# ஸ்ரீ தத்துவ தெய்வம்

# திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள்

ஆசிரியர் :

**T. D. மீனாட்சிசுந்தரம்** பி.ஏ.,பி.எல்.,

(அண்ணாமலைப் பல்கலைக்கழக முன்னாள் பதிவாளர்)

'சகுந்தலா' C 28, பதினோராவது கிராஸ் ரோடு,

தில்லைநகர், திருச்சிராப்பள்ளி–3.

வெளியிடுவோர் :

**ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் பக்தஜன**

**சன்மார்க்க சபை, மதுரை.**

*12/2, காமராஜ் நகர், தல்லாகுளம், மதுரை-2*

# ஸ்ரீ தத்துவ தெய்வம்
# திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்

## பாகம் – ஒன்று

**T. D. மீனாட்சிசுந்தரம்**
*பி.ஏ.,பி.எல்.*

ஓம் சரவணபவ



வேலுண்டு வினையில்லை
மயிலுண்டு பயமில்லை

உ

# SRI-LA-SRI PANRIMALAI SWAMIGAL

RAJARATNA VILAS
PANRIMALAI SWAMIGAL STREET
PUDUR, BALAKRISHNAPURAM
DINDIGUL

*Date : 14—4—1969*

உயர்திரு பக்தர் மீனாட்சிசுந்தரம்
அவர்களுக்கு

தண்டபாணி கிருபை உண்டாகுக

தாங்கள் கோரிய படி பக்த கோடிகட்கு எனது ஆத்மவிண்ணப்பம் யாதெனில் :-

அன்பே சிவம் அதுவே நிசம்

மானிட வாழ்க்கையின் குறிக்கோள் ஆண்டவனது அருளை அடைவதே அதற்கு தடையாயுள்ள நானென்ற அகந்தையை முதலில் நீக்க வேண்டும் வைராக்யத்துடன் ஒரு சற்குருவின் உதவியைக் கொண்டு ஆண்டவனுடைய அருளை அடைய முயற்சித்தால் அன்பு நிலை எய்திடும்

உலகம் உய்ய ஆண்டவன்
துணைபுரிய வேண்டும்

தண்டபாணி துணை

Panrimalai Swamikal

உ

ஓம் நமசிவய

வேலும் மயிலும் துணே.

# ஸ்ரீ தத்துவ தெய்வம்

# திருத்தவத்திரு. பன்றிமலே சாமிகள்.

*"தத்துவ தெய்வ மம்மா*
*சதாசிவ மானதம்மா*
*மற்றுள்ள தெய்வ மெல்லாம்*
*மாயை வடிவாமே."*




*"ஆகின்ற பாதமும் அந்நவாய் நின்றிடும்*
*ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்*
*ஆகின்ற சீயிருதோள் வவ்வாய்க் கண்டபின்*
*ஆகின்ற வச்சுடர் யவ்வியல்பாமே."*

*"நவ் விரண்டு காலதாய் நவின்ற மவ்வயிறதாய்*
*சிவ் விரண்டு தோளதாய் சிறந்த வவ் வாயதாய்*
*யவ் விரண்டு கண்ணதாய் எழுத்து நின்ற நேர்மையில்*
*செவ்வை யொத்து நின்றதே சிவாய மஞ்செழுத்துமே."*

# அணிந்துரைப் பாமாலை

(இசைக்கவிஞர் திரு. N. S. சிதம்பரம்)

' ஓம் '

சித்துமிக நிகழ்த்துகின்ற பன்றிமலை வித்தகன்றன்
சீரை யெல்லாம்
இத்தரையோர் உணர்ந்துய்தல் வேண்டுமென்னும் எண்ணத்தால்
இனிமை யோங்கும்
உத்தமனும் மீனுட்சி சுந்தரநற் பாவாணன்
ஊக்கத் தோடும்
பத்தியுளப் பண்போடும் பைந்தமிழில் நூல்செய்தான்
பாரீர்! பாரீர்!

## பன்றிமலை வள்ளல்!

இராகம் : கல்யாணி  தாளம் : ஆதி

### பல்லவி

பன்றிமலை வள்ளலைப் பாடிநாம் மகிழ்ந்திடுவோம்!
பாரில் அருளோங்கிப் பாங்குடன் திகழ்ந்திடுவோம்!
—(பன்றிமலை வள்ளலை)

### அனுபல்லவி

ஒன்றியுளம் நினைக்க உரைத்திடும் புண்ணியனை
உயர்ந்த சித்தாடுகின்ற ஒப்பிலாக் கண்ணியனைப்
—(பன்றிமலை வள்ளலை)

### சரணங்கள்

சத்திவேல் தாங்குகின்ற சரவணபவன் நாமம்
தவருது சொல்லிடில் தானெய்தும் சேமம்!
மெத்தவும் இதைப்புகட்டும் மேன்மைவளர் நாதனை
வேற்றுமை காணுத விமலசுக நீதனைப்
—(பன்றிமலை வள்ளலை)

ஓதிடற்கரிதான உத்தமன் இவன் சிறப்பை
உலகெல்லாம் அறிய உணர்வினிக்கும் தமிழில்
மேதினிபுகழ் கவிஞன் மீனுட்சிசுந்தரன்
மிகுநல்ல வடிவுடன் தகுபெரு நூல்செய்தான்
—(பன்றிமலை வள்ளலை)



## சாமிகள் உவந்தளிக்கும் திருமுக ஆசிக்கும்

## ஆத்ம விண்ணப்பத்திற்கும் நன்றி.

பாக்கிய பரணியில் புனிதமாய்த் தோன்றிய
பக்தர்கள் போற்றும் சீலா
பன்னிரு கையனும் பாலமுருகையனும்
புண்ணியா உன்னில் கண்டோம்
தூக்கியத் திருக்கரம் திருவருள்புரியவே
தெய்வத்துணை பெருகவே
தவத்திரு பன்றிமலை தேவனே தேசிகா
தென்னாடு பெற்ற செல்வா
வாக்கினில் ஒளிமிகு வார்த்தைகள் தந்தவா
உலகமே உய்ய கருணை
வந்தருள் செய்திடும் வாசகா நன்றியை
உமக்கிதோ நவிலுகின்றோம்
ஆக்கமும் ஆயுளும் ஆற்றலும் இன்பமும்
அன்புடன் எமக்கு ஈவாய்
அற்புதம் ஆடிடும் ஆனந்த சித்தரே
அன்பர்கள் ஏத்தும் ஏறே!

திரு. T. D. மீனாட்சிசுந்தரம்

சுபம்

# பதிப்புரை

''கடவுளைப் பார்த்திருக்கின்றீர்களா?'' என்று ஒருவர் கேள்வி கேட்டால், ''பார்த்திருக்கின்றோமே! திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள் ரூபத்தில் பார்த்திருக்கின்றோம், பார்க்கின்றோம். அவர்கள் பக்தர்கள் என்ற பெரும்பேறும் பெற்றுள்ளோம்'' என்று திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகளைக் கண்டவர்கள் பேருவகையில் பேசமுடியும். சாமிகள் நமது கண்கண்ட தெய்வம். சாமிகள் நம்மிடையே உலவிவரும் நடமாடும் தெய்வம். தெய்வத்தை மனித ரூபத்தில் பார்ப்பதென்றால் சாமிகள் வடிவத்திலேயே காணும் பாக்கியம் பெற்றுள்ளோம் நாம். அவருடைய அருங் குணங்களையும் வாழ்க்கை வரலாற்றையும் புத்தக வடிவில் அமைத்துக் கொடுக்கும் பாக்கியத்தையும் 1961-ம் ஆண்டு சாமிகளுடைய திருப்பெயரால் ஏற்பட்ட இந்த பக்தஜன சன்மார்க்க சபையும் பெற்றுள்ளது.

இந்த நூலை ஆக்கித்தந்தவர் சாமிகளுடைய அருமை பக்தர் திரு. T. D. மீனாட்சிசுந்தரம் அவர்கள். அவர் திருச்சியில் வழக்கறிஞராகவும் (1942—46) அதன்பின் சிக்கல் சிங்காரவேலவர் ஆலயத்தில் சென்னை இந்துமத பரிபாலன அறநிலையத்தின் கீழ் நிர்வாக அதிகாரியாகவும் (1946—50) அதன்பின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் உதவிப் பதிவாளராகவும் (1950—53) பதிவாளராகவும் (1953—65) பணியாற்றி யுள்ளார். இவரை அறிஞருலகம் நன்கறியும். இவர் 1946இல் சகுந்தலா நினைவுமலர் என்ற நூலை வெளியிட்டார். அதன்பின் கலைவாணி, ஓவியம் செய்தவேலை, வசந்தசேனை என்ற நாடகங்களையும், அகல்யா, காதலோ காதல், நளினி-வேலன், எழில்மிகு எமிலி முதலிய கவிதை நூல்களையும் இயற்றியுள்ளார். ''இளமையின் வீறு, ஆங்கில மேதை, தமிழ்ச் செழிப்பு, கலையார்வம், கவிதைச் சுவை, நாடகக் கலைத்திறமை — இவையே மீனாட்சி சுந்தரனார்'' என்று சாமிகளுடைய அருமை பக்தர் கவியோகி. மகரிஷி சுத்தானந்த பாரதியார் அவர்களால் பாராட்டப்பட்டுள்ளார். சாகித்ய அகாடமியால் வெளியிடப்பட்ட நமது இந்திய நாட்டு மொழிகளில் வந்துள்ள சில கவிதைகளுள் இவரது கவிதை ஒன்றும் இடம் பெற்றுள் ளது இவரது புலமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இவர் சாமிகளிடம் நெருங்கிப் பழகும் பாக்கியம் பெற்ற அருமை பக்தர். அதை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார். சாமிகளது திருவுளச் சம்மதம் பெற்று சாமிகளது வாழ்க்கை வரலாற்றைப் பெருநூலாக அமைத்துள்ளார். அவர் கூறுவது போன்றே இந்நூல் சாமிகளது திருவருள் கடாக்ஷத்தினால்தான் இவ்வளவு பெருநூலாக அமைந்துள்ளது.

இந்த நூலை எழுதுவதற்கு ஊக்கமும் உற்சாகமும் கொடுத்து உதவியவர் நமது பெருமதிப்பிற்குரிய சாமிகளின் அருமைபக்தர், பிரபல கண் டாக்டர், திருச்சி திரு. T. V. அரங்கநாதன் அவர்கள் M. B. B. S., L. O., (MADRAS), Z.O., (VIENNA) D.O., (LONDON). அவர்கள் சாமிகளின் பேரில் வைத்துள்ள பக்தி விஸ்வாசமே இப்பெருநூலாகத் திரண்டுள்ளது என்பதை நாங்கள் சொல்லாமல் இருக்கமுடியவில்லை. அவர்கள் இந்த வேலையை வெற்றி கரமாக முடித்துக்கொடுத்த முயற்சியைப் பாராட்டவும் இச்சந்தர்ப்பத்தில் அவர்களுக்கு எங்கள் அன்பையும் வணக்கத்தையும் அறிவித்துக் கொள்கின்றோம்.

இந்த அழகிய நூலைப் பேரன்போடும் பெருமையோடும் சாமிகளது திருப்பாதங்களில் வைத்து வணங்குகின்றோம். சாமிகளுடைய நூலைப் படித்து சகல நன்மைகளும் பக்தர்கள் அடைய சாமிகளைப் பிரார்த்தித்துக் கொள்கின்றோம்.

**ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள்**
**பக்தஜன சன்மார்க்க சபை, மதுரை**
*12/2, காமராஜ்நகர்,*
*தல்லாகுளம், மதுரை-2.*

*தலைவர் :*
**S. பழனிசாமி B.A.,B.L.,**
அட்வகேட், மதுரை.

*துணைத்தலைவர் :*
**R. V. R. N. அப்பாசாமிநாயுடு,**
ஜமீன்தார், இளையரச நேந்தல்

*பொக்கிஷதார் :*
**S. R. நரசிம்மாச்சாரி,**
17, ஜவஹர் ரோடு,
சொக்கி குளம், மதுரை.

*உதவி பொக்கிஷதார் :*
**V. P. கந்தசாமி பிள்ளை,**
22, கமலா 2-வது தெரு,
சின்னசொக்கி குளம், மதுரை-2.

*செயலாளர்கள் :*
**N. S. சோமசுந்தரம்பிள்ளை,**
மிராசுதார், தாண்டிக்குடி.

**K. ஆறுமுகம் பிள்ளை,**
ரிடையர்டு தாசில்தார்,
12, காமராஜ் நகர். 2-வது தெரு,
தல்லாகுளம், மதுரை-2.

*உதவிசெயலாளர்கள் :*
**A. ராமவேல்,**
18, கோகுலரோடு,
தல்லாகுளம், மதுரை-2.

**R. சுந்தரம்,**
ரிடையர்டு தாசில்தார்,
8, காமராஜ் நகர், ்வது தெரு,
தல்லாகுளம், மதுரை-2.



**திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள் அமர்ந்த திருக்கோலம்**

*"நெஞ்சே வருந்தாதே நீங்கும் துயரெல்லாம்<br>
அஞ்சாதே வெற்றியடைந்திடுவாய்—மஞ்சுதவழ்<br>
பன்றிமலை சித்தர் அருள்பாலிக்க வந்துவிட்டார்<br>
இன்பமே என்றும் இனி"*

(திரு. ரா. பு. தங்கராசன்)

உ

# முன்னுரை

திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளைப்பற்றி முதன் முதலில் நான் கேள்விப்பட்டது சுமார் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன். என்பேரன்புக்கும் பெருமதிப்பிற்கும் உரிய முன்னாள் சென்னை மேயர் தொழிலதிபர் திரு M. A. சிதம்பரம் செட்டியார் அவர்கள் விரும்பிய வண்ணம் ஒரு பேராசிரியர் வீட்டில் நடந்துவந்த ஒரு கோளாறை நீக்க திருவுளம் கொண்டு சாமிகள் அண்ணாமலை நகருக்கு வந்திருந்தார். அப்போது நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பதிவாளராகப் பணியாற்றி வந்தேன். அந்தப் பேராசிரியர் வீட்டில் மாலை நேரத்தில் கற்கள் விழுந்து கொண்டிருந்தன. இந்த ஏவல் கோளாறு சாமிகள் அந்த வீட்டில் திருவடி எடுத்துவைத்த நாளிலிருந்து நீங்கிவிட்டது. இதைக் கேள்விப்பட்ட எனக்கு இத்தகைய மகானைப்பார்க்கத் தவறிவிட்டோமே என்று ஒரு மனக் குறை இருந்தது. அந்தப் பேராசிரியரைக் காணும்போதெல்லாம் அவர் இருந்த வீட்டில் நடந்ததும், நடந்தது சாமிகள் அருளால் நின்றதும் எனக்கு நினைவுக்கு வருவதுண்டு.

அதற்குப்பின் சென்னை ஹைகோர்ட்டு நீதிபதியாகப் பணியாற்றி ஓய்வுபெற்ற அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகப் பணியாற்றிய திரு V. சுப்பிரமணிய நாடார் சென்னை இல்லத்தில் சாமிகள் படத்தைக் கண்டேன். சாமிகள் முருகனை வழிபட்டுக்கொண்டிருக்கும் அமர்ந்த திருக்கோலப்படம்தான். சென்னையில் துணைவேந்தர் இல்லத்திற்குச் செல்லும் போதெல்லாம் இந்தப்படம் என் கவனத்தை இழுக்கும். எல்லோர் முன்னிலையிலும் அப்படத்திற்குக் கைகூப்பி வணக்கம் செய்ய என் மனம் இடந்தராவிட்டாலும் அந்த மனம் மட்டும் படத்தைப் பார்க்கும் ஒவ்வொரு தடவையும் படத்திலுள்ள சாமிகளுக்கு வணக்கம் செய்யத் தவறியதில்லை. இதன் பின் 1963ல் என் உடல் நிலை சரியின்றி அறுவை சிகிச்சைக்காக சென்னையில் தங்கி இருந்தேன். எனது அருமை நண்பர் நீதிபதி திரு S. சூரியமூர்த்தி, B.A.,B.L., அவர்கள் நமது சாமிகளின் பெருமைகளை எனக்கு எடுத்துரைத்து அவர் ஆசிபெற்றே நான் அறுவை சிகித்சை செய்து கொள்ளவேண்டுமென்றார். அவர் இஷ்டப்போலவே சாமிகளது ஆசியையும் அருளையும் கடிதம் வாயிலாக என் அருமை நண்பர் மூலமே பெற்றென். அறுவை சிகிச்சையும் வெற்றிகரமாக முடிந்தது. அதன்பின் என் வாழ்க்கையில் எதிர்பாராத ஒரு பேரதிர்ச்சி தரவல்ல நிகழ்ச்சியும் அதைத் தொடர்ந்து அண்ணாமலை நகரை விட்டே விலகி திருச்சிராப்பள்ளியில் இருக்கும் நிலைமையும் ஏற்பட்டது.

சஞ்சலக் கடலில் அலைமோதிக்கொண்டிருந்த என்னை ஒருநாள் என் அருமை நண்பர் திரு S. சூரியமூர்த்தி அவர்கள் கட்டாயப்படுத்தித் திண்டுக்கல்லுக்குச் சாமிகளின் திரு இல்லத்திற்கு அழைத்துச் சென்றார். சாமிகளை முதன் முறையாகக் கண்ட எனக்கு அவர் ஒரு புதியவராகவே தெரியவில்லை. அவரை அறிந்தவராகவே என்னுள் ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. அது வரையில் வாழ்வில் வெறுப்புத்தட்டிய எனக்கு மனதில் ஒரு அமைதியும் ஒரு புதுக்குதூகலமும் ஏற்பட்டுவிட்டது. ஒரு பெரும் துணையை, ஒரு மாபெரும் சக்தியை அடைந்துவிட்டதாகவே என்னுள் ஒரு புதுபலம் கண்டேன். என் மனத்திலுள்ள ஒரு மலைபோன்ற பாரம் நீங்கியது போன்ற உணர்வெய்தினேன். அவரைக் கண்டு திரும்பிய அடுத்தநாளே 'இதயாஞ்சலி பத்து' உருவாகிவிட்டது.

"சொல்லாலும் செயலாலும் உருவினாலும்
சாந்தமுக வடிவின் ஒளி மதியினாலும்
பல்காலும் தளர்வறியா ஆர்வத்தாலும்
பலர்துயரைத் துடைக்கவல்ல ஆற்றலாலும்
இன்றெம்மை ஆண்டு கொண்ட பேரரசே!
இனிய முகப் பேரன்புபொங்கும் ஈசா!
பன்றிமலை சாமி எங்கள் பிராண நேயா
பாதமலர் அருளு கின்றேய் போற்றி போற்றி!

என்று என் உள்ளம் சாமிகளின் பெருமையைப் பாட ஆரம்பித்து விட்டது.

இதற்குப்பின் என்னை அடிக்கடி திண்டுக்கல்லுக்கு அழைத்துச் சென்று சாமிகளை தரிசிக்க உதவிவருபவர் எனது மற்றொரு அருமை நண்பர். திருச்சி டாக்டர் திரு T. V. அரங்கநாதன் அவர்கள். இந்த இரு அருமை நண்பர்களுக்கும் நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

சாமிகளுடைய தெய்வீக ஒளிவீசும் திருவிழிகளும் அருள் பொலிகின்ற திருமுகமும் என்னை வசீகரித்தது போன்று சாமிகளுடைய கருத்தைக் கருத்தாட்டும் திருமொழிகளும் உற்சாகமான நகைச்சுவைப் பேச்சும் என்னை முற்றும் கவர்ந்தன. நான் சாமிகளோடு இருக்கும் திருநாட்களிலெல்லாம் சாமிகள் திருவாயினின்றும் உதிரும் முத்து, மாணிக்க உதயத் திருமொழிகளை நோட்டுப்புத்தகத்தில் குறிக்கத் தவறியதில்லை, ஒருநாள் இந்த நோட்டு புத்தகத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்ட என்னைப்பார்த்து டாக்டர் T. V. அரங்கநாதன் "உங்களுக்கு சாமிகளிடம் சொல்லி ஒரு வேலை கொடுக்கப்போகின்றேன்' என்றார். திண்டுக்கல்லில் சாமிகள் திரு இல்லத்தில் பேசிக்கொண்டிருக்கும் போது, சாமிகளது வாழ்க்கை வரலாற்றைப் படித்ததைப்பற்றி பேசினோம். சாமிகளது முத்து மணிமொழிகளையும் சாமிகள் திருவாயினின்றும் கேட்கும் சாமிகள் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் தொகுத்து ஏற்கனவே சாமிகளைப்பற்றி வெளிவந்துள்ள வாழ்க்கை வரலாறு நிகழ்ச்சிகளோடு இணைத்துப் புத்தகமாக வெளியிட்டால்

அது பெரும் பயனைத்தரவல்லது என்று குறிப்பிட்டார் டாக்டர். சாமிகளது புன்முறுவல் சாமிகளது இணக்கத்தை அறிவிப்பது போன்று விளங்கியது. ''மீனாட்சிசுந்தரத்திற்கு இந்த வேலை கொடுக்கலாம், சாமி'' என்று மன மகிழ்ந்து உரைத்தார் அருமை நண்பர் T. V. அரங்கநாதன் அவர்கள். ''அப்படியே ஆகட்டும்'' என்று தன் திருவுளசம்மதம் அருளினார் சாமிகள். கிடைத்தற்கரிய இந்தப்பேற்றை அடைந்த நான் உடனே என்னிடம் இருந்த சாமிகள் திருமொழிகள் எழுதி இருந்த நோட் புத்தகத்தை சாமிகளது திருப்பாதங்களில் வைத்து என் உளமார்ந்த நன்றியை சாமி களுக்கு அறிவித்து கொள்ளவும் இந்தப் பெரும் பணியை வெற்றிகரமாக முடித்தருள சாமிகள் அருளைவேண்டியும் சாமிகள் திருப்பாதங்களை என் சிரங்கொண்டு தொட்டு வணங்கினேன்.

அன்று ஆரம்பித்தவேலை என்னைப் பல இடங்களுக்குச் சாமிகளோடு அழைத்துச் சென்றது. பல தடவைகள் திண்டுக்கல்லுக்கு டாக்டரோடு என்னை இழுத்துச் சென்றது, பல விஷயங்களைச் சாமிகள் திருநோக்கம் அறிந்து சாமிகளிடமிருந்து குறித்துக்கொள்ள எனக்கு ஊக்கத்தையும் தைரியத்தையும் கொடுத்தது, சாமிகளுடைய தாயார், பழைய சீடர்கள்,— இவர்களிடமிருந்தும் பல விபரங்களைச் சேகரிக்க உதவியது. சாமிகளைப் பற்றி எழுதிவந்த ஒரு நோட்டுப்புத்தகம் பலவாகப்பெருகின. சாமிகளைப் பற்றிய விஷயங்கள் கரைபுரண்டு ஓடும் ஜீவநதி போன்று திரண்டன. எதை விடுவது, எதை எழுதுவது என்ற திகைப்பும், சேகரித்த விஷயங்களைக் கோர்வையாகத் தொகுக்கவேண்டுமே என்ற மலைப்பும், எப்படி மகா புருஷர் ஒருவருடைய வாழ்க்கையை நல்லமுறையில் எழுதுவது என்ற அச்சமும் அடிக்கடி மனதில் உண்டாகிப் பயமுறுத்தும். 'எல்லாம் அவன் செயல்' என்றே எண்ணி சாமிகளை நினைத்து எழுத ஆரம்பித்தேன். நான் சேகரித்துள்ள குறிப்புக்களும், திரு R. N. தீக்ஷிதர் எழுதியுள்ள சாமிகள் வாழ்க்கை வரலாறும், பல பக்தர்களுடைய அனுபவங்களையும் சாமிகளைப் பற்றிய பத்திரிகைச் செய்திகளையும் திரட்டித்தந்த சாமிகளைப்பற்றிய நான்கு புத்தகங்களும், திருப்பதி திரு V. S. வெங்கடநாராயணா அவர்கள் 1966–ம் வருடத்திலிருந்து வருடா வருடம் வெளியிடும் சாமிகளைப்பற்றிய ஆங்கில நூல்களும் எனக்கு வேண்டிய பொருளை ஏராளமாக கொடுத்து உதவின. முதல் பாகம் தங்கு தடையின்றி ஓடி முடிந்தது.

சாமிகளுடைய வாழ்க்கை வரலாறு இரண்டு பாகங்களில் அமைந் துள்ளது. சாமிகள் பிறப்பு, வளர்ப்பு, பள்ளிவாழ்க்கை, இளமைப் பருவம், பழக்க வழக்கங்கள், இல்லற வாழ்க்கை, கன்னிவாடி ஜமீனில் வேலை, பன்றிமலை பஞ்சாயத்து தலைவர் வாழ்க்கை, ஆத்மீக வளர்ச்சி, தாண்டிக் குடியில் பாலமுருகன் கோயில் அமைப்பு, குருமகராஜன் சுற்றுலா – இவை களைக் கொண்டுள்ளது முதல் பாகம். இரண்டாம் பாகத்தில் சாமி களுடைய குணாதிசயங்களும், அற்புதம் ஆடும் ஆற்றலும், சிவராஜ யோக நிலையும், நமசிவாய தத்துவ விளக்கமும், மணிமத்திர ஔடத பேராற்றல் களும், கருத்தைக் கருத்தாட்டும் குருநிலையும் சுபமங்கள நிலையும் எடுத் துரைக்கப்பட்டுள்ளன. இரண்டாம் பாகத்தில் மறை மொழிகளை நிகர்க்கும்

சாமிகளது திருமொழிகள் நிறைந்திருக்கின்றன. நமசிவய தத்துவ விளக்கம் சாமிகள் பாக்கிய பரணி பத்திரிகையில் எழுதியுள்ள கட்டுரைகளின் தொகுப்பாகவே அமைந்துள்ளது. குணசீலரான சாமிகளுடைய எளிய இனிய குணங்களுக்கு அடிப்படையாக – அடிப் பீடமாக அமைந்துள்ள அன்பும், கருணையும், அருளும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. 'அற்புதம் ஆடவல்லார் சாமிகள்' என்ற தொகுப்பு பலபக்தர்களின் அனுபவங்களை மட்டும் எடுத்துக் காட்டவில்லை. அற்புதம், அதை ஆடவல்லார் இயல்பு, அவர் தகுதி, அவர் சிறப்பு, அவர் சக்தி, அற்புதம் ஆடுவதின் நோக்கம் — இவையெல்லாம் வற்புறுத்திக் கூறப்பட்டுள்ளன. இதைப்பற்றி சாமிகளின் திருமொழிகளும் சேர்க்கப்பட்டுள்ளன' சிவராஜ யோக சாமிகள், நமசிவாய சாமிகள் – என்ற இரண்டு அத்தியாயங்களிலும் சாமிகள் ஒரு சிவராஜ யோகி என்பதும், யோகியால் ஆகாததொன்றில்லை என்பதும், யோகத்திற்கும் நமசிவய மந்திரத்திற்கும் உள்ள தொடர்பும் சிறப்பும், சாமிகளே ஒரு நமசிவாய சாமிகள் என்பதும் விளக்கப்பட்டுள்ளன. வைத்திநாத சாமிகள், மணிமந்திர சுபமங்கள சாமிகள் கருத்தைக் கருத்தாட்டும் சாமிகள் என்ற மூன்று அத்தியாயங்களிலும் சாமிகள் யோகத்தால் பெற்றுள்ள பெரும் பேராற்றல்களும் அதனுல் மக்களுக்கு அன்புத் தொண்டு புரியும் அருங் குணமும் வலியுறுத்தப் பட்டுள்ளன.

இரண்டாம் பாகத்தை ஆழ்ந்து படித்துப் பார்க்கும் போது சாமிகளிடம் பெருகி இருக்கும் பேராற்றல்களுக்கும் பேரருளுக்கும் மகா சக்திக்கும் காரணம் காணுமல் இருக்க முடியாது. சாமிகள் ஒரு நடக்கும் பல்கலைக் கழகமாக விளங்குகின்ருர். ஒரு பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சிப் பகுதி எவ்வளவு முக்கியமோ அதே முக்கியத்துவம் அது சமூகத் தொண்டு செய்வதற்குமுண்டு. அதை உணர்ந்தே பல டாக்டர் பட்டதாரிகளை உருவாக்கும் பேராசிரியர்களைக் கொண்டே பல்கலைக் கழகங்களில் அருகில் உள்ள பல ஊர்களுக்கும் பொது மக்களுக்கும் அறிவுரை வழங்கவும் பல்கலைக் கழகங்கள் உதவி வருகின்றன. அது போன்றே சாமிகளும் பேரறிவாளர்களுக்கு மட்டுமின்றி பொது மக்களுக்கும் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற அடிப்படை நோக்கில் அருள்பாலித்து உடற் பிணி மனப் பிணி நீக்கி வருகின்ருர். சாமிகள் ஒரு நடமாடும் கோயில். கோயிலென்ருல் கோன் (கடவுள்) இல்லம் (குடிகொண்டிருக்கும் இல்லம்) மட்டுமல்ல. அது ஒரு பல்கலைக் கழகம், அது ஒரு வைத்திய நிலையம், அது ஒரு அருங்கலை (ஓவியம் சிற்பம்) தாயகம், அது ஒரு முத்தமிழ் (இயல் இசை நாடகம்) கலை மண்டபம், அது ஒரு ஞானப் பூஞ்சோலை—இப்படியே கோவிலுக்குப் பொருள் சொல்லிக் கொண்டே போகலாம். அது போன்றே சாமிகளோடு பழகி வருகின்றவர் சாமிகளது பேராற்றல்களையும் பெருங் கருணையையும் கலையாற்றல்களையும் தொண்டு மனப்பான்மையையும் உணர்ந்து சாமிகளே ஒரு நடமாடும் கோயில் என்பதைக் கண்டுகொள்ள முடியும்.

"வள்ளல் பிரானுக்கு வாய் கோபுர வாசல்."

"அன்பே சிவம்."

நான் எடுத்துக் கொண்ட வேலையை பூர்த்தி செய்து கொடுத்ததற்கு உறுதுணையாக இருந்தது சாமிகளுடைய திருவருள். அவர் திருவருள் இன்றி நான் இந்த வேலையை தொடங்கி இருக்க முடியாது, தொடர்ந் திருக்க முடியாது. எனக்கு எந்த நேரத்தில் நான் எந்தெந்த சமயங் களில் சில விஷயங்களை அறிந்து கொள்ள குறிப்பிட்ட சில சாமிகளின் பக்தர்களைப் பார்க்க விரும்புவேனோ, நான் எந்த சமயங்களில் சாமிகளது நேரிடை உதவியை நாடுவேனோ, அந்தந்த சமயங்களில் சாமிகளின் திருவருள் தோன்றாத் துணையாக உதவி எனக்கு மனதில் உதயமாகி என் இஷ்டத்தைப் பூர்த்தி செய்துள்ளது, சில நிகழ்ச்சிகளைத் தொகுத்து எழுதி வரும்போது சில இடங்களுக்குச் சில தகவல்கள் இல்லாமல் அந்த இடங்களை பூர்த்தியாகாமல் விட்டு வைத்திருப்பேன். திரிகால ஞானி, நமது சாமிகள் என்னை அந்த இடத்திற்கே அனுப்பி தக்கவர்களைக் கொண்டு எனக்கு வேண்டிய தகவல்களை நான் சேகரம் செய்ய உதவி யுள்ளார். தாண்டிக்குடியில் சாமிகளது பக்தர் திரு. N. S. சோமசுந்தரம் பிள்ளை எனக்கு இப்படி அன்போடு தகவல்கள் கொடுத்து உதவியதை நன்றி அன்போடு குறிப்பிட ஆசைப்படுகின்றேன். நான் என் சொந்த விஷயமாகவே சில இடங்களுக்குச் சென்றாலும் சாமிகள் வரலாற்றுக்கு எனக்குத் தேவையான விஷயங்களைத் திரட்டவும் அங்குள்ள நூல் நிலையங்கள் உதவி இருக்கின்றன.

சென்னையில் எனது அருமை உறவினர் நண்பர் திரு. M. P. கிருஷ்ணசாமி பிள்ளை B.A.,B.L., அவர்களது இல்லத்தில் உள்ள ஆத்மீக விஷயங்கள் கொண்ட நூல் நிலையமும் அவருடன் நடத்திய ஆத்மீக உரையாடலும் எனக்குத் தேவையான நூல்களையும் பொருள்களையும் எடுத்து வழங்கியதையும் நான் நன்றியுளத்தோடு இங்கு சொல்ல ஆசைப் படுகின்றேன். திருச்சி டாக்டர் திரு. T. V. அரங்கநாதன், கோவை திரு. A. V. கிரி, சென்னை திரு. K. K. வர்மா, திரு. T. V. கமலசாமி, பம்பாய் திரு. P.K இரங்கராவ், திரு. A.V. இராமச்சந்திரன், திரு. வெங்கட்ராமன், திரு. P. கன்னையா நாயுடு, திருப்பதி திரு. M. G. சாரியார், திரு. V. S. வெங்கடநாராயணா, திண்டுக்கல் சௌந்தர்யராஜா மில் மானேஜர், திரு. நாராயணசாமி நாயுடு, சப்சட்ஜ் திரு. P. S. சிதம்பரநாதன், திருச்சி எலக்ட்ரிகல் டிவிஷனல் எஞ்சினியர் திரு. R. N. சங்கரன், திண்டுக்கல் எலக்ட்ரிகல் டிவிஷனல் எஞ்சினியர் திரு. பாலிகா, சென்னை திரு. T. S. S. நடராஜன், திரு. P. S. பாஷ்யம், திரு. T. D. பழனிபிள்ளை — இப்படி எவ்வளவோ பக்தர்கள் எனக்கு வேண்டிய சாமிகளைப்பற்றிய விஷயங் களை சேகரித்து வழங்கி உதவியதற்கு நான் அவர்களுக்குக் கடமைப் பட்டுள்ளேன்.

இசைக் கவிஞர், எனது அருமை நண்பர் திரு. N. S. சிதம்பரம் அவர்கள் மனமுவந்து வழங்கியுள்ள அணிந்துரைப் பாமாலைக்கு என் இதயங்கனிந்த நன்றியை அறிவித்துக்கொள்கிறேன். எனது மற்றொரு அருமை நண்பர் கவிஞர் திரு R. P. தங்கராஜன் அவர்கள் எவ்வளவோ கவிதைகளை சாமிகள்மீது இயற்றியுள்ளார்; அவைகளையெல்லாம் இந்

நூலில் சேர்த்துள்ளேன். அவருக்கும் என் அன்புகலந்த நன்றி உரித்தாகுக, கவியோகி சுத்தானந்த பாரதியார் பேரன்போடு அளித்துள்ள சாமிகளைப்பற்றிய கட்டுரைக்கும் பாடல்களுக்கும் எனது உளம் கனிந்த நன்றியை அவர்களுக்கு அறிவித்துக்கொள்கின்றேன். பாக்கியபரணியிலிருந்து வெளியாகியுள்ள சாமிகள் எழுதி வருகின்ற 'பஞ்சாட்சரம்' எனும் கட்டுரைகளையும் சாமிகளைப்பற்றிய சில பொருள்களையும் நான் இந்நூலில் பயன்படுத்திக்கொள்ள உதவிய பாக்கியபரணி ஆசிரியர் டாக்டர் திரு P. K. சுந்தரம் அவர்கட்கும் எனது அன்புமிக்க நன்றியை செலுத்த கடமைப்பட்டுள்ளேன்.

இந்தப் பெருநூலை எழுத எனக்கு உதவிய மதுரை ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் பக்தஜன சன்மார்க்க சபைக்கு நான் என் அன்பையும் வணக்கத்தையும் அறிவித்துக்கொள்கின்றேன். மதுரையையும் இந்த சன்மாக்க சபையையும் நினைக்கும்போது இச்சபையின் தலைவர் வழக்கறிஞர் திரு ப. பழனிசாமி அவர்களையும், துணைத்தலைவர் ஜமீன்தார் திரு R.V.R.N. அப்பாசாமி நாயுடு அவர்களையும் (இளையரசநேந்தல்) செயலாளர்கள் பெருநிலக்கிழார் தாண்டிக்குடி திரு N. S. சோமசுந்தரம் பிள்ளை அவர்களையும், ஓய்வுபெற்ற தாசில்தார் திரு K. ஆறுமுகம் பிள்ளை அவர்களையும் நினைக்காமல் இருக்கமுடியாது; இப்பேரன்பர்கள் அனைவருக்கும் என் நன்றியை அன்போடு அறிவித்துக் கொள்கின்றேன்.

இந்தப் புத்தகம் அச்சிட ஆரம்பத்திலிருந்து பூர்த்தியாகும் வரை அச்சுப்பிழைகள் திருத்தி உதவிய எனது பேரன்பர், பிஷப் ஹீபர் காலேஜ் தமிழ் விரிவுரையாளர் திரு N. சுவாமிநாதன் அவர்களுக்கு என் நன்றிகலந்த அன்பை தெரிவித்துக்கொள்கின்றேன். ஆரம்பத்திலிருந்து வேலை முடியும்வரை எனக்கு வேண்டிய உதவிகள் புரிந்து உழைத்த என் மதிப்பிற்குரிய பேரன்பர் ஜோதி பிரிண்டர்ஸ் உரிமையாளர் ஜோதி இராமசாமி அவர்களுக்கும் மேலாளர் திரு இரா. ரெங்கராஜன் அவர்களுக்கும் அச்சு நிலையத்தில் வேலை செய்கின்ற எல்லா தொழிலாளர் நண்பர்களுக்கும் நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன்.

சாமிகளுடைய அருமைக்குமாரர் பன்றிமலை பஞ்சாயத்து உபதலைவர் திரு பேச்சிமுத்து ராஜா அவர்களுக்கும் என் அன்பையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். அவரை உபதலைவராகவும் திரு. S. சோமசுந்தரம் பிள்ளை அவர்களைத் தலைவராகவும் கொண்ட பன்றிமலை பஞ்சாயத்து எடுத்துகொண்ட முயற்சி இன்னும் சிறிது நாட்களில் பன்றிமலைக்கு ஒரு போக்குவரத்து சாலையை அமைத்து கொடுத்துவிடும். நாம் சாமிகள் பிறந்து வளர்ந்த ஊரை, சாமிகளை ஆத்மீகத் துறையில் பரிபக்குவமடைய உறுதுணை புரிந்த ஈசனருள் ததும்பும் பன்றிமலையை, சாமிகள் முதல் பஞ்சாயத்துத் தலைவராக ஆறு வருடகாலம் பணிபுரிந்த அருள்வளமும் பொருள் வளமுமிக்க பன்றிமலையை, அந்த ஊருக்கே சிறப்பைக் கூட்டி வைக்கும் நிலையில் சாமிகளது திருப்பெயரோடு இணைந்து நிற்கும் பன்றிமலையைப் பார்க்க பன்றிமலைக்கு நாம் விரைந்துச் செல்லலாம்.

நான் சாமிகள் சரிதம் எழுதிவரும்போது சாமிகள் உற்சாகமிகுந்து சில அற்புதங்களை ஆடிக் காட்டியதையும் இங்குக்கூறுவது பொருத்தமாக இருக்கும். நான் அடிக்கடி எழுதிய விஷயங்களை சாமிகளிடம் படித்துக் காட்டுவதுண்டு. ஒருநாள் நாலாவது அத்தியாயத்தை சாமிகளிடம் படித்துக்கொண்டே வந்தேன். சாமிகள் உளமுவந்து கேட்டுக்கொண்டே வந்தார். ஒரு வாக்கியத்தை முடித்து அடுத்த வாக்கியத்தை நான் படிப்பதற்கு முன் சாமிகள் ஒரு அற்புதம் நடத்திக் காட்டினார்! நான் அடுத்த வாக்கியத்தில் என்ன படிக்கப்போகின்றேனோ அதையே செயலில் நடத்திக்காட்டிவிட்டார் சாமிகள். நான் படிக்க இருந்த வாக்கியம் இதுதான்! "இன்னும் சாமிகளுக்கு இன்பம் பொங்க ஆரம்பித்துவிட்டால் அவரன்பு கற்கண்டு மயமாக அன்பர்கள் கரங்களிலே கிடைக்கும்". (பக்கம் 19) சாமிகளுக்கு நான் இதைப் படிப்பதற்கு முன்னே இன்பம் பொங்க ஆரம்பித்தது. அவர் அன்பு, கற்கண்டு மழையாகவே என் கரங்களில் மட்டுமல்ல, என் மடியிலும் வந்து கொட்டியது! மற்றொரு சமயம் சாமிகளது அற்புதங்களை வியந்து ஒரு பள்ளு பாடிக்கொண்டிருந்தேன். (பக்கம் 676—678) ஊக்கத்தோடு கேட்டுக்கொண்டிருந்த சாமிகள் நான் எந்தப்பொருளைப் பற்றி பாட இருந்தேனோ, அந்தப் பொருளையே கொடுக்கின்ற மூலப் பொருளையே உவந்தளித்தார். நான் பாட இருந்த பாட்டு இதுதான்!

"பொரியை அரிசியாக மாற்றிவிடுவார்—சென்ற
பாலை மறுபடியும் வரவழைப்பார்
அறிவை மலைக்க வைக்கும் அற்புதங்கள்—பல
ஆடி அருள் புரிந்து மனம் களிப்பார்"

பொரியையும் அரிசியையும்பற்றி பாடுவதற்கு முன்பாகவே சாமிகள் தன் திருக்கரம் கொண்டுவீச, பொரியையும் அரிசியையும் கொடுக்க வல்ல மூலப்பொருளான நெல் அரைப்படி அளவு வானிலிருந்து உலுக்கிவிட்டது போல் பக்தர்கள் முன்னிலையில் வந்து கொட்டியது.

ஒரு நாள் கோவையில் திரு A. V. கிரி அவர்களைச் சந்தித்தேன். என்னிடம் தெய்வீகமகான்கள் சம்பந்தப்பட்ட சுமார் 20 நூல்கள் கொடுத்தார். அதில் ஒன்று 'ஒரு யோகியின் சுயசரிதம்' எனும் நூல். அதில் பல யோகிகளைப்பற்றி ஒரு யோகி பேசுகின்றார். "அவ்வளவு யோகிகள் செய்து காட்டும் அவ்வளவு அற்புதங்களையும் நமது சாமிகள் ஒருவரே செய்து காட்டுகின்றார். இந்தப் புத்தகத்தையே படித்துப் பாருங்கள்" என்று கூறினார் பக்தர் திரு. கிரி. பேருவகையோடு நான் அந்தப் புத்தகத்தைப்படித்தேன். அந்தப் புத்தகத்தில் உள்ள ஒரு சில நிகழ்ச்சிகளை ஒப்ப நான் சேகரம் செய்திருந்த சாமிகள் வாழ்க்கை வரலாற்றில் குறிப்புக்கள் இல்லை. இதை யாரிடம் கேட்பது? சாமிகளிடம் தான் எப்படிக்கேட்பது? என்று மனதைக் குழப்பிக்கொண்டிருந்தேன். சாமிகளை திண்டுக்கல்லில் வழக்கம் போல் அடுத்த ஞாயிறு சந்தித்தேன்

எனக்கு வேண்டிய விஷயம் கிடைக்குமோ என்று ஏங்கித்தவித்த நேரத்தில் நான் கேட்டுப்பதிலளிப்பதுபோல நான் கேட்காமலே எனக்குவேண்டிய விஷயங்களைக் கொடுத்துதவும் சாமிகளின் ஆற்றலை நான் எப்படிப் புகழ்வேன்? அந்த புத்தகத்தில் புலிச்சாமி ஒருவர் உண்டு, இந்தப் புலிச்சாமியார் போன்று சாமிகள் வரலாற்றிலும் ஒருவர் வேண்டாமா? என்று ஏங்கித் தவித்தது என் உள்ளம். அந்தப் புலிச்சாமியார் போன்றே ஒரு பாம்புச் சாமியார் சாமிகள் வாழ்க்கையிலும் வந்து வாய்த்ததை சாமிகள் நான் கேட்காமலே கூறினர். அந்தப் புத்தகத்தில் ஒரு யோகி தங்கத்தால் மாளிகை உண்டாக்குகின்றார். இப்படி சாமிகள் தங்கத்தை வரவழைத்ததுண்டா என்று எண்ணிய எனக்கு சாமிகள் தங்க நகைகளை வரவழைத்ததும் நான் கேட்காமலே சொன்னார் சாமிகள். இவைகளை சேர்த்துக்கொண்டே நான் " ஓர் யோகியின் சுயசரித்திரத்தில் வரும் சில யோகிகளும் நமது சாமிகளும் " என்ற பகுதியை (பக்கம் 640—663) ஆர்வத்தோடு எழுதி முடித்தேன்.

இப்படியே சாமிகள் எனக்கு வேண்டிய சமாச்சாரங்களை நான் கேட்காமலேயே கொடுத்துதவி இருக்கின்றார். யோகத்தைப்பற்றி ஒன்றும் தெரியாத என்னிடம் பல யோக சம்பந்தப்பட்ட நூல்கள் நான் எதிர்பாராமல் வந்ததும் சாமிகளது திருஅருள்தான். சிவராஜயோக சாமிகள் அத்தியாயத்தை ஒருவாறு முடித்தேன். அதைத் திருப்தியோடு செய்ததாக எனக்குத் தோன்றவில்லை. அப்படி இருந்தும் எழுதி இருந்த விஷயங்களை, சாமிகளோடு தாண்டிக்குடி கும்பாபிஷேகத்திற்காக சென்றிருந்தபோது வாசித்துவிடலாம் என்று திட்டமிட்டிருந்தேன். பல தடவைகள் நான் எழுதியிருந்ததை படிக்க ஆரம்பிப்பேன். ஆனால் ஒரு தடவையாகிலும் நான் எழுதியிருந்த சுமார் 150 பக்கங்களில் இரண்டு பக்கங்கள் கூடச்சேர்த்து வாசிக்கமுடியவில்லை. சாமிகள் தன் யோக அனுபவம் ஒன்றையும் தாண்டிக்குடியில் காட்டியருளினர் (பக்கம் 739-740). இதன்பின் நான் ஏற்கனவே எழுதியிருந்த சில கரடுமுரடான பகுதிகளைத்திருத்தி எழுதினேன், சாமிகள் தாண்டிக்குடி யோக அனுபவத்தையும் சேர்த்தேன். ஒருநாள் சாமிகளிடம் ஒரு மருந்தும் விபூதிப் பிரசாதமும் வேண்டுமென்று ஒரு பக்தர் என்னைத் திண்டுக்கல்லுக்கு அழைத்துச் சென்றார். அப்போது 'சிவராஜயோக சாமிகள்' என்று நான் திருத்தி எழுதி அமைத்த பகுதியையும் என்னோடு எடுத்துச் சென்றேன். நான் இதைக்கொண்டு வந்ததைச் சாமிகளிடம் உரைக்கவில்லை. சாமிகள் என்னிடம் இருந்த பகுதியைப் படிக்கச் சொன்னார். இரவு 9 மணிக்கு நான் படிக்க ஆரம்பித்ததை சாமிகள் இரவு 2 மணி வரையிலும் கேட்டு சில விளக்கங்களும் திருத்தங்களும் உதவி அருளினர். இப்படியே ஒவ்வொரு அத்தியாயம் முடிவுறுவதற்கு முன்பு சாமிகள் அந்தந்த அத்தியாயங்களுக்குப் பொருத்தமான சேர்க்கவேண்டிய பொருள்களை தானே உவந்தளித்த அற்புதத்தையும் கருணையையும் நான் எப்படிப் போற்றுவது? நமசிவாய சாமிகள் அத்தியாயத்திலுள்ள கடைசி மூன்று கட்டுரைகளை இரண்டே நாட்களில் சாமிகள் எனக்கு எழுதி அனுப்பி

வைத்த பேரன்பை நான் எப்படிப்போற்றுவதென்றே எனக்குத் தெரிய வில்லை. ஒரு காரியத்தை எடுத்துக்கொண்டால் அதை மங்களகரமாக உடனே இனிது முடித்துக் கொடுப்பது சாமிகளது இயல்பு. இது பெரிய வர்கள் இயல்பு.

"ஏழு கடல்களையும் எழுதும் மையாக்கினாலும், மரங்களை எழுது கோலாக்கினாலும், உலகத்தையே எழுதும் காகிதமாக்கினாலும் கடவுளுடைய பெருமையை எழுதிவிடமுடியாது" என்று கூறுகின்றார் கபீர். உண்மை தான்! பெரியவர்களுடைய பெருமையைக்கூட எழுத நம் ஆயுள் போதாது. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளைப் பற்றி நாம் தெரிந்துகொண்டுள்ளதும் ஓரளவுதான். கடல் நீரைப்படியால் அளக்கமுடியுமா? அதுபோன்றது தான் சாமிகளைப் பற்றி முழுமையும் எழுதமுயல்வது! கூடிய வரையில் சாமிகளது இளம்பிராய நிகழ்ச்சிகளை பூர்த்தி செய்துவிட்டேன் என்று நினைத்தேன். அது உண்மையல்ல என்பதை நான் அறிந்துகொள்ளும் முறையில் சாமிகள் திருமொழிகள் அவர் இளம்பிராயத்தில் நடந்த இரண்டு நிகழ்ச்சிகளை எனக்குக் கொடுத்துதவின. சாமிகள் குழந்தையாக தொட்டிலில் படுத்து உறங்கும்போது அவர் தெய்வாம்சத்தைக்காட்டும் பல அற்புதங்கள் நடந்துள்ளதை நாம் 7, 8 பக்கங்களில் படித்து மகிழ்ந் தோம். ஒரு சமயம் சாமிகளின் பாட்டி குழந்தை இராமசாமி தொட்டிலில் தூங்கிக் கொண்டிருக்கும் வீட்டுக்குள் நுழையும்போது குழந்தையிட மிருந்து வந்த குழந்தையின் தாயார், குழந்தை இராமசாமி தெய்வீக அம்சம்கொண்ட குழந்தையென்று சொல்லி, பாட்டிகைகளில் பழமும் விபூதிப் பிரசாதமும் கொடுத்துவிட்டுச் சென்றார். அவர் வெளியே சென்ற அடுத்த நிமிடமே மறுபடியும் வீட்டுக்குத் திரும்பிவிட்டார். திரும்பிவந்தவர் தன் தாயின் கையில் (இராமசாமி பாட்டி) பழமும் விபூதிப் பிரசாதமும் இருக்கக் கண்டு, "யாரம்மா உங்களுக்கு இந்தப் பிரசாதங்களைக் கொடுத்தது" என்று பாட்டியை விசாரிக்க அப்போதுதான் விளங்கியது உண்மை. உண்மையில் தனக்கு பிரசாதங்கள் அருளியதும் குழந்தை தெய்வீக அம்சம் பொருந்திய குழந்தை என்று கூறியதும் உண்மைத் தாயல்ல, தெய்வம்தான்! உண்மைத் தாய் வீட்டுக்குள்புகுந்து பாட்டியைவிசாரிக்கும் தாய். தெய்வத்தாய் குழந்தை தெய்வீக அம்சம் கொண்டுள்ளது என்று உரைத்து மறைந்த தாய். தெய்வாம்சம் பொருந் திய தெய்வீகக் குழந்தையின் தெய்வீகப் பிறப்பை அறிவுறுத்தவே தெய்வமே மானிட வடிவில் குழந்தை இராமசாமியின் தாய் உருவத்தில் வந்துள்ள அற்புதத்தை என்ன வென்பது! இதைக் கண்ட உண்மைத் தாய்க்கும் பாட்டிக்கும், இதைக் கேள்விப்படும் நமக்கும் மயிர்க்கூச்சல் எடுக்கவில்லையா?

இது போன்றே மற்றொரு நிகழ்ச்சி! ஆச்சாண்டாமலைப் பரதேசி யிடம் சாமிகள் கூடி இருந்ததும் அவரோடு பல ஊர்களுக்குச் சென்று மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாகப் பார்த்து வந்ததும் நாம் அறிவோம். சாமிகளின் தெய்வீக அம்சத்தை ஆச்சாண்டாமலைப் பரதேசியும் அறிந் திருந்தார். சாமிகள் தெய்வீகத்தன்மையை அவர் பல சந்தர்ப்பங்களில்

நேரில் கண்டு அனுபவித்தார். ஒரு நாள் காற்றும் பெருத்த மழையும் அடித்தன. இதில் அகப்பட்டுக்கொண்ட குருவும் சீடரும் ஒரு புளியமரத் தடியில் தங்கினர். மழையும் காற்றும் ஓங்கி யடித்தன. ஓய்வதாகத் தெரிய வில்லை. காற்றும் ஓங்கியது. "இன்னும் கொஞ்ச நேரத்தில் இந்த மரம் சாயப் போகின்றது" என்று கூறினர் சிஷ்யர். "அப்படியா" என்று ஆச்சரியத்தோடு ஸ்ரீ ஆச்சாண்டாமலைப் பரதேசி கேட்டுக்கொண்டிருக் கும்போதே புளிய மரம் படபட வென்று சாய ஆரம்பித்தது. சாமிகள் ஒரு பக்கம் ஓட, ஆச்சாண்டாமலைப் பரதேசி இன்னெரு பக்கம் ஓடினர். குரு ஓடிய பக்கம்தான் மரத்தின் கிளை ஒன்றும் சாய்ந்தது. ஒருக்கணம் தாமதித்திருந்தால் அது அவர் மீதே விழுந்திருக்கும். சாமிகள் ஓடிய பக்கம் ஒரு ஆபத்தும் இல்லை. சாமிகள் வாழ்க்கையில் நமக்குத் தெரியாத நிகழ்ச்சிகள் இன்னும் இப்படி எவ்வளவோ உண்டு. ஒவ்வொரு பக்தர் கூறும் விபரங்களைத் தொகுத்துக் கொடுத்தாலே அத்தொகுப்பு ஒவ் வொன்றும் ஒவ்வொரு புத்தகமாக அமையத்தக்க அருமையும் பெருமையும் கொண்டது சாமிகளது வாழ்க்கை நிகழ்ச்சிகள்.

இயல் இசை நாடகம் – என்பவற்றை முத்தமிழ் என்றும் இலக்கியத் தின் மூன்று அம்சங்கள் என்றும் போற்றுகின்றோம். இயல் நூல் உரை நடை நூல். அது கட்டுரை, வியாக்கியானம், உரையாடல், கடிதங்கள், பொன் மொழி, சிறுகதை, நாவல், வரலாறு, சாஸ்திரங்கள், வாழ்க்கை வரலாறு என்று விரிந்து கொண்டே செல்கின்றது. வாழ்க்கை வரலாற் றிலும் இருவகை. ஒருவர் வரலாற்றை மற்றொருவர் எழுதுவது, ஒருவர் வரலாற்றை அவரே எழுதுவது என்று இருவகை. அறுபத்து மூன்று நாயன்மார்கள் வரலாற்றினைச் சேக்கிழார் நம்பியாண்டார் நம்பி முதலி யோர் கவிதை வடிவில் எழுதி வைத்தனர். சங்கரர் இராமானுசர் முதலிய சமயாச்சாரியர்கள் வாழ்க்கை வரலாறுகளையும் மற்றவர்கள் எழுதி வைத் தனர். சமீபத்தில் வாழ்ந்த இராமலிங்க வள்ளலார், இரமண மகரிஷிகள், சீரடி சாயிபாபா முதலிய மகான்கள் வரலாற்றையும் அவர்களோடு பழகிய பக்தர்கள் எழுதி வைத்துள்ளனர்.

அண்மையில் வாழ்ந்த ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருடைய வாழ்க்கை வரலாற்றை அவருடைய சீடர் சுவாமி சாரதானந்தா அவர்கள் ஐந்து பாகங்களில் வங்காள மொழியில் எழுதி இருக்கின்றார். அவற்றை சுவாமி ஜகதானந்தா அவர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கின்றார். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் வாழையடி வாழையென வருகின்ற திருக் கூட்டத்தின் திருமரபில் உதித்துள்ள பெரியவர். பதினெண் சித்தர் பரம் பரையில் வந்துள்ள சித்தர் அவர். சமயக்குரவர்கள் ஆழ்வார்கள் போன்று உலகம் உய்ய வாய்த்துள்ள அவதார புருடர் அவர்; அருணகிரி, தாயுமானர், இராமலிங்க வள்ளலார் போன்ற சிவராஜயோகி அவர்; இராமகிருஷ்ண பரமஹம்சர், சீரடி சாயிபாபா, இரமண மகரிஷி போன்ற ஆத்மப் பெருஞ்ஜோதி அவர்: என் கடன் பணிசெய்து கிடப்பதே என்ற அடிப்படையில் வாழ்க்கையை வகுத்துக்கொண்டு நம்மிடையே உலவிவரும்

கண்கண்ட நடமாடும் தெய்வம் அவர். சாமிகளுடைய பேரன்பிற்குப் பாத்திரமான பக்தர்களில் ஒருவன் என்றஒரேதகுதி எனக்கு உண்டு. அந்த ஒரே காரணத்தினுல் எனக்கு சாமிகளுடைய வாழ்க்கை வரலாறு எழுதும் கிடைத்தற்கரிய பெரும்பேறு கிடைத்தது. என்னுல் முடிந்த அளவில் இதுவரை சாமிகளைப்பற்றி வந்துள்ள புத்தகங்களைக் கொண்டும், சுமார் ஐந்து வருடங்கள் சாமிகளோடு பழகிவரும் அனுபவத்தைக் கொண்டும் சாமிகள் வாழ்க்கை வரலாற்றை எழுதி இருக்கின்றேன். 150 பக்கங்களில் எழுதி முடிக்கலாம் என்று ஆரம்பித்த இந்நூல் ஆயிரம் பக்கங்களுக்கு மேல் விரிந்து இருப்பது சாமிகளுடைய திருவருள்தான்!

இது ஒரு பெரிய புத்தகமாக அமைந்துவிட்டது. பக்கங்களும் ஆயிரத்துக்குமேல் விரிந்துள்ளதால் இது ஒரு பெரிய புத்தகம். எழுதியுள்ள விஷயங்களும் பெரிய விஷயங்கள் — ஆன்மாவைப்பற்றியும், ஆத்மீக முயற்சியைப்பற்றியும், இராஜயோகத்தைப்பற்றியும், நமசிவய மந்திரத்தைப் பற்றியும், கடவுளைப்பற்றியும் உள்ள பெரிய விஷயங்கள். இதில் நடுநாயக மாக, வரலாற்றுத் திருத்தலைவராக விளங்குபவரும் ஒரு பெரியவர்: இல்லற வாழ்விலும் அவர் பெரியவர்; துறவற வாழ்விலும் அவர் பெரியவர்; பேராற்றல் துறைகளிலும்அவர் பெரியவர்; பேரற்புதங்கள் ஆடிக்காட்டுவதி லும் அவர் பெரியவர். இத்தகைய பெரியவர் புத்தகத்தை அடியேன் எழுதி முடித்தது சாமிகளது திருவருள் கடாக்ஷம் என்றுதான் சொல்லவேண்டும். இந்தப் பெரிய வேலையை ஒருவிதப் பிழையில்லாது செய்யவேண்டுமென்று பெரிதும் முயன்றேன். ஆனுல் என்னையும் மிஞ்சி சில அச்சுப் பிழைகள் ஏற்பட்டுள்ளன. முக்கிய பிழைகளை பிழைதிருத்தம் என்ற பகுதியில் சேர்த்து இருக்கின்றேன். எந்த பிழைகள் இருந்தாலும் பக்தர்கள் என் குற்றங்களை குணமாகக் கொண்டு என் பிழை பொறுத்தருள வேண்டு கின்றேன். ஒரு பிழை விளக்கம் — 647ம் பக்கத்தில் மண்விளக்கொன்று ஒரு பக்தர் வீட்டில் கிடைத்ததைப்பற்றி கூறி இருக்கின்றது. உண்மையில் அது நடந்த இடம் சென்னை பக்தர் திரு. T. S. S. நடராஜன் இல்லம், அது கிடைத்ததும் திருமதி நடராஜன் அவர்களுக்கே. இதைப்பற்றி நான் திரு. நடராஜன் அவர்களிடம் சொல்லி என் பிழையை மன்னிக்கவேண்டிய போது பக்தர் கூறிய மொழிகள் என்னை முற்றும் கவர்ந்தன. ''புத்தம் புதிய அகல் விளக்கு கிடைத்துவிட்டதனுல் எங்களுக்கு அளவிட முடியாத மகிழ்ச்சிதான். சாமிகள் இந்த அகல் விளக்கு போன்ற சுபமங்களப் பொருள்களை எங்களுக்கு மட்டுமா அருள்கின்றுர். திரு. P. S. பாஷ்யம் தம்பதிகளுக்கும், சாமிகளோடு தொடர்புகொண்ட ஒவ்வொரு தம்பதி களுக்கும் மனமுவந்து அருள்கின்றுர். ''சாமிகள் இப்படி எவ்வளவோ குடும்பங்களுக்கு அருள் விளக்குகள் வழங்கி வருகின்றுர்! எவ்வளவோ விளக்குகளை ஏற்றி விளங்கவைக்கின்றுர்'' என்ற உண்மையையும் நீங்கள் விளங்கவைத்திருக்கின்றீர்களே'' என்று திரு. நடராஜன் கூறி என் மன அயர்வை நீக்கினுர்.

சாமிகளுடைய வாழ்க்கை வரலாற்றில் எல்லா இலக்கிய மங்களச் சுவைகளுமுள்ளன. சாமிகளுடைய வாழ்க்கை வரலாற்றில் சிறுகதை

இலக்கியச்சுவை நிறைந்த நிகழ்ச்சிகள் உண்டு. பள்ளியில் படிக்கும் போது கணபதி ஆசிரியருக்குப் பாடம் புகட்டியது (பக்கம் 65, 69) ஒரு கெட்ட மந்திரவாதி படாதபாடு பட்டது (பக்கம் 80) வாய்ப்பந்தல் மாப்பிள்ளைக் கேலிக்கூத்து (பக்கம் 83-86) ஜமீனில் பெருந்தொகை கட்டிய நிகழ்ச்சி (பக்கம் 143) ஒரு வீண் கர்வியின் போக்கை மாற்றியது (பக்கம் 399) முரண்பட்ட பிடிவாத குணமுடைய கணவன்மார்கள் திருந்தியது (பக்கம் 406, 622-623) — இவைகளில் சிறுகதை இலக்கியத்தேன் சொட்டவில்லையா? சாமிகளுடைய கற்பனையும் கலைப்பேராற்றலும் பெரு நாடகாசிரியர்களான ஷேக்ஸ்பியர், காளிதாசன் போன்ற பெரு நாடகாசிரியர்களையும் நம் மனக்கண்களுக்குமுன் கொண்டுவருகின்றன குமாரி இந்திராவுக்கு மாப்பிள்ளை காட்டுகின்ற அற்புதம் (பக்கம் 561), மருமகன் மனநிலையை மாற்றுகின்ற அற்புதம் (பக்கம் 622-623) காளிதாசன் 'சாகுந்தலம்' நாடகத்தையும் ஷேக்ஸ்பியர் 'நடுக்கோடை காலத்து இரவுக் கனவு' (The Midsummer Nights' Dream) நாடகத்தையும் நம் நினைவுக்குக் கொண்டுவரவில்லையா? தனக்கு மணமுடிக்க ஏற்பாடாகி இருந்த சிறுபெண்ணை முதன்முதலில் சாமிகள் அம்மியில் மஞ்சள் அரைத்துக்கொண்டிருக்கும்போது பார்த்தது, கல்யாணமானவுடன் கற்கண்டு வரவழைத்துக்காட்ட புது மனைவியிடமிருந்து ஐந்துரூபாய் சாமிகள் வாங்கிக்கொண்டது, சாமிகளும் அம்மா அவர்களும் சேர்ந்து 42 ஆண்டுகள் வாழ்ந்த வாழ்வில் 24 ஆண்டுகள் புருடன் மனைவி உறவுகொண்டு வாழ்வாங்கு வாழ்ந்த நாட்கள், "பெண் ஆணுக்குமுன் போய்விட வேண்டும். அவளுடைய அருமையை அறிந்தவர் அவளோடு பழகிய ஆண்தான். நான் எல்லா பக்தர்களுக்கும் அடியான். நான் உங்கள் அம்மாவுக்கும் அன்புக்கு அடியான்" என்ற சாமிகள் மொழிகள் — இவைகளைக்கொண்டுள்ள திருமண வாழ்வு என்ற 17வது அத்தியாயம் நாவல் மணங்கொண்டு நம்மை மகிழ்விக்கவில்லையா? சிவராஜயோகசாமிகள், நமசிவாய சாமிகள், வைத்திநாத சாமிகள், மணிமந்திர சுபமங்கள சாமிகள் அத்தியாயங்கள் யோகநூல், மந்திரநூல், ஔடதநூல், மணிநூல் இவைகளின் சுவைகளை நமக்குக் காட்டவில்லையா? சாமிகளுடைய 'நமசிவய' கட்டுரை ஒன்றே போதாதா இந்தப் புத்தகத்தின் மதிப்பை உயர்த்த! சாமிகளது வாழ்க்கை வரலாறு நூல் முத்தமிழ் சுவை கமழும் பொருள் வளம் கொண்டுள்ளது. மெய்ப்பொருளும் அருளும் நிறைந்துள்ள இந்த நூல் சாமிகளுடைய திருவருள் வாக்குகளையும் திருநெறி திருஉரையாடலையும், உதயப் பொன்மொழிகளையும் திரட்டிக் 'கருத்தைக் கருத்தாட்டும் சாமிகள்' என்ற அத்தியாயத்தையும் பக்தர்களுக்கு அளிக்கின்றது.

இவை மட்டுமா? ஸ்ரீ பன்றிமலை சாமிகள் வாழ்க்கை வரலாறு என்றவுடன் ஒரு அற்புத புருடர் வாழ்க்கை வரலாறு என்று எண்ணி பக்கங்களைத் திருப்பி ஒவ்வொரு பக்கத்திலும் சாமிகள் ஆடும் ஒவ்வொரு அற்புதத்தையும் பார்க்க ஆவலுறுகின்றது நமது உள்ளங்கள். உண்மை! இப்புத்தகத்தில் பல இடங்களில் சாமிகளது உதயப் பொன்மொழிகள் பரந்து இருப்பது போன்று சாமிகளது அற்புதத் திருவிளையாடல்களும் விரித்து

உரைக்கப்பட்டுள்ளது. அற்புதத்தைப் பற்றி அற்புதமாக எழுதுகின்றார் திரு. ஜோல்ட் ஆரடி (Zsolt Aradi) எனும் ஹங்கேரிய மேதை தான் எழுதியுள்ள அற்புதங்களைப் பற்றிய புத்தகத்தில் (The Book of Miracles) அற்புதத்தை விளக்கவந்தவர் அதை கடவுள் செயல் என்கின்றார். கடவுள் இருள் அகற்ற அருள் விளக்கம் தரும்போதும், மக்களை எச்சரிக்கும் போதும், மக்களுக்கு உதவும் போதும், அற்புதங்களால் மனிதனின் நிலையை உயர்த்தி அவனைத் தன்னோடு ஒன்றாக்கிக்கொள்ள விரும்பும் போது விளையாடுகின்ற கடவுள் செயலே அற்புதமென்று அழகாகச் சொல்கின்றார். "அற்புதம் அடிக்கடி நடப்பதல்ல, அது நல்லதற்கு நல்லபடி நடக்கவேண்டும். அதற்கு அருள் முத்திரை உண்டு, அதனால் ஒரு தனி நலமோ ஒரு பொது நலமோ உண்டு. உடனடியாக ஏற்படுவதாயிருந்தாலும் அது படிப்படியாக உயர்ந்து கொண்டே விரியும் இயல்பினது, அதன் பயன் நீடித்திருக்க வேண்டும்" என்றும் கூறுகின்றார்.

கிறித்து தேவர் வாழ்க்கையில் 41 அற்புதங்கள் நடந்ததென்பர். நமது சாமிகள் வாழ்க்கையில் நூற்றுக் கணக்கில் அற்புதங்கள் நடந்திருக்கின்றன, நடந்து வருகின்றன. இந்தப் புத்தகத்திலும் வெளியாகாத பல அற்புதங்களும் உண்டு. மதுரை டாக்டர் சுப்பையா அவர்கள் வீட்டில் ஒரு தட்டாரப் பூச்சி சாமிகள் வரவழைத்தது இந்தப் புத்தகத்தில் வெளிவராத ஒரு அதிசயம். இப்படி பல அற்புதங்கள் உண்டு. ஒரு சில சந்தர்ப்பங்களில் சாமிகள் புரிகின்ற செயல்கள் ஆசிய சிகரத்தையும் எட்டிவிடும். ஒரு நாள் சாமிகள் ஒரு பெரிய மனிதர் வீட்டுக்கு அழைக்கப்பட்டார். பூஜை நேரத்தில் பூஜை அறை மூடப்பட்டது. சாமிகள் பூஜை அறையில் என்னதான் செய்கின்றார் என்பதை அறிய ஆவலுற்ற பெரிய வீட்டார் யாருக்கும் தெரியாமல் ஒரு ஏற்பாடு செய்திருந்தார். அது சாமிகளுக்கா தெரியாமலிருக்கும்? மூடிய பூஜை அறையில் பூனை புழக்கடையில் புழங்குவது போன்ற கர்புர் என்ற சப்தம் அறை மேல் மூலை ஒன்றிலிருந்து கேட்டது. சாமிகளுக்கு விஷயம் புரிந்து விட்டது. தலையை பூமியில் வைத்து கால்களை மேலே தூக்கி சிரசாசனத்தில் அமைந்து விட்டார் சாமிகள். சாமிகள் பூஜை அறையில் என்ன செய்கின்றார் என்பதை இரகசியமாக அறிந்து கொள்ளச்செய்த ஏற்பாட்டின்படி, பிறர் உதவியின்றி தானே போட்டோ படம் எடுக்கும் போட்டோ கருவி தானே இயங்கி 'கர்புர்' என்ற சப்தம் செய்து போட்டோக்களை எடுத்து விட்டது. நெகடிவ்வைப் பார்க்கும் போது தலைகீழ்ப் படம்தான் அவருக்கு கிட்டி இருக்கும். "உண்மையை இப்படியெல்லாம் கண்டுகொள்ள முடியுமா?" என்று சாமிகள் இதைச்சொல்லி பக்தர்கள் எல்லோரையும் மகிழ்ச்சியில் திளைக்கவைத்தார். இது போன்ற நிகழ்ச்சிகள் இன்னும் எவ்வளவோ?

சாமிகள் அருமையையும் அருளையும் மக்கள்மட்டுமா அனுபவிக்கின்றனர்? 1969 ஏப்ரல் மாதம் ஒருநாள் திண்டுக்கல்–திருச்சி ரோட்டின் அருகாமையில் முல்லைப்பாடியில் உள்ள சாமிகள் தோட்டத்திற்கு சாமிக

ளோடுச் செல்லும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. சாமிகள் தோட்டத்தில் உள்ள பண்ணையாள் ஒரு கிளி வளர்த்து வருகின்றார். சாமிகளைக் கண்ட இந்தக் கிளி பறந்தோடி வந்து சாமிகளின் வலது தோளில் உட்கார்ந்தது. சாமிகளுடைய அருள் பிரகாச முகத்தையே கூர்ந்து கவனித்து சாமிகளையே சுற்றிச்சுற்றி வலம் வந்தது. சாமிகள் அந்தத் தோட்டத்தில் இருக்கும் வரை சாமிகளைவிட்டு நகரவில்லை இந்த பைங்கிளி. இந்தக் கிளி சாமிகளைக் கண்டதும் அதுதான் முதல்முறை என்பதையும் அறிந்த எங்கள் ஆச்சரியம், அந்தப் பணியாள் கூறிய மொழிகளைக்கேட்டு பன்மடங்கு விரிந்தது. "முருகனிடத்தில் அருணகிரியார் நெருங்குவதில் என்ன ஆச்சரியமிருக்கின்றது? சாமிகளின் அருமை பெருமைகளை அறிந்து கொண்டதனுல்தான் இந்தப் பச்சைக்கிளியும் அவரைவிட்டு நகர மனம் வராமலிருக்கின்றது" என்று கூறிய அந்தப் பணியாளின் வார்த்தைகளில் எவ்வளவு உண்மை பொதிந்துள்ளது!

முத்தமிழும் முத்தமிழ்ப் பயனுமான முழுஞான தெய்வ மாமேதை நமது திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள். அவர் கருணை சுரந்து நிற்கும் பேரொளி காட்டும் மெஞ்ஞான தீபமாய் விளங்கும் ஸ்ரீ தத்துவப் பெருந்தெய்வம் என்பதை பக்தர்களாகிய நாம் உணர்ந்து சாமிகள் காட்டும் வழியில் சென்று அவர் துணைகொண்டு பிறவிப் பெரும்பயனை அடைந்து வாழ்வோம்.

"முத்துக் குலுங்க இளமுத்துநகை சிந்துகின்ற
முத்தான வள்ளிமனம்பறித்த மணவாளன்
முத்துக்குமரன் அருள்பெற்ற கலை முத்தே!
முத்தான மொழி உதிரும் மெஞ்ஞான சுவை முத்தே!
முத்துக்கு ஒளி அருளும் அருளாளன் பெருமையெல்லாம்
முத்தான சொற்களிலே மெத்தளிக்கும் மெய்குருவே!
முத்தான மாமதுரை பன்றிமலை பெற்ற முத்தே
முத்தமிழ் முத்தே மணிமுத்தே முத்தருளே"

என்று போற்றி சாமிகள் பாதத்தை வணங்குவோம்.

சௌமிய வருடம் 2ந்தேதி
13—4—1969.

சாமிகள் பாதமலர்களை வழுத்துகின்ற
**T. D. மீனுட்சிசுந்தரம்**

# படங்கள்

1. ஸ்ரீ தத்துவ தெய்வப் படம்.
2. தாயார் திருமதி அங்கம்மாளோடு சாமிகள்.
3. சாமிகள் தகப்பனர், தாயார், பாட்டியார் கவுண்டாயி அம்மாள் அவர்கள்.
4. தெய்வநிலை எய்தியுள்ள குமாரி இரத்தினம்மாள்.
5. குதிரை வீரர் திரு. இராமசாமிப் பிள்ளை அவர்கள் (சாமிகள்)
6. சாமிகளோடு அன்னையார் அவர்களோடு புதல்வர் திரு. பேச்சிமுத்து ராஜாவும் மருமகள் திருமதி இராமகிரி அவர்களும்.
7. சாமிகளோடு பேரக்குழந்தைகள்.
8. சாமிகளோடு திருச்சி டாக்டர் திரு. T. V. அரங்கனதன் அவர்கள் குடும்பத்தார்.
9. யமுனை நதிக்கரையில் சாமிகளோடு பக்தர் திரு. T. V. கமலசாமி.
10. சாமிகளோடு தமிழ்நாடு அரசாங்கத்தின் முன்னுள் முதல் அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள்.
11. சாமிகளோடு முன்னுள் சென்னை ஹைகோர்ட் நீதிபதி திரு. ராஜ கோபாலன் அவர்கள்.
12. அன்னையார் அவர்களோடும் சாமிகளோடும் நடிகர் திலகம் பத்ம பூஷணம் திரு. சிவாஜி கணேசன் அவர்கள்.
13. சாமிகளுடன் இந்நூலாசிரியர் பக்தர் T. D. மீனுட்சிசுந்தரமும், டாக்டர் T. V. அரங்கனதன் அவர்களும்.
14. நியூ டெல்லியில் ராஷ்டிரபதி பவனத்தில் மொகல் பூங்காவில் நின்ற திருக்கோலத்தில் சாமிகள்.
15. இயற்கை யானையோடு சாமிகள்.
16. மகாபலிபுரத்தில் சிற்ப யானையோடு சாமிகள்.
17. பம்பாய் விமான நிலையத்தில் நின்ற திருக்கோலத்தில் சாமிகள்.

18. பம்பாய் விமான நிலையத்தில் சாமிகளோடு பக்தர்கள்.

19. சென்ற ஜென்மத்தின் சமாதியின் மேல் இப்பொழுது சாமிகள் நின்று அளிக்கும் காட்சி.

20. தெய்வங்களுடன் நடமாடும் தெய்வம் நமது சாமிகள்.

21. அன்னையார் திருமதி பாப்பாத்தி அம்மாள் அவர்களோடு சாமிகள். (அமர்ந்த திருக்கோலம்)

22. அன்னையாரோடு அமர்ந்த திருக்கோலத்தில் சாமிகள்.

23. அன்னையாரோடு நின்ற திருக்கோலத்தில் சாமிகள்.

24. நின்ற திருக்கோலத்தில் அன்னையார் அவர்கள்.

25. நின்ற திருக்கோலத்தில் சாமிகள்.

26. சாமிகள் திருமுகம்.

27. அமர்ந்த திருக்கோலத்தில் சாமிகள்.

28. ரிஷிகேசம் செல்லும் சாமிகள்.

29. சாமிகள் திரு இல்லம் ' இராஜஇரத்ன விலாஸ் ', திண்டுக்கல்.

30. அன்னையார் அவர்களுக்கும் சாமிகளுக்கும் பாத பூஜை வைபவம் (கலர் படம்)

31. ஓம் வடிவுள் தெய்வங்களோடு நடமாடும் தெய்வம் (கலர் படம்)

32. அமர்ந்த திருக்கோலத்தில் சாமிகள் (கலர் படம்)

33. அமர்ந்த திருக்கோலத்தில் சாமிகள். (கலர் படம்)

---

# ஸ்ரீ தத்துவ தெய்வம்
# திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள்

## உள்ளடக்கம்

## திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்
பாகம் — இரண்டு

சுபம்.




**அமர்ந்த திருக்கோலத்தில் சாமிகள்**

"தாமரை இருக்கைதாங்க தாழ்வடம் மார்பில்ஆடப்
பூமணத்தென்றல் பாதப் போதினை வருடிநிற்க
ஓமெனும் பிரணவநாதத்து உருவமாய் பன்றிவெற்பின்
கோமகன் கொலுவீற்றுள்ளார் குவலயம் இன்பம் எய்த

(திரு. ரா. பு. தங்கராசன்)



**திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள்**

''குருவடிவாக வந்து எமக்கு இன்பம்
கொடுக்கும் குமரனே போற்றி
கருணையால் எங்கள் கடமையில் வெற்றி
காட்டிடும் கந்தனே போற்றி
ஒருமையில் ஓங்காரப் பொருள் உணர்த்தும்
ஒளிமிகு சித்தனே போற்றி
திருநிறை பன்றிமலை வளர் ஞானத்
தெய்வமே உய்வருள் போற்றி''

(கவியோகி. சுத்தானந்த பாரதி)

# 1. தெய்வ அம்சம்

रेखामयध्वज सुधाकल शातपत्र
वज्रांकुशांबुरुह कल्पक शङ्खचक्रैः ।
भव्यैरलंकृततलौ परतत्त्वचिह्नैः
श्रीवेंकटेश चरणौ शरणं प्रपद्ये ॥

" ரேகாமயத்வஜ ஸுதாகல சாதபத்ர
வஜ்ராங்குசாம்புருஹ கல்பக சங்கசக்ரை :
பவ்யைரலங்க்ருததலௌ பரதத்வசிஹ்னை :
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே "
—ஸ்ரீ வேங்கடேச்வர ப்ரபத்தி.

" நான் ஆதிக்கணபதியை வணங்கிப் பூஜையை ஆரம்பிப்பதற்கு முன், இரண்டு இடங்களுக்குச் சென்று வருவேன். அந்த இரண்டு இடங்களில் ஒன்று பழநி, மற்றொன்று, திருப்பதி" என்று திருவாய் மலர்ந்தருளுவர் ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகள். இப்படிச் சொன்னவுடன் சாமிகள் பழநி தண்டபாணியையும் திருப்பதி வேங்கடேசப் பெருமானையும் முதலில் தொழுதுவிட்டுத்தான் பூஜையை ஆரம்பிக்கின்றார் என்று நாம் எண்ண இடமுண்டு. சாமிகள் அனுதினமும் காலையிலும் மாலையிலும் பூஜைசெய்கின்றார். பூஜை அறைக்குள் சென்றவுடன் பூஜை அறையை மூடிக்கொள்கின்றார். அதன்பின், பழநிக்கும் திருப்பதிக்கும் சென்று இறைவனை நேரில் கண்ணாரக் கண்டுவருகின்றார். அதன்பின், பூஜையைத் தொடர்ந்து செய்கின்றார். இதைத்தான் சாமிகள் சொல்லாமல் சொன்னார். இதில் ஆச்சரியப்படவேண்டியதற் கொன்றுமில்லை. சாமிகள் தொட்டால் மலர் கற்கண்டாகிறது; உதிரி மலர்கள் மாலையாக மாறுகின்றன; பொரி நெல்லாகின்றது; தண்ணீர் பன்னீராக மணம் பெறுகின்றது. சாமிகள் தொடக்கூட வேண்டியதில்லை; நினைத்தாலே போதும், திவ்விய பரிமளம் குறிப்பிட்டவர் கையிலிருந்து கமகமவென்று வீச ஆரம்பிக்கின்றது. திருமுருகனே சாமிகள் அழைப்பிற்கிணங்கி ஓடோடியும் வருகின்றான். முருகனை நாம் நேரில் பார்க்க முடியாவிட்டாலும் பழநி ஆண்டவனின் அருள் பிரசாதத்தின் மணத்தை உடனே அடைகின்றோம். வாசமுள்ள

பழநி விபூதி உடனே நம்மை நெருங்கிவந்து அதன் அருள் சக்தி யில் ஆட்கொள்ளுகின்றது. நம் மெய்யும் மனமும் ஒரு சொல்லொ ணாத தெய்வீக இன்பத்துள் திளைத்து இறும்பூ தெய்துகின்றது. இத்தகைய அருள் சக்திமிக்க சாமிகளுக்கா சாதிக்க முடியாத தொன் றுளது! அவராலா நினைத்த மாத்திரத்தில் பழநிக்கும் திருப்பதிக் கும் சென்றுவர முடியாது?

நமது நாட்டில் எண்ணிறந்த திருத்தலங்கள் உண்டு. அவை களுள் தென்னாட்டில் ஆயிரக்கணக்கில் பக்தர்களைத் தம் வசமாக்கி, அருள்பாலிக்கின்ற கலியுக மெய்த்தெய்வங்களாக — வரப்பிரசாதி களாக — பழநி தண்டபாணியும் திருப்பதி வேங்கடேசப்பெருமானும் விளங்குகின்றார்கள். இத்தெய்வங்களை வேண்டாத பக்தர்கள் இல்லை. இத்தெய்வங்களுக்குக் காணிக்கைகள் செலுத்தாத குடும்பங்களில்லை. தீராத குறையெல்லாம் தீர்த்தருளும் தெய்வமென்று போற்றாதாரும் இல்லை. தெய்வ வழிபாட்டில் ஈடுபாடு கொண்ட சாமிகளும் வருடத்திற்கொருமுறை திருப்பதிக்கும் அடிக்கடி பழநிக்கும் தம் மெய் யன்பர்களோடு திவ்ய தெரிசனத்திற்குச் சென்று வருவதும் இக் கோயில்களில் எழுந்தருளியிருக்கும் ஆண்டவனின் சக்தி விசேடம் தான் என்பதில் ஐயமில்லை. சாமிகளோடு 1965-ஆம் ஆண்டில் திருப்பதிக்கும் பழநிக்கும் சென்றுவந்த பேறு அவர் அடியார்களாகிய எங்களுக்குக் கிடைத்தது. இந்தப் புதிய அனுபவம் என்னைப் போன்றவர்களுக்குச் சாமிகளோடு நெருங்கிப் பழகும் பாக்கியத்தை யும் தந்தது. சாமிகளின் பேரருள் சக்தி, தெய்வ அம்சம், ஆனந்த சொரூபம், சித்து விளையாட்டு, ஆத்மீக அறிவு, அருள் ஜோதி வாக்கு, பல்கலைப் பேராற்றல், மெஞ்ஞானக் கலையனுபவம்-இவைகளை யெல்லாம் நேரில் கண்டோம், கேட்டோம், அனுபவித்தோம். நாங்கள் கூடினோம், குழைந்தோம் பரவசப்பட்ட நிலையில்; நாங்கள் பேசினோம், புகழ்ந்தோம் பரவசப்பட்ட நிலையில்; நாங்கள் பாடினோம், ஆடினோம் பரவசப்பட்ட நிலையில். பரவசப்பட்ட நிலையில்! அப்படியென்றால்? ஆம், **அவர் வசப்பட்ட நிலையில்தான்!** அவர் வசப்பட்ட நிலை பேரானந்தப் பெருவாழ்வு நிலை என்று சொல்லவும் வேண்டுமோ?

சாமிகளின் தெய்வாம்சத்தை அறிவுறுத்தும் சாமிகளிடம் உள்ள உயிர்மெய் சின்னங்களின் பெருமையை இவ்விடத்தில் கூறுவது பொருந்தும். நான் ஒருமுறை சாமிகளைத் தரிசித்துவரத் திண்டுக் கல்லுக்குச் சென்றேன். அப்போது அங்கு வந்திருந்தோர்களுக்குச் சாமிகளின் இரு உள்ளங்கைகளைக் காணும் பாக்கியம் கிடைத்தது. சாமிகளின் உள்ளங்கைகளில் நான் கண்ட மங்கள தெய்வாம்ச ரேகைகள் எங்களை ஆச்சரியத்துள் மூழ்கச் செய்தன. அவருடைய கரங்களில் நாங்கள் கண்ட தெய்வ சின்னங்கள் சங்கு, சக்கரம், அறுகோணம், சேவற்கொடி, திரிசூலம், ஜண்டா, சக்திவேல், வஜ்ர வேல், வெற்றிவேல், வெற்றி வேலுக்குள் அருள்வேல் முதலியன

வாகும். இவைகள் மட்டுமல்ல! அவர்கள் திருவடிகளிலும் சங்கு, சக்கரம், திருச்சக்கரத்திற்குள் திருவேல் அமைந்திருக்கின்றன. அவர்கள் திருப்புஜங்களிலும் தெய்வாம்சச் சின்னங்கள் விளங்குகின்றன. இந்தத் தெய்வ அம்சங்களைக் கண்டு நான்பெற்ற ஆச்சரிய மிக்க இன்பத்தை எல்லோருக்கும் எடுத்துச் சொல்லும் வாய்ப்பு திருப்பதியில் கிடைத்தது. அங்குள்ள ஸ்ரீ பண்டித ஜவஹர்லால் நேரு உயர்நிலைப்பள்ளியில் 1965இல் சாமிகளுக்கு ஒரு பெரிய வரவேற்பு அளித்தனர். அந்தச் சந்தர்ப்பத்தில் நான் சாமிகளின் அருமை பெருமைகளைத் தொகுத்துரைத்தபோது, "சாமிகள் திருமாலின் பக்தர்; திருமாலின் மருகனின் பக்தர். அத்தனுடைய அருள் நிறைந்திருப்பதாலல்லவா அவர் கைகளில் சங்கும் சக்கரமும் அமைந்திருக்கின்றன. முருகனருள் பூரணமாக இருப்பதாலல்லவா கைகளில் வேலும், சேவல் கொடியும், ஐண்டாவும் அமைந்திருக்கின்றன. அவரிடம் சிவசக்தி குடிகொண்டிருப்பதாலல்லவா அறுகோணமும் திரிசூலமும் அமைந்திருக்கின்றன," என்றேன்.

என் மனத்தில் உதித்த இந்த எண்ணத்தை நான் எடுத்துரைத்த மறுநாள் வேங்கடாசலபதி சுப்பிரபாதம் பதிப்பொன்றை நான் வாங்கி வந்தேன். அதைக்கண்ட மேல் நாட்டுப் படிப்பும் அனுபவமும் பெற்ற பிரபல கண் டாக்டர், எனது மதிப்பிற்குரிய அருமை நண்பர் திரு. T. V. அரங்கநாதன் அவர்கள் தான் அனுதினமும் சுப்பிரபாதத்தைப் பாராயணம் செய்து வருவதைச்சொல்லி அந்தப்பதிப்பிலிருந்து ஒரு சுலோகத்தை என்னை வாசிக்கச் சொன்னார். நான் உடனே புத்தகத்தை விரித்தேன். விரித்த பக்கத்தி லுள்ள ஒரு சுலோகத்தை வாசித்தேன். ஸ்ரீ வேங்கடேஸ்வர ப்ரபத்தி யிலிருந்து ஒரு சுலோகம் :

रेखामयध्वज सुधाकल शातपत्र
वज्रांकुशांबुरुह कल्पक शङ्खचक्रैः।
भव्यैरलंकृततलौ परतत्त्वचिह्नैः
श्रीवेंकटेश चरणौ शरणं प्रपद्ये ॥

"ரேகாமயத்வஜ ஸுதாகல சாதபத்ர
வஜ்ராங்குசாம்புருஹ கல்பக சங்கசக்ரை :
பவ்யைரலங்க்ருததலௌ பரதத்வசிஹ்னை :
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே"

இதனடியில் இருந்த சுலோகத்தின் உரையையும் வாசித்தேன். "நீயே வைகுண்ட நாதன் என்பதற்கு அத்தாக்ஷி, உன் திருவடித் தலங்களில் அமைந்திருக்கும் சங்குரேகை, சக்கரரேகை முதலியவைகள். இவை மற்ற தெய்வங்களுக்கு இல்லை"— இதுவே அந்த சுலோகத்தின் சுருக்க உரை. அதன் விளக்க வுரையைக் கவனிப்போம். "உன்னுடைய திருக்கரங்களிலும் திருவடி

களிலும் தெய்வாம்சச் சின்னங்களாக ரேகைகள் படர்ந்திருக்கின்றன. த்வஜஸ்தம்பம், அம்ருத கலசம், மா இலைகள், வஜ்ராயுதம், கற்பக விருக்ஷம், சங்கு சக்கரம்—இவைகள் இருக்கின்றன. இத்தகைய தெய்வமாகிய உன் பாதார விந்தங்களுக்கு அடியேன் வணக்கம்."

இந்த விளக்கத்தைக்கண்ட எங்களுக்கு ஆச்சரியத்துக்கு மேல் ஆச்சரியமாக இருந்தது. சாமிகளுக்கு திருக்கரங்களிலும் சங்குசக்கர ரேகைகள் மட்டுமல்ல, மற்ற தெய்வாம்ச ரேகைகளும் அல்லவா கூடி இருக்கின்றன. இவைகளை நேரில் கண்டதே எங்களை ஆச்சரியத்துள் மூழ்கடிக்கச் செய்தது. அதிலும் இந்த ரேகைகளின் குண விசேடத்தைக் கூறிய இந்த சுலோகத்தையும் இதன் உட்பொருளையும் கண்டபோது, எங்கள் ஆச்சரியம் பன்மடங்கு விரிந்தது. முதல் நாள் எடுத்துரைத்த உண்மைக்கு விளக்கம் கூறுவது போலவும் ஆதாரம் கிடைத்தது போலுமல்லவா இந்தச் சுலோகம் அமைந்திருக்கின்றது! சாமிகளுடைய அங்க அடையாளங்களின் பேருண்மையை எடுத்துரைக்கவே இப்புத்தகமும் அதில் அடங்கிய சுலோகமும் கிடைத்தது என்று சொல்லி அகமகிழ்ந்தோம். உண்மையாகவே இந்தச் சுலோகம் ஒரு பேருண்மையைத்தான் எடுத்துரைக்கின்றது. சங்கு, சக்கரம், துவஜஸ்தம்பம், அம்ருதசலசம், மா இலை, வஜ்ராயுதம், கற்பக விருக்ஷம், அறுகோணம், சேவற்கொடி, வேல், சக்திவேல், ஜண்டா, திரிசூலம் — இவைகளெல்லாம் தெய்வங்களின் திருச்சின்னங்கள். இந்த ரேகைகளை உடையவர்கள் தெய்வாம்சம் பொருந்தியவர்கள். அதனாலல்லவா கலியுகவரதன் ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் கோயிலுக்கு ஆயிரக்கணக்கில் பக்தர்கள் செல்கின்றார்கள்; அன்பே உருவான சாமிகள் இடத்திலும் எண்ணிறந்த அன்பர்கள் வருகின்றார்கள்.

இவைகளை நாங்கள் சாமிகளிடம் கூறி, நாங்கள் அடைந்த பேராச்சரியத்தையும் பெருமகிழ்ச்சியையும் அறிவித்தோம். இவைகளை நிதானமாகவும் புன்முறுவலுடனும் கேட்டுக்கொண்டிருந்த சாமிகள் கூறிய எளியபதிலை என்னென்றியம்புவது! "சாமி, நான் ஒரு முருகபக்தன்; முருகனுக்கு அடியான். நான் திருமுருகனுக்கு ஒப்பானவன் அல்லன். நான் தெய்வமல்லன். நான் தெய்வத்தின் அருளை மக்கள் நன்மைக்காகச் சம்பாதிக்க அரும்பாடுபடுகிறவன். நானும் உங்களைப்போல் ஒருமனிதன். நான் முருகனுக்குத் தொண்டன்; மக்களுக்கும் தொண்டன். இதை முதலில் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும்" என்று சாமிகள் சுருக்கமாகக் கூறினர். அவர்கள் எளிமையை என்னென்றியம்புவது! உண்மைதான், சாமிகள் ஒரு மனிதர்தான். ஆனால், தெய்வீக மனிதர் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்! உண்மையை ஒப்புக்கொள்ள வேண்டியதுதானே!

## 2. பாக்கிய பரணி

"காணுப் பொருளைக் கடவுளை நான் பெற்றெடுத்தேன்
தேடாப் பொருளைத் தெய்வத்தைப் பெற்றெடுத்தேன்"

மதுரை மாவட்டத்தில் பன்றிமலை, ஐயாயிரம் அடி உயரத்தில் கோடைக்கானல் மலைத்தொடர்களில் ஒன்ருக ஓங்கி நிற்கின்றது. பன்றிமலை எனும் கிராமம் இம்மலையின்மேல் அழகாக அமைந் துள்ளது. சுமார் ஐந்நூறு குடும்பங்கள் வாழ்ந்து வரும் இந்தக் கிராமத்தில் சோழிய வேளாளர்களின் இல்லங்கள் நடுநாயகமாகத் திகழ்கின்றன. அவற்றிலும் தனிநாயகமாக மிளிர்கின்றது திரு. ஆறுமுகம் பிள்ளை வீடு. திரு. ஆறுமுகம் பிள்ளை சைவ சமயத்தைச் சேர்ந்தவர். ஸ்ரீ முருகன் உபாசகர். சிறந்த மாந்திரீக சக்தி பெற்றவர். பில்லி, சூனியம் இவைகளால் பாதிக்கப்பட்டவருக்கும், கொடிய வியாதிகளால் பீடிக்கப்பட்டவருக்கும், விஷக்கடி தொந்தரவு களால் அவதிப்படுபவருக்கும் ஓர் அருமை வைத்தியராக விளங்கு பவர். அவர் மிருக வைத்தியருங்கூட. வேளாண்மைத் தொழிலை வளம் பெறச் செய்து வருபவர். தன்னலம் பேணுது பொதுநலம் செய்வதில் ஆர்வமிக்கவர்; வருவிருந்தினரை வரவேற்று உபசரிப் பதில் உத்தமர். இப்படித் தன் சொந்த வாழ்க்கையை வகுத்துக் கொண்ட பொதுத் தொண்டருக்கு உண்மையாகவே வாழ்க்கைத் துணைவியாக அமைந்து உதவியவர் திருமதி. அங்கம்மாள். இவர் களுக்கு ஓர் அருட்குழந்தை அருமையாகப் பிறந்தது. திருமதி. அங்கம்மாளைத் தன் இல்லாளாகக் கொண்ட திரு. ஆறுமுகம் பிள்ளை தனக்கு ஒரு தெய்வ அருள்நிறை பாலன் பிறந்ததைக் கிடைத்த தற்கரிய பேருகக் கருதினர். தங்கள் பூர்வ ஜன்ம பலன் என்றே தாயும் தகப்பனும் உள்ளங் குளிர்ந்தனர்.

'விளையும் பயிர் முளையிலே தெரியும்,' என்பதற்கிணங்கக் குழந்தையின் செயல்கள் இருந்தன. இதைப்பற்றிச் செவி குளிரக் கேள்விப்பட்டிருக்கின்ருேம், படித்துமிருக்கின்ருேம். இருந்தாலும் இவ்விபரங்களை இவ்வருட்குழந்தையைப் பெற்றெடுத்த தாயிட மிருந்தே கேட்டால் எப்படி இருக்கும்? இந்த ஆவலைப் பழநிக்கு ஒருசமயம் சாமிகளோடு வந்திருந்த சாமிகளைப் பெற்றெடுத்த அன்னை அங்கம்மாள் அவர்களிடமே தெரிவித்தோம். சாமிகள்

தெய்வீகப் பிறப்பு என்பதற்குரிய அறிகுறிகள் சாமிகள் தன் கருவில் வளரும்போதே தென்பட்ட விபரத்தை கூறினர் திருமதி. அங்கம்மாள்.

அன்னை கருவுற்றிருந்தாள். வயிற்றில் உள்ள குழந்தை சித்திரை மாதத்தில் பிறக்கப்போகிற தென்பதை அறிந்தபோது, குழந்தை பிறக்கப்போகின்றதே என்ற இன்பத்தை மிஞ்சுவதாக இருந்தது அக்குழந்தை சித்திரை மாதத்தில் பிறக்கப்போகின்றதே என்ற மன வேதனை. இந்த அர்த்தமற்ற மன வேதனையைப் போக்குவிக்க வந்தவர்போல் ஒரு மகான் தோன்றினர். பால சமுத்திரத்தில் தாய் வீட்டில் திருமதி. அங்கம்மாள் ஏழு மாதக் கர்ப்பிணியாகத் தங்கி இருந்தாள். திண்ணையில் அவரது பெற்றோர்களிடம் ஒரு பெரியவர் பேசிக்கொண்டிருந்தது தாய் காதில் விழுந்தது. ''உங்கள் மகளுக்கு ஓர் ஆண் குழந்தை சித்திரை மாதத்தில் பிறக்கப்போ கின்ருன்'' என்று அவர் சொன்ன மொழிகள் உள்ளே கேட்டுக் கொண்டிருந்த தாய்க்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தந்தது. குழந்தை, அதுவும் ஆண் குழந்தையல்லவா பிறக்கப்போகின்றது. அதை முன்னறிவிக்க ஒரு பெரியவரல்லவா வந்திருக்கின்ருர். ''பரணி நட்சத்திரத்தில் பிறக்கப்போகும் அந்த ஆண் குழந்தை தெய்வாம்சம் கொண்ட குழந்தை'' என்று அவர் மேலும் உற்சாகத்தோடு கூறியது காதில் பேரின்பத்தைப் பொழிவதாக இருந்தது. அந்த மகான் அத்துடன் சென்றுவிடவில்லை. அங்கம்மாள் இருந்த இடத்திற்கே வந்துவிட்டார். காசிலிங்கம் என அழைக்கப்படும் அப்பெரியவரின் கம்பீரமான தோற்றம், கனிவு நகை, வெள்ளிக்காப்பும் மோதிரமும் அணிந்து குச்சி ஒன்று பிடித்திருந்த திருக்கோலம் திருமதி. அங்கம் மாளின் பக்தியை ஈர்த்தன. ''இராமனைப் போன்று உனக்கொரு குழந்தை பிறக்கப் போகின்றது. நீ ஒரு பாக்கியவதி'' என்று சொல்லி ஆசீர்வதித்துச் சென்றுவிட்டார் மகான். அவர் சென்று விட்டாலும் அவர் தேனினும் இனிய அமுத மொழிகள் திருமதி. அங்கம்மாளின் காதுகளில் ஒலித்துக் கொண்டே இருந்தன.

மகான் சொல்லியபடியே திருமதி. அங்கம்மாள் ஒரு சுபதினத்தில் தெய்வாம்சம் பொருந்திய ஆண் குழந்தை ஒன்றைப்பெற்றெடுத் தாள். அக்குழந்தையின் அருள் பிரகாசம் கொண்ட முகத்தைக் கண்டு அகமகிழ்ந்தனர் பெற்ருேரும் பாட்டன் பாட்டியும். 'பரணி யில் பிறந்தவர் தரணி ஆள்வர்' எனும் முதுமொழியை அறிந்த பெற்ருேர் பரணி நட்சத்திரத்தில் தம் குழந்தை பிறந்ததைப் பெரும் பாக்கியமாகக்கருதி மகிழ்வுற்றனர். குழந்தையை இராமசாமி என்று பேரன்போடு அழைத்தனர். இப்படி அழைப்பதற்கும் காரணங்கள் இல்லாமலில்லை. குழந்தையின் பாட்டனுர் பெயரும் இராமசாமிப் பிள்ளை. குழந்தை பிறந்த பன்றிமலை ஊரிலும் ஸ்ரீ இராமருக்கு ஒரு

கோயில் உண்டு. தாயிடம் பிறக்கப்போகும் குழந்தையைப் பற்றிப் பேசிய காசிலிங்கமும் இராமனைப் போன்றல்லவா ஒரு மகவை ஈன்றெடுக்கப் போகின்றீர் என்று தாயை ஆசீர்வதித்தார். பெயர்ப் பொருத்தமும் நட்சத்திரப் பொருத்தத்தைப் போன்றும், சாமி அங்கங்களில் உள்ள சங்கு சக்கரரேகைப் பொருத்தத்தைப் போன்றும், ஒரு பெரிய உண்மையை எடுத்துக் காட்டும். சங்கு சக்கரரேகை சாமிகளின் தெய்வீக அம்சங்களை விளக்குகின்றன. இத்தகையவர் நாட்டில் இருந்தால் பலபேர் அவரைச் சுற்றிஇருப்பர். காட்டில் இருந்தாலும் பல மிருகங்களும் அவரைச் சுற்றி இருக்கும். அத்தகைய முகவசியமும் அருள் சக்தியும் பெற்ற புண்ணியவான் களின் மகிமையே மகிமை! இஃது எவ்வளவு உண்மையாக இராம பிரான் வாழ்க்கைக்கும் விளக்கம் கொடுக்க உதவுகின்றது; பரணி நட்சத்திரத்தில் உதித்துள்ள நமது சாமிகளின் பேரும் புகழுமிக்க வாழ்க்கைக்கும் விளக்கம் கொடுக்க உதவுகின்றது.

பாக்கிய பரணி! ஆம்! சாமிகள் பிறந்த நட்சத்திரத்தின் பெயரி லேயே ஒரு அருட்செல்வ இலக்கியப் பத்திரிகை 1966 ஜனவரி மாதத்திலிருந்து சென்னையிலிருந்து வெளிவருகின்றது. சாமிகளின் அருள் கரங்களுக்கு, "காக்கும் கைக்குக்காணிக்கை" யாக அல்லவா, அதன் கௌரவ ஆசிரியர், பேராசிரியர் டாக்டர் பி. கே. சுந்தரம் எம். ஏ., பி. எச்டி., பாக்கிய பரணியைச் சமர்ப்பிக்கின்றார். "மெய்ப் பொருள் காண்பதறிவு" என்ற முரசொலியோடு 'பாக்கிய பரணி' என்ற இலக்கிய இதழ் மலர்ந்திருப்பது சாமிகளின் புகழுக்கு ஓர் எடுத்துக்காட்டல்லவா! இந்த அருட்செல்வ மலருக்கு மணம் ஊட்ட சாமிகளே 'பஞ்சாட்சரம்', 'நமச்சிவாய' முதலிய தெய்வ மணக் கட்டுரைகளைத் தொடர்ந்து வழங்கிவருகின்றார்கள். வாழ்க பாக்கிய பரணி!

குழந்தை இராமசாமியைத் திருமதி.அங்கம்மாள் தாலாட்டிச் சீராட்டி நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்ததைத் திருமதி. அங்கம்மாள் வாயாலேயே பழநியில் கேட்டு அகமகிழ்ந்தோம். தெய்வாம்சம் பொருந்திய இக்குழந்தையிடம் தெய்வீகக் கலை மட்டும் முகத்தில் தவழ்வதோடல்லாமல், தெய்வீகச் செயல்களும் பரிமளிக்க ஆரம்பித்தன. பெரிய மகான்கள் வாழ்விலும் இத்தகைய அனுபவங்கள் உண்டு. சங்கரருடைய பால்ய லீலைகளைக் கேட்போருக்கும் வேடிக்கை மிகவுண்டு; தெய்வீக மணம் மிகவுண்டு. ஒரு சமயம் காலடிக் கோயிலில் சுயம்பு லிங்கேஸ்வரருக்குச் சாற்றி யிருந்த வில்வ ருத்திராக்ஷ மாலைகளைப் பால சங்கரர் தம்மீது இருக்கக்காட்டினர். ஒரு நாள் சுழல் காற்றில் ஆகாயத்தில் அவர் மறைந்தார். எட்டுத் திக்குகளிலிருந்தும் எட்டு பால சங்கரரைப் பலரும் கொண்டு வர, பின்னர் ஒரே பால சங்கரக்குழந்தையாக

அவர் விளங்கினர். மற்ெருரு நாள் அக்கோயில் ரத உற்சவத்தில் ரதத்திலுள்ள விக்கிரகத்திற்குப் பதில் குழந்தை சங்கரர் வீற்றிருக்கக் கண்டனர். இப்படி எவ்வளவோ தெய்வீகச் செயல்கள் சங்கரர் வாழ்வில் நிகழ்ந்தனபோன்று நமது சாமிகள் வாழ்விலும் நிகழ்ந்தன உண்டு. இவைகளைக் கூறிய சாமிகளுடைய தாயார் சொற்களைக் கேட்ட எங்களுக்கு ஒரே வியப்பாக இருந்தது. தெய்வாம்சம் பொருந்திய இக்குழந்தை தொட்டிலில் படுத்திருக்கும்போது பலவித மான மணங்கள் தொட்டிலில் கமழும். தொட்டிலில் குழந்தையை மேற்குப்பக்கம் தலையை வைத்துப் படுக்கவைத்து விட்டுத் திரும்பி வந்து பார்த்தால் கிழக்குப் பக்கம் குழந்தை தலைவைத்துப் படுத் திருக்கும். ஒரு நாள் கொஞ்ச நேரம் குழந்தையே மாயமாக மறைந்து போய் விட்டமை பெற்றேருக்குப் பேரிடியைத் தந்தது. அடுத்த சில நிமிடங்களில் குழந்தை தொட்டிலில் படுத்திருப்பதைக் கண்ட பெற்றேருக்கு உவகையும் பேராச்சரியமும் பொங்கின. தொட்டிலில் உறங்கிடும் குழந்தையின் நெற்றியில் சில சமயம் திருநீறும், சில சமயம் குங்குமத் திலகமும், சில சமயம் நாமமும் இருக்கக்கண்டு பேராச்சரிய முற்றனர் பெற்ரேர். பிறந்த குழந்தை யின் மேனியில் விளங்கிய ரோமங்கள் ரோம ரிஷியையே பார்ப்ப வருக்கு நினைவூட்டியது. சிறு குழந்தையாயிருக்கும் போதே தான் படுத்திருக்கும் தொட்டிலில் பல நறுமணங்கள் கமழும்படி விளங்கிய சாமிகள், இன்றும் தன் கையால் மற்றவர் கைகளில் தடவி சந்தனம், அத்தர், ஜவ்வாது, மருக்கொழுந்து, வெற்றிவேர் நறுமணங்களை எழுப்பச் செய்கின்ருர். சிறு குழந்தையாயிருக்கும் போதே திருநீறும், குங்குமத் திலகமும், நாமமும் மாறிமாறிக் கொண்டு விளங்கிய தன்மை சாமிகளுடைய சமரசத் தன்மையையும், அவருக்கு எம்மதமும் சம்மதமே என்ற பேருண்மையையும், சாமிகள், சிவனருள், சக்தி யருள், மாலருள் அனைத்தும் பெற்று விளங்கும் மகிமையாளர் என் பதையும் விளக்க உதவுகின்றது. எதிர் ரோமங்கள் உடலில் காணப் பட்டது பின்னல் இக்குழந்தை ரோமரிஷி போன்று விளங்குவதை உணர்த்த உதவுகின்றது. இத்தகைய ஆச்சரியத்துள் திளைக்க வைக்கும் அருட்சேயைத் திருமதி. அங்கம்மாள் தொட்டிலிலிட்டுத் தாலாட்டும் பாட்டையும் எங்களுக்குப் பாடிக் காண்பித்தார். அந்தப் பாட்டைக் கேளுங்கள்.

''ஐந்து வயதினிலே அறியாப் பருவத்திலே
கொஞ்ச வயதிலே கொண்டணைத்தேன் முருகனையே!
காணப்பொருளைக் கடவுளைப் பெற்றெடுத்தேன்!
தேடாப் பொருளைத் தெய்வத்தைப் பெற்றெடுத்தேன்!
கந்தருக்குமுன் பிறந்த சக்தி கணபதியே!
ஐந்தெழுத்து மந்திரத்தை நெஞ்சில் பதிப்பவனே!
சொலுந்தோறும் மந்திரங்கள் ஜோதி விளங்குதப்பா!

பலஜோதி மந்திரங்கள் பரவி வருகுதப்பா!
தொட்டிலிலே பூவெடுத்து பூசைபண்ணிப்புண்ணியர்
மலர்ந்த மலரெடுத்து மந்திரங்கள் ஓதிவரும்
சித்தர் சொன்ன உபதேசம் சீமை முழங்கிவரும்
நாதர் சொன்ன உபதேசம் நாடும் முழங்கிவரும்
முருகன் சொன்ன உபதேசம் முழங்கி வருகுதுவே
சொன்னதொரு உபதேசம் ஜோதி விளங்குதுவே
பூசை முடிந்ததோ புண்ணியரோ உங்களுக்கு
அள்ளின திருநீறே அம்சம் முழங்கிவரும்
அம்சம் முழங்கிவரும் ஆலயம் முழங்கிவரும்
கொடுத்துவரும் திருநீறு கோடிபாவம் நீக்கிவிடும்
வாரின திருநீறு வந்தபிணி நீங்குமன்றே
நடக்கும் வழிதனிலே நல்ல மலர் வாசம் வரும்
வருகும் வழியினிலே வாசம் மிகுந்திருக்கும்
வாசம் மிகுந்திருக்கும் வளமெல்லாம் வீசிவரும்
மேற்கே ரயில் ஓடும் மெட்ராசு தந்திவரும்
வந்திறங்கும் ஸ்டேஷனிலே வணங்கவரும் கோடிஜனம்
வந்த ஜனத்திற்கு வாக்குக் கொடுத்தாரே
வாக்குக் கொடுத்தாரே வந்தபிணி நீங்குமென்று
குளிக்கக் கிணறுவெட்டி கும்பிடவே கோயில்கட்டி
படிக்கமடம் கட்டிவரும் பாண்டியரே என் இராசா
கண்ணே உனைத்தேடிக் கானமெங்கும்பூத்தேடிப்
பொன்னே உனைத்தேடிப் போகாத கோயிலில்லை"

இந்தத் தாலாட்டுப் பாட்டைப் படிக்கும்போது இஃது இந்தக் குழந்தைக்கென்றே அமைந்த பாட்டாகத் தொனிக்கின்றது. பெற்ற தாயின் பக்தியும், குலவழியாக இயல்பாக அமைந்த கல்வி அழகும், பிறந்த பிள்ளையின் அருள் சக்தியும் மகிமையும் பொதிந்துள்ள இப்பாட்டின் நயத்தையும், எளிய அமைப்பையும், நாட்டுப் பாட்டின் இனிமையையும் கேட்டுக்கொண்டே இருக்கலாம்; பல முறை படித்துக் கொண்டே இருக்கலாம்; அதன் உண்மையைச் சுவைத்துக் கொண்டே இருக்கலாம். உண்மை! உண்மை!!

(சாமிகள்) "அள்ளின திருநீறே அம்சம் முழங்கிவரும்
(தெய்வ) அம்சம் முழங்கிவரும் ஆலயம் முழங்கிவிடும்
(சாமிகள்) கொடுக்கும் திருநீறு கோடிபாவம் நீக்கிவிடும்
(நாம்) வாரின திருநீறு வந்தபிணி நீக்குமன்றே".

## 3. பிஞ்சிலே பழநித்தலம்

" ஐந்து வயதினிலே அறியாப் பருவத்திலே
பிஞ்சிலே கூடினேண்டி — கிளியே
பிரிய மனம் இல்லையடி

எங்கும் நிறைந்தவன்டி எட்டியும் எட்டாதவன்டி
குங்கும வருணனடி — கிளியே
குமரப் பெருமானடி"

குழந்தை இராமசாமிக்கு ஐந்து வயது நடக்கும்போது பெற்றோர்கள் பழநிக்கு இரண்டு மைல் தூரத்திலிருக்கும் பாலசமுத்திரத்திற்கு வந்தார்கள். திருமதி. அங்கம்மாளை ஈன்றெடுத்த இராமசாமியின் தாத்தா திரு. கருப்பண்ண பிள்ளைக்கும், பாட்டி திருமதி. கவுண்டாயி அம்மாளுக்கும் பேரனைக் கண்டதிலிருந்து அவனைத் தம் கூடவே வைத்துக்கொள்ளவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. துணிந்தும் கேட்டுவிட்டார்கள். அவர்கள் இஷ்டம் போலவே மனமுவந்து திரு. ஆறுமுகம்பிள்ளையும் இராமசாமியைப் பாலசமுத்திரத்தில் பாட்டன் பாட்டியோடு விட்டுவர ஒப்புக்கொண்டார். அதற்கு முக்கியமான காரணம் பாலசமுத்திரத்தில் தன் குழந்தையின் படிப்புக்கு வேண்டிய வசதிகளும் தகுந்த ஆசானும், நன்றாகக் கவனித்துக் கொள்ளபாட்டன் பாட்டி அன்பும் இருந்தமையே.

குழந்தை இராமசாமிக்கும் பாலசமுத்திரம் மிகவும் பிடித்து விட்டது. அதற்குக் காரணம் பால சமுத்திரத்திற்குப் பக்கத்தில் உள்ள பழநித்தலமாகும். அருட்திருப் பழநித் திருக்குமரப் பெருமான் குழந்தை இராமசாமியின் பிஞ்சு உள்ளத்தைக் கொள்ளை கொண்டார். குழந்தைக்குப் பழத்தின்மீது ஆசை ஏற்படுவது இயற்கையல்லவா? பழத்திற்கு ஆசைப்பட்டல்லவா இளமுருகனும் செம்பொன் கிரியைச் சுற்ற ஆரம்பித்தார். ஆனால் அவர் சுற்றி வருவதற்குள் அவர் அண்ணன் கணபதி, அம்மை அப்பரைச் சுற்றி வந்து கனியைப்பெற்றார். அதனால் வெட்கி மனம் வெகுண்ட பாலன் வேலவன் பழநிமலைக்கு ஓடோடி வந்து விட்டார்! இந்தக் கதையை எப்படி அழகாக அருணகிரி வருணிக்கின்றார்.

"படியிற் பெருமித தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வரவர னந்தப்
பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற்பதனாலே
பான்வெட் கிடவுள மிகவும் வெகுண்டக்
கனியை தரவிலை யெனவருள் செந்திற்
பழநிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே"

இந்தக்கதையும் சிறுவன் இராமசாமியின் மனத்திற்குத் தித்திப்பதாயிருந்தது. பழநிமலையும் தித்திப்பதாயிருந்தது; பழநி ஆண்டவனும் தித்திப்பவனாயிருந்தான். குமரனையே காதலித்து அவனையே மணந்த வள்ளியின் பரமானந்த நிலையை இராமசாமியின் இள உள்ளம் சுவைத்து அனுபவிக்கத் தொடங்கியது. இந்தப் பரமானந்த தித்திப்பிற்குமுன் கரும்பும் துவர்க்கும்; செந்தேனும் புளிக்கும். என்னே இந்த முருகானந்த நிலை!

"பெரும் பைம்புனத்தினுள் சிற்றேனல்
காக்கின்ற பேதை கொங்கை
விரும்பும் குமரனை மெய்அன்பி
னால் மெல்லமெல்ல உள்ள
அரும்பும் தனிப் பரமானந்தம்
தித்தித்து அறிந்த அன்றே
கரும்பும் துவர்த்துச் செந்தேனும்
புளித்து அறக் கைத்ததுவே."

இப்பேர்ப்பட்ட பழத்தின் சுவையைக்கண்ட இராமசாமி பழநியை மறக்கமுடியுமா? கிடைத்தற்கரிய 'பழம் நீ' என்றே பழநி மலையப் பனைக் கைகூப்பித் தொழுது கசிந்துருகிமெய் மறந்தான் இராமசாமி.

பழநி தண்டாயுதக்கடவுளின் திருவுருவம் இராமசாமியின் பிஞ்சு உள்ளத்தில் ஊன்றிப் பதிந்தது. இன்றும் சாமிகள் தண்டாயுதபாணிக்கடவுளை நினைத்துக்கொண்டால் மனமுருகிப் பாட ஆரம்பித்துவிடுவார். அந்த அழகு வருணனையைக் கேட்போம்.

" மகிதலமெல்லாம் புகழும் உனது திருவடியழகு
வலதுகால் சற்றே சாய்ந்து வாடிக்கை போல
வெகு வேடிக்கை ஓயிலாகக் கால்மாறி நிற்கின்ற
அழகும் உகமிக்க மணி முழங்காலழகும்
இடையழகும் உதரமணி நாவினழகும்
உத்தண்டமான தண்டாயுத வலக்கையால்
வேல்உந்திப் பிடித்த அழகும் புகழிடது

தொடையின்மேல் இடது கை விரித்தூன்றும்
பூரித்த மார்பழகும் திருச்சின்ன அழகுமே
புகலு மறையார்க்கு முடிவாய் தகைமை
இளகையனே பழநியங்கிரி யோங்கும்
சண்முக சரவணபவா தண்டாமரைப் பிரமர்
கொண்டாடு மிக்க அருள் தண்டாயுதக்கடவுளே ''

பழநியம்பதியிலே கோலக்குமரனது வண்ணவண்ணக் காட்சிகளையும் கண்டு மயங்கியது இராமசாமியின் இளமனம். பழநியாண்டவர் சந்நிதிக்குச் சென்றுவிட்டால் அவரை வேடனுகவும், விருத்தனுகவும், இராஜனுகவும், சக்தியாகவும் அலங்கரித்துக் காட்டுகின்ற அழகு இராமசாமியை முற்றும் கவர்ந்து விட்டது. அமரர்க்கு வாழ்வளிக்கத் தீமையை ஒழிக்கக்கொண்ட வீரக்கோலம்! செருக்கை அழித்துப் பகையை ஒழித்துத் தெய்வயானை வள்ளியைக் கூடவந்த மணவாளக் காட்சி! உச்சி முதல் உள்ளங்கால் வரை கமலங்களும் பொன்னும் தூய மரகத மணி மயமாகப் பொலிகின்ற இராஜகம்பீரத் தோற்றம்! இப்படியாக அறக் கடவுளாகவும், நிறக்கடவுளாகவும், வேலாயுதனுகவும், மயில் வாகனனுகவும் மாறிமாறி அழகு ஊட்டும் 'அருட்திருப் பழநித்திருக்குமரப் பெருமான்' பால இராமசாமியைத் தடுத்தடிமைப் படுத்தி விட்டான்.

'' பசுபதி சிவாக்ய முணர்வேலன்
பழநிமலை வீற்றருள் வேலன் ''

இசைபயில் சடாக்ஷ ரமதாலே இராமசாமிக்கு
இகபர சௌபாக்யம் அருள் செய்துவிட்டாள்.

'' கமல விமல மரக தமணி
கனக மருவும் இருபாதம்
கருத அருளி யெனது தனிமை
கழிய அறிவு தரவேணும்
குமர சமர முருக பரம
குலவு பழநி மலையோனே
கொடிய பகடு முடிய முடுகு
குறவர் சிறுமி மணவாளா
அமர ரிடரும் அவுண ருடலும்
அழிய அமர்செய் தருள்வோனே
அறமு நிறமும் அயிலும் மயிலும்
அழகுமுடைய பெருமாளே ''

இஃது அருணகிரிநாதரின் பழநித்தலத் திருப்புகழ்ப் பாமாலை. உள்ளங் கசிந்துருகிப்பாடும் அவருள்ளமும் அவரது தனிமை கழிய

அறிவு வேண்டிநின்றது. அதே அறிவை, தனிமையைக் கழித்து இகபர சௌபாக்யம் பெருக்கும் அறிவை பாலன் இராமசாமியும் இறை அருளால் பெற பழநியாண்டவன் இறைக் காதல் கிடைத்தது.

" இபமா முகன் தனக்கிளை யோனே
இமவான் மடந்தையுத்தமிபாலா
ஜெபமாலை தந்த சற்குருநாதா
திருவாவினன் குடிப் பெருமாளே "
" உபதேச மந்திரப் பொருளாலே
உனை நானனை ந்தருட் பெறுவேனோ "

என்று இராமசாமியின் இள உள்ளம் ஏங்கியது. ஐந்து வயது இராமசாமியின் கள்ளம்கபடமற்ற உள்ளத்தில் ஏற்பட்ட இந்த ஆன்மக்காதல் மறக்கமுடியாதது; இக்காதலால் கசிந்து உருகும் அனுபவம் அசைக்க முடியாதது. இத்தகைய அசைக்கமுடியாத இறைக்காதல் அஸ்திவாரத்திலல்லவா பின்னால் தன்னொளி பெருக்கும் சக்தி பீடம் அமையப் போகின்றது.

" ஐந்து வயதினிலே அறியாப் பருவத்திலே
பிஞ்சிலே கூடினேன்டி—கிளியே
பிரியமனம் இல்லையடி "

" எங்கும் நிறைந்தவன்டி எட்டியும் எட்டாதவன்டி
குங்குமம் வருணனடி—கிளியே
குமரப் பெருமானடி "

என்றல்லவா சிறுவன் இராமசாமியின் உள்ளம் முருக இன்பத்தில் தோய்ந்து வளர ஆரம்பித்தது.

சாமிகளுக்குச் சிறுவயதிலேயே தெய்வ அருள் கிட்டக்கூடிய சூழ்நிலைகள் நிறைந்திருந்தன. இராமசாமியிடம் இயல்பாகவே தெய்வபக்தியும் விசேடமாக முருகபக்தியும் நிறைந்த உள்ளம், பொதுவாக பெரியோர்களைக்கண்டு குறிப்பாக மகான்களைக்கண்டு பணிந்தேத்தும் பண்பு, தன்னுள்ளத்தைக் கொள்ளைகொண்ட பழநி தண்டாயுதபாணியை ஒவ்வொரு திங்கட்கிழமைதோறும் தரிசித்து வரும் பேரார்வம், அதோடுகூட பழுத்த ஞானிகளுடைய கூட்டுறவு கிடைத்தால் அதை நன்ருகப் பயன்படுத்திக்கொள்ளும் இயல்பு— இத்தகைய குண நலன்கள் வாய்ந்த இராமசாமி பின்னால் பெரியசாமி யாகப் போவதை உணர்ந்து உரைத்தவர் சல்லிச்சாமியார் எனும் ஞானியாவார். இவர் பாலசமுத்திரத்தில் ஒவ்வொருவரிடமும்

யாசிப்பது ஒரு சல்லிச் செம்புக்காசு நாணயம். அதனால்தான் அவரைச் சல்லிச் சாமியார் என்றழைத்தனர் ஊரார். சல்லிச் சாமியார், தான் அன்றாடம் யாசித்த சல்லிகளையெல்லாம் பால சமுத்திரத்தில் உள்ள புள்ளி விநாயகர் கோயிலில் விளையாடும் குழந்தைகளிடம் கொடுத்து விட்டுத் தானும் குழந்தைகளோடு குழந்தையாகக்குலவி விளையாடுவது வழக்கம். ஆனால் ஒருநாளில் கூட ஒரு சல்லியாகினும் இவர் இராமசாமிக்குக் கொடுத்ததே இல்லை. இராமசாமியும் சல்லிக் காசுக்காகத் தன் கையை நீட்டியதும் இல்லை. காசு கிடைக்க வில்லையே என்று வருத்தப்பட்டதும் இல்லை. எல்லாக் குழந்தைகளுக்கும் காசு வழங்கிய சல்லிச்சாமி இராமசாமிக்கு மட்டும் ஒரு காசுகூடக் கொடுக்காததைக் கண்டிருந்த கண்டியான் எனும் பிள்ளையார்கோயில் பூசாரி இதற்கு விளக்கம் சல்லிச்சாமியாரையே கேட்டார். இராமசாமிக்குப் பற்றற்றநிலை அப்பொழுதே ஆரம்பமாகி விட்டதையும் அது நாளடைவில் பெருமகான்களுடைய கூட்டுறவால் விரிவடைந்து யாவருக்கும் எது வேண்டுமானாலும் கொடுக்கக்கூடிய ஆற்றலை இராமசாமியிடம் உண்டாக்கப் போவதை அறியாமலா இருக்கமுடியும் சல்லிச்சாமிக்கு "இவன்தான் (இராமசாமி) பெரியசாமி ஆயிற்றே. நான் எப்படி இவனுக்குச் சல்லி கொடுப்பது" என்று இரத்தின சுருக்கமாகச் சொல்லி இராமசாமியிடம் உருவாகிக் கொண்டிருக்கும் அரிய அருட் சக்தியைக்கண்டு வியந்தார், இராம சாமிக்கு முன் தம்மைச் சின்னசாமியாகப் பாவித்து விளக்கம் கொடுத்த சல்லிச் சாமியார்! இப்படிப் பொருளுக்காகக் குழந்தைகள் தம்கையைச் சல்லிச் சாமிகளிடம் நீட்டும்போது அருளுக்காக இராம சாமி சல்லிச் சாமிகளைத் தம் கண் கொண்டணைப்பர். சல்லிச் சாமி களின் அருள்நோக்கும் இராமசாமிக்கு இறைவன் திருவருளைப் பெருக்க நயன தீக்கையாக உதவியது. சல்லிச் சாமிகளைப்பற்றிச் சாமிகள் இன்றும் உள்ளமுவந்து பேசும்போதெல்லாம் தனக்கு வாய்த்த குருக்களில் சல்லிச் சாமியும் ஒருவர் என்று போற்றியே பேசுவர்.

பால சமுத்திரத்தில் வரட்டாறு என்ற ஆற்றின் மேட்டில் ஸ்ரீ சல்லிச்சாமி சமாதி இருக்கின்றது. சமீபத்தில் தன் சீடர்களுடன் இந்தச் சமாதியைக் காண சாமிகள் விரைந்தபோது ஸ்ரீ சல்லிச் சாமியார் சமாதி கோயில் பூட்டியிருந்தது. தன்னோடு வந்த சீடர் களுக்கு ஸ்ரீ சல்லிச்சாமியின் அருளைக் கூட்டுவிக்கப் பூட்டியிருந்த கோயிலைத் திறக்க வேண்டி இருந்தது. சாமிகள் பூட்டின்மீது தன் திருக்கரத்தை வைக்க பூட்டு தானாகவே திறந்துவிட்டது. கோயிலுக் குள் சென்று தரிசனம் செய்துவிட்டுத் திரும்பியவுடன் சாமிகள் பூட்டை அழுத்தவும் பூட்டு மறுபடியும் பூட்டிக்கொண்டது. இந்த அற்புதச் செயலைப் பார்க்கும்போது பல நூற்றாண்டுகளுக்கு முன் திருமறைக்காட்டில் நடந்த ஓர் அற்புதச் செயலுக்கே நம் மனம்

நம்மை அழைத்துச் செல்கின்றது. அப்பர் சாமிகள் 'பண்ணினேர் மொழியாள்' என்ற பதிகம் பாடி அந்த ஊர்க்கோயிலின் திருக் கதவைத் திறக்கச் செய்தார். பிறகு சம்பந்த சாமிகள் 'சதுரம் மறைதான்' என்றெடுத்துப் பாடியஉடன் மீண்டும் அக்கதவு அடைத்துக் கொண்டதென நாம் படித்திருக்கின்றோம். இன்றும் இத்திருச் செயல்களுக்கு ஒப்ப, ஸ்ரீ பன்றிமலை சாமிகள் தன் திருக்கை விசேடத்தால் காட்டுகின்ற அற்புதங்களின் அருமையினை என்னென்று இயம்புவது. பழநி மகிமையுடன் பன்றிமலை மகிமை யையும் காவடிச்சிந்தில் கண்டுமகிழ்வது நமது பாக்கியமே.

பழநியில் அற்புதம் கண்டோம் — அங்கு
பன்றிமலை யொன்று ஏறிடக் கண்டோம்
குழகன் பெருமைகள் கண்டோம் — அங்கு
குமரன் அருள்பெற்ற நிர்மலன் கண்டோம்

கைத்தலம் தன்னில்வேல் கண்டோம் — அங்கு
குமரனும் சக்தியாய் மாறிடக் கண்டோம்
மெய்த்தலம் பூமியில் இன்றே — பன்றி
மாமலைச் சாமியின் நிறைவினைக் கண்டோம்

பேரன்பு பொங்கிடக் கண்டோம் — அங்கு
பற்பல வேடங்கள் புரிவதைக் கண்டோம்
தாயன்பு ஓங்கிடக் கண்டோம் — அங்கு
தீன தயாபரன் மகிமைகள் கண்டோம்

தண்டபா ணியையும் கண்டோம் — அவர்
தண்ணருள் பெற்ற தவக்கனி கண்டோம்
பன்றி மலைசாமி கண்டோம் — அவர்
பாங்குடன் பொலிந்திடும் தரிசனம் கண்டோம்

இன்றே இவர்எங்கள் நாதன் — எங்கள்
இதயத்தின் கமலத்தில் ஊன்றிடும் பாதன்
நன்றே அருள்அநு கூலன் — எங்கள்
நன்மைக்கு வாய்த்திட்ட நல்லருள் சீலன்

அன்பு மலர்களைத் தூவி — அவர்
அருமைக ளெல்லாம் கவியாகப் பாடி
இன்பக் காவடியும் ஆடி — அவர்
இன்பம் அடைவோம்நம் இறைவனைக் கூடி.

## 4. ஆதிகுருவின் ஞானப்பொடி மகிமை

"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசியென் உள்ளம் கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனை நாள் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மான் இவன்அன்றே."

1965 டிசம்பர் 26ஆம் தேதி காலை பத்து மணி. சாமிகள், பக்தர்களோடு பழநிமலையில் ஏறிவிட்டார். மலைமீதுள்ள தண்டபாணிக் கோயிலை வெளிப்பிரகாரத்தில் வலமாகச் சுற்றிவந்த சாமிகள் நேராக ஓரிடத்திற்கு விரைந்தார். அவருடைய அன்பு தோய்ந்த கண்கள் பழநிமலைக்கு வடக்கே இரண்டு மைல்களுக்கப்பாலுள்ள வீடுகளையும், அவைகளுக்கும் பழநிமலைக்கும் நடுவில் அமைந்துள்ள ஒரு குளத்தை ஒட்டிய ஆலயத்தையும் பார்த்த வண்ணமாக இருந்தன. டாக்டர் திரு. T. V. அரங்கநாதன் தன் கையிலிருந்த தூரதிருட்டிக் கண்ணாடியைச் சாமிகளிடம் கொடுக்க சாமிகள் அதே இடத்தைக் கூர்ந்து கவனித்தார். ரொம்ப நாட்கள் சந்திக்காது இருந்த பேரன்பர்கள் திடீரெனச் சந்தித்து ஆனந்தமெய்தும் நிலையைச் சாமிகள் அடைந்தார். "அதோ ஒரு குளத்தினருகில் உள்ள கோயிலைப் பாருங்கள். அங்குதான் என் குருநாதர் என் நாக்கில் எழுதிவிட்டு, கோவிலுக்குள் மறைந்தார்கள்" என்று உளமுருகி உரைத்தார். எங்களிடமும் அந்த தூரதிருஷ்டிக் கண்ணாடியைக் கொடுத்து அந்தப் புனித தலத்தைப் பார்க்கச் செய்தார். சாமிகள் காண்பித்த வீடுகள் சாமிகள் சிறுவயதில் பாட்டனார் வீட்டில் வளர்ந்து வந்த பாலசமுத்திரம் எனும் சிற்றுரைத் தான் காண்பித்தன. சாமிகள் காண்பித்த கோயில் செம்மாட்டுப் பாறைக்குள விநாயகர் கோயில். சாமிகள் காண்பித்த குளம் செம்மாட்டுப் பாறைக்குளம். இந்தச் சிறிய கோயிலையும் சற்று தூரத்திலுள்ள வீடு வாசல்களையும் சுற்றி வளைத்திருந்த பச்சைப் பசேலென்றிருந்த இயற்கைக் காட்சி வெகு நாட்களுக்குமுன் நடந்த சாமிகள் கூறிய சம்பவத்திற்கே எங்களை இழுத்துச் சென்றது.

சாமிகளுக்கு எட்டு வயது. சிலார் சாயபு என்ற தோழனுடன் சாமிகள் இந்தப் பிள்ளையார் கோயில் அருகில் விளையாடிக் கொண்டிருந்தார். சாமிகளுக்கு இந்தப் பிள்ளையார் கோயிலென்றால்



**அன்னையார் திருமதி. பாப்பாத்தி அம்மாள் அவர்கள்**

''வள்ளுவர்க்கு வாசுகிபோல் மறைமலை அடிகள்
வாழ்விற்குத் துணையாகி வாழ்வாங்கு வாழ்ந்தாய்
தெள்ளுதமிழ்ப் பண்பாட்டின் வடிவமெனத் திகழ்ந்தாய்
திருவிளக்காய் ஒளிநல்கி மனையறம் நீ காத்தாய்''

(திரு. ரா. பு. தங்கராசன்)



**அன்னையார் திருமதி. பாப்பாத்தி அம்மாள் அவர்கள்**

*"வள்ளுவர்க்கு வாசுகிபோல் பன்றிமலை அடிகள்
வாழ்விற்குத் துணையாகி வாழ்வாங்கு வாழ்ந்தாய்
தெள்ளுதமிழ்ப் பண்பாட்டின் வடிவமெனத் திகழ்ந்தாய்
திருவிளக்காய் ஒளிநல்கி மனையறம் நீ காத்தாய்"*

(திரு. ரா. பு. தங்கராசன்)



நின்ற திருக்கோலத்தில் திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள்

"தாமரை இதய தன்மலர் கோயிலில்
அழகு முருகனின் அருட்சுடர் கண்டிடும்
நிகரிலாப் புண்ணியர் நெறிவளர் குன்றினர்
தரணி துதித்திடும் தவப்பெரு முனிவர்
பல சித்தாடும் பன்றிமலையினர்"

(இசைக்கவிஞர் திரு. N. S. சிதம்பரம்)



'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'

**தாயார் திருமதி, அங்கம்மாளோடு சாமிகள்**

(பக்கம் — 370)

"காணாப் பொருளைக் கடவுளைநான் பெற்றெடுத்தேன்
தேடாப் பொருளைத் தெய்வத்தைப் பெற்றெடுத்தேன்"

— தாயார் திரு. அங்கம்மாள் தாலாட்டிலிருந்து



சாமிகளுடைய தகப்பனுர் திரு. ஆறுமுகம்பிள்ளை அவர்களும்
தாயார் திருமதி. அங்கம்மாள் அவர்களும்
பாட்டியார் கவுண்டாயி அம்மாள் அவர்களும்

(பக்கம் — 10)

மிகவும் பிரியம். இந்தப் பிள்ளையார்மீது அளவு கடந்த பக்தி. ஆதியில் ஏற்பட்ட இப்பிள்ளையார் பக்தியல்லவா இன்றும் சாமிகளைக் கணபதி தோத்திரத்தில் அகமகிழச் செய்கின்றது.

" ஓம்கணபதியைத் தொழக் காரியம் கைகூடும்!
கணபதியைத் தொழக் கண்டபேர் வசியமாம்!
கணபதியைத் தொழக் கர்மவினை தீரும்!
கணபதியைத் தொழக் கைலாசம் கிட்டும்!
அரிதிருமருகனை ஆதி கடவுளை திருவருள்
பெருகவே தினமும் துதி செய்வோம் "

என்ற திருமொழிகளோடல்லவா சாமிகள் இன்றும் உபதேசத்தை ஆரம்பிக்கின்றார். அவர் வாழ்க்கை நிகழச்சிகளையும் அருள் மொழிகளையும் காணப்போகும் நாம் அவர் உபதேசித்தருளிய தோத்திரத்தோடு சாமிகள் சொல்வதுபோல் முதலில் கணபதியை நினைத்து அவன்தாள் பணிவோம்.

செம்மாட்டுப் பாறைக்குள பிள்ளையார் கோயில். அதனருகில் இராமசாமியும் சிலார் சாயபுவும் விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது காவியும் கனிந்த அன்பும் பூண்ட இறையடியார் ஒருவர் இராமசாமியையும் சிலார் சாயபுவையும் பெயர் சொல்லி அழைத்துத் தனக்குக் கஞ்சா வாங்கி வரவேண்டுமென்றார். அவரது தெய்வீகப் பொலிவையும், மூப்பில் விளைந்த அறிவொளியையும் அவர் முகத்தில் கண்ட இராமசாமி அவர் கேட்ட பொருளை உடனே வாங்கிவரக் குதித்தோடினான். பொருளோடு திரும்பி வந்த இராமசாமியை இறையடியார் குளத்தில் குளித்துவரச் சொன்னார். இராமசாமி வந்தவுடன் சிலார் சாயபு பயத்தோடு இறையடியாரை நெருங்குதற்கு மலைக்க, இராமசாமி அவர் கூப்பிட்டவுடன் காந்தத்தால் இரும்பு ஈர்க்கப்பட்டதுபோல முகமலர்ந்து அவரை நெருங்கினான். உடனே இராமசாமியை இறையடியார் வாயைத் திறக்கச் சொல்லித் தன் பையிலிருந்த விபூதியை வாயுள் ஊட்டினார். இராமசாமியின் நாக்கில் ஒருசிறு வேலால் நுனியிலிருந்து அடிவரை எழுதினார். பின் ஆனந்த மேலீட்டால், இராமசாமியின் உடல் முழுதும் தன் பொற்கரத்தால் விபூதி பூசி ஆசீர்வதித்தார். இந்த அனுபவத்தில் உள்ளம் உவகையில் பொங்கிநின்ற இராமசாமியையும் வேல்கொண்டும் விபூதி கொண்டும் தன்னருள் வேலையில் ஈடுபட்டிருந்த இறையடியாரையும் கண்ட சிலார் சாயபுக்கு ஒன்றும் புரியவில்லை. மனத்தில் திகில் வந்துவிட்டது. பீதியடைந்த சிலார் சாயபு ஊருக்குச் சென்று பெரியோர்களை உடனே அழைத்து வரும்படி அங்கு வந்த இரு சிறுவர்களை ஏவினான். அதற்குள் வந்த வேலையை முடித்துக் கொண்டவர்போல் தெய்வ அருள் மணக்கும் இறையடியாரும்

விநாயகர் கோயிலுக்குள் நுழைந்தார். ஊரிலிருந்து ஓடிவந்த பெரிய வர்களும் வந்தவர் யார் என்றறிய ஆவலோடு கோயிலுக்குள் இறை யடியாரைக் காண நுழைந்தனர். கோயிலுக்குள் பெரியவர்கள் கண்டது இறைவன் சிலையைத்தான்; இறையடியார் கோயிலுக்குள்ளும் இல்லை, வெளியிலும் இல்லை. இறையடியார் மறைந்துவிட்டாலும் அவர் அருள் சுரந்த செய்கையின் பலனை அவர்கள் இராமசாமியிடம் உடனே கண்டனர். விபூதி மயமாகப் புத்தொளி கொண்டொளிரும் பாலகனிடத்தில் அன்றிலிருந்து ஒரு புதிய சக்தி உண்டாகிவிட்டது. இறையடியார் திருக்கரம்பட்ட இராமசாமியின் நெஞ்சில் மாபெரும் சக்தி உரமாக ஏறியது; கைகளில் ஒரு அரிய சக்தி உருவாகியது; இறையடியார் திருவேல்பட்ட இராமசாமியின் நாக்கிலிருந்து வரும் மொழிகள் அருள் சக்திபெற்று பலிக்க ஆரம்பித்தன. இந்த அற்புத நிகழ்ச்சி பல நூற்றுண்டுகளுக்கு முன், சீர்காழிக் கோயில் குளக் கரையில் நடந்த ஞானப்பால் கொடுத்த தெய்வத் திருவிளையாடலையே நமது மனக்கண்களுக்கு முன் கொண்டு வருகின்றது. ஏழாம் நூற் ருண்டில் சீர்காழியில் குளக்கரையில் சைவ சமயம் தழைக்கவும் பரப்ப வும் பிறந்திருக்கும் திருஞானசம்பந்தர் எனும் குழந்தையிடம் சிவபெரு மான் தோடுடைய செவியனுக, விடை ஏறியவனுக, மதிசூடியவனுக, காடுடைய சுடலைப்பொடி பூசியவனுகத் தோன்றி அவர் உள்ளம் கவர் கள்வனுகி விட்டார். உமை ஊட்டியபால் வாயிலிருப்பதைக் கண்டு திகைத்த தன் தந்தைக்கு ஊட்டியவர் யார் என்பதை அறிவிக்கும் வகையில் குழந்தை திருஞானசம்பந்தன், ஆண்டவனை வானில் சுட்டிக் காண்பித்ததோடல்லாமல் தீந்தமிழ்ச் சொற்களால் படம் பிடித்தும் காண்பித்து விட்டான்.

> "தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடி
> காடுடைய சுடலைப் பொடி பூசியென் உள்ளம் கவர்
> [கள்வன்
> ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்த அருள்செய்த
> பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மானிவனன்றே".

இருபதாம் நூற்ருண்டில் பால சமுத்திரத்தில் விநாயகர் குளக் கரையில் இறைவன் தேடற்கரிய பழுத்த சிவஞானியாகத் தனித்து வந்து காடுடைய சுடலைப்பொடியைத் தான் பூசிய தோடன்றிச் சிறுவனுகிய இராமசாமிக்கும் பூசி, சிறுவனுடைய பிஞ்சு உள்ளத்தைக் கவர்ந்து சென்ருர். அன்று இறைவன் தோடுடைய செவியனுக குழந்தைக்கு ஞானப்பால் வழங்கிய நிகழ்ச்சியைக் கேட்டு இன்புறு கின்ற நமது மனம், இன்று இறைவன் ஞானி உருவில் இராமசாமிக்கு ஞானப்பொடி பூசி ஞான வேலால் சிறுவன் நாவில் எழுதிய நிகழ்ச்சி யைக் கேட்டு இன்புறுகின்றது; அன்று நிகழ்ந்தது சைவம் தழைப் பதற்காக; இன்று நிகழ்ந்தது தெய்வ நம்பிக்கை செழிக்க வைப்பதற்காக.

இவ்விதமாகத் தெய்வ அருள் சம்பந்தங்கொண்ட எட்டு வயதுச் சிறுவனைத் திருஞானசம்பந்தர் என்று அழைப்பது மிகவும் பொருத்த மல்லவா? அப்படி அழைப்பது இறைவனுடைய இவ்விரண்டு பேரன்பர்களுடைய வாழ்க்கையில் உள்ள ஒற்றுமை நிகழ்ச்சியை மட்டும் நினைவுபடுத்துவதோடல்லாமல், இவ்விரண்டு சைவப் பெரியார்களும் மக்களிடம் சித்துக்கள் விளையாடி மக்களின் தீராத துயரை நீக்கவல்ல கருணைவள்ளல்கள் என்பதையுமல்லவா எடுத்துக் காட்டுகின்றது. அன்று வாழ்ந்த சீர்காழி திருஞான சம்பந்தன் அம்மையப்பர் ஊட்டிய ஞானப் பாலால் சிறந்தான்; இன்று நம்மிடையே உலவிவரும் பன்றிமலை திருஞான சம்பந்தன் அம்மையப்பன் பூசிய ஞானப் பொடியாலும் நாவில் எழுதிய ஞான வேலாலும் சிறந்து விளங்குகின்றான்.

ஞானப் பொடியாகிய பஞ்சாட்சரம் பூசப்பட்ட இராமசாமியின் நெஞ்சிலும் கரத்திலும் நாக்கிலும் யாவரும் கண்டு வியக்கும் சக்தி பெருகியது. இராமசாமி பாம்பைக் கண்டும் அஞ்சா நிலை எய்தினான். பாம்பைத் தன் கையாலேயே பிடித்துத் தன் கழுத்தில் மாலையாய்ப் போட்டுக் கொள்ளும் அளவுக்குத் தைரியம் தலைதூக்கியது. இப்படிப் பாம்புகளை அடக்கும் வல்லவனாகிய இராமசாமியிடத்தில் ஒரு அற்புத சக்தி குடிகொண்டிருப்பதை அறிந்துகொண்ட மக்கள் விஷக்கடி நீங்கிடச் சிறுவனிடத்தில் வரலாயினர். எப்பேர்ப்பட்ட பாம்புக் கடியும் விஷக்கடியும் இராமசாமியின் பெயரைச் சொன்னால் இறங்கி விடும் அளவுக்குப் பையன் சக்தி அடைந்துவிட்டான். இதுமட்டுமல்ல. விளையாட்டாக இச்சிறுவன் எது சொன்னாலும் அவ்வார்த்தைகள் வீணாவதில்லை. ஒருமுறை இராமசாமி ஒரு கல்லை எடுத்து 'இந்தா, கற்கண்டு' என்று தன் தோழனொருவனுக்குக் கொடுக்க, கல்லும் கற்கண்டாக மாறி இனித்தது. இந்தத் தெய்வீக சக்தி அன்றோடு நின்றுவிடவில்லை. நாளாக நாளாக மாபெரும் சக்தியாகத் திரண்டு பற்பல அற்புதங்களைக் காட்டவல்ல சித்துபுருஷனாக இராமசாமியை விளங்க வைத்தது. இன்றும் சாமிகளுக்கு இன்பம் பொங்க ஆரம்பித்துவிட்டால் அவரன்பு கற்கண்டு மயமாக அன்பர்கள் கரங்களிலே கிடைக்கும்.

தெய்வீக அருள் பொங்கி வழிகின்ற சிறுவன் இராமசாமியின் கைபட்டாலும் அற்புதம்! கால்பட்டாலும் அற்புதம்! சொல்பட்டாலும் அற்புதம்! சிறுவனுடைய கைவிசேடம் விஷக்கடியைமட்டும் குணப்படுத்தியதோடல்லாமல், விதைகளைத் தொட்டாலும் அவ்விதைகள் அமோகமான பலனை வயல்களில் விளையவைத்தது; சிறுவனுடைய கால் விசேடம் அவன் சென்ற இடங்களைச்சிறப்புற்றோங்கவைத்ததோடல்லாமல், அவன் பாத தூளிபட்ட இடத்திலிருந்து துஷ்ட தேவதைகளையும் தீய சக்திகளையும் விரட்டி அடித்தது; சிறுவனுடைய

சொல் விசேடம் கல்லைக் கற்கண்டாக மாற்றியதோடு நிற்கவில்லை, அன்றாடம் வயிறு வளர்க்கும் சிறு தொழிலாளி முதல் பெருந்தொகை ஈட்டும் பெருவியாபாரிகளின் இலாபத்தையும் சிறுவனுடைய வாழ்த்துரை விரிவுபடுத்தியது. இவைகளைக்கண்டு பேராச்சரியமும் பேரானந்தமும் அடைந்திருந்தார் பேரனைப் பேணிவளர்த்த பாட்டியார். ஒருநாள் பேரனை அழைத்துக் கொண்டு பால சமுத்திரத்திற் கருகாமையிலுள்ள கன்னடியப் பெருமாள் கோயிலுக்குச் சென்றாள் பாட்டியார். அங்கு பூஜை செய்ய வந்திருந்த பூசாரி வயிற்று வலியால் புழுவாய்த் துடித்துக் கொண்டிருந்தார். அடிக்கடி அவருக்கு வயிற்றுவலி வருவதுண்டு. அன்று நேரம் ஆக ஆக அவருடைய துடிதுடிப்பு சகிக்கொணாத வேதனையாக மாறியது. இதனைக்கண்டு மனமிளகிய பாட்டிக்குப்பேரனின் விபூதிபிரசாதத்தின் மகிமை நினைவுக்கு வந்தது. எதையும் மகிழ்ச்சியாகத் திருப்பவல்ல பேரனின் திருக்கரத்தால் அருளிய விபூதி பாட்டி நினைத்தபடியே பூசாரியின் தீராத வயிற்றிவலியை ஒரு நொடியில் பறக்கச் செய்தது. இதைப்பார்க்கும்போது சைவ சமயகுரவர் அப்பர்வாழ்வின் ஆரம்பப் பகுதியை நினைத்து இன்புறலாம். ஆரம்பத்தில் சமண சமயத்தினராக இருந்த மருள் நீக்கியார் சூலைவலியால் தவியாய்த்தவித்துச் சைவ சமயத்தினரான தன் தமக்கை திலகவதியாரை அடைந்தபோது, திலகவதியார் சிவபெருமானது பேருளை நினைத்துத் திருநீற்றை அஞ்செழுத்தோதித் தம்பிக்குக் கொடுத்தார். அதை உடம்பு முழுதும் அணிந்தவராய்த் தம்பி தமக்கையோடு திருவீரட்டானத்துறை அம்மான் கோயிலுக்கே விரைந்தார். ''தோற்றாதென் வயிற்றின் அகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட ஆற்றேன் அடியேன்'' என்று அலறித்துடித்து,

''கூற்றாயின வாறு விலக்ககலீர்
கொடுமை பல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்''

என்று உளங்கசிந்து உருகினார். இப்படிப் பத்துப் பாட்டுக்கள் பாட தீராத நோயும் உடலை விட்டகன்றது. அங்கும் ஒரு குணவதி திலகவதி உருவில் விபூதியின் மகிமையை உலகிற்கு எடுத்துக் காட்டினாள். இங்கும் ஒரு குணவதி பாட்டியின் உருவில் பேரனுடைய சக்தியை விபூதியின் மகிமையினால் உலகிற்கு எடுத்துக் காட்டினாள். இவ்விரண்டு அற்புதங்களும் நிகழ்ந்த இடங்களும் திருக்கோயில்கள்; இவ்விரண்டு அற்புதங்களால் பேரும் பெயரும் அடைந்தவர்களும் எல்லாம் வல்ல பேரருளின் கருணைக்குப் பாத்திரமான பெரும் பக்தர்கள், நாவுக்கரசராகத் திகழ்கின்றவர்கள். அப்பர்சாமி தாமியற்றிய தேவாரப் பாடல்களால் திருநாவுக்கரசரென்றே அழைக்

கப்பட்டார் ; பன்றிமலை சாமிகள் சகல கலைமணக்கும் அருள் வாக்கால் திருநாவுக்கரசராகவே மிளிர்கின்றார். பன்றிமலை சாமிகள் திருநாவுக்கரசராக விளங்குவதற்கும் முன்பே பால சமுத்திரத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியையும் கண்டுள்ளோம். அவருடைய திருநாவில் வேலாயுதம் கொண்டு எழுதிய இறைவன் செயலை நாம் மறந்துவிட முடியுமா? ஒரே சமயத்தில் திருஞான சம்பந்தராகவும் திருநாவுக்கரசராகவும் நம்மிடையே உலவிவரும் கருணாகரமூர்த்தி திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளை நாம் மனமொழி மெய்களால் வழுத்துவதன்றோ நமது பாக்கியம்! பாக்கியத்துள் பாக்கியம் எது? சிறந்த பாக்கியம் எது? என்று சாமிகள் அடிக்கடி ஒரு கேள்வியைப் போடுவார். தனபாக்கியம், தானிய பாக்கியம், சௌபாக்கியம், சந்தான பாக்கியம், என்றெல்லாம் அன்பர்கள் விடை சொல்வார்கள். இதுவரை அன்பர்கள் கொடுத்த விடைகளைச் சரியானவை யல்ல என்று சாமிகள் சொல்லிவிட்டார். நம்மோடு ஆன்மநேய ஒருமைப் பாட்டோடு வாழ்கின்ற பன்றிமலை சாமிகளை மனமொழி மெய்களால் வழுத்தும் பாக்கியத்தை விட வேறு பாக்கியமும் உண்டோ இப்பாருலகில்! இதுவே பாக்கியத்துள் பாக்கியம். இதைச் சாமிகள் ஒத்துக் கொண்டாலும் சரி ஒத்துக் கொள்ளவில்லையாயினும் சரி — நாம் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளை இப்பிறவியில் அடைந்துள்ள மாபெரும் பாக்கியம் பாக்கியத்துள் பாக்கியம் !! என்றே கொள்வோமாக!

## 5. சட்டி சாமியார் அருள் கூட்டு.

"வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில் குயில் ஆச்சுதடி —அக்கச்சி
மயில் குயில் ஆச்சுதடி
துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றுடும்
வள்ளலைக் கண்டேனடி—அக்கச்சி
வள்ளலைக் கண்டேனடி"

சாமிகள் அவதரித்த இடம் பன்றிமலை. சாமிகள் வளர்ந்த இடம் பழநிமலைக் கருகில் உள்ள பால சமுத்திரம். இவ்விரண்டு கிரிகளும் —பன்றிமலை, பழநிமலை—சாமிகள் தெய்வ அருள் நிறைந்தவர் என்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன. பன்றிமலை ஈசனுடைய தனிப் பெருங் கருணையை உலகிற்கு எடுத்துக் காட்டும் திருத்தலங்களில் ஒன்ருக விளங்குகின்றது. பெற்ருேரின்றி வாடித் தவித்த பன்றிக் குட்டிகளுக்கு இறைவன் தாயாகிப் பாலூட்டிய பெருமையைத் தாங்கும் திருத்தலம் பன்றிமலை. சோமசுந்தரக் கடவுள் திருலீலைகளுள் ஒன்ருன, பன்றிக்குட்டிகளுக்கு இறைவன் தாயான தத்துவத்தை விரித்துரைக்கும் புனிதமலை பன்றிமலை. இங்கு ஈசனடி மறவாத சிந்தையர்களும் சித்தர்களும் ஏராளமாக இருக்கின்றனர். இத்தகைய தெய்வ அருள் சுரந்த இடத்தில் பிறந்த சாமிகள் தம் சிறு பிராயத்தைப் பழநியாண்டவன் அருள் கொழிக்கும் பழநிமலைக் கருகே கழித்ததும் சாமிகளின் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். ஏனெனில் இங்கும் ஆண்டவன் அருளைத் தேடித் திரியும் ஆத்ம ஞானிகள் பலர் இருந்தனர். இன்னும் இருக்கின்றனர்.

சட்டி சாமியார் என்பவர் பழநியம்பதியில் வாழ்ந்த ஒரு பெரிய சித்தர். திரு முருகனடி மறவாத நெஞ்சினர். "தரணி தனில் அறுபத்து ஆறு கோடி தீர்த்தமும் சரவணத்துள்ளடக்கம்" என்று ஏத்தப் படும் பழநி சரவணப் பொய்கையைச் செம்மையாகச் சீர்படுத்திச் சிறு சிற்பங்களைக் கொண்டு சுவர் புறங்களை அழகுபடுத்திய பெருமை சட்டி சாமியாரைச் சேர்ந்தது. இவரைப் பழநியில் சரவணப் பொய்கை கட்டிய சாமியார் என்று அறிவர். ஆனல் அவருடைய அருள் சக்தியை பழநிவாசிகள் அதிகம் அறிந்திலர். இதை அறிந்த சில சீடர்கள் மட்டும் அவரைச் சூழ்ந்து கொண்டே இருப்பர். அவர்

கையில் உள்ளது மண்சட்டி, அது அவரின் வயிற்றைக் காக்க; அவரிடத்தில் உள்ளது ஒரு மாபெரும் சக்தி, அது அவரின் சீடரைக் காக்க. இம்மகானைத் தன் குருவாக அடையும் பேற்றையும் நமது சாமிகள் பெற்றார். ஆத்மீக ஒளியைத் தனக்குக் காட்டி உதவிய சட்டி சாமியாரை சாமிகள் அடிக்கடி நினைத்து இன்பமுடன் பேசுவதுண்டு. உயரமான சட்டி சாமியார் வாட்ட சாட்டமான திருமேனியோடு கோவணங் கட்டி ஒரு தோளில் பெரியதொரு சட்டியைத் தூக்கி நடந்துவரும் மறக்கமுடியாத கம்பீரத் தோற்றமும், சில சமயங்களில் தன் தலையில் சட்டியைக் கவிழ்த்து களிறு வருவது போன்று தோன்றும் காட்சியும், நமது சாமிகளைக் கண்டவுடன் பேருவகை பொங்கி 'பலே பலே' என்று பேரிகை முழங்குவது போல் குரல் எழுப்பி முதுகில் தட்டிக் கொடுத்து, நமது சாமிகள் அவரிடம் விடைபெற்றுக் கொள்ளும் போதெல்லாம் அவர் உச்சியிலிருந்து உள்ளங் கால் வரை தன் அருட் கரங்களால் வருடி அனுப்பும் பேரன்பினையும் சாமிகள் உளமார வாயார இன்றும் உரைப்பர். சிறுவன் இராமசாமி யென்றால் சட்டி சாமியாருக்கு ஒரு தனிப் பிரியம். இதை உணர்ந்த இராமசாமியும் மாதத்திற் கொருமுறையாவது சட்டி சாமியாரைப் பார்த்து வருவதுண்டு. சட்டி சாமியார் சிறுவன் இராமசாமியிடம் வேறு யாரிடத்திலும் காட்டாத அன்பையும் நெருக்கத்தையும் காட்டக்கண்டு சதா காலம் சட்டி சாமியாரை ஓட்டிக்கொண்டிருந்தவர்கள் ஆச்சரியப்படுவதுண்டு. அவர்களுக்கெல்லாம் சட்டி சாமியார் ஒரு பெரிய சித்தர் என்பது தெரியும். ஒரு முறை பழநி இரயில் நிலையத்தில் புறப்பட இருந்த ஒரு புகை வண்டி புறப்பட முடியவில்லை. எஞ்சினிலும் ஒரு கோளாறும் இல்லை. தண்டவாளங்களிலும் ஒரு கெடுதலும் இல்லை. இருந்தாலும் எஞ்சினை ஓட்ட முயன்றால் ஓட்ட முடியவில்லை; காரணம் என்னவென்று நன்றாகக் கவனித்தபோது எஞ்சினுக்கு முன்னால் சிறிது தூரத்தில் சட்டி சாமியார் எஞ்சினை நோக்கி இரெட்டினக் கால் போட்டு உட்கார்ந்திருந்தார். அவரை அந்த இடத்திலிருந்து அழைத்து வந்தவுடன் இரயில் வண்டியை புறப்பட வைக்க ஒரு கஷ்டமுமில்லை. இதை அறிந்திருந்த சீடர்களுக்கு சட்டி சாமியாருக்கு ஏன் இந்தச் சிறுவன் இராமசாமியிடம் இவ்வளவு அருள் சுரப்பு ஏற்பட்டது என்பது மட்டும் அறிய முடியவில்லை. இந்த அருள் சுரப்பு வளர்ந்து கொண்டே சென்றது. சட்டி சாமியார் அடங்க இருக்கும் நாளில் இராமசாமி அவருக்கு ஒரு கிண்ணம் நிறைய அவருக்குப் பிடித்தமான வெள்ளை சீயம் போன்ற அப்பங்களைத் தன் வீட்டில் செய்து கொண்டுவந்து கொடுத்தான். தனக்குப் பிடித்தமான பலகாரத்தைத் தனக்குப் பிடித்தமான பையன் தனக்குப் பிடித்தமான கடைசி நேரத்தில் வாயில் ஊட்டிய குருபக்தியைக் கண்டு ஆனந்த நிலையில் இருந்தார் இன்னும் சற்று நேரத்தில் இறைவனடி சேர இருந்த சட்டி சாமியார். சட்டி சாமியார் இராமசாமியின் தொடையில் தன்

தலையை வைத்துப் படுத்திருந்த வேளை அவருடைய கடைசி மூச்சும் அவர் பீரங்கி முழக்குடன் அழைக்கும் " கருங்கல் வீட்டுக்காரன் பழநியப்பன் " சரணக் கமலங்களுக்குச் சென்றுவிட்டது.

" கருங்கல் வீட்டுக்காரன், பழநியப்பன் "—! ஆம் பழநியில் வீற்றிருக்கும் தெய்வமே இந்தக் கருங்கல் வீட்டுக்காரன். இப்படித் தான் முருகனை வாய்விட்டு அழைப்பர் சட்டி சாமியார். வழக்கம் போல் ஒருநாள் சட்டிசாமியார் "கருங்கல் வீட்டுக்காரா, பழநியப்பா" என்று இடிமுழக்கம் செய்தார். திங்கட்கிழமை காலை நேரம். பக்தர்கள் 'பழநியாண்டவருக்கு அரோகரா' என்று வாயால் முழக்கிக் கொண்டு பழநிமலை மீது ஏறிக் கொண்டிருக்கின்றனர். வழக்கம்போல் இராமசாமியும் தன் பக்தர் குழுவோடு பழநிமலைக்கு ஏற முதல் படியில் கால் வைக்கும் தருணம். இந்தச் சமயத்தில் 'பழநியாண்ட வருக்கு அரோகரா' என்ற கூட்டு சப்தத்தை மிஞ்சிய 'கருங்கல் வீட்டுக்காரா, பழநியப்பா" என்ற ஒரு தனி இதய பேரொலியைக் கேட்டான். மெய்சிலிர்க்க வைக்கும் இந்த இதயப் பேரொலி மும்முறை இராமசாமியின் காதில் விழுந்தது. இராமசாமியை அதை எழுப்பிய சட்டி சாமியாரிடமே இழுத்துக்கொண்டு வந்து விட்டது. மலரைத் தேடிவரும் வண்டுபோல் சட்டி சாமியாரிடம் ஈர்க்கப்பட்ட இராமசாமி வடக்கு நோக்கிச் சென்றுக் கொண்டிருந்த சட்டி சாமி யாரைத் தொட்டான். தெய்வ அருளைத் தொட்டு விட்டான் இராமசாமி. சட்டிசாமியாரின் உருவில் வந்த தெய்வ அருள் இராமசாமியை உடனே ஆட்கொண்டு விட்டது. தன்னைத் தொட்ட கரங்களை வாரி அணைத்தார் சட்டிசாமியார். பழநிமலை அடிவாரத்தில் உள்ள விநாயகர் கோயிலுக்கு எதிரிலிருக்கும் மயில்வாகன மண்டபத்தின் முன் இராமசாமியை அழைத்து வந்தார் சட்டிசாமியார். அங்கு இராமசாமிக்கு மந்திர உபதேசம் செய்தார். தன் கையி லிருந்த சட்டி போன்று ஒரு சட்டி வாங்கி அதில் தண்ணீர் ஊற்றி ஒரு வேப்பிலைக் கொத்து மரத்திலிருந்து பறித்து வந்து, அதில் நட்டு தான் சொல்லிக் கொடுத்த உபதேச மந்திரத்தைச் சொல்லி பூசிக்கும்படி ஆக்ஞாபித்தார் சட்டிசாமியார். வேப்பிலைக் கொத்தை பறிக்க வேப்பமரத்தில் ஏறும்போது ஒரு மந்திரம்: வேப்பிலைக் கொத்தைப் பறிக்கும்போது ஒரு மந்திரம்: மரத்திலிருந்து இறங்கும் போது ஒரு மந்திரம்: இதைப் பானைக்குள் தண்ணீரோடு வைத்து பூசிக்கும்போது ஒரு மந்திரம். இப்படி 108 நாட்கள் பூஜை செய்து முடிக்க வேண்டும். பூஜையை பூர்த்தி செய்து விட்டால் பூஜாபலன் கிட்டும். பூஜாபலன்! பெறுதற்கரிய பொருளை நிச்சயமாக அடைந்து விடுவது! இந்த எண்ணத்தில் தீவிரமாக மும்முரமாக உடனே பூஜையை ஆரம்பிக்க சித்தமானான் சிறுவன் இராமசாமி.

" உபதேசமந்திரப் பொருளாலே உனைநான் நினைந்தருள் பெறுவேனோ" என்று துடிக்கும் உள்ளம் தாத்தா வீட்டிலேயே

ஒரு அறையில் சட்டிசாமியார் உபதேசித்தபடி பூஜையை ஆரம்பித்தது. இராமசாமி காலை மாலை பூஜை செய்து வந்தான். ஐம்பத்திரண்டாவது நாள் பூஜை நடத்தும்போது உருண்டு திரண்ட ஒரு தோற்றத்தைக் கண்டு இராமசாமி கலவரமடைந்தான். இதையறிந்த இராமசாமியின் பாட்டனூரும் இனி இந்தப் பூஜை வேண்டாமென்று சிறுவனைத் தடுத்துவிட்டனர்.

பூஜையை ஆரம்பித்து, ஆனுல் அதைப் பூர்த்தி செய்ய முடியாமல் விட்டுவிட்ட இராமசாமி நிம்மதி இழந்தான். எடுத்த பூஜையை விடாது செய்து முடித்துவைக்க சட்டிசாமியாரும் பழநியில் உதவக் கிடைக்கவில்லை. கொஞ்ச நாட்கள் சென்றன. இளைஞனுடைய ஆர்வம் மட்டும் வளர்ந்தோங்கி வந்தது. ''முயற்சி திருவினை யாக்கும்'' என்பதில் நம்பிக்கை கொண்ட சிறுவன் தன் பாட்டியைச் சரிப்படுத்தி அவள் ஒத்தாசையால் பூஜையை மறுபடியும் ஆரம்பித்தான். பூஜை தொடர்ந்தாற்போல் தங்கு தடையின்றி நடந்தது. அவ்வப்போது தோன்றும் காட்சிகளைக்கண்டு இளைஞன் இப்போது அஞ்சுவதில்லை. இத்தோற்றம் பயமுறுத்த வரும் தோற்றமில்லை, தன்னை ஆட்கொள்ள வரும் அழகுத் தோற்றம் என்பதைப் படிப்படியாக உணர்ந்து கொண்டான் இராமசாமி. சிறுவனுடைய மனப்போக்கையும் சித்திகளையும் கண்ட சிறுவனின் தந்தையும் சிறுவனின் இந்த ஆத்மீக செயலில் உற்சாகமூட்டினுர். தெய்வீக சித்தராகிய சட்டிசாமியாரெனும் தாமரையைக் கண்டு மயங்கி முயங்கி அவரின் தெய்வத்தேனை ருசிகண்ட இராமசாமி வண்டின் போக்கை இனிமேல் தடுப்பாருண்டோ?

இராமசாமிக்கு சட்டி சாமியார் சொல்லிக்கொடுத்த மந்திரம் இராமசாமி பூஜை செய்யும்போது ஓர் உருண்டுதிரண்ட தோற்றத்தைக் காண்பித்து ஆரம்பத்தில் இராமசாமியைப் பயப்பட வைத்தது என்று அறிந்தோம். இராமசாமி தன் விடாமுயற்சியால் அஞ்சாது பூஜையைத் தொடர்ந்து நடத்த ஆரம்பித்தான். இந்த உருவமும் தொடர்ந்து வர ஆரம்பித்தது; தொடர்ந்து வர ஆரம்பித்தது படிப்படியாக பிரகாசத்தோடு வளர்ந்து தெய்வீக மலர்ச்சியில் சிறுவனை அன்றுமட்டுமல்ல, சாமிகளை இன்றும் என்றென்றும் எங்கெங்கும் ஈடுபடவைத்து அருள் பாலித்து வருகின்றது. இத்தகைய திருஉரு எப்படி இருக்கும் என்பதை நாம் அறிய ஆவலுறுவது இயற்கை. இதே ஆவலோடு ஒருநாள் நான் பயபக்தியோடு சாமிகளை இதைப் பற்றி விளக்க துணிந்து கேட்டு விட்டேன். எதற்கும் இல்லை என்பதையே உரைக்காத சாமிகள் இதற்கும் அன்போடு பதில் அளித்தார். தான் நேரில் கண்ட இன்பத்தை இதைக் கேட்கும் யாவரும் உள்ளக்கண்களில் கண்டு அனுபவிக்கவும் உதவினுர்கள். சாமிகள் கூறுவதையே

கேட்போம். "உருண்டு திரண்ட தோற்றத்தைக் கண்டு, அதிர்ச்சியடைந்தேன் என்று சொன்னேனல்லவா. ஆம், முதலில் அதிர்ச்சி தான் அடைந்தேன். திடீரென்று என்முன் ஜெகஜ்ஜோதியாக ஒரு தோற்றம் தோன்றினால் எப்படி இருக்கும். தாளிட்டிருந்த தனியறையில் சிறுவனாக இருந்த எனக்குச் சற்றுப் பொறுத்துப் பார்ப்போம் என்ற மனநிலை இல்லை. ஆரம்பித்த ஒளி பேரொளியாவதைக்கண்ட என் பிஞ்சு உள்ளம் அதில் என்ன உண்டாகுமோ அதனால் எது விளையுமோ என்று அஞ்சியது. ஆனால் பூஜையை விடாப்பிடியுடன் தைரியமாகத் தொடர்ந்து நடத்தும் நாட்களில் நான் கண்ட பேரின்பக் காட்சியை என்னென்று இயம்புவேன். ஜெகஜ்ஜோதியாகத் தோன்றிய ஒளிப்பிழம்பில் தாமரை இதழ்கள் உருவாயின. ஒன்று இரண்டென வளர்ந்து பத்து இருபதெனக் கூடி நூறு இருநூறு எனப் பெருகி ஓராயிரம் இதழ்கள் கொண்ட சூரியப் பிரகாசப் பேரொளியாக அது வளர்ந்தோங்கியது. அதன் நடுவில் ஒரு தேஜோ மயமான மங்கள திருமுகம்! கருணையே பாலிக்கின்ற தாயின் கனிமுகம்! புன்னகை கமழும் அழகே உருவெடுத்த தெய்வமுகம்! அன்னை பராசக்தியின் அருள்முகம் உருவாயிற்று. என்னைத் தடுத்தாட்கொள்ள வந்த அழகுப்பெண் தெய்வம் என்னைக் கண்டு புன்னகை பூத்தாள். நான் அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகியின் சகஸ்ரகமல இதழ் ஜோதி வடிவில் வாயடைத்து அமைந்து விட்டேன்

"வாய்பேசா ஊமையென வைக்கவென்றோ நீ மௌனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே"

"தன்னைத் தந்தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக் கொண்டென்ன பலனெந்தாய் பராபரமே"

என்று அன்று தாயுமானர் வருணித்த அமர நிலையில் அமர்ந்து விட்டேன். அன்னையின் திருவழகை இப்பொழுது நினைத்துப் பார்க்கும்போது குமரகுருபர சாமிகளின் மீனாட்சியம்மை பிள்ளை தீந்தமிழ்ப்பாடல் ஒன்று நினைவுக்கு வருகின்றது.

"தொடுக்கும் கடவுள் பழம்பாடல்
தொடையின் பயனே! நறைபழுத்த
துறைத்தீம் தமிழின் ஒழுகுநறும்
சுவையே! அகந்தைக்கிழங்கை அகழ்ந்து
எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே! வளர்சிமைய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே! எறிதரங்கம்

உடுக்கும் புவனம்கடந்து நின்ற
ஒருவன், திருஉள்ளத்தில் அழகு
ஒழுக, எழுதிப் பார்த்திருக்கும்
உயிர் ஓவியமே! மதுகரம், வாய்
மடுக்கும் குழற்காடு ஏந்தும், இள
வஞ்சிக் கொடியே வருகவே!
மலையத்துவசன் பெற்ற பெரு
வாழ்வே! வருக வருகவே!"

இவ்வாறு அம்மையின் வருகையை உள்ளன்போடு சுவைத்தேன். அதன்பின் நான் கண்ட அற்புதக் காட்சியின் மாற்றத்தை எப்படி வருணிப்பேன்! அம்மையின் கன்னிமங்கள அருள் முகவடிவிலே ஒரு தெய்வமாற்றம்! அன்னை பராசக்தி மறைந்துவிட்டாள்! அவள் திருமுகம் ஒளிர்ந்த இடத்தில் மற்றொரு திருமுகம். இதுவும் அழகு முகம்! இதுவும் புன்னகைபூத்த தெய்வீகமுகம்! இதுவும் அருள் மணக்கும் அற்புதமுகம்! இளமை கொழிக்கும் குமரன்முகம்! முருகு வழிகின்ற இனிமைமுகம்! தெய்வீக மணம் கமழுகின்ற கோலமுகம்! காணக்காணத் தெவிட்டாத அருள்முகம்! இளமை, இனிமை, மணம், அருள் — இவையெல்லாம் ஒருங்குசேர்ந்து உருண்டு திரண்ட திருமுருகனின் திருமுகம்! இன்னருள் கரந்து என்னைத் தடுத்தாட்கொண்ட திருமுகம்! இன்றும் என்னைப் பேரானந்தப் பெருவெள்ளத்தில் மிதக்க வைக்கின்ற திருமுகம்!" என்று உளமுருக வருணித்தார் சாமிகள் தான் கண்ட தெய்வ அருட்காட்சியினை.

"காட்டுந்திருவருளே கண்ணாரக் கண்டுபர
வீட்டின் மெய்ப்பொருளை மேவுநா ளெந்நாளோ
அருவுருவ மெல்லா மகன்றதுவேயான
பொருளெமக்கு வந்து புலப்படுவதெந்நாளோ
ஆரணமும் காணு வகண்டி தாகாரபரி
பூரணம்வந் தெம்மைப் பொருந்து நாளெந்நாளோ"

என்று ஏங்கித்தவித்த உள்ளத்திற்குத் தான் தேடித்தவித்த திருநாள் கூடிவிட்டது. இத்திருநாளில் இறையின் நிறைவை கண்குளிரக் கண்டார்.

"பந்தமெலாந் தீரப் பரஞ்சோதி நீகுருவாய்
வந்தவடிவை மறவேன் பராபரமே"

என்று மனம் பூரித்தார் சாமிகள்.

"சிந்தைமயக் கமறச் சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையும் நான் தந்தேன் பராபரமே

என்று ஆனந்தக் கூத்தாடினர் சாமிகள்.

முதன் முதலில் கண் குளிரக் கண்ட கோலக் குமரனின் ஜெகஜ் ஜோதித் தோற்றம் சாமிகளின் மெய்யை விதிர்க்கச்செய்தது. மனத்தை நெக்குருகச் செய்தது. கோலக் குமரனின் ஜோதி மயத் தோற்றத்தை சாமிகளால் கண்குளிரக் காணமுடிந்ததா என்ற ஐயம் வேண்டாம். அருட்பெருஞ் ஜோதியில் அல்லவா தனிப் பெருங் கருணை குடி கொண்டுள்ளது. ஆரம்பித்தது என்னவோ கண்களைக் கூச வைக்கும் மனத்துள் அச்சமூட்டும் பேரொளி தான். ஆனால் அதைப் பார்க்கப் பார்க்க அது குளிர்ச்சியூட்டும் குறு நகை தவழ் அன்னை முகமாகி பின் திரு முருகன் முகமாக மாறி பேரின்பத்தையும் நம்பிக் கையையும் ஜிலு ஜிலு வென்று ஊட்ட ஆரம்பித்து விட்டது. எத்தனை நாட்களாக எந்த எட்டாத பொருளுக்காக ஏங்கித் தவித்திருந்தாரோ அந்தப் பேரின்பப் பொருள் எட்டிவிட்டது, காட்சி கொடுத்து ஆட் கொண்டு விட்டது, கண்களுக்கும் கருத்துக்கும் தெவிட்டாத தேனைப் பிழிந்து ஊட்ட ஆரம்பித்து விட்டது.

" அருவமும் உருவமுமாகி அநாதியாய் பலவாய் ஒன்றாய்
பிரமமாய் நின்ற ஜோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும்
கொண்டே

ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய "

உலகம் உய்வதற்காகத் திரு முருகன் அவதரித்ததை அல்லவா இந்தப் பாடல் நமக்கு வருணிக்கின்றது. இந்தப் பாடல் நமது சாமிகளின் முன்னும் உலகம் உய்வதற்காகவே திருமுருகன் பிழம்பதோர் மேனி யாக உதித்த விபரத்தையுமல்லவா சித்தரிக்க உதவுகின்றது.

சாமிகளுக்கு உலகம் உய்வதற்குத் தோன்றும் இத் திருக்காட்சி கிடைத்து விட்டது திருமுருகனுடைய திருவருளே கிடைத்து விட்டதை விளக்குகின்றது.

" நாள் என் செயும், வினை தான் என் செயும்
என்னை நாடி வந்த
கோள் என் செயும், கொடுங் கூற்றென் செயும்
குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே. "

என்று உளமார

குமரனைக் கண்டு கசிந்துருக ஆரம்பித்தார் சாமிகள். பேராதரிக்கும் அடியவர் தம் பிறப்பை ஒழித்துப் பெரு வாழ்வும் பேறும் கொடுக்க வரும் பிள்ளைப்பெருமான் என்னும் பேராளன் திருமுகத்தை

சாமிகள் பரவிப் புகழ்ந்து விருப்புடன் "அப்பா வா வா" என்று போற்றிப் பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால், சாமிகளின் திருமுன் வராதிருக்க வழக்குண்டோ வடிவேல் முருகனுக்கு! வளரும் களபக் குரும்பை முலை வள்ளிக் கணவன் ஓடோடி வந்து விட்டான்; இன்றும் வருகின்றான்; சாமிகளின் திருமுன் தன்திருக்காட்சியைக் காட்ட. இறைவன் திருவருளை, பிறவியின் பெரும்பயனை, அருட்பெருஞ்சோதியை, தனிப்பெருங்கருணையை, திருமுருகன் திரு வடிவழகில் கண்டு கொண்ட சாமிகள் அத்திருமுகம் மாறி மாறி விளக்கம் கொடுக்கும் மெய்ப் பொருளையும் உணர்ந்தார். அதில் ஏறுமயிலேறி விளையாடும் திருமுகத்தைக் கண்டார்: ஈசருடன் ஞான மொழி பேசும் திருமுகம் கண்டார்; கூறுமடியார்கள் வினை தீர்க்கும் திரு முகம்கண்டார்: குன்றுருவவேல் வாங்கி நின்ற திருமுகம் கண்டார்: மாறுபடு சூரரை வதைத்த திருமுகம் கண்டார்: வள்ளியை மணம் புணர வந்த திருமுகம் கண்டார். அதுமட்டுமில்லை. ஆறுமுகமான மெய்ப்பொருளை நீக்கமற நிறைகின்ற சச்சிதானந்தப் பேரொளியில் ஆதிஅருணாண் சோதியில் கண்டு விட்டார். "அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்" என்ற திருப்பாட்டின் திருஅடிக்கும் விளக்கம் கண்டுவிட்டார். சாமிகளுடைய ஐம்புலன்களும் இறைவனிடத்தில் ஒருசேர ஈடுபட இறைவன் தானாகவே சாமிகளின் முன் தோன்றி விட்டான். இறைவன் ஓருதரமென்ன, நினைக்கும்போதெல்லாம் 'முருகா' என்றழைத்தவுடன் சாமிகளிடம் தோன்றி விடுவன்.

அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்-நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன்.

இப்படி அவருக்கு முதன் முதலில் காட்சி கொடுத்த சாமிகளின் கருத்தே புகுந்து கதிகாட்டும் கண்மணி முருகனைச் சாமிகள் நேரில் கண்டு அவனை வருக வருக என்று போற்றிப் பணிந்தனர். அத்திரு முருகனைச் சாமிகள் கண்டுகளித்த காட்சியை ஓரளவு திருப்போரூர்ப் பிள்ளைத்தமிழ் நமக்கு எடுத்துக்காட்ட உதவுகின்றது.

" கருத்தே புகுந்து கதிகாட்டும்
கண்ணே வருக! மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக; கருணை பொழி
காரே வருக; ஆனந்தப்
பெருக்கே வருக; யாங்கள் பெறும்
பேறே வருக; மறைசொல் கிளிப்
பிள்ளாய் வருக. பிறங்கு தெய்வப்
பெம்மான் வருக; குறமடந்தை

தருக்கே வருக; மிடியகற்றும்
தருவே வருக; மன்பதைக்கோர்
தஞ்சே வருக; எமையளிக்கும்
தாயே வருக; பவப்பிணிக்கு
மருந்தே வருக; சமரபுரி
வாழ்வே வருக; வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல் வருக; வருகவே"

இப்படியே வள்ளல் முருகனை, தனக்குத் தேசிகனுக வாய்த்தவனை, அறிவானந்தச் சுடரை சாமிகள் மனமுருகி வரவேற்ருர். இன்றும் நினைக்கும்போதெல்லாம் அடைந்து வரவேற்றுப் பேரானந்தப் பெருநிலையில் அமர்ந்துள்ளார்.

சாமிகள் சட்டிசாமியாரின் உதவியால் கண்டுகொண்ட உண்மையான கடவுள் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பரம்பொருள். வெட்டவெளியாக இருப்பதை இன்னதென்று எப்படிக் குறித்துக் காட்ட முடியும்? ஓரளவு முடியும். அதைத்தான் "கருத்தே புகுந்து கதிகாட்டும் கண்ணே வருக" என்று ஆரம்பிக்கும் பிள்ளைத் தமிழும் நமக்கு உணர்த்துகின்றது. சாமிகள் சட்டிசாமியாரின் அருள்கூட்டுறவால் ஞானசொரூபனை—அறிவொளியைக் கண்டார். அதனுல் ஆத்மீகத்தேனை, பேரானந்தத்தேனை, இனிக்க இனிக்கச் சுவைக்கும் பெருவாழ்வு நிலையை அடைந்தார். சின்னஞ்சிறிய வயதிலேயே திருப்பழநியாண்டவன் சாமிகள் பிஞ்சுமனத்தைக் கொள்ளை கொண்டான். பழநியம்பதியில் வாழ்ந்த, கருங்கல் வீட்டுக்காரனின் (திருமுருகனின்) பக்தியில் வாழ்ந்த சட்டிசாமியாரும் திருவருள்சுரந்து உபதேசமந்திரத்தைச் சாமிகளுக்கு வழங்கி விட்டார். இந்த உபதேச மந்திரத்தால், அருவமும் உருவமுமானவனை, அருட்பெருஞ் சுடராகவும், அதுவே முதலில் பராசக்தியாகவும் அதன்பின் திருமுருகனுகவும் தம்முன் தோன்றிய திருக்காட்சிகளையும் சாமிகள் நேரில்கண்டு அனுபவித்துவிட்டார். அன்று முதல் திருமுருகனை வழிபடு தெய்வமாகக் கொண்டார். உள்ளத்தை ஒருநிலைப்படுத்தி மனத்தை ஒருவழிப்படுத்தி உண்மைப்பொருளை ஆராய்ந்து உணரவும் திருமுருகனைத் தேசிகனுக பரமகுருவாக அடையப் பெற்ருர்.

"ஒளியில் விளைந்த உயர்ஞான
பூதரத்து உச்சியின்மேல்
அளியில் விளைந்தது ஓர்ஆனந்தத்
தேனை; அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப்
பெற்ற வெறும் தனியைத்
தெளிய விளம்பியவா! முகம்
ஆறுஉடைத் தேசிகனே"

என்ற கந்தர் அலங்காரப் பாடலுக்கும் நேரிலேயே தத்ரூபமாகத் தான்கண்ட காட்சியில் விளக்கம் கண்டார் சாமிகள்.

இந்த பேரற்புதக் காட்சியைப்பற்றிச் சாமிகளிடமிருந்து கேட்ட எனக்குப் பெரியவர்கள் வாழ்வில் இப்படி ஏற்பட்ட தெய்வீக அருள் தோற்றங்கள் ஞாபகத்திற்கு வந்தன. இராமலிங்க அடிகள் ஆணிப் பொன்னம்பலத்தே கண்ட அற்புதக் காட்சி மனத்திற்கு வந்தது. அவருடைய அற்புதக்காட்சியும் ஜோதிமலையிலேதான் ஆரம்பித்தது. வீதிகடந்து மேடையடைந்து மேல்நிலைமாடமுயர்ந்து பற்பல நவமணி முத்துக்கள் இழைத்த பொன்னம்பலத்தே ஏறி அவர்கண்ட புதுமைகள் மனக்கண்களுக்கு முன் தோன்றின.

"ஆங்காங்கே சக்திகள் ஆயிரமாயிரம்
ஆகவந்தார்களடி — அம்மா
ஆகவந்தார்களடி
வந்து மயக்க மயங்காமல் நானருள்
வல்லபம் பெற்றேனடி — அம்மா
வல்லபம் பெற்றேனடி.

என்று மனமகிழ்ந்து பாடுகின்றார் இராமலிங்க அடிகள். அது மட்டுமல்ல. இராமலிங்க அடிகள் மாதம்பமேறி மணிமுடிகண்டார்; அதன்மேல் கொடுமுடி கண்டார்; கோயில் கண்டார்; கோயில் திருவாயில் கண்டார்; அதன் மணிவாயில் கண்டார்; கடைசியில் திருவாயிலே கண்டார்; அங்கே அம்மையையே கண்டுவிட்டார்.

"அத்திருவாயிலில் ஆனந்தவல்லி யென்
அம்மையிருந்தாரடி-அம்மா
அம்மையிருந்தாரடி
அம்மையைக்கண்டேன் அவளருள்கொண்டேன்
அமுதமுமுண்டேனடி-அம்மா
அமுதமுமுண்டேனடி.

அவளருளாலே நடராஜர் சன்னிதி கண்டார். அங்கே அவர் பெற்ற பேறது சாமியறிவாரடி என்று தன் அனுபவத்தைப் பாட்டில் சொல்லாமல் சொல்லி முடித்துவிட்டார் இராமலிங்க அடிகள். அவரால் அந்தப் பேரின்ப நிலையைச் சொற்களால் வருணிக்க இயல வில்லை. இந்த அனுபவத்தை ஒட்டி அல்லவா நமது சாமிகளின் திருக்காட்சிச் சிறப்பும் அமைந்திருக்கின்றது. பெரியவர்களின் போக்கும் அனுபவங்களும் மொழிகளும் ஒத்துத்தான் இருக்கின்றன.

இந்தச் சந்தர்ப்பத்தில் பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ணர் வாழ்விலும் அவர் தியானத்தில் ஏற்படும் தெய்வீகக் காட்சியைக்

குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். ஸ்ரீ இராமகிருஷ்ணர் தியானத்தில் அமரும்போதெல்லாம் வடிவில் அவர் போன்ற ஒரு சன்யாசி கையில் திரிசூலம் தாங்கிக்கொண்டு அவர் தேகத்தினின்று வெளிவருவார். ஒருமை மனத்துடன் தியானம் செய்யும் முறையை அவருக்கு உணர்த்துவார். அவ்வாறு செய்யத்தவறினுல் திருசூலத்தால் தாக்குவதாகவும் அவ்வுருவம் பயமுறுத்தும். ஒருநாள் அவர் தேகத்திலிருந்து கரிய நிறங்கொண்ட தாமோமய பாபபுருடன் ஒருவன் வெளிப்பட, இந்தச் சந்யாசிஉரு அப்போதே அவனை அங்கே குத்திக் கொன்றுவிட்டது. அதன் பிறகுதான் தான் புனிதன் என்ற உணர்ச்சி அவரிடம் ஏற்பட்டது. இராமகிருஷ்ணர் தியானத்தில் அமர்ந்ததும் வெளிவரும் இவ்வுரு மீண்டும் அவர் தேகத்துள் ஐக்கியமான பிறகுதான் அவர் புற உணர்ச்சி பெறுவர் என்று இராம கிருஷ்ண பரமஹம்சரே கூறி இருக்கின்றுர்.

பெரியவர்களது தெய்வீக அனுபவங்கள் இவை: இவைகளைக் கேட்கும்போதே நமக்கு எவ்வளவு ஆவலும் ஆச்சரியமும், ஆனந்தமும் ஏற்படுகின்றது. திருமுருகன் திவ்விய சொரூபத்தை அனுதினமும் கண்டு மகிழும் ஆனந்தமய சாமிகளுடைய அற்புதக் காட்சியின் அருமையினைச் சாமிகளுடைய திருவாயாலேயே கேள்விப்பட்ட நமக்கு மலரும் தெய்வீகப் பேரொளியில் மணக்கும் திருமுருகன் எழிலை ஓரளவு கற்பனை செய்து கொள்ளவும் முடிகின்றது. இந்த அருமையினைச் சுவைத்திட்ட பேரின்பத்தில் அல்லவா சாமிகள் அடிக்கடி 'முருகா முருகா' என்ற இதயப் பேரொலியை எழுப்பி அடியார்களுக்கு இன்னருள் சுரந்து மகிழ்வூட்டுகின்றுர். இந்த வண்ண வடிவின்பத்தின் மெய்ப்பொருளான முருகன் அருள் அல்லவா சாமிகளிடம் குடிகொண்டு சாமிகளை அண்டினவருக்கெல்லாம் அருட்பெருஞ்சோதியாகத் தனிப்பெருங் கருணையாக உதவி வருகின்றது. இத்திருமுருகனின் தெய்வாம்சம் சாமிகளிடம் உறைந்திருப்பதற்குச் சான்றும் அவர் திருக்கரங்களில் அமைந்துள்ள முருகாம்சங்களாகிய சேவற்கொடி, வேல், சக்தி வேல், ஐண்டா, அறுகோணம் முதலியன அல்லவா? இத்திருமுருகன் தண்ணளியல்லவா சாமிகள் வேண்டும் பொருள்களை வேண்டிய சமயத்து அடையவும் தீராத வியாதிகளைத் தீர்த்து வைக்கவும் பயன்படுகின்றது. திருமுருகனையே சாமிகள் அன்போடு அழைக்கும்போதெல்லாம் கூட்டி வருகின்றது. என்னே இந்த அருள் சக்தி மந்திரத்தின் பெருமை! என்னே இதை உபதேசித்தருளிய சட்டி சாமியாரின் மகிமை! தன்னுடைய ஊனிலும் உயிரிலும் நிறைகோயிலாகக் குடிகொண்ட குமரனையும் அவன்கோலத்தையும் அழகு திருமுகத்தையும் எண்ணி எண்ணி நெக்குருகுவர் சாமிகள். அவனை எங்கே நினைப்பினும் அங்கே வந்து சாமிகளின் திருமுன்னர் நிற்பன் திருமுருகன்.



அன்னையார் திருமதி பாப்பாத்தி அம்மாள் அவர்களோடு சாமிகள்

கந்தனையும் வள்ளியும்போல் கோலாகலமும்
கற்போடு இணைந்த வாழ்வில் கைலைகண்டோய்
இங்குமது தெய்வபலம் இவற்ருல் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோகநாதா !

(திரு. T. D. மீனுட்சிசுந்தரம்)



சாமிகளோடு திருச்சி டாக்டர் திரு. T. V. அரங்கநாதனும்
M.B.B.S., L.O., (MADRAS), Z.O., (VIENNA) D.O., (LONDON)
திருமதி அரங்கநாதன் இராஜேஸ்வரியும், மகள்
திருநிறைச்செல்வி அவ்வையும்

''உன்னருமை பேசபேச தேவாதேவா—எங்கள்
வாய்களெல்லாம் திதிக்குதையா தேவாதேவா
எம்மருமைச்செல்வ குருநாதா தேவா—எங்கள்
இஷ்டத்திற்குகந்த குருநாதா தேவா''

(பக்கம் — 300) (திரு. T. D. மீனுட்சிசுந்தரம்)

"செங்கோல் எடுத்த திணிவடிவேலும் உன் திருமுகமும்
பங்கே நிறைந்த உன் பன்னிரு தோளும் உன்பதும மலர்
கொங்கே தரள செங்கோடக் குமரனென நான்
எங்கே நினைப்பினும் அங்கே என்முன் வந்து எதிர் இருப்பனே"

இந்தப்பாடல் சாமிகளின் முருக இன்பத்தை எடுத்துக்காட்டும் அருமையுடையது. இந்தப்பாடலைச் சாமிகளே உளமுருகி அருமையாக அடிக்கடி பாடுவதும் உண்டு. சாமிகள் நினைக்க வேண்டியதுதான். உடனே அங்கே கோலக் குமரன் சாமிகளுக்குமுன் காட்சியருளுகின்றான். இந்த அளவுக்குச் சட்டி சாமியார் உபதேசித்தருளி இருக்கின்றார் சாமிகளுக்கு!

சாமிகள் இன்றும் சட்டி சாமியாரை அடிக்கடி நினைப்பதுண்டு. அவர் அருமை பெருமைகளை வாய்விட்டுப் புகழும்போது கூறும் சாமிகளின் முத்து மணி மொழிகள் இவைகள். "கிணற்றிலுள்ள தாமரையின் அருமை அதில் உள்ள நத்தைகளுக்குத் தெரிவதில்லை. அதன் மீது உட்கார்ந்து ஆடும். ஆனால் ஆயிரம் மைல்களுக்கப்பால் உள்ள வண்டுகள் அந்தக் கிணற்றுத் தாமரையின் அருமையை அறிந்து பறந்தோடி வந்து அதை மொய்த்து அதன் தேனைக் குடிக்கும்" ஆம், உண்மைதான்! பன்றிமலையிலிருந்து பறந்தோடி பால சமுத்திரத்தில் பாட்டன் வீட்டில் வளர்ந்து வரும் அருள் தேனுக்கு வாயூறிக்கொண்டிருக்கும் இராமசாமி வண்டுக்குச் சட்டிசாமி உருவில் பேரருள் தேன் கொழிக்கும் தெய்வீகத் தாமரை கிடைத்து விட்டால் சும்மாவிடுமா சிறுவண்டு அருட்தேன் மலரை!

பழநியம்பதியில் வாழ்ந்து 'கருங்கல் வீட்டுக்காரன் பழநியப்பனைச்' சிந்தனைசெய்து சாமிகளுக்கு அருள்வழங்கிய சட்டிசாமியாருடைய சமாதி, பழநி கிரிவலம் வருகின்ற சாலையில் சாமிகளுக்கு முதல்முதல் உபதேசித்தருளிய மயில்வாகன மண்டபத்திலிருந்து சுமார் நூறுகெஜ தூரத்தில் இடதுபுறத்தில் உள்ளது. சாமிகளுடைய உரையாடலிலிருந்து சட்டிசாமிகள் கவுண்டர் இனத்தைச் சேர்ந்தவரென்பதை அறிய முடிகின்றது. அவர் பழநி தண்டாயுதபாணியை 'கருங்கல் வீட்டுக்காரன்' என்று பெயர்வைத்து அழைப்பதே வேடிக்கையாக இல்லையா! இப்படியேதான் அவர் வியாதிகளை நீக்க உபயோகிக்கும் சொற்களும் அமைந்திருக்கும். சொற்கள் கேட்பதற்கு வேடிக்கையாக இருக்கும். சட்டிசாமியார் வியாதியுள்ளவரின் தோளில் உள்ள ஒருதுண்டையே எடுத்து வியாதியை ஓட்டு

விக்கத் துண்டையே சுழட்டிச் சுழட்டி அடிப்பதும், அப்படிச் செய்யும் போதே சம்பந்தமில்லாதது போன்ற சொற்களைச் சொல்லி மந்திரிப் பதும் பார்ப்பதற்கும் கேட்பதற்கும் வேடிக்கையாக இருக்கும்.

"காட்டிலே பழம் பழுக்க
கண்டவர் பறிச்சிதிங்க
மேட்டுத்தண்ணீர் பள்ளத்தில்ஓட
மேஞ்சாடு புளுக்கைபோட
நீ அழுக நான் சிரிக்க"

என்று சொல்லிச் சட்டிசாமியார் வருகின்றவர் துண்டு கொண்டே மந்திரிப்பர். சட்டிசாமியாரது வேடிக்கையான பெயர் போன்றே அவரது மந்திரச் சொற்களும் வேடிக்கையாக அமைந்துள்ளன. இத்தச் சொறகளில் வினை அகற்றக்கூடிய சக்தி இருக்கின்றது என்று சாமிகள் திருவாய்மலர்ந்தருளினர். "சட்டிசாமியாரது, உருவும் பேச்சும் போக்கும் வேடிக்கையாகத்தானிருக்கும். ஆனல் அவர்கள் ஆத்மசுத்தி அடைந்த பெரியவர்கள்" என்று சாமிகள் சட்டிசாமி யாருடைய வேடிக்கையாகத் தோன்றும் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுச் சட்டிசாமிகளுடைய தெய்வத்தன்மையை உணர்த்துவர்.

சட்டிசாமியாரைப்பற்றிச் சாமிகள் அடிக்கடி உரையாடுவதுண்டு. சட்டிசாமியார் என்ற பெயருக்கே சாமிகள் விளக்கம் கொடுத்தது உற்றுநோக்கத்தக்கது. "சட்டிசாமியார் ஒரு பெரிய மகான், அரிய சித்தர் என்றெல்லாம் சொல்லி இருக்கின்றேன். அவரை ஒரு அருட்களஞ்சியமென்றே கருத வேண்டும். அவ்வளவு அருட் பொருள் செறிந்த கருணை வள்ளல். ஆத்மசீடர்களுக்கு அள்ளி அள்ளி வழங்கும் உத்தமர்; அள்ளி அள்ளி அருள் வழங்கும் அவரிடம் அருள் ஊற்று வற்றுது வழங்கும் இயல்பினது"—இப்படி யெல்லாம் அவரை வாயாரப் புகழ்ந்துவிட்டு, "சட்டியில் இருந் தால்தானே அகப்பைக்குவரும்" என்று அவர் குருவின் அருட் களஞ்சியப் பெருமையை அளந்து முடிப்பர். உற்சாகம் பொங்க சாமிகள் கருத்தாடலும் ஓங்கிவிடும். "சட்டிசாமி" என்ற பெயருக்கு இன்னெரு விளக்கமும் உண்டு. சட்டியில் இருந்தால்தானே அகப்பையாகிய நெஞ்சிற்கு வரும். அதனுல்தான், அவருக்கு சட்டி சாமி என்று பெயர்வந்தது" என்று விளக்கத்தை விரிவுபடுத்துவர் சாமிகள். ஆம்! ஞானசட்டி கொண்ட குருசாமி அல்லவா சட்டி சாமியார்! சட்டிசாமியாருடைய திருவருளால் அல்லவா சாமிகளுக்கு மெய்ப்பொருள் தரிசனம் கிட்டியது; ஜோதிவடிவும், சக்திவடிவும், கோலக்குமரன் வடிவும் காணப்பெற்றுர். மானிடகுரு சட்டிசாமியார் உதவியால் என்றும் நிலைத்துள்ள கோலக்குமரனின் பரமகுரு கடாக்ஷமும் அடையப்பெற்றுர்.

" வானத்தின்மீது மயிலாடக் கண்டேன்
மயில் குயிலாச்சுதடி — அக்கச்சி
மயில் குயிலாச்சுதடி
துள்ளலைவிட்டுத் தொடங்கினேன் மன்றுடும்
வள்ளலைக் கண்டேனடி — அக்கச்சி
வள்ளலைக் கண்டேனடி.

காணாத பொருளைக் கண்டு கொண்ட பேரானந்தத்தில் எழுந்தது இப்பாடல் இராமலிங்க அடிகளின் திருவாயிலிருந்து. இஃது எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றது, சாமிகளின் சொந்த அனுபவத்திற்கு! சச்சிதானந்தத்தேனை அனுதினமும் அனுபவித்து வரும் சாமிகளை நாம் இந்த அனுபவத்தைப்பற்றிக் கேட்டுவிட்டால், இந்தப் பேரின்ப அனுபவத்தைக் கொடுத்துதவிய ஞானசட்டிசாமிகளின் கருணைத் தன்மையையும் வள்ளல் சக்தியையும் வாயார மனமாரப் புகழாமல் இருக்கமாட்டார்.

## 6. ஆச்சாண்ட மலைப்பரதேசியின் அனுக்கிரகம்

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினுற்கோர்
வார்த்தைசொல சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

மணலைச் சர்க்கரையாக்குவது, விஷத்தை இறக்குவது, வியாதிகளையும் பேய்பிசாசுகளால் பீடிக்கப்பட்டவர்களையும் குணப்படுத்துவது, அந்தரத்தில் தண்ணீர் நிறைந்த குடத்தை நிற்கவைப்பது, அதையே தலைகீழாக ஒரு துளி தண்ணீர்கூடச் சிந்தாமல் ககனத்தில் நிற்கவைப்பது—இராமசாமியின் இத்தகைய அரிய சாதனைகளெல்லாம் பார்ப்போரைப் பிரமிக்கச்செய்தது. இராமசாமிக்கே இப்படி நடப்பதெல்லாம் ஒரு புதிராக இருந்தது. தான் சொன்னபடியும் நினைக்கும்படியும் நடத்திவைக்கும் அந்த மகாசக்தி எப்படித் தன்னுள் உருவாயிற்று என்பதை அறிய இராமசாமி பேராவல் கொண்டார். இந்த மகாசக்தியின் பின்நின்று இயங்கும் சூட்சுமங்களையும் தத்துவங்களையும் அறிந்தால்மட்டும் போதுமா? இன்னும் ஆத்மீகத்துறையில் முன்னுக்குவர வேண்டும் என்ற பேரவாவினுல் உந்தப்பட்டு இராமசாமி இதற்குகந்த குருநாதர் ஒருவர் வருகையை ஆவலோடு எதிர்பார்த்து நின்ருர். தன்னைத் தடுத்தாட்கொண்ட பழநியையும் பழநிஆண்டவரையும் இராமசாமி மறந்துவிடவில்லை: தன்னைத் தெய்வ அருளுக்கு ஆளாக்கிவிட்ட அடியார்களது பேரருளை இராமசாமி மறந்துவிடவில்லை. ஆதியில் முதல்குரு தன் திரு நாக்கில் எழுதிவிட்ட உபதேசமல்லவா இராமசாமியின் சொற்களைப் பலிக்கவும் மேலேகூறிய அற்புதங்களை ஆடவும் இராமசாமிக்குச் சக்தியைத்தந்தது. பழநியம்பதியில் கட்டுடல் சிங்க கர்ஜனைச் சித்தர், சட்டிசாமிகள் மந்திரோபதேசம் இராமசாமிக்கு ஆனந்த ஜோதியின் அற்புதக்காட்சியையும், ஆனந்தவல்லியின் மோகனப் புன்முறுவலையும், கோலக்குமரனின் பரிபூரண நிரந்தர தரிசனத்தையும் காட்டி அருளியது. அண்ட பகிரண்டமறியாத தேவன் வடிவைக்கண்ட சட்டிசாமியாரைக் கொண்டு தேவனைக் கண்டுகொண்டார். சொல்லும் பொருளுமற்றுச் சும்மாயிருப்பதற்கே அல்லும் பகலும் இராமசாமிக்கு ஆசைப் பெருக்கெடுத்தது. "ஈசா, அனைத்துமாய் நின்ருயே, உன் வடி

வழிகைக் காண்பித்தாயே, யான் வேறே, நீ வேறே" என்ற உள்ள மயக்கமும் இராமசாமியின் சிந்தையைக் கிறுகிறுக்கச் செய்தது. "தன்னையறிந்தால் தலைவன்மேல் பற்றலது பின்னையொரு பற்றுமுண்டோ" என்ற ஆவற்புயல் மனத்தேயடிக்க ஆரம்பித்து விட்டது. தன்னுள் ஓங்கிவரும் ஆத்மீக ஆசையைத் தீர்த்தருள பெரியவர் ஒருவர் உதவி வேண்டும். இராமசாமியின் சிந்தை மயக்கத்தை அகற்ற ஒரு பேரறிவாளன் வேண்டும். அவர் மனத்துள் அடிக்கும் அருள் வேட்கைப்புயலைத் தணிவிக்க ஒரு மெய்ஞ்ஞானி வேண்டும். சினமிறக்கக் கற்றாலும் சித்தியெலாம் பெற்றாலும் மனமிறக்கச் செய்யவல்ல கல்விவேண்டும். அந்தக்கல்வியைப் போதிக்கத் தகுந்த ஆசான் வேண்டும். எல்லாம் பளிச்சென்று விளங்கக் கதிரவனை எதிர்நோக்கி நிற்பவர்போல் இராமசாமி குரு நாதன் ஒருவருக்காக ஏங்கி இளைத்திருந்தார். ஆச்சாண்டமலைப் பரதேசி என்ற உருவில் அந்தக் குருதேவரும் வந்தார். அவரைப் பாலசமுத்திரம் ஐயம்புள்ளி விநாயகர் கோயிலில் முதன்முறையாகக் கண்ட இராமசாமிக்குத் தன் ஆத்மீகஆசை நிறைவேறும் என்ற முழுநம்பிக்கை ஏற்பட்டது. இராமசாமியின் அந்தரங்க ஆசையை அறிந்துகொண்ட பரதேசியும் தன்னோடு இராமசாமி தான் செல்லும் இடங்களுக்கெல்லாம் வருவதாய் இருந்தால் இளைஞன் ஆசையை நிறைவேற்றி வைப்பதாகக் கூறினர். ஆச்சாண்டமலைப் பரதேசி மனம் வைத்தால் தன் ஆசையைப் பூர்த்திசெய்ய முடியும் என்பதை நன்கறிந்திருந்தார் இராமசாமி. அச்சாண்டமலைப் பரதேசியிடம் மாபெரும் சக்தி குடிகொண்டிருந்ததை இராமசாமி நன்கு அறிவர். ஆச்சாண்டமலைப் பரதேசி வீட்டு மாடியில்தான் இருப்பர்; வீட்டின் மாடியின்கீழே உள்ள அறையில் யாராவது பொடி போடுவதற்குப் பொடிமட்டையைச் சந்தடியின்றி திறந்தால் கூட அதை அறிந்து விடும் ஆற்றல் பெற்றிருந்தார். வீட்டுக்கு வெளியில் மாடோ கழுதையோ வீட்டை நெருங்கி வந்துவிட்டாலும் வீட்டுக்குள் இருந்த வாரே அவைகள் வருவதை உணர்ந்து வீட்டுக்குள் அவை நுழைந்து செடிகொடிகளை அழித்து விடுவதற்குமுன் அவைகளை விரட்டிவிடச் சொல்லுவார். "என் குரு ஆச்சாண்டமலைப்பரதேசி மருதநாயகம்பிள்ளை வாக்கு பலிக்கணும்" என்றுசொல்லிச் சாமிகளை எந்தக்காரியத்தையும் செய்யச்சொல்வார் ஆச்சாண்டமலைப் பரதேசி.

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர் வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்ற தாயுமானவர் அருள்வாக்குப்படி இராமசாமிக்கு ஒரு சற்குரு வந்து வாய்த்துவிட்டார். அவரை வைத்துக்கொண்டே மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாகத் தொடங்க வாய்ப்பும் வத்திருக்கின்றது. ஆனால், இராமசாமிக்குத் தர்மசங்கடமான நிலைமை தான். வெளியூர் சுற்றிவர

தன்பாட்டனும் பாட்டியும் ஒருக்காலும் ஒத்துக்கொள்ள மாட்டார்கள். ஆனால் தன் வாழ்க்கையிலேயே ஓங்கி வளர்ந்துள்ள அடிப்படை ஆத்மீக ஆசையை எப்படியேனும் தீர்த்துக்கொள்ள வேண்டும்; உண்மை விளக்கத்தை எப்படியும் அறிந்தே தீரவேண்டும் என்ற உள்ள வேட்கை பெரியவர்களின் உத்திரவைக்கூட எதிர்பார்க்க விடவில்லை. யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் பாட்டன் பாட்டிக்கும் தெரியாமல், ஆச்சாண்டமலைப் பரதேசியுடன் பதின்மூன்று வயதுச் சிறுவன் இராமசாமி ஊரைவிட்டுப் புறப்பட்டார்.

நமது புனித நாட்டில் எண்ணிறந்த எழில்ததும்பும் இயற்கைக் காட்சிகள் சூழ்ந்த திருத்தலங்கள் உள்ளன. நீர்வீழ்ச்சிகள் ஆர்ப்பரித்து விழுகின்ற பச்சைப்பசேலென்ற உயர்ந்த மலைகளும், இரு பக்கங்களிலும் இன்பவனச்சோலைகள் கொழிக்கும் நீண்ட ஆறுகளும், வானை அளாவும் நெடுமரங்கள் சூழ்ந்த அடர்த்திமிகு பெரிய ஆரண்யங்களும் இருக்கின்றன. அழகு உறையும் இவ்விடங்களில் அழகே உருவாகும் முருகன், உமைபாகன், திருமால் முதலிய தெய்வங்கள் கோலக்கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கின்றனர். சில இடங்களில் மகாத்மாக்கள் உறைந்தும் வருகின்றனர். மறைந்த மகாத்மாக்களின் திவ்ய சரீரங்களை அடக்கம் செய்த திருத்தலங்களாகச் சில இடங்கள் விளங்கிவருகின்றன. இந்தப் புனிதத்தலங்களையெல்லாம் பரதேசியுடன் இராமசாமி தரிசித்துவரும் பெரும்நலனைப் பெற்றார். தவநலமிக்க பெரியோர்கள் சென்ற பாதையிலே இராமசாமியும் தன்திருவடிகளை வைத்துச் சென்றார். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், அருணகிரிநாதர் காட்டிய வழியையே பின்பற்றினார். ஒவ்வொரு திருத்தலத்தை மிதிக்கும்போதும், ஆண்டவன் சந்நிதியில் மெய்ம்மறந்து நிற்கும் போதும், தெய்வமணம் கமழும் திருமண்டபங்களிலும் பூங்காக்களிலும் ஈசனை அணைந்துநிற்கும் ஆனந்தநிலையில் இராமசாமிக்கு இதுவரையில் புரியாதனவெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகப்புரிய ஆரம்பித்தன. மொக்கு போன்று தெய்வ இரகசியத்தை அடக்கி வைத்திருந்த தத்துவங்களெல்லாம் மலர்போன்று மனத்துள் விரிந்து உண்மை மணத்தைப் பரப்பின. இராமசாமிக்கும் உண்மைப் பொருளுக்கும் இடையே தொங்கிக்கொண்டிருந்த திரைகளெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நீங்க, எல்லா சூட்சுமங்களுக்கும் விளக்கம்கண்ட உயர்ந்தவரானார் இராமசாமி. அவருக்குப் பெருந்தத்துவங்களும் அவைகளை இயக்கும் சக்திகளும் இலகுவாகவும் பூரணமாகவும் புரிந்துவிட்டன.

ஆச்சாண்டமலைப் பரதேசியின் கூட்டுறவு எல்லாம் தானாகவே புரியவைக்கும் ஆலய தரிசனத்தோடு நின்றுவிடவில்லை. அவர் பூஜைமார்க்கத்தையும் இராமசாமிக்கு நன்குணர்த்தினார். ஆச்

சாண்டமலைப் பரதேசி பக்திமார்க்கத்தில் சிறந்தவர்; பூஜைகளை முறைப்படி செய்து பூஜாபலன் கண்ட மெய்ஞ்ஞானி. இவர் இராம சாமிக்குச் சொல்லிக்கொடுத்த முறை கவனிக்கத்தக்கது. தன்னுடைய வாயால் மந்திரங்களோ, நியமங்களோ, ஆத்மநேய விதிகளோ, துதிப்பாடல்களோ ஒன்றுகூடச் சொல்லித்தரவில்லை. இராமசாமிக்கு அவற்றைச் சொல்லாமல் சொல்லிவைத்தார். அப்பெரியார் அபி ஷேகம், அர்ச்சனை, நிவேதனம் செய்து முறையாக இறைவழிபாடு செய்வதை இராமசாமி நன்கு கவனித்து மனத்தில் ஏற்றுக் கொண்டார். ஆச்சாண்டமலைப் பரதேசிக்கும் இராமசாமிக்கும் இருந்த வாய்உறவு இவைகளைப் போதிக்கும் அளவில் இல்லா விட்டாலும் அவர்கள் அனுபவஉறவு இறைவழிபாட்டின் பழக்க வழக்கங்களை நன்குணர்த்தும் அளவில் அன்யோன்யமாக வளர்ந் தது. ஆச்சாண்டமலைப் பரதேசியுடன் கூடஇருந்து பழகிய அனு பவத்தால், இராமசாமியின் உள்ளுணர்வு மிக விரிந்தது. தெய்வீக அருள் தானே சுரந்து மெய்ப்பொருள் விளக்கத்தைத் தானுக உணர்ந் தார். இராமசாமி அறியவேண்டியவற்றைப் பரிபூரணமாக அறிந்த பின் ஆச்சாண்டிமலைப் பரதேசி இராமசாமியைப் பழநிக்கே கூட்டி வந்து ஆசிகூறி அவர் பாட்டனுர் வீட்டுக்கு அனுப்பிவைத்தார். பழநியம்பதியிலிருந்து பாட்டன் ஊரைவிட்டு யாருக்கும் தெரியாமல் இராமசாமி புறப்பட்டபோது அவர் தன்னை அறியார்! ஆனுல், தன்னை அறிந்துகொள்ளப் பாடுபடும் தலைவனுக இருந்தார்.

> தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே — ஒரு
> தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே

என்று இராமசாமியின் பிஞ்சுமனம் ஏங்கிநின்றது. அப்படி ஏக்கம் தோய்ந்திருந்தமனம் ஊருக்குத் திரும்பிவந்தவுடன் பூரண ஆனந்தத்தில் மலர்ந்திருந்தது; காரணம் இராமசாமி தன்னையறிந் தின்புற்றிருந்ததுவே;

> "வானுதி தத்துவமாய் மன்னிநின்ற காரணநீ
> நானுகி நிற்பதெந்த நாளோ"

என்று ஏங்கிக் கிடந்த உள்ளத்திற்கு அவனும் தானுகி நிற்கும்நிலை உணரும் திருநாளும் வந்துவிட்டது.

சிவன் வேறு யான் வேறு எனும் வேற்றுத்தன்மை நீங்கிச் சிவன் எவனே அவனேயான் என்ற உள்ளொளி இராமசாமிக்கு ஏற் பட்டது. 'தத்துவமசி' — அவனே இவன் என்ற விளக்கம் உணர்ந் தவரானுர் இராமசாமி. ஒருவனே அநேகத் தன்மையை அடை கின்ற உண்மையையும் அவனே அநேகனுகியும் ஒருமையை அடை கின்ற உண்மையையும் உணர்ந்தார்.

" சீவனென சிவனென்ன வேறில்லை
சீவனார் சிவனாரை யறிகிலர்
சீவனார் சிவனாரை யறிந்தபின்
சீவனார் சிவனாயிட் டிருப்பரே"

என்ற திருமந்திரப் பேருண்மை இராமசாமிக்கு வெட்ட வெளிச்சமாயிற்று.

" முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"

என்ற திருவாசகமும் உண்மை வாசகம் என்பதை அனுபவ வாயிலாக உணர்ந்தார் இராமசாமி.

" தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியிற் றலைப்படும்
தன்னிற் றன்னை யறிவில னாயிடின்
தன்னிற் றன்னையும் சார்தற் கரியனே"

என்ற திருநாவுக்கரசரின் கூற்றும் உண்மைக் கூற்றென்பதை அறிந்தார் இராமசாமி.

" தன்னை அறிவ தறிவா மஃதன்றி
பின்னை அறிவது பேயறி வாமே"

அன்று இராமசாமிக்கு மூர்த்தி, தலம், தீர்த்தம் இவைகளை ஆச்சாண்டமலைப் பரதேசியோடு சேர்ந்து காணும் பாக்கியம் கிடைத்தது. இன்றும் சாமிகள் சமயம் வாய்க்கும்போதெல்லாம் தம் பக்தர்களையும் சீடர்களையும் அழைத்துக்கொண்டு பலதலங்களுக்குச் சென்று வருவது பக்தர்களின் பாக்கியமாக இருக்கின்றது. பக்தர்கள் குழாமுக்குச் சாமிகளே தலைவராக விளங்கிப் பலத்திருத்தலங்களுக்கு அழைத்துச் செல்லும் அழகும், ஆங்காங்கு அருள்மொழிகள் புகன்று உள்ளங்களைக் கவர்கின்ற அழகும், மெய்ச்சிலிர்க்க வைக்கும் சித்துக்களை ஒருசில இடங்களில் காட்டியருளும் அழகும், கண்கொள்ளாக் காட்சியாக நம் உள்ளங்களில் நிலைத்துவிடுகின்றன. இறைவழிபாட்டைப் பற்றியும் ஆலயதரிசனம் அவசியந்தானா என்பதைப் பற்றியும் திருச்சியில் 8—3—56ல் ஸ்ரீ செந்தாமரைக்கண்ணன் மண்டலாபிஷேக மகோற்சவத்தின்போது சாமிகளே பேசியிருக்கும் கருத்துக்களை இங்கு ஊன்றிக்கவனிப்போம்.

"எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான் யாதினும் அரிது அரிதுகாண்" என்பது தாயுமானுர் வாக்கு.......பல பிறவி களில் செய்த தெய்வ வழிபாட்டினுல் சேர்ந்த புண்ணியம் மலை போல் திரண்டதனுல் கிடைத்தது இத்த மனிதப்பிறவி. பிறவிப் பெருங்கடலைத் தெய்வ வழிபாட்டினுல் நீந்திவிடலாம்...தெய்வ வழி பாடு செய்து பிறவிப் பெரும்பயனை அடைவதுவே அறிவுடைமை யாகும். மறுமைக்கு வேண்டியதை இம்மையிலேயே சேகரித்துக் கொள்வதுதான் அரிதாகிய மனிதப்பிறவி எடுத்ததன் லட்சியம்.

" நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே! நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்து ஏத்திப் புகழ்ந்துபாடி
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதிஎன்றும்
ஆரூரா என்றுஎன்றே அலறுநில்லே.

என்ற அப்பர்சாமிகள் திருவாக்குப்படி மறுமைக்கு வேண்டியதை இம்மையிலே நமக்குத்தருவது தெய்வ வழிபாடு ஒன்றேதான்.......

அப்படி இறைவழிபாடு செய்யத்தவறினுல் பெறுவதற்கு அரிய பேற்றை இழந்துவிடுவோம் என்று திருமந்திரம் கூறுகிறது.

" பெறுதற்கு அரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற்கு அரிய பிரான்அடி பேணுர்
பெறுதற்கு அரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற்கு அரியதோர் பேறு இழந்தாரே"

எனவே ஆராதனை வழிபாடு அவசியமானது.

விக்கிரக ஆராதனை வாஸ்தவத்தில் தெய்வீகம் வாய்ந்தவை என்று ஒருவர் நம்புவாராகில் அவர் தெய்வீகத் தன்மை அடைவார். ஆனுல், அவ்விக்கிரகங்கள் கேவலம் கல்லும் செம்புமே எனக் கருது பவர்க்கு விக்கிரக ஆராதனையால் யாதொரு பயனுமுண்டாகாது. அதனுடைய தன்மை, கண்டவர்களுக்குக் கற்கண்டாகவும் காணுத வர்களுக்கு கற்குண்டாகவும் தெரியும்; இஃது எல்லாமறிந்த பெரி யோர்கள் கண்டறிந்தது.

ஒருவன் ஈஸ்வரனைக்காணும்போது, விக்கிரகம் முதலிய எல்லாப் பொருள்களும் ஆத்மாவின் தோற்றங்கள் என்பதைத் தெரிந்து கொள்வான். அப்படிப்பட்டவனுக்கு விக்கிரகம் கல்லால் ஆக்கப் பட்டதாகத் தோன்ருமல், சின்மயமாகவே தோன்றும்.

பசுவினிடமுள்ள பாலானது வாஸ்தவத்தில் அதன் சரீரமுழு வதும் இரத்த ரூபமாகப் பரவியுள்ளது என்றாலும், அப்பசுவின் காதுகளையோ கொம்புகளையோ பிசைந்தால் பால்வராது; அதற்கு அதன் மடிகளைப் பிடித்துக் கறக்க வேண்டும். அதுபோலவே ஈஸ்வரன் இவ்வுலகத்தில் பரவி இருக்கிறான். ஆயினும், எல்லா இடங்களிலும் அவனை உன்னால் காணமுடியாது. பூர்வபக்தர் களுடைய குணவிசேஷம் நிரம்பிய புண்ணிய தலங்களாகிய கோவில் களில்தான் அவன் சுலபமாய்த் தென்படுகிறான்.

எப்படியென்றால், திருச்சி வானொலி நிலையத்தில் ஒருவர் பாடும் பாட்டு ஒலிமூலமாய் ஒரு நொடியில் உலக முழுதும் பரவுகிறது. அது தூரத்திலுள்ளவர்களுக்கு ஒலியால் பரப்பப்பட்டிருந்தாலும், செவிக்குக் கேட்பதில்லை. அதைக்கேட்க வேண்டுமானால் சம்பந்தப் பட்ட ரேடியோவின் சுவிட்சை திருப்பினால்தான் கேட்கமுடியும். அதிலும் நமக்கு அதிக தூரத்திலுள்ள ஊர்களின் ஒலிபரப்பைக் கேட்க விரும்பினால் அதுசம்பந்தமான நிலையங்களைப் பெற்றால்தான் கேட்கமுடியும். அதுபோலப் புண்ணிய தலங்களாகிய கோவில்கள் மூலமும் மகான்கள் மூலமும்தான் நாம் கோரும் நற்பயன்களை அடையமுடியும். ஆத்ம பரிபக்குவத்தில் வெவ்வேறு நிலையிலுள்ள மனிதர்களுக்குத் தகுந்தபடி இப்படிப்பட்ட பலவிதமான ஆராதனை மார்க்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

குழந்தைகளுக்கு ஆகாரம் கொடுக்கும் விஷயத்தில் ஒவ்வொரு குழந்தைக்கும் ஒத்துக்கொள்கிற ஆகாரத்தையேதான் தாய் கொடுக் கிறாள். ஒரு குழந்தக்கு கஞ்சி, ஒன்றுக்குச் சாதம், இன்னொன்றுக்குப் பால் — இப்படியாகக் குழந்தைகளின் உடலுக்கு ஜீரண சக்திக்குத் தகக்படி ஆகாரம் கொடுப்பாள். அதுபோலப் ஜனங்களின் நிலை மைக்குத்தக்கபடி பல மார்க்கங்கள் காட்டப்பட்டுள்ளன''.

கருத்தைக் கருத்தாட்டலில் வல்லுநராக விளங்கும் சாமிகள் எவ்வளவு அருமையாகத் தெய்வ வழிபாட்டையும் தல வழிபாட்டை யும் ஆராதனை முறைகளையும் நமக்குத் தக்க உபமானங்களோடு எடுத்துரைக்கின்றார். இதற்கு வித்திட்டவர் ஆச்சாண்டமலைப் பரதேசி. அந்த ஆச்சாண்டமலைப் பரதேசி சாமிக்கு பெரிய உண்மை களைச் சொல்லாமல்சொல்லி உணரவைத்தார். ஆனால், சாமிகளோ நமக்குப் பேருண்மைகளைத் தக்க உதாரணங்களோடு எளிய முறையில் விளங்க வைக்கின்றார். சாமிகள் மக்களுக்குச் சாதாரண மாகப் புரியமுடியாத தத்துவப் பேருண்மைகளை எளிமையோடும் அழகோடும் யாவரும் அறியும் வண்ணம் எடுத்துரைக்கின்றார்.

## 7. புல் பிடுங்கிச் சாமியார் பேரன்பு

"பாத்திரமறிந்து பிச்சை இடு"
"கோத்திரமறிந்து பெண்ணைக் கொடு"

இராமசாமியை இளவயதில் குளம், கோயில், இறையடியார்கள் இழுத்த வண்ணமே இருந்தனர். இராமசாமி குளத்தில் நீச்ச லடிக்க விரும்பியபோது தண்ணீரில் முதலில் இறங்க வேண்டி இருந்தது. அதுபோன்றே இறை தத்துவத்தை அறிய வேண்டி அவர் உள்ளம் விழைந்தபோதும் இறையடியார்களிடமே தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டி இருந்தது. "ஒரு மீன் எப்படி தண் ணீரில் உறங்குகின்றது என்பதை அறிய வேண்டுமானால் ஒருவன் மீன்போன்று தண்ணீரில் வாழத் தெரியவேண்டும்" என்று துகாராம் சொல்லி இருக்கின்றார். அதுபோன்றே ஒரு மகாத்மாவை அறிந்துகொள்ள வேண்டுமானால் அந்த மகாத்மா மாதிரி கொஞ்ச மாவது இருக்கவேண்டும். புல்பிடுங்கிச் சாமியார் இருக்கும் இடம் தெரியாது வாழ்ந்த ஒரு உத்தமர். புல்லைப் பிடுங்குவதிலேயே அவர் கை ஈடுபட்டிருக்கும் போதுகூட அவர்மனம் இறை சிந்தனையிலேயே மூழ்கி இருக்கும். பார்ப்பதற்கு ஒரு பித்தராகவே தோன்றுவர். ஆனால், அவர் இறைப்பித்தர் என்பது சிலருக்குத்தான் தெரியும். அவர் ஓர் அரிய சித்தர் என்பது அவரோடு பழகியவருக்குத் தான் தெரியும். இராமசாமிக்கு புல்பிடுங்கிச் சாமியாரின் இயல்பும் தெரியும்; தொழிலும் தெரியும்; அவர் சித்தும் தெரியும்; அவர் சித்த மிசை குடிகொண்ட ஆனந்தமும் தெரியும். புல்பிடுங்கிச் சாமியார் கள்ளிமுள் கற்றுழைமுட்களில் ஏறிச்சென்று கொண்டே இருந்தாலும் அவருள்ளம் இறைமாட்சிப் பீடத்திற்கு ஏறிக்கொண்டே இருக்கும் அருள் தன்மையை நன்கறிந்து இருந்தார் இராமசாமி. புல்பிடுங்கிச் சாமியார் பத்துஆட்கள் சாப்பிடும் சாப்பாட்டை ஒரேவேளையில் சாப்பிட்டு வெளித் தோற்றத்திற்கு ஒன்றும் தெரியாதவர்போல் இருக்கும் எளிய இயல்பைக்கண்டார் இராமசாமி. ஆனால், அவருள்ளே இறைஒளி வீசிக்கொண்டு பரிபூரணானந்தத்தில் அவர் ஒன்றி இருக்கும் அருள் தன்மையையும் கண்டிருந்தார் இராமசாமி. பிஞ்சுப் பலாவையும் பழுத்த பலாவாக்க வல்ல அருஞ்சக்தி அவர் கொண்டிருப்பினும் புல்லையே பிடுங்கும் பித்துக்

குளியாக அவர் பாவனைசெய்கின்ற வெளித்தொழிலையும் கண்டு இராமசாமி ஏமாந்துவிடவில்லை. தன்னுள் உருவாகிஇருந்த ஆத்ம பலத்தை புல்பிடுங்கிச் சாமியார் தன் வெளிவேடத்தால் இராம சாமியிடம் மூடிவைக்க முடியவில்லை புல்லையே பிடுங்கிச்சென்ற பைத்தியக்கார வேடம்போட்டு ஊரை ஏமாற்றிச்சென்ற சாமி யாருக்கு இராமசாமியை ஏமாற்ற முடியவில்லை.

பார்க்கும் போதெல்லாம் புல்லையே பிடுங்கும் சாமிகளை மக்கள் புல்பிடுங்கிச் சாமியார் என்று அழைத்ததில் வியப்பொன்றுமில்லை. ஆனால் கண்டகண்ட இடங்களில் உள்ள புற்களைப் பிடுங்கிய சாமியர் தாயன்போடு அந்தப் புற்களைக் கன்றுகளுக்கு ஊட்டுவார். அவரிடம் உள்ள அருள்புற்களை வாங்கிப்புசிப்பதற்கு ஆவலோடு காத்து இருந்தது இராமசாமிக்கன்றும். இந்த அருட்சித்தர் பன்றிமலை ஊரிலும் அந்த ஊரைச்சுற்றியுள்ள இடங்களிலும் சுற்றிச் சுற்றித்திரிந்தார். தனக்குப் பசியெடுக்கும் போதெல்லாம் குழந்தை யைப்போன்று ஓடிப் பக்கத்திலுள்ள வீடுகளுக்குச் சென்று உணவு கேட்பார். சாப்பாடு இல்லை என்று சொல்லும் அம்மைமார்களிடம் "உன் புருஷனுக்குப் பத்திரப்படுத்தி இருக்கும் சாப்பாட்டைக் கொண்டுவா" என்று அன்னம் இருக்கும் இடத்தைச் சுட்டிக்கூறி ஆசையோடு அன்னத்தை வாங்கிச் சாப்பிடுவார். அடுக்குப்பானை யில் பழங்களை யாருக்கும் தெரியாது பத்திரப்படுத்தி இருந்தாலும் பழம் இருக்கும் இடங்களைச் சுட்டிக்காட்டி அந்தப் பழங்களையே வாங்கிச்சாப்பிடும் பிடிவாதக்காரர். இவருக்கு இல்லையென்றே சொல்வதில்லை மக்கள்.

இந்தச் சாமியாரால் ஒருவருக்கும் தொந்தரவு கிடையாது. ஆனால் இவருக்கும் தொந்தரவு கொடுக்க முந்தினர் ஒருவர். இத்தகைய சித்தரைப் பரீட்சித்துப்பார்க்க முற்பட்டார் பன்றிமலை ஊருக்கு வரும்வழியில் உள்ள அலகமடையில் உள்ள ஒருவர். புல்பிடுங்கிச் சாமியார் எவ்வளவுபோட்டாலும் சாப்பிட்டு விடுவாரா என்பதைத்தானே நேரில் அறிய அவர் ஒரு விஷப்பரீட்சையிலேயே இறங்கி விட்டார். சித்தருடைய யானையைப்போல் சாப்பிடும் சக்தி தான் அவருடைய சிற்றறிவை வியக்கச் செய்ததே தவிர சித்தருடைய அருட்சக்தி அவருடைய மூளைக்கு எட்டவேயில்லை. ஒருநாள் சித்தரை அந்த மனிதர் கூப்பிட்டார். சித்தருக்கென்று பெருமளவில் சமைத்திருந்த உணவைக் கொண்டுவந்து சித்தருக்குப் படைக்கச் சொன்னர். ஐந்துபடி அரிசிச் சமையல் அவ்வளவும் சித்தருக்கு முன் கொட்டப்பட்டது. சித்தரை வலுக்கட்டாயப்படுத்தி அந்த ஆசாமி சாப்பிடவைத்தார். விருப்பின்றிச் சாப்பிடும் சித்தரை வயிறுபுடைக்கச் சாப்பிடும் அளவுக்கு அவசரப்படுத்தும் இந்த ஆசாமிக்கு ஒரு சாட்டை ஒன்றும் கையில் இருந்தது. இந்த

ஆள் மனம் சும்மா இருக்காததைப் போன்று இந்த ஆள் வைத்திருந்த் சாட்டையும் சும்மாயிருக்கவில்லே. மெதுவாகச் சாப்பிடும் சாமியை வேகமாகச் சாப்பிடச்செய்ய ஆசாமி சாட்டை யால் புல்பிடுங்கிச் சாமியாரை ஓரடி அடித்தார். உடனே வலிதாங்க முடியாத சித்தர் ''போச்சுடா கண் ஒன்று'' என்று வம்புசெய்யும் ஆசாமியைப் பார்த்துக் கூறினர். இதை அடுத்து மற்ருெரு சாட்டை அடி. அந்த அடிக்கு ''போச்சுடா காது ஒன்று'' என்று சித்தர் உரைத்தார். சித்தர் உரைத்த சொற்கள் வீணுகவில்லே. அடித்த ஆசாமியின் காது ஒன்று உபயோகப்படாமல் போய்விட்டது; கண் ணென்றும் ஒளி நீங்கிவிட்டது. விஷப்பரீட்சை செய்தவனின் காது களிலொன்றும் கண்களிலொன்றும் பயனின்றிப் போய்விட்டதைக் கண்ட மக்களுக்குப் புல்பிடுங்கிச் சாமியாரின் மகிமை நன்ருகப் புலணுகியது.

ஒருநாள் இந்த அருட் சித்தர் இராமசாமியின் தோட்டத்திற்குத் தாணுகவே வந்தார். மிகுந்த பயபக்தியோடு இராமசாமியின் தந்தை வந்திருந்த மகாஜே அணுகினர், எனக்குச் சாப்பாடு போடுவாயா என்ருர் புல்பிடுங்கிச் சாமியார். தோட்டத்தில் வேலேசெய்கின்ற பத்து பேருக்குச் சாப்பாடு அப்போதுதான் இராமசாமி வீட்டிலிருந்து வந் திருந்தது. சாதத்திற்கு வேண்டிய குழம்பும் வந்திருந்தது. பசிக்கும் சித்தருக்கு இந்தச் சாப்பாட்டை உள்ளன்போடு அளித்தார் இராம சாமியின் அன்புத்தந்தை. பத்தாள் சாப்பாட்டையும் சாப்பிடுகின்ற இந்த ஒரு ஆளுக்கு குழம்பு போதவில்லே. ''அந்தச்செடியிலிருந்து பழுத்த மிளகாய் கொண்டுவா'' என்று அங்கிருந்த ஆட்களேப் பார்த்துச் சொன்ஞர் சித்தர். அந்தக் காலத்தில் மிளகாய்ச்செடி களில் பிஞ்சுகள்தான் ஏராளமாக இருந்தன. ஒரு பழம்கூட இல்லே. சித்தர் வார்த்தைகள் பொய்த்துப் போகவில்லே என்பதை நன் கறிந்த இராமசாமியின் தந்தை அங்கிருந்த ஆட்களில் ஒருவரைக் கூப்பிட்டுச் சித்தர் உரைத்தபடியெ தோட்டத்திலிருந்த அவர் காட்டிய செடியிலிருந்த மிளகாய்ப் பிஞ்சுகளில் கொஞ்சம் பறித்துவரச் சொன்ஞர். என்ன ஆச்சரியம்! சித்தர் உரைத்தபடியே அவர் காண்பித்த செடியில் சிறிதுநேரத்திற்குமுன் பிஞ்சுகளாக இருந்த மிளகாய்களெல்லாம் பழங்களாகமாறி விட்டன. அந்த மிளகாய் களேச் சாப்பிட்டுக்கொண்டே மிஞ்சியிருந்த உணவையும் உட் கொண்டார் புல்பிடுங்கிச் சாமியார்.

புல்பிடுங்கிச் சாமியாருடைய ஆற்றல் பிஞ்சைக்கனியாக்கவல்லது. பிஞ்சுப் பலாக்களேயும் அவர் கனிப்பலாவாக்கும் ஆற்றலே நன்குணர்ந் திருந்தார் இராமசாமி. அருள் பிஞ்சையும் அருள்கனியாக்கவல்ல அவர் சக்தியையும் நன்கறிந்திருந்தார் இராமசாமி. காட்டில் விளேயும்

கொத்துக் கடலையையும் தன் அருள் நோக்கால் மூட்டை மூட்டை யாகப் பெருக்கும் புல்பிடுங்கிச் சாமியின் சக்தியையும் நன்குணர்ந் திருந்தார் இராமசாமி.

அவர் எதற்காக இவ்வளவு நாட்கள் காத்திருந்தாரோ அந்த நேரம் வந்துவிட்டதை உணர்ந்தார் இராமசாமி. புல்பிடுங்கிச் சாமியாருக்கு இவ்வளவு சக்திக்கும் உறைவிடமாகக் கம்பளி ஒன்று இருந்தது இளைஞர் இராமசாமிக்குத் தெரியும். இந்த சக்திகளுக்கு உறுதுணையாக ஒரு சங்கும் அவரிடம் இருந்ததும் தெரியும். இவற்றை அறிந்துகொண்ட இராமசாமிக்கு அந்தச் சக்திமிக்க கம்பளியில் ஒரு பாகமாவது கிடைக்கவேண்டும். அந்தச் சங்கும் தனக்குக் கிடைக்கவேண்டும்; தனது தோட்டத்தில் வயிறுர சாப்பிட்ட புல்பிடுங்கிச் சாமியார் மனங்குளிர்ந்து தோட்டத்தை விட்டு நகர்ந்ததைக்கண்ட இராமசாமி அவரைத் தொடர்ந்தே நழுவி விட்டார். "சாமி எனக்கு இந்தக் கம்பளியில் கொஞ்சம் வேண்டும், இந்தச் சங்கும் வேண்டும்" என்று புல்பிடுங்கிச் சாமி யாரைகேட்டு விட்டார் இளைஞர் இராமசாமி. சித்தருக்கும் இளைஞர் ஆசைக்கு மறுப்பு உரைக்கவே முடியவில்லை. அருள்பலம் ஏற் கெனவே சுரந்து நிற்கின்ற இளைஞரைப்பார்த்து "சரி, அப்படியே கொடுக்கின்றேன். நான் எப்போது திரும்பிவந்து கேட்டாலும் நீ அவைகளைத் திருப்பிக் கொடுக்க வேண்டும்" என்று கூறினர் சித்தர்.

"இது நியாயமா சாமி, கொடுத்த பொருளைத் திரும்பிக் கேட் பாரும் உண்டோ. அதுவும் நீங்கள் மனமுவந்து கொடுப்பதை நான் மனமுவந்தல்லவா என்னிடம் வைத்துக் கொள்ளவேண்டும்" என்று தொடர்ந்து உரைத்துவிட்டார் இளைஞர். இப்படிக் கேட்பவரின் எண்ணத்தை எப்படி ஈடேறச் செய்யாமல் இருக்கமுடியும் புல் பிடுங்கிச் சாமியாருக்கு. இளைஞர் இராமசாமிக்குப் புல்பிடுங்கி சாமி யாரின் சக்திமிக்கக் கம்பளியில் ஒருபகுதியும் தெய்வீகச் சங்கும் கிடைத்தன. அவைகளோடு புல்பிடுங்கிச் சாமியாரின் அருளும் கிடைத்தது. பாத்திரமறிந்தல்லவா ஆத்மபல பிச்சையிட்டார் புல் பிடுங்கிச் சாமியார்! இராமசாமியினுடைய இறைப்பற்றும் ஆத்ம பக்குவமுமல்லவா இராமசாமிக்குச் சங்கு நிதியையும் கம்பள நிதியை யும் அருளியது. கோத்திரமறிந்தல்லவா தெய்வ அருளாகிய பெண்ணைக் கொடுத்திருக்கின்ருர் புல்பிடுங்கிச் சாமியார்! புல்பிடுங் கிச்சாமியாரின் இயல்பை நன்குணர்ந்திருந்த இராமசாமியின் தந்தை தன் மகன் சாமியாரைத் தொடர்ந்து நழுவி விட்டதை அறிந்து பதை பதைத்து ஓடிவந்தார். அவர் சித்தரை நெருங்கும் போது தன் மைந்தனுக்குச் சித்தர் அருள் பாலித்துக் கொண்டிருப்பதைக் கண்

டார். கண்ட காட்சியால் மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழ்ந்தார். ''உன் மகன் நல்லாயிருப்பான்'' என்று மனங்கனிந்து புல்பிடுங்கிச் சாமியார் தன் மகனை ஆசீர்வதித்தது கேட்டுப் பெரு மகிழ்ச்சி யடைந்தார் தந்தை.

சிறுவயதிலேயே பழநித்தலமும் பழநி ஆண்டவனும் பக்குவ நிலைக்குக் கொண்டு வந்துள்ள இராமசாமிக்கல்லவா தன் வித்தையைக் கம்பளி நிதி கொண்டும் சங்கு நிதி கொண்டும் புல்பிடுங்கிச் சாமியார் போதித்துள்ளார். சல்லி சாமியார் ஆசியாலும், இறைவன் ஆதிகுரு திருநாவில் எழுதிய அருளாலும், சட்டிசாமி அருள் கூட்டாலும், ஆச்சாண்டமலைப் பரதேசியின் அனுக்கிரகத்தாலும் பேரருள் உலகில் உயர்ந்துவிட்ட இராமசாமிக்கல்லவா உள்ளமுவந்து தனக்குத் தெரிந்தவற்றை ஊட்டிவிட்டார் பேரன்புமிக்க புல்பிடுங்கிச்சாமியார். இந்த அருள் ஆற்றல் மிகுந்த பெரியோர்கள் இராமசாமிக்கு அருள்ஊட்டிய அருமை நிகழ்ச்சிகளை நினைக்கும்போது ஓர் உவமை உருவாகின்றது. இராமசாமி ஒரு செம்பொன் தீபவிளக்கு. அந்த தீபவிளக்கில் அன்பெனும் நெய் நிறைந்துள்ளது. தீபத்தின் ஐந்து முகங்களிலும் அன்பு தோய்ந்த நெய்யோடு கருணையெனும் திரிகள் பொருந்தி இருக்கின்றன. தன்னையுணர்ந்த தெய்வீக புருடர்களான சல்லிசாமியார், சட்டிசாமியார், ஆச்சாண்டமலைப் பரதேசி, புல்பிடுங்கிச் சாமியார். என்ற நால்வரும் இராமசாமியின் திருநாக்கில் எழுதியருளிய ஆதிகுருவாகிய இறைவனும்–ஆக ஐந்து பேரருளாளர்களும் ஐந்து தெய்வீக சுடர்விளக்குகள், தெய்வீகச் சுடர் விட்டு எரிந்து கொண்டிருக்கும் அருள் விளக்குகள். இந்தச் சுடர் விட்டு எரிந்து கொண்டிருக்கும் அருள் விளக்குகளெல்லாம், சுடர் விட்டு எரியக் காத்துக்கொண்டிருக்கும் இராமசாமியின் அருள் விளக்கிற்கு அருட்சுடர் ஊட்ட தகுந்த சமயங்களில் வந்து வாய்த்தனர். இராமசாமி பெறுதற்கரிய மானிடபிறவியில் உதித்த பெருமகான். தெய்வீகம் அவர் பிறப்பிலிருந்து அவரிடம் மணக்கின்றது. இத்தகைய இராமசாமியாகிய அருமை விளக்கு அன்பு நெய்யோடும் ஐந்து கருணைத் திரிகளோடும் பெரியவர்களுடைய அருட் சுடர் கூட்டுறவுக்காகத் தயாராகக்காத்து நிற்கின்றது. சல்லிசாமியார் எனும் விளக்கின் ஜோதி அவரது ஆசியின் வாயிலாக இராமசாமின் விளக்கின் ஐந்து முகத்திரிகளில் ஒன்றைச் சுடர் விட்டுப் பிரகாசித்து எரிய உதவுகின்றது! ஆதிகுரு எனும் திருவிளக்கின் ஜோதி இராமசாமி நாவில் உரை எழுதுவதன் மூலம் இராமசாமி விளக்கின் இரண்டாவது முகத்திரியைச் சுடர் விட்டுப் பிரகாசித்து எரிய உதவுகின்றது! சட்டிசாமி எனும் மெய்விளக்கின் ஜோதி அவர் உபதேச கூட்டுறவின் மூலம் இராமசாமியின் விளக்கின் மூன்றுவது முகத்திரியை சுடர் விட்டுப் பிரகாசித்து எரிய உதவுகின்றது! ஆச்சாண்டமலைப்

பரதேசி எனும் அணையாவிளக்கின் ஜோதி அவர் மூர்த்தி தலம் தீர்த்தம் காண்பித்த அனுக்கிரகத்தின் மூலம் இராமசாமி விளக்கின் நான்காவது முகத்திரியை சுடர் விட்டு பிரகாசித்து எரிய உதவு கின்றது! புல்பிடுங்கிச்சாமி எனும் உயர் விளக்கின் ஜோதி அவர் கொடுத்த சங்குநிதி வாயிலாக இராமசாமி விளக்கின் ஐந்தாவது முகத்திரியைச் சுடர் விட்டுப் பிரகாசித்து எரிய உதவுகின்றது! இப்படி ஐந்து பேரருளாளர்களுடைய ஆசியாலும் சேர்க்கையாலும் பிரகாசத்தாலும் ஐந்து முகங்களிலும் சுடர் விட்டுப் பிரகாசமாக ஒளி வீசிக் கொண்டிருக்கும் நமது சாமிகள் மக்களுக்கே, உலகிற்கே வாய்த்துள்ள ஒப்பிலா ஜெகஜ்ஜோதி விளக்கு; அருட்பெருஞ் ஜோதி விளக்கு!! தனிப்பெருங்கருணை விளக்கு!!!

அடியார்கள் வணங்குகின்ற தேவதேவன் முழுமுதல் கடவுள்: மேலான பொருட்கெல்லாம் மேலான பொருளாக இருக்கும் 'பரம்பரன்': ஞானிகளுக்கு அருளை வரையாது கொடுக்கும் வள்ளல்: அவன் அருள்தன்மையை நினைக்கும் போது அவனை 'அப்பா' என்றழைப்பதா? அவன் அருட் பெருஞ்ஜோதி நிலையைக் காணும் போது அவனை அணையாத விளக்கென்றே போற்றிப் பொருந்த மனம் விழைகின்றது. இப்படிக் கூறுகின்றார் திருமூலர் தன் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் ஒன்றில்.

> "அடியார் பரவும் அமரர் பிரானை
> முடியால் வணங்கு முதல்வனை முன்னிப்
> படியார் அருளும் பரம்பரன் எந்தை
> விடியா விளக்கென்று மேவிநின்றேனே"

இத்தகைய அருள் பிரகாச அமரஜோதி விளக்காக அன்றோ சாமிகள் நமது குருபரனாக கருணாகரனாக அருளாளராக ஜெகஜ் ஜோதியாகச் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றார்.

## 8. ஆத்மீக முயற்சியில் பெரியசாமி.

மெய்வருத்தம் பாரார் பசி நோக்கார் கண் துஞ்சார்
எவ்வெவர் தீமையையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணுயி னூர்.

ஆத்மீகத் துறையில் முன்னேற்றம் அடைய அரும்பாடு பட்டு வந்த இராமசாமி இறையருள் வேண்டிப் போகாத இடமில்லை; செய்யாத வேலை இல்லை; போடாத வேடமில்லை. அவசியமானால் வீட்டை விட்டுக்கூட யாருக்கும் சொல்லாது ஓடி விடுவதற்கும் தயங்கியதில்லை; தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் வயிற்றை வளர்க்க எந்த வேலையானாலும் கூலி வேலையானாலும் செய்ய மனம் புழுங்கியதில்லை; வேறு வழியில்லாத போது காவி யுடுத்தவும் தயங்கியதில்லை. இன்று தெய்வீகக் கலையுடன் அருள்மணக்கும் சாமிகளைக் காணும் நம்மை, "என்ருவது ஒரு நாள் சாமிகள் காவியோடு காட்சி அளித்திருந்தார்களா?," என்று யாரும் கேள்வி கேட்டால், "இல்லை, இல்லவே இல்லை," என்று உரத்த குரலில் ஓங்கிப் பதிலளித்து விடுவோம். கேள்வி கேட்பவர் மீண்டும், "என்றைக்காவது ஒரு நாள் சாமிகள் கூலி வேலை செய்து பிழைத்திருக்கின்றரா" என்று தொடர்ந்து கேட்டால் கேட்பவர் விஷமி யென்றும் நம்மைக் கேலி செய்கின்றரென்றும் சாமிகளை இழிவாகப் பேசுகிறரென்றும் நினைத்து அவர் மீது சீற்றங் கொள்ளவும் இடமுண்டு. "இல்லை, இல்லை. அறவே இல்லை, மரியாதையாகப் பேசுங்கள்," என்று கூட ஆத்திரத்துடன் ஆரவாரப் பதில் அளித்து விடுவோம். ஆனல் அப்படிக் கூறும் நம் பதில் உண்மையானதல்ல என்பதை இராமசாமியின் ஆரம்ப ஆத்மீக வாழ்க்கை நிரூபித்து விடும். ஒரு நாளா? ஒரு வாரமா? பல நாட்கள் இராமசாமி தெருத்தெருவாகச் சுற்றி இருக்கின்றர், நெற்றியின் வேர்வை நிலத்தில் விழும்படி கூலி வேலை செய்திருக்கின்றர். காவி கட்டி அலைந்திருக்கின்றர். ஆத்மீக வேட்கையை இராமசாமி தணிவிக்க நாடோடி ஆனதுமுண்டு, கூலியானதும் உண்டு, காஷாய சாமியாரானதும் உண்டு.

காதலுக்காக எதையும் செய்யத் துணிவர் மாந்தர். மாந்தர் மட்டுமா? காதலுக்காக எதையும் செய்யத் துணிவர் தெய்வமும்

என்பதைத் திருமுருகப்பெருமான் வாழ்க்கையிலேயே நாம் காண வில்லையா? வள்ளிக்காக வேலர் வேடரானார், வளையல்காரச் செட்டியானார், விருத்தரானார், வேங்கை மரமாகக் கூட மாறினார். ஆத்மீகக் காதலால் அலை மோதுகின்ற இராமசாமியின் நிலை ஆத்மீக ஆவலைத் தணித்துக்கொள்ள எது வேண்டுமாகிலும் செய்யத் தயாராகி இருந்தது. ஆத்மீகத் துறையில் புது அனுபவங்கள் பெற வேண்டி இருந்த சமயத்தில் இராமசாமி வீட்டை விட்டே புறப்பட்டு விட்டார். இராமசாமியின் மனம் நாடிய மெய்ப்பொருள் மேல் ஈடுபட்டிருக்க உடல் வயிற்றை வளர்க்க பாடுபட்ட நிகழ்ச்சிகளை நாம் கேட்கும் போது வியப்பாக இருக்கின்றது. தங்க வீடிருக்க, அமுதூட்ட பாட்டியன்பு காத்திருக்க சிறிது காலம் இவற்றை விட்டே ஓடிவிட்டார் இராமசாமி. தம் சொந்த ஊரை விட்டுச் சென்ற இராமசாமி தன் வயிற்றுக்காக என்னென்ன வேலைகள் செய்தார்? வெளியூர் சந்தைகளில் கல்நார் பற்பொடிகளை விற்றார்: இராவுத்தம்மாள் விற்பதற்குச் செய்து கொடுக்கும் பாய்களுக்குக் கோரை அறுத்து வந்தார்: கவுண்டர் தோட்டங்களில் தண்ணீர் இறைத்துக் கொடுத்தார். இப்படி இடம் இடமாக இராமசாமி சிந்தையை இறையருள் மீது பொருத்தித் திரிந்து வரும்போது சக்தி பூஜை சித்தியாக வேண்டி இருந்தது.

சக்தி பூஜை! ஆம், இராமசாமி சக்தி பூஜையும் செய்தார். சட்டி சாமியார் அருளால் கிட்டிய முதல் பொருள் தேஜோமயமான தொன்று. அஃது ஆயிர இதழ் சூரியப் பிரகாசப் பேரொளியாகிக் குளிர்ந்து செழுங் கருணைத் தாயின் முகமாக உருவாகியது. அன்னை பராசக்தியின் அருள்முகமன்றோ அது! கடவுளின் அருளை அல்லவா சக்தி எனப் போற்றுகின்றோம். சிவனின்றிச் சக்தி இல்லை: சக்தி இன்றிச் சிவனில்லை. சக்தி இல்லாத ஒருவன் ஒரு மூலையில் முடங்கிக் கிடந்தால் சிவனே யென்று கிடந்தான் என்று சொல்வது உலக வாடிக்கை. சிவம் சக்தியோடு இயங்கும் போது தான் எல்லா உயிர்களும் இன்புறுகின்றன. சக்தியோடு கூடிய சிவனை வலியுறுத்தவே, சிவனுக்கு அம்மையப்பர் கோலம் ஏற்பட்டது. ஐந்தொழில் நடத்தும் ஆனந்தக் கூத்தன் நடராஜர் உருவிலும் ஒரு காதில் தோடு விளங்குவது அம்மை அம்சத்தை உணர்த்துவதற்காகவே யாகும். இத்தகைய அருள் உரு அம்மையே மீனாட்சியம்மை. மீன் தான் இட்ட முட்டைகளைக் கண்ணால் பார்க்கவேண்டியது தான். உடனே முட்டைகள் பொரிந்து குஞ்சுகளாகி விடுகின்றன. அது போன்றே பராசக்தியின் கடைக்கண் பார்வை மட்டும் கிட்டிவிட்டால் பரிபக்குவ நிலை தானாக வந்துவிடும். அதனாலல்லவா பராசக்தியை மீனாட்சி என்றும் இறையன்போடு அழைக்கின்றோம். அத்தகைய அருள் பாலிக்கும் அன்னையை இராமசாமி சிந்தையில் பூஜிக்காமலா இருப்பார். சக்தி பூஜையைத் தீவிரமாக ஆரம்பித்து முடிக்கவேண்டும். சக்தி பூஜையை

ஆரம்பித்து ஒரு மண்டலத்தில் முடிக்கவேண்டும். இரவிலே தொடர்ந்து நடத்த வேண்டும். அதற்குகந்த ஒரு தனியிடம் வேண்டும். இரவில் ஒருவிதத் தொந்தரவு மின்றி சக்தி பூஜையை நடத்தத் தகுந்த இடமும் கிடைத்தது. பகலில் யாரும் தன்னைச் சந்தேகப்படாத வகையிலும் வயிற்றுப் பசியை நீக்க ஒரு தொழிலும் திருக்கவுண்டவலசூர் என்ற ஊரில் திரு காளியப்பக் கவுண்டர் தோட்டத்தில் கிடைத்தது.

இராமசாமி நாள் முழுதும் வியர்வை சொட்ட சொட்ட தோட்டத்திற்குத் தண்ணீர் இறைத்துப் பாய்ச்சினர். களைத்த வேளைகளில் கரைத்த கஞ்சியை வாங்கிச் சாப்பிட்டார். இப்படிக் கூலி வேலை செய்து பிழைத்த தோட்டக் காவல்காரனை அந்தத் தோட்டத்தில் மிளகாய் பறிக்கவந்த ஒருபணிப்பெண், "உன் பெயர் என்ன" என்று கேட்டாள். "பெரியசாமி" என்று உடனே பதிலளித்தார் இராமசாமி. இராமசாமி உண்மையில் ஒரு பெரியசாமிதான். உள்ளம் ஊன்றிய மெய்ப்பொருளுக்காகச் சொந்த வீடும் விட்டு சுகம் யாவும் விட்டு அங்குமிங்கும் ஓடி உற்சாகம் குன்ருது உழைப்பினைப் பெருக்குவது ஒரு சாமான்ய சாமியாலா முடியும். இதைச் செய்ய ஒரு பெரிய சாமியால்தான் முடியும். பின் இராமசாமி பெரிய சாமியானதில் என்ன வியப்பிருக்கின்றது. சல்லிச்சாமியாரே இராம சாமியைப் பெரியசாமியென்று ஏற்கெனவே எடைபோட்டு விட்டதை நாம் மறக்கமுடியுமா? பெரியசாமியின் பெரிய முயற்சிகளுக்கும் பெரிய பலன் இல்லாமலா இருக்கும். தேவியை தியானித்த இராம சாமிக்கு இம்மை மறுமை வீடு இவற்றின் நலங்கள் யாவும்பெற உறுதி ஏற்பட்டு விட்டது.

சிவனுக்குச் சக்தியானவள் சிவனது இடப்பாகத்தைக் கொண்டவள், திருமாலுக்குத் தங்கை, மலையரசனுக்கு மகள், அவள் பல ஆறுகள் தன்னுள் சேர்வதுபோல் பல சமயங்கள் தன்னுள்ளே வந்து சேரும் அறிவானந்தவொளி, நாதாந்த ரூபம், வேதாந்த மோனம், நான் எனும் அகந்தையைக் கிள்ளியெறிந்த மதிவதனவல்லி, அவள் தன்னை சரணடைவோர்க்குச் சகல பாக்கியங்களையும் அருள்வாள்.

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்க முண்டெக் காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிர மணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காய சித்திகளு முண்டு

கறையுண்ட கண்டர்பா லும்மைநின் தாளிற்
கருத்தொன்று முண்டாகு மேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞான வானந்த வொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூ தனன் தங்கையே
வரை ராசனுக் கிருகண் மணியாயுதித்தமலை
வளர் காதலிப் பெணுமையே

இப்படித் தாயுமானுரால் ஏத்தப்படும் அம்மை இராமசாமியை உண்மையிலேயே பெரியசாமி ஆக்கிவிட்டாள். ஸ்ரீ சல்லிசாமி வாயைக்கொண்டே இராமசாமியைப் பெரியசாமி என்று கூட எடைபோட்டு உரைக்க வைத்துவிட்டாள். ஞானக் கதிரும் காயசித்திகளும் பாட்டில் கூறிய பல நலன்களும் அமையப்பெற்ற சாமிகள் உண்மையிலேயே பெரியசாமிதான்! அம்பிகையின் அருள் கிட்டியவர் நிச்சயமாகப் பெரியசாமியாகத்தான் விளங்குவர். இலட்சுமி கடாட்சமும் சரஸ்வதி கடாட்சமும் பெற்று என்றுமிகு ஊக்கமும் வஞ்சமிலா நெஞ்சமும் நெஞ்சிலொரு உரமும் கொண்டு பேரின்பத்தில் வாழ்கின்ற அப் பெரியசாமி தெய்வ வடிவசாமியாகவும் விளங்குவர்.

தனம்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனம்தரும் தெய்வ வடிவம்தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும் நல்லன எல்லாம்தரும் அன்பரென்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே.

இந்த அம்பிகைத்துதி நமது சாமிகளுக்கு எவ்வளவு பொருத்தமாக அமைந்துள்ளது.

உமாதேவியே பராசக்தி, அவளே மகேஸ்வரி, அணிமா முதலான அஷ்டமா சித்திகளும் அவளைச்சுற்றிப் பணிப்பெண்களாகக் குற்றேவல்புரிய அமர்ந்திருக்கும் இராஜராஜேஸ்வரி. அவளை உள்ளத்தில் இருத்தித் தியானம் செய்த இராமசாமிக்கு அவள் அருள் கிடைத்தது. அஷ்டமா சித்திகளையும் அன்னை சாமிகளுக்குத் தந்தருளினுள். சிவசக்தியருள் சாமிகளுக்குப் பரிபூரணமாகக் கிடைத்துள்ளதற்கு அடையாளம் அவரது திருக்கரங்களில் சக்தி

வேலும், அறுகோணமும், திரிசூலமும் ரேகை வடிவில் அமைந் துள்ளதே! இதைவிட மேலான சான்றும் வேண்டுமோ சாமி களுடைய அருள்சக்தி தெய்வாம்சத்தை விளக்க!

“ ஒன்றுமிலை என்று பல தர்க்கம் செய்து
உண்மைநிலை யறியாதார் திரியும் இந்நாள்
அன்றுமலர் தாமரைநேர் முகத்தாள் அன்னை
ஆதிபரா சக்தியருள் வலியினாலே
இன்றுபல சித்துக்களின் இயல்பு காட்டி
இறையிருப்பின் உண்மைதனை நிலைநிறுத்தும்
பன்றிமலை சாமிகளின் பாதம் போற்றி
பராபரத்தின் பேரருளைப் பெறுவோம்யாமே”

## தோசை சாமியார்

இராமசாமியின் சிந்தையின்போக்கு சிவன்போக்காக இருந்தது. அதனால்தான் சிவலோலர்களான ஞானியர்களும் சித்தர்களும் அவரை இழுத்த வண்ணமாகவே இருந்தனர். இராமசாமியின் பரிபக்குவமானநிலை சித்தர்களையே இராமசாமியிடம் கொண்டுவந்து சேர்க்கும். இத்தகைய அரிய சித்தர்களின் கூட்டுறவையும் அவர்கள் ஆற்றல்களையும் சாமிகள் ஒருநாள் மிக அழகாக எடுத்துரைத் தார். ஒரு சித்தர் செய்துகாட்டிய செயல் நம் கற்பனையையும் மிஞ்சு வதாக இருக்கின்றது. அவரது செயலை ஒட்டியே அவரைத் தோசை சாமியார் என்று அழைப்பது பொருந்தும். தோசை சாமியார் என்றால் தோசை சாப்பிடுவதில் பிரியர் என்று முடிவுகட்டக் கூடாது. அவரிடம் ஒரு தோசை இருந்தது. அஃது ஒரு அபூர்வ தோசை. அவருடைய அபூர்வப் பிறவியைப்போல. அந்த தோசை எட்டு நாட்கள் இருக்கும். எட்டாவதுநாள் இரண்டு தோசைகளாகக் கூடிய அளவுக்கு அது பெருத்துவிடும். பெருத்த தோசையின் மேல்பகுதியை இழுத்தால் அது தனிதோசையாக வந்துவிடும். கீழ்ப்பகுதி இரண்டாவது தோசையாக இருக்கும். அதில் ஒரு தோசையைப் பிணியால் வாடுபவருக்கு அவர் கொடுத்து விடுவர். அந்த தோசையை ஒரு அணவுக்கு வாங்கிய கருப்பட்டி (வெல்லம்) கரைத்த தண்ணீரில் ஊறவைத்து அந்தக் கருப்பட்டி நீரைச்சாப்பிட எந்தப் பிணியானாலும் உடனே குணமாகிவிடும். மிஞ்சியிருக்கும் மற்ற தோசையை அடுத்த எட்டாம் நாள் மேலேகூறியபடி கையாண் டால் அந்த ஒரு தோசை இருதோசைகளாகும். அதில் ஒன்று பிணியாளருக்கு, பிணியாளர் தொல்லை தீர்வதற்கு; மற்றொன்று சாமியாரிடத்தில், எட்டுநாட்கள் கழிய ஒரேதோசை இரண்டுதோசை

கள் ஆவதற்கு, இந்த அற்புதத் தோசையை இராமசாமிக்கு மனமுவந்து கொடுத்த சாமியார் பார்ப்பதற்கு மிகவும் குள்ளமானவர். அவரே இராமசாமியின் வீடுதேடி வந்து இராமசாமியிடம் இந்த அபூர்வ தோசையை விபரங்கள் கூறி அளித்தார். இந்த விசித்திர தோசை இராமசாமியிடம் பத்துமாதங்கள் இருந்தன. வெள்ளிக் கிழமை தோறும் இந்தப் பிணிதீர்த்தருளும் தெய்வீக தோசைக்காக காத்துக்கொண்டிருப்பர் மக்கள். பிணியாளர் ஒருவருமில்லையானால் ஒரு தோசையை கிணற்றில் எறிந்துவிடும்படி இராமசாமியிடம் தோசை சாமியார் கூறியிருந்தார். ஆனால் இந்த அரியதோசை இராமசாமியிடம் இருக்கும்வரை ஒரு வெள்ளிக்கிழமையிலாவது தோசையில் ஒன்றும் கிணற்றிற்குப் போய்ச் சேரவில்லை.

## மாயாவிநோதச் சாமியார்

பன்றிமலையில் மங்கலங்கெடை என்ற தரிசு இடம் ஒன்றுண்டு. அந்த இடத்தில் ஊரார் மாடுகளை மேய்க்கவிடுவர். இராமசாமியின் தந்தையிடத்தில் அறுபது மாடுகள் உண்டு. அவைகளை மேய்த்து வர கரகம்பூதன் என்ற ஒரு வயதான ஆள் ஒருவனுண்டு. அவன் ஒருநாள் இராமசாமியின் தந்தையிடம், ''மங்கலங்கெடையில் மாடுகளோடு புலியெலாம் சேர்ந்து மேயுது'' என்ற தூக்கிவாரிப் போடும் செய்தியைக் கூறினான். இதைக் கேட்டுக்கொண்டிருந்த இராமசாமி ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாமல் மாடுமேய்க்கும் ஆளோடுகூட மங்கலங்கெடைக்கே நழுவிவிட்டார். மங்கலங் கெடையில் இராமசாமி புலிகளைக் காணவேண்டும் என்ற ஆசையில் ஓடினார். ஆனால் அவரைத் தடுத்தாட்கொள்ள ஒரு பெரியவர் காத்துக் கொண்டிருந்தார். அந்தச் சாமியாரின் அருளை ஒரு நொடியில் உணர்ந்துகொண்ட இராமசாமியிடம் இந்தச் சாமியார் வெகு நாட்கள் பழகியவர்போல் பேசிச் சில மந்திரங்களை உபதேசிக்க ஆரம்பித்தார். புலிகளைக் காணவேண்டும் என்று வந்த இராமசாமிக்குப் புலிகளால் மாடுகளுக்குத் தொந்திரவுவராத மந்திரத்தை அவர் ஓதினார்; மாடுகளுக்கு எந்த வியாதியையும் வராதபடி தடுக்கவல்ல 'மாட்டுக்குக் கோல் எழுதுவது' என்ற வித்தையையும் சொல்லிக்கொடுத்தார். கோல் எழுதுவது என்பது பச்சை மூங்கில் கோலில் மந்திரங்கள் எழுதி அந்தக் கோலைக்கொண்டு மாடுகளுக்குப் பிணிகளை வராதபடி தடுத்தும் வந்தபிணிகளை ஓட்டுவிக்கவும் செய்தல். இப்படி மாட்டு வைத்தியத்தையும் அதற்குச் சில மந்திரங்களையும் சொல்லிக் கொடுத்த சாமியாரிடம் இராமசாமி சில கேள்விகளைக் கேட்டும் பதில் சொல்லிக்கொண்டும் அளவளாவினார். கடைசியில் அந்தச் சாமியார் இராமசாமியின் வாயில் வெள்ளைச் சீந்திக்கொடியை வைத்தார். கொடிவைத்த மறுகணத்தில் எதிரில்

நின்றுகொண்டிருந்த சாமியார் மாயமாக மறைந்துவிட்டார். மறைந்துவிட்ட மாயாவிநோதச் சாமியாரைப்பற்றி இராமசாமி தன்னுடன் கூட இருந்த ஆடுமேய்ப்பவனைக் கேட்டபோது அவன் உரைத்த பதில் இராமசாமியை மேலும் வியக்கச் செய்தது.

**இராமசாமி:** நான் அந்தச் சாமியாரிடம் இவ்வளவு நாழி பேசிக்கொண்டிருப்பதை மிக ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண்டிருந்தாயே. அவர் திடீரென மறைந்துவிட்டாரே, நீ இதைப்பற்றி என்ன நினைக்கின்ருய்?

**ஆடுமேய்ப்பவன்:** என்ன சின்னய்யா? சாமியாரா? மறைந்து விட்டாரா? உங்களுக்கு உடம்புக்கு என்ன? யாரோ ஒரு சாமியார் உங்களுக்கு உபதேசம் செய்ததாகச் சொல்லுகின்றீர். உங்கள் வாயில் ஒரு கொடியைப் போட்டுவிட்டு உடனே மறைந்துவிட்டார் என்று சொல்கின்றீர். இதெல்லாம் கனவா? உண்மையிலேயே உங்களோடு நான் யாரையுமே பார்க்கவில்லையே? நீங்கள்தான் யாரோடவோ பேசுவது போலவும், தலையை அசைத்துக்கொண்டும் கைகளைக் கட்டிக்கொண்டும், பதில் சொல்லிக்கொண்டும், கும்பிட்டுக்கொண்டும் இருந்தீர்கள். உங்களுக்கு உடம்புக்கு ஏதோ சரியில்லையென்று நினைத்தேன். வாங்க, வீட்டுக்குப் போகலாம். அப்பாவிடம் உங்களைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுகின்றேன்''

மாயாவிநோதச் சாமியார் இராமசாமியின் பணியாளுக்குக் கனவுலகுச் சாமியாராகத்தான் தோன்றினர். ஆனல் இராமசாமிக் கல்லவா தெரியும் அவரின் மாயாவிநோதத் தன்மையும், அவர் இராமசாமிக்குச் சில நிமிடங்களில் கற்றுக்கொடுத்த உபதேச மந்திர சக்தியும். தாங்கள் கண்டதை ஆடுமேய்ப்பவனும் இராமசாமியும் இராமசாமியின் அப்பாவிடம் உரைத்தபோது அவருக்கு விளங்கி விட்டது நடந்ததெல்லாம்! தன் அருட்செல்வ மகனுக்கு ஒரு பேரருளாளன் அல்லவா மாட்டு வைத்திய மந்திரங்களை மனமுவந்து வழங்கிச் சென்றிருக்கின்ருர். ஆசையோடு திரு. ஆறுமுகம்பிள்ளை தன் பையனை அணைத்துக் கொண்டார்.

சாமிகள் ஒரு சமயம் திருவண்ணுமலைக்குச் சென்றிருந்தார். ஒரு தனி இடத்தில் ஒரு சாமியார் ஆசனத்தில் வீற்றிருந்தார். இவரைக்கண்டு உரையாடுவதற்காக நமது சாமிகள் இவரை நெருங்கியபோது உட்கார்ந்திருந்த சாமியார் சாமிகளின் இருகரங்களையும்பற்றிச் சாமிகளைத் தன் ஆசனத்தில் இருத்தி அவர் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினர். ''நான் தேடிப்போன சாமியார் என்னைத் தொட்டுத் தொட்டு வணங்கியதை என்னுடன்

வந்தவர்கள் கண்டு மலைத்துவிட்டார்கள்,'' என்று சாமிகள் உற்சாகத்தோடு கூறியபோது நாங்களும் மலைத்துவிட்டோம். எதைக் கண்டு? சாமிகளின் நிறைவையும் ஆத்மசக்தியையும் பரிபூரண இறைத்தன்மையையும் கண்டும், அதே ச்மயத்தில் சாமிகளுடைய ஸ்வாரஸ்யமாகப் பேசக்கூடிய இயல்பையும், எளிமையையும், மனிதத் தன்மையைக் கண்டும்! நமது சாமிகள்தான் பெரியசாமியாயிற்றே! அவரை மற்றவர் தொழுததில் ஆச்சரியப்படுவதற் கென்ன இருக்கின்றது?

சாமிகளுக்கு உற்சாகப் பெருக்கெடுத்து விட்டால் தன் வாழ்விலிருந்து பல பல நிகழ்ச்சிகளை எடுத்துக் கோவையாக அடுக்க ஆரம்பித்து விடுவார். வாயைப்பிளந்தபடி கேட்டுக்கொண்டே இருக்கலாம். இப்படி இன்னும் இன்னும் எத்தனை எத்தனை சாமிகளோ எத்தனைவிதமான சாமிகளோ சாமிகளுக்கு வாய்த்திருந் தனரோ நாமறியோம்; சாமிகளே அறிவர்.

இப்படி இராமசாமி உடல் பிரயாசை கொண்டு பாடுபட்டதும், பட்டினி பசி பாராது இடையருது வேலை செய்ததும், தூக்கம் விட்டு, புறஉலகுச் செயல்களை மறந்தே தான் எடுத்த காரியத்தில் ஊறி இருந்ததும், சமய சந்தர்ப்பங்களில் நாடோடியானதும் கூலியான தும், வேடமிட்டு ஏய்த்ததும் எதற்காக? தன் ஆத்மீக முயற்சியில் வெற்றி காண்பதற்காகவே! வெற்றியும் பெற்ருர்! பெரிய வெற்றி! ஆத்மீக சாதனையில் இராமசாமி பெரியசாமியும் ஆனுர்.

> மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
> எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
> அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
> கருமமே கண்ணுயி னுர்.

## 9. மாயவிநோதக் கலை ஆர்வம்

"கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே"

சாமிகளுக்குச் சிறு வயதிலிருந்தே தளராத உறுதியும் இந்தத் திண்மையான மன உறுதியினால் எந்த விஷயங்களையும் தொடர்ந்து அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் இருந்தன. ஒரு விஷயத்தை அறிந்து கொள்ள ஆர்வம் பிறந்து விட்டால், அதைப் பூரணமாக அறிந்து கொள்ளும் வரை வேறு விஷயங்களில் அவர் மனஞ் செல்லாது. அறிவை விருத்தி செய்வதில் உள்ள அக்கறை சமயத்தில் அவரை வீட்டைவிட்டே இழுத்துக் கொண்டு செல்லக் கூடிய சக்தியையும் வேகத்தையும் பெற்றுவிடும். சந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடாது என்ற நிலையில் சாமிகள் நடிக்கவும் தயங்குவதில்லை. ஆச்சாண்டமலைப் பரதேசியோடு பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டுச் சாமிகள் பல தலங்களுக்குச்சென்று தன்னை உணர்ந்த நிலை நாம் அறிந்ததே. எப்படி உண்மையை அறிதல் பொருட்டு யாருக்கும் சொல்லாது ஊரைவிட்டு ஆச்சாண்டமலைப் பரதேசியோடு மறைந்தாரோ, அப்படியே ஒருநாள் இராமசாமி யாருக்கும் சொல்லாமல் ஊரைவிட்டுக் கிளம்பிவிட்டார். ஆனால், இந்த முறை அவரை இழுத்துச் சென்ற ஆசை பரம்பொருள் ஆசையல்ல, மாந்திரீகம் கற்றுக் கொள்ளவேண்டுமென்ற அவா; இந்தமுறை அவரைக் கூட அழைத்துச் சென்றவர் ஒரு முற்று முணர்ந்த முனிவரல்ல, மாந்திரீகம் கலை வல்லுனரான ஒரு மாது. அவள் கிராமங்கள்தோறும் சென்று சிறிய அளவில் சர்க்கஸ் விளையாட்டுக்களையும் மாந்திரீக ஜாலங்களையும் செய்து பிழைக்கும் பெண்மணி. அவளிடம் ஒருசக்தி வாய்ந்த சக்கரம் இருந்தது. அந்தச் சக்தியால் பார்ப்பவர் திடுக்கிடும்படியான வேலைகளைச் செய்தாள். கடப்பாறையை வாயில் வைக்க வேண்டியதுதான், அது உடனே வயிற்றுக்குள் சென்றுவிடும். அந்த சக்கரத்தை ஒரு எருமை மாட்டிடம் காட்டி விட்டால் அந்த மாடு உடனே நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு கீழே விழுந்துவிடும். இதுபோன்ற எவ்வளவோ ஆச்சரியத்தை விளைவிக்கக் கூடிய வேலைகள் அவளிடம் உண்டு. இந்த மாதுக்குப் பன்னிரண்டு வயது கூடிய ஒரு மகள் உண்டு. அவள் கவனமெல்லாம் தான் தொழில் நடத்தி

ஜீவனம் செய்வதோடல்ல, தனக்குத் தெரிந்தவற்றைத் தன் ஒரே மகளுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணமும் கொண்டு உழைத்து வந்தாள். இவைகளை நன்ருக அறிந்துகொண்ட இராமசாமி இவளிடம் உண்மையைச் சொன்னுல் ஒருநாளும் தனக்கு ஒன்றும் சொல்லித்தரமாட்டாள் என்பதையும் அறிந்திருந்தார். அதனுல் நடிக்க வேண்டிய நிலையும் ஏற்பட்டது.

நடிக்காவிட்டால் தன் எண்ணம் ஈடேறுவது முடியாத காரியம் என்பதை உணர்ந்த இராமசாமி "நான் ஒரு அனுதை" என்று அவளிடம் அண்டிப்பிழைக்க வந்தவர் போல் நடித்தார். 'ஏழை அனுதி'க்கு அன்றிலிந்து பலவேலைகள் கிடைத்தன. செல்வப்பேரனுகச் சீருடன் வளர்க்க பாட்டனுரும் பாட்டியுமிருக்க, படுக்கக் கட்டிலிருக்க, உடுக்கப் பட்டாடை இருக்க, உண்ண வெண்ணெயும் உணவும் தாயன்பும் பாட்டனுர் வீட்டில் இருக்க — இவ்வளவையும் ஒரு நிமிடத்தில் விட்டுவிட்டுப் பிச்சைக் கோலம் பூண்டார் இராமசாமி. எதற்காக? "வித்தை விரும்பு" என்ற ஆத்திசூடி வாக்கின்படி வித்தை விரும்பினுர். அந்த வித்தையைப் பயில இராமசாமி பிச்சைக் கோலம் கூட ஏற்ருர். பிச்சை யெடுத்தாலும் கல்வி கற்பது நல்லதென்று வெற்றிவேற்கை முழங்க வில்லையா?

"கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே"

இராமசாமி உண்மையிலேயே பிச்சை யெடுக்க வேண்டிய அவசியமில்லா விட்டாலும் சமய சந்தர்ப்பம் அவரை ஏழை அனுதியைப் போல் நாடகமாடச் செய்து விட்டது. சிறிய சர்க்கஸ் கூட்டம் திரட்டத் துண்டு நோட்டீஸ்கள் கொடுக்க வேண்டும். ஆட்டத்தில் பெட்டி தூக்கவேண்டும். சர்க்கஸ் துவக்கத்திலும் சர்க்கஸ் நடக்கும் சில நேரங்களிலும் டிரம் (முரசு) அடிக்க வேண்டும். இதுபோன்ற வேலைகளைச் செம்மையாகச் செய்து இராமசாமி சர்க்கஸ் மாதின் மனத்தைத் திருப்தி செய்தான். இந்தச் சில்லறை வேலைகளைச் செய்த நேரம் தவிர, மற்ற நேரங்களில் இராமசாமியின் கவனம் அவள் தொழில் நடத்தும் இரகசியத்தை அறிவதிலேயே வேரூன்றி இருந்தது. அவள் அடிக்கடி தன் ஒரே மகளுக்குத் தான் கற்றறிந்த வித்தையைச் சொல்லிக் கொடுக்கும்போதும், அவள் திரும்பத்திரும்ப தனக்குத் தெரிந்த வித்தையை அம்பலத்தில் ஆடுவதற்கு முன் சிற்றறையில் ஒத்திகைப்போடும் போதும், அம்பலத்தில் ஆடிக் காண்பிக்கும் போதும் — இவைகளைக் கூர்ந்து கவனித்த வண்ணமாகவே இருப்பார் இராமசாமி. அரை குறையாக அவள் அறியாமல் அவளிடமிருந்து கற்றுக்கொண்ட வித்தையை ஒருநாள் அவள் மகளிடமே காட்ட முற்பட்டார் இராமசாமி.

சர்க்கஸ் மாது குளத்திற்குக் குளித்துவரச் சென்றிருந்த சமயம். அவள் பெண்ணை அழைத்து அவள் செய்வதுபோல் செய்து பூ என்று ஊதிவிட்டார் இராமசாமி. அவள் உடனே அடியற்றமரம் போல் வீழ்ந்துவிட்டாள். மந்திரம் பலித்துவிட்டதில் உடனே எழுந்த மகிழ்ச்சி அவளை எழுப்ப முடியாது திகைக்கும்போது இராமசாமிக்குச் சஞ்சலமாகி மனத்தை, ஒரேகலக்கு கலக்கிவிட்டது. என்ன செய்வதென்று அறியாமல் தவியாய்த் தவிக்கும் தருணத்தில் தாயார் வந்தாள். மகள் சாய்ந்திருப்பதையும், அவளை எழுப்ப முடியாமல் இராமசாமி திணறிக் கொண்டிருப்பதையும் கண்ட தாய் இராமசாமிக்குச் சாய்க்கவைக்கும் மந்திரம் பாடமாகி, எழுப்ப வைக்கும் மந்திரம் பாடமாகாமல் இருக்கும் நிலையை உணர்ந்து கொண்டாள். தன்மீது எறிந்து பாய்வாள் என்று எண்ணிப் பீதியடைந்திருந்த இராமசாமிக்கு அவளுடைய செயல் ஆச்சரியத்தை விளைவித்தது. "தம்பி, நீ கெட்டிக்காரப் பையன். நீ அநாதைப் பிள்ளைதான், இருந்தாலும் எவ்வளவு அறிவாளி. நான் என் பெண்ணுக்கு நான்கு வருடங்களாய்ச் சொல்லிக்கொடுத்து வந்ததை நீ ஆறுமாதங்களிலேயே கற்றுக்கொண்டாய். நீயும் என் பிள்ளையாகவே என்னோடு இருப்பாய்" என்று சொல்லி, இராமசாமியைத் தட்டிக்கொடுத்தாள். அன்றிலிருந்து இராமசாமிக்குத் தனக்குத் தெரிந்த வித்தைகளைப் போதித்தாள்; அன்றிலிருந்து இராமசாமியும் மாந்திரீகக் கலையில் நல்லதேர்ச்சி அடைந்து வளர ஆரம்பித்தார்.

தனக்கு வேண்டிய வித்தையைக் கற்றுக்கொண்டபின் இராமசாமி அந்தச் சர்க்கஸ்மாதை விட்டு நழுவித் தன் பாட்டன் பாட்டி வீட்டுக்குத் திரும்பிவிட்டார். பரம்பொருள் சக்திவானுகத்திகழ்ந்த இராமசாமி மாயாவிநோதக் கலைவல்லுநராகவும் திரும்பியதைக் கண்ட அவரைச் சிறிதுகாலம் காணமல் கதிகலங்கியிருந்த பெரியவர்கள் மட்டற்ற மகிழ்ச்சியில் பொங்கிப் பூரித்தார்கள்.

சில நாட்கள் சென்றன. ஒருநாள் ஒருமாது தன்னை வைத்த கண்கள் மாருது கூர்ந்து தொடர்ந்து பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டார் இராமசாமி. அவருக்குப் புரிந்துவிட்டது அவள் யாரென்று. ஆனுல் அவளுக்குத்தான் உடனே புரிந்துகொள்ள முடியவில்லை, தான் பார்த்துக்கொண்டிருப்பது சில நாட்களுக்குமுன் தன்னிடத்தில் மாயாஜாலத்தைக்கற்று ஓடிவிட்ட இராமசாமியென்று. "என்னைத் தெரியவில்லையா" என்ருர் இராமசாமி அவளைத் தன் வீட்டுக்கு அழைத்து. ஆம், இராமசாமியேதான்! தன்னிடம் 'அனுதை' யென்று உண்மையை மறைத்த பையனேதான்! இந்தப்பையன், ஒரு நாடகத்தையே நடத்திவிட்டான். கலையிலிருந்த ஆர்வமல்லவா இதற்கெல்லாம் காரணம். இப்படியெல்லாம் சிந்தனையை வளர விட்டுக் கொண்டிருந்த சர்க்கஸ்மாது வாயைப் பிளந்தபடியே

நின்ருள். இராமசாமியைக் கும்பிட்டாள். தன்னைத் தாயன்போடும் ஆசிரியர் கனிவோடும் ஆதரித்துக் கலையைக் கற்றுக்கொடுத்த அந்த நல்லவளுக்குத் தன் அன்பின் அடையாளமாக ஒரு விலையுயர்ந்த சேலையையும் பல பொருள்களையும் இராமசாமி மனமுவந்து அளித்தார். இந்த நற்செயலைக் கண்ட சர்க்கஸ் மாதுக்குப் பேசக்கூட முடியவில்லை; காரணம் தொண்டையை ஆனந்தம் வந்து அடைத்து விட்டது. ஆனந்தக் கண்ணீருகுத்தாள், இராமசாமியின் கலையார்வத்தையும், சேயன்பையும், வள்ளல் தன்மையையும் கண்டு!

இராமசாமி யெனும் தென்னைக்குத் தன்னிடத்திலுள்ள மாயா விநோதக்கலை யெனும் தண்ணீரைக்கொட்டி (கற்பித்து) வளர்த்து விட்டாள் சர்க்கஸ்மாது. அதன் பயனை இன்று அனுபவித்தாள் இராமசாமியிடமிருந்து அன்பின் அடையாளமாகப் பொருள்களைப் பெற்றுக்கொண்ட சர்க்கஸ்மாது; நன்ருகப் பேணி வளர்க்கப்பட்ட தென்னை, இளநீரும், தேங்காயும் கொடுத்துப் பலனளிப்பதுபோல்.

"நன்றி ஒருவருக்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொ லெனவேண்டா — நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்."

# 10. பள்ளிச்சிறுவன் இராமசாமி

அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்இசையும் நாட்டும்–உறுங்கவல் ஒன்று
உற்றுழியும் கை கொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை.

பழநிக்கருகில் உள்ள பாலசமுத்திரத்தில் இராமசாமியின் பாட்டனார் வீட்டில் இராமசாமியைப் படிப்பிற்காக விட்டுச் செல்ல பெற்றோர்கள் முடிவுசெய்தனர். ஐந்துவயதுக்குழந்தை இராமசாமிக்கு இது கிடைத்தற்கரிய பேருகவே அமைந்தது. பழநியப்பனின் திவ்விய தெரிசனத்தில் மனத்தைப் பறிகொடுத்த இராமசாமிக்குப் பாலசமுத்திரத்திலுள்ள பள்ளியும் அங்குள்ள ஆசிரியர்களும் ஆரம்பக் கல்வி போதித்து அறிவு ஊட்டினர். இராமசாமி ஐந்து வயதிலிருந்து ஏழாவது வரை அங்குள்ள பள்ளிக்கூடத்தில் பாடம் பயின்று வந்தான். அவனுக்கு அன்போடும் அக்கறையோடும் பாடம் போதித்து வந்தவருள் கணபதி வாத்தியார் என்பவர் ஒருவர். பள்ளியில் வாசிக்கும்போது இராமசாமி பள்ளிக்கு வருவதிலும் முதல் மாணவன்; ஆசிரியர்களிடத்தும் மாணவர்களிடத்தும் ஒழுக்க சீலரென பழகும் நல்ல மாணவன் ஊருக்கே தனிமதிப்புடைய சிறந்த மாணவன்; காரணம் இராமசாமிக்கு உயர்ந்த பண்பாளன் என்ற பெயரோடுகூட வாக்குப் பலிக்கும் பிள்ளை, ஆத்மீக சக்தி வாய்ந்த பிள்ளை என்ற புகழும் ஓங்கி இருந்தது. அது அவன் படித்த பள்ளிக்கே ஒரு பெருமையைக் கொடுத்தது.

பள்ளியில் அன்றுடம் சொல்லிக்கொடுத்த படிப்பைப் கவனமாகக் கற்றுக்கொண்டு வந்த இராமசாமிக்குப் பழநி ஆண்டவன் இறை அருள் கிட்டியது. அந்த இறைஅருளோடு பெரிய மகான்கள் சித்தர்கள்—இவர்களுடைய அருள் கூட்டுறவும் கிடைத்தது. இதனுல் அவனுடைய ஆத்மீகக்கல்வி பெருகியது. ஆன்மீக அறிவு வளர்ந் தோங்கியது. அருள் ஆசிரியர் சல்லிச் சாமியாரே இராமசாமியைப் பெரியசாமி என்று போற்றும் அளவுக்கு இராமசாமியிடம் அருள் சக்தி உருவாகிவிட்டது. அருள் செல்வமாகிய ஞானத்தைப் பரிபூரண மாகப் பெற்றுன். ஞான உலகில் கசடறக் கற்றுன். கற்றபின் அதற்குத் தகுந்தாற்போல் நடந்தான்.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக."

என்ற வள்ளுவர் வாக்கின் இலட்சிய புருடனுகத் திகழ்ந்தான். இவன் கற்றுக்கொண்ட பேரறிவு பேரானந்தப் பெருவாழ்வுக்குப் பாங்கானபாதையாக அமைந்தது. இம்மைக்கும் மறுமைக்கும் நல்லன வெலாம் பயப்பதாக விளைந்தது. அவ்வுலக அருளையே இவ்வுலகப் பொருளாகப் பெற்ற இராமசாமிக்கு அதன் அருமையினை உலகத்தார் அனுபவிக்கச்செய்ய தர்ம சிந்தனை மிகுந்தது. மெய்ப்பொருளால் அறம் வளர, உற்றுர் உறவினர் ஊரார் நலம்பெற, அதனுல் இராமசாமியும் ஊரும் பெற்ற இன்பம் போற்றற்குரியது. அறத்தால் விளைந்த இந்த உலகியல் இன்பம் பேரின்பத்திற்கும் இராமசாமிக்கு வித்தாக அமைந்தது. இராமசாமிக்குப் பேரும் புகழும் அவன் வீட்டைத்தேடி வந்தன. அவன் படிக்கும் பள்ளியைத் தேடியே வந்தன. பெரிய பெரிய துன்பங்கள் வருகின்றபோதெல்லாம் தோன்ருத்துணையாக இராமசாமி மக்களுக்கு வாய்த்த அருள்நாத ஞக விளங்கினுன். பலருக்கு ஒருவன் உற்ற துணையாக அமைந்தான்.

"அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்இசையும் நாட்டும்—உறுங்கவல்ஒன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை"

இந்த நீதிநெறி விளக்கப்பாடலுக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக மிளிர்ந்தான் இராமசாமி.

இராமசாமியின் புகழ் அவன் படிக்கும் பள்ளிக்கும் வந்து சேர்ந்தது. எப்போதும் தன்னுள் உருவாகும் சக்தியை வளர்ப்பதில் ஆர்வம் மிக்கோங்கிய இராமசாமி தன் படிப்பிலும் கவனம் செலுத்தியே வந்தான். இருந்தாலும் ஆத்மீகக்கல்வியில் வானளவில் உயர்ந்திருந்த ஆர்வம் பள்ளிப் படிப்பில் ஓரளவிலேதான் இருந்தது. இராமசாமியின் கூர்த்த அறிவுக்குப் பஞ்சமில்லை. இராமசாமியின் புத்திசாலித்தனம் பள்ளி ஆசிரியர்களை மட்டுமல்ல, பள்ளியை மதிப் பிட வரும் அதிகாரிகளைக்கூடக் கவர்ந்து செல்லும் இயல்பினது. ஓருநாள் அந்த பாலசமுத்திரப்பள்ளிக்குப் பள்ளி இன்ஸ்பெக்டர் வந்தார். பள்ளி மாணவர்களிடம் சில கேள்விகளைக் கேட்டு அவர் களின் பதில்களைக் கொண்டு பள்ளியின் தரத்தை அறிய விரும்பிய இன்ஸ்பெக்டர் இராமசாமியிடம் சில பாடக் கேள்விகளைக் கேட்டார். சரியான பதிலைக் கொடுக்கக் கூடிய நிலைமையில் இராமசாமியில்லை. மாணுக்கன் நிலைமையைச் சரிப்படுத்த முயன்ற ஆசிரியரின் நிலைமையும்

பரிதாபகரமாக முடிந்தது. இவைகளைக் கண்ட இன்ஸ்பெக்டர் மனத்தில் திருப்தி ஏற்படவில்லை என்பதை இராமசாமி புரிந்து கொண்டான். வந்திருந்த அதிகாரியும் வெகுவேகமாகத் தன் வேலையை முடித்துக்கொண்டு தலைமையாசிரியருடன் வண்டியிலேறிப் புறப்பட்டார். வந்திருந்த அதிகாரி தன் ஆபீஸ் கட்டுக்களைப் பள்ளிக்கூடத்திலேயே வைத்து விட்டுப் புறப்பட்டுச் சென்றார். அவர் விட்டுச் சென்ற ஆபீஸ் கட்டுக்களையும் ஒரு குடையையும் கவனித்த இராமசாமி அவைகளை எடுத்துக் கொண்டு ஓட்ட ஓட்டமாகச் சென்றார். மறந்து விட்டுச் சென்ற பொருள்களை மீண்டும் அடைந்த அதிகாரிக்குத் திருப்தி ஏற்பட்டது. இராமசாமியையும் தங்களோடு உட்காரச் சொல்லி வண்டியை ஓட்டச் சொன்னார். "இந்தப் பையன் யார்? இவ்வளவு கெட்டிக்காரனாக இருக்கிறானே" என்று விசாரித்து இராமசாமியைத் தட்டிக் கொடுத்த அதிகாரியை இராமசாமி சில கேள்விகள் கேட்டான்.

இராமசாமி : உங்களுக்கு ஒரு பையன் இருக்கின்றானல்லவா?

அதிகாரி : ஆம், இருக்கின்றான்.

இராமசாமி : அவன் அவ்வளவு சிரத்தையாகப் படிப்பதில்லை அல்லவா?

அதிகாரி : என்ன சொன்னாய்?

இராமசாமி : அவன் சிரத்தையாகப் படிக்காததால் உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் அடிக்கடி சண்டை வருவதுண்டா!

இதைக் கேட்டவுடன் அதிகாரி இராமசாயிடம் மிகவும் குழைந்து பேச ஆரம்பித்து விட்டார். இராமசாமி கூறியவை அவ்வளவும் உண்மை! இவையெல்லாம் இராமசாமிக்கு எப்படித் தெரிய வந்தது என்று அவர் ஆச்சரியப்பட்டார். இராமசாமியின் அரிய சக்தியைக் கேள்விப்பட்ட அதிகாரிக்கு இராமசாமி மீது அளவு கடந்த பிரியம் ஏற்பட்டு விட்டது. அந்த அளவுகடந்த பிரியத்தால் அன்று வகுப்பில் இராமசாமி உரைத்த சரியில்லாத பதிலும் அவனைச் சரியானபதில் உரைக்க வைக்க முயன்ற ஆசிரியரின் செயலும் அவர் மனத்தை விட்டே மறைந்து போயின. "இராமசாமி தெய்வீக சக்தி கொண்ட மாணவன், யாவற்றையும் அறியும் ஆற்றலுடைய அரிய பிறவி" என்று வியந்து கொண்டேயிருந்தார். "இராமசாமி கெட்டிக்காரன். அவனை நன்றாகக் கவனியுங்கள்" என்று தலைமையாசிரியரிடம் கூறிப் பாலசமுத்திரத்தை விட்டு நகர்ந்தார் மேலதிகாரி, அன்று நடந்த மற்றவைகளை முற்றும் மறந்துவிட்ட நிலையில்.

இளைஞன் இராமசாமி இயல்பாகவே சாந்த குண முடையவன். இளவயதிலேயே யாவரும் அவனைப் போற்றக்கூடிய அளவில் தெய்வ பலம் மிகுந்தவனாய் விளங்கினான். அவன் சொல் பலிப்பதைக்கண்ட பெரியவர் முதற் கொண்டு யாவருமே இந்த இளைஞனிடம் பயபக்தி யோடு பழகி வந்தனர். தெய்வ சிந்தனை நிறைந்த அவனிடம் அறிவாற்றலும் நிறைந்திருந்தது. அபூர்வ கற்பனா சக்தியும் மிகுந் திருந்தது. அவன் எடுத்துக் கொள்ளும் எந்தக் காரியத்திலும் பொங்கி எழும் பேரார்வம் அந்தக் காரியம் முடியும் வரை ஓய்வ தில்லை. இளைஞன்தானே என்று யாராவது அவனைக் கேலிக்கோ வீண் வம்புக்கோ இழுத்து விட்டால், இளைஞன் மனம் முற்றிலும் மாறிவிடும். இளைஞன் இராமசாமி நல்லவருக்கு நல்லவன்; அவன் வீணாக யாரிடமும் வம்புக்குப் போக மாட்டான்; வந்த வம்பையும் லேசாக விட்டு விடவும் மாட்டான். தன் மனத்தைப் புண்படுத் தியவர் யாராயிருந்தாலும் அவர் வெட்கி நாணித் தலை குனியும் அளவுக்குத் தன் கெட்டிக்காரத்தனத்தைக்காட்டிவிடுவான். அவசியம் ஏற்பட்டால், தன்னுடைய மந்திர சக்தியைக்கூடப் பயன் படுத்திக் கொள்ளத் தயங்குவதில்லை.

இராமசாமி பாலசமுத்திரத்தில் உள்ள சிறுபள்ளியில் படித்துக் கொண்டிருந்தான். பள்ளிக்கு அருகே ஒருவீடும் கடையும் ஒன்றாக அமைந்திருந்தன. அந்த வீட்டில் குடியிருந்த அம்மணி ஒருத்தி பிள்ளைகளுக்கு வேண்டிய பொருள்களை விற்றுவந்தாள். ஒருநாள் சிலேட்டுக்குச்சி வாங்க மிக அவசரமாக இராமசாமி இந்தச்சிறிய கடைக்கு வந்தான். உள்ளே அடுப்படியில் ஈடுபட்டிருந்த அம்மணி இராமசாமியின் அவசரத்தை உணரவில்லை. தன்னுடைய அடுப்பு வேலையில் மும்முரமாக இருந்தவள், அடுப்படியைவிட்டு எழவில்லை. இராமசாமியை வெகுநேரம் காக்க வைத்துவிட்டாள். கடைசியில் உலையில் உள்ள அரிசி வெந்தபின்தான் கடைக்கு வந்து அங்கி ருக்கும் சிலேட்டுக்குச்சியை எடுத்துக்கொடுக்க முடியும் என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டாள். தனக்கு வேண்டிய பொருள் கிடைக்கவில்லையே என்ற ஏமாற்றம் பையன் மனத்தில் வேதனைத் தீயை மூட்டியது; தன் அவசரத்தை உணராது தன்னை அலட்சியப் படுத்தி வெகுநேரம் காக்கவைத்துக் கடைசியில் இல்லையென்று ஏய்த்துவிட்ட மானக்கேடும் மனத்தில் மூண்ட தீயைக் கொழுந்து விட்டு எரிய வைத்தது. வெகுநேரம் காத்திருந்ததால் பாடம் கெட்டுப்போனதை நினைத்துப் பொருமியது பயங்கர வேதனைத் தீ பற்றிக்கொண்ட பிஞ்சுமனது. "உலையில் உள்ள அரிசி வெந்தால் தானே நீ வெளியே வருவது" என்று கூறிவிட்டுப் பையன் பள் ளிக்குச் சென்றுவிட்டான். பையன் சொன்னதைக் கேட்டுக்கொண் டிருந்த அம்மணி பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள், உலையில்

இருந்த அரிசி வெந்தபாட்டைக் காணோம். பையனுடைய சொல் வீணுவதில்லை என்பதை அறிந்திருந்தும் இப்படி நடந்துகொண்டவள் வேறு வழியில்லாமல் பள்ளிக்கே வேகாத அரிசிப்பானையோடு வந்தாள். தலைமையாசிரியரிடம் முறையிட்டாள். "இவள் சொல்வது அவ்வளவும் பொய். சட்டியைத் திறக்கச்சொல்லுங்கள். சாதம் வெந்திருக்கிறது என்றுன் இளைஞன். அரிசியை வேகவைக்க விடாததுமின்றித் தன்னைப் பொய் சொல்லுவதாகக் கூறியதைக் கேட்ட அம்மணி கலயத்தின் மேலிருந்த மூடியை உடனே நீக்கிஞள். என்ன ஆச்சரியம்! மூடியை நீக்க 'குப்' பென்று கிளம்பியது நீராவி. உள்ளே பார்த்தால் சாதம் நன்ருக வெந்து சாப்பிடுவதற்குப் பக்குவமாக இருந்தது. இந்த அற்புதத்தைக்கண்ட அம்மணி வெட்கித் தலைகுனிந்தாள். தான் இராமசாமியை வெகுநேரம் காக்க வைத்துக் கடைசியில் வெறுங் கையோடனுப்பியது தன்குற்றமென்பதை ஒப்புக்கொண்டாள். பையனிடம் மன்னிப்பை வேண்டி நின்றுள்.

## ஆசிரியருக்குப் பாடம்

இராமசாமி பால சமுத்திரப் பள்ளியில் படித்து வரும் போது அவன் பெற்றிருந்த அரிய சக்தி பலரை அவனிடம் தினமும் இழுத்து வந்தது. சொற்ப விஷக்கடியாயிருந்தாலும் கொடிய பாம்புக்கடியாக இருந்தாலும் அதை நீக்க வல்லவன் ஒருவன் பால சமுத்திரப் பள்ளியில் உள்ளான் என்பதை உள்ளூரும் அறியும், பக்கத்து கிராமங்களும் நன்கு அறியும். ஆபத்துக்குதவும் அருங்குணசாலி இராமசாமியின் அரிய சக்தியின் உதவியை நாடி மக்கள் வந்த வண்ணமாகவே இருந்தனர். இராமசாமி பள்ளியில் படித்துக் கொண்டிருப்பான். பாடம் நடந்து கொண்டிருக்கும் வேளையில் ஒரு கும்பல் பள்ளிக்கு வெளியே பள்ளிமாணவன் இராமசாமிக்காகக் காத்து நிற்கும். விஷக்கடியால் வருந்தும் மக்களின் நலம் பள்ளிக் கூடத்தின் அமைதியை அடிக்கடி பாதிக்கும். இதைக் கவனித்த கணபதி வாத்தியாருக்குப் பொறுமை கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்தது. ஒரு நாள் கோபத்தின் உச்ச நிலையை அடைந்தார். 'அடே இராமசாமி, இனிமேல் நீ இந்த வேலையை விட்டுவிட வேண்டும். நாள் தவருமல் உனக்கு இதே வேலையாகி விட்டது. இனிமேல் எந்தக் கடியாயிருந்தாலும் யார் வந்தாலும் நீ உன் படிப்பை விட்டுவிட்டுப் போகக்கூடாது. உனக்குப் படிப்புத்தான் முக்கியம். இந்த மந்திரிக்கும் வேலையை விட்டுவிட வேண்டும்" என்ற கண்டிப்பான உத்திரவைப் போட்டுவிட்டார். மாணவன் இராமசாமியும் ஆசிரியர் போட்ட கோட்டைத் தாண்டுவதில்லை என்று உறுதி கூறிவிட்டான். இப்படி இராமசாமி உறுதி கூறி

கொஞ்சநேரங்கூடச் செல்லவில்லை. கணபதி வாத்தியார் வீட்டிலிருந்து ஒரு ஆள் ஓடோடி வந்தான். கணபதி வாத்தியாருடைய அக்காள் குழந்தை செல்லப்பன் என்ற பையனைப் பாம்பு கடித்துவிட்டது. "விஷத்தை உடனே இறக்காவிட்டால் குழந்தைக்கு ஆபத்து என்று கூறிப் பரபரப்போடு பரிதவித்தான் வந்த ஆள். கணபதி வாத்தியாருக்கு மனம் குழம்பிவிட்டது. தன்னுடைய சொந்த அக்காள் மகன் பாம்பு கடித்து மரணவஸ்தைப்படுகின்றான், உடனடியாக மந்திரித்துக் குணப்படுத்தாவிட்டால் உலகைவிட்டே பிரிந்து விடுவான். இராமசாமியின் தயவிருந்தால்தான் உயிர் பிழைப்பான். சிறிது நேரத்திற்கு முன்புதான் இராமசாமியிடம் இவர் இது மாதிரி வேலைகளை ஒப்புக்கொள்ளக்கூடாது என்று உறுதி வாங்கி இருக்கின்றார். இந்த எண்ணங்கள் அலைஅலையாக வாத்தியார் மனத்தை மோதுகின்றன. தலை சுற்றுகின்றது. இராமசாமி தன் மாணவன் தானே, தான் சொன்னால் எதையும் செய்யவேண்டிய மாணவன்தானே என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டார். மாணவன் இராமசாமியிடம் வந்தார்.

கணபதி: "இராமசாமி, நீ உடனே புறப்பட்டு என்னோடு வரவேண்டும்."

இராமசாமி: (விபரங்கள் தெரிந்தும் தெரியாதவன் போன்று நடித்து) ஏன் சார்? இப்பொழுது தானே நான் எந்தக் காரணத்தைக் கொண்டும் வகுப்பை விட்டுப் போகக்கூடாது என்ற கண்டிப்பான உத்திரவைப் போட்டீர்கள்.

கணபதி: உண்மைதான். என் அக்காள் மகனைப் பாம்பு கடித்து விட்டது. உடனடியாகச்சென்று நீ மந்திரிக்க வேண்டும். மந்திரிக்கா விட்டால் அவன் உயிருக்கு ஆபத்து.

இராமசாமி: (உண்மையிலேயே இரக்கம் கொண்டாலும் கண்டிப்பாக இருப்பவன்போல் நடித்து) சார், என்னை மன்னித்து விடுங்கள். நான் கொடுத்த உறுதியை யாராயிருந்தாலும் மாற்றிக் கொள்ள முடியாது. நீங்கள் சொன்னபடியே நடந்தே தீருவேன். ஒருநாளும் என் படிப்பைவிட்டு என் பள்ளியை விட்டு நகரமாட்டேன்; இது நான் உங்களுக்குக் கொடுத்த உறுதி. குரு வார்த்தையை மீறக் கூடாது. அந்த உறுதியை நான் காப்பாற்ற எனக்கு உதவி செய்யுங்கள்.

கணபதி வாத்தியாருக்கு ஒன்றும் ஓடவில்லை. தான் செய்தது தப்பு என்பதை உடனடியாக ஒப்புக் கொண்டார். எப்படியாவது தன் அக்காள் குழந்தையை மந்திரித்துப் பிழைக்கவைக்க வேண்டும்

என்று மாணவனிடம் மன்றாடிக் கேட்டுக்கொண்டார். மாணவன் இதயம் கல்லா? இரும்பா? அதுயாருக்கும் உதவிசெய்ய முந்தும் அன்பு கனிந்த இதயக் கமலமல்லவா? உடனே மாணவனின் உதவியும் கிட்டியது, உடனே மாணவனைக் கட்டியிருந்த கட்டளையும் தளர்ந்தது. அன்றிலிருந்து வழக்கம்போல்யாருக்கும் இராமசாமியும் அவன் சக்தியும்உதவ ஆரம்பித்தன. சிற்றுயிர்க்கு உற்றதுணையாக அமைந்த அறச்செல்வன் இராமசாமி உறுங்கவல் (பெரிதாக வரும் துன்பம்) வந்த போதும் கை கொடுத்துதவும் மனித தெய்வமாகவே வாய்த்தான். இதற்குக் கணபதி வாத்தியாருடைய முழு மனத்தோடு கூடிய ஆசியும் உதவியாக இருந்தது.

## வகுப்பில் சரஸ்வதி

எந்தப் பையன் வகுப்பிற்கு முதலில் வருகின்றானோ அவனே அந்த வகுப்புக்குச் சரஸ்வதியாவான். அப்படி அந்த வகுப்புக்குச் சரஸ்வதியாகின்றவனுக்குச் சில உரிமைகள் உண்டு. அவனே அந்த வகுப்பில் முதலிடம் பெறுகின்றான். அந்த வகுப்பு மாணவர்களுக்குத் தலைவனாகின்றான். ஆசிரியருக்கு அடுத்த நிலையிலும் அவ் வகுப்பில் அவன் விளங்குகின்றான். வகுப்புக்கு வருபவர்கள் வராதவர்களையும் தாமதமாக வருபவர்களையும் அதற்கென்று வைத்திருக்கும் குறிப் பேட்டில் குறிப்பது, சிலருக்குப் பிரம்படி போன்ற தண்டனைகளை நிறைவேற்றுவது,—இவை இந்த ஸ்தானத்திற்கு ஏற்பட்ட சில உரிமைகள், வேலைகள். இந்த ஸ்தானத்திற்கு 'நான்முன்னே நீ முன்னே' என்று போட்டி போட்டுக்கொண்ட மாணவர்கள் மற்றமாணவர்கள் வருவதற்கு முன்பே பள்ளிக்கு அதிகாலையிலேயே வரவும் முற்பட்டனர். அந்த மாணவர்களில் இராமசாமியும் ஒருவன். எத்தனை நாட்கள்தான் இந்தச் சரஸ்வதி பதவிக்கு ஆசைப்பட்டு காலையிலேயே ஓடோடி வருவது. "தான் அதிகாலையிலும் வரவும் கூடாது, இந்தப் பதவியையும் விடவும் கூடாது" என்று திட்டம்போட்ட இராமசாமி பள்ளிக்கு அருகாமையில் உள்ள நாவல் மரத்தடிக்குச் சென்றான். புத்தபிரானுக்கு போதி (Bodi) மரத்தடியில் ஞானோதயம் ஏற்பட்டதைப் போன்று, சிறுவன் இராமசாமிக்கு ஒரு அபூர்வ யோசனை நாவல் மரத்தடியில் உண்டானது. அந்த நாவல் மரத்தைக் கொண்டே தான் அனுதினமும் சரஸ்வதியாவதற்குரிய திட்டத்தை முடித்துவிட்டான்.

ஒருநாள் மாலை மாணவர்கள் எல்லோரும் வீட்டுக்குத் திரும்பி கொண்டிருந்த நேரம். ஒரு பெரிய கும்பல் வழக்கம்போல் இராமசாமியோடு பேசிக்கொண்டும் விளையாடிக் கொண்டும் வந்தது.

இராமசாமி : நமது பள்ளிக்கூடத்து நவா மரத்தில் ஒரு ஜடா முனி இருப்பது உங்களுக்குத் தெரியுமா?

ஒரு பையன் : நவா மரத்தைப் பார்த்திருக்கோம். அதில் ஜடா முனி இருப்பதை ஒருவரும் பார்த்ததில்லே.

இராமசாமி : ஜடாமுனியை யாரால் பார்க்கமுடியும். ஆனல் அதன் சேட்டைகளைப் பார்க்கமுடியும்.

மற்ருெருவன் : அது எப்படிச் சேட்டை செய்யும்?

இராமசாமி : தன்னந்தனியாக அதனிடத்தில் சிக்கிக்கொண்டால் பெரிய ஆபத்து. சில சமயங்களில் நாவல் மரத்துக் கிளைகளையும் இலைகளையும்உலுக்கிஆட்டு விக்கும் அதன் வேகத்தை யாருமே பார்த்த தில்லேயா.

இராமசாமி சொல்வதில் உண்மையும் இருந்தது. நாவல் மரக் கிளைகள் பெருங்காற்று வீசும்போது பேயாட்டம் ஆடுவதும் அப் போது கிளைகளிலுள்ள இலைகள் பேய்க்கூச்சல் போன்று சப்தங்கள் எழுப்புவதும் உண்மைதானே. இதைக் கண்டிருந்த இளங்கன்று களுக்கு இராமசாமி சொன்ன விளக்கம் பயத்தை எழுப்பியது. இந்த பயம் அவர்களின் சரஸ்வதியாவதற்குப் போட்டியிடும் உற்சாகத் தையே விழுங்கிவிட்டது. அன்றிலிருந்து அதிகாலையில் பள்ளிக்குச் சரஸ்வதி ஸ்தானத்திற்காகக் குதித்தோடி வந்த கூட்டம் நின்றுவிட் டது. தன் அபூர்வ மதியினல் உடனடியாகப் பலன் கண்ட இராம சாமிதான் அன்றிலிருந்து பள்ளிக்கு முதன்முதலில் வருவது. அன் றிலிருந்து இராமசாமிதான் நிரந்தர சரஸ்வதியானன்.

சில நாட்களில் சில பையன்கள் சரஸ்வதி ஸ்தானத்திற்கு ஆசைப் பட்டு இராமசாமியிடமே தங்கள் ஆசையைச் சொல்லிக் கொள்வர். தன்னலமில்லாத இராமசாமியும் அவர்களுக்குக் சரஸ்வதி ஸ்தானத்தைக் கொடுப்பதற்கென்றே அந்த சில நாட்களில் பள்ளிக்குத் தாமதித்து வருவதும் உண்டு.

இராமசாமி சரஸ்வதியாவதில் மாணவர்களுக்கு மகிழ்ச்சியே. யாரையும் பிரமிக்கவைக்கும் சக்திமிக்க சிறுவன் இராமசாமியால் மாணவர்களுக்குப் பல உதவிகள் உண்டு, நன்மைகள் உண்டு. இராமசாமி வீணுக யாருக்கும் தொல்லே கொடுப்பதில்லே: தண்டனே களையும் வாங்கிக் கொடுப்பதில்லே. வகுப்பில் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் உள்ள உறவு அன்யோன்யமாக வளர்ந்தது. மாணவர்களும் ஆசிரியரும் இன்பமாகப் பழகிவந்தனர். இதற்கெல் லாம் காரணம் இராமசாமியின் சரஸ்வதி ஸ்தானத்தின் அன்புப் பணியே!

## பள்ளியில் தீராத விளையாட்டுப் பிள்ளை

பாலசமுத்திரத்தில் கணபதி வாத்தியார் இராமசாமியைக் கட்டுப் படுத்த முயன்று தானே தன் அக்காள் குழந்தைக்குப் பாம்பு கடித்த வுடன் இராமசாமிக்குத் தான் இட்ட கட்டளைக் கட்டை அவிழ்க்க பட்ட பாடு நம் நினைப்பை விட்டு நீங்கவில்லை. அவர் முன்பின் யோசனை யின்றி இட்ட கட்டளையால் தர்ம சங்கட நிலையில் அகப்பட்டுக் கொண் டார். அதே பள்ளியில் மற்ஞெரு வாத்தியாரும் பட்டபாட்டை கேள்விப்படும் போது இவ்வளவு குறும்புத்தனமும் இராமசாமிக்கு ஏற்பட இராமசாமி மனத்தில் எவ்வளவு வலிமை இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுவது இயற்கை. இராமசாமி வலிமைசாலி தான், தப்பான வழியில் செல்வோரைத் திருத்துவதில் தப்பான வழி யில் செல்வோர் யாராயிருந்தாலும் தனக்குப்பாடம் சொல்லிக் கொடுக்கும் உயர்ந்த ஆசிரியராக இருந்தாலும் கூட அந்த ஆசிரி யருக்கே பாடம் பயிற்றுவிக்கத் தயங்குவதில்லை அவனுடைய உரங் கொண்டஉள்ளம். அந்தப்பள்ளியில் ஒரு முன்கோபி வாத்தியார் ஒரு வர் உண்டு. தீர விசாரிக்காமல் திடீர் முடிவுசெய்து திடீர் திடீரென்று பையன்களை ஓயாது அடிப்பார். ஒருநாள் அவசரப்பட்டு அநியாய மாக இராமசாமியின் நண்பர் சிலார்சாயபுவைப் பிரம்பால் நைய புடைத்து விட்டார். ஐயோ ஐயோ என்று அலறித்துடித்தான் சிறு வன். சிலார் சாயபுவின் உடம்பின் அடிபட்ட இடங்களில் பிரம்புக் குறிகள் வீக்கங்கண்டு எழுந்தன. இதைக்கண்ட இரு மாணவர் களுக்கு அழுகையும் வந்தது. அதோடு ஆத்திரமும் பொங்கி வந்தது. இதோடு ஒரு திட்டமும் மனத்தில் குதித்து வந்தது. திட்டமிட்டபடி தாம் நினைத்த காரியத்தை முடிக்க இந்த இரண்டு மாணவர்களும் வகுப்பில் பக்தி சிரத்தையோடு அமர்ந்திருந்தனர். அந்தப் பொல்லாத ஆசிரியர் எந்தப்புத்தகத்தைப் படித்தாலும் தன் கண்ணேடு கண் வைத்துப் படிப்பார். காரணம் பார்வை அவ்வளவு மோசமாக இருந் தது. வகுப்பிற்கு வந்தவர் தன் மேஜை டிராயரைத்திறந்தார். மேஜைக்குள் பெட்டிப்பாம்புஅடங்கி இருத்தலைப் போல ஒருபொருள் அடங்கி இருந்தது. மேஜை டிராயர் மூடியிருந்த போது ஆட்டம் அடங்கிப் படுத்துக்கொண்டிருந்தமெல்லிய வழுவழுப்பான வாயில்லா ஜீவன் ஒன்று டிராயரை ஆசிரியர் திறந்தவுடன் டிராயரை விட்டு நீங்கி ஆசிரியர் மீதே மடமட வென்று ஏற ஆரம்பித்து விட்டது. 'ஐயோ' என்று அலறினுர் ஆசிரியர். கையில் ஏறிய கயிறு போன்ற வழுவழுப்பான பொருளைத் தூர விசிறி எறிந்தார் விலவிலத்துப்போன ஆசிரியர். பயத்தால் மாணவர்கள் வகுப்பைவிட்டே ஓடிவிட்டனர். அந்தப் பொருளும் மாணவர்கள் செய்த அமளியில் உடனே ஓடி மறைந்துவிட்டது. பள்ளிக்கு அருகே தேங்கி நின்ற தண்ணீருக் குள் மறைந்து விட்டது. அவசரத்தில் பயத்தின் கிறுகிறுப்பில்

உதறித்தள்ளிய பொருள் யாதென்று கவனிக்காத ஆசிரியர் வழு வழுப்பாக ஊர்ந்துசெல்லும் அப்பொருள் யாதாயிருக்க முடியும் என்று யூகிக்க முடிந்தது. அவருடைய குற்றம் சாட்டும் மூளை வகுப் பிலேயே நின்றுகொண்டிருந்த சிலார் சாயபுவை உடனே தாக்கத் தொடங்கியது.

ஆசிரியர் : டேய், சிலார் சாயபு. குற்றத்தை ஒப்புக்கொள். நீ தானே இதைச் செய்தாய்.

சிலார் சாயபு : சார், சார். எதற்கெடுத்தாலும் என்னைத்தான் சந்தேகப்படுகின்றீர்கள். எனக்கு என்ன சொல்வதென்றே தெரிய வில்லை.

ஆசிரியர் : டேய் உண்மையைச் சொல்லிவிடு இல்லா விட்டால்.

சிலார் சாயபு : சார், சார், பாம்பை நான் பிடித்தே வரவில்லை.

பாம்பு என்ற சொல் காதில் விழுந்ததோ இல்லையோ ஆசிரியர் அப்படியே இடி விழுந்த மாதிரி ஆசனத்தில் ஒன்றும் பேசாது அமர்ந்து விட்டார். கோபம் தாண்டவமாடிய முகத்தில் பீதி பெரு கியது. இதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான் வகுப்பில் மற்றொரு பையன். உண்மையில் சிலார் சாயபு அந்தப் பாம்பைப் பிடித்து வரவே இல்லை. பாம்பைப்பிடித்து வந்த பையன் தான் வகுப்பில் இருந்த மற்றொரு சிறுவன். ஒன்றும் தெரியாதது போல் இருந்த அவனும் எரிகிற நெருப்பில் எண்ணெய் ஊற்றுவதுபோல் ஆசிரியரின் பீதியை அதிகப்படுத்தப் பேச ஆரம்பித்தான்.

பையன் : சார், உங்கள் கையிலே ஏறின பாம்பு என்ன பாம்பு சார்.

ஆசிரியர் : அது பாம்பு என்பதே சிலார்சாயபு சொல்லித்தானே தெரிகின்றது.

பையன் : சார், அது நல்லபாம்பாயிருந்தாலும் இருக்கலாம். ஒரு வேளை அது கடித்திருந்தால்...

இப்படிப் பையன் வார்த்தைகளை ஏற்ற ஏற்ற அவருடைய பீதி யும் விஷம் ஏறுவதுபோல் ஏற ஆரம்பித்தது. மயக்கம் வரும் அள விற்குப் பயம் தலையைச்சுற்ற ஆரம்பித்தது.

ஆசிரியர் : (கொஞ்சும் குரலில்) தம்பீ, உனக்குதான், விஷக் கடி இறக்கத் தெரியுமே, உடனே மந்திரிக்க மாட்டாயா ?

இப்படித் தன்னிடம் தஞ்சமடைந்த திகிலடித்த ஆசிரியருக்கு விஷக்கடியை இறக்குவதாகச் சொல்லி சில வார்த்தைகளை முணு முணுத்தான் சிறுவன். ஆசிரியரும் பையன் மந்திரங்கள் ஜெபிக் கின்ருன் என்று தைரியத்தோடு இருந்தார். ஏனெனில் மந்திரம் ஜெபிப்பது எந்தக்கடியாயிருந்தாலும் நொடிப்பொழுதில் குணப் படுத்தும் இராமசாமியல்லவா? விஷம் இறங்கவே இல்லை. காரணம் விஷப்பாம்பு கடித்திருந்தாலல்லவா விஷம் ஏறியிருக்கும்? விஷம் ஏறிஇருந்தால்தானே விஷத்தை இறக்கமுடியும்! பெட்டிக்குள் இருந்தது தண்ணீர்ப்பாம்புதான் என்பது அதைக்கொண்டு வந்த இராமசாமிக்கும் அதைப் பெட்டியில் பதுக்கிவைத்த சிலார் சாயபு வுக்கும்தான் தெரியும். இவற்றை அறியாத ஆசிரியருக்கு ஒன்று மட்டும்தான் தெரியும் — இராமசாமி இல்லாவிட்டால் அன்று விஷம் தலைக்கேறி உடல்முழுதும் பரவி அநியாயமாக இப்பாருலகைவிட்டு அவர் நீங்கி இருப்பாரென்ற எண்ணம். அன்றிலிருந்து தலைமை யாசிரியர் பிரம்படி கொடுப்பதையே நிறுத்திவிட்டார் என்று சொல்லவும் வேண்டுமோ? பிரம்பு அவர் கையைவிட்டே மறைந்தது. கோபம் அவர் முகத்தைவிட்டே மறைந்தது. என்னே இரு பையன் களின் சாமர்த்தியக்கூத்து!

தப்புச்செய்தால் திணற அடிக்கும் இராமசாமியின் உள்ளம் செய்கின்றவர் தப்பு வேண்டுமென்றே செய்கின்ருர்களா என்பதை ஆராய்ந்து பார்க்கும். நன்ருக ஆராய்ந்துதான் எந்தக் காரியத்தை யும் செய்வார். சிலார் சாயபுவை நையப் புடைத்ததால் ஏற்பட்ட வீக்கம் ஒரு சூருவளிக் காற்றையே ஏற்படுத்தியது. சாமிகளின் நெற்றியில் ஒரு காய வடு இருக்கின்றது. அது ஒரு பெண் எறிந்த கல்லால் ஏற்பட்ட வடு. அப்படிக் கல்லெடுத்து வீசிய பெண்மணிமீதும் இச்சூருவளிக் காற்றுவேகத்தில் ஆத்திரம் மூண்டதா? இல்லை, இராமசாமி மனத்தில் அமைதியும் சாந்தமுமே நிலவியிருந்தது. ஒருநாள் நெல் காயவைத்துக் கொண்டிருந்த ஸ்ரீரங்கம்மாள் என்ற பெண்மணி நெல்லைக் காக்கவேண்டிய பொறுப்பையும் ஏற்றிருந்தாள். காக்கைகளின் இடைவிடாத தொந் திரவை நீக்கப் பெருங்கல்லொன்றெடுத்தாள். காக்கையைப்பார்த்துக் கொண்டே பெருங்கல்லைக் காக்கைமீது வீசியெறிந்தாள். அவள் முழுபலம் கொண்டு வீசியெறிந்த கல்லையும் அவளையும் ஏமாற்றி விட்டு வெகுதூரத்திற்கப்பால் ஓடிவிட்டது காக்கை. அச்சமயத்தில் குனிந்ததலை நிமிராது வந்து கொண்டிருந்த இராமசாமி நெற்றி யில் இந்தக்கல் பாய்ந்தது. சாதாரணமாக சிறுவன் இராமசாமி வெளியே அதிகம் செல்வதில்லை. வெளியே சென்ருலும் பெண்களைக் கண்டால் மிகவும் அடக்கவொடுக்கமாகவே நடந்துகொள்வான். இதைக் கண்டவர்கள் இராமசாமியின் பாட்டியிடம், "என்ன பாட்டி,

உங்கள் பேரன் பெரியமனுஷி ஆன பெண்போன்று வெட்கப்படு கின்றுனே " என்று சொல்லிக் கேலிபண்ணுவதுண்டு. பெண்ணைக் கண்டல்லவா இப்போதும் தலைசாய்த்து நடந்தான் இராமசாமி. அப்படி நடந்துகொண்டது அவன் நெற்றியையே பிளந்துவிட்டது. இரத்தம் பீறிட்டுவந்தது. தன்னுல் சிறுவன் இராமசாமிக்கு ஏற்பட்ட ஆபத்தைக்கண்ட அணங்கு பதைபதைத்தாள். இராமசாமியின் பாட்டி உடனே ஓடிவந்து தன்பேரன் தலையில் வழியும் இரத்தப் பெருக்கைத் தடுத்து சில மூலிகைகள் வைத்துக் கட்டினுர். பயந்து நடுநடுங்கி இவைகளைப் பார்த்துக் கொண்டிருக்கும் அணங்கின் மேல் தன்பாட்டியின் கோபம் பாய்ந்துவிடுமோ என்று பயந்த இராமசாமி அந்த அணங்கிற்காகப் பேசலானுன்.

இராமசாமி: "பாட்டி, அந்த அக்காள்மீது ஒரு குற்றமும் இல்லை. அந்த அக்காள் காக்கையை அடிக்கத்தான் ஓடிவந்தது. நான்தான் முட்டாள்தனமாக அக்காள் கல்வீசிய பக்கம் கண்ணை மூடிக்கொண்டு சென்றேன். அக்காள்மீது ஒரு குற்றமும் இல்லை. அக்காளைக் கோபித்துக்கொள்ள வேண்டாம்."

அக்காள் : பாட்டி, நான்தான் முட்டாள்தனமாக நடந்து கொண்டேன். ஐயோ, என் குருட்டுத்தனத்தால் தம்பிக்கு எவ்வளவு பெரிய ஆபத்து. என்னை மன்னித்து விடுங்கள்.

உண்மையில் இந்த அணங்குதான் இடையருது தொந்திரவு கொடுத்துவந்த காக்கைமீது பொங்கிய ஆத்திரத்தால் கல்லெடுத்து வீசிக் குருட்டுத்தனமாக நடந்து கொண்டாள். அப்படி இருந் தாலும் தன்னுல் அவளுக்கு ஒருவசையும் ஏற்படக்கூடாது என்பதற் காகப் பழியைத் தன்மேலேயே சுமந்துகொண்ட சிறுவனின் பெருந் தன்மையை என்னென்று போற்றுவது. சிறுவனும் தான் முட்டாள் தனமாக நடந்து கொண்டதாகச் சொல்கின்றுன். அணங்கும் தான் முட்டாள்தனமாக நடந்து கொண்டதாகச் சொல்கின்ருள், உண்மையிலேயே யார்தான் முட்டாள்தனமாக நடந்துகொண்டார் என்பதை அறிந்துகொள்ள முடியாத பாட்டி அதிகம் பேசவே இல்லை. இதைத்தான் இராமசாமியும் விரும்பியது. ஒருபாபமும் அறியாத பெண்ணின் மனம் புண்ணுகக்கூடாது என்பதைத்தான் அவன் மனம் விரும்பியது.

# 11. பள்ளியில் ஓர் வள்ளி

" தண்ணீர் குடிக்கப் போனவன்டி
தவளை போல மிதக்குறான்டி "

இராமசாமி பாலசமுத்திரத்தில் பள்ளி மாணவனாக இருந்த போது, பல நாடகங்களில் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டு பார்ப்போர் உள்ளங்களைக் கவர்ந்திருக்கின்றான். நடிப்புக்குத் தகுந்த வேடம், வேடத்திற்கு வேண்டிய விறுவிறுப்பும் கம்பீரமும், நடிப்பில் எடுப்பாகவும் துடுப்பாகவும் பேசுகின்ற சொல்லாற்றல், கணீரென்ற தொண்டையில் சொற்களை விழுங்காது அழுத்தந் திருத்தமாகப் பாடும் இனிமை – காண்பவர்களுக்கு மகிழ்ச்சிஊட்டின. அன்று பாடிச் சபையோர்களை மகிழ்வித்த சிறுவன் இராமசாமி நமது உள்ளங்களைக் கொள்ளைகொண்டசாமிகளாக இன்று அதே பாட்டுக்களைப் பாடிப் பக்தர்களை மகிழச்செய்யும்போது சாமிகளின் இனிய தன்மையையும் ஞாபக சக்தியையும் நாம் போற்றாமலிருக்க முடியாது.

## சிபிச்சக்கரவர்த்தி நாடகம்

ஒருநாள் சிபிச்சக்கரவர்த்தி நாடகத்தை மாணவர்கள் நடத்திக் காட்டினர். அந்த நாடகத்தில் இளஞ்சிறுவன் இராமசாமிக்கு இரண்டு பாத்திரங்களில் நடிக்க ஏற்பாடாகி இருந்தது. இந்தப் பள்ளிநாடகத்தில் சிபிச்சக்கரவர்த்தி கதையில் இங்குமங்கும் சில மாற்றங்கள் செய்திருந்தனர். ஆனால், பூர்வீகக் கதையின் அழகோ நீதியோ இம்மாற்றங்களால் பாதிக்கப்படவில்லை. எது கேட்டாலும் இல்லையென்றியம்பாத சிபியின் கருணை உள்ளத்தைச் சோதிக்க ஈசன் முற்பட்டார். அக்னிதேவனைக் கூப்பிட்டுப் புறாஉரு எடுக்கச் சொன்னார். அப்புறாவைத் தானே வேடரூபமாக விரட்டிச் சென்றார். வேடனுக்குப் பயந்து புறா சிபியிடம் அடைக்கலம் புகுந்தது. அடைக்கலமடைந்த புறாவுக்குச்சமமான எடையுள்ள தன் ஊனைக் கொடுக்கத் தயாரானார் சிபி. தன் வார்த்தைகளையும் நீதியையும் காப்பாற்றியதே இக்கதையின் சாரம்.

திருநீறுபட்டைகளும் கம்பீரமான பீதாம்பரங்களும் தலையில் தேவக்கிரீடமும் அமைந்து விளங்கிய அக்னிவேடம் தாங்கியிருந்தான் சிறுவன் இராமசாமி. அக்னிக்குச் சிவன் இட்ட கட்டளை பாட்டுருபத்தில் இருந்தது. அந்தப்பாட்டு அப்படியே இளைஞன் இராமசாமி உள்ளத்தில் பதிந்துவிட்டது. அதனாலல்லவா சாமிகள் இன்றும் அந்தப்பாட்டை அழகோடு பாடிக்காண்பிக்க முடிகின்றது. கேளுங்கள் அந்தப்பாட்டை.

"அக்கினி நீதானும் — ஒரு
அருமைப் புருவாய் உருமாறி
இக்கணத்தில் சிபி மடியில்
அடைக்கலப் பொருளாகத் தஞ்சமடைவாய்"

பாட்டில் கூறியபடியே உருமாறினான் அக்கினிதேவன். அதாவது இராமசாமி அக்னிதேவன், உருவிலிருந்து புரு உருவிற்கு மாறினான். இராமசாமி தேவஉடைகளை மாற்றிவிட்டுத் தன் மனித உருவையும் மறைக்கும் இறக்கைகளும் புரு அலகும் சிறகுகளும் வேய்ந்த பட்சி உரு அங்கியை அணிந்து, சபைக்குமுன் வந்தான். பட்சிவேடமானதால் இராமசாமி சபைக்கு நடந்துவரவில்லை. பறந்துவர வேண்டியிருந்தது. அதெப்படி இராமசாமி பறக்கமுடியும்? பெரிய கயிறுகள் கட்டிஇருந்த ஒரு ஆசனத்தில், இராமசாமி பட்சியுரு அங்கியோடு அமர்ந்திருந்தான். ஆசனம் சபையோருக்கு ஆசனம் என்று அறிந்துகொள்ள முடியாதபடி மேலே இருந்து தொங்க விடப்பட்டிருந்தது. ஆசனமும் பட்சிஉரு அங்கிக்குள் இருந்த ஆளும் பார்ப்பவர்களுக்குத் தெரியவேஇல்லை. ஆகாயத்திலிருந்து புரு பறந்துவருவது போலவே இருந்தது. பறக்கும் பட்சிபோல் ஆசனத்தில் அமர்ந்து நடிக்கும் ஆசாமிப்புருவை பிடிக்கவருகின்றான் ஒரு வேடன். அவன் கைகளுக்குச் சிக்காமல் இந்த ஆசாமிப் புரு சிபியின் மடியில் வெகு சாமர்த்தியமாக இறங்கிவிடுகின்றது. இதில் புத்திசாலித்தனம் என்னவென்றால், எல்லாம் சில விநாடிகளில் மின்னல் வேகத்தில் நடக்கவேண்டும். இல்லாவிட்டால் ஆசனம் தொங்குவதும் அதில் ஆசாமிப்புரு வீற்றிருந்ததும் அம்பலமாகிவிடும். நடிப்பில் சுறுசுறுப்பும் விறுவிறுப்பும் தேவை. இவைகளை நன்றாகக்கையாண்டு நல்லபெயர் சம்பாதித்தான் இராமசாமி. புரு வேடம் தாங்கும் இராமசாமி மன்னனிடம் அடைக்கலம் புகுந்து பாட ஆரம்பிப்பதைக் கேளுங்கள்.

"அண்ணலே உன் அடிகளுக்கு
அடியேன் நமஸ்கார மய்யா!"

தன் உயிரை தியாகம் செய்தாகிலும் இந்தப் புருவைக் காப்பதாகச் சிபி வாக்குக் கொடுக்கின்றுன். சிபி பாடுவதைக் கேளுங்கள் :

"மாதவமே இவ்வுருவாய்
வந்த தென்றன் விதிவசமே
நான்முன்னுல் செய்த தவப்பயனே
முனிவர் இங்கு வரக் கண்டேன்—"

இப்படி முழக்குகின்ற சிபியின் உள்ளத்தைப் புரு வென்று விட்டது. அலகு பொருந்திய தலை அசைப்பினுலும், இறக்கைகள் பொருந்திய கை அசைப்பினுலும், சிறகுகள் வேய்ந்து சட்டையிட்ட உடல் அசைப் பினுலும் இராமசாமி சபையோர்கள் கைத்தட்டலேயே தன் அபூர்வ சாமர்த்திய நடிப்பினுல் உடனே சம்பாதித்துக் கொண்டான். அதோடு இந்த நாடகத்தில் நன்ருக நடிப்பவர்களைத் தேர்ந்தெடுக்க நியமிக்கப்பட்ட நீதிபதிகளின் நண்மதிப்பையும் சம்பாதித்து, அன்று நாடகத்தைக் கண்டு இன்புற்ற தலைவரிடமிருந்தும் நாடகத்தில் வெகு அருமையாக நடித்ததற்காக ஒரு பரிசையும் சம்பாதித்துக் கொண் டான் சிறுவன் இராமசாமி.

### வள்ளித் திருமணம்

மற்ருெரு சமயம் இதே பள்ளியில் இராமசாமி வள்ளி வேடம் தாங்கி நடித்தான். இன்று முருகனுக்கு தன் மனம் மொழி மெய்யையே கொடுத்திருக்கும் சாமிகள் அந்த இளம் வயதிலேயே முருகனுக்கே தன்னையே கொடுத்துவிட்ட வள்ளி தேவியாக நாடகமொன்றில் நடிக்கும் வாய்ப்புப் பெற்ருர். முருகனையே நினைந்துருகும் இயற்கை துடிப்பு கொண்டுள்ள இராமசாமிக்கு இந்தப் பாகம் முற்றிலும் பொருந்தி இருந்தது, காரணம் உள்ளம் தெய்வீகக் காதல் உணர் வோடு பொருந்தி இருந்ததால். உள்ளப் பொருத்தம் போன்றே வேடப் பொருத்தமும் நன்கு அமைந்திருந்தது. இராமசாமிக்கு இயற்கையாகவே இடுப்புவரை வளர்ந்து தொங்கும் தலைமயிர் இந்த வள்ளி பாகத்திற்கு அலங்காரக் கூந்தலாகவும், சீவிமுடித்து சிங்கா ரித்துக் கொண்டை போடவும் உதவியது. ஏற்கும் வேடத்திற்கு ஏற்ருற்போல் அந்த வயதில் காதில் வெள்ளைக் கடுக்கனும் முடுகும் கையில் தங்கக் காப்பும் இராமசாமி அணிந்திருந்தார். செதுக்கி எடுத்த அழகுச் சிற்பம்போல் அமைந்துள்ள குறுநகை தவழ இள முகமும், பெண்களுக்குரிய சீரான கொடிபோன்ற உடற்கூறும் இராமசாமி ஏற்றுக்கொண்ட தங்கமான வள்ளி பாகத்திற்கு மெருகை ஊட்டின. இந்த மோகனம் தவழ் இளவடிவிற்கு தன் பாட்டியின் விலையுயர்ந்த பட்டுச்சேலையும் தங்க நகைகளும் சேர்ந்துவிட்டால்

சொல்லவேண்டுமோ வள்ளி எழிலுக்கு? கண்டவர் வியப்புறும் வண்ணம் மேடைமீது தோன்றிய வள்ளி பாகம் கொண்ட இராம சாமிக்கு உற்சாகம் மிகுந்துவிட்டது. தினைப்புனம் காக்க வருகின்ற வள்ளியின் தீம்பாடலைக் கேளுங்கள்.

“ கொக்குகளாம் குருவிகளாம் சோ சோ
தூக்கணத்தான் கூடுகளாம் சோ சோ
காடைகளாம் கௌதாரிகளாம் சோ சோ
காட்டுப் புறு மாடங்களாம் சோ சோ ”

கையில் பறவைகளை விரட்ட வைத்திருந்த கல்லடிக்கும் கவணும், நடையில் பஞ்சுமென் மலரடிப்பாவையைக் காட்டும் ஒயிலும், வாயில் “சோ சோ” என்று முடிக்கின்ற தீஞ்சுவை நாதமும் கூடி இருந்த மக்களுக்கு வள்ளியை நேரிலேயே காண்பதுபோன்ற நிலையை ஏற்படுத்திவிட்டன. கணீரென்று ஒலிக்கின்ற இந்த இனிய குரல் வேலனையே வேடனாக இழுத்து வந்தது. மறுபடியும் வேலனையே வளையற்காரனாகவும் அழைத்து வந்தது. வேலன் போட்ட மையல் வலையில் வீழ்ந்தமனம், வளையல்காரன்போட்ட வண்ணக் காதல் வளையல்களை ஏற்றுக்கொண்ட மனம், வேலன் போதையில்தான் எப்படி அழகாகப்பாடுகின்றது! தோழியைப் பார்த்து வள்ளி பாடுகின்றாள்,

“வளையல்காரச் செட்டி போல
வனத்தில் வந்தாண்டி—சேடி
வனத்தில் வந்தாண்டி
ஊணுங் கொடி பிடுங்கி
ஒன்னுரெண்டாய் வளையல்சுற்றி
வளையல் காரச் செட்டியைப் போலே
வனத்தில் வந்தாண்டி—வேலவன்
வனத்தில் வந்தாண்டி!”

பாட்டுக்குத் தகுந்தாற்போல் முகபாவமும் கொண்டு அழகாக உடலில் தளுக்கும் குலுக்கும் கொஞ்சி விளையாடும் வகையில் அமைந்த இராம சாமியின் நடிப்புத்திறன் காண்பவர்களை மகிழ்வித்தது.

இதைத் தொடர்ந்து சில காட்சிகளுக்குப்பின் கிழவனாக வந்த வேலவன் தினைமாவு சாப்பிட்டு விக்கலெடுத்துத் தண்ணீர்ச் சுனைக்கு வள்ளியோடு சென்றான். வள்ளியை அடையவேண்டும், வள்ளியின் கரம் தன்மேல் படவேண்டும் என்று படாதபாடு படுகின்றது கிழவனின் ஆசை நெஞ்சம் “டபக்”கென்று சுனையில் வழுக்கி விழுபவனைப்போல நடிக்கின்றான் கிழவன் பாகம் ஏற்றுக்கொண்டு நடிப்பவன். நாடகத்தில் இந்தக் காட்சியில் ஒரு பகுதியைச் சற்று பார்ப்போம்,

வள்ளி (பாடுகிருள்) :

" தண்ணீர் குடிக்கப் போனவண்டி
தவளைபோல மிதக்குருண்டி "

சேடி : ஐயோ, பாவம்

கிழவன் : ( பாடுகின்ருன் )

" கையைக் கொடுடி வள்ளி—அடி
கரையேறி நான் வருவேன்
முந்தாணியைக் கொடுடி வள்ளி—அடி
மேடேறி நான் வருவேன் "

சேடி : அம்மா, பாவம், உதவுங்கள்.

வள்ளி : கிழவனுக்குக் கை கொடுத்தால் – அடி
சிறிது மெத்த பேசு வான்டி
கும்மாளம்தான் போடுவான்டி

இப்படி நையாண்டிப் பாடல்கள் வளரும் இந்த வள்ளி நாடகத்தில் சுமார் ஐம்பது வருடங்களுக்குமுன்பே வள்ளி பாகம் ஏற்று நடித்த சாமிக்கு இன்றும் அந்த நாடகத்தில் உள்ள உரையாடல் பாட்டுக்களெல்லாம் நெஞ்சைவிட்டு அகலாமல் இருக்கின்றன. அன்று வள்ளி பாகம் ஏற்றுக்கொண்ட சாமிகள் முருகனின் பேரன்பைக் கொள்ளைக்கொண்டவரல்லவா? பேரருளைப் பூர்த்தியாகக் கொண்டவரல்லவா ? அவரால் எப்படி மறக்கமுடியும் குமரன் கோலாகல வாழ்க்கையை, அவன் பேரின்பத்தை, இன்றும் கிண்டல் சுவை நெளியும் நாட்டுப்பாடல்களைச் சாமிகள் பாடிக்காண்பிக்கும் போதும் ஒரு அருமை நம்மை மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழ்த்தி விடுகிறது.

" தண்ணீர் குடிக்கப் போனவண்டி
தவளை போல மிதக்குருண்டி "

என்று சாமி பாடிக் காண்பிக்கும் போது நம்மையே இன்பச் சுனையில் தள்ளி நம்மை ஒரு தவளையைப் போலவே மகிழ்ச்சியில் திணர அடிக்கும் அவர் அன்பினை நாம் வாயார வாழ்த்துவோம்.

## 12. மன உறுதி தளராத இராமசாமி

"காப்பது விரதம்"
"வீரன் கேண்மை கூரம்பாகும்"

சிறுவன் இராமசாமி பாலசமுத்திரத்தில் தன் பாட்டனர் வீட்டில் தங்கி இருந்தபோது அவரைச்சுற்றித்தேனே ஈக்கள் மொய்ப்பதுபோல் சிறுபிள்ளைகள் சூழ்ந்த வண்ணமே இருப்பர். காரணம் இராமசாமி யோடு இருந்தால் அவர்களுக்குத் தின்பண்டங்களுக்கும் மகிழ்ச்சிக் கும் குறைவேயில்லை. இராமசாமியின் பாட்டனர் வீட்டில் நூறு மாடு கள் உண்டு. பசுமோரிலிருந்து திரட்டப்பட்ட வெண்ணெய்க்குச் சிறு வன் இராமசாமி மட்டுமா காத்திருப்பர், அவர் கூட ஒரு கும்பலே காத்து நிற்கும். தனக்கு எது கிடைத்தாலும் தானே அதை அனுப விப்பது என்பது சாமிகளிடத்தில் இல்லை. சமீபத்தில் திருப்பதியில் ஸ்ரீ வெங்கடேசப் பெருமானின் சுப்ரபாத தரிசனத்திற்காகச் சாமி களுக்கு அழைப்பு வந்தது. சாமிகளோடு சுமார் நூறுபக்தர்கள் இருந்தனர். இந்தத் தரிசனத்திற்குக் குறிப்பிட்ட சிலர் மட்டும் தான் அனுமதிக்கப்படுவர். சாமிகள் மட்டும் செல்வதா, அல்லது நூறு பக்தர்களில் குறிப்பிட்ட சிலரை மட்டும்தான் அழைத்துச் செல்வதா என்ற பிரச்னை எழுந்தது. இந்தத் தர்மசங்கடமான நிலையில் சாமி கள் தன்னேடு வந்த எல்லோரையும் அழைத்துச் செல்வது அல்லா விடில் தான் தங்கியிருந்த விடுதியிலேயே தங்கிவிடுவது என்ற முடிவுக்கு வந்தார். சாமிகளை அழைத்தவர்கள் சாமிகளை விடுதியிலா விட்டுவிட சம்மதிப்பர். சாமிகளையும் சாமிகளுடன் வந்த அவ்வளவு பக்தர்களையும் அழைத்துச் சென்று சுப்ரபாத தரிசனம் செய்து வைத்தனர். இதற்கெல்லாம் காரணம் சாமிகளுடைய பேரன்பு. இந்த அன்பு 'விளையும் பயிர் முளையில் தெரியும்' என்பதற்கொப்பச் சிறுவன் இராமசாமியிடம் பூரணமாகக் குடிகொண்டிருந்தது. தனக் குக் கிடைத்த பாட்டிவீட்டு வெண்ணெயை மட்டும் தாள இராமசாமி தன் கூட்டாளிகளுக்குப் பகிர்ந்து கொடுத்தார். தனக்குக் கிடைத்த தின்பண்டங்கள் யாவையுமே தன் அன்பர்களுக்குக் கொடுத்து இன் புறுவர்.

சிறுவன் இராமசாமியிடம் பழகிய சிறுவர்களுக்கு இராமசாமி ஒரு சிறந்த தலைவனுகவும் விளங்கினர். தலைவருக்கு வேண்டிய

அஞ்சாநெஞ்சம் அவரிடம் இருந்தது. அதோடு கூட வேறு எந்தத் தலைவர்களிடமும் காண முடியாத ஒரு பேராற்றலும் இருந்தது. அவர் சொன்னபடி யல்லவா எல்லாம் நடந்தது. ஒரு நாள் இராமசாமி விளையாட்டாக ஒரு கல்லையெடுத்து "இந்தா கல்கண்டு" என்று ஒரு தோழனிடம் கொடுத்தார். தோழன் இராமசாமி கொடுத்த கல் உண்மையையாகவே கல்கண்டென நினைத்து வாயில் போட்டு மென் ருன். உண்மையிலேயே கல் இராமசாமி சொற்களுக்கிணங்க கற் கண்டாக மாறிவிட்டது. இதை முதன்முதலாகக் கண்ட இராமசாமிக் கும் அவன் தோழர்களுக்கும் ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. அன்றிருந்து கல்லைக் கற்கண்டாக்கும் இராமசாமிக்கு ஓயாத தொல்லை கொடுக்க ஆரம்பித்தனர் தோழர்கள். இந்தத் தொல்லை பொறுக்காத இராமசாமிக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. தன் நண்பர்களுக்கு இல்லை என்று சொல்லாத வழக்கத்திற்கும் பங்கம் நேரக்கூடாது. தனக்கும் ஓயாத தொல்லை இருக்கக்கூடாது. சிந்தித் துப் பார்த்தார். பளிச்சென்று ஒரு யோசனை தோன்றியது. கற்கண்டு என்று கேட்ட ஒரு தோழனிடம் இராமசாமி 'கல் நல்ல வெள்ளை யாக இருந்தால்தான் கல்கண்டாகும்' என்று சொல்லிவிட்டார். அப்படிக் கூறிய போது கூட எங்கே இருந்தேனும் வெள்ளை கற்களைப் பொறுக்கி எடுத்து வர சில நண்பர்கள் தயங்குவதில்லை. இராமசாமி சொன்ன சொல்தான் தவறுவதில்லையே! இருந்தாலும் ஓயாத தொல் லையாக இருந்தது இராமசாமியின் மதிநுட்பத்தால் ஓரளவு குறைந்து விட்டது.

தலைவரென்பவருக்கு அவசியமானது அஞ்சாமையல்லவா? இராமசாமிக்குத்தான் இதற்கும் பஞ்சமில்லையே. ஆதிஇறைகுருவின் ஆசியும் அருளும் இராமசாமிக்குப் பாம்பைப் பிடித்து ஆட்டக்கூடிய துணிச்சலையும் யாருக்கும் பயப்படாத மன உறுதியையும் கொடுத்து விட்டதே! ஒரு மரத்தினடியில் வழக்கம்போல் இராமசாமியும் அவர் நண்பர்களும் விளையாடிக் கொண்டிருந்தனர். அந்த மரத்தினடி யிலிருந்து சிறுவர்களை அகற்ற விரும்பிய ஒரு பெரியவர் குழந்தை களுக்குப் பயம் காட்டி அவ்விடத்தைவிட்டு அகற்ற விரும்பினர். 'ஐயோ இந்த மரத்தில் பிசாசுகள் இருக்கின்றன. இங்கு விளை யாட வேண்டாம். பிசாசுகள் ஏதாவது அடித்துப்போட்டுவிடப் போகிறது" என்று அளந்தார். அவர் சொல்லி வாயை மூடுமுன் இராமசாமியின் கணீரென்ற குரல் அவர் தோழர்களுக்குத் தைரி யத்தை வழங்கிவிட்டது.

இராமசாமி: "பயப்படாதீர்கள், பிசாசுகளையெல்லாம் நான் கட்டிப்போட்டு விடுவேன். என்னைக் கண்டால் பிசாசுகள் பயந்து ஓடிவிடும். அப்படிப் பிசாசு வந்தால், உங்கள் எதிரிலேயே கட்டி விடுகிறேன். பயப்படாதீர்கள். வாருங்கள் விளையாட."

இதைச் சொன்னதோடல்ல, மரத்தின் மேலேயே ஏறிவிட்டார் சிறுவன் இராமசாமி. இராமசாமி வீரகர்ஜனை செய்யும் வீரன் மட்டுமா, சொன்னால் சொன்னபடி நடத்திக் காட்டும் அபூர்வப் பிறவியல்லவா? இராமசாமி சொன்னபடியே ஒருக்கால் பிசாசுகள் வந்தாலும் அவைகளைக் கட்டிவிடத்தான் இராமசாமி இருக்கின்றாரே. சிறுவர்களின் சிரிப்பையும், கூத்தையும், கொம்மாளங்களையும் சொல்லவா வேண்டும்! தன் கதை இராமசாமியிடம் பலிக்கவில்லையே என்று வியந்து பெரியவர் சொல்லிக்கொள்ளாமல் இருந்த இடத்தை விட்டு நழுவிவிட்டார்.

ஒரு முறை இராமசாமியின் பாட்டனார் திரு. கருப்பண்ணப் பிள்ளையிடம் ஒரு மந்திரவாதி வந்தான். ஒரு பரிகாரம் செய்ய வேண்டுமென்று சொல்லிப் பூஜைக்காகச் சாமான்கள் கேட்டான். பூஜை முடிந்தவுடன் அவனுக்கு ஒரு பெருந்தொகை அளிக்கவும் திரு. கருப்பண்ணப்பிள்ளை தயாராக இருந்தார். அன்று நள்ளிரவில் ஊருக்கு ஒதுக்குப்புறமாக உள்ள இடமொன்றில் பூஜை செய்வதாகச் சொல்லி வாங்கிய சாமான்களைத் தானே ஒருமூட்டையாகக் கட்டிக்கொண்டு இரவில் அந்த மந்திரவாதி புறப்பட்டான். எதையும் அறிந்துகொள்ள வேண்டும் என்ற மனநாட்டங்கொண்ட இராமசாமிக்கு மந்திரவாதி என்ன செய்யப் போகின்றான் என்பதை அறிய ஆவல் ஏற்பட்டது. பாட்டன் பாட்டியாராலும், ஏன் அந்த மந்திரவாதியாலும் இராமசாமியின் உடும்புப்பிடி எண்ணத்தை மாற்ற முடியவில்லை. வேண்டா வெறுப்புடன் இராமசாமியை மந்திரவாதி அழைத்துச் சென்றான். வரட்டாற்றின் கரைக்கு வந்ததும் தலையில் இருந்த மூட்டையை மந்திரவாதி இறக்கி வைத்தான். மௌனம் சாதிக்க ஆரம்பித்து விட்டான். இராமசாமி பேச்சுக் கொடுத்தும் பேசமாட்டேனென்று அழுத்தமாக இருக்க ஆரம்பித்தான் மந்திரவாதி. இராமசாமியின் பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டல்லவா? இராமசாமி தன்னையும் மறந்தவராய் "என்ன அய்யா வேடிக்கை செய்கிறீர், இப்போது நீர் உங்கள் தொழிலைக் காண்பிக்கிறீர்களா? அல்லது நான் என் தொழிலைக் காண்பிக்கட்டுமா" என்று இராமசாமி சொன்னதுதான்! ஆகாயத்திலிருந்து பெரும் கற்கள் மந்திரவாதிமீது விழுந்து தாக்க ஆரம்பித்தன. விட்டால்போதும் என்று ஓட்டம்ஓட்டமாக ஓடிவிட்டான் மந்திரவாதி. கொண்டுவந்திருந்த சாமான் மூட்டையையும் ஒரு பெருந்தொகையையும் ஏய்த்துச் சாப்பிட்டு ஏப்பமிடவிருந்த கெட்ட மந்திரவாதி! அவன் ஏன் திரும்பிப் பாலசமுத்திரத்தைப் பார்க்கப் போகின்றான்? தன் மந்திர சக்தியையும் மிஞ்சும் ஆற்றல்மிக்க சிறுவன் இருக்கும் இடத்திலா அவன் பாச்சா பலிக்கமுடியும்? இராமசாமியின் தைரியமான செயல் தாத்தாவீட்டுச் சாமானையும் காப்பாற்றியது: பணத்தையும் காப்பாற்றியது.

பன்றிமலையில் பலாமரங்கள் ஏராளமாக இருக்கின்றன. வான் நோக்கி நீண்ட இம்மரங்கள் அறுபதடி உயரங்கூட இருப்பதுண்டு. இந்த மரங்களின் உச்சிக்கும் சென்று திரும்புவதில் அஞ்சாநெஞ்சமும் வலுவான தேகக் கட்டும் இராமசாமி பெற்றிருந்தார். இவ்வளவு உயரமான மரங்களில் எப்படி இராமசாமி ஏறி இறங்கினுர் என்பது பார்ப்பவர்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். ஒருவேளை தன் தெய்வீக சக்தியைக் கொண்டு நெடுந்தூரம் மரத்தில் வான்நோக்கிச் செல்ல முடிகின்றதென்றும் சிலர் நினைப்பதற்கிடமுண்டு. உண்மையில் மந்திரத்தின் உதவியால் நெடுமரங்களின் நுனிக் கிளைக்கு இராமசாமி ஏறுவதில்லை. நெடுமரங்கள் ஏறுவதற்கு அவருக்கு உறுதுணையாக அமைந்தன இருஉளிகள். அவைகளை ஒன்றிற்குமேல் ஒன்ருக மரத்தில் அடித்தடித்துப் படிகளைப்போன்று அமைத்து மேலே ஏறப் பயன்படுத்திக் கொண்டார் இராமசாமி. இப்படி இரண்டே உளிகளைக்கொண்டு 50 அடி தூரம் 60 அடி தூரம் நீண்டமரங்களின் நுனிவரை சென்று திரும்புவதில்தான் எவ்வளவு இன்பம் இருந்தது இராமசாமிக்கு.

கால்பந்தாடுவதிலும் இராமசாமி மிகவும் கெட்டிக்காரர். கால் பந்து விளையாடிப் பரிசுகளும் பெற்றுள்ளார். கைப்பந்து விளையாட்டில் இராமசாமியை நடுநாயகராக வைத்துக் கொண்டு விளையாடும் கட்சிக்கு வெற்றி நிச்சயம். இப்படி ஆரம்பிக்கும் ஆட்டங்களிலெல்லாம் விளையாட்டு முடியும்வரை இராமசாமி தொடர்ந்தாற் போல் இருக்க முடிவதில்லை; காரணம் இராமசாமியைத் தேடிக் கொண்டு விஷக்கடி தீர்த்தருள மந்திரத்திற்காகவும் விபூதி பிரசாதத் திற்காகவும் வருபவர் பலர். ஆதலால் விளையாட்டை ஆரம்பிப்பதற்கு முன்பே இராமசாமியிடம், "நீ விளையாட்டு முடியும்வரை இந்த விளையாட்டை விட்டுப்போகக்கூடாது" என்ற நிபந்தனையைப் போடுவதும் பந்தாட்டக்காரர்களுக்கு வழக்கமாகிவிட்டது; பந்தாடும் சமயங்களிலும் இராமசாமியைத் தேடிக்கொண்டு இராமசாமியை அழைக்க ஓடிவருபவர்களும், இராமசாமியும் தன் விளையாட்டுக் கூட்டாளிகளிடம் கெஞ்சிக் கூத்தாடி விடைபெற்றுச் சென்று வருவோரின் துயரைத் துடைப்பதும் வழக்கமாகிவிட்டது. இராமசாமியின் விளையாட்டும் அவன் படிப்பைப்போல் அவன் கருணைக்குத் தடையாக இருந்ததே இல்லை. அப்படி ஒருவேளை அவை தன் கருணை சுரக்கும் திருக்கைங்கரியங்களுக்குத் தடையாக இருந்திருக்குமேயாகில் இராமசாமியின் அருள் சுரந்த உள்ளம் படிப்பினையும் விளையாட்டையும் உதறித்தள்ளியிருக்குமேயன்றி அவனை நம்பி வாழும் மக்களின் நலனை மறந்திருக்கவே முடியாது. சிறு வயதிலிருந்தே இராமசாமியின் மனஉறுதி போற்றுதற்குரியது. தன்னை அண்டியவர்களுக்குக் கைகொடுத்து உதவுகின்ற இராமசாமியின் மனஉறுதி அவர்

சொந்த பள்ளிக்கல்விக்கும் பிரியமுள்ள விளையாட்டுகளுக்கும் இரண்டாவது இடத்தைத் தான் கொடுத்திருந்தது. மக்கள் பிணிதீர்க்கும் பணிக்குத்தான் இராமசாமி முதலிடம் கொடுத்திருந்தார். இந்த இளவயதில் ஏற்பட்ட மக்கள் நலத்தில் வேருன்றியிருந்த இராமசாமியின் மனஉறுதி கன்னிவாடி ஜமீனில் இராமசாமி பின்னுல் ஏற்றிருந்த உத்தியோகத்தைக்கூட விட்டுவிடச்செய்தது இங்குக்குறிப்பிடத்தக்கது. "காப்பது விரதம்" என்று ஆத்திசூடி பறைசாற்றுகின்றது. உயிர்களுக்கு ஒரு தீங்கும் செய்யாமல் உயிர்களைக் காப்பாற்றுவதே நோன்பெனப்படும். சாமிகளுடைய செயல்கள் இதைத்தானே நிரூபிக்கின்றன. "வீரன் கேண்மை கூரம்பாகும்" என்பது கொன்றை வேந்தன் மொழிகள். வீரன் ஒருவனுடைய நட்பு மற்றவர்க்குப் பகையை வெல்லத்தக்கக்கூரிய அம்பு போன்று வாய்க்கின்றது என்பது இதன் பொருள். உறுதி தளராத இராமசாமியின் கூட்டுறவில் வீரமும் இருக்கின்றது; விரதமும் இருக்கின்றது. அதனுல் அல்லவா இராமசாமி அன்றும் செயல்வீரனுகவும் இளைஞர்களிடையே விளங்கி மக்களுக்கே பிணிதீர்த்தருளும் மருந்தாகவும் விளங்கினுர். அதனுல் அல்லவா சாமிகள் இன்றும் அஞ்சா நெஞ்சத்தோடு பக்தர்களுக்கு எத்தகைய இடுக்கண்வரினும் அவைகளைக் களைந்து எறிய அன்புத்தொண்டு புரிந்து வருகின்றுர். அஞ்சி நடுங்க வல்ல தீமைமளை விளைவிக்கும் பில்லி, சூன்யம், செய்வினைக் கோளாறுகளை இருந்தஇடம் தெரியாமல் விரட்டுகின்றுர். ஆபத்சகாயனுக, அனந்த இரட்சகனுக மக்களுக்கு இன்னருள் சுரந்தே மனத்தையும் உடலையும் வாட்டுகின்ற பல பிணிகளைப் போக்கவும் உதவுகின்றுர்.

## 13. வாய்ப்பந்தல் மாப்பிள்ளை கேலிக்கூத்து.

"சின்னக் குழந்தைகள்போல் விளையாடிச்
சிரித்துக்களித் திடுவான்—நல்ல
வன்ன மகளிர் வசப்படவே பல
மாயங்கள் சூழ்ந்திடுவான்—" —பாரதியார்.

ஆயர்பாடிக் கண்ணனைத் தீராத விளையாட்டுப்பிள்ளை என்றுபடித்திருக்கின்றோம். அவனால் தீராத தொல்லை. ஆனால் அந்தத் தொல்லையாலேதான் மாறாத இன்பம் உண்டென்றும் கேள்விப்பட்டிருக்கின்றோம். அவன் கேலிக் கூத்துக்களைச் சொன்னாலும் இன்பம், கேட்டாலும் இன்பம். இராமசாமிப் பிள்ளையின் இளமை வாழ்க்கையைப் பார்க்கும்போது இராமசாமியும் ஒரு தீராத விளையாட்டுப் பிள்ளையாகவே இருந்து மகிழ்ந்து மற்றவர்களையும் மகிழவைத்தது தெரியவருகின்றது. இராமசாமிப்பிள்ளை அன்று மட்டும்தானா தானிருக்குமிடத்தில் கலகலப்பையும் களிப்பையும் கூட்டுவித்தார்; இன்றும் சாமிகள் இருக்கும் இடத்தில் தெய்வீகக் களை கட்டிவிடும்; சிரிப்பும் நகைச்சுவையும் தாண்டவமாடத் தொடங்கிவிடும்.

பன்றிமலை சாமிகளின் வாழ்க்கையில் நகைச்சுவை ததும்பக்கூடிய சம்பவங்கள் நிறைய உண்டு. நகைச்சுவை ததும்பக்கூடிய சூழ்நிலைகளைச் சாமிகளே ஏற்படுத்தி விடுவார். சாமிகளுக்கு உற்சாகம் மிகுகின்ற வேளைகளில் தன் வாழ்வில் இளமையில் நடந்த இத்தகைய நிகழ்ச்சிகளைச் சொல்லித் தானும் மகிழ்ந்து கேட்பவர்களையும் வயிறு குலுங்கச் சிரிக்க வைத்துவிடுவார். சாமிகளும் அவர் தம்பியும் ஓர் உறவினர் வீட்டுக் கல்யாணத்திற்கு முதல்நாளே சென்றனர். அவர் தம்பி மனைவியும்கூட வந்திருந்தனர். கல்யாண வீட்டில் ஒரு முறை மாப்பிள்ளை கிடைத்துவிட்டால், இராமசாமிப் பிள்ளை (நமது சாமிகள்) அவரைச் சும்மா விட்டுவிடுவாரா. அதுவும் அந்த உறவு மாப்பிள்ளை அவருடைய ஆசை மனைவியைச் சுற்றிச்சுற்றி வரும் இயல்பினர்; மனைவி கிழித்த கோட்டைத் தாண்டமுடியாத குணவான். சொல்லால் குடைபிடித்துச் சுந்தரியைச் சுற்றும் சுபாவமுள்ள செல்வ மாப்பிள்ளையைக் கண்டவுடன் கற்பனை வளம் மிகுந்த இராமசாமிப் பிள்ளைக்கு இந்த வேடிக்கை மாப்பிள்ளையிடம் வேடிக்கை செய்ய

வேண்டும் என்ற எண்ணம் உதித்துவிட்டது. கல்யாணத்திற்கு முதல்நாள் இரவில் இராமசாமிப் பிள்ளையும் அவர் தம்பியும் வீட்டுக்கு முன் போட்டிருந்த பந்தலில் படுத்துக்கொண்டார்கள். இந்த விசித்திர தம்பதிகள் மட்டும் வெகுநேரம் வரை திண்ணையில் உட்கார்ந்தபடி அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர். கடைசியில் ஆசைக் கணவனைத் திண்ணையில் படுக்க வைத்துவிட்டு ஆசை மனைவி உள்ளே போய் உறங்கிவிட்டாள். மறுநாள் காலை நான்கு மணிக்கு முறை மாப்பிள்ளை எழுந்து வெளியே சென்றார். அதற்கு முன்னேயே விழித்துக் கொண்டிருந்த இராமசாமிப் பிள்ளை இந்தத்தருணத்தை நழுவவிட்டால் மறுசமயம் வாய்ப்பதரிது என்பதை உணர்ந்தார். அவரது சுறுசுறுப்பான கற்பனை வளம் மிகுந்த மூளை ஒரு திட்டத்தையே தயார் செய்துவிட்டது. உடனே தன் தம்பியை எழுப்பினார். முறைமாப்பிள்ளை படுத்திருந்த இடத்தில் அவரைப் படுக்கச் சொன்னார். தம்பியும் அண்ணன் சொல்படி முகத்தைப் போர்வையால் இழுத்து மூடிக்கொண்டு திண்ணையில் அயர்ந்து விட்டார்; இதற்குள் வெளியே சென்றிருந்த முறை மாப்பிள்ளை திரும்பிவந்தார்.

தான் படுத்திருந்த திண்ணையில் வேறொருவர் படுத்திருப்பதைக் கண்டு மலைத்தார். மலைத்த மாப்பிள்ளையை இராமசாமிப் பிள்ளை கூப்பிட்டுத் தன்னோடு படுத்துக்கொள்ளச் செய்தார். காலை ஐந்து மணிக்குக் கல்யாண வீட்டிலுள்ளவர்கள் எழுந்து கல்யாணத்திற்குத் தயாராகிக்கொள்ள ஆரம்பித்தனர். தன் கணவனை அழைக்க உள்ளே இருந்து வேகமாக வந்தாள் ஆசை மனைவி. திண்ணையில் உடம்பையும் முகத்தையும் போர்வையால் இழுத்து மூடிக்கொண்டு உறங்கும் ஆசாமியைக் கண்டு, இன்னும் தன் கணவர் உறங்கிக் கொண்டிருக்கின்றாரென்றெண்ணி அவசரத்தோடு திண்ணையில் நெருங்கினாள். அடுத்த நிமிடம், "என்ன இப்படி இன்னும் உறங்கு கிறீர்கள். எழுந்திருங்கள். எழுந்திருங்கள்" என்று சொல்லித் திண்ணையில் உறங்கிக்கொண்டிருந்தவரைத் தட்டி எழுப்பலாயினள். உறங்குவதுபோல் பாசாங்கு செய்துகொண்டிருந்த ஆசாமி திடுமென எழுந்தார். தன் முகத்தை மூடிக்கொண்டிருந்த போர்வையை மெது வாக எடுத்துத் தட்டிஎழுப்பிய நங்கையைக் கண்டார். தான் தட்டி எழுப்பியவர் தன்னுடைய கணவரல்ல என்பதை உணர்ந்துகொண்ட பேதைப் பெண்ணின் மனம் படபடத்தது. வெட்கத்தால் தலை குனிந்தாள். வெடுக்கென தன் முகத்தைத் திருப்பி நறுக்கென உடனே வீட்டுக்குள் விரைந்து மறைந்தாள். இவ்வளவு கூத்துக்களையும் பந்தல் மூலையிலிருந்து இருவர் பார்த்துக்கொண்டே இருந்தனர்; ஒருவர் பார்த்து ரசித்துக்கொண்டே இருந்தார்; மற்றொருவர் பார்த்துத் திடுக்கிட்டு அசந்துவிட்டார். ரசித்தவர் இராமசாமிப்

பிள்ளை அவர்கள் ; திடுக்கிட்டவர் பேதைப் பெண்ணின் கணவன். அடுத்த நிமிடம் முறைமாப்பிள்ளை தன் மனைவியைப் பார்ப்பதற்கு அவசரம் அவசரமாக வீட்டுக்குள் நுழைந்தார். உள்ளே மனைவியைத் தொடர்ந்தவரின் குரலும் மனைவியின் குரலும் பேச ஆரம்பித்துக் கொஞ்சம் கொஞ்சமாகச் சூடுபிடித்து உச்சஸ்தாயிக்குச் சென்று விட்டன. அவர்களைச் சமாதானப்படுத்த இராமசாமிப் பிள்ளை அவர்களே உள்ளே நுழையும்படி ஆகிவிட்டது. இந்தக் கேலிக் கூத்து இதோடு நின்றுவிடவில்லை. ஒரு புற்றைக் கிண்டிவிட ஒரு பாம்பு மட்டும் வரவில்லை ; மற்றொன்றும் சீறி வெளிவந்த கதையாகி விட்டது. பிள்ளை அவர்களின் தம்பிக்கும் அவர் மனைவிக்கும் ஒரு வம்பே வளர்ந்து விட்டது. அவர்கள் குரல்களும் ஓங்கி ஒலிப்பதைக் கேட்டு இராமசாமிப் பிள்ளை அவர்களை நோக்கி விரைந்தனர்.

தம்பி மனைவி : "மானக்கேடு. மானக்கேடு. கல்யாண வீட்டிலா இந்த மானக்கேடு.

தம்பி : (இராமசாமி பிள்ளையின் தம்பி இராமசாமியைப் பார்த்து) அவள் (முறை மாப்பிள்ளை மனைவி) அவனைப் (முறை மாப்பிள்ளை) பிடிச்சு உலுக்கு கிறாள். இவள் (தன் மனைவி) இப்போது என்னைப் பிடிச்சு உலுக்குகிறாள்.

இராமசாமிப் பிள்ளை : நான் தானம்மா இவ்வளவுக்கும் காரணம், அவர்கள் ஒரு பாவமும் அறியாதவர்கள். தமாஷுக்காக அல்லவா இப்படி கேலிக் கூத்தடித்தோம்.

இதைக் கேட்டவுடன் இரண்டு தம்பதிகள் முகங்களில் இருந்த சோர்வு நீங்கி மகிழ்ச்சி அரும்பியது. ஒரு குற்றமும் அறியாத இரண்டு தம்பதிகளும் குற்றம் புரிந்ததாக நினைத்துக் கொண்டு ஆடி ஓடி ஓய்ந்ததைக் கண்ட இராமசாமிப் பிள்ளைக்கும் அங்கிருந்த வருக்கும் தாங்கொணாத சிரிப்பு. இவ்வளவு நடந்தும் அப்போது வாய்ப்பந்தல் போட்டுத் தன் மனைவியைச் சுற்றி சுற்றி வட்ட மிட்டுக் கொண்டிருந்த மாப்பிள்ளையை அந்த நிலையில் மறுபடி யும் கண்டுவிட்ட இராமசாமிப் பிள்ளை அவர்கள் வாய்விட்டே கொல்லென்று சிரித்து விட்டார். கல்யாண வீட்டின் மங்களகரமான பேச்சுக்களிலும் நாதஸ்வர இசையிலும் இவர்களின் கல கலத்த சிரிப்பும் கலந்து விட்டது.

"நீ இருக்கும் இடம் கலகல வென்றல்லவா இருக்கும். இங்கே கூத்துக் கும்மாளம் உன்னாலல்லவா." என்று முறை மாப்பிள்ளை மறுபடியும் வாய்ப்பந்தல் போட ஆரம்பித்தார். உண்மையில்

கூத்துக்கும் கும்மாளத்திற்கும் இராமசாமிப்பிள்ளை தான் காரணம்; இராமசாமிப் பிள்ளை இருக்கும் இடம் கலகலப்பாகவே இருக்கும், இராமசாமிப்பிள்ளையிடம் இருப்பவர்கள் அவர் நகைச்சுவை பேச்சாலும் போக்காலும் சிரித்துக் கொண்டே இருப்பர். இந்த கேலிக் கூத்தைப் பார்க்கும் போது சுப்பிரமணிய பாரதியார் கண்ணனை-தோழனாக பாவித்து வருணிக்கும் மொழிகள் எவ்வளவு கச்சிதமாக சாமிகளுடைய செயலுக்கும் பொருந்தி உள்ளது என்பது நன்றாக விளங்கும்.

"சின்னக் குழந்தைகள் போல் விளையாடிச்
சிரித்துக் களித்திடுவன் — நல்ல
வன்னமகளிர் வசப்படவே பல
மாயங்கள் சூழ்ந்திடுவன்"

நல்ல வன்ன மகளிர் தம் வசப்படவே பல மாயங்கள் புரிந்திடுவான் அந்த கோகுலகான மாயக் கண்ணன். நல்ல வன்ன மகளிர் மகிழ்ந்திடவல்லவா இராமசாமி நாடகக்சுவை ஓங்கும் சூழ்நிலைகளை உருவாக்குகின்றார்!

## 14. இராமசாமி மனம் குலைந்துவிட்டால்

“ ....................................அவன்
சொன்னபடி நடவாவிடிலோ மிகத்
தொல்லையிழைத்திடுவான்.”

“ உள்ளத்திலே கருவம் கொண்ட போதினில்
ஓங்கியடித்திடுவான் — நெஞ்சில்
கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தை சொன்னாலங்கு
காறி உமிழ்ந்திடுவான் ”

பாரதியார்.

கண்ணனைத் தன் தோழனாகப் பாவித்துக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் அவன் குணங்களை அலசிஅலசிப் பாடுகின்றார். கண்ணன் நல்லவர்களுக்கு நல்லவன்; கொடியவர்களுக்குக் கொடியவன், கர்வத்தை அடக்குவதில் நிபுணன். ‘அவன் சொன்னபடி நடவாவிடிலோ மிகத்தொல்லை யிழைத்திடுவான்’ ‘உள்ளத்திலே கருவம் கொண்ட போதினில் ஓங்கியடித்திடுவான் — நெஞ்சில் கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தை சொன்னாலங்கு காறி உமிழ்ந்திடுவான்’ என்றெல்லாம் கண்ணன் சிறப்பினைப்பாடி மகிழ்கின்றார். இராமசாமிப்பிள்ளையின் வாழ்க்கையிலும் கர்விகளை அடக்கும் நிகழ்ச்சிகளும் உண்டு. ஆனால் கண்ணனைப்போல் காறிஉமிழ்ந்ததில்லை, ஓங்கியடித்ததில்லை. இராமசாமிப்பிள்ளை திட்டம்போட்டு வேலை செய்து கர்விகளுக்குச் சரியான பாடம் கற்பிப்பார். அவைகளில் இரண்டை எடுத்துக் கொள்வோம்.

### மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசை

பன்றிமலைக்கு ஒரு வைத்தியர் வந்திருந்தார். அவர் உறவினருங்கூட. தன்வீட்டிற்கு வந்திருந்த விருந்தாளிக்கு அடக்க ஒடுக்கமாக இருந்த இராமசாமி வேண்டிய பணிகளை அன்போடு செய்து வந்தார். ஆனால், எவ்வளவு செய்தாலும் திருப்தி என்பதே அந்த ஆளுக்குக் கிடையாது. அவரை அருவருப்பைக் கிளப்பக்கூடிய ‘தொணதொணத்தான்’ என்று கூறினால் மிகையாகாது. எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானமென்பர்; இவருடைய முகத்திற்கு

மீசையும் தாடியும்தான் பிரதானமாக விளங்கின. ஓங்கி வளர்ந் திருந்த இந்த மீசைக்காரர் இராமசாமியைப் பம்பரமாய் ஆட்டி வைத்தார். தன்னை விட்டால் போதுமென்று ஆகிவிட்டது இராம சாமிக்கு; இருந்தாலும் கிருதாமீசைக்காரரைச் சும்மாவிட்டுவிட மனம் இடந்தரவில்லை. வந்திருப்பவரோ விருந்தாளி. கோபத் தையோ, அருவருப்பையோ, மனக்கசப்பையோ வந்திருக்கும் விருந் தாளியிடம் காட்டிக்கொள்ளக் கூடாது. இந்த விருந்தாளியை நினைக்கும்போதெல்லாம் அவரின் அடர்த்தியான எடுப்புமீசை இராமசாமியின் கண்களுக்குமுன் வந்துநிற்கும். அந்த மீசையைக் கொண்டே, வந்திருப்பவருக்குப் புத்திபுகட்ட வேண்டும் என்று ஒரு திட்டமிட்டார் இராமசாமி. சரியான சந்தர்ப்பமும் கிட்டியது. வந்திருந்தவர் காய்ந்தமாடு கம்பிலே புகுந்தாற்போல் எதைக் கொடுத்தாலும் வாரிவிழுங்கும் இயல்பு வாய்ந்தவர். அப்படிப் பட்டவருக்கு மலைப் பலாக்கனி கிடைத்தால் ஒருகை பார்த்துவிட மாட்டாரா? இராமசாமி அவருக்கு ஒருதட்டு நிறையப் பலாப்பழங் கள் கொண்டுவந்து கொடுத்தார். 'மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசை' என்ற பழமொழியைக் கேட்டிருக்கின்றோம். இவருக்கு மலைப் பலாப்பழத்தின்மீது அளவுகடந்த ஆசை ஏற்பட்டு விட்டது. பையன் கொண்டுவந்த பலாப்பழங்களெல்லாம் பக்குவமாக இருந் தன; அதாவது, அவருடைய கிருதாமீசையையும் தாடியையும் உடும்புப்பிடியோடு பிடித்துக்கொள்ளும் பக்குவத்திலும் அசைக்க முடியாத பிசின்போன்ற பாலைச்சேர்த்துக் கொண்டிருந்த பிசின் பக்குவத்திலும் இருந்தன. கைஊட்ட, வாய்விழுங்க, மனம் பலாப் பழருசியில் லயித்திருக்க மீசையும் தாடியும் பலாப்பாலை ஏற்று இறுகின. அடர்த்தியான மீசைமயிர்களிலும் தாடியிலும் பலாப்பால் பட்டுப் பிசின்மாதிரி ஒட்டிக்கொண்டது. அவர் அந்தப் பலாப்பாலை மீசையிலிருந்து பிரித்தெடுக்கப் பட்டபாடு பார்ப்பதற்கு வேடிக்கை யூட்டவல்ல காட்சியாக விளங்கியது. அவசரத்தில் பாலைத்துடைத்து எடுத்துவிடலாமென்று காய்ந்திருந்த சாமைப்புல் கொண்டுவந்து மீசையைத் துடைத்தார். பிசின்போன்ற பால் சாமைப்புல்லையும் சேர்த்து மீசையுள் இறுக்கிப் பிணைத்தது. என்ன செய்வார் வைத் தியர். புல்லையும் பாலையும் பிரித்தெடுக்க வைத்தியருக்கே இப் போது ஒரு வைத்தியர் வேண்டியிருந்தது! வேறுவழியின்றி இராமசாமியிடமே அவர் தஞ்சம்புகுந்தார். இராமசாமிக்குச் சிரிப்பு தாங்கமுடியவில்லை. இருந்தாலும் பொங்கிவரும் சிரிப்பை ஒருவாறு சமாளித்துக்கொண்டார். கோமாளிக் கூத்தாடும் விருந்தாளிக்கு உதவ முன்வந்தார் இளைஞர். 'இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும்' என்று இளைஞன் மனம் தீர்மானம் செய்தது. கொட்ட முத்து எண்ணெயைக் கொண்டுவந்து இறுகிக் காய்ந்துபோன பாலும் புல்லும் உள்ள மீசையில் தடவினார். கருத்தமீசையோடு

வெளுத்த திரியாக இரண்டறக் கலந்திருந்த பால்திரிகளையும் மலைப்புல்லையும் வெடுக்வெடுக்கென்று பிடுங்க ஆரம்பித்தார். அழுகையும் ஆத்திரமும் மிஞ்சுகின்ற கிருதாமீசைக்காரர் விழி பிதுங்குகின்றது. வலி தாங்கமுடியவில்லை. கடைசியில் மீசைக்கும் தனக்கும் நிம்மதி ஏற்பட்டபோது மனத்திலுள்ளதை வெளியே சொல்லி ஓய்வு எடுத்துக்கொண்டார். "வம்பை விலைக்கு வாங்கிக்கொண்டது போலல்லவா நான் பலாப்பழம் சாப்பிட்டது ஆகிவிட்டது" என்று சொல்லிப் பெருமூச்சுவிட்டார். பெருந்தொல்லைகளை சிறுவனுக்குக் கொடுத்துவந்த வைத்தியர் தானே தனக்குத் தொல்லையைத் தேடிக்கொண்டு படாத பாடுபட்டுத் தத்தளித்த விவரங்களைச் சாமிகள் எளியசொற்களில் விவரித்துச் சொல்லும்போது அந்த வைத்தியரையே நேரே இழுத்துவந்து நிறுத்தி அன்று வைத்தியர் ஆடிய கோமாளிக்கூத்தை இன்றும் நமக்குமுன் ஆடிக்காண்பிக்க வைப்பதுபோல் இருக்கும்.

## மலையான் சொக்கான் ஒன்றுக்கும் மலையான்

இராமசாமியின் தாயாருக்குத் தனயன்மேல் அளவுகடந்த பிரியம். உளங்கனிந்து இராமசாமியைச் 'சின்னு' என்றழைப்பர். 'சின்னு சின்னு' என்று கொஞ்சிக்குழையும் தாயின் குரலைக்கேட்டுப் பழகிய சிறுவனை மற்றவர்களும் இராமசாமியென்று உளம்உவந்து கூப்பிடுவர். யாருக்கும் இராமசாமியிடத்தில் ஒரு தனி மதிப்பு இருந்தது. அதோடு அப்பையனுடைய பேரன்பிற்குப் பாத்திரமாகவேண்டும் என்ற பேரவாவும் இருந்தது. உற்றார் உறவினர் உள்ளன்பைக் கவர்ந்து நின்ற இளைஞன் தன்வீட்டாருக்குத் தெவிட்டாத தேன், தன்ஊராருக்கு ஓர் வற்றாதசுனை, யாவருக்கும் வளம் சுரக்கும் ஓர் அருள்நதி. இத்தகைய பண்பாளனை ஒரு பொருத்தமில்லாத பெயர்வைத்து எள்ளி நகையாடுவதற்கென்றே ஓர் உறவினர் வந்து வாய்த்தனர். அந்த உறவினர் இங்கிதமாகப் பழகத் தெரியாதவர், வீண் கர்வியும்கூட. அருமைத் தாயின் சின்னுவை, அன்பர்களுடைய இராமசாமியை 'மலையான் சொக்கான்' என்று ஒருதரமல்ல பலமுறை விளித்துக் கூப்பிட்டார். அவர் அழைப்பதில் கேலியும் வம்பும் கலந்து தொனித்தன. தான் மலையானா, சொக்கானா? என்ன அக்கிரமம்? இப்படி அவர் தன்னைத்தொடர்ந்து கூப்பிடும்படி அவருக்கு யார் இவ்வளவு தைரியத்தைக்கொடுத்தது. அவனுடைய அகம்பாவம்தான் இதற்குக் காரணம். பையனுக்கு இந்தப் புதுப்பெயர் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை என்பதைத் தெரிந்தும் பண்பில்லாத அடிவாரத்தான் பன்றிமலையில் வாழ்ந்து வந்த இராமசாமியை மலையான் மலையான் என்று கூப்பிட்டு மலைக்கடித்துவிட்டான். 'இராமசாமியையும் விட

மாட்டேன். அவருக்குச்சூட்டிய மலையான் நாமகரணத்தையும் விட மாட்டேன்' என்ற உடும்புப்பிடி மனத்தினனின் தொல்லை வரம்புக்கு மீறிச்செல்ல ஆரம்பித்தது. இராமசாமி பொறுத்துப் பொறுத்துப் பார்த்தார். பொறுமைக்கு ஓர் எல்லை உண்டல்லவா? அந்த வீண் வம்பனுக்கு ஒரு சரியான பாடம், யாருக்கும் நடக்காதவகையில், வீண்வம்பன் என்றும் நினைத்துக் கொண்டிருக்கும் வகையில் கற்பிக்கவேண்டுமென்று முடிவுசெய்தார். வந்தவர் முகசவரம் செய்து கொள்ள ஒரு நாவிதனை அழைத்துவரச் சொன்னார். இராமசாமி குதித்துக்கொண்டு நாவிதனை அழைத்துவர ஓடினார். அவருக்கு கற்பிக்கும் பாடத்தை நாவிதனைக் கொண்டே நிறைவேற்ற வேண்டும் என்று துள்ளிக்குதித்தோடினார்.

பன்றிமலை ஊரில் சில நாட்கள் மூளைக்கோளாறினால் பீடிக்கப் பட்டு அப்போதுதான் குணமடைந்திருந்த கிருஷ்ணன் என்ற நாவிதனை அடைந்தார். கிருஷ்ணனைத் தனியே அழைத்துக் காதில் ஏதோ குசுகுசுவென்று பேசினார். கிருஷ்ணன் தயங்கினான், தத்தளித்தான், தடுமாறினான். அவனுக்குத் தைரியமூட்ட மீண்டும் இராமசாமி அவன் காதோடு காதாய்ச் சில வார்த்தைகள் கூறினார். மேலும் சொல்லவேண்டிய அவசியமில்லை. தைரியத்தையே தூக்கிக் கொண்டு வருபவன்போல் கிருஷ்ணன் கக்கத்தில் அடப்பப்பெட்டியைக் தூக்கிக்கொண்டு முந்திவிட்டான். வீட்டில் நாவிதன் வரவுக்காக வழிமேல் விழிவைத்துக்கொண்டு விருந்தாளி காத்துக் கொண்டிருந்தார். வேலை ஆரம்பமானது. விருந்தாளி ஒரு கன்னத்தைக் காண்பித்தார். அதிலுள்ள முளைகண்ட மயிர்களையெல்லாம் கிருஷ்ணன் வெகு விரைவில் வழித்துவிட்டான். மறுகன்னத்தைக் காண்பித்தார். அதே விரைவில் அந்தக் கன்னத்து வேலையும் முடிந்தது. திடீரென்று கிருஷ்ணன் கத்தியைத் தன் கையில் தீட்டி, 'வெட்டு ஒன்று துண்டு இரண்டு' என்ற முறையில் ஒரே நொடியில் அவருடைய சிங்கார மீசையில் ஒரு சரிபாதியை நறுக்கென்று வழித்து விட்டான். ஒரே வழிப்பில் இருபாதியாய்ச் சரிபாதியாய்ச் சிங்காரப் பொலிவினைக் காட்டிய மீசையில் ஒரு பாதி மாயமாய் மறைந்து விட்டது. 'அடபாவி, மீசையை வெட்டிவிட்டாயே' என்று குமுறி எழப்பார்த்தார் விருந்தாளி. இராமசாமி தன்னெதிரில் நின்று கொண்டு தன்னைப் பேசாமலிருக்கும்படி பயத்தோடு எச்சரிக்கை செய்வதைக்கண்டும், நாவிதன் பைத்தியம் பிடித்தவன்போல் காட்சியளிப்பதையும் கண்டு மறுபேச்சின்றி விருந்தாளி அடங்கி அமர்ந்து விட்டார். மறுவிநாடியில் மின்னல் வேகத்தில் நாவிதன் கையும் கத்தியும் வேலை செய்ய ஆரம்பித்தன. வலதுபுறத்தில் மற்றொரு இழுப்பு! இடது பக்கத்து மீசையை ஏற்கெனவே விழுங்கிவிட்ட கத்தி இப்போது வலதுபுறத்துப் புருவத்தையும் விழுங்கிவிட்டது. இந்த

வேலை முடிந்த மறுகணமே நாவிதன் ஒரு துள்ளு துள்ளி ஒரு பைத்தியக்கார எக்களிப்புச் சிரிப்பைக்கொட்டிவிட்டு அந்த இடத்தை விட்டுச் சிட்டாகப் பறந்தே போய்விட்டான். திடீர் அதிர்ச்சியும் பரபரப்பும் கொண்ட விருந்தாளி உடனே ஆத்திரத்தோடு எழுந்தார். தன்னுடைய முகத்தின் அலங்கோலத்தை உணர்ந்தவர் அடுத்த விநாடியில் கீழே அமர்ந்தார். முகத்தை முக்காட்டில் மூடிக்கொண்டார். சின்னுவின் தாயாரைக் அழைத்துக் குமுறினர்.

**விருந்தாளி :** " பார்த்தாயா அம்மா உன் மகன் சின்னு செய்த வேலையை "

**சின்னு :** என்னங்க ! நானு அந்த வேலையைச் செய்தேன் ? நாவிதன் செய்த வேலைக்கு நானென்ன செய்வது? நான் ஒன்றுக்கும் மலையேன். ஞாபகமிருக்கட்டும்.

மூடிய முகத்தைப் பார்க்கமுடியாது, என்ன நடந்தது என்பதை அறிய முடியாது தவித்து நின்ருர் தாயார்.

**தாயார் :** என்னப்பா நடந்தது. சொல்லுங்கள்.

**விருந்தாளி :** இந்த அநியாயத்தைக் கேளுங்கள். அந்தப்பாவி நாவிதன் என் மீசையில் ஒரு பக்கத்தையும் என்புருவத்தில் ஒரு பக்கத்தையும் ஓட்ட செறச்சிட்டுப் போய்விட்டான். என் மானம் போவுது. என்ன செய்வது. உன் மகனை நம்பி மோசம் போய் விட்டேன். சின்னு இப்படி நடக்குமென்று நான் கனவிலும் நினைக்கவேயில்லை.

**சின்னு :** நான் என்னம்மா செய்வது. கிருஷ்ணனைத்தான் உங்களுக்குத் தெரியுமே. அவனுக்குச் சில நாட்களுக்குமுன் பைத்தியம் பிடித்திருந்ததும் உங்களுக்குத் தெரியுமே. இவருக்குச் சவரம் செய்துகொண்டிருக்கும்போது திடீரென்று பைத்தியம் பிடித்துக்கொண்டு இப்படி அவன் செய்தால் நான் என்ன செய்ய முடியும். நானும் இவரை முகச்சவரம் ஆரம்பிப்பதற்கு முன்னே ஜாக்கிரதையாக இருக்கச்சொன்னேன்.

**விருந்தாளி :** சின்னு ! நீ ஜாக்கிரதையாக இருக்கச் சொன்னல் அவனுக்குப் பைத்தியம் பிடித்திருந்தது என்று எனக்கு எப்படித் தெரியும்? என் மீசையில் பாதியும் புருவத்தில் பாதியும் செறைப்பான் என்று எனக்கு எப்படித் தெரியும் ?

**சின்னு ;** எனக்கும் எப்படித் தெரியும் ?

விருந்தாளி : இருந்திருந்தும் ஒரு பைத்தியக்கார நாவிதனையா கூட்டிவருவது? வேண்டுமென்றே கூட்டி வந்தாயா சின்னு.

சின்னு : போனால் போவுது என்று கூட்டிவந்தால் இதுவும் பேசுவீர். இன்னும் பேசுவீர். அங்கு ஒரு ஆளும் இல்லையம்மா. கிருஷ்ணனை விட்டால் வேறு ஆள் கிடைக்கவில்லை.

முகத்தில் உள்ள அலங்கோலத்தைச் சரிப்படுத்த வேறொரு நாவிதரை அழைத்துவரச் சின்னுவையே தாயார் அனுப்பிவைத்தாள். திரும்பிவந்த சின்னுவோடு அதே கிருஷ்ணன் திரும்பிவந்ததைக் கண்ட உறவினருக்கு வயிற்றில் எரிச்சலும் கலக்கமும் ஒருங்கே திரண்டு எழுந்தன. ஒருவன் கத்தி வைத்த இடத்தில் மற்றொருவன் கத்தி வைக்கமாட்டான் என்று சமாதானம் சொல்லிக் கிருஷ்ணனை மறுபடியும் அவன் பாதியில் விட்டவேலையைப் பூர்த்தி செய்ய அமர்த்தினர். மறுபாதி மீசையை கிருஷ்ணன் நீக்க முனைந்தபோது 'என்னடா மறுபடியும் மீசையில் கையை வைக்கின்றாய்' என்று நிலை தடுமாறி விருந்தினர் ஓலமிட்டார். 'பாதி மீசையைச் செறைத்து எடுக்காமல் வேறென்ன செய்யமுடியும்' என்று சொல்லி அவர் புத்தியை நிலைக்குக் கொண்டுவந்தனர். உறவினர் முகத்தில் ஒரு மயிரில்லாமல் வழித்துவிட்டான் கிருஷ்ணன். கன்னங்களும் மீசை யிருந்த இடமும் புருவம் இருந்த இடங்களும் வழவழப்பாகிவிட்டதை தடவிப்பார்த்துக் கொண்ட விருந்தாளி தம்முடைய ஊருக்குப் பறந்துபோய்விட்டார். தாயார் சின்னுவைக் கோபித்துக்கொண்டார்.

தாயார்: என்ன சின்னு, என்ன இருந்தாலும் உனக்கு இவ்வளவு கோபம் வரக்கூடாது.

சின்னு : நான் என்னம்மா செய்வது. எனக்குப் பிடிக்கவில்லை என்று தெரிந்துங்கூட அவர் விடாப்பிடியாய் என்னை அநாகரீகமாக, மலையான், சொக்கான் என்றும் அழைத்தது எனக்கு பொல்லாத கோபத்தைக் கிளப்பிவிட்டது.

ஆம் கோபம், அதுவும் பொல்லாத கோபம். கிளம்பியது சூருவளி வேகத்தில் மீசை புருவம் எல்லாவற்றையுமே கிளப்பிக்கொண்டு சென்றுவிட்டது! இராமசாமியை ஒன்றுக்கும் மலையானாகவும் ஆக்கி விட்டது !!

## 15. இராமசாமியின் பாடம் கற்பிக்கும் விளையாட்டுக்கள்

"தீராத விளையாட்டுப் பிள்ளை-கண்ணன்
தெருவிலே பெண்களுக் கோயாத தொல்லை"

பாரதியார்.

கண்ணனைத் தீராத விளையாட்டுப்பிள்ளை என்று போற்றுகின்றோம். அவனுடைய லீலைகளைக் கேட்கக் கேட்க இன்பம். கோபியர்கள் அவன் நினைவில் மெய்மறந்திருப்பது கண்ணன் அவர்களை வம்புக்கழைத்து வட்டி சேர்த்து முதல் இன்பம் அருளுவதும் கேட்க கேட்க வேடிக்கை. கண்ணனைத் தூற்றுவது போலவே போற்றுகின்றார் பாரதியார். அவனால் தெருவில் பெண்களுக்கு ஓயாத தொல்லை என்றும் தூற்றுகின்றார். ஆனால் அவனைத் தீராத விளையாட்டுப் பிள்ளை யென்றும் போற்றுகின்றார். அவன் குறும்புக்கு ஓர் உதாரணம். ஓர் ஆப்பிள்பழம் கொண்டு வந்து தருவான். அவள் அதை ருசியோடு சுவைக்கும் போது அதைத்தட்டிப் பறிப்பன். அதன்ருசியை அனுபவித்தவள் அதை விடுவாளா. 'அப்பா அய்யா' என்று அந்தப் பழத்திற்குக் கெஞ்சினால் அந்தப்பழத்தைத் தன் வாயால் கடித்து எச்சிற் படுத்திக் கொடுப்பான். என்ன குறும்பு இந்தக் குழந்தை கண்ணனுக்கு!

"தின்னப் பழங் கொண்டு தருவான்–பாதி
தின்கின்ற போதிலே தட்டிப்பறிப்பான்;
என்னப்பன் என்னையன் என்றால்–அதனை
எச்சிற் படுத்திக் கடித்துக் கொடுப்பான்"

இராமசாமியும் தன் இளவயதில் துடுக்குப் பெண்களைச் சும்மா விட்டதில்லை. ஆனால் அவர் பெண்களை வீண் வம்புக் கிழுக்க மாட்டார். பெண்களிடம் தானாக முறை தவறி நடந்ததும் கிடையாது. யாராவது தப்பு செய்து விட்டால் அதற்குத்தகுந்த பாடம் கற்பிப்பதில் இராமசாமி தவறியதேயில்லை. தப்பு செய்தவர் பெண்ணாயிருந்தாலும் அவள் வெட்கித் தலைகுனியும் படி செயலாற்றிவிடுவர். அவர் குற்றத்தைத் தண்டிக்கும் முறையில் நவீனமும் இருக்கும், குறும்புத்தனமும் இருக்கும், விறுவிறுப்பும் இருக்கும், நகைச்சுவையும் இருக்கும்.

## கோபமும் தாபமும்

"பெண்கள் சிரித்தால் போச்சு
புகையிலை விரித்தால் போச்சு"

அவரவர்களுடைய நிலைகளுக்கு ஏற்றாற்போல் நடை, உடை, பாவனை அமைய வேண்டும் என்ற அடிப்படையில் வளர்க்கப்பட்டவர் இராமசாமி. இதற்குப்புறம்பாக வாய்த்துடுக்கோ நடத்தையோ இருந்தால், இவற்றிற்குக் காரணமாக இருப்பவர் யாராயிருந்தாலும் சும்மாவிடமாட்டார். இளைஞன் இராமசாமி ஒரு சமயம் பன்றிமலையில் தன் தோட்டத்திற்குச் சென்றிருந்தார். கொள்ளக்காள் எனும் ஒரு பணிப் பெண். இளம் பெண். அவள் இருந்த நிலை எல்லாம் துடுக்குமயமாக இருந்தன. அவளது பார்வையில் துடுக்கு, சொற்களிலும் துடுக்கு, செயலிலும் துடுக்கு. துடுக்காக நின்று கொண்டிருந்த அவளைக் கூப்பிட்டுக் கரும்புத் தோட்டத்திலிருந்து கரும்பு வெட்டி வரச் சொன்னார் இராமசாமி. இட்ட வேலையை ஒழுங்காகச் செய்வது பணிப் பெண்ணுக்கு அழகு. இதைத்தான் அவளிடமிருந்து எதிர்பார்த்தார் இராமசாமி. கொள்ளக்காள் உடனே விளையாட்டாக உரையாடல் செய்ய முற்பட்டாள். "சரித்தான் மாமா, உன்னைத்தெரியும்," என்று துடுக்காக வார்த்தைகளை வீசிவிட்டாள். அவள் ஒரு குறும்புக்காரி என்பது தான் இளைஞன் இராமசாமி மனத்தை முள்தைப்பது போல் குத்தியது. அவள் கபடமற்ற குறும்புக்காரி என்பதை இராமசாமி அறிய அவள் துடுக்குச் சொற்கள் உதவவில்லை. மாமா! சரிதான் மாமா!! உன்னைத் தெரியும்!!! தன்னையா கொள்ளக்காள்—இந்தப் பேதைப் பெண் கிண்டல் செய்கின்றாள். அவன் தன்னை மாமன் முறை வைத்து அழைத்ததும் பதில் உரைத்த விதமும் அவருடைய தூய்மையான மனத்துக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை, 'அடி கொள்ளக்கா நீ என்ன துணிந்து சொன்னாய்' என்று வெகுண்டார். அடுத்த நிமிடம் அந்தப் பெண் வெட்கித் தலை குனிந்ததோடல்ல, சிறிது நேரத்திற்குள் படாதபாடு பட்டு விட்டாள்; காரணம் புடவையில் ஏதோ நெளிவது போன்றிருந்தது. "ஐயோ பாம்பு" என்று அலறித்துடித்து விட்டாள் கொள்ளக்காள். அந்த கிராமத்தின் பட்டிகளில் யாரும் முறைவைத்துக் கூப்பிடுவது வழக்கமென்பதைப் பின்னால் அறிந்துகொண்ட இளைஞன் இராமசாமிக்குப் பணிப்பெண் தன்னை 'மாமா' என்று முறைவைத்து உறவு கொண்டாடியதில் குற்றமொன்றுமில்லை என்பது விளங்கியது. தான் இட்ட வேலையை அவள் ஒழுங்காகச் செய்து முடித்தபோது அவளுக்கு ஒரு கட்டுக் கரும்பையும் கொடுத்து உவகையூட்டினார்.

இளைஞன் இராமசாமிக்கு இவ்வளவு தூரம் கோபம் உண்டா வதற்குக் காரணம் இராமசாமி பெண்களைப்பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயம்தான். இப்பொழுதுகூடச் சாமிகள் பெண்களைப் பற்றிப் பேசும் போது தன் அபிப்பிராயத்தை வெகு வேடிக்கையாக எடுத்துரைப்பர்.

"பெண்கள் சிரித்தால் போச்சு
புகையிலை விரித்தால் போச்சு" என்று

சாமிகள் சொல்வார். உடனே, "பெண்கள் சிரித்தால் என்ன போய்விடும், புகையிலை விரித்தால் என்ன போய்விடும்" என்று நாம் கேட்பது இயற்கை. சாமிகள் இதற்கு விளக்கம் கொடுக்கும் மொழிகளைப் பொன்னெழுத்துக்களால் பொறித்து வைத்துக் கொள்ளலாம். "பெண்கள் சிரித்தாலும் புகையிலை விரித்தாலும் அவர்களிடம் இயற்கையாகவே அமைந்த குணம் மாறிவிடுகின்றது. பெண்களுக்கு நாணம் அச்சம் மடம் பயிர்ப்பு என்பவை இயற்கையாகவே அமைந்த குண நலன்கள். இவைகளைப் பாதுகாத்தலே அவர்களுக்குப் பெருமையைத்தரும். இதை ஒரு பெண் மறக்கக்கூடாது. வாய் விட்டுச் சிரித்தலோ, அடிக்கடி சிரித்தலோ, ஆரவாரத்தோடு சிரித்தலோ பெண்களின் பெருமைக்கு இழுக்கைத் தேடித்தரும். புன்னகை பூக்கும் இதழ் முத்துக்களைக் கொட்டி வீண் விரையம் செய்யாதிருத்தலே பெண்களுக்கு அழகு. அடிக்கடி சிரிக்கும் பெண் யாவர் மதிப்பையும் இழந்து விடுவாள். அது போன்றே புகையிலையை விரித்து விடாமல் மூடி இருப்பதால்தான் அதன் மணமும் காரமும் குன்றாதிருக்கின்றது. அதன் இலையை விரித்து வைத்தாலும், அடிக்கடி விரித்து விரித்து மடித்து வைத்தாலும் அதன் கார மணம் மறைந்து விடுகின்றது. அதனால்தான் பெண்கள் சிரித்தால் அவர்கள் மதிப்புப் போச்சு, புகையிலை விரித்தால் அதன் மதிப்புப் போச்சு, என்று சொல்கின்றோம்." என்று அழகாகப் பிட்டுப் பிட்டு வைப்பார்கள் சாமி.

இராமசாமி பன்றிமலையில் தம் சொந்தப் பண்ணையைக் கவனிக்கும் போது செய்த சில நற்பயனளிக்கும் 'குறும்புச் செயல்கள்' இராமசாமியையும் ஒரு 'தீராத விளையாட்டுப்பிள்ளை' என்றே அழைக்கச் சொல்லும். தம்முடைய காப்பித் தோட்டத்தில் இரு பணிப் பெண்கள் வேலை செய்து வந்தனர். ஒரு நாள் அவர்கள் இருவரும் யாருக்கும் தெரியாமல் பூமியில் விழுந்து கிடந்த காப்பிக்கொட்டைகளைக் களவாடினர். யாருக்கும் தெரியாமல் செய்த செயல் யாருக்கும் தெரியவில்லையென்றாலும் ஒருவருக்கு மட்டும் தெரிந்து விட்டது,

இராமசாமிக்கு! களவுக் குற்றம் செய்த இவ்விரு பணிப் பெண் களையும் கூட்டி இழுத்து வந்தது ஒரு சக்தி. காதோடு காதாக அவர்களை சேர்ந்தாற்போல் இழுத்து வந்த சக்தி ஒருத்தி இடது காதையும் மற்ருெருத்தி வலது காதையும் ஒரே வளையத்தில் பூட்டி விட்டது. காதோடுகாதாக ஒரே வளையத்தில் இணைக்கப்பட்ட இந்தச் சிறுமிகள் திருதிரு வென்ற திருட்டு விழிகளோடும், குனிந்து ஒடுங்கி தயங்கித் தயங்கி வரும் நடுக்கம் கண்ட உடல்களோடும், வியர்த்து வியர்த்து ஆட்டங்கண்ட கால்களோடும் இராமசாமியிடம் வந்து உண்மையை ஒப்புக்கொண்டு காதணி-வளையத்தினின்றும் மீட்சி கண்ட நிகழ்ச்சி ஆங்கிருந்தோரின் மனத்தை விட்டு மாருத காட்சி யாகப் பதிந்துவிட்டது. கேட்கும் நமக்கே இந்தக் காட்சி புதுமையை யும் வியப்பையும் விளைவிப்பதென்ருல் அதை நேரிலே கண்டவர் களுக்கா இந்த விளையாட்டுப் போன்றசெயலை மறந்துவிட முடியும். இதைக் கேள்வியுற்ற யாவரும் இராமசாமியிடம் விளைந்திருந்த எதை யும் அறியவல்ல இந்த அற்புத சக்தியைக்கண்டுபேராச்சரியமுற்றனர்; கள்ளமனப்பான்மையுள்ள ஒரு சிலருக்கு இது ஒரு பேரதிர்ச்சியை விளைவித்தது. அவர்களுக்கு ஒரு சூடான பாடமாகவும் அமைந்தது. கண்ணனைத்தான் 'தீராத விளையாட்டுப்பிள்ளை' யென்று கேள்விப் பட்டிருக்கின்ருேம். இராமசாமி களவை வெளிப்படுத்துவதிலும் கள்வர்களை நூதனமான முறையில் தண்டிப்பதிலும் 'தீராத விளை யாட்டுப் பிள்ளை' யாகவல்லவா விளங்கினுர்.

# 16. இளைஞர் இராமசாமி

## வேட்டைச் சிறுவன் இராமசாமி

> நல்லா றெனப்ப டுவது யாதெனின் யாதொன்றும்
> கொல்லாமை சூழு நெறி
> தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
> தின்னுயிர் நீக்கும் வினை.

பன்றிமலைக்குத் தெற்குத் திசையில் வான்நோக்கி உயர்ந்த மரங்கள் செறிந்த காடுவளம் நிறைந்த மலைச்சாரல்களில் காட்டுப்பன்றிகளும் கடமான்களும் புள்ளிமான்களும் நிறைய உண்டு. நீர்வளம் சுரக்கும் பகுதிகளில் கொக்குக் கூட்டங்கள் பறந்து வருவதுண்டு. மழைபொழியும் மேகங்கள் திரண்டுவராத சில சமயங்களில் நீலவானத்தின் காட்சியும் அதிலே வட்டமிட்டுத் திரியும் புருக்கூட்ட அழகும் காண்போர் கண்களுக்குப் பெருவிருந்தூட்டும். காடும் காட்டு விலங்குகளும் காட்டுப் புள்ளினங்களும் மிகுந்த இவ்வளமான மலைபூமியில் வேட்டைக்குப் பஞ்சமில்லை. இராமசாமி இளைஞனுக்கும் வேட்டையாடும் வேட்கையில் பஞ்சமில்லை. கூட்டம் கூட்டமாகக் கொக்கினம் பறந்து வரும்போது குறிதவறாது உட்கார்ந்திருந்த இடத்திலிருந்தே ஒன்றிரண்டு கொக்குகளைச்சுட்டு வீழ்த்துவதில்தான் ஒரு தனி இன்பம் உண்டல்லவா. செடிகள், புதர்கள் வளர்ந்த மலைச்சாரல்களில் மிருகங்களின் வருகைக்காக ஆவலுடன் பதுங்கி ஒதுங்கி இருப்பதிலும், கடமானும் காட்டுப்பன்றியும் அருகில் தென்பட்டவுடன் ஒளிந்திருக்கும் இடங்களிலிருந்து வெளியே வந்து அவசியமானால் அவைகள் பின் விலாப்புடைக்க ஓடிடுவதிலும், வைத்த கண்கள் வைத்த இடத்தை விட்டு நகராதிருக்கத் துப்பாக்கியினின்றும் பெய்த குண்டுகள் மிருகங்களைத்தைத்து வீழ்த்துவதிலும், வீழ்ந்த விலங்கினங்களை வெற்றிப் பெருமிதத்தோடு ஊருக்குக் கொண்டு வருவதிலும்தான் எத்தகைய சுவை இருக்கின்றது!

ஒருநாள் இளைஞன் இராமசாமியின் கவனம் புள்ளிமான் ஒன்றை அள்ளியெடுக்க ஆவல்கொண்டது. ஆசையோடு அதை விடாமல் தொடர்ந்தான் இளைஞன். கடைசியில் குண்டடிபட்ட இளங்கன்று

புள்ளிமான் ஓட்டம் ஓடுங்கி ஆட்டம் அடங்கிக் கீழே விழுந்தது. அடி பட்ட மானிடம் ஆசையோடு சென்றார் இராமசாமி. வென்று விட்டோம் என்று இறும்பூதெய்திய உள்ளம் கள்ளம் கபடமற்ற புள்ளிமானின் வாடிய முகத்தைக் கண்டவுடன் சோர்வடைந்தது. எழில் மிகுந்திருந்த புள்ளிமானின் வதங்கிய வதனத்தைக்கண்ட இராமசாமியின் கண்களில் கண்ணீர் அரும்பியது. புள்ளிமான் கண்களிலிருந்து வடிந்து நின்ற கண்ணீரும் இராமசாமி உள்ளத்தில் ஒரு பெரும் போராட்டத்தையே ஏற்படுத்தியது. தான் செய்தது நல்லதா கெட்டதா என்ற எண்ணங்கள் ஒன்றோடொன்று மோதிக் கொண்டன. அதுவரையில் எழில்மிகுந்த வனத்திலே துள்ளிக் குதித்துத் துளிர்த்தாடி நின்ற புள்ளிமானும், அது ஒரு நிமிடத்தில் குண்டடிபட்டு ஆடி ஓய்ந்த காட்சியும், அது அல்லல்பட்டுக் கண்ணீ ரும் கம்பலையுமாய்ச் சிதைந்து கிடக்கும் பரிதாப நிலையும் இராமசாமி யின் இளம் உள்ளத்தை உலுக்கிவிட்டது. அவன் மனத்தில் வேதனை எனும் பெரும்புயலே மூண்டுவிட்டது. அதுமூண்டு எரிந்த கனல் வெகு நேரம் தகதகவென்று அனல் பறக்கக் காய்ந்தது. அதைத் தொடர்ந்து மனத்தில் ஒரு அமைதி நிலவியது. அந்த உள்ள அமைதி யிலே ஓர் உறுதியும் உருவாகியது. 'இனிமேல் எந்தக் காரணத் தைக் கொண்டும் வேட்டையாடுவதில்லை, என்பதுதான் இராமசாமி யிடம் உருவாகிய அசைக்க முடியாத ஒரு திண்மையான மன உறுதி. 'என்னுடைய உயிர் போனாலும் சரி, மற்ற ஜீவராசிகளுடைய உயிரைப் பறிக்கின்ற வெந்தொழிலை மேற்கொள்ளேன்' என்ற இரும்பு மன உறுதி உருவாகி விட்டது.

> "தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
> தின்னுயிர் நீக்கும் வினை"

என்ற திருக்குறளுக்குப் பொருத்தமாக இராமசாமியின் மனவுறுதி அமைந்துள்ள இந்த நிகழ்ச்சிக்குப் பின் ஒரு மிருகமும் பறவையும் இராமசாமியின் துப்பாக்கிக்குக் குறியானதே கிடையாது.

உலகிலே பிறக்கும் மானிடன் உற்றார் உறவினரோடு பழகு கின்றான். ஊரோடு பழகுகின்றான். தன் சூழ்நிலைக்கேற்ற பழக்க வழக்கங்களுக்கும் அடிமையாகின்றான். அந்தப் பழக்க வழக்கங்களுள் சில அறநெறிக்குகந்தனவல்ல என்று அறியும் போது அந்த சில பழக்கவழக்கங்களை உதறித்தள்ளி விடுகின்றான். அப்படி உதறித் தள்ளுவதால் அவன் நல்லாரென உயர்ந்து விடுகின்றான். அப்படி நல்லவனாவதற்கும் ஒரு சூழ்நிலை அவசியமாகின்றது. இரக்கமே வடிவான சாமிகளா சிறுவயதில் மிருகங்களையும் பறவைகளையும் வேட்டையாடினார், அவைகளை வேட்டையாடவும் சாமிகளுக்கு மனம் வந்ததா என்று கேட்கலாம். சிறுவன் இராமசாமி வளர்ந்த

மலை பன்றிமலை. காடு செறிந்த மலைப்பகுதிகளில் வேட்டையாடுவது அங்குள்ளவர்களுக்குப் பொழுதுபோக்கு மட்டுமன்று, இரை தேடுவதற்கும் ஒரு வாய்ப்பு. தன்னூர் பழக்கமே இராமசாமிக்கு வேட்டையாடும் பழக்கமாகும். நல்லகாலம் ஏற்படுவதற்கும் நல்லநேரம் வர வேண்டும். நல்லவனுக வருவதற்கும் நல்லநேரம் வரவேண்டும். இராமசாமியின் வாழ்க்கையில் இந்த நல்லநேரம் பலதடவைகளில் பல இடங்களில் வந்திருக்கின்றது. பாலவயதில் பழநிக்கு அருகாமையில் உள்ள பாலசமுத்திரத்திற்கு இராமசாமி வந்ததே அவருடைய நல்லகாலம்; பழநியப்பனின் பக்தியும் பழநியம்பதியிலுள்ள மகான்களின் கூட்டுறவும் அவருடைய புண்ணியபலன்கள். அதைப்போலவே கொல்லாமை பூண்டொழுகவும் ஓர் அரிய சந்தர்ப்பம் கிட்டவேண்டும். கள்ளம்கபடமற்ற வாயில்லா ஜீவன் இளமான் கன்று ஒன்று துள்ளி விளையாடும்போது இராமசாமி அம்பால் அடிபட்டு விழுந்தக்கால், அதன் அழகான ஆட்ட ஓட்டம் அடங்கினமை கண்டு அதன் எழில் மேனி சிதைந்து சின்னபின்னமடைந்தது கண்டு, அது ஜீவன் அடங்கி மூச்சற்று திக்கற்று சாய்ந்து கிடந்ததைக் கண்டு இராமசாமியின் பிஞ்சு உள்ளம் கதறியது. அந்தக் கதறல் கண்ணீரோடு ஒரு மன அமைதியும் அந்த மன அமைதியோடு மெய்ஞானமும் அரும்பியது. கொல்லாமை பூண்டொழுக உறுதி கொண்டான் இராமசாமி.

> "நல்லா றெனப்படுவது யாதெனின் யாதொன்றும்
> கொல்லாமை சூழு நெறி"

என்ற வள்ளுவர் வாக்குப்படி இராமசாமி யாதொன்றும் கொல்லாமை சூழுநெறியால் நல்லாரெனச் சிறந்திட்டார்.

## இராமசாமிக்குப் பொய்யா விளக்கே விளக்காதல்

> ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
> பின்சாரப் பொய்யாமை நன்று.
> உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
> கள்ளத்தால் கள்வே மெனல்.
> தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
> கொள்வர் பழிநாணு வார்.
> எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
> பொய்யா விளக்கே விளக்கு.

கொல்லாமை பூண்டொழுகும் இராமசாமி நல்லாரென வளர்ந்தார். கொல்லாமைக்கு அடுத்து நிற்கும் பொய்யாமைப் பண்பையும் ஆரமாக அணிந்து சான்றோனெனத் திகழ்ந்தார்.

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று

என்ற வள்ளுவர் மணிமொழிக்கு ஏற்றவரானார். பொய்யாமையே தன்னிடம் நெருங்கவிடாதபடி செய்த ஒரு நிகழ்ச்சியையும் சாமிகள் இன்றும் மறந்து விடவில்லை. மக்கள் இயல்பையும், மக்கள் மாசிலாததைப்பற்றியும், பொய்யாமையின் நற்பயன்களைப்பற்றியும் தன் சொந்த அனுபவத்தைக் கொண்டே விவரிப்பார். சாமிகளுடைய இந்த அனுபவத்தையும் பார்ப்போம்.

வெண்ணெய் திருடும் கண்ணன் தனக்காக வெண்ணெய் திருடியதில்லை. தன் கூட்டாளி நண்பர்களுக்காக வெண்ணெய் திருடுவன்; அதை அவர்களோடு பகிர்ந்து தின்பான் என்று கிருஷ்ண லீலைகளில் படித்திருக்கின்றோம். செம்மான் மகளைத் திருடும் திருடனாகிய திருமுருகனுடைய அருள் நிறைந்த சாமிகள் சிறு வயதில் ஒரே ஒருதடவை திருடவும் துணிந்தார். அது விளையாட்டாக நேர்ந்தது. அது தன் நண்பர்களின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்ற நோக்கத்தில் ஏற்பட்டது இராமசாமிக்கு வெள்ளரிக்காய் என்றால் வெகுபிரியம். இது இன்று நேற்று ஏற் பட்ட பிரியமல்ல. சிறு குழந்தையாயிருக்கும்போதே இராமசாமிக்கு வெள்ளரிக்காயென்றால் வாயூறும் இதை நன்குணர்ந்த இராமசாமி யின் நண்பர்கள் மூவர் இராமசாமியை ஒரு வெள்ளரித்தோட்டத் திற்கு அழைத்துச்சென்றனர். தோட்டக்காவல் இல்லாதசமயம். தோட்டத்துக்குள்ளே புகுந்தவர்கள் விறு விறு வென்று வெள்ளரிப் பிஞ்சுகளைப் பிடுங்கித் தோள்மீது இருக்கும் துண்டில் பதுக்க ஆரம்பித்தனர். தான் செய்வது தவறு என்பதை உணர்ந்த இராம சாமிக்கு மனம் 'பக் பக்' கென்று அடித்துக்கொண்டது. இருந்தா லும் பிஞ்சின் மீதுள்ள ஆசை, நண்பர்களுடைய கூட்டணி ஒத்துழைப்பு துணிந்த கருமத்திலிருந்து அவரைப்பின் வாங்க இடம் கொடுக்கவில்லை. இவருக்குத்தைரிய மூட்ட மூன்று நண்பர் களுமல்லவா இதே வேலையைச் செய்கின்றனர்! பறிக்கும் வேளையில் மும்முரமாய் ஈடுபட்டிருந்த இராமசாமிக்குத் தோட்டத்துக்காவல் கிழவன் வந்ததும், அவன் வருவதை முன்கூட்டியே அறிந்து கொண்ட மூன்று நண்பர்களும் இராமசாமிக்கு எச்சரிக்காமல் அவ்விடத்தை விட்டு நழுவி ஓடி விட்டதும் தெரியவே இல்லை. தோட்டக்காரன் இராமசாமியைக் கைப்பிடியாய்ப் பிடித்து விட்டான். இராமசாமி தோளில் ஒரு துண்டில் அவர் பறித்திருந்த வெள்ளரிக் காய்கள் கட்டி இருந்தன. "இந்தக்காரியம் நீ செய்யலாமா? இவ் வளவு காய்களையும் நீ திருடலாமா? என்று இரைந்தான் கிழவன்.

"நான் இரண்டுகாய்கள்தான் பறித்தேன்" என்று இராமசாமி உண்மையை மறைத்துக் கூறினர். துண்டுக்குள் குறைந்தது இருபது காய்களாவது இருக்கும் என்று நினைத்த கிழவன் துண்டைப்பிடுங்கிப் பிரித்துப்பார்க்க இராமசாமி உரைத்ததுபோன்ற இரண்டேகாய்கள் இருக்கக் கண்டான். இராமசாமி சொன்னால் சொன்னபடி நடக்கும் சக்தி பெற்றவர். அவர் உண்மையிலேயே இருபதுக்குமேல் பறித்திருந்தாலும் அவர் உரைத்தபடி இரண்டே காய்கள்தான் துண்டில் இருந்தன. இதை நினைத்த போது இராமசாமியின் மனம் படாத பாடுபட்டது, ஒரு பொய்யை மறைக்க எத்தனை பொய்கள் சொல்ல வேண்டி நேர்ந்தது. திருட வந்ததே முதல் குற்றம். இருபதுகாய்களுக்குமேல் பறித்தும் இரண்டே காய்கள் பறித்ததாகச் சாதித்தது இரண்டாம் குற்றம். துண்டுக்குள் இரண்டேகாய்கள் உள்ளன என்று உரைத்ததைத் தன்னுள் வளரும் தானறியா சக்தியால் மெய்ப்பித்துக் காட்டியது மாபெருங் குற்றம் என்பதை உணர்ந்தார் இராமசாமி. இந்த மூன்று குற்றங்களையும் எண்ணி மனம் குமுறிக் கொண்டிருந்த அந்த வேளையில் தோட்டக்காரன் புரிந்த செயல் சிறுவன் உள்ளத்தையே உலுக்கிவிட்டது. "நீ கவுண்டாயி பேரனல்லவா. நீ எப்படித் திருடத்துணிவாய். ஆசைக்கு இரண்டு வெள்ளரிக்காய் பறித்தாய். இந்தப்பிஞ்சுகளை நீயே தின்பாய்" என்று சொல்லி ஒரு பிஞ்சை இராமசாமி வாயில் ஊட்டி மற்றொரு பிஞ்சை இராமசாமி கையில் திணித்தான் தோட்டக்காரன். இராமசாமிக்குத் துக்கம் தொண்டையை அடைத்து விட்டது. அழுகை பீறிட்டுக்கொண்டு வருவதை மறைக்க அந்த இடத்தைவிட்டு ஓடினர். நேராக வீட்டுக்கு வந்தார். தன் மனத்தை முழுதும் திறந்து நடந்தவற்றைத்தன் தாத்தாவிடம் கூறி அழுதார். உண்மையை ஒளிக்காது உரைத்த இராமசாமியின் வெள்ளை மனத்தைத் தாத்தா பாராட்டினர். "தப்பை ஒப்புக் கொண்டதால் நீ ஓர் அறிவாளி. இனிமேல் இந்தத்தப்பை நீ செய்யமாட்டாய்" என்று சொல்லி இராமசாமி முதுகில் தட்டிக் கொடுத்தார். குற்றம் புரிந்தவனுக்கு இரண்டு காய்கள் இனும், அன்புவார்த்தைகளால் பாராட்டு. இந்த வயோதிகர்கள் புரிந்த செயலைக் கண்ட சிறுவனுக்கு உண்மை பேசுவதின் சிறப்பு விளங்கியது. அன்று தான் செய்த குற்றச்செயல் தன் வாழ்க்கையிலேயே முதல் செயலும் கடைசிச் செயலும் என்று உறுதி எடுத்துக் கொண்டார் இராமசாமி. அதன் பின் அவர் பொய்பேசுவதற்கே இடமில்லாமல் போய் விட்டது. காரணம் களவும் பொய்யும் அவர் அன்றிருந்து கனவிலும் கருதாதவாறு மனத்திலிருந்தே அடியோடு மறைந்து விட்டன.

"உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன் பொருளைக்
கள்ளத்தால் கள்வே மெனல்"

என்று வள்ளுவர் உரைத்தபடி, பிறருடைய பொருளைப் பிறர் அறியாதபடி உபாயம் செய்து பறித்துக்கொள்வது என்பதை காரியத்திலே செய்தால் மட்டுந்தானு பாபம், அப்படி நினைப்பதே பெரும் பாபமல்லவா. இதை நன்ருக உணர்ந்த இராமசாமிக்கு நெஞ்சில் தான் செய்தகுற்றம் மறைந்து போகவில்லை. அது அவர் நெஞ்சை நெடுநாட்கள் அறுத்துக்கொண்டே இருந்தது. உல்லாச மனப்பான்மையோடு தன்னேடு கூட இருக்கும் நண்பர் களின் விருப்பத்திற்கிணங்கித் தான் செய்யும் தொழில் கெட்டதா என்பதைச் சிறிதும் சிந்திக்காது வெள்ளரித் தோட்டத்திற்குள் சென்று வெள்ளரிக்காய் பறித்தது, தோழர்கள் சந்தடி செய்யாது மறைய வெள்ளரித் தோட்டக்காரன் கைகளில் சிக்கிக்கொண்டு எப்படியாவது தப்பிவிட வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு இருபதை இரண்டெனக் கள்ளம் கபடமின்றி உரைத்தது — இவை யெல்லாம் ஒரு பெரிய குற்றமாகப் போவதில்லை. இராமசாமி வேண்டுமென்றே திட்டம் போட்டுக் கள்ளமனத்தோடு களவாடத் துணியவுமில்லை. துணிய அவன் பரிசுத்தமான மனமும் இடங் கொடுத்திருக்காது. அதனுல்தான் அவன் மனம் தான்செய்த சிறிய குற்றத்தையும் பெரிய குற்றமாகக் காணச்செய்தது. சான்றேர்க்கே உரிய இந்தப் பெரிய மனப்பான்மையை வள்ளுவரே எவ்வளவு அழகாக உரைக்கின்ருர்.

> " தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
> கொள்வர் பழிநாணு வார்."

இத்தகைய சான்றேர்க்கு

> " எல்லா விளக்கும் விளக்கல்ல "
> " பொய்யா விளக்கே விளக்கு."

ஆம், முற்றிலும் உண்மைதான். இராமசாமிக்குப் பொய்யா விளக்கு ஒன்றுதான் உண்மை விளக்காக விளங்குகின்றது.

## நெடுநாள் பழக்கம் விளக்கிய இளைஞர்.

> " செயற்கரிய செய்வர் பெரியர் சிறியர்
> செயற்கரிய செய்கலா தார் "

உலகில் எவ்வளவோ பழக்கங்கள் மக்களிடம் குடிகொண்டிருக் கின்றன. சில பழக்கங்களால் மற்றவர்களுக்குத் தொந்தரவு என்று தெரிந்தால் அந்தப்பழக்கங்களை நிறுத்தியும் விடுகின்றேம். முற்றும் அந்தப்பழக்கங்களை மறக்கமுடியவில்லை யென்ருலும் தற்காலிகமாக

அப்பழக்கங்களைக் கைவிட்டு விடுகின்றோம். புகைபிடித்தல் சிலருக்குப் பொழுது போக்கவும் விறு விறுப்பூட்டவும் இனிய பழக்கமாகின்றது. அதை நாள்தோறும் இருபத்து நான்கு மணிநேரமும் – அவரை தூங்கவில்லை. என்றே வைத்துக்கொள்வோம் – தொடர்ந்து செய்வோரைச் சங்கிலித் தொடராகப் புகைப்பவர் (Chain Smoker) என்றும் அழைக்கின்றோம். அத்தகையவரும் 'புகை பிடிக்கக்கூடாது' என்ற மொழிகளுக்குச் செவிசாய்த்து, பஸ்ஸிலும் இரயிலிலும் உட்கார்ந்திருக்கும் வரை சிரமப்பட்டுக் கொண்டு வாயில் புகைபிடிக்காமல் செல்வதைப் பார்க்கின்றோம். ஆனால் வண்டி எப்பொழுது நிற்கும் என்று ஏங்கித் தவித்திருக்கும் அவர் வண்டிநின்று கீழே இறங்கியவுடன் வட்டியும் சேர்த்து முதலைக்கொள்பவர் போன்று புகைபிடிக்க ஆரம்பித்து விடுகின்றனர். அவரைக் குறைசொல்வதில் பயனில்லை. புகைக்குடிப்பழக்கம் அவ்வளவுதூரம் அவரை அடிமைப்படுத்தி விட்டது. இந்தப் பழக்கத்தைப் போன்றே வெற்றிலைபாக்குப் போடுவதும் சிலருக்குத் தொடர்ந்து நிகழும் வழக்கமாகி விட்டது. வெற்றிலைபாக்கு தருதல் மங்கள வழக்கமாகிவிட்டது. புதுமண தம்பதிகளுக்கும் வெற்றிலைபாக்கு அளிக்கின்றோம். தம்பதிகளை ஆசீர்வதிக்கும் சுற்றத்தாருக்கும் நண்பர்களுக்கும் அளிக்கின்றோம். திருமணத் திருநாளிலிருந்து கணவனும் மனைவியும் வெற்றிலை பாக்குச்சுவையையும் நறுமணத்தோடு அனுபவிக்க ஆரம்பிக்கின்றனர். இந்த வெற்றிலைபாக்கு போடும் வழக்கம் மங்கள பழக்கமாக இருப்பதோடு கூட எல்லோரும் ஏகமனதாக ஒப்புக்கொள்ளக்கூடிய பழக்கமாகவும் தமிழ் நாட்டில் நீடித்துவிட்டது.

இராசாமியின் வாழ்க்கையில் பன்றிமலையில் வேட்டையாடும் பழக்கம் அடியோடு நின்று விட்ட நிகழ்ச்சியை நாம் மறக்கமுடியாது. அந்தச் செயல் உயிர்வதை கூடாது என்ற ஜீவகாருண்ய பெரு நோக்கில் விளைந்தது. பச்சிளங் கன்றான மான் துவண்டு விழுந்த பரிதாபத்தில் வேட்டையாடும் பழக்கத்தையே விட்டு விட்டார் இராமசாமி. இராமசாமியின் அற்புதமான வாழ்க்கையில் மற்றொரு பழக்கத்தையும் விட்டு விடும்படி நேர்ந்தது. அவர் விரும்பிச் சுவைத்து அனுபவித்து வந்த வெற்றிலை பாக்கு புகையிலை போடும் வழக்கத்தையே அறவே மறக்கும்படி நேர்ந்தது. புகையிலை போடுவதை நல்ல பழக்கமில்லை என்று சொல்லாம். வெற்றிலை பாக்கு போடுவதை நல்ல பழக்கமில்லை என்று யாரும் துணிந்துரைக்க முடியாது. வாயை மணக்கவைக்கும் சுவைமிக்க இந்தப் பழக்கத்தை விடுவது எளிதல்ல. இதைச் செய்ய சரியான மனதிடம் வேண்டும். வெற்றிலை பாக்குப் போடும் ஒருபழக்கத்தை விட்டு விட்டால் அதைச் செயற்கரிய செயல் என்று தான் சொல்லவேண்டும். செயற்கரிய செயலை செய்ய வல்லார் பெரியவர்கள்தான். இதைச்செய்ய ஒரு இராமசாமியால்

தான் முடியும். இராமசாமி தான் ஏற்கனவே ஒரு பெரியவராக, விளங்குகின்ருரே செயற்கரிய காரியங்களைச் செய்து! சர்க்கரை, கல்கண்டு வரவழைத்தல், விஷக்கடி இறக்குதல்—இந்தச் செயல் களெல்லாம் செயற்கரியன அல்லவா! இத்தகையோர் தான் செய்வது தவறு என்பதை உணர்ந்து விட்டால் அந்தச் செயலை, அது எப் பேர்ப்பட்ட இன்பம் பயக்கும் பழக்கமாய் இருந்தாலும் கூட, அன்றே ஒழித்துவிடுவதில் திடமனமுள்ளவராவர்.

திருமணமாகிப் பன்றிமலையில் வாழ்ந்து வரும்போது இராம சாமிக்கு அடிக்கடி வெற்றிலைப் பாக்குப் புகையிலை போடுவது இன்பம் ஊட்டும் வழக்கமாகி விட்டது. ஒருநாள் தன் மனைவியோடு இராம சாமி ஒரு பஸ்ஸில் ஏறி வெளியூருக்குப் பயணம் செய்து கொண்டிருந் தார். வெற்றிலை பாக்கு புகையிலையை மென்று உமிழ்வதற்குச் சௌகரியமாக ஓரத்து இடத்தில் பஸ்ஸில் அமர்ந்தார். அவருக்குப் பின்னுல் பின் இடத்தில் ஒருவர் புதிய சலவை ஆடை அணிந்து அமர்ந்திருந்தார். பஸ் வேகமாகச் சென்று கொண்டிருந்தது. இராமசாமியும் வெற்றிலை பாக்கு புகையிலையை வாயில் நிறைத்து மென்று சுவைப்பதில் மும்முரமாக இருந்தார். வெற்றிலைச் சக்கையை பஸ் ஓடிக் கொண்டிருக்கும்போதே வெளியில் உமிழ்ந்தார். உமிழ்ந்த சக்கையும், செவேலென்றிருந்த எச்சிலும் வேகமாய்க் சென்று கொண்டிருக்கும் பஸ்ஸின் காற்றில் சிதறிப் பின் இருக்கையில் வீற்றிருந்த ஆடை அலங்காரப் புருடர்மீது தெறித்தது. பின்னுல் இருந்தவரின் தூயஆடை தன் செயலால் அலங்கோலமானது இராம சாமிக்குத் தெரியாது. ஆடையின் அழகைப் பறிகொடுத்த வயிற் றெரிச்சல் ஆடை அணிந்தவருக்கல்லவா தெரியும். இருந்தாலும் அந்தப் பெரிய மனிதர் தன் பொறுமையை இழக்கவில்லை. தன் நிதா னத்தை விடவில்லை. மெதுவாகத் தன் விரல் கொண்டு முன்னுல் அமர்ந்திருக்கும் இராமசாமியைத் தன்பக்கம்—பின்பக்கம் திரும்பும் படிச் செய்தார். அப்போதும் இராமசாமிக்குத் தன்னைப் பின்னுல் உட்கார்ந்திருப்பவர் ஏன் அழைக்கின்ருர் என்பது தெரியாது. "ஏன் என்னைக் கூப்பிட்டீர்கள்" என்று பணிவோடு கேட்டார் இராமசாமி. அப்பெரியவர் நடந்ததை வாயால் கூறமுடியாது, தன் கையால் தன் தூய ஆடையை சின்னுபின்னப் படுத்தியிருந்த செம்மண் நிலையைக் காட்டினுர். அவர் ஆடையை அலங்கோலப் படுத்தி இருந்தது செம்மண் அல்ல, தான் சற்று நேரத்திற்கு முன் வாயால் உமிழ்ந்த வெற்றிலைப்பாக்கு புகையிலை எச்சில் என்பதை உணர்ந்தார் இராசாமி. சுருக்கென்று தைத்தது மனத்தைக் குற்ற உணர்ச்சி. உடனே ஆங்கிலத்தில் 'என்னை மன்னித்து விடுங்கள்' (Excuse me) என்று இராமசாமி உரைத்து விட்டார். அதன்பின் அந்தப் பெரிய மனிதர் ஒரு சப்மேஜிஸ்டிரேட் என்று அறிந்தபோது இராமாசாமி அவருடைய பெருந்தன்மையைச் சிந்தித்து ஆச்சரியப்

பட்டார். தன் உயர்ந்த ஆடைகள் வீணாகிய போதும் நற்பதவியில் இருக்கும் அந்தப்பெருமனிதர் தன் நிதானத்தை விடாமல் கோபத்தையும் காட்டாமல் கடுஞ்சொல் ஒன்றும் கூறாதிருந்தது ஓர் அரிய செயல் அந்த அரிய செயலுக்கு ஈடாகத்தானும் ஒரு அரிய செயல், நற்செயலைச் சாதிக்க உறுதி கொண்டார் இராமசாமி. ''இன்றிலிருந்து நான் வெற்றிலை பாக்கு புகையிலையை அறவே ஒழித்து விட்டேன்' என்று அன்றே கங்கணம் கட்டிக் கொண்டார். மாற்றமுடியாத மறக்க முடியாத நெடுநாள் பழக்கம் அதோடு அன்றோடு அடியோடு நீங்கிவிட்டது. சிறுவயதிலேயே பல அற்புதங்கள் ஆடவல்ல இராமசாமி ஒருவரால்தான் முடியும் இவ்வளவு நாட்கள் தன்னை அடிமைப் படுத்தியிருந்த வெற்றிலை பாக்கு புகையிலை போடும் வழக்கத்தை திடீரென்று உதறித்தள்ள!

> "செயற்கரிய செய்வர் பெரியர் சிறியர்
> செயற்கரிய செய்கலா தார்"

என்பது எவ்வளவு உண்மையாகிவிட்டது இராமசாமியின் இளமை வாழ்விலே!

## குதிரை வீரர் இராமசாமி

> "இராமசாமிக்கு குதிரைகளும் தண்ணீர் பட்டபாடு
> தண்ணீரும் குதிரை பட்டபாடு"

சாமிகளுக்குக் குதிரைச் சவாரி செய்வதில் சிறுவயதிலிருந்தே அலாதிப்பிரியம் உண்டு. இராமசாமி இளமையிலேயே அடக்கொணுக் குதிரைகளையும் அடக்க வல்ல ஆற்றலுடையவர் என்ற பெயரும் பெருமையும் பெற்றார். குதிரைகளில் எவ்வளவோ குணங்கள் வாய்ந்தவை உண்டு. சண்டிக்குதிரை, முரட்டுக்குதிரை, உதைக்கும் குதிரை, கடிக்கும் குதிரை—இப்படி யெல்லாம் உண்டு. இராமசாமியிடம் எப்பேர்ப்பட்ட மூர்க்கமான குதிரையும் அடங்கி ஒடுங்கி விடும் என்ற நம்பிக்கை எல்லோரிடத்திலும் ஏற்பட்டு விட்டது. இராமசாமியிடம் குடி கொண்டுள்ள இறை சக்தியும் அவரின் மந்திர சக்தியுமே இதற்கு உதவுகின்றன என்றும் யாவரும் நினைப்பதுமுண்டு. ஆனால் குதிரைகளை அடக்க இராமசாமி கையாண்டது தந்திரமும் தைரியமும்தான். ஒருதரம் ஒரு முரட்டுக் குதிரையை நான்குபேர் மிக்க கஷ்டத்தோடு இரமசாமியிடம் பிடித்துவந்தார்கள். அதைக் கொண்டுவந்து இராமசாமி வீட்டில் கட்டி வைப்பதற்கே அவர்கள் படாதபாடு பட்டார்கள். அந்த முரட்டுக் குதிரை மீது ஏறி ஓட்டப்பழக்க வேண்டும். இந்தக் குதிரை அருகில் செல்வதற்கே

எல்லோருக்கும் பயம். அதன் அருகில் சென்றால் அது வாயைப் பிளந்து கூரிய பற்களைக் காட்டிக் கடிக்கும் சுபாவம் காட்டும் பொல் லாத குதிரை. இதை இராமசாமி அடக்க வேண்டும். அதன் மீது ஏறிச்சவாரி செய்யவேண்டும். இராமசாமி இதற்கு ஒரு உபாயம் செய்தார். நன்றாக நெருப்பில் சுட்ட பேய்ச்சுரைக்காய் ஒன்றைத்தன் கையில் சுடச்சுடப் பிடித்துக் கொண்டு இராமசாமி குதிரையை நெருங்கினார். வழக்கம்போல், நெருங்குபவரை நெருங்க விடாதபடி கடித்து விரட்ட வாயைப்பிளந்து கொண்டு தலையைத்திருப்பியது முரட்டுக்குதிரை. இராமசாமி மின்னல் வேகத்தில் குதிரையின் பிளந்த வாயில் நறுக்கென சுடச் சுட இருந்த பேய்ச்சுரைக்காயை நுழைத்தார். எதிர்பாராதவிதமாக சுடுவேதனையில் வாய் அடை பட்டு அகப்பட்டுக் கொண்ட மடக்குதிரைக்கு மலைப்பு தட்டிவிட்டது. மலைப்புதட்டிய அதே நிமிடத்தில் இராமசாமி ஜம்மென்று குதிரை மீது பிட்டத்தில் கையைவைத்து ஒரே தாவாகத் தாவி முதுகில் ஏறி அமர்ந்தார். சுடுவேதனை பட்டது போதும், இன்னும் சண்டித் தனம் செய்தால் படுவேதனைப்படநேரிடும் என்று உணர்ந்து கொண்ட குதிரையை தன்மனம் போனபடி ஆட்டுவிக்க இரமசாமிக்கா முடியாமலிருக்கும். இந்த நிகழ்ச்சியை குதூகலத்தோடு உரைத்த சாமிகள் மந்திரம் கால் மதிமுக்கால் ,என்ற கருத்துரையோடு நகைபூத்து முடித்தார்.

இராமசாமிப்பிள்ளையிடம் ஓர் உயர்தரமான பஞ்சகல்யாணிக் குதிரை ஒன்று இருந்தது. அதைக் 'கல்யாணி' என்று அழைப்பர். அந்தக் குதிரை இராமசாமிப் பிள்ளையிடம் வைத்திருந்த பிரியம் அளவிட முடியாதது. இராமசாமிப் பிள்ளை 'கல்யாணி' என்று அழைத்து அதை நெருங்கும் போதெல்லாம் தன் முன் கால்களை, தாழ்த்தி " ஏறுங்கள் என்மீது, ஏறி அமருங்கள் " என்று பேசாமல் பேசி இராமசாமிப்பிள்ளையைத் தன்மீது ஏற்றிக் கொள்ளும். அதன் அறிவு யாவரும் போற்றக் கூடிய அளவில் வளர்ந்திருந்தது. குதிரை தான், ஐந்தறிவுள்ள மிருகந்தான். அதன் நான்கு கால்கள் மத்தி யில் ஒரு குழந்தையை வைத்து விட்டுச் சென்றாலும் இராமசாமிப் பிள்ளையைத் தவிர வேறு யார் வந்தாலும் அவர்கள் குழந்தையை எடுக்க நெருங்க விடாது. இராமசாமிப் பிள்ளை அதை வாயென்ற ழைத்தால் கம்பீர நடைபோட்டு வரும், நில் என்று சொன்னால் எவ் வளவு வேகவாகச் சென்றாலும், காருக்கு பிரேக் போட்டது போன்று, உடனே நின்றுவிடும். 'கல்யாணி' குதிரை கல்யாண குணம் அமைந்த சாது குதிரை மட்டுமல்ல. சமயத்தில் இராம சாமிப் பிள்ளையின் குறிப்பறிந்து முரட்டுக்குதிரையாகவும் மாறிவிடும். ஒருநாள் இராமசாமிப்பிள்ளை பன்றிமலையிலிருந்து பழநிக்கு குதிரை மேல் சவாரி செய்து கொண்டு வந்தார். ஒருவருமில்லாத காட்டுப்

பாதையில் நான்குபேர் திடீரென்று ஒரு புதரினின்றும் கிளம்பி வந்தனர். அவர்கள் நடை உடைபாவனை இராமசாமிப் பிள்ளையின் சந்தேகத்தைக் கிளப்பி விட்டன. வழிப்பறி கொள்ளைக்குத் துணிந்தவராயிருக்கலாமோ என்று நினைத்தார் இராமசாமிப்பிள்ளை. இராமசாமிப்பிள்ளையிடம் கூடவே துப்பாக்கி இருக்கும். ஆனால் அன்று துப்பாக்கி அவரிடம் இல்லை. குதிரை ஒன்றைத்தவிர வேறு யாரும் அவர்கூட இல்லை. குதிரை ஒன்று இருப்பது, அதிலும் குறிப்புணர்ந்து நடக்கும் குணக்குதிரை ஒன்று இருப்பது உணர்ந்து எப்படியும் கொள்ளைக்காரர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கை மிகுந்தார் இராமசாமிபிள்ளை. நினைத்தபடியே அந்த நால்வரும் குதிரையை மறித்தனர். இராமசாமிபிள்ளையை குதிரையைவிட்டு கீழே இறங்க கட்டளையிட்டனர். இன்னும் கொஞ்ச நேரமானால் இராமசாமிபிள்ளையை குதிரையிலிருந்து இழுத்து இறக்கிவிடுவர். இதை உணர்ந்த இராமசாமிப்பிள்ளை இதுதான் தக்க சமயமென்று, "கல்யாணி, கடி, உதை" என்று குதிரைக்கு உத்திரவிட்டார். யஜமானரின் கணீரென்ற குரலையும் கட்டளையையும் கேட்ட சவாரிக்குதிரை அடுத்த நிமிடம் முரட்டுக்குதிரையாக மாறிவிட்டது. திடீரென எதையோகண்டு மிரண்டது போல் முன் காலை மேலே தூக்கி, பெருங்கனைப்பு கனைத்து, எதிரிகளில் ஒருவன் தோள் மீது பாய்ந்தது. குதிரையின் முழுபலத்தையும் தோளில் கண்ட அவன் "ஐயோ, தொலைந்தேன்" என்று சாய்ந்துவிட்டான். கனைப்பிலும் முரட்டுப் பாய்ச்சலிலும் ஓயாது மற்றொருவனை குறி பார்ப்பதுபோல் இருந்த மூர்க்ககுதிரையைக் கண்ட மற்ற மூவரும் ஓடி மறைந்து விட்டனர். இந்த நிகழ்ச்சியை உற்சாகத்தோடு சாமிகள் கூறியபோது ஒருபக்தர் கேட்டகேள்வியும் சாமிகள் பதிலும் வேடிக்கையாக இருந்தது.

பக்தர்: "சாமி, உங்களுக்குக்குதிரை உதவிதானா வேண்டும். இஷ்டப்பட்டிருந்தால் அந்தக் கொள்ளைக் கூட்டத்தாரை உங்கள் சக்தியைக் கொண்டே ஓட வைத்திருக்கலாமே"

சாமிகள்: உண்மைதான். அப்படிச் செய்து விட்டால் எனக்குதான் என்ன மதிப்பு. என்னுடைய குணமிக்க குதிரைக்குதான் என்ன மதிப்பு. இதற்கென்றே ஒரு அறிவுள்ள குதிரை எனக்கு வாய்த்திருக்கும் போது வேறு உபாயம் எனக்குத் தேவையில்லாமல் போய்விட்டது அவர்களிடமிருந்து தப்புவிக்க. அன்று எனக்கு கல்யாணி குதிரைதான் துப்பாக்கியாகவும் மெய்க்காப்பாளனாகவும் உதவியது.

இதைத் தொடர்ந்து பேசும்போது சாமிகள் குதிரை சவாரியைப் பற்றி ஸ்வாரஸ்யமாகப் பேசினார். "குதிரை மீது ஏறி பத்துமைல்

சவாரிசெய்து விட்டால் அதன்வேகம் பெருகுவதைக் கவனிக்கலாம். அது வேகமாக ஓடும்போது அதன் நான்குகால்களையும் ஒரே சமயத்தில் பயன் படுத்திக்கொள்வதில்லை. இரண்டு கால்களுக்குத் தான் ஒரே வேலையில் அதிகவேலை. இந்த இரண்டு கால்களும் அயரும் போது மற்ற இரண்டு கால்களுக்கும் சரியானவேலை, ஆரம்பித்த வேகம் குறையாது குதிரை ஓடிக்கொண்டே இருக்கும். இப்படியே கால்களை மாற்றிமாற்றி ஓடி வேகம் குறையாது இருபது மைல்கள் முப்பதுமைல்கள் குதிரைகள் ஒரே மூச்சில் ஓடும். குதிரைகளுக்கு அயர்ச்சி என்பதே கிடையாது. மிகவும் களைப்படைந்து விட்டால் குதிரைபூமியில் படுத்து ஒரு புரண்டு புரண்டுவிட்டால் அதன் உடம்புவலியெல்லாம் அயர்வெல்லாம் உடனே நீக்கிவிடும். அது திரும்பவும் பயணத்திற்குப் புத்துயிர் பெற்றதுபோல் தயாராகி விடும்.'' குதிரையில் சுவாரஸ்யமாகச் சவாரி செய்த சொந்த அனுபவமல்லவா சாமிகளை இப்படிப் பேசவைத்தது. இராமசாமியிடம் பழக்குவிப்பதற்கு ஒப்புவிக்கப்பட்ட குதிரைகள் அநேகம்: இராமசாமி உற்சாகத்தோடு சவாரி செய்த குதிரைகளும் அநேகம்.

குதிரைச் சவாரியில் மட்டும்தாஞ இராமசாமி நிபுணர். நீச்சல் அடிப்பதிலும் இராமசாமிக்கு இணை யாரும் இல்லை என்ற அளவில் தேர்ச்சியடைந்திருந்தார். நீச்சல் அடிப்பதில் இராமசாமிக்கு அளவு கடந்த பிரியம். ''குதிரைச்சவாரியில் கொம்பன்; நீச்சலடிப்பதில் வம்பன்'' என்று மற்றவர்கள் சொல்லி பொருமை கொள்ளும் அளவுக்கு அவர் சமார்த்தியம் ஓங்கி இருந்தது. எப்பேர்ப்பட்ட முரட்டுக்குதிரையாக இருந்தாலும் அதன்மீதேறி வேகமாகச் சவாரி செய்வதிலும், எவ்வளவு ஆழமான குளமாக இருந்தாலும் அதில் தைரியத்துடன் மூழ்கி விரைவுடன் நீந்தி வருவதிலும் ஆர்வமிகுந்து விளங்கிஞர் இராமசாமி. இவருடைய நீச்சல் திறத்தைக்கண்ட நண்பர்கள் தம் தங்க மோதிரங்களை அஞவசியமாக தைரியத்தோடு ஓடுகின்ற ஆறுகளில், நீர்நிறைந்த குளங்களில் வீசி யெறிவர், தண்ணீருக்குள் எவ்வளவு ஆழத்தில் இருந்தாலும் இராமசாமி வீசியெறிந்த பொருள்களை எடுத்து வந்து கொடுத்து விடுவர் என்ற தைரியத்தால். இராமசாமி இளமையில் வாழ்ந்து வந்த பால சமுத்திரத்தில் பாலாறு என்ற ஓர் ஆறு உண்டு. பாலாற்றில் வெள்ளம் திரண்டு வரும்போதெல்லாம் இராமசாமி பாலாற்றில் குதித்து முழுகி நீந்துதலும் வேகமும் சூழற்களும் கூடிய நீர் பெருக்கைக்கண்டு அஞ்சாது ஆற்றின் குறுக்கே நீந்தி மறுகரையை அடைவது இராமசாமிக்கு இன்பப்பொழுது போக்காவும் விளையாட்டாவும் அமைந்தன. அஞ்சா நெஞ்சினன் இராமசாமிக்குக் குதிரைகளும் தண்ணீர் பட்டபாடு, தண்ணீரும் குதிரை பட்டபாடு.!

## 17. திருமண வாழ்வு

“ அடிசிற் கினியாளே அன்புடை யாளே
படிசொல் தவறுத பாவாய் – அடிவருடிப்
பின் தூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
என் தூங்கும் என் கண் இரா.”

**அம்மா அவர்களின் திருமணப் புது வாழ்வு :**

இராமசாமிக்குப் பதினேழு வயது நடந்து கொண்டிருந்தது. அவர் மனம் ஈஸ்வரதியானத்திலும் ஞானவழியிலும் ஈடுபட்டிருந்தது. அவர் மனப்போக்கினை நன்கறிந்திருந்த அப்பாவுக்கும் பாட்டனுருக்கும் அவர் அறிவு பக்தி மார்க்கத்திலும் விரிவடைவது இன்பத்தை அளித்தாலும் அவர் மனத்தைப் பூராவும் அதில் செலுத்திவிட்டால், ஒருவேளை இல்லறத்தைத் துறக்க நேருமோஎன்ற அச்சம் ஏற்பட்டது. பரலோகப் பலனடையத் துறவு மார்க்கமும் உதவும், இல்லற மார்க்கமும் உதவும். இவற்றுள் அறம், பொருள், இன்பம் ஊட்ட வல்ல இல்லறவழியோ பேரின்பப் பெரு வீட்டிற்கும் அழைத்துச் செல்லும் சிறந்த மார்க்கம் என்பதைத் தந்தை தனயனுக்கு எடுத்துரைத்தார். தனயனும் பெரியவர்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யச் சம்மதித்தார். பெரியவர்கள் இஷ்டப்படியே பழநி திரு. மாரியப்பிள்ளை திருமதி. கருப்பாயி அம்மாள் பெற்ற திருச்செல்வி பாப்பாத்தி அம்மாளை இராமசாமிக்குத் திருமணம் செய்ய ஏற்பாடாகியது.

தனக்குப் பெண் பேசி முடிந்த விவரங்களை ஒருநாள் சாமி உற்சாகத்தோடு எங்களிடம் கூறினர் “ அந்தக் காலத்தில் நமது ஜாதியில்தான் பெண்ணைக் கல்யாணத்திற்கு முன் மாப்பிள்ளையிடம் காண்பிப்பதில்லையே. இருந்தாலும் நான் உங்கம்மாவைக் கல்யாணத்திற்கு முன் பார்த்து விட்டேன். பெண் அம்மியில் மஞ்சள் அரைத்துக்கொண்டிருந்த வேளையில் பெண் ஓடாமல் இருக்க வழிசெய்து பெண்ணைப் பார்த்துவிட்டுத் திரும்பினேன்” என்று சாமிகள் உவகையோடு கூறினர். பார்த்த பெண் தன் மனத்திற்குப் பிடித்தமானவள் என்பதைத்தானே சாமிகள் மறைமுகமாக

உரைத்தனர். தனது வாழ்விற்கே துணையாக வாய்க்கப்போகிறவள் எப்படி இருப்பாளோ என்ற ஆவல் அவளை எப்படியேனும் பார்த்து விடவேண்டும் எனும் பேராவலை எழுப்பியது. இத்தகைய பேராவல் ஒவ்வொரு இளைஞனுக்கு ஏற்படுவது இயற்கையே. தன் வாழ்நாள் பூராவும் தன்னுடன் இணைந்து வாழப்போகும் ஒரு மனையாளை மட்டும் பார்க்கச்செல்லவில்லை சாமிகள். பற்றற்றான் தாளைப்பற்றி இருக்கும் அவரின் ஆத்மீக முயற்சிக்கும் அவள் உறு துணையாக அமைய வேண்டியவள் என்பதை உணர்ந்தும் சாமிகள் தனக்கு நிச்சயமான பெண்ணைப்பார்க்க முந்தினர். அவருக்குப் பெண்ணைக் கண்டதும் திருப்தி ஏற்பட்டது. அதே திருப்தி அவர் வாழ்நாள் முழுதும் வளர்மதி போன்று வளர்ந்து பூரணச்சந்திரனைப் போன்று உருண்டு திரண்டு உளத்திற்கு இன்பம் ஊட்டியது.

திருச்செல்வன் இராமசாமிக்கும் திருச்செல்வி பாப்பாத்தி அம்மாளுக்கும் பழநியில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. திருமணமானபின். சாமிகளின் பாட்டனுர் வீட்டில் சிலநாட்கள் தம்பதிகள் தங்கிவிட்டுப் பன்றிமலைக்குச் சென்றனர். பாப்பாத்தி அம்மாளோடு இணைந்த மணவாழ்க்கை இன்பமயமாக ஓடியது. அன்பும் அறனும் இல்வாழ்க்கையின் அடிப்படையாக அமைந்தன. இறை அன்பில் திளைத்தோங்கும் சாமிகளின் உள்ளம் மனையறத்தையும் மனைவி அன்பையும் விழைந்து அனுபவித்தது. இல்வாழ்க்கையை ஆரம்பித்த நாட்களில் இருவருடைய குழந்தை உள்ளத்தைக் காட்டக்கூடிய ஒரு இனிய சம்பவத்தை இங்கு சொல்வது பொருந்தும். சாமிகளின் தாயார் தன்மருமகளுக்கு ஒருதரம் ஐந்து ரூபாய் அன்போடு அளித்து விடைபெற்றுச் சென்றுர். இதைக் கண்டுகளித்திருந்த தன் தலைவனேடு தலைவி தனித்திருந்த சமயம் தன் மனத்தில் வெகுநேரமாக மூடிவைத்திருந்த ஓர் ஆசையை வாய்விட்டுக் கேட்கத்துணிந்தாள் தலைவி. அவள் தன் தலைவனது சக்திகளைப் பற்றிப் பலர் பேசக் கேட்டிருந்தாள், அதைத்தான் நேரில் காணவேண்டும், அதன் பலனை அனுபவிக்கவேண்டும் என்ற ஆவல் தலைவியைப் பேசவைத்தது. "நீங்கள் எல்லோருக்கும் கற்கண்டு வரவழைத்துக் கொடுக்கின்றீர்களே. எனக்கு மட்டும் இன்னும் கற்கண்டு வரவழைத்துக் கொடுக்கவில்லையே" என்று மனம் துணிந்து கேட்டுவிட்டாள்.

சாமிகள்: "அம்மா உன்னிடம் கொடுத்த ஐந்து ரூபாயை என்னிடம் கொடுத்தால் உனக்குக் கற்கண்டு கொடுப்பேன்"

என்ன வேடிக்கை! ஐந்து ரூபாய் வேண்டுமாம் கற்கண்டை வரவழைக்க. அதுவும் சாமியின் அம்மா மனமுவந்து மருமகளுக்குக்

கொடுத்த ஐந்து ரூபாய் வேண்டுமாம்! தன் வாழ் நாட்களையே, ஏன் தன்னையே சாமிகளுக்கு உவந்தளிக்கும் உத்தமிக்கு தன்கைக்கு வந்த ஐந்து ரூபாயைக் கொடுக்கவா தயக்கமேற்படும். தன் இடுப்பில் செருகி இருந்த பட்டுப் பணப்பையையே முறுவல் பூத்த மங்கை மணாளரிடம் இரண்டுகைகாளாடும் உளமுவந்து கொடுத்தாள். தலைவிக்கு வேண்டிய கற்கண்டு உடனே தலைவனிடமிருந்து கிடைத்தது. "பெற்றுக்கொள்" என்று தன் திருக்கரத்தைத் தூக்கினார் இராமசாமி. பாப்பாத்தியம்மாள் கரத்தில் கற்கண்டு மழை பெய்தது. பாப்பாத்தியம்மாள் வாழ்க்கையிலும் கற்கண்டு மழை பெய்ய ஆரம்பித்தது. சாமிகளின் திருவருள் மழையே கொட்டு கொட்டென்று கொட்டியது. அந்த திருவருள் பயனை அடைந்த சாமிகள் மனைவியின் இன்ப வாழ்க்கையில் தெய்வீகபுத்தொளியும் பேராற்றல்களும் உருவாகத் தொடங்கின. ஐந்து ரூபாய்க்கு கற்கண்டு கொடுத்த அற்புதத்தை எங்களிடம் சொல்லிமகிழ்ந்த சாமிகள் "அவள் கொடுத்த அந்தப்பட்டுப்பை இன்னும் என்னிடம் இருக்கின்றது" என்று கேட்பவர்கள் உள்ளங்களை உருக்கும் வாஞ்சையோடு கூறினார்.

தலைவன் இராமசாமி தலைவியின் குண நலங்களையும் கள்ளம் கபடில்லா மனத்தினையும் தனக்கொத்த பண்புகள் அவளிடம் குடி கொண்டிருந்ததையும் கண்டு அவள் கொழுநன்பக்தியில் பரவசமடைந்திருந்தார். தனக்குகந்தமனைவி தன் தெய்வீகவாழ்க்கைக்கு வாய்த்தாள் என்று இராமசாமியின் அகமகிழ்ந்தது. தன் மனைவிக்கும் சரியான மனபக்குவ நிலை வந்தவுடன் தானுணர்ந்த பேருண்மைகளைப் போதிக்க முற்பட்டார் சாமிகள். ஒருநாள் தன் திருமண வாழ்க்கையையும் வாழ்க்கைத் துணைவியையும் ஞாபகப்படுத்திக் கொண்ட சாமிகள் உளம் கசிந்து எங்களிடம் பேசினார்.

**சாமிகள்:** "எனக்குக் கல்யாணமாகி நாற்பத்திரண்டு ஆண்டுகள் என்னுடன் உங்கள் தாயார் (பாப்பாத்தியம்மாள்) இருந்தாள். கல்யாணமாகி இருபத்து நான்கு வருடங்கள் நாங்கள் புருடன் மனைவி உறவு கொண்டிருந்தோம். பிறகு உங்கள் தாயார் எனக்கு சிஷ்யத் தொண்டே செய்தாள். எனக்குப் பூஜைக்கு வேண்டியவற்றைத் தயாரித்துக் கொடுப்பதிலும் எனக்கு ஆத்மசக்தி பெருகுவதற்கு வேண்டிய ஒத்துழைப்பிலும் தன் முழு கவனத்தையும் செலுத்தினாள். கல்யாணமாகி இருபது வருடங்கள் கழித்து நான் அவளுக்கு உபதேசம்கொடுத்தேன்! இருபத்தைந்து வருடங்களுக்குப் பின் உங்கள் தாயாரும் ஆத்மசக்திபெற்றாள்"

## அம்மா அவர்களின் அருள்சக்தி

குலமகட்கு தெய்வம் கொழுநனே. அருவமுமாய் உருவமுமாய் அருஉருவமுமாய் இருக்கின்ற தெய்வத்தை, சத்து சித்து ஆனந்த

மாய் விளங்குகின்ற கடவுளை ஊனும் உயிரும் கொண்ட உருவத்தில் தலைவனக தலைவி காண்கின்ருள், கணவனே கண்கண்ட தெய்வ மென மனமொழி மெய்களால் போற்றுகின்ருள். சமய ஆசாரப்படி இறைவனுக்குச் செலுத்தும் பக்தியைக் கணவனுக்கு இதயபூர்வமாகக் காட்டி அதன் பயனை உடனே அடைகின்ருள் மனைவி. சாதாரணப் பெண்களுக்கே இந்த அனுபவப்பலன் என்ருல் பேரறிவும் தெய் வாற்றலும் மிக்க மஹான்களின் வாழ்க்கைத் தலைவிகளுக்குச் சொல் லவா வேண்டும். மகான்களின் அருள் நெறியில் படர்ந்து வளர்ந்து வருகின்ற கொடிகளுக்கு மணாளர்களின் மூலம் சித்தர்கள் பெறும் சித்திகளையும் அடைய முடிகின்றது. கொங்கணர் என்பவர் ஒரு முனிவர். அவர் ஒருநாள் திருவள்ளுவர் வாழ்ந்து வந்த இல்லத்திற்கு வந்தார். வரும்போது அவர்மீது ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்த காக்கை எச்சமிட்டது. பசியோடு சென்று கொண்டிருந்த முனிவருக்குக் காக்கையின் செயல் கடுங்கோபத்தைக் கிளப்பிவிட்டது. காக்கையைச் சீற்றத்தோடு பார்த்தார். அவரு டைய கோபாக்கினி காக்கையை ஒரு நொடியில் சுட்டுச் சாம்பலாக்கி விட்டது. அவர் பசியோடே திருவள்ளுவர்மனைக்கு வந்து பிச்சை கேட்டார். அப்போது திருவள்ளுவர் மனையாள் வாசுகி அம்மையார் தன் கணவருக்கு உணவு பரிமாறிக் கொண்டிருந்தாள். தன்வேலையை முடித்துவிட்டுப் பிச்சையிட வந்த அம்மையாரைப் பசிமிக்க முனிவர் சீற்றத்தோடே பார்த்தார். தான் தாமதமாக வந்ததைக் கண்டு மனந்தடுமாறிய கொங்கணரைக்கண்ட அம்மையார் மிகவும் நிதான மாக 'கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா' என்று கேட்டார். அம்மையாருடைய கற்பின் நெறியையும், தன்கணவரையே தெய்வ மாகக் கொண்ட பக்தியினுல் அம்மையார் அடைந்திருந்த சித்தியையும் அமைதியையும் கண்ட முனிவர் வெட்கிவிட்டார். தலைகுனிந்தார். இப்படி பேரறிவான்களையும் தலை குனியவைக்கும் முக்காலமுணரும் கற்பிற்கரசிகள் அன்றும் இருந்தனர், இன்றும் உளர் என்பதைத்தான் அம்மா அவர்களுடைய வாழ்க்கையும் நமக்கு விளக்க உதவுகின்றது.

நம் சுவாமிகளோடு கூடவே மனைவியாகவும் சீடராகவும் பணி புரிந்துவந்த நம் அம்மா அவர்கள் சாமிகளின் அருளால் பரிபூரண சக்தி பெற்ருர்கள். அவர்களுடைய ஆத்ம சக்தியை நேரில் கண்டு அனுபவித்த பக்தர்கள் அம்மா அவர்களிடமும் சாமிகளிடம் பரிபூரண மாக நிறைந்துள்ள சகலசக்திகளும் உருவாகி இருந்தன என்று சொல் கின்ருர்கள். 1954ல் சாமிகளை சேலத்தில் சில மாஜிஸ்டிரேட்டுகள் தரி சிக்கச் சென்றனர். சாமிகள் ஒவ்வொருவரையும் ஒரு எண்ணை நினைக் கச் சொன்ஞர்கள். ஒருவர் நினைத்த ஒரு எண்ணை மற்ருெருவர் நினைத்த மற்ற எண்ணைக் கொண்டு பெருக்கச் சொன்ஞர். பெருக்கி வந்த பெரிய எண்ணினின்றும் மூன்ரும் நபர் ஒருவர் நினைத்த எண்ணைக் கழிக்கச் செய்தார். மீதிவந்த எண்ணையும் நாலாவது

நபர் ஒருவர் நினைத்துக்கொண்ட எண்ணைக் கொண்டு வகுத்து, வகுத்து வந்த எண்ணை—அந்த எண் தான் விடை—தயாராக எழுதி வைத்துக் கொள்ளச்சொன்னார்கள். அப்போது அம்மா அவர்கள் அந்த இடத்தில் எழுந்தருளினார்கள். சாமிகள் அம்மா அவர்களிடம் நடந்ததைக் கூறி ஒவ்வொருநபரும் நினைத்த எண்ணையும், கூட்டிப் பெருக்கிய எண்ணையும், கழித்து மிச்சமான எண்ணையும், அதை வகுத்து முடிவில் மிஞ்சியுள்ள எண்ணையும் சொல்லுமாறு கேட்டார். அன்னை அவர்கள் அடக்க ஒடுக்கத்துடன் மாஜிஸ்டிரேட்டுகள் எண்ணி குறித்துள்ள எண்களையும், பெருக்கலாலும், கழித்தலாலும், வகுத்தலாலும் வந்த சரியான எண்களையும் கிடுகிடுவென்று உரைத் தனர். அம்மா அவர்கள் கடைசியில் கூறிய எண் மாஜிஸ்டி ரேட்டுகள் குறித்து வைத்திருந்த எண்ணாக இல்லை. இதனால் மாஜிஸ்டிரேட்டுகள் முகத்தில் மாறுதல் கண்ட அம்மா தான் கூறிய எண் தான் சரியான எண்ணென்றும் அவர்கள் போட்டு வைத்திருந்த வகுத்துவந்த எண் தவறான எண்ணென்றும் கூறினார்கள். அம்மா சொல்வது உண்மை யென்று கண்டு கொண்டவர்கள் தாங்கள் செய்த பிழையைக் கண்டு வெட்கித் தலைகுனிந்தனர். சாமிகளுடைய மாபெரும் சக்தி அம்மா அவர்களிடம் பரிபூரணமாகப் பரிமளிப் பதைக் கண்டவர்களுக்குப் பேராச்சரியமும், தாங்கள் பேப்பரும் பென்சிலும் கொண்டு போட்டகணக்கு தப்பிப் போனதில் வெட்க மும் அவர்களுக்கு ஏற்பட்டது இயற்கைதானே.

அம்மா அவர்களின் அருள்சக்தி விளக்குகின்ற மற்றொரு நிகழ்ச்சி இங்குக் குறிப்பிடத்தக்கது. பம்பாயில் சாமிகளுக்கு ஒருபக்தர் வீட்டில் பாதபூஜை ஏற்பாடாகியிருந்தது. ஏராளமான மக்கள் கூடி இருந் தனர். சாமிகளின் அருள் வேண்டி சகஸ்ரநாம அர்ச்சனை நடத் தினர். சகஸ்ரநாம அர்ச்சனை செய்ய ஏற்பாடு செய்திருந்தவர்கள் ஒருநாமத்தையும் விட்டு விடாதிருக்க சகஸ்ரநாம புத்தகங்களையும் பயன் படுத்தினர். அப்படி இருந்தும் அவர்கள் படிக்கும்போது இரண்டு நாமங்களை விட்டு விட்டனர். அப்போது அம்மா அவர் களும் சாமிகளும் ஏதோ பேசிக்கொண்டனர். சாமிகள் சகஸ்ரநாம அர்ச்சனை புத்தகத்தைப் படிப்பவர்களை அழைத்து அவர்கள் விட்டு விட்ட அடிகளைப் படிக்கும்படி செய்தார். இது பார்ப்பவர்களுக்கு சாமிகள் செய்த செயல் என்பது தான் தெரிந்தது. உண்மையில் அர்ச்சகர்கள் இரண்டடிகளை விட்டு விட்டதை அம்மா அவர்கள்தான் கண்டுபிடித்தனர். தான் கண்டு கொண்டதை யாவரும் அறியா வண்ணம் சாமிகளிடம் கூறி சகஸ்ரநாம அர்ச்சனை ஒழுங்காக நடக் கும்படி உதவியருளினர். அம்மா அவர்களுடைய செயலில் இரண்டு விசேடங்கள் உண்டு. ஒன்று அம்மா அவர்கள் சகலகலை வல்லபர் என்பதை இச்செயல் விளக்குகின்றது. அஷ்டமாசித்தி அடையப் பெற்றவருக்கு சகஸ்ரநாம அர்ச்சனை மட்டுமென்ன, சகல சாஸ்திரங்

களையும் அறியும் ஆற்றலும் உண்டு. படிக்கும்போது யார் எதை விட்டுப்படித்தாலும் அதை அறியும் ஆற்றல் அவர்களுக்குண்டு. மற்றொருவிசேடம் அன்னை அவர்களின் பெருந்தன்மையையும் தன் னடக்கத்தையும் பேரன்பையும் அவர்கள் சந்தடியில்லாமல் செய்த செயல் விளக்குகின்றது. அம்மா அவர்கள் இஷ்டப்பட்டிருந்தால் அர்ச்சகர்களைத் தானே கூப்பிட்டு அவர்கள் விட்ட வரிகளைப் படிக்கச் சொல்லி இருக்கலாம். அல்லது கூடிஇருக்கும் பக்தர்கள் கவனம் இழுக்கும் வகையிலும் அர்ச்சகர்கள் செய்த பிழையைத் தன் கணவரி டம் சொல்லியிருக்கலாம். ஆனால் அம்மா அவர்கள் சந்தடியின்றி யாருமறியாத வண்ணம் தன் கணவரிடத்தில் நடந்ததைச் சொல்லி தன் கணவரைக்கொண்டே பிழையைச் சரிப்படுத்திக் கொண்ட முறை அம்மா அவர்களது அருங்குணத்தையே விளக்குவதாக அமைந்தது. அன்று மற்றோர் அற்புதமும் நடந்தது. ஏராளமான மக்க ளுக்கு விபூதிப் பிரசாதத்தைச் சாமிகளும் குங்குமப் பிரசாதத்தை அம்மா அவர்களும் அருளிக் கொண்டிருந்தனர். கூட்டத்தில் பெண் கள் பகுதியில் இருந்த ஒரு மாது அம்மா அவர்களை நெருங்கினார். வந்திருந்த சுமங்கிலிகளுக்குக் குங்குமப்பிரசாதம் பக்கத்திலிருந்த் கிண்ணத்திலிருந்து எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்த வண்ணம் இருந்தார் அம்மா அவர்கள். அன்னையை நெருங்கிய மாதும் தன் கரத்தை நீட்ட குங்குமக் கிண்ணத்திலிருந்து அன்னை அவர்கள் குங்குமம் எடுத்து நீட்டிய கைக்கு வழங்கச் சென்றார். ஆனால் பெற்றுக் கொள்ள முந்தியகைக்குக் குங்குமம் பொருத்தமல்ல திருநீறு தான் உகந்தது என்பதை உணர்ந்து கொண்ட அன்னை அவர்களின் திருக்கரம் சற்றுத் தயங்கியது. தயங்கிய திருக்கரத்தில் இருந்த குங்கு மம் உடனே மறைந்தது. குங்குமப் பிரசாதம் இருந்த இடத்தில் விபூ திப்பிரசாதம் உண்டாகிவிட்டது. அன்னை அவர்களின் அருள்சக்தி யால், அன்னை அவர்களுடைய சமயோசிதபுத்தியும் தெய்வ பலமும் கைம்பெண்ணின் கைக்கும் அவள் நிலைக்குப் பொருத்தமான விபூதி பிரசாதத்தை வழங்க உதவின. சாமிகள் கையைப் பிசைந்தால் விபூதி வருகின்றது, குங்குமம் வருகின்றது, மஞ்சள்பொடி வருகின்றது, கற் கண்டு வருகின்றது. இவைகளை சாமிகள் பூஜை அறையிலும் தெய்வ சந்நிதிகளிலும் பக்தர்களுக்கு காட்டி அருள்கின்றார். ஆனால் அம்மா அவர்களாலும் இத்தகைய அற்புதம் ஆடமுடியும் என்பதையும் அம்மா அவர்கள் செயல் நமக்கு நிரூபித்து விட்டது. அதுமட்டுமா? இந்த நிகழ்ச்சி அம்மா அவர்களின் ஆழமான அறிவையும், சமயோசித புத்தியையும், தெய்வாம்சத்தையும், அவர்களுக்கே உரிய பணிவை யும் பரிவன்பையும் நமக்கு எடுத்துக்காட்டுகின்றது.

கொழுநனைத் தொழுதெழும் கற்பெனும் திண்மைகொண்ட அம்மாள் அவர்களின் அருள் சக்தியை விளக்கும் மற்றொரு நிகழ்ச்சி யை இங்குக் கூறுவதும் பொருத்தமாக இருக்கும்.

ஏர்காடு மலையில் பக்தர், சேலம் திரு பழனியப்பக் கவுண்டர் பார்-அட்-லா அவர்கள் பங்களாவில் சாமிகள் அம்மாவோடு தங்கி இருந்தார். ஒருநாள் சாமிகளுக்கு எண்ணெய்த் தேய்த்துவிட அந்த வீட்டுப் பணியாள் வந்தான். அவன் சாமிகள் சிரசில் எண்ணெய்த் தேய்க்கும்போது கண்டகாட்சி அவனை மயங்கிவிழும் படிச் செய்துவிட்டது. அப்பணியாள் சாமிகளை முக்கண்ணனாகக் கண்டான். மூன்றாவது கண்ணைக்கண்ட அதிர்ச்சியில் அவன் மயக்கத்தில் விழுந்து விட்டான். இதைக் கேள்வியுற்ற அம்மா அவர்கள் ஓடோடிவந்தார். மயக்கமுற்றிருந்தவனுக்கு விபூதிபூசினார். அவன் உடனே உணர்வுபெற்று விழித்தான். சாமிகளுடைய அருள்சக்தியை அவர்களது நெற்றியில் கொஞ்சநேரம் தோன்றிய மூன்றாவது கண்ணிலிருந்து அறிந்துகொண்டவன், அன்னையினுடைய அருள்சக்தியைத் தன்னை சிறிதுநேரத்தில் அன்னை அவர்கள் மயக்கத்திலிருந்து உணர்வுக்குக் கொண்டுவந்ததிலிருந்து அறிந்துகொண்டான். சாமிகள், அம்மா அவர்களின் அருள் சக்தியை உணர்ந்து கொண்ட இப்பணியாள் சாமிகளுடையத் திருப்பாதங்களிலும் அம்மா அவர்களுடைய திருப்பாதங்களிலும் விழுந்து விழுந்து நமஸ்காரம் செய்தான்.

அம்மா அவர்கள் அடக்கமே உருவானவர். யாரிடமும் அதிகமாகப் பேசமாட்டார். சாமிகளிடம்கூட அதிகமாகப் பேசமாட்டார். சாமிகளாகக் கூப்பிட்டு எதையும் கேட்டால்தான் பதில் உரைப்பார். கணவனும் தன்னைக் கூப்பிட்டு 'இதைச்செய் அதைச்செய்' என்று சொல்லும்படியும் நடந்துகொள்ளமாட்டார். கணவன் விரும்புவது அவர்களுக்குத் தெரியும். கணவனுடைய சுவையையும் நாட்டத்தையும் நன்கு அறிந்தவர்களுக்கு அவர்கள் குறிப்பறிந்து நடந்து கொள்ளவா தெரியாது. சிலசமயங்களில் இருவரும் பேச்சால் தாம் நினைப்பதையும் நடக்கவேண்டியதையும் சொல்லிக் கொள்வதில்லை. தன் கணவனுடைய பார்வையிலிருந்தே என்ன செய்ய வேண்டும் என்பதை அறிந்து அவர் நோக்கம்போலவே அம்மா பக்குவமாக நடந்துகொண்ட அருமையை இன்றும் சாமிகள் மறந்துவிடவில்லை.

அம்மா அவர்கள் குடும்பப் பொறுப்பினைத் திறமாக ஏற்றுக் குடும்பத்தை நடத்திய அழகினைச் சாமிகள் இப்போதுகூட வாய் விட்டுச் சொல்லி மகிழ்வர். "பத்து நாட்களுக்கு முன்பே வேண்டிய குடும்பப் பொருள்களை வாங்கிவைத்துக் கொள்வாள். குடும்பத்தைக் கெட்டிக்காரத்தனத்தோடு கவனித்துக் கொள்வாள். நான் எங்கு சென்றாலும் என்கூடவே இருப்பாள். எனக்கு வேண்டிய பணிகளைக் காலாகாலத்தில் நான் கேட்பதற்கு முன்பே செய்து முடிப்பாள். நான் எந்த ஊருக்கும் எந்தக் காரியமாகக் கிளம்பினாலும் நான் திரும்பி வரும்வரை நான் எந்தக்காரியத்திற்

குச் சென்றேனோ அந்தக்காரியம் அனுகூலமாக வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டே இருப்பாள்." என்று அம்மா அவர்களின் குடும்பப் பொறுப்பினையும் தன்மேல் உள்ள அக்கறையையும், சாமிகள் குறிப்பிட்டு, "பெண்களுக்கு நகை புருஷன்தானே சாமி" என்று அவர்கள் அன்பை அளவிட்டு முடிப்பர்.

சாமிகளும் அம்மா அவர்களும் ஒத்தமனப்பான்மையர். ஒத்த நலன்கள் வாய்ந்த இவ்விருவரும் வாழ்க்கையை ஒருகண்கொண்டே பார்த்தனர். சாமிகளுக்கு எது விருப்பமோ அவைகளில்தான் அம்மா அவர்களுக்கும் விருப்பம். மல்லிகை, முல்லை, சம்பங்கி போன்ற வெள்ளைப் பூக்கள்மீது அம்மா அவர்களுக்கு அளவுகடந்த பிரியம்; பச்சைநிறப் புடவை உடுத்திக் கொள்வதிலும் அம்மா அவர்களுக்கு அதிக நாட்டமுண்டு. கணவர் கருத்தைக் கவரும் வெள்ளைத் தூய்மையும் பச்சைவளமும் அம்மா அவர்கள் உள்ளத்தைக் கவர்வதிலும் ஆச்சரியம் ஒன்றுமில்லை. வரும் விருந்தினரை அன்போடு உபசரித்தல், எல்லாப் பக்தர்களையும் தாயன்போடு கவனித்தல், யாவரிடத்தும் இனிமையோடும் பேரன்போடும் பழகுதல், கடுமையான மொழிகளும், கோபக்குறிகளும் எந்நேரத்திலும் உண்டாகாதிருத்தல் — இவைகளெல்லாம் சாமிகளுடைய உயரிய குணங்கள் மட்டுமல்ல. அம்மா அவர்களுடைய உயரிய குணங்களும் இவையே. குங்குமமும் மஞ்சளும் கொழிக்கின்ற மங்கள நாயகியாகிய அம்மா அவர்களுடைய முகத்தில் எப்பொழுதும் குளிர்ந்த நகை. அவர்களுக்கு இயற்கையாக அமைந்த அடக்க வொடுக்கத்தைப்போன்றே, படர்ந்திருக்கும். சாமிகள் திருமுகத்தில் விளங்கும் புன்னகை, அவர்கள் உள்ளம் விரிவடைவது போன்று அடிக்கடி சிரிப்பாகப் பெருகிப் பக்தர்கள் உள்ளங்களைக் கவர்வதுண்டு; அம்மா அவர்களிடம் குடிகொண்டிருக்கும் குளிர்ந்தநகை, அவர்கள் இருக்கும் இடம் தெரியாமல் இருப்பதைப்போல, ஒரு அளவோடேயே அருமையாக அவர்கள் இதழ்களில் அமைந்திருக்கும். அம்மா அவர்களையும் சாமிகளையும் பார்க்கும் அன்பர்களுக்கு அவர்களிடம் இயற்கையாக அமைந்துள்ள இனிமையான குளுமையான புன்னகை மறந்துவிட முடியாது; அது வருபவர்களுடைய இடர்களையெல்லாம் ஓட்டுவிக்கவல்ல வான்கருணை வடிவினதாக அல்லவா இருக்கின்றது.

சாமிகளின் தெய்வாம்சத்தில் அன்னைக்கும் பங்குண்டு என்பதைச் சித்திரிக்கும் ஓர் அரிய நிகழ்ச்சி இங்குக் குறிப்பிடத் தக்கது. சேலத்தில் திரு. P. M. பார்த்தசாரதி என்பவர் டாக்டர் திரு. சுந்தரத்தையும் சுவாமிகளையும் சேர்த்து ஒரு போட்டோ படம் எடுத்தார். படம் எடுக்கும் போது அன்னை அவர்கள் அந்த இடத்தில் இல்லை. போட்டோ நெகடிவ்வை கழுவிப்பார்க்கும் போது

டாக்டருக்கு வலதுபுறத்திலும் இடதுபுறத்திலும் சாமிகள் காட்சி அளித்தார். சாமிகளின் இடதுபுறத்தில் சாமிகள் படம் எடுக்கும் போது எந்த ஆடையில் இருந்தார்களோ அப்படியே படத்தில் காட்சி அளித்தனர். டாக்டருக்கு வலதுபுறத்தில் காட்சியளிக்கும் சாமிகளின் உருவத்தில் மார்பிலிருந்து திருப்பாதங்கள் வரையுள்ள பகுதியில் சாமிகளின் தர்மபத்தினி அவர்களின் திருவுருவம் பதிந் திருப்பதைப் போட்டோபடம் எடுத்தவர்களே எழுதியுள்ளார்கள். சாமிகளின் இறைத்தன்மையையும் இப்படம் அறிவிக்க உதவுகின்றது. சாமிகள் அம்மை அப்பனுகவும் காட்சியருளி இருக்கின்ருர். இதில் இன்னெரு உண்மையும்தான் பொதிந்திருக்கின்றது. சாமிகளின் அருள் வாழ்க்கையில் தனக்குச் சமபங்கு உண்டு என்பதை அன்னே உணர்த்தவே, இப்படிப் படம் அமையத் திருவுள்ளங் கொண்டனர் போலும் !

## விருந்தோம்பல்

கணவர் திருப்தி அடையும்படி குடும்பம் நடத்துவது, கணவர் மனத்திற்குகந்த மனேவி என்று பெயர் எடுப்பது, பதிசொல் தவருத பாவை என்று சிறப்பெய்துவது – இதெல்லாம் மணமான பெண் களுக்கு மதிக்கொணுத முத்தாரமாக அமைகின்றன. ஓர் உழைப் பாளியின் துணேவி அவனுக்கு வேண்டிய பணிவிடைகளேச் செய்து தானே சமைத்து உணவைக் கணவனுக்கு அளித்துக் கணவனே மகிழ்விக்கின்ருள். தானும் மகிழ்வெய்துகின்ருள். ஒரு செல்வந்தனின் மனேவி தன் செல்வமணுளனுக்குச் சிறந்தமுறையில் வேண்டுவன வெலாம் அளித்து, தன் பார்வையில் தயாரான அன்னத்தை தன் கையாலேயே பரிமாறிக் கணவருக்கும் உவகை ஊட்டித்தானும் உவகை அடைகின்ருள். ஆக இவர்கள் வீட்டுக்கு மணுளனுக்குப் பிடித்த மான நண்பர்களோ சுற்றமோ அடிக்கடி வந்தாலும் மணவாளன் மனம் திருப்தி அடையும் வகையில் விருந்தோம்பலே இனிது நடத்து கின்ருள் மனேவி. சாமிகளின் வீட்டிற்குச் சுற்றமும் நண்பர்களும் பக்தர்களும் வாராத நாட்களே கிடையாது. சாமிகளுடன் அன்யோன்யமாகப் பழகுகின்றவர் அவர் ஆத்மீக உரையிலும் ஆற்றல்களிலும் மனம் பறிகொடுத்துள்ள பக்தர்கள். அந்த பக்தர் களிலும் ஒருசிலர் சாமிகளின் உள்ளம் கவர்ந்துள்ள அருமைச்சீடர் கள். இவர்கள் வந்துவிட்டாலும் சாமிகளுக்கு அளவுகடந்த களிப்பு. அவர்கள் சாமிகளேக் கண்டு உரையாட ஆரம்பித்து விட்டாலும் சீடர்களுக்கும் மட்டற்ற மகிழ்ச்சி. இந்தக் கூட்டுக்களிப்பும் மகிழ்ச்சி யும் நேரம் போகின்றதைக்கூட அவர்களே உணரவைக்க விடாது. சாப்பாட்டு வேளே தவறிலுைம் இவர்களின் ஒன்றியுள்ள மனங்களின் தத்துவ விளக்க இன்பம் தவறுவதில்லே. சாமிகள் விடாது அருளுரை

வழங்கிக்கொண்டே இன்புற்றிருப்பார். பக்தர்களும் அருளுரையை விடாது கேட்டுக்கொண்டே இன்புற்றிருப்பர். இவற்றைக் கண்டும் வருகின்றவர் எண்ணிக்கை பெருகுவதைக்கண்டும் இன்புற்றிருக்கும் அம்மா அவர்களின் கவனத்தைச் சமையல் அறை தொடர்ந்து இழுத்த வண்ணமாய் இருக்கும். இவர்களையும் பின்னால் வந்தவர்களையும் சமயம் பார்த்து உண்டியிட அழைக்கவேண்டிய கவனமும் அம்மாவை இழுத்த வண்ணமாய் இருக்கும். இவ்விரண்டு செயல்களைச் சாமர்த்தியமாகவும் உள்ளன்போடும் அம்மா அவர்கள் புரிந்து பக்தர்களின் உள்ளன்பைக் கவர்ந்துகொண்ட பெருமை மறக்கமுடியாததென அம்மாவின் விருந்தோம்பல் குணநலனை நன்றாக அனுபவித்த பக்தர்களே இன்னும் சொல்லிச் சொல்லி அம்மாவின் அருமை பெருமைகளைப் பாராட்டுகின்றனர். உடல் உழைப்பையும் பொருட்படுத்தாது, உற்சாகமாக அம்மா அவர்கள் தம் வீட்டுக்கு வருபவரை உபசரித்து அனுப்பும் தாயன்பை என்னென்றியம்புவது?

தாய்க்குத்தான் தெரியும் தன் தனயர்களின் அருமை. சுவாமிகள் வீட்டில் இரண்டு தாய்களல்லவா உள்ளனர். ஒருதாய் கருணைவுள்ளமே கொண்ட சாமிகள், மற்றொருதாய் சாமிகளின் அருமை மனைவியாவர். பிந்தியதாய்க்குத் தெரியும் முந்திய தாய் இத்தனயர்கள் பால் எவ்வளவு பேரன்பை வைத்திருக்கின்றாரென்பது. இந்தத் தனயர்களை அன்பால் மகிழ்வு ஊட்டுவது தன் மணாளனை மகிழ்வு ஊட்டுவதாகுமல்லவா? உலகில் ஒரு குடும்பத்தில் நான்கு அல்லது அதிகமாய்ப்போனால் பத்து குழந்தைகள் இருக்கலாம். ஆனால், இந்தச் சாமிகளின் குடும்பத்தில்எண்ணிறந்த குழந்தைகள். இந்த எண்ணிக்கையும் நாளுக்கு நாள் விருத்தி அடைந்து கொண்டே செல்லுகின்றது. சாமிகளுக்கு ஏற்பட்டுள்ள எண்ணிறைந்த சீடர்களெல்லாம், பக்தர்களெல்லாம் அவருடைய அருமைக் குழந்தைகள் அல்லவா? சீடர்களெல்லாம் சாமிகளின் பெருங் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்பதைக் சீடர்கள் பல நிகழ்ச்சிகளில் மெய்ப்பித்துக்காட்டி வருகின்றனர். திருச்சியில் ஒரு சிஷ்யர் வீட்டில் கல்யாண மென்றால், நிச்சயமாக அங்கு சாமிகளின் தம்பதிசமேத வருகையும் நல்லாசியும் உண்டு. நிச்சயமாகத் தென்னிந்தியாவில் பரவியிருக்கும் சாமிகளின் அருமைச் சீடர்களின் வருகையும் ஒத்துழைப்பும் உண்டு. இப்பேர்ப்பட்ட அருமைக் குழந்தைகளுக்கு வாய்த்திருந்த கடமை எப்படி இருந்திருக்கும். இந்தக்கடமை உணர்ச்சியை நேரில்கண்டு அனுபவித்த பக்தர்களைக் கண்டு கேட்டால்தான் அதன் ஆழத்தை நாம்புரிந்து கொள்ளமுடியும். அம்மாவின் குடும்பம் பெரிது. அம்மாவின் கடமையும் பெரிது. இக் குடும்பத்தில் பெருகியுள்ள குழந்தைகளுக்கு ஒருதாய் மெய்ஞ்ஞான அருள் விருந்தை வாரி வாரி

வழங்கிக்கொண்டே இருப்பார்; அவர்தான் சாமிகள். மற்ருெருதாய் அறுசுவை உண்டியை அள்ளி அள்ளி அளித்துக் கொண்டே யிருப்பர்; அவர்தான் சாமிகளின் அருமை மனைவி.

அன்னை அவர்கள் அனுதினமும் அரும்பாடுபட்டு உழைத்து சுவைமிக்க உணவு தயார் செய்யும் அன்பை அவருடன் பழகிய ஒவ்வொரு பக்தரும் உணர்வர். அவர்கள் சில சமயங்களில் வரும் விருந்தினரை உபசரிக்கவும் தன் அருள் சக்தியால் அற்புதங்கள் ஆடி அருளியதையும் சில ஆப்த சீடர்கள் நேரில் கண்டு பெருவியப்படைந்திருக்கின்றனர். ஒரு சமயம் பம்பாயிலிருந்து சாமிகளுக்கு வேண்டியவர் ஒருவர் பன்றிமலைக்கு சாமிகளைக்காண வந்திருந்தார். பம்பாய் இனிய தின்பண்டங்களுக்குப் பெயர்பெற்றிருந்தது. பம்பாயிலிருந்து வந்திருந்த பக்தருக்கு மற்ற யாருக்கும் எளிதில் கிடைக்காத பாக்கியம் கிடைத்ததென்றே சொல்லவேண்டும். அவர் வந்திருந்த மாலையில் அவருக்குப் பலகாரம் தயார் செய்ய வேண்டும். வீட்டில் இனிய பலகாரம் செய்யவேண்டிய அவகாசமில்லை. அம்மா அவர்கள் இரண்டு இலைகளை அலமாரியில் வைத்தார். கண்களை மூடிக்கொண்டு இரண்டு நிமிடங்கள் தியானம் செய்தார். இவைகளைக் கண்டுகொண்டிருந்த பம்பாய் பக்தர் அலமாரியில் இருக்கும் இரண்டு இலைகளையும் அம்மா தியானத்தில் ஆழ்ந்திருப்பதையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தார். அம்மா வெறும் காலி இலைகளை அலமாரியில் வைத்து ஏன் தியானம் செய்துகொண்டிருந்தனர் என்பதை அறிய வேண்டிய ஆவலோடு பம்பாய் பக்தர் நின்றுகொண்டிருந்தார். அம்மாவின் தியானத்தைக் கண்ட அவர் கண்கள் மறு விநாடியில் அலமாரியில் வைத்திருந்த இலைகள் இரண்டும் நிறைவுற இருக்கக் கண்டு பெரு வியப்பில் மூழ்கினர். இரண்டு இலைகளிலும் பம்பாயிலேயே தயாராகும் இனிய தின்பண்டங்கள் நிரம்பியிருந்தன. அவரும் தன்னோடு பம்பாய் தின்பண்டங்கள் வாங்கிவரவில்லை; சாமிகள் வீட்டிலும் பம்பாய் தின்பண்டங்கள் யாரும் வாங்கிவரவில்லை. இந்தப் பேராச்சரியத்தைக்கண்ட பக்தர். "அம்மா, என்ன அற்புதம்" என்று வாய்விட்டுக் கூறி அம்மா அவர்களின் திருவருடிகளைத் தொழுதார். "சாமிகள் அருள் கிடைத்துவிட்டால் ஆகாததொன்றுமில்லை" என்று தன் பேருள் தெய்வக் கொழுநன் வீற்றிருந்த அறையைக் காண்பித்து கூறினர் அம்மா. இந்த அற்புதத் திருவிளையாடலை நேரில் கண்டு வியந்து மகிழ்ந்த அந்த பக்தர் வாயிக்காக அல்லவா பம்பாய் இனிய தின்பண்டங்களை அம்மா வருவித்துக் கொடுத்தது அம்மாவின் சமயோஜித புத்தியையும், அருள் பிரவாகத்தையும் எடுத்துக் காண்பிக்கின்றது.

அம்மா அவர்கள் சாமிகளின் சீடர்களை நன்ருக அறிந்திருந்தனர். வெகுநாட்களாக பக்தி விசுவாசத்தோடு பழகிவரும் ஆப்த சீடர்களை

யும், அன்றுதான் புதிதாக வந்த பக்தர்களையும் உபசரிப்பதில் அம்மாவுக்கென்றே தனிப்பட்ட ஒரு தனி வாஞ்சையுண்டு. யாவரையும் கண்டு உளம் விரியும் தாய் அவர்கள் குடும்ப நலனை விசாரிக்கத் தவறியதேயில்லை. சேலத்திலிருந்து திரு. பொம்மன்ன செட்டியார் தனியாக வந்துவிட்டால் ஏன் அவர் மனைவியை வழக்கம்போல் கூட அழைத்துவரவில்லை என்று பரிவன்போடு விசாரிப்பார்; மதுரையிலிருந்து திரு. ஆறுமுகம்பிள்ளை திடீரென்று வந்து உடனே புறப்பட ஆயத்தமானால். "ஏன் அண்ணா, இரண்டுநாட்கள் தங்கிச் செல்லக் கூடாதா?" என்று உள்ளன்போடு பேசுவார்; சிலோனிலிருந்து திரு. கணபதியாபிள்ளை சாமிகளைப் பார்க்க வந்தால், அவர் தங்கி இருக்கும் ஒவ்வொருநாளும் ஒவ்வொரு வகைக் காய்கறிகளும் குழம்பும் தயார் செய்து விருந்தோம்பல் செய்வார்; சென்னையிலிருந்து திரு. கமலசாமி வந்து விட்டால் அவருக்கு விருப்பமான ஆப்பங்களும் அதற்குகந்த ருசியுள்ள தேங்காய்ப் பாலும் தயாராக்கி தாயுள்ளத்தோடு அளிப்பார்; ஐயனாவரத்திலிருந்து திரு. கிருஷ்ணமூர்த்தி வரும்போதெல்லாம் அவர் தொண்டைப் பாராட்டும் வகையில் அவருக்கு வேண்டிய சௌகரியங்களை அவர் கேட்காமலேயே செய்துகொடுத்து மகிழ்விப்பார். தாயின் பெருங் கருணைக்குப் பாத்திரமான சாமிகளின் சீடர்களும் பக்தர்களும் அம்மாவின் பேரன்பு முதிர்ந்த பண்புகளைப் பாராட்டிப் பேசும் போது இத்தகைய அன்னையை விட்டுப் பிரிய நேர்ந்ததே என்று மனம்விட்டுச் சோர்வை காண்பிக்காமல் இருக்கமுடிவதில்லை.

## அம்மா அவர்கள் தூய்மைக்கு உறைவிடம்

அம்மா அவர்கள் தூய்மைக்கே உறைவிடமாக விளங்கினர். அவர்கள் மனமும் சுத்தமானது. அதிகாலையில் எழுந்து தன் அருமைக் கணவருக்கு வேண்டியவைகளைத் தயார் செய்வதற்கு முன் அம்மா அவர்கள் மஞ்சள் தேய்த்து நீராடி துளசிச் செடிக்குப் பூஜை செய்வதன்முன் நெற்றியில் குங்குமத்திலகம் விளங்க புத்தாடையோடு நகைபூத்து நிற்கும் காட்சி சாமிகளின் மனத்தைவிட்டு இன்றும் விலகவில்லை என்பதற்குச் சாமிகளின் மொழிகளே சான்றாக விளங்குகின்றன. "உங்கள் அம்மாவின் மனமும் சுத்தம், உடலும் சுத்தம், அவள் இருக்கும் இடமும் சுத்தம், மாட்டுக் கொட்டிலும் சுத்தம், தூசியும் அழுக்கும் இருக்கும் இடங்களில் அவள் கண்பட்டுவிட்டால் அவை இரண்டும் இருந்த இடம் தெரியாது பறந்துவிடும். சுத்தப்படுத்துவது மட்டும் அவள் கவனத்தை இழுக்கவில்லை. எந்தெந்தப் பொருள்கள் எந்தெந்த இடங்களில் இருக்கவேண்டுமோ அவைகளை அந்தந்த இடங்களில் அன்றாடம் சுத்தப்படுத்தி வைத்துவிடுவள். கடுமையான குளிர்நாட்களில் பன்றிமலையில் தம் வீட்டுக்கு வருபவருக்கெல்லாம் கால் அலம்பி

உள்ளே நுழைய சூடான தண்ணீர் எப்போதும் தயாராக் இருக்கும்,'' என்று சாமிகள் அம்மாவின் தூய்மை இயல்பை ஒரு நாள் விளக்கினர். தண்ணீர் எப்போதும் வீட்டில் தயாராக வைத் திருந்தது வருபவரின் கால்களைச் சுத்தப்படுத்துவதற்குத்தான். பன்றிமலையில் கடும்குளிரில் எப்போதும் அவர்கள் வருபவர்களுக்கு மனமுவந்து அளித்தது சூடான வெந்நீரல்லவா? இது அவர்கள் அகத்தூய்மை புறத்தூய்மையை மட்டுமா விளக்குகின்றது. உள் ளன்பையும் காட்டும் சிறந்த செயல்அல்லவா. எவ்வளவுபேர் வந்தாலும் வருபவர்களுக்கெல்லாம் முகம் சுளிக்காது மனம் கோணுது வழங்கும் இந்த அன்புச் செயலை யார் தான் மறக்கமுடியும்! அம்மா அவர்களின் அகத்தூய்மையை எண்ணி மகிழ்வுறும் நம் உள்ளங்கள் அதற்கு அடிபீடமாக அமைந்த அம்மா அவர்களின் உள்ளன்பையும் எண்ணி இரும்பூதெய்துகின்றன.

## கருணை உள்ளம்

அம்மாவின் கருணை உள்ளம் வரும் விருந்தினரை நன்ருகக் கவனித்து அனுப்புவதில் மட்டுமா ஊன்றிஇருந்தது, அது தன்னலமற்ற கருணை உள்ளமாகவும் திகழ்ந்தது. இதை விளக்க ஒரு சம்பவம் நினைவுக்கு வருகின்றது. பம்பாயில் ஒரு செல்வந்தர் ஒரு கொடுமையான நோய்வாய்ப்பட்டார். புற்றுநோயோ அல்லது எந்த நோயோ என்று டாக்டர்கள் தீர்மானம்செய்ய முடியவில்லை. அவரைக் கவனித்துவந்த டாக்டர்களும் அவரைக் கைவிட்டனர். கைவிட்ட இந்த நபரைக் கைகொடுத்துதவ ஆண்டவன் ஒருவனுல்தான் முடியும். அந்த ஆண்டவன் மனித ரூபத்தில் ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலைச் சாமிகளாக விளங்குகின்ருர் என்று பூரண நம்பிக்கைகொண்ட அந்த நோயாளியின் உறவினர் பம்பாயிலிருந்து சாமிகள் அப் போது தங்கிஇருந்த மதுரைக்கே பறந்தோடிவந்தனர். அப்போது அம்மா அவர்களுக்கு உடல்நிலை சீர்குலைந்திருந்த சமயம். சாமிகள் அம்மா அவர்களோடு கூடவே இருந்து நேரில் கவனிக்கவேண்டிய முழுப்பொறுப்பேற்றிருந்தநிலை. பம்பாயிலிருந்து சாமிகளை அழைத் துச்செல்ல வேண்டும் என்று பறந்தோடி வந்தவர்களுக்கு மதுரையில் உடல்நலமின்றி இருந்த அம்மாவையும் அவர்களை அனு தினமும் கூடவேயிருந்து கவனித்துவரும் சாமிகள் அவர்களையும் பார்த்தபோது இந்த நிலையில் சாமிகளை எப்படி பம்பாய்க்கு அழைத்துச்செல்ல முடியும் என்ற ஐயம் ஏற்பட்டது. அம்மா அவர் களை அந்த நிலையில் விட்டுவிட்டு பம்பாயிக்குச் செல்ல சாமிகளுக் குத்தான் எப்படி மனம் வரும்? இவர்களுடைய தர்மசங்கடமான நிலையை உணர்ந்த சாமிகள், ''அம்மாவிடமே நீங்கள் வந்துள்ள விஷயத்தைச் சொல்லுங்கள். அம்மா சொல்படிச் செய்வோம்'' என்று பம்பாய் பக்தர்களிடம் கூறினர். பம்பாயில் தவிக்கும்

ஜீவனுக்காக மதுரைக்குக் காரில் ஓடோடியும் வந்து தவிக்கும் உறவினர்களுக்கு அம்மாவினுடைய உடல் நிலையையும் சாமியின் நிலையையும் பரிசீலனை செய்துபார்க்க நேரமுமில்லை, சிந்தனையு மில்லை. எப்படியாவது சாமிகளைப் பம்பாயிக்கு உடனடியாக அழைத்துச் சென்று பம்பாயில் ஊசலாடிக் கொண்டிருக்கும் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஒரே எண்ணம் அவர்கள் நினைவில் ஊன்றிஇருந்தது. அம்மாவின் தளர்ந்த உடல்நிலையைக் கவனித்து தயக்கமுற்றிருந்தவர்களுக்கு சாமிகளின் சொற்கள் ஒரு புது தைரியத்தை வழங்கியது. துணிந்து அம்மா அவர்களையே சாமிகள் சொன்னபடி கேட்டுவிட்டார்கள். அம்மா உடனே மறுவார்த்தை யின்றி 'அப்படியே ஆகட்டும் உடனே பம்பாயிக்குப் புறப்படுங்கள்' என்று உளமுவந்து விடையளித்தார்கள். அம்மா அவர்களிட மிருந்து தங்குதடையின்றி வந்த சம்மதமே பம்பாய் ஆசாமியின் உயிரைக் காப்பாற்ற வந்த ஆசியென்று சொல்லவும் வேண்டுமோ? சாமிகள் பம்பாய்க்குச் சென்ருர். தன் வேலையை வெகுசீக்கிரத்தில் முடித்துக்கொண்டு உலகைவிட்டுப் பிரியஇருந்த பிராணனைக் காப்பாற்றிவிட்டு மதுரைக்குத் திரும்பினுர். சாமிகளின் அருள் செயலைக் கேட்ட அம்மாவின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் அரும்பின. சாமிகள் பம்பாய்க்குச் சென்று புற்று நோய்வாய்ப் பட்டிருந்த நோயாளியைப் பார்த்தபோது அதுவே அவனுடைய வாழ்க்கையின் கடைசிநாள் என்று சொல்லக்கூடிய வகையில் பிராண அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்தான். சாமிகளின் அருள்பிரசாத விபூதி அந்நோயாளியின் கடைசிநாள் என்று எல்லோரும் எண்ணி யிருந்த நாளை வாழ்க்கையின் தொடர்ச்சி நாளாக்கிவிட்டு அவன் நோயைக் குணப்படுத்தி விட்டது. நாட்கள் செல்லச் செல்ல நோயாளி பூரண குணமடைந்தார். அன்று நோயாளியாக இருந் தவர் இன்று நோய் நீங்கி உயிருடன் இருப்பதற்குக் காரணம் அம்மா அவர்களுடைய பெருங்கருணை உள்ளம்! தன்னலமற்ற சேவையுள்ளம்! இந்தச்செயல் அம்மா அவர்களின் அருஞ்செயல்! தன்னுடைய உடல் நிலையையும் பொருட்படுத்தாது வெகுதூரத்திற் கப்பால் கவலைக்கிடமாகக் கிடக்கும் ஒரு நபரைக் காப்பாற்ற தன் வாழ்க்கைத் துணைவனை மனதார பம்பாய்க்கு அனுப்பிவைத்த அம்மாவின் சுயநலமற்ற புனித உள்ளத்தையும், மற்ற சீவன்கள் பால் தழைக்கும் பேரன்பையும் வாயார வாழ்த்துவோம்.

பன்றிமலையில் சாமிகள் வீட்டுக்கு பக்கத்து வீட்டில் வாழ்பவர் கே. பி. சின்னசாமி என்பவர். சாமிகளின் அன்பையும் ஆதரவை யும் பூரணமாக அனுபவித்த சீலர். ஒருநாள் தாங்கமுடியாத வயிற்று வலியால் மிகவும் அவதிப்பட்டார். அன்றிரவு சாமிகள் அவரை மதுரை சென்று திரு. வடமலையான் என்ற டாக்டரிடம் செல்லும்படி

கூறியதைக் கண்டார். சாமிகளோ இல்லை; தான் கண்டது தன் இதயத்தில் சதாகாலம் வீற்றிருக்கும் சாமிகளது தோற்றம் என்பதை அறிந்து கொண்டார் அன்பர். கையில் பணமில்லை. என்ன செய்வ தென்று ஏங்கி இருந்தனர் மகனும் தாயும். காலையில் அம்மா அவர் கள் திரு. சின்னசாமியின் அன்னையை அழைத்து 'தம்பிக்கு வயிற்று வலி எப்படி இருக்கின்றது' என்று தாயன்போடு விசாரித்தார். இரவு நடந்த விவரங்களையும் சாமிகளின் காட்சியையும் உரைத்ததைக் கேட்டு, பணமில்லாது தாயும் பிள்ளையும் கலங்கிநின்ற கவலையைக் கண்ட அம்மா தன் வீட்டுக்கு ஓடோடியும் சென்று நாற்பது ரூபா யுடன் திரும்பி வந்து 'உடனே மதுரைக்கு தம்பியை அனுப்பிவையுங் கள்'' என்று அன்பு ததும்ப கூறி ஆசியளித்தார்கள். மதுரையில் மற்றொரு அதிசயம் காத்துக் கொண்டிருந்தது. வயிற்றுவலிதீர கவனிக்கும்படி டாக்டருக்கு தம்பி வந்த முதல் நாளே ஒரு கடிதம் சாமிகளிடமிருந்து வந்திருந்தது. இந்த அதிசயங்களையும், சாமிகள் அம்மா அவர்களுடைய பெருங்கருணையையும், பேரன்பையும் அடுத்த வீட்டுக்காரர் மறந்துவிட முடியுமா? அம்மா அவர்கள் சமயத்தில் உதவியதை மறக்க முடியுமா? இந்த நிகழ்ச்சியில் மற்றொரு உண் மையும் பொதிந்திருக்கின்றது. பக்கத்து வீட்டுத்தம்பி இரவில் வயிற்றுவலியால் துடிதுடித்ததை அம்மா அவர்கள் அறிந்து காலை யில் அவருக்கு உதவ முந்தியதும் கையில் பண மில்லாது ஏங்கித் தவித்த உள்ளங்களுக்கு வேண்டிய பணம் கொடுத்து உதவியதும் தன்னுடைய அருள்கணவர் ஏற்கனவே திட்டமிட்டிருந்த செயலுக் கும் உறுதுணையாகவே அமைந்தன. தன்னுடைய தெய்வீக சக்தி மிக்க கணவர் அடுத்த வீட்டுத் தம்பியை டாக்டரிடம் போகச் சொன்ன இரவில் ஏற்பட்ட காட்சியும், அடுத்தவீட்டுத் தம்பி டாக்ட ரை சந்திக்குமுன் பே டாக்டருக்குச் சாமிகள் அனுப்பி இருந்த கடிதமும் சாமிகள் நோயாளியின் பால் கொண்ட இரக்கத்தை எடுத்துக் காட்ட, அம்மா அவர்களின் பண உதவி அம்மா அவர்கள் நோயாளி யின் பால் கொண்ட கருணையையே திரட்டிக் காண்பிக்கின்றது. இவ் விரு அருட்சக்தி தம்பதிகள் உதவி இல்லாது அடுத்த வீட்டுத் தம்பி யின் நோய் குணமாயிருக்கமுடியாது; அவர்கள் கருணையில்லாது டாக்டரின் உதவியை நாடி யிருக்கவும் முடியாது.

அம்மா அவர்களுடைய குண நலன்களை எடுத்துரைப்பதென்றால் சொல்லிக்கொண்டே போகலாம். சாமிகளின் அடிப்படையான அன்பு மயமான வாழ்க்கையின் அடிச்சுவடுகளையே அன்னை பின்பற்றி வந்தனர். ''எத்திறன் நின்றான் ஈசன் அத்திறன் அவளும் நிற்பாள்'' என்பதை யொப்ப சாமிகள் மனம் போன்று அன்னை அமைந்து நின்றாள். சாமிகள் நினைப்பதையே அன்னை நினைப்பாள். சதா இறைவனது பேரருளையே இருவரும் நினைத்த வண்ணமாக

இருப்பர். சாமிகள் எண்ணுவதையே அன்னை எண்ணுவள் : எப்பொழுதும் தம்மைச் சார்ந்திருக்கும் அன்பர்களின் தீராத்துயரைத் தீர்க்கவே அவர்கள் எண்ணம் கொண்டிருப்பர். சாமிகள் விரும்புவதையே அன்னை விரும்புவர்; யாவரும் இறைவன் திருவருளை அடைந்து பேரானந்தப் பெருவாழ்வு வாழ வேண்டுமென்பதையே இவர்கள் விரும்பிக் கொண்டிருப்பர். சுருங்கக் கூறினல், சாமிகளுடைய குண நலங்களே வாய்ந்தவள் அன்னை என்று சொல்லாம்.

மனைவி திறம்பட நடத்துகின்ற இல்லம் இனிய இல்லமாகவே அமையும் ; அங்கு விருந்தோம்பலுக்குக் குறைவில்லை, மனை அறமாட்சிக்குக் குறைவில்லை, நன்மக்கள் பேறுக்கும் குறைவில்லை. இவற்றை அணிகலனுகப் பூண்ட அன்னை திருகடுகம் உரைத்துள்ள "கற்புடையாள் பூண்ட (மூன்று) கடனு" க்கும் ஒரு உதாரணமாகவே விளங்கினுர்.

> " நல்விருந் தோம்பதன் நட்டாளாம் வைகலும்
> இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய்—தொல்குடியின்
> மக்கள் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்
> கற்புடையாள் பூண்ட கடன். "

சாமிகளுக்கு இல்லாளாக வாழ்க்கையில் அமைந்த அம்மா அவர்களின் மனைமாட்சி மங்கலமாக ஓங்கியது. அதன் நன்கலனுகச் செல்வன் பேச்சிமுத்து இராஜா என்ற திருமகனையும் செல்வி இரத்தினம் என்ற திருமகளையும் அன்னை ஈன்றெடுத்தனர். செல்வன் இராஜா செல்வி இராமகிரி அம்மாள் என்கிற லக்ஷ்மி எனும் நல்லாளை திருமணம் செய்து கொண்டு செல்வன் வெற்றிவடிவேல் செல்வன் சக்திவடிவேல் செல்வி, இராஜஇரத்தின அம்மாள் என்ற மக்கட் செல்வங்களைப் பெற்றெடுத்து இனிது வாழ்ந்து வருகின்றுர்.

## அம்மா அவர்களின் கடைசி நாட்கள்

மதுரையில் திருமணம் ஒன்றை நடத்துவிக்க சாமிகள் வந்திருந்தார். சாமிகள் தங்குவதற்காக சகல வசதிகளுடன் கூடிய ஒரு பெரிய இடத்தை தயார் செய்ய குறிப்பிட்டனர் பெண் வீட்டார். "என்னுடைய மகள் வீடு மதுரையில் இருக்கின்றது. நான் அந்த மகள் வீட்டில் தங்குவேன்." என்று சாமிகள் கூறிவிட்டார். சாமிகள் தங்கி இருந்த அந்த வீட்டிற்குக் கல்யாணத்திற்குச் சென்ற சாமிகளின் பக்தர்களாகிய நாங்கள் சாமிகளைக் காணச்சென்றேம். வீட்டுக்கு நடுநாயகமாக விளங்கிய அறையிலும் மற்ற அறைகளிலும் சாமி

களின் திருவுருவப் படம், அம்மாவின் படம், அம்மாவுடன் சேர்ந்து சாமிகளின் படம், இந்த வீட்டுக்காரர்களுடன் அம்மாவும் சாமிகளும் சேர்ந்திருக்கும்படம் — இப்படி பலப் படங்களைக் கண்டோம். இவ்வளவு சாமிபடங்கள் அம்மாபடங்கள்கொண்டு விளங்கும் வீடு நிச்சயமாக சாமிகளுடைய மகள் வீடாகத்தானிருக்க வேண்டும் என்று உறுதிபடுத்திக்கொண்டோம். உண்மையில் அந்த வீடு திரு P. சுப்பையா M. B. B. S. Dc, H. வீடு. இந்த வீட்டில்தான் அம்மா அவர்கள் நோய்வாய் பட்டிருந்தபோது தன் இறுதி நாட்களைக் கழித்தது. இந்த வீட்டில்தான் தன் சொந்த வீட்டில் இருப்பது போல் சகல சௌகரியங்களையும் கண்டு மகவன்பை சொந்த மகளிடம் காண்பதுபோல் டாக்டர் சுப்பையா மனைவியிடம் அம்மா அவர்கள் அனுபவித்தார்கள். இந்த அருமை இல்லத்தில்தான் அம்மா அவர்கள் தனது அருமை மணாளர் மடியில் தலையை வைத்து பரிபூரண சச்சிதானந்தத்துடன் இரண்டறக் கலந்தனர். இத்தகைய மக்கள் அன்பொளிரும் வீட்டை தன் மகள் வீடு என்று மிகப் பொருத்தமாக சாமிகள் கூறியதில் வியப்பொன்றும் இல்லை.

அம்மா அவர்களுக்கு உடல் நலம் குன்றியபோது மதுரைக்கு வைத்தியம் செய்ய அழைத்துச் செல்வது என்று சாமிகள் முடிவு செய்தார். அவசியமானல் சிகிச்சை முடியும்வரை ஆஸ்பத்திரியிலேயே தங்கி இருக்கவும் முடிவு செய்திருந்தார். திண்டுக்கல்லிலிருந்து புறப்பட்ட சாமிகளும் அம்மா அவர்களும் விநாயகரை முதலில் தொழுதுவிட்டுத் திருப்பரங்குன்றத்திலுள்ள பெருமானையும் மதுரையிலுள்ள மீனாட்சி அம்மனையும் தரிசனம் செய்துகொண்டு டாக்டர் சுப்பையா விட்டிற்கு வந்தார்கள். கோயில்களில் அர்ச்சனை செய்யும் போதெல்லாம் தனக்கும் சாமிகள் பெயருக்கும் சேர்த்தே அர்ச்சனை செய்ய அம்மா அவர்கள் கூறினார்கள். அம்மா அவர்களின் உடம்பினை பரிசீலனை செய்த டாக்டர்கள் அம்மா அவர்கள் மதுரையில் சில நாட்கள் தங்கியிருக்கவேண்டியதை வற்புறுத்தினர். சாமிகளும் அம்மா அவர்களும் வைத்திய மனையிலேயே தங்கிவிடலாம் என்று நினைத்தனர். டாக்டர் சுப்பையா அவர்களும் அவரது மனைவியும் சாமிகள் நினைத்தபடி அம்மா அவர்களை வைத்திய மனையில் விட்டு விட இஷ்டப்படவில்லை. அம்மா அவர்களைத் தங்கள் வீட்டிலேயே வைத்து வைத்தியப் பணி செய்வது தங்கள் பேறு தங்கள் கடன் என்று முழுமனதுடன் எண்ணினார்கள்.

சாமிகள்: நல்லாயிருக்கும்போது உபசாரம் செய்வதைப்பற்றி நான் ஒன்றும் சொல்லமாட்டேன். இவள் உடல்நிலை சரியாக இல்லாத சமயத்தில் உங்களுக்கு வீண் தொந்திரவு கொடுக்க விரும்பவில்லை.

டாக்டர் மனைவி முத்தம்மாள்: சாமி, நான் என் தயாருக்குப் பணி விடை செய்யத் தயாராக இருக்கும்போது நீங்கள் தடை சொல்லக் கூடாது. என்னுடைய தாயாரை நான் கவனிக்காது வேறுயாரிடம் கவனிக்க விடுவது? அதனுலல்லவா நானே அம்மாவைத் திண்டுக் கல்லிலிருந்து அழைத்து வந்திருக்கின்றேன்.

இதற்குமேல் ஒன்றும் பேசமுடியவில்லை சாமிகளுக்கு. அன்புக்குக் கட்டுப்பட்டவரானுர். அம்மா அவர்களும் டாக்டர் சுப்பையா வீட்டிலேயே சிகிச்சைபெறத் தங்கி விட்டார்கள். சாமிகளும் அம்மா அவர்களைக் கவனிக்க டாக்டர் வீட்டிலேயே டாக்டர் இஷ்டப்படியே தங்கி இருந்தார். உண்மையில் அம்மா அவர்களை அல்லும் பகலும் உண்மையான மகள் வாஞ்சையோடு பக்திவிஸ்வாசத்தோடு உபசரித்து உள்ளன்புகொண்டு பணிவிடைகள் செய்து அம்மா அவர்களின் பேரன்பைக் கொள்ளை கொண்டது டாக்டர் சுப்பையா அவர்களின் மனைவி. "முன் ஜென்மத்தில் நீ எனக்குப்பிள்ளையாகத்தான் பிறந்திருக்க வேண்டும். எனக்காக நீ எவ்வளவு கஷ்டப்படுகின்ருய். நான் பெற்ற மகள் இருந்தாலுங்கூட உன்னைப் போல் அவளால் கவனிக்க முடியுமா" என்று அம்மா அவர்கள் போற்றக் கூடிய அளவுக்கு டாக்டர் சுப்பையா அவர்களின் மனைவி அம்மா அவர்களைக் கவனித்து வந்தார். படுக்கையிலிருக்கும் அம்மா அவர்களின் உடனடித் தேவைகளை அப்பப்போது கவனிக்கவும் மருந்து வகைகளையும் உணவுகளையும் அவ்வப்போது கொடுக்கவும் ஒரு நர்சை அமர்த்த சாமிகள் நினைத்த போதும், "இந்தப்பணிகளை ஒரு பணியாளுக்கு மனதாரச் செய்ய முடியாது. இந்தப்பணிகளைச் செய்வதற்காகத்தான் நான் இருக்கிறேன்" என்று டாக்டர் மனைவி உரைத்து அம்மா அவர்களுக்கு மனத்திற்கிசைந்த பணியாளாகவும் அமைந்தார். உடல் பிரயாசையில் உத்தம மகளாகவும் தொண்டாற்றும் இப்பெண்மணியின் அருங்குணச் செயல்களைக்கண்டு அன்பின் மேலீட்டால் வாயடைத்து நின்றனர் அருள் சக்திமிக்க சாமிகளும் அம்மா அவர்களும்.

நாளாக நாளாக அம்மா அவர்களின் உடல் நலம் குன்றிக் கொண்டே வந்தது. அம்மா அவர்கள் பிழைப்பது அரிது என்பதும் தெரியலாயிற்று. சாமிகளும் இந்த நிலையில் அம்மா அவர்களை திண்டுக்கல்லுக்குத் தம் இல்லத்திற்கு அழைத்துச் செல்லலாமா என்று எண்ணம் கொண்டபோது, டாக்டர் சுப்பையாவும் அவர் மனைவியும் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. அம்மா அவர்களைக் கடைசிவரையில் கவனிப்பது எங்களது கடன் என்று கண்டிப்பாக உரைத்து விட்டனர். அம்மா அவர்களுக்கும் மதுரையைவிட்டுப் பிரிய மனமில்லை. "மதுரையில் பிறக்க முக்தி, மதுரையில்

இறக்க முக்தி" என்பதும் அவர்கள் மனத்தைவிட்டுப் பிரியவில்லை. டாக்டர் குடும்பத்தாரின் பரிபூரண உள்ளன்பும் அம்மா அவர் களின் கடைசிநேர ஆசையும் அம்மா அவர்களை மதுரையிலேயே டாக்டர் வீட்டிலேயே விட்டுவைக்க சாமிகளின் இசைவைப் பெற்றது.

12-8-65 வியாழக்கிழமை. மாது ஸ்ரீ பாப்பாத்தி அம்மையார் வாழ்வின் கடைசிநாள் பிரக்ஞை தவறவில்லை. கடைசி வரையிலும் நன்றாகப் பேசிக்கொண்டே இருந்தார் அம்மா அவர்கள். அந்நாள் தனது வாழ்நாட்களின் முடிவுநாள் என்பதையும் அறிந்திருந்தார் கள். தனது மனத்திற்குகந்த மணாளரைச் சீக்கிரமாகவே அன்று சாப்பிடச் சொல்லித் தன்னருகில் அமரச் சொன்னார்கள். கூடிய சீக்கிரத்தில் இவ்வுலகையே விட்டுப்பிரிய இருக்கும் அம்மா அவர்கள் தன் இஷ்ட அருள் தெய்வத்தைப் பார்த்த வண்ணமாக இருந்தனர். தன்னுடைய இஷ்ட அருள் தெய்வம், தன்னை முதன் முதலில் தன் தாய் வீட்டில் தான் அம்மியில் மஞ்சள் அரைத்துக் கொண்டிருக் கும் போது பார்த்த முறுவல் வாலிபன்! முதன் முதலில் ஐந்து ரூபாய் வாங்கிக் கொண்டு கற்கண்டு வரவழைத்துக் கொடுத்த அதிசய சக்தி மணாளன்! உண்மையில் உலகில் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமென ஓங்கிய அருளாளன்! தன்னை யும் படிப்படியாக அருள் வாழ்க்கையில் உயர்த்தி ஆத்மீகச் சிகரத்தை எட்டிப்பிடிக்கச் செய்த குருநாதன்! "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று உலகில் பாடுபட்டு வரும் இவருக்கா கவும் இவருடைய சீடர்களுக்காவும் பக்த கோடிகளுக்காகவும் அம்மா அவர்கள் மனமுவந்து செய்த பணிகள் எண்ணிறந்தன. இந்தக் கருணை வடிவினனோடு இவ்வளவு நாட்கள் கூடி அருள் வாழ்வை நடத்திய அம்மா அவர்கள் இத்தகைய அருளாளனை விட்டுப் பிரியும் நேரம் வந்து விட்டதை உணர்ந்தார். தன்னுடைய வீட்டுச் சாவியைச் சாமிகள் கைகளில் ஒப்புவித்தார். அப்பொழுது அம்மா அவர்களின் அருகில் இருந்த டாக்டர் சுப்பையா மனைவியும் தாண்டிக்குடி திரு N. S. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் மனைவி யும் அம்மா அவர்களுக்குப் பால் கொடுத்தார்கள். கணவன் மடியில் தலை வைத்து படுத்திருந்த அன்னை அவர்கள் தன் மணாளனை கண்ணாரக் கண்டார். "எனக்குப் பால் ஊற்றுங்கள்" என்று தன் மணாளனைக் கேட்டுக் கொண்டார். சாமிகளும் தனது திருக்கை கொண்டு மூன்றாவது முறை மனைவியின் வாய்க்குக் கரண்டியால் பால் ஊட்டிய போது அன்னையின் கரங்கள் பால் வார்க்கும் மணாளரின் கையை அணைத்துக் கொண்டன. அதே நேரத்தில் அன்னை பரம் பொருளோடு ஐக்கியமானார்.

சாமிகளது அருமை பெருமைகளில் இன்புற்றிருந்த அன்னை அவர்கள் இன்று மறைந்துவிட்டார். ஆனால் அன்னை அவர்களது

அருமை பெருமைகளை அனுபவித்த சாமிகள் இன்றும் அவற்றை வாய்விட்டுப் புகழாமல் இருக்கமுடியுமோ? "பெண் வாழ்வுஅன்பு மயமான வாழ்வு. பெண் மீன் ஆண் சமுத்திரத்தில் ஆடி ஓடி விளை யாடும் இயல்பினது, பெண் ஆணுக்குமுன் போய்விட வேண்டும். அவளுடைய அருமையை அறிந்தவர் அவளோடு பழகிய ஆண் தான்" சாமிகளுடைய இம்மணி மொழிகள் பொதுவாகச் சொல்லி யது போன்று இருந்தாலும் இவை குறிப்பாக அன்னை அவர்களின் சிறப்பியல்புகளைஉணர்த்து வதாகவே அமைந்திருக்கின்றன சில சந்தர்ப்பங்ககளில் உற்சாகத்தோடும் வேடிக்கையாகவும் சாமிகள் வார்த்தைகள் ஆடும்போதும் அன்னை அவர்களையும் நினைக்காம லிருக்கமாட்டார்கள். "நான் எல்லா பக்தர்களுக்கும் அன்புக்கு அடியான். நான் உங்கள் அம்மாவுக்கும் (சாமிகளின் மனைவி) அடியான்" இந்தச் சொற்கள் அன்னை அவர்கள் சாமிகளின் அன்பு மிக்க சீடர் என்பதை மட்டும் உணர்த்த வில்லை, சாமிகள் அடிக்கடி அன்னை அவர்களின் அருங்குணங்களை நினைப்பதையும் எடுத்துக் காட்டுகின்றது.

"அடிசிற்கினியாளே அன்புடையாளே
படிசொல் தவருத பாவாய்—அடிவருடி
பின் தூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
என் தூங்கும் என் கண் இரா."

இப்படி எண்ணி எண்ணி ஏங்கினுர் வாசுகியின் இல்லற மாண் பை நன்கறிந்து அனுபவித்த வள்ளுவர் வாசுகியை இழந்து. இதே மனநிலையில்தான் சாமிகளும் அன்னையைப் பிரிந்து நிற்கும்போதும் இருந்தார். அன்னையின் தாயன்பையும் பேரருளையும் பெரிதும் அனுபவித்த பக்தர் கவிஞர் திரு ரா. பு. தங்கராஜன் அன்னை மறைந்தபோது பாடியுள்ள அஞ்சலி படிப்போர் மனத்தை உருக்கும் தன்மையதாக அமைந்துள்ளது. விசுவாவசு வருடம் ஆடிமாதம் இருபத்தைந்து தேதி குருவாரம் பௌர்ணமி திதி திருவோண நட் சத்திரம் கூடிய சுபதினத்தில் சச்சிதானந்த சொரூப மேற்ற அன்னை அவர்களின் அஞ்சலியைப் படித்து ஆறுதல் கொள்வோமாக.

## அன்னை அவர்களுக்கு அஞ்சலி

அம்மா நீ மறைந்தாயோ? எமைப்பிரிந்திட் டாயோ?
அருமைமக்கள் வருந்திக்கண் ணீருகுத்து நிற்க.
இம்மா நிலம் துறந்தேன் நீவிரைந்து சென்ருய்?
இல்லறத்தின் இலக்கணத்திற் கிலக்கியமே ஆனேய்!



தெய்வநிலை எய்தியுள்ள குமாரி இரத்தினம்மாள்

*"இரத்தினச் சுருக்கம் உம்மொழிகள்*
*இரத்தின மதிப்பு நின்எழிலும்*
*இரத்தினச் செல்வம் நின் தவமும்*
*இரத்தின விளைவே நன்நிறைவும்"*

(பக்கம் — 134) (திரு. T. D. மீனாட்சிசுந்தரம்)



**சாமிகளோடு பேரக்குழந்தைகள்**
**திருநிறைச்செல்வன் வெற்றிவேலும்**
**திருநிறைச்செல்வன் சக்திவேலும்**

(பக்கம் — 124)

வள்ளுவர்க்கு வாசுகிபோல் பன்றிமலை அடிகள்
வாழ்விற்குத் துணையாகி வாழ்வாங்கு வாழ்ந்தாய்!
தெள்ளுதமிழ்ப் பண்பாட்டின் வடிவமெனத் திகழ்ந்தாய்
திருவிளக்காய் ஒளிநல்கி மனையறம்நீ காத்தாய்!

அருந்துணையாய்ப் பன்றிமலை அடிகள்கைப் பற்றி
அளவற்ற அன்புடைய அன்னையென மிளிர்ந்தாய்
விருந்தோம்பும் அறம்வளர்த்து நிறைவுகண்ட தாலோ
விண்ணுலகம் சென்றுவிட்டாய் மண்ணகத்தை நீத்தே?

எண்ணற்ற மக்களைநீ பெற்றுவிட்டாய் தாயே!
இந்நிலத்து மக்களெல்லாம் அன்னையென்பார் உன்னை
கண்ணீர்வெள் ளத்திடையே மக்களெல்லாம் தவிக்கக்
கற்பகநன் னாட்டினுக்கேன் சென்றுவிட்டாய் தாயே!

மாண்புடைய மனையாளாய்; மக்களுக்குத் தாயாய்
மங்கையர்தம் குலத்திற்கோர் மணிவிளக்காய் நின்றாய்!
காண்பவர்தம் இதயத்தில் கடவுளையே காட்டும்
கருணைஉரு உன்னையினி எவ்வாறு காண்போம்!

மறைந்தாய்நீ என்கின்றோம் மதிமயக்கத் தாலே;
மதலையரைத் தவிக்கவிட்டு மறைவாளோ அன்னை!
நிறைந்துவிட்டாய் எம்நெஞ்சில் அன்புவடி வானாய்
நெஞ்சகம்விட் டுன்உருவம் நீங்கிடுமோ என்றும்?

அருள்மிக்க ஒளிவீசும் தண்ணமுதத் தீபம்
அணைந்துவிட்ட தென்கின்றோம் அறியாமை யாலே;
இருள்நீக்கும் தாரகையாய் அகல்வானில் தாயே
எழிலொளியை வீசிவழி காட்டுதற்கே சென்றாய்!

தினகரன்கற் கடகமனை மீதினிலே நிற்கத்
திருவோணம் முழுமதியோ டிணைந்துநின்ற நாளில்
புனிதநறும் புனல்வைகைக் கரையில்மீ னாட்சி
பொன்னடியில் ஒன்றிவிட்டாய் அன்புருவாம் தாயே'

வையமிசை வாழ்வாங்கு வாழ்கின்ற மக்கள்
வானுறையும் தெய்வமென விளங்கிடுவார் என்பர்
ஐயமிலை அம்மாநீ தெய்வநிலை யுற்றாய்
அருள்நெறியில் எமைநடத்திச் சென்றிடுவாய் தாயே!

பெண்குலத்தின் பெருமையெலாம் ஓருருவம் ஆகிப்
பேரறத்தைப் பேணிவந்த பெண்ணரசே, தாயே!
கண்கலங்க, மெய்நடுங்க, நாகுழற நின்றன்
கமலமலர்ப் பதம்பணிவோம் கண்ணீரி னூடே!

கபீர் தாஸர் காசியில் இறந்தார். அவருடைய சடலத்தை ஹிந்துக்களும் உரிமை கொண்டாடினர். முஸ்லீம்களும் உரிமை கொண்டாடினர். அப்போது சடலத்தின்மீதிருந்த துணியை விலக்கிப் பார்க்கும்போது சடலம் இருந்த இடத்தில் சப்ஜா இலைகளும், ஜெய் மலர்களும், துளசியும் இருந்தன. இந்தப் பேராச்சரியம் விளைவிக்கும் பொருள்களைக் கண்டவர்கள் பெருமகிழ்ச்சியோடு அவரவர் மதத்திற்குகந்தவைகளை வாரி எடுத்துக் கொண்டு சென்று மசூதிகளையும் சமாதிகளையும் அவைகள்மீது பல இடங்களில் கட்டிக் கொண்டாடினர். ஹிந்துக்களுக்குத் துளசியும் முஸ்லிம்களுக்கு மற்ற இரு பொருள்களும் கிடைத்தன. இவ்வாறு சடலம் இரு மதத்திற்குகந்த முக்கியமான இலைகளாகவும் மலராகவும் மாறிய விந்தையைப் பற்றிக் கேள்விப்பட்டிருகின்றோம். அம்மா அவர்களுடைய மாநில வாழ்வின் இறுதியிலும் இத்தகைய விந்தை நிகழ்ச்சி நடந்திருக்கின்றது.

அம்மா அவர்களின் பூத உடலை மதுரையில் தகனம் செய்து அஸ்தியை டாக்டர் சுப்பையா வீட்டில் வைத்திருந்த சமயம் ஒரு தெய்வீக மணம் அந்த இல்லத்தை நிரப்பி இருந்தது. அம்மா அவர்களின் அஸ்தியை முக்கிய சீவ நதிகளான கங்கையிலும் காவிரியிலும் வைகை, நர்மதை, யமுனை முதலிய புண்ணிய நதிகளிலும், இராமேஸ்வரம், திருச்செந்தூர். கன்னியாகுமரி, பம்பாய், சென்னை—இவ்விடங்களிலும் கரைக்க பக்தர்கள் ஏற்பாடு செய்திருந்தனர். சாமிகளின் ஆப்த சீடர்கள் அன்னை அவர்களின் அஸ்தியைக் குறிப்பிட்ட இடங்களுக்கு எடுத்துச் சென்று திருக்கூட்டங்கூடி பஜனை செய்து புண்ணிய தீர்த்தங்களில் கரைத்துவிடச் சித்தம் கொண்டிருந்தனர். அப்படியே சென்னையிலும் பம்பாயிலும் அன்னை அவர்களுடைய அஸ்தியைப் பிரித்துக் கடலுக்குள்கரைக்கப்பார்த்தபோது அன்னை அவர்களுடைய அஸ்தி மஞ்சள் பொடியாகவும் குங்குமமாகவும் மாறி இருந்தன. நெற்றியில் குங்குமத் திலகமிட்டு மங்களகரமாக சாமிகளுடன் மண வாழ்க்கைநடத்திய அன்னை அவர்கள் இறந்தும் தன் இறவாத் தன்மையை உணர்த்தவே இப்படிக் குங்குமமாகவும் மஞ்சள் பொடியாகவும் தன் அஸ்தியை மாற்றிக்காண்பித்தனர் போலும்! அன்னையின் அருள் இன்றும் நமக்கு மங்கல வாழ்க்கையை அருள, மங்களச் சின்னங்களான குங்குமம் மஞ்சள்பொடியாக அன்னையின் அஸ்தி மாறியது போலும்! மங்கலநாயகி நினைவு வாழ்க!

அன்னை சாமிகளோடு பேரின்பப் பெருவாழ்வை நடத்தி இல்லத்தில் சாமிகளுக்கு உறுதுணையாக உதவிவந்தார். அவர்கள் மறைந்துவிட்டாலும் அவர்களுடைய மலர்ந்த அன்பு உள்ளத்தினின்றும் வளர்ந்த அரியசேவைகளைச் சாமிகள் மறக்கமுடியவில்லை. அவைகளை அடிக்கடி நினைப்பதுண்டு. அம்மா அவர்களுடைய

அருமையான குணநலத்தை அடிக்கடி பேசுவதுமுண்டு. ஒருநாள் அம்மா அவர்களை நினைத்துப் பேசியபோது, 'சதிபதி கூட்டுறவு' என்பதைப்பற்றி மிக அழகான கருத்துக்களைச் சாமிகள் வழங்கினர். சாமிகள் திருஉரையையே கேட்போம். "குடும்பம் நடத்துவது என்பது அவ்வளவு எளிதல்ல. குடும்பத்தைச் சுவர்க்கமாகக்கச் செய்வதும், நரகமாக்கச் செய்வதும் மனைவியாக வந்து வாய்ப் பவளைப் பொறுத்திருக்கின்றது. நல்ல மனைவியை அடையும் பாக் கியம் சிலருக்குத்தான் கிடைக்கின்றது. இல்லற வாழ்க்கையில் வெற்றி காண்பவரும் உண்டு. தோல்வி அடைபவரும் உண்டு. குடும்ப வாழ்க்கையில் நல்லதோ, கெட்டதோ இவையாவும் சமாளித்து இல்லறத்தை நல்லறமாகக் காண்பவரும் உண்டு. முத்தெடுக்கச் செல்பவருள் சிலர் கடலுக்குள் பாதிவரை சென்று கடலுக்குள் மூச்சுப்பிடிக்க முடியாமல் பாதியிலேயே திரும்பி விடுப வரும் உண்டு. சிலர் கெட்டிமூச்சுப் பிடித்துக் கடலுள் ஆழமாக உட்சென்று நாற்றத்திலிருந்து ஆணிமுத்தைக் கொண்டு வருபவரும் உண்டு. இதுபோன்றுதான் சம்சார வாழ்க்கையும் நல்ல மனைவியை அடைவதும் அமைகின்றன. ஒத்த நலன்களோடு அமையாத மனைவிமார்களைக் கொண்ட கணவர்கள் இந்த வில்லங்கத்தைவிட்டு விலகுவது எக்காலம் என்று ஏங்கித் தவிப்பவர்களும் உண்டு. சற்று தாறுமாறாக மனைக்கு வந்து வாய்த்தவள் நடப்பாளேயாயின் கூறாமல் சந்நியாசம் கொள்ளவேண்டிய நிலையும் சிலருக்கு வந்து விடுகின்றது. இப்படிச் சந்நியாச மார்க்கத்துள் பிரவேசித்தவர்கள் எவ்வளவோ பேருண்டு." இப்படி உரையாடிய சாமிகள் "பாடு பட்டுவந்த சாமிகள் கொஞ்சம். இப்படிப் பெண்டாட்டிக்குப்பயந்து ஓடிய சாமிகள்தான் அதிகம்" என்று வேடிக்கையாகத் தம் உரையை முடித்தார்.

இந்தச் சதிபதி கூட்டுறவு உரையைக் கேட்ட எங்களுக்கு அம் மாவின் குண நலன்கள் சுடர்விட்டுப் பிரகாசிக்கத் தெரிந்தன. கல் யாணம் செய்துகொள்வதா, அது ஆத்மசாதனைக்கு இடைஞ்சலாக இருக்காதா என்று மலைத்து நின்ற சாமிகள் கல்யாணம் செய்து கொண்டபிறகு அம்மா அவர்களின் உயர்ந்த பண்புகளையும் பேரன்பையும் அனுபவித்து 'இல்லறமல்லது நல்லறமன்று' என்ற உண்மையை உணர்ந்தார். அதனாலல்லவா இன்றும் பெண்களைப் பற்றிச் சாமிகள் பொதுவாகப் பேசும்போதெல்லாம் அம்மா அவர் களுடைய அருமைகளை மனமார வாயாரச் சொல்லி மகிழ்கின்றார். "ஆக்கப் பொறுத்தாலும் ஆறப் பொறுக்காதவர் ஆடவர். ஆனால் பெண்கள் அப்படிஅல்ல. ஒரு சிறு உதாரணம் சொல்கின்றேன். ஒரு மனைவி எவ்வளவு பசியாக இருந்தாலும் அவள் மணாளன் வராமல் சாப்பிடமாட்டாள்." இப்படிச் சாமிகள் கூறியது அம்மா அவர்களின் அருங்குணத்தை மறைமுகமாகக் கூறியதல்லவா?

ஈசனருள் நிறைந்த சாமிகள் மனத்தில் அம்மா அவர்களின் அருமை நினைவும் அடிக்கடி வருவதுண்டு. அம்மா அவர்களுடைய அருமையை நன்கு உணர்ந்தவர் சாமிகள். "பெண் வாழ்வு அன்புமயமான வாழ்வு. பெண்மீன் ஆண்சமுத்திரத்தில் ஆடிஓடி விளையாடும் இயல்பினது. பெண் ஆணுக்குமுன் போய்விட வேண்டும். அவளுடைய அருமையை அறிந்தவர் அவளோடு பழகிய ஆண்தான். உங்கள் அம்மா ஆவணியில் இறைவனடி சேர்ந்தாள்" இப்படிச் சாமிகள் ஒருநாள் கூறியது சாமிகள் எவ்வளவு தூரம் அம்மா அவர்களோடு இல்லற வாழ்க்கையை நன்கு சுவைத்து வாழ்ந்தனர் என்பதைத்தான் எடுத்துக் காட்டுகின்றது. அம்மா அவர்கள் ஆரம்பத்தில் கற்கண்டுக்கு ஆசைப்பட்டுச் சாமிகளிடம் கற்கண்டைக்கேட்டு அதற்காகத் தன்னிடமிருந்த ஐந்து ரூபாயைக் கொடுத்ததை நாம் மறக்கவில்லை. அன்னை நாளாக நாளாகப் பேரானந்தத்தில் திளைக்க வைக்கும் தெய்வீகக் கற்கண்டையும் ஆத்ம சக்தியையும் சாமிகளிடமிருந்து அடைந்தார்கள். அதனால் இன்று பேரின்பப் பெருவீட்டையும் அடைந்துள்ளார்கள். வாழ்க அன்னை அவர்களின் அருட்சக்தி!

தவத்திரு பன்றிமலை சாமிகள் வாழ்க்கைத் துணைவி திருமதி பாப்பாத்தி அம்மையார் அவர்கள் அமர வாழ்வு எய்திய ஆண்டு நிறைவுநாள் 1—8—66ல் திண்டுக்கல்லில் இராஜ இரத்தின இல்லத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டபோது அவரின் நினைவின் மலராக 'அன்னை பஞ்சகம்' என்ற கவிதையைக் கவிஞர் திரு ரா. பு. தங்கராஜன் அவர்கள் சமர்ப்பித்தார். அன்னையார் அடியார்கள் படித்து அன்னை அவர்களுக்கு அஞ்சலி செய்வோம்.

உ

ஓம்

## அன்னை பஞ்சகம்

(மாதா ஜெய ஓம் லலிதாம்பிகை மெட்டில் பாடவும்)

1. அன்பின் உருவே சரணம் சரணம்
அணையா விளக்கே சரணம் சரணம்
இன்பச் சுடரே சரணம் சரணம்
இறவா ஒளியே சரணம் சரணம்
என்றும் அகலா திதயத் தவிசில்
இருந்தே இன்னருள் புரிந்திடும் தாயே
பன்றி மலைமா முனிவர் துணையே
பாரில் அறம்பல வளர்த்த நற்றுயே! (அன்பின்)

2. பூரண மதியம் வானிடை வந்துன்
புண்ணிய வடிவினைக் கண்ணெதிர் காட்டும்
ஆரமு தேஒர் முழுமதி நாளில்
அந்தமில் வாழ்வினை அடைந்தனை நீயே
பூரண வாழ்வு நீ புவியிடை வாழ்ந்து
பொன்னுல கடைந்தாய் ; விண்ணொளி யானுய்
தாரகை சூழத் தண்மதி யதனில்
தனிக்கொலு விருக்கும் தாயே சரணம்! (அன்பின்)

3. எண்ணக் குகையுள் இலங்கிடும் தாயே
இன்னமு தேஉன் இணையடி மலரில்
கண்ணீர் மலர்கள் தூவிநிற் கின்றோம்
கசிந்த மனத்தின் காணிக் கையாக
மண்ணில் உலவிய மங்கலத் திருவே
மானிட உடலைத் துறந்தவா னமுதே
விண்ணில் நிலவாய் விளங்குமெந் தாயே
விரிநிலத் திற்கருள் நிலவளிப் பாயே (அன்பின்)

4. திங்களில் ஒளியாய்த் திகழ்வது நீயே
தென்றலில் மணமாய்த் திரிவதும் நீயே
பங்கயத் துறையும் பார்க்கவி நீயே
பாசாங் குசமுடைப் பார்வதி நீயே
வெண்கம லத்தினில் வீற்றிருந் தின்ப
வீணையை மீட்டும் வாணியும் நீயே
மங்கல விளக்கே சரணம் சரணம்
மனையறம் பேணிய மாதா சரணம் (அன்பின்)

5. மஞ்சள் குங்குமம் மாறு நுதலோய்,
மணமலர் அணிசெய் குழலுடையவளே
நெஞ்சமலர்தனில் நீங்கா துறையும்
நித்ய சுமங்கலி, நிர்மல தேவி!
அஞ்சலி செய்தோம் அன்னபூரணியே
ஆன்மச் சுடர்தரும் அருங்கலை மகளே
கஞ்சமலர்வாழ் கருணைத் திருவே
கற்பக தருவே களிப்பருள் வாயே! (அன்பின்)

## ஜோதிமணி இரத்தினம்

"Those whom the gods love die young"

"தெய்வங்கள் யாரை விரும்புகின்றனரோ அவர்கள் இள வயதில் இறக்கின்றார்கள்."

திருமதி பாப்பாத்தி அம்மாள் ஈன்றெடுத்த பெண் செல்வமே இரத்தினம்மாள். சாமிகளின் அருள்சக்தியும் தாயின் கடமை உள்ளமும் பணிபக்தியும் ஒருங்கே அமைந்த புனிதவதி குழந்தை பரமார்க்க வழியிலேயே ஈடுபட்டாள். தந்தைதாய் அன்பில் தழைத்தோங்கி வளர்ந்த அருங்குணவல்லியின் மனநாட்டம் இறைவழிபாட்டிலேயே ஊறி விளைந்திருந்தது. தன் ஒத்தவயதுப் பெண்களைப் போன்று பொன் அணிகலன்களிலும் பட்டாடைகளிலும் மனம் சுற்றித்திரியாது, சிந்தையை அடக்கிச் சுகம்காணும் தன் தந்தை வழியிலேயே சதாகாலம் மனம் விரிந்தாடத் தொடங்கியது. உலகிற்கு அருள் தந்தையாக வாய்த்த சாமிகள் தனக்குத் தன் பெருந்தவத்தால் தந்தையாக வாய்த்துள்ள பேற்றை எண்ணி மனமகிழ்ந்தாள் வனிதை. இப்பெரும்பேற்றைப் பெற்றிருக்கும் திலகவதியா தன் வாணாளை வீணுக்கத் துணிவள்? மண்ணாசை பொன்னாசைகளில் உழலாத நெஞ்சு பக்திவெள்ளத்தால் நிறைந்தது; பேரின்பப் பெருநிலை அடையத் துடிதுடித்தது; தெய்வப்பேரருளை நாடியது. மனமுவந்து தன் தந்தையின் பூசைக்கு வேண்டிய ஒத்தாசை புரிவதே தன் வாழ்வின் கடன் என்பதை உணர்ந்தே உழைத்தாள் அருட்செல்வி. திருமண வாழ்க்கையை விழையவில்லை அவள் தெய்வநாட்டமுள்ள மனம்.

இந்த அருட்செல்வியை இரத்தினம் என்று பெயரிட்டு அழைத்தனர். இந்த மணிப்பெயரை இக்குழந்தைக்கு இட்டவர் திருமதி பாப்பாத்தி அம்மாளின் தாயார். இந்தப் பெண்மணி ஊராரின் அன்பையே தன் அருப்பணிகளால் கவர்ந்து அருள்சோதி இரத்தினமாக ஜ்வலித்து விளங்கினாள். தன் தாய்தந்தையரின் இன்னுயிராகவும் வளர்ந்தாள். தெய்வ அருள்சுரக்கும் அப்பாவுக்கு மனமுவந்து சேவைசெய்த அருட்செல்வி அம்மாவுக்கும் வேண்டிய வீட்டு உதவிகளை ஆர்வத்தோடு செய்துவந்தாள். அம்மாவின் அரும்பணிகளைப் பெரும்பாலும் சாமிகளுக்கு வேண்டுவன செய்வதிலும் வருவிருந்தினரை மனமார உபசரிப்பதுமே. இந்தத்தாய்த் தொண்டிலும் தனக்கும் பங்குண்டு என்பதை உணர்ந்து விரும்பி உவகையோடு பணியாற்றினாள் இரத்தினம்மாள்.

இரத்தினம்மாள் அவர்களின் அன்பு ஈடு இணையற்றது; ஊரிலுள்ள குழந்தைகளெல்லாம் இரத்தினம்மாள் குழந்தைகள்: ஊரிலுள்ள தாய்மாரெல்லாம் இரத்தினம்மாள் தாயார்கள். அவ்வளவு நெருக்கமாக அன்பொழுகப் பழகிவந்தாள் இரத்தினம்மாள். சாமிகளின் தந்தை திரு. ஆறுமுகம்பிள்ளை மிருக வைத்தியத்தில் கெட்டிக்காரர்: ஆறுமுகம்பிள்ளையிடம் நாள்தோறும் ஊர்மக்கள் மிருக வைத்தியத்திற்கு அவர் அனுபவமிக்க உதவியை நாடுவதுண்டு. தன்பாட்டனர் திரு. ஆறுமுகம்பிள்ளை மிருகவைத்திய அறிவும் திருமதி இரத்தினம்மாளிடம் கூடியிருந்தது ஊருக்கும் ஊரில்இருக்கும் மிருகங்களுக்கும் நன்மையளித்து ஊரிடம் அவள் கொண்டுள்ள உறவை விரிவாக்கியது. இப்படி ஊருடன் கூடிக் குழைந்து உறவாடிய அருட்செல்வி இறைவன் திருநிழல் அடைந்த நாள் ஊரே கதறி அழுததில் ஆச்சரியமென்ன இருக்கின்றது. இத்தகைய அருங்குணவல்லியைப் பற்றிச் சாமிகளை நான் கேட்ட போது அவர்கள் உள்ளமே பேசியது.

சாமிகள்: "அன்பே உருவானபெண் இரத்தினம்மாள். அன்பையே செயலாற்றினள். நான் எதை நினைப்பேனே அதையே செய்து முடிப்பள். என் வேட்டித் துணிமணிகளைத் துவைப்பள். என் கூடத்தான் சாப்பிடும்."

பெற்றேர்களின் அருஞ்செல்வமாக வளர்ந்த பூங்கோதை இவ்வுலகிலிருந்து மறைந்த துயரத்தை அல்லவா சாமிகளின் சொற்கள் காட்டுகின்றன. சாமிகளுக்கு இன்னும் பணிசெய்ய எவ்வளவோ பக்தர்கள் காத்துக் கொண்டிருக்கின்றனர். சாமிகளின் வேட்டித் துணிமணிகளைத் துவைத்து உலர்த்தி மடித்துப் பாங்குடன் வைக்கக்கூடிய மனேபக்குவமிகுந்த நெருங்கிய சீடர்களும் உண்டு. அவரோடு அன்போடு அமர்ந்து சாப்பிட அருட்செல்வ நேயர்களும் உண்டு. ஆனல் தன் தொண்டால் தந்தையையும் தன்னையுமே மகிழச்செய்த கன்னி மகள்தான் இன்றில்லை. அதை நினைக்கும்போது சாமிகளுக்குமட்டுமா, நமக்கே துக்கம் தொண்டையை அடைக்கச்செய்கின்றது. நாங்கள் திருமதி இரத்தினம்மாளைப் பற்றிச் சாமிகளைக் கேட்டநாள் மத்தியானம் சுவாமிகளோடு சாப்பாட்டிற்கு அமர்ந்தநேரம். சாமிகள் தன் அருட்செல்வி மகளைப்பற்றி அன்று காலை கூறியமொழிகள் எங்கள் மனக்காதுகளில் ஒலிக்க ஆரம்பித்தன. "அன்பே உருவான பெண் இரத்தினம்மாள். அன்பையே செயலாற்றியவள். நான் எது நினைப்பேனே அதையே செய்து முடிப்பள். என்கூடத்தான் சாப்பிடும்"— ஆம், இன்று ஆசைத் தந்தையோடு கூடஉட்கார்ந்து சாப்பிட அருட்செல்வி இல்லை. மேதினிவாழ்வில் அலுப்புற்றே கைலை வாழ்விற்குப் பறந்துசென்று

விட்டது அருட்கிளி, இரத்தினம்மாள்! மறையும் காசினி வாழ்க்கையைவிட்டு மாருத சுவைநிலைக்கும் பரலோக வாழ்க்கையை அடைந்துவிட்டாள் மங்கையர்க்கரசி. இருந்தாலும், தன் அன்பெலாம், பக்தியெலாம், பணியெல்லாம் தந்தைக்கே ஆக்கி வாழ்ந்து வந்த அவளது பாசஉள்ளம் எப்படித்தான் தன் ஒப்பற்ற அருள் தந்தையை உலகில் விட்டுப்பிரியத் துணிவு கொண்டதோ?

"போது மென்ற மனது வைத்து
　　பூரித்துலகில் கன்னியு மாய்
சூதும் வாதும் சிறிதறியா
　　செல்வ அறத்தை வளர்த்திட்டோய்!
மாது இரத்தினம்! மங்கை மணி!
　　மேதினி அலுத்தே மறைந்தனையோ!
சாது தந்தை பன்றிமலை
　　சாமியை விடவும் துணிந்தாயோ?

காசினி வாழ்க்கை மறைவ தென்றே
　　கைலை வாழ்க்கை சேர்ந்தனையோ
பூசிடும் திருநீறருள் சுரக்கும்
　　புனிதத் தந்தைக் குதவியுமாய்
பூசையும் பணியும் மேற் கொண்டோய்
　　பறந்தனை சுவர்க்கம் சுவைகண்டே
மாசிலா மணியே! அருட்கிளியே!
　　மங்கையர்க்கரசி! இரத்தினமே!

கருணை மழையாய்க் குவலயத்தில்
　　களிப்பை அளிக்கும் குணவான் தன்
விருப்பை உணர்ந்து அனுதினமும்
　　உதவி பூஜை பலன் கண்டு
கருத்தை முருகன் நேயமதில்
　　குவித்தே உயர்ந்த நெறி கண்டோய்!
திருவாய் வளர்ந்த இரத்தினமே!
　　தேவியே சொர்க்கம் அடைந்தனையோ!

பன்றிமா மலையில் பிறந்திட்டாய்
பன்றிமா மலையில் வளர்ந்திட்டாய்
பன்றிமா மலையின் திருச்செல்வி
பன்றிமாமலையை விட்டதென்ன!
குன்றம் ஆடும் குமரன் தந்தை
கைலை வெள்ளியங்கிரி நோக்கி
தென்றல் காற்றாய் பறந்தனையோ
தேவியே அன்பே இரத்தினமே!

எல்லாப் பிழையும் செய்தலுத்தே
ஏங்கித் தவிக்கும் இவ்வுலகில்
நல்லார் நெடுநாள் வாழ்வதில்லை
நலிவது மில்லை பறந்திடுவர்
பொல்லா வாழ்வை விட்டு விட்டே
பறந்தே சுவர்க்கம் அடைந்திடுவர்
சொல்லால் செயலால் தந்தையையே
சுவைக்கச் செய்தோய் பறந்தனையோ!

எண்ணி எண்ணி ஏங்கிமனம்
இளைத்தே வாடும் இவ்வுலகில்
எண்ணி எண்ணி ஈசனடி
இறை இன்பத்தில் ஆழ்ந்து விட்டாய்!
எண்ணி எண்ணித் தன் மனத்தை
இறைவன் தனக்கே உவந்தளித்த
வண்ண எண்ணத் தெழில் தந்தை
வாழ்விலுதித்த இரத்தினமே!

கற்றவர் போற்றும் இரத்தினமே!
குவலயம் தொழுதிடும் இரத்தினமே!
நற்றவர் மகிழும் இரத்தினமே!
நல்லவர் புகழும் இரத்தினமே!
உற்றார் உவக்கும் இரத்தினமே!
ஊரார் ஏத்தும் இரத்தினமே!
பற்று நிலையில் உன் தந்தை
பெரிதும் திளைக்கும் இரத்தினமே!

இரத்தினச் சுருக்கம் உம்மொழிகள்
இரத்தின மதிப்பு நின் எழிலும்
இரத்தினச் செல்வம் நின் தவமும்
இரத்தின விளைவே நின் நிறைவும்
இரத்தின நிறையே உன் வாழ்வும்
இரத்தின மணியே இல்லழகும்
இரத்தின சுடரே நின் குணமும்
இரத்தின பெயரே நின் நாமம்.

நற்ருய் தந்தைப் பதமலரை
நாளும் போற்றி வளர்ந்து வந்தாய்
உற்ருர் உறவினர் ஊருக்கே
விளக்காய் மருந்தாய் உதவி வந்தாய்
வற்ருச்சுனைபோல் பக்தியினுல்
உலகம் ஏத்தப் பணிபுரிந்தாய்
நற்ருள் உன்றன் பதமலரை
நாடும் எங்கள் குறை தீர்ப்பாய்!

இன்று இந்த அருட்செல்வியின் அருள் நினைவை ஞாபகப் படுத்திக் கொண்டிருப்பது சாமிகள் திண்டுக்கல்லில் குடிகொண்டு விளங்கும் திருஇல்லத்தின் விலாசமாகிய "இராஜ இரத்தினம்" எனும் திருப்பெயர். இன்றும் இந்தத் தெய்வமகளின் தெய்வீக ஆற்றலை அறிவித்துக் கொண்டிருப்பது பன்றிமலையில் அவர் பூத உடல்மீது எழுப்பியுள்ள திருக்கோயிலுமாகும். இன்றும் இந்த இரத்தின அம்மையின் தனிப்பெருங் கருணையையும் கடாக்ஷத்தையும் இளம்பெண்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருப்பது பம்பாயில் இரங்க இராவ் அவர்கள் முயற்சியால் ஏற்பாடாகியுள்ள இரத் தினம்மாள் திருஉருவ வழிபாடு. இந்தத் திருஉருவ வழிபாடு எப்படி ஏற்பாடாகியது என்பதைக் கேட்க மிகவும் வியப்பாக இருக்கின்றது. 1956ம் ஆண்டில் தைப்பொங்கலன்று சாமிகளும், அம்மாவும், சாமிகளின் சீடரான திரு. P. K. இரங்க இராவ் அவர் களும் இரத்தினம்மாள் கோயிலில் பூஜையில் பங்கெடுத்துக்கொண் டிருந்தனர். திடீரென்று இராவ் அவர்களின் பின்னுல் ஒரு ஆள் நிற்பதுபோல் இருந்தது. 'நான்தானப்பா' என்ற குரலும் உடன் எழுந்தது. ஒருவேளை சாமிகளின் திருச்செல்வன் இராஜாவாக இருக்குமென்று இராவ் அவர்கள் நினைத்தார். "நான் இராஜா இல்லை. நான்தான் இரத்தினம்" என்று கணீரென்று ஒலித்தது

ஓர் தெய்வக்குரல். அவர் மனத்தில் எண்ணியதை அப்படியே உரைத்தது! திடுக்கிட்டுத் திரும்பினார் இராவ் அவர்கள். பார்ப்பது நினைவா, கனவா என்று மதிமயங்கினார். தன்முன் இரத்தினம்மாள் காட்சி அளிக்கின்றாள். இடுப்புக்குமேல் தோன்றும் தெய்வீகக் காட்சியில் இரத்தினம்மாளின் அருட்சுவை மாறாத கன்னிவடிவும் பேரன்பு பொழியும் தெய்வீக முகமும் கண்டு கண்டு உளமகிழ்ந்தார். இந்த அற்புதத் திருக்காட்சியோடு இத்தெய்வ வடிவு திருவாய் மலர்ந்தருளிய திருமொழிகளும் அவர் உள்ளத்தை ஈர்த்தன. "நீங்கள் என் அப்பாவுக்கு வேண்டியவர். அதனால்தான் நான் உங்கள்முன் தோன்றினேன். இளம்பெண்கள் குறைதீர்த்தருளச் சித்தம் கொண்டுள்ளேன். என்னை நினைத்துப் பூஜை செய்யுங்கள். இளம்பெண்கள் இடரெல்லாம் தீர்த்தருளுவேன்" என்ற திருமொழிகளோடு இந்தத் தெய்வஉருவம் மறைந்துவிட்டது. கண்டது யாவும் உண்மை என்பதை ஊர்ஜிதம் செய்வதுபோன்று அம்மா அவர்கள், "இரத்தினம்மாள் பூதஉடல்தான் மறைந்தது அவள் இன்றும் உயிரோடு இருக்கின்றாள்" என்று சந்தேகமற விளக்கினர். சாமிகளிடமிருந்து பெற்றுக்கொண்ட இரத்தினம்மாள் திருஉருவப்படத்திற்கு இராவ் அவர்கள் அனுதினமும் பம்பாயில் பூஜை நடத்தி வருகின்றார். அதனால் முப்பது வயதிற்குட்பட்ட எல்லாப் பெண்மணிகளுக்கும் நலன்கள் கூடுவதையும் விளக்கினார். திரு. இராவ் அவர்கள் கூறுவதையே கேளுங்கள்.

இராவ்: முப்பது வயதுக்குட்பட்ட பெண்களுக்கு வேண்டியவற்றைத் தெய்வீக நிலையிலுள்ள இரத்தினம்மாள் அருள்கொண்டே நடத்திவைக்கின்றேன். பெண்களுக்குக் கல்யாணமாவதற்கும் கல்யாணமான மங்கைகள் குழந்தைப் பேறு அடைவதற்கும் கன்னித் தெய்வம் இரத்தினம்மாளின் அருள் கிட்டுகின்றது. நான் தியானம் செய்யும்போது இரத்தினம்மாள் தெய்வ வடிவைக்கண்டு மகிழ்கின்றேன். இதைத் தவிர நமது குருநாதன் அருளால் நான் பலருடைய குறைகளைத் தீர்த்தும் வருகின்றேன். என்னிடம் நமது குருநாதன் ஒரு யோகதண்டு அளித்திருக்கின்றார். அதன் அருள் சக்தி பல பக்தர்களுக்குப் பயனளித்து வருகின்றது. முப்பது வயதுக்குட்பட்ட இளம்பெண்களுக்கு இரத்தினம்மாள் அருள்பாலிக்கின்றார். மற்றவர்களுக்கு நமது குருநாதன் அருள்பாலிக்கின்றார். இவர்கள் இருவருடைய திருப்படங்களைப் பூஜை செய்துவரும் என் இருப்பிடம் சாமிகள் பக்தர்களின் திருக்கோயிலாக விளங்குகின்றது"

**முப்பது வயதில் இவ்வுலகில் பூதஉடலை நீத்த இரத்தினம்மாள் அருள்ஜோதி இரத்தினமாக இன்றும் விளங்குவது இளமங்கையரின் பாக்கியம்.**

பொற்கொடி இரத்தினம்மாள் இன்று தெய்வநிலையில் அண்டிய வர்களின் அருள்கொடியாக விளங்குகின்றார். அவர் பூவுலகில் திலகமெனத் திகழ்ந்ததாலல்லவா அவரைத் தெய்வங்கள் இஷ்டப் பட்டு விண்ணுலகிற்கு அழைத்துச் சென்றுவிட்டன போலும். "யாரைத் தெய்வங்கள் விரும்புகின்றனவோ அவர்கள் இளவயதி லேயே இறந்துவிடுகின்றனர்" (Those whom the gods love die young) என்ற ஆங்கில மொழியில் உள்ள ஒரு பழமொழியும் எவ்வளவு உண்மையாக இருக்கின்றது. ஸ்ரீ இரத்தினம்மாளைப் போற்றுகின்ற ஒரு கீதாஞ்சலியைப் படித்துப் பாடி இன்புறுவோம்.

ஓம்சக்தி

பெட்டி நிறையப் பூக்கொணர்ந்து பூஜிப்பேனம்மா
பூசுரர்கள் போற்றும் பொற்கொடி இரத்தினம்மா
புவனேஸ்வரி — நான் (பெட்டி)

மல்லிகை முல்லை மருவுடன் தாழை மகிழம்பூ பாதிரியும்
அல்லி அரளி கதிர்பச்சை தவளம் அழகுள்ள பாரிஜாதம்
பன்றிமலை சாமியுடன் சக்தி நாம் பக்தியுடன் பாடிட (பெட்டி)

இஷ்டமுடனே பல புஷ்பங்கள் கொணர்ந்து உம்மை
அஷ்டோத்திரம் செய்வேன்
கஷ்டங்கள் வராமல் காப்பதுன்கடமை கருணாசாகரியே
ஸ்ரீகரியே, அபாகரியே, பிரபாகரியே, கிருபாகரியே (பெட்டி)

சம்பங்கி ரோஜா சாஜித மலரால் ஸகஸ்ரார்ச்சனை செய்வேன்
வாணி, சரஸ்வதி, வந்தெம்மை ஆதரி வாசமகோசரியே
ஈஸ்வரியே. ஜகதீஸ்வரியே, திரிபுரேஸ்வரியே, ராஜேஸ்வரியே
(பெட்டி)

பக்ஷமுடனே பல பரிமள பொடியினால் லக்ஷார்ச்சனை செய்வேன்
அக்ஷய சம்பத்துடன் அனுகிரகம் செய்தெம்மை
ஆதரித்திடுவாயே
ஏகாக்ஷரியே, திரியாக்ஷரியே, பஞ்சாட்க்ஷரியே, ஷடாக்ஷரியே
(பெட்டி)

சுபம்

## கன்னிவாடி ஜமீனில் இராமசாமிப் பிள்ளை

" மிகுதியால் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியால் வென்றுவிடல் "

இராமசாமிப் பிள்ளையின் புகழ் பன்றிமலையிலும், அக்கம்பக்கம் ஊர்களிலும் பரவி இருந்தது. இராமசாமிப் பிள்ளை நல்ல குலத்தில் நல்ல குடும்பத்தில் நல்ல குணவானுக்கு வாய்த்த நல்ல பிள்ளை என்ற நல்ல பெயரெடுத்தார். அவர் சீரிய குணங்களும் நல்லொழுக்கமும் நேர்மையும் திறனும் அவருடன் பழகியவர்களுக்கு நன்ருகத் தெரியும். ஆனுல் தன் ஊரிலும் அருகாமையில் உள்ள ஊர்களிலும் இராமசாமி பிள்ளையை ஓர் அபூர்வ சக்திமானென்றே மக்கள் கொண்டாடினர். திரு கே. சசிசேகர அய்யர் அவர்கள் கன்னிவாடி ஜமீன்தார் அவர்களின் சிறிய சகோதரர். அவரே ஜமீனில் மானேஜர். இராமசாமிப் யின் சக்தியும் நேர்மையும், பக்தியும் புத்தியும் கண்டு வியந்த மானேஜர் இத்தகைய சக்திமானைத் தம் ஜமீனில் வைத்துக் கொள்ளவேண்டும் என்று ஆசைப்பட்டு ஜமீனில் கணக்குப்பிள்ளை வேலையை இராமசாமிப் பிள்ளைக்குக் கொடுத்தார்.

கன்னிவாடிஜமீனில் கணக்கராக வேலையில் சேர்ந்த இராமசாமிப் பிள்ளை தன் முயற்சியாலும் உழைப்பாலும் நேர்மையாலும் குணத்தாலும் கூடிய சீக்கிரத்திலேயே வசூல்தார் பதவிக்கு உயர்ந்து விட்டார். பதவி உயர்வு தன் சொந்தத் தகுதியில் ஏற்பட்ட உயர்வாகும். இவருடைய சுறுசுறுப்புத்தன்மையும் யாவரிடமும் இங்கிதமாகப் பழகும் இளிமையும் மனச்சோர்வின்றிச் செயலாற்றும் திறனும் ஜமீன் வசூலில் இவருக்கு முதலிடம் தேடிக் கொடுத்தன. நல்லவர்களுக்குத்தான் சோதனைகள் ஏற்படுமே. நல்ல வசூல்தாரர் ஜமீன் அதிகாரிகளில் ஒருவர் ஏமாந்தவர்களை ஏய்த்து வருவதில் சமர்த்தன். இதை நன்கறிந்திருந்த இராமசாமிப்பிள்ளை இவரிடம் முன் ஜாக்கிரதையாகவே நடந்துகொண்டார். தான் கஜானுவில் இந்தப் பேர்வழி இருக்கும்போது பணம் கட்டும்போதெல்லாம் .தான் கொடுத்த நோட்டுக்களின் எண்களைத் தனிப்புத்தகமொன்றில்குறித்துவைத்துக் கொள்வார். தான் எதிர்பார்த்தபடியே இந்தக் குறிப்புப் புத்தகம் உதவக்கூடிய சந்தர்ப்பமும் வாய்த்தது. ஒருநாள் இராமசாமிப் பிள்ளை கட்டிய தொகையில் செல்லாத நூறு ரூபாய் நோட்டு ஒன்று இருந்ததாக இந்த அதிகாரி புகார் செய்தான். தான் கஜானுவில் பணம் கட்டும்போது எவ்வித மறுப்பும் இன்றி நோட்டுக்களை வாங்கிக் கொண்ட அதிகாரி காலங்கடந்து புகார் செய்தது அதிகாரியின் குற்றமல்லவா. அதுமட்டுமல்ல! துணிந்தே பொய்யுரைக்கின்ருன் அவன் வழக்கப்படி. இதை எடுத்துக்காட்ட இராமசாமிப் பிள்ளை குறிப்புப் புத்தகம் உதவியது. தான் தொகை கட்டிய தினம்,

ஒரே ஒரு நூறு ரூபாய் நோட்டுதான் கட்டினர். அந்த நோட்டின் நம்பரும் அவர் குறிப்புப் புத்தகத்தில் பதிந்திருந்தார். கஜானுவில் உள்ள நோட்டுகளைப்பரிசோதனை செய்யும்போது அதே எண்ணுள்ள நூறு ரூபாய் நோட்டு இருந்ததைக் கண்ட மேலதிகாரி காஷியர் அயோக்கியத்தனத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறிந்து கொண்டனர். முறைதவறி நடந்து கொள்ளும் வம்பர்களையும் பொய்யர்களையும் இராமசாமிப் பிள்ளை மனம் வைத்தால் தன் சக்தியைக்கொண்டு ஆட்டி வைக்கவும் முடியும் என்பதையும் ஜமீன் மானேஜர் ஜமீன் அலுவலகத்தில் உள்ளோர்களுக்குச் சொல்லி எச்சரித்தார். அன்றிலிருந்து காஷியரும் ஜமீனில் உள்ள மற்ற சிப்பந்திகளும் இராமசாமிப் பிள்ளையிடம் மிகுந்த மரியாதையோடும் பயபக்தியோடும் நடந்துகொண்டனர். பண வசூலிப்பிலும் சுறுசுறுப்பும் விடாமுயற்சியும்கொண்டொழுகும் இராமசாமிப்பிள்ளை மற்றவசூல் தாரர்களைவிட பொக்கிஷத்திற்கு பெருந் தொகைகளை வசூலித்து கட்டுவது மற்ற வசூல்தாரர்களின் பொருமையைத் தூண்டிவிடும். சில சமயங்களில் இவர்களுடைய கபட உள்ளத்தை அறிந்த இராமசாமிப் பிள்ளை, தான் வசூல் செய்த தொகையைக் குறைத்தே சொல்வார். வசூலான தொகை கட்டும் சமயங்களில் இராமசாமிப் பிள்ளையின் மனம் வசூலானபைகள் பணத்தால் நிறைந்தபோன்று மகிழ்ச்சியால் நிறைந்து நிற்க, மற்ற வசூல்தார்களின் உள்ளங்களும் முகங்களும் அவர்கள் கொண்டுவரும் நிறையாத பணப்பைகள் போன்று சுருங்கி வாட்ட முற்றிருக்கும். இராமசாமிப்பிள்ளை வேலையைத் திறம்படச் செம்மையாகச் செய்வது சிலருக்கு வயிற்றெரிச்சலைக் கிளப்பிவிடும்; ஆனல் சத்திய சீலனுகவும் நேர்மையாளனுகவும் சுறுசுறுப்பாளனுகவும் உள்ள தெய்வபக்தியும் சக்தியும் அமைந்த இராமசாமிப் பிள்ளையிடம் அவர்களால் போட்டிபோட சத்தியமும் சீலமும் நேர்மையும் சுறுசுறுப்பும் இராமசாமிப் பிள்ளையிடம் அமைந்ததுபோல் அவர்களிடம் கிடையாது. இராமசாமிப் பிள்ளைக்குத் தொந்தரவு கொடுக்கவும் இடுக்கண் விளைவிக்கவும் அவர்களிடம் அவ்வளவு தைரியமும் சக்தியும் கிடையாது. இராமசாமிப் பிள்ளை வசூல் மும்முரத்தை நகண்ட ஜமீன் அவரைவசூல்தாரர்களுக்கெல்லாம் அதிகாரியாக்கி விட்டது. இராமசாமிப் பிள்ளை ரெவன்யூ இன்ஸ்பெக்டராகப் பதவி உயர்வு பெற்ருர். பன்றிமலை அரசாங்கக் கணக்கப்பிள்ளை ஓய்வுபெற்றிருக்கும் சமயங்களிலும் கிராம கணக்கீடு வேலையையும் இராமசாமிப் பிள்ளையே கவனித்து வரவேண்டிய பொறுப்பையும் அரசாங்கம் இவரிடமே ஒப்புவித்தது.

கன்னிவாடி ஜமீனில் இராமசாமிப் பிள்ளை எவ்வளவு கெட்டிக்காரத்தனமாகப் பணவசூல் செய்தார் என்பதைக் கவனிக்கும்போது அவர் ஒருசமயம் நடத்திக்காட்டிய மதியின் விநோத நாடகத்தை

நம்மால் மறக்கவே முடியாது. வாய்தா வசூல் மும்முரமாக நடத்திய தின் பயனாக ஒரே ஒரு நாளில் மட்டும் ரூபாய் பதினான்கு ஆயிரம் சேர்ந்தது. இந்தப் பெருந்தொகையை இராமசாமிப்பிள்ளை கஜானா வில் கட்டிய விதம்தான் விந்தையினும் விந்தையாக இருக்கின்றது. பிள்ளை அவர்களின் புத்திசாலித்தனத்தையும், சமயத்தில் அவர்கள் காலம் இடம் பொருள்களுக்குத் தகுந்தாற்போல் நடித்துக் காரியத்தை சாதித்துக் கொள்ளும் அறிவுக் கூர்மையும் கண்டிருக்கின்றோம். இப் பெருந்தொகையை உரிய இடத்திற்கு அரிய செயலாற்றிச் சேர்ப்பித்த விதத்தில் அன்று ஒரு டைரக்டராகவே அமைந்து விட்டார். ஒரு நாடகத்திலோ அல்லது சினிமாவிலோ பாகம் ஏற்றுக் கொள்பவர்களை திறம்பட நடிக்க வைப்பதற்கு இன்றியமையாதவர் டைரக்டர்கள். நடிப்பையே உண்மையான நடப்பு என்று பார்ப்பவர்கள் நம்பும்படிச் செய்வதில் இவர்கள் நிபுணர்கள். இவர்களுடைய செயல்களையும் மிஞ்சக்கூடிய அளவில் இராமசாமிப்பிள்ளை வசூல் செய்த பணத்தை உரிய இடத்தில் சேர்த்த செயல் விளங்கும்.

ஒரே ஒருநாளில் ரூபாய் பதினான்காயிரம் வசூலாகிவிட்டது. அதை அடுத்தநாளில் ஜமீனில் செலுத்திவிட வேண்டும். வழியில் வழிப்பறிக்கொள்ளை ஆகக்கூடிய சூழ்நிலைகள் நிறைய உண்டு. பலபக்கங்களில் திருடி வயிறுவளர்த்து வந்த கைதிகள் மலையில் பலபாகங்களில் தங்கியிருந்தனர். இந்தக் கொள்ளைக் கூட்டம் வழிமறித்துத் தாக்கலாம் என்பதையும் இராமசாமிப்பிள்ளை அறிந்திருந்தார். தானே இப்பெருந்தொகையை எடுத்துச் சென்று தனக்கும் நிதிக்கும் ஒரு கெடுதலும் வராமல் ஜமீனில் செலுத்தித் திரும்பி வரக்கூடிய தெய்வீகசக்தி இராமசாமிப்பிள்ளையிடம் உண்டு. இருந்தாலும் இதற்காகவா தன் ஆத்மபலத்தைப் பயன் படுத்துவது. இந்தக் கொள்ளைக் கும்பலைத் தன்மதியாலேயே ஏமாற்ற முடிவு கட்டிக் கொண்டார். ''மதி முக்கால் மந்திரம் கால்'' என்று சாமி கள் அடிக்கடி உரைப்பார். அதன்படியே பணத்தை அடுத்த ஊரில் சேர்ப்பிக்கத் தன் மதியை நம்பி ஒரு திட்டம் போட்டார். நம்பிக் கைக்குத் தகுந்த தன் பணியாள் மருதமுத்து என்பவனின் இடுப் பில் இப்பெருந் தொகையைப் பத்திரமாகக் கட்டினார். அவன் கையில் ஒரு பெரிய தடியைக் கொடுத்தார். அவன் காதில் சில வார்த்தைகளை இரகசியமாக மொழிந்தார். பணத்தை இடுப்பில் கட்டிச்செல்லும் பணியாள் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டுச் செல்லும் பயந்தாங்கொள்ளியல்ல, மனத்தில் அசைக்க முடியாத தைரியத்தைக் கட்டிப் பறக்கின்ற வைராக்கியவான். அப்படி இருக்க இராமசாமிப்பிள்ளையின் அஞ்சா நெஞ்சத்து மொழிகளும் செயலும் உதவின. 'அவர் இருக்க அச்சமேன்' என்று பணத்தை இடுப்பில் கட்டிக்கொண்டவன் பயணம் கட்டினான். ஓட்டமும் நடையுமாகப்

பாய்ந்து செல்பவனை வழியில் எதிர்பார்த்தபடி கொள்ளைக் கூட்டத்தினர் மறித்தனர். அஞ்சா நெஞ்சினன் உடனே இராமசாமிப் பிள்ளை சொல்லிக் கொடுத்த பாடத்தை அப்படியே ஒப்பித்தான், அவன் நடந்து கொள்ளும் விதமும் சந்தேகத்தை எழுப்பவில்லை. "அய்யா நான் பன்றிமலைத்தோட்டி. எங்க கிராமத்தில் ஒரு பெரிய சாவு. அடுத்த ஊரிலுள்ள உறமுறையாருக்குச் சொல்லிவரப் போறேன். கொஞ்சம் வழிவிடுங்கள்" என்று கெஞ்சினன். கொஞ்சமென்ன, வழியில் குறுக்கே ஒருவரும் நிற்கவில்லை. கொள்ளைக் கூட்டத்தினர் கண்களில் சொக்குப்பொடியாக நடிப்புப் பொடியைத் தூவிவிட்டு அவர்களை ஏமாற்றிப் பறந்தோடினன் பணியாள். சிட்டாய்ப் பறந்தவனும் சேரவேண்டிய ஊருக்குப் பத்திரமாய்ப் போய்ச்சேர்ந்தான்; கட்டாய் இடுப்பில் இணைத்திருந்த செல்வமும் சேரவேண்டிய இடத்திற்குப் பத்திரமாய்ப் போய்ச் சேர்ந்தது. இப்படி ஒரு கபட நாடகத்தையே நடிக்கச் செய்து, பணியாள் சொல்லிலும் செயலிலும் ஒருவித சந்தேகமும் சொள்ளமுடியாதபடி அவனுக்கு வேடமிட்டு நடந்து கொள்ளவேண்டிய பக்குவமும் சொல்லிக் கொடுத்து, பெருங் கொள்ளைக் கூட்டத்தினரை ஏமாற்றி வெற்றி கண்ட டைரக்டர் இராமசாமிபிள்ளையின் நுண்ணறிவை என்னென்று இயம்புவது. அனுப்பிய ஆள் செவியில் சாமிகள் மந்திரமே ஓதி அனுப்பியிருக்கலாம், ஆனல் ஒரு தந்திரத்தைத்தான் சொல்லி அனுப்பினர்.

கன்னிவாடி ஆபிஸில்வேலைபார்த்து வந்த இராமசாமிப் பிள்ளை அந்த வேலைக்குத் தகுதியானவர் என்பதை அவர் செயல்களே விளக்கவில்லையா? சொல்லாற்றல் செயலாற்றல் இருந்தால் மட்டும் ஒரு வேலையைத் திறம்பட செய்தல் எளிய காரியமன்று. இவையோடு அறிவாற்றலும் வேண்டும். தன்னை ஏமாற்றக் காத்துக்கொண்டிருப்பவரை ஏமாற்றக்கூடிய புத்திக்கூர்மைவேண்டும். இந்த புத்திக் கூர்மையைப் பயன்படவைக்கும் பொறுமையும் உழைப்பும், நேர்மையும் கண்ணியமும் வேண்டும். ஜமீன் அதிகாரி தன்னை ஏமாற்ற இருந்ததை முன்கூட்டியே தற்காப்பிற்கு தானே தயாராக்கி இருந்த நோட் புத்தகமல்லவா இராமசாமிப் பிள்ளைக்கு உதவியது. பெரும் வசூலைக் கொள்ளையடிக்க இருந்த கயவர் கூட்டத்தை இராமசாமிப் பிள்ளையின் மதி நுட்பமல்லவா ஒரு பொய்யையே சொல்லி ஏமாறவைத்தது. ஜமீன் அதிகாரியும் கொள்ளைக் கூட்டத்தாரும் வள்ளுவர் வகுத்துள்ள "மிகுதியால் மிக்கவை செய்வோர்" கூட்டத்தைச் சேர்ந்தவர். 'அவர்களையெல்லாம் தன்னுடைய தகுதியாலும் அத் தகுதியின் காரணமாக வருகின்ற அறிவாற்றலாலும், சொல்லாற்றல் புரிந்து செயலாற்றல் புரிந்து இராமசாமிப்பிள்ளை தன் காரியங்களில் வெற்றி கண்டுவிட்டார்.



எழில்வளம் கொழிக்கும் மகாபலிபுரத்தில் உள்ள
செயற்கை யானையோடு சாமிகள்
(பக்கம் — 397)



**இயற்கை யானையோடு திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள்**

இன்றே இவர் எங்கள் நாதன்—எங்கள்
இதயத்தின் கமலத்தில் ஊன்றிடும் பாதன்
நன்றே அருள்அநு கூலன்—எங்கள்
நன்மைக்கு வாய்த்திட்ட நல்லருள் சீலன்

(திரு. T. D. மீனாட்சிசுந்தரம்)

“மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியால் வென்றுவிடல்”

என்ற கூற்றுக்கே விளக்கம் கொடுத்துவிட்டது இவர் சொற்கள்.

கன்னிவாடி ஜமீனில் இராமசாமிப் பிள்ளை வேலை செய்யும் போது அவருடைய தீவிர உழைப்பு, செயல் திறம், நேர்மை ஒழுக்கம், உயர்ந்த பண்பு ஆகியன அங்கு அவரோடு உழைத்த நல்லவர்களில் பலரை இராமசாமிப் பிள்ளையிடம் நெருங்கியவர்களாக்கி விட்டன. ஜமீன் கிளார்க் திரு. T. M. ஆறுமுகம் பிள்ளை இராமசாமிப் பிள்ளைக்கு அவர் வேலைக்கு வேண்டிய உதவிகள் புரியத் தவறிய தில்லை. சாமிகளின் திறமையைக் கண்ட ஜமீன் இராமசாமிப் பிள்ளைக்கு ஆடலூர் என்கிற மற்றோர் ஊரையும் சேர்த்துக் கொடுத்து ரெவின்யூ இன்ஸ்பெக்டர் பதவியை அளித்தனர்· வேலை அதிகமானாலும் இராமசாமிப் பிள்ளையின் செயலாற்றும் திறனிலும் ஆர்வத்திலும் கொஞ்சம்கூடக் குறைவில்லை. இராமசாமிப் பிள்ளை வசூல் செய்யும் தொகை அதிகமாகி விட்ட சமயங்களில் அவர் பூர்ண அன்பைக் கவர்ந்திருந்த கன்னிவாடியைச் சேர்ந்த தெத்துப்பட்டி மிராசுதாரும், கர்ணமுமான திரு. T. M. ஷண்முகசுந்தம் பிள்ளை வசூல்தொகையைத் தானே ஜமீனில் செலுத்தி ரசீது அனுப்பி இராமசாமிப்பிள்ளைக்கு உதவி செய்வார். அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ்! மலை அடிவாரத்திற்கு இராமசாமிப்பிள்ளை வரும்போதெல்லாம் தம் சொந்த வில்வண்டியை அனுப்பி உதவுவார். இராமசாமிப்பிள்ளை திண்டுக்கல்லுக்குச் செல்வதா யிருந்தாலும் கார் ஏற்பாடு செய்து உதவுவர். இராமசாமிப் பிள்ளைக்கு உயிர்த் தோழனுக் இருந்தவர் மிராஸ் கர்ணம் திரு. குஞ்சரம் பிள்ளை என்கிற திரு· S. பொன்னுசாமி. கன்னிவாடி யில் தான் வேலையில் இருந்த நாட்களைச் சாமிகள் இப்பொழுது நினைக்கும்போதெல்லாம் அவருடைய அருமைத் தோழர்களை நினைக்காமல் இருக்கமாட்டார். தன்னை அன்போடு பாராட்டிவந்த ஜமீன் மானேஜரையும் நினைக்காமல் இருக்கமாட்டார்.

கன்னிவாடி ஜமீன் சர்வே நடந்த காலங்களில் இராமசாமிப் பிள்ளை தன் சொந்த அனுபவத்தாலும் புள்ளி விவரங்கள் சேகரிப் பாலும் சர்வே அதிகாரிகளுக்கு நிறைந்த திருப்தி அளித்தார். சில சமயங்களில் இராமசாமிப் பிள்ளையின் அருட்பெருக்கும் மேலதிரிகாரிகளுக்குத் தக்க சமயத்தில் உதவியையும், உவகையை யும் அளித்தது. ஒரு சமயம் பன்றிமலை உச்சியில் சர்வே நடந்து கொண்டிருந்தது. திரு. C. R. இரத்திவேலு உடையார் எனும் சர்வே இலாகா மேலதிகாரியின் தலைமையில் வெள்ளா காட்டு மலையை அளந்து கொண்டிருந்தனர். மேலதிகாரிக்குத் தாங்க

முடியாத தாகம். அவருக்குந் தண்ணீர் கொண்டு வர ஆள் அனுப்பி வெகுநேரம் ஆகிவிட்டது. அந்த ஆள் கீழே ஒன்றரை மைல்கள் நடந்து சென்று தண்ணீர் கொண்டுவரவேண்டும். தாங்க முடியாத தாகத்தால் மேலதிகாரி தவிப்பதைக்கண்ட இராமசாமிப் பிள்ளை ஒரு பெரிய கல்லை எடுத்துவந்தார். அவர் அந்தச் சமயத்தில் எதற்காகக் கல்லை எடுத்துவரவேண்டும் என்று மேல் அதிகாரி யோசித்துக்கொண்டிருக்க அந்தக் கல்லை ஓங்கி வீசி அவர் முன் இருந்த ஒரு பாறையில் அடித்தார். அந்த ஒரு கல் சில் சில்லாகத் தெறித்தது. நாலா பக்கங்களிலும் சிதறிவிழுந்த சில வெள்ளைச் சில்லிகளை எடுத்துவந்து மேலதிகாரியிடம் கொடுத்தார். இதென்ன! விளையாட்டா புரிகின்றார் இராமசாமிப்பிள்ளை என்று நினைத்தார் மேலதிகாரி. "இதை வாயில் போட்டுப் பாருங்கள். உங்கள் தாகத்திற்கேற்ற கற்கண்டுத் துண்டுகள்" என்று மகிழ்ச்சி யுடன் கொடுக்கும் இராமசாமியின் கரங்களிலிருந்து சில்லிகளை வாங்கிக்கொண்ட மேலதிகாரி கொஞ்சம் சந்தேகத்தோடேயே ஒரு சில்லியை எடுத்து வாயில் போட்டார். என்ன ஆச்சரியம்! அது கருங்கல் சில்லியே அல்ல. நன்றாகத் தித்திக்கும் வெள்ளைக் கற்கண்டு. பேராச்சரியம் கொண்ட மேலதிகாரிக்கு அப்பொழுது தான் தெரியவந்தது இராமசாமிப்பிள்ளையின் அருளாற்றல். அன்றிலிருந்து அவருக்கு இராமசாமியிடம் ஒரு தனிமதிப்பும் பேரன் பும் ஏற்பட்டுவிட்டது என்று சொல்லவும்வேண்டுமா! திரு. உடையார் அவர்களுக்கு ஒரு நாள் தந்தி ஒன்று வந்தது. "வீட்டில் தங்கள் மனைவிக்கு உடல் நலமில்லை, கவலைக்கிடமாக இருக்கின்றதென்று தந்தி அறிவிக்கின்றதோ" என்று தந்தியிலுள்ள விவரங்களை அப்படியே கூறினார் இராமசாமிப்பிள்ளை. தந்தி தந்த செய்தியால் மனக்கவலை படர்ந்திருந்த மேலதிகாரி முகத்தில் ஆச்சரியம் விளைந்தது. இராமசாமிப்பிள்ளை மேலும் பேசுவது கேட்டு ஆச்சரியம் மிகுந்த முகத்தில் ஆனந்தம் அரும்பியது.

இராமசாமிப்பிள்ளை இதையடுத்து மற்றொரு தந்தி வரப்போகின் றது. அதில் "உங்கள் மனைவிக்கு உடம்பு சௌக்கியமாகிவிட்டது." கவலை வேண்டாம். நீங்கள் புறப்பட்டு வரவேண்டாம் என்று தகவல் அமைந்திருக்கும் என்றார்.

இராமசாமிப்பிள்ளை சொல்லியவாறே நலச்செய்தித் தந்தியும் வந்தது. உடையார் அவர்கள் உள்ளத்தில் தாங்கொணாத மகிழ்ச்சி. இராமாசமிப்பிள்ளையின் அருள் வாக்கைப் போற்றி மகிழ்ந்தார் மேலதிகாரி.

சாமிகள் அருளாற்றலைக் கேள்விப்பட்டிருந்தார் மற்றொரு மேலதிகாரி. அவர் கில்பி என்ற பெயர்தாங்கிய ஒரு வெள்ளைக்காரர்.

அவர் இராமசாமிப்பிள்ளை கல்லைக் கற்கண்டு ஆக்கும் செயலாற்றல் பெற்றவர் என்பதைக் கேள்விப் பட்டிருந்தார். அவர் இராமசாமிப் பிள்ளையிடம் உருவாகியிருந்த அருட் சக்தியினைத் தானே நேரில் பரீட்சிக்க எண்ணினார். "இராமசாமிப் பிள்ளை உங்கள் கையில் உள்ள கல்லை வைத்துக்கொண்டு அதை கல்கண்டு ஆக்குவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை, என்கையில் இருக்கும் இந்தக் கல்லைக் கற்கண்டாக்க வேண்டும்," என்று கூறினர் கில்பி அவர்கள். "அதெப்படி ஆகும் சார்," என்று அவர் சந்தேகத்தை எழுப்பி விட்டு "உங்கள் கையை இப்போது பாருங்கள்" என்றார் இராமசாமிப்பிள்ளை. உண்மையிலேயே அவர் கையில் வைத்திருந்த பெருங்கல் அருங் கற்கண்டாய் மாறிவிட்டது. "பலே, கெட்டிக்காரர்" என்று கில்பி அவர்கள் அந்தக் கற்கண்டை வாயில் போட்டுச் சுவைத்துக் கொண்டே இராமசாமிப்பிள்ளையின் கைகளைக் குலுக்கு குலுக்கென்று குலுக்கிவிட்டார் பேருவகையில்!

இராமசாமிப்பிள்ளை ஜமீனில் வேலை பார்த்துவந்த சமயத்திலும் இறைவனிடம் பூண்டுள்ள தொடர்பை விட்டு விடவில்லை. அவர் உடல் ஜமீன் வேலைகளில் மும்மரமாய் ஈடுபட்டிருக்கும் சந்தர்ப்பங்களிலும்கூட அவர் மனம் முழுமுதல் இறைவனிடம் ஒன்றியே இருந்தது. பன்றிமலை ஊரிலும், மற்றுமுள்ள கிராமங் களிலும் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் இராமசாமிப்பிள்ளை சுற்றிச்சுற்றி வரும்போதுகூட பழநிமலைத் தலத்தையும் திருமுருகன் பாதங் களையும் பக்தன் இராமசாமிப்பிள்ளையின் அருள் மணக்கும் மனம் சுற்றிச் சுற்றி வரும். தெய்வீக அருள் ஊற்றாக வாய்த்த இராமசாமிப்பிள்ளையிடம் தங்கள் பிணிகள் தீரவும் பில்லி சூனியத் தொல்லை அகலவும், விஷக் கடிகள் நீங்கவும், மூளைக்கோளாறு நீங்கவும், காற்று சேட்டைகள் ஓட்டவும் வருகின்றவர் தொகை விரிவடைய ஆரம்பித்தது. ஒருசமயம் இராமசாமிப்பிள்ளையின் தெய்வீக சக்தியை உணர்ந்திருந்த கன்னிவாடி ஜமீன் மானேஜர் அவர்களே இராமசாமிப்பிள்ளையை மதராசுக்கு கன்னிவாடி ஜமீன் தாருக்கு அருள் உதவிபுரிய திரு. T. M ஆறுமுகம்பிள்ளையோடு அனுப்பிவைத்து ஜமீன்தாரின் நன்மதிப்பையும், நன்றியையும் சம்பாதித்துக்கொண்டபோது, இராமசாமிப்பிள்ளை ஜமீன்தாரின் பேரன்பையும் நன்றி விசுவாசத்தையும் பெருமளவில் பெற்றார். இராமசாமிப்பிள்ளை தன் தெய்வீக சக்தியால் ஆற்றிவந்த பொதுப் பணி நாளுக்குநாள் விரிவடைந்து அவருடைய பெருமையையும், புகழையும் ஊர் ஊராகத் திரட்டி வந்தது. இராமசாமிப்பிள்ளை ஒரு சாதாரண மனிதனல்ல, தெய்வ அருள் நிறைந்த உத்தமர் என்ப தோடு மக்கள் நின்றுவிடவில்லை. அருள்பழுத்த இல்லற ஞானியாக ஏற்றுக்கொண்டுவிட்டார்கள். பன்றிமலை பெற்றெடுத்த தவசீலராகவும் கொண்டாட ஆரம்பித்தனர். இராமசாமிப்பிள்ளையைச் சாமிகள்

என்றே கூப்பிடவும் ஆரம்பித்தனர். "என் கடன் பணி செய்துகிடப் பதே" என்பதை உணர்ந்த சாமிகளுக்கு இனிமேல் வேலையில் இருந்துகொண்டு ஜமீனின் தனிப்பணி செய்வதால் தன் அருள்சக்தி கொண்டு செய்யும் பொதுப்பணி பாதிக்கும் என்பதை உணர்ந்தார்.

சாமிகளின் பக்தர் எண்ணிக்கையும், மனப்பிணிக்கும் உடற் பிணிக்கும் அவரை நாடுகின்ற கற்றவர் மற்றவர் எண்ணிக்கையும் அதிகமாகிவிட, சாமிகளின் தாசர்களெல்லாம் சாமிகளுக்குக் கன்னி வாடி ஜமீனில் உள்ள பொறுப்பும் வேலையும் அவசியம்தானு என்பதைச் சாமிகளிடமே துணிந்து கேட்கவும் முற்பட்டனர். இந்தச் சமயத்தில் குடும்பப் பொறுப்பையும், எஸ்டேட் பொறுப்பையும் திறமையுடன் கண்காணித்துவந்த தெய்வப்பற்றும் மக்கள் பற்றும் கொண்டு அன்பொழுக வாழ்க்கை நடத்திய தந்தை ஆறுமுகம் பிள்ளையும் இறைவனடி சேர்ந்தார். இந்தப் பொறுப்புக்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமும் இப்போது இராமசாமிப் பிள்ளைக்கு — சாமிகளுக்கு ஏற்பட்டது. இந்த நிலையில் யாவை யும் நன்கறிந்திருந்த ஜமீன்தாரின் இசைவோடு சாமிகள் கன்னி வாடி ஜமீன் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வேலையை விட்டு விலகும் படி நேர்ந்தது. ஜமீனுக்கு வேலை ஏற்றுக்கொள்ள வந்தபோது பிள்ளையை இராமசாமிப் பிள்ளை யென்றுதான் யாரும் அறிந்தனர்; ஜமீன் வேலையைவிட்டுச் செல்லும்போது இராமசாமிப் பிள்ளையை 'சாமிகள்' என்றே எல்லோரும் போற்றினர். ஜமீனில் வேலை பார்த்துவந்த சமயத்தில் கன்னிவாடி ஜமீன் மானேஜரும் சாமிகளைப் பேரன்புடன் தன் குருவாகவே மதித்துப் பழகிவந்ததும் குறிப்பிடத் தக்கது.

## 20. பன்றிமலை ஊரின் பஞ்சாயத்துத் தலைவர்

" இதனை இதனுன் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து
அதனை அவன்கண் விடல் "

சாமிகள் ஜமீன் வேலையிலிருந்து விலகிக்கொண்டதில் குடும்பத்தாருக்கும் பண்ணையாட்களுக்கும் குடும்பத் தலைவர் தம் சொந்த ஊரிலேயே சொந்த இல்லத்திலேயே இருந்து குடும்பப் பொறுப்பையும் பண்ணைத் தோட்டப் பொறுப்பையும் ஏற்று நடத்துகின்ருர் என்ற மகிழ்ச்சி; பன்றிமலை ஊராருக்குச் சாமிகளுடைய வாசத்தால் ஊருக்கே பேரும் புகழும் ஏற்பட்டு ஊரிலுள்ளோருக் கெல்லாம் பிணிதீர்த்தருளும் ஒரு அருளாளனின் இணைபிரியாத சேர்க்கையே கிட்டிவிட்டதென்ற பெருமை. குடும்ப மகிழ்ச்சிக்கும் ஊரின் பெருமைக்கும் முக்கிய காரணங்களாக விளங்கிய சாமிகளின் அருங்குணங்கள் — கருணை, சாந்தம், பேரருள் எல்லோருடைய உள்ளங்களை முற்றிலும் கவர்ந்து விட்டது.

எந்தெந்தக் காரியங்களை யார்யாரிடத்தில் ஒப்படைத்தால் வெற்றிகரமாகப் பூர்த்தியாகும் என்பது மக்களுக்குத் தெரியும். தன்னலமற்ற சிந்தையும் யாவர்க்கும் உதவிசெய்கின்ற அருளும் வாய்த்திட்ட இறை சிந்தனையாளர் இராமசாமிப் பிள்ளை அவர்களையே பஞ்சாயத்துத் தலைவராக ஏகமனதாகப் பன்றிமலை ஊரார் தேர்ந்தெடுத்ததில் வியப்பு ஒன்றும் இல்லை.

' இதனை இதனுன் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து
அதனை அவன்கண் விடல் '

என்ற பொய்யாமொழிக் கிணங்கத் தலைமைப் பதவி ஒப்புவிக்கப்பட்ட சாமிகள் ஆறு வருடகாலம் திறமையுடனும் ஆர்வத்துடனும் இப்பதவியை வகித்துச் சமூகத் தொண்டாற்றினர். சாமிகள் பஞ்சாயத்தின் தலைவராகப் பணியாற்றிய காலத்தில் பன்றிமலை அடைந்த நன்மைகள் பல. ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகள் பஞ்சாயத்துத் தலைவராகப் பதவி வகித்தது அந்தப் பதவிக்கே ஒரு தனிப் பெருமையைக் கொடுத்தது.

1953ஆம் ஆண்டில் சாமிகளுடைய ஒரே மகனர் திருச்செல்வன் பேச்சிமுத்து ராஜாவிற்கு நடந்த திருமணத்தை இங்குக் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். திருச்செல்வன் பேச்சிமுத்து ராஜாவிற்கும் தாராபுரம் தாலுக்கா தளவாய்ப்பட்டணம் மிராஸ்தார் திரு. குஞ்சையப் பிள்ளையின் புதல்வி இராமகிரி அம்மாளுக்கும் 1953-ஆம் ஏப்ரல்-மீ 2-ந்தேதியன்று பழநி அடிவாரம் பாலசுப்பிரமணியர் நிலையத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. பக்த கோடிகளுள் பிரதம அங்கம் வகித்த திரு. பி. கே. எம். குன்னப்பன் செட்டியார் அவர்களும் மற்ற பக்தர்களும் வந்தவர்களை உபசரித்துக் கவனிக்க, சாமிகளின் சித்துக்களையும் சேவைகளையும் பாராட்டிப் பேசி மகிழ்ந்தனர் சில அன்பர்கள்.

சாமிகள் பன்றிமலையில் இருக்கும்போது சாமிகளின் பக்தர்களின் திருக்கூட்டம் அவர்கள் இல்லத்திற்கு வந்தவண்ணமாக இருக்கும். தன்னலமற்ற சேவையாலும், வருவாய் எதிர்நோக்காது செய்யும் பணிகளாலும் ஜாதிமத பேதமின்றி யாவருக்கும் ஆற்றுகின்ற பணியாலும், செல்வந்தர் ஏழைகள் என்ற பாகுபாடின்றி யாவரிடத்தும் அன்பு ஒன்றுலே பழகிவரும் ஓர் அருமைக் குணத்தாலும், சாமிகள் உள்ளூர் வாசிகள் அயலூர் வாசிகளது பேரன்பை கவர்ந்துவிட்டார். சாமிகளது இறையருள்தன்மை, பக்தர்களது அருள் தாகத்தைத் தணிக்கும் பேராற்றல், கலைமணாங்கமழும் உரையாற்றல், தெய்வ தத்துவங்களை எளிய சொற்களில் யாவரும் புரிந்து கொள்ளும் வகையில் விளக்கும் திறன், பல சீடர்களையும் பக்தர்களையும் சேர்த்து விட்டது. பல பிணிகளுக்காகச் சாமிகளின் விபூதிப் பிரசாதத்தைப் பெற்றுக் கொள்பவர் தொகை விரிந்தது போன்று சாமிகளின் அருள் பிரசாதத்தை நாடி வருபவர்களின் எண்ணிக்கையும் அதிகமானது. சாமிகளது உபதேசம் பெற்றுக் கொள்ளவும் சீடர்களாகவும் பலர் சாமிகளிடம் வர ஆரம்பித்தனர். பல ஊர்களிலிருந்தும் சாமிகளை இடர்களைவிக்கவும் பிணிகளைத் தீர்த்தருளவும், ஆலய நிர்மாணப் பணிக்கும் குடமுழுக்குக்கும், திருவிழாக்களுக்கும், திருப்பணிகளுக்கும்; அழைத்துச் செல்லலாயினர், பக்தியில் விளைந்தவர் ஸ்ரீ பன்றிமலை சாமிகள்; யோகத்தில் சிறந்தவர் ஸ்ரீ பன்றிமலை சாமிகள்; ஞானத்தில் பெரியவர் ஸ்ரீ பன்றிமலை சாமிகள்; மந்திர சாத்திரங்களில் கைதேர்ந்தவர் ஸ்ரீ பன்றிமலை சாமிகள் என்ற பெயரும் புகழும் நான்கு பக்கங்களிலும் பரவின. அருள்சக்தி மகானை 'சாமிகள்' என்று கூப்பிட்ட ஞான உறவு அருமையோடு, ஆத்மீக சாதனையில் அவருக்கு இணை அவரே என்பதை உணர்த்துவது போலும், இளவயதில் இராமசாமி என்று அழைக்கப்பட்டவரை, அதன்பின் 'சாமிகள்' என்று விளங்கியவரை ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் என்று சீடர்களும் பக்தர்களும் நாடும் நகரங்களும் அருமையாக அழைத்துக்கொண்-

டாட ஆரம்பித்தன. "மலைப்பிராந்தியத்தில் உள்ள குக்கிராமத்தில் பிறந்த பன்றிமலை இராமசாமிதான் முயற்சியினால் உழைப்பினால் உயர்ந்து, கடுந்தவத்தால் பக்தியால் சாக்ஷாத்காரம் பெற்று, அருங்கலைகள் ஆரணங்கள் மறைகளின் சிரப்பொருள் தெரிந்து, பக்தி, யோக, ஞானம், மந்திர சாஸ்திரங்களில் கைவல்யம் பெற்று விளங்கும் ஜோதி ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அவர்கள்" — இப்படிப் புகழ்ந்து முடிக்கின்றார் சாமிகள் வாழ்க்கை வரலாற்றை அழகுடன் தமிழில் எழுதிய திரு R. N. தீக்ஷிதர்.

"ஸ்ரீலஸ்ரீ, பன்றிமலை சாமிகள் எளியவர், படாடோபமில்லாதவர், மற்ற கிரஹஸ்தர்களைப் போலவே காணப்படுகின்றார். ஆனால் இவரிடமும் மற்ற கிரஹஸ்தர்களிடமும் உள்ள வேற்றுமை இவர் முருகனையும் சக்தியையும் இடைவிடாது சிந்தித்திருக்கின்றார், உலக ஞாபகத்தை மறந்திருக்கின்றார். அவர் உலகில் வாழ்ந்தாலும் அதன் மாயவலைகளில் சிக்காது வாழ்கின்றார்"— இப்படி ஒரு சொல் லோவியத்தில் தீட்டிக் காண்பிக்கின்றார் ஆங்கிலத்தில் அருமையாக சாமிகளைப்பற்றிய "ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகள்" என்ற சிறு புத்தகத்தை எழுதியுள்ள சுப்ரீம் கோர்ட் வழக்கறிஞர் திரு. D. M. பருலேகர். சாமிகளின் அருங்குணங்களைத் தொகுத்துரைக்கும் இலக்கிய பத்திரிகைகள் அவரின் குண நலன்களை எடுத்துரைக்கும் அழகையும் அதில் ஒரு புதுமையையும் இங்குப் படித்தின்புறலாம். தேவாலயம் என்ற மாதப்பத்திரிகையில் திரு. வே. கிருஷ்ணமூர்த்தி வரைந்துள்ள படம் இது.

"இதயத்தை இறைவன் இருப்பிடமாக்கி இருப்பிடத்தை இறைவன் ஆலயமாக்கி நின்றவர் நின்றிருக்க கண்டவர் கருத்தைக் கவர்ந்து ஒரு சொலான் உலகாள்வோன் உளந்திறந்து, முதல்வரைத் தம் உதட்டில் தேக்கி உத்தமர் முதல் உண்மையறியா பித்தர் வரை—மிட்டாதார் முதல் பஞ்சைவரை நெஞ்சையிழக்கும் நெறிதந்து வரும் ஸ்ரீலஸ்ரீ, பன்றிமலை சாமிகள்.........ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள், பூமாலை போட்டு மகிழ்கிறார்கள்—அவர்காக்கும் கடவுளல்ல! புகழ் பாடித் துதிக்கிறார்கள்—புலவர் காவலனல்ல! மாணவர் மண்டியிடுகின்றனர்—அவர் ஆசிரியனல்ல! சுகபிரசவத்தைத் தன் பெண்ணுக்கு அளிக்க அகமுருகி அவர் முன் பிரார்த்திக்கிறாள் தாய் —அவர் மருத்துவருமல்ல! வறுமைமுதல் சகல குறைகளும் அவர் முன் எடுத்துரைக்கப்படுகின்றன மக்களால்—அவர் அரசியல் தலைவருமல்ல!

"காக்கும் கருணை உள்ளத்தினால், கண்ணொளியால் ஆழ்த்தி வேலனைக்காட்சிதரும் ஞானகுருவாக, அறிவற்றுக்கிடக்கும் அநேகரின் ஆசிரியனாக மனநோயுற்று வாழ்வோர் அகமருத்து

விளங்க, சிறுர்முதல் விருத்தர்வரை அத்தனை பேரின் தந்தையாக், அரிச்சுவடியிலிருந்து அரச பீடத்தார் வரை அநேகரின் மானசீகத் தலைவராக ஏக காலத்தில் இருந்துவரும் நிரந்தர ஞானஒளியே நமது அடிகள்''.........

''சுயவிளம்பரம் விரும்பாதவர். தன்னுடல், பொருள் சுகம் எண்ணுதவர். நமது அடிகள் எதையும் யாசிப்பதில்லை. அளித் தாலும் ஏற்பதில்லை. காணிக்கையாகப்பெறுவார் ஒன்றே ஒன்றே! அதுவே அன்பு!''

கங்கை என்ற பத்திரிகையில் சாமிகளைப் படம் எடுத்துக் காட்டும் திரு. த. செங்கல்வராயப்பிள்ளை வருணனையைச் சற்றுப் படித்து மகிழ் வோம். ''அன்பு தவழும் திருமுகம், ஒளிவீசும் கண்கள், அறங் கிடந்த நெஞ்சம், கருணை கனிந்த மொழி, எளியவர்களிடத்தும் இனிமையாகப் பழகுதல், நகைச்சுவை ததும்ப உரையாடுதல், அரிய கருத்துக்களை எளிதாக விளக்குதல்; இசையில் ஈடுபடுதல், இறைவன் புகழ்பாடல்களைச் செவி மடுக்கும்போது தம்மை மறந்திருத்தல், பூசை வேளைகளில் 'ஒன்றாய் பலவாய் உயிருக்குயிராய் ஆகும் கருணைக் கடல் பரஞ் சோதியின்' அருள் ஒளியிலே இரண்டறக்கலந்து இருத்தல் ஆகிய இயல்புகளுடன் நம்மிடையே ஸ்ரீலஸ்ரீ, பன்றிமலை சாமிகள் வாழ்ந்து வருகின்றார்.

''தெய்வ நெறிவளர்க்கும் பன்றிமலை,'' என்ற தலைப்பில் 'கங்கை' ஆசிரியர் ஸ்ரீ 'பகீரதன்' சாமிகளைப்பற்றி வரையும் சொல் லோவியத்தையும் கண்டு மகிழ்வோம். ''திருப்பெருந்திரு பன்றிமலை சாமிகள்'' சடாமுடிதரித்து, காவி உடுத்து முற்றும் துறந்த முனிவராக காட்சியளிப்பார் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் அதற்கு நேர் விரோதமாக நம்மைப் போன்ற ஒரு இல்லற வாசியாகக் காட்சி அளித்தார். 'இவர்தான் பன்றிமலை சாமிகள் என்று சொன்னபோது என்னால் நம்பமுடியவில்லை...... இந்தக் காலத்தில் தமிழ் நாட்டில் நாத்திகம் ஓங்கி வருகிறது என்று அடிக்கடி சொல்லக் கேட்கிறோம். நாத்திகக் கொள்கை தமிழ்நாட்டுக்குப் புதிதல்ல. நாத்திகம் பேசி நாத்தழும்பு ஏறி...' என்று மாணிக்க வாசகப் பெருமான் பாடி இருக்கிறார். நாத்திகம் தோன்றும் சமயங் களிலே மேன்மையான ஆத்திக சமய நெறியும் திருவருளும் ஓங்கி இருக்கின்றன. அவ்வாறே இன்றைக்கும் நம் தெய்வத் தமிழ் நாட்டில் தவநெறியும் திருவருளும் நிறைந்த பன்றிமலை சாமிகள் போன்ற மகான்கள் தோன்றி இல்லறத்தில் இருந்து கொண்டே பிறவிப்பயனைக் கொடுக்கக்கூடிய தீய சக்திகளை அழித்து வருகிறார்கள். தமிழர் பண்பாடும் தமிழ் மக்கள் வாழ்வும் உயர்வதற்குத் திருப்பெருந் திரு. பன்றிமலை சாமிகள் போன்ற பெரியோர்கள் செய்து வரும்

தொண்டு மிக மேன்மையானது. நமது பழம் பெருந்தெய்வ நெறி தழைத்தோங்குவதற்கு அவர் செய்யும் தொண்டினை அளப்பரி தாகும்.''

'சௌபாக்கியம்' எனும் மாதப் பத்திரிகையில் திரு. பா. சொக்க லிங்கம் சாமிகளை 'கண்கண்ட அற்புதக்காட்சி' என்ற கட்டுரையில் ஏத்தும் ஒரு பகுதியைப் படித்தின்புறுவோம். ''பன்றிமலைச் சாமி யார் எனப் பெயர் பெற்ற இவ்வடியார் இந்த இருபதாம் நூற் றுண்டுச் சித்தர். 'விச்சதின்றியே விளைவு செய்குவாய்' எனும் மாணிக்கவாசகர் வாக்கை மெய்ப்பிக்கும் ஞானி, காயெல்லாம் கனி யெனக் கனிவிக்கும் கருணை அமுதே என்ற அருட்பாவின் திருவுருவம்.''

'அமுதசுரபி' என்ற மாதப் பத்திரிகையில், 'இறைதத்துவம் விளக்க இதோ ஒரு சித்தர்', என்ற கட்டுரையில் ஆஸ்திகன் எனும் புனைப் பெயரோன் சாமிகளை அழகாக சித்தரித்துச் காட்டுகின்றுர். ''ஹிந்து சமயத்தின் பெருமையை விளக்க சங்கரரும் மத்வரும் இராமானுஜரும் தோன்றினர். விவேகானந்த அடிகளார் அயல் நாடு சென்று நம் மத உண்மையை விளக்கினுர். இராமலிங்க அடி களார் தோன்றி ஆண்டவன் இருக்கிருன் என்று கவிதை மூலம் பிர சங்கமூலம் சித்துக்கள் மூலம் விளக்கினுர். இப்பொழுது பன்றிமலை சாமிகள் என்ற மகான் தோன்றியிருக்கிருர். அவர் நம்மைப் போன்ற மனிதர்தான். ஆனுல் நாம் அறியாதவற்றை, நம்மை மறைப்பன வற்றை, நாம் புரிந்து கொள்ள முடியாதவற்றை புரிய வைக்க—நம்பவைக்க சக்தி பெற்றிருக்கிருர்...... நீர்மேல் நடக்கலாம்; நெருப்பில் படுக்கலாம், என்றெல்லாம் முன்னேர்கள் கூறினுர்களே, அவசியந்தானு? சித்து—எல்லோருக்கும் வரப்பெற்றதன்று, அதில் வல்லவர் அதைத் தொழிலாகக் கொள்வதில்லை. பன்றிமலை அடி களாரும் தொழிலாகக் கொள்ளவில்லை. அவர் எந்தவித ஊதியமும் வாங்குவதில்லை...... 'முருகா முருகா என்றுேது. முருகனை நம்பு' என்பதே சாமிகளின் உபதேசம்.''

'தேவாலயம்' மாதப்பத்திரிகையில் 'ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் இதழ்' என்ற சிறப்பு மலரிலிருந்து ஒரு பகுதியைப் படித்து மகிழ் வோம். ''ஸ்ரீலஸ்ரீ சாமிகள் எல்லோரையும் ஜாதிமத கட்சி பேத மின்றி அன்புடன வரவேற்கும் இயற்கைக் குணம் படைத்தவர். உயர்ந்த ஞானமும் குழந்தை உள்ளமும் படைத்த பெரும் ஞானி என்பது மறுக்க முடியாத உண்மை. தரிசிக்க வரும் யாவரையும் அவர்களது அல்லல் உணர்ந்து முருகன் மீது ஆணை வைத்துத் திருமுருகனையே நம்பி அல்லல் தணிக்கும் அரும்பெரும் கருணைக் கடலாகக் காட்சியளிக்கின்றுர். முருகா! முருகா! என்ற திருநாமந்

தான் புன்னகை தவழ்ந்து விளையாடும் சாமிகளின் பவளச் செவ் வாயிலிருந்து ரீங்காரம் செய்து கொண்டிருக்கும். சாமிகளின் பூஜை அறையில் எப்பொழுதும் கந்த களப கஸ்தூரியின் மணம் கமழும். ஐய நிலையுற்றோர்க்கு தெளிவு நிலைகாண பலசித்துக்கள் மூலம் தெய்வ நெறிப்பாதைக்கு நமது சாமிகள் அழைத்துச் செல்வர். சாமிகளைத் தரிசிக்க பலதரப்பட்ட மக்கள் இரவு 3 மணி வரை குழமியிருந்து அருட்பிரசாதம் பெறுவது கண் கொள்ளாக் காக்ஷி யாக விளங்கும்.''

''மாந்தருக்குள் ஒரு தெய்வம்,'' என்ற கட்டுரையில் திரு சு. வழித்துணைராமன் சாமிகளைப் பற்றி எழுதுவதைச் சிறிது படித்து மகிழ்வுறுவோம். ''......இன்று தென்னாட்டில் சிறப்பாக ஆஸ்திகத் திற்கு ஒரு வளர்ச்சி—அருள் வளர்ச்சி ஏற்பட்டிருக்கின்றது. அதற்கு முக்கிய காரணஸ்தர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள்தான் என்றால் மிகையாகாது......''மழித்தலும் நீட்டலும் வேண்டா'' என்று இருப் பவர்கள். அவர்கள் ஊர் திண்டுக்கல் சமீபம் உள்ள பண்ணப்பட்டிக் கோம்பைக்கு அருகே உள்ள ஆடலூர் பன்றிமலை என்பது. அந்த மலைக்கு ஏறுவது என்பது மிகமிகச் சிரமமானது. அதிலிருந்து நாட்டிற்குள் வந்து நமக்காகப் பலபல அதிசயங்களைச் செய்து ஆண்டவன் அருள் சக்தியைக் காட்டுவதற்காக அந்த தவப் புதல்வர் தாள் பணிந்து நிற்பது தவிர வேறு கைமாறு என்ன செய்வது என்பது எனக்குத் தெரியவில்லை.''

பன்றிமலை திரு. A. R. R. சுந்தரம், B. A. 'மலைவேந்தன்' எனும் புனைபெயரில் அருமையான கவிதைகளில் சாமிகளை மனமாரப்பாடி விட்டார்.

''மலைமுகட்டில் மஞ்சு துஞ்சும் மாண்புமிகு
மாதர் கழுத்தில் அணிகள் துஞ்சும்
சிலைஉதட்டில் சிற்பியின் கலைத்திறன் துஞ்சும்
சிரித்தவர் முகத்தினிலே சிறப்புத் துஞ்சும்
மலையில் வாழும் மாமுனிவர் நெஞ்சத்தில்
மறுவற்ற அறநெறிகள் துஞ்சும் உயர்பன்றி
மலைவாழும் சாமிகள் நெஞ்சில் மேதினியில்
மேவும்நல் இறைவன் திருவருள் துஞ்சும்

பெரும்பொருள் செல்வர், பிழையுற்ற நெஞ்சத்தார்
பேரிருள் கள்வர், பேதையர் அன்புமிகு
அரும்பொருள் ஆசான், ஆணையிடும் தானையர்
அவனியில் உயர்ந்திடும் அறிஞர் பெருமக்கள்

உறுபொருள் உரைக்கும் உத்தமர் மற்றில்
உலகில் தோன்றிடும் உயிர்கள் யாவும்
வரும்பொருள் அறிந்து வளமொடு வாழ
வழிநெறி காட்டும் சாமிகள் வாழ்கவே!

பன்றிமலை ஊர் பஞ்சாயத்துப் போர்டிலேயே அங்கத்தினர் பதவி வகித்த சோலைக்காட்டுமலை மிராசுதார் திரு. ரா. வெங்கிடாஜலம் செட்டியார், "எங்கள் பன்றிமலை கிராமப் பஞ்சாயத்துப் போர்டுக்கு பிரசிடெண்டாக போட்டியில்லாமல் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுக் கிராம மக்களுக்கும் பல நன்மைகள் சாமிகள் செய்து வருகின்றார். நானும் அந்த பஞ்சாயத்துப் போர்டில் ஒரு மெம்பர். சாமிகளை ஒரு கண்கண்ட தெய்வமாகப் பூசித்து நன்மைகள் பெற்று வருகின்றேன்" என்று சாமிகளை ஏத்துகின்றார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக இருந்த திரு. T. M. நாராயணசாமிப் பிள்ளை சாமிகளை, "அவர்களுக்கு உயர்வு தாழ்வு, வேண்டியவர் வேண்டாதவர், பணக்காரர் ஏழை என்ற பாகுபாடுகள் கிடையாது. 'ஒன்றேகுலம் ஒருவனே தெய்வம்' என்ற வாக்கியத்திற்கு இணங்க வாழ்க்கை நடத்தி வருகின்றனர். அவர்கள் முகத்தில் எப்பொழுதும் அருளும் அன்பும் பொலிகின்றன. அவரிடம் ஒரு நிமிடம் பழகினாலும் இவ்வுண்மைகள் தெரிய வரும். உண்மையான பக்திக்கும் அன்புக்கும் அவர்களே உதாரணம்" என்று புகழ்மாலை அணிவிக்கின்றார்.

பன்றிமலை பஞ்சாயத்துப் போர்டு அங்கத்தினர் மொழிகள் சாமிகளுடைய உள்ளூர் மதிப்பையும், ஒரு பல்கலைக்கழகத்துத் துணை வேந்தர் மொழிகள் சாமிகளுடைய தமிழ்நாட்டின் மதிப்பையும் எடுத்துக்காட்டும். அவர்கள் புகழ் நமது இந்திய நாட்டின் தலை நகரிலும் மணக்கின்ற பெருமையைப் பாராளுமன்ற உறுப்பினராக இருந்த பெருமனிதர்கள் மொழிகள் நன்கு விளக்கும். "ஸ்ரீசுவாமிஜி 1956-ஆம் செப்டம்பர்-மீ முதல் வாரத்தில் புதுடில்லி விஜயம் செய்தபோது எங்களுக்கு அவர்களை சந்திக்கும் பாக்கியம் கிட்டியது. ஸ்ரீ சுவாமிஜியிடம் தெய்வீக சக்தி நிறைந்திருக்கின்றது. மனிதனது அறிவுக்கும் விஞ்ஞான அறிவுக்கும் எட்டாத பல அற்புதங்களைச் செய்து காட்டினார்கள். நாங்கள் கண்டவைகளையும் அனுபவித்தவைகளையும் இச்சிறு கடிதத்தில் எழுதுவதைப் பார்க்கிலும் ஸ்ரீபன்றிமலை சாமிகளை நேரில் தரிசித்துச் சந்தேகம் தெளிந்து பலன் அடைவது சாலச் சிறந்ததாகும் என்பதைத் தெரிவிக்கின்றோம். தெய்வசிந்தனையும் பக்தியும் குறைந்து வரும் இக்காலத்தில் ஸ்ரீ சாமிகளின் பணி மிகவும் போற்றத் தகுந்தது"— இப்படி

புகழ்ந்து பேசுகின்றனர் 1956ல் பாராளுமன்ற உறுப்பினர்களான திரு. G. R. தாமோதரன், எம். சங்கரபாண்டியன், திரு. க. சக்தி வடிவேல் கவுண்டர், திரு. சி. இராமசாமி முதலியார் அவர்கள் எல்லாம்.

சாமிகள்பால் பக்திமேலிட்டால் உற்சாகமிகுந்து பேசும் அன்பர் திரு. P. A. சித்தப்ப செட்டி எழுதுவதையும் படித்து ரசிப்போம். "காசி முதல் கன்னியாகுமரி வரையில் உள்ள முக்கியமான கோயில் களுக்கெல்லாம் பலமுறை என் குடும்பத்துடன் போயிருக்கிறேன். அந்தக் கோயில்களிலுள்ள எந்தச் சாமியாவது ஓர் ஊமையைப் பேச வைத்திருக்கிறதா? ஒரு செவிட்டைக் காதுகேட்க வைத்திருக் கிறதா? ஒரு நொண்டியை நடக்க வைத்திருக்கிறதா? நாம் மன தில் நினைப்பதைச் சொல்லுகிறதா?......... மேலும் நம்மோடாவது பேசுகிறதா? ஒன்றுமே செய்யக் காண்கின்றோமே! நம் பன்றிமலை சாமி இவைகளையெல்லாம் செய்கிறதே! இன்னும் எத்தனையோவித அற்புதங்களை எல்லாம் பகிரங்கமாகவும் உள்ளங்கை நெல்லிக்கனி போலும் பிரத்தியட்சமாகச் செய்து காட்டுகின்றதே!!......பன்றிமலைச் சாமிகளை வணங்குவது மிகமிகச் சிறப்பு வாய்ந்தது......"

நகைக்சுவை நடிகர் திரு. K. A. தங்கவேலு சாமிகளைப் பற்றி நகைச்சுவை ததும்பப் பேசுவதையும் இங்குக் கேட்டுக் களிப்புற வேண்டுவதே. "படித்தவர்கள், மேதைகள், அறிவுள்ளவர்கள், சக்தி வாய்ந்தவர்கள், பிறரைப் பார்த்தவுடன் தன் வயப்படுத்தி அவர்களை அன்போடு அழைத்து அன்னவர்கள் குறைகளைத் தீர்க்கும் தீர்க்கதரிசிகள், சாப்பாட்டுக்கு ஊறுகாய் வைப்பதுபோல், கொஞ்சப்பேர்களே நம் நாட்டில் இருந்து வருகிறார்கள்......(நான்) ... புண்ய க்ஷேத்திரங்களில் ஸ்நானம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடும் என் குடும்பத்தாரோடும் ...ஹரித்துவார் சென் றேன். பல ஆண்டுகளாக நேரில் பார்க்கவேண்டும் பார்க்க வேண்டும் என்று துடியாய்த் துடித்துக் கொண்டிருப்பவன் நான்... எண்ணிப்பார்க்க முடியாத இடத்திலும் எத்தனையோ நூறு மைல் களுக்கு அப்பால் வந்திருக்கக் கூடிய எனக்கு அம்மாபெரும் மகத் தான தரிசனம் கிடைக்கும்பொழுது விடுவேனா! யானைக்குக் கரும்பு அகப்பட்டால் விட்டுவிடுமா? முடவனுக்கு மூலிகைக் கிடைத்தால் விடுவானா? ஆண்டிக்கு அமாவாசைச் சோறு கிடைத்தால் அசை வானா?... என்கவலைகளுக்கும் மருந்தும் மாற்றமும் கேட்டபொழுது கூட மனம் கசந்து கொள்ளாது தன்னை ஒரு பெரிய மகானாகக் காட்டிக்கொள்ளாது உற்றார் உறவினர்போல பல இன்சொற்களைச் சொல்லி என்னை இன்பத்தில் ஆழ்த்திவிட்டார். அவருடைய அன் பும் ஆசையும் எனக்கு நிறையாகவும் நிரந்தரமாகவும் கிடைத்தது அவர் யார்?...... இதோ சொல்லுகிறேன், அவர்தான் என் அன் பிலே அகப்பட்டுக்கொண்ட ஸ்ரீமத் பன்றிமலை சாமிகள்.

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் மகிமையை உணர்ந்த திருவனந்தபுரம் மகாராஜா திரு. இராமவர்மா அவர்களும் அவர்கள் தாயார் மகாராணி அவர்களும் கூறுகின்ற இராஜ மொழிகளையும் செவிமடுப்போம். "ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளை எங்களுக்கு நன்றாகத் தெரியும். முருகன் அருள்பெற்ற ஓர் இல்லற ஞானி. இவரால் அநேக ஜனங்களுக்கு பல நன்மை ஏற்பட்டிருக்கிறது. இவர்களை நேரில் தெரிசித்தால் இவர் மகிமை ஜனங்களுக்கு வெளிப்படும். அநேக ஜனங்கள் நன்மையடையவே இதை நாங்கள் தெரிவித்துக் கொள்ளுகிறோம்"

உண்மையில் ஆயிரம் ஆயிரம் மக்கள் முருகன் அருள்பெற்ற இவர் மகிமையால் நன்மையடைந்தார்கள், அடைந்தும் வருகின்றனர். இவரே பேசும் தெய்வம் என்ற அளவுக்கு போற்றிப்பணியவும் பக்தகோடிகள் வளர்ந்து விட்டனர்.

"எங்கள் ஊர் பெருமாள் கோவில் சாமியைத் தரிசித்தபோது பெருமாள்சாமி பேசவில்லையே என்று நான் சிறு பெண்ணாய் இருந்தபொழுது தேம்பித் தேம்பி அழுதுகொண்டிருந்த பொழுது என் பாட்டி என்னை 'அழாதே அம்மா உன்னுடன் சாமி பேசுவார்' என்று சமாதானப்படுத்தினர். என்பாட்டி சொன்ன வாக்கியம் இப்பொழுது நிறைவேறியது. பன்றிமலை சாமியே பேசும் தெய்வம், இவரே விஷ்ணு, இவரே முருகன், இவரே நான் வணங்கிவரும் தெய்வம்" என்று சொல்லி டாக்டர் வேதவல்லித் தாயார் சாமிகளை நடமாடும் தெய்வமாகப் போற்றுவதையே பக்தர்களெல்லாம் ஒருங்குசேர்ந்து சொல்ல ஆசைப்படுவர்.

சாமிகள் பன்றிமலை ஊரில் பஞ்சாயத்துத் தலைவராக இருந்த போது அவருடைய இல்லம் கோயிலாகவே விளங்கியது: பன்றிமலை ஊரும் ஒரு திருத்தலமாகவே விளங்கியது. "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையம்" என்று நினைத்த சாமிகள் பன்றிமலை ஊருக்குமட்டும் தம் தவப்பயனை உவந்தளித்த தோடல்லாமல், இவ்வையகத்திற்கே தான் பெற்ற பேரின்பப் பெருநிதியை உவந்துவந்து அளிக்கலானர். பிறருக்குத் தெய்வநெறியை வழங்கும் சாமிகள் அவரவர்கள் மன பரிபக்குவத்திற்குத் தகுந்தாற்போல் பக்தி மார்க்கத்தையும், ஞான மார்க்கத்தையும், கர்ம மார்க்கத்தையும் காட்டி அருள் புரியலானர். இப்படி தியான சொரூபியாகவும் விளங்கிய சாமிகள் தன்னையும் மறக்கவில்லை, பக்தர்களையும் மறக்கவில்லை, ஊரையும் மறக்கவில்லை, நாட்டையும் மறக்கவில்லை, உலகையும் மறக்கவில்லை. நமக்கெல்லாம் அருள்பாலித்து வரும் திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள் இல்லற ஞானியாக விளங்குவதைப் போலவே சமுதாயத் தலைவராகவும் பஞ்சாயத்துத் தலைவராக ஆறு வருடங்கள் பணியாற்றியது ஆத்மீகத் துறையில் ஈடுபட்டிருந்த பெருமகான்களின் வாழ்க்கையில் காணாத ஒரு புதுமை! இல்லறத்திலும்

சமுதாயத்திலும் நன்ருகப் பங்கு கொண்ட சாமிகளுடைய மனம் இறைவனுடன் ஒன்றியே இருந்தது. தன்னையறிந்தின்புற்றிருந்தது. பற்றற்ருன் தாளைப்பற்றி பற்றற்ற நிலையிலேயே நிலைத்து நின்றது. சுட்ட மண் ஒட்டாது என்ற மனுேபக்குவம் வந்தபின் சாமிகள் எங்கே இருந்தால் என்ன, எந்தச் சூழ்நிலைகளிலும் திடமான ஞானி தன் பூரணஞானத்தை இழப்பதில்லை. எங்கிருந்தாலும் அவருடைய பரிபக்குவநிலை அவரை உயர்த்துகின்றது: மிதிலையில் ஜனக மகாராஜன் எப்படி வெற்றிகரமாகத் தன் தவநிலையைக் காப்பாற்றிக் கொண்டு நாட்டைக் காப்பாற்றி அமைந்தாரோ அதுபோன்றே சாமிகளும் பன்றிமலை ஊரில் சமூக அரசவைப் பொறுப்பையும் தமது ஆத்மீக உயர்வு வேட்கையையும் வெற்றிகரமாகப் பூர்த்திசெய்து வந்தார். இப்படி இருந்த தன் நிலையைச் சாமிகளே கூறுவதையே கேட்போம். "தன்னைத்தான் அறிய பற்றற்ற நிலை அவசியந்தான். பற்றற்றநிலையை இல்லறத்தில் இருப்பவர்கள் அடைய முடியாதா? முடியும். தாமரை இலையைக் கவனியுங்கள். பார்ப்பதற்கு அது தண்ணீருள் நிற்கின்றது தெரியும். ஆனுல் உண்மையிலேயே தண்ணீர் இலையில் ஒட்டி இருக்கவில்லை. எப்படித்தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாமல் நிற்கின்றதோ அதுபோல் ஒருவன் குடும்ப வாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் இருந்தாலும் பற்றற்ற நிலையில் இருக்க முடியும்." இந்த நிலை எய்தியதனுலல்லவா சாமிகள் ஆருயிர்கட்கெலாம் அன்பு செய்வதே தமது முழு முதல் கடமையாகக் கொண்டுள்ள அடிகளாராக அறநெறி வாழ்வைக் கடைப்பிடித்து அன்புப் பணியாற்றி அனைவருக்கும் அருள்புரிந்து வருகின்ருர். திருவள்ளுவர் காட்டிய இல்லற ஞானியின் உண்மை வாழ்விற்குச் சாமிகள் ஓர் ஈடு இணையில்லாத எடுத்துக்காட்டாக விளங்கி வருகின்ருர். சாமிகளின் அருமை பெருமைகளை அளவிட்டுக் கூறும் நமது முன்னுள் தமிழ்நாட்டு முதல் மந்திரி கனம் எம். பக்த வத்சலம் இரத்தினச் சுருக்க மொழிகளைப் படித்து நாம் இன்புறுவோம். "பன்றிமலை சாமிகள் படாடோபமில்லாத பெரியார், மக்களிடத்தில் அன்பு நிறைந்தவர். அற்புத சக்தி வாய்ந்தவர். இறைவனின் அருளைப் பெற்றவர். இந்தப் பெரியோரின் வாழ்க்கை வரலாறு படிப்பவர்களுக்குப் பயன்தரக் கூடியது–" ஆம்! உண்மைதான் இப்பெரியாரின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும்போது இவரது தெய்வப் பிறவி, பெரியோர்களின் தெய்வீகக் கூட்டுறவு, ஆத்மீக சக்தி வளர்ச்சி, மதி ஆற்றல், கலை ஆற்றல், அருள் ஆற்றல், அருள் ஆற்றல் கொண்டு மக்கள் பிணி தீர்த்தல், 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற அடிப்படையில் புரியும் சேவை— இவைகளை நாம் அறிந்து கொள்ள முடிகின்றது. மாநிலத்தில் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஓர் நடமாடும் தெய்வம் என்பதையும் நாம் அறிந்து கொள்ள முடிகின்றது.

## 21. திண்டுக்கல்லில் " இராஜ இரத்தின " திரு இல்லம்.

" நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு"

என்னுடைய நண்பர் ஒருவர் என்னைக்கண்டு 2-6-68 ஆனந்த விகடன் வாரப்பத்திரிகையைப் படித்துப்பார்த்தீரா என்று கேட்டார். "இல்லை, என்ன விசேடம்" என்றேன். நமது சாமிகளைப் பற்றி செய்தி வந்திருக்கின்றது என்றார். உடனே ஆவலோடு அந்தத் தேதி ஆனந்தவிகடனை வாங்கிப் பிரித்துப்பார்த்தேன். உண்மை, ஒரு பக்கம் செய்தி '4500 அடி உயரத்தில் 2500 பேர்' என்ற தலைப்பில் வந்திருந்தது. அங்கு இன்று 2500 பேர்கள் இருந்தாலும் ஒருவர் மட்டும் பன்றிமலையை விட்டுச் சென்று திண்டுக்கல்லில் வசிக்கிறார் என்றும் தெரியவந்தது. யார் அவர் என்று கேட்டால் வேறுயாருமில்லை, நமது சாமிகளே அவர். இதுவும் இந்தக் கட்டுரையில் கடைசி பாராவில் குறிக்கப்பட்டுள்ளது. முதல் நான்கு பாராக்களைப் படித்தவுடனேயே, சாமிகள் ஏன் அங்கு இருக்க முடியவில்லை என்பதை உணர்த்தும் காரணங்களையும் காணலாம். அந்த விபரங்கள் இவைதான் :

"போக்குவரத்து நெரிசலே இல்லாத கிராமம் ஒன்று தமிழ் நாட்டில் இருக்கிறது. அதுதான் பன்றிமலை. கிராமத்தில் உள்ள வீதிகள் அவ்வளவும் படிக்கட்டுகள். அதனால் எல்லோரும் நடந்து தான் போகவேண்டும். சைக்கிள் விடக்கூட முடியாது !.

" திண்டுக்கல்லிலிருந்து சுமார் இருபது மைல் பஸ்ஸில் போய் இரண்டரை மைல் நடந்து ஏழரைமைல் மலை ஏறினால் இங்கே வந்து சேரமுடியும். சுமார் 4500 அடி உயரத்தில் இருக்கும் இங்கே 2500 பேர் வசிக்கிறார்கள்.

" மக்களுக்கு முக்கியமான தேவைகளில் ஒன்று 'சீமைத்தண்ணி, —கிரோசின். அடுப்பு எரிக்க அல்ல! விளக்கு வைக்கவும்தான். இங்கே மின்சார வசதி கிடையாது.........

"தபால் நிலையத்தில் நாளுக்கு ஒருமுறை தபால் ரன்னர் மூலம் வந்து சேருகிறது. உண்மையாகவே இந்த ரன்னர் நடந்தே வந்து சேரவேண்டியிருக்கிறது—ஏழரை மைல் தூரமும் மற்ற கிராமங்களைப்போல சைக்கிளில் வரும் ரன்னர் அல்ல."

இப்படிக் கட்டுரையை ஆரம்பித்த திரு. ஜெயஸ்ரீ அவர்கள் கடைசிப் பாராவில் இப்படி முடிக்கின்றார் :— "பன்றிமலைக்கு வருபவர்கள் முக்கியமாக ஆவலோடு கேட்கும் கேள்வி "பன்றிமலை சுவாமிகள் எங்கே இருக்கிறார்" என்பதுதான். அவர்களுக்கு ஏமாற்றம் தான் காத்திருக்கிறது, பன்றிமலைச் சுவாமிகள் இந்த இடத்தைவிட்டுப் போய் ஏழு ஆண்டுகளுக்குமேல் ஆகிறதாம். கீழே திண்டுக்கல்லில் தான் வசிக்கிறார் அவர்."

ஏழு ஆண்டுகளுக்குமுன்னேயே சாமிகள் மலையை விட்டுத் திண்டுக்கல்லில் திரு இல்லம் அமைத்துக் கொண்டது, நாள்தோறும் பெருகும் தம் பக்தர்களின்மேல் சுரக்கும் அன்பினால்தான். நூற்றுக் கணக்கான படிகளை ஏறவைத்து பல மைல்கள் செங்குத்தான பாறை வழிகளில் நடக்கவைத்து மின்சார வசதியில்லாத இருட்டுப் பாதைகளில் மக்களை இடறவிட மனம் வரவில்லை சாமிகளுக்கு. அவர்களுக்கு எந்த விதமான ஏமாற்றமும் ஏற்படக் கூடாதென்றே சாமிகள் பல பக்தர்கள் வேண்டுகோளுக்கிணங்கித் திண்டுக்கல்லில் தம் திரு இல்லத்தை அமைத்துக் கொண்டார்.

திண்டுக்கல்லுக்கும் பழநிக்கும் இடையிலுள்ளது பன்றிமலை. உயரத்திலும் பாதை அமைப்பிலும் வெளி ஊர் மக்களுக்கு மலைப்பையும் தவிப்பையும் கொடுக்கும் வகையில் அமைந்துள்ள பன்றிமலையில் சாப்பிட உணவுநிலையமோ தங்க ஓட்டல் வசதிகளோ கிடையாது குடிதண்ணீர் வசதியும் வேண்டிய அளவு கிடையாது. இப்படி இருந்தும் சாமிகளின் பக்தர்கள் சாமிகளின் அருளைத்தேடி இந்தக் கஷ்டங்களை யெல்லாம் பொருட்படுத்தாது பன்றிமலைக்குச் சென்று வந்தார்கள். சாமிகளின் அருளை அனுபவிப்பவர்களில் பெரிய நீதிபதிகள், வைத்திய நிபுணர்கள், சிறந்த வழக்கறிஞர்கள், வியாபாரிகள், தொழிலதிபர்கள், உயர்பதவியாளர்கள் ஒரு பகுதியினர். ஐந்நூறு, ஆயிரம் மைல்களுக்குக் கப்பாலிருந்தும் சாமிகளின் அருளைத்தேடி வருபவரும் உண்டு. பம்பாயிலிருந்தும் டெல்லியிலிருந்தும் பக்தர்கள் தொடர்ந்து வருவது உண்டு. தமிழ் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் திரண்டு வருவதுண்டு. இவர்களுக்கெல்லாம் கரடு முரடான செங்குத்தான பன்றிமலைப்பாதையில் ஏறி இறங்குவதற்கு மட்டும் இரண்டு நாட்கள் வேண்டியிருந்தது. இவர்களின் கஷ்டங்களை யுணர்ந்த அருட்குரு சாமிகள் இவர்கள் இஷ்டப்படியே திண்டுக்கல்லில் 'இராஜ இரத்தினம்' என்ற திரு இல்லத்தை அமைத்துக்கொண்டு வருபவர்களுக் கெல்லாம் இடர்



சாமிகளோடும் அன்னையார் அவர்களோடும் புதல்வர் திருநிறைச்செல்வன் பேச்சிமுத்துராஜாவும் மருமகள் திருநிறைச்செல்வி இராமகிரி என்கிற இலட்சுமி அம்மாள் அவர்களும்

(பக்கம் — 150)



சாமிகள் திருஇல்லம் "இராஜஇரத்தின விலாஸ்" திண்டுக்கல்.

(பக்கம் — 159)

தீர்த்தருளிவருகின்றார். சாமிகளைத் திண்டுக்கல்லில் எழுந்தருளச் செய்தவர்களில் முக்கியமான பங்கு கொண்டவர்கள் திண்டுக்கல்லில் அப்போது சப் ஜட்ஜ் பதவியில் இருந்த திரு S. சூரியமூர்த்தி அவர்களும் டிஸ்டிரிக்ட் முன்சீப் திரு P. S. சிதம்பரநாதன் அவர்களும் ஆவார்.

சாமிகளுடைய ஒரேமகன், தெய்வீகநிலை எய்திய ஒரேமகள் பெயர்களைத் தாங்கி இருக்கும் 'இராஜ இரத்தினம்' எனும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் திரு இல்லம் திண்டுக்கல்லில் கிழக்குக் கோடியில் பாலகிருஷ்ணபுரம் எனும் இடத்தில் உள்ளது. இத்திரு இல்லம் அமைந்திருக்கும் தெருவைச் சாமிகள் பெயரால் அழைக்கின்றனர். இத்திரு இல்லம் வடக்கு நோக்கி இருக்கின்றது. இத்திரு இல்லத்தின் இடது பக்கத்தில் பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்கி அனுக்கிரகம் புரிய உதவும் சாமிகள் அருள்பாலிக்கின்ற பூஜை அறையும் அதன்முன் திருச்சபையும், அதை அடுத்து எழில் மிகு பூந்தோட்டமொன்றும் அமைந்துள்ளன. இப்பூந்தோட்டத்தின் முன் பன்றிமலை சாமி தெரு ஆரம்பத்தில் தெருவின் மத்தியில் கிழக்கு நோக்கி ஒரு விநாயகர் கோயிலையும் சாமிகள் அழகுற அமைத்திருக்கின்றார்.

காலையிலும் மாலையிலும் சாமிகள் தெய்வீக உதவியை நாடிப் பல பக்தர்கள் பூஜைக்கு வேண்டிய தேங்காய் பழங்கள் ஊதுபத்தி சூடம் சாம்பிராணி முதலிய பொருள்களுடன் திருச்சபையில் கூடுகின்றனர். சாமிகள் அருள் பாலிக்கின்ற திருச்சபை சாமிகள் பூஜை அறைக்கு முன் அமைந்துள்ளது. பூஜை அறையில் விநாயகர், முருகன், சிவன், பார்வதி. வெங்கடாஜலபதி அலமேலுமங்கை படங்களும், தெய்வ விக்கிரகங்களும், சக்கரங்களும் இருக்கின்றன. திருச்சபை நீளமாக கவின் வனப்புடன் விளங்குகின்றது. திருச்சபையில் பூஜை அறைக்கு வெளியே வலது பக்கத்தில் சாமிகளுடைய வெங்கலச் சிலை வடிவம் ஒன்று புத்தம்புது மலர்மாலையோடு வருகின்றவர்களுக்கு அருள் கூட்டுகின்ற அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி அளிக்கின்றது. தூய்மையும் பிரகாசமும் நிர்மலமும் நேர்த்தியும் ஓங்கிய இத் திருச்சபையில் சாமிகள் தமக்கென்றிருக்கும் குரு பீடத்தில் அமர்ந்து வருகின்றவர்களுக்கெல்லாம் காலையிலும் மாலையிலும் பூஜையை முடித்துக் கொண்டு அருள் பாலிக்கின்றார். எண்ணிறந்தவர்—பல மதத்தினர்கள்–உடற்பிணி மனப்பிணிக்குச் சாமிகளிடமிருந்து அருட்பிரசாதம் பெற்றுத் திரும்புகின்றனர். சாமிகளுடைய அருட்பிரசாதம் பரிமள மிகு விபூதிப் பிரசாதமுமே. பித்தந் தெளியவும் சாமிகள் அருள் மருந்து கொடுப்பார்கள். சில சமயங்களில் சில மூலிகைகளைக் கொண்டும் பிணிகளை அகற்ற வழிகளும் எடுத்துரைப்பதுண்டு. முகமதியர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் சாமிகள் புஷ்பபிரசாதம்

வழங்குகின்றனர். இந்தத் திருச்சபையில் காலையிலும் மாலையிலும் கூடும் பக்தர்கள், சாமிகள் பூஜை அறையில் தாளிட்டு பூஜை செய்து முடிக்கும்வரை, சாமிகளின் வருகைக்காக ஆவலோடு காத்துக் கொண்டிருப்பர். அப்போது இந்த அருள்சுரக்கும் திருச்சபையின் தெய்வீக மணத்தில் மனத்தைப் பறி கொடுத்து இறை சிந்தனை வயப் பட்டு மோன நிலையில் அமைவர். சங்கீதப் பயிற்சியுடையோர் ஈஸ் வர நாம சங்கீர்த்தனம் செய்து கொண்டும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமி களின் தெய்வீக ஆற்றலைச் சித்தரிக்கும் பாட்டுக்களைப் பாடிக் கொண்டும் மகிழ்ச்சியில் மிதந்து கொண்டிருப்பர். சாமிகள் பூஜை அறைக்குள் சுமார் ஒரு மணி நேரம் பூஜை செய்வார். பூஜை முடிந்து விட்டது என்பதை பூஜையறைக்குள் ஒலிக்கும் மணி அறிவித்து விடும். சாமிகள் பூஜை அறையைத் திறந்து அங்குள்ள தெய்வங் களுக்குத் தீபாராதனை செய்வார்கள். தன் திருக்கரத்திலேயே அந்த தீபாராதனைத் தட்டை வெளியில் காத்து நிற்கும் பக்தர்களுக்கு மனமு வந்து ஜோதியுடன் கொண்டுவந்து காட்டி பக்தர்கள் ஜோதியின் தெய்வீக அருளைக் கண்களில் ஒற்றிக்கொள்ள உதவுவர். தட்டில் ஓங்கி விளங்குகின்ற ஜோதி பிரகாசம் சாமிகளின் முகத்தில் சுடர் விட்டுக் குலுங்கும் தெய்வீகப் பேரொளியை பக்தர்களுக்கு எடுத்துக் காட்டும். அந்தச் சமயத்தில் சாமிகளுடைய முகம் ஒரு ஒப்பற்ற அருள் சக்தி கொண்டு விளங்கும்.

பூஜை முடிந்தது. இதன்பின் திருச்சபையில் பூஜை அறையை ஒட்டி இருக்கும் ஹால் பகுதியில் சாமிகள் குரு ஆசனத்தில் கிழக்கு நோக்கி அமர்ந்து அருள்பாலிக்க ஆரம்பிப்பார்கள். சாமிகள் அமர்ந்திருக்கும் பகுதி திரையில் மூடப்படும். இப்படிச் செய்வது பக்தர்கள் தங்கள் குறைகளைச் சாமிகளிடத்தில் மனம் திறந்து சொல்ல வும் சாமிகளும் அருள் சுரந்து அவர்களுக்கு விபூதி பிரசாதம் வழங்கி அவர்கள் குறைதீர வழிகளும் சொல்லி அனுப்பவும் உதவுகின்றது. பக்தர்கள் ஒவ்வொருவராகச் சாமிகளிடம் சென்று அவர் திருத்தாள் களைப்பற்றி வணங்கி அவர் ஆசியோடும் அருள் பிரசாதத்தோடும் திரும்புவர். தம்பதி சமேதராக வருபவரெல்லாம் தம்தம் குடும்பத் தோடு சாமிகளைத் தரிசித்து அருள் ஆசி பெற்றுத் திரும்புவர். இந்த சந்தர்ப்பங்களில் சில சமயங்களில் சாமிகள் உற்சாகப் பெருக்கெடுத் துப் பேரருள் வழியும் நிலை எய்துவர். அப்போது சித்துவிளையாடல் மணம் பொங்கிவழிய ஆரம்பித்துவிடும். சாமிகள் மனம் பொங்க, சித்து மணம் பொங்க ஆரம்பிக்கும். தெய்வாம்சம் பொருந்திய விபூதி, குங்குமம், மஞ்சள், அட்சதைஅரிசி, கல்கண்டு -- இவைகளை சில பக்தர்களுக்கு உள்ளம் உவந்து வரவழைத்துக் கொடுப்பர். இப்படி அருள்பாலிக்கும் பணி முடிந்தவுடன் வெளியே தெருவில் அமைந்துள்ள விநாயகர் கோவிலில் மணி முழங்க தீபாராதனை செய்து சாமிகள் அவ்வேளை பூஜையை முடிப்பர். பூஜை முடிந்தபின்

கணேசருக்கு நைவேத்தியம் செய்த பக்தர்கள் கொண்டுவரும் இனிய தின்பண்டங்களையோ வாழைப் பழங்களையோ தன்னுடைய திருக்கரத் தாலேயே அங்குக் கூடியிருக்கும் பக்தர்களுக்குச் சாமிகள் வழங்குவர். ஒரு சிலருக்கு சாமிகளிடமிருந்து இரண்டாவது முறையும் பிரசாதம் கிடைக்கும்; அதற்கும் காரணம் கூறியே சாமிகள் உவந்தளிப்பர். திருச்சபையில் குருபீடத்தில் அமர்ந்த திருக்கோலத்தில் திருக்காட்சி யளித்த சாமிகள் விநாயகர் கோயிலில் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி திருக்காட்சியளிப்பர். திருவெண்ணீறும் சந்தனப்பொட்டுள் குங்குமப்பொட்டும் விளங்கும் திருமுகம்; உருத்திராக்ஷமாலை விளங் கும் திருமார்பு; தெய்வீகத் திருநீறு மணம் சுற்றிலும் வீசுகின்ற திருமேனி. திருஅருள் ஒளிவீசும் திருமுகமும் திருமணம் சுற்றிவீசும் திருமேனியும் கொண்டு விளங்கும் நடமாடும் தெய்வத்தை பக்தர்கள் விநாயகர் கோயிலில் சாஷ்டாங்கமாகத் தரையில் படுத்துச் சாமிகள் திருப்பாதங்களைப்பற்றி வணக்கம் செலுத்துவர்.

இதன்பின் வெளியூர் அன்பர்கள் சாமிகளைப் பின்தொடர்ந்து 'இராஜ இரத்தின' விலாசத்திற்கே சென்று சாமிகளுடன் ஆத்மீக உரையாடல் செய்வதற்காகச் சாமிகளைக் காண விழைவர். எப்படி வெகு தூரத்திற்கப்பாலுள்ள தாமரையைத் தேடிக்கொண்டு வந்த வண்டுகள் தாமரையைக் கண்டு அதை மொய்த்து அதை விட்டுப் பிரிய மனமில்லாது ஏங்கித் தவிக்குமோ அதே நிலையில் சாமிகளை விட்டுப் பிரிய மனமில்லாது பக்தர்கள் தயங்கித் தயங்கி நிற்பர். இவர்கள் சாமிகளை விட்டுப் பிரியும்போதும் பிரிய மனமில்லாமலே தான் திண்டுக்கல்லை விட்டு நகர்வர். சாமிகள் பக்தர் மேல் கொண்டிருக்கும் கருணை சாமிகளை வீட்டு வாசல் படிக்கே இழுத்து வந்துவிடும். வெகுதூரத்திலிருந்து கார்களில் வந்திருக்கும் தன் ஆப்த சீடர்களையும் மற்ற பக்தர்களையும் சாமிகள் தன் திரு இல்லத்தின் வாசற்படி வரையிலும் வந்து ஆசிகூறி வழியனுப்புவது சாமிகளின் இன்பப்பழக்கமாகி விட்டது. அப்பொழுதுகூடப் பிரிய மனமில்லாத பக்தர்கள் அவர் திருவடிக் கமலங்களைத் தொழுது பிரியத் துணிவதும் பக்தர்களின் பழக்கமாகி விட்டது. சாமிகளின் பக்தர்கள் சாமிகளை அடிக்கடி தரிசித்து வரவே விழைகின்றனர். அவர் ஆத்ம சீடர்கள் மாதத்திற்கொரு முறையாவது அதிலும் சிலர் வாரத்திற்கு ஒரு முறையாகிலும் சாமிகளைக் காணும லிருக்க மனம்விடாது. சண்டைகளும் சச்சரவுகளும் குழப்பங்களும் தொந்திரவுகளும் மலிந்த இந்த வேதனை உலகத்தின் அன்றாட வாழ்க் கையில் எவ்வளவோ மேடுகளை மனிதன் ஏற வேண்டி இருக்கின்றது, எவ்வளவோ பள்ளங்களைத் தாண்ட வேண்டி இருக்கின்றது, எவ்வளவோ ஆறுகளையும், பாலைவனங்களையும் கடக்க வேண்டி இருக்கின்றது. இதற்கு வேண்டிய பலமும் தைரியமும் கொடுக்க யார் எங்கு இருக்கின்றார் என்று ஏங்கித் தவிக்கின்றது உள்ளம்.

அந்த ஏக்கத்தில் தக்கோரில் மிக்கோரான ஒரு தலைமை வழிகாட்டி ஒருவரை மனிதன் கண்டுவிட்டால் அவன் அவரை நாடுகின்றான். அவர் நாவுரையை மனமுவந்து கேட்கின்றான். அவருடைய தரிசனமும் ஆசியும் அருள்வாக்கும், வாடிக் களைப்புற்றிருந்த பெரும் பசிக்காரனுக்கு வாய்த்திட்ட பெருவிருந்துபோல், அவன் மனச்சோர்வை நீக்க உதவுகின்றன. வறண்ட வாழ்க்கையில் வெந்துழலும் மக்கள் அடிக்கடி இந்த அருள் விருந்தை நாடிவருவது இயற்கையே. அது மட்டுமல்ல. ஒரு பாட்டரியை அடிக்கடி சார்ஜ் செய்வதைப்போலவே, மழுங்கிப்போன கத்தரிக்கோலைச் சாணை தீட்டிக்கொள்வதுபோலவே, வாடிப்போன உள்ளங்களுக்குப் புத்தொளியும் புத்துயிரும் பெற்றுக் கொள்ள மக்கள் தீர்க்கதரிசிகளைக்காண விழைகின்றனர். சாமிகளைக் கண்டு அளவளாவிப் பேசிப் பிரியும் சீடர்கள் புத்தொளி கொண்டு புத்துயிர்கொண்டு கலகலப்போடு அருள் பலத்தோடு தம்தம் ஊருக்குத் திரும்புவர்கள், மறுபடியும் சாமிகளிடமிருந்து புத்தொளியைப்பெற திண்டுக்கல்லுக்கு 'இராஜஇரத்தின' நிலையத்திற்கு விரைவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

நல்ல நூலைப் படிக்கப்படிக்க இன்பம். திருக்குறளைப் படிக்கப் படிக்க உள்ளத்திற்கு மட்டும் இன்பமா? அது புகட்டுகின்ற உலக நீதிகள், அதில் பொதிந்திருக்கும் அறிவுக்களஞ்சியங்கள், அதில் ஊற்றுப் பெருக்கெடுத்து வழிகின்ற அனுபவமுதிர்ச்சி உரைகள் சாதாரண அறிவாளிகளுக்கு மட்டுந்தானு மகிழ்ச்சியூட்டுகின்றன. பேரறிவாளர்களுக்கும் அதைப் படிக்கப்படிக்க ஓர் ஆனந்தம். படிக்கப்படிக்க புதுப்புது அனுபவங்களும் புதுப்புதுப் பொருளும் புதுப்புது மெய்யுணர்வும் அடைகின்றனர். இதைப்போன்றுதான் பெரியவர்களுடைய இயல்பும். பண்புடையாளரைப் பார்க்கப் பார்க்கப் பரமானந்தம். ஒருதரம் பார்த்துவிட்டோமென்ற மகிழ்ச்சி, அவரை அத்தோடு விட்டுவிடுவதில்லை. அடிக்கடி அவரைக்காணத் துடிக்கும். அடிக்கடி அவர் அறிவாற்றலுரைகளைக் கேட்கத் துடிக்கும். அடிக்கடி அவர் தெய்வீக உறவைத் தேடத் துடிக்கும்.

"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு"

இப்படித்தானே திருக்குறளும் தன்னுடைய இயல்பையும் தன்னை உலகினுக்கே தந்த வள்ளுவன் இயல்பையும் வள்ளுவனை யொத்த பண்புடையாளர் இயல்பையும் அப்பண்புடையாளனுகிய நமது சாமிகளது இயல்பையும் பறைசாற்றுகின்றது. படிக்கப்படிக்க இனிக்கும் திருக்குறள் அல்லவா நமது சாமிகள்; இத்தேனினும் இனிய திருக்குறளை அடிக்கடிகண்டு படித்துப்படித்துப் பேரின்பத்தில் திளைக்கின்ற வாசகர்களல்லவா அவர் பக்தகோடிகளாகிய நாம்!

சாமிகள் பூஜையை ஆரம்பிப்பதற்கு முன் திவ்ய பரிமள சாம்பி ராணி தூபத்தைப் பூஜை அறையிலும் திருச்சபையிலும் உள்ள தெய் வங்களுக்கும் படங்களுக்கும் காட்டிமகிழ்வர். பூஜை முடிந்தபின் தெய்வ மங்கள சூடதீப ஆராதனை செய்து மகிழ்வர். அதன்பின் பக்தர்களுக்கு அருள்பாலித்து மகிழ்வர். சாமிகளின் இத் தெய்வீக மகிழ்ச்சியைக் கண்டு ஆனந்தப்படும் பக்தர்கள் எண்ணிறந்தவர்; சாமிகள் வாயி லாகப் பொழிகின்ற சிவபோக வாரிதியின் பேரின்பத்தில் திளைக்கின்ற மெய்யன்பர்கள் எண்ணிறந்தவர். அவர்கள் உள்ளுணர்வோடு சாமிகளைப் போற்றும் திருமொழிகளும் எண்ணிறந்தன. "ஓங்கார வடிவம்காட்டி அதன் உண்மைநிலை காட்டி; அகரமுதலாய ஐம்பத் தோரட்சரமும், நிறை மொழி மாந்தர் உரையின் மறைபொருளும், அபரிமித சுருதியும், வெகு விதங்கொண்ட தத்துவமும் விளக்கி சுரியதோரெழுத்தை யுன்னிச் சொல்லும் பஞ்சாட்சரத்தினை தூலத்தில் தொட்டு, தூரியத்திலும் துலக்கி, அருள்மாரி பெய்து, மோனமாம் வித்தைப்பதித்து, அன்பு நீராகவே பாய்ச்சி, வாக்கு மனமணுகாத பூரணமாய், சகலமாய் அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய், நின்ற பொருள் வந்து தேக்கித் திளைக்கவே, அறிவரிதாய், அறிவினுக் கறிவாய், அல்லாமாய், அல்லவுமாய், இருந்ததனை, இருந்தபடி, இருந்துகாட்டி, சொல்லாமல் சொல்லி, ஒரு சொல்லாலுணர்த்தி விமலபோத சொரூபானுபூதி காட்டவல்ல வள்ளல், பன்றிமலை கொண்ட மெய்நிலை கண்ட குரு உள்ளும் புறமுமாய், உள்ள தெல்லாம் தானுகும் வெள்ளமாய், சிவபோகமென்னும் பெருவாரிக் கழைக்கவே, உறவோடு கலந்துண்ண விழைந்து, "விரைந்துவாரும் உலகீரே! சேரவாரும் ஜெகத்தீரே! என வழைத்தோம். இது உண்மை! வெறும்புகழ்ச்சி இல்லை" – இப்படி உண்மைத் தேன் சொல்மாரி பொழிந்து உலகினை திண்டுக்கல்லுக்கு அழைக்கின்றுர் திண்டுக்கல் ஸப்-ஜட்ஜ் திரு. எஸ். சூரியமூர்த்தி அவர்கள் 2—2—61ல்.

சாமிகள் தெய்வீக நிலையில் அடைந்துள்ள கீர்த்தியை நம்மால் அளவிட முடியுமா? இப்பாருலகில் பலபேர்கள் பல வகையால் பெற்றுர் கீர்த்தி. நம் கருணுகரனுகிய சாமிகள் சண்முகனின் தண்ணருளால் பெற்றுர் கீர்த்தி. அவருடைய பாதமலர்களை வழுத்து கின்ற நாமோ அவரடியார் என்ற கீர்த்தியை அடைந்துவிட்டோம். அந்த ஆனந்த நிலையில் அமைந்துள்ள ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் கீர்த்திப்பத்தைப் பாடி மகிழ்வோம்.

நெல்லாலே வள்ளலென வாழ்ந்த சடையன்
நேயமிகு கம்பனது கவியால் கீர்த்தி
வில்லாலே வீரனெனத் திகழ்ந்த விஜயன்
உயர் கிருட்ணன் கீதையினுல் பெற்றுன் கீர்த்தி

சொல்லாலும் செயலாலும் சாந்த மூர்த்தி
சண்முகனின் தண்ணருளால் பெற்றாய் கீர்த்தி
நல்லோன் உன் கருணையினால் வாழும் நாமோ
நாயகஉன் நற்றவத்தால் பெற்றோம் கீர்த்தி.

2. நல்லாளால் அறம் வளர்த்த திருவள்ளுவர்
நிலையான திருக்குறளால் பெற்றார் கீர்த்தி
கல்லாதான் கற்ற கவி காளிதாசன்
காளியன்னைக் கருணையினால் பெற்றான் கீர்த்தி
இல்லாளின் இன்பசுகம் பெற்ற மெய்யா!
இறைவனது தண்ணளியால் பெற்றாய் கீர்த்தி
எல்லாமும் நீயே யென்றிருக்கும் நாமோ
இன்ப வடிவான உம்மால் பெற்றோம் கீர்த்தி.

3. தஞ்சமென வந்தடைந்தோர்த் துயரைத் தீர்ப்போன்
துயர்நீங்கும் வெண்புருவால் பெற்றான் கீர்த்தி
அஞ்சுவதேன் என்றருளும் சக்கிர பாணி
அன்றொருநாள் களிறென்றால் பெற்றான் கீர்த்தி
மஞ்சுதவழ் பன்றிமலை புனித நாதா!
மயில்வாகன் மகிமையினால் பெற்றாய் கீர்த்தி
கொஞ்சுமொழி கேட்டுனது அடிகள் கண்டோம்
குவலயத்தில் உம்மருளால் கொண்டோம் கீர்த்தி.

4. இராஜாதி இராஜன் அவன் வழிவந்தோர்கள்
இரதக்கோயில் கட்டுவித்துக் கண்டார் கீர்த்தி
வீராதி வீரரெனத் திகழும் தென்னோர்
வண்டமிழால் உலகத்தில் கண்டார் கீர்த்தி
சூராதி சூரனையே அழிக்க வந்த
செவ்வேலன் பேரன்பால் பெற்றாய் கீர்த்தி
போராத காலமிலை உமை யடைந்தோம்
புனிதமலர் தாள்படவே கொண்டோம் கீர்த்தி.

5. அறத்தாலே வளர்வேந்தன் பாரி மன்னன்
ஆசைமலர் முல்லையினால் அடைந்தான் கீர்த்தி
திறத்தாலே கவிவாணர் போற்றும் வேந்தோ
தேவகனி நெல்லியினால் பெற்றான் கீர்த்தி
உறத்தாலே நற்றவத்தின் பலமே மிக்கோய்!
உமைபாகன் மகனருளால் பெற்றாய் கீர்த்தி
வெறும்பூசல் வழக்குகளில் உழலும் யாமோ
உன்னருளின் தண்ணளியால் பெற்றோம் கீர்த்தி.

6. கங்கைநதி காவிரியும் ஆடி ஓடி
கலைவளரும் நகர்கொழிக்கக் கொள்ளும் கீர்த்தி
மங்கையரும் மணவாளர் மெச்சும் பெண்கள்
மேதினியில் கற்பொன்றால் கொள்வர் கீர்த்தி
அங்கயற்கண் அம்மையருள் பாலா வேதா
அருள்பொழியும் குருநிலையில் பெற்றாய் கீர்த்தி
பங்கயமுன்தாள் சேர்ந்தோம் கிருபா மூர்த்தி
புண்ணியனே உனதருளால் பெற்றோம் கீர்த்தி

7. நீதிநெறி வழுவாத நேர்மைச் சோழன்
நற்பசுவின் செயலாலே கொண்டான் கீர்த்தி
வேதநெறி தவறாத உண்மை பேசன்
வண்ணமயில் ஒன்றாலே கொண்டான் கீர்த்தி
கீதைநெறி வழுவாத எங்கள் வேந்தே!
கருணைமுகப் பொலிவதனால் பெற்றாய் கீர்த்தி
பாதநெறி வழுவாத உன்றன் பக்தர்
பாசவழி நீர்காட்டக் கண்டோம் கீர்த்தி.

8. அறவழியே கொண்டுயர்ந்த அண்ணல் காந்தி
அகிம்சாவின் சக்தியினால் கொண்டான் கீர்த்தி
திறமைமிகு உலகுபுகழ் ஜவகர் நேரு
தாய்நாட்டின் தொண்டதனால் கொண்டான் கீர்த்தி
மறையுணரும் நல்மார்க்கத் துறையில் செல்வா
மால்மருகன் பேரன்பால் பெற்றாய் கீர்த்தி
நிறையுணரா நற்சுகத்தைக் காண நாமோ
நாதன் உமதருள்மலரால் பெற்றோம் கீர்த்தி.

9. அறிவுரையின் திருவிளக்கு விவேகானந்தர்
அன்புகுரு பரமஹம்சர் அவரால் கீர்த்தி
அருள்ஜோதி தனிக் கருணை இராமலிங்கம்
அருட்பாவால் அவனியிலே கொண்டார் கீர்த்தி
திருமணியே எங்கள் குலக்குருவே அன்பே!
திருமுருகன் பேரருளால் பெற்றாய் கீர்த்தி
வெறும்மனிதர் வாழ்க்கையிலே உழலும் நாமோ
உம்பாதமலர் தொட்டுக் கொண்டோம் கீர்த்தி.

10. குரு மணிகள் சங்கரரும் இராமானுஜரும்
குருபீடம் அமைத்ததனல் கொண்டார் கீர்த்தி
திருமணி சொல் மாணிக்க வாசகரும்
தெய்வத்திரு வாசகத்தால் கொண்டார் கீர்த்தி
அருமைகவி, இன்னிசையும் தெய்வ மொழியும்
அற்புதங்கள் இவைகளினல் பெற்ருேய் கீர்த்தி !
பெருமைபுகழ் இன்பம் எழில் உம்மால் பெற்ருேம்
புண்ணியனே குருஅருளால் பெற்ருேம் கீர்த்தி.

சாமிகளுடைய கீர்த்தியைப் போற்றுகின்ற நமது உள்ளங்கள் அவர் புகழை ஒரு கீர்த்தனத்தில் அமைத்து இன்புறுவோம்.

இராகம் : மோஹனம் ] [ தாளம் : ஆதி

பல்லவி

பன்றிமலை அய்யனே பரமனருள்
பெற்ற சீரடி மெய்யனே

அனு–பல்லவி

குன்றம் குடிகொண்டவன் கோலமயில்வாகன்
கந்தன் கருணைகொண்ட காருண்யமூர்த்தியே – பன்றிமலை

சரணம்

சென்ற இடமெல்லாம் உன்சீரும்சிறப்பும் கண்டோம்
சீடரிடத்தில் உள்ளம் உவக்கும் களிப்பும் கண்டோம்
மன்றமாடு மகிபன் மாதொருபாகன் சிவன்
மங்களம் தாங்கிடும் மங்கள மூர்த்தியே – பன்றிமலை.

சுபம்.

## 22. குருமகராஜன் திருத்தவத்திரு, பன்றிமலை சாமிகள்.

"அன்புருவாம் பன்றிமலை அருள் அரசே போற்றி
ஆனந்தம் ஊட்டுகின்ற ஆரமுதே போற்றி
இன்பத்தேன் உவந்தளிக்கும் எழில்மலரே போற்றி
ஈசனருள் நிழலளிக்கும் இன்னமுதே போற்றி"

இராஜஇரத்தின விலாசமுள்ள தம் திரு இல்லத்தில் வாழ்ந்து வரும் சாமிகள் தம் பக்தர்கள் மனக் கோவிலிலும் வீற்றிருக்கின்றார். பக்தர்கள் விரும்பி அழைக்கும்போதெல்லாம் பக்தர்கள் ஊர்களுக்கு விஜயம் செய்து அவர்கள் இல்லங்களுக்குச் சென்று அவர்களை மகிழ் விக்கின்றார். பக்தர்கள் இல்லங்களில் எழுந்தருளி இருக்கும்போது காலையிலும் மாலையிலும் பூஜை அறையில் பூஜை செய்கின்றார். பூஜை முடிந்தவுடன் சாமிகளுடைய விபூதிப் பிரசாதத்திற்காகக் காத்திருக்கும் மக்களுக்கு அருள்புரிகின்றார். சில சமயங்களில் சாமிகளைத் தம் வீடு களுக்கு அழைத்து பக்தர்கள் சாமிகளுக்குப் பாதபூஜை செய்து அவ ரது சரண கமல திருவடிகளைத் தொழுகின்றனர். சாமிகள் இருக்கு மிடங்களெல்லாம் இராஜ கெம்பீரத்துடனும் இரத்தின மதிப்போடும் 'இராஜ இரத்தின' விலாசமாகவே விளங்கும். அங்கு பக்தர்கள் திருக்கூட்டமும் மலர் மாலைகளும், பாடகர்களும் பாமாலைகளும், பல கலை நிபுணர்களும் வாழ்த்து வரவேற்பு இதழ்களும் வந்த வண்ணமாகவே இருப்பது சாமிகளது பெருமையை எடுத்துரைக்கும். ஸ்ரீ பன்றிமலை சாமிகள் நடமாடும் தெய்வமாதலால் பல பக்தர்கள் அவரைச் சூழ்ந்து பணிகின்றனர். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஒரு நடக்கும் பல்கலைக் கழகமாக விளங்குவதால் ஆற்றல் மிகுந்த பேரா சிரியர்கள், வைத்திய நிபுணர்கள், வழக்கறிஞர்கள், அறிவாளிகள் அவரை மொய்த்த வண்ணமாகவே இருக்கின்றனர். கற்றவர் செல்லு மிடமெல்லாம் சிறப்பு கூடுகின்றது. கற்றவர் தொழுதேத்தும் நற்றவர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் செல்லும் இடமெல்லாம் ஒரு உற்சவமே உருவாகி விடுகின்றது.

அல்லல் உலகில் அவதிப்படும் மக்களின் அல்லல்களை நீக்க ஒரு தெய்வம் வேண்டும். அந்தத் தெய்வத்தின் இயல்பினை மறை

களும் இலக்கியங்களும் வகைவகையாக வருணிக்கின்றன. அவனை அரூபியென்றும் சொரூபி என்னும் புகழ்கின்றன; எங்கும் நிறைந்தவனென்றும் இயம்புகின்றன ; தன்னுள் இருப்பவனென்றும் சாற்றுகின்றன. இத்தகைய மாயபிரானை அடைவதற்கு எவ்வளவோ மார்க்கங்களும் கூறப்பட்டுள்ளன. இருந்தாலும் 'ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது' என்பதற்கிணங்க, ஒருவர் எவ்வளவுதான் நூல்களை அலசி அலசிப் படித்தாலும் ஆண்டவன் அருளை அடைய ஆண்டவன் அருளை பரிபூரணமாக அனுபவிக்கும் பெரியார்களின் உதவி இன்றியமையாதிருக்கின்றது. அவருதவியின்றி ஆண்டவனைக்கூட முடியாது.

"உருவின்றியே நின்று உருவம் புணர்க்கும்
கருவின்றியே நின்று தான் கருவாகும்
அருவின்றியே நின்ற மாய பிரானை
குருவன்றி யாவர்க்கும்கூட ஒண்ணாதே"

ஈசனடி மறவாத சிந்தையர் இத்தகைய பெரியோரை குருவாக அடைந்துவிட்டால் குருவினடி மறவாத மனத்தினராகின்றனர். அவர்கள் ஈசனையும் குருவையும் ஒன்றாகப் பார்க்கின்றனர். ஈசனே குருவடிவில் உலகில் அவருக்கு வாய்த்துள்ள நடமாடும் தெய்வமென எண்ணுகின்றனர். 'பரம்பொருள் விளக்கத்தைக் காட்டுபவனும் குருவே, பரம்பொருளும் குருவே" என்று குருவைப் போற்றுகின்றனர். கிடைத்தற்கரிய பேரின்பப் பெருவெள்ளத்தில் மிதக்கின்றார்கள்.

"ஆசானும் ஈசானும் ஒன்றே யாகும்
அவனருளும் ஒன்றாகும் அது தானாகும்
பேசாத மந்திரமும் இதுவேயாகும்
பேரொளியின் வடிவமாகும் பேறுமாகும்"

"நேராறும் கலைகளெல்லாம் தானேயாகும்
நிலையான ஓங்காரப் பீடமாகும்
ஈசானை ஆசானாய்க் காணும் பேர்க்கு
இன்பமுடன் கைலாசம் எய்தலாமே"

மேலே கூறிய மூன்று பாடல்களையும் கூறி அவற்றிற்கு விளக்கம் கொடுத்தவர் நமது சாமிகள். அவர் திருவாக்கால் மட்டுமா நமக்கு விளக்கம் கொடுக்கின்றார் சாமிகள். இப்பாடல்களுக்கு அவரே உண்மையில் ஒரு விளக்கமல்லவா? சாமிகளே பக்தர்களின் அல்லல் அகற்றுகின்ற அருளாளன், செழுங்கருணை ஊற்று, குருமகராஜன்.

குருவை இறைவனாகவும் இறைவனைக் குருவாகவும் ஏற்கும் உள்ளங்களுக்குக் குருதாளைப் பணிவது இறைவனையே பணிவதாக

அமைந்துள்ளது. முழுமுதல் கடவுளை நாம் கண்டதில்லை ; ஆனால் நடமாடும் தெய்வத்தைக் கண்டுள்ளோம், ஞான குரு ஸ்தானத்தில் ! இடர்பட்டோர் அடைக்கலம் என்று பற்றுவது சரண கமலாலயமாகிய திருவடிகள். அப்பா என்னைக் காப்பாற்று என்று திருவடிகளிலே தான் விழுகின்றோம். உன் பாத கமலங்களே துணையென்று பாத மலர்களைப் பற்றிக் கொள்கின்றோம். பாதக்கமலங்களை சிரசின்மீது வைத்து அகங்குளிர்கின்றோம். எம்பெருமானது பாத மலர்களை மணிவாசகம் போற்றுவது தமிழ் இலக்கியத்திலேயே தலைசிறந்த வர்ணனைகளில் ஒன்று.

" நமசிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க
இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் [வாழ்க
கோகழியாண்ட குருமணிதன் தாள் வாழ்க
ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க "

இப்படி ஈசன் திருவடிகளை வாழ்த்திய மாணிக்கவாசகர்,

" வேகம் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப் பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க "

என்று திருவடிகளின் வெற்றியைப்பாட முனைந்தார். அதன்பின்,

" ஈசனடி போற்றி எந்தை அடிபோற்றி
......................
ஆராத இன்பம் அருளும் மலை போற்றி "

என்று ஈசனடிகளைப் போற்ற ஆரம்பித்துவிட்டார். நம்மை வாழ்விக்க வந்த பாதம் சாமிகளது திருப்பாதம் : நமக்கு வெற்றிக்கு வழி காட்டும் பாதம் சாமிகளது திருப்பாதம் : நம்மைப் போற்றுகின்ற (பாதுகாக்கின்ற) பாதமும் சாமிகளது திருப்பாதம். இறைவன் குருவடிவில் எழுந்தருளி பிறவிப்பிணியை நீக்க ஞான உபதேசம் செய்தருளுவது என்பது சைவ சித்தாந்தம் எடுத்துரைக்கும் உண்மை. ஆதலால் கடவுளின் கல்யாண குணங்கள் கொண்ட ஞான தேசிகனாகிய குருவையும் இப்படி வாழ்த்தி வணங்குவது நமது கடனல்லவா. நமது சாமிகள் 'நாம்சிவம்' எனும் 'நமசிவாய'ப் பேருண்மையை எடுத்துரைக்கும் குரு : எப்பொழுதும் நம் நெஞ்சில் நிலைத்திருக்கும் நடமாடும் தெய்வம் : பிறவிப்பிணியைப் போக்குவிக்க வந்த ஆராத இன்பம் அருளும் ஞான தேசிகன். அவன் தாளை வணங்குவது ஏகனாகவும் அநேகனாகவும் உள்ள இறைவனை வணங்குவதேயாகும்.

திருவடி வணக்கத்தைத் திருக்குறள் செல்வம் எடுத்துரைக்கும் முறையில் ஒரு தனி சிறப்புண்டு. கடவுள் திருவடிகளுக்கும் வள்ளுவர் வாசகம் பொருந்தும்: நடமாடும் பெரியவர்களது திருவடிகளுக்கும் வள்ளுவர் வாசகம் பொருந்தும். தூய அந்தமில் அறிவு வடிவினனாக விளங்கும் இறைவன் திருவடிகளைத் தொழாமல் இருந்தால் நாம் கற்ற கல்வியின் பயன்தான் என்ன?

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்?"

இந்த வாலறிவன் யார்? இது கடவுளுக்கும் பொருந்தும். நடமாடும் தெய்வத்திற்கும் பொருந்தும். அதுபோன்றே 'மலர் மிசை ஏகினான் மாணடி என்ற சொற்களும்,' 'வேண்டுதல் வேண்டாமை இலான்,' 'தனக்குவமை இல்லாதான்' 'அறவாழி அந்தணன்' என்று வள்ளுவர் சொன்ன தொடர்களெல்லாம் கடவுளையும் குறிக்கும். உலகில் உலவுகின்ற கடவுட் தன்மை கொண்டொழுகும் பெரு மகான்களுக்கும் பொருந்தும். இத்தகைய தெய்வத்தின் திருவடிகளை தம் மனத்தில் வைத்து வழிபடுபவர்களுக்கும், விருப்பு வெறுப்பு இல்லாத இறைவனடிகளை வழுத்துவோருக்கும், தனக்கு ஒப்புமை இல்லாத தேவனின் பாதங்களை என்றும் சிந்தனை செய்வோருக்கும், அறக் கடவுளெனச் செந்தண்மை பூண்டொழுகும் தெய்வத்தின் திருவடி கமலங்களை வணங்குகின்றவர்க்கும் நீண்ட ஆயுளுண்டு. துன்பமென்பதே இல்லை. இன்பம் பொங்கும். சீரும் சிறப்பும் ஓங்கும்.

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

"வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல."

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது."

"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது."

இத்திருக்குறள் பாக்கள் உலகத்தில் உள்ள மகான்களுக்கும் பொருத்தமாக வாய்ந்துள்ளன. இறைவனடியை குருவினடிகளை வணங்குகின்றவர்கட்கு பிறவிப் பெருங்கடலை நீந்தக்கூடிய சக்தி உண்டு.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்"

கடவுளைப் போற்றுகின்ற இந்தக் கருத்துக் குறள்கள் குருவைப் போற்றுகின்ற பாக்களல்லவா? இந்த மெய்யுணர்வை அனுபவிக்கின்ற அன்பர்களல்லவா குருவின் தாளைத் தம் கரங்களில் பற்றி, சிரம் தாழ்த்தி, முகத்தால் முகர்ந்து வணங்கி ஆனந்தக் கண்ணீருகுக்கின்றனர். இப்படி அன்பர்கள் சரணடைவதால் அருள்சுரக்கின்ற நடமாடும் தெய்வத்தின் அருளும் உதவியும் தங்குதடையின்றிக் கிடைக்கின்றது. சிரசால் வணங்கக்கூடிய திருநிலை பெற்ற திருவடிகளைப் பூஜை செய்ய அபிஷேக ஆராதனைகள் ஏற்பாடாகின்றன. தோத்தரிக்க நாமாவளிகளும் உருவாகின்றன. போற்றிப் பாடல்களும் தயாராகின்றன. அவைகளோடு திருவடிகளில் புட்பங்கள் தூவி அர்ச்சனை செய்யவும் வழி வகுக்கப்படுகின்றது. இப்படி வகுத்த குரு வழிபாடே பாத பூஜையென அழைக்கப்படுகின்றது. குருவின் பாத மலர்கள் கிடைக்கப்பெற்ற இல்லங்களில் சீடர்களும் பக்தர்களும் குருவின் திருப்பாதங்களுக்குப் பூஜை செய்கின்றனர். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளுக்குப் பாதபூஜை பல இல்லங்களில் சிறப்பாக நடக்கின்றது. சாமிகள் மலாயாவில் பிரயாணம் செய்த பொழுதும் இந்தப் பாதபூஜை விமரிசையாகப் பல இடங்களில் கொண்டாட்டத்துடன் நடைபெற்றது. நமது சாமிகள் பாத பூஜைக்கும் மற்ற குருக்களுக்கு நடக்கும் பாதபூஜைக்கும் ஒரு வித்தியாசம் உண்டு. பொதுவாக புத்தம்புது நறுமணமலர்களைக் காணிக்கையாகச் செலுத்தும் அன்பர்கள் சுவர்ண புஷ்பத்தையும் குருக்களுக்குக் காணிக்கையாக அளிக்கின்றனர். ஆனால் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஏற்றுக் கொள்வது மண மலர்களும் மற்றொரு ஈடு இணையில்லாத திருமலரும். அது பெருந்தொகையாக வடிவெடுக்கும் ஸ்வர்ண புஷ்பமல்ல. அது விலைமதிக்க முடியாத பக்தர்களின் உள்ளன்பு மலர் ஒன்றே!

நமது சாமிகளுக்குப் பாதபூஜை நடக்கும் முறையைக் காண்போம். ஒரு பக்தர் வீட்டில் சாமிகள் பூஜை அறையில் காலையிலோ மாலையிலோ பூஜை செய்கின்றார். பூஜை முடிந்தவுடன் சாமிகள் வரவுக்காகக் காத்திருக்கும் அன்பர்கள் வீற்றிருக்கும் பெரிய ஹாலில் சாமிகள் எழுந்தருளுகின்றார். சாமிகளுக்கென்றே ஏற்பாடாகி இருக்கும் குருபீடத்தில் சாமிகள் அமர்கின்றார். சாமிகள் வீற்றிருக்கும் ஹாலில் திருச்சபை கூடிய கலை சோபிக்க ஆரம்பித்துவிடும். சாமிகளின் திருவருள் சிறப்பை விளக்குகின்ற திருப்பாடல்களைப் பாடகர்கள் தனித்தோ சேர்ந்தோ பாட சாமிகளின் திருவடிகளுக்கு அபிஷேகம் நடக்கின்றது. பாலாபிஷேகம், தேன் அபிஷேகம், இளநீர் அபிஷேகம், பன்னீர் அபிசேஷகம், பஞ்சாமிர்தம் அபிஷேகம், சந்தன அபிஷேகம், விபூதி அபிஷேகம் — இவைகள் வரிசையாக நடக்கின்றன. ஒவ்வொரு அபிஷேகம் முடிந்தவுடன் சாமிகளின் திருவடிகளின் மேல் மஞ்சள் தடவி குங்குமத்திலகமிட்டு மலர்களை அணிவித்து மணியோசையோடு தூபதீபாராதனை நடக்கின்றது.

கடைசியாக விபூதி அபிஷேகம் நடக்கும்போது சாமிகளின் திருவடிக் கமலங்களில் திருநீறு மேலும் கீழும் நிறைந்திருக்கும். இந்த நிறை வேளையில் ஒவ்வொரு அன்பர் மனத்திலும் பக்தி நிறைந்திருக்கும். சாமிகள் வீற்றிருக்கும் ஹாலில் திருநீற்றின் வாசனை தெய்வீக மணத் துடன் வீச ஆரம்பித்து விடும். அப்போது அந்த இல்லத்தின் சதி பதிகள், இருவரும் சேர்ந்து சாமிகளுக்கு அபிஷேகம் செய்து தூப தீபாராதனை செய்தது போலவே, உளமுவந்து பக்தி பரவசத்தில் சாமிகள் போற்றிபாடி, முல்லை, தாமரை, ரோஜா. முதலிய மலர்க ளால் சாமிகளின் திருவடிகளுக்கு அர்ச்சனை செய்விக்க ஆரம்பிக் கின்றனர். ஒருவர் சாமிகளின் போற்றி பாமாலையை ஒவ்வொரு வரி யாகப் பாட மற்ற பக்தர்கள் கூட்டாக அந்த வரியைத் தொடர்ந்து பாட பாமாலை பூர்த்தியாகின்றது. போற்றிபாமாலை ஆரம்பிப் பதைக் கேளுங்கள்.

உ

கணபதி துணை.

## காப்பு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை, ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

கணபதி துணை

முன்னவனே யானை முகத்தவனே முக்திநலம்
சொன்னவனே தூமெய்ச் சுகத்தவனே—மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
தற்பரனே நின்தாள் சரண்.

ஓம் கணபதியைத் தொழக் காரியம் கை கூடும்
கணபதியைத் தொழக் கண்டபேர் வசியமாம்
கணபதியைத் தொழக் கர்மவினை தீரும்
கணபதியைத் தொழக் கைலாசம் கிட்டுமே

அரிதிரு மருகனை ஆதிக் கடவுளைத்
திருவருள் புரியவே தினம்துதி செய்வோம்.

## நெஞ்சமே அஞ்சாதே நீ

நெஞ்சே வருந்தாதே நீங்கும் துயரெல்லாம்
அஞ்சாதே வெற்றி அடைந்திடுவாய்—மஞ்சுதவழ்
பன்றிமலைச் சித்தர்அருள் பாலிக்க வந்துவிட்டார்
இன்பமே என்றும் இனி.

வென்றிவேல் ஏந்துமிள வீரன் அருள்பெற்ற
பன்றிமலைச் சித்தர் பதமலரே—என்றென்றும்
தஞ்சமெனக் கொண்டபின்னர் தாழ்ச்சி யடைவதுண்
[டோ
நெஞ்சமே அஞ்சாதே நீ.

சிவனை வழிபட்டார் எண் இலாத் தேவர்
அவனை வழிபட்டு அங்கு ஆமாறு ஒன்று இல்லை
அவனை வழிபட்டு அங்கு ஆமாறு காட்டும்
குருவை வழிபடின் கூடலும் ஆமே.

—திருமந்திரம்.

உ

ஓம்

## போற்றிப் பாமாலை

அன்புருவாம் பன்றிமலை அருள்அரசே போற்றி
ஆனந்தம் ஊட்டுகின்ற ஆரமுதே போற்றி
இன்பத்தேன் உவந்தளிக்கும் எழில்மலரே போற்றி
ஈசனருள் நிழலளிக்கும் இன்னமுதே போற்றி

இதயத்தின் இருள்நீக்கும் எழிற்சுடரே போற்றி
ஈடில்லா அமைதிதரும் இறையவனே போற்றி
உதயகதிர் போலொளிரும் உத்தமனே போற்றி
உண்மையெனும் உயர்பொருளை உணர்ந்தவனே போற்றி

உள்ளத்தை மலர்விக்கும் ஒண்கதிரே போற்றி
ஊனுருக்கி உயிர்உருக்கும் ஒலிவடிவே போற்றி
வெள்ளமெனக் கருணைபொழி விண்முகிலே போற்றி
வேதாந்தம் தெளிவாக்கும் விண்விளக்கே போற்றி

எண்ணத்தில் அருள்வேட்கை எழுப்பிவைத்தோய் போற்றி
ஏக்கத்தைப் போக்கவல்ல இன்னுருவே போற்றி
எண்ணமெனும் பொய்கையிலே விரிமலரே போற்றி
ஏகாந்த வீதியில்என் வழித்துணையே போற்றி

ஐயமெல்லாம் அகற்றுகின்ற அறிவொளியே போற்றி
ஐந்தெழுத்தின் பொருளுணர்த்தும் அருட்கனியே போற்றி
வையமெல்லாம் மகிழயின்பம் வழங்கிடுவோய் போற்றி
வானகத்தை மண்ணகத்தே காட்டவல்லோய் போற்றி

ஒண்சுடர்வேல் முருகனருள் உடையவனே போற்றி
ஓதாமல் மறைமுடிவை உணர்ந்தவனே போற்றி
மண்ணகத்தோர் பிணிதீர்க்கும் மருத்துவனே போற்றி
மாயஇருள் மயக்கறுக்கும் மன்னவனே போற்றி

கண்கண்ட தெய்வீகக் கற்பகமே போற்றி
காரிருளாம் துயர்நீக்கும் கதிரொளியே போற்றி
கண்ணுதலோன் அருள்பெற்ற தவக்கனலே போற்றி
காவியுடை புனையாத தவவடிவே போற்றி

கின்னரர்தம் இன்னிசையில் இன்புறுவோய் போற்றி
கீதஒலி தனில்மகிழும் மாதவனே போற்றி
குன்றிலுறை குமரனருட் குவையுடையாய் போற்றி
கூற்றுதைத்த நாதனருட் பேறுடையாய் போற்றி

கெஞ்சுமனத் துயர்நீக்கி அருள்புரிவாய் போற்றி
கேடகற்றி இன்பஒளி நல்கிடுவாய் போற்றி
அஞ்சலென அபயகரம் அளித்திடுவாய் போற்றி
அற்புதங்கள் காட்டிமனம் அடிமைகொண்டாய் போற்றி

கொடுவினைகள் நீறுக்கும் கொற்றவனே போற்றி
கோலமதி புனைசடையன் பாலகனே போற்றி
கடுவினையும் அமுதாக்கும் அருட்கடலே போற்றி
கந்தனருள் பெற்றபன்றி மலையரசே போற்றி

சரவணத்தான் மனம்நீங்காச் சற்குருவே போற்றி
சார்ந்தவர்க்குச் சரணளித்துக் காக்கவல்லோய் போற்றி
சிரங்குவிவார் பவம்கெடுக்கும் சீருடையாய் போற்றி
சீதளப்பூந் தென்றலென உலவிடுவாய் போற்றி

சுந்தரமாய்க் காட்சிதரும் சுடர்வடிவே போற்றி
சூதற்றோர் மனம்கோவில் கொளும்சோதி போற்றி
செந்தமிழாய் இனிமைதரும் தேனமுதே போற்றி
சேர்ந்தார்க்குக் களிப்பருளும் செஞ்சுடரே போற்றி

சொல்லுக்குப் பொருளாகும் சுடர்உருவே போற்றி
சோதிவடி வாயிலங்கும் ஆதியனே போற்றி
வெல்லுதிறல் வேலனருட் பொற்புடையாய் போற்றி
வினையகற்றும் பன்றிமலை வெற்புடையாய் போற்றி

தஞ்சமடைந் தவர்க்கருளும் தண்ணருளே போற்றி
தாய்போன்று பரிந்தருளும் தயைவடிவே போற்றி
மஞ்சுதவழ் பன்றிமலை மன்னவனே போற்றி
மால்மருகன் அருள்காட்டும் தென்னவனே போற்றி

திருநீற்றின் மணம்கமழும் அருள்வடிவே போற்றி
தீவினையைப் பொடியாக்கும் செந்தழலே போற்றி
அருள்நோக்கால் துயர்நீக்கும் அன்புருவே போற்றி
அறநெறிஇல் வாழ்வென்றே காட்டுகின்றோய் போற்றி

துளவத்தார் தனைஏத்தும் தூயவனே போற்றி
தூயகொன்றை மலர்விழையும் மாயவனே போற்றி
துளக்கமறத் துணிவூட்டித் துணையானாய் போற்றி
தூண்டாத மணிவிளக்காய்த் துலங்கிடுவாய் போற்றி

தென்பாண்டி நாடளித்த தேசிகனே போற்றி
தேவாதிதேவனருட் திருவளிப்பாய் போற்றி
தென்றலிலே வரும்தெய்வ நறுமணமே போற்றி
தேன்பலவின் கனிச்சுளையின் தீஞ்சுவையே போற்றி

தையலுடன் அறம்வளர்க்கும் தவமணியே போற்றி
தானென்னும் செருக்கழிக்கும் தனித்தலைவா போற்றி
வையகத்தை உய்விக்கும் வானமுதே போற்றி
வளர்பிறை வேணியனருளைக் கூட்டுவிப்போய் போற்றி

பன்றிமலை வேந்தேநின் பாதமலர் போற்றி
பாவவினை நீறுக்கும் பரஞ்சுடரே போற்றி
பன்னிருகை வேலனருள் திருவுடையாய் போற்றி
பாசபந்தம் கடந்தொளிரும் பரம்பொருளே போற்றி

பித்தனருள் நடம்காணும் பெருஞ்சித்தா போற்றி
பீடுடைய சிவனைமன வீடடைத்தோய் போற்றி
புத்தமுத ஞானவெள்ளம் பொழிந்திடுவோய் போற்றி
பூரணன்தாள் கூட்டுவிக்கும் புண்ணியனே போற்றி

பெண்சுமக்கும் பித்தனன்பைப் பெற்றுள்ளோய் போற்றி
பேயுடன்கூத் தாடும்அரன் நேயமுள்ளாய் போற்றி
பெண்ணுடனே அறம்பேணும் பேரன்பே போற்றி
பேரின்ப நெறிகாட்டும் பேரொளியே போற்றி

மலைவகற்றும் பன்றிமலை மன்னவனே போற்றி
மாநிலத்தில் தெய்வமணம் தரும்பொழிலே போற்றி
அலையுமனப் புயலடக்கும் அன்புருவே போற்றி
ஆனந்தத் தேன்பிலிற்றும் அருள்மலரே போற்றி

மின்னும்அறி வால்மனத்தின் இருள் அழிப்பாய் போற்றி
மீன்போன்று கடல் வாழ்வின் திசைகாட்டி போற்றி
மென்காற்றில் தவழ்ந்துவரும் இன்னிசையே போற்றி
மேதினியில் இருள் துரத்தும் விடிவெள்ளி போற்றி

முத்தனைய கருத்தருளும் மூதறிஞ போற்றி
மூவாசை மயக்கறுத்த முழுமுதல்வா போற்றி
சித்துக்கள் புரிகின்ற சிவநேசா போற்றி
செந்நெறியைக் காட்டுகின்ற தவசீலா போற்றி

வழிநடந்த களைப்பகற்றும் நிழல்தருவே போற்றி
வாட்டம்நீங் கப்பாடும் பூங்குயிலே போற்றி
விழிசெய்த தவப்பயனாய் விரிமலரே போற்றி
வீட்டையும் வழிகாட்டும் விண்ணொளியே போற்றி

விந்தைபல நிகழ்த்துகின்ற வித்தகனே போற்றி
விதிஎழுத்தும் வலிகுன்ற அருள்புரிவாய் போற்றி
மந்திரமாம் ஐந்தெழுத்தின் மாண்பறிந்தோய் போற்றி
மண்ணுலகை விண்ணுலகாய் மாற்றவல்லோய் போற்றி

வென்றிவடி வேலனருட் பேறுடையாய் போற்றி
விடையேறும் ஈசனருள் நிதியுடையாய் போற்றி
பன்றிமலை புவிக்களித்த பாண்டியனே போற்றி
பாரெங்கும் இன்பஒளி பரப்பிடுவோய் போற்றி

ஓம் ஸ்ரீ பன்றிமலை சுவாமி சரணம்.

சில இல்லங்களில் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அஷ்டோத்திர சத நாமாவளியோடு அர்ச்சனை நடக்கின்றது. சில சமயங்களில் தமிழ்த்தோத்திர பாமாலையும் சமஸ்கிருத அஷ்டோத்திர சத நாமா வளியும் அர்ச்சனைக்கு அடுத்தடுத்துப் பயன்படுகின்றன.

## ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள்
## அஷ்டோத்திர சதநாமாவளி

ஓம் ஸ்ரீ பன்றிமலை ஸ்வாமினே நம:
,, பன்றிமலை ராமஸ்வரூபாய நம:
,, சத்ய தர்ம பாராயணாய நம:
,, மஹேஸ்வராய நம:
,, சர்வாந்தர்யாமினே நம: 5

ஓம்ஸ்ரீ ஸ்ரீஅவதார மூர்த்தயே நம:
,, மாயா மானுஷ விக்ரஹாய நம:
,, சுப்ரஹ்மண்யாய நம:
,, ஆதிபுருஷாய நம:
,, அனந்தரூபாய நம: 10
,, ஆதிசேஷாய நம:
,, விஸ்வரூபாய நம:
,, ஆபத்பாந்தவாய நம:
,, ஸர்வ வியாதி சம்ஹாரிணே நம:
,, ஸர்வ சுவாஸன சிந்தனாய நம: 15
,, த்ரிகால ஞானினே நம:
,, ஸர்வ பூதபிசாச சம்ஹாரிணே நம:
,, லக்ஷ்மி காந்தாய நம:
,, ஆதிமூலாய நம:
,, தசாவதாராய நம: 20
,, தீன ரக்ஷகாய நம:
,, தீன ஜன போஷகாய நம:
,, அனந்த சயனாய நம:
,, சங்க சக்ர ஹஸ்தாய நம:
,, நீலமேக சியாமளாய நம: 25
,, விபூதி தாரிணே நம:
,, விபூதிப்ரியாய நம:
,, க்ருஹஸ்தாஸ்ரம வாஸினே நம:
,, மாயா வினோதாய நம:
,, சாந்த ஸ்வரூபிணே நம: 30
,, அபூர்வ சக்தினே நம:
,, பக்த ப்ரியாய நம:
,, சமரச சன்மார்க்க ப்ரபவே நம:
,, த்ரிநேத்ராய நம:
,, பஞ்சாக்ஷர போதகாய நம: 35
,, சர்வாபீஷ்ட சித்தி தராய நம:
,, சுகந்த, சுவாசன, விபூதி, குங்குமதாரிணே நம:
,, அற்புத ஆச்சர்ய பரிமள வாஸனாய நம:
,, மார்க்க பந்தவே நம:
,, ஸர்வ சக்தி மூர்த்தயே நம: 40
,, முருகஸ் தோத்ர ப்ரியாய நம:
,, சர்வ ஜன சௌக்யாபி வர்தனாய நம:
,, சத்சங்க, சத்புருஷ யோகினே நம:
,, வைத்ய நாதாய நம:
,, சக்தி ஸமேத தர்ஸனாய நம: 45

ஓம்ஸ்ரீ கன்னிவாடி க்ராமோத் பவாய நம :
,, முருக நாம மாயாவினோதகாய நம :
,, ஸர்வ பய நிவாரிணே நம :
,, ஸர்வ பாப க்ஷயகராய நம :
,, விஸ்வ கர்மிணே நம : 50
,, கலிகாவதார காருண்ய மூர்த்தயே நம :
,, பஞ்சபூத ஸம்ஹாரிணே நம :
,, லீலா மானுஷ விக்ரஹாய நம :
,, அவ்யக்த ரூபாய நம :
,, ப்ரேம் ப்ரதாய நம : 55
,, மாதா பிதா குரு தெய்வ சமேத சர்வ ப்ரேமாய நம :
,, ஸர்வ ஜயப்ரகாசாய நம :
,, சகல தத்வ போதகாய நம :
,, ஸுலப ப்ரசன்னாய நம ;
,, யோகீஸ்வர ரூபாய நம : 60
,, ஓங்கார ப்ரணவ மந்த்ர போதகாய நம :
,, புருஷோத்த மாய நம :
,, புண்டரீக வரதாய நம :
,, சர்வமத சம்மதாய நம :
,, சகல தேவதா பூஜ சம்மதாய நம : 65
,, சர்வ வ்யாபகநாத ப்ரம்மாய நம :
,, மானுஷ்ய ரூப வினோதாவ தாரயே நம :
,, சர்வ ஜனபூஜ அர்ஹதாய நம :
,, பார்வதி பதயே நம ;
,, நீலகண்ட சர்வ அலங்கார விபூதி தாரிணே நம : 70
,, நித்ய கல்யாண நிரஞ்சனாய நம :
,, நிர்விகார நிருபமாய நம :
,, நிர்த்தோஷகாய நம :
,, சிவஸ்ய கோத் மோத்பவாய நம :
,, கல்யாண குணாய நம : 75
,, கர்ம த்வம்ஸினே நம :
,, பரணி நக்ஷத்ர ஜனனோத்ப வாய நம :
,, ஸகல சாஸ்த்ர ஸாதகாய நம :
,, ஸகல காரிய சித்திதராய நம :
,, சேஷ உபனாய நம : 80
,, பரம புருஷாய நம :
,, பன்றிமலை ஜனன ரூபகாய நம :
,, பரதன பரஸ் தோத்ர நிராசகாய நம :
, நிருபம, நிர்க்குண, நிர்த்தோஷ காய நம :
,, சகல நீதி போதகாய நம : 85

ஓம் ஸ்ரீ சத்ரு மித்ரு தோஷ நிவாரிணே நம:
,, புராண புருஷாய நம:
,, லோக சேவ ப்ராணய நம:
,, அனுத ரக்ஷகாய நம:
,, அஸஹாய ஸஹாயாய நம: 90
,, உமா மஹேஸ்வராய நம:
,, லீலா விநோதகாய நம:
,, மாயரூப மஹேஸ்வராய நம:
,, தீர்க்க தரிஸினே நம:
,, ஆனந்த முக மர்மா வதார காய நம: 95
,, அனந்த ரோக நிவாரிணே நம:
,, இராஜஇரத்தின நிலய நிவாசினே நம:
,, பக்த ஜன போஷகாய நம:
,, ஆசாபாச ஸம்ஹாரிணே நம:
,, அணிமாதி அஷ்டசித்தி நாயகாய நம: 100
,, அநேக நேத்ர தாயகாய நம:
,, சகலாங்க ரோக சம்ஹாரிணே நம:
,, சரணாகத ரக்ஷகாய நம;
,, சரவணபவ சர்வேஸ்வராய நம:
,, த்ரிலோக ரக்ஷரமணயே நம: 105
,, மந்தஹாஸ வதன ஸ்ரீ பாபாத்தி பதியே நம:
,, மயூர வாஹன மாணிக்ய மகுடாய நம:
,, பன்றிமலை கைலாச வாசினே நம: 108

நாணவித மந்த்ர புஷ்பாணி சமர்ப்பயாமி.

சுபமஸ்து

அர்ச்சனை முடிந்தபின் சாமிகளுக்குத் தூபதீப ஆராதனை நடக்கின்றது. அப்போது சாமிகளுக்கென்றே புனைந்துள்ள தீபாராதனை மங்கள கீதம் பாடப்படுகின்றது. சாமிகள் பக்தர்களுக்கு அனுகூலன்: மெய்யன்பர்களுக்கு அருளாளன்: ஜோதியான சக்தி பெற்ற மைந்தன்: முருகனருளை வாரிவாரி வழங்குகின்ற வள்ளல்: அவருடைய பாத சரணகமலங்களை நம்பினவர்களின் குருமகராஜன்: மனித வடிவிலே கருணைவழங்கும் தெய்வம்: நடமாடும் முருகனாகவும் உடனே நமக்கு அருள்பாலிக்கின்றார். இத்தகைய அருளாளரை, முருக இன்பத்தில் தோய்ந்துள்ள மகானை, நடமாடுந் தெய்வத்தை வருக வருக என்று உள்ளங்கள் போற்றிப் பாடி கசிந்துருக ஆரம்பிக்கின்றன.

## தீபாராதனை மங்களம்

### பல்லவி

செந்தில் வடிவேல் முருகா செல்வா நீ வாராய் — திருச்
செந்தில் வடிவேல் முருகா செல்வா நீ வாராய் — முருகா
செந்தில் வடிவேல் முருகா செல்வா நீ வாராய்.

### அனுபல்லவி

சந்ததமும் தீபஜோதி தன்னில் நீ வாராய் — செந்தில்

### சரணம்

ஆதிஅந்தமான ரஹிதா தேவா நீ வாராய் — முருகா
ஆதிஅந்தமான ரஹிதா தேவா நீ வாராய்
சோதியான சக்திபெற்ற மைந்தா நீ வாராய்
— செந்தில்

தேனும் தினைமாவும் உண்ட தேவா நீ வாராய் — முருகா
தேனும் தினைமாவும் உண்ட தேவா நீ வாராய்
மான்மகளைக் காதல்கொண்ட கள்வா நீவாராய்
அம்மான் மகளைக் காதல்கொண்ட கள்வா நீ வாராய்
— செந்தில்

ஏழை எங்கள் பாவம்தீர எழிலாய் நீவாராய் — முருகா
ஏழை எங்கள் பாவம்தீர எழிலாய் நீவாராய்
ஏகதந்தன் சோதரனே எங்கள் முன் வாராய்
— செந்தில்

பக்தர்களைக் காக்க வரும் வேலா நீவாராய் — முருகா
பக்தர்களைக் காக்க வரும் வேலா நீவாராய்
பார்புகழும் பன்றிமலை சீலா நீவாராய்
— செந்தில்

"வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா
ஸ்ரீ பன்றிமலை சுவாமிக்கு அரோகரா"

எனும் அரோகரா கோஷத்தைப் பக்தர்கள் கூட்டாக ஒலிக்க பாத பூஜை இனிது முடிவடைகின்றது. அதன்பின் அங்குக் கூடியிருக்கும் மக்களுக்குச் சாமிகள் அன்புகூர்ந்து விபூதிப்பிரசாதம் அருள்கின்றார்கள். சாமிகள் அமர்ந்திருக்கும் அறையில் தெய்வீக மணம் கமழ்கின்றது. சாமிகளின் திருமுகத்தில் அருட்பொலிவு பூத்துக் குலுங்குகின்றது. பக்தர்களின் மனப்பிணியையும் உடற்பிணியையும் போக்கியருளும் சாமிகளின் தெய்வீகப் புன்னகையையும் அவர்

திருவருளைப்பெறக் காத்திருக்கும் அன்பர்கள் கூட்டத்தையும் பார்க்கும்போது சாமிகளின் சிறுபிராய நிகழ்ச்சிகளும் நம் மனக்கண்களுக்கு முன்பு தோன்றுகின்றன. சாமிகளின் நயனதீக்கை குரு ஸ்ரீ சல்லிச்சாமியார் உரைத்தபடியல்லவா சாமிகள் இன்று ஒரு பெரியசாமிகளாகத் திகழ்கின்ருர். சாமிகளுக்கு ஸ்பரிசத்தீக்கை அருளிய ஆதிகுரு, சாமிகளின் திருநாக்கில் வேல் கொண்டு எழுதினுர். அதனுலல்லவா இன்று சாமிகளின் திருவாக்கு அருள்வாக்காகவும் வரப்பிரசாதமாகவும் விளங்குகின்றது. சாமிகளின் திருக்கரம் உடற்பிணி மனப்பிணிகளை போக்குவிக்க அருமருந்தாக உதவுகின்றது. சாமிகளுக்கு மந்திரதீக்கை அருளிய மகான் ஸ்ரீ சட்டிசாமி சாமிகளுக்கு எவ்வளவோ மந்திர உபதேசங்களை உபதேசித்தருளினுர். அதனுலல்லவா சாமிகள் இன்று எல்லா மந்திரங்களையும் அறிந்து மந்திரங்களுக்கே மூலமந்திரமாக உள்ள 'நமசிவாய' மந்திரத்தையும் கசடறக் கற்றுணர்ந்து அதன் நற்பலன்களை அவரை அண்டினவருக்கெல்லாம் கொடுத்தருளுகின்ருர். சாமிகளுக்கு "மூர்த்தி தலம் தீர்த்தம்" இவற்றை முறையாகக் காண்பித்து உண்மை உணர்த்திய மானசதீக்கை அருளிய ஆச்சாண்டமலைப்பரதேசி சாமிகளுக்குச் சொல்லாமல் சொல்லி தன்னையறிந்து இன்பமுறச் செய்தார். அன்று ஆச்சாண்டமலைப்பரதேசி தன் மனத்தால் எப்படி சாமிகளின் மனத்தைத் தன் வயப்படுத்திப் புரியாதனவற்றைப் புரியவைத்தாரோ அவ்வாறே சாமிகளும் தன்னுடைய ஆத்மநேய பக்குவமுள்ள சீடர்களுக்கு மானசதீக்கை அருள்புரிகின்ருர். சாமிகளே இன்று யாவருக்கும் மூர்த்தியாகவும் தலமாகவும் தீர்த்தமாகவும் அமைந்து நல்வாழ்வு அருளுகின்ருர். சாமிகளின் ஐந்தாவது குருவாக அமைந்த புல்பிடுங்கிச் சாமியார் சாமிகளுக்கு சங்குநிதியளித்து ஞானதீக்கையும் ஸ்பரிச தீக்கையும் அருளினுர். அதனுலல்லவா இன்று சாமிகள் எண்ணற்ற பக்தர்களுக்கு எண்ணற்ற இடங்களிலிருந்து காப்பாற்றும் அருள்நிதி அளிக்கின்ற நடமாடும் தெய்வமாகச் செயலாற்றுகின்ருர். ஆண்டவனையே நேரில் காணுத நாம் ஸ்ரீ பன்றிமலை ஆண்டவனை நேரில் காணும் பாக்யம் பெற்றுள்ளோம். சங்கரனுடைய திருத்தாளையும் சண்முகனுடைய திருத்தாளையும் நேரில் காணுத நாம் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் திருத்தாளை நேரில் கண்டு பாதபூஜை செய்யுமளவுக்கு பாக்யம் பெற்றுள்ளோம். பரமாத்மாவின் புகழை பலர் பாடக்கேட்ட நாம் அவனே ஜோதியாகவும், அன்பே கடவுளாகவும், அறிவே தெய்வமாகவும் விளங்குவதைக் கேட்டிருக்கின்ருேம். ஆனுல் "அவனைப் பார்த்திருக்கின்ருேமா" என்று கேட்டால், ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளைப் பார்த்தவர்கள் நிச்சயமாகப் பதில்கூற முடியும், "பார்த்திருக்கின்ருேம்" என்று. ஏனெனில் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அன்பமுதமாக அருள்பாலிக்கின்ருர்கள் : அறிவொளியாக இன்பச்சுடர் ஏற்றுகின்ருர்கள் :

கருணை வடிவினராக அன்பு ஊட்டுகின்றார்கள். அவருடைய பாத மலர்களை வழுத்துகின்ற நமக்கு ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஒரு நடமாடும் தெய்வம். அவருடைய இதயாஞ்சலிபத்தை சாமிகள் பாதமலர்களுக்கு அணிவித்து மகிழ்வோம்.

குன்றோங்கும் திரைகளெல்லாம் எழில்பரப்பி
குணக்குன்றாய்க் கருணை உருக் கொண்டாய் போற்றி!
மன்றில் நடமாடும் எங்கள் கலையே போற்றி!
மனங்கனிந்தெம் மனக்கோயில் வாழ்வாய் போற்றி!
என்றென்றும் எங்கெங்கும் ஈகை சேர்த்து
இன்பநிலை வாழ்க்கையினை அடைந்தாய் போற்றி!
பன்றிமலை சாமி எங்கள் பிராண நேயா
பாதமலர் அருளுகின்றாய் போற்றி போற்றி!

சென்றலையும் மனக்குரங்கின் பிடியுள் சிக்கி
சேர்ந்தஇடம் எங்கும்சோர்வும் தளர்வும் கண்டு
ஒன்றில் நிலை கொள்ளறியா தேக்கம் மூண்டு
உன்னருளே தஞ்சமென ஏங்கி நிற்கும்
கன்றுகளாய் நிற்கின்றோம் அன்னை போற்றி!
கருணைபொழி மதிவதன அன்பே போற்றி!
பன்றிமலை சாமிஎங்கள் பிராண நேயா
பாதமலர் அருளுகின்றாய் போற்றி போற்றி!

பெற்றோரும் இல்லையென்று வாடிநின்றோம்
பெருங்கவலை நோய் கொண்டு வெதும்பி நின்றோம்
பெற்றோரும் ஆனாய்எங்கள் பரமன் ஆனாய்
பெருங்கவலை தீர்க்க எங்கள் மூர்த்தி ஆனாய்
தென்றலென தெய்வமணம் வீசுகின்றாய்
தமிழினிமை இசையமுதம் பொழியும் காரே
பன்றிமலைசாமி எங்கள் பிராண நேயா
பாதமலர் அருளுகின்றாய் போற்றி போற்றி!

மண்ணுலகை விண்ணுலகாய் மலரச் செய்யும்
மார்க்கத்தை அறிந்துதவும் மனித தெய்வம்
கண் ஈந்து குருடர்களை வாழவைக்கும்
குவலயத்தில் ஊமைகளைப் பேசவைக்கும்
சென்ற விடம் எங்கும்பல அற்புதங்கள்
செய்துநலம் அருளுகின்ற ஞான வேந்தே!
பன்றிமலை சாமிஎங்கள் பிராண நேயா
பாதமலர் அருளுகின்றாய் போற்றி போற்றி!

பற்றற்று நிற்கும்பரம பிதாவும் நீயே
பற்றுடனே எமைப்பற்றும் களிப்பும் நீயே
அற்பசுகம் தனில்மொய்க்கும் மக்கள் தம்மை
ஆனந்தக் கடல்நீந்த அருளும் தேவே
கன்றெனவே உமைச்சாரும் அன்பர் தம்மைக்
களி சுரந்து ஏற்கும் எங்கள் தீம்பாற் கோவே!
பன்றிமலை சாமிஎங்கள் பிராண நேயா
பாதமலர் அருளுகின்றோய் போற்றி போற்றி!

பொல்லாத பாவியென நாம்பி றந்தோம்
பற்பல வீண் வம்புகளைப் பெருக்கி நின்றோம்
நில்லாத சுகம்நாடி பெருங்குற் றங்கள்
நிலையில்லா வாழ்வினிலே நிதமும் செய்தோம்
குன்றாத அன்பமுத வானே! உன்னைக்
குருவெனவே சரணடைந்தோம் தஞ்சம் சாமி!
பன்றிமலை சாமிஎங்கள் பிராண நேயா
பாதமலர் அருளுகின்றோய் போற்றி போற்றி!

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பை ஈந்து
கரங்குவிக்கும் அன்பர்கட்குக் கரங்கொடுக்கும்
நல்லோர்க்கும் எல்லோர்க்கும் கருணை ஈந்தெம்
நல்வினையின் பயனாய்வரு ஞான ஒளியே
கண்ணாய் இசையானாய் கரும்புமானாய்
கற்பகம்போல் அமுதமொழி குருவுமானாய்
பன்றிமலை சாமிஎங்கள் பிராண நேயா
பாதமலர் அருளுகின்றோய் போற்றி போற்றி!

சொல்லாலும் செயலாலும் உருவி னாலும்
சாந்தமுக வடிவின்ஒளி மதியி னாலும்
பல்காலும் தளர்வறியா ஆர்வத் தாலும்
பலர்துயரைத் துடைக்கவல்ல ஆற்ற லாலும்
இன்றெம்மை ஆண்டுகொண்ட பேரரசே!
இனியமுகப் பேரன்பு பொங்கும் ஈசா!
பன்றிமலை சாமிஎங்கள் பிராண நேயா!
பாதமலர் அருளுகின்றோய் போற்றி போற்றி!

பித்தனென்று பரமசிவன் பெயரைக் கொண்டான்
பக்தர்களைத் தன்பித்த னாக்கி விட்டான்
சித்தமெல்லாம் அவனை மாற்றி விட்டான்
சென்றவிடம் அவன் திருவில் உவக்கச் செய்தான்
சங்கரன்தாள் சண்முகன்தாள் நேரில் காணச்
சிறப்பறியோம் உம் அருமைத்தாளைக் கண்டோம்
பன்றிமலை சாமிஎங்கள் பிராண நேயா!
பாதமலர் அருளுகின்றோய் போற்றி போற்றி!

எண்ணத்தில் எழில் திருவைக் காட்டுகின்றான்
ஏடேடாய் அவன்புகழைப் பாடக் கேட்டோம்
வண்ணத்தின் சுடரொளியாய் அன்பாய் அறிவாய்
வானமுதின் கருணையினைச் சொல்லக்கேட்டோம்
அன்பமுதாய் அறிவொளியாய்க் கருணை வடிவாய்
அப்பா உன் தண்ணருளை நேரில் கண்டோம்
பன்றிமலை சாமிஎங்கள் பிராண நேயா!
பாதமலர் அருளுகின்றாய் போற்றி போற்றி!

சுபம்.

இப்படியல்லவா நமது மனங்கள் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் திருப்பாதமலர்களைப் பற்றித் திருப்பாதமலர்களுக்கு அர்ச்சனைசெய்து திருப்பாதமலர்களைப் போற்றிப்பாடிப் பேரானந்தப் பெருநிலை அடைகின்றன.

பக்தர்களுக்கு அருள்புரியும் சாமிகளின் தெய்வாம்ச சின்னங்களை நினைவுபடுத்திக் கொண்டு நடமாடும் தெய்வமென அவருக்குப் பாதபூஜை செய்து, மலர்மாலை சூட்டி, பாமாலை சூட்டி மன மொழி மெய்களால் பணிந்து ஏத்துவதே பக்தர்களாகிய நமது பாக்கியம்!

கேளப்பா இடமுதுகில் மறுத்தான் காணும்
கெடியான இடக்கையில் சங்கு சக்ரம்
நாளப்பா இக்குறியை நன்றாய்ப் பாரு
நாசியிட நாசியிலே மறுவைப் பாரு
வேளப்பா இடமுதுகில் மறுவைப் பாரு
வேதாந்த வாதியென குறியே பாரு
ஆளப்பா இப்படியே அடையா ளங்கள்
ஆறையும்கேட் டவரைநீ அடுத்துக்காணே.]

சாமிகளுடைய பதமலரடிகளை நம்பி வாழ்ந்தால் சாமிகள் திருவருள்சுரந்து செவிக்கினிய உடற்கினிய உயிர்க்கினிய உபதேசங்களும் அருளி நம்மை பூமிதனில் 'வாழ்வாங்கு வாழ' திருவுளம் கொள்வர் சாமிகள்!

ஐயமின்றி உடல்பொருள் ஆவி மூன்றும்
ஆண்டவனே உன்னதென்று அளித்துப் பின்னும்
துய்யகுரு நாதனுக்கே அடிமை யாகிச்
சொன்னபடி கேட்ப தற்கே தொண்டனாகி
மெய்யென்றே அவர்மனமும் களிக்க மட்டும்
வேண்டிய தோர் சோதனைக்கு மிதத்திடாமல்

செய்யதிரு மலரடியில் காத்தி ருந்தால்
செவியதனில் உபதேசம் செய்வார் தாமே!

வாழி திருமன்றங் கண்ட மலர்க் கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி யவனை வணங்கும் முடிச்சென்னி
வாழி யவன் சீர்பாடும் வாய்.

வாழ்க திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்!
வாழ்க அவர் சீரடியா ரெல்லாம்!

சுபம்.

## 23. தாண்டிக்குடி ஸ்ரீ பாலமுருகன் கோயில்

" முருகா வருக சதுர்வேத முதல்வா வருக வினைதீர்க்கும்
முனைவா வருக மலர்ஆறு முகவாவருக திருமாலின்
மருகாவருக மயில் ஏறுமன்று வருக அடியார்கள்
வாழ்வேவருக தெய்வசிகாமணியே வருக வருகவே."

" தாண்டிக் குடி உண்டு
தக்கோர் மிக உண்டு
தாண்டி குதித் தருள
தனயன் முருகுண்டு
வேண்டி அவன் அருளை
உவந்தளிக்கப் பன்றிமலை
ஆண்டவர் அன்புண்டு
அருள்ஜோதி மலை காணீர் "

ஆண்டவன் மெய்யடியார்கள் நினைக்கும்படியெல்லாம் தரிசனம் தருகின்றான். மெய்யடியார்கள் ஆட்டி வைக்கும்படியெல்லாம் ஆடுகின்றான். மெய்யடியார்கள் இட்ட கட்டளையைத் தாண்டுவதில்லை. காஞ்சிபுரத்தில் திருமழிசையாழ்வார் எனும் மெய்யடியார் ஒருவர் இருந்தார். அவருடைய சீடன் கணிகண்ணன் எனும் புலவன் இருவரும் எந்தையடி மறவாத சிந்தையர். இறைவனைப் பாடிப் பாடி மகிழும் புனிதர். அந்நாட்டுப் பல்லவ மன்னன் கணிகண்ணனைக் கண்டு தம் பேரில் ஒரு பாட்டுப் பாட விரும்பினன். " நாராயணனைப் பாடும் வாயால் நரனைப் பாடுவதில்லை " என்ற அவர் நிலையை அறிந்ததும் தன் நாட்டை விட்டு அவரை வெளியேற உத்தரவிட்டான். இதைக்கேட்ட குருவும் காஞ்சிபுரத்தைவிடத் துணிந்தார். அவரோடு காஞ்சிபுரத்தில் பள்ளிகொண்டிருந்த பெருமானையும் அழைத்துச் செல்லச் சித்தம் கொண்டார். அரசனைப் பாடாத வாய் பள்ளிகொண்ட பெருமாளை ஆணையிட்டுப் பாடத் தொடங்கிது.

" கணிகண்ணன் போகின்றான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா — துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள் "

இதைக் கேட்ட திருமாலும் தன் பாம்புப் படுக்கையைச் சுருட்டிக் கொண்டு புலவரைப் பின்தொடர்ந்தார். இது கண்டு மனம் வருந்திய பல்லவன் ஆழ்வாரைத் தஞ்சமடைந்து அவரையும் சீடனையும் மறுபடியும் காஞ்சிக்கு அழைத்து வந்தார். ஆழ்வாரும் மற்றொரு பாட்டுப் பாடி பெருமானையும் தம்கூட அழைத்து வந்து மறுபடியும் பள்ளிகொண்ட கோலத்தில் அமர்த்தினர். அந்த ஆணையும் ஒரு பாட்டாகவே எழுந்தது.

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டும் — துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள் "

இப்படிப் பல நூற்றாண்டுகளுக்கு முன் நடந்ததாக ஒரு கதையும் உண்டு. 1948ஆம் ஆண்டிலும் இத்தகைய நிகழ்ச்சி ஒன்று தென்னகத்தில் நடந்துள்ளது. நிகழ்ந்த இடம் கொடைக்கானல் மலைத்தொடரில் உள்ள தாண்டிக்குடி எனும் ஊர். தாண்டிக்குடியைச் சிறிது காலம் விட்டுச்சென்றதாக வழங்கிவரும் கதையில் உள்ள குமரனை மறுபடியும் அழைத்து வந்தவர் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளே! குன்றுதோறும் குமரனும் மெய்யடியார்கள் விருப்பிற்கிணங்க ஓடி வருகின்றனே !

"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே"

மண மிகுந்தவனை ஒளி மிகுந்தவனை பாலமுருக வடிவிலே தாண்டிக்குடிக்கு அழைத்துவந்து விட்டார் சாமிகள். காஞ்சிபுரத்தை விட்டுச் சென்ற பெருமான் மெய்யடியாரும் காஞ்சியை விட்டுச் சென்ற காரணத்தால்: ஆனல் தாண்டிக்குடியை விட்டுத் தாண்டிய முருகப் பெருமான் பழநிமலை அழகை அனுபவிப்பதற்கே. காஞ்சிக்குத் திரும்பி வந்த பெருமான் மெய்யடியாரும் காஞ்சிக்குத் திரும்பிவந்த காரணத்தாலும் மெய்யடியார் விருப்பத்தாலும்; திரும்பவும் தாண்டிக்குடிக்குத் தாண்டிவந்த முருகப்பெருமானும் மெய்யடியார் ஒருவர் விருப்பத்திற்கிணங்கவே. ஆக இரண்டு இடங்களிலும் மெய்யடியார் விருப்பிற்கிணங்கவே ஆண்டவன் ஓடோடி வருகின்றன். காஞ்சியில் கையில் சுருட்டிய பாம்புப் பாயோடு வருகின்றன்: தாண்டிக்குடிக்கு தாயன்போடு தாண்டிக் குதித்து வருகின்றன். என்னே மெய்யடியார் பக்தியின் சக்தி !

பச்சை மாமலைகளுக்கு மத்தியில் 4500 அடி உயரத்தில் சுமார் ஆயிரத்துஐந்நூறு இல்லங்களைக் கொண்டு விளங்குவது தாண்டிக் குடி எனும் அழகான ஊர். இது கொடைக்கானல் மலைத்தொடர்ச்சியில் கிழக்குத் தொகுதியில் உள்ளது. குளுகுளுவென்றிருக்கும் அருமை யான இடத்தில் பச்சைப் போர்வையுடுத்திப் பொழில் வளத்தோடு விளங்கும் இப் பூமி, காண்பவர்களைக் கவர்கின்றது. வான்நோக்கிச் செல்லும் உயர்ந்த மரங்களும் எங்கிலும் தழைந்து வளம் கொழிக்கும் காப்பி வாழை ஏலத் தோட்டங்களும் பார்ப்பவர் கண்களுக்கு விருந் தாகின்றன. ஊருக்கு வடக்கே ஒரு கிரியின் உச்சியில் குளுகுளுவென நீலச்சுடரொளி ஒன்று இரவில் "இங்கு வருக வருக" என்று அழைப்பதுபோல் பிரகாசிக்கின்றது. அவ்வொளி இன்று பால குமாரன் ஆலயத்தின்மேல் நாள்தோறும் விடியும்வரை எரிகின்ற மின்சார விளக்கு. இந்த முருகன் கோயில் உண்டாவதற்குமுன், இந்தக் கோயில் அமைந்துள்ள உச்சியிடத்திலிருந்து கோயிலுக்கு தெற்குப்புறத்தில் ஊரைநோக்கிச் சுமார் பதினைந்தடிக்கு கீழே ஒரு பேரொளி 1948ஆம் வருடம் உண்டானது. அது பட்டப்பகலில் வெட்ட வெளிச்சத்தில் உண்டாகி மூன்று நாட்கள் சுடர்விட்டுப் பிர காசித்து மறைந்தது தாண்டிக்குடி மக்களின் தெய்வீக உணர்ச்சி யைத் தட்டி எழுப்பக்கூடிய அளவில் இந்த ஜோதி தோன்றி மறைந்து விட்டது. ஆனால் இந்த ஜோதியைக் கண்ட அதிசய உணர்ச்சி மக்களின் மனத்தைவிட்டு அகலவில்லை. இந்த ஜோதி இங்கு ஒரு முருகன் கோயில் ஏற்பட ஒரு தெய்வ அறிகுறியாக அமைந்தது. இந்த ஜோதி எழுப்பிய அதிசய உணர்ச்சி கோயில் எழுப்புவதற் குரிய ஆர்வத்துக்கு அஸ்திவாரமாக அமைந்தது. இந்த மலையையே ஜோதிமலை' என்று அழைக்கவும் உதவியது.

தாண்டிக்குடி வாசிகள் தெய்வபலத்திற்கு அஞ்சித் தொண்டாற்று பவர். இங்குள்ள ஆதிமலைவாசிகளின் வாத்தியம் கலைவாணர்களின் கவனத்தைக் கவர்வனவாக அமைந்துள்ளது. இங்கு வேட்டையாட வும் வாத்தியம்; களிக்கூத்திற்கும் வாத்தியம்; சாமி வரவழைக்க வாத்தியம்; காட்டுக் கோழி கூவுதல் போலவும் வாத்தியம். இந்த வாத்தியங்களை ஒலிக்க முறையே வேட்டைக்காரன் தாளம், கன்னியர் தாளம், கரிமால் தாளம், சுண்டுக் கோழித் தாளம் கையாளப்பட்டு வருகின்றன. இயற்கை வளமும் வாத்திய வளமும் கொண்டு உயர்ந்த இந்தத் தாண்டிக்குடி ஊரில் திரு. N. S. சோமசுந்தரம் பிள்ளை ஒரு பெரும் நிலக்கிழார். "பிறர் நலம் கண்டு பெருமை கொள்ளும் உத்தமரே! ஆலயம் அமைத்தும், ஆத்மீகத்தை வளர்த்தும், கலைக்கோயில் உயர்நிலைப்பள்ளி அமைத்தும், கல்வி யறிவு புகட்டியும், மருத்துவமனைகட்டி மக்கள் பிணி தீர்த்தும், பிறர் நலம் பேணலே பிறப்பின் பயன் எனக் கருதும் பெருந்தகையே"—

என்றெல்லாம் பொதுமக்களால் போற்றப்படும் பெரிய மனிதர். இவர் 1948இல் சாமிகளோடு பழக்கமானது இந்த ஊருக்கே ஒரு தலத்தை அமைத்துக் கொடுத்துவிட்டது. தாண்டிக்குடியைத் திரு முருகன் ஸ்தலமாக அமைத்து விட்டது.

சாமிகளுக்கும் பிள்ளை அவர்களுக்கும் ஏற்பட்ட உறவு சுவாரஸ்ய மானது. 1948இல் பிள்ளை அவர்கள் வீட்டில் விலையுயர்ந்த வேட்டிகள் சேலைகள் களவு போயின. களவு போனதை எப்படியேனும் கண்டு பிடித்துவிட வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டார் பிள்ளை யவர்கள். இதைக் கண்டுபிடிக்க பன்றிமலையில் இருக்கும் பன்றிமலைச் சாமிகளால் முடியும் என்று கூறினர் உள்ளூர் வாசிகளுள் ஒருவர். அதன்படி சாமிகளை அணுக, களவுபோன மூன்றுவது நாள் களவு போன பொருள்கள் திரும்பவும் வந்துசேருமென்று சாமிகள் சொன் னார்கள். சாமிகள் சொன்னபடி மறைந்த சாமான்கள் மீண்டும் கிடைத்தன. 'நம் உறவினர்களிலும் இவ்வளவு கெட்டிக்காரர் ஒரு வர் இருக்கின்றாரே' என்று ஆச்சரியப்பட்ட பிள்ளையவர்கள் ஒரு நாள் திரு இராமசாமிப் பிள்ளையை விருந்துக்குத் தாண்டிக்குடிக்குத் தன்னில்லத்திற்கு உள்ளன்போடு அழைத்தார். பன்றிமலையிலிருந்து குதிரைமீது சவாரி செய்துவந்த சாமிகளும் தன் சக்தியைத் தாண்டிக் குடி வாசிகளுக்குக் காட்டியருளினர். ஒருவர் வைத்திருந்த கடிதத்தை சாமிகள் அதன் சொந்தக்காரரைக் கொண்டே கொளுத்தித் தீக்கு இரையாக்கிக் கரிந்துபோன கருப்புத்தாளை ஆற்றில் கரைத்துவிட்டு வரச் சொன்னர். ஆற்றில் கரைத்துவிட்டுத் திரும்பிய நபரின் சட்டைப் பையிலிருந்தே சற்று நேரத்திற்குமுன் தீப்பிடித்து கருகிய சாம்பலான கடிதத்தைக் கொஞ்சங்கூடப் பழுதில்லாமல் எடுத்துக் கொடுத்தார் சாமிகள்.

இதைக் கண்டு பேராச்சரியத்தில் மூழ்கிய ஒருவர், சாமிகளால் ஒரு காடைப்பறவையை வரவழைத்துக் கொடுக்க முடியுமா என்று கேட்டார். முடியுமென்றார் சாமிகள். மறுநிமிடம் கேட்டவர் மடியில் மெதுக் மெதுக்கென்று புடைத்துப் புரண்டது ஓர் உயிருள்ள பொருள். உடனே அச்சத்தோடும், அவசரத்தோடும் தன் மடியை அவிழ்த்துப் பார்க்க உயிரோடு ஒரு காட்டுக் காடை விர்ரென்று பறந்து தரைமீதமர்ந்தது.

இந்த அதிசயங்களைக் கண்ணுற்ற யாவருக்கும் சாமிகள் ஒரு விந்தை மனிதராகவே தென்பட்டார். பிள்ளையவர்களுக்கு திரு. இராமசாமிப் பிள்ளையிடம் அன்பு பெருகியது, வளர்ந்தது. திரு. இராமாமிப் பிள்ளை திரு. சோமசுந்தரம் பிள்ளைக்கு விந்தை விளை விப்பவராக மட்டும் விளங்கவில்லை. அறிவின் பொக்கிஷமாகவும்,

ஆத்மசக்தி பீடமாகவும் விளங்கினர். இருவருடைய அன்பும் சாமி களை அடிக்கடித் தாண்டிக்குடிக்கு அழைக்கப்படும் அளவுக்கு வளர்ந்துவிட்டது. எப்பொழுதும் சாமிகள் வரவுக்காக ஆவலுடன் ஏங்கிக்கிடக்கும் ஒரு சற்கூட்டம். சாமிகள் கூட இருக்கும்போது பொழுதுபோவதே அவர்களுக்குத் தெரியாது. சொல்லின் செல்வ ராகவும், வயிறுகுலுங்கச் சிரிக்கவைக்கும் ஹாஸ்யச் சொல்லழக ராகவும் விளங்கும் திரு. இராமசாமிப் பிள்ளையை வண்ணத் தாமரையை வரிவண்டுகள் மொய்ப்பதுபோல் யாவரும் சூழ்ந்து மொய்த்தனர். ஒருநாள் மாட்டுத் தொழுவம் அமைக்க ஒரு நல்ல இடத்தை நிர்மாணிக்க சாமிகளைத் தம் தோட்டத்திற்கு அழைத் துச்சென்றார் பிள்ளையவர்கள். குதிரைமீது சவாரி செய்துகொண்டு வந்த சாமிகள் தற்சமயம் கோவில் அமைத்திருக்கும் எல்லையை நெருங்கியதும் குதிரையைவிட்டுப் பயபக்தியோடு இறங்கித் தன் காலணிகளைக் கழற்றிவைத்தார். அப்போது அந்த இடம் மரம் செடி, கொடி வளர்ந்த புல்புதராய் விளங்கியது.

பிள்ளை: இங்கு நிறைய முட்கள் உண்டு. ஆதலால் நீங்கள் பூட்சைக் கழற்றவேண்டாம்.

சாமிகள்: சாமி, இந்த இடத்தில் தெய்வ அருள் மணக்கின்றது, அதன் தெய்வீக மணம் பலமாக வீசிக்கொண்டிருக்கின்றது. அது என்ன என்பதைக் கண்டுபிடித்து வருகின்றேன்.

இப்படி உரைத்த சாமிகள் அந்த இடத்தைச் சுற்றிப்பார்த்து விட்டுக் கட்டப்பாறையாய் இருந்த ஓரிடத்திற்குச் சென்று, அதைத் தெய்வ அருளொளிப் பிரகாசிக்கும் இடம் என்று சுட்டிக்காட்டினர். "தெய்வமணம் வீசுகின்ற இந்த இடத்தில் ஒரு தெய்வ ஜோதியைக் கண்டேன். இந்த இடத்தில் முருகப்பெருமான் இருக்கின்றார்." என்று சாமிகள் உற்சாகத்தோடு கூறினர். "இதே இடத்தைத் தொன்றுதொட்டு 'பழனியாண்டவர் கல்பொலிச்சப்பாறை' என்று இவ்வூரார் கூறிப் பயபக்தியோடு போற்றிவருகின்றனர்" என்று பிள்ளையவர்கள் கூறினர். சாமிகள் விருப்பப்படி அந்த இடத்திலிருந்த செடிகொடிகளை நீக்கிப் பார்த்தபோது, ஒரு கோயிலின் மூலத் தானமும் அர்த்தமண்டபமும் முன்னுளில் இருந்ததற்குரிய அடிப்பீட அடையாளங்களும் தென்பட்டன. பக்கத்திலுள்ள சிதறிக்கிடந்த கருங்கற்கள் சில இங்கு ஏற்கனவே ஒரு கோயில் அமைந்திருந்ததை எடுத்துக் காட்டின. சாமிகள் திருவுள்ளப்படி அங்கு ஒரு கல் மேடை எழுப்பப்பட்டது. அருள்பிரகாசம் ஓங்கியிருந்த அந்த இடத்தில் சாமிகள் ஒரு தெய்வக்கல்லை நாட்டினர். தெய்வக்கல் நாட்டிய இடத்தில் முருகனருள் செறிந்த மகிமை வளர்ந்தோங்கியது.

இத்தெய்வீகம் பொருந்திய இடத்தில் ஒரு முருகன் கோயில் அமைப்பது மிகவும் நல்லது என்று சாமிகள் கருதினர். "தமிழ் நாட்டில் ஏற்கெனவே ஏற்பட்டிருக்கும் கோயில்களுக்கு எண்ணிக்கை இல்லே. புதுக் கோயில்கட்டி வீண் விரையம் செய்யும் பணத்தை மக்கள் நலனுக்காக எவ்வளவோ பலனளிக்கும் வேலேகளில் செலவு செய்யலாமே" என்ற மனப்பான்மை வெகுபேருக்கு இருந்து வந்தது. இதையுணர்ந்த திரு. சோமசுந்தரம் பிள்ளே கோயில் கட்டுவதற்கு வேண்டிய ஆதரவு மக்களிடமிருந்து பெறவேண்டிய அவசியத்தை உணர்ந்தார். இந்த இடத்தில் கோயில் கட்டுவது அவசியம்தான் என்பதற்குரிய அறிகுறி ஏதுவும் தென்பட்டால் இந்த முயற்சியில் பொதுஜன ஆதரவோடு ஈடுபடலாம் என்று சாமிகளிடம் கூறினர். பிள்ளேயவர்கள் விரும்பியவாறே அதே இடத்தில் ஒரு தோற்றம் உண்டாகும், அதைக்கண்டு கோயில் கட்டுவதற்குரிய ஏற்பாட்டைச் செய்யலாம் என்று சாமிகள் கூறினர். இதே இடத்தில் தோன்றிய ஜோதி சாமிகள் ஒருவருக்கு மட்டும்தானே தெரிந்தது? ஏன், மற்றவர்களுக்குத் தெரியவில்லே? என்று பேசிய சிலரும் வியப் புறும் வண்ணம் அதே இடத்தில் ஜோதி தோன்றியது. அந்த ஜோதியைப் பகலில் மூன்று தினங்கள் எல்லோரும் பார்க்கும் பாக்கியம் கிடைத்தது. ஜோதி தோன்றிய இடத்தில் முருகன் திரு அடிச்சுவடுகள் மண்ணில் பதிந்தால் எப்படி இருக்குமோ அப்படிக் கல்லில் பதிந்து காட்சியளித்தது. ஜோதியைக் காட்டிய இம் மலேயை ஜோதிமலே என்று அழைக்கவும் மறுப்பாருண்டோ? 'இது ஜோதிமலே' என்று கல்லில் அழகுறச் செதுக்கப்பட்டக் காட்சியை எல்லோரும் கண்டு இன்புற்றனர். இந்த அருள்ஜோதி மலேயில் இன்றும் தெய்வமணம் கமழ்வதை எடுத்துக்காட்ட சில அடையாளங்கள் தென்பட்டன. மலேக்குத் தெற்குப் பாகத்தில் ஊரை நோக்கியுள்ள பாறையில் திருமுருகனின் திருப்பாதங்கள் தோன்றியதைப் போன்றே எழில்மிகு மயில் உரு ஒன்று ஒரு பாம்பைக் கௌவிக் கொண்டிருப்பது போன்றும், தனிப் பாம்புரு ஒன்றும் உருவாயின.

இத்திருப்பாதங்களே இங்கு பார்க்கும்போது தாண்டிக்குடியின் பெயரை விளக்க உதவும் பூர்வீகக் கதையொன்றும் இங்கு குறிப்பிடு வது உசிதமாகும். "வளஞ்செறிந்த மலேகளினூடே அமைந்து நிற் கும் இத்தாண்டிக்குடி தொன்றுதொட்டு முருகன் அடியார் போற்றும் ஊராகும். குறிஞ்சி நிலக்கடவுளாகிய முருகன் மலேவளங் கண்டு தங்கியிருந்த பெருமையை உடையது இவ்வூர். முன்காலத்தில் அகஸ்தியர் கைலேயை அடைந்து சிவபெருமானேத் தரிசித்த பொழுது சிவபெருமான் சிவகிரி சக்திகிரி என்ற இரண்டு சிறு குன்றுகளே அகஸ்தியருக்கு அன்பினுல் அளித்தார். அகஸ்தியர் தம்முடைய

சீடனாகிய இடும்பனை இறைவன் அன்புடன் அளித்த இரு குன்றுகளை யும் கைலையிலிருந்து பொதிகை மலைக்குக் கொண்டுவரும்படி பணித் தார். குருவின் பணி தலைமேற் கொண்டு குருவினால் உபதேசிக்கப் பட்ட மந்திர பலத்தினால் இரு குன்றுகளையும் பிரம தண்டத்தைக் கோலாகக்கொண்டு காவடி கட்டித் தூக்கி வந்தார் இடும்பன். பழநித் தலம் வந்ததும் இடும்பன் களைப்புற்றுக் காவடியைக் கீழே இறக்கி சிரமபரிகாரம் செய்து கொண்டார். தாண்டிக்குடியில் மலைவளம் கண்டு கொண்டிருந்த முருகன் இவ்விரு குன்றுகளில் ஒன்று தனக்கு இருப்பிடமாக்கிக்கொள்ள உரியது என்று கருதித் தான் தங்கி யிருந்த தாண்டிக்குடியின் அருகில் உள்ள செகுத்தாப்பட்டி மேட்டி லிருந்து ஒரே தாண்டாகத் தாண்டி ஒரு குன்றின் மீது அமர்ந்து கொண்டார். முருகன் இப்படி இங்கிருந்து தாண்டினமையால் தாண்டிக்குடி என்று இவ்வூருக்குப் பெயர் உண்டாயிற்று. இடும் பனது ஆணவத்தைச் செகுக்கப் (அழிக்க) புறப்பட்ட இடமாகிய தாண்டிக்குடியை அடுத்த இந்த மேடு செகுத்தாப்பட்டி என்ற பெயர் பெறுவதாயிற்று.'' செகுத்தாப்பட்டியில் ஏற்கனவே முருகன் கோயில் இருந்தமைக்கு உள்ள அடையாளங்களை நமது சாமிகள் அறிந்து கொண்டனர்: முருகு மணத்தையும் முற்று முணர்ந்தனர்: அழகு ஜோதியையும் கண்டனர். தான் கண்ட தெய்வீகப் பே ரொளியைத் தாண்டிக்குடி மக்களும் கண்டானந்திக்க உதவினர். தெய்வீகப் பேரொளி சாமிகளுக்கு ஒரு பேருண்மையை விளக்கியது. ஆதியிலேயே இக்குன்றம் முருகன் குன்றமாக விளங்கினமைக்கு ஓர் அறிகுறியாக உள்ளதைச் சாமிகள் உணர்ந்து அப்பால முருகனையே பழநி நோக்கி எழுந்தருள ஏற்பாடு செய்தனர்.

'' தாண்டிக்குடி உண்டு
தக்கோர் மிக உண்டு
தாண்டி குதித்தருள
தனயன் முருகுண்டு
வேண்டி அவன் அருளை
உவந்தளிக்க பன்றிமலை
ஆண்டவர் அருளுண்டு
அருள் ஜோதிமலை காணீர் ''!

கோயில் பாறையில் மயில் உரு ஒன்று கருமை தீட்டிய வடிவாக அமைந்திருக்கும் அழகு கலைஞர் உள்ளத்தை மகிழ்விக்கக்கூடியது. தோகையைத் தலைக்கு மீது இடது பக்கம் ஒய்யாரமாகத் தூக்கி நளினமாக நிற்கும் அற்புதத்தைப் பாறையின்மீது கருமை பூத்த மயில் வடிவாக அமைந்துள்ள உருவம் காட்டுகின்றது. இவற்றை யெல்லாம் கண்டு வியப்பும் மகிழ்ச்சியும் ஒருங்கே கூடிய மக்களுக்குக்

கோயிலைக் கட்டவேண்டும் என்ற ஆர்வம் தானே பொங்கி எழுந்தது. இவர்கள் ஆர்வத்தைக் கண்ட பிள்ளை அவர்களும் மனமுவந்து கோயில் கட்டி முடிக்க முற்பட்டார். இதற்கெல்லாம் மூல காரண மாக விளங்கும் சாமிகளிடம் பிள்ளை அவர்கள் வந்தார். எல்லா மூர்த்திப் பிரதிஷ்டையும் சக்கர ஸ்தாபனமும் சாமிகளே செய்தருள வேண்டுமெனறும் கேட்டுக்கொண்டார். கோயில் திருப்பணி வேலை உற்சாகத்தோடு ஆரம்பித்து மும்மரமாகத் தொடர்ந்து நடந்தது.

ஆரம்பத்தில் பாலமுருகனுடைய திருக்கோயில் கட்ட எண்ணிறந்த சிற்பிகளும் கல்தச்சர்களும் ஈடுபட்டபோது சில கல் தச்சர்கள் வாயில் நுரை தள்ளி மயக்கத்தோடு விழுந்து விடுவதுண்டு. இதைக் கேள்விப்பட்ட சாமிகள் குருவரையான் எனும் முன்னடி தேவதையால் ஏற்பட்ட கெடுதல் இதென்றும், அந்தத் தேவதையின் வழிப்போக்கில் இந்த வேலை நடப்பதால் வேலை செய்பவருக்குத் துன்பமென்றும், அந்த தேவதையின் மார்க்கத்தை மாற்றிக் கொடுப்பதே இதற்கு வழி யென்றும் கூறினர். ஒரு நாள் பிள்ளையவர்கள் சாமிகள் கூறியபடியே சர்க்கரை கலந்த நெற்றுத் தேங்காய்த் திருகலைத் தன் கைகளில் ஏந்தித் தேவதை வரும் மார்க்கத்தில் நின்று கொண்டு "நான் முருகன் கோயில் கட்டப்போகின்றேன். நீங்கள் அருள் கூர்ந்து உங்கள் வழிப்போக்கை மாற்றிக்கொள்ள வேண்டுகிறேன்" என்று சாமிகள் சொல்லி வைத்தபடி உரைத்தார்கள். அவர் கூறி முடித்த சொற்ப விநாடிகளுக்குப்பின் அவர் கையிலிருந்த சர்க்கரைத் தேங்காய்த் திருகல் மாயமாய் மறைந்து விட்டது. யாரோ வாயில் பீச்சங்குழல் வைத்து உறிஞ்சி எடுத்து விடுவது போன்ற உணர்ச்சியை அவர் தம் கைகளில் கண்டார். அன்றிலிருந்து சாமிகளின் அருளால் தேவதையின் தொந்தரவு ஒன்றுமில்லை. ஒரு வருஷத்திற்குள் கோயில் வேலை பூர்த்தியாகிட்டது.

கோயில் அமைக்கின்றூர்கள். தீர்த்தம் வேண்டாமா? இந்த நெடும் பாறையில் தீர்த்தத்தை எங்கிருந்து கொணர்வது. மலைமீதே தீர்த்தம் கிடைத்துவிட்டால் கோயிலுக்கே பெருமையல்லவா? இதை யுணர்ந்த ஒரு பக்தர் சாமிகள் மலைமீது மற்ற அன்பர்களோடு கூடியிருந்த சமயம், "சாமிகள் கை வைத்தால் தீர்த்தமும் மலை மீதே கிடைத்துவிடும்" என்று உரைத்துவிட்டார். சாமிகளும் மனமு வந்து பாறையில் ஒரு இடத்தைக் காண்பித்து அதைப் பிளக்கச் சொன்னர். பிளக்கப் பிளக்கப் பலன் ஒன்றும் காணேம். சாமிகளே தன் திருக் கரத்தால் அந்தப் பாறையில் உள்ள ஒடுக்கொன்றில் தலை தூக்கி நின்ற நீண்டதொரு கற் சிலும்பைப் பிடுங்கினர். உடனே சிலும்பிருந்த இடத்தில் பொந்து ஒன்று ஏற்பட, அப்பொந்தினின்றும் பீறிட்டடித்தது தண்ணீர். வெறும் கற்பாறை சாமிகள் கைப்பட

அற்புதச் சுனையாகிய விந்தையைக் கண்ணுற்ற தாண்டிக்குடி மக்களின் இன்பத்தை அளவிடமுடியாது. அவர்களுடைய உற்சாக ஊற்று புதுச்சுனையில் ஊறி எழுகின்ற தீர்த்தத்தின் வேகத்தை மிஞ்சுவதாகவே இருந்தது.

இன்னுமொரு அதிசயம்! இந்தக் குமரன் திருச்சுனைப் பாறையும், குமரன் திருப் பாதப் பாறையும், குமரன் திரு மயில் பாறையும் அமைந்த குன்றின் பாகத்தில் உச்சியிலிருந்து கீழே சுமார் எழுபத்தைந்தடி தூரத்தில் ஒரு மண் மேடு உண்டு. இந்த மண்ணே திருமண்ணாக இந்தக் கோயிலுக்கு வாய்த்திருக்கின்றது. மண்ணைக் கையிலெடுக்க விளைந்த விபூதியாக விளங்குகின்றது. இக்குன்றிலுறை பாலமுருகனுக்குகந்த விபூதியாக இத்திருமண்ணே பயன்படுகின்றது.

கணபதி, முருகன், மயில், இடும்பன், பைரவர், அகஸ்தியர் நவக்கிரகங்களுடன் சகல மங்களகரத்துடன் அமைந்த இப்பால முருகனின் கோயில் திருப்பணி முடிவாகி விரோதி வருஷம் வைகாசி மாதம் 24ந்தேதி (6—6—49) திங்கட்கிழமை காலை மணி 6-45க்கு ரிஷப லக்கினத்தில் மகா கும்பாபிஷேகம் சிறப்புற நடந்தேறியது திரு பாலகுமரன் கோயில் விசேடம் என்னவென்றால் ஆரம்பத்திலிருந்து கும்பாபிஷேகம் முடியும் வரை சாமிகளே அல்லும் பகலும் சலியாது உழைத்து உழைப்பின் பயன் இறைவன் திருவருள் இன்பம் அடையப் பெற்றார் என்று சொல்வதைவிட அனைவரையும் அடையச் செய்தார் என்று கூறுவதே சாலப் பொருந்தும். இவ்விழாவில் சைவத் திரு ஈசான சிவாச்சாரியார் பெரும் பங்கு எடுத்துக்கொண்டார். ஒவ்வொரு சந்நதியிலும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் திரு சொற்படி ஆலயம் அமைக்கப்பட்டதென்று கல்லில் செதுக்கப்பட்டிருப்பது சாமிகள் இந்தக்கோயில் அமைப்பிலும் விரிவிலும் எவ்வளவு அழுத்தமான ஊக்கமும் பேரன்பும் கொண்டிருக்கின்றார் என்பதையே பொது மக்களுக்கு எடுத்துரைக்க உதவுகின்றது.

இந்தக் கோயில் கட்டும் போது பல அன்பர்கள் கனவில் சாமிகளின் வேண்டுதலின்படி முருகன் சென்று ஆணையிட அவ்வாணை கேட்ட அனைவரும் தமக்கு இறைவன் பணித்த கோயில் தொண்டை மனமார ஏற்று முடித்தனர். பழநியில் இருந்த ஒரு சிற்பி பாலமுருகன் விக்கிரகத்தை நின்ற திருக்கோலத்தில் சமைக்க 501 ரூபாய்க்கு ஒத்துக்கொண்டதும் முருகப்பிரான் அவர் கனவில் தோன்றி உரைத்தபடியே! முருகப் பெருமான் சிற்பி கனவில் தோன்றி ஆணையிட்டதும் அவரடியார் சாமிகளின் திருவுள்ளம்படியே! இப்படியே ஓய்வு பெற்ற தாசில்தார் திரு. தில்லை கோவிந்த நாடார் திரு பழநி என்பார் மேற்பார்வையில் முருகன் ஆணைப்படி சில விக்கிரகங்கள்

பழநியில் சமைக்கப்பட்டன. சூலூர் துணை மாவட்ட ஆணையர் திரு. பஞ்சாட்சரம் பிள்ளை அவர்கள் கனவில் தாண்டிக்குடி விக்கிரகப் பிரதிட்டையின் போது நவரத்தினக்கற்கள் கொண்டு வந்திட வேண்டுமென்று முருகன் ஆணையிட அவரும் மனமுவந்து வழங்கினார் நவரத்தினக் கற்கள். இவையெல்லாம் எதைக் காட்டுகின்றது? தாண்டிக்குடி பாலமுருகனின் அருள் திறத்தையும், சாமிகளின் தெய்வத் தன்மையையும் தான்!

1967இல் இந்தக் கோவிலில் கோலாகலமாகக் குதூகலத்துடன் கொண்டாடப்படும் உத்திர விழாவைச் சாமிகளுடன் சேர்ந்து காணும் பாக்கியம் பக்தர்களுக்குக் கிடைத்தது பங்குனி உத்திரத்தில் ஏராள மான மக்கள் இந்தக் கோவிலுக்குத் திரண்டு வருகின்றனர். கொடு முடியிலிருந்து சில பக்தர்கள் தாண்டிக்குடிக்குப் போகும்போதும் அங்கிருந்து வரும்போதும் சாமி அருள் பெற்று காவடி எடுத்து திருக்காவேரி தீர்த்தம் கொண்டு வருகின்றார்கள். ஆணிகள் பதித்த பாதக் குறட்டில் ஏறிய ஒரு பக்தர் "ஆதிகுரு எங்கே" என்று சாமி களைத் தேடி வந்து சாமிகளைக் கண்டு வணங்கி அருள் விபூதிப் பிர சாதம் பெற்று பாதக் குறட்டில் ஆடுகின்றார். அருள் வழியும் அவர் மயிர்க் கூச்சலெடுத்து பாதக்குறட்டில் நிற்பது காண்பவர்களை பக்திப் பரவசப் படுத்துகின்றது. அருள் செறிந்த இத்திருக் கூட்டத்தைத் தொடர்ந்து மங்கள மஞ்சள் முளைப்பாலி தலைகளில் சுமந்து வரும் மங்கையர்களின் பக்தி மங்களக் காட்சி இக்கூட்டத்திற்கே ஒரு சிறப் பையும் சோபையையும் கூட்டி வருகின்றது. காவடி எடுத்து ஆடு பவர்களில் சிலர் ஜோதிமலை மீது ஏற்பாடாகி இருக்கும் தீ மிதித் தலிலும் பங்கு கொள்கின்றனர். இன்னிசைக் குழுவினர் உற்சாகத் தோடு திருப்புகழ் பாடி வருகின்றனர். காவடி ஆடலுக் கேற்ப நாதசுர இசைக்குழுவினரும் காவடிச் சிந்துகளை நன்றாக அனுபவித்து வாசித்து வருகின்றனர். பக்தர் குழாம் பக்திப் பரவசத்தோடு இவை களைக் கண்டும் கேட்டும் உள்ளம் நெகிழ்ந்து மெய் மறந்து நிற்கின் றனர். இவைகளைக் கண்டு களிப்பதற்கென்றே நவீன நளின திருத் தேரில் பால முருகன் வள்ளி தெய்வயானையுடன் திருக்கோலம் கொண்டு கோயிலைச் சுற்றி பவனி வருகின்றான். கோயிலுக்கு வெளியே கோலாகலத்துடன் கொழித்திலங்கும் உற்சவ மூர்த்தியை யும் உற்சவத்தையும் மக்கள் உற்சாகத்தையும் பக்திப் பெருக்கையும் உள்ளிருந்தவாறு கண்டு களித்து காட்சியளிக்கின்றான் கர்பக்கிரகத் தில் எழிலோடு நிற்கும் எம்பெருமான். பால குமரன் அருள்பழுத்த குறுநகை தவழ்திரு முகத்தின் தெய்வப் பொலிவைச் சந்தன அலங் காரம் எடுத்துக்காட்ட மல்லிகை முல்லை ரோஜா முதலிய எழில்மிகு மலர்மாலைகள் முருகனுடைய மணத்தழகை வாரி வாரி வீசுகின்றன. இதைக்கண்டு களிக்கவரும் அடியார்கள் உள்ளங்கள் தங்கள் குறை தீர்த்தருள திருமுருகனின் பாதார விந்தங்களைக் கண்டு சொக்கி

விடுகின்றன. இந்தக் கண்கொள்ளாக் காட்சியினைக் காண நமது சாமிகளே பங்குனி உத்திரத்தன்று மனமுவந்து தாண்டிக்குடிக்கு மக்கள் அழைப்பிற் கிணங்கி ஓடோடி வருகின்றார். சாமிகள் ஜோதி மலையின் மேலே தம்மருமைச் சீடர்கள் புடைசூழ அமருகின்றார். அப்போது சாமிகளைக் காணும் சீடர்களுக்கு ஜோதிமலையின் மேலே ஒளிரும் ஜோதி மலையாகவே சாமிகள் காட்சியளிக்கின்றார். ஆம்! சாமிகள் ஒரு அருள் ஜோதிமலையாக அல்லவா விளங்குகின்றார்!!

இப்பொழுது பல மெய்யடியார்களது பொருளுதவி கொண்டு இத்தலத்தின் திருக்கோயில் புதுப்பிக்கப்பட்டுள்ளது. கீலக ஆண்டு ஆவணித் திங்கள் 22ஆம் நாள், 5—7—68 வெள்ளிக்கிழமை தசமி திதியும், சுவாதி நக்ஷத்திரமும், சித்தயோகமும் கூடிய திருநாளில் 6 மணிக்குமேல் 7 மணிக்குள் மிதுன நல்லோரையில் ஸ்ரீ பால முருகருக்கு சைவ ஆகம விதிப்படி ஜீர்ணோத்தாரன அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் வெகு சிறப்பாக நடந்தேறியது. திருத்தவத் திரு பன்றிமலை சாமிகள் நாற்பத்து முக்கோண சக்கர ஸ்தாபனம் செய்தது அவர் பூரண அருள் இத்தலத்திற்கு அமைந்திருப்பதை விளக்கும். சாமிகளது தலைமையில் இக்குடமுழுக்கு விழாவை ஆகம விதிப்படி நடத்த திரு. ம. க. சுந்தரேச பட்டர் பெரும்பங்கு எடுத்துக் கொண்டார். 4–7–68இல் குடமுழக்கு விழா முதல்நாள் இத்தல சிறப்பு மலர் ஒன்று சாமிகள் தலைமையில் வெளியிட ஏற்பாடாகி இருந்தது. தாண்டிக்குடி நாகம்மை நினைவு உயர்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் திரு. தி. வே. தருமராசன் பி. ஏ., எழுதிய சிறப்பு மலரை திரு. ம. க. சுந்தரேச பட்டர் வெளியிட்டார். முதல் புத்தகத்தை பெருந் தொகை கொடுத்து சாமிகளுடைய திருக்கரங்களிலிருந்து பெற்றுக் கொண்டவர் பம்பாய் பக்தர் திரு. கோபாலய்யர் அவர்கள். மலரில் சாமிகளின் பெருமையை விவரிக்கும் ஆசிரியர், "அடியார் குறை நீக்கக் கற்றாவின் மனம்போலக் கசிந்துருகி விரைந்து வரும் இவ்வருளாளரின் (சாமிகளின்) ஈடிலாச் செயற்கருஞ் செயல்கள் இவரைத் தெய்வமாகவே தொழச் செய்யும் மாண்பின. மக்கள் மையல் நீங்கி உய்வு பெற அழகனே இவ்வுலகத்து அவதாரம் செய்துளான் எனக் கருத இயலும் அலகிலா விளையாட்டுடை இத்தலைவரைக் கண்டேத்தும் முருகன் என்றே அடியவர் கூறி நிற்பர்" என்று கூறி வழுத்துகின்றார். இவர் அன்று பேசுகையில் 'தாண்டிக்குடி என்றற்கு இவண் நின்றும் முருகன் தாண்டிப் பழநி சேர்ந்தமையின் தாண்டிக்குடி என்ற பெயர் வந்துற்றது என்பார் கூற்று சற்றும் பொருத்தமின்மை தெளிவு' என்ற அடிப்படையில் இந்தப் புத்தகத்தை தான் எழுதியுள்ளதைக் குறிப்பிட்டார். சாமிகள் தலைமை உரையில் இதைப் பற்றிக் குறிப்பிடும் முத்து மொழிகள் அடியார் மனத்துள் ஆழ்ந்து பதிவன. "தாண்டிக்குடி என்பது முருகன்

அடியார் ஒவ்வொருவர் மனத்திலும் தாண்டிக் குதித்து ஒவ்வொரு அடியார் மனதில் குடி கொண்டிருப்பதை விளக்க வில்லையா? முருக னருள் பக்தர்கள் எல்லோருக்கும் கிடைக்க வேண்டுகின்றேன்" என்று சாமிகள் கூறியது உண்மை விளக்கமாகவும், யோக விளக்க மாகவும் அமைந்தது. இக்கோலாகல குடமுழுக்குக் காட்சிகளை 3, 4, 5 தேதிகளில் கண்டுகளித்த என் மனதில் ஒரு கீர்த்தனை சாமா இராகத்தில் சாமிகள் அருளால் உருவாகியது. அதைப் பாடி மகிழ்வோம்.

சாமா இராகம் — ஆதி தாளம்

**பல்லவி**

தாண்டிக்குடி முருகா — குகா
தாண்டிக்குடி முருகா — ஷண்முகா

**அனுபல்லவி**

வேண்டி உனதருளை நாடும் அடியவர்
வேண்டும் வரமருளும் பாலசுப்ரமண்யா — தாண்டி

**சரணம்**

1. ஆண்டவன் அற்புதம் ஆடிடும் வள்ளலார்
அன்புநிறைமிகு பன்றிமலை நல்லார்
தாண்டவன் மகனுனதருளினை வாரியே
தந்தேமகிழ்ந்தார் அருள்ஜோதி விளங்கிடும் — தாண்டி

2. தாண்டிக்குதித்தவன் தீந்தமிழ்க் காவலன்
தேனமுதன் குழகன் தூயவருள்ளத்தில்
தாண்டிக்குதித்தருளி குடிகொள்ளும் நாயகன்
தாண்டிக்குடி முருகன் பாலதண்டாயுதன் — தாண்டி

இத்தலத்தின் அழகையும் அது உண்டான விபரங்களையும் அதை உண்டாக்கிய அருள்வள்ளலார் சாமிகள் அவர்கள் திருச் செயல்களைக் காணும்போது ஒரு கவிதையே உருவாகி விடுகின்றது. ஜோதிமலையிலேயே உருவாகி இருக்கும் தோகை மயிலை விளித்தே இந்த அழகிய குன்றின்மேல் நின்ற கோலத்தில் திருத்தண்டு கொண்டு விளங்கும் பாலமுருகனின் பெற்றியை இராகமாலிகையில் பாடி மகிழ்வோம்.

1. பாலமுருகனிவன் — மயிலே
பாதக்கமலம் கண்டேன்
வேலன் வந்தவிதம் — உரைப்பேன்
வண்ணக் கதை ஓவியம் !

2. ஆதியில் குன்றிரண்டை — மயிலே
அற்புதக் காவடியாய்
தோளினில் கட்டியுமே — வீறுடன்
தென் இடும்பன் வந்தான்.

3. தென்னகம் சேர்ந்தவுடன் — மயிலே
தெய்வ இடும்பனுமே
மண்ணகம் சேர்ந்துவிட்டான் — மலைகள்
சற்றும் அசையவில்லை.

4. மலைகளும் வேரூன்ற — மயிலே
மலர் கொடி வேரூன்றும்
மரஞ் செடி வேரூன்றும் — புள்ளினம்
மஞ்ஞையும் சேர்ந்துலவும்.

5. அழகு பொழில் சூழும் — மயிலே
ஆனந்தக் காட்சிகாண
அழகு தெய்வம் முருகன் — எழிலாய்
ஆசையோடு வருவன்,

6. தாண்டிக் குடிவாசி — மயிலே
தேனமுதன் முருகன்
வேண்டி பழநிமலை — கண்டிட
ஓரடி தூக்கி விட்டான்.

7. தாண்டிவிட்டான் பழநி — மயிலே
தாண்டிக் குடி விட்டே
தாண்டிக் குடிவாசி — குழகன்
தெய்வ வடிவேலன்

8. இப்படி எத்தனை நாள் — மயிலே
இங்கிருந்த தெய்வம்
தப்பிதம் ஏதுமில்லா — தலத்தை
தட்டிக் கழிப்பதுண்டோ ?

9. ஆதிப்பரஞ் சுடரை — மயிலே
அழகின் திருச்சுடரை
ஓதி அழைப்பதற்கே — ஒருவர்
உத்தமர் ஓடிவந்தார்.

10. பன்றிமலை வாசி — மயிலே
பக்தர்க் கனுகூலன்
ஒன்றி முருகனோடு — இருப்பன்
உண்மையைக் கண்டறிந்தோன்.

11. தன்னை உணர்ந்தவராம் — மயிலே
தன்னை அடைந்தோர்க்கு
அன்னை யென உதவும் — அருள்மிகு
அற்புத சக்தி பெற்றோன்.

12. பன்றிமலை சாமி — மயிலே
புனிதர் இவர் கூட்டு
குன்றம் இத்தாண்டிக்குடி — மலைக்கு
கொள்ளை இன்பம் கொணரும்.

13. நாடி இவர் உதவி — மயிலே
நேயர் ஒருவர் தேட
வேடிக்கை காட்டுகின்றார் — வேலவன்
வண்ணத்தைக் காட்டுகின்றார்.

14. காடைப்பறவையுமே — மயிலே
கண்ணிமைப் போதினிலே
தேட மடியினின்றும் — குதித்து
தென்றலெனப் பறக்கும்!

15. கடிதம் ஒன்றை எரிக்க — மயிலே
கரிந்து சாம்பலான
லிகிதம் பையினின்றும் — பழுதின்றி
லேசாக வந்ததம்மா!

16. இப்படி அற்புதங்கள் — மயிலே
இஷ்டப்பட்டே காட்டினார்
செப்பிடு வித்தையல்ல — இவைகள்
சித்து விளையாட்டே!

17. சித்தின் சிகர மென — மயிலே
சுந்தர ஜோதி ஒன்று
இத்தல மாமாலையின் — மேட்டிலே
ஏற்றுமல் ஏற்றி வைத்தார்.

18. மூன்று பகல் நேரம் — மயிலே
மோன ஜோதி ஒளிரும்
மீண்டும் முருகனையே — இவ்விடம்
மீட்டுவரச் சித்தம்.

19. மேட்டிலே பேரொளியை — மயிலே
மூன்று நாள் காட்டிவிட்டார்
மேட்டிலே பேரழகன் — திருக்கோயில்
முடிக்க அருள் கொண்டார்.

20. ஆதிப்பரஞ்சுடரை — மயிலே
அழகின் திருச்சுடரை
பாலமுருக னென்று — ஸ்தாபித்து
பெருக்கி விட்டார் ஒளியை

21. ஜோதிமலை காண்போம் — மயிலே
சுந்தரக் கோயில் காண்போம்.
ஆதியில் உள்ள வரை — முருகை
ஆனந்தமாய்க் காண்போம்.

22. பன்றிமலைசாமி — மயிலே
பாருக்களித்த கோயில்
தொன்று தொட்டு வந்த — வேலவன்
தூக்கிக் கொணர்ந்ததுவே.

23. தாண்டிக்குடி விட்டான் — மயிலே
தாண்டொன்று தாண்டியுமே
தாண்டிக்குடி வந்தான் — மறுபடி
தாண்டொன்று தாண்டியுமே.

24. தாண்டிக் குடிவேலன் — மயிலே
தாண்டவ மாடுவதால்
தாண்டிக் குடி பெருமை — சாமிகள்
தேடி வைத்த பெருமை.

25. பன்றி மலைப் பெருமை — மயிலே
பக்தி சுனைப் பெருமை
வென்றி வடி வேலன் — இயற்கை
விபூதியின் பெருமை

26. ஜோதிமலை யென்று — மயிலே
சுவ டெழுத்தின் பெருமை
ஜோதிமலைமீதே — மஞ்ஞையும்
நாக வடு பெருமை.

27. பெருமை அருமை யெல்லாம் — மயிலே
பக்தி வெள்ளப் பெருமை
பெருமை அருமை யெல்லாம் — சாமிகள்
பன்றிமலைப் பெருமை.

28. பன்றிமலை சாமி — மயிலே
பக்தர் பரஞ்ஜோதி
பன்றிமலைசாமி — எந்நாளும்
பார்புகழும் சீலன்.

29. பன்றிமலைசாமி — மயிலே
பக்தர் சுடர் விளக்கு
பன்றிமலை சாமி — இதயம்
பற்றிடும் பேரொளியே.

30. இந்தச் சாமியல்லவோ — மயிலே
இன்பவள சோதி
வந்த மலை அளித்தார் — முருகன்
வரவழைத் தே அளித்தார்.

31. ஆடிடுவாய் இங்கே — மயிலே
அற்புத சோதி கண்டு
ஆடிடுவாய் மயிலே — சாமிகள்
அருள் விளையாட்டு கண்டு.

32. ஆடி டுவாய் அழகாய் — மயிலே
ஆடிடு ஆடி டுவாய்
நாடியவர் பாதம் — சாமிகள்
நேய அடி பணிந்தே.

33. தூயவன் தென்பழநி — குமரன்
தாண்டிக் குடி வேலன்
சேயுருகண்டாடு — மயிலே
ஜம்ஜம் என ஆடு.

34. ஜம்ஜம் என ஆடு — மயிலே
ஜில்ஜில் என ஆடு
தொம் தொம் என ஆடு — மயிலே
தொல்லைகள் தீர்ந்த தென்றே.

35. அல்லல் அழிந்த தென்றே — மயிலே !
ஆனந்தம் வந்த தென்றே
சொல்லி விளையாடு — மயிலே !
சுந்தரப் பொன் மயிலே !

---

## 24. குருமகராஜன் சுற்றுலா.

"கன்னல் மொழிபேசிக் கருத்தைக் கருத்தாட்டும்
சின்ன வடிவேலன் செந்தமிழ்வேள் அருளாளன்
பன்றி மலைசாமி பாரெல்லாம் சுற்றிவர
பண் ஓங்கும் கார் ஓங்கும் பார் ஓங்கும் புகழ் ஓங்கும்."

சாமிகள் கருணையே வடிவினர்! சாமிகள் எளிமையே மொழியினர்! சாமிகள் அருளே குணத்தினர்! இப்படியெல்லாம் ஏத்துகின்ற மெய்யன்பர்கள் சாமிகளை ஊர் ஊராக அழைக்கத் தொடங்கினர். செல்லுமிடமெல்லாம் சாமிகள் தன் இனிய பேச்சாலும் பழக்கத்தாலும் அருளாலும் அன்பாலும் பேரின்பப் பெருக்கில் ஓடிவருகின்ற சித்துத் திருவிளையாடலாலும், பிணிகள் அகற்றுகின்ற பெருங் கருணையாலும் மக்கள் உள்ளங்களைக் கவர்ந்தார். அவர்கள் இல்லங்களில் சாமிகள் படங்கள் கொலு வீற்றிருப்பது போன்று அவர்கள் உள்ளங்களிலும் சாமிகள் கொலுவீற்றிருக்கலானர். சாமிகள் ஊர் ஊராக, நகர் நகராக, நாடு நாடாகச் சென்று வந்த அருமை நிகழ்ச்சிகளை இனித் தொடர்ந்து படித்து மகிழ்வோம்.

### சேலத்தில் தீராத விளையாட்டுச் சித்தர்

"அன்பு மறிவு மறிந்தவர்க ளிவ்வுலகிற்
துன்பமது நீங்கிச் சுகம்பெறுவர் — பன்றிமலைச்
சாமி திருவுள்ளம் சார்ந்தவர்கள் எஞ்ஞான்றும்
பூமியில் பெறுவர் புகழ்."

திருமங்கலம் பால பண்டித வித்துவான்,
திரு. ப. பாப்பு இராமநாதன்.

சேலத்தில் சாமிகள் விஜயம் செய்து அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தபோது பல சித்துக்கள் விளையாடி பக்தர்களை பரவசப் படுத்தினர். இவைகளைக் காணும்போது சேலம் மாவட்டத்தில் திருச் செங்கோட்டில் எழுந்தருளியுள்ள சுப்ரமணியர் திருவிளையாடல்களில்

சில நம் மனக்கண்களுக்கு முன் வருகின்றன. இந்தத் தலத்தில் உள்ள கல் ரிஷபம் ஒரு சமயம் சுப்ரமண்யர் அருளால் ஒரு அடியார் விரும்பியபடி அடியார் கொடுத்த கடலைப் பருப்பைச் சாப்பிட்ட நிகழ்ச்சி யாரும் மறக்கமுடியாதது. சுப்பிரமணியருடைய பக்தர் குண சீலன் எனும் கவிஞர். அவரைப் போட்டியில் தோற்கடிப்பதாகச் சொல்லிப் பாண்டிய நாட்டுக் கவிஞர் ஒருவர் புறப்பட்டு விட்டார். இதைக் கேள்வியுற்ற குணசீலன் தன்னையும் தன் பெயரையும் காப் பாற்றி அருள வேண்டிக் கொண்டபடி, முருகனும் ஓர் இடைச் சிறுவன் கோலத்தில் ஊருக்கு வெளியே வந்துகொண்டிருந்த பாண்டிய நாட்டுப் புலவரைச் சந்தித்தார். தன்னைக் குணசீலக் கவிராயரது மாணுக்கனென்று அறிமுகப்படுத்திக் கொண்டு தன் குருவின் பெரு மைகளைத் தொகுத்துரைக்க ஆரம்பித்தார். சீடனே இப்படி இருக்கும் போது குரு எப்படி இருப்பார் என்பதை யூகித்துக் கொண்ட பாண்டிய நாட்டுப் புலவர் வந்த வழியே யாருக்கும் சொல்லிக் கொள்ளாது பயணம் கட்டிவிட்டார். இப்படி முருகக் கடவுள் சித்துக்கள் புரிந்த சேல மாவட்டத்தில், சேலம் நகரிலேயே முருகன் அருள்பெற்ற சாமிகள் புரிந்த சித்துக்களைக் கண்டு மகிழ்வோம். திருச்செங்கோடு திருத்தலத்திலேயே சாமிகள் ஆடிய சித்து கோவில் தேவதீர்த்தத்தைப் பன்னீராக மாற்றி பக்தர்களுக்கு அளித்தது. தேவ தீர்த்தம் பன்னீராக இருந்த அதிசயத்தைக் கண்ட சிவசுப்பிரமண்ய குருக்கள் அதை அளித்த மகானையே கண்டுகளிக்க விழிகளை உயர்த் தினர். என்ன ஆச்சரியம்! பன்னீர் அருளியவருடைய முகத்தைப் பார்த்ததில் கையில் வேலுடன் ஸ்ரீ சுப்பிரமண்யசாமியே பிரத்தியட்ச மாய் நின்று கொண்டிருப்பதைக் கண்டார். மெய்மறந்த அவர் சாமிகள் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்தார். தன் சுய நினைவுவர அவருக்குக் கால்மணி நேரம் ஆனது. இவைகளைப் பார்க்கும்போது ஒரு பேருண்மைக்கு விளக்கம் காண்கின்றோம். சாமிகளே முருகன் அருள்பெற்ற சித்தர் என்பதை அறிகின்ற நாம் முருகனே சாமிகள் திருவடிவில் உலகில் நம்மோடு உலவிவரும் அதிசயத்தையும் உணர முடிகின்றது. திருச்செங்கோடு தலத்தில் அன்று சுப்ரமணியரே சித்து விளையாடினர்: அன்று நடந்தவை கதையல்ல, உண்மை நிகழ்ச்சிகளே என்று நிரூபிப்பதுபோல் தானும் முருகனும் இரண் டறக் கலந்த நிலையில் அற்புதங்கள் ஆடிக் காட்டுகின்ருர் நமது சாமிகள். இந்த நிகழ்ச்சியைப் படம் பிடித்துக் காட்டும் கவிதை எழிலோவியத்தைக் கண்டு மகிழ்வோம்.

**காவடிச் சிந்து**

1. க்ஷேத்திரங்கள் சுற்றிவந்த சீலன் — பலர்
   நேத்திரம் திறந்த அனுகூலன் — குலம்
   செழித்து விளங்கத்திரு விளக்கை நிகர்த்த மகன்
   அடைந்தார் மகிழ்வடைந்தார்.

2. நஞ்சைப் புஞ்சைத் தோட்டம் பணம் உண்டு
நாளெல்லாம் செய்திடுவார் தொண்டு — சுகம்
மிஞ்சுமந்த வாழ்விருந்தும் சஞ்சரித்து லோகமெங்கும்
வருவார் அருள் தருவார்.

3. கொஞ்சும் வள்ளிக்கிசைந்த நேசன் — அருள்
கொண்ட பன்றிமலை உல்லாசன் — தன்னைத்
தஞ்சமென்று வந்தவரை அஞ்சல் என்று அனுதினமும்
காப்பார் குறைதீர்ப்பார்.

4. தேவனைத் தொழச்சென்றார் கோவில் — சாமி
திருச்செங் கோடென்னும் தாலுகாவில் — அங்கு
தீர்த்தம் பெறகையில் கெண்டி பாத்திரத்துடன் வந்தார்
சிட்டார் ஒருபட்டர்.

5. பன்றிமலை நாதரவர் முன்னே — வந்த
பட்டர்கண்ட காட்சியது என்னே ! — பசும்
பொன்மயிலும் வேலும் துலங்க புண்யன் சுப்ரமண்யனையே
கண்டார் தொழுது கொண்டார்.

6. சாத்திரங்கள் கற்றவரும் கண்டு — இவர்
சரவண தாசரெனக் கொண்டு — மலர்த்
தாளில் விழுந்து எந்த நாளும் துணைபுரியும்
ஐயன் அன்பர் மெய்யன்.

1952ஆம் வருடம் மதுரை ஜில்லா அய்யம்பாளையம் மிராஸ்தார் திரு குன்னப்ப செட்டியார் மகள் கல்யாணம் சாமிகள் தலைமையில் நடப்பதாகப்பத்திரிகையில் குறிப்பிட்டிருந்தது. கல்யாணமும் நடந்து விட்டது. சாமிகளை மட்டும் காணோமே என்று ஒருவர் எண்ண மிட்டுக் கொண்டிருக்கும் நேரத்தில் ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்து கொடுத்தார்கள், வரவேற்புப் பத்திரம் வாங்கிக் கொண் டவர் மிகவும் எளியவர். காவியோ கமண்டலமோ அவரிடம் இல்லை. இவர்தான் சாமிகள் என்று அறிந்த இந்த ஒருவர் சேலம் திரு. E. M. பார்த்தசாரதி அவர்கள். இந்த எளிய இனியவரை ஒரு பெரிய ஹாலுக்கு அழைத்துச் சென்றதைக் கண்ட பார்த்தசாரதி அவர்கள் அவருடைய வருகைக்காகப் பல பக்தர்கள் கூடி இருந்ததையும் கண் டார். சாமிகளிடம் கூடி இருந்தவர்கள் தம் குறைகளைச் சொல்லி விபூதிப் பிரசாதம் வாங்கிக்கொண்டனர். திரு. பார்த்தசாரதி அவர் களுடைய விஷயங்களையும் சாமிகள் ஒரு காகிதத்தில் எழுதிக்கொடுத்

தார். அவையாவும் சரியாக இருந்தன. சாமிகளின் அபார சக்தி யையும் பில்லி சூனியம் இவைகளைத் தகர்த்து ஒழிப்பதில் பேராற்றல் பெற்றிருப்பதையும் நேரில் கண்ட பார்த்தசாரதி அவர்கள் சாமிகளை சேலத்திற்கு வரும்படி பலமுறை கேட்டுக்கொண்டார். சாமிகளும் திருவுளம் கொண்டு 1954இல் சேலத்திற்கு வந்தார்.

சேலம் செரிரோட்டில் உள்ளது சந்திர விலாஸ் ஹோட்டல். இங்கு காபி தயார் செய்தால் காபியினுடைய சுவை இருப்பதில்லை, மண் மணமே இருக்கும். அடிக்கடி யாதொரு காரணமில்லாமல் அடுப்புப் பற்ற வைத்தால் திடீரென்று மேலிருக்கும் கொட்டகையில் நெருப்புப் பிடித்துக்கொண்டு தானய் எரிய ஆரம்பித்துவிடும். அந்த ஹோட்டலுக்கு முன் "சைக்கிள் வைக்குமிடம்" என்று எழுதிய ஒரு பலகை இருந்தது. அது சுவரில் ஆணி வைத்து அடிக்கப்பட்டி ருந்தது. சாமிகளின் திருவாக்கின்படி அந்தப் பலகை அகற்றப் பட்டது. அன்றிலிருந்து அந்த ஓட்டலைப் பாதித்து வந்த பில்லி சூனியமும் அதனுல் விளைந்த விபரீதங்களும் அகற்றப்பட்டன. திரு. R. இராஜகோபால் ராவ் எனும் வழக்கறிஞருக்கு சாமிகள் தன் ஆசி யோடு பூசை செய்த புட்பங்கள் அளித்தார்கள். அவைகளை இராவ் அவர்கள் தன் மனைவிக்கு கொடுக்கும்போது கற்கண்டு கட்டிக ளாக அவை மாறிவிட்டன. பம்பாயிலிருந்து சாமிகளைத் தரிசிக்க வந் திருந்த திரு. பத்மனுபன் என்பவருக்குப் பூசை ரூமில் இருந்த உடைந்த தேங்காய் மூடிகளை ஒன்ருக்கி ஒரு முழுத் தேங்காயாக சாமி கள் உவந்தளித்தார். இவைகளை நேரில் கண்டு அதிசயத்திருந்த பார்த்தசாரதி அவர்கள் சாமிகள் வேருெரு இடத்தில் ஒரு நாத்தி கரை நம்பவைக்கச் செய்த அற்புதத்தைக்கேட்டுப் பேராச்சரிய மடைந் தார். சாமிகள் ஒன்றும் எழுதாத காகிதத்தைப் பூசை அறையில் வைத்துவிட்டு வெளியில் வந்து கதவை மூடிய கொஞ்ச நேரத்தில் கதவு கொஞ்சம் திறந்தது. பூசை அறையில் வைத்துவிட்டு வந்த வெறும் காகிதத்தில் பக்தர்கள் கேட்ட சந்தேகங்களுக்கும் கேள்வி களுக்கும் பதில் எழுதி இருந்தது. அந்தக் காகிதத்தை ஸ்ரீ முருகப் பெருமானே கொடுப்பதாகச் சாமிகள் உரைத்தபோது, "ஸ்ரீ முருகப் பெருமான் அந்தக் காகிதத்தை எடுத்துக்கொண்டு வந்து சாமிகள் அவர்கள் கையில் கொடுப்பது உண்மையானுல், அப்படி நடந்து வந்த ஸ்ரீமுருகப் பெருமானின் திருவடி அடையாளங்களை உங்களால் காண்பிக்க முடியுமா". என்று நாத்திகர் கேட்டார். அவர் கேட்ட படியே ஸ்ரீ முருகப்பெருமான் திருவடிகள் பதிவதற்கு பூசையறையில் ஒரு வெள்ளைக் காகிதத்தையும் ஒரு தட்டில் குங்குமம் நீரையும் சாமி கள் கூறியபடி வைத்தனர். ஸ்ரீ முருகப்பெருமானின் திருவடிகள் அந்த வெள்ளைக் காகிதத்தில் குங்கும நீரால் பதிந்து வந்தது. இந்த விபரங்களைச் சாமிகள் சேலம் பக்தர்களுக்கு உரைத்தார்.

இதைக் கேட்டுப் பேராச்சரியப் பட்ட பார்த்தசாரதி அவர்களுக்கு ஒரு ஆசையும் உள்ளத்தில் அரும்பியது. ஒரு நாத்திகர் வம்புக்காகச் சோதிப்பதற்காகக் கேட்டதற்கே இவ்வளவு பெரிய அற்புதத்தைச் செய்து காண்பித்த சாமிகள், மனப்பூர்வமாய் பக்தியோடு கும்பிடுவதற்கு ஸ்ரீ முருகபெருமான் திருவடிகளை வேண்டி நிற்கும் ஆஸ்திகர் பார்த்தசாரதி அவர்கள் அன்புக்கு கட்டுப்படாமலா இருப்பர்? அன்பர் பார்த்தசாரதி ஆசையையும் நிறைவேற்றி வைக்க சாமிகள் திருவுளம் கொண்டனர். இந்த அற்புதத்தைப்பற்றிப் பார்த்தசாரதி அவர்கள் கூறுவதையே கேட்போம். "நான் பூஜை அறையில் ஒரு வெள்ளைக் காகிதத்தை வைத்துவிட்டு மஞ்சள் நீரையும் ஒரு தட்டில் வைத்தேன். ஸ்ரீ சாமிகள் மஞ்சள் தண்ணீர் இருந்த தட்டை பூஜை செய்யும் அறையில் படங்களுக்கு முன்னால் வைத்துவிட்டு, என் மகளை அந்தக் காகிதத்தை மேற்படி தட்டின் முன்னால் வைத்துவிட்டு வரும்படி சொல்லி, அவர் பூஜை அறைக்கு வெளியில் வந்துவிட்டார். என்னுடைய மகள்தான் கடைசியாக பூஜை அறையிலிருந்து வெளியில் வந்தது. .........பூஜை அறையின் சன்னல் கதவுகள், வாசற்கதவு, கூடத்தின் சன்னல் கதவுகள், வாசற்கதவுகள் எல்லாவற்றையும் சாமிகள் மூடும்படியாய் சொல்லிவிட்டு தானும் கூடத்திற்கு வெளியில் வந்துவிட்டார். பின்னர் கொஞ்சநேரம் தியானம் செய்து கூடத்தின் கதவை ஒரு கை நுழையும்படியான அளவு திறந்து, கையை உள்ளே நீட்டினார். என்ன ஆச்சரியம்! பூஜை அறையில் வைத்துவிட்டு வந்த வெறும் காகிதத்தில் மஞ்சள் நீரில் மிதித்த அடிச்சுவடுகளுடன் அந்தக் காகிதம் ஸ்ரீ சாமிகள் கைக்குப் பறந்து கொண்டு வந்தது! .........அப்போது ஒரு சலங்கை கட்டிய குழந்தை நடக்கும்போது ஏற்படும் சத்தமும் உள்ளே கேட்டது. காகிதத்தில் அப்போதுதான் மிதித்த ஈரமும் இருந்தது. .........அந்த அடிச்சுவடு காகிதத்தில் ஸ்ரீ முருகபெருமான் வேல் ஊன்றும் இடத்தில் ஓர் அடையாளமும் இருக்கின்றது. ...... அந்தப் பாதச் சுவட்டின் அமைப்பு: பாதச்சுவடுகளைச் சுற்றிலும் அலைகள் (ஒலி) இருக்கின்றன. இரண்டு பாதங்களுக்கும் நடுவில் உள்ள வெண்மையான பாகம் ஒரு சங்கின் தோற்றத்தை ஒத்து இருக்கின்றது. அந்தச் சங்கின் சுற்றுப்புறத்தைக் கவனித்தால் அதைச் சுற்றிச் சக்கரங்கள் தெரிகின்றன." இந்த அற்புதம் நடந்தபோது இரவு சுமார் 11–30 மணி இருக்கும். அன்று சாமிகளுடைய அருளால் வீட்டில் உள்ளவர்களுக்கு மட்டும் தயாராகி இருந்த உணவு வந்திருந்தவர்களுக்கும் போதிய அளவு பெருகி உதவியது. விந்தையிலும் விந்தையாக அமைந்தது. இப்படிச் சுமார் எட்டுமாத காலம் சாமிகள் சேலத்தில் பார்த்தசாரதி அவர்கள் இல்லத்தில் தங்கி இருந்த சமயம், கணக்கற்ற பக்தர்கள் சாமிகளுடைய அருளுக்குப் பாத்திரமாகினர், எவ்

வளவோ பேருக்கு ஏற்பட்டிருந்த இன்னல்கள் நீங்கின, கடவுள் நம்பிக்கையில் ஈடுபட்டுப் பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டன பல உள்ளங்கள், பலரகமான அற்புதங்களையும் கண்டுகளித்தனர் மக்கள்.

சேலம் பக்தர்களுள் திரு. P. S. S. பொம்மன்னச் செட்டியார் குடும்பத்திற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பிருந்தே சாமிகள் தபால் மூலம் அருள் பாலித்து வந்தார். அவரது தெய்வீக அறிவுரைகளையும் விபூதிப் பிரசாதங்களையும் கண்ட இந்தக் குடும்பம் சாமிகளை நேரில் கண்டதில்லை, அவருடைய தெய்வீகச் சித்துக்களையும் கண்டதில்லை. "வெகு நாட்களுக்கு முன்பே எங்களை அறியாமலே ஒருவித சக்தி எங்களை ஸ்ரீலஸ்ரீ சாமிகளிடம் பிணைத்துவிட்டது. 1954ல் தான் சேலத்திற்கு ஸ்ரீ சாமிகள் விஜயம் செய்த சமயந்தான் அவரை நேரில் கண்டு தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது." என்று பொம்மன்னச் செட்டியார் அவர்களே உரைக்கின்றார். ஒருநாள் வேடிக்கையாகவே பொம்மன்னச் செட்டியார் அவர்கள் வீட்டில் உள்ள ஒரு பெண்மணி, "எங்களுக்கென்று முருகப்பெருமானின் திருவிளையாடல் யாதொன்றும் காண்பிக்கவில்லையே" என்று சாமிகளைக் கேட்க, சாமிகள் சிரித்துக்கொண்டே, "அதற்கென்ன, உங்கள் வீட்டில் பூசை நடக்கும் தினம் ஸ்ரீ முருகனைச் சலங்கை கட்டி ஆடச்செய்யலாம்" என்று விளையாட்டு போலத்தான் சொன்னார். 20—8—56ல் அவர் வீட்டில் ஸ்ரீ முருகர் பூசையும் சங்கு ஸ்தாபனமும் சாமிகள் அருள் செய்தார்கள். "பூசை அறையில் ஒரு தட்டில் சங்குகள் வைக்கப்பட்டிருந்தன. பூசை முடிந்தவுடன் சாமிகள் உள்பட யாவரும் வெளியே வந்துவிட்டோம். பூசை அறையினுள்ளிலிருந்து சலங்கை கட்டிய குழந்தை வேகமாக நடந்தால் எப்படி சப்தம் வருமோ அவ்விதம் சப்தம் வந்து இரண்டு நிமிடங்களுக்குமேல் இருந்தது. ஸ்ரீலஸ்ரீ சாமிகள் பூசையறைக் கதவைத்திறந்து, சங்குகள் வைக்கப்பட்டிருந்த தட்டானது வேகமாகச் சுழல்வதைப்பார்க்கச் சொன்னார்கள். இது வெல்லாம் ஸ்ரீ முருகன் அருள் பெற்றார் செய்யும் அரிய சாதனைகளே. ஸ்ரீலஸ்ரீ சாமிகளின் அருள் எல்லையற்றது. ஆழம் அறிய முடியாதது. ஸ்ரீ சாமிகளின் பாதங்களைச் சேவித்து யாவரும் பேரின்பமடைய வேண்டுமென்பதே எனது கோரிக்கை". இப்படி உரைக்கின்றார் பொம்மன்னச் செட்டி அவர்கள். உரைப்பது மட்டுமின்றி எது செய்தாலும் சாமிகள் ஆசியோடேயே செய்து வருகின்றனர். சேலத்தில் இவர் குடும்பத்தார் மட்டுமல்ல. திரு. சித்தப்பச் செட்டியார் குடும்பம் — இப்படியே சொல்லிக்கொண்டே செல்லலாம். சேலத்தில் மட்டும் தானா? சாமிகளுடன் நெருங்கிப் பழகும் எல்லா ஊர்களிலிருக்கும் பக்தர்களும் சாமிகளின் ஆசியோடல்லவா இன்றும் தங்கள் வீட்டு திருமணங்களையும் முடிவு செய்கின்றனர். சாமிகளது தெய்வீகத் தலைமையிலுமல்லவா திருமணங்களும் நடக்கின்றன.

சாமிகளுடைய தெய்வீகத் தன்மையை உணர்ந்த சேலம் வழக்கறிஞர்களில் திரு. K. பழனியப்பன் Bar-at-law என்பவரும் ஒருவர். சாமிகளைப்பற்றி உரைத்த அவர், சாமிகளின் குழந்தையுள்ள சுபாவத்தைப் போற்றி சாமிகளுடைய தரிசனத்தை விசுவ ரூபதரிசனமென்றும் புகழ்கின்றார். காரணம் சாமிகளோடு பழகப் பழகத்தான் தெரியும் அவரது கற்பனைக்கும் எட்டாத அற்புதத் திருவிளையாடல்களின் மகிமை. இவர் ஒரு முறை காளிப்பட்டி எனும் ஊரில் வெகு விமரிசையாக நடக்கும் சூரசம்ஹார உற்சவத்திற்கு சாமிகளை அழைத்துச் சென்றார். சூரசம்ஹாரத்திருநாள். சூரனும் திருமுருகனும் போருக்குப் புறப்பட்டு விட்டார்கள், மேளதாளங்கள் முழங்க, வெடி வாணங்கள் வானில் வெடித்துக்குலுங்க ஆயிரக்கணக்கான மக்கள் இந்த உற்சவத்தில் நடக்கும் போரைக் காண ஆவலுடன் காத்திருக்கின்றனர். சூரனுக்கும் திருமுருகனுக்கும் உற்சவத்தில் வேடிக்கைக்காக மூண்டப் போர் உக்கிரமாக நடந்துகொண்டிருக்கின்றது. தேவ யுத்தங்களில் அக்னிபாணங்களையும் வாயு பாணங்களையும் தங்கள் ஆத்ம சக்தியால் கட்டித் தடுத்து முறியடித்த விபரங்களை நாம் புராணங்களில் படித்திருக்கின்றோம். இந்த விழாவில் சூரனிடமிருந்து விடப்பட்டபாணங்கள் எரிந்துவருகின்றன. உண்மையிலேயே இவைகள் இந்தத் திருவிழாவிற் கென்றே தயாரான பட்டாஸ் மத்தாப்பு பாணங்களே. தத்ரூபமாக நடக்கும் போரைப் போன்று திருவிழா அமைக்க வேண்டும் என்ற மனப்பான்மையோடு செய்திருந்த ஏற்பாடு. இந்த நாடகத்திலும் சாமிகள் ஒரு அற்புதத்தைக் காட்டி யாவரையும் மெய்மறக்கச் செய்தனர். சூரனுடைய பாணங்கள் நீடிப்பதா? அதுவும் திருமுருகனுடைய அவதாரமாகிய ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளுக்கு முன் அவை நிற்பதா? சாமிகள் அக்கினிகட்டு எனும் மந்திரத்தைப் பிரயோகித்துக் கனல் கக்கி வந்த எரிபாணங்களை ஒரே விநாடியில் அணைத்து விட்டார். இந்தச் செயலைக் காணும்போது சூரபத்மனுக்கும் திருமுருகனுக்கும் ஏற்பட்ட போரும் அந்தப்போரில் நிகழ்ந்த சம்பவங்களும் நம் மனக்கண்களுக்கு முன்வந்து நிற்கின்றன. கச்சியப்ப சிவாசாரிய சாமிகள் அருளிச்செய்த கந்தபுராணப் பாடல்களே நம் நினைவுக்கு வருகின்றன.

> “கூற்றுயிர் குடிக்குந் துப்பிற் கொடும்படை மாரிதன்னை
> ஆற்றபின் அவுணர் கோமான் விடுத்துழி–அவற்றையெல்லாந்
> காற்றெனப் பகழி தூண்டி முறை முறை கடிதிற் சிந்தி
> மாற்றினன் திரிந்தான் ஐயன் மூதண்ட வரைப்பு முற்றும்”

> “துணிப்புறும் எல்லை வல்லே சுடர்க்கணை அநந்தகோடி
> தணப்பற விடுத்தலோடுஞ் சண்முகன் அவற்றையெல்லால்
> கணைப்பெரு மழையால் மாற்றி காசிபன் தனது செம்மல்
> அணைப்படு தோள்மேல் பின்னும் ஆயிரம் பகழி உய்த்தான்”

சேலத்தில் நீண்ட நாட்கள் 1954ல் சாமிகள் தங்கியது சேலம் மக்கள் செய்த தவப்பயன் என்றே சொல்ல வேண்டும். எல்லா ஜாதியினரும், மதத்தவர்களும், செல்வந்தர்களும் ஏழைகளும் ஒருவித வித்தியாசமுமின்றிச் சாமிகளைத் தரிசித்து அருள் பிரசாதம் பெற்றனர். சாமிகள் ஒரு அவதார புருஷர் என்பதைக் கண்டு வணங்கிய மக்கள் சாமிகள் ஒரு தீராத விளையாட்டுச் சித்தர் என்பதையும் நேரிலேயே கண்டு மனம் மகிழ்ந்தனர். அவர்களுடைய உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும் சாமிகளின் திருவிளையாடல்கள் இரண்டா, இருபதா எண்ணிச் சொல்வதற்கு! சாமிகளுடைய புட்ப பிரசாதம் தேங்காயாகவும், பழங்களாகவும், கற்கண்டாகவும் மாறுகின்றது. சாமிகளுடைய வெறுங்கைகளிலிருந்து கற்கண்டு, குங்குமம், விபூதி கொட்டுகின்றன. சாமிகளுடைய திருக்கரம் பட்ட தண்ணீர் பன்னீராக மாறுகின்றது. மண் பன்னீர் மணம் பெறுகின்றது. வீடுகளில் உள்ள கெடுதல் செய்யும் நோக்கத்துடன் வைத்திருக்கும் செய்வினைத் தகடுகளை எடுத்துத் தீவினைகளை சாமிகள் அப்போதே அகற்றி விடுகின்றார். விஷயம் அறியவேண்டி வரும் அன்பர்களுக்கு அவரவர்கள் மொழியில் அவரவர்களுக்கு வேண்டிய விஷயங்களை எழுத்துக்கள் தாமாகவே தோன்றி அறிவிக்கும்படி சாமிகள் செய்கின்றார். சில சமயங்களில் அவர்கள் ஒரு கையில் பேனாவும் மறுகையில் வெறுங் காகிதச் சுருளும் வைத்துக் கொள்ளும்போது எழுத்துக்கள் காகிதச் சுருளில் தாமாகவே உருவாகின்றன. மற்றும் சில சமயங்களில் ஒன்றும் எழுதாத காகிதத்தையும் பேனாவையும் ஒரு அறையில் வைத்துவிட்டு வெளியே வந்துவிட்டால், அந்தக் காகிதம் வேண்டிய பதிலோடு சாமிகளுடைய திருக்கரங்களுக்கே ஓடி வருகின்றது. சாமிகள் ஒருநாள் ஆப்ரிகாவிலிருந்து வந்த அயல் நாட்டு தமிழரின் ஆப்ரிகாவிலுள்ள நிலத்தின் பிளான் போட்டுக் காட்டுக்கின்றார். பல் வைத்தியர் டாக்டர் K. P. கெரிசன் அவர்களுக்கே புத்தம் புதிய வேலைப்பாடமைந்த உயர்ந்த செயற்கைப் பற்களை 'முருகன்' பெயர் சொல்லி வரவழைத்துக் கொடுக்கின்றார். சேர்வராயன் மலைக்குச் சென்று ஊதுபத்தி வாங்கி அதை எடுத்துவர மறந்துவிட்ட பக்தர் ஒருவருக்காக சேலம் சப்மேஜிஸ்டிரேட் திரு. சாம்பசிவம் அய்யரைக் கொண்டு சுண்டுவிரல் மொத்தம் உள்ள யாவரும் அதிசயிக்கத் தக்க ஒரு அடி நீளமுள்ள இரண்டு ஊதுபத்திகளை ஒரு கம்பிக் கதவின் இடுக்கிலிருந்து விரல்களால் எடுக்கச் செய்கின்றார். மற்றொரு சமயம் ஒரு டம்ளர் தண்ணீரில் கற்பூரம் ஏற்றிவைத்து அதை சாமிகள் மூட தண்ணீருக்கடியில் உண்டான ஒரு நற்பவளத்தை உளங் கனிந்து சாம்பசிவய்யர் அவர்களுக்கே சாமிகள் கொடுக்கின்றார். வழக்கறிஞர் திரு. A. R. சீனிவாசன் அவர்கள் வீட்டில் பூஜை அறையில் ஒரு சாமியாருக்காக ஒரு பிரம்பை ஸ்ரீ நடராஜப் பெருமான் ஆடியதைப்போல் ஆடிக்காட்டி அருள் செய்கின்றார். சௌ A. இந்திரா என்னும் பெண்ணுக்கு அவளுக்கு வாய்க்கப்போகும்

மாப்பிள்ளையைச் சாமிகள் அவள் வீட்டுப் பூசை அறையிலேயே முன் கூட்டியே காண்பிக்கின்றார். கண்பார்வை இழந்த அலமேலு எனும் பெண்ணுக்குச் சாமிகள் கண்பார்வை அருளுகின்றார். திருமதி ஆனந்தம்மாள் என்பவரின் கணவருக்கு உயிர்பிச்சையே அருளுகின்றார். சைக்கிளில் செல்லும்போது மயங்கி விழுந்த திருமதி ஆனந்தம்மாள் கணவரை, டாக்டர் மாதவன் வீட்டிற்கு அழைத்துச் செல்ல, காலமாகி விட்டார் என்று டாக்டர்கள் கருதிய அவருடைய வாயில் சாமிகளின் அருள்பிரசாத விபூதியை திருமதி ஆனந்தம்மாள் ஊட்ட, அவர் கணவன் கண் திறந்து, "என் உடம்பின் உள்ளே யாரோ நுழைந்து எழுப்புவதுபோல இருக்கிறது" என்று சொல்லி எழுந்து விடுகின்றார். இப்படி எவ்வளவோ அற்புதங்கள்! கணக்கில் அடங்காதவை. இப்படி அருள் ஆட்டம் ஆடுகின்ற வள்ளலை சேலம் நகரமே தெய்வமெனக் கொண்டாட ஆரம்பித்து விட்டது. அவரை தீராத விளையாட்டுச் சித்தரென ஏத்திப்புகழ ஆரம்பித்துவிட்டது! 'நாம் அறிந்த ஓர் நடமாடும் தெய்வம்' என்ற தலைப்பில் சேலம் ஸ்ரீ S. லோகமாதா அவர்கள் தம் அனுபவத்தைக் கூறுவதேயே கேட்போம்: "சில வருஷங்கள் வரையில் அநேக பக்தர்களைப் போல நாங்களும் ஸ்ரீ சாமிகளை ஒரு சக்தி வாய்ந்த மகான் என்றுதான் நினைத்து வந்தோம். ஸ்ரீ சாமிகளும் தம்மை முருகன் துணை பெற்றவர் என்றே இதுவரையில் கூறி வருகிறார்கள் ஆனால் பழக்கம் ஏற்பட ஏற்பட நாங்கள் அவருடைய செயலையும் சொல்லையும் உன்னிப்பாகக் கவனித்துப் பார்த்ததில் அவர் மனிதசரீரத்தில் இருக்கும் பரப்பிர்ம்ம ஸ்வரூபமென்பது தெள்ளெனத் தெரிந்தது ........... ஸ்ரீ சாமிகள் மக்களின் கண்முன்பாக பெரும் பிரவாகத்தோடு சமுத்திரத்தை நோக்கி ஓடும் ஓர் புனிதமான நதிக்கு ஒப்பானவர். அப்புனித பிரவாகத்தின் சலசலப்பு கிடைத்துள்ள சமயத்தை நழுவ விடாமல் பிறவிப் பெருங்கடலைத் தாண்டும் நற்காரியத்திற்கு உபயோகித்துக் கொள்ளுங்கள் என்று கூவிக்கொண்டு செல்லுகிறது போல தோன்றுகிறது. நதியின் நீரை இருகரைகளிலுமுள்ள நிலச் சொந்தக்காரர்கள் தங்களுடைய நிலத்திற்கும் பாய்ச்சிக்கொண்டு பக்கத்திலுள்ள நிலச் சொந்தக்காரர்களுக்கும் பங்கிட்டுக் கொடுப்பது போல பக்தர்கள் ஸ்ரீ சாமிகளின் கிருபை என்றும் புனித நீரை தங்களுடைய பிறவி மண்ணுக்குப் பாய்ச்சிக் கொள்ள வழி செய்ய வேண்டும்."

## டெல்லியில் ஓர் அஷ்டாவதானி.

"கண்ணில்லார் கண்பெற்றார் காலில்லார் கால்பெற்றார்
எண்ணில்லார் நோய்தீர்த் திருக்கின்றார் — மண்ணில்
செவிடு பிறப்பூமை தீர்ந்தன மற்றுன்னூற்
றவிடு பொடியாய்த் தகர்ந்து."

—(மதுரை திரு. கி. பழனியப்பன்)

தென்னகத்திலிருந்து வட இந்தியாவிற்குச் சென்று பக்தியாலும் பரமார்க்க சித்தியாலும் மக்கள் மனதையும் மன்னவர் மனதையும் ஆட்கொண்ட பெரியவர்களின் வாழ்க்கையைப் படித்திருக்கின்றோம். ஆதிசங்கரரும் வைணவ இராமானுஜாசாரியும் பீடாதிபதிகளாக ஆற்றிய திருத்தொண்டுகளும் காண்டற்கரிய செயல்களும் எண்ணிறந்தவை. சமீபத்தில் கி. பி. பதினேழாம் நூற்றுண்டில் குமரகுருபரர் காசியை ஆண்ட முகலாய மன்னரின் இராஜ சபைக்கு சிம்மத்தின் முதுகின்மேல் சென்ற அற்புதமும் தன் ஆத்ம சாதனையாலும் அறிவாலும் யாவர் உள்ளங்களைக் கவர்ந்த செயலும் நினைக்க நினைக்க நாம் பெருமைப்பட வேண்டியவை. இந்தக் காலத்திலும் தன்னுடைய தவவலியால் காட்டாதனவெல்லாம் காட்ட வல்ல அருள் சித்தர் ஒருவர் இந்தியாவின் தலைநகரான டெல்லிக்குச் சென்று கற்றோர், கலைவாணர், பதவியாளர் இந்திய நாட்டின் தலைவருள்பட அனைவரின் அன்பினையும் தன் அருள் சக்தியால் ஆட்கொண்ட பெருமை ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளைச் சேர்ந்ததாகும்.

1956ல் சாமிகளை டெல்லிக்கு அழைத்துச் சென்றவர் நமது இந்திய நாட்டின் தலைநகரில் அமைந்துள்ள பார்லிமெண்டில் அப்போது இருந்த அங்கத்தினருள் ஒருவர். சாமிகளின் அருளாற்றலையும் அருமைத் தொண்டுகளையும் நேரில் கண்டு அனுபவித்தவர், இன்றும் அனுபவித்துக் கொண்டு இருப்பவர். சாமிகளின் அருமைச் சீடர்களில் ஒருவர், திரு. S. V. கமலசாமி அவர்கள் 3—9—60ல் கொழும்பிலிருந்து வெளியாகும் வீரகேசரி என்ற பத்திரிகையில் அவர் சாமிகளைக் கண்டு அடைந்த பேரின்ப நிலையை "நான் அறிந்த நடமாடும் தெய்வம்" என்ற கட்டுரையின் வாயிலாக அறிவித்துள்ளதைப் படித்து மகிழ்வோம். "சற்று ஏறக்குறைய ஏழு ஆண்டுகளுக்கு முன்பாக நான் "நடமாடும் தெய்வம்" என்ற சாமிகளை முதன் முதலாசத் தமிழ் வளர்த்த மதுரையம்பதியில் அகில இந்திய இரல்வே ஊழியர் மகாநாட்டிற்குச் சென்றிருந்தபோது தெரிசிக்கும் பாக்கியம் பெற்றேன். என் கூடவே ரயில்வே மந்திரி கௌரவ. லால்பகதூர் சாஸ்திரியும் இருந்தார். பாராளுமன்ற உறுப்பினர் திரு. பட்டாபிராமன் என்னையும் மந்திரியையும் சாமிகளுக்கு அறிமுகம் செய்து வைத்தார். அன்று தொடக்கம் எனது வாழ்க்கையில் ஒரு புது அத்தியாயம் ஆரம்பமாயிற்று என்று சொன்னால் அது மிகையாகாது. நான் சாமிகளைச் சந்தித்த தினத்தை என் ஆயுள் காலத்தில் மறக்கமுடியாத ஒரு புனித தினமாகக் கருதுகிறேன்...அதிலிருந்து நான் சாமிகளை அடிக்கடி சந்திப்பதுண்டு. பல சந்தர்ப்பங்களில் சாமிகளோடு மாதக்கணக்கில் நானும் அவர்கள் செல்லுமிடமெல்லாம் தொடர்ந்து செல்லும் அரிய வாய்ப்பும் பெற்றேன்." இப்படிக் கூறுகின்றவர் இன்னும் எங்கெங்கெல்லாம் சாமிகளுக்கு வரவேற்பு நடக்கின்றதோ அங்கெல்லாம் சாமிகளின்

அருமைச் சீடர்களோடு வருகின்ற பக்தர். இவர் சாமிகள் ஆடி அருளுகின்ற சித்துக்களில் பலவற்றை நேரில் கண்டு அனுபவித் திருக்கின்ருர். ஆனுல் ஒரே ஒரு தடவை சாமிகள் நடத்திக்காட்டிய அற்புதத்தை சொன்னபோது, 'சாமிகளிடத்தில் இப்படியும் ஒன்றைக் கேட்பார்களா' என்று அவர் அன்று ஆச்சரியப்பட்டதைப்போன்று நாமும் ஆச்சரியப்படுவோம். ஒருநாள் ஆவியுலகத்தைப்பற்றி பேச்சு வளர்ந்தது. உலகில் நாம் பார்க்கின்றவைகளைத் தவிர வேறு யாதும் உண்டோ? அவைகளைப் பார்க்க முடியுமா? என்றெல்லாம் கேள்விகள் வளர்ந்து, சாமிகளே அவைகளைக் காட்ட முடியுமா? என்ற அளவுக்கு சீடர்களுக்கு தைரியத்தையும் உற்சாகத்தையும் கொடுத்துவிட்டது.

**கேள்வி :** பேய் பிசாசு என்று சொல்கின்ருர்களே. அவை உண்மையிலேயே இருக்கின்றனவா, சாமி.

**சாமிகள் :** அவை உண்மையிலேயே இருக்கின்றன. பேய்க்கு ரூபமும் உண்டு.

**கேள்வி :** அவைகளைப் பார்க்க முடியுமா?

**சாமிகள் :** பார்க்கலாம். ஆனுல் ஒரு பேயைப் பார்க்கக்கூடிய அளவு தைரியம் வேண்டும். பயங்கரமான சேட்டைகள் கொண்ட அவைகளின் உருவங்களும் பார்க்க பயங்கரமாக இருக்கும்.

**கேள்வி :** சாமிகள் இருக்கும்போது எங்களுக்குப் பயம் என்பதே இல்லை. சாமிகள் மனது வைத்தால் பேயைக்கூட காண்பிக்க முடியாதா?

இதற்குமேல் பேச்சை வளரவிடவில்லை சாமிகள். பேயைக் காண்பிக்க ஒத்துக்கொண்டார். இரவு பன்னிரண்டு மணி இருக்கும். சாமிகள் அன்பர்களை மயானத்திற்கருகான ஓரிடத்திற்கு அழைத்துச் சென்றனர். எங்கும் நிசப்தம். செடி கொடிகளைத் தாண்டிச் செல்லும் அன்பர்களின் வேஷ்டிகள் செடி கொடிகளின் கிளைகளில் மாட்டிக் கொள்ளும்போது தைரியத்தை கூட்டிக்கொண்டிருக்கும் அன்பர்களுக்கு சுரீர் என்ற ஒரு உணர்ச்சி உடலில் ஊடுருவிச் செல்லும். குட்டைகளிலிருந்து திடீரென ஒலிக்கும் தவளைகளின் சப்தங்கள் மனத்தை ஒரு குழப்பு குழப்பிவிடும். அவைகள் தொடர்ந்து ஒலிக்கும்போது "என்ன பார்க்கப் போகின்ருேமோ, என்ன நடக்குமோ" என்ற எண்ணங்கள் மனத்தில் பேயாட்டம் ஆடத் தொடங்கின. நள்ளிரவில் நன்ருக நெருப்புப் பிடித்துக்கொண்டு எரியும் பிணங்களின் காட்சி மனிதனுடைய நிலையில்லாத வாழ்வை

மட்டும் நினைப்பூட்டியதா?' பேய் பிசாசு எண்ணங்களையும் உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரியச் செய்தன. கூட்டத்தில் ஒருவர் தன்னிடத்தில் டார்ச் லைட் பத்திரமாக இருக்கின்றதா என்பதை நிச்சயப்படுத்திக் கொள்கின்றார். இரும்புக் கொத்துச்சாவி தன்னிடம் இருக்கின்றதா என்று சட்டைப் பையில் தடவிப் பாத்துக்கொள்கின்றார் ஒருவர். சாமிகள் இந்த நிலையில் இருக்கும் பக்தர்களை, ஒரு வட்டம் பூமியில் போட்டு, அந்த வட்டத்தின் நடுவில் நிற்கவைத்து விட்டார் அதைத் தாண்டி ஒரு அங்குலம்கூட நகரக்கூடாதென்ற கடும் உத்திரவையும் இட்டார். 'எதற்கும் பயப்பட வேண்டாம். ஆனால் வரப்போகும் உருவை நேராக பார்க்கக்கூடாது' என்றும் எச்சரித்தார் திடீரென்று ஒரு பெரிய மரம் பூமியில் மின்னொளியால் தாக்குண்டு தடதடவென்று விழுவதைப்போல் ஒரு பயங்கர சப்தம்! பூமியே அதிர்ந்துவிட்டது. "என்னப்பா வந்திட்டாயா, நீ கருப்பனா அல்லது சங்கிலியானா" என்று சாமிகள் அமைதியாக கேட்கும்போது கலகலவென்று பல சங்கிலிகளை உலுக்கி ஆட்டும் ஆர்பாட்ட பேரொலி குதித்த இடத்தில் ஏற்பட்டது. சங்கிலியான் என்ற குறிப்பை உணர்த்த ஏற்பட்ட இடி ஒலியைக்கேட்ட பக்தர் குழாம் சங்கிலியான் உண்டாக்கிய அதிர்ச்சி ஒலிகளைக் கேட்டு உண்மையிலேயே நடுக்கம் கொண்ட கிலியான்களாகவே ஆகி விட்டனர். 'உன்னுடைய குரலைக்காட்டு' என்று சாமிகள் கேட்டது தான் தாமதம்! உடலில் ஓடிக்கொண்டிருக்கும் இரத்தமே உறைந்து விடும்போல செய்யவல்ல பேய்க்குரல் ஒன்று நெடுந்தூரம் ஓங்கி ஓலமிட்டு ஓய்ந்துவிட்டது. 'உன்னுடைய உருவைக் காட்டு' என்று சாமிகள் சொல்ல, சாமிகள் முன்னெச்சரித்தபடியே தரையையே கூர்ந்து கவனித்தனர் அன்பர்கள். இருட்டாக இருந்தாலும் தமக்கெதிரே தரைமட்டத்தில் வானோங்கி வளர்ந்த ஒரு பிரமாண்டமான உருவம் நிற்பதும் அதன் கால்களில் கரடி மயிர்போன்ற கொத்து கொத்தான மயிர்கள் அடர்த்தியாக செறிந்திருப்பதையும் கண்ட பக்தர்களில் சிலர் கண்களை மூடிக்கொண்டனர். 'போகலாம்' என்ற சாமிகளின் வார்த்தைகளைக்கேட்ட அந்த உரு மறைந்தது. அப்போதுதான் கூடியிருந்தவர்களுக்கு உயிரைத் திருப்பி பெற்றது போல் இருந்தது. இதை தத்ரூபமாக விளக்கிக்காட்டிய திரு, கமல சாமி சொற்கள் கேட்ட எங்களுக்கு பெருவியப்பை ஏற்படுத்திய தல்லாமல் பேயைக் கண்ட ஒரு பயத்தையும் உண்டு பண்ணியது. பேயையும் கொண்டுவந்து காட்டவல்ல சாமிகளின் அற்புத ஆற்றலை என்னென்று புகழ்வது!

1956ஆம் ஆண்டு, டெல்லி பாலம் விமான நிலையத்தில் விமானங்கள் வருவதும் போவதும் காதுகளுக்கு ஓயாத பெரும் சப்தம்: கண்களுக்கு வேடிக்கையான சாட்சி: ஒருநாள் விமான நிலையத்

திற்கு வந்திருப்பவர்களுள் ஒருவர் வேஷ்டி சட்டை அணிந்த எளிய வர். அவர் அங்கு இருந்த ஒரு இளைஞரான விமான நிலைய அலு வலரை அணுகினர். "உங்களுக்கு அருமையான எதிர்காலம் காத்துக் கொண்டிருக்கின்றது" என்ருர் வந்திருந்தவர். இளைஞருக்கு இது கேட்பதற்கு இன்பமாக இருந்தது "நீங்கள் இந்த வேலையை எதிர் பார்த்திருக்கவே மாட்டீர்கள். தீடீரென்று கிடைத்தவேலை. திடி ரென்றே உங்களுக்கு கூடிய சீக்கிரத்தில் வேறு ஒரு வேலையும் கிடைக்கப் போகின்றது" என்று அவர் தொடர்ந்து சொன்னவை இளைஞருடைய ஆவலைதட்டி எழுப்பியது. உண்மையில் அவர் இந்த வேலைக்கு வந்ததே எதிர்பாராத வகையில்தான். சொன்னது உண்மை என்பதை ஒப்புக்கொண்டு வந்திருந்த பெரியவரை கூர்ந்து கவனித்தார் இளைஞர். "உங்கள் கையால் பூமியைத் தொட்டு முகர்ந்து பாருங்கள். என்ன என்று சொல்லுங்கள்" என்ருர் வந் திருந்த எளியவர். இளைஞன் அப்படிச் செய்துபார்க்க பழநியாண் டவர் திருக்கோயில் விபூதி வாசனை அவர் மண்ணைத் தொட்ட கைகளி லிருந்து கமகமவென்று வீச ஆரம்பித்தது இளைஞருக்கு ஒன்றும் தோன்ருமல் வந்திருந்த வரை இருகரங்கள் கூப்பி வணங்கினர். வந்திருந்த விபூதி மகிபர் இளைஞரை விடவில்லை. அவருடைய கைகளை நீட்டச் சொல்லி தன் திருக்கரங்களை அவர் கைகளில் வைத்து எடுத் தார். விபூதி மகிபர் கை விலக இளைஞர் கைகளில் கற்கண்டுக் கட்டிகள் நிறைந்திருந்தன. ஆச்சரியத்திற்கு மேல் ஆச்சரியத்தை இப்படி யாக அடுக்கிக்கொண்டே வந்த இனியவர் இந்த ஆச்சரிய செயல் களுக்கே முடிவைப்பது போல் மற்ெருரு செயலும் ஆற்றினர். அவர் கள் இருந்த அறையில் மேஜையில் ஒரு காகிதத்துண்டையும் மை பெட்டியையும் மை எழுதுகோலையும் வைத்துவிட்டு இனியவர் சொல் படி எல்லோரும் அறையைவிட்டு வெளியே வந்தனர். அறையும் மூடப் பட்டது இப்போது உமக்குக் கடவுளிடமிருந்து ஓர் செய்தி வரவழைக் கின்றேன் என்று இனியவர் புன்னகை பூத்துக் கூறினர். முருகா இந்த இளைஞருக்கு ஒரு செய்தியை [அனுப்ப வேண்டும் என்று கூறி முடித் தார் முருகன் அருளாளர். உடனே ஞொய் என்று கடிதம் பறந்து வரும் ஒலி கேட்டது. மூடியிருந்த கதவு தாஞக திறந்தது. முருகன் அருளாளர் தமிழில் அப்போதுதான் எழுதி மைகூட காயாமல் இருந்த நற்செய்தியைப் பெற்றுக்கொண்டார். அதை இளைஞரிடம் கொடுத்து இளைஞரையும் அங்குக் கூடியிருந்த அனைவரையும் அறிவுக் கும் விஞ்ஞானத்திற்கும் எட்டாத தன் அருட்செயல்களால் மெய் மறக் கச்செய்த இந்த காட்சிக்கு எளியவர், விபூதி மகிப்பர், செயலில் இனியவர், முருகன் அருளாளர் வேறு யாராயிருக்க முடியும்? தன் னருள்கொண்டு இன்னல்கள் போக்கும் தயாபரன் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளே இம்மகான்!

சாமிகள் பாலம் விமான நிலையத்தை மட்டுமா தம் செய்கைகளால் மெய்மறக்கச் செய்தார். அவர் செயலாற்றலைக் கண்டு டெல்லி நகரே பரபரத்து விட்டது. டெல்லி நகரே — பொதுமக்கள், அலுவலர்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள், பெரும் பதவியாளர்கள், ஜனாதிபதி இராஜேந்திரபிரசாத் அவர்களே — சாமிகளைக் கண்டு அவர் அருட்பிரசாதம் பெற்று மகிழ்ந்தனர். 1952ல் டெல்லி நகருக்கு விஜயம் செய்த சாமிகள் மூன்று வாரங்கள் தங்கி இருந்தார். அன்றாடம் காலையிலும் மாலையிலும் பூஜை அறையை மூடிக்கொண்டு ஒரு மணி நேரம் பூஜை செய்வது வழக்கம். பூஜையறையிலிருந்து வெளிவரும் சாமிகளைத் தரிசிக்க எண்ணிறந்த மக்கள் 'குயூ' வரிசையில் காத்திருந்தனர் குழந்தைக்கு தீராத நோய். அதைத் தீர்த்தருள வேண்டும் என்று வேண்டுபவர் சிலர். இருபதாவது நூற்றாண்டில் இப்படியும் ஒருவர் உண்டா என்று சாமிகளை நேரில் கண்டு உண்மையைத் தெரிந்து கொள்வோம் என்று வருபவரும் சிலர். வீட்டில் பல சிக்கல்கள், அவைகளை நீக்கி வழிகாட்ட வேண்டுமென்று ஓடிவருபவரும் சிலர். சாமிகளையே கேள்வி கேட்டு திணற அடிக்க வேண்டும் என்று எண்ணிச் சாமிகளைக் கண்டு திரும்பும்போது திருப்தி அடைந்த நபர்களும் சிலர். இப்படிக் கூட்டம் பெருகிக் கொண்டே இருந்தது.

டெல்லி நகரில் சாமிகள் புரிந்த லீலா விநோதங்களில் சில வற்றைக் காண்போம். முன்னாள் பார்த்தறியாதவர்களின் வீட்டமைப்பைப் பற்றியும் மனநிலைகளையும் சாமிகள் எல்லாம் தெரிந்தவராக உரைத்தபோது அதைக்கேட்ட பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு மட்டுமோ பெருவியப்பு, அதைப்படிக்கும் நமக்குமல்லவா பெரு வியப்பு ஏற்படுகின்றது. மாயா தேவி செட்ரீ என்பவர் ராஜ்ய சபை உறுப்பினர். அவருடைய இல்லம் மேற்கு வங்காளத்தில் டார்ஜீலிங் வட்டத்தில் உள்ளது. அவரை சாமிகள் அதற்குமுன் சந்தித்ததில்லை. அவரை முதன் முதலில் டெல்லியில் சந்தித்தபோது சாமிகள் அவருடைய வீட்டின் அமைப்பையும், அவருடைய வீட்டுக்குச் செல்லும் சாலைகளையும் படம் போட்டுக் காட்டினார். இதைக் காட்டி விட்டு வரப்போகும் எதிர்காலம் எப்படி இருக்குமென்பதையும் சுட்டிக்காட்டினார். மற்றொரு நாள் ஒரு இளைஞர் சாமிகளை டெல்லியில் கண்டார். இதற்குமுன் அந்த இளைஞர் மனது ஒடிந்து வீட்டை விட்டே ஓடிவிட்டார். அவர் ஒரு நள்ளிரவில் சுடுக்காட்டின் மத்தியில் மனம் தடுமாறி இருந்தபோது ஒரு தவசீலர் அவரைக் கூப்பிட்டார். இளைஞருடைய முடிவு சரியானதல்ல என்று சொல்லி, இளைஞரை மறுபடியும் தன் குடும்பத்தாருடன் சேர்ந்து வாழ ஆசி அருளி இளைஞரை தவசீலர் இளைஞரின் வீட்டுக்கே திருப்பி அனுப்பினார். இந்த விபரங்களை சாமிகள் நேரில் கண்டவர்போல் இளைஞரிடம் உரைத்த

போது இதைக் கேட்டுக்கொண்டிருந்த முன்னுள் மைசூர் மந்திரியும் பாராளுமன்ற உறுப்பினருமான திரு. H. C. தாசப்பா அவர்களுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லே. சாமிகள் செய்யும் தொண்டினே வாயாரப் புகழாமல் அவரால் இருக்க முடியவுமில்லே.

டெல்லியில் சாமிகள் நடத்திக் காட்டிய லீலா விநோதங்களில் ஆப்பிலுக்கும் தேங்காய்க்கும் பெரும்பங்குண்டு. அன்பு பழுத்திருந்த உண்மை நெறியாளர்களுக்கு சாமிகள் அருள் பழுத்த உள்ளத்தோடு ஆப்பில் பழங்களே வரவழைத்துக் கொடுத்தார். மனமிக்க ரோஜா இதழ்களிலிருந்து சுவைமிக்க ஆப்பில்கனிகள் வரவழைத்தார். ரோஜா இதழ் ஆப்பிலாக மாறிய விந்தையை கண்டிருந்த லெப்டினண்ட் ஜெனரல் திரு D.R தேபர் (Thaper) ஒரு ஆப்பிலே தன்னுடைய கையாலேயே அடையாளமிட்டு ஒரு காகிதப் பையில் போட்டு ஒரு அறையில் வைத்தார். அறையின் மூலேயில் வைக்கப்பட்டிருந்த ஆப்பில் அதைக் கொண்ட காகிதப் பையோடு பத்தடிக்கப்பாலுள்ள சாமிகளிடம் பறந்து சென்ற அருமையை லெப்டினண்ட் ஜெனரல் வாய்விட்டுப் புகழாமல் இருக்க முடியுமா. சாமிகள் சிலருக்கு தேங்காய் வரவழைத்துக் கொடுத்த விநோதத்திலும் ஒரு பேருண்மையையே உலகிற்கு எடுத்துக்காட்டினர். நமது விஞ்ஞான அறிவுக்கும் எட்டாதது மெய்ஞான அறிவு. இதை அடைந்தவர்களால் நடத்திக் காட்ட முடியாதது ஒன்றுமில்லே. இதைத்தான் கனிகளேக் கொண்டும் தேங்காய்களேக் கொண்டும் உலகிற்கு விளக்கிக் காட்டினர் சாமிகள். ஆப்பில் கனிகளில் பற்பல அற்புதம் ஆடிக் காட்டியதுபோல் தேங்காய்களேக் கொண்டு பற்பல விநோதங்கள் ஆற்றினர். தேங்காய் ஒரு சுபமங்களப் பொருள். இதைப் பல பக்தர்களுக்கு சாமிகள் வருவித்துக் கொடுப்பார். ஒருநாள் ஒரு தேங்காயை இரண்டு பாதிகளாக உடைக்கச் சொன்னர். உடைந்த இரு பகுதிகளேயும் மறுபடியும் ஒட்டிவைக்கச் சொன்னர். அப்படிச் செய்தவுடன் உடைந்திருந்த தேங்காய் இரு பகுதிகளும் ஒன்ருக ஒட்டிக்கொண்டது, இல்லே, ஒரு முழுத் தேங்காயாகவே மாறிவிட்டது. இப்படி ஒன்றை இரண்டாக்கி, இரண்டை ஒன்ருக்கும் விநோதத்தைக் காண்பித்த சாமிகள் " நன்ருக இந்த ஒன்ருக மாறிய தேங்காயைப் பாருங்கள் " என்று சொல்ல, பக்தர்கள் அதைக் கூர்ந்து கவனிக்க அதில் ஒரு மயிரிழைக்கோடு உடைந்த வட்டப்பகுதியில் ஓடியிருப்பதை கவனிக்க முடிந்தது. அந்தத் தேங்காயை ஆட்டிப்பார்த்தால் அதனுள் பழைய மாதிரி நீரும் நிறைந்திருந்தது. மற்ெருரு நாள் சாமிகளின் ஆற்றலேக் கேள்விப்பட்டு ஒரு அயல்நாட்டு பத்திரிகை உலக மங்கையே வந்திருந்தாள். அவள் சாமிகளேப் பார்க்க சாமிகளின் அறையின் வெளியில் காத்துக்கொண்டிருக்கும்போது ஒருபொறி இயல் நிபுணர் சாமிகளேக் கண்டு திரும்பினர். அவர் சாமிகளின்

பேராற்றலைத் தான் நேரில் கண்ட அனுபவத்தை அங்கு கூடியிருந்த பக்தர்களுக்கு உளமுவந்து விவரித்துக்கொண்டிருந்தார். இவை களை கேட்டுக்கொண்டிருந்த அயல்நாட்டு மங்கைக்கு அருளாற்றல் மகிமை சரியாகப் புரியவில்லை போலும். "தாங்களை மயக்கியது மாயாஜால வித்தை இல்லை என்பதை நிச்சயப்படுத்த முடிந்ததா?" என்ருள். இதற்கு விளக்கம் கொடுப்பதைவிட அவள் அனுபவத் தையே கேட்டுவிடுவது என்று அம்மாது சாமிகளைக் கண்டு திரும்பி வரும்வரை பொறி இயல் நிபுணரும் அந்த இடத்திலேயே அமர்ந்து காத்துக்கொண்டிருந்தார். மாது சாமிகளைக் கண்டாள். சாமிகள் ஒரு பூவை தேங்காயாக்கிக் காண்பித்தனர். இந்த எதிர்பாராத நிகழ்ச்சியைத் தொடர்ந்து ஒரு ஆட்டமும் நடந்தது. வேறு யாரும் ஆடவில்லை, அந்த தேங்காயின் முடிதான் அவ்வளவு ஆட்டம் ஆடிக் காண்பித்தது. இதைக் கண்ட மாதுக்கு ஒன்றும் புரியவில்லை. வாயடைத்து நின்ருள் வியப்பினுல். முதன் முதலில் தேங்காய் உயர எழும்பியதைக் கண்டவுடன் எழுந்த அதிர்ச்சியும் பயமும் தேங்காய் பூமியிலிருந்து எழும்பி எழும்பி ஆட வேடிக்கையாக மாறியது. இது என்ன மாயமா, மாயா ஜாலமா, அறிவுக்கும் விஞ்ஞானத்திற்கும் எட்டாத அற்புதமா? ஒன்றும் புரியாத நிலையில் அதிர்ச்சிக்கும் பயத் திற்கும் வியப்பிற்கும் ஆளான மங்கை அறையை விட்டு வெளியே வந்தாள். அவள் வருகையை ஆவலோடு எதிர்நோக்கி இருந்த பொறி இயல் நிபுணர் அவளிடம் அவன் கேட்ட கேள்வியையே கேட்டு ஒரு அதிர்ச்சியையும் வெட்கத்தையும் அவளிடம் ஏற்படுத்தி விட்டார். 'தாங்களை மயக்கியது மாயா ஜாலவித்தை இல்லை என் பதை நிச்சயப்படுத்த முடிந்ததா." மங்கையால் இல்லை என்ருே ஆமாம் என்ருே பதில் சொல்ல முடியவில்லை. அப்படி குழம்பி இருந்தது எதிர்பாராத செயல்களைக் கண்ட அவள் மனநிலை. சாமிகள் ஒரு தேங்காயை ஆட்டிவைத்து எப்படி யெல்லாம் மனங் களை ஆட்டிவைக்கின்ருர். இவ்வளவு ஆட்டங்களும் எதற்காக? சாமிகள் அருள்சக்தியால் ஆடாத பொருளுமில்லை, அடையாத சித் தியுமில்லை என்பதை நிரூபிப்பதற்காக வல்லவா இந்த அற்பு தங்கள்!

ஒருநாள் தாயுமானவர் பாடல் ஒன்றைப் பாடி விளக்கம் செய்து கொண்டிருந்தார்கள் சீடர்கள். தனக்கு நிகர் இல்லை என்ற அள வுக்கு சித்தி பெறலாம் என்பதை உணர்த்தும் அப்பாடல் உலகில் நடக்கின்ற சித்துக்களை வகைவகையாய் உரைக்கும் 'கந்துகமதக் கரியை வசமாய் நடத்தலாம்' என்ற திருப்பாடல். 'வேருெருவர் காணுது உலகத்துலாவலாம்,' என்பது வகை வகையாய் உரைத்த சித்துகளில் ஒன்று. இதைக் கேட்டுக்கொண்டிருந்த சாமிகளுக்கு இந்த வகையிலும் ஒரு சித்தாடிக் காண்பிக்க வேண்டும் எனும் எண்ணம் உதித்தது. சாமிகள் தங்கி இருந்த வீட்டில் உள்ள ஒரு

அறையில் தன்னை ஒரு ஜன்னல் கம்பிகளில் இறுக கட்டச் சொன்னார். “ நீங்கள் யாவரும் முன் ஹாலுக்குச் செல்லுங்கள். நான் கூப்பிடும் வரை அங்கு தங்கி இருங்கள் ” என்று கூறினார். இவைகளைச் செய்து சாமிகள் அழைப்பை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தவர் பூசை ரூமி லிருந்து அழைப்பு வருவதைக் கேட்டு பிரமித்துவிட்டனர். குரல் சாமிகளுடைய குரல். சாமிகளைக் கட்டியதோ வெகு தூரத்திற்கப் பால் உள்ள படுக்கை அறையில். சாமிகளின் குரலோ பூசை ரூமிலி ருந்து பக்தர்களை அழைத்தது. ஒருவேளை கட்டவிழ்த்துக்கொண்டு பூசை ரூமிற்கு வந்துவிட்டார்களோ என்று யாவரும் பூசை ரூமிற்குச் சென்றார்கள். அங்கு அவர்கள் கண்ட காட்சி மேலும் பக்தர்களை பேராச்சரியத்தில் ஆழ்த்திவிட்டது. சாமிகள் படுக்கையறை ஒரு ஜன்னல் கம்பிகளில் எப்படி இறுக கட்டப்பட்டிருந்தாரோ அதே மாதிரி பூசை ரூமிலுள்ள ஒரு மரச்சட்டத்தில் கட்டப்பட்டிருந்தார். ஒரு முடிச்சுகூட அவிழ்க்கப்படவில்லை, கலைக்கக்கூடப்படவில்லை. கட்டுண்டிருக்கும் தன்னை கட்டுக்கலையாமல் ஓரிடத்திலிருந்து மற் றொரு இடத்திற்கு மாற்றிக்கொள்ளும் திறன் கொண்ட சாமிகளைப் போன்றவர்களுக்கு வேறொருவர் தெரியாது உலகத்தில் உலவுவது கஷ்டமான காரியமாகாது என்பதைத்தான் சாமிகள் செயல் விளக்கிக்காட்டியது.

கட்டுண்ட சாமிகள் ஒரு அறையிலிருந்து மற்றோர் அறைக்குச் சென்றதாவது ஓரே வீட்டில் நடந்த அதிசயம். மற்றொரு நாள் டெல்லியில் இருந்த ஒருவருக்கு கல்கத்தாவில் நடந்த காட்சியை காட்டியருளினர். ஒரு சீனுக்காரர் ஒரு நாள் சாமிகளைக் காண வந்தார். சாமிகள் நடத்திக் காட்டும் விநோதங்களைச் கண்டு ஆச்ச ரியப்பட்டவருக்கு ஒரு ஆசை ஏற்பட்டது. தான் கேட்பதை சாமி களால் நடத்திக் காட்ட முடியுமா என்பதில் அவருக்கு பெரிய சந்தேக முண்டு. இருந்தாலும் அதைச்செய்து காண்பித்து விட்டால் சாமி கள் பேராற்றல் மட்டும் விளங்குவதல்லாமல் சைனுகாரர் பேராசை யும் பூர்த்தியாகும். அவர் சாமிகளை, “ கல்கத்தாவில் இருக்கும் என் நட்பிற்குரிய ஆசைப் பெண்ணை காட்ட முடியுமா ” என்று கேட்டார். புன்னகை புரிந்துகொண்டே சாமிகள் அவரிடம் ‘ முடியும் ’ என்று கூறி சீனுக்காரரை பூசை ரூமிற்குள் அழைத்துச் சென்றார். சில நிமி டங்கள் கழித்து இருவரும் அறையை விட்டு வெளியே வந்தபோது சீனுக்காரர் முகம் ஒரே வியப்புமயமாக இருந்தது. “ அவளைக் கண் டேன். கல்கத்தாவில் அவளுடைய வீட்டில் வேலை செய்துகொண்டி ருப்பவளை இப்பொழுது கண்டேன்.” என்று ஆசையோடு கூறினார் சீனுக்காரர், தன் ஆசைப்பெண்ணைப்பற்றி.

டெல்லியில் சாமிகள் காட்டிய பேராற்றல் செயல்கள் ஆண்ட வனின் பேருண்மைத் தத்துவத்தை விளக்க அமைந்தனவாம். சாமி

களுடைய பஞ்சாட்சர விபூதியின் மகிமையைத் தலை நகரே கண்டு அதிசயத்தில் ஆழ்ந்தது. மேஜர் பிருதிபால் சிங் அவர்களின் பேத்திக்கு ஐந்து நாட்களாகக் கடுமையான காய்ச்சல். எதனால் ஜுரம் ஏற்பட்டது என்பதை வைத்திய நிபுணர்களும் நிர்ணயிக்க முடியவில்லை. இந்த நிலையில் என்ன செய்வது என்று ஏங்கித் தவித்திருந்த மேஜர் அவர்களுக்கு சாமிகளின் விபூதிப் பிரசாதம் கிடைத்தது. இந்த அருள் பிரசாதம் கிடைத்து குழந்தைக்கும் கடும் சுரத்தினின்றும் விடுதலையும் கிடைத்தது. அன்றிருந்து சாமிகள் பேரில் அசைக்கமுடியாத பக்தி விஸ்வாசம் மேஜருக்கு கிடைத்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ. வைத்தியர் மூளைகளையும் குழப்ப வல்ல கடுஞ் சுரத்தையும் இறக்கினார். சாமிகள் வைத்தியர்களால் உதவமுடியாத ஊமைகளையும் பேசவைத்தார். சாமிகள் டெல்லிக்குப் போகும் போதெல்லாம் கண்டறியாதென செய்து காட்டுவதுண்டு. நியூ டெல்லியில் திரு சசிபூஷன் குமார் மகனுக்கு டைபாய்டு ஜுரம் வந்தது. அதன் பிறகு வாய் பேசாமலே அந்த பையன் இருந்து வந்தான். சாமிகளது வரப் பிரசாதமாகிய விபூதியை வாயில் ஏற்றுக்கொண்ட பையன் நன்றாக பேச ஆரம்பித்து விட்டான். "டெல்லியில் ஆயிரக்கணக்கான மக்களைப் போன்று நானும் என்னுடைய காது கேட்காத வாய் பேசாத பேரனோடு சாமிகளுக்கு எங்கள் வணக்கத்தை அறிவிக்க வந்தோம். என்னுடைய பேரனைச் சாமிகள் ஆசீர்வதித்தார். அதற்குமுன் உச்சரித்ததைவிட வெகு தெளிவாக என் பேரன் பேச முடிந்தது. நான் இறைவன் முன் இருப்பது போல் ஒரு உணர்ச்சி யடைந்தேன்" என்று முன்னாள் அஸாம் தலைமை உயர் நீதிபதி திரு C.R. சின்கா கூறியது சாமிகளின் எல்லாம் வல்ல இறைத் தன்மையை புகழ்ந்து கூறியதேயாகும். இந்த இறைத்தன்மை பிறவியிலிருந்து பேசாமல் இருப்பவர்களையும் பேச வைக்கும் ஆற்றலை சாமிகளுக்கு அருளியது. திரு. O. P. காடிவல் குமாரன் மோஹிந்தர் பிறவி ஊமை. சாமிகளுடைய அருள் பிறவியிலிருந்து பேசமுடியாத அவனைப் பேசவைத்தது. திரு காடிவல் அவர்கள் சாமிகளை ஒரு அவதார புருஷரே என்று போற்றுகின்றார்

சாமிகள் அரைகுறை ஊமைகளையும், முழு ஊமைகளையும், பிறவி ஊமைகளையும் தானா பேசவைத்தார்? கண் சரியாகத் தெரியாதவர்களையும், பிறவிக் குருடர்களையும் பார்க்க வைத்தார். பத்து வருடங்களாக பார்வை இல்லாதிருந்த கனம் தீனதயாளின் மனைவி ஸ்ரீமதி இராஜகுமாரிக்குப் பார்வை அளித்தார். சாமிகளின் அதே அருள் பிரசாத விபூதி பிறவிக் குருடராய் இருந்த ஸ்ரீ ஜம்பு பிரகாசத்தின் மகன் ஓம்பிரகாசுக்கு முழுப் பார்வை அளித்தது. குருடர்களுக்கும் ஊமைகளுக்கும் உதவிய சாமிகளுடைய திருநீர் செவிடர்களுக்கும் நொண்

டிக்கும் உதவியது, கூன் முதுகையும் நேர்முதுகாக்கியது. நேராக நடக்கமுடியாமல் இருந்த திரு டோரா அருஜா, சாமிகளைக் காண தள்ளுவண்டியில் வந்தார். சாமிகளைக் கண்டு திருநீர் கிடைத்தபின் தள்ளுவண்டியில் வந்தவரும் தள்ளு வண்டியின் துணையின்றி நேரே நிமிர்ந்தே நடந்து திரும்பினர்.

நமது உபஜனாதிபதி திரு. கிரி அவர்கள் கவர்னராகப் பணியாற்றியபோது அவர் மகளுக்கு ரொம்ப வருடங்களாக இருந்த தலைவலியைச் சாமிகள் நீக்கினார்கள். இவைகளைக் கேள்வியுற்ற சாமிகளின் அருள் மகிமையை 1961ல் பாராட்ட முன்வந்த சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ டி.கே. மதோல்கர் சாமிகளிடம் இவைகளைப்பற்றிக் கேட்டபோது," "இந்த அருள் ஊற்று எப்பொழுதும் பொங்கி நிறையக் கூடியது. தபோ சக்தி எடுக்க எடுக்கக்குறைவதில்லை" என்று சாமிகள் உளமுவந்து பதிலளித்தார். இத்தகைய அருளாளர்களால் தெய்வீக ஒளி மங்காது விடாது பிரகாசித்துக்கொண்டிருக்கும் அருள் விளக்கினால் பல சிக்கல்களால் அவதிப்படும் உலக நாடுகளுக்கு வழிகாட்ட முடியாதா? என்ற கேள்வியும் எழுவது இயற்கை. பக்தர்களுக்கு உதவுகின்ற இந்த அருள் ஊற்றை உலகத்தின் நலனுக்காக பயன்படுத்த முடியாதா? என்ற கேள்வியை பத்திரிகை நிருபர்கள் சாமிகளையே கண்டு நேரில் டெல்லியில் கேட்டனர். அதற்கு சாமிகள் ஒன்றையும் மூடி மறைக்காமல் அவர்களுக்கே உரிய எளிய பாணியில் விளக்கம் தந்தார். "எதிர்காலத்தை எடுத்துரைக்கும் ஆரூடன் நானல்ல. என்னுடைய தபத்தால் எனக்கு ஏற்பட்டிருக்கும் தெய்வீக பலம் கொண்டு என்னால் இயன்றதைச் செய்து காட்டுகின்றேன். ஒரு தனிப்பட்ட நபருடைய இறந்த காலத்தைப் பற்றியும் நிகழ் காலத்தைப் பற்றியும் எதிர்காலத்தைப் பற்றியும் என்னால் பேச முடியும். ஆனால் உலகத்தைப்பற்றி அப்படி என்னால் பேசமுடியாது. நான் நீச்சல் கற்றுக்கொண்டிருக்கும் ஒரு மாணவனுக்கு ஒப்பானவன். என்னால் இப்பொழுது ஒரு குட்டையிலோ அல்லது சிறு நதியிலோ நீந்த முடியும். இன்னும் பெரிய கடல்களில் நீச்சலடிக்கப் பழகிக்கொள்ளவில்லை. நான் இன்னும் முயற்சிசெய்து கொண்டிருக்கின்றேன். எனக்கு இந்த சக்திகளும் கிடைத்து விட்டால் ஒருவேளை உங்கள் கேள்விக்கு பதிலையும் என்னால் அளிக்க இயலும்." உண்மை! சாமிகள் ஒரு நதியிலே நீச்சலடிக்க இயலும் என்பதை ஒத்துக்கொள்கின்றார், அவர்கள் உண்மையிலேயே ஒரு மிக முக்கியமான, தலைமை நதியிலேயே நீச்சலடித்த விபரமும் இங்கு சொல்வது பொருந்தும். ராஷ்டிரபதி பவனத்தில் இந்தியாவின் முதல் ஜனாதிபதி டாக்டர் இராஜேந்திர பிரசாத் அவர்களை காண சாமிகள் வந்திருந்தார். சாமிகள் எப்பொழுதும் அணிவது போன்று ஒரு பட்டுச் சட்டையுடன் காட்சியளித்தார். சாமியார்களுக்குரிய சிறப்புச்

சின்னங்கள் சாமிகளிடத்தில் இல்லாததால் இவர்தான் சாமிகள் என் பது முதன்முதலில் சந்திக்கும் டாக்டர் இராஜேந்திரபிரசாதுக்கும் தெரியவில்லை. "சாமிகள் வந்துவிட்டார்களா. அவர்கள் எங்கே" என்று ஆர்வமுடன் கேட்ட "ஜனாதிபதிக்கு இவர்தான் சாமிகள்" என்று அறிமுகப்படுத்தப் பட்டார். "என்ன செய்வார்," என்ற கேள்விக்கு "என்ன கேட்டாலும் பதில் சொல்வார்" என்று திரு. கமலசாமி பதிலளித்தார். உடனே ஆறுமாத பலன் கேட்கப்பட்டது "முதலில் நான் தினப்பலன் சொல்கின்றேன். அது சரியாக இருக்கின்றதா என்பதைப் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று சாமிகள் புன்னகை யோடு கூறிக் காலையில் நடந்த ஒரு சிறிய நிகழ்ச்சியை உரைத்தார். அது முற்றிலும் உண்மையாக இருந்ததை உணர்ந்த டாக்டர் இராஜேந்திரபிரசாத் மிக ஆவலோடு சாமிகள் கூறுவதை கேட்டார். மத்தியானத்திலும் அத்தகைய நிகழ்ச்சி ஒன்று நடக்கப்போவதை அறிவித்தவுடன் அந்த நிகழ்ச்சிக்கு கொஞ்சங்கூட இடங்கொடுக்காத படி முன்னெச்சரிக்கையாக சில ஏற்பாடுகள் நடந்தன. ஆனால் சாமிகள் சொன்னது நடந்தே விட்டது. டாக்டர் பிரசாத் அவர்க ளுக்கு சாமிகளிடம் அளவு கடந்த அன்பும் நம்பிக்கையும் ஏற்பட்டு விட்டது. சாமிகளை அஷ்டாவதானி என்று அழைக்கும் அளவுக்கு அவர் நம்பிக்கை ஓங்கிவிட்டது. இதே ஜனாதிபதி பீடத்தில் அமர்ந்த டாக்டர் இராதாகிருஷ்ணன் அவர்கள் வேதாகமங்களை கசடறக் கற்ற வர். டெல்லியில் அவரையும் சாமிகள் சந்தித்தபோது "கடவுள் எப் படி இருப்பார்" என்று டாக்டர் இராதாகிருஷ்ணன் அவர்கள் கேட்க "எள்ளுக்குள் எண்ணெய் இருப்பது போல" என்று கூறிய சாமி கள், "நசுக்கினால் எண்ணெய் வரும்" என்று முடித்தது கடவுளைக் காட்ட முடியும் மகான்களும் உண்டு என்ற பேருண்மையை மறை முகமாகச் சொன்னதே. சாமிகளுடைய எளிய தோற்றத்தையும் இனிய பதிலையும் கண்டு திருப்திகொண்ட டாக்டர் இராதாகிருஷ்ணன் "நீங்கள் மனதிலுள்ள காவியைக் கசக்கியவர்" என்று சாமிகளைப் போற்றினார்.

இத்தகைய அருளாளரைப் பத்திரிகையாளர்கள் மட்டுமா மொய்த்துக் கொண்டனர். மனப்புண்ணுக்கும் உடற் புண்ணுக்கும் மருந்து கொடுக்கவல்ல வைத்தியநாதன் என்று டெல்லிமா நகரமே அவரைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டது. "பெரிய மகானான ஸ்ரீபன்றிமலை சாமிகளுக்குப் பக்திக் காணிக்கையை அளிப்பதற்கு நூற்றுக்கணக் காகவும் ஆயிரக்கணக்காகவும் டெல்லி மக்கள் வந்த ஆச்சரியமான காக்ஷிக்கு நானே ஒரு சாட்சி" என்று 1961ல் அகில இந்தியா சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி ஸ்ரீ B. P. சின்ஹா அவர்களே பெருமிதத் தோடு கூறினார். பல ஆயிரக்கணக்கான ஜனங்கள் விபூதிப் பிரசாதம் கஷ்டமில்லாமல் பெறவும் பல போலீஸ் ஜவான்களை வைத்து கூட் டத்தை ஒழுங்கு செய்யப்பட்டதைப் பற்றியும் ஸ்ரீ சாமிகள் பாகுபாடில்

லாமல் எல்லோருக்கும் பிரசாதம் வழங்கியதைப் பற்றியும் டெல்லியில் அதிசயக்கத்தக்க அநேக விந்தைகளைச் சாமிகள் செய்ததையும், பல குருடர்களுக்குக் கண்பார்வையும் ஊமைகளுக்குப் பேசும் திறமையைச் சாமிகள் கொடுத்ததையும் பற்றி டெபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல் (ஸ்பெஷல் போலீஸ்) திரு. D. சென் அவர்களே வாய்விட்டுப் புகழ்ந்தார். சாமிகளுடைய அருமை பெருமைகளைக் கண்கூடாக அனுபவிக்கும் ஒரு சீடர், முன்னாள் பாராளுமன்ற உறுப்பினரான திரு. கமலசாமியின் நற்செயல் சாமிகளை இந்தியாவின் தலைநகருக்கு அழைத்து வந்தது. பாலம் விமான நிலையத்தைப் பேராச்சரியத்தில் மூழ்க வைக்கும் பெருஞ்செயலை மட்டும் சாதிக்கவில்லை சாமிகள்; டெல்லிமா நகரையே தன்னுடைய ஆத்மீகப் பேரருளாற்றலாலும் பேரறிவுத் திறனாலும் மெய்சிலிர்க்க வைத்தார் சாமிகள்.

### தூத்துக்குடியில் ஆராத இன்பம் அருளும் மலை.

> "காடே திரிந்தென்ன காற்றே
> புசித்தென்ன கந்தை சுற்றி
> ஓடே எடுத்தென்ன உள்ளன்
> பில்லாதவர் ஓங்கி விண்ணோர்
> நாடே யிடை மருதீசர்க்கு
> மெய்யன்பர் நாரியர் பால்
> வீடே யிருப்பினும் மெஞ்ஞான
> வீட்டின் மேவு வரே."

என்ற அருள் இலக்கண வடிவாயிருக்கிற ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் நமது காலத்தின் சித்து புருஷர் என்று தூத்துக்குடியில் இருக்கும் 1957இல் சென்னை சட்டசபை உறுப்பினராயிருந்த திரு. P.C. வீரபாகு அவர்கள் சாமிகளைப் பற்றி எழுதி இருக்கின்றார். சாமிகள் தூத்துக்குடியில் நடத்திக் காட்டிய அற்புதங்களை யெல்லாம் நேரில் கண்டே அவர் இப்படிக் கூறியிருக்கின்றார். 22–4–57இல் டாக்டர் ஸ்ரீ ரங்கசாமிப் பிள்ளை அவர்கள் அழைப்பில் வந்த சாமிகளை மேளதாளத்துடன் நூற்றுக்கணக்கான பக்தர்கள் சூழ சாமிகளுக்கென்றே ஏற்பாடாகி யிருந்த அலங்காரப் பந்தலுக்கு அழைத்துச் சென்றனர். சாமிகளுக்குப் பாதபூஜை வெகு விமரிசையாக நடத்தி வைத்தனர். மண்ணுலகில் அற்புதங்கள் செய்யும் அருட்செல்வர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் விண்ணுலகே வியப்படையும் மெய் தண்டபாணி தேவன். இந்த அருட்கதிரோன் வரவை எதிர்நோக்கி இருந்த பக்தர்களின் இதயக் கமலங்கள் எல்லாம் இவரைக் கண்டு மலர ஆரம்பித்தவுடன் பண்டை மறை வண்டுகள் பாட ஆரம்பித்தன. பசுந்தேன் ஞானம் பரிந்தொழுக ஆரம்பித்தது. முருகுபரந்து மணக்க ஆரம்பித்

தது. இத்தகைய முருகுமிகு சைவநாதரின் பொற்பாத மலர்களுக்கு அபிடேகங்களும், அர்ச்சனையும், ஆராதனையும் அமோகமாக நடத்தி வைத்தனர். இந்த வைபவத்தை அன்று வாசித்தளித்த வரவேற்புரை எவ்வளவு அழகாக எடுத்துரைக்கின்றது பாருங்கள்.

"பண்டைமறை வண்டுபாடப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுக முருகு பரந்து நாறக்
கண்ட இருதயக்கமல முகை களெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்த அருட்கதிரோன்
விண்ணோர்க்கு வியப்பாகும் பன்றிமலை மேவு
மெய்தண்டபாணி தேவன் மிகு சைவநாதன்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வோம்"

தூத்துக்குடியில் ஒரு ஊமைப் பெண் ஒரு மஹானுடைய வரவுக்காகக் காத்திருந்தாள். அவளுடைய குறையைத் தீர்க்க ஒரு சாமி தூத்துக்குடிக்கு வருவார் என்று ஒரு ஜோதிடர் கூறியிருந்தார். அந்தத் திருநாளை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த வெங்கடாசலம்ஐயர் என்பவரின் பதினெட்டு வயதுப் பெண் சாமிகளின் பெருமையைக் கேள்விப்பட்டுத் தன் குறை தீர்த்தருளச் சொல்லியிருந்த மகானே வந்துவிட்டாரென நம்பிக்கையோடு வந்தாள். 23–4–57இல் சாமிகளும் தன்னருளுக்கு ஏங்கி நிற்கும் பெண்ணைக் கண்டார். "இந்தப் பெண் பிறவி ஊமை, ஆனால் இனிமேல் பேசும்" என்று திருவாய் மலர்ந்தருளி, அந்தப் பெண்ணுக்குப் பிரசாதம் அருளி, "முருகா என்று சொல்லுங்கள்" என்றார். தன்னுடைய தீராப்பிணியாக, பிறவிப் பிணியாக இருந்த ஊமைத் தன்மையைப் போக்குவிப்பதற்காகவே முருகா என்ற திருமந்திரத்தைச் சாமிகள் அவள் வாய் கொண்டு சொல்லச் சொல்கின்றார். சாமிகள் தன்னை நிச்சயம் பேச வைப்பார் என்ற மனோதிடம் கொண்ட ஊமைப் பெண்ணும் மறுகணமே முயன்றாள். வாயசைந்தது. நாவசைந்தது. அவள் பிறப்பிலிருந்து அதுவரை நடவாதது நடந்து விட்டது. 'முருகா' என்று பேசி விட்டாள். இனிய நாதமும், மழலையும் ஒருங்கே கூடிய தன் இனிமைக் குரலில், 'முருகா' என்ற ஒரு பெயர் மட்டும்தானா? சாமிகள் சொல்கின்ற தெய்வீக நாமங்களெல்லாம் அவள் வாயிலிருந்து தங்குதடையின்றி வர ஆரம்பித்தன. என்ன ஆச்சரியம்! தன்னுடன் கூடவே பிறந்திருந்த ஊமை நோயைப் போக்க 'முருகா' என்ற திருநாமம் திருமந்திரமாக, தீராத வினையைப் போக்கவல்ல சமயசஞ்சீவியாக வந்து உதவியது. இதனைக் கண்டவர்கள் ஆச்சரியத்தால் வாயடைத்து மெய் சிலிர்த்தனர்.

இதைத் தொடர்ந்து ஒரு நொண்டிப் பிள்ளைக்கு முருகன் அருள் கிட்டியது. பிறர் உதவியுடன் உள்ளே வந்த கால் ஊனம் உள்ள ஒரு சிறுமி மிகுந்த கஷ்டத்தோடு சாமிகளை நமஸ்கரித்தாள். ஆனால் அவளால் எழுந்து நிற்க முடியவில்லை. கருணையே உருவாக விளங்கும் சாமிகள், இதைக் கவனித்து "முருகா" என்று உளங்குளிர உரைத்து கனிவுள்ளத்தோடு "கொஞ்சம் காலை நீட்டிப் பாரம்மா" என்றார். அந்தப் பெண் அதுவரை நீட்டமுடியாத இருந்த காலை சாமிகள் சொல்படி நீட்டினாள். தன்னிஷ்டப்படி மடக்கினாள். சாமிகளுடைய பேருதவியை என்னென்று சொல்வது! தங்களுடைய வாழ்க்கையிலேயே மறக்க முடியாத, தங்களுடைய வாழ்க்கைக்கே உயிரைக்கொடுக்கும் உத்தம உதவியை அல்லவா இப்பெண்களுக்குச் சாமிகள் செய்து விட்டனர். சாமிகளைப் பணிந்தாள், போற்றினாள், இந்த அற்புதத்தைச் சொல்லப் பிறர் உதவியின்றித் தானே நடந்து வெளியே சென்றுவிட்டாள். ஊமையாயிருந்தவளும் தான் பேசும் அதிசயத்தை மற்றவர்களுக்குத் தன் வாயாலேயே சொல்லி மகிழத் திரும்பியதும், நொண்டி நொண்டி நடந்து வந்தவள் திரும்பும் போது நல்ல பெருமைப்படும் நடைபோட்டுச் சாமிகளின் அருள்சக்தியைப் புகழ்ந்து பேச வீடு திரும்பிய இந்தப் பேரதிசயங்களைக் கேட்ட தூத்துக்குடி நகரமே பேராச்சரியத்தில் ஆழ்ந்தது. ஹிந்து, சுதேசமித்திரன், தினமணி முதலிய தினசரிச் செய்தித்தாள்களும் இந்த அதிசயங்களை நாட்டிற்கு எடுத்துரைத்தன.

சாமிகள் தூத்துக்குடியில் ஆடி அருளிய மற்ற அற்புதங்களும் கண்டோர் கேட்டோர் இதயங்களைக் கொள்ளை கொண்டன. சாமிகளுடைய சீடர் ஒருவருக்கு "சல்பா செக்ஸ்டைன்" என்ற ஒரு பேதி மாத்திரை வேண்டியிருந்தது. அவர் அதற்காக அலைந்து தேடாத கடைகள் பாக்கியில்லை. இதை அறிந்த சாமிகள் அவருக்கு வேண்டிய மாத்திரைகளை வரவழைத்துக் கொடுத்தார். கீழூர் பிள்ளையார் கோவிலில் ஒரு கற்பூரம் வரவழைத்துப் பக்தர்களை மகிழ்வித்தார். உப்பளங்களைச் சாமிகள் பார்வையிட்டபோது திரு. வீரபாகுப்பிள்ளையிடம் ஒருகை உப்பை எடுத்துக் கொடுக்க அது அரிசியாக மாறியது. வள்ள நாட்டில் தண்ணீர் தேக்க நிலையத்தை பார்க்கச் சென்ற போது அங்கு இருந்த தண்ணீரை சாமிகள் கையால் கொடுக்க அந்தத் தண்ணீர் பன்னீராக மாறிப் பரிமளித்தது. இந்த அற்புதங்களை யெல்லாம், பக்தர்கள் சாமிகளுக்கு பாக்களாக தொகுத்து ஒரு வாசிப்புப் பத்திரத்தையே வழங்கி விட்டார்கள், திரு. A.P.C. வீரபாகு அவர்கள் வீட்டிற்குச் சாமிகள் வருகைதந்தபோது. நாமும் அவைகளைப் படித்து இன்புறுவோம்.

"கத்துக் கடல்சூழ் திருமந்திர நகரதனில் கடல்நீர்
மொத்துண்ட நிலத்தில் விளைஉப்பினை உலைப்பெய்யும் அரிசியும்

பத்தரெலாம் பணிந்து போற்றிடும் தந்திக்கணபதி சந்நிதியில்
சித்தமகிழ்வுற புத்தம் புதுகைமுறு கற்பூரம் நாட்டியும்
பத்தராம் திருநிறை திருவருங்கராவுக்கு இஞ்ஞாலத்தில்
வித்தகம் பேசும் மருத்துவராலும் காணுத மாத்திரை ஊட்டியும்
முடமான நொண்டி நடமாடித் திரிந்தவும்
தடநாக்கில் பட்டவிட நோய் நீங்கவும் நின்
கடநோக்கில் கணீரென்று முருகா! என ஒலித்ததுவும்
ஓடிய பூம்புனல் வெள்ளமதை பத்தரெலாம்
நாடிய யோகியர் உள்ளம்போல் உவந்தே
கூடும் கண்ணீர் மல்கும் பன்னீராக்கிய பான்மையும்
உடலுருக உளமுருகி ஊனுருகிய நின்மனம்
தடந்தோளுறை தண்ணளி முருகன் மோனத்தே."

பேராசிரியர் சிவ. முருக. இலக்குவன் M. A., M. O. L அவர்கள் திருச்செந்தூர்ச் செல்வர், 'பண்டிதமணி' 'வித்துவான்' பட்டங்கள் பெற்றவர். தித்திக்கும் திருவாசகத் தேனை இனிக்க இனிக்கப் பருகி "ஆராத இன்பம் அருளுமலை" போற்றிப் பாடிச் சிவபுராணம் படித்து இன்பமுறும் பாவலர். அவருக்கு கண்கண்ட பிரத்தியட்ச "ஆராத இன்பம் அருளுமலை" ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள். சாமிகள் ஒருதரம் தூத்துக்குடிக்கு வந்திருந்தபோது அவர் சாமிகளைக் கண்டு தரிசிக்கச் சென்றார். அவரையும் அறியாமல் வளர்ந்த ஒரு ஆசையை சாமிகளிடமே வாய்விட்டுக் கேட்டு விட்டார். "எனக்கு அள்ள அள்ளக் குறையாத விபூதிப்பை வேண்டும்" என்று சாமிகளைக் கேட்டு விட்டார். சாமிகளும் 'சரி' என்று ஒப்புக்கொண்டார். வற்றாத விபூதிப் பை வந்த விதத்தை அவர் சொல்வதையே கேட்போம்." நானும் சாமிகளும் ஒரே சமயத்தில் எல்லாம் வல்ல ஸ்ரீ முருகப்பெருமானை மனமுருக வேண்டி நின்றபோது திடீரென்று ஒரு அதிசய ஜோதி ஜாஜ் வல்யத்தோடு ஜொலிக்கக் கண்டேன். அப்போது எனது கண்களை நன்றாக அகல விரித்து நோக்கிய வண்ணம் இருந்தேன். அந்த அதிசயப் பேரொளியினைக் காண்பதற்கு ஆயிரம் கண்படைத்த ஆதிசேடனாலும்கூட முடியாது என்பது எனது அபிப்பிராயமாகும். ஜெகஜ் ஜோதியாக இருந்ததால் அந்த அருளொளிக்கு முன் என்னால் நிற்கவே முடியவில்லை. கூப்பி நின்ற எனது கரங்களில் திடீரென்று எங்கிருந்தோ "சில்" என்ற பேரொளியுடன் ஒரு அழகிய அற்புத பொற்புறு விபூதிப்பை பறந்து வந்து 'பொத்' என்ற ஓசையுடன் விழக்கண்டேன். விபூதிப்பையைக் கண்டவுடன் எனக்கு ஒரே குதூகலம். கங்குகறையற்ற உற்சாகம். விபூதிப்பையைச் சுற்றிக்கட்டு வதற்குரிய சிகப்புக்கயிறு முதலில் இருந்ததாக எனக்குத் தோன்ற வில்லை. சாமிகளின் திருக்கரம் பட்டவுடன் திடீரென்று பையினுள்ளே

இருந்த சிகப்புக் கயிறு வெளித் தோன்றியது. பையிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக அற்புதமான முறையில் எடுக்க எடுக்க விபூதி வளரலாயிற்று. பையை விரித்து உள்ளே பார்த்தபோது பையில் உள்ளே இரண்டு வெண்மை மிக்க அறைகள் இருப்பதறிந்தேன். ஓர் அறையில் விபூதி இருந்தது. மற்றொரு அறை காலியாக இருப்பது அறிந்து விபூதியைப்போலவே குங்குமமும் அள்ள அள்ளக் குறை யாமல் வளரச்செய்ய வேணுமாய்ச் செய்யவேண்டும் எனச்சாமிகளிடம் விண்ணப்பித்துக் கொண்டேன். அவர் அருளால் அவ்வாறே ஆயிற்று. இந்நிகழ்ச்சி எங்கள் குருநாத சாமிகள் நிகழ்த்திய அற்புத நிகழ்ச்சிகளுள் ஒன்றாகும். இதுவரை இவ்விபூதிப் பையிலிருந்து எண்ணிறகடங்கா பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்கி இருக்கிறேன். ஆனாலும் இன்னும் எப்போதும் போலவே அன்றுபோல் இன்றும் சிறிதும் குறையாத நிலையில் விபூதியும் குங்குமமும் மென்மேலும் பையில் வளர்ந்து கொண்டே இருப்பது அவர் ஆசியோடும்'' ''ஆராத இன்பம் அருளும் பன்றிமலை'' சாமிகள் தீராத விபூதிப் பையை சீடருக்கு உவந்தளித்து என்றும் ஆடாத அற்புதத்தை யல்லவா எளிதில் ஆடி விட்டார்!

திருநெல்வேலி மாவட்டத்தில் கன்னியாகுமரிக்கு சாமிகள் கன்னிகா பரமேஸ்வரியைத் தரிசிக்கச் சென்றார். அங்கும் ஒரு அம்மை யார் சாமிகள் அருளால் கண் பார்வை கிடைக்கப் பெற்றார். சாமிகள் கோயிலுக்குள் நுழையும்போது அந்த நடுத்தர வயதானவள் சாமிகள் எங்கிருக்கின்றார் என்பதை அறிந்துகொண்டு சாமிகளது திருவடி களைத் தொட்டுக் கும்பிட்டார். குருடாக இருந்த அந்த அம்மையார் ஏதோ ஒரு காட்சியைக் கண்டு களிப்பவர் போன்று சாமிகளைக் கூர்ந்து கவனித்தார். உண்மையிலேயே அவளுக்கு ஒரு காட்சி கிடைத்து விட்டது. சாமிகள் நின்ற இடத்தில் ஒரு ஒளியைக் கண்டாள். அந்த ஒளி விநாடிக்கு விநாடி விரிந்தும் பெருகியும் வளர்ந்தும் திவ்ய ஜோதியாகத் தெரிந்தது. ஊனக்கண் அற்ற அந்த அம்மாளுக்கா ஜோதி தரிசனம்! கேட்பதற்கே வியப்பாக இருக்கின்றதல்லவா? அம்மையாருக்கு அப்போதே பார்வை கிடைத்து விட்டது. கோயிலைக் கண்டாள்; பக்தர்களைக் கண்டாள்; சாமிகளைக் கண்டாள்; கன்னிகா பரமேஸ்வரியைக் கண்டாள். எல்லாம் உள்ள உலகைக் கண்டாள். சாமிகளுடைய கருணை அருட் சக்தியால் தனக்குக் கண்ணொளி கிடைத்ததையும் கண்டாள். அவளுடைய பரவசநிலையைச் சொற்களால் எடுத்துரைக்கவும் முடி யுமோ? கன்னிகா பரமேஸ்வரி கர்ப்பக்கிரகத்தில் மற்றொரு அற் புதமும் நடந்தது. ஒரு இளம் பெண்ணின் தெய்வீகச் சிரிப்பு கன்னிகா பரமேஸ்வரி சிலையிலிருந்து வரக் கேட்டனர் பக்தர்கள். அப்போது பிரதிஷ்டை செய்திருந்த ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரி தேவியின் சிலை ஜீவன் பெற்றதுபோல் ஒரு காட்சி ஏற்பட்டது.

தூத்துக்குடியில் டாக்டர் S. இரங்கசாமி பிள்ளை சாமிகளிடம் 1955லிருந்து தொடர்பு வைத்திருக்கின்றூர். அவருக்குத் திருச்செந்தூரில் சாத்துக்குடிப் பழம் சாமிகள் அருள் கூர்ந்து அளித்து உபதேசமளித்த திருநாளை அவரால் மறக்கவே முடியாது. இப்படியே அவருடைய வாழ்க்கையில் சாமிகளின் அருளால் ஏற்படும் திருநாட்கள் எவ்வளவோ உண்டு. சாமிகளை 1957ல் தன் வீட்டிற்கழைத்துப் பாதபூஜை செய்து உபசாரப் பத்திரமளித்து இன்பமடைந்தது மற்ெருரு திருநாளாகும். தன்னுடைய இரண்டு மகள்களுக்குத் தகுந்த வரன்களைப் பார்க்கும் வேலையில் ஈடுபட்டிருக்கும்போது சாமிகளே அருள் கூர்ந்து அந்தந்த மகளுக்குகந்த வரனின் ஜாதகத்தை அந்தந்த மகளின் ஜாதகத்தில் இணைத்து பூஜை அறையில் வைத்துக் கொடுத்த நாட்களும் அந்தந்த முகூர்த்தங்கள் நடந்த நாட்களும் டாக்டரால் மறக்க முடியாத திருநாட்களாகும். இதில் ஆச்சரியமென்னவெனில் அவருடைய இரண்டாவது மகள் திருச்செல்வி சீதாவுக்கு ஜதாகப் பொருத்தம் கிடைத்தபோதும் கல்யாணம் நடந்தபோதும் சாமிகள் மலேயாவில் இருந்தார். டாக்டரின் மூன்ருவது மகள் திருச்செல்வி கோமதிக்கு ஜாதகப் பொருத்தம் கிடைத்தபோதும் அந்தப் பொருத்தமான ஜாதகத்தோடு ஒரு பவுன் தங்கம் கிடைத்தபோதும் சாமிகள் பாளையம் கோட்டையில் இருந்தார். மாப்பிள்ளையைப் பார்த்துக்கொடுக்கும் சாமிகளுடைய அருள் பெண்ணுக்குத் திருமாங்கல்யத்திற்காக ஒருபவுன் தங்கத்தையுமல்லவா உவகையோடு கொடுக்கின்றது. இத்தகைய திருநாட்கள் டாக்டர் இரங்கசாமி அவர்களுக்கு மட்டுந்தானு? சாமிகளுடைய எண்ணிறந்த பக்தர்களுக்கும் இத்தகைய திருநாட்கள் எவ்வளவோ உண்டு!

"கோடி மாதவங்கள் செய்து குன்றினுர் தம்மையெல்லாம்
வீடவே சக்கரத்தால் எறிந்துபின் அன்பு கொண்டு
தேடி மால்செய்த கோயில் திரு இராமேச்சுரத்தை
நாடி வாழ் நெஞ்சமே நீ நன்னெறியாகுமன்றே."

இப்படிப் புகழ்கின்ருர் அப்பர் சாமிகள் இராமேஸ்வரத்தை. இந்தத் திருத்தலத்திற்கும் சாமிகள் அடியாரோடு சென்று வருவதுண்டு. சமீபத்தில் 1968ம் ஆண்டிலும் பக்தர்களுடன் சென்று கோவிலுள்ளோர் அதிசயிக்கும்படி அற்புதம் ஆடி அருளியதும் குறிப்பிடத்தக்கது. சாமிகள் 1959ல் இராமேசுவரம் சென்று கடற்கரையில் திருநீராட வந்திருந்தார். அப்பொழுது வரவர வளரும் பேரிசையோடு ஒரு பொருள் கடலிலிருந்து வருவதைப் போன்று தோன்யறிது. எல்லோரும் ஆவலோடு பார்க்க ஒரு ஆசனம் அபூர்வ வேலைப்பாடுடன் கடலலைகள் மேல் ஆலிலைமேல் பள்ளிகொண்ட திருக்குழந்தை போல மிதந்து வந்தது. சாமிகளுக்கென்றே வந்தது.

போல் அது நேராக சாமிகள் இருக்கும் இடத்திற்கே வந்து சேர்ந்தது. சாமிகளும் அதை அன்புடன் எடுத்து அதில் அமர்ந்து திருநீராடலை முடித்துக் கொண்டனர். தம் வேலை முடிந்ததும் சாமிகள் இந்த தெய்வீகத் திருஆசனத்தை மறுபடியும் கடலில் வீச, அம்மஞ்சம் அது வந்த வேகத்தோடும் சப்தத்தோடும் அவ்விடத்தை விட்டுக் கடலுக்குள் அலைகளோடு சென்று விட்டது.

## மலாயாவில் தென்னாட்டுச் சித்தர்.

" They alone live who live for others ;
The rest are more dead than alive " —
(Swami Vivekananda)

" மற்றவர்களுக்காக வாழ்கின்றவர்கள் மட்டும்தான்
வாழ்கின்றார்கள் ; பாக்கி உள்ளவர்கள் எல்லாம்
உயிரோடு இருப்பதைவிட இறந்தவர்களாகவே
இருக்கின்றார்கள் " — சுவாமி விவேகானந்தர்.

தமிழகத்திற்கும் மலேயாவுக்கும் வெகுநாட்களாகவே நல்லுறவு நீடித்திருக்கின்றது, திரைகடலோடித் திரவியம் தேடச் சென்ற தமிழர்கள் மலேயா நாட்டில் குடியேறி வாழ்கின்றார்கள். தமிழகத் திருச்செல்வங்களையும் தெய்வங்களையும் போற்றிப் பணிந்து வருகின்றனர். தாம் குடியேறிய வளநாட்டிலும் முருகனுக்கும் மாரியம்மனுக்கும் மற்ற தெய்வங்களுக்கும் கோவில்கள் கட்டிப் பூசை நடத்தித் தமிழ்ப் பழக்க வழக்கங்களில் வேரூன்றி நிற்கின்றனர். தமிழ் மறைகளில் தேனூறித் திளைத்திருக்கின்றனர். கி. மு. பதினோராவது நூற்றாண்டில் தமிழ்ப் பேரரசன் இராஜேந்திர சோழனைக் கவர்ந்த இந்த பூமி இந்த நூற்றாண்டில் தமிழ்க் கலைஞர்களையும் எழுத்தாளர்களையும் அழைத்து இன்பமடைந்தது. உலகிலேயே முதன் முதலாகத் தமிழ்மொழி மகாநாடு ஒன்றைக் கூட்டுவித்த பெருமை இந்த மலாசியா நாட்டிற்கே உரித்தாகும். கலைஞர்களை மட்டும் அழைத்து மகிழ்வூட்டும் பெருமை மட்டுமல்ல இந்த நாட்டிற்கு. அருட் செல்வர்களையும் இந்த நாடு அழைத்துப் பெருமைப் படுத்துகின்றது, தானும் பெருமை யடைகின்றது. 1958ஆம் ஆண்டில் ஜூலை 11ந் தேதி சாமிகளைத் தாம் வாழும் மலாயா நாட்டிற்கு அழைத்துச் சென்ற பெருமை பொதுவாக அங்கு வாழும் தமிழர்களுக்கும் சிறப்பாக திரு. எஸ். வெங்கடப்பச் செட்டியார் அவர்கட்கும் உரியது.

சாமிகள் மலேயாவுக்கு வரவழைக்கப் பட்டார். மலாயா நாட்டு கோலாலம்பூர் சுகாதார மந்திரி திரு. வீ. தி. சம்பந்தன், கிள்ளான்

சிலங்கூர் சுகாதார மந்திரி திரு. மாணிக்கவாசகம், பிரபல கோலாலம்பூர் வர்த்தகர் திரு. எஸ். வெங்கடப்பச் செட்டியார், பினங்கு மாகாண மலாயன் இந்தியர் காங்கிரஸ் தலைவரும் பிரமுகருமான திரு. என். டி. எஸ். ஆறுமுகம்பிள்ளை, பூச்சோங் சுத்த சமாஜம் சார்பில் சாமிகள் சத்யானந்தர், தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கக் காரியதரிசி திரு. பி. பி. நாராயணன், ஈப்பாரோடு மிலியன்டாலர் செட்டில் மெண்ட் சிரியா பாபாஜி சங்கம், பிரிக் பீல்ட் விவேகானந்தா ஆசிரமம், தமிழ் நேசன் பத்திரிகை உரிமையாளர் — இன்னும் எவ்வளவோ கோயில்கள், பொதுத்தாபனங்கள், கலைநிலையங்கள், பிரபல வக்கீல்கள், டாக்டர்கள், வியாபாரிகள், தொழிலாளர்கள் சாமிகளுக்கு மலாயா நாட்டில் மகோன்னத வரவேற்பு அளித்தார்கள். சாமிகளின் அருள் சக்திகளை நேரில் கண்டு களி கூர்ந்தனர். மக்கள் கூட்டம் நாள்தோறும் திரண்டு வந்தன: உற்சாக மேலீட்டால் சாமிகளை மொய்த்தனர். சாமிகளும் உவகைப் பெருக்கெடுத்து அருள் மழையையும் அற்புதத் திருவிளையாடல்களையும் பொழிந்து மக்களை அருள் வழியில் மகிழ்வித்தனர். இவைகளை யெல்லாம் கொட்டை எழுத்துக்களில் பொறித்து வானளாவப் புகழ்ந்தன தமிழ் ஆங்கிலப் பத்திரிகைகளெல்லாம். சிங்கப்பூர் முரசு, கோலாலம்பூர் தமிழ் நேசன், பினங்கு சேவிகா முதலிய தமிழ்ப் பத்திரிகைகளும், சண்டே கெஜட், (Sunday Gazette) ஸ்டெரியிட் டைம்ஸ் (Strait Times) சண்டே டைகர் ஸ்டாண்டார்ட் (Sunday Tiger Standard) என்ற ஆங்கிலப்பத்திரிகைகளும் சாமிகளின் அருட்சக்தியினையும், அவர் பிரயாணச் சிறப்பையும் புகழ்ந்து மகிழ்ந்து எழுதின. "தென்னாட்டுச் சித்தரின் அரிய செயல்கள்," 'அற்புதம் நிகழ்த்தும் பன்றிமலை சாமிகள்,' 'அற்புத மனிதரைக் காண ஆயிரம் ஆயிரம் கூட்டம்,' 'எவ்வேளையும் செவ்வேளையே வணங்கும் பன்றிமலை சித்தர்,' 'நான் கண்ட நடமாடும் தெய்வம்,' 'பன்றிமலை சாமிகள் சிறப்பியல்புகள்,' 'அவன் அருள் உண்டானால் அற்புதமெல்லாம் எளிதே, 'வெறும் கையிலிருந்து வந்தது அற்புதக்குருவி', 'வெறும் பையிலிருந்து வந்தது மஞ்சள் கிழங்கு,' 'பன்றிமலை சாமிகள் தெய்வீக அருள் பெற்றவர்' — இப்படியெல்லாம் சாமிகளின் அருமை பெருமைகளை அலங்காரப்படுத்திச் செய்திகளாகவும் கட்டுரைகளாகவும் வெளியிட்டன தினசரி செய்தித்தாள்களும், வார இதழ்களும். இந்தப் புகழ் சாமிகளின் மலாயா சுற்றுலா முடியும் வரை விரிந்து விரிந்து மணந்தது. இப்படி ஈப்போவில் 1957 ஜூலை 11ந் தேதி ஆரம்பித்த சாமிகளின் மலாயாப்பயணம் பினங்கு, சிங்கப்பூர், கோலாலம்பூர், கிள்ளான், சிரம்பான், மலாக்கா, குவாந்தான் முதலிய இடங்களுக்கும் சாமிகளை அழைத்துச் சென்றது. 1958 நவம்பர் 24ந் தேதி தன்னோடு வந்த மனைவியுடன் புகழ்மாலையுடன் சாமிகள் சென்னைக்குக் கப்பலில் பிரயாணமாகி டிசம்பர் 1ந் தேதி சென்னை வந்து சேர்ந்தார்.

திருவிழாக்களில் தலமூர்த்தியின் பவனி வருவதை அறிவிக்க முரசு ஒலிக்கின்றது. அது போன்றே சாமிகள் மலாயா நாட்டுக்குள் திருவடி யெடுத்து வைக்கு முன்பே அவருடைய சிறப்பை முற்போக்குப் பத்திரிகைகளெல்லாம் தொகுத்துரைக்க ஆரம்பித்தன. அவருடைய தோற்றச் சிறப்பையும், அருள்நெறிச் சிறப்பையும், இந்தியாவில் அவர் பெற்றுள்ள பெயரையும் சீரையும் ஏத்தி எழுதின செய்தித் தாள்கள். "தென்னாடு பெருமை கொள்ளும் சிறந்த அருள் மொழி அரசர். காவியுடுத்தாதவர். கமண்டலமேந்தாதவர். உத்திராட்சமாலை பாதக்குறடு முதலிய ஆடம்பரங்கள் ஏதுமின்றி இல்லறத்திலிருந்து இதயத்தை இறைவன் இருப்பிடமாக்கி இருப்பிடத்தை இறைவன் ஆலயமாக்கியவர். செல்வர் முதல் பஞ்சை வரை நெஞ்சை இழுக்கும் நெறி தருபவர்" என்றெல்லாம் சாமிகளின் சிறப்பை வருணித்தது ஒரு பத்திரிகை. 1956ல் புது டெல்லியில் இந்திய நாட்டுத் தலைவர் திரு. இராஜேந்திர பிரசாத் உள்ளத்தையும் கற்றவர் நெஞ்சங்களையும் அருள் சக்தியால் பல அற்புதங்கள் காட்டிக் கொள்ளை கொண்டவர், விபூதிப் பிரசாதத்தால் இந்தியாவில் பல இடங்களில் முருகன் அருளைக் கொண்டு கண் கெட்டவர்களுக்குப் பார்வையும், ஊமைகளுக்குப் பேச்சும், நொண்டிக்கு நடையும் ஈந்தருளும் நடமாடும் தெய்வம்—இப்படியெல்லாம் சாமிகளின் புகழைப் பாட ஆரம்பித்தன செய்தித் தாள்கள். இப்புகழ் கொண்ட மகா புருஷனே நாட்டுக்கு வந்துவிட்டால் அவரைக் காணவா தயங்குவர் மக்கள். இந்துக்கள், கிறிஸ்துவர், முஸ்லீம், மலாயாக்காரர், சீனர்கள்—எல்லோரும் திரண்டு வந்தனர் சாமிகளை நேரில் காண, தாம் கேட்டனவெலாம் உண்மைதானா என்பதை நேரில் அறிய.

மாலாயாவுக்கு வருகை தந்துள்ள மகான் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளை உற்சாகத்தோடு மக்கள் வரவேற்றதற்குக் கம்பர்வாழ் நகரத்தார் வாசித்தளித்த வரவேற்பிதழ் ஒன்றே போதிய சான்றாக மிளிரும். சாமிகளைப் போற்றி வரவேற்கின்ற மக்களின் இதய ஒலியைக் கேளுங்கள்.

"அன்பே வருக! அருள் நிறைந்த
உருவே வருக! அறங் காக்கும்
பண்பே வருக! படிற திலாப் பதியே
வருக! நெறியுரைக்கும்
அறிவே வருக! அவை நல்கும்
இன்பே வருக!
அருமை பெரு பன்றிமலைக்
குருவே!! வருகவே!!!

வளமிகுந்த மலைநாடு வருபவர்களெல்லாம்
வாரிடுவோம் பொருளனைத்தும் என, அதனைக் கொள்வோர்
நிலமதிலே! அவர் வழியே நீவி ரேற்ற போழ்தும்
நினைவதிலே நாடவில்லை என்பதுமே உறுதி
களங்கமிலாத் தெளிவுளத்தின் கருணை யதுவல்ல;
கலியகற்றும் பணியதுவே சிறந்ததெனக் கொண்டு
நலங்காட்டப் பரம் பொருளின் பிறஉருவாய் நின்று
நங்களுடன் உறவாடும் நாயகனே வருக.
வண்ண மலர்மலர வண்டினங்கள் மொய்ப்பதுபோல்
வந்திழையும் மக்களுக்கே வழிகாட்டும் எம் தலைவ!
எண்ணமெலாம் இறைபோற்றி ஏற்பதெல்லாம் நற்சிந்தை
என்றுணர்வைப் பெற்றோரும் இருந்துளரே கோடா கோடி
சொன்னதெலாம் சொல்லளவே, சுகம் எவரும் கண்டதுண்டோ
சொல்லுமையா சொல்வீரென்று சொன்னவரும்
[கோடாகோடி
இன்னவழி செல்வதென்று ஏங்கி நிற்கும் இக்காலை
எடுத்தியம்பி அருள் மயத்தை எல்லோர்க்கும்
[அளித்திடுவீர்!

சாமிகள் மலாயாவில் திருவடி எடுத்துவைத்த முதல் இடம் ஈப்போ நகர். இங்கு சாமிகளின் எளிய தோற்றத்தையும் இனிய பழக்கத்தையும் கண்டு உளம் குளிர்ந்த மக்கள் அவருடைய பேராற்றலைக்கண்டு பெருவியப்புற்றனர். ஒருநாள் ஈப்போ நகர விமான நிலையத்தில் ஒரு மலாய் முஸ்லிம் இராணுவ வீரர் ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவரைக்கண்ட ஒரு அயல்நாட்டுப் பெரியவர் அவரோடு பேச ஆரம்பித்தார். "அய்யா, நீர் ரொம்பக் கவலையுடன் இருக்கிறீர். உம் மனைவி பிரசவத்திற்குப்பின் சில நாட்களாக உடல் நலமின்றி, அவள் தாயார் வீட்டுக்குச் சென்றிருக்கின்றாள், நீர் ஓட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்" என்றார் பெரியவர் தமிழ் மொழியில். இதைப் பெரியவரோடு இருந்த இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் லிமிடெட் மானேஜர் திரு. M. R. கோவிந்தராஜன் மலாயா மொழியில் இராணுவ வீரருக்கு மொழிபெயர்த்துச் சொன்னார். சொன்னது முற்றிலும் உண்மை என்று ஒப்புக்கொண்ட மலாயா வீரர் சொன்னவர் பெரியவர் என்பதை உணர்ந்தவராய் அவர் ஆசியையும் பெற்றார். பக்கத்தில் ஒரு வாசமற்ற பூக்கள் நிறைந்த ஒரு செடி இருந்தது. அப்பூக்களில் பெரியவர் ஒன்றைப் பறித்து 'இதில் வாசமிருக்கிறதா பாருங்கள்' என்று வீரரிடம் கொடுக்க, 'இது அழகுக்காக உள்ள பூ, வாசமில்லாத பூ' என்றார் வீரர். அதே வாசமில்லாத பூவை பெரியவர் வாங்கி ஊத அந்தப்

பூவில் புனுகும் சந்தனமும் கலந்த நறுமணம் உடனே உண்டாகி விட்டது. இதை முகர்ந்த மலாயா வீரருக்குப் பேராச்சரியமும் பெரு மதிப்பும் பெரியவரிடம் ஏற்பட்டுவிட்டது. இந்தப் பெரியவர் திரு. கோவிந்தராஜன் வீட்டிலும் உதிர்ந்த புஷ்பங்களை அவர் மனைவி யின் கைகளில் கொடுக்க, கையைத்திறந்து பார்க்கும்போது கைகளில் உதிர்ந்த மலர்கள் இல்லை, ஒரு பெரிய மஞ்சள் கிழங்கு இருந்தது. மங்களகரமான மஞ்சள் கிழங்கைக் கிடைக்கப்பெற்ற கோவிந்தராஜன் சதிபதிகள் அதைக் கிடைத்தற்கரிய பேருகக்கருதிப் பூஜையில் வைத்து பூஜித்தனர். இப்படிச் சமயசந்தர்ப்பங்களுக்குத் தகுந்தாற்போல் அற்புதம் ஆடிவந்தப் பெரியவர் வேறு யாராய் இருக்க முடியும்? நமது அருட்பெரியார் சாமிகளே யாவர்!

ஈப்போ நகரில் மக்கள் மனத்தைக் கொள்ளைகொள்கின்ற அற் புதங்களை மட்டுமா இப்படி உவகையோடு காண்பித்தார். தீரா திருந்த வியாதிகளை யெல்லாம் வெகுசீச்கிரத்தில் தன் அருட்கரத் தால் குணப்படுத்தினர். "ஈப்போ கிண்டா வர்த்தகப்பள்ளித் தலைமையாசிரியர் திரு. கே. இராமநாதின் குமாரருக்குச் சுத்தமாகக் காது கேளாமல் இருந்தது. ஆங்கில மருத்துவ முறைகள் எவை யும் பயன்படவில்லை. ஆனல், பன்றிமலைச் சாமிகள் சில நிமிடங் களில் இந்த இளைஞனின் கேளாக்காதைக் கேட்கும் காதாக்கி விட் டார்." லிப்டன் கம்பெனியைச் சேர்ந்த திரு. எஸ். நாகராஜன் மனைவி திருமதி, மங்களத்திற்குப் பாரிசவாயு நோயால் உணர்ச்சி யற்று நடக்க முடியாமல் இருந்தது. சாமிகளின் அருள்பிரசாத திருநீற்ருல் அவள் மகிழ்ச்சியுடன் உணர்ச்சி பெற்று எழுந்து நடந்தாள். கப்பாரில் எலக்டிரிக் போர்மனுக இருக்கும் திரு. வி. ஆர். சந்திரன் இருபத்தோராண்டுகளாக வயிற்று வலியால் பீடிக்கப்பட்டவர். சாமிகளின் அருள் சக்தியைக் கேட்டு ஈப்போவுக்கு விரைந்தார். சாமிகளின் அருள் சக்தி விபூதி இருபத்தொரு ஆண்டு கள் அவரை வாட்டி வதைத்த வயிற்று வலியை ஒரேநாளில் நீக்கி விட்டது. பினங்கிலுள்ள ஒரு வட இந்திய வியாபாரி திரு. ரேவா சந்த் மேத்தாராம் என்பவருக்குத் தீராத நோயாகத் தொந்திரவு கொடுத்து வந்த பிரபல டாக்டர்களால் கைவிடப்பட்ட வயிற்று வலி யும் சாமிகளின் அருட்கரத்தின் வருடலினுல் உடனே மறைந்தது. சாந்தா எனும் ஒரு வடநாட்டுப் பெண் வலதுகையில் ஓயாத வலி மூன்று வருடகாலமாக இருந்தது சூரியனைக் கண்ட பனிபோல் சாமிகள் அருள் விபூதி பூசினவுடன் மறைந்துவிட்டது லிம்பா எனும் சீனர் பல நாட்கள் தீராதிருந்த தன் நோய் சாமிகள் பிரசாதத் தால் ஒரு பொழுதிலே மறைந்ததை மனதாரப் புகழ்ந்து மறுநாளும் சாமிகளைக்காண ஓடோடி வந்தார். கம்பாரில் டாக்டர்கள் கைவிட்ட ஒரு நோயாளி படுத்த படுக்கையாக இருக்கின்ருர் பிழைக்கமாட்டா ரென்று கேள்விப்பட்டார் சாமிகள். அந்த நோயாளி ஒரு டிரைவர்,

அவர் பரிதாப நிலையை உணர்ந்த சாமிகள் தானே அவரிருக்கும் இடத்திற்குச் சென்று அருள் வழங்கினர் அன்றிலிருந்து டிரைவருக்கு படிப்படியாக குணமேற்பட்டு வந்தது. சிங்கப்பூரில் சாப்பாட்டுக் கடை நடத்தும் திரு. சொ. சின்னையன் மகள் பிறவியிலிருந்து பதின் மூன்று வருடங்கள் ஊமையாயிருந்தவளைச் சாமிகள் ' முருகா ' என்று சொல்ல வைத்துப் பேச வைத்தார். சிங்கப்பூர் திரு. லிங்கம் ஜே. பி. மகள் பத்து வருடமாகச் சித்த பேதமாக இருந்தவளைக் குணப்படுத் தினர். மலாக்காவில் திருமதி எஸ். குவாட்செங் என்பவரின் நெஞ்சு வலியை, ஒரு மாம்பழ அளவுள்ள கற்கண்டு கட்டி ஒன்றை வரவழைத் துக்கொடுத்து 108 நாட்கள் சாப்பிடச் சொல்லிக் குணப்படுத்தினர். பினங்கு நகரில் சாமி தங்கியிருந்தபோது ஆயல் ஈத்தாம் ஈகியோக் டோஸ்புத்தர் கோவிலின் தலைமை சீனகுரு மிகவும் நோய்ப்பட்டிருந் தார். அவரால் எதுவும் சாப்பிடவும் முடியாது, குடிக்கவும் முடியாது. சாமிகளின் அருள் சக்தியைக் கேள்வியுற்ற இத்தலைமை குரு தன் நிலையை சாமிகளிடம் அறிவிக்க தன் சீடரில் ஒருவரை அனுப்பினர். தன்னை அன்றே வந்து பார்க்குமாறும் கேட்டிருந்தார். அன்று சாமி கள் அலோஸ்டார் எனும் இடத்திற்குப் போகத் திட்டமிட்டிருந்தது. இருந்தாலும் உடல் பிணியால் வருந்தும் சீனர் தலைமைக் குருவைப் பார்ப்பதே தன் முதல் கடமையென ஏற்றுப் பயணத்தை ஒத்திவைத் தார்; நேராக அவரிருக்கும் புத்த ஆலயத்திற்குச் சென்றார். அவர் உடல் நலத்தோடு இருந்தால் ஏழைகளுக்குத் தொண்டாற்ற முடியும் என்று சொல்லிக்கொண்டே ' அடியார்க்கு மடியன்', சாமிகள் சீனகுரு வுக்குத் தொண்டாற்றச் சென்றார். சாமிகள் அடைந்த புத்தக்கோயி லில் பெரிய ஊதுவத்திகள் உண்டு. சாமிகளுக்கு ஒரு பெரிய சூடக் கட்டி வேண்டியிருந்தது. அதைத் தன்னை அழைத்து வந்த சீனக் குரு அனுப்பிய சீனச்சீடர் சட்டைப் பையிலிருந்தே வரவழைத்தார் சாமி கள். இந்தச் சூடத்தைக்கொண்டு தீபாராதனை செய்து விபூதிப் பிர சாதத்தைத் தலைமை குருவுக்கு அனுப்பினர். அதன்பின் சீடர் சந்நி யாசியைத் தான் தங்கியிருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்று ஒரு கற்கண்டுக் கட்டியையும் வரவழைத்து அதோடு விபூதிப் பிரசாதமும் கொடுத்தனுப்பினர் சீனத்தலைமை சந்நியாசிக்கு இப்படியாக ஏழை மக்கள் தொழிலாளிகள் முதற்கொண்டு சீன சந்யாசித் தலைவர்களுட் படத்தன்னை நாடிவந்த மக்கள் யாவருக்கும் கருணை வள்ளல் விபூதி வழங்கி அவர் பிணிகளை அகற்றி அருள் புரிந்தார்.

சாமிகள் கைமாறு கருதாது ' தன் கடன் பணி செய்து கிடப்பதே ' என்பதைத் தினசரி நிரூபித்துக் காட்டும் நடமாடும் தெய்வம் என் பதை மலாயா நாட்டு மக்கள் புரிந்துகொண்டனர். சாமிகள் தினமும் காலையிலும் மாலையிலும் தவருது பூஜைசெய்து காத்திருக்கும் பக்தர் கள் அனைவருக்கும் விபூதிப் பிரசாதம் கொடுத்து அவரவர்களுடைய ஐயப்பாடுகளைத் தெளிவுபடுத்துவதையும், வாழ்க்கையில் ஏற்படும்

பலவிதமான பிரச்சினைகளுக்குத் தகுந்த பரிகாரங்கள் சொல்வதையும், பக்தர்களுக்கு ஆறுதல் அளிப்பதையும், பில்லிசூனியம் ஏவல் முதலான கெடுதல் விளைவிக்கும் மாந்திரீகங்களுக்குச் சுலபமாகச் சாமிகள் நிவர்த்தி மார்க்கம் கூறுவதையும், கல்யாணமாகாத பெண்களை வைத்துக்கொண்டு கவலைப்படும் பெற்றோர்களுக்கு மஞ்சள் கிழங்கு மந்திரிந்து அனுகூலம் செய்வதையும், முக்கியமாக வெகு நாட்கள் உடலினைப் பீடித்து வாட்டி வதைத்து வந்த பிணிகளைப் போக்க அருள் சுரப்பதையும் மலாயா மக்கள் நன்ருகப் பயன்படுத்திக் கொண்டனர். தனவந்தர், பதவியாளர், அமைச்சர், பட்டம் பதவி பெற்ரோர், பாமரமக்கள், தொழிலாளி, முதலாளி, ஹிந்து, கிறித்தவர், முஸ்லீம், சைனர், மலாயாமக்கள் புத்த மதத்தினர் — இவர்கள் யாவரும் ஓரினம் என்பதை உணர்ந்து இதை எல்லோருக்கும் உணர்த்துவித்து, ஏகனே தெய்வம் என்பதை அறிந்து எல்லோருக்கும் அதையே அறிவுறுத்திச் சொல்லாலும் செயலாலும் கருணையையே வாரிவாரி வழங்குகின்ற சாமிகள் என்பதை மலாயா மக்கள் நன்ருகப் புரிந்துகொண்டனர். அவர்களுக்குச் சாமிகள் ஒரு கண் கண்ட தெய்வமாக விளங்கினுர். ஒரு கண்கண்ட தெய்வத்தை இப்பிறவியில் காணும் பேறுபெற்ரோம் என்று உள்ளம் பூத்தனர் மலாயா நாட்டு மக்கள்.

தமிழ் நாட்டிலிருந்து எழுந்தருளியிருக்கும் சாமிகள் வைத்திய நாதனுகமட்டுமா மலாயா மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தார். அற்புதத் திருவிளையாடல்கள் புரியும் லீலாவிநோதராகவும் மலாயா மக்கள் கண்களையும் கருத்தையும் கவர்ந்தார். சாமிகள் மலாயாவில் ஆடிய அற்புத லீலைகளுள் சில அபூர்வமானவற்றை மட்டும் இங்குக் குறிப்பிடலாம். தன் திருக்கரத்தைப் பிசைந்து பக்தர்கள் கையில் திருநீறு குங்குமம் மஞ்சள் கொட்டச் செய்யும் சாமிகளின் சாதாரண அற்புதச்செயலே மலாயா மக்கள் அதுவரை கண்டிராதது. சாமிகள் அவர்களுள் ஒருவருக்குக் கடவுளையே காண்பிக்க சித்தம்கொண்டா ரென்ருல் சொல்லவேண்டுமா மக்கள் பேராச்சரியத்தை? பினுங்கில் திரௌபதி என்ற பெண்ணுக்குக் கடவுளைக் காண வேண்டும் என்ற ஆசை எழுந்தது. ஒருவேளை சாமிகள் சக்தியை சோதிக்கத்தான் எண்ணினுரோ என்னவோ? தன் ஆசையை வெளியிட்டாள் பெண்மணி. சாமிகள் தயங்கவில்லை. சாமிகள் கடவுள் ஆசை மூண்ட பெண்ணையும் மற்ருெருத்தியையும் கண்களை மூடிக் கொண்டு தியானம் செய்யச் சொன்னுர். சாமிகளும் தியானம் செய்தார். கண்களை மூடியிருந்த பெண்மணிகளுக்குமுன் அருட்பெருஞ் ஜோதியின் திவ்விய வடிவு ஒளிவீசிப் பிரகாசித்தது. தெய்வீக ஒளியைக்கண்டு தெய்வீக இன்பம் கண்டவர்கள் "கடவுளைக் கண்டோம்" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினர். கோலாலம்பூரில் சாமிகள் தெய்வத் தன்மையை உணர்ந்த ஒருபக்தர் கடவுளையே நேரில் காணும்

பாக்கியம் பெற்றதாகச் சாமிகளைக் கண்டே மகிழ்ந்தார். சாமிகள் தாய்நாடு திரும்பிவிட்டாலும் அவர் அருளை மறவாவண்ணம் சாமிகள் திரு உருவப்படம் ஒன்று தனக்குக் கிடைத்துவிட்டால் அதுவே ஒரு பெரும் பேருகும் என்று எண்ணினர். இதை அறிந்த சாமிகள் "முருகனை வேண்டிக்கொள்ளுங்கள். அவனருளால் உங்களுக்கு வேண்டியது கிடைக்கும்" என்றார். முருகன் அருளை நாடிநின்ற அந்த அருட் கூட்டத்தில் திடீரென்று ஒருபொருள் வெகு வேகமாக பறந்து வந்து சாமிகள் திருக்கரங்களில் அமைந்தது. என்ன ஆச்சரியம்! அது பக்தர் விரும்பிய சாமிகள் அழகான திருப்படமே. சொல்லவும் வேண்டுமோ பக்தரின் பேரானந்தத்தை!

திருமுருகன் அருள் கடலில் நீந்தி விளையாடும் சாமிகளுக்குக் கண்டவர் வியக்கும் அற்புதத் திருவிளையாடல் ஆற்றில் குடைந்து ஆடுவது மிக எளிய காரியம். மலாயாவில் பிரேசர் மலைத் தொடர்கள் மீது மஞ்சு தவழ்கின்றது மேகங்கள் மலைகளில் நீந்து விளையாடுவது போன்றே காட்சியைக் காட்டும். பசுமையும் குளிர்ச்சியும் கூடிக் காண்பவர் உள்ளங்களுக்கு இனிமையை ஊட்டும். இங்கு ஆலயங் கொண்டு எழுந்தருளி இருக்கின்றான் குன்று தோறாடும் குமரக் கடவுள். இத்தகைய அழகுமலை சுகவாசத்தலமாக இருப்பதில் ஆச்சரியமொன்றுமில்லை. இங்குள்ள அரசாங்க இல்லத்தில் சாமிகள் சில நாட்கள் தங்கி இருந்தனர். ஒருநாள் மந்திரி திரு. வி. தி. சம்பந்தம் அவர்கள் குடும்பமும் சில பக்தர்களும் சாமிகளோடு கூடி அளவளாவி இருந்தனர். மந்திரியின் அண்ணார் திரு. வி. தி. சுந்தரம் கேட்ட கேள்வியும் சாமிகளின் பதிலும் அதைத் தொடர்ந்து சாமிகள் நடத்திக்காட்டிய செயலும் கற்றோர் உள்ளத்தைக் கவர்வன.

சுந்தரம்: தாங்கள் நினைத்த மாத்திரத்தில் பொருள்கள் வந்து சேருகின்றனவே? அவை எப்படி வருகின்றன? எங்கிருந்து வருகின்றன? உயிருள்ள பொருள்களும் இவ்வண்ணமே வந்து சேரும் என நம்புகின்றேன்.

சாமிகள்; அறிந்தவர்களுக்கு அருளின் பெருமை தெரியும். கடவுளிடம் தொடர்புகொள்ளும் வாய்ப்பு மனிதனுக்கு ஏற்படுமானால், மனிதன் எத்தனையோ அற்புதங்களை அவன் அருளால் நடத்தலாம். அப்பன் முருகபிரான் எங்கே நான் நினைப்பினும் அங்கே என் முன் வந்து நிற்பானே.

இதைக்கூறி தம் திருக்கரங்களால் சுந்தரம் அவர்களின் கரங்களை மூடச் செய்தார். ஏதேனும் பொருள் தட்டுப்படுகிறதா என்று சாமிகள் கேட்டார். இல்லையென்று சொல்ல, அமைச்சர் கரங்களையும் சுந்தரம் கைகளோடு வைத்து திரும்பவும் ஏதேனும் தட்டுப்படுகிறதா என்றார்

சாமிகள். ஆம், ஒரு பொருள்தான் கைகளினுள்ளே உண்டாகி விட்டது, உருவாகிவிட்டது. அது தட்டுப்படுகிறது. அது ஆடி அசைவதை இருவரும் உணர்ந்தனர். ஏதேனும் விஷஜந்துவாக இருந்தால் என்ன செய்வது என்ற எண்ணம் அவர்கள் மனதில் உதித்தது. அவர்கள் முகத்தில் பயம் படர்ந்தது. "பயம் வேண்டாம். கைகளைத் திறந்து பொருளைக் காட்டுங்கள்" என்றார் சாமிகள். அதுவரை கண்ட ஆச்சரியங்களுக்கெல்லாம் சிகரம் வைத்தது போன்ற ஒரு பேராச்சரியம் விளைவிக்கும் அற்புதமே உருவாகி இருந்தது. ஒரு பறவை! ஒரு வண்ணப் பறவை!! ஓர் உயிருள்ள வண்ணப் பறவை!!! சிட்டு போன்ற அளவுள்ளது அவர்கள் கைகள் கட்டு நீங்க விட்டுவிட்டுப் பறந்தது. சாமிகளைச் சுற்றி சுற்றிப் பறந்து வந்தது. சிட்டுக் குருவியின் வடிவு, தேன்சிட்டுவின் அலகு, மயில்தோகையின் சிறகு, தூய்மையும் மென்மையும் கூடிய திருவழகு — இந்தத் தோற்றப் பொலிவோடு தெய்வக்குருவி அறையையே திருவலம் வந்தக் காட்சி கண்டவரின் கண்களுக்கு இனிய விருந்து. கருத்திற்கும் தெவிட்டாத விருந்து. இந்த வண்ண வடிவின்பக் குருவியை யாருக்கும் விட்டுவிட மனமில்லை. விடாமலிருப்பதும் தப்பென்று எண்ணினர். கடைசில் சாமிகள் திருவுள்ளப்படி யாவரையும் சொக்கி மகிழ்வித்த தேன்சிட்டு ஜிவ்வென்று கைகளிலிருந்து மாயமாக வந்ததைப் போன்று ஜிவ்வென்று அறையை விட்டு ஒரு நொடியில் பறந்துபோய் விட்டது. தேன்சிட்டுதான் மறைந்ததே தவிர அதனுடைய தெய்வீகத் தோற்றமும் அதை உருவாக்கிய சாமிகளின் தெய்வீக சக்தியும் யாவர் மனக்கண்களிலிருந்து மறையவே இல்லை. நேரில் இந்த அற்புதத்தைக் கண்டவர்களுக்கு இந்தக் காட்சியை மறக்கவே முடியவில்லை.

இந்த நிகழ்ச்சி ஒரு கவிஞருடைய கவிதா உள்ளத்தை முற்றிலும் கவர்ந்துவிட்டது. அவர் 'நந்த வனத்திலோர் ஆண்டி' என்ற வர்ண மெட்டில் இந்த வண்ணப் பறவை நிகழ்ச்சியைப் பாட்டாகவே பொழிந்து விட்டார். கேளுங்கள்.

கிழக்கத்திச் சீமைக்குப் போனார் — சாமி
வழக்கம்போல் அற்புதம் காட்டவுமானார்

அழுக்காறுடன் ஒருவன் வந்தான் — சாமி
ஆத்ம சக்தியைச் சோதிக்க நினைத்தான்.

பட்டணம் கோலாலம்பூரு — அதன்
பகுதியாம் பிரேசர் மலையதன் பேரு

உயிருள்ள பொருள் ஒன்றைக்கொண்டா — அதை
உண்டாக்கும் சக்திதான் உன்னிடம் உண்டா?

மயில்வேலன் அருள் உண்மையானால் — அந்த
மகத்துவம் காட்டு என் கண்களின் முன்னால்

என்றே சொன்னான் அந்தப் பக்தன் — அவன்
இருகையும் மூடிடச் சொன்னார் என் ஐயன்

குன்றுடும் வடி வேலைப்பாட — சிறு
குருவி அவன் கையில்தான் விளையாட

ஆச்சர்ய மானதோர் காட்சி — அது
அழகுள்ள மயில் போல இறகுள்ள பட்சி

பேச்சுக்கு சொல்லலே ஐயா — இது
பேப்பரில் வந்த தோர் சங்கதி மெய்யா

சுற்றி நிற்கும் துன்பம் தீர்க்க — இதோ
துள்ளி வருகுது வேல் நம்மைக் காக்க

பற்றும் வினையோடும் தன்னால் — எங்கள்
பன்றிமலை நாதன் அருட்பேரைச் சொன்னால்

வெற்றிவடி வேலன் வாழ்க ! — அவன்
பக்தர்கள் பலகோடி பல்லாண்டு வாழ்க

பத்தரை மாத்துள்ள தங்கம் — எங்கள்
பன்றிமலைச் சிங்கம் கதை கேட்டோர் வாழ்க

வாழி வாழி அடிகள் வாழி — பல
ஊழி ஊழிகாலம் வரை நின்று வாழி !

மலாக்காவில் சாமிகள் விளையாடிய திரு அற்புதங்கள் சில குறிப்பிடத்தக்கன. ஒரு பெண்மணிக்கு ஒன்பது மஞ்சள் கிழங்குகள் சாமிகள் அளித்துப் பிணி நீங்க அவற்றைப் பூசிக் குளிக்கும்படி கூறினார். இதைக் கவனித்து நின்ற தோசெங்வாட் எனும் சீனப் பிரமுகருக்கு, 'மஞ்சள் தேய்த்துக் குளிப்பதால் பிணி நீங்குமா' என்ற ஐயம் ஏற்பட்டது. தன் ஐயத்தையும் கேட்டுவிட்டார்.

சாமிகள் : முருகன் அருள் இருந்தால் அது இயலும்.

சீனர் : எங்கே சாமி, முருகன் அருளைக் காண முடியுமா.

சாமிகள் : காணலாம், இப்பொழுதே காணலாம். இப்போது நான் எவ்வளவு மஞ்சள் கிழங்குகள் இந்தப் பெண்ணுக்குக் கொடுத்தேன்.

சீனர் : ஒன்பது.

அந்த ஒன்பது மஞ்சள் கிழங்குகளையும் அப்பெண்மணி சேலைத் தலைப்பில் வைத்து முடியச் சொன்னார் சாமிகள். அந்த முடியை



ரிஷிகேசம் செல்லும் திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள்



குதிரைவீரர் திரு. இராமசாமிப் பிள்ளை
திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள்
(பக்கம் — 105)

திரும்பி அவிழ்த்துப் பார்க்கச் சொன்னார். என்ன ஆச்சரியம்! அவிழ்த்துப்பார்க்க ஒன்பது மஞ்சள் கிழங்குகளும் பத்தாக மாறிக் கூடி இருந்தன. முருகன் அருளைக் கண்கூடாகப் பார்த்த சீனப்பிர முகருக்கு நம்பிக்கை ஏற்பட்டு விட்டதில் ஆச்சரிய மென்ன இருக் கின்றது. " ஒன்பதைப் பத்தாக்க வல்ல சாமிகள் பிணியையும் போக்க வல்லவரே '' என்று போற்றிப் பணிந்தார் சீனப்பிரமுகர்.

மலாக்கா பிரமுகர் திரு. சி. எம். சேத் (ஜே. பி.) பங்களா கடற் கரையில் அமைந்துள்ளது. அங்குக் கூடியிருந்தவர் முன்னிலையில் முருகன் திருவிளையாடல் ஒன்று காட்டியருள வேண்டும் என்று சாமிகளைக் கேட்டுக்கொண்டார் சேத் அவர்கள். சாமிகள் எல்லோ ரையும் கடலுக்கருகில் அழைத்துச் சென்றார். எதையோ வர வழைத்துக் காட்டப் போகின்றாரென்று ஆவலுடன் காத்திருந்தன அநேகம் கண்கள். சாமிகளின் கண்கள் சேத் அவர்கள் அணிந் திருந்த விலை மதிப்புயர்ந்த வைர மோதிரத்தை கவனித்தன. அந்த வைர மோதிரத்தை சேத் அவர்கள் அண்ணர் மகளைக்கொண்டு கடலில் வீசி எறியச் சொன்னார் சாமிகள். விலையுயர்ந்த மோதிரமான தால் வீசியெறியத் தயங்கினார். இருந்தாலும் சாமிகள் சொல்படி நடந்தார். வீசியெறிந்த மோதிரத்தைக் கடல் விழுங்கி அலைகள் கொண்டு ஆர்ப்பரிப்பதைக் கண்டு திகைத்தன பல கண்கள். கட லுக்குள் மறைந்த மோதிரம் திரும்பவும் வருமா? எப்படி வரும்? சாமிகள் மௌனம் சாதித்தார். எல்லோரையும் மாளிகைக்கே திரும்பவும் அழைத்துச் சென்றனர். மாளிகையில் சாமிகள் சாப்பிட பால் கொண்டு வந்தனர். அந்த பால்கோப்பையை வாங்கிக் கொண்ட சாமிகள் மோதிரத்தைக் கடலில் வீசி யெறிந்த இளைஞரி டத்தில் கொடுத்து பாலை துழாவிப்பார்க்கச் சொன்னார். விரிந்த கடல் நீர் விழுங்கிய மோதிரம் சிறிய கோப்பைக்குள் இருக்கும் பாலி னுள் கிடைத்துவிட்டது! இந்த முருகன் திருவிளையாடலைக் கண்டு வியப்பெய்தி வாயடைத்திருந்தனர் சேத்தும் அவர் நண்பர்களும்.

சாமிகள் கிள்ளான் சிலாங்கூர் மந்திரி திரு. மாணிக்கவாசகம் இல்லத்திற்கு விஜயம் செய்தார். அப்போது கிள்ளான் உயர்நிலைப் பள்ளி ஆங்கில ஆசிரியர்கள் இருவர், திரு பொன்னுசாமி, திரு. சபாபதி சாமிகளிடமிருந்து இரட்சைக் கயிறுகள் வாங்கிக்கொண் டனர். ஆனால் வாங்கிக்கொண்ட கயிற்றைத் தம் கைகளில் கட்டிக் கொள்ளவில்லை சாமிகளுக்குப் புரிந்தது விஷயம். அவர்களுக்கு கயிற்றைக்கட்டிக் கொள்ள வெட்கமாக இருந்தது. அவரவர்களைக் கொண்டே அந்தக்கயிறுகளை துண்டு துண்டாக வெட்டச்செய்து அத் துண்டுகள் அனைத்தையும் எரித்து, அந்தக் சாம்பலை நீரில் கரைத்து ஊற்றிவிடச் செய்தார் சாமிகள். ஒன்றும் புரியாது விழித்துக் கொண்டிருந்த திரு. சபாபதியை அவர் சட்டைப் பையைப் பார்க்கச்

சொன்னர் சாமிகள். சற்றுநேரத்திற்குமுன் எரிந்து சாம்பலாகிக் கரைந்துபோன கறுப்புக்கயிறே சட்டைப் பையில் இருக்கக் கண்ட ஆசிரியர் ஆச்சரியத்தில் மூழ்கினர். தனக்கும் எரிந்து மறைந்த மற்றொரு கயிற்றையும் இப்படியே, தன் சட்டைப்பையிலிருந்து எடுத்துக் கொடுப்பாரோ என்று மனத்தைக் குழப்பிக்கொண்டிருந்த திரு. பொன்னுசாமியைச் சாமிகள் பார்த்தார். அதன்பின் அமைச்சர் வீட்டில் பெரிய பழைய பெட்டி ஒன்று இருந்ததைச் சாமிகள் கவனித்தார். அந்தப் பெட்டி பூட்டியிருந்தது. அதன் சாவி மந்திரியின் தம்பி இடத்தில் இருந்தது. அந்தத் தம்பி மதருசில் அச்சமயத்தில் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். அந்தப் பெட்டியைத் திறக்கச் சொன்னர் சாமிகள். தன் தம்பியிடம் அப்பெட்டியின் சாவி இருப்பதை மந்திரி கூறியதும் சாமிகள் அப்பெட்டியின் பூட்டை உடைக்கச் சொன்னர். அப்படியேசெய்து பெட்டியைத் திறந்தனர். பொன்னுசாமிக்கு கொடுத்திருந்த கயிறு சற்று நேரத்திற்கு முன் அனைவருக்கும் முன்னல் கரிந்து சாம்பலாகிப் போனது இப்போது மிகவும் பத்திரமாகப் பெட்டிக்குள் இருந்ததைக் கண்டு யாவரும் மலைத்து நின்றனர். தம் சிந்தனைக்கு எட்டாத, இந்தப் பேரதிசயங்களைக் கண்டு அதிர்ச்சி யடைந்த இரண்டு ஆசிரியர்களும் உடனே சாமிகள் அளித்த அருள் கயிறுகளை உடனடியாகக் கைகளில் கட்டிக்கொண்டனர் என்று சொல்லவும் வேண்டுமோ?

சாமிகள் மலாயாவில் ஆடி அருளிய அற்புதங்களை மட்டும் குறிப்பிடுவதென்றல் ஒரு தனிப் புத்தகமே எழுதிவிடலாம். அவர்கள் சென்ற இடங்களையும் சென்ற இடங்களில் காட்டி அருளிய சித்துக்களையும் தொகுத்து விவரித்துரைத்த செய்திகளை மட்டும் திரட்டினலும் கூட ஒரு பெரிய நூலாக அமையும். மலாயா நாட்டு முக்கிய பத்திரிகாசியர்கள், உரிமையாளர்கள், நிருபர்கள் எல்லோருமே சாமிகளின் அருட் குணங்களையும் அவர் ஆத்மிக சக்தியின் நற்பயனையும் நேரில் கண்டனர். கோலாம்பூரில் 'நேசன்' பத்திரிகை உரிமையாளரும், ஆசிரிய நிர்வாகப்பகுதியினரும் சாமிகளை தம் காரியாலயத்தில் அன்போடு வரவேற்றனர். 14—12—58ல் சங்க நதி என்ற இடத்தில் சாமிகள் ஒரு கலாசாலை பதிப்பகத்தையும், மலைநாடு வாரப் பத்திரிகை அலுவலகத்தையும் ஆரம்பித்து வைத்து வாழ்த்தியருளினர். சிங்கப்பூர் 'முரசு' பத்திரிகை உதவியாசிரியர் பத்திரிகையின் சார்பில் வந்து சாமிகளைப் பேட்டி கண்டார். சாமிகள் நடத்திக்காட்டும் அற்புதங்களைக் கண்கட்டு வித்தை என்ற எண்ணத்தில் அவர் சாமிகளைச் சந்தித்தார். மனத்தில் உள்ளதையும் மறைக்காமல் கேட்டுவிட்டார்.

**உதவி ஆசிரியர் :—** தாங்கள் விபூதியைக் கற்கண்டாகவும் பூவை எலுமிச்சம்பழமாகவும் மாற்றுவதெல்லாம் வெறும் கண்கட்டு வித்தை என்கிறர்களே?

சாமிகள் : நான் கண்கட்டுவித்தை செய்யவில்லை, என்னிடம் பொய் பித்தலாட்டம் இல்லை. என்னை எப்படி வேண்டுமானாலும் எவ்வளவு வேண்டுமானாலும் சோதிக்கலாம். நான் பணம் சம்பாதிக்க வரவில்லை.

இப்படிக் கூறிவிட்டு ஆசிரியர் கைகளைச் சாமிகள் நீட்டச் சொன்னார். தன் கைகளை அவர் கைகளுக்குமேல் உயர்த்தி 'ஓம் முருகா' என்று கூறி மூடியிருந்த தன் கைகளைத் திறந்தார். உடனே திராட்சைப் பழங்கள் ஆசிரியர் கைகளுள் குபுகுபு வென்று விழுந்து நிறைந்தன. ஆசிரியருக்கு அப்படியே புல்லரித்துப் போய்விட்டது. கைக்குள் கிடைத்த பலன் கைமேல் கிடைத்த பழம், பழங்களைப் பேரன்பு பூத்து ஆசிரியர் உட்கொண்டார். தானே நேரில் சாமிகள் அருட் சக்தியை கண்டுவிட்டார். சாமிகளின் எளிய தன்மையையும் தாயுள்ளத்தையும் சமரச சன்மார்க்க நோக்கையும் புரிந்துகொண்டார். அவர் சாமிகளை விட்டுப் பிரிந்து சென்றபோது அவர்மீது கொண்டிருந்த சந்தேகமெல்லாம் பறந்து போய்விட்டது. உதவி ஆசிரியர் சொல்வதையே கேட்போம். "சுவாமிகள் என்றதும் ஒரு மாதிரியாக இருப்பார்கள், நடை உடை பேச்சு எல்லாம் ஒருமாதிரியாக இருக்கும், எல்லாம் சுத்த ஜாலவித்தை என்கிறார்கள் என்ற எண்ணத்துடனேயே சாமிகளைப் பார்க்கச் சென்றேன். சாமிகளைப் பார்த்ததும் அவர்களது எளிமை என்னைப் பெரிதும் கவர்ந்தது. அந்த எளிமை அந்தக் கணமே எங்களிடையே இதயத் தொடர்பை எழுப்பியது. சவாமிகள் பேசத்தொடங்கியவுடன் அவர்களது பேச்சில் ததும்பிய வாஞ்சையும் தூய்மையும் என்னிடம் இன்னதென்று விவரிக்க முடியாத ஒரு திருப்தியை உண்டு பண்ணின. சாமிகளிடத்தில் ஆடம்பரமோ, ஆணவமோ மருந்துக்கு மில்லை என்பது குறிப்பிடத்தக்க தாகும். ஒருதாயின் வாஞ்சையோடும் பணிவோடும் பேசுகின்றார்கள். அதனால் அவர்களைச் சந்தேகிக்கத் தோன்றவில்லை" இந்த உதவி ஆசிரியர் மட்டும்தானா சாமிகளைக் கண்டு இப்படி அனுபவம் பெற்றார். சாமிகளைக் காணும் ஒவ்வொருவருக்கும் இத்தகைய அனுபவமல்லவா காத்துக் கொண்டிருக்கின்றது.

சாமிகளின் மலாயா நாட்டுப் பயணம் இருவகையில் பயனளித்தது. மலாயா நாட்டைச் சுற்றிப் பார்த்த சாமிகள் மலாயா மக்களாக வாழும் தமிழர்களின் தெய்வபக்தியையும் மலாயாவில் தமிழர்கள் கட்டியிருக்கும் கோயில்களையும் பார்த்தார். அங்கு நம் தமிழர்கள் ஒற்றுமையுடனும் ஆன்மநேய ஒருமைப்பாட்டுடனும் ஆலயங்களிலும் கலைதாபனங்களிலும் கலந்துகொள்வதைப் பார்த்தார். தெய்வீக ஆற்றலும் அருளும் எம்மதத்தினரையும் இழுக்கக்கூடிய சக்தி வாய்ந்தது என்பதை தம்மைப் பார்க்கக்கூடும் பெருங் கூட்டங்களில் சீனர்களும் மலேயா மக்களும் கலந்துகொள்வதிலிருந்து பார்த்தார்.

இதைப் போலவே மலேயா மக்களும் சாமிகளின் தெய்வாம்சத்தைக் கண்டனர். சாமிகளின் அருளைக் கண்டனர். சாமிகளின் காருண்யத்தையும் தாயுள்ளத்தையும் கண்டனர். இருவரும் — சாமிகளும் மலாயா மக்களும்–ஒருவரை ஒருவர் நேரில் கண்டுகொண்டதால் சாமிகள் பரிபூரண கடாக்ஷம் சாமிகளைக் கண்ட மலாயா மக்களுக்கு தங்கு தடையின்றி கிடைத்தது. எல்லோரும் இன்புற்றிருக்க சாமிகள் அயராது சலிக்காது தொண்டியற்றும் வள்ளல் தன்மையை நன்குணர்ந்த மலாயா நாட்டுமக்கள் அதை நன்ருகப் பயன்படுத்திக் கொண்டனர். சாமிகளின் அற்புதங்கள் அநேகருக்கு இறைவன் நம்பிக்கையை ஏற்படுத்தியது, எண்ணிறந்தவர்களின் தீராத நோய்களெல்லாம் அகன்றன. சாமிகள் மலேயா நாட்டைவிட்டுப் பிரியும்போது சாமிகளின் பால் அளவு கடந்த பக்தியும் பேரன்பும் கொண்டுள்ள மக்கள் இவ்வளவு சீக்கிரத்தில் சாமிகள் தாய்நாடு திரும்புகின்ருர்களே என்று மனம் விட்டு மொழிந்தனர், கண்ணீருகுத்தனர். சாமிகள் தாய் நாட்டுக்கு கப்பலேறியவுடன் மலாயா தமிழ்மக்கள் உள்ளங்களும் தாய் நாட்டின் தெய்வங்களையும் அருள்பிரகாச வள்ளலார்களின் தெய்வத்தன்மையையும் நினைத்து நினைத்து இன்புற்றிருந்தன. இந்திய நாடாகிய அவர்கள் தாய் நாட்டில் பேரின்ப நிலை அடைய வழிகாட்டிய பெருந்தகைகள் வாழையடி வாழையாக வந்துகொண்டே இருக்கின்றனர். ஆழ்வார்கள், நாயன்மார்கள், திருமூலர், பதினெண் சித்தர்கள் — இவர்கள் சென்ற வழியிலே இவர்கள் காட்டிய நெறியிலே வந்தருளிய ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகளை மனமொழி மெய்களால் வழுத்தி வழுத்திப் பூரிப்படைகின்றனர்.

இந்தியாவை விட்டு வெளிநாடுகளுக்குச் சென்று வந்த தவவலிவுடையோர் சிலருண்டு. சாமிவிவேகாநந்தர் அமெரிக்க நாட்டில் சிகாகோ நகரத்தில் நடந்த உலக மத மகாநாட்டில் கலந்து கொண்டு சங்கநாதம் ஒலித்து இந்தியாவுக்குப்பெருமை தேடித் தந்ததை நாம் மறந்துவிட வில்லை. சுவாமி ராம தீர்த்தர் அமெரிக்க நாட்டிற்குச் சென்று நமது வேதங்களின் மெய்ப்பொருளைப் பிரபல பல்கலைக்கழகங்களில் இந்தியர் பெருமைப் படும் அளவுக்கு விளக்கி வந்ததும் நாம் மறந்து விடவில்லை. இவர்கள் முற்றும் துறந்த ஞானியாகவே வெளிநாடு சென்று வந்தார். 1958ல் மலாயா நாட்டிற்குச் சென்று வந்த சாமிகள் தன் வாழ்க்கைத்துணைவியோடே அங்கு அழைக்கப்பட்டார். அங்கு நமது மூல மந்திரங்களின் உட்பொருளையும், உட்பொருளை உணர்த்துவிக்க அற்புதங்களையும், அற்புதங்களால் இறைவன் தண்ணளியையும், அத் தண்ணளியால் தீராத வியாதிகளைத் தீர்த்துவைக்கும் தன்மையும் மக்களுக்குக் காட்டிவந்தனர். "நான் என்னை விளம்பரப் படுத்திக் கொள்ளவோ, அன்றிப்பிறரின் பாராட்டுதலைப் பெறுதற்காகவோ அல்லது பொருளை விரும்பியோ இங்கு வரவில்லை. இறவாமல்

பிறவாமல் எமையாளும் சற்குண நாதனுகிய முருகப் பெருமானைச் சதா உபாசித்தால் பெருவாழ்வு கிட்டும். எம்பெருமானின் திரு வருள் எங்கும் பொங்கி வழிந்தோடுகின்றது. அதில் எளியேன் தவழ்ந்து அருளின்பம் பெறுகின்றேன். அந்த அருளின்பப் பெரு வெள்ளத்தில் ஏழை என்றும் செல்வர் என்றும் பாகுபாடின்றி அவரவர் பக்குவத்திற் கேற்றபடி அருந்துங்கள். எல்லாவினையும் தீரும். முருகன் பேரருள் கிட்டும்.'' என்றல்லவா தன் குறிக்கோளை தெளிவாக திருவாய் மலர்ந்தருளி இருக்கின்ருர். மலாயா பத்திரிகை தமிழ்நேசன் உரைத்தபடி ''சாமி எளிய சுபாவமுடையவர். இல்லறத் திலிருந்து துறவறத்தின் சிகரத்தை எட்டியவர். எதிலும் ஒட்டியும் ஒட்டாதிருந்து, எட்டியும் எட்டாதிருக்கும் மயிலேறிய முருகப் பெருமானைப் பலகாலம் தியானித்து சித்தி பெற்றவர். தாம் பெற்ற சித்தியை இவ்வையகமும் பெறவேண்டும் என்ற பெருநோக்கோடு மலாயா போந்துள்ளார்.'' அது மட்டுமல்ல. மனிதனிடம் மறைந்து கிடக்கும் மகாசக்தியையும் மக்களுக்குக் காண்பிப்பதே நோக்கமாக வும் சாமிகள் மலாயா நாட்டுக்குச் சென்று திரும்பி உள்ளார். இதைப்பற்றிச் சாமி சொல்வதையே கேட்போம். ''மனிதன் என் பதற்கு உள்ள சொல் மனுஷன் என்பது. இது மனு ஈசன் என்று பிரிக்கப்படக்கூடியது. அதாவது எவ்வாறு மனிதனின் உடம்பும் ஈசனின் இருப்பிடம் என்பதனைக் காட்டுகின்றதோ அவ்வாறே மனி தனிடம் மறைந்துகிடக்கும் மகா சக்தியை மனிதனுக்கு ஜீவாதார மானதாக இருக்கிற ஆத்மார்த்த அம்சத்தைப் பலரும் உணரும்படி செய்யவேண்டுமென்பதே நம் நோக்கம்.'' யாரொருவர் மற்றவர் களுக்காக வாழவேண்டும் என்று நினைத்து நினைத்தபடி வாழு கின்ருரோ அவரே உண்மையாக வாழ்கின்ருர். மற்றவரெல்லாம் உயிரோடு இருந்து என்ன பயன். அவர் இறந்தவருக்கு ஒப்பான வரே யாவர். இவை சாமி விவேகாநந்தருடைய பொன்மொழிகள். ''தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்ருர் சைவப் பெரியார் ஒருவர். ''என்கடன் பணி செய்து கிடப்பதே'' என்ருர் மற்ருெரு சைவபக்தர். மனிதத் தன்மையின் அடிப்படை தத்துவ மாகிய சேவைத் தத்துவத்தைப் பெருக்கிய பெருமான்கள் போன்றே நமது சாமிகளும் தாய் நாடென்றும் பிறநாடென்றும் பார்க்காது மனித சமுதாயத்திற்கே திருத்தொண்டு செய்து வருவது, அளவிட முடியாத பெருமைக்குரியது. மனப்பிணி உடற்பிணி போக்கவல்ல மனித தெய்வமாகிய சாமிகள் உலகத்தில் கிடைத்தற்கரிய 'கருணை உயிரோவியமாக' உலகநன்மைக்கே உலககுலத்திற்கே வாய்த் திருக்கின்ருர். ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற பண்பில் விளைந்த இந்த மூதறிஞர் உலகமே உரிமை கொண்டாடும் பேரறிஞர். பாண்டிய நாடென்ன, தமிழ்நாடென்ன, இந்திய நாடென்ன, இலங்கை என்ன, சிங்கப்பூரென்ன, மாலாயாநாடுகள் என்ன—உலகநாடுகளுக்கே அவதரித்துள்ள மகாபுருஷன். வாழ்க

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள்! வாழ்க அவர்களின் உலகத் திருத் தொண்டு!

## சென்னையில் காலத்திற்கேற்ற அருள்தூதர்

"வென்றிமிகும் நற்சமயம் விளக்கமுற
வெள்ளிடையின் மலையேயென்னத்
துன்றியநல் சித்ததனைத் துணையாகக்
கொண்டு நல்லறமே பூண்டு
கன்றிய நல் உள்ளத்தோர் கவினுறவே
வழியதனைக் காட்டும் பெம்மான்
பன்றிமலை அடிகளவர் பாதபங்
கயங்களிணை பாரில் வாழி!

—சென்னை வித்வான் அம்பை இரா. சங்கரனுர்.

மக்களுக்கு இன்றியமையாதது இன்பம். உலகில் வாழ்கின்ற மக்கள் நிரந்தரமாக இன்பத்தை அனுபவிப்பதில்லை. ஆனால் பரிபூரண ஆனந்தத்தை அடைந்துள்ள பெரியவர்களும் அவ்வப் போது உலகம் உய்யத் தோன்றுகின்றார்கள். அல்லல் உலகில் அவதிப்பட்டுழலும் மாந்தர்க்கு அருமருந்தாகவும் இப்பெரியவர்கள் உதவுகின்றார்கள். அவர் தாளைப்பற்றிச் சரணடைந்தோர்க்கு மனக் கவலை சூரியனைக்கண்ட பனிபோல் நீங்குகின்றது. இப்படிப்பட்ட பெரியவர்களையல்லவா தனக்குவமை இல்லான் என்று உலகம் ஏத்துகின்றது. காரணம் தான் அனுபவிக்கின்ற பரிபூரணனந்த நிலையிலிருந்து மற்றவர்களுக்கு இன்பத்தை அள்ளி அள்ளி ஈந் தருளுவது அவர்களின் ஈகைக் குணமாகும். இத்தகையோர் வருகைக் காக ஏங்கித் தவித்திருக்கும் உள்ளங்கள் இவர் தம் நகருக்கு வந்து விட்டால் திருநாள் கொண்டாடத் தயங்குவரோ? வரவேற்பும் உரு வாகின்றது. மலர் மாலைகளும் புகழ்மாலைகளும் வரவேற்பு மாலை களும் தயாராகின்றன. பெரியவர்களை அங்குளிரப் பொன்னுடை போர்க்த்திக் கெளரவிக்கின்றனர். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் செல் லும் இடமெல்லாம் சிறப்பு, அந்த இடங்களில் கோயில் கொண்டுள்ள திருத்தலங்களின் சிறப்பினைப் போன்று! மதுரை, திருமங்கலம், ஐயனுவரம், ராசிபுரம், திருப்பதி, பம்பாய் முதலிய இடங்களில் சாமி களுடைய திருப்பெயராலேயே சத்சங்கங்கள் உருவாகி இருக்கின்றன. சாமிகளுடைய திருப்படங்கள் கொண்ட ஆலய அறைகள் பக்தர்கள் இல்லங்களுக்கு அரண் ஆகின்றன. ஒருசில வீடுகளில் அமைந் துள்ள படங்கள் ஆலய விசேடங்களுடன் பக்தர்களை கூட்டுவிக் கின்றது. மதருசில் ஐயனுவரத்தில் திரு. மணி அய்யர் வீட்டு மாடி யில் அமைந்துள்ள சாமிகளின் ஆலய அறை பக்தர்களைத் தினசரி

இழுக்கின்ற காந்தமாக விளங்குகின்றது. அங்கு தினசரி பூஜையும் நடக்கின்றது. முக்கியமான நாட்களில் பஜனையும் நடக்கின்றது. சாமிகள் மதுரசில் தங்கி இருக்கும்போது ஒரு நாளைக்காவது இந்த அன்புப்பீடத்திற்கு அடியெடுத்து வைக்காமலிருக்க மாட்டார். அந்தச் சமயம் சாமிகளுடைய திருவடிகளுக்குப் பக்தர்கள் ஆன்மநேய ஒருமைப்பாட்டோடு பூஜை செய்யும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். கூடி இருக்கின்ற அன்பர்களெல்லோரும் கூட்டமாய் சாமிகள் போற்றிபாடி கூட்டமாகவே சாமிகளுடைய சரணக்கமல திருவடிகளுக்குக்கூட்டு மலர்கொண்டு அர்ச்சனை செய்கின்ற கூட்டழகு கற்றோர் மனத்தை கவருனவாக அமையும். பம்பாயில் செம்பூரில் 'ரேவதி' என்ற இல்லமும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் கோயிலாக விளங்குவதும் குறிப்பிடத்தக்கது. திருச்சானூரில் ஸ்ரீ அலமேலு மங்கை கோயிலுக்கு முன் தெருவில் சாமிகளின் திருப்படம் கொண்ட ஒரு திருக்கோயிலும் உண்டு. சாமிகள் அவர்களை வீட்டிற்கழைத்து பாதபூஜை செய்து மகிழ்வதைப்போல, பெருநகரங்களும் சாமிகளுக்கு வரவேற்பளித்து பொன்னுடை போர்த்தி பெருமகிழ்வெய்துகின்றனர். பெருநகரங்கள் மட்டுமென்ன, மலேயா, சிங்கப்பூர், சிலோன் — வள நாடுகளும் சாமிகளை வரவேற்று மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றன.

சாமிகள் மலேயாவுக்குச் சென்று வந்த சிறப்பினைப் படித்து மகிழ்ந்தோம். மலேயா சென்று வந்த சாமிகளுக்கு தமிழ் நாட்டின் தலைநகராகிய சென்னையில் ஒரு குதூகலமான பொது வரவேற்பு 16-12-58ல் ஏற்பாடாகி இருந்தது. சைவப் பெரியார் திரு. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் இந்த பொது வரவேற்பு நிகழ்ச்சியில் தலைமை தாங்கி சாமிகளை "காலத்திற்கேற்ற அருள் தூதர்" என்று வரவேற்று சாமிகளுக்கு பொன்னுடை அணிவித்தார். இந்த பெருவிழாவில் சென்னை நகர மேயர் திரு. கமலக் கண்ணன் அவர்களும், அறிவாற்றல்மிக்க திரு. கி. வா. ஜகந்நாதன், திரு. பகீரதன், திரு. வி. எஸ். கிருஷ்ணசாமி முதலியோர்களும் பங்கெடுத்துக் கொண்டனர். நகரும் எழுத்தாளர்களும் சாமிகளை வரவேற்றதில் ஒரு சிறப்பு. அவர்கள் நிகழ்த்திய அறிவுரையிலும் ஒரு தனி சிறப்பு.

கடவுளைப் பலர் பலவிதமாகக் கண்டு ஆனந்தமடைவதைப் போன்று சாமிகளைக் கற்றோரும் பலவிதமாகப் போற்றலாயினர். சாமிகளின் சித்தமிசை குடிகொண்ட பரிபூரணனந்தன், சாமிகளை சித்துக்கள் புரிந்து மக்கள் மனத்தை கொள்ளை கொள்ளச் செய்துள்ளான். சாமிகளை 'காலத்திற்கேற்ற அருள் தூதர்' என்று போற்றிப் பேசிய திரு. சச்சிதானந்தம் பிள்ளை சாமிகளுடைய அருளைப் பற்றியும் அவர் அற்புதங்களைப் பற்றியுமே அருமை உரை ஆற்றினர். "கடவுள் இல்லை என்போரைத் தத்துவம் பேசித் திருப்ப முடியாது. மனித அறிவுக்கு அப்பாற்பட்ட தெய்வத்தின் அருளால் பெற்ற

இத்தகைய சித்துக்களைக் காட்டினால் நாத்திகம் தானே அடங்கி விடும்" என்று பேசினார். நவீன நாகரிகமும் விஞ்ஞானமும் செழித்திலங்கும் சென்னை நகரத்தின்மேயர் திரு. கமலக்கண்ணன் உண்மை மொழிகளும் ஊன்றிக் கவனிக்கத் தக்கன. கமலக்கண்ணன்: "நவீன நாகரிகம் விஞ்ஞானம் காரணமாக அன்பு குன்றி மக்கள் பல இன்னல்களுக்கு ஆளாகி வரும் இந்நாட்களில் ஆண்டவன் அருளைப் பெற்ற ஒருவர் மக்களிடையே மனத்தில் பக்தியை வளர்க்க முன் வந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. அவரை நான் சென்னை மக்கள் சார்பில் வரவேற்கின்றேன்" சென்னை மேயரைத் தொடர்ந்து பேசிய இலக்கிய அறிஞர் திரு. கி. வா. ஜெகநாதன் சாமிகளுடைய அன்பு நெறியைப் போற்றிப் பேசினார். கி. வா. ஜெகநாதன் : "ஸ்ரீ பன்றிமலை சாமிகளிடத்தில் காணப்படும் அற்புதச் செயல்களைப் பாராட்டுவதைவிட அவருடைய பக்தியையும் அன்பு நெறியையும் வளர்த்து, அவன் திருநாமத்தை ஏற்றி போற்றிப் பெரியாராகத் திகழும் பன்றிமலை சாமிகளைப் பாராட்டி வரவேற்கினறேன்"

இவரைத் தொடர்ந்து பேசிய இலக்கிய அறிஞர் திரு. பகீரதன் சாமிகளின் விபூதி மகிமையைப்பற்றி அழகான உரை நிகழ்த்தினார். பகீரதன் : "இன்று அணுகுண்டுச் சாம்பல் செய்யும் பல தீமைகளைக் காணும்போது, திருநீற்றின் நன்மையையும் அதன் சக்தியையும் ஏன் நம்பக்கூடாது? நாத்திகப்பிரசாரம் நமக்கு புதிதல்ல. நாத்தியத்தை நாட்டிலிருந்து விரட்ட சாமிகள் உதவுவர்"

இலக்கிய ஆற்றல் மிகும் திரு. V. S. கிருஷ்ணசாமி காலத்திற் கேற்ற அற்புத புருடர் என்று சாமிகளை விவரித்தார்.

V. S. கிருஷ்ணசாமி : "சாமிகள் ஆற்றிவரும் அற்புதம்தான் பிரத்தியட்சமாக மக்களை நம்பிக்கை யுள்ளவர்களாக்குகின்றது. விஞ்ஞான சாதனைகளைக் கண்டு விஞ்ஞானத்தைப் போற்றுவது போல கடவுள் அருளையும் நாம் போற்ற வேண்டுமானால் இத்தகைய சித்துக்களைக் காட்டித்தான் அதைச் சாதிக்கமுடியும். இந்த அற்புதங்கள் இன்றைய உலகிற்கு அவசியமே"

இந்தக் கூட்டத்தில் பேசிய மற்றொருவர் ஒரு முகமதியர். அவர் முருகபக்தரும் கூட.

அன்பர்களுடைய வரவேற்பு உரைகளைக் கேட்ட சாமிகள் தன்னுள் உருவாகி இருக்கும் சக்தியினை விளக்குவது போன்றும் 'கடவுள்' என்ற சொல்லுக்கு ஒரு விளக்கம் கொடுத்தார். "கடவுள் 'என்பது கட உள்ளே" என்று விரியும். அதாவது அறிவை உள்ளே செலுத்து என்பதே இதன் பொருள். இவ்வாறு அறிவை உள்ளே

செலுத்தினால் ஆண்டவன் முருகன் காட்சியளிக்கின்றான். அருள் பாலிக்கின்றான். நாம் எண்ணியதை ஈடேறச் செய்ய முகமலர் கின்றான். இதுதான் என் அனுபவம். இத்தகைய உயர்நிலையை எய்த இல்லறத்தைத் துறக்க வேண்டிய அவசியம் இல்லை''

சாமிகளுடைய அருள் வாக்கும் வரவேற்புரை செய்த அன்பர்கள் பேச்சும் "சாமிகள் காலத்திற்கேற்ற அருள் தூதர்'' என்பதையே மெய்ப்பித்து விட்டன. சாமிகள் காலத்திற்கேற்ற வாழ்க்கை நடத்துபவர். உலகைப் பழித்துத் தூற்றும் கமண்டல சன்யாசி யல்ல. நல்லறமாம் இல்லறத்தை ஏற்று வாழ்வாங்கு வாழும் சீலர். இக்காலத்தில் எதைச் சொன்னாலும் நிரூபித்துக் காட்ட வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. விஞ்ஞானிகள் கூறுவதெல்லாம் நம்பக் கூடியனவா? சந்திரமண்டலத்துக்குச் சென்று விடலாம் என்றால் நம்மால் எளிதில் நம்பமுடிகின்றதா? அப்படிச் செய்து காட்ட சில முயற்சிகள் நடத்திக் காண்பிக்கும் போதுதான் இது முடியும் என்ற நம்பிக்கையும் ஏற்படுகின்றது. "கடவுள் இருக்கின்றாரா'' என்ற கேள்விக்கு சுலபமாக 'இருக்கின்றார்' என்று பதில் அளிக்கமுடியும். கடவுளிருப்பதை நிரூபித்துக் காட்டு என்று சொல்லும் போதுதான் அது அவ்வளவு சுலபமான வேலையல்ல என்பது புலனாகும். இதை நிரூபித்துக் காண்பிக்கத்தான் அற்புதம் ஆடவல்லார் ஒருவர் வேண்டி இருக்கின்றது. காலத்திற்கேற்றபடி அப்படி நிரூபித்துக் காட்டக் கூடியவர் சாமிகளே என்று சொல்லவும் வேண்டுமோ, "சாமிகள் காலத்திற்கேற்ற அருள் தூதர்'' என்பது எவ்வளவு பொருத்தமாக உண்மையாக இருக்கின்றது. அவர் அருளை நாடி உய்விக்கும் மக்களே அவர் எங்குச் சென்றாலும் அவரை நாடி நலம் அடைகின்றனர். அவர் கொடுக்கும் அருள் விபூதியினால் மனப் பிணியும் உடற்பிணியும் நீங்கி இன்பமடைகின்றனர்.

சென்னையில் சாமிகளுக்கு எண்ணிறந்த பக்தர்களுண்டு. கலைஞர்கள், வைத்திய நிபுணர்கள், உயர்நீதி மன்ற நடுவர்கள், பெரிய வழக்கறிஞர்கள்,—இவர்களுக்கு உறைவிடமாகிய தமிழ் நாட்டில் தலை நகரிலே சாமிகள் ஆடி அருளிய அற்புதங்கள் எண்ணற்றவை. அவைகளுள் தலைசிறந்த உயிரூட்டும் அற்புதம் ஒன்றை மட்டும் உரைப்பது மிகப் பொருத்தமாகும், சென்னை என்றவுடன், அற்புதம் என்றவுடன் மயிலை நமக்கு நிச்சயமாக நினைவுக்கு வரும். மயிலாப்பூர் என்று விளங்கும் கபாலீச்சுரர் ஆலயத்தைச் சுற்றி இருக்கும் ஊரில் பல நூற்றாண்டுகளுக்கு முன் நடந்த ஒரு அற்புதத்தை நினைவுபடுத்திக் கொள்வோம். திருமயிலாப்பூரில் சிவநேசச் செட்டியார் எனும் சைவப் பெரியார் திருஞானசம்பந்தரின் அருட்செயல் களை வியந்து அவர் திருவருளை சிந்தனையில் பதித்து அவர் திருவருகைக்காக ஏங்கி இருந்தார், "அவருக்கே என் பொன்னும் பெண்

ளும் உரியள வாகுக" என்று சங்கற்பித்திருந்தார். ஆனுல் அந்தப் பெண் பாம்பு கடித்து இறந்தாள். உயிரோடு தன் மகளை திருஞானசம்பந்தரிடம் ஒப்புவிக்க முடியாவிட்டாலும் அவள் எலும்புகளையேனும் அவரிடம் ஒப்புவிப்பேன் என்று மகளின் எலும்புகளை ஒரு குடத்தில் வைத்துப் பூசித்து வந்தார் சிவநேசர். திருஞான சம்பந்தர் பக்தடைய வரவேற்பிற் கிணங்கி மயிலாப்பூர் வந்தடைந்தார். காபாலீச்சுரர் கோயில் மதிற்புறத்துக் கொண்டுவந்து வைத்திருந்த எலும்புக் குடத்தை சிவநேசர் திருஞான சம்பந்தரிடம் காண்பித்து, "தங்களுக்கென வளர்த்து வந்த என் மகள் பூம்பாவை பாம்புக் கடித்து இறந்துவிட்டாலும் அவள் எலும்புகளை தங்களிடம் ஒப்புவிக்க காத்திருந்தேன்" என்று அடிகள் உளமுருகிக் கூற இந்த அதிசயமான செயலைக் கேட்ட திருஞான சம்பந்தர் இந்த அதிசயச் செயலை மிஞ்சுகின்ற ஒரு அதிசயத்தையே காட்டிவிட்டார். திருஞான சம்பந்தர் இறைவன் திருவருளை நினைந்து 'மட்டிட்ட புன்னை' எனும் திருப்பதிகம் பாடினுர்.

"மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்(கு)
அட்டிட்டங் காணுதே போதியோ பூம்பாவாய்"

இந்தத் திருப்பதிகம் பாட எலும்புகள் கூடி தசைபெற்று பூம்பாவை உருவெய்தி உயிர்பெற்றெழுந்தன. இறந்து சாம்பலாகி இருந்த பூம்பாவை உயிர்பெற்றாள். இந்த அற்புதச் செயலை இன்று நினைவூட்டுவதற்குக் காரணம் 1962ல் சாமிகளும் இதற்கீடான ஒரு அற்புதத்தை ஆடிக் காண்பித்தனர் என்பதை அறிவிப்பதின் பொருட்டோ.

சேலத்திலிருந்து வந்த சாமிகளின் பக்தர் ஒருவருக்குப் போன உயிரைச் சாமிகள் மீட்டுக்கொடுத்த அற்புதம் அங்குக்கூடியிருந்த அறிவாளிகளையும் பிரபல டாக்டர்களையும் பேராச்சரியத்தில் மூழ்க்கியது. சாமிகளின் திருவருளை நேரில் கண்டவர்கள் சாமிகளின் இறை சக்தியை நேரே உணர்ந்தனர். M. பார்த்தசாரதி செட்டியார் என்பவர் சாமிகளது அருமை பக்தர். சாமிகள் திரு. T. S. சாமிநாதய்யர் அவர்களுடைய தங்கை திருமணத்தையும் மகனுடைய உபநயனத்தையும் நடத்தி வைக்க சென்னை வந்திருந்தார். இந்த வைபவங்களைக் காணச் செட்டியார் அவர்கள் சேலத்திலிருந்து வந்திருந்தார். சேலத்திற்கு திரும்ப 22—11—62ல் இரயிலில் ஒரு இடத்தை தனக்கென்று ஏற்பாடு செய்ய அவர் நண்பர் சாமிநாதய்யர் அவர்களிடம் சொல்லி இருந்தார். ஆனுல் அய்யர் சாமிகளைக் கலந்து செட்டியார் சேலம்

திரும்ப 23ஆந் தேதிக்கே ஒரு இடத்தை அவருக்கென்று ஏற்பாடு செய்தார். செட்டியார் பிடிவாதக்காரர் என்பதை அறிந்தே ஒருநாள் பயணத்தை ஒத்திப்போட்ட ஏற்பாட்டையும் செட்டியார் அவர்களுக்கு முன்கூட்டி அறிவிக்காமல் இருந்தார்கள். செட்டியார் அவர்கள் 22ஆந் தேதி ஊருக்குத் திரும்ப சாமிகளிடம் உத்திரவு பெற வந்தார். சாமிகள் "சேலத்திற்கு நாளை மாலை புறப்பட்டு வருவதாகத் தந்தி கொடுத்து விடுங்கள். இன்று புறப்பட்டுப் போகவேண்டாம்" என்று கண்டிப்பாக உரைத்து விட்டார். சாமிகளுடைய ஆத்ம பக்தர்கள் ஊருக்குச் செல்லும்போதெல்லாம் சாமிகளுடைய ஆசியைப் பெற்றுக்கொண்டே பிரிவது வழக்கம். சாமிகள் நோக்கம் எப்படியோ அப்படியே அவர்கள் நடந்து கொள்வதும் வழக்கமாகி விட்டது. குருநாதன் சொல்படி செட்டியார் அவர்களும் சென்னையில் 22—10—67 தங்கி விட்டார்கள், சாமிகள் சொற்படி நடப்பது உசிதம் என்பதை உணர்ந்த செட்டியார் அவர்களுக்கு சாமி ஏன் ஒரு நாள் தன் பயணத்தைத் தள்ளி வைத்தார் என்று அறியும் ஆற்றல் இல்லை. அன்று யாருக்கும் இந்த ஆற்றல் இருந்திருக்க முடியாது. 22ஆந் தேதி இரவு நடந்த சம்பவத்தாலல்லவா சாமிகள் ஏன் பக்தரை ஒருநாள் மதரூசில் தங்கிச்செல்ல கட்டளை யிட்டார் என்பது புரிய வந்தது.

22—11—62ல் சென்னையில் அய்யனுவரத்தில் உள்ள ஸ்ரீ பன்றிமலை சாமிகள் சத்சங்கத்தில் சாமிகள் திருஉருவப்படம் பிரதிஷ்டை செய்துள்ள திருக்கோயிலில் சாமிகளுக்கும் அம்மா அவர்களுக்கும் தெய்வீகத் தம்பதிகளுக்குப் பாதபூசை வெகு விமரிசையாக நடத்த ஏற்பாடாகி இருந்தது. பக்தர்கள் பஜனையில் ஈடுபட்டிருந்தனர். இந்த சந்தர்ப்பங்களில் சாமிகளைக் கண்டு ஆசிபெற சாமிகளின் ஆப்த சீடர்களும் பக்தர்களும் நூற்றுக்கணக்கில் வருவதுண்டு. ஐயனுவரத்திலும் அதற்கு அருகாமையில் உள்ள திரு. மணி அய்யர். திரு. முத்துக்குமாரசாமி, திரு. சண்முக சுந்தரம், திரு. ரா. பு. தங்கராஜன், திரு. கிருஷ்ணமூர்த்தி முதலியோர் இந்தச் சந்தர்ப்பங்களில் பெரும்பங்கு எடுத்துக்கொள்வர். 22—11—62ல் நடக்க இருக்கும் பாத பூசையைக்காண சாமிகளின் அருமை சீடர்களான சென்னை அரசாங்க மருத்துவப் பணிகளின் உதவிடைரக்டர் டாக்டர் மேஜர் குமரவேல் அவர்களும் அரசாங்க ஸ்டான்லி வைத்திய நிலையத்தில் மூளை வியாதிகள் நிபுணர் டாக்டர் நரேந்திரன் M. S., F, R. C. S., அவர்களும், சென்னை சர்க்கார் ஜெனரல் வைத்திய நிலைய கௌரவ உதவி சர்ஜன் டாக்டர் C. காசி விஸ்வநாதன், M. B. B. S., அவர்களும் வந்திருந்தார்கள். 22—11—62ல் சென்னை ஐயனுவரத்தில் நடக்க இருக்கும் அற்புதத்தில் இவர்களுக்கும் பங்குண்டு என்பதைச் சிறிது நேரத்தில் அறியப்போகின்றோம்: இரவு 8-15 மணிக்கு ஆரம்பித்த பாத பூசை வெகு விமரிசையாக பக்தர்கள் பஜனை முழங்க நடந்துகொண்டி

ருந்தது. இந்த வைபவத்தைக்காண சேலம் திரு. M. பார்த்தசாரதி செட்டியாரும் வந்திருந்தார். சாமிகளின் பாதபூசை ஆனந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டு அவரும் சில பக்தர்களும் கோயில் அமைந்துள்ள மாளிகைப்பிடிச் சுவரின் மேல் சாய்ந்துகொண்டிருந்தனர். பூசைமுடிய சாமிகள் பக்தர்களுக்கு விபூதிப் பிரசாதம் வழங்கிக்கொண்டிருந்தனர். சேலம் செட்டியார் அவர்களுக்கு திடீரென்று மயக்கமேற்பட்டு நிலை தடுமாறியதைக் கண்ட அவர் நண்பர் அருகில் இருந்த டாக்டர் காசி விசுவநாதனை அழைத்துக்கொண்டு வந்தார். திடீரென்று அவர் உடம்பு குப்குப்பென்று வியர்த்தது. மூச்சு விடுவதற்குக்கூட திணறிக்கொண்டிருக்கின்றார். முகம் நீலநிறமாகி விட்டது. அவர் டாக்டர் மீதே சாய்ந்து தன் தலையை டாக்டர் தோள்மேல் சாய்த்துக்கொண்டார். டாக்டர் உடனே அவரை தரை மீது படுக்கவைத்து அவர் நாடியைப்பரிசோதித்தார். நாடியே இல்லை. அவர் இறந்துவிட்டார் என்பதற்குரிய சகல அறிகுறிகளும் இருந்தன. டாக்டர் குமரவேலும் டாக்டர் நரேந்திரனும் நாடியைப் பரிசோதித்து விட்டு பார்த்த சாரதிச் செட்டியார் இப்பூவுலகை விட்டு நீங்கிவிட்டார் என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினார்கள். செட்டியாருக்கு உடல்நிலை மோசமாகி விட்டதென்பதைக் கேட்ட சாமிகள் அம்மா அவர்களோடு ஓடோடி வந்தனர்.

**சாமிகள் :** (டாக்டர்களைப் பார்த்து) என்ன சாமி.

**ஒரு டாக்டர் :** நாங்கள் இதுமாதிரி ஒரு விஷயத்தை ஸ்ரீசாமிகள் அவர்களிடம் தெரிவிப்போம் என்று கனவிலும் நினைக்கவில்லை.

**சாமிகள் :** என்ன, சாமி! விளங்கச் சொல்லுங்கள்.

**டாக்டர் :** சாமி, நாடியே இல்லை. செட்டியாருக்கு ஏற்கனவே இருதயக் கோளாறு இருந்திருக்கவேண்டும், இதயம் நின்று விட்டது. நாடி இல்லாததனால் நாங்கள் ஒன்றும் செய்வதற்கில்லை.

சாமிகள் உடனே பஞ்சாக்ஷரத்தை செட்டியார் நெற்றியில் தனது திருக்கரம் கொண்டு தடவி விட்டார். சாமிகளின் கட்டளைப் படி டாக்டர் காசிவிசுவநாதன் செட்டியாரின் நாடியைச்சோதித்தவாறு இருந்தனர். ஆச்சரியத்திலும் ஆச்சரியம் என்னவெனில் சாமிகள் தமது திருக்கரத்தின் பெருவிரலை நெற்றியிலிருந்து எடுத்தவுடன் செட்டியாரின் நாடி பேச ஆரம்பித்தது. டாக்டர்கள் ஒவ்வொருவராக ஆச்சரியத்தால் அவர் நாடியைச் சோதிக்க முற்பட்டனர்.

டாக்டர் : கொஞ்சம் கொஞ்சமாக நாடிவருகின்றது. இருந்த போதிலும் இப்பேர்ப்பட்ட கேசுகளை நம்புவதற் கில்லை.

சாமிகள் : அப்படி ஒன்றும் இல்லை. இன்னும் எத்தனையோ பேர்களை அவர் அனுப்பவேண்டியிருக்கிறது.

இதன்பின் செட்டியார், மெதுவாகத் தலையை அசைத்தார், கண் திறந்தார், சுற்றிலும் பார்த்தார், சாமிகளை அருகில் கண்டார். கண் களிலிருந்து நீர் வடிய அப்படியே சாமிகளின் திருவடிக் கமலங்களை இறுகக் கட்டிக்கொண்டார்.

சாமிகள் : ஒன்றும் இல்லை, சாமி. சரியாகப் போய்விடும். பயப்படவேண்டாம்.

சாமிகள் இருக்கும்போது செட்டியார் அவர்களுக்கா பயம்? ஆபத்தில் சகாயனாக அல்லவா சாமிகள் வந்து வாய்த்து விட்டார். பார்த்த சாரதிச் செட்டியார் புனர்ஜென்மம் எடுப்பதற்காக அல்லவா அவரை ஒரு நாள் தாமதித்து சேலத்திற்கு திரும்ப சாமிகள் கட்டளை இட்டார்கள். உயிரைக் கொடுப்பதற்கல்லவா ஒரு கட்டளை! இந்தக் கட்டளையை அன்பென்பதா, அருள் என்பதா, தெய்வீகம் என்பதா?

காலத்திற்கேற்ற அருள் உதவி. சமயத்திற்கேற்ற அருள் விபூதி. இவைகளை அருள காலத்திற்கேற்ற அருள் தூதர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள். இத்தகையவர் வருகைக்காக அயல் நாடுகள் மட்டுமா காத்திருந்தன? மலேயா நாட்டு விஜயம்முடிந்தவுடன் அவரை மனமுவந்து வரவேற்கத் தமிழ் நாட்டின் தலைநகரம் மட்டுமா காத் திருந்தது? தமிழ்நாட்டின் பெருநகரங்களெல்லாம் அவரை அழைத்து கௌரவிப்பதில் போட்டியிடுவதுபோல் நற்செயல்கள் ஆற்றின. சாமிகளும் தான்செல்லும் இடங்களிலெல்லாம் உள்ளமுவந்து அருட் பணி ஆற்றினர். சிலருக்குத் தீராத வியாதிகளைத் தீர்த்தருளினர். சில இடங்களில் லீலாவிநோதராக பல அற்புதங்களை ஆடிக்காட்டி னர். 1956ல் டெல்லி நகரையே தன் அற்புதத் திருவிளையாடல் களால் சாமிகள் பிரமிக்க வைத்ததும் மக்கள் அறிவர். 1957ல் தூத்துக் குடியில் ஊமையைப் பேசவைத்ததும் நொண்டியை நடக்க வைத்த தும் மக்கள் கேள்விப் பட்டிருந்தனர். இத்தகைய ஆற்றல் மிகுந்த சைவக்குரவர்கள் 1500 ஆண்டுகளுக்குமுன் தமிழ் நாட்டில் அற்புதங் களை ஆடி அருள் பாலித்ததை படித்து மகிழ்ந்த உள்ளங்கள் இப்புவி யில் இப்பொழுதே ஒரு மகான் நடக்க முடியாதன வற்றை நடத்திக் காண்பிக்கின்றார் என்று கேள்விப்பட்டவுடன் அவரைக் காண முந்தினர். அவரை தம்தம் நகரங்களுக்கு அழைக்க பெரும் ஏற்பாடு கள் செய்தனர்.

## பம்பாயில் மெய்ஞ்ஞான குரு.

"சுப்பிரமணியனும், சுகஸ்வ ரூபனும்
அண்ணல் வள்ளல் அன்பன் உருவாய்
ஆர்த்திடுங்கோவே! அரிய பேரடிகாள்!
எம்மனோர்க் கெல்லாம் ஏற்றநல் குருவே
தன்னலமறுத்த சொன்னலம் செய்நலம்
எண்ணலங் கொண்ட ஏந்தலோய்! ஏறே!
நன்மையும் செல்வமும் நாளும் நல்குவீர்!
தீமையும் பாவமும் திறலுடன் செகுப்பீர்!
புன்மையும் பிணியும் பறக்கவே யருளுவீர்!
பெரியோய் நும்திறல் பரவவும் வலனே!
எளியோர்க் கெளியோய்! ஏந்துநல் துணையோய்!
பூந்தமிழ்த் தேவன், புண்ணிய போதன்
கந்தன் குகனின் கண்ணிய அடிமிசை
ஏழையரெம்மையும் ஏற்று விப்பையே!

பம்பாய் மாதுங்கா திரு. நா. பிச்சுமணி.

பம்பாயை நினைக்கும்போது "பவன்" என்ற ஆத்மீக பொருள் கொண்டு விளங்கும் உயர்ந்தமாத இலக்கிய பத்திரிகையை நினைக்காமல் இருக்க முடியாது. இந்த பத்திரிகையிலும் சாமிகள் தன் சொந்த ஆத்மீக அனுபவத்தை கட்டுரைகள் வாயிலாக பொதுமக்களுக்கு அருளுகின்றார். பம்பாயை நினைக்கும்போது இப்பத்திரிகையை நடத்துகின்ற டாக்டர் முன்ஷி அவர்கள், அங்கு கவர்னர் பணியாற்றிய ஸ்ரீ பிரகாசா அவர்கள் போன்ற பேரறிவாளர்களையும் மறக்க முடியாது. 1959ஆம் ஆண்டு பம்பாய் மாவட்ட கவர்னர் அருமை பக்தர் ஸ்ரீ பிரகாசா விரும்பியதின் பேரில் கவர்னர் மாளிகைக்குச் சென்று மாளிகையில் காசி கங்கை தீர்த்தமும், வில்வத்தழையும், காசி விஸ்வேஸ்வரர் கோயில் பூஜையிலிருந்து வரவழைக்கப்பட்டு கொடுத்து கவர்னர் அவர்களை ஸ்ரீ சாமிகள் ஆசீர்வதித்ததும் கண்டவர் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்த நிகழ்ச்சி. சாமிகளுடைய அருள் பிரவாகத்தின் அருமை பெருமைகளை முன்ஷி தம்பதிகள் எவ்வளவோ அனுபவித்திருக்கின்றனர். இவை அவர்கள் மனதில் மாருத சித்திரங்களாகப் பதிந்துவிட்டன.

பம்பாயில் பேரறிவாளர்களுக்கு மட்டுமா சாமிகளுடைய அருள்! மக்கள் யாவருக்கும் சாமிகளின் அருள் அருவிபோல் பெருகியது. திரு. P. K. இரங்கராவ் என்பவர் பம்பாயில் செம்பூரில் உள்ள 'ரேவதி' எனும் இல்லத்தில் வாழ்பவர். சாமிகளைத் தன் இல்லத்தில்

தெய்வமாகப் பூஜித்து வருபவர். சாமிகளின் இன்னருளால் மந்திர உபதேசங்கள் பெற்று சாமிகளின் திருஉருவப் படத்தைக் கொண்டும் பஞ்சாட்சர விபூதி கொண்டும் எண்ணிலோரின் இன்னல்களைப் போக்குவிக்க பெரும் பாடுபட்டு வரும் பெருமகனுர். சாமிகளால் ஒரு யோக தண்டும் கொடுக்கப் பெற்று தீராத வியாதிகளையும் போக்கு விக்க சாமிகளின் அன்பைப் பெற்றவர். இவர் தெய்வ நம்பிக்கை கொள்ள நேர்ந்த சம்பவங்களும், சாமிகளைக் காண நேர்ந்த நிகழ்ச்சியும் வேடிக்கையானவை. இயேசுநாதர் இவரைக் கனவில் தடுத்தாட் கொண்டார். சாமிகள் இவரை நேரே கண்டு தடுத்தாட் கொண்டார். சாமிகளும் இயேசுநாதரைப் போலவே ஓர் அருள் ஊற்று என்று அறிந்துகொண்ட இவர் சாமிகளின் அருள் ஊற்றின் அருளமுதை வாரிவாரி உட்கொண்டார். தம் அன்பர்களுக்கும் அள்ளி அள்ளிக் கொடுத்தருளினுர். அதனுலல்லவா அவருடைய இல்லம் சாமிகளின் திருக்கோயிலாக இன்று பெருமைகொண்டு அண்டினவர்க்கெல்லாம் அருமருந்தாகவும், தாகம் தீர்த்து வைக்கும் அருளமுதமாகவும் விளங்குகின்றது.

தன்னுடைய குருமகராஜனை மனமொழி மெய்களால் நாள் தோறும் வழுத்தி வருகின்ற இராவ் அவர்கள் பன்றிமலையில் இருந்த சாமிகளைப் பம்பாயிக்கு மதுரையிலிருந்து விமானமூலமாக 1959 மார்ச் மாதம் 28ஆம் தேதி அழைத்துச் சென்றுர். பம்பாயில் எண்ணிறந்த மக்கள் சாமிகளை நேரில் கண்டு வரப்பிரசாதம் வாங்கிக் கொள்ள துடித்துக் கொண்டிருந்ததே அதற்குக் காரணம். இந்த அரிய சந்தர்ப்பத்தையும் சாமிகளைக் கௌரவிக்கவும் இவர் நன்ருகப் பயன் படுத்திக் கொண்டார் "பம்பாய் செம்பூரில் சாமிகள் தங்கியிருந்த 'ரேவதி' இல்லம் ஒரு திருக்கோயில்போல காட்சியளித்தது. காலையிலிருந்து இரவு 2 மணி வரை கூட பல சமூகத்தைச் சேர்ந்த மக்கள் சாரி சாரியாக வந்து சாமிகளை தரிசித்துச் சென்றனர். பல்வேறு நோய்களையும் மற்ற பிரச்சினைகளையும் சொல்லிக் கொண்டுவந்த எண்ணற்ற மக்களுக்கு சாமிகள் அருட்பிரசாதம் வழங்கி ஆறுதல் அளித்தார்." இப்படி நவின்றது தினமணி இதழ். இதையே புகன்ற 'பிரீபிரஸ் புல்லடின்' வாசகங்களில் ஒரு புதுமையும் நவீனமும் ஒலித்தன. அது என்ன கூறியது? " நாம் பலவிதமான சாமிகளைப் பார்த்திருக்கின்ரேம். காவி உடை தரித்தவர், நாள்தோறும் மும்முறை குளித்து நெற்றியில் விபூதி இட்டவர், சமீபத்தில் உருவாகிய புருக்லாந்து நகர் கொச்சைச் சொற்களைக் கையாண்டு, மெத்த படித்தவர்களெனப் பெயர்பெற்று, ஒரு கருத்தைத் துண்டு போடுவதிலும், அதைக் கயறு திரிப்பதிலும், வார்த்தைகளைக் கொண்டு விளையாடுவதிலும் சமர்த்தரென பெயரெடுத்து நன்ருக பேச வல்லவர் இந்த இனத்தவரைச் சேர்ந்தவரல்ல பன்றிமலை சாமிகள். அவர் ஒரு தனி இனம். குழந்தைகளோடும் மனையோடும் குடும்பம் நடத்து

பவர். வருமானம் உள்ளவர். காப்பித் தோட்டங்கள் உரிமையாளர். தென்னிந்தியாவில் மதுரைக்கு பக்கமுள்ள பன்றிமலையில் பிறந்தவர். அவர் கண்களில் ஒரு குளிர்ச்சியான ஒளி உண்டு, விரல்களில் ஆறுதலளிக்கும் ஸ்பரிசம் உண்டு, இவர் இதயத்தில் இவைகளை மிஞ்சும் அனுதாப உணர்ச்சி உண்டு. இவருடைய அற்புதமான பணியாற்றும் சக்திகளைப் பற்றிப் பல கதைகள் உண்டு. குருடர்களுக்குப் பார்வை கொடுத்திருக்கின்றார், அந்த அளவுக்கு அவருடைய பக்தர்கள் நம்புகின்றார்கள். இரவில் நெடுநேரம் பகல் பூரும் செம்பூரில் அமைந்துள்ள இந்த சாமிகளின் ஆசிரமத்திற்கு பக்தர்கள் வந்துகொண்டே இருக்கின்றனர். சாமிகளைப் பற்றி ஒரு விஷயம். யாரும் சாமிகளை எந்த நேரத்திலும் பார்க்கலாம். அவர் தொண்டுக்கு யாரிடமிருந்தும் ஒருபைசாகூட பெறுவதில்லை. இந்தச் சாமி கடவுளுக்குக்கூட அவ்வளவு பக்திசிரத்தைக் காட்டுவதாகத் தெரியவில்லை தன்னை அண்டியவர்களுக்கே அவ்வளவு பக்திசிரத்தைக் காட்டுகின்றார்.'' இப்படி உவந்தேத்தியது நவீனப் பத்திரிகை உலகம்.

பம்பாய் நகர் செம்பூர் 'ரேவதி' பக்தர்கள் பகவான் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் பாதார விந்தங்களுக்கு ஒரு வரவேற்பிதழ் சமர்ப்பித்தனர். அந்த இதழில் சாமிகளை 'முருகப்பெருமானின் அவதாரமே வருக, நடமாடும் கடவுளே வருக, பன்றிமலைவாழ் மெய் ஞான குருவே வருக, என்று போற்றிப் புகழ்ந்தனர். பம்பாய் பக்தர்கள் 1959 ஏப்ரல் 14உ சாமிகளுக்குப் பொன்னுடை போர்த்தி தங்கள் மட்டற்ற மகிழ்ச்சியைக் காட்டிக்கொண்டனர்.

சாமிகளை வரவேற்று திருவிழா கொண்டாடிய அன்பர்கள் சாமிகளை பம்பாயிலிருந்து கோலாப்பூர், பூனு, நாசிக், மகாபலேஷ்வர் ஆகிய இடங்களுக்குக் காரில் அழைத்துச் சென்றனர். சாமிகளுடன் திருத்தலங்களுக்குச் செல்லும்போது அவருடைய அருள்வாக்குகள் உள்ளங்களுக்கு அவர் தெய்வீகத் தன்மையை விளக்கிக் கொண்டே இருக்கும். அவருடைய அருள் ஆற்றல் நிறைந்த செயல்கள் அவர் அருள்வாக்குகளை மெய்ப்பித்துக் காட்டும் தெய்வீகத் தன்மை கொண்டு பொலியும்; அவருடைய கருணையோடும் மனிதத் தன்மையோடும், தெய்வீகமும் பரிமளிக்கும். வஜ்ரேஸ்வரி வழியாக நாசிக்குப் போகும்போது அங்குள்ள சுடுதண்ணீர் ஊற்றில் குளித்துவிட்டு பின் வஜ்ரேஸ்வரி அம்மனை தரிசித்தார். கோஷ்டியில் உள்ள ஒருவருக்கு தேள் கடித்து விட்டது. விஷக்கடியை இறக்க சாமிகள் ஒன்றும் செய்யவில்லை. வேறொரு பக்தரைக் கொண்டு விஷக்கடியை இறக்கினார். விஷக்கடியிறக்க சாமிகள் மந்திரமும் அவருக்கு உபதேசிக்கவில்லை. விபூதியும் அவரிடம் கொடுக்கவில்லை. "விஷமே இறங்கு" என்று மட்டும் மூன்று தரம் அவரைச் சொல்லச் சொன்னார்.



பம்பாய் விமான நிலையத்தில் நின்ற திருக்கோலத்தில் சாமிகள்

(பக்கம் — 255)






பம்பாய் விமான நிலையத்தில் சாமிகளோடு பக்தர்கள்

(பக்கம் — 255)

"விஷமே இறங்கு" என்று உரைத்தார் பக்தர் மூன்றுமுறை பக்தர் உரை கேட்டு விஷமும் இறங்கி விட்டது. விஷத்தை இறக்குவதில் கூட ஒரு நவீனம் அமைந்துவிட்டது.

சாமிகளைப் பஞ்சவடிக்கு அழைத்துச்சென்றனர் அன்பர்கள். அந்த நாளில் 'தெய்வப் பஞ்சவடி' எனும் பருவச் சோலையில் தனி இடம் நண்ணி இலக்குமணனால் சமைக்கப்பட்ட இனிய பூஞ்சாலை எய்தி இருந்தனன் இராமன், இங்கு எழில் ததும்பும் இயற்கையை வருணிக்கும் கம்பர் இங்கு ஓடும் கோதாவரி நதியைச் 'சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி' என்று வருணிக்கின்றார். சீதை ஓதிமநடையையும் இராமன் போதிம எழிலையும் வருணிக்கின்றார். இராமனைக் கண்டு காமவெறி மூண்டு எழில் மங்கையாக மாறி வந்த சூர்ப்பனகையையும் வருணிக்கின்றார்.

"அம் சொல் இள மஞ்ஞை என, அன்னம் என, மின்னும்
வஞ்சியென, நஞ்சம் என, வஞ்ச மகள் வந்தாள்"

என்று கம்பர் சூர்ப்பனகையை வருணிப்பது அவளை நமக்கு முன் கொண்டு வந்து நிறுத்துவது போன்றே இருக்கின்றது. 1959இல் சாமிகள் இந்தப் பஞ்சவடிக்கு அடியெடுத்து வைத்தபோது அங்கிருக்கும் சூர்ப்பனகை சிலை கம்பர் வர்ணிப்பது போல் நடந்து வரவில்லை. ஆனால் இவ்விடத்தில் அவள் ஞாபகமாக வைத்திருக்கும் கற்சிலை உடல் குலுங்கியது, சாமிகளைக் கண்டவுடன். அன்று காதும் அறுபட்ட காமாந்தகாரி இராமனைக் கண்டு கதி கலங்கினாள். இன்று வந்திருப்பதும் இராமசாமி யல்லவா. ஒரு வேளை இராமசாமி என்ற பெயரைக் கேட்டதும் கிடுகிடுத்துப் போயிருக்கும் கற்சிலை கூட! உண்மையில் உயிரில்லாத சிலையைக் குலுக்க வைத்தது சாமிகளின் தவ சக்தியே. என்னே சாமிகளின் சந்தர்ப்பத்துக்குத் தகுந்த அற்புதத் திருவிளையாடல்!

பூனா நகர் வழியாக மாலிநகர் வந்த சாமிகள் அவ்வூர்ச் சர்க்கரை ஆலை டைரக்டர் திரு. போராவ்கே என்பவருடைய மகள் வாழ்க்கையை வளம்பெற அருளினார். 12 வருடங்களாகப் பிரிந்திருந்த அவர் மகளையும் அவள் கணவரையும் ஒன்றுசேரவும் அவர்கள் மகப்பேறடையவும் அருள்பாலித்தார். அதன்பின் சாமிகள் பண்டரிபுரம் சென்றார். அங்கு பாண்டுரங்கனின் தரிசனம் கிடைத்தது. நதிக்குச் சென்றபோது தாங்கமுடியாத வெயில். எங்கும் தணல்; நாக்கு வறண்டுவிட்டது பல பக்தர்களுக்கு. "ஏதாவது குளிர்ந்த பானங்கள் கிடைத்தால் எப்படி இருக்கும்" என்று பக்தர்கள் வாய்விட்டும் பேசிவிடவில்லை. குளிர்ந்த பானங்களுக்கு ஏங்கித் தவித்தது அவரது உள்ளங்கள். பக்தர்களின் பரிதவிப்பைக் கண்ட சாமிகள் கருணை

மூர்த்தியாகி விட்டார்கள். உடனே ஒரு சித்தராகவும் தயங்கவில்லை. பக்தர்களுக்குமுன் ஒரு ஈரத்துணியை விரித்து 'முருகா, பக்தர் களின் இச்சையைப் பூர்த்தி செய்'' என்றார். அடுத்த விநாடியில் பக்தர்களுடைய வறண்ட நாக்குகளைத் திருப்தி செய்யச் சில வெள்ள ரிக்காய்களே துண்டில் கிடைத்துவிட்டன. அது வெள்ளரிக்காய் விளையாத காலம் என்பதும் குறிப்பிடத்தக்கது. சாமிகளுக்குத்தான் வெள்ளரிக்காய் என்றால் மிகவும் பிரியமல்லவா? அதனால்தான் தாகத் திற்குகந்த வெள்ளரிக்காய் கொண்டுவந்தனர் போலும்! சிறு வயதிலேயே இருபது வெள்ளரிக் காய்களை இரண்டு காய்களாக்கிக் காண்பித்த சாமிகளுக்கா இன்று வேண்டிய வெள்ளரிக்காய்களைப் பக்தர்களுக்கு வருவித்துக் கொடுக்க முடியாது?

பண்டரிபுரத்திலிருந்து சாமிகளும் பக்தர்களும் கோலாப்பூர் அம்மனைச் சேவை செய்யச் சென்றபோது அம்பாளைப் புறப்பாடு செய்ய ஏற்பாடாகியிருந்தது. அப்போது "தாம்பா தாம்பா'' என ஒரு அசரீரி சப்தம் கேட்டது. தாம்பா என்பது ஒரு மராத்திய சொல். அச் சொல்லுக்கு 'நிறுத்து' என்பது பொருள். அம்பாளை பவனி செல்ல தம் தோள்களில் தூக்கி நின்றவர்கள் 'நிறுத்து' என்ற சொல்கேட்டு நின்றுவிட்டனர். கோவில் அதிகாரிகளை கோஷ்டியில் உள்ளவர் ஒருவருக்கும் தெரியாது. கோயிலுக்குச் சென்றபோது அக்கோயில் வழக்கப்படி அம்பாளுக்கு வளையல்கள், பட்டு, தேங்காய், பொறி, மிட்டாய் வாங்கிச் சென்றார்கள் பக்தர்கள். சாமிகளையும் பக்தர்களையும் வரவேற்ற கோயில் அதிகாரிகள் வந்த வர்களுக்கு நல்ல தரிசனம் செய்துவைத்தனர். வழக்கப்படி வாங்கி வந்த வளையல்களைக் கோயில் அர்ச்சகர் அம்பாளுக்கு அருகே சாற்றி வைக்க எடுத்தார். சாமிகள் வளையல்களை அம்பாளுக்கு அணிவிக்கும் படி சொன்னார். அவ்விடத்தில் அப்படிச் செய்வதில்லையென்று பழக் கத்தைச் சொல்லிவிட்டு வளையல்களை அம்பாளுக்கருகில் எடுத்துச் சென்றார் அர்ச்சகர். அடுத்த விநாடியில் அர்ச்சகர் கைகளில் இருந்த வளையல்கள் மறைந்துவிட்டன. அவை அம்பாளின் திருக்கரங்களில் அணிவிக்கப்பட்டிருந்தன. இதைக் கண்ட கோவிலிலுள்ள அனை வருக்கும் பேராச்சரியம் உண்டானது. சாமிகள் அந்த வளையல்களை வந்திருந்த பக்தர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றாகக் கொடுத் தார்கள். இந்தத் தலகோஷ்டி அன்று இரவு அங்கு தங்கி, மறுநாள் ஆகாச கங்கை முதலிய இடங்களுக்குப் போய்விட்டுக் கோடை வாசஸ்தலமாகிய பனேராவுக்குச் சென்று பூனாவைப் பார்த்துவிட்டு மறுநாள் காலை மகாபலேஸ்வரர் கோயிலுக்குச் சென்றனர். அங்கு கோயிலில் சாமிகள் கற்பூரமும் ஊதுவத்தியும் வரவழைத்துப் பக்தர் களை ஆச்சரியத்துக்குள்ளாக்கினர். இப்படியாக ஏறிய விஷத்தை வேறொரு நபரைவிட்டு உத்திரவிடச் சொல்லி இறக்கியதும், பஞ்சவடியில் சூர்ப்பனகைச் சிலையை அசைய வைத்ததும், 'வாழா

வெட்டி 'யாக இருந்த ஒரு பெண்ணுக்குத் தாம்பத்திய வாழ்வும் மகப் பேறும் அடைய வாழ்த்தியதும், குளிர்ந்த பானங்களுக்கு ஏங்கித் தவித்த அனல்பறக்கும் உள்ளங்களுக்குக் குளிர்ச்சிமிக்க வெள்ளரிக் காய் வரவழைத்து உவந்தளித்ததும், கோலாப்பூர் அம்பாளுக்கு வளையல் அணிவித்தும் அவைகளையே அன்பர்களுக்கு அம்மை அருளோடு கொடுத்ததும், மகாபலேஸ்வரம் கோயிலில் ஊதுவத்தியும் கற்பூரமும் வரவழைத்ததும் கண்டவர் உள்ளங்களுக்குத் தெய்வீகக் களிப்பை உண்டாக்கித் தெய்வீகப் பேரருள் விளைவின் பெருமையை எடுத்தியம்பியது.

'தெய்வ மனுஷ ரூபேண'—என்பர். தெய்வம் மனித ரூபத்தில் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளாக இன்று உலவி வருகின்றார். அவரது சொல்லிலும் செயலிலும் தெய்வீகம். அவரது விபூதியிலும் தெய்வீகம். அவருடைய திருஉருவப்படத்திலும் தெய்வீகம். அவரை நேரிடை யாகக்கூட மக்கள் காணவிட்டாலும் ரேவதியில் உள்ள அவர் தெய்வீ கத் திருப்படம் பலபேர்களுடைய ஆருத்துயரை நீக்கி வருகின்றது. தீராப்பிணிகளையும் தீர்த்துவருகின்றது என்று பல பக்தர்கள் தங்கள் அனுபவங்களை எழுதி இருக்கின்றனர். இத்தகைய தெய்வீக புருடர் பம்பாயில் எவ்வளவோ பேருக்கு இன்னருள் சுரந்து ஆறுதலும் உதவியும் அளித்து வருகின்றார். அதில் தனிச் சிறப்பு கொண்ட ஒரு நிகழ்ச்சியை மட்டும் உரைப்பது பொருத்தமாக இருக்கும். நதி களையே கட்டுப்படுத்தக் கூடிய ஆற்றல் ஆதி சங்கரருக்கு இருந்ததை அவர் சரிதம் சொல்லுகின்றது. அவருடைய மூப்பான தாயார் கங்கை நதிக்குச் சென்று வரமுடியாததால் கங்கை நதியே தமது வீட்டுக் கருகில் வரச்செய்தார். ஒருநாள் தம் ஆசிரியர் குகையில் நிர்விகல்ப சமாதியில் இருக்க நர்மதை வெள்ளம் பெருகி வருவதைக் கண்ட சீடர் அதைத் தன் கமண்டலத்தில் அடக்கி எவ்வுயிரையும் காப்பாற்றியதாகவும் சங்கரர் சரிதம் உரைக்கின்றது. சாமிகள் பூனவில் நடத்திக்காட்டிய பேருதவி அற்புதம் இந்த ஆதிசங்கரர் காலத்திய நிகழ்ச்சிகளை நம் மனதிற்கு கொண்டு வருகின்றது. 12—7—61 காலை 10 மணி. வீட்டு வேலைகளை முடித்த ஸ்ரீமதி V. பட்டம் மாள் பூனவில் சாமிகளின் வாழ்க்கை வரலாற்றைப் படித்துக்கொண்டு கண் அயர்ந்தாள். மணி 12–30 இருக்கும். யாரோ தன்னை முது கில் தட்டியது தெரிந்தது. 'பட்டு' என்று ஒருகுரல் ஒலித்தது. அப்படி ஸ்ரீமதி பட்டம்மாளை அழைப்பது சாமிகள் ஒருவர்தான். குரல்கேட்டு எழுந்தபோது ஒரு பெரிய சப்தம் வெளியே கேட்டது. வெளியில் போய்ப் பார்க்கும்போது ஒரு பெரிய வெள்ளம் பெருக் கெடுத்தோடியது. உடனே தெய்வமாகப் பூஜிக்கும் சாமிகளுடைய திருப்படங்களை மட்டும் எடுத்துக்கொண்டு வெளியில் வருவதற்குள் ஜலம் இடுப்பு மட்டும் வந்துவிட்டது. அடுத்த கட்டிடத்தின் மேல் மாடிக்குச் சென்று காப்பாற்றிக்கொள்ள ஸ்ரீமதி பட்டம்மாளுக்கு

யோசனை தோன்றினும் அதற்குவேண்டிய பலமும் தைரியமும் இல்லை. தண்ணீர் வேகமும் விநாடிக்கு விநாடி உயர்கின்ற நிலையும் அம்மையாரின் மனத்தைக் கலக்கிவிட்டது. அப்போது ஒருவர் ஓடோடி வந்தார். அவரைப் பார்ப்பதற்குச் சாமிகள்போன்று தோன்றியது. அவர் கைகொடுத்து வெள்ளத்தில் அவதியுறும் அம்மையைப் பிடித்து நீச்சலடித்துக் கொண்டு அடுத்த கட்டிடத்தின் மேல்மாடிக்குக் கொண்டு சேர்த்தார். இதற்குள் ஸ்ரீமதி பட்டம்மாள் இல்லம் ஜலத்தில் மூழ்கிக்கொண்டிருந்தது. தக்க சமயத்தில் தட்டி எழுப்பித் தன்னுயிரைக் காப்பாற்றிய சாமிகளை நேரில் கண்டு களிக்க 19—7—61இல் ரேவதிக்கே வந்துசேர்ந்தார் ஸ்ரீமதி பட்டம்மாள். சாமிகளைக் கண்டவுடன் சாமிகளே தன்னைக் கூப்பிட்டு அந்த அம்மையைக் காப்பாற்றிய பேருதவியைச் சாமிகளிடமிருந்தே கேட்டறிந்த அம்மையின் கண்களில் நன்றி ததும்பும் ஆனந்தக் கண்ணீர் பெருகியது. என்னே சாமிகளின் அருளாற்றல்! இந்த எளிய உதவிச்செயலில் சாமிகள் நதியின் போக்கையே மாற்றவில்லை ஆதிசங்கரரைப் போன்று. நதியையே ஒரு கமண்டலத்தில் அடைக்கவுமில்லை அன்று நடந்ததைப்போன்று. அடியார் தொண்டனுக அல்லவா அமைந்துவிட்டார் சாமிகள். அவர் ஓடோடி அருளிய அருளாற்றல் தாய்ப்பாசத்தால் மட்டுமா? தன்னை அண்டிப் பிழைக்கும் ஒரு பக்தர் நிலையில் இருக்கும் அடியாருக்கும் அடியாராக அல்லவா அவர் எளிய இனிய உதவி அமைந்துள்ளது!

## கொழும்பு கண்ட நடமாடும் தெய்வம்

மாணிக்கநிறை கங்கையாடி உன்னைப்பணிய
வந்திடும் பூதலத்தோர்
வாய்ஊமர் பாடவும் குருடர்கண் பார்த்திடவும்
மலடிகள் மைந்தர் பெறவும்
காணிற்குமரவேலா எனும் அன்பரைக்
கரடி புலியானை சிங்கம்
காலில் பணிந்தஞ்சி ஓடிடவும் செயும் கந்தனே
கண்கண்ட தெய்வமே
ஆகத்திலுற்ற பிணி தீர்த்திடவும் முன்னிற்கும்
ஆறுமுக மெய்த் தெய்வமே
தேவரொடு மனிதர்மணி கதிர்காம வேலனே
செங்கீரை யாடி யருளே!

இலங்கை நாட்டை நினைக்கும்போது கதிர்காம வேலவனைச் சிந்திக்காமலிருக்க முடியாது. அந்த வடிவேலனை நினைக்கும்போது அவன் அருளைப் பற்றிய அருமையான மேலே உள்ள பிள்ளைத்தமிழ்ப் பாட்டின் சில அடிகளைப் பாடிச் சுவைக்காமல் இருக்கமுடியாது. சாமி

களின் அற்புத அருள் திருவிளையாடல்களைக் கண்டு மகிழும் நமக்கு இந்தப் பாடலின் சுவை பன்மடங்கு அதிகமாகச் சுவைக்கின்றது. காரணம் சாமிகளை நாம் கண்கண்ட தெய்வமாக ஊமைகளைப் பேச வைத்தும் குருடர்களைப் பார்க்க வைத்தும், மலடிகளை மைந்தரைப் பெற வரமருளியும் பார்க்கின்றோம்.

சாமிகள் அன்பர்களின் அழைப்பின்பேரில் இலங்கை நாட்டிற்குச் சென்றிருந்தபோது அனுராதபுரம், மட்டக்களப்பு முதலிய இடங்களில் பொதுவாக இரவில் யாரும் பிரயாணம் செய்வதில்லை; காரணம் காட்டு மரங்கள் வளர்ந்தோங்கி இருக்கும் வழிகளில் யானைகளும் துஷ்ட மிருகங்களும் சிலசமயங்களில் வந்து இன்னல் விளைவிக்கும். சாமியவர்கள் இவ்விடங்களில் இரவு இரண்டு மூன்று மணிக்குத்தான் பிரயாணம் செய்தார். அப்படியிருந்தும் ஒரு மிருகமாவது வழியில் எதிர்ப்படவில்லை. இலங்கையில் பல வைத்திய நிபுணர்களால் கைவிடப்பட்ட பல நோயாளிகளின் நோய்களைக் குணப்படுத்தி அருள் வழங்கினார் சாமிகள். உண்மையிலேயே சாமிகளைக் கண்கண்ட தெய்வமாகக் கண்டனர் சிலோன் மக்கள், சாமிகள் அங்கு 1960ஆம் வருடம் வருகை தந்தபொழுது.

1960இல் ஜூலை 31ஆம் தேதி சாமிகள் விமான மார்க்கமாகக் கொழும்பு வந்துசேர்ந்தார். அவரை வரவேற்க அநேக பக்தர்கள் விமான நிலையத்தில் கூடியிருந்தனர். இலங்கையில் சுமார் நாற்பது நாட்கள் பல பாகங்களுக்கும் சென்று பல பக்தர்களுக்கு அருள் வழங்கினார்; பல இடங்களில் அற்புதங்கள் ஆடிக் காட்டினார். உற்சாகமிகுந்த வேளைகளில் சொல்லாடல் புரிந்து பக்தர்களுக்கு உவகை ஊட்டினார், சாமிகள் அனுராதபுரம், திருக்கேதீஸ்வரம், யாழ்ப்பாணம், நயினார் தீவு, பதுளை முதலிய இடங்களுக்குச் சென்றார். கதிர்காமத்திற்கும் சென்று முருகனைத் தரிசித்தார். யாழ்ப்பாணத்தில் சாமிகளுக்கு அமோகமான வரவேற்பு ஏற்பாடாகி இருந்தது. அங்கிருந்து கிரிமலை, தொண்டமானாறு, செல்வச் சன்னதி, துல்லார் கந்தசாமி கோயில், சட்டநாதர் சிவன் கோயில், கொக்குவில் மஞ்சுவடி சுப்பிரமணியர் கோவில் முதலிய திருத்தலங்களைத் தரிசித்தார். ‘மலேயா கபே’ முதலாளி திரு. மு. கு. கதிர்வேலு அவர்கள் யாழ்ப்பாணத்திலுள்ள தம் ஓட்டலில் சாமிகளுக்கு ஒரு பெரிய வரவேற்பு ஏற்பாடு செய்திருந்தார். யாழ்ப்பாண நகர்த் தொண்டர்கள் புடைசூழ, உயர்தர மேள வாத்தியங்கள் முழங்க, பக்தர்கள் பஜனை செய்ய சாமிகள் ‘மலாயா கபே’ மாடியில் அமைக்கப்பட்டிருந்த அலங்கார மண்டபத்திற்கு அழைத்து வரப்பட்டார். கூடியிருந்த மக்கள் யாவருக்கும் சாமிகள் அருள்பாலித்தபின், சாமிகளின் மகிமையைப்பற்றி திரு. சி. எஸ். மணி பாகவதர் அவர்கள் வியந்து பேசிச் சாமிகளின் இலங்கை வருகையை ஒரு வரப்பிரசாதம் என்று போற்றினார்.

யாழ்ப்பாணத்திலிருந்து பன்னிரெண்டு மைல்கள் தூரத்தில் சிறிய சிறிய தீவுகள் பல உண்டு. செழிப்பான தென்னை வளம் கொண்ட இந்த அழகிய தீவுகளை நைனத்தீவுகள் என்றழைப்பர். நீலத்திரைக் கடல்மீது பசுமைப் போர்வைகளை அங்குமிங்கும் விரித் திருப்பது போன்று இந்த வளமிக்க தீவுகள் காண்போர் கண் களுக்குப் பெரு விருந்தூட்டுவன. இந்தத் தீவுகளில் ஒன்றில் ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோயில் ஒன்று உண்டு. இந்தக் கோயிலுக்குப் பக்தர்களோடு சாமிகள் சென்ற சமயம் கோயில் அர்ச்சகர் பூஜையை முடித்துக்கொண்டு கோவிலைப் பூட்டிவிட்டு அடுத்த தீவிலுள்ள கோயி லுக்குச் சென்று விட்டார். அழகுமயமான வளமிகு தீவுகளைக் கண்டு களித்த பக்தர்களின் உள்ளங்கள் எழில் மிகுந்த ஈசுவரியைக் காணு மல் திரும்புவதா என்று ஏங்கின. இயற்கை வனப்பினைச் சுவைத்துச் சென்ற சாமிகளின் மனத்தைப் பக்தர்களின் ஏக்கம் தொட்டுவிட்டது. ஆலயப் பரிபாலன கர்த்தாக்களின் உதவியினுல் கதவுகளையும் திறந்து விட்டாலும் அம்பாளை மறைத்து ஒரு திரை தொங்கியது. பக்தர் களின் ஏக்கத்தை ஒருவாறு போக்கச் சித்தம் கொண்டார் சாமிகள். "தேவி, கடல் தாண்டி வந்திருக்கின்றோம். உன் கருணை இருந்தால் காட்சி கொடுத்தருளவேண்டும்" என்று சாமிகள் வாய் விட்டு வேண்டிக் கொண்டார். என்னவென்று சொல்வது சாமிகளின் ஆற்றலை! மறு விநாடியில் மூடியிருந்த திரை மெதுவாக விலகியது. அன்றொரு நாள் பக்திமான் நந்தன் 'வழி மறைத்திருக்குதே மலை போலே ஒரு நந்தி படுத்திருக்கின்றதே' என்று நந்திக்குப்பின் நின்று மறைந்திருந்த ஈசனிடத்தில் முறையிட்டான். பக்தனுடைய விருப் பத்திற்கிசைந்து நந்தியும் விலகியதை நாடகத்தில் பார்த்திருக் கின்றோம். இன்று அம்பிகை அருள் கூர்ந்து தன்னுடைய திரையை விலக்கிச் சாமிகளுக்கு தன் திருவருள் தரிசனத்தைக் கொடுத்திருக் கின்றுள். இருட்டாக இருந்த இடத்தில் தீபம் சுடர் விட்டு எரிய ஆரம்பிக்கின்றது. சாமிகள் அம்பாளின் அருளைத் தாங்குவது போல் தம் கரங்களை நீட்ட அருள் பிரசாதங்கள் சாமிகளின் கைகளில் மழை போல் சொரிகின்றன. அவற்றை மனங் கனிந்து தன் கூட வந் துள்ள பக்தர்களுக்கு அருளுகின்றுர் சாமிகள். என்னே சாமிகளின் அருள் ஆற்றல்!

சாமிகளின் கொழும்பு பக்தர்களில் திரு கே. வி. கணபதி அவர்கள் ஒருவர். இவர் கொழும்பில் தொழிலதிபர்: சைவ சமய நெறியாளர்: வேடிக்கையாகப் பேசி உள்ளங்களைக் குளிர வைப்பதில் கெட்டிக்காரர், திருச்சியில் சாமிகளைக் காண வந்த இவர் ஒரு நாள் சாமிகளின் பக்தர்களிடம் கடவுள் எங்கிருக்கின்றுர் என்றகேள்வியைக் கேட்டு 'நோயுளார் வாயுளார்' என்ற பதிலையும் சொல்லி யாவரையும் வாய் விட்டுச் சிரிக்க வைத்தார். நோயற்ற செல்வமே குறைவற்ற செல்வம். அந்தச் செல்வம் இருக்கும் வரை பொதுவாகக் கடவுளை

நாடிச் செல்வதில்லை. இது உலக இயல்பு. நோய் வந்துவிட்டால் வேண்டாத தெய்வமில்லை. "முருகா முருகா" என்று நோயுற்றவர் கடவுளை எந்த நேரமும் பெயர் சொல்லி அழைப்பதையும் காண்கின்றோம். இப்படி நகைச் சுவை ததும்பப் பேசுகின்ற இவர் சாமிகளைப் பற்றி என்ன சொல்கின்றார்? "சாமிகள் ஹாஸ்யமாகவும் வேடிக்கையாகவும் பேசுவது போல் தோன்றினாலும் அத்தனையிலும் ஆழ்ந்த பொருள் பொதிந்து கிடக்கும். அவரவர்கள் தங்கள் தங்கள் ஆராய்ச்சிக்கு ஏற்ப நுணுகி அறிந்து கொள்ளலாம்." என்று சாமிகள் பேச்சை அளவிடுகின்றார். "நான் அறிந்த நடமாடும் தெய்வம்" என்று திரு டி. வி. கமலசாமி அவர்கள் வீரகேசரியில் எழுதிய சாமிகளின் சிறப்பியல்புகள் கட்டுரையிலும் சாமிகளின் கருத்தாடலும் 3-9-60 இல் இடம் பெற்றது. "சாமிகள் பேசும் பொழுது சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு விளையாட்டுப் போல் தோன்றும். ஆனால் அவர்கள் எதுவுமே ஒரு ஆழ்ந்த கருத்தைப் பொதிந்து தான் பேசுவார்கள். உதாரணமாகச் சாமிகள் அடிக்கடி கூறும் அருள் வாக்கு என்னவென்றால் "கடவுள் எப்படி இருக்கிறார் தெரியுமா? தன்னைக் கண்டவர்களுக்குக் கற்கண்டாகவும் காணாதவர்களுக்குக் கற்குண்டாகவும் இருக்கிறார் என்பதே"—இப்படிக் கொழும்பு வீரகேசரி புகழ்ந்து பாராட்டிய சாமிகளை, இப்பாராட்டுக் கட்டுரை வெளியிடுவதற்கு முன்பாகவே ஜாந்துப்பட்டி ஸ்ரீ சிவசுப்ரமண்ய சுவாமி கோயில் பரிபாலகர்கள் பூரண கும்பம் முதலிய சகல மரியாதைகளுடன் வரவேற்று உபசரித்தனர். அருள் பிரவாகமாயிருந்த சாமிகள் அருள் பிரசாதமாக விபூதி வரவழைத்துப் பக்தர்களுக்குக் கொடுத்தார். இந்த வைபத்தில் கலந்து கொண்ட கே. வி. கணபதி அவர்களும் சாமிகள் பண்டைக்காலத்து நாயன்மார்களைப் போல் அற்புதச் செயல்களை இன்றும் செய்து மக்களிடமே மெய் பக்தியை வளர்த்து வருவதைக் குறிப்பிட்டுச் சாமிகளைப் போற்றினர். இப்படிப் பல இடங்களில் சிறப்புற வரவேற்கப்பட்ட சாமிகள் பல பக்தர்களுக்குச் சமய சஞ்சீவியாக வாய்த்துத் தீராத வினைகளைத் தீர்த்தருளினர். "தேவரோடு மனிதர் மணி கதிர்காம வேலன்" உறைகின்ற இலங்கையிலும் கதிர்காம வேலனையும் கண்குளிரக் கண்டு "அகத்திலுற்ற பிணி தீர்த்திடவும் முன்னிற்கும் ஆறுமுக மெய்த் தெய்வமாக" நாற்பது நாட்கள் அல்லும் பகலும் திருத்தொண்டாற்றிச் சாமிகள் தாயகம் திரும்பினர்.

## மதுரையில் சித்தர்கள் திருவிளையாடல்கள்

"பன்றி மலைவாழும் பண்ணவனே இன்றுனக்கு
நன்றி யுளநிறைந்த நல்வணக்கம் — குன்றாத
மாணிக்கம் போலும் வரவேற்பிவை தருவம்
காணிக்கை யாகக் கனிந்து"

என்ற நேரிசை வெண்பாவோடு வாழ்த்துப்பாக்கள் சாமிகளைப் போற்றிப் பாடின. 1961 அக்டோபரில் பாண்டிய நாட்டிற்குத் தலை நகரம், சங்கம் வளர்த்த திருநகரம், செந்தமிழ்நாட்டுத் தமிழ் கருவூல மாகிய மதுரைமா நகரம் சாமிகளுக்கு "நன்றியுள நிறைந்த நல் வணக்கம்" செலுத்தி "குன்றுத மாணிக்கம் போலும் வரவேற் பினைத்" தந்தது. ஸ்ரீ பன்றிமலை சாமிகளைப் பாராட்டும் திருவிழா மூன்று நாட்கள் தொடர்ந்தாற்போல் விமரிசையாக நடந்தது. சாமி களுக்குப் பிடித்தமான ஆருவது படைவீடாக அமைந்திருக்கும் பழமுதிர்சோலையில் இலட்சார்ச்சனை வழிபாடு நடந்தது. 15-10-61இல் மதுரை மாவட்ட நீதிபதி திரு. ஆர். இலட்சுமணன் அவர்கள் தலை மையில் ஒரு பெரிய பாராட்டுக் கூட்டம் நடந்தது. தொடக்கத்தில் நான்கு ஆவணி மூலவீதிகளிலும் சாமிகளை ஊர்வலமாக ஸ்ரீ சேது ராமன் ஸ்ரீ பொன்னுசாமி நாதசுர இசையுடன் அழைத்து வந்தனர். திரு. T. D. பழனி அவர்கள் வரவேற்போடு கூட்டம் ஆரம்பித்தது. சாமிகளது திருஉருவப் படத்தைத் திண்டுக்கல் துணை நீதிபதி திரு. எஸ். சூரியமூர்த்தி திறந்து வைத்துச் சாமிகளின் அருட்செல் வத்தைப் புகழ்ந்து பேசினுர். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பணி யாற்றிய திரு. T. V. இராமச்சந்திர முதலியார் சாமிகளுக்குப் பொன் னுடை அணிவித்தார். மதுரை திருவள்ளுவர் கழகம், அருட்ஜோதி மாதர் சன்மார்க்க சங்கத்தார் சாமிகளைப் பாராட்டி இதழ்கள் வாசித் தனர். ஸ்ரீ பன்றிமலை சாமிகளின் பாராட்டுக் கூட்டத்தின் மூன்ரு வது நாள் கவி இசைமணி மதுரை சோமசுந்தரம் தன் குழுவின ரோடு இன்னிசை அமுது படைத்துச் சாமிகளுக்கு இன்பமூட்டினுர்.

மதுரை நகர் சாமிகளை இன்னிசை கொண்டும் பாராட்டுரை கொண்டும் வரவேற்றதோடு நிற்கவில்லை. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமி கள் பக்தஜன சன்மார்க்க சபையையும் உருவாக்கிய பெருமையும் மதுரைக்குண்டு. இத்திருச்சபை உருவாவதற்கு வேண்டிய முயற்சி கள் எடுத்தவருள் சாமிகளின் திருத்தொண்டர் முன்னுள் தாசில்தார் திரு. K. ஆறுமுகம் பிள்ளை அவர்களும் ஒருவர். சர் பி. டி. இராஜன் அவர்களால் சபை துவங்கப் பெற்றது. சபை துவக்க விழாவில் சாமிகளுடைய அருளுரை கேட்டோர் மனத்துக்குத் தெவிட்டாத அமுதமாக அமைந்தது. சபைத் தலைவர் சாமிகளுடைய அன்புநெறி பக்தர் வழக்கறிஞர் திரு. S. பழனிச்சாமி, சாமிகளின் அருட்பெருக் கினை வியந்து பேசி இப்பெரிய மகான்கள் கூட்டுறவிற்காகவே சபை திறந்து வைக்கப்பட்டிருக்கின்றதென்பதையும் விவரித்தார்.

"மதுரேசர் பொற்
க்ஷேத்திரக் கொடிகட்டு சித்தர்யாங்
கரும்பைமுன்பு கல் லானைக்கிடுஞ்சித்தர்
கையில் செங்கல்ப சும்பொன்ன தாக்கினனே"

இது மதுரைக் கலம்பகப்பாடலில் ஒருபகுதி. இப்பாடலில் இருவர் மதுரையில் சித்தாடியது கூறப்படுகிறது. ஒருவர் இறைவன். மற்றொருவர் எல்லாம்வல்ல இறைவனிடமும் சித்தாடிய மனிதன். இறைவன் சித்தராக வந்து மதுரையம்பதியையே ஆட்கொண்ட அருமையைக் கேட்ட அபிஷேக பாண்டியன் ஒருநாள் அந்த இறைச் சித்தரையே மதுரைத் திருக்கோயிலில் கண்டான். தன்னை அலட்சி யப்படுத்தும் முறையில் பேசிய அவரை, பக்கத்திலுள்ள கல்யானை யைக் காட்டி, “இந்தக் கல்யானை கரும்பெடுத்துத் தின்றால் நீர் எல் லாம் வல்ல சித்தரென மதித்துத் தாங்கள் வேண்டியதைக் கொடுப் பேன்” என்றான். சித்தருடைய அருட்பார்வை ஏற்ற கல்யானை உயிர் யானையாகிச் சாறொழுக அரசன் கைக்கரும்பை இழுத்து வாயில் செலுத்திக் கடித்துத் தின்றது. அடுத்தாற்போல் பாண்டியன் கழுத் தில் இருந்த மணிமாலையைப் பற்றிக் கரும்பை விழுங்கியதுபோல் விழுங்கி விட்டது. இதைக் கண்ட மெய்க்காவலர் சித்தரையே தாக்க முற்பட்டனர். புன்னகை பூத்த சித்தர் அவர்களை ‘நில்லுங்கள்’ என்று கூற, அடிக்க வந்த மெய்க்காவலர் கற்சிலையாகி விட்டனர். இவைகளைக் கண்ட பாண்டியன் சித்தர் திருவடிக் கமலங்களில் வீழ்ந்து தனக்குப் புத்திர சந்தானம் வேண்டுமென்றான். அதற்கும் அருள் புரிந்தார் இறைவன்.

இந்தச் சித்தில் ஒருபகுதியைக் கூறிய மதுரைக் கலம்பகச் சித்தர் தான் சித்தாடிய பெருமையையும் உரைப்பதாக மதுரைக் கலம்பகப் பாடல் அமைந்திருக்கின்றது. மதுரேசர் பொன் கோபுரத்தில் கொடி கட்டவல்ல சித்தி பெற்றவர் தாமென்றும், கல்யானையையே கரும்பு தின்ன வைத்த இறைவனுடைய கையிலேயே உள்ள மேருமலை வில்லையே பொன்னாகச் செய்தவரென்றும் பெருமை பேசுகின்றார். தொன்றுதொட்டு இப்படி சித்துக்கும் சித்தர்களுக்கும் பெயர்பெற்ற மதுரையம்பதியிலே ஸ்ரீ பன்றிமலை சித்தரும் வந்துவிட்டால் சும்மா இருப்பரோ மக்கள். சாமிகள் தான் சும்மாயிருப்பாரோ. எவ் வளவோ சித்துக்கள் ஆடி மக்கள்மனத்தைப் பரவசப்படுத்தினர். எவ் வளவோ பேருக்குப் பஞ்சாட்சரமருளி உடற்பிணியையும், மனக்கவலை யையும் நீக்கினர். மதுரையம்பதியில் சாமிகள் வந்திருந்தபோது நிகழ்ந்த மூன்று சித்துக்களைப் பற்றி மட்டும் கூறி முடிப்போம். கல்லுக்கு உயிரூட்டிய கல்லானை கரும்பு தின்ற இறைவன் திருவிளை யாடலைக் கேட்ட நமக்குச் சாமிகள் ஆற்றலைக்கேட்கவும் இன்பம் பெரு கும். ஒருநாள் சாமிகளும், அன்பர்களும் மதுரையில் கூடி இருந்த நேரம். அதே நேரத்தில் பழநியம்பதியில் பழநி ஆண்டவனுக்கு அபிஷேம் நடந்து கொண்டிருந்தது. இறைவன் தண்ணருளைப் பேசிப் புகழும் சாமிகளுடைய திருவாய் அதே நேரத்தில் பழநியாண் டவனுக்குப் பன்னீர் அபிஷேகம் ஆகும் சிறப்பை எடுத்தோதியது.

பழநியாண்டவனின் பன்னீர் அபிஷேகத்தையே சாமிகளுடைய அருட்பேச்சிலும், காட்சியிலும் கண்டுகளித்திருந்த பக்தர்களுக்கு ஓர் அற்புதம் காத்துக்கொண்டிருந்தது. பழநியாண்டவனின் மணம் கமழும் அபிஷேப் பன்னீரையே சாமிகள் வரவழைத்தார்கள். அங்கிருந்த ஒருவரிடம் காலி டம்ளர் ஒன்றைக் கொடுத்து உயரத் தூக்கிப் பிடித்துக்கொள்ளும்படி சொல்லிச் சாமிகள் முருகனைத் தியானித்தார். மறு நிமிடம் அந்த டம்ளரை நிறைத்தது பழநியாண்டவனின் அருட்பிரசாதப் பன்னீர். அன்று இறையருளைக் கண்டு வியந்தான் அபிஷேக பாண்டியன். இன்று சாமிகளின் அருளைக் கண்டதோடல்ல, தம் ஊனையும், உயிரையும் தித்திக்கச் செய்யவல்ல அருட்பிரசாதத் தண்ணீரையும் ஊன் குளிர, உயிர் குளிர உண்டனர் பொது மக்கள். அன்று கண்டது காட்சிதான்! இன்று கண்டது காட்சியோடல்ல!! மெய், வாய், கண், மூக்கு, செவிக்கும் இன்பம்!!!

மதுரையில் சோமசுந்தரக் கடவுள் அரசனின் மெய்க்காப்பாளரைக் கல்லாக அசையாதபடி செய்த நிகழ்ச்சியை நாம் மறக்கவில்லை. அதைப்போன்ற சாமிகள் செயல் ஒன்றும் நம்மைப் பேராச்சரியத்தில் ஆழ்த்தும். அன்று இறைச் சித்தரைத் தாக்கவந்த அரசன் மெய்க்காப்பாளரை 'நில்லுங்கள்' என்று இறைச்சித்தர் சொன்னவுடன் அவர்கள் கல்லாக அமைந்தனர். இன்று சாமிகள் நடத்திக்காட்டிய நிகழ்ச்சியில் அவர் வாய்கூட அசையவில்லை. அவர் கை ஒன்றுதான் அசைந்தது. சாமிகள் மந்திரங்கள் முணுக்காது வார்த்தையொன்றும் பேசாது ஒரு காரியத்தைச் செய்து முடித்தார். அன்று நடந்த நிகழ்ச்சி தற்காப்புக்குச் செய்துகொண்டது. இன்று சாமிகள் செய்தது மற்றவர்கள் உயிரைக் காப்பதற்காகவே. சாமிகள் மதுரையில் டாக்டர் சுப்பையா அவர்கள் வீட்டில் பக்தர்களோடு சாப்பிட்டுக் கொண்டிருந்தார். சாப்பாட்டில் ஈடுபட்டிருந்த அவர் கரங்கள் திடீரென்று ஏதோ ஒருசாமானை வெகு சிரமப்பட்டுப் பிடித்து இழுத்து நிறுத்துவதுபோல செய்தன. அப்படி நிறுத்தும் அவர் பரபரத்த முகத்தில் அமைதி நிலவவில்லை; ஒரு காரியத்தை எப்படியேனும் முடிக்க வேண்டும் என்று ஊன்றிய கவனமே அவர் முகத்தில் பதிந்திருந்தது. 'அப்பாடா' என்று ஒரு பெரிய காரியத்தைச் செய்து முடித்தவர்போன்று பெருமூச்செறிந்து மறுபடியும் சாப்பிட ஆரம்பித்தார். இதைக் கவனித்த அன்பர்களில் ஒருவர் இதற்கு விளக்கம் கேட்டார்.

சாமிகள்: நந்திமலையில் உயர்ந்த பாறையிலிருந்து விழ இருந்த ஒருவரைக் காப்பாற்ற இந்தக் கை உதவியது. நந்திமலை! உயர்ந்த பாறை!! நந்தி மலையிலிருந்து விழப்போகும் ஒருவரை மதுரையில் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் சாமிகள் கைகொடுத்து உதவிக் காப்பாற்றுவது!!! இது ஒன்றும் விளங்கவில்லை அன்பர்களுக்கு.

அதற்குமேல் சாமிகளைக் கேட்டுத் தெரிந்துகொள்ளவும் சாமிகளுக்கு தொந்திரவு கொடுக்க அன்பர்கள் இஷ்டப்படவில்லை. இது நடந்த அன்று இரவில் ஓர் இளம் தம்பதிகள் சாமிகளைக் காண ஓடோடி வந்தனர். "என்னைக் காப்பாற்றி எனக்கு உயிர்தந்த தெய்வம் தாங்களல்லவா" என்று ஓடிவந்த மாப்பிள்ளை சாமிகள் கரங்களில் விழுந்து கும்பிட்டார். அப்போது சாமிகளோடு பகலுணவு சாப்பிட்டவர்களும்கூட இருந்தனர்.

சாமிகள் : ஐயா, நந்திமலையில் என்ன நடந்ததென்பதை இவர்களுக்கு விளக்கிச் சொல்லுங்கள்.

மாப்பிள்ளை ; மத்தியானம் சுமார் இரண்டு மணி இருக்கும். நானும் என் மனைவியும் நந்திமலைக்குப் பொழுது போக்குக்காகச் சென்றிருந்தோம். நான் ஒரு உயரமான பாறையிலிருந்து கொண்டு கீழே பார்த்தேன். கிடுகிடு பாதாளம் ஒரு காலத்தில் அந்த இடத்திலிருந்து குற்றவாளிக்கைதிகளைத் தண்டிக்கத் கீழே தள்ளுவார்களாம். இதை நினைத்துக் கிடுகிடு பாதாளத்தைப் பார்க்க என் தலை சுற்ற ஆரம்பித்தது. நான் நிலைதடுமாறி அந்த உயரமான பாறையிலிருந்து கீழே விழப்போகின்றேன். அந்தத் தருணத்தில் என் முந்தியைப் பிடித்து என்னைப்பிடித்து என்னைக் காப்பாற்றினர் இதே சாமிகள். அவர் தங்கி இருக்கும் விலாசமும் கொடுத்தார். நாங்கள் எனக்கு உயிரளித்த உத்தமனைக்காண ஓடோடி வந்தோம்"

என்ன ஆச்சரியம்! மதுரையில் இருந்துகொண்டு வெகு தூரத்திற்கப்பால் உள்ள நந்தி மலைப்பாறையிலிருந்து விழ இருந்தவரைக் கையசைத்துக் காப்பாற்றுவதா? இது முடிகின்ற காரியமா? நினைக்கப் பேராச்சரியம் தரவல்ல இந்த நிகழ்ச்சியை மதுரை அன்பர்கள் மறக்கமுடியுமா?

மதுரையில் சோமசுந்தரக் கடவுள் அருளால் புத்திரபாக்யம் இல்லாத அபிஷேக பாண்டியனுக்குப் புத்திரனும் பிறந்தான். இதே மதுரையில் சமீபத்தில் ஸ்ரீமதி சக்குபாய் என்ற அம்மாளுக்குக் கல்யாணமாகி எட்டு வருடங்களாகியும் புத்திரபாக்கியம் ஏற்படவில்லை. இதைக் காரணமாகக் கொண்டு அவள் கணவருக்கு இரண்டாம் கல்யாணம் செய்ய ஏற்பாடுகள் நடந்தன. இதைக் கண்டு சகிக்க முடியாதவளாய்க் கண்ணீர்வடித்தாள் ஸ்ரீமதி சக்குபாய். அவள் ஆருத்துயரை நீக்க அருள் பாலித்து விட்டார் சாமிகள். சாமிகளின் விபூதிப் பிரசாதத்தால் ஸ்ரீமதி சக்குபாய்க்குப் புத்திர

பாக்கியம் ஏற்பட்டதோடுகூட, மலடான முதல் மனைவி என்ற கெட்ட பெயரும் ஏற்படாமலிருக்கவும் அல்லவா மனங்கனிந்து உதவினார் சாமிகள்.

**பன்றிமலை ஈன்ற சான்றோன் மகன்.**

"ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்"

இறைவனுடைய திருவிளையாடல் புராணத்தில் மதுரை சோம சுந்தரக்கடவுள் தம் தாய் தந்தையரை இழந்த பன்னிரெண்டு பன்றிக் குட்டிகளுக்குக் கருணை மிகுந்து தாய்ப்பன்றியாகத் தோன்றி ஞானப் பால் ஊட்டியவிபரம் அறிகின்றோம். இந்தப் பன்னிரெண்டு பன்றிக் குட்டிகளும் ஈஸ்வரன் அருளால் பன்றிமுகத்தோடு மானிட வடிவம் தாங்கி மதுரையை ஆண்ட இராஜ பாண்டியனுக்கே மந்திரிகளாகிக் கடைசியில் முக்தி யடைந்தன என்பர். இத்தகைய ஈஸ்வர அருள் கொழிக்கின்ற மலையிலல்லவா சாமிகள் பிறந்தது. ஈஸ்வரன் ஆடிய திருவிளையாடலைப் போலவே எவ்வளவோ அற்புதத் திருவிளையாடல் களைச் சாமிகளும் தான் பிறந்த ஊரிலே ஆடிக்காண்பித்திருக்கின்றார். இறைவன் செழுங் கருணைச் செயல்போல, தன் மலைமீது ஏறி, தன்னை நாடி வந்த பக்தர்களுக்கெல்லாம் அருள் பாலித்திருக்கின்றார்; அந்த அருளைத் தான் செல்லும் இடங்களிலெல்லாம் அள்ளி அள்ளி உவந் தளித்திருக்கின்றார்கள். செல்லுமிடமெல்லாம் தான்பிறந்து வாழ்ந்த ஊரைச் சிறப்பிக்கும் அளவில் அத்திருவூரின் பெயரையல்லவா சாமிகள் தாங்கிச் செல்கின்றனர். "சாமிகள் வந்துவிட்டார்" என்று சொன்னவுடன் "எந்தச் சாமிகள்" எனும் கேள்விக்கு "ஸ்ரீ பன்றி மலை சாமிகள்" என்றல்லவா பதிலளிக்கின்றோம். இது பன்றி மலைக்கே ஒரு சிறப்பைத் தேடித் தரவில்லையா?

தமதூருக்குப் பேரையும் புகழையும் தேடித்தரும் மகானைப் பெருமைப்படுத்திப் பன்றிமலை ஊரார் 1961 நவம்பர் 21ஆந் தேதி சாமிகளுக்கு ஒரு பாராட்டு விழா நடத்தினர். ஸ்ரீ எ. என். வி. காமாட்சிப் பிள்ளை தலைமை வகிக்க, பஞ்சாயத்துத் தலைவர் திரு. டி. வி. எஸ். சோமசுந்தரம் வரவேற்புரை நிகழ்த்தினர். திண்டுக்கல் உதவி நீதிபதி திரு. எஸ். சூரியமூர்த்தி, ஜில்லா முன்சீப் திரு. சிதம்பர நாதன், மதுரை வழக்கறிஞர் திரு. எஸ். பழனிச்சாமி, முன்னாள் பார்லி மெண்ட் அங்கத்தினர் திரு. கமலசாமி முதலியோர் சாமிகளைப் பாராட்டிப் பேசினர்.

"ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்"

என்ற செந்நாப் போதாரின் வாக்கிற்கிணங்க உம்மைப் பெற்ற நனி சிறந்த நமதூராம் பன்றிமலே வரலாற்றுக் காவியத்திலே, வானவர் ஏட்டிலே, கவிஞர்களின் கருத்திலே, புலவர்கள் கூற்றிலே, பெரியோர்களின் பேச்சிலே, என்றென்றும் நீங்காத இடம் பெற்று நிலைத்திருக்கச் செய்த சுவாமிகளே. நும் அருளால் நமதூர் செழிப்புற, தங்களை வருக வருக என்று வாழ்த்தி வரவேற்கின்றோம்'' என்று மகிழ்ந்துரைத்தது மக்கட்சார்பில் சாமிகளுக்குக் கொடுத்த நல்வரவேற்புரை. திருவிளையாடல் புராணத்தில் நாம் காணும் இறைத் தாய்க்கு பன்றிக் குட்டிகளுக்குப் பாலூட்டினும் என்ற பெருமிதம்மட்டுமா? அவைகளைப் பேரறிஞர்களாக்கி அரச அவையில் மந்திரிகளாக்கி அவர் பெருமைகளைக் கேட்டும் அல்லவா பெருமித மடைகின்ருன் ஆண்டவன். அது போன்றே உலகிற்குச் சாமிகளைப் பெற்றளித்த தாய்ப்பெருமை பன்றிமலைக்கு? அவர் பன்றிமலையை மட்டுமல்ல உலகத்தையே காக்க வந்த சான்ருேன் என்ற புகழ்கேட்டு, உள்ளம் பூரிக்கும் தாய்பெருமை கூட. சாமிகள் இறையருளோடு பிறந்து தம் ஊருக்கே நற்பயன் அளித்தபோது இருந்த இன்பத்தை மிஞ்சியது சாமிகள் வெளி ஊர்களுக்குச் சென்று சான்ருேன் எனப் பெயற் பெற்றதைக் கேட்ட பன்றிமலே வாசிகள் இன்பம். ''வடஇந்தியாவில் காசி, கயா, காஷ்மீரம், அமர்நாத், பத்திரிநாத், திருக்கேதாரம், உத்திரப்பிரயாகை முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு எழுந்தருளி ஆங்காங்கு மா பெருஞ் சித்திகளைப் புரிந்து தங்களது அருள் மறையால் பக்தர்களை அன்று வெள்ளத்தில் ஆழ்த்தினீர்கள். பஞ்சம், பசி, பிணி, மழையின்மை இவைகளைப் போக்கி........ எங்களுக்கு நல்லாசிகள் பல புகன்று வேதாந்த சித்தாந்த ஆத்மீக தத்துவங்கள் பல புகட்டி நல் வாழ்விற்கு வழிகாட்டுங்கள்'' என்று வரவேற்பு விழாவிலும் பன்றிமலே பக்தர்கள் வாழ்த்திதழ் வாசித்தது உற்றுநோக்கத்தக்கது.

சாமிகள் குழந்தையாக இருக்கும் போதிருந்தே பல அற்புதங்களை ஆடிக் காண்பித்ததைப் பன்றிமலே ஊரார் நன்ருக அறிவர். ஆரம்பத்திலிருந்தே இன்றுவரை சாமிகள் தம் சித்தமிசை குடிகொண்ட முருகனருளால் பலபேர்க்குக் குறைகள் தீர்த்தருளுவதையும் நாம் அறிவோம். அனுக்கிரக சித்து விளையாடும் சாமிகள் குறும்பைக் கண்டிக்க தன் ஆற்றலைக் காண்பித்ததும், ஆங்கிலேயர் ஒருவரும் அதிசயப்படத்தக்க திருவிளையாடல் புரிந்ததும் இங்குக் குறிப்பிடத்தக்கன. ஒரு சர்க்கஸ்காரர் மாயா ஜால வித்தைக்காரர். தன் வேலையில் கெட்டிக்காரர். அனுதினமும் தன் திறமையைக் காட்டிப் பொருள் ஈட்டுபவர். ஆனுல் அவர் அகம்பாவி ஒருநாள் வீண்கர்வம் அவர் புத்தியை மறைத்தது. ஊராரை அலட்சியப்படுத்திப் பேசிவிட்டார். சாமிகளின் மனத்தையும் புண்படுத்திவிட்டார். வழக்கம்போல் அந்த சர்க்கஸ்காரர் தான் அனுதினமும் ஆடிவரும் ஆட்டங்களைக் கம்பீரமாக ஆரம்பித்தார். இரும்புச் சங்கிலியை அறுக்க வந்தார். அவருடைய

கண் கட்டி வித்தை பலிக்கவில்லை. இரும்புச் சங்கிலியை அவரால் அசைக்கக்கூட முடியவில்லை. அடுத்தாற்போல் ஒரு சின்ன வளையத்தில் தன் பலமிக்க உடம்பை உட்செலுத்திக் காட்ட முந்தினர். பெரிய உடம்பு வழக்கம்போல் சிறிய வளையத்துள் சென்றது. ஆனால் பழக்கத்திற்கு மாருக வளையத்தில் நன்ருக மாட்டிக்கொண்டது. வளையத்தை விட்டுவர எவ்வளவோ முயற்சிகள். சாண்டோவின் உடம்பு படாதபாடு பட்டது. வியர்வை கொட்டியது. திறுதிறுவென்று என்ன செய்வதென்றறியாது சுழன்ற விழிகள் பிதுங்கிவிட்டன. உயிர் போய் விடுமோ என்ற ஆபத்தான நிலைமை ஏற்பட்டது. தன் தவறை உணர்ந்த பயில்வான் சாமிகளைக் கண்டு தன் மன்னிப்பைப் பேசமுடியாத நிலையில் முகத்தால் அறிவித்தான். சாமிகளுக்கு மனம் இளகிவிட்டது. கருணைமூர்த்தியின் அருளால் தான் சர்க்கஸ்காரன் கர்வம் கரைந்தது. கர்வம் கரைந்தவன் வளையத்தினின்றும் மீட்சி கண்டான். வளையத்துள் நுழையும்போது சர்க்கஸ்காரன் சாமிகளை அலட்சியமாக நினைத்த அகம்பாவி; வளையத்தைவிட்டு வரும்போது சாமிகளைக் கண்கண்ட தெய்வமாகக் கருதும் கடமை உணர்ந்த பொதுத் தொண்டன் ஆனுன்.

பல ஆண்டுகளுக்கு முன் பன்றிமலை கிராமம் சர்வே நடந்தது. சர்வே டைரக்டராக அங்கு தன் பரிவாரத்தோடு தங்கியவர் ஸ்மித் எனும் ஆங்கிலேயர். அவர் சாமிகளின் சித்தாகும் ஆற்றலையும் பெருமையையும் பற்றியும் கேள்விப்பட்டார். தானே நேரில் சாமிகளின் ஆற்றலைப் பார்க்கவேண்டும் என்று ஆசைப்பட்டார். சாமிகளும் மனமுவந்து துரையவர்களைக்கொண்டே தன்னைக் காம்ப் டேராவில் ஒரு தூணில் கட்டச் செய்தார். சாமிகளை ஒரு தூணில் கட்டிய ஸ்மித் துரையவர்கள் அடுத்த நிமிடம் அந்தத் தூணில் சாமிகளைக் காணவில்லை. தான் கட்டிய கட்டுக்கள் கொஞ்சங்கூடச் சிதையாமல் இருக்க சாமிகள் வேருெரு தூணில் அதே கட்டுகளோடு கட்டப்பட்டிருந்தார். இப்படித் தன் சொந்த ஊரிலேயே சாமிகள் ஆடிக்காண்பித்த அற்புதக் கூத்துக்கள் எவ்வளவோ உண்டு.

சாமிகள் குடியிருந்த அவர் சொந்த வீட்டிலேயே, சாமிகள் குடி போகாதமுன், செய்வினைக் கோளாருல் எவ்வளவோ விபரீதங்கள் நடந்துகொண்டிருந்தன.

சாமிகள் அந்த வீட்டில் அடியெடுத்து வைத்தது முதல் அங்கு இருந்த தீயசக்திகள் ஒழிந்தன. சரஸ்வதி லக்ஷிமிகடாக்ஷமும் பொருந்திய இல்லமாக அது விளங்க ஆரம்பித்தது. தென்னுட்டையும், இந்தியாவையும் திரட்டிவரக்கூடிய சக்தி அம்சமும் பெற்றுவிளங்கியது சாமிகளது திரு இல்லம்.

## திருப்பதியில் பிரத்தியட்ச தெய்வம்

*"அன்னை அழைத்துவாராள் — திருமலைக்கு*
*அன்னை அழைத்துவாராள் — பன்றிமலையை"*

ஆண்டாளைத் திருவரங்கன் ஆட்கொண்ட திருமண நிகழ்ச்சி ஆத்மீக அன்பர் உள்ளத்தை ஈர்க்கும் இயல்பினது. "ஆண்டாளை நான் அங்கீகரிக்கின்றேன்" என்று பெரியாழ்வார் கனவில் ஒரு நாள் தோன்றி உரைத்த திருவரங்கன் மற்றொருநாள் அவளைத் திருவரங்கத்திற்கு அழைத்து வருமாறு பெரியாழ்வார் கனவில் தோன்றி உரைத்தார். தான் ஆண்டாளை அங்கீகரிக்கும் திருவிழாவைப் பற்றியும் திருவரங்கத்தின் அர்ச்சகருக்கும் சொப்பனத்தின் வாயிலாகத் திருவரங்கன் அறிவித்தார். இது நாம் கேள்விப்பட்ட கதை. 1961 ஆம் ஆண்டிலும் ஆண்டவன், இம்முறை வேங்கடேசப் பெருமாளுகக் கனவில் தோன்றி அழைக்கும் அற்புதத்தை என்னென்று இயம்புவது!

ஒரு தெய்வீக மங்கை சாமிகள் இல்லத்திற்கு வந்திருக்கின்ருள். சிகப்புநிறம். அழகுத்திருவுருவம்! அவளுக்குப் பின்ஞல் கம்பீரமான ஒரு கரிய நிற நெடியோன் நீண்ட நாமத்தோடு நிற்கின்ருர். "உங்களை என் ஊருக்கு அழைக்கவே வந்திருக்கின்றேன்," என்று அம்மங்கையின் தெய்வீகக் குரல்பேச, "அவர் கூப்பிடவில்லையே" என்று நிற்கும் மணவாளரைக் காண்பித்து சாமிகள் பதிலளிக்கின்ருர். "நானும் உம்மைக் கூப்பிடுவதற்காகவேதான் இங்கு வந்திருக்கின்றேன். உம்மை அழைத்துப்போக ஆள் அனுப்புகிறேன்" என்ருர் நெடியோன். சாமிகள் கண்களை ஆவலோடு திறந்து பார்க்கும்போது கண்டவை யாவும் கனவு போல் தோன்றியது. அதே சமயத்தில் சாமிகளைத் திருச்சானூருக்கும் திருப்பதிக்கும் அழைத்துச்செல்ல திருச்சானூரிலிருந்து ஸ்ரீ அலர்மேல் மங்கைத் தாயார் கோயில் அர்ச்சகம் மிராசுதார் திரு. M. G. சாரி அவர்களே திண்டுக்கல்லுக்கு வந்திருக்கின்ருர். சாமிகளை திருச்சானூருக்கு அழைத்துச் செல்லத் திருப்பதி ஸ்ரீ வேங்கடாசலபதி அலர்மேல் மங்கை கட்டளை தம் கனவில் கிடைத்த விபரத்தையும் திரு, சாரி அவர்கள் சாமிகளிடம் உரைத்தார். இதைக் கேட்டவுடன் சாமிகளுக்கு திருப்பதிக்கு உடனே புறப்படாமல் இருக்க முடியுமா?

இது நடந்தது 1961இல். சாமிகள் உடனே திருப்பதிக்குப் புறப்பட்டார். இதைத் தொடர்ந்தே சாமிகளும் திருச்சானூருக்கும் திருப்பதிக்கும் வருடா வருடம் திருச்சானூர் அலர்மேல்மங்கை திருக்கல்யாண வைபவ பிரமோற்சவத்திற்குக் கூடியவரை தவருமல் தம் பக்தர் குழாத்தோடு சென்று வருகின்றனர்.

முதன்முதலில் திரு. சாரி அவர்கள் ஸ்ரீ வெங்கடாசலபதி சந்நிதியில் சாமிகளோடு தரிசனம் செய்த சமயத்தில் சாமிகளுடைய பூரண கிருபாகடாக்ஷம் அடையப் பெற்றுர். 'நம்முடைய பக்தருக்குப் பூணூல் வேண்டும்' என்று சாமிகள் உரைத்த அடுத்த கணத்தில் ஒரு பூணூல் தெய்வீகமாகத் தோன்றி திரு. சாரி அவர்களுக்குக் கிட்டியது. 1962ம் ஆண்டில் திருச்சானூர் அலர்மேல்மங்கைத் தாயார் சந்நதியிலும், 'அம்மணி' என்று சாமிகள் உளமுவந்து அழைக்க, தாயார் சிலை பீடத்திலிருந்த குங்குமம் அப்படியே சாமிகள் திருக்கரங்களுக்குத் தானகவே வந்து சேர, அதைக் கூடியிருந்த பேஷ்கார் திரு. C. இராமசாமி ரெட்டி முதலிய பக்தர்களுக்குச் சாமிகள் வழங்கினர். பேஷ்கார் மனையில் இருந்த தோஷங்களை நிவர்த்தி செய்தார். அவர் மனைவியைப் பீடித்திருந்த வாதநோயைக் குணப்படுத்தினர். 1962இல் சாரி அவர்கள் ஒரு வீடு கட்டப் போவதையும் அது 1963இல் பூர்த்தியாகப் போவதையும் கூறி அந்தக் கிரகப்பிரவேசத்தைத் தானே வந்து நடத்தி வைப்பதையும் கூறிய சாமிகள் அப்படியே செய்து காண்பித்தனர். அந்த இல்லத்திற்கு சாரி அவர்கள் 'ஸ்ரீ பன்றிமலை சாமி நிவாஸ்' என்று அழகாகப் பெயர் வைத்திருக்கின்றுர். இந்த ஸ்ரீ பன்றிமலை சாமி நிவாஸ் கிரகப்பிரவேசத்தை உண்மையிலேயே சாரி அவர்கள் சாமிகளின் குருபிரவேச தினமாகவே கொண்டாடினர்.

சாமிகளிடம் நெருங்கிய ஆன்மநேய ஈடுபாடு கொண்டுள்ள திரு. சாரி அவர்கள் திருச்சானூரில் குடிகொண்டிருக்கும் ஸ்ரீ பத்மாவதி அம்மன் தேவஸ்தானத்தில் பரம்பரை அர்ச்சகர். ஆகம சாஸ்திரங்களை நன்கு கற்றுணர்ந்தவர். சக்திமிகுந்திலங்கும் சாமிகளை நடமாடும் தெய்வமாகவே கொண்டாடும் இயல்பினர். "பத்மாவதித் தாயார் தெய்வீக அருளே என்னை அவரிடம் சேர்த்துள்ளது. ஸ்ரீ சாமிகள் முருகனுடைய திரு அவதாரமே; தெய்வங்களுக்குள்ள 'சகல சக்திகளும் அவரிடம் உண்டு" என்றெல்லாம் சாமிகளைப் போற்றுகின்றுர், காரணங்கள் இல்லாமலா இப்படி ஒருவர் சொல்வர். "முருகா என் மாலையைக் கொடு" என்று சாரி அவர்கள் சாமிகள் கூறியபடியே உரைக்க, மதருசில் பூசை அறையில் மூலையில் தூக்கி வீசப்பட்டிருந்த மாலை ஒன்று மளமளவென்று சாரி அவர்கள் கைகளுக்குப் பறந்து வந்தது, ஸ்ரீ அலர்மேல் மங்கை சந்நிதியிலேயே சாமிகள் அருள் கூர்ந்து கந்தப்பொடியையும் அந்தக் கோயிலில் உபயோகப்படும் குங்கும பிரசாதத்தையும் சாரி அவர்களுக்கு வரவழைத்து அளித்தனர். ஒரு புஷ்பத்தைக் கிள்ளி அதனின்றும் வந்த கற்பூர வில்லையைச் சாமிகள் சாரி அவர்களிடம் கொடுக்க, அந்தக் கற்பூர வில்லையை அம்பாளுக்கே கற்பூர ஹாரத்திக்கு உபயோகப்படுத்திய போது அது சுமார் அரைமணி நேரம் ஓர் அபூர்வ நறுமணத்துடன் எரிந்தது. ஒரு நாள் சென்னையில் முருகன் அருள் பெற்ற மஹான் ஒருவரிடம் தன்னை அழைத்துச் செல்லும்படி உத்திரவானதென்று

கூறிய அம்மையார் ஒருவர் இஷ்டப்படி சாரி அவர்கள் அவ்வம்மையாரை நம் சாமிகளிடமே அழைத்துச் சென்றனர். அப்போது சாமிகள் பூசை அறைக்குள் இருந்தனர். பூசை அறைக்குள் நடந்தனவற்றைச் சாரி அவர்கள் வாயிலிருந்தே கேட்போம்.

சாரி: "என்ன விஷயம் என்று ஸ்ரீ சாமிகள் கேட்டுக்கொண்டிருக்கும் போதே உடனே வந்து அம்மையார் ஸ்ரீ சாமிகளுக்கு எதிரில் பத்மாசனம் போட்டு உட்கார்ந்து விட்டார்கள், சில நிமிடங்களுக்கெல்லாம் அவ்வம்மையார் பத்மாசனம் போட்டபடியே தரையிலிருந்து மேலே இரண்டடி உயரத்திற்குக் கிளம்பி அந்தரமாக உட்கார்ந்திருந்தார்கள். நான் இதைப்பார்த்து அந்த அருளைக்கட்டுப்படுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன் சில மந்திரங்களை ஜெபித்தேன். ஸ்ரீ சாமிகள் பக்கம் திரும்பிப் பார்த்துத் திடுக்கிட்டேன். ஸ்ரீ சாமிகள் வீற்றிருந்த அதே இடத்தில் ஒளி வீசும் முகத்துடனும், அருளை வழங்கும் விழிகளுடனும், விபூதி சந்தனம் பூசித் தலையில் கிரீடம், கழுத்தில் ருத்திராக்ஷமாலை, மலர்மாலை, அறையில் பட்டுப் பீதாம்பரத்துடன் சாக்ஷாத் முருகப் பெருமானே தேஜோமயமாகக் காட்சியளித்தார். நான் அந்தக் காட்சியை எப்படி வர்ணிக்க முடியும். நான் அந்தத் தெய்வீகக் காட்சியைப் பார்த்துக்கொண்டே இருந்தேன். வாய்பேச நா எழவில்லை. நான் எங்கே இருக்கிறேன், என்ன செய்கிறேன் என்று எனக்கே தெரியவில்லை. உண்மையிலே முருகன் காட்சியைக் கண்ட பூரிப்புடன் திருப்பாதங்களில் வீழ்ந்துவிட்டேன். "எழுந்திருங்கள் சாமி" என்ற குரல்கேட்டு எழுந்து பார்க்கையில் ஸ்ரீலஸ்ரீ சாமிகள் புன்முறுவலுடன் அங்கே வீற்றிருந்தார்கள்." சாரி அவர்கள் உவகையைக் கேட்கவேண்டுமா, சாமிகள் அருளில் திளைத்தோங்கும் சாரி அவர்களுடைய உவகை சாமிகளைப் பற்றிய ஸ்ரீ ஜகத்குரு காமகோடி சங்கராச்சாரியார் அவர்களுடைய திருவுரையைக்கேட்டு விரிவடைந்தது. "ஒரு பெரிய மகானாக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளுடைய சீடனாக இருக்கும் உங்களுக்கு அவருடைய அருள் கிட்டிவிட்டபடியால், உங்களுக்கு ஏது குறை. அவரை விட்டுவிட வேண்டாம்" என்று திருவாய் மலர்ந்தருளினர் ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சாரியார் அவர்கள். இந்தத் திருமொழிகளையே 'அன்னை அழைத்துவாராள்' என்ற ஆங்கிலப் புத்தகத்துக்கு முன்னுரை வழங்கிய திரு, சாரி அவர்கள் அம் முன்னுரைக்கு அணிகலனாகப் பேருவகையோடு சேர்த்து விட்டார்.

1964இல் சாமிகள் திருச்சானூர் திருப்பதித் தலங்களுக்குத் திருச்சானூர் பிரமோற்சவத்தின் போது வந்தார். அப்போது நடந்த இரண்டு நிகழ்ச்சிகளை மட்டும் குறிப்பிடுதல் விசேஷம். திருப்பதி தேவஸ்தான நிர்வாக அதிகாரி திரு B. நரசிங்க ராவ் B. A,, B. L,. அவர்களுக்கு நீண்ட நாட்களாக பெரியோ திரோடைஸ் (Perior

Thorites) என்ற வியாதி உண்டு. அதனால் மிகவும் சிரமப்பட்டார். அந்த வியாதியைக் குணப்படுத்தப்பெரிய வைத்தியர்களையும் நிபுணர்களையும் அடைந்தார். அவர்களால் குணப்படுத்த முடியவில்லை. இந்த வியாதிக்கு மருந்தே இல்லை என்று மனம் தளர்ந்திருந்த நேரத்தில் சாமிகள் பலவியாதிகளுக்குத் தக்க மருந்தாய் உதவுகின்றார் என்ற தகவல் கிடைத்தது. சாமிகளைத் தேடிச் சென்று தன் தீராத வியாதியைக் குணப்படுத்திக்கொள்ளவேண்டும் என்ற எண்ணம் அவருக்கு இல்லை; காரணம் அவருக்குத்தன் நண்பர்கள் உரைத்ததில் அவ்வளவு நம்பிக்கையில்லை. இவரைச் சாமிகளே தேடிச் சென்று தடுத்தாட்கொண்டது போன்று தோன்றுகின்றது! சாமிகள் திருமலை சென்று தன் பயணத்தை முடிக்கும் தறுவாயில் இந்த நிர்வாக அதிகாரியும் தன் அலுவல்களைக்கவனிக்கத் திருமலைக்கு வந்திருந்தார். அந்தச் சமயத்தில் சாமிகளைக் காண இராவ் அவர்கள் விரைந்தார். அவரைக் கண்டு சாமிகள் புன்னகை பூத்த முகத்தோடு வரவேற்றார். உதவாமல் இருந்த அவருடைய கரத்தை உதவச் செய்யத் திருநீறு கொண்டு அவர் தோளில் தடவினார் சாமிகளுடைய அருட் கரங்கள் பட்ட மாத்திரத்தில் நீண்ட நாட்களாகத் தூக்கமுடியாது இருந்த இராவ் அவர்களுடைய கை நொடிப் பொழுதில் முழு நீளத்திற்குத் தூக்க முடிந்தது. அன்றிலிருந்து அவரைத் தீராத வியாதியெனப் பற்றியிருந்தது பறந்துவிட்டது. இந்தவிபரங்களை இராவ் அவர்களே திரு V. S. வெங்கட நாராயண M. A , B. Ed., அவர்கள் எழுதியுள்ள "நான் கண்ட பிரத்தியக்ஷ தெய்வம்" என்ற புத்தகத்திற்கு முன்னுரை வழங்கியபோது அதில் எடுத்துரைக்கின்றார். உண்மையிலேயே "நான் கண்ட பிரத்தியக்ஷ தெய்வம்" என்ற முறையில் இராவ் அவர்கள் முன்னுரை வழங்கியிருப்பது புத்தகப் பெயருக்கும் மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளது அல்லவா?

3—12—1954இல் திருச்சானூரில் ஸ்ரீ அலர்மேல் மங்கை உற்சவ விக்கிரகத்திற்கு அபிஷேகம் நடந்துகொண்டு இருந்தது. கோவில் ஜீயர் அவர்களும் சாமிகளோடு இருந்தார். மஞ்சள் பொடி வைத்திருந்த கிண்ணம் உடனே கிடைக்கவில்லை. சாமிகள் உடனே கைகளைப் பிசைய மஞ்சள் தூள் வேறொரு காலிக் கிண்ணத்தில் நிறைந்து விட்டது. அபிஷேகம் முடிந்தவுடன் சாமிகளும் ஜீயர் அவர்களும் ஸ்ரீ அலர்மேல் மங்கை சந்நிதிக்குச் சென்றனர். அப்போது தாயார் விக்கிரக பீடத்திலிருந்து ஒரு ஒளிக்கதிர் உண்டாகிச் சாமிகளது திருவருட் கரங்களில் இணைந்தது. உடனே ஜீயர் கைகளில் கற்கண்டுக் கட்டிகள் கொட்ட ஆரம்பித்தன. "போதும், என்றால் தாங்கமுடியவில்லை" என்று ஜீயர் அவர்களே உரைக்கும் வரை கற்கண்டுக் கட்டிகள் பொழிந்து கொண்டே இருந்தன. சாமிகளை ஒரு உண்மை மகாத்மாவாகக் கண்ட ஜீயர் அவர்கள் சாமிகளைத் தன் மடத்திற்கு அழைத்துச் சென்று

கௌரவித்தார். மடத்தின் முக்கியமான இடத்திற்கு அன்போடும் ஆர்வத்தோடும், மரியாதையோடும் சாமிகளை அழைத்துச் சென்ற ஜீயர் சாமிகளுக்குப் பத்ராசனம் தன் கையாலேயே அளித்து ஜீயர் அவர்களுக்கே உரிமையாக உள்ள ஸ்ரீ வெங்கடேசப் பெருமான் சந்தன அஸ்தம், பத்மம் இவைகளைச் சாமிகளுக்கு உவந்தளித்தார். சாமிகளுடைய சித்த புருஷத் தன்மையை வியந்து புகழ ஆரம்பித்தார். சாமிகளுக்கு இவைகளை விட வேறு என்ன தன்னால் அளிக்க முடியும் என்றும் சாமிகளைப் போற்றினர். உலகில் பிறந்து வளர்ந்த ஒரு மங்கை நல்லாளை, ஸ்ரீ ஆண்டாளை உலக இரட்சகன் தெய்வ ஸ்தானத்தில் உள்ள அரங்கநாதன் திருமணம் செய்து கொண்டிருப்பானு என்ற ஐயத்தைச் சாமிகளையும் சாமிகள் ஆடும் அற்புதங்களையும் காண்பவர் நிச்சயமாக மனத்தில் வைத்துக்கொள்ள மாட்டார் என்று சொல்லிச்சாமிகளின் அருள் நிறைவைப்போற்றினர். அப்போது சாமிகள், குலம், ஜாதி, மதம், நிறம், நாடு இவைகளைப் பாராமல் உலகில் யாராயிருந்தாலும் அவர்களுக்கு இறைவனிடத்தில் பக்தி ஏற்படுத்துவதே தன்னுடைய கடமை என்பதை அறிவுறுத்தினர் கள். சாமிகளையும் ஜீயர் அவர்களையும் ஒன்று சேர்த்துக் காணும் பக்தர்களுக்கு வைணவ பீடாதிபதி ஜீயர் அவர்கள் கூறிய உண்மை மொழிகள் அமுதம் பொழிவது போன்று இருந்தது.
ஜீயர்: "சாமிகள் ஒரு பெரிய ஆத்மா. அவர்களுக்கு ஜாதி முதலிய கட்டுப்பாடுகள் கிடையா. அவர்கள் கண்களுக்கு முன் எல்லோரும் சரிசமம். இவர் ஆண்டவனுடைய பூரண அருளைப் பெற்றவர் என்று போற்ற வேண்டும்."

## திருப்பதிக்குச் சாமிகள் வருகை : 1965

1965 நவம்பர் மாதம் சாமிகள் திருச்சானூருக்குப் பிரம்மோற்சவத்திற்கு வந்தார். சென்னையிலிருந்து டாக்டர் C. நரேந்திரன் முதலியோரும், சென்னை ஐயனாவரத்திலிருந்து ஸ்ரீ பன்றிமலை சாமிகள் பக்த ஞானசபை அன்பர்களும், திருச்சியிலிருந்து டாக்டர் T. V. அரங்கநாதன் முதலியோரும், தாண்டிக்குடியிலிருந்து திரு. N. S. சோமசுந்தரம்பிள்ளை முதலியோரும். மதுரையிலிருந்து ஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஞானசபைக் காரியதரிசி திரு. ஆறுமுகம்பிள்ளை முதலியோரும், கோயமுத்தூரிலிருந்து நடுவர் திரு. M. P. சங்கரநாராயணன் முதலியோர்களும், சாமிகளோடு கலந்துகொண்டனர். சாமிகள் தம்பக்தர் குழாத்தோடு குலவுவதும் அருள்மொழி ஆடுவதும் அன்பொழுகப் பழகித் தித்திக்கத் தித்திக்கப் பேசுவதும் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. சாமிகள் எழுந்தருளிய கார் முன்னால் செல்லப் பின்னால் வரிசையாகச் சாமிகள் காரைத்தொடர்ந்து பல கார்கள் சென்ற காட்சி பார்ப்பதற்கு வெகு அழகாக இருந்தது. 23—11—65. திருச்சானூர் கோவிலுக்குமுன் இருக்கும் ஸ்ரீ பன்றிமலை

சாமிகள் திருவுருவப்படம் கொண்ட திருக்கோயிலின் எதிரில் அமைந்துள்ள ஒரு பஜனைமடக் கட்டிடத்தில் சாமிகள் தங்கி இருந்தார். அன்று காலை பூஜையிலிருந்து பக்தர்கள் சாமிகளைக் கண்டு அருள்பெற வந்த வண்ணமாகவே இருந்தனர். சங்கீதாமிர்தம் சாமிகளின் பக்தர்கள் உவந்தளிக்க, சாமிகளது தெய்வீக விபூதி பஜனை மடத்திற்கே ஒரு நறுமணத்தை ஊட்ட, சாமிகளது அருள்கனிந்த நோக்கும் திருஉருவும் அந்த இடத்திற்கே ஒரு தெய்வீக சபை அழகைக் கூட்ட நேரம் செல்வதே தெரியவில்லை. கோயிலில் அலர்மேல்மங்கைத் தாயாருக்கு அபிஷேகம் முடிய சாமிகளும், பெரிய ஜீயர் அவர்களும், சிறிய ஜீயர் அவர்களும், பக்தர்களும் தாயார் சந்நிதிக்குச் சென்றனர். அப்போது உளங்கனிந்து சாமிகள் "அம்மணி" என்று தாயாரை அழைக்க ஜீயர்களுடைய இரு கைகளிலும் திருமஞ்சள்பொடி மழையெனப் பெய்து நிறைந்தது. அன்று நள்ளிரவுவரை சாமிகளுக்கு ஓயாத வேலை. பக்தர்களுக்கு அருள் பிரசாதம் வழங்கினர். அன்று கடைசியாகத் திருப்பதி ஸ்ரீ பன்றிமலை சாமி ஞானோதய சபா முயற்சியால் வெளிவந்த "ஸ்ரீ இலட்சுமி வேங்கடேச்வர தோத்திரமும்," "தெய்வீக அருள் ஒவ்வொரு மனிதனுடைய பிறப்புரிமை" என்ற சாமிகளது கட்டுரையும் கொண்ட தெலுங்குப் புத்தக வெளியீட்டு விழாவோடு அன்றைய நிகழ்ச்சிகள் இனிது முடிந்தன.

திருச்சானூரில் ஒருநாள் காலை வெங்கடேஸ்வரா சர்வகலாசாலையில் படித்துவரும் ஒரு அமெரிக்க ஆராய்ச்சி மாணவர் தன் மனைவியோடு வந்தார். தாயுடைய மடியைக் கெட்டியாகப் பற்றிய கைக் குழந்தை ஒன்றை அவள் ஏந்திக்கொண்டு வந்தாள். சாமிகளுடைய பெருமைகளைக் கேள்விப்பட்ட அமெரிக்க இளம் தம்பதிகள் சாமிகளைக் கண்டு கைகூப்பி வணக்கம் செலுத்தினர். சாமிகள் அங்கு இருந்த தாம்பூலத்திலுள்ள உதிரிப்புஷ்பங்களைக் கையில்அள்ள அவை தொடுத்த மலர்மாலைகளாக உடனே மாறிவிட்டன. மயிர்க்கூச்சல் எடுக்கச்செய்யும் இந்த அற்புதத்தைக் கண்ட அமெரிக்கர்களுக்கு ஏற்பட்ட அதிசயம் சொல்லமுடியாதது. "இத்தகைய அற்புதங்கள் உங்கள் நாட்டில் உண்டா" என்று சாமிகள் கேட்ட கேள்விக்கு உடனே அவர்களால் பதிலுரைக்க முடியவில்லை. தங்களுடைய சிரங்களைத் தாழ்த்திய வண்ணம், "அப்படி ஒன்றும் இல்லை" என்பதை அறிவிப்பதுபோல் தலைகளை அசைத்தார்கள். சாமிகள் அருகில் இவைகளைக் கண்டு அனுபவித்து நின்றுகொண்டிருந்தார் திரு சாரி அவர்கள். திரு. சாரி அவர்கள் நெற்றியில் விளங்கும் நாமத்தைக் கண்ட சாமிகள் வந்திருந்த அமெரிக்கர்கள் நெற்றிகளிலும் திடீரென்று குங்குமத்தால் நாமங்கள் இட்டு ஆசீர்வதித்தார். எதிர்பாராத இவைகளைக் கண்ட அமெரிக்க இளந்தம்பதிகள் ஒரு அற்புத மனிதரைக் கண்டோம் என்ற பெருங்களிப்பில் அந்த இடத்தைவிட்டு

நகர்ந்தனர் சாமிகள் கொடுத்த மாலைகளை அணிந்த வண்ணமுமாய்! சாமிகள் இட்ட நாமத்தைக் கொண்ட வண்ணமுமாய்!

அவர்கள் சென்றவுடன் அந்த அமெரிக்க மங்கையின் வயிற்றைக் கெட்டியாகப் பிடித்திருந்த குழந்தையைப் பற்றிச் சாமிகள் பேசினர். "நீங்கள் அந்தக் குழந்தை எவ்வளவு கெட்டியாக அதன் அம்மாவின் மடியைப்பற்றியிருந்ததைக் கவனித்தீர்களா? அந்தத் தாயும் எவ்வளவு பத்திரமாக அந்தக் குழந்தையைத் தாங்கி இருந்தார் என்பதையும் கவனித்தீர்களா? மரத்தில் கிளைக்கு கிளை வெகு உயரத்தில் தாவுகின்ற தாய்க்குரங்கு வயிற்றை உடும்புப்பிடியாகப் பிடித்திருக்கும் குட்டிக்குரங்கையும் பார்த்திருப்பீர்கள். தாய்க் குரங்கு அப்படித் தாவும்போது அந்தக் குட்டிக் குரங்கு கீழே விழுவதுண்டா? அந்தத் தாய்க் குரங்குதான் அப்படித் தன் குட்டியைக் கீழே விழவும் விட்டு விடுமா? அது ஒருநாளும் நடக்காது. அப்படித்தான் குருவின் உறவும் சீடர்களுடைய உறவும் அமையவேண்டும். ஒரு குருவை அண்டி அவர் அருளில் வளர ஆரம்பிக்கும் சீடன் குருவை அதே குரங்குப்பிடியோடுதான் பற்றிக்கொள்ள வேண்டும். அவனும் குருவின் அருள் நிலை மடியிலிருந்து கீழே தவறி விழுவதில்லை. குருவும் அப்படித் தன் அருள்பிடியிலிருந்தும் சீடர்களைக் கீழே விழுந்து விடவும் விட்டுவிடமாட்டார்." இப்படி உளமுவந்து பேசிய சாமிகள் இடத்திற்கு ஏற்றாற்போல் கருத்தாடல் செய்தார். "நீயே கதி" என்று நமக்குப் பிரத்தியக்ஷ தெய்வமாக விளங்கும் சாமிகளைப் பற்றியிருக்கும் நம்மைச் சாமிகள் கைவிட மாட்டார்கள் என்ற எண்ணம் பக்தர்களின் உள்ளங்களைக் குளிரச் செய்தது.

இவைகளை யெல்லாம் கண்டுகளித்துப் பேருவகையில் மிதந்து கொண்டிருந்த எனக்கு இவை அத்தனையும் ஒரு பாட்டில் பொழிந்து விடவேண்டும் என்ற ஆர்வம் பொங்கியது. பெயர்பெற்ற திருமலைக்குப் பெயர்பெற்ற பன்றிமலை வந்திருக்கின்றது. வெங்கடேசப் பெருமானைக் காண ஸ்ரீ பன்றிமலை சாமிகளே திருப்பதிக்கு வந்திருக்கின்றார். அவரை முதன் முதலில் திருப்பதிக்கு வர அலர்மேல்மங்கைத் தாயாரேயல்லவா அவர் கனவில் தோன்றி அழைத்து வந்திருக்கின்றார். திருச்சானூரில் வந்திருக்கும் சாமிகளுக்கு எவ்வளவு பய பக்தியோடு திருச்சானூர்ப் பக்தர்களும், வெளியூர்ப் பக்தர்களும் உபசாரம் செய்கின்றனர். திருமாலுடைய மருகர் திருமுருகர். திருமுருகர் பக்தர் சாமிகள். மால் மருமகனுக்கு நடக்கும் மரியாதையெல்லாம் மருமகன் அருள்சுரந்து நிற்கும் சாமிகளுக்கு நடக்கின்றது. செந்தமிழ்நாட்டுச் சிறப்பு அருள் தொண்டர்க்கன்றோ அருமையான வகையில் பேரன்பு வரவேற்புக் கொண்டாட்டமாக நடக்கின்றது. திருச்சானூரில் சாமிகளைப் பிரத்தியக்ஷ தெய்வமாக அல்லவா கோயில் எழுப்பியும், பஜனை செய்தும், தூபதீபங்கள் காட்டியும்,

பால் பழம், கற்கண்டு, இன்னிசை வழங்கியும் பூஜிக்கின்ருர்கள். இவையெல்லாம் என் பாட்டில் இடம்பெற்றுவிட்டன. இதைப் பாடுவதற்கு ஒரு தக்க தருணம் வேண்டுமே என்று ஏங்கிக் கொண்டிருந்தேன். திருச்சானூரில் திரு. V. S. வெங்கடநாராயணு M. A., B. Ed., அவர்களைத் தலைமை ஆசிரியராகக் கொண்ட நேருஜி தேசீய உயர் நிலைப்பள்ளியில் சாமிகளுக்கு அமோக வரவேற்பு ஏற்பாடாகி இருந்தது. சாமிகளுடைய தீவிர சீடர்களில் ஒருவர் திரு. V. S. வெங்கட நாராயணு அவர்கள், தன்னுடைய திறமைக்காகத் தேசீய பதக்கமும், இந்திய அரசாங்கத்தாரால் வழங்கப் பெற்றவர். இனிமை யென்பதை மனமொழி மெய்களால் யாவருக்கும் தன் எளிய முறையில் காண்பித்து இறைவனடி மறவாத நெஞ்சத்தவர். சாமிகளது அருள் பிரவாகத்தில் நீந்தி நீந்தி ஆடிச் சாமிகள் அன்பைக் கொள்ளை கொண்டவர். "எனது பிரத்தியட்ச தெய்வம்" என்று சாமிகளின் வாழ்க்கைக் குறிப்பையும் தனது அனுபவங்களையும் தொகுத்து ஒரு அழகான புத்தகமாக வெளியிட்ட உத்தமர். இந்தலைமையாசிரியர் சாமிகளுக்கு வரவேற்பு வழங்கியவுடன் சாமிகளிடமிருந்து எனக்கு ஒரு கட்டளை வந்தது. நான் அன்று பேசுவேன் என்பதைக் கனவிலும் கருதவில்லை. "ஆனல் இந்தச் சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமாக அமைந்த பாட்டைச் சாமிகள் என்னைப் பாட வைக்கமாட்டார்களா" என்று துடித்துக் கொண்டிருந்தது என் உள்ளம். சாமிகளுக்கா தெரியாது என் உள்ளத்தின் துடிப்பு? கட்டளை வந்தது; நான் எழுதி வைத்திருந்த பாட்டை ஷண்முகப்பிரியா இராகத்தில் பாடி விட்டேன். அதை வைத்துக்கொண்டே சாமிகளது அருள் ஆற்றல்களைப் பற்றி பேசியும் விட்டேன். என்னென்று சொல்வது சாமிகளது மற்றவர் மனத்தை அறிகின்ற திறனை! நான் பாடிய பாட்டை இதோ கேளுங்கள்!

**இராகம் : ஷண்முகப்பிரியா ]** **[ தாளம் : ஆதி**

**பல்லவி**

அன்னை அழைத்து வாராள் — திருமலைக்கு
அன்னை அழைத்து வாராள் பன்றிமலையை — அன்னை

**அனுபல்லவி**

தன்னை அறிந்தவரை மங்கை அலமேலு
மாட்சி மிருந்திலங்கும் பன்றிமலை சாமியை -– அன்னை

**சரணம்**

மால்மருகன் முருகன் மைந்தனென்று இவர்க்கு
மனம் கனிந்தே இந்த வரவேற்போ!
வேல்குமரன் சுவைக்கும் செந்தமிழ்த் தேனுக்கோ
ஓடி எடுத்துவரும் பூமாலை!

பால்பழம் கற்கண்டு பைந்தமிழ் தேனிசை
பக்தருளம் அணைக்கும் பன்றிமலை சாமியை — அன்னை

இதை அடுத்து சாமிகள் அருள்வாக்கு வழங்கினர். அது மாணவர் இளம் உள்ளங்களுக்கு அருள் சர்க்கரையாகவும், குழுமியிருந்த பெருமக்களுக்கு அருள் தேனாகவும் அமைந்து சாந்தி அளித்தது.

1965இல் நடந்த இந்நிகழ்ச்சியையும், மற்ற விஷயங்களையும் ஒன்றாகத் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட்டார் திரு. V. S. வெங்கட நாராயண அவர்கள். இந்தப் புத்தகத்திற்கு மேலே உள்ள பாட்டின் பல்லவியின் முதல் அடியையே புத்தகத்தின் பெயராகவும் கொடுத்து விட்டார். "அன்னை அழைத்து வாரான்" என்பதே அவ்வாங்கிலப் புத்தகத்தின் பெயர்.

1965இல் சாமிகள் திருமலையில் மூன்று நாட்கள் தங்க ஏற்பாடாகி இருந்தது. சாமிகள் எழுந்தருளிய கார் திருப்பதி மலைமீது முன்னே செல்ல வெளியூரிலிருந்து வந்திருந்த பக்தர்களின் கார்கள் வரிசையாகப் பின்தொடர்ந்தன. டாக்டர் T. V. அரங்கநாதன் அவர்கள் காரை ஓட்ட சாமிகள் மிக குதூகலத்துடன் அருள்மொழிகள் மொழிந்து வந்தார். எளியேனுக்கும் சாமிகள் பக்கத்தில் உட்காரும் பாக்கியம் கிடைத்தது. சாமிகள் முருக இன்பத்தில் தோய்ந்திருந்தார். முருகனுடைய கருணையில் தேனூறித் திளைத்திருந்த சாமிகள் அருள் முகத்தில் முருகு வழிய ஆரம்பித்தது "இதோ முருகனைக் கூப்பிடுகிறேன்" என்று உரைத்து உள்ளம் விரிந்து பாட ஆரம்பித்தார்.

"செங்கோல் எடுத்ததினை வடிவேலன் உன்திருமுகமும்
பங்கே நிறைந்த உன்பன்னிரு தோளும் உன்பதுமமலர்
செங்கேதாள செங்கோடக் குமரனென நான்
எங்கே நினைப்பினும் அங்கே என்முன்வந்து நிற்பனே"

பாடிக்கொண்டே இருக்கும் சாமிகளைச் சுற்றிலும் தெய்வீக மணம் பெருக ஆரம்பித்தது. பழநி ஆண்டவருடைய அருட்சக்தி விபூதி நறுமணம் காரில் பெருகியது. முருகனுடைய தெய்வீக அருள் அங்கு சுரந்து நிரம்பியது. சாமிகளுடைய திருமுகத்தில் பரிபூரணனந்தம் தாண்டவமாடியது. சாமிகள் திருமுருகன் திருக்காட்சியில் லயித்து விட்டார். சில நிமிடங்கள் தெய்வீக மலர்ச்சியில் ஒரு விவரிக்க முடியாத இன்பத்தைக் கொடுத்துச் சென்றன. காரை ஓட்டிவந்த டாக்டரும் இத்தெய்வீக மெய்யுணர்வில் லயித்துக் காரை நிறுத்தி விட்டார். இப்படியே இன்பப் பெருக்கில் சில நிமிடங்கள் ஓடின. சாமிகள் திருவிழிகள் திறந்து திருமொழிகள் கூற ஆரம்பித்தார். காரும் மறு

படியும் மேல்நோக்கி நகர்ந்தது. முறுவல் பூத்த சாமிகளது திரு வாயிலிருந்து 'சாம்ப சிவசிவ' என்ற திருச்சொற்கள் எழுந்தன. அதைத் தொடர்ந்து "சாம்ப சிவசிவ சிவானந்தமே" என்ற சிவச் சொற்கள் ஆனந்தமேலீட்டால் இசையோடு சாமிகளிடமிருந்து வெளி வந்தன. மேலும் ஆனந்தம் பொங்க, "சாம்ப சிவ சிவ சிவ, சாம்ப சிவா, சாம்பலுக்குள் சிவன்" என்று சாமிகள் திருவாய் மலர்ந் தருளித் தன் திருக்கரத்திலுள்ள பஞ்சாட்சர விபூதியை என் வாயில் போட, திருநீறு கற்கண்டாக மாறி என் வாயை நிரப்பியது.

சாமிகளுடைய உற்சாகம் மேலும் மேலும் பெருக்கெடுத்தோட ஆரம்பித்தது. பாட ஆரம்பித்தார். "கணபதியின் கிருபை இருந் தால் காரியம் கைகூடும்" என்று சொல்லிச் சாமிகள் நாட்டக்குறிஞ்சி இராகத்தில் பாடினர்.

"இதுததி அருள் செய்வாய்
ஆதிமூல ஜோதி பால கணபதி – இது ததி
நான் சிறியேனே
எனினும்
அருள்மழை
தனிலொடு
துளியது
பெருகிட – இதுததி

இதைத் தொடர்ந்து ஸ்ரீ சரஸ்வதிமீது ஒரு தோத்திரம் பாடினர். மாம்பழக் கவிராயர் பாட்டு.

**பல்லவி**

"வாணி சரணம் சரணம் – வேதபுத்தக
பாணி சரணம் சரணம்.

**அனுபல்லவி**

வேத முகத்தினிலுற்ருய் சகலலோக
மாதா எனப்பெயரும் பெற்ருய்
ஆதார மற்றனையும் நீதான் மயக்கமதில்
வேதா உனக்குநிகர் கீதாமிர்தப்ரபல – வாணி

**சரணம்**

சொந்த மொடுபல துதிசெய்ய
என்னுவில் வந்த ஜெய சரஸ்வதி
சொந்தவிதமாக வந்த விசவிதசுரி
துங்கமாம்பழக் கவி சிங்கம்தனை இரட்சிக்க – வாணி

சாமிகளது இசை ஆர்வம் அருள்நிலையின் சிகரத்தையே எட்டிப் பிடிக்க ஆசைகொண்டதுபோல் மேலே எழ ஆரம்பித்தது. சாமிகள் இசை இன்ப வானின் உச்சியிலேயே பறக்க ஆரம்பித்து விட்டார். தன்னுடைய சொந்த சாகித்யம் ஒன்றையே அனுபவித்துப் பாட ஆரம்பித்தார்.

**பல்லவி**

அரிவோம் பிரணவ ஸ்ரீநமோ நாராயணா
அகிலம் முழுதும் உந்திஅமைத்த சம்பூரண

**அனுபல்லவி**

விரிபுவன ரக்ஷக சாக்ஷாத் காரண
விசிதை சரிதை சொல்நிச மருளாளன – அரி

**சரணம்**

மதனும் பிரமனைத் தந்த மாவிஸ்வகாந்திரா
மகாரிஷிகள் பரவும் மகிமை சத்பாத்ரா
வதன சுபமங்கள வாரிச நேத்ரா
உனைவணங்கும் பன்றிமலை சுவாமி சொல்தோத்திரா – அரி

சாமிகள் ஆர்வத்தோடு பாடிய பாட்டுக்கள் நமது உடலில் உள்ள ஆறுதாரங்களுள் முதல் மூன்று ஆதாரங்களுக்குரிய தெய்வங்களைப் பற்றி அல்லவா இருக்கின்றன. முதலில் பாடிய பாட்டு ஸ்ரீ கணபதியைப் பற்றியது. ஸ்ரீ கணபதி மூலாதாரத்திற்கு உரிய மூர்த்தி. இரண்டாவது பாடிய பாட்டு சுவாதிட்டானத்திற்கு உரிய சக்தி ஸ்ரீ சரஸ்வதியைப் பற்றியது. மூன்றாவது பாடிய சொந்த சாகித்தியம் மணிபூரகத்திற்குரிய மூர்த்தி ஸ்ரீ விஷ்ணுவைப் பற்றிய தேயாகும். சாமிகள் யோகி என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அவர்களுடையப் பாடல்களும் யோக சம்பந்தமாக உள்ளதில் ஆச்சரியப்படவேண்டிய தொன்றுமில்லை.

சாமிகள் சொந்த சாகித்தியத்தைப் பாடி முடிப்பதற்குள் சாமிகள் தங்கியிருந்த விடுதி பங்களா வந்துவிட்டது. சாமிகள் மடமட வென்று நேராக பங்களாவிற்குள் நுழைந்தார். காரில் நடுவில் விட்ட அடியைத் தொடர்ந்து பாடி பாட்டை முடித்துவிட்டுத்தான் வேறு வேலை பார்ப்பது என்று கங்கணம் கட்டிக் கொண்டவர் போல் தோன்றியது அவர் செய்த செயல். சாமிகள் பாட்டை முடித்தவுடன் அங்கு கூடியிருந்தவர்களில் சாமிகள் பாடுவதைக் கேட்டு ஆச்சரிய மடைந்த மாது ஒருவர் “ பாடுகிறீர்களே சாமி ” என்று பெரு வியப்போடு கேட்டுவிட்டார். இதற்கு உடனடியாகச் சாமிகள் அளித்த பதில் கூடி இருந்தவர் எல்லோரையும் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்து விட்டது. “ அவர் சொல்லிக் கொடுத்தார் ” என்று அருகில்

அமர்ந்திருந்த அடியேனைக் காண்பித்து விட்டு ஒன்றும் தெரியாதவர் போல் இருந்த சாமிகள் எல்லோரும் சிரிக்கவும் தானும் அந்தச் சிரிப்பில் கலந்து கொண்டனர்.

சாமிகள் திருமலையில் விடுதி பங்களாவில் தங்கி இருந்த பொழுது மகிழ்ச்சித் திருவுருவம் தாங்கி இருந்தார். ரூபத்திலும் தோற்றத்திலும் மகிழ்ச்சி! சொற்பெருக்கிலும் வாக்கிலும் மகிழ்ச்சி! அம்மகிழ்ச்சிப் பெருக்கை அருள் மகிழ்ச்சிப்பெருக்கு என்று தான் சொல்ல வேண்டும். சாமிகள் நாதரூபனையும் வேத நாயகனையும் நினைவில் இருத்தி, யோக இன்பத்தில் திளைத்து, ஆத்மீக சொற்பெருக்கில் ஈடு பட்டிருந்த இந்த நாட்களில் வேடிக்கை உரையாடலுக்கும் ஒரு குறைச்சலும் இல்லை. திருப்பதி வெங்கடேசப் பெருமான் சந்நிதியில் அதிகாலையில் சுப்ரபாத தரிசனத்திற்காக வெளி மண்டபத்தில் காத்திருந்தோம். எல்லோரும் பெருமாள் தரிசனத்திற்காகச் சப்தம் இன்றிக் காத்துக்கொண்டிருக்கும் நேரம். அப்போது இந்தத் திருக் கூட்டத்திற்கு முன் ஒரு கருப்புப் பூனை ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கத்திற்கு ஒரு பயமுமின்றி நிதானமாக அடிமேல் அடியெடுத்து வைத்து நடந்தது. நிசப்தம் நிலவி இருந்த இந்தச் சமயத்தில் எல்லோருடைய மனமும் வெங்கடேசப் பெருமான் தரிசனத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கும் நேரத்தில் ஒரு கணத்தில் இந்த அஞ்சாத பூனை எல்லோர் கவனத்தையும் இழுத்து விட்டது. இதைக் கவனித்த சாமிகள் "கோவில் பூனை தேவர்க்கு அஞ்சாது என்பர். தேவருக்கே அஞ்சாத பூனையா மனிதர்களுக்கு அஞ்சும்" என்று கூறி மௌனிகளாக இருந்த அவ்வளவு பேரையும் வாய் விட்டுச் சிரிக்க வைத்தார். அப்போதும் அவ்வளவு பேர் வாய் விட்டுச் சிரிப்பதையும் கொஞ்சம் கூட சட்டை செய்யாது ஆமை நடை போட்டுக் கொண்டே நகர்ந்தது அப்பூனை.

சாமிகளுடன் வெளியூருக்குச் செல்லும்போது சாமிகளுடைய வாழ்வில் நடந்த சில நகைச்சுவை ததும்பும் நிகழ்ச்சிகளையும் சாமிகள் குறிப்பிடுவர். திருப்பதியிலும் ஒரு சுவாரஸ்யமான நிகழ்ச்சி ஒன்றைச் சாமிகள் கூறினர். உலகத்தில் நிலையாமைபற்றியும் ஆண்டவன் அருள் தன்மை பற்றியும் பேசும் சாமிகளின் கருத்தாழமுள்ள சொற்பெருக்கில் சப்தமின்றி மனம் ஒன்றியிருந்த பக்தர்களின் மனத்தைத் திடீரென்று தன் வாழ்விலிருந்து ஒரு வேடிக்கை நிகழ்ச்சியை எடுத்துச் சொல்லிச் சாமிகள் நகைச்சுவை உலகிற்கு திருப்பினர்.

**சாமிகள்:** நான் பள்ளிக்கூடத்தில் படிக்குபோது கேலிக்கூத்துக் களுக்குக் குறைச்சலில்லை. ஒருநாள் சிபிச்சக்கரவர்த்தி நாடகம் நடத்த எங்களை எங்கள் வாத்தியார் அயலூருக்கு அழைத்துச் சென்றார்.

அன்றிரவு மாணவர்களும் வாத்தியாரும் ஒரு பெரிய அறையில் படுத்திருந்தோம். பகலில் ஒரு சொறிபிடித்த நாய் எங்களைச் சுற்றி வந்தது. அதை விரட்டிக் கொண்டேயிருந்தாலும் அது எங்களை விட்டபாடில்லை. அன்றிரவு நாங்கள் நன்ருகத் தூங்கிக்கொண்டிருந் தோம். வாத்தியாருடைய மகன் வாத்தியாருக்கருகில் படுத்திருந் தான். அவனுக்குப் பக்கத்தில் நாடகத்தில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்ட ஒரு பையன் படுத்திருந்தான். வாத்தியார் மகன் முடி வளர்த்திருந்தான். அவன் தூக்கத்தில் புரண்டு புரண்டு உருண்டு பக்கத்தில் படுத்திருக்கும் பையன் அடிவயிற்றில் தன் தலையை வைத்து குறட்டைவிட்டுத் தூங்குகின்ருன். பகல் பூராவும் விடேன் என்று தொடர்ந்துவந்த சொறி நாயையே நினைத்துப் படுத்து உறங்கிக் கொண்டிருந்த நடிகன் பையனுக்கு தன் அடிவயிற்றில் வாத்தியார் மகன் முடி பட்டவுடன் உறக்கம் ஓடியது, சொறி நாயின் நினைப்பு வந்துவிட்டது. தன் கையைத்தூக்கி பயத்தில் 'மடார்' என்று ஒரு வீச்சு வீசினுன் சொறி நாயென்று. பாவம், அந்த வீச்சு 'பளார்' என்று வாத்தியார் மகன் கன்னத்தில் விழுந்தது. கண்ணை விழித்து சொறிநாய் போய்விட்டதா என்று பார்க்கும்போதுதான் அறை வாங்கியவன் வாத்தியார் பையன் என்பது விளங்கியது பக்கத்துப் பையனுக்கு. தன்னையும் வாத்தியார் கோபத்திலிருந்து காப்பாற்றிக் கொள்ளவேண்டும். பகலில் நாடகமாடியது போன்றே இரவிலும் உண்மை வாழ்விலும் ஒரு நாடகமாட வேண்டிய நிலைவந்துவிட்டது. அவசர அவசரமாகத் தனக்கு இடது பக்கத்தில் படுத்திருந்த வேறு ஒரு மாணவனை வாத்தியார் பையனுக்கு அருகே நகர்த்திப் படுக்க வைத்துவிட்டு ஒருபாவமும் அறியாதவன்போல் பையன் அறையின் மூலைக்கே ஒதுங்கிவிட்டான். நன்ருக அயர்ந்து தூங்குபவன் போலும் குறட்டைவிடவும் ஆரம்பித்தான். கொடுத்த அறை தாங்க மாட்டாத வாத்தியார் மகன் தூக்கம்விட்டு எழுந்தான். இருட்டில் பயந்து 'ஐயோ' என்று கதறிவிட்டான். இந்த அமளியில் விழித் துக்கொண்ட வாத்தியாருக்குத் தன்னுடைய உறக்கம் பாழ்பட்டதே என்ற கோபம். தன் மகனுக்கல்லவா கன்னத்தில் 'சுளீர்' என்ற அறை கிடைத்துவிட்டது. அது அவருடைய கோபத்தை இன்னும் அதிகமாக்கியது. தன் பையனின் பக்கத்தில் நன்ருக உறங்கிக் கொண்டிருக்கும் ஒரு குற்றமும் புரியாத தூங்கும் பையனை எழுப்பி விசாரணை நடத்த ஆரம்பித்துவிட்டார் வாத்தியார். எல்லாப் பையன்களும் விழித்துக் கொண்டனர். ஒன்றும்புரியாத குற்றம் சாட்டப்பட்ட மாணவனும் திருதிருவென்று விழிக்க ஆரம்பித்து விட்டான். அவனைப்பற்றி இருந்த தூக்கம் இருந்த இடம் தெரியாது ஓடிவிட்டது. இவைகளையெல்லாம் மூலையில் இடம் மாறிப்படுத்துக் கொண்ட உண்மைக் குற்றவாளி தூக்கத்தினின்றும் தெளிந்து எழாத வன் போலவே நடித்துக்கொண்டு நடப்பனவற்றைக் கவனித்து ரசித்துக்கொண்டிருந்தான். யார் இந்த ரசிகன் என்று கேட்கின்

றீர்களா? யார் இந்த உண்மைக் குற்றவாளி என்று கேட்கின்றீர்களா? யார் இந்தப் போக்கிரி நடிகன் என்று கேட்கின்றீர்களா? அதெல்லாம் நான்தான், சாமி. நான் வேணுமென்று வாத்தியார் மனை அறையவில்லை. அந்தப் பொல்லாத நாய்தான் வந்துவிட்டதென்று பயத்தால் அதைத் துரத்த அடித்தேன். என்னுடைய பொல்லாத காலம் அடிவாங்கியது பையனாக இருந்துவிட்டது. உண்மையைச் சொன்னால் யார் நம்புவர். அந்தப் பொல்லாத வாத்தியாரிடமிருந்தும் நான் தப்பிக்க வேண்டுமே, அதற்குத்தான் இந்த நடிப்பு, இந்த உபாயம்!

இந்தக் கேலிக்கூத்துச் சம்பவத்தைக்கேட்ட பக்தர்களுக்கு ஒரு பக்கம் சிரிப்பும் ஒரு பக்கம் சாமிகளா இப்படி நடித்து ஏய்த்தார் என்ற வியப்பும் ஏற்படுவது இயற்கைதானே! இதைத் தொடர்ந்து சாமிகளின் விருப்பப்படி சில பெண்கள் "மாதா ஜய ஓம் லலிதாம்பிகையே" என்ற பாட்டை நெஞ்சை உருக்கும் இராகத்தில் பாட ஆரம்பித்தனர். இன்னிசை இன்பத்தில் ஒன்றிவிட்ட சாமிகளது திருமுகம் அருள்சுரக்க, சாமிகள் வீற்றிருந்த திருச்சபையில் தெய்வீக சோபை உடனே கூடிவிட்டது. பக்தர்களது சிந்தைகளை லலிதாம்பிகை கீதம் குளிர்வித்துப் பரவசநிலைக்கு ஏற்றிக் கொண்டிருக்கின்றது. ஒரு பொறியியல் ஸ்தாபன பேராசிரியர் திரு. வேங்கடேசன் என்பவர் இப்பாடலில் ஊறி ஆவேச உணர்வெய்தினர். ஆனந்தக் களிப்பை எடுத்துக்காட்டும் முகத்தோடு ஆனந்த மயமாகி ஆனந்த நடனம் ஆடத் தொடங்கிவிட்டார். ஊனையும் உயிரையும் உருக்குகின்ற பொருள் நயத்துடன் இராக பாவத்துடன் பாடும் பாட்டோடு ஐக்கியமாகி அப்பாட்டின் தாளத்திற்கேற்ப நடமாட ஆரம்பித்துவிட்டார். அவருணர்வை வசப்படுத்திய அம்பாள் அவர் மூலமாகப் பேசினள். சாமிகளது வேண்டுகோளுக்கிணங்க அம்பாளும் அதற்கடுத்து முருகப்பெருமானும் அவர் மூலமாகக் கூடி இருந்த பக்தர்களுக்குத் தம் ஆசி வழங்கி மறைந்தனர். இப்படியே சாமிகளோடு கூடியிருந்த நேரம் ஓடிக்கொண்டே இருந்தது. இப்படியே உள்ளத்தை உருக்குகின்ற ஆடல்பாடல்களுக்கிடையேயும், வாய்விட்டுச் சிரிக்க வைக்கும் நகைச்சுவை மிக்க நிகழ்ச்சியுரைகளுக்குமிடையேயும், சாமிகள் தன் இன்னமுத அருளுரைகளை வழங்கிப் பேருண்மைகள் பொதிந்துள்ள அரிய உரையாற்றி பக்தர்களின் மனத்தைப் பரவசப் படுத்தி வந்தார்.

திருமலையில் பாபநாசம் நீர்வீழ்ச்சிக்கு ஒருநாள் சாமிகள் அவர் பக்தர்களை அழைத்துச் சென்றனர். ஒரு டம்ளரில் நீர்வீழ்ச்சியிலிருந்து விழுகின்ற தண்ணீரைப் பிடித்துச் சாமிகள் பக்தர்களுக்கு வழங்க அந்நீர் பன்னீராக மாறிவிட்டதைப் பக்தர்கள் சுவைத்தார்கள். "இது பாறையிலிருந்து விழுகின்றவரை தண்ணீராக இருந்

தது. என் கைக்குக் கிடைத்தவுடன் தீர்த்தமானது. என் கைகளி லிருந்து உங்கள் கைகளுக்கு கிடைக்கும்போது பன்னீரானது'' என்று பொருட்சுவையோடு சாமிகள் உரையாடினர். இந்த நீர் வீழ்ச்சிக்கு அருகில் ஒரு காபிக் கடை உண்டு. இந்த கடைக்கு வருடா வருடம் சாமிகள் வருவதுண்டு. சாமிகளது திருவடிகள் பட்ட இந்த காபிக்கடை வருடாவருடம் வியாபாரத்திலும், அளவிலும், தோற்றத் திலும் பெருகிக்கொண்டே வருகின்றது. சாமிகள் முதன்முதலில் இங்கு வந்தபோது சாதத்தை அரிசியாக்கி அற்புதம் காட்டினர். அடுத்த ஆண்டு இங்கு மணலைச் சர்க்கரையாக்கி அற்புதம் காட்டினர். 1965ஆம் ஆண்டில் சாமிகள் பொறியை நெல்லாக்கி அற்புதம் ஆடிக் காண்பித்தனர். கடைக்காரருக்குச் சாமிகள் அட்சதை அரிசி வர வழைத்துக் கொடுத்து ஆசி அருளினர். திருமலையிலிருந்து திரும்பும் போது கபிலேஸ்வர ஆலயத்திற்கும், காமாட்சி அம்மன் ஆலயத்திற் கும் சென்று தரிசனம் செய்தனர். அங்கு சாமிகளது அருட்கரங்களி லிருந்து குங்குமப் பிரசாதம் மழை பெய்வதுபோன்று கொட்டு வதைக் கண்ட ஒரு இளம் அர்ச்சகர் ஏதோ வேண்டியவர்போல் சாமிகளைச் சுற்றிச் சுற்றி வந்தார். 'வரலெட்சுமி கட்டின புண்ணிய வான் இவர்' என்று சாமிகள் அந்த இளம் அர்ச்சகரைக் குறிப்பிட் டார். அவர் திருதிருவென்று விழித்தாரே தவிர பதில் ஒன்றும் உரைக்கவில்லை. "உங்கள் மனைவியின் பெயர் என்ன" என்று சாமிகள் கேட்க, "வரலெட்சுமி" என்று பதிலளித்தார் அர்ச்சகர். "உங்களுடைய குறை குழந்தையில்லாக் குறை அல்லவா" என்று சாமிகள் கேட்டு அவருக்கு புத்திர பாக்கியம் ஏற்படவும் ஆசி அளித் தார். சாமிகள் அன்றுதான் முதன்முதலாகக் காணும் இள அர்ச்ச கரின் மனைவியின் பெயரை உரைத்து அவர் குறையையும் எடுத் துரைத்த அற்புதத்தைக் கண்ட நாங்கள் சாமிகள் திரிகால ஞானி என்பதை உணர்ந்தோம்.

சாமிகளை அடுத்தாற்போல் காளாஸ்தி கோவிலுக்கு அழைத்துச் சென்றனர் பக்தர்கள். சாமிகள் அடிக்கடி இந்தத் தலத்திற்குப் பெருமை கொண்டுவந்த கண்ணப்பரின் அளவிலா அன்பைப்பற்றிப் பேசுவதுண்டு. அத்தலத்திற்கே சாமிகளை அழைத்து வந்தால் அவருடைய உள்ள நிறைவினை நாமே யூகித்துக்கொள்ளமுடியாதா? கண்ணப்பரின் ஈடுஇணையில்லாத அன்புச் செயலும் அவரைத் தடுத் தாட்கொண்ட குடுமி அப்பரின் கருணையும் அந்தத் தலத்தில் கூடி இருந்த அனைவர் உள்ளங்களில் தோன்றித் தோன்றி மறைந்தன.

"மற்றவர் பிழிந்து வார்த்த மருந்தினால் திருக்காளத்தி
கொற்றவர் கண்ணிற் புண்ணீர் குறைபடா திழியக்கண்டும்
இற்றையின் நிலைமைக்கென்னோ இனிச்செயல் என்று பார்ப்போர்
உற்றநோய் தீர்ப்ப தூனுக்கூனெனும் உரை முன்கண்டார்"

என்ற திருத்தொண்டர் புராணச் செய்யுள் சிலர் நினைவுக்கு வந்தது. கண்களிலிருந்து இரத்தம் கசியச்செய்து, மூலிகை மருந்தாலும் இரத்தத்தைக் கட்டுப்படுத்தவிடாது, கட்டுக்கடங்காத — கண்ணப்பரின் ஈடுஇணையில்லாத — கண்ணுக்குக் கண்ணைக் கொடுத்த அற்புதச் செயலால் கட்டுப்படுத்திய பேரன்பை உலகிற்குக் காட்டினார் எம்பெருமான் அன்று.

> "அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
> அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவென்றும்
> அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவாம் என்றும்
> அவனுடைய நிலை இவ்வாறறிநீ என்றருள் செய்வார்"

கண்ணப்பரின் அருளாளனைத் திருக்காளத்தி ஈசனைக்கண்டு தரிசிக்கச் சென்ற சாமிகள் சந்நிதியில் ஒரு கற்பூரக் கட்டியைத் தன் அருள்சக்தியால் வரவழைத்தார். அன்புருவாம் கண்ணப்பரின் கருத்தைக் கவர்ந்த ஈசனைத் தரிசித்துவிட்டுத் திரும்பிய எங்களிடம் "அன்பே சிவம்" என்று சொல்லிச் சில பைசாக்களுக்காகக் கையை நீட்டினார் ஒரு 'வயிற்றுச்சாமி'. "அதுவே நிசம்" என்று சாமிகள் உடனடியாக எதுகையோடு பொருட்சுவை நகைச்சுவையோடு பதிலளித்தது அந்த 'வயிற்றுச்சாமி'யின் நீட்டிய கரத்தை பின் வாங்க வைத்தது. எங்களையும் சிரிக்க வைத்தது. எங்களது கார்களையும் புறப்பட வைத்தது.

1966 நவம்பரில் சாமிகள் திருச்சானூருக்குப் பிரமோற்சவத்திற்கு வந்த சமயம் வழக்கம்போல் இடத்திற்கும் சந்தர்ப்பங்களுக்கும் ஏற்றுற்போல் அற்புதம் ஆடிக்காட்டினார். ஜீயங்கார் சாமிகளைத் தன் மடாலயத்திற்கு அழைத்தார். சாமிகளும் அவருடைய அழைப்பிற்கிணங்கி அவர் மடாலயத்தில் எழுந்தருளியபோது ஜீயங்கார் அவர்களுக்குப் பொருத்தமான ஒரு திவ்வியப் பொருள் அவருக்கு அளிக்கத் திருவுளம் கொண்டார். சாமிகள் தன் விருப்பத்தை ஜீயங்காரிடம் அறிவிக்கும்போது ஜீயங்காரும் தன் திவ்விய சம்மதத்தைத் தெரிவித்தார், சாமிகள் 'முருகா' என்ற அழைப்போடு தன் கரத்தை நீட்ட சாமிகள் கைகளில் ஸ்ரீசூரணம் ஒன்று கிடைத்தது. அந்த ஸ்ரீசூரணம் சாதாரணமாகக் கடைகளில் விற்கும் பொருளல்ல, ஜீயங்காருக்கென்றே விசேஷமாகத் தயாராகும் ஸ்ரீசூரணமாகவே அது இருப்பதைக்கண்டு ஜீயங்காரும் அவருடைய அன்பர்களும் வியப்படைந்தனர். இப்படியே கும்பகோணம் கோயிலிலிருந்து வந்திருந்த ஒரு அர்ச்சகருக்கும் அந்தக் கோயிலுக்கென்றே தயாராகும் குங்குமத்தை வரவழைத்துக் கொடுத்துச் சாமிகள் அந்த அர்ச்சகரையும் கூடியிருந்தோரையும் மகிழ்வித்தார்.

பெரியாழ்வார் பெண்கொடி ஆண்டாள் திருவரங்கனை திரு மணாளனாகக் கொண்ட விபரத்தைக் கேட்கும்போது பெருமகிழ்வடை கின்றோம். தரணியிலுதித்த ஒரு மானிடப்பெண்ணைக் கோயிலில் தெய்வமாக விளங்குகின்ற திருவரங்கன் திருமணம் செய்துகொள்ள முடியுமா என்பது ஒரு பெரிய கேள்விதான். சாமிகளுடைய தெய் வாற்றல் இயல்பையும் அவர்கள் தெய்வீகத்திற்கு விளக்கமாக இருப்பதை காண்கின்ற நமக்கு இது முடியும் என்பதை ஒப்புக் கொள்ள முடிகின்றது. ஆண்டாள் அரங்கநாதப் பெருமானை 'நீயே நானாய் நானே நீயாய்' என்ற இரண்டறக்கலந்த நிலையில் மனத்தில் அனுபவிக்க ஆரம்பித்துவிட்டாள். இந்தப் பரிபக்குவ நிலையில் அவருடைய மாலையைத் தானணிந்து மகிழ்வெய்தும் சுபாவமும் வழக்கமும் அவளுக்கு வந்துவிட்டன. இத்தெய்வ அருள் மணக்கின்ற மங்கையாலா இறைவனைக் கூடமுடியாது? திருப்பதி மலை அடிவாரத்தில் உள்ள திருப்பதி ஊரில் கோவிந்தராஜப் பெருமாள் கோவிலில் ஆண்டாளுக்கென்று ஒரு சன்னதி உண்டு. அங்கு சாமிகளும் பக்தர் குழாமும் வந்தபோது, ஆண்டாள் வடி வழகையும் அவள் சூடியிருந்த பெரிய திண்டுமாலை அழகையும் பார்த்து மகிழ்ந்து நின்றோம். "இந்தத் தாயாருக்கு மணமிகுந்த பூக்கள் என்றால் மிகவும் பிரியம். இந்தத் தெய்வத்திற்குப் பொருத்த மான பூவொன்றைச் சொல்லுங்கள்" என்றார். அடுத்தக்கணமே 'தாழம்பூ உகந்தது' என்றுக் கேட்டுக்கொண்டே சந்நதியின் வாயில்படியை கையால் தொட நீண்டதொரு தாழம்பூ மடல் உடனே சாமிகள் திருக்கரங்களில் தோன்றியது சந்நதிக்குப் பொருத்தமான வாசமிகு தாழம்பூவைக்கண்ட அர்ச்சகருக்கும் கூடி யிருந்தவர்களுக்கும் ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. ஆண்டாளைப் போன்று ஆண்டவனிடம் 'நீயே நானாய், நானே நீயாய்' என்ற பரிபக்குவ நிலைக்கு வந்துள்ள சாமிகளுக்கா வருவிக்க முடியாத் தொன்றுளது. ஆண்டாளை ஆட்கொண்ட எம்பிரான் கனவி லுதித்து உரையாடின விந்தையை நாம் மறந்துவிடவில்லை. சாமி களுக்கும் அருள்பாலிக்கின்ற எம்பிரான் சாமிகள் கனவிலும்தோன்றி உரையாடிய விந்தையையும் நம்மால் மறக்கமுடியாது. சிலப்பதி காரம் சிறப்பாக எடுப்பாக எடுத்துரைக்கும் வேங்கட அண்ணல் தோற்றத்தை மறக்கமுடியுமா?

"வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலயத்து உச்சிமீமிசை
விரிகதிர் ஞாயிறும திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய இடை நிலைத்தானத்து
மின்னுக்கொடி உடுத்து விளங்கு வில்பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்

பகை அணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலம்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றி
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்

இது சிலப்பதிகாரம் திரு வேங்கடத்தானை எடுத்துரைக்கும் சொல் ஓவியம். இந்த 'செங்கண் நெடியோன்' அல்லவா சாமிகளின் கனவில் தோன்றி திருவேங்கடத்திற்கு அழைத்தார். திருப்பதியில் பிரத்தியட்ச தெய்வாக விளங்கும் 'செங்கண் நெடியோன்' நின்ற வண்ணத்தையும் நம்மால் மறக்கமுடியாது: திருப்பதிக்கு அடிக்கடி வந்து உதவும் பிரத்தியட்ச தெய்வமாக விளங்கும் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளின் ஈடு இணையில்லாத அற்புதத் திருவிளையாடல்களையும் நாம் மறக்க முடியாது.

**உதகையில் உவகை நாதர்**

"தொண்டர் ஆர்த்தனம்: சுருதிகள் ஆர்த்தன: தொல்லை
அண்டர் ஆர்த்தனர்: அகிலமும் ஆர்ப்புடன் எய்தக்
கொண்டல் ஆர்த்தன; முழவமும் ஆர்த்தன: குழுமி
வண்டறுப் பொலி மலர்மழை ஆர்த்தது வானம்."

திருத்தொண்டர் புராணத்தைப் படிக்கும்போது ஐந்தெழுத்தோதுபவரை உலகம் எப்படிக் கொண்டாடியது என்பது தெரிய வரும். திருஞான சம்பந்தப் பெருமானை மக்கள் எவ்வளவு குதூகலத்துடன் செல்லுமிடமெல்லாம் வரவேற்றனர் என்பதைப் படிக்கப் படிக்க இன்பம். அவர் செல்லுமிடமெல்லாம் தொண்டர்கள் ஆரவாரம் செய்தனர். கற்றோரும் கலைஞர்களும் ஆரவாரம் செய்தனர். எங்கும் ஒரே ஆரவாரம். உலகிலே மட்டும் தான் இந்த ஆர்ப்பரிப்பா? வானிலும் ஒரே குதூகலம். வானில் மேகக் கூட்டங்களும் மண்ணில் முழக்கும் முழவத்தோடு கூடி ஆரவாரம் செய்தன. வானத்திலிருந்து மழையும் பெய்து ஆரவாரம் செய்தது. இதைத்தான் மேலே உள்ள பாட்டு அறிவிக்கும். எப்படி அழகாக கவிஞர் வருணிக்கின்றார்!

நல்லவர்கள் ஒரு ஊருக்கு வந்தால் வானமும் பெய்து பூமியைக் குளிரவைக்கும் என்பது நமது நம்பிக்கை மட்டுமல்ல. வானம் தவறாது பெய்யும் என்பதும் நாம் கண்கூடாகக் காணும் உண்மை. அதனால் தான் தொண்டரோடும் கொண்டல் ஆர்த்தனவென்றும், முழவத்தோடு மலர்மழை ஆர்த்தன வென்றும், வெகு அழகாகக் கவி நயத்துடன் சேக்கிழார் ஒரு பேருண்மையை உலகிற்கு எடுத்துக் காட்டினார்.

இந்தப் பேருண்மை நமது சாமிகள் நீலகிரியிலுள்ள உதகைக்கு வருகை தந்த சமயத்தில் நன்ருக விளங்கியது. மழைக்கும் அழகுக்கும் பெயர் பெற்ற ஊர் உதகை. இங்கு மழை கொட்டு கொட்டென்று கொட்டும். குளிர் உடலைக் குலுங்கக் குலுங்க உலுக்கிவிடும். உதகையில் மழையிருந்தால்தான் மேட்டூர்த் தேக்கத்திற்கும் தண்ணீர் உண்டு. அப்போதுதான் ஔவையார் வாக்குப்படி வரப்புயரும். 1965ம் ஆண்டு செப்டம்பர் மாதம் மேட்டூர்த் தேக்கத்தில் தண்ணீர் ஏறவேண்டு மென்று உழவர்கள் வேண்டிக்கொண்டிருக்கும் நேரம். உதகையிலோ மழையில்லை. குடிக்கக்கூடத் தண்ணீர் குறைந்து விட்டது. வானத்தைக் கண்டு ஏங்கித் தவித்திருந்த நாட்களில் வருண ஜபம் கூடச் செய்யத் தவறவில்லை மக்கள். அந்த நேரத்தில் சாமிகள் பக்தர்கள் விருப்பத்திற்கிணங்கி உதகைக்கு வந்தார். பெரியவர்கள் அடியெடுத்துவைத்தால் பின் வாங்கிடுமோ மேகக் கூட்டங்கள்? ஜபத்தையும் செவி குளிரக் கேட்டுக்கொண்டிருந்த வருணபகவான் சாமிகளைக் காண உதகைக்கு ஓடோடி வந்தான். மழை கொட்டியது. நீர்த் தேக்கம் ஏறியது. வரப்பு உயர்ந்தது. இது சாமிகள் நடத்திக் காட்டிய ஓர் பேரற்புதமல்லவா!

### கோவை கண்ட அற்புதம்

> "காலையிளம் கதிரவனே பேரூர்க் கோயில்
> கண்டதொரு வேதாந்தக் களிப்பே! எங்கள்
> பாலைவன நெஞ்சத்தைப் பசுமைக் காடாய்ப்
> பயனுக்க வருக அருள்பழுத்த ஞானச்
> சோலையிலே கனிபறிக்கச் சூழ்ந்திருக்கும்
> தொண்டர்மனம் கொண்டாட வருக இந்த
> ஞாலமெலாம் அருள்ஞான தீபமேற்றி
> நடத்துகின்ற பன்றிமலை தேவே போற்றி.

திரு. எ. வெள்ளியங்கிரி கோவையில் தொழில் நிர்வாகச் செல்வர். திருப்பேரூர் ஸ்ரீ பட்டீஸ்வர சாமி தேவஸ்தானத்தின் மானேஜிங் டிரஸ்டி. ஈசனடி மறவாத சிந்தையர். ஆத்மீக முயற்சியில் ஈடுபட்டு அதற்குகந்த குருநாதன் ஒருவருக்காகவும் காத்திருந்தது அவர் உள்ளம். அவர் நாட்டத்தை அறிந்து அவரைத் தேடிவந்த குருமார்களும் உண்டு. ஒரு சாமியார் இவர் பூஜை அறையில் இருந்த விளக்கை ஏற்றி வைக்க முன்வந்தார். மற்ருெருவர் 100 வயதிற்கு மேற்பட்ட ஒரு ஹடயோகி. அவர் கிரி அவர்கள் இல்லத்தில் ஓரறையில் கம்பிகளால் படுக்கை உண்டாக்கி அதில் படுத்துக் கொள்ளச் சென்ருர். பூஜை அறையில் விளக்கேற்ற முன்வந்தவர்

தனக்குகந்த குருநாதராக இருந்தால் ஏற்றின விளக்கு சுடர்விட்டு எரியவேண்டும். கம்பிகளில் படுத்துறங்க வந்த ஹடயோகி தனக்குகந்த குருநாதராக இருந்தால் கம்பிக்கயிறுகள் அவரைத் தாங்கக்கூடிய வலுப்பெற்றிருக்க வேண்டும். இப்படி எண்ணியது கிரி அவர்கள் உள்ளம். முதல் சாமியார் ஏற்றிவைத்த திரி, அவர் கிரி அவர்களுக்குகந்த குருவில்லை என்பதை அறிவிப்பதுபோல் ஒளி இழந்தது. இரண்டாவது வந்த ஹடயோகி படுத்த கம்பிப் படுக்கை, அவரும் தகுதியற்றவர் என்பதை உணர்த்துவதுபோல், அவர் அதன் மேல் ஏறி அதன் பலத்தைப் பரீட்சை செய்ய அழுத்திப் பார்த்தபோது படக்கென்று கம்பிகள் அறுபட ஹடயோகியைக் கீழே விழ வைத்தது. இவ்விரண்டு சம்பவங்களும் கிரி அவர்களைத் தமக்கு ஞான ஒளிச்சுடர் அருளும் தக்கார் ஒருவரை, ஆத்மபலம் கொண்ட மிக்கார் ஒருவரைக் கண்டுபிடிக்க வேண்டிய முயற்சியில் ஈடுபடுத்தின. இந்த வேளையில் ஆத்மீக அறிவை நாடியிருந்த அவருக்கு மலையிலுதித்த மகான் ஒருவர் குருவாக வாய்ப்பர் என்று கௌசிக நாடியில் குறித்திருந்தது. "மலைவாசி ஒருவர் தன்னால் இன்னதென்று உரைக்க ஞானம் ஓங்கும். வராகிதேவி இராஜ இராஜேஸ்வரி முருகன் அவதாரம் கொண்ட குரு வாய்ப்பன்" என்று அந்த ஏட்டுச்சுவடியில் எழுதி இருந்தது. அந்தத் திருநாளையே ஆவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்த கிரி அவர்களுக்குப் பன்றிமலையிலுதித்த நமது சாமிகளே குருவாக அமைந்தார். ஸ்ரீ வெள்ளியங்கிரிக்குக் கிடைத்தது ஸ்ரீ வராக கிரி.

சாமிகள் கிரி அவர்களைத் தடுத்தாட்கொண்ட விபரங்கள் வியப்பை ஊட்டும் தன்மையன. சாமிகளை நேரில் காண்பதற்கு முன்னதாகவே சாமிகளைத் தன் கனவில் கண்டு களித்தார் கிரி அவர்கள். அவர் கண்ட திருவருள் கனவை அவர் சொல்லவே கேட்போம்.
கிரி: 1963இல் நான் கனவொன்று கண்டேன். நானும் என் மனைவியும் கன்னியாகுமரிக் கோவிலுள் இருக்கின்றோம். அப்போது ஒரு அற்புதமான காட்சி ஆரம்பமானது. கன்னிகாபரமேஸ்வரி கர்ப்பக்கிரகத்தின் முன்னிலிருந்து ஒரு பிரமாண்டமான நூறடி நீளமுள்ள ஐந்துதலை நாகப்பாம்பு மிகக் கம்பீரமாகத் தலைதூக்கி நகர்ந்து சென்றது. அதற்கடுத்தாற்போல் அழகு நடை போட்டுக்கொண்டு ஒரு உயரமான யானை வந்தது. அதைத் தொடர்ந்து கட்டுடலும் தசை பலமும் கொழிக்கும் புலி ஒன்று நடந்து வந்தது. ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரி திருச்சிலை இருந்த இடத்திலிருந்து ஒரு தெய்வீகம் பொருந்திய மகான் புறப்பட்டார். அவர் நமது சாமிகளேதான். அவர் என்னைப் புன்னகையோடு அழைத்தார். அருள் சுரந்த அவர், "நீர்தான் அடிக்கடி என்னிடம் வரப்போகின்றீர்களே என்று திருவாய் மலர்ந்தருளி, எனக்கு நாமக்கட்டி அருளினர். இதைக் கண்ட என் மனைவி இந்தப் பிரசாதம் தனக்குக் கிடைக்கவில்லையே என்று

என்னைக் கேட்க, 'உனக்கும் எனக்கும் சேர்த்துத்தான் சாமிகள் பிரசாதம் அருளினர்' என்று பதில் அளித்தேன். இந்தக் கனவு கண்ட ஒன்றரை வருடங்களுக்குப் பிறகு என்னைச் சாமிகளிடம் திரு. S. சூரியமூர்த்தி அழைத்துச் சென்றார். சாமிகளுடைய அருமை பெருமைகளைத் திரு. S. சூரியமூர்த்தியிடமிருந்து நான் மிகவும் கேள்விப்பட்டிருந்தேன். நான் முதன்முதலில் சாமிகளைப் பார்த்தவுடன் அவரை எங்கோ முன்னதாகவே பார்த்த நினைப்பு வந்தது. இதே சாமிகளைப் பதினெட்டு மாதங்களுக்கு முன்பல்லவா கனவில் கண்டு களித்திருக்கின்றேன் என்ற நினைவு வந்தது. எப்படிக் கன்னிகாபரமேஸ்வரி கர்ப்பக்கிரகத்திலிருந்து அருள்வடிவினராக வந்தாரோ அதே அருள் வடிவை நான் அகங்குளிரக் கண்டேன். என்னுடைய ஜன்மம் சாபல்யமடைந்தது என்று எண்ணி அவரைக் கண்டவுடனேயே பெருமகிழ்வு எய்தினேன்.'' இந்தக் கனவைக் கேட்கும் நமக்கும், கிரி அவர்கள் சாமிகளிடம் ஈடுபட்டு இருக்கும் நெருங்கிய தொடர்பெனும் புத்தகத்திற்கே இந்தக் கனவு நிகழ்ச்சி ஒரு முன்னுரை வழங்கியது போலும் அல்லவா தோன்றுகின்றது.

கிரி அவர்கள் கண்ட மற்றொரு கனவும் விசித்திரமானது. அவரும் அவருடைய அருமை மனைவியும் ஒருநாள் கடற்கரை ஒன்றில் வீற்றிருக்கின்றனர். அந்தக் கடற்கரையும் கன்னியாகுமரியில் உள்ளதே. அப்போது நான்கு முரடர்கள் அவர்களை நெருங்கினர். அந்நால்வரும் கிரி தம்பதிகளை வளைத்துக் கொண்டு நகைகளைப் பறித்துச் செல்லத் திட்டம் போட்டுக்கொண்டு வந்தவர்களாகவே தென்பட்டனர். முரடர்களில் ஒருவன் இவர்களுக்கு அருகே நெருங்கி உட்கார, மற்ற மூன்றுபேரும் ஏதோ குறும்புத்தனம் செய்வதற்குத் தயாராவதைப் போன்று தங்கள் சட்டைகளின் கைப்பகுதியை மடித்துக் கொண்டு நெருங்கினர். கிரி அவர்கள் உடனே சாமிகளின் விபூதியை எடுத்துத் தன் நெற்றியில் அணிந்தார். சாமிகளின் விபூதி இருக்கும் போது யார் என்ன செய்யமுடியும் என்று நினைத்துக் கிரி அவர்கள் முரடர்களைக் கூர்ந்து கவனித்தார். என்ன ஆச்சரியம்! நெருங்கி வந்த முரடர்கள் பதறி உடனே அந்த இடத்தைவிட்டே ஓடிவிட்டார்கள். இந்தக் கனவு கிரி அவர்கள் சாமிகளிடம் பழக்கமானவுடன் கண்டது. இதனுடைய சிறப்பு சாமிகளின் திருநீற்றின் சிறப்பையே எடுத்துரைக்கும் தன்மையது என்று கிரி அவர்கள் வியந்திருக்கும் ஒருநாள் சாமிகளை நேரில் கண்டு சாமிகளின் உரைகளில் மனம் பறிகொடுத்திருந்தார். அன்று சாமிகள் கருத்தைக் கருத்தாடிக்கொண்டு வரும்போது, ''ஒருகோடி ரூபாயும் சரி, ஒருபிடி திருநீறுப் பையும் சரி; முந்தியது சமயத்திற்கு உதவாது, பிந்தியது சமயத்திற்கு உதவும்'' என்று உரைத்தார். இதைக் கேட்ட கிரி அவர்கள் மனதில் அவர் கொஞ்ச நாட்களுக்குமுன் தான் கண்ட சாமிகளின் கனவு பளிச்சென்று தோன்றியது. உடனே இந்தப் பொன்மொழிகளுக்குள்

புதைந்துள்ள பொருள் நினைவில் புகுந்து விளையாட ஆரம்பித்தது. சாதாரணமாகப் பார்த்தால் சைவ சமயத்திற்கே இன்றியமையாதது விபூதியல்லவா. உலகத்தை உதறித் தள்ளியவன் உலகப் பொருளை யும் தள்ளுவன். ஆனால் விபூதியை மட்டும் கடைசிவரையில் தள்ள முடியாது. 'மந்திரமாவது நீறு, சமயத்திலுள்ளது நீறு' என்பதை அவன் நன்கறிவன். இது சாமிகள் சொன்ன திருவாக்குக்குச் சாதா ரணமான பொருள். இது சாமிகள் சொன்ன திருவாக்கின் ஒருபகுதிக்கு விளக்கம் கூறிவிட்டது. ஒருகோடி ரூபாய் சமயத்திற்கு உதவாது என்ப தற்குப் பொருள் கிடைத்துவிட்டது. ஆனால் ஒருபிடி திருநீறு சமயத் திற்கு உதவும் என்பதற்கு அரும்பொருள் விளக்கவுரை தேவைப்படு கின்றது. இதை விளக்கிக் காட்டுவதற்கென்றே அல்லவா இந்தக் கனவும் கிரி அவர்களுக்கு உதவியது. இந்தக் கனவு சாமிகள் தன்னையடைந்தோர்க்கு ஒரு கவசம் என்பதையும் அல்லவா உணர்த்தி விட்டது. பஞ்சாட்சர விபூதியும் ஒரு சமய சஞ்சீவி, சாமிகளைப் போன்று. நான்கு முரடர்களுக்கு மத்தியில் அகப்பட்டுக் கொண்டபோது சரியான சமயத்தில் உதவியது செல்வமும், செல்வத் தால் அடைந்துள்ள மற்றவையுமல்ல. இந்தச் சாமிகளது விபூதியே இப்படியும் சமயத்திற்கு (சந்தர்ப்பத்திற்கு) உதவியது. ஒரு பேரா பத்தினின்றும் காப்பாற்றியது. இந்தக் கருத்தையும் சாமிகளுடைய அருள்வாக்கு எவ்வளவு அருமையாக உட்கொண்டுள்ளது என்பதை என்னிடம் கிரி அவர்கள் சொல்லி மகிழ்ந்தார். தான் கனவில் கண்ட பேருண்மையை முத்தாகவும், மணியாகவும் அல்லவா சாமிகள் சொற் களில் பதித்துக் காண்பித்திருக்கின்றனர். "ஒருகோடி ரூபாயும் சரி, ஒருபிடி திருநீற்றுப் பையும் சரி; முந்தியது சமயத்திற்கு உத வாது, பிந்தியது சமயத்திற்கு உதவும்."

இப்படிச் சாமிகளிடம் தொடர்புகொண்ட கிரி அவர்கள் 1966இல் மார்ச் முதல் வாரம் சாமிகளைக் கோவைக்கு அழைத்து வந்து தம் முடைய பங்களாவிலேயே தங்க வைத்தார். சாமிகள் அங்குத் தங்கி இருந்த இரண்டு வாரங்களும் திருவிழாப் பெருமையோடு சிறப்புற் றன. கற்றோரையும் மலைக்கச் செய்யவல்ல அற்புதங்களை ஆடிக் காட்டி னார் சாமிகள். "கண்கண்ட தெய்வமாக மக்களிடையே இருந்து இன் முகத்தோடு உரையாடும் சாமிகள் நாளொரு வேளையும் பொழுதொரு அதிசயமுமாக நிகழ்த்தி வரும் அருட்சக்தியால் ஆகர்ஷிக்கப்பட்டுள்ள கோவை மக்கள் சுவாமிகள் முகாமிட்டுள்ள தொழில் நிர்வாகி திரு ஏ. வி. கிரி அவர்களின் இல்லத்தைச் சுற்றி எப்போதும் வலம் வந்து கொண்டிருக்கின்றார்கள்." என்று கோவை 'குடியரசு' இதழ் பேரிகை கொட்டியது. ஒரு நாள் சாமிகளுக்கு எண்ணெய் ஸ்நானம் ஏற்பா டாகி இருந்தது. அன்று மாரி எனும் பணியாளைச் சாமிகளுக்கு எண்ணெய் தேய்க்க ஏற்பாடு செய்திருந்தார்கள். சாமிகளுடைய

தலையில் எண்ணெய் ஊற்றித் தேய்க்க இருந்தவன் திடீரென்று சாமிகள் உச்சந்தலையில் ஒரு ஜோதி கிளம்புவதைக் கண்டு மெய் அதிர்ச்சியுற்றான். சாமிகளின் சிரசினின்றும் வெளிப்பட்ட தெய்வீக ஒளி ஒரு டார்ச் லைட்டிலிருந்து வெளிச்சம் கிளம்பி நெடுந்தூரம் பெருகிச் செல்வதைப்போல், வான் நோக்கிச் செல்வதைக் கண்ட அவன் வாய் கிட்டி அடியற்ற மரம் போல் சாய்ந்துவிட்டான். அவன் மறுபடியும் சாமிகள் அருளால் உணர்ச்சி பெற்றபோது, "இவர் தான் சாமி யென்பது அதுவரையில் எனக்குத் தெரியாது. தான் தெய்வமென்பதை எனக்குக் காட்டிவிட்டார் சாமிகள்" என்று உள்ளம் உருகிப் பேசிப் பிறவியின் பயனை அடைந்தவன் போல் பூரிப்படைந்தான்.

கிரி அவர்களின் வீட்டில் மற்றொரு நாள் மற்றொரு அற்புதம் நடந்தது. சாமிகளுக்கு அன்று முடி வெட்டப்பட்டது. வெட்டப்பட்ட முடியை ஒரு காகிதத்தில் மடித்து சுருட்டி வைத்தான் நாவிதன். சாமிகள் அந்த முடி கொண்ட காகிதப் பொட்டலத்தை நாவிதனை பிரித்துப் பார்க்கக் கூறினர். அவசர அவசரமாகப் பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்த நாவிதன் மலைத்தே போய்விட்டான், காரணம் முடி வைத்திருந்த காகிதப் பொட்டலம் திறந்து பார்க்க திருநீறு கொண்டு விளங்கியது. இந்த அற்புதம் நடந்த மறுநாள் முடி விபூதிப் பிரசாதமாக மாறி இருந்த பொட்டலத்தைக் கிரி அவர்களைக் கொண்டே திறக்கச் செய்தார். என்ன விந்தை! ஒரு விரல் பிடி விபூதி எடுத்து அதைக் கொடுக்க அது மறுபடியும் சாமிகளின் முடியாக மாறிவிட்டது. இதைப்பற்றிச் சுவராஸ்யமாக எழுந்த பக்தர்கள் பேச்சிலிருந்து இதைப் போன்ற நிகழ்ச்சி இதற்குமுன் இரு பக்தர்கள் வீட்டில் சாமிகள் நடத்திக் காட்டியது வெளி வந்தது. மதுரையில் சாமிகள் ஒரு பக்தர் வீட்டில் தங்கியிருந்தார். சாமிகளுக்கு முடி வெட்டும்போதெல்லாம் வெட்டிய முடியைப் பொட்டலமாக மடித்து பக்தியோடு பத்திரப்படுத்தி வைத்திருந்தனர். அந்தப் பக்தர் ஒரு நாள் அந்தத் திருமுடிப் பொட்டலங்களை அவிழ்த்துப் பார்க்கும் போது, ஒன்றில் மஞ்சளும், மற்றொன்றில் குங்குமமும், மற்றொன்றில் கமகம வென்று வசானை வீசும் விபூதியும் இருந்ததைக் கண்டு பக்தர் பேராச்சரிய முற்றனர், இந்த அருட் பிரசாதங்களுக்கு 'நான் முன்னே நீ முன்னே' என்று போட்டி போட்டுக் கொண்டனர். ஒரு தரம் பம்பாயில் ஐந்தடுக்கு மெத்தை வீட்டுக் கட்டிடத்தில் இரண்டாவது அடுக்கு மெத்தை வீட்டில் சாமிகள் முடி வெட்டிக் கொண்டார். நாவிதன் வேலை முடிந்தவுடன் முடியினைச் சேர்த்து ஒரு காகிதத்தில் மடித்து பொட்டலமாக்கிக் கீழே எறிந்துவிட்டான். இதைக் கவனித்து நின்ற வீட்டின் தலைவி 'ஐயோ, முடிப் பொட்டலத்தை கீழே வீசி விட்டாயே. பொட்டலம் அவிழ்ந்தால் அது விழுந்த இடமெல்லாம் மயிர் சிதறி இருக்குமே, கீழே குடியிருப்பவர் கோபித்துக்

கொள்வரே' என்று பயந்து விட்டாள். நாவிதன் அவசர அவசர மாகக் கீழே இறங்கித் தான் வீசியெறிந்த பொட்டலத்தைப் பார்க்க அதனுள் வெட்டியிருந்த முடி காணவில்லை. திவ்விய பரிமள விபூதிப் பிரசாதமே அதில் இருந்தது. சாமி உங்கள் மகிமையை என்னென்று சொல்வது, என்று வீட்டின் தலைவி அதை எடுத்துப் பூசிப் புளகாங்கித மடைந்தாள். திருமுடி இருந்த இடத்தில் வரப் பிரசாதமாகிய விபூதி இருந்ததைப் போல் அவள் பீதி இருந்த மனத்தில் ஈஸ்வரப் பிரேமை வந்து நிறைந்தது. பீதியைப் போக்க வரப் பிரசாதமல் லவா விபூதிப் பிரசாதம்.

முன்னொரு நாள் காசித் தலத்தில் ''யார் பரம்பொருள்'' என்ற விவாதம் எழுந்தது. ''விஷ்ணுவே பரம்பொருள்'' என்று வியாச முனிவர் துணிந்துரைத்தார். அதே துணிவோடு ஸ்ரீ விசுவேசர் சந்நிதானத்திற்கே சென்று தன் சிரசின்மீது இரு கைகளையும் மேலுயர்த்திக்கொண்டு 'விஷ்ணுவே பரம்' என்று உரைத்தார். உரைத்த உடனேயே திரு நந்தித்தேவர்]சாபத்துக்குள்ளாகி மேலே உயர்த்திய கைகள் உயர்ந்தே நிற்க, நாவும் தம்பிக்க ஸ்ரீவிஸ்வேசர் சந்நதியில் நாட்டிய வெற்றித் தம்பம்போல வியாச முனிவர் நின்றார். குற்றத்தை உணர்ந்து தன்னைத் தியானித்த வியாசரை விசுவேசர் திருவருள்சுரந்து திருப்பேரூருக்கு அனுப்பினார். திருப்பேரூரைச் சேர்ந்த வியாச முனிவர் ஸ்ரீ காஞ்சி நதியில் மூழ்கி வெள்ளியங் கிரியை அடுத்து ஈஸ்வரனைத் தரிசித்துத் துதித்த அளவில் கைகளுந் தாழ்ந்தன, நாவும் அசைவுற்றது. தாழ்ந்த கைகள் ஈஸ்வரனை ஒன்றுசேர்ந்து வணங்க நாவும் போற்றிப் பாட ஆரம்பித்தது. இத்தகையத் திருப்பேரூர்த் தலச்சிறப்பைக் கேள்வியுற்ற எங்க ளுக்குச் சாமிகள் மருதமலையில் ஆடிக்காட்டிய இதையொத்த அற் புதம் ஒன்று ஞாபகத்திற்கு வருகின்றது. அன்று வீண்வாதம் செய்த முனிவர் ஒருவர் நந்திதேவர் சாபத்திற்குள்ளாகிப் பேச்சின்றிக் கொடிமரம்போல் ஸ்தம்பித்து விட்டார். இன்று குறும்புத்தனம் செய்த இளைஞன் ஒருவன் சாமிகளின் கோபத்திற்குள்ளாகி அடி யற்ற மரம்போல் பேச்சுமூச்சின்றி விழுந்துவிட்டான். மருதமலைக்குத் திருமுருகன் கோயிலுக்குச் சாமிகளைக் கிரி அவர்கள் அழைத்துச் சென்றார். கிரி அவர்கள் பணியாட்களில் ஒருவன். அவன் ஒரு இளைஞன். பக்திப் பாடல்களை நன்றாகப் பாடுவான். சிறுபிள்ளைத் தனம் என்று சொல்வோமே, அந்தத்தன்மையில் அவன் அவனுக் குத்தெரிந்த சிலருக்குச் சாமிகள் அருட்பிரசாத பஞ்சாட்சரம் வழங்கு வது போல், விபூதி அள்ளிக் கொடுத்துச் சாமிகளைக் கேலிசெய்யும் முறையில் இறங்கிவிட்டான். தான் கேலிக்கூத்து அடிப்பது யாருக் கும் தெரியாது, சாமிகளுக்கும் தெரியாது என்று இப்படிக் கோய முத்தூரில் செய்தவன் மருதமலையிலும் இந்த விளையாட்டைத் தொடர்ந்து செய்ய ஆரம்பித்தான். சாமிகள் மருதமலையில் தங்கி

யிருந்த விடுதியில் இவன் சாமிகளுக்கு விசிறிகொண்டு தொண்டாற்ற அமர்த்தப்பட்டிருந்தான். இந்த விளையாட்டு மனப்பான்மை இளைஞனைத் தடுத்தாட்கொள்ள சாமிகள் திருவுளங்கொண்டனர் போலும்! எல்லாம் உணர்ந்த சாமிகளும் இளைஞனைத் திருத்தத் தன் பாதப் பெருவிரலை நிலத்தில் வைத்து அழுத்தினர். யாருக்கும் தெரியாதென்று கேலிக்கூத்து ஆடிய இளைஞன் உடனே அடியற்ற மரம்போல் கீழே வீழ்ந்தான். மூச்சு பேச்சு ஒன்றுமில்லை. சாமிகள் இளைஞன் குறும்புத்தனத்தை யாவருக்கும் அறிவித்து தன் பாத பெருவிரலைத்தூக்கி மரம்போல் கிடந்தவனை எழவைத்தார். தன் தவற்றை உணர்ந்த இளைஞன் சாமிகளிடம் தான்செய்த குற்றத்திற்காக மன்னிப்பு வேண்டினன். சாமிகளை மகிழ்விக்க முருகன் பாடல்களைக் கசிந்துருகிப் பாடினன். சாமிகளும் அவனுக்கு அருட்பிரசாத விபூதி அருளினர். இந்தச்செயல் அந்த நாளில் முனிவர் வியாசரை ஆண்டவன் தடுத்தாட்கொண்டதுபோல் இந்த நாளில் இளைஞனைத் தன் தப்பை உணரவைத்துச் சாமிகள் தடுத்தாட்கொண்ட பேரன்பை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது.

தமிழ் நாட்டில் சில இடங்களில் சிவ்பிரான் சித்தராகத் திருஉருக்கொண்டு பற்பல அற்புதங்களைச் செய்தருளியிருக்கின்றார். அத்திருத்தலங்களில் கோயமுத்தூரில் உள்ள திருப்பேரூர்த் தலமும் ஒன்று. இங்கு அருள்பாலிக்கும் சிவபிரானுக்குப் பட்டிநாதரென்றும் பெயருண்டு. காரணம், இங்குக் காமதேனுச் சிலகாலம் தங்கிச் சிவனை வழிபட்டுச் சிவனருள் பெற்றது. இங்கு உண்டான வெள்ளியம்பலத்திலே நடராஜர் தாண்டவமாடி விஷ்ணுவிற்கும் பிரம்மாவிற்கும் சிவபிரான் அருள்பாலித்தார். தான் இத் திருத்தலத்தில் வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடச் சித்தம்கொண்ட திருபிரான் முன்கூட்டியே விஷ்ணுவைக் கோமுனியாகவும், பிரம்மனைப் பட்டி முனியாகவும் இவ்விடத்திற்கு அனுப்பிவைத்தார். ஒருநாள் கோமுனிவருக்கு, "நடராஜர் திருஉரு அமைத்து வழிபடுவாயாக" என்ற அசரீரி வாக்கு உண்டாக, அவர் சபை நிருமிக்கும் இடம் புலப்படாது திகைத்தார். அப்போது சிவபிரான் சித்தராக திருவுருக்கொண்டு இவ்வூரில் பல அற்புதங்களை ஆடிக்காட்டினர். அவரைக் கோமுனிவர் அடுத்து, "சிவபெருமான் திருநடனஞ்செய்கின்ற திருச்சபையைத் தெரிவிக்க வல்லீராயின் நீவிரே முற்றுமுணர்ந்த பெற்றியர்" எனக்கூற, சித்தேசர் "வெள்ளியம்பலம் எழுக" என்று திருவாய்மலர்ந்தருளினர். உடனே "வெள்ளியம்பலத்திற்குரிய தேவர்பிரான் திருவுருவம் செய்தருள வேண்டும்" என்று கோமுனிவர் முதலியோர் சித்தமூர்த்தியை மறுபடியும் வேண்ட, திருவுளமகிழ்ந்த சித்தேசர் திருச்சபையைச்சூழத் திரைகோலச்செய்து அதனுள் ஒரு முகூர்த்தமளவும் அமர்ந்து இரண்டாம் முகூர்த்தத்தில் சித்தேசர் திரையோடும் மறைந்தருளினர். சித்தேசர்

மறைந்தாலும் அவர் ஆடிய மற்றெருசித்து திரு நடராஜர் திருவுருவையும் திரு சிவகாமியம்மை திருவுருவையும் அவர் மறைந்த அடுத்த வினடியில் உருவாக்கியது. கோவில் அமைத்தப் பங்குனி உத்திரத்திருநாளில் ஸ்ரீ ஞானநடராஜன் வெள்ளியம்பலத்திலே திருநிருத்தஞ் செய்தருளினர். ஆண்டவன் ஆடும் திருநடனத்தைத் திருவடிச் சிலம்பொலியும் வாத்திய இசையும் மட்டுமே கூடியிருந்தோரின் செவிக்குக் காட்டியருளியது. ஆண்டவனுடைய ஆனந்தத் திருநடனத்தைக் கண்கள்பார்த்து அனுபவிக்கக் கொடுத்துவைக்க வில்லை. இதைக் கண்டவர்கள் ஆண்டவனை ஏங்கி இரந்துத் துதிக்க "ஊன நடனஞ் செய்து எவ்வகை உயிர்கட்கும் ஆணவமல வலியை மாற்றி ஞான நடனஞ்செய்தருளும் நடராஜர் ஞான நோக்கத்தைத் தந்தருளலும், அஞ்ஞானம் நீங்கி, மூன்று முனிவர் முதலிய யாவருந் தாண்டவத்தின் ஆனந்தத்தைக் கண்களால் கண்டு, மொண்டு மொண்டு உண்டு, களிபேருவகையுற்று ஆனந்தக் கூத்தாடினர்கள்" இதுவே திருப்பேரூரில் ஆண்டவன் காட்டியருளிய திருவிளையாடல்.

இத்தகையச் சித்தர் தலமும் ஸ்ரீ பன்றிமலைச் சித்தரை உள்ளம் உவந்தேத்தி வரவேற்றது.

"காலையிளம் கதிரவனே பேரூர்க் கோவில்
கண்டதொரு வேதாந்தக் களிப்பே! எங்கள்
பாலைவன நெஞ்சத்தைப் பசுமைக் காடாய்ப்
பயனுக்க வருக அருள் பழுத்த ஞானச்
சோலையிலே கனி பறிக்கச் சூழ்ந்திருக்கும்
தொண்டர் மனம் கொண்டாட வருக இந்த
ஞாலமெலாம் அருள்ஞான தீப மேற்றி
நடத்துகின்ற பன்றிமலைத் தேவே போற்றி"

இப்படிப் போற்றினர் பேரூர் தேவஸ்தான அறங்காவல் குழுவினர் 6-3-65இல். அன்று சாமிகள் பட்டீஸ்வரசாமி தேவாலயக் கடைகள் கட்டிடத்தைத் திறந்துவைத்தார். "இன்று சாமிகள் சைவ சித்தாந்தத்திற்குத் தந்த விளக்கம் நான் இதுவரை பெருத இன்பவிளக்கம்" என அன்று தலைமை தாங்கிய தமிழக அரசாங்க இந்துமதத்துறை நெறியாளர் திரு. சாரங்கபாணி அவர்கள் கோவிலில் குழுமியிருந்தப் பெருமக்கள் முன் வாய்விட்டுச் சொல்லிச் சாமிகளைச் சைவசமயப் பெருங்குரவர்களுக்கு ஒப்பிட்டு வணக்கம் தெரிவித்தார். கோவையில் கண் டாக்டர்களால் சாதிக்கமுடியாது சாஸ்வதமாகச் சாகும்வரை குருடராகவேதான் வாழவேண்டுமென கைவிடப்பட்ட ஐம்பத்தாறு வயதான முன்னுள் பள்ளி ஆசிரியர்

திரு. கே. பலராமன் என்பவருக்குச் சாமிகளுடைய தவவலிமையால் கண்ணொளிக் கிடைக்கச் செய்தப் புல்லரிக்கும் செய்தி சாமிகள் கோயமுத்தூரில் ஆடிய சித்துகளுக்கெல்லாம் வைரமுடி வைத்தது போன்று விளங்குகின்றது. ஞானநடராஜன் வெள்ளியம்பலத்தில் ஆடிக் கூடியிருந்த மக்களுக்கு ஞானவொளிவீசி ஆடிக் காண்பித் தான். தன் திருநடனத்தை ஊனக்கண் கொண்டு காணஇயலாத அவர்களுக்கு அருள்சுரந்து தன் திருநடனம் காணவல்ல கண் களும் கொடுத்தருளினன். இவைகளைக் கேள்விப்படும் நமக்கு இப் போது சாமிகள் பார்வை இல்லாத ஒருவருக்குப் பார்வை கொடுத் ததும், சுற்றேரும் மற்றேரும் வியக்கவல்ல ஞானச்சொற்பொழிவு நிகழ்த்தியதும் ''ஈசனும் ஈசனருள் சித்தர்களாலும் ஆடிக்காட்ட முடியாத சித்துக்களும் உண்டோ'' என்றபேருண்மையை நன்ருக விளக்குகின்றது. சாமிகளின் அற்புதத் திருவிளையாடல்களை நேரில் கண்டு அனுபவித்த பத்திரிகை நிருபர் ஒருவர் அவற்றைக் 'கோவைநகர் காணுத அற்புதம்' என்ற தலைப்பில் ஒரு பத்திரிகை யில் தொகுத்துரைத்தார். கோவையில் ஏற்கனவே பேரூரில் சித் தேசர் ஆடி அருளிய அற்புதங்களைக் கேள்விப்படும் நாம், இவற்றை மேலே தொகுத்துரைத்த வண்ணம் சாமிகள் சித்துக்களையும் ''கோவை நகர் கண்ட அற்புதங்கள்'' என்று போற்றுவது பொருத்தமாகும்.

## திருச்சியில் ஆண்டவன் அருள்நிறை அண்ணல்

''தாயாகித் தனிக்கருணை வள்ளலாகி
தழைத்திட்ட குன்றிரண்டு அடையப்பெற்றேய்!
மாலாகி மால்மருகன் முருகனுகி
மணக்கும் திருப்பதிஇரண்டும் சிறக்கப்பெற்றேய்!
தானுகி நின்றதொரு பரம்பொருளின்
தத்துவத்தை விளக்கவந்தமெய்யா! எங்கள்
கோனுகி வேளாண்மைக் குடியுமாகிக்
கற்கண்டாய்ப் பன்றிமலை சாமி வாழ்க!

— T. D. மீனுட்சிசுந்தரம்.

சாமிகளையும், திருச்சியையும் நினைக்கும்போது மேல்நாட்டு அனுபவமும், திறமையும், அறிவும், ஆற்றலும் நிறைந்த டாக்டர் T. V. அரங்கநாதன் M. B. B. S., L. O., D. O., Z. O., அவர்களை நினைக்காம லிருக்க முடியாது. டாக்டர் அரங்கநாதன் செயல் வீரர். ''ஒரு மனிதன் காலாகாலத்தில் ஒழுங்காக வேலைசெய்து வருவதே அவன் எடுத்த மனிதப் பிறவியின் கடன்'' என்று நம்புபவர். அதைச் செயலில் அன்ருடம் சாதித்து வருபவர். தன்னுடைய கண் வைத்தி

யத்தைச் செம்மையாகச் செய்வதில் வேண்டிய மேல்நாட்டு அனுபவமும், திறனும் வாய்ந்தவர். தன் தொழிலில் முன்னணியில் நிற்கும் இவருக்கு ஓய்வும் கிடையாது. இறைச் சிந்தனைக்கு ஒதுக்கி வைக்க நேரமும் கிடையாது. அதில் மனமும் கிடையாது. இப்படிப்பட்ட ஒருவரைச் சாமிகளிடம் அழைத்துச் செல்வது எளிய காரியமல்ல. அப்படிச் செய்துவிட்டாலும் சாமிகளிடம் நம்பிக்கை ஏற்படும்படி எப்படிச் செய்வது? இப்படியே மனத்தைக் குழப்பிக்கொண்டிருந்தார் சாமிகளுடன் நெருங்கிப் பழகும் திரு S. சூரியமூர்த்தி அவர்கள். ஒருநாள் சாமிகளிடம் டாக்டரை அழைந்துச் செல்லும் வாய்ப்பும் நண்பருக்குக் கிடைத்தது. அப்போது சாமிகள் திருவுளம்கொண்டு டாக்டருக்கு ஒரு தேங்காய் வரவழைத்துக் கொடுத்தார். அப்போதும் தானுக வந்த தேங்காயைச் சாமிகள் தன்னிடத்தில் எங்கோ மறைத்துவைத்து எடுத்துக் கொடுத்தபடியாகத் தானிருக்க வேண்டும் என்று டாக்டர் உண்மையாகவே நம்பினுர். தாம் நம்பியதை மறைக்கும் பழக்கமே அவருக்குக் கிடையாது. அதைத் தன்னை அழைத்து வந்த நண்பர்களிடமே சொல்லி விட்டார். நண்பர்கள் மட்டும் அவரை மறுபடியும் சாமிகளிடம் அழைத்துச் செல்லத் தயங்கவில்லை. அப்போது சாமிகள் "எப்பொழுதும் விசுவாசமாக இருங்கள்" என்றுகூறி டாக்டரின் வலது கையைத் தடவினுர். சாமிகள் தடவிய டாக்டரின் வலது கையில் நறுமணம் வீசியது. தன் கையிலிருந்து திடீரென்று வந்த மணம் நிச்சயமாகச் சாமிகளின் மாயாஜாலவித்தைகளில் ஒன்று என்று டாக்டர் அன்று முடிவு கட்டினுர். இருந்தாலும் சாமிகள் எழுப்பிய மணம் நீடித்திருந்ததைப் போன்று சாமிகளின் அருட்செயலும் அவர் மனத்தில் நீடித்திருந்தது. சாமிகளை டாக்டர் அடிக்கடி சந்திக்கும் வாய்ப்புக்களும் வருவதுண்டு. சாமிகளை அடிக்கடி நினைக்கும் மனப்பக்குவமும் வந்துவிட்டது.

ஒருநாள் கண் மங்கிய ஒரு சிறு பெண்ணுக்கு ஆபரேஷன் செய்யவேண்டி இருந்தது. அவளுக்கு ஏற்கனவே ஒரு கண் இல்லை. மற்ற கண்ணும் மங்கி வருகின்ற அந்நிலையில் ஆபரேஷன் செய்தால் ஒரு கண்ணையாவது காப்பாற்றி அவளையும் காப்பாற்றி விடலாம். இந்த ஆர்வத்தோடு டாக்டர் திரு. V. அனந்தகிரி அவர்கள் மயக்க மருந்துக் கொடுக்க சிறுமிக்கு ஆபரேஷன் நடந்தது. ஆபரேஷன் வெகு ஜாக்கிரதையோடு நடந்து கொண்டிருக்கும்போது தவிர்க்க முடியாத காரணத்தினுல் ஆபரேஷன் செய்ததும் பயனற்ற வேலையாக முடிந்துவிடுமோ என்ற நிலை எதிர்பாராதவிதமாக ஏற்பட்டு விட்டது. அப்படி இருந்தும் டாக்டர் அரங்கநாதன் தன்னுல் முடிந்தவரை வெகு ஜாக்கிரதையுடன் ஆபரேஷனைத் தொடர்ந்து செய்து முடித்தார். இருந்தாலும் ஆபரேஷனை முடித்து அவள் கண்ணுக்குக் கட்டுக் கட்டும்போது அவளுக்குப் பார்வை கிடைக்கும் என்ற நம்பிக்கை கொஞ்சம் இருந்ததும் அடியோடு அகன்றுவிட

ஆரம்பித்தது. அப்படி ஒருவேளை அச்சிறுமிக்குப் பார்வை கிடைத்து விட்டாலும் அது தன்னுடைய படிப்பினாலும், அனுபவத்தினாலும், செயலாலும் ஒருக்காலும் இருக்கவே முடியாது கடவுள் அருளால் வேண்டுமானால் முடியலாம் — இப்படி அலைமோதிக் கொண்டிருக்கும் டாக்டருடைய மனத்தில் பளிச்சென்று வந்தது சாமிகளுடைய நினைப்பு! பன்றிமலை சாமிகள்!! எவ்வளவோ அற்புதங்கள் ஆடிக் காண்பிக்கின்றார். நொண்டியை நடக்க வைக்கின்றார் என்கின்றனர். ஊமையைப் பேச வைக்கின்றார் என்கின்றனர். குருடர்களுக்கும் கண் கொடுக்கின்றார் என்கின்றனர். உண்மையிலேயே அவருக்கு அவ்வளவு சக்தி இருந்தால் ஏன் இந்த அபலைச்சிறுமிக்கு அருள் செய்யக்கூடாது? ஏன் இந்தப் பெண்ணுக்குக் கண் தெரியக் கூடாது? என்ற நினைப்பு டாக்டர் மனத்தில் அரும்பிவிட்டது. இதுவே மனத்தில் தொடர்ந்து வளர்ந்து நேரமாக ஆக மலர்ந்த பேராசையாகி விட்டது. அடுத்த நாள் ஆவலோடு அவசரமாக வெகு ஜாக்கிரதையுடன் சிறுமியின் கண்ணில் கட்டியிருந்த கட்டு அவிழ்க்கப்பட்டது டாக்டர் மனப்பூர்வமாக விரும்பிய ஆசை நிறை வேறி விட்டது. சின்னப் பெண்ணின் ஆபரேஷன் செய்த கண்ணுக்குப் பூரண ஒளி கிடைத்து விட்டது. சாமிகளுடைய அருள் அவளுக்குக் கிட்டிவிட்டது. இதைப் பூரணமாக உணர்ந்தார் டாக்டர். தனது அறிவையும், ஆற்றலையும் மிஞ்சும் சாமிகளின் சக்தியே சிறுமிக்குப் பார்வையை அளித்தது என்பதைப் பரிபூரண மாக நம்பிவிட்டார் டாக்டர். சாமிகள்மீது உறுதியான நம்பிக்கை வந்துவிட்டது. அவருடைய பேச்சிலும், போக்கிலும், பழக்க வழக்கங் களிலும் அசைக்க முடியாத நம்பிக்கை வந்துவிட்டது. சாமிகளை மனமொழி மெய்களால் எப்பொழுதும் வழுத்துகின்ற பேரன்பராகி விட்டார்.

சாமிகளை நனவிலும் மட்டுமின்றிக் கனவிலும் கண்டு களிக்கும் சீடராகி விட்டார் டாக்டர். அவர் சில தினங்களுக்கு முன் கண்ட கனவையே கேளுங்கள், அவர் வாயிலாகவே! டாக்டர் அரங்கநாதன்: " நாமெல்லாம் வழக்கம் போல் சாமிகளின் பூஜைக்காக – சாமிகளின் வருகைக்காகக் காத்துக்கொண்டிருக்கின்றோம். வழக்கமாக வருகின்ற நமது நண்பர்கள் எல்லோரும் கூடி இருக்கின்றோம். ஆனால் நாம் கூடி இருப்பது ஒரு கோயில். வெகுநேரமாகியும் சாமிகளைக் காணோம். நான் கோயிலுக்குள் சென்றேன். எங்கேயோ அவசர மாகப் போய் வர சாமிகள் தயாராகிக்கொண்டிருந்தார். தான் அவ சரமாக ஓரிடத்திற்குச் செல்லவேண்டுமென்று சொல்லி அனைவருக்கும் தரிசனம் கொடுத்துவிட்டு விடை பெற்றுக் கொண்டார் சாமிகள். நானும் விழித்துக் கொண்டேன். இது தான் பகலில் கண்ட கனவு. அன்று இரவு வழக்கம் போல் படுத்துக் கொண்டேன். மறுபடியும் அதே கோயில். அங்கேயே நான் சாமிகளின் வருகைக்காகக் காத்துக்

கொண்டிருக்கின்றேன். சாமிகளும் திரும்பி வந்துவிட்டார். பூஜை வழக்கம் போல் முடிந்தது. வழக்கம் போல் பிரசாதமும் கொடுத்தருளினர். நான் உடனே விழித்துக் கொண்டேன். இது நான் இரவில் கண்ட மற்றொரு கனவு. டாக்டர் கனவு காண்கிறார். பகலிலும் கனவு: இரவிலும் கனவு. கனவுகளிலும் ஒரே நிகழ்ச்சி தொடர்ந்து வருகின்றது. சாமிகளும் தொடர்ந்து வருகின்றார். முன் கனவில் தரிசனம் தந்து விட்டுச் சென்ற சாமிகள் பின் கனவில் அருள் பிரசாதம் வழங்கத் திரும்பி வருகின்றார் இந்த அளவுக்கு டாக்டருடைய பக்தி சாமிகளிடம் பெருகி விட்டது. பின் அவர் வாரந்தோறும் சாமிகளைக் கண்ணாரக் கண்டுவரத் திண்டுக்கல்லுக்குச் செல்வதில் வியப்பென்ன இருக்கின்றது.

சாமிகள் 1966 ஏப்ரல் மாதம் திருச்சிக்கு அன்பர்கள் அழைப்பிற்கிணங்கி வந்தார். டாக்டர் திரு. அரங்கநாதன் இல்லத்தில் ஒரு வாரம் தங்கினர். சாமிகளைத் திண்டுக்கல்லிலிருந்து திருச்சிக்கு அழைத்து வந்தபோது, எதிர்பார்த்திருந்த நேரத்திற்கு அரை மணிக்கு முன்னதாகவே சாமிகள் டாக்டர் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். டாக்டர் அரங்கநாதனும் பக்தர்களும் சாமிகளை வரவேற்கக் குறிப்பிட்ட நேரத்தில் டாக்டர் வீட்டுக்குச் சென்றபோது சாமிகள் சிரமப் பரிகாரம் செய்துவிட்டு அவருக்கென்று அமைத்திருந்த நாற்காலியில் வருபவர்களுக்கெல்லாம் தரிசனம் தந்துகொண்டிருப்பதைக் கண்டோம். அவ்வளவு சீக்கிரமாகச் சாமிகள் வந்துவிட்டதைக் கண்டு ஆச்சரியப்பட்ட எங்களைப் பார்த்து "நான் சீக்கிரம் வந்துவிட்டேன் என்று ஆச்சரியப்படுகின்றீர்களா. நம் வீட்டுக்கு வருவதற்கு நேரம் பார்ப்பதுண்டா. நான் தான் சீக்கிரம் புறப்படச் சொன்னேன்" என்று அன்புக் குரலில் அன்பு மொழிகளை அன்பொழுகக் கூறினர். அன்பின் சிகரமாக விளங்கும் சாமிகளின் பிறந்த தினமும் யாவரும் கண்டு வியக்கும் வகையில் நவீனத்தோடு டாக்டர் வீட்டில் குதுகலத்தோடு கொண்டாடப்பட்டது. இதில் பெரும் பங்கு எடுத்துக் கொண்ட டாக்டர் T.V. அரங்கநாதன் மகள் திருச்செல்வி ஔவையின் உற்சாகம், சாமிகளை நன்ருகக் கவனித்துக்கொள்வதில் அவருக்கு இணை அவரே என்று சொல்லக்கூடிய அவர் தாயின் ஆர்வத்தோடு போட்டி போடக்கூடிய அளவில் இருந்தது. சாமிகள் பிறந்த தினத்தைக் கொண்டாட மெழுகு வர்த்திகள் ஏற்றப்பட்டன. பிறந்த நாளைக் கொண்டாடுவதற்கென செய்யப்பட்டிருந்த கேக்கைச் (பணியாரம்) சாமிகள் கூடியிருந்த பக்தர்கள் அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்தார். இப்படிக் கிறித்தவ முறையில் அவர் பிறந்த நாளைக் கொண்டாடியது சாமிகள் சமரச சன்மார்க்க நோக்கமுடையவர், இந்து மதத்தினரன்றிக் கிறித்தவர் முகமதியர் எல்லோருக்கும் உரியவர் என்பதைத்தான் உணர்த்துகின்றது.

திருச்சிக்கு விஜயம் செய்த சாமிகளை உற்சாகத்தோடு வரவேற்க திருச்சி ரோடரி கிளப் முந்திக் கொண்டது. உலகம் முழுவது பரவி யுள்ள ரோடரி கிளப்புகளில் திருச்சி ரோடரி கிளப் சாமிகளை முதன் முதலாக வரவழைத்துக் கௌரவித்தது அதனையே கௌரவித்துக் கொண்ட பெருமை மிக்க செயல். இது மற்ற கிளப்புகளுக்கும் நன் னெறியில் வழிகாட்டியாகவும் அமைந்துள்ள சிறந்த செயலுமாகும். இந்தக் கூட்டத்தில் இன்னொரு புதுமையும் காத்துக் கொண் டிருந்தது சாதாரணமாக எந்தக் கூட்டத்திற்கும் தலைமை தாங்குப வரை ஒரு நாற்காலி தாங்கிக்கொண்டிருக்கும். ஆனால் இந்தக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கியவரை அவருக்கென்று ஒதுக்கப்பட் டிருந்த நாற்காலி தாங்க வாய்ப்பில்லை. தலைவர், ஆரம்பத்திலிருந்து கூட்டம் முடியும் வரை பக்தியோடும் பணிவன்போடும் நின்று கொண்டேயிருந்தார். காரணம் சாமிகளின் பிரதம சீடர்களில் ஒருவரல்லவா அன்று தலைமை தாங்கினர். டாக்டர் அரங்கநாதன் அல்லவா அன்று தலைமை தாங்கியவர். சாமிகள் திருவாய் மலர்ந் தருளிய சொற்பொழிவில் தெய்வீகக் கருத்து மணிகள், அருள் வாக்கு மாணிக்கங்கள், சிந்தைக்கு மெய்யுணர்வு ஊட்டக் கூடிய நல் முத்துக்கள், ஈசனடி மறவாத சிந்தையைக் கொடுக்கவல்ல வைரங்கள் நிறையப் பதிந்திருந்தன. இறையருள் இன்பத்தில் தோய்ந்திருக்கும் பெரியார் ஒருவரைக் கண்டோம், பெரியார் ஒருவர் திருவாக்கைக் கேட்டோம் என்ற பேரின்பநிலையில் கண்டவர் கேட்டோர் உள்ளம் மிதந்து நின்றது.

இதற்கடுத்து நிகழ்ந்த நிகழ்ச்சியை ஒரு வைபவமென்றே உரைக்கவேண்டும். சாமிகளை வரவேற்றுக் கௌரவிக்கத் திருச்சி மக்களே கி. ஆ. பெ. விஸ்வநாதன் உயர்நிலைப்பள்ளிக் கொட்டகை யில் ஏராளமாகக் கூடி இருந்தனர். சாமிகளைப் பூரணக் கும்பத் தோடும், மேளதாளத்தோடும் வரவேற்ற பெருங் கூட்டத்திற்கு அண்ணாமலைப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் திரு T. M. நாராயணசாமிப் பிள்ளை தலைமை வகித்தார். வெளியூரிலிருந்தும் பிரமுகர்கள் வந்து விழாவினைச் சிறப்பித்தனர். பல துறைகளில் முன்னணியில் நிற்கும் பெரியவர்கள் சாமிகளின் அருள்வாழ்வைப் போற்றிப் புகழ்ந்தனர். மேடைமீது சாமிகளை உயர்ந்த ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்து அவரைச் சுற்றி மேடைமீது அமர்ந்திருந்த பெரியவர்களையும், கொட்டகையில் திருச்சி நகரமே வந்திருந்ததைப் போன்று பெருவாரியாகத் திரண்டிருந்த மக்கள் கூட்டத்தையும் காணும்போது கம்பர் இராமர் பட்டாபிஷேகக் காட்சியை வருணிக் கும் பாட்டு ஞாபகத்திற்கு வருகின்றது.

"அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த

பரதன் வெண்குடை கவிக்க
இருவரும் கவரி வீச
விரை செறிகுழலி ஓங்க
வெண்ணெயூர் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌளி''

அன்பும், தவமும் மிக்க கூட்டத் தலைவர் திரு. T. M. நாராயணசாமிப் பிள்ளை மேடையில் வீற்றிருந்தது வஸிட்டரையும், கொடையும் கலையும் மிக்க முத்தமிழ்க் காவலர் திரு. K. A. P. விஸ்வநாதம் வீற்றிருந்தது சடையப்ப வள்ளல் மூதாதையரையும், சாமிகள்மீது பக்தியும், பெருமதிப்பும் மிக்க தாண்டிக்குடி திரு. V. சோமசுந்தரம் பிள்ளை போன்ற வெளியூர் அன்பர்கள் மேடையில் வீற்றிருந்தது அனுமனையும், அங்கதனையும், பேரன்பும் பெருமகிழ்ச்சியும் மிக்க உள்ளூர்ப் பெருமக்கள் இலக்குமணன், பரதன், சத்துருக்கனன் இவர்களையும் நம் மனக்காட்சிக்குக் கொண்டுவந்தது. இந்த அமோக வரவேற்பு வைபவத்தில் சிறப்பாகக் கலந்து கொள்வோரும் இராமசாமி எனும் பெயருடைய சாமிகள் என்பதை அறியும்போது இவ்விரு வைபவங்களில் தலைமைப் பீடத்தில் அமர்ந்திருப்பவர் பெயர்ப் பொருத்தத்தைக் கண்டும் நம்மால் ஆச்சரியப்படாமலிருக்க முடியவில்லை. பட்டாபிஷேக (இராம)பிரானைக் கண்டு உள்ளம் பூரித்தனர் அயோத்தி மக்கள் அந்நாள்; வரவேற்பு வைபவ (இராம)சாமிகளைக் கண்டு உள்ளம் உவப்படைந்தனர் திருச்சி மக்கள் இந்நாள்.

இந்தத் திருவிழாவில் மூன்று சங்கங்கள் சாமிகளுக்கு வாழ்த்துரை வழங்கிப் பெருமை கொண்டன. திருச்சி வேளாளர் சங்கம் சாமிகள் வேளாளர் மரபில் உதித்துள்ளப் பெருமையைத் தம் சங்கத்தின் பெருமையாய் உரைத்ததோடல்ல சாமிகள் தன்னுள் சிவத்தைக்கண்டு சிவானந்த நிலையால் யாவர்க்கும் பிணிநீக்கவல்ல உயிர்மெய்யன் என்பதையும், திருப்பதி பழநி இத்திருப்பதிகளில் வாழும் தெய்வங்களின் திருச்சின்னங்களும் கடாக்ஷமும் பெற்றவர் என்பதையும், சாமிகள் இறைவன் பன்றிக்குட்டிகளுக்குத் தாயான பன்றிமலையில் பிறந்து. இறைவன் செட்டிப்பெண்ணுக்குத் தாயான திருச்சிக்கு வந்து அந்த இறைவன் செயலையே எல்லோருக்கும் உவந்தளிக்கும் வள்ளல் தன்மை பெற்றவரென்பதையும் ஏத்திப் புகழ்ந்தது.

'' தாயாகித் தனிக் கருணை வள்ளலாகி
தழைத்திட்ட குன்றிரண்டு அடையப் பெற்றேய்

மாலாகி மால் மருகன் முருகனுகி
மணக்கும் திருப்பதி இரண்டு சிறக்கப் பெற்றேய்

தாஞகி நின்றதொரு பரம் பொருளின்
தத்துவத்தை விளக்கவந்த மெய்யா எங்கள்
கோஞகி வேளாண்மைக் குடியுமாகி
கற்கண்டாய் பன்றிமலை சாமி வாழ்க!"

சாமிகள் வேளாளகுலமணியாகப் பிறந்திருந்தாலும் அவர் ஒரு குலத்திற்கோ ஒரு மதத்திற்கோ ஒரு வகுப்பிற்கோ மட்டும் உரியவரில்லை, மனிதகுலத்திற்கே சொந்தமானவர் என்பதை அறிவுறுத்துவதுபோல் திருச்சி நாயுடு மகாஜன சங்கம் கொடுத்த வரவேற்புரை அமைந்திருந்தது. திருவருளும் குருவருளும் பொலியும் பெருமானென்றும், அட்டமாசித்திகள் கைவரப்பெற்ற அண்ணலே யென்றும், காட்சிக்கு எளிய கருணைவாரிதியே யென்றும், ஆண்டவன் அருள்நிறை அண்ணலே யென்றும் சாமிகளைப் போற்றிப் பணிந்தது நாயுடு சங்கத்தார் வாசித்தளித்த நல்வரவேற்பிதழ். சாமிகள் மனிதகுலத்திற்கே உரியவராஞலும் மனிதகுலத்தின் சிறப்பு அம்சமாக விளங்கும் கலைஞர்கள் உள்ளங்களைக் கவரும் உன்னத மகான் என்பதை விளக்குவதுபோல திருச்சி தபால்பில்லை சேகரிப்பவர் சங்கம் அளித்த வாசிப்புப்பத்திரம் விளங்கியது.

சாமிகள் அன்று பேசிமகிழ்வித்தார் என்று சொல்வதைவிடச் சாமிகள் அருள்வாக்குப் பொழிந்து மக்கள் மனத்தைக் கொள்ளை கொண்டார் என்பதே பொருத்தமாக இருக்கும். நாற்பது நிமிடங்கள் நீர்மடை திறந்து விட்டது போன்று கணீரென்ற குரலில் சாமிகள் நிகழ்த்திய பேரருள்பேருரை சாமிகள் நிகழ்த்திக்காட்டுகின்ற அற்புதங்களுக்கெல்லாம் சிகரம் வைத்தது போன்று அமைந்தது. மக்கள் எல்லோரும் சாமிகளின் தெய்வ அருள்நிறைந்த சொற்பெருக்கில் கவனம் முழுவதும் ஈர்க்கப்பட்டு மெய்மறந்து அன்று மலர்ந்த செந்தாமரையில் ஊறும் மதுரத்தேனைச் சுவைக்கும் வண்டுகள்போல் தெய்வீக இன்பத்தில் மனம் ஒன்றி இருந்தனர். சாமிகள் ஆற்றிய சொற்பொழிவில் பொறுக்கி எடுத்தாற் போல் நவமணிகள் போன்ற சொற்கள் கருத்துக்கள், கோப்பு, (சோர்வை), இதயத்திலிருந்து எழுச்சி பொங்கி பீறிட்டெழுகின்ற பேரூற்று அருள்வாக்கு, கற்றேரும் மற்றேரும் கருத்தொருமித்து ஏற்றுக்கொள்ளும் தெய்வீகத் தத்துவ விளக்கம், தெய்வம் இல்லை யென்பாரையும் தெய்வம் உண்டு என்று சொல்லவைக்க வல்ல ஆத்மஞான வேகம் பெருகி ஓடின. சாமிகளின் உண்மை உருக்கும் பேச்சில் கருத்நாடலை விரும்பியவர் கருத்தாடலையே கண்டு அதில் ஊறி திளைத்தார். அருள் மொழிகளை விரும்பியவர் அருள்

மொழி மயமாகச் சொற்பொழிவு இருப்பதைக் கண்டு அதில் ஊறித் திளைத்தார்: ஆத்மீக குரல் பரப்பும் சிந்தனை விருந்து உரைகள் விரும்பியவர் சிந்தனை அமுதையே உட்கொண்டு அதிலேயே ஊறித் திளைத்தார். இப்படிப் பேரானந்தப் பெருநிலையில் சொக்கி இருந்தனர். மக்கள் சாமிகளுடைய பேராற்றல் சொற்பொழிவைக் கேட்டு. இந்த மக்கள் இயல்பைக் காணும்போது இராமனுடைய அழகைக் கண்டு ஒவ்வொரு அங்கத்தைக் கண்டவர் அந்த அங்க அழகில் ஈடுபட்டத் தன்மையே நம் மனக் கண்களுக்கு முன் வருகின்றது. "தோள் கண்டார் தோளே கண்டார்" என்ற கம்பர் பாட்டும் ஞாபகத்திற்கு வருகின்றது. அதைப் போன்றே சாமிகள் அருளிய பேச்சில் உள்ள பல அம்சங்களைக் கவனிக்கும்போது கேட்டவர்களில் ஒவ்வொருவரும் தாம் விரும்பிக் கேட்ட ஒவ்வொரு அம்சத்திலும் மனம் லயித்து மயங்கி இருந்தனர் என்பது வெளிப்படை. அவர்கள் நிகழ்த்திய நாற்பது நிமிடப் பேச்சை தொகுத்து உரைப்பதென்றால் அதற்கே ஒரு புத்தகம் வேண்டியிருக்கும். ஆனால் அது எத்தகைய பேச்சு, அதை எப்படி மக்கள் விரும்பினர் என்பதை விளக்க கீழ்க் கண்ட நிகழ்ச்சி உதவும். சாதாரணமாக வானொலியில் பேசுவதென்றால், பேசவேண்டிய பொருளை முன் கூட்டியே எழுதி வானொலி நிலையத்திற்கு அனுப்பி விடவேண்டும். சாமிகளது அழகான சொற்பொழிவைக் கேட்ட வானொலி நிலையத்தார் சாமிகளின் அருள்வாக்கை ஒலிப்பதிவு செய்து மக்களுக்கு ஒலி பரப்ப முடிவு செய்தனர். அதற்காக சாமிகளைத் திருச்சி வானொலி நிலையத்திற்கு வரும்படி கேட்டுக் கொண்டனர். வானொலி நிலைய வழக்கப்படி சாமிகளும் தான் பேச வேண்டிய ஐந்து நிமிட அருள் வாக்குப் பேச்சை முன்கூட்டி எழுதியே நிலையத்திற்கு எடுத்துச் சென்றார்கள். அங்கு ஒரு ஆச்சரியம். சாமிகளையும் சாமிகளோடு சென்ற எங்களையும் காத்துக்கொண்டிருந்தது. முதல் நாள் சாமிகளின் அருள் பிரவாகப் பேச்சை கேட்டனுபவித்த நிலையத்தாருக்கு சாமிகளை அவர் எழுதிப் படித்ததோடு விட்டுவிட மனமில்லை. "சாமி நாங்கள் விரும்புவது உங்கள் அருள்வாக்கு. உங்களுக்குத் தோன்றும் இறை எண்ணங்களை இப்பொழுதே சொல்லுங்கள். நாங்கள் அந்த அருள் வாக்கையும் உடனே பதிவு செய்து கொள்கின்றோம்" என்று சாமிகளை நிலையத்திலேயே பேசும்படி கேட்டுக்கொண்டனர். அவர்கள் கேட்டுக் கொண்டபடி மூன்று ஐந்து நிமிட அருள் வாக்குப் பேச்சுக்களைச் சாமிகள் உவந்தளித்தார், இந்த அருள்வாக்கினை திருச்சி நிலையத்தார் அடிக்கடி தம் நிலையத்தில் ஒலி பரப்பி வருகின்றனர்.

திருச்சி மாவட்டத்தில் காவிரி பாய்ச்சலில் செழித்து விளங்கும் ஆமூரில் சாமிகளுக்கு அமோகமான வரவேற்பு ஏற்பாடாகியிருந்தது. ஆமூர் நிலக்கிழார் திரு. T. அருணசலம் பிள்ளை சாமிகளை மேளதாளத்துடன் புட்ப விமான மொன்றில் தன் இல்லத்திற்கு ஊர்வலமாக

அழைத்துச் சென்று பாத பூஜை விமரிசையாக நடத்தினர். பிள்ளை அவர்களுடைய பண்ணையாட்களெல்லாம் சாமிகள் அருள் பிரசாத விபூதிக்காக வீட்டு வாயிலில் காத்துக்கொண்டிருந்தனர். சாமிகள் கூட்டத்திலிருந்த ஒரு தலைவனையும் அவர் தலைவியையும் அழைத்துச் சதிபதிகளான அவரிருவரையுமே ஒரு துண்டை விரித்துப் பிடிக்கச் செய்தார். துண்டுக்குமேல் சாமிகளுடைய திருக்கரங்கள் உயர்ந்தன. சாமிகள் தன்னுடைய அருளையே திருநீறு வடிவத்தில் துண்டுக்குள் கொட்டு கொட்டென்று வழங்கினர். ஒன்றுமில்லாத அருட்கரங்களிலிருந்து திருநீறு பெருகி வருவதைக் கண்ட மக்களுக்குச் சொல்லொணு உற்சாகம். அந்த அருள் பிரசாதத்தையே அவ்வளவு பேருக்கும் சாமிகள் உள்ளங் குளிரத் தன் திருக்கரத்தினுலேயே எடுத்துக் கொடுத்த காட்சி சாமிகளின் அற்புதமாடும் திறனை மட்டுமல்ல சாமிகளுடைய செழுங் கருணைப் பெருக்கினையே அங்குக் குழுமியிருந்த மக்களுக்கு எடுத்துக் காட்டியது.

சாமிகளுடைய தெய்வீக அருளை 1966ஆம் ஆண்டிலேதானு திருச்சி மக்கள் அனுபவித்தனர்? சாமிகள் இதற்கு முன்பாக எவ்வளவோ முறைகள் திருச்சிக்கு வருகை புரிந்திருக்கின்ருர். குறிப்பாக அவர்கள் 1956ஆம் ஆண்டில் திரு. கே. ஆர். சுப்பையர் அவர்கள் வீட்டில் சுமார் இரண்டு மாதங்கள் தங்கி இருந்தபொழுது சாமிகளின் பிரபாவங்களைத் தெரிந்து கொண்ட திருச்சி மக்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் விரிந்துகொண்டே சென்றது. சாமிகளைத் தன் இல்லத்திற்கு அழைத்துவந்த சுப்பையர் அவர்களுக்குச் சாமிகளைப் பார்ப்பதற்கு முன் இரவில் தூக்கம் வருவதில்லை. தம் மனே இடைஞ்சலை நிவர்த்திச் செய்யக்கூடிய மகானைத் தேடிக்கொண்டிருந்த போதுதான் சாமிகளின் அருள்கூட்டு இக்குடும்பத்தினருக்கு ஏற்பட்டது. சாமிகளைக் கண்டு அவர் அனுக்கிரகத்தைப் பெற்றுக் கொண்டதிலிருந்து சுப்பையர் அவர்களை இரவில் தூங்கவிடாதபடி செய்த கோளாறு உடனடியாக மறைந்து விட்டது. சுப்பையர் அவர்களுடைய சகோதரியை நான்கு மாதங்களாகப் பீடித்திருந்த வாய்வுக் கோளாறும் சாமிகள் பஞ்சாக்ஷரத்தால் மூன்றே நாட்களில் மறைந்தது. சாமிகளைப் பார்க்கும் வரை நான்கு மாதங்களாக நடக்க முடியாதிருந்த அம்மையார், சாமிகளின் அருள்பெற்ற மறுதினமே ஒருவர் உதவியின்றி நிற்க ஆரம்பித்தார். மூன்ரும் நாள் தானே நடந்து வந்து சாமிகளை மூன்றுமுறை பிரதக்ஷிணம் செய்த காட்சியையும் அவர்களால் மறக்க முடியாது. 18—1—56இல் திருச்சி பெரிய சௌராஷ்டிரத் தெருவில் எழுந்தருளி இருக்கிற ஸ்ரீ செந்தாமரைக் கண்ணன் சந்நிதியின் அஷ்டபந்தன மகோற்சவம் மகா சம்ரோக்ஷணம் நடந்தபோது சாமிகள் இதில் பெரும்பங்கு எடுத்துக் கொண்டார். அபிஷேகத்திற்காகக் காசி கங்காதீர்த்தமும் வரவழைத்துக் கொடுத்தனர். கங்கைநீரைப் பிரதானக் கும்பகலசத்

தில் கலக்கப்படும் சமயம் இரண்டு இரண்டணு நாணயம் இந்தக் கலசத்தில் இருக்கக்கண்ட சாஸ்திரிகள் அவைகளை எடுக்க, இரண்டு நாணயங்களும் கற்கண்டுத் துண்டுகளாக மாறியதைக் கண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டனர். உறையூர் சீடர் திரு. T. காளி முத்துப்பிள்ளை வேண்டுகோளுக்கிணங்கி அவர் வீட்டுக்குத் தம் முடைய திருவடிகளில் பூசப்பட்ட சந்தனுதிகளோடு எழுந்தருளித் தன் அருள் திருபாத கமலங்களை வஸ்திரத்தில் பதியச் செய்து பூஜாவிக்கிரகமாக அவருக்கு அருளினர். அத்திருவடிகளில் வலது திருவடியில் சக்கரமும் இடது திருவடியில் சங்கும் பதிந்துள்ளது. ஒருநாள் திரு. தெ. சோ. சுப்பிரமணியம் என்பவர் சாமிகள் திருமார்பில் மின்னல் ஒளிபோல் ஒரு ஜோதியைக்கண்டு மெய் மறந்தார். இப்படி அருட்செயல்கள் எவ்வளவோ செய்துகாட்டி மக்களின் மனக்கவலையையும் உடற்பிணியையும் போக்கவல்ல மனிதத் தெய்வமாக விளங்கும் சாமிகளைப் போற்ருத மக்களும் உண்டோ?

திருச்சியில் மலைக்கோட்டைக் கோயிலில் அமர்ந்திருக்கும் சிவ பெருமான் ஓர் அருமையான திருவிளையாடல் புரிந்து 'தாயுமானர், என்ற திருப்பெயரைச் சூடிஉள்ளார். தன்னையே நம்பியிருந்த செட்டிப்பெண் ஒருத்திக்கு தக்கசமயத்தில் காவேரிப் பெருக்கால் அவள் சொந்தத் தாய் பிரசவம் பார்க்கவர இயலாமல் தவிக்கும் போது அவளுடைய சொந்தத் தாய்போன்று தோன்றி அவள் நலமுடன் பிரசவிக்க அருள்உதவி புரிந்தான் ஆண்டவன். காவிரி வெள்ளப்பெருக்கு ஓய, சொந்தத் தாய் தன் பெண்வீட்டுக்குவரும் போது சொந்தத் தாயைப்போன்றே வேருெருதாய் இருக்கும் அற் புதத்தைக்கண்ட பக்தியுள்ள மகளுக்குச் சிவபெருமான் ரிடபாரூப ராய்க் காட்சியளித்துத் தான் அவளுக்குத் 'தாயுமானர்'என்பதை விளக்கினர். இப்படித்திருக்காட்சி அற்புதம் ஆடிய திருச்சி மாவட்டத் தில் 1966ஆம் வருடத்திலும் சாமிகள் ஒரு திருக்காட்சி அற்புதத்தை ஆடி அருளினர். திருச்சி லால்குடி தாலுகாவில் குமுளூர் என்ற கிராமத்தில் சாமிகளுடைய பக்தர் திரு. T. N. கணேசம் பிள்ளை சாமிகளுக்கு வரவேற்பளித்தார். சாமிகள் குமுளூருக்கு வந்தவுடன் அந்த ஊருக்கே சீரும் சிறப்பும் கொடுத்தருளும் வடிவேலவன் சந்நிதிக்கே நேராக அழைத்துச் செல்ல ஏற்பாடாகி இருந்தது. சிறுகுன்றின் மீதிருக்கும் கோயிலைச்சுற்றி நின்று கொண்டிருக்கும் மக்கள் சாமிகளின் வருகையை ஆவலோடு எதிர்நோக்கியிருந் தனர். சாமிகளை மேள வாத்தியந்தோடு குன்றின்மேல் அழைத் துச் செல்லும்போது மக்களின் உள்ளமெல்லாம் சாமிகளின் எளிமையையும் அருளையும் கண்டு வியந்து நின்றன. 'காட்சிக்கு எளியன்' என்பதை நேரில் கண்டு அனுபவித்த மக்கள் 'சித்

தாடுவதில் நிகரிலன்' எனும் உண்மையையும் அறிய ஆவல் கொண்டிருந்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. சாமிகளும் இந்த மக்களுக்குத் தெய்வ உணர்வு ஊட்டவல்ல சித்து ஒன்று ஆடிக் காண்பிக்கத் திருவுளம் கொண்டனர். குன்றின்மேல் இருக்கும் வடிவேலனின் திருவுருவம் சாமிகளின் மனதை முற்றிலும் கவர்ந்தது. இதந் முருகனை வைத்துக் கொண்டே அற்புதம் ஆடவும் திருச்சித்தம் கொண்டனர். கோவிலில் குடிகொண்டுள்ள திருமுருகனையே காண்பிக்கப் போவதாகச் சாமிகள் திருவாய்மலர்ந்தருளினர். காண்பிக்கப்போவது அனுதினமும் அம் முருகப்பெருமானுக்குப் பணிவிடை செய்துவரும் பூசாரிக்குமட்டுமே என்பதையும் கூறிவிட்டார், ஆயிரத்துக்குமேல் கூடியுள்ள கூட்டத்தில் ஒரு சந்தடியுமில்லை, சப்தமுமில்லை. எல்லோரும் சாமிகளையும் அவர் அருகில் நின்று கொண்டிருக்கும் பூசாரியையுமே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தனர். தெய்வீக அருளே பூரணமாகப் பொலிவுற்றிருக்கும் திருமுகம் கொண்ட சாமிகள் 'முருகா' என்று அழைக்க, அருகில் நின்ற பூசாரி காணுததைக் கண்டு சொக்கி வீழ்வது போன்று மயங்கியவர் நாலடிதூரத்திற்கப்பால் தூக்கி எறியப்பட்டார். மயக்கம் தெளிந்து புத்தி நிதானத்திற்கு வந்தவுடன் அவர் கண்ட — அவர் கூறிய முருகனின் இனியகாட்சியை என்னென்றியம்புவது! கோவிலிலிருந்து பளிச்சென்று ஓர் உருவம் ஓடி வந்தது! எல்லாம் மின்னல் வேகத்தில்தான்! காவியுடையும் முடிமேல் முத்தாரமும் கொண்ட ஜோதிவடிவினன் இளங்குமரன் ஒரு கணத்தில் ஓடிமறைந்த விந்தையை எப்படி வார்த்தைகளால் வருணிக்க இயலும்! அன்று ஈசனைத் தாயுமானவடிவில் கண்டு அனுபவித்தாள் செட்டிமகள்: இன்று குமரனை அவன் கோல வடிவிலேயே கண்டு அனுபவித்தார் கோயில் பூசாரி! என்னே சாமிகளின் திருவிளையாடல்!

**தஞ்சையில் காயெல்லாம் கனிவிக்கும் கருணை அமுது.**

பன்றிமா மலையில் தோன்றி
  பரனருள் வித்தை ஊன்றி

குன்றிலே ஏற்றி வைத்த
  கோலமா விளக்குப் போல

என்றைக்கும் நாட்டில் பக்தி
  இறையருள் பொங்க வைக்கும்

பன்றிமா மலை வாழ் சுவாமி
  பதம் துணை பாடு வோமே

(திரு. வழித்துணை ராமன்)

9-6-67இல் தஞ்சை நகரில் சாமிகளுக்கு ஓர் வரவேற்புக்கொடுத்துச் சாமிகளை மக்கள் கௌரவித்தார்கள். திக்கெட்டும் தெய்வமணம் பரப்பும் தவத்திரு சாமிகளைச் சோழநாட்டின் தலைநகரமாகிய தஞ்சை வரவேற்பதில் பெரு மகிழ்ச்சியடைந்தது. தஞ்சை மக்கள் சாமிகளின் தெய்வீக ஆற்றலைப் புகழ்ந்தார்கள். " விச்சதின்றியே விளைவு செய்குவாய் " என்னும் மாணிக்க வாசகர் வாக்கை மெய்ப்பிக்கும் ஞானி யென்றும், " காயெல்லாம் கனிவிக்கும் கருணை அமுதே " என்றும் அவர்கள் அளித்த வரவேற்புரையில் சாமிகளைப் புகழ்ந்தார்கள். இப்படி அவர்கள் புகழ்ந்தது, சாமிகளது 'கருத்தை கருத்தாடல்' என்ற வாக்கிற்கிணங்க இரு உண்மைகளை எடுத்துக் காட்டுகின்றது. அவரது அற்புதத் திறன் வெறும் காயைக் கூடக் கனியாக்க வல்லது, ஏன், காயில்லாமல் கூடக் கனியை வரவழைக்கக் கூடியது. இது ஓர் உண்மை. பக்குவமாகாத மனங்களையும் பக்குவப்படுத்துவதற்கு உதவுகின்றது சாமிகளது தண்ணளி என்பது மற்றோர் உண்மை. தன்னுடல், பொருள், சுகம் கருதாது, எதனையும் விரும்பாது, விளம்பரம் வேண்டாது வாழும் சாமிகள், அவர்கள் அன்புப் பிணிப்புக்கும் கட்டுண்டு வரவேற்புக் கூட்டத்தில் கலந்து அருளுரை யாற்ற இசைந்த பெருந்தகைமையைப் பாராட்டிச் சாமிகளை வருக வருக என உளங்களிந்த உவகையோடு தஞ்சை மக்கள் வரவேற்றார்கள்.

தஞ்சை மாவட்டத்தில் பக்தர்கள் சாமிகளைப் பல ஆலயங்களுக்கு அழைத்துச்சென்றனர். சென்ற விடமெல்லாம் தன் அருள் சக்திகளைக் காட்டிப் பக்தர்களை ஆட்கொண்டார் சாமிகள். அவைகளில் இடத்திற்குப் பொருத்தமான அற்புதம் ஆடிய ஓர் நிகழ்ச்சியை மட்டும் உரைப்பது பொருத்தமாகும். திருச் சிக்கல்தலம் தஞ்சை கோயில்களில் உள்ள சிறப்புக் கோயில்களில் ஒன்று. இங்கு உள்ள தீர்த்தத்தின் தெய்வீகத் தன்மையை உரைக்க ஒரு அற்புதக் கதையே உண்டு. காமதேனு ஒரு சமயம் புலாலை உண்ட பாபத்தால் புலி வடிவம் பெற்று இங்கு வாழ்ந்தது. இறைவன் திருவுள்ளப்படி காமதேனு புலி உருவில் திருச் சிக்கல்தலத்திலுள்ள பால்குளத்தில் முழுக அதன் புலி உரு மறுபடியும் பசு உருவானது. இப்பேர்ப்பட்ட தலத்தில் சாமிகளின் சீடர் ஓய்வு பெற்ற பொறி இயல் இஞ்ஜினீயர் திரு. T. D. பழனி அவர்கள் சாமிகளின் தலைமையில் தன் ஆண்டு நிறைவு விழாவை வைத்துக்கொண்டார். தனக்குக் கங்கைத் தீர்த்தம் கிடைக்கவில்லை என்பதை அவர் சாமிகளிடம் மனம் விட்டுக் கேட்டு விட்டார். தீர்த்தமே ஒரு புலியைப் பசுவாக்கிய பெருமை கொண்ட இந்தத் தலத்தில், தீர்த்தத்தைக் கொண்டு வந்தே ஓர் அரிய அற்புதம் ஆடினார் சாமிகள். சாமிகள் உடனே தன் கழுத்திலுள்ள மலர் மாலையில் சில மலர்களை எடுத்துத் திரு. பழனியின் கைகளில் கொடுக்க ஒரு சிறிய கங்கைச் செம்பு கிடைத்தது. அற்புதம் இதோடு நின்றுவிடவில்லை. அறுபதாம் ஆண்டு திருமண தம்பதிகள் இருவரும் பூரண

அளவு ஸ்நானம் செய்யும் வரையில் அந்த மிகச் சிறிய கங்கைத் தீர்த்தம் பொங்கிய வண்ணமாகவந்துகொண்டிருந்தது. சிக்கலில் கந்தர் சஷ்டிக்கு முதல் நாள் சக்தி வேலை சக்தியாயதாட்சி அம்மையிடமிருந்து வாங்கியவுடன் ஸ்ரீ சிங்கார வடிவேலவன் உற்சவ விக்கிரகத்தில் வியர்வை உண்டாகும் அற்புதத்தை வருடந்தோறும் காணும் சிக்கல் மக்களுக்கு சாமிகள் ஆடிக் காட்டிய அற்புதம் பேருவகையைத் தந்தது என்று சொல்லவும் வேண்டுமோ.

சாமிகள் இடத்திற்கு ஏற்றுற் போல் அற்புதம் ஆட வல்லவர். மனம் வைத்தால் வேண்டிய பக்தர்களுக்கு வேண்டிய பொருளை வேண்டிய சமயத்திலும் கனிந்த உள்ளத்தோடு வரவழைத்துக் கொடுப்பார். அப்படி வரவழைத்துக் கொடுப்பதில் ஒரு புதுமையையும் உண்டாக்குவர். தஞ்சை மாவட்டத்தில் தலச் சுற்றுவிழா நடத்தி வந்த பக்தர்கள் கூட்டம் திருக்காட்டுப்பள்ளியில் ஒரு தோட்டத்தில் சிறிது நேரம் தங்கியது. தோட்டத்து மணலில் சாமிகள் தண்டாயுதபாணி உரு ஒன்றைத் தன் விரலால் எழுதினுர். தான் உரு எழுதிய மணல் பாகத்தை தன் இரு கைகளிலும் அள்ளி 'பெற்றுக் கொள்ளுங்கள்' என்று தோட்டத்துக்கு உரியவரான திரு. T. D. பழனி அவர்கள் கரங்களில் கொட்டினுர். என்ன ஆச்சரியம்! மண் உலோகமாகி விட்டது. மணலில் கோடு போட்டு உருவாகி இருந்த தண்டாயுதபாணி மணல் உரு, ஒரு சிலை உருவாகிவிட்டது. அழகிய சிக்கல் சிங்கார வேலவனையும் அவர் திருத் தொண்டர் சாமிகளையும் அனுதினமும் மறவாத திரு. T. D. பழனி பிள்ளைக்கு அழகிய வேலவனுடைய திருத் தொண்டராகிய சாமிகளின் அழகிய கைகளிலிருந்தும் ஒரு அழகிய தண்டபாணி உரு கிடைத்தால் சும்மா இருப்பாரா பக்தர். இன்னும் அதைத் தினசரி பூஜை செய்து கொண்டு கொண்டாடி வருகின்ருர், தன் புனிதமான தெய்வ அறையில், நமது சாமிகளின் திருவுருவத்தின் பக்கத்தில் வைத்து.

சாமிகள் பல நகர்களுக்கு விஜயம் செய்து பல பக்தர்களுக்கு அருளுதவி புரிகின்ற பகுதி எழுத எழுத விரிந்துகொண்டே செல்லும் பான்மையது. கூடிய வரையில் கிடைத்துள்ள செய்திகளை வைத்துக்கொண்டே சாமிகளது நகர் சுற்றுலாப் பகுதி அமைத்துள்ளது. சாமிகள் சென்றிருக்கும் நகரங்கள் இன்னும் எவ்வளவோ உண்டு; சாமிகள் அருள்பாலித்திருக்கின்ற அன்பர்கள் இன்னும் எவ்வளவோ பேருண்டு; சாமிகள் ஆடிக்காட்டுகின்ற அற்புதத் திருவிளையாடல்கள் இன்னும் எவ்வளவோ உண்டு. சாமிகள் மைசூர் ஸ்டேட்டிலும், கேரளா ஸ்டேட்டிலும் வருகைதந்த செய்திகளோடு இந்தப் பகுதியை முடிப்போம்.

குருநானக் ஒரு மசூதியில் தொழுகைக்கு கவர்னர் டௌலத்கானோடு சென்றிருந்தார். எல்லோரும் தொழுது கொண்டிருக்கும் போது குருநானக் திடீரென்று விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தார். காரணம் என்னவென்று கேட்க, "தொழுது கொண்டிருக்கும் முல்லா புதிதாகப் பிறந்துள்ள குட்டி, அருகிலுள்ள கிணற்றுக்கு தவறிச்சென்று விழுந்து விடுமோ என்று மனங்குழம்பி அதையே நினைத்துக் கொண்டிருக்கின்றார்" என்று குருநானக் கூறினார். அதே நேரத்தில் காபூலில் குதிரை வாங்க வேண்டியதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார் டௌலத்கான். உடனே அவர்கள் குருநானக்கின் உளமறியும் ஆற்றலை வியந்து அவர் திருவருளைப் போற்றினர். பெரிய மாகான்களாலா மற்றவர் மனத்தில் குடி கொண்டிருக்கும் எண்ணங்களை அறிந்து கொள்ளமுடியாது? பெங்களூரில் சாமிகள் திரு. T. S. இராதாகிருஷ்ணன் செட்டியார் வீட்டில் தங்கி இருந்தார். சாமிகளைக் காண எண்ணிறந்தவர் வந்தனர். தம் குறைகளைச் சொல்லிச் சாமிகளின் அருளுதவிச் பெற்றனர். பல வியாதித் தொந்தரவுகளால் மூன்று வருடங்களாக இல்லாத நல்ல தூக்கத்தைத் தூங்கினதாக 'ரத்ன மகால்' திரு. P. V. ராமன் கூறி சாமிகள் அருளைப் போற்றுகின்றார். அநேகம் பேருக்கு அநேக வியாதிகள் நீங்கியதையும் தீவினைகளைச் சாமிகள் நீக்கியதையும் திரு. T. S. ராதாகிருஷ்ண செட்டியார் அவர்களே உரைக்கின்றார். அங்கு பக்தர்கள் கூடியிருந்த ஒருநாள் திரு. K. நாகராஜன் என்பவருக்கு மனத்தில் ஓர் ஆசை எழுந்தது. சாமிகளுக்கா தெரியாது அவர் உள்ளத்தில் எழுந்த ஆசை. ஆச்சரியம் விளைவிக்கும் சாமிகளது அற்புதத் திருவிளையாடலைக் காணவேண்டும் என்பதுதான் அவரது ஆசை. திரு. K. நாகராஜனையே அழைத்து ஒரு புஷ்பமாலையைக் கொண்டுவரும்படிச் செய்து, அதிலுள்ள புஷ்பங்கள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகப் பிரித்து எடுக்கச் சொன்னார் சாமிகள். பிரித்து வைத்த உதிரி மலர்களைச் சாமிகள் தம் திருக்கரங் கொண்டு எடுத்து அவர் கைகளில் வைத்தார். அது ஓர் அழகிய மாலையாக மாறவேண்டும் என்று அவரையே வேண்டும்படி சொன்னார். அவர் அப்படிச் சொன்ன அடுத்தகணம் ஓர் அழகிய அபூர்வ புஷ்பமாலை அவருடைய கைகளை நிறைத்தது. அது முன்னிருந்த புஷ்பமாலையைவிட மிகவும் நேர்த்தியாக விளங்கியது. என்னே சாமிகளின் மற்றவர் மனநிலை அறியும் ஆற்றலும் மற்றவர் எண்ணங்களைப் பூர்த்தி செய்யும் பெருங்கருணையும்!

1967இல் கன்னடப் பிரதேசத்தைச் சேர்ந்த சிர்சி நகரப் பிரமுகர் திரு. G. V. தாகப்பா அவர்கள் சாமிகளை ஸ்ரீகோகர்ணத்திற்கு அழைத்துச் சென்றார். அப்போது சாமிகள் பெங்களூரில் பிரபல ஜவுளி வியாபாரம் 'ருக்மணி ஹால்' அதிபர் குடும்பத் திருமண

வைபவங்களுக்குத் தலைமை வகித்து நடத்திக் கொடுத்து அவர் பங்களாவில் தங்கியிருந்தார். சாமிகளோடு ராசிபுரம் திரு சித்தப்பச் செட்டியார் தன் குடும்பத்தாரோடு ஸ்ரீகோகர்ணம் செல்ல பெங்களூரில் சேர்ந்து கொண்டனர். ஸ்ரீ பன்றிமலை சாமிகள் அவர்களுக்கே உரிய முறையில் பஞ்சபூதத் தத்துவ வண்ணங்களாகிய பொன்மை, வெண்மை, செம்மை, பசுமை, கறுமை ஆகிய ஐந்துவர்ணப் பட்டுத் துணியால் தயாரிக்கப்பட்டு, ஓம் என்ற ஓங்காரப் பிரணவ எழுத்தும், வேலாயுதமும் பொறிக்கப்பட்ட பஞ்சவர்ணத் தத்துவக் கொடிகள் சாமிகளுக்குக் குருகாணிக்கையாகச் செலுத்திய திரு. சித்தப்பச் செட்டியார் கார்களில் கொடி கட்டிக் கோகர்ணம் போய்வர அனுக்கிரகிக்க வேணுமென்று சாமிகளை வேண்டிக் கொண்டார். விநாயக ஆராதனையோடும், சாமிகள் ஆசியோடும் பெற்ற கொடிகளைத் தாங்கிய கார்கள் ஸ்ரீகோகர்ணத்திற்குப் புறப்பட்டு விட்டன. வழியில் அபூர்வ சிற்ப வேலைப்பாடமைந்த பேலூர் சிவன் கோயில் வனப்பைக் கண்டு மகிழ்வுற்றார் சாமிகள். மேற்குத் தொடர்ச்சிமலையைச் சேர்ந்த அடர்ந்த வனப்பிரதேசங்கள் தம்முடைய இயற்கை அழகுகொண்டு சாமிகள் உள்ளத்தைக் குளிரச் செய்தன. ஜாக் நீர்வீழ்ச்சியின் எழில்ததும்பும் காட்சி சாமிகளது மனத்தை முற்றிலும் கவர்ந்தது. சிர்சியில் சாமிகளைக் கண்டு அவர் அருள்பெற நூற்றுக்கணக்கான மக்கள் திரண்டிருந்தனர். சிர்சியில் உள்ள ஆலயங்களுக்கும் சாமிகளை வரவேற்றுச் சென்றனர். தெய்வ சன்னதிகளுக்குகந்த விபூதியையும், குங்குமத்தையும் அட்சதையையும் சாமிகள் அவ்வப்போது வரவழைத்து மக்களுக்கு மனமுவந்து வழங்கினர்.

29—1—67இல் சாமிகளும், பக்தர்களும் ஸ்ரீகோகர்ணம் வந்து சேர்ந்தனர். இங்குக் கோயில்கொண்டு விளங்குவது ஆத்ம லிங்கமே. நவசக்திகளையும் கைவல்யப்படுத்திக் கொண்ட மன்னாதி மன்னனாகிய ஸ்ரீ இராவணேஸ்வரனால் பரமசிவன் அருள் கொண்டுவந்த ஆத்ம லிங்கமே இதுவென்பர். ஸ்ரீ மாகாபலீஸ்வர சாமிக்கு மூன்று நாட்களும் அபிஷேகமும், அர்ச்சனையும், ஆராதனையும் சாமிகளே தம் கைப்படச் செய்து எல்லோரையும் மகிழ்வித்தனர். இந்தக் கோவிலும், லிங்கமும் எங்கும் காணாத முறையில் அமைந்திருப்பதைக் கண்டு பக்தர்கள் பரவசம் கொண்டனர். உற்சாகம் பெருகிய சாமிகளும் விபூதி, குங்குமம், அட்சதை, வில்வம் முதலிய அருள்பிரசாதங்களைப் பலமுறை வரவழைத்துப் பக்தர்களுக்கு வழங்கினர். மண்டபத்தில் அமர்ந்திருக்கும் தம் பக்தர்களுக்கு ஓங்காரப் பிரணவப் பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்து உருவேற்றும் முறைகளைப் பாடம் சொல்லிக் கொடுத்து அருள் புரிந்தார் சாமிகள். சில ஆண்டுகளுக்குமுன், 3—2—62 பிலவ வருஷம் தை மாதம் 21-ஆந் தேதி மாலை முதல் தை மாதம் 23-ஆந் தேதி மாலைவரையில் ராகு

கிரகத்தைத் தவிர மற்ற கிரகங்களும் மகர ராசியில் ஒன்று சேரு வதின் விபரீத விளைவுகளைப் பற்றிப் பல சோதிட நிபுணர்கள் அபிப்பிராயங்களைத் தெரியப்படுத்தி இருந்தனர். அதிலும் தை அமாவாசையன்று பூர்ண சூரிய கிரகணத்தில் அஷ்டக்கிரகக் கூட்டுச் சேர்க்கை நிகழ்வது லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் மிக மிக அபூர்வமாக ஏற்படும் என்றும் சொல்வர். அதுசமயம் சாமிகள் திருவுளப்படி அஷ்டக்கிரகச் சேர்க்கைத் தோஷ நிவர்த்திக்காக, ராசிபுரத்தில் ஸ்ரீ தத்துவத் தெய்வத்தின் முன்னிலையில் மிகச்சிறந்த முறையில் சர்வசக்திச் சக்கரம் ஒன்று ஸ்தாபிதம் செய்து 9 நாட்களில் 1008 பஞ்சாட்சர அர்ச்சனைகள், அறுகம்புல், வில்வம், புஷ்பம், அட்சதை, விபூதி, குங்குமம், மஞ்சள் தூள், சந்தனப்பொடி, 1008 செப்புக்காசுகள் இவைகளைக்கொண்டு செய்து முடிக்கப்பட்டன. இந்த 1008 செப்புக்காசுகளும் உண்டி யலில் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டன. இந்த உண்டியலைச் சாமி கள் தம்மோடு எடுத்துவந்து பல பூஜைகளில் வைத்து உரு வேற்றியதோடு பழம்பெரும் புண்ணிய க்ஷேத்திரமான ஸ்ரீ கோகர் ணத்தில் 3 நாட்களில் 5 பூஜைகளில் இந்த 1008 செப்புக்காசு களைக் கொண்டு 1008 பஞ்சாட்சர அர்ச்சனைகளைச் சாமிகள் செய்து முடித்தார்.

மிருத்யுஞ்சயர் என்பவர் ஆண்டவனின் பூரண அருள்பெற்ற சீலர். அவரிடம் ஒரு வீரசைவர் சீடனுனர். இதைக்கண்டு வெகுண்ட மற்ற வீரசைவர்கள் சீடரைத் தம் ஜாதியிலிருந்து ஒதுக்கி வைத்துவிட்டனர்; ஒருநாள் அந்நாட்டரசன் சிவனடியார் யாவருக்கும் விருந்தளிக்க அழைத்து எல்லோரையும் உட்கார வைத்து உணவு பரிமாறி முடிக்க, லிங்கதாரிகள் அனைவரும் நிவே தனம் செய்யும் பொருட்டுத் தங்கள் கழுத்தில் அணிந்துள்ள லிங்கப்பெட்டிகளைத் திறக்க அவைகளில் இருந்த சிவலிங்கங்கள் மறைந்து விட்டதைக் கண்டனர். இது மிருத்யுஞ்சருக்குச் செய்த அபசாரத்தால் விளைந்தது என்பதை அறிந்த அரசனும் சிவனடி யார்களை மிருத்யுஞ்சயர் இல்லத்திற்கே அனுப்பி வைத்தார். தம் தவறை உணர்ந்துகொண்ட வீரசைவர்களின் லிங்கங்கள் தாமே வந்துசேரும் என்று சொல்லித் தம் பூஜை அறைக்கு அழைத்துச் சென்றார் பெரியவர். அங்கு மலர்க்குவியலின் மத்தியில் அவ்வளவு சிவலிங்கங்களும் இருந்தன. அதில் யாருடையது எது என்று அறியாது மனம் தடுமாறும் வீரசைவர்களது நிலையை உணர்ந்த பெரியவர் சிவபெருமானைத் துதித்திட அவரவர் பெட்டிக்குரிய சிவலிங்கங்கள் தாமாகவே அவரவர் பெட்டிக்குள் வந்து அமைந் தன. இந்தப் பூர்வீகக் கதையில் சிவலிங்கங்கள் மறைந்து திரும்பி அடையப்பெற்றத் தன்மையைக் கண்டோம். ஸ்ரீ கோகர்ணத்தில் சாமிகள் அருளால் ஒரு ஸ்படிகச் சிவலிங்கமே ஆகாயத்திலிருந்து

வந்த அதிசயத்தை என்னென்பது! சிர்சி திரு. G. V. தாகப்பா அவர்களுக்கு மனத்தில் ஒரு விருப்பமேற்பட்டது. தம் குடும்ப பூசைக்காக ஒரு சிவலிங்கம் தருவித்துக் கொடுக்கவேண்டுமென்று சாமிகளைப் பல முறை வேண்டிக்கொண்டனர். அன்பு கனிந்த சாமிகளும் சிறிய ஸ்படிக லிங்கம் ஒன்றை விபூதிப் பிரசாதத்துடன் ஆகாயத்திலிருந்து அவர் கைகளில் விழும்படியாக அருள் செய்தார். ஆண்டவனுடைய அருளைச் சிவவடிவில் சாமிகள் அருட் பிரசாதமாகப் பெற்றுக்கொண்ட தாகப்பா அவர்களின் மட்டற்ற மகிழ்ச்சியை எழுத்தில் இயம்பமுடியுமோ?

ஒரு பிள்ளையார் கோயில் கட்ட விரும்பிய பக்தர் ஒருவருக்கும் சாமிகள் உளமுவந்து ஒரு சிறிய அபூர்வ ஸ்படிக விநாயகரை வரவழைத்துக் கொடுத்ததும் படித்து இன்புற வேண்டியது. திரு. K. K. வர்மா, B. A., B. L., ஒரு தொழிலதிபர். சாமிகளுடைய இனிய பக்தர். மதுரையில் உள்ள அவரது இல்லத்திற்குச் சாமிகளை அடிக்கடி வரவழைத்து உளம் மகிழும் இனிய பண்பினர். அவரது எழில்மிகு இல்லத்தில் எழில்மிகு கலைப்பொருள் பல உண்டு. ஓவிய மன்னன் ரவிவர்மாவின் படங்களும், கலை அழகு கமழும் சிலைகளும் பல உண்டு. இவைகளைக் கண்டு உளமகிழ்வுறும் சாமிகள் தானும் இந்தச் சீடருக்கு அபூர்வப் பொருள் ஒன்று கொடுக்கத் திருவுளம் கொண்டார். ஒருநாள் அவருடைய ஐஸ் பெட்டியைத் (Frigidaire) திறந்து அதிலிருந்த ஒரு தக்காளிப் பழத்தை எடுத்தார். அதில் ஒரு பக்கம் அதிகமாகப் பழுத்திருந்த இடத்தில் தோலும் பிரிந்திருந்தது; அதை வர்மா அவர்களிடம் கொடுக்க அது ஒரு பிளாஸ்டிக் (Plastic) தக்காளியாக மாறிவிட்டது. இயற்கைத் தக்காளி ஒரு செயற்கைத் தக்காளியாக மாறிவிட்டது. கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த பக்தர் திரு. கிருஷ்ண மூர்த்திக்கு ஆச்சரியத்தை அடக்கமுடியவில்லை, அதைத் தொட்டுத் தடவிப்பார்த்தார். ஐஸ்பெட்டியிலிருந்து எடுத்த தக்காளியே மாறிவிட்டது என்பதை அறிவிப்பதுபோல் அதன்மேல் 'ஜில்லிப்பு' அப்படியே இருந்தது. பிரிந்திருந்த தோலும் அப்படியே இருந்தது.

மற்றொரு சமயம் இராமருடைய அருளையே வரவழைத்துக் கொடுத்த விந்தை நமது மனங்களைக் கவர்வதாகும்; திரு வர்மா அவர்களிடமிருந்து ஒரு எட்டணு நாணயத்தை வாங்கிக்கொண்ட சாமிகள் அதை அவரிடம் திருப்பிக் கொடுக்கும்போது 'ராம்டிங்' மொகராவாக மாறிவிட்டது. இராமசாமிக்கா இராம்டிங்கி நாணயத்தை வரவழைக்காமலிருக்க முடியும்? அன்று பத்ராஜலம் தாலுக்காவிற்குத் தாசில்தாராகப் பணியாற்றிய இராமர் தொண்டன் கோபன்னு, தான் வசூல்செய்த தொகை முழுவதையும் பத்ராஜலக் கோயில் திருப்பணியில் செலவழித்ததைக் கண்ட

தானிஷா அவரைக் கொடுந் தண்டனைகளுக்கு உள்ளாக்கினார். தாஸரது தீராத தொல்லைகளை நீக்க இராமர் வீரர் உருவில் இலக்குமணனோடு வந்து அவரது தீராத கடனை, ஆறு இலட்சம் வராகனை, 'ராம்டிங்' மொகராக்களாகத் தானிஷாவிடம் கட்டிப் பக்தனது தீராத தண்டனையை நிவர்த்தி செய்தார். இன்று தன் இனிய பக்தர் ஒருவரை மகிழ்வூட்டத் திருவருள் கிருபை கூட்டும் வகையில் சாமிகள் ஒரு எட்டணா நாணயத்தையே 'ராம்டிங்' மொகராவாக மாற்றி அருளுகின்றார்.

திரு. K. K. வர்மா அவர்கள் சாமிகளைக் கேரள நாட்டிலுள்ள தம் சொந்த ஊரான கிளிமானூருக்கு அழைத்துச் சென்றார். அங்கு ஒரு விநாயகர் கோயில் கட்டுவதற்குச் சாமிகளுடைய ஆசியையும் பேரன்பையும் கோரினார். அதற்கு வேண்டியன செய்து அருளிய சாமிகள் அவருக்கு ஓர் அற்புதத்தையும் காட்டி மகிழ் வித்தார். உற்சாகம் பொங்கும் சாமிகள் திரு. வர்மா அவர்கள் கைகளில் நறுமண விபூதியும் அதற்குள் ஒரு ஸ்படிக சுந்தர விநாயகரும் வரவழைத்துக் கொடுத்தார். அபூர்வமான அந்த ஸ்படிக சுந்தர விநாயகரும் அற்புதமானதொன்று!

இப்படி மக்கள் பிணி அகற்றும் வைத்திய நாதனாகவும் மக்கள் அல்லல் நீக்கும் திருமுருகனாகவும் பெருமகிழ்வோடு அற்புத விளை யாட்டுகள் புரிகின்ற திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள் உலகத் தில் வாய்த்துள்ள ஒரு பேரருள் ஊற்று! எடுக்க எடுக்க ஊறும் வற்றாத ஊற்று! மணக்க மணக்க நமக்குப் பேரின்பம் ஊட்டும் ஊற்று!

"காக முறவு கலந்துண்ணக்
கண்டீ ரகண்டாகார சிவ
போகமெனும் பேரின்ப வெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக உருவாய்க் கிடக்குதையோ
இன்புற்றிட நாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாரும் ஜெகத்தீரே" (தாயுமானர்)

சாமிகளை நம் பிறவியிலேயே அடைந்துள்ள நாம் மகாபாக்கிய சாலிகள். சாமிகளது சிவபோகப் பேரின்ப வெள்ளத்தைப் பருகிப் பயன்காண்பதல்லவா நாம் பெற்றுள்ள மனிதப்பிறவியின் பயன்! அவரே நமக்கு வாய்த்துள்ள அம்மையும் அப்பனும்! அவரே நமக்கு வாய்த்துள்ள இணையில்லாத அருள்மணி! அவரே நமக்கு வாய்த்திருக்கும் அன்பில் விளைந்த ஆரமுது!

" அம்மையே அப்பா ஒப்பிலாமணியே
அன்பினில் விளைந்த வாரமுதே
பொய்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபத மளித்த
செல்வமே சிவ பெருமானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே" (மாணிக்கவாசகர்)

இகத்திற்கும் பரத்திற்கும் ஆத்மீக இன்பத்திற்கும் உறுதுணையாக விளங்கும் பெருநிதி சாமிகளை அன்பெனும் பிடியுள் சிக்கெனப் பிடித்துக் கொண்டால் அவர் நம்மைவிட்டு நழுவிவிட முடியுமோ?

சாமிகளுடைய தெய்வீக முத்துநகையையும் முத்து மொழிகளையும் நா இனிக்க மனமினிக்கப் போற்றுவோம்.

" முத்துக் குலுங்க இளமுத்து நகை சிந்துகின்ற
முத்தான வள்ளி மனம் பறித்த மணவாளன்
முத்துக்குமரன் அருள் பெற்ற கலை முத்தே!
முத்தான மொழி உதிரும் மெஞ்ஞான சுவை முத்தே!
முத்துக்கு ஒளி அருளும் அருளாளன் பெருமையெலாம்
முத்தான சொற்களிலே மெத்தளிக்கும் மெய்குருவே!
முத்தான மாமதுரை பன்றிமலை பெற்றமுத்தே
முத்தமிழ் முத்தே மணிமுத்தே முத்தருளே!"

## 25. அன்பர்கள் இதயகீதம்.

"உள்ளத் துள்ளது கவிதை — இன்ப
உருவெடுப்பது கவிதை;
தெள்ளத் தெளிந்த தமிழில் — உண்மை
தெரிந்து ரைப்பது கவிதை."

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

சாமிகளின் தெய்வீகப் புன்னகையையும், அருள் கருணை வடிவினையும், பேராற்றல் பெருமைகளையும் நேரில் காணும் அன்பர்கள் பேரின்பப் பெருவானில் உச்சியில் பறக்க ஆரம்பித்து விடுவர். அந்தப் பரவச நிலையில் அவர்களது இதயங்களிலிருந்து ஆனந்த கீதம் பெருக ஆரம்பித்துவிடும். கவிஞர்களும், வித்வான்களும், கவிமாலை புனைய ஆரம்பித்துவிடுவர். வித்வான் பட்டம் பெறுத அன்பர்கள்கூடத் தம் இதய கீதத்தைச் சொற்களில் அமைத்துப் பாடத் தொடங்குவர். இந்த இதய கீதம் கீர்த்தனை வடிவிலும், காவடிச் சிந்து வடிவிலும், கும்மி வடிவிலும், பாக்கள் வடிவிலும் உருவாகி விடும். திருநகரங்கள் அளிக்கும் வரவேற்புரை இதழ்களிலும் இந்த இதயகீதம் பெருகும். அவற்றுள் சிலவற்றைப் படித்து மகிழ்வோம்.

குறள்

பன்றிமலை சாமிகளின் பாதமலர் சார்ந்தவரை
என்றைக்கும் சாரா திடர்.

  

### சிறப்புப் பாயிரம்

(மகாகவி திரு. நா. பிச்சுமணி)

ஆர் கலி சூழ்ந்த அவனித் தல மதில்
அறமெனப் படுவது அன்பின் ஆட்சி
அன்பின் மாட்டே ஆன்மகோடிகள்
சங்கிலித் தொடர்போல் செறிந்து நிற்றலால்,
அனந்தம் தொழிலின் அனவரதமும் உழல்

வாழ்விடை மக்கள் வதிய நேரிடினும்,
கரண மூன்றும் கணமும் பிறழாது
உண்மை வாய்மை மெய்மை என இவை
நிறை வுறு கருத்தின் நேர்மையின் இறங்கி,
நாளும் நேசம் நாடெலாம் பெருக்கி
ஒன்றிய மனத்து ஓர்ந்து பன்னலங்கள்,
உற்றார்க் கதிகமாய் ஊரெலாம் பரப்பி,
தெய்வத்தொண்டே திகழ் திரு சமூகத்
தொண்டெனக் கருது தரணியில் யார்க்கும்
தன்னலங் கருதாது தாழ்மையின் பண் பொடு
தகை பெரு பணிகள் தேர்ந்தே புரிந்து,
சிறியரே மதிக்கும் செல்வத்தின்பால்
சிந்தனை நாடொறும் சிறுகச் சிறுகச்
செய்கரு மப்பயன், செவ்விய சீரடிச்
செல்வன், ஈசன், செழுங் கருணைக்கே
அர்ப்பணம் செய்து, அன்பன், அழகன்,
ஆண்டவர்க் கடிமை, என்றே அவனியோர்
ஆர்ப்பரித் தெப்பவும் அகத்தெழு உவகையின்
செங்கதிர்ச் செல்வன் பொழுது செய்யாண்டும்
நேர்மையும், பண்பும் நிறை வுறு சாந்தமும்,
மகிழ்ச்சியும், மாண்பும், மங்காது தொடர,
வாழ்க்கை நடத்தலே வகை அறமாகும்

எனவே, (அத்தகைய)

அறு விதை ஊன்றி நலப்பயிர் விளைத்து
நலி வெலாம் போக்கும் நன்மை பெருக்கியே
நாடெலாம் சென்றே நெடுந் தொண்டாற்றும்
அடியார் வரிசையில் 'அ'கரம் போல,
முதன்மையாம் நிற்கும் மாண்புடை வள்ளல்,
பன்றிமலையார் பெருமை பகர்தல்
பக்கமாறாயிரம் பரப்பினும் அரிதே!
அண்ணல், அடிகள் அன்புருவாகி
ராமசாமி யெனும் ரம்யப் பெயரினர்
தன்னலங் கருதாத் தண்ணளி நிதியினர்
பருவ மாரியாய்ப் பன்னலம் பரப்பும்
பான்மை நவிலல் (இப்) பாக்கடங்காது

பின்னையோ?

பார்வுறு தொண்டின் பல்வகைச் சிறப்பும்
உள்ளுறையாகும் உயர்ந்தோர் வாழ்வின்
சரிதைக் குறிப்பிலும் சாரமாய் ஓதிய
பன்னூறாய பல்பெரு மக்கள்

வாய்மையின் கழறிய வழாத வகையின்
பாராட்டுரையிலும் காண்பீர் காண்பீர்
அத்தகை யடிகள் ஆண்டவன் உருவாய்
நம்மிடைத் தோன்றி நன்னிலைப் புகட்டி
பக்திச் சிறப்பு பண்பின் சிறப்பு
கல்விச் சிறப்பு கருத்தின் சிறப்பு
முயற்சிச் சிறப்பு மனத்தின் சிறப்பு
இவற்றிற் கணியாய் நிற்றலை போற்றி
அன்ன வரடிக்கே ஆட் செய்வோமே

சுபம்.

  

காப்பு

பன்றிமலை வாசனைப் பண்ணுல் துதித்திடவே
தந்தி முகன் அந்தமுள்ள தாளிரண்டும் காப்பாமே!

## பன்றிமலை தோன்றிய தலச்சிறப்பு

1. சீர் பெறும் நான் மாடக் கூடலிலே — எங்கள்
சிவனுர் திருவிளையாடலிலே
ஊரறியப் பன்றிக் குட்டிகளுக்குப் பால்
ஊட்டிய தெனவே ஒன்றிருக்கு.

2. கோலமிகும் வைகைத் தென்கரை உள்ள
குக்கிராமம் குருவிரிந்துரையில்
சீலமுடன் தேவ குருவும் தவம் செய்ய
க்ஷேத்திரக் கீர்த்தியைப் பெற்ற தலம்.

3. சுகலன் என்பான் அந்தக் கிராமத்திலே — சதி
சுகலையுடன் சுக போகத்திலே
அகங்கார முடனே வாழ்ந்து வந்தார் — ஆறு
முகன் கைகள் போல் பிள்ளைகள் பிறந்தார்.

4. செல்வத்தால் மிஞ்சிய கர்வத்திலே — அந்தச்
சீமான் பிள்ளைகள் உருவத்திலே
நல்ல வளர்ச்சி யடைந்தாலும் — மதி
நல்வழியில்லை எந்த நாளும்.

5. பன்னிருவரும் வளர்ந்து விட்டார் — அவர்
அன்னை தந்தையார் மறைந்துபட்டார்.
சின்னத்தன வேடர் கும்பலிலே — மக்கள்
சேர்ந்து மாட்டிக்கொண்டார் வம்பினிலே

6. தவம் செய்யும் தவகுரு மேலே — அந்தத்
தட்டுக் கெட்ட மைந்தர் கல்லாலே
அவமதித்திட அடித்திடவே — குரு
ஆத்திரம் கொண்டு சபித்திடவே

7. பன்றியரசன் குடும்பத்திலே — அந்தப்
பன்னிரு பேர்களும் சாபத்திலே
சென்று பிறந்ததன் பின்னாலே — அங்கு
தென்னன் வந்தான் வேட்டையின் மேலே

8. பட்டாளமாம் பன்றிச் சேனையுடன் — அந்தப்
பன்றிக்கரசன் தன் ராணியுடன்
மட்டில்லாக் கோபமே கொந்தளிக்கப் — பாண்டி
மன்னனுடன் சண்டை போட்டு இறக்க

9. தாய் தந்தையற்று அநாதைகளாய்ப் பன்றிச்
சேய்கள் கதறிற்றுப் பேதைகளாய்
தாயின் உருக் கொண்டு பால் கொடுத்தார் — சிவ
சங்கரன் முன் வந்து ஆதரித்தார்

10. பாண்டியன் கொன்றிட்ட பன்றிகளை — மண்ணும்
பாவிட ஆச்சுது பன்றிமலை
ஆண்டிடும் பன்றிமலை சுவாமி — அங்கு
தோன்றிடப் புண்யம் பெற்ற பூமி

  

**விருத்தம்.**

“ ஆறுமுகத்தான் திருவருளால்
அன்பர்க் குற்ற தீங்கெல்லாம்
நீறு கொடுத்தே நீக்கியவர்
நெஞ்சி னின்று நீங்காதான்
கூறும் பன்றிமலை வாழும்
கோமான் பாதம் குறுகியவர்
வேறு துணையும் வேண்டுவரோ
வேண்டார் வேண்டார் வேண்டாரே ”

  

## வாழ்த்துப்பா

(உடுமலைப் புலவர் திரு. சோமசுந்தரனார்)

காரோங்கும் மதுரைதவழ் பன்றிமலை
சுவாமிகளின் பெருமை தன்னைச்
சீரோங்க வுணர்ந்தவர்கள் தாமுணர்வர்
தாமுணர்ந்தும் தன்மை கண்டார்
பேரோங்க வாழ்வதனி லின்பமெனும்
நிறை கடலினமிழ்த முண்டார்
ஏரோங்கு மீசனருள் நற்கருணைக்
கினிதானார் வாழி! வாழி!!

  

## ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் பஞ்சரத்னமாலை வணங்கற்பா

(அய்யம்பாளையம் திரு. P. K. M. குன்னப்பன் செட்டியார்)

குன்றது வராக மென்ற
குன்றின்மேல் உதித்த வீரா!
குணத்தினால் குன்றாய் நின்றாய்
நாமத்தால் இராம னானாய்
தவத்தினால் யோகி யாகித்
தரணியில் பேறும் பெற்றாய்
முயற்சியால் முருகன் நாமம்
முழுவதும் ஓதி நின்றாய்
இன்னல்கள் உற்ற மாந்தர்
இன்னது செய்வ தென்று
அறிகிலார் பேதை யோரே
அவரையும் ஆதரித்தாய்
மந்திர சூத்திரத்தால்
மந்திர நீறைக் கொண்டும்
மயங்கிய மாந்தர் தம்மை
மதியையும் தெளிய வைத்தாய்
அன்பெனும் கவசம் பூண்டு
ஆழிபோல் நிறைந்து நின்று

சொல்லெனும் மதுவி னாலே
சொற்களைப் பொழிந்து வென்றாய்
ஏழைக்கோர் உற்ற நண்ப!
எங்ஙனம் போற்றுவேன் யான்
கருணையை உன்னி உள்ளம்
உருகியான் வணங்குகின்றேன்.

★ ★ ★

## தெய்வத்துள் தெய்வம்

(திரு. வழித்துணை ராமன்)

பால்மணம் வீசும் செந்தேன்
பழம்மணம் கொழிக்கும் குன்று
வேல்மணம் வீசும் வெற்றி
வேலனே அன்ன எங்கள்
பால் மனம் வைத்துக் கந்தன்
பதம் மனம் சலங்கை கொஞ்சும்
கால்தினம் ஏற்றி எம்மைக்
காத்திடும் எங்கள் சுவாமி!
பன்றிமா மலையில் தோன்றி
பரனருள் வித்தை ஊன்றி
குன்றிலே ஏற்றி வைத்த
கோலமா விளக்குப் போல
என்றைக்கும் நாட்டில் பக்தி
இறையருள் பொங்க வைக்கும்
பன்றிமாமலை வாழ் சுவாமி
பதம் துணை பாடுவோமே.
நாவினால் பேசா ஊமை
நயனங்கள் இழந்தோர் முன்னைப்
பாவத்தால் பிணிகள் கொண்டார்
பற்பலர் வாழ்வு உய்யத்
தேவையை நல்கும் செம்மல்
தெய்வத்துள் தெய்வம் மீது
காவிய மாலை சூடக்
கந்தனைப் பெறுவோம் தாமே!

## ஓங்கார பரம குரு வணக்கம்

வேதமுடன் ஆகமபு ராணமிதி
காசமுதல் வேறுபல கலைகள்யாவும்
வேண்டிப் படித்திடா திதயகுகை
வாழ்குகன் விருப்புடன ளிக்கவந்த
போதமிகு பன்றிமலை அடிகளே
நும்பெருமை புகல்வதெனின் கைவிளக்குப்
புவனம் அடங்கலும் ஒளிசெயும்
பகலவனைப் போந்துகாட்டுவ தொக்குமால்
நாதவெளி தாண்டிமறை முடிவுக்கு
மெட்டாத ஞானவடி வானமுருகன்
நற்கழல்கள் உள்ளத்தில் இறுகப்
பிணித்தவன் நல்வாழ்வு நுமது வாழ்வாய்
ஓதரிய சித்திபல செய்துலகம்
உய்விக்கும் ஓங்கார பரமகுருவே
உமதடியை இதயத் திருத்திடவும்
குறையெலாம் ஒழியவும் அருளுவீரே

## கவி மாலை

(புதுக்கம்பன் கவி. திரு. ரா. கா. பூமிபாலகதாஸ்)

வானமும் பூமியும் மலைகளும் கடல்களும்
மக்களும் போற்றும் சமுகம்
வாலை வடிவேலை நினை வேலை எது போதினும்
மறவாத ஞான சமுகம்
மஹா லக்ஷ்மி அருள் பெற்ற கோடீசர் வர்க்கம்
வணக்கம் செலுத்து சமுகம்
மலை அரசு புரிகின்ற சுவாமிகள் மஹாசித்தர்
வாக்கு லக்ஷ்மிப் பிரபுத்வம்
தானமும் தவமும் தயாளமும் சீலமும்
தங்கும் விசேஷ சமுகம்
தாரித்ர தோஷாந்தகார படலத்தைத்
தகர்க்கும் உதார சமுகம்
சகல சித்புருஷத்வ தண்டாயுதக் கடவுள்
தரிசனம் கொண்ட சமுகம்

தமிழ்க்கொடி இமாலயம் டெல்லி உத்ரப்ரதேசங்கள்
சஞ்சார சமுகம்
ஞானகுரு பன்றிமலை சுவாமிகள் மகத்துவ
நலந்திகழ் குபேர சமுகம்
நனவிலும் கனவிலும் மானசீகத்தியான
நம்பிக்கை வாய்ந்த புலவன்
நயபூமி பாலதாஸ் பஞ்சரத்னக்கவி நமஸ்கரித்
தெழுது நிருபம்
ராமானுநுஜம் தந்த சந்நிதானத் தபால்
நாட்டுக்கவி இரண்டு முக்யம்
தேனமுதவாசகம் சிந்தைக் கிறும்பூது செய்தி
ஏகலைவன் ஆகி
சேலம் ஸ்டுடியோ விஜயம் காலதாமத
நிலைமை சேர்ந்து கடன் வாதையாலே
திக்கு முக்காடும் வேளையில் இங்கு சுவாமிகள்
தேவரீர் உள்ள கேள்வி
தெரிந்து வந்தேன் தங்கள் திருவடி அடைக்கலம்
திருவருள் துலங்க இனிதே.

* * *

## பரமாத்ம தெரிசன பன்றிமலை சுவாமிகள் பாத பூஜித கவசம்.

**(புதுக்கம்பன் கவி. திரு. P. K. பூமிபாலதாஸ்)**

### கவிமணி.

இன்றைய உலகம் போற்றும்
இல்லற தரும ஞானி
எண்ணரும் காரணார்த்தம்
இயற்றிடும் யோக சித்தர்
ஒன்றிய கால மூன்றும்
உணர்ந்துரைக்கு மகாத்மா
ஒருவர் உண் டென்னில் அந்த
உத்தமர் வளஞ்சீர் ஓங்கும்
பன்றிமா மலையில் தோன்றும்
பரம் பொருள் ராமானந்தர்
பாரத தேசம் செய்த
பாக்கியக் குரு முகூர்த்தம்

வென்றிசேர் உடுமலைப்பேட்டை
வித்தியாசாகர் பங்களா
விஜயத்தில் கண்ட காட்சி
வியப்பினில் ஆழ்த்திற்றுமே.

## கீதமாலை.

இராகம் தோடி] [தாளம் ஆதி

சாமி நலந் தக்க வழி ஒன்று சாமி
தர்ம தேவதா சொரூபம்
தங்குமான ஜென்ம லாபம்.
தரிசிப்பவர் வறுமைப் பிணி
இருளற்றிட அருள் உத்தம (சாமி)
சம்பிரமத் தின்புறுசித்
தம்பெறுநற் பன்றிமலை (சாமி)
பூமிபுகழ் வித்யா சாகரர் மாளிகை
பூஜைக் கொலு பீடத் தூறு
மாசற்ற விலாசத்துமை (சாமி)
நாடி வருபவர் நெஞ்சம் கவர்ந்திடும்
ஞானப்ரகாச மெஞ்ஞானியே
கூடிய அன்பர்கள் கோரிக்கையை யாவும்
கொடுத்திடும் பேரபிமானியே
பாடிய செந்தமிழ்ப் பூமி பாலகவி
பக்திக் கவிமாலை சூடி
ரட்சித் திடவே கொண்டாடி (சாமி)

## நற்சாட்சிக் கவி.

பன்றி மலைக் குறவஞ்சிப் பாடல்களும்
பக்தர்கள் சொல் தோத்ரப்பாவும்
அன்றியும் சீர் பரவும் வித்யாசாகரர் நற்
சான்றுரையும் அன்பு தோய்ந்த
நன்றி மணம் கமழ் மலராய்ச் சூடிய
ராமானந்தர் நயனம் பூத்த
வென்றி அருள்ப் பரவசராய் விளங்குக
பேர் வையம் எல்லாம் விளம்ப வாழி

* * *

## மகா சித்புருஷர்

## ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் பாதபூஜித பஞ்சரத்னம்

(புதுக்கம்பன் திரு. கவி பூமி பாலகதாஸ்)

[பத்மராகம்]

அகண்ட வியாபகப் பொருளாய் அமர்ந்த ஸ்வாமி
அணிமாதி அஷ்டசித்தும் ஆடும் ஸ்வாமி
சுகந்த பரிமள கந்தம் துலங்கும் ஸ்வாமி
ஜோதிமயமாய் விளங்கித் தோன்றும் ஸ்வாமி
தகுந்த பல சித்துக்கள் தான் செய் ஸ்வாமி
தமிழ் வளர்த்த பாண்டிய நாட்டுதித்த ஸ்வாமி
பகர்ந்த மொழி தவறாது பலிக்குஞ் ஸ்வாமி
பன்றிமலைச் சாமிகள் சீர் பாதம் போற்றி

[மரகதம்]

குழந்தை முருகப் பெருமான் திருக்கால்த்தாரை
குளிர்ந்த மஞ்சள் நீர் தோய்ந்த அடையாளந்தான்
விழைந்த மனத்தோர் காண விளங்கும் ஸ்வாமி
வேதாந்த சித்தாந்த மேலாஞ் ஸ்வாமி
குழைந்து சித்தம் இரக்கம் உறுங் குருவாஞ் ஸ்வாமி
குபேரனுக்கும் ஏழைக்குஞ் சமமாஞ் ஸ்வாமி
தழைந்த பொழில் வானடர்ந்த கோடைக்கானல்
சமீப பன்றிமலை ஸ்வாமி சரணம் போற்றி.

(கோமேதகம்)

ஊமைப் பெண்ணைப் பேசவைத்த ஸ்வாமி
உலகமெலாந் தன் உருவாய் உற்ற ஸ்வாமி
மேமிக்க வீடொன்றில் கட்டி வைக்க
வெளியில்வந்து காண எதிர்மேவுஞ் ஸ்வாமி
மாமிக்க திரிநேத்ரம் வாய்ந்த ஸ்வாமி
மகத்துவங்கள் எத்தனையோ வழங்குஞ் ஸ்வாமி
காமர்ப் பைம்பொழில் சூழ்ந்த கன்னிவாடி
காண் பன்றிமலை ஸ்வாமி கால்கள் போற்றி

(வைரம்)

இறந்து நெடுநாள் பல சென்றோர் தம்மை
எதிர் அழைத்துப் பேசவைக்கும் அபூர்வ சித்தர்

சிறந்த பல காரியங்கள் செய்த சித்தர்
செல்வாக்கு நல்வாக்குப் படைத்த சித்தர்
நிறைந்த இளநீர் மட்டை எடுக்கா துள்ளே
நிமிர்ந்த மந்தரத் தகடெடுத்த நீதிச் சித்தர்
பறந்துவந்து விபூதித்தூள் கிடைக்கச் செய்யும்
பன்றிமலைச் சித்தர் பாதம் போற்றி

(வைடூரியம்)

சிறுவயதில் வாலைநகர் படித்தபோது
திரு வரதமா ததிக்கண் சித்தர் தோன்றி
அறுமுகவன் வேல்கொண்டு நாவில் தீட்டி
அந்தரத்தில் மறைந்த குருமூர்த்தி சீஷன்
நெறி திகழும் இமயமலை உத்ரகாசி
நீண்ட பல யாத்திரைகள் செய்த ஸ்வாமி
பொறிபுலன்கள் அடக்கியும் இல்லற மார்க்கத்தில்
புகழ் பன்றிமலை ஸ்வாமி போற்றி போற்றி

* * *

"அராகத்தன் வலிமையினல் நிலைமறந்தான் ;
அவனிதனைப் பாயாக்கி அலைக்குங்காலை,
வராகத்தின் உருவன்றே மால்எடுத்தான்?
அரியேற்றின் வலிய தன்றே.
வராகம்? இது விளக்கிடுமா இல்லறத்து வாழ்ந்து சித்தி
வழங் கிடு மா (பரஞானி) வரதன் எம்மான்,
விராகத்தன் பன்றிமலைச் சாமிகளின்
விரை கமழ் தாள் விழை வோம் யாமே!"
"பன்றிமலைச் சாமிபதம் சூடி நின்றார்
பவம் தருமாமயல் ஓழிவர் பண் பால் மீறி,
நின்றிடுவர் எண்டிசையும் புகழ் நிறைத்து
நித்தலுமே அன்பாற்றல் நெறி புரப்பார்,
குன்றுதவில் தனம் பெறுவார் கும்பிடுவார்
குறை நீக்கும் கோளும் ஏற்பார்,
பன்றிமலைப்பரன் பதமும் பழனிமுருகன் பதமும்
பணி வோம் யாமே!"
"மூர்த்திதலம் தீர்த்தம் முறை ஆடுவார்க் காம்
முதிர்பயனும் இன்று நமை முன்வந்தாளும்,
தீர்த்தகுரு பன்றிமலைச் சாமிகளின்
திருவடிகள் சிரத்திற் கொண்டோம்,

வார்த்திகமும் பிணி ஒழிப்பார் வருபிறப்பும் மாற்றி
யென்றும் வாழ்வார் வாழ்த்த
நேர்த்தி யுடன் வாழ்ந்திடு வோம்! நீணிலத்தீர் வாரீர்
நன் நெஞ்சி னூடே!

(நல்லடியார்க்கடியான் திரு. நா. நடராஜன்)

* * *

உ

ஸ்ரீ முருகன் துணை

## ஸ்ரீ பன்றிமலை சுவாமிகள்

### ஸ்தோத்திரம்

" பன்றிமலைச் சாமிநும் பாதார விந்தமலர்
என்றுதான் சேவிப்ப தென்றிருந்தோம் — இன்றே
கிடைத்தப் பேறும் கிருபையும் அன்பிங்
கடுத்தடைய வந்தவெமை யாள் "

குன்றுதோ றுடும் குகனருளால் உட்பகைகள்
வென்று மிளிரும் விறலுடையோய் — கன்றினைக்
காத்திடும் தாய்ப்பசுபோல் காத்திடுவீர் நும்பெருமை
ஏத்திடும் மாறறியோம் இங்கு "

சந்தேகங் கேட்பவர்க்குச் சஞ்சலமும் நீங்கிடவே
தந்தீர் பதிலுரைகள் தண்ணளியால் — சிந்தா
குலந்தீரச் செய்யும் குருவாகி வந்தீர்
நிலந்தனில் இற்றைநாள் நீர்

ஐயா திருப்பழனி ஆண்டவர் தம்மருளால்
பொய்யா வுரைகள் புகலுவிர் — உய்யவே
கேட்டோர் பயனடைந்தோர் கேண்மையுரை தான்வரைய
ஏட்டிலுங் காணு திடம்

செந்தில் முருகன் திருவுருவாய் வந்திங்கு
சிந்தையி லுள்ளவெலாஞ் செப்புவீர் — முந்தைநாள்
செய்த வினைதீரச் செய்வீர் பரிகாரம்
உய்திற மீங்கருள்வீர் ஓர்ந்து

தென்பரங் குன்றமரும் தெய்வநேர் வந்ததென
அன்புடன் அஞ்சலென ஆட்கொண்டு -- துன்பம்
துடைக்க வழிகாட்டும் தூயநும்போல் வார்யார்
கிடைப்பார் அவனியிலே

திரு. தொ. ரா. ப.

* * *

கீடம்ப மாலைதனை களிப்புடன் பூண்டும்
கானைத் தேடி மங்கையை அடைந்தும்
பற்பல பெயர்தனைப் பாங்குடன் பெற்றும்,
பழனி மலையில் பண்புடன் திகழும்.
இவைறனை இறைஞ்சலே இன்பமென் றிருக்கும்
பன்றி மலைஎனும் பதிவாழ் அடிகளே!
நின்னடி பணிந்தோம் நன்னெறி உரைக்க;
மக்கள் போற்றும் மகிமை உடையோய்
உந்தன் அருளால் உயர்வுற் ரேம்யாம்;
அன்பும் அறனும் பண்பும் உடையோய்!
வருக! வருக!! வருக!!! வருகவே!!!!

திருமதி. இராம விசாலாட்சி

* * *

## ஸ்ரீ பன்றிமலை சாமி

## பஞ்சமணி மாலை

(பேரையூர் பால பண்டித வித்வான் திரு. பா. பாப்பு இராமநாதன்)

நேரிசை வெண்பா.

ஞான குருநெறியை ஞாலமதிற் காட்டிடவே
தானந் தவறுத தன்னிலையால் – மோனநிலை
கண்டுணர்ந்து முத்திநிலை கண்டுணர்ந்து பன்றிமலை
கொண்டுணரும் வாழ்வைக் குறி.

அன்பு மறிவு மறிந்தவர்க ளிவ்வுலகிற்
றுன்பமது நீங்கிச் சுகம்பெறுவர் – பன்றிமலைச்
சாமி திருவுள்ளம் சார்ந்தவர்கள் எஞ்ஞான்றும்
பூமியிற் பெறுவர் புகழ்.

உண்மை மறுக்கும் உலுத்தர்வாழ் நாட்டினிலே
தண்மையா ஞானந் தழைத்தோங்க – உண்மையினைக்
காட்டியே மக்கள் கருத்தைத் தெளிவிக்கக்
கூட்டினன் மோன குரு.

குருமணியா ஞான குகமணியைக் கண்டு
திருமணியைப் பெற்ற திருச்செல்வன் – அருமணியா
ஞான அருட்கனியை ஞாலமதிற் பெற்றவர்கள்
மோன நிலைபெறுவார் முன்.

முன்னுரை வைத்த முதல்வனும் பன்றிமலை
நன்மணியை எல்லோரும் நாடுகவே – அன்னவர்கள்
எக்காலு மின்ப மினிதாக வேயெய்தி
யிக்காலம் வாழ்வ ரினி.

* * *

## ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் போற்றிசை அகவல்

திருமுருகன் அருள் முருகன் எனும் பெருங்
— கலியுக வரத கந்த தேவன்
பொலியுரு வாகிய பொன்னடிச் செல்வா!
— பன்றிமலையா! என்றும் இலங்கும்
வாய்மை பிறழா வாக்கமு தத்தின்
தனிப்பெருஞ் செல்வா தாரணி உய்யவும்
ஆர்தவ மோங்கவும் அறமது தழைக்கவும்
மறம் நலிந்திடவும் நல்மார்க்கம் நிலைக்கவும்
வந்தவோர் எம்பிரான், வரதன், கடம்பன்
செந்திலாண்டவன் சேவடிக் கணி செய்
செய்யோய்! செம்பணிச் செவ்விதாய்ச் சூழ்ந்தோய்
ஒருபழம் பெறவே ஓடிய பெம்மான்
பாலன், லோலன், பாகினன், காந்தன்
இந்தி விதிபர்க் கிணையிலாத் துணையாய்
மீறு சூரறுத்து மூவுல குய்த்தவன்,
கண்மல ரருளின் கண்ணகல் ஞாலம்
வாழச் செய்வோன், வம்பின் வெம்பகை
வேலாயுதத் தோன், கோல மஞ்ஞையன்,
காலனை யுதைத்த சூலன் மதலை,
அடியார்க் கெளியன், ஆபத மெரிப்போன்
சுப்பிரமணியனும், ஸுகஸ்வ ரூபனும்
அண்ணல், வள்ளல் அன்பன் உருவாய்
ஆர்த்திடுங் கோவே! அரிய பேரடிகாள்!
எம்மனோர்க் கெல்லாம் ஏற்ற நல்குருவே!
தன்னல மறுத்த சொன்னலாம் செய்நலம்
எண்ணலங் கொண்ட ஏந்தலீர்! ஏறே!
நன்மையும் செல்வமும் நாளும் நல்குவீர்!

தீமையும் பாவமும் திறலுடன் செகுப்பீர்!
புன்மையும் பிணியும் பறக்கவே யருளுவீர்!
பெரியீர் நும்திறல் பரவவும் வலனே!
எளியார்க் கெளியீர்! ஏந்துநல் துணையீர்!
பூந்தமிழ்த் தேவன், புண்ணிய போதன்,
கந்தன் குகனின் கண்ணிய அடிமிசை
ஏழைய ரெம்மையும் ஏற்றுவிப் பீரே.

* * *

## சற்குரு ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் துதிமணி மாலை

1. திருமுருகன் அருள்நிறை பெருமகனாய் வந்து
 திக்கெட்டும் தெய்வ மணமே
 திருவுடன் பொலிந்திட நன்னலங்களிலே
 திளைத்துமே வாழ்ந்து வருவோய்
 அருள்நிறை மெய்ஞ்ஞான வடிவோடு எம்மையும்
 ஆட்கொள்ள வந்த குருவே
 அடியார்க்கு எளியனாய் அன்புதவழ் இன்சொலால்
 அன்புபணி செய்து வருவோய்
 அற்புதம் மிகப்பல விருப்பமொடு அருளவே
 நற்கருணை நாளும் நல்கும்
 பொற்பரன் மனத்தினால் நினைத்துமே அடியர்தம்
 உளத்திலே நினைத்த ஒன்றைப்
 போற்றிட உரைத்துமே யாவரும் துதிக்க அருள்
 பன்றிமலை ஞான குருவே

2. தெய்வமணங் கமழ் திருவடியில்
 செழித்த சங்கு சக்கரமும் கண்டோம்
 தெய்வயானை புகழ் முருகனை அர்ச்சிக்கும்
 திருக்கரத்து அவையே கண்டோம்
 தெய்வத்திரு வுருவ சேவடியும் மேலான
 திருக்கரமும் யாங்கள் கண்டோம்
 தேவதேவன் அருளும் உபதேச மறையான
 சற்குணமும் யாங்கள் கண்டோம்
 தெய்வகுருவாய் வந்து உலகத்தை ரட்சிக்கும்
 சற்குருவை இன்று கண்டோம்
 தெய்வத்திருவருளைப் பாலிக்கும் மெய்யனே
 உன் பெருமை இன்று கண்டோம்

தெய்வமறையாவுமே தோத்திரம் கூறியே
வணங்கும் வடிவேலனை நீ
மெய்ம்மை நெறியாய் துதிபாடியே மேன்மையுறும்
பன்றிமலை ஞான குருவே

3. வள்ளுவர் விசிட்டரும் வாழ்ந்த நல்இல்லற
நல்லற தருமம் காக்கும்
வள்ளலே மெய்ஞ்ஞான அருள்ஞானி நின்பெருமை
பேசவும் எளிய தாமோ
வெள்ளையுளம் கொண்டுமே வள்ளிதெய்வானை தம்
வேலனைப் பணிந்து போற்றும்
வேலவா உனதன்பை வேண்டியே நின்றிடும்
அடியவர்களுள் அன்பனே
அருணகிரி போற்றிடும் அருட்புகழை ஏற்றியே
அன்பு கனிந்த முருகன்
அண்டர்கள் வியப்புற மண்டலத்தே உனது
மகிமையைக் காண விழைவார்க்கு
அருள் பொழியும் பன்றிமலை சாமியாய் வந்தெம்மை
ஆட்கொள்ள வந்த குருவே
அப்புவியில் இறைவனை நம்பியே வாழவருள்
பன்றிமலை ஞான குருவே.

4. கற்பனை கடந்தநற் கடவுளின் திருவுருவக்
காட்சியைக் கனியெனக் காட்டுவித்தும்
கண்ணின்றும் காண இயலாத கடவுளையே
ஜோதியெனக் காட்டு வித்தும்
அற்புதன் பொற்பதம் நற்பதம் வேண்டிட
வழிகாட்டும் நல்ல குருவாய்
அவனடியில் தொழ அவனிதனில் அவன் பெருமை
கண்ட மெய்ஞ்ஞான குருவாய்
சீலமிகு செல்வத் திருக்குமரன் சீர்பரவி
சித்துபல செய்யும் குருவே
ஞாலமிசை கண்கண்ட தெய்வஅருள் நின்றுமே
நல்லருள் புரியும் குருவே
ஓலமிடும் நான்மறைகள் ஒண்பொருளாய் நிற்கும்
ஓங்கார நற் பொருளையே
ஓதியே உயர்வருள் நிறைந்த மெய்ஞ்ஞான குரு
பன்றிமலை ஞான குருவே.

5. பிரணவப் பொருள் தன்னை தந்தைக் குரைத்துமே
குருவாக நின்ற குமரன்
திருவருளைக் கொண்டுமே உபதேச நன்மொழி
எங்கட் குரைத்த ஞானி
பந்த பாசங்களை வேரறுத்திடவும் மெய்ஞ்
ஞானத்தைக் கண்ட ஞானி
நிந்தையுறும் மக்கள் தம் பில்லி சூனியம் வைப்பை
நிவர்த்திக்க வந்த ஞானி
பன்றிக்குப் பால் வார்த்த பரமன் தன் திருவருளால்
வந்தவதரித்த ஞானி
பாதங்கள் தொழுதிடப் பாவங்கள் போக்கியே
சஞ்சலம் தீர்க்கும் ஞானி
பன்றிமலையின் பெருமை பாரோர் பகர்ந்திட
வள்ளி தெய்வயானை நேசன்
வழிவந்த சற்குருவாய் வந்துதித்த நற்
பன்றிமலை ஞான குருவே.

6 வஞ்சனைகள் வெடி பில்லி ஏவல்
சூனியம் வைப்பு மாரணம் பேதன முதல்
வல்வினைகள் செய்கின்ற வஞ்சரைக்
குத்தியே நெஞ்சைப் பிளந்தெரிந்து
மிஞ்சிய சதகோடி பூதப் பிசாசுகளை
வெட்டித் துணித் தெறிந்து
அஞ்சிடும் அடியவர்க்கு ஆறுதல்
அளித்திடும் ஆறுமுகனின்னருளினால்
பஞ்ச பூதங்களின் சேர்க்கையால்
வருகின்ற பாபத்தைப் போக்கும் ஞான
பரமனின் திருவருளை அளித்திடும்
மெய்யனே பன்றிமலை வாழுங் குருவே
தஞ்சமென வந்தவர்க்கு அருள் பொழிய
கந்த வேல் பஞ்சவடி தொழுது ஏத்தி
நெஞ்சங் குழைந்து தான் நெக் நெக்குருகிடும்
பன்றிமலை ஞான குருவே.

7. இல்லறப் பணிபூண்ட நல்லறத் துறவியே
உன்னுமம் போற்றி போற்றி
இல்வாழ்வு நல் வாழ்வாய்க் காணவே அருளிடும்
திருவுருவே போற்றி போற்றி

நல்வழியில் மக்களை நன்முறையில் செலுத்திடும்
நல்ல குருபரனே போற்றி
நல்வழி இது வென்றும் தீ திதென்றுரைத்துமே
நலங்கூறும் அருளே போற்றி
பொல்லாங்கைத் தீர்த்திடும் திருவடிவில் நானுன்றன்
சற்குணம் நாமம் போற்றி
கல்லாற்கும் கற்றவர்க்கும் ஆசியை அளித்துதவும்
திருக்கரத்தின் மேன்மை போற்றி
நல்லடியார் போற்றிடும் திருமறைகள் ஏத்திடும்
நல்ல குருவான வேலன்
நல்லருட் பேற்றினை உலகுக்கு அளித்துவரும்
பன்றிமலை சாமி போற்றி.

## ஸ்ரீ பொன்மலையாம் பன்றிமலை வாழ்க

(திருமதி. கிருஷ்ணம்மாள்)

காப்பு

கணபதி முதல் பொருள்
முயல்பவர் முடிப் பொருள்
தனிப்பொருள் தவப் பொருள்
முருகனின் மூத்தவர் பொருள்
தந்தெனை காக்க காக்க.

உண்மை காணல்

உள்ளது அதனைக் கண்டேன் கண்டேன்
உத்தமரே! செய்தி கேளும்
உயிரினும் இனியது உண்மையது
ஆருயிரே இனியும் கேளும்
பெற்றவர் நூற்ற நோன்பினுலோ
முன்னவர் செய்த தவத்தாலோ
தில்லை நடராஜனின் திருநாளில்
பெற்ற பேறு அதனினுலோ
உலகறிவு வந்து பற்று முன்
தங்கள் கரம் பற்றிய பாக்கியத்தாலோ
அன்பில் தோய்ந்து அம்பிகையுடன்
சாந்தி நாராயணனைப் பெற்ற புண்ணியத்தாலோ
தங்கள் தருமமதில் பங்கு கொண்டதினுலோ
இதனுலோ, வேறெதனுலோ,
தக்க தருணமதில் மிக்க அரிதாம்
தவகுருதாள் சரணடைந்தேன், ஆட்கொண்டார்

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை
ஆட்கொண்டார் வினைக்கரை சேர்ந்தார்
அருள் தந்து மந்திரம் தந்து
ஊன்று கோலாய் நின்று உண்மை காட்டினர்.
உள்ளதை உள்ளபடி உள்ளமாய் அறிந்தேன்
நிலை பெற்றேன், பிறந்த பயன் பெற்றேன்
என்குருவின் அருளினும் வேறெது பாக்கியம்
அவரடியார் உமதடியாள் அவளினும் யாரது பாக்கியவதி

## புலம்பல்

சென்மமதில் ஒன்றும் செய்யவில்லை
சென்மம் வேறெதில் செய்தேனென்றும் அறியேன்
பெற்றவர்க்குப் பணி செய்யவில்லை
கொண்டவர் உமக்கும் சேவை புரியவில்லை
பெற்ற மூவர்க்கும் சிறிதும் ஆற்றவில்லை
பின் மற்றவர்க்கு மறந்துமேது ? கனவிலுமேது ?
முன்உண்டு, முன் தூங்கி பின்னெழுந்தும்
பிரியாத அன்பின் பெருமை அன்று தெரிகிலேன்
இன்று அறிவேன்
அதனல் ஆசையுண்டு, நிலையினின்று
குறைதீர்க்க — பின் இச்சை யேதோ ?

## வரம்பெறல்

உற்றவள் நான் உரிமையுடன் கேட்க
உள்ளவனும் மறுப்பானே
இன்ப முறுவலுடன் வரம் அளித்தான்
சர்வ மங்கள சௌ பாக்கியத்துடன்
விண்ணொடு மண்ணும், நாளொடு
நாடும் பெற்று
என்னவனை இன்பமூட்டி
என் அருள், என்னுரு
என் பொருள் மூவரை மகிழூட்டி
அன்புடன் அருளுடன் பொன்னுடன் புகழுடன்
என்னுடன் நீடூழி வாழென
வரமளித்தான் ஈசன்
அருள்மலை, தனிமலை, பன்றிமலை மகேசன்.

## வாழ்த்து

பேரருளாம் பெருங் காற்று வீசி
தூசியா மெனை அவரடி சேர்த்தது

அவரைசூழ் ஜீவஜந்துடன் புல்பூண்டுடன் கல்மண்ணுடன்
யானும் பெற்றேனே பெரு வாழ்வு
சொல்லிற் றடங்கா அருட்தாள் போற்றி
என் அம்மையின் பொற்தாள் போற்றி
ஸ்ரீ ராஜா லக்ஷிமியுடன் செல்வக் கண்மணிகாள்
வெற்றிவேல் வாழ்க! சக்தி வடிவேல் வாழ்க!
அவரடி பணியும் நீங்களும் நம்மதும் வாழ்க!
பெற்றவர் வாழ்க! முன்னவர் பின்னவர் வாழ்க
பொன் மலையாம் பன்றிமலை வாழ்க!
அவரடியார் உமதடியாள் பெற்றபேறும் வாழ்க!

## வேறு

இல்லை யென்போர்க் கொரு உரை
இல்லை யென்னும் நீஇல்லையோ -- உண்டே
உள்ளவன் தன்னை பூசனை செய்கில்
காணு மதுண்மை ஈசனு மதுவே.

பகவான் கண்டவர்களுக்குக் கல்கண்டாகவும் காணுதவர்களுக்கு கல்குண்டாகவும் இருக்கிருர் என்று என் குரு அடிக்கடி சொல்வதைக் கேட்டிருக்கிறேன்.

சுபம்.

* * *

## ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகளிடம் அருள்பெற விரும்பிப் பாடியது

(மைலாப்பூர் வித்வான் திரு. சு. கோதண்டராமன்)

திருவாரும் பன்றிமலை யதனில் வாழ்கின்ற
உருவாரும் சித்தெல்லாம் உணர்ந்து பெரும் சுவாமியே
கருவாரும் பிணிவாய்ப்பட் டுழல்கின்ற கடையேற்குப்
பெருகார்வத்துடன் நினது பெருங்கருணை புரிந்திடுவாய்

உனை அடைந்தோர் துன்பின்றி உய்வண்ணம்
[கேட்டடியேன்
நினை அடைந்தேன் நினது பெருங் கருணையினுல் எளியேற்கு
நினைவதனில் உள்ளவற்றை நீ அறிந்து தீர்த்திட்டு
எனை பக்தியுடனிருக்கும் திடமதனை இனிதருள்வாய்

25—5—56 சுவாமிகள் அருள் புரிந்தவுடன் பாடியது.

இவ்வண்ணம் நினையடைந்த எளியேனின் இயல்பறிந்து
செவ்வண்ணம் உபதேசஞ் செய்தெனக்கு அருள்புரிந்த
மைவண்ணப் பன்றிமலை வாழ்குரு சுவாமி நான்
உய்வண்ணம் செய்வித்த உனது பொற்றுள் போற்றுவனே.

* * *

" தாமரை இருக்கை தாங்கித்
தாழ் வடம் மார்பில் ஆடப்
பூமணத் தென்றல் பாதப்
போதினை வருடி நிற்க
ஓமெனும் ப்ரணவ நாதத் (து)
உருவமாய்ப் பன்றி வெற்பின்
கோமகன் கொலுவீற்றுள்ளார்
குவலயம் இன்பம் எய்த "

* * *

## பன்றிமலைச் சித்தர் இரட்டை மணிமாலை

(கவிஞர் திரு. ரா. பு. தங்கராசன்)

நெஞ்சே வருந்தாதே நீங்கும் துயரெல்லாம்
அஞ்சாதே வெற்றி அடைந்திடுவாய்—மஞ்சுதவழ்
பன்றிமலைச் சித்தர் அருள் பாலிக்க வந்துவிட்டார்
இன்பமே என்றும் இனி.

இனிஉனக் கென்ன கவலை மனமே கதிரவன்முன்
பனிபோல் விலகிப்போம் பற்றிய துன்பப் பிணிகளெல்லாம்
தனிவேல் கரத்தன் முருகன் அருள்பெற்ற பன்றிமலை
முனிவர் பதமலர் பற்றுவாய் முன்னிற்கும் வென்றிவேலே.

வென்றிவேல் ஏந்துமிள வீரன் அருள்பெற்ற
பன்றிமலைச் சித்தர் பதமலரே—என்றென்றும்
தஞ்சமெனக் கொண்டபின்னர்த் தாழ்ச்சி அடைவதுண்டோ
நெஞ்சே அஞ்சாதே நீ.

நீயேன் நலிகின்றுய் நெஞ்சே நினது துயர்களையத்
தாயே அனைய தயையுடன் பன்றி மலைமுனிவர்
மாயோன் மருகன் முருகன் துணையுடன் வந்துவிட்டார்
தூயோர் அருளால் துயர்நீங்கும் இன்பம் நெருங்கிடுமே.

நெருங்கிவந்தோர் துன்பமெல்லாம் நீங்கும் பொருட்டுக்
கருங்கல் வீட்டில்வாழும் கந்தன்—கருணையுடன்
பன்றிமலைச் சித்தரையிப் பாருக் கனுப்பிவைத்தான்
நன்னெஞ்சே நீயவர்தாள் நாடு.

நாடுவாய் நெஞ்சே நலமருள் சித்தர் திருவடியைப்
பாடுவாய் கண்கள் பனிப்பப் பணிகின்ற பக்தரொடு
கூடுவாய் செந்திற் குமரன் திருப்பதம் சேருநெறி
தேடுவாய் பன்றி மலைத்தேவர் இன்னருள் நாடுவையே.

நாடிப் பணிவார் நலமடைவார் ; ஆங்கவரைத்
தேடிவந்து சேர்வாள் திருமடந்தை—நாடியசீர்
அத்தனையும் வந்தே அணிசெய்யும் பன்றிமலைச்
சித்தர் அருள் நோக்கால் சிரித்து

சிரித்துப் புரமூன்றும் செற்றவன் மைந்தன் திருப்புகழை
விரித்துப் பொருள்கூறும் வேந்தன்—அருள்நோக்கால்
[வெந்துயரை
எரித்துப் பொடியாக்கும் இல்லற ஞானி—பதம் தலைமேல்
தரித்துப் பெறுவோம் தவக்கனல் நல்கிடும் இன்பமதே.

இன்பம் பிறக்கும், இதயம் களிப்பெய்தும்,
துன்பங்கள் யாவும் தொலைந்தேகும்—அன்புருவாம்
பன்றிமலைச் சித்தரெனப் பார்புகழும் மெய்ஞ்ஞானி
பொன்னடியைப் பற்றும் பொழுது.

பொழுதை அவமாகப் போக்காமல் சித்தர் திருவடியைத்
தொழுது பணிந்தால் துயர்நீங்கிப் போகும், மனம்வருந்தி
அழுது புலம்பி அரற்றுவ தேன் உன் தலையினிலே
எழுதிய பொல்லா விதியெழுத் தும்வலி குன்றிடுமே.

குன்றுதோ றாடும் குமரன் அருள் காட்டும்
பன்றிமலை வேந்தே பதம்பணிந்தேன்—என்றுமினி
அஞ்சலென்ற கையும், அருள்விழியும் கொண்டெனது
நெஞ்சில் உறைவாய் நிலைத்து.

நிலையாய்என் நெஞ்சத்தில் நீங்கா துறையும் வரமருள்வாய்
அலைமோதும் செந்திற் பதிவாழ் அழகன், ஒளியுமிழும்
இலைவேற்கை ஏந்தும் இளையோன் திருவருள் பெற்றபன்றி
மலைவேந்தே பாத மலரே துணையெனப் பற்றினனே.

பற்றை உதறும் பலமில்லேன் ; நன்னெறியைப்
பற்றி ஒழுகவல்ல பண்பில்லேன்—பற்றினேன்
பற்றற்ற பன்றிமலைச் சித்தர்தாள், பற்றியபின்
பற்றுமோ நெஞ்சைப் பயம் ?

பயங்கொள்வ தேனோ? பழனிமலையுறை பன்னிரண்டு
புயங்கொண்டான் துன்பப்புயலழித் தின்னருள் செய்தி டானோ?
மயங்காதே பன்றிமலைச் சித்தர்பாதம் பணிந்தபின்னர்
தயங்குவனோவேலன் தாவிவந் தின்பம் அருள்வதற்கே?

அருளமுதம் வந்தெய்தும், ஆனந்தம் சேரும்
இருள்சேர் பவவினைகள் ஏகும்—மருள் நீக்கும்
பன்றிமலைச் சித்தர் அருட் பார்வையினால் நல்லருட்
பொன்திகழும் வாழ்வில் பொலிந்து.

பொலிவுடை வாழ்வும் புகழும் பொருந்தும், துயரஇருள்
நலிவுறும், பேரின்ப நாதம் பிறக்கும், இடர்விளக்கும்
கலிநீங்கும், உள்ளம் தெளிவுறும், ஞான வலம்புரிச்சங்
கொலிசெயும் பன்றி மலைமன் உரையமு துண்கையிலே.

உண்ணத் தெவிட்டா உயர்கனியும், நெஞ்சினிலே
எண்ணும்போ தேயினிக்கும் இன்னமுதும்—பண் மிழற்றும்
பைங்கிளியே யார் தருவார் பன்றிமலைச் சித்தர்போல்
எங்குமின்பம் பொங்கிடுக என்று.

என்றுநாம் காண்போம் இறைவன் அடியை? அடிநிழலில்
என்றுநாம் தங்கி இடர்கள் தவிர்ப்போமா? ஈசனருள்
என்றேனும் காண்போமோ என்றே மயங்கி அயர்ந்து நின்றோம்
பன்றி மலைமன் வடிவில் இறையருள் காணுமுன்னே.

காணும்பே றெய்தின கண்கள்; செவிகளுயிர்
பேணும் அருள்மொழிகள் பெற்றன—மாணுயர்ந்த
பன்றிமலைச் சித்தர்தம் பாத மலர்தோய்ந்தே
இன்புற்ற தென்றன் சிரம்.

சிரம்நான் குடையான் செருக்கினைக்கிள்ளிச் சிறையிலிட் டோன்
பரங்குன்றில் நின்று பணிவோர்க் கருளும் முருகனருள்
வரம்பெற்று வையத்திற் கின்பம் வழங்கும் முனிவரை நீ
கரம்கூப்பி என்றும் கழலடி போற்றுவாய் நெஞ்சகமே.

* * *

## நடமாடும் தெய்வம்

(கவிஞர் திரு. ரா. பு. தங்கராசன்)

ஓம்

தில்லையில் நடமாடும் – தெய்வத்
திருவடி மலர்களில் உளம்பதித்தே
நல்வினைப் பயனாலே – உலகில்
நடமாடும் தெய்வத்தின் கதையுரைப்பேன். 1

தென்றலின் உடன்பிறந்த – தெய்வத்
தீந்தமிழ்க் குழவியைத் தாலாட்டும்
மன்றினை வளர்த்த புகழ்ப் – பாண்டி
மன்னர்கள் ஆண்டார் வளநாட்டில் 2

சித்தர்கள் உலவுகின்ற – பெருஞ்
சிறப்பினைக் கொண்டது பன்றிமலை
எத்தனை எத்தனையோ – முனிவர்கள்
இன்னுமங்கே தவம் இயற்றுகின்றார். 3

அந்தமலைப் பெருமை – என்னால்
அளவிட்டுக் கூறுதல் எளிதாமோ?
சிந்தையை வென்றிகொண்ட – தவ
சீலர்கள் சிவனருள் நாடுமலை. 4

பந்தம கன்றவர்கள் – இறைவன்
பதமலர் இணைபற்றிப் பாடுமலை.
நொந்த மனமுடையார் – தங்கள்
நோய்தவிர் மருந்தினைத் தேடுமலை. 5

அந்தமலைப் பெருமை – என்னால்
அளவிட்டுக் கூறுதல் எளிதாமோ?
மஞ்சுகள் தவழ்ந்துவரும் – இள
மானினம் அவைகண்டு குதித்தோடும்
அஞ்சுகம் மழலையிலே – கூறும்
அரன்பெயர் மலைஎங்கும் எதிரொலிக்கும். 6

மாங்குயில் பாட்டிசைக்கும் – அதில்
மயங்கியே தோகை மயிலாடும்
ஓங்கிய மரக்கிளையில் – முகில்கள்
உட்கார்ந்து நடனத்தைக் கண்டுகளிக்கும். 7

பொங்கர வூர்ந்து செல்லும் – பாயும்
பூம்புனல் தனில்விடைநீர் அருந்தும்
திங்களங் குலவிவரும் – மலைத்
தீயின்முன் புலிவாய்த் திறந்துநிற்கும். 8

மதியுண்டு நாகமுண்டு – இன
மானுண்டு விடையுண்டு புலியுமுண்டு
நதியுண்டு தீயுமுண்டு – தில்லை
நாதனிடம் மலையுருக் கொண்டனனோ? 9

இத்தனை சிறப்புடைய – மலையில்
எழுந்த பொற்சுடரினைப் போற்றிடுவோம்
அத்தனின் திருவருளே – மானிடர்க்
கருள்செய மண்ணகம் வந்ததுவே. 10

மன்றினில் நடமாடும் – தெய்வம்
மானிட வடிவினைப் பெற்றுற்போல்
பன்றிமலையினிலே – அடிகள்
பக்தியினைப் பரப்புதற் கவதரித்தார். 11

ஆறுமுகம் பிள்ளையும் – கற்பின்
அணிகல மெனத்திகழ் அங்கம்மையும்
ஆறுமுகன் அருளால் – அடிகளை
அடைந்தனர் மகனுய்த் தவப்பயனுல். 12

கையிலும் கால்களிலும் – சங்கு
சக்கரம் வேல் திகழ் சான்றுகண்டோர்
மெய்யினில் பரம்பொருளே – இந்த
மேதினிக்கு வந்ததென்று தெளிவுகொண்டார். 13

பிள்ளைப் பிராயத்திலே – அவர்க்குப்
பெற்ருேர் அளித்தபெயர் ராமஸ்வாமி
கள்ளமில் சிறுவருடன் – அவர்
களித்திடும் போதிலும் அற்புதஞ்செய்தார். 14

கல்லினைக் கையிலெடுத்தே – சுவைக்
கற்கண்டாய் மாற்றியே தோழர்க்களிப்பார்
எல்லோரும் வியப்பெய்த – அடிகள்
எத்தனையோ சித்துக்கள் செய்துநிற்பார். 15

பாலசமுத்திர மென்னும் – சிறந்த
பதியினிற் கல்வி பயின்றிடுங்கால்
வேலவன் குடியிருக்கும் – பழநி
வெற்பினில் சிந்தையைப் பறிகொடுத்தார். 16

துறவுநெறியில் செல்வோர் – பல
தூயவர் அடிகளின் நேயரானர்
உறவினை வளர்த்துவந்தார் – கந்தன்
ஒளியில்தன் உள்ளத்தைப்பிணைத்து வந்தார். 17

குளத்தினில் நீராடிக் – கணபதி
கோவிலின் அருகினில் செல்லுகையில்
உளத்தினில் பற்றறுத்த – ஒருவர்
ஒள்வேலால் மந்திரத்தை நாவில் வரைந்தார். 18

மந்திரம் நாவில் வரைந்து – முனிவர்
மறைந்தனர் கணபதி கோயிலுள்ளே
அந்தக் கணமுதலாய் – அடிகள்
ஆற்றிய அற்புதத்திற் களவுமுண்டோ. 19

ஓடுகின்ற பாம்பைப் பிடித்தே – தம்
உடம்பினில் மாலையென அணிந்துகொள்வார்
நாடுகின்ற பொருளையெல்லாம் – பெற்று
நண்பருக்கு நல்கிமனம் களிப்படைவார். 20

சல்லிச்சாமி சட்டிச்சாமி – எனும்
சன்யாசிகள் மதிப்பைப் பெற்றுவிட்டார்
நல்லவர் இணக்கமுடன் – பூசனை
நாடொறும் இயற்றியே வாழ்ந்துவந்தார். 21

அருள்நெறி தனில்செல்லும் – அடிகளை
ஆண்டுகொள வந்தார் ஒரு முனிவர்
அருள்வலி மிகவுடையார் – அவரை
ஆச்சாண்ட மலைப்பர தேசிஎன்பார். 22

பேரருளாளர் அவரை – அடிகள்
பின்பற்றிச் சென்றிட மனம் துணிந்தார்.
ஊரவர் அறியாமல் – அடிகளவ்
வுத்தமன் காலடி தனைத் தொடர்ந்தார். 23

பூசனை புரியு முறை — பரி
பூரணன் மகிழ்ந்திடும் தொண்டுநெறி
ஈசனைக் கூடும் வழி — அனைத்தும்
இயம்பினர் முனிவர் நம் அடிகளுக்கே 24

முனிவர்க்குத் தொண்டியற்றிப் — பல
மூர்த்திகளைப் பணிந்து நல் தீர்த்தமாடினர்
கனிவுடன் அம்முனிவர் — இறைவன்
காட்சியைப் பெறும் நெறி காட்டிவிட்டார். 25

இத்தனைப் பேற்றுடனே — ஒருநாள்
இல்லம் திரும்பி வந்தார் நம் அடிகள்
அத்தனை மகிழ்ச்சியுற்றார் — மக்கள்
ஆதவன் முகம் கண்ட அம்புயமானார்! 26

அறமெனல் இல்லறமே — என
அருளிய வள்ளுவர் மறை நோக்கி
இறையருள் எய்துதற்கே — இல்லறம்
இடையூறன்றென மனம் தெளிந்தே. 27

இல்லறம் ஏற்றுக்கொண்டார் — மனைவிளக்
கேற்றிய துணைவிபாப் பாத்தியம்மாள்
நல்லறம் நடத்திவந்தார் — மக்கள்
நலம்பெற நன்னெறி காட்டுகின்றார் 28

அருள்நெறி காட்டுகின்றார் — மக்கள்
அகத்தினில் ஆனந்தம் ஊட்டுகின்றார்
இருள்தவிர் விளக்கேந்தி — மாந்தர்
இதயத்தில் அன்பொளி பரப்புகின்றார் 29

நடமாடும் தெய்வமென — அடிகள்
நலிந்தவர் உய்ய அருள் பொழிகின்றார்
இடரெலாம் போக்குகின்றார் — பக்தரை
ஈசனருள் நெறியினில் செலுத்துகின்றார் 30

அந்தகர் விழிபெற்றார் — ஊமையர்
ஆண்டவன் பேர்சொலும் ஆற்றலுற்றார்
சிந்தையில் தெளிவில்லார் — பன்றிமலைச்
சித்தர் அருளால் மதி தெளிவு பெற்றார். 31

கல் வடிவான யானை — தின்னக்
கரும்பினைத் தந்த சித்தர் வழித் தோன்றல்
நல் வடி வெடுத்துவந்தார் — இந்த
நானிலம் ஆற்றிய நற்றவத்தால் 32

கண்கண்ட அருள் தெய்வம் — அவர்
காலடி பணிந்து நற்கதி பெறுவோம்
பண் கொண்டு பாடிடுவோம் — அன்புப்
பரவச மெய்தி நட மாடிடுவோம் 33

சித்திரத் தெழுதி வைப்போம் — அடிகள்
திருவுரு வமைத்தே தொழுது நிற்போம்
இத்தரை மீதினிலே—ஈசன்
இணைமலர் அடிகண்டு களித்திடுவோம் 34

உள்ளமெனும் திரையினிலே — அவர்
ஓவியம் தீட்டிமலர் தூவிடுவோம்
தெள்ளுதமிழ்ப் பாட்டிசைப்போம் — வீசும்
தென்றலிலே அவர் இசை கேட்டுநிற்போம் 35

அன்பெனும் மலர்தூவி — அடிகள்
அடிபணிந் தின்னருள் எய்திடுவோம்
அன்புரு வானசித்தர் — அமுதம்
அளித்திடுவார் உள்ளம் களித்திடவே 36

நடமாடும் தெய்வத்தின் — அருட்கதை
நவின்றேன் நல்லன்பர் மனம்குளிர
கடல்சூழ் புவியெங்கும் — சித்தர்
கருணையின் ஒளியே நிறைந்திடுக. 37

* * *

## ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சற்குரு பாமாலை

(திரு. T. D. மீனாட்சிசுந்தரம்)

### அறிவானாய்!

1. வெள்ளைத் தாமரையில் வீற்றிருக்கும் நாமகளை
வாயார வாழ்த்தி வழிபடுவதன்றி அவள்

முல்லைச் சிரிப்பழகை நேரில் நாம் காணவில்லை
மதுரமொழி ஒன்றும் நேரில் நாம் காணவில்லை

உள்ளம் உவந்தெம்மை வாழ்விக்க வந்தவனே!
உத்தமனே, வித்தகனே, உண்மை வடிவானவனே!

தெள்ளமுதத் தேனூட்டும் அருள்குன்றே, அறிவே!
தெவிட்டாது நின்மொழிகள் பன்றிமலை சற்குருவே!

### கலையானாய்!

2. கற்றவர்க்குக் கல்வி அருள்கலை அரசே! களிப்பே!
கவிஞருக்குக் களிப்பூட்டும் கற்பகத் தேனிசையே!

கற்றறியா ஞானநிலை விளக்குகின்ற குருவே!
கலைகளெலாம் முழுதுணர்ந்த கற்கண்டு சிகரே!

நற்றவத்தால் நாடுபவர் நலமறிந்து அவர்க்கு
நன்மைபல சுரந்தருளும் தவமணியே! ஊற்றே!

பற்றியுளோம் உம்தாளை பால்அருளும் தாயே!
பதமலரைப் பற்றியுளோம் பன்றிமலை சற்குருவே!

### சுவையானாய்!

3. கற்சுவைக்க வைப்பவனே! கற்கண்டே! இனியவனே!
கரச்சுவையால் மணச்சுவையைத் தித்திக்கச் செய்பவனே!

நற்சுவையை எங்களுக்கு நல்விருந்தாய் அளிப்பவனே
நீதியெலாம் மறைகளெலாம் மனதினிக்க உரைப்பவனே

எச்சுவையும் ஈந்தெமக்கு அருள்சுவையை ஊட்டவல்ல
எம்மீசா! எம்அருமை கலைஞான மெய்விருந்தே!

இச்சுவைக்கு ஈடாக ஒன்று சொல நானறியேன்
இன்பசுவை இனிதளிக்கும் பன்றிமலை சற்குருவே!

### திருவானாய்!

4. பொல்லாத உலகமென்று தூற்றுவதும் இனியுண்டோ
பலபேர்கள் பாபிஎன்று உரைப்பதுவும் இனியுண்டோ

நில்லாதசுகம் என்று நவில்வதுவும் இனியுண்டோ
நல்லவர்கள் இல்லை என்று கூறுவதும் இனியுண்டோ
இல்லாத செல்வத்திற்கு ஏங்குவதும் இனியுண்டோ
எடுத்ததெலாம் காயுமெனக் கவலையதும் இனியுண்டோ
நல்லாருள் மாணிக்கம் நீயிருக்க வேறு திரு
நாடுவனோ? நாயகனே பன்றிமலை சற்குருவே!

## தாயானாய்!

5. நாயென்றலைந் தேனை நாவிருந்தும் ஊமையனை
நான்குபேர் சிரித்திடவே நடுத்தெருவில் அலைந்தேனை
காயமுற்றிருந் தேனை கடும்பசியில் உற்றேனை
கொடுமையெலாம் கசப்பெல்லாம் வாழ்க்கையிலே
[கண்டேனை
பேயென்று பார்ப்பவர்கள் வெருண்டோட நின்றேனைத்
பொல்லாத பாபியென்று பலர்தூற்ற உள்ளேனைத்
தாயென்று உமைநம்பி தஞ்சமென்று வந்தேனை
தளர்வகற்றி துயர்துடைக்கும் பன்றிமலை சற்குருவே!

## தந்தையானாய்!

6. கல்லாதார் செவிகுளிர கல்வியருள் நிர்மலனே
கவலையெலாம் போக்குவிக்கும் சற்குணனே
[புண்ணியனே
பொல்லாங்கு செய்பவரைப் பொறுத்தருளும் காருண்யனே
பாவமெலாம் போக்குவிக்கும் அருட்கடலே அமுதே
எல்லாப் பிழைகளையும் பொறுத்தருளும் பெருந்தகையே
எமக்கின்பம் ஊட்டவல்ல செல்வநல மணியே
நல்லோராய் எமையாக்க விழைந்தருளும் தவக்குன்றே
நாடியுளோம் தந்தையும்நீ பன்றிமலை சற்குருவே!

## குருவானாய்!

7. குமரன் அருள்பெற்ற நிர்மலனே நின் தவத்தில்
காட்டுக்கு வெறித்தோடும் தன்மையிலை தனிமையிலை
அவதிகளை விடுவதற்கு அவதியிலை உடையில்லை
ஆசை அறுப்பதற்கு தாடியிலை மௌனமிலை
தவயோகி பஞ்சாட்சரம் உணர்ந்த பெற்றியனே
தவமெலாம் எமக்காக்கும் தன்மையிலே கற்பகமே

எமதருளே! எம்குருவே, உம்சீடர் சிரம்தாழ்ந்தோம்
ஏற்றருள்வீர் எம்பணிகள் பன்றிமலை சற்குருவே!

### நேயனாய்!

8. மாயத்தால் விந்தைபல செய்திட்ட மாயவனும்
மார்க்கத்தைக் கீதைவழி பரப்பிவிட்ட கோவலனும்
நேயத்தால் பார்த்திபனை அணைத்திட்ட மாதவனும்
நேயத்தால் மாதொருவள் மானத்தைக் காப்பாற்றி
நேயத்தால் பாண்டவரின் நெறிப்போரில் ஜெயம்நாட்டி
நேயத்தால் பேருலகை செழிக்கவைத்த பேரன்பின்
தாயத்தால் எங்கள்பல வினைகளையே போக்கவல்லோய்
துணையே எங்கள்நேயா, பன்றிமலை சற்குருவே!

### நாயகனாய்!

9. சந்திரனைக் கண்டன்றோ அல்லிவிழி பால்மலரும்
சூரியனைக் கண்டன்றோ குவலயமும் மலர்விரிக்கும்
சங்கரனைக் கண்டன்றோ சங்கரியும் நகைபூக்கும்
ஷண்முகனைக் கண்டன்றோ வள்ளியுளம் வேட்கையுறும்
செந்தில்வடி வேலவனைக் கண்டன்றோ நின்வாயும்
சிந்துகளைப் பாடிஉளம் உவகையிலே விரிந்தாடும்
அந்த மிகுந்தவனே ஆனந்தம் உமைக்கண்டேன்
ஆடுமிதோ என் உள்ளம் பன்றிமலை சற்குருவே!

### ஈசனாய்!

10. கங்கைமுடி பிறைநுதலும் பெற்றபெரு மீசனவன்
கருணையினைக் கண்டிட்டோம் உன்அழகு முகம்தன்னில்
அஞ்சேலென அபயகரம் காட்டுகின்ற அண்ணலவர்
ஹரியவனின் அன்பமுதே உன்னருமைத் திருமொழிகள்
கொஞ்சுகின்ற ஷண்முகனார் இளமைமனம் திருஅழகு
கருணையெலாம் அருளெல்லாம் உன்றன்இதழ்
[திருமுறுவல்
மஞ்சுதவழ் பன்றிமலை பரஞ்சுடரே திருஈசா
மகிழ்ந்தெனக்கு உதவுகின்ற பன்றிமலை சற்குருவே!

* * *

## திருத்தவத்திரு பன்றிமலைத் தேவன் போற்றி பாமாலை

(பேரூர் தேவஸ்தான அறங்காவல் குழுவினர்)

அருள்பழுத்த முக்கனியே ! அகங்கா ரத்தை
ஆணவத்தை எதிர்த்தழித்த ஞானக் குன்றே
குருநாதா! குளிர்தருவே அமிழ்தே தேனே!
கொடிய பிணி போக்கிடுநன் மருந்தே நாடி
வருவோர்க் கருள்மழையே ! மலைவாழ் ஞான
மணிவிளக்கே ! உயிர்க்குயிரே ! வாழ்வே ! அன்புக்
கருணைமழைக் கடலே எம் கண்ணே ! கண்ணின்
கருமணியே ! பன்றிமலைத் தேவே போற்றி !

மத்துருட்டும் தயிரென்ன மனங்க லங்க
வளர் துயரை இன்னல்களைப் போக்கி யுன்றன்
சித்துருட்டிச் சிவஞான விளக்கம் கூறித்
திரிகால ஞானியென நின்றாய் நீயே !
பக்தர்களுக் கெளியவனே ! மயில்மேல் தோன்றும்
பன்னிரண்டு கருணை விழிச் சுடரே ! அன்பே !
உத்தமனே ! உனதடிகள் தொழுது நின்றோம் !
உயர்குருவே! பன்றிமலைத் தேவே போற்றி !

நெஞ்சினிக்கும் உனதருளை எண்ண எண்ண !
நினைவினிக்கும் சேவிக்க! நெகிழ்ந்து நின்றே
கொஞ்சுமயில் முன்தோன்றும் சேவல் கூவும் !
கொடிதோன்றும் ! குமரனவன் வடிவும் தோன்றும் !
வஞ்சமிலா வாழ்வருள்வாய் உலகம் வாழும்
வரமருள்வாய் ! வறண்டநில மழைநீர் ஆவாய் !
தஞ்சமெனப் பன்றிமலை நாதா உன்றன்
தாள்பணிந்தோம் காத்தருள் சற் குருவே போற்றி

ஓங்கார வெளியினிலே ஞானம் என்ற
ஒருவிளக்கை நிறைவிளக்கைத் திரியிட் டேற்றி
ஆங்கார மனப்பேயை வெட்டிச் சாய்த்தங்
கமர்ந்திருக்கும் குருநாதா ! ஆத்ம ஞானப்
பூங்காவில் இளைப்பாற வைத்தே எம்மைப்
புனிதமுறச் செய்திடவே வருக ! என்றும்
தூங்காத ஞானவெளிக் கழைத்துச் செல்லும்
சுடரொளியே ! பன்றிமலைத் தேவே போற்றி

காலையிளங் கதிரவனே! பேரூர்க் கோவில்
கண்டதொரு வேதாந்தக் களிப்பே! எங்கள்
பாலைவன நெஞ்சத்தைப் பசுமைக் காடாய்ப்
பயனுக்க வருக! அருள் பழுத்த ஞானச்
சோலையிலே கனிபறிக்கச் சூழ்ந்தி ருக்கும்
தொண்டர்மனம் கொண்டாட வருக! இந்த
ஞாலமெலாம் அருள்ஞான தீப மேற்றி
நடத்துகின்ற பன்றிமலைத் தேவே போற்றி!



## சென்னை பச்சையப்பன் கல்லூரி உயர்பள்ளி வாழ்த்திதழ்

( வித்வான் அம்பை திரு. இரா. சங்கரனார் )

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தென்பாண்டிப் பழம்பதியில் திருமுருகன்
உரைவிடங்கள் திகழும் நான்கில்
இன்பாகும் ஆவியர் கோன் எழிலுறவே
ஆண்டிருந்த இசைந்த ஊரில்
துன்பாரும் உலகமதைத் தூயதாய்
விளக்கவருள் தோன்றும் மூர்த்தி
என்பாரும் உருவநெகிழ்ந் தேத்துறவே
எல்லாமாய் இலங்கும் எம்மான்.

பழநியமர் செல்வனவன் பண்பாரும்
இன்னருளைத் தனதாக் கொண்டு
கழனிநிறை பன்றிமலைக் கண்ணியவான்
காதலால் அவன்தன் பாதம்
எழனிதமும் அர்ச்சித்து இன்பமெலாம்
எழிலுறவே கொண்டு மேலும்
தழனிகரும் மேனியவன் தண்ணருளைத்
தாரணியோர்க் களிக்கும் வள்ளல்

இறைவனவன் எவ்விடத்து முள்ளானன்
னேனருளால் இயங்கும் பூமி
கறைமிடற்றுப் பெம்மானின் னருளிலதேல்
காசினியே கலங்கும் என்ன
மறைமிழற்றக் கேட்டுமனம் மாறாய்
மனம்போன போக்காய்ச் சென்று
அறைகடல்சூழ் புவியதனில் அம்மகோ!
வாழ்விழந்தார் அறிவொன் றில்லார்

அன்ஞேருக் கறிவுறுத்த அழல்சடையம்
அம்மானும் அவ்வப் போது
தன்னேரில் பெரியாரைத் தாரணியில்
வரவிடுத்த தகைமை போல
மின்னேராம் ஒளியோடு மேதினியி
லிப்போது மேவி யுள்ளோர்
அன்னேதன் நிகராவார் பன்றிமலே
அடிகளார் அடிகள் வாழ்க !

அரும்பொருள்கள் பலவாலே ஆக்கினுர்
அருள்பச்சை யப்ப வள்ளல்
தருஞான நெறிபலவும் தரத்தக்க
அறநிலேயம் தலேயாய்ப் பாரில்
பெருஞானி தங்களேப்போல் பெரியோர்கள்
கடைக்கண்ணுல் அருள்நீர்ப் பாய்ச்சின்
வரும்பயனும் பெரிதாமே வந்திட்டெம்
மாணவரை வாழ்த்தல் வேண்டும்

என்பைப்பெண் உருவாக்கில் இயல்பேயோ !
அலதுந்தாம் இருந்தண் நீரில்
வன்பாய கல்லிணேயே வன்பற்று
மிதக்குறவும் வகைமை உண்டோ ?
துன்பாய குருடர்களும் துணேக்கண்ணேப்
பெற்றனரோ ? என்றே நப்பார்
அன்பாலே அடிகளார் அற்புதங்கள்
அவர்களேயும் அகற்றும் ஐயா

வென்றிமிகும் நற்சமயம் விளக்கமுற
வெள்ளிடையின் மலேயே யென்னத்
துன்றியநல் சித்ததனேத் துணேயாகக்
கொண்டுநலி லறமே பூண்டு
கன்றியநல் உள்ளத்தோர் கவினுறவே
வழியதனேக் காட்டும் பெம்மான்
பன்றிமலே அடிகளவர் பாதபங்
கயங்களிணே பாரில் வாழி !

  

## தூத்துக்குடியில் பக்தர்களின்
## நல்வரவேற்புப் பாமாலைகள்

சக்திவேல் மைந்தனைத் தண்ணருளால்
நித்திய மருளும் நிமலமூர்த்தியினை – உத்தமனும்
அந்தணனை அறிய பன்றிமலைப் பேராளனை அன்போடு
சிந்தனை செய் நெஞ்சே தினம்!

திருநின்று சீர் செம்மையே செம்மையாய்
திருமந்திர நகரதனில் உடல் மருத்துவராம்
பெருமானிடத்து பேரன்பு மிகு புனிதன்
அரங்க சாமி அழகு திருக்குடில் கொண்ட

முருகனும் பார்பரவும் பன்றிமலைத் தேவை
அருகணைந்தார் அனைவரும் அன்பு வேண்டும்
நின்ற நிமலன் எந்தமக்கே அருளும்
நிலையான பேரின்பம் எய்தும்

நன்றெனவே கானிலத்தில் நல்லறங்கள் காட்டும்
குன்றுதோறும் குலவிய குமரன் தந்த
பன்றிமலைப் பழவடியார் வருகை கண்டு
பவமகற்றித் தவம்பெருக்கும் பதம் போற்றி!

கொன்றைவார் சடையன் செந்தில் வாழ்வாம்
கோலமாமஞ்ஞை வைகும் கோவை எம் குருவை
செந்திற் கந்தன் கனிவருள் பெற்றுய்ய
சந்தமும் நினதருளை இறைஞ்சி நிற்க

எங்கள் ஞான சற்குருவாய் வந்து
பந்தமற முந்தை வினையறப் பாடிக்களித்து
வந்து வேண்டுவார்க்கு வேண்டுவன தந்து
அண்டரெலாம் அதிசயிக்க அன்று கங்கையினை

கொண்டலுருக் கொண்டவன் தன் கோயிலினில்
கண்டார் அதிசயிக்க காணுதார் புளகமுற
மண்டுபுகழ் மன்னியே ஆற்றியோய் அற்புதங்கள்!
தொண்டரெலாம் நினை தொழுது நிற்பரால்!

## வேறு

ஓங்காரத் துள்ளொளிக்கும் உள்ளொளியாய்
நீங்காத பேருருவாய் நின்றானே ! ஐந்தொழிற்கும்
கலையே அவயவமாகக் காட்டும் அத்துவாயின்
நிலையே வடிவமாய் நின்றோய் ! போற்றி
ஆவிப்புலனுக்கு அறிவி அளிப்ப ஐந்தொழிலும்
ஏவித் தனிநடத்தும் எங்கோவே ! மேவ
வரும் அட்ட மூர்த்தமாம் வாழ்வே ! மெய்ஞானம்
தரும் அட்ட யோகாந்தத் தவமே
சைவக் கொழுந்தே ! தவக்கடலே ! ஞானவிளக்கே !
ஆறு திருப்பதிகண்டு ஆறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைவளர் செல்வா !

## வேறு

பைந்தமிழ்ச் சோலையில் புகுந்து
நல்ல பரிமளம் வீசும் மலர்பறித்துச்
சந்தமெழ மாலைகாட்டி — நின்
தாளில் அணிந்து தொழுவோம் !

கன்றுக் கிரங்கும் பசுபோல — நீ
கனிந்தருள் செய்திடல் வேண்டும்
என்றும் நின்துணை யுண்டானால்
எமக்கேதும் கவலை யில்லையன்றோ

பாவம் பறந்தோடிப் போகும்
பெரும் பாக்கியம் வந்து எமைச்சேரும்
தேவர் முனிவருமே காணு அந்தச்
சிவலோக வாழ்வும் எமக் கெய்தும்

காக்கக் கடவிய நீ காவா திருந்தக்கால்
ஆர்க்கும் பரமாம் அறுமுகவா – முழக்கும்
கடம்பா முருகா பன்றிமலை வேலாநல்ல
இடங்காண் இரங்காய் இனி.

எத்தொழிலைச் செய்தாலும் ஏ தவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே முருகன் பன்றிமலை மேவு
பச்சைமயில் வாகனமுப் பன்னிரண்டு திண்டோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும் கச்சைத்
திருவடியும் சிறடியுஞ் செங்கையும் ஈராறு
அருள் விழியும் மாமுகங்கள் ஆறும் – விரிகிரணம்

சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற – வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமுந் தந்து புகுந்து
உல்லாசமாக உள்ளத்திருந்து பரவசமெய்திட

* * *

## திருச்சிராப்பள்ளியில் பக்தகோடிகளின் வாழ்த்துப்பாமாலை

திருமகன் அருளுருவக் காட்சி தன்னல்
திரிசிர புரத்தினிலே வந்து வைகும்
பெருமானும் பன்றிமலை சுவாமி என்னும்
பெர்மான் தன் அன்பினையே வேண்டி என்றும்
நின்ற பெரும் எந்தமக்கே அருளைக்கூட்டி
நிலையான பேரின்பம் வழியே யாய்ந்து
நற்றெனவே நல்லறங்கள் பலவும் காட்டும்
குன்றுதோறும் ஆடிவரும் குமரன் தந்த

பன்றிமலை மெய்யடியார் வருகை கண்டு
பவமொழித் திடவேயாம் பாதம் போற்றி
கொன்றைமுடி யுடையான் தன் மகனே யான
குமரன் தன் அருள் நிறைந்த ஒருவை நாடி
செந்தாமரைக் கண்ணனருள் பெற்றே உய்ய
சந்ததமும் அவனருளை இறைஞ்சி நிற்க
எந்தமக்கே அருள்புரிய வேண்டு மென்றே
எங்கள் நிலை யுணர்ந்து அருளுவாய் வந்து

கொண்டலுருக் கொண்டவன் தன் கோயில் நண்ணி
கும்பாபி ஷேகத்தைச் சிறக்கச் செய்தே
வேண்டுவர்க்கு வேண்டுவன அளித்து நல்கும்
வேணுகோபா லன்தன் னுருவம் கண்டாய்
மண்டலத்தில் அவன் பெருமை பாரோர் ஏத்த
மண்டலாபி ஷேகத்தை உயர்வாய்க் காண
அண்டரெலாம் அதிசயிக்க கங்கை தன்னை
இங்குவரச் செய்தபெரும் விந்தை என்னும்!

பன்றிகளின் குட்டிகட்குப் பாலை வார்த்து
பரிந்துதவும் பரமன்தன் வழியே யாய்ந்து
கொன்றுயிரைக் குடிக்கவரும் கொடுநோய் தம்மை
நொடிப்பொழுதில் அகற்றுவிக்கும் நோன்பு கண்டு

உம்மடியைப் பணிந்திடுவார் உயர்வு காண்பார்
உம்பெருமை எம்மனோரால் உரைக்க வொண்ணு
கன்னலினும் இனியநற் சொல்லால் வாழ்த்தி
இன்னல்தனைப் போக்குவிக்கும் இறையே வாழி !

செயற்கரிய செய்தவரே பெரியர் என்னும்
செய்த பெரும் சேவையுளம் கொண்ட நல்லோய்
செய்தவத்தால் சேலத்தான் பட்டி தன்னில்
செகமெச்ச அலமேலு மங்கை நல்லாள்
குருடான கண்களுமே ஒளியே பெற்று
குருவான உமது ஆசி அருளாலே
குருபரன் தன் மெய்மைதனை உலகம் போற்ற
குணக்குன்றும் உமதடியை வணங்குகின்றோம்.

சுப்பைய ரில்லத்துத் தங்கி நின்றே
எப்பொழுதும் அடியவர்க்கு அருளே நல்கி
இப்பணியைச் செய்துதவ அவர்தம் செல்வர்
உடனுறையும் கிருஷ்ணமூர்த்தி உந்தன் அன்பு
தவமுடையோர் அருட்பெருக்கால் நாளும் பொங்கி
அவர்வழியே நீ பெற்ற பேறேயாகும்
அவர்வாழ அவ்வடியார் பாதம் போற்றி
அருட்பெருக்கால் வாழ்ந்திடவே வாழ்த்து கின்றோம்

பாமரர்க்கே பக்தியினை புகட்ட வந்த
வள்ளி தெய் வானையுடன் வீற்றிருக்கும்
பார்வதி தன் திருமகனும் சுப்பிரமண்யன்
பாங்கான தொண்டராம் நாளும் வாழ
கலியுகத்தில் அவதரித்த கருணை வள்ளல்
கண்கண்ட தெய்வ அருள் நிறைந்த ஞானி
பொலியிருவப் பொன்னடியைப் போற்றி வையம்
பொலிந்திடவே வேண்டும் வகை அருள்செய்வீரே.

* * *

## வரலாறும் சித்துக்களும்

(புன்னாக வராளி இராகம்)

சின்னவயதில் தன்னையறியப் போன சாமி – நம்
கண்ணு முன்னே கந்த வேலைக் காட்டும் சாமி
சித்து விளையாடின சிங்காரசாமி – நம்
சிந்தை தெளிய சேதி சொல்ல வந்தசாமி
நாஸ்திகத்தை விரட்டி யோட்டும் நல்லசாமி – எங்கும்

ஆஸ்திகத்தை பரப்ப வந்த அன்புச் சாமி
பன்றிமலை மீது குடி கொண்ட சாமி – தம்மை
அண்டினோர்க் கருளும் அவதாரச்சாமி.

## கிளிக்கண்ணி மெட்டு

ஏழு பிராயத்திலே பால பருவத்திலே
கோழிக் கொடியோனையே — சாமி
தேடியே சென்றாரடி

ரிஷி முனி சித்தர் போல பசிதாகம்
பாராமலே இசைந்து தவம் செய்தவர் — சாமி
எங்கள் குரு நாதரடி

ஆறெழுத்து மந்திரத்தின் அர்த்தம் தெரிந்தபின்
ஈரேழு வயதினிலே — சாமி
இருப்பிடம் வந்தாரடி

புண்ய வசத்தாலே இந்த பூமியில் பிறந்து வந்த
கண்யமுள்ள மங்கை தன்னை — சாமி
கல்யாணம் செய்து கொண்டாரடி

பரமசிவன் சம்சாரிதான் பரந்தாமன் சம்சாரிதான்
ஆறுமுகன் சம்சாரிதான் — சாமி
அடியாரும் சம்சாரியடி

இல்லறமே நல்லறமாகும் என்றே தமிழ் வேதங் கூறும்
வள்ளுவரின் வழிபோலவே — சாமி
இல்லம் புகுந்தாரடி

* * *

## கண்ணிகள்

(கவிஞர் திரு. அம்பிகாபதி)

1. எங்கும் நிறைவான பொருள் தன்னருளினாலே
இன்பநிலை எய்தி உயர்வான — தவயோகி
2. அன்பர்க்கு உண்மைநிலை தெரிவதற்குஆக
அரிய பல சித்துகளைக் காட்டிடும் விவேகி
3. புருவநடு மத்தியிலே தெரிவதொன்று உண்டு
புனிதருக்கு வாய்க்குமந்த புண்ணியத்தைக் கண்டு
4. மனிதருக்கு நன்மை பல செய்திடுவார் நாளும்
மனப்பயங்கள் நீங்கி உபசாந்த நிலைசூழும்

5. இகபரத்திலே நிலைத்த இன்பம் வந்து சேரும்
இணையிலா ஆனந்த வாழ்வு அனைவர்க்கும் நேரும்

6. பன்றிமலை சுவாமிகளின் தன் மகிமையாலே
பாரில் நலம் மீறி சுகம் பரவிடும் தன்னாலே

* * *

## பன்றிமலை பஞ்ச ரத்ன மாலை

### காவடிச் சிந்து மெட்டு

பார் புகழும் பன்றிமலை ஐயா – ஸ்வாமி
ஆறுமுகன் அருளுருவே மெய்யா
தேன் கமழும் கொன்றைமுடி சடையன் பெற்ற
குமரன் மகிழ் சீலா அனுகூலா
(பார் புகழும்)

தாண்டிக்குடி குன்றம் வாழும் கோமா – நல்ல
பாண்டியன் மகள் பாலன் தரு ஸோமா
நாடுபவர் தேடும் வரம் நாளும் தரும் நித்ய சூர்ய
தேஜா – ஸ்வயம் ப்ரகாசா
(பார் புகழும்)

பழனிக் குன்றம் வாழும் வடிவேலன் – அன்பன்
அழற் கடவுள் அருமை மிகு லோலன்
கண்ணழகன் கனகவல்லி காந்தனவன் கருணை வள்ளல்
தொண்டன் – மெய்யக்கண்டன்
(பார் புகழும்)

பாரில் பரந்தாமனடி பேணும் – நல்லவர்க்
காதரவு மிகப் படைப்பின் காணும்
சூழும் நல்ல திரிகரண தூயர் குழாம் உய் ஔஷதம்
மொழிவான் – அருள் பொழிவான்
(பார் புகழும்)

நேரும் கண்ணும் கருத்தும் அவன்தானே – இனி
கூறும் பிணி துயர்ப் படுதல் வீணே
நம்பி அவன் உறவு கொண்டு நாளும் எண்ணி
துணை கோரியே வாழ்வோம் – சுகத்தில் ஆழ்வோம்
(பார் புகழும்)

திரு. நா. பிச்சுமணி.

## "ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமி நாமம் சொல்லு"

### காவடிச் சிந்து

ஆனைமுகன் தம்பியைப் பாட – முத்
தானைமுகன் மலர்ப் பாதம் காப்பாகச் சூட

ஆறுமுகன் என்றொருகால் சொன்னால் – பாவம்
அத்தனையும் பறந்தோடிப் போகுமே தன்னால்

நீறெடுத்து நெற்றியிலே இட்டு – அவனடி
நித்தமும் ஒருதடவை மனதிலே தொட்டு

தொழுதிடுவார் தம்எதிரே வருவான் – அவர்கள்
தொந்தவினை அத்தனையும் தீர்த்தருள் புரிவான்

தீராத வியாதியும் தீரும் – பாரில்
தேடாத செல்வமும் தேடிவந்து சேரும்

வள்ளிதெய் வானை மணவாளன் – கோலப்
புள்ளிமயில் மீதுவரும் நன்னய குணாளன்

பன்னிருகை கொண்ட வடிவேலன் – தன்
பக்தர்க்கு இரங்கியருள் பார்வதியின் பாலன்

ஒன்று மறியாதவன் நானே – என்றன்
உள்ளமதில் நின்றுகவி பாட வைத்தானே

இல்லறத்திலும் இன்ப முண்டு – என்று
எடுத்துரைக்க மனசிலே எண்ணமும் கொண்டு

செந்தூரில் கோவிலும் கொண்டான் – தன்
சிந்தைமகிழ் செய்ய இரு தாரமும் கொண்டான்

சம்சாரம் தன்னிலிருந் தாலும் – ஒரு
சன்யாசி போலவே வாழ்ந்திடலு மாகும்

என்றே எல்லோர்க்கும் உபதேசம் – செய்ய
எண்ணியே ஏகினன் எந்தை பரதேசம்

அன்றுமுதல் பழநிமலை வாசம் – செய்யும்
ஆண்டவன் கொண்டானே ஆண்டிவேஷ நேசம்

சாதிமத பேதம் கிடையாது – அவன்
சம்சாரம் வள்ளியும் சாதிக் குறமாது

அப்பனே பெரிய மலையாளி – இவன்
ஆத்தாளோ குறச்சாதி வழிவந்த காளி

அண்ணனே வேழமுகம் உடையோன் – இவன்
அம்மானே அந்தரத்தில் அலைகின்ற நெடியோன்

கோழியைக் கொடியாகக் கொண்டான் – பசிக்
கொடுமையைப் போக்கப் பஞ்சாமிர்தம் உண்டான்

இடும்பனுக்கு வீடுதந்த ஈசன் – மிக்க
ஏழைக்கும் இரங்கியருள் ஞான விசுவாசன்

அம்மா என்று ஓடிவரும் பிள்ளை – தன்னை
அணைக்கின்ற உயிர்களை இன்பத்தில் பிணைப்பான்

சுப்பிர மணியனை நம்பு – அதனால்
தோன்றாது உலகத்தில் எப்போதும் வம்பு

குன்றுதோ றாடிவரும் வேலன் – அவன்
கூடவே பேசிவரும் பன்றிமலை சீலன்

ஆத்திகரை ஆளும் செங்கோலன் – மற்றும்
நாத்திகர்க்கும் முருகனருள் கூட்டும் அனுகூலன்

பன்றிமலை சாமி நாமம் சொல்லு – சுற்றி
நின்றழுத்தும் தீவினையை அடியோடு வெல்லு.



## ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை ஸ்வாமிகள் பேரில் அமிர்தப்பத்து

1 பன்றிமலை வளர் வாசா – நமோநம
பக்தர் உள்ளப் பிரகாசா – நமோநம
பழனி ஆண்டவர் நேசா – நமோநம–குருநாத

2 ஏழை செல்வர் அபேதா – நமோநம
இடர்களைந்திடும் நீதா – நமோநம
வாழவைக்கவந்த தாதா – நமோநம–முகம்பாராய்

3 அன்பு வழி செல்லும் மின்னே – நமோநம
அறத்தின் பொருள்சொல்லும் பொன்னே – நமோநம
நண்பனாக வந்த கண்ணே – நமோநம–அருள்தாராய்

4 இல்லறம் செய்யும் நாதா – நாமோநம
வள்ளி நாயகன் தூதா – நமோநம
சொல்லுக்கரிய விநோதா – நமோநம–துணைநீயே

5 போக பாக்ய உல்லாசா – நமோநம
யோக வாக்ய நன்நேசா – நமோநம
சோகம் தீர்க்கும் முருகேசா – நமோநம–பணிந்தோமே

6 தன்னை உணர்ந்துள்ள துய்யா – நமோநம
சங்கு சக்ரமுள்ள கையா – நமோநம
கந்தன் குடிகொண்ட மெய்யா – நமோநம–அவதாரா

7 கால மூன்று முணர் சீலா – நமோநம
வேலன் காட்சிபெற்ற பாலா – நமோநம
பாலர் கிழவர் பணிதாளா – நமோநம–அனுகூலா

8 மாசில்லாத நல்முத்தே – நமோநம
மயக்கம் நீக்கிடும் வித்தே – நமோநம
ஏகவார்க்கும் அருள்சித்தே – நமோநம–கணம்வாராய்

9 நம்பன் விளைத்த நல் ரோஜா – நமோநம
நாஸ்திகம் விரட்டும் தேஜா – நமோநம
நம்பினோர் துதி ராஜா – நமோநம–குறைதீராய்

10 பேசும் தெய்வ சொரூபா – நமோநம
பிணிகள் தீர்க்கும் பிரதாபா – நமோநம
வீசும் அருளொளி தீபா – நமோநம–எனையாளாய்

## 'ஆதிமூல முருகா' என்ற மெட்டு

(முல்லண்ட் முருக மாமா திரு. கோதண்டராமய்யர்)

அல்லல் தீர்க்கும் குருவே – அன்பர்களின்
தொல்லை போக்கும் குருவே
கல்லை கையிற்தந்து அதனை யொரு
கற்கண் டாக்கும் குருவே

ஆண்டி வேடம் பூண்ட – ஆறுமுகன்
அருளைப் பெற்ற குருவே
வேண்டி உம்மை பணியும் – பக்தர்மனக்
குறை யகற்றும் குருவே

இல்லறத்தைக் கொண்டே – இறைவனது
ஜோதி கண்ட குருவே
சல்லிசாமி தொடர்பை யேற்றுபல
சக்தி பெற்ற குருவே

ஈரமற்ற மனதை கொண்டவரும்
நேரில் உம்மை காண
பரம மகிழ்ச்சியோடு உம்மையே
பார்த்து நிற்பதேனோ

உலக முழுதும் சுற்றி உன்னத
சித்து பலவும் செய்து
திலகம் போன்றே ஜ்வலிக்கும் – எங்களின்
திவ்ய ஞான குருவே

ஊன்மை வாயைத்திறந்து பேசுவதும்
என்னே உங்கள் மாயம்
கூனும் குருடும் கூட உம்மைக்கண்டு
குதித்து மகிழ்வதென்ன ?

எளியோர் குறையகற்றும் எண்ணமதை
என்றும் மனதில் கொண்டு
சலிப்பில்லாமலுழைக்கும் உமதடியில்
சரணடைந்தோம் குருவே.

ஏக்கம் கொண்ட ஏழைநோக்கமதை
எளிதில் கண்டு கொண்டு
தீர்க்கும் வழியைச்செய்து அன்னவரை
திகைக்க வைக்கும் குருவே

ஐங்கரனிளைய சோதரன் அரிய
சக்தி பெற்று
வையகத்தோர் குறையை போக்கும்நீர்
வாழ்க என்றும் குருவே

ஒருமுறை உமதுநாமத்தை உச்சரித்தபேர்க்கு
குறைவு ஏதும் இல்லை என்பதை
அறிந்து கொண்டோம்
குருவே

ஓடி வந்தோம் குருவே உமதடியை
நாடி வந்தோம் குருவே
கூடி நின்று உமது புகழை என்றும்
பாடி மகிழ்வோம் குருவே.

ஔவை முன்பு அறியாச் சிறுவன்போல்
நின்று பரிகசித்த
கௌரி பெற்ற பாலன் முருகனை
தினமும் போற்றும் குருவே

குழந்தை வடிவமான முருகனை
போற்றிப் பணியும் அடிமை
கோதண்ட ராமன் போற்றும்குருநாதர்
என்றும் வாழ்க வாழ்க.

★ ★ ★

பன்றிமலைத் தெய்வமே – உன்
பாதமலர் பணிவமே

உலகினில் உயர்ந்த
ஒரு பெரும் பொருளின்

பல் கலைக் கழகம்
பாரினில் திலகம்

சென்றிடும் திசைகளில்
செல்வமே பெருகிடும்
செகமெலாம் உன்னருளால்
செம்மையே ஓங்கிடும்

ஏழை எளியவர்க்கு
இரங்கும் பரம் பொருளே
எங்கும் உன் புகழாலே
இன்பமே! அருள்தாராய்

பசித்தழும் குழவிக்குப்
பாலூட்டும் தாய்போல
பாவங்கள் நிறைந்தெம்மை
பரிந்தணைத் தருள் செய்வாய்

(திரு. கண்ணன்)

★ ★ ★

## இசைப் பாடல்கள்

ராகம்-வலஜி. தாளம்-ஆதி.

**பல்லவி**

நினைந்து நினைந்து உள்ளம்
உருகிடுதே — எந்தன்
உயரிய பன்றிமலை சுவாமிகளை என்றும் (நினைந்து)

**அனுபல்லவி**

பாரதம் புகழ்ந்திடும் பண்புடையோர் அவரே
பழனிமலையாண்டியின் அன்பில் திகழ்ந்தவரே
(நினைந்து)

**சரணம்**

ஆண்டியும் அரசனும் அனைவரும் வந்திட
அணையா புகழிடம் அடைந்தவரும் அவரே
மூப்பிலும் அவரிடம் முருகன் இளமை கொஞ்சும்
முன்னோடி வந்து மக்கள் சேவையும் செய்திடுவார்
(நினைந்து)

திரு. த. சா. தியாகராசன்.

* * *

ராகம்-பிலஹரி. தாளம்-ஆதி.

பல்லவி

பாத தரிசனமே எந்தன்
பாப விமோசனமே ஸ்வாமி உம் — பாத

அநுபல்லவி

பன்றிமலை ஸ்வாமி உன் பாதம் பூசித்து
பக்தியுடன் உம்மை பணிந்தேன் பணிந்தேன் — பாத

சரணம்

அலமேலு மங்கைக்கு நேத்திரம் தந்த
அநேக பேய்களை துரத்திய தேவ
கலியுக அவதார காருண்ய மூர்த்தியும்
கண்கண்ட தெய்வத்தை நான் கண்டேன்
கண்டேன் — பாத

( திருமதி. P. மீனாக்ஷி. )

* * *

பல்லவி

பன்றிமலை சுவாமி பாதம் – நெஞ்சில்
பற்றியவர்க் கேது பாரிலபாயம் – (பன்றிமலை)

சரணம்

தீராத துன்பங்கள் தீர்க்கும் – மிகத்
திடமான நம்பிக்கை உடையவர் யார்க்கும்
சேராத இன்பங்கள் சேர்க்கும் – இந்தச்
சென்மம் கடைத்தேற்றிச் சேமத்தை ஊட்டும் (பன்றிமலை)
சொத்துண்டு சுகமுண்டென்றாலும் – உளம்
துறவோடும் உறவாடும் தூயவனாகும்
சத்திமகன் வடிவேலன் – புகழ்
தன்னையே எண்ணி மகிழ்தவசீலன் (பன்றிமலை)

பல்லவி

பன்றிமலைக் கரசே – உந்தன்
பாதத்துணை எனக்கே. (பன்றிமலை)

அனுபல்லவி

முன்னைப்பழம் வினைமுற்றும் அறுத்தென்னைப்
பொன்னைப் போலாக்கிடுவாய் – மெய்ப்
போதத்தை ஊட்டிடுவாய். (பன்றிமலை)

சரணம்

வானமுகி லெனவோ – நின்
வண்மைக் குணஞ் சொலவோ!
மோனத்தின் மத்தியிலே – ஒளிர்
ஞானத்தின் முத்தனேயாய்!
கான மயிலேறும் – வள்ளிக்
காதல் மணவாளன்
ஆன முருகேசன் – அருள்
ஆர்ந்த குருநாதா – (பன்றிமலே)

ராகம்: தோடி. பல்லவி

சற்குரு தாளிணே பணிமனமே ஸ்ரீ பன்றிமலே
வாழ் மெய்ஞான தேவா தமது. (சற்)

அனுபல்லவி

கலியுக வரதனும் கந்த வேளின் உருவாய்
கருணே மிகக்கொண்டு அடியார் தம்மை ஆட்கொள்ளும் (சற்)

சரணம்

உண்மை வழிகாட்டி உபதேசமும் தந்து
இன்மொழி சொல்லியே சித்துகள் செய்திடும்
ஓங்கார ரூபனும் முருகனே நினேந்திட
அருள் நெறி பரவிடும் சக்தி சமேதவும். (சற்)

இராகம்: ஹிந்தோளம் பல்லவி

ஸ்ரீ குருநாத உமது பத மறவேன் ஸ்ரீ பன்றிமலே
நாதா உம்மையே சரணடைந்தேன் என் (கு)

அனுபல்லவி

அகில மெல்லாம் உமது அருள் ஒளி பரவிட
அகமகிழ்ந்தே நான் அனுதினமும் பணிய (கு)

சரணம்

வந்தவினே அகற்றி கருணே மழை பொழியும்
வறுமை, பிணி அகற்றி வளம் பெறச் செய்திடும்
நின் மலரடி நினேந்து உருகுமடியார்கள்
கணம் உம்மை மறவாமல் பணிய அருள், தாரும். (கு)

பல்லவி

பாதபூஜை செய்வோம் – வாரீர்
ஸ்ரீ பன்றிமலே சுவாமிகட்கு – நாம் (பாத)

அனுபல்லவி

பாலும் பன்னீரும் பரிமள சந்தனமும்
தேனும் தயிருடன் தூய திருநீறுடன் – (பாத)

சரணம்

மல்லிகை முல்லை மணமுள்ள ரோஜா
மலரெடுத்து நாமும் மங்கள கரத்துடன் – (பாத)

தூபதீபம் காட்டி துல்லிய மனதுடன்
அன்னைக்கும் தந்தைக்கும் ஆரத்திசெய்து மகிழ்வோம்
— (பாத)

* * *

## தவத்திரு பன்றிமலை சாமிகள் கீர்த்தனைகள்

(திரு. T. D. மீனாட்சிசுந்தரம்)

இராகம் : பந்துவராளி — தாளம் : ரூபகம்

பல்லவி

பன்றிமலை அப்பனே
பரமகிருபா கரனே — பன்றிமலை

அனுபல்லவி

இன்றெமக்கு அப்பனாய்
அம்மையாய் வந்தருள் — பன்றிமலை

சரணம்

கள்ளம் கபடு சூதுவாது மொய்த்திடும்
கருணையிலா உலகில் நைந்தே வாடிடும்
உள்ளம் வெதும்பி மனம் உடைந்தே நிற்குமெமக்கு
ஊக்கம் கொடுத்துயிரை ஊனில் திளைக்கவைக்கும்
— பன்றிமலை

இராகம் : பிலஹரி — தாளம் : ஆதி

பல்லவி

பன்றிமலை தெய்வம் — பேரின்பம்
ஊட்டும் அருள் தெய்வம் — பன்றிமலை

அனுபல்லவி

ஒன்றி உளம் சுரந்து உன்புகழ் பாடியே
விண்சுகம் தேடியே உன்றன் அடிதொழுதோம்
— பன்றிமலை

சரணம்

சுந்தர சொற்களும் சார்ந்த மலர் முகமும்
மங்களப் புன்னகை மகிழும்நின் ரூபமும்
கந்தனருள் கொழிக்கும் கைவளம் கொண்டவா!
விந்தை வளத்தைக்காட்டும் வித்தகனே வடிவேல்
— பன்றிமலை

இராகம்: காபி தாளம்: ஆதி

பல்லவி

பன்றிமலை மகிபன் — பரமனடி
பணிந்தோம் அனுதினமே மனமே — பன்றிமலை

அனுபல்லவி

குன்று தோறுடிடும் குமரன் தாள் வழுத்திடும்
கந்தன் அருளாளன் கற்பகமே புனிதன் — பன்றிமலை

சரணம்

தென்றல் தவழ்கின்ற தண்புனத்திலே
நன்றென வேற்றுருவில் வில்லேந்தியே
குன்றில் குறவள்ளியை கண்டுகண்டுகளித்து
வென்று மணத்தில் கொள்ளும் வள்ளி மணவாளன்
அன்பா — பன்றிமலை

இராகம்: சரஸ்வதி தாளம்: ரூபகம்

பல்லவி

பரம கருணா — கர
பன்றிமலை சாமி நேயா — பரம

அனுபல்லவி

அருணோதயமாகி நின்றீர்
அருள் வழங்கினீர் — ஈசா — பரம

சரணம்

அவனன்றி ஓர் அணு அசையா
அருமை காட்டினீர்
கருணாம்ருத வாரிதியே
கலைஞான குரு — தேவா — பரம

## ஸ்ரீ பன்றிமலை சாமிகள்

### கும்மிப் பாட்டு

(திரு. T. D. மீனாட்சிசுந்தரம்)

கும்மியடி பெண்கள் கும்மியடி பெண்கள்
கூடிக் கும்மியடியுங்கடி
செந்தில் குமரன் அருள் பெற்ற நிர்மலன்
சாமி கண்டு அடியுங்கடி
வம்புகள் செய்து வளம் கொண்ட வள்ளியை
வாரியணைத்த வடிவேலன்
அம்பு மலர்க்கணை ஆரம்புனைந்திட்ட
சாமி கண்டு அடியுங்கடி
செங்கதிர் தாமரை ஆயிரம் தேனிதழ்
செக்கச் சிவந்திட்ட ஓர் சபையில்
தங்கித் தழைத்து திளைத்து மகிழுறும்
சாமி கண்டு அடியுங்கடி
விந்தை புரிந்தவன் மாயக்கண்ணன் அவன்
விந்தை விளக்கிட வந்தவன்டி
சிந்தை குளிரக் கருத்தைக் கருத்தாட்டும்
சாமி கண்டு அடியுங்கடி
பன்றிமலையிலே பரணி மீனிலே
பங்கயம் போலே பிறந்தானடி
குன்றுதோறாடிடும் குறத்தி மணாளனின்
சாமி கண்டு அடியுங்கடி
குன்றம் பழநிக்குச் செல்பவனும் செல்வ
குன்றம் திருப்பதி செல்பவனும்
மன்றத்தில் ஆடிடும் செல்வ நடராஜன்
சாமி கண்டு அடியுங்கடி
மாந்தரின் உள்ளம் கொள்ளை கொள்ளுவான்
மன வியாதியை நீக்கி அருள்புரிவான்
காந்தமெனவே நம்மை யெல்லாம் ஈர்த்திடும்
சாமி கண்டு அடியுங்கடி
கற்கண்டு பன்னீர் கனகமழை பெய்து
காவலனாய் நம்மைக் காத்திடுவான்
கற்றவர் மற்றவர் உள்ளம் கவர்கள்வன்
சாமி கண்டு அடியுங்கடி.

திருத்தவத்திரு

# பன்றிமலை சாமிகள்

## பாகம் — இரண்டு

## 26. குணசீலர்

" நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே — நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே அவரோ
டிணங்கி இருப்பதுவும் நன்று."

தண்ணீரின் சிறப்பு அது பாயும் நிலத்தில் காணும் விளைச்சல்; தக்கோர் சிறப்பு அவர் வள்ளல் தன்மை; பெண்களின் சிறப்பு அவர் கற்பு; நல்லோரின் சிறப்பு மாறுது ஊற்றுப் பெருக்கெடுக்கும் அவர் கருணை.

" தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணம் கொடையால்
கண்ணீர்மை மாறுக் கருணையால் — பெண்ணீர்மை
கற்பழியா ஆற்றல் கடல்சூழ்ந்த வையகத்துள்
அற்புதமாம் என்றே அறி" — நல்வழி.

திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள் அன்பிலும் பண்பிலும் சிறந்தவர்; கருணையே உருவினர்: கருணையே பண்பினர்: கருணையே செயலினர். அற்புதம் ஆடுகின்ற வள்ளலாகிய சாமிகளிடத்தும் என்றும் குடிகொண்டிருக்கும் அற்புதமும் ஒன்று; அது தான் அவரின் வான் கருணை இயல்பு. அவருடைய சீல குணத்திற்கே அடிப்படையாக அமைந்துள்ளது அவரின் எல்லையில்லாக் கருணை. அவருடைய மாதா பிதா அன்பும், குழந்தைகள் மீது அவருக்கு எழுகின்ற பாசமும் மாணவ மணிகளின் நன்மையில் அவருக்குள்ள அக்கறையும் மக்கள் நலத்தில் அவர் கொண்டுள்ள பெருங் கருணையும் கேட்டுப் பருகப் பருகத் தித்திக்கும் தெவிட்டாத அமுதமாக வளர்கின்ற இயல்பின. இந்தப் பேரன்பு மக்கள் கருணையோடு நின்று விடுகின்றதா? அது அவர் வீட்டில் வளர்க்கின்ற பிராணிகள் மீதும் வாஞ்சையாக வளர்கின்றது. இயற்கை அழகிலும் ஒரு பெரும் ஈடுபாட்டையும் உண்டாக்குகின்றது. கடவுளுடைய இயல்பை எடுத்துக் காட்டும் பெரியவர்கள் அதை 'வான் கருணை' என்றே வருணித்தார்கள். சாமிகளும் நமக்குக் காலந்தவறுது பொழியும் 'வான் கருணை'யாகவே வாய்த்துள்ளார். அவரைக் கண்டும் அவர்

திருமொழிகளைக் கேட்டும் இன்புறும் நாம் அவருடைய குணாதிசயங் களை உரைத்தும் இன்புறுவோம். கருணை அமுதாக விளங்கும் சாமிகள் குணசீலராக விளங்குவதையும் படித்து இன்புறுவோம்.

## பெற்றோர்மேல் அன்பு

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'

சாமிகள் பெற்றோரிடத்தில் வைத்திருக்கும் அன்பு பக்தி விஸ் வாசத்தோடு கூடியது. சாமிகளுடைய ஆந்மீக வளர்ச்சிக்கு உறு துணையாக அமைந்தவர் அவருடைய தந்தை ஆறுமுகம் பிள்ளை. அவர் கொடுத்த ஊக்கம்தான் சாமிகளது அருள்பலத்தைப் பெருக்கியது. இன்றும் தன் அருமையான தந்தையாரை நினைக் கும் போதெல்லாம் சாமிகள் தன்னையறியாமலேயே அவருடைய குண நலன்களை எடுத்து இயம்புவதுண்டு. "என் அப்பா ஆறு முகம்பிள்ளை முருக உபாசகர். தண்ணீரில் துண்டு போட்டு உட் காரவும் நடக்கவும் சித்திபெற்ற பெரியார். எங்கள் பகுதியிலேயே மிருக வைத்திய நிபுணரென்றே கூறக்கூடிய அளவிற்கு ஆற்றல் பெற்றவர். மூலிகை மருந்து கொடுப்பதிலும் வல்லவர். ஊரார் மதிப்பைப்பெற்று வாழ்ந்தவர். அவருக்கு ஆறுவிரல்களுண்டு" என்று அந்த அதிர்ஷ்ட மனிதரைப்பற்றி அருமையாகப் பேசுவர் சாமிகள்.

தன் மைந்தன் தவசீலர், பலருடைய அருள்பெற்ற சக்திபாலன் என்பதை ஆதியிலேயே உணர்ந்துகொண்ட தந்தை, தம் குழந்தை உண்மை அறிவை 'ஐந்து வயதினிலே அறியாப் பருவத்திலேயே' எட்டிப் பிடித்ததை அறிந்து

"பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்ற வள்ளுவர் வாக்கை நன்குணர்ந்தார். மக்களுக்குத் தன் பணியை செய்து உயர்ந்த பண்பட்ட ஆறுமுகம்பிள்ளை மனது தம் மகனும் அவன் பெற்ற இணையில்லாத பேரறிவாலும் உலகம் உய்ய வேண்டுமென்றே கருதியது.

"தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது"
"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்".



பாதபூஜை வைபவம்

**திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகளும்**
**திருமதி. அன்னையார் அவர்களும்**

" அன்புறுவாம் பன்றிமலை அருள்அரசே போற்றி
ஆனந்தம் ஊட்டுகின்ற ஆரமுதே போற்றி
இன்பத்தேன் உவந்தளிக்கும் எழில்மலரே போற்றி
ஈசனருள் நிழலளிக்கும் இன்பமுதே போற்றி "

(திரு. ரா. பு. தங்கராசன்)

என்ற வள்ளுவ நெறிமொழிகளுக்கு ஏற்பத்தன் மகனுக்கு அவன் மனமுவந்து ஏற்ற தவநிலைக்குத் தந்தை குறுக்கே நிற்கவில்லை; அந்தத் தவமே தரணிசெழிக்க வளரவிடவேண்டும் என்று தனயனுக்குக் கூறி அவன் தவ ஆர்வத்திற்கு வேண்டிய உற்சாகம் கொடுத்தார், உதவியும் செய்தார். பழநியில் தன் குமரன் பழநி மலைக்கு அடிக்கடி சென்றுவரும்போதும் ஊக்கம் ஊட்டினார். சட்டிசாமிகள் கற்றுக்கொடுத்த மந்திர பூஜையில் தன் பையனுக்கு முதலில் பயம் ஏற்பட்டு மறுபடியும் பூஜையை ஆரம்பிக்கலாமா என்று மைந்தன் தன்னிடம் கேட்டபோதும், பூஜையைத் தொடர்ந்து செய்ய மற்றவர்களைப்போல் தடையாக இல்லாமல், உற்சாகமூட்டினார் ஆறுமுகம் பிள்ளை. தன் குமரன் பூஜையைத் தொடர்ந்து செய்ய இத்தகைய அறிவாளித் தந்தையாராலல்லவா மைந்தன் அருளொளியாக வளரமுடிந்தது.

சாமிகளும் சிறுவயதிலிருந்து அப்பாவின் சொற்கள் கேட்டு வளர்ந்தார். பையன் ஒன்றைக் கேட்டு இல்லையென்று அப்பாவும் உரைத்ததில்லை; அப்பா ஒன்று கேட்டு இல்லையென்று தனயனும் உரைத்ததில்லை. தன்னுடைய மைந்தனின் மனம் ஈஸ்வரனிடத்தில் லயித்து உலக இன்பத்தை மறந்திருக்கும் நாளில், தந்தை ஆறுமுகம் பிள்ளை அவர்கள் மணவாழ்வைப் பற்றியும், இல்லறம் நல்லறம், துறவறத்திற்குத் தடையில்லாதது என்பதைப் பற்றியும் குமாரனிடம் விரித்துரைத்த போதும் தந்தையின் குறிப்பறிந்து தந்தை இஷ்டம் போலவே திருமணம் செய்துகொள்ளத் தன் முழுச் சம்மதத்தைக் கொடுத்தார் சாமிகள். இதைப்பற்றி ஒருநாள் சாமிகள் பேசிக் கொண்டிருந்தபோது அழகான கருத்தைக் கருத்தாடச் செய்வதில் புகுந்து விட்டார். "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்று ஔவைப் பிராட்டியார் கூறியிருக்கின்றார். அப்பாவையே தன் சொல்படி ஆட்டி வைக்கின்ற இவ் உலகில் அப்பாவின் சொல்படி நடக்கும் குழந்தைகளும் இருக்கின்றனர். அப்பாவின் சொற்களை சிரமேற்கொண்டு வாழ்கின்ற தனயர்களுக்கு இந்த வார்த்தைகள் முற்றும் பொருந்தும். தந்தை சொல்லி விட்டால் அந்தச் சொல்லை தாண்டமாட்டார் பிள்ளை. அதையே வேத வாக்காகக் கொள்வர். அதுவே பிள்ளைக்கு மந்திரம். ஏனெனில் தகப்பனே பிள்ளைக்குத் தெய்வம். இதுதான் சாதாரணமாக நமக்குச் சொல்லிக்கொடுத்த பொருள். இந்தச் சொற்றொடரை கருத்தில் செலுத்திக் கருத்தாடினால், சிந்தித்துப் பார்த்தால், ஆராய்ந்தால் உண்மைப் பொருள் விளங்கும். உண்மைப் பொருள் எது? உலகமே எதற்காகப் பாடு படுகின்றது? ஆத்மீக அனுபவமிக்கப் பெரியார்கள் பாடுபடுவது எதற்காக? நானும் நீங்களும் பாடுபடுவது எதற்காக? இந்த உண்மைப் பொருளைக் கண்டுபிடிப்பதற்காகத்தான்! உண்மைப் பொருள் எது? தந்தை சொல் மிக்க மந்திரமில்லை. அந்த தந்தை

சொல் என்ன? வேறென்றும் இல்லை. 'ஓம் நமசிவாய' என்ற திருமந்திரம்தான். இதற்கு மேலும் ஒரு திருமந்திரம் உலகில் உண்டோ''

'தந்தை சொல்' என்பதற்கு அரிதான விளக்கத்தை எளிதான உரையில் இனிதாக உரைத்தருளிய சாமிகளைப் பெற்றெடுத்த தந்தையின் தவம்தான் என்னே!

''மகன் தந்தைக்காற்றும் உதவி இவன் தந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்''

இது எவ்வளவு பொருத்தமாக ஆறுமுகம் பிள்ளைக்கு அமைந்து உள்ளது!

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதைச் சாமிகள் நடைமுறையில் காண்பித்து வருகின்றார். திண்டுக்கல்லில் 'இராஜ ரத்தின' விலாஸ் இல்லத்தில் சாமிகளின் அருமை பெருமைகளை விளக்குகின்ற புகைப்படங்கள் எவ்வளவோ உண்டு. சிஷ்யகோடிகளோடு சாமிகள், சிஷ்ய குடும்பத்தாரோடும் சாமிகள், முக்கிய வைபவங்களிலும் சாமிகள், பெரு மனிதர்களோடும் சாமிகள்—இப்படி சாமிகளின் படங்கள் எவ்வளவோ உண்டு. இவற்றுள் ஒரு படம் என் உள்ளத்தில் ஊன்றி விட்டது. அதுதான் சாமிகள் ஓர் உயரிய இடத்தில் தன் அன்னையை அமர்த்தி அவரடியின்கீழ்த் தானும் அமர்ந்து தாய்க்கு அஞ்சலி செய்யும் புகைப்படம். சாமிகளின் திருக்கரம் இந்தப் படத்தில் அன்னைக்கு பக்தி விஸ்வாசத்துடன் வணக்கம் செலுத்துகின்றது. தன்னை ஈன்ற தெய்வத்தைப் பணிகின்றது, நாம் பணிகின்ற பேசும் தெய்வம்!

இன்னும் ஓர் அபூர்வ நிகழ்ச்சி ஞாபகத்திற்கு வருகின்றது. 1966இல் சாமிகளோடு பழநிக்கு ஸ்ரீ தண்டபாணி தரிசனத்திற்குச் சென்றிருந்தோம். ஆண்டவன் தரிசனம் முடித்துக்கொண்ட மெய்யன்பர்கள் சாமிகளுடைய திவ்விய பாதமலர்களைத் தொட்டு வணங்கி நின்றனர். எல்லா பக்தர்களும் தம் திருத்தாள்களுக்குத் தரையில் சாஷ்டாங்கமாக விழுந்து வணக்கம் செலுத்தும் வரை சாமிகள் உட்கார்ந்த இடத்தை விட்டு நகரவில்லை. கடைசி பக்தர் தம் வணக்கம் முடித்துக்கொண்டவுடன் சாமிகள் உற்சாகத்தோடு எழுந்தார். அடுத்து அருகில் அமர்ந்திருந்த தன் அன்னையின் பாதங்களில் தன் திருமேனி பூமி தோயப் படிந்து பணிந்த சாமிகளின் அன்னை பக்தியை என்னென்று இயம்புவது! குருவுக்கு அஞ்சலி செய்த பக்தர்கள் யாவரும் குருவின் அன்னைக்கும் குருவைப் போல அஞ்சலி செலுத்தினர் என்று சொல்லவும் வேண்டுமோ! அன்று அன்னையின் அடிகளை வழுத்திய சாமிகள் அப்போது அன்னை பக்தியைப்பற்றி இன்பம் ஓங்கப் பேசினார்.

சாமிகள் : நம்மைப் பெற்றுத் தாலாட்டிப் பாராட்டி வளர்த்தவள் நம் தாய். தனக்கு எவ்வளவு கஷ்டங்கள் வந்தாலும் நமக்கு ஒரு கஷ்டமும் வராதபடி பாதுகாப்பவள் நம்மைப் பத்து மாதம் சுமந்து பெற்ற தாய். இவள் நமக்குப் பேசும் தெய்வம். அதனாலல்லவா அன்னைக்கு முதல் இடம் கொடுத்து, 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று போற்றுகிறோம். அன்னையை அல்லவா முதலில் தொழவேண்டும்.

## சாமிகளும் குழந்தைகளும்

"சேய் போல் இருப்பக் காண்பீர்
உண்மை ஞானம் தெரிந்தவரே"

"கடந்த ஞானியும் மறப்பரோ மக்கள் மேல் காதல்"

சாமிகள் குழந்தை உள்ளம் படைத்தவர். குழந்தைகளோடு பழகும்போது குழந்தையாகவே மாறிவிடுவர். குழந்தைகளோடு கூடி இருக்கும்போது அந்தக் குழந்தைகளைப் போலவே விளையாடுவர். சிறு வயதுக் குழந்தைகளாக இருந்தால் அதே ஒத்த வயதுக் குழந்தையாகவே மாறி சாமிகள் விளையாட ஆரம்பித்துவிடுவர். ஏழு வயதுஎட்டு வயது இளங் குழந்தைகள் ஒருசமயம் சாமிகளோடு அன்பொழுகப் பேசிக் கொண்டு சாமிகளைச் சுற்றிக் கொண்டிருந்தனர். சாமிகளும் குழந்தைகளோடு குழந்தையாக மாறி விளையாட ஆரம்பித்துவிட்டார். ஒரு பண்டைய நாள் காசை வைத்துக்கொண்டு 'பூவா தலையா' என்ற விளையாட்டை ஆட ஆரம்பித்தார் சாமிகள். 'பூ' வேண்டுமென்றால், தூக்கிப்போட்ட காசு பூவைக் காட்டிக் கொண்டு பூமியில் விழும். தலை யென்று சொன்னால் தலை தான் வரும். இப்படியே கேட்டதை வெகுநேரம் முகம் சுளிக்காது மனம் சலிக்காது குழந்தைகளுக்குக் காட்டி அவ்விளையாட்டால் சிறுர்களுக்கு மகிழ்ச்சி ஊட்டினார். சாமிகள் சொன்னபடியே கேட்கும் காசைக்கண்டு ஆச்சரியப்பட்டார்கள். குழந்தைகள் சாமிகளைக் கண்டும் பேரானந்தம் கொண்டனர். 'மந்திரம் கால் மதி முக்கால்' என்று அடிக்கடி சொல்கின்ற சாமிகளும் குழந்தைகளிடம் இந்த விளையாட்டைக் காட்டியபோதும் மந்திரத்தை உபயோகித்தாரா அல்லது மதியைத் தான் பயன்படுத்தினாரா என்ற சந்தேகம் உதிப்பதும் இயற்கையே; ஏனெனில் காசைத் தூக்கிப் போடும் ஒவ்வொரு தடவையும் காசு சொல்படியல்லவா ஆடுகின்றது!

செயல் தூய்மை கொண்ட சாமிகள் சொல் தூய்மைகளுக்கும் உறைவிடம். சாமிகள் யாருக்கும் கொடுத்த வாக்கை மறந்துவிடவே மாட்டார்கள். குழந்தைகளாயிருந்தாலும் அவர்களிடம் சொல்லாமல் சொன்ன மொழிகளையும் மறந்துவிடும் இயல்பினர் அல்லர். "இராஜ இரத்தினம்" என்ற சாமிகள் இல்லத்தைப் பழுதுபார்த்துக் கொண்

டிருந்த சமயத்தில் பின்புறத்தில் உள்ள தோட்டத்தைச் செப்பனிட வேண்டி இருந்தது. அந்தத் தோட்டத்தில் ஓரிடத்தில் கீதா எனும் ஒரு சிறுமி தன் கையால் ஒரு முல்லைச் செடியை நட்டுவைத்தாள். அந்த முல்லைச் செடி செழித்து வளர்ந்தது. சாமிகள் வீட்டுக்கு வரும்போதெல்லாம் வளரும் செடியைக் கண்டு வளரும் குழந்தையும் உவகை கொள்வதுண்டு. தன் உவகையைச் சாமிகளிடமும் சொல்லி மகிழ்வதுண்டு. குழந்தை நட்டு வைத்த செடியால் மனம் மகிழ்வதைக் கண்டு மனம் பூரிப்பர் சாமிகள். ஒரு நாள் 'இராஜ இரத்தின' விலாச இல்லத்தை விரிவுபடுத்த 'பிளான்' ஒன்று தயார் செய்யும் போது, இந்தச் செடியுள்ள இடத்தையும் கட்டிடம் கட்டிக் கொள்ளச் சேர்த்துக் கொள்ளலாமா என்று பொறியியல் நிபுணர்கள் சாமிகளைக் கேட்டனர். "இந்த இடத்தை விட்டு விடுங்கள்," என்று மூன்றே வார்த்தைகளில் கண்டிப்பாக உரைத்து விட்டனர் சாமிகள்; காரணம் இந்தச் செடி அவர்கள் திட்டத்தால் அடிபட்டுவிடும்; அதனால் குழந்தையின் பிஞ்சு உள்ளத்திற்கு ஏமாற்றம் ஏற்பட்டுவிடும் என்பதே. செடியைக் குழந்தை நடும்போதும் அது செழித்து வளர்வதைக் கண்டு குழந்தை மகிழ்ச்சியை அறிவித்த போதும் செடிக்கு ஓர் ஆபத்தும் வராது என்பதையல்லவா சாமிகளின் புன்முறுவல் எடுத்துக் காட்டியது. குழந்தைக்கு இப்படிச் சொல்லாமல் சொன்ன வாக்கையும் காப்பாற்றவேண்டும் என்ற மனத் தூய்மை அல்லவா செடியை அகற்றி அவ்விடத்தில் கட்டிடம் கட்டச் சாமிகளை விடவில்லை.

குழந்தை உள்ளங் கொண்ட சாமிகள் பெரியோர்களையும் தம் கள்ளம் கபடமற்ற உள்ளத்தால் தம் வசம் கொள்ளும் பெருந்தகை, பெரியோர்களும் அவர் சூது வாதற்ற செயல்களில் ஈடுபட்டுக் குழந்தைகளாக மாறிவிடுவதும் உண்டு. குழந்தைகளுக்கும் கல்கண்டு வரவழைத்துக் கொடுப்பர். பெரியோர்களுக்கும் கல்கண்டு வரவழைத்துக் கொடுப்பர். தம் திருக்கரம் கொண்டு குழந்தைகைகளில் ஆசையோடு அறைந்தால் ஒரு பாறைக் கற்கண்டு கைகளில் வந்து பொருந்தும். புஷ்பத்தையோ விபூதிப் பிரசாதத்தையோ குழந்தை கைகளில் வைத்தாலும் அவை கற்கண்டுகளாக மாறிவிடும். விதவிதமான கற்கண்டுகளையும் சாமிகள் குழந்தைகளுக்கு வரவழைத்துக் கொடுப்பார். பாறை போன்ற பெரும் கற்கண்டுக் கட்டிகள் : அச்சுச் சூடம் போன்ற அழகான சதுரக் கற்கண்டுப் பில்லைகள்: பனங்கற்கண்டு: சீனு கற்கண்டு — இப்படிக் கற்கண்டுகளில் பலவிதம்.

பன்றிமலையில் காலையிலும் மாலையிலும் சாமிகள் வெளியே சென்று வீட்டுக்குத் திரும்பும் போதெல்லாம் ஒரு குழந்தைக் கூட்டமே சாமிகளின் வருகைக்காகக் காத்துக்கொண்டிருக்கும். சாமிகள் திரும்பி வரும்போது குழந்தைகள் வழியில் வரிசையாக நின்று சாமிகளின் பாதங்களை வணங்குவர். அப்போது உளமுவந்து

சாமிகள் அவர்களுக்குக் கற்கண்டு வரவழைத்துக் கொடுப்பார். சில சமயங்களில் சாமிகள் சிறுவர்களின் ஒத்தாசையால் பூப்பந்து விளையாடும் நிலத்தைச் செப்பனிட்டு விளையாடச் சரியாக்கி விடுவர். அப்போதும் குழந்தைகள் கைகள் நிறையக் கற்கண்டுக் கட்டிகள் ஏராளமாகச் சாமிகள் இஷ்டப்பட்டபோது வந்து சேரும்.

ஒருநாள் திண்டுக்கல்லில் பூஜைமுடித்தவுடன் வழக்கம்போல் சாமிகள் பூஜைஹாலில் – பின்பகுதியில் திரைக்குப்பின் அமர்ந்து கடைசியாக வந்திருந்த பக்தர் ஒருவருக்கு அருள்பாலித்துக் கொண்டிருந்தார். திரைக்கு வெளியே ஹாலில் நானும் சில பக்தர்களும் எங்கள் குடும்பங்களோடு வீற்றிருந்தோம்; எங்கள் குழந்தைகள் அங்கு விளையாடிக் கொண்டிருந்தனர். திடீரென்று நாங்கள் இருந்த இடத்தில் படபடவென்ற சப்தம் கேட்டோம். ஆலங்கட்டி மழை பெய்வது போன்ற ஓர் ஓசை; சுற்றிலும் பார்க்க பெரும் பாறைகள் உருவில் கற்கண்டுக் கட்டிகள் சிதறிக் கிடக்கக் கண்டோம்; பெரும்பாறை கற்கண்டுக் மழையல்லவா பெய்திருக்கின்றது. சிதறிக்கிடக்கும் கற்கண்டுப் பாறைகளைப் பொறுக்க 'நான் முன்னே நீ முன்னே' என்று எங்கள் குழந்தைகளும் நாங்களும் முந்திக்கொண்டதைக் கண்டு எங்கள் குடும்பத் தலைவிகளும் வாய் விட்டுச் சிரித்து விட்டனர். வாய்விட்டுச் சிரித்தவர்கள் அடுத்த நிமிடமே எங்களிடமிருந்து நாங்கள் பொறுக்கி எடுத்துக்கொண்ட கற்கண்டுகளில் பங்குக்கு முந்திக்கொண்டனர். குழந்தைகளைப் போலவே, கற்கண்டுக் கட்டிகளை எங்கள் குடும்பத்தோடு பகிர்ந்து சுவைத்துச் சாப்பிட்டபின்தான், 'சாமிகள் அல்லவா இந்தக் கற்கண்டு மழையைப் பெய்யச்செய்தார்' என்பதை உணர்ந்தோம். பேராச்சரியத்தோடும் பேருவகையோடும் எங்கள் நன்றியைத் தெரிவிக்கத் திரைக்கு உள்ளே இருந்த சாமிகளிடம் ஓடோடினோம். கற்கண்டுமழை பெய்ததையும் உரைத்தோம், "கற்கண்டு மழையா? எனக்கு ஒன்றும் தெரியாதே" என்று புன்னகையோடு ஒன்றும் தெரியாதவர்போல் சாமிகள் கூறினர். விஷயத்தைப் புரிந்து கொண்ட சாமிகளிடம் திரைக்குள் அருள்பிரசாதம் வாங்கிக்கொண்டிருந்த வயது முதிர்ந்த ஒருவர் கல்கண்டுத் துண்டுக்காக ஆசையாலும் ஆச்சரியத்தாலும் உந்தப்பட்டுத் திரைக்கு வெளியே ஓடி வந்தார். ஆனால் ஒரு கல்கண்டுக் கட்டிகூட விட்டுவைக்காமல் எங்கள் சிறிய குழந்தைகளும் பெரிய குழந்தைகளாகிய நாங்களும் தான் முன்னேயே முந்திக்கொண்டோமே? திரைக்கு வெளியில் இருந்தவர்களுக்குக் கிட்டியது தனக்கு எட்டவில்லையே என்ற ஏக்கம் பெரியவர் முகத்தில் படர்வதைக்கண்ட எங்களில் ஒருவர் அவருக்குத் தன்னிடமிருந்த கற்கண்டுக் கட்டிகளில் ஒன்றை மனமுவந்து வழங்கினர். இவற்றையெல்லாம் திரையை விலக்கிப் பார்த்துக் கொண்டிருந்த சாமிகள் வாய்விட்டுச் சிரித்துவிட்டார் எங்கள்

குழந்தைச் செயலைக்கண்டு! கற்கண்டுக்காக நாங்களும் முந்திக் கொண்டோம் அவற்றைப் பொறுக்கி எடுத்துக்கொள்ளக் கடைசி யாகத் திரைக்குள்ளிருந்து பிந்திவந்த பெரியவரும் முந்திக்கொள் கின்ருர் திரையையும் சாமிகளையும் விட்டே! சிறியவர்களையும் பெரிய வர்களையும் கபடு சூதற்ற குழந்தைகளாக்கிக் கற்கண்டளித்து மகிழ்ச்சியூட்டிய குழந்தையுள்ளச் சாமிகளின் போக்கில்தான் எவ் வளவு கனிந்த அன்பும் கருணையும் தோய்ந்திருக்கின்றது.

சில சமயங்களில் குழந்தைகளோடு சாமிகள் விளையாடிக் கொண் டிருக்கும்போது உற்சாகம் பெருகிவிடும். குழந்தைகளுக்குப் பாட்டுப்பாடி மகிழ்விக்கக்கூடிய அளவு உற்சாகம் பெருகிவிடும். கதையைச்சொல்லிப் பாட்டைப்பாட ஆரம்பித்துவிடுவார்; ''பாட்டி லிருந்து ஒரு பாட்டி வருவாள், அவள் தோசைச் சுட்டு விற்று வயிற்றை வளர்க்கும் பாட்டி. அவளுக்கு ஒத்தாசை செய்ய ஒரு பக்கத்து வீட்டுச் சிறுவன். அவன் செய்யும் வேலைக்குத் தினம்தினம் ஒருதோசை கூலி ஒருநாள் எண்ணெய் வாங்கிவரச் சொன்னுள் பாட்டி. மறுத்துவிட்டான் சிறுவன். தினக்கூலி ஒரு தோசையை யும் கொடுக்க மறுத்துவிட்டாள் பாட்டி. கோபம் பொத்துக் கொண்டு வந்தது பையனுக்கு. அதனுல் ஆப்பச்சட்டியைப் பொத்துக்கொண்டுச் சென்றது பையன் வீசிய கல். எப்படிக் கதை இருக்கின்றது. இதே கதையைப் பாட்டிலே பார்ப்போம்! கவனி யுங்கள்'' என்று கூறிப் பாட்டை ஆரம்பிப்பார் சாமிகள்.

1. காலை தோறும் அடுப்புக் கூட்டி
   காப்பி அப்பம் தோசை சுட்டு
   கடைத்தெருவில் விற்று வந்தாள் — ஒரு கிழவி

2. எடுத்த வேலை செய்யும் படி
   அடுத்த வீட்டுப் பையனுண்டு
   கூடச்கூடவே கொடுத்து வந்தாள் — ஒரு அப்பம்

3. எண்ணெய் வாங்கி வரச் சொல்லவே
   எண்ணமில்லாச் சின்ன பையன்
   மாட்டேனென்று மறுத்து விட்டான் — மறுமொழியும்

4. மாட்டேனென்ற பையனுக்கு
   அப்பம் தர மாட்டேனென்ருள்
   போட்டான் கல் அப்பச்சட்டி — சிதறிடவே.

இந்தப் பாட்டைப் பாடிக் காண்பித்த சாமிகள் கூடியிருந்த குழந்தைகளுக்குப் புத்திமதியும் கூறினுர். ''தம்பி, பாட்டைக் கேட் டீர்கள். கதையும் கேட்டீர்கள். கதையில் வந்த பையன் துஷ்டப்

பையன். நீங்கள் எல்லோரும் நல்ல பிள்ளைகள். பெரியவர்கள் இட்ட வேலைகளை உடனே மறுக்காமல் செய்து முடிப்பீர்கள். கோபமே உங்களுக்கு வராது. நீங்கள் அந்தப் பொல்லாத பையனைப் போன்று ஒருநாளில் கூட கல்லைக் கையில் எடுக்கமாட்டீர்கள். என்னப்பா தம்பி! இத்தக் கதையில் வந்த பாட்டிபோல் ஒருவரும் கிடைக்கவில்லையே என்று எண்ணுகிறாயா? இப்படி ஒரு பாட்டி கிடைத்துவிட்டால் ஒரு அப்பம் அல்லவா தினமும் கிடைக்குமே என்று எண்ணுகிறாயா? கதை கேட்டதற்கு உங்களுக்குக் கூலி வேண்டாமா? இந்தா கற்கண்டு" என்று சொல்லி அவர்களுக்கு ஜல்லிக்கல் அளவுள்ள பெரிய கற்கண்டுக் கட்டிகளை வரவழைத்துக் கொடுத்தார்.

சாமிகளோடு பக்தர்கள் எப்போதும் கூடி இருப்பர். பக்தர் கூட்டத்தில் ஒருபகுதி குழந்தைகளும் உண்டு. சாமிகள் அருள் வாக்கைப் பருகிக் கொண்டே இருப்பர் இந்த பக்தர்கள். சாமிகள் உற்சாகத்தோடு இறை இன்பத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும் போதும் கூட்டத்தில் குழந்தைகளும் இருக்கின்றனர் என்பதை மறந்து விடுவதில்லை. அவர்களையும் மகிழ்விக்க அருள் உரையாடல் நடுவில் சிறு விடுகதையோ, சிறு கதைகளையோ சொல்வர். குழந்தை களின் இனிமைச் சொற்களைக் கேட்டுத் திளைக்கும் சாமிகள் சில சொற்றொடர்களைக் கூறி அவைகளைக் குழந்தைகளைக் கொண்டு திருப்பித் திருப்பி சொல்லச் சொல்வர். அந்தச் சொற்றொடர்கள் கரடுமுரடானவை. திருப்பித் திருப்பிச் சொல்வதற்கு அவ்வளவு சுலபமானவை அல்ல. சில சொற்றொடர்கள் திருப்பித் திருப்பிச் சொல்வதற்குச் சுலபமானவை போன்று தோன்றும். திருப்பித் திருப் பிச் சொல்ல பாடுபடும்போதுதான் தெரியும் அது அவ்வளவு சுலப மான வேலை இல்லை என்பது. குழந்தைகளுக்கு மட்டுமல்ல, அந்த நேரங்களில் குழந்தைகளாக மாறிவிடுகின்ற பெரியவர்களுக்கும் அவைகளைத் தொடர்ந்து கூறுவது சாத்தியமாவதில்லை.

சாமிகள் : மயில் அகவுது
யானை பிளிறுது
மரவுரல் உருளுது.

இதைத் திருப்பித் திருப்பிச் சொல்லுங்கள்.

குழந்தைகளும் ஒவ்வொருவராகத் திருப்பித் திருப்பிச் சொல்லிப் பார்க்க முந்துவர். அதன்பின் பெரியவர்களும் முந்துவர்.

அதற்கடுத்தாற்போல் சாமிகள் மற்றொரு சொற்றொடரை எடுத் துக் கொடுப்பர்.

"சத்து தங்கச் சத்து
சுக்கு சொத்த சுக்கு"

இதைத் திருப்பித் திருப்பிச் சொல்ல முந்துபவரில் அநேகம் பேர் சத்து தங்கச்சத்து என்று சொன்னவுடன் சுக்கு என்பதை மறந்து விட்டு சொத்து என்று சொல்லித் தடுமாறுவர். இதைக்கேட்டு எல்லோரும் கொல்லென்று வாய்விட்டுச் சிரிப்பர். இதைச் சொல்லிப் பார்ப்பவர் ஒரு பெரியவராக இருந்துவிட்டால் குழந்தைகளின் கணீர் சிரிப்பு வானைப் பிளக்கும் அளவு பெருகிவிடும்.

இதற்கடுத்தாற்போல் கொஞ்சம் கரடுமுரடான சொற்றொடர்களையே சாமி எடுத்துக் கொடுப்பார், மற்றவர்கள் அதைத் திருப்பித் திருப்பிச் சொல்ல.

"கொல்லா குறடெற டுதடா
எறடி சிறுகுறடு முறிகுதடா"

தங்கச் சத்துக்கும் சொத்தச் சுக்குக்குமே படாத பாடுபட்ட வாய்க்கா இந்தக் குறடு–இறடு சொற்களை வெற்றிகரமாகத் திருப்பித் திருப்பிச் சொல்ல முடியும்! பல்லே தெறித்துப் போவது போலல்லவா சொற்றொடர் அமைந்துள்ளது!

ஒருநாள் ஸ்ரீரங்கத்தில் திரு. சுப்பையா செட்டியார் வீட்டில் சாமிகள் ஒரு பத்து வயதுச் சிறுவனுடன் அன்போடு பேசிக்கொண்டிருந்தார்.

சாமிகள்: நீ இவ்வளவு கெட்டிக்காரனாக இருக்கின்றாயே. நான் ஒரு மனக்கணக்கு சொல்கின்றேன்; விடை சொல்கின்றாயா, எட்டேகால் ரூபாய்க்கு ஐம்பத்து ஐந்து நோட் புத்தகம் வாங்கினால், இரண்டேகால் ரூபாய்க்கு எவ்வளவு நோட் புத்தகம் வாங்குவாய்?

பையன் யோசித்து யோசித்துப் பார்த்தான். பதில் வரவில்லை. உடனே ஒரு பேப்பரையும் பென்சிலையும் தேட அடியெடுத்து வைத்தான். சாமிகள் பையனை அழைத்து அவனது கையில் தமது திருக்கரத்தால் விபூதியை வைத்தனர். வைத்த விபூதியை தன் திருவாயால் ஊதினார். என்ன ஆச்சரியம்! 15 என்ற எண் சாமிகள் ஊதி இருந்த இடத்தில் விபூதியால் எழுதப்பட்டிருந்தது.

சாமிகள்: என்னப்பா, உன் கையில் எழுதி இருக்கின்றது?

பையன்: பதினைந்து எனும் எண்.

சாமிகள் : அதுதானப்பா நான் கேட்ட கேள்விக்குப் பதில். இரண்டேகால் ரூபாய்க்குப் பதினைந்து நோட்புக்கு கொடுப்பார்கள்.

சாமிகள் சிலசமயம் குழந்தைகளின் அறிவுக்குச் சட்டென்று எட்டு கின்ற கேள்விகளைத் திடீரெனக் கேட்டுத் திடீரெனப் பதிலையும் எதிர் பார்ப்பர். ஒரு கூட்டத்தில் இரண்டு கெட்டிக்காரக் குழந்தைகள் உடனே தக்க பதிலைத் தந்தனர். சாமிகளும், கூடியிருந்தவர்களும் கேட்டு மகிழ்ந்தனர்.

சாமிகள் : முருகனை உங்களுக்குத் தெரியும். அவன் வள்ளி மணவாளன். வேலாயுதன். பழநிமலையிலும் இருப்பவன். பல கோயில்களில் இருப்பவன். நமக்கு வேண்டிய உதவி செய்யும் கடவுள். அப்பேர்ப்பட்ட தெய்வமாகிய முருகனுடைய பெயரையும் சொல்லவேண்டும். அப்படிச் சொல்லி முடிக்கும்போது வாயையும் மூடவேண்டும். எங்கே பதிலை சொல்லுங்கள்.

ஒரு பையன் : சுப்ரமணியம்!

ஒருபெண் குழந்தை : ஆறுமுகம்!

சுப்ரமண்யம், ஆறுமுகம் என்று உரைத்த குழந்தைகளில் ஒரு குழந்தை பதில் உரைக்க, அதன் வாயும் மூட, அந்த மூடிய வாயைத் திறவாதிருந்தது, சாமிகள் சிரிப்பையும் கூடியிருந்தோர் சிரிப்பை யும் எழுப்பி விட்டது.

ஒருநாள் குழந்தைகளோடு அவர் நிலைக்குத் தகுந்தாற்போல் பேசிக் கொண்டும், அதே சமயம் பெரியோர்களோடும் அளவளாவிக் கொண்டும் வந்த சாமிகள் பெரியவர்களையே சிந்திக்க வைக்கும் ஒரு பழமொழியை எடுத்துரைத்தார்.

சாமிகள் : தொட்டில் பழக்கம் சுடுகாடுமட்டில் என்று சொல் கின்றார்களே, அது உண்மையா!

ஒருவர் : உண்மைதான் சாமிகளே! ஒருவன் சிறு குழந்தையா யிருக்கும்போது என்ன கற்றுக்கொள்கின்றானோ, அந்தப் பழக்கத் தைக் கடைசி வரையில் விடுவதில்லை.

சாமிகள் : அநேகமாக தொட்டிலில் உறங்கும் ஒருவயது இரண்டு வயதுக் குழந்தைகள் எல்லாமே விரலைச் சப்புகின்ற வழக் கத்தை யார் சொல்லிக் கொடுக்காமலும் தாமே கைக்கொள்கின்றனர். அந்தக் குழந்தைகள் பெரியவர்களாகியுமா விரலைச் சப்பிக்கொண் டிருக்கின்றன? அந்தச் சிறுவயதில்தான் செய்கின்றன. அதன் பின் இவ்வழக்கம் தானே மறைகிறது!

சிறிது நேரம் சாமிகள் மௌனமாக இருந்தார். பக்தர்களும் சாமிகளையே ஆவலுடன் தக்க பதிலுக்காக எதிர்நோக்கி இருந்தனர்.

சாமிகள்: தொட்டில் பழக்கமாக நிலைத்து நிற்கும் விரல் சப்புவது தானாகவே ஏற்பட்டுத் தானாகவே மறைந்துப்போகும் பழக்கம். கடைசிவரையில் நிலைத்துநிற்கக் கூடிய பழக்கம் விபரம் அறிந்தபோது மனிதரால் மேற்கொள்ளக்கூடிய பழக்கம். அந்தப் பழக்கம் நல்லதோ, கெட்டதோ? அந்தப் பழக்கத்தைத் தொட்டு விட்டால் அதை விட்டுவிடுவது கஷ்டம். புகையிலையைக் கை மட்டுமா தொடுகிறது. மனமும் அதை விரும்பித் தொட ஆசைப்படுகின்றது. அப்படித் தொட்டுவந்த வழக்கங்கள்தான் நெடுநாள் பழக்கமாகி விடுகின்றன. அவைகளை விட்டுவிட அவற்றை முதலில் தொட்டு அனுபவித்த மனமும் விரும்புவதில்லை. இப்பொழுது பாருங்கள் பழமொழியைத் "தொட்டப் பழக்கம் சுடுகாடுமட்டில்" இப்படித்தான் இருக்க வேண்டும் பழமொழி. தொட்டில் பழக்கம் என்று இருக்க முடியாது. அது தொட்டப் பழக்கம் என்றுதான் இருக்கவேண்டும். ஏனென்றால், தொட்டில் பழக்கம் விரல் சப்புவதைப் போன்று மறைந்துவிடும். தொட்ட பழக்கம்தான் கடைசிவரையில் நீடித்து நிற்கும், புகையிலை போடுவது போன்று! இது உண்மைக்குப் பொருத்தமாக இருக்கின்றதா?

கருத்தைக் கருத்திட்டு ஆட்டவல்ல சாமிகளின் அறிவாற்றல் இது போன்ற பழமொழிகளைக் குழந்தைகளுக்கும் மற்றவர்களுக்கும் அளித்துச் சிந்தனையைத் தூண்டிவிடும். "குருவிக்குத் தகுந்த இராமேஸ்வரம்" என்றால் என்ன? என்பதைக் கேட்டுவிட்டுச் சிறிது நேரம் பொறுத்து "குறிக்குத் தகுந்த இராமர் சரம்" என்பது எப்படி நாளடைவில் மருவி குருவியாகவும் இராமேஸ்வரமுமாக மாறிவிட்டதென்பதை உரைப்பர். இப்படியே, "குட்டுப்பட்டாலும் மோதிரக்கையால் குட்டுப்படணும்" என்பதைச் சொல்லி அதற்கும் பொருள் கேட்பர். கூட்டத்தில் இருந்த ஒருவர் – அவர் குழந்தை யல்ல ஒரு பெரியவர்தான் – இதற்கு விளக்கம் கொடுத்தார். "பெரியவர்கள், குழந்தைகள் தவறு செய்தால், திருத்த குழந்தை கள் தலையில் கொட்டுவர். பெரியவர்கள் சாதாரணமாக விரல் களில் மோதிரம் அணிந்திருப்பர். இப்படி மோதிரக்கையால் பெரியவர்களிடமிருந்து கொட்டு வாங்குவது குழந்தையைத் திருத்த உதவுகின்றது." என்ற விளக்கம் ஓரளவு ஒத்துக்கொள்ளக்கூடிய தாயிருந்தாலும் சாமிகள் கூறிய அதன் உட்பொருள் அதுவரை புரியாத எங்களுக்குக் கணபதியை நினைத்து அஞ்சலி செய்ய உதவியது.

சாமிகள்: இதுவும் காலப்போக்கில் மருவிவந்ததே. 'குட்டுப் பட்டாலுங் மோதகக்கையான் குட்டுபடணும் என்று சொல்லிப்

பார்த்தால் அதன் உட்பொருள் மனத்துக்கு ஏற்றதாகவும் இருக்கின்றது? எவ்வளவு இன்பமாகவும் அது கேட்பதற்கு இருக்கின்றது? ஒரு தெய்வத்தின் கரம் நமது சிரசின்மேல் பட்டால் அதுவே நமக்கு விமோசனம் தரும் பெரும்பேறல்லவா? அதுவும் எதையும் வெற்றிகரமாக முடித்துக் கொடுக்கும் கணபதி கை நம் தலையில் படுவதால் நமது அறிவும் வளரும், மங்களமும் பெருகும், அந்தக் கணபதியின் கையை வைத்து மோதகக்கையான் என்று கூறுகின்ற நாம் அவன் வடிவை வைத்தும், வயிற்றை வைத்தும் கொம்பை வைத்தும் எப்படியெல்லாம் கேலிசெய்யும் வகையில்கூடக் கணபதியைப்போற்றித் தொழுகின்றோம் பாருங்கள்.

"குள்ளக் குள்ளனை
குண்டு வயிறனை
வெள்ளைக் கொம்பனை
விநாயகனைத் தொழு"

இப்படி இனிக்க இனிக்கப் பேசும் சாமிகளது மகிமையைப் பாப்பாப் பாட்டொன்றில் பாடி மகிழ்வோம்.

**பல்லவி**

பாடு பாப்பா பாடு பாப்பா
பன்றிமலை சித்தரைப் பாடு பாப்பா — பாடு

**சரணங்கள்**

1. கூடும் அருளின் மலைமீது பிறந்தார்
குன்றில் உறை வேலனைக் குருவாய்க் கொண்டார்
நாடும் பழநிமலை ஆண்டவன் கண்டார்
நாட்டத்தை அவர்மீது ஏற்றி மகிழ்ந்தார் — பாடு

2. நோக்கமறிந்துனக்கு நீதி சொல்லுவார்
நேயமுடனுனது ஆசை அறிவார்
ஏக்கமுடனே நீயும் அவரைக் கண்டால்
ஏக்கத்தைப் போற்றிடவே அருளும் செய்வார் — பாடு

3, பாட்டுக் கதைகளையும் கேட்டு மகிழ்வார்
பிட்டுக்கு மண் சுமந்த கதையும் சொல்வார்
ஏட்டுச் சுவடறியா சித்துக்கள் செய்வார்
இனிக்கும் கற்கண்டு வகை தந்து மகிழ்வார் — பாடு

4. கற்கண்டு கனிகளை வரவழைப்பார்
காகித அருள் சீட்டு வரவழைப்பார்
அற்புத விபூதி மஞ்சள் குங்குமம்
அற்புதமாக வன்றோ வரவழைப்பார் — பாடு

5 பையன் ஒருவனுக்கு மனக்கணக்கு
போட்டிட பையனுமே பென்சிலைத் தேட
ஐயன் அருள்கூர்ந்து அவன்கையிலே
அற்புத விடைதந்தார் விபூதியாலே — பாடு

6 கெட்ட மனிதருக்குப் புத்தி சொல்லுவார்
கையால் படமெழுதி உயிர் ஊட்டுவார்
தொட்ட கடிதத்தின்மேல் தேளும் வருமே
தூயவர் ஆக்கும் அவர் திறனுமென்னே — பாடு

7 பொய்யைப் புளுகுகின்ற பாமரருக்கும்
புத்தி புகட்டிடவே காகித மொன்றில்
ஐயன் தேனீக்களையே படம் போட
அவைகளுமே கிளம்பும் அற்புதமாக — பாடு

8 கையைத் தொடுவார் அந்தக் கைதனிலே
கமழும் அற்புதமணம் ஐவ்வாது
கையைத் தொடாமலுமே பலமணங்கள்
கைதனில் ஏற்றிடுவார் அற்புதமாய் — பாடு

9 பிரம்பை அறையினுள்ளே வைத்திடுவார்
பரமனைப் போலே அதை ஆடு என்பார்
பிரம்பும் நடராஜன்போல் நடமாடும்
பிரம்பும் பறந்துவந்து கையிலேகூடும் — பாடு

10 ஒரு தூணில் கட்டி விட்ட சாமிகளையே
ஊராரும் பார்த்து நின்றுர் பன்றிமலையில்
மறுதூணில் சாமிகளும் மாறும் விந்தையை
மக்களும் கண்டுமிக மகிழ்வடைந்தார் — பாடு

11 நல்லவர் அவரென்று பாடுபாப்பா
நாட்டுக்கு நன்மைவரப் பாடுபாப்பா
வல்லவர் அவரென்று பாடுபாப்பா
வரங்கள் அருள்வீர் என்று பாடுபாப்பா — பாடு

12 எல்லோரும் இன்பமுறப் பாடுபாப்பா
ஏக்கம் கவலைதீரப் பாடுபாப்பா
நல்லோரின் நாயகரைப் பாடுபாப்பா
நாடுசிறக்க நன்ருய்ப் பாடுபாப்பா — பாடு

## மாணவர்களுக்கோர் மணிவிளக்கு

சாமியிலே பலசாமி உண்டு — மேலே
சாம்பல் அள்ளிப்பூசும் சாமி உண்டு
சடைமுடி தரிக்கும் சாமி உண்டு -- பட்டைச்
சாதத்துக்காகச் சாமியான துமுண்டு
கர்விகட்டும் சில சாமியுண்டு — கைமேல்
காணிக்கை கேட்கிற சாமிஉண்டு

அந்தவகை இல்லை இந்தசாமி
ஆறுமுகன் அருள் பெற்றசாமி.

குழந்தைகளுடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்ட சாமிகள் மாணுக்கர்களின் மணிவிளக்காகவும் விளங்குகின்ருர். "இன்றைய மாணவர்களே நாளை நம் நாட்டைத் திறம்பட நடத்தும் கடமையுணர்வுடைய மக்கள் திலகங்கள். அவர்கள் கல்வி கேள்வி அறிவோடு வளரவேண்டும். அஞ்சாநெஞ்சோடு அறத்திற்காக எந்த நிலையையும் சமாளிக்கக் கூடிய தர்ம வீரர்களாக வாழவேண்டும். ஆத்மீக சாதனைகள் மிகுந்திலங்கும் நமது நாட்டு ஆத்மிகப் பொக்கிஷங்களைக் காக்கவேண்டும். அருள்நெறி தழைத்தோங்கி வாழவேண்டும். அறத்தையும் அன்பையும் பேணி இல்லறத்தை நல்லறமாக அடைந்து வையத்தில் சீரும் சிறப்பும் பெற்று வாழ வேண்டும். விஞ்ஞானம் தலைதூக்கி இருக்கும் இன்றைய கல்வியுலகில் விஞ்ஞான அறிவிலும் சிறந்திருக்க வேண்டும். நமது நாட்டின் சேவைக்கு மக்கள் நலனுக்குப் பொறியியல் துறையிலும், மருத்துவத் துறையிலும், விஞ்ஞானத் துறையிலும், வர்த்தகத் துறையிலும் எண்ணற்ற மாணவர்கள் தேவை. அதோடுகூட அருள் துறையிலும் அவர்கள் ஈடுபாடு இன்றியமையாதது. மாணவர்கள் விஞ்ஞானிகளாவதோடு மட்டுமின்றி மெய்ஞானிகளாகவும் வாழ வேண்டும். இதுவே என்னுடைய ஆசை. அதனுல் அவர்கள் பெருமகான்களுடைய அறிவாற்றல் பெற்றுத் தாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற அடிப்படைத் தத்துவத்தில் வாழ்க்கையை வகுத்துக்கொள்ள வேண்டும். – இப்படியே சாமிகள் மாணவர் நலனைப்பற்றி உரையாடல் நிகழ்த்துவர்.

இந்த உள்ளம் பேசும் உரையாடலோடு அவர் ஆர்வம் நின்று விடுவதில்லை. மாணவர்கள் விருப்பத்திற்கும் செவிசாய்த்துத் தம்மால் இயன்ற உதவியையும் அருளுவர். மாணவர் உடனடியாக விரும்புவன தொழில் கல்லூரிகளில் சேர்வது, சேர்ந்தவுடன் பரீட்சைகளில் நல்லவிதமாகத் தேர்வடைவது. முந்தியது பூர்த்தியடைய மாணவர்கள் மட்டுமல்ல, மாணவர்களின் பெற்ருேர்களே

சாமிகளின் ஆசியை அடைய முந்துவர், பிந்தியது பூர்த்தியடைய மாணவர்களே சாமிகளின் அருள்பிரசாதத்திற்கும் வருவதுண்டு, இந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் அவர்களுக்கு நல்லாசி கொடுப்பதுடன் நல்ல புத்திமதிகளும் உரைப்பர் சாமிகள். தம்மால் இயன்ற உதவி புரிவதற்கும் சாமிகள் தயங்கியதே இல்லை. இந்த நேரங்களில் மணம் பெருக்கும் விபூதி நாசிகளுக்கு இன்பம் ஊட்டும்; அருள் பெருக்கும் சாமிகளின் விழிகளும் மொழிகளும் உள்ளத்திற்கு உவகை ஊட்டும்.

இத்தகைய அருங்குணவானை, அன்பின் சிகரத்தை, மாணவர்களின் மணிவிளக்கை மாணவர்கள் போற்றுமலா இருப்பர்? 5—7—58இல் கலமேறிக் கடல்கடந்து பக்திநெறி பரப்பச்சென்ற ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் தம்பதிகளுக்குச் சென்னை மாணவர் குரல் எனும் பத்திரிகை வழியனுப்பி வாழ்த்திதழ் அளித்தது. "பக்தி மார்க்கத்தைப் பாரெல்லாம் பரப்ப, கடல்கடந்து மலேயா செல்லும் இல்லறமாம் நல்லறத்தின் துறவற வாழ்வு நடாத்தி நானிலத்துக்கோர் தனிசிறந்த எடுத்துக்காட்டாய் விளங்கும் பன்றிமலை தம்பதிகாள், .........மலேயா வாழ் மக்கள்தமை அருள் நெறியில் உய்த்து, மருள்நீக்கி, அன்பெனும் பிடியுள் அகப்படும் முதியோன் முருகனைக்காட்டி, நல்வழிப்படுத்தி, நலமொடு நும் அருள் தொண்டை இனிதே முடித்துத் தமிழகத்தின் பெருமையைப் பெருக்கி விரைவில் மீண்டும் எங்கள் முகம் நோக்க புகழொடு திரும்புமாறு பெரும் பெயர் முருகனை இறைஞ்சுகிறோம்" என்று ஒலித்தது மாணவர் குரல். மாணவர் குரல் என்ற பத்திரிகையைப் பேசவைப்பது மாணவர் உள்ளங்களல்லவா?

இந்த மாணவரின் அன்பும் அருமையும் சாமிகளை மலாயாவுக்கு வழியனுப்புவதோடுகூட நின்றுவிடவில்லை. சாமிகளுடைய திருவுருவப் படத்தையே தாம் பயிலும் பச்சையப்பன் கல்லூரிப் பள்ளிக்கும் உவந்தளிக்கச் செய்தது மாணவர்களையும் அவர்களை நல்வழியில் ஈடுபடுத்தும் ஆசிரியர்களையும் அந்தப் பள்ளியையே செவ்வையாக நடத்திவந்த தலைமை ஆசிரியர் திரு. T. செங்கல்வராய முதலியாரையும். இந்தத் திருவிழாவுக்கு அன்று உயர்நீதிமன்ற நடுவர் V. சுப்பிரமணிய நாடார் அவர்கள் தலைமைதாங்கிச் சாமிகள் திருவுருவப்படத்தைத் திறந்து அரியதொரு சொற்பொழிவும் நிகழ்த்தினர். சாமிகளது இனிய பண்புகளையும் இனிய மொழிகளின் இயல்பையும் உணர்த்த, அவர்கள் இனிய படம் அந்தப் பள்ளி மாணவர்களுக்கு ஒரு வழிகாட்டும் திருப்படம் என்பதையும் விழாத்தலைவர் விளக்கினர். சாமிகளின் திருக்கடாட்ச முகப்பொலிவினைக்கண்டு அனுபவித்த மாணவர்களின் உள்ளங்கள் இதற்கு முன் சாமிகள் தம்பள்ளிக்கே வருகைதந்து உரையாடிய அழகினை

யும் அவர்கள் அன்பினையும் நினைவுபடுத்திக்கொண்டு மட்டற்ற மகிழ்ச்சியில் பொங்கி இருந்தனர்.

சாமிகள் குணநலன்களால் மாணவர் உலகம் நலம்பெறும் என்ற ஆர்வத்தில் பல உயர்நிலைப்பள்ளிகள் சாமிகளை அன்போடு வரவேற்கின்றன. அவரது அருளை நாடி அவரது ஆசியை நாடி மலேயாவிலும்கூட இத்தகைய மணிவிளக்கை மாணவர் உலகம் விட்டுவிடவில்லை. சமீபத்தில் 1965ஆம் ஆண்டு திருப்பதியில் ஜவஹர்லால் நேரு உயர்நிலைப்பள்ளியில் சாமிகளுக்கு ஏற்பாடாகியிருந்த அமோக வரவேற்பு சாமிகள் அங்கிருக்கும் ஆசிரியர் உள்ளங்களில் மட்டுமல்ல மாணவர் இள உள்ளங்களிலும் கோவில் கொண்டு விளங்குகின்றார் என்ற உண்மையைத்தான் விளங்க வைத்தது. இந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் சாமிகள் மேடைப் பிரசங்கத்தில் மாணவர்களுக்கு அறிவுரை வழங்குவர். தனித்தனியாக மாணவர்களைச் சந்தித்தும் அளவளாவுவர். சாமிகள் திருவுளம் பேருவகையடையும்போது சிலருக்கு கற்கண்டுகளும் சர்க்கரையும் கிடைக்கும். கடையிலிருந்து வாங்கி வந்தவையல்ல, சாமிகளே தம் அருள் சக்தியால் நீட்டிய கரங்களுக்கு உடனடியாக உள்ளமுவந்து அருள்சக்தியால் வழங்குபவை. இதைப்பற்றியே மாணவர்களுடைய சிந்தனையும் ஆராய்ச்சி வேலையில் தீவிரமாக ஈடுபடுவதுண்டு.

ஒரு மாணவன்: சாமி கற்கண்டை வரவழைத்துக் கொடுத்தாரே. இது கண்கட்டி வித்தையோ? ஜாலமாயிருக்குமோ?

மற்றொரு மாணவன்: அப்படி இருக்கமுடியாது. கண்கட்டி வித்தை செய்பவர் அவர்கள் வரவழைக்கும் பொருள்களை முன் கூட்டியே வாங்கித் தம்மோடே கொண்டுவருவர். கொண்டுவரும் பொருள்களை நமக்குக் காட்டாமல் அவர்தான் கொண்டுவரும் பெட்டிடியில் மறைத்து வைத்திருப்பர். சாமி வரும்போது அவர் வெறுங் கையோடுதானே வந்தார். கூட ஒன்றும் கொண்டுவரவில்லையே. இது ஒருவேளை அவர் மந்திரசக்தியால்தான் வந்திருக்கும்.

ஒரு மாணவன்: மந்திரமோ, தந்திரமோ நமக்குக் கற்கண்டு கிடைத்தது. சாமி நம்மைப் போன்றவரல்ல. மாயாஜாலக்காரருமில்லை. ஒரு பெரிய மகான்தான்! அவரால்தான் இப்படி சித்தெல்லாம் ஆடமுடியும்.

மாணவர்களுடைய மதிப்பிடலுக்கொப்ப சாமிகள் ஒரு பெரிய மகான்தான். ஆம்! ஒரு பெரிய மகானால்தான் இத்தகைய சித்துக்கள் ஆடமுடியும்!

சாமிகள் தம் அருட்செய்கையால் மாணவர் உலகை ஆட்கொள்வர். மாணவரிலும் நாத்திகம் பேசும் செயலாற்றல் மிக்கோரையும் தன்வசப்படுத்தக்கூடிய செயலாற்றல் கொண்டவர். திரு. எஸ். சரபன் 1961 ஆண்டில் டில்லி சர்வகலாசாலையில் எம். ஏ. வகுப்பில் படித்துவந்த மாணவர். தான் படித்த சர்வகலாசாலை வாத விவாத போட்டியில் சாமி இல்லையென்று விவாதித்து முதற்பரிசு பெற்ற பேச்சாளர். இவருக்கு 10—7—61இல் சாமிகளின் தரிசனம் கிடைத்தது. அன்றேடு அவருடைய கொள்கையும் மாறியது. கடவுள் இருப்பது உண்மை என்றும் சாமிகள் முருகப்பெருமானின் திவ்விய சொரூபி என்றும் உரைக்க ஆரம்பித்தார். 'கடவுள் மனிதனின் மனப்பிரமையே அன்றி வேறு ஒன்றுமில்லை' என்றிருந்த அசைக்க முடியா உள்ளத்தவரை அசைக்க வைத்தது சாமிகளுடைய செயலாற்றல். ஒரு வெறும் காகிதத்தில் சாமிகள் இவரைத் தேனீக்கள் வரையச் சொன்னர். திரு. சரபன் தேனீக்களை வரைந்தார். இந்தத் தேனீக்கள் கடிக்குமா என்று சாமிகள் கேட்க, திரு. சரபன் கடிக்கமுடியாதென்றார். உடனே சாமிகள் 'கடி' என்று சொல்ல, அந்த காகிதத்தில் வரைந்திருந்த தேனீக்கள் காகிதத்திலிருந்து பறந்துவந்து திரு. சரபனைக் கடிக்கத் தொடங்கின. திரு. சரபன் சாமிகளிடம் வேண்டிக்கொள்ள தேனீக்களும், அவை கடித்ததனல் ஏற்பட்ட வலியும் மறைந்து விட்டன.' உயிரற்ற உருவத்திற்கு உயிர் அளிக்கும் ஒருவரை மகானென்றல்லவா வர்ணிப்பது என்றுகூறி சாமிகளது அருளையும், ஆசியையும் போற்றலானர் திரு. சரபன். "மானிடர்களாகிய நாம் யாவரும் தினத்தில் ஐந்து நிமிடமாவது ஈஸ்வரத் தியானத்தில் செலவிட வேண்டும்" என்று அன்று திரு. சரபனுக்குச் சாமிகள் அருளிய உபதேசம் பொதுவாக உலக மக்கள் அனைவருக்கும் குறிப்பாக மாணவர் உலகத்துக்கும் ஏற்ற உபதேசமல்லவா ?

எதையும் நன்ருகப் பரிசீலனைசெய்து பார்க்கும்போது விறுவிறுப்பும், சுறுசுறுப்பும் கொண்டவர்கள் இளைஞர்கள். உலகத்தில் எவ்வளவோ சாமியார்களைப் பார்த்திருக்கின்றனர்கள். உடலே சாம்பல் மயமாகவும், தலையே சடைமுடி தாடி கோலமாகவும் திரியும் சாமிகள் பலர் பட்டைச் சாதத்திற்காக என்பதை அவர்கள் அறிவர். காவியுடையும், கமண்டலமும் ஏந்தித் திரியும் சாமிகளில் பலர் கையை நீட்டிக் காசு வாங்குவதற்காக என்பதும் அவர் அறிவர். ஆனல் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளோடு பழகிவிட்டால் இவர் ஆறுமுகன் அருள்பெற்ற சாமிகள், 'ஏமாற்றும் சாமிகளல்ல, ஏற்றம் கொடுக்கும் சாமிகள்' என்பதையும் மாணவர் உலகம் நன்கு அறியும். அதனலல்லவா திரு. சரபனுக்குச் சாமிகளைக் கண்டு பழகியவுடன் ஒரு பொருத்தமான பாட்டு ஞாபகத்திற்கு வந்தது. அந்தப்பாட்டு இதுதான்.

“சாமியிலே பல சாமியுண்டு — மேலே
சாம்பல் அள்ளிப்பூசும் சாமியுண்டு
சடைமுடி தரிக்கும் சாமியுண்டு — பட்டைச்
சோற்றிற்காகச் சாமியான துண்டு
காவிகட்டும் சில சாமியுண்டு — கைமேல்
காணிக்கை கேட்கிற சாமியுண்டு
அந்தவகை இல்லை இந்தசாமி
ஆறுமுகன் அருள்பெற்ற சாமி”

## “மெட்டு”க் கிளியும் “மணி” நாயும்

“He prayeth well who loveth well
Both men and bird and beast
He prayeth best who loveth best
All things both great and small
For the dear God who loveth us
He made and loveth all — Coleridge.”

மக்களையும் மாக்களையும் அன்பு செய்வார்
மகிபனுக்கே அன்பு செயும் பண்புளோர்கள்
மிக்கதுவோ சிறியதென்றே எண்ணி மனம்
மாறுது தன் அன்பை எதற்கும் ஈவார்
எப்பொருளை படைத்தருளும் ஈசனும்
எப்பொருளின் மீதும் தனது அன்பைப் பெய்வார்
இப்பொருள் தான் அப்பொருள்தான் என்றென்றில்லை
இறைவனுக்கு அன்பு செய — எல்லாம் ஒன்றே”
— கோல்ரிட்ஜ்.

“காக்கை குருவி எங்கள் ஜாதி — நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்
நோக்கும் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை
நோக்க நோக்கக் களியாட்டம் — பாரதியார்.

அமெரிக்க நாட்டில் அரிசோனு எனும் இடத்தில் ‘சகாரா’ என்று ஒரு பாலைவனமல்ல, ஒரு ஓட்டல் அப்பெயர் தாங்கி இருக்கின்றது. அதற்குள் நான் 1964ல் நுழையும் போது எனக்கு முன்னுல் நீல கவுன் அணிந்த ஒரு மாது நடந்து சென்றுள். “அவள் அழகாக இல்லையா’ என்று ஒரு மெல்லிய குரல் ஆங்கிலத்தில் ஒலித்தது. அவளும் அதைக் கவனிக்கவில்லை, நானும் அதைப் பொருட்படுத்த வில்லை. மறுபடியும் இதே வார்த்தைகள் ஒலித்தன. யார் இப்படித் தைரியமாக ஒரு பெண்ணைப் பற்றிப் பேசுவது என்று குரல் வரும்

திக்கை நோக்கினேன். கூண்டிலடைபட்ட ஒரு கிளி இப்படிக் கூறுவதைக் கேட்டு அசந்துவிட்டேன். "என்னம்மா, உங்கள் அழகைப் போற்றுகின்ற கிளியைக் கவனிக்காமல் கூட செல்கின்றீர்களே" என்று அப்பெண்ணைக் கேட்டேன். "அந்தக் கிளி என்னை மட்டுமா இப்படி வருணிக்கின்றது. இந்த ஓட்டலுக்கு வருகின்ற ஒவ்வொரு மாதையும் பார்த்தவுடன் இப்படியே தனக்குச் சொல்லிக் கொடுத்த பாடத்தை ஒப்பிக்கின்றது," என்று உண்மையைக் கூறி அவள் மறைந்துவிட்டாள். உண்மை தான்! அந்தக் கிளி தனக்குச் சொல்லிக் கொடுத்த பாடத்தைத் தான் திருப்பித் திருப்பி உரைக்கின்றது. இந்த வாக்கியங்கள் மட்டுமல்ல, சுமார் பதினாறு வாக்கியங்களை இப்படி உரைக்கும் ஆற்றல் அக்கிளியிடம் உள்ளது என்பதை அந்தக் கூட்டின் பக்கத்தில் இக்குறிப்புகள் கொண்ட ஒரு விளக்கு அட்டையிலிருந்து தெரிந்துகொண்டேன். இது என் அனுபவம். சிக்கல் கோவிலில் ஒரு கிளி இருந்தது. அது யாரைக் கண்டாலும் 'யார்ரா அது' என்று விளிக்கும். இத்தகைய கிளி ஒன்று சங்கரரிடம் வாது செய்த மண்டலா மகிசி ஞானி வீட்டில் இருந்ததாம். அது வருவோரிடம் "சுதம்ஹா பரம்வா பரதஹா பரம்வா (ஜீவாத்மா பெரிதா பரமாத்மா பெரிதா) என்று கேட்குமாம். இத்தகைய கிளியின் ஆற்றலைப் படம் பிடித்துக் காட்டும் நகைச்சுவை மிகுந்த தமிழ்ப் பாட்டும் ஒன்றுண்டு. காதல் களிப்பில் வெளிவந்த காதலர் சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்த காதல் அறையில் இருந்த கூண்டுக்கிளி பலருக்கு முன்னால் தான் கேட்ட காதலர் தனித்துப் பேசிய மொழிகளையே பேச முந்தியபோது வெட்கமிகுந்த தலைவி அதன் வாயைப் பொத்த ஓடினளாம் என்பது அப்பாடலின் பொருள்.

கிளிகள் பேசும் அருமையைப் பழந்தமிழ்ப் பாக்கள் மட்டுமா புகழ்கின்றன. முற்போக்கு நாடாகிய அமெரிக்கா மட்டுமா போற்றுகின்றது. நமது சாமிகளே அதன் கொஞ்சு மொழிகளைக் கேட்டு மனங்களித்திருக்கின்றனர். பேசும் கிளி ஒன்றையே வளர்த்தும் வந்திருக்கின்றனர். இந்தக் கிளியும் சாமிகளிடம் வந்த விபரமும் சுவையுள்ளன ஒருநாள் ஒருசாமியார் சாமிகள் வீட்டுக்குத் தன் தோளில் ஒரு கம்பில் ஒரு கிளியை ஒரு கூண்டிலிட்டுக் கொண்டு வந்தார். "இந்தக் கிளியைக் கணியூரில் அரசமரத்துப் பொந்தில் பிடித்தேன்; நன்றாகப் பேசும். இது உங்களிடத்தில் இருக்கட்டும்" என்று சொல்லிச் சாமிகளிடத்திலேயே அந்தக் கிளியை விட்டுச் சென்றனர். இந்தப் பேசுங்கிளியை "மெட்டு" என்று சாமிகள் ஆசையோடு அழைப்பர். அந்தக் கிளி சாமிகள் வீட்டுக்கு வருவோரை யெல்லாம் 'வாங்க அண்ணு' என்று அருமையாக அழைக்கும். விட்டுக்குள் பூனை வந்தால் 'அக்கா பூனை' என்று சப்தமிடும். சாமிகள் வீட்டில் அந்தச் சமயம் மணி என்ற ஒருநாய்

இருந்தது. தம் வீட்டில் வளர்கின்ற பிராணிகளின்மேல் அன்பும், அக்கறையும் கொண்ட சாமிகள் அடிக்கடி வீட்டில் 'மணிக்கு சாப் பாடு போட்டீங்களா' என்று கேட்பதுண்டு. இதை அடிக்கடி கேட்டுக்கொண்டிருக்கும் மெட்டு மணிநாயைக் காணும்போதெல்லாம் 'டே மணி' என்று கூப்பிட்டுவிட்டு 'மணிக்கு சாப்பாடு போட்டீங் களா' என்று கேட்ட வண்ணமாகவே இருக்கும். வீட்டுக்கு வண்ணார் வெள்ளையெடுக்க வரும்போதெல்லாம், சாமி கேட்க மறந்து விட்டாலும் 'மெட்டு' மட்டும் கேட்கத் தவறியதில்லை. 'ஏண்டா, இவ்வளவு நாளா வெளுக்க' என்று அழுத்தம் திருத்த மாகக் கேட்டுவிடும். இஞ்சி விற்கும் கொள்ளப்பா வந்தால், 'கொள்ளப்பா வா வா, இஞ்சி என்ன விலை' என்று விசாரிக்கும். சாமிகள் சொல்வதையெல்லாம் கேட்டுச் சொல்லும் சாதுர்யமும் யாரிடம் கேட்கவேண்டுமோ அவரிடமே கேட்டு மகிழ்கின்ற அறிவும் கொண்ட இந்த அற்புதக் கிளி, சாமிகளின் உள்ளத்தைக் கவர்ந்த அருமையான மெட்டு, வீட்டின் உயிரோவியம், பக்தர்களின் பாச மலர். மெட்டுக்குப் பசி வந்துவிட்டால், "அக்கா பசிக்குது" என்று கேட்கும். அது அமர்ந்திருக்கும் கூடு எப்போதும் சுத்தமாக இருக்க வேண்டும். கூட்டை அவ்வப்போது சுத்தப்படுத்தாவிட்டால் மெட்டுக்குப் பொல்லாத கோபம் வந்துவிடும். மெட்டு கூண்டிலடை பட்ட கைதிக்கிளியாக வாழவில்லை வெளியிலும் தன் இஷ்டம்போல் உலவுகின்ற சுதந்திரக் கிளியாகவே சாமிகள் வீட்டில் வளர்ந்தது. மெட்டு மனம் வைத்திருந்தால் சாமிகளின் வீட்டைவிட்டே வான் நோக்கிச் சிறகடித்துக்கொண்டு சுதந்திரப் பறவையாய்ப் பறந்தோடி இருக்கலாம். ஆனால் சாமிகளிடம் பழகிய கிளியாயிற்றே? சாமி களிடம் பழகுகின்றவர்களுக்கா சாமிகளை விட்டுப் பிரிய மனம் வரும்? அதிலும் சாமிகள் வீட்டிலேயே இரவும் பகலும் உண்டு உறங்கிச் சாமிகளின் இன்னுரைகளைக் கேட்டு அவர் தெய்வீக அருள் மணத்தை முகர்ந்து அவர் பேரன்பிலே வளர்ந்து தவழ்கின்ற 'மெட்டுக்கா' சாமிகளின் வீடாகிய பூலோக சுவர்க்கத்தைவிட்டு நீங்க மனம் வரும்? கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும் என் பர். அதுபோன்றே அன்புருவாகிய அண்ணல் சாமிகளின் வள்ளல் தன்மையைக் கண்ட கிளியும் சாமிகள் வீட்டுக்கு வருவோரையெல் லாம் 'வாங்க சாமி' என்று வரவேற்பதிலும் ஆச்சரியப்படுவதற் கொன்றுமில்லை. இவ்வளவு அருமையான அன்புக்கிளியையும் ஒரு நாள் ஒரு கருடன் கவர்ந்துசெல்ல அந்த கருடனுக்குத்தான் எப்படி மனம் வந்ததோ? எவ்வளவோ ஜாக்கிரதையாகவும், அந்தக் கிளி யின் மனம் போலவும் மெட்டை வளர்த்து வந்தார் சாமிகள். இரவில் மெட்டைக் கூண்டுக்குள் பத்திரப்படுத்தி வைத்தார். பகலில் மட்டும் மெட்டின் இஷ்டம்போல் வீட்டில் அங்குமிங்கும் சுற்றிவர விட்டு விடுவார். எங்கிருந்தோ ஒரு நொடியில் வந்த கருடன் ஒருநாள் மெட்டுவை வளைத்துச் சுருட்டி எடுத்துக்கொண்டு வான்நோக்கிப்

பறந்து ஓடிவிட்டது. மெட்டுவின் குணநலன்களை உற்சாகத்தோடு உரைத்துவந்த சாமியின் குரல் மெட்டு மறைந்த சோக நிகழ்ச்சியால் தடைப்பட்டது சிறிது நேரம் அவர் மௌனமாக இருந்தது சாமிகள் மெட்டுவின்மேல் கொண்டிருந்த அளவிலா ஆசையையே எங்களுக்கு எடுத்துக்காட்டியது. இன்று மெட்டு மறைந்து விட்டது. ஆனால், அதன் அன்பு நினைவு இன்றும் சாமிகள் மனத்திலிருந்து மறைந்து விட வில்லை.

சாமிகளின் அன்பைக் கவர்ந்த பிராணிகளுள் இந்தக் கிளி ஒன்றுதானா? சாமிகளுக்கு நாய்கள் என்றால் மிகவும் பிரியம். சாமிகளுக்கு நல்ல ஜாதி நாய்கள் வளர்ப்பதில் தனிப்பிரியமுண்டு. மெட்டு வளரும்போது சாமிகளிடம் மணி என்ற 'புல்டாக்' நாய் ஒன்று வளர்ந்தது. ஒரே இடத்தில் அடங்கி இருக்கும் இயல்பு அந்த புல்டாக்கிடம் கிடையாது. அது வீட்டைச் சுற்றிச் சுற்றி வரும்; சாக்குத் துணி ஒன்றை வாயில் கௌவிக்கொண்டு வீட்டினுள் மூலைக்கு மூலை ஓடிவிளையாடும் இது மற்ற நாய்களைப்போன்று வெளியே சுற்றி வராது. சாப்பிடு என்று சொன்னால் தான் சாப்பிடும். காலையில் அதைக் குளிப்பாட்டி விடவேண்டும். அப்போது ஒரு குழந்தை போன்று உட்கார்ந்து குளிக்கும். இந்தக் காட்சி பார்ப்போர் உள்ளத்தைக் கவரக்கூடியதாக இருக்கும். குளித்தவுடன் அதன் நெற்றியில் குங்குமப் பொட்டிட்டால்தான் அது குளித்த இடத்தை விட்டு நகரும். சாமியின் அருள்பிரகாசம் பொருந்திய நெற்றியில் விளங்கும் சந்தன குங்குமத் திலகத்தின் அழகைக்கண்டுதான் தானும் இப்படி நெற்றியில் திலக அணி பூண்டு மகிழ்ந்தது போலும்! இந்த நாய் யாரும் வீட்டுக்குள் நுழையும்போது அவரை ஒன்றும் செய்யாது: அவர்கள் வீட்டைவிட்டு வெளியே புறப்படும்போது அவருக்குமுன் சென்று அவர்கள் வேட்டியின் முந்தியைப் பிடிக்கும். விடு என்றால் தான் தன் வாய்ப்பிடியை விடும். களத்திலும் நல்ல காவல்காரனாக விளங்கும். களத்திலிருக்கும் சாமிகள் "காப்பி வாங்கி வாடா" என்று சொல்லிவிட்டால், இந்த நாய் வீட்டுக்கு ஒரே பாய்ச்சலில் ஓடி அம்மா அவர்களின் கால்களைப் பரண்டும். காப்பிகூஜா களத்திற்கு வந்துசேரும்வரை அம்மா அவர்களை விட்டுவிடாது. பன்றிமலைக்குச் சாமிகளைப் பார்க்க வருபவர்களையெல்லாம் மலையடிவாரத்திலுள்ள பஸ்நிலையத்திற்குச் சாமிகள் திருப்பி அனுப்பும்போது இந்த மணியையும் அவர்களோடு சாமிகள் அனுப்புவர். மணி அவர்களுடன் அடிவாரம் வரை செல்லும். அவர்கள் அடிவார பஸ்நிலையத்தில் பஸ் ஏறுகின்றவரையில் அங்கேயே காத்துநிற்கும். அவர்கள் பஸ் ஏறியவுடன் ஓட்டம் ஓட்டமாகச் சாமிகளிடம் திரும்பி வந்துவிடும் சாமிகளின் அருங்குணங்களில் ஒன்று அவர்கள் வீட்டுக்கு யார் வந்தாலும் அவர் சாமி

களிடம் விடைபெறும்போது அவரோடு சாமிகள் வீட்டு வாசல் படிவரை கூடவே வந்து வழிஅனுப்பும் அருமை. வழியனுப்பும் போது இன்னருள் சுரக்கும் முகப்பொலிவோடு விடைபெறுவோர் களைச் சாமிகள் ஆசிகூறி அனுப்புவர். இந்த அருமையான பழக்க மல்லவா அவர் அருமையாக வளர்த்துவந்த நாயிடமும் பரிமளிக் கின்றது. அதனுலல்லவா மணியும் வீட்டுக்கு வருபவர்களைப் பஸ் நிலையம் வரையிலும் அழைத்துச் சென்று வாலைக் குழைத்தாட்டி வழியனுப்பி வந்தது !

சமீபத்தில் சாமிகளிடம் இரண்டு நாய்கள் இருந்தன. 'டாஷ்' என்ற இனத்தைச் சேர்ந்தவை. நீண்ட காதுகளும், முகமும், குள்ள மான கால்களும், குறுகுறு பார்வைகளும் கொண்டவை. சுறுசுறுப் பும் கவனமும் உள்ளவை. ஒன்று சிகப்புநிறம்; மற்ருென்று காப் பித்தூள் நிறம். இரண்டும் அடிக்கடி சாமி வீட்டில் ஒன்ருே டொன்று மோதிக்கொள்வது, 'லொள் லொள்' என்று சீறிக் கொள்வது பார்ப்பதற்கு வேடிக்கையாக இருக்கும். இதற்குக் காரணம் சிவப்பு நாயைச் சாமிகள் கொஞ்சம் கொஞ்ச ஆரம்பித் தால் மற்ற நாய்க்கு அது கொஞ்சமும் பிடிக்காது. கோபம் பொத் துக்கொண்டுவரும். அந்த இடத்திலிருந்தே சிவப்பு நாயை விரட்டு வதோடு நில்லாமல், வீட்டைவிட்டே துரத்திவிட வேண்டும் என்ற வேகத்தோடு அதை ஓடஓடத் துரத்தும்; 'வள்வள்' என்று தொடர்ந்தாற்போல் குரைக்கும். சிவப்பு நாய் இவ்வளவையும் பொறுத்துக்கொண்டு நிதானம் இழக்காமல் இருப்பதைப் பார்ப் பவர்கள், கோபமும் சாந்தமும், வேகமும் நிதானமும், கடுப்பும் அமைதியும் இருநாய்களிடை இருப்பதுகண்டு ஆச்சரியம்படாமல் இருக்கமுடியாது. சாமிகளுடைய அன்பில் தான்மட்டும் தழைக்க வேண்டும் மற்றவர்களுக்குப் பங்கில்லை என்ற சுயநலத்தோடு சுற் றித்திரியும் இந்தக் காப்பிக்கலர் நாயைப் பார்க்கும்போது சீடர் களாகிய எங்களுக்குச் சிரிப்பை அடக்க முடியாது. சாமிகளின் பேரன்பையும் பேராதரவையும் அடைய இந்த ஜிம்மியும் பேபியும் தாஞ போட்டியிடுகின்றனர்? அவருடைய பேரருளையும் பெருங் கருணையையும் அடைய எவ்வளவோ அன்பர்கள் காத்துக்கொண் டிருக்கின்றனர். 'நான் முன்னே நீ முன்னே' என்று சாமிகளை அழைக்கவும் அவருடன் குழைந்து பேசவும், அவருடன் நெருங்கிப் பழகவும் முந்திக் கொள்கின்றனர்.

நாய்களின் சுபாவத்தை அளந்துரைத்த சாமிகள் நாய்களின் செய்ந்நன்றியைப் பாராட்டும் திருமொழிகளைக் காண்போம். "காமத் துக்குக் கண்ணில்லை" என்பார்கள். காமவெறிப் பிடித்தலையும் நாய்களுக்கு இந்த வார்த்தைகள் எவ்வளவு பொருத்தமாக அமைந் துள்ளன. இஃது இயற்கையின் கூத்து. ஆனல் நாய்களைப்போன்று

விஸ்வாசமுள்ள பிராணியை நாம் பார்க்கவே முடியாது. அறிவுள்ள நாயின் நன்றி விஸ்வாசம் போற்றுதலுக்கு உரியது அது தலைவன் அடித்தாலும் பொறுத்துக் கொள்ளும். வேலெடுத்து வதைத்தாலும் தன் நன்றி விஸ்வாசத்தைத் தன் வாயசைத்தே காட்டும். இது இந்தச் சிறிய பிராணி காட்டுகின்ற அன்பையே விளக்கும். இதற்கு மாருன சுபாவம் கொண்டது பெரிய பிராணியாக விளங்கும் யானை. யானை குற்றம் செய்தவரை மனத்திலேயே வைத்துக்கொண்டு பழிவாங்குவதைப் பல நீதி நூல் கதைகள் உரைக்கும்; இந்த மூர்க்க சுபாவத்தை உடைய யானைக்குத் தன்னை அன்போடு பேணிவளர்க்கும் பாகன் என்பது கூடத் தெரிவதில்லை. அவனையும் சமயத்தில் கொன்று விடுவதைப் பார்க்கின்ருேம். அதனுல்தான் நட்பில் விஸ்வாஸமுள்ளவர் துணைகொள்ள வேண்டும், மூர்க்க குணமுடையவர் நட்பு என்றைக்கிருந்தாலும் ஆபத்தையே கொடுக்கும். இதை எவ்வளவு அழகாக ஒரு தமிழ்ப்பாட்டு எடுத்துரைக்கின்றது.

"யானை அனையவர் நண்பொரீஇ நாய் அனையர்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும் – யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய்."

## வனப்பில் மனம் குளிரும் மகிபன்

"உற்ருரை யான் வேண்டேன் ஊர் வேண்டேன் பேர் வேண்டேன்
கற்ருரை யான் வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்ருலத்தமர்ந்துறையுங் கூத்தா வுன்குரை கழற்கே
கற்ருவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே"
— மாணிக்கவாசகர்

நம் மனமாடும் ஈசன் தன் குழலாட, கரமாடக் கூத்தாடுகின்ருன். குற்ருலத்தமரும் ஈசன் கூத்தாட அங்கு எழில் ததும்புகின்றது எழில் அங்கு விழும் நீர் வீழ்ச்சிகளில் மட்டும் தானு? இயற்கை வனப்பிலும், பச்சைக் குன்றுகளின் வனப்பிலும், செடி கொடிகளின் கொழுமையிலும் அல்லவா எழில் ததும்பி வழிகின்றது! இந்த இயற்கை அழகிலும் அந்த அழகை ரசித்துக்கொண்டு ஆடும் ஈசன் அழகிலும் ஈடுபடும் மனங்களுக்குச் சுற்றமோ, நகரோ, பேரோ, புகழோ, சொற்பொழிவோ, காப்பியமோ — இவை ஒன்றும் தேவையில்லையாம்; காரணம் இயற்கை அன்னை வாரி வழங்கும் காட்சி இன்பத்தின் முன்னும், இதைக் கண்டு மகிழ்ந்து ஆடும் ஈசன் இன்பத்தின் முன்னும்

மற்றப் பொருள்களால் வரும் இன்பம் சற்று இளைத்திருப்பதே. தளிர் இளஞ் செடி கொடிகளும் செழித்துக் கொழித்து மரகதப் போர்வையிட்டு மலைகளை முறுவலுறச் செய்தால் அந்த இயற்கை அழகின் மோகனப் புன்முறுவலில் மயங்காதவர் யார்? குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தனே இயற்கை அழகில் மயங்கி ஆட ஆரம்பித்து விட்டானே? இத்தகைய இயற்கைச் சூழ்நிலைகளையும் இயற்கை அழகை யும் வருணிக்கும் பகுதிகள் தேவாரத் திருப்பதிகங்களில் அமைந் திருப்பது தமிழ் சிவப் பெரியார்களது இயற்கை அழகு ஈடுபாட்டைத் தான் விளக்க உதவுகின்றது. அழகு எங்கிருக்கின்றது என்று தேடித் திரிகின்ற கவிஞர்களுக்கு இயற்கை அழகு கலைப் பொக்கிஷ மாக வாய்த்துள்ளது. நமது சாமிகள் கலையறிவு செறிந்த பெரியார்; இயற்கை எழில் கண்டு மனமகிழும் இயல்பினர். அவர்கள் பிறந்து வளர்ந்த இடமே இயற்கை வனப்புக்கொண்ட எழில் ததும்பும் மலைப் பிரதேசமல்லவா? பச்சை வளம் கொண்ட, கோடைக்கானல் பன்றி மலைச் சாரல்கள் தம் நெடு மரங்களின் எழிலாலும், வண்ணமலர் எழி லாலும், பசுந்தளிர் மேனி எழிலாலும் சாமிகள் மனத்தை உவகையில் மிதக்கவிடும் மாண்பு கொண்டன வல்லவா!

இயற்கை வனத்திலும் அழகிலும் மனமகிழ்ந்து வளர்ந்த சாமி களுக்கு எங்குச் சென்றாலும் இந்த இயற்கை அழகைக் கண்டு வியப் புற்றுச் சுவைக்கின்ற ஆசை தானுகத் துள்ளி எழுந்துவிடும். பக்தர் குழாமொடு கார்களில் தலங்களைத் தரிசிக்கச் செல்லும்போது அழகு பூத்துக் குலுங்கும் அருமை மிகு இடங்களில் காரை நிறுத்திக் காரி லிருந்து இறங்கி வனப்புமிக்க அவ்விடங்களுக்குச் சென்று அழகை உண்டு உண்டு மகிழ்வர். பக்தர்களுக்கும் இயற்கை அன்னையின் எழிலுருவத்தைக்காட்டி இன்புறச் செய்வர். ஒருதரம் திருப்பதி யிலிருந்து திரும்பி வரும்போது பாபநாசம் நீர்வீழ்ச்சியைக் கண்டு நெடுநேரம் அக்காட்சியைச் சுவைத்து நின்றார் சாமிகள். இங்கும் உயரத்திலிருந்து நீர் விழுகின்ற அழகினையும், அதில் உள்ள நீர்த்துளிகள் சூரிய வெளிச்சத்தில் பளபளப்போடும் ஜிலுஜிலுப்போடும் வைரக்கற்கள் போன்று சுமார் ஐம்பதடி உயரத் திலிருந்து விழுகின்ற அழகினையும், ஒரு நெடும் சுவர்போன்ற பாறையில் ஒரு பட்டையிட்ட போக்கில் காவியில் வெள்ளை அடித் ததுபோல், நீர்வீழ்ச்சியிலிருந்து விழுகின்ற தண்ணீர் ஓர் பாங் கான குளத்துள் நிறைந்து நிற்கும் அழகினையும், அந்தத் திருக் குளத்தின் அருகில் அமைந்திருக்கும் பாபநாசம் திருக்கோயில் அழகினையும் சாமிகள் பார்த்துப்பார்த்துச் சுவைத்தார். பலகோணங் களிலிருந்தும் இந்த இன்பமூட்டும் அழகைக் கண்டுகண்டு உளம் களித்தார். மலாயாவில் சிட்டா பெர்லிஸ் பகுதிகளில் சுற்றுப் பிரயாணம் செய்தபோதும் அங்குக் குன்றுகளும் மலைகளும் நிறைந்த சூழலில் நெல் வயல்களையும் ஆங்காங்கு மாட்டுக் கூட்டங்களையும்

கண்டபோதும் திருச்சி தஞ்சை நெல்வளமும் எழில்வளமும் சாமிகள் மனத்தில் நினைவுக்கு வந்து அவரைப் பெருமகிழ்ச்சியில் ஆழ்த்தின. மலாயாவில் சுகவாச ஸ்தலமாக விளங்கும் ப்ரேசர் மலையையும், அங்குள்ள மலைத் தொடர்ச்சிகளையும், அம்மலைகள்மீது அலை மோதிக் கொண்டிருப்பதுபோல் பாய்ந்தோடும் மஞ்சுக்கூட்டங்களையும், மலை பச்சைவளத்தையும், செழுமைப் பாங்கையும் கண்ட சாமிகளின் கண்கள் களிப்பால் விரிந்தன. திருக்கோகர்ணம் செல்லும்போது மேற்குத்தொடர்ச்சி மலையில் அடர்ந்த வனப்பிரதேசங்கள் வழியாகப் பல மைல்கள் காரில் செல்லும்போது இயற்கை அற்புதக் காட்சிகளைக் கண்டு பெருமகிழ்வெய்தினார். மாலையில் ஜாக் நீர் வீழ்ச்சியின் பேரழகு சாமிகளின் உள்ளத்தை நெடுநேரம் கவர்ந்துவிட்டது. இத்தகைய சமயங்களில் உற்சாகம் பொங்க சித்துக்களும் பொங்கி எழும். அருவி நீர் பன்னீராகும் விந்தையில் மனம் பறி கொடுப்பவர் பக்தர்கள். பக்தர்கள் கைகளைத் தடவியும் பல மணங்களையும் எழுப்பச் செய்து, பக்தர்கள் கைகளில் மங்கள அட்சதை அரிசி வருவித்துக் கொடுத்தும், தம் உற்சாகத்தைச் சாமிகள் கொட்டி மகிழவர்.

ஒரு முறை சாமிகளை இயற்கை அழகு கொழிக்கும் முதுமலைக்குப் பக்தர்கள் அழைத்துச் சென்றனர். அங்கு அடர்த்தியான காட்டுக்குள் நுழையவேண்டியது தான். வெகு தூரத்திற்கப்பால் காட்டு எருமைகள் கூட்டம் கூட்டமாக மேய்வதையும், அந்த இடத்தையும் கடந்தால் புள்ளிமான் கூட்டங்கள் இருப்பதையும் காணலாம். சாமிகளும் அம்மா அவர்களும் இதற்கென்றே பழக்கப்பட்ட ஒரு யானையிலும், பக்தர் கோவை திரு. T. S. சிவசுப்பிரமணிய செட்டியார் முதலியோர் மற்றொரு பழக்கப்பட்ட யானையிலும் இக்காட்சிகளைக் காணக் காட்டு வழிகாட்டிகளோடு புறப்பட்டனர். கொஞ்ச தூரம் சென்றவுடன் காட்டு எருமைகள் கூட்டங் கூட்டமாக மேய்வதைக் கண்ட சாமிகள் அவைகளைக் கண்டு மகிழ்ந்து அவைகளை நெருங்கிப் பார்க்க விழைந்தார். ஆனால் வழிகாட்டிகள் எருமைகளுக்கு அருகே யானைகளை அழைத்துச் செல்லப் பயந்தனர். சிறிது நேரம் தியானம் செய்த சாமிகள் தைரியமாக யானைகளை மேயும் எருமைக் கூட்டங்களுக்கு அருகே ஓட்டச் சொன்னார். சாமிகளே கூறிவிட்டால் சும்மா இருப்பரா வழிகாட்டிகள்? பக்கத்தில் யானைகள் போகப் போக அந்த காட்டு எருமைக் கூட்டம் பழக்கப்பட்ட நாட்டு எருமைகள் போல் தம் சுபாவ மூர்க்கத்தனத்தைக் காட்டாமல் இருந்ததைக் கண்டவர்களுக்கு பேராச்சரியம் ஏற்பட்டது. அந்த இடத்தைத் தாண்டிச் சுமார் இருநூறு அடிகள் சென்றவுடன் புள்ளிமான் கூட்டங்கள் ஓடுவதும் துள்ளி விளையாடுவதும் மேய்வதுமாக அழகுக் காட்சிகளை அளித்துக் கொண்டிருந்தன. அழகே உருவான இவைகளையும் நெருங்கிக் காணவேண்டும் என்று துடித்தன பலர் உள்ளங்கள். அழகில் லயித்து

நிற்கும் சாமிகளும் யானைகளை அவைகள் இருக்கும் இடத்திற்கே ஓட்டச்சொன்னார். என்ன ஆச்சரியம்! மனிதரைக் கண்டவுடனேயே கண்ணுக்குத் தெரியாமல் ஓட்டம் பிடிக்கும் மானினங்களும் சாமிகளின் அரிய சக்தியால் அப்படியே நின்றன. அவைகளின் பளபளப்புப் புள்ளி வடிவினையும்செழிப்புக் கட்டுடல்களையும், நீண்ட தளிர் மேனிகளையும், கள்ளம் கபடமற்ற முகப் பொலிவையும் கண்டு வெகு நேரம் சுவைத்திருந்தனர் பக்தர்களும் சாமிகளும்.

சாமிகள் மலைவனப்பைப் பார்த்து மகிழ்வுறும் தன்மையைக் கண்ட அன்பர்கள் சாமிகளை சிறுவாணி, டாப்சில்ப் முதலிய மலை வாசஸ்தலங்களுக்கு அழைத்துச் சென்றனர். அங்கு வேலை செய்வதற்காகப் பழக்கப்பட்ட யானைகளை சர்க்கார் அதிகாரிகள் சாமிகளிடம் காண்பிக்க அழைத்து வந்தனர். சாமிகளை அழைத்துச் சென்ற அதிகாரி வழக்கம் போல் அன்று யானைகளுக்குப் பழம் வாங்கிக் கொண்டு வரவில்லை என்பதைச் சாமிகளிடம் அறிவித்தார். மலை வளம் கண்டு மனம் நிரம்பி இருக்கும் சாமிகளுக்கு யானைகளைக் கண்டவுடன் விந்தை வளம் காட்ட மனம் தீர்மானித்து விட்டது. அதிகாரியின் நோக்கத்தை அறிந்து கொண்ட சாமிகள் ‘முருகா’ என்று அழைத்துக் கையை நீட்டினர். அவர் திருக்கரங்களில் ஒரு வாழைப்பழம் வந்துவிட்டது. இதனைக் கண்டு ஆச்சரியப்பட்ட பக்தர்களுக்கு ஒரு வாழைப்பழத்தை வைத்துக்கொண்டு எப்படி மூன்று யானைகளைச் சாமிகள் திருப்தி செய்யப் போகின்றார் என்ற ஆவலும் ஏற்பட்டது. இந்த விந்தை வாழைப்பழம் மிகவும் கெட்டியாக இருந்தது. ஒரு கொடுவாள் கொண்டுதான் மூன்று துண்டுகளாக்க முடிந்தது. ஒவ்வொரு யானைக்கும் ஒவ்வொரு துண்டு கொடுத்தார் சாமிகள். ஒரு கட்டுக் கரும்பைச் சாப்பிடும் திருப்தி யானைகளுக்கு ஒரு துண்டுப் பழத்தைச் சாப்பிட்டு ஏற்பட்டது. ஒரு கட்டுக் கரும்பைச் சாப்பிட சுமார் கால் மணி நேரமாவது ஆகும்; அதுபோலவே இந்த ஒரு துண்டு வாழைப்பழத்தைச் சாப்பிட யானை ஒவ்வொன்றுக்கும் கால் மணி நேரம் பிடித்தது.

யாழ்ப்பாணத்தில் நைனாத் தீவுகள் தென்னை வளம் ஓங்கிய இயற்கைப்பொழில் சூழ்ந்த பூமிப்பரப்புகள். அவைகள்மீது நீலத் திரைக்கடல் மோதி அடங்குவதும், அவைகள் அங்குமிங்குமாக நீலக்கடலில் பசுமை மேடுகளாகக் காட்சி அளிப்பதும் சாமிகளது உள்ளத்திற்குப் பரவசம் கொடுத்தன. இந்தப் பரவசமல்லவா சாமிகள் அத்தீவுகள் ஒன்றில் உள்ள நாகபூஷணி அம்மன் திருச்சன்னதியில் குறுக்கே அம்பாளை மறைத்துநின்ற திரையையும் முற்றும் விலக்க உதவியது? அம்பாளின் கடாக்ஷத்தையும் அங்குள்ள தீபம் சுடர்விட்டு எரிவதைக் கொண்டும் காட்டி அருளியது.

ஒரு சமயம் பேரேழில் பூத்துக்குலுங்கும் தேவாரம், தேக்கடி, பெரியார் நீர்த்தேக்கம் முதலிய இடங்களுக்குச் சாமிகளைப் பக்தர்கள் அழைத்துச் சென்றனர். இரண்டு கார்கள். இதில் எந்தக் காரில் சாமிகள் ஏறுவாரோ அதுதான் ஓடும். மற்றது நின்று விடும். இப்படியானதில் தேக்கடி சேருவதற்குள் இருட்டிவிடும் என்று தோன்றியது. அப்போது ஒருகார் காலியாகத் தேக்கடி நோக்கிப் பறந்து சென்றது. அந்தக்காரை நிறுத்தி டிரைவரிடம் சாமிகள் ஏதோ பேசினர். உடனே டிரைவர் சாமிகளோடு வந்திருந்த பெண்களைத் தேக்கடிக்கு அந்தக் காலிகாரில் ஏற்றிச்சென்று விட்டார். சிறிது நேரம் சென்றபின் தேக்கடியைச் சேர்ந்த அந்தக் கார் மற்றொரு காருடன் திரும்பியது. தேக்கடியில் யாருக்காக ஒரு தந்தியை அவசர அவசரமாகக் காரில் எடுத்துக் கொண்டு சென்றாரோ, அதே பெரியவர் சாமிகளைத் தேக்கடிக்கு அழைத்துச் செல்லத் தம் காரையும் எடுத்துக் கொண்டு ஓடோடி வந்து விட்டார். ஏனெனில் தேக்கடிக்குப் பறந்து சென்று கொண்டிருந்த காரை நிறுத்தி யாருக்கும் தெரியாத தந்திச் சமாச்சாரத்தையும், நல்ல பலனையும் அல்லவா சாமிகள் டிரைவரிடம் கூறியனுப்பினர். நல்லாசிகூறிய திரிகால ஞானியைக் காண்பதற்கா தயங்குவர் பெரியோர்? அவருக்கு உதவி செய்யவுமல்லவா காத்துக் கொண்டிருப்பர்! இந்த நிகழ்ச்சியில் இன்னொரு விசேடமும் உண்டு. சாமிகள் சமய சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தாற்போல் சித்தாடுவர். இங்கு சாமிகளுடைய திருவிளையாடல் அந்தி வேளையில் காட்டில் அகப்பட்டுக்கொண்ட தம் பக்தர்களையே அக்காட்டுப் பகுதியிலிருந்து ஊருக்குப் பத்திரமாகக் கொண்டு செல்லவும் உதவியுள்ளது.

சென்னை ஐஸ்பேக்டரி தொழிலதிபர் திரு. T. S. S. நடராஜன் சாமிகளைத் தம் குடும்பத்தாரோடு கன்னியாகுமரி திருச்செந்தூர் முதலிய தலங்களுக்கு அழைத்துச் சென்றார். கன்னியாகுமரியில் காலையில் கடலிலிருந்தும் செம்பரிதி மேலே கிளம்புகின்ற அற்புதக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். கன்னியாகுமரியில் எழுந்தருளியிருக்கும் தேவியின் செழுங் கருணை இளமை அழகு வடிவு காணக் காணத் தெவிட்டாத இன்பமல்லவா? இதுமட்டுமல்ல! முக்கடல் சந்திக்கின்ற பெருங்கடலில் கிழக்குப்பக்கம் சூரியோதயம் ஒரு பெரிய சிகப்புப் பந்தைப்போல திடீரென்று கடலினின்றும் மேல் கிளம்பிப் பச்சை நீல விரிப்பாகப் பரந்திருக்கும் கடல்நீரில் தம் குளிர்ந்த கதிர்களைப்பரப்பித் தண்ணொளி மயமாக்கும் விந்தையான காட்சியும் கண்களுக்குப் பெருவிருந்தூட்டும் தன்மையது அல்லவா? இதைக்காண அதிகாலையிலேயே சூரியன் உதிப்பதற்கு முன் திரு. நடராஜன் குடும்பத்தார் கடற்கரைக்கு விரைந்தனர். சூரியோதயம் ஆவதற்கு முன் அவர்கள் சாமிகள் தங்கி இருக்கும் அறையையே கவனித்துக் கொண்டிருந்தனர்; ஏனெனில் சாமிகள்

தம் அறைக்கு முன்னே நின்று கொண்டும் இப்படியும் அப்படியும் நடந்து கொண்டும் இருந்தனர். சூரியோதயம் நேரம் நெருங்கி விட்டது. சாமிகள் இருக்கும் இடத்திலிருந்து சூரியோதயத்தைப் பார்க்க முடியாதென்பதை அன்பர்கள்அறிவர். சாமிகள் ஏன் இந்தக் கண்கொள்ளாக் காட்சியைக் காணத் தம்மோடு வரவில்லை என்றும் அவர்கள் பேசிக்கொண்டனர். ஆனால் அவர்கள் இருக்கும் இடத்திலிருந்தே சூரியோதயத்தையும் காணமுடியும், சாமிகளையும் தரிசித்துக் கொள்ளமுடியும். சூரியன் செழுங்கருணைத் தண் முகத்தோடு வெளிக்கிளம்பி விட்டான். இதைக்கண்ணுற்ற அன்பர்கள் அதே நேரத்தில் அறைக்கு வெளியே நின்று கொண்டிருக்கும் சாமிகளையும் கண்டு இன்புற்றனர். இன்பத்திண்ணொளி சுடர்கள் வீசி எழுகின்ற வானவெளி சூரியனின் காட்சி ஒரு புறம்: இன்ப ஆத்மீகப் பேரொளி எப்பொழுதும் பரந்திருக்கும் தெய்வீகப் புருடன் சாமிகளின் திருமுகக்காட்சி மற்றொருபுறம். சூரியோதயத்தைக் கண்குளிரக் கண்டு வந்த திரு நடராஜன் சாமிகளிடம் வந்தார். தான் கண்ட அற்புதக் காட்சியைச் சாமிகளிடம் விவரித்துச் சாமிகளும் இந்தக் காட்சியைக் காண வந்திருக்கலாமே என்றும் கூறினர். "நானும் அந்தக் காட்சியைக் கண்டு இப்பொழுது தான் திரும்பினேன்" என்று சாமிகள் சொன்னது ஒரு பெரு விந்தையாக இருந்தது. சாமிகள் சூரியோதய காலத்தின்போது அறைக்கு முன் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்துக்கொண்டிருந்த அன்பர்களுக்கு இது ஆச்சரியத்தை விளைவித்தது. சாமிகள் கூறியது உண்மை என்பதை அறிவிப்பது போல் சாமிகள் எப்பொழுதும் போட்டுக் கொள்ளும் பாதரட்சை அடிச்சுவடுகளும் கடற்கரையிலிருந்து சாமிகள் தங்கி இருக்கும் அறைவரைக்கும் மணலில் அப்போது தான் பதிந்திருந்த அற்புதத்தையும் கண்ட பக்தர்களின் பேராச்சரியத்தை எப்படி உரைக்க முடியும். இயற்கை எழில் விநோதக் காட்சிகளைக் காணுமலிருக்க முடியுமா சாமிகளுக்கு? அதிலும் கன்னியாகுமரி சூரியோதயத்தைக் காணவா தயங்கி நிற்பர் சாமிகள்? எப்படி சாமிகள் அறைக்கு வெளியே உலவிக்கொண்டிருந்த அதே சமயத்தில் கடற்கரையிலிருந்தும் சூரியோதயத்தைக் கண்டாரென்பது தான் அன்பர்களின் உள்ளங்களில் எழும் கேள்வி.? அதைத்தானே அற்புதம் என்கின்றோம்!

சாமிகளுடைய கலை உள்ளம் பேரெழில் மிக்க கோவில் சிற்பங்களையும், இறைவனைச் சிலையில் பல வடிவங்களில் வடித்துக்காட்டும் பேரழகையும் கண்டு ரசித்துக்கொண்டே இருக்கும். நடராஜரின் கலை உள்ளம் கவரும் நடனக் காட்சியிலும், கல்யாணசுந்தரரின் இணைபிரியா மணக்கோலக் காட்சியிலும், பெருங்கருணை வடிவாகும் தக்ஷிணுமூர்த்தி குரு வடிவுக் காட்சியிலும், கண்ணனின் இனிய வண்ணக்காட்சியிலும், திருமாலின் திவ்விய காட்சியிலும், சிங்கார

வேலவனின் திருக்காட்சியிலும் மனம் நெடுநேரம் ஈடுபட்டு மகிழ்வர். மைக்கேல் ஏஞ்ஜலோ கைத்திறனல் எழுந்துள்ள அன்னையின் மடியில் அமைந்துள்ள இயேசுநாதரின் பியட்டா (Pieta) எனும் திருஉருவம் ரோம் நகரில் உள்ளது உலகப் பிரசித்திபெற்றது. அதன் மாதிரிச் சிலை ஒன்று மிகச்சிறிதளவில் என் இல்லத்தில் இருந்ததைச் சாமிகள் வெகுநேரம் கண்டு அனுபவித்தார். கண்கவர் வனப்புமிக்க எழிலும் சோகமும், தெய்வீகமும் பொருந்திய பிரெஞ்சு நாட்டு மோனலீசா படத்தையும் வெகு நேரம் கண்டு அதன் அழகில் ஈடுபடுவர். உலக அற்புதங்களிலேயே ஒன்ருக விளங்கும் தாஜ்மஹால் அழகை பல கோணங்களிலிருந்தும் கண்டு அகமகிழ்வர். ஒருதரம் சாமிகள் தாஜ்மஹாலைப் பார்க்கத் தம்பதிகளோடு சென்றிருந்தார். அவசரத்தில் புறப்பட்ட தம்பதிகள் தம்மோடு வீட்டில் தயாராக இருந்த உணவை அவசர அவசரமாக ஒருடிபன் பெட்டியில் எடுத்துக் கொண்டு கிளம்பினர். சாமிகளோடு தாஜ்மகால் செல்லும் பாக்கியம் கிடைத்த உற்சாகத்தில் அவர்களுக்கு வேறு பொருள்கள், தின்பண்டங்கள் வாங்கவும் சிந்தையுமில்லை, நேரமுமில்லை. சாமிகளோடு தாஜ்மகாலைச் சுற்றிப் பார்த்து அனுபவித்த தம்பதிகளுக்குப் பசி வந்துவிட்டது. ஆனல் டிபன் பெட்டியில் உள்ள பொருளை எடுத்துச் சாப்பிட வெட்கம்! சாமிகளுக்கா தெரியாது டிபன் பெட்டியில் உள்ள பொருளும், தம்பதிகளுக்கு ஏற்பட்ட பசியும், எப்படி டிபன் பெட்டியைத் திறந்து சாப்பிடுவது என்ற தம்பதிகளின் மனநிலையும்! "என்னம்மா, பசியெடுக்கவில்லையா, அந்த டிபன் பெட்டியைத்தான் திறங்களேன். பசிக்கு ஏதாவது உதவட்டும்" என்று கூறினர். சாமிகளே கேட்டுவிட்டார். இனி சும்மாயிருப்பது தவறு. சாமிகள் எப்படி வேண்டுமானலும் நினைத்துக் கொள்ளட்டும் என்று நினைத்து மெதுவாக டிபன் பெட்டியின் மூடியைத்திறந்தார். வேங்கடேசன் வேதம் அவர்கள் மூடியைத் திறக்க குப்பென்று அனல் வீசியது பெட்டிக்குள் சுடச்சுட இருந்த உணவிலிருந்து! இது என்ன மாயா ஜாலமா? வேங்கடேசன் வேதம் தம்பதிகள் தம் கண்களையே நம்பவில்லை. கொண்டுவந்ததோ 'பழையது'(பழைய சாதம்); அதனல்தான் சாமிகள் என்ன நினைத்துக் கொள்வார்களோ என்று அந்தப் பெட்டியைத் திறக்கவும் வெட்கப்பட்டு வாளாயிருந்தனர் அவர்கள். டிபன் பெட்டியைத் திறந்து பார்க்கும்போது பழைய சாதம் சுடுசாதமாகவல்லவா மாறிவிட்டது சாமிகளின் அருளால்! தாஜ்மகாலை சுற்றிப் பார்த்த பரவசமல்லவா சாமிகளை உல்லாசப் பிரயாணக் களிப்பில் மிதக்கவைத்து அரிய அற்புதத்தையும் ஆடச் செய்துள்ளது. சாமிகள் இந்த எளிய உணவிலும் அன்பினல் சூட்டையும் ஏற்படுத்தி அவர்களிடமிருந்து வாங்கிச் சாப்பிட்டபோது, தம்மிடமிருந்து அவல் வாங்கிச் சாப்பிட்ட கண்ணனுடைய தாசன் குசேலப் பெருமானுடைய மகிழ்ச்சியையே மிஞ்சிவிடும் அளவில் இருந்தது வேங்கடேசன் வேதம் சதிபதிகளின் உள்ள நிறைவு!

சாமிகள் இயற்கைக் காட்சிகளிலும் கலைக் காட்சிகளிலும் மனம் லயித்து இருக்கும் வேளைகளில் சாமிகளோடு செல்லும் அன்பர்களும் அந்தச் சந்தர்ப்பங்களை நன்றாகப் பயன்படுத்திக் கொள்வதுண்டு. சாமிகள் மகாபலிபுரம் சென்றாலும் சாமிகளோடு, அங்கிருக்கும் பாறைகளைக் குடைந்து வண்ண வண்ண விமானமாகவும், அற்புத சிலைகளாகவும், யானை வடிவமாகவும் உள்ள கலைப் பொக்கிஷங் களோடு போட்டோ படங்கள் எடுப்பதுமுண்டு. இந்தச் சந்தர்ப்பங் களிலும் எழில் வனப்பதில் விரிந்த மனக்களிப்பு கொண்ட சாமிகள் தம் திருவிளையாடலையும் காட்டாமலிருப்பதில்லை. அந்தத் திருவிளை யாடலும் பல நாட்கள் நீடித்து இருந்து சாமிகளின் தெய்வீகத்தை உணர்த்தும் தன்மையதாக அமைந்துவிடுவது முண்டு. திருச்செந் தூரில் நீலத்திரைக் கடலுக்கு முன் சாமிகளை நின்ற திருக்கோலத்தில் போட்டோ படம் எடுத்தார் செயின் பீடித் தொழிலதிபர் திரு. கண்ணன் அவர்கள். சாமிகள் படத்தில் சாமிகளின் தலைக்குப் பின்னால் தெய்வ வடிவங்களின் பின் அமைந்திருக்கும் பேரொளி வட்டம் தானாகவே அமைந்துள்ளதை அன்பர்கள் இன்றும் கண்டு மகிழ்உறலாம்.

சாமிகள் தன்னையுணர்ந்த பெரியவர்: சாமிகள் உள்ளொளி கண்டவர்: சாமிகள் ஒரு யோகி; அவர்கள் பரிபூரணானந்தத்தின் தன் அருளைச் சச்சிதானந்தத்தின் பொருளை அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்க் கண்டு களிக்கும் பேரின்பப் பெரு வாழ்வைக் கொண்டவர். அவர்கள் பரபிரம்ம சொரூபத்தையே தன்னுள் கண்டவர்: யாவும் பரப்பிரம்ம மயமாக இருப்பதை உணர்ந்தவர். இறைவனுடைய பேரன்பை, பேரருளை, பேரழகை எங்கும் எப்பொழு தும் அனுபவித்துக் கொண்டே இருக்கும் பெற்றியர்.

"பொங்கிய நின் தண் அருளை புட்கலமாய் பெற்றவர்க்கு
எங்கெழுந்தென் ஞாயிறு இயம்பாய் பராபரமே!
கங்குல் பகலற்ற திருக்காட்சியர் கண் கண்ட வழி
எங்கும் ஒரு வழியே! எந்தாய் பராபரமே! — தாயுமானவர்

**சாமிகளும் அவரே; ஆசாமியும் அவரே.**

"அழுந்தொறும் அணைக்கும் அன்னை
அறிவிலாது ஆடி ஓடி
விழுந்தொறும் எடுக்கும் அப்பன்
விளையாடும் போது தோழன்
தொழுந்தொறும் காக்கும் தெய்வம்
சொந்தமாய் எடுப்போர்க் கெல்லாம்
குழந்தை இப்படி உலாவும் என்
குருநாதன் வாழி! வாழி!!

சாமிகள் அஞ்சா நெஞ்சம் படைத்த செம்மல். நீதிக்குக்கட்டுப் பட்டவர். பதவிக்கு உரிய மதிப்புக் கொடுப்பவர். நீதிகுலைந்த இடத்தில் சாமிகளைப் பார்க்கமுடியாது. பதவியினால் யாரும் சாமி களை ஆட்டிவைக்க முடியாது, தன்னை ஆட்டுவிக்க சாமிகளும் விட்டுக் கொடுக்கமாட்டார். பதவியிருந்தும் பண்பிலா மனத்தின னாய் ஒருவன் துணிந்து கெடுதி விளைவிக்க முற்பட்டால் அவனைத் தான் சாமிகள் ஆட்டிவைப்பர். ஒரு சமயம் ஒரு பெரிய அதிகாரி சாமிகளைக் கையோடு கூட்டிவரும்படி தன் 'டவாளி' பணியாளை ஏவினார். "அவர் எங்கிருந்தாலும் பிடித்துக்கொண்டு வரவேண்டி யது" என்பது அவருடைய அதிகாரமான கட்டளை. பதவியும் அதை வகிக்கும் கர்வமும் மட்டுமல்ல, சாமிகளை சரியாகத் தெரிந்து கொள்ளாத நிலையும் அவரை அப்படிப் பேசவைத்தன. இதைக் கேள்வியுற்ற சாமிகளும் அதிகாரியைக் காரணமில்லாது காரிய மில்லாது பார்க்க வரமறுத்ததைக் கேள்விப்பட்ட தலைமை அதி காரிக்குக் கோபம் இன்னும் பன்மடங்கு பெருகியது. அந்த நேரத் தில் பணியாள் சாமிகளின் சிறப்பையும் சுபாவத்தையும் விளக் கினார். அந்தப்பணியாள் சாமிகளின் அருளைப் பரிபூரணமாக உணர்ந்தவர். தன்னுடைய மாடு காணமல் போனதைப்பற்றிச் சாமிகளிடம் சொன்னபோது காணமல் போனபசு சினைப்பசுவாகத் திரும்பிவிடும் என்று சாமிகள் கூறியபடியே நடந்தது. இவர் தன்னுடைய மேலதிகாரியிடம், "சாமிகள் ஏழைப் பணக்காரர் என்ற வித்தியாசமே பார்க்கமாட்டார். சட்டதிட்டத்திற்கு உயர்ந்த இடம் கொடுப்பவர். ஆனால் ஒரு காரணமுமின்றி யாரையும் பார்க்க அவர் வீட்டைவிட்டு நகர ஒருக்காலும் சம்மதிக்கமாட்டார். என்னிடம் விட்டுவிடுங்கள். நான் எப்படியாவது சாமிகளை அழைத்து வருகின்றேன்" என்று இதமாகக் கூறிச் சாமிகளை அழைத்துவரச் சென்றார்.

மேல் அதிகாரியின் அட்டகாச குணங்களைக் கேள்வியுற்றிருந்த சாமிகளுக்குத் தன்னை ஏன் இப்படி அதிகாரி வற்புறுத்தி அழைக் கின்றாரென்பது தெரியும். ஆனால் சாமிகளைக் கூப்பிட வந்திருந்த பணியாளுக்குத் தெரியாது. சாமிகள் யோசனைசெய்து ஒரு முடி வுக்கு வந்தார். பணியாளருடைய வார்த்தைகளைக் காப்பாற்ற வேண்டும்; பணிவும் அன்பும் இருக்கும் இடத்திற்குச் சாமிகள் எவ்வளவு மதிப்புக் கொடுக்கின்றார் என்பதை அதிகாரியும் உணர வேண்டும்; அவரை அப்படி உணர வைக்கவேண்டும். சாமிகள் உடனே இரண்டு எலுமிச்சம்பழங்களோடு அரசாங்க அதிகாரி யைப் பார்க்கப் புறப்பட்டுவிட்டார், "அவரவர் பீடத்திற்குரிய மரியாதையை நாம் செலுத்தவேண்டும் சாமி. அவர் கவர்ன்மெண்ட் அதிகாரியாக இருந்ததால்தான் இரண்டு எலுமிச்சம்பழங்கள் வாங் கிச் சென்றேன்" என்று கூறிவிட்டு அவருக்கும் அந்த அதிகாரிக்கும்

நிகழ்ந்த உரைகளை நினைவுபடுத்திக் கூறினர். சாமிகளின் வரவை உள்ளூர ஆவலோடு எதிர்பார்த்திருந்த அதிகாரி தன் ஆவலையும் வெளியே கொஞ்சங்கூடக் காட்டிக்கொள்ளவில்லை. அவருடைய அலட்சிய மனப்பான்மையையே மிகைப்படுத்திக் காட்டினர், தன் இல்லத்திற்கு வந்த சாமிகளை வாவென்றுகூறி அழைக்கவும் அவர் நா தயங்கியது.

**சாமிகள்:** "நமஸ்காரங்கோ. என்னைத்தான் பன்றிமலை சாமி என்று அழைப்பர். சாமி என்றவுடன் சாமியாருக்குரிய தாடி. உருத்திராட்சம், காவி இல்லையென்று மலைக்கவேண்டாம்.

**அதிகாரி:** நான் யார் தெரியுமா?

அதிகாரிக்கு மாயாஜால வித்தை (மெஸ்மெரிசம்) ஓரளவு தெரியும், தனக்குத் தெரிந்த வித்தையைத்தான் சாமிகளும் கற்று வைத்திருக் கின்றார், சாமிகளின் வித்தை தன்னிடம் ஒன்றும் செல்லாது என்று தப்புக்கணக்குப் போட்டுக்கொண்டு மமதை ஏறிப் பேசினர் அந்த அதிகாரி.

**சாமிகள்:** உங்களிடம் இருப்பது உண்மையிலேயே ஒரு போலி வித்தை. இன்னும் பத்து நிமிடங்களில் நான் யார் என்பது உங்களுக்குத் தெரியும். நீங்களே அறிந்துகொள்வீர்கள்.

சாமிகள் அதிகாரிக்கென வாங்கிவந்திருந்த இரண்டு எலுமிச்சம் பழங்களையும் அதிகாரியிடம் கொடுத்தார். பழங்களை வாங்கிக்கொண் டும் ஆணவத்தோடு பேச்சாடிக்கொண்டே இருந்தார் அதிகாரி. சாமி களின் பொறுமையைச் சோதிப்பதாக இருந்தது அதிகாரியின் அகம் பாவம். சாமிகள் கொடுத்த வழவழப்பான அன்புக் காணிக்கையான எலும்மிச்சம் பழங்களைத் தேய்த்துத் தேய்த்து நின்றது அதிகாரியின் வாட்டசாட்டமான கைகள். சாமிகளுடைய பொறுமைக்கும் ஒரு எல்லைஉண்டு. சாமிகளது சீற்றம் பீறிட்டடிப்பது போன்று அந்த அழகான எலுமிச்சம்பழத்திலிருந்து பீறிட்டடித்தது கால்படி அளவு செந்நீர். அதிகாரி அணிந்திருந்த வெள்ளை சட்டை பாண்ட் எல்லாம் சிவப்புமயமாக மாறியது. அவசர அவசரமாக வீட்டுக் குள் நுழைந்தார் அதிகாரி. சிவப்புக்கறை படிந்த உடைகளோடும் பீதியும் குழப்பமும் அடைந்த உள்ளத்தோடும் அவசர அவசரமாக உடைகளை மாற்றிக்கொண்டார் அதிகாரி. வேறு வேட்டி சட்டை யோடு ஓடோடி வந்தார். உடைகளை மாற்றிக் கொண்டதுபோல் அவர் போக்கையும் பேச்சையும் மாற்றிக்கொண்டு விட்டார். சாமி களின் எதிர்பாராத செயல் செந்நீரைமட்டும் எலுமிச்சம்பழங்களி லிருந்து கிளப்பவில்லை! அந்த அதிகாரியின் மனத்தில் ஆழமான பயபக்தியையும் சாமிகள்மீது அசைக்கமுடியாத நம்பிக்கையையும் உண்டாக்கியது. அன்பும் அச்சமும் குரலில் தொனிக்க சாமிகளை வீட்டுக்குள் அழைத்துச்சென்ருர். அவர் உள்ளத்தை நெடுநாள்

அரித்துச் சாப்பிட்டுவந்த ஒரு பெருங்கவலையைச் சாமிகளிடம் வாய்விட்டு உரைத்தார். அவருடைய அருமையான ஒரே மகனுக்கு உடம்பு முழுவதும் சிகப்பு மஞ்சள் கருப்பு புள்ளிகள் போட்டிருந் தன. இதற்குத் தேடாத டாக்டர்கள் இல்லை; பார்க்காத வைத் தியமுமில்லை. ஒன்றும் பயனில்லாமல் போய்விட்டது. சாமிகள் மனம்வைத்தால் தன் ஆருயிர் மகன் உடலில் அலங்கோலமாக இருக்கும் புள்ளிகள் மறைய வழிஉண்டு. அதைக்கேட்ட சாமி களது மனம் இளகிவிட்டது. சாமிகளின் கருணையால் பையன் உடம்பிலிருந்த செம்புள்ளி, கரும்புள்ளி, மஞ்சள்புள்ளி யாவும் மறைந்துவிட்டன.

புள்ளிகளை மாற்றக்கூடிய சக்தி சாமிகளிடம் காணும்வரை அதி காரியின் உள்ளம் மமதையாலும் ஆணவத்தாலும் தலைவிரித்தாடி யது. ஆனல் சாமிகளிடம் தொடர்பு கொள்ளும் யாவரும் சாமி களின் அருள் சக்தியின் நல்வினைகளாலும் பெருங்கருணை வள்ளல் தன்மையாலும் நெருக்கமாகப் பழக ஆரம்பிப்பதுடன் ஆன்மநேய ஒருமைப்பாட்டுப் பிணைப்புடன் சாமிகளின் அத்யந்த சீடர்களும் ஆகிவிடுகின்றனர். சாமிகளிடம் சாதாரண உழைப்பாளிகளும் தொழிலாளிகளும், குமாஸ்தாக்களும், ஏழைகளும், அநாதிகளும் வந்து அருள்சக்தி உதவியடைகின்ருர்கள். சாமிகளிடம் தொழி லதிபர்களும், செல்வந்தர்களும், தலைமை அதிகாரிகளும், பெரும் பதவியாளர்களும் வந்து அருள் ஆசி பெறுகின்றனர். யாராயிருந் தாலும் தலைமைப்பீட அதிகாரியாக இருப்பினும் சாமிகளுக்குரிய, குரு ஸ்தானத்திற்குரிய மரியாதை செலுத்துவதில் தவறியது கிடையாது. ஒரு உயர்நீதிபதி, சட்டம் பயின்ற பல அதிகாரிகளோடு ஒருநாள் சாமிகளைக் காணத் திண்டுக்கல்லுக்கு வந்திருந்தார். சாமிகள் தன் பூஜை அறையில் பூஜையை முடித்துவிட்டு வெளி ஹாலுக்கு வந்து தன் பீடத்தில் அமர்ந்தார். சாமிகள் பக்தர்களுக்கு அவர்கள் குறைகளைத் தனித்தனியாகக்கேட்டுப் பிரசாதம் வழங்கும் பொருட்டுத் திரை போடப்பட்டது. பக்தர்கள் யாவருக்கும் விபூதிப் பிரசாதமும் வேண்டியவர்களுக்கு இரட்சைக் கயிறும் கட்டியபின் சாமிகளை மறைத் திருந்த திரை திறக்கப்பட்டது. சாமிகளைக் காண வெகு தூரத்தி லிருந்து வந்திருந்த பக்தர்கள் யாவரும் புடைசூழ சாமிகள் தன் குரு ஆசனத்தில், தெய்வக் களையுடன் பூஜை அறையிலிருந்து வெளி வந்து அன்பர்களுக்கு அருள்பாலித்து, அருள்சுரப்புடனும் இனி தமர்ந்திருந்தனர். பக்தர்கள் குழாமில், சட்டம் பயின்று வாழ்க்கை யில் சில வருடங்கள் வழக்கறிஞராக இருந்து அதன்பின் பல்வேறு துறைகளில் அதிகாரிகளாக விளங்கும் பெரியவர்களும் இருந்தனர். இக்கூட்டத்தில் உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவரும் அமர்ந்திருந்தார். இவரைக் கண்டவுடன் இவரின் பக்தியும், பரிபக்குவமான மனநிலையும் சாமிகளின் உற்சாகத்தைத் தட்டி எழுப்



சாமிகளோடு தமிழ்நாடு அரசாங்கத்தின் முன்னாள்
முதல் அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள்

(பக்கம்: 158)



**சாமிகளோடு முன்னாள் சென்னை ஹைகோர்ட் நீதிபதி**
**திரு. P. ராஜகோபாலன் (M. A., I. C. S.) அவர்கள்**

*(பக்கம்: 401)*

*" நற்றவத்தால் நாடுபவர் நலமறிந்து அவர்க்கு*
*நன்மைபல உவந்தளிக்கும் நவஇரத்ன மணியே*
*பற்றியுளோம் உமதருளை பன்றிமலை குருவே*
*பதமலரைப் பற்றியுளோம் நலம் உவந்தருளே "*

(திரு. T. D. மீனாட்சிசுந்தரம்)

பின. சாமிகள் அவரவர்க்குரிய ஸ்தானத்தைப் பற்றி ஒரு அரிய சொல்லோவியத்தையே அங்குள்ளவர்களுக்கு வழங்கி விட்டனர். "பாமர மக்கள்முதல் பெரும் பதவி வகிப்பவர் வரை என்னிடம் வரக்கூடிய பெரும் பாக்கியம் பெற்றுள்ளேன். இதற்குக் காரணம் எம்பெருமான் முருகனுடைய அருள் ஒன்றுதான். அவன் அருள் இருந்தால் இல்லாததொன்றுண்டோ? என்முன் அமர்ந்திருக்கும் இவர் ஒரு உயர்நீதிபதி. அவர்களுடைய ஆன்மீகப் பற்றையும், முருக பக்தியையும், ஒழுக்க ஒடுக்கத்தைப் பற்றியும் என்னுல் இப்போது பேசாமலிருக்க முடியவில்லை. ஒருசமயம் திருவண்ணுமலையில் ஒரு வைபவம். அங்கு பெரிய அதிகாரிகளுக்கும் பதவியாளர்களுக்கும் அவரவர்களுக்குரிய முக்கியத்துவப்படி ஆசனங்கள் ஏற்பாடாகி இருந்தன. அவரவர்களும் அவரவர்களுக்குரிய ஆசனங்களில் அமர்ந்திருந்தனர். நானும் அந்த வைபவத்தைக் காணச் சென்றேன். நான் அங்கு சென்றபோது முக்கியமான பகுதியில் இருந்த ஆசனங்களெல்லாம் நிறைந்து விட்டன. முதல் வரிசையில் முக்கியமான இடத்தில் வீற்றிருந்த ஒருவர் என்னைக் கண்டு ஓடோடி வந்தார். தான் வீற்றிருந்த ஆசனத்திற்கு அன்போடும், பக்தியோடும் அழைத்துச் சென்று அதில் என்னை அமரும்படிச் செய்தார். அவர் செய்த செய்கையைக் கண்ணுற்ற யாவரும் என்னையே கூர்ந்து கவனித்தனர். அவர்தான் இங்குத் தரையில் வீற்றிருக்கும் பெரிய மனிதர். உயர்நீதிபதி ஒருவர் தன்னுடைய ஆசனத்தை மற்ருெருவருக்குக் கொடுப்பதாயிருந்தால் அவருடைய உள்ளத்தில் அந்த மற்றவருக்கு, எனக்குத்தான், எவ்வளவு உயரிய பீடம் அவர் கொடுத்திருக்கின்ருர் என்பது விளங்கவில்லையா? அவ்வளவு தூரம் அவர் அன்பைக் கவர்ந்திருக்கும் நானும் ஒரு முக்கியமான மனிதர் என்று அங்கு குழுமியிருந்த மக்கள் எண்ணியதில் வியப்பொன்றுமில்லை. மற்ருெரு சமயம் கடற்கரை ஒன்றில் இதே நீதிபதியும் அவர் நண்பர்களும் உட்கார்ந்து கொண்டு உரையாடிக் கொண்டிருந்தனர். நானும் அன்று கடற்கரைக்குச் செல்ல நேர்ந்தது. கடற்கரையில் உரையாடிக் கொண்டிருந்த பக்தரைக் கண்டு அவரிடம் ஆசையோடு சென்றேன். அவர் உடனே எழுந்துவிட்டார். நான் அமரும்வரை நின்றுகொண்டே இருந்தார். நிற்கும் தன் எளிமையை வற்புறுத்த "பெரியவருக்குக் கொடுக்கவேண்டிய காணிக்கை" என்று உளமுவந்து என் நிலையைப் போற்றினுர் இதே நீதிபதி அவர்கள். இன்றும் நான் இந்த நாற்காலியில் அமர்ந்திருக்க அவர் தரையில் பக்தியுளத்தோடு வீற்றிருக்கின்ருர். என்னுடைய நிலையை போற்றுகின்ருர். என்னுடைய நிலை என்ன? இப்படி உங்களையெல்லாம் கீழே உட்கார வைத்து உங்களைவிட உயரமான இடத்தில் உட்கார்ந்திருப்பதுதான் என் உயர்நிலையா? "பெரியவருக்குக் கொடுக்கவேண்டிய காணிக்கை" என்று அன்று சொன்னுரே.

நான் அப்படிப் பெரியவனு? எந்த விதத்தில் நான் பெரியவனுவேன். இந்தப் பெரிய ஸ்தானத்திற்கு நான் எப்படி அருகதையாவேன். இந்த மேல்நிலை எனக்கு அவசியம்தானு? இந்த நாற்காலி நீங்களாக உளமுவந்து எனக்களித்துள்ள பீடம். இந்த நாற்காலியை நீங்களே எடுத்துவிட்டால் நானும் உங்களைப்போல் கீழே உட்கார வேண்டியதுதான். நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் என்னை நீங்கள் மனது வைத்தால் கீழே இறக்கமுடியும். நீங்கள் அமர்ந்திருப்பது புனிதமான பூமிதேவியின் மடியல்லவா! நீங்களெல்லாம் கீழே தரையில் வீற்றிருக்க, நான் மட்டும் ஏன் மேலே அமரவேண்டும்? இந்த உயரிய நிலைக்கு என்னிடம் என்ன தகுதி இருக்கின்றது? நான் எந்தவிதத்தில் உங்களைவிடப் பெரியவன்? அவனன்றி ஓரணுவும் அசைவதில்லை. அவன் யார்? எல்லோரையும் ஆட்டி வைக்கும் ஆண்டவன். அவனை அடைவதே மானிடப் பிறவியின் குறிக்கோள். அவனை பக்தியால் அடையலாம். பக்தியினுல் ஆத்ம சுத்தியும், ஆத்ம சுத்தியினுல் ஆத்ம சக்தியும், இதனுல் ஆண்டவன் அருளும் அடையலாம். ஆத்ம சக்தியைத் தலம், தீர்த்த யாத்திரை, தியானம் முதலியவற்ருல் பெருக்கிக்கொள்ளப் பாடுபடவேண்டும். இதற்கு உறுதுணையாக நிற்பவர் குரு என்பவர். அந்தக் குரு ஸ்தானத்தில்தான் என்னை நீங்கள் அமர்த்தி இருக்கின்றீர்கள். முருகப்பெருமானின் திருவருள் எங்கும் பொங்கி வழிந்தோடுகின்றது. அதில் எளியேன் தவழ்ந்து அருளின்பம் அடைகின்றேன். அந்த அருளின்பப் பெருவெள்ளத்தில் ஏழையென்றும், செல்வர் என்றும் வேறுபாடின்றி அவரவர்கள் பக்குவத்திற்கேற்றபடி அருந்தவே நான் உதவப் பாடுபடுகின்றேன். நான் பாடுபடுவதெல்லாம் சீடர்களாகிய நீங்கள் முருகன் பேரருளைப் பெறவேண்டும் என்பதற்காகவே. அதற்காகவே இந்தக் குருபீடம். ஈசனருளை மற்றவர் அடைய உதவுபவர் ஒருவர் குரு நிலைக்கு ஏற்றப்படுகின்ருர். நமது ஆசார விதிகள்படி அந்தக் குருவே சீடர்களின் பேசுந்தெய்வமாகப் பாவிக்கப்படுகின்ருர். கொடுக்கின்ற ஒருவர் வாங்குகின்ற மற்றவர்களுக்கு உயர்ந்தவர், அதனுல் பெரியவர். இதை உணர்த்தவே இந்த நாற்காலியும் அதில் அமரும் குருவும். ஆனுல் இந்த நிலை ஒருநாளில் இருபத்து நான்கு மணி நேரமும் நீடித்திருக்கின்ற நிலை அல்ல. இந்த நிலை நான் பூஜை அறையில் விபூதிப் பிரசாதம் வழங்கும் வரையில்தான். நான் இந்தப் பூஜை அறையை விட்டு என் வீட்டுக்குச் சென்றுவிட்டால் நிலைமை மாறிவிடுகின்றது. நானும் உங்களைப் போன்றவனுகிவிடுகின்றேன்'' என்று குருநிலையை மிகவும் தெளிவாகவும், அருமையாகவும் விளக்கி,

> " நான் விளையாடும்போது தோழன்
> பூஜை செய்யும்போது சாமி
> வெளியே வந்தால் ஆசாமி "

என்று அழகாகக் கூறித் தன் இன்னுரையை முடித்தார் சாமிகள்.

பூஜை அறை நிகழ்ச்சிகள் முடிவுற்றன. யாவரும் சாமிகள் வீட்டுக்குச் சென்றனர். அங்கு வெளியூர் அன்பர்களுக்காகக் காத்திருந்தன சிற்றுண்டி வகைகளும், பாலும் பழங்களும். இந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் தலையாயதாக விளங்கியது சாமிகள் வந்திருந்தோரிடம் சரிநிகர் சமானமாகத் தரையில் உட்கார்ந்து கொண்டு மனம் விட்டு நட்புரிமையோடு உரையாடிக் கொண்டிருந்ததே!

சாமிகள் கூறிய முடிப்புரையின் ஒவ்வொரு வாக்கியமும் என் மனக்கண்கள் முன் தோன்றின. "பூஜை செய்யும்போது சாமி"— ஆம் பூஜை அறைக்கு முன் நாற்காலியில் குரு பீடத்தில் அமர்ந்து அருள் பாலிக்கும் போது அவர்கள் சாமிகள் தான் என்பதில் ஐயமென்ன இருக்கின்றது? இப்போது வீட்டுக்கு வந்துவிட்டார், எல்லோருடனும் சமமாகப் பழகி அன்பெனும் பொய்கையில் நீந்துகின்றார். இதைப் பார்க்கும்போது பூஜை அறையிலிருந்து "வெளியே வந்தால் ஆசாமி என்ற முறையிலல்லவா சாமிகள் பழகுகின்றார் என்பது புரிகின்றது. "நான் விளையாடும் போது தோழன்"— என்றார். சிந்தித்துப் பார்த்தேன். ஆம், தோழனிடத்தில் தானே விளையாடுகின்றார். தோழமை பூண்டு கொள்வதனாலல்லவா மற்றொருவர் வெறுக்கத் தக்கவை செய்யினும் அதை மறந்து அன்போடு அவரை ஏற்று விளையாட்டாகவே அவருக்குச் சரியான புத்தி புகட்டித் தன்னுடைய அருள் சக்தியால் ஆட்கொள்கின்றார் சாமிகள். பதவி கர்வத்தினால் அதிகாரி நடந்துகொண்ட சம்பவமும் இதை நிரூபிப்பதாக அல்லவா அமைந்துவிட்டது. சித்து விளையாடி மஞ்சள் பழங்களைச் செக்கச் சிவந்த ரசம் பொழியச் செய்து சரியானபாடம் கற்பித்து விட்டார் சாமிகள். தன்னையும் யார் என்பதை அதிகாரி புரிந்து கொள்ளவும் செய்தார் சாமிகள். சாமிகள் சக்தி கற்பனைக் கடங்காதது என்பது மட்டுமல்ல, சாமிகள் கருணையே வடிவினர் என்பதையும் அதிகாரி உணர்ந்தார்.

> "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
> நன்னயம் செய்து விடல்"

என்ற அளவுக்குமல்லவா சாமிகள் அந்த அதிகாரிக்கு இன்னருள் வழங்கி விட்டனர்.

சாமிகளது திருவாக்கும் செய்ல்களும் என் மனத்திற்கு குருநாதருக்குரிய ஒரு வாழ்த்துப் பாட்டையே ஞாபகத்திற்குக் கொண்டு வந்தது.

"அழுந்தொறும் அணைக்கும் அன்னை
அறிவிலாது ஆடி ஓடி
விழுந்தொறும் எடுக்கும் அப்பன்
விளையாடும் போது தோழன்
தொழுந் தோறும் காக்கும் தெய்வம்
சொந்தமாய் எடுப்போர்க் கெல்லாம்
குழந்தை இப்படி உலாவும் என்
குருநாதன் வாழி வாழி"

நம் இதயங்கள் சாமிகளைப் போற்ற முந்துகின்றன.

"தந்தையும் தாயும் குருவும் யான் போற்றும்
சாமியும் பூமியும் பொருளும்
சொந்த நல்வாழ்வும் நேயமுந்துணையும்
சுற்றமும் முற்றும் நீ யென்றே
சிந்தையுற்றிங்கே யிருக்கின்றேன்"

என்றல்லவா நம் இதயங்கள் அன்று இராமலிங்க சாமிகள் இறைவனை ஏத்தியது போன்று இன்று சாமிகளைப் போற்ற முந்துகின்றன.

வாழ்க ஸ்ரீ பன்றிமலை சாமிகள் !
வாழ்க அவர் சீரடியாரெல்லாம் !

## 'மதிகால் மந்திரம் முக்கால்'

சாமிகளின் அருள் பெற்றவர்கள் சாமிகள் சொல்லிக் கொடுத்த மந்திரங்களை உரைத்துப் பஞ்சாட்சரம் கொடுத்து, விஷக்கடி இறக்கு வதையும் சுரம் தணிவிப்பதையும் பற்றி கேள்விப்பட்டிருக்கின்றோம். சாமிகள் அருள் இருந்தால் மந்திரங்களும் தேவை இல்லை, திருநீறு கூடத் தேவை இல்லை. சீடர்கள் சொல்லவேண்டியது தான் ! சொன்னவை சொன்னபடி நடந்தே தீரும் ! ஆனல் சாமிகள் அருள் இருந்தால் தான் முடியும். சாமிகள் இப்படி அருள் வழங்குவதற்கும் அவர் செழுங் கருணைதான் காரணமாகும். தன்னுடைய சீடர்களை விட்டுக் கொடுப்பதோ அவர்களுடைய குறைகளைக் காட்டிக் கொடுப் பதோ சாமிகளிடத்தில் அறவே இல்லை. குறைகளிருப்பின் பக்குவ மாகச் சொல்லிக் குறையுளோரை குணசீலராக்கி விடுவர். ஒரு குற்றமும் அறியாத தன் பக்தர்களை மற்றவர் எண்ணி நகையாடுவதை அவர் ஒரு போதும் கண்டு வாளாயிருக்கமாட்டார். அவர்களுக்குப் பக்க பலமாகி விடுவர். அவசியமாயின் தன் சித்து விளையாட்டா லேயே அவர்களின் அருமைக் குணத்தை விளக்கவும் முந்திவிடுவர்.

வட இந்தியாவில் லதீப்ஷா என்ற ஒரு முஸ்லிம் பெரியார் பிறமதங்களை அறிய வேண்டி சாஸ்திரங்களில் வல்ல ஒரு அந்தணரை அடைந்தார், அவர் ஹிந்து மதத்தையும் ஏற்று அவர் சீடராகிப் பாகவத கைங்கர்யமும் செய்துவரலானார். இதைக் கேள்வியுற்ற நவாப் இவரது சொத்தைப் பறிமுதல் செய்து இவரை விலங்கிட்டு அழைத்துவரச் சேவகர்களை அனுப்பினார். லதீப்ஷா இல்லத்தில் பஜனை நடப்பதையும் பஜனையில் மெய்மறந்து இருக்கும் லதீப்ஷாவைக் கண்ட சேவகர்களும் தம் வேலையை மறந்து மெய்மறந்திருந்தனர். சேவகர்கள் சென்று நெடுநேரமாகியும் வராததைக்கண்ட நவாப் தானே பக்தர்வீட்டுக்கு விரைந்தார். பஜனை நடக்கும் இடத்தில் பாகவதக் காட்சிகள் சித்திரமாகத் தீட்டப்பட்டிருந்தன. அதில் ஒரு படத்தில் இராதா பிராட்டியார் கண்ணனுக்கு வெற்றிலை மடித்துக் கொடுக்கும் காட்சி ஒன்று இருந்தது. ஏளனமாக நவாப் பக்தரைப்பார்த்து "எங்கே உம்முடைய கண்ணனை இராதை கொடுக்கும் தாம்பூலத்தை வாங்கிப் போட்டுக் கொள்ளச் சொல்லும்" என்றுகூற, லதீப்ஷாவும் இறைவனை வேண்ட, அந்தவீடே கோகுலமாக மாறியது. கண்ணன் ஓவியம் உயிர்பெற்றது! இராதைஓவியமும் உயிர்பெற்றது! இராதை கொடுத்த தாம்பூலத்தைக் கோவிந்தன் வாங்கி உண்டான்! இதைக் கண்ட நவாபும் தன் சேவகர்களைப் போலவே லதீப்ஷாவின் பக்தியைக்கண்டு மெய்மறந்தார். இந்தக்கதையைக் கேட்கும் நமக்கு இதைப்போன்ற அற்புதம் நமது சாமிகளே தன்னுடைய பெண்மணி பக்தர் ஒருவருக்காக ஆடிக்காட்டியருளியது நமது மனக்கண்களுக்குமுன் வந்து நிற்கிறது.

கோபிச்செட்டிப் பாளையத்தில் ஒரு முக்கியமானவர். அவருடைய மனைவி சாமிகளிடம் பக்தி விஸ்வாசத்தோடு வந்து விபூதிப் பிரசாதம் பெற்றுச்செல்லும் புனிதவதி. கணவருக்குக் கோயில், பூஜை என்பனவற்றில் அவ்வளவு நம்பிக்கை இல்லை. ஆதலால் தன் மனைவியின் செயலை அவர் விரும்பவில்லை, ஆனால் மனைவியைத் தடுக்கவும் அவர் மனம் இடம் தரவில்லை. தான் வெறுப்பதைச் சூடான சொற்கள் கொண்டு ஏளனமாகப் பேசிக் காண்பிக்க முனைந்தார். அம்மை சாமிகளைத் தரிசித்து வரும்போதெல்லாம், தன்னுடையதுண்டை விரித்து, "நீ வாங்கிக்கொண்டு வந்த அருளில் கொஞ்சம் கொடு" என்று சொல்லி நையாண்டி செய்வர். அம்மையின் நிலையை அறிந்து கொண்ட சாமிகள் ஒருநாள் அம்மைக்கு ஒரு யோசனை கூறினர்.

அந்த யோசனைப்படியே சாமிகளைத் தரிசித்து வந்த அம்மை மலர்ந்த முகத்தோடு வீட்டுக்குத் திரும்பினர். அம்மை வீட்டிற்குள் நுழைவதற்குள்ளாகவே அவரைக் கேலி செய்வதற்கென்றே வழக்கம் போல் தம் துண்டை இரு கைகளிலும் பிடித்துக்கொண்டு, "இன்

றும் அருளை வாங்கிக்கொண்டு வந்தாயா? அதில் கொஞ்சம் போடு" என்று கிண்டல் செய்தார் கணவர். சாமிகளுடைய திருமொழிகளாலும் ஆசியாலும் தைரியமும் மகிழ்ச்சியும் பொங்குகின்ற அம்மை உடனே தன் வெறும் சேலை முந்தாணியை தன் கையால் எடுத்து "பெற்றுக் கொள்ளுங்கள்" என்று தன் கணவர் ஏந்தி இருக்கும் துண்டுக்குள் உதறினர். நம்புவீர்களா! ஒன்றுமில்லாத வெறும் முந்தாணியிலிருந்து கற்கண்டுக்கட்டிகள் கொட்டின. இந்த அற்புதத்தைக் கண்ட கணவருக்கு எள்ளி நகையாடும் நிலைமாறி உள்ளத்தில் அச்சம் கண்டுவிட்டது. தன் போக்கிரித்தனத்துக்காக தன் மனைவியிடம் வருத்தம் தெரிவித்தார். சாமிகளிடம் சென்று அவர் அடிகளைப் பணிந்து தன்னை மன்னித்தருள வேண்டினர். பக்தி மனைவியோடு கூட கணவரும் சாமிகளுடைய சீடர்களுள் ஒருவரானர் என்று சொல்லவும் வேண்டுமோ? கணவரும் கொடுத்துவைத்தவர் தான். அவருடைய கேலிப் பேச்சே சாமிகளின் திருவருளை அவருக்குச் சம்பாதித்துக் கொடுத்துவிட்டது அதிசயத்திலும் அதிசயமல்லவா?

ஒரு குடும்பத்தில் கணவருக்கும் மனைவிக்கும் ஆரம்பத்தில் இருந்த மன வேற்றுமையை இப்படி மன ஒற்றுமையாக திருப்பித் தந்த பெருமை மட்டுமா சாமிகளுக்கு? ஒரு ஊரையே இரண்டு கட்சிகளாகப் பிரித்து வைத்திருந்த ஒரு கோயில் பிரச்சினையையே தீர்த்துவைக்கவும் முற்பட்டார். இச்செயலிலும் அவர் அபூர்வ சித்துக்கும் பங்குண்டு.

சாமிகளை ஒரு ஊருக்கு அன்பர்கள் அழைத்துச் சென்றனர். ஒரு பழைய கோயில் இருந்த இடத்தில் ஒரு புதிய கோயில்கட்ட வேண்டுமென்று அவ்வூர் அன்பர்கள் முடிவு செய்திருந்தனர்: ஆனால் எந்தத் தெய்வத்திற்காகக் கோவில் கட்ட வேண்டுமென்பதில் அவர்களிடம் ஏகோபித்த முடிவு ஒன்றுமில்லை. அவர்களில் சிலர் பழைய கோயிலில் மதுரைவீரன் சிலை இருந்ததாகவும், மதுரைவிரனுக்கே கோயில்கட்ட வேண்டுமென்றும் வாதாடினர். மற்றவர்கள் பழைய கோயிலில் முனியாண்டி சிலைதான் இருந்ததென்று கூறி முனியாண்டிக்கே கோயில் எழுப்ப வேண்டுமென்று எதிர்வாதம் செய்தனர். சாமிகளை இந்த வாதத்தைத் தீர்ப்பதற்கென்றே அழைத்து வந்தனர். சாமிகள் எவ்வளவோ சிக்கல்களை எப்படி எப்படியோ தீர்த்து வைத்திருக்கின்ருர். வேறு வழியில்லாவிட்டால் தெய்வ அருளைக்கொண்டும் காரியங்களைச் சாதித்து வந்திருப்பது எல்லோரும் அறிந்தது. அந்தத் தெய்வ அருளைக்கோரியே இப்போதும் இவர்கள் சாமிகளைக் கோயில் பிரச்னையைத்தீர்க்க அழைத்து வந்திருந்தனர், தெய்வ அருளைப்பயன்படுத்த அவசியமில்லாச் சூழ்நிலைகளில் சாமிகள் தன் மதியாலும் நிலைமையைச்

சமாளித்துக் காரியத்தில் வெற்றிகண்டிருக்கின்ருர். இளம்பிராயத்தில் தானே நடித்தும், சிலவேளைகளில் தானே டைரக்டராக இருந்தும் மற்றவர்களைத் திறம்பட நடிக்கச்செய்தும் வேலைகளைத் திருப்தி அளிக்கும் வகையில் முடித்தும் கொடுத்திருக்கின்ருர் சாமிகள். இந்தக் கோயில் பிரச்சினையைத்தீர்க்க இப்பொழுது என்ன செய்வது? நடிப்பதா? நடிக்கச் செய்ய டைரக்டர் கோலம் கொள்வதா? அல்லது தெய்வ அருளை நாடுவதா? நன்ருகச் சிந்தனை செய்தபின் மதியையும் மந்திரத்தையும் சேர்த்தே பயன்படுத்திக் கொள்வது என்ற முடிவுக்கு வந்தார் சாமிகள்.

இந்தக் கோயில் பிரச்சினையில் சாமிகளே ஒரு நீதிபதியாக அமைந்துவிட்டார். உண்மை எது என்று சொல்லிவிடுவதால் மட்டும் இந்தப்பிரச்சினையைத் தீர்த்துவைக்க முடியாது. 'இப்படிச் செய்' என்று முடிவு எடுக்கவேண்டும்! நீதிபதியின் முடிவை எல்லோரும் ஏற்றுக்கொள்ள வேண்டும். சாமிகள் நன்ருகச் சிந்தித்தார். இது அர்த்தமற்ற வீண்விவாதம். இங்கு எல்லோருக்கும் கோயில்கட்டுவதில் ஏகோபித்த முடிவும் அளவுகடந்த உற்சாகமும் இருக்கின்றது. மதுரைவீரனுக்குக் கோயிலா அல்லது முனியாண்டிக்கே கோயிலா என்பது யாரும் தீர்த்துவைக்க முடியாத பிரச்சினை. கூட்டத்தில் ஒரு பகுதியினர் சார்பில் பேசினல் மற்ருெரு பகுதியினர் அதை விரும்பவும் மாட்டார், ஏற்றுக்கொள்ளவும் மாட்டார். கோயிலில் வைத்துக் கும்பிடப்போகும் தெய்வத்தை யாரும் அலட்சியப்படுத்தக்கூடாது, அசட்டை செய்யவும் கூடாது. மக்களுக்கு வேண்டியது பக்தி. அந்தப்பக்திக்கு பங்கம் நேரிடக்கூடாது. இப்படிச் சிந்தனைசெய்த சாமிகளின் சொற்கள் குழுமியிருந்தோரின் கவனத்தைக் கவர்ந்தன. "இதோ, இந்தக் கோயிலுக்குரிய தேவதையே பேசப்போகின்றது. அந்தத் தேவதையே உங்களுக்கு வேண்டிய விடையை அளிக்கப்போகின்றது" என்று சாமிகள் சொல்லிய உடனேயே கூட்டத்திலிருந்த ஒருவருக்கு ஆவேசம் வந்துவிட்டது. தேவதையின் பதிலையும் உரைத்துவிட்டார். "நான் இங்கு முன்னே மதுரைவீரனுக இருந்தேன்; இப்போது முனியாண்டியாக இருக்கின்றேன்" என்று கூறி ஆட்டம் அடங்கிவிட்டார் கூட்டத்தில் ஆவேசம் வந்து பேசியவர். நெடுநாள் முடிவுகட்ட முடியாது கட்சிகளை எழுப்புவித்த பிரச்சினை இன்று உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இனிதான முடிவில் தீர்ந்துவிட்டது. நல்ல முடிவு! நல்ல நீதிபதி! யாவருக்கும் திருப்தி! கோயில்எழுந்தது! முனியாண்டி மணி ஒலித்தது! அவன் அருள் எல்லோருக்கும் கிட்டியது! என்னென்று சொல்வது சாமிகளின் புத்திசாலித்தனத்தை! மதி முக்கால், மந்திரங் கால்! உண்மையாகவே மந்திரம் கால்தான்! மதிதான் முக்கால்!!

## பொறுமைக்குச் சன்மானம்

சாமிகளைப் பொறுமையின் சிகரம் என்றே சொல்லலாம். சாமிகள் பக்தர்களின் பொறுமையையும் சோதிப்பதுண்டு. பொறுமைக்கும் தக்க அருள் சந்தானமும் வழங்குவதுண்டு. சாமிகளின் கருணை தோய்ந்த உள்ளத்தில் அன்பிற்கு முண்டோ அடைக்கும் தாள்! கருணையும், அன்பும் தவழ்கின்ற அவர் செயல்களிலும் சோதனை செய்வதற்காகவே சில சமயங்களில் அவர் திருவிளையாடல் செய்வது நினைக்க நினைக்க இன்பம் பயப்பதாக இருக்கின்றது. ஒருதாம் 1965இல் திருப்பதியில் சாமிகள் அன்பர் குழாத்தோடு அளவளாவிக் கொண்டிருக்கையில் சாமிகளிடம் ஒரு அழகான பட்டுப்பையில் குங்குமப் பிரசாதம் கொண்டுவந்து கொடுக்கப்பட்டது. சாமிகள் தன் திருக்கரத்தினுலேயே எல்லோருக்கும் குங்குமப் பிரசாதம் வழங்கினர். 'நான் முன்னே நீ முன்னே' என்று பிரசாதம் வாங்க முந்தியது பக்தர் கூட்டம். நீட்டிய கைகள் எல்லாம் நிறையப் பெற்றன; ஆனல் ஒருகை மட்டும் நீட்டியபடியே இருந்தது; ஏனெனில் அது நிறையப்படவில்லை. எல்லாக் கைகளுக்கும் கிட்டிய பாக்கியம் தனக்குக் கிட்டவில்லையே என்று ஏங்கினரோ என்னவோ, அது தெரியாது! ஆனல் அவர் நீட்டிய கையை பின்வாங்கவுமில்லை, மடக்கவுமில்லை. எல்லோருக்கும் சாமிகள் உளமுவந்து குங்குமப் பிரசாதம் கொடுத்தாகி விட்டது, இவரைத் தவிர. கடைசியாக சாமிகள் உற்சாகம் பொங்கிக்கொண்டு இந்தப் பொறுமைசாலியின் கைகளில் பிரசாதத்தை வழங்கினர். அதோடுகூட பிரசாதத்தையே தன்னுள் கொண்டு விளங்கிய பளபளப்பான அந்த பட்டுப் பையையே மனமுவந்து அப்பொறுமைசாலிக்கு அளித்துவிட்டனர்.

சாமிகள்: அன்பர் வெகுநேரமாக பிரசாதத்திற்காகக் காத்து நின்றது எனக்குத் தெரியும். அவர் பொறுமைசாலி என்பதும் எனக்குத் தெரியும். அவர் பொறுமையை எல்லோரும் அறிய வேண்டுமல்லவா? அவர் பொறுமைக்கும் ஒரு பரிசு வேண்டுமென்று தான் இந்தப் பட்டுப் பையையே அவருக்குக் கொடுத்துவிட்டேன்.

செல்வத்திற்காக ஏங்கிக் கிடக்கும் ஒருவருக்குப் பொற்காசு மட்டு மல்ல; அவைகள் உற்பத்தியாவதற்கு மூலகாரணமாயுள்ள பொன் சுரங்கத்தையே அளித்துவிட்டால் எப்படி இருக்கும்? அப்படி ஆனந்த மெய்தினர் அருள் பிரசாதமும், அதுகொண்ட பளபளப் பான பட்டுப் பையும் பெற்ற பொறுமைசாலி. அவர் வேறு யாரும் அல்ல; சாமிகளது பூரண அருளை அனுபவித்து வரும் மதுரை ஸ்ரீ பன்றிமலை சாமிகள் பக்தஜன சன்மார்க்க சபைக் காரியதரிசி திரு. K. ஆறுமுகம் பிள்ளை அவர்கள்.

1960இல் நடந்த இத்தகைய மற்ருெரு நிகழ்ச்சியும் கேட்பதற்கு இனிமை ஊட்டும் இயல்பினது. பச்சையப்ப கல்லூரிப் பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. த. நா. செங்கல்வராயப் பிள்ளை சாமிகளின் நெருங்கிய பக்தர். ஒருநாள் சாமிகள் இரட்சைக் கயிறு ஒன்றை தானே முறுக்கி மந்திரமுடிச்சுகளுடன் பக்தர் கையில் கட்டுவதற்குத் தயாராக இருந்தார். அப்போது சாமிகளின் சிறந்த பக்தரும் தேவியின் வரப்பிரசாதமும் பெற்ற ஸ்ரீ சாமிஆனந்தம் என்பவர் சாமிகளை வணங்கி நின்ருர்.

சாமிகள்: "இது நல்ல கயிறு; சிறந்த பக்தர்களுக்குத்தான் இத்தகைய கயறு வாய்க்கும். ஆனந்தத்திற்கு ஒரு கயிறு கட்ட வேண்டும்.

இதைக் கேட்ட ஆனந்தம் அவர்கள் தம் கையைச் சாமிகள் முன்பு நீட்டினுர். சாமிகள் கருணையுடன் அக்கயிற்றைச் செங்கல்வராயப் பிள்ளை அவர்கள் கையில் கட்டினுர்.

சாமிகள்: ஆனந்தம் கை நீட்டியபொழுது அந்தக் கயிறு நமக்காகத் திரித்தது. எங்கு தனக்குக் கிடைக்காமல் போய்விடுகிறதோ என செங்கல்வராயப் பிள்ளை கவலையுற்ருர். உண்மைதானே ?

செங்கல்வராயப் பிள்ளை: உண்மையே, ஸ்ரீ ஆனந்தம் அவர்களுக்கு அளிப்பதைப் பற்றி வருத்தமில்லை. ஸ்ரீ ஆனந்தம் சிறந்த பக்தர். ஆனுல் கைக்கெட்டியது நமக்கு வாய்க்கெட்டவில்லையே என்றுதான் எண்ணினேன்.

ஞானகுருநாதருக்கு பிறர் உள்ளத்தில் எழும் எண்ணங்களையா அறிய முடியாது ?

ஆனந்தம் அவர்களுக்கும் ஒரு கயிறு அளிக்க சாமிகள் விரும்பியதை அறிந்த ஒரு பக்தர் கடைக்குச் செல்ல முற்பட்டார். ஆனுல் சாமிகள் முருகனிடமிருந்தே நூல் கயிறைப் பெறத் திருவுளம் கொண்டனர். ஆனந்தம் அவர்களை இடக்கையில் பிடித்துக்கொண்டு வலக்கையை பூஜை அறைக்குள் நீட்டி 'முருகா! முருகா! நூல் கொடு!' என்று சாமிகள் உரைத்தார். சாமிகள் உள்ளங்கையில் சிறுநூல் கண்டு ஒன்று வந்து சேர்ந்தது. அதிலிருந்து ஜவ்வாது வாசனை கமகமவென்று வந்தது. அதிலிருந்து எடுத்த தெய்வீக மணக் கயிற்றை ஆனந்தனுக்கு இரட்சைக் கயிருகத் சாமிகள் ஆனந்தத் தோடு கட்டினர்.

'சிறிது நேரம் பொறுமையாகக் கவலை கொள்ளாமல் இருந்திருந்தால் முருகன் அருளிய கயிறு உங்களுக்கு வாய்த்திருக்கும்" என்று திரு. செங்கல்வராயப் பிள்ளையைப் பார்த்து சாமிகள்

கூறினர். இதைக்கேட்ட செங்கல்வராயப் பிள்ளை அவர்களும் உண்மையை ஒப்புக்கொண்டார். ஆனந்தம் அவர்களின் ஆனந்தத்தை அளவிட முடியுமோ!

சமீபத்தில் 5—7—(8இல் தாண்டிக்குடியில் சீர்செய்யப்பட்ட கோயிலில் குட முழுக்கு வைபவம் சிறப்பாக நடந்தேறியது. கோயில் சீர் செய்ய பங்குகொண்ட அனைவருக்கும் கோயிலார் பட்டு பரிவட்டம் கட்டி மரியாதை செய்தனர். குறிப்பிட்ட நபர்களுக்காக வாங்கி வைத்திருந்த பட்டு பரிவட்டங்கள் தீர்ந்து விட்டன. சாமிகள் இடத்திற்கும், சந்தர்ப்பத்திற்கும் தகுந்தவாறு அற்புதம் ஆடவல்ல கற்பனை வள சிற்பியல்லவா? பட்டு பரிவட்டம் கட்டி மரியாதை செய்யவேண்டியவர் இன்னும் பலர் இருப்பதை உணர்ந்தார். கருணாகர வள்ளலாகத் திகழும் சாமிகள் கை பக்கத்தில் நிற்கும் பக்தர் ஒருவர் வைத்திருந்த காலிப் பைக்குள் சென்றது. சாமிகள் ஒவ்வொரு முறை பைக்குள் தம் திருக்கரத்தை விட்டு எடுக்கும் போதும் இரண்டு பரிவட்டப் பட்டுகள் இணைந்து வந்தன. இந்தப் பட்டு நெருக்கமாக இழையப் பட்டதாகவும், அளவு பெரிதாகவும், ஜரிகைப் பட்டையும் பெரிதாகவும் இருப்பதைக் கண்ட பக்தர்களுக்கு ஆச்சரியத்திற்கு குறைவில்லை. இந்தப் பரிவட்டப் பட்டாடை பெறுபவர்களைக் கண்டு இதற்குமுன் கோவிலார் வாங்கியிருந்த பரிவட்டங்களை பெற்றவர்கள் கொஞ்சம் பொறுமைப்பட்டுத் தானிருக்க வேண்டும்; உண்மையிலேயே நான் பொறுமைப்பட்டேன். ஏனென்றால் எனக்கு சாமிகளுடைய அருள்மயமான தெய்வீகப் பட்டு கிடைக்கவில்லையே என்று எண்ணியே முன்னால் முந்திக்கொண்ட கோயில் பரிவட்டம் கட்டிக்கொண்ட கூட்டத்தில் நானும் ஒருவன். சாமிகள் இப்படி எவ்வளவோ முறைகள் பொறுமைக்கு உரித்தான சன்மானம் அளித்து பக்தர்களை திருப்தி செய்திருக்கின்றார். சாமிகளது அருள் இருந்தால் கிடைக்காதன எதுவும் உண்டோ?

## தனிப்பெருங் கருணை வள்ளல்

> அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
> செந்தண்மை பூண்டு ஒழுக லான்.

சாமிகள் அருட்பிரகாச சீலராக வாழ்வதைக் கண்டோம்: சாமிகள் மணிமுத்து மாணிக்க வாசகராக வாழ்வதையும் கண்டோம். சாமிகள் தனிப் பெருங் கருணை வள்ளலாக வாழ்வதைக் காண்போம். அன்பொழுகப் பழகும் அடியார்க்கெல்லாம் அடியாராக சாமிகள் பழக ஆரம்பித்துவிடுவர். அவர் மனதைக் கட்டுப்படுத்துவது மக்கள் உள்ளத்திலிருந்து கட்டுக்கடங்காது எழுகின்ற தூய அன்பு

வெள்ளம். இவ்வன்பு வெள்ளம் அவருடைய உள்ளத்திலும் பேரன்புப் பிரவாகத்தை ஒரு நொடியில் எழுப்பி விடும்.

1966ல் திருச்சானூரில் அலர்மேல் மங்கைத் தாயார் கோவிலில் உற்சவம் நடந்துகொண்டிருந்தது. ஒரு நாள் காலை திருக்குளத் தில் திருப்பதியிலிருந்து வந்த சக்கரத்தாழ்வாருக்குத் திருமுழுக்கு. அதில் சாமிகளும் பங்கு கொள்ள வந்திருந்தார். சாமிகளின் பேரன்புக்குப் பாத்திரமான திருப்பதி ஜவர்ஹர்லால் நேரு உயர் நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. V. S. வெங்கட நாராயண என்பவர். அவரைத் தடுத்தாட்கொண்ட சாமிகளின் திருவிளையாடல் களை ஒரு புத்தகமாகவே அவர் ஆங்கிலத்தில் 1965ல் வெளியிட்டுள் ளார். அவர் 1966ல் சாமிகள் திருப்பதியில் தங்கி இருந்த நாட் களில் தன்னுடைய சொந்த வேலைகளையும் கவனித்துக் கொண்டும் சாமிகளோடும் கூடவே இருந்து அவருக்கு வேண்டிய பணிகளை உள்ளன்போடு புரிந்து வந்தார். திருமுழுக்குத் திருநாளன்று காலை அவரால் சாமிகளோடு சேர்ந்துகொள்ள முடியவில்லை. உடனடி யாகக்கவனிக்கவேண்டிய சொந்த ஆபீஸ் அலுவல்களை முடித்துவிட்டு சாமிகளோடு சேர மாலை ஓடோடியும் வந்தார். எப்படியாவது மாலை புறப்படும் சாமிகள் பங்கு கொள்ளும் ஊர்வலத்திலாவது சேர வேண்டுமென்று ஓட்ட ஓட்டமாக ஓடி வந்தார், ஆனால் அவர் வந்து சேர்வதற்குள் திருக்கூட்டம் மேளதாளத்தோடு புறப்பட்டுக் குளத்தை பாதி சுற்று சுற்றி விட்டது. திருக்கூட்டத்தை எதிர் நோக்கி ஓடிவந்த தலைமை ஆசிரியர் திருக்கூட்டத்தின் முன்னனியில் நிற்கும் சாமிகளின் திருவடிகளைப்பற்றி சாஷ்டாங்கமாக பூமியில் விழுந்து கும்பிட்டார். காலையிலிருந்து அதுவரை சாமிகளைக் காணாதிருந்த ஆவலும் அன்புத் துடிப்பும் அவர் பாதங்களைப் பற்றிய கரங்களின் அணைப்பிலும் பிடிப்பிலும் ததும்பி வழிந்தன. அன்பின் பெருக் கையும் அது நடுவீதியில் நான்கு பேர் முன்னிலையில் அவர் அடி களில் ஒரு உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியரையே பணியச் செய்ததையும் கண்ட சாமிகளுக்கு ஆனந்தம் தாங்கமுடியவில்லை. தன் இரண்டு திருக்கரங்களாலும் கீழே தன் திருவடிகளைப்பற்றி இருந்த தலைமை ஆசிரியரை அள்ளி எடுத்தார். "வாயைத் திறவுங் கள்" என்றார். தலைமை ஆசிரியர் பதில் சொல்லாமல் உடனே வாயைத் திறந்தார். சாமிகள் அருட்கரங்களிலிருந்து அவர் வாயுள் கல்கண்டு மழை பெய்து விட்டது. "எப்படி இருக்கின்றது" என்று சாமிகள் உடனே கேட்டால் எப்படி இருக்கும் தலைமை ஆசிரியர் நிலை? வாயினின்றும் வழியும்படி கற்கண்டுக் கட்டிகள் வாயை நிறைத்து நின்றன. பேச முயற்சித்தாலும் கற்கண்டுக் கட்டிகள் கீழே விழுந்து விடும் என்ற பயம்: பதில் சொல்லாவிட்டாலும் சாமி கேட்டு தான் பதில் சொல்ல முடியவில்லையே என்ற வருத்தம். இந்தப் பயத்திற்கும் வருத்தத்திற்கும் இடையே அலைமோதிக் கொண்டிருந்த இத்தலைமை

ஆசிரியர் உண்மையிலேயே ஒரு பாக்கியசாலி! சாமிகளுடைய பேரன்பையே சர்க்கரைக் கட்டிகளாகப் பெற்று வாயில் ருசிக்க ஆரம்பித்து விட்டாரே தலைமை ஆசிரியர்!

சாமிகள் ஒரு கருணைக் கடல். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற அவரின் அடிப்படை செயல்களில் ஊறி நிற்பது செழுங்கருணை. ஒருசமயம் தாண்டிக்குடிக்கு உற்சவ சமயத்தில் தன் பக்தர்களோடு சென்றிருந்தார் சாமிகள். 4500 அடி உயரத்தில் இருக்கும் இந்த ஊரில் பகலில் கனத்த மழையும் இரவில் எலும்பையே உலுக்குகின்ற கடுங்குளிரும் வலுத்திருந்தன. சாமிகளுக்கும் சாமிகளோடுவந்திருந்தவர்களுக்கெல்லாம் படுக்கையும் கம்பளியும்கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கூட இருப்பவர்களைச் சாமிகள் எங்கு அழைத்துச் சென்றாலும் நன்றாகக் கவனித்துக்கொள்வது சாமிகளுடைய அருங்குணம். எல்லோரையும் கவனித்து வரவேண்டுமென்றே சாமிகள் எல்லோரும் படுப்பதற்குமுன் அவரவர்கள் தங்கியிருந்த இடங்களுக்குச் சென்று பார்த்து வந்தார். ஒரே ஒரு பெண்மணி மட்டும் தன் பச்சிளங் குழந்தையோடு யாவரும் எதிர்பாராத ஒரு அறையில் குளிர்வாடை தாங்கமுடியாது அமர்ந்திருந்தாள். எல்லோரும் தங்குவதற்கு மற்ற இடங்களில் சகல ஏற்பாடுகளும் செய்திருக்க ஏனோ இப்பெண்மணி மட்டும் இந்தத் தனியறையில் தனியாகத் தங்கிவிட்டாள். இது யாருக்கும் தெரியாது. சாமிகள் இப்பெண்மணி தங்கி இருந்த அறைக்கு முன் வந்ததும் நின்றுவிட்டார். இங்கு ஒருவரும் இல்லை என்று நினைத்துக் கொண்டிருந்தவர்கள் சாமிகள் ஏன் இங்கு நின்று விட்டாரென்று யோசனை செய்ய, சாமிகள் மூடி இருந்த கதவைத் திறக்கச் சொன்னார். கதவு திறந்தது. ஒரு பச்சிளம் குழந்தையுடன் ஒரு பெண்மணி நடுக்கத்துடன் நடுங்கி அமர்ந்திருந்த பரிதாபத் தோற்றம் சாமிகளது மனத்தை அப்படியே உலுக்கிவிட்டது. இப்பெண்மணியின் நிலையைத் தன் ஞானக் கண்களால் கண்டுதான் சாமிகள் இந்த அறைக்கென்றே வந்ததாகத் தோன்றுகின்றது, அன்பர்கள் அப்பெண்மணிக்குப் படுக்கை வசதி ஏற்பாடு செய்ய முற்பட்டபோது சாமிகள் தன் தோள்மீது தனக்காக காக வைத்திருந்த உயர்ந்த கம்பளியை உடனே மனமுவந்து அந்தப் பெண்ணிடம் ஈந்தார், தாயையும் சேயையும் கடுங்குளிர்வாடையிலிருந்து காக்க. இந்தச் செயலைக் காணும் நமக்கு ஸ்ரீ மாதவதாஸர் பக்தருக்கு இறைவன் தாமே வந்து தமது பீதாம்பரத்தை மாரிக் காலத்தில் ஒருநாள் போர்வையாகப் போர்த்திய பெருங்கருணை செயல் ஞாபகத்திற்கு வருவது இயற்கை!

அல்லல்படும் உலகில் வாழ்கின்ற மக்களின் அல்லல்களை நீக்கச் சாமிகள் எப்போதும் மனம் சலித்ததில்லை. அருவருக்கத்தக்க பிணியாளர்களையும் அருள்கரம் கொண்டணைக்கும் சாமிகள் அன்

பிணி என்னென்று இயம்புவது. சாமிகள் பன்றிமலையில் வாழ்ந்து வந்த நாட்களில் ஒருநாள் ஓர் ஏழை மங்கை அவர் உதவிநாடி வந்தாள். கந்தை உடுத்தியும் அழுகிய ரணமான இடதுகாலோடும் பார்ப்பதற்கே பயங்கரமாகக் காட்சியளித்த இந்த ஏழை மங்கை மிகுந்த ஆவலோடு சாமிகளைக் காணவந்தாள். அவள் இழிந்த நிலையையும் ரணத்தினின்று பெருகும் துர்நாற்றத்தையும் கண்ட சிலர் அவள் சாமிகள் வீட்டுத் திண்ணையில் ஏறுவதைத் தடுத்து நிறுத்தினர். தன்னுடைய ரணத்திற்குக் குணம்தேடிச் சாமிகளைத்தேடி வந்துள்ள ஏழை மங்கை இந்த ஊருக்குத் தன் ஊனக்காலாலேயே பல ஆயிரம் படிகள் ஏறிச் சுமார் 4500 அடிகள் உயரத்தில் அமைந்துள்ள ஊருக்கு மூச்சுத்திணற ஏறி இருக்கின்றாள். அவளைத் தடுத்து நிறுத்தினால் எப்படிஇருக்கும்? திகைத்தாள், தத்தளித்தாள், தடுமாறினாள். இவளது அவலநிலையை, பரிதாபநிலையை, பேராபத்துநிலையை யார் சாமிகளிடம் சென்று எடுத்துச்சொல்வது? இதற்குள் ஒரு சிறுகூட்டமே சாமிகள் இல்லத்தின் வாசலில் கூடி விட்டது. பேதைப்பெண் வாய்விட்டுச் சாமிகளைக் கூப்பிடவும் அவகாசம் கொடுக்காத இச்சிறுகூட்டத்தின் இரைச்சலைக் கேட்ட சாமிகள் வீட்டினின்றும் வெளியே வந்தார். அப்போதுதான் அந்த அம்மை கால் தடுமாறி தடால்என்று படிக்கட்டில் விழுந்தாள். இந்தப் பரிதாபத்தினைக்கண்ட சாமிகளுக்கு மனம் இளகிவிட்டது. விடுவிடென்று ஓடி அவ்வம்மையைச் செந்தூக்காகத் தூக்கி அன்போடு தன் வீட்டுத்திண்ணையில் உட்காரவைத்தார்

சாமிகள்: அம்மா, உங்களுக்கு என்ன வேண்டும்?

அம்மையார்: சாமி, என்னுடைய ரணம் குணமாகவேண்டும்.

சாமிகள்: முருகன் காப்பாற்றுவான்.

ஆம். முருகன் காப்பாற்றினான், மனித உருவில் வந்து ஸ்ரீ பன்றிமலை சாமிகளாக! அருவருக்கத்தக்க நிலையில் உள்ளவளை சாமிகள் நடு மனைக்கு அழைத்துச் சென்றார். மான்தோலில் அமர்த்தினார். அருகில் நெருங்கவிடாதபடி பெருகிய துர்வாடையையும் பொருள்படுத்தாது அவள் ரணத்தைக் கவனித்து அதன் மீது அருள்கரந்து திருநீறு பூசினார். இந்தப் பேரன்பு வெள்ளம் அதோடு நின்றுவிடவில்லை; அவள் கட்டியிருந்த கந்தைக்குப் பதிலாக ஒரு புத்தாடையையும் அளித்தது. அவள் வயிற்றை ஒட்டியிருந்த பசிக்காக உணவும் வழங்கினார். இந்த அன்பின் செயல்களைக்கண்ட ஏழை உள்ளத்தின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. 'என்ரணம் இனி குணமடைந்துவிடும்' என்று சொல்லிக் கொண்டே மறைந்து விட்டாள் அந்தப் பெண்மணி. மறுபடியும் அம்மாது சாமிகள்வீட்டுக்குத் திரும்பிவந்தபோது நான்குமாதங்

கள் கடந்து விட்டன. ஆனால் திரும்பிவந்தவள் அன்று அல்லலுற்றுத் தவித்த ரணமங்கையல்ல. பூர்ணகுணமான குதூகலநங்கை நெடுநெடுவென்று நேராக சாமி பூஜை அறைக்கே விரைந்து சென்றுவிட்டாள். யாருடைய அனுமதியும் தேவையில்லை இப்பொழுது. சாமிகள் கொடுத்த கருணை உள்ளத்தின் தைரியமல்லவா இப்படி ஒருவரையும் கேட்காது இவ்வம்மையாரை உள்ளேநுழைய ஊக்கத்தைக் கொடுத்துள்ளது. அவள் சாமிகளைக்கண்டு அளவு கடந்த மகிழ்ச்சியோடு பூஜை அறையைவிட்டு வந்தபோது 'மகிமையடா மகிமை' என்றுகூறி துள்ளும் உள்ளத்தோடு விடைபெற்றாள். இதைக் கேட்கும் நமது உள்ளங்களும் துள்ளவில்லையா? 'மகிமையடா மகிமை' என்று நாமும் சாமிகளின் பேரன்புப் பேரருளைக் கண்டு மெய்மறந்து வாய்விட்டுச் சொல்கின்றோம்!

சேலம் அஸ்தம்பட்டி திரு. C. இரத்தின உடையார் எல்லா வசதிகளும் உள்ள நல்ல குடும்பத்தில் பிறந்தும், சிறுவயதிலேயே தகப்பனாரை இழந்து. உறவினர்களிடையேஉள்ள மனப்போக்கின் காரணமாகப் பாதிக்கப்பட்டு மனவேதனையுடன் வாழ்க்கை நடத்தி வரும் எளியவர். கோயில் குளம் இவைகளையும் சாமியாரையும் நாடுவதில்லை. சாமிகள் சேலம் ஸ்ரீ பார்த்தசாரதி அவர்கள் வீட்டில் தங்கி இருந்தபோது சாமிகளைப்பற்றிக் கேள்விப்பட்ட அவருக்குச் சாமிகளைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. சாமிகளைப்பார்த்தவுடன் அனுதினமும் அவர் விபூதிப்பிரசாதம் வாங்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அதைத்தொடர்ந்து இன்னொரு ஆசையும் மனதில் ஏற்பட்டுவிட்டது. அதை மனத்திலேயே அடக்கிவைத்திருந்தார். ஒருநாள் சாமிகளே அவரைப் பார்த்து "உமக்கென்ன குறைபாடு இருக்கிறது" என்று கேட்க தன தாசையை மனத்திலேயே மூடிவைத்திருந்த பக்தரும் "நான் சொல்லித்தான் தாங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமோ" என்றும் துணிந்தும் உரைத்துவிட்டார். சாமிகளும் பேசாமல் இருந்துவிட்டார். பக்தரும் தொடர்ந்து சாமிகளை அனுதினம் தரிசிப்பதையும் விடவில்லை. இப்படியே சிலநாட்கள் சென்றன. மற்றொருநாள் சாமிகள் காரில் போகும்போது பக்தரை வழியில்கண்டு காரை நிறுத்தி, "இரத்தினம் அவர் வீட்டுக்கு வரச்சொல்லி அழைக்கின்றார். ஒருநாள் குறிப்பிடுங்கள்" என்று திரு. பார்த்தசாரதி செட்டியாரிடம் கூறினார். பக்தருக்கு தாங்கமுடியாத ஆனந்தமேற்பட்டுவிட்டது. தன் வீட்டுக்குச் சாமிகள் வருவாரோ, தான் கூப்பிட்டால் ஏதும் சாக்கு போக்குச் சொல்லி வராமல் இருந்துவிடுவாரோ என்று ஏங்கித்தவித்த உள்ளம் சாமிகளே தானாக அறிந்து தானாகவே வர மனமுவந்த சாமிகளது கருணையையே போற்ற ஆரம்பித்தது. சாமிகளும் ஒருநாள் அவர் வீட்டுக்குச் சென்று பூஜை செய்தார். சாமிகள் ஆசிபெற்ற அவர் மனத்தில்

ஒரு தெம்பும் வளமும் ஓங்கியது. "நான் ஏழ்மையாக வாழ்க்கை நடத்தினலும் மனம் நிம்மதியுடனும் திருப்தியுடனும் சஞ்சலம் எதுவுமின்றி வாழ்கின்றேன், வீட்டில் சந்தோஷம் நிலவுகின்றது" என்று பெருமையோடு சாமிகளின் கருணையை ஏத்துகின்ருர்.

சாமிகளுக்கு ஏழையென்றும் செல்வர் என்றும், வேண்டியவர் என்றும் வேண்டாதவரென்றும், ஹிந்துக்கள் என்றும் மற்ற மதத்தினரென்றும் வேற்றுமையே கிடையாது. எல்லோரையும் அருள் நோக்கு அன்பினலேயே காண்கின்ருர். தன்னை நாடியவர் யாரையும் ஒன்ருகவே பாவிக்கின்ருர். அருளமுது எல்லோருக்கும் வித்தியாசமின்றி வழங்குகின்ருர். சில ஊர்களுக்கு வருகை தந்து தவருமல் அழைக்கின்ற பக்தர்கள் வீட்டில் தங்கும்போதுகூட சாமிகள் தானே விரும்பிச் சில ஏழைக் குடும்பங்களையும், அவர்கள் எங்கிருந்தாலும், காரோ வண்டியோ நுழைய முடியாத சந்துகளில் இருந்தாலும், அங்கும் சென்று அவர்களைக் கண்டு அவர்கள் பக்தி விஸ்வாசத்தோடு கொடுக்கும் பாலையும் காப்பியையும் சாப்பிட்டு அகமகிழ்வதைப் பக்தர்கள் அறிவோம். இந்த அருமைக் குணத்தைப்பற்றி பக்தர் வி. சீதாராமன் போற்றும் உரைகளில் புதுமை மெருகும் உண்மை ஆழமும் பொதிந்துள்ளதைப் பார்த்து மகிழ்வோம். "என் குருநாதருக்கு 'கன்ஸல்டிங் ஹவர்சோ' அல்லது 'கன்ஸல்டிங் பீஸோ' கிடையாது. யார் வேண்டுமானலும் எப்போது வேண்டுமானலும் பார்க்கலாம் பழகலாம். குறைகளைச் சொல்லி நீங்கும்படி பிரார்த்திக்கலாம்... 'காசே கடவுள்' என்று வெறிகொண்டு ஆட்டம்போடும் இந்தக் காலத்திலே அத்தக் காசைச் சம்பாதிப்பதற்காக எத்தகைய ஈனச் செயலையும் கூசாது செய்ய முன்வரும் மக்கள் நிறைந்த இந்த உலகத்திலே, பாவச் செயல்களே தழைத்தோங்கும் இக்கலியுகத்திலே காசையும், காணிக்கையையும் எதிர்பாராமல் 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற ஒரே குறிக்கோளோடு தன்னைத் தேடிவரும் பக்தர்களுடன் அளவளாவி அவர்களது குறைகளை நீக்கி குணவான்களாக வாழச்செய்து வரும் அவதார மூர்த்தி ஸ்ரீ சாமிகள்"

சாமிகள் அண்டியவர்களின் அருள்பிரசாதமாக மட்டுமா விளங்குகின்ருர், சாமிகள் ஏழை பங்காளனுகவும் உதவுகின்ருர் என்பதை சாமிகளின் பக்தர் தன் சொந்த அனுபவத்திலிருந்து சொல்வதையே கேட்டு இன்புறுவோம் சென்னை திரு K. V. கிருஷ்ணமூர்த்தி இன்று சாமிகளின் ஆப்த சீடர்களுள் ஒருவராக விளங்குபவர். சாமிகளின் அபார சக்திகளையும் அரும் பெருஞ் செய்கைகளையும் பல பத்திரிகைகளின் வாயிலாக அறிந்து கொண்டிருந்த இவர் சாமிகளை 1956ம் ஆண்டில் தரிசிக்கும் பாக்கியம் பெற்ருர். சாமிகள் தலைமையில் பெரிய வைபவங்களும் திருமணங்களும் நடப்பதும் இவருக்குத் தெரியும். 1957இல் தன் இரண்டாவது மகனுக்கு

பழநியில் முடி இறக்க தீர்மானித்தார். "(அப்போது) அடியேனுக்கு ஸ்ரீலஸ்ரீ சாமிகள் தம்பதிகளைப் படத்தின் வாயிலாகத் தொழுது வழிபடும் நிலேயேயன்றி மிக நெருங்கிய பழக்கம் இல்லை. சென்னையிலிருந்து பழநிக்குப் புறப்படுவதற்குமுன் ஸ்ரீ சாமிகளின் படத்தின் முன் வணங்கி ஸ்ரீ சாமிகளே உடன் இருந்து இந்த வைபவத்தை நடத்திவைத்தால் எவ்வளவு சிறப்பாக இருக்குமென்று நினைத்தேன். அடுத்த கணத்தில் எந்த நிலைமையிலும் வசதியில்லாத ஒருவனுக்கா இந்த எண்ணம் தோன்றுவது என்று நினைத்துக்கொண்டே பழநிக்குப் புறப்பட்டு விட்டோம்" என்று கூறுகின்றார். மறுநாள் பழநிக்குச் சென்றார் கிருஷ்ணமூர்த்தி தன் குடும்பத்துடன். அங்கு அவரையே வியக்கவைக்கும் ஒரு நற்செய்தி கிடைத்தது. சாமிகளுக்காக ஒரு அறை தேவஸ்தான சத்திரத்தில் ஏற்பாடாகி இருந்தது. அன்று இரவே சாமிகளும் வந்து விட்டார். தன் எண்ணத்தை ஈடேறச் செய்யத் தன் குருநாதரே வந்துவிட்டார் என்று அவரும் அவர் குடும்பத்தினரும் அகமகிழ்ந்தனர்.

சாமிகள்: "நீங்கள் எப்படி இங்கு வந்து சேர்ந்தீர்கள்.

கிருஷ்ணமூர்த்தி: எல்லாம் ஸ்ரீ சாமிகளின் திருஉள்ளம் அறியும்.

சாமிகள்: எனக்கு இதெல்லாம் எப்படித் தெரியும்? நீங்கள் கடிதம் ஏதாவது போட்டீர்களா?

கிருஷ்ணமூர்த்தி: இல்லை.

பின்னர் மேற்கொண்டு ஆகவேண்டிய காரியங்கள் எல்லாம் சாமிகளே நிறைவேற்றி அடியாருடைய விருப்பப்படியே மறுநாள் காலை மலையேறி உடனிருந்து சிறந்த முறையில் வைபவத்தை நடத்திக் கொடுத்தார். தம்முடைய குழந்தையின் முடி இறக்கும் வைபவமும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் அருள்மிகு தலைமையில் நடந்ததை தம் வாழ்விலேயே பொன்னெழுத்துக்களால் பொறித்து வைத்துக் கொள்ளக்கூடிய ஒரு பேரன்புச் சம்பவமாக திரு. கிருஷ்ணமூர்த்தி கருதி பேருவகையில் ஆழ்ந்தார்.

திரு. கிருஷ்ணமூர்த்திகள் மட்டும் தானா இப்படிப் பேருவகையில் ஆழ்கின்றார். சாமிகளுடைய பக்தர்கள் யாவருக்கும் சாமிகளின் அன்பும் அருளும் காத்துக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொருவரும் சாமிகளை, 'மழைக்குக் குடை' யென்றும், 'பசிநேரத்துணை' வென்றும் "வாழ்வினுக் கெங்கள் கண்ணன்" என்றும் அனுபவித்துப் போற்றுகின்றனர். கவி சுப்பிரமணிய பாரதியார் கண்ணனை என் தோழன்




அன்னையார் திருமதி. பாப்பாத்தி அம்மாள் அவர்களோடு சாமிகள்

''முத்துக்கு ஒளி அருளும் அருளாளன் பெருமையெல்லாம்
முத்தான சொற்களிலே மெத்தளிக்கும் மெய்குருவே
முத்தான் மாமதுரை பன்றிமலை பெற்ற முத்தே
முத்தமிழ் முத்தே மணிமுத்தே முத்தருளே''

(திரு. T D. மீனாட்சிசுந்தரம்)



**அன்னையார் திருமதி. பாப்பாத்தி அம்மாள் அவர்களோடு சாமிகள்**

"வண்ணா வடிவின்பமுதம் ஊட்டும் திருக்கோவே
விண்ணமுதைச் சொல்லமுதாய் உவந்தளிக்கும் கோவே
விண்ணுலகின் பேரமுதை உன்னருளால் கோவே
உவந்துவந்து ஏற்று தெய்வபோகம் பெற்னோம் கோவே"

(திரு. T. D. மீனாட்சிசுந்தரம்)

என்று போற்றுகின்ற பாடல்களில் சில வரிகள் சாமிகளுக்கென்றே புனைந்த பாமாலைகளாக விளங்குவதை நாம் சுவைக்காமல் இருக்க முடியாது. — என்றன்

ஊனை வருத்திடு நோய் வரும் போதினில்
உற்ற மருந்து சொல்வான் -- நெஞ்சம்
ஈனக் கவலைகளெய்திடும் போதினில்
இதஞ் சொல்லி மாற்றிடுவான்

..............................................................

அழைக்கும் பொழுதினில் போக்கு சொல்லாமல்
அரை நொடிக்குள் வருவான்
மழைக்குக் குடை பசிநேரத்துணவென்றன்
வாழ்வினும் எங்கள் கண்ணன்

..............................................................

— என்றன்

நாட்டத்திற் கொண்ட குறிப்பினை யிஃதென்று
நான் சொல்லு முன்னுணர்வான் — அன்பர்
கூட்டத்திலே யிந்தக் கண்ணனைப் போலன்பு
கொண்டவர் வேறுளரோ.

..............................................................

— சிறு

பள்ளத்திலே நெடுநாளழுகுங் கெட்ட
பாசியை யெற்றிவிடும் — பெரு
வெள்ளத்தைப் போலமுன் வார்த்தைகள் சொல்லி
மெலிவு தவிர்த்திடுவான்.

..............................................................

— பெரும்

ஆபத்தினில் வந்து பக்கத்திலே நின்
றதனை விலக்கிடுவான் — சுடர்
தீபத்திலே விழும் பூச்சிகள் போல் வரும்
தீமைகள் கொன்றிடுவான்

இத்தகைய குருளனை, அருளாளனை, மெய்க்கண்ணனை அன்பர்கள் தம் வாழ்க்கை வளம் பெற வாய்த்துள்ள பேசும் தெய்வமாகப் பாவித்துப் போற்றிப் பணிந்து வருகின்றனர்.

## கலைஞர்களிடம் ஆர்வம்

"தேன்படிக்கும் அமுதாம் உன் திருப்பாட்டைத் தினந்
[தோறும்

நான் படிக்கும் போதென்னை நான் அறியேன் நாவொன்றோ
ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்
தான்படிக்கும் அனுபவங்காண் தனிக் கருணைப் பெருந்
[தகையே!"

—இராமலிங்க சாமிகள்

சுந்தரர் தேவாரத்தைப் படித்தறிந்த அனுபவத்தைத்தான் இவ்வளவு அழகாகப் பாட்டாகப் பொழிந்துவிட்டார் இராமலிங்க சாமிகள். இதே அனுபவம்தான் சாமிகளைக் காணும் கவிஞர்களுக்கும் காத்திருக்கின்றது. கலைவாணர்கள் பலதுறையில் உள்ளனர்: இலக்கிய உலகிலும் இன்னிசை உலகிலும் சிற்பக்கலை உலகிலும் அவர்கள் உண்டு. அவர்களுக்கு ஜான் கீட்ஸ் கூறியுள்ளபடி அழகுள்ள ஒரு பொருள் எப்பொழுதும் இன்பம் பயக்கும் (A thing of beauty is a joy for ever) அவர்களுக்கு உண்மைதான் அழகு; அவர்கள் அழகில்தான் உண்மையைக் காண்கின்றனர். (Truth is Beauty and Beauty is Truth–keats) அழகு அழகு என்று ஏங்கிக் கிடக்கும் கவி உள்ளங்களுக்கு அழகு தேனிலவிலும் வான வில்லிலும் இளமை வனப்பிலும் இயற்கைப் புன்னகையிலும் மட்டும்தானு கிடைக்கின்றது. தெய்வீகம் கமழும் திருக்கோயில்களிலும் தெய்வீக புருடர்களிடத்தும் அவர்கள் நிரந்தரமான அழகைக் காண்கின்றனர். அந்த அழகு அவர்கள் உள்ளத்தில் பாய்ந்து ஊனையும், உள்ளத்தையும், உயிரையும், உயிருக்கு உயிரானவொன்றையும் பற்றி எல்லை இல்லாத ஆனந்தத்தைப் பெருக்குகின்றது. நமது சாமிகள் அன்பின் ஊற்று. நமது சாமிகள் அருட்ஜோதிச் சுடர், நமது சாமிகள் திக்கற்ற கப்பல்களுக்கு ஒரு கலங்கரை விளக்கம். சாதாரணமாக சாமியார் ஒருவரைப் பார்க்கப்போகின்றோம் என்றவுடன், சேலம் திருமதி. ஜெயலக்ஷ்மி கிருஷ்ணசாமி B. A. அவர்கள் நினைப்பதுபோல், "தலையிலே மொட்டை, நெற்றியிலே பட்டை, கழுத்தில் கொட்டை, கையில் மட்டை, காலில் கட்டை, அறையில் காவி—இவைகளோடு இருக்கும் சாமியாராகத்தான் இருப்பார்" என்று யாரும் எண்ண இடமுண்டு. ஆனால் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளைப் பார்த்தால் அவர் கருணை வடிவினராகக் காட்சி தருவதும், எளிய இல்லற புருஷராக விளங்குவதும், எல்லோரிடத்தும் செந்தண்மைபூண்டு ஒழுகுவதும் மக்கள் யாவரையும் கண்டவுடன் வசீகரிக்கும் பான்மையன. இனிமையே வடிவெடுத்து வந்தவர் சாமிகள்: இனிமையே வாக்கெடுத்து வந்தவர் சாமிகள்: இனிமையே செயலெடுத்து வந்தவர் சாமிகள்.

கோவை முத்துசாமி நாயுடு G. V. B. Sc., அவர்கள் கூறுவதுபோன்று அஞ்சாநெஞ்சம் படைத்த நம் குருநாதரிடம் மக்களை வசீகரம் செய்யும் சக்தி, அன்னாரின் கடலினும் பெரிய ஆழமான அன்பும் பொறுமையும், அடக்கம், சீரிய பண்புகள், நற்குணம், பச்சிளங் குழந்தையின் வெள்ளை உள்ளம், பக்தர்கள் முன்னேற்றத்தில் ஒன்றியிருக்கும் மனம்—இவைகளாலேயே ஏற்பட்டுள்ளது.'' மதுரை திரு. S. நாக சுந்தரம் உரைப்பது போன்று, ''சாமிகள் என்ற வார்த்தைக்கு விரிவுரை தரும் பண்புகளான அன்புடைமை, அருளுடைமை, அடக்க முடமை, தவம், வாய்மை, வெகுளாமை, இன்னாசெய்யாமை, அவா அறுத்தல், இறை வலியுறுத்தல், நடுவு நிலைமை, கடமையைச் செய்தல், பயன் எதிர்பாராமை ஆகிய குணங்கள் நமது சாமிகளிடம் பூரண மாக இருக்கின்றன. வித்துவான் சிவ. முருக. இலக்குவன் M.A.,M.O.L., எடுத்துரைப்பது போன்று, அன்பு தவழும் திருமுகம், ஒளிகாலும் களிமிக்க கவினுடைய கண்கள், அறஞ்சொல்லும் நெஞ்சம், கருணை கனிந்த மொழி, நல்லோரிடத்தும் வல்லோரிடத்தும் எளியோரிடத் தும் எல்லோரிடத்தும் இனிமையாகப் பழகும் பண்பு, நகைச் சுவை ததும்ப இனிது உரையாடும் இயல்பு, அரிய பெரிய சித்தாந்த வேதாந்தக் கருத்துக்களை 'கதிர்விளக்கும் மண்டிலம்' என இனிது விளக்கும் தெளிவு, ஏழிசையாம் இன்னிசையில் மதுகரமாய் மகிழ்ந்து ஈடுபடும் தன்மை, தொண்டர் சீர் பரவுவார் இறைவன் புகழ்பாடும் இனியபாடல்களைச் செவிமடுக்கும்போது தன்னை மறந்திருத்தல், பூசை வேளைகளில் ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்குயிராய் ஆடும் கருணைக் கடலாம் பரஞ்ஜோதியின் அருள் ஒளியிலே இரண்டறக் கலந்து இருத்தல் ஆகிய இயல்புகளுடன் நமது சத்குரு நாதசுவாமிகள் நம் மிடையே மிக்க எளிமையுடன் வாழ்ந்து வருகின்றார்கள். திரு. வி. சீதா ராமன் வருணிப்பதுபோன்று, நமது சாமிகள் ஆஸ்திகத்தைப் பரப்ப வந்த அன்பின் உருவம். ஆண்டவனுடன் இரண்டறக்கலந்தும் மனித ருள் ஒருவராக நமது மத்தியில் பழகிவரும் மாணிக்கம்: சின்ன வயதில் தன்னை அறிந்து சித்துவிளையாடும் சக்தி சொரூபம்: ஆறு முகன் அருளால் அற்புதங்கள் நடத்திக் காட்டும் அருள் வடிவம்: பன்றிமலை பரிந்தளித்த பாவனமூர்த்தி. இப்படி விளங்குபவர் கவி உள்ளம் படைத்த கலைவாணர்களைக் கண்டவுடன் வசீகரிக்கும் இயல்பினர்.

கலைஞர்களும் சாமிகளைக் கண்டவுடன் உற்சாகம் பெற்று இசை வெள்ளத்துள் ஆழ ஆழப்பாய்ந்து ஆட ஆரம்பிக்கின்றனர். இசை வானின் உச்சி எல்லையையே எட்டிப் பிடிக்கின்றனர். கவி இசைமணி திரு. மதுரை திரு. சோமசுந்தரம் அவர்களின் கச்சேரி மதுரையில் சாமிகளின் வருகையை முன்னிட்டு 1961இல் நடக் கின்றது. கானாமிர்த மழை கொட்டுவது போன்று அன்று திரு. சோமசுந்தரம் அவர்கள் தமிழ்க் கீர்த்தனங்களையும், திருப்புகழ்ப்

பாமாலைகளையும் சரமாரியாகப் பொழிந்து விட்டார். 1965இல் திருப்பதியில் அலர்மேலுமங்கை சந்நிதானத்தில் வாசித்துக் கொண்டிருந்த இசைப்பேரறிஞர் திரு. P. S. வீருசாமி பிள்ளை சாமிகளைக் கண்ட பேருவகையில் குமரனுக்குகந்த இராகங்களையும் மெட்டுப் பாட்டுக்களையும் காவடிச் சிந்தையும் ஆனந்தக் களிப்பு மயமாக வாசித்தளித்தது இன்றும் காதில் ஒலித்துக்கொண்டிருக்கின்றது. திருச்சியில் 1967இல் சாமிகள் தலைமையில் நடந்த ஒரு திருமணத்தின் போது வாசித்த திருவாவடுதுறை ஆதீன வித்வான் குளிக்கரை திரு பிச்சையப்பா அவர்கள் சாமிகள் முன்னிலையில் சங்கீதப் பேரார்வமுற்று இசை ஜாலங்களையெல்லாம் தமது நாதஸ்வரத்தில் யாவரும் மெய்சிலிர்க்கும்படி வாசித்துக் காட்டினார். இந்த வித்வான்களெல்லாம் சாமிகள் கலந்து கொள்ளும் வைபவங்களில் அடிக்கடி வாசித்துச் சாமிகளை மகிழ்வுறச் செய்ய விரும்புவதிலும் தம் மன நிறைவைக் காட்டிக் கொள்கின்றனர்.

சாமிகளுக்கு வாய்த்துள்ள பக்தர்களுள் பாடகர்கள் கவிஞர்களுமுண்டு, பாடகர்களுமுண்டு. பாடகர்கள் சாமிகளை இசை உலகிற்கு அழைத்துச்சென்று அங்கிருக்கும் அழகுராகக் கைலையங் கிரிகளையும் கீர்த்தன மாளிகைகளையும் நொண்டிச்சிந்து காவடிச்சிந்து போன்ற சிந்து பைந்தோட்டங்களையும் காட்டி சாமிகளையும் மகிழ்வித்துத் தானும் மகிழ்வர். கவிஞர்கள் சாமிகளை நடு நாயகமாக வைத்துச் சிந்து பாடுவர், பாமாலை புனைவர், போற்றி இசை அமைப்பர், கீர்த்தனைகள் செய்வர். சில கவிஞர்கள் தாம் அமைத்த பாட்டுக்களையே சாமிகளிடம் பாடி அகமகிழ்வர். சாமிகளுடைய அருட்பொலிவையும் ஆத்தும சக்தியையும் பெருங் கருணையையும் படம் பிடித்துக்காட்டி இருக்கின்றனர் பாக்கிய பரணியில் மலர் ஒன்றில் இதழ் நான்கில். உண்மையாகவே சாமிகளுடைய அபயகரத்தோடு கூடிய படம் புத்தக ஆரம்பத்தில் திருவருட் பொலிவோடு விளங்குகின்றது. அதற்குமேல் படத்தினையே சொற்களில் படம் பிடித்து அமைத்துத் தந்திருக்கின்றனர் ஒரு மெல்லிய காகிதத்தில், அடியில் உள்ள திருவுருவும் தெரியும்படி!

"தாமரை இருக்கை தாங்கத்
தாழ்வடம் மார்பில் ஆடப்
பூமணத் தென்றல் பாதப்
போதினை வருடி நிற்க
ஓமெனும் பிரணவ நாதத்து
உருவமாய்ப் பன்றி வெற்பின்
கோமகன் கொலுவீற் றுள்ளார்
குவலயம் இன்பம் எய்த"

கவிஞர் திரு. ரா. பு. தங்கராஜன் "கலைமகள்" வெள்ளி விழாக் கவிதைப் பரிசுபெற்ற பாவலர். சாமிகளின் ஆப்த பக்தர்களுள் ஒருவர். அவருடைய பாமாலைகளெல்லாம் சாமிகளுடைய பேரருள் வனப்பையும் மாண்பையும் சொல்லோவியமாக இனிது காட்டும் இயல்பின.

"நெஞ்சே வருந்தாதே நீங்கும் துயரெல்லாம்
அஞ்சாதே வெற்றி அடைந்திடுவாய்—மஞ்சுதவழ்
பன்றிமலை சித்தர்அருள் பாவிக்க வந்துவிட்டார்
இன்பமே என்றும் இனி"

இதைப்போன்ற பாடல்கள் தமிழ் இலக்கியத்திற்கே அணி செய்யும் பெருமையோடும் பொருள் ஆழமும் செறிந்து விளங்குவ தோடுகூட சாமிகளின் கருணை ஆற்றலையும் எல்லோருக்கும் எடுத் துரைக்கும் எளிமையும் இனிமையும் கொண்டுள்ளன. இவர் இயற்றியுள்ள சாமிகளின் தமிழ் அருச்சனை போற்றிப்பாக்கள் அருச்சனை இலக்கியத்திலேயே தலைசிறந்ததும் வழிகாட்டியுமாக அமைந்துள்ளதைத் தமிழ் வாணர்கள் போற்றுமலிருக்க முடியாது. இவர் இயற்றியுள்ள பன்றிமலை குறவஞ்சி, நடமாடும் தெய்வம் முதலிய சாமிகள் தொடர்புள்ள பாட்டுக்கள் சாமிகளின் மங்கள குணங்களையும், சித்துக்களையும் தொகுத்துரைக்கின்றன.

கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார் தமிழ் நாட்டிலேயே தமிழ் எழுத்தாளர் வரிசையில் முன்னணியில் இருப்பவர். அவரு டைய மதுரமொழி கீர்த்தனங்களைப் பல வித்வான்கள் பாடித் தமிழ் உலகை மகிழ்விக்கின்றனர். அவருடைய பாக்களில் தெய்வீகப் பொருளுமுண்டு, தெய்வீக மணமுமுண்டு, தெய்வீக இனிமையும் உண்டு. கவியோகியே சாமிகளின் சிறப்பை இருபத்தோரு போற்றுரைப் பாடல்களில் மனம்கனிந்து பாடி இருக்கின்றார். அவருடைய 21வது வாழ்த்துப் பாடல் ஒன்றே போதும் முதல் இருபது போற்றிப் பாடல்களின் இனிமையைச் சுவைத்து அனுப விக்க!

"வாழிய நின் அவதாரம்!
வாழிய நின் அருளே!
வாழிய நின் அற்புதங்கள்!
ஏழுமலை முருகா!
வாழிய நின் அன்புவளர்
வாக்கமுத வெள்ளம்!
சூழுகசுத் தானந்தச்
சுவைக்கினிய தேனே!

சாமிகளது பக்தர்கள் பக்தி பரவசத்தில் பாமாலே புனைந்து சாமிகளை வழுத்தியிருப்பதை 'பக்தர்கள் இதய கீதத்தில்' நாம் படித்து மகிழ்ந்தோம். அடியேனும் சாமிகளைக் கண்டு பரவசப் பட்ட நிலையில் என்னால் இயன்ற அளவில் ஸ்ரீ பன்றிமலை சாமிகள் கீர்த்திப்பத்து, இதயாஞ்சலிபத்து, சற்குரு பாமாலை, யோகநாதர் போற்றிப்பத்து முதலிய பாமாலைகளையும் தாண்டிக்குடி மயில்பாட்டு, கும்மிப்பாட்டு, கீர்த்தனைகள் முதலிய பாடல்களையும் புனைந் துள்ளது சாமிகள் கிருபாகடாக்ஷத்தாலும் அதனால் என்னுள் ஓங்கிய உற்சாகத்தாலுமே!

சாமிகளே ஒரு சாகித்ய கர்த்தா! சாமிகளே ஒரு கவிஞர்! சாமிகளே ஒரு கலைஞர்! அதனாலல்லவா அவர்கள் உள்ளத்தி லிருந்து எழுகின்ற கீதங்களைக் கேட்டு பரவச மடைகின்றார், கலை ஞர்களோடு பேசுவதிலும் பேரார்வம் கொள்கின்றார். சாமிகள் திருக்கோவிலூருக்குச் சென்று கோவிலில் அம்மன் சிலைக்குப் பின்னால் வைத்த பெரும் சாவியை வெளியே பறந்தோடி வைத்த அதி சயத்தைப் படித்திருக்கின்றோம். இந்தப் பேராச்சரியத்தைப் பார்த்த திருக்கோவிலூர் அர்ச்சகருக்கு உடனே தனக்குவேண்டிய பாடகர் ஒருவர் நினைவு வந்தது. அகில இந்திய ரேடியோவில் பாடிக்கொண்டிருந்த அந்தப் பாடகருக்குத் திடீரென்று பாட்டுப் பாட முடியவில்லை. அக்குறை சாமிகளால் உடனே நிவர்த்திக்க முடியும் என்பதை அறிந்துகொண்ட அர்ச்சகர் இவ்விஷயத்தை சாமிகளிடம் அறிவித்தார். அப்போது மணி இரவு 12 இருக்கும். பாட்டுக்கும் பாடகர்களுக்கும் பெருமதிப்பு அளிக்கின்ற கருணை சாமிகளா தயங்குவர் தம் கருணையை அளிக்க! பாடகரையும் அழைத்து வந்தனர். சாமிகள் அருளால் பாடமுடியாதிருந்த குறையும் அப்பொழுதே மறைந்தது. பாடகரும் பாடி சாமிகளை மனங்குளிர வைத்தார். பாட்டிலும் பாடகரிடத்திலும் எழுகின்ற சாமிகளின் ஆர்வம் நேரம் செல்வதைக்கூட பொருட்படுத்துவ தில்லை. காலங்கடந்து வருபவரையும் கவனித்து அனுப்பும் சாமி களின் அருள்தான் என்னே!

சங்கீத மேதைகளின் உற்சாகம் சாமிகளின் உற்சாகத்தைப் பெருக்கிவிடும். ஒரு சமயம் பிடில் வித்வான் மைசூர் சௌடய்யா அவர்களுக்கு ஒரு அருள்சீட்டு அவர் கன்னட மொழியில் வருவித்துக் கொடுத்து சாமிகள் மகிழ்வித்தார். அவருடைய பிடில் வாசிக்கும் நரம்பு கூடிய வில் சாமிகளுடைய அருட்சக்தியால் பூசை அறையில் அந்தரத்தில் எழுந்து ஆடிய அற்புதத்தைக் கண்டவர்கள் இன்றும் மறக்க முடியுமா?

சாமிகள் எது வேண்டுமானாலும் வரவழைக்கும் சக்தி பெற்றவர் என்பதை அறிந்த இசைப் பேரறிஞர் திரு. P. S. வீருசாமி பிள்ளை

தனக்கு நாதஸ்வரத்தில் வாசிக்கும் சீவாலி வேண்டுமென்று சாமி களைக் கேட்டார். கருணை மிகுந்த சாமிகள் "முருகா, பீலியைக் கொடு" என்று கேட்ட மாத்திரத்தில் இரண்டு சீவாலிகள் இசைப் பேரறிஞர் கைகளுக்குப் பறந்து வந்து சேர்ந்தன. சாமிகள் வர வழைத்துக் கொடுத்த பீலிகள் அவருடைய நாதசுரத்திற்கென்றே தனியாகத் தயாராகும் பீலிகளாகவும் அவை இருந்ததைக்கண்டு யாவரும் வியப்புற்றனர். அன்று சாமிகளுக்கு ஸ்ரீ அலர்மேலு மங்கைக் கோவிலில் பொன்னுடை போர்த்தி மரியாதை செய்தனர். அவ்வைபவத்தில் இசைப் பேரறிஞரே நாயனம் வாசித்து சாமி களை மனங்குளிர வைத்தார்.

"என் கற்பனையில் இருந்த சாமிக்கும் நான் பார்த்த சாமிக்கும் எவ்வளவோ வேறுபாடுகள். தாடி இல்லை, காவி இல்லை, சடை இல்லை. நம்மில் ஒருவராகவே இருக்கின்றார். கோவிலுக்குச் சென்றோம். சாமி அவர்கள் (குருக்கள் கொண்டு வந்த) மாலையில் உள்ள பச்சை இலைகளிலிருந்து திருநீறு வரவழைத்து எல்லோருக் கும் அளித்தார். எல்லோரும் பயபக்தியுடன் நெற்றியில் இட்டுக் கொண்டோம். நான் சிறிது தூரம் எட்டிப் போய்விட்டேன். திருநீறு இடுவது, காலில் விழுந்து கும்பிடுவது பிடிக்காத காரணத் தால். பிறகு அம்மன் சன்னதியில் குங்குமம் வரவழைத்துக் கொடுத்த தாகச் சொன்னார்கள். என்னைப் பொறுத்த மட்டிலும் அது ஒரு ஜால வித்தை (மேஜிக்) என்று கருதினேன்." இப்படிக் கூறுபவர் வேறு யாரும் இல்லை சாமிகளுடைய திருச்சிலையைச் செய்ய இருக்கும் சிற்பி, ஓவியர் திரு R. வெங்கடேசன் அவர்கள். இந்த மனப்பான்மையரிடத் திலா சாமிகள் சிலையைச் செய்விக்க ஒப்புவித்தனர் என்று கேட்கலாம். 'ஆம்,' அவரும் சிலை வேலையை ஆரம்பித்தார். சிலை ஒருவாறு உரு வாகிய தறுவாயில் சாமிகள் தன் பேரக் குழந்தைகளோடு சிலையைக் காண வந்தார். குழந்தைக்குக்கூடச் சிலையை அடையாளங் கண்டு கொள்ள முடியவில்லை என்பதை அறிந்த சிற்பிக்கு அப்பொழுது தான் தெரிந்தது எவ்வளவு நிலையில் உள்ளது தன் வேலையின் திறன் என்று! "அவருடைய (சாமிகளுடைய) அன்பும், பரிவு கலந்த ஆதரவும் பார்த்த பிறகு – இவ்வளவு நல்ல கல்யாண குணங்கள் அமைந்தவர் எவ்வளவு எளிமையாகப் பழகுகிறார் என்பதைக் கண்ட பிறகு என் வித்தையால் எனக்கு ஏற்பட்ட மண்டை கர்வம் படிப் படியாக இறங்கிவிட்டது. இரண்டாம் தடவை நல்ல புகைப் படங் கள் எடுத்தேன். அவைகளைக் கொண்டு சிலையை உருவாக்கினேன்." என்று அதே சிற்பி கூறுகின்றார். அவர் தன் வேலையை இரவு 7 மணிக்கு ஆரம்பித்து விடியற்காலை மூன்று மணி வரையிலும் செய்வர். சாமிகளுடைய சிலை வேலையை செய்யும்போது பக்தி விஸ்வாஸத்தோடேயே அதில் ஈடுபட்டார். ஒரு நாள் சாமிகளின் சிலையின் திருமுகத்தை மிகுந்த அக்கறையுடன் செய்து கொண்டிருந்

தார். இரவு சுமார் 2-30 மணி இருக்கும். சாமிகள் அவர் பின்புறத்தில் தோளைத் தட்டி சிலையின் தோளை கவனித்து செய்யும்படி கூறியது போல் இருந்தது. சுற்றும் முற்றும் பார்க்க ஒருவரும் இல்லை. இப்படியே மற்றொரு சமயம் சாமிகள் 'வெங்கடேசா' என்று கூப்பிட்டு அவரைத் தட்டியதை உணர்ந்தார். ஆனால் யாரையும் காணவில்லை. சாமிகள் அப்பொழுது இலங்கையில் இருந்ததை உணர்ந்த சிற்பிக்கு இது மகான்களின் திருவிளையாடல் என்பது விளங்கியது. இது நடந்த சிறிது நேரத்திற்குள் அவர் கலைக்கூடத்தில் இருந்த சிலைகள் எல்லாம் சிறிது சிறிதாக மறைந்ததைக் கண்டார் அவ்வளவு தான். மறுதினம் காலை 10 மணிக்கு எழுந்த பிறகுதான் சுய நினைவு வந்தது. "நானோ பொது உடைமை வாதி, கடவுள் மத நம்பிக்கை அற்றவன், யாரிடம் சொல்வது இரவு நடந்ததை" என்று கூறும் அவர் அதைத் தன் தம்பியிடம் கூறினார். இது அவர் வாழ்வில் கண்ட புதுமையல்லவா?

சிலை வேலை பூர்த்தியானது. மறுபடியும் சாமிகள் தம் பக்தர்களுடனும், பேரக்குழந்தையுடனும் சிலையைப் பார்க்க வந்தார். "யாரப்பா இந்தச் சிலை" என்றார் சாமிகள். "இது தாத்தா சிலை" என்றான் பேரக்குழந்தை. பக்தர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு குறையைக் கூற ஆரம்பித்தனர். இதைக்கேட்ட சிற்பியின் மனம் வேதனையுற்றது. அதைக்கண்ட சாமிகள் ஒரு அறிவுரை வழங்கினார்.

சாமிகள்: (பக்தர்களைப் பார்த்து) கானகத்தில் ஒரு மயில் ஆடியது. அதை ஒரு சித்திரக்காரன் பார்த்துப் படமாக வரைந்துகொண்டான். ஒரு நாட்டியக்காரன் மயில் ஆடுவதைக் கண்டு தானும் அதைப்போல் ஆடிப் பழகிக்கொண்டான். பக்தன் ஒருவன் வந்தான். அவன் அந்த மயிலை முருகன் ஏறுகின்ற வாகனம் என்று கும்பிட்டு பரவசம் அடைந்தான். கடைசியாக வேடன் ஒருவன் வந்தான். குறி பார்த்தான். அம்பை எய்தான். மயில் கீழே விழுந்தது. அதைப் பையில் திணித்துப் போய்விட்டான். ஆகவே நீங்கள் (பக்தர்கள்) ஆக்கப்பூர்வமான யோசனை கூறிச் சிலை சிறந்த முறையில் உருவாக்க உங்களுக்குப் பிடித்த தினத்தில் வந்து பார்த்துச் சொல்லுங்கள்.

சாமிகள்: (சிற்பியைப் பார்த்து) எனக்கு அகோரமாகப் பசியாக இருப்பதாக வைத்துக்கொள்ளுங்கள். நெடுந்தூரத்திலிருந்து சில பக்தர்கள் துயரத்துடன் வந்து அவர்கள் துயரைக் கூற வருகின்றார்கள். அவர்களை 'அசெ' என்று கூறுவது முறையாகுமா? நான் பொறுமையை வரவழைத்து அவர்களுக்கு ஆறுதல்கூறி அனுப்புவது தான் பண்பல்லவா?

இந்த அறிவுரையைக் கேட்ட பக்தர்களும், சிற்பியும் ஒத்துழைக்க சிலை வேலை பூர்த்தியானது. சிலையைப் பூர்த்தி செய்த திரு.

வெங்கடேசன் அவர்களுக்கு ஒரு மகானின் சிலையைச் செய்து முடித் தோம் என்ற திருப்தி மட்டுமல்ல, சாமிகளை ஒரு கண்கண்ட தெய்வ மாகவும் அடைந்த பேருவகையும் கொண்டார். 20—11—60இல் அடித்த பேய் மழையும், கடும் புயலும் அதனுல் ஏற்பட்ட வெள்ளமும் தென்னை ஓலைக்கொட்டகையில் உள்ள தன் கலைக்கூடத்தைப் பெயர்த்துவிடும் என்ற பீதியில் சாமிகளின் திருச்சிலையைத் தவிர மற்ற எல்லா சிலைகளையும் அப்புறப்படுத்தி விட்டார் சிற்பி. சாமி களுடைய சக்தியைத்தான் பார்ப்போமே என்று இப்படிச் செய்தாரோ என்னவோ நமக்கு தெரியாது. இதை நம்புவீர்களா? இந்தக் கொட்டகையைவிடப்பலமாகக் கட்டப்பட்டிருந்த பக்கத்துக்கொட்டகை எல்லாம் சடசடவென்று முறிந்து விழுந்தது. பெரிய மரங்களும் பக்கத்தில் விழுந்தன. ஆனுல் காற்றில் பறந்து போகக்கூடிய சாமி கள் திருச்சிலை கொண்ட பனை ஓலைக் கொட்டகை மட்டும் பத்திரமாக நிலையாக நின்றது. இது எதனுல் என்ற கேள்வி எழுகின்றது. "எல்லாம் சாமி அவர்களின் ஆசீர்வாதத்தால்தான் என்று கருது கின்றேன்" என்று சிற்பி திரு. வெங்கடேசன் அவர்களே பதில் கூறுகின்ருர். சாமிகள்மீது பூரண நம்பிக்கை ஏற்பட மற்ருெரு சம்பவமும் நடந்தது. அவருடைய தம்பியின் மனைவிக்கு நெடுநாட் களாக எலும்புருக்கி நோய் சுரபி வீங்கி இருந்ததை எவ்வளவோ முயற்சிகள் செய்தும் பயனில்லாமல் போய்விட்டதை சாமிகள் தம் திருவருள் திருநீற்ருல் குணம் அடையச் செய்தது அவர் உள்ளத்தை பக்தியாலும், விஸ்வாசத்தாலும் நிரப்பியது. "நல்லோரைக் காண் பதுவும் நன்றே, நல்லோர்சொல் கேட்பதுவும் நன்றே, அவரோடு இணங்கி இருப்பதுவும் நன்றே" என்று பரவசநிலையில் சாமிகளின் அருளைப் போற்றுகின்ருர் அன்பர் திரு. R. வெங்கடேசன்.

இத்தகைய பக்தரின் திருமணத்திற்காகத் திருமாங்கல்யத்தையும் சாமிகள் பூஜை அறையிலிருந்து பறந்துவரச்செய்து தன் ஆசியுடன் கொடுத்தார். இல்லற வாழ்வில் சாமிகளுடைய அருள் ஆசியால் இன்பமுற வாழ்கின்ற அன்பர் திரு. R. வெங்கடேசன் நன்மக்கட் பேற்றுடன் சகல நன்மைகளும் பெற்று வாழ்கின்ருர். சாமிகளுடைய அருள் ஆசி அடைந்த குடும்பங்களுக்கு மன நிறைவும், பொருள் நிறைவும் கூடுகின்றன.

சாமிகளே ஒரு அபூர்வக் கலைஞர். கலைமணம் விரிந்தாட அவர் கற்பனையும் சிறகடித்துக்கொண்டு மேலே எழில் ததும்பப் பறக்க ஆரம்பித்து விடும். அப்போது அவர் செய்கையிலும் ஒரு தனிப் புதுமை பரிமளிக்கும். சொற்களிலும் ஒரு தனி இனிமை மணக்கும். சாமிகளுடைய அருட்சக்தியை அளக்கவல்லார் யார்? அவருடைய சக்தியைக் காண்பிக்கும் போதுகூட தன் அபூர்வ கலைத்திறனையும் அல்லவா சாமிகள் காட்டுகின்றனர். கற்பனை வானில் சாமிகளே

உயிர் பறக்கும்போது நம்மையும் தன்னோடு அழைத்துச்சென்று விடுவர். சாமிகளின் அற்புதச்சக்தி எப்படி ஒரு புலவரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது என்பதைக்காட்டும் ஒரு அதிசய நிகழ்ச்சியைக் கண்டு அகமகிழ்வோம்.

தமிழில் புலமைமிகுந்த சைவ சித்தாந்த அறிவாளி ஒருவர் வயதிலும் முதிர்ந்தவர். அவருடைய அனுபவமிக்க வாழ்நாட்களில் தாம்கண்ட கோவில்களையெல்லாம் வரலாறு வாயிலாக இலக்கியமாக தொகுத்துரைத்த பண்டிதர். தாம் ரசித்து அனுபவித்த சமய இலக்கியங்களை அழகோவியங்களாகப் புத்தகரூபத்தில் அளித்துள்ள புலவர். அவர் புலமையை மெச்சி தமிழ்நாட்டிலுள்ள ஒரு மகத்துவமுள்ள பீடாதிபதி அவருக்கு ஒரு உருத்திராக்ஷமாலை அளித்திருந்தார். அதில் ஒருபக்கம் அம்பிகையும் மறுபக்கம் மடத்தின் சின்னமும் உள்ள அழகு வேலைப்பாடுள்ள பொன்பதக்கமும் இணைந்திருந்தது. ஒருநாள் அவர் அந்தத் தங்க உருத்திராக்ஷத்தின் பெருமையையும் அதை அளித்த பீடாதிபதியின் பெருமையையும் தான் தங்கியிருந்த நீதிபதி ஒருவர் வீட்டில் பெருமையோடு பேசிக்கொண்டிருந்தார். அதே நீதிபதி வீட்டில் சாமிகள் தங்கி இருந்ததும் அவருக்குத்தெரியும். சாமிகளின் சித்து விளையாடும் அருள்சக்தியைப் பற்றியும் கேள்விப்பட்டிருந்தார் புலவர். இருந்தாலும் சாமிகளை அதற்குமுன் கண்டிராத அப்புலவருக்குச் சாமிகளின் அருள்சக்தியில் அவ்வளவு நம்பிக்கை இல்லை. தன்னுடைய சக்திமிக்க உருத்திராக்ஷத்தின்முன் எந்த யக்ஷிண்ய வேலையும் நடக்காது என்று பெருமையடித்துக் கொண்டார்.

இந்தப் புலமை வாய்ந்த பெருமை கொழிக்கும் வித்வான் சாமிகளை அவர் தங்கியிருந்த நீதிபதி இல்லத்திலேயே சந்திக்க நேர்ந்தது. புலவரையும் அவர் மார்பில் விளங்கும் உருத்திராக்ஷமாலையையும் கண்ட சாமிகள் அவரோடு உற்சாகத்தோடு உரையாட ஆரம்பித்துவிட்டார்.

சாமிகள் : பெரியவர் அணிந்திருக்கும் உருத்திராக்ஷமாலை பெரியவர் ஒருவரால் கொடுக்கப்பட்டது.

புலவர் : ஆம், சாமி !

சாமிகள் : அது சக்திவாய்ந்தமாலை. அதனிடத்தில் யக்ஷிண்ய வேலை ஒன்றும் பலிக்காது

புலவர் : ஆம், சாமி. சாமிகள் சொல்வது முற்றிலும் உண்மை. அதனிடத்தில் யக்ஷிண்ய வேலை ஒன்றும் பலிக்காது.

சாமிகளின் புன்னகை பூத்தமுகம் அந்த உருத்திராக்ஷமாலை யையே நோக்கிய வண்ணமிருந்தது. சாமிகள் கூறியபடி அந்த உருத்திராக்ஷமாலை புஷ்பங்கள் நிறைந்த தட்டொன்றில் வைக்கப் பட்டது. அடுத்தகணம் அந்தத் தங்க உருத்திராக்ஷமாலை வைத்த இடத்தில் இல்லை. மறைந்துவிட்டது. தெய்வீகம் பொருந் திய அந்த உருத்திராக்ஷமாலையிடம் எந்த யக்ஷிண்ய வேலையும் ஒன்றும் செய்ய முடியாது என்று பெருமையடித்துக் கொண்டிருந்த புலவருக்கு மலைப்புத் தட்டிவிட்டது, என்ன சொல்வதென்று தெரிய வில்லை. இரண்டு பவுன் எடையுள்ள வண்ணமயமான சுவர்ண மாலையல்லவா இப்படி ஒரு கணத்தில் மாயமாக மறைந்துவிட்டது. புலவரின் கலக்க மனநிலையையுணர்ந்த சாமிகள் மறைந்தபொருளை சீக்கிரத்திலேயே பூஜை அறையிலிருந்து ஒரு புஷ்பத்தட்டிலிருந்தே அந்தப் புலவரை எடுத்துக்கொள்ள அருள்செய்தார். மறைந்த பொருளை மீண்டும் அடைந்த புலவருக்குச் சொல்லொணு மகிழ்ச்சி ஏற்பட்டது. சாமிகளிடம் அளவு கடந்த பயபக்தியும் உண்டானது.

புலவரின் ஆசை இப்போது மகாதேவனைக் காணத் தூண்டியது; சாமிகளிடம் தன்னுடைய பேராசையையும் வாய்திறந்துக் கேட்டு விட்டார். "தேவனைக் காண்பிக்த முடியுமா?" இந்தக் கேள்வி சாமிகளிடமிருந்து அரிய உண்மைகளை விளங்க வைக்கும் அற்புத மான பதிலையே கொண்டுவந்தது.

சாமிகள்: பரம்பொருள் இறைவன் அருவமாகவும், உருவ மாகவும், அருஉருவமாகவும் இருக்கின்றான். அருவாகி நின்றானை யார் கண்டார்? உருவத் திருமேனி கொண்டு விளங்குபவனைக் கண்ணாரக் காண உயிர்கள் துடிப்பது இயற்கை. காணும் உருவி னுக்குங் காணுத அருவினுக்கும் அறிகுறியாகச் சிவலிங்கம் அருஉருவ நிலையை விளக்கிக் காட்டும். இப்பரம்பொருள் வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாக ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க் கோனாகி யானென தென்றவரைக் கூத்தாட்டு வானாகி நிற்கின்றது. அதை என்னவென்று சொல்லி வாழ்த்துவது? அது ஒரு மாபெரும் சக்தி. அதை நாம் நேரில் காண்பதற்கு நமது கண்களுக்குப் போதிய சக்தி கிடையாது. அம்மாபெரும் சக்தியின் ஒரு அம்சமான சூரியதேவனைக்கூட நம் கண்கள் காணப் போதிய சக்தி இல்லை. மின் சாரத்தின் மாபெரும் சக்தியை நாம் தாங்க முடிகின்றதா? அதை நமது ஊனக் கண்களாலும் பார்க்க முடிவதில்லை. நாம் பார்க்க முடியாத காரணத்தால் அதை இல்லை என்று மறுக்க முடியுமா? மின் சாரத்தின்சக்தியை மின்சார விளக்குளரிவதன்மூலம் நாம் உணர்கின் றோம். அந்த மின்சார விளக்கையும் ஓரளவு ஒளி பிரகாசத்துடன் தான் நாம் நம் கண்ணால் பார்க்க முடிகின்றது. அதற்குமேல் மின்சார சக்தியைப் பயன்படுத்தி ஒளியை மிகைப்படுத்தினுல் நம்

கண்கள் பார்க்கின்ற சக்தியை மிஞ்சி விடுகின்றது மின்சாரத்தின் ஒளிசக்தி. இதை மனத்தில் வைத்துக்கொண்டு நான் செய்யப்போகும் அற்புதத்தைக் கவனியுங்கள். தேவனை நம்மால் காணமுடியாது, அவனை நேராகக் காணக்கூடிய சக்தி நம்மிடத்தில் இல்லை. தேவதேவனைக் காணமுடியாவிட்டாலும்ஒரு சிறிய தேவதையை இப்பொழுது அழைக்கின்றேன். அதைக் கண்டு களியுங்கள் !''

தேவனைக் காட்டமுடியுமோ? என்பதுதான் புலவரின் கேள்வி. காட்டமுடியும்! ஆனல் அளவிடமுடியாத சக்தி உருவினனை நம்மால்தான் பார்க்கக்கூடிய சக்தி இல்லை. இருந்தாலும் உண்மைப் பொருளை உணர, நாம் பார்க்கக்கூடிய சக்திக்கு ஏற்ப தேவனுடைய சிறு சக்திகளில் ஒன்றை, ஒரு சிறு தேவதையை அழைத்து வரவும் சம்மதித்தார் சாமிகள். இந்தப் பேருண்மைகளை நமது நாட்டிலுமல்ல, நாகரீகம் மிகுந்திலங்கிய கிரேக்க நாட்டிலும் கதைகள் மூலமாக எடுத்துரைத்தனர். ஒரு சில அரிய தத்துவங்களைக் கதைகளின் மூலம்தான் விளக்கி மனத்தில் பதிய வைக்கமுடியும். செமிலி என்பவள் இவ்வுலகத்து வனிதை; அதிருபவதி; அவளைக் கண்டான் தேவதேவனன ஜீபிடர்; கண்டவுடன் காதல் கொண்டான் தேவதேவன். ஒரு மானிட உருவில் அவளை அடைந்தான். இருவர் காதலும் வளர்பிறைபோல் வளர்ந்து வந்தது. இதை அறிந்த தேவதேவனின் தெய்வலோக தேவிக்கும் கோபம் வந்தது. இதை ஒழிக்கத் திட்டமிட்டாள். ஒருநாள் செமிலியை அடைந்து அவள் காதல் நாயகனைப்பற்றி விசாரித்தாள். தேவாதிதேவனே தன்னிடம் வந்து செல்வதை இறுமாப்புடன் கூறிய செமிலியைக் கண்டு எள்ளி நகையாடினள் தெய்வலோக தேவி. யாரோ ஒருவன் தேவதேவனென்று சொல்லி அவளை ஏமாற்றுவதாகவும், அப்படி அவன் தேவதேவனுனல் தன் உண்மை வடிவிலேயே அவளிடம் வரலாமே என்றும் செமிலியிடம் கூறிச் சென்ருள் தேவலோக தேவி. தேவி உரைத்தபடியே செமிலி தன் காதலனைத் தன் சுயவடிவில் வரும்படி வற்புறுத்தினள். தேவதேவன் எவ்வளவோ சொல்லியும் பேதை செமிலி கேட்க மறுத்தாள். அப்போது மனிதவடிவில் உள்ள தேவதேவனை உண்மை வடிவில் ஏற்கக்கூடிய சக்தி செமிலியிடம் இல்லை என்பதை எவ்வளவோ முறை சொல்லியும் பயனில்லை. அவள் வற்புறுத்தலுக்கு இணங்கிய தேவதேவன் தன் கோடி கோடி சூரிய பிரகாச ஒளி வடிவோடு அவளை நெருங்க செமிலி ஒரு நொடியில் அழிவுற்ருள். இறைவனுடைய அளவிடமுடியாத அரிய சக்தியை விளக்குவிக்க இந்தக் கதை உதவுகின்றது. இந்த உண்மை, கதையால் கிரேக்க நாட்டில் விளக்கப்பட்டது. சாமிகளோ தன் அபூர்வக் கலைத்திறனல், அற்புத சக்தியால் இந்தப் பேருண்மையை ஓர் அழகு நிகழ்ச்சி ஒன்ருல் விளக்கினர். இதில் யாருக்கும் ஒருதொந்திரவும் கஷ்டமு

மில்லே. இதனல் கண்டவர்களுக்குக் 'காணுததைக் கண்டோம்' என்ற களிப்பும் அதனுல் உண்மையறிந்த அனுபவமும்!

தேவனைக் காண்பிக்க முடியுமா? முடியும்! ஒரு சிறிய தேவதையைக் காண்பிப்பதன்மூலம் தேவனின் சக்தியை அறிந்து கொள்ள முடியும்! இப்படி அல்லவா சாமிகள் உரைத்து விட்டனர். நீதிபதியின் இல்லத்தில் குழுமியிருந்த யாவரும் வரப்போகும் தேவதையையே எதிர் பார்த்துக்கொண்டு ஆவலுடன் அமர்ந்திருந்தனர். வரப்போகும் தேவதை எங்கிருந்துவரும், எப்படிவரும், எப்படி இருக்கும் என்றெல்லாம் அவர்கள் மனத்தில் பல எண்ணங்கள் உருவாகிக் கொண்டிருந்தன. சாமிகள் நான்கு மகிழம்பூக்களைப் பூஜை அறையில் பறித்து வைக்கச்சொன்னுர். அப்படியே செய்ய மகிழம்பூக்கள் இருந்த இடத்தில் ஒரு சிறிய ஒளி வடிவம் ஏற்பட்டது. பளிச்சென்று தன் இறக்கைகளை அடித்துக்கொண்டு ஒரு தெய்வீக வண்ணப்பூச்சி மேல் எழும்பியது. ஒளிமயமான இறக்கைகள் பளபள வென்று தகதக வென்று ஜெகஜ்ஜோதியாக வளர வளர அந்தத் தெய்வீக ஒளியைத் தாங்கக் கூடிய சக்தி பார்ப்பவர்கள் கண்களுக்கு இல்லே 'கண்கள் கூசுகின்றன. பார்க்க முடியவில்லே' என்ற குரல்களைக் கேட்ட சாமிகள், "முருகா! இவ்வளவு ஒளியைக்கண்டு தாங்கக்கூடிய சக்தி இங்குக் கூடியிருப்போருக்கில்லே ஆதலால் எல்லோரும் பார்க்கக்கூடிய அளவில் பிரகாசம் குறையவேண்டும்" என்று கூறினுர். சாமிகள் கூறிய அடுத்த கணம் கண்கள் பார்க்கமுடியாத இருந்த ஒளி தன்மையும் வேகமும் தணிந்தது. யாவரும் கண்டுகளிக்கவல்ல அற்புதமான அந்த வண்ணப்பூச்சி அங்குமிங்கும் தன் பிரகாசம் பொருந்திய இறக்கைகளை விரித்துக்கொண்டு பறந்தோட ஆரம்பித்தது. தேவதையை எந்த ரூபத்திலும் அழைக்கலாம். சாமிகளுடைய கற்பனுசக்தியும் அற்புதசக்தியும் சேர்ந்தல்லவா இந்த அபூர்வப் படைப்பை உருவாக்கி விட்டன! இது தேவதைதானு? சாமிகள் அழைப்பில் வந்த தெய்வீகம்தானு? ஒருவேளே தோட்டத்தில் மலர்களே வட்டமிட்டுக் கொண்டிருந்த வண்ணப்பூச்சி ஒன்றுதான் இப்படித் தோட்டத்தினின்று தப்பித் தவறி உள்ளே புகுந்து ஆட்டம்போடுகின்றதோ? அந்தச் சந்தேகத்தையும் நீக்குவதுபோன்று சாமிகள், அந்த வண்ணப்பூச்சியைப் பார்த்து, "முருகன் தாளேத் தொட்டு வணங்கிவா" என்ருர். என்ன ஆச்சரியம்! அங்குமிங்கும் ஆடி ஓடித்திரிந்த எழில் மிகு ஒளி வண்ணப்பூச்சி பூஜை அறையில் இருந்த திருமுருகனின் படத்திற்குப் பறந்து சென்று திருமுருகனின் திருவடிகளில் ஒற்றிச் கொண்டது. இதற்கடுத்தாற்போல் சாமிகள் அந்த வண்ணப்பூச்சியைப் பார்த்துப் பிரணவ மந்திரத்தை எழுதும்படி கோரினுர். உடனே அங்கு கூடியிருந்தோர் மயிர்க் கூச்சலெடுக்கும்படி அந்த வண்ணப்பூச்சி சாமிகள் கூறியபடியே செய்தது, நமது வான ஊர்திகள் ஆகாயத்தில் சில விழாக்களில் ஆபூர்வ விளேயாட்டுக்கள்

வானில் காட்டும்போது அவைகளின் பின்புறத்திலிருந்து வெளிப் படும் வெண்புகையால் சிலஎழுத்துக்களை வானில் வரைந்து காட்டு வதைப்போல பறந்து மக்களை மகிழ்விப்பதைக் கண்டுள்ளோம். அந்த வான ஊர்திகளைப் போலவே இந்த வண்ணப்பூச்சியும் 'ஓம்' எனும் பிரணவ திருஎழுத்துக்களைத் தான் பறப்பதின் மார்க்கமாக மேலே பறந்து காண்பித்தது. அதன்பின் உற்சாகமிகுந்த சாமிகள் இட்ட வேலைகளை உற்சாகத்துடன் வண்ணப்பூச்சி தொட்டுச்செய்யவும் ஆரம் பித்தது. 'அம்மாவைச் சுற்றி வா' என்று சாமி சொல்லவேண்டியது தான்! அது நீதிபதியின் மனைவியைச் சுற்றிச் சுற்றிப் பறக்க ஆரம்பித் தது "நீதிபதியின் வலது தோளில் உட்கார்" என்றார் சாமிகள்; அது அப்படியே செய்தது. "புலவர் வலது கையிலும் அமரவேண்டும்" என்றார் சாமிகள். அப்படிச் செய்த வண்ணப்பூச்சி வெளியே ஓடவே இல்லை. சாமிகள் சொற்படி அதைப் பிடித்து வெளியே விட்டுவிட்டு வந்தாலும் உடனடியாக பூஜை அறைக்குள் வந்துவிடும். ஜன்னல் கள் சாத்தியிருந்தும் அது பூஜை அறைக்குள் வந்துவிட்ட அதி சயத்தை என்னென்பது! கடைசியில் சாமிகள் தன் வலது தோளில் வந்தமர்ந்தவண்ணப்பூச்சியைக்கேட்டுக்கொண்டபடி வண்ணப்பூச்சி இமைப்பொழுதில் ஓடி மறைந்துவிட்டது.

"என்ன தேவனைக் காட்ட முடியுமா என்கிறீர்களே, எப்படி இந்த அனுபவம்" என்று கேட்ட சாமிகளுக்குப் பதில் அளிக்கப் புலவ ருக்கு வார்த்தைகள் வரவில்லை. அவ்வளவு மெய் மறந்திருந்தார் அவர் சாமிகள் ஆடிக்காட்டிய தெய்வீக அற்புதத்தைக் கண்டு!

மந்திரங்களைப் பாட்டாகவே பொழிகின்ற சாமிகள் இசைப் பாடல்களையும் பாடி மகிழும் கலைஞர். திருக்காட்டுப்பள்ளியில் ஓர் அழகிய தண்டாயுதபாணியின் உருவையே தம் பக்தர் திரு. T. D. பழனிக்கு மணலில் எழுதிச் சிலை வடிவில் அமைத்துக் கொடுத்த தெய்வீக சிற்பி. அவரால நினைத்ததை முடித்துக் காட்டமுடியாது? தன் அபூர்வக் கலைத்திறனும், ஆற்றலுமல்லவா இன்று ஓர் அரிய நிகழ்ச்சியைக் காண்பித்து ஒரு பெரிய உண்மையை மக்கள் மனத் துள் ஆழப் பதிய வைத்தது. "தேவதேவனைக் காண்பிக்க முடி யுமா?" என்ற கேள்விக்கு எவ்வளவு அழகாக சாமிகள் ஒருசெயலைக் காட்டியே பதில் அளித்துள்ளார்? இது கவிஞர்களின் கற்பனையை மிஞ்சுவதாக அல்லவா அமைந்துவிட்டது!

சாமிகளுடைய கலை ஆர்வத்தை எடுத்துக்காட்டும் நிகழ்ச்சிகள் எண்ணிறந்தன உண்டு. அவைகளைச் சில சமயங்களில் சுருக்க மாகவே கூறிவிடுவதும் உண்டு. அந்தச் சுருக்க உரைகளை விரித்துச் சொல்லும் போதல்லவா சாமிகளுடைய உண்மை ஆற்றலும் அவர் ஆடும் அற்புதங்களுள் அமையும் புதுமையும் புலப்படுகின்றன.

கிளிமானூரில் சாமிகள் திரு. K. K. வர்மா அவர்களுக்கு அளித்த நறுமண விபூதி ஸ்படிக சுந்தர விநாயகரைப் பற்றிக் கேரளநாட்டுப் பயணத்தில் குறிப்பிட்டபோது, "அபூர்வமான அந்த ஸ்படிக சுந்தர விநாயகரும் அற்புதமானதொன்று" என்று எழுதப்பட்டது. சாமிகள் தாமே வரவழைத்துக் கொடுத்த விநாயகர் அற்புதமானதொன்று என்பது தெரிகின்றது. அது எப்படி அபூர்வமானதொன்று என்பதை அன்பர்கள் அறிய ஆசைப்படுவது இயற்கை. நறுமண விபூதி வரவழைத்துக் கொடுத்த சாமிகள் திரு. வர்மா கைகளில் ஒரு ஸ்படிக விநாயகரையும் வரவழைத்துக் கொடுத்தார். இந்த விநாயகரும் வர்மா அவர்கள் திருப்பணி செய்ய இருக்கும் கோயிலுள் உள்ள விநாயகரைப் போலவே சிறிய அளவில் அமைந்துள்ளது ஓர் அபூர்வம். அதைச் சாமிகளிடமிருந்து வர்மா அவர்கள் வாங்கிக் கொண்டபோது அது வெதுவெதுப்பாக இருந்தது மற்றொரு அபூர்வம். சாமிகள் கூறியபடி வர்மா அவர்கள் அதை இறுகப்பிடித்துப் பார்க்கும்போது அது உயிருள்ளவர் போன்று மூச்சுவிடுவதைக் கண்ட அதிசயம், கண்ட அபூர்வங்களிலெல்லாம் பெரிய அபூர்வமாக அமைந்துவிட்டது. சாமிகள் ஒரு அபூர்வ சிற்பியாக அல்லவா விளங்குகின்றார்!

சாமிகளுக்குக் கர்நாடக சங்கீதத்தில் பற்று உண்டு; காவடிச்சிந்து போன்ற பாடல்களிலும் பற்று உண்டு; நவீன இராக அமைப்பிலும் பற்று உண்டு; உள்ளத்தைத் தொடுகின்ற இசை எதுவாயினும் சாமிகள் உளமுவந்து கேட்பார். அப்படியே சிற்பங்கள் படங்கள் மேல் சாமிகள் கொண்டுள்ள பற்றும் அமைந்துள்ளது. கண்ணாடியின் பின்னால் கிருஷ்ணன் உரு அமைத்து ஆடை ஆபரணங்களால் வனப்புறச் செய்துகாட்டும் தஞ்சாவூர் ஓவியக்கலையையும் பார்த்து மகிழ்வுறும் சாமிகள் வட்டங்களாலும், முக்கோணங்களாலும் வரி வடிவுகளாலும் அமைக்கப்படும் நவீன சித்திரங்களைக் கண்டும் களிப்புக் கொள்வர். தென்னிந்திய கலைப்பொக்கிஷங்களாக விளங்கும் நடராஜர், அம்மை அப்பர், கல்யாணசுந்தரர் சிற்ப சிலைகளைக் கண்டு அகமகிழும் சாமிகள், மதராஸ் கடற்கரையில் வைத்துள்ள 'உழைப்பின் கண்ணியம்' போன்ற நவீன சிற்ப வேலைப்பாடுகளையும் கண்டு களிகொள்வர். 1966ஆம் ஆண்டில் சாமிகள் காளத்தியில் கோவில் தரிசனம் முடித்துக்கொண்டபின் பக்தர்கள் அங்குள்ள கடைகளில் அவர்களுக்கு இஷ்டப்பட்ட பொம்மைகளையும் மற்ற சாமான்களையும் வாங்கினர். பக்தர்கள் வாங்கிவந்த பொம்மைகளுள் இரண்டு சாமிகள் கவனத்தைக் கவர்ந்தன. மினுக்கிக் குலுக்கி மேனியை வளைத்துப் புருவத்தை நெளித்து ஒரு கூடையை இடுப்பில் வைத்து ஓட முந்துகின்ற ஒரு தளுக்குப்பெண் பொம்மை ஒன்று, இதைக்கண்ட சாமிகளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அதோடு ஒரு பாட்டும் வந்துவிட்டது.

" ஓடர ஓட்டத்திலே
ஓலைப்பெட்டி கக்கத்திலே
பாடர பாட்டிதிலே
பக்கத்திலே பார்த்துக்கொள் "

என்று வெகு வேடிக்கையாகப் பொம்மையைக்கண்ட அடுத்த கணத்தில் பாடிவிட்டார் சாமிகள். பாட்டின் முதல் இரண்டு வரிகள் அந்தப் பொம்மையை அப்படியே சித்தரித்துக் காட்டுகின்றது. அந்தப் பொம்மையின் அமைப்பையும், அழகையும், விறுவிறுப்பையும், இளமைத் துடிப்பையும், இதைவிட அழகாக எளிதாக இனிதாகச் சுருக்கமான சொற்களில் படம்பிடித்துக்காட்ட முடியாது. அந்தப் பொம்மையின் சிறப்பே அதன் இடுப்பில் அமைந்திருந்த கூடையும் அது ஓட்டமும் நடையுமாய் முந்திக்கொள்கின்ற இளமை விறுவிறுப்பும்; அவைகளை அப்படியே எளிய சொற்களில் இரண்டே வரிகளில் சாமிகள் வருணித்துவிட்டார் கவிதை வடிவிலே.

மற்றொரு பொம்மை மிகவும் நவீனமானதொன்று. முக்கோணம், சதுரம், வட்டம், கேள்விக்குறி போன்ற மரக்கட்டைகளைக் கொண்டு மனித உரு அமைத்து அதில் ஒரு பெண்ணின் வடிவைச் சிற்பி சமைத்துத் தந்துவிட்டான். இதை நான் சாமிகளிடம் விளக்கினேன். சாமிகள் உடனே என் கையிலிருந்த நோட்புத்தகத்தை வாங்கினர். " நானும் உங்களுக்கு இத்த நவீன சித்திரங்கள்மூலம் ஒரு உண்மையை விளக்குகின்றேன் " என்று கூறி ஒரு சதுர வடிவத்தையும், ஒரு அரைவட்ட வடிவையும், ஒரு முக்கோண வடிவையும், ஒரு அறுகோண வடிவத்தையும், ஒரு வட்ட வடிவத்தையும் காகிதத்தில் வரைந்தார். எனக்கு ஒவ்வொன்றையும் சதுரமென்றும் அரைவட்டமென்றும் முக்கோணமென்றும் அறுகோணமென்றும் வட்டமென்றும் சொல்லத் தெரிந்ததே அன்றி, அது ஒவ்வொன்றும் எதைக்குறிக்கின்றது என்பது தெரியவில்லை. சாமிகள் உடனே அதிலே நமசிவாய மந்திரம் அடங்கியுள்ள விபரத்தை இனிது விளக்கினர். " பிருதிவி தத்துவத்திற்குரிய நாற்கோண சதுர வடிவம் 'ந' எனும் எழுத்தைக்குறிக்கும்! அப்புபூதத்தத்துவத்திற்குரிய அரைவட்ட வடிவம் 'ம' எனும் எழுத்தைக்குறிக்கும்! தேயுபூத தத்துவத்திற்குரிய முக்கோணம் 'சி' எனும் எழுத்தைக்குறிக்கும்! வாயுபூத தத்துவத்திற்குரிய அறுகோணம் 'வ' எனும் எழுத்தைக் குறிக்கும்! ஆகாயபூத தத்துவத்திற்குரிய வட்டம் 'ய' எனும் எழுத்தைக் குறிக்கும். இவை அனைத்தும் சேர்ந்து நமசிவய மூலமந்திரத்தையே குறிக்கும்." என்று தெளிவாக விளக்கினர். அடுத்தாற்போல் இந்த 'நமசிவய' எழுத்துக்களை வைத்துக் கொண்டே ஒரு மானிடஉருவம் எழுதிக்காண்பித்தார் சாமிகள்.

“ நம்மதான் சிவம், நாம் சிவம் என்பதைத்தான் எடுத்துக் காட்டுகின்றது நமசிவய மந்திரம் ; அதைத்தான் நான் படமாகவே காண்பிக்கின்றேன் ” என்று உளமுவந்து உற்சாகத்தோடு பேசினர் சாமிகள்.

பேருண்மைகளை அரிய தத்துவங்களை எளிய சொற்களில் இனிதுகூறி விளங்க வைக்கும் சாமிகள் நவீன சிற்பச் சித்திர அமைப்பு முறைகளைக் கொண்டும் சித்திரத்தைக் கொண்டும் எவ்வளவு எளிதில் பேருண்மைத் தத்துவங்களை விளக்கிவிட்டார் ? இதை விளக்கமாகப் படிக்கவிரும்பும் பக்தர்களுக்கும், சாமிகள் பாக்கியபரணி இதழ்வாயிலாக ‘பஞ்சாட்சரம்’ பற்றியே தொடர்ந்தும் கட்டுரைகள் எழுதிவருகின்றார். ‘ நமசிவய ’ மந்திரத்தை ஓவியமாக்கிக் காண்பித்த அற்புதத்தை அவர் எழுத்தோவியத்தைக் கொண்டே புரிந்து கொள்வோம்.

சாமிகள் : “ நமசிவய எனும் ஐந்தெழுத்து ஆதிசக்தியாகிய பரமசிவனுடைய திருநாமமாகும். எங்கும் நிறைந்த, எல்லாம்வல்ல சக்தியானது நமது உடலுக்குள்ளும் நிறைந்து நிற்கின்றபடியால் சாதனையின் சித்தியால் நானே அவன் அவனே நான் எனும் தத்துவார்த்தப் பொருளாகின்றோம்.

> “ நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வுவயிறதாய்
> வெவ்விரண்டு தோளதாய் சிறந்த வவ்வு வாயதாய்
> யவ்விரண்டு கண்ணதாய் எழுந்து நின்ற நேர்மையில்
> செவ்வை யொத்து நின்றதே சிவாய அஞ்செழுத்துமே.”

அதாவது, ந என்ற எழுத்தை இரு கால்களாகவும் ம என்ற எழுத்தை வயிறு ஆகவும் சி என்ற எழுத்தை இரு தோள்களாகவும் வ என்ற எழுத்தை வாய் ஆகவும் ய என்ற எழுத்தை இரு கண்கள் ஆகவும் பஞ்சாட்சரங்களை முறையே உடல் உறுப்புக்களைக் குறிப்பிடுவனவாக அமைத்து, பண்டைய சித்தர்கள் பாடியுள்ளார்களாகையால் நமது உடலே நமசிவய எனும் பஞ்சாட்சர மந்திர எழுத்துக்களால் அமைந்த சூட்சும தத்துவ உருவமாகும். ”

பொதுவாகக் கலைகளைப் போற்றும் நமது சாமிகள் சிறப்பாகத் தமிழ் நாட்டின் அமரத்வ படைப்புக்களாய் அமைந்துள்ள சிற்பவளத்தையும் சிற்பவளம் மிளிரும் கோயில் அமைப்பையும் அருமையையும் போற்றுவதிலும் ஒரு தனி அழகு இருக்கின்றது. கோயில் அமைப்பைப் போற்றுகின்ற சாமிகள் மனித முயற்சியால் அரச ஊக்கத்தால் எழுந்துள்ள மகாபலிபுரம், காஞ்சிபுரம், தஞ்சை, கங்கை கொண்ட சோழபுரம், தாராசுரம், மதுரை, ஸ்ரீரங்கம் முதலிய சிற்பச்

செல்வங்கள் கொழிக்கின்ற பரந்த வெளியில் உருவாகி உள்ள தமிழகக் கோயில்களை மட்டுமா மனக் கண்களில் பார்க்கின்றனர். அதே சமயத் தில் தமிழகத்தின் இதய வெளியிலே ஆத்ம சிற்பிகளால் உருவாக்கப் பட்ட உள்ளக் கோயில்களையும் அல்லவா கண்குளிர அகங்குளிரக் காண்கின்றனர். தமிழ் நாட்டிற்குப் பெருமை கொண்டு வந்துள்ள சிற்பக் கோயில்கள் எழுப்பிய பல்லவ மன்னர்களையும் சோழ மன்னர் களையும் போற்றுகின்ற ஆத்மசிற்பி ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள், தமிழ் நாட்டின் ஆத்ம சிற்பிகள் அனைவரையுமே அல்லவா—ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், நம்மாழ்வார், பூதத்தாழ்வார், இவர்களையும் திருமூலர், ஔவை, திருவள்ளுவர், அருணகிரிநாதர், தாயுமானுர், இராமலிங்க சாமிகள் இவர்களையும்—போற்றுகின்றுர்கள். அவர்கள் கலைக்கோயிலையும் இதயக் கோயிலையும் நிர்மாணித்துள்ள பெரியோர்களைப் புகழும் பொன்னுரையையே கேட்டு மகிழ்வோம்.
சாமிகள்: இசையும் இலக்கியமும் சித்திரமும் சிற்பமும் தமிழகத்தின் வண்மைக்கும் வலிமைக்கும் தொன்மைக்கும் தூய்மைக்கும் மென்மைக் கும் மேன்மைக்கும் அழியாத அரும் பெரும் சான்றுகளாய் நிற்கின் றன. காலங் கடந்த கலைகள், தமிழகத்தின் மாபெரும் பழமைக்குக் கட்டியம் கூறி நிற்கின்றன. தமிழகத்தின் தெய்வீகச் சிற்பங்கள் தத்துவ விளக்கம் செய்கின்றன. வானளாவிய கோபுரங்கள் திகழும் ஆலயங்கள் எல்லாம் தமிழகத்தின் அறிவு ஆற்றல் பண்பு கலை உணர்வு ஆகியவற்றின் அழியாத சின்னங்களாய்த் துலங்குகின்றன. வறண்ட பாறைகளிலே வண்ணக்கலை பிறந்தது. சின்னஞ்சிறு சில்லிலே சிங்காரப் புன்னகை தவழ்ந்தது. உள்ளங் கண்ட வனப் பினை உளிகள் வார்த்தன. ஓங்கி அடித்த ஒவ்வொரு ஒலியும் ஓங்கார ரீங்காரம் செய்தது. இவ்வாறு கல்லின் குன்றுகளைக் கலையின் குன்றுகளாய் வடித்தது சிற்பிகளின் கைத்திறமை. தமிழகத்தின் பரந்த வெளியில் இந்தச் சிற்பிகள் கலைக் கோயில்களை நிர்மாணித்தனர். அதே சமயத்தில் தமிழகத்தின் இதய வெளியிலே கடவுளின் கோயில் களை நிர்மாணித்தனர், ஆத்ம சிற்பிகள். தமிழகத்தின் மகோன்னத மான பண்பினை அன்றும் இன்றும் என்றும் அறிவுறுத்திக்கொண் டிருக்கின்றன அவைகள். இந்த ஆத்ம சிற்பிகள் இறைவனைத் தங்கள் உள்ளங்களில் கண்டார்கள். சிந்தை வெளியில், அன்பு நதிக்கரையில் ஆலயம் அமைத்தனர் சிலர். வேறு சிலர் உள்ளக் கோயிலை அடைவதற்கு அன்புப் பாலம் அமைத்தனர். மற்றும் சிலர் கடமைப்பாலம் கட்டினர். உள்ளக் கோயிலில் துலங்கும் சுயஞ் சோதிச் சுடரை அடைவதற்கு வழி காட்டினுர்கள். "மயங்கும் நிலை மறந்து வினைப் பயன்கள் தனைத் துறந்து, மெய்ப்பொருள் துலங் கும் நிலை உணர்ந்து துயர்தீர்ந்த மலர்ப்பாதை வழியே மெய்விளக் கேற்றிச் செல்லுங்கள்" என்று அறை கூவினுர்கள். ......................
உள்ளக்கோயிலில் சோதிச் சுடராய் விளங்கும் இறைவனை மெய்யடி யார்கள் தங்களுக்கு உகந்த முறையில் வழிபட்டனர். பலர் பாமாலை

களைச் சூட்டி வழிபட்டனர். பலர் அவனே நினைவாய் மெய் மறந்து ஞான பரவச நிலையில் ஆழ்ந்து விட்டனர். வேறு சிலர் அவனுடைய புனிதமான திருப்பெயரை இடைவிடாமல் கூறிய வண்ணம் நிலை மறந்து உள்ளத்தோடு ஒன்றிவிட்டனர். அந்தத் திருப் பெயர் தான் எல்லாத் துன்பங்களுக்கும் கை கண்ட மருந்து. அந்த நாமந் தான் எவர்க்கும் எளிதில் கிடைக்கும் ஒளடதம் என்று மெய்யடியார்கள் வழி கூறி இருக்கின்றார்கள். ............................ அது தான் நமசிவய எனும் திருப் பெயர். இந்த ஐந்தெழுத்துக்களும் உள்ளத்தில் இருளை அகற்றி ஒளிவிளக்கேற்றி மெய்ந்நெறிக்கு வழிகாட்டுகின்றன.

"அஞ்சா அஞ்செழுத்துண்மை அறிந்தபின்
நெஞ்சகத்துள்ளே நிறையும் பராபரனே"

அருட் சிற்பி ஆத்ம சிற்பி அற்புத சிற்பி சாமிகளின் அருள் உரைகளை இன்னும் கேட்டுக்கொண்டே இருக்கலாமென்றல்லவா நமது உள்ளங்கள் துடிக்கின்றன!

கலைஞர்களைப் பற்றிய இந்தப் பகுதியில் சாமிகளின் திருப் பெயரின் ஒவ்வொரு எழுத்தையும் வைத்து ஆரம்பிக்கும் ஒன்பது வரிப்பாடல் ஒன்றை கலை உள்ளத்தோடே படித்து மகிழ்வோம்.

பன்றிமலை சாமிகளின்

(இ)**ன்**ப நிலை கண்டவர் நற்

**றி**றத்தை உரைப்பதென்றால்

**ம**லைபோலும் எழுந்துவிடும்!

**லை**ட்-ஹவுஸ் என விளங்கும்

**சா**மிகளின் திருவருளே

**மி**த்திரர்க்கும் எல்லோர்க்கும்

**க**லை வாழ்வில் பெரிதுதவும்!

(அரு)**ள்** என்றால் திருவருளே!

அது சாமிகளின் மஞ்சள் திருவருள்தான் என்பதில் ஐயமும் உண்டோ?

கலைஞர்களுக்கு உற்சாகம் பெருகிவிட்டால் புதுமையும் கற்பனை வளமும் அவர்கள் மனத்துள் 'நான் முன்னே நீ முன்னே' என்று போட்டி போட்டுக்கொண்டு உருவெடுக்கும். சற்குருமீது ஒரு துதிப்

பாடலே உருவாகிவிடும். அதிலும் ஒரு புதுமை அமைந்துவிடும். திருப்பதி உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் திரு. T. வரதாச்சாரி அவர்கள் B. A. B. Ed. ஒரு துதிமாலை புனைந்துள்ளார். 'ஸ்ரீ பன்றிமலை சாமினே நமஹ' என்று ஆரம்பிக்கும் பாமாலை "ஆதிமூல ஸ்ரீ பன்றிமலை பரப்பிரம்மணே நமஹ" என்று முடிகின்றது. இது வடமொழியில் உருவான 39 வரிகள் கொண்ட தோத்திர ஸ்லோகங்கள். இந்த வடமொழித் தோத்திரத்தை அப்படியே ஆங்கிலத்தில் அச்சடித்திருக்கின்றனர். அதில் உள்ள அற்புதம் என்னவெனில் ஒவ்வொரு வரியின் முதல் ஆங்கில எழுத்துக்களை வைத்துக் கொண்டே சத்குரு ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமினே நமஹ என்ற தோத்திரத்தையே அருமையாகப் புதுமைப் படைப்பாக இனிது அமைத்துவிட்டார். என்னே பக்தரின் கற்பனைப் புதுமை வளம்! ஆங்கிலத்தில் 39 வரிகள் கொண்ட இந்தத் தோத்திரத்தின் முதல் எழுத்துக்களை மட்டும் மேலிருந்து கீழேவாசிப்போமானால் சத்குரு ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமினே நமஹ என்று படிக்கின்றோம்! அதையே படித்து மகிழ்வோம்!

Sri Pandrimalai Swamine Namaha

ஸ்ரீ பன்றிமலை ஸ்வாமினே நம:

Archaka Poojithaaya Namaha

அர்ச்சக பூஜிதாய நம:

Trikala Gnanine Namaha

திரிகால ஞானினே நம:

Grihastasrama Vasine Namaha

கிரகஸ்தாஸ்ரம வாசினே நம:

Umamaheswaraya Namaha

உமாமகேஸ்வராய நம:

Roga Samharine Namaha

ரோக சம்ஹாரிணே நம:

Udaara keertaye Namaha

உதார கீர்த்தயே நம:

Sukapuri Vasine Namaha

சுகபுரி வாசினே நம:

Ramaswaroopaya Namaha

ராமஸ்வரூபாய நம:

Ishtaabhista Varaprasadakaya Namaha

இஷ்டாபீஷ்ட வரப்பிரசாதகாய நம:

Loka sevaaparayanaaya Namaha
லோகசேவாபராயணாய நம:
Ananta Roka Samharine Namaha
அனந்த ரோக சம்ஹாரிணே நம:
Sarva Sakti moorthaye Namaha
சர்வ சக்தி மூர்த்தயே நம:
Rakshana Manaye Namaha
ரக்ஷண மானயே நம:
Ishta Siddhi Daayakaaya Namaha
இஷ்டசித்தி தாயகாய நம:
Paradhana Parastotra Nirasakaya Namaha
பரதான பரஸ்தோத்ர நிரசகாய நம:
Adbhuta Ascharya Parimala Vasannaaya Namaha
அற்புத ஆசார்ய பரிமள வாசனாய நம:
Nilakanta Sarvaalankara Vibuti Dharine Namaha
நீலகண்ட சர்வாலங்கார விபூதி தாரிணே நம:
Deergha Darsine Namaha
தீர்க்க தரிசினே நம:
Rakshakaaya Namaha
ரக்ஷகாய நம:
Ishta Kaamyaartha Paladaaya Namaha
இஷ்ட காம்யார்த்த பலதாய நம:
Muruga Stothra Priyaaya Namaha
முருக ஸ்தோத்ர ப்ரியாய நம:
Aneka Netra Daayakaaya Namaha
அநேக நேத்ர தாயகாய நம:
Leela Vinodakaaya Namaha
லீலா விநோதகாய நம:
Aasaapaasa Samhaarine Namaha
ஆசாபாச சம்ஹாரிணே நம:
Indu Vadanaaya Namaha
இந்து வதனாய நம:

Sankha Chakra Hasthaaya Namaha
சங்க சக்ர ஹஸ்தாய நம :

Walkalaajina Dharine Namaha
வால்கலாஜின தாரிணே நம :

Anantha Rakshakaaya Namaha
அநந்த ரக்ஷகாய நம :

Manushya Roopa Vinodakaaya Namaha
மனுஷ்ய ரூப விநோதகாய நம :

Yogeswara Roopaaya Namaha
யோகீஸ்வர ரூபாய நம :

Nirdoshakaaya Namaha
நிர்தோஷகாய நம :

Easa Putraaya Namaha
ஈச புத்ராய நம :

Nitya Kalyaana Niranjanaaya Namaha
நித்ய கல்யாண நிரஞ்சனய நம :

Apoorva Sakthaye Namaha
அபூர்வ சக்தயே நம :

Mama Sadguruve Namaha
மம சத்குருவே நம :

Avataara Moortaye Namaha
அவதார மூர்த்தயே நம :

Harihara Priya Pandrimalai Vasine Namaha
ஹரிஹர பிரிய பன்றிமலை வாசினே நம :

Adimoola Sri Pandrimalai Parabrahmane Namaha
ஆதிமூல ஸ்ரீ பன்றிமலை பரப்பிரம்மணே நம :

## சாமிகளும் கவியோகி சுத்தானந்த பாரதியாரும்

" ஆண்டவா உனதடிமலர்த் தேனை
அள்ளி அள்ளியான் பருகிடவேண்டும்
வேண்டும் உன்னடியார் திருக்கூட்டம்
வினையினேன் பிறப்புய்த்திட வேண்டும்

வேண்டும் உன்னருள்வேட்கை; யென்உள்ளம்
வேறு வேட்கைகள் ஆறிடவேண்டும்
வேண்டும் உன்புகழ் பாடிடும் இன்பம்
விமலனே எனதாருயிர் வேந்தே"

— கவியோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதி.

கவியோகி மகரிஷி திரு. சுத்தானந்த பாரதியார் செந்தமிழ் நாட்டுத் தவப்புதல்வர்களில் ஒருவர். நூற்றுக்கணக்கான நூல்களை யும், கவிதைகளையும், கீர்த்தனங்களையும் இயற்றியுள்ள கவியோகி. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் கூறுவதுபோன்று தவமும் கலையும் ஒருங்கியைந்த அவர்கள் பேராறு மடை திறந்து பாய்வதுபோல இன்சுவை கெழுமிய நூல்கள் எழுதி வருகிறார். கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களால் 'தவத்திற் பெரி யோன்; தமிழ்ப்பயிர் வளர்ப்போன்' என்று பெருமைப்படுத்தும் இக் கவியோகி, திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகளிடம் கொண்டுள்ள ஆத்மீக ஈடுபாட்டையும், பக்தி பரவசத்தையும் என்னென்றுரைப் பது? இவர் ஆண்டவனுடைய திருவடிகளில் குவிந்திருக்கின்ற மலர் களில் உள்ள அருள்தேனை அள்ளி அள்ளிப் பருகிட வேண்டுமென்ற ஆசையோடு இறைவன் அடியார் திருக்கூட்டத்தையும் அடைய ஆசை கொண்டார். இறைவன் புகழ் பாடவும் ஆசை கொண்டார். இறை வன் அருள்வேட்கையினால் கவியோகி சாமிகளது திருக்கூட்டத்தையும் அடைந்தார். சாமிகளது ஆத்மீகக் கூட்டுறவில் சாமிகள் பன்றிமலை முருகனென்பதையும் உணர்ந்தார். அந்த நன்றி உணர்வில் "நன்றியுடன் வணங்குகின்றோம் பன்றிமலை முருகா" என்று கவியோகி ஆரம்பிக்கும் போற்றுரைப்பாடல்களே உருவாகி விட்டன. அப்பாடல்களுக்கு முன்னுரையாக சாமிகளிடம் அவர் அடைந்த பேரருள் பேரின்ப அனுபவங்களையும் அழகாகத் தொகுத்தெழுதி இருக்கின்றார்.

சாமிகளுக்குக் காணிக்கையாக நிவேதித்துள்ள அவர் அன்பில் எழுந்த பாசுரங்களைப் படிப்பதற்குமுன் சென்னையில் நடந்த இரு நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழ்ச்சியடைவோம். 1968 ஆரம்பத்தில் கவியோகி ரஷ்யா முதலிய மேல்நாடுகளுக்குச் செல்வதற்கு முன் சாமிகளைச் சென்னையில் பக்தர் திரு. K. K. வர்மா அவர்கள் வீட்டில் தரிசனம் செய்தார். சாமிகள் கவியோகியோடு வெகு உற்சாகமாகப் பேச ஆரம்பித்து விட்டார். உற்சாகமேலீட்டால் ஒரு அற்புதமே ஆடிக் காண்பிக்கவும் சாமிகள் திருவுளம் கொண்டார். கவியோகி அனுதினமும் ஆராதனை செய்யும் திருவேலொன்றுண்டு. சாமிகள் சித்தப்படி அந்தத் திருவேலை பூஜை அறையில் வைத்தனர். சாமிகள் 'முருகா உன்வேல் பறந்து வரவேண்டும்' என்று மனமுருகிக்

கேட்க சுமார் ஒன்றரை அடி நீளமுள்ள கவியோகியின் திருமுருகன் திருவேல் அந்தரத்தில் ஆடிக்கொண்டு பூஜை அறையிலிருந்து வந்த அற்புதக் காட்சியைக் கண்டவர் மெய்சிலிர்த்து நின்றனர். முருகனருள் பரிபூரணமாகக் கொண்டு விளங்கும் நமது குருநாதரின் அரிய சாதனையைக் கண்ணுற்ற கவியோகி அந்தரத்தில் ஆடிவரும் வேலின் அற்புதத்தைக் கண்டார். ஸ்ரீ பன்றிமலை சித்தரின் மகிமை யையும், சக்தியையும் கண்டார். நமது குருநாதரை வேல் சித்த ரென்றே உவந்து அழைத்து விட்டார். தான் ரஷ்யா முதலிய வெளிநாடுகளுக்குச் செல்வதற்கு முன் அடையாற்றில் உள்ள தன் ஆசிரமத்தில் ஏற்பாடாகியிருந்த தன் பிறந்ததின விழாக்கூட்டத்திற் கும் வேல் சித்தரை அழைத்து வந்தார். தன்னுடைய ரஷ்ய பயணத் திற்கும் வேல் சித்தரின் ஆசியையும் பெற்றார். அன்று சாமிகளின் அருள் தன்மையையும் கவியோகியின் வெளிநாட்டுப் பயணத்தையும் பற்றிப் பேசிய திருப்பதி ஜவகர்லால் நேரு உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. V. S. வெங்கடநாராயணா, M. A. B. Ed. அவர் கள் மொழிகளைக் கேட்போம்.

தலைமை ஆசிரியர்: வசந்தத்தை கண்டு குயில் பாடாமலிருக்க முடியுமா? வான் முகிலைக் கண்டு மயில் ஆடாமல் இருக்கமுடியுமா? மயில் வாகனத்திற்குரிய திருமுருகனின் அவதாரமாக உள்ள சாமி களே எழுந்தருளியுள்ள இந்த அவையில் நான் பேசாமலிருக்க முடியுமா? கவியோகி அழகுற அழைத்தது போன்று நானும் சாமிகளை வேல் சித்தரென்றே அழைத்து என் அஞ்சலியைச் செலுத்துகின்றேன். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஒரு சித்தர் மட்டுமல்ல. இல்லற ஞானி மட்டும் அல்ல, அவர் முருகனுடைய திரு அவதாரமே! கவியோகி யைப் போன்றுள்ள பேரறிவாளர்களை உற்சவ விக்கிரகத்திற்கு ஒப் பிடலாம் இவர்களெல்லாம் கோயில் கர்ப்பக் கிரகத்திலுள்ள மூல விக்கிரகத்திலிருந்து சக்தியைப் பெறுகின்றனர். நமது சாமிகளே அந்த மூலவர். அவருடைய அருள் கொண்டு வெளிச்செல்லவிருக் கும் கவியோகி சாமிகளின் ஆசியினால் தன் வெளிநாட்டுப் பயணத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு சாமிகளின் ஆத்மீக சக்தியை உலகமறியச் செய்யவேண்டும்.

1968ஆம் ஆண்டு ஏப்ரல் 28ஆந் தேதி தவப்பெருந்திருபன்றிமலை சாமிகளின் அவதார தினம். சென்னையில் நுங்கம்பாக்கம் பகுதியில் பக்தர் திரு. கே. கே. வர்மா அவர்கள் இல்லத்தில் கொண்டாடப் படுகின்றது. அடியார்கள் திருக்கூட்டம் இடம் முழுதும் நிரம்பி வழிகின்றது. நாமணக்க வேதமும் இசையுமாய், பூ மணக்க பூசையுமாய் கோலாகல வைபவச் சிறப்போடு விளங்கியது அத்திரு இல்லம். பக்தர்கள் சாமிகளுக்கு மணமிகு மாலைகள் அணிந்து மகிழ் வதும் சாமிகள் எல்லோருக்கும் ஆசி அருளி உள்ளம் குளிர்வதும்

கண் கொள்ளாக் காட்சியாக அமைந்தது. சாமிகள் தமது திருக் கரங்களால் மலர்க்குவியலிலிருந்து மலர்களை அள்ளி வழங்குகின்றார். எடுக்கும்போது மலர்களாக உள்ளன, சாமிகள் கொடுக்கும்போது குங்குமமாக மாறி சுப மங்கள சோபையை அங்குக் கூட்டுவிக்கின்றது. வெளிநாட்டுப் பயணத்தை முடித்து வந்துள்ள கவியோகி சுத்தானந்த பாரதியாரும் அங்குக் குழுமியுள்ள பேரறிவாளர்கள் பகுதியில் ஒருவர். அவருக்கும் இந்த அரிய சந்தர்ப்பத்தில் ஒரு விருப்பம் உள்ளத்தில் அரும்புகின்றது. இப்புண்ணிய நன்னாளில் திருமுருகனுடைய திருப்பாதங்களைக் கண்முன் காணவேண்டுமென்பதே அவருள்ளத்தில் அரும்பி விரிவடையும் ஆசை. சாமிகளும் ஆண்டவனுடைய அருளைத் திருமுருகனின் சரணக்கமல பாத சுவடுகளின் அடையாளங்களால் பக்தர்களுக்குக் காட்டத் திருவுளம் கொண்டனர். கூடியிருக்கின்றவர்களின் முகங்களில் ஆர்வமும் வியப்பும் அச்சமும் அடக்கமும் பக்தியும் பெருமையும் கலந்து பொங்குகின்றன. பெரிய அதிசயம் அங்கு அப்பொழுது நடக்கப்போகின்றது என்ற ஒரே எண்ணம் எல்லோர் ஆவலையும் எழுப்பி இருக்கின்ற அந்த நேரத்தில் தெய்வத்தை வரவழைப்பதிலும் எந்த வடிவில் வரவழைப்பது என்பதில் ஒரு முடிவு இல்லை. அந்தச் சமயத்தில் திரு M. G. சாரி அவர்கள் பாலமுருகனுடைய தெய்வச் சிறு பாதச் சுவடுகள் கிடைத்தருள சாமிகளை வேண்டினார். சாமிகள் தம் குருபீடத்திலிருந்து எழுகிறார். இரு கரங்களையும் விரித்து இறைவனை ஏத்துகின்ற நிலையில் நிற்கிறார். அவரது இனிய குரல் செந்தில்நகர் சேவகன் திருநீற்றின் பெருமைப்பாட்டை "வந்த வினையும் வருகின்ற வல்வினையும் கந்தன் என்று சொல்லக் கலங்கிடுமே" என்று பாடத் தொடங்கியது. சாமிகளின் தெய்வீகப் பாடலைக் கேட்கின்ற உள்ளமெல்லாம் புல்லரிக்கின்றது. 'முருகா, முருகா' என்ற ஆரவாரம் சாமிகள் நிற்கின்ற திரு அறையில் ஆனந்த ஒலியாக இதயங்களிலிருந்து வருகின்றது. ஒரு அறையில் மஞ்சள் நீர் நிறைந்த தட்டு ஒன்றும் ஒரு வெள்ளைக் காகிதமும் சாமிகள் திருவுள்ளப்படி வைக்கப்படுகின்றன. சாமிகளோடு அறைக்குள் சென்று திரும்பிய கவியோகி முதலியோர் மெய்சிலிர்ப்போடும் உன்னிப்பாகவும் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அந்த அறையின் கதவுக்கு வெளியில் நின்று கொண்டிருக்கும் சாமிகள், தண்டாயுதபாணிக் கடவுளின் திருவடி அழகையும் காலழகையும் இடை அழகையும் மார்பழகையும் கையழகையும் இளவழகையும் வருணிக்கும் "மகிதலமெலாம் புகழும் உனது திருவடி அழகு" என்று ஆரம்பிக்கும் ஷண்முகத்தின் பாட்டை மெய்யுருகப் பாடுகின்றார். பாடல் முடிந்ததும் சாமிகளின் உடலில் ஒருவித மெய்ப்பாடும் உண்டாகின்றது. சிறு நடுக்கம் தென்படுகின்றது. ஆனால் முகத்திலே விழிகளிலே எப்போதும்போல் அமைதி தங்கி இருக்கின்றது. "முருகா, கொடு இப்படிக் கொடு" என்று சாமிகள் தம் திருக்கரங்களை நீட்டிக் கேட்கின்றார். சிறிதளவு கதவு

திறந்திருக்கும் அறையிலிருந்து வெள்ளைத்தாள் பறந்துவந்து சாமிகளின் திருக்கரங்களில் அமர்கின்றது. அந்தச் சமயத்தில் அறையினுள் சலங்கை கட்டிய சிறுபாலன் பாதங்களின் தெய்வீக ஓசை கேட்கின்றது. அறையின் உள் சுவரில் ஒரு மயிலின் நிழல் படிவதையும் சிலர்கண்டு மயிர்க் கூச்சல் அடைகின்றனர். சாமிகள் அருளொளி முகத்தையும் அவர் இருக்கும் இடத்தைச்சுற்றி தெய்வீகமும் சூழ்ந்து நிற்கும் அற்புதத்தையும் கண்ட மெய்யன்பர்கள் உளங்கள் உருகித் தெய்வீக அருள்தேனை உண்ட அருள் மயக்கத்தில் ஆழ்ந்திருக்கின்றன. சாமிகள் பீடத்தின் மேலேறி நின்று எல்லோர்க்கும் தெரியும்படியாகக் காகிதத்திலுள்ள மஞ்சள் நீரில் தோய்ந்த சின்னஞ் சிறு முருகனின் பாதச் சுவடுகளைக் காண்பிக்கின்றார். திருமுருகனை "ஒருகால் நினைக்கின் இருகால் தோன்றும்" அற்புத தெய்வீகக் காட்சியைக் கண்ணுறும் பக்தர்கள் 'அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்' அற்புதத்தைக், கண்கூடாகப் பார்க்கின்றனர். பால முருகனின் சீறடிகளின் பாதச்சுவட்டின் எழில் காட்சியை இன்றும் நுங்கம்பாக்கத்திலுள்ள திரு. K. K. வர்மா அவர்கள் 'கைராலி' எனும் பங்களாவில் பக்தர்கள் கண்டு மகிழலாம்.

இந்தப் பேரற்புதச் செயலைக் கண்டுகளிக்குமுன் சாமிகளின் பேரருளினைப் பற்றி பேசியவருள் கவியோகியும் ஒருவர். அவர் பேசுவதையே கேட்போம்.

**கவியோகி:** நான் மாஸ்கோ முதலிய மேல்நாட்டு நகரங்களுக்குச் சென்று திரும்பி வந்திருக்கின்றேன். நவினத்திற்கும், விஞ்ஞான அறிவுக்கும் தலைசிறந்த அந்நாடுகளில் அபயகரத்தோடு காட்சியளிக்கும் நம் சாமிகளின் போட்டோ படத்தைக் காட்டினேன். கருணையையும், ஆதரவையும் அருள்கின்ற சின்முத்திரை காட்டியருளும் சாமிகளின் உயர்த்திய திருக்கரங்களையும், சாமிகளையும் கண்டவரெல்லாம், 'இவர் யார்?' என்று என்னைக் கேட்டனர். ஜீவாத்மா பரமாத்மாவோடு ஐக்கியமாகும் உண்மையை விளக்கும் சின்முத்திரை தத்துவத்தை அவர்களுக்கு எடுத்துரைத்தேன். சின்முத்திரை காட்டும் சாமிகளின் பேரருளை அவர்களுக்கு எடுத்துரைத்தேன். நான் எல்லாச் சமயங்களையும் சார்ந்து ஆராய்ந்திருக்கின்றேன். நான் எவ்வளவோ மகான்களையும், தீர்க்கதரிசிகளையும் கண்டிருக்கின்றேன். ஆனால் நமது சாமிகளுக்கு ஈடுஇணையாக இதுவரையில் நான் யாரையும் காணவில்லை. நான் அவரை பன்றிமலை சாமிகள் என்று அழைக்கவில்லை. அவரை வென்றிமலை சாமிகள் என்றே அழைக்கின்றேன். அவருடைய ஆத்மீக நோக்கத்தை உலகு முழுவதும் பரப்ப சித்தமாக உள்ளேன்.

இப்படிச் சாமிகளைப் போற்றி மகிழ்கின்ற கவியோகியின் சொந்த அனுபவங்களையும் அவர் வாயிலாகவே கேட்டு மகிழ்வோம்.

கவியோகி சாமிகளின்மீது பாடியுள்ள போற்றி உரைப்பாடல்களையும் படித்து மகிழ்வோம் !

**யான் கண்ட பன்றிமலையார் அற்புதம் :**

( கவியோகி சுத்தானந்த பாரதியார் )

பன்றிமலைச் சுவாமிகளை நான் வெள்ளிமலை முருகன் என்பேன். நான் பிளுங்குமலைமேல் தவம்புரிந்தபோது, அவர் அந்த ஊரில் புகழ்பெற்ற செல்வர் ஆறுமுகம்பிள்ளை வீட்டிற்கு வந்திருந்தார், அவரைப் பார்த்ததும் எனக்குப் பல்லாண்டுகள் பழகிய அன்புணர்ச்சி எழுந்தது. இருவரையும் சிவனருள் கூட்டிவைக்கும் நாளை எதிர்பார்த்தேன். நான், பம்பாயில் பன்றிமலைச் சுவாமிகளைப் பற்றி அன்பரிடையே பேசி ஆவேசமாகப் பாடும்போது, என்மேல் பூமாரி பொழிந்தது. அத்தப் பூக்கள் மலைப்பூக்கள். சுவாமிகள் நாமாரிக்குப் பூமாரிபெய்து என்னை அருகில் அழைத்தார்; பிறகு என் அன்பர் திருமிகு. தேவ. நடராசரும், திருமிகு. தேவ, சுப்பிரமணியமும் ஒருநாள் என்னை அவரிடம் அழைத்துச் சென்றனர். சுவாமிகள் என்னை அணைத்து ஆலிங்கனதீட்சை தந்து அருகே நாற்காலியில் அமர்த்தி, நெற்றியில் விபூதியிட்டார். என் கையைத் தடவினார், கை சந்தனம் கமழ்ந்தது. பிறகு ஒரு மாலைசூட்டினார். கனிதந்தார். நான் வழிபடும் முருகனின் வேலைக் கைநீட்டி வரவழைத்தார். அது துள்ளிவந்து என் கையில் அமர்ந்தது.

சுவாமிகளிடம் என் உள்ளம் ஈடுபட்டது. என் உள்ளத்தில் அவர் குடிகொண்டார், எனது பிறந்தநாள் விழா யோகசமாஜத்திற் சிறப்பாக நடந்தது. அதற்கும் சுவாமிகள் எழுந்தருளி ஆசீர்வதித்தார். அப்போது யோக சமாஜத்தில், ஓர் ஏக்கர் நிலம் காட்டி, "அதில்......... திருக்கோயில் எழுப்பி, அங்கே நமது சமயப்பணி நலம் பரவவேண்டும்" என்றேன். "அவ்வாறே நடக்கும்" என்றருளினார். மறுநாள், நான் டில்லிக்குச் சென்று, அங்கிருந்து இரஷ்யாவுக்குப் பறந்தேன். எஸ்தோனியா, இலிட்வியா, ஸ்வீடன். நார்வே முதலிய பால்டிக் பிரதேசங்களை நான் சுற்றிப் பார்த்தேன்; பல கூட்டங்களிற் பேசினேன். சுவாமிகள் படத்தைக்காட்டி டெலிவிஷன் பேச்சும் நடத்தினேன். மாஸ்கோவிலிருந்து சுவாமிகளுக்கு எழுதினேன் ; ஆசி கிடைத்தது.

அண்மையில் சென்னையில் நுங்கம்பாக்கத்தில் மகா பக்தமணியான கே. கே. வர்மாவின் வீட்டில் சுவாமிகளின் பிறந்தநாள்விழா மிகச் சிறப்பாக நடந்தது. சுவாமிகள் தமது அரியணைக்குக் கீழ் என்னையும் அமர்த்தினர். நான் மகாதுரிய சமாதியில் லயித்திருந்தேன். அப்போது என்மேல் தடதடவென்று மல்லிகைப்பூ மழை

பொழிந்தது. நான் இன்னும் ஆழ்ந்து தியானிக்கும் போது சுவாமிகள் என்னைப் பேசச் சொன்னார். நான் பண்ணுடன் பல பாடல்கள் பாடி, சுவாமிகளின் அற்புதங்களைச் சொல்லிப் பிறகு வேதநெறி தழைத்தோங்க, மிகு சைவத்துறை விளங்க, உலகெங்கும் நமது சமய முழக்கம் செய்யும் அபூர்வத்தைப்பாடி, நமது சமயப் பெருமையை விளக்கினேன். அத்துடன் யோகசமாஜ நிலத்தில் திருப்பதி – முருகன் கோயில் அமைத்து அருள் அடியாரைச் சமயப்பணிக்குப் பயிற்றும் ஆர்வத்தைத் தெரிவித்தேன். சுவாமிகள் என்னை மார்புறத்தழுவி ஆசீர்வதித்து இரு கை நிரம்ப மலர்களை அள்ளி என்கையில் வைத்து அழுத்தினார். அத்தனையும் குங்கும மாகக் கொட்டியது. குங்குமத்தை ஒருதட்டில் பிடித்து என்வழி பாட்டில் வைத்துள்ளேன். பிறகு என்னைத்தனியே உள்ளே இட்டுச்சென்று "கோயில் அமைப்போம்," என்றார். ஒரு தட்டில் காலிஃப்ளவரும், மொச்சையும் வேகவைத்த உணவைத் தந்தார்; தக்காளிச்சாறு தந்தார். ஒரு கிண்ணம் நிரம்பப் பாலூட்டினார். ஞானசம்பந்தர் நினைவே வந்தது. நான் முருகன் திருவடியை நினைத்தேன், பாடினேன். சுவாமிகளுக்கு அன்பர் மிக உருக்கமாக வழிபாடுகள் நடத்தினார். மற்றொரு மலர்மாரி; அஃதானதும் ஒரு வெள்ளைக் காகிதத்தில் பாலமுருகனின் சந்தனத் திருவடி வந்தது. பலர் "முருகா, முருகா" என்று ஆவேசத்தில் முறையிட்டு ஆனந்தக்கூத்தாடினர். சுவாமிகள் என்கையில் இரண்டு கனிகளை அழுத்தினார். ஆவேச வெள்ளத்திடையே பிரியா விடைகொண்டு சமாஜம் திரும்பினேன். அன்று நான் பிடில், மிருதங்கத்துடன் சங்கரர் சரிதையை இசைச் சொற்பொழிவாற்றினேன். என்பாட்டிலும், பேச்சிலும் புதிய அருள் விளங்கியது. பன்றிமலை எனக்கு வென்றிமலையாகக் காட்சியளித்தது. என் அன்பில் எழுந்த பாசுரங்களையே அவருக்குக் காணிக்கையாக நிவேதிக்கிறேன். ("நன்றியுடன் வணங்குகிறோம், பன்றிமலை முருகா!" என்ற தலைப்பில் பெருந்தவயோகச் சித்தர் பன்றிமலைச் சுவாமிகளைப் பற்றிய போற்றுரைப்பாடல்)

பன்றிமலை முருகன் பாதம் போற்றி!

**நன்றியுடன் வணங்குகிறோம் பன்றிமலை முருகா!**

**(பெருந்தவ யோகச்சித்தர் பன்றிமலைச் சுவாமிகள் போற்றுரைப்பாடல்)**

**[கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்.]**

**நன்றியுடன் வணங்குகிறோம்**
**பன்றிமலை முருகா!**
**ஒன்றிநினை அன்பர்களின்**
**உள்ளத்தில் இருப்பாய்!**

குன்றெளிரும் விளக்கெனவே
குலவும்உன தருளால்
வென்றியெமக் களித்திடுவாய்
வேலாயுதச் சித்தா ! (1)

கலியுகத்தில் அற்புதங்கள்
கண்டேனுன் னிடமே !
மலர்பொழிந்தாய் ! குங்குமத்தின்
மழைபொழிந்தாய் முருகா !
இலகுதிரு வேலளித்தாய் !
இணையடிகள் அளித்தாய் !
உலகமெல்லாம் உன்னருளே !
உலவுநல மீவாய் ! (2)

அருண்முகத் திருவழகா !
கருணைவிழிக் குழகா !
தருணமலை போலுதவும்
தயவான குமரா !
இருளரக்கர் குலமழியப்
பொருதுசுடர் வேலா !
குருபரனும் சிவக்கனலே !
குகனேஷண் முகனே ! (3)

அன்புமண மலர்மாலை
ஆர்வமுடன் சூட்டி,
என்புருக மனங்குழைந்தே
எம்முகம்பார் என்றோம்,
துன்பமிகும் பகைக்குலத்தைத்
தூறுடனே நூறி
இன்பமுறும் வெற்றியருள்
எம்முயிருக் குயிரே ! (4)

வஞ்சனைசெய் மாயமற
வாய்மையொளி காட்டாய் !
அஞ்சவரும் தீவினையை
அக்கணமே மாற்றாய் !
நெஞ்சினிலே நீண்டுயரும்
சிவஞானக் கொழுந்தே,
தஞ்சமுன்னை யன்றியில்லை
சண்முகனே சரணம் ! (5)

எனதுனதென் றிறுமாக்கும்
ஈனவெறி யின்றி,
மனிதனுக்கு மனிதனும்
மரியாதை காட்டி,
மனமொன்றி இனமொன்றி
மனிதசமு தாயம்
தினமொன்றி உனதருளிற்
செழிக்கவருள் முருகா! (6)

வெற்றுரையும் வேற்றுமையும்
வீண்வழக்கும் இன்றிப்
பெற்றதொரு தாயினரும்
பிள்ளைகளைப் போலே,
ஒற்றுமையாய் ஒருகுலமாய்
உலகமெல்லாம் வாழும்
பெற்றியினை யீந்தருளாய்!
பிரியமுள்ள முருகா! (7)

மேற்கினிலும் கிழக்கினிலும்
மேன்மையுறச் சைவம்
ஆக்கநலப்பணி பொலியும்
ஆலயமிங் கொளிரும்
பாக்கியத்தைத் தந்திடுவாய்
பஞ்சாமிர்தம் போலே
வாக்களித்துச் சிவநாத
வளம்பெருக வருளாய்! (8)

இச்சைகொண்ட நன்மைகளை
இயற்றிமுடித் திடவே
அச்சமற உலகினிலே
அருட்கொடிநாட் டிடவே
எச்சமயத் தொண்டர்களும்
இணங்கிவணங் கிடவே
பச்சைமயில் ஏறிவந்தென்
பக்கமிருந் தருளாய்! (9)

தளராதே பணிபுரியும்
தாளாண்மைத் தொண்டர்
வளரான்ம நேயர்களை
வளமாகத் தருவாய்!

உளமான மன்றினிலே
ஓம் நடனம் புரிவாய்!
இளவேனில் அழகா நின்
எழிலே என் ஒளியாம்! (10)

அளிவளரும் சிற்சபையின்
அப்பனரும் கனலே!
தணிகையொளிர் மாமணியே!
தகரகுகைக் குகனே!
பணிவுடனே பதம்பணிந்தேன்
பழநிவடி வேலா!
துணிவுடனே தொடங்கிய நின்
தொண்டில் வெற்றியீவாய்! (11)

உருக்கமாய்க் கூவுகிறேன்
உள்வளரும் அருளே!
முருக்கிளஞ் சோதியனே!
முருகா ஓம் சரணம்!
அருக்கனைப்போல் எழுந்தென்னுள்
அகத்திரையை யகற்றித்
'திருக்கோயில்' ஒளிவிளங்கச்
செய்வாய்என் உய்வே! (12)

பாரினிலே மாந்தர்குலம்
பகையச்ச மின்றி
வேரினிலே கிளைபற்றி
விளைகனித்தோட் டம்போல்!
நாரினிலே சேர்ந்திலகும்
நறுமலர்மா லையைப்போல்
ஓரிதய நேயமுடன்
ஓங்கவருள் முருகா! (13)

வருவாயெங் கலிதீர
வள்ளிமண வாளா!
தருவாயுன் ஆசியினைத்
தவயோகம் வெல்ல!
திருவாரும் சிவசக்தி
திகழுமுல கெல்லாம்
குருவாக வருவாயெம்
குகனேஷண் முகனே! (14)

சமயோகத் தொண்டருடன்
சமயோகம் கோயில்
அமைத்தங்கே முருகோனும்
அரியரனும் விளங்க !
இமையாத நாட்டமுடன்
இதயவெளி தனிலே
அமரகவி பாடியுன்னை
அடிபணிய வருளாய் ! (15)

சங்கரனே ! ஐங்கரனே !
சண்முகனே ! குகனே !
தங்கமயில் வாகனனே !
தாருகனை வென்ற
துங்கவலி வேலவனே !
துணை நீ எந்துணை நீ
சிங்கமெனப் பகைவர்களைச்
செயிக்கு முரனருளாய் ! (16)

யோகசமா ஜகத்தினிலே
உன்னன்ப ருடனே
ஏகரச மன்றமைத்தே
ஏழிசைகள் பாடித்
தாகமறப் பேரின்பம்
தழைக்க நடமாடி
வேகமுறச் சமயோகம்
வெற்றி பெறச் செய்வாய் ! (17)

காலையிலே எழுந்திலகும்
கதிரழகுன் அழகே !
மாலையிலே பூத்தமுல்லை
மலர்நகையுன் பொலிவே !
வேலையிலே நடமாடும்
வேகமுன திசையே !
சோலையிலே மணத்தென்றல்
சொல்லுவதுன் சொல்லே ! (18)

மலைமேலே மலைபோலே
மாண்புடனே வளர்வாய் !

அலைவீசும் அருவியிலே
　　அருள்வீசி வருவாய் !
கலைவீசும் புலவருளம்
　　கவியூற்ருய்ப் பொசிவாய் !
வலைவீசிக் காதலரை
　　வசஞ்செய்யிள முருகா !　　(19)

திருப்பதிப் பெருமாளும்
　　தென்பழனிக் குகனும்
உருக்கொண்ட கோயிலினை
　　உருவாக்கி யிங்கே
அருட்பாசு ரங்களினல்
　　அபிஷேகம் செய்யும்
பெருமகிழ்வைத் தந்திடுவாய்
　　பேசுந்தெய்வ மணியே !　　(20)

வாழியநின் அவதாரம் !
　　வாழியநின் அருளே !
வாழியநின் அற்புதங்கள் !
　　ஏழுமலை முருகா !
வாழிய நின் அன்புவளர்
　　வாக்கமுத வெள்ளம் !
சூழுகசுத் தானந்தச்
　　சுவைக்கினிய தேனே !　　(21)

— சுத்தானந்த பாரதியார்.

ஓம்

**நகைச்சுவை இன்பம் :**

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

" Smile awhile and while you smile another smiles : and there is a mile of smile while you smile."

"கொஞ்சநேரம் புன்னகை செய். நீ புன்னகை செய்யும் போது மற்ருெருவர் புன்னகை செய்வர். நீ இப்படிப் புன்னகை செய்யும்போது இப்புன்னகை ஒருமைல்தூரம் பரந்து விரிவடைகின்றது."

"ஆடிக்கறக்கின்ற மாட்டை ஆடிக்கறக்கணும். பாடிக்கறக்கின்ற மாட்டை பாடிக் கறக்கணும் " என்று கூறுகின்ற சாமிகள் தம் இள

வயதில் ஆத்மீகத் துறையில் பல உண்மைகளை அறிந்துகொள்ளப் பாடுபட்டபோது பல வேடங்கள் பூண்டதும், பல கோலங்கள் கொண்டதும் பல நாமங்கள் ஏற்றதும் நாம் அறிவோம். மாயா விநோதக்கலையைக் கற்றுக்கொள்ளும் ஆர்வத்தில் ஒரு சர்க்கஸ் மாதை அண்டித் தன்னை அநாதை என்று அவளிடம் அறிமுகப்படுத்திக் கொண்டு டிரம் அடிப்பதிலிருந்து அவள் இட்ட வேலைகளைச் செய்து முடிக்கவும் சாமிகள் தயங்கவில்லை. சக்தி பூஜை சித்தியாக வேண்டி இருந்த சமயத்தில் பல இடங்களில் கூலிவேலை செய்தும் காஷாய சாமியாராகத் திரிந்தும், 'பெரியசாமி' என்றே தன் பெயரை மாற்றிக்கொண்டும் பாடுபடவும் சாமிகள் தயங்கவில்லை. "குஸ்திக் குப் போனால் லங்கோடோடு இருக்கவேண்டும். ஆத்மீகத் துறையில் ஈடுபடும்போதும் பித்தனாகவும் பேயனாகவும் இருக்கவேண்டும்" என்றும் சாமிகள் உரைப்பர். இப்படியே அருள்வாக்கு ஊற்றாக விளங்குகின்ற சாமிகளும் நகைச்சுவை ததும்பும் உரையாடலிலும் வல்லவராக விளங்குகின்றார்.

ஒருவரோடு ஒருவர் இனிது கலந்து அளவளாவிக் கூடி மகிழ்தல் சிறந்த மக்கட் பண்பாகும். நகைச்சுவை அறியாதார் வாழ்க்கையை இருள்பட்ட வாழ்க்கை யென்றுதானே வள்ளுவர் குறளும் குறிக் கின்றது. ஓர் ஆங்கில நூலாசிரியன் இனிது உரைத்தது போன்று ஒரு புன்னகை பூத்த முகத்தால் பல முகங்களுக்குப் புன்னகை ஊட்ட முடிகின்றது. "கொஞ்சநேரம் புன்னகை செய். நீ புன்னகை செய்யும்போது மற்றொருவர் புன்னகை செய்வர், நீ இப்படிப் புன்னகை செய்யும்போது இப்புன்னகை ஒரு மைல் தூரம் பரந்து விரிவடைகின்றது" இந்த வார்த்தைகள் சாமிகளுக்கும் சாமிகளின் பக்தர்களுக்கும் எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றது. சாமிகள் இயல்பாகவே புன்னகை பூத்த முகப்பொலிவோடு விளங்குபவர். அவர் உரையாடல் புரியும்போதும் வயிறு குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்து இனிக்க இனிக்க அருளமுதம் வழங்குவர் தம் நகைச்சுவை ததும்பும் மொழிகளால்! சாமிகள் உரையாடலில் தமாஷுக்கும் ஆஸ்யத்திற்கும் நிறைய இடமுண்டு. ஆதிமுதல் அந்தம்வரை உரையாடல் ஆத்மீக விஷயங்களைப்பற்றியே இருந்தாலும் கேட்பவ ருக்குச் சலிப்புத் தட்டிவிடும், உற்சாகம் குறைந்துவிடும் என்பதைச் சாமிகள் உணர்ந்தே இப்படி வேடிக்கையாக உரையாடலை அமைத்து விடுவர். அதோடுகூட தமாஷோடேயே பல அரிய உண்மைகளையும் தத்துவங்களையும் அழகுற விளக்குவர். புன்னகை காணாத முகங்களி லும் சிரிப்புக்குக் குறைவு இருக்காது: வாட்டமுற்றிருக்கும் ஒரு சிலரும் வாய்விட்டுச் சிரிக்கவும் செய்வர். ஆத்மீகக் கருத்துக்களைக் கருத்தாடல் செய்யும்போது நடுவில் நகைச்சுவைமிக்க சிறு கதைகளைக் கூறிப் பக்தர்களுக்கு மகிழ்ச்சி ஊட்டுவர். "ஒரு கிளியை விற்கப்புறப் பட்டான் ஒரு கெட்டிக்காரன். அதைப் பேசும் கிளி என்றான். அது

எதற்கெடுத்தாலும் "அதெற்கென்ன சந்தேகம்" என்றே உரைக்கும். அப்படிப் பேச அதைப் பழக்கி இருந்தான். அதை விற்க முனைந்த கெட்டிக்காரன் பேசுங்கிளிக்கு ஆயிரம் ரூபாய் விலை என்றான். "ஒரு கிளியின் விலை ஆயிரமா? ஆயிரம் ரூபாய் கொடுக்கலாமா?" என்றான் அதை வாங்கலாமா என்று மலைத்து நின்றவன். உடனே சொல்லிக் கொடுத்திருந்த பாடத்தை அப்படியே உரைத்தது கிளி. "அதற்கென்ன சந்தேகம்" என்றது கிளி. இதைக் கேட்டவன் மனமகிழ்ந்து ஆயிரம் ரூபாயைக் கொடுத்து உடனே பேசுங் கிளியை வாங்கிச் சென்றுவிட்டான். எப்படி இந்த ஏமாந்த சோணகிரி?" "ஒரு இராஜா வீட்டில் ஒருவருக்குப் பிசாசு பிடித்திருந்தது. பக்கத்து வீட்டில் விசேடம். இசைப் பொருத்தமில்லாத ஒருவன் பக்கத்து வீட்டு விசேடத்தில் நாதசுரம் வாசித்தான். அந்த அபசுரத்திற்குப் பயந்து இராஜா வீட்டில் ஒருவரைப் பிடித்திருந்த பிசாசு உடனடியாக ஓடிவிட்டது. "பிசாசை ஓட்டவல்ல இசைவாணர்" என்று அன்றிலிருந்து அவன் புகழ் திக்கெட்டும் பரவியது. அவன் உதவியை நாடி ஒருவன் வந்தான். தன் வீட்டில் ஒரு நபரைப் பிடித்திருக்கும் பிசாசை ஓட்ட நாதசுர வித்வானை அழைத்தான். ரூபாய் பத்தாயிரம் கொடுத்தால் ஊதுகிறேன் என்றான் ஐந்து ரூபாய்க்குத் தாளம் போட்டுக்கொண்டிருந்த நாதசுர மேளக்கார வித்வான்." இப்படியே நிறைய ஆஸ்யம் நிறைந்த சிறுகதைகளைச் சாமிகள் சொல்லிப் பக்தர்களை மகிழ்விப்பதுண்டு.

இப்படிக் கேலிக்கதைகள் கூறுகின்ற சாமிகள் "சாமி, சாமிகள், சாமியார்" என்பதற்கும் விளக்கம் கொடுக்கும் வகையிலும் சிரிப்பூட்ட நகைச்சுவை இனிமை உண்டு, சிந்திக்க பொருள் ஆழமும் உண்மையும் உண்டு.

சாமிகள்: சாமி என்று மற்றவர்கள் அழைக்கக்கூடிய நிலைக்கு வந்தவர் வெறும் காவி கட்டி இருந்தால் மட்டும் போதுமா? மனத்திலுள்ள காவியை அல்லவா நன்ருகக் கசக்கி எடுக்கவேண்டும். மனத் தூய்மையோடிருக்க வேண்டும். உடலும் தூய்மைக்கு இருப்பிடமாக இருத்தல் போன்று உள்ளமும் தூய்மைக்கு உறைவிடமாக இருக்க வேண்டும். இத்தகையவர்தான் உண்மையான சாமியாவார். துறவி என்றவுடன் தாடியும், காவியும்தானே நினைவுக்கு வருகின்றன. இவை இரண்டும் அவசியந்தானு? இவை இரண்டும் இல்லாதவர் துறவியாக இருக்கமுடியாதா? வேடத்தால் பயனில்லை. நல்லொழுக்கம் வேண்டும். கூடா ஒழுக்கம் இல்லாதவர்க்கு வேடமே வேண்டியதில்லை. இதைத்தானே வள்ளுவர்,

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்"

என்று அழகாக எடுத்துரைத்தார். இல்லறத்தில் துறவிகள் இல்லையா? இல்லறத்தில் இருந்துகொண்டும் பற்றற்ற நிலையை மேற்கொண்டவர் உலகில் இல்லையா? உண்டு; நிறைய உண்டு. பின் எப்படி இந்தக் காட்டுத் துறவறமும் காவியும், தாடியும் வந்தன என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். உலகப் பற்று முற்றும் துறந்தவன் ஒருவன் நாட்டை விட்டான். காட்டுக்குச் சென்றுவிட்டான் கட்டின ஒரே வேட்டியோடு, அது அழுக்குப் படிந்து போனதையும் அவன் சிந்திக்கவில்லை; மீசையும் முடியும் தாடியாகவும், ஜடாமுடியாகவும் வளர்ந்துவிட்டதையும் அவன் சிந்திக்கவில்லை. சிந்தனை முழுதும் இறை இன்பத்தை நாடி இருந்தது. அழுக்குப் படிந்திருந்த அவன் வேட்டி காவிக் காட்சியளித்தது. ஆக அவனுடைய தாடிக் கோலமும், முடிக்கோலமும் காவி உடைக்கோலமும் நாளடைவில் துறவிகளின் அங்கலக்ஷண விதியாக வந்துவிட்டன. செயற்கைக் காவி உடையும் தாடியும் நீண்ட முடியும் கொள்ளலாயினர் துறவறம் ஏற்ற சன்யாசிகள். இப்படிக் கோலம் கொண்டவரைச் 'சாமி' என்று உலகம் அழைக்க ஆரம்பிக்கின்றது. நாட்கள் செல்லச் செல்லச் சாமியின் புகழ் பரவுகின்றது. பலர் அவரைச் சூழ்கின்றனர். அதுவரையில் 'சாமி' என்று இருந்தவரை மக்கள் 'சாமிகள்' என்று கௌரவமாக அழைக்க முந்துகின்றனர். சாமியோடு 'கள்' சேர்க்க ஆரம்பித்தவுடன் உண்மையிலேயே கர்வம் என்ற போதை சில சாமிகளுக்கு ஏறிவிடுகின்றது. சாமியாருடைய போக்கிலும் மற்றவருடைய போக்கிலும் ஒரு வித்தியாசமின்றி அந்தச் சாமியார் வாழ்க்கை அமைந்துவிடும்போது, உண்மையிலேயே சாமி யார் என்ற கேள்வி எழுகின்றது. உலகில் பாடுபட்டு வந்த சாமியார் கொஞ்சம்; பெண்டாட்டிக்குப் பயந்து ஓடிய சாமியார்தான் அதிகம். சாமி என்பதற்கு ஒரு இடம்தான்; அது குருஸ்தானம்தான். இந்த நிலைக்கு வந்துவிட்டவருக்கும் எல்லாக் கலைகளும் தெரியும். ஒரு சர்க்கஸில் வருகின்ற பபூனுக்கு, சர்க்கஸில் நடக்கின்ற எல்லா வேலைகளும் தெரியவேண்டும். அவன் தமாஷுக்காக மட்டும் ஆடவில்லை. சர்க்கஸில் ஆடுகின்ற எல்லோரைப் போலவும் அவனுக்கு ஆடத் தெரியும். அவன் உண்மையிலேயே ஒரு புத்திசாலிதான். அவன் செய்வதெல்லாம் எல்லோரையும் மகிழ்விக்கவே. ஒரு உண்மை சாமியினுடைய குறிக்கோளும் வாழ்க்கையும் மற்றவர்களை நல்வழிப்படுத்தவும் குறைகளை நிவர்த்தி செய்யவும் உதவ அமைய வேண்டும்.''

இப்படி அருமையாகவும், வேடிக்கையாகவும் விஷயங்களை விளக்குகின்ற சாமிகள் சகல கலைநிபுணராகவே விளங்குகின்றார்; ஆஸ்யக் கலையிலும் அவர் ஆற்றல் பெற்றிருப்பதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. சர்க்கஸில் வருகின்ற பபூன் செய்வதெல்லாம், சாமிகள் கூறுவது போன்று, மக்களை மகிழ்விக்கவே. அதைத்தானே

திருத்தொண்டர்களும் தம் வாழ்க்கையில் தம் திருத்தொண்டின் வாயிலாகக் காண்பிக்கின்றனர்; சாமிகளும் நிரூபித்துக் காண்பிக் கின்றார் !

சாமிகள் இடத்திற்கும் சந்தர்ப்பங்களுக்கும் ஏற்ப நகைச்சுவை ததும்பச் சொல்லாடல் செய்வர். சாமிகள் கேலியும் செய்வர்; கேலி யால் நலனும் செய்வர். ஒரு நாள் சாமிகளைப் பார்க்க வந்திருந்த பக்தர்கள் சாமிகளிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு தம் காரில் ஏறிவிட்டனர். மற்றொரு நபர் காரில் ஏறி உட்கார காரில் வசதியாக இடமில்லை. அந்த வேளையில் அவசரமாக ஊருக்குத் திரும்ப நினைத்த மற்றொரு பக்தர் அதே கார் தம் ஊருக்குச் செல்வதைக் கேள்விப் பட்டு அதில் ஏறிச் செல்வதற்கு சாமிகள் வீட்டிலிருந்தும் ஓடோடி வந்தார். "காரில் இடமில்லை," என்று கார் சொந்தக்காரர் உரைத் ததைக் கேட்ட பக்தருக்கு ஏமாற்றம் ஏற்பட்டது. வெளியே காரில் செல்பவர்களுக்கு விடையளிக்க வந்திருந்த சாமிகள் அவசர அவசர மாக ஓடி வந்தவர் 'காரில் இடமில்லை' என்று கேள்விப்பட்டவுடன் முகம் சுருங்கி மனம் சுருங்குவதைக் கண்டார். கருணை சுரந்துவிட்ட சாமிகள் வேடிக்கையாகவே "எவ்வளவு ஆவலோடு அவசர அவசர மாக வந்திருக்கின்றார். இவருக்கா காரில் இடமில்லை என்று தட்டிக் கழிப்பது? காரில் இடமில்லாவிட்டால் டிக்கியில் ஏற்றிக் கொண்டு செல்லுங்கள்" என்றார். சாமிகள் கூறிய நகைச் சுவை சொற்கள் அங்கிருந்தவரை வாய்விட்டுச் சிரிக்க வைத்தன. சாமிகளுடைய கேலிச் சொற்களில் சாமிகள் உள்ளத்தையும் அறிந்துகொண்டவர் கள், காரில் நெருங்கி உட்கார்ந்து ஏமாற்ற மடைந்திருந்த அந்த மற்றொரு நபரையும் காரில் இடம் கொடுத்து அழைத்துச் செல்லத் தயங்கவில்லை.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த என் நண்பர்களில் ஒருவர் சாமிகளின் கேலிச் சொற்களும் எப்படி அவசரமாக ஊருக்குச் செல்ல விரும்ப பக்தருக்கும் உதவியது என்பதை வாய்விட்டுப் புகழ்ந்து அதற்கு ஒரு உவமையையும் கூறினர்.

நண்பர்: சாமிகள் செய்த இந்த உபகாரம் ஒரு உவமையை நினைவூட்டுகின்றது. ஒரு சபையில் எள் விழுந்தால் எடுக்கமுடியாத படி கூட்டம் கூடி சபை வழிகின்றது. அந்த நேரத்தில் அந்த நாட் டின் அரசர் அங்கு வந்துவிட்டார். இடமில்லை யென்று சபையில் கூடியிருந்தோர் வாளாயிருப்பர். எக்கச் சக்கமாக கூடியிருந்த கும் பலும் அரசனை வரவேற்று அரசன் சபையில் அமரவேண்டிய இடம் அமைத்துக் கொடுத்தனர். சாமிகளுடைய கேலிச் சொற்களும் அரசன் வந்ததைப் போன்று பக்தருக்குக் காரில் இடம் கொடுக்க உதவி விட்டது. அரசனுக்கு அவன் அரசப் பதவி சபையில் இடம்

தேடிக் கொடுத்தது. பக்தருக்கு அவரின் சிஷ்யப் பதவி குருவின் திருமொழிகளால் காரில் இடம் அமைத்துக் கொடுத்தது.

இதைக் கேட்ட சாமிகள் வாய்விட்டுச் சிரித்தார். அந்தச் சிரிப்புக்குப் பின் சாமிகளுடைய உற்சாகம் நகைச்சுவை இன்பத்தை மேலும் வாரி வழங்கியது.

சாமிகள்: சாமி, நீங்கள் கூறிய உவமைக்கே ஒரு நகைச் சுவை நிகழ்ச்சியைச் சொல்வார்களே! அதைக் கேள்விப்பட்டதில்லையா? ஒரு கல்யாண வீட்டில் அறுசுவை அமுதும் வகை வகையான காய் கறிகளும் பரிமாறினர். ஒருவர் வயிறு புடைக்கச் சாப்பிட்டு விட்டார். 'இனிமேல் ஓர் பருக்கைக்குக் கூட வயிற்றில் இடம் கிடையாது' என்று தன் பக்கத்தில் வீற்றிருக்கும் நண்பரிடம் பெருமையடித்துக் கொண்டார். அந்த வேளையில் ஒவ்வொரு விருந்தினருக்கும் ஒவ்வொரு டம்ளர் பாதம்கீர் அளிக்கப்பட்டது. வயிற்றில் ஒரு பருக்கைக்குக் கூட இடமில்லை என்று சொன்னவரும் ஒருடம்ளர் பாதம்கீரைத் தயக்கமின்றி விருப்போடு வாங்கிச் சாப்பிட்டார். இதைப் பேராச்சரியத்தோடு பார்த்துக்கொண்டிருந்த தன் நண்பரிடம் நீங்கள் கூறிய உவமையையே சொல்லி மகிழ்ந்தார். பாதங்கீருக்கும் அரசனுக்குள்ள மதிப்பு இருப்பதைப் பார்த்தீர்களா? அரசனுக்குச் சபையில் இடம் கிடைத்ததைப் போன்று பாதங்கீருக்கும் வயிற்றில் இடம் கிடைத்து விட்டது. இந்தக் கதையில் சொன்ன நிகழ்ச்சியெல்லாம் உண்மையோ என்னவோ? எப்படியோ நம் பக்தருக்குக் காரில் இடம் கிடைத்துவிட்டது.!

நகைச்சுவை எள்ளல் காரணமாகப் பிறக்கலாம், அன்றி இளமை, பேதைமை, மடன் காரணங்களாலும் பிறக்கலாம். எள்ளல் காரணமாக வரும் நகைச்சுவையை நையாண்டிப்பேச்சிலும் பரிகாச வார்த்தைகளிலும் காணலாம். இளமையாலும் பேதைமையாலும் மடனுலும் உண்டாகின்ற நகைச்சுவையில் ஒரு தனிச்சவை உண்டு. சாமிகளிடம் இருக்கும்போது பொழுதுபோவதே தெரிவதில்லை. சலிப்புத்தட்டும் வகையில் அவர் பேச்சும் பழக்கமும் வளர்வதே கிடையாது. நான்குபேர் மத்தியில் நகைச்சுவைக் கட்டத்தை இனிமையாக அமைத்து அதன் முடிவில் ஓர் அரிய கருத்தையும் சாமிகள் வெளியிடுவர். ஒருநாள் மத்தியானம் சுமார் பதினைந்து பக்தர்கள் சாமிகளோடு உரையாடிக் கொண்டிருந்தனர். அதில் ஐந்துபேர் பெண்மணிகள். உரையாடிக் கொண்டிருந்த சாமிகள் உற்சாகமிகுந்தார். ஆடவர் ஒருவர் கையைத் தடவி அற்புத அத்தர் மணம் எழுப்பினர். அதை மற்ற ஆடவர்கள் முகர்ந்து அகமகிழ்ந்தனர். பெண்மணிகளும் இதைக் கவனித்து மகிழ்வுற்றிருந்தனர். பெண்மணிகளுள் ஒருவர் சமீபத்தில் சாமிகளது ஆசியாலும் அருளாலும் கல்யாணமானவர். சாமி

களின்பால் அளவுகடந்த பக்தியும் இயற்கையாகவே கெட்டிக்காரத் தனமாகப் பேசும் இயல்பும் வாய்ந்தவர். இந்தப் பெண்ணைப் பார்த்து சாமிகள், "தொட்டால் மணக்கும் அதிசயத்தைப் பார்த் தீரா? இப்போது சொன்னால் பலிக்கும் அதிசயத்தையும் பாருங் கள். நான் உங்கள் மூக்கிற்கு வெற்றிவேர் வாசனை கொடுத்து விட்டேன்! எப்படிஇருக்கின்றது வாசனை?" என்று கேட்டார். சாமி தன்னைக் கேலிசெய்கின்றார் என்பதை உணர்ந்த பெண்மணி "என்னுடைய கைகளில் வாசனை இருந்தாலும் என் மூக்கால் அதை முகர்ந்து எப்படி வாசனை இருக்கின்றது என்பதை உரைக்க முடியும். மணத்தை முகர்கின்ற மூக்கின்மீதே வாசனை இருந்தால் நான் எதைக்கொண்டு இந்த வாசனையை அறியக்கூடும்" என்று உரைத் தாள் பேதை. "உங்களால் இந்த வெற்றிவேர் வாசனையை முகர்ந்துப் பார்க்க முடியாவிட்டாலும் உங்கள் சகோதரிகளால் இந்த வாசனையை முகர்ந்து அனுபவிக்க முடியாதா?" என்று சாமிகள் உரைத்தவுடன் தன் எடுப்பான மணமிகுந்த மூக்கை மற்றப் பெண்மணிகளிடம் காட்டிவந்தாள் நாசியில் வெற்றிவேர் மணக்கும் இளமங்கை. "உன் மூக்கில் வெற்றிவேர் மணத்திற்கு குறைச்சலில்லை" என்று ஏகமனதாகக் கூறினர் மற்றப் பெண் மணிகள். இதைக் கேட்டுக் கொண்டிருந்த சாமிகள் புன்னகை புரிந்து கூறின மொழிகள் அந்த நாசிமணம் பெற்ற பெண்ணுக்கு வெட்கத்தையும் மற்றவர்களுக்குத் தாங்கொணாத சிரிப்பையும் கொடுத்து மகிழ்வித்தது.

சாமிகள்: உங்கள் மூக்கு வாசனையைக்காட்ட ஒவ்வொரு பெண் மணியிடத்திலும் சென்று வந்தீர்களே? இங்கு அந்த வெற்றிவேர் வாசனையை முகரமுடியாது எத்தனைபேர்கள் பாக்கி இருக்கின்றார் கள் என்பதைக் கவனித்தீர்களா?

இப்படிக் கூறிய சாமிகள் அங்குக்குழுமியிருந்த ஆடவர்களைக் கூர்ந்து கவனித்தார். வெற்றிவேர் வாசமிகுந்த மூக்குடையாள் முகம் வெட்கத்தால் நாணமுற்றுக் கீழே சாய்ந்த வண்ணமிருந்தது. கூடியிருந்த ஆடவர்களுக்குச் சிரிப்பைத்தாங்க முடியவில்லை. சிரிப்பு ஓய்ந்தது, சிறிது நேரம் யாரும்பேசவில்லை, சாமிகள் பேசினார். "ஓடத்திற்கும் தண்ணீருக்கும் சம்பந்தம் உண்டு. ஆனால் அது எப்படிப்பட்ட சம்பந்தமாக இருக்கவேண்டும்? ஓடத்தை மிதக்க வைக்கத்தான் தண்ணீர் பயன்பட வேண்டும், ஓடத்தை மூழ்கடிக்க அல்ல. ஓடம் தண்ணீரின்மேல் இருக்க வேண்டும்; தண்ணீர் ஓடத்தின்மேல் இருக்கக் கூடாது." சாமிகளுடைய பொன்மொழிகள் கூடியிருந்தோர் சிந்தனையைத் தூண்டிவிட்டன. யார் யாரை எந் தெந்த இடங்களில் வைத்துக்கொள்ள வேண்டும் என்ற அறி வுரையை அல்லவா சாமிகள் அழகாக எடுத்துரைத்ததோடன்றி ஆஸ்யமிகு நிகழ்ச்சி ஒன்றாலும் உருவாக்கிக் காண்பித்துவிட்டார்!

சாமிகள் கன்னிவாடி ஜமீனில் ஆரம்பத்தில் கணக்குப்பிள்ளை வேலையில் அமர்ந்தார். அந்த வேலையை நினைத்துக் கொண்டார் ஒருநாள். பொதுவாகக் கிராமங்களில் கணக்குப்பிள்ளை வேலையைப் பற்றியே தமாஷாகப் பேச ஆரம்பித்து விட்டார். சாமிகளது ஆஸ்யப் பேச்சையே கேட்போம்.

சாமிகள் : "கணக்குப்பிள்ளை என்றால் என்ன பொருள் தெரியுமா. கண்ணைக் கெடுக்கும் பிள்ளைதான் அவர் ; ஏனென்றால் பல புள்ளி விபரங்களை சேர்த்துக் கணக்கு எழுதிக் கண்ணுக்கு வலியைக் கொடுக்கின்றவர் அவர். அவர் மட்டும் தப்பான பேர்வழியாக இருந்துவிட்டால் அவர் போட்டுக் காண்பிக்கும் எண்கள் மேலதிகாரிகளுக்குத் தலைவலியை மட்டுமா தரும்? பெருந் தொல்லைகளையே தந்துவிடும். அவர் மேலதிகாரிகளுக்கு வேண்டும்போது வேண்டிய வேலைகளையும் செய்து முடிக்கவேண்டும். ஒருசில சமயங்களில் ஒருசில மேலதிகாரிகள் இது வேண்டும் அது வேண்டும் என்று கேட்டு விடுவர். அதையும் உடனடியாக முடித்துக் கொடுக்க வேண்டும். இத்தகைய நெருக்கடிகளைக் கெட்டிக்காரத்தனமாகச் சமாளிக்கக்கூடிய ஒரு கணக்குப்பிள்ளை மேலதிகாரி ஒருவரிடமிருந்து வந்த ஒரு கடிதத்தை அவசர அவசரமாகப் பார்த்தார். அதில் "கண்டிப்பாய் வந்து சேரவேண்டும்" என்று குறித்திருந்தது. 'கண்டிப்பாய்' என்ற வார்த்தைகளைக் கண்டவுடனேயே அவருடைய பதிலும் தயாராகிவிட்டது. கண்டி (ஊர்) "பாய்தான் வேண்டுமா? அது கிடைக்காவிட்டால் நாட்டுப்பாய் வாங்கி அனுப்பலாமா? எத்தனை பாய்கள், என்ன விலையில் வேண்டும் என்பதைத் தயைகூர்ந்து குறித்தனுப்ப வேண்டுகிறேன்"— இதுதான் அவருடைய பதில். அவர் மீது குறையாக ஒன்றும் சொல்லுவதற்கில்லை. அவர் மேலதிகாரிகளுக்கு வேண்டியவைகளை வாங்கிக் கொடுத்துக் கொடுத்து வழக்கமாகப்போய்விட்டால், அவர் இந்த கண்டிப்பான கடிதத்தைப் படித்து பார்க்கும்போதுகூட வழக்கம்போல் மேலதிகாரி என்ன கேட்கின்றாரோ என்று அவசரத்துடன் படித்ததால் ஏற்பட்ட தவறு என்றுதான் இதைச் சொல்ல வேண்டும்.

கணக்குப் பிள்ளைகளுக்குக் கிராமத்தில் நல்ல செல்வாக்குண்டு. ஒருதரம் ஒரு கிராமத்திற்கு அம்மை குத்த ஓர் அதிகாரி தன் பணியாளோடு வந்தரர். பணியாள் வீட்டினுள் கணக்கு எழுதுவதில் ஈடுபட்டிருந்த கணக்குப் பிள்ளையிடம் அதிகாரி வந்துள்ளதைத் தெரியப்படுத்தினர். வேலை மும்முரத்தில் இருந்த கணக்குப் பிள்ளைக்குத் தன் முக்கியத்துவமும் மனத்தில் நிலைகொண்டிருந்தது. "அம்மை குத்திர ரைட்டரிடம் நான் புள்ளி குத்திர ரைட்டராக்கும் என்பதை அறிவிப்பாயாக" என்று குமுறிப் பேசிவிட்டார். இதைக் கேள்வியுற்ற அதிகாரிக்குக் கோபம் வந்ததில் வியப்பில்லை ; "என்ன

இப்படிப் பேசிவிட்டீர்களாமே'' என்று கணக்குப்பிள்ளையைக் கேட்டார். புத்திசாலிக் கணக்கப்பிள்ளை மிகவும் கெட்டிக்காரத்தனமாகப் பதில் சொல்லி அதிகாரியைத் திருப்தி செய்தார்.

கணக்குப் பிள்ளை: நீங்கள் ஒன்றும் வித்தியாசமாக எடுத்துக் கொள்ளக்கூடாது. என்னுடைய அடங்கல் புத்தகத்தில் அல்லவா யார் யாருக்கு ஏற்கனவே அம்மை போட்டு இருக்கின்றது, இன்னும் யார் யாருக்கு அம்மை குத்த வேண்டும் என்ற புள்ளி விபரங்கள் அடங்கியுள்ளன. நான் அம்மை குத்தின பேர்வழிகள் பெயருக்கு எதிரிலே புள்ளிகுத்தி வைத்திருக்கிறேன். ஆக நீங்கள் அடங்கலில் புள்ளிகுத்தாமல் இருக்கும் நபர்கள் பெயரைப் பார்த்துத்தானே அவர்களுக்கு அம்மை குத்தவேண்டும். அதனால்தான் நான் புள்ளி குத்திர ரைட்டர் என்று என்னைச் சொல்லிக்கொண்டேன். இதை நீங்கள் தவருக எடுத்துக் கொள்ளக்கூடாது.

சில சமயங்களில் அவர்கள் நிலை பரிதாபப்படக் கூடிய அளவுக்கு வந்துவிடும். கிராமங்களில் எழுதப்படிக்கத் தெரிந்தவர் தொகை அப்போது கொஞ்சம்தான். ஒருநாள் ஒரு சிற்றமுற்றப் பெண் ஓடோடி வந்தாள் ஒரு கணக்குப்பிள்ளையிடம். போலீசுக்குப் புகார் செய்யவேண்டிய கேஸ். தன்னை ஒரு அயலான் கைப்பிடித் திழுத்தான் என்பது கேஸ். அப்படியே கணக்கப்பிள்ளையும் அவள் கூறியபடியே எழுதிப் போலீசுக்கு அனுப்பினுர். கோபத்தில் புகார் செய்த பெண்ணுக்கும் அவள் கையைப்பிடித்திழுத்த ஆளுக்கும் அதன்பின் உறவு உண்டாகித் திருமணமும் நிச்சயமாகி விட்டது. தன்னைத் திருமணம் செய்துகொள்ளப் போகும் மணுளனுக்கா தண்டனையைத் தேடித்தருவாள் ஒருபெண்? இருந்தாலும் தான் கொடுத்த வாக்குமூலத்திலிருந்தும் தப்பிக்கொள்ள வேண்டுமே. மிகவும் புத்திசாலிப்பெண். கோர்ட்டில் விசாரணை நடந்தது. அப்போது அவள், ''அவர் என் கையைப்பிடித்திழுத்தார் என்று நான் சொல்லவில்லை. என் பையைத்தான் பிடித்தார் என்று கூறினேன். எழுதினவர் அவசரத்தில் தப்பிதமாக எழுதிக் கொண்டார்'' என்று குழுமியிருந்தவரது இரக்கத்தை ஏற்றுக்கொண்டிருக்கும் கணக்கப்பிள்ளையைப் பார்த்துக் கூறினுள் அந்தப்பெண். இப்படியும் நடக்கின்றது உலகத்தில். ஒழுங்காக எழுதிக் கொடுத்தாலும் தப்பாக எழுதிக் கொடுத்தாரென்ற பெயரும் அவர் எடுக்கின்ருர். இது கணக்கப் பிள்ளையின் ஜாதகம் என்றுதான் சொல்லவேண்டும்.

நான் இப்படியெல்லாம் பேசுவதிலிருந்து கணக்குப்பிள்ளைகளை நீங்கள் மட்டமாக நினைக்க வேண்டாம். நான் சொல்லுவது பழைய நாட்களில் வேலை செய்தவர்களைப்பற்றி. இப்போது எல்

லாம் மாறிவிட்டது. குற்றமே கண்டுபிடிக்க முடியாது. நான் பேசிய திலிருந்து நான் வேலை செய்துவந்த ஜமீனில் நான் கண்ணைக் கெடுக்கும் கணக்கெழுதியோ மேலதிகாரிகளுக்குப் பொருளோ கொடுத்தேனென்று எண்ண வேண்டாம். நான் அங்கு வேலை செய்த போது பொறுமையும் இழந்ததில்லை. ஒரு தர்மசங்கடமான நிலைமை யிலும் அவதிப்பட்டதில்லை. நான் வேலைசெய்த [இடத்தில் அதற் கெல்லாம் இடமில்லை.

இவ்வளவு நேரம் நகைச்சுவையோடு கணக்குப்பிள்ளை வேலை யைப்பற்றி உற்சாகத்துடன் பேசிக்கொண்டிருந்த சாமிகள் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். அருட்சுடர் ஒளிரும் திருமுகத் தோடு அருட்திருமொழிகள் இதைத் தொடர்ந்துவந்தன.

சாமிகள்: கடைசியில் பார்க்கப்போனல் நாம் எல்லோருமே கணக்குப்பிள்ளைகள்தான். மனிதன் முதற்கொண்டு தெய்வம் வரை யிலும் எல்லோரும் கணக்குப்பிள்ளைகள்தான். ஆனல் நமக்கும் தெய்வத்திற்கும் ஒரு வித்தியாசம் உண்டு. மனிதன் மற்றவர்கள் செய்யும் குற்றங்களைக்கண்டு கணக்கெடுத்து வைத்துக்கொள்கின் ருன், எப்பொழுது அவர்களைப் பழிவாங்கலாமென்று: கடவுள் நாம் செய்யும் புண்ணியச் செயல்களைக் கணக்கெடுத்து வைத்துக்கொள் கின்ருர், எப்பொழுது நம்மைத் தன் அருட்கரங்கொண்டு அணைக் கலாமென்று!

## அன்பே சாமிகள்

“அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனுங் கரத்தமர் அமுதே”

“பசுக்கள் நிறங்களில் மாறுபடுகின்றன; ஆனல் அவை கொடுக்கின்ற பாலில் ஒருவித மாறுதலும் இல்லை.” என்று மகான் துகாராம் மொழிகின்ருர். உண்மை தான்! எல்லாப் பசுக்கள் பாலும் வெள்ளை நிறமாகவே உள்ளது. பெரிய மகான்கள் பலர் பல காலங் களில் பல நாடுகளில் பல மதங்களில் பிறந்திருக்கின்றனர். அவர்கள் மக்களுக்கு வழங்குகின்ற தீஞ்சுவைப்பால் ஒரே நிறமுள்ளது. ஒரே சுவையுடையது, ஒரே குணமுடையது. அது வேருென்றுமில்லை? அன்பு தான்! அந்த அன்பு ஒன்று இருந்துவிட்டால் எவ்வுயிரையும் தம்முயிர்போல் பாவிக்கும் மனநிலை வந்துவிடும். அந்த அன்பு தான் என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற மன நிலையை அருள் கின்றது. அத்தகைய அன்பு ஒன்ருல் தான் ஈசன் அருளை அடைய

முடிகின்றது. மீராவினுடைய அருமையான கவிதை ஒன்று சாற்றுவது போல் அனுதினமும் தீர்த்தத்தில் மூழ்கி எழுவதனால் இறைவன் கிடைப்பதாயிருந்தால் அவன் மீன்களுக்குக் கிடைத்திருப்பான்; பழங்கள் தின்று கந்த மூலங்கள் உண்டால் கிடைப்பானாயின் குரங்குகள் அவன் அருள் பெற்றிருக்கும்: இலைகள் தின்பதனால் கிடைப்பானாயின் ஆடுமாடுகள் அவன் அருளை அடைந்திருக்கும்: அன்பு ஒன்று தான் அவன் அருளைக் கூட்டும். இந்த அன்பு ஒன்றாலேயே சாமிகள் மக்களுக்குத் தொண்டாற்றித் தேவன் திருத்தொண்டராகின்றார்.

திருத்தொண்டர்கள் தமக்கென வாழாப் பிறர்க் குரியாளர்: அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு எனும் பண்பினர். மன்னுயிரைத் தம்முயிர் போல் கருதும் தகைமையாளர்: தாயினும் சாலப் பரிந்து நிற்கும் குணசீலர்கள். அவர்கள் மக்களுக்கு அருளுதவி அளிப்பதைக் காணும்போது "வேண்டுவோர் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்றல்லவா நமது இதயங்கள் பேசுகின்றன. சாமிகளும் வாழையடி வாழையாக வரும் திருக்கூட்டமாகிய திருத்தொண்டர்களில் ஒருவராக விளங்கி மக்களின் இன்னல்களைப் போக்கி இன்னருள் கூட்டித் தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று சலியாது உழைப்பவர். மக்கள் தொண்டுக்கே தன் வாழ்வினை வகுத்துக் கொண்டவர்: தன்னை அண்டியோர்க்கு அபயம் அளித்து காக்கக்கூடிய குருபரன். இந்த அருங்குணத்தை யல்லவா சாமிகள் வாழ்க்கை நிகழ்ச்சிகளில் நாம் தொடர்ந்து கண்டு மகிழ்கின்றோம்.

சாமிகள் எல்லோரிடத்தும் அருமையாகப் பழகுகின்ற இயல்பினர். இந்த அருமை எத்தன்மைத்து என்பதைச் சாமிகளோடு கூடிப்பழகியவர்களால் உணரமுடியும். சாமிகள் அருள் கூர்ந்து பார்க்கும்போதும் ஓர் அருமை, அவர்கள் கூர்ந்து பேசும்போதும் ஓர் அருமை! அவர் கருணை கூர்ந்து அருளும் போதும் ஓர் அருமை! சாமிகளைக் கொஞ்ச நாட்களாகவோ நெடு நாட்களாகவோ காணாதிருந்து அன்பர்கள் சந்திக்கும் சந்தர்ப்பங்களில் சாமிகள் அன்பர்களைத் தன் கண் கொண்டு அணைப்பது சாமிகள் நம்மைத் தம் இதயம் கொண்டு அணைப்பதையே காட்டும். அன்பர்கள் சாமிகளைத் தனியாகச் சந்திக்கும் போதும் இதே உணர்ச்சியடைவர். கூட்ட மத்தியில் சந்திக்கும் போதும் இதே உணர்ச்சி அடைவர். இவ்வித அருமையையே சாமிகள் உற்சாகமிகுந்து பேசும் போதும், கருத்தாடல் செய்யும்போதும், ஒரு பாட்டைப் பாடும் போதும் நாம் நம் உளங் குளிரக் காண்கின்றோம். சாமிகள் அருள் சுரந்து அற்புதம் ஆடிக் காட்டுகின்ற போதும், பிணிகளை நீக்க அருள்பாலிக்கும் போதும் இதே அருமை அவர்களிடத்தில் பரிபூரணமாகப் பரிமளிப்பதைக் காண்கின்றோம். சாமிகள் காட்சிக்கு எளியர்; அந்த எளிய காட்சியிலும் ஓர் அருமை அல்லவா தோய்ந்திருக்கின்றது.

சாமிகள் சாதாரணமாக யாரையும் அழைப்பதே அருமையாக இருக்கின்றது. சாமிகளைக் கண்டு உரையாடும்போது பக்தர்கள் சாமிகளைச் சாமிகள் என்றே பயபக்தியோடு அழைக்கின்றோம். சாமிகளை சாமி என்று அழைப்பதில் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை. பெரியவராயிருந்தாலும் சரி, சிறியவர்களாயிருந்தாலும் சரி, மற்றோராயிருந்தாலும் சரி யாராயிருந்தாலும் – சாமிகள் நம்மைப் பார்த்துப் பேசும்போதெல்லாம் அருமையாக 'சாமி' என்றே விளித்துப் பேசுவர். சாமிகள் மற்றவர்களை 'சாமி' என்று அருமையாக அழைப்பது ஆச்சரியப்பட வேண்டியதாயிருப்பினும் இதிலும் ஓர் உண்மை பொதிந்துள்ளது, கடவுள் நம்முள் இருக்கின்றான் என்ற பேருண்மையை சாமிகள் (நம்மதான் சிவன், நாம் சிவம்' என்று அழகாகச் சொல்லி நமசிவாய தத்துவத்தையே எளிதாக விளக்குவர். இந்தப் பேருண்மையைச் சாமிகள் கூறுகின்ற இரு பாடல்களைக் கண்டும் உணர்ந்து அகமகிழ்வோம்.

> அறிவுடையார் நெஞ்சு அகலிடம் ஆவது
> அறிவுடையார் நெஞ்சு அருந்தவம் ஆவது
> அறிவுடையார் நெஞ்சோடு ஆதிப்பிரானும்
> அறிவுடையார் நெஞ்சத்து அடங்கிநின்றானே"

> "தம்மிற்சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கி
> தம்மன்பால் மஞ்சள்நீர் தாம்ஆட்டித் – தம்மை ஒரு
> பூவாக்கி பூவழியாமல் கொடுத்துப் பூசித்தால்
> ஓவாமை யின்றே உடல்."

யோகநிலை உணர்த்துகின்ற பாடல்களைப் பாடிக்காட்டும் யோகியே நமது சாமிகள். ஆனால் சாமிகளை நினைத்தவுடனேயே அவருடைய எளிமையும், இனிமையும்தான் நம்முன் வந்து முதலில் நிற்கின்றன. சாமிகள் காட்சிக்கு எளியன்; அணுகுவதற்கு எளியன்; பேசுவதற்கு எளியன்; பழகுவதற்கு எளியன். சாமிகள் காட்சிக்கும், அணுகுவதற்கும், பேசுவதற்கும், பழகுவதற்கும் இனியவரும் கூட. அவரைக் கண்டவுடனேயே அவர் நம்மைப்போன்ற ஒருவர் என்ற உணர்ச்சி உடனே ஏற்பட்டு விடுகின்றது. அவர் தெய்வச் சுடர் ஒளிரும் திருமுகமும், அதன் இனிமையும், எளிமையும் நம்மைத் தடுத்தாட் கொள்கின்றன. நம்மை அவரிடமிருந்து பிரித்து வைக்க அவரிடம் காஷாயமில்லை; தாடியில்லை; மற்ற துறவற ஆடம்பரங்கள் ஒன்றுமில்லை. அவரும் நம்மைப்போல் ஒருவர் என்ற எண்ணம் அவருடன் நம்மை நன்றாக நெருங்கிப் பழக ஊக்குவிக்கின்றது. சாமிகளை முதன்முதலில் காணும்போதே சாமிகளிடம் வெகுநாள் பழகிய ஒரு பேரன்பையே காண்கின்றோம். தம் இனிய சொற்களாலும். செயல்களாலும் வெகுநாள் பழகிய ஒரு அன்னி

யோன்யத்தை சாமிகள் நமக்கு வழங்குகின்றூர். சாமிகள் பேசுகின்ற மொழிகளும் உள்ளத்திலிருந்து ஊற்றுப்பெருக்கெடுத்து வருவதால் நம் உள்ளங்களைத் தொடுகின்றன. அவருடைய திருவிழிகளின் கருணை அமுதையே நமது உள்ளங்கள் சுவைத்து அனுபவிக்க ஆரம் பிக்கின்றன. சாமிகளிடம் ஆடம்பரமோ, படாடோபமோ, வீண் கர்வமோ, பெருமையோ செருக்கோ – இவை ஒன்றும் கிடையா நம்மைப் பயப்படுத்த! சாமிகள் எளிய சொற்களாலேயே இனிய உரையாடுகின்றூர். பரம்பொருள் விளக்கத்தையும் எளிய இனிய மொழிகளால் நடத்திக் காண்பிக்கின்றூர். அவருடைய எளிய உரை களைக் கேட்கக் கேட்க அதன் இனிமை வளர்ந்துகொண்டே செல் கின்றது. சாமிகளோடு பழகிவிட்டால் நாமும் அவருடைய குடும்பத் தில் ஒருவர் என்பதை நாம் அறிகின்றோம்.

சாமிகளோடு இருக்கும்போது நம்மைச் சாமிகள் உரையாடல் கப்பலிலேற்றி அருள் கடலிலேயே அழைத்துச் செல்கின்றூர். அடிக் கடி கேலிமொழிகளாலும், வேடிக்கை நிகழ்ச்சிகளாலும் வயிறு குலுங்கச் சிரிக்க வைத்தும் விடுவார். அவரவர் நாடிவந்த பொருளைப் பற்றி யும் அவ்வப்போது அன்போடு பேசி அவர்கள் மனப்புண்களையும் ஆற்றி ஆறுதல் அளிப்பார். ஒரு பக்தர் தனக்கு வேலை கிடைக்குமா என்று ஏங்கி இருப்பார். மற்றொருவர் தன் சொந்த கிராமத்திற்கே சென்று வாழலாமா என்று மனதை அலட்டிக் கொண்டிருப்பார். வேறொரு பக்தர் வீடு வாங்கலாமா என்று சிந்தித்துக் கொண்டிருப் பர். மற்றுமொருவர் சாமிகளை தம் ஊரில் நடக்கும் தன் குமாரத்தி கல்யாணத்திற்கு அழைத்துச் செல்ல விரும்புவார். சாமிகளிடம் வந்திருக்கும் அவ்வளவு பேர் உள்ளங்களில் உருவாகிக் கொண்டிருக் கும் எண்ணங்களுக்கெல்லாம், ஐயங்களுக்கெல்லாம், கேள்விகளுக் கெல்லாம் சாமிகள் தன் உரையாடலுக்கு நடுவிலேயே தக்க பதிலையு முரைத்து பக்தர்களை உற்சாகப்படுத்துவர். சாமிகள் கூட்டத்தில் பேசிமுடிக்கவேண்டிய விஷயங்களைக் கூட்டத்திலேயே பேசி முடிப்பர். தனிமையில் பேசவேண்டிய விஷயங்களைத் தனித்தும் பேசுவர். ஆதரவும், அன்பும் ஈந்தருள வேண்டிய இடங்களில் கருணைமுகத் தோடு பேசுவர். கண்டிப்பாக இருக்கவேண்டிய இடங்களில் அழுத்தந்திருத்தமாகப் பேசுவர். தன் சொந்தக் காரியங்களை முன்னிட்டோ சொந்த நலனை முன்னிட்டோ சாமிகள் எப்பொழுதும் பேச்சை வளர்க்கவுமாட்டார், குறைக்கவுமாட்டார். பற்றற்ற நிலையி லுள்ள அவருக்கா சொந்தக் காரியமென்றும், சொந்த நலனென்றும் ஒன்று உண்டு. சாமிகளுக்கு வேண்டியது ஒன்றேதான் – அது யாவர்க்கும் தன்னலையன்ற மட்டும் அருள்பாலிப்பதேயாகும்! சாமி களது முகத்தில் எப்பொழுதும் தவழ்ந்து கொண்டிருப்பது ஒன்றே தான் – அது யாவர் மனக்கவலையையும் மகிழ்ச்சியாக மாற்றவல்ல அருட்பிரகாசப் புன்னகைதான்! சாமிகளது உள்ளத்தில் ஊற்றுப்

பெருக்கெடுத்து வழிந்து கொண்டிருப்பது ஒன்றேதான் – அது எவ்வுயிரையும் தம்முயிர்போல் பாவித்துக் கருணை ஊட்டவல்ல அன்பு ஒன்றேதான்!

"எத்துணையும் பேதமுறாதெவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணியுள்ளே
ஒத்துரிமை யுடையவராய் உவக்கின்றார் யாவரவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடமெனநான் தெரிந்தேன்அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திட வென்சிந்தைமிக விழைந்ததாலோ.

இப்படி வித்தகர் இயல்பைக்கூறிப் பாடி மகிழ்ந்தார் இராமலிங்க அடிகள். இத்தகைய வித்தகராக அல்லவோ நமது சாமிகள் விளங்குகின்றார். அவர் அடிகளுக்கு ஏவல் புரிந்திடுவதல்லவா நமது கடன்! அடியார்க்கடியாராகத் தன்னை மதித்து அண்டியவர்க்கெல்லாம் அன்பு செயல் செய்து விளங்கும் வித்தகர் குண நலன்களையெல்லாம் படித்து ஏத்துவதல்லவா நமது இன்பம்!

"எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங்கிருப்பது நீயன்றோ பராபரமே"

என்று இறையருளை வாயார வாழ்த்துகின்றார் தாயுமானார். யோகத்தைப் பரிபூரணமாக அனுபவிக்கும் நமது சாமிகளும் உலகிலுள்ள அனைவரையும் தமது அன்பாலும் அருளாலும் கருணையாலும் இன்முகத்தோடும் இன்சொற்களாலும் இன்செயல்களாலும் தடுத்தாட்கொண்டு தயாபரனாக உதவிவருகின்ற ஆனந்த நிலையை நாம் எப்படிப் புகழ்வது?

"என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்னுளா ரடியார் அவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெல்லாம்."

அருள்சுரக்கும் உள்ளமும் கருணை வழிந்தோடும் கண்களும் கூடிய சாமிகள் அன்பின் சிறப்பை அன்பே சிவம் எனும் தத்துவத்தை விளக்குகின்ற அருமையைப் படித்து இன்புறுவோம்.

சாமிகள் : மனித உள்ளம் அன்பின் ஊற்றாக அமைவதுதான் மானிட ஜன்மத்தின் நற்பயன். அன்பு என்பது இகத்திற்கும் பரத்

திற்கும் உகந்த உயர்ந்த பொருள். அன்பு தோய்ந்துள்ள உள்ளம் பலருக்குப் பலவகையில் ஈடுபடுகின்றது. குழந்தைகளைக் கண்டவுடன் பாசமாகப் பரிமளிக்கின்றது. தாயைக் கண்டவுடன் சேயன்பாகக் கொழிக்கின்றது. காதலியைக் கண்டவுடன் காதலாக மணக்கின்றது. வாடித்தவிக்கும் மக்களைக் கண்டவுடன் கருணையாக விளங்குகின்றது. பற்றற்றானாகிய ஈசன் தாளைக் கண்டவுடன் ஒரு தனிப்பெரும்பற்றால் அவன் தாளைப் பின்னிப் பற்றுகின்றது. அதுவன்றோ பக்தி. ஈசனே பற்றற்றானாக இருக்கும்போது அவன் மெய்யடியார்களும் பற்றற்றான் ஆகிவிடுகின்றனர். இப்பற்றற்றான் யார்? பந்தபாசங்களை விட்டவர், விருப்பு வெறுப்பு மற்றவர், இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்றாகப் பாவிப்பவர்—இப்படியெல்லாம் அதற்குப் பொருள் விரித்துக்கொண்டே போகலாம். அப்படியென்றால் பற்றற்றநிலை அடைந்தவர்களுக்குப் பற்றே இல்லை என்று சொல்லிவிட முடியுமா? அவர் மனத்தில் அன்பிற்கு இடமில்லை என்று சொல்லிவிட முடியுமா? தன் தாளை 'நீயேகதி' என்று சரணடைந்தோருக்கும் கருணை சுரக்காத ஈவிரக்கமில்லாத கல்நெஞ்சத்தவர் என்று அவரைச் சொல்லிவிட முடியுமா? சாந்தமும் தண்ணளியும் பேரன்பும் குடிகொண்ட கருணாமூர்த்தியே அவர். பற்றற்றநிலை என்பது தனக்கென்று வாழாத் தகைமையையே குறிக்கும். தனக்கு வேண்டும் என்ற சுயநலம் அற்ற தொண்டு மனப்பான்மையரே பற்றற்ற நிலை அடைந்தவர். தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று சலியாது உழைப்பவர் அவர் மக்கள் தொண்டுக்குத் தம் வாழ்வினை வகுத்துக் கொண்டவர். தன்னை அண்டிய அன்பர்களுக்குத் தன் அன்பை வாரி வாரி வழங்குபவர். இத்தகையவர் உறவு கிடைப்பது பூர்வஜன்ம புண்ணியத்தால் தான். அது அவ்வளவு எளிதல்ல. குறிப்பிட்ட சிலருக்குக் குறிப்பிட்ட காலத்தில்தான் இந்த உறவை அடைய முடியும். அவன் அருளாலே அவன் தாள் வணங்குதற்கும் அவன் அருளே வேண்டும். அவன் அருள் இல்லையென்றால் அவரை நெருங்கவும் முடியாது.

அன்பு என்பதைப்பற்றி அழகாக எடுத்துரைத்த சாமிகள் அவர் பொன்னுரைகளுக்கே ஒரு சான்றாக அல்லவா திகழ்கின்றார்? அவரை அடைவது, அவர் அன்பை அடைவது, அவர் அருளை அடைவது எல்லாம் அவருடைய கருணையையே பொறுத்திருக்கின்றது என்பதையும் நாம் அறிகின்றோம். சாமிகள் அடுத்த வீட்டிற்கே வந்திருப்பார், பூஜை செய்வார், சாமிகளுக்கும் பாதபூஜை நடக்கும்; ஆனால் பக்கத்து வீட்டுக்காரருக்கு இதெல்லாம் கவனிக்க நேரமிருக்காது, நேரமிருந்தால் நோக்கமிருக்காது, நேரமும் நோக்கமுமிருந்தாலும் அதிர்ஷ்டம்] இருக்காது. பல மைல்களுக்கப் பாலிருந்து சாமிகளைத் தேடிக்கொண்டு வருபவருக்கு இந்த பாத பூஜை வைபவமும் சாமிகள் அருளுதவியும் கிட்டிவிடும். இது நாம் கண்டுணர்கின்ற உண்மை.

சாமிகள் பல சந்தர்ப்பங்களில் பல இடங்களில் தொண்டர் இயல்பைப்பற்றியும் அவருக்கு இன்றியமையாதிருக்கும் அன்பைப் பற்றியும் பேசி அகமகிழ்வதுண்டு. சாமிகளுடைய அருள்வாக்கமுதை உண்டு மகிழ்வோம். "கொட்டுகின்ற மழை உயரமான இடத்திலேயே நிலைத்து நின்றுவிடுவதில்லை. அது மலைகளிலிருந்தும் மேட்டிலிருந்தும் ஆறுகப் பெருகி பலவளங்கள் உண்டாக்குகின்றது. மமதையும் கர்வமும் ஏறிய கல்நெஞ்சத்தவரிடம் தெய்வ அருள் சுரப்பதில்லை. அது அடக்கமே உருவான உயர்ந்தவர்களிடத்திலிருந்து பெருகி மக்களுக்கு உதவுகின்றது"—"காவிரி ஆரம்பிக்கும் இடத்தில் அருவி அளவிலேயே ஓடுகின்றது. காவிரி கடலில் சங்கமம் ஆகும் இடத்திலும் வாய்க்கால் அளவிலேயே ஓடுகின்றது; காரணம் காவிரி பெருகி விரிந்து கரைபுரண்டு ஜீவநதியாக திருச்சி தஞ்சை வட்டாரங்களில் ஓடும்போது அதன் நீரை அணைகள் கொண்டும் கிளை வாய்க்கால்கள் மூலமாகவும் மக்கள் நிலவளம் பெருக்க நீர்வளத்தை நன்ருகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அதனுல்தான் விரிந்து ஓடிய காவிரி நதி ஒடுங்கிய வாய்க்காலாக கடலுள் சேரும்போது அமைந்துள்ளது. அதுபோன்றுதான் மக்களும் உடல் ஒடுங்கி அடங்குவதற்குமுன் தம்மால் பல நலன்கள் உலகம் அடையச் செய்வதே தம் கடனுகக் கொள்ளவேண்டும். நதிகள் பெருகிப் பெருங்கற்களையும் சோலைக் கரைகளையும் உரசி ஓடும்போது சலசலப்புச் சப்தம் கேட்கின்ருேமே? அது என்ன சப்தம்? "என் கடன் தண்ணீர் பாய்ச்சுவதே" என்றல்லவா ஆறுகள் மொழிந்து கொண்டு வயல்களையும் சோலைகளையும் நோக்கி மகிழ்ந்து ஓடுகின்றது. அதுபோன்றல்லவா பெரியவர்கள் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று நினைத்து அகமகிழ்ந்து கருணை கூர்ந்து அருள் சுரந்து யாவருக்கும் அன்புப்பணி செய்து வரவேண்டும்"

இப்படிப் பொதுவாக அருள்வாக்குகளைத் திருவாய் மலர்ந்தருளும் சாமிகள் ஒருநாள் பேசிஅருளிய திருவாக்கு சாமிகளின் பேரன்பு நிலையை நமக்கு எவ்வளவு அழகாக விளக்குகின்றது. "நானும் ஒரு வக்கீல்தான்; ஆனல், எனக்கும் கோர்ட்டில் ஆஜர் ஆகும் வக்கீலுக்கும் ஒரு வித்தியாசமுண்டு. கோர்ட்டு வக்கீல் தான் ஏற்றுக்கொண்ட ஒரு கேசுக்காக பீசுக்காகத்தான் (Fees) வாதாடுவர். நான் உங்கள் நன்மைக்காக என்றும் எப்பொழுதும் ஆண்டவன் சந்நிதியில் வாதாடுகின்றேன். அதற்கு உங்களிடமிருந்தும் நான் ஆசையோடு ஆவலோடு எதிர்பார்க்கும் பீஸ் (Fees) வேருென்றுமில்லை, உங்கள் அன்பு ஒன்றுதான்." அன்பின் அருமையை, அன்பின் பெருமையை, அன்பின் இயல்பை எவ்வளவு இனிமையாகவும், எளிதாகவும், அழகாகவும் சாமிகள் உரைத்து விட்டார்.

ஒருநாள் அன்புப் பெருக்கில் சொல்மாரி பெய்த சாமிகள் தம் பக்தர்கள்மேல் உள்ள பேரன்பை மிக உற்சாகத்தோடு கூறினர். "கடவுள் எல்லாம் எனக்குக் கொடுத்திருக்கின்றார். ஆம்! அந்த 'எல்லாம்' என்பதென்ன? யார்? எது?| அந்த 'எல்லாம்' என்பது? அந்த எல்லாம் என்பது என் பக்தர்களாகிய நீங்கள் தான்!" மற்றொரு சமயம், "வாடாத பூ, நிலைத்த மணமுள்ள பூ, இன்பமூட்டும் பூ எது?" என்ற கேள்வியைக் கேட்டு, "அது அன்பு" என்று பேருவகையோடு உளங்கனிந்து உரைத்தார் சாமிகள். அன்பு என்ற சொல்லில் கடைசி வார்த்தையை 'பூ' என்று அழுத்தமாகக் கூறி! இந்த அன்புகனிந்த கருணைமொழிகள் சாமிகளது தண்ணருள் சுரக்கும் திருவுள்ளத்தை அல்லவா நமக்குத் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்ட உதவுகின்றது. அன்பின் பீடத்தில் அமர்ந்திருக்கும் அன்பின் திருவுரு திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளை நினைக்கும்போது இராமலிங்க சாமிகளின் அன்புப்பாட்டே நம் மனக்கண்களுக்கு முன் வந்து இன்பூட்டுகின்றது.

"அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில் புகும் அரசே
அன்பெனும் வலைக்குட்படு பரம்பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனு முயிரொளிர் அறிவே
அன்பெனு மணுவுள் அமர்ந்தபே ரொளியே
அன்புரு வாம்பர சிவமே"

## 27. அற்புதம் ஆடவல்லார் சாமிகள்

" தூணைச்சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்வோம்
துரும்பைப் பெருந்தூணுகத் தோற்றச் செய்குவோம்
ஆணைப்பெண்ணும் பெண்ணை யாணுமாகச் செய்குவோம்
ஆரவாரத் தெதிராய்நின் ருடுபாம்பே

" எட்டுமலைகளைப் பந்தா யெடுத்தெறிகுவோம்
ஏழுகடலையுங் குடித் தேப்ப மிடுவோம்
மட்டுபடா மணலையு மதித்திடுவோம்
மகாராஜன் முன்பு நின்ருடு பாம்பே."

— பாம்பாட்டிச் சித்தர் பாடல்

அரிது அரிது மானிடராய்ப் பிறப்பது அரிது என்பர் பெரியோர். அதிலும் இந்த இருபதாம் நூற்றுண்டில் பிறந்திருக்கும் நாம் மானிடராய்ப் பிறவி எடுத்திருப்பதைப்பற்றி மட்டும் எண்ணி மகிழ்ந்து அடங்கிவிடுவதா? நம்மைப்போல் பிறவி எடுத்த மானிடர்கள் இதற்கு முன்னும் இல்லை பின்னும் இருக்க முடியாது என்று இறுமாந்து ஏறுநடை போடக்கூடிய அளவு நாம் பாக்கியம் பெற்றுள்ளோம். விஞ்ஞான அறிவில் சந்திரமண்டலத்தைத் தொடுமளவு சக்தி பெற்றுவிட்டோம்: தீராத க்ஷயரோகம் போன்ற பிணிகளை அடியோடகற்றவும் சக்தி பெற்றுவிட்டோம்: மக்களைப் பலியிட்டு மற்ற நாடுகளை விழுங்க முனைந்த ஹிட்லர் போன்றவர்களின் போர்முனைச் சக்தி பாழானதைக் கண்டோம்: இரத்தமின்றி, கத்தியின்றி அஹிம்சா சக்தியால் நம்நாடு வீர சுதந்திரம் அடைந்ததையும் கண்டோம்: அஹிம்சா சக்தி உருவாக்கிக் கொடுத்த உத்தமன் மகாத்மா காந்தியடிகளைக் கண்டோம். உலகத்தையே ஒத்து வாழவைக்க உழைத்த ஒப்பற்ற சக்திகளாக விளங்கிய ஜவகர்லால் நேரு, ஜான் கென்னடி போன்றவர்களின் சலியாத உழைப்பையும் கண்டோம். அறிவு சக்தி, போர்முனை சக்தி, அகிம்சா சக்தி, அன்பின் சக்தி – இந்த சக்திகளைக் கண்டதனுல் மட்டும்தான நாம் பாக்கியவான்கள்? பிறவியின் பயனைக் காட்ட வல்ல அருள்சக்தி மகான் ஒருவரையும் காணும் பாக்கியம் நாம் பெற்றுள்ளோம். அந்த அருள்சக்தி வள்ளல்தான் நமது திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்.

"நமது தத்துவ சாத்திரம் கனவிலும் கண்டறியாத எவ்வளவோ பேருண்மைகள் விண்ணிலும் மண்ணிலும் நிறைந்திருக்கின்றன," ("There are more things in heaven and earth than are dreamt of in our philosophy") என்று ஷேக்ஸ்பியரின் அமரபடைப்பான ஹாம்லத் சொல்வது நமது ஞாபகத்திற்கு வருகின்றது. ஆம்! உண்மைதான்! இப்பேருண்மைகளை மனிதன் அறிந்து கொள்ள ஆரம்பத்திலிருந்து எவ்வளவோ முயற்சி செய்து வருகின்றான். நாம் பார்க்கின்ற உலகம் ஒன்று: நாம் பார்க்காத உலகமும் இருக்கின்றது. ஆவி உலகத்தைப்பற்றிக் கேள்விப்படுகின்றோம். ஆனால், அங்கு நடப்பது நமக்குத்தெரிவதில்லை. இதைப் போல் இரகசியமாக மறைந்துகிடக்கும் மகாசக்திகளை நாம் பார்க்க முடிவதில்லை. ஆனால், அத்தகைய பெரும் சக்திகள் உண்டு என்பதைமட்டும் உணர்கின்றோம். அவைகளுள் சிலவற்றை அறிந்து அவைகளைக் கொண்டு அதிசயங்களை ஆடவல்ல அற்புத அறிவாளிகளையும் காண்கின்றோம். ஆவிகளுடன் பேசக்கூடிய ஆற்றல் சிலரிடம் உண்டு என்று கேள்விப்படுகின்றோம். நாளை வருவதைப் பற்றி எடுத்துச்சொல்லும் ஆரூடர்களும் ஏடுகளும் உண்டு என்பதையும் அறிகின்றோம். கனவில் தோன்றுவதைக் கொண்டு நாளை வருபவற்றை உரைப்பவர்களும் உண்டு. பில்லி சூனியத்தால் பலரை நையச் செய்பவரும் பில்லிசூனியத்தை அழிப்பவர்களும் உண்டு. இவைகளைவிட அதிசயப்படக்கூடிய ஆற்றல் வாய்ந்தவர்களும் உண்டு. ஜலத்தில் மிதக்கக்கூடிய வித்தையும் அந்தரத்தில் நிற்கக்கூடிய வித்தையும் (ஜலஸ்தம்பனம், வாயுஸ்தம்பனம்) உண்டு. ஒருவர் மனத்தில் என்ன நினைக்கின்றார் என்பதை மற்றொருவர் அறிய முடிகின்றது. (Telepathy) தொலைவில் நடக்கும் நிகழ்ச்சிகளை இருந்த இடத்திலிருந்து ஒருவர் பார்க்கமுடிகின்றது. (Telesthesy) ஒரு சுவருக்குப்பின்னால் நடப்பதைப் பார்க்கவும் மூடியுள்ள கவரில் உள்ள கடிதத்தைப்படிப்பதும் சாத்தியமாகின்றது. (Kryposcopy) ஒரு பொருளைத்தொட்டுப் பல நூற்றாண்டுகளுக்குமுன் நடந்த நிகழ்ச்சிகளைக் காணமுடிகின்றது. (psychometry) ஒரு இடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கனமான பொருள்கள் தாமே அசைந்துசெல்ல வைக்க முடிகின்றது. (telekinesis) எவர் உதவியின்றி ஒருபொருளோ அல்லது ஒருநபரோ தானே மேலேஎழும்பி அந்தரத்தில் செல்லவைக்க முடிகின்றது. (Levitation) வெகுதூரத்திலிருந்து ஒருபொருளையோ அல்லது ஒருநபரையோ தூக்கிவரச் செய்ய முடிகின்றது; (apporte) ஒரு நபரிடமிருந்து ஒருபொருளையே உண்டாக்க முடிகின்றது. (teleplasty) சில பொருள்களை மறையச் செய்ய முடிகின்றது. (demalerialization) ஒரே நபர் இரண்டு இடங்களில் காட்சியளிக்க முடிகின்றது, (gift of bilocation) இந்த அதிசயங்களைக் காட்டி வருபவர்களும் இந்தக் கலைகளில் வல்லவர்களாகவே விளங்குகின்றார்கள். இவைகளில் சில மாயாஜால கண்கட்டுவித்தை

யாக இருக்கலாம், சில மாந்திரீக விளைவுகளாகவுமிருக்கலாம், ஆனால், சிலசக்திகள் மாயாஜாலத்திற்கும், செப்பிடுவித்தைக்கும், மாந்திரீகத்திற்கும் அப்பாற்பட்டவையாக விளங்குகின்றன. மேலே கூறிய வித்தைகளையும் இவைகளுக்கு அப்பால் பட்ட சக்தி விளைவுகளையும் ஆடவல்லவர்களும் உண்டு. அவர்கள் தான் அருள் சக்தி மிக்கோர். அருளாளர்களால் ஆகாதன ஒன்றில்லை. அருள் சக்தி ஒன்றினாலேயே அருளாளர்கள் எதையும் நடத்திக் காட்ட முடியும். அவர்கள் கருணை மழை சொரிவதைப் போலவே அவர்களால் வானிலிருந்து மழையையும் தருவிக்க முடியும். கூன் குருடு செவிடு நொண்டி இவர்களின் தீராக் குறைகளையும் போக்குவிக்கக் கூடும். மாண்டவர்களையும் மீண்டும் உயிர் வாழ வைக்க முடியும். எதையும் சாதிக்க முடியும் என்ற நிலையில் உள்ள இந்த அருளாளர் வரிசையில் நமது சாமிகள் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்று விட்டார்கள்.

அருள் சக்தி அருள் சக்தி என்று கூறுகின்றோமே. அதைப்பற்றி சாமிகள் கூறுவதையே கேட்போம். "ஒவ்வொரு மனிதனின் உடம்பு ஈசனின் இருப்பிடம் என்பதனைக் காட்டுகின்றது. அவ்வாறு மனிதனிடம் மறைந்து கிடக்கும் மகா சக்தியான புதையலை மனிதனுக்கு ஜீவாதாரமானதாக இருக்கிற ஆத்மார்த்த அம்சத்தைக் கடந்து நிற்கக்கூடிய ஆண்டவன் அருளால் பலரும் உணரும்படி செய்ய வேண்டும் என்று அடிப்படை நோக்கத்தால் தான் இவ்வித அற்புதச் செயல்களைச் செய்வது" என்று சாமிகள் கூறுகின்றார். இதைப்பற்றி உலக தத்துவ சாஸ்திர மேதைகளுள் ஒருவரான ஹெலன் பெத்ரோனா பிளாவஸ்கி என்பவன் கூறும் மொழிகளும் உற்று நோக்கத்தக்கன. "ஒவ்வொரு மனிதனிடத்தில் ஜீவாத்மாவிடம் நிறைந்தும் சத்தாகவும் பரிமளிக்கும் தெய்வீக ஒளி பரம்பொருளான பரமாத்மாவிடம் உள்ளதைப் போன்றதே" என்று அவன் கூறுகிறான். இயங்கும் சக்தி, இயங்கவைக்கும் சக்தி, இயங்குவதால் ஏற்படும் சக்தி—இவைகளுக்கெல்லாம் மூலமாக உள்ளது பரப்பிரம்மம். பெரியவர்கள் பரப்பிரம்மத்தை உணர்ந்தவரானபின் தன்னைத் தானே உணர்ந்தவராகின்றார். பரப்பிரம்மத்தைத் தன்னுள்ளடக்கி சகல சாத்திரங்களையும் கண்டறிந்த வல்லுனராகி அட்டமாசித்துக்கள் புரியும் ஆற்றலுடையவராகத் திகழ்கின்றார்கள். "அகம் பிரம்மாஸ்மி' நிலை அடைந்த இவர்களில் ஒருவராக அல்லவா நமது சாமிகள் மிளிர்கின்றார். தன்னையறிந்தின்புறுகின்றார். உள்ளொளி பெருக்கும் இன்பத்தில் திளைத்திருக்கின்றார். அதன் பயனையும் மக்களுக்கு அளித்து ஆசி அருள்கின்றார். மனப்பிணி உடற்பிணி அகற்றி ஆத்ம இன்பத்துள் மற்றவர்களையும் திளைக்கவைக்கின்றார்கள். அணுவாதல், மேருவாதல், எளிதாதல், பளுவாதல், எங்குமியக்குதல்,

விரும்பிய இன்பம் பெறுதல், முத்தொழில் புரியும் முதன்மை தன் வயப்படுத்துதல் என்னும் அட்டமாசித்து ஆடி அருள்கின்றனர்.

அருள் சக்தி மிக்கோர் சகலகலா வல்லபராக விளங்குகின்றனர். அருள் சக்தியால் எதையும் செய்ய வல்லவராகவும் இருக்கிறார். நமது சாமிகள் விஞ்ஞான கலையும் அறிந்தவர் அருள் சக்தியும் பெற்றவர் என்பதை எடுத்துக்காட்டும் ஒரு நிகழ்ச்சியைக் காண்போம்.

திருச்சியில் இராஜன் டிரான்ஸ்போர்ட் பஸ் நிலையத்தில் ஒரு மூலையில் தண்ணீர்க் கிணறு வெட்டிக் கொண்டிருந்தனர். சுமார் பத்தடி வெட்டியிருந்தும் ஊற்று உடனடியாகத் தென்படுவதற்குரிய அறிகுறிகள் இல்லை. அங்கு அழைக்கப்பட்டிருந்த சாமிகள் வெட்டப் படும் கிணற்றைக் கவனித்தார். அங்கிருந்த ஒரு கைப்பிடி அளவு கருங்கல்லை எடுத்து கிணறு வெட்டும் இடத்திலிருந்து சுமார் ஐம்ப தடி தூரத்தில் வைத்தார். அதன்பின் அருகிலிருந்த ஒரு மாமரத் தின் கொழுகினை ஒன்றை எடுத்தார். அதிலிருந்த இலைகளை நீக்கி ஒரு மும்முனைக் கொம்பொன்று செய்தார். அதன் இரண்டு முனை களைத் தம் இரு கரங்களாலும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு காம்பவுண்டு சுவருக்குள் உள்ள இடத்தைச் சுற்றி வந்தார். அவர் எந்த இடத்தில் கல் வைத்திருந்தாரோ, அந்த இடத்திற்கு வந்த வுடன் மும்முனைக் கொம்பின் கைப்பிடியிலில்லாத மூன்றாவது முனை திடீரென்று ஏதோ ஒரு காந்த சக்தியால் இழுக்கப்படுவது போன்று பூமியை நோக்கிச் சாய்ந்தது. அதே மும்முனைக் கொம்பைக்கூட இருந்தவர்களிடம் கொடுத்துத் தான் செய்தது போலவே செய்யச் சொன்னார். கல் வைத்திருக்கும் இடம் வரும்போது மும்முனைக் கழியின் கைப்பிடித்திராத மூன்றாவது முனை கீழே சாய்ந்துவிடும். இதைக்கண்டு ஆச்சரியப்பட்ட எங்களிடம் சாமிகள் தண்ணீர் இருக் கும் இடத்தைக் கண்டுபிடிப்பதைப் பற்றி விளக்கம் கூறினார்கள். "நான் எந்த இடத்தில் கல்லை வைத்திருக்கின்றேனோ அந்த இடத் தில் மும்முனைக் கம்பின் மூன்றாவது முனை பூமிநோக்கிச் சாய்கின்றது. ஏதோ ஒரு ஆகர்ஷண சக்தி அக்கம்பை இழுப்பதுபோல் தோன்று கின்றதல்லவா? அது எதைக் குறிக்கின்றது? அது அந்த இடத்தில் தரைமட்டத்திற்கு அருகிலேயே நல்ல ஊற்று இருப்பதை அறிவிக் கின்றது. மும்முனைக் கம்பைப் பிடித்து தண்ணீரிருக்குமிடத்தைக் கண்டுபிடிப்பது விஞ்ஞானம். இதை ஆங்கிலத்தில் 'வாடர் டிவைனிங்' (Water divining) என்று கூறுவர். ஆனால் அதே இடத் தில் ஒருவிதக் கம்பின் உதவியின்றி ஊற்றிருப்பதைக் கண்டுகொள்ள முடியும். ஒருவித கம்பு உதவியின்றி ஊற்றிருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதுதான் அருள்சக்தி. அந்த அருள்சக்தியால்தான் தண்ணீர் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து அதற்கு அடையாளமாக ஒரு

கல்லை அவ்விடத்தில் வைத்தேன். அங்குத் தண்ணீர் இருக்கின்றது என்பதை விஞ்ஞான முறையில் நிரூபிக்கவே மும்முனைக் கொம்பை வைத்துக் காட்டினேன். இவ்வறிவால் தண்ணீர் எவ்வளவு ஆழத்தில் உள்ளது? எவ்வளவு வேகத்தில் வெளிக்கிளம்பும்? எத்தனை அடி ஆழத்தில் பாறை, செங்கல், வெங்கல், லேசான பாறை, உப்புத் தண்ணீர், நல்ல தண்ணீர், நிரந்தரமாக நிற்கும் தண்ணீர் உள்ளன என்ற புள்ளி விவரங்களெல்லாம் சொல்லமுடியும்" என்று சாமிகள் அருள்சக்திக்கும், விஞ்ஞான அறிவுக்கும் விளக்கம் கொடுத்தார். அருள்சக்தி வல்லார் விஞ்ஞானியாகவும் விளங்குகின்றார். ஆனால், விஞ்ஞானிகள் அருள்சக்தி வல்லாராக விளங்கவில்லை.

## "அற்புதம்"

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அற்புதம் செய்யவல்ல சித்தர் என்பது உலகம் அறியும் செய்தி. சாமிகள் சித்து விளையாடுவதை நேரில் கண்டவர்கள் அதைக் கண்கட்டி வித்தையென்றோ, மாயா ஜால விநோதலீலை யென்றோ சொல்லத் துணியார். அவருடைய சித்து அனுக்கிரக சித்தாகும். அவர் அல்லும் பகலும் இறைசிந்தனையில் ஆழ்ந்திருப்பது ஆத்மகோடிகள் உய்வதற்காகவே. தன்னை அண்டியவர்களுக்கு அபயமளிக்கும் கை, தீராத நோயைத் தீர்க்கும் சக்தி வாய்ந்துள்ளது. மனப்புண்ணையும் ஆற்றவல்ல தெய்விக அருள் சுரந்துள்ளது. அவர் புரிகின்ற அற்புதமெல்லாம் அருள் சுரப்பின் விளைவுகள். அவர் அன்பு மனத்தின் எழுச்சியே அவர் மலர்விக்கின்ற அற்புதச் செயல்கள். அவர் கனிந்த இதயத்தின் இனிய பயன்களே அவர் ஆடும் அற்புதத் திருவிளையாடல்கள். அவர் புரிகின்ற அற்புதங்களை ஆராய்வதன்முன் 'அற்புதம்' என்பதன் பொருளையும் இலக்கணத்தையும் அறியலாம். ஒருநாய் மனிதனைக் கடித்தது என்பது சாதாரண நிகழ்ச்சி. ஆனால், ஒருமனிதன் நாயைக் கடித்தான் என்றால் அது பரபரப்பை விளைவிக்கக்கூடிய செய்தியாக நான்கு பக்கங்களிலும் பறக்கின்றது. மல்லிகைச் செடியில் இருந்த மொக்கு மலர்ந்தது என்று சொன்னால் அதில் ஆச்சரியப் படுவதற்கு ஒன்றுமில்லை. இது நிகழ்ந்த, நிகழும், நிகழக்கூடிய செயல்களில் ஒன்று. மல்லிகைச் செடியில் ரோஜா பூத்தது என்று சொன்னால் அதில் ஆச்சரியப்படுவதற்கு புதுமை இருக்கின்றது. இயற்கைக்கு மாறான சுவை இருக்கின்றது, இதுவரை கண்டும் கேட்டுமிராத தத்துவ ஆராய்ச்சிக்குரிய விஷயமும் அதில் பொதிந்துள்ளது. மல்லிகைச் செடியில் ரோஜா பூப்பது அற்புதம். மல்லிகைப்பூவே கற்கண்டாக மாறிவிட்டால் அது அற்புதத்திலும் அற்புதமாகின்றது. ஒரு கட்டெறும்பு யானை அளவில் தோன்றினாலும், ஒரு யானை கட்டெறும்பு அளவில் தோன்றினாலும் அங்கு அற்புதம் தோன்றுகின்றது. ஆக அற்புதமென்பது அதிசயம் விளைவிப்பது. அது

ஒன்பதுவகைச் சுவைகளுள் ஒன்று. கண்டறியாத ஒன்றைக் காணும் போது அற்புதம் காண்கின்றோம்; மிகப்பெரியவற்றையோ, சிறிய வற்றையோ காணும்போதும் அற்புதம் காண்கின்றோம்; ஒன்று மற்றொன்றாய் மாறும் போதும் அற்புதம் காண்கின்றோம். ஆக அற்புதத்திற்கு இலக்கணம் சொல்லவந்தவர் அதனை "புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு மதிமைசாலா மருட்கை நான்கே" என்று இரத்தினச் சுருக்கமாக எடுத்துரைத்தார்கள்.

## தமிழ் நாட்டில் நடந்த சில அற்புதங்கள்

சாமிகள் காட்டுகின்ற அற்புதங்களைப்பற்றிச் சிந்திப்பதற்கு முன் நமது தமிழ் நாட்டில் நடந்த அற்புதங்களைச் சற்று நமது மனக் கண் களுக்குமுன் கொண்டுவந்து நிறுத்துவது பொருத்தமாகும். சமண மதம் சைவ சமயத்தை மறைக்கத் துணிந்த காலத்துச் சமய குரவர் கள் தோன்றி அற்புதம் காட்டித் தமிழ் மன்னர்களையும் மக்களையும் சமண மதத்திலிருந்து காப்பாற்றி சைவ சமயத்தைத் தழைக்கச் செய்தனர்: திருஞான சப்பந்தர் மதுரையில் சமணர்களைத் திணறச் செய்த அற்புதங்கள் சைவ நெறியின் மாண்பை விளங்க வைப்பதற்காகவே. பாண்டிய மன்னரின் கடும் சுரம் சம்பந்தரின் அருள் சக்தி வாய்ந்த "மந்திரமாவது நீறு" என்ற திருப்பதிகத் தாலும் விபூதியாலும் மறைந்தது; "போகமார்ந்த பூண் முலையாள் தளி ரிள வளரொளி' என்ற திருப்பதிகங்கள் கொண்ட ஏட்டை அனலும் கனலும் எரிக்க முடியவில்லை; வைகை நதியில் விட்ட "வாழ்க அந்தணர்" என்ற திருப்பதிகம் கொண்ட ஏடு ஓடும் ஆற்றின் தண்ணீரை எதிர்த்தோடியது, கூனாக இருந்த பாண்டி யன் கூனை நீக்கியது, இவ்வற்புதங்களைக் கண்டு தலை சாய்த்தனர் சமண மதத்தினர் என்பவர். இதுவன்றி கன்னி ஒருத்தியின் முயலக னென்னும் நோயை நீக்கி உணர்வு அருள் கூட்டினார் சம்பந்தர்; கொங்கு நாட்டில் தம்மடியார் உடல்களை வாட்டிய பனியெனும் சுர நோயைத் திருநீலகண்டத் திருப்பதிகம் பாடி நீக்கினார்; அரவம் தீண்டி இறந்திருந்த ஒரு கன்னி விரும்பிய இளைஞனுக்கு, "சடையா யெனுமால் சரண் நீ யெனுமால்" எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடி உயிர்ப் பிச்சை அளித்தார்; தொண்டை நாட்டில் ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கிக் குரும்பை யீன்று காய்க்கச் செய்தார்; மயிலையில் எலும்பும் சாம்பலுமாய் மாறிக் கிடந்த இறந்து போன பூம்பாவையை "போதியோ, பூம்பாவாய்" என்ற திருப் பதிகங்கள் பாடி உயிர்த்தெழவைத்த அற்புதம் சைவ உலகில் என்று மழியாத அற்புதமாகும். இறைவன் சம்பந்தருக்குத் திரு வைந் தெழுத்து எழுதிய செம்பொன் திருத்தாளம், முத்துச் சிவிகை, குடை, சின்னம், முத்துப் பந்தர், ஆயிரம் பொன்னடங்கிய பொற்கிழி அளித்ததெல்லாம் இறைவனின் அற்புதத் திருவிளையாடல்களே.

நாவுக்கரசர் வாழ்க்கையிலும் நிகழ்ந்த அற்புதங்கள் சைவ உலகம் மறக்க முடியாதவை. தன்னை வாட்டிய சூலை நோய் சிவனருளால் மறைந்தது ஓர் அற்புதம். சமணர்கள் அவரை மாய்க்க வெம்மை மிக்க நீற்றறையில் இட்டபோதும், நஞ்சு கலந்த பாலடிசிலை ஊட்டிய போதும், பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து அவரை இடறி மிதிக்க ஏவிய போதும் அவர் அவைகளால் பாதிக்கப்படாமலும் இனிதமர்ந்திருந்ததும் பல அற்புதங்கள்: அவரைக் கடைசியாகக் கல்லில் கட்டிக் கடலில் தள்ளியபோது,

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைத்தொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே"

எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடி ஒருவித அபாயமுமின்றித் திருநாவுக்கரசர் வெளிவந்தது இந்த அற்புதங்களுக்கெல்லாம் பெரு மற்புதமாக விளங்கும்; பாம்பு கடித்திறந்த அப்பூதி அடிகளின் மகனையும் உயிர்பெறச் செய்தது ஒரு பேரற்புதம்!

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் சேர்ந்து ஆடிய அற்புதங்களும் உண்டு. திருவீழிமிழலையில் பஞ்சகாலத்தில் அடியார் வருத்தம் நீங்க இச்சமயக் குரவர்கள் விருப்பத்திற்கிணங்கி இருவருக்கும் பஞ்சம் நீங்கும் வரை திருக்கோயில் கிழக்கு பீடத்திலும் மேற்கு பீடத்திலும் இறைவன் பொன்காசு கொடுத்து உதவியது ஒரு அதிசயம்! திருமறைக் காட்டில் பல நாட்களாகத் திறக்கப் படாமல் இருந்த நேர்முகக் கோயில் கதவுகள் திருநாவுக்கரசர் பாடிய "பண்ணி நேர்மொழியாளுமை பங்கரோ" என்ற திருப்பதிக்கத்தால் திறந்ததும், திருஞானசம்பந்தர் பாடிய 'சதுரம் மறை' என்ற திருப்பதிகத்தால் அடைக்கப்பட்டதும் மற்றொரு அதிசயம்!

சமயக்குரவர் சுந்தரமூர்த்தி சாமிகள் வாழ்க்கையிலும் எவ்வளவோ அற்புதங்கள் உண்டு. சுந்தரருக்குப் பரவையாரையும் சங்கிலியாரையும் ஆண்டவன் திருமணம் செய்து வைப்பதிலேயே அற்புதச்சுவை மிகவுண்டு: ஆண்டவன் பஞ்சகாலத்திலும் நெற்குவியல் அளித்து அவற்றைப் பூதகணங்களைக் கொண்டு குண்டையூரிலிருந்து திருவாரூருக்குக் கொண்டுவந்து சேர்த்தது ஓர் அற்புதம்: திருமுதுகுன்றப்பெருமான் நம்பியாரூரர்க்குப் பன்னீராயிரம் பொன்களைப் பரிசிலாகத் தந்தருள, இவற்றைத் தனக்குத்திருவாரூரில் வியக்கும் வண்ணம் கிடைக்கும்படி செய்ய ஆண்டவனை வேண்ட, அதன்படியே மணிமுத்தாற்றில் இட்ட பொன் திருவாரூர்க் குளத்தில்

கிடைத்தது ஓர் அற்புதம்! சூலைநோயால் வாடிய ஏயர்கோன் கலிக்காமனை ஆண்டவன் திருவுளப்படி அடைய இருந்த சுந்தர மூர்த்தி சாமிகள் வருவதற்கு முன்பே, அவர் வருவதைக் கேள்வி யுற்ற ஏயர்கோன் "இறைவனைத் தூதனுப்பிய வன்றொண்டனைப் பார்ப்பதற்குமுன் இறப்பேன்," என்றுகூறி வயிற்றைக் கிழித்து இறந்த ஏயர்கோனையும் சுந்தரர் ஆண்டவன் திருவருளால் உயிர் பெற்றெழச் செய்ததும் ஓர் அற்புதம்; காவிரி வெள்ளத்தால் தடைப்பட்ட தம் பயணத்தை ஆண்டவன் அருள்கொண்டு காவிரி நதி வெள்ளத்தின் நடுவிலேயே வழியமைத்து திருவையாறு அமர்ந்த பெருமானின் கோயிலுக்குச் சுந்தரமூர்த்தி சாமிகளும் சேரமான் பெருமாளும் சென்றது ஓர் அற்புதம்! முதலை உண்ட பாலனை அவிநாசியில் அம்முதலை வாயிலிருந்தே உயிரோடு வர வழைத்துக் கொடுத்தது ஒரு பேரற்புதமாகும்!

இப்படியே மாணிக்கவாசக சாமிகளும் சிதம்பரத்தில் ஊமைப் பெண்ணைப் பேசவைத்த அற்புதத்தையும் நம்மால் மறக்கமுடியுமா!

சமீபகாலத்தில் கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் குமரகுருபரர் காசியை ஆண்ட மன்னரின் முகலாய இராஜசபையில் சிம்மத்தின் முதுகின்மேல் சென்ற அற்புதத்தையும் கேள்விப்பட்டிருக்கின்றோம். சென்ற நூற்றாண்டில் (1823) அவதரித்த வடலூர் இராமலிங்க சாமிகள் ஆடிய திருவற்புதங்கள் எண்ணிறந்தன என்பதையும் அறிகின்றோம். ஒரே சமயத்தில் பல இடங்களில் காட்சியருளியவர் இராமலிங்கம்: குன்ம நோய்களைக் குணப்படுத்தியவர் இராம லிங்கம்: கைநிறைய மணலை ஒரு கிழவியின் கைகளில் நிரப்பி அதை மூடச்செய்து மறுபடியும் திறந்து பார்க்கும்போது அநேக சிவலிங்கங்களாக மணலை மாறவைத்தவர் இராமலிங்கம்: ஒரு சிறு கூட்டத்திற்குத் தயாரித்திருந்த உணவை ஒரு பெருங்கூட்டத் திற்குப் பெருக்கிக் கொடுத்தவர் இராமலிங்கம்: இரசத்தை மணி யாகக்கட்டியவர் இராமலிங்கம்: சிதம்பரத்தில் நடந்த ஆனித் திருமஞ்சனக் காட்சியை வடலூரில் ஒரு திரைக்குப்பின் நின்று கொண்டிருந்த பக்தர்களுக்குக் காட்டியருளியவர் இராமலிங்கம்: இப்படியே ஏராளமாகச் சித்துக்களைக் காட்டியருளியவர் இராம லிங்கம்: சித்தின் வித்தகர் இராமலிங்க வள்ளலால் வாத நோயி னின்றும் குணப்படுத்தப்பட்ட வித்வான் கண்ணுடி சுப்பராய முதலியார் வடலூராரின் சித்தின் மகிமையைப் பாடும் அருமையைக் கேளுங்கள்.

"அகத்தியனே வான்மீகியோ ஆதிசேடன் தானே
மகத்துமாஞ் சம்பந்த மாயோ — சகத்திவருஞ்
சச்சிதான ந்தத்தின் தண்ணளியோ என்னென்பேன்
மெச்சுமதி இராமலிங்க வேள்"

இத்தகைய 'சச்சிதானந்தத்தின் தண்ணளியை' அற்புதத் திருவிளையாடல்களை, அனுக்கிரகச் சித்துக்களை இந்த நூற்றுண்டில் இப்போது நமது நாட்டிலே காட்டி அருளும் நடமாடும் தெய்வம் ஒருவர் உளர். அவரே தன்னைச் சார்ந்தோரை பேராதரிக்கும் பெருமனிதராக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஆவர். அவருடைய சித்துக்கள் எண்ணிறந்தன. வகைவகையாவன. நேர்த்தி நிறைந்தன. தண்ணருள் சுரப்பன. அவைகளை அறிவதே அறிவுக்கு ஒரு கலை விருந்தாகும்.

## அவனன்றி ஓரணும் அசையாது

ஒரு மகான் அற்புதம் ஆடவல்லார் என்று சொன்னுல் சிலர் அதை மதிப்பதில்லை. காரணம் அற்புதம் இயற்கைக்கு மாறுனது என்று அவர்கள் நினைப்பதேயாகும். இயற்கையில் நடப்பன வெல்லாம் இறைவன் சட்டதிட்டத்திற்கு உட்பட்டவை; அதில் தாறுமாறுக நடப்பது ஆண்டவனுக்கே பிடித்தமில்லாதது என்றும் அவர்கள் வாதிப்பதைக் கேட்கலாம். இது ஒரு சட்டம் என்று ஏற்றுக்கொள்ளும்போதே இந்தச் சட்டத்தை ஏற்படுத்தி நடத்துகின்றவர் உண்டு என்பதையும் ஏற்றுக்கொள்கின்ருேம். இந்த சட்டத்தை ஏற்படுத்தி நடத்துகின்றவர்களுக்குச் சட்டத்தை மாற்றும் உரிமையும் இந்தச் சட்டத்திற்கு விதிவிலக்கு உண்டாக்கும் உரிமையும் உண்டென்பதையும் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். அப்படி இல்லாவிட்டால் சர்வவல்லமை பீடமாகிய அரசுக்குத்தான் என்ன மதிப்பு! அதுமட்டுமல்ல. அவனன்றி (இறைவன்) ஓரணுவும் அசைவதில்லை. ஆண்டவன் வகுத்த நியதிப்படியே எல்லாம் நடக்கின்றது. தெய்வ நம்பிக்கையை நிலைநாட்டும்போது அற்புதங்கள் நடக்கின்றன. நடக்காதன நடக்கின்றன. ஆண்டவன் அருள் தன்மையால் தீராத வியாதிகளும் தீருகின்றன. இவ்வாறு நடப்பனவெல்லாம், இயற்கைக்கு விரோதம் என்று கருதுவனவெல்லாம், அற்புதங்களெல்லாம் 'அவனன்றி ஓரணும் அசைவதில்லை' என்ற நியதிக்கு உட்பட்டே நடக்கின்றன என்று ஏற்றுக்கொள்வதில் என்ன தடை இருக்கமுடியும். ஆண்டவன் எங்கும் நிறைந்தவன்; காலம் கடந்தவன்! சர்வ வல்லபன். சர்வ வல்லபனுக்குத் தான் இஷ்டப்பட்டால் உலகப் போக்கிலோ இயற்கைப் போக்கிலோ ஒரு புதுமையையோ, மாறுதலையோ ஏற்படுத்த முடியாதா? இராமகிருஷ்ண பரமஹம்சர் வாழ்க்கையில் நடந்த ஒரு சம்பவம் நினைவுக்கு வருகின்றது. "இயற்கை நியதியை மாற்றக் கடவுளாலும் கூட முடியாது. உதாரணமாகச் செம்மலர்ச் செடியில் வெள்ளைமலர் பூக்கும்படிச் செய்யப் படைத்தவனுலும் இயலுமா" என்ற கேள்வியை மதுரநாத விஸ்வாஸ் இராமகிருஷ்ணரிடம் கேட்டார். "என்ன அப்படிச் சொல்லுகிறீர்? தான் விதித்த சட்டதிட்டங்களை விலக்கவும்,

மாற்றவும் அவனால் இயலும். எல்லாம்வல்ல இறைவனால் ஆகாதது ஒன்றுண்டோ" என்று பதிலளித்த இராமகிருஷ்ணர் ஒருநாள் ஒரே செடியில் ஒரே காம்பில் ஒரு தூவெண்மலரொன்றும் நல்ல சிவப்பு மலரொன்றும் இணையாகப் பூத்திருந்த செம்பருத்திக் கிளை ஒன்றைக் கொண்டுவந்து காட்டினார். ஆண்டவனுக்கு இயற்கையை மாற்ற வல்ல இந்த அற்புத சக்தி இருக்குமேயானால் அவன் அருள் பரிபூரணமாக அடைந்த சித்தர்களுக்கு ஆகாததும் ஒன்று உண்டோ? இந்தச் சந்தர்ப்பத்தில் ஒருநாள் சாமிகள் கூறிய பொன் மொழியும் ஊன்றிக் கவனிக்கத்தக்கது. "எல்லாம் அவன் செயல். அவனன்றி ஓரணுவும் அசையாது. நான் செய்பவை யெல்லாம் இந்த நீதிக்கு உட்பட்டு நடப்பவையே."

உண்மையிலேயே ஞானிகள் எவ்வளவு நெருக்கமாக ஆண்டவ னிடத்தில் இருக்கின்றார்களோ அவ்வளவு அருள் சக்தி அடை கின்றார்கள். அதனால் அற்புதங்கள் ஆட வல்லவர் ஆகின்றார்கள். இதைப் பற்றி நமது சாமிகளே எவ்வளவு அழகாக எடுத்துரைக் கின்றார். "தூங்குகிற ஆத்மாக்களைத் தட்டி எழுப்பிப் பக்தியில் ஈடுபடுத்துவதற்கே சித்துக்கள் செய்வது பயன்படுகின்றது. எல்லாம் தானாகி எங்கும் நிறைந்துநின்று இவ்வுலகத்தை ஆட்டித் தானும் ஆடி நிற்கும் அரிய திருவருள் பேற்றினால், இவ்வையகம் தானும் வாழ்ந்து மக்களையும் வாழ வைக்கின்றது. ஆண்டவன் தன்மையில் மனிதனின் மனம் எவ்வளவு ஈடுபடுகிறதோ அவ்வள விற்கு அம்மனிதன் சீலமுடையவனாகின்றான். மனிதனின் மனம் எவ்வளவிற்கு ஆண்டவன்மீது லயித்துச் சார்ந்து நிற்கிறதோ அவ்வளவிற்கு ஆண்டவன் அருள் பெற்றுப் பிறப்பை அறுக்கும் புனிதத் தன்மையை மனிதன் அடைவதுமன்றி ஆண்டவனின் எண்ணிலாச் சக்திப் பிரபாவங்களையும் அடைகின்றான்! ஆண்ட வனின் அருள்பெறப் பக்தி வேண்டும். பக்தியை உணர ஆத்மசுத்தி வேண்டும். ஆத்மசுத்தி ஏற்பட்டால் ஆத்மசக்தி ஏற்படும். ஆத்ம சக்தி ஏற்பட்டவுடன் விவேகம், வைராக்கியம், மூதாதை சாது சேவை, சாது சங்கம், சங்கீத ஈசன் நாம கீர்த்தனம், சத்தியம் முதலியவை களின் மூலமாகப் பக்தி தானே ஏற்படும். பக்தி ஏற்பட்டால் சித்தி எல்லாம் ஏற்படும். சித்தி ஏற்பட்டால் முக்தி ஏற்படும். முக்தி நிலையில் ஆத்ம சொரூபத்தைக் காணலாம் ஆத்ம சொரூ பத்தை உணர்ந்தால் ஆண்டவனை உணரலாம்" ஆக ஆண்டவனை உணர்ந்தோர் அற்புதம் விளையாட முடிகின்றது; தெய்வ நம்பிக்கை மனிதருள்ளத்தில் உதிக்கவே அவர் அற்புதம் ஆடுகின்றார் சாமி களும் இன்று அருள்பூத்த நிலையில் அற்புதம் காண்பிப்பது கடவுள் நம்பிக்கை குறைந்துவரும் மனங்களுக்குத் தெய்வ நிறைவு ஏற்படுவ தற்காகவும் மக்களின் குறைகளும் பிணிகளும் நீங்குவதற்காகவுமே. சாமிகள் அற்புதம் செய்து காட்டுவதிலிருந்து சாமிகள் முருகனிடம்

எவ்வளவு நெருங்கி இருக்கின்றார் என்பதும் நன்கு புலனாகின்றது. 'நான் முருகனுக்கு டவாலி போட்டவன்' என்று சாமிகள் சில சமயங்களில் பெருமையோடும் பூரிப்போடும் உரைப்பார். அன்பெனும் குடில் புகும் அரசு இறைவன் போன்ற பக்திக்கு எது வேண்டுமானாலும் இறைவன் செய்வன். அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாள்! தன் அன்பிற்குக் கட்டுப்பட்ட இறைவனை, தன்னுள்ளே இரண்டறக் கலந்த ஈசனை பக்தர்களுக்காகப் பணிபுரியவைக்கும் பன்றிமலை சாமிகளின் அற்புதத்தை அளவிடமுடியுமா இப்பாருலகில்?

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளைப்பற்றி எவ்வளவோ புத்தகங்கள் வெளிவந்துள்ளன. அவர்களுடைய அற்புதங்களை மட்டும் திரட்டி வெளிவந்துள்ள நூல் ஆயிரம் பக்கங்களுக்கு மேல் விரிந்துள்ளது. அவரவர்கள் சாமிகளின் அருளுக்குப் பாத்திரமாகி அவரவர்கள் அனுபவங்களையும் சாமிகளின் அருங்குணங்களையும் அருள் சக்தியையும் தொகுத்து எடுத்துரைக்கும் நூல் ஒரு பொருள்கலைக் களஞ்சியமாகவே உரு எடுத்து விட்டது. அவ்வளவு நிகழ்ச்சிகளையும் இங்கு எடுத்துரைப்பதென்றால் இந்தப் புத்தகத்தில் எழுத இடம் கிடையாது. சாமிகளின் அற்புதச் செயல்கள் எண்ணிறந்தன; வித விதமானவை. வேடிக்கை சிறந்தவை: கவிஞர்களுக்கு விருந்தூட்டவல்லன: அறிவாளிகளுக்குக் கருத்தோவியமான: வளமிகு இயல்பின. பல்கலைச் செல்வர்களுக்குப் பெருஞ்செல்வமாவன: சைவ வைணவ சமயத்திற்கும் கருவூலமாவன அவைகளில் சிலவற்றைப் பொறுக்கி எடுத்துப் படித்து மகிழ்வோம்.

சாமிகளின் சித்துக்களைப் பற்றிப் பேசும்போது பலர் சாமிகளின் யோக சக்தியைப் பற்றியும் ஞான சக்தியைப் பற்றியும் பேசுவதைக் காணலாம். ஆம், சாமிகளுக்கு யோக சக்தி உண்டு; ஞான சக்தி உண்டு; அந்த யோகமும் ஞானமும் தான் சாமிகளுக்கு அருள் சக்தியை தோற்றுவித்துள்ளன: அந்த அருளும் முருகனுடைய அருள். முருகனுக்கும் சாமிகளுக்கும் ஏற்பட்டுள்ள தெய்வீக உறவைப் பற்றிக் கூறியுள்ள ஹைகோர்ட் நீதிபதியாக விளங்கிய கனம் சோமசுந்தரம் அவர்களின் வாக்கு உற்று நோக்கத்தக்கது. "ஸ்ரீ சாமிகள் முருகன் அருள் பெற்றவர்கள். முருகன் அருள் பெறுவது எளிதல்ல. ஆனால் பெற்றுவிட்டாலோ அவர்களிடம் முருகன் விளையாடவே செய்கிறான். சாமிகளுடன் முருகன் விளையாடுவது அன்பார்ந்த தந்தை தன் அருமைக் குழந்தையுடன் விளையாடுவதை ஒக்கும். கூப்பிட்ட மாத்திரத்தில் ஓடோடியும் வருகின்றான், நினைத்த மாத்திரத்தில் முன் வந்து நிற்கின்றான். இது எப்படி என்பது சாமிகளுடன் நெருங்கிப் பழகியபின் தான் தெரியும்" உண்மை. சாமிகளோடு பழகுகின்ற யாவருக்கும் தெரியும் உண்மை, சாமிகள் முருகனருள் நிறைந்தவர் என்பதே."

முருகன் பக்தியில் ஊனும் உயிரும் தோய்ந்து முருகன் இன்பத்தில் திளைத்தோங்கும் சாமிகள் "முருகு" என்ற திருச்சொல்லுக்கு பொருள் சொல்லுவதைப் பார்ப்போம் "முருகு என்ற தமிழ்ச் சொல்லுக்கு எவ்வளவோ பொருள்கள் சொல்வர். மாருத அழகை முருகென்பர்! மாருத இளமையை முருகென்பர். மாருத மணத்தை முருகென்பர்: மாருத இனிமையை முருகென்பர். தெய்வத் தன்மையையும் முருகென்பர். முருகு என்ற சொல்லுக்கு அருள் என்ற பொருளும் உண்டு. அதனலல்லவா முருகா என்றவுடன் உள்ளம் உருகுகின்றது உதவியும் கிட்டுகின்றது என்று உரைப்பர் சாமிகள். உண்மையிலேயே முருகன் அருளாளன் என்பதில் என்ன சந்தேகம் இருக்க முடியும்? முருகனுடைய அருளே மனித உருவில் நமது சாமிகளாக விளங்கும் போது அற்புதங்களுக்குக் குறைச்சல் உண்டோ? அந்த அற்புதங்களை ஆடவல்லவராக சாமிகள் விளங்குவதிலும் ஆச்சரியப்படுவதற்கு எதுவும் உண்டோ?

சாமிகளின் அற்புதங்களை — அந்த அற்புதங்களைத் திருவிளையாடல்கள் என்றுகூடச் சொல்லலாம் — வகைவகையாகப் பிரிக்கலம். சாமிகள் அருள்சுரந்து அற்புதம் ஆடுகின்ருர். சந்தர்ப்பங்களுக்கும் சூழ்நிலைகளுக்கும் தக்கவாறு அற்புதம் ஆடுகின்ருர். உற்சாக மேலீட்டால் தானே யார்கேட்காமலும் அற்புதம் ஆடுகின்ருர்: தெய்விகபலத்தால் எதையும் சாதிக்கமுடியும் என்று மக்களுக்கு அறிவுறுத்தும்போதும் அற்புதம் ஆடுகின்ருர்: தெய்வ நம்பிக்கையும் அருள் அறிவும் மக்களுக்கு ஏற்பட அற்புதம் ஆடுகின்ருர்: குழந்தைகளை மகிழ்விக்கும் கருணைஉள்ளத்தோடு அற்புதம் ஆடுகின்ருர்: பக்தர்களுடைய வேண்டுகோளுக் கிணங்கியும் அற்புதம் ஆடுகின்ருர். இந்த அற்புத நிகழ்ச்சிகளில் யார்யாருக்கு என்னென்ன பொருள்கள் பொருத்தமாக இருக்குமோ அந்தந்தப் பொருள்களையே அவரவர்களுக்கு உவந்து அளிக்கின்ருர். ஆரம்பத்தில் சாமிகளுக்கே இந்தச் சக்தி உண்டான சூழ்நிலையையும், தனக்குத் தெரியாத இந்தச் சக்தியைச் சாமிகள் தானே கண்டு வியந்த தன்மையையும், இந்த அரிய சக்திக்கு விளக்கம் கொடுத்த தனக்கு வாய்த்த குருநிலையையும் தலயாத்திரையையும், இந்தச் சக்தியை நாளுக்குநாள் சாமிகள் விரிவுபடுத்திக் கொண்ட ஆத்ம பலத்தையும் நாம் மறந்துவிட முடியாது. ஐந்து வயதில் இவர் நாவில் விபூதி ஊட்டி வேல்கொண்டு எழுதிய இவரின் 'உள்ளம் கவர்கள்வன்' செயலிலிருந்தல்லவா இந்தச் சக்தி இவர் கரத்திலும் சொல்லிலும் உருவாகியது: அல்லும் பகலும் பக்திப் பாதையில் ஆலயந்தோறும் அழைத்துச்சென்ற ஆச்சாண்டமலைப் பரதேசியின் குரு கூட்டுறவாலல்லவா இந்தச் சக்திகளை இயக்குகின்ற தத்துவங்கள் சாமிகளுக்கு விளக்கமாயின: சாமிகளது அயராத முயற்சியாலும் ஆத்மீக உற்சாகமேலீட்டாலல்லவா இந்தச்

சக்தி விரிவடைந்து கண்டவர்களை மெய்சிலிர்க்க வைக்கக்கூடிய அளவு இன்று அற்புதம் ஆடவல்லவராக, அருள்சக்தி நாதனைச் சாமிகளைக் குருபீடத்தில் அமர்த்தியுள்ளது. திருஞானசம்பந்தர் வாழ்வில் இறைவனே சம்பந்தருக்கு ஞானப்பால் ஊட்டித் திருத் தாளம் கொடுத்து முத்துச்சிவிகை அளித்தனவெல்லாம் இறைவனே சம்பந்தரிடம் ஆடிய அற்புதங்கள். நமது சாமிகளின் வாழ்விலும் இறைவனே இளவயதில் தோன்றி இவரது திருநாவில் திருவைந் தெழுத்து எழுதி பஞ்சாட்சரம் ஊட்டி அவரை ஆட்கொண்டு விநாயகர் ஆலயத்தில் மறைந்ததும், அன்றிலிருந்து சாமிகள் சொற்களிலும் செயல்களிலும் தெய்வீகம் மணப்பதும் இறைவன் இருவர் வாழ்க்கையிலும் ஆரம்பத்தில் தானே ஆடிஅருளிய அற் புதம் இவர்களை அருளாற்றல் வல்லவர்களாக்கி அருள்மழை பொழி யும் அற்புதம் ஆடவல்லவராக்கிவிட்டது!

## சித்துக்களைப் பற்றிப் பெரியவர்கள்

தன்னையறிந்தின்பமுறும் தெய்வாற்றல்மிக்கோர் பல அற்புதங் களைச் செய்வதைப் பார்த்து, 'அவர் சித்து விளையாடுகின்றார்' என்று உலகம் கூறுகின்றது. உண்மையில் அவர்களா சித்துக்களை அதிசயம் விளைவிக்க வேண்டும் என்ற அடிப்படை நோக்கில் விளை யாட்டாக ஆடிக்காண்பிக்கின்றனர்? இல்லை. அறவே இல்லை. சித்துக்கும் விளையாட்டிற்கும் வெகுதூரம். சித்தமிசை குடிகொண்ட சிவானந்த மயமாக இருக்கும் உள்ளொளிகண்ட ஞானிகளுக்கு தங்களைப் பெருமைப்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற அற்ப ஆசையே எழுவதற்கு உள்ளமில்லை, உணர்வு இல்லை, இடமே இல்லை. அவர்கள் ஆசையை வென்றவர்கள். தம்மை மறந்தவர் கள். அவர்கள் 'நான்' என்பதை, அகந்தையை அறுத்துவிட் டதால்தான் சித்தர் நிலையை அடைந்தார்கள். அவர்கள் அன்பே உருவாகிப் பரிபக்குவ நிலையில் உள்ளவர்கள். "எமது கடன் பணி செய்து கிடப்பதே" என்ற அன்பு வெள்ளத்தில் நீந்தி நீந்தி இன்புறுபவர். "அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டு விட்டால் இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே" என்ற அன்பு ஆகாயத்தில் உயர்ந்து உயர்ந்து பறக்கும் மகிமையாளர். "எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே" என்ற நிலையில் தேனமுதைச் சுவைத்துச் சுவைத்துச் சாப்பிடும் பண்பாளர். உள்ளூறும் இதய அன்பால் தன்னை அண்டினோர்க்கெல்லாம் அருள்பாலிக்கக் கூடிய ஆத்தும ஞானிகள். அவர்கள் ஆடிக்காட்டும் அற்புதமெல்லாம் மன அவதி யாலும் உடல் பிணியாலும் அல்லல்படுகின்ற மக்களை அவ்வல்லல் களிலிருந்து நீக்குவதற்காகவேயாகும். அவர்கள் தற்பெருமைக் காகவோ, தம்மை மக்கள் தெய்வமாகக் கொண்டாட வேண்டும் என்பதற்காகவோ சித்தாடுவதில்லை.

சித்துக்களைச் செய்வோர் அதன் மாயா விநோதத்தில் மயங்கிவிட மாட்டார். சித்துக்களை மக்கள் நன்மைக்காகவே அருள் கூர்ந்து விளைவிப்பர். அப்படி அவரே தான் விளைவிக்கும் சித்தில் மனத்தைப் பறிகொடுத்துவிட்டால் அப்பொழுதே அவர் நிலை சரிந்தவராவர். அப்படிப்பட்டவர் சாதாரண ஒரு இந்திர ஜாலிகனின் நிலைக்கும் கீழான நிலையையே அடைந்துவிடுவர் என்பதை இரமண மகரிஷி களே தாம் இயற்றிய ஒரு பாட்டில் வேடிக்கையாகக்கூறி இருக்கின்றார்.

> "இந்திர ஜாலிகனுந் தான் மயக்க மெய்தாமல்
> இந்த உலகர்க்கும் மயல் ஏய்விப்பன் — மைந்தனே
> சித்தனே தான் மயங்கிச் சேர்க்கும் மயல் இவ்வுலகர்க்கு
> எத்தனை விந்தை இது."

தான் உண்டாக்கும் இந்திர ஜாலங்களால் மந்திரவாதி தானே மயக்கமுறுவதில்லை! மற்றவர்களைத்தான் மயங்கி விழும்படிச் செய் கின்றான். மற்றவர்களை மயக்கம் விளைவிக்கும் பொய்ச் செய்கையால் ஏய்க்கின்றான்; தன்னை ஏய்த்துக் கொள்வதில்லை. அப்படி இருக்க, ஐம்பொறி அவித்துப் பேரருள் பேற்றினை அடைய விரும்பும் வழியில் இருக்கும் சித்தன் தன்னுடைய சித்தாற்றலைத்தானே வியந்து தன்னுடைய சித்தாற்றலில் மயக்கமுறலாயின் அவன் மந்திரவாதியை விட மிகமட்டவனாகின்றான். ஏனெனில் அவன் தன் ஐம்பொறிகளை அற்ப சுகத்திற்குத் திருப்பிப் பேரருள் பாதையிலிருந்து வழுக்கி விழுகின்றான்.

இறையருள் கிட்டிய மகான்கள் ஆடும் சித்து தன் சுயநலம் கருதி செய்வதல்ல. டாம்பீகத்திற்கோ மற்றவர் போற்றுதலுக்கோ வேடிக் கைக்கோ விளம்பரத்திற்கோ அவர்கள் சித்தாடுவதில்லை. மற்றவர் களுக்கு உதவி அருள, உலகம் உய்ய அவர்கள் சித்து புரிகின்றனர். கனிந்து உளம் உருகிச் செய்கின்ற அவர் செயல்களில் தெய்வ மணம் வீசுகின்றது. அவர்கள் சித்தாடும்போது அவர்களையும் அறியாமல் செயல் விளைவிக்கின்றனர். சித்து விளையாடுகிறோம் என்ற அற்ப நினைப்பு அறவே அவரிடம் இல்லை. அதனால்தான் தெய்வீகச் செயல் எனப் போற்றக்கூடிய சித்துக்களை அவர்கள் அருள்கின்றனர். தெய்வ அருள் சுரப்பல்லவா அவரது சித்துக்கள். இதயத்தினின்றும் ஊற்றுப்பெருக்கெடுத்து வழியும் பேரன்பல்லவா அவர் உதவியருளும் சித்துக்கள். இத்தகைய அரிய சித்துக்களை நினைக்கும்போது கண்ணனையும் இயேசுநாதரையும் மறக்கமுடியுமா? தெய்வமும் மானிடராக இவ்வுலகில் வாழ்ந்தபோது பேரன்பு சித்துக்களைக் காட்டி அண்டினோரை வாழவைத்தனர். திரௌபதி இராஜசபையில் தன்னை மானபங்கப்படுத்த முயன்ற எதிரிகள் கைகளில் அகப்பட்டுத் தவிக்கும்போது, 'கிருஷ்ணா' என்று எழுப்பிய இதய ஒலி இறைவன் கருணையை அருள்சுரப்புபோல தட்டி எழுப்பிவிட்டது. தங்கு தடை

யின்றிப் பெருகிய அருள்வெள்ளம் சேலை சேலையாக வளர்ந்து அம்மை யின் மானத்தைக் காப்பாற்றியது. இயேசுநாதர் ஒரு குருடனின் கண் ணில்லாப் பரிதாபத்தை அவன் தட்டுத்தடுமாறி அவதியுறும்போது பார்த்தபோது இதயம் உருகிவிட்டது. உடனே அன்பு பெருகி விட்டது. அவர் உளங்கனிந்து அவன் குருட்டுத் தன்மையை நீக்கினுர். இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் தம் சக்தியை உலகிற்கு எடுத்துக் காட்டுவதற்காகவா கிருஷ்ணனும் இயேசுநாதரும் செய் தனர்? உள்ளத்தில் பேரூற்ருகப் பெருகிய உள்ளத்தினின்றும் வழியும் கருணை பூரித்த செயல்களே இந்தச் சித்துக்கள்! இந்த உண்மையைத்தான் வற்புறுத்தினுர் இரமணமகரிஷிகளும் சித்துக் களைப்பற்றி வினவிய மேல் நாட்டார் ஒருவருடன் அவர் நடத்திய சம்பாஷணையைச் சற்றுக் கவனித்தால் இதன் உண்மை விளங்கும். P. H. ஹம்பெரி (Humphreys)—சாமி, முன்ஞல் கிருஷ்ணபகவானும் ஏசுநாதரும் சித்துவிளையாடியதைப்போல நான் சித்துபுரியலாமா?

மகரிஷி: அவர்களில் யாராவது அவர்கள் அருஞ்செயல் ஆற்றிய போது சித்துவிளையாடுகின்ருேம் என்ற நினைப்பில் இருந்தார்களா?

ஹம்பெரி: (சிறிது நேரங்கழித்து) இல்லை. சாமி.

அணிமாதி அஷ்ட சித்திகள் கிடைத்தற்கரிய செல்வங்கள். இயற்கையை மாற்றக்கூடிய தெய்வீகச் செயல்கள். "கந்துகமதக் கிரியை வசமாய் நடத்தலாம்" என்ற தாயுமானவர் பாடலில் கண் டுள்ளபடி உலகத்தில் நடக்காதன வற்றை யெல்லாம் நடத்திக் காட்ட லாம். அப்படி நடத்திக் காட்டும் ஒருவனைத்தான் எல்லாம் வல்ல சித்தர் என்றழைக்கின்றது உலகம். அவரால் நடத்திக்காட்ட முடியாதது எதுவும் இல்லை. அவரால் தேகத்தைப் பரமாணுவைப் போல சூட்சமமாக மாற்ற முடியும்; இது அணிமாவாம். தேகத்தை ஆகாயம்போன்று பெரிதாக்க முடியும்; இது மகிமாவாம். மிக இல குத்துவமுடையன வாயிலிருப்பவற்றை (எண்மை) குருத்துவமுடை யனவாக (திண்மை) மாற்ற முடியும்: பஞ்சைமலையாக மாற்றலாம்; இது கரிமாவாம். அப்படியே மலையையும் பஞ்சாக மாற்றலாம்; இது இலகிமாவாம் சகலத்தையும் முன்னிற்கச் செய்யலாம்: பூமியிலிருந்து கொண்டே விரல் நுனியால் சந்திரனைத் தொடலாம்; இது பிராப்தி யாம். இச்சித்தபடி எதையும் முடிக்கலாம்: ஜலத்தில் முழுகுவதைப் போல பூமியிலும் முழுகி எழும்பலாம்; இது பிரகாமியமாம், பூத பௌதிகங்களைச் சிருஷ்டித்தல் திதித்தல் சங்கரித்தலாகிய விசேஷ சாமர்த்தியம்தான் ஈசித்துவமாம். பூதபௌதிகங்களைச் சுவாதீனம் (வசம்) செய்தல் வகித்துவமாம். இந்த அணிமாதி அஷ்ட சித்திகள் அடைந்தோர் கூடுவிட்டுக் கூடுபாய்தல், ஜலஸ்தம்பனம், வாயுஸ்தம் பனம் முதலிய வித்தைகளிலும் வல்லவர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

## சித்துக்களும் தாயுமானுரும்

சித்துக்களேக் கண்டிக்கும் சிலர் தாயுமான அடிகள் பாடியுள்ள "ஆசைக்கோரளவில்லே" என்ற பரிபூரணுனந்தப் பாடலேயும், "கந்துகமதக்கிரியை வசமாய் நடத்தலாம்" என்ற தேசோமயானந் தப் பாடலேயும் எடுத்துக்காட்டி, தாயுமான அடிகளும் சித்தைப் பரிக சித்துப் பேசினதாகக் கூறுவர். ஆனுல் அவர் சித்தைப் பரிகசித்துப் பேசவில்லே. மனத்தை நசுக்கி யோகத்தில் அமராமல் பேராசையில் உழன்று மனக்கோட்டை கட்டிக்கொண்டு சித்தியடைதலிலேயே மனத்தை நாட்டியுள்ள குறை மனத்தினரையே அவர் மனத்தில் வைத்துப் பாடினுர்.

"ஆசைக் கோரளவில்லே யகில மெலாங்கட்டி
 யாளினுங் கடன் மீதிலே
ஆணே செலவே நினேவ ரளகேச நிகராக
 வம் பொன் மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலேந்திடுவர்
 நெடு நாளிருந்த பேரும்
நிலேயாக வேயினுங் காயகற்பந்தேடி
 நெஞ்சு புண் ணுவரெல்லாம்
யோசிக்கும் வேளேயிற் பசிதீரவுண்பது
 முறங்கு வதுமாக முடியும்
உள்ளதே போதுநா னுனெனக்கு ளறியே
 யொன் றை விட்டொன்று பற்றிப்
பாசக்கடற்குளே வீழாமன் மனதற்ற
 பரிசுத்த நிலேயை யருள்வாய்
பார்க்குமிடமெங்கு மொரு நீக்கமறநிறைகின்ற
 பரிபூரணு னந்தமே"

கந்துகமதக்கரியை வசமாய் நடத்தலாம் என்று சித்தின் வல்லபத்தைப்பாடிய தாயுமானுர் படிப்படியாகச் சித்தின் வல் லபப் பெருக்கைப் பாடிக்கொண்டே வந்தார். தனக்கு நிகரில்லே என்ற அளவுக்கும் ஒருவர் சித்திபெறலாம். இது அடைவது எளிது. ஆனுல் சிந்தையை அடக்கிச் சும்மாஇருக்கும் சமாதிநிலே அடைவதுதான் அரிது என்றல்லவா அவர் பாடியிருப்பது. அவர் சிந்தை அடக்கிச் சும்மாயிருக்கும் யோகிகளின் சித்தைப் பரிகசிக்க வில்லே. யோகத்தை அடையாது அதை அடையுமுன் கிட்டும் சித் துக்களே அடைந்தோர் அச்சித்துக்களில் மனத்தைப் பறிகொடுத்து அலேவதைத்தான் இந்தப் பாட்டில் குறித்துள்ளார்.

“கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்
கரடிவெம்புலி வாயையுங்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலினிரதம் வைத்தைந்து லோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாம லுலகத்துலாவலாம்
விண்ணவரை யேவல் கொளலாஞ்
சந்ததமுமிளமை யோடிருக்கலா மற்றொரு
சரீரத்தினும் புகுதலாஞ்
சலமேல் நடக்கலாங் கனன்மேலிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாஞ்
சிந்தையை அடக்கியே சும்மாவிருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோ மயானந்தமே”

ஆண்டவனுடைய அருளினைப் பாடிமகிழும் தாயுமானரும் அவன் தன்மையை எப்படியெல்லாம் போற்றுகின்றார் பாருங்கள்: பக்தியினால் அடையும் பலன் ஆத்துமசித்தி அடைதல், சித்தர் சித்த திறம் அடைதல், மோன முக்தி அடைதல், இவ்வளவுக்கும் காரணம் முழுமுதல் கடவுளே, பரிபூரணானந்த வாழ்வே! அருளொடு நிறைந்ததெதுவோ அதன் அருள் பிரவாகத்தை, அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகப் பாடிய தாயுமான அடிகளே, அதே அருளை ‘சித்தி நீ யென்றும் சித்தர் சித்தத்திற்கும் நீ யென்றும்’ போற்றுகின்றார். இப்படிப் போற்றுவது சித்திநலம் வாய்ந்த சித்தர்களைப் போற்றும் பொன்மொழி என்பதும் உற்று நோக்கத்தக்கது.

“பக்திநீ பக்திகாணப் பலன்நீ பலவாச்சொல்லும்
சித்திநீ சித்தர் சித்தத்திற்கும்நீ திறமோர்ஞான
முத்திநீ முத்திகாண முதலுநீ முதன்மையான
யுத்திநீ யெனக்கொன்றுண்டோ பூரணானந்த வாழ்வே”

சச்சிதானந்த சொரூபியாய் விளங்கும் பரம்பொருளைச் சத்தாகவும், சித்தாகவும், ஆனந்தமாகவும் பாவித்துப் பணிந்து மகிழ்வது பெரியவர்கள் இயல்பல்லவா! ‘சமய கோடிகளெலாம் தன் தெய்வ மெந்தெய்வ மென்றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிட்ட’ இறைவனைத் தாயுமான சாமிகளே ‘எங்கணும் பெருவழக்கா யாதினும்

வல்லதொரு சித்தாகியின்பமா யென்றைக்கு முள்ளது அது, என்றும் சித்தின் அருமையை அழகுறப் பாடிவிட்டார். இறைவனைப் பரிபூரணானந்தமாகவும் தக்ஷிணாமூர்த்தி சின்மயானந்த குருவாகவும், கருணாகரக் கடவுளாகவும், ஆனந்தமான பரமாகவும், பரஞ்சோதியாகவும், சுகவாரியாகவும், சச்சிதானந்த சிவமாகவும் பாடிய தாயுமான அடிகளே இறைவனைச் சித்தர்கணமாகவும் பாடி மகிழ்ந்தது சித்தின் மாண்பையும் அதை ஆடவல்லார் மாண்பையும் எடுத்துரைக்க வில்லையா? சித்தாடல் பெருமையைத் தொடுத்துரைக்கும் அவர் பாடல்களில் இரண்டைப் படித்து மகிழ்வுறுவோம்.

"திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
சென்றேடி யாடி வருவீர்
செம்பொன் மகமேருவொடு குணமேரு வென்னவே
திகழ்துருவம் அளவ ளாவி
யுக்ரமிகு சக்ரதர னென்னநிற்பீர் கையி
லுழுந் தமிழுமாச மனமா
வோரேழு கடலையும் பருகவல்லீரிந்த்ர
னுலகு மயிராவதமுமே
கைக்கெளிய பந்தா வெடுத்து விளையாடுவீர்
ககன வட்டத்தை யெல்லாங்
கடுகிடையிருத்தியே யட்ட குலவெற்பையுங்
காட்டுவீர் மேலு மேலும்
மிக்க சித்திகளெல்லாம் வல்லநீரடிமைமுன்
விளங்கவரு சித்தியிலிரோ
வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பாட்டளிதுதைந்துவளர் கற்பக நன்னிழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பத்மநிதி சங்கநிதி யிருபாரிசத்திலும்
பணிசெயுந் தொழிலாளர் போற்
கேட்டது கொடுத்துவர நிற்கவைப்பீர் பிச்சை
கேட்டுப்பிழைப் போரையுங்
கிரீடபதியாக்குவீர் கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுக வைப்பீர்
ஓட்டினையெடுத்தா யிரத்தெட்டு மாற்றுக
வொளிவிடும் பொன்னாக்குவீர்
உரகனும்இளைப்பாற யோக தண்டத்திலே
யுலகுசுமையாக வருளால்

மீட்டிடவும் வல்லநீ ரென்மனக்கல்லையனன்
மெழுகாக்கி வைப்பதரிதோ
வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே"

இது மட்டுமல்ல. 'அடியார் வணக்கம்' பாடும்போது, திரு ஞானசம்பந்தரையும், 'வாரங்கொள்செங்கையர்' அப்பரையும், பேதைபால் தூதனுப்புவித்த தமிழ்ச் சமர்த்தர் சுந்தரரையும், வாதவூரையன் மாணிக்கவாசகரையும், செல்வப் பட்டினத்தார் பத்ரகிரியையும், சிவவாக்கியரையும், திருமூலரையும், கந்தரனுபூதி சொன்ன வெந்தை அருணகிரியையும் போற்றிவிட்டுக் கடைசிப் பாட்டில் சித்தர்களுக்கும் அடியார் வணக்கம் கூறியுள்ளது தாயுமானர் சித்தி அடைந்துள்ள பெரியோர்களுக்கு எவ்வளவு பக்தி வைத்திருக்கின்றார் என்பதையே விளக்க உதவும்.

"எண்ணரிய சித்த ரிமையோர் முதலான
பண்ணவர்கள் பக்தருள் பாலிப்ப தெந்நாளோ"

என்றல்லவா அடியார் விளக்கத்தை முடிக்கின்றார் தாயுமான அடிகள். இவைகளிலிருந்தே பெரியவர்கள், சித்தாடும் வல்லபம் பெற்ற பெரியவர்களை இறைவன் தன்மை கொண்டவர் என்றேத்திப் பணிந்தது நமக்குப் புரியவில்லையா?

## இராமலிங்க சாமிகளும் சித்தும்

இராமலிங்க சாமிகள் தாம் பாடியுள்ள எண்ணிலா அருட் கவிதைத் தொகுதிகளிலும் சித்தியை அடிக்கடி புகழ்கின்றார். எல்லாம் வல்ல எம்பிரானே சர்வசித்தன் என்பதையும் அடிக்கடி தம் அருட்பாக்களில் வற்புறுத்திக் கூறி இருக்கின்றார். "சித்தியெலாம் வல்ல சிவன்" என்றும் "எல்லாம் செய்யவல்ல தனிப் பெருந் தலைமைச் சித்தன்" என்றும் தனிப் பெருங் கருணையை அருட்பெருஞ் சோதியை வருணிக்கின்றார். அவனருளை வேண்டும் போதும் சித்தி செல்வத்தையும் தமக்கருளவேண்டுமென்றும் வேண்டுகின்றார். திருவருட் பெருமையைப் பாடும்போது "சித்தா சித்தியெலாந் தர வல்ல செஞ்சுடரே' என்று அருளாரமுதந்தனை ஏத்துகின்றார். திருவருட் கொடையைப் பற்றிப் புகழும் பாக்களில் தன்னை ஆண்டவன் சேயென வளர்க்கின்ற பெருமையையும், செல்வமொடு வளர்கின்ற பெருமையையும், திருவளித்து வளர்க்கின்ற பெருமையையும், செய முறவே வளர்க்கின்ற பெருமையையும் தொகுத்து உரைக்கும் போதும் தன்னைச் சித்துருவின் வளர்க்கின்ற பெருமையையும் சேர்த்தே கூறி மகிழ்கின்றார்.

"சைவரெனு நின்னடியார் சபை நடுவே வைத்தருளி
தெய்வமென வளர்க்கின்றாய் சிற்சபையினடிக்கின்றாய்"

என்று ஈசனை வழுத்தும் இராமலிங்க அடிகள்

"சித்தரெனு நின்னடியார் சபை நடுவில் வைத்தருளி
சித்துருவின் வளர்க்கின்றாய் சிற்சபையினடிக்கின்றாய்"

என்று அகமகிழ்ந்து ஈசனைப் போற்றுகின்றார்.

சித்தின் மகிமையைப் பற்றிப் பல பாக்களில் பாடி மகிழ்கின்ற இராமலிங்க சாமிகள் சித்துக்களை வருணிக்கும் ஒரு பாடலையும் நாம் படித்து இன்புறுவோம்.

"கல்லையு முருக்கலாம் நாருரித்திடலாம்
கனிந்த கனியாச் செய்யலாம்
கடுவிடமு முண்ணலாம் அமுதாக்கலாம் கொடுங்
கரடி புலி சிங்க முதலா
வெல்லு மிருகங்களையும் வசமாக்கலா மன்றி
வித்தையுங் கற்பிக்கலாம்
மிக்க வாழைத்தண்டை விறகாக்கலாம் மணலை
மேவு தேர் வடமாக்கலாம்"

அருட்பெருஞ் சோதி அகவலில் அவர் சித்திநிலையைப் போற்றும் பகுதியும் முக்கியமானதொன்று.

"சேகரமாம் பல சித்தி நிலைக்கெல்லாம்
ஆகரமாஞ் சபை யருட் பெருஞ் சோதி
......................................................................
சக்தி யெல்லா ந் தழைக்க வெங் கெங்கும்
அத்தகை விளங்கு மருட் பெருஞ் சோதி
......................................................................
பெரிதினும் பெரிதாய்ச் சிறிதினுந் சிறிதாய்
அரிதினுமரிதா மருட் பெருஞ் சோதி
காட்சியும் காணுக் காட்சியுமது தரும்
ஆட்சியுமாகிய சித்திகளெல்லாம் புரிக வென்
றன்புடனெனக் கருளருட் பெருஞ் சோதி
இறவா வரமளித் தென்னை மேலேற்றிய
அறவாழி யாந் தனியருட் பெருஞ் சோதி"

பரசிவ நிலையை விவரிக்கும் அருட்பாக்களிலும் "அருட் சோதி தெய்வமெனை ஆண்டு கொண்ட தெய்வம்" என்று ஆரம்பித்து சித்துவர மருளும் தெய்வமென்றும் ஈசனைப் போற்றுகின்றார்.

"எண்ணியவா விளையாடென்றெனை யளித்த தெய்வம்
எல்லாம் செய்வல்ல சித்தே யெனக்கீந்த தெய்வம்
.......................................................

பக்தி வலைப்படுகின்ற தெய்வமெனக் கெல்லாம்
பரிசுமளித் தழியாத பதத்தில் வைத்த தெய்வம்
சித்தியெலாஞ் தருந் தெய்வம் சித்தாந்தத் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்"

வாதனைக் கழிவு பாக்களிலும் ஆண்டவன் அவருக்குச் சித்திநிலை முழுதும் கொடுத்து அருளிய செழுங் கருணையைப் போற்றுகின்றார் இராமலிங்க சாமிகள்.

"சுகமே நிரம்பப் பெருங் கருணைத் தொட்டிலிடத்தே யெனை
யமர்த்தி
அகமே விளங்கத் திருவருளா ரமுதமளித்தே யணைத்தருளி
முகமே மலர்த்திச் சித்தி நிலை முழுதுங் கொடுத்து மூவாமற்
சுகமே யிருக்கப் புரிந்தாயே தாயே என்னைத் தந்தாயே"

அனுபவ சித்தி அருட்பாக்களில் சித்தி வல்லபம் பெற்ற அவருக்கு இணை யாருளர் என்று இறுமாந்து பேசுகின்றார் வள்ளலார்.

"வாட்ட மெல்லாந் தவிர்ந் தேனருட் பேரொளி வாய்க்கப்
பெற்றேன்
கூட்ட மெல்லாம் புகழ் அம்பலவாணரைக் கூடப் பெற்றேன்
தேட்டமெலாம் வல்ல சித்தி பெற்றே னிச் செகதலத்தே
ஆட்டமெலாம் விளையாடுகின்றே னெனக்கார் சரியே."

சுத்த சிவ நிலை விளக்கும் திருவருட்பாக்களில் தன் சித்தி நிலையையும் விளக்கி மக்களுக்கு மகிழ் ஊட்டுகின்றார் வடலூர் வள்ளல் சாமிகள்.

.......................................................

"சித்தியெலாந் தந்தே திருவம்பலத்தாடு
நித்திய னென்னுள்ளே நிறைகின்றான்—சத்தியமீ
தந்தோ வுலகீ ரறியீரோ நீவிரெலாஞ்
சந்தோட மாயிருமின் சார்ந்து

## சித்துக்களும் கைவல்ய நவநீதமும்

இந்த அணிமாதி அஷ்டசித்தி ஐஸ்வரியங்களை எப்படி அடைவது? யோகிகள் சிலருக்கு இவை எப்படி வந்துசேருகின்றன? என்ற கேள்விகள் எழுவது இயற்கை. "யோகமென்பது என்னிடத்து

(பகவானிடத்தில்) ஒரே மனதாயிருத்தல்'' என்று ஆதித்திய புராணங் கூறுகின்றது. ஞானேந்திரிய பஞ்சகம் மனத்துடன் ஆத்மாவில் நிலைத்து நிற்க, புத்தி வியாபாரமற்றுள்ள நிலையே யோகமாம். அப்படி யோக நிலையிலுள்ளவர்களுக்கு அணிமாதி அஷ்டசித்தி ஐஸ்வரியம் ஏற்படுகின்றது. இந்தச் செல்வம் ஈசனது எனவும் போற்றப்படுகின்றது. இதை எவ்வளவு அழகாகக் கைவல்ய நவநீதமெனும் நூல் நவில்கின்றது! குருவினிடம் சீடன் கேள்வி கேட்க குரு பதிலளிக்கும் வகையில் அருமையான ஞானப்பொருளை விளக்கும் நூல் கைவல்ய நவநீதமாகும். அந்த நூலைச் சற்று ஆராய்வோம்.

(சீடன்) ''முத்திநல்கிய சற்குருவேபல முனிகளுக் கணிமாதி
சித்திபூமியிற் கண்டிருக் கவுமந்தச் செல்வமீ
சனதென்றீர்

(குரு) புத்தியொத்திட வுரைத்தருளென்றிடிற் புகழுமீ
சனைநோக்கியே

பக்திசெய்திடுந் தவத்தினு லியோகத்தாற்
பலித்ததென் றறிவாயோ''

யோக நிலையிலுள்ளவர்களுக்கு அணிமாதி அஷ்டசித்தி ஐஸ்வரியம் எப்படி ஏற்படுகின்றது? சித்திமுத்தி எனும் இரண்டையும் தவமுளோரே அடைகின்றனர். மற்றவர்களிடம் இவை இல்லை. அது ஏன்?

(சீடன்) ''சிவசொரூபமாந் தேசிகமூர்த்தியே
சித்திமுத்தியிரண்டும்

தவமுளோரடை குவரெனி லவர்கள்போற் சகலரு
மடைவரோ

அவர்கள் பூருவஞ் சித்தியு ஞானமு மடைந்ததுங்
கண்டோமே

இவர்கண் ஞானிகளென்றிடிற் சித்திகளிவர் இலா
வகையாதோ''

பயன் நோக்கிச்செய்யும் தவத்தைக் காமிய தவம் என்பர். பயன் நோக்கிச் செய்கின்ற தவம் செகமயக்கம் தரும். முக்தி நெறிக்குப் பாடுபடுவதே சிறந்த தவமாகும். உலகத்தில் என்றென்றும் வாழும் படியான நிலை கிடைத்துவிடுகின்றது என்று வைத்துக்கொள்வோம். இன்பம் ஒன்று இல்லையானால் காயம் இருந்தும் நிலைத்தும் என்ன பயன்? இதை எவ்வளவு அழகாகத் தாயுமானவர் எடுத்துரைக்கின்றார்.

"சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சென்மமற
முக்திநெறி கேட்டல் முறைகாண் பராபரமே"
"கற்ருலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்ருலுங் மின்ப முண்டோ பேசாய் பராபரமே"

தான் தொட்டதெல்லாம் சாம்பலாகி விடவேண்டும் என்று தவம் செய்தான் பஸ்மாசுரன். அவன் கோரிய வரமும் கிடைத்தது. நினைக்குங்கேடு தனக்கு என்பதற்கேற்ப தன் தலையையே தொட்டு நொடிப்பொழுதில் அவன் சாம்பலான கதையையும் அறிவோம். இதுபோன்று தான் சித்தி அடையவேண்டும் என்று பாடுபடுபவர் கள் வாழ்வும் வீணுகின்றது. சில தபசிகள் சித்திக்கு மட்டும் பாடு பட்டு முக்தியை இழக்கின்றனர். சிலர் முக்திக்குப் பாடுபட்டுச் சித்தி யையும் அடைகின்றனர். ஆனல் சித்தியடைந்து விட்டோமே என்ற எண்ணத்தில் சித்தியிலேயே மனம் லயித்துவிட்டால் அது விநோ தந் தருவதிலேயே நின்றுவிடுகின்றது. இன்று பாடுபடுகின்றவர் களில் பலர் சித்தியை விரும்பியே தவமியற்றுகின்றனர். சித்தியும் முக்தியும் விரும்பித் தவமியற்றுபவரில் சிலரும் சித்தியிலேயே மூழ்கி முக்தி அடையாது வீழ்கின்றனர். ஆனல் இவ்விரண்டையும் அடைந் தவர்கள் முன்னுளில் தவயோகிகளாகச் சிறந்து விளங்கிய பெரியோர் கள். சித்தி முக்தி இரண்டும் தவமுளோர் அடைவர். அணிமாதி ஐஸ்வரியம் ஈசனுக்கு உரியது. இதை வஸிஷ்டர் வியாசர் முதலிய பெரியவர்கள் அடைந்தார்கள். அம்முனிவர்கள் பரமேஸ்வரனை நோக்கிச் செய்த பக்தியினுலும் கிருச்சிரம் சாந்திராயணம் முதலிய தவங்களாலும் இயமநியமாதி அஷ்டாங்க யோகத்தாலும் அவ்வணி மாதிச் செல்வம் அவர்கட்குச் சித்தித்த தென்றறிய வேண்டும். கைவல்ய நவநீதம் கூறுவதையே கேட்போம்.

குரு: "காமியத்தவங் காமிய மொன்றையுங் கருதிடாத் தவமென்றும்
பூமி யிற்றவ மிருவகை சித்தியும் போதமுந் தருமைந்தா
ஆமி வற்றிலொன் றியற்றினு ரொன்றையே யடைகுவ
ரிதுதீர்வை
யாமு ரைத்தவவ் விரண்டையு மியற்றினு ரன்றுள
பெரியோரே"

"அனக மைந்தனே முத்திஞா னத்தையே யடைந்தன
ரல்லாமல்
செனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரோ
இனிய சித்தியே விரும்பினுர் சிலர்சில ரிரண்டையு முயன்ருராம்
முனிவர் சித்திகள் விநோதமாத் திரந்தரு முத்தியைத்
தாராவே"

உண்மையாக ஆத்மீகத்துறையில் பாடுபடுபவர் தானும் ஈசனும், 'அகம் பிரஹ்மாஸ்மி' யெனும் தத்துவ ஞானத்தால் பேதமில்லாத வர் என்பதை உணர்கின்ருர். அதை யோகத்தில் தத்ரூபமாக அனுபவிக்கின்ருர். அதை அனுபவிக்கும் நிலையில் ஈஸ்வர சம்பத் தான அணிமாதி அஷ்டசித்திகளையும் அனுபவிக்கின்றனர். அவர்கள் அவற்றை அனுபவித்து ஆடவேண்டும் என்ற நோக்கில் இல்லா ததும், அவையே அவர் செயல்களில் தாமாகவே பரிமளிப்பதும் உற்றுக் கவனிக்கவேண்டியது. இப்படி வந்தடைந்த சித்துகள்தான் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஆடி அருளுகின்ற சித்துக்கள். இந்த ஈஸ்வர செல்வத்தை அருள்சித்து என்று போற்றுவதா? அன்னை அருள் என்று துதிப்பதா? 'நல்லார் அருளே எல்லாம் சிவமே' என்று போற்றிப் பணிந்திடுவோம்.

## மூன்று நிலைகளில் சித்திகள்

தீர்க்கதரிசிகள் மூன்று நிலைகளிலுள்ள சித்திகளைப்பற்றிப் பேசு கின்றனர். 'அன்பே தெய்வம்' என்று போற்றுகின்ற சைவ சித்தாந் தம் 'அறிவே தெய்வம்' என்றும் சாற்றுகின்றது. தெய்வத்தை 'பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணுனந்தமே'' என்றும், ''கருதரிய சிற்சபையிலானந்த நிர்த்தமிடு கருணைகரக் கடவுளே' என்றும், ''வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகச்சித்தர் கணமே'' என்றும், ''அண்டபகிரண்டமு மடங்க வொரு நிறைவாகி யானந்தமான பரமே' என்றும், ''சுத்த நிர்க்குண மான பரதெய்வமே பரஞ்சோதியே சுகவாரியே' என்றும், 'இகபரம் இரண்டினிலு முயிரினுக் குயிராகி யெங்கும் நிறைகின்ற பொருளே' என்றும், 'சர்வ பரிபூரண வகண்ட தத்துவமான சச்சிதானந்த சிவமே' என்றும் போற்றிப்பாடிய தாயுமான சாமிகள் அதே இறைவனை 'சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே தேஜோ மயானந்தமே' என்றும் வழுத்தியிருக்கின்ருர். இந்தச் சித்தமிசை குடிகொண்ட அறிவின் ஆற்றல் என்ன என்பதைச் சற்று ஆராய் வோம்.

சிலபேர் அவர்களை அறிவாளிகள் என்று சொல்வதுகூடக் குற்ற மாகும்—சித்திக்கு ஆசைப்பட்டு அதை அடைவதற்குரிய மார்க்கம் சரியானதா என்பதைக்கூடப் பொருட்படுத்தாமல் தெய்வத்திற்கு அடுக்காத மந்திரங்களையும் யாகங்களையும் பூஜைகளையும் செய்து சுத்தமில்லாத சித்திகளை அடைகின்றனர். இந்த சித்தியை அடைந் தவர் மற்றவருக்குக் கெடுதல்தான் செய்ய முடியுமேதவிர நன்மை அளிக்க முடியாது. பில்லி சூனியம் செய்வோரையும் ஏவல் வேலை செய்வோரையும் இக்கூட்டத்தில் சேர்க்கலாம். தப்பு காரியம் செய்ய

உதவும் இந்தக் களங்க சித்தியை ஒரு நொடியில் உடைத்தெறிந்து விடலாம். அசுத்தத்தில் பிறக்கின்ற இந்த சித்து அந்த அசுத்தம் மறைய, தானே அழிகின்றது.

இதற்குமேல் சிலபடிகள் உயர்ந்து இருக்கின்றது மந்திர சித்தி என்பது. ஒரு குறிப்பிட்ட தெய்வத்தை ஆராதனை செய்து மந்திர உச்சாடனஞ் செய்வதன்மூலம் இந்த சித்தி அடையலாம் என்று சொல்வர். இந்த சித்தியை அடைந்தவர் அவர்கள் இஷ்டப்பட்ட போது தம்முடைய உள்ளங்கையில் புட்பங்களையோ பழங்களையோ வெள்ளி தங்கப் பொருள்களையோ கொண்டு வரலாம். பொருள் களையும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு மாற்றவும் முடியும். இதை யட்சண்ய வேலை என்றும் கூறலாம். இன்னும் சில படிக்கட்டு கள் ஏறி மலைஉச்சியில் உள்ள கோயிலின் அர்த்தமண்டபத்தை அடை வதை ஒக்கும் யோக சித்தி அடைவது. யோக மார்க்கத்தில் நின்று வெற்றிபெற்ற யோகிகள் அணிமா, மகிமா, லகிமா, பிராத்தி, பிரகா மியம், ஈசத்துவம், வகித்துவம், கிரிமா எனும் அட்டமாசித்திகளைப் பெறுவர். இவர்களால் ஆகாத காரியமில்லை என்று சொல்லக்கூடிய அளவுக்குச் சித்துக்கள் ஆடவல்லவர் இந்த யோகிகள்.

யோகசித்தியை அடைந்தவர் நிச்சயமாக மகாசித்தியை அடைந்தே தீருவர். மலை உச்சியிலிருக்கும் கோயிலில் உள்ள அர்த்த மண்ட பத்தை அடைந்துவிட்டால் கர்பக்கிரகத்தில் உள்ள எம்பிரானைக் காணுமலா இருக்க முடியும். இந்த நிலையை எட்டிப் பிடித்தவர் தன்னையுணர்ந்த பரமாத்மாக்கள். அவர்கள் ''நீயே நானாய், நானே நீயாய்'' என்ற ஈசனுடன் இரண்டறக்கலந்த நிலைக்கு வந்து விடு கின்றனர். ஆண்டவனுடன் கலந்து விட்டால் ஆண்டவனே ஆகின்றனர், ஒருதுளி தண்ணீர் கடலோடு கலந்து கடல் குணங்களைக் கொள்வது போல, இப்படிக் கடவுளோடு ஒன்றாகி விட்டால் கடவுள் தன்மை அவர்களிடம் பரிமளிக்க ஆரம்பித்து விடுகின்றது. அவர் களுக்கும் கடவுளுக்கும் வித்தியாசமே இல்லை. அவனன்றி ஓரணுவும் அசையாதது போல ஈசனுடன் ஒன்றிய இவரன்றி ஓரணுவும் அசையாது என்ற நிலைக்கு வந்து விட்டார் இவர். இந்த நிலையில் உள்ளவர்களுக்குச் சித்துக்கள் ஆடுவது எளிது. இதற்காக விரதங்களோ, பூஜையோ, மந்திரங்களோ தேவையில்லை. அவை தாமாகவே வந்து விடுகின்றன. சித்துக்கள் ஆடும்போது அவர் களுக்கு அது தெரிவதில்லை. சித்துக்கள் தானாகவே வெளி வருகின்றன.

சித்திகள் கைவரப்பெற்றவர் பூரணயோகியாக இருப்பரே யானால் அவருக்குச் சித்திகள்பால் மனமே இராது. அவர் பூரண யோகியாக இல்லாவிட்டால் தான்பெற்றுள்ள சித்திகளில் மனம்

பறிகொடுத்து மமதை தலைவிரித்தாட ஆரம்பித்துவிடுவர். இவர்கள் கர்விகளாகத்திரிவர். பேருக்கும் புகழுக்கும் அலைவர். ஆனுல் இவர்களை அடக்குவது கடவுள் பூரண அருள் பெற்றவர்களுக்கே முடியும். முன்காலத்தில் மச்சேந்திரநாதர் என்ற பெரியவருக்கு கோரக் நாதர் என்பவர் சீடராக இருந்தார். அவர் அஷ்டமா சித்தி பெற்றவர். நான் எனும் அகங்காரத்தால் ஆட்டப்பட்ட அவர் யாரையும் வாதில் வெல்ல விரும்பி ஊர்ஊராகச் சுற்றிவந்தார். காசியில் குருபீடத்தில் இருந்த நல்லார் இராமானந்தரையே வாதிற்கு அழைத்தார். இராமானந்தரைத் தம் குருவாகப் பாவித்த கபீர்தாஸர் இதைக் கேள்விப்பட்டு ஓடோடிவந்து 'சாமி, கோரக்கருடன் வாதுபுரிய அருள்புரிய வேண்டும்.' என்று இராமானந்தரைக் கேட்க இராமானந்தருக்கே கபீரால் எதிரிமுன் நிற்க முடியுமா என்ற சந்தேகம் வந்துவிட்டது. ஆனுல் கபீர் எதிர்த்தார் கோரக்கரை. பெரும் பட்டுநூல் கயிற்றை ஆகாயத்தை நோக்கி வீசி, நெடுமரம்போல் நின்ற அதன் உச்சியில் ஏறி அமர்ந்து, "வானவெளியில் வாது செய்ய வாரீர்" என்று கபீர் கோரக்கரைக் அமைக்க, திகைத்த கோரக்கர், தன் திகைப்பைச் சமாளித்துக் கொண்டு கபீரைத் தரைக்கு வந்து வாதாட அழைத்தார். கபீர் தரைக்கு வருவதற்குள் கோரக்நாதர் தன் உருவைமாற்றி இராமானந்தராக விளங்கினுர். கபீரும் உடனே கோரக்நாதர் குரு மச்சேந்திரநாதராக மாறினுர். அடுத்தகணம் கோரக்கர் மகா விஷ்ணுவாக கபீர் சரபமூர்த்தியானுர். இப்படி ஒவ்வொரு வடிவிலும் தன்னை மிஞ்சும் வல்லபம்பெற்ற ஆண்டவன் பூரண அருள் பெற்றிருந்த கபீர்தாசரிடம் கோரக்நாதர் தோல்வியை ஒப்புக் கொண்டு தாள்களில் விழுந்து வணங்கினுர். இந்த நிகழ்ச்சியில், பூரண இறையருளுக்கு முன்னுல் அஷ்டமாசித்திகளும் தலைதூக்க முடியா என்பதும், பூரண இறையருள் பெற்றோர் இந்த அற்புதங்களைத் தம் வல்லமையைக் காட்டவும் புகழடையவும் ஆடிக்காட்ட மாட்டார்கள் என்பதும், பூரண இறையருளை வெளியே காட்ட வேண்டிய சந்தர்ப்பங்களில் அவர்களையறியாமலே உண்டாகும் உற்சாகத்தில் அவரால் முடியாதது ஒன்றில்லை என்பதையும் காண்பிக்கவே இப்படி அற்புதம் ஆடுவது என்பதும் நாம் கவனிக்க வேண்டியவை.

இப்படிச் சித்துக்கள் காட்டிய மகாபுருஷர்கள் ஒருவர் இருவர் அல்ல: ஒரு மதத்தில் மட்டுமல்ல: ஒரு நாட்டில்மட்டுமல்ல: நேற்றுமட்டுமல்ல: இன்றும் பல நாடுகளிலும் பல மதங்களிலும் பல சமயங்களிலும் எவ்வளவோ மகாபுருஷர்கள் அவதரித்து எவ்வளவோ அற்புதங்கள் ஆடி அருளுகின்றனர். 1968 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த இயேசுநாதர், சுமார் 1500 ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த சைவசமய ஞானுசாரியர்கள், சுமார் 1200 ஆண்டுகளுக்கு

முன் வாழ்ந்த சங்கராச்சாரியார், சமீபத்தில் நூற்றைம்பது வருடங்களுக்குள் வாழ்ந்த இராமலிங்கசாமிகள், ஷீரடி சாயிபாபா – இவர்களெல்லாம் சித்தர்கள், சித்துக்களை விளைவித்த சிறந்த சமயத் தலைவர்கள். இந்த வாழையடி வாழையென வந்த திருக்கூட்டத்தில் வந்த ஒருவர்தான் ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகளும்.

தெய்வமாகப் போற்றப்படும் இயேசுநாதரும் சித்துக்கள் புரிந்தார்: சமயாச்சாரியர்களும் மகான்களும் சித்துக்கள் புரிந்தனர். இதை உணராத சிலர் சித்துக்களைப் பற்றிப் பேசி எள்ளிநகையாடுவர். சித்துக்களைக் குறைகூறி அதைச் செய்பவர்களையும் குறை கூறுவர், தாம் கூறுவதை நிரூபிக்க பெரிய மகான்களே சித்துக்களைக் கண்டித்ததாகவும் சொல்ல முனைவர். இராமகிருஷ்ணபரமஹம்சரே சித்துக்களைக் கண்டித்தாரென்றும் அவருடைய வாழ்க்கையிலிருந்து ஒரு நிகழ்ச்சியையோ திருவாக்குகளையோ எடுத்துரைக்கவும் முனைவர். உண்மையிலேயே இராமகிருஷ்ணபரமஹம்சர் நல்லதையா கண்டித்தார். கெட்டதைத்தான் கண்டித்தார். இன்னருள் சுரந்து மகான்கள் உலகில் நன்மை விளைவிக்கக்கூடிய அற்புதங்களையோ தீராத வினைகளைத் தீர்த்தருளும் சித்துக்களையோ பெரியவர்கள் கண்டித்ததாகத் தெரியவில்லை. ஒரு பெரியவர் ஒரு தரம் கண்டித்தது ஒரு செப்பிடுவித்தைக் காட்டுபவனைப்போல் அவரிடம் தான் அடைந்திருந்த சித்திநிலையைக் காட்ட வந்த ஆத்ம அனுபவ முதிர்ச்சி இல்லாத ஒரு தற்பெருமைக் காரனைத் தான். அத் தற்பெருமைசாலி சாதித்துக்காட்டிய செயல் தண்ணீரின் மேல் நடந்து ஒரு நதியைக்கடந்ததே. "ஆற்றைக் கடக்க அரையணாகொடுத்து ஒரு படகில் ஏறினல் போதாதா? அதற்குத் தண்ணீரில் நடக்கக்கூடிய ஆற்றல் வேண்டுமா? இந்த ஆற்றலை அடைய பத்துவருடங்கள் வீண்விரயம் செய்வதா." இப்படிச் சொல்லி இந்தக் குறிப்பிட்ட செயலைப் பெரியவர் கண்டித்தாரே தவிர தெய்வீகம் பொருந்திய பேராற்றல் மிக்க புண்ணிய புருஷர்களாகிய இயேசுநாதர், சைவசமயக் குரவர்கள் மக்கள் நன்மைக்குச் செய்த சித்துக்களைப்பற்றிப் பேசவேயில்லை,

### சித்துக்களைப் பற்றிச் சாமிகள்

பெரிய மகான்கள் சித்து புரிவதைப் பற்றிச் சாமிகளிடம் விளக்கம் கேட்டபோது அவர்கள் மிகவும் சுருக்கமாகவும் தெளிவாகவும் சித்தைப் பற்றி விளக்கம் தந்தார்கள். "தூங்கிக் கிடக்கும் ஆத்மாக்களைத் தட்டி எழுப்புவதற்காகவே மகான்கள் சித்துக்கள் புரிகின்றனர். ஆண்டவனல் ஆகாததொன்றுமில்லை: ஆண்டவன் அருளைப் பெற்றவர்களாலும் ஆகாததொன்றுமில்லை. அவனன்றி ஓரணுவும் அசையாது என்பதையும் அவனன்றித் சித்துக்களும் நடக்காது என்பதையும் தான் சித்துக்கள் காட்டி மகான்கள் நிரூபித்து வருகின்றனர்.

ஆண்டவனிடத்தில் பூரண நம்பிக்கை ஏற்படுத்தி அவன் அருளாளன் என்பதை மெய்ப்பிக்க வைப்பது தான் சித்துக்கள் காட்டுவதின் நோக்கம். சித்துக்கள் மனவியாதி உடல் வியாதி இவைகளைப் போக்குவிக்க முற்றுமுணர்ந்த ஞானிகளுக்கும் உதவுகின்றன, ஆற்றல் மிகுந்தவர்கள், உள்ளொளி கண்டவர்கள், தூண்டா மணி விளக்கைப் பெற்றவர்கள், இதயக்கோயிலை அடைந்தவர்கள், உள்ளொளியை மட்டும் பேரனந்தப் பெருவாழ்வில் வைத்தவர்கள் தான் இம்மகான்கள். இவர்களது ஆத்மீக சக்தி ஒரு வற்றாத ஊற்றாகப் பலனளிக்கின்றது. இறைக்க இறைக்க ஊறுகின்ற வற்றாத சுனை போன்று இவர்கள் ஆத்மீகச் சக்தி எடுக்க எடுக்க வளரும் இயல்பினது.''

சாமிகள் : சித்து யாராலும் செய்யமுடியாதது. அதைச் செய்வதென்றால் ஒரு நிலையை அடைந்தவர்களால் தான் அது முடியும். ஆத்ம சித்தி பரிபூரணமாக அடைந்தவர்களால் ஆகாததொன்றில்லை. இறை தத்துவத்தை, இறை உண்மையை, இறை நிலையை உணர வேண்டிப் பாடுபடும் மக்கள் பல பல படிகளைக் கடந்து செல்லவேண்டி இருக்கின்றது. பல அனுபவங்களைப் பெறவேண்டி இருக்கின்றது. ஒருவன் கல்வியில் ஓரளவு வந்துவிட்டால் அவருக்கு பி. ஏ. பட்டம் அளிக்கின்றது ஒரு சர்வகலா சாலை. கல்வியில் ஓரளவுக்கு மேல் சென்றுவிட்டால் எம். ஏ. பட்டம் கொடுத்து அவர் கல்வியின் தரத்தை அளக்கின்றது. அந்த எம். ஏ. நிலையையும் கடந்து கல்வியில் பெருநிலை அவர் அடைந்து விட்டால் அவருக்கு டாக்டர் பட்டம் கொடுத்துப் பெருமை செய்கின்றது. ஆனால் டாக்டர் பட்டம் பெற்றவர்களுடைய அறிவெல்லாம் அத்துடனே நின்று விடுகின்றதா? அது மேன்மேலும் விருத்தியாகி இதுவரையில் அறியாதவற்றை அறிந்துகொண்டே செல்ல ஊக்குவிக்கின்றது இந்தப் பட்ட விளக்கத்தை வைத்துக்கொண்டே சித்தாடும் மகான்களைப் பார்ப்போமானால், இவர்களும் ஆத்மீகத்துறையில் ஒரு டாக்டர் பட்டம் பெற்றவர் நிலையை ஒப்பர் என்றே கூறிவிடலாம். இதற்கு மேலும் ஆத்மீகத் துறையில் அவர்கள் அறிவையும் அனுபவத்தையும் விரிவுபடுத்திக் கொள்ளமுடியும் என்பதும் சொல்லவும் வேண்டுமோ''? சித்தைப் பற்றி மற்றொரு சந்தர்ப்பத்தில் சாமிகள் கூறியதும் இங்கு உற்று நோக்கத் தக்கதே. ''பழநிமலை இருக்கின்றது. பக்தர்கள் அதைப்பற்றி கேள்விப்படுகிறார்கள். பழநியாண்டவனைக் கண்டு தரிசிக்க ஆசைப் படுகிறார்கள். எல்லோருக்குமே பழநியாண்டவன் தரிசனம் கிடைக்கின்றதா ? சிலருக்கு உடல் வசதியும், சிலருக்குப் பொருள் வசதியும் இருக்காது. பழநிமலையை அடைய ஆண்டவனைக் காணவேண்டும் என்ற ஆவலாய் ஓடி வருகின்றவர்கள் இரயிலேறியோ காரிலோ பழநி ஊருக்கு வந்து, பழநிமலை மீது படிப்படியாக ஏறுகின்றார்கள். மலையில் நெடுந்தூரம் சென்றபிறகு இடும்பன் சந்நிதி வந்தடை

கின்றனர். அங்கேயே அவர்களுக்கு இறைவனை நெருங்கிவிட்டோம் என்ற உள்ளுணர்வு ஏற்படுகின்றது. அதையும் தாண்டி உச்சி மலைக்குச் சென்று விட்டால் பழநியாண்டவன் செழுங்கருணை வடி வையே கண்டு களிப்பெய்துவர். உச்சிமலை அடைவது தான் யோகியர் குறிக்கோள்: உச்சியை அடைந்தவர்களே யோகியர்கள். உச்சிமலையில் தான் சீவன் சிவனோடு ஐக்கியமாகின்றது. உச்சி மலையை அடைவதற்குமுன் இடும்பன் சந்நிதி அடைவது ஒக்கும். சித்தாடும் ஆற்றல் பெறும் நிலையினை அடைவது. உண்மைப் பக்தர் பழநிமலையை அடைவது திண்ணம். அவர் இடும்பன் சந்நதியைப் தரிசித்துத் திரும்பி விடுவதில்லை. அது போன்றே உண்மை யோகி பரப்பிரம்ம ஐக்கியத்தை அடைந்தே தீருவர். அவர் சித்தாடலி லேயே மனம் லயித்து அதிலேயே உழன்று திரிந்து வாணாளை வீணாளாக்க மாட்டார்."

சாமிகள் திருவாய் மலர்ந்தருளும் திருமொழிகளை ஊர்ஜிதம் செய்வதுபோலல்லவா ஸ்ரீ சாமி விவேகானந்தர் திருமொழிகளும் அமைந்துள்ளன.

சாமி விவேகானந்தர்: "அக்காலத்தில் கடவுள் தன்மை பெற்ற மகான்கள் இருந்தனர். அவர்கள் விந்தை புருஷர்களல்ல. அவர்கள் உம்மையும் என்னையும் போலச் சரீரம் தரித்திருந்தவர்களே. ஆனால் அவர்கள் மாபெரும் யோகிகள், இறைநிலைத் தன்மை அடையப்பெற்ற னர். அன்று ஒருவர் அந்நிலை அடைந்தார் எனும் உண்மை, மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் அந்நிலை அடையக்கூடும், அடைய முடியும் என்பதை ருசுப்படுத்துகின்றது. ஒவ்வொரு மனித னும், ஏன் ஒவ்வொரு ஜீவராசியும் ஒருகாலத்தில் அந்த உயர் நிலைக்கு வந்தே ஆகவேண்டும். அதுதான் முடிவு."

சாமி விவேகானந்தர் கூறியுள்ள மாபெரும் யோகிகள் வரிசை யில், சாமிகளும் நிலைபெற்றிருப்பதனாலல்லவா சாமிகள் கடவுள் தன்மை பெற்று விளங்குகின்றார்! மற்றவர்களையும் பழநிமலை உச்சிக்கு அழைத்துச் செல்லச் குருமகராஜனாகவும் விளங்குகின்றார்.

**கல்கண்டு சாமிகள் :**

> "கனியி னுங்கட்டி பட்டக ரும்பினும்
> பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
> தனிமுடி கவித்தாளும ரசினும்
> இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே"

பரம்பொருள் இறைவன் ஓர் இனியன். அவன் கனியினும் இனியன்; முதிர்ந்த கரும்பினும் இனியன்; குளிர்ந்த மலர்க்கூந்தலழ குப் பாவையரினும் இனியன்; மன்னுதி மன்னவனினும் இனியன்.

இறைவன் தன்மையை எடுத்துணர்த்தும் அப்பர் அடிகளும் அவன் இனிமைத் தன்மையைத் தானே இப்படி விரிவுபடுத்திக் கூறினர். இந்த இனியத் தன்மையைத்தான் நமது சாமிகளும் இனிக்கும் கற்கண்டைக் கொண்டே விளக்கி வருகின்றார்.

“கடவுள் கண்டவர்க்குக் கற்கண்டு
காணுதவர்க்கு கல்குண்டு”

என்று இறைவன் தன்மையை அருமையாக உரைப்பது சாமிகள். திருமுருகன் பேரெழிலை அருணகிரி தித்திக்கத் தித்திக்கப் பாடிய காரணம் அவர் கண்ட திருத்தலங்களிலெல்லாம் இறைவன் அருளும் அழகும் உருக்கொண்டெழுந்ததே! கடவுளைத் தண்டபாணியாகவும், திருமுருகனுகவும், சிங்காரவேலனுகவும், சுப்ரமண்யனுகவும், குமரனுகவும், வள்ளி மணுளனுகவும் பல திருத்தலங்களில் கண்டார். திருமுருகனின் பேரெழிலைப் பேராற்றலைப் பெருநிலைகளைப் பலவாக எடுத்துக்காட்டும் சிலைகளைப் பல கோயில்களில் கண்ட அவருக்கு இறை அனுபவம் கிடைத்தது, இறை இன்பம் கிட்டியது. இறை மாட்சியைப் பாடினர். சிலை உருவில் கடவுளைக் கண்ட பக்திமானுக்கு இறைவன் கற்கண்டாக இனிக்கின்றான். அதனுல்தான் கடவுள் கண்டவர்கட்குக் கற்கண்டாகின்றான். ஆனுல் கடவுள் நம்பிக்கை இல்லாத ஒருவன் கடவுளை வடித்துக் காட்டும் உருவில் கல்லையும் உலோகத்தையும் தான் காண்கின்றான். அதனுல்தான் கடவுளைக் காணுதவர்க்குக் கல்குண்டாகத் தோற்றமளிக்கும் என்பதை சுருக்கமான சொற்களில் விளக்கமாக உரைத்தனர் சாமிகள். “கடவுள் கண்டவர்க்குக் கற்கண்டு, காணுதவர்க்கு கல்குண்டு” என்று!

“நமது கண்கள் காண விரும்புவன இனிய காட்சிகள்; செவிகள் கேட்க விரும்புவன இனிய மொழிகள்: வாய்ருசிக்க விரும்புவன இனிய பொருள்கள்: நாசி முகர விரும்புவன இனிமை மிகு மணப்பொருள்கள்: மெய் அனுபவிக்க விரும்புவன இன்பம் ஊட்டும் பொருள்கள். ஐம்புலன்களையும் ஆட்டவல்லது அவை விரும்புவன இனிமை. ஐம்புலன்களையும் ஒன்று சேர்த்து ஒருநிலையில் வைத்து இறையை நோக்கி இயக்குவதைத் தானே அருச்சுனனுக்குச் சாரதியாக விளங்கிய கிருஷ்ணன் ஐந்து குதிரைகள் பூட்டிய இரதத்தை ஓட்டும்போது அவைகளின் கடிவாளங்களைத் தம் ஒருகையில் நன்ருகக்கூட்டி இயக்கியதை நமக்கு நினைவூட்டுகின்றது. ஐம்புலன்களையும் ஒன்று சேர்த்து இறைவன் பக்கம் திரும்பிவிட்டால் இறைவனே நமக்கு இனிய காட்சியளித்து விடுகின்றான். அந்த இனிமையில் நம்மையே மறந்துவிடுகின்றோம். இந்தக் கருத்தையல்லவா “ஐந்து முகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்” என்ற திருவாக்கும் உணர்த்துகின்றது. ஐந்துபொறி

களும் புலன்களும் ஒன்றுகூடித் துய்க்கும் இறை இன்பம் பேரின் பத்தையல்லவா காட்டிவிடுகின்றது" இப்படிப் பேருண்மை விளக் கத்தை நமது சுவாமிகள் இனிமையாக அருளுவதுண்டு. இத் தகைய பெருந்தகையாளர் அற்புதத்தை ஆடிக்காட்டும் போதும் இனிமைப் பொருளைக்கொண்டே இனிமைப் பொருள்களை வர வழைத்தே ஆண்டவன் சிறப்பையும் அருளையும் இனிமையையும் உணர்த்துகின்றார். முருகு என்ற சொல்லுக்கும் இனிமை அல்லவா பொருள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் சாமிகளை முதன்முதலில் நான் கண்ட இனிமையான அனுபவத்தைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. சாமிகளை அவரது திருஇல்லத்திலேயே திண்டுக்கல்லில் முதன்முத லாகக் கண்டேன். அருள்ஜோதி வடிவு காட்டும் தெய்வீகப் புன்னகை தவழும் இனிமையான முகம்: அருள்ஜோதி வடிவு காட்டும் இனிமையான தோற்றம்: கருணைவழிந்தோடும் இனிமை யான மொழிகள் — இவைகளே சாமிகளாக எனக்குத் தோன்றினர். உற்சாகமிகுந்து அளவளாவிக் கொண்டிருந்த சாமிகள், நானும் அப்போது சென்னை மேல்சட்டசபை உறுப்பினராக இருந்த M. சுப்பையா செட்டியாரும் சாமிகளுக்குக் காணிக்கையாகச் செலுத் திய உதிரி சம்பங்கிப் புட்பங்களை எடுத்து, திரு. சுப்பையா செட்டி யார் மடிமீது வீசினர். லேசான மென்மை மலர்களில் சில தரையில் விழுந்தன. விர்ரென்று பறந்துசென்ற மலர்கள் தரையிலும் மடி யிலும் சிறு கற்கள் விழுவதைப்போன்று சென்றன. சிறுகற்களே! ஆம் சிறு சிறு கற்கண்டுக் கட்டிகளே தரையிலும் மடியிலும் விழுந் தன!! கற்கள் விழுகின்ற சிறிய ஓசை கேட்டுப் பூக்களைப் பார்த் தோம், சாமிகள் திருக்கரத்திலிருந்து வீசப்பட்ட பூக்கள் இனிய கற்கண்டுகளாக மாறிச் சிதறி வீழ்ந்துள்ளன. அந்த சுவைமிகு கற் கண்டுகட்டிகளைச் சாமிகள் எங்களுக்கு மனமுவந்து வழங்கினர். நாங்கள் இனிய கட்டிகளைச் சுவைத்துச் சுவைத்துச் சாப்பிட் டோம். நா சுவைத்துத் தேன் கட்டிகளை மென்று மென்று விழுங்கி அனுபவித்தது. அந்த நாவே அதை விளைவித்த அற் புதத்தைப் பற்றியும் பேசிப்பேசி மகிழ்ந்தது.

பல சந்தர்ப்பங்களில் கற்கண்டைச் சாமிகள் விருப்போடு வர வழைத்து விளையாடுவதில் புதுமையும் உண்டு, வித்தியாசமும் உண்டு. குழந்தைகள் சாமிகளிடம் கற்கண்டுக்காகக் கையை நீட் டும்போது சாமிகள் அருகில் இருக்கும் புஷ்பங்களை எடுத்துக் கொடுப்பார். கற்கண்டுக்காக ஏங்கித்தவிக்கும் கண்கள் கொஞ்ச நேரம் அவர் செயலால் ஏமாற்றமடைந்து, புஷ்பம் கற்கண்டாகக் கைகளில் விழும்போது ஆச்சரியத்தால் மலர்ந்து விரியும். சுவாமி கள் எடுக்கும் புஷ்பங்களில் அடிக்கடி மாறுதல் இருப்பதைப்

போலச் சாமிகள் கொடுக்கும் கற்கண்டுகளிலும் மாறுதல் இருப்ப துண்டு. சிலசமயம் மல்லிகை மலர்களை அள்ளி அருள அவை சீனுக்கற்கண்டுகளாக மாறும்: சிலசமயம் சம்பங்கி மலர்களை எடுத் தால் அவை பனங்கற்கண்டுகளாக மாறும்: சிலசமயம் செவந்திப் புஷ்பங்களை எடுத்தால் அவை அச்சுக் கற்கண்டுகளாக மாறும். கதம்ப உதிரிப் புஷ்பங்களை அள்ளி அருளினலும் அவர் இஷ்டப் பட்ட கற்கண்டு வகைகள் வந்து குவியும். புஷ்பத்தை வைத்துக் கொண்டுதான் கற்கண்டை வரவழைக்க முடியும் என்பதில்லை. அவர் கை அருளும் விபூதியும் கற்கண்டை உருவாக்கும். சில சமயங்களில் ஒரு பொருளும் இல்லாமலேயே கற்கண்டுகளை வர வழைத்துக் கொடுப்பதும் உண்டு. ஒருநாள் திண்டுக்கல்லில் பூஜை முடிந்தவுடன் சாமிகள் திரைக்குப்பின் கொலுவீற்றிருந்து பக்தர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருந்தார். கடைசியாக ஒரு பக்தர் சாமிகளோடு திரைக்குப்பின் விபூதிப் பிரசாதம் பெற் றுக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார். திரைக்கு வெளியே பக்தர் கள் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தனர். திடீரென்று திரைக்கு வெளியே கற்கண்டுமழை பெய்வதைப்போல் பத்துப் பதினைந்து கற்கண்டுகள் பல இடங்களில் விழுந்தன. ஒவ்வொரு கற்கண்டும் ஜல்லிக்கற்கள் அளவு இருந்தது. சாமிகளது அருள் பிரவாகம் கற்கண்டு மாரியாகப் பெற்றோம் என்று சுவாமிகளிடம் உளமகிழ்ந்து சொல்ல திரைக்குள் எட்டிப்பார்க்க உள்ளேயிருந்த பக்தர் ஒன்றும் தெரியாது விழித்தார். ‘என்ன விசேடம்’ என்று எங்களைக் கேட்டவுடன் அவருக்கும் தெரியாமல் இந்தக் கற்கண்டு மழைபெய்திருப்பதை அறிந்து மகிழ்வுற்றோம். மற்றொருநாள் நான் சுவாமிகளிடம் திரைக்குப்பின் தனித்துத் தரிசனம் செய்யும் போது அன்று என்னுடைய பிறந்ததினம் என்று சொல்லிக் கொண்டேன். ‘மிகவும் சந்தோஷம் சாமி,’ என்று கூறி அருள் பிரசாத விபூதி வழங்கினர்கள். அதற்குப்பின் கூட இருந்தவர் களெல்லாம் தரிசனம் செய்து கொண்டனர், திரை கலைவதற்கு முன் சாமிகள் என்னை அழைப்பதைக்கேட்டு நான் ஓடோடினேன். அன்பு மலர்ந்த விழிகளோடு சாமிகள் என்னை அருகில் அழைத்துப் பக்கத்திலிருந்த ஒற்றை நந்தியாவட்டைப் புஷ்பங்களை எடுத்தார். என்கைகளில் அவைகளை வைக்கும்போது ஒரு பெரிய கற்கண்டுப் பாறையே என்கைகளில் பொருந்தக்கண்டேன். ஒரு பெரிய ஜல் லிக்கல் அளவு கற்கண்டு ஒரு பாறையிலிருந்து வெட்டி எடுக்கப் பட்டதைப்போல் என் கைக்குக்கிடைத்தது. என் ஆனந்தத்திற்கும் எல்லைஉண்டோ? நான் அவ்வளவு பெரிய அளவு கற்கண்டுக் கட்டியை அதற்குமுன் பார்த்ததே இல்லை. இந்தப் பெரிய அளவு கற்கண்டைக் கண்ணுற்ற எனக்குப் பிறந்தநாள் பரிசையல்லவா சாமிகள் அன்போடு அருளினர் என்ற எண்ணம் என் உள் ளத்தைப் பேருவகையால் நிரப்பியது. கற்கண்டை வைத்துக்

கொண்டே சாமிகள் விதவிதமாக வகைவகையாகத் தெய்வீக வேடிக்கை ஆடி அருளுகின்றார். என்னுடைய ஏழையுள்ளம் திருப்தி அடைவது போன்று எவ்வளவு அன்பர்கள் சாமிகளது கருணைப் பிரவாகத்தால் கற்கண்டு அன்பால் ஆத்மதிருப்தி அடைகின்றனர்.

பூக்கள் கற்கண்டுகளாக மாறும் அற்புதத்தை மட்டும்தானா நான் சாமிகளைக் கண்ட முதல் நாள் கண்டேன்? அவர்களது திருக்கரங்களிலிருந்து குங்குமம் பெருகும் தெய்வீக விந்தையையும் அந்தக் குங்குமம் அடையும் பாக்கியமும் பெற்றேன். சாமிகள் பூஜை முடித்து, பக்தர்களுக்கு அருள்பிரசாதம் வழங்குவது முடிந்தவுடன் என்னை சுவாமிகளிடம் அழைத்துச் சென்ற எனது நண்பர் திரு. S. சூரியமூர்த்தி அவர்கள் எனக்கும் திரு. சுப்பையா செட்டியார் அவர்களுக்கும் அனுக்கிரகம் செய்யும் வகையில் ஒரு அருட்செயல் விளைவிக்கும்படி சாமிகளை வேண்டினார். சாமிகள் எங்களை அழைத்து ஒருவர் கைக்கு மேல் மற்றொருவர் கையை ஏந்தும்படி செய்தார். மேலே இருந்த என் வலக்கையின் ஒரு அடி உயரத்தில் வைத்து தன் கையை பிசைய பிசைய குங்குமத்திற்குப் பொடி என்னுடைய கையுள் கொட்டு கொட்டென்று கொட்டிவிட்டது, சாமிகளது அருள்மழைதான் மங்களத்திலகமிடும் குங்குமமாக எங்கள் கைகளில் நிரம்பியது. அதை நினைக்கும் போதே அன்று நடந்ததைப்போல் மெய்சிலிர்க்கின்றது, உள்ளம் புல்லரிக்கின்றது. இனிப்புச் சுவை நல்கும் கற்கண்டைக் கொண்டு எங்களை அன்போடு அழைத்த சாமிகள் அவர்களது மங்கள கரத்தினாலேயே எங்களுக்கு மங்கள குங்குமத்திலகமிட்டு வழியனுப்பிய பெருங் கருணைப் பேரருளை என்னென்றியம்புவேன்? இத்தகைய அற்புதத்தைச் சாமிகள் அடிக்கடி ஆடிக்காண்பிக்கின்றார். ஆண்டவன் சந்நிதிக்குச் செல்லும்போது கூட தீபாரதனை முடிந்தவுடன் அன்பர்கள் கரங்களை ஏந்தச் செய்து மேலே ஏந்திநிற்கும் நிர்வாக அதிகாரி கரத்திலோ அல்லது வேறொருவர் கரத்திலோ விபூதிப் பிரசாதம் தன் வலத்திருக்கரத்தைப் பிசைந்து அருளுகின்றார். அம்பாள் சந்நிதிக்குச் சென்றாலும் இப்படியே குங்குமப் பிரசாதத்தையும் அருளுகின்றார். சில சமயங்களில் சாமிகளது திருக்கரம் அட்சதை அரிசியையும் மங்கள மஞ்சள் பொடியையும் வரவழைத்து அனுக்கிரகம் புரிகின்றது. வேண்டும் வேண்டும் என்று ஏங்கிக்கிடக்கும் இந்த மனம் இன்பத்திற்காகத் தவியாகத் தவிக்கின்றது. பொருள் வேண்டுகின்ற உள்ளம் அருளும் வேண்டுகின்றது. நிதிவேண்டுகின்ற கை கருணை நிதியையும் கேட்கின்றது. கேட்கின்றகைகளுக்குச் சாமிகளது திவ்விய மங்கள கரம் விபூதிப்பிரசாதம், குங்குமப்பிரசாதம், அட்சதைஅரிசிப்பிரசாதம் வழங்குகின்றது. வழங்குகிற சாமிகள் திருக்கரம் மழை பெய்வதைப் போல் கொட்டு கொட்டென்று கொட்டிவிடுகின்றது அருள் நிதியை. அருள்நிதியாகக் கிடைக்கின்ற விபூதிப் பிரசாதத்திலும் பலவகைகள் உண்டு. சாதாரணமாக சாமிகளிடத்திலிருந்து கிடைக்கின்ற விபூதி

மணமுள்ளதாகவே இருக்கும். சில சமயங்களில் தெய்வீகமணம் பிறிட்டெழுகின்ற விபூதிப் பிரசாதத்தையும் வரவழைத்துக் கொடுப்பர். திருச்செந்தூர் முருகன் விபூதியைக் கூடப் பச்சை இலையில் வைத்து அருளும் சாமிகளது அற்புதத் திருவிளையாடல்களை என்னென்று இயம்புவது! சில சமயங்களில் சில குறிப்பிட்ட சன்னதிகளில் தயாராகும் அந்தந்த விபூதிப் பிரசாதத்தையும், குங்குமப் பிரசாதத்தையும் சாமிகள் வரவழைத்து அளிப்பது சாமிகளுடைய பேராற்றலைத்தான் நமக்கு எடுத்துக்காட்டுகின்றது.

## கனி அருள் சாமிகள்

> "மனிதர் காளிங்கே வம்மென்று சொல்லுகேன்
> கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லீரே
> புனிதன் பொற்கழல் ஈசனெ னுங்கனி
> இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே."

இறைவன் கண்டவர்க்குக் கற்கண்டு என்று இறையின்பத்தில் தோய்ந்திருக்கும் சாமிகள் கூறுவர்: இனிக்கும் கற்கண்டுக் கட்டிகளையும் நினைத்தமாத்திரத்தில் வரவழைத்துப் பக்தர்களுக்கு அளிப்பர். இறைவன் அருளைச் செயலில் விளக்கும்போதும் இறைவன் இனிமைத்தன்மையைத் தீஞ்சுவைக் கற்கண்டுகளை வரவழைத்துக் கொடுப்பதிலிருந்தே விளக்குகின்றார் சாமிகள். இறைவன் இனிமைத்தன்மையைக் கற்கண்டுக் கட்டிகளை வரவழைத்து அளிப்பதால் மட்டுமா சாமிகள் காட்டுகின்றார்? இனிமையான பழங்கள் வரவழைத்தும் இறை இனிமையை ஊட்டுகின்றார். இந்த அற்புதத்தைக் கண்டாகிலும் ஈசன் எனும் கனியை அடைய முன்வர மாட்டார்களா மக்கள்? "கனி தந்தாற் கனி உண்ணவும் வல்லீரே" என்று திருநாவுக்கரசு சாமிகள் உரைத்த மேலே காட்டியுள்ள திருப்பதிகம் நம் மனக்கண்களுக்கு முன் வந்து நிற்பதும் இயற்கையே.

சாமிகள் சுவை மிகுந்த கனிகளை வரவழைத்துக் கனிந்த பக்திமான்களுக்குக் 'கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியான' ஆண்டவனின் அருளைக் காட்டுகின்றார். இறைவனது அருளைக் கனியாக ஏற்ற அற்புதத்தை நமது சைவ மங்கையர்க்கரசி காரைக்காலம்மையார் சரித்திரத்தில் படித்திருக்கின்றோம். கணவர் கொடுத்தனுப்பிய மாங்கனி இரண்டில் ஒன்றை இறையடியார்க்கு அமுது படைக்கும்போது செலவிட்ட புனிதவதி கணவனுக்கு எஞ்சி இருந்த மாங்கனியை உணவோடு பரிமாறினாள். கணவன் தானனுப்பிய மற்றக் கனியையும் சாப்பிட வேண்டுமென ஆவலுடன் கேட்க உற்ற இடத்தில் உதவும் கருணை வள்ளலாகிய இறைவனை அம்மை உள்ளம் உருகி வேண்ட அதிமதுரக்கனி ஒன்று அம்மை கரத்தில்

வந்தமர்ந்தது. திடீரென விளைந்த தெய்வீகச்செயலால் பெருவியப் பில் ஆழ்ந்த அம்மை தன் கணவருக்கு அத்தெய்வீகக் கனியைப் படைத்தார். அதன் தெவிட்டாத இனிப்பையும் தெய்வீகச் சுவை யையும் இனிக்க இனிக்க உண்ட கணவன் அதன் மகிமையைப் பற்றிப்பேச, அம்மையால் ஈசனின் அற்புதக் கருணைவிளையாட்டை மறைக்க முடியவில்லை, மற்றொரு தெய்வீகக் கனிக்கு ஆசைப்பட் டான் மணாளன். அதுவும் கிடைத்தது; ஆனால் அது சற்றுநேரத் தில் மாயமாக மறைந்துவட்டது. இச்செயல் அம்மையின் எல்லை யில்லா ஈசனன்பையும் பரம்பொருளின் எல்லையில்லா அருள் தன்மையையும் உலகிற்குக் காட்டவே விளைந்த அற்புதம். இதைச் சொன்னால் இது ஏட்டில் எழுதிவைத்த கதை என்று சொல்லி எள்ளிநகையாடுபவரும் உண்டு. ஆனால் இன்றும் இத்தகைய அற்புதம் நடக்கின்றது என்று சொன்னால் நம்புவார்களா? அது நடக்கின்றது என்பதைப் பார்த்துவிட்டால் அது ஆண்டவனின் செழுங்கருணை அருளால் நடக்கின்றது என்பதையும் நம்பவேண்டி இருக்கின்றது. இன்று இந்த அற்புதத்தை நடத்திக் காண்பிக்க கவிமணி காரைக்காலம்மையாரில்லை. உலகம் உய்வதற்காக பாடுபட்டு வரும் சித்தர், மகரிஷி, மகான் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலைசாமிகள் இஷ்டப் பட்டால் இஷ்டமான கனிகளை இஷ்டப்பட்ட நேரத்தில் இஷ்டப்பட்ட இடத்தில் பக்தர்களுக்கு அருளக்கூடும். ஆப்பிள் வேண்டுமோ? ஆரஞ்சு வேண்டுமோ? திராட்சை வேண்டுமோ? நினைத்த மாத்திரத் தில் இப்பழங்களைச் சாமிகள் அன்பர்களுக்கு வழங்கி வருகின்றார். இந்தப்பழங்களை வரவழைத்துக் கொடுப்பதிலும் பலவிதமான அற் புதங்கள். இவருடைய வெறுங்கையிலிருந்து வீழ்கின்றது அற்புதக் கனிகள். இவர் எடுக்கும்போது உதிரிப்புஷ்பங்களாகவும் விபூதியாக வும் இருப்பவை கொடுக்கும்போது பற்பல கனிவகையாக மாறி விடு கின்றன. இவர் கைக்குக்கூட வேலை தேவை இல்லை, சாமிகள் சொல்லி விட்டால் பூஜை அறையிலிருந்தும் கனி தானாகவே விர்ரென்று பறந்து வந்து குறிப்பிட்ட அடியாரிடத்தில் வீழ்கின்றது. ஒரு சமயம் பூஜை அறையில் ஆப்பிள், ஆரஞ்சு, வாழை, திராட்சைப்பழங்கள் குவிந்திருந் தன. இவைகளல்லாத வேறு பழம் ஒன்றை ஒரு பக்தரை கேட்கச் சொன்னார் சாமிகள். பக்தர் ஒருவர் 'மாதுளம்பழம் கிடைக்குமோ' என்று கேட்டார். என்ன ஆச்சரியம்! அடுத்த விநாடியில் சாமிகளின் திருக்கரத்திற்குச் சிவந்த மாணிக்க மணிகள் நிரம்பிய மா மாதுளம் பழம் ஒன்று பறந்து வந்து சேர்ந்தது. அது மாதுளை விளையும் காலமல்ல என்பதும் குறிப்பிடத்தக்கது. கோயமுத்தூர் திரு A. L. A. R. அருணாசலஞ் செட்டியார் தன் மனைவியுடன் ஒரு சமயம் பன்றிமலைக்குச் சென்று சாமிகள் பாதத்தில் இரண்டு சாத்துக்குடி ஆரஞ்சுப் பழங்களை வைத்துக் கும்பிட்டார். ஒரு சாத்துக்குடிப் பழத்தை சாமிகள் கையில் எடுத்து அவர் கையில் கொடுக்க அது விபூதி வாசனை மிகுந்த ஆப்பிளாக மாறிவிட்டது. பழம் வர

வழைப்பதே ஒரு பெரிய அற்புதம்! பழங்களை வருவிப்பதிலும் கையாளுகின்ற தெய்விக முறைகள் அற்புதத்திலும் அற்புதமாக அல்லவா விளங்குகின்றன.!!

கன்னலுடன் முக்கனியும் கற்கண்டுஞ் சீனியுமாய்
மன்னு மின்ப ஆரமுதை வாய் மடுப்ப தெந்நாளோ?

என்று இறைவன் அருளை எண்ணி ஏங்கினூர் தாயுமான அடிகள். நமது திருத்தவத் திரு பன்றிமலை சாமிகளோ நமக்கு இனிமையான வகை வகையான கனிகளையும் கற்கண்டுக் கட்டிகளையும் சர்க்கரையும் வாரி வாரி வழங்குகின்றூர்! எதற்காக? இறைவன் இனிமைத் தன்மையை உணர்த்தவும் அவன் கருணையை மக்களுக்குக் காட்டவும் அவனன்றி ஓரணுவும் அசையாது என்பதை விளக்கவுமே. சாமிகள் அடியில் கண்ட நிகழ்ச்சியில் இதை விளக்குவதையே கேட்போம். திரு. பா. சொக்கலிங்கம் தான் கண்ட அற்புதக் காட்சியை சௌபாக்கியம் எனும் சென்னை மாதப் பத்திரிகையில் 1956இல் எழுதியுள்ளார். அந்த அற்புதக் காட்சி என்ன? அவர் கூறுவதையே கேட்போம். "என்னுடன் வந்த நண்பர்கள் கைகளைச் சாமிகள் ஒன்றின் மீது ஒன்றாக வைக்கச் செய்தார். அதன்மீது என் இரு கரங்களையும் பிடித்து வைத்தார். முருகனைத் தொழுதார். முன் கிடந்த வில்வத்தை எடுத்து என் கரத்தில் வைத்துப் பிடி என்றூர். என்ன அற்புதம்! ஓர் அழகிய ஆப்பிள் பழம் என் கரத்தே காட்சி அளித்தது. எனக்குத் திகைப்பும் வியப்பும் ஏற்பட்டன." இந்த வியத்தகு செயலுக்குச் சாமிகள் கூறும் விளக்கத்தையே கேட்போம்.

சாமிகள்: ஏதோ அற்புதம் செய்து உங்களைத் திகைக்க வைக்க வேண்டும் என்பது என் எண்ணமல்ல. அல்லது என் செயலை ஊரெங்கும் பரப்பி எனக்குப் புகழ்மாலை சூட்ட வேண்டும் என்பதும் ஆசையல்ல. அல்லது ஒரு சிலருக்கு இத்தகைய அற்புதங்களைக் காட்டிப் பொன்னோ பொருளோ சேர்க்கவேண்டும் என்பதும் என் நோக்கமல்ல. ஆனுல் ஓர் ஆசை உண்டு. நமது சக்திக்கு அப்பாற்பட்ட சக்தி ஒன்று உண்டு. அதைக் காணமுடியாக் காரணத்தால் இல்லையெனச் சிலர் சொல்லுகிறூர்கள். ஆனுல் அத்தகைய பேராற்றலின் செயலால் ஆகாதன எதுவுமில்லை. உங்கள் கரத்தே இதோ காணப்படும் ஆப்பிள் கனியும் அந்தப் பரம்பொருளின் செயலாலே வந்தது தான். என் செயலால் ஆவதொன்றுமில்லை. நான் ஒரு கருவியே. அத்தகைய பெருஞ் சக்தியை மறந்தால் வாழ்வே பாழ்: வாழ்வு அதற்காக வகுக்கப்பட்டதே. அதனை நம்புங்கள், நம்புமாறு செய்யுங்கள், இந்த ஒரு நோக்கத்தை நிறைவேற்றவே நான் விரும்புகிறேன்.

## "தொட்டால் மணக்கணும் சொன்னால் பலிக்கணும்"

இனிய பண்புகள் நிறைந்த சாமிகள் இனிய அற்புதம் ஆட வல்லவர்; இனிய கற்கண்டு சுவைக்கனிகள் கொடுக்கவல்லவர் என்பதெல்லாம் காண்கின்றோம். சாமிகள் இனிய முறுவல் பூத்த முகத்தினர், இனிய சொற்கள் உரைப்பவர் என்பதையும் நேரில் கண்டு அனுபவிக்கின்றோம். சாமிகள் தீந்தமிழ்ச் சொற்களை இனிமையாகக் கவிதை அழகோடு அமைத்துப் பொருள் செறிந்த வாக்குகளை அடிக்கடி கூறி அந்த வாக்குகளைத் தன் அற்புதத் திருவிளையாடல்களால் மெய்ப்பித்துக் காட்டி வருவதும் பக்தர்களாகிய நாம் அறியும் உண்மை.

"தொட்டால் மணக்கணும்
சொன்னால் பலிக்கணும்
விட்டால் பறக்கணும்
நட்டால் முளைக்கணும்"

இந்த திருமொழிகளினாலேயே சாமிகள் தாம் ஆடுகின்ற சித்தை வகைப்படுத்தி உரைப்பர். சாமிகளுடைய திருவாக்கிலேயே அவர் ஆடி அருளுகின்ற அற்புதங்களெல்லாம் அடங்கிவிட்டன.

"தொட்டால் மணக்கணும்" என்று சாமிகள் திருவாய் மலர்ந்தருளுவர். உற்சாகமிகுந்த வேளைகளில் சாமி மணத்தை எழுப்பிப் பக்தர்கள் மனத்தைக் குளிரச் செய்வர். முருகனுடைய அருள் நிறைந்தவர் மணச்செயல் புரிவதில் ஆச்சரியமொன்றுமில்லை; ஏனென்றால் முருகு என்ற சொல்லுக்கே மணம் என்ற பொருளும் உண்டல்லவா! 'தொட்டால் மணக்கணும்' என்று சாமிகள் கூறுகின்றாரே, யாரை யார் தொட்டால் மணம் எழுப்ப முடியும்? சாமிகளால்தான் மணம் எழுப்ப முடியும். எப்படிப் பக்தர்களின் உள்ளங்களைத் தன் திவ்விய நோக்கால் தொட்டு அவ்வுள்ளங்களில் தெய்வீக மணம் எழுப்புகின்றார்களோ அப்படியே பக்தர்களின் உடல் உறுப்புக்களில் தன் திருக்கரம் வருடி வகைவகையான வாசனைகளைச் சாமிகள் எழுப்பி விடும் ஆற்றல் பெற்றிருக்கின்றார். உற்சாகமிகுந்த வேளைகளில் சாமிகள் மணத்தை எழுப்பி பக்தர்கள் மனங்களைக் குளிரச் செய்வர். சாமிகளிடத்திலேயே ஒரு தெய்வீக மணம் எப்பொழுதும் கமழ்கின்றது. சாமிகள் ஓர் இல்லத்திற்கு வந்து பூஜைசெய்துவிட்டுச் சென்றாலும், அந்த இல்லத்தில் சில நாட்கள் சாமிகளுடைய திவ்விய பரிமள பழநி விபூதி வாசனை போன்ற ஒரு தெய்வீக நறுமணம் வீசிக் கொண்டே இருக்கும். சாமிகளது தெய்வீக வடிவில் அவர்கள் படத்தில் சாமிகள் திருமுகத்தின் பின்னால் பிரகாசிக்கின்ற தெய்வ வட்டம் போன்று, ஒரு தெய்வீக மணம் சாமிகளைச் சுற்றிலும் பரிமள விபூதி வாசனை போன்று வீச ஆரம்பித்துவிடும். சாமிகள் தலைமை

யில் ஒரு திருமணம் ஏற்பாடாகி இருந்தது. சாமிகள் அமர்ந்திருந்த ஹாலில் இந்தத் தெய்வீக நறுமணம் எங்கும் வீசத் தொடங்கியது. இதை முகர்ந்து அனுபவித்த கல்யாணத்திற்கு வந்திருந்த விருந்தாளி பக்கத்திலுள்ள அன்பரொருவரை 'கல்யாண வீட்டில் நல்ல வாடை வேண்டுமென்றே நறுமண பன்னீரோ, சென்ட்கலந்த தண்ணீரோ இந்த ஹாலில் தெளித்து வைத்திருப்பதை கவனித்தீர்களா?' என்று கேட்டார். "அது எங்கள் சாமிகளது தெய்வீகத் திருமணம்" என்று பக்கத்திலிருந்த சாமிகள் பக்தர் உரைத்தபோதுதான் வந்திருந்த விருந்தாளிக்கு உண்மை விளங்கியது. திருமணம் பெருக்கும் சாமிகளது திருவருளை அடைய அவரும் முந்திக்கொண்டார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? முருகனுடைய தோழமை பூண்ட சாமிகள் முருகனுடைய திருமணத் தன்மையை அகிலம் அறியப் பரிமளிக்கச் செய்கின்றார். பாடுபட்டுத் தேடி வைத்திருக்கும் தெய்வீக சக்தியை ஆண்டு அனுபவித்து வரும் சாமிகளிடத்தில் உற்சாகம் பெருகவேண்டியதுதான்! தன் திருக் கரங்களைக் கொண்டு பக்தர்களின் கைகளைச் சாமிகள் தடவவேண்டியதுதான்! உடனே சாமிகள் திருக்கரம் தடவிய இடத்தில் தெய்வீக மணம் எழும்பிவிடும்! மணத்திலும் பலவகைகள். புனுகு மணம், அத்தர் மணம், ஜவ்வாது மணம், வெற்றிவேர் மணம். பேராசிரியர் தியாகராஜன் அவர்கள் கரங்களை வருட உடனே அங்கு அத்தர் மணம் பொங்க ஆரம்பித்துவிடும்; அப்துல் சத்தார் அவர்களின் கையைத் தடவ அவர் தயாரிக்கும் ஜவ்வாது ஊதுவத்திகளின் வாசனையை மிஞ்சுவதாக அமையும் சாமிகள் எழுப்பிய ஜவ்வாது வாசனை; குமாரி ஔவையின் கரத்தில் அவள் சூடுகின்ற வெற்றிவேர் பரிமளத்தை உண்டாக்கி விடுவர். சாமிகளது பேரன்பு ஊற்று சுரந்து ஓங்கும்போதெல்லாம் அவர்களது சொற்களும் கலை வாசனை கலந்து ஒலிக்க ஆரம்பிக்கும். "நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் என் மீது விசுவாசமுள்ளவர். விசுவாசத்தில் வாசம் அமைந்திருப்பது போன்று விசுவாசமுள்ள அவரிடத்திலும் வாசம் அமைந்திருப்பதில் ஆச்சரியப்படுவதற்கென்ன இருக்கின்றது!" என்று உரையாடி ஈரோடு திரு. நாராயணசாமி பிள்ளை அவர்களையும், மற்ற பக்தர்களையும் மகிழ்விப்பர் சாமிகள்.

சாமிகள் மக்களுக்கு ஆண்டவன் இருக்கின்றான் என்ற உண்மையை உணர்த்துவதற்காக ஆடிக்காட்டும் சித்து விளையாட்டுக்கள் கணக்கில் அடங்காதன. ஒன்றுமில்லாமலேயே தம் திருக்கரங் கொண்டு விபூதிப் பிரசாதமும், குங்குமம், மஞ்சள், அட்சதை அரிசி, கற்கண்டு, சர்க்கரை முதலியனவும் நினைத்த இடத்தில் அருள்கின்றார். மலர்களை வைத்துக்கொண்டும் வேறு பொருள்களை மலர்களை மாற்றி அளிக்கின்றார். திருமுருக. குகஸ்ரீ கிருபானந்தவாரியாருக்கு சாமிகள் மலர் கொடுக்க அம்மலர் ஒரு பெரிய சாத்துக்குடிப் பழமாக அவர்

கைகளில் விழுந்தது. பம்பாய், செம்பூர் புஷ்ப வியாபாரி திரு. S. ஆறுமுகம் மதருசில் பெரம்பூரில் சாமிகளுக்குப் பாதபூஜை நடந்ததும், அங்கு சாமிகள் பக்தர்களுக்கு அளித்த பூக்களில் ஒன்று ஒரு பக்தருக்கு அட்சதையாக மாறி விழுந்ததையும் மற்றொரு பூ மற்றொரு பக்தருக்கு இரட்டைப் பழமாக மாறி விழுந்ததையும், மூன்றாவது பூ கிறித்தவ குரு ஒருவருக்கு மஞ்சள் பொடியாக விழுந்ததையும் கூறி, 'இப்படி தினம் தினம் எத்தனையோ சம்பவங்கள்!' என்று ஆச்சரியப்படுகின்றார். டெல்லியில் ஒரு புஷ்பம் லட்டாக மாறியதைக் கண்டு வியந்து புகழ்கின்றார் லப்டினன் ஜெனரல் D. R. தாபர் அவர்கள். சென்னையில் தன் கரங்களில் சாமிகள் பூஜை மலர்களைத் தூவி அவைகளைத் தம் திருக்கரங்களால் மூடி 'முருகா' என்று தியானித்துத் தம் திருக்கரங்களை நீக்க, புட்பங்கள் இருந்த கைகளில் ஒரு தேங்காயே உருவாகிவிட்ட விந்தையை உவகையோடு விவரிக்கின்றார் சென்னை திரு. த. நா. செங்கல்வராயப் பிள்ளை.

உடுமலைப்பேட்டையில் முன்னாள் நீதிமன்ற நாசர் திரு. S. சொக்கலிங்கம் பிள்ளை, தம் கரங்களில் சாமிகள் சாமந்தி மலர்களை நிரப்பி 'முருகா முருகா' என்றுகூறி அவைகளை அப்போது மலர்ந்த முல்லைப் புஷ்பங்களாக்கிய அற்புதத்தையும், ஒரு பெண் குழந்தையின் வேண்டுகோளுக்கு இணங்கி சாமிகள் வேறு ஒரு செவ்வந்திப் பூவை எல்லோர் முன்னிலையிலும் இரண்டு மலர்களாக மாற்றிவிட்ட அற்புதத்தையும் புகழ்கின்றார். இப்படியே கோபிச்செட்டிப்பாளையத்தில் பூஜை புஷ்பங்களை சாமிகள் ஒரு வாழைப்பழ சீப்பாக மாற்றிய அதிசயத்தை ஆசிரியர் திரு K. R. தெய்வநாயகம் போற்றுகின்றார். பெங்களூரில் உதிரிப் புட்பங்களை ஒரு அழகிய மாலையாக ஒருக்கணத்தில் சாமிகள் மாற்றி அருளிய திருவிளையாடலை திரு. K. நாகராஜன் சொல்லி மகிழ்கின்றார். இவை மட்டுமா? புஷ்பம் குங்குமமாக மாறுகின்றது. இப்படிப் பல பொருள்களைப் புஷ்பத்தைக் கொண்டே மாற்றி அருளுகின்ற சாமிகள் சில சமயங்களில் ஒருபொருளை வைத்துக் கொண்டே மற்றொரு பொருளை உண்டாக்குகின்றார். தேவிப் பட்டணத்தில் சாமிகள் ஓர் அர்ச்சகரிடம் ஒருபிடி மண் கொடுக்க அது சர்க்கரையாக மாறியது. அதுவே அங்கிருந்தோருக்குப் பிரசாதமாக உதவியது. மற்றொரு சமயம் வேலூரிலிருந்து சாமிகளைத் தரிசிக்க வந்த நீரிழிவு வியாதியஸ்தர் ஒருவருக்கு சாமிகள் ஒருகை மணலைக் கொடுக்க அது சர்க்கரையாக மாறிவிட்டது. அதை அந்த நீரிழிவு வியாதியஸ்தரையே சாப்பிட வைத்தார் சாமிகள்! மதருசில் ஒரு பக்தருக்கு சாமிகள் ஆப்பிள் துண்டு கொடுக்க அது மஞ்சளாக மாறிய விந்தையை டிவிஷனல் எஞ்ஜினீர் திரு. G. சிவானந்தம் கூறி போற்றுகின்றார். இப்படி எவ்வளவோ அற்புதங்கள்!

சில சமயங்களில் இந்த அற்புத மணங்களை, தொட்டுதான் எழுப்ப முடியும் என்ற அவசியம் இல்லாது தொடாமலும் மணக்கச்

செய்யலாம் என்பதையும் சாமிகள் நிரூபித்துக் காண்பிப்பார். தொட்டுச்செய்வதை 'தொட்டால் மணக்கனும்' என்றும் தொடாமல் செல்லிச்செய்வதை 'சொன்னால் பலிக்கனும்' என்று அழகாக விளக்குவர். திருப்பதியில் 1965ல் சாமிகள் நேரு உயர்நிலைப்பள்ளியில் பிரசங்கம் நிகழ்த்திவிட்டுச் சில அற்புதங்கள் ஆடி அருளினர். அங்கு வந்திருந்த போலீஸ் அதிகாரி ஒருவர் கையில் சாமிகள் தன் திருவிரலால் தடவ தடவிய பாகத்திலிருந்து அத்தர் வாசனை கமகமவென்று வீச ஆரம்பித்தது. இதை ஆவலுடன் கவனித்துக் கொண்டிருந்த செய்தித்தாள் நிருபர் ஒருவரைக் கண்ட சாமிகள் "உங்கள் கையில் புனுகு வாசனை வரவழைக்கின்றேன்" என்றார். நிருபர் சாமிகளிடம் ஓடிவந்து தன் கைகளை நீட்ட அவசரம் அவசரமாக இருந்த இடத்தைவிட்டு எழ முயன்றார். "நீங்கள் இங்கு வரவேண்டிய அவசியமில்லை. 'தொட்டால் மணக்கனும்' என்பதைத் தொட்டுக் காட்டிவிட்டேன். நான் இப்போது செய்யப் போவது, 'சொன்னால் பலிக்கனும்' என்பது. நான் உங்கள் வலக்கையில் புனுகு வாசனை வரவழைக்கின்றேன். முகர்ந்து பாருங்கள்" என்று சாமிகள் கூற நிருபரும் கைகளை முகர்ந்து பார்த்தார். அவரது வலக்கையில் புனுகு மணம் பெருகிவிட்டது. அவர் மட்டுமென்ன, ஒரு கூட்டமே திரண்டுவிட்டது அவரைச்சுற்றி இந்த அற்புதமணத்தை முகர்ந்துபார்த்து அனுபவிக்க!

தொட்டால் மணக்க வைக்கும் செயல் கரத்தில் தடவிப் பரிமளம் உண்டாக்குவதோடு நின்றுவிடவில்லை. தண்ணீரையும் பன்னீராக ஆக்கக்கூடிய ஆற்றலையும் சாமிகளின் திருக்கரம் பெற்றிருக்கின்றது. தன்னோடு வந்திருக்கும் மதராஸ் திரு. கிருஷ்ணமூர்த்தியை அழைத்து திருப்பதி பாபநாச நீர்வீழ்ச்சியிலிருந்து விழும் தண்ணீரை ஒரு கூஜாவில் கொண்டுவரச் சொல்வார் சாமிகள். அந்தக் கூஜாவை வாங்கி அதிலுள்ள தண்ணீரைப் பக்தர்கள் மேல் தெளித்து ஆசீர்வதித்து அந்தத் தீர்த்தத்தை ஒவ்வொரு பக்தருக்கும் அருந்த அளிக்கும்போது தண்ணீர் பன்னீராகப் பரிமளிக்கும் விந்தையில் மனம் பறிகொடுப்பர் பக்தர்கள். அந்தக் கூஜாவிற்குச் சொந்தக்காரராகிய டாக்டர் திரு. T. V. அரங்கநாதனுடைய மனைவியை அழைத்து நிறைந்த தீர்த்தம் கொண்ட கூஜாவை பன்னீர் மணத்தோடு சாமிகள் உவந்து அளிப்பதும், அதில் உள்ள பன்னீருக்கு ஆசைப்பட்டு மற்ற பெண்மணிகளும் நான் முன்னே நீ முன்னே என்று முந்திக் கொள்வதும், கேட்டவர்களுக்கெல்லாம் சலிக்காமல் கொடுத்துவிட்டு எஞ்சியிருக்கும் தீர்த்தத்தையாவது ஊருக்கு எடுத்துச் செல்லலாம் என்று அவர்கள் ஆவலோடு கொஞ்சம் தீர்த்தத்திற்காகக் கூஜாவை உற்றுநோக்கும் காட்சியும் நமது குரு மகாராஜனின் அருளாடல் சிறப்பினை அல்லவா நமக்கு எடுத்துக்காட்டுகின்றது. இதுமட்டுமல்ல? சாமிகள் மனதுவைத்தால் நினைத்த

இடத்திலேயே பழனிப் பன்னீரையும் வரவழைக்க முடியும் என்பதை ஒருநாள் ஒரு பக்தரை வெறும் டம்ளரைப் பிடிக்கச் செய்து பழநிப் பன்னீர் வரவழைத்துக் கொடுத்தார். இப்படி அநேக சந்தர்ப்பங்களில் சாமிகள் அருவிநீருக்கும், கிணற்றுநீருக்கும், ஆற்றுநீருக்கும், கடல்நீருக்கும் அருமை மணம் எழுப்பி அவற்றை அற்புதப் பன்னீராக மாற்றிய விந்தையை பல பக்தர்கள் நேரில் கண்டு அனுபவித்திருக்கின்றார்கள்.

இப்படி மணம் எழுப்பும் விதங்களிலும் பலவிதம். தேக்கடியில் அடுப்புச் சாம்பலை எடுத்து சாமிகள் திரு. N. இராமச்சந்திரன் கைகளில் தேய்க்க புனுகு ஜவ்வாது மணம் தேய்த்த இடத்திலிருந்து கமகமவென்று வீச ஆரம்பித்தது. மண்ணைப் பரிசீலனை செய்யும் விஞ்ஞானி திரு. V. ரவிகுமார், B SC., (Ag) சேலத்தில் சாமிகளைக் கண்டபோது அவர் தொழிலை அறிந்துகொண்ட சாமிகள், "உங்கள் இஷ்டம்போல் எந்த இடத்தில் உள்ள மண்ணையாவது எடுத்து வாருங்கள்," என்றார், சாமிகள் திருவுளப்படி அவர் கொண்டுவந்த பிடிமண்ணைச் சாமிகள் தொடவில்லை. அதை அவரையே முகர்ந்து பார்க்கச் சொன்னார். அப்படி முகர்ந்தபோது திவ்வியமான தெய்வீக மணம் அம்மண்ணில் வீசியது. விஞ்ஞான அறிவுக்கு எட்டுமா இந்தத் தெய்வீகச் சக்தி? இதைத்தானே சாமிகள் சொல்லாமல் காட்டியருளினார்!

## சொன்னால் பலிக்கணும்

சுகந்த பரிமளம் குறிப்பிட்டவர் கரத்திலிருந்து சாமிகள் தொடாமலேயே சாமிகளுடைய அருள் வாக்கினாலேயே ஏற்படுவதையும் கண்டோம். 'உமது வலது கரத்தை முகர்ந்து பாருங்கள். வெற்றி வேர் வாசனை வீசும்" என்று சாமிகள் சொல்ல வேண்டியது தான்! சாமிகள் தடவவேண்டிய அவசியமேயில்லாது வெற்றி வேர் மணம் உடனே அந்த வலது கரத்திலிருந்து வீச ஆரம்பிக்கின்றது. இதையே சாமிகள் 'சொன்னால் பலிக்கணும்' என்று கூறி தொடாமலேயே மணத்தைப் பெருக்கிக் காட்டுவர்.

சாமிகள் சொல்லித்தான் பலிக்க வேணுமா? நினைத்தாலே போதாதா? பக்தர்கள் விரும்பிக் கேட்கின்ற பொருள்களைச் சாமிகள் விரும்பி அழைத்தால் அவை உடனே கிடைக்கின்றன. முருகா என்று சாமிகள் உள்ளம் குழைந்து அழைக்கவேண்டியது தான். முருகன் ஓடோடி வந்து சாமிகள் இட்டத்தைப் பூர்த்தி செய்கின்றான். திரு. மாயாண்டி தேவர் சாமிகளின் சக்தியைச் சோதிக்க எண்ணினார். "சாமிகளால் ஒரு பாம்பை வரவழைக்க முடியுமா" என்று சாமிகளையே கேட்டார். கேட்டவர் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய சாமிகள்

"வா, பாம்பே, வா, படமெடுத்து ஆடு" என்று கூறினர். இமைப் பொழுதில் புஸ் என்று ஒரு சப்தம்! படம் விரித்த கோலத்தில் தலை தூக்கிக்கொண்டு வந்தது ஒரு நாகப் பாம்பு. சாமிகள் முன்னே வந்து அது ஆடவும் தொடங்கியது. இதைக் கண்டவர்கள் பயப் படுவதைக் கண்ட சாமிகள் ஆடும் பாம்பை 'போ' என்று கூற பாம்பும் ஆட்டத்தை விட்டு இருந்த இடத்தை விட்டு நகர்ந்து மறைந்தது. சேலம் திரு. V. மாரி செட்டியார் சாமிகளை பன்றிமலையில் தரிசனம் செய்யச் சென்றிருந்தார். சாமிகள் பூஜை முடிந்தவுடன் அவரை அந்த அறையைச் சுற்றி பார்க்கும்படி சொல்லி விட்டு அவருடன் வெளியில் வந்து பூஜை அறையில் கதவை மூடி வீட்டு 'முருகா உன் பாதத்தண்டை இருக்கும் பாம்பை அனுப்பு' என்று கூறி கதவைத் திறந்ததும் அங்குள்ள முருகப் பெருமான் படத்திற்கு அருகில் மிகப் பெரிய கருநாகப் பாம்பு ஒன்று படமெடுத்து ஆடிற்று. 1950ஆம் ஆண்டின் திரு. சூசைமாணிக்கம் பிள்ளை மனை வியைப் பாம்பு கடித்தது. அதனால் அடிக்கடி மயக்கமும் மார்பு அடைப் பும் ஆகாரம் செல்லாமையும் ஏற்பட்டது. ஐந்து வருடங்கள் இப்படி அவதிப்பட்ட அம்மையைச் சாமிகளிடம் அழைத்து வந்தனர் சாமிகள் ஒரு டம்ளரில் தண்ணீர் கொண்டுவரச் செய்து, பாம்பு கடித்த விரலை தண்ணீருள் வைக்கும்படி சொல்லி, "விஷமே இறங்கு" என்றார். உடனே விஷம் இறங்கிவிட்டது.

பாம்பை மட்டுமா வா என்றவுடன் வருகின்றது, போ என்றவுடன் போகின்றது? விஷம் மட்டுமா இறங்கு என்றவுடன் இறங்குகின்றது? சாமிகள் 'விழு' என்று சொல்லவேண்டியது தான! வாட்ட சாட்ட மான ஆரோக்ய மனிதனே அடியற்ற மரம் போல் விழுந்து சவமாகக் கிடக்கின்றான்! திருச்செந்தூரில் கோயில் பட்டர் ஒருவரை அழைத் தார் சாமிகள். அவரைப் பார்த்து 'விழு' என்று சாமிகள் கூற அவர் அந்தக் கணமே கீழே விழ அவரை முன் கூட்டி தயார் செய் திருந்த இருவர் பிடித்து தரையில் படுக்க வைத்தனர். அவர் சுய உணர்வு அற்று வெறும் கட்டை போலக் கிடந்தார். சாமிகளுடன் சென்றிருந்த தூத்துக்குடி டாக்டர் ரெங்கசாமி பிள்ளையும் பட்டரைப் பரிசோதித்துப் பார்க்க பட்டர் உயிருடன் இருக்கிறாரா என்பதே சந்தேகப்படும்படி இருந்தது. சிறிது நேரத்திற்குப்பின் சாமிகள் பட்டரைக் கூப்பிட்டார். துயில் நீங்கி எழுபவர் போன்று பட்டரும் எழுந்தார். மற்றொரு சமயம் சாமிகள் திரு. C. நடராஜன் M. SC. அவர்களை ஒரு தாமரை புஷ்பத்தை விருதுநகரில் அவர் வீட்டில் உள்ள பூஜை அறைக்குள் தூக்கி வீசச் சொனனார். சாமிகள் பூஜை அறைக்கு வெளியே நின்றுகொண்டு "முருகா அந்த புஷ்பத்தைக் கொடு" என்றார். அந்தத் தாமரைப்பூ ஒரு சிட்டுக் குருவி போல் பறந்து வந்து சாமிகள் கரத்தில் விழுந்தது.

சாமிகள் ஏன் இப்படி யெல்லாம் செய்யவேண்டும்! மனித அறிவுக்கும் எட்டாத ஆத்ம பலத்தை மக்களுக்கு உணர்த்தி இறை திருவிளையாடல்களால் பக்தியைப் பரப்ப என்பதை சொல்லவும் வேண்டுமோ!

## விட்டால் பறக்கணும்

சாமிகள் தொட்டால் மணக்கின்றது; சாமிகள் சொன்னால் பலிக்கின்றது; இப்பொழுது சாமிகள் கட்டளையிட்டால் பொருள்கள் பறந்துவரும் விந்தையைக் காண்போம். சாமிகள் கட்டளை இடுவதா? அவர் யாருக்குக் கட்டளை இடுகின்றார் என்ற கேள்வியும் எழுவது இயற்கையே. அவர் இடுகின்ற கட்டளைகளும் சாதாரணமாக மனிதர்களால் பூர்த்தி செய்யமுடியாத கட்டளைகள். அப்படியென்றால் இந்தக் கட்டளைகளை யார் நிறைவேற்றி வைக்கின்றார்? முருகனே நிறைவேற்றி வைக்கின்றான் என்று சாமிகளே உளங்கனிந்து உரைப்பர். முருகனும் சாமிகளும் அருமையுடன் பழகுகின்ற இனிமையைத்தான், 'விட்டால் பறக்க' வைக்கும் செயல்கள் விளக்குகின்றன. முருகனே சாமிகளுடைய எண்ணங்களைப் பூர்த்தி செய்கின்றான். முருகனுடைய தோழமைப் பேரன்பே சாமிகள் இஷ்டப்படும் பொருள்களை இஷ்டப்படும் நேரங்களில் சாமிகள் இஷ்டப்படி பறந்துவந்து சேரும்படி செய்கின்றது. 'நான் முருகனுக்கு டவாலி கட்டியவன்' என்று சாமிகள் அடிக்கடி பேருவகையுடன் பெருமிதத்துடன் கூறுவதும் உற்று நோக்கத்தக்கது. முருகனும் சாமிகளும் பழகுகின்ற அந்த அன்யோன்ய உறவு முருகனையே இட்ட வேலையை உடனே செய்துமுடிக்க உதவுகின்றது என்பதைத்தானே சாமிகள் கூற்று விளக்குகின்றது.

பன்றிமலை திரு. சிவமுருகேச மன்றாடியார் தன் மனைவிக்கு உடல் நிலை சரியில்லாததால் சாமிகளிடம் விபூதி வாங்கச் சென்றார். "நீங்களே முருகனைக் கேளுங்கள்" என்று சாமிகள் உரைத்தபடியே அவர் 'முருகா விபூதி கொடு' என்றார். உடனே சுமார் இருபதடிக்கு அப்பாலிருக்கும் பூஜை ரூமிலிருந்து ஒரு விபூதிப் பொட்டலம் ஒரு பறவைபோல் பறந்து மன்றாடியார் கைகளில் விழுந்தது. தூத்துக்குடி டாக்டர் திரு. S. ரங்கசாமிப் பிள்ளை மதுரைக்கு சென்றிருந்த போது பூஜை அறையில் சாமிகளுடைய திருவுருவப்படத்தை வைத்திருந்ததைச் சாமிகளே பூஜை அறைக்கதவுகளை மூடிவிட்டு வெளியே நின்றுகொண்டு தண்டபாணியின் திருப்பெயரைச் சொல்லி "கொண்டு வா" என்றார். கதவின் இடுக்கின் வழியே பறந்துவந்த திருப்படத்தை உளமுவந்து டாக்டர் அவர்களுக்கே சாமிகள் அளித்தனர். இப்படியே டெல்லியில் ஒரு ஆப்பிள் பழம் ஒரு பையில்

சாமிகள் விருப்பப்படி பறந்துவந்து சேர்ந்ததும், விருதுநகரில் ஒரு தாமரைப் புட்பம் குருவிபோன்று பறந்து வந்ததும் நம் ஞாபகத்தில் இருக்கின்றன. இதுபோன்றே திருத்தணியில் சாமிகள் ஒரு மராத்தியருக்கு ஒரு சுலோகம் எழுதிய காகிதத்தை பூஜை அறையிலிருந்து பறந்துவரச் செய்த அற்புதத்தை மதரூஸ் திரு. P. மருதைப் பிள்ளை உரைக்கின்றார். "எந்த பாஷை தெரிந்த ஜனங்கள் வந்தாலும் அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு அவரவர் பாஷையிலேயே ஸ்ரீ குருநாதர் வெள்ளைக்காகிதத்தில் பேனாவை சுருட்டி பூஜை அறையிலே வைத்துவிட்டு ஸ்ரீ குருநாதரும் வெளியில் வந்து கதவை மூடிவிட்டு 'முருகா' என்று சொல்லி கதவை ஒருகை நுழையும் அளவுக்கு திறந்து கையை உள்ளே நீட்டினால் உள்ளே வைத்த காகிதத்தில் பதில் எழுதி அது தானாகவே ஸ்ரீ குருநாதர் கைக்கு பறந்துவரும். அதை உரியவர்களுக்குக் கொடுத்து விடுவார்" என்று பம்பாய் மடுங்கா N. S. அப்பாதுரை அய்யர் அவர்கள் சாமிகள் செயலைப் போற்றுகின்றார்.

பல பொருள்களைச் சாமிகள் இஷ்டப்படி பறந்தோடி வரச்செய்ய திருமுருகனே பறந்தோடி வருகின்றதைச் சாமிகளே அடிக்கடி கூறுவதையும் கேட்கலாம். திருச்செந்தூரில் எக்சைஸ் இன்ஸ்பெக்டர் திரு. இராமராவ் அவர்களிடம் ஒரு மாலையைக் கொடுத்து அதை வீசி எறியச் சொன்னார் சாமிகள். அந்த மாலை அடுத்த உள் அறைக்குள் ஒரு கொப்பறையில் விழுந்தது.

சாமிகள் : அந்த மாலையை இங்கு வரச்செய்ய முடியுமா?

ராவ் : சாமிகள் சொன்னால் வரும்.

சாமிகள் : முருகா, அந்த மாலையைக் கொண்டு வா என்று நீங்கள் கேளுங்கள், வரும்.

ராவ் அவர்களும் சாமிகள் கூறியபடியே கேட்க, மாலை பறந்து வந்து சேர்ந்தது. அப்பொழுது சாமிகள் 'முருகனை வழிபட்டால் நாம் ஏவியதைச் செய்யும் அளவிற்கு நமக்கு அன்பு செய்பவன்" என்று முருகன் அருளை வியந்து பாராட்டினார். தூத்துக்குடியில் பிரமுகர் ராம்ஜி என்பவர் சாமிகளைக் காண வந்தார். பின்னர் ராம்ஜியின் பவுண்டன் பேனாவை வாங்கி ஒரு அறைக்குள் மூடி வைக்கும்படி கூறி சாமிகள் வெளியே இருந்தவாறு 'முருகா' என்று ராம்ஜியை கூறச்செய்து கதவு இடுக்கு வழியாக தனது கையை நீட்ட ராம்ஜியின் பேனா சாமிகளின் கைகளுக்குப் பறந்து வந்தது. இதைக் கண்டு பேராச்சரியப்பட்ட ராம்ஜி கேட்ட கேள்வியும் சாமிகள் அதற்கு அளித்த நகைச்சுவை பதிலும் முருகனிடம் சாமிகள் கொண்டுள்ள அன்யோன்ய உறவைத்தான் விளக்க உதவுகின்றன.

ராம்ஜி: அறைக்குள் யாருமே கிடையாது. எப்படி பேறு தங்கள் கைக்கு வருகின்றது?

சாமிகள்: முருகனும் நானும் இன்னும் பலர் முன்னிலையில் நேரில் பேசும் பக்குவத்தை அடையவில்லை.

## நட்டால் முளைக்கணும்

"ஐந்தறிவுள்ள பிராணிகளாலேயே சில அற்புதங்களைச் செய்ய முடிகின்றது. ஆமை நினைத்தாலே போதும்: அதன் முட்டையிலிருந்து குஞ்சு பொறித்துவிடும். மீன் பார்த்தாலே போதும் அதன் முட்டையிலிருந்து குஞ்சு பொறித்துவிடும். சேவல்கூடத் தேவையில்லை, கோழி முட்டையிடுவதற்கு! ஆறறிவு படைத்த மனிதனுலா பேரற்புதங்களைச் செய்யமுடியாது? அதற்கும் யோகம் வேண்டும். யோகம் செய்வதற்கும் யோகம் வேண்டும், வில்லில் சொல்லை வைத்து அடித்தால் பலிக்காதா? நட்டால் முளைக்காதா? காற்றுகிய வில்லில் நமசிவாய மந்திரச் சொல்லை வைத்து அடித்தால் எந்தக் காரியம்தான் பலிக்காமல் இருக்கும்? தாரக மந்திரத்தை நட்டுவிட்டால், உபயோகப்படுத்திவிட்டால் எந்தக் காரியங்கள்தான் சித்தியாகாமல் இருக்கும்? நமசிவாய சாமிகளால் ஆகாதன ஒன்றில்லை. அவர்களால் தொட்டால் மணக்கவைக்க முடியும், சொன்னுல் பலிக்கவைக்க முடியும், விட்டால் பறக்கவைக்க முடியும், நட்டால் முளைக்கவைக்க முடியும்." இப்படி அழகாகப் பேசுகின்ற நமது சாமிகளே ஒரு நமசிவாய சாமிகள்தானே! அவராலா நட்டால் முளைக்க வைக்காமல் இருக்கமுடியும்? அவர் ஆடுகின்ற அற்புதங்களெல்லாம் இப்பேருண்மையைத்தானே விளக்க உதவுகின்றன.

சாமிகள் அருள்சுரந்து பஞ்சாட்சரம் அளிப்பது மங்களகரமான காரியங்களைக் கூட்டுவிக்கின்றது, திருமணங்களை நடத்தி வைக்கின்றது, மக்கட்பேறு அளிக்கின்றது, மக்கட்கு நற்பலன்களையும் செல்வத்தையும், தீர்ச்காயுளையும், அருள்கின்றது, நடக்காதனவற்றை நடத்திக் காட்டுகின்றது, கேளாதனவற்றை அற்புதமாகக் காட்டிவிடுகின்றது, பைத்தியங்களைக் குணப்படுத்துகின்றது, பில்லி சூனியம் கோளாறுகளை அகற்றுகின்றது, தீராத தலைவலிகளையும் உடல் பிணிகளையும் போக்குகின்றது. இவ்வளவு தானு? பேசாதவன் பேசுகின்றுன்: பார்க்காதவன் பரர்க்கின்றுன்: கேளாதவன் கேட்கின்றுன்: இதுமட்டுமா? பிணமாக இருந்தவரும் உயிர்பெற்று மறுபடியும் மாந்தராக வாழ ஆரம்பிக்கின்றுர். பாம்புக்கடியினுல் இறந்தவரை மட்டுமா சாமிகள் உயிர்ப்பித்தார்? மாரடைப்பால் வீழ்ந்தவருக்கும் உயிர்ஊட்டிப் பிழைக்கவைக்கும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை

சாமிகளின் பேரருளை எப்படித்தான் போற்றுவது! சாமிகள் ஒரு சித்தர்: சாமிகள் ஒரு மகான்: சாமிகள் ஒரு ஜீவன்முக்தர்: சாமிகள் ஒரு நடமாடும் தெய்வம் — இப்படியே அவர் புகழைப் போற்றிப் பாடிக் கொண்டே செல்லலாம்.

### நாத்திகருக்கும் நற்பாடம்

சாமிகளுடைய அருள் விளையாட்டு நாத்திகத்தையும் தலையெடுக்க விடாதபடி தடுக்க வாய்த்த ஒரு நல்லமருந்தாகவும் உதவுகின்றது. "பயிர் வந்தவுடனேயே களையும் உண்டாகிவிடும், பக்குவப் பருவத்தில் அக்களைகளைப் பிடுங்கி உரமாகப் பயிருக்கே பயன்படுத்திக் கொள்பவரல்லவா அறிவுமிக்க உழவர். அந்த அறிவுமிக்க உழவர்தாம் பெருமகான்கள். அவர்கள் வளர்த்து வருவது தான் இறையின் பேரருள் என்ற பயிர். அப்பயிரோடு தோன்றுவதுதான் களையெனும் நாத்திகம். களையையே பிடுங்கிப் பயிருக்கு உரமாகப் பயன்படுத்துவது போன்றே, நாத்திகர்களையும் நல்லவர்களாகத்திருப்பி ஆத்திகர்களாகப் பயன்பெற வைக்கலாம்" இப்படிச் சொல்லாடல் புரிகின்ற சாமிகள் 'நட்டால் முளைக்கணும்' என்று சொல்லி ஆடுகின்ற அற்புதங்களுள் நாத்திகர்களையும் ஆஸ்திகராக்கும் விந்தையைச் சற்றுக் கவனிப்போம்.

"கடவுள் எங்கும் இலார்" என்று உண்மையாகவே நம்பி அப்படிக் கூறுபவர்களையும் "கடவுள் இங்கு உளார்" என்று நம்பவைத்து உள்ளதை உரைக்க வைக்கும் சாமிகளின் திறன்தான் என்னே! சாமிகள் அற்புதம் ஆடிஅருளுவதற்கு ஒரு காரணமும் கடவுள் நம்பிக்கை ஏற்படுத்துவதற்காகவல்லவா? சுவாமி விவேகானந்தர் காவிஉடை தரித்துத் தென்னிந்தியாவில் ஒரு சமயம் ரெயில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவர் அப்போது உலகப் பிரசித்தியடையாதிருந்த காலம். அவரோடு இருந்த இரு அயல் நாட்டினர் "இந்நாடு முன்னுக்கு வராமல் இருப்பதற்கும், இந்நாட்டு மக்கள் தன்னம்பிக்கை இல்லாமல் இருப்பதற்கும் காரணம் இந்தச் சோம்பேறி சாமியார்கள்தான்" என்று விவேகாநந்தரைப் பார்த்து ஆங்கிலத்தில் நிந்தைமொழி பேசினர். சேலம் சந்திப்பில் ரெயில் நிலைய அதிகாரி விவேகாநந்தருக்கு வணக்கம் தெரிவித்து அவரிடம் ஆங்கிலத்தில் உரையாடுவதைக் கண்டபோது தான் விவேகாநந்தருக்கும் ஆங்கிலம் தெரியும் என்பது அயல்நாட்டு பிரயாணிகளுக்குத் தெரியவந்தது. ரெயில் புறப்பட்டதும் அவர்கள் "சாமியாரே, உமக்குத்தான் ஆங்கிலம் தெரிகின்றதே! நாங்கள் பேசிக்கொண்டு வந்தபோது நீர் ஏன் மறுத்து ஒன்றும் பேசவில்லை" என்று விவேகாநந்தரைக் கேட்க, "முட்டாள்களை நான் சந்திப்பது இது முதல் தடவை அல்ல" என்று அமைதியாகவும், சுருக்கமாகவும்

பதிலளித்ததை நாம் படித்திருக்கின்றோம். சாமிகளோ தெய்வ நிந்தனை செய்பவர் தம்மிடம் வாக்குவாதம் செய்ய முன்வந்தாலும் அவர்கள் மனத்தை மாற்றவல்ல செயல்களைப் புரிந்து "என்கடன் இறை அருளை உலகம் உய்யக் காட்டுவதே" என்று அற்புதப் பணியில் இறங்கிவிடுவர்.

"ஸ்ரீ சாமிகள் எப்பொழுதும் உபதேசித்துவரும் இகபர சுகத்திற்கு வேண்டிய சாதனங்கள் பலவற்றுள் தற்கால நாகரிக நிலையில் கடவுளே இல்லை என்ற நாத்திக மனப்பான்மை உடையோர்களை அறவே மாற்றி தமது தீய எண்ணத்தை அடியோடு விட்டுவிடும்படியாகச் செய்வது ஒன்று...வக்ரபுத்தி யுடையவர்களைத் தகுந்த சான்றுகள் மூலம் மனமாற்றம் அடையச் செய்வதில் சாமிகள் ஒரு நிபுணர் என்றே சொல்ல வேண்டும்" என்று முன்னாள் டெபுடி கலெக்டர் திரு. A. V. சுப்பையா பிள்ளை சொல்கின்றார். திருச்சி நாகைய நல்லூர் திரு. N. S. சுந்தரம் முதலில் சாமிகளை அவ்வளவாக நம்பவில்லை. ஏதோ எல்லோரும் போகின்றார்களே என்று சேலத்தில் திரு. பார்த்தசாரதி வீட்டில் தங்கி இருந்த சாமிகளைச் காணச் சென்றார். முதல்நாள் சாமிகளிடம் ஒரு கேள்வி கேட்டார். மறுநாளும் தன் மனைவியின் மூலம் அதே கேள்வியைச் சாமிகளிடம் கேட்டார். சாமிகள் இரண்டு நாட்களிலும் அளித்தபதில் ஒன்றாகவே இருந்தது. சந்தேகம் தெளியாத இவரை அடுத்தநாள் சாமிகள் அழைத்து வரும்படி கூறினார்." என்னை நம்பாமல் இருக்கின்றீர், இந்த காலத்தில் இது சகஜந்தான். அநேகம் பேர்கள் கிளம்பி இருக்கிறார்கள். இருந்தாலும் ஒருசில பேர் இருக்கின்றார்கள். எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ, ஆகையால் சிலரையாவது நம்புங்கள்" என்று கூறினர் சாமிகள். இவருக்குக் கல்யாணமாகிப் பதினேழு வருடங்கள் ஆகியும் சந்தான பாக்யம் ஏற்படவில்லை. சாமிகள் அருளால் ஒன்பது மஞ்சள்கள் பெற்றுக்கொண்ட இவர் மனைவி கடைசி மஞ்சள் சாமிகள் கூறியபடி பூசி முடிப்பதற்குள் ஒரு பெண் குழந்தைக்குத் தாயாரானாள். சந்தானம் அருளிய சாமிகளிடம் திரு. சுந்தரத்திற்கு நம்பிக்கை ஏற்பட்டதை சொல்லவும் வேண்டுமோ? திரு. சுந்தரம் சந்தேகம் தெளிய கூறிய சாமிகளின் திருவாக்கைக் கவனித்துப் பார்ப்போமேயாகில் விவேகானந்தரிடம் தர்க்கமாட முனைந்த அயல்நாட்டு பிரயாணிகளின் கேள்விக்கும் இதில் பதில் அமைந்திருப்பதை அன்பர்கள் அறிந்து இன்புறலாம். பலப் போலிச் சாமியார்கள் புறப்பட்டிருக்கும் இக்காலத்தில் உண்மையில் சாமி யார்? என்று கண்டுபிடிப்பது கடினம்தான். உண்மையான விவேகானந்தரைப் போன்ற துறவற சாமிகளையும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளைப் போன்ற இல்லற ஞானிகளையும் கண்டுபிடிப்பது அவ்வளவு எளிது அல்லதான்!

சாமிகள் தெய்வ நம்பிக்கையில்லாதவர்களைத் தெய்வ வழியில் திருப்பப் பலவிதமான அற்புதங்கள் ஆடி வருகின்றார். சாமிகளது அற்புத சாதனைகளால் விஞ்ஞானத்திற்கும், பகுத்தறிவிற்கும் எட்டாத சக்தி ஒன்று உண்டு என்பதை - கடவுள் உண்டு என்ற உண்மையைப் பலரை அறிய வைத்துள்ளார். சாமிகளுடைய படத்தைப் பூஜை செய்வதால் பலன் என்ன என்று கேட்ட நாத்திக அன்பரிடமே தன் சொந்தப் படத்தையே பறந்துவரச் செய்து, அவரைக் கடவுள் உண்டு என்று நம்பவைத்த நிகழ்ச்சியை நாம் மறந்துவிடவில்லை. தேவாலயம் எனும் மாதப் பத்திரிகையின் ஆசிரியருடன் ஒரு நாத்திகர் சாமிகளைக் காணச் சென்றார். சாமிகள் அவரை 'ஆண்டவன் உண்டு என்பதை ஒப்புக்கொள்கிறீரா' என்று கேட்க அவர் மௌனம் சாதித்தார். சாமிகள் திரும்பவும், "மனித சக்திக்கும், விஞ்ஞானத்திற்கும் அப்பாற்பட்ட ஒரு தனிப்பெரும் சக்தி இயங்குகின்றது என்பதையாவது ஒப்புக்கொள்கிறீரா" என்று அவரைத் தொடர்ந்து கேட்டார். முன்னே மௌனம் சாதித்த தோழர், "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற உண்மையை ஒப்புக் கொள்பவர் என்றும், ஆனால் ஆண்டவன் பெயரால் நடக்கும் அக்கிரமங்களைத் தான் வெறுப்பதாகவும் பதிலளித்தார். அதற்காக ஆண்டவனை வெறுப்பது நல்லதல்ல என்பதைக் கூறிச் சாமிகள் அவரிடம் முருகா என்றுகூறி ஒரு மலரைக் கொடுத்தார். சாமிகள் அளித்த மலர் அவர் கைகளில் தேங்காயாக மாறியதைக் கண்டு வியப்புற்ற தோழர் மெய்மறந்து சாமிகளை வணங்கி விபூதி குங்குமப் பிரசாதம் பெற்று, நெற்றியில் அணிந்து, சாமிகள் கொடுத்த தேங்காயைச் சாமிகள் சொற்படியே மலைக்கோட்டை மாணிக்கவிநாயகர் ஆலயத்தில் உடைக்கப் புறப்பட்டு விட்டார். மதுரை தேவாரத்தில் திரு. C. R. C. ஒன்னுசாமி என்பவர் வீட்டில் ஒரு நாத்திகர் சாமிகளைப் பார்க்க வந்திருந்தார். அவர் பக்தி சிரத்தையோடு வரவில்லை, வேடிக்கைப் பார்க்க வந்தவரென்பதை அறிந்து கொண்ட சாமிகள் ஒரு தேள் உருவத்தை ஒரு காகிதத்தில் வரைந்து அதை அவரிடம் காண்பித்து, "தேள் உருவத்தின்மேல் கை வைத்தால் தேள் கடிக்குமா? அப்படிக் கடித்தால் சாமி உண்டு என்று நம்புவீர்களா?" என்று கேட்டார். சரி என்றார் நாத்திக அன்பர். உடனே அவர் கையைப் படத்தில் கொடுக்கு இருக்கும் இடத்தில் வைக்க, பேப்பரில் உள்ள தேள் கொட்டிவிட்டது! அடுத்தாற்போல் சாமிகள் ஏறிய விஷத்தை இறக்கி அவரை ஆத்திக நண்பராக மாற்றி விட்டார். இப்படியே வேறொரு நாத்திகரைப் பேப்பரில் வரைந்த பாம்பின் உருவத்தைக் கொண்டே கடிக்கவைத்து விஷம் இறக்கிச் சாமிகள் ஆடிய அற்புதமும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

சாமிகள் ஒருநாள் மதுரையில் ஒரு பக்தர் வீட்டில் அமர்ந்து அருளுரையாடிக் கொண்டிருந்தார். அங்கு ஒருவர் சாமிகளைப்

பரிசோதிக்க வந்தவர் ஒன்றும் கூறமுடியாது சாமிகள் சொற்களி லேயே கவனம் ஊன்றி அமர்ந்திருந்தார். சாமிகள் சித்திகளைப் பற்றிப் பேசி வந்தவர், "நான் தொட்டால் மணக்கும், சொன்னால் பலிக்கும், விட்டால் பறக்கும், நட்டால் விளையும். இவைமட்டுமல்ல. நான் பார்த்தால் நடக்கும்" என்றும் உற்சாகத்தோடு கூறி "என்னைப் பரிசோதிக்க யாரும் வருகின்றீர்களா" என்றும் பேசி விட்டார். சாமிகள் சாதாரணமாக இப்படி அறைகூவி சவால் விடுப்பது இல்லை. பரிசோதிக்க வேண்டும் என்று உளம் குமுறு கின்ற நாத்திக அன்பருக்கும் வாய்விட்டுப் பேச தைரியம் எழவில்லை. நான் ஒருவரைக் கூப்பிடுகிறேன் என்று சாமிகள் உரைத்துப் பரி சோதிக்க வந்தவரைக் கூர்ந்து கவனித்து "என்னைப் பாருங்கள்" என்று சொல்ல சாமிகளைப்பார்த்த நாத்திகர் அடுத்த கணத்திலேயே சவம்போல் கீழே சாய்ந்துவிட்டார். தரையில் படுக்கவைத்திருந்த அவரின் உடம்பை இரண்டு டாக்டர்கள் பரிசோதித்துப் பார்த்துக் கிலியுற்றனர்; காரணம் படுத்திருந்தவரிடம் பேச்சு மூச்சு இல்லை, அந்த உடம்பில் உயிர் இல்லை. சாமிகள் மிகுந்த அமைதியுடன், "அவர் இப்பொழுது எங்கெல்லாம் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றா ரென்பது உங்களுக்கு எப்படித் தெரியும். அவர் பெயரைச் சொல்லி அழையுங்கள். அவரே உங்களுக்குத் தன் பேரின்ப அனுபவத்தைச் சொல்வார்" என்றார். வந்திருந்தவர் பெயரும் யாருக்கும் தெரி யாது. சாமிகளே "ஷண்முகம்" என்று படுத்திருத்தவரை அழைக்க ஷண்முகம் என்ற பெயர் கொண்ட நண்பர் எழுந்தார். பக்தி பரவசம் முகத்தில் பொங்க, "நான் கொடுத்து வைத்தவன்" என்று கூறிக்கொண்டே சாமிகளுடைய பாதங்களில் விழுந்து வணங்கினார்; "நான் சாமிகளைக் கண்டது எனது புண்ணியம். இந்த நாளை என்னால் மறக்கமுடியாது. சோதிக்க வந்த எனக்கு ஜோதி இன்ப அனுபவங்களை அல்லவா சாமிகள் காட்டியருளினார். ஆண்டவன் உண்டு, ஆண்டவன் அருளுண்டு, பன்றிமலை ஆண்ட வன் அருள் உண்டு" என்று தெய்வத்தையும் சாமிகளையும் போற்றவே ஆரம்பித்துவிட்டார் ஷண்முகம் அவர்கள்.

எதை அடைய விரும்புகின்றான் என்பதிலிருந்து ஒரு மனித னுடைய உண்மைத்தரத்தை அளந்துவிடமுடியும்என்கின்றார் மார்கஸ் அரீலியஸ் (The true worth of man is to be measured by The Object he pursues—Marcus Aerelius) சாமிகள் தெய்வ அமுதைத் தான் அருந்தி அனுபவிப்பதோடல்லாமல் மற்றவர்களுக்கும் அதைக் கொடுத்து அனுபவிக்கச் செய்வதே தம் பெரு நோக்காகக் கொண் டுள்ளார். இம்மானிடப் பிறவியைப் பெற்றுள்ளவர்கள் நல்வழியில் சென்று அன்பமுதை அனுபவித்து இறையருளை அடைய வேண்டும் என்பதே சாமிகளது நோக்கம். பேபர் கூறும் உண்மையைத்தான் சாமிகளும் மக்களிடையே வற்புறுத்துகின்றார். "கடவுள் நமது

பக்கத்தில் இருக்கின்றார் என்று சொன்னால் கூடக் கடவுளைப் பிரித்துத் தான் பேசுகின்றோம். அவன் நம்முள் அல்லவா இருக்கின்றான்'' என்று கூறினார் பேரறிஞர் பேபர் என்பவர் (God is never so far as even to be near; he is within—Faber) இதையே இரத்தின சுருக்கமாக சாமிகள் 'நாம் சிவம்' என்று நமசிவாய மந்திரத்தை விளக்குவது போன்று உரைப்பர். கடவுள் அருளாளன் என்பதை யும் சாமிகள் அடிக்கடி அறிவுறுத்துவர். "கடவுள் உனக்கு எல்லா மாக வாய்க்கின்றான்: நீ பசியாயிருக்கும்போது உனக்கு உணவா கின்றான்; உனக்கு தாகமாக இருக்கும்போது தண்ணீராகின்றான்; இருட்டாயிருந்தால் வெளிச்சமாகின்றான்; ஆடையில்லாதபோது அமரத்வ ஆடையுமாகின்றான்'' என்று அகஸ்டின் சாமிகள் கூறு கின்றார். (God is all the Thee; if Thou be hungry, He is bread; if Thirsty He is water; if darkness He is light; if naked He is a robe of immortality — Saint Augustine.) "நானிருக்க பயமேன் என்றல்லவா முருகன் தன் அருள் கரத்தைக் காண்பிக்கின்றான். அவன் நான் எங்கே நினைப்பினும் என்முன் வந்து தோன்று வனே'' என்றல்லவா சாமிகள் அருள் உரையாடல் அடிக்கடி செய்து வருகின்றார். இத்தகைய இறைத் தன்மையை விளக்க வைக்க, இத்தகைய இறைத்தன்மையில் மக்களின் நம்பிக்கையை ஊட்ட, சில அறிகுறிகளும் தேவைப்படுகின்றன, அற்புதங்களும் தேவைப்படுகின்றன. (Except ye see signs and wonders ye will not believe — St. John IV) அவைகளைத்தான் சாமிகள் தன் சித்து அற் புதங்களால் உலகில் காட்டி மக்களை நன்னெறியில் ஊக்குவிக் கின்றார். மக்களுக்குத் தெய்வ நம்பிக்கை ஊட்டி வருகின்றார்.

"தெய்வம் தெளிமின்; தெளிந்தோர்ப் பேணுமின்'' என்றல் லவா சிலப்பதிகாரம் சாற்றுகின்றது. 'தெய்வம் தெளிமின்' என்ப தைத் தான் சாமிகள் வற்புறுத்தி வருகின்றார்: 'தெளிந்தோர்ப் பேணு மின்' என்றல்லவா நாம் அவரை போற்ற வேண்டும்.

## மோதிரத்தால் அற்புதம்:

"தாரமாகிய பொன்னித் தண்டுறை யாடிவிழுத்தும்
நீரினின்றடி போற்றி நின்மலா கொள்ளெனவாங்கே
ஆரம்பூண்ட எம் ஆனைக்காவுடை யாதியை நாளும்
ஈரமுள்ளவர் நாளும் அவர் எம்மையு மாளுடையாரே.

இலக்கிய உலகில் மோதிரத்திற்கு, அது உடலில் அலங்கரிக் கும் சிறப்பான இடத்தைப் போன்று, ஒரு முக்கியமான இடம் உண்டு. குட்டுப்பட்டாலும் மோதிரக்கையால் குட்டுப்படவேண் டும் என்று கூடச் சொல்லும் அளவுக்கு அதன் மகத்துவம்

உயர்ந்து விட்டது. காளிதாசனும் ஷேக்ஸ்பியரும் அதை நடுபீட மாக வைத்துக்கொண்டு அதன்மீது பம்பரம்போல் ஆட்டிவைத்து விட்டனர். அவர்கள் உருவாக்கிய இலக்கிய படைப்புக்களை. காளி தாசன் இயற்றிய சாகுந்தலந்தில் மோதிரத்தை இழந்த சகுந்தலா தன் காதல் மன்னனின் காதலை இழந்தாள்; மோதிரம் மறுபடி யும் கிடைக்க மன்னனையும் அவன் காதலையும் மறுபடியும் அடை கின்ருன். ஷேக்ஸ்பியர் எழுதிய வெனிஸ் நகரத்து வர்த்தகன் என்ற நாடகத்தில் பசானியோ தன் மனத்துக்குகந்த மனைவி அவனி டம் எப்பொழுதும் விட்டுப்பிரியாதபடி கொடுத்த மோதிரத்தை, தன் ஆருயிர் நண்பனின் உயிரைக்காத்த வழக்கறிஞருக்கு, அந்த வழக்கறிஞனே மாறுவேடத்தில் வந்த தன்மனைவியே என்பதை அறியாது கொடுத்துவிட்டுப் படாதபாடுபடும் கேலிக்கூத்தையும் நாம் மறந்துவிட முடியுமா? சுருங்கக் கூறினல் மோதிரம் என்ற வுடனேயே மணமும் மணமிகுந்த செயல்களும் புயலும் புயலுக்குப் பின் அமைதியும் மோதிரமும் கொண்டுவரும் என்பது வெளிப்படை.

இவ்வளவு பீடிகைகளும் எதற்காக என்று எண்ணுகிறீர்களா? சாமிகளிடம் நெருங்கிப் பழகுகிறவர்களால் சாமிகள் மோதிரத்தை வைத்துக் கொண்டு சாதிக்கும் அற்புத நிகழ்ச்சிகளை மறந்துவிட முடியாது "விட்டால் பறக்கணும்" என்ற முறையிலும் சாமிகள் டில்லியில் டைம்ஸ ஆப் இந்தியா சர்குலேஷன் மானேஜர் திரு T.N.M. லிங்கன் மோதிரத்தைப் பூஜை அறைக்குள் வைத்து, முருகன் நாமத் தைக் கூறி அந்த மோதிரத்தைப் பூஜை அறையிலிருந்து ஒரு சிட்டுக் குருவி போலப் பறந்து வரச்செய்ததைக் கண்ட அன்பர்கள் அதை மறக்கமுடியுமா? புதுடில்லியில் திரு K. L. ராத்தி என்பவர் தன் மோதிரத்தை இருகைகளுக்குள் வைத்து அழுத்தமாகப் பத்திரப் படுத்தினர்; காரணம் சாமிகள் அந்த மோதிரத்தை மாயமாக மறையச் செய்யப் போவதாகக் கூறியதே. ஆனல் மோதிரம் மறைந்தே போய்விட்டது. அது கைகளுக்குள் இல்லை. சாமிகள் அவரை அவர் சட்டைப் பையில் தேடிப் பார்க்கச் சொன்னபோது மோதிரம் அங்குப் பத்திரமாக இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டவருக்கு இந்த நிகழ்ச்சி மனதை விட்டு மறைந்து விடுமா? விழுப்புரம் நியூ வாஸவி விஹார், திரு. K. சுப்ரமண்ய ரெட்டியார் வீட்டில் ரெட்டியார் மோதிரத்தைக்கழற்றி அந்த ஹாலில் வீசி எறியச் சொன்னர் சாமிகள். அதன்படியே செய்தார் ரெட்டியார் அவர்கள். அதன்பின் பூஜை அறையிலிருந்த ஒரு வாழைப்பழச் சீப்பை எடுத்து வந்து அதில் ஒரு பழத்தை எடுத்து அதை மூன்று துண்டுகளாகப் போட்டு ஒரு துண்டை சாமிகள் சொற்படி ரெட்டியார் அவர்கள் வாயில் போட்டு குதப்பினர். சபையில் வீசி யெறியப்பட்டு மாயமாக மறைந்த மோதிரம் வாயில் உள்ள ஒரு துண்டு வாழைப்பழத்திலிருந்து வந்த அருமையை ரெட்டியார் இன்றும் எண்ணிப் பார்க்காமலா இருக்க

முடியும்? திருப்பதியில் திருச்சானூரில் நாதஸ்வர வித்வான் திரு. வீருசாமி பிள்ளை இரண்டு புது வைர மோதிரங்களைச் சாமிகளிடம் கொடுத்து ஆசீர்வதித்துக் கொடுக்க வேண்டினர். அம் மோதிரங்கள் இருந்த இடத்திலிருந்து மாயமாக மறைந்து விட்டன. அதே மோதிரங்களை சாமிகள் ஒருவிரல் தாராளமாக நுழையும்படியான ஒரு குழியிலிருந்து திருச்சானூர் தாயார் சன்னதிக்கு முன் எடுத்துக் கொடுத்தபோது திரு. வீருசாமிப் பிள்ளைக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை என்னென்பது!

சாமிகள் மலாயா நாட்டிற்கு விஜயம் செய்தபோது கடலில் வீசி எறிந்த மோதிரத்தைக் கோப்பையில் கொண்டுவந்து அற்புதம் ஆடிய விபரத்தை மலாயா நண்பர் திரு. வெங்கடப்பா செட்டியார் கூறினர். அதைக் கேட்டவர்களுள் கோயம்புத்தூர் திரு. கிரி அவர்களும் ஒருவர். இதே போன்ற நிகழ்ச்சியைச் சாமிகள் கோவை அன்பர்களுக்குச் சமீபத்தில் ஆடிக் காட்டியது கண்டவர்களுக்கும் இதைக் கேள்விப்பட்டவர்களுக்கும் மட்டற்ற மகிழ்ச்சியை ஊட்டுகின்றது. சாமிகளும் அவரோடு பக்தர் குழாமும் திருச்சூருக்கு அருகாமையிலுள்ள இராமர் கோயிலுக்கு ஒரு படகில் சென்றுகொண்டிருந்தனர். இராமர் கோவிலுக்குச் செல்லும் சாமிகளின் சிந்தனை இராமர் வரலாற்றுக்கே சென்று விட்டது. தன்னிடமிருந்து வந்தவர் என்பதை அறிவிக்கத் தன் கணையாழியை அனுமாரிடம் சீதைக்குக் கொடுத்தனுப்பிய பாகம் சாமிகள் நெஞ்சில் பாய்ந்து சென்றது. இவர்கள் செல்லும் இதே க்ஷேத்திரத்தில்தான் அசோக வனத்திலிருந்து திரும்பிய அனுமன் சீதை தன் அடையாளமாகக் கொடுத்த ஆபரணத்தை இராமரிடம் சேர்த்து இராமனுக்கு நம்பிக்கையையும் இன்பத்தையும் கூட்டுவித்தது. இதை ஞாபகப்படுத்திக்கொண்ட சாமிகள் மோதிரம் ஒன்றை வைத்துக்கொண்டே அருள்சக்தி விளையாட்டுப் புரிய ஆசை கொண்டார். பக்தர் குழாமில் திரு. சாம்பசிவய்யர் என்ற ஒருவர் இருந்தார். அவர் விரலில் கண்களைப் பறிக்கும் வண்ணம் ஜ்வலித்துக் கொண்டிருந்தது ஒரு விலையுயர்ந்த மோதிரம். அந்த மோதிரத்தைச் சாமிகள் அய்யரிடமிருந்து போட்டோப்படம் பிடிப்பவரிடம் கொடுக்கச்செய்து அதைப் படகைச் சுற்றி இருக்கும் தண்ணீருக்குள் தூக்கி வீசி எறியும்படி ஆக்ஞாபித்தார். மோதிரத்தின் சொந்தக்காரர் முகத்தைப் பார்த்தார் போட்டா படம் எடுப்பவர். அப்போது அவர் காமிராவை ஒரு தட்டுதட்டி இருந்தால் அந்த முகத்தில் அசடு வழிந்துகொண்டிருந்தது அப்படியே படமாக விழுந்திருக்கும். அடுத்து காட்டும் பளிங்குபோல் திரு. சாம்பசிவ அய்யரின் உள்ளத்தடுமாற்றத்தை முகம் படம் பிடித்துக்காட்டிக் கொண்டிருந்தது. அவர் உள்ளத்தில் உருவாகிக் கொண்டிருக்கும் தடுமாற்றம் வாயினின்றும் வந்துவிட்டது. "அது என் மாமனர்

அளித்த மோதிரம்'' என்று சொன்னர். முகமும் மொழியும் மோதிரத்தைத் தண்ணீருக்குள் போடவேண்டாம் என்று கெஞ்சிக் கூத்தாடின. போட்டோ கிராபர் முகம் சாமிகள் பக்கம் மறுபடியும் திரும்பியது. 'தயக்கமேன் ஆகட்டும்' என்பதுபோல் சாமிகள் தலையசைத்தார். வேறு வழியின்றி போட்டோகிராபர் சாமிகளின் கட்டளையை உடனடியாக நிறைவேற்றினர். அவ்வளவு நேரம் ஒரு விரலில் அழகுடன் வீற்றிருந்த ஒரு விரல் சுற்றளவுள்ள அருமை மோதிரம் ஓர் இமைப்பொழுதில் விசாலமாக விரிந்திருந்த ஆழமான தண்ணீருக்குள் விழுந்து மறைந்துவிட்டது. இதைக் கண்ட திரு. சாம்பசிவ அய்யருக்கு 'பகீர்' என்ற உணர்ச்சி ஏற்பட்டது. "நான் விளையாட்டாகச் சொன்னேன். உண்மையாகவே மோதிரத்தை வீசி எறிந்து விட்டார்களே'' என்று சாமிகள் கூறிய வார்த்தைகளைக் கேட்ட போட்டோ கிராபருக்கும் வயிற்றில் பகீர் என்ற உணர்ச்சி ஏற்பட்டது. இவர்களுடைய மனப்போரட்டத்தைக் கண்டு அவர்கள் நிலையைச்சுவைத்த சாமிகள் இன்னும் தொடர்ந்து விளையாடச் சித்தம் கொண்டார். "செந்தலைக் கருடன் வந்திடம் பாய்ந்தால் கெங்கையில் பொருளும் தன் கையில் சேரும்'' என்று கூறினர். சாமிகள் கூறி முடித்த ஒரு சில நிமிடங்களில் ஒரு கருடன் சற்றுத் தூரத்தில் தோன்றியது. சகுந்தலாவிடமிருந்து பறிபோன மோதிரத்தை ஒரு மீன் வயிற்றிலிருந்தல்லவா ஒரு செம்படவன் சம்பாதித்தான்! அதுபோன்று ஒரு வேளை இந்த கருடபகவானே தலைக்கு மேல் பறந்து மோதிரத்தைப் போட்டு விடுமோ என்று ஆவலுடன் எதிர்பார்த்தனர் சாம்பசிவ அய்யரும் போட்டோகிராபரும் கூட இருந்த பக்தர்களும். கருடன் அவர்கள் எதிர்பார்த்தபடி தலைக்கு மேல் பறந்தது. இடமிருந்து வலம் பறந்தது; ஆனல், மோதிரம் மட்டும் கீழே விழக் காணும். இந்த ஏமாற்றத்தையும் அவர்கள் முகத்தில் கண்டு சாமிகள் ரசித்துக் கொண்டிருந்தார். சாமிகளின் பேச்சு தொடர்ந்தாற் போல் பல தத்துவங்களை விளக்கிச் சுவாரஸ்யமாகச் சென்றுகொண்டிருந்தது. நான்கு மணி நேரம் ஓடிப் போனதை எல்லோரும், மோதிரக் கவலை கொண்டவர் கூட உணரவில்லை.

சாமிகளும் பக்தர் குழாமும் படகை விட்டு இறங்கினர். இராமர் சந்நிதிக்குச் சென்று இறைவன் தரிசனம் செய்து கொண்டிருக்கும் வேளை அந்தக் கோவிலில் 'போத்தி' என்று அழைக்கப்படும் அர்ச்சகர் இறைவன் பிரசாதத்தை இலையில் வைத்து ஒவ்வொரு பக்தரிடமும் தொடாமல் தூக்கிக் கொடுப்பது வழக்கம். சாமிகளிடமும் ஒரு இலைப் பிரசாதத்தை வழங்கி வந்தபோது சாமிகள் திரு. சாம்பசிவ அய்யரிடம் கொடுக்கச் சொன்னர். அந்த இலையை மோதிரம் பறிகொடுத்தவர் வாங்கிப் பிரித்துப் பார்க்க, அவரால் நம்பவே முடியவில்லை. பறிபோன மோதிரம் அந்த இலையில் உள்ள சந்தனப் பிரசாதத்தில்

பளிச்சிட்டு விளங்கியது. இராமனுடைய பிரசாதமாகத் தன்னுடைய மோதிரத்தை வரவழைத்துக் கொடுத்த சாமிகளின் அருளை வியப்பதா? சந்தனப் பிரசாதத்தோடு மோதிரத்தையும் கூட்டி சுருட்டி வைத்திருந்த இராமபிரான் லீலைப் பெருமையை வியப்பதா? இந்த மாயமான வாழ்க்கையின் தத்துவத்தை விளக்கத்தானு இந்த மோதிரத்தை வைத்துக்கொண்டு ஓர் அற்புத திருவிளையாடல் சாமிகள் புரிந்தார்! பொழுது போக்கிற் கிடையிலும், உரையாடலில் ஆஸ்யம் கலந்து உற்சாகப்படுத்துவது போன்று, சாமிகள் இந்த ரசமான சம்பவத்தைப் புகுத்திவிட்டார்களா? இத்தகைய நிகழ்ச்சி மாயாஜால வித்தையல்ல, ஆண்டவனின் பூரண அருள் நிறைந்தவர்கள் மகிழ்ந்தாடும் தெய்வீகச் செயல் என்பதை நிரூபித்துக் காட்டவா சாமிகள் இப்படிச் செய்தார்? இப்படியே அலை மோதிக்கொண்டிருந்தது இதைக் கண்டவர் உள்ளங்களில்! இதை எப்படி வேண்டுமானுலும் கற்பனை செய்து கொள்ளலாம்; ஆனுல் ஒன்று மட்டும் நிச்சயம். சாமிகளின் கவடு சூதுவாது அற்ற தூய்மையான மனம் ஆண்டவனிடத்திலே லயித்து ஒன்றிப் பேரின்பக் கடலில் மூழ்கி இருக்கும் வேளையிலும் ஆண்டவன் சக்தியை மக்களுக்குக் காட்ட இத்தகைய அற்புதங்களைச் சாமிகள் விளையாடிக் காண்பிக்கின்ருர். அதில் வெறும் விளையாட்டைக் காண்பவர் சிலர். அதில் அற்புதத்தை மட்டும் ரசிப்பவர் சிலர்: அதில் பொதிந்துள்ள தெய்வீகத் தத்துவ விளக்கத்தை உணர்பவர்கள் சிலர்.

விளையாட்டில் அற்புதம், பொழுதுபோக்கில் தெய்வீக ஆற்றல், தலவிஜயப் பிரயாணத்தில் அருட்செயல் — இவைகளை காண்பிக்கும் சாமிகள், உடல்நோய் போக்குவதற்கும் இவ்வுபாயத்தைக் கையாள்வதுண்டு. அப்போதும் மோதிரத்திற்கு ஒரு முக்கியப் பங்கு உண்டு. ஒருநாள் சாமிகளைக் காண ஒரு பெரிய அதிகாரி வந்திருந்தார். இரவு பத்துமணிக்கு மேலிருக்கும். அவருடைய அருமை மகனுக்குக் காக்கை வலிப்பு நோய். அதைப்போக்க சாமிகளின் அருளை நாடி அவர் வந்திருந்தார். சாமிகள் உடனே அதற்கு ஒத்தாசை செய்ய உளமுவந்து ஒப்புக்கொண்டார். ஒரு இரும்பு மோதிரம் வேண்டும். பையன் அந்த இரும்பு மோதிரத்தை எப்பொழுதும் அணிந்துகொள்ள வேண்டும். அந்த அர்த்த இராத்திரி வேளையில் எந்தக் கடைக்குச் சென்று இந்த இரும்பு மோதிரத்தை வாங்க முடியும்? அப்படி வாங்க முடிந்தாலும் பையனுடைய விரல் அளவு தெரிய வேண்டாமா? இவைகளை நினைத்துத் திகைத்து நின்ருர் வெகுதூரத்திலிருந்து காரில் வந்திருந்த பெரியார். மனம் தடுமாறிக் குழம்பியிருக்கும் பெரியவரின் சட்டைப் பையைச் சோதிக்கச் சொன்னுர் சாமிகள். தன் சட்டைப் பைக்குள் விரலைவிட்டுத் துழாவிய பெரியவருக்கு அவர் கடையில் வாங்க விரும்பிய பொருளே கிடைத்துவிட்டது. மோதிரம்! இரும்பு

மோதிரம்!! அதுவும் தன்னுடைய மகன் விரலுக்கு அளந்து வைத்தாற்போல் அணியக்கூடிய அற்புத அருள் மோதிரம்!!! "இந்த மோதிரத்தை உங்கள் பையன் எப்போதும் அணிந்திருக்க வேண்டும். ஒரு குறையும் உண்டாகாது" என்று ஆசி கூறினர் சாமிகள். எப்படி இருக்கும் வந்திருந்த வெளியூர் அன்பருக்கு? சாமிகளின் கருணை உள்ளத்தையும், சமயோஜித புத்தியையும் அருள் சக்தியையும் கண்டு மெய்மறந்து நின்றார் மெய்யன்பர்.

காவேரியாற்றில் ஒருநாள் உறையூர் சோழமன்னன் வழக்கம் போல் நீந்தி மகிழ்ந்தான். திருவானைக்கா ஜம்புகேஸ்வரனை அனுதினமும் மனத்தில் இருத்தி மகிழுறும் இயல்பினன் இந்தச் சோழ மன்னன். நீரைவிட்டு எழுந்து பார்க்கத் தன்னுடைய முத்தாரம் தண்ணீருள் போய்விட்டதை உணர்ந்தான். உடனே ஆனைக்காவுடையானை எண்ணி அவருக்கே அந்த முத்தாரத்தை அளித்துவிட்டதாக எண்ணி அகமகிழ்ந்தான். நேரே கோவிலுக்குச் சென்றான். அப்போது காவிரியிலிருந்து கொண்டுவந்த புனலைக்கொண்டு இறைவனுக்கு அபிஷேக நீராட்டிக்கொண்டிருந்தனர். கடைசிக் குடத்திலிருந்து இறைவன்மீது நீரைவிட அந்தக் குடத்திலிருந்து காவிரி நீரில் காணாமல் போய்விட்ட முத்தாரம் இறைவன் மீது வீழ்ந்தது. தான் எண்ணிய படியே முத்தாரம் ஆனைக்காவடி ஆதியை அடைந்து அலங்கரித்த விந்தையை எண்ணி எண்ணி பூரித்தான் உறையூர் மன்னன். இந்த நிகழ்ச்சியைக் கவிதைச் சொற்களால் படம் பிடித்துக் காண்பிக்கின்றார் சுந்தரர்.

> "தாரமாகிய பொன்னிதண் டுறையாடி விழுத்தும்
> நீரினின் றடி போற்றி நின்மலா கொள் ளென வாங்கே
> ஆரம்பூண்ட எம் ஆனைக்காவுடை வாதியை நாளும்
> ஈரமுள்ளவர் நாளும் அவர் எம்மையுமாளுடையாரே"

இந்த நிகழ்ச்சியைப் பாட்டில் கண்டு மகிழும் நாம் இதையொக்கும் நிகழ்ச்சிகளைச் சாமிகள் ஆடி அருளுவதையும் கண்டு மகிழ்வோம். ஈரோடு தாசில்தார் திரு. M. சேதுமாதவன் B. A., பவானியில் பணியாற்றியபோது ஒரு வாய்க்காலில் மார்பளவு தண்ணீரில் நின்று குளித்துக்கொண்டிருந்தார். அப்போது மோதிரத்தைப் பத்திரமாக பூணூலில் முடிந்து வைத்திருந்தார். குளித்துவிட்டு வந்து பார்க்க மோதிரம் பூணூலில் இல்லை. தண்ணீர் ஓட்டமும் சேறும் சகதியுமாகவுள்ள வாய்க்காலிலிருந்தா கீழே விழுந்துவிட்ட மோதிரத்தை எடுக்கமுடியும்? சாமிகளின் அற்புதங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த அவர் ஓரே உறுதியுடன் "ஸ்ரீ பன்றிமலை சாமிகளிடம் எவ்வளவோ அற்புத தெய்வ சக்திகள் இருப்பதாகச் சொல்கிறார்களே, இது உண்மையானல் காணாமற் போன

மோதிரம் உடனடியாகக் கிடைக்கவேண்டும்" என்று வேண்டிக் கொண்டு அவர் மறுபடியும் வாய்க்காலில் இறங்கினார். என்ன ஆச்சரியம்! உடனேயே, தேடுகின்ற வலது கரத்தில் மோதிரம் மோதிர விரலிலேயே ஏறிக்கொண்டது. இதைக் கேள்விப்பட்ட பவானி ஸ்ரீ சங்கமேஸ்வரன் கோயில் மானேஜிங் டிரஸ்டி திரு. T. K. ராமசாமி கவுண்டர் "இப்படியும் நடக்குமா?" என்று மனத்தில் நினைத்தார். அவரது சந்தேகத்தை உடனடியாகத் தெரிந்து கொண்ட சாமிகள் ஒரு பெட்ரோமாக்ஸ் லைட்டை எடுத்துக் கொண்டு வரச் சொன்னார். அங்கிருந்த எல்லோரையும் அழைத்துக் கொண்டு பவானி ஆற்றிற்குப் போய் தாசில்தாரிடமிருந்து அவருடைய மோதி ரத்தை வாங்கி டிரஸ்டியிடமே கொடுத்து ஆற்றில் வீசி எறியச் சொன்னார். பின்னர் சாமிகள் சொற்படி எல்லோரும் வீடு திரும்பினர். இதையெல்லாம் கூடவே இருந்துகொண்டு பார்த்துக் கொண்டிருந்த திரு. ராஜரெத்தின ஸ்தபதிக்கு ஆச்சரியமாக இருந்தது. இன்னுமொரு பேராச்சரியமும் அவருக்காக காத்துக் கொண்டிருந்தது. அவருடைய சட்டைப் பையையே சாமிகள் தேடிப் பார்க்கச் சொன்னார். அதில் ஒன்றுமில்லை. மறுபடியும் அதைத் தேடிப் பார்க்க சொல்ல நதியில் வீசி எறியப்பட்ட அதே தாசில்தார் மோதிரம் ஸ்தபதி சட்டையில் பத்திரமாக இருந்தது; அது நதி யிலிருந்து வந்ததை அறிவிப்பது போல் அது தண்ணீர் துளி களோடு உள்ளதை எல்லோரும் கண்டு பெரு வியப்புக் கொண்டனர்.

இப்படி மோதிரத்தை வைத்துக்கொண்டு வித விதமான அற் புதம் ஆடுகின்ற சாமிகளிடம் அன்பர்கள் பக்தி வேறூன்றி தழைக்க ஆரம்பிக்கின்றது. திரு. M. சேதுமாதவன்: "...... என்னை யறியாமலே ஒரு பரவச உணர்ச்சியும் ஸ்ரீ சாமிகள் மீது பக்தியும் அன்பும் பெருக்கெடுத்தது. அன்று முதல் ஸ்ரீ சாமிகள் எங்கள் குடும் பத்திற்கே குருநாதராகவும் தோன்றாத் துணையாகவும் இருந்து எண்ணற்ற அருள் பிரசாதங்களை அளித்து வருகின்றார்."

## தொண்டர் துயர்தீர்க்கும் திருத்தொண்டர்

> "The bee is more Lonoured than, other animals, not because she labours but because she labours for others" —St. Chrysotom.

> "மற்ற ஜீவராசிகளைவிட தேனீக்கு மதிப்பு அதிகம். காரணம் அது உழைப்பதனால் மட்டுமல்ல அது உழைப்பது மற்றவர்களுக்காக என்பதால்தான்"

சாமிகளின் அரிய சாதனைகளின் அருமையினை அனுபவிக்கச் சில சிரிப்பூட்டும் சம்பவங்களும் உண்டு. இலக்கிய மேதைகள் நாடகம்

அமைக்கும்போது நவரசம் குன்றாது நகைச்சுவை சிகரங்கள் கொண்டுள்ள கதை நிலைகளையும் அமைப்பதுண்டு. ஷேக்ஸ்பியர் அமைத்துள்ள 'நடுக்கோடையின் இரவுக்கனவு' என்ற நாடகத்தில் குலுங்கக்குலுங்கச் சிரிக்கவைக்கும் ஆஸ்யம் நிறைந்த காதல் சித்திரங்களை வரிசையாக வழங்குகின்றார். வனதேவதை உலகம், மானிட உலகம். இவ்விரண்டு உலகங்களிலும் அதுவரை காணாத அதிசயங்கள் நிகழ்கின்றன. இந்த அதிசயங்களை ஒரு பூவின் சாறு ஏற்படுத்துகின்றது. பூவின் சாற்றை ஒருவர் கண்களில் தடவவேண்டியதுதான். உடனே அவரிடம் மனமாற்றம் உண்டாகின்றது. தூங்கும் ஒருவர் கண்களில் இந்தச் சாற்றைத் தடவிவிட்டால் அவர் விழித்துப் பார்க்கும்போது யாரை முதன்முதலில் பார்க்கின்றாரோ அவர்மீது விழிகளும் மொழிகளும் பொருந்திக் காதலாகி கசிந்துக ஆரம்பித்துவிடுகின்றார். யாரையும் விடாப்பிடியாகக் காதல் பிடியுள் கெட்டியாகச் சிக்கவைக்கும் மாண்புடைய இந்தப் பூவின் சாற்றால் ஒரு வனதேவதை ராணியே கழுதைத்தலை வனப்பில் தன் கருத்தை இழந்து தடுமாடுகின்றாள். அதே வனத்தில் இரு காதல் ஜோடிகள் தடுமாறி அலைகின்றனர். தம்மீது உயிர்க்காதல் கொண்ட உண்மைப் பெண்மணியை உதறித்தள்ளிவிட்டு வேறொருவனை மனமாரக் காதலிக்கும் வேறொருத்தியைச் சுற்றிச்சுற்றி அலைகிறான் ஒருவன். இதையுணர்ந்த வனதேவதைகளின் அரசன் அவனுடைய காதலை அவனை மனதார விரும்பும் காதலியிடம் திரும்ப அவன் தூங்கும்போது அவன் கண்களில் இந்த சாற்றைத் தடவிவரும்படி ஒரு தேவதையை ஏவினான். ஆனால் காதல் சாற்றைத் தடவவேண்டியவர் கண்களில் தடவாது, மற்ற ஆடவன் கண்களில் தேவதை தவறிப்பிழிந்து வந்துவிட்டது. இதனால் இந்த இரண்டு காதல் ஜோடிகளுக்கிடையே பெரும்புயலடித்துச் சிக்கல்களும் புகைச்சலும் ஏற்பட்டு கலகம் ஓங்கி வாயடி கையடி நிலைக்கு இரு கிரேக்க வீரர்களையும் கொண்டு வந்துவிடுகின்றது. கடைசியில் தப்பை உணர்ந்த தேவதைகள் தடவவேண்டியவர் கண்களிலேயே காதல் சாற்றைப் பிழிந்து இருகாதல் ஜோடிகளுக்கும் மட்டற்ற மகிழ்ச்சியை ஊட்டுவிக்கின்றன. இது கதை. ஆனால் சாமிகள் இதைப்போன்ற சுவைமிகுந்த நிகழ்ச்சிகளை தன்னுதவி நாடிவரும் சிலரிடம் நடத்திக்காட்டி யாவரையும் மகிழவைக்கின்றார்.

இந்தக் கதை சாமிகளின் சொக்குப்பொடி அழகினை உணர மிகவும் பயன்படும் எனபதற்காகவே இங்குக் குறிப்பிடப்படுகின்றது. சாமிகளின் சொக்குப்பொடி வேறொன்றும் இல்லை. அது சாமிகளிடமிருந்து பக்தர்கள் அடையும் வரப்பிரசாதம் தான் — திருநீறுதான். ஒருநாள் ஒரு மாமியார் சாமிகளின் அருளை நாடி வந்தாள். அவளுடைய பெரியகுறை என்னவென்றால் தன்னுடைய அருமை மகளை அவள் அருமை உணராத கணவன் அவளை அதட்டி மிரட்டி சில சமயம் அடித்தும் துன்புறுத்தும் தன் மருமகனின் விபரீத நடத்தை

யாகும். இதைச் சாமிகளிடம் சொல்லி இதை மாற்ற ஒரு உபாயம் தேடிவந்தாள் மாமி சாமிகளிடம். சாமிகளின் கருணையுள்ளம் இந்த சோகக் கதையைக் கேட்டது. உடனே சாமிகள் அருள்பிரசாத விபூதியை மாமிக்கு அளித்தார். "இந்த விபூதியை உன் மகளிடம் கொடுத்து உன்மருமகன் தூங்கிக் கொண்டிருக்கும்போது அவர் மீது தூவச்சொல். உன் மருமகன்மீது திருநீறு பட்டவுடன் எல்லாம் சரியாகிவிடும்" என்று கூறி மாமியை சாமிகள் அனுப்பிவைத்தார். வெகுவிரைவில் சாமிகளிடம் விபூதிப் பிரசாதம் வாங்கிக்கொண்ட ஆனந்த மேலிட்டாலும், விபூதியின் பயனை உடனே அறிந்துவிட வேண்டும் என்ற பேரார்வத்தாலும் மாமி ஓடோடியும் வீட்டுக்குச் சென்றாள். தன் பெண் வீட்டுக்கு விலக்காக ஒரு மூலையில் ஒதுங்கி இருந்தாள். சொல்லிவைத்தாற்போல் அந்த வேளை மருமகன் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தான். இந்த வேளை நழுவவிட்டால் மறுவேளை வாய்ப்பதரிது என்று எண்ணினாள். கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தால் கேட்டுவாங்க வேண்டியவைகளை வாங்காமலா விட்டுவிடுவது என்ற மனநிலையில் இருந்தாள் மாமி. "உன் மருமகன்மீது திருநீறு பட்டவுடன் எல்லாம் சரியாகிவிடும்"– சாமிகள் சொன்ன மொழிகளில் இந்த வார்த்தைகள் மட்டும் அவள் மனத்தில் நன்றாகப்பதிந்து விட்டது. யாரைக்கொண்டு இந்தக் காரியம் சாமிகள் செய்யச்சொன்னார் என்ற முக்கியமான பகுதியை அடியோடு மறந்துவிட்டாள். மடமடவென்று தன் முந்தானையில் முடிந்து வைந்திருந்த விபூதியை விரைந்தெடுத்தாள், மருமகன் தூங்கும் திண்ணையை நெருங்கினாள், அவசர அவசரமாக மருமகன் மீது சாமி கொடுத்த விபூதியை வீசினாள். மாமி வீசி யெறிந்த மறு விநாடியில் மருமகன் கண் விழித்தார். கண் விழித்து முதன் முதலில் கண்டது மாமியைத்தான். தான் காண்பது யார்? ஏனிப்படி தன் மனம் தன்முன் நிற்பவள்முன் காந்தம் இழுப்பதுபோல் ஓடுகின்றது. முன்னால் நிற்பது மாமியல்லவா? மாமியடத்திலா மனதைப் பறி கொடுப்பது—இப்படி யெல்லாம் சிந்திக்க மாப்பிள்ளையிடம் மனது வேலை செய்யவில்லை. கண் விழித்துப் பார்த்தவுடன் எதிரில் நிற்கும் ஒரு மாதைக் கண்டவுடனே அவள்மீது அளவு கடந்த பிரியத்தோடு பழகவே அவன் முந்தினான்-இது சாமிகள் கொடுத்த சொக்கு பொடி விபூதி செய்தவேலை. விபூதி வேலை செய்ய ஆரம்பித்தது. மருமகன் மாறிவிட்டான். மாமி என்பதை மறந்து விட்டான். மாமியைக் கண்டால் அடக்க வொடுக்கமாக பழகும் அவன் இப்போது மாமியைக் கட்டுக் கடங்காத நாட்டத்தோடு பார்க்கின்றான். 'மாமி மாமி' என்று குழைந்து பேசி மாமியைச் சுற்றி சுற்றி வருகின்றான். அந்தோ, மாமியோ! கிணறு வெட்ட பூதம் புறப்பட்ட கதை ஆயிற்றே என்று மனம் குமிறினாள் மாமி. தன் மருமகனிடமிருந்து தப்புவிக்க வேறு வழியில்லாமல் வாயுவேகம் மனோவேகத்தோடு சாமி களிடத்திற்கே விரைந்தாள் மனம் குழப்பிய மாமி.

மாமி: சாமி, எல்லாம் விபரீதமாகப் போய்விட்டது. என்னைச் சுற்றி அலேகின்ருன் அந்த பாவி மருமகன்.

சாமி: அம்மா, நீ என்ன செய்தாய். விபூதியை யார் உன் மருமகன் மீது போட்டது.

மாமி: நான்தான் சாமி. அப்பொழுது எழுந்திருந்தவன்தான் இப்படி என்னைச் சுற்றி சுற்றி வருகின்ருன். என் மானமே போய் விட்டது.

சாமி: அடப்பாபமே. நான் உங்கள் மகளிடம் விபூதியைக் கொடுத்தல்லவா அவள் கணவன் மீது தூவ சொன்னேன். உங்களைப் போடச் சொல்லவில்லையே. இவ்வளவு அலங்கோலத்திற்கும் நீங்கள்தான் காரணம். நீங்கள் போட்டிருக்க கூடாது. பரவாயில்லை, தைரியமாக இருங்கள்.

தைரியமாக இருக்கச் சொன்னுர் சாமிகள்; தைரியம் வந்து விட்டது. அடுத்த நிமிடத்தில் சாமிகள் கொடுத்த தைரியம் பனி கரைவது போன்று உடனே மறைந்து விட்டது, காரணம் அந்த பொல்லாத மருமகன் சாமிகள் வீட்டுக்கே மாமியைத் தேடிவந்து விட்டான். மாமியின் நடுக்கத்தையும் மருமகனின் தடுமாற்றத்தை யும் கண்ட சாமிகள் உடனே மருமகன் நெற்றியில் தன்னிடமிருந்த விபூதியைப் பூசினுர். மருமகன் மனநிலை உடனடியாக மாறியது. மாமி இருந்த பக்கத்தைக் கூடப் பாராது விருவிரு வென்று தன் வீட்டை யடைந்தார். தன் மனைவியை ஆசையோடு கூப்பிட்டார். அந்த ஆசை மாருத ஆசையாக மாறிவிட்டது. அன்றிலிருந்து தன் மனைவியின் நெஞ்சை வார்த்தைகளால் கூட புண்படுத்துவதில்லை. தன் வீடே சுவர்க்கம் என்று உணர்ந்து தன் அன்பு மனைவியுடன் இன்பவாழ்க்கை நடத்த ஆரம்பித்து விட்டான் மருமகப்பிள்ளை.

இத்தகைய சுவை மிகும் மற்ருெரு நிகழ்ச்சியையும் இங்குக் கூறுவது பொருந்தும். டெல்லியில் ஒரு தம்பதி. கணவன் கொண்ட மனைவியிடம் சிறிதும் பற்றுதலின்றி வாழ்க்கையை நடத்தி வந்தார். மனைவியும் தன் மணுளன் மனத்தைத் தன் வயப்படுத்த எவ்வளவோ சொல்லியும் செய்தும் பார்த்தாள். அவள் நினைக்காத தெய்வங்கள் இல்லை. செல்லாத ஆலயங்கள் இல்லை. ஆனுல் அவளுக்கு வேண்டிய இன்ப வாழ்க்கை இந்த உலகத்தில் இல்லாமலே போய் விடுமோ என்று ஏங்கி இளைத்தாள். அவள் வாட்டத்தைக் கண்டிருந்த அவன் உறவினர் ஒருவர் ஒரு நாள் சாமிகளின் அருள் சக்திகளை வியந்து புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தார். வாழ்க்கையிலே விரக்தி ஏற்பட்ட இந்த மாது காதுகளில் அவர் சாமிகளைப் புகழ்வ தெல்லாம் வீணே விழுந்து கொண்டிருந்தன. அவள் மனது

அவற்றை விரும்பிக் கேட்கவில்லை. "சாமிகள் அருள் கிடைத்துவிட்டால் நடக்காத தொன்றில்லை" என்று அவர் சாமிகளின் பெருமைகளை யெல்லாம் தொகுத்து சுருக்கமாக உரைத்தார். முடிவுரையும் தந்தார். இந்த உலகில் நடக்காத தொன்றில்லை. ஆனால் அதற்கு வேண்டியது ஒன்று. அது தான் சாமியின் அருள். இந்த வார்த்தைகள் காதில் விழுந்தன இதயத்திற்கு ஓடிவிட்டன. சிந்தைக்கும் எட்டி விட்டன. சிந்தை குளிர்ந்தது. இதயம் அந்த எண்ணத்திலேயே ஒன்றியது. சாமியால் ஆகாத தொன்றில்லை. அவர் மனது வைத்தால் தன்னுடைய வாழ்க்கையையே சுவர்க்கமாக்கி விட முடியும். தன்னோடு தன் மணாளனை ஒன்றி வாழ வைத்துவிட முடியும். ஆனால் அவர் அருளை எப்படி சம்பாதிப்பது. அவரை எப்படி எங்கு பார்ப்பது. இதைத் தெரிந்து கொண்டால் கணவன் தன்னை என்ன பாடு படுத்துவார். இப்படி அலைகின்ற மனத்தையுடைய அபலையின் கண்ணீரைத் துடைக்க] வந்திருந்த உறவினர் உதவி செய்ய முன் வந்தார். "நானே சாமிகளுக்கு உன்னைப்பற்றி எழுதி வேண்டியதைச் செய்கின்றேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றார். சொல்லிச் சென்றவரிடமிருந்து சில நாட்களில் ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தோடு ஒரு விபூதி பொட்டணமும் வந்தது. "இந்த விபூதியை உன் கணவர் சாப்பிடும் காப்பியோடு சேர்த்து கொடுக்கவும். விபூதியை உட்கொண்ட உன் கணவர் வாழ்வில் மாறுதல் ஏற்படுவது நிச்சயம். உன் வாழ்க்கையில் மறுமலர்ச்சி ஏற்படுவது நிச்சயம்" என்று அனுப்புவித்த விபூதியின் மகிமையைப் பற்றி வரைந்திருந்தார் உறவினர். இந்தக் கடிதத்தையும் அருள் பிரசாதத்தையும் பத்திரமாக தாம் அனுதினமும் பிரார்த்திக்கின்ற தெய்வ அறையில் இப்பெண்மணி வைத்திருந்தாள். சமயம்பார்த்து காப்பியில் இந்த விபூதியைக் கலந்து கணவனிடம் கொடுக்கவேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தது அபலையின் மனம். ஒருநாள் சமையல் அறையில் காப்பித் தயாரித்துக்கொண்டிருந்த பெண்ணை கணவன் அதட்டிக் கூப்பிட்டான். அதட்டலில் புதுமிரட்டலும் பயங்கரமான கோபமும் இருந்தன. 'என்னமோ நடக்காதது நடந்துவிட்டது என்று தடுநடுங்கி வந்தாள் மனைவி. ஆம், அவள் நினைத்தது சரியே, நடக்கக் கூடாதது நடந்துவிட்டது, கணவனுடைய இடது கையில் தான் மறைத்து வைக்கவேண்டும் என்று எண்ணியிருந்த கடிதம். வலதுகையில் விபூதிப் பொட்டலம். "என்ன தைரியமடி உனக்கு. எனக்கு மருந்து போடுமளவுக்கு யாரடி உனக்குத் தைரியம் கொடுத்தது? என்ன சாமியார் மருந்தா? இதைக்கொடுத்து என்னை மாற்ற பயமுறுத்துகிறாயா? சரி பார்க்கின்றேன்; கொண்டுவாடி காப்பியை. நானே இந்தச் சாம்பலைக் காப்பியில் போட்டுக் குடிக்கின்றேன். இதற்கெல்லாம் பயந்தவன் நானில்லை" என்று கொதிக்கக் கொதிக்கப் பேசுகின்றான். 'இன்னுமா தயக்கம் கொண்டுவாடிக்

காப்பியை' என்று துடிதுடித்துப் பேசுகின்றான். உண்மையிலேயே காப்பியைக் கேட்கின்றாரா அல்லது தன்னைத் தொல்லையூட்டும் கேலி செய்கின்றாரா என்று அபலை அறியமுடியவில்லை. என்ன வந்தாலும் வரட்டும், எதற்கும் ஒருமுடிவு வரவேண்டும் என்ற ஒரே சிந்தனையோடு சமையல் அறைக்குச்சென்று தயாராகியிருந்த காப்பியோடு திரும்பிவந்தாள் வனிதை. அவளிடமிருந்து வெடுக்கென்று காப்பி டம்ளரைப்பிடுங்கி, பொட்டலத்திலிருந்த விபூதிப் பிரசாதத்தை உடனே காப்பியில் கொட்டி மடமடவென்று வெறி பிடித்தவர் போல் காப்பியை ஒரேமுடக்கில் குடித்துவிட்டார். காப்பி உள்ளே சென்ற அடுத்த நிமிடம் அவர்முகத்தில் ஒரு இன்பச்சுடர் தோன்றியது'' "அடி வேதம், உன் காப்பி வெகு ஜோராக இருக்கிறது" என்று புகழ ஆரம்பித்தார். அன்று ஆரம் பித்தப்புகழ் இன்றும் வளர்ந்து கொண்டே செல்கின்றது. "உண்மை யிலேயே அந்த விபூதி மிகவும் சக்திவாய்ந்தது. முரடனாக இருந்த என்னையே மென்மையானவனாக மாற்றிவிட்டது வேதம், வேதம் அந்தச் சாமிகளைப் பார்க்க வேண்டும். அவரை நேரே கண்டால் தான் எனக்கு மனதுக்கு நிம்மதி ஏற்படும்" என்று பேசுமளவுக்கு கணவர் வந்துவிட்டார். சாமிகளையும் வேதத்தோடு கண்டார். அவர்கள் இருவரும் இணைபிரியாத இன்பச் சதிபதிகளாக அன்றிலிருந்து மாறிவிட்டனர்: வேதம் சொன்னதுதான் அவள் கணவனுக்கு வேதவாக்காகிவிட்டது. என்னென்று இயம்புவது சாமியின் அருள்பிரசாத மகிமையை!

## திருவருள் சீட்டு அற்புதம்

ஜெயதேவ சாமிகளுக்காக அன்று
ஜகந்நாதன் மனமகிழ்த்து எழுதிவைத்தான்
ஜெயம் ஏங்கிதவிக்கின்ற உள்ளங்கட்கு
ஜெயக்கொடியை நாட்டுவிக்க சித்தம்கொள்ளும்
ஜெயசித்தர் பன்றிமலைநாதர் இன்று
ஜெயமோங்கும் ஆசித்தானை வரவழைக்கும்
ஜெயமருளும் அற்புதத்தைப் போற்றிபோற்றி
ஜெயதேவர் அவர்தாளை வணங்குவோமே!

மகாகவி ஜயதேவர் கீத கோவிந்த மகாகாவியம் உள்ளங்களை மணக்க வைக்கும் கவிதை மலர். ஒருநாள் கவிதை உணர்ச்சிக்கு வயமான ஜயதேவர் "சாருசீலே பிரியே, சாருசீலே" என்ற பல்லவியோடு கூடிய பாமாலையைத் தொகுக்க, கண்ணன் வாயிலாக "ஓ, இராதே விரகத்தினல் தவிர்த்துக் கொதிக்கும் என் சிரசில் உன் பனி மலர் தாமரைத் தளிர் அடிகளை வை" என்ற கருத்தையும் வைத்து

பாடிவிட்டார். அதை மறுபடியும் படிக்க திடுக்கிட்டார். அந்தக் கருத்து உகந்ததல்ல என்று பயந்து தான் எழுதிய ஓலையைத் தூள் தூளாகக் கிழித்து எண்ணெய் முழுக்காட ஆற்றிற்கு புறப்பட்டார். சில நிமிடங்களில் தன் கணவன் எண்ணெய் தேய்த்த தலையோடு வீட்டுக்கு திரும்பிவந்து "காலையில் நான் எழுதிய கவிதைச்சுவடிகளையும், எழுத்தாணியும் கொண்டு வா. ஒரு அருமையான கற்பனை உதித்தது. அது மறந்துபோகுமுன் எழுத ஓடோடி வந்தேன்" என்று கூறி ஓலையில் சில வரிகளை எழுதிவிட்டு எழுந்து சென்றதைக் கண்டாள் ஜயதேவரின் மனைவி. எண்ணெய் தேய்த்து குளித்து திரும்பிய ஜயதேவர் மறுபடியும் அதே கவிதைச்சுருளைக் கொண்டு வரச்சொன்னார். படித்தவர் அப்படியே அசந்துபோய் விட்டார். காரணம் தான் தகுதியல்ல என்று கிழித்தெறிந்த அதே வாக்கியங்கள் அப்படியே ஓலைச்சுவடியில் திரும்பவும் எழுதப்பட்டிருந்தன. "பத்மா, நீ ஏதாவது எழுதினாயா" என்று கேட்டார். "நீங்கள் தானே எண்ணெய்த் தலையோடு வந்து கற்பனை கலைந்துவிடும் என்று சொல்லி சில நிமிடங்களுக்குமுன் ஓடிவந்து எழுதிவிட்டு மறுபடியும் குளிக்கச் சென்றீர்" என்று பதிலளித்தார் மனைவி. ஜயதேவர் எண்ணெய் தலையோடு சில நிமிடங்களுக்குமுன் வந்தாரா? அதே வரிகளை ஓலைச் சுவடியில் எழுதினாரா? கொஞ்சம் கொஞ்சமாக விஷயம் புரிய நெஞ்சில் கோகுலகிருஷ்ணன் லீலாவிநோத செயல் புரிந்துவிட்டது. கண்ணனேயல்லவா தம் உருவில் வந்து தனக்குப் பிடித்தமான அதே வரிகளை எழுதி வைத்துவிட்டுச் சென்றிருக்கின்றான். அமர கவிக்கு ஏற்பட்ட ஆனந்தத்தைச் சொல்லி முடியுமோ. ஒருசமயம் அந்த நாட்டின் அரசருக்கு ஜயதேவரிடம் கொஞ்சம் பொறாமை ஏற்பட்டது; காரணம் தானும் ஒரு கவி; இருந்தாலும் ஜயதேவர் பாட்டுக்களைத்தான் மக்கள் பாடினர். அதற்கு மக்களையே விளக்கம் கேட்க, அவர்கள், "உங்கள் இருவர் பாட்டையும் தெய்வ சன்னதியில் வைப்போம். எது உயர்ந்தது என்பதை ஆண்டவனே முடிவு செய்யட்டும்" என்றனர். அப்படியே இருவருடைய கவிதை சுவடிகளும் இறைவன் சன்னதியில் வைக்கப்பட்டு கோயில் பூட்டப்பட்டது. காலையில் திறந்து பார்க்க ஜயதேவர் கவிதைகளின்மேல் 'உவந்தோம்' என்று எழுதியிருந்தது. இப்படி ஜயதேவர் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளைக் கேட்கும்போது ஆண்டவன் இப்படியெல்லாம் அருள்புரிவாரா, உலகத்தில் நேரே வந்து எழுதுவாரா என்ற ஐயம் ஏற்படலாம். சாமிகளது வாழ்க்கையில் அவர் ஆடி அருளுகின்ற அற்புதங்களுள், அருள்சீட்டு வரவழைப்பது என்பது கற்பனையையும் கருத்தையும் மிஞ்சும் ஒரு அரிய அருள்செயல். முருகன் ஓடோடி வந்து சாமிகள் இஷ்டப்படி எழுதுகின்றான். ஒரு மொழியில் மட்டுமா அருள்சீட்டு, தமிழிலும், ஹிந்தியிலும், ஆங்கிலத்திலும், ஏன் உலகிலுள்ள அத்தனை மொழிகளிலும் அருள்சீட்டு முருகபெருமானிடமிருந்து பெறும் வல்லபத்தை அல்லவா சாமிகள் பெற்றிருக்கின்றார்.

“ என்னுடைய மானத்தை ஒரு யானை காப்பாற்றியது ” என்று ஒருநாள் சாமிகள் கூறினர். யானை என்றவுடன் சாமிகள் அடிக்கடி கூறும் ஒரு கருத்து ஞாபகத்திற்கு வந்தது. ‘யானையைப் பிடிக்கணும், பானைக்குள் அடைக்கணும்’ என்பதே அவர் கருத்தோவியம். இங்கு யானை என்று சாமிகள் குறிப்பிட்டது பஞ்சேந்திரியங்கள்; பானை என்று குறிப்பிட்டது நமது உடலே. மதம் கொண்ட யானை கட்டுக்கடங்காது ஓடத் தலைப்படுவதுபோல் பஞ்சேந்திரியங்களும் தலைவிரித்தாடும். அப்படி விடாது அவைகளை உடலில் கட்டுப்படுத்துவதைத்தானே சாமிகள் இவ்வளவு அழகாக சொல்லோவியமாக வடித்துத் தருகின்றனர். ஆக யானை என்றவுடன் சாமிகள் இந்திரியங்களைத்தான் குறிப்பிடுகின்றனர் என்று எண்ணினேன். சாமிகள் தொடர்ந்து பேசியபோதுதான் அவர்கள் விளக்கவந்த வேறு விஷயம் புரிந்தது.

சாமிகள்: நான் முதன்முதலாக டெல்லிக்கு விமான மூலமாகச் சென்றேன். விமானத்தில் உபசரிக்கும் யுவதி சும்மா வீற்றிருந்த என்னிடம் ஆங்கிலச் செய்தித்தாள் ஒன்றைக் கொடுத்தாள். பேப்பரை வாங்கிக் கொண்ட எனக்கு திகைப்பேற்பட்டது. காரணம் அவள் கொடுத்தது ஆங்கிலப் பத்திரிகை. எனக்கு ஆங்கிலம் தெரியாது. ஆங்கிலம் தெரியாது என்று சொல்லி பேப்பரை திருப்பிக் கொடுக்கவும் எனக்கு வெட்கமாக இருந்தது. பேப்பரை கையில் சும்மா வைத்துக்கொண்டிருப்பதும் கஷ்டமாக இருந்தது. கையில் இருந்த செய்தித்தாளைப் பிரித்தேன். படிப்பதுபோல் பாவனை செய்தேன். பேப்பரில் ஒரு யானை தலைகீழாக இருப்பதைக் கண்டேன். உடனே என் தவற்றை உணர்ந்து கொண்டேன். யானை ஒருக்காலும் தலைகீழாக நிற்காது. நான்தான் செய்தித்தாளை தலைகீழாக வைத்துக்கொண்டிருக்கின்றேன், அதனால்தான் யானை தலைகீழாக இருக்கின்றது என்ற தவற்றை உணர்ந்தேன். சுற்றிலும் முற்றிலும் பார்த்தேன். யாரும் என் தவற்றைக் கவனிக்கவில்லை என்பதை அறிந்தேன். உடனே தலைகீழாக இருந்த செய்தித்தாளை முறையாகப் பிடித்து படிப்பவன்போல் பாவனை செய்தேன். அன்று அந்த பேப்பர் யானைதான் எனக்கு உதவியது. என் மானத்தைக் காப்பாற்றியது.

இப்படி சாமிகள் உரைத்து முடித்தபோது எங்கள் சிரிப்பை அடக்க முடியவில்லை. சாமிகளின் யூகமும் விநயமும் குழந்தை சுபாவமும் கண்டு வியந்த எங்களுக்கு சாமிகளின் போக்கே ஒரு புதிராகவும், விந்தையாகவும் இருந்தது. ஆங்கிலம் தனக்குத் தெரியாது என்று கூறுகின்றனர். அதை நம்பவைக்க தன் வாழ்க்கையிலிருந்து ஒரு சிரிப்பூட்டும் அனுபவத்தையும் எடுத்துரைக்கின்றனர். ஆனல் சாமிகள் ஆடி அருளுகின்ற சித்துக்களைப் பார்க்கும்போது சாமி

களுக்கு அவசியம் ஆங்கிலம் தெரிந்திருக்கத்தான் வேண்டும் என்று நாம் நினைக்கவேண்டி இருக்கிறது. ஆரூரில் நிலக்கிழார் திரு T. அருணாசலம் பிள்ளை வீட்டில் பூஜையும் பாத பூஜையும் பெரு விமரிசையாக நடந்தது. பூஜை முடிந்தவுடன் என்னையும் பிள்ளை அவர்களுடைய அத்தான் டாக்டர் T. V. அரங்கநாதன் அவர்களையும் சாமிகள் பூஜை அறைக்குள் அழைத்தார். என்னுடைய வலது கரத்தில் ஒரு பேனாவைப் பிடிக்கச் சொன்னார்: டாக்டருடைய வலது கரத்தில் சுமார் ஓர் இரண்டங்குல சதுரமான காகிதச் சுருளைப் பிடிக்கச் சொன்னார். அந்தக் காகிதச் சுருளும் பூஜை ரூமில் கிடைத்த காகிதத்திலிருந்து எடுத்து சுருட்டப் பட்டதே. எங்கள் இஷ்ட தெய்வங்களை வேண்டிக் கொள்ளச் சொன்னார். அப்படியே செய்தோம். பின் டாக்டர் கைய்லிருந்த சுருளை என்னை வாங்கி படிக்கச் சொன்னார். ஆங்கிலத்தில் அழகிய கொட்டை எழுத்துக்களில் பன்னிரண்டு வரிகளில் ஆத்மீக விஷயம் அச்சடித்தது போலக் குறிப்பிட்டிருந்ததைப் படித்தேன். இந்த அருள் சீட்டு சீடர் அரங்கநாதன் அவர்களுக்கு உரியது என்றும் இது போன்று குருவாக்கு அருள் சீட்டுகள் டாக்டருக்கு இன்னும் பல உண்டு என்றும் சாமிகள் திருவாய் மலர்ந்தருளினார்.

மற்றொருசமயம் நீதிபதி திரு. சிதம்பரநாதன் இல்லத்தில் நீதிபதியின் சுருக்கெழுத்துக் குமாஸ்தா சாமிகளைத் தரிசிக்க வந்தார். அவருடைய வேலையைக் கேள்விப்பட்ட சாமிகள் அவர் எழுதும் சுருக்கெழுத்து எப்படி இருக்கும் என்று கேட்டார். உடனே குமாஸ்தா ஒரு பேப்பரில் சுருக்கெழுத்தை (Short–Hand) எழுதிக்காட்ட முனைந்த போது, சாமிகள் அவர் இடது கரத்தில் அதே காகிதத்தை மடித்தும், வலது கையில் ஒரு பேனாவையும் பிடித்துக் கொள்ளச் சொன்னார். இஷ்ட தெய்வத்தை நினைத்துக் கொள்ளச் சொல்லி, அந்தக் காகிதச் சுருளைப் பிரித்துப் பார்க்கச் சொன்னார். என்ன ஆச்சரியம்! அச்சடித்ததுபோல் அந்தக் காகிதத்தில் சுருக்கெழுத்து அதே பேனாமையில் பளிச்சென்று எழுதி இருந்ததைக் கண்டு வியப்படைந்தோம். சாதாரணமாகச் சுருக்கெழுத்தை எழுதப் பேனா உபயோகப் படுத்துவதில்லை, பென்சிலைத்தான் உபயோகப் படுத்துவர். பேனாவில் எழுதுவது அவ்வளவு சௌகரியமுமல்ல. ஆனால் சாமிகளோ பேனாவினாலே எழுத்துக்களை உருவாக்கிக் காண்பித்தது சுருக்கெழுத்துக் குமாஸ்தாவின் கற்பனையையும் மிஞ்சுவதாக இருந்தது. சாமிகள் எந்தப் பேனாவைக் கையில் வைத்துக் கொள்ளச் சொல்லுகின்றாரோ, அதே பேனாதான் இவ்வருள் சீட்டுக்களுக்குப் பயன் படுத்தப் படுகின்றன என்பதை மைநிறத்தாலும், எழுத்தின் மென்மை பட்டை வடிவத்தாலும் அறிந்து கொள்ளலாம். பேராச்சரியத்தில் பறந்து கொண்டிருந்த குமாஸ்தாவின் முகம் அந்த சீட்டைப் பிரித்துப் படித்து மகிழ்ந்தது; காரணம் அது அவரை ஆசி அருளிய சாமிகளின் ஆங்கில அருள் சுருக்கெழுத்துச் சீட்டு!

இந்த இரண்டு நிகழ்ச்சிகளைக்கண்ட நான் சாமிகளுக்கு ஆங்கிலம் தெரியுமோ என்ற எனது ஐயத்தை வாய்விட்டுக் கேட்டுவிட்டேன். காரணம் இவ்விரண்டு சீட்டுக்களிலும் நன்றாகப் பேசக்கூடிய ஆங்கில அறிவுபெற்றவர் மகாவாக்கியங்கள் உயர்ந்த முறையில் ஆங்கிலச் சொற்களில் அமைந்திருந்தன. "எனக்கு ஆங்கிலம் தெரியாது. எல்லாம் இறைவன் செயல்" என்று திருமுருகனுடைய திருப்படத்தைக் காட்டிப் பேசிய சாமிகள் இத்தகைய அருள் சீட்டுக்கள் எந்த மொழியிலும் பெறமுடியும் என்று கூறினர். சாமிகளுடைய அருள்சக்தி திருவிளையாடல்களைத் தொகுத்துரைக்கும் புத்தகங்களைப் படித்துப் பார்த்த பல பக்தர்களிடமிருந்தும் கேட்ட எனக்குச் சாமிகள் இந்திய பாஷைகள் மட்டுமின்றி அன்னிய மொழிகளான பிரஞ்ச் மொழி. இத்தாலிய மொழி, அராபிய மொழி, சீன மொழி, ஜப்பான் மொழி— இவைகளிலும் பலநாட்டுப் பக்தர்களுக்குப் பல நற்செய்திகளையும் சுப மங்கள ஆசியும் அருளி இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டேன், அவருடைய அருள் சீட்டை வாங்கி ஆனந்தமடைந்த வித்வான்கள் எவ்வளவோ பேர், பேராசிரியர்கள் கணக்கற்றவர், தொழில் மேதைகள், டாக்டர்கள், வழக்கறிஞர்கள்—இப்படியே சொல்லிக்கொண்டே போகலாம். பிடில் வித்வான் சௌடய்யா அவர்களுக்குக் கன்னடத்தில் ஆசி அருளுகின்றார் சாமிகள்: பொறிஇயற் கல்லூரிப் பேராசிரியர் திரு. D. சூரியநாராயணனுக்கு அவர் பேசும் தெலுங்கில் அருள் சீட்டு வழங்குகின்றார் சாமிகள்: டாக்டர் கெரிசன் அவர்களுக்கு அவர் மொழி மலையாளத்தில் நற்செய்தி கொடுக்கின்றார் சாமிகள்: பிரபல வியாபாரி டைரக்டர் திரு. J. R. மேதாவிற்கு அவரது தாய்மொழி குஜராத்தி மொழியில் பேரன்புச் சீட்டு அருள்கின்றார் சாமிகள்: இராஜ்ய சபை உதவி ஆணையாளர் திரு. அமோலக் சந்த் அவர்கள் கேட்ட கேள்விக்கு ஹிந்தியில் பதில் அருள்கின்றார் சாமிகள். இவை மட்டுமல்ல! ஒரு மொழியை மக்கள் பேசுகின்றனர். ஆனால் பேசும் அந்த மொழியை எழுத மற்றொரு மொழியை உபயோகப்படுத்துகின்றார்கள். இந்த மொழிதான் கொங்கணி பாஷை என்பது. இதைப் பேசுகின்றவர் இதைக் கன்னட எழுத்தில் எழுதுகின்றனர். சாமிகள் சிர்சி என்ற நகரத்திற்கு 1967இல் சென்றனர். அங்கு கொங்கணி பாஷை பேசுபவர்கள் நிறைய உண்டு. இந்தப் பாஷைக்கு இதுவரை எழுத்துக்களே கிடையாது என்பதை உணர்ந்த சாமிகள் ஓர் அருள் சீட்டைப் பூஜை ரூமிலிருந்து அங்குக் கூடியிருந்த முக்கியஸ்தர்களுக்கு வழங்கினர். அந்தச் சீட்டில் தமிழ் எழுத்துக்கள் எழுதப்பட்டிருந்தன. இதை ஒரு தமிழரை அழைத்துப் படிக்கச் சொன்னர் சாமிகள். படித்தது தமிழ் மொழிகளல்ல, கொங்கணி மொழிதான், எழுதப்பட்டிருந்ததுதான் தமிழ்மொழியில்; இதைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த கொங்கணி பாஷைக்காரர்கள் அதைத் தாம் எழுத உபயோகப்படுத்தும் கன்னட மொழியிலேயே குறித்து வைத்துக் கொண்டனர்.

இப்படித் தமிழ் ஒன்றுதான் தெரியும் என்று கூறுகின்ற சாமிகளுக்கு எப்படி உலகில் உள்ள பாஷைகள் அனைத்தும் பாடமாகி உள்ளது என்பதை அறிந்துகொள்ள குருநாதர் திருவாக்கே நமக்கு உதவுகின்றன. சாமிகள்: இந்த உலகில் ஒரு பெரிய ஆசிரியரை அடைந்தால் அவரிடமிருந்து இரண்டு மூன்று மொழிகளை அறிய முடிகின்றது. இந்த அண்ட சராசரங்களுக்கே ஆதிநாயகனுகிய விளங்கும் எல்லாம் வல்ல எம்பிரான் திருமுருகன்; அவனே ஒப்பற்ற ஆசிரியராக நமக்கு வாய்த்துவிட்டால், ஒரு மொழியென்ன, உலகத்திலுள்ள அத்தனை மொழிகளையும் அறியும் ஆற்றல் தானுகவே வந்து விடுகின்றது.

சாமிகள் இத்திருவருள் சீட்டுக்களை பக்தர்கள் கையில் பேனுவையும் காகிதச் சுருளையும் வைக்கச் சொல்லி அருளும் முறை ஒன்று; சாமிகள் பூஜை அறையிலிருந்தும் அருள் சீட்டுக்களைப் பறக்கவரச் செய்து கொடுப்பதும் அவர் அருள்பாலிக்கும் முறையில் மற்ருென்று. அமோலக் சந்த் அவர்கள் சாமிகளிடமிருந்து எதிர்பார்த்தது தனக்கு மட்டும் தெரிந்த ஒரு விஷயத்திற்குப் பதில். அந்தப் பதிலை ஹிந்தி மொழியிலேயே சாமிகள் அவருக்குப் பூஜை ரூமிலிருந்து பறந்து வரும்படி செய்தார். பன்றிமலைக்குச் சாமிகள் அருளுக்காகப் பலபக்தர்கள் சென்றனர்; வந்திருந்தவர்களது கோரிக்கைகளைக் காகிதங்களில் எழுதி பூஜை அறையில் வைக்கும்படி சாமிகள் கூறினர். ஒவ்வொருவர் கோரிக்கைக்கும் பதில் எழுதப்பட்ட காகிதங்கள் அவரவர்கள் முக விலாசமிட்டுப் பூஜை அறையிலிருந்து திரும்பி வந்த அற்புதத்தை உடுமலைப்பேட்டை திரு. சின்னச்சாமி நாயுடு வாயாரப் புகழ்கின்ருர். இப்படியே எந்த பாஷை தெரிந்த மக்கள் வந்தாலும் அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு அவரவர் பாஷையிலேயே பூஜை அறையிலிருந்து பதில் வரவழைத்துக் கொடுப்பர் சாமிகள். பூஜை அறையில் வெள்ளைக் காகிதத்தில் பேனுவைச் சுருட்டி வைத்துவிட்டு, கதவுகளை மூடி, 'முருகா' என்று சாமிகள் சொல்லிக் கதவை ஒரு நுழையும் அளவுக்கு திறக்கவேண்டியதுதான்! உள்ளே வைத்த காகிதத்தில் பதில் எழுதி அது தானுகவே சாமிகள் திருக்கரங்களுக்குப் பறந்து வருகின்ற அருமையைப் பம்பாய் மாடுங்கா அப்பாதுரை அய்யர் பரவசப்பட்ட நிலையில் எடுத்துரைக்கின்ருர். சாமிகள் பால் பக்தி விசுவாசம் கொண்ட தம்பதிகள் தம் மனத்தில் சொல்ல முடியாதிருந்த ஒரு குறையை எப்படிச் சாமிகளிடத்தில் உரைப்பது என்று மயங்கி இருந்தனர். அவர்கள் வீட்டில் பூஜை செய்த சாமிகள், அவர்கள் மனத்தை வாட்டி வதைத்துக் கொண்டிருந்த விஷயத்தைக் குறித்து அந்தக் குறையை நீக்க வழியையும் பூஜை ரூமில் வைத்த சுருள் கடிதத்தில் எழுதி வரவழைத்தார். அதைப்படித்த சேலம் திரு. K. குழந்தைவேலுவின் ஆச்சரியத்தையும் இன்பத்தையும் வார்த்தைகளால் அளவிட முடியுமோ?

ஜெய தேவருடைய வாழ்க்கையில் கண்ண பரமாத்மா ஆடி அருளிய லீலைகளைப் போலவே சாமிகள் அன்றாட வாழ்க்கையிலும் திருமுருகன் ஆடி அருளுகின்ற லீலைகள் எண்ணிறந்தன.

சாமிகள் ஏற்காட்டில் தங்கி இருந்த சமயம் ஒருவர் ஆப்ரிகா தேசத்திலிருந்து சாமிகளைப் பார்க்கத் தன் குடும்பத்தோடு வந்திருந்தார். அவர் சாமிகளிடம் உரையாடிக்கொண்டிருந்த சமயம் சாமிகள் அவர் குடும்ப சரிதம் முழுதுமே கூறுவதைக் கேட்டு வியப்புற்றனர் வந்திருந்த ஆப்ரிகா தேசத்து குடும்பம். திடீரென்று அவர் ஒரு கேள்வியைச் சாமிகளிடம் கேட்க "சற்று இருங்கள், முருகனிடம் பதில் வாங்கித் தருகின்றேன்" என்று சாமிகள் கூறி ஒரு வெள்ளைக் காகிதத்தையும் பேனாவையும் பூசை அறையில் வைத்து வெளியில் வந்து, ஆப்ரிகா தேசத்தவரைக் கொண்டே 'முருகா எனக்கு எழுதிக் கொடு' என்று மும்முறை சொல்லச் சொன்னார் சாமிகள். கதவு கைமட்டும் நுழையும் அளவு திறக்கப் பட்டபோது முத்துப்போன்ற அழகிய ஆங்கில எழுத்துக்களுடன் அக்காகிதம் தானாகப் பறந்துவந்து சேர்ந்தது. அதில் குறித்துள்ள உண்மையைப் படித்த ஒவ்வொருவருடைய மெய்யும் சிலிர்த்தது. "இவ்வுலகம் ஒரு புண்ணிய பூமி. இது சீர் குலைந்து, செருக்குற்றுத் தடுமாறி நிற்கின்றது. எங்கு பார்க்கினும் கட்சிப்பிணக்கும், வறுமைத் தொல்லையும், சமயப் பூசலும், சாத்திர சர்ச்சைகளும் ஓங்கி வளர்கின்றன. உயர்ந்தோரைத்தேடி உணராமல் கண்மூடித்தனமாய் இன்றைய உலகம் மண்மூடிக் கிடக்கின்றது. இருப்பினும் இதில் சோலை வளர்க்க வல்லவர்கள் இல்லாமல் போகவில்லை. மேகமானது யாராவது கட்டளையிட்டா மழையைப் பெய்கிறது? மேகம்போல் பெரியோர் அருள் மழை பொழிந்து உலகத்தை வாழ்விக்க இருக்கின்றனர். அவ்வருள் மழையைப் பயன்படுத்திக்கொள்ளும் பண்பு மக்களுக்கு அமைய வேண்டும். ஆகவே உம்மைப் போன்றவருக்கு அருள்மழை பெய்து வழிகாட்ட ஸ்ரீ பன்றிமலை சாமிகளைப் போன்ற மகான்கள் இருக்கிறார்கள். அவர்களை நீர் பூரணமாய் நம்பும் அவர்கள் உமக்குக் கலங்கரை விளக்குபோல் வழி காட்டியாவார்கள்." இதைப்போன்றே சாமிகள் கோலாலம்பூர் சென்றிருந்த சமயம் அங்கு ஒரு முஸ்லீம் பேராசிரியருக்குச் சாமிகள் ஒரு அருள்சீட்டும் அந்நாட்டு சுகாதார மந்திரி திரு. சம்பந்தம் அவர்கள் இல்லத்தில் வரவழைத்துக் கொடுத்ததும் குறிப்பிடத்தக்கது. ஒரு அறையில் மேஜையில் பேனாவும் தாளும் வைக்கப்பட்டன. எல்லோரும் வெளியே வந்தவுடன் முஸ்லீம் பேராசிரியரைச் சாமிகள் ஓதும்படி சொல்ல அவரும் ஒரு நற்செய்தி எழுதித்திரும்படி ஓதினார். ரூமின் கதவிற்கிடையில் சாமிகள் 'முருகா எழுதிக்கொடப்பா' என்று சொன்னவுடனே ரீம் என்ற தொனியோடு கடிதம் பறந்து சாமிகள் கைக்குக் கிடைத்தது.

"பக்தா, உன் எதிர்காலம் நலமாயிருக்கும்; நான் பல ரூபங்களிலும் இருப்பேன். உமது நாயகனுகவும் இருக்கிறேன். என்னைத் தினமும் ஐந்து முறை ஓதிவரவும்" என்ற திருவரிகளைக் கண்ட முஸ்லீம் பேராசிரியருக்கு விவரிக்கவொண்ணு ஆச்சரியம் ஏற்பட்டது என்று சொல்லவும் வேண்டுமோ?

சாமிகள் அல்லல் உலகில் அவதிப்படும் அன்பர்களின் கேள்வி களுக்கு மட்டும்தானு பதிலளிக்கின்ருர்? சாமிகளின் பேரருளைத் தஞ்சமென அடைகின்ற பக்தர்களுக்கு மட்டும்தானு அருள்சீட்டு அருளுகின்ருர்? அயல்நாட்டினருக்கு மட்டும்தானு இறைவன் தண்ணளியை வற்புறுத்தும் உண்மையை அறிவிக்கின்ருர்? கடிதங்களுக்கே பதில் எழுதி அனுப்பவும் சாமிகளுக்குத் திருமுருகன் உதவுகின்ருர். பம்பாயில் உள்ள ஒரு பக்தருக்கு உடனடி யாகத் தான் எழுதிய கடிதத்துக்குச் சாமிகள் பதிலும் பஞ்சாட்சரமும் வேண்டியிருந்தது. இதை அறிவித்த திரு ஆர். என். தீட்சதர் பம்பாய் பக்தருடைய கடிதத்தையும் அக்கடிதத்திற்குப் பதில்போட கவரையும் சாமிகளிடம் கொடுத்தார். அப்போது சாமிகள் கையில் அன்பர்கள் எழுதிய பல கடிதங்கள் இருந்தன. சாமிகள், 'முருகா, அப்பாதுரை அய்யருக்கு நான் கடிதம் எழுத வேண்டுமாம். தீட்சதர் சொல்கிருர். நீ எழுதிக் கொடு' என்று சொன்ன மாத்திரத்தில் சாமிகள் திருக்கரத்தில் இருந்த கடிதங்களிலிருந்து ஒரு கவர் துள்ளி எழும்பி பட்சிபோல் பறந்து, குறிவைத்து அடித்தாற்போல அத்தனை பேரையும் தாண்டிப் பின்னுல் உட்கார்ந்திருந்த தீட்சதர் அவர்கள் மடியில் வந்து விழுந்தது. அது ஒட்டப்பட்டிருந்தது, ஒட்டப்பட்ட இடம் நன்ருக உலர்ந்திருந்தது. வெளிச்சத்தில் அந்த தபால் உறையைப்பார்த்தபோது சாமிகள் பன்றிமலையில் உபயோகிக்கும் லெட்டர் பேப்பரில் ஸ்ரீ சாமிகள் கையாலேயே எழுதப்பட்டு நறு மணம் வீசும் பஞ்சாட்சர பொட்டலத்துடன் கடிதம் இருந்தது நன்ருகத் தெரிந்தது. சாமிகள் தமது கைகளிலிருந்த மற்ற கடிதங் களைத் தீட்சதர் அவர்களிடம் கொடுத்து எல்லாக் கடிதங்களையும் முருகன் படத்திற்கு முன் வைக்கச்சொன்னுர். ஒரு நிமிடம் கழித்து எடுக்கச் சொல்லி அவைகளைப் பார்க்கச் சொன்னபடி பார்த்ததில் முருகன் படத்திற்கு முன்னுல் வைக்கப்பட்ட எல்லாக் கடிதங்களுக்கும் பதில் எழுதப்பட்டு முறையே அந்தந்தத் தபால் உறைகளில் வைக்கப் பட்டு ஒட்டப்பட்டுமிருந்தன. இதைச் சொன்னுல் நம்பமுடியுமா? அதை நேரிலேயே கண்ட பக்தர்கள் பிரமிப்பையும் பேராச்சரியத்தை யும் எப்படி உரைப்பது? இதே முறையில் சாமிகள் தாண்டிக்குடியிலும் திரு. சித்தப்பச் செட்டி அவர்களுக்குப் பதில் எழுதி அனுப்பியதை நேரே கண்ட எனக்குச் சாமிகள் கூறிய திருமொழிகள் பெருவியப்பை ஊட்டின.

சாமிகள்: நான் டெல்லிக்குச் சென்று திரும்பிய சமயம். டெல்லியில் என்னைக் காண நூற்றுக்கணக்கில் மக்கள் கியூ வரிசையில் நின்றதையெல்லாம் நீங்கள் படித்திருப்பீர்கள். தினமும் பல பக்தர்களிடமிருந்து பெருவாரியாகக் கடிதங்கள் வந்து சேர்ந்த வண்ணமாகவே இருந்தன. உடனடியாகப் பதில் விரும்பும் பக்தர்கள்: பஞ்சாட்சரம் கேட்டு எழுதும் அன்பர்கள், அவர் சிந்தையைக் குழப்பும் பெருங்கேள்விகளுக்குப் பதில் கேட்கின்ற பெரு மனிதர்கள்: இவ்வளவு கடிதங்களுக்கும் நான் பதில் எழுத வேண்டும். ஒரு மொழியல்ல பல மொழிகளில் கடிதங்கள். நான் இருப்பதோ பன்றிமலை. மதருஸ் போன்ற நகரங்களாயிருந்தாலும் பல பக்தர்களின் உதவி கொண்டு பதில் எழுதிவிடலாம். நான் என்ன செய்வது! திருமுருகனை எண்ணி வேண்டிக் கொள்வேன். அவனே உளங்கனிந்து அவ்வளவு கடிதங்களுக்கும் தக்க மொழியில் பதிலும் பஞ்சாட்சரமும் அனுப்பிவிடுவன். என்னென்று இயம்புவது என் திருமுருகன் பேரருளை !

சாமிகள் காகிதங்களை வைத்துக்கொண்டு ஆடுகின்ற மற்றோர் அற்புதமும் கற்பனையையும் மிஞ்சுவதாக இருக்கின்றது. தாண்டிக்குடியில் ஒரு கடிதத்தை எரித்து அதன் சாம்பலை ஆற்றில் கரைத்துவிட்டு வந்தபின், அதே கடிதத்தை ஒரு பழுதுமில்லாமல் கரைத்து வந்தவர் சட்டைப்பையிலிருந்து எடுத்துக் கொடுத்த அற்புதத்தை நாம் மறக்கமுடியுமா? இது போன்று எவ்வளவோ இடங்களில் சாமிகள் அற்புதம் ஆடிஇருக்கின்றார். சாமிகள் திண்டுக்கல்லில் 'இராஜ இரத்தின' திருஇல்லம் சீரமைப்பு மும்முரமாக நடந்துகொண்டிருந்தபோது உடனடியாக நிறைய சிமெண்ட் வேண்டியிருந்தது. கடிதம் எழுதினாலும் தாமதமாகும். ஆள் அனுப்பி சிமென்ட்வர ஏற்பாடு செய்வதற்குக்கூட நேரமில்லை. அப்போது திண்டுக்கல்லில் ஸ்ரீ பன்றிமலைசாமி தெருவில் போனும் அமைக்கப்படவில்லை. சாமிகள் டால்மியாபுரத்தில் உள்ள பக்தர் ஒருவருக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்தக்கடிதம் சாமிகள் சொற்படியே எரிக்கப்பட்டுத் தண்ணீரில் கரைக்கப்பட்டுத் தண்ணீரும் வெளியே கொட்டப்பட்டது. இதைச் செய்த மறுகணமே ஒரு சிறுவன் இதே லெட்டரை டால்மியாபுரத்திலுள்ள சாமிகள் பக்தரிடம் கொடுத்துவிட்டு மறைந்தான். கொண்டுவந்தவனைப்பற்றிச் சிந்தனை செய்யப் பக்தருக்கு நேரமுமில்லை, சந்தர்ப்பமும் உதவவில்லை. சாமிகள் விருப்பப்படி உடனடியாகத் தேவைப்பட்ட சிமென்டை லாரியில் ஏற்றி அனுப்பியபின்தான் பக்தருக்கு லெட்டர் கொண்டுவந்தவன் யார் என்கின்ற சிந்தனை ஏற்பட்டது. அவன் யார் என்பதைச் சாமிகளிடமே கேட்டுக்கொண்ட போதுதான் திருமுருகனே சாமிகள் விருப்பத்தைப் பூர்த்திசெய்து அருள்கின்றான் என்ற உண்மையை

அறிந்து கொண்டார். பக்தர் திருமுருகனேயல்லவா சாமிகளது கடிதத்தைத் தன்னிடம் கொண்டுவந்து சேர்த்திருக்கின்ருன்!

இப்படிச் சாமிகள் திருமுருகன் பணியை எவ்வளவோ முறை பயன்படுத்தி அனுபவித்திருக்கின்ருர். ஒரு சமயம் தன் மாமா வோடு சாமிகள் கன்னியாகுமரி, திருச்செந்தூர் முதலிய தலங்களைக் கண்டு திரும்பினர். ஊருக்குத் திரும்புமுன் மாமாவுக்குக் கோடைக் கானல் பார்க்க வேண்டுமென்ற ஆசைவந்தது. சாமிகளிடம் கேட்க சரியென்று சொல்லிவிட்டார். கோடைக்கானல் போகும் வழியில் பன்னக்காடு என்ற ஓர் ஊருண்டு. இங்குப் பவளம் எனும் இளைஞனைச் சாமிகளுக்குத் தெரியும். இன்னும் சற்றுநேரத் தில் கோடைக்கானலை அடைய இருக்கும் சாமிகளும் ஒரு கடி தத்தை அவசரமாக எழுதி பஸ் பன்னக்காடு வந்தவுடன் பஸ் ஸுக்கு வெளியே வீசியெறிந்தார். அங்கு ஒரு ஆளும் இல்லாத தைக்கண்ட மாமா 'இப்படிக் கடிதத்தை வீசியெறிந்தால், அது பவளத்திடம் போய்ச் சேருமா' என்று கேட்டார். 'நிச்சயம்போய்ச் சேரும்' என்று கூறிய சாமிகளும் மாமாவும் முதல் பஸ்ஸில் கோடைக்கானல் போய்ச் சேர்ந்தார்கள். பவளம் என்ற பையன் அடுத்த பஸ்ஸில் சாமிகள் விரும்பிய துணிமணி கம்பளி முதலிய வற்றை எடுத்து வந்துவிட்டான். இதை நம்பமுடியாத மாமாவும் 'உனக்கு எப்படித் தகவல் கிடைத்தது' என்று பவளத்தைக்கேட்க பவளம் தன்னிடம் ஒரு பையன் சாமிகள் கொடுத்த லெட்டரைக் கொடுத்ததாகக் கூறினன், "முருகா! முருகா!" என்று திருமுருகன் அவதாரமாகிய சாமிகளை வணங்குவதன்றி வேறு எவ்வகையில் நாம் நம் வியப்பினை அறிவித்துக்கொள்ள முடியும்.

சாமிகள் காகிதத்தை வைத்து அருளுகின்ற சித்துக்களில் சமீபத்தில் நடந்த ஒன்று மிகவும் வேடிக்கையானது. திரு. புரு ஷோத்தம் K. சாலியன் என்பர் ஒரு எஞ்ஜினீயர். அவரிடம் சாமி கள் '35167' என்ற இலக்கமிட்ட ஒரு சிறிய காகிதத்துண்டைக் கொடுத்து வாயில்போட்டு மென்று விழுங்கச்சொன்னர். தும்மு மென்ருர் சாமிகள். உடனே எஞ்ஜினீயர் மூன்றுதரம் தும்மி விட்டார். மூன்ருவது தும்மலோடுகூட ஒரு பேப்பர் அவர் நாசி யிலிருந்து வெளிவந்தது. அதைப்பார்க்க '35167' இலக்கமிட்ட அதே துண்டுக் கடிதமாக இருந்ததை எல்லோரும் கண்டு வியந்தனர்.

சாமிகள் சிலசமயங்களில் நாத்திகரையும் திகைக்கச்செய்யும் அற்புதமும் காகிதத்திலே அமைவதும் பார்க்க வேடிக்கையாகவும் உடனே பலனளிக்க வல்லதாகவும் இருக்கும். காகிதத்தில் சாமிகள் ஒரு தேளின் படத்தையோ பாம்பின் படத்தையோ வரைவதும்,

அந்தப் படத்தேளும் படப்பாம்பும் கொட்டுமா கடிக்குமா என்று சாமிகள் கேட்பதும், கொட்டாது கடிக்காது என்று அவர்கள் சொல்லிச் சாமிகள் சொற்படி தம் கரங்களைக் கடுதாசியில்வைக்க படத்தேள் கொட்டுவதும் படப்பாம்பு கடிப்பதும் விந்தைகளில் பெருவிந்தையாக அல்லவா இருக்கின்றது! இப்படியே பொய் சொல்லிச் சாமிகளை ஏமாற்ற நினைத்தவர்களையும் ஒரு சமயம் சாமிகள் பேப்பரில் தேனீக்களை வரைந்து, பேப்பரில் பூ என்று ஊதி விட வரைந்திருந்த தேனீக்கள் வந்து பேப்பர் தேனீ கொட்டுமா என்று சந்தேகப்பட்ட நபரைக் கொட்டிவிட்டன. தாளைவைத்துக் கொண்டு அற்புதம் ஆடுவதிலும் எவ்வளவு வகைகள்! சாமிகள் ஊதினால் ஒட்டிய கடிதம் திறக்கின்றது, சாமிகள் கடிதத்தைப் பிரிக்கக்கூடத் தேவையில்லை, அதிலுள்ள சமாச்சாரங்களை அப்படியே சொல்வர். காகிதம் சாமிகள் திருவுள்ளப்படி பறந்துவரும்! விபூதிப் பிரசாதத்தோடும் பறந்துவரும்! சாமிகள் பதில்கொண்டே குறிப்பிட்ட பக்தருக்கும் பறந்துவரும்!

## கோபத்திலும் அற்புதம்! கருணையிலும் அற்புதம்!!

"உள்ளத்திலே கருவங்கொண்ட போதினில்
ஓங்கியடித்திடுவான் — நெஞ்சில்
கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தை சொன்னாலங்கு
காறி உமிழ்ந்திடுவான்" — பாரதியார்

கண்ணனுடைய குணங்களைத் தோழனென வருணிக்கும் பாரதியார் பாடலில் இது ஒருபகுதி. மகாபாரதக் கதைகளிலும் கர்விகள் மமதை ஆட்டம் ஆடுவதையும் அவர்களை அடக்கும் கண்ணனின் லீலா விநோதங்களையும் காண்கின்றோம். சாமிகளுடைய அருள் வாழ்க்கையிலும் பொய் சொல்வோரும் கபட மனப்பான்மையரும் அகந்தை மனிதர்களும் தம் வெறுக்கத்தக்க குணங்களால் அவதிப்படுவதும் அதன்பின் தவற்றை உணர்ந்து சாமிகள் அருளால் ஆசியருளப்படுவதையும் காணலாம்.

ஒருசமயம் சாமிகளோடு சில தலங்களைக் காணச் சென்ற பக்தர்கள் ஒரு பிராமண சமையல்காரரையும் தம்மோடு உதவிக்கு அழைத்துச் சென்றிருந்தனர். சாமிகள் ஒருநாள் காலை குளித்து விட்டுப் பூஜைக்குத் தயாரானர். தன்னுடைய துண்டைச் சாமிகள் உபயோகித்து விட்டார் என்பதை அறிந்த சமையல்காரருக்கு மனத்தில் துவேஷம் ஏற்பட்டது. அந்த நிமிடமே அவர் வாய் குழறியது. துண்டை எடுத்துவந்த கை பச்சைவாதம் வந்ததைப் போல் சுவாதீனம் அற்று விழுந்தது. வலியினால் தரையில் புரண்டு கதறினர். எல்லோரும் அவரைச் சூழ்ந்துகொள்ளத் தான் செய்த

தவற்றைக் கூறிச் சாமிகளின் மன்னிப்பை வேண்டினர். "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்பதைக் கூறிய சாமிகள் "எல்லாம் நீயே என்று வேற்றுமைகள் அற்று எக்காலத்திலும், எல்லாக் காரியங்களிலும் நடந்துகொண்டால் சாலச்சிறந்தது" என்றும் கூறினர். "முருகா, நீயே இந்த உபத்திரவத்தைச் சமையல்காரருக்குப் புத்தி வருவதற்காகக் கொடுத்திருந்தால், உமது விபூதி இது, இதனாலேயே குணமாகட்டும்" என்று சொல்லிக் கொண்டே சமையல்காரர் கைகளில் சாமிகள் விபூதிப் பிரசாதம் அளிக்க அந்தக் கணமே அவரை வாட்டிய நோய் பறந்து விட்டது. "வேண்டுவோர் வேண்டுவனவெல்லாம் அவரவர் உள்ளம் தெரிந்து பிறவிப்பயனை அனுசரித்து அருள்பாலிக்கும் சிறந்த வழிகாட்டி. உடல் நோய்களை அகற்றி, ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்க வழிகாட்டும் கலிகாவதார காருண்யமூர்த்தி" என்று இந்த நிகழ்ச்சியை குறிப்பிடும் திரு. K. S. சரவணை J. R. S. அவர்கள் சாமிகளின் அருள்தன்மையை வாயாரப் புகழ்கின்ருர்.

சாமிகளைக் காண்பவர்கள் யாவரும் ஒரு தெய்வீகப் புருடரைக் கண்டு மகிழ்வுறும் தன்மை அடைவர். சாமிகளிடம் என்ன சக்தி இருக்கின்றது என்று அறிய வரும் ஒரு சில நாத்திக அன்பர்களும் சாமிகளைக் கண்டவுடன் தம் கொள்கைகளையும் மறந்து அவர் அன்பில் மயங்கி விடுவர். ஒருசில சமயங்களில் – அவைகளை விரல் விட்டே எண்ணிவிடலாம் – சில துவேஷ மனப்பான்மையினர் எதற்கும் துணிந்து சாமிகளிடமே தம் பொய்யையும் துவேஷ மனப்பான்மையையும் காட்ட முனைவதும் உண்டு. ஆனால் சாமிகள் தம்மிடமே துணிந்து பொய் சொல்லும் துவேஷ மனப்பான்மையரை உடனே தண்டிக்கத் தயங்கியதே இல்லை.

ஒருநாள் இருவர் சாமிகளையே சோதிக்க முன்வந்தனர். அதில் ஒருவர் ஒரு ஓட்டலில் பரிமாறுபவர். மற்றொருவர் சமையல் வேலை செய்பவர். இருவரும் சாமிகளிடம் "தமது வேலை உயருமா?" என்று கேட்டனர். "நீங்கள் என்ன வேலையில் இருக்கின்றீர்கள்" என்று சாமிகள் கேட்டார். தாங்கள் கணக்கு வேலையில் இருப்பதாக இருவரும் பொய் சொன்னர்கள். உடனே சாமிகள் அவர்கள் செய்து வரும் வேலை இன்னது என்று சொல்லி அவர்கள் அப்போது செய்து வரும் வேலையே உயர்ந்த உத்தியோகமென்று உரைத்திட அவர்களுக்கு உள்ளத்தில் அச்சமேற்பட்டு விட்டது. பின்பு சாமிகள் ஒரு கடிதத்தில் தேனீக்களை வரைந்து இந்தத் தேனீக்கள் கொட்டுமா என்று கேட்க ஒருவர் சந்தேகமாகப் பதிலளித்தார். சாமிகள் கடிதத்தின் மேல் 'பூ' என்று ஊதினவுடன் தேனீக்கள் வந்து அந்த சந்தேகப்பட்ட நபரைக் கொட்ட அவர் சாமிகளின் அடிகளில்

விழுந்து பணிந்தார். தன் குருநாதர் ஆடியருளும் அற்புதங்களைத் தொகுத்துரைக்கும் திரு. P. கன்னையா இந்த நிகழ்ச்சியை 1956இல் குறிப்பிடுகின்றார்.

ஒரு சந்தர்ப்பத்தில் தன் பக்தர் ஒருவரை மரியாதைக் குறைவாக நிந்தித்துப் பேசியவர் பைத்தியமாக மாறின நிகழ்ச்சியும் ஒன்றுண்டு. திரு. இரத்தினசாமி நாடார் என்பவர் சாமிகளின் அருளால் ஒரு காப்பிக் கடை வைத்து மிக விரைவில் நல்ல நிலைமைக்கு உயர்ந்த பக்தர். அவர் ஓர் உண்டியல் வைத்து, தினந்தோறும் காணிக்கை சேர்த்து, உண்டியல் நிறைந்தவுடன் அதைச் சாமிகள் ஆசியோடு பழநி ஆண்டவருக்குச் சேர்ப்பித்து வருவது வழக்கம். ஒருசமயம் அவர் இந்த நிறைந்த உண்டியல் பெட்டியோடு சாமிகளைக் காண வரும்போது சிலர் அவரை மரியாதைக் குறைவாகப் பேசினர். இதைப் பக்தர் சாமிகளிடம் உரைக்கவே இல்லை. பக்தர் வந்து சேர்ந்த கொஞ்ச நேரத்தில் சாமிகள் வீட்டுக்குமுன் ஒரு கூட்டம் இரு பைத்தியங்களை இழுத்துக்கொண்டு வந்தது. அவ்விரு பைத்தியங்களும் 'உண்டியல்' என்று சொல்லிக் கொண்டு தம் வேஷ்டி சட்டைகளைக் கிழித்துக் கொண்டிருந்தனர். அப்பொழுதுதான் உடையார் தனக்கு வழியில் இவர்களால் அவமரியாதைப் பேச்சு ஏற்பட்டதைச் சாமிகளிடம் அறிவித்தார். குணங்கெட்டவர் சித்தம் கெட்டவராக மாறியதைக் கண்ட சாமிகள் தம் கருணை உள்ளத்தால் உடனேயே அவர் சித்தத்தை நல்ல நிலைமைக்குக் கொண்டுவந்து குணத்தையும் சீர் செய்தார். சாமிகளை மன்னிப்புக் கோரி விழுந்தவர்களை "எனக்கு நீங்கள் கெட்டவர்கள் இல்லை, முருகனிடம் மன்னிப்புக் கேளுங்கள்" என்று சாமிகள் கூறி மூன்று பங்குனி உத்திரங்களுக்குப் பழநி போய் முடி எடுத்து மனசுத்தியோடும் பயபக்தியுடனும் காவடி எடுத்துத் தியானித்து நல்வழிப்படவும் ஆசி அளித்தனர்.

உலகில் போலிச் சாமியார்கள் பலர் மக்களை ஏமாற்றி அலைகின்றனர். பரப்பிரம்மத்தைக் காணாத அவர் பேசுவது எல்லாம் பரப்பிரம்மத்தைப்பற்றியே. ஆண்டவனையே நேருக்கு நேராய்ச் சந்தித்த அளவில் அவர்கள் பேச்சும் செயலும் விரிந்திருக்கும். அவர்களைப் பற்றிப் பேசுகின்ற புத்தர் அவர்களை ஒரு காதலனுக்கு உவமிக்கின்றார்; ஆனால் இந்தக் காதலனுக்குத் தன் காதலியாரென்றுதான் தெரியவில்லை என்றும் சொல்லி ஏளனம் செய்கின்றார். இவர்களை, எங்கே அரண்மனை என்பது தெரியாமல் மெத்தை வாசல் படி கட்டுபவருக்கும், ஒரு நதியைக் கடக்க விரும்பும் ஒருவன் எதிர்க்கரையே தன்னிடத்திற்கு வரவேண்டும் என்று எண்ணுபவனுக்கும் ஒப்பிட்டு எள்ளி நகையாடுகின்றார் புத்தர். இந்தக் காலத்திலும் அத்தகைய கபட சன்யாசிகள் உண்டு. ஒரு சமயம் ஜல்லிப்பட்டிக்கு அருகாமையி

லுள்ள திருமூர்த்தி மலைக்குச் சாமிகள் வந்தார். அப்போது ஒரு பாறையின் மீது ஒரு சாமியார் உட்கார்ந்து கொண்டு மக்களுக்கு விபூதி கொடுத்துக்கொண்டிருந்தார். சாமிகளும் தம் பக்தர்களோடு அந்தச் சாமியாரை அணுகினர். அகம்பாவியான அந்தச் சாமியார் அங்கிருந்த மண்ணைத் தன் துண்டால் வேண்டுமென்றே பக்தர்கள் மீது தட்டிவிட்டார். அகம்பாவ மனப்பான்மை கொண்ட கர்வியின் மமதையை உடனடியாக அடக்கச் சாமிகள் சித்தம் கொண்டனர். தன் கையிலிருந்த கைக்குட்டையை எடுத்து ஒருமுடி போட்டார் சாமிகள். அப்பொழுதே ஒட்டிக் கொண்டான் கர்வி அந்தப் பெரும் பாறையில். தன் குற்றத்தை உடனே ஒப்புக்கொண்டு தன்னை மன்னிக்கும்படி வேண்டினன் கபட சந்யாசி சாமிகளை வணங்கி. சாமிகளும் சாமியாருக்கு உடனே உதவினர்: சாமியாரைப் பற்றி இருந்த பாறை உடனே சாமியாருக்கு விடுதலை அளித்தது! என்னே சாமிகளின் கருணையும், கருணையைக் காண்பிப்பதிலும் ஒரு வேடிக்கையும் புதுமையும்!

இந்தப் போலிச் சாமியாரைப் பற்றி ஒரு நாள் சாமிகள் கோபிச் செட்டிபாளையத்தில் பேசும்போது அவர் பாறையில் ஒட்டிக்கொண்டு அவதிப்பட்டதையும் சொன்னர். அந்நகர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் திரு. K. R. தெய்வநாயகம் இப்படியும் செய்ய முடியுமா என்ற ஐயம் கொண்டார். அவர் மனத்தில் ஏற்பட்ட ஐயத்தை உடனே அறிந்துகொண்ட சாமிகள் அவரைக் கொண்டே அவர் ஐயத்தை நீக்கச் சித்தம் கொண்டார். ஆசிரியரைக் கூப்பிட்டு அவர் கைகளைப் பக்கத்துச் சுவரில் சாமிகள் வைத்தார். "கைகளை எடுங்கள்" என்ருர் சாமிகள். உடனே ஆசிரியர் கைகளை எடுக்க முயல, கைகள் அசையவில்லை; கைகள் சுவரில் ஒட்டிக் கொண்டன, போலிச் சாமியார் பாறையில் ஒட்டிக்கொண்டதைப் போல! அங்குக் கூடியிருந்த ஸ்பெஷல் டெபுடி கலெக்டர் திரு. சங்கரன், போலீஸ் உதவி சூப்ரெண்டெண்ட் திரு. ரங்கபாபாஷ்யம், மாவட்ட தாசில்தார் திரு. சேதுமாதவன் முதலியோர் எல்லோரும் இழுத்துப் பார்த்தார்கள். ஒவ்வொருவரும் ஆசிரியரை இழுக்கப் பார்த்தார்கள். ஒவ்வொருவரும் ஆசிரியரை இழுக்க இழுக்க ஆசிரியர் கைகளுக்கு வலி கண்டுவிட்டது. வலி பொறுக்கமுடியாதவரைக் கண்டு சாமிகள், "முருகா, இவர் கைகளை விடு" என்றுரைத்தவுடன் ஆசிரியர் கைகள் பளிச்சென்று சுவரிலிருந்து விடுபட்டன. அதிர்ச்சியினல் மயக்க முற்ற ஆசிரியரை யாரோ பழனிமலைக்கு எடுத்துச் செல்வது போல் இருந்தது. பழநி உச்சியை அடைந்தவர் தம் சுய உணர்வையும் அடைந்து சாமி திருவடிகளைத் தொழுதார். அன்று சாமிகள் மனமுவந்து அவருக்கு ஒரு சக்தியையும் ஈந்தார். "இன்று முதல் என் பெயரைக் கூறித் தேள் கடித்தவர்களுக்கு விபூதி கொடுத்தீராளுல் விஷம் இறங்கிவிடும்" என்று சாமிகள் அனுக்கிர

கித்தார். "அது முதல் தேள் கடித்துத் துன்பப்படுகின்றவர்களுக்கு சாமிகள் அருளினால் விஷம் நீங்கச் செய்து முகமலர்ச்சியுடன் அனுப்பி வைக்கின்றேன்" என்று அகமகிழ்ந்து உரைக்கின்றார் ஆசிரியர்.

சாமிகளுக்கு உற்சாகம் பொங்கிவிட்டால் உடனே நூதனமான அற்புதங்களை விளையாட ஆரம்பித்து விடுவர். ராஜ்ய சபை உதவி ஆணையாளராக இருந்த அமோலக் சந்த் ஒருநாள் சாமிகளைக் கீழே விழுந்து கும்பிட்டார். அப்போது தரையில் பட்ட அவர் தலையிலிருந்து ஒரு பொருள் வருவது போன்று உணர்ந்தார். அது ஒரு சிவந்த பூவாக இருக்கக் கண்ட அவருக்கு அது வைத்துப் பூஜிப்பதற்குகந்த மணமலராகிவிட்டது. சாமிகள் ஒரு முறை பல தலங்களை தரிசித்து வரும்போது ஒரு வழிப்போக்கர் விடுதியில் மாலை பூஜை நடத்தவேண்டியிருந்தது. சாமிகளோடு இருந்த திண்டுக்கல் டிவிஷனர் (எலக்டிரிக்) என்ஜினியர் திரு. பாலிகா அவர்களிடம் சாமிகள் வத்தி இருக்கின்றதா என்று கேட்டார். இல்லை என்று அவர் கூறினார். மறுபடியும் சாமிகள் "உங்கள் டிரௌசர் பாக்கெட்டைக் கைவிட்டுத் தேடிப் பாருங்கள். இருக்கும்" என்றார். அவர் அப்படியே தேடிக் கைகளை வெளியே எடுக்கும்போது ஒரு கட்டை விரல் பருமன் உள்ள ஒரு மொத்தமான ஊதுவத்தி சுமார் ஒன்றரை அடி நீளத்தில் பாக்கெட்டிலிருந்து வந்தது. கோலாப்பூருக்குக் காரில் சென்று கொண்டிருக்கும்போது டாக்டர் ஒருவர் மூக்கிலிருந்து ஒரு மஞ்சளை வரவழைத்துச் சாமிகள் லீலா விநோதங்களைக் காணவேண்டுமென்று ஆவல் நிரம்பி இருந்த பம்பாய் பக்தர் திருமதி. சீதாலட்சுமி வெங்கட்ராமனுக்கு அளித்தார் சாமிகள். மதுரை வழக்கறிஞர் திரு. பழநிசாமி நாடார் அவர்களுக்கு ஒரு மஞ்சள் வரவழைத்துக் கொடுத்தார் சாமிகள். கூட இருந்த பக்தர் திரு. கமலசாமி அவர்களுக்கு மதுரை பக்தருக்குக் கிடைத்தது தனக்குக் கிடைக்கவில்லையே என்ற எண்ணம் அலை மோதிக்கொண்டிருந்தது. இந்த ஓயாத அலைமோதலுக்கு ஆளான அவர் உள்ளத்தையும் திருப்தி செய்யத் திருவுளம் கொண்டார் சாமிகள். "உங்கள் ஜிப்பா பாக்கட்டைப் பாருங்கள்" என்றார் சாமிகள். என்ன ஆச்சரியம், அவருக்கும் ஒரு மஞ்சள் பிரசாதம் அவர் பாக்கெட்டிலேயே இருந்தது.

சேலம் வியாபாரி திரு. M. நாகமாணிக்கம் அவர்கள் வீட்டுக்கு ஒருநாள் சாமிகள் எழுந்தருளினர். ஒரு டம்ளர் நிறையவும் மற்றொரு டம்ளரில் பாதியுமாக இரு டம்ளர் பால் சாமிகளுக்கு அளிக்கப்பட்டன. தான் பல வீடுகளுக்குச் சென்று நிறைய சாப்பிட்டு வந்ததால் தன்னைத் தொந்திரவு செய்ய வேண்டாமென்று சாமிகள் கேட்டுக்கொண்டார். இருந்தாலும் பக்தர் கொஞ்சமாவது சாப்பிடவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்.

அதன்பின் சாமிகள் அன்புகூர்ந்து பாதிபால் வைத்திருந்த டம்ளரின் மீது தமது கையை வைத்தபடியே, "நான் தங்களுக்காகப் பால் சாப்பிட்டு விட்டேன். இதோ அடையாளமாக இதைப் பாருங்கள்" என்று தம்கையை எடுத்தார். அரைடம்ளர் பால் இருந்த டம்ளரில் பால் பொங்கி அதிகமாகி டம்ளர் நிறைந்து விட்டது. அந்தப் பாலை அங்கிருந்த பக்தர்கள் யாவரும் பகிர்ந்து கொண்டனர் என்று சொல்லவும் வேண்டுமோ?

வற்றாத விபூதிப்பை அடைந்த திருச்செந்தூர் வித்வான் திரு. சிவ. முருக. இலக்குவன் சாமிகளின் அருள் ருசியை அனுபவித்தவரல்லவா! அவருக்கு வற்றாத பையைச் சாமிகளிடமிருந்து பெற்றதுபோல் இன்னுமொரு பொருளையும் பெற ஆசை பிறந்தது. அது பழநியம்பதியிலே கோலக்கொலு வீருந்து மோனத்தவஞ் செய்யும் ஸ்ரீ தண்டாயுத பாணி சாமியின் திருக்கோவணமே. அதற்காகச் சாமிகளிடம் மன்றாடியபோது "உங்கள் மடியிலேயே கோவணம் இருக்கின்றதே, பாருங்கள்" என்றார் சாமிகள். ஆம்! கோவணம் வித்வான் மடியிலேயே இருந்தது.

கேட்டதை அருளுகின்ற சாமிகளின் பேரன்பினை அன்பர்கள் நன்றாக அனுபவிக்கின்றனர். கேட்கக்கூட வேண்டியதில்லை. நினைத்தாலே நடந்து விடும். ஒரு சமயம் சாமிகள் ஒருவரை ஒரு சில நிமிடங்களில் ஆயிரம்மைல்கள் தாண்டி அயல் நாட்டிற்கு அழைத்துச் சென்ற புதுமை யாவரையும் மலைக்கச் செய்வதொன்றாம். திரு. ஜான் என்பவர் பக்தர்களுக்கு முன் கீழே படுத்திருந்தது தான் தெரிந்தது. ஆனால் அவர் எங்கெல்லாமோ சஞ்சரித்து வருகின்றார் என்பதை அவருடைய படுத்திருந்த நிலையும் முகமும் உணர்த்தியது. அவர் உடல்தான் இங்கு இருந்ததே தவிர, அவரைச் சாமிகள் இதாலி நாட்டிற்கே அனுப்பிவிட்டார். அவருக்குப் பழக்கமான நண்பர்களைக் கண்டு பேசிக்கொண்டும், தான் பத்து வருடங்களுக்கு முன் பார்த்த சில அழகான இடங்களைப் பார்த்துக் கொண்டும் வர ஆரம்பித்தார் ஜான் அவர்கள். ஜான் அவர்கள் இதாலியில் எங்கெங்கு செல்கின்றாரென்பதையும் யார் யாருடன் பேசிக்கொண்டிருக்கின்றாரென்பதையும் சாமிகள் ஜான் படுத்திருக்கும் இடத்தில் குழுமியிருந்த அன்பர்களுக்கு எடுத்துரைத்துக் கொண்டிருந்தார். ஜான் அவர்கள் பயணம் முடிவுற ஜான் அவர்கள் தன் சுய உணர்வு பெற்று எழுந்தார். சாமிகள் கூறிய அத்தனை விஷயங்களையும் ஒன்று விடாமல் கூறினார்: இதாலியில் கொஞ்சநேரத்தில் நிகழ்ந்த தன் சொந்த அனுபவத்தையல்லவா சொல்லி மகிழ்ந்தார்!

ஜான் அவர்கள் உடலாவது இந்தியாவில் இருந்தது, அவர் இந்தியாவை விட்டு இதாலிநாடு சுற்றிவரும்போது! மற்றொரு

அதிசய நிகழ்ச்சியில் ஒருவரை உடலோடு கைலாச பர்வத்திற்கே சாமிகள் அனுப்பிவைக்கக் கிருபை செய்தார். கொஞ்ச நேரம் மறைந்து கைலாச பர்வதத்திலிருந்து திரும்பிவந்த அந்த வயோதிகர் உடம்பு கடும் குளிரால் நடுக்க முற்றிருந்தது. அவருடைய தலை முடி முழுவதும் நனைந்திருந்தது. கைலையைக் கண்ட பேரானந்தத்தில் அந்த வயோதிகர் திளைத்திருந்தார் என்று சொல்லவும் வேண்டுமோ.

சேலத்தில் திரு. V. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு ஒரு பேழையில் விபூதி நிறையப்போட்டு நித்தியப்படி உபயோகத்திற்கென்று சாமிகள் அளித்தனர். அந்த விபூதி அட்சயப் பாத்திரத்திலுள்ள பொருளைப்போல் தானே வளர்ந்துகொண்டு வரும் விந்தையைப் பேழையைப்பெற்ற பக்தரே போற்றிமகிழ்கின்றார். மதராஸ் வழக்கறிஞர் திரு. T. V. இராமச்சந்திர முதலியார் அவர்கள் வீட்டில் சங்கு ஸ்தாபனம் சாமிகள் செய்து அருள்புரிந்தார். அதற்கு வேண்டிய பொருள்களைத் திரட்டியவர்கள் சாமிகள் விரும்பிய பெருந்தினையை எந்தக்கடையிலும் பெறமுடியவில்லை. அந்த நிலையில் என்ன செய்வது என்று ஏங்கியிருந்த முதலியார் அவர்களுக்குச் சாமிகள் பெருந்தினை வரவழைத்துக் கொடுத்தது மிகவும் விந்தையான முறையில் அமைந்தது. சாமிகளைப்பார்க்க மலாயாவிலிருந்து ஒருவர் வந்தார். அவரிடம் இருந்த காலிப் பையை வாங்கி, முதலியார் அவர்களைச் சாமிகள் "முருகா பெருந்தினை கொடு" என்று சொல்லிப் பிரார்த்திக்கக்கூறினர். முதலியார் அவர்களும் அப்படியே சொல்லிச் சாமிகள் திருவுளப்படி அந்த வெற்றுப்பையில் தம் கைகளைவிட அந்தப் பைக்குள் ஒரு சிறிய பை ஒன்று இருந்தது. அதைப் பிரித்துப்பார்க்க பூஜைக்குவேண்டிய, கடைவீதியிலேயே கிடைக்காத, பெருந்தினை இருந்தது. சாமிகளின் அருளை என்னென்று வர்ணிப்பது? சேலத்தில் திரு K. N. வசந்தா சாட்டர்ஜி என்பவரின் கர்ப்பிணி மகளுக்கு நெஞ்சுவலி ஏற்பட்டது. சாமிகள் ஒரு கருடனுடைய இறகு ஒன்றை அவள் படுத்திருக்கும் தலையணைக்கடியில் வைத்தால் குணமேற்படும் என்று கூறினர். அவர் கருடனுடைய இறகுக்காகப் போகாத கடைஒன்று மில்லை; அது மட்டும் கிடைக்கவே இல்லை. இதனால் மனக்கவலையுடன் சோர்ந்து தன்மகள் தங்கியிருந்த வைந்தியசாலை ரூமிலிருந்து அடியெடுத்து வைத்த தந்தைக்கு ஓர் அதிசயம் காத்துக்கொண்டிருந்தது. எதற்காக ஏங்கித் தவித்தாரோ அதே கருடன் இறகு தன்னெதிரிலேயே தரையிலே கிடக்கின்றது. மற்றொரு ஆச்சரியமும் அவரை ஆனந்தத்தில் ஆழ்த்தியது. இந்தக் கருடன் இறகைச் சாமிகள் கூறியபடி தன்மகள் படுத்திருக்கும் தலையணைக்கு அடியில் வைக்கத் தன்மகளை வாட்டிவதைத்த நெஞ்சுவலியும் இருந்த இடம் தெரியாது ஓடிவிட்டது! திருச்சி திரு. V. சுப்பிரமணியம்

வேலேசெய்யும் அலுவலகத்தில் பின்புறத்தில் ஒரு முனீஸ்வரன் பிரதிஷ்டைச் செய்யப்பட்டிருந்தது. அவரும் அலுவலகக் கட்டிட ஒருபகுதியில் குடியிருந்தார். முனீஸ்வரனுல் கர்ப்பிணிகளாக இருந்த தன் இருபெண்களுக்கும் ஒரு தீமையும் ஏற்படாமலிருக்க சாமிகளே வேண்டிக்கொண்டார். சாமிகள் அந்தக் கோவில்பக்கம் சென்று அங்கிருந்த வேப்பிலே மரத்திலிருந்து கொத்தொன்றைப் பறித்து, அவரைத் தன் மேல்துண்டைப் விரித்துப் பிடிக்கச்சொல்லி, வேப்பிலேக் கொத்தை உதறினர். அதிலிருந்து பச்சைப் பூச்சிகள் விழுந்து அவைகள் எல்லாம் நெல்லாக மாறின. இப்படி அரைக் கால்படி நெல் கிடைத்ததை முனீஸ்வரனுக்குப் பொங்கல் செய்து படைக்கும்படி சாமிகள் கூறி அனுக்கிரகித்தார்.

சாமிகளுடைய சித்துக்களேக் கணக்கெடுக்க முடியாது. அதன் புதுமையையும் கற்பனேயிலும் சிந்திக்கமுடியாது. ஒரு சமயம் கரைந்த சோப்பைப் புதியது ஆக்கின விந்தையைப் பார்ப்போம். மதுரையில் ஒரு தமிழ்வித்வான் சாமிகளது சித்தாடும் திறனேக் கேள்விப்பட்டார். சாமிகள் திருச்செந்தூரில் கரைந்துபோன சோப்பின் மிச்சத்தைப் புதியதாக்கியதைப்பற்றிப பேச்சு வந்தது. அவருக்கு ‘இப்படியும் நடக்குமா’ என்ற கேள்விக்குறி மனத்தில் வேரூன்றிநின்றது. “இவ்வளவு சிறந்த படிப்புகளுக்குப் பின்னரும் உங்களுக்கு இதிலெல்லாம் சந்தேகமா” என்று சாமிகள் வித்வானேக்கேட்டு, ஓர் உபயோகமான சோப்பை அவரிடம் கொடுத்துப் பூஜை அறையில் வைத்து அறையைச் சாத்திவிட்டு வரச்சொன்னர். வித்வான் சோப்பை வாங்கிய அவசரத்தில் அது கீழே விழுந்தது. அதனுல் அது விழுந்தபாகம் காயமுற்றதுபோல் பள்ளமாகிவிட்டது. சாமிகள் பூஜை அறையின் கதவைச் சற்றுத் திறந்தார். “முருகா,” இந்தப் பக்தர் தமிழ்ப்புலவர் உன் பெருமைகளேப்பற்றி அநேக நூல்கள் படித்திருக்கிருர். எனினும் அவருக்கு சந்தேகம், சஞ்சலம் முருகா! நீ கலியுகத்தில் கண்கண்டதெய்வம், உன்னுல் எதையும் செய்யமுடியும் என்பதை இந்தப் பக்தருக்குக் காட்டு, முருகா! உள்ளே வைத்திருக்கும் தேய்ந்த சோப்பைப் புதியதாக்கிக்கொடு.” என்று சாமிகள் சொல்ல, அடுத்த விநாடியில் வித்வான் கைகளில் புத்தம்புதியச் சோப்பொன்று அப்பொழுதுதான் வார்ப்படத்திலிருந்து எடுத்துக் கொடுத்ததுபோல் நறுமணத்துடன் வந்தது. அது கரைந்துபோன பழைய சோப்புதான் என்பதை விளக்குவது போன்று, சற்றுநேரத்திற்குமுன் சோப் கீழேவிழுந்து காயம்பட்டதைப்போன்ற பள்ளமும் அது அடிபட்ட இடத்திலேயே அப்படியே இருந்தது!

“உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலே பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா

அலகிலா விளையாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே"

என்று கம்பர் இறைவன் அலகிலா விளையாட்டை வியந்தார். அலகிலா விளையாட்டுடையார் வழியில், முறையில், அருளில்வந்துள்ள ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஆடி அருளுகின்ற விதவிதமான நூதன புதுமை கற்பனையையும் மிஞ்சும் அற்புதங்களை எப்படி வருணிப்பது?

## தெய்வச் சிலைகள் கொண்டு அற்புதம்

நட்டகல்லை தெய்வமென்று நாலு புட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொண மொணத்து சொல்லும் மந்திரமேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ

இப்படிப் பாடினார் சிவ வாக்கிய சித்தர். யோகத்தின் மாண்பினை விளக்குகின்ற பாட்டு இது. சிவவாக்கியர் சிலை வழிபாட்டினை கண்டித்தார் என்பது அர்த்தத்தை அநர்த்த மாக்குவதாகும். அவரே ராம நாமத்தை உயர்த்திப் பேசும் பாட்டுக்களும் உண்டு. இராம நாமத்தைப் புகழ்பவரா ராம வடிவையோ சிவ வடிவையோ இகழ்ந்து பேசமுடியும். இந்த பரப்பிரம்ம சொரூபிகளுக்கு நட்ட கல்லையும் பேசவைக்க முடியும் ஆற்றல் உண்டு. எழில் திரு உருவங்கள் கொண்ட இறைவன் விக்கிரகங்களையே இஷ்டப்பட்டபோது இஷ்டப்பட்ட பக்தர்களுக்கும் வரவழைத்துக் கொடுக்கும் சக்தியும் உண்டு. சாமிகள் திருச்சி குழுளுரில் குன்றுதோருடும் திருக் குமரனையே அக்கோவில் விக்கிரகத்திலிருந்து கோவில் பூசாரியிடம் ஓடிக் காட்டச் செய்து மக்களுக்குத் தெய்வீகத்தை விளக்கிய அரிய செயலை நாம் மறந்துவிடவில்லை. திரு. T. D. பழனிப் பிள்ளை அவர் கட்குத் திருக்காட்டுப்பள்ளித் தோட்டத்து மணலில் தண்டாயுதபாணி உரு ஒன்று எழுதி அம்மணலை அவருக்குக் கொடுக்க, அம்மணலுரு உலோகத்தால் செய்த அற்புதசிலையானதையும் நாம் மறக்கவில்லை. இப்படியே ஸ்ரீ கோகர்ணத்தில் திரு. நாகப்பா அவர்களுக்கும் கிளியாமாணூரில் திரு. K. K. வர்மா அவர்களுக்கும் முறையே ஸ்படிக லிங்கமும் ஸ்படிக விநாயகரும் அளித்ததும் நாம் அறிந்ததே.

சாமிகள் அருளால் ஆசிச்சீட்டு வருகின்றதையும், ஸ்ரீ முருகனின் திருப்பாதச் சுவடுகள் மங்கள நீரால் நனைந்து காகிதத்திலோ பட்டுத் துணிகளிலோ பதிக்கப்பட்டவாறு கிடைப்பதும் நாம் சாமிகள் பக்தர்களுக்கு உவந்தருளும் சித்தாடல் செயல்களில் கண்டுள்ளோம். ஒரு சந்தர்ப்பத்தில் சேலம் பக்தர் வக்கீல் திரு. சீனிவாசன் குடும்பத்தினருக்கு ஒரு பூவைக் கொடுத்து அதை ஸ்ரீநிவாசப் பெருமாள்

விக்கிரமாக மாற்றிக் கொடுத்து அதை அவர்கள் கார் பிரயாணம் செய்யும்போது தம்முடன் எடுத்துச் செல்லக் கூறி அவர்களுக்கு வழியில் நேர்ந்த கார் விபத்திலும் உதவி அருளினார் சாமிகள். அந்த ஆபத்தினின்றும் ஸ்ரீ சீனிவாசப் பெருமானே காப்பாற்றுவர் என்றும் அந்தச் சிலையைக் கொடுக்கும்போதே சாமிகள் திருவாய் மலர்ந்தருளினார். அதன்படியே நடந்தது. விழுப்புரம் நியூ வாசவி விகார், திரு. K. சுப்ரமண்ய ரெட்டியாருக்கு ஸ்ரீ சக்தி அம்சம் கொண்ட விக்ரகம் ஸ்ரீ முருகனருளால் வரவழைத்துக் கொடுத்தார் சாமிகள். "முருகனின் சக்தி ஆயுதமாகிய வேல் ஒன்றும் வரவழைக் கப்பட்டு ஒரு பக்தரின் பூஜைக்கு என்று கொடுக்கப்பட்டது" என்று மதரூஸ் திரு. M. S. கோவிந்தசாமி நாயுடு உரைக்கின்றார். இப்படி எவ்வளவோ பேருக்குச் சாமிகள் விக்கிரகங்கள் உவந்தளித்திருப்பது அன்பர்கள் வாயிலாக அடிக்கடி கேள்விப்படுகின்றோம்.

ஒருநாள் சில ஊர்களில் சிலர் வேல் வரவழைத்தும் விக்கிர கங்கள் வரவழைத்தும் மக்களுக்குக் கொடுப்பதைப் பற்றிச் சாமி களிடம் நானும், சில அன்பர்களும் பேசிக்கொண்டிருந்தோம். சாமிகள் அப்போது, "விக்கிரகம் வரவழைக்கலாம், வேல் வரவழைக் கலாம், விக்கிரக ஆராதனையும் வேண்டியதே. மனத்தை ஆண்டவன் பால் செலுத்த இது மிகவும் பயன்படுகின்றது. இது பக்தியை வளர்க்கின்றது. மீராவின் கதை உங்களுக்கெல்லாம் தெரிந்திருக் கும். அவள் குழந்தையாக இருந்தபோது அவள் ஒரு கிருஷ்ண விக்கிரகத்தை வைத்துக்கொண்டுதான் விளையாடினாள். அந்த விளையாட்டு கிருஷ்ணப் பிரேமையாக வளர்ந்து விட்டது. அந்தக் குழந்தை தூங்கும்போதுகூட கிருஷ்ணன் விக்கிரகத்தைத் தன்னோடு கூடவே வைத்துக்கொண்டிருந்தாள். அவள் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர வளரக் கண்ணன் பக்தியும் வளர்ந்தது. அவளுடைய ஜீவாத்மா பரமாத்மா ஐக்கியத்தையே நாட விரும்பிவிட்டது. இந்த நிலையைக் கொண்டுவரத்தான் சிலருக்கு விக்கிரக ஆராதனை ஆரம்பத்தில் உபயோகப்படுகின்றது. கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு நம்பிக்கை ஊட்டவும், கொஞ்சம் பக்தி உள்ளவர்களின் ஆர்வத்தைப் பெருக்கவும், உள்ளன்போடு பழகுகின்றவர்களை கடவுள் பக்தியில் ஊக்குவிக் கவும் அவர்களுக்குப் பிடித்தமான சிலைகளையோ, வேலையோ கொடுத்துப் பெரியவர் உதவுகின்றனர்.

விக்கிரகம் வரவழைக்கலாம், வேல் வரவழைக்கலாம் இதுவெல் லாம் செய்வது ஒருபெரிய அற்புதமல்ல. ஆனால், இதையே சிலர் தொழிலாக நடத்துவதைப்பற்றி நீங்கள் கூறுகின்றீர். அந்தச் செயல் வெறுக்கத்தக்கது. அது அவர்கள் நிலைக்கும் உகந்ததல்ல.

அவர்கள் அடைந்துள்ள ஆத்மீக மேல்நிலையிலிருந்தும் அவர் களைக் கீழே தள்ளிவிடும். உண்மையிலேயே பெரியவர்கள் பொருள்பலன்கருதிச் சித்துவிளையாட மாட்டார்கள். சில சமயங் களில் இத்தகைய செயல்கள் மக்களை ஏமாற்றிக் காசுபறிக்கும் ஈனத்தொழிலில் சிலரை இறக்கிவிடுவதையும் கண்கூடாக நாம் காணலாம். இத்தகைய வெறுக்கத்தக்கச் செயல்களைக்கண்டுதான் நல்ல சித்துக்களையும் உண்மையிலேயே பெரிய மகான்களையும் அநேகர் வெறுத்துப் பேசுகின்றனர். உங்களுக்கு என்ன விக்ரகம் வேண்டும். ஒரு கணத்தில் வரவழைக்கலாம். இது ஒரு பெரிய காரியமல்ல. என்று கூறிக் கையைத்தூக்கி என் மடிமீது ஏதோ ஒரு பொருளை அளிப்பதுபோல் வீசினர். ஒரு அழகான இரண்டு இஞ்சுகள் உயரமான சாஸ்தா விக்கிரகம் அப்போதுதான் கடைந் தெடுத்தாற்போல் பளபளப்பாக என் மடிமீது விழுந்தது. அதை ஆவலோடு பார்த்து அனுபவித்தோம். சாமிகள் அதைத் திரும்ப வும் தம் திருக்கரங்களில் பெற்று "எங்கே அந்த விக்ரகம்" என்று கேட்டு மூடியிருந்த தம் கையைத் திறந்து காட்டினர். சாஸ்தா விக்ரகம் மறைந்து விட்டது.

சாமிகள் பூஜை செய்வதற்கு வேண்டிய யந்திரத்தைக்கூடத் தம் அருள்சக்தியால் வரவழைக்கின்றார். மதுரை "பாம்பே டைலர்ஸ்" உரிமையாளர் திரு. M. S. விஜயநாத் பூஜை செய்யத் தமக்கு ஒரு யந்திரம் வேண்டுமென்றார். அவர் சட்டைப்பையை ஒரு போலீஸ் அதிகாரி சாமிகள் சொற்படி சோதனைசெய்து அதில் ஒன்றுமில்லை என்றார். "இவர் தனது பாக்கெட்டிலேயே யந்திரத்தை வைத்துக்கொண்டு என்னைக் கேட்கின்றாரே" என்று சாமிகள் மறுபடியும்கூற திரு. விஜயநாத் தம் பாக்கெட்டில் தேடிப் பார்த்ததில் அவருக்கு வேண்டிய யந்திரமும் கைக்குட்டை ஒன்றும் கிடைத்தது. அவர் அதற்குரிய பூஜைமுறைகளைப்பற்றிச் சாமிகளைக் கேட்டார். சாமிகள் பின்னர் ஒரு சமயம் சொல்லித் தருவதாகக் கூறி அதுவரை அந்த யந்திரத்தைப் பத்திரமாக வைத்துக்கொள் ளும்படிக் கூறினர். மறுநாள் திரு. விஜயநாத்தும் குச்சானூர் சனீஸ்வரபகவான் கோவில் பூசாரியும் சாமிகளோடு பேசிக்கொண் டிருக்கும்போது சாமிகள் பூசாரியின் சட்டைப்பையைப் பார்க்கச் சொன்னர். என்ன ஆச்சரியம்! திரு. விஜயநாத் தன்கடையில் ஒரு மேஜையுள் ஒரு டப்பாவில் கெட்டிக் காகிதத்தில் ஒரு பட்டுக் கயிறால் நன்றாகக்கட்டியிருந்த சாமிகள் அருளால் கிடைத்த கைக் குட்டையுள் பத்திரமாக வைத்திருந்த அதே யந்திரம் பூசாரி சட்டைப்பையில் இருந்தது. பேராச்சரியமடைந்த திரு. விஜயநாத் சாமிகள் கூறியபடி நேராகத் தன் கடைக்குச்சென்று அந்த யந் திரம் வைத்திருந்த டப்பாவைத் திறக்காமல் சாமிகளிடம் கொண் டோடி வந்தார். பெட்டியைத்திறந்து பட்டுநூல் கயிறை அவிழ்த்துக்

கைக்குட்டையைப் பிரித்துப் பார்த்தனர் அன்பர்கள். யந்திரம் அதில்இல்லை. சாமிகள் இந்த அற்புதத்தைப் பேசும்போது, "இதெல்லாம் பெரியதில்லை. இதனுலெல்லாம் யாருக்கும் நன்மையுமில்லை. இதற்கெல்லாம் மூலமாக இருக்கும் முருகனின் அருள்பெற வேண்டும். அவன் செய்யக்கூடிய அற்புதங்கள் கணக்கில் அடங்காதவை. அவற்றைக் கற்பனை செய்யவும் முடியாது. அவன் அருள் இருந்தால் முடியாதது என்று ஒன்றுமில்லை, அவனருள் பெற பக்திவேண்டும். பக்தியினுல் எல்லாவற்றிலும் மேன்மையான முக்தி அடையலாம்" எனத் திருவாய்மலர்ந்தருளினர்.

சாமிகள் உற்சாகப் பெருக்கெடுக்கும்போது விக்கிரகங்களை வைத்துக்கொண்டே சிந்துவிளையாடவும் முற்படுவர். சென்னையில் ஒரு பக்தர் வீட்டில் பக்தர் பூஜித்துவரும் நான்கு பொன் உருவங்கள் கொண்ட ஒரு வெள்ளிப்பெட்டியை சாமிகளிடம் ஆசிபெறக் கொடுத்தார் பக்தர் ஒருவர். சாமிகள் அந்தப் பக்தரிடமே பெட்டியைக்கொடுத்துத் திறந்து பார்க்கச்சொன்னுர். அதில் இருந்த ஒரு தெய்வச்சிலை காணவில்லை. அந்தச்சிலை அங்கு வந்திருந்த ஒரு வடநாட்டு வணிகருடைய சட்டைப்பையில் இருந்தது, சாமிகள் திருச்சித்தப்படி. அப்போது அங்கு டில்லி மத்திய அரசாங்கத்தில் உயர்பதவி வகித்த பேரறிஞர் திரு. S. ரங்கநாதன் I. C. S. முதலியோர் இருந்தனர். 'இப்படியும் நடக்குமா' என்ற பேராச்சரியத்தில் மலைப்புற்றிருந்த பேரறிஞர் கைகளிலேயே மூடியிருந்த இந்தப் பெட்டியைக் கொடுத்து, சாமிகள் "இந்தப் பேழையிலிருந்து எந்த சாமி வெளிப்பட வேண்டும் சொல்லுங்கள்." என்று கேட்டார். "சரஸ்வதி" என்று அவர்கூற சாமிகள், "வீணைபிடித்த சாமி வெளியேறட்டும். முருகா! முருகா!" என்று சொல்ல நான்கு சிலைகள் உட்கொண்ட பேழையைத் திறக்கச்சொல்ல, கலைமகள் சிலை அதில் இல்லை. அந்தக் கலைமகள் விக்கிரகம் சாமிகள் கூறியபடியே அப்பேரறிஞர் சட்டைப் பையிலேயே இருந்தது. இந்த அற்புதச் செயலைக் கண்டு யாவரும் பரவசமடைந்தனர்.

## ஆழ்வாரைக்காட்டும் அற்புதம்

"புவியுள் நான் கண்டதோர் அற்புதம்
    பூணி மேய்க்கும் இளங்கோவலர் கூட்டத்து
அவையுள் நாகத்து அணையான் குழல் ஊத
    அமரலோகத்தளவும் சென்றிசைப்ப
அவியுணு மறந்து வானவர் எல்லாம்
    ஆயர்பாடி, நிறையப் புகுந்து ஈண்டி
செவியுள், நாவின் சுவை கொண்டு மகிழ்ந்து
    கோவிந்தனைத் தொடர்ந்து என்றும் விடாரே"

--பெரியாழ்வார்.

கண்ணன் குழல் ஊதுகின்ருன். இடையர் சிறுவர்கள் கூட்டத்து மத்தியில் இருந்து கொண்டு பூமியில் ஊதுகின்ற அவன் குழல் வானுலகத்திலுறையும் அமரர்களேயே இழுத்து வந்துவிடுகின்றது ஆயர்பாடிக்கு. இதுதான் புவியுள் பெரியாழ்வார் கண்ட அற்புதம்! இந்த அற்புதக்காட்சியைப் பாட்டாகவே நமக்குத் தந்தருளினுர். இன்று நமது சாமிகள் அந்தப் பெரியாழ்வாரையே ஒரு சிறுவன் வடிவத்தில் ஆழ்வார் திருநகரியில் பக்தர்களுக்குக் காட்டிவிட்டார். இது நமது சாமிகள் காட்டிய திருவற்புதம்! 1956இல் தம் பக்தர்களோடு சாமிகள் ஸ்ரீ ஆழ்வார் திருநகரிக்குச் சென்ருர். அவ்விடம் உள்ள பெரியாழ்வார் அவதரித்த புளியமரத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் போது அம்மரப்பொந்திலிருந்து கௌபீனதாரியாய் ஒருசிறு பையன் வெளிவந்து ஓடினுன். அதுகண்டு சாமிகள் பெரியாழ்வார் சிறு பையனுகத் தரிசனம் தந்துள்ளார் என்று சொல்ல எல்லோரும் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தனர். இது உண்மையா என்பதைச் சாமிகள் அந்த அர்ச்சகர்களைக் கொண்டே பெரியாழ்வாரையே அவர் சந்நதியிலேயே கேட்கச் சொன்னுர். அர்ச்சகர்களும் அப்படியே கேட்க ஆம் என்று ஒப்புக்கொள்வதுபோன்று அர்ச்சகர்கள் கைகளில் இனிய கற்கண்டுகள் வந்து சேர்ந்தன. "கோவிந்தனைத் தொடர்ந்து என்றும் விடாரே" இளங்கோவலர் கூட்டமும், பெரியாழ்வாரும். அத்தகையோரையே சாமிகள் இளங்கோவலரைப் போலவே சிறுபையனுக வரவழைத்துக் காட்டிய விந்தையினை என்னென்று இயம்புவது?

சாமிகளே ஒரு திருத்தொண்டர். அவர் அழைத்தால் மற்றெரு திருத்தொண்டர் வராமலா இருக்கமுடியும்? சாமிகள் மனம் வைத்தால் வெகு நாட்களுக்கு முன் நடந்ததாகக் கூறப்படும் அற்புதத்தையும் இன்றும் பக்தர்களுக்குக்காட்டி இறை மாண்பை விளக்கமுடியும். 1954ஆம் வருடம் திருக்கோயிலூர் கோவிலுக்குச் சாமிகள் தம் பக்தர்களோடு வந்தார். ஆனுல் வந்து சேர்ந்த நேரம் இரவு 10–15 மணி இருக்கும். சாமி சந்நிதானம் மட்டும் திறந்திருந்தது. அம்மன் சந்நதியை, அர்த்தஜாமப் பூஜைமுடிய, மூடிவிட்டனர். அந்தச் சந்நதியைப் பற்றிய ஒரு பயமூட்டும் செய்தியும் உண்டு. வெகு வருடங்களுக்கு முன் ஓர் அர்ச்சகர் தன்னுேடு இருந்த குழந்தையைக் கோவிலுக்குள் மறந்தாற்போல் வைத்துப் பூட்டிவிட்டு வீடு திரும்பினுர். "விட்டுச் சென்ற குழந்தையைக் கொண்டுவந்தபின் சாப்பிடலாம்" என்று கோபித்துக்கொண்ட மனைவி சொற்படி பூட்டி இருந்த கோயிலைத் திறந்தார். கோவிலில் குழந்தை இல்லாததைக்கண்டு அம்மன் சந்நதியைத் திறக்க அவர் முற்பட்டபோது 'ஏன் பீச முத்திரை செய்த சந்நிதானத்தைத் திறக்கிருய்' என்று ஓர் அசரீரி கேட்டது. அர்ச்சகர் நடந்ததைக்கூற அவரைத் தன் மனைவியை அழைத்துவர அசரீரி ஆணை பிறந்தது. மனைவியுடன் திரும்பிவந்த அர்ச்சகரும்

மறுபடியும் எழுந்த அசரீரி ஆணைப்படி குறிப்பிட்ட கோபுரவாசல் பக்கம் போய்பார்க்க குழந்தை இரண்டாய்க் கிழித்தெறியப்பட்டிருந்த தாகவும் அன்று முதல் அக்கோபுர வாசலை மூடி இருப்பதாகவும் ஒரு கதை உண்டு. இன்னும் ஒரு கதையும் உண்டு. இந்த விஷ்ணு கோவிலில் துர்க்கைச் சிலை ஒன்றும் உண்டு. பூர்வீகத்தில் கோவில் கர்ப்பக்கிரகத்தைப் பூட்டியவுடன் அந்தச்சாவியை ஒருதட்டில்கதவுக்கு வெளிப்புறம் வைத்துவிட்டால் சாவி துர்க்கையிடம் வந்துவிடுமாம். காலையில் அர்ச்சகர் வந்து தட்டைக் கையில் வைத்துக்கொண்டு பூட்டியிருக்கும் கர்ப்பகிரகத்திற்கு முன் நின்றால் சாவி துர்க்கையிட மிருந்து தட்டிற்கு வந்து விடுமாம். இதைக் கேள்விப்பட்ட பக்தர் ஒருவர் பேராச்சரியமுற்றார்.

பக்தர் ஒருவர் : இப்பொழுதுகூட அப்படி நடக்கின்றதா?

அர்ச்சகர் : இப்பொழுதெல்லாம் அதுமாதிரி நடப்பதில்லை.

பக்தர் : அதற்கென்ன காரணம்?

அர்ச்சகர் : எல்லாம் சரிவர நடந்து கொள்ளாததுதான் காரணம்.

இந்தக் கதைகளையும் இன்றும் அன்றுபோல் நடக்காததற்குக் காரணங்களையும் கேட்டுக்கொண்டிருந்த சாமிகள் இன்றும்தெய்வீகத் தால் நடக்காதது ஒன்றுளதோ என்பதைக் காட்டியருளத் திருவுளம் கொண்டார். அன்று வழக்கத்திற்கு மாறாக அம்மன் கோவிலை அர்ச்சகர் சாமிகளுக்காகத் திறந்துவிட்டார். சாமிகள் கூறியபடியே அம்மன் சிலைக்குப் பின்னால் அந்த சந்நதிச் சாவி வைக்கப்பட்டது. அது ஒரு பெரிய சாவி. கதவும் மூடப்பட்டது. பின் சாமிகள் கதவை ஒரு கை நுழையும் அளவிற்கு திறந்து இடுக்கில் தன் கையை நீட்ட கர்ப்பக்கிரக அம்பாள் அருகில் இருந்த வெள்ளிமணி தானே ஒலிக்க ஆரம்பித்துவிட்டது. அந்த நாதத்தோடு அம்பாள் பின்னே வைக்கப்பட்டிருந்த பெருஞ்சாவியும், அந்நாளில் துர்க்கை யிடமிருந்து அர்ச்சகர் தட்டுக்கு ஓடிவருவதுபோல், சாமிகளின் கைகளுக்குப் பறந்தோடி வந்துவிட்டது! அன்று நடந்ததே இன்று நடந்துவிட்டது!

சாமிகள் பெரியாழ்வாரை வரவேற்றுக் காட்டிய அற்புதம் போலவே ஆலயங்களிலும் பூஜை ரூமிலும் திருமுருகனின் திருவேலை யும் ஆடவைக்கின்றார், திருமுருகனையே ஆட வைத்துக் காட்டு கின்றார். 1952-ஆம் வருடம் மதராஸ் டெபுடி பிரசிடெண்சி போஸ்ட் மாஸ்டர் திரு. K. S. சிவசுப்ரமணியம் சாமிகளுடன் திருப்பரங் குன்றம் கோயிலுக்குக் கிருத்திகையன்று சென்றார். மாலை மணி

ஆறு. திருமுருகன் கையில் சாற்றியிருந்த திருவேல் சாமிகள் தியானிக்க கொஞ்ச நேரம் இப்படியும் அப்படியுமாக நான்கு அங்குல தூரம் வரை ஆடிக்கொண்டு அர்ச்சனை தீபாராதனை முடியும் வரையில் இருந்தது. சாமிகளுடன் சேவைக்குச் சென்றதின் பலன் கண்களுக்குக் கிடைத்த பாக்கியத்தை எல்லோரும் போற்றினர். ஒரு சமயம் சேலம் திரு. பார்த்தசாரதி செட்டியார், மதுரை திரு. வைத்தியநாத அய்யர், பேராசிரியர் திரு. N. P. பழனியப்பன் முதலியோர் பன்றிமலைக்குச் சாமிகளைத் தரிசிக்க வந்திருந்தனர். பூஜை அறையுள் இருந்த மணியைக் கண்டவர்களுக்கு இந்த மணி தானகவே அடிக்குமா என்ற எண்ணம் உதித்தது. இதைப் பக்தர்கள் கூடிப் பேசுவதைக் கேட்ட சாமிகள் அங்கு வந்திருந்த மதராஸ் திரு. K. V. கிருஷ்ணமூர்த்தியை அழைத்து "முருகா, மணி அடிக்கும் சப்தம் கேட்கவேண்டும்" என்று சொல்லச் சொன்னர். அவரும் அப்படியே சொல்ல, மூடியிருந்த பூஜை அறையில் ஒரு குழந்தை குதித்ததுபோல் ஒரு சப்தம் கேட்டது. அதன்பின் காலடி சப்தத்துடன் நடமாடி மணியை கணகணவென்று அடித்த சப்தமும் கேட்டது. "மணியை ஏன் அடிக்க வைக்க முடியாது முருகன் இதைச் செய்ய மாட்டானு" என்று கூறிய சாமிகளின் எளிய இனிய சுபாவத்தையும், யாராலும் சாதித்துக் காட்ட முடியாத பேராற்றலையும் கண்டு மெய்சிலிர்த்து வாயடைத்து ஆனந்த வெள்ளத்தில் மூழ்கியிருந்தனர் பக்தர்கள்.

ஒருநாள். அமாவாசை புண்ணியநாள்! மேகம் சூழ்ந்த வானம். நல்லார்க்கும் அல்லார்க்கும் மழைபொழிவது போலச் சாமிகள் மனம் எனும் அகண்ட வானம் அருள் கிருபா கடாட்சம் எனும் ஞான மழையைப் பொழிந்து சேலம் வழக்கறிஞர் திரு. A. R. சீனிவாசன் இல்லத்தில் கூடி இருந்த பக்தர்களை ஆட்கொண்டது. வெண்ணீறு அணிந்த வெள்ளாடை பூண்ட ஒரு சாமியார் கைப்பிரம்போடு வந்தார். அவர் அகங்கார ஸ்வரூபியாகத் தென்பட்டார். அவர் பேச்சிலும் மமதை, அவர் போக்கிலும் மமதை "தாங்கள் திருக்கோயிலூர் வாசியாயிற்றே. சில தினங்களுக்குமுன் அம்மன் சந்நதியிலிருந்து தானே வந்த ஒரு சாவி அற்புதத்தைப்பற்றிக் கேள்விப்பட்டீரா" என்று சாமிகள் கேட்க இல்லை என்றே மமதையோடு பதில் கூறினர் பிரம்பு தாங்கிய சாமியார். திருக்கோயிலூர் சந்நதியிலிருந்து சாவி வந்ததைப்போல் இந்தப் பூஜை அறையிலிருந்து உங்கள் பிரம்புத்தடியை வரச் செய்யலாமா என்றார் சாமிகள். சாமிகள் கூறியபடியே சந்தேகப் பேர்வழி பூஜை அறையில் பிரம்பை வைத்துவிட்டுத் திரும்பினர். பூஜை அறையின் கதவு சாத்தப்பட்டது. எல்லோரும் முருகா, முருகா என்று உளமுருகித் துதிக்க சாமிகள் சற்றுப் பூஜை அறைக்கதவைத் திறந்து அந்தச் சாமியாரை உள்ளே எட்டிப் பார்க்கச் சொன்னர். ஆகா! என்ன

அற்புதம்! அந்த மமதைச் சாமியார் கண்ட காக்ஷியை எப்படி வருணிப்பது! அவர் மமதையைக் கரைக்க வைப்பதற்கென்றே இந்த அற்புதமா? தில்லையம்பலத்தில் நடராஜப் பெருமான் ஆடியதைக் கேள்விப்பட்டிருக்கின்றோம். இந்தப் பிரம்பு முப்பதடித் தூரத்தில் ஆடின ஆட்டம் அங்குக் குழுமியிருந்தோர் கண்கள் செய்த பாக்கியம் என்றே கூறவேண்டும். அதன்பின் சாமிகள் கதவின் இடுக்கில் தன்கையை நீட்ட அப்பிரம்பு சாமிகள் கைகளுக்கு வந்துவிட்டது. அப்போது சாமிகள் திருமுகத்திலும் திருவடிவிலும் தெய்வீக அருள் வழிந்தோடியது. மகாஜோதி வடிவமாக அமைந்த சச்சிதானந்த சொரூப சாமிகளைக் கண்ட மமதை அடங்கிய பிரம்புச் சாமியார் தம் அவநம்பிக்கையைவிட்டு அகங்காரத்தை விட்டுச் சாமிகளை வணங்கினர். இராமலிங்க சாமிகளுடைய அருட்பா ஒன்றையும் கசிந்துருகிப் பாட ஆரம்பித்து விட்டார் சாமிகளை நோக்கி, சாமிகளின் மாண்பைப் போற்றும் வகையில்.

"ஒருமையுடன் நினதுதிரு மலரடிகள் நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்
பெருமைபெறும் நினதுபுகழ் பேசவேண்டும் பொய்மை
பேசாதிருக்க வேண்டும்
பெருநெறிபிடித் தொழுகவேண்டும் மதமானபேய்
பிடியாதிருக்க வேண்டும்
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டும்உனை
மறவாதிருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
வாழ்வில் நான் வாழ வேண்டும்
தருமமிகு சென்னையில் கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே"

1955ஆம் வருடம் சிவராத்திரி பண்டிகைதினம். சேலத்திலிருந்து மாதேஸ்வரர் மலைக்கு ஒரு பக்தர் கோஷ்டி காரில் சென்று கொண்டிருக்கின்றனர். இரவு நேரம். அடர்ந்த காடு. பயங்கரமாக உள்ள இருள்சூழ்ந்த காட்டுப்பாதையில் கார் விளக்கிளெளியில் காரின் வலதுபக்கத்தில் ஒரு பெரிய புலி ஒன்று நின்றுகொண்டிருந்தது காரில் முன் சீட்டில் உள்ள திரு பார்த்தசாரதி செட்டியாருக்குத் தெரிந்தது. அவர் சொல்படி காரை நிறுத்தினர். சுமார் ஐந்து நிமிட நேரம் அந்தப் பெரும் புலி அது நின்று கொண்டிருந்த

இடத்திலிருந்தே காரை உற்று நோக்கிய வண்ணமிருந்தது. காரின் பின் சீட்டில் சாமிகள் இருந்தார். அதன்பின் வெகு சாவகாசமாக அப்பெரும் புலி ரோட்டின் குறுக்கே நடந்து மறுபுறம் உள்ள காட்டுள் மறைந்தது. இப்படி இருபது மைல்கள் யானை தொந்திரவு மலிந்த இந்தக் காட்டுப் பாதையில் பிரயாணம் செய்து மாதேஸ்வரர் கோவிலுக்குக் கார் வந்து சேர்ந்த போது இரவு 10—30 மணி இருக்கும். கோவில் பக்தர்கள் அடைந்தபோது அங்கு அவர்கள் வழியில் கண்ட புலியைப் போன்றே ஒன்று அசைவற்று நின்றது; அது ஸ்ரீ மாதேஸ் வரனின் புலிவாகனம். இதைக் கண்ட பக்தர்களுக்கு ஸ்ரீ மாதேஸ்வரரே தம் வாகனமாகிய புலியை அனுப்பிச் சாமிகளை எதிர் கொண்டழைத்தார் என்ற எண்ணம் உதித்தது. இதைப்போன்றே கழுகு மலையில் காரிலிருந்து சாமிகள் இறங்க கோவிலுள் உள்ள மயில் ஓடோடி வந்து சாமிகளை வலம்புரியாகச் சுற்றி வந்து சாமிகளுடன் கோவிலுக்குள் சென்றது. சாமிகள் திரும்பவும் காரில் ஏறும்வரை சாமிகள் கூடவே தொடர்ந்து வந்தது அம்மயில். இந்த அற்புதச் செயலைக் கண்ட மக்கள் 'இந்தக் காலத்தில் கூட இப்படி ஒரு மகான் இருக்கிறாரா' என்று ஆச்சரியப்பட்டு சாமிகள் அருள் பிரசாத விபூதி வாங்கி மகிழ்ந்தனர்.

இப்படித் தெய்வீகம் கமழும் திருச்சந்நதிகளிலும் தெய்வீகப் பிரசாதங்களாகிய விபூதி குங்குமம், அட்சதை அரிசி, மஞ்சள் பொடி இவைகளைச் சாமிகள் வரவழைத்துக்கொடுப்பதும் அவரது உற்சாகப் பழக்கமாகி விட்டது. வேண்டிய போது கற்கண்டும் ஊதுவத்தியும் சாமிகள் வரவழைத்துக் கொடுத்து உதவுவதும் நாம் அறிவோம். தேவை ஏற்பட்டால் பூஜைக்கு அவசியமாக வேண்டிய பொருள்கள் அனைத்தையுமே சாமிகள் வரவழைக்கவும் தயங்குவதில்லை. ஒருதரம் கன்னிவாடி ஜமீன் மானேஜர் திரு K. சசிசேகர அய்யரோடு சாமிகள் வெள்ளக்காக்ஷி நீர் வீழ்ச்சியைக் கண்டு அனுபவித்து தோட்டமலையாண்டிசாமிக் கோவிலுக்கு வந்தார். பக்தர்கள் தேங்காய், பழம் கற்பூரம் ஒன்றும் வாங்கிவரவில்லை. இவை இருந்தால் அபிஷேக பூஜை செய்யலாமே என்று அவர்கள் கூறினர். சாமிகள் அவர்களைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். சாமிகளது மகிமையால் வேண்டிய பொருள்கள்–தேங்காய், பழம், கற்பூரம், விபூதி பிரசாதங்கள் நிறைந்திருந்தன. "எல்லோருடைய மனம் சந்தோஷமடைய சாமி தரிசனம் செய்து மகிமைப் பிரசாதங்களும் பெற்று ஆனந்தித்துப் பன்றிமலை வந்தோம்" என்று சாமிகளோடு அன்று சென்று வந்த பன்றிமலை பஞ்சாயத்து போர்டு மெம்பர் திரு S. K. முத்து காமாக்ஷி ஆசாரி கூறுகின்றார்.

சாமிகள் பக்தர்களின் உள்ளங்களை ஆத்மீக இன்பத்தில் நிறைவிக்க உலகில் நாம் காணாதன வெல்லாம் காட்டவும் சித்தம் கொள்

வதுண்டு. சிலோனில் நாகபூஷணி அம்பாள் சன்னதியை மறைத்து நின்ற திரை விலகியது நாம் அறிவோம். அங்கு சுடர் விட்டு தீபம் எரிந்ததும் அறிவோம். பாலக்காட்டுக்கருகே கல்லியாங் குளக்கரை என்ற இடத்தில் பிரசித்தி பெற்ற தொரு பகவதி கோயில் இருக்கிறது. 1952இல் சாமிகள் ஒருநாள்பகல் 12 மணிக்குப் பக்தர் களோடு தரிசனத்திற்கு இந்தக் கோயிலுக்கு வந்தார். அச்சமயம் கோயில் பூட்டி இருந்தது. மாலை 4 மணிக்குத் தான் கோயில் திறக் கப்படும் என்று அங்கிருந்த ஒருவர் கூறினர். உடனே சாமிகள் கை கூப்பி வணங்கினர். இமைப் பொழுதில் கதவு தானே திறந்து கொண்டது மூலத்தானக் கதவும் திறந்தது. இதைக் கேள்விப் பட்ட கோவில் அர்ச்சகர் ஓடோடி வந்து அம்மனுக்கு அர்ச்சனை தீபாராதனைகள் செய்து சாமிகளுக்கு மரியாதை செய்தனுப்பினர்.

மதுராநகரில் திரிபுரதாஸர் என்ற ஒரு பக்தர். மந்திரிப்பதவி யில் இருந்தவர். தேசாடனம் செய்ய விரும்பி பிருந்தாவனத்திற்கே வந்து தங்கிவிட்டார். பல்வேறு நாடுகளிலிருந்து வரும் தொண்டர் குழாம் பட்டாடை கொண்டுவந்து கண்ணனுக்கு அணிவித்து மகிழ்வர். உஞ்சவிருத்தி வாங்கி உண்ணும் வாழ்க்கை கொண்ட இந்த பக்தருக்கும் தானும் கண்ணனுக்கு ஓர் ஆடை சாத்த வேண்டும் என்று ஆசை ஏற்பட்டது. தன்னிடம் இருந்த பித்தளைப் பாத்திரத்தை விற்று ஒரு நூலாடை வாங்கி வந்தார் கண்ணனுக்கு. அதைக் கண்ணனுக்கு அணிவிக்க மறுத்து விட்டனர் கோயில் அர்ச் சகர். இரவு கண்ணன் விக்ரகத்திற்குத் திருமஞ்சனம் முடித்து பூசை நடைபெறும் பொழுது மூல மூர்த்தியின் உடல் நடுங்க ஆரம்பித்தது. பட்டு துப்பட்டாக்களும் பீதாம்பரங்களும், தூபதீபம், அகில், கற்பூரம் இவைகளும் விக்கிரகத்தின் நடுக்கத்தை நிறுத்த முடியவில்லை 'பக்தன் திரிபுரதாசன் கொண்டு வந்த நூல் ஆடை அணிவித்தால் தான் என்குளிர் நீங்கும்' என்ற அசரீரி கேட்க அதன்படியே செய்ய குளிரும் நீங்கியது, நடுக்கமும் நின்றது. இது நாம் கேள்விப்படும் பக்திக் கதைகளுள் ஒன்று. இன்றும் கற்சிலையும் உயிர் பெற்றெழுந் ததைப் போல் மூச்சுவிட்டுக் காட்சியளிக்கும் அற்புதத்தையும் சாமிகள் காட்டி அருளியதை என்னென்று சொல்வது! 22—5—56 மாலை சாமிகள் பக்தர்களுடன் மைலாப்பூர் கபாலீஸ்வரர் கோவிலுக்குச் சென்றபோது கற்பகாம்பாள் சந்நதியில் சகஸ்ரநாம அர்ச்சனை நடந்து கொண்டிருந்தது. சாமிகள் அன்புகனிந்த கண்கள் அம்பாளைக் கண்டு களித்தன. உடனே அம்மன் விக்கிரகம் உயிர் பெற்று விட்டதுபோல் மூச்சுவிட ஆரபித்தது மூச்சுவிடும்போது நமது உடல் சுருங்கி விரிவதைப்போல் அம்மன் சிலை உருவிலும் காட்சி ஏற்பட்டது. தலையில் அணிவித்திருந்த பூக்கிரீடமும், மேலே சாத்தி இருந்த புட்பமாலைகளும், பட்டுச்சேலையும் மேலும் கீழும் மூச்சு

விடுவதால் அசைவது தத்ரூபமாகத் தெரிந்தது." 'இக்காட்சியைக் கண்ட பக்தர்கள் மெய் மறந்தோம்' என்று திரு K. S. சிவசுப்பிர மணியம் கூறுகின்ருர்.

ஆழ்வாரைக் காட்டுகின்ற சாமிகளாலா திருக்கோயில்களிலும் திருபூஜை அறைகளிலும் ஆண்டவன் சக்தியை விளக்கும் பேரற்புதக் காட்சிகளைக் காண்பிக்கமுடியாது ?

**கனவுகளில் அற்புதம்.**

"மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதிசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனக்கண்டேன் தோழீநான் !

— ஸ்ரீ ஆண்டாள்.

இப்படிச் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாக விளங்கும் ஆண்டாள் கனவில் தான் ஆண்டவனுடன் ஐக்கியமாகும் பேரின்பத்தை அற்புதப் பாக்களில் அமைத்துக் காண்பிக்கின்ருர். கனவில் ஆண்டவனையே காண்பதும் ஆண்டவன் அருளையே பெறுவதும் நாம் பெரியோர் கள் வாழ்க்கையில் கண்டு மகிழும் பேரற்புதங்கள். பண்டரீபுரத் தில் தாம்சேட்டி என்ற ஒரு தையல்காரர் ஒரு பெரிய பக்தர். வயதில் முதிர்ந்தவர். அவர் மனைவி கனவில் பண்டரிநாதன் தோன்றி' நாளை காலையில் நீ ஒரு மகனைப் பெறுவாய் என்று கூறினர். இதைக்கேட்ட கணவருக்கும் அதில் நம்பிக்கையில்லை. அடுத்தநாள் அவர் நதியில் குளிக்கும்போது ஒரு சிப்பி மிதந்து வந்தது. அதில் ஒரு ஆத்மச் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் அருட் குழந்தையைக்கண்டு, ஓடி எடுத்து, உச்சிமுகர்ந்து, 'கனவு பலித் தது' என்று ஆனந்தக் கூத்தாடினர் பக்தர். அந்த அருட்சேயே நாமதேவர். ஜயதேவசாமிகளும் இப்படித்தான் கனவில் ஆண்ட வன் கூறியபடி பிறந்தார். இவரது தந்தை நாராயண சாஸ்திரி எனும் பெரியார். தாய் கமலாபாய். கமலாபாயிக்குத் தன் குலம் விளங்க ஒரு புதல்வன் வேண்டுமென்று ஆசை. ஆனல் கண வரோ முற்றும் துறந்த முனிவராகவே வாழ்க்கை நடத்துபவர். அவருக்குப் புதல்வன் அடைய ஆசை அறவே இல்லை. ஒரு நாளிரவு அவர் கனவில் இறைவன் தோன்றி அவர் இன்னுயிர் மனைவி கோரிய வரம் அளித்ததாகத் திருவாய் மலர்ந்தருளினர். 'நீ இறை வனிடம் எதைக் கேட்டாய் என்று அவர் கேட்க' புதல்வன் வேண்டித் தவம் கிடந்தேன்' என்ருள் கமலாபாய். போயும்போயும் இறைவனிடம் இதையா கேட்பது என்று மனம் புழுங்கி யிருந்த,

கணவர் கனவில் மறுபடியும் இறைவன் தோன்றி' பிள்ளை இன்பம் பேரின்பமாகும். உங்கள் பக்திக் குகந்த சீலன் பிறக்கப் போகின்ருன் என்று கூறி மறைந்தார். இறைவன் திருவுளப்படி ஸ்ரீ ஜயதேவர் பிறந்தார். இப்படி யெல்லாம் நாம் இறைவன் திருவருளைக் கனவில் காட்டுகின்ற திருவிளையாடல்களை ஸ்ரீ மகா பக்த விஜயக் கதைகளில் படிக்கின்ரேம். இப்பொழுது திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள் அன்பர்கள் கனவுகளில் தோன்றி அருள் பாலிக்கின்ற திருவிளையாடல்களின் அருமையை என்னென்று இயம்புவது?

நம்பிக்கை யில்லாதவருக்கு நம்பிக்கை ஏற்படுத்தவும் சாமிகள் கனவில் தோன்றுகின்ருர். திரு ராஜ்கமல் என்பவர் சாமிகளைப் பற்றி அறியாது பலவாதம் பேசினர். ஒருநாள் சாமிகளை, அவர் தகப்பஞர் திரு. மூக்கன் செட்டியார் தமது இல்லத்திற்குப் பூசை யேற்க அழைத்துச் சென்ருர். அன்று இரவில் திரு ராஜ்கமல் அவர்களுக்குச் சாமிகள் கனவில் தோன்றி வள்ளிதேவ யானை சமேதராக முருகப் பெருமானுகக் காட்சி தந்தார். கனவில் கண்ட தெய்வத்தை நேரே காண மனமுவந்து அடுத்தநாள் திரு. ராஜ்கமல் சாமிகளைக் காணச் சென்றபோது சாமிகள் 'நேற்றிரவு நீர் முருகன் இருக்கிருர் என்பதைத் தெரிந்து கொண்டீர்களா' என்று கேட்க திரு ராஜ்கமல் முழுநம்பிக்கையோடு சாமிகள் திருவடிகளை வணங்கினர் என்று சொல்லவும் வேண்டுமோ? பக்தர்களுக்கு உதவி செய்யும் போதும் சாமிகள் கனவில் தோன்றுகின்ருர். பன்றிமலை பஞ்சாயத்து போர்டு பள்ளி உதவி ஆசிரியர் திரு. மாரிமுத்துப்பிள்ளை ஒரு அவசர காரியமாகத் திண்டுக்கல் போக வேண்டியிருந்தது. தன் காரியம் சித்தியாகச் சாமிகள் அருளையும் வேண்டி நின்ருர். திண்டுக்கல்லுக்குப் புறப்படுவதற்கு முதல்நாள் இரவு அவருக்கு ஒருதோற்றம். கதவின் ஓர் மூலையில் சுடரான ஓர் ஒளி தெரிந்தது. பால் வடியும் முகமும் பார்க்கத்தெவிட்டாத பச்சிளம் பாலகன் கையிலே வேல், கால்களில் கட்டை, பவுன் போன்ற மேனி உருவுடன் தோன்றி 'நீர் போகவேண்டிய அவசியம் ஏற்படாது. நீர் போவதற்கு முன்பே உம் வேலை முடிந்து விடும், என்று உரைத்து மறைந்தது. காலையில் சாமிகளிடம் இந்த ஆசிரியர் தான் கண்ட கனவைச் சொல்ல விரைந்தபோது சாமிகளே "நீர் திண்டுக்கல் போகவில்லையா. நீர் இரவு கனவு கண்டீரா" என்று சிரித்துக் கொண்டே கேட்டார். சாமிகளின் திருவருளையும், அதைக் கனவிலேயே முன்கூட்டி காட்டும் அற்புதத்தையும் அன்பர் மறக்க முடியுமா? சாமிகள் கனவிலும் தோன்றிப் பக்தர்களுக்கு உபதேசமும் செய்துவைக்கின்ருர். புதுடெல்லி திரு. R. வெங்கடேசன் சிலகாலம் ஏற்காடுமலையில் தங்கி இருந்தார். சாமிகளும் அப்போது ஏற்காடு மலைக்கு வந்திருந்தார். திரு. வெங்கடேசன் நண்பர்

ஒருவருக்குச் சாமிகளை எப்படியாவது மார்கழி மாதம் பிறப்பதற்கு முன் தம் இல்லத்திற்கு அழைத்துச் செல்லவேண்டும் என்று ஆவல். அவர் மனைவிக்கும் சாமிகளிடம் சீடர் பக்தி நிறைந் திருந்தது. மார்கழி மாதம் பிறப்பதற்கு முதல் நாள் எப்படியாவது சாமிகளைத் தம் இல்லத்திற்கு அழைத்துச் செல்ல எவ்வளவோ தீவிர மாக இருந்தார் பக்தர். ஆனால் மூடுபனி வந்து இறங்கிவிட்டது. மலையில் சாமிகளை அழைத்துச் செல்ல முடியவில்லை. அன்று இரவு நண்பரின் மனைவியின் கனவில் சாமிகள் அவர்கள் வீட்டிலேயே திருக்காட்சி அளித்து உபதேசம் வழங்கி வந்தனர். இதை ஆவலுடன் அடுத்த நாள் சாமிகளிடம் நண்பர் உரைத்தபோது, சாமிகள் "நீங்கள் நேற்று என்னை அழைத்துச் செல்லவில்லையே என்கிற மன வருத்தத்துடன் வீடு சென்றிருக்கின்றீர். அதனால் மார்கழிக்கு முன் வந்தேன்' என்று பதிலளித்தார். என்னே சாமி களின் பேரன்பு!

## சாமிகளும் அற்புதக் காட்சிகளும்

"முருகன் தனிவேல் முனிநம் குருஎன்று
அருள்கொண்டு அறியார் அறிவும் தரமோ
உருவன்று அருவன்று உளதன்று இலதன்று
இருளன்று ஒளியன்று என நின்றதுவே"
— அருணகிரிநாதர்

சமீபத்தில் திருவண்ணாமலையில் ஆத்மீக ஒளியாக பூத உடலோடு வாழ்ந்து வந்த ரமணமகரிஷி, ஒரு பெரிய யோகி. அவரை அடிக்கடி கண்டு தரிசித்து வந்த திரு. M. சிவப்பிரகாசம் பிள்ளை 1913இல் மக ரிஷியை மலையில் விருபாக்சக் குகையில் காண வந்தார். அப்போது அவருக்கு ஒரு விநோதக் காட்சி தோன்றியது. மகரிஷிகள் முகம் சாதாரண முகமாகத் தோன்றவில்லை. கண்களைப் பறிக்கும் ஒரு பெரிய ஜோதி அவரைச் சூழ்ந்திருந்தது. அவருடைய சிரசிலிருந்து ஒருபொன்மயமான குழந்தை மெதுவாகக் கிளம்பிக் கொஞ்சநேரத்தில் மறுபடியும் தலைக்குள் திரும்பியது. இந்தக் காட்சி இரண்டு மூன்று தடவை கிடைத்தது. அடுத்த நாள் மாலையிலும் இத்தகைய காட்சி கள் அவருக்குக் கிடைத்தன. மகரிஷியைச் சுற்றிலும் ஒரு ஒளி வட்டம் தெரிந்தது; அவ்வொளி பல சந்திரர்கள் சேர்ந்து காட்டும் ஒளி போல் தோன்றிற்று. அவருடைய உடம்பும் காலைக் கதிரவனின் தகதக வென்றிருக்கும் பொன் மயமான காட்சியாகத் தோன்றியது. அடுத்த நிமிடம் மகரிஷி உடல் முழுமையும் விபூதி மயமாகத் தோன்றி யது. கண்களிலிருந்தும் கருணை வழிந்து கொண்டிருந்தது. இரண்டு நாட்கள் கழித்துப் பார்க்கும்போது மகரிஷி பளிங்குக்கல் போன்று தோற்றம் அளித்தார். இவருக்குத் தோன்றிய காட்சிகள் மட்டும்

கூடியிருந்த மற்றவர்களுக்குத் தெரியவில்லை. இவர் இக்காட்சிகளை எடுத்துரைத்தபோது மற்றவர்கள் இவரை ஏளனம் செய்யவும் முற்பட்டனர். இந்த அரிய காட்சிகள் மகரிஷி தெய்வீக புருஷர் என்பதை நிரூபிப்பதோடு கூட அவரது அருள் பிள்ளை அவர்களுக்குக் கிடைத்தது என்பதற்கு அறிகுறியாக அமைந்தது என்று பிள்ளை அவர்கள் உணர்ந்தார். மகரிஷியைக் குருவாக ஏற்றுக்கொண்ட உள்ளத்தோடு இவ்வனுபவங்களைத் தான் எழுதிய அனுக்கிரக அகவலில் பிள்ளை அவர்கள் தொகுத்திருக்கின்ருர். ஸ்ரீலஸ்ரீ பன்றி மலை சாமிகளோடு பழகி வருகின்ற சில அன்பர்களுக்கும் இத்தகைய அனுபவங்கள் பலவகைகளில் ஏற்பட்டு வருகின்றன.

சாமிகள் உள்ளொளி பெருக்கிய மகான். உள்ளத்தினில் ஒளி உண்டானல் வாக்கினில் ஒளி உண்டாகும் என்பதை மெய்ப்பித்துக் காட்டும் சுயம்பிரகாச சாமிகள். அவர்கள் திருவாக்கிலும் உரையாடலிலும் ஒரு தெய்வீக ஒளி எப்போதும் உண்டு. அவர் அன்பு கனிந்த திருமுகத்திலும் திருஉருவிலும் எப்போதும் ஒரு தெய்வீக ஒளி உண்டு. சாமிகளைக் காண விபூதி ஜோதி சாமிகள் எனும் ஸ்ரீ நித்யானந்த கவீஷ்வர் ஒருவர் வந்தார். சாமிகளது திவ்ய தெய்வீக வடிவில் ஒரு பேரொளித் தோற்றம் உண்டானதைக் கண்டு மெய் மறந்து இருந்தார். சாமிகள் தெய்வீக புருடர் என்பதை உடனே உணர்ந்தார். இப்படி எவ்வளவோ பேருக்கு அனுபவங்கள் உண்டு. ஆனல் ஒருவருக்கு ஏற்பட்ட ஒளி அனுபவம் போட்டோ படத்திலேயே நிரந்தரமாக அமைந்து விட்டது; சாமிகளது தெய்வீகத்தன்மையை உலக மறியச் செய்யவும் விளங்கி வருகின்றது. திருச்செந்தூரில் திரைகடலுக்கு முன் சாமிகளை நின்ற திருக்கோலத்தில் திருச்சித் தொழிலதிபர் திரு. கண்ணன் அவர்கள் ஒரு போட்டோ படம் எடுத்தார். என்ன ஆச்சரியம்! படத்தில் சாமிகளுடைய திருமுகத்திற்குப்பின் ஓர் ஒளி வட்டம் தெய்வங்களுக்குப் பின் அமைந்திருப்பது போல் தானே உண்டாகி அமைந்திருக்கின்றது. சாமிகளும் ஒரு தெய்வீக புருஷர் என்பதைத் தானே இப்போட்டோ படம் விளக்குகின்றது. இதை இன்றும் எல்லோரும் பார்த்து அனுபவிக்கவல்லவா இப்பேரொளி வட்டமாகப் படத்திலேயே இயற்கையாக அமைந்து நிலைத்து விட்டது!

"முருகன் தனிவேல் முனிநம் குரு என்று
அருள் கொண்டு அறியார் அறியும் தரமோ
உருவன்று அருவன்று உளதன்று இலதன்று
இருளன்று ஒளியன்று என நின்றதுவே"

என்று அருணகிரி நாதர் கந்தர் அனுபூதிச் செய்யுள் ஒன்றில் பாடுகின்ருர். அருணகிரிநாதர் சுய அனுபவத்தை எடுத்துக் காட்டும்

பாடல் திரட்டே கந்தர் அனுபூதியாகும். கந்தபிரானையே தம் குரு நாதனுக அடைந்த பெரும் பாக்கியம் அருணகிரிநாதருக்கு மட்டு மல்ல, நமது சாமிகளுக்கும் உண்டு. அவரைக் குருவாகக் கொண் டுள்ள நமக்கும் சாமிகளே சிறப்பாக திரு முருகனுகவும் மற்றும் பல தெய்வங்களாகவும் சில சமயங்களில் காட்சி அருளுவதில் வியப் பொன்றும் இல்லை.

சாமிகள் அற்புதக்காட்சிகளைப் பெற்ற மெய்யன்பர்கள் அனு பவங்களில் சிலவற்றைப் பார்ப்போம். திருச்சி திரு. R. முத்துசாமி ஒருநாள் சாமிகள் இருந்த அறையில் நித்திரை செய்தார். இரவு சுமார் இரண்டு மணிக்கு ஒரு குழந்தை பேசும் சப்தம் கேட்டு எழுந் திருந்து பார்த்ததில் சாமிகளுடன் ஒரு குழந்தை பேசிக்கொண் டிருக்கக்கண்டு ஆச்சரியப்பட்டார் மதருஸில் திரு V. N. சம்பந்தம் அழைப்பின் பேரில் அவர் இல்லத்திற்கு வருகைதந்த சாமிகளுக்கு அவர் மனைவி ஆரத்தி எடுத்தார். அடுத்த விநாடி 'முருகா, முருகா' என்று ஆவேசக்குரலுடன் ஆனந்தக் கண்ணீர் பெருகி மூர்ச்சித்து விட்டார். மூர்ச்சை தெளிந்தவுடன் "நான் வேலுடன் கூடிய முருகனைக் கண்டேன். முருகனை நேரில் காணும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது" என்று சொல்லிப் புளகாங்கிதமடைந்தார் சாமிகள் பக்தர். மில் அதிபர் திரு. V. வித்யாசாகர் அவர்கள் பங்களாவில் வடபூதிநத்தம் பெருமாள் கோயில் திரு. தி. வெங்கிட சாமி அய்யா சாமிகளைக்கண்டு விபூதிபெற அது ஒரு செவந்திப் புஷ்பமாக மாறியது. மயிர்கூச்சலெடுத்து நிலை மறந்த அவருக்குக் கண்களைத்திறக்க சுமார் ஒரு மணிநேரம் சென்றது. "கண்கள் மூடியிருக்கும் சமயத்தில் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அமர்ந்திருந்த இடத்தில் ஓங்கார ஜோதிக்குள் பாலசுப்ரமணியராகச் சாமிகள் என் முன்னுல் காட்சிதந்தார். மலையும் சந்நிதானமும் பார்த்தேன். ஒரு மணிநேரம் கழித்துச் சாமிகள் ஸ்பரிசத்தால் என் சுய உணர்வு பெற்றேன். இன்றுமுதல் சாமிகளை எனது குருவாக வைத்துப் பூஜித்து வருகின்றேன்" என்று கூறுகின்றுர் அர்ச்சகர். மற்ெறுரு கோவில் அர்ச்சகர் திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர் கோவிலில் சாமிகளைக் கையில் வேலுடன் ஸ்ரீ சுப்ரமணிய சாமிகளே பிரத்தி யட்சமாக நிற்பதைப்போல் கண்டதையும் நாம் அறிவோம். சேலத்தில் திரு. S. M. சுப்புசிங் என்பவர் சாமிகளைத் திரு. பார்த்த சாரதி செட்டியார் இல்லத்தில் ஒரு மாத காலம் தொடர்ந்து தரிசித்து வந்தார். ஒருநாள் இரவு பூஜைக்குப்பின் சாமிகள் சரவணபவா என்று கூறி அவர் சிரசில் விபூதி பூசினுர். அப்போது சாமிகளுக்கும் தனக்குமிடையே ஒரு ஒளியும் அதில் ஓர் உருவ மும் கண்டு மூர்ச்சையடைந்தார். அடுத்த நாளும் முன்தினம்போல் ஒளி தோன்றியது. அதில் தோன்றிய உருவத்தின் கையில்

வேலுடன் கழுத்தில் ருத்திராட்சத்துடன் ஸ்ரீ முருகக்கடவுள் பிரகாச மாய்த் தோற்றமளித்தார். அதுபோலச் சாமிகளைத் தரிசிக்கும் போதெல்லாம் முருகக்கடவுள் போலவே தோற்றம் ஏற்பட்டது.

சில பக்தர்களுக்குச் சாமிகள் முருகனாக மட்டுமின்றி வேறு தெய்வங்களாகவும் காட்சி அளிக்கின்றார். சேலம் திரு. D. V. மாரி செட்டியார் மனைவி சாமிகளைத் தரிசித்தபோது முதலில் அவருடைய நெற்றியில் ஒரு ஜோதி தெரிந்து அதன் நடுவில் வேலுடன் ஆறு முகப்பெருமான் தரிசனமும், பின்னர் சங்கு சக்கரங்களுடன் ஸ்ரீ நாராயணன் தரிசனமும், பிறகு ஆலிலைமேல் பள்ளிகொண்ட மால் தரிசனமும் கிடைத்தது. அதன்பின் அவருடைய உந்திக்கமலங் களிலிருந்து வெளிவந்த தாமரைப்பூவில் பிரம்மதேவனும் பின்னர் கலைவாணி வீணைவாசித்து வந்த காட்சியும் ஏற்பட்டது சேலத் தில் ஸ்ரீ அனந்தபத்மநாபசாமி கோயில் துபாஷ் திரு. வெங்கிடாசல மய்யர் சாமிகளைக்காண வந்தார். ஆத்மீக விசாரத்தில் ஈடுபாடு கொண்ட இந்த ஜோதிட நிபுணருக்குச் சாமிகள் சங்குசக்ர ரேகை களும் இருபுருவத்து நடுவே பிறைச்சந்திரன் போன்ற குறியும் சாமிகளது தெய்வீகத்தை உணர்த்திக் கொண்டிருக்கும்போது அவருக்கு ஒரு காட்சி ஏற்பட்டது. சாமிகள் ஸ்ரீ முருகப்பெருமானாக வள்ளி தெய்வயானையுடன் வேலேந்தியவாறு காட்சியளித்தார். அருள்புளகாங்கிதமுற்ற அவர் தன் அந்திய காலம் காசியில் ஆக வேண்டும் என்று கேட்க, சாமிகள் 'ஓம், கணபதியைத் தொழக் காரியம் கைகூடும்' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஐயருக்குச் சாமிகள் விநாயகராகக் காட்சி அளித்தார். அதன்பின் அவரைப் பூஜை அறைக்கு அழைத்துச் சென்று ஒரு ஜோதியைக் காண்பித்து அதில் ஸ்ரீ கிருஷ்ண பாமாத்மாவை நீலமேக சியாமள ரூபத்தில் தரிசிக்கச் செய்தார். ஜோதியை மற்றவர்கள் பூஜை அறைக்கதவு திறக்கக்ண்டு மகிழ்ந்தனர்,

இப்படித் தெய்வீகக் காட்சிகளைக் காட்டும் செயல்களைப் புரிந்து மெய்யுணர்ச்சியைப் பக்தர்களுக்கு அருளுகின்ற குருநாதரை, அருணகிரிநாதர் கந்தர் அனுபூதியில் போற்றுவது போன்று, முருகா என்றும் குமரா என்றும் குகா என்றும் மொழிந்து உருகு வதல்லவா பக்தர்களாகிய நமது கடன்!

"முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகும் செயல் தந்து உணர் வொன்றருள்வாய்
பொரு புங்கவரும் புவியும் பரவும்
குருபுங்கவ எண் குண பஞ்சரனே"

## திருமணம் திருஅருள் சாமிகள்

" தாமரை இதயத் தன்மலர்க் கோயிலில்
அழகு முருகனின் அருட்சுடர் கண்டிடும்
நிகரிலாப் புண்ணியர் நெறிவளர் குன்றினர்
தாரணி துதித்திடும் தவப்பெரு முனிவர்
பல சித்தாடும் பன்றி மலேயினர்
அன்புறு வான அடிகளார் அவர்தம்
திருமுன் நிகழ்ந்தநும் திருமணம் என்றும்
சீரும் ஆசியும் செம்மையும் கொண்டது

— திரு. N. S. சிதம்பரம்

ஒவ்வொரு நாடகாசிரியனும் தன்னுடைய நாடகக் கதையில் ஒரு நவீனத்தைப் புகுத்த அரும்பாடு படுகின்ருன். நாடகத்திற்கு உயிராக ஓடுவது அதிலுள்ள காதல் கதை அமைப்பு. கதையில் வருகின்ற தலேவனேயும் தலேவியையும் முதல் முதலில் சந்திக்க வைப்பதிலும் ஒரு புதுமையைக் கொடுப்பதிலும் நாடகாசிரியர்கள் தன் சாமர்த்தியத்தைக் காண்பிக்கின்றனர். சாகுந்தலத்தில் வருகின்ற கன்னி சகுந்தலா ஒரு வனத்தில் இயற்கை அழகு ததும்பும் ஆசிரமத்தில் வாழ்கின்ற புனிதமலர். அந்தப் புதுமண மலரை வாரிச்சூடிக் கொள்கின்ருன் வீரத்திலும் அழகிலும் மிக்க துஷ்யந்தனெனும் மன்னன். மன்னவனேக் கண்டவுடன் காதல்கொள்ளும் இளமனம்கொண்ட சகுந்தலே கள்ளம் கபட மற்ற தூய மலர். 'புயல்' எனும் நாடகத்தில் ஷேக்ஸ்பியர் சகுந்தலேயை யொத்த கன்னி ஒருத்தியை உருவாக்கி இருக்கின்ருர். ஆனுல் ஒரு முக்கிய மாறுதல் அமைத்திருக்கின்ருர். சகுந்தலேயாவது ஆசிரமத்தில் உள்ள ஆண்பிள்ளேகளேக் கண்டிருக்கின்ருள். மிராண்டா எனும் ஷேக்ஸ்பியரின் படைப்பு தன் தகப்பனேத் தவிர வேறு ஆண்களேயே கண்டதில்லே. அவள் முதல்முதலாகக் கன்னியாக காணும் ஆண் அவள் கண்டவுடன் காதல்கொள்ளும் பர்டினண்ட் எனும் முறை மாப்பிள்ளே. அவன் ஆணழகையும் கண்டு உவப்பாகும் கன்னிக்கு அவன் தேவனே அல்லது தெய்வமோ என்று வியப்பேற்படுவதும் இயற்கை. இந்த உலகப் பிரசித்திபெற்ற காளிதாஸன் ஷேக்ஸ்பியர் நாடகங்களில் வருகின்ற கன்னிகள் தம் தலேவர்களே முதன் முதலில் காண்பதில்தான் எவ்வளவு புதுமை அமைந்துள்ளது. மனேன்மணீயம் எனும் தமிழ் நாடகத்தில் சுந்தரம் பிள்ளே மற்ருெரு புதுமையைப் புகுத்திவிட்டார். அதில் வருகின்ற தலேவனும் தலேவியும் ஒருவரை ஒருவர் நேரில் சந்திக்கவில்லே, தான் கண்ட கனுக்களில் கண்டு மனம் பறிகொடுக்கின்றனர். இருவர் ஒன்றிய உள்ளங்கள் விரும்பிய திருமணத்தை இடர்களேக்

களை நடத்தி வைக்கின்றார் சுந்தரமுனிவர் என்பவர். சகுந்தலா, மிராண்டா, மனோன்மணி - இவ்வளவு கன்னிகளும் நாடகாசிரியர்கள் உருவாக்கிய கதாபாத்திரங்கள். மிராண்டாவுக்கு மணவாழ்வை அருளுகின்றவர் அவளது தகப்பன் பிராஸ்பரோ: மனோன்மணிக்குத் திருமண வாழ்வை அருளுகின்றவர் சுந்தரமுனி. இந்த பிராஸ்பரோவும் சுந்தர முனிவரும்கூட நாடகாசிரியர்கள் உருவாக்கிய கற்பனைக் கதா பாத்திரங்களே. இந்த நாடகங்களிலும் நடக்காத புதுமை இந்த நூற்றாண்டில் சமீபத்தில் தமிழ்நாட்டில் நடந்திருக்கின்ற தென்றால் ஆச்சரியப்படாமலிருக்க முடியுமா? அதிலும் இரண்டு முக்கியமான பாத்திரங்கள்; ஒருவர் மணமாக வேண்டிய கன்னி. மற்றொருவர் அந்த கன்னிக்கேற்ற மாப்பிள்ளையைக் காண்பித்து மணமுடித்த இல்லறஞானி. அந்த இல்லற ஞானியும் வேறுயாரும் இல்லை? நமது சாமிகள்தான்!

சௌ. இந்திரா ஒரு கல்யாணமாகாத கன்னிப்பெண். B.Sc. படித்துக்கொண்டிருந்தாள் சாமிகளிடத்தில் அவளுக்கும் அவள் பெற்றோருக்கும் அளவுகடந்த பக்தியும் பணிவும் உண்டு. ஒரு நாள் படித்துக்கொண்டிருக்கும் அவள் திருமணத்தைப் பற்றி ஸ்வாரஸ்யமான பேச்சு எழுந்தது அது ஸ்வாரஸ்யமாகவே வளர்ந்தது. அவளுக்கு வாய்க்கும் மணாளனைச் சாமிகளால் காட்ட முடியுமா? எவ்வளவோ அற்புதங்களைச்செய்து காண்பிக்கின்றார்களே! கற்கண்டு, பழங்கள், உயிருள்ள பொருளினை, வரவழைக்கின்றார்களே! 'சாமிகளால் இந்த இந்திராவுக்கு வரப்போகும் மாப்பிள்ளையைக் காண்பிக்க முடியுமா? 'முடியும்', என்றார் சாமிகள். அங்குக்கூடி இருந்தவர்களுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. ஆனால் யார் இதை நம்பமுடியும்? இதைச் சொல்வது சாமிகள், அதனால் நம்பாமலும் இருக்க முடியவில்லை. சாமிகள் பூஜை அறைக்குள் இந்திராவையும் அவள் தங்கையையும் அழைத்தார். சாமிகள் அவள் தங்கையை அறையில் வட்டம் வரைந்து அந்த வட்டத்தினுள்ளேயே கண்களைக் கட்டி குனிந்திருக்கும்படி செய்தார். இப்படிச் செய்ததால் அங்கு நடக்கப்போவதை அவள் அறியாதவாறும் செய்துவிட்டார் சாமிகள். ஒரு கோட்டை வரைந்து, அந்த கோட்டைத் தாண்டிச்செல்ல வேண்டாமென்று இந்திராவையும் எச்சரித்தார். கோட்டுக்கு வெளியில்தான் அங்கு வரப்போகும் இந்திராவின் மாப்பிள்ளை காட்சி கொடுப்பாரென்றும், அவர் சாமிகள் போட்ட கோட்டைத்தாண்ட முயன்றால் உடனே இந்திரா சாமிகளை அழைக்கும்படியும் இந்திராவுக்கு அறிவித்துவிட்டு சாமிகள் பூஜை அறையைவிட்டு வெளிவந்துவிட்டார். பூஜை அறை சாத்தப்பட்டது. வேடிக்கையாக கேட்டு உண்மையிலேயே தனக்கு வரப்போகும் மாப்பிள்ளையை முதன்முதலாகக் காணப்

போகும் கன்னியின் மனநிலையை யோசித்துப் பாருங்கள். அச்சமும் ஆர்வமும், வெட்கமும் உற்சாகமும் மாறிமாறி அலைமோதுகின்ற நெஞ்சினள் தடால் என்ற சப்தத்தைக்கேட்டு சப்தம் வந்த இடத்தை மிக உன்னிப்பாகக் கவனித்தாள். சப்தம் கேட்ட இடத்தில் ஓர் இளைஞர் தோன்றினர். அவர் இந்திராவைப் பார்க்கவில்லை; இந்திராதான் அவரைப் பார்க்க முடிந்தது. கொஞ்ச நேரத்தில் அவர் எப்படி மாயமாக வந்தாரோ அப்படியே மாயமாக மறைந்துவிட்டார். இந்த விபரங்களைச் சாமிகளிடம் கூறிய கன்னியிடம், இதே இளைஞன் இரண்டு வாரத்திற்குள் கன்னியைத் தேடி வருவாரென்றும், அவரை ஒரு கம்பள வியாபாரி என்று நினைத்து அசட்டையாக அனுப்பிவிடவேண்டாமென்றும் சாமிகள் கூறினர். சாமிகள் சொல்லியபடியே இளைஞரும் வந்தார்: கம்பள வியாபாரி என்றே ஒருவர் அவரைத் தப்பாகவும் எண்ணினர். இந்த நிகழ்ச்சியை குறிப்பிட்டிருக்கும் மணப்பெண் சேலம் குமாரி A. இந்திரா அவர்களே களிப்போடு கவினுற உரைக்கும் மொழிகளையே கேளுங்கள். "இந்த தேவலோக கதையும் மற்றவைகளைப் போலவே பழைய மாதிரி வழியிலேயே கொண்டு போய்விடும்." என்று தமக்கு நடக்கப் போகும் திருமணத்திற்கு அழைப்பையும் அறிவித்திருக்கின்றனர். சாமிகள் கூறியபடி திருமணமான திருமதி. இந்திராவும் ஓர் ஆண் குழந்தை பெற்று இனிது வாழ்கின்றனர். இது கதையா? உண்மையா? கனவா? நிகழ்ச்சியா? இவ்வளவும் கதையும் அல்ல! கனவுமல்ல! உண்மையில் நடந்த வாழ்க்கை நிகழ்ச்சி! இதை வாழ்க்கையில் உண்மையாக அமைத்துக் கொடுத்த நாடகச் சிற்பி நமது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள்.

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் கல்யாண குணநலம் வாய்ந்துள்ள தன்மையைக் காணும்போது அவர் மங்கள மூர்த்தியாகவே அருள் பாலிக்கின்றனர் என்பது வெளிப்படை. அவர் அருள் தோய்ந்த முகத்தில் ஒரு மங்கள ஒளி: அவர் அன்பு தோய்ந்த பேச்சில் ஒரு மங்கள ஒலி: அவருடைய கருணை தோய்ந்த செயலிலும் ஒரு மங்களச் சுவை. 'மங்கல மென்ப மனைமாட்சி' என்ற குறளுக்கு எடுத்துக் காட்டாக மட்டும் விளங்குவதோடு கூட எவ்வளவோ திருச் செல்வர்களையும் திருச் செல்விகளையும் கலியாணம் என்ற ஓடத்தில் ஏற்றி வாழ்க்கை எனும் ஆற்றில் இன்ப உலா செய்துவரச் செய்கின்றனர்.

சாமிகள் கனிந்த இதயத்தோடு உவந்து முடிக்கும் திருமணங்கள் வெற்றியோடும் இன்பத்தோடும் நிறைவோடும் சகல பாக்கியங்களோடும் அமைகின்றன. சாமிகள் செய்து வைக்கும் திருமண திருநாட்களை எப்படி கவிஞர் திரு. ரா. பு. தங்கராஜன் புகழ்கின்றனர் என்பதும் படித்து மகிழ்வுற வேண்டியது.

" பூங்குயிலே பாடு புதிய சுவைப்பண் ஒன்று!
தீங்குரலில் பாடு திசையனைத்தும் இன்பமுற!
இன்றோர் திருநாள்! இசைகுலுங்கும் பொன்மணி நாள்!
அன்புத்திருமண நாள்! ஆனந்தம் பொங்கிடுநாள்!
இன்ப மனையறத்தை ஏற்கும் இளமைந்தருக்குப்
பன்றிமலை சித்தர்அருள் பாலிக்கும் நற்றிருநாள்!"

சாமிகள் தலைமையில் நடக்கின்ற திருமணங்களைக் கவிஞர் திரு. என். எஸ். சிதம்பரம் வருணிக்கின்ற சொற்களில் எவ்வளவு உண்மை பொதிந்திருக்கின்றது என்பதும் நாம் படித்துச் சுவைக்க வேண்டியது!

" தாமரை இதயத் தன்மலர்க் கோயிலில்
அழகு முருகனின் அருட்சுடர் கண்டிடும்
நிகரிலாப் புண்ணியர் நெறிவளர் குன்றினர்
தாரணி துதித்திடும் தவப்பெரு முனிவர்
பலசித் தாடும் பன்றிமலையினர்
அன்புறு வான அடிகளார் அவர்தம்
திருமுன் நிகழ்ந்தநும் திருமணம் என்றும்
சீரும் ஆசியும் செம்மையும் கொண்டது"

இத்தகைய மங்கள மூர்த்தி சாமிகளை விடாமல் அன்போடு தொடரும் சில அன்பர்கள் சாமிகளைக் கல்யாணத்திற் கென்றே விடாப்பிடியாய்ப் பிடித்திருக்கின்றார்கள். சாமிகள் செய்தருளும் நற்செயல்களுள் ஒன்று மணமுடித்தல். பருவம் வந்ததும், அழகும் செல்வமுமிருந்தும் கல்யாணமாகாது மனம் ஏங்கும் பெண்களை, அவர்களைவிட மனம் ஏங்கித் தவிக்கும் பெண்களின் பெற்றோர் நிலையைக் காணும் சாமிகளது உள்ளம் அவர்கள் படும் பாட்டைக் கண்டு உருகிவிடும். அவர்கள் இன்புற்றுவாழ திருமணத் திருநாளையே கூடிய சீக்கிரத்தில் கூட்டு வித்துவிடுவர். கல்யாண விஷயமாகச் சாமிகளை நாடிவருபவர்களை பூஜைக்கு ஒன்பது மஞ்சள் கிழங்குகள் வாங்கி வரச் சொல்லி அம் மஞ்சள்களை பூஜையில் வைத்து ஆசி கூறிக் கொடுப்பர். பூஜையில் வைத்து சாமிகளது கருணையோடு அளிக்கப்படும் மஞ்சள் கிழங்குகளின் சக்தி வியப் புறத் தக்கது. இந்தப்பெண்ணுக்கும் மாப்பிள்ளை வருவானா என்று ஏங்கித் தவிக்கும் இல்லங்களுக்கு எத்தனையோ வரன்களின் ஜாத கங்கள் குவிய ஆரபித்துவிடும். தான் கொடுக்கும் ஒன்பது மஞ்சள் கிழங்குகளையும் கல்யாணம் ஆகவேண்டிய பெண் தேய்த்துக் குளிக்கவேண்டும். " இந்த ஒன்பது மஞ்சள் கிழங்குகளும் தேய்த்து

தீர்ந்து விடுவதற்கு முன்பே உங்கள் பெண்ணுக்குத் திருமணம் ஆகிவிடும் கல்யாணம் செய்வதற்கு வேண்டிய பொருள்களையும் நிதியையும் உடனே திரட்ட ஆரம்பியுங்கள்'' என்று ஆசீர்வாதம் செய்வர் சாமிகள். ஒருநாள் உற்சாகமேலீட்டால் சாமிகள் இந்த மஞ்சள் கிழங்குகளின் மகிமையை வேடிக்கையாக விளக்க ஆரம்பித்தார்'' "கல்யாணம் ஏற்பாடு செய்ய பொருள் சேகரிப்பதில் தாமதம் ஏற்படுமாயின் மஞ்சள் கிழங்குகளை வாங்கும்போது ஏற்பட்ட உற்சாகமும் வேகமும் மஞ்சள் கிழங்குகளை உபயோகப் படுத்தி கரைத்து தீர்த்து விடுவதில் இருப்பதில்லை'' என்று சாமிகள் கூறினர். இந்த வேடிக்கையை உணராது ஒருவர் விளக்கம் கேட்டபோது சாமிகள் மிகவும் பரிவுள்ளத்தோடு சொன்னர் "குழந்தை பிறக்கும் வரை ஒரு கணவர் தன் மனைவியை விரட்டுவதைப் பார்க்கின்றோம். ஆனல் பெண் குழந்தை பிறந்துவிட்ட நாள் முதல் மனைவியே கணவரை விரட்ட ஆரம்பித்ததைப் பாத்துவிடலாம். எதற்காக எவ்வளவு நாட்கள் இந்த விரட்டல்? நல்லவரனை கணவன் தன் பெண்ணுக்குத் தேடித்தரும் வரை இந்த விரட்டல் இருக்கின்றது. அதிர்ஷ்ட வசமாக ஆண்டவன் அருளால் மஞ்சள் கிழங்குகள் கிடைக்கின்றன. நல்லவரனும் கிடைத்து விடுகின்றன். கல்யாணம் செய்விக்கப் பொருள் வேண்டுமே? பொருளுக்காக ஏங்கித் தவிக்கின்றது உள்ளம். மஞ்சள் கிழங்குகளின் மகிமையால் நல்ல வரன் கிடைத்து விடும் என்ற நம்பிக்கையால் வரும் இன்பம் பொருள் இன்மையால் துன்பமாக மாறுகின்றது. பூஜையில் வைத்து கொடுத்த 9 மஞ்சள் கிழங்குகளில் ஒவ்வொன்ருக கரைத்தாகி விட்டது. மிஞ்சி இருப்பவை இரண்டு அல்லது மூன்று கிழங்குகள். இவைகளைப் பொருள் சேர்ப்பதற்கு முன்னே ஆரம்பத்தில் இருந்த ஆர்வத்தோடு தேய்த்து கரைத்து விட்டால் என்ன ஆவது பெண்ணின் கதி? என்று பெற்றோர்கள் பொருள் தம் கைக்கு சேரும்வரை மஞ்சள் கிழங்கை மிகப் பத்திரப் படுத்தி தேயாமல் தீராமல் பார்த்துக்கொள்வதில் ஆச்சரிய மென்ன இருக்கின்றது'' என்று நகைச்சுவைத் ததும்பச் சாமிகள் பேசுவர். இப்படி வேடிக்கையாகவும் விநயமாகவும் உள்ளதை உள்ளபடி சொல்லும் சாமிகளின் ஆஸ்ய மொழிகளில்தான் எவ்வளவு உண்மைகள் பொதிந்திருக்கின்றன.

"நல்ல வரன் அவ்வளவு சீக்கிரத்தில் கிடைத்து விடுகின்ருனு" என்று சாமிகள் கூறிய சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு தாய் தன் அனுபவத்தை ஒருநாள் சாமிகளிடம் வாய்விட்டுக் கூருமல் இருக்கமுடியவில்லை.

தாய்: எவ்வளவோ முயற்சிகளின் பயனல் மாப்பிள்ளையை இல்லத்திற்கு பெண் பார்க்க அழைத்து வருவோம். சொஜ்ஜி பஜ்ஜி சாப்பிட்டு ஏப்பம் விட்டுப் பதில் கூடச் சொல்லாமல் கம்பி நீட்டி

விடும் மாப்பிள்ளைகளும் உண்டு. பெண் வீட்டுக்கு அமர்த்தி வந்த டாக்சி பணத்தை வாங்கிக் கொண்டு பெண் வீட்டாரை திரும்பிப் பார்க்கக்கூடக் கூசி நடைகட்டும் மாப்பிள்ளைகளும் உண்டு.

சாமிகள் : என்ன செய்வது? பெற்றோருக்கு தன் பெண்ணுக்குத் தகுந்த வரன்வேண்டுமென்று ஆவல். சமயத்தில் கிடைத்த வரனை விட்டுவிட்டால் மறு வரன் கிடைப்பதரிது என்று மனம் பரிதவிக்கும். "குச்சி வள்ளிக் கிழங்குமாவோ உளுந்துமாவோ? எதுவாயினும் எண்ணெயில் போட்டால் வெந்து விடும்" என்ற மன நிலைக்கு சிலசமயம் பெற்றோர்கள் வந்து விடுவர். கிடைத்ததை விட்டு விடக் கூடாது என்று யாருக்கும் சொல்லாமல், கல்யாணப் பெண்ணுக்கும் சொல்லாமல் வரனை முடிவு செய்து கொண்டு அதனால் படாத பாடு பட்டவர்களும் உண்டு. இதோ மூலையில் உட்கார்ந்திருக்கின்றாரே. அவரைக்கேளுங்கள்

சாமிகளின் கடைக்கண் நோக்கிற்காகக் காத்துக்கொண்டிருக்கும் அந்த நபருக்குச் சாமிகள் தன்னைக்குறித்துப் பேசியதில் அடக்கொணு மகிழ்ச்சி. அவர் திண்டுக்கல்லுக்குச் சாமிகளைத் தன் மற்றொரு மகள் திருமண விஷயமாகவே தேடிச் சென்றார். சாமிகள் திருச்சியில் இருப்பதைக் கேள்விப்பட்டுச் சாமிகள் தங்கி இருந்த டாக்டர் T. V. அரங்கநாதன் வீட்டிற்கே ஓடோடியும் வந்தார். அவர் சாமிகள் சொல்படி கூறிய தன் சொந்த அனுபவம் எங்கள் உள்ளங்களை நெகிழ வைத்தன. அவருக்கு நிறையப் பெண் குழந்தைகள். அவர் சாமிகளின் பெருங்கருணைக்குப் பாத்திரமானவர். தன் பெண்களுடைய திருமணங்களைச் சாமிகளின் அருள்கொண்டும் ஆசிகொண்டும் நடத்திக் கொண்டுவரும் பக்தர். ஒருநாள் தன் மகள்களில் ஒருவர் ஜாதகத்தையும் தன்னிடம் வந்திருந்த மாப்பிள்ளை ஒருவர் ஜாதகத்தையும் சாமிகளிடம் கொடுத்தார். சாமிகள் சரி என்று அதே வரனுக்கு அவர் மகளைத் திருமணம் முடிக்க ஆசி கூறிவிட்டார். இதைப் பற்றி இதோ பெண்ணின் தகப்பனாரே பேசுகின்றார். கேளுங்கள்!

தந்தை : சாமிகளது உத்திரவு கிடைத்தவுடன் தயங்குவதா? கல்யாணத்திற்கு வேண்டிய சகல ஏற்பாடுகளையும் செய்துவிட்டு மாப்பிள்ளை வீட்டாரிடம் நாள் குறிப்பிட்டுவிட்டு வீட்டுக்குத் திரும்பினேன். இந்த நற்செய்தியை என் வீட்டிலுள்ளோருக்கு மகிழ்ச்சியோடு தெரிவித்தேன். கல்யாணம் செய்து கொள்ளப்போகும் என் அருமை மகளும் என்னிடம் தனியாக வந்தாள். 'அப்பா, மாப்பிள்ளையைப் பார்த்தீர்களா? தங்களுக்குப் பிடித்தம்தானே? உங்களுக்குப் பிடித்திருந்தால் எனக்கும் பிடித்தம்தான் அப்பா.' என்று மனம் விட்டுப் பேசினாள். எனக்கு உடனே ஆயிரம் தேள்கள் சேர்ந்து என்னைக் கொட்டுவதுபோன்றிருந்தது. வாயடைத்து நின்றேன்.

பொறிகலங்கினேன். காரணம் நான் மாப்பிள்ளையைப் பார்த்ததே கிடையாது. பல எண்ணங்கள் என் இதயத்தைப் பிளக்க ஆரம் பித்தன. ஒருவேளை மாப்பிள்ளையைப் பெண்ணுக்கு பிடிக்காவிட்டால்? ஒருவேளை மாப்பிள்ளை பார்ப்பதற்கு அசிங்கமாக இருந்தால்? ஐயோ, பார்ப்பதற்கே அருவருப்பு கொள்ளும் உருவமாக இருந்து விட்டால்? அப்படி இருந்துவிட்டாலும் பரவாயில்லையே ஒருவேளை உடம்பில் ஊனம் எதுவும் இருந்துவிட்டால்? இப்படியே படிப்படி யாக என் மனப்போராட்டம் ஓங்கிக்கொண்டே இருந்தது. என் குழம்பிய மனநிலையை உணர்ந்த என் மகள், "ஏன் அப்பா இப்படி அசந்து விட்டீர்கள்" என்று கேட்டாள். நான் வேறு வழியின்றி நடந்ததை அப்படியே சொல்லிவிட்டேன். என்மனம் தடுமாறுவது போல் அவளும் மனஅலைமோதுண்டு தடுமாறுவாள், பெரு ஏமாற் றத்தோடு என்னைத் தன் கோபக்கனல் பறக்கும் விழிகளால் பொசுக்கி விடுவாள் என்று மிகவும் பயந்து அவளை அச்சத்தோடு நோக்கி னேன். என்ன ஆச்சரியம்! அவள் முகத்தில் நான் எதிர்பார்த்த ஏமாற்றமில்லை. அவள் கண்களில் வெறுப்பும் கோபமும் இல்லை. அவளுடைய சாந்த முகத்தில் இன்பம் அரும்பியது நான் ஆச்சரி யப்பட்டேன். "என்னம்மா, நீ அதிர்ச்சியடையவில்லையா" என்றேன். "எதற்கப்பா அதிர்ச்சியடைவது? நான் மிகவும் பாக்கியசாலி, நமது குருநாதன் பார்த்து எனக்குத் தேர்ந்தெடுத்த மாப்பிள்ளை எனக்குகந்தவராக இருப்பது நிச்சயம். அதில் எதற்கப்பாஉங்களுக்குச் சந்தேகம். நீங்கள் மாப்பிள்ளையைப் பார்க்கா விட்டால் பரவாயில்லை. இந்த மாப்பிள்ளை நமது குருநாதன் எனக் காக அருளியிருக்கின்றார். இதைவிட நமக்கு வேறென்ன பேறு வேண்டும்" என்று உளமுவந்து பேசினான். அப்போதுதான் மூடி யிருந்த என் கண்களை என் மகள் திறந்து விட்டதை உணர்ந்தேன். எனது குருநாருடைய, நமது சாமிகளது, அருளையும் பெருமையையும் என்னை உணரவைத்த என்மகளின் குரு பக்தியை மெச்சினேன். இன்னமும் சொல்லவேண்டுமா. எங்களுக்குகந்த கண்களுக்கும் கருத்துக்கும் ஏற்ற மணாளனை என் அருமை மகள் உண்மையிலேயே பெற்றாள். அதே அருளை நாடியே மற்றொரு பெண்ணுக்கு மண முடிக்க சாமிகளை நாடி இப்பொழுதும் வந்திருக்கின்றேன்"

இப்படி உரைத்தவர் சாமிகளின் மலர்ப் பாதங்களைப்பற்றி ஆனந்தக் கண்ணீர் வடித்தார். உடனே சாமிகள் கூறிய மொழிகள் எங்களை வாய்விட்டுச் சிரிக்க வைத்தன.

சாமிகள்: ரொம்ப சந்தோஷம். உம்முடைய கல்யாண அவசரத்தில் முக்கியமானதைச் செய்யத் தவறுதீர்கள். இந்தமுறை யாவது நீர் கொண்டு வந்திருக்கும் ஜாதக வரனை நேரே கண்டு வந்தீர்களா?

சாமிகள் தம் பக்தர்களுக்குக் கல்யாண விஷயங்களில் ஒரு இணையற்ற 'ஜோதி' யாகவே விளங்குகின்றார். இருட்டில் என்ன செய்வது என்று ஏங்கி நிற்பவர்க்கு ஒரு விளக்கு கிடைத்தால் பாதை நன்றாக விளங்குவதுபோல, சாமிகள் ஜோதி எந்த இடத்தில் எந்த வரன் இருக்கின்றார், எந்தப் பெண்ணுக்கு எந்த மாப்பிள்ளை என்பதை யெல்லாம் அறிய கண்கண்ட தெய்வீக ஒளியாக விளங்குகின்றது. "ஜோதி இருக்கு மிடமல்லவா ஜோதிடம், என்று அழகாக பேசுகின்ற சாமிகள் பக்தர்களுக்குக் கவலையெல்லாம் தீர்க்கின்ற பெரிய ஜோதிடர். சாமிகள் சீடர் திரு T. V. கமலசாமி அவர்களுடைய மகள் திருமணப் பேச்சு நடந்து கொண்டிருக்கின்றது. ஏராளமான ஜாதகங்கள் வந்திருக்கின்றன. சாமிகள் வந்துள்ள ஜாதகங்களில் ஒன்றைக் குறிப்பிட்டது கலைமணம் கமழ்வதாக இருக்கின்றது. உற்சாகத்தோடு சீடரைப்பார்த்துப் "ஓம் கணபதியைத் தொழ காரியம் கை கூடும்" என்ற தான் முதலில் வணங்க உதவும் கணபதி தோத்திரத்தின் முதல் வரியைச் சொன்னார் சாமிகள். வந்திருந்த வரன்களின் ஜாதகங்களுள் திரு.கணபதியா பிள்ளை மகன் ஜாதகமும் ஒன்று. இதைத் தானே சாமிகள் கலை உள்ளத்தோடு நிறை உள்ளத்தோடு உவகை உள்ளத்தோடு குறிப்பாக உணர்த்தினர். சாமிகள் கூறியபடியல்லவா சாமிகளுடைய பேரருளால் திருமணமும் சாமிகள் தலைமையில் சிறப்பாக நடந்தேறியது. இது மட்டுமல்ல. சாமிகள் திருமணம் நடக்கப் போகும் காலத்தையும் குறிப்பிடுவர். ஓர் ஏழைப் பெண். இருபத்திரண்டு வயது. தனக்குக் கல்யாணமாகுமா என்பது அவள் மனக் கவலை. அதை அறிந்து கொண்ட சாமிகள் "இன்னும் ஆறுமாதத்தில் உனக்குக் கல்யாணம் ஆகும். கணவனுடன் ஏரோபிளேனில் ஏறிப் போவாய்" என்றார். இதைக் கேட்டுக் கொண்டிருந்த பம்பாய் மடுங்கா திரு N. S. அப்பாதுரை அய்யர் அவ்வாறு நடந்ததை நேரில் கண்டு ஆச்சரியப் படுகின்றார். சாதாரண ஜோதிடர் கல்யாண திசையைப் பற்றியும் கல்யாணம் நடக்கும் காலம் பற்றியும் கூற இயலும்; அவரால் கல்யாணமான பின் தம்பதிகள் ஏரோபிளேனில் ஏறிச்செல்வர் என்பதை உரைக்க முடியுமா? சேலம் சார்டர்டு அகௌண்டன்ட் திரு N. V. சுப்பிரமணியம் தன் மகளுக்குச் சுமார் ஒரு வருடமாக பல வரன்களைப் பார்த்தும் ஏதாவதொரு காரணத்தால் கல்யாணம் முடியாதிருந்தது. இதுபற்றிச் சாமிகளைக் கேட்டதில் அவர் பெண்ணைக் காலையில் 108 நாள் சூரிய நமஸ்காரம் செய்து எறும்புப் புற்றுக்குச் சர்க்கரையும் வைக்கச் சொன்னார். 108 நாட்களுக்குள் கல்யாணம் முடிந்து விடும் என்று சாமிகள் கூறியபடியே 60 தினங்களிலேயே தன் மகளுக்குத் திருமணம் நடந்தேறியதை மிகப் பெருமையோடு திரு. சுப்பிரமணியம் கூறுகின்றார். ஒரு தீக்ஷிதர் ஒருவர் சாமிகளைத்தேடி இரு ஜாதகங்களைக் கொண்டு வந்து பார்க்க, அவ்விரண்டு ஜாத

கங்களுக்கும் பொருத்த மிருந்தாலும் கல்யாணம் நடக்க பிராப்தவசமில்லை என்று சாமிகள் சொல்லி அப் பெண்ணுக்கு இரண்டு வருடங்கள் கழித்துத்தான் ஒருநல்ல இடத்தில் விவாகம் ஆகும் என்று கூறியது போலவே நடந்ததை மதுரை திரு V. வைத்திய நாதய்யர் கூறியது நாம் ஏற்கனவே அறிவோம். தூத்துக்குடி டாக்டர் திரு S. ரங்கசாமிப்பிள்ளை தன் மகள்களின் திருமணங்களைச் சாமிகளது அங்கீகாரம் பெற்றே நடத்துவர். தனது இரண்டாவது மகள் திருமணம் பேசும்போது ஏராளமான வரன் ஜாதகங்கள் வந்திருந்தன. சாமிகள் அப்போது மலாயாவில் இருந்தார். 21—8—58. டாக்டர் பூஜை செய்தபோது தன் மகள் சௌ. சீதா ஜாதகத்தோடு திரு. இராமச்சந்திரன் ஜாதகம் குண்டூசியால் இணைக்கப் பட்டு நறுமணம் கமழும் சாமிகளது விபூதிப் பிரசாதத்தோடு இருந்ததைக் கண்டார். அவர் மகளும் அவள் தலையணையடியில் ஒரு குங்குமப் பொட்டினம் இருப்பதையும் கண்டார். கடவுள் எங்கு மிருக்கின்றார் என்பதை அறிந்த டாக்டருக்கு சாமிகளும் எங்குமிருக்கின்றார், தம்மை நம்பி இருக்கும் பக்தர்களை மறப்பதில்லை என்பது நன்றாக விளங்கியது. இதே தம்பதிகளுக்கு கல்யாணம் உறுதியானது. என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இப்படியே தன் மூன்றாவது மகள் திருமணத்திற்கும் நடந்ததை டாக்டர் பக்தி விஸ்வாசத்தோடு எடுத்துரைக்கின்றார். தன் பெண்ணைப் பார்த்த ஒரு வீட்டார் ஜாதகம் சரியில்லை என்று தெரிந்தும் சாமிகளின் இஷ்டத்தைக் கேட்டு அறிவியுங்கள் என்று டாக்டரை வற்புறுத்தினர். ஒருநாள் பூஜை அறையில் சாமிகளுடைய கையெழுத்தில் "வேண்டாம் ஞானம் பார்க்கவும்" என்று ஒரு துண்டு கடிதம் இருந்தது. சில நாட்களுக்குப் பிறகு டாக்டருடைய மூன்றாவது மகள் சௌ. கோமதி ஜாதகத்தோடு திரு குணசேகர் என்பவருடைய ஜாதகம் இணைக்கப் பட்டு ஒரு பவுனோடு கூட சாமிகள் திருவுருவப் படத்திற்கு முன் காட்சியளித்தன. அப்போது பாளையங்கோட்டையில் இருந்த சாமிகளைக் கேட்க சாமிகள் எல்லாம் முருகன் அருள் என்று கூறி அந்தப் பவுனை திருமாங்கல்யம் செய்ய ஆசீர் வதித்தார்.

திருச்சி ஸ்டேட் பேங்க் ஏஜண்டாக இருந்த திரு. V. சுப்ரமணியம் சாமிகளை முதன் முதலாகப் பார்த்ததிலிருந்து சாமிகளிடத்தில் அவருக்குண்டான பக்தி, நம்பிக்கை, தெய்வ உணர்ச்சி இவைகளைச் சொல்ல இயலாது. 1958இல் தன் இருபெண்களுக்கும் சாமிகள் தலைமையில் முகூர்த்தம் வைத்து அழைப்புக்கள் அனுப்பிவிட்டார். முகூர்த்தத்திற்கு ஒரு வாரத்திற்குமுன் பெரிய மகளுக்குத் திடீரென்று ஜுரம் கண்டது; 105° வரை ஏறிவிட்டது. கல்யாணத்திற்கு முதல்நாள் இரவில் மாப்பிள்ளை அழைப்பும் ஆகிவிட்டது. சாமிகள் வரவை

ஒவ்வொரு நிமிடமும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் தகப்பனருக்கு இவ்வளவு ஜுரத்தில் நிற்கக்கூடத் தெம்பில்லாத தம் பெரிய மகளுக்கு எப்படி கல்யாணம் நடக்கும் என்ற திகிலும் கவலையும் நாழியாக ஆக உயர்ந்து கொண்டே இருக்கின்றது. கடைசியில் சாமிகள் வந்துவிட்டார். கல்யாணப் பெண்ணைத் தன் பக்கத்தில் உட்காரவைத்து விபூதிப் பிரசாதம் கொடுத்தார். கொடுஞ்சுரத்தால் வாதனைப்பட்டுக் கொண்டிருந்த பெண்ணுக்கு உடம்பில் ஒரு புது சக்தியும் தெம்பும் வந்துவிட்டன. "குருநாதரின் பிரசாதம் உள்ளே போகவும் கல்யாண மணையிலும் ஊஞ்சலிலும், மற்றுமுள்ள விசேஷங்களிலும் கொஞ்சமும் சிரமம் இல்லாமல் கலந்து கொண்டதுடன் மாப்பிள்ளை வீட்டிற்குப் பெண்ணும் மாப்பிள்ளையும் தாலி கட்டிமுடிந்தவுடன் நடந்து சென்றனர்கள்" என்று பெருவகையுடன் கூறுகின்றார் பெண்ணின் தந்தை.

இந்தச் சந்தர்ப்பத்தில் என்னுடைய சொந்த அனுபவத்தைக்கூற ஆசைப்படுகின்றேன். என்னுடைய முதல் மகள் சௌ. சகுந்தலா S. S L. C. பரீட்சை தேர்வுக்குச் செல்வதற்குமுன் சாமிகளிடம் அவர் ஆசியைப் பெற அவளை அழைத்துச் சென்றேன். "சாமி, சகுந்தலாவுக்குக் கணக்கு என்றால் அவ்வளவு வராது. இது முக்கியமான பரீட்சை. சாமிகள் அவள் கணக்கிலும் நல்லமார்க்கு வாங்க ஆசீர்வதிக்க வேண்டும்" என்றேன். "பரீட்சையில் கணக்கிலேயே அதிகமார்க்கு வாங்கி பாஸ் செய்துவிடும்" என்று சாமிகள் கூறிய வார்த்தைகளைக்கேட்டு அகமகிழ்ந்தோம். சாமிகள் கூறியதுபோலவே என் முதல் மகள் கணக்கில்தான் அதிக மார்க்கு வாங்கி இருந்தாள். ருசிகண்டுவிட்ட நாங்கள் மறுபடியும் என் மகள் புகுமுக வகுப்புத் தேர்வுக்குமுன் சென்று சாமிகளின் ஆசியை வேண்டி நின்றோம். சாமிகள் பரீட்சையைப் பற்றி ஒன்றும் கூறாது என் மகளுக்கு கல்யாண யோகம் வந்துவிட்டதென்றார். அடுத்தமுறை சாமிகள் எங்கள் குடிலுக்கு வருகை தந்தபோது என் மகள் இடது கையில் மஞ்சள் கயிறு கட்டி "இன்னும் ஆறு மாதங்களுள் கல்யாணம் நடக்கும்" என்று ஆசீர்வதித்தார். சாமிகள் சொல்வதா நடக்காமலிருக்கும்? சாமிகளுடைய தலைமையிலேயே திருமணம் இனிது நடந்தேறி, சௌ. சகுந்தலா லட்சுமிநாராயணன் இப்போது ஒரு ஆண் மகவைப்பெற்றுத் தன் மணாளருடன் இனிது வாழ்கின்றாள் என்பதைப் பெருமையோடும் பெருமிதத்தோடும் கூற ஆசைப்படுகின்றேன்.

இன்னுமொரு அதிசயம். என் மகள் கல்யாணத்திற்குச் சாமிகள் எங்கள் வீட்டில் எழுந்தருளினர். சாமிகளுக்குப் பாதபூஜை முடிந்தவுடன், திருமணமாகாதிருந்த ஒரு பெண்மணிக்கு அப்பெண்ணின் பெற்றோர் இஷ்டப்படி சாமிகள் மஞ்சள் கயிறுகட்டி ஆசீர்வதித்தார்,

சாமிகள் திருக்கரங்களில் மற்றுமொரு மஞ்சள் கயிறு இருந்தது. என் சகலர் மகன் திரு. T. S. ஷண்முகம் M. A. அவரின் முதல் பெண் குழந்தை கூட்டத்தில் விளையாடிக் கொண்டிருந்தவளை சாமிகள் அன்போடு அழைத்து அவள் கையில் மஞ்சள் கயிறை கட்டிவிட்டார். ஒன்றும் அறியாத இளங்குழந்தைக்கு மஞ்சள் கயிறு கட்டுவதைக் கண்ட அங்கிருந்தவர் "இவளுக்கா கல்யாணம்" என்று கேலி செய்தனர். சாமிகள் உடனே 'அவளுக்கு தம்பி பிறக்கப் போகின்றான் என்றுதான் நான் மஞ்சள் கயிறு கட்டி இருக்கிறேன்" என்று ஆசீர்வதித்தார். சாமிகள் வார்த்தைகள் பொய்த்துப் போகுமா? அவர் திருமொழிகள் போலவே அந்தக் குடும்பத்தில் சாமிகள் கூறியபடியே ஒரு ஆண் குழந்தை பிறந்து இனிது வளர்ந்து வருகின்றான். என்னே சாமிகளின் திரிகால ஞான உணர்வு!

சாமிகள் மஞ்சள் கயிறு கட்டியும் மஞ்சள் கிழங்குகள் பூஜையில் வைத்து ஆசீர்வதித்துக் கொடுத்தும் திருமணம் கூட்டிவைப்ப தைப்போலவே குழந்தையில்லாதவர்களுக்குக் குழந்தைகள் பிறக்க வும் அருள்பாவிக்கின்றார்.

"மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு".

என்றல்லவா தெய்வப் புலவர் வள்ளுவரும் உரைக்கின்றார். திரு மணத்தின் முக்கியமான நோக்கமும் பயனும் நன்மக்கட் பேறடைதல் அல்லவா? அவ்வாறு அல்லா விட்டால் அக் குடும் பங்களில் ஏமாற்றமும் குழந்தையில்லை என்ற கவலையும் ஏற்படுவது இயற்கையே. மதராஸ் சாமி பவுண்டரி மானேஜர் திரு. ராமையா என்பவருக்கு மணமாகிப் பத்து வருடங்கள் ஆகியும் குழந்தை இல்லாமல் இருந்தது. சாமிகள் பூஜை செய்து மஞ்சள் கிழங்கு ஆசீர்வதித்து வழங்க சாமிகள் குறிப்பிட்ட தேதிக்குள் குழந்தை பிறந்தது பெற்றோர்கள் பாக்யமல்லவா? உடுமலைப்பேட்டை திரு. S. K. ஆறுமுகம் என்பவருக்குக் கல்யாணமாகி 18 வருடங்கள் ஆயின. அவர் மனைவிக்கு இரண்டு குழைந்தைகள் பிறந்து பிறந்த வுடன் மரித்து விட்டன. சாமிகளை அவர் முதன் முதலில் சந்தித்த போது அவர் மனைவி கர்ப்பவதி. பிறக்கப் போகும் குழந்தையை ஆசீர்வதிக்க வேண்டிக்கொண்டவர்க்கு, பிரசவம் ஆகும்போது ஒரு மூலிகையைக் கொண்டு வந்து அதன்மேல் பிரசவம் ஆகும் படி செய்தால் குழந்தை சௌக்யமாக இருக்கு மென்றார் சாமிகள். அவரும் அப்படியே நடந்து கொள்ள தாயும் சேயும் சாமிகள் அருளால் சௌக்யமாக இருக்கின்றனர். திருச்சி நாகைய நல்லூர் திரு N. S. சுந்திரத்திற்கு கல்யாணமாகி 17 வருடங்கள் ஆகியும்

புத்திரபாக்கியம் ஒன்றுமில்லை, முதலில் பிறந்த ஒரு பெண் குழந்தையும் காலமாகிவிட்டது. சாமிகள் 9 மஞ்சளைப் பூஜையில் வைத்துக் கொடுக்க, கடைசி மஞ்சள் பூசி குளித்து முடிப்பதற்குள் ஒரு பெண் குழந்தை பிறந்தது இப்படி எவ்வளவோ அன்பர்களுக்குச் சாமிகள் புத்திர சந்தானம் ஏற்பட அருள் பாலித்து இருக்கின்றார், எவ்வளவோ பெண்களுக்குத் தகுந்த வரன்களைத் தேர்ந்து திருமணம் செய்து வைத்ததைப் போல!

மங்கள மூர்த்தி ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகள் மங்களகரமாக திருமணங்களை நடத்தியும் புத்திர பாக்கியம் பெற ஆசீர் வதித்தருளுவதையும் காணும் நாம், சாமிகள் பூணூல் கல்யாணங்களிலும் தெய்வீகச் செயலாற்றித் தலைமை பங்கு கொள்வதையும் இங்கு குறிப்பது உசிதமாகும். திரு. N. அனந்த கிருஷ்ணய்யர் மகன் சிர. நாராயணனுக்குப் பூணூல் கல்யாணம் சாமிகள் தலைமையில் திருவாவினன் குடியில் நடக்க ஏற்பாடாகி இருந்தது. சேலம் திரு K. வெங்கட்ராம சாஸ்திரி விதிப்படி ஹோமம் வளர்த்து மந்திரஜபம் செய்து கொண்டிருந்தார். அவர் கொண்டு வந்திருந்த பூணூல் விதிப்படி இல்லை என்பதை உணர்ந்த சாமிகள் ஓர் அற்புதம் ஆடி அருளினார். உடனே சாமிகள், ‘முருகா, நாராயணனுக்கு பூணூல் போட்டு ஆசீர்வதிக்கப் பிரார்த்திக்கின்றேன்’ என்று சொல்ல, ஒரு பூணூல் விதிப்படி பிரும்ம முடிச்சுடன் சிர. நாராயணனுடைய தோளில் வலமாக விரிந்து வந்து தானே விழுந்தது! சாமிகள் வலது கையைத் தூக்கி ஆசீர்வதிக்கும்போது ஜோதி ஒளியாக ஓம் எனும் பிரணவம் அவர் உள்ளங்கையில் கண்ட திரு வெங்கட்ராம சாஸ்திரிக்கு மயிர்க் கூச்சல் எடுத்தது. “இந்தக் கலியுகத்தில் இப்பேர்ப்பட்ட ஒரு பெரிய மகத்துவம் பொருந்திய அதிசய சம்பவத்தை நான் நேரில் என் கண்ணாரப் பார்க்கக் கொடுத்து வைத்ததற்கு நான் என்ன புண்ணியம் செய்தேனோ” என்று சாஸ்திரி அவர்களே கூறி சாமிகளின் ஆண்டவன் சக்தியைக் போற்றுகின்றார். திருச்சானூர் திரு. சாரி அவர்களுக்கும் சாமிகள் இவ்விதமே தெய்வீகத்தால் ஒரு பூணூலை வரவழைத்து அவருக்கு அனுக்கிரகம் செய்ததும் நாம் மறந்துவிட முடியாது. இப்படி எவ்வளவோ பக்தர்களுக்குச் சாமிகள் உற்சாகம் பொங்கி எழும்போதெல்லாம் பூணூலை அருளுவதும் அவருடைய அற்புத திருவிளையாடல்களில் ஒன்றாகும்.

இப்படி மங்கையர்க்கும் மங்கல நல்வாழ்த்துரைக்கும் சாமிகளை, வானுலகின் அற்புதங்கள் காட்டுகின்ற சாமிகளைக் கோவே என்று போற்றி நமது இதயாஞ்சலியை சமர்ப்பிப்போம்.

## ஸ்ரீ பன்றிமலை சாமிகள் இதயாஞ்சலி

ஞான இரதம் ஏறும் பன்றி மாமலையின் கோவே!
ஞாலம் நன்று வாழஅருள் கூட்டும் கலைக்கோவே!
வானமுகில் போல்கருணை காட்டுகின்ற கோவே!
உன்னழகைக் காணவந்தோம் ஞான நிலைக் கோவே!

கானமதிலே உருகும் பாணர் போற்றும் கோவே!
கன்னித்தமிழ் ஏத்தும்எங்கள் கோலக்குரு கோவே!
வானுலகின் அற்புதங்கள் காட்டுகின்ற கோவே!
வந்தெமையே ஆட்கொண்டருள் அன்புமயக் கோவே!

வண்ணவடி வின்பமுதம் ஊட்டும் திருக்கோவே!
விண்ணமுதைச் சொல்லமுதாய் உவந்தளிக்கும் கோவே!
விண்ணுலகின் பேரமுதை உன்னருளால் கோவே!
உவந்துவந்து ஏற்றுதெய்வ போகம் பெற்றோம் கோவே!

மண்ணில்உயிர் வாழவளம் ஓங்குவிக்கும் கோவே!
மங்கையர்க்கும் மங்கலநல் வாழ்த்துரைக்கும் கோவே!
பண்ணுடனே செந்தமிழால் உன்றனுக்குக் கோவே!
பாமலரைச் சூட்டுகின்றோம் பன்றிமலைக் கோவே!

வள்ளிமண வாளன்மகிழ் பன்றிமலைக் கோவே!
வெந்துயரைப் போக்கவல்ல வான்கருணைக் கோவே!
புள்ளிமயி லேறும்வடி வேலன் மகிழ் கோவே!
பக்தருளம் பூரிக்க நல் வரமருளும் கோவே!

தெள்ளுதமிழ் பாடமனம் துள்ளுகின்ற கோவே!
ததிங்கிண தோம் என்றாட முழக்குகின்றோம் கோவே!
அள்ளி எமை ஆண்டருளும் ஆருயிரின் கோவே!
அம்மைஅப்ப னாகிநின்றாய் பன்றிமலைக் கோவே!

மணக்கோலம் இன்பநிலை மாளிகைக்கு அழைத்துச் செல்லும் வாசல். இந்த வாசலைத் திறந்து விட்டால் இன்பத்திற்குக் குறை வில்லை. பொருள் உலகில் உழலுகின்ற மாந்தர் மணத்தில் போக மும் மகிழ்வும் அடைகின்றனர். அருள் உலகில் அலைகின்ற ஆன் மாக்களும் ஒரு திருமணத்தையே எதிர்நோக்கி நிற்கின்றன. அப் போது ஜீவாத்மாக்களெல்லாம் தலைவி நிலையில் இருந்து பேரின்ப சுவர்க்க மாளிகையில் பரமாத்மாவாகிய தலைவனைக் கூடிக்கலக்க விழைகின்றன. நமது சாமிகள் மணவாசல் திறந்து பக்தகோடி களுக்கெல்லாம் பேரின்ப நிலையை உணர்த்த குருவாக உதவுகின்றார்.

சாமிகள், சாதாரண தம்பதிகளை மட்டும் கூட்டி மகிழ்விக்கின்ற பெருந்தந்தையாக மட்டும் இருந்துவிடவில்லை. இறைவனை விழைந்து அவனருள் பெற அவாவுகின்ற ஆத்மகோடிகளையும் அவன் அடைய வழிவகுத்துக் கொடுக்கின்ருர். பேரின்ப வாசலைத் திறந்து விடுகின்ருர். இதை மனதில் வைத்துக்கொண்டு கவிஞர் திரு. ரா. பு. தங்கராசன் சாமிகள்மீது பன்றிமலை குறவஞ்சி ஒன்றையே பாடிவிட்டார். இறையன்பு கொண்ட இதயத்தைத் தலைவியாகவும், இறைவனைத் தலைவனுகவும் இறையருள் கூட்டும் ஞானகுருவாக திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளையும் உருவகப் படுத்தி எழுதிய சித்திரம் இது. திருமுருகன்மீது ஆருத காதல் கொண்ட தன் மகளின் காதல் நோயைப் புரிந்து கொள்ளாத ஒரு தாயை ஒரு குறவஞ்சி கண்டு மகள் மையல்நோயை விளக்குகின்ருள். அவள் மகள் முருக வேட்கை தணிய பன்றிமலை சித்தரின் உதவியை நாடி விட்டால் அவர் திருநீற்றின் உதவியால் திருமுருகனை மகள் அடைவது திண்ணம் என்று கூறுகிருள் குறவஞ்சி. அதன்படி சாமிகள் விபூதி கிடைத்தவுடன், மகள் நோய் தீர்ந்து வடிவேலன் அருளுருவைக் கண்டு அகமகிழ்கின்ருள். இந்த அழகான காவியத்தை கல்யாணகுண மிக்க நல்லார் ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகளைப் பற்றி கூறும் இப்பகுதியல் சேர்த்துப் படிப்பது மிகவும் பொருத்த மாகும்.

### பன்றிமலைக் குறவஞ்சி

புன்னகைத்தேன் சிந்துகின்ற புதுமலரைப் போல்வாள்
புகையுண்ட ஓவியம்போல் நகையிழந்த தென்ன?
இன்னிசையை நாள்முழுதும் வழங்குகின்ற வஞ்சி
இசைமறந்து நெட்டுயிர்ப்போ டேங்குவதேன் இன்று?

மான்போன்று களிப்புடனே துள்ளிவிளை யாடும்
மங்கையிவள் மனம்சோர்ந்து வாடுகின்ற தேனே?
நான்பெற்ற செல்வமகள் நலிகின்ற தேனே?
நலிவகற்றும் மருத்துவனை நானெங்கே காண்பேன்?

தென்றலவள் மேனிக்குப் பனிவாடை யாச்சே
தேனிலவும் அவள்மனத்தில் தீயுமிழ லாச்சே!
இன்பந்தரும் குயிற்குரலும் எரிதழலா யிற்றே
இன்னிசையும் அவளுக்கு நஞ்சாயிற் றையோ!

மணம்கமழும் மலர்கள்அவள் மனம்துளைக்கும் கணையாம்
மாலைப்போ தவள்உயிரைக் கொல்லவரும் கூற்றும்
உணவையவள் வெறுத்திட்டாள் உறக்கமொழிந் திட்டாள்
உன்மத்தம் கொண்டவள்போல் உயிர்க்கின்ருள் மங்கை

சிலம்பொலிக்க நடஞ்செய்யும் சிற்றடிகள் இன்று
செயலிழந்து கிடக்கின்ற நிலையென்ன என்பேன்
நிலத்திலவள் பிணிதீர்க்கும் மருத்துவனைத் தேடி
நெஞ்சமெல்லாம் தளர்வுற்று நிற்கின்றேன் யானே.

நோன்பிருந்து பெற்றமகள் நோயுற்றாளோ அந்
நோய்அகலும் வழிஎதுவோ யான்அறியேன் என்று
தான்பெற்ற தவமகளின் தவிதவிப்பைக் கண்டு
தத்தளிக்கும் தாய்முன்னோர் குறவஞ்சி வந்தாள்.

"எங்கிருந்து வந்தாய்நீ குறவஞ்சி? என்றன்
இடரகல நல்லகுறி இயம்புவையோ" என்றாள்
"செங்கதிரோன் உதிக்கின்ற பன்றிமலை நின்று
செகமுழுதும் குறிசொல்லித் திரியும்வஞ்சி நானே.

அம்மே! நின் தவமகளுக் குற்றபிணி யெல்லாம்
ஆறுமுகன் திருவருளால் அரைக்கணத்தில் நீங்கும்
சும்மாநான் சொல்லவில்லை வேல்முருக சாமி
சொல்லுகின்றார் என்நாவில் சொல்வடிவாய் நின்று

பூங்கொடிக்குப் பிணியொன்றும் இல்லையடி அம்மே
பூர்வசென்ம புண்ணியத்தால் விளைந்ததிந்த நிலையே
பாங்கியரோ டன்றொருநாள் பாவையவள் பொழிலில்
பந்துவிளை யாடிஉள்ளம் களித்திருக்கும் வேளை

நீலமயில் வாகனத்தில் மாலைவடி வேலன்
நேரிழையார் மனம்கவரப் பவனிவந்தான் அம்மே
வாலையிளங் குமரியவள் பவனிவரும் வேலன்
வடிவழகின் ஒளியினிலே பறிகொடுத்தாள் நெஞ்சை

அன்றுவரை அறியாத புத்துணர்ச்சி கொண்டாள்
அழகென்னும் பேரொளியில் அகமிழந்து விட்டாள்
தென்றலெனும் தேரேறித் திரியும்உரு வில்லான்
தேமொழியாள் மீதுமலர் தூவிவதைத் திட்டான்

வேல்விழியாள் உள்ளத்தை வேரோடு பறித்து
வெற்றிவடி வேலனவன் வீதிவலம் சென்றான்.
மால்மருகன் தனைத்தொடர்ந்து மனம்பவனி செல்ல
மங்கையவள் வெறுங்கூடாய் வீடுவந்து சேர்ந்தாள்

தோகைமயில் ஏறிவந்தே ஆவியினை வென்ற
தூயவன்றன் தோளின்பம் துய்க்கமயல் கொண்டாள்
மோகமெனும் பெருநெருப்பில் தேகம்நீ றாக
முருகன்எழில் உருநினைந்தே உருகுகின்றாள் பேதை

வடிவழகன் தனைக்கூடும் வழியொன்று சொல்வேன்
வாட்டமெல்லாம் நீங்கிமங்கை மகிழ்வடைவாள் அம்மே
துடியிடையாள் துயர்தீர மருந்தளிக்க வல்ல
தூயவரை நானறிவேன் சொல்லுமொழி கேளாய்.

பனிவரையில் யோகத்தால் ஆழ்ந்திருக்கும் சிவனார்
பார்த்திபனாய் உலகளித்த பாண்டிவள நாட்டில்
முனிவரர்க்கு முத்திதரும் பன்றிமலை என்னும்
முதுமலையொன் றுள்ளதனை அறிவாயோ அம்மே

பரமசிவன் பன்றியுருத் தாங்கிவந்து குட்டி
பசிதீரப் பால்கொடுத்த மலையந்த மலையே
வரமளிக்கும் வலியுடைய மோனசித்தர் கூட்டம்
வாழ்கின்ற மலையந்தப் பன்றிமலை அம்மே.

பன்றிமலைச் சாரலில்வாழ் சித்தரிலே ஒருவர்
பன்னிருகை வேலவனின் இன்னருளைப் பெற்றோர்
குன்றின்மேல் இட்டதொரு விளக்கைப்போல் இன்று
குமரனருட் செல்வத்தைப் புவிக்குணர்த்தும் ஞானி

காவியுடை புனையாமல், காயிலைதின் னாமல்
கானிடையே திரியாமல் இல்லறத்தில் வாழ்ந்தே
பூவினிலே பேரின்பம் பெற்றிடலாம் என்று
புவியினுக்குக் காட்டுகின்ற புண்ணியர் அச் சித்தர்.

நாடிவந்தோர் பிணியகற்றி நலமடையச் செய்வார்
நாத்திகர்க்கும் இறையருளில் நம்பிக்கை தருவார்
தேடிவரும் அன்பருளத் துயரமெல்லாம் போக்கித்
திருவருளை நல்கிமனம் களிப்படையச் செய்வார்

கண்பெற்றார் பலர்சித்தர் திருவருளால் உலகக்
காட்சிபெற்றார் ; சிலர்கடவுட் காட்சியினைப் பெற்றார்,
பெண்பெற்ற தாயேநீ சித்தர் அருள் பெற்றால்
பெரும்பேறு பெற்றிடுவாய் ஐயமில்லை அம்மே.

குன்றில்வாழ் குமரன் தான் மனிதஉருக் கொண்டு
குவலயத்தார் குறைதவிர்க்க வந்துவிட்டான் அம்மே !
பன்றிமலைச் சித்தர் பதம் பற்றிவிட்டால் உன்பெண்
பன்னிருகை வேலவனைக் கூடுவது திண்ணம்,

வெண்ணீற்றைப் பெண்ணவள் தன் நெற்றியிலே பூசு !
வேலன் மேல் கொண்டமயல் நோய்தணியும் பாராய்
கண்கண்ட தெய்வசித்தர் கனிந்தளித்த நீற்றால்
கந்தனருட் காதல்கை கூடுமடி யம்மே.''

என்றுரைத்துக் குறவஞ்சி அன்னையவள் கையில்
இனிதளித்த திருநீற்றைப் பக்தியொடு வாங்கி
வென்றிவடி வேலன்மேல் மையலினுல் வாடும்
வேல்விழியாள் நெற்றியிலே பூசிவிட்டாள் நற்ருய்.

வெண்ணீறு நெற்றியிலே பட்டவுடன் மங்கை
விழிமலர்கள் உவகையினுல் விரிந்தனவே அம்மா!
கண்ணெதிரே மலர்விழியாள் கண்டதென்ன? கனவா?
கண்விழித்துக் காண்கின்ற காட்சியது கனவோ?

உள்ளமெனும் மென்மலரைக் கொய்து சென்ற கள்வன்
உயிரினிலோர் தவிதவிப்பை ஊட்டிவிட்ட மாயன்
ஒள்ளியவேல் கரத்தேந்திப் புன்னகைசெய் வேலன்
உருவத்தைக் காட்டிஅருள் அமுதம் அளித்தானே.

சுபம்.

## நமது நாட்டு அற்புதங்களும், சாமிகளின் அற்புதங்களும்

சாமிகளது வாழ்க்கை நிகழ்ச்சிகளை ஊன்றிக் கவனிப்பவர்கள் இரமண மகரிஷிகளுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளில் சிலவற்றையும் நினைத்துப் பார்க்க இடமுண்டு. இரமண மகரிஷிகளைப் போன்றே சாமிகளும் பாண்டிய நாடளித்துள்ள பெரியவர், மதுரை மாவட்டம் கொடுத்துள்ள தன்னொளி பெருக்கிய மகான். எப்படி திருவண்ணு மலை என்று முதல்முதல் கேட்டவுடன் மகரிஷிகள் மனம் தெய்வீக புளகாங்கித மடைந்ததோ அதைப் போன்றே சாமிகளது மனமும் பழநி என்று முதலில் கேட்டவுடனேயே ஒரு தெய்வீக பேரின்பத் தைத் துய்த்து அனுபவிக்க ஆரம்பித்து விட்டது. அதனுல் அல்லவா தன் பால்ய வயதிலேயே பழநி மலைக்கருகிலுள்ள பாலசமுத்திரத்தில் தன் பள்ளிக்கூட வாழ்க்கையை ஆரம்பிக்க சாமிகளும் சம்மதித்தார். இருவர் வாழ்க்கையிலும் 17ஆவது ஆண்டு ஒரு முக்கிய திருத்தத்தைக் கொடுத்தது. பதினேழாவது வயதில்தான் வெங்கடராமன் என அழைக்கப்பட்ட மகரிஷிகளும் தன்னொளி பெருக்க வீட்டைவிட்டே கிளம்பித் துறவறக்கோலம் பூண்டார். பதினேழாவது வயதில்தான் இராமசாமி என அழைக்கப்பட்ட சாமிகளும் தம் உள்ளொளி பெருக் கும் முயற்சிகளுக்கு இல்லறம் தடையாயிருக்க முடியாதென்பதை உணர்ந்து தந்தை சொல்படி இல்லறம் ஏற்றுக்கொண்டார்.

### 1 மற்ருேர் மனம் அறியும் ஆற்றல்

ஒரு சமயம் திரு. K. நாராயண சாஸ்திரி என்பவர் ஒருசீப்பு வாழைப்பழங்களுடன் திருவண்ணுமலை அருணுசலமூர்த்தி கோவி

லுக்கு ஆராதனைக்குச் சென்றார். வழியில் உள்ள கணபதிமூர்த்தி யின் பெரிய சிலையைக் கண்டு மனத்தால் சீப்பில் உள்ள வாழைப் பழங்களில் ஒன்றைக் கணபதிக்கு நிவேதனம் செய்தார். அதன்பின் அந்த ஒரு சீப்புப் பழங்களையும் அருணாசலமூர்த்திக்கு ஆராதனை செய்து, பூஜை செய்த பழங்களை இரமண மகரிஷிகளிடம் சேர்த்தார். அந்த ஒரு சீப்புப் பழங்களையும் உள்ளே எடுத்துச்செல்லும்போது, மகரிஷிகள் "நில்லப்பா, அவர் கணேசருக்கு ஆராதனை செய்த ஒரு பழத்தை எடுத்துக்கொள்கிறேன்" என்று உரைத்தார். இதைக் கேட்ட சாஸ்திரி அவர்கள் தான் மனத்தில் நினைத்துக்கொண்டதை அறியக்கூடிய ஆற்றல் பெற்றுள்ள மகரிஷிகளைப் போற்றிப்பணிந்தார். இதைப்போன்றே ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலைசாமிகள் மற்றவர் மனங்களில் நடக்கும் போராட்டங்களையும் எண்ணங்களையும் அறியும் ஆற்றலைப் பல சந்தர்ப்பங்களில் பக்தர்கள் கண்டு ஆச்சரியப்படுவதுண்டு. ஒருநாள் சாமிகளோடு ஆப்த நண்பர்கள் திண்டுக்கல்லில் 'இராஜ இரத்தின' இல்லத்தில் கூடிப் பேசி மகிழ்வுற்றிருந்தனர். வெளிக்கதவு அடைத்துத் தாழ்ப்பாள் போடப்பட்டிருந்தது. அவசர அவசரமாகப் பின்பக்கமாக ஒரு பெண்மணி சாமிகளைக்காண வீட்டுக்குள் விரைந்து வந்தாள். வீட்டில் குழுமியிருந்தவர்களையும் அவர்களுடன் உற்சாகத்தோடு உரையாடல் நிகழ்த்திக் கொண்டிருக்கும் சாமிகளைக் கண்டு தான் சொல்லவந்த அந்தரங்கமான விஷயத்தை உடனடி யாக உரைக்க வாய்ப்பில்லாததையும் கண்டு ஒரு மூலையில் அமர்ந்து விட்டாள் அப்பெண். அவள் அவசரத்தையும், அவள் துடிதுடிப்பையும், அவள் மனவேதனையையும் அறிந்துகொண்ட சாமிகள் கருணைஉளமிகுந்து அப்பெண்ணை அழைத்து விபூதிப் பிரசாதம் அருளினார். "உங்கள் கஷ்டம் நீங்கிவிடும். உங்கள் புருஷன் உங்களை நிராகரித்துவிட்டு வேறொருத்தியிடம் வாழ்க்கை நடத்தி வருகின்றார். உம்மைக் கவனிப்பதில்லை. இதைத்தானே என்னிடம் சொல்லி, விபூதிப் பிரசாதம் வாங்க வந்தீர்" என்று சாமிகள் கூறிய வார்த்தைகளைக் கேட்ட பெண் முகத்தில் ஆச்சரிய மும் புத்தொளியும், நன்றியும், மகிழ்ச்சியும் குலுங்க ஆரம்பித்தன. "ஆம் சாமி" என்று உரைத்தவள் அடுத்தகணமே சாமிகள் அளித்த பிரசாதத்தோடு தன் வீட்டிற்கு விரைந்து சென்றாள். 1966இல் திருப்பதியிலிருந்து பக்தர்கள் சாமிகளோடு காரில்வந்து கொண்டிருக்கின்றனர். திருவண்ணாமலையில் கார் சற்று நின்றது. அப்போது ஒரு பையோடு சென்று கொண்டிருக்கும் ஒருவரைச் சாமிகள் அழைத்தார். "நீர் உம் மனைவியுடன் கோபித்துக் கொண்டு வீட்டைவிட்டே புறப்பட்டு விட்டீரே. இது நியாயமா? உம் மனைவிமீது ஒரு குற்றமும் இல்லை. நீர் உடனே வீட்டுக்குத் திரும்ப வேண்டும்" என்று சாமிகள் கூற, அந்தஆள் யாருக்கும் தெரியாத இந்தத் தகவல் சாமிக்குத் தெரிந்துள்ள அதிசயத்தைக் கண்டு மலைத்து நின்று சாமிகளின் கருணையைப்போற்றி சாமிகள்

கூறியபடியே தன் வீட்டை நோக்கி மனைவியை அடையப் புறப்பட்டு விட்டார். இப்படி எவ்வளவோ நிகழ்ச்சிகள் உண்டு.

## 2. ஒரே சமயத்தில் இரு இடங்களில் சாமிகள்

பெரியவர்கள் வாழ்க்கையில் வியத்தகு நிகழ்ச்சிகள் நடப்பது எண்ணிறந்தன. அவர்களாக அந்நிகழ்ச்சிகளை உரைப்பதேயில்லை. ஏனெனில் இறைவன் இன்பத்தில் நிலைத்துள்ள அவர் உள்ளத்தில் இவைகளைச் சிந்திப்பதற்கே இடமில்லை. சில சமயங்களில் பக்தர்கள் விளக்கம் கேட்கும்போதுதான் இச்சம்பவங்களைப்பற்றிப் பெரியவர்கள் பேசுகின்றனர். கணபதி சாஸ்திரி என்பவர் இரமண மகரிஷிகளின் அனுக்கிரகம் பெற்ற சீடர். தபசில் மனத்தைவைத்து, தபசுக்கே மகரிஷிகளிடம் விளக்கம் அறிந்து, அந்தத் தபசையே மதருசுக்கு அருகாமையில் இருக்கும் திருவொற்றியூரில் சாலையிலிருந்து கொஞ்ச தூரத்தில் உள்ள ஒரு பிள்ளையார் கோயிலுக்கு அருகே பதினெட்டு நாட்கள் மௌனவிரதம் இருந்து மேற்கொண்டவர். தவம் தொடங்கிய பதினெட்டாம் நாள் அவர் விழித்துக் கொண்டு படுத்திருக்கும்போது மகரிஷிகள் உரு தம்மிடம் வந்து பக்கத்தில் அமர்வதைக் கண்டார். ஆச்சரியமிகுந்த சாஸ்திரி எழுந்திருக்க முயன்றபோது சாஸ்திரி தலையில் கையைவைத்து அழுத்தினர் மகரிஷிகள். அப்போது சாஸ்திரி உடம்பில் ஒரு மின்சாரம் பாய்ந்த உணர்ச்சி ஏற்பட்டது. இதை அஸ்ததீட்சையாகக் கருதி உவகைமிகுந்த சாஸ்திரியார் தன் அனுபவத்தையே உற்சாகத்தோடு மகரிஷிகளிடம் உரைக்கலானர். இதைக் கேட்டுக் கொண்டிருந்த மகரிஷிகள் ஒருநாள் வானின்மேலே வெகுஉயரத்திலே தன் உடல் தூக்கிச் செல்லப்பட்டதாகவும், அந்த உயரத்தில் கீழே உள்ள யாவையும் மறைந்ததாகவும், ஒரே வெண்ணொளி மயமாக இருந்ததாகவும், கொஞ்ச நேரத்திற்குப் பிறகு உடல் கீழே இறங்க எல்லாப் பொருள்களும் விளங்கக் கண்டதாகவும், திருவொற்றியூரில் ஒருசாலையில் நடந்து சென்று சற்று தூரத்தில் உள்ள கணபதி கோயிலுக்கு அருகாமையில் சென்று பேசி திரும்பியதாகவும், ஆனால் தான் என்ன பேசினர், என்ன செய்தார் என்பது தெரியவில்லை என்றும், திடீரென்று தான் விழித்துப்பார்க்க தான் தங்கியிருந்த விருப்பாட்சக் குகையில் படுத்திருந்ததாகவும் கூறினர். "இதை நான் உடனே என்னுடன் இருந்த பழனிசாமியிடம் கூறினேன். இப்படித்தான் சித்தர்கள் தோன்றுவதும் மறைவதும் போலும் என்று நான் சொல்லிக் கொண்டேன்" என்றூர் மகரிஷிகள். மகரிஷிகள் திருவண்ணுமலைக்கு வந்ததிலிருந்து அந்த இடத்தைவிட்டுச் சென்றதே இல்லை. திருவொற்றியூரைப் பார்த்ததேயில்லை. இருந்தாலும் இப்படியும் ஒரு சித்து நடந்திருக்கின்றது தம் சீடருக்கு அஸ்த தீட்சை அருள்வதற்கு!

பெரியவர்கள் தம் பக்தர்கள்பால் மனமிளகி உதவி அருளு கின்ற நிகழ்ச்சிகள் எவ்வளவோ உண்டு. சௌதாகரன் ஒரு கப்பல் வியாபாரி. ஒருமுறை அவன் கப்பல் மூழ்கிவிடும் என்ற செய்தி வர அவன் தன் குருநாதன் ஸ்ரீ சமர்த்த ராமதாஸரை நினைத்துப் பிரார்த்தித்தான். நடுக்கூட்டத்திலிருந்த தாஸர் அவசர மாக எழுந்து சென்று ஈர வஸ்திரத்துடன் மீண்டும் வந்தார். வெகு தூரத்திற்கப்பால் உள்ள கப்பலைக் காப்பாற்றிய அவருடைய பேராற்றலை அறிந்து கொண்ட மக்களின் ஆச்சரியத்தை அளவிட முடியுமோ ? குஜராத்தில் போகாபூர் என்ற சிற்றரசில் ஸ்ரீ பண்ஹாஜி ராஜபுத்திரர் என்ற மகான் வசித்து வந்தார். தீபாவளித் திரு நாளன்று அரசரும், இவரும், பக்தர்களும் சேர்ந்த பஜனைக் கூட்டம் கோவிலில் மெய் மறந்து பகவன் நாமாவளிகளைப் பாடிக்கொண் டிருந்தது. திடீரென்று பண்ஹாஜி துள்ளித் துடித்து தமது அறையி லிருந்த ஆடையைக் கசக்கிப் பிழியலானார். இதைக்கண்ட அரசன் விளக்கம் கேட்க, "துவாரகையில் அர்ச்சகரது கவனமின்மையால் எம்பெருமான் பச்சைநிற ஆடையில் தீப்பற்றியதை அணைத்தேன்" என்றார் பக்தர் பண்ஹாஜி. இதை உண்மையெனக் கண்ட அரசருக் கும், மக்களுக்கும் ஏற்பட்ட விந்தையை என்னென்பது ! இறைவனது பச்சை நிறமுள்ள பனாரஸ் துப்பட்டா திடீரென்று தீப்பற்றி எரிந் தது. மற்றவர்கள் அதை அணைப்பதற்குமுன் அதுதானே அணைந்து விட்டது. ஒரு பக்தர் வெகு தூரத்திற்கப்பால் உள்ள கப்பலைக் காக்க உதவி அளிக்கின்றார். மற்றொரு பக்தர் இருந்த இடத்திலிருந்தே வெகு தூரத்திற்கப்பால் உள்ள கோவிலில் ஏற் பட்ட தீ விபத்தை உடனடியாகத் தவிர்க்கின்றார். இப்படி எவ்வளவோ மகான்கள் எட்டி இருக்கும் இடங்களில் நடக்கும் பேராபத்துக்களி லிருந்தும் தம் பக்தர்களைக் காப்பாற்றி அருள் ஆற்றல் காட்டி வந்திருக்கின்றனர்.

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் பக்தர்கள் குடும்பங்களில் இத் தகைய நிகழ்ச்சிகள் நிறைய ஏற்பட்டிருக்கின்றன. சாமிகள் ஆபத்துக் காலத்தில் பக்தர்கள் குடும்பங்களுக்கு உதவி செய்யப் பல நூறு மைல்கள் ஒருகணத்தில் கடந்துசென்று தோன்றாத் துணைவனாக ஆபத்சகாயனாக வாய்த்து விடுகின்றார். மதுரையில் சாப்பிட்டுக் கொண்டிருந்த சாமிகள் திருக்கரம் வெகு தூரத்திற்கப்பால் நந்தி மலையில் உயர்ந்த பாறையிலிருந்து விழ இருந்த ஒருவரைக் காப் பாற்ற உதவிய அற்புதத்தை நாம் படித்திருக்கின்றோம். 1957இல் வி. சுப்ரமணியம் அவர்களின் மைத்துனர் பையன் கோயமுத்தூரில் தன் வீட்டில் தாழ்வாரத்தில் போட்டிருந்த கம்பியைப் பார்வினை யாட்டுச் செய்யப் பிடித்தான். அந்தக் கம்பியில் ஏதோ தவறுதலால் மின்சாரம் பாய்ந்து கொண்டிருந்தது அவனுக்குத் தெரியாது.

பையன் கம்பியைத் தொட்டு மின்சாரத்தால் தாக்குண்டு அவதிப் பட்ட அலறலைக் கேட்டோடிய தாய் தன் மகன் நிலையைக் கண்டு நிலைதடுமாறினாள். அவள் நல்ல காலம் ஆபத்சகாயன் சாமிகள் நினைவு வந்தது. குருநாதரை நினைந்து உதவும்படி கதறினார் தாய். என்ன ஆச்சரியம்! மறுக்கணமே பையனைக் கம்பியிலிருந்து இழுத்துத் தள்ளியமாதிரி இருந்தது! பையன் கீழே விழுந்தான். அந்தக் கம்பியில் இன்னும் மின்சாரம் போய்கொண்டேயிருந்தது. நிதானத்திற்கு வந்த பையன் தன்னைச் சாமிகள் வந்து தொட்டுத் தள்ளி விட்டதாகக் கூறினான்.

என்னே சாமிகளின் கருணைச் செயலாற்றல்! இதுபோன்றே மற்றொரு சமயம் சாமிகளின் பக்தர் ஒருவர் குழந்தையைக் காப்பாற்ற அந்த பக்தர் வீட்டுக்கருகே முட்டவந்த மூர்க்க மாட்டையும் சாமிகள் தான் இருந்த இடத்திலிருந்தே அடக்கிய விந்தை நிகழ்ச்சியையும் அந்தபக்தர் உரைத்தது இன்னும் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கின்றது.

இந்நிகழ்ச்சிகளைக் கேட்கும்போது சாமிகள் இரண்டு இடங்களில் ஒரே சமயத்தில் இருக்கமுடியுமா என்ற ஐயம் ஏற்படுவது இயற்கையே! இத்தகைய நிகழ்ச்சிகள் பல இடங்களில் பல சமயங்களில் நடந்துள்ளன. 1966இல் இரவு பன்னிரண்டு மணிக்குச் சாமிகளுக்குக் கேரளா நாட்டில் உள்ள கிளிமானூரில் பாதபூஜை வைபவம் நடக்கின்றது. அதே சமயத்தில் சாமிகள் சென்னையில் திரு சி. முத்துக்குமாரசாமி குடும்பத்தினருக்கு அவர்கள் வீட்டிலேயே காட்சி கொடுக்கின்றார். சேலம் டாக்டர் திரு. S. சுந்தரம் ஒருநாள் சேலத்தில் சாமிகளிடம் "ஒரு மனிதர் தம் சுய உருவத்தில் ஒரே நேரத்தில் இரண்டு இடங்களில் இருக்க முடியுமா?" என்ற கேள்வியையே கேட்டுவிட்டார். அப்போது இரவு பத்தரை மணி இருக்கும். அதே நேரத்தில் சாமிகளின் குடும்பத்தினர் யாவரும் பன்றிமலையில் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது சாமிகளின் மருமகள் ஒரு செம்பில் தண்ணீர் கொண்டு வருவதைக் கண்டவர்கள் எதற்காகத் தண்ணீர் என்று கேட்டனர். மாமாவுக்காக (சாமிகளுக்காக) என்று மருமகள் உரைக்க, எங்கு சாமிகள் வந்திருக்கின்றார் என்று மற்றவர்கள் கேட்க, சாமிகள் மாடிக்குச் சென்றிருக்கின்றார் என்று மருமகள் உரைத்தனர். உடனே எல்லோரும் மாடிக்குச் சென்று பார்க்க மாடியில் சாமிகளிடம் பெருகும் நறுமண விபூதி வாசனை அடிக்கத் தொடங்கியது. இதைச் சேலத்தில் தங்கி இருக்கும் சாமிகளுக்குக் கடிதம்மூலம் தெரிவித்த சாமிகள் புதல்வர் தனக்குச் சாமிகளின் தரிசனம் கிடைக்காமல் போய்விட்டதே என்றும் வருத்தப்பட்டு எழுதி இருந்தார். இந்தக் கடிதத்தைக் கண்ட டாக்டருக்கு சாமிகள் ஒரே சமயத்தில் இரு இடங்களில் இருக்கும் ஆற்றல்

பெற்றுள்ளார் என்பது விளங்காமலா இருக்க முடியும்! இப்படியே சாமிகள் பம்பாய் சென்றிருந்த சமயம் மதுரையில் டாக்டர் சுப்பையா அவர்கள் வீட்டுப் பூஜை அறையில் சாமிகள் பூஜை செய்வதுபோன்று மணி சப்தம் ஏற்பட்ட விந்தையையும் பக்தர்கள் மகிழ்ந்து உரைப்ப துண்டு. பம்பாய் திரு. ஆர். என். தீட்சதர் நண்பர் திரு. நரசிங்க ராவ். அவருக்குப் பல சங்கடங்கள் உண்டாகி அவர் உயிரை விட்டு விடலாமா என்றுகூட யோசிக்கும் அளவுக்குப் பெருகி விட்டன. இதைப்பற்றிச் சாமிகளுக்குத் திரு. தீட்சதரிடமிருந்து கடிதம் வந்தது. கவலைப்படவேண்டாம் என்ற பதிலும் உடனே சாமிகளிடமிருந்து கிடைத்தது. இதை ஊர்ஜிதம் செய்வதுபோன்று ஒருநாள் இரவு 1½ மணிக்கு ராவ் அவர்களின் சங்கடங்களுக்குக் காரணமாக இருந்த வர் வீட்டில் தமிழ்நாட்டுப் பாணியில் உடை தரித்திருந்த ஒருவர் 'நரசிங்கராவ் இருக்கிறாரா' என்று சிரித்தபடி கேட்க, 'இல்லை நீர் யார்' என்று தொடர்ந்து கேட்டார் வீட்டார். "என்பேர் சாமி என்று சொல். இராவின் நண்பனுக்குத் தெரியும்" என்று சொல்லி விட்டு நடந்தார் கதவைத் தட்டியவர் வீட்டின் அருகில் இருந்த தெருத் திருப்பத்தில் நின்றவாறு. அவரைப் பிடிக்க ஓடியவரும் சாமிகளைப் பிடிக்க முடியவில்லை. சாமிகள் மறைந்து விட்டார். இந்தச் சம்பவத்தில் ஆச்சரியப்பட வேண்டியது என்னவென்றால், என்றைக்குக் "கவலை வேண்டாம்" என்று புனர்வாழ்வு தரும் கடி தத்தைச் சாமிகள் சேலத்திலிருந்து எழுதினாரோ, அன்றைக்கே பம் பாயில் இந்த நிகழ்ச்சி நடந்துள்ளது! கவலை வேண்டாம் என்று தன் தொண்டருக்குக் கடிதம் வாயிலாக ஆசீர்வாதம்! தொந்தரவு கொடுக்காதே என்று தொண்டரின் விரோதிக்கும் தன் காட்சியின் வாயிலாக எச்சரிக்கை! என்னே சாமிகளின் ஈரிடங்களில் ஒரே சமயத் தில் இருக்கின்ற பேராற்றலும், பக்தர்கள்பால் சுரக்கின்ற கருணை அமுதும்!

திரு. இராதாகிருஷ்ணன் என்பவர் குழாய் (பம்ப்) செட்டுகளைப் பழுது பார்க்கும் ஒரு தொழிலாளி. அவர் சாமிகளைப் பற்றியும் சாமிகள் புரிகின்ற சித்துக்களைப் பற்றியும் கேள்விப்பட்டிருந்தார். ஆனால் சாமிகளை நேரில் கண்டதில்லை. 1967இல் தசரா நாட்களில் ஒருநாள் மதராசில் திரு. R. R. ஐயர் அவர்கள் வீட்டில் வேலை செய்யாமல் இருந்த பம்ப் செட்டைச் சீர்செய்ய முற்பட்டார். எவ் வளவோ முயன்றும் பலனைக் காணோம். அந்த நேரத்தில் ஐயர் அவர்கள் கார் வீட்டின்முன் வந்து நின்றது. காரிலிருந்து ஒருவர் இறங்கினார். பம்ப் செட்டைச் சீர்செய்யப் பாடுபட்டுக் கொண்டிருந்த தொழிலாளியிடம் வந்து பம்ப் செட்டில் உள்ள ஒரு சிறு கோளாறை எடுத்துச் சொல்லி அதைச் சரிப்படுத்தச் சொல்லிவிட்டுச் சென்று விட்டார் வந்திருந்த பெரியவர். திரு. இராதாகிருஷ்ணனும் அப்படியே செய்ய பம்ப் செட் வேலை செய்ய ஆரம்பித்தது. வேலை

முடிந்ததும் தன்னிடம் பேசியவர் யார் என்பதை அறிய ஆவலோடு திரு. இராதாகிஷ்ணன் வீட்டிற்குள் நுழைந்து பார்க்க அங்குப் பெரியவர் இல்லை. அவர் எங்கு சென்றுவிட்டார் என்று காரை ஓட்டிவந்த டிரைவரையும் கேட்க, டிரைவர் அப்படி ஒருவர் அந்தக் காரில் ஏறி வரவில்லை என்றார். அன்று மாலை திரு. இராதா கிருஷ்ணன் 'விஷ்ராம்' ஹோட்டலுக்கு வந்தார். அங்கு விளங்கும் சாமிகளுடைய திருவுருவப்படம் அவர் கவனத்தைக் கவர்ந்தது; ஏனெனில் இந்தப் படத்தில் உள்ளவர்தான் தனக்கு மிஷினில் உள்ள கோளாறைக் காலையில் உரைத்து விட்டு மறைந்தவர். இதை 'ஹோட்டல் விஷ்ராம்' நடத்துகின்ற திரு. பாஷ்யம் அவர்களிடம் கூறியபோது தனது குருநாதன் மகிமையை அறிந்து மகிழ்வுற்றார் திரு. பாஷியம். இந்த விபரங்களைத் திரு. பாஷ்யம் அவர்களிடமிருந்தே நாங்கள் கேட்டபோது எங்கள் மகிழ்ச்சிக்கும் எல்லையில்லை. இந்த அதிசயம் மதருசில் நடந்த நாள் சாமிகள் மைசூர் மகாராஜாவோடு மைசூரில் இருந்தார்.

சமீபத்தில் மதருசில் நடந்த அதிசயங்களையும் இங்கு உரைப்பது பொருத்தமாக இருக்கும். திரு. K. K. வர்மா அவர்கள் வீட்டில் ஒரே சமயத்தில் பல பக்தர்கள் சாமிகளைப் பல பக்கங்களில் கண்டு தரையில் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டனர். மதுரை டாக்டர் சுப்பையா அவர்கள் ஒருபக்கம் சாமிகளைக் கண்டு வணங்குகின்றார். சென்னை திரு. K. கிருஷ்ணமூர்த்தி சாமிகளை மற்றொரு பக்கம் கண்டு வணங்குகின்றார். சென்னை திரு. G. இராமகிருஷ்ணன் சாமிகளை வேறு பக்கம் கண்டு வணங்குகின்றார். "ஆண்டவன் எங்கும் இருக்கின்றான். அவன் இங்கும் இருக்கின்றான். அங்கும் இருக்கின்றான். ஒவ்வொரு கோபியினிடத்தும் அன்று கிருஷ்ண பரமாத்மா காட்சியளிக்கவில்லையா? அதைப்போன்று தான் ஒரே சமயத்தில் பல இடங்களில் பல பக்தர்களுக்குக் காட்சியளிக்கின்றார் சாமிகள்" என்று கூறுகின்ற திரு. V. S. வெங்கடநாராயண சொற்களில்தான் எவ்வளவு ஆழமான உண்மை பொதிந்துள்ளது! மதருசில் மற்றோர் அதிசயம்! ஒருநாள் சாமிகளை மதருசில் காண பம்பாய் பக்தர்கள் ஒரு காரில் வந்திருந்தனர். அவர்களுக்குச் சாமிகள் தங்கி இருக்கும் இடம் தெரியாது. அவர்கள் கந்தசாமி கோயில் பக்கம் வந்து கொண்டிருக்கும்போது அவர்கள் காருக்கு முன் சென்றுகொண்டிருந்த ஒரு காரில் சாமிகள் போய்க்கொண்டிருப்பதைக் கண்டனர். 'சாமிகளைக் கண்டுவிட்டோம்' என்ற மகிழ்ச்சியோடு அவர்கள் சாமிகள் காரைப் பின்தொடர்ந்தனர். அவர்கள் கார் நுங்கம்பாக்கம் ஹைரோடிலுள்ள 'கைராலி' பங்களாவிற்குள் நுழையும்போது சாமிகள் காரும் பங்களாவிற்குள் நுழைந்து விட்டது உண்மைதான். ஆனால் சாமிகள் கார் கந்தசாமி கோவிலிலிருந்து வரவில்லை.

சைதாப்பேட்டையிலிருந்துதான் வந்தது. சாமிகளைச் சைதாப் பேட்டையிலிருந்து காரில் அழைத்து வந்த டாக்டர் சுப்பையா அவர்களே இதைக் கூறியபோது எங்களுக்கு ஏற்பட்ட வியப்பை என்னென்றியம்புவது !

26—4—68இல் சாமிகள் திருப்பதிக்குத் தம் பக்தர்களோடு சென்றார். அந்தப் பக்தர்களுள் திரு ஹெக்டே என்ற ஒரு தொழிலதிபரும் ஒருவர். சாமிகள் திருப்பதி வெங்கடேசப்பெருமானைத் தரிசிக்கச் சென்றபோது திரு. ஹெக்டேயும் சில பக்தர்களும் சாமிகளோடு செல்ல முடியவில்லை. வெங்கடேசப் பெருமானைத் தரிசனம் செய்துவிட்டுத் திரும்பிய சாமிகளைக் கண்டு திரு. ஹெக்டே தானும் சில பக்தர்களும் சாமிகளோடு சேர்ந்து வெங்கடேசப் பெருமானைத் தரிசிக்க முடியவில்லையே என்று தன் வருத்தத்தை அறிவிக்க, “வருத்தப்பட வேண்டாம். நீங்கள் செல்லுங்கள். நானும் உங்களோடு இருப்பேன் என்று சாமிகள் கூறிவிட்டுத் தான் தங்கி இருந்த விடுதிக்குச் சென்றார். சாமிகள் கூறியபடியே திரு. ஹெக்டே வெங்கடேசப் பெருமானைத் தரிசித்தபோது மூல விக்கிரகத்திற்கு அருகாமையிலேயே சாமிகளையும் கண்டு பேராச்சரிய முற்றார். இது கனவல்ல. தான் அந்தக் கர்ப்பக்கிரகத்தின் முன் நின்று கொண்டிருந்த நேரம் முழுதும் சாமிகள் வெங்கடேசப் பெருமானோடு சேர்ந்து காட்சி யளித்தது அப்படியே அவர் மனத்தில் பதிந்து விட்டது. இந்த ஆனந்தத்தில் கோவிலிலிருந்து திரும்பிய பக்தர் திரு. ஹெக்டே நேரே சாமிகளிடம் ஓடோடிச் சென்று சாமிகளின் பேராற்றலை வியந்து அடிகளைப் போற்றினர்.

“மைவண்ண நறுங்குஞ்சி குழல் பின்தாழ
மகரஞ்சேர் குழை இருபாடு இறைஞ்சி ஆட
... ... ... ... ... ... ... ... ... ...
இருவராய் வந்தார் என் முன்னே நின்றார்”

என்று அன்று பாடிய ஆழ்வார் மகிழ்ச்சியை இன்று பெற்றுப் போற்றுகின்றார் சாமிகளின் பொன்னடிகளை, பக்தர் திரு. ஹெக்டே அவர்கள்.

### 3. நடந்தது, நடப்பது, நடக்கப்போவது அறியும் ஆற்றல் :

திரு. ஹம்பிரீஸ் (Humphreys) எனும் ஆங்கில வாலிபர் ஆத்மீகத் துறையில் ஈடுபாடு கொண்டவர். இரமண மகரிஷிகளைக் கண்டு அளவளாவித் தெய்வீக இன்பம் துய்த்த வெளிநாட்டு அறிஞர். அவர் மகரிஷிகளை நேரில் காணு முன்பே தன் கனவில் அவரின் தரிசனம் கண்டார். ஒரு மலைக்குகை வாயில். அதன் முன் ஒரு

சிற்றருவி ஓடிக்கொண்டிருக்கின்றது. அக்குகை வாயிலில் மகரிஷிகள் தரிசனம் தருகின்ருர். இதைப் படமாக வ ரை ந் து காண்பித்த போலீஸ் இலாகாவில் பணியாற்றப் ப யி ற் சி பெ று ம் அதிகாரி இவரை, தெலுங்கு மொழி சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர் திரு. S. நரசிம்மய்யா ஒருநாள் மகரிஷிகள் அ வ ரி ட மே அழைத்துச் சென்ருர். அந்த ஒரு நாளோடு திரு. ஹம்பிரீஸ் மனம் திருப்தி அடையவில்லே. மறுமுறையும் மகரிஷிகளிடம் சென்ருர். ஹம்பிரீஸ் அவர்களே உடனே அறிந்து கொண்ட மகரிஷிகள் அதை அறி விப்பது போன்று ஹம்ப்ரீஸ் அவர்களுக்கு மட்டுமே தெ ரி ந் த ஒரு விஷயத்தைக் கேட்டார். அவர் சாப்பிடாமல் பசியாக இருப் பதை உணர்ந்த மகரிஷிகள் அவருக்கு உ ட ன டி யா க உணவு அளிக்க ஏற்பாடு செய்தார். அவருக்குக் கொடுத்த ஓர் இளநீர் அவர் தாகத்தைத் தீர்க்கவில்லே என்பதை உணர்ந்த மகரிஷிகள் அவருக்கு இன்னும் கொடுக்கச் சொ ன் ன ர். அவர் தாகமும் பசியும் அடங்கியவுடன் அவரை இன்னும் சாப்பிட வற்புறுத்திய வரைத் தடுத்து நிறுத்திஞர் மகரிஷிகள். அவர் சாப்பிட்டுக் கொண் டிருக்கும் போதே அவருடைய கடந்த கால நிகழ்ச்சிகளே அப்படியே உரைக்கலாஞர் மகரிஷிகள். இதைப் பற்றிக் கூறும் ஹ ம் ப் ரீ ஸ் அவர்கள் "அவரைப் பார்க்க வரும் ஒவ்வொருவரும் அவருக்கு ஒரு திறந்த புத்தகம். அவர் பார்வை ஒருதரம் கிடைத்து விட் டால் போதும், அவரவர்கள் விஷயங்கள் அ ப் ப டி அப்படியே, திறந்த புத்தகத்தில் இருக்கும் விஷயங்கள் போன்று அவருக்குத் தெரிந்துவிடும் என்று இலக்கியச் சுவையோடு போற்றுகின்ருர்.

இத்தகைய அனுபவங்கள் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலே சா மி க ளே க் காணும் பல பக்தர்களுக்கு ஏற்பட்டிருக்கின்றன; சாமிகளேக் கண்டு தரிசிக்கும்படி எவ்வளவோ பேருக்குக் கனவுகளில் அ வ ர வ ர் வணங்கும் தெய்வங்களே திருவாய் மலர்ந்தருளி இருக்கின்றனர். காட்டுப்பட்டி சாமியார் என்பவர் சக்தி பூ ஜை சித்தியாவதற்குச் சாமிகள் அருளே அடைய தன் கனவில் கண்டவாறு சாமிகளேப் பன்றிமலேக்குத் தேடி வந்தார். மூ ல ங் கு டி கிராம முன்சீப் திரு. பி. வேலாயுதம் பிள்ளே தன் குருநாதன் சித்தர் குழந்தையானந்த சாமிகள் தன் கனவில் உரைத்தபடி பன்றிமலே சித்தரிடம் வந்து ஆசி அடைகின்ருர். பம்பாய் செம்பூர் பக்தர் திரு. P. K. இரங்க ராவ் அவர்களும் ஆதியில் தம் மனத்தைக் கவர்ந்த இயேசு பகவான் தன் கனவில் தோன்றி ஸ்ரீலஸ்ரீ பன்றிமலே சாமிகளேயே க ண் டு தன்னேக் காணும்படி ஆக்ஞாபித்த விபரங்களேயும் உற்சாகத்தோடு உரைக்கின்ருர். இப்படிப் பல பக்தர்களுக்குச் சாமிகளுடைய அருள் கூட்டுறவு ஏற்பட்டிருக்கின்றது. "நான் இறந்து போனபின் ஒரு மனிதர் முக்காடிட்டு அ வ ர் கைதனிலிருக்கும் பிரம்பால் 'இது தானே உன் த க ப் ப ன் வியோக ஸ்தானம் என்று தட்டுவர்.

அவரே உன் குரு'' என்று சொல்லிவிட்டுப் பிரிந்தார் கூடலூர் தேவநாயகம் பிள்ளை தகப்பனுர். தகப்பன் உரைத்ததைப் போன்றே இராமலிங்க அடிகளும் முக்காடிட்டு வந்தார், பிரம்பால் தட்டினுர், தேவநாயகம் பிள்ளையையும் சீடனுக ஏற்ருர். இது போன்றல்லவா இன்றும் தெய்வங்களும் தெய்வீக புருடர்களும் கனவிலுதித்து சொல்ல பக்தர்களும் சாமிகளிடமே சென்று தம் குறைகளைப் போக்கிக் கொள்கின்றனர்.

சாமிகள் திரிகால ஞானி. அவரது அகண்ட ஞானத்தையும் சர்வஞ்ஞத் தன்மையையும் அறியாத பக்தர்கள் இல்லை. யாருக்கும் தெரியாமல் செய்துவிட்டோம் என்று நினைத்து இருப்பது மடமை. யாருக்கும் தெரியாமல் இருக்கலாம் ஆனுல் ஒருவருக்கும் மட்டும் தெரியும். அந்த ஒருவர் நமது சாமிகள் என்பது சாமிகளது பக்தர்களுக்குத் தெரியும். நமக்கு மட்டுந்தான் தெரியும் என்று எண்ணி இருப்பவர்களைத் தகுந்த சமயம் வாய்க்கும்போது தனிமையிலும் கூட்டங்களிலும் சாமிகள் தம் அருளுரையாடலுக்கு நடுவிலேயே அவ்விஷயம் தமக்கும் தெரியும் என்பதை ஒரு சில வார்த்தைகளைக் கொண்டே குறிப்பாக உணர்த்தி விடுவர். டெல்லியில் ஜனுதிபதி திரு. இராஜேந்திர பிரசாத் அவர்கள் மாளிகையில் ஒரு நாளில் நடந்ததையும் நடக்கப் போவதையும் கூறிய சாமிகளின் வாக்கு பொய்த்துப் போகவில்லை. சாமிகள் காலையில் நடந்த நிகழ்ச்சியையும் கூறினுர்; மாலையில் நடக்கப்போகும் நிகழ்ச்சியையும் கூறினுர்; இரண்டும் உண்மையாகவே இருந்தன. ''மானிட உருவில் தெய்வம்'' எனும் புத்தகத்தை திரு V. S. வெங்கட நாராயணு M. A., B. Ed., எழுதி இருக்கின்ருர். சாமிகளது தெய்வீகத் தன்மையையும் சாமிகள் அற்புதங்களையும் தொகுத்துரைக்கும் நூல். அதில் சாமிகள் ஒரு டாக்டரது கடந்த நிகழ்ச்சிகளை சினிமாவில் காண்பிப்பது போன்று அந்த டாக்டர் சிறுவயதிலிருந்து சாமிகளைச் சந்திக்கின்ற நேரம் வரை காட்டுவித்த அற்புதத்தைப் படித்து அசந்துவிட்டேன். சாமிகளால் காண்பிக்க முடியாதது ஒன்றுமில்லை என்பது எனக்குத் தெரியும். சாமிகள் வகைவகையாக ஆடி அருளுகின்ற சித்துக்களில் கற்பனைக்கும் எட்டாத புதுமையைக் கண்டுதான் அசந்து விட்டேன். ஒரு பக்தர் காலையிலிருந்து சாமிகளைக் காணும் நேரம் வரை என்னென்ன செய்து கொண்டிருந்தார், யார் யாரைப் பார்த்தார், எந்தெந்த இடங்களுக்குச் சென்ருர் என்பதையெல்லாம் சாமிகள் அறிவதையும் அறிவேன். அவற்றையே ஒரு பக்தருக்குக் கூறியதைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆனுல் இந்த நிகழ்ச்சியில் ஒருவருடைய கடந்தகால வாழ்க்கை நிகழ்ச்சிகளையே ஒன்றன்பின் ஒன்ருக நிகழ்காலம் வரை சாமிகள் காட்சிகள் வாயிலாகக் காண்பித்த அற்புதம் கண்களையும் கருத்தையும் கவருவனவாக அமைந்

துள்ளது. இக்காட்சிகளை சாமிகள் காண்பித்துக் கொண்டிருந்த போது ஒரு பிரகாச ஒளி சாமிகளுடைய திருக் கண்களிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்ததையும் ஆசிரியர் அழகாக எடுத்துரைக்கின்ருர். சாமிகள் நாளை நடக்கப் போவதையும் உணர்ந்து பக்தர்களுக்கு அருள் பாலித்து வருகின்ருர். சென்னையில் பக்தர் சேலம் திரு. M. பார்த்தசாரதி செட்டியாருக்கு சாமிகள் உயிரையே காப்பாற்றி அருளிய அற்புதத்தை நாம் மறக்க முடியுமா ?

## 4. பொருளை மறையவைத்து மீட்டி அருளும் அற்புதம்

மிருத்யுஞ்சயர் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும்போது அவர் தன் தெய்வ ஆற்றலால் வீரசைவர்கள் கழுத்தில் அணிந்திருந்த லிங்கப்பெட்டிகளுள் இருந்த இலிங்கங்களை மறையவைத்ததும், அவ்வளவு இலிங்கங்களையும் பூஜை அறையிலுள்ள புஷ்பங்களில் தோன்றச் செய்ததும் அவை அனைத்தையும் அது அது இருந்த பெட்டிக்குள் அமைத்துக் காட்டிய பேரற்புதத்தையும் மறக்கமுடியாது. இத்தகைய அற்புதமும் இன்றும் நடக்கின்றது : அதை நடத்திக் காட்டும் அற்புதத் தெய்வபுருஷர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள். விபூதி ஜோதி சாமி ஸ்ரீ நித்யானந்த ரவீஷ்வர் ஹிமாலயத்தில் சமோலி மாவட்டத்தில் பத்திரிகாச்ரமம் உடையவர் ; நீலகிரியில் கோட்டகிரியில் சாந்தி ஆச்ரமும், விசாகப்பட்டினத்தில் சமாதான மிஷனும் நடத்துகின்றவர். அவர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்த சாமிகளது ஆசியை நாடி வந்திருந்தார். 5—10—67இல் திண்டுக்கல்லில் சாமிகளது இல்லத்தில் ஸ்ரீ ஜோதிசாமி அவர்கள் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளைக் காண்கின்ருர். அவரிடம் ஒரு சிறிய ஸ்படிக விநாயகர் இருந்தது. "இதன் வயது எழுநூறு ஆண்டுகள். என் கைக்கு வருவதற்கு முன் 15 கைகள் மாறியிருக்கின்றது. மிகவும் சக்தி வாய்ந்த விநாயகர்" என்று அந்தச் சாமி தன் ஸ்படிக விநாயகரைப் புகழ்ந்தார். 'அப்படியா' என்று கூறித் தன்கரத்தில் விநாயகரை வாங்கிக் கொண்டார் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள். கைகளை மூடித் திறக்க அந்தச் சக்திவாய்ந்த ஸ்படிக விநாயகர் சாமிகள் கைகளில் இல்லை. மறைந்து விட்டது. 'உங்கள் பாக்கெட்டைப் பாருங்கள்' என்ருர் சாமிகள் ஸ்ரீ ஜோதிசாமியைக் கண்டு. "என் பாக்கெட்டில் இல்லையே" என்ருர் ஸ்ரீ ஜோதிசாமி. 'நன்ருகத் தேடிப்பாருங்கள்' என்ருர் சாமிகள். அப்படிப் பார்க்கப் பத்திரமாக இருந்தது ஸ்படிக விநாயகர் ஸ்ரீ ஜோதி சாமியின் பாக்கெட்டில். இதைத் தொடர்ந்து கருணைபொழிகின்ற தாயன்பூட்டும் விழிகளோடும், அருள் பொழிகின்ற திருமுகத்தோடும், சாந்தி பொழிகின்ற திருவதனத்தோடும் அமர்ந்து சொல்லாடல் புரியும் சாமிகள் கருத்தைக் கருத்தாடிக் கொண்டும் இருந்தார். ஸ்ரீ ஜோதிசாமி சாமிகளின் கருத்தைக்

கருத்தாட்டும் உரைகளில் ஆழ்ந்திருந்தபோது அவருக்கு ஒரு தரிசனம் ஏற்பட்டது. சாமிகளது இதயகமலத்தினின்றும் ஒரு ஜோதி வேல்போன்று பளிச்சென்று வெளிச்சென்றதைக் கண்டு மெய்சிலிர்த்தார் ஜோதிசாமி. "பெருஞ்ஜோதி மகான், அவதார புருஷர், முருகனே சாமிகள் நாம் பண்ணின புண்யம் அவரைக் கண்டோம்" என்று சாமிகளை ஸ்ரீ ஜோதிசாமி போற்ற ஆரம்பித்தார். ஜோதிசாமிக்கு ஒரு ஜோதித்தோற்றம் நமது பெருஞ்ஜோதி சாமிகளின் இதயக்கமலத்தினின்றும்! என்ன பொருத்தமான ஜோதிக்காட்சி!

இது போன்றே "எந்த யக்ஷிண்ய வேலையும் என் உருத்திராட்சமாலையிடம் ஒன்றும் செய்ய முடியாது" என்று பெருமையடித்துக்கொண்ட ஒரு தமிழ்ப் புலவரையும் அவருடைய பெருமை மிக்க உருத்திராட்ச மாலையை மறைய வைத்து மீட்டுக்கொடுத்த சாமிகளின் அற்புதத் திருவிளையாடல்களையும் நாம் பார்த்து மகிழ்ந்திருக்கின்றோம். ஒருநாள் சாமிகளைக் காண விவேகானந்தா சாமியார் ஒருவர் வந்தார். அவரிடம் விவேகானந்தருடைய உருவப்படம் கொண்ட பேட்ஜ் ஒன்று இருந்தது. அதையும் சாமிகள் மறையவைத்து மீட்டுக் கொடுத்த அதிசயத்தையும் நாம் மறக்க முடியாது. இப்படியே மதுரை சித்தருடைய உருத்திராட்சமும் சாமிகளது பேராற்றலால் மறைந்து மறுபடியும் கிடைத்த அற்புதத்தையும் கோவை திரு. V. கிரி அவர்கள் சொல்லக் கேட்டிருக்கின்றேன். 30—3—1968இல் சாமிகள் இராமேசுவரத்திற்குச் சென்றிருந்தபோது கோவில் அர்ச்சகர் ஒருவர் சாமிகளைக் காண வந்திருந்தார். அவர் மார்பில் நிறைய உருத்திராட்ச மாலைகள் அணிந்திருந்தார். அவர் சாமிகளோடு உரையாடிக் கொண்டிருக்கும்போதே அவை ஒரே நொடியில் மறைந்துவிட்டன. சாமிகள் அந்த அர்ச்சகரைக் கொண்டே மறைந்த மாலைகளைத் தான் தங்கியிருந்த அறையின் மூலையில் உள்ள ஒரு பெட்டியிலிருந்து எடுக்க வைத்த விபரங்களை சாமிகளுடன் சென்ற பக்தர் திருச்சி எலக்டிரிகல் டிவிஷனல் எஞ்ஜினீயல் திரு. R. N. சங்கரன், அவர்கள் கூறக் கேட்டிருக்கின்றேன்.

இப்படிச் சாமிகள் எவ்வளவோ இடங்களில் ஒரு குறிப்பிட்ட பொருளை மறையவைத்து மறுபடி கிடைக்க வைத்து அற்புதம் ஆடுவதிலும் ஓர் உண்மை பொதிந்துள்ளது. ஆத்மீகத் துறையில் முன்னேறுவதற்குச் சாமிகளின் உதவியைநாடி வருகின்ற சாமியார்களும் உண்டு. அருள் உலகமின்றி இப்பொருளுலகிலும் பல துறைகளில் முன்னேற்றமடைய சாமிகளின் ஆசியைநாடி வருகின்றவர்களும் உண்டு. அப்படி வருபவர்களும் தமக்குகந்த தெய்வ சின்னங்களையோ, உருத்திராக்ஷ துளசிமணி மாலைகளையோகொண்டு

வருவதும் அவைகளின் சக்தியைப்பற்றி மனத்தில் அடிக்கடி நினைப்பதும், ஒருசில சந்தர்ப்பங்களில் அவைகளின் மகிமையைப்பற்றி வாய்விட்டுப் பேசுவதும் நாம் காண்பதுண்டு. இவற்றைக் காணும் சாமிகளுக்கு இந்த மகிமைவாய்ந்த பொருள்களை வைத்துக் கொண்டே அற்புதம் ஆட உற்சாகம் தானே பொங்க ஆரம்பித்து விடும். அப்பொழுதுதான் மிக சக்திவாய்ந்தவை என்று கருதப் பட்ட அப்பொருள்கள் சாமிகள் சொல்படி மறைவதும் சாமிகள் உளங்கனிந்துரைத்த மாத்திரத்தில் மறுபடியும் கிடைப்பதும் நடக்கின்றன. இந்த அற்புதத்தைக்கண்ட உடனேயே வந்தவர்கள் சாமிகளது மகாசித்திநிலையை உடனடியாக உணர்ந்து குருநிலைக் குகந்த நாதரைத் தரிசிக்கும் பேறுபெற்றோம் என்று பேரானந்தம் கொள்கின்றனர். சாமிகளது பேரருள் பேராற்றலில் ஓர் அசைக்க முடியாத நம்பிக்கையும் அவர்களுக்கு ஏற்படுகின்றது. 'சாமிகள் இருக்க பயமேன்' என்ற தெய்வபலமும் அவர்கள் அடைகின்றார்கள்.

"குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள் விசும்பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்"

நலந்தரும் ஆற்றல் பெற்றுள்ள திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள் பேராற்றல் பெருநிதி என்பதும், பெருங்கருணை வள்ளல் என்பதும், பெறற்கரிய தெய்வம் என்பதும் அவர்களைக் கண்டவர்கள் கண்கூடாகக் காண்கின்றனர்.

## 5. முருகன் சாமிகளிடம் ஆடும் அற்புதம்

"பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்"
நம்பியாரூரர்.

சைவ சமயக் குரவர்கள் வாழ்க்கையில் இறைவன் தோன்றாத் துணையாகத் தோன்றிப் பசியால் இளைத்து வாடும் பக்தர்களுக்கு அமுதூட்டும் நிகழ்ச்சிகளை அறிவோம். திருநாவுக்கரசர் திருப்பைஞ்ஞீலியை வழிபடச் செல்லும்போது வழியில் பசியாலும் தாகத்தாலும் மிகவும் இளைப்புற்றார். அவரது பசி வருத்தத்தை நீக்கத் திருவுளங்கொண்ட சிவபெருமான் வழியில் ஒரு சோலையையும் குளத்தையும் உண்டாக்கித் தானே அந்தணர் வடிவில் திருநாவுக்கரசரை அடைந்து பொதி சோறளித்ததையும் நாம் மறந்துவிட முடியாது. இதைப்போன்றே சுந்தரமூர்த்தி சாமிகளும் குருகாவூர்

எனும் திருப்பதியை நோக்கி அடியார்களுடன் செல்லும்போது வெயில் கடுமையாலும் பசியாலும் நீர்வேட்கையாலும் வாடினர். அவர்களது சோர்வை நீக்க சிவபெருமான் மறையவர் வடிவுடன் தண்ணீரும் பொதிசோறும் கொண்டுவந்து வெயில் வெப்பம் நீங்க நிழல்தரும் பந்தரையும் உண்டாக்கிச் சுந்தரமூர்த்தி சாமியைத் தடுத்தாட்கொண்டதையும் நாம் மறந்துவிட முடியாது. உண்டு பசிதீர்ந்த வன்றொண்டர் உரிய நேரத்தில் உணவளித்து உய் வித்த மறையவரைப் பாராட்டி அடியார்களுடன் துயில் அமர, இறைவன் பந்தருடன் மறைந்தருளினார். இப்படித் தனக்கு அருள் புரிந்த பெருமான் குருகாவூரில் கோயில் கொண்டருளும் சிவபெரு மானே என அறிந்தவர்

> " இத்தனை யாமாற்றை யறிந்திலே னெம்பெருமான்
> பித்தரே யென்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
> முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
> வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே "

எனவரும் திருப்பதிகம் கொண்டு போற்றி மகிழ்ந்தார்.

இராமலிங்க சாமிகளின் சரிதத்திலும் இறைவன் அவர் பசிக்கு உதவுகின்ற நிகழ்ச்சிகளும் உண்டு. ஒருநாள் வள்ளலார் திரு வொற்றியூர் கோயிலில் தரிசித்து அன்றிரவு ஒரு சத்திரத்தில் தங்கி அயர்ந்தார். அவரைத் தட்டி எழுப்பி வள்ளலாருக்குத் தெரிந்த ஒரு குருக்கள் அன்னமளித்துச் சென்றார். உண்மையில் அன்று அந்த குருக்கள் அந்த ஊரிலேயே இல்லை. ஆண்டவனே குருக் கள் வடிவில் வந்து வள்ளலாருக்கு அன்னமளித்துச் சென்ற அற்புதம் இறையடியார் உள்ளங்களைக் கவரும் தன்மையது. மற் றொருநாள் திருவொற்றியூரிலிருந்து காலந் தாழ்த்தி வந்த வள்ள லார் தன் தமக்கை வீட்டுத் திண்ணையிலேயே படுத்து உறங்கி விட்டார். மூடியிருந்த கதவைத் தட்டித் தமக்கையை எழுப்பி சாப் பிட வள்ளலார் சித்தம் கொள்ள வில்லை. கொஞ்ச நேரத்திற் கெல்லாம் தன்னைத் தட்டி எழுப்பி ஒரு தாமரை இலையில் பொங்கல் சோற்றினைக் கொடுத்து உதவினாள் தமக்கை உருவில் தோன்றிய அருளம்மை நாயகி. தன் உண்மைத் தமக்கை இதற்கடுத்தாற் போல் சாப்பிடத் தன்னைத் தட்டி எழுப்பியபோதுதான் இறைவி உதவிய இவ்வுண்மை வள்ளலாருக்குப் புரிந்தது. இந்த அற்புதச் செயலை உளங்கனிந்து நெஞ்சறிவுறுத்தலில் பாடி விடுகின்றார் இராமலிங்க வள்ளலார்.

> " அன்றொருநாள் நம்பசி கண்டந்தோ தரியாது
> நள்ளிரவில் சோறளித்த நற்றாய் காண் "

என்று பாடியது வள்ளலார் உள்ளம். இறைவியின் செழுங் கருணைச் செயலைப் போற்றி!

சாமிகள் இறைவனைப்போன்று தம்பக்தர்களுக்கு ஆபத்சகாயனாக உதவிவருவதைப் பக்தர்களாகிய நாம் அறிவோம். பம்பாய் பக்தர் களோடு பண்டரி புரத்திலிருந்து நதிக்குச் சென்றபோது தாங்க முடியாத வெயிலில் நாவறட்சியாலும் வேதனையுற்ற தம் பக்தர்களுக்கு சாமிகள் தம் துண்டை ஏந்திப் போதிய வெள்ளரிக்காய்கள் வர வழைத்துப் பக்தர்களின் பசியையும் தாகத்தையும் உள்ளங்களைக் குளிரச் செய்ததையும் படித்திருக்கின்றோம். ஒரு சமயம் திருமுரு கனே சாமிகளின் பசியைத் தணிவிக்க ஓடோடி வந்த அருமை நிகழ்ச்சியையும் சாமிகளே பேரன்போடு பேருவகையோடு கூறி னர் ஒரு நாள் ஐயம்பாளையத்திலிருந்து சாமிகள் மலைக்கு ஒரு வண்டியில் வந்து கொண்டிருந்தார். கொஞ்ச தூரம் நடக்க வேண்டி இருந்தது. நடந்து வந்த சாமிகளுக்குக் களைப்பேற்பட்டது. நாவறட்சி ஏற்பட்டுக் குடிக்க எதுவும் கிடைக்காதா என்ற ஆவலும் ஏற்பட்டது. சாமிகள் கடும் தாகத்தால் களைப்புற்றிருந்த அந்த நேரத்தில் ஓர் ஆள் ஓர் ஆரஞ்சுக் கூடையை தூக்கிக் கொண்டு அதிகவேகமாக அந்தப் பக்கம் வந்தான். அவன் நாலைந்து ஆரஞ்சுப் பழங்களைத் தனியாகத் தன் தோளில் ஒரு துண்டில் கட்டி வைத்திருந்தான். சாமிகளைக் கண்ட அந்த இளைஞன், பொன்னிற மேனியன், கண்களையும் கருத்தையும் கொள்ளை கொள்ளும் எழி லோன். களைப்புற்றிருந்த சாமிகளைக் கண்டு, சாமிகளுக்குக் கென்றே துண்டில் ஆரஞ்சுப் பழங்களைச் சாமிகளின் தாகத்தைத் தணிவிக்க கொண்டு வந்தவன் போன்று, சாமிகளிடம் மிக அன் போடு துண்டிலிருந்த பழங்களை அளித்தான். அத்துடன் "நான் உங்களை நித்தம் பூஜையில் பார்த்திருக்கிறேன்" என்றும் கூறி விட்டு கிடு கிடு பாதாளமாக உள்ள மலைச்சரிவுப் பக்கம் சென்று விட்டான். ஆபத்துக்கு உதவிய இளைஞன் கொடுத்த பழங்களை சாமிகள் சாப்பிட்டு இளைப்பாறிக் கொண்டிருக்கும்போது "இங்கு யாராவது ஒரு கூடை ஆரஞ்சுப் பழங்களைத் தூக்கிச் சென்றதைப் பார்த்தீர்களா சாமி" என்று திரு. சங்கரலிங்க நாடார் எஸ் டேட்டு ஆட்கள் சாமிகளைக் கண்டு கேட்டனர். "இப்பொழுது தான் ஓர் இளைஞன் இந்தப்பக்கம் சென்றான்" என்று மலைச்சரி வைக் காட்டிச் சாமிகள் கூறினர். அவர்களும் அந்த மலைச்சரிவுப் பக்கம் ஓடிச்சென்று பார்க்க அங்கு ஒரு இளைஞனும் தென்பட வில்லை. ஆனால் பத்திரமாக ஒரு கூடை நிறைய ஆரஞ்சுப்பழங்கள் ஒரு மேட்டில் இருந்தன. இந்த நிகழ்ச்சியை எங்களுக் கெடுத் துரைத்த சாமிகள் "முருகன் கண்கண்ட தெய்வமாக உதவுகின் றான். ஆபத்துக்கு உதவுகின்ற அவன் தாகத்திற்கும் உதவும் அருமையைக் கண்டு கொண்டீர்களா? நான் உங்களைத் தினமும்

பூஜையில் பார்த்திருக்கின்றேன் என்று என்னிடம் கூறித் தான்தான் முருகன் என்பதைச் சொல்லாமல் சொல்கின்ற அவன் அழகை அவன் பெருங்கருணையை, அவன் பேரருளை நான் எப்படி மறக்க முடியும்? என்று உளமுருகி உரைத்தார். அன்று ஆண்டவன் திருநாவுக்கரசருக்கும் சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் பொதி சோறு அளித்துப் பசியை நீக்கியதைக் கேட்டு மகிழ்ச்சியுறும் நாம் இன்று திருமுருகன் சாமிகளுக்கு ஆரஞ்சுப் பழங்கள் கொடுத்து தாகத்தைத் தீர்த்தருளும் நிகழ்ச்சியையும் கேட்டுப் பெருமகிழ் வெய்துகிறோம்.

முருகன் சாமிகளுக்குப் பசிக்கு மட்டுமா உதவுகின்றான்? வழி காட்டவும் உதவுகின்ற அவன் பேரன்பையும் சாமிகளின் அருள் சக்தியையும் போற்ற போதிய வார்த்தைகள் இல்லை? ஒரு சமயம் வேலூருக்கு அருகாமையில் உள்ள வள்ளிமலைக்கு ஒரு சாமியாரைப் பார்க்க சாமிகளும் சென்னை திரு. சி. முத்துக்குமார சாமியும் அவர் குடும்பத்தினரும் மாலையில் சூரியன் சாயும் வேளையில் மலையேறினர். திரும்பி வரும்போது இருட்டிவிட்டது. அவர்களைக் கூட்டிச் சென்றவருக்கும் வழி தெரியவில்லை. 'என்ன செய்வது' என்று எண்ணம் கொண்டவர்களும் 'சாமிகள் கூட இருக்க பயமேன்' என்ற தைரியத் தோடேயே தயக்கத்தோடு இறங்கி வருகின்றனர். அந்த நேரத்தில் "முருகா வழிகாட்டு" என்ற சாமிகளின் குரல் கேட்டது. அடுத்த விநாடியில் முருகன் ஓடோடி வந்து விட்டான். சாமிகளையும் பக்தர்களையும் தாண்டிக் சொண்டு ஒருவர் விடு விடு வென்று செல்கின்றார். அவரைத் தொடர்ந்து பாதை தெரிகின்ற அளவுக்கு ஒரு வெளிச்சம் ஏற்பட்டு விட்டது. பசிவேளையில் ஆரஞ்சுப்பழங்களைக் கொடுத்துதவும் திருமுருகன் இருட்டு வேளையிலும் வெளிச்சம் கொடுத்துதவும் அருமையை எப்படி வருணிப்பது? இத்தருணத்தில் இராமலிங்கசாமிகளின் பாட்டொன்றே பொருத்தமாக நினைவுக்கு வருகின்றது.

"அன்னையினும் தயவுடையாய் நீ மறந்தாய் எனினும்
அகில மெல்லாம் அளித்திடும் நின் அருள் மறவாதென்றே
இன்னுமிக்க களித்திங்கே இருக்கின்றேன் மறவேல்
இது தருணம் அருட்சோதி எனக்கு விரைந்தருளே".

சாமிகள் முருகனுடைய அருளை 'முருகா வழிகாட்டு' என்று அழைத்து விட்டார், இத்தருணத்தில் திருமுருகன் அருள் ஜோதி வடிவமாகப் போதிய வெளிச்சம் காட்டுகின்ற அளவில் சாமிகளுக்கு விரைந்தருளி விட்டான்! இராமலிங்க சாமிகளின் வாழ்க்கையைப் படிக்கும்போது, நாள்தோறும் வள்ளலார் கடலூரில் நிகழ்த்தும் சொற்பொழிவை மஞ்சக் குப்பத்திலிருந்து வந்து கேட்பர் ஒரு

பக்தர் இராம கிருஷ்ணம் பிள்ளை என்பவர். இடை வழியில், நடந்துவரும் அவருக்கு எங்காவது அச்சமேற்படின் தன் முன்னே ஒரு மனிதர் ஒரு விளக்கைக் கரத்தேந்தி நடந்து செல்வது தைரிய மூட்டும். இவர் யாரென்பதை அறிய பிள்ளை எவ்வளவோ முயன்ருர். கண்டு பிடிக்க முடியவில்லை. இதையே பிள்ளை வள்ளலாரிடம் தெரிவித்தபோது 'எல்லாம் திருவருட் செயலே' என்ருர் வள்ளலார். இப்படியே வடலூரில் வள்ளலார் ஞாயிற்றுக்கிழமை நிகழ்த்தும் பிரசங்கத்தைக் கேட்க சனிக்கிழமை இரவே விருத்தாசலத்திலிருந்து புறப்பட்டு வடலூருக்கு வேங்கடேசய்யர் எனும் வக்கீல் ஒருவர் வருவார். இரவில் மூன்று மைல் தூரம் உள்ள காட்டைக் கடக்கும்போது இரண்டு தீவர்த்திகள் ஆளின்றித் தாமாகவே அவருக்கு உதவியாக முன்போய்க் கொண்டிருக்கும். இதுவும் வள்ளலார் திருவருட் செயலே! சாமிகளோ இன்று திருமுருகனையே அழைத்துத் தமக்கும் தம் பக்தர்களுக்கும் வெளிச்சத்தையும் காட்டி வழிகாட்டவும் வைத்து விட்டனர்!

## 6. காய்க்காத மரங்கள் காய்க்கின்ற அற்புதம்

" திருவோத்தூர் ஆண்பனையைப் பெண்பனையா கென்னும்
பெருவார்த்தை தானுடைய பிள்ளை "

இப்படிப் பாடிப் போற்றுகின்ருர் நம்பியாண்டார் நம்பி திருஞான சம்பந்தப் பெருமானை. தொண்டை நாட்டில் திருவோத்தூரில் ஒரு சிவனடியார் இறையடியார்க்கெனத் தண்ணீர் இறைத்து வளர்த்த பனைகளுள் ஒன்றேனும் காய்க்காதது கண்டு மனம் புழுங்கினர். இப்பனைகளைச் சிவனருளால் காய்க்கும்படி செய்ய முடியுமா என்று சமணர்கள் இவரை வினவி இகழ்ந்துரைக்கவும் முற்பட்டனர். இது புண்ணில் கோலிட்டு வதைப்பது போன்று இருந்தது. அப்போது திருஞான சம்பந்தர் திருவோத்தூருக்கு எழுந்தருளினர். சிவனடியார் துயரைத் தீர்க்கத் திருக்கோயிலினுள்ளே போந்து

" பூத்தேர்த் தாயன கொண்டுநின் பொன்னடி
ஏத்தாரில்லை யெண்ணுங்கால்
ஓத்தூர் மேல ஒளிமழு வானவகைக்
கூத்தீர் உம்ம குணங்களே "

என்ற பதிகத்தைப் பாடித் திருக்கடைக்காப்பில்

" குரும்பை யாண்பனை யின்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்புகலியுள் ஞானசம்பந்தர்சொல்
விரும்புவார் வினை வீடே"

என முடிக்குமளவில் அங்கிருந்த ஆண்பனைகளெல்லாம் பெண்பனை களாக மாறிக் குரும்பையீன்று காய்த்தன. இது நாம் சமய இலக்கி யத்தில் சுவைக்கின்ற இனிய நிகழ்ச்சி.

சாமிகளது வாழ்க்கையிலும் இத்தகைய அரிய அற்புத நிகழ்ச்சி கள் பல காண்கின்றோம். வெகு நாட்கள் புத்திரப்பேறு இல்லாத வர்களுக்கு மஞ்சள் கிழங்குகள் அருளிப் புத்திரப்பேறு அடையச் செய் கின்றார் சாமிகள் : மலடி என்று தூற்றப்பட்டவர்களையும் மகப்பேறு அடையச் செய்து மகிழ வைக்கின்றார் சாமிகள். உப்புத் தண்ணீர் கொண்ட கிணற்றையே நல்ல தண்ணீர் கொண்ட கிணறாகவும் மாற்றி விடுகின்றார். பூக்காத காய்க்காத மரங்களையும் பூக்க வைத்து காய்க்க வைத்து மகிழ் ஊட்டுகின்றார் சாமிகள். திரு. இராதா கிருஷ்ணன் செட்டியாருக்குரிய பலாமரம் காய்ப்பதில்லை. பக்தர் சாமிகளின் அருளை நாட சாமிகள் உற்சாகத்தோடு ஒரு பாட்டையே பாடி விட்டார்.

"ஆத்தாளே அகிலமெலாம் பூத்தாளே
அடியார்க்கு அறுசுவைக்கு அன்புப்பலாவை
பூத்துக் காய்த்துப் பூர்த்தி செய
பொருத்தமதாய் உதவி செயவேணும் தாயே"

சாமிகளின் திருப்பாடலின் சக்தி அன்று வரை பூக்காமல் காய்க்காமல் இருந்த பலாமரத்தை பூக்கவைத்தது ; காய்க்க வைத்தது. சாமி களுடைய திண்டுக்கல் இல்லத்தில் தோட்டத்தில் இருக் கும் தென்னைமரம் பலனளிக்காமல் இருந்ததையும் சாமிகள் பூத்துக் காய்க்கும்படி செய்துவிட்டார். இப்படி எவ்வளவோ அரிய நிகழ்ச்சி கள் பல உண்டு.

## 6. நடவாதன நடக்கும் அற்புதம்

கறந்தபால் முலைபுகா கடைந்த வெண்ணை மோர்புகா
உடைந்துபோன சங்கின் ஓசை உயிர்களும் உடல்புகா
விரிந்த பூ உதிர்ந்த காயு மீண்டும் போய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை இல்லை இல்லை இல்லையே.

உலகத்தில் சில நடக்கவே முடியாது. அதை வற்புறுத்தவே இல்லை என்பதை மூன்று முறை அழுத்தம் திருத்தமாக உரைக் கின்றார் சிவ வாக்கியர் தன்னுடைய ஆழமான பொருள் செறிந்த மேலே குறிப்பிட்டுள்ள பாட்டில். உலகத்தில் எவ்வளவோ காரியங்கள் நடந்துகொண்டிருக்கின்றன; அவைகள் நடப்பதால் தான் உலகமே நடக்கின்றது. மரம் செடி கொடிகள் பூத்துக் காய்க்கின்றன. பசுக் களிடமிருந்து பால் கறக்கின்றோம், மோரிலிருந்து வெண்ணெய்

எடுக்கின்றோம். சங்கிலிருந்து ஓசை உண்டாகின்றது. மானிடர் களும் இறக்கின்றார்கள். இவைகளெல்லாம் நடப்பன, நடந்து கொண்டே இருப்பன. ஆனால் மரம் செடி கொடிகளிலிருந்து உதிர்ந்த பூக்களையும் காய்களையும் மறுபடியும் அந்தந்த மரஞ் செடி கொடிகளில் அவை உதிர்வதற்கு முன் இணைந்திருந்ததைப் போன்று இணைத்து வைக்க முடியுமா? முடியாது. உடைந்து போன சங்கிலிருந்து ஓசை எழுப்ப முடியுமா? எப்படி உடலை விட்டுப் போன உயிரை மறுபடியும் உடலில் சேர்க்க முடியாதோ அப்படியே உடைந்த சங்கில் ஓசையை எழுப்ப முடியாது. மோரைக் கடைந்து எடுத்த வெண்ணெயைத் திரும்பவும் மோரில் ஒன்றாக்கி விட முடியுமா? முடியாது! முலைக்காம்பிலிருந்து கறந்த பாலை திரும்பவும் பசு மடியில் ஏற்றிவிட முடியுமா? முடியாது; முடியவே முடியாது; முற்றிலும் முடியாது. நெல்லை அரிசியாக்கலாம். அரிசியை பொறியாக்கலாம். கடலையை லட்டாக்கலாம். உளுந்தம் பருப்பை ஜிலேபியாக்கலாம். ஆனால் மாறுபட்ட பொருளை பழையபடி பழைய ரூபத்திற்கும் நாமத்திற்கும் கொண்டு வருவது மனிதனால் இயலாத காரியம். அரிசியை நெல்லாக்க முடியாது. பொறியை அரிசியாக்க முடியாது. லட்டைக் கடலைப்பருப்பாக்க முடியாது; ஜிலேபியை உளுத்தம்பருப்பாக்க முடியாது. நினைத்த பொழுதெல்லாம் தான் நினைத்தபடி நினைத்த நினைத்த பொருள்களை வரவழைக்கின்ற அற்புத சித்தர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள். உலகத்தில் நடக்காதனவெல்லாம் நடத்திக் காட்டுகின்றனர். சாதத்தை அரிசியாக்குகின்றார். பொறியை நெல்லாக்குகின்றார்; லட்டை கடலைப்பருப்பாக்குகின்றார். 1960 ஆம் ஆண்டு சேலத்தில் டாக்டர் காப்டன் O. C. மாதவன் அவர்கள் வீட்டில் சாமிகளுக்குச் சிற்றுண்டி ஏற்பாடாகி இருந்தது. சாமிகள் ஜிலேபியை எடுத்துத் தம் கையை மூடி தம் விரல்களைப் பிசைய உளுத்தம் பருப்பு சாமிகள் திருக்கரத்திலிருந்து மேஜை மேல் விழுந்த அதிசயத்தை எல்லோரும் கண்டு வியந்தனர். இச்செயல் கள் கற்பனையாலும் நினைத்துப் பார்க்க முடியாத பெரு விந்தையாக இருக்கின்றது "கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்" என்று சித்து வகைகளைத் தொகுத்துரைத்த தாயுமானவரும் "வெந்தழலி னிரதம் வைத்தைந்து லோகத்தையும் வேதித்து விற்றுண்ணலாம்" என்றும் அழகாக எடுத்துரைத்தார். சென்னையில் ஒரு பக்தர் பாத ரசத்தை (mercury) ஒரு புட்டியில் வைத்துக்கொண்டு அதனை ஒரு மணியாகக் கட்டித் தரவேண்டும் என்று சாமிகளை எப்படிக் கேட்பது என்று தடுமாறிக் கொண்டிருந்தார். இதைத் தானாக அறிந்து கொண்ட சாமிகள் பக்தரிடமிருந்த பாதரச புட்டியை வாங்கி, தமது இடதுகரத்தைக் குழியாக வைத்துக்கொண்டு பாதரசத்தை அதில் ஊற்றித் தனது வலது கை விரலால் தேய்க்க பாதரசம் திரண்டு ஈயக் குண்டைப் போன்று கெட்டியான ஒரு மணியாயிற்று!

பன்றிமலையில் நடந்த ஒரு அரிய நிகழ்ச்சியை இங்கு கூறுவதும் பொருத்தமாக இருக்கும். காட்டுப்பட்டி சாமியார் ஆத்மிகத் துறையில் பாடுபட்டு வந்தவர். அவர் நடப்பதற்குக் கால் உதவவில்லை. அவருக்கு சக்தி பூஜை சித்தியாக வேண்டி இருந்தது. அவருடைய கனவில் அவருக்கு 'நீர் பன்றிமலை சாமிகளிடம் போகவேண்டும், என்ற உத்திரவு கிடைத்தது. சாமிகளைத் தேடி வந்தவர் சாமிகளைக் கண்டு ஒரு நாள் சாமிகளோடு ஒரு கோயிலில் படுத்திருந்தார். இரவு பன்னிரண்டு மணி இருக்கும். அவர் படுத்திருந்த இடத்தில் கல்மேல் ஏறி வந்தது ஒரு புலிக்குட்டி. "இந்த நொண்டிப் பையனை விட்டு இந்த புலிக்குட்டியை விரட்டாதீங்க சாமி' என்று சாமிகளை கேட்டுக் கொண்டார், இந்த காட்டுப்பட்டி சாமியார். இவருக்கும் சித்தாடும் ஆற்றல் ஓரளவு கைகூடி இருந்தது. சாமிகள் வீட்டில் ஒரு நாள் ஆண்டிப்பிள்ளை என்பவர் ஒரு டம்ளர் பால் கொண்டு வந்து வைத்தார். காட்டுப்பட்டி சாமியார் சக்தியால் டம்ளரில் இருந்த பால் மாயமாக மறைந்துவிட்டது. "போன பால் திரும்பி வருமா? என்ற கேள்வியை சாமிகள் கேட்டார். 'அதெப்படி?' என்று நினைத்தனர் கூடியிருந்தோர், காட்டுப்பட்டி சாமியார் உள்பட. "திரும்பி வருகின்றது பாருங்கள்" என்று சாமிகள் திருவாய் மலர்ந்தருளிய மறுக் கணமே டம்ளரில் பால் குபு குபு என்று பெருகி நிரம்பி விட்டது. இந்த மகா சித்தியைக் கண்ட சாமியாருக்கு தான் தேடி வந்த குருநாதன் பெருமையை அளவிட முடியுமா? அவருடைய பக்தியையும் மகிழ்ச்சியையும் தான் நம்மால் அளவிடமுடியுமா?

சமீபத்தில் சாமிகள் ஆடி அருளிய சித்து இவையாவற்றையும் மிஞ்சுவதாகவே இருந்தது. 3-11-68ல் சாமிகள் திருச்சியில் ஒரு விநாயகர் கோயில் கும்பாபிஷேகத்திற்காக திரு. M. சுப்பையா செட்டியார் வீட்டில் எழுந்தருளினர். அன்றுபூஜையில் அதில்முக்கிய பங்கு கொள்ளும் ஒரு சிவாச்சாரியார் சாமிகளைக் காண வந்தார். அவர் மதராசில் தம்புச்செட்டித் தெரு கோயில் குருக்கள். சிவாசாரிய குலபூஷண ஸ்ரீ T. S. சாம்பசிவ மூர்த்தி சாமிகளின் ஆசியை வேண்டினர். பூசை அறையில் ஈரமான சந்தனம் இருந்தது. அதை சிவாச்சாரியார், சாமிகள் திரு சொல்படி எடுத்து வந்து தன் கைகளில் உருட்டி பந்துபோன்று உருவாக்கினர். சாமிகள் சொற்படியே உருட்டிய ஈரமான சந்தனப் பந்தைத் தம் கைளில் வைத்து மூடிக்கொண்டார். சாமிகள் கையைத்திறக்கச் சொன்னவுடன், திறந்துபார்க்க அந்த ஈரமான சந்தனப் பந்து கெட்டியாகி இறுகி காய்ந்துபோன சந்தனப்பந்தாகி விட்டது. ஈரப்பசை கொஞ்சங்கூட இல்லை. அழுத்த முடியாதபடி கெட்டியாகிவிட்டது. காய்ந்துவிட்டது. அறை முழுவதையும் மணக்க வைக்கும் ஒரு பரிமளத்தையும் வீச ஆரம்பித்தது. அந்த புதிய விதமான அற்பு

த்தை ஆடிக்காட்டிய சாமிகளது திருவாய்மொழிகளை உற்று நோக்குவோம்.

சாமிகள்: மகா சித்தி அடைந்துவிட்டால் எதையும் செய்ய முடியும். விஷத்தை இறக்கி விடுவது சாதாரணமாக செய்யக்கூடியது. விஷத்தையும் ஏறவைக்க வேண்டும். இது எல்லோராலும் முடியாது. நெல்லைப் பொறியாக்குவது பாதரசத்தை மணியாக்குவதோ சித்தர்களால் முடியும். ஆனால் ஈரமாகவுள்ள சந்தன உருண்டையை ஒரு நொடியில் ஈரம் உலரச்செய்து கெட்டி உருண்டையாக்குவது அவ்வளவு சுலபமானதல்ல அபரிமிதமான சூட்டை ஏற்படுத்தி விட்டால் பாதரசத்தை மாற்றிவிடலாம். ஆனால் ஈரமான சந்தன உருண்டையை ஈரம் நீக்கி கெட்டிபடுத்துதற்கு அதற்குத் தேவையான சூட்டை உஷ்ணத்தைக் கொடுக்க வேண்டும் அதிகமான உஷ்ணத்தைக் கொடுத்தால் ஈரமான சந்தனம் உஷ்ணத்தால் வெந்து கருகி சாம்பலாகிவிடும். இந்த பரிமள தெய்வீக சந்தனக் கட்டியை நான் சிவாசார்ய குல பூஷண சாம்பமூர்த்தி அவர்களுக்கு அன்போடு அளிக்கின்றேன். முருகன் அருளோடு அளிக்கின்றேன். இது அவர்களுக்கு உகந்த பொருளாக அமைந்து விட்டது. கருடன் காலில் கட்டின சலங்கை போன்று இது அவருக்கு வாய்த்து விட்டது. சலங்கையை கட்ட வேண்டிய இடத்தில் கட்டினால்தான் அதற்கும் சிறப்பு, கட்டப்பட்ட பொருளுக்கும் சிறப்பு. சலங்கையை கோழிக்காலில் கட்டுவதுண்டோ? சலங்கைக்கு உகந்த இடம் கருடன்கால். அதுபோன்றே 6—11—68ல் மதராசில் ஜனநாயக சேவா சங்கத்தாரால் 'சிவாகம சாஸ்திர நிபுண' எனப்பட்டம் பெறப்போகின்ற சிவாசாரியருக்கு நான் இந்த அற்புத சந்தனக் கட்டியை ஆசியோடும் அன்போடும் அளிக்கின்றேன். தெய்வீகப் பணியில் ஈடுபட்டுள்ள அவருக்கு இந்த தெய்வீக சந்தனமும் மிகவும் பொருத்தமாக உள்ள பொருள்.

## 8. திரைகடலும் ஓடிவரும் அற்புதம்

"மரகத வடிவும் மதித்திரு முகமும்
மலர்க் குழலும் குறு நகையும்
கரகமலமும் கூர் விழியும் செவ்வாயும்
கச்சணி தனமும் நூலிடையும்
அரகர என்போர்க் களித்திடும் பதத்தோ
டஞ்சல் என்றென் னெதிர் தோன்றி
உரகதி யளித்த பெரிய நாயகியை
உளத்தினில் இருத்தி வாழ்த்திடுவோம்"

இப்படி அம்பாளை வணங்குபவர் திருமுதுகுன்றத்துத் திருமடத்து ஆதீனமுதல்வர் ஸ்ரீ குமாரதேவர். இவர் காட்டுப் பாதையில் ஒரு நாள் நடந்து வருகையில் நீர்வேட்கையால் அயர்ச்சியடையும் போது பழமலைநாதர் (இறைவன்) ஒரு வீர சைவ வேதியன்போல் தோன்றி அவர் வரும் வழியில் தண்ணீர்ப் பந்தல் நிறுவித் தாகம் தீரத் தீர்த்தம் அருளினார். இச்செயல் நமது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் வாழ்க்கையிலும் திருமுருகன் ஒரு கூடைக்காரன் போல் தோன்றி தாகத்திற்குள்ளான சாமிகளுக்கு ஆரஞ்சுப் பழங்கள் கொடுத்துதவிய நிகழ்ச்சியை நினைவூட்ட உதவுகின்றது. ஸ்ரீ குமார தேவருக்கு முதுகிரிப் பெரியநாயகியார் ஆவின்பால் கொடுத்துத் தடுத்தாட்கொண்டபோதே ஸ்ரீ குமாரதேவர் சுத்த சாதகம் என்ற நூல் திருவாய்மலர்ந்தருளியபோது பாடிய சொல்லோவியம் மேலே உள்ள பாட்டு. ஸ்ரீ குமாரதேவர் ஆடி அருளிய அற்புதங்களுள் திருவாரூரில் தேரோடச் செய்தருளியது விசேடமானது. ஒரு சமயம் திருவாரூர் தியாகேசர் தேர்விழாவிற்கு ஸ்ரீ குமாரதேவர் சென்றிருந்தார். அவர் பெருமை அறியாத பேதையரிருவர் அவரைப் பார்த்து 'வீரசைவ மருளைப்பார்த்தீரோ' எனப்பேசி இகழ்ந்தனர். இதைக் கேட்ட ஸ்ரீ குமாரதேவர் தேரில் உள்ள மகா தேவரான தியாகேசரை நோக்கி, "இவர்களுரைப்பதுபோல் வீர சைவம் மருளானால் இரதம் நடக்கட்டும்; அருளானால் நிற்கட்டும்" என்று கூற அடுத்தகணமே தேர் நின்றுவிட்டது. தேர் நிலைக்கு வந்தபின்னே உணவருந்தும் நியமமுடைய தஞ்சை மன்னன் செய்தி அறிந்து ஸ்ரீ குமாரதேவரை அடைந்து பிழை பொறுத்தருள வேண்டினர். அப்போது மறுபடியும் ஸ்ரீ குமாரதேவர் தியாகேசரை நோக்கி "பெருமானே, தயாநிதியே! வீரசைவம் அருளானால் இந்த இரதம் நடப்பதாக! மருளானால் நிற்கட்டும்" என்றார். யாவரும் அதிசயிக்கும் வண்ணம் தேரும் விரைந்து நிலை சேர்ந்தது.

ஆண்டவன் அருளைப் பரிபூரணமாக அடைந்த பெரியவர்கள் பேராற்றலை என்னென்பது! அந்த நாளில் தேரோடும் மாடவீதியில் ஓடிவருகின்ற பேரெழில் மிக்க தியாகேசர் தேரும் பெரியவர் ஒருவர் சொல்படி நில் என்றால் நிற்கின்றது, ஓடென்றால் ஓடுகின்றது. இன்றும் பெரியவர் ஒருவர் வருகைகண்டு நீலத்திரைக் கடலும் ஒதுங்குகின்றது, அவர் வாய்விட்டழைக்க ஓடிவருகின்றது. 24—4—67 அன்று சந்திரகிரகணம். சென்னை திரு. K. K, வர்மா, திரு. K. கோபாலன், திருச்சானூர் திரு. M. G. சாரி, திரு. V.S. வெங்கடநாராயணா இவர்களோடு ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் சென்னை கடற்கரைக்கு மாலை எட்டு மணிக்குச் சென்றார். திரு. கோபாலனை சாமிகள் கடற்கரை மணலைக் கையில் எடுக்கச்சொன்னார், அப்படி எடுத்த மணல் உடனே மஞ்சளாகவும் திருச்சானூர் கோயில் குங்கும மாகவும் மாறிவிட்டது. மறுபடியும் மணலை சாமிகள் திரு.

கோபாலனையே அள்ளச்சொல்ல அவ்வளவு மணலும் கற்கண்டுக் கட்டிகளாக மாறிவிட்டது. கடல் நீரில் சாமிகள் கால் கழுவச் சென்றபோது கடல் நீரும் இந்த அற்புதங்களைக் கண்ட அதி சயத்தை வியந்து காட்டுவது போன்று பல அடிகள் பின்வாங்கிக் கொண்டே சென்றது. சாமிகள் கடல்நீரை அணுக அணுக அலை களோங்கிய கடலும் சாமிகளுக்கு வழிவிடுவதுபோன்று விலகிக் கொண்டே இருந்தது. இதைக்கண்ட சாமிகள் "கடலே வருவாய்" என்று திருவாய்மலர்ந்தருள அலைபொங்கிவரும் கடல் மளமள வென்று முன்பு இருந்ததைப்போன்று பெருகி சாமிகளது பாதங் களையே அணைத்துக் கொண்டது அருள் சுரக்கும் சாமிகளின் திருவடிகளை நீர் சுரக்கும் கடல் சேர்ந்து கொண்ட அற்புதத்தைக் கண்ட பக்தர்களின் பெருவியப்பை அளவிடமுடியுமோ? சாமி களின் பேராற்றலை நேரில் கண்டு களிக்கும் திரு, கோபாலன் அவர்களுக்கும் சாமிகளின் செயலில் மனித அறிவுக்கு அப்பாற் பட்டுள்ள ஒரு சக்தி பரிமளிப்பது விளங்காமலா இருக்கமுடியும்?

## 9. பாம்புகடித்திறந்தவர் பிழைத்தெழும் அற்புதம்

மதுரையில் இறைவன் சித்தராக வநது கலயானையைக் கரும்பு தின்ன வைத்ததைப்போன்று திருச்செங்கோட்டிலும் ஓர் அடியார் கொடுத்த கடலையை கல் ரிஷபம் சாப்பிட்டதையும் படித்தறிவோம்.

"வில்லார் மணிச்சபையின் வித்தகாகூடலின் முன்
கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன் – வல்லாண்மை
கட்டுரையே யாகிவிந்தக் கல்லேறெறீ இக்கடலை
பிட்டவிவர் முன்றினச் செய்யே"

இந்த வெண்பாவைப்பாடி கல்ரிஷபத்தை கடலைச் சாப்பிடச்செய்த பெரியவர் திருத்துறையூராதீன ஆச்சாரியர் ஸ்ரீ சிவப்ரகாச தேகிகர் என்பவர். சித்தாடுவதில் பேராற்றல் படைத்திருந்த இவர் மழை யில்லா நாட்டில் மழை வருவித்ததும், எண்ணெய் இல்லாமல் இருந்த தீவர்த்திகளை காவிரி ஆற்று நீரால் எரியும்படிச் செய் ததும் வீரசைவ இலக்கியம் மறக்கமுடியாத தெய்வீகச் செயல்கள். இவர் ஓருசமயம் 'திருக்கலய நல்லூருக்கு அருகாமையில் வரும் போது ஆதிசைவ புத்திரனொருவன் சர்ப்பந்தீண்டி யிறக்க அப் பிரேதத்தை மயானத்திற்கெடுத்துச் செல்லக்கண்டு அதை அவர் கள்பாற் கேட்டு வாங்கித் திருநீறு மந்திரித்துத் தெறித்து' அப் பையனை உயிர்ப்பித்ததும் அவர் வாழ்க்கையில் நடந்த மற்றொரு அற்புத நிகழ்ச்சி. இது நடந்து வெகு வருடங்கள் ஆகிவிட்டன சமீபத்தில் பழநியில் இத்தகைய நிகழ்ச்சி ஒன்று நடந்தது. பழநி யில் பாம்பு கடித்து இறந்து கிடந்தான் ஒரு இளைஞன். அவன்

இறப்பதைத் தடுக்க ஒரு மருந்தும் மந்திரமும் உதவவில்லை. ஆனால் இறந்துபோன இளைஞன் உயிரை மீட்க ஒரு கருணாகரனே வந்து வாய்த்தார். அந்தக் கருணாகரமூர்த்திதான் நமது சாமிகள். இந்த நிகழ்ச்சியை சாமிகள் கூறுவதையே கேட்போம்.

சாமிகள் : பாம்புகடித்து இறந்துவிட்ட இளைஞன் இருந்த இடத்திற்குக் குதிரை வண்டி கொண்டுவந்து என்னை அழைத்துச் சென்றார்கள். பிணத்தைப் புதைக்க ஏற்பாடும் செய்திருந்தனர். நான் கீழே போட்டிருந்த உடலின் கால்பெருவிரலை ஆட்டினேன். மூடி இருந்த கண்கள் திறந்தன. சோடா வேண்டுமென்றான் சற்று முன் பிணமாய்க் கிடந்தவன்.

மாண்டவனை மீண்டும் உயிர்த்தெழச் செய்யும் அருள் வள்ளல் களின் பேராற்றலைப் பணிந்திடுவோம்!

## அற்புதம் ஆடுவதில் சாமிகளும் இராமலிங்க அடிகளும் :

"எல்லாம் செயல்கூடும் என்னாணை அம்பலத்தே
எல்லாம் வல்லான் றனையே யேத்து."

பெரியவர்கள் பெரியவர்களை அறிந்து கொள்வர், அவர்களுக்கு கொடுக்கவேண்டிய மரியாதையைச் செலுத்தத் தவறியதும் கிடையாது. ஒரு நிர்வாண சந்யாசி தான் பார்க்கின்றவர்களை 'கழுதை போகின்றது, மாடு போகின்றது' என்று கூறுவது வழக்கம். ஒரு நாள் அவர் இராமலிங்க அடிகளைக் கண்டுவிட்டார். "இதோ உயர்ந்த மனிதன் போகிறார்" என்று பேருவகையோடு உரைத்து விட்டார். இப்படியாக அல்லவா சல்லிச் சாமியார் செயலும் அமைகின்றது. எல்லாக் குழந்தைகளுக்கும் தான் யாசித்த சல்லிக் காசுகளைக் கொடுத்து மகிழும் சல்லிச் சாமி, சாமிகளுக்கு மட்டும் ஒரு சல்லிக்காசுகூடக் கொடுப்பதில்லை. "இவன்தான் (சாமிகள்) பெரிய சாமி ஆயிற்றே; நான் எப்படி இவனுக்குச் சல்லி கொடுப்பது" என்று சாமிகளது பெருநிலையை சாமிகள் குழந்தையாக இருக்கும் போதே உணர்ந்து உரைத்துவிட்டார் சல்லிச் சாமியார்.

பெரியவர்களை பெரியவர்கள் மட்டும்தான் அறிந்து கொள்கின்றனர். பாம்புகளும் கண்டு வணங்குகின்றன. பெரியவர்கள் வாழ்க்கையில் பாம்புகள் புலப்படுவதும் அடிகளுக்கு அஞ்சலி செய்வதும் கேள்விப்படுகின்றோம். ஒருநாள் சென்னையை அடுத்த வியாசர் பாடியிலிருந்து இராமலிங்க அடிகளார் தம் சொற்பொழிவை முடித்துவிட்டு தம் அடியார்களோடு திரும்பும்போது நடுவழியில் ஒரு பெரிய பாம்பு இவரை நோக்கி வந்தது. எல்லோரும் ஓட அடிகள் மட்டும் அவ்விடத்தைவிட்டு நகரவில்லை. அடிகள்

பாதங்களைச் சுற்றிக்கொண்டிருந்த பாம்பும் அடிகள் ஏகுமாறு சொல்ல உடனே ஏகிவிட்டதென்பர். 1967ஆம் ஆண்டில் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் தஞ்சை ஜில்லாவில் தம் பக்தர் குழாமோடு சில கோயில்களுக்குச் சென்றனர். திருவாரூர் ஸ்ரீ தியாகேசர் கோவிலில் ஒரு கருநாகப் பாம்பு வந்துவிட்டது. சாமிகள் திருக் கரத்தைக் காட்டியதும் அப்படியே நின்று விட்டது. சாமிகளுக்கு அஞ்சலி செய்வதுபோல் சிறிதுநேரம் அமைதியாக இருந்த சர்ப்ப மும் அதன்பின் அவ்விடத்தைவிட்டு அகன்றது.

## 1. மணலை மாற்றும் அற்புதம் :

பெரியவர்களுக்கு உற்சாகம் பெருகவேண்டியதுதான். மணலை யும் மாற்றுகின்றனர். கொடுக்கவேண்டியவருக்குப் பொருத்தமான பொருள்களையே மணலை மாற்றிக் கொடுக்கின்றனர். ஓர் வயதான வள் இராமலிங்க அடிகளிடம் தனக்கு ஒரு அருள்சித்து ஆடிக் காட்டியருள வேண்டினர். அடிகள் வயதானவள் கைககளில் ஒரு பிடி மணல் வாரிக்கொடுக்க அது பல சிவலிங்கங்களாக மாறிவிட் டது. திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள் சமீபத்தில் கும்பகோணத் தில் மகாமகத்தின்போது காவிரி ஆற்றில் நீராடினர். சாமிகளோடு பல பக்தர்கள் இருந்தனர். அவர்களில் திரு. K. K. வர்மா அவர் களை சாமிகள் அவருடைய ஈரமாயிருந்த துண்டில் குளித்துக் கொண்டிருந்த இடத்திலிருந்த மணலை அவர் துண்டு நிறைய எடுக்கக் கூறினர். காவிரி தண்ணீர் பெருக்கெடுத்து ஓடுகின்ற நேரம். இடுப்பளவு தண்ணீர். பக்தரும் சாமிகள் திருவுள்ளப்படி தண்ணீருள் மூழ்கித் துண்டு கொள்ளுமட்டும் மணலை நிரப்பி, தண்ணீருக்கு வெளியே எடுத்தனர். என்னென்று இயம்புவது இந்தத் தெய்வீகத்தை! துண்டுக்குள், இருந்தது அவ்வளவும் ஜீனி சர்க்கரை! துண்டுக்குள் நிரப்பியபோது ஈரமான மணலாக இருந்தது தண்ணீருக்கு வெளியே துண்டோடு எடுத்து பார்த்த போது கொஞ்சங்கூட தண்ணீர் சம்பந்தமில்லாத புது ஜீனி சர்க் கரையாக மாறிவிட்டது. துண்டும் ஈரம் மாறி உலர்ந்திருந்திருந் தது. அன்று அடிகளார் மணலைச் சிவலிங்கங்களாக மாற்றிக் காட்டி னர்; இன்று சாமிகள் மணலைச் சர்க்கரையாக மாற்றி அருள்கின்றனர். கடவுளையே கற்கண்டாக காண்கின்ற சாமிகள் கடவுள் தன்மை யையே இனிப்பான சீனிச் சர்க்கரையாக தமது சென்னை பக்தருக்கு அருள்கின்றனர்.

"கடவுள் கண்டவர்க்கு கற்கண்டு, காணுதவர்க்கு கல்குண்டு" என்ற சாமிகளின் திருமொழிகளை நம்மால் மறக்க முடியுமா? இதைத் தானே சாமிகள் இப்போது செயலில் காட்டி அருள்கின்றனர்!

## 2. நீர்வளம் நிலவளம் பெருக்கும் அற்புதம்.

ஒரு சமயம் புதுக்கோட்டை நகரில் கிணறுகளில் நீர் வற்றியது. சிறிது நீரிருந்தாலும் பயன்படக் கூடியதாக இல்லை. இதற்காக அழைக்கப்பட்டுவந்த இராமலிங்க அடிகள் கிணறுகளில் நீர் பெருக் கவும் பயன்படக்கூடிய சுவை ஊட்டவும் திருவருள் பாலித்தார். மணலூர் நடராஜப் பிள்ளை புன் செய் நிலங்களை நன் செய் நில மாக்கவும் இராமலிங்க அடிகள் அருள் புரிந்ததையும் படிக்கின்றோம். இன்று தவத்திரு. பன்றிமலை சாமிகள் ஆடி அருளுகின்ற சித் துக்களில் நீர் பெருக்குவிக்கும் செயலும் காய்க்காத மரங்களை காய்க்கவைக்கும் அற்புதமும் சாமிகளின் கருணை உள்ளத்தையே எடுத்துக் காட்டுகின்றன. மழை இல்லாத போது வருணஜெபம் ஆரம்பிக்கின்றனர். சாமிகளையும் அழைக்கின்றனர். 1965ஆம் ஆண்டில் மழையில்லா நேரத்தில் சாமிகள் உதகைக்கு எழுந்தருளி யதும் அங்கு உடனே மழை கொட்டியதும் பக்தர்கள் அறிவர். இப்படி எவ்வளவோ பக்தர்களுக்கும் சாமிகள் உளமுவந்து அருள் பாலித்து வருகின்றார். பட்டி வீரம்பட்டி ஐயம்பாளையம் திரு. குன் னப்பச் செட்டியார் சாமிகளின் அருளுதவியால் தோண்டிய கிணறு விரிந்த பல ஏக்கர் நிலங்களுக்குப் போதிய தண்ணீரளித்துப் பயி ரெழுப்பவும் நல்ல விளைச்சல் காணவும் உதவி வருகின்றது. திண்டுக்கல்லில் உள்ள சாமிகளுடைய இராஜ இரத்தின இல்லத்தில் உள்ள கிணற்றில் ஆரம்பத்தில் தண்ணீர் நிறைய இருந்தும் வாயில் வைக்கமுடியாதபடி அவ்வளவு உப்புத்தன்மை வாய்ந்ததாக இருந்தது. சாமிகளது அருளாற்றல் அக்கிணற்று நீரை சுவையுள்ள பயன்படும் நீராக அமைத்து விட்டது. சாமிகளுடைய அருளாற்ற லால் சாமிகள் இல்லத்திலேயே இருக்கும் ஆண் தென்னைகளும் பெண் தென்னைகளாக மாறி, காய்க்க ஆரம்பித்து விட்டன. இப்படி சாமிகள் பலாமரத்தை அம்பாள் அருளால் பாடி காய்க்க வைத்ததை யும் நாம் அறிவோம். பெரியவர்கள் திருவடிகள் சேரும் நிலங்களும் இல்லங்களும் செழித்தோங்குகின்றன: பெரியவர்களுடைய திருக் கரங்கள் அருளும் விபூதிப் பிரசாதம் எண்ணற்றவர் இடர்களை நீக்க உதவுகின்றன.

## 3. மூன்று காலங்கள் காட்டும் அற்புதம் :

பெரியவர்கள் கடந்தகால, நிகழ்கால, எதிர்கால நிகழ்ச்சிகளை யெல்லாம் காட்டவல்ல சித்தர்கள். பல மைல்களுக்கப்பால் நடப் பவைகளையும், பல ஆண்டுகளுக்கு முன்னுல் நிகழ்ந்தவைகளையும், சில நாட்களுக்குப்பின் நடக்கப்போவதையும் காட்டவல்ல பெரு மகான்கள். இராமலிங்க அடிகள் திரைமறைவில் திருச்சிற்றம் பலத்தைக் காட்டியருளிய அற்புதத்தைப் படித்திருக்கின்றோம். சிதம்பரத்தில் ஆனித் திருமஞ்சன நாள். பக்தர்கள் நடராஜ

தரிசனத்திற்காக ஏங்கி இருப்பதை வடலூரில் இருந்த இராமலிங்க அடிகள் உணர்ந்தார். பக்தர்களை அழைத்து சத்திய தரும சாலையில் ஓரிடத்தில் ஒரு திரையைத் தொங்கவிட்டுத் திருச்சிற்றம்பல காட்சியை சிதம்பரத்தில் நடப்பதை அப்படியே திரைக்குள்ளே காட்டி அருளினர் அடிகளார். இது நிகழ்கால நிகழ்ச்சியை காட்டுகின்ற அற்புதம். ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகள் இப்படியும் அற்புதம் ஆடி இறைமாட்சியைத் தெய்வபலத்தை மக்களுக்கு அறிவுறுத்துகின்றனர். சாமிகளுடைய அன்புக்குப் பாத்திரமான ஒரு டாக்டர் பக்தருக்கு சாமிகள் டாக்டருடைய குழந்தைப் பருவத்திலிருந்து அன்றுவரை நடத்த முக்கிய நிகழ்ச்சிகளை சினிமா படத்தில் காட்டுவது போன்றே காட்டியருளியதைத் திரு. V. S. வெங்கடநாராயணு அவர்கள் கூற கேட்கின்றோம். இதுநடந்தவை காட்டும் அற்புதம். நடக்கப்போவதையும் அல்லவா சாமிகள் அருள் கூர்ந்து காண்பிக்கின்றனர். குமாரி A. இந்திரா எனும் கன்னிக்கு அவருக்கு வாய்க்கப் போகும் மாப்பிள்ளையையே பூஜை அறையில் சாமிகள் காண்பித்து விட்டதை மறக்க முடியுமா?

## 4. அங்கங்கள் பிரிந்து சேரும் அற்புதம் :

பெரியவர்கள் இஷ்டப்போல் எது வேண்டுமாயினும் செய்வர். அவர்கள் யோகியர். யோகத்திலும் என்னென்னவோ செய்கின்றனர். மற்றவர்களுக்குத்தான் அவை புரியவில்லை. ஒருநாள் இரவு வெளியே சென்ற இராமலிங்க அடிகள் வெகு நேரமாகியும் வரவில்லை. வேலூர் ஷண்முகம் பிள்ளை என்பவர் அடிகளை ஆவலுடன் எதிர்பார்த்து சாலையை விட்டு வெளியே போய்ப் பார்க்க ஓரிடத்தில் அடிகளது அங்கமெல்லாம் தனித்தனியாக இருந்தன. "அந்தோ அடிகள் இவ்வாறு ஆயினரே. இனி என்ன செய்வேன்" என்று வருந்திக் கதறினர். அடிகள் உடனே அவர் முன் வந்து "நீர் இனி இம் மாதிரி வந்து பார்க்காதீர்" என்று எச்சரித்ததாக அறிகின்றோம். ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகள் பக்தர்களுக்கும் இதே அனுபவம் ஏற்பட்டிருக்கின்றது. பம்பாய் செப்பூர் பக்தர் திரு P. K. ரங்கராவ் சொல்வதையே கேட்போம். "ஸ்ரீலஸ்ரீ குருநாதர் 1950ஆம் வருஷம் பம்பாய் வந்திருந்தபோது என் இல்லத்தில் தங்கினர்கள். ஒரு நள்ளிரவில் மின்சார விளக்கைப் போட்ட சமயம் குருநாதரின் சரீரம் தலைவேறு கால்கைகள் உடல் வெவ்வேருகக் கிடந்தது கண்டு பயத்தினல் சப்தம் போட்டு விட்டேன். எல்லோரும் எழுந்திருந்து பார்த்துவிட்டுக் கதறிவிட்டார்கள். திடீரென்று வெவ்வேருகக் கிடந்த அங்கங்கள் ஒன்று சேர்ந்து விட்டது. குருநாதர் தூங்கி எழுந்தாற்போல் எழுந்தார்கள்." திரு. P. கன்னையா என்பவர் சாமிகளது பம்பாய் பக்தர். இவரது அனுபவத்தையும் கேட்போம்.

கன்னையா : "ஒருநாள் அதிகாலை 4 மணிக்கு நான் திடீரென்று விழித்துக் கொண்டு மின்சார விளக்கைப் போட்டேன் ஆச்சரியம், என் குருநாதர் கால்கள் வேறு கைகள் வேறு ஆக இருக்கக் கண்டு அச்சமும் அதிர்ச்சியும் ஏற்பட்டது. உடனே மற்ற வாசற் படி தாண்டி விட்டேன். பின்பு சிறிது தைரியத்துடன் திரும்பி வந்து பார்க்கையில் எல்லா அங்கங்களும் கூடிவிட்டு, ஒருகை மர்த்திரம் தோளோடு சேருவதைக் கண்டேன். பிறகு ஒன்று மறியாதவன்போல் விளக்கை அணைத்து விட்டுப் படுத்துவிட்டேன். தூக்கம் வரவில்ல." பக்தர் கன்னையா அவர்களுக்குத் துக்கமும் வரவில்லை. இதைப்பற்றி சாமிகளிடம் கேட்கவும், ஆவலும் ஏற் பட்டது. சற்று துணிந்தே இது நடந்த ஐந்தாவது நாள் சாமி களையே இதைப்பற்றி கேட்டுவிட்டார். சாமிகள் புன்சிரிப்புடன் 'அது யோகம்' என்று பதில் சொல்லிவிட்டார்.

## 5. பொன் ஆக்கும் அற்புதம் :

மண்ணாசை பெண்ணாசை பொன்னாசைகளில் மயக்க வைக் கும் மாயா உலகத்தில் இந்த ஆசைகளை அறவே ஒழித்தவர்கள் பெரியவர்கள். அவர்களால் ஆகாதன ஒன்றுமில்லை. இரும்பை பொன்னாக்க முடியும். ஈயத்தை வெள்ளியாக்க முடியும். இறை யருளால் ஆகாதன ஒன்றில்லை என்பதைக் காட்டவே இதைச் செய்வர். கூடலூரில் இரசவாதம் மயக்கம் கொண்ட தேவநாயகம் பிள்ளையிடம் இராமலிங்க அடிகள் இரும்பை பதினாறு மாற்றுப் பொன்னாக மாற்றிக் காட்டினார். அதோடுகூட "இது இச்சையற்ற வர்க்கு சித்திக்கும். ஆதலால் இனி இதில் மயங்காதே" என்ற அறிவுரையும் வழங்கினார். ஒருநாள் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமி களோடு பேசிக்கொண்டிருந்த பக்தர்கள் இரச வாதத்தைப் பற்றி பேசமுந்தினர். இரும்பை உருக்கும் பச்சிலை உண்டு என்றார் ஒருவர் : செம்பைத் தங்கமாக்கும் பச்சிலை உண்டென்றார் மற்றொரு வர். இப்படியே பொன்னையே அடிப்படையாக வைத்துக் கொண்டு சென்றது, சில பக்தர்களின் உரையாடல். இதை நிதானமாகவும் புன்முறுவலுடனும் கேட்டுக் கொண்டிருந்த சாமிகள் உளமுவந்து பேச ஆரம்பித்தார். "சித்தர்களால் முடியாதது ஒன்றுமில்லை. அவர் சித்தம் வைத்தால் அவர் கோரியது நடந்தே விடும். இப்படிச் செய்தால்தான் ஒரு பொருள் கிட்டும் என்ற வரம்பு அவர்கட்கில்லை. மூலிகையை வைத்துக் கொண்டுதான் ஒரு பொருளை மாற்ற வைக்கமுடியும் என்ற அவசியமே அவருக்கு இல்லை. மூலிகை இல்லாமலேயே தங்கமுண்டாக்க முடியும் அவ ரால்." இப்படி பேசிய சாமிகள் அருகில் அமர்ந்திருந்த ஒரு பக்தரின் சட்டைப் பையில் இருந்த ஒரு தபால் கார்டை வாங்கி னார். அதில் ஒரு மூலையில் ஒரு சிறுபகுதியை தன் கையால்

கிழித்து அந்தப் பகுதியை அந்த பக்தரிடமே கொடுத்தார். அந்தக் கிழிபட்ட கார்டுத் துண்டை வாங்கிக் கொண்ட பக்தர் தம் கண்களை நம்புவதா என்று விழிக்க ஆரம்பித்து விட்டார். காரணம் கார்டின் துண்டு பத்தரை மாற்றுப் பசும் பொன் துண்டாக மாறிவிட்டது. துண்டு கார்டின் அளவில் அந்த கார்டின் கனத்தில் மாறிவிட்டது கார்டு பொன்னுக! இப்படி உற்சாகம் பொங்கிச் செய்த சாமிகள், "இதெல்லாம் கூடாது சாமி," என்ற நல்லுரையும் முடிவில் புகன்றுர்.

"சாமிகளைப் பார்த்தால் பொன் போன்ற மேனி இல்லையே என்று நினைக்க வேண்டாம். சாமிகள் பூராவும் தங்கமடா" என்று உவகை மீறிக் கூறினுர் ஒரு நாள் கவியோகி. சாமிகளுடன் ஒரு நாள் பேசிக்கொண்டிருந்தோம். உற்சாகமிகுந்திருந்த சாமிகள் தன் கழுத்தைத் தன் ஒன்று சேர்த்த வலதுகை விரல்களால் தட்டிக் காண்பித்தார். கலகலவென்ற பொன் ஒலி கேட்டு அசந்து விட்டோம். உடனே கவியோகியின் சொற்கள் எங்கள் ஞாபகத்திற்கு வந்தன. 'சாமிகள் பூராவும் தங்கமடா' என்ற வார்த்தைகள் மெய் என்பதை காட்டுவது போலல்லவா சாமிகள் செயல் விளங்குகின்றது. என்னே குருநிலை வகிக்கும் பெரியவர்களின் சித்தமும் சித்தாடலும்!

## 6. வழிப்பறி கள்வர்களை மாற்றும் அற்புதம்

இத்தகைய செயலாற்றல் மிகுந்த பெரியவர்களை வழிப்பறி கள்வர்களால் என்ன செய்ய முடியும்? ஒரு நாளிரவு இராமலிங்க அடிகளும் கோர்ட் சிரஸ்தாதார் இராமச்சந்திர முதலியார் என்பவரும் வடலூரிலிருந்து மஞ்சக் குப்பம் போகும்போது. வண்டியை ஓட்டி வந்தவனும் சேவகனும் வண்டியை விட்டு ஓடினர்; காரணம் வழிப் பறிக் கூட்டம் ஒன்று வண்டியை மறித்தது. கள்வரில் ஒருவன் முதலியார் வைர மோதிரத்தை கழற்றிக் கொடுக்க வேண்டுமென்றுன். 'அவசரமோ' என்று அடியார் உரைக்க கள்வன் தடியாலடிக்க தன் கையை ஓங்கினுன். தூக்கிய கை அப்படியே நின்றுவிட்டது. அவன் கண்கள் பார்வையும் மங்கின. கள்வர் தாம் இழைத்த பிழையைப் பொறுத்தருள வேண்டிக் கொள்ள அடிகளும் அவர்களை மன்னித்தார். அவர் கையும் உதவ கண்களுப் உதவ அருள் பாலித்தார் என்பதை படித்திருக்கின்ரேம். இத்தகைய கொள்ளைக்கூட்ட நிகழ்ச்சி ஒன்றை ஸ்ரீல ஸ்ரீபன்றிமலை சாமிகளின் பக்தர், கண்டிராக்டர் திரு T.S. சுவாமி நாதன் கூறுவதையே கேட்போம். "பழநிக்கு நமது தெய்வ குரு நாதர் அவர்கள், மாது ஸ்ரீ அன்னையார், நான் டிரைவர் ஆக நான்கு பேர்களும் காரில் இரவில் வந்துகொண்டிருந்தோம். மலைச்சரிவும், காடுகள் அடர்ந்தும் காணப்பட்ட ஒரு இடத்தில் நடு ரோட்டில் பாறைகள் உருட்டி வைக்கப்பட்டிருந்தன. இத்துடன் இடி மழை

வேறு இவைகளைக் கண்ட டிரைவர் காரை நிறுத்தினார். என்னை இறங்கி "என்ன என்று பாருங்கள்" என குருநாதர் உத்தர விட்டார்கள், கீழே இறங்கி பார்த்தேன், சுமார் 25, 30 பேர்கள் தடியும் துப்பாக்கியும் வைத்துக்கொண்டு இருபுறமும் சூழ்ந்து நின்றார்கள். அதை எண்ணும்போது இப்பொழுதும் எனக்கு உடல் சிலிர்க்கிறது. அடுத்த கணமே "யார்" என்ற நம் குருநாதர் சப்தத்திலேயே சூழ்ந்திருந்தவர்கள் கட்டுண்ட நாகம் போல் நடு நடுங்கி எவ்வித இடையூறும் ஏற்படாத வண்ணம் கண நேரத்தில் அப்பாறைகளை ஒதுக்கி வழி விட்டார்கள்" பெரியவர்கள் 'அவசரமோ' என்றால் கள்வரின் ஓங்கியகையும் அப்படியே உதவாமல் நின்று விடுகின்றது, கண்களும் மங்கி விடுகின்றன: பெரியவர்கள் "யார்" என்றால் கள்வர் நடுநடுங்குகின்றனர்; வழி விடுகின்றனர். பெரியவர்களுடைய சொற்களுக்கே எவ்வளவு சக்தி உள்ளன என்பதை இவ்விரு நிகழ்ச்சிகள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

## 7. தண்ணீர் விளக்கெரித்த தன்மையும், தண்ணீர் எண்ணெயான தன்மையும்:

"தண்ணீர் விளக்கெரித்த தன்மைபோல் மாந்தர்கள்தம்
உண்ணீர் சிவம்விளங்க ஓங்குவிக்கும் — கண்மணியாம்
நங்கள் இராமலிங்க நல்லஅருட்பா முறையைத்
துங்கமுற மாணு தொழு"

இப்படிப் பாடி ஏத்துகின்றார் சிதம்பர சாமிகள் இராமலிங்க அடிகளை! இராமலிங்க அடிகளை நினைக்கும்போதே அவர் ஆடிய சித்துக்களும், அந்த சித்துக்களில் உள்ளத்தைக் கவரும் தண்ணீர் விளக்கெரித்த அற்புதமும் நமது மனக்கண்களுக்குமுன் வந்து நிற்கின்றன. கருங்குழியில் இராமலிங்க அடிகள் வெங்கடரெட்டியார் வீட்டில் தங்கி இருந்த சமயம். ஒருநாள் அக்குடும்பத்தார் வெளியூர் செல்ல நேர்ந்தது. விளக்கில் எண்ணெய் விட்டு ஏற்றி அதன் அருகில் ஒரு புதிய மண் பாத்திரத்தை பழக்குவதற்காக அதற்குள் தண்ணீர் விட்டுச் சென்றனர் குடும்பத்தலைவி. அடிகள் வழக்கம் போல் அவ்விளக்கருகே அமர்ந்துகொண்டு பாக்களை வரைந்து கொண்டிருந்தவர் மண் பாத்திரத்தில் இருந்த தண்ணீரை எண்ணெய் என்றெண்ணி அதை எடுத்து அவ்விளக்கில் ஊற்றினார். இப்படியே இரவு முழுதும் எண்ணெய் என தண்ணீரைவிட அந்நீரிலேயே விளக்கும் எரிந்து கொண்டிருந்தது. காலையில் வீட்டின் தலைவி முத்தாலம்மாள் விளக்கு நிறைய நீர் இருப்பதும் அது எரிவதும் கண்டு பேராச்சரியமுற்றனர். இது அடிகள் வாழ்க்கை வரலாற்றில் குறிப்பிட்டுள்ள பேரதிசயங்களில் ஒன்று.

தவத்திரு பன்றிமலை சாமிகள் அருளாற்றல்களில் தண்ணீரை எண்ணெயாக்கும் அற்புதமும் நடந்திருப்பது பெரியோர் வாழ்க்கையில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளின் ஒற்றுமையை நமக்கு எடுத்துக் காட்ட உதவுகின்றது. 2—2—1958ஆம் தேதி சாமிகள் சென்னை கபாலீஸ்வரர் ஆலயத்தில் மகாநந்தி கும்பாபிஷேகத்தை வெகு விமரிசையாக நடத்தி வைத்தார் சக்ரஸ்தாபனமும் சாமிகள் செய்தருளினர். மகாநந்தி கும்பாபிஷேகம் நடக்கும்போது உடனடியாக தேவைப்பட்ட எண்ணெய் அங்கு இல்லை. இதை அறிந்த சாமிகள் தன் அருகேயுள்ள தண்ணீர் நிறைந்த குவளை ஒன்றைத் தொட்டார். சாமிகளது திருக்கரம் பட்டவுடன் குவளையில் இருந்த தண்ணீர் முழுவதும் எண்ணெயாக மாறிவிட்டது. அந்த எண்ணெயே மகாநந்திக்கு தடவ உதவியது. அன்று அடிகளது அருளால் தண்ணீர் எண்ணெய்போன்று உதவி விளக்கெரித்த அதிசயத்தை முத்தாலம்மாள் கண்டு வியப்புற்ருர். இன்று சாமிகளது அருளால் ஒரு குவளை நிறைய இருந்த தண்ணீர் முழுதும் எண்ணெயாக மாறிய விந்தையை பொதுமக்கள் யாவரும் கண்டதை 1960இல் கபாலீஸ்வரர் தேவஸ்தான தர்மகர்த்தா, திரு. P. S. அண்ணுமலை முதலியார் அவர்களே விவரித்தெழுதி இருக்கின்ருர். “நான் கண்ட நடமாடும் தெய்வம்” என்ற தலைப்பில் திருமதி சரோஜினி A. கிருஷ்ணன், சாமிகள் அவர்கள் தம் வீட்டுக்கு எழுந்தருளிய தினத்தில் நிரப்பி வைத்த விளக்கின் எண்ணெய் நான்கு நாட்கள் இரண்டு வேளையும் பூஜையில் விளக்கெரிந்தும் நிரம்பி இருந்த அதிசயத்தை 1961இல் எழுதி இருக்கின்ருர்; திரி மட்டுமே எரிந்திருந்தது என்பதையும் குறிப்பிட்டுள்ளார். ஒருநாளைக்கு விளக்கெரிய உதவும் எண்ணெய் நான்கு நாட்கள் விளக்கெரிய உதவுவதும் தண்ணீரே எண்ணெயாக மாறுவதும் சாமிகள் இன்று நடத்திக்காட்டும் அற்புதங்கள்.

## 8. இடம் விட்டு இடம் தோன்றும் அற்புதம்:

பெரியவர்கள் இஷ்டப்பட்டால் இஷ்டப்பட்ட இடத்திற்குச் செல்லமுடியும். இருந்த இடத்திலிருந்தே உடனே மறைய முடியும். இரண்டு இடங்களிலும் ஒரே நேரத்திலும் இருக்க முடியும். பல இடங்களிலும் பலருக்கு ஒரே சமயத்தில் காட்சி கொடுத்தருளவும் முடியும். நினைத்துப் பார்க்க முடியாத வேகத்தில் செல்லக்கூடும். அவ்வேகத்தை வாயு வேகம் என்று சொல்வது கூட பொருந்தாது. அதை மனோவேகம் என்று சொன்னல் ஓரளவு பொருந்தும். இராமலிங்க அடிகள் கூடலூர் அப்பாசாமி செட்டியார் வீட்டில் அறையொன்றில் தனித்திருக்கும்போது ஒரு புதுமனிதர் தங்கு தடையின்றி வீட்டினுள் புகுந்தார். அவரை, அங்கிருந்த பக்தர்கள் தொடர அம்மனிதர் மாயமாய் மறைந்துவிட்டார். எங்காவது இப் புதுமனிதர் ஒளிந்துகொண்டாரோ என்று ஐயுற்ற பக்தர்கள்

அடிகளிடமே இச்செய்தியைச் சொன்னார்கள். அடிகள் புன்னகையோடு "வந்தவர் மனிதரல்ல. அவர் சித்தர். அவர் நம்மைக் காணவே இங்கு வந்தார். இந்நேரம் அவர் காசியிலிருப்பார். அவர் கொடுத்துப் போனதே இந்த லட்டு" என்று விளக்கியருளினார். விளக்கி அருளிய அடிகளே இரண்டிடங்களில் ஒரே சமயத்தில் இருந்தும் அற்புதம் ஆடி அருளினார். வடலூர் சத்திய தருமசாலையில் இரவு பதினொரு மணிக்கு அடிகள் உபந்யாசம் நடக்கின்றது. அடிகள் அதே சமயத்தில் கூடலூரில் தம் சீடர் தேவநாயகர் ஒரே மகன் பிணியுற்றிருந்தபோது திருநீறு வழங்கி நாளை குணமாகும், பயப்படாதீர்கள்" என்று ஆறுதல்மொழி அளித்த நிகழ்ச்சியும் படித்தின்புறுகின்றோம். ஞான சபைக்கு கொடிமரம் வாங்கச் சென்ற சாமிகள் தனக்குமுன் சென்னைக்கு இதே விஷயமாகச் சென்ற கண்டிராக்டர் ஆறுமுகம் முதலியாரையும் சென்னையில் சந்திக்கின்றார். சென்னையில் கொடி மரம் வாங்கும் அதே நேரத்திலும் அடிகள் வடலூரிலும் இருக்கின்றார். திருவதிகையில் அடிகளைக் காண எண்ணிறந்த மக்கள் கூடியபோது இரண்டு மூன்று இடங்களில் தம் உருவை ஒரே சமயத்தில் காட்டி அகமகிழ்வித்தார். இவைகள் நாம் இராமலிங்க அடிகள் வாழ்க்கை வரலாற்றில் படித்து மகிழும் நிகழ்ச்சிகள் இன்று நம்மிடையே வாழ்ந்துவரும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளும் ஈரிடத்தில் ஒரே சமயத்தில் இருப்பதை இதற்குமுன் படித்து மகிழ்ந்தோம். மதுரைசில் திரு. K. K வர்மா அவர்கள் பங்களாவில் பல பக்தர்களுக்கு பல பக்கங்களில் ஒரே சமயத்தில் காட்சி கொடுத்ததையும் படித்து மகிழ்ந்தோம்.

சாமிகள் மறைந்து தோன்றும் அற்புதத்தையும் படித்து மகிழ்வோம். 1951ஆம் ஆண்டில் சாமிகள் கோட்டையூரில் ஒரு பக்தர் வீட்டில் தங்கியிருந்தார். ஒரு பணியாள் குளிக்கும் அறையில் சாமிகளுக்கு எண்ணெய் தேய்த்தான். கிண்ணத்தில் எண்ணெய் தீர்ந்துவிட பக்கத்திலிருந்த அலமாரியிலிருந்து வேண்டிய எண்ணெய் எடுக்கத் திரும்பினன் சாமிகள் பக்கம் எண்ணெயோடு அப்பணியாள் திரும்பிய போது சாமிகள் மறைந்து விட்டார். கதவு உள்புறம் தாளிட்டது தாளிட்டவாறே இருந்தது. பீதியும் பரப்பரப்புமடைந்து அவன் அறையை சாத்திவிட்டு வீட்டாரிடம் சொல்ல, குளிக்கும் அறையை சாத்தி தாளிட்டு விட்டார், சாமிகளை ஒவ்வொரு அறையாக தேடி வந்தனர். கால் மணி நேரம் அலைந்து சாமிகளைக் கண்டுபிடிக்கமுடியாத வீட்டார் மறுபடியும் குளிக்கும் அறையைத் திறந்து பார்க்க சாமிகள் தான் உட்கார்ந்திருந்த அதே இடத்தில் அமர்ந்திருந்தார். இதை எடுத்துரைக்கும் சென்னை டிப்டி பிரசிடென்சி போஸ்ட் மாஸ்டர் திரு. K. S. சிவசுப்ரமணியம் "இது மாதிரி சம்பவங்கள் எனக்கு ஏற்கனவே தெரியும்" என்றும் சாமிகளின் அற்புதங்களைப்பற்றி பெருமையாகக் கூறுகின்றார். இத்தகைய

நிகழ்ச்சி ஒன்று பழநியில் வெகுநாட்களுக்கு முன் நடந்ததையும் சாமிகள் சொல்லக் கேட்டிருக்கின்றேன். சாமிகள் தங்கி இருந்த இடத்தில் சாமிகளோடு நெருங்கிப்பழகிய நண்பர்கள் வெகுநேரம் சாமிகளோடு பேசிக் கொண்டிருந்தனர். எல்லோருக்கும் சாப்பாடு வேறிடத்தில் ஏற்பாடாகி இருந்தது. சாமிகளோடு நட்பு முறையில் பழகிவந்தவர்கள் அவர்களுக்கு ஏற்பட்ட பசிவேளையில் சாமிகள் பூஜை செய்துவிட்டு வருகிறேன் என்று சொன்னவுடன் மனம் சற்று இளைத்து முகம் மாறினர். இதைக் கண்ட சாமிகள் "நீங்கள் இந்த வீட்டை பூட்டிவிட்டு செல்லுங்கள். எனக்காக காத்திருக்க வேண்டாம்" என்று அழுத்திக் கூறவே சாமிகள் இஷ்டம்போலவே சாமிகள் தங்கி இருந்த வீட்டைப் பூட்டி விட்டு அவர்கள் சாப்பாடு தயாராகி இருந்த வேறுவீட்டுக்கு விரைந்தனர். அவர் சாப்பாட்டுக்காக வேறு வீட்டுக்குச் சென்றபோது அவர்களை வரவேற்க ஓர் அதிசயமே காத்திருந்தது. சாமிகளே வரவேற்க வாயிலின் வந்து நின்று காத்துக் கொண்டிருந்தார்!

சாமிகள் பக்தர்களுக்கு அருள்பாலிக்க சித்தம் கொண்டால் அவர் ஆடுகின்ற அற்புத திருவிளையாடல்களில் புதுமை புகுந்து விடும். ஒரு சமயம் திருச்செந்தூருக்கு வேலவன் தரிசனம் செய்ய புறப்பட்ட சாமிகள் மதுரையில் பக்தர் திரு. R. வெங்கட்ராமய்யர் வீட்டிற்கு விஜயம் செய்தார். அப்போது திரு. வெங்கடராமய்யர் சாமிகள் திருச்செந்தூரில் ஆண்டவனை தரிசிக்கும்போது அடியாராகிய தன் குடும்பத்தையும் ஞாபகப்படுத்திக் கொள்ள வேணுமாய் பிரார்த்தித்துக் கொண்டார். அடுத்தநாள் சாமிகள் திருச்செந்தூர் முருகன் சந்நதியில் "திருநகர் திரு. வெங்கட்ராமய்யர் தம்பதிகள் கேட்டுக் கொண்டபடி பிரசாதம் அனுப்பியாகிவிட்டது" என்று தன்னோடு வந்திருந்த பக்தர்களிடம் கூறினர். அதே தினத்தில் திரு. வெங்கட்ராமய்யர் தன் அலுவலகத்திற்கு சென்றபோது திருச்செந்தூர் இலைப்பிரசாத விபூதி இரண்டு இலைகளில் ஒரு காகிதத்தில் மடித்து வைக்கப்பட்டிருந்தது. மறுதினம் சாமிகள் திருச்செந்தூரிலிருந்து திரும்பி வரும்போது திரு. வெங்கட்ராமய்யரை மதுரையில் சந்தித்து ஆசீர்வதிக்கும்போது 'பிரசாதம் கிடைத்ததா' என்றும் அன்போடு கேட்டார். புளகாங்கிதமடைந்த பக்தர் இதைப் பற்றி 1956ல் எழுதும்போது "அதிகம் வருணிக்க நமது சக்தி போதாது என்பதே என் அபிப்பிராயம்" என்று முடிக்கின்றார்.

ஆயிரம் வருடங்களுக்கு முன்புதான் அற்புதங்கள் நடந்தனவா? 18-வது 19-வது நூற்றாண்டுகளிலும் அற்புதங்கள் நடந்திருக்கின்றன. இந்த இருபதாவது நூற்றாண்டிலேயே எவ்வளவோ அற்புதங்களும் நடந்து வருகின்றன. இதைத்தானே இராமலிங்க அடிகளார் வாழ்க்கை வரலாறும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் வாழ்க்கையில் நடந்து வருகின்ற நிகழ்ச்சிகளும் நமக்கு எடுத்துரைக்கின்றன.

## அற்புதம் ஆடுவதில் சீரடி சாயிபாபாவும் சாமிகளும்

1908க்கு முன்னால் சீரடி என்பது ஒரு நிம்மதியான எளிய கிராம மாக இருந்தது. "இங்கு மாளிகைகள் உண்டாகும்; பெரு மனிதர்கள் வருவர்; இரதங்கள் மாளிகைகள் யானைகள் எல்லாம் வரும்; பெரும் ஊர்வலங்கள் நடைபெறும்" என்று இந்த கிராமத்தைப் பற்றி உரைத்தார் ஒரு கல்யாண ஊர்வலத்தோடேயே இந்த ஊருக்கு வந்த ஒருவர். அவர் தான் சீரடி சாயியபாபா எனும் மகான். அவர் உரைத்த வார்த்தைகள் உண்மையாயின. சீரடி சாயிபாபாவினுடைய மகிமை அந்த ஊரை ஒரு தலமாக்கி விட்டது. அவரைப் பற்றிக் கூறுபவர் அவர் வாழ்ந்து வந்த ஒரு பாழடைந்த மசூதியில் ஆரம் பத்தில் நிகழ்ந்த இரண்டு அதிசயங்களைப் பற்றிக் கூறுவர். ஒரு அதிசயம் அவர் தங்கியிருந்த பாழடைந்த மசூதியில் கந்தைத் துணி களால் தொங்கவிடப்பட்டிருந்த ஏழடி உயரத்தில் உள்ள அவர் உறங்கும் பலகையில் அவர் எப்படி ஏறுகின்றார் என்பது; ஆனால் ஒருவரும் அவர் ஏறுவதைக் கண்டதே இல்லை, அவர் ஏறி இருப் பதைத்தான் கண்டிருந்தனர். இதற்காகக் கூடும் மக்கள் தொந்திரவு தாங்கமுடியாது கோபத்தால் அவர் பலகையை ஒருநாள் போட் டுடைத்தார். மற்றொரு அதிசயம்! அந்த மசூதியில் பாபா அவர்கள் நிறைய விளக்குகள் ஏற்றி வைப்பதுண்டு, தாம் படுத்திருந்த பலகை முனைகளிலும் விளக்கேற்றி வைப்பதுமுண்டு. அதற்காகப் பக்கத்தி லுள்ள கடைகளில் எண்ணெய் அவர் யாசித்து வருவதுண்டு. ஒரு நாள் எண்ணெய் கொடுக்க மறுத்த பக்கத்திலுள்ள கடைக்காரர்கள் இவர் எப்படி விளக்குகளை ஏற்றி வைக்கின்றார் என்பதைக் கவனித் தனர். பாபா அவர்கள் தண்ணீரை ஊற்றி விளக்குகளை ஏற்றி வைத்த அற்புதம் பாபா அவர்களின் பெருமையை அந்த ஊரிலும் உலகிலும் பரப்பி விட்டது. சீரடி சாயிபாபா சமீபத்தில் வாழ்ந்த தெய்வீக புருஷர் என்பதை நாடு அறிந்துள்ளது.

அன்று சீரடி சாயிபாபா ஆடி அருளிய அற்புதங்களிலும் இன்று ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகள் ஆடி அருளும் அற்புதங் களிலும் உள்ள ஒற்றுமையைக் கண்டு மகிழ்வோம். பெரியவர்கள் 'தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்' என்ற அடிப்படையில் இருவர் வாழ்க்கையும் அமைந்துள்ளது. 'தான் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம்' என்ற மனப்பான்மையோடு அன்று பாபா தொண் டாற்றியபடியே சாமிகளும் இன்று தொண்டாற்றி வருகின்றார். தம் பக்தர்கள் மீது சுரக்கின்ற அன்னை அன்பு, அவர்களுக்கு உதவியருளுகின்ற கருணை உள்ளம், மற்றவர்கள் மனமறியும் ஆற்றல், உலக நன்மைக்காகத் தெய்வீக சித்தாடும் இயல்பு,— இவைகள் பல நிகழ்ச்சிகளில் இருவர் வாழ்க்கையிலும் பரிமளிக் கின்றன. இருவரும் தன்னல மற்ற சேவையைக் குறிக்கோளாகக்

கொண்டு மக்கள் தொண்டு புரியும் மனநிலையை விளக்க அவர்கள் விளக்க உரைகளே உதவுகின்றன. 1910-ல் ஸ்ரீ பாபா, "நான் இரண்டு வருடங்களாக உடம்பு பிணியுற்று வெறும் ரொட்டியும் தண்ணீரும் சாப்பிட்டு வாழ்கின்றேன். மக்கள் ஏராளமாக வருவதால் எனக்கு ஓய்வில்லை. நான் எங்கிருந்து வந்தேனோ அந்த இடத்திற்குப் போகும்வரை இப்படியேதான் இருக்கும். அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை: ஏனென்றால் என்னுடைய சொந்த வாழ்க்கையைவிட மக்களையே நான் பெரிதாகக் கருதுகிறேன்" என்று தாயுள்ளத்தோடு உரைத்தார். ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகளது தினசரி பணிகளையும் பார்க்கும் நமக்கு, சாமிகள் முகம் சுளிக்காது மனம் சலிக்காது உடல் தளராது மக்களுக்கு அன்போடு பேசியும், ஆசி அருளியும், உதவியளிக்கின்ற கருணைச் செயலைக் கண்டு பிரமிப்பு அடையாமல் இருக்கமுடியாது. எவ்வளவு பேர்கள் வந்தாலும் அவர்களிடம் மனமாரப் பேசி மகிழ்விக்கின்றார்: அவர்கள் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் பதில் அளிக்கின்றார். அவர்கள் மனப்பிணி உடல் பிணிகளுக்கும் மருந்துகளையும் விபூதிப் பிரசாதமும் அளிக்கின்றார் சாமிகள். நாள் பூராவும். இரவு நேரத்தில் பெரும் பகுதியும் மக்களுக்காக பணியாற்ற மனம் சுரக்கும் சாமிகளுக்கு ஒரு சமயம் ஜுரம் வந்து விட்டது இரவில் ஜுரம் அதிகரித்தது. பல டாக்டர்கள் வந்தனர். ஒவ்வொரு டாக்டர் வெப்பமானியும் ஒவ்வொரு விதமாக ஜுரத்தின் அளவைக் காண்பித்ததைப்போல ஒவ்வொரு டாக்டரும் ஒவ்வொரு அபிப்பிராயம் கூறினர். மதுரை பக்தர் திரு. V. வைத்தியநாத அய்யர் சாமிகள் ஜுர நிலையைப் பற்றி ஒன்றும் புரியாமல் மனம் வருந்தியபோது சாமிகள் "எல்லாம் கடவுள் செயல். ஏதோ ஒரு காரணமாகத்தான் இந்த நோயை இந்த சரீரத்திற்கு முருகன் கொடுத்திருக்கின்றான். இந்த சரீரம் அனுபவிக்க வேண்டியது. எல்லாம் முருகன் செயல். இந்த உடலும் அதற்குள் வந்த நோயையும் ஒன்றையொன்று விசாரித்துக் கொள்ளட்டும்" என்று கூறினர். சாமிகள் குணமடைவதற்கு பதினன்கு நாட்கள் ஆகின. சாமிகள் ஜுரமாக இருந்தபோதும் டாக்டர் போன பின்பு தினசரி குளிக்கத் தயங்கவில்லை; பூஜை செய்யவும் பக்தர்களுக்கு பிரசாதம் வழங்கவும் தவறவில்லை. தன்னை கடும் ஜுரம் தாக்கி இருந்த சமயத்திலும் அதைப் பொருட்படுத்தாது உடல் சுத்தியோடு முருகனை உளமார பூஜை செய்து முருகனருளை தினசரி கூடுகின்ற மக்களுக்கு வாரி வழங்கும் சாமிகளின் கருணை உள்ளத்தை என்னென்று போற்றுவது. சாமிகளின் திருத்தொண்டை உளமார விவரிக்கும் பக்தர் திரு. வைத்தியநாதன் உரைகளையே படித்தின்புறுவோம். "ஸ்ரீ. சாமிகளுடைய தெய்வீக சக்தியையும் அவர்கள் ஏழை பணக்காரர் வித்தியாசமில்லாமல் பக்தர்களிடம் காட்டும் கருணையையும் கடாட்சத்தையும் சொல்லி முடியாது. ஒரு



நியூ டெல்லியில் ராஷ்ட்ரபதி பவனத்தில் மொகல் பூங்காவில்
நின்ற திருக்கோலத்தில் சாமிகள்

(பக்கம்—218)



யமுனை நதிக்கரையில் இயற்கை அழகில் ஈடுபட்டுள்ள சாமிகளோடு
பக்தர் திரு. T.V. கமலசாமி (முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்) அவர்கள்.

முறை சாமிகள் பல இடங்களுக்குச் சென்று விடுவதனுல் தரிசனம் செய்ய கஷ்டமாக இருக்கின்றது என்றதற்கு, "எங்கு இருந்தால் என்ன? நேருக்கு நேர் இருந்தால்தானு? யார் என்ன வேண்டி னுலும் மனப்பூர்வமாக பிரார்த்திக்கிறவர்களுக்கு பக்கத்தில் நான் எப்பொழுதும் இருக்கிறேன். எப்பொழுதும் அவர்களுக்கு ஊன்று கோலாக நிற்பேன்" என்று எடுத்துச் சொன்னுர்கள். மக்களு டைய நலனையே தம் சிந்தையில் பெரிதாகக் கருதிச் செயலாற்றி வரும் பெரியவர்கள் வாழ்க்கை படித்தருந்த அருந்தத் தெவிட்டாத அமுதமாக விளங்குகின்றது.

இவ்விரண்டு பெரியவர்களின் அருளால் கண்பார்வை இழந்த சிலர் பார்வை பெற்றனர்; குழந்தைப்பேறு இல்லாதிருந்த சிலர் மக்கட் செல்வம் பெற்றனர்; புத்திபேத மடைந்திருந்த சிலர் சித்தம் தெளிந்தனர்; நீங்காத தலைவலி பிடித்திருந்த சிலர் தீராத தலை வலி நீங்கப் பெற்ருர்; காணுமல்போன பையன்கள் அவர்கள் கூறியபடியே திரும்பிவந்தனர்; பரீட்சைப்பலனும் அவர்கள் உரைத்தபடியே சிலருக்கு கிடைத்தது. இன்றும் சாமிகள் இந்த அற்புதங்களை ஆடி அருளி சில பக்தர்களின் இன்னல்களை நீக்கி வருகின்ருர். இப்போது சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழ்வோம். காட்டில் காணுமற்போன சந்த்பாயி என்பவரது குதிரையை காட்டில் அது புல் மேய்ந்து கொண்டிருக்கும் இடத்தை சந்த்பாயிக்குச் சுட்டிக்காட்டி பிடிக்கச் செய்தார் சாயிபாபா அவர் கள். அது போன்றே பன்றிமலையில் ஜனுப் கோ. மு. முகமது சுல் தான் ஆடொன்று காணுமற்போக, சாமிகள் குறிப்பிட்ட நேரத் தில் துப்பு கிடைத்தது. மூன்று நாட்களாகக் காணுமல் இருந்த ஆடும் சாமிகள் குறிப்பிட்ட நேரத்தில் கிடைத்து விட்டது. C. K. காட்கில் என்பவர் புது வேலையை ஒப்புக் கொள்ளுமுன் சாயிபாபா அவர்களைக்காண விரும்பினுலும் அவர் எண்ணம் கை கூடவில்லை. அந்த நேரத்தில் அவர் தொடைமீது விபூதி பொட் டலம் ஒன்று வந்து விழுந்தது. பாபாவை அவர் இதன்பின் காணச் சென்றபோது "நீ வர முடியாததால் விபூதி அனுப்பி னேன்?" என்று பாபா கூறி பக்தரை மகிழ்வித்தார். இது போன்றே திருச்செந்தூருக்கு சாமிகளுடன் செல்ல முடியாத மதுரை வெங்கட் ராமய்யர் தம்பதிகளுக்கு, சாமிகள் என்று திருச்செந்தூரில் முருக தரிசனம் செய்தாரோ அன்றே அவர் ஆபீஸ் மேஜைமீது இரண்டு இலைகளில் திருச்செந்தூர் முருகன் பிரசாதத்தை சாமிகள் தன் அருளால் கிடைக்கும்படி செய்ததையும் நாம் அறிவோம். மறு தினம் திரு. வெங்கட்ராமய்யரை சந்தித்த சாமிகளும் பக்தரை ஆசீர் வதித்து தான் அனுப்பிய பிரசாதம் கிடைத்ததா என்று கேட்டதும் குறிப்பிடத்தக்கது. காணுமற்போன பொருட்கள் மட்டும்

தானு திரும்பிவருகின்றன? பிரசாதங்கள் மட்டும்தானு கிடைக்கின்றன. கங்கை தீர்த்தமே பக்தர்களுக்குக் கிட்டுகின்றது. ஒருநாள் தாங்கானு என்பவர் மகாசிவராத்திரியை முன்னிட்டுச் சீரடிக்கு மூன்று மைல் தூரத்திலுள்ள ஆற்றில் கங்காஸ்நானம் செய்துவர எண்ணினர். "கங்கை நீருக்காக நீங்கள் அங்கு எதற்குச் செல்ல வேண்டும். இதோ என் பாதத்தில் அந்த நீரைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறிய பாபா திருவாக்குப்படி பாபா அவர்கள் பாதத்திலிருந்து நீர் பெருக ஆரம்பித்தது. அதை கங்கை யென ஏற்றுத் தம் தலையில் பக்தர் தெளித்துக் கொண்ட அற்புதத்தை பாபா அவர்கள் வரலாற்றில் படித்திருக்கின்ருேம். இன்றும் இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்துள்ளது. 1967இல் சாமிகளது தலைமையில் சிக்கல் தலத்தில் தன் அறுபது ஆண்டு நிறைவு விழாவை வைத்து நடத்திக் கொண்ட திரு. T. D. பழனி அவர்கள் விருப்பத்திற் கிணங்க சாமிகள் அவருக்கு கங்கை தீர்த்தத்தை ஒரு சிறிய செம்பு ஒன்றில் தான் அணிந்திருந்த மலர் மாலையிலுள்ள சிலமலர்களை எடுத்து வருவித்துக் கொடுத்ததும், அதிலுள்ள கங்கை தீர்த்தம் பழநி தம்பதிகள் இருவரும் குளிக்கும் அளவுக்குப் பெருகி வந்ததும் நாம் அறிவோம்.

பக்தர்களுக்குப் புண்ணிய தீர்த்தம் அருள்கின்ற மகான்கள் பக்தர்களின் குழந்தைகளையும் காப்பாற்றவும் திருவருள் சுரப்பதுண்டு. S. S. D. நிமோங்கர் என்பவர் தன் அண்ணிக்குப் பிறந்த குழந்தையைக் காணச் செல்லும் வழியில் சீரடியில் பாபா அவர்களைத் தரிசித்தார். அப்போது பாபா அவர்கள் பிரசாதம் வழங்கி "குழந்தையின் உயிரைக் காப்பாற்று" என்று கூறினர். குழந்தையைப் பார்க்கச் சென்ற இடத்தில் குழந்தை ஜில்லிட்டுப் பிழைக்குமோ என்ற ஆபத்து நிலையில் இருந்தது. நிமோங்கர் பிரசாதத்தைப் பார்க்க அது அவரிடத்தில் இல்லை. உடனே அவர் அக்குழந்தையை வாங்கி பாபா அவர்களை தியானித்திருக்க பதினைந்து நிமிடங்களில் குழந்தைக்கு குணம் ஏற்பட்டது. இத்தகைய நிகழ்ச்சி ஒன்றும் சமீபத்தில் நடந்ததைப் படித்து மகிழ்வோம். திருப்பதி வழக்கறிஞர் திரு. A. வேணுகோல ரெட்டி ஒரு வாரம் திண்டுக்கல்லில் தங்கி இருந்து சாமிகளை தரிசித்து வந்தார். திருப்பதிக்குத் திரும்ப சாமிகளிடம் விடை கேட்டபோது சாமிகள் விபூதி பிரசாதம் அருளி அவரை உடனே மதராசுக்குப் புறப்பிட்டுச் செல்லும்படி வற்புறுத்தினர். அப்படியே அவர் மதருசுக்குச் செல்ல, அங்கிருந்த அவர் மகள் அம்மை கண்டு ஆபத்தான உடல் நிலையில் இருந்தாள். சாமிகள் கொடுத்தனுப்பிய விபூதி பிரசாதத்தை மகளுடம்பு முழுவதிலும் பூச, மகளை வாட்டிய ஜுரமும் தணிந்தது, நோயும் நீங்கியது. அப்பொழுது தான் உணர்ந்தார் பக்தர் சாமிகள் ஏன் தன்னை திருப்பதிக்குச்

செல்ல விடாமல் மதுரைக்கு வற்புறுத்தி அனுப்பியதின் நோக்கத்தை ! அப்பொழுதுதே உணர்ந்து விட்டார் சாமிகளின் செழுங் கருணை உள்ளத்தையும், சாமிகளது துயர்நீக்கும் விபூதிப் பிரசாத மகிமையையும் !

வெகு தூரத்திற்கப்பாலுள்ள குழந்தைகளின் பிணிகளையும் அறிந்து அவர்களைக் காப்பாற்ற அருள்பிரசாதமும் அருள்கின்றனர் பெரியவர்கள். அருள்சுரக்கும் பெரியவர்கள் அறியாததொன்றில்லை. சீரடி சாயிபாபா அவர்களை எடுத்துக்கொள்வோம். 1917இல் பம்பாயிலிருந்து பாலபூவசுதார் என்பவர் முதன்முதலாக சீரடிக்கு வந்து பாபா அவர்களை வணங்கினார். "எனக்கு இவரை நான்கு வருடங்களாகத் தெரியுமே" என்றார் பாபா அவர்கள். உண்மை தான் ! நான்கு வருடங்களுக்கு முன்பு பம்பாயில் பாபா அவர்களுடைய திருப்படத்தின் முன்பு விழுந்து அவர் நமஸ்கரித்திருக்கின்றார். மற்றொரு சமயம் பாபா அவர்கள் "இந்த ஊரில் என்னைப்போன்ற சொறிபிடித்த நாய் ஒன்று உண்டு. அதை ஒவ்வொருவரும் அடிக்கின்றார்கள்" என்று கூறினார். இதைக் கேட்டுக்கொண்டிருந்த பக்தர் மாலசபதி என்பவருக்கு தன்னைத்தான் பாபா அவர்கள் குறிப்பிடுகின்றார் என்பது விளங்கிவிட்டது. தான் செய்த காரியத்திற்கு மிகவும் வருந்தினார் அவர். ஒருசாமி ஒருவரிடம் பாபா அவர்களுக்கு ஒரு தேங்காய் அனுப்பினார். அதைக் கொண்டு வந்தவர் அதை பாபா அவர்களிடம் சேர்க்க முடியவில்லை; காரணம் அதை அவர் சிநேகிதர்கள் சாப்பிட்டு விட்டனர். அவரைக் கண்டவுடன் பாபா அவர்கள், 'இதோ ஒருதிருடன். என் சகோதரன் எனக்கு அனுப்பிய தேங்காய் எங்கே' என்று கேட்டுவிட்டார். இப்படி எவ்வளவோ நிகழ்ச்சிகள் அன்று நடந்தன. இன்று ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளோடு சிலநாட்கள் சேர்ந்திருக்கும் பாக்கியம் கொண்ட பக்தர்களுக்கு இத்தகைய நிகழ்ச்சிகள் பல நடப்பது நன்கு தெரியும்.

ஒருசமயம் சாமிகளைப் பக்தர்கள் பெரியாறு அணை பார்க்க அழைத்துச் சென்றனர். அங்கு மோட்டார் படகில் ஏறி சுற்றிவர பக்தர்களுக்கு ஆசையேற்பட்டது. இருப்பது பதினான்கு பேர்கள். படகில் ஏழு பேருக்குமேல் ஏற்றமாட்டார். படகை ஓட்டுபவர் ஒரு ஆங்கிலோ – இந்தியர். அவர் தான் கண்ட கனவொன்றைத் தம் டயரியில் குறித்திருந்தார். சாமிகள் அவர் கண்ட கனவையும், கனவு குறித்துள்ள அவர் டயரியையும் பற்றி ஆங்கிலோ – இந்தியரிடம் கூற அவர் அப்படியே பிரமித்து விட்டார். இத்தகைய சக்தி வாய்ந்த மகானையும் அவர் பக்தர்களையும் படகில் ஏற்றிச் செல்லவா தயங்குவர் கனவு கண்ட டையரி உடையோர் ! மற்றொரு சமயம் மதுரை திரு. V. வைத்தியநாதய்யர் சாமிகளை ஒரு இஞ்ஜினீயரோடு சந்தித்தார். "நீங்கள் சிகரெட்டு குடிக்கும் பழக்கம் உண்டோ"

என்று சாமிகள் இஞ்ஜினீயரைக் கேட்க, அவர் 'ஆம், அது ஒரு கெட்ட வழக்கந்தான்' என்ருர். 'மடியில் இருக்கும் சிகரெட் பாக்கெட்டை எடுங்கள்' என்று சாமிகள் கூறினர். அவர் மடியைப் பார்த்து அதிக ஆச்சரியத்துடன் ஒரு புதிய சிகரெட் பாக்கெட்டை எடுத்தார். 'அதைப் பிரித்துப் பாரும்' என்று சாமிகள் சொல்ல, மேல் காகிதத்தைக் கிழித்து, பாக்கெட்டை உடைத்து அவனுள் சிகரெட் வைத்திருக்கும் அட்டையைப் பார்க்க, அந்த அட்டையில் 'பக்தா உன் மனைவியின் பிரிவாற்ருமையினல் வருந்துகிருய். கவலைப்படாதே. சீக்கிரம் சேர்த்துவிடுகிறேன். முருகன்' என்று எழுதி இருந்தது. இதைக் கண்ட இன்ஜீனியர் கதறிவிட்டார். சாமிகள் அவரைத் தேற்றி விபூதிபிரசாதம் வழங்க, விபூதிபிரசாதம் சென்ற இரண்டு மாதங்களுக்குள் தம்பதிகள் ஒன்றுசேர்ந்து குதூகலமாக வாழ ஆரம்பித்தனர். சாமிகள் பேராற்றல் யாருக்கும் தெரியாத விஷயங்களையும் வெளிக்கொணர்கின்றது. அதோடுகூட அருளுதவியும் பக்தர்களுக்குக் கிட்டுகின்றது.

சீரடி கிராமத்தின் எதிர்காலத்தை சாயிபாபா அவர்கள் எடுத்துரைத்த திருமொழிகளை நாம் படித்தோம். அதன்படியே அது சாயிபாபா திருத்தலமாக விளங்குவதையும் இன்று காண்கின்ருேம். இன்றும் தாண்டிக்குடி தல வரலாற்றைக் காணும் நாம் சாமிகளுடைய பேரருள் எப்படி ஒரு வளமிக்க ஊரையே ஒரு நலமிக்க திருத்தலமாக்க உதவியது என்பதையும் அறிவோம. சாமிகளுடைய பேராற்றல் 1948ஆம் ஆண்டிலேயே தெய்வீக மணம் பொருந்திய ஜோதிமலையைக் கண்டுவிட்டது. அந்த மலையில் ஏற்கனவே முருகன் கோயில் அமைந்திருந்த விபரங்களையும் ஆதாரங்களையும் எடுத்துரைக்கவும் உதவியது. சாமிகளின் பேரருள் அல்லவா தாண்டிக்குடியையே முருக தலமாக ஓங்கி எழுந்தருளச் செய்துள்ளது. சாமிகளுடைய பேராற்றலை விளக்கும் மற்ருெரு சம்பவமும் இங்கு குறிப்பது பொருத்தமாக இருக்கும். 1943இல் சாமிகளை சிறுமலை செயின்ட் ஜோசப் காபி எஸ்டேட்டை பார்க்க அழைத்துச் சென்றனர், பிரபல திரு. P. R கருப்பைய நாடார். தோட்டத்தில் ஒரு இடத்தில் சாமிகள் தான் சவாரி செய்துவந்த குதிரையிலிருந்து இறங்கினர். "இங்கு பதிறைடிக்குக் கீழே ஒரு விக்கிரகம் இருக்கின்றது" என்று சாமிகள் சொல்ல தோண்டிப் பார்க்க இராமர் விக்கிரகமும் பக்கத்தில் பிள்ளையார் விக்கிரகமும் மற்றும் பல விக்கிரகங்களும் கிடைத்தன. அவற்றை சாமிகள் திருவுள்ளப்படி வெளியே எடுத்து பீடத்தில் இருத்தி விளக்கு ஏற்றி வருகின்றனர்.

இப்படிப் பேராற்றலும் பெருங்கருணையும் ஓங்கியுள்ள மகான்களை பக்தர்கள் கொண்டாடுகின்றனர், ஒரு சிலர் வேடிக்கைப் பார்க்கவும் வருவதுண்டு. சில சமயம் நம்பிக்கையில்லாதவர்களும்

வருவதுண்டு. ஒருநாள் நம்பிக்கையில்லா ஒருவர் சீரடி சாயிபாபா அவர்களைக் காணவந்த பொழுது பாபா அவர்கள் பானைகளை விளக்கிக் கொண்டிருந்தவர் அப்பானைகளை கவிழ்த்து வாய் பக்கம் தரையில் வைத்தார். இதைக்கண்டவர் "ஏன் இப்படி கவிழ்த்து வைக்கின்றீர்" என்று கேட்க பாபா அவர்கள் "என்னிடம் வருகின்ற ஒவ்வொரு பானையும் வாய் கீழ் நோக்கியே வருகின்றது" என்றார். வந்தவர் தன்னிடம் நம்பிக்கை கொள்ளவில்லை என்பதைத்தான் அவர் வாங்கவரவில்லை என்று அர்த்தம் தொனிக்கும் முறையில் பாபா அவர்கள் குறிப்பாக தம் சொற்களால் உணர்த்தினர். சில சமயங்களில் உத்தம சீட குண நலம் வாய்ந்தவர்கள் இம்மகான்களை நெருங்கிவிட்டால் அப்போது அவர்களுக்கு பெருகும் உற்சாகத்திற்கும் ஆனந்தத்திற்கும் எல்லையே கிடையாது. இப்படி ஒருவர் ஒருநாள் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளைக் காண வந்தார். அன்று சாமிகள் பேச்சில் உற்சாகமும் இன்பமும் பெருகி விட்டது. "இன்று எனக்கு ஒரு நல்ல மத்தளம் கிடைத்தது. நன்றாக வாசித்து ஜமாய்த்து விட்டேன்" என்று குதூகலத்துடன் சாமிகள் கூறினர். நல்ல சீடரைக்காணும் குருவின் ஆனந்தத்தை எழுத்தில் இயம்ப முடியுமோ?

## அற்புதம் ஆடுவதில் சாமிகளும் இயேசுநாதரும்

தர்ம சமஸ்தாபனுய சம்பவாமி யுகே யுகே

"தர்மத்தை நிலைநாட்ட நான் ஒவ்வொரு யுகத்திலும் மனித உரு எடுக்கின்றேன்" என்று கிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு கீதா உபதேசத்தில் உரைக்கின்றார். உலகத்தில் அநீதியும் அக்கிரமும் தலைவிரித்தாடுங்காலத்தில் மகாபுருஷர்கள் பிறக்கின்றார்கள். அவர்கள் தம் சொற்களாலும் செயல்களாலும் பந்தத்தில் கட்டுண்டு உழலும் மானிடர்களின் மனவியாதிக்கும் உடல் வியாதிக்கும் மருந்தருளி அவர்கள் கவலைகளைத் துடைத்தருளுகின்றனர். இப்படி பாடுபடுபவர்களை மக்கள் நடமாடுந் தெய்வங்களாகப் பாராட்டி மனமகிழ்கின்றனர். இராமன், கிருஷ்ணன், இயேசுகிறிஸ்து, முகம்மது, புத்தர் — இப்படியாக அவதார புருஷர்கள் தோன்றாத்துணையாக மக்களுக்கு உதவி அரிய தொண்டு செய்ததன் காரணமாக இன்றும் அவர்களை நாம் தெய்வமாகத் தொழுகின்றோம்.

திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளின் அருள்சுரக்கும் அற்புத நிகழ்ச்சிகளையும் அமுத அருள்வாக்குகளையும் காணும் நமக்கு 1968 ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த இயேசுநாதரின் வாழ்க்கையில் நடத்திக்காட்டிய அற்புதங்களையும் அருள்வாக்கையும் நினைக்காமல் இருக்க முடியாது. சமீப காலத்தில் தோன்றிய இராமலிங்க

சாமிகள், இராமகிருஷ்ண பரமஹம்சர், சீரடி சாயிபாபா, இரமண மகரிஷிகள் மற்றும் பல மகான்கள் இவர்களுடைய தெய்வீகப் பெருமை களையும் மக்கள் மனதார வழுத்தி வருகின்றனர். இப்போது நமது பாரத நாட்டில் நடமாடும் தெய்வமாக ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமிகள் பல அரிய சித்துக்கள் ஆடிவருவதோடுகூட ஆத்தும சிந்தனைக் குரிய அரிய விஷயங்களை பக்தர்களுக்கு மொழியாலும் எழுத் தாலும் ஊட்டிவருவதும் அவர்களுடைய மனமெய் இடர்களை களைந்து வருவதும் கண்கூடாக நாம் பார்க்கின்ற உண்மை நிகழ்ச்சி கள். "தெய்வம் ம்னுஷ ரூபா" என்ற சுலோகத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றார் சாமிகள்.

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் அருள்சுரக்கும் அற்புத நிகழ்ச்சி களையும் அமுத வாக்குகளையும் காணும்தோறும் 1968 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த இயேசுநாதரின் செயல்களையும் சொற்களையும் நாம் நினைக்காமல் இருக்க முடியவில்லை. இவருடைய ஆற்றல்களையும் கண்டு அவைகளின் ஒத்த இயல்பினைக் காணும் நமக்கு அவர்தானோ இவர் என்று மனதில் தோற்றமேற்பட்டாலும் ஆச்சரியப்படுவதற் கில்லை: 1940ஆம் ஆண்டில் திரு. பி. கே. இரங்கராவ் என்பவருக்கு ஏற்பட்ட அனுபவம் இங்கு குறிப்பிடத் தக்கது. 1940இல் அவர் ஜெருசலேமில் இயேசு பகவானை அவர் ஆடுமேய்க்கும் சிறுவன் உருவத்தில் தரிசனம் செய்தார். "நீ பிறந்த நாட்டிலேயே சில காலத்திற்குப் பிறகு என்னை மறுபடியும் பார்" என்று அவரிடம் பகவான் சொல்லி மறைந்தார். திரு. இராவ் அவர்கள் இந்த மகத்தான நிகழ்ச்சியை மறந்தே விட்டார். வேலையில் ஓய்வுபெற்று தாய்நாடடைந்து பம்பாயில் ஒரு வேலையை ஒப்புக்கொண்டிருந்த சமயம் ஓரிரவு மறுபடியும் இயேசு பகவான் அவர் கனவில் தோன் றினார். பம்பாய் நகரிலேயே அவர் அருகிலேயே வேறு ரூபத்தில் இருக்கும் தன்னை வந்தடையும்படி கட்டளையிட்டார். சொல்லி வைத்தாற்போல் அவர் தமக்கை ஸ்ரீ பன்றிமலை சாமிகளைப் பம்பாய் நகரில் கண்டு அவர் வீட்டிற்கு அழைத்துவந்தார். ஆனால் அவர் கள் வந்த நேரம் இராவ் அவர்கள் வீட்டில் இல்லை. "உங்கள் தம்பியைக் கூப்பிட்டும் வரவில்லையே? அவரை என்னிடம் வரச் சொல்லுங்கள்" என்று சொல்லிவிட்டுச் சாமிகள் தன் இருப்பிடம் சென்றார். விபரம் அறிந்த இராவ் அவர்கள் அன்றிரவும் கனவு கண்டு மறுநாள் காலை சாமிகளிடம் விரைந்தார். சாமிகளை அடைந்தார்: சாமிகளைக்கண்டார்: சாமிகளால் ஆட்கொள்ளப் பட்டார். இதை அவர் வாயிலிருந்தே கேட்போம். – "என் சிற்றறி வுக்கு எட்டியபடி இயேசு பகவானால் காண்பிக்கப்பட்ட என் குரு நாதரைப் பழனி தண்டாயுதபாணி சொரூபமாக தரிசனம் கண்டு மகிழ்ந்து அன்று முதல் அவருக்கு அடிமையாகி சிஷ்யரென்று ஏற்றுக்கொள்ளப்பட்டு உபதேச மந்திரங்கள் உபதேசிக்கப்பட்டு

மனம் கடவுளேயே நோக்கி நிற்கப் பாடுபட்டு வருகிறேன்'' கன் வுலகில் இயேசுவாக காட்சியளித்த ஒருவரையல்லவா இன்று பூவுலகில் ஸ்ரீ பன்றிமலே சாமிகளாக நேரில் கண்டு இன்புற்று இருக்கின்ருர் இராவ் அவர்கள்.

## பெரியவர்கள் போற்றும் பெரியவர்கள்

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலே சாமிகள் இயேசுநாதராக இருக்க முடியுமா என்ற கேள்வி இருக்கட்டும். இவர்கள் இருவர் வாழ்விலும் சில நிகழ்ச்சிகளேக் காணும்போது ஒருவருடைய பெருமை மற்றவரு டைய பெருமையை மதிப்பிடக் கூடிய அளவுக்கு ஒத்திருக்கின்றது, மெய்ப்பொருள் கொண்டுள்ளது, தெய்வீகம் சுரந்துள்ளது. எல்லா குழந்தைகளுக்கும் ஒவ்வொரு சல்லி கொடுத்து வந்த சல்லி சாமி யார் இராமசாமிக் குழந்தைக்கு மட்டும் ஒரு சல்லிகூட கொடுக்கா மல் இருந்த நிலேயை விளக்கிச் சொல்லும்போது, ''இவன்தான் பெரிய சாமியாயிற்றே. நான் எப்படி இவனுக்குச் சொல்லிக் கொடுப்பது'' என்று கூறினுர். இவர் இப்படி உரைத்தது சாமி களுடைய இறை அருள் நிறைவை எடைபோட்டுக் கூறியதாகவே அமைந்துள்ளது. இதைப் போன்றே இயேசுநாதர் வாழ்க்கை யிலும் ஒரு நிகழ்ச்சி உண்டு. ஜான் எனும் மகான் மக்கள் ஆத் மீக நலனுக்காகப் பாடுபட்டு வந்த பெரியவர். அவர் மக்கள் செய்த பாவங்களே நீக்க அவர்களுக்கு மங்கள நீராட்டுதல் செய்து வைத்தார். மக்களுக்கு ஆற்று முழுக்கோடு அவரவர்கள் பாவங் கள் நீக்கி புதுவாழ்வு அருள உதவினுர். அவரிடம் சென்றவருள் இயேசுநாதரும் ஒருவர். ஜான், இயேசுவைக் கண்டவுடனேயே அவர் தெய்வத் தன்மையை உணர்ந்தவராய், ''நானல்லவா உங்களிடம் என்பாவத்தைப் போக்க மங்கள நீராட வந்திருக்க வேண்டும், தங்கள் என்னிடம் வரலாமா'' என்று ஆச்சரியத் தோடு வினவினுர். பெரியவருடைய பெருமைகளேப் பெரியவர்தானே உணரமுடியும் : இராமசாமி பெரியசாமி என்பதை ஒரு சல்லிசாமி யரால்தான் உணரமுடியும்! இயேசுநாதர் தெய்வநாதர் என்பதை ஒரு ஜான் சாமியாரால்தான் உணர முடியும்!

## உணவு பெருக்கும் அற்புதம்

இயேசுநாதருடைய அற்புத திருவிளேயாடல்களில் அவர் ஒரு திருமணத்தில் தண்ணீரை திராக்ஷ மது ரசமாக்கி எதிர்பார்த் திருந்த நபருக்கு அதிமாக வந்திருந்தவர்களுக்கு அளிக்க அருள் செய்ததும், காட்டில் தன்னுேடு வந்திருந்த சுமார் ஐயாயிரம் பக் தர்கள் பசி நீக்க பக்தர் ஒருவரிடம் இருந்த ஐந்து ரொட்டிகளே யும் இரண்டு மீன்களேயும் பலவாக பெருக்கி அவ்வளவு பக்தர்

களின் பசியை நீக்கியதும் அவர் வரலாற்றில் படித்திருக்கின்றோம். வடலூர் சத்திய தருமசாலையிலும் இராமலிங்க அடிகள் அருளால் கொஞ்சம் பேருக்குத் தயாராகி இருந்த உணவு திடீரென்று வந்த நூறுபேர்களுக்கு விரிவடைந்த அற்புதத்தையும் இராமலிங்க அடிகள் சரிதத்தில் படித்திருக்கின்றோம். சாமிகளின் வாழ்க்கையில் இத்தகைய அற்புதம் பல தடவைகள் நடந்திருக்கின்றன. சாமிகள் அன்பர்களின் அழைப்பிற் கிணங்கி அன்பர்கள் வீட்டில் பூஜை செய்வதுண்டு. அச்சந்தர்ப்பங்களில் எதிர்பார்த்ததற்கு அதிமாக பக்தர்கள் கூடி விடுவதுண்டு. வந்தவர் அனைவருக்கும் படைப் பதற்கு போதிய உணவு தயார் செய்ய வில்லையே என்று ஏங்கித் தவிக்கும் அன்பர்கள் ஏக்கத்தைத் துடைக்கும் வகையில் சாமிகள் தம் அருளால் வேண்டிய உணவைக் கூட்டுவித்து இருக்கின்றார். மலாயாவில் ஈப்போவில் ஆடிட்டர் திரு N. நாராயனன் வீட்டில் எதிர்பார்த்த அளவுக்குமேல் பக்தர்கள் கூடிவிட்டனர். அதனால் சுமார் ஐம்பது பேருக்கு பலகாரம் போதவில்லை. என்ன செய்வது என்று ஏங்கி இருந்த தம்பதிகளின் கவலையைச் சாமிகள் உடனே நீக்கினார், ''பலகாரம் வேண்டிய அளவில் இருக்கின்றது. போய் பாருங்கள்'' என்றார் சாமிகள். என்ன ஆச்சரியம்! ஒரு பெரிய பாத்திரம் நிறைய வேண்டிய இட்டிலிகள் எல்லோருக்கும் சிற் றுண்டி படைக்க தயாராக இருந்தன. சேலம் திரு E. M. பார்த்த சாரதி அவர்கள் தம் இல்லத்தில் நடந்த இத்தகைய அற்புதத்தை யும் வாய்விட்டுப் புகழ்கின்றார். ''சாமிகள் முருகனுடைய அடிச் சுவடு எடுத்துக் கொடுக்கும் நன்னாள், இரவு நெடு நேரமாகி விட்டது. வீட்டில் உள்ளவர்களுக்கு மட்டும்தான் சாப்பாடு தயா ராகி இருந்தது. சாமிகளோடு எட்டு பக்தர்கள் இருந்தனர். சற்குருநாதனை நம்பியே எல்லோருக்கும் உணவு பரிமாறப்பட்டது'' சற்குருநாதர் கருணை வந்திருந்தவரும் வீட்டாரும் சாப்பிட்டது போக உணவு மிச்சப்படும்படி செய்துவிட்டது. 'ஒரு சமயம் சாமிகள் சுருளிமலைக்கு பக்தர்களுடன் சென்றார். எல்லோரும் மதுரையிலிருந்து புறப்பட்டு குமுளிபோய்ச் சேர்ந்தனர். அங்கு ஒருபடி பசுவின்பால் வாங்கி அதைக் காய்ச்சி எல்லோருக்கும் கொடுக்கும்படி சாமிகள் சொன்னார். அங்கிருந்த பக்தர்கள் இருபத்தி இரண்டுபேர். மதுரை திருமதி M. S. வெங்கடலக்ஷிமி தேவி சாமிகளுக்கு, காய்ச்சிய பாலில் ஒரு பெரிய கப் கொடுத் தார். இப்படியே எல்லோருக்கும் அதே அளவில் பாலைக் கொடுக்க பால் பெருகிக் கொண்டே வந்தது. எல்லோருக்கும் கொடுத்தவருக்கும் ஒருகப் பால் கிடைக்கும் அளவுக்கு பால் பெரு கிய விந்தையை என்னென்று உரைப்பது!

இந்த அற்புத சக்தி சாமிகளிடம் மட்டும்தானா அன்பர்கள் கண்டனர்? அம்மா அவர்களிடமும் கண்டு களித்திருக்கின்றனர்.

பன்றிமலையில் ஒரு பம்பாய் விருந்தினருக்காகப் பம்பாயில் தயாராகும் இனிய தின்பண்டங்களையே தம் அருள் சக்தியால் அம்மா அவர்கள் வரவழைத்ததை அறிவோம். 1959ஆம் ஆண்டில் சாமிகளோடும் பக்தர்கள் நாசிக்கில் இருந்தபோது அவர்களுக்கு தயாரான உணவு போதவில்லை. காரணம் எதிர்பாராதவகையில் பலர் வந்து விட்டனர். சுமார் பதினைந்து அப்பளத்தைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. இதை அறிந்த அம்மா அவர்கள் ஒவ்வொரு பாத்திரத்தையும் தன் திருக்கரத்தினுல் திறந்து பார்க்க அப்பாத்திரங்களில் அத்தனை பக்தர்களும் சாப்பிட்டு மீதம் ஆகும் அளவுக்கு உணவு பெருகிவிட்டது.

சாமிகளின் சீடர் திரு. T V. கமலசாமி அவர்கள் மகள் திருமணத்திற்குக் காண்டிராக்டர் திரு. M. S. சுப்பிரமணிய அய்யரை சாப்பாடு தயாரிப்புக்கு ஏற்பாடு செய்திருந்தனர். சாமிகள் தலைமையில் நடந்த அத்திருமணத்திற்கு ஏராளமான பக்தர்கள் கூடி இருந்தனர். கல்யாணத்திற்கு முதல் நாள் அய்யர் அவர்களை அழைத்து பூஜை அறையில் அவர் கையை நீட்டிப் பிடிக்கச் சொல்லி சாமிகள் ஒரு மலரை எடுத்து 'முருகா' என்று சொல்லியபடி பிசைந்தார்கள். சாமிகளுடைய திருக்கரத்திலிருந்து கரகர வென்ற சப்தத்தோடு மளமள வென்று அருமையான ஆர்காடு அரிசி விழ ஆரம்பித்தது; அய்யர் கைகளை நிரப்பியது. என்ன செய்வதென்று அறியாமல் நின்று கொண்டிருந்த அவரை நோக்கி "அந்த அரிசியைக் கொண்டுபோய் சமைக்க இருக்கும் அரிசி மூட்டையில் கலந்து விடுங்கள்" என்று சாமிகள் கூறினுர். "25 பேர்களுக்கு என்று மதிப்பிட்டு மூன்றுபடி அரிசி வடித்துப் பரிமாறும்போது 50 பேர்களுக்கு மேல் சாப்பிட்டு மிச்சமும் இருந்தது. இப்படியாக 200 பேர்களுக்கு என்று மதிப்பிட்டு வாங்கிய சாமான் வகைகள் 4000 பேர்களுக்குமேல் சாப்பிட்டும் மீத மிருந்ததை காணும்போது விந்தையிலும் விந்தையாகவே இருந்தது." என்று தன் வியப்பை அறிவிக்கின்றுர் திரு. M. S. சுப்பிரமணிய அய்யர். 1968-ல் சாமிகள் திருப்பெயரால் அமைந்துள்ள மிஷன் ஆரம்பவிழாவிலும் ஐம்பது பேருக்கு தயாராகி இருந்த உணவு சுமார் நானூறு பேருக்கு சென்னையில் விரிந்து உதவியதும் சாமிகள் திருவருளே!

## எல்லாம் அறியும் ஆற்றல்

ஒரு சமயம் இயேசுநாதர் சரித்திரப் புகழ் வாய்ந்த ஓர் புனித கிணற்றை அடைந்தார். அது ஜேகப் சாமிகளும் அவர் குடும்பத்தினரும் ஏற்கனவே உபயோகப் படுத்தி தீர்த்தம் கொண்ட கிணறு. தனது தாகத்தைத் தீர்த்துக் கொள்ள அதன் தீர்த்

த்தை இறைத்து கொடுக்குமாறு அங்கு வந்த ஒரு மாதை இயேசுநாதர் கேட்டார். "வேறு இனத்தைச் சேர்ந்த உனக்கு பெண்மணியாகிய நான் எப்படி தண்ணீர் கொடுப்பது" என்று உரைத்தாள் அம்மாது.

இயேசு : இந்தக் கிணற்றிலிருந்து தண்ணீர் குடிப்பவர்கள் மறுபடியும் தாகம் அடைவார்கள். ஆனால் நான் கொடுக்கக் கூடிய தீர்த்தம் உயிருள்ள ஊற்றிலிருந்து எடுப்பதாகும். அது எடுக்க எடுக்க வளரும் இயல்பினது.

மாது : (குறும்புத்தனமாக) அப்படியானால் நான் இனி இந்தக் கிணற்றுக்கு வரவேண்டிய அவசியமே இராது. எனக்கு அந்தத் தீர்த்தம் வேண்டும்

இயேசு : நீ உன் கணவனை அழைத்து வந்தால் தருகிறேன்.

மாது : எனக்கு கணவன் இல்லையே?

இயேசு : உண்மை. நீ ஏற்கனவே ஐந்து கணவன்களைக் கொண்டிருந்தாய். இப்போது உன்னோடு வாழ்கின்றவன் உனக்கு கணவனில்லைதான்!

இந்த மொழிகளைக் கேட்ட மாது திடுக்கிட்டாள்; வெட்கித் தலை குனிந்தாள், உண்மையைக் கூறிய உத்தமன் உரைகேட்டு அதிர்ச்சி அடைந்தாள், "நீங்கள் ஒரு தீர்க்கதரிசி! உண்மை உணர்ந்தோர்! உலகை இரட்சிக்க வந்த பரமபிதா" என்று கூறிக்கொண்டு ஊரையடைந்து ஒரு பெருங் கூட்டத்தையே கூட்டி வந்து விட்டாள். சாமிகளும் இப்படியே உண்மைகளை அறியும் பேராற்றல் பெற்றிருப்பது பக்தர்கள் அறிவர். ஒரு சமயம் ராமேஸ்வரம் கோவிலின் பரம்பரை டிரஸ்டி ஸ்ரீ A. L. A. R. சோம சுந்தரம் செட்டியார் அழைப்பின் பேரில் சாமிகள் இராமேஸ்வரம் சென்றிருந்தார். அப்போது ஸ்ரீ. லால்பகதூர் சாஸ்திரியும் அவர் குடும்பத்தாரும், திரு. T. S. ராமதுரை அய்யரும், சேலம் திரு. E. M. பார்த்தசாரதியும் சாமிகளோடு சென்றனர். கோவில் தரிசனம் முடிந்து விட்டுத் திரும்பிய சாமிகள் இராமேஸ்வரம் ரயில் நிலை யத்தில் பிரயாணிகள் தங்குமிடத்தில் இரயிலுக்காகத் தங்கி இருந் தார். அங்கு ஓர் மூலையில் ஒரு வடநாட்டுப் பிரயாணி தான் ஸ்ரீ ராமநாதசாமி தரிசனம் செய்ய அங்கு வந்ததாயும், தன் குழந் தைக்கு ஜுரம் அதிகமாய் வந்து விட்டபடியால் தரிசனம் செய்ய இயலவில்லை என்றும் வருத்தப்பட்டார். இதைக் கேட்ட திரு. A. L. A. R. சோமசுந்தரம் செட்டியார் சாமிகளிடம் வந்து அவர்களுக்கு உதவிபுரியும்படி வேண்டினர். சாமிகளும் உடனடி யாக தம் விபூதிப்பிரசாதம் கொடுத்து ஜுரத்தை தணிய வைத்தார்.

இதைக்கண்ட அந்த வடநாட்டு யாத்ரீகர் தன்னுடன் இருந்த பெண்ணையும் சாமிகளிடம் அழைத்து வந்து தம் குடும்பத்தை ஆசீர் வதிக்க வேண்டினார். சாமிகள்: நீர் குற்றம் புரிந்துவிட்டு, இராமநாதன் பேரில் பழி போடாதீர். நீர் முறை தவறி மாற்றான் மனைவியையும் குழந்தையையும் அழைத்து வந்திருக்கின்றீர். உம் குற்றத்திற்குரிய தண்டனையை அனுபவிக்கின்றீர். இப்பெண்ணுக்கு உரியவன் பின்னால் அடுத்த ரயிலில் தேடிக்கொண்டு வருகிறான். இனி இம்மாதிரி துர்நடத்தையில் ஈடுபடாதீர்"

உண்மையைச் சாமிகள் வெளிப்பட சொன்னதைக் கேட்ட யாத்ரீகர் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு நடு நடுங்கி விட்டார். மகாபுருஷர்களை ஏமாற்ற முடியுமா? புருஷனென்றும் மனைவி யென்றும் சொல்லி உலகை ஏமாற்றினாலும் தெய்வத்தையும் தெய்வாம்சம் பொருந்தியவர்களையும் ஏமாற்ற முடியுமா?

## குருட்டுக்குப் பார்வை அளிக்கும் அற்புதம்

பெரிய மகான்களெல்லாம் உலகத்தில் ஜோதியாகவே விளங்கி வருகின்றார்கள். அவர்களோடு இருந்தால் இருளினின்றும் மீட்சி காண்கின்றோம். போகுமிடமெல்லாம் ஜோதியை வழித்துணையாக கொண்டு செல்ல முடிகின்றது. இம்மகான்களின் உதவி இருந்தால் அந்தகாரத்தில் அழுந்தி இருக்கும் பிறவிக் குருடர்களுக்கும் வெளிச்சம் தெரியமுடியும். இயேசுநாதர் ஓர் கண்ணில்லாப் பிச்சைக் காரனிடம் இரக்கம் கொண்டார். நிலத்தில் தன் எச்சிலைத் துப்பி, இரண்டையும் குழைத்து சேருக்கி அந்த சேற்றை, அவன் கண்ணில் தடவினார். சைலோம் நீரோடையில் அவன் கண்களைக் நன்றாகக் கழுவச்சொன்னார்; என்ன ஆச்சரியம்! கண்களை நன்றாகக் கழுவினவுடன் பிச்சைக்காரன் குருடனாக இல்லை. விழி பெற்றான்: ஒளி பெற்றான்; பாரில் பெறற்கரிய பாக்யம் பெற்றான். இது காறும் சுவரையே பிடித்துச் சென்று கொண்டிருந்த குருடன் மற்றவர்களைப்போல் இப்போது தெருவில் கம்பீரமாக ஏறுநடைபோட்டுச் செல்லலாயினன். இத்தகைய அற்புதச் செயல் இன்றும் நடக்காமலில்லை. கோயமுத்தூர் நகர். 6—3—1966. டாக்டர் பிரேமலதா அவர்கள் வீட்டிற்கு நூற்றுக்கணக்கான மக்கள் முந்துகின்றனர். அவர்களில் ஒருவர் வயோதிகர். பார்வை இழந்தவர். ஆர்வத்தோடு நடந்துவரும் அவரை அவர் மனைவி கைகொடுத்து அழைத்துச் செல்கின்றாள். டாக்டர் பிரேமலதா அவர்கள் வீட்டின் பூஜை அறையில் ஸ்ரீ பன்றிமலை சாமிகள் திரண்டிருந்த மக்கள் ஒவ்வொருவருக்கும் தரிசனம் தந்து அவர்கள் குறைகளைக் கேட்டு விபூதி அருளுகின்றார். அப்போது தன் குருட்டுக் கணவனைத் தளர்ந்த மனைவி பூஜை அறைக்கு அழைத்துச்

செல்கின்ருள். சாமிகள் கணவனுடைய கெட்டுப்போன கண்களின் விபரங்களைக் கேட்டறிகின்ருர். அவருடைய தெய்வீக விரல்களைப் பார்வை இழந்த கண்களின் மீது வைத்து தடவி விடுகின்ருர். "இப்போது என்ன தெரிகின்றது" என்கின்ருர் சாமிகள். அச்சமுற்றிருந்த அந்தக் குருடர் முகத்தில் ஆனந்த ஒளி பரவுகின்றது. கொஞ்சம் நிதானிக்கின்ருர். ஆனந்தமேலீட்டால் "எனக்கு வெளிச்சம் தெரிகின்றது" என்று கூச்சலிடுகின்ருர். மற்ெருருமுறை சாமிகளின் அற்புத விரல்கள் அவர் கண்களைத் தடவிக் கொடுக்கின்றன. 'இப்போது என்ன தெரிகின்றது" என்கின்ருர் சாமிகள். "நான் காண்பது நிஜமா? உங்கள் உருவத்தைக் காண்கின்றேன்," என்கின்ருர் குருட்டுத்தன்மை நீங்கிக் கொண்டிருக்கும் பெரியவர். "தாங்கள் காண்பிப்பது வலக் கை," "தாங்கள் காண்பிப்பது வலது கையில் மூன்று விரல்கள்" — இப்படி அவர் கூறுகின்ற வார்த்தைகள் அவர் பார்வை சக்தி படிப்படியாக உயர்ந்து கொண்டே செல்கின்றதை விளக்குகின்றது. சாமிகளின் பாதங்களைப் பிடித்து ஆனந்த பாஷ்பம் பொழிந்து நின்ற பார்வையற்றவர் பார்க்கும் நிலையைக் கண்ட சாமிகளுக்கும் பேரானந்தம் பொங்கியது. இதைக்கண்ட எங்களுக்கு மயிர்க் கூச்சல் எடுத்தது: நாங்களும் ஆனந்தக கண்ணீர் வடித்தோம். பூஜை அறைக்குத் தட்டுத் தடுமாறி மனைவி உதவியால் நடந்து வந்த கோலூன்றிய கணவன் பூஜை அறையை விட்டு யாவருதவியுமின்றிப் பெருமிதத்தோடு கண் பார்வையோடு துள்ளல் உள்ளத்தோடு அழகுநடைபோட்டுச் சென்ற காட்சி இன்றும் நாம் மறக்க முடியாத கண் கொள்ளா இன்பக் காட்சியாகும்.

உள்ளொளி பெருக்கிய மகான்களால் கண்ணிழந் தோருக்கும் ஒளி அருள முடிகின்ற உண்மையை நான் இயேசுநாதர் வாழ்க்கை வரலாற்றில் உளங்குளிரப் படித்து வியப்புற்றேன். இதே உண்மையை கண்ணூரக் கண்டேன் கோவைமா நகரில் டாக்டர் பிரேமலதா வீட்டில் ஸ்ரீ பன்றிமலை சாமிகள் அருள் சுரப்பு திருவிளையாடலில்! 1954ஆம் ஆண்டில் சேலத்தாம் பட்டி ஸ்ரீ ரங்க சாமிக்கவுண்டர் மகள் அலமேலு என்ற பதினெட்டு வயது குருட்டுப் பெண்ணுக்கு 1—11—54இல் பலபேர் முன்னிலையில் சாமிகள் பார்வை அருளியதை சேலத்தில் ஸ்ரீ பன்றிமலை சாமிகளின் அற்புத நிகழ்ச்சிகள் என்ற தலைப்பில் சுதேசமித்திரன் தினசரி 30—11—54-ல் எடுத்துரைத்தது. 1957-ம் ஆண்டில் கன்னியாகுமரி கன்னிகா பரமேஸ்வரி கோயிலில் ஒரு இளம் பெண்ணுக்கு சாமிகள் பார்வை அருளிய அற்புதத்தையும் நாம் படித்திருக்கின்ருேம். 1957-ம் ஆண்டில் நவம்பர் 11ஆந்தேதி சென்னையில் புரசவாக்கத்தில் திரு. T. S. சாமிநாத அய்யர் அவர்கள் இல்லத்தில் ஒரு வருடகாலமாய் கண் பார்வை இழந்திருந்த குமாரி. தங்கத்திற்கு

சாமிகள் திருவருளால் பார்வை கிடைத்ததை அவள் தந்தை திரு. கு. பால்வண்ணநாதன் பெருமையோடு பேசுகின்றார்.

காகா நகரில் சாமிகள் அருளால் மூன்று குருடர்களுக்குப் பார்வை பெற்றதைப் பற்றி 1961இல் திருமதி சரோஜா கிருஷ்ணன் எழுதுகின்றார் 1961ஆம் ஆண்டில் டெல்லியில் திரு. ஜம்பு பிரசாத்தின் 19 வயது பையனுக்குக் விபூதிப் பிரசாதத்தால் சாமிகள் பார்வை அருளியதும், 10 வருடங்களாய்ப் பார்வை இழந்து இருந்த திருமதி இராஜகுமாரி தீன்தயாளுக்கும் விபூதிப் பிரசாதத்தால் சாமிகள் பார்வை அருளியதும் பல பக்தர்கள் நேரில்கண்டு தம் வியப்பை எழுதி வைத்துள்ளனர். இப்படி எத்தனைப் பிறவிகளுக்கோ சாமிகள் அருள் பாலித்திருக்கின்றார்.

சாமிகள் திருவருள் பார்வை இல்லாத சிலருக்குப் பார்வை அளித்துள்ளதைப் போன்று பேசாத சிலரைப் பேச வைத்திருக்கின்றது. செவிடர்களில் சிலரைக் கேட்க வைத்துள்ளது. கால் ஊனமானவர்களில் சிலரை நடக்க வைத்துள்ளது. 1951இல் சென்னையில் 10 வயதுப் பிறவி ஊமைப் பெண்ணைச் சாமிகள் 'முருகா' என்று சொல்லவைத்து ஒரு வருடத்தில் நன்றாகப் பேச அனுக்கிரகம் செய்தார். திருச்சியில் 1956இல் வாய் பேசாமல் இருந்த திரு. A. நாராயண அய்யர் 13 வயதுப் பெண்ணை, 'முருகா' என்று வாய்விட்டுச் சொல்ல வைத்தார், பேச்சோடின்றி சரஸ்வதி மேல் ஒரு பாட்டையும் பாடவைத்தார். 1957இல் தூத்துக்குடியில் வெங்கடாசலமய்யர் 18 வயதுப் புதல்வியைப் பேச வைத்தார். 1961இல் புதுடெல்லியில் திருமதி சரோஜா கிருஷ்ணன் வீட்டில் நான்கு வாய் பேசா ஊமைகளைச் சாமிகள் பேசவைத்தார். பிறவியிலிருந்து பேசாமலிருந்த திரு. C. P. காடிவல் பையன் சாமிகள் பிரசாதம் பெற்றவுடன் பேச ஆரம்பித்துவிட்டான், ஐந்து வருடம் வாய் பேசாதிருந்த சகிபூஷன்குமார் சாமிகள் விபூதிப் பிரசாதம் பெற்று நன்றாகப் பேச ஆரம்பித்துவிட்டார். இப்படியே 1962இல் திண்டுக்கல்லில் திடீரென்று ஊமையான வெள்ளைச்சாமியின் மனைவி சாமிகள் விபூதிப் பிரசாதத்தால் நன்றாகப் பேச ஆரம்பித்தார்.

சாமிகளுடைய திருவருள், கேட்காத காதுகளையும் கேட்கவைக்கின்றது. 1961இல் பம்பாயில் இருபது வருடங்களாகக் காது சரியாகக் கேட்காத குறையைப் போக்கிக் கொள்ள திரு. N. S. ஜெய்க்கர் சாமிகளின் ஆசியை நாடினார். சாமிகள் அவரைத் தம் விரல்களை காதில் வைக்கச் சொன்னார். அவர் கைகளில் சாமிகள் ஒரு சிறு அடி கொடுத்தார். அந்த அடி விழுந்ததைக்கேட்டு ஆச்சரியப்பட்ட ஜெய்க்கர் 'காது கேட்கின்றதா' என்ற சாமிகளின் அருள்பேச்சைக் கேட்டார். காது நன்றாகக் கேட்க ஆரம்பித்து

விட்டது. இப்படியே இரண்டு வருடங்களாக நன்ருக நடக்க முடியாதிருந்த தோனு அருஜா என்பவரை ஒரு சக்கரம் அமைத்த நாற்காலியில் சாமிகளிடம் தள்ளிக்கொண்டு வந்தனர். சாமிகள் திருநீறு அவரை உடனே நடக்க உதவியது. இது டெல்லியில் 1961இல் நடந்த அற்புதம். தூத்துக்குடியில் 1957இல் கால் ஊனமான பெண் ஒருவள் சாமிகளைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தபின் சிறு முயற்சியோடு எழுந்து நடந்த விந்தையை ஆங்கில தினசரி ஹிந்து 28—4—57-இல் எடுத்துரைத்தது. இப்படி எவ்வளவோ பேருக்குச் சாமிகள் அருள்பாலித்திருப்பது அவர் அற்புத ஆற்றலில் பொதிந்துள்ள அவர் செழுங்கருணைத் தன்மையை அல்லவா உலகுக்குப் பறை சாற்றுகின்றது.

## மாண்டவர் மீளும் அற்புதம்

" ......... கொடுங்கூற்று என்செயும் குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே "

மாண்டவரை மீண்டு வரும்படிச் செய்யும் மகான்களும் உலகத்தில் உதிக்கின்றனர். குறிப்பிட்ட ஒரு இளைஞனுக்கே தன் மூத்த மகளைக் கல்யாணம் செய்து தருவதாக வாக்களித்தார் ஒருவர். ஆனுல் அவர் தன் வாக்கைக் காப்பாற்றத் தவறிவிட்டார். மூத்த மகளையும், கடைசி மகளைத்தவிர மற்ற மகள்களையும் இந்த இளைஞனைவிட பல நலன்கள் வாய்ந்த வரன்கள் கிடைக்கும்போது அவர்களுக்கே மணம் செய்து கொடுத்தார் தந்தை. இதைக்கண்டு மனமிளகிய கடைசி மகளுக்கு அப்பாவின்மீது அடக்கொணுக் கோபமும் இளைஞன்மீது பரிவும் காதலும் ஏற்பட்டு அந்த இளைஞரோடு ஊரைவிட்டே ஓடிவிடும் அளவுக்குத் தைரியமும் வந்தது. அந்தோ! ஒருநாள் வேறு ஊரில் தங்கியிருந்த சத்திரத்தில் பாம்பொன்று இளைஞனைத் தீண்ட இளைஞன் இறந்தான். இதைக்கண்டு மனமிளைத்த மங்கை நல்லாள் அவ்வூரில் எழுந்தருளிய திருஞானசம்பந்தர் திருத்தாள்களை விடாமல் பற்றினுள். திருஞானசம்பந்தர் திருவருள் இறந்த இளைஞனை உயிர்த்தெழ வைத்தது. அவருடைய பேரன்பு இருவருக்கும் மணவாழ்வு தந்தது. இது நமது செந்தமிழ் நாட்டுச் சைவ இலக்கியம் நமக்குக் காட்டும் ஒரு தெய்வீகச் செயல்.

இயேசுநாதர் வாழ்க்கையில் லாசரஸ் என்பவர் உயிர்பெற்றெழுந்த விந்தை இயேசுநாதர் வாழ்வில் நடந்த விந்தைகளுக்கெல்லாம் சிகரம் வைத்ததுபோன்று விளங்குகின்றது. இயேசுநாதர் பொன்னடிகளை என்றும் மறவாத தன்னடியார்கள் லாசரஸ்

என்பவரும் அவருடைய இரு அருமைச் சகோதரிகளும். இறப்பிற்குப்பின் வாழ்வு இல்லை என்பதே அவர்களுக்குத் தெரிந்த தத்துவம். இருந்தாலும் " நானே இறப்பினும் உயிர்த்தெழும் சக்தி வாய்ந்தவன். நானே வாழ்வு. என்மீது நம்பிக்கைக் கொண்டு வாழ்கின்றோர் என்றும் இறப்பதே இல்லை. இதை நம்புவீர்களா ?" என்று இனிதுரைக்கும் இயேசுநாதரை நம்பி இவர்கள் வாழ்பவர்கள். ஒருநாள் அருமைச் சகோதரிகளின் உயிராக வாழ்ந்த லாசரஸ் உடல்நலமின்றி உயிர் நீத்தான். லாசரஸ் உடல்நலக் குறைவைக் கேள்விப்பட்ட இயேசுநாதருக்கு லாசரஸ் இறந்தது தெரியும். "என் நண்பன் லாசரஸ் தூங்குகின்றான். நான் அவனை எழுப்பச் செல்லுகிறேன்" என்றுரைத்து ஜார்டான் பள்ளத் தாக்கிலிருந்து 2400 அடிகள் உயர்ந்துள்ள பெதானி எனும் மலை ஊருக்கு இயேசுநாதர் விரைந்தார். தங்கள் அன்பே உருவான திருமகனைக்கண்டு கதறினர் சகோதரனைப் பறிகொடுத்த நங்கைகள். இதைக்கண்டு மனமிளகிய திருமகனும் லாசரஸ் சவப்பெட்டி வைத்திருக்கும் கல்லறைக் குகைக்கே விரைந்து சென்றார். கல்லறைக் குகையை மூடியிருந்த கருங்கல்லை எடுக்கப்பணித்தார். "சாமி, அவன் இறந்து நான்கு நாட்கள் ஆகிவிட்டன. இந்தக் குகையே துர் நாற்றம் பெருகி இருக்கும்" என்று தன் அடக்கொணு வேதனையை விரித்தாள் மார்தா எனும் சகோதரி. "நம்பிக்கை உண்டானால் கடவுள் சக்தியின் மாண்பைக் காணலாம்" என்று உறுதியுடன் உரைத்தார் திருமகன். "லாசரஸ் வெளியே வா" என்று இறைவனை மனதார வழிபட்டுக் கூப்பிட்டார் இயேசுநாதர். மூடி இருந்த கல் நீக்கப்பட்டது. சவக்குகை வாயிலிருந்து லாசரஸ் உயிர்பெற்று நடந்து வந்தான், கால்களிலும் கைகளிலும் தலையிலும் இருந்த சவக்கட்டுகளோடு ! பிரிந்தவர் கூடின மகிழ்ச்சியையும் மகிழ்ச்சியில் கலந்த பேராச்சரியத்தையும் நம்மால் அளவிட முடியுமா ?

மாண்டவர் மீண்ட இந்த அபூர்வக் கதையை இயேசுநாதரையே ஜெரூசலத்தில் இடைச் சிறுவனாகக் கண்ட இரங்கராவ் அவர்கள் படித்திருக்கின்றார். தன்னை அண்டியவருக்கு அபயம் அளிக்கும் இயேசுநாதரே ஸ்ரீ பன்றிமலை சாமிகளாக அவருக்கு இப்பொழுது வாய்த்திருக்கும்போது சாமிகளின் அருளும் தெய்வீக சக்தியும் இராவ் அவர்களைக் காலன் கைகளிலிருந்து விடுவிக்காமலா இருக்கும்? 1960ஆம் ஆண்டில் இராவ் அவர்கள் இருதயநோய் வாய்ப்பட்டுப் பம்பாயில் மருத்துவமனை ஒன்றில் அனுமதிக்கப்பட்டார். இவர் நிலைமை மோசமாகிவிட, வைத்தியர்களால் கைவிடப்பட்ட அவரை அவசரமாக வீட்டுக்குக் கொண்டுவந்தனர். இராவ் அவர்கள் சாமிகளிடம் கொண்டுள்ள பெரும்பக்தியை நினைத்த இராவ் அவர்கள் மகன் சாமிகளின் அருளை நாடி திண்டுக்கல்லில் இருக்கும் சாமிகளுக்கு ஒரு தந்தி அடித்தார். மயிர்க்கூச்சல் எடுக்கவைக்கும்

இந்த விபரங்களை நான் சொல்லுவதைவிட இந்தத் தந்தியை வாங்கிய என் அருமை நண்பர் திரு. S, சூரியமூர்த்தி, குண மடைந்த திரு. இராவ் அவர்கள் பேச்சைக் கொண்டே அறிந்து மகிழ்தல் மிகவும் பொருத்தமேன்று நினைக்கின்றேன். அவர்கள் சுமார் ஒன்றரை வருடங்களுக்குமுன் பேசியது இன்னும் என் காது களில் ஒலித்துக்கொண்டிருப்பது போலவே இருக்கின்றது. அவர் கள் பேசிக்கொண்டதை என்னுல் இயன்ற வரையிலும் ஞாபகப் படுத்திச் சொல்கின்றேன்.

சூரியமூர்த்தி: ஒருநாள் சாமிகள் என்வீட்டில் பூஜையை முடித்துவிட்டுப் படுத்துக்கொண்டபோது இரவு மணி இரண்டிருக் கும். அரைமணி நேரம் கழித்து வீட்டுக்கு வெளியே சைக்கிள் மணி கேட்டது. "சார் தந்தி" என்று சொல்லி ஒருவன் கதவைத் தட்டினுன். அவசர அவசரமாகத் தந்தியை வாங்கிப் பிரித்துப் படித்தேன். அந்தத் தந்தி சாமிகளுக்குப் பம்பாயிலிருந்து வந்திருந் தது. "இராவுக்கு கவலைக்கிடமான நிலை. டாக்டர்கள் கைவிட்ட னர். மருத்துவ மனையிலிருந்து அகற்றுகிறோம்; காப்பாற்ற வேண்டும்" என்று தந்தியில் அறிவித்திருந்தது. "என்ன சாமி, தந்தி வந்திருக்கா, பம்பாயில் இராவுக்கு உடல் நிலைமை மோசமாக இருக்கிறதென்று அறிவித்திருக்கிருர்களா" என்று தந்தியில் உள்ள விஷயத்தை நான் சொல்வதற்கு முன்பாகவே சாமிகள் சொன்னுர். "சரி, குளிக்க வெந்நீர் வேண்டும், பூஜை செய்ய புஷ்பம் வேண் டும். பம்பாய்க்குச் செல்ல வேண்டும்" என்று மளமளவென்று சாமிகள் பேசினுர். அன்று எதிர்பாராதவிதமாகத் தண்ணீரும் அடுப் பில் சுட்டுக்கொண்டிருந்தது. சாமிகள் உடனே குளித்தார். பூஜைக்கு விட்டிலிருந்த மகிழ மரத்தை உலுக்கி மகிழம் பூக்கள் கொண்டு வந்தோம். இரவு மூன்று மணிக்கு பூஜை அறைக்குச் சென்ற சாமிகள் காலை ஆறு மணிக்குப் பூஜை அறையைவிட்டு வெளியே வந்தார். ஒருவேளை காலையில் பம்பாய்க்கு விமானம் மூலம் சாமிகள் பயணம் செய்வாரென்று சாமிகளை மதுரைக்கு விமான நிலையத்திற்கு அழைத்துச் செல்ல காரையும் தயாராக வைத்திருந்தேன். சாமிகளிடம் "பம்பாயிக்கு" என்று ஆரம்பித் தேன் பேச்சை. "போய் வந்தாச்சு, உயிருக்கு ஆபத்து ஒன்று மில்லை, இராவ் உடம்பு சௌகரியமாக இருக்கவேண்டுமென்று பதில் தந்தி அடியுங்கள்" என்று சாமிகள் கூறி முடித்தனர். இதற்குப்பின் இராவ் அவர்களுக்கு குணமாகி விட்டது என்பதுதான் எனக்குத் தெரியும். பம்பாயில் என்ன நடந்தது என்ற விபரங்களை இராவ் அவர்கள் வாயாலேயே கேளுங்கள்.

இந்த விபரங்களைக் கேட்ட எனக்கும், என் நண்பர்களுக்கும் பம்பாயில் நடந்த மற்ற பகுதியையும் உடனடியாக இராவ் அவர்

களிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டும் என்ற ஆவல் மிகுந்தது. அன்றுதான் பம்பாயிலிருந்து சாமிகளைக் காண வந்திருந்த இராவ் அவர்கள் அமர்ந்திருந்த பக்கம் திரும்பினேன். திரு. சூரியமூர்த்தி அவர்கள் சொல்வதைக் கேட்டு அனுபவித்துக் கொண்டிருந்த இராவ் அவர்கள் முகம் மலர்ந்தது, விழிகள் விரிந் தன, வாய் திறந்தது, புத்துயிர் பெற்றவரே பேசுகின்றார், கேளுங்கள் !

இராவ் : மருத்துவ மனையில் டாக்டர்கள் என்னைக் கைவிட்டது எனக்குத் தெரியும். என்னை நோயாளி காரில் கொண்டுவந்து வீட்டுக்கு அனுப்பிவைக்க ஏற்பாடு செய்ததும் எனக்குத் தெரியும். ஆனால் என் வீட்டில் என் கட்டையைக் கொண்டுவந்து சேர்த்தது எனக்குத் தெரியாது. காலை சுமார் 5½ மணி இருக்கும். " சீக்கிரம் எழுந்திருங்க சாமி, உங்களுக்கு ஒன்றுமில்லை " என்று பழகிய பேரன்புக் குரல் கேட்டது. அது நான் கேட்டுகேட்டு அனுபவித் திருந்த என் குருநாதர் தெய்வீகக் குரல். கருணாகரனின் குரல் கேட்டு உயிர்த்தெழுந்தேன். ஏதோ உறக்கத்திலிருந்து எழுபவன் போல் உணர்ந்தேன். கண் விழித்துப் பார்த்தேன். என்வாயில் விபூதி ஒட்டிக்கொண்டிருந்ததைக் கண்டேன். என்னுடைய குருநாத ருடைய வாசமிகுந்த விபூதி. சற்று தூரத்தில் என் வீட்டில் என் தங்கை மகள் அழுது கொண்டிருப்பதைக் கண்டேன். " ஏன் அழுகின்றீர்கள் " என்று வாயைத் திறந்து கேட்டேன். " அம்மா ! அண்ணா ! மாமா பேசுகின்றார், மாமா பேசுகின்றார் " என்று இரைந்து கத்திக்கொண்டு என் தங்கை மகள் துள்ளிக் குதித் தோடினாள். கீழே கூடியிருந்த என் உறவினர்கள் நண்பர்கள் என்னைப் படுக்கவைத்திருந்த அறைக்குள் குபுகுபுவென்று புகுந் தனர். ஆச்சரியத்தால் மலைத்து நின்றனர். நான் இறந்துவிட் டேன் என்று சிந்திய கண்ணீரெல்லாம், நான் உயிர்பிழைத்து விட்டேன் என்பதால் ஆனந்தக் கண்ணீராக மாறியது. நான் என்னவென்று சொல்வேன் என் குருநாதன் பேரருளை, பெருங் கருணையை. அவர் கொடுத்த உயிர், இன்று அவரருளைப் பற்றிப் பேசுகின்றேன் சாமிகள் முருகன் அருள்கொண்டு மிருத்யு ஜபம் செய்து என் உயிரைக் காப்பாற்றினார். நான் பிழைத்துவிட்டேன் என்று கேள்விப்பட்ட டாக்டர்கள் முதலில் நம்பவில்லை. பிழைத்ததை நேரில் கண்டதும் என் இதயத்தை எக்ஸ்ரே படம் எடுத்துப் பார்த் தனர். ஒருவிதக் கெடுதலும் இன்றி நோயற்ற வாழ்வு வாழ்பவர் இதயம் போன்று என் இதயம் வேலை செய்வதைக் கண்டு பேராச்சரியமுற்றனர்.

சூரிய மூர்த்தி : எனக்கும் இப்பொழுதுதான் தெரிகின்றது. பம்பாயில் என்ன நடந்ததென்பதைப்பற்றி. நான் இராவ் அவர்

களை முதன் முதலில் சாமிகள் விட்டில் கிரகப்பிரவேசத்தின் போது சந்தித்தேன். என்னைக் கண்ட இராவ் அவர்கள் என் முன்பு சாஷ்டங்கமாக விழுந்து பணிந்தார். ஒருவேளை என்னை சாமிகள் என்று தவறாக நினைத்து என் காலில் வணக்கம் செலுத்துகின்ருரோ என்று எண்ணினேன்' "எனக்கு அன்று உயிர்ப்பிச்சை வாங்கிக் கொடுத்த அருமை நண்பரல்லவா நீங்கள். நான் பம்பாயில் பேச்சு மூச்சின்று இருந்தபோது உங்கள் உதவியால் அல்லவா சாமிகள் அருள் கிடைக்கப் பெற்றேன்" என்று மறுபடியும் என்னை வணங்கும் போதுதான் உண்மை விளங்கியது.

உயிர்ப் பிச்சை வாங்கிக் கொடுத்த பக்தரையும் உயிர் பெற்றெழுந்த பக்தரையும் கண்ட எங்கள் கண்களிலும் ஆனந்தக் கண்ணீர் பெருகியது. உயிர் கொடுத்துதவும் கருணாகரக்கடவுளாகவும் சாமிகள் விளங்குவதைக் கண்டு சாமிகள் அடிகளையே பற்றிப் பணிந்தோம்.

சாமிகள் எத்தனைபேருக்கு இது போன்று ஆபத் சகாயனாக வாய்த்திருக்கின்ருர் என்பதில் என் மனம் ஈடுபட்டது. பழநியில் பாம்பு கடித்திறந்த சிறுவன் ஒருவனைச் சாமிகள் காப்பாற்றிய நிகழ்ச்சி ஞாபகத்திற்கு வந்தது. சேலத்தில் மூன்று டாக்டர்களால் கைவிடப்பட்ட திருமதி ஆனந்தம்மாள் கணவருக்கு அவர் மனைவி ஊட்டிய விபூதிப்பிரசாதம் அவருக்கு உயிரை ஊட்டி எழுப்புகின்ற விபரங்களும் என் மனக் கண்களுக்குமுன் வருகின்றன. சிலோனில் இந்தியன் ஹைகமிஷன் ஆபீசில் வேலை செய்து வந்த ஓர் அதிகாரி இறந்து விட்டதை நான்கு டாக்டர்கள் ஏகோபித்துச் சொன்னதும், அவர் உடலைத் தகனத்திற்கு எடுத்துச் செல்லுமுன் அவர் மனைவி சாமிகள் கொடுத்திருந்த விபூதியை அவர் உடம்பில் தேய்க்க மாண்டவர் மீண்டும் உயிர் பெற்றெழுந்து உட்கார்ந்த விந்தையும், இதைக்கேட்டு இவ்விபரங்களை 23—7—61 இந்தியன் எக்பிரஸ் தினத்தாளில் வெளியிட்ட பத்திரிகை நிருபர் செய்தியும் என் முன்னே தோன்றின. மதுரைசில் சேலம் பக்தர் பார்த்தசாரதி உயிரையும் சாமிகள் காப்பாற்றிய அருட்செயலும் மனத்திற்கு வந்தது. நமக்குத் தெரியாமல் இன்றும் எத்தனைபேர்களைச் சாமிகள் உயிர் ஊட்டி எழ வைத்தனரோ, என்ற எண்ணமும் மனதில் ஏற்பட்டது.

அருள் காட்டும் அற்புதமே!
அன்ெருருநாள் ஈசன்

திருவடிவைப் பற்றிய தோர்
தூய மணி பாலன்

உருகாக்க உயிர்காக்க
வெளிப்பட்டார் : இன்று
அருள்ஜோதி பன்றிமலை
அண்ணல் அவர் ஆசி
மறுபடியும் மாண்டவரை
மீட்டுவது விந்தை !
பெறுமவற்றுள் பெரும்பாக்யம்
புனர் வாழ்வு பெறுதல் !
நறு வாழ்வை உயிர் ஊட்டி
நிலைக்கவைக்கும் எங்கள்
அறத்தரசு பன்றிமலை
அடிகளவர் வாழ்க !

### காரை ஓட்டிக்காட்டும் அற்புதம் !

சாமிகளை மகிழ்விக்கப் பக்தர்கள் பாடுவதுண்டு: ஒரு சில சமயங்களில் சாமிகளே உற்சாகமிகுந்து அருமையாகப் பாடுவது கண்டும் நாம் மட்டற்ற மகிழ்ச்சி அடைவதுண்டு. சாமிகள் பாடுவார் என்றும் சாகித்யம் அமைப்பார் என்றும் பலபேருக்குத் தெரியாது சாமிகளைப் பக்தர்கள் தம் கார்களில் எழுந்தருளச் செய்து சாமிகள் அருகில் அமர்ந்து கார் ஓட்டிச்சென்று மகிழ்பவரும் உண்டு. ஒரு சில சமயங்களில் உற்சாகமிகுந்த சாமிகள் காரையும் ஓட்டி பக்தர்களை மகிழ்விப்பர் என்பது ஒரு சில பக்தர்கள் தான் அறிவர். சாமிகள் மனது வைத்தால் டிரைவர் ஆசனத்தில் அமர்ந்துதான் காரை ஓட்டவேண்டும் என்ற அவசியமும் இருப்பதில்லை. ஒருநாள் திருச்சி டாக்டர் T. V. அரங்கநாதன் அம்பாசிடர் காரில் திண்டுக்கல்லிலிருந்து சாமிகள் புறப்பட்டுத் திருச்சி நோக்கி வந்துகொண்டிருக்கின்றார். சாமிகள் உளங்கனிந்து அருள்மொழிகள் கூறிக்கொண்டு வந்தவர் திடீரென்று பேருவகைப் பூக்க, "நான் கார் ஓட்டட்டுமா சாமி" என்று உரைத்தார். காரை ஓட்டிக்கொண்டுவந்த திரு. S. இராஜகோபால் அவர்களும் காரை உடனே நிறுத்தி தன் இடத்தை சாமிகளுக்கு அளிக்க நினைப்பதைக் கண்ட சாமிகள் "நீங்கள் இறங்கவும் வேண்டாம், காரை நிறுத்தவும் வேண்டாம். நான் இருக்கும் இடத்திலிருந்தே காரை ஓட்டப் பார்க்கின்றேன்" என்று கூறி, ஸ்டியரிங்கில் தன் வலக் கரத்தை வைத்தார்கள். கோபால் கார் ஓட்டுவது நின்றுவிட்டது: சாமிகளே காரை ஓட்டுகின்றார். உலகமே காணாத ஒரு புதுமை! காரின் டிரைவர் சீட்டுக்குப் பக்கத்தில் அமர்ந்திருக்கும் ஒரு மகானுடைய திருக்கரம் காரின் ஸ்டியரிங்கைப் பிடித்திருக்க,

ஸ்டியரிங்கே காரின் சக்கரங்களைப் போக வேண்டிய பக்கம் திருப்பிக் காரின்போக்கைத் தங்குதடையின்றி அமைத்துக் கொடுத்தது போன்று தோன்றியது. காரின் வேகத்திலும் குறைச்சலில்லை. சாமிகளுடைய உற்சாகத்திலும் குறைச்சலில்லை. இதைக்கண்டு பேராச்சரியமுற்ற எங்களது மகிழ்ச்சியிலும் குறைச்சலில்லை.

சாமிகள் காரின் ஸ்டியரியங்கில் கை வைத்தால்தான் கார் ஒழுங்காக ஓடுமா? அவர் திருக்கரம் படாமலேயே கார் ஓடாதா? சாமிகள் பக்தர் கைகளில் அருள்சுரந்து தன் விரல்களால் தடவிஞல் அற்புத மணம் எழுகின்றது. தொட்டால் மணக்கின்றது. அவர் கைவிரல் கொண்டு தடவக்கூட வேண்டியதில்லை. அவர் சொன்ஞலே போதும். சாமிகள் குறிப்பிட்டவர் கைகளிலிருந்து வெற்றிவேர் மணம் பெருக ஆரம்பித்துவிடுகின்றது. சொன்ஞல் பலிக்கிறது. இத்தகைய மகாஞலா காரையும் ஒருவருமின்றி ஓட்டவைக்க முடியாது. மதஞஸ் டாக்டர் திரு. நரேந்திரன் சாமிகளுடைய அருமைச் சீடர்களில் ஒருவர். அவர் சாமிகளையும் அம்மா அவர்களையும் சேர்த்து சில நிமிடங்கள் ஓடும் சினிமாபடமே எடுத்து வைத்திருக்கின்ருர். அந்தப் படத்தில் ஒரு கார் ஓடுகின்றது. அந்தக்காரை ஓட்ட ஒரு டிரைவரும் இல்லை. ஆளில்லாமல் ஒரு கார் திண்டுக்கல் சாமிகள் "இராஜ இரத்தினம்" திரு இல்லத்திலிருந்து தானே புறப்பட்டுச் சிறிது தூரம் ஓடுகின்றது. இந்த அற்புதத் திருவிளையாடலைச் சாமிகளே கண்டு களிக்கின்ற காட்சியும் இந்தப் படத்தில் பார்க்கின்றவருடைய உவகையை எழுத்தில் உணர்த்த முடியுமா? இத்தகைய அற்புதத் திருவிளையாடலைச் சாமிகள் தஞ்சை ஜில்லாவில் செய்து காட்டியதைப் பல அன்பர்கள் 14—6—67 தினமணி (மதுரை) செய்தித்தாளில் படித்து இன்புற்றனர். நாமும் அதைப்படித்து இன்புறுவோம். "திருவாரூர் ஸ்ரீ தியாகேசர் கோவிலில் ஒரு கருநாகப்பாம்பு சாமிகள் கையைக் காட்டியதும் அப்படியே நின்றுவிட்டது. அன்றிரவு சாமிகள் பக்தர்களுடன் காரில் சென்றபோது கார் ஓட்டுபவரை (டிரைவரை) அவரது கால்களை ஆக்ஸிலேட்டரிலிருந்தும், கிளட்சிலிருந்தும் எடுக்கச்சொல்லிவிட்டு சாமிகள் ஒரு கையில் ஸ்டியரிங்கைப்பிடித்துக் கொண்டு வண்டியை ஓடு என்று உத்திரவுஇட வண்டி எந்தவிதமான இடையூறும் இல்லாமல் ஓடி சாமிகள் நில் என்று சொன்னதும் நின்று விட்டது."

சாமிகளை வாழ்க்கையில் ஆபத்சகாயஞக அடைந்த பக்தர்கள் இத்தகைய கார் அனுபவங்களிலும் சாமிகள் ஆபத் சகாயஞக அமைவதையும் கண்டு பேருவகை கொள்கின்றனர். ஒரு நாள் கோயமுத்தூர் தொழிலதிபர் திரு. வெள்ளையங்கிரி (A. V. கிரி) அவர்கள் சாமிகளோடு காரில் வருகின்ருர். திருச்சூரிலிருந்து சாமிகள்

அவர்களே காரை ஓட்டி வருகின்றார். சாமிகளுடைய திருக்கரம் ஸ்டியரிங்கில் இருக்க கார் வேகமாகவே ஓடிக்கொண்டிருக்கின்றது. எதிரில் மரங்கள் ஏற்றி ஒரு பெரிய லாரி மிக வேகமாக வந்துகொண் டிருக்கின்றது. லாரிக்கும் ரோட்டின் ஓரத்திற்கும் இடையே உள்ள வெளி சாமிகள் ஓட்டுகின்ற காருக்கும் போதுமா என்ற சந்தேகம் காரில் உள்ளவர்களுக்குப் பெருங் கிலியை எழுப்பி விட்டது. காரை நிறுத்தவும் சாமிகள் திருவுளங் கொள்ளவில்லே. காரின் வேகமும் குறையவில்லே· எதிரே வெகு வேகமாக வந்து கொண்டிருக்கும் லாரியோடு கார் மோதிவிட இன்னும் சில கணங்களே என்று பேரதிர்ச்சியுள்ள உள்ளங்கள் அதே சில கணங்களில் கார் பத்திர மாக எதிரே வந்துகொண்டிருந்த லாரியையும் கடந்து சென்றதைப் பார்த்துப் பேராச்சரியமுற்றன. வாழ்க்கைப்பாதையில் எவ்வளவோ திடுக்கிடும் சம்பவங்கள், பேரதிர்ச்சிதரும் செயல்கள் எண்ணிறந்தன உள்ளன. சாமிகள் மட்டுமே நம் கூடவே இருந்தால் இவைகளெல் லாம் என்ன செய்யமுடியும் என்பதைத்தான் இந்தக் கார் அனுபவம் கிரி அவர்களுக்கும் சாமி பக்தர்களுக்கும் எடுத்துக்காட்ட உதவு கின்றது. சாமிகள் பக்தர்களின் துணைவன்; சாமிகள் இருக்க பயமேன்!

தன்னுடைய பக்தன் அர்ச்சுனனுக்காக கிருஷ்ண பரமாத்மா ரத சாரத்யம் செய்தது போன்று சாமிகள் தம் அருமை சீடர்களுக்கு சாரத்யம் செய்கின்றார்; அர்ச்சுனனுக்கு கிருஷ்ணன் கீதோபதேசம் செய்தது போன்று சாமிகளும் சீடர்களுக்கு அறிவுபதேசம் அருள் கின்றார்: அர்ச்சுனனுக்கு தன்னுடைய விஸ்வரூப தரிசனத்தை கிருஷ்ண பரமாத்மா காண்பித்தது போன்று சாமிகளும் சீடர்களுக்கு தன் விஸ்வரூப தரிசனத்தை நம்பமுடியாத பல அரிய செயல்களே சாதித்துக் காட்டி அருளுகின்றார். அந்த நம்ப முடியாத அரிய செயல்களில் ஒன்றுதான் எதிரே வருகின்ற லாரியையும் பொருட் படுத்தாது காரை நிறுத்தாமல் ஓட்டி இருக்கின்ற நெருக்கடியான இடை வெளியிலும் காரை பத்திரமாக செலுத்திக்காட்டிய பேரற்புதம்!

சாமிகளுடைய சாதனைகள் யாரும் எளிதில் நம்பமுடியாதபடி அமைந்து விடுகின்றன. 'இப்படியும் நடக்குமா?' என்று பேராச் சரியப்படும்படி காரை வைத்துக்கொண்டும் திருவிளேயாடல் புரி கின்றார். 1950ஆம் ஆண்டில் ஒருநாள் பம்பாய் விமான நிலேயத்தில் ஒருவரைப்பார்க்க சாமிகள் ஒரு காரில் மாதுங்காவிலிருந்து போக வேண்டி இருந்தது. விமானம் வருவதற்குள் விமான நிலேயத்தை அடைய சில நிமிடங்களே இருந்தன. சாமிகள் இஷ்டப்படியே வெகு வேகமாக காரை விமான நிலேயத்திற்கு ஓட்டிக்கொண்டு வந்தார் டிரைவர். போகும் வழியில் ஒரு பாலம் புதிதாக கட்டிக்கொண்டிருந் தனர். அதனல் அந்த ரோட்டில் வந்து கொண்டிருந்த கார்களே

வேறு பக்கம் திருப்பிக் கொண்டிருந்தனர். இந்த எதிர்பாராத நடப்பு காரில் இருந்தோர்களுக்கு மனத் தடுமாற்றத்தையும் பெரு வருத்தத்தையும் தந்தது. காரை வேறு வழியில் திருப்பினால் விமான நிலையத்திற்கு விமானம் வருவதற்கு முன் போய் சேர முடியாது. புதுப் பாலம் கட்டிக்கொண்டிருக்கும்போது காரை நிறுத்தாமல் வேறு என்ன செய்யமுடியும்? இந்த தர்ம சங்கடமான நிலையில் "காரை விடு" என்ற சாமிகளுடைய குரல் ஒலித்தது. ஒன்றும் விளங்காத நிலையில் ஒன்றும் செய்யாத டிரைவருக்கு கார் நிற்காமல் மிக வேகத்தில் ஓடுவது ஒன்றுதான் தெரிந்தது. கண் மூடி கண் திறப்பதற்குள் கார் புதிதாக கட்டிக்கொண்டிருந்த பாலத்தைத் தாண்டி எதிர்பக்கமுள்ள ரோட்டில் வெகுவேகமாக ஓடிக் கொண்டிருந்தது. "இது கனவா, அல்லது நினைவா" என்று பேரதிர்ச்சியில் பெருவியப்பு கொண்ட கார் டிரைவருக்கு "இது சாமிகளின் அற்புத சாதனை" என்பது கொஞ்சம் கொஞ்சமாக புரிய, பாலத்தை கார் எப்படி தாண்டியது என்பது மட்டும் ஒருவருக்கும் புரியவில்லை,

சாமிகள் காரில் போய்க் கொண்டிருக்கும்போது அவருடைய மனதில் மகிழ்ச்சி பொங்க திருமொழிகளும் பொங்கும், திருச் செயல்களும் பொங்கும். தென்னாட்டில் சாமிகள் தூத்துக்குடி விஜயத்தின்போது ஒருநாள் காரில் சென்று கொண்டிருக்கின்றார். பத்திரிகைகளைப் பற்றி பேசிக்கொண்டு வந்தவர்கள் பம்பாயில் அன்று வெளியாகும் பிரீபிரஸ் (Free Press) செய்தித்தாளைப் பற்றிப் பேச ஆரம்பிக்கின்றனர். இதைக் கேட்டுக் கொண்டுவந்த சாமிகள், "உங்களுக்கு இன்று அச்சாகும் பம்பாய் பிரிபிரஸ் செய்தித்தாள் வேண்டுமா" என்று கேட்டார். காரில் சென்று கொண்டிருப்பவர்களுக்குச் சாமிகள் கேட்டது விளங்கவில்லை. பம்பாயில் அன்று வெளியாகும் செய்தித்தாள் தூத்துக்குடியில் எப்படி அன்றே காரில் சென்று கொண்டிருப்பவருக்குக் கிடைக்கும்? இப்படியே பதில் கூறமுடியாது திணறிக் கொண்டிருக்கும் பக்தர்கள், சாமிகள் தம் திருக்கரத்தைச் சட்டென்று வெளியில் நீட்டுவதும், அடுத்த கணம் சாமிகளது திருக்கரங்களில் ஒரு செய்தித்தாள் தோன்றுவதும் கண்டு வாயடைத்து இருந்தனர். 'இது என்ன பேப்பர்' என்று சாமிகள் கூறி அந்தத் தாளை ஒரு பக்தரிடம் கொடுக்க, "இது பம்பாயில் இன்று வெளியாகும் பிரிபிரஸ் செய்தித்தாள்" என்று பம்பாய் பக்தர் அதைப் பார்த்துக் கூறினார். இரண்டு மூன்று மைல்கள் சென்றன. மறுபடியும் சாமிகள் தம் திருக்கரத்தை வெளியே நீட்ட மலாயாவில் கிடைக்கும் சூடம் கிடைத்தது, இதுவும் ஒரு பக்தர் இஷ்டப்படியே கிடைத்தது.

ஒருநாள் சாமிகள் ஒரு நிகழ்ச்சியைப் பற்றி உற்சாகத்தோடு காரில் போகும்போது பேசிவந்தார். அந்த நிகழ்ச்சியில் முக்கிய

பங்கு கொண்ட ஒரு அம்மையாருக்கு சாமிகள் பூஜைப் பெட்டி யில் என்ன வைத்திருக்கின்றார் என்பதை அறிய ஒரு ஆவல். அதைச் சாமிகளிடமே கேட்பதற்கும் ஒரு அச்சம். இருந்தாலும் கேட்காமலேயே புத்திசாலித்தனமாக பூஜைப் பெட்டியில் என்ன இருக்கின்றதென்பதை அறிய ஒரு யுக்தி! அந்த யுக்தியோடு அவள் சாமிகள் அன்று பூஜை செய்த அறைக்குள்ளேயே சென்று விட்டாள். அப்போது சாமிகள் பூஜைப் பெட்டியில் வைக்க வேண்டிய பொருள்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். பூஜை அறைக்குள் நுழைந்த அம்மையாரின் நோக்கத்தை உடனடியாகத் தெரிந்து கொண்ட சாமிகள், "கண்ணில் என்னம்மா" என்று கேட்டார். உடனே மூடிக்கொண்ட கண்களைப் பிசைந்து பிசைந்து திறக்கமுற்பட்டாள் அம்மையார். அந்த சில நிமிடங்களில் சாமி கள் வைக்கவேண்டிய பொருள்களைப் பூஜைப் பெட்டியைத் திறந்து வைத்துவிட்டு பெட்டியை மூடினார். சாமிகள் பெட்டியை மூடுவதற் கும் மூடிய கண்கள் திறப்பதற்கும் சரியாக இருந்தது. அம்மை யாருக்கும் சாமிகள் பூஜைப் பெட்டியைத் திறந்து வைக்க வேண்டியவைகளை வைத்துவிட்டு பெட்டியைப் பூட்டியதும் தெரி யாது: சாமிகளால்தான் தன் கண் மூடிதிறந்தது என்பதும் தெரி யாது. இந்த நிகழ்ச்சிகளைக் காரில் சாமிகள் சொல்லக் கேட்டு வரும் பக்தருக்கு கண்களும் ஒட்டிக் கொள்ளுமா என்ற சந்தேகம் உதித்தது. அதையும் சாமிகளிடமே கேட்டுவிட்டார். "அதில் சந்தேகமா சாமி. கண்கள் ஒட்டாதா" என்று சாமிகள் கூறினார், உடனே அந்த பக்தருடைய கண்களும் மூடிக்கொண்டன. கார் ஓடிக்கொண்டே இருந்தது. பத்து நிமிடங்களும் ஓடிவிட்டன. "சோதித்தது போதும்" என்று மனம் புழுங்கிய பக்தரின் கண் கள் தாமே மூடிக்கொண்டது போன்று தாமே திறந்தபோது அவருக்கும் சாமிகள் கூட இருந்த மற்ற பக்தர்களுக்கும் மற்றொரு பேருண்மையும் விளங்கியது. சாமிகள் இஷ்டப்பட்டால் வெறுங் கண்களை மட்டுமா மூடச் செய்யமுடியும்? தன்னலமும் பிடிவாத மும் கர்வமும் பேராசையும் தாண்டவமாடும் மனத்தின் மாயைக் கோளாறு கண்களையும் மூடச்செய்ய முடியும்! சாமிகள் இஷ்டப் பட்டால் வெறுங் கண்களை மட்டுமா திறக்கச் செய்யமுடியும்? பொதுநலத் தொண்டையும் பேரன்பையும் இறைப்பற்றையும் பெருங் கருணையையும் ஊட்டவல்ல பக்திகண்களையே திறந்து விடச் செய்ய முடியும்!

## புகைப்படங்களில் அற்புதம்

சாமிகளின் புகைப் படங்கள் கண்டால் அன்பர்
சாமிகளின் அற்புதங்கள் பலவே காண்பர்!

சாமிகளை வைத்தெடுத்த படத்தில் ஒருநாள்
சாமிகளின் உருவமதே விழவே காணோம்!
சாமிகளைப் படம் எடுத்தால் புதிதாய் ஒருவர்
சாமிகளின் பக்கத்தில் நிற்கக் காண்போம்!
சாமிகளின் திருப்படமே கலர்ப்படமாய்
சாமிகளின் அருளாலே மாறக் காண்போம்!

சாமிகள் இறை அருள் நிறைந்தவர், தெய்வீக ஒளி வீசுபவர், தெய்வாம்சம் பொருந்தியவர் என்பதை யெல்லாம் சாமிகளுடைய புகைப் படங்களே நிரூபித்து வருகின்றன. கருணை பொழியும் திருமுகத்தையும் வடிவையும் எடுத்துக் காட்டும் படங்கள் அவர் இறை அருள் நிறைவை விளக்க உதவுகின்றன. தெய்வ வடிவங்களைப் படங்களாக வரைகின்ற சரித்திரப் புகழ்பெற்ற ஓவியர்களும் அத்தெய்வங்களின் தலைகளைச் சுற்றிலும் வட்ட வடிவ ஒளியைச் சித்தரித்துக் காட்டுவதுண்டு. காரணம் தலையைச் சுற்றிலும் ஒளி வட்டமுடையவர் தெய்வப் பிறவி என்பதை உணர்த்தவே. இதை உணர்ந்தே சாமிகளின் அமர்ந்த திருக்கோலம் புகைப் படம் உருவாக்கும் சென்னை பக்தர் திரு. ஷண்முகசுந்தரமும் சாமிகளின் திருமுக வடிவின் பின் ஒரு செயறகை ஒளிவடிவைக காணபித திருக்கின்றார். இந்தப் படம் சாமிகளின் பக்தர்கள் இல்லங்களை காத்து வருகின்றது. முருகன் அருளையும் இலக்குமி கடாக்ஷத்தையும் கூட்டி வைக்கின்றது. பக்க பலமாக அமைந்து விடுகின்றது. சாமிகள் உண்மையாகிய தெய்வீக ஒளி வீசுபவர் என்பதை 1964ஆம் ஆண்டில் திருச்செந்தூரில் எடுத்த புகைப்படம் ஒன்று நிரூபித்துக் காண்பிக்கின்றது. திருச்சி தொழிலதிபர் திரு. கண்ணன் சாமிகளோடு திருச்செந்தூர் சென்றார். திருச்செந்தூர் கடற்கரையில் திரைகடல் பரப்பிற்கு முன் சாமிகளை எழுந்தருளச் செய்து போட்டோ படம் ஒன்றெடுத்தார். அந்தப் புகைப்படத்தில் சாமிகளின் திருமுகத்தைச் சுற்றிலும் ஒரு ஒளி வட்டம் அமைந்திருக்கின்றது. இது தானே இயற்கையாக அமைந்துள்ள அற்புதமாக விளங்குகின்றது: சாமிகள் தெய்வாம்சம் பொருந்தியவர் என்பதை விளக்குவது போன்றே ஒளி வீசுகின்றது.

சாமிகள் இறையருள் நிறைந்தவர் என்பதைத் திருப்பதியில் 1964ஆம் ஆண்டில் எடுத்த போட்டோ படம் எடுத்துக் காட்டுகின்றது. திருப்பதியில் அலர்மேலு மங்கைத் தாயார் சந்நதியில் கர்ப்பக் கிரகத்திற்கு வெளியே சாமிகள் அமர்ந்திருந்தார். அன்னையின் திருவடிகளுக்கு சாமிகள் அர்ச்சனை செய்துகொண்டிருக்கும் அமர்ந்த திருக்கோலம். இந்தக் காட்சியை புகைப்படம் பிடித்தனர். போட்டோவில் நடக்காத விந்தை ஒன்று நடந்திருந்தது தெரிந்தது. சாமிகளுக்கும், தாயாருக்கும் இடையில் இருந்த வெளி எங்கே.? கர்ப்பக்கிரக

வாசல்படி எங்கே? இவைகள் போட்டோ படத்தில் மறைந்துவிட்டன. சாமிகள் கர்ப்பக் கிரகத்தில் தாயார் திருவடிகளை ஒட்டியே அமர்ந் திருக்கும் அற்புதத்தை என்னென்றியம்புவது! சாமிகள் சக்தி அருள் பாலன் என்பதை அல்லவா இப்படம் நமக்கு எடுத்துக் காட்டு கின்றது! தாயாரிடம் சாமிகள் கொண்டுள்ள நெருங்கிய தொடர்பை அல்லவா இப்படம் உலகிற்கு காட்டுகின்றது!

சாமிகள் தெய்வாம்சம் பொருந்தியவர் என்பதைப் பல தடவை களில் எடுத்த அவருடைய போட்டோ படங்களே விளக்க உதவு கின்றன. சிவபரம்பொருளுக்கு மூன்று வடிவங்கள் உண்டு. அவை அருவம், உருவம், அருஉருவம் என்பன. கண்ணுக்குப் புலப்படாத நிலையை அருவநிலை என்கின்ருேம். கண்ணுக்குப் புலப்படும் நிலையை உருவநிலை என்கின்ருேம். இவ்விரண்டும் கலந்த நிலையை அருஉருவம் என்கின்ருேம். "காணும் உருவினுக்கும், காணுத அருவினுக்கும் அறிகுறியாம் சிவலிங்கம்" அல்லவா! 1964ஆம் ஆண் டில் டாக்டர் சுப்பையா அவர்கள் வீட்டில் சாமிகளை ஜன்னலுக்கு முன்பாக அமர்த்தி ஒரு காப்டன் புகைப்படம் எடுத்தார். அப்போது அருள் வடிவினராகிய சாமிகள் அருள்கரமாகிய வலக்கரத்தைத் தூக்கி சின்முத்திரை காட்டி அபயமளிக்கும் கோலத்திருவடிவு தாங்கி விளங்கினுர். இந்த போட்டோ பிரதி ஒன்றெடுத்த அன்பர் மறுபடி யும் இரண்டாவது பிரதி எடுத்தார். அதே நெகடிவ்தான்! இரண் டாவது பிரதியில் சாமிகளைக் காணவில்லை. சாமிகள் அமர்ந்திருந்த இடத்தில் சாமிகள் அமர்ந்திருந்த அடையாளங்கள் மட்டுமே தெரி கின்றன. முதல் போட்டோ காபியில் சாமிகளது இடதுபுறத்தில் இருந்த பூக்களும் இரண்டாவது காப்பியில் உள்ளன. ஒருவேளை தன் கவனக்குறைவால் இரண்டாவது போட்டோ காபியில் சாமிகள் இல்லாக்குறை ஏற்பட்டதோ என்று சந்தேகப்பட்ட பக்தர் மறுபடியும் சில காப்பிகளை எடுத்தார். என்ன ஆச்சரியம்! சில காப்பிகளில் சாமிகள் திருஉருவம் இருந்தன. சிலவற்றில் சாமிகள் திருஉருவம் இல்லை. அன்பர் ஆழ்ந்து சிந்தித்தார். அன்பர் மனத்திரை நீங்கி யது. உண்மை விளங்கியது. இந்தப் படங்கள் சாமிகளின் தெய் வாம்சத்தை அல்லவா விளக்க வந்திருக்கின்றன. சாமிகள் உள்ள படம் இறைவனின் உருவத்தன்மையையும் சாமிகள் இல்லாத படம் இறைவனின் அருவத்தன்மையையும் அல்லவா உலகிற்கு எடுத்துக் காட்டுகின்றது. இந்த அற்புதப் படங்களைக் காணும் பேறு எனக்கு மதருசில் சாமிகளின் சீடர் திரு. A. முத்துக்குமாரசாமி அவர்கள் வீட்டில் கிடைத்தது. சாமிகளின் அருள்பூத்த தோற்றம் அபய அஸ்தத்தோடு வீட்டுக்கெதிரில் வீட்டுக்கு வருபவரையெல்லாம் ஆசி யளித்து அபயமளித்து வரவேற்கின்றது. இதுவே சாமிகளின் உருவநிலையைக் காண்பிக்கும் போட்டோவின் ஒருபிரதி. இதைக் கண்டு மகிழ்ச்சியடைந்த என்னை அவர் தன் தியான அறைக்கு

அழைத்துச் சென்றார். அங்கு சாமிகளின் அருவநிலையைக் காண்பிக்கும் அதே போட்டோவின் மற்றொரு பிரதி. அதில் சாமிகள் உருவில்லை; வெளியில் நான் கண்ட படத்தின் அளவே அந்தப் படமும் இருந்தது. இடத்திற்குப் பொருத்தமாக அமைந்துள்ள சாமிகளின் படங்களைக் கண்டு பரவசநிலை யடைந்தேன். இந்தப் படங்களின் விபரங்களை அவர் மெய் மறந்து எனக்கு எடுத்துரைத்தபோது, தியான அறையில் பொருத்தமாக அமைந்த சாமிகளின் அருவ அமைப்பின் தெய்வீக மாண்பையும் விருந்தறையில் பொருத்தமாக அமைந்த சாமிகளின் உருவ அமைப்பின் கம்பீரத்தையும், அருட்பொலிவையும் மறுபடியும் கண்டு, கண்டு, உணர்ந்து, உணர்ந்து பேரின்ப அனுபவம் கண்டோம் நாங்கள் இருவரும். இந்தப் படங்களின் தெய்வீக இயல்பை ஒருநாள் நான் சாமிகளிடம் எடுத்துரைத்தபோது சாமிகள், "அந்த அருவநிலைப் படத்தில் இன்னும் சில அற்புதங்கள் நடக்கப்போகின்றன. இன்னும் சில நாட்களில் ஒன்றுமில்லாத படத்தில் என் உருவின் நிழல் தோன்றும். அதன் பின் சில நாட்களில் என் உருவும் அமைந்துவிடும்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

பரம்பொருளைத் தியானிக்கின்ற தெய்வீகக் கலைஞர் அப்பரம்பொருளை அம்மை அப்பனாகவும் கண்டுகளிக்கின்றான். அர்த்தநாரீஸ்வரர் வடிவம் இன்றும் நம் கண்களுக்கும் சிந்தைக்கும் இன்பம் ஊட்டவல்ல கருத்தோவியமாகத் தமிழ்நாட்டுச் சோழர்கள் எழுப்பிய கோயில்களிலெல்லாம் சிறந்து விளங்குகின்றது. 'அவளின்றி அவனில்லை, சக்தியின்றி சிவனில்லை, இரண்டும் உள்ள இடத்தில் தெய்வமணமுண்டு, தெய்வப் பேரின்பமுண்டு, தெய்வ அருள் உண்டு' என்பதை உணர்த்துவதுபோல சாமிகளின் புகைப்படம் ஒன்று அமைந்தது. சேலம் திரு. P. M. பார்த்தசாரதி சாமிகளை சேலம் டாக்டர் சுந்தரம் அவர்களோடு நின்ற திருக்கோலத்தில் ஒரு புகைப்படம் எடுத்தார். அப்போது சாமிகள் ஒரு மேல் வேட்டியோடு நின்று கொண்டிருந்தார். போட்டோ நெகடிவ்வை கழுவிப்பார்த்தபோது டாக்டருக்கு இருபக்கங்களிலும் சாமிகள் நின்றுகொண்டிருக்கின்றார். இடது பக்கம் அப்பனது காட்சி: வலதுபக்கம் அம்மையின் காட்சி. இடதுபக்கம் மேல் வேஷ்டியோடு சாமிகள் நிற்கின்றார். வலதுபக்கம் நிற்பதும் சாமிகள்தான், ஆனால் மார்பிலிருந்து பாதம் வரையிலுள்ள பகுதியில் ஸ்ரீ சாமிகளின் தர்மபத்தினி திருஉருவம் பதிந்திருந்தது.

வடலூரில் சாலை அபிமானிகள் இராமலிங்க வள்ளலாரை சென்னை மாசிலாமணி முதலியாரைக் கொண்டு எட்டுதரம் புகைப்படம் எடுத்தும் வள்ளலார் திருஉருவம் படத்தில் அமையவில்லை என்பதைக் கேள்விப்பட்டிருக்கிறோம். இதைப்போன்றே சில

சந்தர்ப்பங்களில் சாமிகளைப் புகைப்படம் எடுக்கும்போதும் சாமிகள் படம் விழாமலும் இருப்பதுண்டு. ஒருசமயம் இருபக்தர்கள் நடுவில் சாமிகளை நின்ற திருக்கோலத்தில் புகைப்படம் பிடித்தனர். படம் எடுத்துப் பார்க்கும்போது நடுவில் நின்ற சாமிகளைமட்டும் காணவில்லை. சமீபத்தில் மதருசில் இரண்டு பெரிய விளக்குகளின் நடுவில் சாமிகளை நின்ற திருக்கோலத்தில் புகைப்படம் பிடித்தனர். படத்தில் இரண்டு விளக்குகள் மட்டும் இருந்தன.

ஒரு சமயம் திருநீறுமணக்கும் திருக்கோலத்துடன் இருந்த சாமிகளை ஒருவர் புகைப்படம் பிடித்தார். சாமிகள் மார்பில் திருநீறு அழகுற அமைந்திருந்தது. புகைப்படம் எடுத்து பார்த்த போது சாமிகளுடைய தெய்வாம்சம் பொருந்திய மார்பில் சிவலிங்கமும் சேவற்கொடியும் காட்சி அளித்தன. திருநீற்றைச் சிவலிங்கமாகவும் சேவற்கொடியாகவும் மாற்ற வல்ல சாமிகள் தன்னுடைய போட்டோ படத்திலேயே இந்த அற்புத மாற்றத்தை விளைவித்துப் பக்தர்களை மகிழ்வித்தார்.

காசியில் கங்கை நதிக்கரையில் சாமிகள் தன் உயரமுள்ள சுவருக்கருகில் நின்றுகொண்டிருந்தார். பக்தர் ஒருவர் அன்று எடுத்த புகைப்படத்தில் சாமிகள் தன்உயர அளவு இருந்த சுவரையும் மிஞ்சி காட்சியளித்தார். இது சாமிகளுடைய விஸ்வரூபத் தன்மையைக் காட்ட வில்லையா?

திண்டுக்கல்லில் சாமிகள் திருஇல்லத்தின் கிரகப்பிரவேசத் திருநாளின்போது சாமிகள் படத்திற்குமுன் மயில்தோகைவைத்து ஒரு புகைப்படம் பிடித்தனர். போட்டோ படத்தில் மயில்தோகை சாமிகள் படத்திற்குப்பின் பொருந்தி அமைந்து விளங்கியது.

திரு. P. M. பார்த்தசாரதி அவர்களின் அனுபவமும் அதிசயத்தை விளைவிக்கின்றது, ஹரூருக்கு அருகில் உள்ள அநுமந்த தீர்த்தத்திற்கு அருகில் சாமிகளைப் புகைப்படம் பிடித்தார் பக்தர். அப்போது சாமிகளோடு கூடஇருந்த காட்சி அந்தப் புண்ணியத் தீர்த்தம்தான். ஆள் ஒருவரும் சாமிகள் பக்கத்தில் இல்லை. ஆனால் போட்டோ எடுத்துப் பார்க்கும்போது ஒரு மரத்தால் செய்த அழகு பொம்மை போன்ற உச்சிக்குடுமி கொண்ட பால உருவமும் படத்தில் இருந்ததைக்கண்டு ஆச்சரியப்பட்டனர் பக்தர்கள். மற்றொரு சமயம் திருச்செந்தூரில் சாமிகளை சாமிகள் அன்னையுடன் நின்ற திருக்கோலத்தில் படம் பிடித்தனர். வேறு யாரும் அங்கில்லை. படம் எடுத்துப்பார்க்கும் போது சாமிகளுக்கும் சாமிகள் அன்னைக்கும் பின்னால் கொஞ்ச தூரத்தில் வேறொருவர் நிற்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார் திருச்சி பக்தர் திரு கண்ணன் அவர்கள்.

சாமிகள் அற்புதங்கள் ஆடவல்லவர் என்பதை அவர் செயல் கள் மட்டுமல்ல. அவர் சம்பந்தப்பட்ட போட்டோ படங்களும் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன. கருத்தைக் கருத்தாடல் செய்ய வல்ல முறையிலும் போட்டோ படங்கள் அமைவதும் உற்றுநோக்கத் தக்கன. பரம்பொருள் விளக்கமாகவும் சாமிகள் படங்கள் அமை வதும் பக்தர்கள் மகிழ்ச்சியோடு சிந்திக்க வேண்டியவை.

போட்டோ படங்களைப்பற்றிக் கூறும்போது பக்தர்கள் சாமிக ளோடு தம்மைச் சேர்த்து போட்டோ எடுத்துக் கொள்ளும் ஆர் வத்தைப்பற்றியும் கூருமலிருக்க முடியவில்லை. சாமிகளோடு செல்லும் இடங்களிலெல்லாம் பலதடவைகள் சாமிகளைத் தனியாக வோ மற்றவர்களுடன் சேர்த்தோ குடும்பமாகவோ படம் எடுப் பதுண்டு. சில சமயங்களில் கடும் வெயிலிலும், சூடேறிய பாறை களிலும் குளிர் மிகுந்த மலைப்பிரதேசங்களிலும் சாமிகளை வெகு நேரம் நிற்கச் செய்து படம் எடுக்க முனைவதுண்டு பக்தர்கள். ஆனல் சாமிகள் இதைத் தொந்திரவாகவே நினைப்பதில்லை. தம் பக்தர்களை மகிழ்விக்க எத்தனை நேரமானுலும் கடும் குளிரையும் கடும் வெயிலையும் பொருட் படுத்தாமல் புன்னகை பூத்த முகத் துடன் எத்தனை முறை வேண்டுமானுலும் தன்னைப் படம் பிடிக்க அனுமதிக்கும் சாமிகள் அன்பை எப்படி போற்றுவதென்றே தெரிய வில்லை. சாமிகள் பூஜை அறையில் இருக்கும்போதும் சாமிகள் அருள் திரு உருவை, அருட்பெருங் காட்சியைப் படமாக்கித் தம் இல்லங்களில் அழகுற மாட்டிவைக்க தயங்குவதுமில்லை பக்தர்கள். ஸ்ரீரங்கம் திரு. M. சுப்பையா செட்டியார் இல்லத்தில் சாமிகள் திருப்படம் ஒன்று விளங்குகின்றது. பூஜை அறையில் சாமிகள் மார்பில் ஒரு பனியன் அணிந்து கொண்டு நிற்கும் திருக்கோலம்! அதில் ஆச்சரியம் என்னவென்ருல் சாமிகளைப் பூஜை அறையில் புகைப்படம் எடுக்கும்போது சாமிகள் பனியன் உடையோடு இல்லாமல் இருந்ததே!

இந்த அற்புதப் படத்தைக்கண்டார் ஒரு பக்தர். திண்டுக் கல்லிலேயே சாமிகள் திரு இல்லத்திலும் சாமிகளின் படங்கள் பல வற்றை கண்டுகளித்திருந்தார். சாமிகளின் ஆசியை நாடிய அவர் சாமிகளிடம், சாமிகளின் அமைந்த திருக்கோலப் புகைபடத்தைக் கொடுத்து சக்கரம் அமைத்துப் பூஜைக்கு கொடுத்து அருள வேண்டினர். ஸ்ரீரங்கத்தில் திரு. மு. சுப்பையா செட்டியார் வீட் டிலேயே இந்த நிகழ்ச்சி நடந்தது, சாமிகள் அந்தப் புகைப் படத்தை வைத்துக்கொண்டே பக்தருக்கு ஓர் அற்புதம் ஆடி அருள சித்தம் கொண்டார். சாமிகள் ஆடி அருளும் அற்புதங் களைப் பக்தர் கேள்விப்பட்டிருக்கின்ருர். ஒருசில அற்புதங்களையும் நேரில் கண்டிருக்கின்ருர். 'இவை அவசியமா' என்று கூட

அவர் நினைப்பதுண்டு: ஒரு நாள் அப்படியே சாமிகளையே நேரில் கேட்டு விட்டார். இன்று சாமிகள் ஆடிக்காட்டிய அற்புதம் அவருடைய கேள்விக்கே சரியான பதிலாக அமைந்துவிட்டது. சாமிகள் அந்தப் புகைப்படத்தின் பின்னுல் சக்கரம் அமைத்தார். பக்தரையே அழைத்து அதனடியில் பக்தருடைய கையெழுத்தையே போடச் சொன்னுர். இதைக் கவனித்துக் கொண்டிருந்த பக்தர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. இப்படி யாரையும் சாமிகள் அவர்கள் கையெழுத்தைப் படத்தில் போடும்படி சொன்னதில்லை. எதற்காக இப்படி சாமிகள் கேட்கின்ருர் என்பதும் புரியவில்லை, அந்த பக்தருக்குக்கூட. சாமிகள் கேட்ட படியே பக்தரும் தன் கையெழுத்தையும் படத்தின் பின்னுல் போட்டு விட்டார். சாமிகள் அந்தப்படத்தை ஒரு நீளமான காகிதத்தினுள்ளே வைத்து மறைத்து பத்திரமாக அந்த பக்தர் கைகளிலேயே வைத்துக் கொள்ளும்படி கூறினுர். தான் பூஜை செய்து முடிக்கும் வரை காகிதத்துள் மறைக்கப்பட்டிருந்த படத்தை அந்த பக்தர் கைகளிலேயே வைத்திருக்கச் சொல்லி தியானத்தில் இருக்கும்படியும் கூறினுர் சாமிகள். சாமிகள் திருவுள்ளப்படி பக்தரும் பயபக்தியோடு பூஜை முடியும்வரை தியானத்தில் அமர்ந்தார். பூஜை முடிந்தது. சாமிகள் முதன் முதலில் பூஜை அறைக்குள் அழைத்தது அந்த பக்தரைத்தான். சாமிகளுடைய மற்ற பக்தர்களுக்கும் அதைத்தொடர்ந்து சாமிகள் அழைப்பு வந்தது. நாங்கள் ஆவலுடன் பூஜை அறைக்குச் சென்ருேம். சாமிகளுக்கருகில் பக்தர் காகிதத்தில் மூடி இருந்த படத்தோடு நின்றுகொண்டிருந்தார். சாமிகள் பேசினுர். சாமிகள்: "பூஜைக்கு வேண்டுமென்று ஒரு படம் நமது அன்பர் வாங்கி வந்ததும், அதில் சக்கரம் போட்டுக் கொடுக்கும்படி என்னைக் கேட்டுக்கொண்டதும், நான் அந்தப் புகைப்படத்தின் பின்னுல் அவர் கையெழுத்தையே போடச் சொன்னதும் உங்களுக்குத் தெரியும். அந்தப் படத்தைத்தான் அவர் மிகப் பத்திரமாகக் கடிதாசியில் சுற்றி வைத்துக் கொண்டிருக்கின்ருர். அதே படம்தான் என்று சொல்வதற்கு அவர் கையெழுத்தே படத்தின் பின் இருக்கின்றது. இப்பொழுது காகிதத்தைப் பிரித்துப் படத்தைப் பாருங்கள்."

சாமிகள் திருவுள்ளப்படி காகிதத்தைப் பிரித்து ஆவலுடன் பக்தர் படத்தைப் பார்த்தார். நாங்களும் பார்த்தோம். இதுவரையில் கேள்விப்படாத நாங்கள் பார்க்காத ஒரு பேரதிசயத்தைக் கண்டோம். புகைப்படத்தில் ஒரு பேரற்புத மாற்றம் ஏற்பட்டிருந்தது. சாதாரண (கருப்பு வெள்ளை) புகைப்படமாக இருந்த சாமிகள் படம் கலர் புகைப் படமாக மாறிவிட்டது. பச்சை நிறமுள்ள இடத்தில் ஜரிகை வேய்ந்த சிகப்புக் கரை வேட்டியோடு நெற்றியில் சந்தனமத்தியில் சிகப்புக் குங்குமத் திலகத்தோடு தன் இயற்கைநிறத்தோடும்

வனப்போடும் அமர்ந்திருக்கும் சாமிகளையும், அவர்கள் பின் அமைந்துள்ள சிகப்பு மயத்தையும் மோகன முறுவல் பூத்த சாமிகளின் திரு முகத்தின் பின் அமைந்துள்ள மஞ்சள் நிற தெய்வ ஒளி வட்டத்தையும் கண்டு மெய் சிலிர்த்தோம். வாயடைத்து நின்றோம். "பின்னால் திருப்பிப் பாருங்கள்" என்ற சாமிகள் சொற்களைக் கேட்ட பக்தர் அப்படியே செய்ய, சாமிகள் கைப்பட போட்டிருந்த சக்கரமும் அதன் அடியில் பக்தர் கையெழுத்தும் அப்படியே இருந்தன. இதைக் கண்ட பக்தர் சாமிகள் குருநிலை அருளாற்றலை உணர்ந்தார், தான் கேட்ட கேள்விக்கும் பதிலையும் இந்த அற்புத மாற்றத்தில் உணர்ந்தார். சாமிகள் ஆடிக் காண்பிக்கின்ற சித்து பேரருள் சித்து என்பதை உடனே அறிந்துகொண்டார். இதைக் கண்டதனால் சாமிகளுடைய பேராற்றல் பெருநிலையைக் கண்டு கொண்டார். தெய்வீகத்தால் ஆகாததொன்றுமில்லை என்பதை புரிந்து கொண்டார். தெய்வீகமே சாமிகள் என்பதையும் புரிந்து கொண்டார். இந்த பக்தர் யார்? வேறு யாரும் இல்லை, நமது மதிப்பிற்குரிய நண்பர், சாமிகளுடைய அருமை பக்தர் திருச்சி இ. வி. ஆர். கல்லூரி முதல்வர் திரு. சூரிய நாராயண முதலியார் அவர்களே!

பக்தர்களின் ஆவலையும் பூர்த்தி செய்யும் சாமிகள் தன் திருப் படம் கொண்டே பக்தர்களுக்கு நல்ல காலம் வருவதையும் எழுதாமல் எழுதிக் காண்பிக்கும் அற்புத நிகழ்ச்சி ஒன்றைக் காண்போம். சாமிகளுடைய போட்டோ படம் ஒன்றை சாமிகளிடம் கொடுத்தார் ஒரு பக்தர் சாமிகளின் ஆசியை நாடி. சாமிகள் அந்தப் படத்தின் பின் திருச்சக்கரம் போட்டார், தன்னுடைய கையெழுத்தும் போட்டார், அந்த கையெழுத்தின் கீழ் 11—12—68 என்ற தேதியும் போட்டார். 11—12—68 தேதி வர எவ்வளவோ நாட்கள் இருக்கின்றன. சாமிகள் எதற்காக வரப்போகும் தேதியை அன்று எழுதி வைத்தார் என்பதை அறிய ஆவலுற்றனர் பக்தர். "உங்களுக்கு நல்ல காலம் வந்துவிட்டது. எல்லாம் போகப் போகத் தெரியும்" என்பதை மட்டும் கூறி இதற்கு மேல் விளக்கம் கொடுக்கவில்லை சாமிகள். டிஸம்பர் 11-ந் தேதியும் வந்தது. வெகு வருடங்களாக நீதி மன்றத்தில் வழக்காடி வந்த ஒரு கேஸ் 11—12—68ல் இந்த பக்தருக்கு சாதகமாக முடிந்து, தீர்ப்பும் அன்றே கிடைத்தது. சாமிகளிடம் படம் வாங்கும்போது பக்தரின் மனத்தில் என்ன நினைத்து கொண்டிருந்தார்? எதற்காக சாமிகளின் ஆசியைக் கோரினர்? கேசில் நன்மையடையவே! அவர் மனத்தில் கோரிய நன்மையே கிடைத்துவிட்டது. அந்த நன்மை தீர்ப்பு வடிவாக 11—12—68ல் கிடைக்கப் போவதை அல்லவா முன்கூட்டியே சாமிகள் சொல்லாமல் சொல்லிவிட்டார்? இதைப்பற்றி உவகை வெள்ளத்தில் சாமிகளுக்கு எழுதி இருந்த சென்னை பக்தர் பாஷ்யம் அவர்கள் கடிதத்தைப் படிக்கக் கேட்ட பக்தர்களுக்கு சாமிகள் செயல்களில் மணக்கும் அற்புதங்களுக்கும்

பொருள் உண்டு என்பதை அறியாமலா இருக்கமுடியும்? சாமிகள் தூங்காமல் தூங்குகின்றார்! அதைப் போன்றே சாமிகள் சொல்லாமல் சொல்கின்றார்! சாமிகள் ஒரு யோகி! சாமிகள் ஒரு தீர்க்க தரிசி!

## இப்படிப் பல அற்புதங்கள்!

சாமிகளுடைய அருள் ஆற்றல் அற்புதச்சுவை அளிக்கின்றது. சமய சந்தர்ப்பங்களுக்கேற்ப அமைந்துவிடுகின்றது. திருப்பதி கோவிந்தராஜப் பெருமாள் கோவிலுள்ளிருக்கும் சூடிக்கொடுத்த மங்கை சந்நதியில் தாழம்பூ வரவழைக்கின்றார். திருச்சானூர் ஜீயர் அவர்களுக்கு அவர்களுக்கென்றே தயாராகும் ஸ்ரீசுரணம் வரவழைக்கின்றார். மன்னார்குடி அர்ச்சகர் அவர்களுக்கு மன்னார்குடி தாயார் குங்குமத்தையே வரவழைத்துக் கொடுக்கின்றார். திருச்சானூரில் சீடர் திரு. R. N. சங்கரன் அவர்களுக்கு மஞ்சள் வரவழைத்து அருள்கின்றார். இடத்திற்கு ஏற்றாற்போல் அற்புதம் ஆடுகின்றார் சாமிகள். எந்தப்பொருளை மாற்றுகின்றாரோ அந்தப் பொருள்கள் அமைவதும் உற்று நோக்கத்தக்கது. மணலைச் சீனி சர்க்கரையாக மாற்றும் போதும் மணல் அளவிலேயே சீனி சர்க்கரை அமைந்துவிடுகின்றது. உற்சாகமிகுந்த சாமிகள் ஒருநாள் ஒரு கடையில் இருந்த துவரம்பருப்பில் ஒரு கைப்பிடி கேட்டு வாங்கி, அந்தப் பருப்பை திருப்பி அளித்தபோது அவ்வளவு பருப்பும் அட்சதை அரிசியாக மாறிவிட்டது; அந்தப் பருப்பு அளவுக்குப் பெரிய அரிசி உருமாறிவிட்டதால் கொஞ்சம் எட்டியிருந்து பார்ப்பவர்க்கு ஒரு மாறுதலும் ஏற்படவில்லை என்றுதான் தோன்றியது. ஏனென்றால் மஞ்சள் நிறமான பெரிய அட்சதை அரிசிக்கும் மஞ்சள் நிறமான துவரம் பருப்பிற்கும் கொஞ்சதூரத்திலிருந்து ஒருவித வித்தியாசமும் தோன்றவில்லை. அருகில் நெருங்கிப் பார்க்கும்போதுதான் அவ்வளவு பருப்பும் சுபமங்கள அட்சதையாக மாறிய அற்புதத்தைக் கண்டனர் பக்தர்கள். ஒருநாள் ஒரு பக்தர் வீட்டில் மிளகாய் துவையல் செய்திருந்தனர். மிளகாய் அதிகமாக சேர்த்திருந்ததால் துவையலை வாயில் வைக்க முடியாத அளவுக்கு உறைப்பேறிவிட்டது. "ரொம்ப உறைப்பாக இருக்கின்றதா, அவ்வளவு மிளகாய்கள் தேவையில்லை" என்று கூறிய சாமிகள் கைகளில் இரண்டு மிளகாய்கள் வந்துவிட்டன. துவையலைச் சாப்பிடும் அளவுக்கு சாமிகள் மாற்றிவிட்டனர் துவையலிலிருந்து இரண்டு மிளகாய்களை நீக்கியதன்மூலம்! இப்படியே நன்றாக சமையல் செய்த சாதத்தை அரிசியாகவும், நன்றாக வெந்து கறியாகமாறிய பீன்ஸ் காய்களை, அவை கறியாக மாறுவதற்கு முன்பு இருந்த பச்சை வடிவில் பீன்ஸ் ஆகவும், இரசத்தில் உபயோகமான பூண்டையும் அது உபயோகமாவதற்கு முன் இருந்த நிலையில் உரிக்காத

வெள்ளைப்பூண்டாகவும் சாமிகள் மாற்றி ஆடும் அற்புதத்தை என் னென்று இயம்புவது! ஒரு சமயம் சாமிகளுக்குக் காப்பி வாங்கி வந்தார் ஒரு பக்தர். சாதாரணமாக சாமிகள் காப்பியில் சர்க்கரை சேர்த்துக்கொள்வதில்லை. அவசரத்தில் காப்பி வாங்கிவந்த பக்தர் இதை மறந்துவிட்டார். சர்க்கரை கலந்த இனிக்கும் காப்பியைப் பெற்றுக்கொண்ட சாமிகள் அந்தக் கூஜா நிறைய இருக்கும் காபி யில் ஒரு டம்ளர் சாப்பிட்டார். காப்பி வாங்கிவந்த அவசரத்தில் சர்க்கரை கலந்துவிட்டதை உணர்ந்து மனதில் அவதிப்பட்டுக் கொண்டிருந்த பக்தருக்கும் சாமிகள் ஒரு டம்ளர் காபி கொடுத் தார். பக்தர் வியப்படைந்தார். தான் வாங்கிவந்த காபி சர்க்கரை கலந்த இனிக்குங் காபி. சாமிகள் கொடுத்தது சர்க்கரை இல்லாத காபி "சர்க்கரை இல்லையென்று ஆச்சரியப்படுகிறீர்களா?" என்று சாமிகள் கேட்கும்போதுதான் பக்தருக்கு உண்மை விளங்கியது. காப்பியிலிருந்து சாமிகளே தன் அற்புதச்செயலாற்றலால் சீனி சர்க்கரையையே அகற்றிவிட்டார் என்பது! பம்பாயிலிருந்து திருமதி சீதாலக்ஷ்மி அம்மாள் தனக்குச் சாமிகள் அருளிய மாம் பழத்தைப்பற்றி உவகையோடு கூறியதும் படித்து மகிழவேண்டியது. "சாமிகள் என் கைகளில் விபூதி வரவழைத்துக் கொடுத்தார்கள். சாமிகளுடைய கைகளிலிருந்து கொட்டிய விபூதி முடிவில் ஒரு மாம்பழமாக என் கைகளில் மாறிவிழுந்தது"

அவசியம் ஏற்பட்டால் சாமிகள் மருந்துகளைக்கூடத் தன் அற்புதப் பேராற்றலால் வரவழைக்கவும் தயங்கியதில்லை. மதுரையில் அம்மா அவர்கள் உடல்நிலை சரியில்லாமல் தங்கியிருந்த சமயம். தற்சமயம் மதுரையில் மருத்துவக் கல்லூரி டீனாக வேலைபார்க்கும் டாக்டர் M. G. பிரபு அவர்களுக்கு இரவில் டெட்டால் வேண்டியிருந் தது. அந்த நேரத்தில் கடைகளும் மூடிஇருந்தன. சாமிகள் ஒரு கிண்ணத்தில் உள்ள தண்ணீரில் தன் வாயிலிருந்து எச்சலை உமிழ்ந்தார். என்ன ஆச்சரியம்! அவ்வளவு தண்ணீரும் டெட் டாலாக மாறிவிட்டது. நிறத்திலும் டெட்டால்! மணத்திலும் டெட் டால்! இதைச்செய்தருளிய சாமிகள் "எச்சல் வாயில் இருக்கும் வரை அம்ருதமாக விளங்குகின்றது, வெளியில் வந்தால் நஞ் சாகின்றது" என்று தன் செயலுக்கும் விளக்கம் கொடுத்தருளினார். இப்படியே தூத்துக்குடியில் சீடர் ஒருவருக்காக கடைகளில் அன்று அவசரத்திற்குக் கிடைக்காத 'சல்பா செக்ஸ்டைன்' என்ற மாத்திரை களையும் வரவழைத்துக் கொடுத்ததும் நாம் படித்து மகிழ்ந் துள்ளோம்.

சில சமயங்களில் கோவிலுக்குச் செல்லும்போதும் சாமிகள் உற்சாக மிகுதியால் பெருஞ் சூடக்கட்டிகள் வரவழைப்பதுண்டு. சாமிகள் "இராஜ இரத்தின விலாஸ்" திரு இல்லத்தின் கிரகப்

பிரவேசத்தின்போது நவதானியம் சாமிகள் வரவழைத்துக் கொடுத்தார். பழநியில் ஒரு பக்தருக்கு வாயில் சந்தனத்தைப்போட அது மிளகாக மாறியது. மதுரையில் வழக்கறிஞர் திரு. பழநிசாமி நாடார் வீட்டில் சாத்துக்குடிப்பழம் வில்வக் காயாக மாறியது. பம்பாய் பக்தர் திரு. ரங்கஇராவுக்கு திருப்பதி வேங்கடேசப்பெருமான் லட்டே சாமிகள் வரவழைத்துக் கொடுத்தார். இப்படி அற்புதத்திலும் பல வகைகள் உண்டு. பக்தர்களைக் காப்பதற்காகவும் சாமிகள் அற்புதம் ஆடி அருளுகின்றார். 1964ம் ஆண்டில் சென்னை பக்தர் திரு. முத்துக்குமாரசாமி பிள்ளை சாமிகளிடம் திண்டுக்கல்லில் விடைபெறும்போது சாமிகள் அவரிடம் ஓர் எலுமிச்சம்பழம் கொடுத்து வழி அனுப்பினார். காரில் புறப்பட்டு வைதீஸ்வரன் கோயில் பக்கம் வரும்போது உயரமான ரோட்டிலிருந்து கார் கண்ட்ரோல் இல்லாமல் ஐந்தடி பள்ளத்தில் விழுந்தது. அந்த ஆபத்து நேரத்தில் "எப்படி இருந்தாலும் குருநாதன் காப்பாற்றுவார்" என்ற நம்பிக்கை காரில் உள்ள பக்தர்களுக்கு இருந்தது. காரில் சட்டத்தில் இருந்த சாமிகளுடைய போட்டோ படம் வெளியே உருண்டு விழுந்த பையன் கைகளில் சட்டம் நீங்கி பத்திரமாக இருந்தது. எல்லோரும் பத்திரமாக கார் விபத்திலிருந்தும் ஒரு காயமுமின்றி காப்பாற்றப்பட்டனர். இது நடந்த அடுத்தவாரமே திரு. முத்துகுமாரசாமி சாமிகளை மறுபடியும் திண்டுக்கல்லில் தரிசனம் செய்து "இந்த திருக்கரம்தான் எங்களைக் காப்பாற்றியது" என்று சொல்லி அஞ்சலி செலுத்தினார். காப்டன் P. K. லோகநாதன் சாமிகளின் அருளைப் பல தடவைகள் அடைந்து சாமிகள் ஆசி பெற்றுள்ள பக்தர். சாமிகளைக் கனவிலே கண்டு சாமிகள் ஆசியளித்தபடி பி. காம். பரீட்சையில் தேறினார், திருமணமும் செய்து கொண்டார். ஒருநாள் ஒரு காட்டில் ஜீப் ஒன்றில் சென்று கொண்டிருக்கும்போது, ஜீப்பின் சக்கரங்கள் ஏரிக்கரையில் உள்ள உளையில் சிக்கிக் கொண்டன. அந்த நேரத்தில் தனியாக ஒரு காட்டு யானை இவர்களை நெருங்கி விட்டது. யானைக் கூட்டங்களிலிருந்து தப்பித்து விடலாம்: தனியாக வரும் யானை யாரையும் விட்டுவிடாது. இந்தக் கஷ்டநிலையில் சாமிகளை நினைத்து அவர் நாமத்தை வாய்விட்டுச் சொல்வதைத்தவிர வேறொன்றும் செய்ய முடியவில்லை பக்தருக்கு. சாமிகள் திருநாமம் கேட்டவுடனேயே யானை சப்தம் போட்டு வேறுபக்கம் திரும்பி ஓடி மறைந்து விட்டது. இதைக்கண்ட அவருடன் இருந்த மற்ற நண்பர்கள் ஆச்சரியத்தை அளவிட முடியுமா? மற்றொரு சமயம் இதே பக்தர் சிக்கிம் எல்லையில் ரோந்து வேலையில் ஈடுபட்டிருந்தார். ஒரு பெரிய நதியைக் கடக்கவேண்டும். அது ஒரு காட்டாறு. காப்டன் தலைமையில் அந்த ஆற்றைக் கடக்க முனைந்துவிட்டனர், ஜவான்கள். பாதுகாப்பிற்காக இருக்கும் கனமான ஒரே கயிற்றில் ஒவ்வொருவரும் அதே கயிற்றை இடுப்பில் கட்டிக்கொண்டு ஆற்றைக் கடக்க ஆரம்பித்தனர். ஜவான்களில் டேவிட் என்பவர் இடுப்பில் சுற்றி இருந்த

கயிறு அறுந்துவிட்டது. மூர்க்கமாக செல்லும் காட்டாற்றில் அவர் அடித்துச் செல்லப்பட்டார். இந்த பரிதாபக் காட்சியைக் கண்ட பக்தர் தன்னோடு இருந்த சாமிகளின் படத்தை மனதார வழுத்தினர். என்ன ஆச்சரியம்! டேவிட் என்பவர் பத்திரமாகக் கரை ஏறிவிட்டார். அடித்துச் செல்லப்பட்ட அவர் இடுப்பில் சுற்றியிருந்த அறுந்த கயிறு ஒரு மரத்தில் மாட்டிக்கொள்ள மரம் ஏறி கரை சேர்ந்துவிட்டார் டேவிட். இதைக்கண்ட காப்டன் சாமிகளே தன் ஜவானுக்கு இப்படி உதவியருளியதைக் கண்டார். ஒருநாள் அவர் தன்னுடைய அனுபவங்களையெல்லாம் மிக உற்சாகத்தோடு கூற ஆரம்பித்து "எங்கு போனாலும் சாமிகள் என்கூட இருப்பதால் ஒரு ஆபத்தும் இல்லை" என்று முடித்தார். இப்படியே எவ்வளவோ பக்தர்களுக்கு சாமிகள் பல சந்தர்ப்பங்களில் உதவியருள்கின்றார். அவரவர்கள் சாமிகள் புரிகின்ற அருளாற்றல் உதவிகளை விவரிக்க ஆரம்பித்தால் சாமிகளின் செழுங்கருணை உள்ளத்தைப் பல பக்கங்களில் எழுதி எழுதி படித்துக் கொண்டே இருக்கலாம்.

இப்படி ஆபத்சகாயனாக வாய்த்துள்ள சாமிகள் சில சமயங்களில் ஆடி அருள்கின்ற அற்புதங்களைக் கேட்கும்போது "இப்படியும் நடக்குமா?" என்றே நாம் வியப்புறும்படி இருக்கின்றது. "வெள்ளை யானை என்று ஒன்று உண்டா? அதை இவ்வுலகத்தில் யாரும் கண்டிருக்கின்றார்களா?" என்று கேட்டால், பம்பாய் பக்தர் திரு. இராஜகோபால் என்பவர் 'உண்டு. அதை நான் நேரில் என் மனைவியோடு கண்டிருக்கின்றேன்' என்று பதிலளிக்க முன்வருவர். ஒருநாள் சாமிகளைக் காண வந்திருந்த பம்பாய் தம்பதிகளைச் சாமிகள் தன்வீட்டு மாடிக்கு அழைத்துச் சென்றார். உள்ளே போகச் சொன்னார். அப்போது வெள்ளையானைக்குட்டி ஒன்று உள்ளே இருந்து வந்தது. இதைக் கண்ட பக்தர்களுக்கு ஆச்சரியமே பயத்தை மிஞ்சுவதாக இருந்தது. சாமிகள்கூட இருக்க பயமேன்? அவர்கள் பார்ப்பதும் உலகத்திலேயே காணாத அதிசயமல்லவா? "வெள்ளை யானைக்குப் பழம் கொடுங்கள்" என்றார் சாமிகள். அவர்கள் ஆச்சரியத்தால் வாயடைத்து நின்ற சமயம் சாமிகளே ஒரு சீப்பு வாழைப்பழங்களையும் வரவழைத்துக் கொடுத்தனர். பழங்களைச் சாப்பிட்ட வெள்ளை யானையும் திடீரென்று தோன்றியதுபோலவே திடீரென்று திரும்பிச் சென்று மறைந்துவிட்டது.

சாமிகள் நடத்திக்காட்டிய மற்றொரு அற்புதச் செயலை நினைக்கும் போது ஸ்ரீ சக்குபாய் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சி நினைக்காமலிருக்க முடியாது. பண்டரிபுரத்தில் நடக்கும் ஏகாதசி உற்சவத்தை எப்படியேனும் பார்ப்பது என்று முடிவு கட்டிக் கொண்டாள் பக்தமணி சக்குபாய். அவளைத் தடுக்க அவள் மணாளன் அவரை ஒரு அறையில் வைத்துத் தூணோடு கட்டி விட்டார். 'இறை

வன் பக்தமணிக்கு உதவியருளத் திருவுள்ளம் கொண்டார். "நீ பண்டரிபுரம் சென்று திரும்பும்வரை இந்தத் தூணில் உனக்குப் பதிலாக நான் கட்டுண்டு நிற்பேன்" என்று கூறினன் பரந்தாமன் சக்குபாயிடம் சக்குபாய் போன்ற ஒரு பெண் ரூபத்தில் வந்து. சக்குபாய் பண்டரிபுரம் சென்ருள். அவள் திரும்பி வரும் வரை இறைவன் சக்குபாய் போன்றே தன் திருவுருவை மாற்றி அமைத்துக் கொண்டு கணவனுக்குகந்த மனைவியாகவும் மாமிக்குத் தகுந்த மருமகளாகவும் நடந்து கொண்டார். இதைத் தன் சொந்த மனைவி சொல்லக் கேட்டு மெய்மறந்தார் சக்குபாயின் கணவன் மிதகுராவ். இதுபோன்றே நம்மையும் மெய்மறக்கச் செய்ய வல்ல சாமிகள் செயலும் ஒன்றுண்டு. பம்பாயிலிருந்து ஒரு பக்தர் சில நாட்கள் லீவில் திண்டுக்கல்லுக்கு வந்தார். சாமிகளோடு தங்கி இருந்தார். அவருக்கு லீவு முடிவதற்கு முன் பம்பாய்க்குத் திரும்ப சாமிகளின் ஆசியை நாடினர். சாமிகள் இன்னும் ஒருவாரம் தங்கிச் செல்லலாம் என்று கூறினர். நான் வேலைபார்க்கும் அலுவலகத்தில் குறிப்பிட்ட தினங்களுக்கு லீவு தரமாட்டார்கள். ஆதலால் சாமிகள் என்னை பம்பாய்க்கு அனுப்ப ஆசீர்வதிக்கவேண்டும்' என்ருர் பக்தர். சாமிகள் ஆழ்ந்து சிந்திப்பதைக் கண்ட பக்தர் சாமிகள் என்ன சொல்வார்களோ என்று ஆவலுடன் சாமிகள் பதிலை எதிர் நோக்கினர். சாமிகள் அதிகாரம் தொனிக்கும் குரலில் "நீங்கள் அவசியம் ஒருவாரம் இங்குத் தங்கிவிட்டுத்தான் செல்லவேண்டும்" என்று ஒரு கண்டிப்பான உத்திரவை இடுபவர் போல் கூறிவிட்டனர். இதை அடுத்துப் புன்முறுவல் பூத்து "நீங்கள் சும்மா ஒருவாரம் தங்கிச் செல்லுங்கள். ஒன்றுக்கும் பயப்படவேண்டாம்" என்றும் திருவாய் மலர்ந்தருளினர். சாமிகளுடன் நெருங்கிப் பழகும் பக்தர்கள் சாமிகள் எதைச் சொன்னுலும் தட்டுவதே இல்லை. சாமிகள் சொல்லுவதிலும் ஏதோ ஒரு நன்மை உண்டு என்பதைப் பக்தர்கள் உணர்வர். பம்பாய் பக்தரும் முக மலர்ந்து "அப்படியே செய்கிறேன் என்று கூறி ஒருவாரம் திண்டுக்கல்லில் தங்கிவிட்டு, லீவு தீர்ந்து ஒருவாரம் கழித்து தன் அலுவலகத்துக்குச் சென்ருர். "ஒன்றுக்கும் பயப்படவேண்டாம்" என்று சாமிகள் கொடுத்த தைரியம் அவரை அஞ்சா நெஞ்சினராக்கி விட்டது. எது வந்தாலும் வரட்டும் என்றே அலுவலகத்திற்கு மனதை உரமாக்கிக் கொண்டு சென்ருர். அவரைக் கண்ட தன் சக அலுவலர்கள் முகத்திலோ பேச்சிலோ ஒரு மாறுதலும் இல்லை; வியப்போ, கோபமோ ஒன்றும் இல்லை. அவர் ஒருவாரம் லீவுக்குமேல் தங்கி விட்டார் என்ற மனப்பான்மையையே ஒருவரும் காட்டிக் கொள்ள வில்லை. ஏன் அவர் ஒருவாரம் காலம் தாழ்த்தி வந்தார் என்ற கேள்வியோ குறிப்போ–ஒன்றும் எங்கும் இல்லை. பக்தருக்கு ஆச்சரியத்துக்குமேல் ஆச்சரியம் காத்துக் கொண்டிருக்கின்றது.

தான் அதிகப்படியாக ஒருவார்காலம் வேலையை விட்டு நீங்கி இருந்த காலத்தும் தானே அங்கு உரிய காலத்தில் சேர்ந்து வேலை பார்த்த அற்புதத் திருவிளையாடலை மற்றவர்கள் பேச்சி லிருந்து அறிந்து கொண்டார். ஆபத் சகாயன் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் தன் லீவு முடிந்த ஒருவாரகாலமும் தன்னைப் போலவே தன் அலுவலகத்தில் பணியாற்றிய பேரற்புதத் திருவிளையாடலைப் புரிந்து கொள்ளாமலா இருப்பர் பக்தர்! அன்று பண்டரி நாதன் பக்தமணி சக்குபாயிக்காக அவள் உருத்தாங்கி பணிபுரிந்து உலகை வியக்கவைத்தார்; இன்று சாமிகள் பம்பாய் பக்தர் வேலைபார்க் கும் அலுவலகத்திலேயே பணிபுரிந்து உலகை வியக்க வைத்து விட்டார்! சாமிகள் இஷ்டப்பட்ட பொருளை வரவழைப்பதையும் இஷ்டப்பட்ட இடங்களுக்கு இஷ்டப்பட்டபோது சென்று வருவதை யும் அறிந்து உணர்ந்து அனுபவித்து வரும் பம்பாய் பக்தருக்கா, சாமிகள் தனக்காகத் தன்னுரு எடுத்து ஒருவாரகாலம் தன் அலு வலகத்திலேயே பணியாற்றிய திருவிளையாடல் புரியாமல் இருக்கும்?

இத்தகைய அருளாளன் வருகைக்காக ஆவலுடன் காத்திருந் தார் மீனம்பாக்கத்தில் விமான நிலையத்தில் ஆபீசர் ஒருவர். சமீபத்தில் தன் இல்லத்திற்குச் சாமிகளை அன்போடு அழைத்துச் சென்று சாமிகள் பாதங்களை மலர்கள் கொண்டு அலங்கரித்து வணங்கினர். சாமிகளது திருப்பாதங்கள் ஒரு பலகையின் மீது இருந்தன. சாமிகள் பக்தரை ஆசீர்வதித்து விட்டுத் திரும்பினர். சாமிகள் பாதங்கள் வைத்திருந்தப் பலகையை பக்தர் தன் வீட்டில் அப்புறப்படுத்த எடுத்தார். என்ன ஆச்சரியம்! பலகைக்கு அடியில் உள்ள சிமெண்ட் தரையில் சாமிகளது திருப்பாதங்கள் அப்படியே பதிந்து விட்டதைப் போன்று தென்பட்டன. இந்த அற்புதத் தைக் காட்டவே சாமிகளையே மறுபடியும் தன் இல்லத்திற்கு அழைத்துச் சென்றார் பக்தர். இந்தப் பேரற்புதத்தைக்காண சாமி களின் பக்தர்கள் விரைந்தனர் என்பதைச் சொல்லவும் மேண்டுமோ?

சாமிகள் திருப்பாதங்கள் இப்படி சிமெண்ட் தரையில் பதிந்து விட்டதைப்போன்ற காட்சியைக் கண்ட சென்னை டாக்டர் நரேந்திரன் அவர்கள் இதைப்போன்றே தம்முடைய ரத்தின கம்பளத்திலும் சாமிகள் திருவடிகள் பதித்திருந்த அற்புதத்தையும் சாமிகளிடமும் தன் நண்பர்களிடமும் கூறி அகமகிழ்ந்தார். டாக்டர் நரேந்திரன் சென்னையில் ஒரு நர்சிங் ஹோம் கட்ட ஏற்பாடு செய்து ஒரு முக்கிய மான இடத்தில் சாமிகளது திருவடிவை எழுந்தருளச் செய்யத் தீர் மானித்து சாமிகளையே அந்த இடத்திற்கு அழைத்துச் சென்றார். அந்த இடத்தில் காட்டுச் செடிகள் நிறைந்திருந்தன. சாமிகள் திரு வடிகள் பட்ட அந்த இடத்தில் சாமிகள் விஜயம் செய்த சில நாட் களில் துளசிச் செடிகள் கிளம்பிவிட்ட அற்புதத்தையும் பக்தர் தன்

அன்பர்களுக்குக் காட்டிப் பேருவகை கொண்டார். இந்த அற்புதங்கள் தெய்வீக புருஷர் சாமிகளது திருவடிகள் சிறப்பை அல்லவா நிரூபிக்க உதவுகின்றன! அந்தத் தெய்வீகத் திருவடிகளை போற்றுவதல்லவா நமது இன்பம்!

பன்றிமலை சாமிகளின்
புனிதமலர் கழல் போற்றி!

வென்றிஅருள் ஞானமணி
விளங்கு குரு அடி போற்றி!

தென்றலெனத் தமிழ் வேதம்
தவழ் தொண்டர் பதம் போற்றி!

குன்றிலிட்ட திருவிளக்கு
குருபரனின் தாள்போற்றி!

—T. D. மீனாட்சிசுந்தரம்.

பன்றிமலைச் சாமி நும் பாதார விந்த மலர்
என்று தான் சேவிப்ப தென்றிருந்தோம் — இன்றே
கிடைத்த பேறும் கிருபையும் அன்பில்
கருத்தடைய வந்தெம்மை யாள்.

(ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் மலாயா வருகை ஞாபக மலர்)

1968 நவம்பர் மாதத்தில் மதுரை டாக்டர் சுப்பையா அவர்களின் புதல்வியின் திருமணத்திற்குத் தலைமைவகிக்க சாமிகள் மதராஸ் சென்றிருந்த சமயம். பெரிய கிருத்திகை புண்ணியதினத்தன்று சென்னை விஷ்ராம் ஹோட்டல் உரிமையாளர் திரு. P. S. பாஷ்யம் அவர்கள் சாமிகளைத் தன் இல்லத்திற்கு அழைத்து வந்தார். சாமிகளின் ஆசியை நாடிப் பலபக்தர்கள் அங்குக் கூடி இருந்தனர். பேருவகை திகழும் திருமுகத்தோடு விளங்கும் சாமிகள் அன்று ஒரு திருவிளக்கு வழங்கிய அற்புதம் பாஷியம் தம்பதிகள் மறக்கமுடியாத தொன்று. "மண் சுருட்டி (அகல் விளக்கு) வேண்டுமா? பொன் சுருட்டி வேண்டுமா?" என்று சாமிகள் திருமதி பாஷ்யத்தைக் கேட்டார் மண் சுருட்டி வேண்டுமென்று வாயைத்திறந்து சொல்லி முடிப்பதற்குமுன் ஒரு புத்தம்புதிய மண் அகல்விளக்கு ஒன்று திருமதி பாஷ்யம் அவர்கள்மேல் எங்கிருந்தோ திடீரென்று வந்து விழுந்தது. அது கீழே விழுந்தும் உடையவில்லை. புத்தம் புதிய அகல் விளக்கில் மண்மணம் மாறுதிருந்ததையும் பக்தர்கள் கண்டு உளம் பூரித்தனர். சாமிகள் இப்படி எவ்வளவோ குடும்பங்களுக்கு அருள் விளக்குகள் வழங்கி வருகின்றார்! எவ்வளவோ குடும்ப விளக்குகளை ஏற்றி விளங்க வைக்கின்றார்.

1968ஆம் ஆண்டு நவம்பர் மாதக் கடைசியில் சாமிகள், ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் மிஷன் ஆரம்பிக்க திருப்பதிக்கு விஜயம் செய்தார். ஆந்திர மாநில முதல் அமைச்சர் திரு. K பிரமானந்த ரெட்டி அவர்கள், திருமதி இராகவம்மா பிரமானந்தரெட்டி அவர்கள், விவசாய அமைச்சர் திரு. P. திம்மரெட்டி அவர்கள், திரு. R. இராமலிங்கராஜு சாமிகளை வரவேற்று வேங்கடேஸ்வரர் ஆலயத்திற்கு அழைத்துச் சென்றனர். ஸ்ரீ வேங்கடேஸ்வரர் திருச் சன்னதிக்குமுன் முதல் மந்திரிக்கு சாமிகள் மனமுவந்து திவ்ய பிரசாதங்கள் வரவழைத்துக் கொடுத்தார். சாமிகளுடைய திருக் கரத்திலிருந்து திருவருள் மழை பெய்தது; வேங்கடேசப் பெரு மானுக்குகந்த அட்சதை, கற்கண்டு, சந்தனம், முந்திரிப் பருப்பு, திராக்ஷைப்பழம் முதல்மந்திரி கைகளை நிறைத்தன. சாமிகள் இதைத் தொடர்ந்து பேசுகையில், "ஏழுமலையான் கர்ப் பக்கிரகத்தில் ஏழுமலையான் திருமுன்னர் இத்தகை அருள் சித்து ஆடுவது எளிதல்ல. மனித சக்திக்கு அப்பாற்பட்ட தெய்விக சக்தி ஒன்று உண்டு என்பதை நிரூபிக்கவே நான் இப்படிச் செய்தேன்" என்று திருவாய் மலர்ந்தருளினர். இவ்வருள் மழை தெய்வீகத்தைக் கண்ணுற்ற திருப்பதி தேவஸ்தான டிரஸ்டிகள் தலைவர்கள் திரு. P. N. அப்பராவ் அவர்கள், மற்ற டிரஸ்டிகள், சாமிகளோடு சென்ற கவியோகி சுத்தானந்த பாரதியார், மற்ற பக்தர்களுடைய வியப்பையும் ஆனந்தத்தையும் என்னென்று இயம்புவது! அருளாளர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளுக்குத் திருப்பதி ஸ்ரீ பத்மாவதி பெண்கள் கல்லூரியில் ஒரு பெரிய வரவேற்பு காத்துக்கொண்டிருந்தது. கவியோகி சுத்தானந்த பாரதியார் தலைமை வகிக்க, திருப்பதி திரு. V, S. வெங்கடநாராயணு, சென்னை P. S. பாஷ்யம், திருமதி B. T. ஷங்கர் ஹெக்டே, கல்லூரி முதல்வர், திருமதி. K. இராஜேஸ்வரி மூர்த்தி அவர்கள் சாமி களின் அருளைப் பாராட்டிப் பேசினர். சாமிகள் பெண்மணிகளுக் கோர் அறிவுரை வழங்கினர். நமது நாட்டின் திலகங்களாக விளங்க வேண்டுமென்று பெண்மணிகளை ஆசீர்வதித்தார். சித்தூர் கலெக்டர் மனைவி திருமதி. அசந்தா அவர்கள் கைகளில் சாமிகள் திருக்கரத்திலிருந்து குங்கும மழை பெய்தது. அதை நெற்றியில் திலகமாக இட்டுக் கொண்டனர் நாட்டில் திலகவதி களாக விளங்க வேண்டிய ஆசியை சாமிகளிடமிருந்து பெற்றுக் கொண்ட பெண்மணிகள். 'சாமிகள் மானிட உருவில் உலவிவரும் தெய்வம்' என்ற இனிய உரை பகன்ற கல்லூரி முதல்வருக்கு இனிய கற்கண்டுகள் சாமிகள் வரவழைத்துக் கொடுத்தார். சாதம் அரிசியாகும் அற்புதத்தையும் கண்டு அகமகிழ்ந்தார் கவியோகி சுத்தானந்த பாரதியார்.

ஸ்ரீ டாம் டெனிஸ் ரட்லட்ஜ் (Dom Denys Rutledge) எனும் மேல் நாட்டு பாதிரியார் ஒரு யோகியைத் தேடுதல்' (In search of a yogi) என்ற புத்தகம் ஒன்று எழுதி இருக்கின்றார். யோகி என்பவர் யார், அவரால் என்னென்ன செய்யமுடியும் என்பதைப் பற்றி பதஞ்சலி சூத்திரத்திலிருந்தும் சமீபத்தில் வெளியான 'ஒரு யோகியின் சுயசரிதம்' (Autobiograpty of a yogi) முதலிய புத்தகங் களிலிருந்தும் அறிந்து கொண்ட இந்த மேல்நாட்டு பாதிரியார், யோகி ஒருவரையே நேரில் காண ஆசைப்பட்டு 1959–60 ஆண்டு களில் காசியிலிருந்து கங்கை நதி உற்பத்தியாகும் இடம் வரை யாத்திரை செய்து தேட ஆரம்பித்தார். ஆனால் அவருடைய ஆசை நிறைவேறவில்லை. அவர் படித்துக் கொண்ட ஒரு யோகி யாகிலும் அவர் கண்களுக்குத் தென்படவில்லை. அவர் கேள்விப் பட்டிருந்த யோகியரை இப்போது பார்ப்பதற்கில்லை என்பதைத் தான் அவர் கேள்விப்பட்டார். இப்படிக் கூறும் அவருடைய புத்த கத்தில் அவர் மேலும் கூறும் சில விஷயங்களைப் பார்ப்போம். ஹிமாலயத்தில்தான் சாதுக்களும் சாமியார்களும் யோகிகளும் சன்யாசிகளும் மற்ற புனித மனிதர்களும் வாழ்வாரென்றும், இந்தியாவில் சுற்றிக் கொண்டிருக்கும் சுமார் ஏழுலட்சத்து ஐம்பதி னாயிரம் சாதுக்களில் எல்லோருமே கொஞ்ச நாளாவது இமா லயத்தில் கழித்ததாகச் சொல்லிக் கொள்வார்கள் என்றும் ஓரிடத் தில் கூறுகின்றார். மற்றோரிடத்தில் உலகில் நம்பமுடியாத சில இயற்கையை மிஞ்சும் அற்புதங்களைப் பற்றியும் கூறுகின்ற கருத் தைக் கவனிப்போம். "இயற்கைக்கு மிஞ்சியது என்பது எதைக் குறிக்கும்? அது இயற்கை வரம்பை மிஞ்சுகின்ற ஒரு சக்தியைக் குறிக்கும், ஒரு செயலைக் குறிக்கும், ஒரு நிகழ்ச்சியைக் குறிக்கும்! ஒரு குறிப்பிட்ட காரியத்தை இயற்கைச் சாதனங்களைக் கொண்டு செய்து விடலாம்! ஆனால் அதைச் செய்யும் விதத்தில் தான் இயற்கையை மிஞ்சுவது அமைந்துள்ளது. புரூஸ் மார்ஷல் (Bruce Marshell) எழுதியுள்ள மாலாச்சி பாதிரியார் அற்புதத்தில் (Father Malachy's Miracle) எடின்பர்க் நகரிலிருந்து பாஸ்மலைக்கே ஒரு சீர் கெட்ட உல்லாச மனையை அகற்றி விடுகின்றனர். அந்த உல்லாச மனை கட்டிடத்தையே தனித்தனியாகப் பிரித்து புதிய இடத்தில் மறுபடியும் பிரித்து எடுத்த கற்களைக் கொண்டே அதே கட்டிடத்தை எழுப்பி இருக்கவும் முடியும். ஆனால் பாதிரியார் எப்படி அந்த உல்லாச மனையை அகற்றினார்? அந்தக் கட்டிடத்தை அப்படியே வானில் எழும்பச் செய்து சேரவேண்டிய இடத்திற்குப் பறந்து செல்ல வைத்துவிட்டார். இதில்தான் இயற்கைக்கு மிஞ்சியது அமைந்துள்ளது. இது நமக்குத் தெரிந்த சக்திகளுக்கு மிஞ்சிய செயலாக அமைந்துள்ளது. உண்மையைச் சொல்லப்போனால்

மனித சக்தியின் எல்லையையே நாம் இன்னும் அறியவில்லை. இயற்கை வசதிகளைக் கொண்டே எதையெல்லாம் சாதிக்க முடியும் என்பதையும் நாம் இன்னும் அறியவில்லை. ஐம்பது வருடங்களுக்குமுன் நடக்கமுடியாதது இன்று நடப்பதைக் காண்கின்றோம்... மிலாச்சி பாதிரியாருக்கே அவரிடம் உருவாகி இருந்த சக்தி தெரியாதிருந்திருக்கலாம். தனக்கே தெரியாதிருந்த அரிய சக்தியை அவர் உபயோகப் படுத்தியிருக்கலாம். இதற்குமுன் இது போன்று நடக்கவில்லை என்பது வீண்விவாதம். இதற்குமுன் நடக்காமலிருந்தது எவ்வளவோ இப்பொழுது நடைபெறுகின்றன. இதைப்பற்றி யோகிகளைக் கேட்டால் பிரயாசை எடுத்துக் கொண்டால் இயற்கை சக்தியால் யாராலும் இச்செயல்களை நடத்திக் காட்ட முடியுமென்றும் இச் செயல்கள் நடக்கின்றன என்றும் உறுதியாகச் சொல்வர். அவர்கள் இப்படிக் கூறுவதற்குக் காரணம், நம் எல்லோரிடத்தும் நம்மை அறியாமலே இத்தகைய சக்திகள் நிறைந்துள்ளன; அந்தச் சக்திகளை உணர்ந்து விட்டால் அவை நமக்கு அறிய செயல் விளைவிக்க உதவுகின்றன என்பதேயாகும். இமாலயத்தில் ராணிகட் எனுமிடத்தில் இப்படி ஒரு மாளிகை உருவாக்கப்பட்டதென்றும், மிலாச்சி பாதிரியர் செய்து காட்டியது போல் அது ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பறந்து செல்லவில்லை; ஆனால் ஓரே கணத்தில் உருவாக்கப்பட்டதென்றும், பல இரத்தினங்கள் இழைத்த கண்களைப் பறிக்கும் தங்கமயமான மாளிகை நாம் இருக்கும் உலகு எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாக இருந்ததென்றும் கூறப்படுகின்றது. இதைக் கேள்விப்பட்ட நான் இத்தகைய அரிய சக்தி ஆற்றலால் ஒன்றிரண்டு நிகழ்ச்சிகள் நிகழ்ந்தனவா என்பதை நேரில் விசாரித்து அறிந்து கொள்ளவே ஆசைப்பட்டேன். அவை எப்படி நடந்தன என்பது இருக்கட்டும். அவை இப்படி நடந்ததா என்பதைத் தான் நான் அறிய ஆசைப்பட்டேன்'' இதுதான் அவர் கூறியுள்ள விஷயம்.

மற்றோர் இடத்தில் அவர் மேலே கூறிய பொன்மய மாளிகையைப்பற்றிக் கூறும் புத்தகத்தைப் பற்றியே பேசுகின்றார். அவர் கூறுகின்ற சாரத்தையே கவனிப்போம். ''என்முன் 'ஒரு யோகியின் சுயசரிதம்' என்று கூறப்படும் நூல் ஒன்று உள்ளது... அது உண்மையில் கதைகளை, அபூர்வ கதைகளைக் கொண்டுள்ளது. மாலையில் இருட்டும் வேளையில் ஒரு அழகிய மாது ஆகாயத்தில் பறந்து வந்து ஒரு சீடருக்குமுன் தரையில் இறங்குகின்றார், கங்கைக் கரையில் அமைந்துள்ள பூமிக்கடியிலுள்ள குகையில் அவர் பேரானந்த வாழ்க்கை அமைந்துள்ளது. இமாலயத்தில் ஒரு மாளிகை உருவாக்கப்படுகின்றது....... ஒருமலை உச்சியிலிருந்து கிடு கிடு பாதாளத்திற்குக் குரு சொற்படி ஒரு சீடன் விழுகின்றான். அப்படி விழுந்து விட்டவனின் சிதைந்த உடலைத்

தூக்கிக் கொண்டு வர, உடனே அவன் உயிர் பெற்றெழுகின்ருன். ஒருவன் காலராவால் இறந்து ஏழுதுளி விளக்கெண்ணெய் கொடுக்க உயிர் பெற்றெழுகின்ருன்..........................
சித்துகளைப் போன்ற சக்திகள் இந்த வாழ்க்கையில் இல்லை என்று யாரும் நினைக்க நான் விரும்பவில்லை. எந்த அளவுக்கு நம் இயற்கை சக்திகளை வளரவைக்க முடியும் என்பதை அறிய முடியவில்லை என்பது எனக்கு நன்ருகத் தெரியும். நான் இப்போது சொல்லிக் கொள்ள விரும்புவது என்னவென்ருல் இத்தகைய சக்திகள் யோகிகளிடத்தில் உள்ளன என்பதற்குரிய அத்தாட்சிகள் இதுவரையில் நான் காணவில்லை என்பதே!

இந்தியாவிற்கே வந்து யோகியைத் தேடிச்சென்ற மேல்நாட்டுப் பாதிரியார் யோகியைப் பார்க்க முடியவில்லை என்கின்ருர். அதனுல் சித்துக்கள் ஆடிக்காட்ட வல்லவர்கள் உண்டா என்பதையே சந்தேகப்பட ஆரம்பித்தார். அவர் அபூர்வ கதைகள் கொண்ட புத்தகம் என்று வருணித்துள்ள 'ஒரு யோகியின் சுய சரிதம்' எனும் புத்தகத்தையே படித்துப்பார்த்தேன். பரமஹம்ச யோகானந்தா என்பவர் எழுதியுள்ள நூல்தாள் 'ஒரு யோகியின் சுய சரிதம்' எனும் புத்தகம். அவர் அமெரிக்காவில் லாஸ் ஏன்ஜல்ஸ் எனும் இடத்தில் தன்னை அறியும் ஸ்தாபனத்தையும் (Self Realisation Fellowship) இந்தியாவில் யோகாதா சத்சங்க சமூகம் (yogada Satsanga Society) என்பதையும் ஏற்படுத்தியவர். யோகானந்தா அவர்கள் (1893—1952) செரம்பூர் சாமி ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரியின் சீடர். கிரி அவர்கள் காகியோகி லகரி மகாசாயா அவர்கள் மகாவதார மெனக் கருதப்படும் பாபாஜீ அவர்களுடைய சீடர். பாபாஜி அவர்கள் இன்றும் இமாலயத்தில் இருபத்தைந்து வயது இளைஞரென மதிப்பிடத்தக்க தேஜோமய தோற்றம் கொண்டு வாழ்ந்து வரும் அமரத்வம் அடைந்த மகா அவதார புருஷர் என்று அறிகின்ருேம்.

இவர்கள் யாவரும் கிரியாயோகத்தை மக்களுக்கு எடுத்தோதி கற்பிக்க வந்தவர்கள் என்பதை இப்புத்கம் அறிவிக்கின்றது. புத்தக ஆசிரியர் யோகானந்தா அவர்கள் தம் வாழ்க்கையில் நேரில் கண்ட கேள்விப்பட்ட சித்தாடல் மிக்க தவப்பெரியார் பலரது அற்புதங்களையும் தொகுத்துரைக்கும் நூல் 'யோகியின் சயசரிதம்' என்பது. இந்த நூல் எடுத்துரைக்கும் சித்துக்களில் சில கற்பனையை மிஞ்சுவதாக இருக்கின்றன, ஆனுல் இதை ஆடிக் காட்டியவர்கள் யோகியர், சித்தர்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. சித்தர்களால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை என்று சொல்லக் கூடிய அளவுக்கு அவர்கள் செயல்கள் விளங்குகின்றன. இந்த அரிய சித்து ஆற்றல் மிக்க பெரியார்கள் அன்று மட்டும்

வாழவில்லை: இன்றும் நம் நாட்டில் வாழ்ந்து வருகின்றனர். இந்த நூலில் கூறியுள்ள சித்துக்களைப் பார்க்கும் போது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளை நினைக்காமல் இருக்கமுடியாது. சாமிகள் உற்சாக மிகுந்த வேளைகளில் ஆடி அருளுகின்ற சித்துக்களையே தான் இந்தப் புத்தகத்தில் குறிக்கப்பட்டுள்ள மகான்களும் செய்து காட்டியுள்ளனர். அதில் உள்ள பேராச்சரியம் விளைவிக்கும் அபூர்வப் பொருள்களையும் அவை விளைகின்ற அற்புத விதங்களையும் கண்டு மட்டும் நாம் ஆச்சரியப்படுவதோடு நின்று விடக்கூடாது. அவைகளில் பொதிந்துள்ள உட்கருத்துகளையும் உணர்ந்து மகிழ வேண்டும். இப்புத்ததத்தில் மகான்கள் காட்டிய பேரற்புதங்களையும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் இன்று ஆடிக்காட்டி அருளும் பேரற் புதங்களையும் ஊன்றி கவனித்துப் பார்த்தால் அவற்றில் பெரும் பாலன ஒத்திருப்பதைக் கவனிக்காமல் இருக்க முடியாது.

இந்த 'ஓர் யோகியின் சுயசரிதம்' எனும் புத்தகத்தில் ஒரு தங்க மாளிகை ஒரு கணத்தில் உருவான விபரம் விவரிக்கப்பட்டிருக்கின்றது. லகரிமகாசாயா எனும் இல்லற ஞானியை அவர் குரு பாபாஜி அவர்கள் தடுத்தாட்கொள்ள நினைத்தார். பாபாஜி தாம் இருக்கும் இடத்திற்கே அவரைப் பதவியிலிருந்தபடியே மாற்ற வைத்தார். ஒரு நாள் இமாலயத்திலேயே அவரைக் கண்டு ஆசியருளினார். அங்கேயே பல இரத்தினங்கள் வேய்ந்த தங்க மாளிகையைச் சீடருக்காக உடனடியாக எழச் செய்தார். கண்களைப் பறிக்கும் எழில்ததும்பும் இனிய காட்சிகள் கொண்டுள்ள மாளிகை உள்ளேயே தங்க ஆசனத்தில் குரு அமர்ந்து கிரியா யோகத்தை சீடருக்கு உபதேசித்தருளினார். சீடனுடைய உலக இச்சைகளை நசுக்குவதற்கு முன் சீடர் அவாவிய பொன்மய வாழ்க்கையைச் சீடருக்குக் காண்பித்துச் சீடரை மகிழ்வித்தார். அதன் பின் சீடரைப் பார்த்து 'நீ பசியோடிருக்கின்றாய். கண்களை மூடிக் கொள்' என்றார். அப்படியே செய்து சீடர் மறுபடியும் கண்களைத் திறக்க பிரமாண்டமாக வளர்ந்தெழுந்த கனக மாளிகை மறைந்து விட்டது. அது எதற்காக உருவெடுத்து வந்ததோ அந்த வேலை முடிய, மாளிகையும் மறைத்து விட்டதென்றார் குரு. தரையிலிருந்து ஒரு மண்பாண்டத்தை எடுத்துக் கொடுத்தார் குரு. வேண்டிய உணவுப் பொருள்கள் அள்ள அள்ள கிடைத்தன சீடருக்கு அவர் பசி அடங்குமட்டும்! யோகியின் சுயசரிதம் என்ற புத்தகத்தில் நான் படித்த இந்த விபரங்களைச் சாமிகளிடம் கூறி 'இப்படியும் நடக்குமா, சாமிகளே' என்றேன். சாமிகள் முறுவல் பூத்துப் பேச ஆரம்பித்தனர். "பன்றிமலையில் நம் தோட்டத்தில் வேலை செய்ய அரசாயி சிலம்பாயி மற்றும் சில பெண் பிள்ளைகளும் வருவதுண்டு. அவர்களுக்குத் தங்க நகை பேரில்

மிகவும் ஆசை. அவர்கள் வேலை செய்து முடித்தபின் ஓய்வு எடுத்துக் கொள்ளும் நேரங்களில் அவரவருக்கு விருப்பமான தங்க நகைகள் அவர்கள் உறுப்புக்களில் உடனே அமைந்துவிடும். வெறுங்கயிறு இருக்கும் கழுத்துக்களில் தங்க காசுமாலைகளும் தங்க சங்கிலியும் ஒன்றுமில்லாத மூக்கில் தங்க மூக்குத்தியும் காதில் தோடும் இடுப்பில் ஒட்டியாணமும் கைகளில் நிறைய வளையல் களும் இமைமூடித் திறப்பதற்குள் சேர்ந்து விடும். அவர்கள் வேலைக்கு மறுபடியும் புறப்படுவதற்குமுன், நகைகள் திடீரென்று வந்ததைப்போன்றே ஒரே நொடியில் மறைந்துவிடும். யோக மிருந்தால் எதுவும் நடக்கும் சாமி'' என்று திருவாய் மலர்ந் தருளினர் சாமிகள், உண்மைதான்! பெரியவர்களிடத்தில் சேருவதற் கும் பணியாற்றுவதற்கும் யோகம் வேண்டும். யோகமிருந்தால் எதுவும் நடக்கும்: சீடருக்குக் கனக மாளிகையும் பணிப்பெண் களுக்கு தங்க ஆபரணங்களும் கிடைத்துவிடும். உண்மைதான்! யோகமிருந்தால் எதுவும் நடக்கும்தான்! சீடருக்கு வெறும் மண் கிண்ணத்திலிருந்து வேண்டிய உணவும் கிட்டும். ஆத்மீகத் துறையில் அரும்பாடு பட்டு சாமிகளையே குருவென அடைந் துள்ள கவியோகிக்கும் சாமிகளுடைய குருவருள் கிடைத்து ஆத்மீகப்பசியும் தணிகின்றது. 1968ஆம் ஆண்டு முடிவில் சாமிகள் திருப்பதிக்குச் சென்றிருந்தார். கவியோகி சுத்தானந்த பாரதி யாரும் சாமிகளோடு சென்றிருந்தார். கவியோகி சீடருக்கு சாமிகள் மண்ணைக் கிள்ளி பருப்பும் அரிசியும் கொடுத்தார். சாமிகளுடைய பேராற்றல் சித்த நிலையை உணர்ந்த கவி யோகிக்கு ஆத்தமீகப்பசி அடங்கவில்லை போலும்! ''பசி'' என்றார். சாமிகள் உளம் கனிந்து 'கண்களை மூடிக் கொள்ளுங்கள்'' என்று கவியோகியைப் பார்த்துக் கூறி, ஒரு கவளமா, பல கவளங் கள் அமுதினுமினிய தயிர் சாதத்தை வரவழைத்துக் கவியோகிக்கு ஊட்டினர், சாமிகள் தம்முடைய திருப்படத்திற்கு முன் திருப்பதியில்.

ஒரு நாள் பாபாஜி அவர்கள் யோக குண்டத்திலிருந்த ஒரு நெருப்புக் கட்டையால் சீடர் ஒருவர் தோளில் சூடிட்டார். இதைக் கண்டு பதறிய லகரிமகாசாயவிடம் 'நான் இப்படிச் செய்யாவிடில் அந்த சீடர் அவர் கர்ம வினைப்படி அக்கினிக்கே பலியாகி இருப் பர். அவர் கர்ம வினையையும் அனுபவிக்கவேண்டும். அவர் உயிர் தப்பவும் வேண்டும் என்பதற்காகவே நான் அப்படிச் செய்தேன்'' என்றுகூறிக் காயமுற்றிருந்த இடத்தைத் தடவிக் கொடுத்துக் குணப் படுத்தினர் பாபாஜி. இன்றும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் எவ் வளவோ பேருக்கு ஆபத்து வேளையில் பிரத்தியட்ச தெய்வமாகத் தோன்றிக் காப்பாற்றுகின்றார். சேலம் வழக்கறிஞர் திரு. சீனிவாசன் குடும்பத்தார் கார் பயணம் செய்த போது ஒரு விபத்துக்குள்

ளார்கள். அந்த நேரத்தில் அவர்களைக் காப்பாற்றுவதற்கென்றே சாமிகள் அவர்கள் காரில் புறப்படும்போது ஒரு பூவை சீனிவாசப்பெருமான் விக்கிரமாக மாற்றி அளித்து 'அது ஆபத்து வேளையில் காக்கும்' என்றும் உவந்து கூறினர். அப்படியே அந்த விக்கிரகம் திரு. சீனிவாசன் குடும்பத்தினரை ஒரு பேராபத்தினின்றும் காப்பாற்றியது. விபத்து நடப்பது தவிர்க்க முடியாததொன்று. அந்த விபத்தும் நடக்கவேண்டும். அந்த விபத்திலிருந்தும் பக்தர்கள் காப்பாற்றப் படவேண்டும். அதைத்தான் சாமிகள் அருள் செய்துக் காட்டியது. சாமிகளிருக்க பயமேன்?

ஒருநாள் ஹிமாலய மலைஉச்சி ஒன்றில் இருந்த பாபாஜியிடம் ஒருவர் ஓடோடி வந்து தன்னைச் சீடராக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினர், தன்னை பாபாஜி சீடராக ஏற்காவிட்டால் கிடுகிடு பாதாளத்தில் விழுவதாகவும் பயமுறுத்தினர். 'சரி விழு' என்றார் பாபாஜி. உடனே விழுந்தார் அன்னியர். பாலாஜி சொல்படி கீழே விழுந்தவரின் சிதைந்த உடல் மேலே கொண்டு வரப்பட்டது. பாபாஜியின் திருக்கரம்பட மாண்டவர் மீண்டும் உயிர் பெற்றெழுந்தார். 'இப்போதுதான் நீர் சீடர் வாழ்க்கைக்குத் தகுதி பெற்றீர்' என்று பாபாஜி கூறி அவரைத் தம் சீடர் குழுவில் ஏற்றுக்கொண்டார். இதைப் பார்க்கும்போது இதைப் போன்றதொரு நிகழ்ச்சி சாமிகள் வாழ்க்கையிலும் நடந்துள்ளது நமது ஞாபகத்திற்கு வரும். ஆனல் நிகழ்ச்சியில் மதுரையில் சாப்பிட்டுப் கொண்டிருக்கும் சாமிகள் பலமைல்களுக்கப்பால் உள்ள நந்திமலை உச்சியிலிருந்து குடுகிடு பாதாளத்தில் விழ இருந்த ஒரு நபரைக் காப்பாற்றினர். சாமிகளையே அதற்முன் பார்த்திராத அவருக்கு சாமிகளிடைய இன்னருள் கிடைத்தது அவரது பாக்கியம் என்றுதான் சொல்லவேண்டும். மதுரையில் சாப்பிட்டுக் கொண்டிருந்த சாமிகள் திருக்கரம் நந்திமலையில் விழ இருந்த ஒருவரின் உயிரைக் காப்பாற்றிய விந்தையை எப்படிப் போற்றுவது!

பாபாஜி வரலாற்றில் மற்ருெரு சம்பவம். கங்கை நதிக்கரையின் அருகே உள்ள பூமிக்கடியில் உள்ள குகை ஒன்று திறக்க, அதிலிருந்து அழகான மாது ஒருவர் மேலே மிதந்து வந்தார். அவர் மாதாஜி என அழைக்கப்படும் பாபாஜியின் தெய்வீக சகோதரி. உடனே கங்கை நதிமேல் ஒருஜோதி ஓடிவந்தது. அது மாதாஜியை நெருங்கியவுடன் லகரிமகா சாயியாக உருப் பெற்றது. அடுத்தாற்போல் வானவீதி வழியாக மாதாஜியை அடைந்த ஒளி உரு பாபாஜி உருவமாக மாறியது. இம் மூவரும் கூடியது ஒரு முக்கிய விஷயமாக. பாபாஜி தம் உடலை விட்டு ஆத்மக் கடலில் கலக்கச் சித்த முற்றிருந்தார். ஆனல் மாதாஜி

அதை விரும்பவில்லை. மாதாஜி விருப்பப்படி பாபாஜி தம் உடலை விட்டு விடுவதில்லை யென்றும் தன் தொண்டைத் தொடர்ந்தே செய்து வருவதாகவும் உறுதியளிக்க இம் மூவரும் தாங்கள் வந்தது போலவே திரும்பிவிட்டனர். சாமிகளது இல்லற வாழ்க்கையிலும் அன்னையின் மொழிகளுக்கு முதலிடம் சாமிகள் கொடுத்து அன்னை இஷ்டங்களைப் பூர்த்தி செய்ததைப் பக்தர்கள் நன்கு அறிவர். அன்னை அவர்கள் மதுரையில்தான் நோயுற்றிருந்ததையும் பொருட் படுத்தாது பம்பாயில் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் ஒரு பக்தரைக் காப்பாற்ற சாமிகளைத் தம் முழு மனத்தோடு அனுப்பிவைத்த விபரங்களை அறிவோம். பாபாஜிக்கு வாய்த்துள்ள தங்கை மாதாஜியைப் போன்றே இல்லறத் தலைவர் சாமிகளுக்கு வாய்த்திருந்த இல்லறத்தலைவி அன்னையும் தொண்டையே பெரிதாக மதித்திடும் பெருந்தகையாளர். 'என்கடன் பணி செய்து கிடப்பதே, என்பதைத்தானே பெரியவர்கள் நிரூபித்து வருகின்றனர்.

## காசியோகி லகரி மகா சாயாவும் சாமிகளும்

காசியோகி லஹரி மகாசாயா ஓர் இல்லற ஞானி. அவர் ஆபீசில் வேலை செய்து கொண்டிருக்கும்போது அந்த ஆபீசில் வேலைபார்த்து வந்த ஒரு ஆங்கிலேயர் இங்கிலாந்தில் உடல்நிலை மோசமாக இருந்த தன் மனைவியை நினைத்துக் கொண்டு வருத்தத்தில் ஆழ்ந்திருந்தார். இதை அறிந்த லகரி மகாசாயா ஒரு தனிமையான இடத்திற்குச் சென்று வந்து "உம் மனைவி தேறி வருகின்றார். கவலைப்பட வேண்டாம். இப்பொழுது தங்களுக்கு ஒரு கடிதம் எழுதிக் கொண்டிருக்கின்றார்." என்று ஆங்கிலேயரிடத்தில் கூறிக் கடிதத்தில் என்ன எழுதி இருக்கின்றார் என்பதையும் அறிவித்தார். சில தினங்களில் அதே கடிதம் வந்தது. அந்த கடிதத்தில் மனைவி திருப்திகரமாக உடல் தேறிவருவதும் லகரி மகாசாயா கூறிய அதே வாசகங்களும் இருந்தவை ஆங்கிலேயரைப் பேராச்சரியத்தில் மூழ்கியது. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளும் கடல் தாண்டியுள்ள அயல் நாட்டினர் உடல் நிலையையும் அறிந்துரைக்கும் ஆற்றலைச் சென்னையில் சமீபத்தில் பக்தர்கள் கண்டதை சென்னை பக்தர் திரு. சீனிவாசன் அவர்கள் உரைக்கக் கேட்டேன். சென்னையில் டாக்டர் சுப்பையா அவர்களின் மகள் கல்யாணத்தில் பரதநாட்டியம் நடந்து கொண்டிருக்கின்றது. சாமிகளின் தெய்வீக ஆற்றலை அறிந்து கொண்டுள்ள ஒரு அயல் நாட்டு வர்த்தகர் சாமிகளை அணுகி அயல் நாட்டில் உடம்பு சௌகரியமில்லாமலிருந்த தம் சிநேகிதரைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். சாமிகள் சிறிதுநேரம் மௌனமாக இருந்தவர் பேச ஆரபித்தார்.

**சாமிகள் :** உமது நண்பருக்கு வலதுகால் வலதுகை உதவ வில்லை. பச்சை வாத நோய்வாய்ப்பட்டுப் படுத்திருக்கின்றார். இப்போது அவர் படுக்கைக்குப் பக்கத்தில் குட்டையான ஆள் வெள்ளையணியோடு நின்று கொண்டு பணியாற்றுகின்றார்.

**அயல் நாட்டினர் :** அந்த குட்டையான ஆள்.

**சாமிகள் :** அந்த குட்டையான ஆள் படுத்திருப்பவருடைய மனைவி.

இந்த விபரங்களைக் கேட்ட அயல்நாட்டுப் பக்தரின் வியப்பை அளவிட முடியுமா? சாமிகள் உரைத்தபடி அவருடைய நண்பரின் மனைவி குள்ளமாயிருப்பதும், நண்பர் வியாதியுற்றிருப்பதும் சாமிகள் நேரில் கண்டு உரைப்பது போலவல்லவா இருக்கின்றன. பல ஆயிரம் மைல்களுக்குப் கப்பால் இருப்பவர்களைக் காணமுடிகின்ற யோகியரின் மாண்பை வெகுநேரம் வியந்து போற்றினர் அயல்நாட்டுப் பக்தர்.

ஒரு சமயம் காசியோகி லகரி மகா சாயாவின் சீடர் இராமன் என்பவருக்குக் காலரா நோய்கண்டது. அவருடைய மற்றொரு சீடர் இராமனது ஆபத்து நிலையைக் குருவிடம் வருத்தத்தோடு தெரிவித்தபோது குரு 'ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம்' என்று கூறினர். ஆனால் இராமன் நிலைமை படுமோசமாக கடைசியில் உயிரும் உடலைவிட்டு நீங்கியது. யுக்தேஸ்வர் என்ற மற்றொரு சீடர் குருவிடம் நடந்ததைக் கூறிக் கதறி அழுதார். இதைக் கேள்வியுற்ற குரு பக்கத்தில் இருந்த விளக்கிலிருந்து விளக்கெண்ணெய் எடுத்துச் சென்று இராமன் வாயில் ஏழுதுளிகள் ஊற்றச் சொன்னர். அவ்வாறே செய்ய தூக்கத்திலிருந்தும் விழிப்பது போன்று இராமன் எழுந்து உட்கார்ந்து, "என்முன் லகரி மகா சாயா ஒரு ஜெகஜ்ஜோதியாகத் தோன்றினர். தூக்கத்தை விட்டு எழுந்திரு. யுக்தேஸ்வரருடன் வந்து என்னைப்பார்" என்று மற்ற மற்ற சீடரிடத்தில் பேசினர். இதைப் படித்த எனக்கு நமது குருநாதர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் திண்டுக்கல்லில் இருந்து கொண்டு பம்பாயில் சவமெனக் கிடந்த பக்தர் ஒருவருக்கு உயிரூட்டிய அற்புத நிகழ்ச்சி ஞாபகத்திற்கு வருகின்றது. செம்பூர் பக்தர் திரு. P. K. இரங்கராவ் இதய நோய்வாய்ப்பட்டு வைத்திய மனையில் சேர்க்கப்பட்டு வைத்தியர்களால் கைவிடப் பட்டதையும் அவர் உடலை வீட்டுக்கு எடுத்து வந்தையும், அவர் மகன் திண்டுக்கல்லுக்கு சாமிகள் உதவியைக்கோரி தந்தி அடித்ததும், சாமிகள் திண்டுக்கல்லில் திரு. S. சூரியமூர்த்தி வீட்டில் இராவுக்காக பூஜை செய்ததும், இராவ் அவர்கள் உயிர்பெற்

றெழுந்த விபரங்களும் ஏற்கனவே திரு. S. சூரியமூர்த்தி, திரு. இராவ் அவர்கள் வாயிலாகக் கேட்டிருக்கின்றோம். பம்பாயில் கட்டையாகக்கிடந்த இராவ் அவர்களும் சாமிகள் குரல்கேட்டல்லவா, சாமிகள் திவ்விய தெய்வீக மணம் கமழும் திருநீறு நெற்றியில் பட உணர்ந்து விழித்தெழுவது போல அன்று உயிர்பெற்றெழுந் தார். இதுபோன்றே சாமிகளுடைய தெய்வீக விபூதி சில பக்தர் களை உயிர்பெற்றெழவைத்த அற்புதங்களையும் படித்திருக்கின்றோம். பெரியவர்கள் அருள்பாலித்தால் போன உயிர் மீண்டும் வரு கின்றது. மருந்து கொடுத்தால் தானே பிணி தீருகின்றது. அது தான் உலக வழக்கம். இந்த வழக்கத்தை அனுசரித்துதான் விளக்கெண்ணெய் சொட்டுகளும் லகரி மகாசாயா அவர்கள் கொடுத்தார்; விபூதிப் பிரசாதத்தை ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அருள்கின்றார். ஆனால் உண்மையில் நிரந்தர தூக்கம் போன் றுள்ள சாக்காட்டிலிருந்தும் இவர்களை மீட்டித் தட்டி எழுப்ப உதவு வது பெரியவர்களின் அருள் ஒன்றே!

**'ஓர் யோகியின் சுய சரிதத்'தில் வரும்**
**சில யோகிகளும் நமது சாமிகளும்**

காசி சாமி பிரணபானந்தா என்பவர் ஒரே சமயத்தில் இரு இடங்களில் காட்சியளிக்கவல்ல சக்திபெற்றவர். ஓர் யோகியின் சுயசரிதம் எழுதிய பரமஹம்ச யோகானந்தாவோடு இவர் பேசிக் கொண்டிருக்கும்போதே வெகுதூரத்திற்கப்பால் கங்கை நதியில் குளித்துக்கொண்டிருக்கும் கேதர்நாத் பாபு என்பவரையும் கண்டு பேசி யோகானந்தாவின் பெருவியப்பை அள்ளிக் கொண்டார். இன்று ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஒரே சமயத்தில் இரண்டு இடங்களில் காட்சியளிப்பதை நாம் பலபக்தர்கள் சொல்லக்கேட்டு இன்புற்றிருக்கிறோம். 'ஒரே இடத்தில் இரு இடங்களில் சாமிகள்' என்ற தலைப்பிலும் 'இடம் விட்டு இடம் தோன்றும் அற்புதம்' என்ற தலைப்பிலும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் பல இடங்களில் ஒரே சமயத்தில் காட்சியளிப்பது படித்து மகிழ்வுற்றிருக்கின்றோம். பர்துவானில் குடியிருந்தவர் கந்தபாபா எனும் யோகி. அவர் நினைத்தால் மணமற்ற மலருக்கு மணமளிப்பர், வாடிய புஷ்பத்தை வளமாக்கிவிடுவர்; ஒருவர் உடம்பிலிருந்து சுகந்த பரிமளம் எழுப்பி விடுவர். அவர் நினைத்த மாத்திரத்தில் வெறுவெளியிலிருந்து தன் கையில் பழங்களையும் வரவழைத்துக் கொடுப்பர். இவரை யோகானந்தா அவர்கள் பார்த்தபோது அவர் உள்ளங் கையி லிருந்து ரோஜாமணம் எழுப்பினர் கந்தபாபா கையைத்தொடாமலே! பூக் கிண்ணத்திலிருந்த ஒரு வாசமில்லா மலருக்கு யோகி யோகானந்தா இஷ்டப்பட்டபடி மல்லிகை வாடை ஊட்டினர்.

இந்த சித்தாடலைக் கந்தபாபா ஆயிரம் வயதுக்கு மேற்பட்ட ஒரு திபத்துநாட்டு சாமியாரிடமிருந்து தெரிந்து கொண்டாரென்றும் யோகானந்தா அறிந்தார். இன்று ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் உற்சாகம் பெருகும்போதெல்லாம் அடிக்கடி ஆடிக்காட்டும் அற்புதங்களில் பழங்களை வருவித்தலும் குறிப்பிட்ட மணங்களை எழுப்புவதும் முக்கியமானவைகள். சாமிகள் தொட்டால் மணக்கும்; தொடாமலும் மணம் குறிப்பிட்டவர் கையிலிருந்து தானே உண்டாகும். சமீபத்தில் கும்பகோணத்தில் ஜனுப் ரஜாக் அவர்கள் வீட்டில் ஒரு பிளாஸ்டிக் பூவிற்கு சாமிகள் மணம் கொடுத்த அற்புதத்தை அன்பர்கள் மறக்கமுடியுமா? சாமிகள் உளம் கனிந்து கனி அருளும் அற்புதத்தையும் 'கனி அருள் சாமிகள்' என்ற தலைப்பிலும் 'தொட்டால் மணக்கணும் சொன்னால் பலிக்கணும்' என்ற தலைப்புகளிலும் படித்தின்புறலாம்.

வங்காளத்தில் யோகி ஒருவர் இருந்தார். அப்சல்கான் என்பவர் அவர். அவர் இந்து மகான் ஒருவர் அருளால் இருபது வருடங்கள் யோக மார்க்கத்தில் பயின்று சில சித்திகளை அடைந்தார். ஆனால் சித்திகளை அடைந்த அளவில் அதுவே தான் கண்ட சொர்க்கம் என்று மயங்கித் தன் சித்தியிலேயே மனத்தை நிறுத்திவிட்டார். ஆத்மீக உயர்வுக்கு மனத்தை செலுத்தவில்லை. அவர் எந்தப் பொருளைத் தொட்டுத் திருப்பி வைத்துவிட்டாலும் அந்தப் பொருள் மறைந்துவிடும். நகைக் கடையில் உள்ள நகைகள் அவர் கைப்பட்டுவிட்டால் திரும்பி இருந்த இடத்தில் வைக்கப்பட்டாலும் மறைந்து விடும். ஒருநாள் யோகானந்தாவின் குரு யுக்தேஸ்வரர் அந்த யோகியைக் காணச்சென்றார். ஒரு தோட்டத்திலுள்ள ஒரு கல்லை யுக்தேஸ்வரர் கையெழுத்தோடு எதிரில் ஓடும் கங்கை நதியில் வீசி எறியச்சொன்னார் யோகி. அப்படியே செய்தார் யுக்தேஸ்வரர். இது முடிந்தவுடன் ஒரு கிண்ணத்தில் கங்கை நீரைக் கொண்டுவரச் சொன்னார் யோகி. அப்படியே செய்தார் யுக்தேஸ்வரர். உடனே அந்த யோகி "ஹஜ்ரத், அந்தக்கல்லை இந்த கிண்ணத்தில் போடு" என்று கூற யுக்தேஸ்வரர் கையெழுத்துக் கொண்டகல், சற்றுமுன்னால் நதியில் எறியப்பட்டது, உடனே கிண்ணத்தில் தோன்றியது. எதைச் செய்வதாயிருந்தாலும் அந்தயோகி 'ஹஜ்ரத்' என்ற ஒரு தேவதையை அழைத்துக் கட்டளை இடுவார். உடனே அந்த வேலை முடிந்துவிடும். இவருக்கு இந்த சக்தி நெடுநாள் நிலைக்கவில்லை; காரணம் அவர் அதைச் சொந்த நலனுக்கே பயன்படுத்திக்கொண்டதே. கல் நதியில் மறைந்து கிண்ணத்தில் கிடைத்த விபரத்தை அறியும்போது இதே மாதிரி நிகழ்ச்சி சாமிகளது வாழ்க்கையில் மலாக்காவில் திரு. சி. எம். சேத் (ஜி. பி.) பங்களாவில் நடந்ததும் நமது ஞாபகத்திற்கு வருகின்றது. இங்கு

மறைந்தது ஒரு வைரமோதிரம்; கடலுக்குள் வீசியெறியப்பட்ட வைர மோதிரம் பால் கோப்பையில் மாளிகையில் கிடைத்துவிட்டது. இப்படியே பல பொருள்களை, அசைக்க முடியாத தெய்வீக பலம் கொண்டவை என்று சொல்லக் கூடியவைகளையும் சாமிகள் தொட்டும், தொடாமலும் மறையவைத்து மீட்டிக் கொடுப்பதை 'மோதிரத்தால் அற்புதம்' என்ற தலைப்பிலும், 'பொருளை மறைய வைத்து மீட்டி அருளும் அற்புதம்' என்ற தலைப்பிலும் படித்து மகிழலாம். சாமிகள் யோகத்தின் பயனை அடைந்தவர். ஈசனுடன் இரண்டறக்கலந்தவர். மேல்நிலை அடைந்த பயன்தான் சித்துக்கள் அவர் சொற்படி நடக்கின்ற ஒருநிலை. சாமிகள் சித்துக்களுக்கு அடிமையல்ல: சித்துக்கள்தான் சாமிகளுக்கு அடிமை. எல்லாம் வல்ல முருகப்பிரானே சாமிகளுக்கு உளங்கனிந்து பணியாற்றுகின்ருன். அதனாலன்றோ அவருடைய ஆத்மீக சக்தி நாளுக்குநாள் வளர்பிறைபோல் வளர்ந்து கொண்டே செல்கின்றது! பல மக்களுக்கு அவரது அருள் கிட்டுகின்றது; பல நன்மைகள் நடக்கின்றன!

புலிச்சாமி என்பவரைப் பற்றியும் யோகானந்தா தன் புத்தகத்தில் விவரிக்கின்ருர். புலிச்சாமி சன்யாசியாவதற்குமுன் பல புலிகளை வென்ருர். அவர் புலிகளைப் பூனைக்குட்டிகளாக மதித்துத் தன் பலமிக்க கைகளாலும் எதையும் எதிர்க்கவல்ல தைரியத்தாலும் புலிகளுடன் சண்டை செய்து அவைகளை அடக்கி ஆண்டார். இவருடைய கையின் சக்தியைக் காண்பிக்கச் சுவரில் ஓரடி ஓங்கி அடித்தார் தன் கையால்; சுவரிலிருந்து ஒரு செங்கல் சிதறிக் கீழே விழுந்தது. இவர் மனதிலுள்ள புலிகளை அடக்குவதற்குமுன் காட்டில் உள்ள புலிகளை அடக்கிப் புலிச்சாமி என்ற பெயர் பெற்றிருந்தார். இவருடைய புலிச்சண்டை அட்டகாசத்தை ஒழிப்பதற்கென்றே ஒரு சாமியார் நடக்கப்போவதை உரைத்தார். 'அடுத்த புலிச்சண்டைதான் உன்மகனின் கடைசிப் புலிச்சண்டை. அதில் படுகாயம் பட்டு ஆறு மாதம் கடும் நோய்வாய்ப்பட்டு அதன்பின் உன்மகன் ஒரு சன்யாசியாவார்' என்று அவர் தகப்பனிடம் எச்சரித்தார் ஒரு சாமியார். அவர் சொன்னபடியே நடந்தது. கூச்பிகார் இளவரசருடைய கோரப் புலியுடன் சண்டையிட்டது சாமியார் சொல்படியே முடிந்தது. இதைப் படிக்கும்போது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் பாம்புசாமி என்பவரைப் பற்றிக் கூறியது நினைவுக்கு வருகின்றது. இந்தப் பாம்புசாமி என்பவர் எப்பேர்ப்பட்ட பாம்பாயிருந்தாலும், நாகமாயினும் சரி, சாரைப் பாம்பாயிருந்தாலும் சரி அது கொஞ்ச தூரத்திலிருக்கும் போதே அதை மிக கெட்டிக்காரத்தனத்துடன் தலையில் கழுத்தில் கை வைத்துப் பிடித்து வளைத்து அடித்து பாம்பு மயங்கிக் கிடக்கும்படி செய்துவிடுவதில் சமர்த்தர். அதனால் அவரைப் பாம்புசாமி என்று மக்கள் அழைக்கலாயினர். அவருக்கும் அஞ்சாநெஞ்சமும்,

குறி தவருது பாம்பு கொஞ்ச தூரத்தில் இருக்கும்போதே அதைப் பிடிக்கவேண்டிய இடத்தில் பிடித்து அடிக்கவேண்டிய இடத்தில் அடித்து வீழ்த்துவதில் உள்ள திறனும்தான் அவர் வெற்றிக்குக் காரணமாயிருந்தன. வீணுகப் பாம்புகளுக்குத் தொந்தரவு கொடுத்துவந்த இவருக்கும் சாமிகள் ஒருபாடம் கற்பிக்க விரும்பினர். 'எந்தப் பாம்பாயிருந்தாலும் அடக்கிவிடுவேன்' என்று வீராப்புப் பேச்சு பேசிய இவரிடம் சாமிகள் ஒரு பாம்பை வரவழைக்கப் போவதாகக் கூறினர். பாம்புசாமி மிக ஆவலோடு சற்று தூரத்தில் பாம்பு வரும் என்பதை மிக எச்சரிக்கையாகக் கவனித்துக் கொண்டிருந்தவர் அங்கம் திடீரென்று நடுநடுங்க ஆரம்பித்து வாய் குழற ஆரம்பித்தது. காரணம் அவர் மடிக்குள் ஆடைக்குள்ளேயே ஒரு பாம்பு நெளிவதுபோன்று இருந்தது. அவர் பாம்பைப் பிடிக்கவேண்டுமென்ருல் பாம்பு சற்று தூரத்திலிருந்தால்தான் முடியும். ஆனுல் சாமிகள் உரைத்த பாம்பு அவர் உடலிலேயே தோன்றும் என்பதை அவர் எதிர்பார்க்கவில்லை. அவர் பயத்தைக் கண்ட சாமிகள் தன் ஆற்றலை பாம்பு நெளிவது போன்ற உணர்ச்சியேற்படுத்தியதோடேயே நிறுத்திக்கொண்டனர். அவர் பயத்தை நீக்க திருநீறும் உவந்களித்தார். அன்றிலிருந்து பாம்புசாமியார் பாம்புகள் இருக்கும் இடத்தைக்கூட ஏறிட்டுப் பார்ப்பதில்லை என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஜீவவதை கூடாது என்பதைத் தானே பெருமகான்கள் மற்றவர்களுக்கு எடுத்தோதி வருகின்றனர், காரியத்திலும் செய்து காட்டுகின்றனர்.

'ஓர் யோகியின் சுயசரிதம்' என்ற புத்தகத்தில் இன்னும் பல யோகிகளின் சித்திகள் விளக்கப்பட்டிருக்கின்றன. தாராகேஸ்வரம் அருகாமையில் உள்ள ரான்பஜ்பூரில் உள்ளவர் இராம் கோபால் மஜீம்தார் எனும் யோகி. இவரைத் தூங்காத சாமி என்பர். இவரைக் காணவும் இமாலயத்திற்கே சென்று யோகிகளைக் காணவும் ஆசைப்பட்டார் யோகானந்தா அவர்கள். "மலைகள் உன்னுடைய குருவாக முடியாது. நீர் ஏன் உம் குருநாதரை விட்டு ஓடிவந்தீர். உமக்கு வேண்டுவன அவரிடம் உள்ளன. அவரையே போய்ச் சேரும்" என்று கூறிய இந்த யோகி, யோகானந்தரைக் கண்டு 'கடவுள் எங்கிருக்கிருர்' என்ற கேள்வியும் கேட்டார். 'என்னுள் இருக்கிருர் எங்கும் இருக்கின்ருர்' என்ற விடையை யோகானந்தா அளிக்க, 'பின் ஏன் தாராகேசுவர கோவிலில் உள்ள கடவுள் சிலையைக் கண்டு வணங்கவில்லை' என்ற கேள்வியும் கேட்டு யோகானந்தாவை வியப்புறச் செய்தார் யோகி. அவர் 12 வருடங்கள் அனுதினமும் 8 மணி நேரம் தியானத்தில் இருந்ததாகவும், அதன்பின் 25 வருடங்கள் தினந்தோறும் 20 மணி நேரம் யோகத்தில் தனியாக ஒரு குகையில் இருந்ததாகவும், தான் உறங்குவதில்லையென்றும் கூறினர். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளிடம் பழகிவருகின்ற பக்தர்

களுக்கு அவர் இரவில் நெடுநேரம் அருள்பாலிப்பதும், ஆன்மநேய ஒருமைப்பாட்டுப் பேச்சில் திளைத்திருப்பதும் நன்கு தெரியும். அநேகமாக அவர்கள் பக்தர்களோடு கூடி இருக்கும்போதெல்லாம் இரவு இரண்டு மணி, மூன்று மணிவரை ஆன்மீகச் சொல்லாடல் புரிந்து கொண்டிருக்கின்றார். இப்படி நீண்டநேரம் விழித்திருந்த சாமிகள் காலையில் யாவரும் எழுந்திருப்பதற்கு முன் தயாராகி காலை 5 மணி, 6 மணிக்கெல்லாம் தரிசனம் கொடுத்துக் கொண்டிருப்பர். சாமிகளுடைய திருமுகத்தில் நீண்டநேரம் விழித்திருந்ததற்குரிய அடையாளங்கள் — சோர்வு, முகவாட்டம், கண் சிறுத்திருத்தல், தூக்க சாயல் — ஒன்றுமே இருக்காது. அன்றலர்ந்த தாமரை மலர்போன்ற திருமுகத்தில் உள்ள திருநயனங்கள் பக்தர்களைக் கண்டவுடன் சூரியனைக் கண்ட செந்தாமரையைப் போன்று விரிந்து விளங்கி ஆனந்தம் பொழிய ஆரம்பித்துவிடும். சாமிகள் படுத்திருக்கும் அறையில் வேறொருவரும் படுத்துக்கொள்வதில்லை. சாமிகள் உண்மையிலேயே இரவில் உறங்குகின்றார்களா என்பதே சந்தேகமாக இருக்கின்றது. பகலிலும் சாமிகள் உற்சாகமிருந்து பேசுகின்ற நேரத்திலும் பக்தர்கள் பேச்சு மும்முரத்தில் உரத்தி வாதமிடும் சந்தர்ப்பங்களிலும், பக்தர்களின் கீதாமிர்தத்தை கேட்டனுபவித்துக் கொண்டிருக்கும் போதும், காரில் செல்கின்றபோதும் திடீரென்று கண்களை மூடிக்கொண்டு சிறிது நேரம் ஒன்றும் பேசாதிருப்பர் சாமிகள். தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்குச் சாமிகள் உட்கார்ந்து கொண்டு தூங்குவது போல இருக்கும். இரவிலேயே தூங்காத சாமிகளா பகலில் தூங்குவர்! அவர் முகத்தையும் திருமேனியையும் அந்த நேரத்தில் காண்பவருக்குச் சாமிகள் ஒரு சுகத்தை அனுபவித்துத் தூங்குவது நன்றாகத் தெரியும். அது எத்தகைய தூக்கத்தின் சுகம்? சாமிகள் தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவதையல்லவா நாம் காண்கின்றோம். சாமிகள் ஒரு யோகி. எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் யாருடன் இருக்கும்போதும் யோகத்தில் ஆழ்ந்து விடுவர். இப்படிச் சும்மா இருக்கின்ற சாமிகள் நிலையைச் சரியாக உணராத சில பக்தர்கள் சாமிகளைத் தூங்குவதாக நினைத்துக் கொண்டு தொந்திரவு கொடுக்கவேண்டாம் என்று நினைக்கும் போதும் சாமிகள் உடனே கண்களைத் திறந்து பக்தருக்கு உடனடியாகத் தேவையான பதிலைத் தாமதமில்லாது அளித்துவிடுவர். ஒரு நாள் சாமிகள் திண்டுக்கல்லிலிருந்து திருச்சிக்குக் காரில் வந்து கொண்டிருக்கின்றார். சாமிகள் கண்களை மூடிக்கொண்டு தியானத்தில் ஆழ்ந்துவிட்டார். அவருக்குத் தொந்திரவு கொடுக்க நாங்கள் விரும்பவில்லை. திருச்சி அடைந்துவிட்டோம். திருச்சியில் எந்த இடத்திற்கு முதலில் செல்லவேண்டுமென்று கேட்க ஆவல். ஆனால் சாமிகளுக்குத் தொந்திரவு கொடுக்க நாங்கள் விரும்பவில்லை. சாமிகள் விரும்பிய ஒருஇடத்திற்குக் கார் செல்லாது வேறு ஒருஇடத்திற்குச் செல்வதைக் கண்களை மூடியிருந்தவாறே தெரிந்து கொண்ட

சாமிகள் உடனே தம் திருவிழிகளைத் திறந்து தான் விரும்பிய இடத்திற்கே ஓட்டும்படி பணித்தார். இப்படி இருக்கின்ற சாமிகளையும் யோகிகளையும் ஓர் யோகியின் சுய சரிதத்தில் விவரிப்பது போல தூங்காத சாமி என்று விவரிப்பதைவிட 'தூங்காமல் தூங்கி சுகம் பெறும் சாமிகள்' என்று போற்றுவதல்லவா பொருத்தமாக இருக்கும்!

திரைலிங்க சாமி பிரசித்தி பெற்ற ஒரு யோகி. லகரி மகா சாயாவும் அவரும் ஆன்மநேய நண்பர்கள். அவரைப் பற்றி எவ்வளவோ சித்துக்கள் உரைப்பர். அவர் நிர்வாண சாது. அவரைப் போலீசார் ஒரு நாள் சிறையில் வைத்தனர். இந்தப் பெரிய யோகி சரீரமும் பெரியது. சிறிது நேரத்திற்கெல்லாம் இவர் சிறைக்கட்டிட கூரைமீது அமர்ந்திருப்பதைக் கண்டு கலவரமடைந்தனர் போலீசார். பூட்டியிருந்த சிறைக் கதவு பூட்டியபடியே இருந்தது. கூரையிலிருந்து இறக்கி மறுபடியும் இவரைச் சிறையில் அடைத்துப் பூட்டினர். ஒரு போலீஸ் காவலையும் ஏற்படுத்தினர். பூட்டி இருந்த சிறை அறையையும் விட்டுக் காவலையும் மிஞ்சி மறுபடியும் சாமி சிறைக்கட்டிடக் கூரை மீது அமர்ந்திருப்பதைக் கண்ட மக்கள் வியப்பை அளவிடமுடியுமோ? ஒரு இடத்தில் அடைத்துவைக்க மறு இடத்தில் காணப்படும் அதிசயம் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் வாழ்க்கையில் பலதரம் நடந்திருக்கின்றது. சாமிகளை அடைத்து வைப்பதற்குக் காரணம் வேறு: சாமிகளை அடைத்து வைப்பவர்களும் வேறு. "இப்படியும் நடக்குமா?" என்று சந்தேகப்படுபவர்களின் சந்தேகத்தை நீக்கவும் எல்லாம் வல்ல சித்தர்களால் ஆகாத தொன்றில்லை என்பதைப் பக்தர்களுக்கு விளக்கிக் காட்டவே சாமிகள் உற்சாகமிகுந்து இந்த அற்புதத்தை ஆடிக்காட்டுகின்றார். சாமிகளின் பக்தர்களே சாமிகள் விருப்பப்படி சாமிகளைப் பன்றிமலையில் ஸ்மித் துரை அவர்களுக்கு முன் ஒரு தூணில் கட்ட மற்றொரு தூணில் சாமிகள் இமைப் பொழுதில் மாறி அதே கட்டப்பட்ட நிலையில் காட்சியளித்ததும் படித்திருக்கின்றோம். டெல்லியிலும் சாமிகளைப் படுக்கை அறையில் பக்தர்கள் அங்கிருந்த ஒரு ஜன்னல் கம்பிகளில் இறுகக் கட்டினர். சிறிது நேரத்திற்கெல்லாம் சாமிகள் பூஜை அறையிலிருந்து பக்தர்களை அழைத்ததும் நாம் அறிவோம். பழநியில் ஒரு தரம் சாமிகள் பூஜை செய்வதற்காக ஒரு விட்டில் தங்கினார். தான் பூஜை செய்வது பக்தர்களுக்குச் சாப்பாட்டிற்குத் தடையாயிருக்கக் கூடாதென்று தான் பூஜை செய்ய தங்கிய வீட்டைப் பூட்டி விட்டு பக்தர்களைச் சாப்பாடு நடக்கும் வேறு வீட்டிற்கு சாமிகள் அனுப்பி வைத்தார். என்ன ஆச்சரியம்! பக்தர்கள் வேறு வீட்டிக்குச் சாப்பாட்டுக்குச் சென்ற போது, தாம் பூட்டி விட்டு வந்த வீட்டுள் பூஜைக்காக தங்கிய சாமிகள், சாப்பாடு நடக்கவிருக்கும் வேறு வீட்டில் பக்தர்கள் வருவதற்கு முன்பாக வந்து விட்ட விபரங்களும் அறிவோம்.

இப்படி எவ்வளவோ அற்புதங்கள் சாமிகள் ஆடி இருப்பது எவ்வளவோ பக்தர்கள் அறிவர்! அன்று திரைலிங்க சாமி எவ்வளவோ வகை சித்துக்கள் ஆடி மக்கள் மனதை கொள்ளை கொண்டார்; இன்று ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் எவ்வளவோ விதமான அற்புதங்கள் ஆடிக் காட்டி பக்தர்கள் உள்ளங்களுக்கு தெய்வீக ஆற்றலைப் பற்றிய தெளிவு ஞானத்தை அருளுகின்றார்.

திரைலிங்க சாமிகளின் அற்புதங்களை தான் எழுதியுள்ள 'ஓர் யோகியின் சுயசரிதத்தில்' விவரித்துள்ள யோகானந்தா அவர்கள் தென் இந்தியாவில் பிரபலமாக இருந்த சித்தர் சதாசிவபிரம்மத்தைப் பற்றியும் போற்றி எழுதி உள்ளார். சதாசிவபிரமம் அவர்கள் ஆடி அருளிய சித்துக்களில் ஒன்றைப் பார்ப்போம். ஒரு நாள் 150 மைல் தூரத்தில் இருக்கும் மதுரை உற்சவத்திற்குப் போக ஆசைப்பட்டனர் சதாசிவ பிரமம் அவர்களைச் சூழ்ந்திருந்த கிராமத்துக் குழந்தைகள். யோகியின் இஷ்டப்படி குழந்தைகள் யோகியின் உடலைத் தொட்டனர். அடுத்த கணம் அவ்வளவு குழந்தைகளும் மதுரையில் நடக்கும் விழாவிற்கே சென்றுவிட்டனர். விழாவைக் கண்டு இன்புற்ற சிறுர்கள் மறுபடியும் யோகியின் அருளால் ஒரு கணத்தில் தம்மூர் அடைந்தனர். இவர்கள் உரைத்த விந்தைப் பயணத்தையும் இவர்கள் கொண்டு வந்த மதுரைப் பலகாரங்களையும் கண்ட பெற்றோர்களின் வியப்பை விவரிக்க முடியுமோ? தாமே ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு இமைப் பொழுதில் செல்லக்கூடிய ஆற்றல் பெற்ற பெரியவர்கள் மற்றவர்களையும் மற்றோரிடத்திற்கு இமைப் பொழுதில் செல்ல வைக்கக் கூடிய பேராற்றலை என்னென்றியம்புவது! அன்று சதாசிவபிரமம் நடத்திக் காட்டிய பேரற்புதம் போன்றே இன்று ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் பெரு மனிதர்களையே ஒரு இடம் விட்டு மற்றொரு இடம் சென்று அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளைக் கண்ணாரக் கண்டு வரச் செய்கின்றார். டெல்லியில் இருந்த சைனுக்காரர் ஒருவருக்கு கல்கத்தாவில் இருந்த அவருடைய ஆசைப் பெண்ணைக் காட்டி டெல்லியில் பூஜை அறையிலிருந்து உவகை பொங்கும் சைனுகாரரைச் சாமிகள் அழைத்து வந்த அற்புதத்தை நாம் மறக்க முடியுமா? இலக்கியங்களே கண்டிராத புதுமையை சேலம் திருமதி. இந்திரா அவர்களுக்குக் காட்டி, அவரை மணந்து கொள்ளும் மணாளரையே சேலத்தில் அவர் வீட்டு பூஜை அறையில் வெகுதூரத்திலிருந்து காண்பித்த புதுமையை நாம் மறக்கமுடியுமா? இந்த அற்புதத்தைத் திருமதி. இந்திரா அவர்கள் விவரித்துரைத்ததையே நாம் படித்து மகிழ்ந்திருக்கிறோம். திருமதி. இந்திரா அவர்களே சாமிகள் இதைப் போன்று ஆடிய பேரற்புதங்களைப் பற்றிக் கூறுவதையே கேட்போம்.

இந்திரா : இங்கு ஒரு மின்சாரப் பொருள் விற்கும் கடையில் வேலை செய்து வரும் ஜான் என்பவரைச் சாமிகள் இத்தாலிக்கு அனுப்பி வைத்தார். அங்கு அவர் தான் யுத்தப் பணியில் இருந்த போது பத்து வருடங்களுக்கு முன் இருந்த இடங்களுக்குச் சென்றும் பழக்கமானவர்களைப் பார்த்துக் கொண்டும் மூன்று மணி நேரம் கழித்தார். இவை நடக்கும்போது ஜான் அவர்கள் தரையில் ஒரு விதமான மயக்கத்தில் இருந்தது போன்று காணப்பட்டார். இவை நடக்கும்போது ஸ்ரீ சாமிகள் இத்தாலியில் உள்ள சீதோஷ்ண நிலையையும், ஜான் அவர்கள் என்னென்ன செய்து கொண்டிருக்கின்றார் என்பதைப் பற்றியும் உரைத்துக் கொண்டிருந்தார். சாமிகள் சொன்ன அவ்வளவு விஷயங்களையும் ஜான் அவர்கள் தன் சுய நிலைமைக்கு வந்தஉடன் உறுதிப்படுத்தினார். மற்றொரு சமயம் கைலாய மலைக்கே ஒரு வயதான தெய்வ பக்தியுள்ள ஒருவரைச் சாமிகள் அனுப்பி வைத்தார். இந்த முறை அவரை உடம்போடேயே அனுப்பி வைத்தார் சாமிகள். அந்த வயதானவர் திரும்பி வந்தபோது அவர் உடம்பு குளிரால் நடுங்கிக் கொண்டிருந்தது. அவருடைய தலைமயிரில் ஜில்லிட்ட தண்ணீர்த் துளிகள் இருந்தன. அவர் புனிதமான மலையைக் கண்ட பேரின்ப நிலையில் லயித்திருந்தார். இது நடக்க ஒரு சில நிமிடங்களே ஆயின.

பெரியவர்கள் மனம் வைத்தால் உலகத்தில் நடக்க முடியாதனவற்றை நொடிப் பொழுதில் சாதித்துக் காட்டுகின்றனர். அன்று உற்சவத்திற்குச் சிறார்களை மதுரைக்கே அழைத்துச் செல்ல சதாசிவப்பிரமம் இருந்தாரென்றால் இன்று கைலையங்கிரிக்கு ஒரு பக்தரை அழைத்துச் செல்ல ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளே அருள் பாலிக்கின்றார்.

இவ்வளவும் ஆடி அருளுகின்ற பேராற்றல் படைத்துள்ள சாமிகளைப் பார்க்கும் போது, ‘இவரா இப்படியெல்லாம் செய்கின்றார்’ என்று தோன்றுவது இயற்கை. ஏனென்றால் சாமிகளிடத்தில் ஆடம்பரம், கர்வம், தற்புகழ்ச்சி, தற்பெருமை அறவே கிடையாது. அமைதியும், அருளும், எளிமையும், இனிமையும் சுரந்துள்ள சாமிகள் ஒன்றுமறியாதவர் போன்றே எல்லோரிடமும் அன்போடு பழகி அருளுதவி புரிந்து அற்புதப் பணியாற்றி வருகின்றனர்.

‘லாப்சங் ரம்பா – மூன்றாவது கண்’ எனும் நூல் திபேத்து நாட்டில் 7 வயதிலிருந்து பெரிய ஆசிரியர்களிடத்தில் ஒரு மதஸ்தாபனத்தில் ஒருவர் சாதாரண மனித அறிவுக்கு அப்பாற்பட்ட சக்திகளைக் கற்றுக்கொள்ளும் அனுபவங்களைக் கொண்டுள்ள புத்தகம். அறிவும் ஆற்றலும் நிறைந்த போதிய அனுபவம் நிறைந்தவர் சிலருக்கே நெற்றியில் மூன்றாவது கண்ணைத் திறக்க ஒரு ஆபரேஷனே

நடத்தப்படுவதைச் சித்தரிக்கும் நூல். அட்டையிலும் ஒருவர் முகத்தில் மூன்ருவது கண் நெற்றியில் பொருத்தப்பட்டது போன்ற படம் ஒன்றுள்ளது. மூன்ருவது கண் திறக்கப்பட்டவர்கள் மற்றவர்கள் நினைப்பதையும், இன்பதுன்பங்களையும் வியாதிகளையும் நன்ருகப் பார்க்க முடியும் என்றும் இந்நூல் விவரிக்கின்றது. திபேத்து நாட்டில் நடந்ததெனக் கூறப்படுபவற்றை நாம் அறிய முடியவில்லை. ஆனுல் இன்று நம் குருநாதர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலைசாமிகள் மற்ருேர் மனங் களில் அலைமோதிக் கொண்டிருக்கும் எண்ணங்களையும் நிலைத்து நிற்கும் நினைவுகளையும் அறியும் ஆற்றல் பெற்றுள்ளதை நன்ருக அறிந்துள்ளோம். சாமிகள் யார் யார் என்னென்ன விஷயங் களுக்காகத் தம் அருளுதவி நாடுகின்ருர் என்பதை அவரவரைக் கண்டவுடன் புரிந்து கொள்கின்ருர், சாமிகள் அறியாதது ஒன்று மில்லை என்றே கூறிவிடலாம். மற்றவர் மனங்களில் எழுகின்ற எண்ணங்களை அறியக்கூடிய இவ்வரிய ஆற்றலை, மூன்ருவது கண்ணுக நாம் கருதினுல் சாமிகளுக்கும் 'முக்கண்' உண்டு என்பதை நாம் ஒப்புக் கொள்ள வேண்டும். உண்மையிலேயே சாமிகள் முக்கண் கொண்டு விளங்கியதைக் கண்ட பக்தர்கள் உரைகளையே கேட்போம்.

சேலம் ஜெயலெக்ஷ்மி கிருஷ்ணசாமி :.... ... .... .... ... ... ... ... ...
"சனிக்கிழமையன்று அதிகாலையில் ஒரு பணியாளை ஸ்ரீ சாமிகளுக்கு எண்ணெய் தேய்க்கச் செய்தோம். அவன் ஸ்ரீ சாமிகளுக்கு கண்ணில் எண்ணெய் கட்டினுன். எண்ணெயைக் கண்ணில்விட எண்ணெய் பூராவும் மணலில் விழும் தண்ணீர்போல கண்களுக்கு உள்ளே போய்க் கொண்டிருந்ததைக் கண்டு அவன் ஆச்சரியப் பட்டுக் கொண்டிருக்கையில் திடீரென்று இரண்டு புருவங்களுக்கு மத்தியில் மூன்ருவது கண் தெரிந்ததாம். அதன் உள்ளே வெகு தூரத்திற்கப்பால் இருந்ததைப்போன்று ஒரு ஜோதியையும் ஜோதி யினூடே திருமுருகன் வேலேந்தி நிற்பதையும் கண்ட பணியாள் திகிலடைந்து மயக்கமாய் விழுந்து விட்டான். நாங்கள் உடனே அவனைப் பிடித்துப் படுக்கவைத்தோம். ஸ்ரீ சாமிகள் குளித்தான வுடன் தமது தர்மபத்தினியாரைக் (நமது அன்னை) கொண்டு திரு நீற்றை அவன் நெற்றியிலிட அவன் தூங்கி அப்போதுதான் விழித் தவன்போல் எழுந்து மேற்கண்ட தான் பார்த்த அதிசயத்தை எல் லோருக்கும்சொல்லி எங்களை மெய்மறக்கச் செய்தான்"

சேலம் V. V. சுந்தரராஜன் (ஆடிட்டர்): "பூஜை அறையில் ஒரு நாள் ஸ்ரீ சாமிகளின் முகத்தைப் பார்த்தேன். இரண்டு கண் களுக்கு மத்தியில் ஒரு கண்ணை என் கண்ணுரக் கண்டேன். பிறகு என் நண்பர் ஒருவரையும் அழைத்துவந்து காட்டினேன். அவர்களும் ஸ்ரீ சாமிகளின் நெற்றிக்கண்ணைப் பார்த்தார் பார்த்து இருவரும்

ஆச்சரியத்தில் மூழ்கினேம். இந்த ஞானியால் அநேகர் நன்மை யடைய முருகனைப் பிரார்த்திக்கிறேன்.

பக்தர் பிரார்த்திப்பது போன்றே அறிவுக்கண், அன்புக்கண், ஆத்மீகக்கண், மூன்ருவது கண் என்று போற்றக்கூடிய அருள் கண்ணையும் கொண்டே சாமிகள் மக்களுக்குத் தம் இரு திருவிழி களோடும் புன்முறுவலோடும் தெய்வீக முக ஒளியோடும் கருணை காட்டி உடல்பிணி மனப்பிணி அகற்றிவருகின்ருர்.

கண்களைப்பற்றிப் பேசுகின்ற நேரத்தில் சாமிகள் கண்களைக் கொண்டே செய்துகாட்டுகின்ற ஒரு அற்புதத்தைப்பற்றிக் கூறியது ஞாபகத்திற்கு வருகின்றது. ஒரு பையனுடைய சாதுர்யத்தைப் பற்றி கூட ஒரு கதையும் உண்டு. மிகவும் கெட்டிக்காரப்பையன் ஒருவன் "நான் கண்களை மூடிக்கொண்டு செய்வதை நீங்கள் கண் களைத் திறந்துகொண்டு செய்யமுடியுமா?" என்ருன். "கண்களை திறந்திருந்தால் எல்லாம் தெரிகின்றது. அதனுல் எதையும் செய்ய யமுடியும்" என்பதை எண்ணிய எல்லோரும் உடனே சரி என்றனர். கெட்டிக்காரப்பையன் உடனே தன் கண்களை மூடிக்கொண்டு மண்ணைவாரிப் போட்டுக் கொண்டான். கண்ணை திறந்து கொண்டு மண்ணை வாரிப் போட்டுக்கொள்ள முடியுமா? முடியாதென்று தோல்வியை யாவரும் ஒப்புக் கொண்டனர். இந்தக் கதையை டாக்டர் திரு. T. V. அரங்கநாதன் சாமிகளிடம் கூறினுர். இந்தக் கதையைக் கேட்ட சாமிகள், "என்னுடைய குருநாதர் ஆச்சாண்ட மலைப் பரதேசியால் கண்களைத் திறந்து கொண்டே மண்ணைக் கண்ணுள் போட்டுக்கொள்ள முடியும். தண்ணீரில் படுத்துக் கொண்டே தன் கண்களில் மணலைவாரிப் போட்டுக் கொள்வதைப் பார்த்திருக்கின்றேன். அந்த கெட்டிக்காரப் பையனைக் கூட்டி வாருங்கள் சாமி, நான் அவனை தோற்கடிக்க முடியும்" என்று ஆசி யம் தொனிக்க உற்சாகம் பொங்கப் பேசினுர் சாமிகள்.

"கடலை உழக்கால் அளக்க முடியுமா? தங்கள் பெருமையைப் பெருநூலாக எழுதி அது நாடெங்கும் பரவ வேண்டும்... நமது தமிழுலகில் இப்படி அற்புதம் இருப்பதை உலகம் அறியவேண்டும்—" இப்படி சாமிகளுக்கு எழுதுகின்ருர் சாமிகளது அருளைப் பரிபூரண மாக அனுபவித்துவரும் கவியோகி சுத்தானந்த பாரதியார் அவர் கள். சாமிகளது சிறப்பை சித்தர் சிறப்பு என்ற ஒரு கட்டுரை யாகவும் எழுதி உள்ளார். சாமிகள் ஆடுகின்ற அற்புதங்களைப் பற்றியும் அந்த சக்தி நாளடைவில் எப்படி வளர்ந்தது என் பதையும் அவர் அனுபவம் கொண்டு எழுதி இருக்கிருர். அந்தக் கட்டுரையையும் இந்த இடத்தில் பக்தர்களாகிய நாம் படித்து மகிழ்வது உசிதமென்றே நினைக்கின்றேன்.

## சித்தர் சிறப்பு

(கவியோகி சுத்தானந்த பாரதியார்)

உண்மையான மகான் இவரே என்று காட்ட நேற்று காந்தி இருந்தார். இன்று பன்றிமலைச் சித்தர் இருக்கிறார். எளிய நடை, எளிய உடை, எளிய பேச்சு, ஆழ்ந்த அடக்கம், அருள் உள்ளம், சக்திக் கனல் — இவை இரண்டு மகான்களுக்கும் பொருந்தும். மகாத்மா அரசியற் புலவர்; நமது சித்தர் அருளியற் புலவர். சித்தர் என்ற பெருமைக்கு உரிய ஒரே ஒருவர் நமது பன்றிமலைச் சித்தரே. அவர் பஞ்சாட்சரத்தில் தோய்ந்த சித்தர். ஆதலால் அவரை நமச்சிவாயச் சித்தர் என்று அழைக்கிறோம். மகாத்மா என்றால் காந்திக்கே சிறப்புப் பெயரானது போன்றே, சித்தர் என்றாலே பன்றிமலை நமச்சிவாயச் சித்தர் என்போம்.

சித்தர் சிறப்பை மிகப்பெரிய நூலாக எழுதிக் கொண்டிருக்கிறேன்; அது அடுத்த ஆண்டு வெளிவரும்; அதில் அவரது தன்மை, நன்மை, உண்மை, தகை, வியன் செயல்கள், அவரது வாழ்க்கைக் குறிப்புகள், சித்தர் சங்கம், சித்தர் வாக்குகள்–எல்லாம் நிரல் பெறக் காணும். தமிழ் நாட்டுத் தவப்பயனாகத் தோன்றிய நமச்சிவாயச் சித்தரை நான் பல்லாண்டுகளாக அறிவேன். எனினும் சென்ற இரண்டாண்டுகளாக நேரில் நெருங்கிப் பழகும் பேறு பெற்றேன். அற்புதம் அற்புதம் என்று வியந்து போற்றும் நூறு செயல்களை நான் நேரே கண்டேன். அவர் கார் மேனியும், கருணையுள்ளமும், குளிர்ந்த பார்வையும், கொஞ்சுந் தமிழும், தெளிந்த மனமும், அனைத்தும் அறியும் புலமையும், செருக்கில்லாச் செம்மையும், செவ்விய நன்மையும், வீறு பெற்ற வேல் சக்தியும் உடையவர். அவர் தம்மைக் கடவுள் அவதாரம் என்று சொல்லிக் கொள்வதில்லை, பிறரைக் கிண்டல் செய்வதில்லை. நமது சித்தர் அலை கடல் போன்றவர். அவர் செய்யும் அற்புதங்களெல்லாம் அலைகளின் அற்புதமே. ஆழக்கடலில் முத்தும் மணியும் குவிந்திருப்பது போல, வாய் மனங் கடந்த சித்தர் உள்ளத்தில் அருளும், அறிவும், அன்பும், ஆற்றலும் நிரம்பிக் கிடக்கின்றன.

இப் பெருமை பன்றிமலை ஆறுமுகனார் மகன் இராமசாமிக்கு எப்படி வந்தது? ஐந்து வயதிலேயே இராமசாமி பழனி முருகன் அருளைப் பெற்றார்; பக்திப் பெருக்கிலேயே அவரது வாழ்க்கைப் படகு நீந்தி சக்தித் துறையடைந்தது. அவரது தெய்வ மகிமையைப் பெற்றோர் அறிந்தனர். பழனிக்கருகேயுள்ள பாலசமுத்திரத்தில் ஒரு சிறு பள்ளியில் இராமசாமி தமிழ் கற்றார். அவர் ஆசிரியர் கணபதியார் இச் சிறு மாணவனின் மாண்புலமையைக்

க்ண்டு வியந்தார். அந்த ஊர் குளத்தங்கரை விநாயகரை நமது இராமசாமி உருக்கமாக வணங்கினர். ஒரு நாள் ஒரு சித்தர் அவரது நாவின் மேல் எழுதி மறைந்தார். அன்று முதல் இராம சாமி சித்து விளையாடினர், இனி அவரைச் சித்தர் என்போம். இளஞ்சித்தர் பேசுவதெல்லாம் பெரிய ஞானம். கற்களை எடுத்துக் கையை மூடித்திறப்பார். கற்கண்டு வரும். மண்ணைச் சர்க்கரை யாக்குவார். மலரைக் கசக்குவார். குங்குமம் கொட்டும்... முருகா என்பார். மலர் விபூதியாகும். முருகா என்று காகிதப் பூவைத் தடவுவார். அது மல்லிகை மணம் வீசும். ஆகாயத்தில் கையை நீட்டி 'பழனி முருகா' என்பார். பழனிப் பிரசாதம் வரும். நல்ல பாம்பைப் பிடித்து மாலை போட்டுக் கொள்வார். அது பூமாலை யாய் விடும், வெறும் துண்டை உதறுவார்; பட்டென்று ஒரு தேங்காய் விழும். திருநீறு தருவார்; நோய் தீரும். நெற்றியில் நீறிடுவார்; கவலைப்பிணி தீரும். கையில் கருப்புக் கயிறு கட்டுவார்; பேய் பிசாசு பறக்கும்.

இந்த அற்புதப் பிள்ளையைச் சட்டி சாமியார் பார்க்கிறர். பஞ்சாட் சரியுடன் மந்திரோபதேசம் செய்கிறர். ஒரு பானையில் வேப்பிலைத் தண்ணீர் வைத்து ஒரு மண்டலம் ஜபிக்கச் செய்கிறர். ஜபமகி மையால் நமது சித்தர் தற்போதமிழந்து சிற்போதம் பெற்று சீவ போதத்திற்கப்பால் சிவபோதப் பித்தராகிறர். சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது; மனிதன் மாறிப் பிறந்தான். பாட்டனர் கவலை கொண்டு மந்திரவாதியை ஏவுகிறர். மந்திரவாதி கிட்ட வருகி றன். அவன் மேல் கல் விழுகிறது. அவன் பயந்து ஓடுகிறன். பாட்டனர் பயந்து இளஞ்சித்தரின் உபாசனையைத் தடை செய் கிறர். ஆனல் தந்தை ஆறுமுகனர் மகன் பெருமையை அறிந்து அவன் போக்கில் விட்டு விட்டனர். சித்தர் கன்னடியப்பன் கோவிலுக்குச் செல்லுகிறர். கோவில் பூசாரி வயிற்றுவலியால் துடிக்கிறர். சித்தர் 'சிவ முருகா' என்று விபூதி வரவழைத்து வயிற்றில் தடவுகிறர். வயிற்று வலி பறந்து போகிறது. இன்னும் பலருக்கு நோய் தீர்க்கிறர். பேய் தீர்க்கிறர். மக்கள் வியந்து பயந்து நயந்து பணிந்து வணங்குகின்றனர். வயது பனிரண்டில் இந்த அற்புதம்.

ஆனல் சித்தர் உள்ளம் நானர் என் உள்ளமார் என்று அறியத் துடிக்கிறது. பெரும் சித்திக்குமேல் அருட்சித்தியை வேண்டுகிறது. ஆச்சாண்ட மலைப்பரதேசி அருட்சித்தினைத் தேடி வருகிறர். பக்குவம் அறிந்து தக்கது செய்கிறர். ஆலயந்தோறும் அரன் என வணங் கும்படி பல தலங்களுக்கு இட்டுச் செல்லுகிறர். மூர்த்தி தலம் தீர்த் தங்களைச் சித்தர் முறையாகச் சேவிக்கிறர். குருபரதேசியை ஆர்வ முடன் அன்பு செய்கிறர். குரு தெய்வபக்தியால் உருவும் அருவும்

விளங்கி உள்ளறிவு கனிகிறது. வயது பதினாறு; தூய பிரமசரியங் காத்த சித்த புருஷருக்கு ஒரு சக்தியை மணம் புரிகின்றனர் பெற்றோர். தாயுமானார் போலவே இல்லறத்திலிருந்தே யோக சித்தராயிருக்கும் சாதனத்தை நமது அருட்பெருமான் உலகிற்குக் காட்டினார். மனைவி பாப்பாத்தியம்மாள் கணவனைத் தெய்வச் சித்தர் என்று பணிந்து தொண்டு செய்தார். மகவு பிறந்ததும் இருவரும் சிவ சக்தி சாதகராகவே வாழ்ந்தனர். உள்ளத்தில் நமசிவாய மந்திரம் துடிக்கும்; மூச்சு முருகா என்று வெளிவரும். வாயில் சித்தாந்தம் பேசும்; செயலில் கருணைச் சித்துக்கள் விளங்கும். உடல் நடமாடும் கோயில். அஃது அன்பர் இருக்குமிடமெல்லாம் உலா நடத்தி அற்புதத்தால் அரிய நலம் புரியும். ஜீவாத்மாக்களைச் சிவம் பெறச் செய்யும். இந்தியா, இலங்கை, மலாயா நாடுகளெல்லாம் சென்று நமச்சிவாய சித்தர், குகமுருக சித்தர், பல அற்புதங்களைச் செய்தார். பாப்பாத்தியம்மாள் பரமபதம் எய்திய பிறகு மகனிடம் பொருளாட்சியை விட்டு நமச்சிவாய சித்தர் அன்பர் உலகில் அருளாட்சி நடத்துகிறார்.

பன்றிமலை நமச்சிவாய சித்தர் செய்யும் அற்புதங்களை நான் கண்டு வியந்துள்ளேன். பம்பாயில் நான் அவர் பெருமைகளைப் பேசினேன். என்மேல் மலர் பொழிந்தது. சென்னையில் மலர்களை என் கையில் வைத்தார். குங்குமம் பொழிந்தது. மற்றொருநாள் தூய பழனித்திருநீறு பொழிந்தது. இன்னொருநாள் வேல் எடுத்துக் கொடுத்தார். முருகன் திருவடியைச் சந்தனத்தில் வரவழைத்தார். திருப்பதியில் அவர் படத்தின்முன் நின்றேன். என் வாயில் தயிர் சாதம் வரவழைத்து ஊட்டினார். மண்ணைக் கிள்ளி பருப்பும் அரிசியும் எடுத்தார்.

நான் எத்தனையோ தெய்வப் பெரியாருடன் பழகியிருக்கிறேன். இத்தகைய அற்புதங்களைக் கண்டதில்லை. அவர் என்பால் கொண்ட அன்பும் அற்புதமே; அதனினும் அற்புதம் என் உள்ளத்தை அவர் அறிந்து இனி நடக்கப்போவதை நான் நினைத்தவாறே உரைத்தது. அதனினும் அற்புதம் உலகில் எனக்கு ஒரு அருட்பணியளித்தது — அது இன்னதென்று 'அற்புதச் சித்தர்' என்ற பெருநூலில் விளக்குவேன். இங்கே என் வணக்கத்தைச் செலுத்தி சித்தர் திருவுளம் ஆகுக என்று முடிக்கிறேன்"

கவியோகி சுத்தானந்த பாரதியார் சாமிகள்மீது பாடியுள்ள இரண்டு கீர்த்தனங்களையும் படித்து மகிழ்வோம்.

## பன்றிமலைச் சித்தர்

தோடி : ஆதி தாளம் :

பல்லவி

பாடுகிறான் என்னுள் — பன்றிமலையப்பன்
பக்தர்க்கனு கூலன்
பரம தயாளன் (பாடு)

அனுபல்லவி

ஆடுகிறான் உலகில் ஆனந்தக் குழந்தையாய்
அற்புதச் சித்தனே
அவன்மேல் யான் பித்தனே (பாடு)

சரணம்

எண்ணிய எண்ணங்கள் யாவையும் அறிவான்
எவரெவர்க்கு எப்படி, அப்படிப் புரிவான்
மண்ணைப் பொன்னாக்குவான்
மனதைத் தனதாக்குவான்
மனிதரை மாசற்ற புனிதராய் மாற்றுவான்.
மவுனமாய் வருவான்
மந்திரந் தருவான்
அவன் சுத்தானந்தனை
ஆண்டு கொண்ட பெருமான் (பாடு)

## உள்ளம் உருகும் அன்பு

சிந்து பைரவி : ஆதி தாளம் :

பல்லவி

உள்ளம் உருகுதென் ஊனும் உருகுதம்மா
ஊற்றெனவே அன்புக் கண்ணீர் பெருகுதம்மா — (உள்ளம்)

அனுபல்லவி

பிள்ளைபோல் விளையாடும் பேரின்பப் பெருமான்
பித்தாகி எனையாண்டான் சித்துவிளையாடல் கண்டேன்
— (உள்ளம்)

சரணம்

பால் நினைந்தூட்டும் பரிவுளதாயினும்
பட்சம் வைத்தருளுவான் பன்றிமலையப்பன்
காலைப் பிடித்தவர்க்குக் கவலையினியுண்டோ ?
கட்டியனைத் தென்னைக் கனிந்த நல்லமுதம்
கொட்டினன் அற்புதக் குகைக்கனலெழுந்திட
வந்தான் – மனதிற் – புகுந்தான் – நினைத்ததைத்
தந்தான் சுத்தானந்த முவந்திட
நமச்சிவாய சித்தனே
நல்லஜீவன் முத்தனே
சமயசஞ்ஜீவி — சிவ
ஷண்முககுக ஜோதி ஓம் — (உள்ளம்)

இந்த அற்புதங்களைப்பற்றி ஒருநாள் சாமிகளிடம் உரையாடல் செய்தபோது சாமிகள் சித்துக்களைப்பற்றி உளமுவந்து பேசினர். சாமிகள் : அருள்சித்து என்பது உடனடியாகப் பலன்தரவேண்டும். மனிதன் தந்தி அடித்தால் உடனே புறப்பட்டு வருகின்றான். எந்த நேரத்தில கன்று கத்தினலும் மாடுவரும்; அது போன்றுதான் நாம் வேண்டும்போது அருளாளன் கடவுள் ஓடோடி வருகின்றான். திருப்பதிப் பிரசாதம் வா என்றவுடன் வந்து கரத்தில் அமைகின்றது. எங்கே நினைப்பினும் அங்கே என்முன் வந்துநிற்பவன் இளமுருகன். சாமிக்கே டவாலி கட்டியவன் நான். அதனால்தான் முருகன் நான் இட்ட வேலையைச் செய்து முடிக்கின்றான். ஆண்டவன் அருள் உள்ளவரை மதிப்பது ஆண்டவரை மதிப்பதல்லவா? ஒரு டாக்டர் வீட்டுப் பியூனுக்கு நல்ல மதிப்பு என்றால் அது அந்த டாக்டருடைய மதிப்பைத்தானே காட்டுகின்றது. எல்லோருக்கும் அந்த டாக்டர் பட்டம் பெறமுடியுமா? அது போன்றுதான் கடவுள் அருள் கிடைப்பதும். சித்து என்பது காட்டில் முளைத்துள்ள ரோஜாப்பூ; வேண்டுமானால் பறித்துக் கொள்ளலாம். மனம்போல பூக்களை மாலையாகக்கட்டி மகிழலாம். விதவிதமாக பூச்செண்டு செய்யலாம் நறுமண ரசம் செய்யலாம். தேவையில்லையென்றால் பூக்களைப் பறிக்க வேண்டியதில்லை. சித்துக்களை ஓடுகின்ற ஒரு நதிக்கும் ஒப்பிடலாம். வேண்டுமென்றால் அந்த நதிகளில் குதித்துக் குடைந்து விளையாடலாம், அந்த நதியில் உள்ள நீர்வளத்தை நிலவளம் பெருக்கவும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். சித்துக்களை நல்ல காரியங்களுக்காக நல்லவிதமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

“ஒரு குறிப்பிட்ட அங்கியை அணிவதோ யோகி தண்டத்தைப் பிடிப்பதோ உடம்பெல்லாம் விபூதி பூசிக்கொள்வதோ மதமாகாது. அசுத்தமான உலகிலிருந்து கொண்டே சுத்தமாக வாழப் பழக வேண்டும். அதுதான் ஒரு நல்ல மதத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும். கடவுள் ஒவ்வொருவரிடத்திலும் இருக்கின்ருர். ஆதலால் எல்லோரையும் சமமாகப் பாவிக்க வேண்டும்” இப்படித் தன் கொள்கையை எடுத்துரைத்தார் குருநானக் எனும் மகான். சென்னையில் சாமிகளேக்காண ஒரு சீக்கியர் வந்தார். அவருக்கு அருள் பாலித்த சாமிகள் அவருக்கு ஒரு அருள்சீட்டும் வரவழைத்துக் கொடுத்தார். அதில் “நான்தான் உன் குருநானக்” என்ற திரு வாசகம் எழுதப்பட்டிருந்தது. உண்மைதான்! சாமிகளுடைய கொள்கையும் குருநானக் கொள்கையும் ஒத்திருக்கின்றன. குரு நானக் அவர்களும் சாமிகள் போன்றே சித்து விளையாடி அரிய உண்மைகளை விளக்கினுர். அவர் ஆடிய அற்புதங்களுள் ஒன்றைப் பற்றி மட்டும் எழுதி மகிழ்வோம். ஒருநாள் குருநானக் தன் சீடர் மர்த்தனுவோடு ஒரு காட்டுக்குச் சென்ருர். சீடருக்குப் பசி ஏற் பட்டது. சாப்பிடத்துடித்தார். குரு சீடரை ஒரு பூந்திக்கொட்டை மரத்திற்கு அனுப்பி அந்த மரத்துப் பழங்களைச் சாப்பிடச்சொன்னுர். அந்தப் பழங்களை நகைகளைச் சுத்தம் செய்யப் பயன்படுத்துவது தான் சீடருக்குத் தெரியும். அவை சாப்பிடக் கசக்கும். அப்பழங் களை சாப்பிடத்தயங்கும் சீடருக்கு குரு ஆணையிட்டார். உடனே சீடரும் சாப்பிட அந்தப்பழங்கள் வெகு ருசியாக இருந்தன.

சாமிகளுடைய அற்புதங்களைக் கண்டு மகிழ்ந்த நாம், சாமி கள் தன் அற்புதத் திருவிளையாடலாலேயே ஒரு அருள் சீட்டு வரவழைத்து ஆசி அருளியதைக் கண்டு அந்த ஆசியே நமக் கெல்லாம் வாய்த்துள்ள ஆசியாகக்கருதி இந்த அற்புதம் ஆடும் பகுதியைப் படித்து முடிப்போம். திரு K. பூவராகன் ஒரு வடமொழிப் பண்டிதர். சாமிகள் இவரிடம் ‘கிரந்த எழுத்துக்களைப் படிப்ப துண்டா’ என்று கேட்டார். அவைகளை இப்போது அதிகமாக உபயோகப்படுத்துவதில்லை என்பதைக் கூறிய பண்டிதர் சாமிகளை அந்த கிரந்த எழுத்துக்களைக் கொண்டே ஒரு அருள்சீட்டு தரு வித்து அருளுமாறு வேண்டிக்கொண்டார். சாமிகள் திருவுள்ளப் படி திரு. பூவராகன் தன் கையில் ஒரு சுருட்டியத் தாளைப் பிடித் துக்கொண்டார். அதைப்பிரித்துப் பார்த்தபோது கிரந்த எழுத் துக்களில் வடமொழி திருவாசகம் ஒன்று கண்டு மனமகிழ்ந்தார்.

“Om ! Mama Sodhanaaya Maagrahaayateet Tvam
Kastaanubaava Kaala Maagapeeti”

“ஓம்! மம சோதனய மாக்ரஹாயதீத் த்வம்
கஷ்டானுபாவ கால மாகபீதி”

"ஓம்! கஷ்டகாலம் முடிந்துவிட்டது. பயப்பட வேண்டாம்" என்பதே அந்தத் திருவாசகத்தின் பொருள். இந்த ஆசிச் செய்தி பண்டிதர் அவர்களுக்குமட்டுமா சாமிகள் அளித்துள்ளார்? இடர்பட்டுழலும் இந்த உலகத்திற்கே இடர்களைவிக்க வாய்த்துள்ள நலச்செய்தியாக அதைக்கருதி சாமிகளுக்கு அஞ்சலி செய்வோம்.

இந்த சந்தர்ப்பத்தில் பக்தியோடு சாமிகளைப்பற்றிக் கவிதை வடிவில் அளித்துள்ள திருமதி. ரேவதி அவர்களின் பாக்களையும் இசை உருவில் திரு. தேவராஜ் நடராஜன் M. A., அவர்களின் பாட்டுகளையும் படித்து மகிழ்வோம்.

## ஸ்ரீ பன்றிமலை சாமிகள் அருள்விளக்கு

(திருமதி ரேவதி)

பொன்னவன்தான் மயங்கு தன்னொளி கொண்ட
தென்னவன்தான் திருச்செந்தூர் தன்னில் இலங்கு
மன்னவன்தான் முருகன்தான் மனத்தைக் கொண்ட
என்னவன்தான் என்றுரைக்கும் பன்றிமலை அடிகள்.

தென்னவன்தான் உள்ளமெலா மன்புமிகு எளிய
வன்னவன்தான் முக்காலமுணர் துறவியுந்தான்
முன்னவன்தான் தந்த அட்டமா சித்தனுந்தான்
அன்னவன்தான் மெய்யா யருள்புரிவான் அகிலமெலாம்.

உரை: கதிரவனே மயங்குகின்ற அளவு ஒளிபெற்ற தென்னகத்தைச் சார்ந்த திருச்செந்தூர்தனில் விளங்கும் மன்னவனாகிய முருகன் "தன் மனத்தைக் கொண்டவன், என்னைச் சேர்ந்தவன்" என்று கூறும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை அடிகளாரும் தென்னகத்தைச் சேர்ந்தவர்தான். உள்ளமெலாம் அன்பைக்கொண்டு எளியவராகக் காட்சி அளிப்பவர்தான். முக்காலமும் உணர்ந்த மாமுனிவர்தான். முன்னவனும் சிவபெருமான் தான் அருளிய அட்டமா சித்திகளும் பெற்றவர்தான். அப்படிப்பட்டவர்தான் உலகிலே உண்மைக்கு உண்மையாக அருள்செய்பவர்.

1. அவனியில் நான்கண்ட அன்புருவம்
   ஆண்டவன் படைத்திட்ட அருளுருவம்
   இன்னலைத் தீர்க்கின்ற இன்னுருவம்
   முன்னவன் வேலவன் மெய்யுருவம்

2. ஞாலத்தார் புகழ்கின்ற ஞானியவர் — தான்கொண்ட
   சீலத்தால் சிறக்கின்ற சித்தரவர்
   காலத்தால் அழியாத காதலையே — வேல்கொண்ட
   கோலத்தான் துணைகொண்டு காட்டிடுவார்

3. ஆறுபடை வீடுகொண்ட வேலவனை
மாறுகின்ற மனம்கொண்ட மைந்தருக்கும்
வீறுகொண்ட பார்வையினால் காட்டிடுவார்
கார்முகிலைத் தோற்கடிக்கும் வள்ளலவர்.

4. குன்றிலுயர் நாயகனும் குலவிளக்கு
நின்றிருக்கும் ஓங்கார மணிவிளக்கு
மன்றிலுயர் மைந்தர்க்கு ஒளிவிளக்கு
பன்றிமலை சுவாமிகளாம் அருள்விளக்கு.

## வாழ்க எங்கள் பன்றிமலை வள்ளலே!

(திரு. தேவராஜ் நடராசன், எம். ஏ.)

இராகம் : உசேனி ] அறுசீர் ஆசிரிய விருத்தம் [ தாளம் : கண்டசாபு

பத்திப்ர வாகமது பாரினிலே பரந்தெங்கும் பாய வைக்கும்
சித்தன்றற் சார்வாரை உய்விக்கும் சீவமுத்தன், சிறந்த ஞானி,
எத்துணையும் பேதமுறு தெவ்வுயிர்க்கும் இரங்கியருள்
எளியன் சாலும்
நற்றவத்தோர் நாடுநல்ல பன்றிமலைச் சித்தனிரு
நற்றாள் போற்றி!

இராகம் : ஆனந்தபைரவி ] (விருத்தம்) (வேறு)

சித்தா! சித்தித் திறங்காட்டுஞ் சித்தர் செல்வா! தேவன்தாள்
பத்தா! பத்தர் பலர்போற்றும் பன்றி மலைவாழ் பெருமானே!
முத்தா! முத்தி தரவல்ல முருக னருள்சால் முதல்வா! என்
அத்தா! அருட்பே ருபதேசம் அருளி னுயிவ் வடியேற்கே!

இராகம் : ஆனந்தபைரவி ] வேறு [ தாளம் : ஆதி

பன்றிமலைச் சுவாமிகளைப் போற்றிடவே,
பயபந்தத் தொந்தமெலாம் பறந்திடுமே!
பன்றிமலைச் சுவாமிகளைப் போற்றிடவே,
பாவவினை யாவும்பட் டொழிந்திடுமே!
பன்றிமலைச் சுவாமிகளைப் போற்றிடவே,
பாரினிலே பன்னலமும் பெருகிடுமே!
பன்றிமலைச் சுவாமிகளைப் போற்றிடவே,
பரமுத்திப் பேரருளும் வாய்த்திடுமே!

இராகம் : மத்யமாவதி ] விருத்தம் கலிநிலைத் துறை.

போற்றி ! போற்றி ! பன்றிமலைப் பரமா போற்றி !
போற்றி ! போற்றி ! படிறிடரைப் போக்குவாய் போற்றி !
போற்றி ! போற்றி ! பத்தியெனும் பரிசருள்வாய் போற்றி !
போற்றி ! போற்றி ! பெருமுத்திப் பேறருள்வாய் போற்றி !

இராகம் : மத்யமாவதி ] கலி விருத்தம் [ தாளம் : ஆதி

வாழ்க எங்கள் பன்றிமலை வள்ளலே !
வாழ்க எங்கள் வண்டமிழும் சைவமும் !
வாழ்க எங்கள் வளமார்நற் றமிழகம் !
வாழ்க வாழ்க ! உலகெலாம் வாழ்கவே !

சாமிகளுடைய அற்புதப் பேராற்றலைப் படம் பிடித்துக் காட்டும் மதுரைமாநகர் 1961ஆம் ஆண்டு வாழ்த்துப்பாக்களையும் இங்குப் படித்து இன்புறுவோம்.

நேரிசை வெண்பா

பன்றி மலைவாழும் பண்ணவனே யின்றுனக்கு
நன்றி யுள நிறைந்த நல்வணக்கங் — குன்றுத
மாணிக்கம் போலும் வரவேற் பிவைதருவங்
காணிக்கை யாகக் கனிந்து.

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணி லியையுந் திறந்தானு
மென்றன்று முன்னோ ரியம்பு]முறைதன்னை
யின்றறிந்தோ முன்னு லினிது.

இயம முதலான வெண்வகையாம் யோக
நியம முறைதழுவு நேய — நயமமைந்த
அட்டமா சித்தி யடைதல் பெருவியப்போ
திட்டமாய் நின்பாற் சிறந்து.

கண்ணில்லார் கண்பெற்றார் காலில்லார் கால்பெற்று
ரெண்ணில்லார் நோய்தீர்த் திருக்கின்றார் — மண்ணில்
செவிடு பிறப்பூமை தீர்த்தனமற் றுன்னாற்
றவிடு பொடியாய்த் தகர்ந்து.

பார்த்தாலே நோய்கள் பறக்குமதன் மேற்கைவைத்
தீர்த்தாலே கன்முடமென் நின்னவெலா — மார்த்தோடு
மென்னநினை தன்ப ரியம்பலுங்கேட் டேயுவந்தேஞ்
சொன்னவர் போற்கண் சுரந்து.

முருகு நினைந்துன்போன் மொய்ம்மலர்த்தாள் போற்றி
யுருகு முளத்தோ டுவந்தே — யொருவா
றயலாத வின்றி யவன்னுமா மன்பர்க்கு
இயலாத தொன்று மிலை.

கல்லானைக் கன்று கரும்பளித்த சித்தனெனும்
வல்லான்றன் மாமரபில் வந்துதித்துப் — பொல்லாத
தீங்கொழிக்கும் நீயத் திறத்தாற் பொருள்தேடா
தீங்கிருத்த லன்றோ வினிது.

அருள்சே ரிறைவ னடிபணியா ராகி
யிருள்சே ருளத்தோ டிருப்பார் — மருள்சித்து
நல்லவழி காட்டிவரு நற்றவத்தா யாமறியேம்
வல்லநினைக் காடுங்கைம் மாறு.

பன்றி மலைவாழ்க பண்புமிகு நீவாழ்த
லன்றி நினக்கடியா ராண்டுபல — வொன்றியே
வாழ்க மனைவி மகாரிவரோ டின்பமிகச்
சூழ்க பலர்சீர் சொல.

(திரு. கி. பழநியப்பன்)

சாமிகளுடைய பேராற்றல் விளக்கும் அற்புதங்களைப் போற்றிக் கொண்டே இருக்க ஆவலுறும் நமக்கு அவர் அற்புதங்களை வைத்துக் கொண்டே பள்ளு பாடவும், துள்ளி ஆடவும் மனம் முந்துவது இயற்கை. நாம் ஆடுவோம், நாம் பாடுவோம்.

பல்லவி

ஆடுவோமே பள்ளு பாடுவோமே — நம் பன்றிமலை சித்தரின்
அற்புதங்களைக் கண்டு.

சரணங்கள்

1. கல்லைக் கையாலெடுத்துக் கற்கண்டாக்குவார் — வெறும்
காற்றின் வெளியினின்றும் கனி பறிப்பார்
முல்லை மலரெடுத்து மணம் மாற்றுவார் — அது
மாறியே வேறுபொருளாக வுமேசெய்வர் — (ஆடு)

2. வீட்டுக்குள்ளே அமர்ந்து பூட்டிடச் சொல்வார் — அந்த
வீட்டை விட்டே வெளியே வந்திடச் செய்வார்
ஏட்டில் எழுதாமலே எழுதிடச் செய்வார் — அந்த
ஏடும் பறந்துவந்து சேர்ந்திடச் செய்வார் — (ஆடு)

3. மண்ணைச் சர்க்கரையாக மாற்றிவிடுவார் — நல்ல
மாங்கனி தேங்காயாக மாற்றி விடுவார்
தண்ணீரை எண்ணெயாக மாற்றி விடுவார் —முழுத்
தேங்காயை தோம் தோம் என்று ஆடிடச்செய்வார் — (ஆடு)

4. மோதிரம் ஒன்றெடுத்து வீசிஎறிவார் — கரை
மோதிவரும் அலைகள் மீது வீசுவார்
ஜோதி பளபளப்பு கோப்பையினுள்ளே — அதை
ஜொலிப்புடன் பாலினுள்ளே தோன்றிடச் செய்வார் — (ஆடு)

5. தேவனைக்காட்டச் சொன்ன புலவருக்கு — ஒரு
தெய்வீகம் காட்டி உள்ளம் கொள்ளையே கொண்டார்
ஆவலுடன் பறக்கும் வண்ணப்பூச்சி — கண்டு
ஆண்டவன் கண்டே புலவரும் மகிழ்ந்தார் — (ஆடு)

6. மங்கைக்குகந்த ஒரு மணவாளன் — அவள்
மணநாளுக்கு முன்னமே காட்டிவிட்டார்
செங்கைக் குகந்த தெய்வ அட்சதையும் — பல
சீடருக்கு அருளால் கொட்டிவிடுவார் — (ஆடு)

7. மனத்தில் உதிக்கும் எண்ணம் படம்பிடிப்பார் — அதை
மக்களிடத்தில் சொல்லி வியக்க வைப்பார்
கனவில் கண்ட நிகழ்ச்சி எடுத்துரைப்பார் — யாரும்
காணுமல் நடந்ததும் கண்டு சொல்வார் — (ஆடு)

8. அலைகடல் தாண்டியுள்ள நகர்களிலே — உள்ள
அனைத்தும் அறியவல்ல ஆற்றல் கொண்டவர்
தொலைவில் நடக்கும் செய்தி சொல்லவல்லவர் — நம்மை
தூரதேசத்திற்குமே கொண்டு செல்பவர் — (ஆடு)

9. நாளை வருவதெல்லாம் சொல்ல வல்லவர் — இன்று
நேரில் நடக்காததைப் பார்க்க வல்லவர்
தேளை வரைந்தே தேளும் கொட்ட வைப்பவர் — நல்ல
தேனுய் தண்ணீரையும் மாற்ற வல்லவர் — (ஆடு)

10. பொறியை அரிசியாக மாற்றி விடுவார் — சென்ற
பாலை மறுபடியும் வரவழைப்பார்
அறிவை மலைக்கவைக்கும் அற்புதங்கள் — பல
ஆடி அருள்புரிந்து மனம் களிப்பார் — (ஆடு)

11. சிங்கார வேலவனை வரவழைப்பார் — அவன்
சுந்தர அடிகளைச் சுவ டெடுப்பார்
பொங்கி பறந்துவரும் அருள்காட்ட — சாமி
பொன்மயமான வேலை பறக்கச் செய்வார் — (ஆடு)

12. அற்புதங்கள் ஆடுவது எதற்காக ? — சாமி
ஆனந்த மேலீட்டால் நமக்காக !
கற்பனை மிஞ்சுகின்ற ஆற்றலெல்லாம் — தெய்வக்
கருணையைக் காட்டவே அருளாக — (ஆடு)

( T. D. மீனாட்சிசுந்தரம் )

## 28. சிவராஜ யோக சாமிகள்

" சக்திவேலா சக்திவேலா — சண்முகசுப்பிரமண்ய
சக்திவேலா — உன்றன்
தரிசனம் தந்தருள்வாய் சக்திவேலா."

### ஔவையார் விநாயகர் அகவல்

சுந்தரமூர்த்தி நாயனுருடன் கயிலாயத்திற்குப் பரமசிவனுடைய சந்நிதானத்தில் ஆதியுலா அரங்கேற்ற எழுந்தருளும் சேரமான் பெருமாணுயனுர் இந்த வைபவத்திற்கு ஔவைப் பிராட்டியை அழைத்து வரவில்லையே என்று நினைத்தார். அப்போது ஔவைப் பிராட்டியார் விநாயக தியானத்தில் ஆழ்ந்திருந்தார். நாயனுர் விருப்பத்தை பூஜையில் உணர்ந்த ஔவைப்பிராட்டி தானும் கைலைக்குச் செல்லவேண்டுமென்று நினைத்து பூஜையைத் துரிதப்படுத்தினுர். அப்போது விநாயகர், " ஔவையே, நீ சாவதானமாய்ப் பூஜை செய். நீ அவர்களுக்கு முன்னதாகப் போய் சேரும்படி செய்கிறேன்." என்றுர். அகமகிழ்ந்த ஔவைப் பிராட்டியும் பூஜையை வழக்கம் போல் முடித்து 'விநாயகர் அகவலைத்' தோத்திரமாகப் பாடினுர். பரவசமடைந்த விநாயகரும் தான் கூறியபடியே ஔவைப் பிராட்டியைக் கைலைக்கு மற்றவர்கள் வருவதற்குமுன் சேர்த்து வைத்தார். இப்படி உலவி வருகின்றது ஒரு கதை. இக்கதை ஒரு பேருண்மையை விளக்க உதவுகின்றது. ஔவைப் பிராட்டியார் ஒரு யோகி. யோகத்தினுல் அட்டமாசித்திகளை அடையப் பெற்றவர். அதனுலேயே நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்திற்குச் செல்லமுடியும் ஆற்றலைப் பெற்றிருந்தார் என்பதை அறிகிறேம்.

யோகத்திற்கும் கணபதிக்கும் என்ன சம்பந்தம் என்ற கேள்வி எழுவது இயற்கை. அதற்குச் சாமிகளுடைய, " கணபதியில்லாமல் யோகமில்லை, யோகமில்லாமல் கணபதி இல்லை " என்ற திருவாக்கு ஆழ்ந்து ஆலோசித்து அனுபவிக்கத்தக்கது. இந்துக் குடும்பங்களில் எந்தக் காரியத்தைத் தொடங்கும்போதும் கணபதியைத் தொழுவது வழக்கமாகி விட்டது. அண்ணன் கணபதியை மறந்த வடிவேலன் கூட அந்த மறதியால் தன் காதலில் படுதோல்வி ஆரம்பத்தில் அடைந்தான். அண்ணனை வேண்டிக்கொண்டவுடன்தான் முருகன் வள்ளியின் கரத்தைப்பற்ற முடிந்தது, திருமணம் முடிக்க முடிந்தது.

" அத்துயரது கொடு சுப்பிரமணி படும்
அப்புன மதனிடை யிபமாசி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே "

என்றல்லவா அருணகிரிநாதரும் கணபதியின் சக்தியை வாயாரப் புகழ்கின்றார்.

" கணபதி ஆதிகடவுள். ஆதியில் சமுத்திரத்தில் சுரைக்குடுக்கையில் சிவசக்தி மிதந்தது. அது பெண்ணுய் இருந்தது. ஒரு துணைவன் வேண்டுமென்று ஈஸ்வரி மந்திரம் ஜெபித்தாள். விநாயகர் உடனே தோன்றி 'தாயே' என்றார். அப்படி உதித்த விநாயகன் அபார மான சக்தி உடையவர். தன்னை யார் நினைத்து எது செய்தாலும் அது சித்தியாகவேண்டுமென்று அருள் புரிபவர். விநயம் இல்லாமல் ஒன்றும் செய்யமுடியாது. விநயம் என்பது புத்திக் கூர்மையைத் தான் குறிக்கும். இந்த அறிவு, ஆதி பொருள், சக்தி அளித்த பொருள். இந்த அறிவு சக்தியைத்தான் விநாயகன் என்று போற்றுகின்றோம். " என்று சாமிகள் கூறுவதுண்டு.

குண்டலினி சக்தி என்பது நம்முடைய உடம்பில் நமது முது கெலும்பின் அடியில் மூலாதார சக்கரத்தில் அமைந்துள்ளது என்பர். அது பாம்புபோல் மூன்றரை வட்டங்களுள் சுருண்டு இருக்கின்றது. அதைத் தட்டி எழுப்பி விட்டால் உடம்பில் புத்துணர்வு ஓடும், வீரிய பலமலர்ச்சி ஏற்படும். ஓம் ஓம் என்று நாம் சொல்லும்போது தொப்புளுக்குக் கீழே ஒரு உணர்ச்சி ஏற்படுவதை உணர்வோம். அந்த இடத்தில் தான் குண்டலினி சக்தி அமைந்திருக்கின்றது. இந்த குண்டலினி சக்தியைச் சாமிகள் கணபதியென்றே கூறி விளக்கு வதைக் கவனிப்போம். "கணபதி என்றாலே கழல்பதி என்ற பொருளும் உண்டு. கழல்பதி யென்றால் உஷ்ணத்திற்குள் இருக்கும் சக்தி என்பது புலனாகும். இது குண்டலினி சக்தியையே குறிக் கின்றது. கணபதி யென்றாலும் பல கணங்களுக்கும் அவன் பதி யாக விளங்குவதைக் குறிக்கின்றது. குண்டலினி சக்தியை யெழுப்பு தற்கு அதற்கென்றே ஏற்பட்டுள்ள சுவாச மார்க்கமும் வகுக்கப்பட் டுள்ளது; அதற்கு வேண்டிய மூல மந்திரமும் உரைக்கப்பட்டுள்ளது. அதனால் தான் இப்படி குண்டலினி சக்தியைப் பற்றிப் பேசும்போது " மூச்சிலும் கணபதி பேச்சிலும் கணபதி என்கிறோம் " என்று சாமிகள் உரையாடுவதுமுண்டு. இந்த உண்மைகளை ஔவைப் பிராட்டியார் அருளிய விநாயகர் அகவல் எப்படி வர்ணிக்கின்றது பாருங்கள் :

"ஆரு தாரத் தங்குச நிலையும்
பேரு நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறிவித்து
கடையிற் சுழுமுனை கபாலமுங் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவிலுணர்த்திக்
குண்டலியதனிற் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலாதாரத்தின் மூண்டெழு கனலைக்
காலாலெழுப்புங் கருத்தறிவித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடைச் சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற் சக்கரத்தின் உறுப்பையும்காட்டி
சண்முக தூலமும் சதுர்முக சூட்சமும்
எண்முகமாக இனி தெனக்கருளி—

இப்படியே இந்த அகவலில் கணபதியை வேண்டிக் கொண்டே செல்கின்றார் யோகத்தை முற்றும் அனுபவித்த ஔவைப் பிராட்டியார் யோகத்தை விளக்கும் வகையில்.

**வாசி என்பது என்ன:**

சாமிகள் இப்படி இனிமையாக உரையாடும் போதெல்லாம் அடிக்கடி மூச்சைப்பற்றிப் பேசுவார். யோகத்திற்கு வாசி எவ்வளவு முக்கியம் என்பதைப்பற்றியும் பேசி பதினெண் சித்தர்களுடைய பாடல்களிலிருந்து ஒன்றிரண்டு பாடல்களையும் பாடிக் காண்பிப்பர். மூச்சைப் பற்றியும் பொருள் செறிந்த பலமொழி பேசுவர்.

"உள்ளே போனால் மூச்சு
வெளியே போனால் போச்சு"
"மூச்சு உள்ள வரை சிவம்
மூச்சு நின்றுவிட்டால் சவம்"
"தத்தக்கா புத்தக்கா நாலுகால்
தானு நடந்தால் இரண்டு கால்
உச்சி விழுந்தால் மூன்று கால்
ஊருக்குப் போனால் பத்துகால்"

சாமிகள் இப்படிப் பேசும்போதெல்லாம் நிலையில்லாத வாழ்வைப்பற்றித்தான் பேசுகின்றார் என்று பக்தர்கள் எண்ணுவதுண்டு. சாமிகள்

அநித்ய வாழ்வை மட்டும் குறிப்பிடவில்லை: யோகானந்த வாழ்வுக்குத் தேவையான வாசியைப்பற்றியும் விளக்கவே இப்படி உளமுவந்து பேச ஆரம்பிப்பார். "நடராஜர் தத்துவமென்ன" என்று கேள்வியைக் கேட்டு, "நடக்கின்ற ராஜா வேறொன்றுமில்லை, மூச்சு தான். மூச்சிருக்கின்றவரைதான் நடப்பார் இந்த ராஜா" என்று மனிதனைச் சுட்டிக் காண்பித்து விடையும் அளிப்பர். திருமாலை இருந்தான் கிடந்தான் நின்றான் என்று திருக்கோலப்படுத்திச் சொல்வதெல்லாம் இந்தக் கட்டையைப் பற்றிச் சொன்னதுதான் என்று உடம்பைக் காண்பித்து விளக்கம் சொல்வர். இப்படி சாமிகள் கூறுவதெல்லாம் தெய்வங்களைக் குறை கூறுவதில்லை. வாழ்விற்கு, சுகவாழ்விற்கு, மூச்சின் இன்றியமையாமையை விளக்கவே இப்படிப் பேசுகின்றார். வாசியின் அருமையை விளக்கவே இப்படி உரையாடுகின்றார். யோகத்தில் தெய்வநிலை எய்துவதையும் கூறாமல் கூறுகின்றார்.

"வாசியை வென்றவன் வயசு சொல்ல முடியாது. வாசி வாசி என்று சொல்லிக் கொண்டேபோனால் சிவா சிவா என்று சொல்லிக் கொண்டு போகும் நிலைக்கு வந்துவிடலாம், மரா மரா என்ற சொற்கள் ராம ராம என்ற நாமமாக மாறுவதைப்போல், வாசி, சிவா ஆகும்போது சச்சிதானந்த சொரூபி ஆகிவிடலாம். நமசிவாய நமசிவாய என்று உச்சரித்து உண்மை அறிய அறிய அது தம்மை சிவமாக்கிவிடும். வாசி யென்பது என்ன? சுவாசம் என்ற சொல்லிலிருந்துதான் வாசி வந்திருக்கின்றது. ஆனால் சுவாசம் மட்டும் வாசியாவதில்லை. வாசியில் சுவாசம் சம்பந்தப்பட்டிருக்கிறது, பிராண எனும் சொல்லுக்கும் பிராணவாயுவிற்கும் சம்பந்தம் ஏற்பட்டிருப்பதைப்போல. தபசிக்கு ஆதாரம் வாசி யென்பர்? வாசி நடுநிலையிலும் மூலத்திலும் நாபியிலும் கண்டத்திலும் சுழியிடமும் சதா நிற்பவர்கள் மெய்ஞ்ஞானிகள் என்று நிஜானந்தபோதம் உரைக்கின்றது. வாசியைப்பற்றி வால்மீகர் அருளிய சூத்திர ஞான பாடல்களும் உற்று நோக்கத்தக்கன.

"வந்ததுவும் போனதுவும் வாசியாகும்
வானில் வரும் ரவிமதியும் வாசியாகும்
சிந்தை தெளிந்திருப்பவனே யவனே சித்தன்
செகமெலாஞ் சிவமென்று அறிந்தோன் சித்தன்
நந்தி யென்ற வாகனமே தூல தேகம்
நான் முகனே கண் மூக்குசெவி நாக்காகும்
தந்திமுகன் சிவசக்தி திருமூச்சாகும்
தந்தைதாய் ரவிமதியென் றறிந்து கொள்ளே.

அறிந்துகொளும் [1] பூரகமே சரியை மார்க்கம்
அடங்குகின்ற [2] கும்பகமே கிரியை மார்க்கம்
பிரிந்துவரும் [3] ரேசகமே யோக மார்க்கம்
பிசகாமல் நின்றதுவே ஞான மார்க்கம்
மறிந்துஉடல் புகுகின்ற பிராண வாய்வு
மகத்தான சிவசக்தி அடங்கும் வீடு
சிறந்து மனத் தெளிவாகி சேர்ந்தோன் சித்தன்
சிவ சிவா அவனவனென்றுரைக்கலாமே''

**வாசி யோகம்**

இப்படி வாசியை விளங்குகின்ற யோக மார்க்கத்தை நன் குணரும் சாமிகள் யோகத்தில் தேனூறித் திளைத்து மகிழ்கின்றனர். யோகத்தைப்பற்றியும் யோகத்தில் நாம் அடையக்கூடிய பேரானந்த நிலையைப் பற்றியும் அடிக்கடி அனுபவித்து சாமிகள் பேசுவதுண்டு. ஒருநாள் பேசிக்கொண்டிருக்கும் போதே திடீரென்று ''சூட்சமம் தெரிந்து ஆடணும் குடிச்சாடணும்'' என்று திருவாய்மலர்ந்தருளி னர். அடுத்தாற்போல் ''கலையை ஆட்ட வேண்டிய இடத்தில் ஆட்டினால் பேரின்ப போதை ஏற்படும்'' என்று கூறியபோதுதான் சாமிகள் யோகத்தின் பேரானந்தத்தைப்பற்றிப் பேசுவது புரிந் தது. மற்றொருமுறை இதைப் போன்றே,

'' நிற்க நிற்கச் சொக்குதடி
நினைவு தடுமாறுதடி '' என்று

பாடினார். சிற்றின்பப் பாடலையா சாமிகள் பாடுவர் என்று எண் ணக் கூடியவர்களின் சந்தேகத்தை ஓட்டுவிப்பது போன்று சாமிகளே இதைத் தொடர்ந்து யோகநிலை விளக்கம் உரைத்தது அமைந்தது. ''இந்தப் பாட்டில் அடி அடி என்று ஆசையாக உரைத்ததெல்லாம் காற்றை நினைத்துதான். கலையைக் காற்றைச் சேர்க்க வேண்டிய இடத்தில் சேர்த்தால் மனம் சொக்குகின்றது, சச்சிதானந்தக் கடலில் மிதக்கின்றது. இந்தப் பாட்டைக் கேட்ட வுடன் இகஅர்த்தம் தொனிக்கும் பாட்டாகவே தோன்றும். இதில் பர அர்த்தமும் உண்டு'' என்றார் சாமிகள். அடுத்தாற்போல் ''செம்மான் மகளைத் திருடும் திருடன்'' என்ற கந்தர் அநுபூதிப் பாடல் ஒன்றின் முதல் வரியைச் சொல்லி, அது எதைக்குறிக்கும் என்று கேட்டார். ''செம்மையாகிய மானின் மகளாகிய வள்ளியின்

---

1. பிராண வாயுவை இழுப்பது பூரக மென்பர், அடக்குகிறதை
2. கும்பகம் என்பர், விடுவதை
3. ரேசகம் என்பர்.

மனதைக் கொள்ளைகொண்ட கள்வன் முருகனையே குறிக்கும்'' என்றார் கூடியிருந்த பக்தர்களில் ஒருவர். "உண்மைதான். அது சாதாரணப்பொருள். ஆனால் இதில் ஒரு யோகஉண்மையே பொதிந்துள்ளது. யோகிகளுக்குக் கண்போன்றது மூச்சு. அம்மூச்சைத் திருடி அடக்குவதைத்தான் இது குறிக்கின்றது. சந்திர கலையை சூரிய கலையாகவும் சூரிய கலையைச் சந்திர கலையாகவும் மாற்ற வல்ல யோகியர்களுக்குப் பொருந்தும் சொற்கள். அந்தப் பாட்டையே பாருங்கள்.

"செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இரு சொல்லற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே''

யோகநிலையை அல்லவா இந்தப் பாட்டு எடுத்துக் காட்டுகின்றது. சொல்லற்ற நிலையில் சும்மா இருக்கின்ற மோனநிலையை அல்லவா எட்டிப் பிடித்து விடுகின்றான் யோகி. "மோன மென்பது ஞான வரம்பு'' இதன் பொருள் யோகத்தை அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும். மற்றவர்களுக்குத் தெரியாது'' — என்று சாமிகள் பதிலளித்தார்.

சாமிகள்; ஒருவன் உப்பைத் தொட்டு விட்டு
உரலை விழுங்கினானும். இதற்கு என்ன பொருள்?

வந்தவர் ஒருவர்: ஒருவன் உரலை விழுங்க முடியுமா? அப்படி விழுங்க வல்ல வாயும் பலமும் படைத்திருந்தாலும் அவன் உப்பைத் தொட்டுவிட்டுத்தான் உரலை விழுங்க வேண்டுமா? உப்புக்கும் விழுங்குவதற்கும் என்ன சம்பந்தம் இருக்கின்றது. ஒன்றுமே யுரியவில்லை, சாமிகளே.

சாமிகள்: இதுவும் யோகாப்பியாசத்தைக் குறிப்பிடும் வாசகம். இங்கு உப்பு என்று சொல்லப்படுவது வலது ஈரல் அடியில் உள்ளது. உரலை என்று சொன்னது உருளையாகும். உருளை என்பது காற்றைக் குறிக்கும். காற்றை உள்ளிழுக்கும் ஒரு வழியையே இப்படிக் கூறி இருக்கின்றார்.

"கோட்டைக்குள்ளே இரண்டு கொம்பானை
கொம்புக்குள்ளே இரண்டு கிளிக்கூண்டு
அதில் பச்சைக்கிளி வந்து கீச்சுக் கீச்சுங்குதடி
பாரடி முத்துவீராயி''

இந்தப் பாட்டிற்கு என்ன அர்த்தம்?

பக்தர் ஒருவர்: இந்தப்பாட்டு கேட்பதற்கும் வேடிக்கையாக இருக்கின்றது. அதைச் சிந்தனை செய்து அதில் உருவாக்கப்பட்டிருக்கும் கோட்டையையும், அந்தக் கோட்டையில் கம்பீரமாக நிற்கும் யானையையும், அந்த யானையின் இரு கொம்புகளில் இருக்கும் இரண்டு கிளிக்கூண்டுகளையும், அந்தக் கூண்டுகளிலிருந்து கிளிகள் உள்ளும் வெளியும் போய்வந்து கீச்சுக் கீச்சு என்று கத்துகின்ற காட்சியையும் பார்க்கும்போதும் வேடிக்கையாக இருக்கின்றது. ஆனால் சாமிகளால்தான் இதன் மெய்ப்பொருளை உணர்த்த முடியும்.

சாமிகள்: இதுவும் யோகசம்பந்தப்பட்ட பாட்டுதான். கோட்டைக்குள்ளே இரண்டு கொம்பானை என்பது மூக்கைக் குறிக்கும். கொம்புக்குள்ளே இரண்டு கிளிக்கூண்டு என்பது மூக்கின் துவாரங்களைக் குறிக்கும்: அதிலே பச்சைக்கிளி வந்து கீச்சுக் கீச்சென்று கத்துவது காற்றைக் குறிக்கும். இப்படி எவ்வளவோ அடிகள் உண்டு. காற்றைக் குதிரையாகச் சொல்லும் ஞானக்கும்மி பாட்டொன்றைக் கேளுங்கள்.

"சூட்சக் குதிரை யடங்காது சுழிக்
கோட்டுக் குட்செல்ல முடியாது
மூச்சுக் காயிரங் காதவழி மிக
முந்தி நடக்குதாம் ஞானப் பெண்ணே!"

இதுபோன்றே கொங்கணச் சித்தர் வாலைப்பாட்டில் ஒன்றும் மூச்சைக் காளையாகப் பேசுகின்றது.

"கட்டாத காளையைக் கட்டவேண்டும் — ஆசை
வெட்டவேண்டும் வாசி எட்டவேண்டும்
எட்டாத கொம்பை வளைக்கவேண்டும் — காயம்
என்றைக் கிறக்குமோ வாலைப் பெண்ணே!"

இப்படி மூச்சு மூச்சென்று பேச்சின் போக்கிலே மூச்சின் பெருமையை ஏன் இப்படிச் சாமிகள் பேசவேண்டும் என்று எண்ணிப்பார்த்தால் மூச்சை அடக்கித் தம்வசப்படுத்தி வாசியை வென்று யோகத்தில் சச்சிதானந்தத்தைச் சாமிகள் அனுபவிப்பதே காரணம் என்பது வெளிப்படை. இதைத்தானே பதினெண் சித்தர்களும் வற்புறுத்தியதை அகஸ்தியர் ஞானமும் உரைக்கின்றது என்பதையும் வலியுறுத்துவர் சாமிகள்.

"ஆச்சப்பா விந்தமுறை பதினெண்பேரும்
அயன்மாலு மரனோடுந் தேவரெல்லாம்

மூச்சப்பா தெய்வமென்றறியச் சொன்னர்
முனிவோர்கள் ரிஷியோர்களிப் படியேசொன்னர்
பேச்சப்பா பேசாமல் நூலைப் பார்த்து
பேரான பூரணத்தை நினைவாய்க்காரு
வாச்சப்பா பூரணத்தைக் காக்கும்பேர்கள்
வாசிநடு மையத்துள் வாழ்வார் தாமே''

இந்தப் பாட்டையும் ஒருநாள் பாடிக் காண்பிக்கும் சாமிகள் யோகத்தைப்பற்றி ஒரு அருளுரை வழங்கினர்.

## யோகத்தைப் பற்றிச் சித்தர்கள்

''சுவரை வைத்துக்கொண்டு சித்திரம் எழுதவேண்டும், உடலை நன்னிலையில் வைத்துக்கொண்டு யோகம் பழகவேண்டும். யோகப் பழக்கம் உண்டானல் உடம்பு வலுப்பெறும். உயிரும் உறுதிபெறும். பரப்பிரம்ம ஐக்கியத்தையும் அதன் இன்பத்தையும் அனுபவித்துக் கொண்டே இருக்கலாம். அதன் பயனல் மற்றவர்களும் நலமுற வாழ அருள் ஆடலாம். ''காற்றுள்ள போதே தூற்றிக்கொள்'' என்ற முறையில் கிடைத்தற்கரிய பேருகிய மனிதப் பிறவியில் கிடைத்த நல்லுடம்பை வைத்துக்கொண்டே நாதனை உடம்புக் கோயிலிலேயே கண்டு அனுபவிக்க ஒவ்வொருவரும் பாடுபடவேண் டும். காற்றையும் (வாசியையும்) பயன்படுத்திக் கொள்ளவேண்டும். ஊனும் உயிரும் இருக்கும்போதே பேருண்மையை உணரவேண்டும் என்பதை எவ்வளவு அழகாக சிவவாக்கியரும் எடுத்துக் கூறுகின்ருர்.

''ஓடமுள்ள போதெலா மோடியே உலாவலாம்
ஓடமுள்ள போதெலா முறுதி பண்ணிக் கொள்ளலாம்
ஓடமுடைந்தபோது ஒப்பிலாத ஒளியிலே
ஆடுமில்லை, கோலுமில்லை, யாருமில்லை யானதே''

இப்படி உள்ளொளி பெருக்கும் ஈசன் நம் உடம்பில் இருக்க உடம்பையே கோயிலாகக் கொள்ளாது உள்ளொளியையே ஈசனுகக் கொள்ளாது மனதை அலையவிட்டு புறக்கோயில்களை மட்டும் சுற்றி வந்தும் பயனில்லை. மனத்தைக் கட்டுப்படுத்தாமல் விக்கிரகங்களை மட்டும் சுற்றி மந்திரங்கள் மட்டும் மொழிந்து வருவதும் ஒரு பலனை யும் தராது. 'கல்லிலே தெய்வமில்லை, கருத்திலே தெய்வம் உண்டு' என்பதுதான் சிவவாக்கியர் போன்ற யோகிகள் கண்டுள்ள அனுபவ உண்மை.

''நட்டகல்லை தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணத்து சொல்லுமந்திரமேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ''

மேலும் சிவவாக்கியர் சொல்லுகின்றார். உண்மைப் பேரொளியைக் காண்பதற்குக் குளங்குளமாய் தீர்த்தமாடி விட்டால் மட்டும் போதுமா? வண்டி வண்டியாய் விறகு சேர்த்து நெருப்பை மூட்டிக் குடம் குடமாய் நெய்யைவிட்டுக் கூட்டம் கூட்டமாய் ஆட்கள் சேர்த்து யாகம் செய்வது அவசியந்தானு? இவ்வளவு கஷ்டங்கள் வேண்டியதில்லையே. பஞ்சபூதசேர்க்கையான நம் உடம்பிலேயே இப்பேரொளியைப் பாடுபட்டால் காணலாமே!

"நெருப்பைமூட்டி நெய்யைவிட்டு நித்தநித்த நீரிலே
விருப்பமொடு நீர்குளிக்கும் வேதவாக்யங்கேளுமின்
நெருப்புநீறு மும்முளே நினைந்துகூற வல்லீரேல்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்து கூடலாகுமே"

மூச்சை, உயிர்ப்பை, வாசியைக் கட்டுப்படுத்தி இஷ்டத்திற்கு ஆட்டி வைத்து யோகநிலையில் அமர்ந்துவிட்டால், ஆயுளும் வளரும், தேகமும் உரம் பெறும், பரப்பிரம்ம சொரூபி ஆவதும் உண்மை.

"மூலமான மூச்சதில் மூச்சரிந்து விட்டபின்
நாலுநாளு முன்னிலொரு நாட்டமாகி நாட்டிடில்
பாலனுகி நீடலாம் பரப்பிரம்ம மாகலாம்
ஆலமுண்ட கண்டராணை யம்மையாணை உண்மையே"

"மூலநாடி தம்முளே முளைத்தெழுந்த வாயுவை
நாளுநாளு நம்முளே நடுவிருத்த வல்லீரேல்
பாலனுகு மும்முடல் பரந்து போகலாய்விடும்
ஆலமுண்ட கண்டபாதமம்மை பாதமுண்மையே"

சிவவாக்கியர் மட்டுமா யோகத்தையும் வாசியையும் புகழ்ந்தார். ஒவ்வொரு சித்தரும்தான் புகழ்ந்திருக்கின்றனர். பாம்பாட்டி சித்தர் பாடுவதைக் கேளுங்கள்!

இந்த உடல் என்றைக்கிருந்தாலும் ஒருநாளைக்கு அழியப் போகின்றது. இதை ஒரு மண்பாண்டத்திற்கு ஒப்பிடலாம். தவறிக் கீழே விழுந்தால் சுக்குசுக்காக உடைந்து மண்ணோடு மண்ணுகி விடுகின்றது சட்டி. இதைப்போன்றதுதான் அழிகின்ற நமது உடலும். இதை எவ்வளவு அழகாகப் பாம்பாட்டி சித்தர் பாடி இருக்கின்றார்.

"ஊத்தைக் குழியிலே மண்ணை யெடுத்தே
உதிரப்புனலிலே யுண்டை சேர்த்தே
வாய்த்த குயவனுர் பண்ணும் பாண்டம்
வரஓட்டுக்கு மாகாதென்றுடாய் பாம்பே"

பாம்பென்று விளித்துப் பாடுகின்றுரே, அதென்ன? அது குண்டலினி சக்தியைத்தான்! அது எழுந்துவிட்டால் ஆருதாரங்களை துளைத்துக்கொண்டு முடியிலுள்ள சகஸ்ராரத்திற்கே சென்று ஜீவனை சிவனேடு ஐக்கியமாக்கிவிடுகின்றது. அதை எவ்வளவு அழகாக ஆரம்பப்பாடலிலேயே உற்சாகத்தோடு பாடுகின்ருர்.

"தெளிந்து தெளிந்து தெளிந்தாடு பாம்மே — சிவன்
சீர்பாதங் கண்டு தெளிந்தாடு பாம்பே

ஆடுபாம்பே தெளிந்தாடு பாம்பே — சிவன்
அடியிணைக் கண்டோமென்றாடு பாம்பே.

இந்தப் பாட்டிலும் ஒரு அருமையைக் கவனிக்கவேண்டும். பாம்பு நெளிந்து நெளிந்து ஆடும். ஆனல் இந்தப் பாம்பு தெளிந்து தெளிந்து ஆடும் என்கின்ருர் சித்தர்.

அங்குமிங்கும் குண்டலியைப் பற்றியும் யோகத்தைப் பற்றியும் மறைமுகமாகப் பாடிவந்தவர் ஒருசில பாடல்களில் நேர்முகமாகவே தூங்காமல் தூங்கும் சுகமளிக்கும் யோகத்தைப் பற்றியே பாட ஆரம்பிக்கின்ருர். கேளுங்கள்!

உள்ளத்துக்குள்ளே உணரவேண்டும்
உள்ளும் புறம்பையு மறியவேண்டும்
மெள்ளக்கனலை யெழுப்ப வேண்டும்
வீதிப்புனலிலே செலுத்த வேண்டும்
கள்ளப்புலனைக் கடிந்து விட்டுக்
கண்ணுக்கு மூக்குமேற் காண நின்று
தெள்ளு பரஞ்சோதி தன்னைத்தேடிச்
சீர்பாதங் கண்டோமென் ருடாய் பாம்பே.
ஓங்காரக் கம்பத்தினுச்சி மேலே
உள்ளும் புறம்பையு மறியவேண்டும்
ஆங்காரக் கோபத்தை யறுத்துவிட்டே
ஆனந்த வெள்ளத்தைத் தாக்கிக்கொண்டே
சாங்கால மில்லாமற் ருனுவுடனே
சட்டதிட்டமாகச் சேர்ந்து சாந்தமாகவே
தூங்காமல் தூங்கியே சுகமடைந்து
தொந்தோம் தொந்தோமென் ருடாய் பாம்பே

"மாயக்குடத்திலே நின்ற பாம்பைக்
கருணைக் கடலிலே இயங்கவிட்டு
நேயச்சுழிமுனை நீடு பாய்ச்சி
நித்தியமான வஸ்துவை நிலைக்கநாடி

மாயப் பெருவெளி தன்னிலேறி
மாசற்றப் பொருளினை வாய்க்கத்தேடி
ஆயத்துறை கடந்தப்பாற் பாழின்
அனந்தஞ் சேர்ந்தோமென்றூடாய் பாம்பே''

ஆனந்த நடனத்தில் அரிய கருத்துக்களை அள்ளி வீசுகின்ற இடைக்காட்டு சித்தரும் யோகத்தைப் பற்றிப் பாடுவதைக் கேளுங்கள்.

''ஆருதாரத் தெய்வங்களை நாடு
அவர்க்கு மேலான வாதியைத் தேடு
கூருன வட்டவானந்தத்திற் கூடு
கோசமைந்துங் கண்டு குன்றேறி கூத்தாடு
தாந்தமித்திமி தந்தக்கோனுரே
தீந்திமித்திமி திந்தக்கோனுரே
ஆனந்தக் கோனுரே அருள்
ஆனந்தக் கோனுரே.

நமது உடம்பு எதற்கு உதவுகின்றது? ஐம்புலன்களால் இன்பம் அடைகின்றேம். ஆனால் இந்த இன்பம் நிலைபெற்ற இன்பமா? இதே உடம்பில் ஈசனை அடைய முடியுமே!

''உடம்பினைப் பெற்ற பயன் ஆவது எல்லாம்
உடம்பினுள் உத்தமனைக் காண்''

என்றல்லவா ஔவையார் ஞானக்குறள் புகழ்கின்றது.

சித்தர்களில் அழுகணிச் சித்தர் போக்கே ஒரு தனிப்போக்கு. கூத்தாடி கூத்தாடி அரும்பொருள் விளக்கம் கொடுத்தார் இடைக் காட்டு சித்தர்: அழுதே அழுதே ஊன்உறுப்பு நிலையாமையைப் பாடி விடுவர் அழுகணிச் சித்தர். உடம்பின் நிலையாமையை அவர் பாடு வதைக் கேளுங்கள்.

[1]பட்டணத்தை யாளுகின்ற [2]பஞ்சவர்கள் ராசாக்கள்
விட்டுப் பிரியாமல் வீரியங்கள் தான்பேசி
விட்டுப் பிரிந்தவரே வேறுபடுங்காலம்
பட்டண முந்தான் பரிபோய் என் கண்ணம்மா
படை மன்னர் மாண்ட தென்ன

1. பட்டணம் – உடல். 2. பஞ்சவர்கள் – மெய், வாய், கண், மூக்கு, செவி.

" ஊத்தைச் சடலமடி என் கண்ணே உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊத்தைச் சடலம் விட்டு – என் கண்ணம்மா
உன் பாதம் சேரேனோ?

இந்தச் சோகப் பாடலைக் கேட்டார் மற்றொரு சித்தர். இவருக்கு இது உண்மை என்று தோன்றவில்லை. உடனே தான் கண்ட பேருண்மையைப் பாட்டாகவே பொழிந்து விட்டார். அவர் தான் கொங்கணச் சித்தர்.

" ஊத்தைச் சடலம் என்று எண்ணாதே இது
உப்பிட்ட பாண்டம் எண்ணாதே
பார்த்த பேருக்கு ஊத்தை இல்லை இதைப்
பார்த்துக் கொள் உன்றன் உடலுக்குள்ளே "

இந்தப் பாட்டு கொங்கணச் சித்தர் அழுகணிச் சித்தரைப் பார்த்தே எள்ளி நகையாடிப் பாடுவது போன்று தொனிக்கின்றது. அழுகணிச் சித்தர் ஏதோ அப்படி ஒரு பாட்டை நிலையாமையைக் குறித்துப் பாடி விட்டாலும் அவரும் உண்மையை அறிந்து கொண்ட பதினெண்மருள் ஒருவரே. "பார்த்த பேருக்கு ஊத்தை இல்லை" என்பதை அவர் உடலுக்குள்ளேயே அவர் பார்த்துக் கொண்டாரென்பதை அவர் பாடிய இந்தப் பாட்டே நன்கு அறிவிக்கும்.

" கண்ணுக்கு மூக்கடியோ காதோர மத்தியத்தில்
உண்ணுக்கு மேலேறி உன் புதுமை மெத்த உண்டு
உண்ணுக்கு மேலேறி உன் புதுமை கண்டவர்க்கு
கண்ணுக்கு மூக்கடியோ என் கண்ணம்மா
காரணங்கள் மெத்த உண்டே"

இப்படியே சொல்லிக்கொண்டே போகலாம் யோகத்தைப் பற்றியும் யோகச் சிறப்பைப் பதிணென் சித்தர்கள் பாடியதைப் பற்றியும். அனுபவித்தவர்களுக்குத் தான் தெரியும் யோகத்தின் பேரின்ப நிலை.

" நிற்க நிற்க சொக்குதடி
நினைவு தடுமாறுதடி"

என்றல்லவா இருக்கும் அந்த சுகம்.

இப்படி அருள்மாரி பெய்த சாமிகள் நிட்டையில் ஆழ்ந்தது போன்று சில நிமிடங்கள் பேசாமல் அமர்ந்துவிட்டார். சாமிகள்

முகத்தில் எப்பொழுதும் தவழும் புன்னகை மறுபடியும் அரும்பிய போது சாமிகளிடம், "பம்பாயில் சாமிகள் தங்கியிருந்தபோது இரவில் அங்கங்களெல்லாம் தனித்தனியாக இருந்ததைப் பற்றிச் சில பக்தர்கள் கூறி இருப்பதைக் கேட்டிருக்கின்றோம். அதைப் பற்றி சொல்லும்போது சாமிகளே யோகம் என்றும் குறிப்பிட்டுள்ளதை படித்தோம்," என்றேன். சாமிகள் முகத்தில் அரும்பிய முறுவல் பூத்தது. சாமிகள் வாய்விட்டுச் சிரித்தார். "சாமி, தங்கள் அனுபவத்தை எங்களுக்குத் தெரிவிக்கலாகதா, யோகிகள் என்னென்னவோ காண்பார்கள், கேட்பார்கள், என்று கேள்விப்படுகின்றோம். தெய்வ நிலையை அனுபவிப்பதையும் கேள்விப்படுகின்றோம்." என்று தொடர்ந்து பேசிவிட்டேன். சாமிகள் மென்மையான குரலில், "யோகத்தால் வரும் இன்பத்தை என்னென்று சொல்வது. அதை எடுத்துரைக்க வார்த்தைகள் ஏது. இருந்தாலும் அகஸ்தியர் ஆனந்த கீதத்தில் இவ்வின்பத்தைக் காட்டும் ஒரு பாட்டு ஒன்று உளது. அது கூடியவரையில் யோகானுபவத்தை நன்றாகப் படம் பிடித்துக்காட்ட உதவும். நாம் சாப்பிட்டு வந்தவுடன் அந்தப் பாட்டைப் பாடுகின்றேன்." என்று உளமார உரைத்தார்.

## யோகத்தில் உடலும் உள்ளமும்.

சாமிகள் அன்று பாடிக் காட்டி அங்கும் இங்கும் சொல்லோவியமாகத் தன் சொந்த அனுபவப் பெருக்கினை உணர்ச்சிப் பெருக்கில் பொழிந்த அருமையை எடுத்துரைப்பதற்குமுன் யோகத்தைப் பற்றி நாம் அறிந்து கொள்ளவேண்டிய விஷயங்களைக் குறிப்பிடுவது இங்கு பொருத்தமென நினைக்கின்றேன். இந்தக் குறிப்புகள் தான் 'சக்தி வேலா' எனும் அந்தப் பாட்டுக்கு நல்ல விளக்கத்தைக் கொடுக்க உதவும் என்று நம்புகின்றேன். யோகத்தைப்பற்றிப் புத்தகத்தில் படித்துத் தெரிந்துகொள்ள முடியாதென்று யோகிகளே உரைத்திருக்கின்றனர். அதைத் தக்க ஒரு குருவால் தான் அடையமுடியும். அப்படி இருப்பினும் நான் படித்தும் கேள்விப்பட்டும் உள்ள சில விஷயங்களை நமது குரு திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள் அவர்கள் திருவுள சம்மதம் பெற்றே இங்கு வரைய முற்படுகின்றேன். இவ்விஷயங்கள் 'சக்திவேலா' பாட்டை ஓரளவு விளக்க உதவும்.

"அங்கிங் கெனுதபடி யெங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லம்
தங்கும்படிக் கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்தது" என்று

பரசிவ வணக்கத்தை ஆரம்பித்த தாயுமான சாமிகள் கருத்திற் கிசைந்த இதை 'கண்டனவெல்லா மோனவுரு வெளியதாகவும் கருதி' அஞ்சலி செய்கின்றார். இந்த மோன உரு வெளியைக் காண்பதே மானிடராகப் பிறந்த நமது முக்கிய கடமையாகும். இதை 'இரவு பகல் இல்லா இன்ப வெளி' என்று திருவுந்தியார் கூறியிருப்பதும் உற்று நோக்கத் தக்கது. இதை அடைய யோகம் அவசியமானது. நாம் பரப்பிரம்பத்தின் ஒரு பாகம். பரமேஸ்வரனது பேரொளியில் ஒரு துளிச்சுடர். பரமாத்மா அப்பேரொளி: ஜீவாத்மாக்கள் அப்பரமாத்மாவினின்றும் தோன்றிய சிறு துளிச் சுடர்கள். அவனின்றும் உண்டாகிய நாம் அவனையே அடைய முடியும். இந்த அடிப்படை உண்மையில் தான் மெய்யுணர்வு புகட்டும் யோக மார்க்கமும் வகுக்கப்பட்டுள்ளது. இதை விளக்க ஒரு வேதாந்த பரம்பரைக் கதையும் உதவும். ஒரு அரசனின் மகன் காட்டில் அகப்பட்டு வேடர்களால் வளர்க்கப்படுகின்றான். அவன் தன் ஆதி அரச பிறப்பை மறந்து விட்டான். நெடு நாட்களுக்குப் பிறகு அவன் யார் என்பதை அறிகின்றான். தான் வேட குலத்தினன் அல்லன், தான் வேந்தர் குலத்தினன் என்பதை அறிந்து, தான் இழந்த நாட்டையும் மீண்டு மடைகின்றான். அது போன்று தான் ஜீவாத்மா ஐம்புல வேடர் வயப்பட்டுத் தன் பரமாத்மா அரசு நிலை மறந்து காடாகிய இவ்வுலக வாழ்வில் அலைந்து திரிகின்றது. இந்த ஜீவாத்மாவை மறுபடியும் பரமாத்மா நிலைக்குக் கொண்டுவர உதவுவது வாசியை ஆளுகின்ற யோக சாதனமாகும்.

இதை இன்னும் விவரித்துக் கூறலாம். நம்முடைய ஆத்மாவே பிரம்மமாய் விளங்குகின்றது. அதர்வணவேத ஞான கண்டத்து மாண்டூக்கிய உபநிஷத் இதை விளக்கமாக உரைக்கின்றது. எயுர் வேத அயித்திரிய உபநிஷத்தும் 'அகம் பிரமா அஸ்மி' என்ற சொற்றொடர்களால் 'நானே பிரம்மம்' என்பதைத் தெளிவுறப் பேசுகின்றது. சாமவேதஞ்ஞான கண்டத்துள் சாந்தோக்கிய உபநிஷத்தில் 'தத், தவம், அசி' எனும் வாக்கியம் "நீயே நானாய்" என்ற ஆத்ம பிரம்ம ஐக்கியத்தை, இரண்டறக் கலந்த ஏகாந்த நிலையை ஐயமற எடுத்து ஓதுகின்றது. இது தான் தன்னை யறிகின்ற உண்மை. உள்ளொளியைக் கண்டு கொள்ளும் விளக்கம். ஆத்ம ஜோதியைத் தன்னுள் காண்பதே உடலில் பொதிந்துள்ள பேருண்மையாகும். பரம்பிரம்மத்தை தேகத்தில் கண்டு அனுபவிப்பதே வாசியோகிகளின் பேரின்ப நிலையுமாகும்.

ஆதியில் பரப்பிரம்மம் தன்னைப் பலவாகக் காண மனம் பெற மனம் உதித்ததென்பர். அதற்கு அடையாளமாக அந்தக்கரணம் என்ற சித்தமும் அதிலிருந்து படிப்படியாக அகங்காரம், புத்தி, மனஸ் என்ற தோற்றங்கள் உண்டாயின வென்பர். இப்படியாக

பரம்பொருள் இத் தோற்றங்களைக் கொண்டு உண்டாக்கப்பட்ட பஞ்சகோசங்களடங்கிய தூல சரீரத்துள் புகுந்தது வென்பர். நமது சரீரத்தைச் சூட்சம சரீரமென்றும் (உள்ளுடல்) தூல சரீரமெனறும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். தூல சரீரத்தில் எலும்புத் தசை முதலியனவும் நாடி நரம்பு முதலியனவும் உள்ளன. அதில் 96 தத்துவங்கள் உள்ளன.

## 96 தத்துவங்கள்

பூதம்–5: பிரிதிவு, அப்பு, தேய்வு, வாய்வு, ஆகாயம்.

பொறி–5: மெய், வாய், கண், மூக்கு, செவி.

தொழில்–5; தேவ, தானம், விசர்க்கம், ஆனந்தம், பயம்.

கோசம்–5: அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்கியான மயம், ஆனந்தமயம்.

சயம்–5: அமரசயம், பக்குவசயம், மலசயம், சலசயம், சுக்கிலசயம்.

புலன்–5: சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்.

கரணம்–4: மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

குணம்–3: சாத்மீகம், இராசதம், தாமதம்.

மலம்–3: ஆணவம், மாய்கை, காமியம்.

கண்ம இந்திரியம்–5: வாக்கு, பாதம், பானி, பாயுரு, உபத்தம்.

இராகம்–8: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், இடும்பை, வேகம்.

நாடி–10: இடைகலை, பின்கலை, சுழிமுனை, இங்குவை, புருடன், காந்தாரி, அசனி (அக்னி), அலம்புவி, சங்குனி, குணு.

ஆதாரம்–6: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்கினை.

மண்டலம்–3: அக்னி, சூரியன், சந்திரன்.

அவித்தை–5: சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், அதிதுரியம்.

தோஷம்–3: வாதம், பித்தம், சிலேத்துமம்.

எக்ஷணை–3: அர்த்த எக்ஷணை, புத்திர எக்ஷணை, லோக எக்ஷணை.

வாயுகள்–10: பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிதரன், தேவதத்தன், தனஞ்செயன்.

வினை-2 : நல்வினை, தீவினை.

அறிவு-1 : ஞானம்,

சூட்சமசரீரத்தில் மனது நினைக்கின்றது, சித்தம் மனது நினைப்பதைப் பதிவு செய்கின்றது, அகங்காரம் நான் என்று மார்தட்டி எழுகின்றது, புத்தி இது நலம் இதுதீது என்று பகுத்து அறிகிறது. இந்த அந்தக்கரணத்திற்குப் பின்னுல்தான் உள்ளமும் அதில் ஆத்மாவும் உள்ளது. இந்த இரண்டிற்கும் இடையே உயிர் உயிர்க்கிறது. சூட்சம உடலையும் தூல உடலையும் வாழ வைக்கின்றது. இவையெல்லாம் அறிந்துதான் திருமூலமந்திரமும் இப்பேருண்மைகளை இரண்டு பாட்டுக்களால் தெளிவாக விளக்குகின்றது.

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே."

"உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே"

சகல சீவராசிகளுக்கும் உயிராக இருப்பது வாயு என்பதை அறிந்து கொண்டோம். இந்த வாயு என்பது தூலரூபத்தில் காற்ருகவும் சூட்சம ரூபத்தில் பிராணு என்றும் அழைக்கப்படுகின்றது. பிராணு இல்லாத இடமில்லை. இது சக்திக்கு ஆதாரமாக உள்ளது. இதன் சக்திதான் சூரியசந்திர நட்சத்திரங்களை பிரகாசித்து உலாவச் செய்கின்றது. இதனுல்தான் இயற்கையும் தன்வேலையைச் செய்கிறது. பிராணு சீவராசியில் உயிர்பெற்று உலாவும்போது 'பிராணன்' எனப் பெயர் பெறுகிறது. மனிதன் 'பிராணுவை' சர்வ வியாகத்திலிருந்து இழுத்து நிரப்பக்கூடிய ஆற்றல் பெற்றவன். அதைத் தகுந்த முறையில் உபயோகிக்கக்கூடிய அறிவும் பெற்றிருக்கின்ருன். இதயம், மூளை, நரம்புகள், நுரையீரல்கள், சீரணக் கருவிகளெல்லாம் பிராணுவை நன்ருகப் பயன்படுத்திக் கொள்ள முடியும். நன்ருகவும் நிரப்பிக் கொள்ளவும் முடியும். இப்பிராணு ததும்பி நிற்பவர்கள் நல்ல ஆரோக்ய சக்தி பெற்றவர்கள். இது சீர்குலைந்தால் நோய் உண்டாகிறது. இந்தப் பிராணுவை திரட்டும் வழியே யோக சாதனமாகும். உடலுக்கு மட்டுமல்ல, மனம் புத்தி இவைகளுக்கும் பிராணு தன் சக்தியை ஊட்டிக் காட்டமுடியும். யாருடைய மனத்திலும் புத்தியிலும் இது நிரம்பிததும்பி வழி

கின்றதோ அவனே கவிஞனுகவும், ஆராய்ச்சி நிபுணராகவும், பேரறிஞனுகவும் திகழ்கின்ருன். இது சீவன் முக்தர்களேயும் உண்டாக்குகின்றது.

தூலசரீரமும் பிரம்மத்திலிருந்து பஞ்சபூத வாயிலாகப் பிறந்தது என்பதும் சீவமனது என்பது பிரமத்தின் பிரிவுத்தோற்றம் என்பதையும் அறிந்தோம். இவைகளில் பங்குகொள்கின்ற சூக்ஷம வாயு எனும் பிராணன் யோக சாதகத்திற்கு மிகவும் முக்கியமானது. இந்த சூக்ஷம வாயுவாகிய பிராணனுக்கு மனம் ஒரு சேஞபதியைப் போல் விளங்குகின்றது. பிராணன் என்ற சைன்யத்தைப் பிடித்து அடக்கிஞல் சைன்யத்தின் சேஞபதியான மனம் தானே அடங்குகின்றது. பிராணன் மனதிற்குக் கட்டுப்பட்டது. அப்படியே சேஞபதியையும் பிடித்துவிட்டால் சைன்யமும் பிடிபட்டு விடுகின்றது. எந்த யோகியால் பிராணன் கட்டுப்படுகின்றதோ அந்த யோகியால் மனம் கட்டுப்படுகின்றது; எந்த யோகியால் மனம் கட்டுப்படுகின்றதோ அவஞல் பிராணன் கட்டுப்படுகின்றது. இதைப்பற்றிப் பேசும் சிவபோக சாரம் இன்னும் இந்தத் தத்துவத்தைக் கீழ்க்கண்டவாறு விளக்குகின்றது. "மனம் பிராணன் என்னும் இரண்டில் ஒன்றைக் கட்டிஞல் மற்ருென்றும் கட்டப்படும். ஆதலால் மனம் ஓடுங்காத வரையில் வாசனே நசியாது. வாசனே நசியாத வரையில் சித்தம் நசியாது. சித்தம் நசியாத வரையில் தத்துவ ஞானம் உண்டாகாது. பிராணன் மனம் என்னும் இவ்விரண்டையும் எவன் லயமாக்குகின்ருனே அப்புருஷன் மோக்ஷத்தை அடைகின்ருன்... மஞேலயம் எதுவரையில் ஆகவில்லேயோ அதுவரையில் இந்திரிய விஷயங்கள் ஜெயமாகாது...இந்திரிய விஷயங்கள் ஜெயமாகாத வரையில் எனதென்பது எப்படி நீங்கும்? எனதென்பது நீங்காத வரையில் யானெனும் அகந்தை எப்படி நீங்கும்? யானெனும் அகந்தை நீங்காத வரையில் மனம் சுத்தம் எப்படி ஆகும்? மனம் சுத்தமாகாத வரையில் அபரோட்ச ஞானம் எப்படி உதயமாகும்? அபரோட்ச ஞானம் உதயமாகாத வரையில் பிரம்ம சைதன்னியம் சமாதியின்கண் எப்படி புலப்படும்? பிரம்ம சைதன்னியம் சமாதியின்கண் புலப்படாத வரையில் திடஞ்ஞானம் எப்படி உண்டாகும்?" — இப்படியே அடுக்கிச் சொல்கின்றது சிவபோக சாரம். யோகத்தில் மஞேலயத்தின் முக்கியத்துவம் பற்றி இந்த மனமடங்கும் நிலேதான் யோகத்தில் மோனநிலே. இதைத்தான் 'மோனமென்பது ஞானவரம்பு' என்று கொன்றைவேந்தனும் பகர்கின்றது. இந்தப் 'பேசாவநுபூதி' பிறத்தலேயும் குறிக்கும் கந்தரநுபூதிப் பாடலேயும் இங்கு எடுத்துக்காட்டுவதும் பொருந்தும்.

"தூசாமணியும் துகிலும் புனேவான்
நேசாமுருகா நினதன் பருளால்

ஆசா நிகளம் துகளாயின்பின்
பேசா அனுபூதி பிறந்ததுவே"

பவள முத்தாபணம் ஆடை அலங்கார புருடன், வள்ளி மணவாளன், முருகன் கடைக்கண் அருள்பார்வையால் ஆசாபாசங்களெல்லாம் தூளாகும். அவை தூளானபின் வாய் பேசாத நிர்விகற்ப சமாதியாகிய மகா மௌனநிலை பிறக்கும் என்பதே கந்தரநுபூதிப் பாடலின் பொருள். இந்த நிலையைத்தான் 'பலகோடி சூரியர் ஓரிடத்தொருங்கு தோன்றினாற்போல நீக்கமற நிறை பேரொளியாய் சடசித்துக்களின் உள்ளும் புரம்புமாகிப் பூரண நிரவய நிட்கள சொரூபமாக எங்கெங்கும் பரந்து விளங்கும் நிலை' யென்பர். இச் சுத்த நிலையை இராப்பகலற்ற இடமென்றும் மறப்பு நினைப்பற்ற இடமென்றும் யோகியர் போற்றுவர்.

பிராணன் எனும் சூட்சம வாயுவைப் பற்றி அறிந்தோம். இப்போது யோகத்திற்கு அவசியமான தூல வாயுவான காற்றைப்பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும். சாமிகளிடம் நேயமுள்ள பக்தர் ஒருவர் அடிக்கடி சாமிகளைப்பற்றிப் பேசும்போது வேடிக்கையாக ஒரு பாட்டையும் பாடிக் காண்பிப்பார்.

"பறையன் வந்தான் தமுக்கடித்தான்!
பனிரண்டுக் கப்பல் ஏத்திவைத்தான்!
இரும்பினாலே கோட்டை கட்டி
இழுத்தடிச்சான் நவாபு! நவாபு!! நவாபு!!!"

இந்தப் பாட்டு வேடிக்கை விளையாட்டுப் பாட்டுபோல் ஏதோ தமுக்கடித்தலையும், கப்பலையும், கோட்டையையும், நவாபையும் காட்டுகிறதென்று எண்ணவேண்டாம். இது யோக மார்க்கத்தைச் சிறப்பித்துக் காட்டும் பாடல். யோகத்திற்கு இன்றியமையாத வாசி வசப்படுத்தும் பெருமையை வானளாவப் புகழ்கின்றது இப்பாட்டு. பரஜயன் (பரப்பிரம்ம சொரூபியான மனிதன்) வந்தான். 'தம்' (மூச்சை) கடித்தான் (பிடித்தான்) பன்னிரண்டுக் கப்பல் (பஞ்சேந்திரியம், ஆருதாரம், துரியம் என்ற நிலைகளுக்கப்பால் உள்ள துரியாதீதம் என்ற நிலைக்கு) ஏற்றி வைத்தான். (அதுதான் மோன நிலை) இழும் பூவினாலே ('பூ' என்று ஊதினால் வருகின்ற காற்றினாலே) கோட்டை கட்டி (காற்றை சேகரம், பந்தனம் செய்து) இழுத்தடிச்சான் (வெளியே காற்றைவிடல்) இதுதான் இதன் உட்பொருள். விளக்கிச் சொன்னவுடன் இது எவ்வளவு அருமையாக வாசி வென்ற வரது நிலையை, ராஜயோக நிலையை மிகவும் உன்னத பதவியைக் காண்பிக்கும் 'நவாபு' என்ற சொற்களால் அலங்கரித்துக் காட்டுகின்றது என்பது விளங்கும்.

நமது வாழ்நாட்களைப் பற்றிப் பேசும்போதுகூட நமது வாழ்வு ஒரு குறிப்பிட்ட மூச்சு எண்களைக் கொண்டது என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கின்றோம். அதனுல் மூச்சை வீண் விரயம் செய்யக் கூடாது என்றுகூடப் பெரியவர்கள் சொல்வர். மூச்சை வீண் விரயம் செய்வதால் நமது ஆயுளும் குறையும் என்றும் சொல்வர். சுவாசமே மனிதன் உயிர். சுவாசத்தை ஒழுங்கு செய்துகொண்டால் ஆயுள் நீளும், வியாதிகள் அணுகா. பிராணுயாமம் செய்வது சுவாசத்தை ஒழுங்குபடுத்துவதேயாகும். ஒரு நிமிடத்தில் உள்ளுக்கும், வெளிக்குமாய் 15 தடவை சுவாசம் நடமாடுகிறதென்றும், ஒருமணிக்கு 900 தடவையும், ஒருநாளைக்கு 21,600 தடவையும் சுவாசம் நடக்கிறதென்றும் கண்டுபிடித்திருக்கின்றனர். மூக்கால் உட்செல்லும் காற்று அதிலுள்ள உயிர்க்காற்றைப் பிரித்து இரத்தத்திற்கு ஊட்டி அதன் மூலம் உடலில் பிராணசக்தியைப் பரப்பி எஞ்சியுள்ள நஞ்சையொக்கும் கரிக்காற்றை வெளியேற்றுவது சாதாரண மானிட உடலில் அன்ருடம் ஒவ்வொரு கணமும் நடந்துகொண்டிருக்கும் ஒரு அற்புத வேலை. பிராணுயாமம் செய்யும் ஓர் யோகி சுவாசத்தை ஒழுங்குபடுத்துகின்ருர். அப்படியென்ருல் சுவாசப்பயிற்சியே பிராணுயாமம் என்று உடனே கூறிவிட முடியாது. பிராணுவைக் கட்டியாளும் மார்க்கமே பிராணுயாமமாகும். பிராணுயாமம் செய்யும்போது சுவாசம் கலந்து கொள்கின்றது. மூச்சை உள்ளே இழுப்பதும், உள்ளே இருத்துவதும் பிராணுயாமத்தில் நடக்கின்றது. அதனுல் மூச்சை அடக்குவது மட்டுமே பிராணுயாமத்தின் நோக்கம் என்றும் கூறிவிட முடியாது.

நமது உடம்பில் முதுகெலும்பு ஒரு முக்கியமான பெட்டகம். 33 உறுதியான எலும்புகளால் ஆக்கப்பட்டது. முதுகெலும்பில் மூன்று துளைகள் உள்ளன. இடப்புற துளையுள் இடை நரம்பும் (இட நரம்பு), வலப்புற துளையில் பின்கலை நரம்பும் (வல நரம்பு), நடுவிலுள்ள நுட்பத் துளையில் சுழுமுனை நரம்பும் (நடு நரம்பு) ஓடுகின்றன. இம்மூன்று நரம்புகளையும் 'ஜீவயாழின் தந்திகள்' என்று கூறுவர்; காரணம் இவையே உடலை இயக்கும் சூத்திரக் கயிறுகளாக அமைந்துள்ளன. இந்த சக்தி நிலையங்கள் பின்னுல் விவரிக்கப்படும் சூட்சமஸ்தானங்களாகிய மூலாதாரம், சுவாதிஷ்டானம், மனிபூரகம், அனுஹதம், விசுக்தி, ஆக்ஞை எனும் ஆருதாரச் சக்கிரங்களோடு தொடர்புடையன. நாம் பிராணுயாமம் செய்யும் போது சுவாசம் முதுகெலும்புத் துவாரத்தில் ஓடுகின்றது. முதுகு நரம்பின் பக்கங்களில் அறியப்படாதபடி அமைந்துள்ள சிம்பதெடிக் கேங்கிலியா (Sympathelic Ganglia) என்கிற நரம்புக் கூட்டங்களும் வேகஸ் (Vegus) எனும் நரம்புகளும் பிராணுயாமத்தில் கலந்துகொள்கின்றன என்பர். சூட்சமமாக அமைந்துள்ள இடா பிங்களா கஷும்னு என்ற யோக தத்துவ நாடிகளும் பிராணுயாமத்தில்

கலந்து கொள்கின்றன என்பர். யோக தத்துவ நாடிகள் சூட்சம மானவை; இவை யோக உள்நோக்கத்திற்கே புலப்படும். பிராணு யாமம் செய்யும் சாதகர் மனக்கண்களால் தான் பார்க்கமுடியும் என்பர். முதுகு நரம்புக்கும் துவாரம் உள்ளது. இதனுள் மறைந்து நிற்கும் சுஷும்ந நாடியும் இடப்புறம் இடாவும் வலப்புறம் பிங்களாகவும் அமைந்திருக்கின்றன. இடாவுக்கும், பிங்களாவுக்கும் சுவாச சம்பந்தம் உண்டு; இடா இடது நாசி சுவாசத்தோடு சம்பந்தம் கொண்டுள்ளது; பிங்களா வலது நாசி சுவாசத்தோடு சம்பந்தம் கொண்டுள்ளது என்கின்றனர்.

சிவபோகசாரம், மனிதர்களுக்குச் சாதாரணமாக எழுபத்திராயிரம் நாடி நரம்புகள் இருக்கின்றன என்று கூறுகின்றது. இவற்றுள் இருபத்தி நான்கு முக்கியமானவை. அவை எப்போதும் உறங்கிக் கொண்டிருக்கின்றன. இவைகளே குண்டலினி சக்தி நாடிகள் என்று ஆதிநாதர் அருளிச் செய்திருப்பதாகச் சிவபோக சாரம் சொல்கின்றது. சிவபோக சாரம் நூல் இன்னும் இதைப்பற்றிக் கூறுவதைத் தொடர்ந்து கவனிப்போம். இக்குண்டலினி சக்தி யோகிகளுக்கு மோட்சத்தின் பொருட்டும் மற்றோருக்கு பந்தத்தின் பொருட்டும் தூங்குகிறது. குண்டலினி சக்திகொண்டுள்ள இந்த இருபத்து நாலு நாடிகளுள் பத்தை விசேடமாகக் கூறுவதுண்டு. இந்தப் பத்து நாடிகளிலும் மூன்றை வெகு முக்கியமாக எடுத்திருக்கின்றது; தேகத்தின் இடதுபாகத்தில் இடகலையும், வலது பாகத்தில் பிங்கலையும் மத்தியில் சுழிமுனையும் அமைந்திருக்கின்றன.

உள்ளே சென்று வெளியே வருகின்ற சுவாசத்தைக் கலை என்று யோக சாத்திரத்தில் கூறுவர். கலையில் மூன்று உண்டு. அவற்றை இடைகலை, பிங்கலை, சுழிமுனை என்றழைப்பர். இடைகலை என்பது இடது நாசியிலும், பிங்கலை என்பது வலது நாசியிலும், சுழிமுனை என்பது இரண்டு நாசிகளிலும் வரப்போகவுமிருக்கும் சுவாசம். இடைகலையைச் சந்திரனென்றும், பிங்கலையைச் சூரியனென்றும், சுழிமுனையை அக்கினியென்றும் அழைத்து சந்திரகலை, சூரியகலை, அக்கினிகலை யென்றும் சுவாசத்தைப் பெயரிட்டு அழைப்பதுண்டு.

தக்க குருவைக்கொண்டு செய்யும் சுவாச பந்தனத்தாலும் பிராணுயாமப் பயிற்சியாலும் நல்ல பயன்களை அடைய முடியும். வியாதிகளைக்கூட சுவாசப் போக்கால் மாற்றலாம். இன்னின்ன வியாதிகளுக்கு இன்னின்ன விதமாக சுவாசத்தை இழுத்தோ விடுத்தோ சேர்த்து வைத்தோ குணம் காணலாம் என்றும் யோகிகள் உரைப்பர். காற்றை இழுத்தலை பூரகமென்றும், விடுதலை ரேசகம் என்றும், சேர்த்து வைத்தலைக் கும்பகமென்றும் கூறுவர்.

உடம்பின் வலது பக்கம் சூரிய நாடியும் இடது பக்கம் சந்திர நாடியும் ஓடுகின்றன. சூரிய நாடியையே விசேஷமாகக் கூறுவர். ஏனெனில் நாம் சூரிய நாடியில் சுவாசத்தை நடமாட வைத்துக் கொண்டால் உடல் வலிமையும், நீண்ட ஆயுளும், காரிய சித்திகளும் உண்டென்பர். இதற்காகவே பெரியவர்கள் நம்மை இடது பக்கமாய் படுக்கச் சொல்வர். இப்படி இடது பக்கத்துக்கே அதிக வேலை கொடுத்தால் சூரிய நாடியில் சுவாசம் நடக்கச்செய்கின்றோம்; அதனால் நல்ல பலன்களை அனுபவிக்கலாம்.

## குண்டலினி யோகம்

இப்பொழுது குண்டலினி சக்தியை எழுப்பி சிவராஜயோக மார்க்கத்தை அடைவதெப்படி என்பதை ஆராய்வோம். குண்டலியை எழுப்பி பரப்பிரம்ம ஐக்கியத்தில் இணையும் இக்கலையைக் கவிதை வடிவிலே தாயுமானாரும் இராமபிரசாத் என்ற தந்திர யோகியும் கூறியவற்றை இங்கே படித்தின்புறலாம்.

"மருமலர்ச்சோலை நெறி நன்னீழன் மலையாதி
மன்னுமுனிவர்க் கேவலாய்
மந்திரமாலிகை சொல்லு மியமநிய மாதியா
மார்க்கத்தினின்று கொண்டு
கருமருவு காயத்தை நிர்மல மாகவே
கமலாசனாதி சேர்த்து
காலைப் பிடித்தனலை யம்மை குண்டலியடிக்
கலைமதியினூடு தாக்கி
யுருகிவரு மமிர்தத்தை யுண்டுண்டுறங்காமல்
உணர்வான விழியை நாடி
யொன்றோ டிரண்டெனுஞ் சமரச சொரூபசுக
முற்றிடவென் மனதின் வண்ணந்
திருவருண்முடிகவித் தேகமொடு காண்பனோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிமான தெய்வமே
தேசோன் மயானந்தமே"

இப்படி அருமையாகத் தீந்தமிழில் வருணிக்கின்றார் தாயுமான சாமிகள். இதையே ஆங்கிலக் கவிதையில் சுருக்கமாக எளிதாகப் பாடுகின்றார் இராம்பிரசாத் எனும் தந்திர மெய்ஞானி.

" Awake Mother Kundalini, how long has thou been asleep
In the lotus of the Muladhara
Fulfil thy secret function, Mother
Rise to the Thousand petalled Lotus within the head
Where mighty Siva has his dwelling
Swiftly pierce the Six Lotuses
And take away my grief, O Essence of Consciousness.

(Ramprasad, The Tantric Mystic)

இந்த ஆங்கிலக் கவிதைப் பொருளையும் தமிழ்க் கவிதை வடிவில் காண்போம்.

" தாயே குண்டலினி சக்தி எழுந்திடுவாய்!
தூக்கம்விடு மூலாதாரக் கமலத்தில்
கோயிலாய் சிவன்கொழிக்கும் ஆயிரமாம் இதழ்கொழிக்கும்
கோயில் சிரசிற்கே அம்மா எழுந்திடுவாய்!
ஆறுக் கமலங்கள் அவற்றையுமே ஊடுருவி
அழகாய் பாய்ந்து எழு! வேகமுடனே எழுவாய்!
தீரும் கவலையெலாம் வேகமுடன் நீஎழவே
தெய்வ உள்ளுணர்வின் பிழிந்தெடுத்த தீஞ்சாரே!

இதையே இரத்தினச் சுருக்கமாக மகாவித்துவான் திரு. நா. கதிர்வேல் பிள்ளை தாயுமான சாமிகள் சரித்திரச் சுருக்கத்தில் கூறி உள்ளதையும் கவனிப்போம். " யோகமாவது அகத்தொழிலின் மாத்திரையானே ஈசுவரன் அருவத்திருமேனியை நோக்கிச்செய்யும் வழிபாடு. அது இந்திரியங்களை யொடுக்கி மனத்தை விடயங்களின் வழிச்செல்ல வொட்டாமல் திருப்பி, ஒரு குறிப்பில் நிறுத்தி, உச்சவாசம் நிச்சவாசமென்னும் இரேசகபூரக வாயுவைத் தடுத்து, நடு நாடியாகிய சுழிமுனை மார்க்கத்திலே பிராணவாயுவை நிறுத்தி, மூலாதார முதலிய ஆருதாரங்களின் அந்தர்மா திருகாக்கிரமத்தை யறிந்து, அவ்வவ் வாதாரங்களின் அதிதேவதைகளை உபாசித்து, அவர்கள் அனுக்கிரகத்தால் அவ்வாதாரங்களில் அதோமுகமான பதுமங்களைப் பேதித்து, அவற்றின்மேல் பிரமரந்திரமளவும் அசபையுடன் சென்றணைந்து, அங்கு அதோமுகமாக இருக்கும் சகத்திரதள தாமரை முகையை ஈசரனருளால் அங்கு உதிக்கும் சிவார்க்கனுலே மலரச்செய்து, அந்தத் தாமரைப் புட்பத்தின் கேசாக்கிரத்திலே உள்ள சந்திரமண்டலத்தை ஆகுஞ்சனஞ் செய்தலினுலே மூலாக்கினியை அக்கினி பீஜாட்சர உச்சாரணத்தினுலே எழுப்பி, நாடிச் சக்கரங்களைப் பேதித்து, அவ்வங்கியினுலே சந்திர மண்டலத்தை யிளகப்பண்ணி, அந்த அமிர்தத்தைச் சர்வநாடி

வழியாயிழுத்து உடல் முற்றும் நிறையச்செய்து, அதிலுண்டாகும் சுகோதயத்தில் அந்தமயமான ஞானமிர் வாதத்தையை அடைந்து நின்று, சோம சூரியாக்கினிப் பிரகாசாதிகளாகிய பிரத்தியேகப் பிரகாசங்களெல்லாம் சூரியோதயத்தில் நட்சத்திராதி பிரகாசங்கள் அடங்கினற் போலத் தீன்னிடத்தடங்கப் பரவெளி நடுவிற் சர்வ தோமுகமாய்ப் பெருஞ்ஜோதியான சிவத்தைச் சத்தியோடு நேர் நோக்கிச் சுயம்பிரகாசமா யதனுளழுந்து மியல்பாதலாலும் சாந்தி யோகத்திற்குக் காரணமாதலாலும் யோகியர் புக்கழுந்துவது பர வெளிச்சோதி யுள்ளாகலாலும் 'சாந்தபத வியோமநிலை' என்னப் பட்டது."

1968 மே மாதம் 4ஆம் தேதி ஹிந்துப் பத்திரிகையில் ஒரு செய்தி வெளியாகி இருந்தது. அமெரிக்காவில் இருபத்து நான்கு வயது இளைஞர் ஒருவர் மௌன நிலையில் அமர்ந்திருக்கக்கண்ட போலீசார் அவரைக் கைது செய்து நீதித்தலத்திற்கே கொண்டு வந்தனர். அவருடைய உடப்பு ஒரு மதில் போன்று கெட்டியாக இருந்தது என்று போலீஸ் ரிப்போர்ட்டில் அவரைக் கைது செய்த அதிகாரி குறித்திருந்தார். போலீஸ் அதிகாரி கேட்ட கேள்விகளுக்குப் பதில் இல்லை. உணர்வற்ற உடலையும் பதிலற்ற நிலையையும் புரிந்து கொள்ள முடியாத போலீஸார் அவர் போதையில் இருந்ததாகக் குற்றம் சாட்டினர். "நான் போலீஸ் அதிகாரி கேட்ட கேள்வி களுக்கு பதில் அளிக்காதது உண்மைதான். நான் என் உடலி லேயே அந்த சமயம் இல்லையே" என்று கூறினர் இளைஞர், செயலற்று மொழியற்று இருந்த யோகநிலையை உணர்ந்த நீதிபதி அவர்மீது குற்றம் சாட்டி இருந்ததை நீக்கினர். இந்த இளைஞர் ஒரு அமெரிக்க நாட்டினர், திரு. சத்தியஞானமா போதிசத்வா (Mr. Satyananama Bodhistava) என்ற பெயரினர். இந்தச் செய்தி, அவர் யோகநிலையை உணராத அமெரிக்க நாட்டில் எவ்வளவு ஆச் சரியத்தை விளைவித்ததோ, அவ்வளவு ஆச்சரியத்தை நமக்கும் விளை விக்கின்றது ; காரணம் இத்தகைய யோகத்தையும் செய்ய வல்லவர் யோக சாதனத்திற்கே புகழ் வாய்ந்த இந்தியாவில் மட்டுமல்ல வேறு நாட்டிலும் இருக்கின்றனர், என்பது தான். உலகில் மனிதன் இன்பத்தை அனுபவிக்கின்றன். தூக்கத்திலும் சுகம் உண்டு, கன விலும் சுகம் உண்டு. விழிப்பதிலும் சுகம் உண்டு. இந்த மூன்று நிலைகளிலும் அனுபவிக்கும் இன்பத்தைவிட ஒரு பேரின்ப நிலையை யும் மனிதன் அடையக்கூடும். அதையே 'துரித நிலை' என்பர். இந்த நிலையை கைலையில்தான் வைகுண்டத்தில்தான் அனுப விக்க முடியும் என்பதல்ல. அமெரிக்காவில் கூடஅனுபவிக்கின்றனர் என்பதைத் தான் செய்தித் தாள் மூலம் அறிகின்றோமே !

இந்த நிலையை அடையவேண்டுமென்ற எண்ணம் எல்லோரிடத்தும் இருக்கின்றது. இந்த எண்ணத்தைத் தட்டி எழுப்பத்தான் குருவின் கருணை வேண்டும். நமது சாமிகள் பேரருள் வேண்டும். அவர் உதவியிருந்தால் இப்பேரின்ப நிலைக்கு இவ்உடலை வைத்துக் கொண்டே ஏறிவிடலாம். கடவுளே குருவடிவில் வந்து இப்பேரின்ப நிலையை அடையச் செய்கின்றார் என்பதும் ஹிந்து தர்மத்தின் நம்பிக்கை. குருவும் ஆத்ம சக்தியைக் கொடுத்துத்தான் தூங்கும் குண்டலினி சக்தியை விழிப்படையச் செய்கின்றார். "தன்னையறிந்தின்பமுற," குண்டலினியை விழிப்புறச் செய்கின்றார். இந்தப் பேருண்மையை அடிக்கடி நமது சாமிகள் சீடர்களுக்கு எடுத்துரைக்கின்றார். அவர் சக்தி பாதத்தின் மூலம் நம்மிடம் தூங்கிக்கொண்டு இருக்கும் குண்டலினி விழிப்படையும் நன்னாளை எதிர்பார்த்திருக்கும் பக்தர்கள் எவ்வளவோ பேர் இருக்கின்றனர். ஜீவனைச்சிவமாக்கவும், நரனை நாராயணனாக்கவும் செய்ய வல்ல சித்தி பெற்ற குருசாமிகள் மனது வைத்தால் உலகத்தில் நடக்காதன உண்டோ?

தந்திர ஆகமப்படி சமாதி நிலைக்குக் கொண்டு செல்லத்தக்க பல யோக வழிகள் உண்டு; குண்டலினி சக்தியைத் தட்டி எழுப்பக் கூடிய யோகம் அதில் ஒன்று. தந்திர முறைப்படி (ஆகமவிதிகள்படி) போகத்தை வைத்துக் கொண்டே யோகத்தை அடையலாம் என்றும் இகத்திலும் பரத்தை அடையலாம் என்றும் அறிய முடிகின்றது. இதற்கு விளக்கம் தேவையில்லை. ஆத்ம அனுபவம் பெற வேண்டியவர்களுக்கு உடலும் அதன் கருவிகளும் மனமும் அடிப்படை ஆதாரமாக உள்ளன. சிவம் சக்தியாக விளங்குகிறது. சிவசக்தி இயங்குவதனால் தான் உலகம் இயங்குகின்றது. இதைத்தான் 'எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்' என்று சித்தியாரும் உரைக்கும். கடவுளுடைய அம்மை அப்பர் தன்மையைத் தெளிவாக உரைக்கின்ற அப்பர் பெருமானும் அம்மையப்பரைக் 'கண்டேன் அவர் திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்' என்று முடியும் திருப் பாசுரங்களால் காதல் மடப்பிடியோடு களிறு வருவதைக் கண்டேனென்று கூறி இறைத் தன்மையைச் சிவசக்தித் தன்மையாக ஜீவராசிகளை ஆண் பெண் ஜோடியாகப் பார்த்து அனுபவிப்பதை விளக்குகின்றார். அதில் உள்ள முதல் பாசுரத்தைப் பாருங்கள்.

"மாதர் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவாரவர் பின் புகுவேன்
யாதும் சுவடுபடாமல் ஐயாறு அடைகின்ற போது
காதல் மடப் பிடியோடும் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்."

தன்னிடத்திலிருந்து பிரிக்க முடியாத சக்தியோடு இருக்கும் சிவன் அண்ட சராசரங்களில் நிறைந்துள்ளது. அண்டத்தில் உள்ள அது பிண்டத்திலும் நிறைந்துள்ளது. ஆக அது ஒவ்வொரு வர் உடலிலும் நிறைந்துள்ளது. மனிதனிடம் உறையும் இம்மகா சக்திகளை மகோன்னத நிலைக்குக் கொண்டு வந்து அனுபவிக்கச் செய்யும் நிலையைத் தான் குண்டலினி யோகம் என்று சொல் கின்றோம். இந்தச் சந்தர்ப்பத்தில் சாமிகள் ஆதி சக்திதான் கடவுள் என்பதை விளக்கிக் கூறும் பொன் மொழிகளையும் செவி மடுப்போம்.

சாமிகள் : ஆதி யென்பது ஆகாசமாகின்றது. சக்தி என்பது இயங்கவைக்கும் பிராணன் ஆகின்றது. ஆகையால் ஆகாசமும் பிராணனும் சேர்ந்தே ஆதி சக்தி எனப்படும். அந்த ஆதி சக்தி தான் கடவுள். கடவுள் என்ற சொல்லைப் பிரித்து ஆராய்வோம். கடவுள் என்ற சொல் 'கட' என்பதையும் 'உள்' என்பதையும் கொண்டுள்ளது. 'கட' என்பது என்ன? எல்லாவற்றையும் கடந்து நிற்பது ஆகாயம். 'உள்' என்பது என்ன? உள்ளே நின்று இயங்க வைப்பது பிராணன். அதுவே சக்தி. ஆக கடவுள் என்பது ஆகாயத்தையும் பிராணனையும் சேர்த்து காட்டுகின்றது. ஆக கடவுள் என்பது ஆதி சக்தியைக் குறிப்பிடுகின்றது. யோகம் நமக்கு எதைக் காட்டுகின்றது. கடவுளைக் காட்டுகின்றது. குண்டலினி சக்தி மேல்நோக்கிச் சென்று பரவெளிக்கே, மோன நிலைக்கே, இரவு பகலில்லா இடத்திற்கே, தூங்காமல் தூங்கிச் சுகம் பெறும் பீடத்திற்கே, சிவலோகத்திற்கே நம்மை இழுத்துச் செல் கின்றது.

குண்டலினி யோகம் உயிர் சக்திகளையும் உடலையும் சுவாசத் தையும் கொண்டு படிப்படியாக மேலே ஏறுகின்ற ஆத்ம அனுபவ மேல்நிலை. குண்டலினி யோகம், உறங்கும் குண்டலினி சக்தியைத் தட்டி எழுப்பிப் பேரானந்தப் பெருநிலைக்கு அழைத்துச் செல்லும் பரப் பிரம்ம ஐக்கிய பீடம். "உறங்கும் குண்டலினி எப்போது விழிப் படைகின்றதோ அப்போது சகல பதுமங்களும் ஆறு சக்கரங்களும் பிரமகிரந்தி விஷ்ணு கிரந்தி உருத்திர கிரந்தி என்கிற மூன்று கிரந்திகளும் பேதம் அடைகின்றன. அப்போது சூரியப் பதவி யென்னுஞ் சுழி முனையிற் பிராண வாயு இராஜ மார்க்கமாக அனு சரிக்கப்படுகின்றது" (சிவபோகசாரம்) "மூலாதாரத்தில் பொ ருந்தும் உட்பாகமாகிய அக்குண்டலினியைச் சூரியனால் பூரிக்க வேண் டும்...... அக்கினி மண்டலம் நாபியின் கீழ்பாகத்திலிருக்கின்றது...... அக்குண்டலினியை எழுப்ப...... சூரிய உதய காலத்திலும் அஸ்தமன காலத்திலும் தினந்தோறும் இரண்டு முகூர்த்தம் பேதிக்க வேண் டும். சூரியனால் பூரித்துச் சந்திரனால் இரேசிக்கிறபடியால் அபான னும் (வாயுவில் ஒன்று) அக்கினியை அடைந்து உஷ்ண சொரூபத்

தால் பிராணனை அடைகின்றது. அக்கினியின் உஷ்ணத்தால் செவ்வையாகத் தபிக்கப்படுகின்றதால் தூங்குகின்ற குண்டலினி சக்தி நன்ருய் விழிப்படைவதாகின்றது. தண்டத்தால் அடிபட்ட சர்பத்தைப் போல நிஸ்வாசத்தைச் செய்து நிமர்ச்சி அடைகின்றது. அதன் பின் பிலத்திற் பிரவேசித்தே பரம்பைப்போல் சுழிமுனையினுள் பிரவேசிக்கின்றது'' (சிவயோகசாரம்) குண்டலி தொடர்ந்து செய்யும் காரியங்களைப் பின்னுல் பார்ப்போம்.

## குண்டலினி சக்தி

இந்தக் குண்டலினி என்னவென்பதை ஆராய்வோம். 'குண்டலினி' என்ற சொல்லுக்குச் 'சுருண்ட ஒன்று; என்பது பொருள். இந்தச் சுருளை மூன்றறை வட்டச் சுருளென்பர். குண்டலினி என்ற பெயரை இந்த யோகத்திற்குக் கொடுத்ததற்கே காரணம் இந்த யோக நிலையைக் கொண்டு வரும் சக்தி மூன்றறை வட்ட வடிவில் மேல் நோக்கிச் செல்லும் பளபளப்பான சக்தியாகும் என்பதே. இந்த சக்தி முதுகெலும்பிற்கு அடியில் மூலாதரச் சக்கரத்தில் அமைந்துள்ளது. இதை மேலே கூறியபடி குருவின் அருளினுலும் உபதேசப்படியும் எழுப்பி விட்டால் இது முதுகு எலும்பு அடியிலிருந்து எழுந்து முதுகெலும்பின் வழிமேல் சென்று 'உள்ளொளி பெருக்க ஆரம்பித்து விடும். குண்டலினி மேலே கிளம்புவது உடலில் ஒரு பாம்பு மேலே வளைந்து வளைந்து செல்வதைப் போலிருக்கும் என்பர். முதுகெலும்பு அடித் தளத்திலுள்ள மூலாதரத்திலிருந்து தலை உச்சியில் உள்ள சகஸ்காரத்தின் வரை சுஷீமா (Sushuma nerve) நரம்பில் இருக்கின்ற ஆறு நரம்பு மையங்கள் — அவைகளைச் சக்கரங்கள் என்றும் அழைக்கின்ருர் — குண்டலி எழுந்தவுடன் சுத்தப்படுகின்றன. ஆரம்பத்தில் இந்த சக்தியின் அசைவு ஐம்புலன்களும் அறியக் கூடிய உணர்வாக இருக்கின்றது. இந்த சக்தி கடைசி கட்டங்களை அடைந்து பூர்த்தியாகும்போது ஐம்புலன் உணர்வு நின்று விடுகின்றது. இந்த சக்தியைத் தட்டி எழுப்பிவிட்டவுடன் உடம்பில் வீரிய பல மலர்ச்சியும் புத்துணர்வும், அகத்தூய்மையும் உண்டாகும். ஆரம்பத்தில் தாங்கமுடியாத தூக்கம் வருவது போன்ற உணர்ச்சி, அதிர்ச்சி, வியர்வை, மின்சாரம்பாய்வதுபோன்ற உணர்ச்சியும் ஏற்பட்டு சுவர்க்கம், தெய்வங்கள், மகான்கள் காட்சிகளைக் காண ஆரம்பிக்கின்றனர் சீடர்கள். தியானம் கூடி வரும் போது ஒளியில் பல விதங்கள் பார்க்கின்றனர்; ஒலியில் பல விதங்கள் கேட்கின்றனர். ஆறு ஆதாரங்களாகிய சக்கிரங்கள் இச்சக்தியால் ஊடுருவிச் செல்லப்பட்டுத் தூய்மையாக்கப் பட்டவுடன் எல்லாம் புதுவிதமாகத் தோன்றுகின்றது. மூச்சு உள்ளிழுப்பதும் வெளிவிடுவதும் சமமாகவும் முறையாகவும் நடக்கின்றது,

உள்ள கட்டுகளெல்லாம் அவிழ்கின்றன. மன்மாயை மறைகின்றது: எல்லாச் சந்தேகங்களும் நிவர்த்தியாகின்றன: உள் போராட்டம் ஓய்கின்றது. ஜீவாத்மா பரமாத்மாவோடு இரண்டறக் கலந்து விடுகின்றது. இந்த எழுச்சி குருவின் கருணையால் உடலில் நடக்கின்ற ஒரு பேரற்புதம்!

யோகிகள் தம் கற்பனையில் குண்டலினி சக்தி எழும்புவது சுருண்டபாம்பு எழும்புகின்றதை ஒக்கும் என்பர். அதனால்தான் இந்தக் குண்டலினி யோகத்தை அரவு யோகம் என்று கூட அழைப்பர். குண்டலினியை விழிக்க வைத்தவுடன், தன் வட்டவடிவத்தினின்றும் நிமிர்த்திக் கொண்டு 'ஹிஸ்' என்ற சப்தத்தோடு மேலேயே நேராக எழும்ப ஆரம்பிக்கின்றது என்றும் சொல்வர். ஒரு பாம்பைத் தடிகொண்டடித்தால் எப்படி நிமிர்ந்து 'ஹிஸ்' என்ற சப்தத்தோடு நேராக எழும்புகின்றதோ அப்படியே உறங்கிக் கொண்டிருக்கும் குண்டலினி மேல் எழ ஆரம்பிக்கும் என்பர். அப்போது உடம்பின் உஷ்ணம் அதிகரிக்கும். உடலிலும் மனத்திலும் உள்ள 'பிராண' எனும் ஜீவ (Vital) சக்திகளைத் தம்முள் இழுத்து அதை மேலே தூக்கிக்கொண்டு குண்டலினி செல்ல ஆரம்பிக்கின்றது. ஆக பிராணனுடைய முழு வெள்ளமும் இதனுள் இழுக்கப்பட்டு மேலே கிளம்புகின்றது. இப்படி மேல் நோக்கிச் செல்லும்போது ஒன்றுக்குமேல் ஒன்றாக அமைந்திருக்கும் ஆறு ஆதாரங்கள் என்று கூறுகின்ற சக்கிரங்களைத் துருவிக் கொண்டு ஊடுருவிக் கொண்டு குண்டலினி செல்கின்றது. இதனால் கீழே உள்ள கால்கள் அசைவின்றிச் சவம் போன்று ஜில்லென்று போய்விடும். அப்படியே அது செல்கின்ற ஒவ்வொரு பாகமும் அது அந்தப் பாகத்தைச் விட்டுச் சென்றவுடன் ஜில்லிட்டுப் போகும். இத்தகைய சக்தியைத்தான் யோகத்தில் அனுபவிப்பவர் பாம்பின் அடையாளத்தால் மனதில் உருவகப்படுத்திக் கொள்வது இயற்கை.

## ஆறு ஆதாரங்கள்

இப்போது குண்டலினி ஊடுருவிச் செல்கின்ற ஆறு ஆதாரங்களைப் பற்றிச் சிந்திப்போம். இவ்வாறு ஆதாரங்களையும் சக்கிரங்கள் என்றும், மத்திகள் என்றும் கூறுகின்றனர். உடலில் இந்த ஆதாரங்கள் ஆறும் ஒன்றிற்குமேல் ஒன்றாக அமைந்துள்ளன. அவைகளை அடியிலிருந்து மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுக்தி, ஆக்ஞை என்று பெயரிட்டு அழைப்பர். இவைகளைக் கமலங்கள் என்றும் அழைத்துத் தாமரை இதழ்கள் மூலமாக அடையாளம் காண்பிக்கின்றனர். இந்த வட்டங்களில் காண்பித்துள்ள கமல இதழ்களும் எண்ணிக்கையில் மாறுகின்றன.

ஒவ்வொரு ஆதாரமும் ஒவ்வொரு நிறத்தைக் கொண்டது. ஒவ்வொரு ஆதாரத்திற்கும் அதற்குரிய மூர்த்தியும் சக்தியும் உண்டு. இச்சக்கிரங்களுக்கு வடிவமும் உண்டு. ஒவ்வொன்றிற்கும் உரிய தெய்வ உபாசனை மந்திரங்களும் வாசியைக் கட்டுப்படுத்தி உபயோகிக்கும் முறைகளும் உண்டு. இந்த ஆறு ஆதாரங்கள் உடலில் எந்தெந்த உறுப்புகளுக்கு நேரிடை சம்பந்தம் வைத்துக்கொண்டிருக்கின்றன என்பதும் நன்கு விளக்கப்படவில்லை. ஆனால் ஒவ்வொரு ஆதாரமும் உடலில் விளங்குகின்ற இடங்கள் புரிகின்றன. இடுப்பு, இதயம், கழுத்து, கண்கள் மத்தி – இவ்விடங்களில் ஆதாரங்கள் அமைந்துள்ளன என்பதை உணருகின்ற நாம், இவ்வாதாரங்களைக் காண்கின்ற யோகி தன் அகக்கண்களினாலேயே அவைகளைக் கண்டு, அவைகளில் உள்ள தாமரை இதழ்களை மலரச் செய்து குரு உபதேசப்படி தியானம் செய்து பலனடைகின்றார் என்பதையும் மறந்துவிடக்கூடாது. அடியில் உள்ள மூன்று ஆதாரங்களில் அழுத்துகின்றது போன்ற உணர்ச்சியும், வலியும், காட்சிகளும், நாதங்களும் யோகிக்கு ஏற்படுவதையும் மறந்துவிடக் கூடாது.

1. மூலாதாரம் :—இடம் = அடிவயிறு.

மலவழிக்கு இரண்டு அங்குலத்திற்கு மேலும் ஜலவழிக்கு இரண்டு அங்குலம் கீழும் உள்ள இடம் என்பர். அண்ட வடிவத்திற்குள் முக்கோண வடிவத்தில் உள்ள இந்த ஆதாரத்தில் அமைந்துள்ள கமலம் இரத்த நிறமுடையது. நான்கு இதழ்களைக் கொண்டது. இதற்குரிய எழுத்து 'ஓம்' என்பது: மூர்த்தி ஸ்ரீ கணபதி, சக்தி ஸ்ரீ வல்லபை.

2. சுவாதிஷ்டானம் :—இடம் = உந்தி.

மூலாதாரத்திற்குமேல் சற்றுத் தூரத்தில் அமைந்துள்ளது. நாற்சதுரமாய் உள்ள இந்த ஆதாரத்தில் அமைந்துள்ள கமலம் பொன்னிறமான ஆறு இதழ்களைக் கொண்டது. இதற்குரிய எழுத்து 'ந' என்பது: மூர்த்தி ஸ்ரீ பிரம்மா, சக்தி ஸ்ரீ சரஸ்வதி.

3. மணிபூரகம் :—இடம் = தொப்புள்.

இந்த ஆதாரத்தில் அமைந்துள்ள கமலம் அர்த்த சந்திர வடிவமாய் மேக நீலநிறமான பத்து இதழ்கள் கொண்டுள்ளது. இதற்குரிய எழுத்து 'ம' என்பது: மூர்த்தி ஸ்ரீ விஷ்ணு, சக்தி ஸ்ரீ இலக்குமி.

4. அநாகதம் :—இடம் = நெஞ்சு.

இது முக்கோண வடிவமாய் சிந்தூர வர்ணமுள்ள பன்னிரண்டு இதழ்களைக் கொண்ட கமலத்தைக் கொண்டுள்ளது. இதற்குரிய எழுத்து 'சி' என்பது: மூர்த்தி ஸ்ரீ ருத்திரன், சக்தி ஸ்ரீ ருத்திராணி.

5. விசுத்தி :—இடம் = கழுத்து.

இது அறுகோண வடிவமாய்ப் புகைநிறமான பதினறு இதழ்களை உடைய கமலத்தைக் கொண்டுள்ளது. இதற்குரிய எழுத்து 'வ' என்பது : மூர்த்தி ஸ்ரீ மகேஸ்வரன், சக்தி ஸ்ரீ மகேஸ்வரி.

6. ஆக்ஞை :—இடம் = நெற்றி.

இது வட்டவடிவமாய் வெண்ணிறமான மூன்று இதழ்களை உடைய கமலத்தைக் கொண்டுள்ளது. இதற்குரிய எழுத்து 'ய' என்பது : மூர்த்தி ஸ்ரீ சதாசிவம், சக்தி ஸ்ரீ மனோன்மணி.

இந்த ஆறுதாரங்களுக்கு அதிபதிகளான தெய்வங்களைப் பத்திரி கிரியாரும், கொங்கண நாயனரும் பாடி இருப்பதை ஒரு நாள் சாமிகள் எடுத்து இயம்பினர். பத்திரிகிரியார் புலம்பலில் கூறி இருப் பதைக் கேளுங்கள்.

"ஆதார மூலத் தடியில் கணபதியைப்
பாதார விந்தம் பணிந்து நிற்பதெக்காலம்?
மண்வளைந்தநற் கீற்றில் வளைந்திருந்த வேதாவைக்
கண்வளைந்து பார்த்துள்ளே கண்டிருப்ப தெக்காலம்?

அப்புர நடுவே யமர்ந்திருந்த விட்டுணுவை
உப்புக் குடுக்கையுள்ளே யுணர்ந்தறிவ தெக்காலம்?
மூன்று வளையமிட்டு முளைத்தெழுந்த கோணத்தில்
தோன்று முருத்திரனைத் தொழுதுநிற்ப தெக்காலம்?

வாயுமறு கோணமதில் வாழு மகேச்சுரனைத்
தோயும்வகை கேட்கத் தொடங்குவது மெக்காலம்?
வட்டவழிக்குள்ளே மருவுஞ் சதாசிவத்தைக்
கிட்ட வழிதேடக் கிருபைசெய்வ தெக்காலம்?

உச்சிக்கிடை நடுவே யோங்கு குருபதத்தை
நிச்சயித்துக் கொண்டிருந்து நேர்வதினி யெக்காலம்?
பாராகிப் பார்மீதிற் பஞ்சவர்ணம் தானுகி
வேருகி நீமுளைத்த வித்தறிவ தெக்காலம்?

என்னையறிந்து கொண்டே னென்கோமா னேடிருக்கும்
தன்மையறிந்து சமைந்திருப்ப தெக்காலம்?
ஆறுதாரங்கடந்த வானந்தப் பேரொளியை
பேருகக் கண்டுநான் பெற்றிருப்ப தெக்காலம்?"

கொங்கண நாயனர் அருளிச்செய்த வாலைக்கும்மியிலும் ஆதாரங்களுக்குரிய தெய்வங்கள் விவரிக்கப்பட்டுள்ளதைக் கேளுங்கள்.

" அத்தியிலே கரம் பத்தியிலே மனம்
புத்தியிலே நடு மத்தியிலே
நெற்றி சதாசிவமென்று சொன்னேனுந்தன்
நிலைமைப் பாரடி வாலைப் பெண்ணே.

அழுத்திலே சொல்லஞ் செழுத்திலே நானும்
வழுத்தினேன் ஞானப் பழத்திலே
கழுத்திலே மயேஸ்வரனு முண்டு
கண்டு பாரடி வாலைப் பெண்ணே.

அஞ்சிலே பிஞ்சிலே வஞ்சியரே நிதம்
கொஞ்சி விளையாடும் வஞ்சியரே
நெஞ்சிலே ருத்திரன் சூழிருப்பான்
நேருடனுமடி வாலைப் பெண்ணே.

தொந்தியிலே நடுப்பந்தியிலே திடச்
சிந்தையிலே முந்தியந் தனுடன்
உந்தியில் விஷ்ணுவுந் தானிருப்பாரிதை
உண்மையைப் பாரடி வாலைப் பெண்ணே.

ஆலத்திலேயிந்த ஞாலத்திலே வருங்
காலத்திலே யனு கூலத்திலே
மூலத்திலே பிரமனுந் தானிருந்து வாசி
முடுக்கின்றான் பிண்டம் பிடிக்கின்றான்.

இந்த ஆறுதாரங்களுக்குயிரான மந்திரங்கள் பிரணவமும் ஐந்தெழுத்துமாம். இந்த ஆறு ஆதாரங்களிலும் உள்ள பூக்களின் இதழ் நுனிகள் கிரந்த எழுத்துள்ள ஐம்பத்தொரு எழுத்து போலிருப்பதால், அந்த ஐம்பத்தொரு எழுத்துக்களும் அவைகளில் உள்ளன என்றும் சொல்வர். கிரந்த எழுத்து தமிழிலிருந்து வந்தவை. "க்ஷ கரமானது ககரமும் சகரமும் சேர்ந்தது. ஆதலால் அதைத் தவிர்த்து எழுத்துக்கள் ஐம்பது ஆதலின்,

ஐம்பத்தெழுத்தே அமர்ந்த வேதங்கள்
ஐம்பத்தெழுத்தே ஆகமாதிகள்
ஐம்பத்தெழுத்தின் அறிவை அறிந்தபின்
ஐம்பத்தெழுத்தே ஐந்தெழுத்தாமே" —

என்று திருமூலர் மொழிந்துள்ளனர்.

இதைப்பற்றி நமது சாமிகள் பாக்கியபரணியில் வரைந்துள்ளதைப் படித்து மகிழ்வோம். "ஆதிக்கும் ஆதியிலே அணுவுக்கு அணுவாகி நின்ற ஆதிபராசக்தியிலிருந்து முதன்முதலாக உண்டான ஒலிகளின் பேதாபேதத்தன்மைகளை அனுசரித்தும் அவைகளின் சக்திகளுக்கு ஏற்றவாறும், தத்துவ ஞானிகளால் காரண காரியமான உச்சரிப்புகளுடன் கூடிய 51 அட்சரங்களாக உருவாக்கப்பட்டன. ஆகையால் அவ்வட்சரங்கள் 51-ஐயும் ஒலிகளுடன் கூடிய மந்திர உச்சாடன எழுத்துக்களாகவும் தமிழ்ச் சித்தர்களால் தொன்று தொட்டுக் கையாளப்பட்டு வருகின்றன. இத்தகைய மந்திர எழுத்துக்களாகிய 51 அட்சரங்களிலிருந்தே அவைகளின் தாரதம்மியத்தை அனுசரித்து உயிர் எழுத்துக்கள் 16 என்பதாகவும், மெய் எழுத்துக்கள் 35 என்பதாகவும் ஆன்றோர்களால் வகுக்கப்பட்டனவாகும். தமிழ் மொழியின் மெய் எழுத்துக்களாகிய 35இல் மிகவும் வல்லமையும், சக்தியும் கொண்டது ந – ம – சி – வ – ய என்ற ஐந்து எழுத்துக்களாகும். இதுவே பஞ்சாட்சரம் எனப்படும். எல்லா மந்திரமாக விளங்குவது இப்பஞ்சாட்சரமேயாகும். உயிர் எழுத்துக்களாகிய 16இல் சிறப்புமிக்கதானது அ இ உ எ ஒ என்ற எழுத்துக்களாகும். இவைகள் மெய் எழுத்துக்களுடன் கூடி உயிர்ப்பை ஊட்டி உதவி புரிவனவாகும்."

## குண்டலினி எழுச்சியும் ஆறு ஆதாரங்களும்

அடிக்கோலாகிய மூலாதாரத்தினின்றும் கிளம்பிய குண்டலினி இப்பாடல்களில் குறிக்கப்பட்டுள்ள தெய்வங்களுக்குரிய ஆறுதாரங்களைத் துளைத்துக்கொண்டு சென்று சிறுமூளை (Cerebrum) பின்பகுதியில் ஆயிர இதழ் கமலம் உள்ள முடிக்கோலாகிய உச்சியில் இரண்டறக் கலக்கும்போது குண்டலினி எழுச்சி பூர்த்தியடையுமென்பர். குண்டலினி எழுச்சியை இப்போது கவனிப்போம். இவ்வெழுச்சியை 'லயகர்மா' என்று அழைப்பர். மூலாதாரம், சுவாதிஷ்டானம் எனும் அடியில் உள்ள இரண்டு ஆதாரங்களைக் கடந்து செல்வதன்மூலம் குண்டலினி தன் ஒருபாதி வேலையை முடிக்கின்றதெனலாம். அதன் பின் மூன்று முடிச்சுகள் என்று சொல்லப்படுவனவற்றுள் முதல் முடிச்சாகிய பிரம்ம கிரந்தி வழியாகக் குண்டலினி செல்கின்றது; அப்போது சாதகருக்கு வலிகள் உண்டாகின்றன, அழுத்துவதுபோன்ற உணர்வும் ஏற்படுகின்றது. அடுத்தபடியாக, சக்தி வெள்ளமாக மேலோங்கிச் செல்லும் குண்டலினி மணிப்பூரகம் எனும் ஆதாரத்திற்குச் சென்று, அதன்பின் இதயம் இருக்கும் இடத்தில் அமைந்துள்ள அநாகதம் எனும் ஆதாரத்திற்குச் செல்லும். இவ்விடத்தில் விஷ்ணு கிரந்தி என்றழைக்கப்படும் இரண்டாவது முடிச்சு இருக்கின்றதென்பர். இப்பொழுது உடலில் பலவித மெய்யறிவு அனுபவங்கள் ஏற்படுகின்றன.

அநாகதம்:- ஆதாரத்தில் யோகிகள் அடைகின்ற புதுமை மெய் அனுபவங்கள் இந்த யோகத்திலேயே ஒரு முக்கியமான கட்டத்தைக் காண்பிக்கின்றது. ஐம்புலன்களுக்கும் அதிகமான கட்டுக்கடங்காத உணர்வுகளைக் கண்டு யோகி மயங்கிவிடக் கூடாது. இதில் மயங்கி விட்டால் தான் அடைய வேண்டிய இடத்திற்குப் போக முடியாது; இந்தப் படியிலேயே தங்கிவிடும்படி நேரிடும். மனதை மயக்குகின்ற இந்த அனுபங்களே இல்லாமல் ஆத்மீக ஏணியில் ஏற முடியாதா என்ற கேள்வி எழலாம். அது முடியாது என்பதைத்தான் யோக சித்தியடைந்த மகான்கள் இராமகிருஷ்ணரும், விவேகானந்தரும், நமது சாமிகளும் கூறுகின்றனர். இந்தப் புது அனுபவங்களில் யோகியர்க்குப் பளிச் சென்ற ஒளியோ ஜுவாலையோ தோன்றும். பலவித நாதங்கள் கேட்கும். ஆனால் இந்த இடம் தான் சுய உணர்வை ஆத்ம உணர்வுக்கு மாற்றவல்ல சிறந்த இடம் என்பதை யோகிகள் மறந்துவிடவில்லை. புறப் பொருள் உணர்வு உலகிலிருந்து ஆத்ம உலகிற்கே வாசலைத் திறந்து விடும் இடமே அநாகதச்சக்கரமாகும். இந்த இடம், உடல் அனுபவங்களை மறக் கடித்து உயிர் அனுபவத்தை ஊட்டவல்ல ஆத்ம பொக்கிஷம். மெய்யை மறக்கடித்து உயிரை ஓம்பச் செய்யும் மெஞ்ஞான சுவர்க்க வாசல் என்று சொன்னாலும் மிகையாகாது. இங்கு நானுவித சப் தங்கள் கேட்குமென்பர்.

> ''மணிக்கடல் யானை வளர்க்குழன் மேக
> மணிவண்டு தும்பி வளைபேரிகை யாழ்
> தணித்தெழு நாதங் கடாமவை பத்தும்
> பணிந்தவர்க் கல்லது பார்க்க வொண்ணாதே''

எனும்பாடல் இந்த யோக சித்தியைப் புகழ்கின்றது. ஆனால் உண்மையான யோகி இதில் மனத்தை நாட்டாமல் அவற்றையே உள்ளொளி பெருக்கத்திற்கு உபயோகப் படுத்துகின்றார். அதற்கு யோகத்திற்கு இன்றியமையாதிருக்கும் வாசியும் உதவுகின்றது. முதலில் 'வாய்வு பிரமாந்திரத்திற் செல்லுங் காலத்துப்' பெருஞ் சப்தங்கள் சமுத்திரத்தினின்றும், சச்சரத்தினின்றும், மேகத்தி னின்றும், பேரிகை கனக தப்பட்டையினின்றும் வருவனபோல் இடி யெனக் கேட்கும். இப்படிப்பட்ட இடிநாதங்கள் 'பிரமாந்திரத்தில் வாய்வு ஸ்திரப்பட்டபின்' மத்தளம், சங்கு, கண்டாமணி, காகளம் இவைகளிலிருந்து வரும் சப்தத்தைப் போன்று மாறும். இப்படிப் படிமானமான நாதங்களும் 'அந்தத்தில் பிராணன் பிரமாநந் தத்தில் மிகவும் ஸ்திரமானபின்' கிண்கிணிவேணி, வீணை தந்தரி, வண்டு என்பவற்றின் ரீங்காரங்களைப் போன்றதாகி அம்மெல்லிசை தேகத்தின் மத்தியில் உள்ளனவாகக் கேட்கப்படும். ''அவற்றுள் சூட்சுமத்திலும் சூட்சுமமாகிய நாதத்தையே சிந்திக்க வேண்டும்.

சூட்சுமமாகிய நாதம் நெடுநேரமிருப்பதால் சித்தம் நெடுநேரம் ஸ்திரமுடையதாய் நிலைக்கும் .. நாதங்களில் ரம்மிக்கும் மனமோ சமாதியை அடையும் என்பது கருத்து. அதாவது மலர்ந்த புஷ்ப ரசத்தைக் குடிக்கும் வண்டு கந்தத்தை விரும்பாததுபோல சூட்சும நாதத்தில் சித்தம் நிலைக்க வேண்டியது. சப்தாதி விஷயமாகிய உத்தியானத்தில் சஞ்சரிக்கும் மனமென்னும் மதயானை யடக்குதலில் இந்த அனுகத்தொனியாகியது கூரிய அங்குசம் போன்ற வலி யுடைய தென்று சொல்லப்பட்டிருக்கின்றது''— இப்படி மொழி கின்றது சிவபோகசாரம். ஆத்மீகநிலைக்கு ஏந்திச் செல்லும் இத் தகைய அநாகத ஆதாரத்தை ஏத்துகின்ற சர்ஜான் உட்ராப் (Sir John Woodroff) என்ற மேனாட்டு அறிஞரும் இந்த அநாகதச் சக்கரம் குண்டலினி எழுச்சியில் ஒரு முக்கியமான கட்டம் என்றும், இதைப் பற்றி ஆகமங்களில் நிறைய எழுதி இருக்கின்றதென்றும் கூறி இருக்கின்றார்.

முதல் மூன்று ஆதாரங்களாகிய மூலாதாரம், சுவாதிஷ்டானம் மணிபூரகம் என்பனவற்றில் நடப்பனவெல்லாம் உடல் உணர முடிகின்றது. அநாகத சக்கரத்தில் தான் உடம்பிலிருந்து உயிருக்கு மாறும் அனுபவ நிலை ஏற்படுகிறதென்பதையும் அறிந்தோம். இதற்கு அடுத்த நிலையும் யோக சாதனத்தில் மிகவும் முக்கியமானது. அநாகத ஆதாரத்திலிருந்து வெள்ளம்போல் மேலே எழும்பிவரு கின்ற குண்டலினி தொண்டைக்கு வருகின்றது. இங்கு விசுத்தி ஆதாரத்தை வந்தடைகின்றது. இந்த விசுத்தி ஆதாரத்தோடு சாதகனுக்குத் தன் நினைவே நின்றுவிடுகின்றது என்று சொல்லலாம். சாதகர்கள் தம் அனுபவங்களை விசுத்தி ஆதார நிலை வரையில் தான் நன்றாக விவரித்துக் கூறமுடியும்; ஏனெனில் அந்த அனுபோ கத்தை ஐம்புலன்களும் கண்டன. இப்பொழுது சுய உணர்வே முற்றும் நின்றுவிடுகிறது; ஜீவனார் எல்லா பந்தங்களையும் விட்டு சிவனோடு ஒன்று கலக்கவல்ல பக்குவ நிலையை அடையும் ஆரம்ப கட்டம் அடைந்து விட்டார். தனியார் (சிவன்) இருக்கும் இடத்திற்குத் தனியார் (ஜீவன்) கிளம்பும் அற்புதம் இப்பொழுது ஆரம்ப மாகிறது.

எல்லா ஆதாரங்களிலும் குருவின் உபதேசப்படி மூச்சைப் பயன் படுத்தி முறைப்படி தியானம் செய்வதால் அவற்றிற்குரிய பலன்களை அடையச் செய்கின்றது இந்த யோகம். மூலாதாரத்தால் சரீர காந்தியும் பலமும் விருத்தியாகும் : சுவாதிஷ்டானம் ஆதாரத்தால், இதில் உற்பத்தி உறுப்புகள் சம்பந்தப்பட்டிருப்பதால், வீரிய புஷ்டி அடைவதும் காமத்தை வெல்வதும் எளிது : மணிபூரகம் ஆதாரத் தால் சரீர பலமும் சகல செல்வங்களும் சித்திகளும் வந்து சேரும் : அநாகத ஆதாரத்தால் சாதகர் சுய உணர்வை ஆத்ம உணர்வுக்கு

மாற்றவல்ல தன்மை வந்தெய்துகின்றனர். விசுக்தி ஆதாரத்தால் சாதகருக்குத்தன் சுய நினைவு நின்று விடுகின்றது; 'தன்னையறிந்தின்ப முறும் பக்குவ நிலைக்குக் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்றப்படுகின்றார்'. விசுக்தி ஆதாரத்தை ஊடுருவிச் சென்று மேலெழும்பும் குண்டலினி வெள்ளம் அடுத்தாற்போல் ஆக்ஞை ஆதாரத்திற்கு எட்டி நுழை கின்றது. ஆக்ஞை ஆதாரம் புருவமத்திக்கு நடுவில் அமைந் துள்ளது. இந்த ஆதார அனுபவத்தில் சாதகர் மனது ஒட்டிக் கொண்டிருப்பதை அறிகிறார். அதாவது ஒரு பூரணமில்லாத ஐக்கிய நிலை ஏற்படுகின்றது. முழு சிவ ஐக்கியத்திற்கும் சுய உணர்விக்கும் நடுவில் மெல்லிய திரை ஒன்றுதான் நிற்கின்றது. அதை நீக்கிவிட்டால் பரப்பிரம்ம ஐக்கியம் ஏற்பட்டுவிடும். இந்த நிலையை சவிகல்பநிலை என்னும் கூறுவர். இதை சவிகற்ப சமாதி யென்றும் அழைப்பர்."

"கருதும் பொருள் தனில் கதியற நிற்றல்
சமாதியா மீது சவி கற்பமே"

என்று இந்த நிலையை எடுத்துரைப்பர். "தியேய பொருளில் சித்தம் அசைவற நிற்றல் சமாதியேயாயினும் இச்சமாதியில், தியாயா (தியானிப்பவர்) தியானம் (சிந்தித்தல்) தியேயம் (தியானிக்கப் படுவது) எனும் மூன்றில் தோற்றமாகிய விகற்பமிருப்ப தால் (வேற்றுமை) இது சவிகற்பமெனப்பட்டது என்று கூறுவர். இந்தச் சமாதி நிலையை அங்கயோக சமாதியென்றும், அங்க சமாதி யென்றும், சபீஜ சமாதி யென்றும், சம்பிரஞ்ஞாத சமாதி என்றும் கூறுவர்.

இந்த ஆறு ஆதாரங்களுக்கும் அப்பாற்பட்ட உச்சநிலை ஒன் றுண்டு. அதுதான் பரமசிவபத நிலையாகும். அந்தச் சச்சிதானந்த நிலையை அடைவதே யோகியரது குறிக்கோளுமாகும். இதிலே தான் சகஸ்ரகமலம் அமைந்திருக்கின்றது என்பர். குண்டலினி பெருக்கெடுத்து ஆக்ஞை ஆதாரத்திற்கு வந்து, புருவ மத்தியில் உள்ள உடம்பில் உள்ள மூன்றாவது முடிச்சாகிய ருத்ரகிரந்தியைத் துளைத்துக் கொண்டுதான் சகஸ்காரத்தை அடையமுடியும். இது ஒரு கஷ்டமான கட்டமென்றும் சொல்வர். இங்குதான் பரப்பிரம்ம ஐக்கியத்தை மறைத்து நிற்கும் சுயஉணர்வெனும் ஒரே திரை தொங்கிக் கொண்டிருக்கின்றது. இதை விலக்கிவிட்டால் சிவனோடு ஜீவன் ஐக்கியமாகிவிடும். இதை நீக்குதற்குக் குருவினுடைய அருள் அவசியமாக வேண்டியிருக்கின்றது. இந்த இடத்தை நினைக்கும் போது சாமிகளுடைய அருள் உரை ஒன்று ஞாபகத்திற்கு வரு கின்றது. "அவன் அருளாலே அவன் தாள் வணங்கி" என்ற திருவாசக வரியை அடிக்கடி சாமிகள் பக்தர்களுக்கு ஞாபகமூட்டு வார். இது சாமிகளைக் குருவாக அடைவதற்குச் சாமிகளுடைய அருள்

அவசியம் என்பதை மட்டும் ஞாபகப்படுத்தவில்லை. பரப்பிரம்ம ஐக்கியத்திற்கும் நமக்கும் நடுவே தொங்கிக்கொண்டிருக்கும் திரையை நீக்கிச் சிவனோடு இரண்டறக்கலக்கவும் குருவினுடைய அருள் வேண்டும் என்பதையும்தான் ஞாபகமூட்டுகின்றது. இந்தத் திரைவிலக சிவனுறைகின்ற ஆத்மீகக் கைலையங்கிரிக்கு ஏறிவிடலாம். சாமிகள் தெய்வீக உற்சாகம் ஏற்படும் போதெல்லாம் நமக்கும் பரப்பிரம்மத்திற்கும் உள்ள தொடர்பை சித்தரிக்க உபயோகப் படுத்தும் "நீயே நானாய் நானே நீயாய்" என்ற மகாவாக்கியம் உடனே நம் கண்முன் பொன் எழுத்துக்களால் எழுதி வைக்கப் பட்டதுபோல் தோன்றுகின்றது. இதைப்பற்றி நூல்கள் வருணிக் கின்றதையும் பார்ப்போம். "சுவேதவர்ணமான ஆயிரம் இதழ் கமலவடிவு சந்திரமண்டலமும், அதில் சிதாநந்த ஸ்வரூப பரம சிவன் விளங்குவதையும், அவர் பக்கத்தில் ஆயிரம் சூரியனொத்த தேஜசுள்ள பிரபோதத்ஸ்வரூபமான அர்த்த சந்திராஹாரமான நிர்வாணகலை விளங்குவதையும், இதன் நடுவில் அநேக கோடி சூரியசமான தேஜசுள்ள அதிசூட்சமமான நிர்வாண சக்தி விளங்கு வதும், இவற்றின் மத்தியில் மனோவாக்குக் கெட்டாத கேவல யோக கம்மியமான சிதாநந்த ஸ்வரூபத்தின் பரமான (அழியா) பரமசிவபதத்தை" ஓரளவு கற்பனை செய்துகொள்ள முடிகின்றது. இதுவே பரப்பிரம்மபத மெனப்படும். இதை அடைவது பிரம்ம ஐக்கியமேயாகும். இந்த நிலையை 'நிர்விகற்ப சமாதி' என்று கூறுவர்.

"திரிபுடி யொழிந்து தேய மாத்திரமாய்
நிற்குமதுவே நிர்விகற்பகமாம்"

எனும் சொற்றொடர்கள் நிர்விகற்ப சமாதி நிலையை விளக்க உதவுகின்றன. 'அசைவற நின்ற சித்த விருத்தியானது தியாதா, தியானம், தியேயமெனும் திருபுடியின் தோற்றம் நீங்கி தியானிக் கப்படும் பொருள் மட்டுமாக நிற்கும் நிலை எதுவோ அதுவே நிர் விகற்ப சமாதியாகும். இதை அங்கி சமாதி, அங்கியோகம், நிர் பீஜ சமாதி, அசம்பிரஞ்ஞாத சமாதி என்றும் அழைப்பர். "திருபுடி யில்லாத பரமானந்த சொரூப சுத்த சைதன்ய வடிவமாகிய ஜீவாத்மா பரமாத்மா ஐக்யாவஸ்தை சமாதியெனப்படும்." என்றும் பழைய நூல்கள் வருணிக்கின்றன. இதுவே துரியாதீத நிலை யெனப்படுவது. இந்த நிலையில் 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகா சமாய் ஆனந்த பூர்த்தியாகி நிற்கும்' ஞானம், ஆன்மாவினை மறைத்து சர்வப் பிராந்திமய சம்சார பந்தங் கட்டும் காரணமாக இருக்கும் அஞ்ஞானத்தை ஒழித்து எவ்விதத் துன்பமுமில்லாத நிரதி சுப சுகரூபமான பரிபூரண சிவஸ்வரூபம் ஒன்றை மிஞ்சிக் காட்டும். இப்பொழுது சங்கரரின் அம்ருதமயமான அத்துவித

சாக்ஷாத்காரத்தினின்றும் எழுந்த மகாவாக்யம் மனதிற்கு வருகின்றது. "யான் பூமியல்லன், ஜலம் அல்லன், அக்கினி அல்லன், காற்று அல்லன், ஆகாயம் அல்லன், இந்திரியம் அல்லன், இவை கூட்டமும் அல்லன்; இவை ஒழிந்த இடத்தில் மீதியாயிருப்பவனும் சுழுத்தியில் முக்கியமாக சித்தித்திருப்பவனும் கேவலமும் ஏகமுகமான சிவம் நான்." இதற்கொப்பக் கந்தபுராணத்தில் உள்ள ஒரு செய்யுளையும் படித்து இன்புறுவோம்.

"ஊர் இலான், குணம் குறி இலான், செயல் இலான்,
உரைக்கும்
பேர் இலான், ஒருமுன் இலான், பின் இலான், பிறிது ஓர்
சார் இலான், வரல்போக்கு இலான், மேல் இலான்,
தனக்கு ஓர்
நேர் இலான், உயிர்க்கடவுளாய் என்னுள்ளே நின்றான்."

"அவன் வேறு நான் வேறு" என்ற நிலை மாறி "அவனே நான் நானே அவன்" என்ற ஜீவாத்மா பரமாத்மா ஐக்கியம் ஏற்பட்டு விடுகின்றது. இந்நிலையை அடைந்தவர்களை ஜீவன் முக்தரென்றும் அழைப்பர்.

குண்டலினி விழிப்படையும்போது மனிதன் தூங்குகிறான் என்பதைக் கண்டோம். குண்டலினி ஆருதாரங்களையும் ஊடுருவிச் சென்று முடிமேலிருக்கும்போது சச்சிதானந்தமளிக்கும் பேரின்பப் பெருவாழ்வு சித்தி ஆகின்றது என்பதையும் அப்போது மனமேயொழிந்து ஏகனுக மிளிர்வதையும் கண்டோம். இந்தப் பேரின்பப் பெருநிலையை அளிக்கின்ற சிவ ராஜ யோகத்தைக் கண்டு தான் பட்டினத்தடிகளும் 'தூங்காமல் தூங்கி சுகம் பெறுவதெக்காலம்' என்று போற்றினர்!

இந்த நிலையைச் சுப்பிரமணியர் ஞானக் காப்பு எவ்வளவு அருமையாக எடுத்துரைக்கின்லது.

ஒழியாத சுழிமுனையி லொடுங்கி நல்ல
உற்றகலைவாகி சிவ யோகத் தேகி
வழியான துறையறிந்து மவுனங் கொண்டு
மகத்தான ஆண்டவரை முடிமேற் சென்று
தெளிவான ஓங்கார வடிவேல் கொண்டு
தெளிந்து மனத்தறிவாலே தன்னைக் கண்டு
வெளியான பரவெளியில் வாசமாகி
வேதாந்த சக்தி சிவ ஆதி காப்பே.

இந்த நிலையைச் சிவநிலை என்றும், சிவானுபவமென்றும் இராம லிங்க அடிகள் போற்றிப் பாடுவதையும் கண்டு இன்புறுவோம்.

" தத்துவமனைத்தும் தனித்தனி கடந்தோம்
தத்து வாதீத மேல் நிலையில்
சித்தியல் முழுதுந் தெரிந்தனம் அவைமேற்
சிவநிலை தெரிந்திடச் சென்றேம்
ஓத்தவர் நிலைக்கண் யாமுமெம் முணர்வும்
ஒருங்குறக் கரைந்து போயினமென்று
அத்தகை உணர்ந்தோர் வகுத்த நின்றேங்கும்
அருட்பெருஞ் சோதி யென்னரசே "

* * *

உள்ளதாய் விளங்கும் ஒரு பெருவெளி மேல்
உள்ளதாய் முற்று முள்ளதுவாய்
நள்ளதாய் எனதாய் நானதாயித் தனதாய்
நவிற்றருந் தானதாய் இன்ன
விள்ளொணு அப்பால் அப்படிக்கு அப்பால்
வெவெளி சிவானுபவ மென்று
உள்ளுற அளித்த ஞான சம்பந்த
உத்தம சுத்த சற் குருவே.

மேலே காட்டியுள்ள பாடல்களில், அத்தகைய சிவ நிலையை உணர்ந்தோர் வழுத்தினர் என்றும், சிவானுபவத்தை ஞான சம்பந்த சற்குரு உள்ளுற அளித்தாரென்றும் இராமலிங்க அடிகள் உரைப்பதால் அவருக்கு இந்த அனுபவம் இல்லையா என்று கேட்க லாம். அவருக்கு இல்லாத அனுபவமா? சித்தர் பரம்பரையில் சேர்ந் துள்ள இராமலிங்க அடிகள் ஆடிக் காட்டிய சித்துக்களெல்லாம் அவர் அடைந்திருந்த சிவானுபவ யோக நிலையைத்தானே நிரூபிக்க உதவுகின்றன. அவருடைய பாடல்களே அவருக்கு இந்த அனுபவம் உண்டு என்பதைத் தெள்ளத் தெளிய விளக்குகின்றதையும் அறி யாமலா நாம் இருக்கமுடியும்.

துரிய மேற்பர வெளியிலே
சுக நடம் புரியும்
பெரியதோர் அருள் ஜோதியைப்
பெறுதலே எவர்க்கும்
அரிய பேறு, மற்றவை யெல்லாம்
எளியவே அறிமின்
உரிய இம்மொழி சத்தியம் வாரீர்

என்று இறும்பூதி அறுதியிட்டு அவ்வரிய பேற்றினைப் புகழ்கின்றார். மற்றொரு பாட்டில்,

> "அச்சமெல்லாம் தீர்ந்தேன்
> அருளமுதம் உண்கின்றேன்
> நிச்சலும் பேரானந்த
> நித்திரை செய்கின்றேனே"

என்றே உளம் திறந்து பேசுவது யோகானந்த நிலையைப்பற்றியல்லவா?

இராமலிங்க அடிகள் பாடியிருக்கின்ற அருளமுதுப் பாக்களெல்லாம் அவர் யோகி என்பதை அல்லவா எடுத்துக்காட்ட உதவுகின்றன.

> "கடல் கடந்தேன் கரையடைந்தேன்
> கண்டு கொண்டேன்
> கோயில் கதவு திறந்திடப் பெற்றேன்
> காட்சியெலாம் கண்டேன்
> அடல் கடந்த திருவமு துண்டரு
> ளொளியா லனைத்தும்
> அறிந்து தெளிந்து அறிவுறுவாய்
> அழியாமை யடைந்தேன்
> உடல் குளிர்ந்தேன் உயிர் குளிர்ந்தேன்
> உள்ளமெலாம் தழைத்தேன்
> உள்ளபடி உள்ள பொருள் உள்ளவனாய்
> நின்றேன் இடர் தவிர்க்கும்
> சித்தியெலாம் என்வசம் ஓங்கிடவே
> இத்தனையும் பொது நடஞ்செய்
> இறைவனருட் செயலே!"

என்றல்லவா அவர் இதயம் பாடுகின்றது.

இந்தப் பேரின்பப் பெருநிலையைத் தாயுமானார் எப்படி உணர்த்துகின்றார் என்பதையும் கவனிப்போம். "சிவராஜ யோகமென்பது யோகத்தைக் கருவியாகக் கொண்டு சிவத்தியானம் சமாதி என்பவற்றை முயன்றடைவதே." "புருவ நடுவிலிருந்து ஆறுவிரற்கிடைக்கப்பால் தலைநடுவில் (பிரமரந்திரத்தில்) இருக்கிற ஆயிர இதழ்த் தாமரையைச் சிவசூரியனால் விரியச்செய்து அத்தாமரைப் பூந்தாதுவிலுள்ள திங்கள் மண்டலத்தை மூல நெருப்பினால் இளக்கி அதன் அமுதத்தை எல்லா நாடிகளிலும் பரவச் செய்வதே செய்யு

முறை யென்பர்.'' "உடம்பிலுள்ள சுழுமுனை என்னும் நாடியின் வாயிலாகப் பிராண வாயுவின் உதவியால் மூலாதாரத்திற்கு மேலுள்ள அனலைச் சிரசின் நடுவிலுள்ள சந்திரமண்டலத்திற் சேர்த்து அதன் கண் நின்றெழுகும் அமுதத்தினை உடலெங்கும் பரவச்செய்து நெடு நாள் உயிரோடிருத்தலாகிய காயசித்தியைக் கருவியாகக் கொண்டு கடவுளை நினைந்து வழிபடுமுறையை, யோக இயல்பை,

"மூலப் பிராணனோ டங்கியைச்
சோமவட்டத் தடைத்துஞ்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க
டோறுநிலை நிற்கவீறு
சித்தி செய்தும்''.........

என்ற இடத்து தாயுமானர் உணர்த்தினர்.

கந்தரனுபூதியில் அருணகிரி இந்நிலையைப் போற்றுவதும் கண்டு மகிழ்வோம்.

ஆனவமுதே யயில் வேலரசே
ஞானகரனே நவிலத் தகுமோ
யானகிய வென்னை விழுங்கி வெறுந்
தானய் நிலை நின்றது தற்பரமே.

நிஜானந்த போதத்தில் உள்ள ஒருபாட்டு இந்நிலையை மிக அழகாக எடுத்தோதுகின்றது.

உடலுக்குள் நீர் நின்றுலாவுதலைக் காணமல்
கடகமலை தோறுந்திரிந்து காலலுத்தேன் பூரணனே!
நானே நீ நீயே நாமிரண்டு மொன்றானல்
தேனின் ருசியதுபோல் தெவிட்டாய் நீ பூரணனே!

இப்படித் தெவிட்டாத தேனக இருக்கும் நிலையில் எவ்வளவு நேரம்தான் சொக்கி இருக்கமுடியும். இந்தப் பேரின்பப் பெருநிலையில் கொஞ்ச நேரம்தான் இருக்கமுடிகின்ற தென்பர். சீக்கிரத்தில் சுய உணர்வு தலைதூக்க ஆரம்பிக்கும். உச்சி வானில் சிறகடித்துப் பறந்து கொண்டிருந்த ஆத்மீக அன்னம் உச்சி வானைவிட்டு உடல் எனும் நிலைக்கு இறங்கி மறுபடியும் உலகில் உழன்று வாழ வந்து விடுகின்றது. குண்டலினி உச்சியிலிருந்து கீழே இறங்கி ஒவ்வொரு சக்கிரங்களுக்கும் அதன் அதன் சக்திகளைத் திருப்பிக் கொடுத்து விட்டுத் தன் மூல பீடத்திற்குத் திரும்பிவிடுகின்றது. மேலே வெள்ளச் சுனையாகப் பீரிட்டுக் கிளம்பி ஆருதாரங்களையும் துளைத்துக்கொண்டு

சென்ற குண்டலினி திரும்பித் தன் சொந்த இடத்தை அடையும் போது அந்த ஆதாரங்களைத் தூய்மையாக்குவதோடு கூட உடலுக்கே ஒருபுத்துணர்வை ஊட்டிவிடுகின்றது. இந்தக் குண்டலினி யோகத் தால் புத்துயிர் பெற்றுள்ள யோகி ஒவ்வொரு முகத்திலும் பரம் பொருளையும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒரு திட்டமும் காரணமும் காண்கின்றார். வாழ்க்கை பற்றிய மனநிலையில், மதிப்பு எதற்குக் கொடுக்க வேண்டும் என்பதிலும் ஒரு மாறுதல் அவருக்கு ஏற் படுகின்றது. தான்கண்ட புதிய காட்சியில் அன்பின் அழகும் வாழ்வில் உள்ள ஒரு பொதுவான ஒற்றுமையும் உணர்கின்றார், தானும் ஆனந்த சொரூபியாகவே மாறிவிடுகின்றார். அவர் மனதில் அமரத்வம், தன்னுறுதி, சாந்தி, பலம் ஏறுகின்றன. இந்த மெய் அனுபவத்தைக் கண்டறியாத மற்றவர்களுக்கும் இந்த மெய்யுணர் வைக் காட்ட வேண்டும், அது முடியாவிட்டாலும் தாம் கண்டதைச் சொல்ல மேண்டுமென்ற ஒருஆசை ஓங்குகின்றது. இதற்கெல்லாம் எடுத்துக்காட்டாக அல்லவா நமது சாமிகள் விளங்குகின்றார். இதே ஆசையாலல்லவா தாம் கண்ட யோக இன்பத்தைச் சாமி களும் அடிக்கடி வேடிக்கைச் சொற்றொடர்களாலும், நகைச்சுவை ததும்பும் பேச்சாலும் நமக்கு எடுத்து எடுத்துச் சொல்கின்றார். சித்தர்கள் கவிதை உரை கொண்டும் விளக்குகின்றார். இப்போதும் ஒரு அருமையான 'சக்திவேலர்' எனும் பாட்டைக் கொண்டே தன் யோக சித்தி அனுபவத்தை இசை இன்பத்தோடு விளக்கு கின்றார்.

## நிர்விகற்ப சமாதி

நிர்விகல்ப சமாதியைப்பற்றி அறிந்து கொள்வது யாதெனின், இயேசுகிறிஸ்து பகவான் கூறியபடி 'நமக்குள்ளேயே சுவர்க்க பூமி இருக்கின்றது' என்ற பேருண்மையைப் புரிந்து கொள்வதே. (The Kingdom of Heaven is within you - Jesus) இந்த நிர்விகல்ப சமாதியிலும் இரண்டு நிலைகள் கூறப்பட்டுள்ளன. அதன் இயற்கை நிலையில் மனம் அழிந்து விடுகின்றது, பரப்பிரம்மத் தோடு ஐக்கியமாகி மறைந்து விடுகின்றது. இந்த நிலையில் மனம் திரும்பிவராது. பந்தபாசங்கள் எல்லாம் முற்றும் அறிந்துவிட்ட நிலை. மற்ற நிலை கேவல நிர்விகல்ப சமாதி என்றழைப்பர். இந்த நிலையில் மனம் அழியவில்லை. தன்னையறிந் தின்பமுறும் நிலை என்றே இதைக் கூற வேண்டும். மனது என்பது இந்நிலை யில் தனியாக விலகுகின்றது. இவ்விரண்டு நிலைகளையும் உதா ரணங்களால் நூல்கள் விளக்கிக் காட்டுகின்றன. இயற்கையான பூரண நிர்விகல்ப சமாதியை ஒரு நதிக்கு ஒப்பிடலாம். நதி கடலில் சங்கமமாகி ஒன்றுவதைப்போல் இதில் ஜீவாத்மா பரமாத்மாவோடு கலந்து ஒன்றாகிவிடுகின்றது. கேவல நிர்விகல்ப

சமாதியை விளக்க ஒரு கிணறும், தண்ணீர் இறைக்கும் வாளியும் உதவுகின்றன. மனத்தை வாளியென்று வைத்துக் கொள்வோம். கிணற்றை இந்த யோகம் என்று வைத்துக்கொள்வோம். கிணற்றில் கயிற்றால் தொங்கவிடப்பட்டுள்ள வாளியைக் கிணற்றிலுள்ள தண்ணீருக்குள் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் வைத்திருக்கலாம். வாளியை வேண்டியபோது தண்ணீரிலிருந்து வெளியே இழுத்துக் கொள்ளலாம்: இப்படியே கேவல நிர்விகல்ப சமாதியில் உள்ளவர் வேண்டும்போது உலகற்திற்கு உள்ளனுபவித்திலிருந்து திரும்பிவிடலாம். யோகத்தை விட்டு உலகப்புற உணர்ச்சியடைய இராமகிருஷ்ண பரம்ஹம்சரே ஏதாவது ஒரு இயற்கைப்பொருளை நினைக்க வேண்டி இருந்தது என்று சொல்வர். இந்த யோகத்தில் நீண்ட நேரமும் இருக்கலாம். வாளியை நீண்ட நேரம் கிணற்றுத் தண்ணீருள் வைக்கமுடியும் என்பதைப்போல வாளியை அடிக்கடித் தண்ணீருக்குள் செலுத்தவும் தண்ணீருக்கு வெளியில் எடுக்கவும் முடியும். 'தன்னைப்பற்றிய இரகசியங்கள்' (Secret of the self) என்ற புத்தகத்தில் இது சம்பந்தமாக ஒரு அருமையான நிகழ்ச்சிச் சித்திரம் ஒன்று தீட்டப்பட்டிருக்கின்றது. வெகுகாலமாக இந்த யோகத்தில் தன்னை மறந்திருந்த யோகி ஒருவர் திடீரென்று யோகத்தைவிட்டுப் புற உணர்வு பெற்றார். தன்னுடைய சீடரைக் கண்டு தனக்குக் குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்றார். தண்ணீர் கொண்டுவரச் சென்ற சீடர் வெகுநேரமாகியும் வராததைக் கண்ட யோகி மறுபடியும் யோகத்தில் ஆழ்ந்தார். அவர் திரும்பவும் சமாதிகலைந்து எழுந்த போது எவ்வளவோ நூற்றாண்டுகள் கடந்துவிட்டன. யோகி சமாதிகலைந்து எழுந்தவுடன் கேட்ட முதல்கேள்வி 'தண்ணீர் கொண்டு வந்துவிட்டாயா?' என்பது. இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால் அவர் பல நூற்றாண்டுகளுக்குமுன் யோகம் கலைய தண்ணீர் வேண்டுமென்ற போது இந்த நினைவு அவர் மனதில் பதியப்பட்டிருந்தது. தண்ணீர் வருவதற்குள் மறுபடியும் யோகத்தில் ஆழ்ந்துவிட்டார். அநேக நூற்றாண்டுகள் தாண்டி யோகத்தை மறுபடியும் கலைத்து எழுந்தவுடன் மனதில் பதியப்பட்டிருந்த தண்ணீர் வேட்கை, மனம் செயல்பட ஆரம்பித்தவுடன் தண்ணீரை வேண்டிக் கேட்கின்றது. இந்தச் சித்திரம் கேவல நிர்விகல்ப சமாதியில் மனது என்பது தனியாக விலகி நிற்கின்றது என்பதை ருசுப்படுத்த உதவுகின்றது.

## கணபதியும் குண்டலியும்

இவ்வளவு அற்புதங்களையும் கொடுக்கவல்லது குண்டலி எழுச்சி யல்லவா ? குண்டலினி சக்திதான் என்னே ! குண்டலியைக் கணபதி

என்று சாமிகள் போற்றுவதிலும் ஆச்சரியம் ஒன்றும் இல்லை; மூலாதாரத்திற்குரிய கடவுளும் கணபதியல்லவா? அவனை முதன் முதலில் தொழுதுவிட்டு அல்லவா மற்ற தெய்வங்களையும் மற்ற ஆதாரங்களில் தொழச் செய்கின்றோம், கணபதியின் சக்தியைப் போற்றும் குண்டலியின் சக்தியை வியக்கும் சாமிகள் கணபதியைத் தன் அனுபவ உண்மைகளைக்கொண்டே எவ்வளவு அருமையாகத் துதிக்கின்றார்.

"ஓம் கணபதியைத் தொழக் காரியம் கைகூடும்
கணபதியைத் தொழ கண்டபேர் வசியமாம்
கணபதியைத் தொழ கர்ம வினைதீரும்
கணபதியைத் தொழ கைலாசம் கிட்டும்.
அரிதிரு மருகனை ஆதி கடவுளைத்
திருவருள் பெருகவே தினம் துதி செய்வோம்"

ஆம், கணபதியைத் தொழ, கைலாசம் கிட்டிவிடுகின்றது; உடலில் உள்ள குண்டலியைத் தட்டிவிட அது முடியிலுள்ள சகஸ்ர கமலத்திற்கே சென்று பரமாத்மாவோடேயே இணைத்து விடுகின்றது. குண்டலி மேல் எழும்புவதை 'லயகர்மா' என்று அழைப்பது போல் குண்டலி கீழே இறங்குவதை 'சிருஷ்டி கர்மா' என்று அழைப்பர். குண்டலி மேலே செல்லும்போது உணர்ச்சி குன்றுவதால் லயகர்மா என்கிறோம்: குண்டலி கீழே இறங்கும்போது புறஉலகு உணர்விற்கு சுயஉணர்வு உண்டாவதால் 'சிருஷ்டி கர்மா' என்கின்றோம். புறஉலகு உணர்வு வந்தவுடன் புத்துயிர், நறுமலர்ச்சி, தெய்வீக மணம் யோகிகளுடைய செயல்களில் பரிமளிக்க ஆரம்பிக்கின்றன. எழில் எழிலாக கவிதைச் சிற்பத்தை உருவாக்கித் தந்த கவிஞர் சுப்பிரமணிய பாரதிக்குக்கூட இந்த அனுபவம் இருந்திருக்கலாம் என்று யூகிக்க இடமிருக்கின்றது. புத்துயிரும் ஊட்ட வல்ல குண்டலியால் ஏற்பட்ட மெய்யுணர்வு இலக்கிய மேதைகளையும் மத மேதைகளையும் உருவாக்குகின்றது. இதை வலியுறுத்துவது போலவே விநாயகர் நான்மணிமாலையில் சுப்பிரமணி பாரதி இப்பேருண்மைகளைப் பாடியிருக்கின்றார். விநாயகர்தானே குண்டலி!

"அக்னி தோன்றும், ஆண்மை வலியுறும்
திக்கெலாம் வென்று ஜெயக்கொடி நாட்டலாம்
கட்செவி தன்னைக் கையில் எடுக்கலாம்
விடத்தையும் நோவையும் வெம்பகைதனையும்
துச்சமென் றெண்ணித் துயரிலா திங்கு
நிச்சலும் வாழ்ந்து நிலைபெற் றோங்கலாம்

அச்சந்தீரும் அமுதம் ஓங்கும்
வித்தை வளரும் வேள்வி ஓங்கும்
அமரத்தன்மை எய்தவும்
இங்குநாம் பெறலாம் இஃதுணர்வீரே.

" மணக்குள விநாயகா, வான்மறைத் தலைவா
தன்னைத்தான் ஆளுந்தன்மை நான் பெற்றிடில்
எல்லாப் பயன்களும் தாமே எய்தும்
அசையா நெஞ்சம் அருள்வாய் — உயிரெலாம்
இன்புற்றிருக்க வேண்டிநின் னிருதாள்
பணிவதே தொழிலெனக் கொண்டு
கணபதி தேவா! வாழ்வேன் களித்தே!

## சிவராஜ யோகம் — விளக்கம்

சாமிகள் சிவராஜ யோகத்தைப் பற்றி விளக்குவதைப் படித்து இன்புறுவோம்.

சாமிகள்: "கடவுளை அடைவதே யோகமார்க்கம்; மறுபடியும் பரப்பிரம்மத்தை அடைந்து இரண்டறக் கலந்து ஒன்றுதலே யோகத்தின் பயன். கடவுளை அடைவதால் யோகி கடவுள் தன்மையும் அடைகின்றார் என்பது அவர் ஆடும் சித்துக்களால் உணரலாம். யோகம் என்ற சொல்லே சேர்ப்பது என்ற பொருள் கொடுக்கும் 'யோக்' (yoke) என்ற ஆங்கிலச் சொல்லிலிருந்து பிறந்தது என்றுகூட சொல்லுமளவுக்கு 'யோக்' எனும் ஆங்கிலச் சொல் பொருளும் இடம் கொடுப்பது உற்று நோக்கத்தக்கது. மனிதனைக் கடவுளிடம் ஐக்கியப்படுத்தும் வழியே யோகம். உடலில் உத்தமனைக் காண்பதே யோகம்.

மெய்ப்பொருளை அறிவதற்கு அடைவதற்கு உறுதுணையாக இருக்கும் வழிகளில் ஒன்று இராஜயோகம். இது யோகங்களுக்கெல்லாம் முதன்மையானது, தலைமையானது என்பதை விளக்கவே இந்தயோகத்தை ராஜயோகம் என்ற கூறுவர். அன்னை பராசக்தி தெய்வீகப் பெரும் சக்தி. அவள்தான் பேரானந்தத்திற்குப் பிறப்பிடம். எல்லோரிடத்தும் சுருண்டு புதைந்திருக்கும் இந்தத் தெய்வீக சக்தியைத் தட்டி எழுப்புவதே ராஜயோகத்தின் நோக்கம்: இதைத்தட்டி எழுப்புவதால் தன்னை அறிந்தின்பமுறலாம், சிவயோகத்தை அனுபவிக்கலாம், பரப்பிரம்மத்தோடு ஐக்கியமாகலாம் என்பதே இதன் பயன்.

இராஜ பீடத்தில் அமைந்துள்ள மன்னவன் ஒரு சாம்ராஜ்யத்திற்கே அதிபதி. அந்த ராஜ்யத்திலுள்ள அனைவரையும் இஷ்டம்போல் ஆள்கின்றான் மன்னன். பகையை வென்று நாட்டுக்கு நன்மையே செய்கின்றான் அரசன். அது போன்றே

இந்த யோகி உடலைக் கட்டி ஆள்கின்றார், மனத்தைக்கட்டி ஆள் கின்றார். யோகி தன்னுள் உருவாகிய மகாசக்தியால் மகா சித்தி கள் அடையப் பெற்று இயற்கையையும் ஆளவல்லவராகின்றார். உடலையும் நல்ல நிலையில் வைத்துக்கொண்டு கருணைக் கடலாக விளங்குகின்றார். இத்தகைய சிவ செல்வத்தையும் செல்வாக்கை யும் அருள்கின்ற யோகத்தை ராஜயோகம் என்று சொல்வதல்லவா பொருத்தமாக இருக்கின்றது.

கீதையில் யோகத்தைப் பற்றிக் கூறுகின்ற கிருஷ்ணபகவான் "இந்த அமரத்வமான யோகத்தை நான் சூரிய பகவான் விவஸ் வானுக்குக் கற்றுக் கொடுத்தேன். அவர் மனுவிற்கும், மனு அவர் திருமகன் இச்வாக்குக்கும் கற்றுக் கொடுத்தனர். இப்படித் தகப் பனிடமிருந்து தனயனுக்கு அறிவிக்கப்பட்ட இந்த யோகம் இராஜரிஷிகளுக்குத் தெரிந்தே இருந்தது" என்று கூறினர். அதனல் இராஜாக்களுக்குத் தெரிந்த யோகமாதலால் இதை இராஜயோகம் என்று அழைப்பதும் பொருந்தும்.

உண்மையிலேயே யோகி இராஜ நிலைக்கும், ஏன் இராஜ நிலைக்கும் அப்பாற் பட்ட நிலைக்கே ஏறிவிடுகின்றார். சிவசாம் ராஜ்யத்தையே எட்டிப்பிடித்து விடுகின்றார். பின் இதை சிவராஜ யோகம் என்று சொல்லாமல் இருக்கமுடியுமா? யோகி ஜீவனே சிவனுகின்றார், பரப்பிரம்ம சொரூபியாகின்றார். அந்த நிலையை எட்டிப் பிடித்தவர் ஒருவருடைய சிவ அனுபவத்தை அவர் மொழி களிலேயே கேட்போமே. இராமலிங்க அடிகள் தம் சீவானுபவத் தைப் பல பாடல்களில் பாடி மகிழ்கின்றார்.

"சிவமே பொருளென்று தேற்றி — என்னைச்
சிவவெளிக் கேறுஞ் சிகரத்தி லேற்றி
சிவமாக்கிக் கொண்டது பாரீர் — திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி"

* * *

மதிமண்டலத்தமுதம் வாயார உண்டே
பதிமண்டலத் தரசு பண்ண — நிதியே
நவநேயமாக்கு நடராஜனே யெஞ்
சிவனே கதவைத்திற!

* * *

ஜோதிமலையில் கண்டேனின்னைக் கண்களிக்கவே
துய்த்தேன் அமுதமகத்தும் புறத்தும் பரிமளிக்கவே

ஓதி உணர்தற்கரிய பெரியஉணர்வை நண்ணியே
ஓதாதனைத்து முணர்கின்றேனின்னருளை யெண்ணியே

* * *

சிவ சிவ சிவ சிவ சின்மய தேஜா
சிவ சுந் தர குஞ் சித நட ராஜா

... ... ... ... ...

அம்பல வாசிவ மாதேவா
வம்பல வாவிங்கு வாவா வா

... ... ... ... ...

அரகர சிவசிவ மா தேவா
அருளமு தந்தர வா வா வா"

... ... ... ... ...

இதே அனுபவ நிலையில் சாமிகள் சிவராஜயோகத்தின் பேரின்பத்தை ஒரு நாள் பாடிக் காண்பித்தனர்.

சிவ சிவ சிவ சிவ சிவராஜா
சிவ நடன மிடும் நடராஜா
அர அர அர அர மக தேவா
அம்பிகை மகிழ்பொன் அம்பலவா

* * *

எப்போ காண்பேன் எப்போ காண்பேன்
ஏழை பங்காளனை எப்போ காண்பேன்

* * *

இந்த யோகத்தை அனுபவ வாயிலாகப் பல பாட்டுக்களில் இராமலிங்க அடிகள், தாயுமானுர், அருணகிரிநாதர், பதினெண் சித்தர்கள், திருமூலர், ஔவையார், மாணிக்கவாசகர் முதலியோர் பாடி மகிழ்ந்தனர். ஆளுடை நாயகனுன ஏறுடையான் (சிவன்) தன்னுள் புகுந்திடவே என்னென்ன நடக்காது என்று விவரிக்கும் யோக அனுபவத்தை மாணிக்கவாசகர் 'திருப்படை ஆட்சி' என்ற விருத்தங்களில் பாடியுள்ளதும், யோகத்தைப் பற்றி நன்ருக அறிந்து கொள்ள பயன்படும் திருவாசகப் பகுதியாகும். உத்தர தேசங்களில்

பஞ்சால தேசத்தில் அவதாரம் செய்த குருநானக் பரம்பரையி லுதித்த ஞான சிரேஷ்டர், தயாகுண பரிபூரணன், குருசரண் தாஸ், பாபாஜி அவர்களால் இந்துஸ்தானி பாஷையில் உபதேசிக்கப்பட்ட வைகளைத் தமிழில் எழுதியதே சிவயோகசாரம் எனும் நூல். இதிலும் இந்த யோகத்தைப் பற்றி விளக்கம் கூறியுள்ளனர். நீஜானந்த போதம் என்பது மற்றொரு யோக நூல். இந்த யோகத்தைப் பற்றியே விரிவாகப் படிக்க பதஞ்சலி முனிவரால் இயற்றப்பட்ட யோகசூத்திரம் மிகவும் உதவும். இந்த யோகம் அட்டாங்க யோக மென்றே விவரிக்கப்பட்டுள்ளது.

யம நியமாஸன ப்ராணயாம ப்ரத்யா ஹார
தாரணத்யான ஸமாதயோ அஷ்டாவங்காணி – பதஞ்சலி

இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன இராஜயோகத்தின் எட்டு அங்கங்கள். இவைகளின் விளக்கமும், அட்டமா சித்துக்கள் விபரங்களும் யோக சூத்திரத்தில் அடங்கி உள்ளன. இயமம் என்பது கொல்லாமை, பொய்யாமை, களவின்மை, பொறியடக்கம், உண்மை, பொறுமை, நடுவுநிலைமை, தயை, தூய்மை, கள்ளுண் ணாமை, தூய அளவான உணவு கோடல் என்பவற்றைக் கொண் டுள்ளது. நியமம் என்பது தவம், செபம், மனநிறைவு, கடவுள் நம்பிக்கை, கடவுள் வழிபாடு, ஈகை, மெய்நூற்கேள்வி, விரதம், நன்மையில் விருப்பம், பாவத்தில் வெறுப்பு - இவைகளைக் கொண் டுள்ளது. ஆசனத்தைப் பற்றி பதஞ்சலி சூத்திரம் 'ஸ்திர ஸீக மாஸனம்' என்றுரைக்கின்றது. ஸ்திரமாகவும் சுகமாகவும் இருப் பது ஆசனம். பிராணயாமம் என்பது சுவாசத்தைக் கட்டி ஆள் வதைக் குறிக்கும். பிரத்தியாகாரம் என்பது மனதைக் கட்டி ஆள் வதைக் குறிக்கும். தாரணை என்பது சித்தத்தை ஒரு பொருளில் படிந்திருப்பதைக் குறிக்கும். (தேச பந்தஸ்த சித்தஸ்ய தாரண) இந்த நிலை தொடர்ந்து நீடித்திருப்பது தியானம் என்பது. (தத்ர ப்ரத் யயைக தானதா தியானம்) தியானம் செய்கின்ற பொருள் வடிவத்தை மறந்துவிட்டு அதன் உட்பொருளை (கருத்தை) மட்டும் சித்தத்தில் ஒளிரச் செய்வது சமாதி என்பது.

'ததே வார்த்த மாத்ர நிர்பாஸம்
ஸ்வரூப சூன்யமிவ ஸமாதி'

யோகத்தின் உச்சநிலையே சமாதியாகும். உலகில் பிறந்துள்ள எல்லா ஜீவராசிகளும் இந்த நிலையை ஒருநாள் அடைந்தே தீரும் என்றும் கூறுவர். இவைகளே இராஜயோகத்தின் எட்டு அங்கங் களில் உள்ள பொருள்.

**யோகத்தின் பயன் :**

குண்டலினி எழுச்சியுற்ற உணர்விலேதான் விட்மென் (Whitman) என்பவரும், 'என்னுடைய கீதம்' (Song of Thyself) எனும் புத்தகம் எழுதினுரென்றும் கேள்விப்படுகின்றேம். இதே உணர்வுதான் ரமண மகரிஷிகளையும் 'ஆத்மபோதம்' என்ற நூலுக்கு மொழி பெயர்ப்பு அருள உதவியது என்பர். அரவிந்த மகரிஷிகளையும் இவ்வுணர்வுதான் இலக்கிய ஞானநூல்களை வாரி வழங்க வைத்த தெனலாம். திருவருட்பாக்களை இராமலிங்க அடிகள் திதிக்கத் திதிக்கப் பாட வைத்ததெனலாம். இவ்வுணர்வு கொண்டல்லவா இராமகிருஷ்ண பரமஹம்சரும் மெய்ப்பொருள் விஷயங்களை அள்ளி அள்ளி அருமைச் சீடர்களுக்கு ஊட்டி இருக்கின்ருர். நமது சாமி களையும் அவரது அருள்வாக்கையும், மடைதிறந்தாற்போல் தங்கு தடையின்றி வெள்ளம் பெருகுவதுபோன்று வழிகின்ற சாமிகள் மணிமொழிகளையும் கருத்தைக் கருத்தாடல் செய்யும் உரையாடலையும் பார்க்கும்போது இதே எழுச்சிதான் சாமிகளுக்கும் இவ்வற்புத சக்தியை அளித்துள்ளது என்பதை அறிந்துகொள்ளலாம். "எட்டுகிற வரையில் சிற்றின்பம்; எட்டாத வரையில் பேரின்பம்: சிற்றின்பத்தை அனுபவித்து விட்டுவிடுவார்கள்; பேரின்பத்தை அனுபவித்தவர்கள் விடமாட்டார்கள்." என்னே சாமிகளின் முத்து மணிமொழிகளும், அவை அனுபவப்பொருள் சாறும்!

இந்தச் சந்தர்ப்பத்தில் சாமிகள் திருவாய் மலர்ந்தருளும் சில முத்துமணி அருள்மொழிகளை செவி மடுத்தின்புறுவது பொருத்தமாக இருக்கும்.

(தெய்வம்)

"சொல்லப்போனுல் எல்லோருமே கணக்குப் பிள்ளைகள் தான். மனிதன் முதற்கொண்டு தெய்வம் வரையிலும் எல்லோருமே கணக்குப் பிள்ளைகள்தான்; ஆனுல் மனிதனுக்கும், தெய்வத்திற்கும் ஒரு வித்தியாசமுண்டு. மனிதன் மற்றவர்கள் செய்யும் குற்றங்களைக் கண்டு கணக்கெடுத்து வைத்திருக்கின்ருன், எப்பொழுது அவர்களைப் பழிவாங்கலாமென்று; தெய்வம் மனிதர்கள் செய்யும் புண்ணியச் செயல்களைக் கணக்கெடுத்து வைத்திருக்கின்ருர், எப்பொழுது நம்மை தன் அருட் கரங்கொண்டு அணைக்கலாமென்று."

* * *

"கடவுள் என்பவர் கண்டவர்க்குக் கற்கண்டு
காணுதவர்க்குக் கல்குண்டு"

* * *

நீர்வீழ்ச்சியில் நேராகத் தண்ணீர் குடிக்க முடியாது. நீர்வீழ்ச்சி யிலிருந்து விழுந்து ஓடிவரும் ஒருசிறு வாய்க்காலில்தான் தண் ணீர் குடிக்க முடியும். அதுபோன்றே தெய்வத்தை நேரில் பார்க்க முடியாது. தெய்வத்தை ஆலயம் என்ற இடத்தில்தான் சிலா ரூபத்தில் காண முடியும்.

* * *

( யோகம் )

மானிட உலகில் போர்த்த போர்த்த உடலில்
குளிர் ஓங்கும் ; நினைக்க நினைக்க மனதில்
குளிர் (சஞ்சலம்) ஓங்கும் : யோகியர்
உலகில் இந்த இரண்டுவகை குளிரும் இல்லை.

* * *

இராஜா வரும்போது எல்லா மேளங்களும் வரும் ;
வாண வேடிக்கைகள் வரும் : இவையெல்லாம்
இராஜா வருவதற்குமுன் வருகின்றவை.

* * *

மயிருள்ள சீமாட்டி எப்படி வேண்டுமானாலும்
முடிபோட்டுக் கொள்ளலாம் ; கடவுள்அருள்
பெற்ற குரு எப்படி வேண்டுமானாலும் சித்தாடிக்
காட்டலாம்.

* * *

கர்விக்குக் கண் தெரியாது
ஞானிக்கும் கண் தெரியாது.

* * *

காற்றடித்தாலும் நடுக்கும்
அருள் வந்தாலும் நடுக்கும்.

* * *

இவ்வுணர்வு வயப்பட்ட சாமிகளுக்குக் கவிதை வடிவிலும், சக்தி பெற்ற சொற்றொடர்கள் அமைந்துவிடும். இந்த அருள்கவிதை மணிகளெல்லாம் மந்திரசக்தி பெற்ற ஔடதமாக சாமிகள் உவந் தளிக்கும் பக்தர்களுக்கு உதவி வந்திருக்கின்றன.

"காலமே உதயமாகி
தகதகாவென்று வருகின்ற
சூரிய பகவானே!
ஊறுகின்ற புழுவிற்கு
கூனெறும்பு மண்ணெடுத்துக்
கூசாமல் நான்போட
ஊறுகின்ற போது
உடனே விழுகச் சிவா!

மாடுகளுக்குப் புண் உண்டாகிப் புழு ஏற்பட இந்த மந்திரசக்தி வாய்ந்த வாக்கியங்களைச் சாமிகளோ அல்லது சாமிகள் அனுக்கிரகம் பெற்றவரோ சொல்லிப் பஞ்சாட்சரம் பூசினல் புழுக்களெல்லாம் புண்ணிலிருந்து விலகிக் கீழே விழுந்துவிடும்.

வேட்டைக்குச் செல்லும் அன்பர்களுக்கும் வேட்டையிலிருந்து வெற்றியோடு திரும்பி வருவதற்கும் சாமிகள் உளமுவந்து தாம் வேட்டையாடி வந்த நாட்களில் ஒரு மணிமொழிக் கவிதை வழங்கியதுண்டு.

"வேண்டும் விலங்கினம் இவன்
வேட்டில் அகப்படச் செய்
தூண்டும் பரம் பொருளே
தூயவனே ஈண்டு
காத்திருக்கலாமோ
கடைக்கண் செய்திடுவாய்
இவன் சீர்த்தியும் பூர்த்தியும்
சேருமே"

இப்படி ஒரு பாட்டு இரண்டு பாட்டுகள் அல்ல, எவ்வளவோ பாட்டுகள் மக்கள் பிணி நீங்கவும் விலங்கினம் பிணி தீரவும் சாமிகள் உவந்தளித்திருக்கின்ருர்.

சாமிகளுடைய அருள் பெற்றவர் மந்திரசக்தி வாய்ந்த சாமிகளுடைய சிவவாக்கியத்தை உரைத்து திருநீறு பூசினல் பாம்புக்கடி விஷமும் இறங்கிவிடும்.

"காளி காளாஸ்திரி நீலி நீலகண்டன்
செந்தலைக் கருடன் நஞ்சிலே பாய்ந்து
நஞ்சுநீர் நீராகப் போகச் சிவா!"

இந்தப் பேரின்ப நிலையில் சாமிகள் கீர்த்தனங்களையும் பாட ஆரம்பித்து விடுவர். அக்கீர்த்தனங்களை உதயப்பாட்டுகள் என்றும் அழைக்கலாம். சாமிகள் பாடி அனுபவிக்கும் இரண்டு உதயகீதங்களைப் படித்து இன்புறுவோம்.

### 1

பலலவி

மகா பிரம்ம சொரூபா வருகவே — சுய
மகா ரகா வகா ரகவருகவே — மகா

அனுபல்லவி

சகா தரா சிருஷ்டி பிரதாபா
தவமும் புரிவச்சரகுண நிபநின் புனரத்சதகுண — மகா

சரணம்

அமிர்தம் பொழி தமிழ்மந் திரவாணி கணவா
கமலாம் புஜஎழில் சுந்தரவேணி எதிர்வா
அம்போருக உலகசிவா சம்போ குலதிலகானவர்
அமல வராகி ராமசாமி கமலவரத வாசத்திருநீர் — மகா

### 2

பல்லவி

தேன் டொளிக்கும் வண்டின் கண்டுண்டளவும்
பூண்டவர் நெஞ்சம் பொன்நெஞ்சம் நின்றடியேன் — தேன்

அனுபல்லவி

ஆண்டவன் தனை பாண்டவர்க்கருளும்
அண்டு மேடுண்டுள கொண்டல் வண்ணன் கண்ணன் — தேன்

சரணம்

காற்றடிக்கும் செங்கல் தரையில் பூத்தவனே
ஆய்த்திடும் தும்பி உண்டுருளும் காரணனே
கருணையா இது சமயம்
கந்தையா வந்து காரும் — தேன்

யோகி வாசியடக்குவதால் இவ்வுலகத்திச்சையினின்று சுவர் தீனப்படுவதும், மனம் ஆனந்திக்கப்பட்டு ஞானச் செல்வமுண்டாவதும், விதேகி ஆவதும் கண்டோம். அதுமட்டுமல்ல. தூர தேசத்தில் நடப்பவைகளையும் சொல்கின்றார். ஆகாசத்திலுள்ள சகலமும் கண்டுணர்வர். சரீரம் காயசித்தி பெறுவர். அணிமாதி சித்திகளை அடைவர். நவரண்டங்களில் சஞ்சரிப்பர். ஒரு தேகத்தை விட்டு மற்றொரு தேகத்தில் பிரவேசிப்பர். தனது ஆத்மாவையே கண்டு வசனிப்பர். நெடுங்காலம் அன்ன பானாதிகளை நீக்கி அவா அற்றிருப்பர். இப்படியெல்லாம் யோகிகளுக்குச் சகல சக்திகளையும் கொடுத்துதவுகின்றது யோகம் என்று சிவயோக சாரம் உரைக்கின்றது நமது சாமிகளைக் கண்டுப் பழகிவரும் பக்தர்களாகிய நமக்கு சாமிகளிடம் இத்தகைய சக்திகள் குடி கொண்டிருப்பது நன்றாகத் தெரியும். ஆனால் சாமிகள் குறிப்பாகவோ அல்லது ஜாடையாகவோ தனக்கு இவையெல்லாம் தெரியும் என்பதைக் காட்டிக் கொள்வதே இல்லை. வள்ளல் பிரானாகவும் தெள்ளத் தெளிந்தவராகவும் விளங்கும் சாமிகளின் மாண்பை சித்தரிக்க இந்த ஒரு பாட்டே போதும்!

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானுக்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப்புலன் ஐந்தும் காளாமணி விளக்கே"

## சக்திவேலா பாட்டும் சாமிகள் விளக்கமும்

சாமிகள் தான் அனுபவித்துவரும் யோக சித்தியை ஒருநாள் பாட்டாகவே பாடிவிட்டார். இப்பாட்டு அகஸ்தியர் ஆனந்த கீதத்தில் உள்ளதென்று உரைத்த சாமிகள் ஆனந்தக் களிப்பிலேயே மிதக்க ஆரம்பித்து விட்டார் என்றே சொல்ல வேண்டும். பல்லவியை அழுத்தந்திருத்தமாகச் சக்தியை வலியுறுத்திப் பாட ஆரம்பித்தவர் சரணங்களை ஒன்றன் பின் ஒன்றாகப்பாடி வருங்கால் கொஞ்சங் கொஞ்சமாக உள்ளம் நெகிழ்ந்து மெய்யுருகி மனம் கசிந்து பாட்டோடு ஒன்றி இசையாகவே மாறிவிட்டார். அப்போது தான் சாமிகள் யோகத்தில் அடைந்த பேரின்ப நிலையை ஓரளவு கூடியிருந்த பக்தர்களுக்கு உணர முடிந்தது. சாமிகள் பாடும் பாட்டையே கேட்போம்.

**பல்லவி**

சக்திவேலா சக்திவேலா ஷண்முக சுப்பிரமண்ய சக்திவேலா
உன்றன் தரிசனம் தந்தருள்வாய் சக்திவேலா.

சரணங்கள்

1. ஆயிரத் தளங்கள் தங்கத் தாமரைக் குள்ளே – உன்றன்
அத்துவித சுத்த ஜோதி நர்த்தனம் கண்டேன்
வாயுவை வசப்படுத்தி வாசியைக் கண்டேன் – மேலே
வாசலைத் திறந்து நீ பேசிடக் கண்டேன் – சக்தி வேலா

2. சொல்லும் மனமும் எய்த சூட்சமங் கண்டேன் – ஐயா
சூத்திரத்தில் ஆட்டுகின்ற பாத்திரங் கண்டேன்
அல்லும் பகலுமிலா அற்புதங் கண்டேன் – இந்த
அகிலம் அனைத்தும் என்னுள் ஆவதைக் கண்டேன்–சக்தி வேலா

3. பாலைப் பருகும் இந்தப் பக்குவம் கண்டேன் – தெய்வ
பாம்பை எழுப்புகின்ற சூட்சமம் கண்டேன்
காலைக் கதிரவனின் காட்சியைக் கண்டேன் – என்னுள்
கனவில் உருவாக்கிய காவியம் கண்டேன் – சக்தி வேலா

4. காடுமலை சுற்றி வந்து புகழ்பாடி – தோளில்
காவடி கொண்டாடு மன்பர் கோடானு கோடி
ஆடுகின்ற நீலமயில் தோகை நிழலில் – கூடி
அந்தரரும் வந்து நிற்பார் அருள் தேடி – சக்தி வேலா

5. பார்க்கும் திசைகளில் உன் பால்முகம் கண்டேன்
பயத்தைத் தவிர்த்தருளும் வேல்முகம் கண்டேன்
யார்க்கும் அஞ்சாமல் பொங்கும் சேவலைக் கண்டேன் – என்றன்
இதயத்தில் ஆன்மக்குயில் தாவலைக் கண்டேன் – சக்தி வேலா

இந்த கீதத்தை உற்சாகத்தோடு புன்னாகவராளி இராகத்தில் பாடிக் காட்டிய சாமிகள் ஆனந்த நிலையிலேயே இந்தப் பாட்டுள் பொதிந்துள்ள பொருளைத் தன் யோக அனுபவம் கொண்டே விளக்கவும் அருள் கூர்ந்தனர்.

சாமிகள் : வாசி யோகத்தை அனுபவித்த ஒருவரால் தான் இத்தகைய அருமையான பாட்டை நன்கு அனுபவிக்க முடியும். பல்லவியில், யோகத்தால் அடையும் பலனும் யோகத்திற்கு அவசியமான வாசியும் நன்குணர்த்தப்பட்டிருக்கின்றது. பல்லவியைப் பாருங்கள்.

"சக்தி வேலா சக்தி வேலா ஷண்முக சுப்பிரமண்ய
சக்தி வேலா — உன்றன் தரிசனம் தந்தருள்வாய் சக்திவேலா."

பாடும் போது பல்லவியில் சக்தி வருகின்ற இடத்தை நம் முழு சக்தியோடு அழுத்தம் திருத்தமாக பாடவேண்டும். அந்த சக்தி வேறு ஒன்றும் இல்லை. காற்று தான். அந்தக் காற்றை உபயோகப்

படுத்த வேண்டியபடி குருவின் உபதேசப்படி பயன்படுத்திக் கொண்டால் அது நம்மை 'தன்னை அறிந்தின்பமுற'ச் செய்யும் சக்தி வாய்ந்தது. இந்தக் காற்றின் உபயோகத்தோடு உடலிலுள்ள ஆறு ஆதாரங்களையும் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். பல்லவியில் வருகின்ற 'ஷண்முகம்' என்ற சொல் ஆறுதாரத்தைக் குறிக்கின்றது. அடியில் எழுப்புகின்ற சக்தி, குண்டலினி, மேலே சென்று, உச்சியில் வேல்முனை உணர்த்தும் அறிவுச் சுடரை, பரம்பொருளை, சிவனைக் காட்டி விடுகின்றது. அடியில் சக்தியோடு கிளம்பி முடிவில் வேலோடு, அதாவது தன்னைத்தான் அறியும் அறிவோடு திரும்பும் யோக மார்க்கத்தை குறிப்பதற்கே சக்தியையும் வேலையும் சேர்த்து 'சக்திவேலா' என்று அருமையாகப் பாட்டை ஆரம்பிக்கின்றார். வாசி யோகத்தின் பயன் நாம் காண விழைகின்ற பேரானந்தப் பெருநிலை. அந்த நிலையை நாடுவதால் தான் 'உன்றன் தரிசனம் தந்தருள்வாய்' என்ற சொற்களை ஆண்டிருக்கின்றார் கவிஞர்.

இந்தப் பல்லவியில் உரைத்துள்ள அருமை அனுபவத்தை சுப்பிரமணிய ஞானகீதம் எப்படி உரைக்கின்றது பாருங்கள்!

> "ஞானமென்ன நிலைகாட்டி மூலங்காட்டி
> நாதாந்த ஆறுமுக நிலையுங்காட்டி
> மோனமென்ற வடிவேலின் முனையுங்காட்டி
> முனையறிந்து கலைநிறுத்தி முடிமேல் நில்லே"

அடுத்து வரும் சரணங்களில் வரும் பாட்டை ஒவ்வொன்றாக எடுத்துக்கொள்வோம்.

> "ஆயிரத்தளங்கள் தங்கத் தாமரைக் குள்ளே — உன்றன்
> அத்துவித சுத்தஜோதி நர்த்தனம் கண்டேன்
> வாயுவை வசப்படுத்தி வாசியைக் கண்டேன் — மேலே
> வாசலைத் திறந்து நீபேசிடக் கண்டேன்."

கலையை (சுவாசத்தை) வென்று அதை எப்படியெல்லாம் பூரகம் செய்து (இழுத்து) கும்பகம் செய்து (அடக்கி வைத்து) ரேசகம் (விடுவது) செய்து யோகப்பயனை அடையலாம் என்ற அறிவும் ஆற்றலும் பெற்ற பக்குவநிலை யோகி, அந்த வாசியோகமே தனக்கு சுவர்க்க வாசலைத் திறந்துவிடும் சக்தி பெற்றது என்பதை அறிவன். சுவர்க்கம் என்பது என்ன? அது வேறு உலகமல்ல. அது நமது உடம்பிலேயே உத்தமனைக் காண்பதுதான். ஜீவனே சிவனாகும் கைலாய நிலை. நரனே நாராயணனாகும் சுவர்க்க நிலை. இந்த ஜீவாத்மா பரமாத்மா ஐக்கியத்தைத் தானே அத்துவித சாத்திரமும் நமக்கு "நீயே நானாய் நானே நீயாய்" என்ற அருமை

மொழிகளால் நன்கு விளக்குகின்றது. சகஸ்ராரக் கமல ஜோதி நிலை எய்தி விட்டால் ஆண்டவனோடு இரண்டறக் கலந்து விடுகின்றோம். தன்னையறிந்து இன்பமுற ஆரம்பிக்கின்றோம். இந்த துரியாதீத நிலைக்குக் கொண்டு செல்லும் வாசியின் பழக்கத்தைக் கொங்கணமுனிவர் எப்படி போற்றுகின்றார் பாருங்கள்.

'வாசிப் பழக்க மறிய வேணுமுற்று
மண்டல வீடுகள் கட்ட வேணும்
நாசிவழி கொண்டு யோகமும் வாசியும்
நாட்டத்தைப் பாரடி வாலைப் பெண்ணே.'

இதையே சிவவாக்கியர் பாடல் ஒன்று எவ்வளவு அழகாகச் சித்திரித்துக் காட்டுகின்றது.

'மவுனவஞ் செழுத்திலே வாசியேறி மெல்லவே
வானளாய நிறைஜோதி மண்டலம் புகுந்தபின்
அவனுநானு மெய்கலந் தனுபவித்த வளவிலே
அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை யானதே.'

வாசியை வசப்படுத்தி விட்டால் நடக்காதன ஒன்றுமில்லை என்றே சொல்லலாம். நமன் கூட நெருங்கி வராதபடி செய்து கொள்ளவும் முடியும் என்பதை எப்படி ஒரு பாட்டு பகர்கின்றது பாருங்கள்.

"ஏற்றி யிறுக்கி யிருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே."

சரணத்தில் உள்ள அடுத்துவரும் இரண்டு பாடல்களும் யோகத்தால் நாம் அடைகின்ற பயனை எடுத்துரைக்கின்றன.

சொல்லும் மனமும் எய்த சூட்சமங் கண்டேன் — ஐயா
சூத்திரத்தில் ஆட்டுகின்ற பாத்திரங் கண்டேன்
அல்லும் பகலும் இல்லா அற்புதங் கண்டேன் — இந்த
அகிலம் அனைத்தும் என்னுள் ஆவதைக் கண்டேன்.

பாலைப்பருகும் இந்தப் பக்குவம் கண்டேன் — தெய்வ
பாம்பை எழுப்புகின்ற சூட்சமம் கண்டேன்
காலைக் கதிரவனின் காட்சியைக் கண்டேன் — என்னுள்
கனவில் உருவாக்கிய காவியம் கண்டேன்.

குண்டலினி சக்தி என்ற பாம்பை நாம் எழுப்ப வேண்டியது தான்! உடனே மூலாதாரத்திலிருந்து ஆரம்பித்து உடலில் உள்ள மற்ற ஆதாரங்களையும் குண்டலினி ஊடுருவிச் செல்கின்றது. இது மேலே ஒவ்வொரு ஆதாரமாக ஊடுருவிச் செல்லும்போது பல பல அற்புதக் காட்சிகளைக் காணலாம், பல பல அற்புத நாதங்களைக் கேட்கலாம், தேனினும் இனிய அமிர்தம் பருகலாம். அண்டத்திலுள்ளது பிண்டத்தில் என்ற பேருண்மையைக் காணலாம். அட்டமாசித்திகளையும் அடையலாம். இதைத்தான் இவ்விரண்டு பாடல்களும் எடுத்துரைக்கின்றன. இப்பாடல்கள் ஒன்றில் 'அல்லும் பகலும் இல்லா அற்புதங்கண்டேன்' என்ற வாக்கியம் ஒன்றுளது. இந்த அற்புதத்தின் பொருளை ஞானரத்தினக் குறவஞ்சி ஓரளவு கேள்வி பதிலாக எடுத்துக்காட்டும்.

" ஒருமித்திருக்கின்ற வோரிடமெவ்விடம் சிங்கி — அது
வொன்றுமிரவும் பகலுமுதிப்பிடம் சிங்கா
இரவும்பகலும் மொன்றுனது மெவ்விடம் சிங்கி — அது
எப்போது மிருளாயிருப்பது மூலையே சிங்கா
இரவும்பகலும் பிறப்பிட மெவ்விடம் சிங்கி — அது
யிருளிலுதித்துன்னி வந்ததடி மூலம் சிங்கா
இரவும் பகலு மெழுந்திட மெவ்விடம் சிங்கி — அது
யேகாந்த உன்னல்வந்தேறிய தாமரை சிங்கா
இரவும் பகலும் பிறந்திட மெவ்விடம் சிங்கி — அது
யெழுந்தறு கோணமிடம் வலம் வாசியே சிங்கா
இரவும் பகலும் நின்றுடிய தெவ்விடம் சிங்கி — அது
எழுந்து நின்றுடுஞ் சுழிமுனை மண்டலம் சிங்கா
இரவும் பகலும் மிருப்பிட மெவ்விடம் சிங்கி — அது
ஈராறுமோடிய வோரான நான்கடா சிங்கா
இரவும் பகலுமுதிப்பிட மெவ்விடம் சிங்கி — அது
மேறுமெட்டங்குல மிறுவிழி நடுநிலை சிங்கா
இரவும் பகலென்று யென்னத்தைச் சொல்லலாம் சிங்கி—அது
இரவு பகலிட பின்கலை வாசியே சிங்கா "

இரவு பகலிலா இடத்தை இக்குறவஞ்சி விளக்க இவ்வளவு பாடல்களா என்று கேட்கலாம். இவ்வளவு பாடல்களும் விளக்க வந்த இரவு பகலிலாவிடத்தை இப்போதாவது விளங்கிக் கொண்டோமா? இல்லை. காரணம் அதை அனுபவித்தே உணரவேண்டும்.

சரணத்தில் உள்ள நான்காவது பாடலைப் பற்றிச் சிந்திப்போம்.

" காடுமலை சுற்றிவந்து புகழ்பாடி — தோளில்
காவடி கொண்டாடு மன்பர் கோடானுகோடி
ஆடுகின்ற நீலமயில் தோகைநிழலில் — கூடி
அந்தரரும் வந்து நிற்பார் அருள்தேடி — "

உலகில் கோயில் குளமென்றும் இறைவனைத் தேடித்திரியும் அன்பர்கள் கோடிக்கணக்கில் உண்டு.

" கோடி கோடி கோடி கோடி குவலயத்தோராதியை
நாடி நாடி நாடி நாடி நாளகன்று வீணதாய்
தேடி தேடி தேடி தேடி தேகமும் கசங்கியே
தேடி தேடி தேடி தேடி நிற்பர் கோடி கோடியே "

என்ற சிவவாக்கிய பாடலும் இதை எவ்வளவு தெளிவாக எடுத்துரைக்கின்றது.

ஆண்டவனை நம் தேகமாகிய ஆலயத்தில் கண்டு கொண்டவர் மிகச் சிலரே. அவரே தன்னை உணர்ந்த மகாத்மா வாகும். அவருடைய பெருமையை என்னென்றியம்புவது! அட்டமாசித்தி பெற்ற அவர் அருளைத் தேடி தேவரெல்லாம் வந்து நிற்பர்.

சரணத்தில் உள்ள கடைசிப் பாட்டு இந்த யோகியர் யோகத்தால் அடைகின்ற பக்குவ நிலையையும், ஆற்றல்களையும் எடுத்துரைக்கின்றது.

பார்க்கும் திசைகளில் உன்றன் பால்முகம் கண்டேன் — என்
பயத்தைத் தவிர்த்தருளும் வேல்முகம் கண்டேன்
யார்க்கும் அஞ்சாமல் பொங்கும் சேவலைக்கண்டேன் — என்றன்
இதயத்தில் ஆத்மக்குயில் கூவிடக் கண்டேன்.

இந்தப் பேரானந்தப் பெருநிலைப்பாலைப் பருகி நின்ற யோகிக்குப் பார்க்குமிட மெல்லாம் நீக்கமற நிறைகின்ற பொருளாகப் பேரானந்தப் பெருநிலைப்பால் காட்சியளிக்கின்றது. யோகி உலகிலுள்ள ஒவ்வொரு முகத்திலும் பரம்பொருளைக் காண்கின்றார். பயத்தைப் போக்குவிக்கத் துள்ளி வருகின்றது ஞானவேல். 'யாம் யார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்' என்ற மனஉறுதி ஏற்படுகின்றது. ஆத்மக்குயில் ஆனந்த வானில் சிறகடித்துப் பறக்க ஆரம்பிக்கின்றது. வளர்கின்ற உற்சாகம், பேராற்றல்களையும் உருவாக்குகின்றது. யோகிக்குப் பல சித்திகளும் கை கூடுகின்றன. ஆத்மீகத் துறையில் தெய்வீகப் பாடல்களும், அருள் மொழிகளும், கருத்தைக் கருத்தாடலும் பொங்கி வழிய ஆரம்பிக்கின்றது."

இப்படி யோகத்தைப் பற்றி அரிய சொற்பொழிவாற்றிய சாமிகள் சில நிமிடங்கள் கண்ணை மூடிக்கொண்டு மோன நிலையில் அமர்ந்திருந்தனர். திடீரென்று சாமிகள் கண்கள் மலர்ந்தன. முகமும் அருள் ஒளியால் பளிச்சென்று மலர்ந்தது. சாமிகள் மறுபடியும் திருவாய் மலர்ந்தருள ஆரம்பித்தார்.

சாமிகள்: நான் பாடுபட்டு கண்ட உண்மை, நான் அனுபவிப்பது இந்த 'சக்திவேலா' பாட்டுக்குள் அடங்கி விட்டது. சக்திவேலுக்குள் முக்திவேல் அடங்கி விட்டது, மனுசனுக்குள் ஆருதாரத்திற்குள் எல்லாம் அடங்கி விட்டது. சக்திவேலைத் தட்டிவிட்டால் எல்லாம் நம்முள் இருக்கின்றது. எளிதாகப் புரியும். அண்டபுவனங்களெல்லாம் நம்முள்ளே ஆடுவதைப் பார்க்கலாம். சக்திவேலனிடத்தில் தான் எல்லாம் இருக்கின்றது! இந்தப் பாட்டிலேதான் நாம் அறியவேண்டிய அத்தனையும் இருக்கின்றது."

இவை யாவும் உண்மையல்லவா? யோகத்தைப் பற்றியும் யோகத்தால் எவை அடையுலாம் என்பதைப் பற்றியும் ஓரளவு தெரிந்துகொண்ட நமக்கு யோகத்தின் பெருமையை ஒரு யோகியின் பாட்டாலேயே உருவாக்கிக் காண்பிக்கும் சிவராஜ யோகி சாமிகளின் அற்புத ஆற்றல்தான் என்னே!

யோகத்தைப் பற்றி சாமிகள் அடிக்கடி பேசும்போதெல்லாம் இதற்கு ஆதாரமாகவுள்ள சரீரத்தைப்பற்றியும் அதை நல்லமுறையில் பாதுகாத்துக் கொள்ளவேண்டியதையும் வற்புறுத்துவர். ஒருநாள் இருபொருள் தொனிக்கும் விடுகதைக் கவியை அளித்தார். பதிலை அன்பர்கள் உரைக்கும்படி கூறிவிட்டார். அந்தக் கவி இது தான்: வாசகர்களும் இதைப்பற்றிக் கொஞ்சநேரம் சிந்தனை செய்யலாமே!

"நெட்டுடலாய் நீண்டிருக்கும் அரவுமல்ல
நெருப்பினின்று விளையாடும் சிவனுமல்ல
மட்டுமிஞ்சி தொனிகேட்கும் மேகமுமல்ல
பட்டணத்தைச் சுட்டழிக்கும் அனுமானல்ல
வாயாலே தின்றுகக்கும் வெளவாலுமல்ல
பாருலகில் இக்கதைக்குப் பயன்சொல்வீரே!"

இதைத் தொடர்ந்து இன்னும் இரண்டு புதிர்களையும் அளித்தார். அதில் ஒன்று, உரைநடை ஏந்தும் கவிதை வடிவில் அமைந்துள்ளது.

" தாது மாதுளை தூது கனிவளம்
தண்ணீரில்லாத தாமரைப் பொய்கையில்
காலில்லாத ரெண்டன்னங்கள் மேயுதே — அதை
காலில்லாதவன் ஓடிப் பிடிப்பதும்
கண்ணில்லாதவன் கண்டு மகிழ்ந்தனனே " அது என்ன?

மற்ரென்று நூதனக் கவிதை தொனிக்கும் உரை நடை உருவில் உள்ளது.

" ஒருவேடன் உலக்கையை வில்லாக வளைத்து
உரலை குண்டுசெய்து போட்டான் — அது
தாய் மானுக்குப்படாமல் தாய்க்குட்டிக்குப் பட்டது
அதைக் கொண்டுவந்து காலில்லா பந்தலில் காய
வைத்தான், தலையில்லாத நாய்வந்து தூக்கிக்
கொண்டு போனது — அது என்ன ?

இவ்விரண்டு புதிர்களுக்கும் சரியான விடையளிக்க சீடர்கள் அரும்பாடுபட்டுக் கொண்டிருக்கும் போது 'நெட்டுடலாய் நீண்டிருக்கும் அரவுமல்ல' என்ற விடுகதைக்கு உரிய பொருள் துப்பாக்கி ஒன்று தான் என்று ஒரு பக்தர் அழுத்தந்திருத்தமாகக் கூற முன் வந்தார். சாமிகள் புன்னகை பூத்து, "அது சாதாரண அர்த்தம். அந்தக் கவியில் மற்ருெரு பொருளும் உண்டு. அது புரிகின்றதா' என்ருர். எவ்வளவோ முயற்சி செய்தும் சரியான மற்ருெரு பொருள் யாராலும் விளங்கவைக்க முடியவில்லை. சாமிகள் உடனே மூன்று கேள்விப் புதிர்களுக்கும் விடையருள மனங் கொண்டனர்.

"நெட்டுடலாய் நீண்டிருக்கும் அரவு மெய்யை உணர்த்தும்: நெருப்பினின்றும் விளையாடும் சிவன் கண்களை உணர்த்தும்: மட்டுமிஞ்சி தொனி கேட்டும் மேகம் செவிகளை உணர்த்தும்: பட்டணத்தைச் சுட்டழிக்கும் அனுமான் வாயை உணர்த்தும்: வாயாலே தின்று கக்கும் வௌவால் மூக்கை உணர்த்தும். ஆக இது இந்த பஞ்சேந்திரியங்களையே குறிக்கும் விடுகதை."

" தாது மாதுளை " கவிதை சிந்தித்துப் பார்ப்போருக்கு சொக்கட்டான் காய் ஆடும் ஆட்டத்தைக் குறிப்பது போல் தான் இருக்கும். ஆனல் இன்னும் சற்று ஆராய்ந்து பார்த்தால் அதில் சில யோக உண்மைகள் பொதிந்துள்ளதை அறியலாம். சாதாரணமாக வயதானவர்களால் தான் யோகம் செய்ய முடியும். அதனல் சிறுவயதில் யோகம் செய்ய முடியாதென்பதில்லை. யோகத்தை ஆண்களும், பெண்களும் செய்யலாம். யோகத்திற்கும் ஒன்று வேண்டும். அது தான் யோகம். யோகமிருந்தால் தான் யோகம் செய்ய முடியும். தாது மாதுளை தூது கனிவளம்

என்ற சொற்றொடர் யோகம் செய்பவர் வயதான நிலையை உணர்த்தும். தாமரைப் பொய்கை உடலையும், காலில்லாத இரண்டன்னங்கள் சூரிய கலையையும் சந்திரகலையையும், காலில்லாதவன் மனத்தையும், கண்ணில்லாதவன் என்பது யோக நிலையில் கண்மூடி மௌனியாகும் யோகியரையும் குறிக்கும். 'ஒரு வேடன் உலக்கையை வில்லாக வளைத்து' வருகின்ற சொற்றொடர்களும் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கும் போது யோகநிலையையே உணர்த்துவதை அறியலாம்."

## 'வேகாத்தலை' — 'சாகாக்கலை'

டாக்டர் V. அரங்கநாதன் சாமிகளிடம் தெய்வீக விஷயங்களில் அடிக்கடி விளக்கங்கள் கேட்பதுண்டு. அவர் சாமிகளிடம் தொடர்பு கொண்டதிலிருந்து ஆத்மீகப் பொருள் விளக்கும் பல நூல்களிடமும் தொடர்பு கொண்டுள்ளார். யோகத்தைப் பற்றிப் படித்து வரும் போது இரண்டு சொற்றொடர்கள் அவர் கவனத்தை இழுத்தன. அவை யோகியருடைய பரிபாஷை என்று தான் அவர் விளக்கம் கேட்ட பண்டிதர்கள் உரைத்தனரே தவிர அவைகளை விளக்க முன்வரவில்லை. காரணம் அச்சொற்றொடர்களுக்கு அவர்களே விளக்கம் காணாததே. சாமிகளிடம் எப்படியேனும் இவைகளுக்கு விளக்கம் காணவேண்டுமென்றிருந்த அன்பர் சாமிகளிடமே ஒரு நாள் இதைப் பற்றி விளக்கம் வேண்டினார். சாமிகள் சிறிது நேரம் கண்மூடி மௌனியானார். அவர்கள் தெள்ளத் தெளிந்த முறையில் விளக்கம் கொடுத்தது டாக்டர் மனதில் வேரூன்றி விட்டது. சாமிகள் பேசுவதையே கேட்போம். "சாமி: நீங்கள் கூறிய இரண்டு சொற்றொடர்களும் 'வேகாத்தலை' 'சாகாக்கலை' என்பன. உண்மையிலேயே இவற்றிற்கு நீங்கள் கேட்டவுடனே விளக்கம் கொடுக்க நான் தயாராக இல்லை, யோகானுபவம் கொண்டே இதன் உட்பொருள் உணர வேண்டியவனானேன். அதனால் தான் நான் சில நிமிடங்கள் இப்புற உலகையே விட்டு இருக்க நேர்ந்தது, அதன் பயன் நான் இப்போது இச் சொற்றொடர்களுக்கு விளக்கம் கொடுக்கும் நிலையில் இருக்கின்றேன். இப்பொழுது 'வேகாத்தலை' என்பதை எடுத்துக் கொள்வோம். "யோகநிலை ஞானிக்கு மூக்கு நுனிமேல் ஞானம்" "வாசிநிலை ஞானிக்கு நாசி நுனிமேல் நினைவு" என்று நான் அடிக்கடிச் சொல்வது உங்களுக்கு ஞாபகம் இருக்கலாம். மூக்கு நுனி ஞானம் என்பது யோக சித்தியில் ஒரு முக்கியமானக் கட்டம். இதைப்பற்றி ஞானக்கும்மியில் ஒரு பாட்டைப் பாருங்கள்.

"பார்க்குஞ் சுழிமுனை காணாரே அது
மூக்கு நுனி யென்றறியாரே
மார்க்க மறிந்து பெரியோரைக் கண்டு
வாழ்த்திக் கும்மியடியுங்கடி"

மூக்குநுனி மார்க்கம் அறிந்த பெரியோரைப் போற்றும் இக் கும்மியில் அம்மார்க்கம் என்ன என்பது தெளிவாக வெட்ட வெளிச்சமாக உணர்த்தப்படவில்லை. யோகி ஒரு பொருளைக் கண்ணுங் கருத்துமாகச் சிந்தனை செய்து கும்பகம் செய்யும் காலத்தில் அதிலேயே தன் நாட்டம் முழுமையும் கூட்டுவித்து இரண்டு புருவ மத்தியில் ஞானக்கண் கொண்டு இருக்கும் நிலையில் எல்லாச் சக்திகளும் புருவ மத்திக்குப் பாய்ந்து வருகின்றன. அப்போது அங்கு எழுகின்ற உஷ்ணம் தாங்க முடியாதது. அதை அதிக உஷ்ண நிலைகளை அறிவிக்கும் (தர்மாமீட்டர்) உஷ்ண மானிகளால்கூட தெரிந்து கொள்ளமுடியாது. அவைகளின் அளவையும் மிஞ்சுகின்ற உஷ்ணம், தகாதகா வென்று எதையும் எரிக்க வல்ல உஷ்ணம் அங்கு ஏற்பட்டு விடுகின்றது. ஆயிரம் ஆயிரம் சூரிய வெப்பங்களெல்லாம் சேர்ந்து 'ஓரிடத்தில் குறுகி அமைந்தால் எப்படி இருக்குமோ, அப்படி இருக்கும் அந்த இடம். அப்படி ஒரு அனுபவம் யோகியின் சிரசின் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஏற்பட்டாலும் அதனால் அந்த யோகியின் தலை வெந்து போவதில்லை. இதைத் தான் 'வேகாத்தலை' என்று வருணித்தனர்.

இப்பொழுது 'சாகாக்கலை' என்பதை எடுத்துக் கொள்வோம். கலை என்பது காற்றைக் குறிக்கும், நமது சுவாசத்தைக் குறிக்கும். இதைத் தன் இஷ்டத்திற்கு ஆட்டிவைத்துக் காட்டுகின்ற பெரியோரே யோகி யெனப்படுவர். இதைப்பற்றிக் கூறும் சிவவாக்கியர் பாடல் ஒன்றைக் கேளுங்கள்.

"நஞ்சிலே யிருந்திருந்து நெருக்கியோடும் வாயுவை
அன்பினுலிருந்து நீரருகிருத்த வல்லீரேல்
அன்பர் கோயில் காணலாம் மகன்றுமெண் டிசைக்குளே
தும்மியோடி யோடியோ சொல்லடா சுவாமியே"

வாயுவை ரேசகம் பூரகம் முறையாகச் செய்யவல்ல யோகி அதை கும்பகம் செய்ய ஆரம்பித்தால் மூச்சு உடம்பு உள்ளுக்கும் செல்லாது, உடம்புக்கு வெளியிலும் வராது. மூச்சு உள்ளேயே ஸ்தம்பித்து நின்றுவிடும். இந்த நிலையில் எவ்வளவோ நேரம் மூச்சு விடாமலே இருப்பர் யோகியர். மூச்சு போக வர இருக்குமளவுதானே உடலில் உயிருண்டு. இதுதானே நாம் சாதாரணமாகப் பார்ப்பது. ஆனால் இந்த யோகத்தில் மூச்சைக் கட்டியிருப்பதால் மூச்சு வெளியிலும் வரவில்லை, உள்ளுக்கும் செல்லவில்லை. அதனால் உயிருக்கு ஆபத்தும் ஒன்றுமில்லை, அதோடு மட்டுமல்ல உயிரை நெடுநாள் காப்பாற்றிக் கொள்ளவும் இந்த யோகம் உதவுகின்றது. மூச்சைக் கட்டியிருக்கும் யோக நிலையில் மூச்சு வெளிவராமலும் உள் செல்லமாலும் இருப்பதால் உடலுக்கு ஆபத்து ஒன்றுமில்லை. இந்த நிலையை உணர்த்தவே மூச்சை

"சாகாக்கலை" என்ற சொற்களும் விளக்க உதவுகின்றன. இதைத் தான் "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்றும் சித்தர்கள் அறிவுறுத்தவர்.

## யோகத்தின் பயன்

தாண்டிக்குடி கும்பாபிஷேகத்தை நடத்தி வைக்க அருள் கூர்ந்த சாமிகளோடு அன்பர் குழாம் ஒன்றும் கூட இருந்தது. யோகத்தைப் பற்றியே சாமிகளிடம் தாண்டிக்குடியில் தங்கி யிருந்த சமயம் பேசிக்கொண்டிருந்தோம். யோகத்தினுல் அடை கின்ற சித்திகளைப்பற்றி 4—7—68 அதிகாலையில் சாமிகளோடு உரை யாடிக் கொண்டிருந்தோம். நாங்கள் மொழி அளவில் காட்ட முயற்சி செய்துகொண்டிருப்பதை செயலிலேயே நிரூபிக்கச்சாமிகள் திருவுளம் கொண்டனர். அந்தச் சமயத்தில் இராசிபுரம் திரு. சித்தப்பச் செட்டியாரிடமிருந்து சாமிகளுக்கு ஒரு கடிதம் வந்ததைக் கும்பா பிஷேகக் குழுத் தலைவர் திரு. சோமசுந்தரம் பிள்ளை சாமிகளிடம் சமர்ப்பித்தார். கடிதத்தில் சாமிகளுடைய பெருங் கருணையைப் போற்றியிருந்ததோடு சீடருக்குச் சாமிகளுடைய பஞ்சாட்சரமும் அனுப்பிவைக்குமாறு வேண்டுதலையும் இருந்தது. கடிதத்தோடு கூட விபூதிப் பிரசாதம் அனுப்பிவைக்க திரு. சித்தப்பச் செட்டியார் விலாசத்தோடு தபால் பில்லைகள் ஒட்டிய கவரும் ஒன்று இருந்தது. திரு. சித்தப்பச் செட்டியாருடைய கிடைத்தற்கரிய பேறு என்று தான் சொல்லவேண்டும். சாமிகள் தன் சீடருக்கு உடனே அந்த நிமிடத் திலேயே அருள்பாலிக்க திருவுளம் கொண்டனர். அந்த நேரத்தில் சாமிகள் தங்கியிருந்த அறையில் உடனடியாக பதில் எழுதுவதற்குக் காகிதமோ, பேனுவோ, பஞ்சாட்சரம் அனுப்புவதற்கு விபூதிப் பிர சாதமோ, இவைகளையெல்லாம் உள்ளே வைத்து கவரை ஒட்டுவ தற்குக் கோந்தோ பிசினே ஒன்றும் இல்லை. இருந்தாலும் அக்கணமே பதிலை எழுதி 'விபூதிப் பிரசாதம் வைத்து கவரை ஒட்டித் தபாலுக் கனுப்பத் திருச்சித்தம் கொண்ட சாமிகள், திரு. சித்தப்பச்செட்டியார் பதில் எதிர்பார்த்து தன் விலாசம் எழுதிய கவரை அறையுள் இருந்த மேஜை மீது வைத்துவிட்டு வெளியே வந்தார். நாங்களும் சாமிகள் திருவுளப்படி வெளியே வந்து விட்டோம். சாமிகள் அறையின் கதவுகளை மூடினுர். அடுத்தாற் போல் ஒரு கதவைச் சற்று திறக்க மேஜைமீதிருந்த கவர் சாமிகள் திருக்கரங்களுக்கு பறந்து வந்து சேர்ந்தது. அந்தக் கவரை எங்களிடம் சாமிகள் கொடுத்தார். கவர் ஒட்டி இருந்தது. அப்போது தான் ஒட்டியிருந்ததால் அதற்கு பயன்பட்ட பிசின் பசையும் எங்கள் கைகளில் ஒட்டியது. கவருக்குள் பதில் கொண்ட காகிதமும் பஞ்சாட்சரம் உள்ள ஒரு காகிதப் பொட டணமும் இருந்தது எங்களுக்கு நன்ருகத் தெரிந்தது. என்ன ஆச்சரியம்! எல்லாம் ஒரு சில விநாடிகளில்! அந்தக் கவரைத் திரும்ப

வும் வாங்கிக்கொண்ட சாமிகள் 'இந்த அருள் கடிதத்திற்கு தெய்வீக மணம் வேண்டாமா,' என்று கூறி மறுபடியும் எங்களிடம் கொடுத் தார்கள். அருள் மணக்கும் விபூதி வாசனை கமகம வென்று கவரி லிருந்தும் பெருகி அறை பூராவும் தெய்வீக பரிமளமாக்கிவிட்டது.

இந்தப் புது அனுபவத்தில் மயங்கி இருந்த எங்களுக்கு மற்று மொரு புதுமை காத்துக் கொண்டிருந்தது. சாமிகள் அறையி லிருந்து கவரை வாங்கிக்கொடுத்தத் தன் வலது கையை எங்க ளிடம் காண்பித்தார். அதைத் தொட்டுப் பார்க்கும்படியும் செய் தார். என்ன ஆச்சரியம்! வலது கை உஷ்ணமயமாக மாறிவிட்டது. அத்திருக்கரத்தில் படபடப்பும் இரத்தப் பாய்ச்சலும் அதிகமாகவே இருக்கக் கண்டோம். இதற்கு விளக்கம் அறியாத எங்களுக்கு சாமிகள் இதன் உண்மையை எடுத்துரைத்தார். "நாம் யோகத் தைப்பற்றியே பேசிக் கொண்டிருந்தோம். யோகத்தால் யோகிகள் சித்தி அடைவதையும் பற்றிபேசினேம். அதன் நற்பயனைப்பற்றிப் பேசிக்கொண்டே போனல் என்ன பயன்? யோகத்தால் அடையும் பயனை தத்ரூபமாக நேருக்கு நேராகப் பார்க்கவேண்டாமா? அதற்குதான் இந்த நல்ல காரியம் செய்தேன், அதற்கு யோகத்தைப் பயன்படுத்தினேன். என்கையில் ஏறிய அதிக சூடும் பரபரப்பும் எல்லாம் இந்த யோக சாதனையால்தான். விஷயம் புரிந்து விட்டதா" — இப்படி உரைத்த சாமிகள் அருள் புன்னகை மலர்ந்த முகத்துடன் சற்றுநேரம் மௌனமாக அமர்ந்துவிட்டார்.

இந்த நிகழ்ச்சி ஒன்று போதாதா சாமிகளின் யோகசித்தியை நமக்கு உணர்த்த. இந்த யோக சித்தியால்தான் சாமிகளும் ஔவைப் பிராட்டியைப் போன்று நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்திற்குச் செல்லும் வல்லபம் பெற்றிருக்கின்றார். கற்பனைக்கும் எட்டாத சித்துக்களையும் ஆடிக்காட்டுகின்றார். தாண்டிக்குடியில் 5—7—68இல் கும்பாபிஷேகம் முடிந்தது. கோவிலில் கும்பாபி ஷேகத்தில் முக்கிய பங்கு கொண்டவர்களுக்கும் பிரமுகர்களுக்கும் கலைஞர்களுக்கும் கோவில் மரியாதை செய்து பரிவட்டம் கட்டிக் கௌரவித்தனர். இதற்காகக் கோவிலில் இருபத்துநான்கு சரிகை வேய்ந்த பட்டுப் பரிவட்டங்கள் தயாராக வைத்துக் கொண்டிருந் தனர். இருபத்து நான்கு பரிவட்டங்களும் கோவில் மரியாதைக் காகக் கூடிஇருந்த பக்தர்கள் எண்ணிக்கைக்குக் குறைவாகவே இருந்தது. ஒருவருக்குப்பின் ஒருவராக பரிவட்டம் கட்டிக்கொள்ள வரும் பெரியவர்களில் ஒரு சிலருக்குமட்டும்தான் கோயில் மரி யாதை செய்வது உசிதமாக இல்லை. கோயில் மரியாதை நடக்க நடக்க இருபத்து நான்கு பரிவட்டங்களும் ஒன்றன்பின் ஒன்ருகப் பக்தர்களோடு பக்தர் முடிகளை அலங்கரித்துச் சென்றுவிட்டன. இன்னும் எவ்வளவோ முக்கியஸ்தர்கள் இருக்கின்றனர்.

கோவில் கும்பாபிஷேகக் குழுத்தலைவர் திரு. சோமசுந்தரம் பிள்ளை இருக்கும் நிலையைக்கண்டு மனம் களித்தார். சாமிகள் நிலைமையைத் தம் அருட்சக்தி கொண்டு சமாளிக்கத் திருவுளம் கொண்டனர். பக்கத்தில் நின்று கொண்டிருந்த பக்தர் ஒருவர் பையினின்றும் சாமிகள் தம் திருக்கரம்கொண்டு எடுக்க எடுக்க அதேமாதிரியான பரிவட்டங்கள் ஒன்றன்பின் ஒன்ருக வர ஆரம்பித்தன. இப்படி மொத்தத்தில் நாற்பத்துஐந்து பேருக்கு பரிவட்டங்கள் வழங்கப்பட்டன. இருபத்து நான்கு பரிவட்டங்களை நாற்பத்து ஐந்தாகப் பெருக்கிய சிவராஜ யோகி திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளின் யோக சித்தியை என்னென்றியம்புவது! சாமிகளால் வரவழைக்கப்பட்ட பரிவட்டங்கள், முதலில் வழங்கப்பட்டவைகளைவிட உயர்வானதாக இருந்தன, நெசவிலும், பளபளப்பிலும், ஜரிகை அளவிலும்.

சாமிகள் தன்னை அறிந்த யோகி என்பதை வெளியே காட்டிக் கொள்வதே இல்லை. தாண்டிக்குடியில் சாமிகளது யோக பலனைக் குறிப்பிட்ட சில பக்தர்களுக்குக் காண்பித்ததற்குக் காரணம் அந்த நாட்களில் யோகத்தைப் பற்றியே சாமிகளது பக்தர்கள் விளக்கம் கேட்டுக்கொண்டிருந்தனர். உண்மையைக் கண்டவர் அதைப் பெரிதாக விரித்துக் கூறுவதில்லை. அரைகுறையாக அறிந்து கொண்டவர்தான் அபரிமிதமாகப் பேசுகின்றதை உலகம் அறியும். படித்து கேட்டுப் பேசுவது எளிது; உணர்ந்து அறிவது அரிது. சாமிகள் திருமொழிகள் அனுபவ முதிர்ச்சியால் விளைந்து வருபவை. அதனுலல்லவா 'கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்' என்று பெரியோர்கள் உண்மையைப் பழமொழியாகவே பகர்ந்துள்ளனர். "யோகத்தின் பலனை நல்ல காரியத்திற்காகப் பயன்படுத்த வேண்டும். சுயநலத்திற்காக உபயோகப்படுத்தக்கூடாது. அதிலேயே மயங்கி அதுதான் சுவர்க்கம் என்று அதிலேயே மனத்தைப் பறிகொடுக்கக்கூடாது. யோகமே இறைவனுடன் ஒன்றி இருப்பதற்குத் தகுந்த சாதனம்" என்று திருவாய் மலர்ந்தருளிய சாமிகளை ஒரு பக்தர், "யோகத்தின் பயன் இதுவானுல், பின் மந்திரங்கள் ஜெபிப்பது, பூஜை பண்ணுவது, கோவிலுக்குப் போவது இவையெல்லாம் அவசியம்தானு" என்று கேட்டார். சாமிகள் முறுவல்பூத்த அருள் ஒளி முகத்துடன் அளித்த பதில் யாவரும் கேட்டு மகிழவேண்டிய நிறைமொழி.

சாமிகள் : நாம் இக்கரையில் இருக்கின்ருேம். அக்கரைச்சேர விரும்புகின்ருேம். நாம் அரிதாகிய மானிடப் பிறவி எடுத்துள்ளோம். அதை வீணுக்கக் கூடாது. நாம் மனிதப் பிறவியின் பயனை அடையப் பாடுபட வேண்டும். அறிவையும் அன்பையும் கருணையையும் வாழ்க்கையில் தொண்டியற்றிப் பயன்படுத்த வேண்டும். இறைவனுடன்

இரண்டறக்கலத்தலையே வாழ்வின் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும். இதுதான் நாம் செல்ல விரும்பும் அக்கரை. அக்கரை சேர்வதற்கும் அக்கறை வேண்டும். அக்கறை இருந்தால்தான் அதாவது ஒரு பேரார்வம் ஆத்மீக உற்சாகம் இருந்தால்தான் நாம் இறைவனை இந்தப் பிறவியிலேயே கண்டு ஒன்றி அனுபவிக்கமுடியும். யோகம் பரப்பிரம்ம ஐக்கியத்திற்கு இன்றியமையாதது என்பது உண்மை தான். அதனுல் பூஜையும் மந்திர ஜெபமும் கோவிலுக்குச் சென்று இறைவனை வழிபடுவதும் ஈஸ்வரநாம சங்கீர்த்தனம் செய்வதும் வேண்டாம் என்று நினைக்கக்கூடாது. அக்கரை அடைவதற்கு இவை சாதனங்கள். அக்கரை செல்வதற்கு எவ்வளவோ வழிகள் உண்டு. நடுவில் இருக்கும் பெருநதியைக் கடக்க நடைபாதைக் கொண்ட பாலம் உண்டு, ரயில் பாலம் உண்டு, தண்ணீர்மேல் செல்லும் ஓடமும் உண்டு, மோட்டார்ப் படகும் உண்டு. ஆகாயத்தில் நினைத்த மாத்திரத்தில் எழுந்து ஒரே தாண்டாகத் தாண்டிச் செல்லும் ஹெலிகாப்டர் போன்ற விமான சாதனமும் உண்டு. இதில் எதிலாவது ஒன்றில் ஏறிக் கொண்டு சென்றுதான் அக்கரையை அடையவேண்டும். இவைகளில்லாமலும் அக்கரையை அடைய யோக சாதனமும் உண்டு. அந்த யோக பக்குவமுள்ளவர்களால் நீரின்மேல் நடக்க முடியும், நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்திற்கும் செல்லமுடியும். யோகிகளுடைய அனுபவத்திலேயே அந்தந்த ஆதாரத்திற்குரிய மூர்த்திகளை நினைத்து குருவின் உதவிகொண்டு சொல்ல வேண்டிய மந்திரங்களைச் சொல்லி கலையைக் கட்டுப் படுத்திப் பயன் படுத்திக் கொள்வதல்லவா முடிவில் (முடியில்) இறைவனுடன் இரண்டறக் கலத்தலில் அமைந்துவிடுகின்றது. யோகத்திலும் ஆரம்பத்தில் மூர்த்திக்கும் மந்திரத்திற்கும் பிராணுயாமத்திற்கும் சம்பந்தம் இருப்பதை நாம் மறந்து விடக்கூடாது. குருவிற்குத் தெரியும் சீடர்களுடைய பரிபக்குவ நிலை. அவரவர்களுடைய நிலைக்குத் தகுத்தாற்போல் குரு மார்க்கங்களைச் சீடர்களுக்குக் காட்டி அக்கரை செல்ல உதவுகின்ருர்.

சிவராஜயோகி ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் ஜீவாமுதமாகப் பொழிகின்ற திருமொழிகளுக்கும் குறைவில்லை: கருணுமுதமாக ஆடிக்காட்டுகின்ற அருள் சித்துக்களுக்கும் குறைவில்லை. தன்னை உணர்வது யோகத்தின் உச்சி நிலை: சித்தாடுவது தன்னை உணரும் உச்சிக்குப் போவதற்கு முன் அமைந்துள்ள அடுத்த நிலை. இந்த அடுத்த நிலையைக் கூட எட்டிப் பார்க்காதவர்கள் தான் பக்கம் பக்கமாக எழுதித் தள்ளுவர், மணிக்கணக்கில் பேசிக் கொண்டிருப்பர் யோகத்தைப் பற்றியும் சித்துக்களைப் பற்றியும். பதஞ்சலி யோக சூத்திரத்தில் யோகத்தைப் பற்றிக்கூறி உள்ள விஷயங்களை விவரித்து எடுத்துச் சொல்லும்போதும் பதஞ்சலி

சித்துக்களைப் பேசி இருப்பதையே குறிப்பாக விவரித்துச் சித்துக்களை இகழ்ந்து யோகத்தைப் புகழ்ந்து உரையாடுவர். சித்துக்கும் யோகம் வேண்டும், சித்துக்கள் அடைந்தவர்களே யோகிகள் என்பதைத் தான் இவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை. உலகக் கண்ணீரை ஓரளவு துடைப்பதற்கும் அருள்சித்து பயன்படுவதையும் அவர்கள் உணரவில்லை.

இவர்களைப் பற்றி நினைக்கும் போது தாயுமானவர் பாட்டு ஒன்று நினைவுக்கு வருகின்றது தன்னைப் பற்றிப் பாடியதாக அமைந்த அந்தப் பாட்டு இவர்களைப் போன்றவர்களைப் பற்றிப் பாடியதே என்பதில் ஐயமும் உண்டோ?

"கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றும் அறிவு இல்லாத என் கர்மத்தை என் சொல்வேன்,
மதியை என் சொல்லுவேன்
கைவல்ய ஞானநீதி நல்லோர் உரைக்கிலோ கர்மம் முக்கியம் என்று
காட்டுவேன், கர்மம் ஒருவன் நாட்டினுலோ பழைய ஞானம் முக்கியம் என்று
நவிலுவேன், வடமொழியிலே வல்லவன் ஒருத்தன் வரவும் திராவிடத்திலே
வந்ததா விவகரிப்பேன் வல்லதமிழ் அறிஞர்வரின் அங்ஙனே வடமொழியில்
வசனங்கள் சிறிது புகல்வேன் வெல்லாமல் எவரையும் மருட்டி விட வகைவந்த
வித்தை என் முக்தி தருமோ வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற
வித்தகர் சித்தர் கணமே."

இங்கு மெய்கண்டார் கூறி உள்ளதும் குறிப்பது பொருத்தமாக இருக்கும். "தம்மை அறிந்தவர்களே ஈசனை அறிந்தவர்கள். அவர்கள் நம் தலைவர்களை இகழ்ந்து பேசுவதில்லை. தம்மை அறி யாதவர்கள் ஒன்றும் அறியாதவர்கள். அவர்கள் வீண் சச்சரவு செய்யும் வார்த்தைகளை நாம் செவிமடுக்க வேண்டாம்," என்பதே மெய் கண்டார் திருமொழிகள்.

"தம்மை உணர்ந்து தமை உடையதன் உணர்வார்
எம்மை உடைமை எமை இகழார்—தம்மை
உணரார் உணரார், உடங்கு இயைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்."

இந்த இடத்தில் சாமிகள் அருள் கூர்ந்து எடுத்தியம்பும் ஒரு சித்தர் பாடலை ஊன்றி கவனிப்பது அவசியம்.

"உந்தியெனும் நிலையெங்கே? அறுகோணம் எங்கே?
ஓங்கார நிலையெங்கே? உற்ற இடமும் எங்கே?
மந்திரமும் சாஸ்திரமும் பிறந்தது எங்கே?
மறைநாலு விரித்த அயன்தானும் எங்கே?
முந்திவரும் கணபதியும் பிறந்தது எங்கே?
முக்கோண முனையெங்கே? அடிதான் எங்கே?
இந்தவகை பொருள் அறிந்துகொள்வார் தம்மை
இறைவன் என்றே கருதி இயம்பலாமே!"

இந்த சித்தர் பாடலில் உள்ள கேள்விகளுக்குப் பதில் அளிக்க வல்லவர் சிவராஜயோகி திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளே ஆவார், சித்தர் பாடல் கூறுவது போன்று அவரே நமது இறைவன் என்று போற்றி பணிந்திடுவோம்.

ஸ்ரீ பன்றிமலை யோகநாதனின் பேரற்புதச் செயல்களையும் பெருங்கருணையையும் தெய்வீகத்தையும் சிவராஜயோக நிலையையும் நாம் இப்பொழுது "இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம் எம்மீசா, பன்றிமலை யோகநாதா" என்று போற்றிப் பாடி மகிழ்ந்திடுவோம்.

போற்றிப்பத்து

1. சங்குண்டு சக்கரமும் வேலுமுண்டு
சண்முகனின் வெற்றிக் கொடி சேவலுண்டு
சங்கரனும் சங்கரியும் சேர்ந்த சக்தி
சிவனருளாம் அறுகோண ரேகை உண்டு
திங்களென கருணைபொழி முகத்தில் இன்ப
தெய்வஒளி தண்ணருளே முழுதும் உண்டு
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோகநாதா!

2. ஐந்தாகி உள்ளமதில் காதல் ஏற்றாய்
ஐங்கரனின் தம்பியினை மனதில் ஏற்றாய்
ஐந்தோட அதற்குப்பின் அருளை ஏற்றாய்
அருள்ஞானி ஐந்தெழுத்தை நாவில் ஏற்றாய்
ஐம்புலன்கள் அடக்கிவந்த அருளாளர்கள்
ஐம்பூதம் ஆட்டவல்ல சக்தி ஏற்றாய்
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோகநாதா!

3. சிந்தைக்குள் ஊறிநின்ற தெய்வத் தேனை
சிலநாளில் பெருகவைத்துப் பெருமை கண்டாய்
பந்தத்துள் பிணைத்து வைக்கும் மணமும் கொண்டு
பந்தமிலா வாழ்வாக்கி வளமும் கண்டாய்
கந்தனையும் வள்ளியும் போல் கோலாகலமும்
கற்போடு இணைந்த வாழ்வில் கைலைகண்டாய்
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோகநாதா !

4. இங்கே உம் அற்புதங்கள் பலவும் கண்டோம்
இனிமை மிகு கற்கண்டு சொரியக் கண்டோம்
எங்கும் உம் திருக்கரமும் பாதம் சேர்ந்தால்
எழில் இன்பம் தழைப்பதனை நேரில் கண்டோம்
தங்கம் தேன் அளிக்க வல்ல ஆற்றல் கண்டோம்
தாயாகிக் கருணைப்பால் ஊட்டக் கண்டோம்
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோக நாதா !

5. விண்ணாகி மண்ணாகி பூதமாகி
ஊனாகி உயிராகி உண்மையாகிக்
கண்ணாகி நின்றதொரு பரம் பொருளின்
கருத்தினையே கருத்தாட்டும் கண்ணின் மணியே
பொன்னாகிப் பொன்னதனைப் பூண்டவள் போல்
பல கலையாய் கலையணியும் இனிய மார்பா
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோக நாதா !

6. தென்பாண்டி நாடதனில் பிறப்பும் பெற்று
தேனமுதப் பழநியிலே வளர்ப்பும் பெற்று
தென் பழநி தெய்வமதின் அருளும் பெற்றுத்
தேனினிக்கத் தித்திக்கும் வாக்கும் பெற்று
தண்டாயுதன் குமரன் பக்தி பெற்று
திரிகால ஞானியுமாய்ச் சித்தி பெற்றாய்
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோக நாதா !

7. பிஞ்சாகிக் காயாகிக் கனியுமாகிப்
பாருலகில் பயனளிக்கும் வாழை போல

நெஞ்சாரச் சொல்லளிக்கும் கலையின் செல்வர்
நல்லுரைகள் கதை ஞானம் கொழிக்கும் வேந்தே
எங்கெங்கும் வாழையடி வாழையாக
வளம் ஓங்கும் சொற்றிறனைக் கண்டு கொண்டோம்
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோக நாதா !

8. பங்கில்லை என்போர்க்குப் பங்களிப்பாய்
பாரினிலே கன்னியர்க்கு மணமளிப்பாய்
அங்கில்லை இங்கில்லை என்று சொல்வோர்
அவனன்றி அணுவசையா தென்று சொல்வர்
தங்களது மகிமையினைத் தொகுப்ப தென்றால்
தடைபட்ட உயிர் மீட்டு உடலைக் காப்பாய்
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோக நாதா !

9. நெஞ்சு கெட்ட மாந்தரையும் ஒன்று சேர்ப்பாய்
நெஞ்சார வாழ்த்திடுவாய் நெஞ்சில் வாழ்வாய்
தஞ்சமடைந் தோரையெலாம் தழைக்கச் செய்வாய்
தரணியிலே செல்வவளம் ஊட்டுவிப்பாய்
கொஞ்சமதும் பேசாத நாவினுக்குக்
கொஞ்சுமொழி பேசிடவும் கருணை வைப்பாய்
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோக நாதா!

10. வண்ண வண்ண வித்தைகளை உவந்தளிப்பாய்
விதவிதமாய் அற்புதங்கள் ஆடவல்லாய்
மன்னர் மன்ன ! அருள் மன்ன ! என்றே உம்மை
மனதார ஏத்திடவே மனமே கொண்டோம்
கண்கொடுக்கும் சிவராஜ யோகி சிவமே
கருத்துக்கு நல்விருந்தே குருவே அன்பே
இங்குமது தெய்வபலம் இவற்றால் கண்டோம்
எம்மீசா பன்றிமலை யோகநாதா !

(T. D. மீனாட்சிசுந்தரம்)

## 29. நமசிவாய சாமிகள்

எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்பது அறிவு.

கருணைக்கடலாக விளங்கும் சாமிகள் சிவராஜ யோகியாக விளங்கும் சிறப்பையும் கண்டோம். சிவராஜயோகியாக விளங்கும் சாமிகள் நமசிவாய சாமிகளாக விளங்குவதிலும் ஆச்சரியமொன்றுமில்லை; யோகமும் நமசிவாய மந்திரமும் தன்னையறிந்தின்பமுற வாய்த்துள்ள இணைபிரியா சாதனங்கள் அல்லவா? நமசிவாய மந்திரத்தின் யோகப் பொருளைச் சாமிகள் விளக்குவதிலே ஒரு தனி அழகுண்டு: இதைவிட எப்படி உண்மையைத் தெளிவாக உணர்த்த முடியும்? "நம்மதான் சிவம், நாம் சிவம், இதைத்தானே நமச்சிவாய மந்திரமும் நமக்கு எடுத்துரைக்கின்றது"—இப்படிக் கூறும் சாமிகளின் திருவாக்கு அத்திருமந்திரத்தின் சக்தியை விளக்கும் போதும் ஒரு தனி அழகை அடைந்துவிடும். "வில்லில் கல் வைத்து அடித்தால் குறி பார்த்த பழம் தப்பாது விழுந்துவிடும். அதுபோன்று வில்லில் சொல் வைத்து அடித்தாலும் நமக்கு வேண்டியது கிடைத்துவிடும். வில்லில் சொல் வைத்து அடிப்பதா? அந்த வில்வேறொன்றுமில்லை, காற்றுதான். இது யோக அனுபவப் பேச்சாகும். சாதாரணமாக "போடா" என்று சொன்னாலே எவ்வளவு கோபம் வருகின்றது. அந்த 'போடா' என்ற சொல்லுக்கே அவ்வளவு சக்தி இருந்தால் நமசிவாய என்ற மந்திரத்திற்கு எவ்வளவு சக்தி இருக்கும். இதைவிட மேலான மந்திரம் வேறொன்றுமில்லை. அதை உணர்த்தவே "தந்தை சொல்மிக்க மந்திரமில்லை" என்று பெரியவர்கள் சொன்னார்கள்." இப்படியே அழகாக நமசிவாய மந்திரத்தைப்பற்றிச் சாமிகள் சமயம் வாய்க்கும்போதெல்லாம் பேசி மகிழ்வர்.

இந்தத் திருமந்திரத்தின் பெரும் சக்தியை விளக்கும் அரியதோர் நிகழ்ச்சியைம் காண்போம். சுந்தரமூர்த்தி சாமிகளைச் சிவபெருமான் திருவுள்ளப்படி வெள்ளையானையில் அமர்த்தித் தேவர்கள் கயிலைக்கு அழைத்துச் செல்ல, சுந்தரமூர்த்தி சாமிகள் தன் உயிர்த்தோழன் சேரமான் பெருமானை நினைத்தார். இதைத் திருவருளாற்றலால் விரைந்துணர்ந்த சேரமான் பெருமாள் தம் குதிரை மீதேறித் திருவஞ்சைக்களத் திருக்கோயிலில் புறப்பட இருந்த சுந்தரமூர்த்தி

சாமிகளை அடைந்தார். அப்போது வெள்ளையானையின் மீதமர்ந்து விசும்பிற் செல்லும் சுந்தரராகிய தம் தோழரைக் கண்டதும், தம் குதிரையின் செவியிலே திருவைந்தெழுத்தை உபதேசித்தார் சேரமான் பெருமாள். அவ்வளவில் அக்குதிரை வான் வழியே செல்லும் ஆற்றல் பெற்றுத் தெய்வத்தன்மை வாய்ந்த வெள்ளை யானையை வலம் வந்து அதற்கு முன்னே செல்வதாயிற்று. என்னே திருமந்திரத்தின் சக்தி!

சாமிகள் அஞ்செழுத்தின் அற்புதச் சக்தியை வானொலிப் பேச்சுகளிலும் அகமகிழ்ந்து பேசுவர்: நித்திய உரையாடல்களிலும் உள முவந்து பேசுவர். அதன் பரிபூரண சக்தியை அனுபவிக்கும் சாமிகள் அதன் விளக்கத்தை ஆத்மீகப் பொருள் மணக்கும் 'பாக்கிய பரணி' பத்திரிகையில் தொடர்ந்து எழுதிவருகின்றார். ஆங்கிலப்பத்திரிகை பவன் பத்திரிகையிலும் எழுதிவருகின்றார்.

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்பது அறிவு"

என்றார் திருவள்ளுவநாயனார். ஐந்தெழுத்தின் மகிமையை எவ்வளவோ பெரியவர்கள் எடுத்தோதி இருக்கின்றனர். அதைப்பற்றி எவ்வளவோ கட்டுரைகள் வெளிவந்துள்ளன. ஆனால் சாமிகள் அதை யோகீஸ்வரவாகப் பயன்படுத்திப் பல இன்னல்களிலிருந்து பலரை நீக்கி அன்பு சுரந்து அருள் பாலிக்கின்றார். மந்திரத்தின் மாண்பை எளிய சொற்களில் மனத்தில் பதியவைக்கக்கூடிய ஆற்றல் மட்டுமா சாமிகளுக்கு; மந்திரத்தின் பயனால் நீங்காத நோய்களையும் கஷ்டங்களையும் உடனடியாகப் போக்குகின்றார். சாமிகள் வாய் பேசுகின்றது நமசிவாயத்தைப்பற்றி: சாமிகள் கரம் பூசுகின்றது பஞ்சாட்சரத்தை பஞ்சாட்சரத்தை ஓதி! கேட்டும் கண்டும் நாம் பஞ்சாட்சரத்தின் மகிமையை உணர்கின்றோம், சக்தியைக் கண் கூடகாப் பார்க்கின்றோம், அதன் மெய்ப்பொருளைக் காண்கின்றோம்,

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேத நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே"

என்று மொழிந்த திருஞானசம்பந்தர், அதன் மகிமையால் தன் மணத்தைக் காணவந்த அடியார்களையே குடும்பங்களோடு கைலைக்கு அழைத்துச் சென்றார். இந்த அற்புதத்தைக் கேள்விப் படும் நமக்கு, நமசிவாய மந்திரத்தின் ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்விக்கும் உயர்வை, மண்ணுலகில் உதவும் அதன் மெய்ப் பொருளை சாமிகள் அருமையாக விளக்கி வருகின்றார். சாமிகளே

நமசிவாய மந்திரத்தின் விளக்கமாக அல்லவா அருள்பூத்து மணக்கின்றார். அவரை நமசிவாய சாமிகள் என்று அழைப்பது உண்மைக்குப் பொருத்தமாக இருக்கின்றது, நமது உள்ளங்களுக்கும் இனிமை பயப்பதாக இருக்கின்றது.

தமிழகத்தில் தோன்றியுள்ள நமசிவாய சாமிகள் பலருண்டு. அந்தத் தெய்வீகப் பரம்பரையில் உதித்துள்ள பெருமகானே நாம் தெய்வமாகப் போற்றுகின்ற ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள்; சாமிகளே நம்மிடையே வாழுகின்ற நமசிவாய சாமிகள். சாமிகள் நமசிவாய மந்திரத்தைப் பற்றிப் பாக்கிய பரணி பத்திரிகையில் எழுதிவரும் பொருளைப் படித்து மகிழ்வதன்முன் சாமிகள் அதைப் பற்றிக் கூறும் அருமை மொழிகளைக்கேட்டு மகிழ்வோம்.

சாமிகள்: "தன்னைத்தான் அறிவது மெய்யறிவு. ஜீவனில் சிவனைக் காண்பது உண்மை அறிவு. இதற்காகத்தான் தமிழ் சித்தர்களும் பெரியோர்களும் பெரும்பாடுபட்டுக் கடைசியில் உண்மையைக்கண்டு, உண்மையோடு இரண்டறக் கலந்தனர். பரப்பிரம்ம சொரூப நிலையை உணர்ந்தோர், பரப்பிரம்மத்தோடு 'நீயே நானாய் நானே நீயாய்' என்ற நிலையில் ஐக்கியமாயினர்.

"எங்கும் திருமேனி எங்கும் சிவசக்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாய் இருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவன் அருள்தான் விளையாட்டதே"

இப்படி இறையருளைப் போற்றித் தன் உள்ளத்திலேயே அண்ட சராசரங்களை அரங்கமாக அமைத்து அற்புதங்களைத் தோற்றுவித்து இறைவனின் ஆனந்த நடனத்தைக் கண்டுகளித்தார் திருமூலர்.

"விளக்கைப் பிளந்து விளக்கை ஏற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்க வல்லார்க்கு
விளக்குடையான் கழல் மேவலுமாமே"

என்று இதயக்கோயிலின் பிரகாரத்தை அடைந்து சந்நிதியை எட்டிப்பிடிக்க வழிகாட்டினார் திருமூலர். இவர் வழியைக் கடைப் பிடித்தவர்களே அருணகிரிநாதரும், தாயுமானவரும், சமீபத்தில் வாழ்ந்த இராமலிங்க அடிகளும்.

உடலில் உள்ளத்தில் தம்மில் இறைவனைக் கண்டு கொண்ட பெரியவர்கள் அவன் திருப்பெயர் எல்லாத் துன்பங்களுக்கும் கை

கண்ட மருந்தென்று அறிந்தனர். அது எவர்க்கும் எளிதில் கிடைக்கும் ஔடதம் என்பதையும் உணர்ந்தனர். மனிதனை வாட்டி வருத்தும் இன்னல்களை ஓடஓட விரட்டும் தாரக மந்திரத்தை உணர்ந்தவர் அதை நன்ருகப் பயன்படுத்தினர். சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஔவையார், திருமூலர், இராமலிங்க அடிகள் முதலியவரால் போற்றப்பட்டுள்ள அத்தாரக மந்திரம் வேறென்றுமில்லை; அதுதான் நமசிவாய எனும் திருப்பெயர். இந்த ஐந்து எழுத்துக்களும் உள்ளத்தில் இருளை அகற்றி ஒளிவிளக்கேற்றி மெய்ந்நெறிக்கு வழி காட்டுகின்றன.

"அஞ்செழுத்தின் உண்மை அதுவான அப்பொருளை
நெஞ்சழுத்தி ஒன்ருகி நிற்குநாள் எந்நாளோ"

என்று ஏங்கி இளைத்தார் தாயுமானுர்.

"அஞ்சுக அஞ்செழுத்துண்மை அறிந்தபின்
நெஞ்சகத்துள்ளே நிறையும் பராபரமே"

என்றும் அதன் மகிமையைப் புகழ்ந்தார் தாயுமானுர்.

உள்ளொளி கண்டவர்களின் ஆற்றல்தான் என்னே "சொல்லுக்குள் சொல்லறியார், ஜோதியைத் தன்னுள் அறியார், தன்னைத் தானறியார், தானமும் தவமும் தானென்றறியாரே" என்பது முற்றும் உண்மை. ஜோதியைத் தன்னுள் அறிந்து விட்டால் எப்பேர்ப்பட்ட இடைஞ்சல்கள் வாழ்க்கையில் ஏற்படினும் சூரியனைக் கண்ட பனிபோல் அந்த இடையூறுகள் மறைகின்றன. கொடுமைகளும் நீங்குகின்றன. அப்பரைப் பல நீற்றறையில் இட்டனர்; அவருக்கு நஞ்சூட்டினர்; பட்டத்து யானையை விட்டு மிதிக்கச் செய்ய முற்பட்டனர் — இவ்வளவும் அவரைக் கொல்வதற்காக. ஆனுல் இவ்வளவு தீங்குகளிலிருந்தும் இறைவனருளால் காப்பாற்றப்பட்டவரைக் கல்லோடு சேர்த்துக் கயிற்றினுற் கட்டிக் கடலிலும் தள்ளினர் கடைசியாக. அப்போதும் அப்பர் திருவாயிலிருந்து வெளிவந்தது நமசிவாய திருப்பெயரும், அதன் மகிமையும்.

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே"

அப்பரைத் தீயசக்திகள் ஒன்றும் செய்ய முடியவில்லை. நமசிவாய நாமத்தை மகிழ்ந்தேத்த ஆரம்பித்து விட்டார் நாவுக்கரசர்.

" இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி உள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே"

இந்த நமசிவாய பலத்திஞல்தான் "நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்" என்று ஆரம்பிக்கும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தை ஆரம்பத்திலேயே பல்லவ மன்னன் அனுப்பிய அமைச்சர்களிடமே திருவாய் மலர்ந்தருளினர் நாவுக்கரசர்.

இது மட்டுமா? மனித வாழ்விற்கு அவசியமானதெல்லாமே அவ்வைந்தெழுத்துக்களில் அடங்கிவிட்டதென்பதையும் மிகத்தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

" நமசி வாயவே ஞானமும் கல்வியும்
நமசி வாயவே நானறி விஞ்சையும்
நமசி வாயவே நானவின்று ஏத்துமே
நமசி வாயவே நன்னெறிக் காட்டுமே"

இதே போன்றுதான் சுந்தரமூர்த்தி அடிகளும் நமசிவாயத்தில் மனம் ஒன்றிப் போனர்.

" நற்றவா உனைநான் மறக்கினும்
சொல்லும் நா நமசிவாயமே"

என்று நெஞ்சுருகிப் பாடலானர்.

மாணிக்கவாசகர் சாமிகளும் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் இறைவனை மனதார நினைந்து பாட ஆரம்பித்தார். " நமசிவாய வாழ்க, நாதன் தாள் வாழ்க" என்று கிளம்பின அவர் இதய ஒலிகள்.

" போற்றியோ நமசிவாயப் புயங்கனே மயங்குகின்றேன்
போற்றியோ நமசிவாயப் புகலிடம்பிறிது ஒன்றில்லை
போற்றியோ நமசிவாயப் புறமெனைப்போக்கல் கண்டாய்
போற்றியோ நமசிவாய ஜயஜய போற்றி போற்றி"

என்று போற்றிப் பாடவும் முற்பட்டார்.

நமசிவாயத்தை நம்பினோர்க்கு அபாயம் ஒன்றில்லை என்பதைத் திருமூலரும் உணர்ந்து உலகிற்கு அறிவித்தார், ஔவையும் அறிவித்தார்.

" சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்கு
அபாயம் ஒருநாளு மில்லை "

சமீபத்தில் இராமலிங்க அடிகளும் நற்றவத்தவர் உள் இருந்து ஓங்கும் நமசிவாயத்தை அவருக்கே உரிய கவிதை மொழிகளால் உள்ளத்தில் பதியும்படி தித்திக்கும் தேன் தமிழில் உரைத்துள்ள தைப் படித்து மகிழ்வோம்.

பெற்ற தாய்தனை மக மறந்தாலும்
பிள்ளையைப் பெறும் தாய் மறந்தாலும்
உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்
உயிரை மேவிய உடல் மறந்தாலும்
கற்ற நெஞ்சகம் கலை மறந்தாலும்
கண்கள் நின்று இமைப்பது மறந்தாலும்
நற்றவத்தவர் உள் இருந்து ஓங்கும்
நமச்சிவாயத்தை நான் மறவேனே.!!

இவ்வுலகில் நாம் வாழ்க்கையில் அனுபவிப்பவை எவ்வளவோ உண்டு. நாம் அனுபவிக்காமல் இருப்பவைகளும் எவ்வளவோ உண்டு. இவைகளின் அந்தரங்க சக்திகளின் அற்புத ரகசியங்க ளெல்லாம் எவ்வளவோ உண்டு. இவைகளை அறியக்கூடிய ஆற்றல் அல்லல் உலகில் அவதிப்படும் சாதாரண மக்களுக்கு இல்லை. இப் பிரபஞ்சத்தின் உண்மைத் தத்துவங்களை யெல்லாம் அறிவதற்கும் அனுபவிப்பதற்கும் நெடுநாள் சாதனை வேண்டும். அமோகமான ஆத்மசக்தி வேண்டும். முருகன் அருளும் வேண்டும். இவைகளை பரிபூரணமாகக் கொண்டுள்ள நமது குருநாதர் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள் உளமுவந்து நமக்குப் புரியக்கூடிய வகையில் 'பஞ்சாட்சரம் — நமசிவாய' என்பதைப் பற்றி பாக்கியபரணியில் எழுதி வருவது நம்முடைய பாக்கியம். இராஜயோகத்தைப் பற்றியும் இத்திருமந்திரத்தைப் பற்றியும் எவ்வளவு படித்தாலும் 'ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாது' என்ற கதையாகத்தான் முடியும். குரு உதவியால் தான் இவைகளைக் கற்றுணர்ந்து உய்த்துணர முடியும் என்பதையும் சாமிகளும் அடிக்கடி தன் கட்டுரைகளில் வற்புறுத்தி இருப்பது கவனிக்கவேண்டியது. இப்போது நாம் சாமிகள் பஞ்சாட் சரத்தைப் பற்றி எழுதி வருகின்ற பேருண்மைகளைப் படித்து மகிழ்வோம்.



**திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள்**

"ஓம்ஜயஓம் ஓம்சிவஓம் ஹரிஹரா !
ஓம்குஹஓம் ஓம்குருஓம் ஹரிஹரா !"

(கவியோகி சுத்தானந்த பாரதியார்)

ஓம்

# பஞ்சாட்சரம் – நமசிவய

## 1. ஒலி ஒளி என்ற இருவகை சக்திகள்

"ஆண்டவன் அருளால் உலகமக்கள் அனைவருக்கும் பக்தி பெருகி ஆசீர்வாதம் கிடைப்பதாகும்.

"அரியதோர் நமச்சிவய மாதியந்த மானதும்
ஆறிரண்டு நூறுகோடி அளவிடாத மந்திரம்"

எனப் பண்டைய சித்தர்கள் பாடியுள்ளபடி, நமசிவாய என்னும் பஞ்சாட்சரங்களின் சிறப்புத் தன்மைகளைப்பற்றி, ஒரு சற்குருவின் உபதேசமூலமாக நன்கு அறிந்து கொண்டு, முறைப்படி சாதனைகளைக் கடைப்பிடித்தொழுக வேண்டியது கடவுளை அறிய விரும்பும் ஒவ்வொரு அறிவாளியின் கடமையாகும்.

ஆதிக்கும் ஆதியிலே வெட்டவெளியாகிய சூன்யப் பரவெளி எங்கும் பரமான்மாவானது அணுவுக்குள் அணுவாக இரண்டறக் கலந்து நீக்கமற நிறைந்து பரிபூரணமாக நின்றது. அத்தகைய கோடானு கோடி அணுக் கூட்டங்கள் இயற்கைச் சக்தியால், தன்னைத்தானே அதிவேகமாக சுழன்று ஓடியாடி இயங்கிக் கொண்டிருந்தன. அத்தகைய சுழற்சியின் அதிவேகத்தால், அணுக்கூட்டங்களானவை, ஒன்றையொன்று உராய்ந்ததின் காரண காரியத்திலே, முதன் முதலாக ஓசை (நாதம்) உண்டாகியது. பிறகு அதைத்தொடர்ந்தே ஒளி (விந்து) உண்டாகியது. இந்த நாத விந்து என்பதே, சிவன் சக்தியாகும்.

ஆதியில் உண்டான ஒலி ஒளியாகிய நாத விந்துக்களிலிருந்து, அகார, உகார, மகார முதலாகிய மூன்று மூலமந்திர ஒலி எழுத்துக்கள் உண்டாகி, ஓம் என்னும் பிரணவமாயிற்று. ஓங்காரப் பிரணவத்திலிருந்து ஐந்துவித சக்திகளுடன் கூடிய 'நமசிவய' என்னும் பஞ்சாட்சர மந்திர ஒலி எழுத்துக்கள் தோன்றின. பஞ்சாட்சர சூட்சும சக்திகளிலிருந்து, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூத சக்திகள் தோன்றின. அந்தப் பஞ்ச பூதங்களின் கூட்டுறவுச் சக்தியிலிருந்து அண்டபகிரண்ட சராசரங்களும், நவக்கிரகங்களும், கோடானுகோடி நட்சத்திரங்களும், மற்றும் சகலமும் தோன்றின. இவைகளை அடக்கி ஒடுக்கி நடுநிலையில் நின்று ஆட்சிபுரியவேண்டி, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில்களை முறையே வகுத்து

உள்ளடக்கிக் கொண்ட எல்லாம் வல்ல 'நமசிவய' என்னும் பஞ்சாட்சரமானது 5 மந்திர ஒலி எழுத்துக் கொண்டதாக மலர்ந்தது. அவைகளிலிருந்து உடன்பாடு, எதிர்மறை என்ற இருவித சக்திகளை உள்ளடக்கிக்கொண்டு, 96 தத்துவங்களாக விரிந்து மேலும் எண்ணிறந்த சக்திகள் தோன்றலாயின.

இத்தகைய எண்ணிறந்த இயற்கைச் சக்திகளில் சரி பேர்பாதி உடன்பாட்டுச் சக்திகளாகவும், மற்ற சரிபாதி எதிர்மறைச் சக்திகளாகவும், அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாவற்றிலும் இயங்கிக்கொண்டிருக்கின்றன. இதுவே "பரமரகசியம்" எனப்படுவதாகையால் வெளிப்படையாக யாரும் விளக்கிக் கூறுமல் "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்றுமட்டும் மறை பொருளாகக் கூறிக்கொண்டிருப்பது பெரியோர்களின் வழக்கமாக இருக்கின்றது.

நல்வினை தீவினையும், தோன்றல் மறைதலும், ஆவதும் அழிவதும், பகல் இரவும், வளர்பிறை தேய்பிறையும், அமாவாசை பௌர்ணமியும், சூரிய சந்திர கிரகணமும், குளிர்ச்சி வெப்பமும், இடி மின்னலும், நிழல் வெயிலும், காற்றும் புயலும், மழை வறட்சியும், நிலம் நீரும், பிராணவாயு கரியமிலவாயுவும், நல்லகாற்று விஷக்காற்றும், மலை மடுவும், நல்லநீர் உப்புநீரும், ஊற்றுமலை எரிமலையும், சோலைவனம் பாலைவனமும், சந்திரன் சூரியனும், பிங்கலை இடகலையும், பூரகம் ரேசகமும், பிறப்பும் இறப்பும், ஆண்பால் பெண்பாலும், அமிர்தம் விஷமும், சுகாதாரம் நோய் நொடியும், வாசனை நாற்றமும், சுகம் துக்கமும், அன்பும் ஆங்காரமும், சிரிப்பும் அழுகையும், விருப்பு வெறுப்பும், சாந்தமும் குரூரமும், அடக்கம் ஆவேசமும், உயர்வு தாழ்வும், இளமை முதுமையும், விழிப்பு உறக்கமும், நினைவும் கனவும், சப்தம் நிசப்தமும், சன்மார்க்கம் துன்மார்க்கமும், மெய்ஞ்ஞானம் அஞ்ஞானமும், ஆகிய பற்பல பேதாபேதங்களை உண்டாக்குவதற்குக் காரண காரியமாக நிற்பது எவையென்ருல் இயற்கையின் ஒரு நடுநிலை சக்தியிலிருந்து பிரிந்த, உடன்பாடு எதிர்மறை என்ற இருவித சக்திகளேயாகும்.

ஒரு நடுநிலை சக்தியிலிருந்து, ஒலி ஒளி என்ற இருவித சக்திகள் உற்பத்தியாகின்றன என்பதற்கும், அவைகளுக்கு உடன்பாடு எதிர்மறை என்ற இருவித சக்திகளே காரண காரியமாகின்றன என்பதற்கும் உள்ள சம்பந்தாசம்பந்தத்தை ஆராய்ந்தறிய ஓரிரு உதாரணங்களைக் கூறுவோமாக.

நாம் நெருப்பை உண்டாக்க சிக்கி முக்கிக் கற்களைத் தட்டுகிறோம். வலதுகையில் ஒரு கல்லையும், இடது கையில் ஒரு கல்லையும் கெட்

டியாகப் பிடித்துக்கொண்டு வலதுகைக் கல்லே மேலிருந்து கீழாக வும், இடதுகைக் கல்லே கீழிருந்து மேலாகவும், வேகமாய் உராயும் படி செய்தால், முதன்முதலாக ஒலியை அதாவது ஓசையைக் (நாதத்தை) கேட்கிறோம். அடுத்து அடுத்து உராயும் பொழுது ஒளியை அதாவது நெருப்பை (விந்துவைக்) காண்கிறோம். அது போலவே மழைக்காலங்களில் வானத்திலிருக்கும் மேகக்கூட்டங்கள் ஒன்றோடொன்று நெருங்கி வேகமாய் உராய்வதால், இடியும் மின்னலும் அதாவது ஒலியும் ஒளியும் உண்டாகின்றன.

மேலும், இயற்கைச் சக்திகளில் ஒன்றாகிய மின்சார (எலக்டிரிக்) சக்தியைப்பற்றிச் சிந்தித்துப் பார்ப்போம். உடன்பாட்டுச் சக்தியைக் (பாஸிடிவ்) கொண்ட ஒரு கம்பியையும், எதிர்மறைச் சக்தியைக் (நெகடிவ்) கொண்ட ஒரு கம்பியையும் எடுத்துக்கொண்டு, ஒன்றையொன்றின் நுனியைப் பொருந்த வைத்தால், ஒருவித சடபுடா என்ற சப்தத்தையும், அத்துடன் கூடவே நெருப்புப் பொறியையும் காண்கிறோம். அந்த இருவித சமசக்திகள் கொண்ட கம்பிகளை ஒரு கட்டுப்பாட்டில் நடுநிலே நாட்டும் முறையில் பல்புக்குள், இருவித சக்திகளும் நுழையும்படியாகப் பொருந்தவைத்து, அவ்விருவித சக்திகளேயும் மயிரிழை போன்ற சன்னக்கம்பியால், பல்புக்குள், தொடச்செய்வதால் பிரகாசமான வெளிச்சம் உண்டாகின்றது. இருவித மின்சாரசக்திகளேக் கட்டுப்படுத்தி, செயல்படுத்துவதின் மூலமாக எத்தனையோவித நூதன காரியங்கள் சாதிக்கப்படுகின்றன.

இப்பிரபஞ்சத்தில் காணப்படும் சித்தும் அசித்தும் ஆகிய எல்லாப் பொருள்களேயும் இயங்க வைக்கின்ற அந்த மஹா சக்தியானது, ஒரேயொரு நடுநிலே சக்திதான் என்னும் உண்மை அறிவு நூல் வல்லோராலும் தத்துவ ஞானிகளாலும் நன்கு நிலே நிறுத்தப்பட்டிருக்கிறது. இந்த ஒரு சக்தியே தான் இயங்கு திணைப் பொருள்களுக்கும், இயங்காத் திணைப் பொருள்களுக்கும் உரிய அந்தரங்க சக்தியாகப் பொதுவில் அமைந்து கிடக்கின்றது. இத்தகைய அந்தரங்க சக்தியானது அளவிட்டுக் கூறமுடியாதவாறு, அவ்வளவு அதிகமாக நிறைந்து நிற்கின்றது. அதன் மத்தியில் நாமும் ஒருவகை சக்திக்குரிய ஜீவபிராணியாய் அமைந்திருக்கின்றோம் என்பதைத் தெள்ளத் தெளிய அறிந்து கொண்டு விடுவோமாயின் தத்துவஞானம் தானே உதிக்கும். "அண்டத்திலுள்ள சக்திகளெல்லாம் பிண்டத்திலும் உண்டு" என்பது தத்துவ சித்தாந்தமாகும். அண்டம் என்பது இவ்உலகம். பிண்டம் என்பது நம் சரீரம். நமது உடலுக்குள்ளும், மின்சார சக்தியைப் போன்றே ஒரு நடு நிலே சக்தியானது இருவித பிரிவுகளாக, அதாவது உடன்பாட்டுச் சக்திகளாகவும், எதிர்மறைச் சக்திகளாகவும், சுவாசம், நாடி, நரம்பு, ரத்தம், மூளே முதலிய எல்லாவற்றிற்குள்ளும் சரிசமவிகிதா

சாரமாய்சாதாரணமாக இயற்கையாய் இயங்கிக்கொண்டிருக்கின்றன. நம் உடலின்கண் அமைந்துள்ள எதிர்மறைச் சக்திகளை, ஆத்ம சக்தியாய் அடக்கி ஒடுக்கி உடன்பாட்டுச் சக்திகளை அபிவிருத்தி செய்து, தன் அறிவைக் கொண்டு நடுநிலை நாட்டி ஒளியை அதாவது ஜோதியைக் காண்பதுவே மெய்ஞ்ஞானமாகும். "தன்னைத் தானறி யார் தன்னையும் தவமும் தானறியாரே," என்றபடி தன்னையும் தானறியும் தத்துவஞானபோத சாதனை முறைகளை, சற்குருநாதர் உபதேச மூலமாக அறிந்துகொண்டு அதற்குரித்தான மூலமந்திர மாகிய நமசிவய என்னும் பஞ்சாட்சரங்களை முறைப்படி உச்சாடனம் செய்து, யோக சாதனையை விடாமுயற்சியுடன் அனுஷ்டித்தாலொழிய எல்லாம் வல்ல எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் பரிபூரணனந்த மான அருள்பெருஞ் சோதியைக் காணமுடியாது.

சந்தர்ப்பமும் சூழ்நிலையும் சாதகமாக இருந்துவரும் பட்சத்தில், நமசிவய எனும் பஞ்சாட்சர மந்திர சக்திகளின் பல தத்துவங்களைப் பற்றி, ஒவ்வொன்றாகவும் அவ்வப்பொழுதும் பின்பு விளக்கிக் கொண்டு வருவோமாக.

"தன்னைத் தான் வணங்குக"

## 2. பஞ்ச உறுப்புகள்

இம் மானிட வாழ்க்கையில் அனுபவிக்கும், அந்தரங்க சக்திகளின் அற்புத ரகசியங்களை யெல்லாம், ஆராய்ந்து கண்டறிய முடியாமல், அந்தகாரத்தில் மூழ்கிக் கிடக்கும் மக்கள்மீது எமக்குள்ள அபிமானத் தினால் எமக்குத் தெரிந்தவரை இப்பிரபஞ்சத்தின் உண்மைத் தத்து வங்களையெல்லாம் அனுபவித்தும், நெடுநாள் சாதனையோடு கூடிய ஆத்மசக்தியாலும், முருகன் அருளாலும், நாமே சுயமாகக் கண்டு உணர்ந்தவைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டும், கடவுளின் உண்மையான தத்துவங்களைப் பற்றி மேலே கண்ட மக்கள் ஓரள வுக்குப் புரிந்து கொள்ளும் வகையில், ஒவ்வொன்றாக விளக்கங்களைக் கூறிக்கொண்டுவர முன்வரலாயிற்று.

இவ் உலகில் மானிடராய்ப் பிறந்த எல்லோருடைய உள்ளங் களிலும், "ஆத்மசக்தி" எனப்படும் ஒருவகை அற்புத உன்னத சக்தியானது ஊடுருவி நிற்கின்றது. அவ்வாத்ம சக்தியானது, மனிதவாழ்க்கைக்குரிய ஜீவாமிர்தமாய் அந்தரங்கமாக ஒவ்வொரு வரிடத்திலும் அடங்கிப் புதைந்து கிடக்கின்றது. அச்சக்தியை அபி விருத்தி செய்துகொண்டு, அதிகமாக அருந்தி அனுபவித்தவர்களே இவ் உலகில் மகான்களாகவும், யோகிகளாகவும், சித்த புருஷர் களாகவும், பிராபல்யமடைந்து கொண்டு வந்திருக்கிறார்கள். அப்பேர்ப்பட்டவர்கள், எல்லாம் வல்லவர்களாகையால் அவர்களால் ஆகாத காரியம் ஒன்றுமே இல்லை யென்னலாம்.

“பெருமையும் சிறுமையும் தான் தரவருமே” என்கின்ற ஆன்றோர் வாக்குப்படி, மனிதனே தன்னுடைய மேன்மைக்கும் தாழ் மைக்கும், வெற்றிக்கும் தோல்விக்கும், செம்மைக்கும் வறுமைக்கும் காரணமாகின்றான். சிலர் இதற்குக் காரணம், பூர்வகர்மமென்றும், விதி என்றும் கூறுவர். இது ஓரளவுக்கு உலக வழக்காகி விட்டது. ஆனால் விதியை மதியால் வெல்லலாம்! அகமும் புறமும் சூழ்ந்து கொண்டிருக்கும் எதிர்மறைச் சக்திகளை அடக்கி ஒடுக்கி அழித்து விட்டு உடன்பாட்டுச் சக்திகளின் உறுதுணையுடன், ஆத்மசக்தியை யும் அபிவிருத்தி செய்துகொண்டு, நடுநிலை சக்தியை நிலைநாட்டிப் பரமாத்மாத்வை நெருங்கக்கூடிய பேரறிவு பெற்ற அறிவாளிகளால் தான் விதியை மதியால் வெல்லமுடியும்.

மனிதன் என்பான் இயற்கையால் ஓர் உயிரும் உணர்ச்சியும் உள்ள காந்தக் கல்லைப்போன்று அமைக்கப்பட்டிருக்கின்றான். இரும்புக் காந்தத்திற்கு இத்தகைய உயிரும் உணர்ச்சியும் இருப்ப தில்லை. அது, தற்செயலாக தன்னருகில் கொண்டு வரப்பட்ட இரும்புத்துண்டை மட்டும் கிரகிக்கும். ஆனால், மனிதகாந்தமோ? இம்மட்டோடு நிற்பதில்லை; மனிதகாந்த மெனும் ஆத்ம சக்தியை ஓங்கி வளரச்செய்து கொண்டால் இவ்வுலக எல்லையை மட்டுமல்ல, அண்டபகிரண்ட சராசரங்களின் எல்லைகளையும் கடந்து செல்லும் படியாக பாயவைத்து, அங்குள்ள எல்லாவற்றையும் உணரலாம்! ஆத்ம சக்தியின் வளர்ச்சியைக்கொண்டு எண்ணிய காரியங்களை எண்ணியபடி நிறைவேற்றிக் கொள்ளும் ஆற்றலைப் பெறமுடியும்! ஆத்ம சக்தியின் எல்லையற்ற ஆற்றலை யாராலும் அளவிட்டுக் கூறவே முடியாது.

அந்த அற்புத சக்திக்குரிய மூலங்களெல்லாம் ஒவ்வொரு மனி தனுடைய அந்தக் கரணத்திற்குள்ளும் ஆழ்ந்து மூழ்கி உறங்கிக் கிடக்கின்றன. அதைத் தட்டி எழுப்பி ஓங்கி வளரச்செய்ய வேண்டு மென்பதே, இகலோக பரலோக காரிய சித்திகளுக்கு இன்றியமையாத தாகும்.

‘உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்
வள்ளல் பிரானுக்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலன் ஐந்தும் காளாமணிவிளக்கே”

அதாவது ஆருயிரின் உள்ளமாகிய நெஞ்சமே திருக்கோவிலினுள் காணப்படும் கருவறையினை (மூலஸ்தானத்தை) யொக்கும். ஊனு லாகிய உடம்பு முழுவதும் பெரிய கோவிலை யொக்கும். நமசிவய என்னும் பஞ்சாட்சர மந்திர எழுத்துக்களை உச்சரிக்கின்றவாயானது

கோவிலின் பெரிய கோபுர முன்வாயிலை யொக்கும். அத்தகைய் மெய்ப் பொருள் தத்துவங்களை நன்ருய் அறிந்து தெளிவு கொண்டவர்களுக்கு உடம்பினுள் இயங்கிக்கொண்டிருக்கும் ஜீவனே (உயிரே, ஆத்மாவே) கோவில் மூலஸ்தானத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவலிங்கத்தை யொக்கும். உடலின் கண் அமையப் பெற்றிருக்கும் உய்த்து உணரக்கூடிய ஐம்புலன்களே அழகிய தீபங்களை யொக்கும் என்பதை அறிந்து கொள்க. மேலும்,

"நமசிவாய அஞ்செழுத்தும் நல்குமேல் நிலைகளும்
நமசிவாய அஞ்சில் அஞ்சும் புராணமான மாயையும்
நமசிவாய அஞ்செழுத்தும் நம்முளே யிருக்கவே
நமசிவாய வுண்மையை நன்குரை செய்நாதனே".

அதாவது, நமசிவாய என்னும் பஞ்சாட்சரங்களின் உறுதுணையால் உண்டாகும் ஆருதாரங்களால் மேல் நோக்கி நிற்கும் மூலாதாரம் முதலான நிலைகளும் புராண இதிகாசங்களின் உண்மைத் தத்துவங்களும், நம் உடம்பிற்குள்ளும் மனதிற்குள்ளும் அமைந்திருக்கின்ற படியினுலே நமசிவய என்னும் பஞ்சாட்சரத்தின் எல்லாவித மந்திர சக்திகளின் உண்மைத்தத்துவங்களைப்பற்றிக் குருநாதரின் மூலமாக கேட்டறிந்து கொள்ளத் தக்கது என்பதாலும் அறிந்து கொள்க.

நமசிவய எனும் ஐந்தெழுத்து ஆதி சக்தியாகிய பரமசிவனுடைய திரு நாமமாகும். எங்கும் நிறைந்த எல்லாம் வல்ல சக்தியானது நமது உடலுக்குள்ளும் நிறைந்து நிற்கின்றபடியால் சாதனையின் சித்தியால் "நானே அவன், அவனே நான்" எனும் தத்துவார்த்தப் பொருளாகின்ருேம்.

"நவ்விரண்டு காலதாய் நவின்ற மவ்வு வயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய் சிறந்த வவ்வுவாய தாய்
யவ்விரண்டு கண்ணதாய்எழுந்து நின்ற நேர்மையில்
செவ்வை யொத்து நின்றதே சிவாய அஞ்செழுத்துமே

அதாவது,

ந–என்ற எழுத்தை இருகால்களாகவும்
ம–என்ற எழுத்தை வயிறு ஆகவும்
சி–என்ற எழுத்தை இருதோள்களாகவும்
வ–என்ற எழுத்தை வாய் ஆகவும்
ய–என்ற எழுத்தை இரு கண்கள் ஆகவும்

பஞ்சாட்சரங்களை முறையே உடல் உறுப்புகளைக் குறிப்பிடுவனவாக அமைத்து, நமது பண்டைய சித்தர்கள் பாடியுள்ளார்களாகையால்,

நமது உடலே நமசிவய என்னும் பஞ்சாட்சர மந்திர எழுத்துக்களால் அமைந்த சூட்சம தத்துவ உருவமாகும்.

தன்னை யறிந்தவனே தலைவனை யறியமுடியும். தன்னை யறிவதும், தன்னை வணங்குவதும் தத்துவ ஞானமார்க்கமாகும். அதனால் தான், குருநாதர்கள் " தன்னைத் தானறி ", என்று சிஷ்யர்களுக்கு சுருக்கமாகவும், அழுத்தந்திருத்தமாகவும் உபதேசம் புரியும் வழக்கத்தைச் சிந்தித்து அறிவீர்களாக.

"வழிபடுவதற்குரிய (பூஜைக்குரிய) ஒரே கடவுளாவது மனித உடலில் உள்ள மனித ஆத்மாவே. எல்லா விலங்குகளும் கோயில்களே என்பது உண்மை தான். ஆனால் மனிதனே அனைத்திலும் உயர்ந்த கோயிலாகும். " நான் அதில் வழிபட இயலாதவனாயின், வேறு எக்கோயிலும் எப்பயனும் தராது" என்பதாக சுவாமி விவேகானந்த அடிகளும் கூறியுள்ளதையும் இவ்விடத்தில் குறிப்பிடத் தக்கதாகும்.

மேலே சொன்ன அந்தகாரத்தில் மூழ்கி இருக்கும் மக்கள், கருத்தை கருத்தாட்டினால் உண்மை புலப்படும். ஆனால் அறிந்தோர்க்கு அருளின் பெருமையை எடுத்துக் கூறத்தேவையில்லை.

### 3. பஞ்ச பூதங்கள்

ஓங்காரப் பிரணவத்திலிருந்து உண்டான, பஞ்சாட்சரமாகிய ந, ம, சி, வ, ய, என்னும் சக்திகளிலிருந்து பஞ்சபூத சக்திகளாகிய 1. பிருதிவி (மண்) 2. அப்பு (நீர்) 3. தேயு (நெருப்பு) 4. வாயு (காற்று), 5. ஆகாயம் (வானம்), முதலியவைகள் முதன் முதலாக உற்பத்தியாயின. அதாவது அங்கு இங்கு எனாதபடி, எங்கும் பிரகாசமாய் நிறைந்து நிற்கும் ஆதி மூலமான பரமசிவனுடைய திருநாமமாகிய (பெயராகிய) நமசிவய என்னும் பஞ்சாட்சர மந்திர ஐந்தெழுத்தின் சக்தியின் அடிப்படையாக,

1. ந – என்பது பிருதிவி பூத தத்துவ சக்தியாகவும்
2. ம – என்பது அப்பு பூத தத்துவ சக்தியாகவும்,
3. சி – என்பது தேயு பூத தத்துவ சக்தியாகவும்,
4. வ – என்பது வாயு பூத தத்துவ சக்தியாகவும்,
5. ய – என்பது ஆகாய பூத தத்துவ சக்தியாகவும்,

தோன்றலாயின.

இந்தப் பஞ்சபூத சக்திகளின் கூட்டுச் சேர்க்கையினுலே அண்ட பிண்ட சராசரங்களும், சகலமும், கோடானுகோடி பேதா பேதங் களுடன் தோன்றி இயங்கலாயின. இப்பிரபஞ்சத்தில் பஞ்ச பூத சக்திகளுக்கு உட்படாத அன்னியமான வேறு பொருள் ஒன்றுமே கிடையாது, எங்கும் எல்லாம் பஞ்சபூத மயமேயாகும். இவ் வுலகில் காணப்படும் எல்லா காரண காரியங்களும், பஞ்ச பூத சக்திகளால் தான் நடைபெறுகின்றன.

இப் பஞ்சபூதங்கள், ஒவ்வொன்றுக்குள்ளும், (1) சப்தம் (2) ஸ்பரி சம் (3) ரூபம் (4) ரசம். (5) கந்தம். ஆகிய ஐம்புலன்களின் பண்பு களை (தன்மைகளை) வெவ்வேறு விகிதாசாரப்படி உள்ளடக்கிக் கொண்டு அமைந்துள்ளன.

" பூவிலாய ஐந்துமாய் புனலில் நின்ற நான்குமாய்
தீயிலாய மூன்றுமாய், சிறந்த கால் இரண்டுமாய்
வேயிலாய ஒன்றுமாய், வேறு வேறு தன்மையாய்
நீயலாமல் நின்ற நேர்மை யாவர் காணவல்லரே?"

என்பதாக, பண்டைய தமிழ்ச் சித்தர்கள் பாடியுள்ளபடி,

ந–எழுத்துக்குரிய பிருதிவி (மண்) பூதத்திற்கு சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம், ஆகிய 5 பண்புகளும்,

ம–எழுத்துக்குரிய அப்பு (நீர்) பூதத்திற்கு சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், ஆகிய 4 பண்புகளும்,

சி–எழுத்துக்குரிய தேயு (நெருப்பு) பூதத்திற்கு சப்தம், ஸ்பரிசம் ரூபம் ஆகிய 3 பண்புகளும்

வ–எழுத்துக்குரிய வாயு (காற்று) பூதத்திற்கு சப்தம், ஸ்பரிசம் ஆகிய 2 பண்புகளும்

ய–எழுத்துக்குரிய ஆகாயம் (வானம்) பூதத்திற்கு சப்தம் ஆகிய 1 பண்பும், விகிதமாக தன்னுள் அடக்கிக்கொண்டு, செயல் படுகின்றன.

அதோடு மட்டும் அல்லாமல், மேற்கொண்டும், ஒவ்வொரு பஞ்ச பூதத்துடனும், மற்ற பூதங்களின் சக்திகள் தனித்தனியே கலப்பதால் ஒன்றுக்கு ஐந்து (1–5) வீதமாகப் பெருகி, 25 வித உபசக்திகளைக் கொண்டதான " ஸ்தூல பஞ்சசீகரணம் " என்றும் அம்மா திரியே, மேலும், 25 வித உபசக்திகளைக் கொண்டதான

"சூட்சும பஞ்சசீகரணம்" என்றும், ஆக 50 வித சக்திகளாக் அண்ட பிண்ட சராசரங்கள் அனைத்தையும், இயங்க வைத்துக் கொண்டிருக்கின்றன.

இந்த மகா சக்திவாய்ந்த, பஞ்ச பூதங்களுக்குண்டான, பற்பல விதமான உபசக்திகளின் விகிதாசார அளவில் அதிகபட்சமாகவும், குறைந்தபட்சமாகவும், வெவ்வேறுவிதமான தன்மைகளில் ஒன்றுடன் ஒன்று கூட்டு சேர்ந்து அண்ட பிண்ட சராசரங்கள் முதலிய எல்லாவற்றையும் உண்டாக்கி இயங்க வைக்கின்றபடியினுலே இப் பிரபஞ்சத்தில் காணப்படும் நல்வினை தீவினைகளும், உடன்பாட்டு எதிர்மறைச் சக்திகளும், எண்ணிறந்த பேதாபேதங்களும், ஏற் படுவதற்குக் காரணகாரியமாகின்றன.

ஆதி சக்தியாகிய, ஒன்றிலிருந்து, இரண்டாகி, சிலவாகி, பலவாகி, கோடானுகோடி பேதா பேதங்களாகி, வெவ்வேறுவித மாக சகலமும் உண்டாகி இருக்கின்றன என்பதற்கு உதாரணமாக, மானிட வர்க்கத்தை ஆராய்ந்து பார்ப்போமாக. ஒரு மனிதனைப் போலவே எல்லா அம்சங்களிலும், அதாவது தோற்றம், நிறம், உயரம், பருமன், எடை, குணம், தொனி, நடை, உடை, பாவனை அமைப்பு, மச்சம், மருவு, ரேகை முதலானவைகளில் ஒன்றுபோல உள்ள, மற்றொரு மனிதனை இவ்வுலகில் எங்கும் காணமுடியாது. இதைப் போலவே சகலஜீவ வர்க்கங்களுக்கும் பொருந்தும்.

அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகியவை களில், எதை வேண்டுமானுலும், ஒன்றுடன் ஒன்றை ஒத்திட்டுப் பாருங்கள். ஒன்றைப்போலவே மற்றொன்று இருக்கவே இருக்காது. வார்ப்படத்தில் வார்த்துச் செய்யப்பட்ட உலோக உருவங்களைக் கவனித்துப் பாருங்கள். ஒன்றுக்கு ஒன்று எடை, நிறம், புள்ளி கள், குறிகள் முதலியனவற்றில் வித்தியாசங்கள் இருந்தே தீரும்.

நூதன யந்திரங்களைக்கொண்டு அச்சடிக்கப்பட்ட, ஒரே மாதிரியான இரண்டு படங்களை எடுத்துக்கொண்டு நுட்பமாக ஆராய்ந்தாலும் வர்ணம், மை, அழுத்தம் முதலானவைகளில் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருப்பதைக் காணலாகும்.

விஞ்ஞானக் கருவியைக்கொண்டு, புகைப்படம் ஒன்றை எடுத் துக்கொண்டு அந்த நெகடிவ் ஒன்றிலிருந்தே அநேக நகல் போட்டோப் படங்கள் எடுக்கப்படுகின்றன. அவைகள் எல்லாம் மேலெழுந்தவாரியாக பார்த்தால், ஒன்றுபோலவே காணப்பட் டாலும் நுண்ணிய முறையில் நன்ருய் ஆராய்ந்து பார்த்தால்

புகை, அழுத்தம் முதலியவைகளில் ஒன்றுக்கொன்று மிக நுண்ணிய நிறவேறுபாடுடன் வித்தியாசமாகவே இருக்கின்றன.

விஞ்ஞான வளர்ச்சியின் நூதனக் கருவிகளான கிராமபோன் தட்டுகள், டேப்ரிக்கார்டுகள், டெலிபோன்கள் முதலியவைகளை ஒரு முறை உபயோகித்ததை மறுமுறை உபயோகிப்பதால் ஏற்படும் நுண்ணியதேய்மானம் காரணமாகவேனும் சீதோஷ்ண ஸ்திதி காரணமாகவேனும், முன் முறைக்குப் பின் முறையில் சப்தத்தில் மிகச் சிறிதளவேனும் மாறுதலைக் கொடுக்காமல் இருக்காது. இதைப்போலவே ரேடியோ, டெலிவிஷன், சினிமாபிலிம் முதலிய வற்றிலும் உணரலாகும்.

மேலும் இயற்கையில் ஆண்டவனாலேயே படைக்கப்பட்டு, ஜீவநாடியாக ஆண்டவனே உள்ளிருந்து இயங்க வைத்துக்கொண் டிருக்கும் நமது உடலில் அமைந்துள்ள இரு கண்களைப் பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். தன்மையிலும், பார்வையிலும், பிரகாசத் திலும் சிறிதளவாயினும் ஒரு கண்ணுக்கு மறுகண் மாறுபட்டேதான் இருக்கும்.

இவைகள் சாதாரண ஆராய்ச்சியாகத் தோன்றலாம். ஆனால், இத்தகைய தத்துவ ஆராய்ச்சிகளின் தன்மையால் தான் எல்லாம் வல்ல, தனிப்பட்ட சக்தி ஒன்று உண்டு என்ற நம்பிக்கை உதய மாகும்.

ஆகையால் இப்பிரபஞ்சத்தில் ஒன்றைப்போலவே மற்றொன்று எப்பொழுதும் எங்கும் எதிலும் இல்லவே இல்லை என்பது உண்மை யாகின்றது.

சிறந்த பகுத்தறிவைக் கொண்டு தெள்ளத் தெளிய ஆராய்ந் தால் ஒப்புயர்வற்ற, அரும்பெரும், பழம்பொருளாகிய மறைந்து கிடக்கும் அற்புதப் புதையலை அறியமுடியும். அந்தப் புதையலைத் தான் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும் ஐம்பெரும் பூதங்கள் இடைவிடாமல் காவல் காத்துக்கொண்டு, நம்மை அடைய ஒட்டாமல் தடுத்து நிறுத்தி சர்வாதிகார ஆட்சிபுரிந்து கொண்டு இருக்கின்றன.

அத்தகைய பஞ்சபூதங்களை அடக்கி, வெல்லுவதற்குண்டான நமசிவய என்னும் அஞ்செழுத்து மந்திரவாளினை உபயோகித்து, முயற்சி செய்யும் சாதனைகள் மூலமாகத்தான் நாம் வெற்றியடைய முடியும்.

அத்தகைய சாதனைகளுக்குண்டான, வழிமுறைகளைத் தக்க குருநாதரின் திருவருள் மூலமாக ஞானோபதேசமாகப் பெற்று முறை பிசகாமல் ஆராதனை செய்யத் தக்கதாகும்.

"அவனன்றி ஓரணுவும் அசையாது" என்கின்ற ஆன்றோர் வாக்குப்படி இவ்வுலகில் கோடானுகோடி விசித்திர பேதாபேதங்களையும் விபரீத, அற்புத நிகழ்ச்சிகளையும், எதிர்மறை உடன்பாட்டு சக்திகளின் அடிப்படையில் உண்டாக்கிக் கொண்டிருப்பது, இந்த பஞ்சபூத சக்திகளின் செயல்களேயாகும்.

இவ்வுலகில் காண்பனவெல்லாம் தோன்றி மறையக்கூடியவைகளாகவே இருக்கின்றன. மெய்யென நம்பினவைகளெல்லாம் பொய்யாகின்றன. அதனாலேயே இவ்வுலகு மாயா உலகம் எனப்படுகின்றது.

ஆனால் பேதாபேதமின்றி ஒன்றுவது எது? தோன்றி மறையாமல் முக்காலமும் சாசுவதமாக உண்டு என்பது எது? என்கின்றதான கேள்விகள் இவ்விடத்தில் உண்டாகின்றன.

அதுவே இப்பிரபஞ்சமாயா காரியங்களுக்கெல்லாம் அப்பாலுக் கப்பாலாய், சர்வமும் ஒன்றேயாய், ஆதியும் அந்தமும் இல்லாத அழியாவஸ்துவாகிய பரம்பொருள் எனப்படும் கடவுளாகும். அதாவது எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பழம்பொருள் சக்தியாகும்.

"மண் எழுந்தும், நீர் எழுந்தும் தீ எழுந்தும் வாய்வு எழுந்தும்
விண் எழுந்தும், கடி ஒருவீடாகி – நண்ணரிய
மாயம் எல்லாம் உண்டாக்கி வைத்தான் காண்நெஞ்சே, இக்
காயம் எல்லாம் நானெக் கருது.

## 4. ஐந்தொழில்களும் பஞ்சமூர்த்திகளும் (i)

இப்பிரபஞ்சத்தில், உடன்பாட்டுச் சக்திகளையும் எதிர்மறைச்சக்திகளையும் அடிப்படையாகக் கொண்டு, சகலவற்றையும் இயங்கச்செய்து கொண்டிருப்பதற்கு காரண காரியம் ஆக இருப்பது பஞ்சபூதங்களின் பலவிதமான மாறுபட்ட சக்திகளே யாகையால் அவைகளை அடக்கி ஒடுக்கிக் கட்டுப்படுத்திக்கொண்டு தீய வினைகளை விலக்கவும்' தூய வினைகளை ஆற்றவும், தக்க கருவியாக இருக்க வல்லமையுள்ளது ந–ம–சி–வ–ய என்னும் மூலமந்திர எழுத்துக்களின் அற்புத சக்திகளேயாகும்.

பஞ்சாட்சர மந்திர சக்திகளுடைய மகத்துவங்களைப் பற்றி அளவிட்டுக் கூறவே முடியாது. அவ்வளவு வல்லமை பொருந்திய மாபெரும் சக்திகளைக் கொண்டதாகும்.

"ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது" என்கின்றபடி ஏட்டில் எழுதப்பட்டிருப்பதைப் படித்துவிட்டு பள்ளிப் பிள்ளைகள் எழுத்துக் களின் மந்திர தத்துவ மார்க்கங்களை, குரு முகாந்திரமாய் தெரிந்து கொள்ளாமல் வெறுமனே உச்சரிப்பதால் பயன் என்றுமே வராது இதுவே "குரு இல்லாத வித்தை, குருட்டு வித்தையாகும்" எனப் பழமொழியாகச் சொல்லப்படுவதாகும்.

ஆனால் உண்மையான தெய்வ நம்பிக்கையுள்ள நன்மாணுக்கன் ஒருவனுக்கு தெய்வீக அருள்பெற்ற சற்குருநாதர் ஒருவர் கிடைக்கும் பாக்கியம் பெற்றால் அம்மாணுக்கனின் பக்குவமறிந்த குருநாதர், தாமாகவே மனம் உவந்து கொடுத்தருளும் தத்துவ ஞானுபதேசத்தின்படி வழிமுறை பிசகாமல் பக்தி உணர்ச்சியுடன் உச்சரிப்பதால் இப்பஞ்சாட்சர மந்திர அரும்பெரும் சக்திகள் கட்டுப்பாட்டுடன் தன் வயப்பட்டு எந்தவித காரியங்களையும் சாதித்துச் செய்து முடிக்கக் கூடிய சிறந்த பலன்களைத் தரத்தக்கனவாகும்.

ந–ம–சி–வ–ய என்கின்ற மந்திர ஐந்தெழுத்துக்களை இகலோக காரிய சித்திகளுக்கும், சி–வ–ய–ந–ம என்பதாக எழுத்துக்களை மாற்றி பரலோக காரிய சித்திகளுக்கும் மேலும் 1. ந–ம–சி–வ–ய, 2. சி–வ–ய–ந–ம, 3 சி–வ–ய–சி–வ, 4. சி–வ–சி–வ, என நான்கு வகையாக. ஆண்டவனை வழிபடுவதற்குமாக எழுத்துக்களை மாற்றியும், கூட்டியும், முறை பிசகாமல் உச்சரித்து உரு வேற்றுவதால் அவனருளால் சகல சித்திகளையும் அடைய முடியுமென தலைசிறந்த தமிழ் மறையாகிய திருமந்திரத்தில் திருமூல முனிவரால் கூறப்பட்டிருக்கின்றது.

"சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்போடு,
உறற்பால ஐந்தெழுத்தின் உண்மை"

என்கின்றபடி ந-ம-சி-வ-ய என்னும் மந்திரமாக ஒலித்து ஐந்து எழுத்துக்களும் தமிழ்ச் சொற்களாகிய 1. நடப்பு, 2. மறைப்பு, 3. சிறப்பு, 4. வனப்பு, 5. யாப்பு, ஆகியவற்றின் முதல் எழுத்துக்களால் அமையப்பட்டனவாக இருப்பதால் தமிழ் மொழிக்கே சிறப்பைத் தருவன வாகும்.

மேலும் ந-ம-சி-வ-ய என்னும் எழுத்துக்கள் முறையே 1 தம்பனம், 2. மோகனம், 3. மாரணம், 4. உச்சாடனம், 5. வசியம் எனவும், 1. மலம், 2. மாயை, 3. சிவன், 4. அருள், 5. ஆன்மா எனவும், 1. நனவு, 2. கனவு, 3. உறக்கம், 4. பேருறக்கம், 5. உயிர்ப்பு அடங்குதல்-எனவும் பல பிரிவுகள் கொண்ட பலவித கருத்தும் பொருள்களும் அடங்கியிருப்பதாக தமிழ் மறைகளில் காணப்படுகின்றன. அவைகளைப் பற்றி சந்தர்ப்பம் வாய்க்கும் பொழுது அடுத்து வரும் கட்டுரைகளில் விளக்குவோமாக.

"நகார மகார சிகார நடுவாய்,
வகார இரண்டும் வளியுடன் கூடி,
ஒகார முதற் கொண்டு ஒருகால் உரைக்க.
மகார முதல்வன் மனத் தகத்தானே"

என்கிறபடி ந-ம-சி-வ-ய என்னும் பஞ்சாட்ரத்தில் சிகரம் நடுவு இரண்டுவளி என்பது வலது இடது மூச்சானபிராண வாயுக்களாகும். கூடி என்பது ரேசக, பூரக கும்பகம் செய்து பிராணவாயுவை சுழி முனையில் ஏகாக்கிரசித்தத்தால் நடுநிலை நாட்டுவதாகும். அதன் பின் ஓம் நமசிவய என்று பஞ்சாட்சர பிரணவத்தை உள்ளன்புடனும், பக்தி உணர்ச்சியுடனும், ஒருமனதுடனும் ஒரு முறை உச்சரித்தால் மகார முதல்வனாகிய சிவன், ஓதுவார் நெஞ்சிலே குடியேறி அருள் புரிந்து கொண்டிருப்பன் என்பதாகும்.

அத்தகைய நமசிவய எனப்படும் சிவசக்தியானது இப்பிரபஞ்சம் எங்கும் நீக்கமற நிறைந்து தன்னருளால் தானேபுரியும் தொழில்கள் ஐந்து வகையாகும். அவை 1. படைத்தல், 2. காத்தல், 3. துடைத்தல், 4. மறைத்தல், 5. அருளல் எனப்படுவனவாகும்.

இக் காரியங்களை தனித்தனியே கவனித்துவரும் கர்த்தாக்கள் ஐவர்களாகும். 1. பிரம்மா, 2. விட்டுணு, 3. ருத்திரன் 4. மகேசுவரன், 5. சதாசிவன், என்கின்ற தத்துவப் பெயர்களால் குறிப்பிடும் பஞ்ச மூர்த்திகளாகும்.

"நவ்வெழுத்தே பிரமனாகும், அதில்
நாராயண மவ்வெழுத் தானே;
சிவ்வெழுத்தே தெய்வருத்திரனும் இன்னும்
செப்புவான் கேளடி ஞானப் பெண்ணே.

"செப்பவே வவ்வு மகேசுரனும் வட்டம்
சேர்ந்துப சாரம் சதா சிவனும்
தப்பிலா ஐந்தெழுத்தாலே சராசரம்
தங்கியிருந்தது ஞானப் பெண்ணே.

என்பதாக பண்டை சித்தர்கள் பாடியுள்ள படியும்,

ந-எழுத்துக்குரிய படைத்தல் தொழில் புரியும் பிரம்மன்
ம-எழுத்துக்குரிய காத்தல் தொழில் புரியும் விட்டுணு
சி-எழுத்துக்குரிய அழித்தல் தொழில் புரியும் ருத்திரன்
வ-எழுத்துக்குரிய மறைத்தல் தொழில் புரியும் மகேசுரன்
ய-எழுத்துக்குரிய அருளல் தொழில் புரியும் சதாசிவன்

ஆக பஞ்ச மூர்த்திகளாக ஆன்றோர்களால் ஒவ்வொரு தொழிலுக்கும், தனித்தனியே வகுத்து அமைக்கப்பட்டிருக்கும், தத்துவப் பெயர்களைப்

போற்றியும் பஞ்சாட்சர மந்திரங்களை உச்சரித்தும் வணங்கப்பட்டு வருகின்றன.

1. பிரம்மா, 2 விட்டுணு, 3. ருத்திரன், 4. மகேசுரன் 5. சதாசிவன், ஆகிய பஞ்ச மூர்த்திகளும் முறையே 1. பிருதிவி (மண்), 2. அப்பு (நீர்), 3. தேயு (நெருப்பு), 4. வாயு (காற்று), 5. ஆகாயம் (வானம்) ஆகிய பஞ்ச பூதங்களை அடக்கியாளும் தேவர்களாக மனக் கண்ணில் உருவகப்படுத்திக்கொண்டு, அவைகளுக்கே உரித்தான நமசிவய என்னும் பஞ்சாட்சர மந்திரத்தை குருநாதரால் உபதேசிக்கப்பட்ட முறைப்படி பிசகாமல் உச்சரித்து உருவேற்றி ஆண்டவனை வணங்கி அவனருளால் சகல சித்தியும் அடையும் மார்க்கமே தமிழ் மறையின் தலை சிறந்த முறையாகும்.

## 5. ஐந்தொழில்களும் பஞ்சமூர்த்திகளும் (ii)

ந-ம-சி-வ-ய என்னும் பஞ்சாட்சர சூட்சும ரூபியாகிய பரமசிவம் தன்னருளால் பஞ்சபூதசக்திகளை அடிப்படையாகக் கொண்டு செய லாற்றும் ஐந்தொழில்களாகிய 1. படைத்தல், 2. காத்தல், 3. துடைத் தல், 4. மறைத்தல், 5. அருளல் ஆகியவைகள் பற்றியும், அவ்வைந் தொழிலுக்கும் கர்த்தாக்களான 1. பிரம்மா, 2. விஷ்ணு, 3. ருத்திரன் 4. மகேசுரன், 5. சதாசிவன் ஆகிய பஞ்சமூர்த்திகளைப் பற்றியும் சுருக்கமாக முன்கட்டுரையில் விளக்கப்பட்டிருக்கிறது.

பஞ்சபூதங்களுக்கு இயற்கையாகவே பஞ்சவர்ணங்கள் அமைக் கப்பட்டிருக்கின்றன. அதாவது,

1. பிருதிவி பூதத்திற்கு — பொன்மை (மஞ்சள் நிறம்)
2. அப்பு பூதத்திற்கு — வெண்மை (வெள்ளை நிறம்)
3. தேயு பூதத்திற்கு — செம்மை (சிவப்பு நிறம்)
4. வாயு பூதத்திற்கு — பசுமை (பச்சை நிறம்)
5. ஆகாய பூதத்திற்கு — கருமை (கருப்பு நிறம்)

ஆகியவைகளாகும்.

ராஜ யோகத்துக்குரிய பிராணயாம முறைகளை குருநாதர் மூலமாக உபதேசம் பெற்று பல வருடங்கள் முறைபிசகாமல் சாதனை செய்துவரும் ஒரு மாணாக்கன் பிராணயாம யோகத்தின்போது பிராணனாகிய சுவாசத்தை நாசிவழியாக நன்றாய்ப் பூரகம்செய்து மனத்தை ஒருமையுடன் கூட்டி அச்சுவாசத்தைக் கும்பகம்செய்து சுழிமுனை என்னும் புருவமத்தியில் நிலைகாட்டி புறக்கண்களை மூடிய

நிலையில் மனக்கண்ணுல் சுழிமுனைமூலமாக நாட்டத்தை செலுத் தினுல் விளக்கொளிபோன்ற ஒரு பிரகாசம் (ஜோதி) காணக்கூடும்.

மேற்கொண்டும் உற்றுற்று நோக்கினுல் பலவித ரூப பேதங் களுடன் கூடிய பஞ்ச வர்ணங்களையும் நல்ல பிரகாசத்துடன் காண லாகும். இத்தகைய பிராணுயாம யோகாப்பியாசத்தில் முதிர்ந்த தேர்ச்சி பெற்றவர்கள் மனத்தை ஏகாக்கிர சித்தத்தில் நிறுத்தி நோக்கினுல் அகக்கண்களால் மட்டும் அல்லாமல் விழிப்பு நிலை யிலும், எந்நேரத்திலும் சர்வசாதாரணமாய் இப்பஞ்ச வர்ணங் களையும் புறக்கண்களாலும் காணக்கூடும். ஆனுல் கண் இமை கொட்டாத விழிப்பு நிலையில் நோட்டத்தை செலுத்த வேண்டும். இதுவே யோகாப்பியாசத்தின் சிறந்த அம்சமாகும்.

இப்பிரபஞ்சத்தில் அண்ட பிண்ட சராசரங்கள் சகலவற்றிலும் இப்பஞ்ச வர்ணங்கள் கலந்தே காணப்படுகின்றன.

பூமியை ஆழமாகத் தோண்டினுல் மண், கல் உலோகங்கள், முதலியவற்றிலும் பஞ்சவர்ணங்கள் காணப்படுகின்றன.

மரம், செடி, கொடி முதலிய தாவரங்களிலும் அவற்றில் காய்க் கும் இலை, பூ, காய், பழம், வித்து முதலியவற்றிலும் பஞ்சவர்ணங் கள் காணப்படுகின்றன.

ஜீவராசிகளாகிய பாம்பு, பூரான், புழு, மீன், தவளை, நண்டு, சங்கு, சிப்பி, ஆகிய ஊர்வன, நீர் வாழ்வனவற்றிலும் மயில், கிளி, கோழி, கருடன், குருவி, வெட்டுக்கிளி, பட்டுப்பூச்சி, காக்கை, கொக்கு, முதலிய பறப்பனவற்றிலும், மான், புலி, குதிரை, ஆடு, மாடு, மனிதன் அகிய நடப்பனவற்றிலும் இப் பஞ்சவர்ணங்கள், தனித்தனியாகவோ, சேர்ந்தோ காணப்படுகின்றன.

மேலும் வானத்தில் சூரிய உதயத்திலும், அஸ்த மனத்திலும், வானவில்லிலும் இப் பஞ்சவர்ணங்களையும் காண்கின்ருேம்.

பொதுவாக சொல்லப் போனுல் இப்பிரபஞ்சத்தில் பஞ்சபூத தத்துவமாகிய பஞ்சவர்ணங்களுக்குச் சம்பந்தப்படாத அந்நிய மான ஒரு பொருளும் இல்லைனலாம். பஞ்சபூத சக்திகளுக்குரிய தத்துவங்களாக பஞ்சவர்ணங்களும் தோன்றி அமைந்திருப்பதின் காரணமாகவே, தமிழ்ப் பழங்குடிமக்கள், பஞ்சவர்ணக் கற்கள் பதியவைத்த ஆரபணங்களையும், பஞ்சவர்ண நூல் கயிற்ருல் கோர்க்கப்பட்ட பஞ்சவர்ண மணிகளையும். பஞ்ச வர்ணங்களால் ஆக்கப்பட்ட ஆடைகளையும் தொன்றுதொட்டு அணிந்து கொள்ளும் பழக்க வழக்கங்கள் உண்டாயின.

இத்தகைய பஞ்சவர்ண ஆடை, ஆபரணங்களை அணிந்து கொள்வதால் பஞ்சபூத சக்திகளும் தம் வசப்பட்டு தீமைகளை நீக்கி, நன்மைகளைச் செய்யும் என்ற நம்பிக்கையுடன் கூடிய சித்தாந்த மாகும்.

கிரகதோஷ பரிகாரங்களுக்காக பஞ்சவர்ணங்களையும் தனித் தனியே சாதத்துடன் சேர்த்துப் பிசைந்து ஒரே தட்டில் ஐந்து வர்ண விளக்குகளாக செய்தமைத்து மக்களின் முன் வலம் இடமாக மும்மூன்று முறைகள் சுற்றிவிட்டு அப்பஞ்சவர்ண சாதத்திலான விளக்குகளை முச்சந்தியில் வைத்துவிட்டு வரும் வழக்கத்தையும் நம் தமிழ் நாட்டில் காண்கின்றோம்.

மேலும் மக்களின் திருஷ்டி பரிகாரங்கள் செய்யும் ஆரத்தி எடுப்பதற்காக ஒரு தட்டில் தண்ணீரை ஊற்றி,

1. பிருதிவி தத்துவத்திற்குரிய பொன்னிறமாகிய மஞ்சள் தூளையும்.
2. அப்பு தத்துவத்திற்குரிய வெண்மை நிறமாகிய சுண்ணும் பையும்.
3. தேயு தத்துவத்திற்குரிய செம்மை நிறமாகிய மிளகாயையும்.
4. வாயு தத்துவத்திற்குரிய பசுமை நிறமாகிய வெற்றிலை யையும்.
5. ஆகாய தத்துவத்திற்குரிய கருமை நிறமாகிய அடுப்புக் கரித் துண்டையும்.

அதில் போட்டு கலக்கிக்கொண்டு வலம்புரியாகவும், இடம்புரியாக வும் மும்மூன்று சுற்றுகள் சுற்றிவிட்டு ஆள்காட்டி விரலைக்கொண்டு தட்டிலுள்ள நீரைத்தொட்டு, மக்களின் நெற்றியில் பஞ்சவர்ணத் திருநீர் திலகமிட்டவுடன் அந்நீரை வீட்டின்முன் வாசலில் கொண்டு போய்க் கொட்டிவிட்டு வரும் வழக்கத்தையும் காண்கின்றோம்.

ந–ம–சி–வ–ய என்னும் பஞ்சாட்சரங்களில் முதல் எழுத்தான ந–வுக்குரிய பிருதிவி பூததத்துவ வர்ணமாகிய பொன்மை (மஞ்சள்) நிறமே. எல்லா நிறங்களையும்விட மிகவும் சிறந்த தெய்வீக மகத் துவம் பொருந்தியதாகும்.

அத்தகைய மஞ்சள் நிறமான எலுமிச்சம் பழத்தை தெய்வ வழிபாட்டுக்குப் படைக்கிறோம். மந்திர சூன்ய சக்திகளுக்கும் அப் பழத்தையே உபயோகிக்கின்றார்கள். பக்தர்முதல் குருநாதர் வரையும், துறவி முதல் வேந்தன் வரையும் ஆகிய பெரியவர்களுக்கு எலுமிச்சம்பழம் கொடுக்கப்பட்டால் அன்புக் காணிக்கையாக, மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளும் வழக்கமாக இருந்து வருகின்றது.

மேலும் மஞ்சள் நிறமான மஞ்சள் கிழங்கானது மகத்துவம் பொருந்திய அரும்பெரும் மூலிகையாகும். அது ஆண்டவனல் நமக்கு அளிக்கப்பட்ட வரப்பிரசாதமாகும். நோய் நொடி, பில்லி சூன்யம், ஏவல் வசியம், திருஷ்டி, தோஷம், முதலியவற்றிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காகவே நம் தமிழ்நாட்டுக் குலமாதர்கள் மஞ்சளை அரைத்துத் தேய்த்துக் குளித்து வரும் பழக்கவழக்கங்களை அந்த நாள் முதல் இந்த நாள் வரை கையாண்டு வருகிருர்கள்.

மஞ்சள் மங்களகரமானது. ஆகையிஞலேயே திருமணம் முதலிய எல்லாக் காரியங்களிலும் பலவித சடங்குகளுக்கும், பலவித முறையில் மஞ்சளை உபயோகப்படுத்தும் பழக்கவழக்கங்களை நமது பெரியோர் கள் உண்டாக்கியுள்ளார்கள் என்கின்ற உண்மைத் தத்துவங்களை ஆராய்ந்து அறிந்து கொள்வீர்களாக.

## 6. பஞ்ச பூதங்களின் பஞ்ச வடிவங்கள் (i)

பஞ்சபூதங்களுக்குரிய, பஞ்சவடிவங்களும், ஆதியிலே, ஆதி சக்தியால் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. அதாவது,

1. பிருதிவி (மண்) பூதத்திற்கு, சதுரம் □ வடிவம்,
2. அப்பு (நீர்) பூதத்திற்கு, பிறை வட்டம் ⌣ வடிவம்,
3. தேயு (நெருப்பு) பூதத்திற்கு, முக்கோணம் △ வடிவம்
4. வாயு (காற்று) பூதத்திற்கு அறுகோணம் ▽ வடிவம்,
5. ஆகாயம் (வானம்) பூதத்திற்கு, வட்டம் O வடிவம்,

ஆக, ஐந்து வடிவங்களாகும்.

1. பஞ்சபூதங்களில், பிருதிவி என்பதை, பூமி எனப் பொருள் கொள்வாரும் உண்டு. பூமி என்பது, உருண்டை வடிவமாகவல்லவா இருக்கின்றது? அப்படியிருக்க எப்படி நாற்சதுர வடிவம் ஏற்பட் டிருக்க முடியும், என்று சந்தேகப்படுவோரும் உண்டு.

கருத்தைக் கருத்தாட்டிஞல்தான், உண்மைப்பொருள் விளக் கத்தை அறிந்துகொள்ள முடியும்.

பூமி, உருண்டை வடிவமாகத் தானிருக்கின்றது என்பது உண்மையே. ஆனல், சமுத்திர நீர்ப்பரப்பும், 'மண் நிலப்பரப்பும், ஆக இரண்டுவிதப் பரப்புகளும் கொண்டதே, உருண்டையான பூமி யாகும். நீர்ப்பரப்புக்கு, அப்பு பூதம் என்ற பெயர் கொடுக்கப்பட்டு, தனிப்பூதமாகின்றது. நீர்ப்பரப்பை நீக்கி, மீதி நிலப்பரப்பாகிய மண்ணேயே பிருதிவி பூதத்துக்குரிய தத்துவப் பொருளாகக் கருதப் படுகிறது என்பது சித்தாந்தமாகும்.

மண் கல்லாகிய, நிலப்பரப்பிற்கே திசைகளைச் சொல்லமுடியும். கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்னும் நான்கு திசைகளைக் குறிக்கும், நான்கு நேர்க்கோடுகளே சேர்ந்து, நாற்கோண சதுர வடிவம் உண்டானதற்குக் காரணமாகின்றது.

மேலும், பிருதிவி பூதத்திற்குரிய, படைத்தல் தொழில் புரியும், பிரம்மாவுக்கு நான்முகன், என்ற பெயர் வழங்கப்படுகின்றது.

பிரம்மாவுக்கு, 1. கிழக்கு முகம், 2. மேற்கு முகம், 3. தெற்கு முகம், 4. வடக்கு முகம், எனச் சொல்லப்படுவது, நான்கு திசைகளைக் குறிப்பிடும், தத்துவப்பொருளாக விளங்க வைக்கும் வேதாந்தக் கருத்தாகும். 2. அப்பு பூதத்தின் பிறைச் சந்திர வடிவமானது வட்டவடிவமானது. பூமியின்கண் அமைந்துள்ள, நிலப் பரப்பை நீக்கி, நீர்ப்பரப்பை மட்டும், அரைவட்ட வடிவில் குறிப்பிடுவதாகும்.

3. தேயு பூதத்தின் முக்கோண வடிவமானது :–நெருப்பு எரியும் பொழுது, அடிமட்டும் பெருத்தும், மேல் மட்டும் சிறுத்தும் கூர்மையாகக் காணப்படுவதைக் குறிக்கின்றது.

4. வாயு பூதத்தின் அறுகோண வடிவமானது :– காற்று வீசுவதாலேயே, நெருப்புக்கண்டமானது, முக்கோணம் △ வடிவமாக, தணல்விட்டு எரிகிறது. காற்றானது மேலிருந்து கீழ்நோக்கி வீசும் பொழுது, தலைகீழ் முக்கோண ▽ வடிவில், எரிகின்றது. காற்று ரூபத்தில் ஏற்படும் இரண்டுவித முக்கோணங்களும், ஒன்றின்மேல் ஒன்று சேர்வதால், அறுகோண வடிவமாகின்றது. மேலும் ஆறு பக்கமும் காற்று சுழல்கிறது.

நேர் முக்கோண வடிவத்தை △ சிவன் சொரூபமாகவும் கீழ் நோக்கும் முக்கோண ▽ வடிவத்தை சக்தி சொரூபமாகவும் கொண்டு அத்தகைய சிவசக்தி சொரூப வடிவங்கள் இரண்டும் பொருந்தியதே, அறுகோண வடிவமாகிய, உயிர்க்காற்றாகிய, பிராண வாயுவாகக் கொள்ளத்தக்கது என வேதாந்தம் கூறுகின்றது.

5. ஆகாய பூதத்தின் வட்ட வடிவமானது மண் தூசியும், நீராவியும், நெருப்பும் புகையும் காற்றுடன் கலந்து, பத்துத்திசையும் பரவியடித்துக்கொண்டு, சுருள் சுருளாக உயரக்கிளம்பி, மேகமண்டலத்தையும் கடந்த, வானமண்டலத்தில், வட்டவடிவமாகச் சுற்றிக் கொண்டிருக்கின்றது என்கிறதைக் குறிப்பிடுவதாகும்.

இப்பிரபஞ்சத்தில் அணுக்கள் முதல் அண்டங்கள் வரை, சகலமும், உருண்டை வடிவத்துடன் தன்னைத்தானே சுற்றிக்கொண்டும்

ஒன்றையொன்று வட்டவடிவமாகச் சுற்றிக்கொண்டும் இருப்பதால், அத்தகைய சில இயக்கங்களையும், வெட்டவெளியான வானத்தில் கட்டுப்படுத்தி அடக்கிக் கொண்டிருக்கும் ஆதிசக்தியின் தத்து வத்தைக் குறிப்பிடுவது, வட்டவடிவமாகும் என வேதாந்தம் கூறுகின்றது.

பரமாணுக்களின் சக்தியால், பிரபஞ்சத்தில் எங்கும் உண்டான அண்டபிண்ட – சராசரங்கள் எல்லாம், வட்டவடிவமேயாகும்.

உதாரணமாக, பஞ்சபூதங்களாகிய பஞ்சவடிவங்களை, அட்டைக் காகிதத்தால் செய்து, மத்தியில் துவாரமிட்டுத் தனித்தனியே ஐந்து கம்பிகளில் செருகி, காற்றாடி மாதிரி சுற்றும்படி செய்தால், சதுரம், அரைவட்டம், முக்கோணம், அறுகோணம், வட்டம் ஆகிய 5 வடிவங் களும், கண்ணுக்கு வட்டமயமாகவே தோற்றமளிக்கும்.

மேலும், ஒரு பந்தலில் வேயப்பட்ட தென்னங்கீற்றுக்களில் உள்ள துவாரங்களின் வழியாகச், சூரிய கிரணம் பாய்ந்து, கீழே நிலத்தில் விழுவதை ஆராயுங்கள். எல்லாம் வட்ட வடிவமாகவே யிருக்கும். ஆனால் கீற்றுக்களில் உள்ள துவாரங்களை, மேலே நன்றாய் கவனித்துப் பாருங்கள். சதுரம், முக்கோணம் முதலிய கோணல்மாணலான, பலவித வடிவங்களாக இருக்கும்.

ஆகையால், எல்லாம் வட்டமயம், எல்லாம் வட்டத்திற்குள் அடக்கம், என்பது அரும்பெரும் ரகஸ்யமாகும். இத்தகைய ஆராய்ச்சிகளைச் செய்யும், பகுத்தறிவு உள்ளவர்களுக்கே விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம், தத்துவ ஞானம் முதலியவைகள் உதயமாகும். தவிர, பஞ்சபூதங்களுக்குரிய, பஞ்சவர்ணக் கற்களாலான, பஞ்சபூத வடிவங்களை பஞ்சவர்ணக் கற்களில் தயார் செய்து, பொன்வெள்ளி யில் பதிய வைத்துச் கருப்புக் கயிற்றில் கோர்த்து, அதை ரக்ஷாபந் தனமாகப், பண்டைத் தமிழ் மக்கள், கழுத்தில் அணியும் வழக் கத்தைக் கையாண்டு வந்தார்கள்.

மேலும், மோடிவித்தை, ஜாலவித்தை, கண்கட்டு வித்தை, பீதாம்பர வித்தை முதலியவைகளைச் செய்து காட்டிக் கொண்டுவரும் வித்தைக்காரர்கள், பஞ்சவடிவங்களை, உலோகங்களில் செய்து, கழுத் தில் அணியும் வழக்கத்தைக் கொண்டிருப்பதாகவும், ஆராய்ந்து அறிவீர்களாக.

ஆகையால், ராஜயோகத்திற்குரிய பிராணாயாம முறைகளை, குருநாதர் மூலமாக உபதேசம் பெற்றுத், தன்னம்பிக்கையுடனும், பல வருடங்கள் முறை பிசகாமலும், யோக சாதனைகள் செய்து கொண்டு வரும் ஒரு மாணாக்கனுக்கு, முன் கட்டுரையில் கூறியுள்ளபடி, பஞ்ச

பூதங்களுக்குரிய பஞ்சவர்ணங்களையும் அகப்புறக்கண்களால் கண்டறிவதைப் போலவே, பஞ்சவடிவங்களையும் காணலாகும். அதோடு ஒவ்வொரு வடிவத்தையும் பஞ்சவர்ணங்களிலும் காணலாகும்.

இத்தகைய சாதனைகளே தத்துவ ஞானமார்க்கமாகும். நாளடைவில் ஆத்மஞானசித்திகள் கைவசமாவதற்கும் குருநாதரின் அருள் பெற்றால் முடியக்கூடியதேயாகும்.

## 7. பஞ்ச பூதங்களின் பஞ்ச வடிவங்கள் (ii)

தெற்குத்தமிழ்நாடே மிக மிகப்பழமையான நன்னாடாகும். நில வளத்தாலும், நீர்வளத்தாலும், குடி வளத்தாலும், மொழி வளத்தாலும், கடவுள் கொள்கையாலும், குரு சிஷ்யப் பண்பாட்டாலும் நலம் பல அளித்து மேன்மையுற்று, அன்றும், இன்றும், என்றும், உலக முழுமைக்கும் தலைசிறந்து நிற்பது தமிழ்நாடேயாகும்.

செந்தமிழும், சிவநெறியும், ஒருங்கே, உடலும் உயிரும் போலப் பிரிவின்றி, இணைந்து, இயங்கும் அபூர்வத் தன்மையுடையது நம் நாடாகும்.

தமிழ் மொழியானது, ஆதியிலே முதல் முதலாக உருவ எழுத்துக்களையும், பின்பு கோல் எழுத்துக்களையும், பின்பு வட்ட எழுத்துக்களையும், பின்பு சதுர எழுத்துக்களையும் கொண்டதாக, மாறுதல்கள் அடைந்துகொண்டே வந்திருப்பதாகப் புராணக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்கள் கூறியிருக்கிறார்கள்.

கோல் எழுத்துக் காலத்திலும், வட்ட எழுத்துக் காலத்திலும், தமிழ் மொழி, 15 உயிர் எழுத்துக்களும், 36 மெய் எழுத்துக்களும் ஆக 51 எழுத்துக்களைக் கொண்டதாக வழங்கி வந்து கொண்டிருந்ததாகவும், பின்பு இராமாயண பாரத காலத்திற்குப் பிறகு, சதுர எழுத்துக்கள் ஆரம்பமாகி அ–ஆ–இ–ஈ முதலான 12 உயிர் எழுத்துக்களையும்; க–ங–ச–ஞ முதலான 18 மெய் எழுத்துக்களையும், ஃ என்ற ஆய்த எழுத்து ஒன்றையும் சேர்த்து, 31 எழுத்துக்களை மட்டும் கொண்டதாகப், பெரியோர்களால் வகுக்கப்பட்டும் நாளதுவரை பழக்க வழக்கங்களில் கையாண்டும் செந்தமிழ் மொழி என்பதாகத், தற்கால நடைமுறையிலும், இருந்து கொண்டு வருகின்றதென்றும் தமிழ்மொழி ஆராய்ச்சியாளர்கள் முடிவு கட்டிக் கூறுகிறார்கள். ஆகையால் நாம் தற்சமயம் சதுர எழுத்துக்காலத்தவர்களாகின்றோம்.

எல்லா மறைகளிலும் முந்தியதும், மிக மிகச் சிறந்ததும் அரும் பெரும் பொருள் உண்மைகள் கொண்டதுமான தமிழ் மொழித்

திருமறையாகிய திருமந்திரமானது, சுமார் ஏழு எட்டாயிர வருடங்களுக்கு முன்பு சித்தாதி சித்தரான தவத்திரு திருமூலமுனிவருடைய அருள் வாக்கினால் உண்டானதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்கள்.

அக்காலம், வட்ட எழுத்துக் காலமாகையால் அது சமயம் பழக்க வழக்கத்தில் இருந்தபடி 16 உயிர் எழுத்துக்களையும், 35 மெய் எழுத்துக்களையும் ஆக 51 அட்சரங்களைக் கொண்டே தமிழ்த் திருமறையாகிய திருமந்திரமானது உற்பத்தியாகி மூவாயிரம் பாடல்களாக முற்றுப்பெற்ற, ஒப்புயர்வற்ற நூல் ஒன்றேயாகும்.

இத் திருமந்திர நூல் ஒன்றே தமிழ் வேதாகம முழுமுதற் கருவூல நூலாகும்.

ஆதிக்கும் ஆதியிலே, அணுவுக்குள் அணுவாகி நின்ற ஆதி பராசக்தியிலிருந்து, முதன் முதலாக உண்டான ஒலிகளின் பேதா பேத தன்மைகளை யனுசரித்தும், அவைகளின் சக்திகளுக்கு ஏற்ற வாறும், தத்துவ ஞானிகளால் காரண காரியமான உச்சரிப்பு களுடன் கூடிய, 51 அட்சரங்களாக உருவாக்கப்பட்டன.

ஆகையால் அவ்வட்சரங்கள் 51–உம், ஒலிகளுடன் கூடிய மந்திர உச்சாடன எழுத்துக்களாகவும், தமிழ்ச் சித்தர்களால் தொன்று தொட்டு கையாளப் பட்டு வருகின்றன.

இத்தகைய மந்திர எழுத்துக்களாகிய, 51 அட்சரங்களிலிருந்தே அவைகளின் தார தம்மியத்தை அனுசரித்து, உயிர் எழுத்துக்கள் 16 என்பதாகவும், மெய் எழுத்துக்கள் 35 என்பதாகவும் ஆன்றோர்களால் வகுக்கப்பட்டன வாகும்.

தமிழ் மொழியின் மெய் எழுத்துக்களாகிய 35இல் மிகவும் வல்லமையும் சக்தியும் கொண்டது ந–ம–சி–வ–ய என்ற 5 எழுத்து களாகும். இதுவே பஞ்சாட்சரம் எனப்படும். எல்லா மந்திரமாக விளங்குவது இப்பஞ்சாட்சரமே யாகும்.

உயிர் எழுத்துக்களாகிய 16இல், சிறப்பு மிக்கதானது அ இ உ எ ஒ என்ற எழுத்துக்களாகும். இவைகள் மெய் எழுத்துக் களுடன் கூடி உயிர்ப்பை யூட்டி உதவி புரிவன வாகும்.

மேலே கூறப்பட்ட 51 அட்சரங்களின் சக்திகளும் பஞ்சபூத சக்திகளுடன் கூடி இப் பிரபஞ்சத்தில் அண்ட பிண்ட சராசரங்கள் அனைத்திலும் இயங்கிக் கொண்டிருக்கின்றன என்பது சித்தாந்த மாகும்.

"ஓதும் எழுத்தோடு உயிர்கலை மூவைந்தும்
ஆதி எழுத்தவை ஐம்பதோடு ஒன்று என்பர்
சோதி எழுத்தின் நிலை இரு மூன்று உள
நாத எழுத்திட்டு நாடிக்கொள்வீரே (திருமந்திரம்)

அதாவது மந்திர உச்சாடனங்களுக் கெல்லாம் முதலாவதாக உச்சரிக்கப்படும் ஓங்காரத்துடன் ஏனைய உயிர் எழுத்துக்கள் மூவைந்து பதினைந்தும் கூடி மொத்தம் 16 உயிர் எழுத்துக்கள். அத்துடன் மெய் எழுத்துக்கள் 35-உம் சேர்ந்து மொத்தம் ஆதியில் உண்டான ஒலி எழுத்துக்கள் 51. இவையே ஐம்பத்தொரு அட்சரங்கள் எனப்படும்.

சோதி எழுத்தாகி (சி) அக்கினியின் சிவக்கொழுந்திற்கு நிலையங்கள் (இரு மூன்று) ஆறு, நம் உடலுக்குள் உள்ளன. அவைகள் (1) மூலாதாரம் (2) சுவாதிட்டானம் (3) மணிபூரகம் (4) அனுகதம் (5) விசுத்தி (6) ஆக்ஞை என்பனவாகும். ஓம் என்கிற, ஓங்கார நாதத்தை எழுப்பி, நாடத்தக்கதாகும். இம் முறையை குருநாதரின் உபதேச மூலமாக அறிந்துகொள்ள வேண்டும் என்பதாகும்.

## 8. பஞ்ச பூதங்களின் பஞ்ச வடிவங்கள்.

தமிழ் மொழியின் மெய் எழுத்துக்களாகிய 36இல் மிகவும் சிறந்த சக்தி வாய்ந்தவையான ந-ம-சி-வ-ய என்ற பஞ்சாட்சரங்களே மூல மந்திர எழுத்துக்களாகும்.

ந-ம-சி-வ-ய என்ற பஞ்சாட்சரமே பரமசிவனுடைய திருநாமம் என்றும் அப்பஞ்சாட்சர எழுத்துக்களே சிவசொரூப தோற்றம் என்றும் இப்பஞ்சாட்சர சக்திகளுக்குள் 51 அட்சரங்களின் சக்திகளும் 96 தத்துவங்களின் சக்திகளும் பஞ்சபூத சக்திகளும் உற்பத்தியாகி இப்பிரபஞ்சத்தில் அண்டபிண்ட சராசரங்கள் சகலவற்றையும் இயங்க வைத்துக் கொண்டிருக்கின்றன என்பதும் பண்டைய சித்தர்களின் சித்தாந்தமாகும்.

ஆகையால் ந-ம-சி-வ-ய என்னும் பஞ்சாட்சரங்களே வேதாந்தம், சித்தாந்தம், தத்துவ ஞானம், மெய்ஞ்ஞானம் முதலியவைகளுக் கெல்லாம் பொதுவான அடிப்படை மந்திரமாகும்.

பஞ்சாட்சர சக்திகளின் மகத்துவங்களுடன் அவைகளின் தத்துவார்த்தப் பொருள்களின் கருத்துக்களையும் அந்தரங்கமாக உள்ளடக்கியே பலவிதமான இதிகாசங்கள் புராணங்கள் காவியங்கள்

சித்திர சிற்பங்கள் முதலியவைகள் ஆன்ரோர்களால் கற்பனை செய்யப்பட்டன வென்பது பகிரங்க ரகஸ்யமாகும்.

" கலை உரைத்த கற்பனையே
நிலையெனக் கொண்டாடும்
கண்மூடி வழக்க மெல்லாம்
மண்மூடிப் போக "

என்பதாக ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் கூறியுள்ள கற்பனையாகப் புனையப்பட்ட பலவித இதிகாச புராண காவியங்களில் கூறப்பட்டிருப் பதைக் கொண்டு சித்திரக்கலைகளாகச் சித்திரிக்கப்பட்ட பற்பல விசித் திரமான சிலை உருவங்களை ஊனக்கண்களால் தரிசித்து வணங்கிக் கொண்டாடி, தெய்வநிலை இதுவேதான் என்று முடிவுகட்டி, அவ்வள வோடு நின்றுவிடாமல் அக்கற்பனைக்கெல்லாம் காரணமாக புதைந் தும் மறைந்தும் இருக்கின்ற இரகசிய தத்துவார்த்தப் பொருள்களின் அரும்பெரும் கருத்துக்களைத் தெள்ளத்தெளிய ஆராய்ந்து அறிந்து கொண்டு ஞானயோக சாதனைகள் மூலமாக முக்காலமும் நிலையாக நிற்கும் ஏகபரஞ்சோதியை ஞானக்கண்களால் கண்டு உணர வேண்டும் என்பதாகும்.

இச்சன்மார்க்க நெறிக்கு கலங்கரை விளக்குப் போன்றது பஞ்சாட்சர ஆராய்ச்சி அறிவேயாகும். படித்ததினால் ஆயப்பயன் என் என்றபடி, ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாது. ஆகையால் ஏட்டில் படித்ததோடு நின்றுவிடாமல் இவ்விஷயங்களைச் சற்குரு நாதருடைய உபதேச மூலந்தான் அறிய முடியும். ஆகையால் முதலில் குருவுக்குத் தகுந்த சிஷ்யனாகத் தயாராக்கிக் கொள்ள வேண்டும்.

தகுந்த குருவானவர் கிட்டும் பாக்யத்தை நல்ல பக்குவமுள்ள சிஷ்யன் தானாகவே அடைக்கூடும் என்பதே குரு சிஷ்ய சம்பிரதாய மாகும்.

நந்தி நாமம் நமசிவாயமே என்பதாகத் தமிழ் மறையாகிய திருமந்திரம் கூறுகின்றது. நந்தி என்பது சிவபிரானாகிய முழு முதற் கடவுளாகும். ஓங்காரப் பிரணவ பஞ்சாட்சரமே பரமசிவ னுடைய தத்துவத் திருமேனியாக அமைக்கப்பட்டதாகும். அக் காரணமாகவே பரமசிவனுடைய சக்திகள் அனைத்தும் பஞ்சாட்சரத் திற்குள்ளாக உள்ளூர உறைந்தும் பதிந்தும் எல்லையற்ற சக்தி களுடன் இப்பிரபஞ்சத்தில் அண்ட பிண்ட சராசரங்கள் சகல வற்றிலும் நீக்கமற நிறைந்து விளங்குவதால் பஞ்சாட்சரங்களுக்கு நிகரான மந்திரமே இல்லையெனலாகும்.

பண்டைத் தமிழ்ச் சித்தர்கள் பஞ்சாட்சர மந்திர எழுத்துக்களை மாத்திரை கூட்டியும் குறைத்தும் எழுத்துக்களை முன்பின் மாற்றியும் எழுத்துக்களை நீக்கியும் சேர்த்தும் உச்சரிப்பு அழுத்த பேதங் களுடன் காரணார்த்தமாகப் பல முறையில் கையாண்டு கொண்டு வந்திருக்கின்றனர்.

உதாரணமாக நமசிவய என்பதை நமச்சிவாய என்றும் சிவயநம என்பதை சிவாயநம என்றும் வகர எழுத்தானது நீட்டல் விகாரம் பெற்று உச்சரிப்பதும் நெடுநாள் பழக்க வழக்கங்களில் உள்ளதாகும். இரண்டு விதமும் கருத்திலும் பொருளிலும் ஒன்றையே குறிப்பனவாகும்.

சிவனை வழிபடுவதற்குத் தமிழ்மறையாகிய திருமந்திரத்தில் நன் னெறி நான்முறை என வகுத்துக் கூறப்பட்டிருக்கிறது.

அதாவது

(1) நமசிவய

(2) சிவய நம

(3) சிவய சிவ

(4) சிவ சிவ

என்பதாக பஞ்சாட்சரங்களை மாற்றிக் கணித்து நான்கு வித முறையாக உச்சரித்து வணங்கி உருவேற்றுவதே சிவ வழிபாட்டுக் குரிய சிறந்த அருச்சனை முறையாகும்.

இவை செம்பைப் பொன்னுக்கும் குளிகை எனப்படும்; அதாவது ஸ்தூல உடம்பின் கண்ணுள்ள ஆசாபாசங்களான அழுக்கை அறுத்து (நீக்கி) உடம்பைப் பொன்னிற சோதியாக்கித் தன்னைச் சிவமாக்கக் கூடிய மிகவும் சக்தி வாய்ந்த மூல மந்திரமாகும் என்பதே பண்டைய சித்தாதிகளின் அனுபவ சித்தாந்தமாகும்.

ந–ம–சி–வ–ய என்னும் பஞ்சாட்சரங்களுக்குரிய எண்களை ஐந்து வகைகளாக ஆன்றோர்களால் முறைப்படி வகுக்கப்பட்டிருக்கின்றன. அவைகள்:

9-- 11—4— 15— 12 என்ற ஐவித எண்வகைகளாகவும் இவை களைக் கூட்டினால் (ருக) 51 இலக்கமாகும்.

இவைகளே 35 மெய் எழுத்துக்களுடைய சக்திகளையும் 16 உயிர் எழுத்துக்களுடைய சக்திகளையும் ஆக 51 அட்சர தத்துவ சக்திகளை

யெல்லாம் 5 பிரிவுகளில் அடக்கிக் கொண்டும் பஞ்சாட்சரங்களுக்கு கட்டுபட்டும் அண்ட பிண்ட சராசரங்கள் சகலவற்றிலும் வியாபித்து சர்வ வல்லமையுடன் இயங்கிக் கொண்டிருக்கின்றன என்பது சித்தாந்தமாகும்.

தமிழ் மொழியின் மெய் எழுத்துக்களாகிய 35இல், சகலவற்றிலும் வல்லமை மிக்கதான ந ம சி வ ய என்னும் பஞ்சாட்சர சக்திகளும், உயிர் எழுத்துக்களாகிய 16-ல் உயிர்ப்புத்தன்மையை ஊட்ட வல்லதான அ-இ-உ-எ-ஒ எழுத்துக்களின் மந்திர உயிர்ச் சக்திகளும், ஓங்காரப் பிரணவ மந்திர சக்திகளும், 96 தத்துவ சக்திகளும் ஆகிய எல்லாம் செயல் படுவதற்கு, அடிப்படை ஆதாரமாகவும், உறுதுணையாகவும் ஏவுகணையாகவும், பிரதிபலிப்பது பஞ்சபூத சக்திகளேயாகும்.

பஞ்ச பூதங்களாகிய, (1) பிருதிவி தத்துவத்துக்குரிய நாற்கோண சதுரமான வடிவத்தையும், (2) அப்பு பூதத் தத்துவத்துக் குரிய அரை வட்டமான வடிவத்தையும் (3) தேயு பூத தத்துவத்துக் குரிய முக்கோணமான வடிவத்தையும், (4) வாயு பூத தத்துவத்துக் குரிய அறுகோணமான வடிவத்தையும் (5) ஆகாய பூத தத்துவத்துக் குரிய வட்டமான வடிவத்தையும் பஞ்ச பூத வர்ணங்களாகிய முறையே பொன்மை, வெண்மை, செம்மை, பசுமை, கருமை ஆகிய நிறங்களும், 51 அட்சர மந்திரங்களும் ஓங்காரப் பிரணவ பஞ்சாட்சர மந்திரங்களும் அவைகளின் 6 மத்திய நிலயங்களாகிய ஆறு ஆதாரங் களும் அடங்கிய, சிவராஜயோக முறைகளை சற்குரு முகாந்தரமாக உபதேசம் பெற்று அனுஷ்டிக்கும் யோக சாதனைகள் மூலமாக, சித்தியடைந்தவர்கள் மேலே கூறப்பட்ட மந்திரசக்திகளின் அட்சரங் களை முறை பிசகாமல் ஒருமனதான ஆழ்ந்த தியானத்துடன், அழுத் தந்திருத்தமாக உச்சரித்து உருவேற்றினால் மந்திரம் பலிதமடைந்து, இகலோக பரலோக காரிய சித்திகளுக்குண்டான பிரமிக்கத்தகுந்த சிறந்த பலன்களை உண்டாக்கத் தக்கனவாகும்.

எல்லா மந்திர எழுத்துச் சக்திகளுக்கும் அடிப்படை ஆதார மான பஞ்ச பூதங்களுக்கு முறையே லம்-வம்-ரம்-யம்-அம் அல்லது ல-வ-ர-ய-அ என்பவைகளே மந்திரசக்தி எழுத்துக்களாகும். இவை களை, பீஜ மந்திரங்கள் எனப்படும். பீஜம் என்றால் வித்து எனப்படும்.

ந-ம-சி-வ-ய என்கிற பஞ்சாட்சரங்களை மூல மந்திரம் எனப் படும். மூலம் என்றால் வேர் என்பதாகும், எல்லா மந்திரசக்தி களுக்கும் ஆணிவேர் போல, நட்ட நடுவாக ஊன்றி நின்று என்றும் நிலைபெறச் செய்யத்தக்கதாகும்.

## 10. பஞ்ச பூதங்களும் — 96 தத்துவங்களும்

தமிழ்மொழியின் மெய் எழுத்துக்களாகிய 35இல் சகலவற்றிலும் வல்லமைமிக்க தான ந–ம–சி–வ–ய என்னும் பஞ்சாட்சர சக்திகளும் உயிர் எழுத்துக்களாகிய 16இல் உயிர்ப்புத் தன்மையை ஊட்டவல்ல தான அ–இ–உ–எ–ஒ எழுத்துக்களின் மந்திர உயிர்சக்திகளும், ஓங்கார பிரணவ மந்திரசக்திகளும், 96 தத்துவ சக்திகளும் ஆகிய எல்லாம் செயல்படுவதற்கு அடிப்படை ஆதாரமாகவும் உறுதுணை யாகவும் ஏவுகணையாகவும் பிரதிபலிப்பது பஞ்சபூத சக்திகளே யாகும் என்று முன்பே கூறி இருக்கிறேன். இதன் தொடர்பை மேலும் கூறுகிறேன்.

1. மூலமந்திரமான பஞ்சாட்சரங்களாகிய ந–ம–சி–வ–ய ஆகிய 5 எழுத்துக்களையும்,

2. பஞ்சாட்சரங்களுக்கு உயிர்ப்பை ஊட்டவல்ல அ–இ–உ–எ–ஒ ஆகிய 5 எழுத்துக்களையும்,

3. பஞ்சபூத தத்துவங்களுக்குரிய உருவங்களான சதுரம், பிறை வட்டம், முக்கோணம், அறுகோணம், வட்டம் ஆகிய 5 வடிவங்களையும்,

4. பஞ்சபூத சக்திகளுக்குரிய மந்திர அட்சரங்களாகிய லம்–வம்–ரம்–யம்–அம் ஆகிய 5 எழுத்துக்களையும்,

5. ஐம்பத்தொரு அட்சர சக்திகளின் ஐவகைப் பிரிவு எண் களான 9–11–4–15–12 ஆகிய 5 தமிழ் இலக்கங்களையும்,

புராதன காலத்து சித்தர்களாலும், முனிவர்களாலும், சாத்திர முறைப்படி வகுக்கப்பட்ட, ஐயைந்து இருபத்தைந்து கட்டங்களில், அவையவைகள் இருக்க வேண்டிய அந்தந்த இடங்களில் மாற்றிக் கணித்து, எல்லாவற்றையும் ஒரே வட்டத்திற்குள் அடங்கும்படி யாக, 25 அறைகள் கொண்ட கட்டங்களில் எழுதி அடைத்து அமைக்கப்படுவதே சர்வ சக்தி சக்கரமாகும்.

இவைகளை, பொன், வெள்ளி, தாமிரத் தகடுகளில் முறை பிச காமல் எழுதி அமைப்பதையே, யந்திரம் அல்லது ரக்ஷை எனப் படும். இச்சக்கரத்தை முறைப்படி வழிபடுவதால், தீமைகள் விலகி, எல்லா நன்மைகளும் உண்டாகும் என்பது சித்தாந்தமாகும்.

மேலும் இத்தகைய சக்கரங்களில் அடங்கியுள்ள தத்துவார்த்தப் பொருளின் கருத்துக்களைப் பற்றியும் மகத்துவமான அபாரசக்தி

களைப் பற்றியும், குருநாதரின் உபதேச மூலமாய் அறிந்துகொண்டு இச்சக்கரங்களை முன்வைத்து, பக்தியுடன் வணங்கி, பஞ்சாட்சர மந்திரங்களை முறை பிசகாமல் உச்சரித்து, எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான எண்ணிக்கையாக மன ஒருமையுடன் தினசரி, உறுதியுடன் உருவேற்றப்படுகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு கோரிய நன்மைகளையெல்லாம் செய்யக்கூடிய அமோகமான சத்தியும் வல்லமையும் உடையதாகும்.

இத்தகைய மந்திர எழுத்துக்கள் கொண்ட சக்கரங்கள் அமைக்கும் முறைகளை, சற்குருநாதர் மூலமாய், தெள்ளத் தெளிய அறிந்துகொள்ளாதவர்களால், முறை பிசகி எழுதிக்கொடுக்கப்படும் சக்கரங்களை வைத்து வணங்குவதால் கோரிய நன்மைகளை அடைய முடியாமல் போவதோடு, எதிர்மாறான தீமைகளையும் உண்டாக்கி விடக்கூடும் என்பதை அனைவரும் அறிந்து எச்சரிக்கையாக இருக்க வேண்டியதாகும். இது காலால் நடப்பதைவிட்டு தலையால் நடப்பது போலாகும்.

இதுவரை கூறப்பட்ட சக்திகள் அனைத்தும் இயற்கையாகவே இப்பிரபஞ்சத்தில் அண்டபிண்ட சராசரங்கள் சகலவற்றிலும் வியாபித்து இயங்கிக்கொண்டேயிருக்கின்றன. ஆகையால் பகுத்தறிவுடன் கூடிய மக்களாய்ப் பிறந்த அனைவரும் இச்சக்திகளைப் போற்றி வழிபட வேண்டியது கடமையாகும்.

அண்டம் என்பது உலகம், பிண்டம் என்பது நமது உடல், அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உண்டு என்பது சித்தாந்தமாகையால், இத்தகைய சக்திகள் அனைத்தும். நமது உடலுக்குள்ளும் உள்ளூர அமைந்து இயங்கிக் கொண்டிருக்கின்றன என்கின்ற முடிவே தத்துவ ஞானமாகும்.

தன்னைத் தான் அறிந்த தத்துவஞானி, தன் உடலின் கண் அமைந்துள்ள இத்தகைய சக்திகள் அனைத்தின் தத்துவங்களையும் தெள்ளத்தெளிய அறிந்துகொண்டுள்ளபடியால், அச்சக்திகள் எல்லாவற்றையும் தனக்குள்ளே சக்கரங்களாக உருவகப்படுத்திக் கொண்டு, மானசீகமாகவே, தன்னையேதான் வணங்கி, பஞ்சாட்சர மந்திரங்களை முறைப்படி உச்சரித்து உருவேற்றுவதால், ஆத்மார்த்தமான சகல சித்திகளையும் அடையக்கூடுமாகையால், இந்த நிலையே, வேதாந்தமும், சித்தாந்தமும் ஒருங்கே அமையப்பெற்ற, ஒப்புயர்வற்ற உன்னதமான, தலைசிறந்த பக்குவ நிலையாகும்.

ஆதிக்கும் ஆதியிலே, இருள் சூழ்ந்த, வெட்டவெளியாகிய, சூனியப்பரவெளியெங்கும், நுண்ணினும் நுண்ணிய அணுவுக்குள்

அணுவாகப் பரமான்மாவானது நீக்கமற நிறைந்தும், இரண்டறக் கலந்தும், பரிபூர்ணமாக நிறைந்தும் நின்றது. அத்தகைய கோடானுகோடி அணுக்கூட்டங்கள், தன்னைத்தானே அதிவேகமாகச் சுழன்றும். பரவெளியெங்கும் சுற்றியும், ஓடியாடி கட்டுக்கடங்காத அபாரசக்தியுடன் தன்னைத்தானே இயங்கிக்கொண்டிருந்தன. இச் சக்தியே இயற்கைச் சக்தியாகும்.

அத்தகைய, சுழற்சியின் அதிவேகத்தாலும், வலம்புரியாகவும், இடம்புரியாகவும் சுற்றிவந்த ஓட்டத்தாலும், அணுக்கூட்டங்கள் பரவெளி மண்டலத்தில், ஒன்றையொன்று மோதிக்கொண்டும், உராய்ந்து கொண்டும், செயல்பட்டு வந்ததின் காரண காரியமாக, முதன்முதலாக "நாதம்" (ஒலி, ஓசை, சப்தம்) உண்டாகியது. அதைத் தொடர்ந்தே "விந்து" (ஒளி, வெளிச்சம், ப்ரகாசம்) உண்டாகியது.

ஆதியில் உண்டான "ஒலி, ஒளி" ஆகிய நாதவிந்துக்களி லிருந்து "அ–உ–ம்" என்ற அதாவது அகார உகார மகாரம் ஆகிய ஒலி உண்டாகி இம்மென அடங்கி மூன்றுவிதமான ஒலிகளும் சேர்ந்து 'ஓம்' என்ருகி ஓங்காரப் பிரணவ மந்திரம் ஆயிற்று.

அவ்வோங்காரப் பிரணவ மந்திர ஒலியிலிருந்து, 'ந–ம–சி–வ–ய' என்ற "பஞ்சாட்சரம்" ஆகிய மூலமந்திர எழுத்துக்கள் தோன்றி, ஐம்பத்தொரு அட்சரங்கள் ஆக விரிந்தன. "ஓங்காரப் பிரணவ பஞ்சாட்சரம்" ஆகிய 'ஓம் நமசிவாய' என்கிற மகாமந்திர சூட்சம சக்திகளிலிருந்தே "பஞ்ச பூதங்கள்" உள்பட 'தொண்ணூற்று ஆறு' தத்துவங்களாகிய பலவிதமான சக்திகள் தோன்றிப் பஞ்சபூத சக்திகளை அடிப்படையாகக் கொண்டு, இப்பிரபஞ்சத்தில் அண்ட பிண்ட சராசரங்கள் முதலிய சகலவற்றையும் உண்டாக்கி, ஆதி சக்தியாகிய 'ஒன்று' தன்னருளால் இயங்க வைத்துக்கொண்டு இருக்கின்றது என்பது, பண்டைய தமிழ் சித்தர்களின் சித்தாந்த மாகும்.

"அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உண்டு" என்பது வேதாந்த, சித்தாந்த முடிவாகும். அண்டம் என்பது நாம் ஊனக் கண்களால் காணும் இவ்வுலகம். பிண்டம் என்பது ஞானக் கண் ணல் காணவேண்டிய நமது உடல். ஆகையால் மேலே கூறப்பட்ட 96 தத்துவ சக்திகளையும் உள்ளடக்கிக் கொண்ட, பஞ்சபூத சக்திகளை அடிப்படையாகக் கொண்டு இதர மூலசக்திகளுடன் ஆதிசக்தியாகிய பரம்பொருளானது, தன்னருளால், மனித உடலுக்குள்ளும் குடி கொண்டு, தன்னைத்தானே இயங்க வைத்துக்கொண்டிருக்கின்றது என்பதே தத்துவ ஞான சித்தாந்தமாகும்.

" தன்னைத்தானறி" என்பதே வேதாந்த குருமார்களின் ரத்தினச் சுருக்கமான, சிறந்த உபதேசமாகும். மனித உடலுக்குள் இருக்கும் மேலே கூறப்பட்ட 96 தத்துவங்கள் முதலான எல்லா வற்றையும் குருமுகாந்தரமாய் உணர்ந்தவன், ஆண்டவனை அறிந்த தத்துவஞானி ஆகின்றான். அத்தத்துவ ரகசிய சக்திகளை யெல்லாம், பரிபூர்ணமாக, தன்வயமாக்கிக் கொண்ட தத்துவ ஞானியே " தானே அவன் அவனே தான்" ஆகின்றான். "தத்து வம் எங்குண்டு, தலைவன் அங்குண்டு" "தத்துவம் எங்கில்லை, தலைவன் அங்கில்லை" என்பதாகப் பண்டைத் தமிழ்ச் சித்தர்கள் முடிவுகட்டிக் கூறியிருப்பதால் " தத்துவமே தெய்வம்" என்பதாகும்.

ஜடமாகிய உடலுக்குள், தொண்ணூற்றாறு தத்துவ சக்திகளும், இயங்கிக் கொண்டிருக்கின்ற வரையில், நடமாடும் மனிதனாக, இவ் வுலகில் சகல சுகதுக்கங்களையும் அனுபவிக்கின்றான். அத்தொண் ணூற்றாறு தத்துவ சக்திகளும் காயத்தைவிட்டு, வெளியெறிப் போனவுடனே நடமாடாத பிணமாக, மண்ணோடு மண்ணாக மறை கின்றான். "உள்ளே போனால் மூச்சு வெளியே போனால் போச்சு, உள்ளே இருக்கும்வரை சிவம், வெளியே போனால் சவம்."

"மனிதர் வாழ்வு மண்ணிலே மறைந்தபோது விண்ணிலே" என்கின்ற ஆன்றோர்களுடைய, அருள்மொழியைச் சிந்தித்து ஆராய்ந்து உணரத்தக்கதாகும்.

"ஐவகைப்பூதம் தொண்ணூற்றாறு தத்துவங்கள் ஆட்டும், தெய்வம் உன்னிடத்தில் இருக்க, தேசத்தில் அலைந்தாய் நீதான். பொய்வசத் தேகபந்தம் போக்கி, மெய்ப்பொருளை நோக்கி, ஐவர் ஓர் இடத்தில் கூடும் ஆனந்தம் அறிவாய் நெஞ்சே"

என்பதாக சித்தர்கள் பாடி, அறிவுறுத்தியுள்ளார்கள். அதாவது, 96 தத்துவ சக்திகளையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கும் பஞ்சபூத சக்திகளை அடிப்படையாகக் கொண்டு, எல்லாவற்றையும் ஆட்டிப் படைத்து, தன்னைத்தானே இயங்க வைத்துக் கொண்டிருக்கும் " தத்துவ தெய்வமானது" உன் உடலுக்குள் இயற்கையாக அமைந் திருக்க, அதை உன் பகுத்தறிவால் ஆராய்ந்து அறிந்து கொள் ளாமல், உலகெங்கும் தேடித்தேடி வீணாக அலைகின்றாய். ஆகை யினாலே, இம்மாயா உலக ஆசாபாசங்களான புறப்பற்றுதல்களைத் துறந்தும், தேகத்தின் அழுக்குகளை அறுத்தும், மெய்ப்பொருளை, அறிந்து கொள்ள வேண்டும் என்கின்ற ஆசையும், நம் பிக்கையும், வைராக்கியமும் கொண்டவனாகி, சற்குருநாதர் மூலமாய், ஞான உபதேசம் பெற்று, குருநாதரின் கட்டளைப்படி, முறை பிசகாத, தீவிர சிவயோக சாதனைகளின் மூலமாக,மனதையும்,

அறிவையும், உயிர்ப்புச் சக்தியையும், ஏகாக்கிரச்சித்தமாகக் கட்டுப் படுத்தி, புருவ மத்தியாகிய சுழிமுனையில் நடுநிலைநாட்டி, ஆழ்ந்த தியானத்துடன் யோகநிஷ்டையில் கூடினால் பஞ்சாட்சர மந்திர சக்திகளின் தத்துவங்கள் அனைத்தும் ஒன்றுகூட, ஒடுங்கி கைவல் யப்பட்டு, சத்து சித்து ஆனந்தமான அருள்பெருஞ்சோதியை ஞானக்கண்ணால் கண்டு மெய்ப்பொருளாகிய பரம்பொருளை, உனக்குள் நீயே உணரலாம் என்பதாகும்.

"கடவுள் கண்டவருக்குக் கற்கண்டு காணாதவருக்குக் கல் குண்டு" என்கின்ற அருள் வாக்கின் கருத்தைக் கருத்தாட்டி உணர் வீர்களாக.

## 96 தத்துவங்களாவன

| | | |
|---|---|---|
| பூதம் | 5 | பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம். |
| பொறி | 5 | மெய், வாய், கண், மூக்கு, செவி, |
| தொழில் | 5 | தேவ, தானம், விசர்க்கம், ஆனந்தம், பயம். |
| கோசம் | 5 | அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்யானமயம், ஆனந்தமயம். |
| சயம் | 5 | அமரசயம், பக்குவசயம், மலசயம், சலசயம், சுக்கிலசயம். |
| புலன் | 5 | சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம். |
| கரணம் | 4 | மனம், புத்தி, சித்தம், அகங்காரம். |
| குணம் | 3 | சாத்வீகம், இராசதம், தாமதம். |
| மலம் | 3 | ஆணவம், மாய்கை, காமியம். |
| கண்மேந்திரியம் | 5 | வாக்கு, பாதம், பாணி, பாயிரு, உபத்தம். |
| இராகம் | 8 | காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், இடும்பை, வேகம். |
| நாடி | 10 | இடைகலை, பிங்கலை, சுழிமுனை, சிங்குவை, புருடன், காந்தாரி, அக்கினி, அலம்புவி, சங்குனி, குறு. |
| ஆதாரம் | 6 | மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை. |
| மண்டலம் | 3 | அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம். |

| | | |
|---|---|---|
| அவத்தை | 5 | சாக்கிரம், சொப்பனம், சுழித்தி; துரியம் அதிதுரியம். |
| தோஷம் | 3 | வாதம், பித்தம், சிலேத்துமம். |
| எஷணை | 3 | அர்த்த எஷணை, புத்திர எஷணை, லோக எஷணை. |
| வாயு | 10 | பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருதரன், தேவதத்தன், தனஞ்செயன். |
| வினை | 2 | நல்வினை, தீவினை. |
| அறிவு | 1 | (ஞானம்) |

ஆக 96 தத்துவங்களாகும்.

## 11. 51 அட்சரங்கள் — 6 ஆதாரங்கள்

முன்பு பல கட்டுரைகளில் விளக்கப்பட்டிருந்தவைகளான, ஆதி பராசக்தியின் நாதவிந்துகளும், ஓங்கார ப்ரணவ பஞ்சாட்சரங்களும், பஞ்ச பூதங்களும், பஞ்சபூத வடிவங்களும், பஞ்சபூத வர்ணங்களும், கணபதியும், பஞ்சமூர்த்திகளும், 51 அட்சரங்களும், 96 தத்துவங்களும் ஆகிய பலவித சக்திகளும், மானிட சரீரத்திற்குள் வியாபித்து, ஆறு இடங்களில், ஆறுவித மத்திய நிலையங்களாக வகுத்துக்கொண்டு, தாமரை மலர்போன்ற சக்கரங்களாக அமைந்து சூட்சமமாகவும், சூத்திரமாகவும் இயங்கிக்கொண்டு இருக்கின்றன. அந்த மத்திய 6 நிலையங்களும் 6 ஆதாரங்கள் எனப்படும்.

பழம்பொருளாகிய ஆதிசக்தியின் தெய்விகத் தன்மைகளை உணர்ந்துகொள்ளவேண்டும் என்றால், சற்குருநாதரால் உபதேசிக்கப்பட்டபடி, பிராணுயாம யோக சாதனை மூலமாக, மூலாதாரத்தில் உறங்கும் 'குண்டலி' சக்தியை இடகலை, பிங்கலை, சுழிமுனை ஆகிய மூலநாடிகளைக் கொண்டு, தட்டி எழுப்பி, உயரக்கிளப்பி, ஆறு ஆதாரங்களையும் ஊடுருவித் தாண்டி, மேல்நோக்கிச் சென்று, புருவ மத்தி ஸ்தானமாகிய, நெற்றிச் சுழிமுனையில் நாட்டத்தைச் செலுத்தி, ஞானக்கண் கொண்டு நோக்கினுல், உண்மையான தெய்வத்தின் தத்துவங்களை உணரலாகும்.

'குண்டலி சக்தி' என்பது மனித உடம்பின், மத்திய பாகமாகிய மூலாதாரத்தை இருப்பிடமாகக் கொண்டு, பாம்பைப்போல, முச்சுழியாகச் சுருண்டு எப்பொழுதும் உறங்கிக் கொண்டிருக்கும் ஒருவித மகோன்னதமான வல்லமை மிக்க, அற்புத, சூட்சம சக்தியாகும்.

மனித உடம்பில், எழுபத்திரண்டாயிரம் நாடி நரம்புகள் இருக்கின்றன. அவற்றுள் முக்கியமானது 24 ஆகும். உடம்பின் மைய ஸ்தானமாகிய மூலாதாரத்திலிருந்து 10 நாடிகள் மேலாகவும், 10 நாடிகள் கீழாகவும், 2 நாடிகள் பக்கவாட்டிலும், 2 நாடிகள் மற்றொரு பக்கவாட்டிலும் அமைந்திருக்கின்றன. பலவித சக்திகளைக் கொண்ட இத்தகைய நாடி நரம்புகள் அனைத்தும், பிரிந்து சேரும் இடமே மூலாதாரம் என்றும் அவையவைகளின் தன்மைக்கும், சக்திக்கும் ஏற்றவாறு ஆஸ்த்திரா கயிறு முடிச்சுபோல இருந்து, இயங்க வைத்துக்கொண்டிருக்கும், அதிஅற்புதமான சக்தியையே, குண்டலி சக்தி என்றும் கூறப்படுவதாகும்.

மேலே விவரிக்கப்பட்ட 24 நாடிகளுள், மிகவும் முக்கியமானதாகும். இப்பத்து நாடிகளில் 3 நாடிகள் அதிமுக்கியமான "மூல நாடி" என்பதாகும். அவைகளாவன: இடைகலை, பிங்கலை, சுழிமுனை என்ற நாடிகளாகும். இடைகலை என்பது, இடதுபுற நாசியிலும்; பிங்கலை என்பது, வலதுபுற நாசியிலும்; சுழுமுனை என்பது, இரண்டு நாசியிலும்; வரவும், போகவும் இருக்கின்ற மூச்சாகும். இடைகலை என்பது சந்திரனும், பிங்கலை என்பது சூரியனும், சுழுமுனை என்பது அக்கினியும் ஆகும். மற்ற விவரங்களைப் பின்னர்வரும் கட்டுரைகளில் விளக்குவோமாக.

### 6 ஆதாரங்களாவன :

1. மூலாதாரம், 2. சுவாதிட்டானம், 3. மணிபூரகம், 4. அநாகதம், 5. விசுத்தி, 6. ஆக்ஞை என்பனவாகும்.

### 1. மூலாதாரம் :

மனித எண்சாண் உடம்பின் உயர அளவிலும், குறுக்கு அளவிலும், உள்ள மத்திய ஸ்தானமாகும். இது தேகமத்திய பாகமாகும். இதைப் பாதம் என்றும், அடி என்றும் கூறப்படும். மலரடி, குருபாதம், அடிமுடி, என்கின்ற சொற்களுக்கு சம்பந்தப்பட்டதாகும். இந்த இடத்தில், குண்டலி சக்தியானது, முச்சுழியாக பாம்பைப்போல், சுருண்டு உறங்கிக்கிடக்கும். 4 இதழ்கொண்ட தாமரை மலரைப்போன்று இருக்கும். அதாவது 4 விதமான நாடிகளின், சக்திகள், பிரிந்தும், சேர்ந்தும் இயங்கக்கூடிய இடம் என்பது சித்தாந்தமாகும்.

ஓங்காரப் பிரணவ பஞ்சாட்சரமாகிய, ஓம். நமசிவய என்பதின் ஓங்காரப் பிரணவமாகிய ஓம். என்கின்ற மந்திர எழுத்தின் ஒலி உதிக்கும் ஆரம்ப, தேகமத்திய நிலையமாகும். இங்கு கணபதி இருப்பிடமாகும். மந்திர அட்சரங்கள் 4 ஆகும். (ஜலவாய், கருவாய், மலவாய், இருக்குமிடம்)

## 2. சுவாதிட்டானம் :

உந்தி (அடிவயிறு) ஸ்தானமாகும். 6 இதழ்கொண்ட தாமரை மலரைப் போன்று இருக்கும். அதாவது 6 விதமான நாடிகளின் சக்திகள், பிரிந்தும், சேர்ந்தும், இயங்கக்கூடிய இடம் என்பது சித்தாந்தமாகும். மூலாதார ஸ்தானத்திற்கு மேலே ஒரு சாண் உயரம்வரை உள்ள இடம். இதை கந்தஸ்தானம் எனப்படும் பஞ்சபூத சக்திகளில் பிருதிவி (மண்) தத்துவ இருப்பிடமாகும். வர்ணம் பொன்மை (மஞ்சள்) நிறமாகும். உருவம் சதுர வடிவ மாகும். அதற்குரிய "பீஜ" (வித்து) மந்திரம் "லம்" என்பதாகும். பஞ்சாட்சர மந்திர எழுத்தாகிய ந–வுக்குரிய ஸ்தானமாகும். ஆட்சிபுரியும் தேவன் பிரம்மா ஆகும். ஆற்றல் தொழில் படைத் தல் ஆகும். (ஆகையால் கரு உற்பத்தி இடம்) மந்திர அட்சரங்கள் 6 ஆகும்.

## 3. மணிபூரகம் :

நாபி (தொப்பூழ்) ஸ்தானமாகும். 10 இதழ்கொண்ட தாமரை மலரைப் போன்று இருக்கும். அதாவது 10 விதமான நாடிகளின் சக்திகள், பிரிந்தும், சேர்ந்தும் இயங்கக்கூடிய இடம் என்பது சித்தாந்தமாகும். பஞ்சபூத சக்திகளில் அப்பு (நீர்) தத்துவ இருப்பிடமாகும்.

வர்ணம் வெண்மை (வெள்ளை) நிறமாகும். உருவம் அரை வட்ட வடிவமாகும். அதற்குரிய பீஜ (வித்து) மந்திரம் "வம்" என்பதாகும். பஞ்சாட்சர மந்திர எழுத்தாகிய ம–வுக்குரிய ஸ்தான மாகும். ஆட்சி புரியும் தேவன் "விட்ணு" ஆகும். ஆற்றல் தொழில் காத்தல் ஆகும். (ஆகையால் கருவுக்கு உணவு ஊட்டிக் காக்கும் தொப்பூழ் கொடியிடம்) மந்திர அட்சரங்கள் 10 ஆகும்.

## 4. அனாகதம் :

இருதயம் (நெஞ்சு) ஸ்தானமாகும். 12 இதழ்கொண்ட தாமரை மலரைப்போன்று இருக்கும். அதாவது 12 விதமான நாடிகளின் சக்திகள், பிரிந்தும் சேர்ந்தும், இயங்கக்கூடிய இடம் என்பது சித்தாந்தமாகும். பஞ்சபூத சக்திகளில் தேயு (நெருப்பு) தத்துவ இருப்பிடமாகும். வர்ணம் செம்மை (சிகப்பு) நிறமாகும். அதற்கு உருவம் முக்கோண வடிவமாகும். அதற்குரிய பீஜ (வித்து) மந்திரம் "ரம்" என்பதாகும். பஞ்சாட்சர மந்திர எழுத்தாகிய சி–வுக் குரிய ஸ்தானமாகும். ஆட்சிபுரியும் தேவன் ருத்திரன் ஆகும். ஆற்றல் தொழில் அழித்தல் ஆகும். மந்திர அட்சரங்கள் 12 ஆகும்.

## 5. விசுத்தி :

கழுத்து (கண்டம்) ஸ்தானமாகும். 16 இதழ் கொண்ட தாமரை மலரைப் போன்று இருக்கும். அதாவது 16 விதமான நாடிகளின் சக்திகள் பிரிந்தும் சேர்ந்தும், இயங்கக்கூடிய இடம் என்பது சித்தாந்தமாகும். பஞ்சபூத சக்திகளில், வாயு (காற்று) தத்துவ இருப்பிடமாகும். அதற்கு வண்ணம் பசுமை (பச்சை) நிறம் ஆகும். உருவம் அறுகோண வடிவமாகும். அதற்குரிய பீஜ (வித்து) மந்திரம் 'யம்' என்பதாகும். பஞ்சாட்சர மந்திர எழுத்தாகிய வ–வுக்குரிய ஸ்தானமாகும். ஆட்சி புரியும் தேவன் மகேசுவரன் ஆகும். மந்திர அட்சரங்கள் 16 ஆகும். ஆற்றல் தொழில் மறைத்தல் ஆகும்.

## 6. ஆக்ஞை :

நெற்றி (புருவமைய) ஸ்தானமாகும். 2 இதழ் கொண்ட தாமரை மலரைப்போன்று இருக்கும். அதாவது 2 விதமான நாடிகளின் சக்திகள், பிரிந்தும் சேர்ந்தும் இயங்கக்கூடிய இடம் என்பது சித்தாந்தமாகும். பஞ்சபூத சக்திகளில் "ஆகாய" (வானம்) தத்துவ இருப்பிடம் ஆகும். வர்ணம் கருமை (கருப்பு) நிறமாகும். உருவம் வட்ட வடிவமாகும். அதற்குரிய பீஜ (வித்து) மந்திரம் 'அம்' என்பதாகும். பஞ்சாட்சர மந்திர எழுத்தாகிய, ய–வுக்குரிய ஸ்தானமாகும். ஆட்சி புரியும் தேவன் சதாசிவன் ஆகும். ஆற்றல் தொழில் அருளல் ஆகும். மந்திர அட்சரங்கள் 2 ஆகும்.

## 12. சிவராஜ யோகம் — குருசிஷ்ய நிலை

ந. ம. சி. வ. ய. என்கின்ற பஞ்சாட்சர நாம சூட்சும சொரூபமாகிய அருட்பெருஞ் ஜோதியைப் பிராணயாம யோக சாதனைகளின் மூலமாக வைராக்கிய விடா முயற்சி செய்து, உய்த்து, உணர்ந்து சித்தி அடையக்கூடிய தலைசிறந்த மார்க்கமே, சிவராஜ யோகம் எனப்படுவதாகும்.

குருபக்தி மிகுந்த மாணுக்கன் ஒருவன், அருள் சக்தி மிகுந்த குருநாதரை அடைந்து, அவரால் சிவஞான உபதேசம் அருளப் பெற்று, பல வருடங்கள் இடைவிடாமல், முறைப்படி, சிவயோக சாதனைகளைப் புரிவதின் பயனுக, சித்தியடையக்கூடும் என்பது சித்தாந்தமாகும். 'இல்லறமல்லது நல்லறமன்று' என்பதாகப் பெரியோர்கள் கூறியிருப்பதால், சிவராஜ யோகத்திற்குரியவர்களில் இல்லற வாசிகளே மிகவும் சிறந்தவர்கள் ஆகின்றுர்கள் என்பதாகும். ஆண் ஆனுலும், பெண் ஆனுலும் இதற்கு உரியவர்களே. இருபாலரும் உரிமையில் ஒன்றே ஆகும்.

## குரு (ஆசான்) நிலை

"சிவராஜயோக" மார்க்கத்தை உபதேசித்தருளும் சிவகுரு, அல்லது ஆசான் என்பவர், தெள்ளத் தெளிந்த 'ஆத்ம ஞானி யாயும் உபதேசக் கருத்துக்களைச் சொல்லாலும் குறிப்பாலும் செய்கை யாலும், மனதாலும், உணர்த்தக் கூடியவராயும், சிறப்பாக வெகுளியை வென்ற சாந்த சொரூபியாயும், மூல மந்திரமாகிய "ஓங்காரப் பிரணவ" பஞ்சாட்சர சக்திகளைத் தன் வசமாகக் கைவல்யப் படுத்திக் கொண்ட, சிவயோக சாதனைகளில் முற்றுப் பெற்றவராயும், தன் னம்பிக்கைக்குப் பாத்திரமான பக்குவமுள்ள மாணுக்கனைத் தேர்ந்து எடுத்து, சிவயோக சாதனை முறைகளை, ஞானேபதேச மூலமாக, எளிய நடையில், படிப்படியாக, காலாகாலத்தில், போதித்து அருளத் தக்க, வல்லமை உடையவராயும் இருத்தல் வேண்டும் என்பது தமிழ் மறை முறையாகும்.

## சிஷ்யன் (மாணுக்கன்) நிலை

உத்தமமான பூர்ண உறுப்புகளுடன் கூடிய பிறவியாயும், திரேக ஆரோக்யமுள்ளவனும், சிந்தித்து ஆராய்ந்து அறியும் பகுத்தறிவு உள்ளவனும், கோபத்தை அடக்கும் ஆற்றல் உள்ளவனும், தன் மனசாட்சியில் திட நம்பிக்கை கொண்டவனும், குரு பக்தியில் மிகுந்து, குரு பணிவிடையில் ஆர்வமுள்ளவனும் குருநாதர் சொல் லாமற் சொல்லும், குறிப்பை உணர்ந்து பொறுப்புடன் நடந்து கொள்ளக்கூடிய, சிறந்த பக்குவத் தன்மையை உடையவனுகவும், முன் னறியும் தெய்வங்களாகிய மாதா பிதாக்களை உபாசித்தும், பேணி, தனது கிரகத்திலிருந்து ஏக பத்தினி விரதம் கொண்டு, சீரிய முறை யில், இல்லற வாழ்க்கைத் தரத்தை நடத்தும் நல்லொழுக்கம் உடைய வனும் குருநாதருடைய சோதனைகளுக்கெல்லாம் ஆட்படும், குரு நம்பிக்கைக்குப் பாத்திரமான, நல்ல மாணுக்கனே சிவராஜ யோக உபதேசம் பெறுவதற்கு உரியவன் ஆகின்ருன் என்பதும் தமிழ்மறை முறையாகும்.

இத்தகைய நற்குணங்களை உடைய மாணுக்கன், தெய்வீக சக்தி களையுடைய, சற்குருநாதரைத் தேடி அடைந்து, அவர் திருவடிகளில் பணிந்து வணங்கி, அவர் மனம் குளிரும்படி நடந்துகொண்டு, உடல், பொருள், ஆவி மூன்றையும் குருநாதரின் திருவடிகளில், தத்தம் செய்து, குரு நம்பிக்கைக்குப் பாத்திரமானபின், குருநாதரின் சன்னதியிலிருந்து, தாமாகவே குருநாதர் உபதேசித்து அருளியபடி, ஓம் 'நமசிவாய' என்ற ஓங்கார பிரணவ பஞ்சாட்சர மந்திர சக்தி களின் தத்துவங்களை, உய்த்து உணரத்தக்க, சிவயோக சாதனை முறைகளை, திட நம்பிக்கையுடனும், விடாமுயற்சியுடனும், தினசரி

செய்து வருங்கால், உதிக்கும் சம்சயங்கள் அனைத்தையும், அவ்வாசா னிடத்திலேயே, அவ்வப்பொழுது அடிக்கடி விண்ணப்பம் செய்து கொண்டு, அந்த சம்சயங்கள் நசிக்கும்படியான வகையில், உத்தரங் களைக் கேட்டுத் தெரிந்து, சீர்திருத்தி, எக்காலமும், எந்நேரமும், குருவை மறவாத சதா குரு சிந்தனை உள்ளவனாக இருத்தல் வேண்டும்.

"ஐயமின்றி, உடல் பொருள் ஆவி மூன்றும் ஆண்டவனே உன்னது என்று அளித்துப் பின்னும், துய்ய குருநாதனுக்கே அடிமை ஆகி, சொன்னபடி கேட்பதற்கே தொண்டன் ஆகி மெய் யென்றே அவர் மனமும் களிக்கு மட்டும், வேண்டினதோர் சோ தனைக்கு மிதத்திடாமல் செய்ய திருமலரடியில் காத்து இருந்தால், செவியதனில் உபதேசம் செய்வார் தாமே." என்பதாக பண்டைய சித்தர்கள் பாடியுள்ளதையும் அறிவீர்களாக. "ஆசானும் ஈசானும் ஒன்றேயாகும்." என்பதாகவும், எழுத்தறிவித்தவன் இறைவனாகும்." என்பதாகவும், ஆன்றோர்கள் கூறியுள்ளபடியால் ஓங்கார பிரணவ பஞ்சாட்சரங்களையும், அவைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கும், 51 அட்சரங்களையும் அறிவித்து, அவைக்கு சம்பந்தப்பட்ட 96 தத்துவ சக்திகளின் மகா ரகசியங்களையும் உபதேசித்து, அவைகளை அறியும் சிவயோக சாதனை முறைகளைப் போதிக்கும் ஆசானாகிய குருநாதரும் தெய்வத்திற்குச் சமானமாவார் என்பதாகும்.

"தந்தை சொல் மிக்க மந்திரமில்லை." இது ஓர் அருமையான தமிழ் பழமொழியாகும்.

தந்தை :—நம் அனைவரையும், படைத்தும், காத்தும், அழித்தும். மறைத்தும் அருளும் தந்தையாகிய சிவபிரான்.

சொல் :—நமசிவாய என்னும் சொல். இது சிவபிரானுடைய திரு நாமமாகவும், தத்துவத் தெய்வமாயும், சிவசொரூப சூட்சும வடிவமாகவும் அமையப்பெற்ற ஓங்காரப் பிரணவ பஞ்சாட்சர சொல்.

மிக்க மந்திரமில்லை :—ஓங்காரப் பிரணவ, பஞ்சாட்சரமாகிய ஓம் – நமசிவாய என்கின்ற மூலமந்திரமே, எல்லா மூலமந்திரங் களையும்விட, மிகவும் வல்லமையும், மகத்தான சக்தியும் கொண்ட தலைசிறந்த மந்திரச்சொல் ஆனபடியால், இதற்கு நிகரானதும், மேலானதுமான மந்திரச் சொல்லே கிடை யாது என்பது உண்மையாகும்.

" ஒன்றுகண்டேன், இவ்வுலகுக்கு ஒருகனி
நன்றுகண்டாயது நமச்சிவாய க்கனி
மென்றுகண்டால் அதுமெத்தென்று இருக்கும்
தின்றுகண்டால் அதுதித்திக்கும் தானன்றே — (திருமந்திரம்)

நமச்சிவாய வாழ்க, நாதன் தாள் வாழ்க.

## 13

தமிழ் மறைப்படி நன்னெறி நன்முறையாக பஞ்சாட்சரங்களை மாற்றிக் கணித்து, உச்சரித்து, உருவேற்றி, அர்ச்சித்து, சிவ வழிபாடு செய்வதால், படிப்படியாக அடையும், பலனும் பண்பும், மாண்பும் மகிமையும், அருமையும், பெருமையும், சீருஞ் சிறப்பும், சுத்தியும் சித்தியும் முதலியன.

| நமசிவய (1) | சிவயநம (2) | சிவயசிவ (3) | சிவ சிவ (4) |
|---|---|---|---|
| பருமை | நுண்மை | மீநுண்மை | முதல் |
| ஸ்தூல தேகம் | சூட்சும தேகம் | அதிசூட்சுமதேகம் | காரணகர்த்தா |
| சீலம் | நோன்பு | செறிவு | அறிவு |
| சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
| பக்தன் | தொண்டன் | யோகி | ஞானி |
| சாலோகம் | சாமீபம் | சாரூபம் | சாயுச்சியம் |
| சிவ உலகம் | சிவன் அண்மை | சிவ உருக்கலப்பு | சிவப்பெரு வாழ்வு |
| சிவ உலக வாழ்வு | சிவனருகே இருத்தல் | சிவனுரு பெறுதல் | சிவனேயாதல் |
| கனவு | நனவு | உறக்கம் | பேருறக்கம் |
| காரிய சுத்தி | சித்த சுத்தி | ஜீவசுத்தி | ஆத்ம சுத்தி |
| இகலோக காரியசித்தி | பரலோக காரியசித்தி | யோக சித்தி | ஞானசித்தி |
| காத்தல் | துடைத்தல் | மறைத்தல் | அருளல் |
| அறம் | பொருள் | இன்பம் | வீடு பேறு |
| கல்வியறிவு | கேள்வியறிவு | அருள் ஞானம் | சிவஞானம் |
| சத்து | சித்து | ஆனந்தம் | பரமானந்தம் |

" எளிய வாதுசெய்வாரெங்கள் ஈசனை
ஒளியை யுன்னியுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாயநம வென்னும்
குளிகை யிட்டுப் பொன்னுக்குவன் கூட்டையே "

— (திருமந்திரம்)

ஓம் — நமசிவய
ஓம் — சிவயநம
ஓம் — சிவயசிவ
ஓம் — சிவசிவ

" நாடும் நமசிவய நல்ல சிவயநம
கூடும் சிவயசிவ கூறிமேல் — நாடும்
சிவசிவ என்றெண்ணுவர், நற்சீலம்முதல் நான்கின்
தவநெறிசார் செந்தமிழர் தாம் " — (திருமந்திரம்)

சிவபெருமான் திருவருளால், திருவாவடுதுறைக்கண் ஸ்தல விருட்சமான அரச மரத்தின்கீழ், சிவயோகத்தமர்ந்து, சித்தாதி சித்தரான தவத்திரு திருமூலநாயனுர் திருவாய் மலர்ந்தருளிய, செந்தமிழ் வேதமே திருமந்திரமாகும். திருமந்திரம் என்னும் நூல் ஒன்றே, தமிழ் வேதமாக, முழுமுதல் கருவூல நூலாகும். உலகியல் நல்லொழுக்கங்களும், அருளியவாகிய தத்துவத் தெய்வ அந்தரங் கங்களும், திருவுருவச் சிறப்புகளும், மந்திர அக்கரசக்கர அமைப்பு முறைகளும், மந்திர எழுத்துச் சக்திகளின் மகிமைகளும், அடியார் பெருமைகளும், சிவகுருவின் தன்மைகளும், சிவவழிபாட்டு முறை களும், சிவயோக சாதனை முறைகளும், மற்றும் பலவும் திட்டவட்ட மாக சித்தாந்தப்படி, சிறப்புடன் பொருந்தி, அறிவுறுத்தி உணர்த் துவது, தமிழ் திருமறையாகிய திருமந்திர நூலாகும்.

எல்லா மந்திர சக்திகளும், மூல மந்திரமாகிய ஓங்காரப் பிரணவ பஞ்சாட்சர சக்திகளுக்குள் கட்டுப்பட்டு அடங்கியுள்ளதேயாகும். ஓங்காரப் பிரணவ பஞ்சாட்சரம் என்பது "ஓம் நமசிவய" என்பதாகும்.

நமசிவய என்னும் பஞ்சாட்சரமானது, நந்தியெம் பெருமானுகிய பரமசிவனுடைய திருநாமமாகும். ஓங்காரப் பிரணவ பஞ்சாட்சரமே பரமசிவனுடைய தத்துவத் திருமேனியாக அமையப்பட்டதாகும். அக் காரணத்தினுலேயே பரமசிவனுடைய சக்திகள் அனைத்தும், ஒருமிக்க பஞ்சாட்சரத்திற்குள் உள்ளூர உறைந்தும், பதிந்தும், எல்லையற்ற சிறந்த சக்திகளுடன், அண்டபிண்ட சராசரங்கள் சகலவற்றிலும் சூட்சுமமாக, நீக்கமற நிறைந்து விளங்குவதால், அன்றும் இன்றும், என்றும் பஞ்சாட்சர மந்திரங்களுக்கு, நிகரான மந்திரமே இல்லை யென்பதே, தமிழ்மறையின் முடிவு ஆகும்.

சிவனை வழிபடுவதற்கு, நன்னெறி நான்முறை எனத் தமிழ் மறையில் வகுக்கப்பட்டிருக்கின்றது. அதாவது :-

1. நமசிவய — 2. சிவாயநம
3. சிவயசிவ — 4. சிவசிவ என்பதாக,

பஞ்சாட்சரங்களை மாற்றிக் கணித்து, நான்குவித முறையாக உச்சரித்து வணங்கி உருவேற்றுவதே, சிவ வழிபாட்டுக்குரிய சிறந்த அருச்சனை முறையாகும். இவை செம்பைப் பொன்னுக்கும் 'குளிகை' எனப்படும். அதாவது ஸ்தூல உடம்பின் அழுக்கறுத்து, பொன்னிறச் சோதியாக்கி, தன்னைச் சிவமயமாக்கக் கூடிய, சக்தி வாய்ந்த மூலமந்திரம் ஆகும், என்பதே பண்டைய சித்தாதிகளின் அனுபவ சித்தாந்தமாகும்.

" நாடும் நமசிவய நாப்பண்சி நாப்பண்ய
கூடும் சிவயநம கூறுங்கால்,—நேடும்
சிவயசிவ நாப்பண் சிறப்பிருவர், சேர்வாம்
சிவசிவ தாடலையாம் சேர்ப்பு." — (திருமந்திரம்)

" ஆலய மாக அமர்ந்த பஞ்சாக்கரம்
ஆலய மாக அமர்ந்த இத்தூலம்போய்
ஆலய மாக அறிகின்ற சூக்குமம்
ஆலய மாக அமர்ந்திருந் தானே." — (திருமந்திரம்)

கருத்துரை :- செந்தமிழ்த் திருவைந் தெழுத்தாலாகிய, திருக்கோவிலே, அம்பலவாணரின் அருள் உறையுளாகும். இவ்வைந் தெழுத்து :-

1. பருமை — 2. நுண்மை — 3. மீநுண்மை
4. முதல் — 5. மாமுதல் — என ஐவகைப்படும்.

அதாவது :— 1. பருமை = நமசிவய
2. நுண்மை = சிவயநம
3. மீநுண்மை = சிவயசிவ
4. முதல் = சிவசிவ
5. மாமுதல் = சிவ

இவற்றுள் பருமையாகிய, நமசிவ்ய என்பதின்மேல், நுண்மையாக அறிகின்ற சிவயநம, என்னும் அதுவே திருக்கோவிலாக அமர்ந்திருந்தான் என்க. இந்நிலை இரண்டும் முறையே, உலகியலைப் பெரிதாகவும், வீட்டியலைப் பெரிதாகவும் கொள்ளும் குறிப்பினவாகும்.

" நமச்சிவாய வாஅழ்க, நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க."

* * *

உள்ளொளி பெருக்கிய மகான்கள் பலர் நமசிவாய சாமிகளே. சிவவாக்கியர் போன்ற சித்தர்களும் நமசிவாய சாமிகளே; சைவ சமயக்குரவர்களும் நமசிவாய சாமிகளே; திருமூலரும், ஔவையும், சமீபத்தில் வாழ்ந்த சைவப்பெரியார்களும் நமசிவாய சாமிகளே. அந்த வாழையடி வாழையென வந்த நமசிவாயசாமிகள் திருக் கூட்டத்தில் உள்ளவர் தான் நமது திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகளும்.

நமது நமசிவாய சாமிகளாக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ. பன்றிமலை சாமி களை கவியோகி சுத்தானந்த பாரதியார் போற்றிப் பணிகின்ற பாக் களை படித்து மகிழ்வோம்.

## பன்றிமலைச் சித்தர் பெருமை

[கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்]

காலையிலே தியானத்திற்
கணபதியாய் வந்தவனே
ஸ்ரீலஸ்ரீ பன்றிமலைச்
சிவக்கொழுந்தே என்னுயிரே
மாலையிலே வேலுடனே
மனக்கோயில் புகுந்தவனே
நாலை யளித்தைந்தெழுத்தின்
நாதவடி வானவனே.

[ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் 1—12—68 காலை, என் தியானத் தில், கணபதி வடிவாகக் காட்சியளித்தார். 4—12—68 மாலை கார்த் திகை பூஜை செய்து தியானித்த போது, வேல் முருகனாகத் தோன்றி, என் மனதில் புகுந்து நானுனர்-குருபரமாத்மா]

## கணபதி காட்சி

தகராகாசக் குகைநடுவே
தணலும் சுத்த சக்தியனே
அகர வுகர மகர வுரு
வான ஞானக் கணபதியே
பகர வொண்ணுச் சித்திதரும்
பன்றிமலைக் குருவருளின்
சிகர மிலகு சித்தொளியே
சேயேன் அன்புத் தாய் நீயே

சுத்தானந்தச் சுயஞ் சோதித்
துரியவெளியின் சுடர்விளக்கே
சத்தங் கடந்த தகர குகைத்
தனி மோனத்தின் சக்திவளர்
சித்தர் சித்தி கணபதியே
சித்தாந்தத்தின் மணிவிளக்கே
அத்தா என்னுள் விளையாடாய்
அன்பு வைத்துன் அடிப்பணிந்தேன்.

## வேல் முருகன் காட்சி

குருவடிவாக வந்து எமக்கு இன்பம்
கொடுத்திடும் குமரனே போற்றி
கருணையால் எங்கள் கடமையில் வெற்றி
காட்டிடும் கந்தனே போற்றி
ஒருமையில் ஓங்கா ரப்பொருள் உணர்த்தும்
ஒளிமிகு சித்தனே போற்றி
திருநிறை பன்றி மலைவளர் ஞானத்
தெய்வமே உய்வருள் போற்றி!

## ஓம் ஜெய ஓம்
### (தீபாராதனைப் பாட்டு)

ஓம்ஜயஓம் ஓம்சிவஓம் ஹரிஹரா!
ஓம்குஹஓம் ஓம்குருஓம் ஹரிஹரா!

வேல் கொடுத்த பழநி மலை வேந்தனே
பால் கொடுத்த பன்றிமலைச் சாந்தனே ...
கால் கொடுத்த காலகால நாதனே
ஆலடியின் மௌனகுரு ஜோதியே ... (ஓம்)

எல்லாருக்கும் இன்பமருள் குருபரா
எம்மதமும் சம்மதமாம் குருபரா
நல்லவரம் நல்கும் அருட் குருபரா
நமச்சிவாயச்சித்தசரண் சாமியே! (ஓம்)

கலியினிலே கண்கண்ட தெய்வமே — நின்
கற்பகக்கை அற்புதத்தால் உய்வமே
புலிநரியின் புதர்போன்ற உலகிலே — நின்
புகலிருந்தால் இல்லையொரு கலகமே ... (ஓம்)

தொட்டதெல்லாம் தங்கமாகத் துலங்குமே
தொண்டர் கொண்ட பணிகள்வெற்றி யிலங்குமே
விட்டிடரும் பிணிதுயரும் விலகுமே — அன்பர்
விருப்பமெல்லாம் வெற்றிபெற நிலவுமே ... (ஓம்)

பொய்மாயப்போர் வெறிகள் அழியுமே
போகயோக போக்கியங்கள் பொழியுமே —
தெய்வசக்தி சித்து விளையாடுமே — நின்
சேவகர்க்குத் தெய்வநிலை கூடுமே ... (ஓம்)

பகலிரவும் பரிந்தருளும் குருபரா — தூய
பக்தர் குறை தீர்த்தருளும் ஒருவனே
சகலாத்ம சமயோக வாழ்வுடன் — நின்
சத்தியசித் தாந்தஒளி சூழ்கவே
சாந்தசிவமங்கலந் துலங்கவே —
ஓம்ஜயஓம் ஓம்சிவஓம் குருபரா !

நன்றியுடன் வணங்குகிறோம் பன்றிமலை ஸ்வாமீ !
ஒன்றிநினைந் துருகிநின்றோம் உன்பெருமை கண்டே !
என்றுமெங்கள் சமயநெறி குன்றின் விளக்காக
வென்றியெமக் களித்திடுவாய் வேலாயுத சித்தா !
மேற்கினிலும் கிழக்கினிலும் மேன்மையுறச் சைவம் !
வாக்கினிலே சிவநாத வானமுதம் பொழிவாய்,
ஆக்கநலம் ஊக்கிடுவாய், ஆற்றலளித் திடுவாய்,
நோக்குயர நோக்கியருள் நோக்கவரந் தருவாய் !
அப்பரைப் போலே அன்புப் பணியும்,
பாலருவாயர் போல் உள் அறிவும்,
சுந்தரர் போலே செந்தமிழ்ச் சொல்லும்,
'இது பொருள்' என்றுணை இரண்டறக் கலந்த
மணிவாசகர்போல் மாசறு காதலும்,
புனிதவதி போல் புண்ணிய நேயமும்,
ஔவையார் போலே செவ்விய மதியும்,
திருமூலர்போல் செழுந்தவ யோகமும்,
மெய்கண்டார் போல் உய்நெறி விளக்கமும்,
பட்டினத்தார் போல் பழுதறு துறவும்,
வள்ளுவர் போலே இல்லற வாழ்வும்,
தாயுமானர் போல் ஆய்ந்த உள் அமைதியும்,

வள்ளலார் போலே தெள் அருள் சோதியும்,
ஆழ்வார் போலே அடைக்கல உறுதியும்,
சங்கரர் போலே சகசாத்ம சித்தியும்.
வியாசர் போலே வியன் பெறு புலமையும்,
சேக்கிழார் போலே தெய்வத் தமிழும்,
தொண்டர் சீர்பரவும் தூயநற்றிறனும்,
ஆற்றலும் ஆயுளும் ஆத்தும சக்தியும்,
அருளும் அருட் பணிக் காகிய பொருளும்,
பன்றிமலைவாழ் பரமன் அருளால்
சுத்த சன்மார்க்க சுதந்திர வாழ்வும்,
பொங்குக நிதமும், பூரணம் பொலிகவே.

## சித்தர் சந்நிதி முறை

[கவியோகி சுத்தானந்த பாரதியார்]

நமச்சி வாய நாதனெம் பெருமான்
இமைப்பொழு தும்எமை இணை பிரியாதான்
குருகுக முருகன் அருளைப் போற்றி
உருகரு ளன்பால் உய்வோம் வாரீர்.
பாலைக் கொடுத்த பன்றிமலைச் சிவன்
பழத்தைக் கொடுத்த பழனிவேல் முருகன்
அருளால் வந்த அமரா போற்றி
கருவிலே திருவுறு கனியே போற்றி
ஆறு முகனுர் ஏறே போற்றி
ஐந்தில் முருகன் அன்பிற் பழுத்தே
கல்லாக் கல்வியைக் கற்ருய் போற்றி
பால சமுத்திரப் பள்ளியிற் சிறிது
கணபதி யாரிடம் கணக்கும் தமிழும்
கற்றும் குளக்கரைக் கணபதி யருளால்
முற்றும் உணர்ந்த முனிவா போற்றி
சித்தர் நாவிற் செயவேல் எழுதவும்
இராம சாமி எனும்பெயர் மாறி
அற்புதச் சித்தன் ஆனுய் போற்றி!
கற்களை எடுத்துக் கற்கண் டாக்கினுய்
சலித்த மணலைச் சர்க்கரை யாக்கினுய்

காகிதம் மல்லிகை யாகிடச் செய்தாய்
கையை நீட்டிக் கனியைக் காட்டுவாய்
பழனிப் பஞ்சா மிருதமும் பாலும்
முருகா என்றதும் முன்வரச் செய்வாய்
திருநீ றளித்துத் தீர்ப்பாய் பிணியை
கவலை தீரக் கருணை காட்டி
நம்புத லூட்டும் பண்பனே போற்றி
மலைப் பாம்புகளை மாலையா யணிவாய்
விலைப் பாம்புகளை விடமடக் கிடுவாய்
பேய்பிசா சுகளை ஓயென வெருட்டுவாய்
சதாசிவ சித்தர், சட்டிச் சாமியார்
வேப்பந் தண்ணீர் விச்சை பயிற்றி
ஐந்தெழுத் தறிவைச் சிந்தையி லூக்கவே
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தாய்
சீவ போதம் சிவபோத மாளுய்
பட்டனுர் கண்டு பயந்து கொணர்ந்த
மந்திர தந்திர மாயரை மாற்றிக்
கால்விழுந் திறைஞ்சக் காட்டினை யற்புதம்
கன்னடி யப்பனைக் கைதொழுங் குருக்கள்
வயிற்று வலியை மாற்றினை நீறால்
சிவமுரு காவெனச் செப்பிநின் கையால்
விபூதி யிட்டு வெம்பிணி தீர்த்தாய்
பொருட் சித்தி தாண்டி அருட்சித்தி வேண்டி
சத்தங் கடந்த சுத்த சக்திச்
சுடரினை விரும்பிச் சுடச்சுட நோற்ருய்
ஆசண் டமலை அருட் பரதேசி
பக்குவ மறிந்து தக்கது செய்தான்
அயரா அன்புடன் அவனடி பற்றி
ஆலயந் தோறும் அரனை வணங்கி
நம சி வாய சிவாய நம ஓம்
சிவய சிவ ஓம் சிவ ஓம் எனவே
திருமந் திரத்தைத் தினந் தினஞ் செபித்துக்
குருவும் உருவும் அருவைக் காட்டத்
தெள்ளத் தெளிந்த உள்ளறி வாலே
தேனுர் அமுதம் ஆளுய் போற்றி!
பாப்பாத்தி யென்னும் பத்தினி யுடனே

மந்திரஞ் சொல்லுந் தந்திர யோகம்
சிவசக்தி நல்கச் சிறந்தாய் போற்றி!
இல்லறத் துறவியின் இயல்பை யுணர்த்தி
வள்ளுவர் வழியில் வாழ்ந்தாய் போற்றி
ஒரு மகன் வந்ததும் ஒரு மகள் வந்ததும்
உள்ளத் தடங்கி யுட்பொரு ளறிந்தே
அன்பரைக் காக்கும் அருட்பணி பூண்டாய்
பக்தி யுள்ளம் பஞ்சாட் சரமாய்
மூச்செலாம் வடிவேல் முருக நாமமாய்
பேச்செலாம் சைவப் பேரிகை யாகிச்
செயலெலாம் கருணைச் சித்துக ளாகி
அன்பருக் கரிதாம் அற்புதங் காட்டித்
துன்பந் துடைத்துத் தூயநல் லின்பம்
அளித்தாய் அருளிற் குளித்தாய் போற்றி
இந்தியா இலங்கை எழிலார் மலையா
எங்கும் அற்புதம் இயற்றினாய் போற்றி!
அங்கையற் கண்ணி யருளைப் பெற்றேன்
சித்தர் பலரிடம் சக்திகள் பெற்றேன்
பலதுறைப் பணிகளைப் பயனுறப் புரிந்தேன்
பன்னூலியற்றிப் பாரத சக்திப்
பனுவலை யாக்கிப் பாருக் களித்தேன்
என்னை அறிந்தே என்பால் வந்தென்
அன்பேற்றருளி இன்ப மளித்தாய்
சக்தி வேலளித்த வித்தகா போற்றி
மும்பை நகரிற் பைம்பூ பொழிந்தாய்
உருசியா செல்ல வுகந்த நாளன்று
மங்கல சக்திக் குங்குமம் ஈந்தாய்
தாயினும் சாலத் தயையுடன் எனக்குப்
பாலமு தளித்தாய் பரிவுடன் சிவனே!
திருப்பதி மலைமேல் விருப்புறு தெலுங்கிற்
பாடினேன் அருளைக் கூடினேன் எனக்குப்
புதுவாக் களித்த புலவா போற்றி!
பாரதசக்தியைப் பாரெலாம் புகழ
ஆசியைத் தந்தாய் அருளே எந்தாய்
கணபதி மந்திரம் கைவரச் செய்தாய்

கருணை முருகனைக் காட்டினுய் உடனே
முருகன் சித்தி தருகணந் தன்னில்
சிவமயமான தவநிலை யருளினை
உனது பெருமை உரைக்கப் போமோ!
என்னை யாட் கொண்டாய் அன்னையே யப்பா
இறைவன் அருளால் என் சமயோகப்
பிறவி நலம்பெறப் பெரும்பணி தந்தாய்
நினைத்தவாறே நினைத்தது நடக்கும்
சித்தி யளித்த சித்தா போற்றி
பன்மொழிப் புலமையால் உன்புகழ் உரைத்தே
உலகெலாம் வெற்றி யுலா நடத் திடவே
அறிவும் திருவும் ஆற்றலும் வீரமும்
அற்புத சக்தியும் ஐயனே யளிப்பாய்
பன்றிக் குன்றின் வென்றிச் சுடரே
அற்புதமான சிற்பரச் சித்தா
நின்னிசை யெங்கும் நிலவிட என்னை
நடத்துவாய் இந்த ஞாலம் போற்றும்
சித்தனே சரணம் சுத்தனே சரணம்
அத்தனே சரணம் அப்பனே சரணம்
ஆதி மூல ஜோதிக் குருவே.

சகல லோகமும் சகல தெய்வமும்
சகல சித்தியும் சகல புத்தியும்
எல்லாச் செல்வமும் ஈந்தெனையாளும்
சிவமுருகா ஓம் சிவமுருகா ஓம்!

## இதயக் கதவை திறந்தருள்

(கவியோகி சுத்தானந்த பாரதியார்)

(கல்யாணி இராகம் :) (ரூபக தாளம் :)

பல்லவி

இதயக் கதவைத் திறந்தருள்
ஈசனே அன்பர் நேசனே
எங்கள் புன்றிமலை வாசனே (இதய)

அனுபல்லவி

பதமலரில் என் பாரத்தை வைக்கவே
சுதந்திரமாக வுன் சுகத்தினிற் சொக்கவே (இதய)

சரணம்

காரினை உலுப்பிடும் காற்றினைப் போலவே
கமலத்தை மலர்த்திடும் கதிரொளி போலவே
பூரணமாகவுன் பூங்கரத்தாலே
புண்ணியனே – காருண்ணியனே – என் (இதய)
இருள் மன மாயஞ் செய் இருவினை நலியவே
இகபர சுகமிந்தச் சகமெல்லாம் பொலியவே
அருட் பெருஞ்சோதி சுத்தானந்தம் பொழியவே
அள்புவெள்ளத்தாலே ஆருயிர் செழிக்கவே (இதய)

## பன்றிமலைச் சிவனே

(கவியோகி சுத்தானந்த பாரதியார்)

(காம்போதி இராகம் :) (ஆதி தாளம் :)

பல்லவி

பத்தர் மனமகிழ சித்து விளையாடுவாய்
பன்றிமலைச் சிவனே — குருகுகனே (பத்)

அனுபல்லவி

எத்திசையும் உனது
இசை நலம் விளங்கிட
இனிய நல் இன்பங்கள்
அனைவர்க்குந் துலங்கிட (பத்)

சரணம்

எனதென்றகங்கரிக்கும் மனது பணிந்து வர
இருவினைக் கட்டுகள் இற்றுச் சுயேச்சைப்பெற
அனவரதமும் உன்னை
நினைந்து கசிந்துருகி
அத்தா உன் மலரடிப்
பித்தராய் வாழ்ந்திட (பத்)
அரஹரஹர என்றெம் ஆர்வங்கள் கோஷிக்க
அன்பு மகர வீணை தும் தும் என வாசிக்க
சிரசிலுன் பேரின்பம் சிலிர்த்து நடமாடச்
செந்தமிழ் வாணியுன் மந்திரப் பொருள் பாட (பத்)

சாமிகளுடைய நமசிவாய பொருள் செறிவையும் செல்வத்தையும் நன்குணரும் நாம் சாமிகளின் நிறைவை, பெருமையை, அருளை 'நமோ நம' என்று போற்றிப் பணிந்து நம் குருநாதருக்கு வணக்கம் செலுத்துவோம்.

1. அன்பின் வித்தே விளைவே நமோ நம
ஆனந்த ரூபா அழகா நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாதா

2. கன்னலே கருணை ஈசா நமோ
கந்தன் சிந்தனையாளா நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாதா

3. சிந்தை நிறைவே சிவா நமோ நம
சண்முகன் அருள் நாதா நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாதா

4. கந்தமே தெய்வ காந்தி நமோ நம
கருணை மாமலை அன்பே நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாநா

5. பன்னிசை விழை நாதா நம
பக்தர்கள் அனுகூலா நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாதா

6. அண்ணலே அருட்ஜோதி நமோ நம
ஆதியே பரிபூர்ண நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம — குருநாதா

7. எந்தையே எங்கள் தாயே நமோ நம
எங்கள் சற்குரு நாதா நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாதா

8. விந்தை அற்புத நாதா நமோ நம
வந்தருள் செயும் பாதா நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாதா

9. கொண்டல் வண்ணனே கண்ணு நமோ நம
குன்று தோறுடும் கந்தா நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாதா

10. ஓம் நமசிவாய நமோ நம
ஓம் நமசிவாய நமோ நம
பன்றி மாமலை சாமி நமோ நம—குருநாதா.

T. D. மீனாட்சிசுந்தரம்

## 30. வைத்தியநாத சாமிகள்

" நல்ல மருந்திம் மருந்து — சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து "

நாம் முற்பிறவியில் செய்த புண்ணிய பயனே நாம் இப்பிறவியில் செய்யும் இறைவழிபாடும் அதனால் வரும் இன்பமும்.

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே
இருங்கடல் வையத்து
முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை
முழுமதி தரளங்கள்
மன்னு காவிரி சூழ் திருவலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும்
பாடியும் வழிபடுமதனாலே.

இப்படியல்லவா வாய்விட்டுப் பாடுகின்றார் திருஞான சம்பந்தர். ஆலய வழிபாடு, விக்கிரக வழிபாடு, மலர்களாலும் பாமலர்களாலும் இறை வழிபாடு — இவைகளெல்லாம் மானிடராகப் பிறந்த நமக்கு இன்றியமையாதன என்பதையும் இறைவழிபாட்டின் முக்கியத்துவத்தையும் எவ்வளவு அருமையாக சாமிகள் நமக்கு அடிக்கடி எடுத்துரைக்கின்றனர். எவ்வளவு முறைகள் திருத்தலங்களுக்கும் நம்மை அழைத்துச் சென்று அவன் அருள் கிட்ட உதவுகின்றனர். அதனால் அருட்பெருஞ் ஜோதி தெய்வம் நம் நெஞ்சை விட்டு நீங்காதவராகி நம்மைக் குழந்தை போல் காத்தருள் புரியும் காருண்ய மூர்த்தி ஆவதையும் நெஞ்சார உணர்கின்றோம்.

" தந்தையு நீயென்னுயிர்த் துணையு நீ
சஞ்சலமது தீர்க்க
வந்த தேசிக வடிவு நீ உனையலால்
மற்றொரு துணை காணேன்
அந்தமு மாதியு மளப்பருஞ் சோதியே
ஆதியே அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமானவ னெனுஞ்
சிரகிரிப் பெருமானே "

என்று ஏத்துகின்ற தாயுமானவர் மனநிலைக்கும் வந்து விடுகின்றோம். உலக நாயகனையே நடமாடுந் தெய்வமாக, நமது தேசிகனாக, தோன்றாத் துணையாக நமது சாமிகள் உருவிலும் கண்டு உளங் குளிர்கின்றோம். சாமிகளே நமது நோய்க்கு வாய்த்துள்ள மருந்து என்றும் போற்றுகின்றோம். "நானிருக்க பயமேன்" என்று விளங்கும் நமது சாமிகள் நமக்கு வாய்த்துள்ள முருகானந்த கவசம், அருள் மருந்து. நம்மைக் காத்தருள தெய்வீக கவசமாகின்றார் நமது சாமிகள் ; நம் பிணிகளை போக்குவிக்க தெய்வீக மருந்தாகின்றார் நமது சாமிகள். சுகநிதியாக விளங்கும் பரமேஸ்வரன் வைதீஸ்வரனாக விளங்குவது போன்று ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் நமக்கு வைத்திய நாதனாக நம்மிடையே உலவும் தெய்வமாக அமைந்து விளங்குகின்றார். அவரைப் போற்ற அருட்பாவே நமக்குதவும்.

"நல்ல மருந்திம் மருந்து – சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து —

"அருள் வடிவான மருந்து — நம்முள்
அற்புதமாக அமர்ந்த மருந்து
இருளற வோங்கும் மருந்து — அன்பர்க்
இன்புருவாக இருந்த மருந்து
.....................................................

"புத்தமுதாகும் மருந்து — பார்த்த
போதே பிணிகளைப் போக்கும் மருந்து
பக்தர் அருந்தும் மருந்து — அனு
பானமும் தானும் பரம மருந்து."

வைத்தியநாதனாக மிளிர்கின்ற சாமிகள் உண்மையிலேயே ஒரு அருள்நாதர். அவர் அருளே பக்தர்களின் பிணிகளை ஓட்டுவிக்கின்றது. அவர் விபூதிபிரசாதம் அருளி பிணிகளை குணப்படுத்துகின்றார் : அவர் மூலிகை மருந்துகளை அருளியும் பிணிகளைப் போக்குகின்றார் ; சில சமயங்களில் அற்புதமாடும் ஆற்றலாலும் பிணிகளை உடனடியாக நீக்குகின்றார் ; மந்திர சக்தி வாய்ந்த சிவவாக்கியத்தாலும் விஷ வியாதிகளை அகற்றுகின்றார். உண்மையிலேயே இந்த மருந்தும், மந்திரமும், விபூதிப் பிரசாதமும், அற்புத ஆற்றலும் வியாதிகளை ஓட்ட சாமிகளுக்கு அவசியந்தானா? இவைஇன்றி அவரால் வியாதிகளை விரட்ட முடியாதா? அவர் திருவருள் திருக்கண்கள் கடாக்ஷம் ஒன்றே போதாதா? போதும்! அவர் அருள் ஒன்றே போதும்! இருந்தாலும் உலக வழக்கங்களுக்கு ஒப்ப சாமிகள் பெரும்பாலும் திருநீற்றையும், மந்திரத்தையும் மூலிகைகளையும் உபயோகித்தே பிணிகளை நீக்கி அருள் பாலிக்கின்றார்.

உடனடியாக ஒருவித மருந்தின்றி வியாதிகளைப் போக்கவல்லவான்கருணை சாமிகளின் இயல்பை எப்படிப் போற்றுவது? ஒருநாள் சாமிகளுடைய ஆப்த சீடர் ஒருவர் விரலில் கருப்பு நிறமேறிய படை உண்டாகி இருந்தது. அதன் தொந்திரவையும், அருவருக்கத்தக்க தன் விரல் காட்சியையும் காண சகியாத அந்த அன்பர் வியாதியை குணப்படுத்த சாமிகளிடம் தன் விரலை நீட்டினார். உடனே சாமிகள் அது குணமாவதற்கு வேண்டிய மூலிகை வகைகளை உரைத்தார். சீடருக்கு உடனடியாக விரல் குணமாகிவிட வேண்டும். அவருக்கு உடனடியாகத் தேவையாக வேண்டியிருந்தது மூலிகை மருந்தல்ல, சாமிகளுடைய திருவருளே. சீடருடைய குறிப்பறிந்த சாமிகள் உள்ளமுவந்து உடனடியாக பஞ்சாட்சரம் அருளினார். சாமிகளுடைய திருவருள் சீடர் விரும்பிய குணத்தை உடனே அளித்தது. இரண்டே நாட்களில் விரலுக்கு பூரண குணமேற்பட்டது.

## அற்புதத்தால் வாக்கால் பிணிதீர்த்தல்

வேண்டியவருக்கு வேண்டிய குணத்தை வேண்டிய வகையில் உதவுவதில் சாமிகள் கருணை கற்பகத்தருவாகவே விளங்குகின்றார். கற்பனையை மிஞ்சுகின்ற முறைகளையும் சாமிகள் கையாள்வது கற்றவர் உலகம் வியந்து ஏத்தும் சிறப்புடையது. சென்னை திருமதி. செ. பாரிஜாதம், B. SC., B. T., சாமிகளுடைய பேரருளை மஞ்சள் குங்குமம் வடிவுகளில் பெற்றவர். 1960–இல் ஜூலைமாதம் சாமிகளை சென்னையில் தரிசிக்கச் சென்றபோது அவர் முகம் நிறைய வேனல் கட்டிகள் இருந்தன. அவற்றைச் சாமிகள் தன அற்புத ஆற்றலால் நீக்கிய நிகழ்ச்சியை திருமதி. பாரிஜாதம் வாயிலிருந்தே கேட்டோம்.

பாரிஜாதம்: நான் (சாமிகளை) வணங்கி எழுந்த போது "என்னம்மா, முகமெலாம் கட்டிகளாக இருக்கின்றனவே, அப்பாவை மருந்து வாங்கிக் கொடுக்கச் சொல்லிப் போடக் கூடாதா" என்று சொல்லி என் தந்தையாரைப் பார்த்துப் புனுகு வாங்கிக் கொடுக்கும்படியாகச் சொன்னார், எனது தந்தையும் அவ்வாறே வாங்கித்தருவதாகச் சொன்னார். சிறிது நேரம் சென்ற பின் ஸ்ரீ சாமிகள் என்னை அழைத்து அங்கு இருந்த ஒரு பாத்திரத்தில் இருந்த பூசை செய்த நீரை எடுக்கச்சொன்னார், அவ்வாறே செய்தேன். அதில் தம் கைகளை இட்டுச் சிறிது நீரெடுத்து என் முகத்திலிருந்த கட்டிகளின்மேல் தடவினார். என் தந்தையைக் கூப்பிட்டு முகத்தில் தடவிய நீரை முகர்ந்துப் பார்க்கச்சொன்னார். எனது தந்தையும் முகர்ந்துப் பார்த்தார். நல்ல புனுகு வாசனை! சிறிது நேரத்திற்கெல்லாம் நிறையப் புனுகுத்தைலமாக என் முகத்தின் கட்டிகளின்மேல் பரவியது. உடனே கட்டிகளும் உடைந்து

விட்டன. மறுநாள்வரை புனுகுத்தைலம் முகத்தில் இருந்தது. கட்டிகள் நன்ருகக் காய்ந்துவிட்டன.''

சென்னை திரு. T. S. துரைசாமி அவர்களின் மனைவிக்கு 1958-ஆம் வருடம் கடுமையான வயிற்றுவலியும் நாபியிலிருந்து உதடு வரையில் புண்ணுகி அன்ன ஆகாரம் இன்றிப் படுத்தப் படுக்கையாய் இருந்தார். அறுவை சிகிச்சை செய்தால்தான் குணம் காணமுடியும் என்றனர் வைத்திய நிபுணர்கள். ஆபரேஷனுக்குச் சாமிகளுடைய ஆசியை நாடிவந்த இந்தப் பக்தர்கள் சாமிகளோடு சாமிகளின் பக்தர் டாக்டர் திரு. குமரவேலு முதலியாரும் இருக்கக் கண்டனர். ''இந்த வியாதிக்கு டாக்டர்களிடம் மருந்து இல்லையா'' என்று கேட்டார் சாமிகள் சிரித்த முகத்துடன். பிறகு சில ரோஜா இதழ்களை எடுத்து நோயாளியின் கையில் கொடுத்தார். கொடுத்த உடன் அவை ஓர் அரிய ஔஷதமாக மாறியது. அதிலிருந்து சாமிகள் கொஞ்சம் டாக்டர் குமரவேலுவிடம் கொடுத்து ''இது என்ன மருந்து தெரியுமா'' என்று கேட்டார். டாக்டர் அதை ருசித்துப் பார்த்து இதுமாதிரி மருந்தை தான் ருசித்துப்பார்த்த தில்லை என்ருர். பிறகு நோயாளியை அந்த திவ்விய மருந்தை வாயில் போட்டுக் கொண்டு சிறிது ஜலம் அருந்தச் சொன்னுர். ''அது வரையில் நடக்கக் கூட சக்தி இல்லாமல் இருந்த என் மனைவி ஸ்ரீ குருநாதரின் அருளால் நன்ருக நடக்க ஆரம்பித்தாள். முருகக் கடவுளின் அவதாரமான நம் ஸ்ரீ குருநாதர் முன்பு வேறு எந்த மருந்தும் ரண சிகிச்சையும் என்ன செய்ய முடியும்'' என்று இறும் பூது பேசுகின்ருர் பக்தர்.

மற்ருெரு பக்தர் மகளுக்கு மூன்று வேளை மருந்து கொடுத்து சாமிகள் தீராத பிணியை தீர்த்தருளியதும் இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். சேலம் திருமதி P. இராஜரெத்தினம் அம்மாள் மகள் சௌ. கேசவாவிற்கு இரத்தம் கெட்டு உடம்பு முழுதும் கருப்பு புள்ளிகள் விழ ஆரம்பித்து விட்டன. இரத்த பரிசோதனைகளும் அதைத் தொடர்ந்து பல வைத்தியங்களும் பலனளிக்கவில்லை. சாமிகள் தானே நேரில் வந்து கவனிப்பதாக கூறி மூன்று வேளை மருந்து கொடுத்து குணப்படுத்துவதாகவும் தைரியம் சொல்லி பெண்ணின் தந்தையை சென்னையிலிருந்து அனுப்பினுர். சொல்லிவைத்தபடியே சாமிகள் சேலத்திற்கு ஒரு நாள் வந்து மூன்றே வேளை மருந்திலுல் வியாதியை குணப் படுத்தினுர். ''என் குமாரத்தியின் வியாதி சூரியனைக் கண்ட பனிபோல் இருந்த இடம் தெரியாமல் போய் எங்களுக்கு மன நிம்மதியை கொடுத்தது.'' என்று பெண்ணின் தாயார் உளமார சாமிகளைப் போற்றுகின்ருர்.

மதுரை பக்தர் திரு. V. வைத்தியநாதய்யர் நண்பர் ஒருவர் தமக்கையார் முழங்காலில் வீக்கமேற்பட்டு சீகோர்த்து பெரும் வேதனையில் தவித்துக் கொண்டிருந்தார். முழங்கால் பூரவும் வெட்டி எடுத்தால்தான் பூரண குணமாகுமென்றனர் டாக்டர்கள். தமக்கையார் சாமிகளின் அருள் ஒன்றையே நம்பி சாமிகளிடமே தஞ்சம் அடைந்தனர். சாமிகள் ரணத்தை உற்று நோக்கினார். பிறகு ஊதிவிட்டு தன் கைப்படவே ஒரு பச்சிலை கொண்டு வந்து அறைத்தும் போட்டார். ஒரு வாரத்தில் வீக்கம் வடிந்து முழங் காலுக்கு பூரண குணமேற்பட்டு விட்டது. "இப்போது அந்த அம்மாளின் காலில் வடுத்தோற்றம் கூட கிடையாது" என்று பெருமையோடு சாமிகளின் வைத்திய மகிமையைப் புகழ்கின்றார் பக்தர் வைத்தியநாதய்யர் அவர்கள்.

சாமிகள் சித்தும் ஆடவேண்டியதில்லை, பச்சிலையையும் கொண்டு வர வேண்டியதில்லை வியாதிகளைப் போக்க! சாமிகளின் வாக்கே மருந்தாக வாய்க்கும் சிறப்பை சாமிகள் வாழ்க்கை வரலாற்றை முதன்முதலாக தமிழில் எழுதும் பாக்கியம் பெற்ற திரு R. N தீக்ஷிதர் கூறுவதையே செவிமடுப்போம். " இவ்வருஷம் (1960) ஜனவரி மாதம் என் உடல் நிலை மிகவும் மோசமாகி விட்டது. எக்ஸ்ரே போட்டோ, இரத்தப் பரீட்சை முதலியனவற்றிலிருந்து எனக்குக் கடுமையான க்ஷயம் (T B.) என்று தெரியவந்தது. பெற்றோர்கள் வைத்தியம் செய்ய முயற்சித்தும் நான் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளை கலந்து கொள்ளாமல் எதுவும் செய்து கொள்ள மறுத்துவிட்டு ஸ்ரீ சாமி களுக்கு தகவல் எழுதினேன். அருள் தெய்வம் ஸ்ரீ சாமிகள் சேலம் வந்தார்கள். அவரது அருளால் க்ஷயம் மறைந்தது. அதன் ஜாடை யான வேறு சில தொல்லைகள் தான் இருந்து வருகிறது. அதுவும் ஸ்ரீ சாமிகள் அருளால் காலக்கிரமத்தில் தானே மறைந்து விடும் என்பது உறுதி. முக்கியமான வியாதி ஸ்ரீ சாமிகளது வாக்கால் போனது அவரது அருள் சக்தியைக் காட்டுகின்றது."

சாமிகள் வாக்கு நோயை நீக்குவது போன்றே சாமிகளுடைய திருக்கரமும் தீராத வியாதிகளை நீக்குகின்றது. பினாங்கில் ரேவாசந்த் மேதாராம் எனும் வட இந்திய வியாபாரிக்கு நீண்ட கால மாக தீராத வயிற்று நோய். எவ்வளவோ 'எக்ஸ்ரே' படங்கள் எடுத்தனர். எவ்வளவோ டாக்டர்கள் வைத்தியம் செய்தனர். எவ்வளவோ மருந்துகள் சாப்பிட்டார். ஒன்றுக்கும் அசையவில்லை வயற்றுவலி இந்த அசைக்கமுடியாதிருந்த வயிற்று நோய் சாமிகள் திருக்கரம் பட ஒரு நொடியில் ஒழிந்து விட்டது. சாமிகள் திரு. ரேவாசந்தின் வயிற்றை தடவ நோயாளியின் முகம் மலர்ந்தது. குறையாத வயிற்று வலி குறைய ஆரம்பித்ததை உணர்ந்தார் நோயாளி. சிறிது நேரத்தில் அவரை வெகு நாட்களாக வாட்டி வதைத்த வயிற்று நோய் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

## வைத்தியநாதருக்குரிய அறிகுறிகள்

அருட்ஜோதி சுடராகவும், அன்பின் எல்லையாகவும் விளங்கு கின்ற சாமிகள் பக்தர்களுக்கு கருணைத்ததும்பி கனிவுடன் பிணி தீர்க்கும் வைத்தியநாதராக விளங்குவதில் ஆச்சரியமொன்றுமில்லை. வியாதிகளை குணமாக்கும் தெய்வீக சக்தி அவரிடத்தில் ஆரம்பத்தி லிருந்தே குடிகொண்டிருப்பதை நாம் அறிவோம். சாமிகள் சிறு குழந்தையாக இருந்தபோதே எதிர் உரோமங்கள் மிளிரும் மேனி யுடன் விளங்கியது, அவர் வாழ்வில் வைத்தியநாதர் உரோம ரிஷி யாக விளங்கப்போவதை யல்லவா சுட்டிக் காட்டும்! உரோம ரிஷி என்பவர் சித்த முறைகளை தொகுத்து வைத்த பெருமகான். சித்த வைத்தியத்தில் அகஸ்தியர் அறுநூறும், உரோம ரிஷி நூறும் பிரபல்யமானவை. இன்றும் நோயுளார் நோய்தீர சாமிகள் அருளை நாடும்போதும் மூலிகைகளைக் கொண்டு நோய்களை விலக்க சாமிகள் சித்த வைத்திய முறைகளை தங்கு தடையின்றி வகைவகையாக எடுத் துரைப்பர். அந்த சமயத்தில் சாமிகளே நடக்கும் சித்த வைத்திய நூலகம் போன்று விளங்குவதை பக்தர்கள் கவனிக்காமல் இருக்க முடியாது. எட்டு வயதிலேயே நாவில் எழுதி உடம்பில் விபூதி பூசிய ஆதிகுரு தெய்வத்தால் ஆட்கொள்ளப்பட்ட இராமசாமியிடம் உருவாகியது ஒரு மாபெரும் சக்தி யென்பதையும் உணர்வோம். பாம்புகளையே இராமசாமி சிறுவன் பிடித்து மாலையாகக் கழுத் தில் அணிந்து மகிழ்வர். பாம்புக் கடிக்கும், விஷக்கடிகளுக்கும் இராமசாமியிடம் ஓடிவந்தனர் மக்கள். விஷக்கடி தீர்க்கும் சிறுவனுகமட்டுமா விளங்கினுர் இராமசாமி. தீராத வியாதிகளையும் அவருடைய திருக்கரம் தீர்த்து வைத்தது. பாலசமுத்திரத்தில் கன்னடிய பெருமாள் கோவில் பூசாரியின் சகிக்கொணுத வயிற்றுவலி இராமசாமியின விபூதியால் ஒரு நொடியில் ஓடி மறைந்ததையும் படித் துள்ளோம். இதே சக்தி நாளடைவில் விருத்தியாகி கண்ணிழந்த சிலருக்கு பார்வையும் கொடுக்கவும் வாய் பேசாத சிலருக்கு பேச்சை கொடுக்கவும், காது கேளாத சிலருக்கு காது கேட்பதை உண்டாக்க வும் தீராத வியாதிகளை தீர்த்தருளவும் சாமிகளுக்கு உதவி வரு கின்றது. மாண்டவர் சிலருக்கு மீண்டும் உயிரைக் கொடுக்கக்கூடிய அளவுக்கு சாமிகளை வைத்தியநாத பீடத்தில் அமர்த்திவிட்டது.

## விஷக்கடிக்கு வைத்தியம்

சாமிகள் விஷக்கடியினின்றும் பலரை காப்பாற்றிவரும் விதங்கள் சுவை நிறைந்தன. சாமிகளுடைய பெயரை சொன்னுலே விஷக்கடி இறங்கும் அளவுக்கு சாமிகள் திருவருள் சுரந்துவிட்டது. தன் பக்தர் சிலருக்கு விஷக்கடி போக்கவும் ஜுரம் தணிவிக்கவும் மந்திர உபதேசமும் செய்தருளுகின்ருர். பஞ்சாட்சரத்தால் விஷக்கடி

நீக்கவும் சில பக்தர்களுக்கு அருள்பாலித்திருக்கின்றார். சாமிகளுடைய அருளைப்பெற்றவர் அடியில் கண்ட சிவவாக்கியத்தை சாமிகள் கூறியுள்ளபடி சொல்லி பயன்படுத்தினால் எந்தவிதமான கொடிய நஞ்சும் இறங்கிவிடும்,

"காளி காளாஸ்திரி நீல நீல கண்டன்
செந்தலை கருடன் நஞ்சிலே பாய்ந்து
நஞ்சுநீர் நீராகப் போகச் சிவா."

மந்திர சக்தி வாய்ந்த சொற்களுக்கு விஷத்தை இறக்கக் கூடிய ஆற்றல் உண்டா என்று சந்தேகப்படுபவர் ஐயத்தை நீக்க சாமிகள் ஆடிக் காட்டிய அற்புதம் ஒன்றை இங்கு கண்டு மகிழ்வோம். 6—2—69. திருச்சியில் டாக்டர் T. V. அரங்கனாதன் வீட்டில் சாமிகள் இரவில் பக்தர்களோடு உற்சாகமாக உரையாடிக்கொண்டிருந்தார். "வில்லம்பு பட்டாலே தூரத்திலுள்ள பறவைகள் குறி தவறாது கீழே விழுகின்றன. பெரும் பீரங்கிகள் பலமைல்களுக்கப் பாலுள்ள குறிப்பிட்ட இடங்களுக்கு குண்டுகளை குறிதவறாமல் கிளப்புகின்றன. சொல்லம்பின் சக்தியைப் பார்க்கவேண்டுமா? கொங்கணவர் கோபாக்கினியே எச்சமிட்ட ஒரு கொக்கை சாம்பலாக்கி விட்டது. இதோ பாருங்கள்! எவ்வளவு கொசுக்கள் எனக்கெதிரில் இருக்கும் இந்த மின்சார விளக்கின் பக்கத்தில் பறந்தாடிக் கொண்டிருக்கின்றன. அவற்றில் ஒன்றை என்பக்கத்தில் இருக்கும் பக்தர் மீனாட்சிசுந்தரம் கையில் வந்து விழ வைக்கிறேன்" என்று கூறிய சாமிகள் என்னைப் பார்த்தார். நான் உடனே எனது வலதுகையை விரித்தேன். அடுத்த கணமே என்னிடமிருந்து சுமார் ஐந்தடி தூரத்தில் உயரத்தில் பறந்து கொண்டிருந்த ஒரு பெரிய கொசு கருண்டு வந்து விரித்திருக்த என் கையில் விழுந்தது. இந்த யோக சாதனையை, மந்திர சக்தியை கண்ட பக்தர்களின் வியப்பை என்னென்று இயம்புவது!

இத்தகைய ஆற்றல் உருவாக்கும் சொல் சக்தியல்லவா விஷத்தையும் இறக்குகின்றது. பாம்பு கடித்த ஒரு வாழைத்தண்டை பால் தாம்ட்ளத்தில் வைத்து சாமிகள் 'விஷமே இறங்கு' என்று சொல்ல வேண்டியதுதான். இமைப்பொழுதில் விஷம் இறங்கிவிடுவது பாலின் நிறம் நீலமாக மாறுவதிலிருந்தே கண்டுகொள்ளலாம். 1950ம் ஆண்டில் மதுரை கவர்ன்மெண்டு ஆஸ்பத்திரி மேல் நர்சிங் ஆர்டர்லி திரு. சூசை மாணிக்கம்பிள்ளை மனைவி திருமதி. செபமாலையை பாம்பு கடித்து விட்டது. அதனால் அடிக்கடி மயக்கம், மார்பு அடைப்பு, ஆகாரம் செல்லாமை முதலிய உபத்திரவங்கள் உண்டாயின. எவ்வளவோ வைத்தியங்கள் செய்து பார்த்தனர். ஒன்றும் குணம் காணோம். இந்த கஷ்டங்களை 1955ல் ஒரே நொடியில்

சாமிகள் நீக்கிவிட்டனர். ஒரு டம்ளரில் தண்ணீர் கொண்டுவரச் செய்து பாம்பு கடித்த விரலை தண்ணீருக்குள் வைக்கும்படி சொல்லி சாமிகள் மந்திரம் ஜபித்து 'விஷமே இறங்கு' என்றார். உடனே விஷம் இறங்கிவிட்டது. தண்ணீர் நீலநிறமாக மாறிவிட்டது. இப்படியே மலேயாவில் குவாந்தான் பகுதியிலும் ஒரு தொழிலாளிக்கும் சாமிகள் பாம்புக்கடி விஷத்தை இறக்கி அருள்பாலித்தார். பழனியில் ஒரு இளைஞனை பாம்புக்கடியால் ஏற்பட்ட மரணத்திலிருந்தே காப்பாற்றி உயிர்பிச்சை அளித்த விபரங்களும் நாம் படித்திருக்கின்றோம்.

## லூர்து பொய்கையும் சாமிகள் அருளும்

பிரான்ஸ் தேசத்தில் ஸ்பெயின் நாட்டு எல்லைக்கருகில் ஒரு கிறிஸ்தவ தலம் இருக்கின்றது. அதை லூர்து என்றழைப்பர். அது உலகப் பிரசித்திபெற்ற தலமாகி விட்டது' நம்நாட்டில் பல்லாயிர மக்கள் தீராத வியாதிகளைத் தீர்த்தருளும் தெய்வமெனத் திருப்பதி வெங்கடாசலபதியையும், பழநியாண்டவரையும் வேண்டிக்கொண்டு திருப்பதிக்கும், பழநிக்கும் சென்று வருவதைப்போல இந்தத் தலத்திற்கும் தீர்த்தமாட ஏராளமாக மக்கள் சென்று வருகின்றனர். இங்குள்ள தெய்விகம் வாய்ந்த பொய்கையில் நீராடி வருகின்றனர். இந்தத் தெய்வீகம் வாய்ந்த பொய்கையைப் பார்க்கும்போது நமது நாட்டு புண்ணிய நதிகளான கங்கை, காவிரி இவைகளையும், பழநியில் உள்ள சரவணப் பொய்கையையும் நினைக்காமல் இருக்க முடியாது. லூர்து என்ற இந்த இடத்தில் ஏற்பட்ட பொய்கை சுமார் நூறு ஆண்டுகளுக்குமுன் என்று கூறுவர். அது இயேசு பகவானின் திருத்தாயார் மேரி அம்மையின் அருளால் உண்டானதென்பர். இதன் தெய்விக மகத்துவத்தை பெர்னட் பதீமா என்ற இடையர் பெண்ணுக்கு அம்மை காட்சியளித்து அறிவித்தாரென்றும் கூறுவர். காட்சியளித்த நாளிலிருந்து இந்தத் தீர்த்தத்தின் தெய்விகத்தால் நற்பயன் அடைந்தோர்கள் பலர். ஆரம்பத்தில் ஒரு சிறு ஊற்று தான் உண்டானது. அதன் தெய்வீகத் தன்மையை உணர்ந்தோர் கூட்டங் கூட்டமாகச் சென்று அதில் நீராடி வரலாயினர். நாளாக நாளாக அங்கு வருபவர்களின் எண்ணிக்கையும் பெருக பெருக அந்த ஊற்றின் பெருக்கும் பிரவாகமும் வளர்ந்தோங்கி விட்டன. இப்போது அது வளமிக்க பெரிய புனித பொய்கையாக விரிந்து விட்டது. ஆரம்பத்தில் எண்ணிறந்த மக்கள் அதில் நீராடி வந்ததைக் கண்ட அரசாங்கத்தார் அது சுகாதாரத்திற்கு பொருந்தாதென்று மக்கள் நீராடுவதைத் தடுத்தனர். ஆனால் நெப்போலிய மன்னனின் மகனுக்குத் தீராத நோயை இந்தப் புண்ணிய தீர்த்தம் குணப்படுத்தியதிலிருந்து அதுவரை இருந்த தடையை அரசாங்கம் நீக்கி விட்டனர். போப் ஆண்டவர் அங்கீகாரம் பெற்ற இப்புனித

தலத்திற்கு ஏராள்மான மக்கள் செல்கின்றனர். இங்கு குணமாகும் தீராத வியாதிகளை பரிசீலனை செய்வதற்காக அகில உலக வைத்தியக் குழு ஒன்று இங்கு உருவாகி இருக்கின்றது. இக்குழு வைத்தியர்களால் கைவிடப்பட்ட பிணியாளர்களையும், வைத்தியத்திற்கு அப்பால்பட்ட பிணிகளையும் பற்றிய விபரங்களையும், அந்த பிணியாளர்களுடைய எக்ஸ்ரே போட்டோ குறிப்புகளையும் பரிசீலனை செய்து வருடாவருடம் தீராத பிணி தீரும் தகவல்களைத் தொகுத்து உலகிற்கு செய்தியாகத் திரட்டித் தருகின்றது. இப்படி போப் ஆண்டவர் அங்கீகாரம் பெற்று இதுவரை சுமார் ஐயாயிரம் நபர்களுக்குமேல் தீராத வியாதிகள் குணமாகி இருக்கின்றன என்று அறிகின்றோம். நமது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அளிக்கும் பஞ்சாட்சரத்தால், மூலிகைகளால், இரட்சைக் கயிறுகளால், யோகத்தால் — சுருங்கக்கூறினல் நமது சாமிகளது அருளால் குணமாகின்ற தீராத நோய்களைப் பார்க்கும் போது, சாமிகளே நமது தமிழ்நாட்டில் திகழும் ஒரு நடமாடும் லூர்துவாக விளங்குவதை பக்தர்கள் கண்டு மனம் களிக்கின்றோம். அவருடைய கருணைப் பொய்கையில், அருள் ஊற்றில், கிருபாகடாக்ஷ தீர்த்தத்தில் மூழ்கி எழுந்திருக்கும் பக்தர்கள் இடரெல்லாம் நீங்குகின்றன ; வியாதிகளெல்லாம் பறக்கின்றன.

இத்தகைய தீராத வியாதிகளைக் குணப்படுத்தும் லூர்து தீர்த்தத்தையும் கேலி செய்பவரும் உண்டு. கேலிக்கென்றே ஒரு கதையைக்கூடக் கட்டி விடுபவரும் உண்டு. அந்தக் கதையைக் கேளுங்கள். லூர்துவிலிருந்து ஒருவர் தன் சொந்த ஊருக்குத் திரும்பினர். அவர் மதுப்பிரியர் ; அவரோடு சில மதுபான சீசாக்கள் இருந்தன. அவருடைய சொந்தநாடு மது கட்டுப்பாடுடைய நாடு. இவர் தன் நாட்டின் எல்லைக்குள் நுழையும்போது அதிகாரிகள் இவர் பெட்டியைப் பரிசோதித்து சீசாக்களில் மது இருந்ததைக் கண்டுபிடித்தனர். இந்தச் சிக்கலிலிருந்து தப்புவிக்க மதுப்பிரியர் ஒரு யூகம் செய்தார். அவரிடமிருந்து வந்த சொற்கள் அவர் சொந்த நாட்டுச் சுங்க அதிகாரிகளை மட்டுமென்ன, தெய்வ நம்பிக்கைக் கொண்டுள்ள நம்மையே அதிர்ச்சியுறச் செய்யும். "நான் இந்தப் புட்டிகளில் லூர்துவில் நிரப்பியது புனிதமான லூர்து தீர்த்தம்தான். நமது நாட்டுக்கு வந்து சேர்வதற்குள் அவை யாவும் மதுவாக மாறிவிட்டது லூர்து அற்புதம்தான் என்று சொல்லவேண்டும்" என்றார் கெட்டிக்கார மதுப்பிரியர். இவரைப் போன்று சித்துகளையும் சித்தர்களையும் எள்ளிநகையாடும் கூட்டமும் எங்கும் உண்டு. ஆனால் உண்மையிலேயே வெறும் தண்ணீரை மணமிக்கப் பன்னீராக மாற்றவல்ல பன்றிமலைச் சித்தரைக் கண்டுவிட்டால் மகான்களின் மகத்துவத்தை உணர்ந்துவிடுவர். சாமிகள் மனம்வைத்தால் குடம் குடமாகத் தண்ணீரைப் பன்னீராக மாற்றவும் முடியும். 1968-ஆம் ஆண்டில் கும்பகோணத்தில் மகா

மகத்தில் காவிரியில் சாமிகள் பக்தர்களுக்கு அருள்சுரந்து குடம் குடமாகக் காவிரித் தீர்த்தத்தை மொண்டு மொண்டு சீடர்கள் தலைகளில் ஊற்றி வாழ்த்தினுர். காவிரித் தீர்த்தம் பன்னீராகப் பரிமளித்த விந்தையை பக்தர்கள் மறக்கமுடியுமா? சாமிகளது இனிய எளிய குழந்தை அன்பை மறக்கமுடியுமா? சாமிகளது கருணையை மறக்கமுடியுமா? சாமிகளது வாழ்க்கையில் மதுவையே பழரச பானமாக்கிய விந்தை நிகழ்ச்சியையும் இங்கு குறிப்பது பொருத்தமாக இருக்கும். சாமிகளது அருள்சக்தியால ஒரு செல் வந்தருடைய தீராதவியாதி குணமாயிற்று. அந்த மகிழ்ச்சியில் அவர் ஒரு பெரிய விருந்தைச் சாமிகளுக்கு ஏற்பாடு செய்தார் ஒரு பெரிய ஓட்டலில். மது கட்டுப்பாடில்லாத காலம். ஒரு சிறந்த விருந்தை மதுபானத்தோடு ஆரம்பிப்பதும் வழக்கமாக இருந்த காலம். சாமிகள் இந்த தர்மசங்கடமான நிலைமையை உணர்ந்தார். எல்லோருடைய மனங்களும் திருப்தி அடைய வேண்டும். " முருகா அடியாரின் மனம் கோணுமல் இருப்பதற்காக இந்த மதுவகைக் கலந்த திராவகத்தைத் தொட்டாலும், சாப்பிடும் பொழுது அவை சோடா லெமன் ஆகவேண்டும் " என்று சாமிகள் பிரார்த்திக்க அவ்விதமே குருநாதரைச் சேர்த்தவர்களுக்கெல்லாம் மதுபான வகைகள் சோடா லெமனுக மாறிவிட்டது என்று உரைத்து மகிழ்கின்றுர் சாமிகளுடைய சீடர் திரு. ரங்கராவ் அவர்கள்.

## திருநீறு கொண்டு வைத்தியம்

நமது சாமிகள் லூர்து போன்று தீராத வியாதிகளைத் தீர்த்து வைக்கும் அற்புதத்தைக் கண்டு மகிழ்வோம். லூர்துவில் தீர்த்தம் மகிமை பெற்றிருப்பது போன்று சாமிகளிடத்தில் சாமிகளின் பஞ் சாட்சரம் மகிமை பெற்றுள்ளது.

" வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்கிடுமே-செந்தில்நகர்
சேவகா என்று திருநீறு அணிவோருக்கு
மேவ வாரா வினை "

எவ்வளவு பொருத்தமான பாட்டு சாமிகளின் செயலை விளக்க! சாமிகள் திருக்கரத்தால் முருகனை நினைத்தோ, முருகன் நாமத்தை உரைத்தோ அல்லது இந்தத் திருப்பாட்டையே பாடியோ விபூதி பூசினுல் எந்த வியாதியும் பறந்து விடும். இப்படி வியாதியை ஓட்டு விக்கும் திருநீற்றை, மனக்கவலையை போக்குவிக்கும் திருநீற்றை, சாமிகளது அடியாருக்குதவியருளும் திருநீற்றை திருஞான சம்பந்தர் மொழிகளாலேயே போற்றிப் பணிந்திடுவோம்.

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்திரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
வேதத்தில் உள்ளது நீறு வெம் துயர் தீர்ப்பது நீறு
முத்தி தருவது நீறு முனிவர் அணிவது நீறு
பக்தி தருவது நீறு பெருமை கொடுப்பது நீறு
தத்துவமாவது நீறு தேசம் புகழ்வது நீறு
பூச இனிப்பது நீறு புண்ணியம் தருவது நீறு
சித்தி தருவது நீறு திருவாலவாயான் திரு நீறே"

இப்படி ஆரம்பிக்கும் பதிகங்களில் போற்றப்படும் திரு நீறல்லவா கூன் பாண்டியன் சுர நோயைத் தீர்த்தருளியது.

சாமிகளுடைய திருக்கரம் அருளும் விபூதி பிரசாதத்தால் எவ்வளவோ மக்களுக்கு ஆறுதலும் ஆதரவும்! எவ்வளவோ நோயாளிகளுக்கு துன்பம் நீங்கி இன்பம் பெருகல்! எவ்வளவோ குழந்தைகளுக்கு சாமிகளின் பேருதவியும் பேரன்பும்! பவானி திரு. M. இராமச்சந்திர அய்யர் தமையனார் குழந்தைக்கு அது பிறந்த ஒரு மாத காலமாக உதட்டில் ஒரு பிளவு இருந்தது. அதனால் அது தாய்ப்பால் அருந்தமுடியவில்லை. சாமிகள் கூறியபடி சாமிகளது விபூதிப் பிரசாதம் பூச குழந்தை மற்ற குழந்தைகள் போல் தாய்ப்பால் உண்டு வளர்ந்தது. மதுரை திரு. மு. முத்திருளப்பன் மகள் லீலா மூன்றரை வயது குழந்தை நடக்க முடியாத குழந்தை. கால்கள் மெலிந்து பலவீனமாக இருந்ததை அயல்நாட்டு முறை வைத்தியமும் நாட்டு வைத்தியமும் சரி செய்ய முடியாததை சாமிகளது விபூதிப் பிரசாதம் இட்டவுடனே பலன் காண வைத்தது. "ஸ்ரீ சாமிகள் விபூதியை குழந்தையின் கால்களில் பூசி குழந்தையை நடக்குமாறு கூறினார். உடனே குழந்தை லீலா உதவி இல்லாமல் யாருடைய கையையும் பிடித்துக்கொள்ளாமல் ஆறுஅடி தூரம் நடந்தாள். பின்னர் இரண்டு நாட்களில் லீலா நடப்பதோடில்லாமல் மெத்தைப் படிகளிலும் தானாகவே ஏறி வந்தாள். தற்போது நன்றாக ஓடியாடி சிரித்து விளையாடிக் கொண்டிருக்கிறாள். கால்களிலும் நன்றாகச் சதைபிடித்து விட்டது" என்று மனம் பூரித்து எழுதுகின்றார் தந்தை. பட்டிவீரன்பட்டி திரு. P. தங்கராஜனுடைய இரண்டரை வயது குழந்தைக்கு டிப்தீரியா எனும் நோய் கண்டு ஆபத்தான நிலை ஏற்பட்டது. கழுத்து வீங்கி மூச்சுவிட முடியாமல் திணறும் குழந்தையை 24 மணி நேரத்திற்குள் மதுரை வைத்திய நிலையத்திற்கு அழைத்துச் சென்றுக் கவனிக்காவிட்டால் உயிருக்கே ஆபத்து என்று எச்சரித்தார் உள்ளூர் டாக்டர். மாலையில் கார் வசதியில்லாத ஊரில் இதைக் கேட்ட பெற்றோருக்கு வயிற்றில் பகீர் என்றது. உடனே மனதில் சாமிகளது அருள்பிரசாத விபூதி நினைவுக்குவர, அதை எடுத்து

குழந்தையின் கழுத்திலும் நெற்றியிலும் தடவ, அந்த விபூதியே சமய சஞ்சீவியாக வாய்த்து அரைமணி நேரத்தில் கழுத்து விக்கத்தை வற்றடித்தது, நோயைக் குணப்படுத்தியது. பெற்றோரின் பேருவகையை விவரிக்கவா வேண்டும்! சேலம் திரு. P. சாரங்கபாணியின் தங்கைக்குப் பத்து வயதிலிருந்து உடம்பு சுகமில்லை. க்ஷயரோகத்திற்காக ஒரு ஆபரேஷனும் நடந்தது. அதனால் அனுகூலமில்லை. அதற்குப்பின் வேறு எந்த சிகிச்சையும் செய்ய இயலாது என்று கைவிரித்தனர் வைத்தியர்கள். அறுவை சிகிச்சைக்குப்பின் புத்திப் பேதகமும் ஏற்பட்டுவிட்டது. இந்த நிலையில் உள்ள பெண்ணைச் சாமிகள் கண்டு ‘ இது குணமாகிவிடும். அழைத்துச்செல்லுங்கள் ’ என்றார். ''மகான் கூறிய வார்த்தையின் மகிமை! ஒருவார காலத்தில் பூர்ண குணமேற்பட்டு என் குடும்பம்பட்ட கவலைகள் எல்லாம் போய் ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்துவிட்டோம்'' என்று மகிழ்ச்சியுடன் கூறுகின்றார் சுசீலாவின் அண்ணன்.

இப்படி எவ்வளவோ குழந்தைகளுக்கும் அருள்பாலிக்கின்ற சாமிகள் பெரியோர்களுக்கும் விபூதி பிரசாதமளித்து இடுக்கண்களைக் களைத்து வருகின்றார். திரு. கோபால் என்பவருக்கு 7 மாதகாலமாக கடும் தலைவலி. சேலத்தில் ஜெனரல் ஆஸ்பத்திரியில் இரண்டுமாத காலம் வைத்தியம் செய்து பார்த்தனர். குணம் ஏற்படவில்லை. கடைசியில் மண்டையில் ஆபரேஷன் செய்யச் சென்னைக்குச்செல்ல வேண்டுமென்றனர் வைத்திய நிபுணர்கள். அந்த சமயத்தில் சாமிகள் சேலத்தில் இருப்பதைக் கேள்விப்பட்டு நோயாளியைச் சாமிகளிடம் அழைத்துவந்தார். இந்த வியாதியின் முழுவிபரம் அறிந்துகொண்ட சாமிகள் அன்பு தவழும் முகத்துடன் நோயாளியின் கை சுண்டுவிரலைப்பிடித்து விபூதி போட்டு சில விநாடிகளில் தலைவலியைப் பூராவும் குணப்படுத்திவிட்டார்.

தலைநிமிர முடியாமல் ஏதோ ஒரு சுமை அழுத்திக் கொண்டிருந்தது போலிருந்த பெரும் தலைவலியிலிருந்து நான்கு வருடங்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ஒருவருக்கு பூஜை பஞ்சாட்சரத்தாலும், தீர்த்தத்தாலும் சாமிகள் அவரின் தீராத் துயரை தீர்த்தருளிய விந்தையைக்கூறி மகிழ்கின்றார் சென்னை பக்தர் திரு. R. அடைக்கலம் பிள்ளை. தலைவலி மட்டும்தானா? உலகில் வைத்தியர்களால் கைவிடப்பட்ட எந்தவிதமான நோயும் சாமிகள் அருள் கிட்டினால் மறைந்து ஒழிகின்றன. 1960இல் ஈரோடு தாசில்தாராக இருந்த திரு. M. சேதுமாதவன் மனைவிக்கு ஒரு தலைவலியும், அதே பக்கம் முதுகுவலியும் ஏற்பட்டு வீக்கம் உண்டாகி பல டாக்டர்கள் பரீட்சித்தும் வியாதி இன்னது என்று கண்டுபிடிக்க முடியாது, வேலூர் சென்று முதுகில் அறுவை சிகிச்சை செய்வதென்று தீர்மானித்தார்கள். அப்போது சாமிகளைக் காணும் பாக்கியம்

கிடைத்தது நோயாளிக்கு. சாமிகளுடைய அருள்பிரசாத விபூதி கிடைக்கும் பாக்கியமும் கிடைத்தது. விபூதியை விடாமல் பூசிவந்த அம்மையாருக்கு ஒருநாள் தாங்கமுடியாத வலியும், வீக்கமும் ஏற்பட அவர் துடியாய் துடித்து, "பன்றிமலை சாமிகள் என்கின்றார்களே, எல்லாம் பொய், முருகனும் பொய், உங்களை நம்பி இந்த கதியா?" என்று கதறி அழுதார். அழுத அயற்சியில் கண் அயர்ந்தார். அருள்தெய்வம் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் கனவில் தோன்றினர். "குணமாய்விடும், நல்ல காலம் வந்துவிட்டது" என்றுகூறி ஊதி விட்டு மறைந்தார். அதன்பின் நடந்ததை ஸ்ரீமதி சேதுமாதவன் மொழிகளிலேயே கேட்போம். "நான் கண் விழித்துக்கொண்டேன், உடனே 'சில்' என்று மூன்றுமுறை அலைபோல் அடுத்தடுத்து அடித்தது. உடனே ஸ்ரீ சாமிகளையும், முருகனையும் தியானித்து என் கணவரை எழுப்பி, என் கனவைப் பற்றியும் உணர்ந்ததையும் சொன்னேன். என் கணவர் 'எல்லாம் ஸ்ரீ சாமிகளின் செயல். உன்னைப் பிடித்த சனி இன்றுடன் விட்டது' என்றார். அதன்பிறகு எனக்கு உடம்பிலும், தலையிலும் திடீரென்று வியர்த்து தண்ணீராக கொட்டி படுக்கை, தலையணை எல்லாம் நனைந்தன. என் தலைவலி, முக வீக்கம், தோள், கைவிரல்கள் வீக்கம் எல்லாம் நன்றாக வடிந்து இதுவரை யாதொரு நோயின்றிச் சுகமாக இருக்கிறேன். என் குரு நாதரை எங்கள் கண்கண்ட தெய்வமாக குடும்பத்தார் அனைவரும் வணங்கி பூஜித்து வருகின்றோம்" என்று பேருவகையோடு கூறு கின்றார் ஸ்ரீமதி சேதுமாதவன். இந்த சம்பவம் நடந்தபோது சாமிகள் மலேயாவில் இருந்தது குறிப்பிடத்தக்கது. மலேயாவிலும் சாமிகள் தீராத வியாதிகளைக் குணப்படுத்தியதும் நாம் "மலாயாவில் தென்னாட்டுச் சித்தர்" என்ற தொகுப்பில் படித்து மகிழ்ந்தோம்.

மலாயாவில் பினங்கில் சீனர் திரு விம்பர் என்பவரின் பலநாள் தீராதிருந்த நோயைச் சாமிகள் விபூதிபிரசாதம் அருளி பிரசாதத்தை உடம்பில் பூசியும் உள்ளே நீரில் கலந்து குடிக்க வைத்தும் ஒரே நாளில் ஒரே பொழுதில் பாதி குணமாக்கி விட்டார் என்ற விபரத்தையும் 'நான் கண்ட நடமாடும் தெய்வம்' என்ற கட்டுரையில் தமிழ் முரசு பத்திரிகையில் திரு நா. த சீ. ஆறுமுகம் பிள்ளை எழுதி இருக்கின்றார். கோயமுத்தூர் "திருப்பூர் ஹவுஸ்" திரு T. S. சிவ சுப்பிரமணிய செட்டியார் B. A., சாமிகளுடைய அருமை பக்தர். 1957இல் சாமிகளைத் தம் பங்கவாவிற்கு அழைத்து வந்தார். அவருக்கு அந்தச் சமயம் போதாத காலமென்றும், பிரயாணம் செய்வது படிகட்டுகள் ஏறுவது கூடாதென்றும் சாமிகள் எச்சரித்தார். சாமிகளும் அதன்பின் மலேயா சென்று விட்டார். சாமிகள் எச்சரித்துச்சென்ற நான்கு மாதங்களுக்குள் அவர் தன் படுக்கையறை வாசற்படியில் தடுக்கி விழுந்தார். அவரது இடதுகால் எலும்பு இடுப்புக்குப் பக்கத்தில் உள்ள சப்பை (joint) முறிந்து விட்டது. அதற்கு உடனடியாக

வைத்தியம் செய்த நிபுணர்கள் அவரை ஆறுமாத காலம் படுத்த படுக்கையாகவே இருக்கவேண்டுமென்றும், அசைந்தால் எலும்பு ஓட்டுவது கடினம் என்றும் கூறினர். மலாயாவிலிருந்து திரும்பிய சாமிகளுக்கு இவ்விஷயங்களைப் பக்தர் சொல்லி அனுப்பினர். சாமிகள் சீடரைக் காண ஆவலோடு கோவைக்கே வந்தார். பஞ்சாட்சரத்தைப் பாதிக்கப்பட்ட இடத்தில் சாமிகள் தன் திருக்கரம் கொண்டே தடவினர். 'இனி டாக்டரைக் கூட்டிவத்து காண்பியுங்கள்' என்றார் சாமிகள். அப்படியே எலும்பு வியாதி நிபுணர்களும் வந்து பார்த்து கட்டுகளை அவிழ்த்துக் கால்களை மடக்கச் சொன்னார்கள். காலை மடக்கவும் முடிந்தது, ஊன்றவும் முடிந்தது. இந்த பேரற்புத குணத்தைக்கண்ட வைத்திய நிபுணர்களின் ஆச்சரியத்தை விவரிக்க முடியுமா? டால்மியாபுரம் திரு. G. அனந்தராமன் என்பவருக்கு 1960–இல் ஒரு வருடமாக வெயிலில் சென்றாலும் வெளிச்சத்தைப் பார்த்தாலும் கண்கூசி, மயக்கம்போட்டு விழுந்துவிடுவார். சாமிகளுடைய இரட்சைக்கயிறும் விபூதிப் பிரசாதமும் இந்தக் கோளாறுகளை உடனே நிவர்த்தி செய்தன. டாக்டர்களால் இரத்தக் கொதிப்பு என்று மதிப்பிடப்பட்ட நோய் ஒரு பைசா செலவில்லாமல் உடனே மறைந்த விந்தையை மகிழ்ச்சியோடு கூறுகின்றார் திரு. அனந்தராமன். 1956–இல் சென்னை இந்திய அரசாங்க உணவு கிளை சூபரின்டெண்டாக இருந்த திரு. ந. த. இராசேந்திரன் என்பவருக்கு ஒரு கொடூர எலும்புநோய் ஏற்பட்டு இடது கையை வெட்டி எடுத்துவிட வேண்டும் என்று டாக்டர்கள் தெரிவித்து நாளும் குறிப்பிட்டு விட்டனர். இதைக்கேட்டு மனம் குழம்பிய நோயாளிக்கு நல்லகாலம் வந்துவிட்டது. அவரது நல்லகாலம் சாமிகளையே சென்னைக்கு அழைத்துவந்து நோயாளியை சாமிகளிடம் கூட்டி வந்தது. திரு. இராசேந்திரன் கூறுவதையே கேட்போம். "அது சமயம் அந்நகருக்கு ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு அவர்களிடம் ஆசிபெற்று வரலாம் என்று ஆஸ்பத்திரியிலிருந்து அதிகாரிகள் உத்திரவு இன்றி வெளியேறி ஸ்ரீ சாமிகளிடம் சரணடைந்து என் இன்னல்களைத் தெரிவித்தேன். அவர்கள் சகல வியாதிகளையும் குணப்படுத்தும் தெய்வீக நறுமணம் கொண்ட விபூதியைக் கொடுத்து அதைப் பூசிவந்தால் எல்லாம் குணமாகிவிடும் என அபயம் கொடுத்தார். அன்றுமுதல் அவர் வாக்குப்படியே அவர் கொடுக்கும் பிரசாதத்தை பூசிவருகிறேன். படிப்படியாக என் நோய் குணமடைந்து விட்டது. நான் வேறு மருந்து வாங்கிக்கொள்ளவில்லை. என் வியாதி குணமானது கண்டு பலபிரபல டாக்டர்கள் மிகவும் அதிசயித்தார்கள். எனக்கு வாழ்வு அளித்த சாமிகளை இன்றும் நடமாடும் தெய்வமாக கருதிப் பூசித்து வருகிறேன்."

சென்னை மித்தியாபுரம் ராணி திருமதி, லக்ஷிமி அம்மாள் என்பவர் சாமிகளின் சக்திகளைக் கேட்டார். அவர் நான்கு வருடங்களாக

வயிற்றுகட்டியால் வேதனைப்பட்டார். அநேக வைத்தியங்கள் செய்தும் குணப்படவில்லை. அவர் சாமிகளை நேரில் காணவும் இல்லை. சாமிகளுக்கு ஒரு கடிதம் வாயிலாக தன் நோயைப்பற்றி எழுதினர். சாமிகள் தபாலிலேயே பஞ்சாட்சரம் அனுப்பி அதை நெற்றியில் பூசிவரும்படி எழுதினர். "அதன்படி செய்தேன், என்ன ஆச்சரியம்! வயிற்றிலுள்ள கட்டி கரைந்து நான் உபத்திரவம் இல்லாமல் சுகமாக வாழ்ந்து வருகிறேன். இந்த மகானுல் அநேக நன்மை அடைய முருகனைப் பிரார்த்திக்கிறேன்" என்று பக்தியோடு எழுதுகின்ருர் திருமதி லக்ஷிமி அம்மாள். ஈரோட்டில் திரு. சொக்கலிங்கம் பிள்ளை என்ற பெரியவர் தீராத விக்கல் வந்து அவதிப்பட்டார். எந்த டாக்டரும் குணப்படுத்த முடியவில்லை. "சாமிகள் ஆசீர்வதித்துத் தந்த விபூதியை நான் சாமிகளை நினைத்து பூசித்து பூசிக்கொள்ளத் தரவே உடனே அவர் குணமடைந்து நன்னிலை அடைந்தார்" என்று பெருமையோடு கூறுகின்ருர் மதுரை டிப்டி கலெக்டர் திரு. இரா. கிருபாகரன் M A., M. SC. 1963–இல்,

## ஜோசியமும் வைத்தியமும்

சாமிகள் மணிமந்திர ஔத வல்லபராக விளங்கி வருவதால் யாருக்கு எந்த காலத்தில் என்ன நடக்கும் என்பதை ஜோதிட அறிவால் உணர்ந்து அந்தக் காலத்தில் ஏற்படும் பிணிக்கும் தகுந்த ஔடதமாகவே சாமிகளே அமைந்து விடுகின்ருர். கெட்ட காலத்தையும் நல்ல காலமாக்கி விடுகின்ருர். ஜோதிடராக பலன் உரைத்து வைத்தியநாதராக நல்ல பலன் அளிக்கின்ருர். சேலம் இராவ் பகதூர் A. S. நாராயணன் அவர்கள் சாமிகளோடு திருவனந்தபுரத்திற்குச் சென்று வந்த நிகழ்ச்சிகளை தொகுத்துரைக்கின்ருர். அதில் ஒரு நிகழ்ச்சியை இங்குக் குறிப்பது பொருந்தும். கோடை பிற்பகல். ஒரு தென்னை தோட்டத்தில் சாமிகளும் பக்தர்களும் இளைப்பாற அமர்ந்தனர். ஒரு மரமேறியின் உதவியால் இளநீரும் தாகத்திற்குக் கிடைத்தது. எட்டி அமர்ந்திருந்த மரமேறியிடம் பக்தர்களில் ஒருவரை அனுப்பித்து மரமேறியின் பெயரையும் அவன் மனைவி பெயரையும் அறிந்துவரச் சொன்னர் சாமிகள். பெயர்களை அறிந்து வந்த பக்தர் மரமேறியின் 'பெயர் சிவராமன் என்றும் அவர் மனைவி பெயர் பவானி என்றும் கூறினர். சாமிகள், அருகில் இருந்த ஒரு புத்தகத்தின் அட்டையில் பக்தர் வருவதற்குமுன் எழுதியிருந்ததையும் அந்த பக்தரைக் கொண்டே படிக்க வைத்தார். அந்த அட்டையில் "சிவராமன், பவானி வயது 28" என்று எழுதியிருந்ததைக் கண்டு பக்தர்கள் ஆச்சரியப்பட்டனர். இதன்பின் சாமிகள் சிவராமனைக் கண்டு, "உன் மனைவி ஒரு கடுமையான நோய் வாய்ப்பட்டிருக்கிருள் அல்லவா? அவளை இங்கே அழைத்துவா"

என்றார். மறுநாள் அவளை அழைத்துவர சாமிகள் விபூதி பிரசாதம் அளித்தார். அதனால் அவளுக்கு குணமேற்பட்ட விபரத்தையும் சாமிகளுக்கு அறிவித்தார்கள்.

திண்டுக்கல்லில் சுந்தரராஜ மில்லில் லேபர் ஆபீசர் (1962) திரு. P. S. இராதாகிருஷ்ண நாயுடு B. A., அவர்கள் மூத்த குமாரன் திரு. ஜனார்த்தனன் அடிக்கடி சாமிகள் தரிசனம் செய்து வருவதுண்டு. ஒரு நாள் சாமிகள் அவரிடம் அவர் நேர பலன் சரியில்லை என்று கூறி போக்குவரத்தில் ஜாக்கிரதையாக இருக்கும்படி எச்சரித்தார். ஒரு நாள் அதிகாலை இவர் சைக்கலில் செல்லும்போது ரயில்லே லெவல் கிராசிங் கேட்டில் சைக்கல் மோதி இவரது இடது புஜம் பலமாக அடிபட்டது, தோள் பட்டை எலும்பு முறிந்து விட்டது. ஜெனார்த்தனம் உடனடியாக ஒரு நண்பர் உதவி கொண்டு ஜட்காவில் ஏறி சாமிகளை அடைந்தார். சாமிகள் அருள் கூர்ந்து விபூதிப் பிரசாதம் அளித்தார். எலும்பு கூடிவிடு மென்றும் ஆசியளித்தார். எலும்பு கூடி விட்டதா என்பதை அடுத்த வாரம் எக்ஸரே படம் பிடித்து பரிசீலனை செய்து பார்த்த டாக்டர்களை இப்படியும் விபூதியால் இவ்வளவு சீக்கிரத்தில் எலும்பு கூடிய ஆச்சரியம் வாயடைத்து விட்டது. எலும்பு நன்ருய் கூடிவிட்டாலும் இடது கையை திரு. ஜனார்த்தனனால் ஒரு அளவுக்கு மேல் தூக்கமுடியவில்லை. டாக்டர்களும் ஆறு மாத காலம் கையும் அப்படித்தானிருக்கும் என்று கூறிவிட்டனர். அந்த நிலையில் ஜனார்த்தனன் ஒரு பரீட்சை எழுத வேண்டி இருந்தது. கையை இப்படி வைத்துக்கொண்டு எப்படி பரீட்சை எழுதுவது என்ற மன வருத்தத்தோடு சாமிகளை தஞ்சமடைந்தார் இளைஞர். சாமிகள் "நீ மதுருசுக்குச் சென்று நன்ருகப் பரீட்சை எழுதலாம். நீ மாம்பலம் ஸ்டேஷனில் இறங்கி உன் தமக்கையார் வீட்டிற்கு போகுமுன் உன் கை முழு அளவிற்கும் தூக்குவதற்கு முடியும். கவலைப்படாமல் பரீட்சை எழுது" என்று ஆசீர்வதித்தார். அதன்படியே நடந்தது என்று சொல்லவும் வேண்டுமோ? தன் அக்காள் வீட்டை அடைவதன் முன் தன் கையை யாதொரு வலியின்றித் தூக்க முடிந்ததைக் கண்டு ஆச்சரியம் தாங்க முடியாத இளைஞரும் நேராகத் தபாலாபீசுக்குச் சென்று இந்த மகிழ்ச்சிகரமான செய்தியைத் தன் தந்தைக்குத் தந்தி மூலம் அறிவித்தார்.

## சென்னையில் சமீபத்தில் ஒரு பேரற்புதம்

சமீபத்தில் சென்னையில் ஒரு பேரற்புதம் ஒன்று நடந்தது. வைத்தியக் கல்லூரியில் படிக்கின்ற ஒரு மாணவி. வைத்திய நிபுணர் ஒருவருடைய மருமகள். அவருக்கு வாதநோய் தாக்கி உடலில் இடது பக்கம் பாதிக்கப்பட்டது. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் அருள் விபூதி பிரசாதம் அவரின் உதவாதிருந்த உறுப்புக்களை உதவ

உதவியது. இதைக்கண்ட பெண்ணின் தந்தை திரு. K. கோவிந்தன் ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் அளவிடமுடியுமா? அவருடைய ஆனந்தத்திலேயே சாமிகளுடைய பெருமையைப் போற்றி "சித்தபுருஷர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள்" என்றே ஒரு கட்டுரை வரைந்து விட்டார். இந்த அதிசயத்தை நேரில்கண்ட பக்தர்களுள் 'பாக்கியபரணி' ஆசிரியர் Dr. P. K. சுந்தரமும் ஒருவர். அவருடைய பெருவியப்பு ஒரு இலக்கியச் சுவைமிகுந்த எழுத்தோவியத்தையே உருவாக்கிவிட்டது. பாக்கிய பரணியில் மலர் மூன்றில் இதழ் நான்கில் கைவண்ணமும் கால் வண்ணமுமாக ஆரம்பித்த முதல் தலைமை கட்டுரை வேலும் காலுமாக வளர்ந்து மருளும் அருளுமாக விரிந்து சாமிகளின் பெருமையை புகழ்த்துரைக்கின்றது. அந்த இலக்கிய ஓவியத்தில் சில பகுதிகளைப் படித்து இன்புறுவோம்.

(i)

"தன் கை வண்ணத்தாலும் கால் வண்ணத்தாலும் இரு உயர்ந்த கற்புக்கரசிகளுக்கல்லவா இராமன் உயிர் கொடுத்திருக்கிறான். வில் முறியாவிட்டால் சீதையின் உயிர் முறிந்திருக்கும். கல் முறியாவிட்டால் அகல்யை கல்லாகவே இருந்திருப்பாள். வில்லை முறித்ததிலிருந்து சீதையின் பின்வினை தொடங்குகிறது. கல்லை மிதித்ததிலிருந்து அகல்யையின் முன்வினை முடிகிறது. கையால் வில்லையும் காலால் கல்லையும் செறுத்தான் என்பது சீதை கேள்வனின் காதை; இராமனின் சரித்திரம்"

(ii)

"வள்ளி மணாளனின் வரலாறும் இப்படித்தான் இருக்கிறது...... வேல் அரக்கரின் உயிரை மட்டுமே குடித்தது. காலோ தலையெழுத்தையே அழித்துவிடுகின்றது, விதியையே மாற்றிவிடுகிறது. வினையைப் பொடியாக்குகிறது. வந்தவினை வருவினை எல்லாவற்றையும் நீருக்கி வினையின் கருவினையே உறிஞ்சிவிடுகிறது. கந்தரலங்காரம் சொல்லுகின்ற செய்தி இது:

"வேல்பட்டு அழிந்தது வேலையும் சூரனும் வெற்பும் அவன் கால்பட்டு அழிந்தது இங்கு என் தலைமேல் அயன் கையெழுத்தே" .........வேல் பெரிதா? கால் பெரிதா? வேல் பாவியின் உயிரை மட்டும் போக்குகிறது. காலோ பாவத்தின் உயிர் நாடியையே அழித்துவிடுகிறது. ஆகவே கால்தான் பெரிது"

## மருளும் அருளும்

இங்கு ஒரு கேள்வி:

கைவண்ணமும் கால்வண்ணமும் ஒரே முறையில் வினை தீர்க்கும் இடம் ஏதாவது இருக்கிறதா?

வேலும் காலும் வேற்றுமையில்லாமல் கூற்றுவனை மாற்றும் தெய்வம் ஒன்று உண்டா?

உண்டு; இருக்கிறது. இங்கேயே இருக்கிறது; இப்பொழுதே நம் முன்னே இருக்கிறது.

இதன் கால்தொட்டுப் பணிந்தால் பாவவினைகள் போகும்.

இது கைதொட்டுப் பணிந்தால் கடுமறலி ஓடும்.

ஓடியிருக்கிறது; புனைகதையில்லை; பொய்யில்லை; உண்மை. ஓடின தேதிகூடச் சொல்லலாம்.

கடந்த மாதம் ஏழாம் தேதி, 7—10—1968.

யாரிடத்திலிருந்து ஓடியது என்றுகூடச் சொல்லலாம்.

திரு. கோவிந்தன் என்பவருடைய பெண்;

சென்னை மாநகரில் பெருமையுடன் தொழில் செய்யும் டாக்டர் நரேந்திரரின் மருமகள்.

இந்த அபலைப் பெண்ணைத்தான் யமன் குறி வைத்தான். இதற்குப் பிரமன் தலை எழுத்து கூட்டணி.

பாரிசவாயுவாக வந்து தாக்கினான். உடலின் ஒருபக்கம் பூராவும் செயலிழந்து போயிற்று.

ஆனால், இக்கொடியோனுக்கு ஒரு பெரிய இடத்தைப் பற்றி அடிக்கடி மறந்து போகிறது. நிறைய களங்களில் புறங்காட்டியும் புத்தி வரவில்லை. மறுபடி வந்து சிக்கிக் கொண்டான். ஆரவாரத்துடன் வந்த ஆட்கொல்லியை, அமைதியாகப் புன்முறுவலுடன் பார்த்தன, இரு அருள் பொழியும் கண்கள்.

பாரிசவாயுவினால் துடிக்கும் அந்தக் குழந்தையை அருகில் வைத்துக்கொண்டு, வேலும், சங்கும், சக்கரமும், குக்குடக்கொடியும் இழையோடும் தன் திருக்கரத்தினால் சிறிது திருநீற்றை எடுத்து, பாரிசவாயு தாக்கிய உடலின் பகுதியிலே மென்மையோடு இந்தத் தெய்வம் பூசுகிறது.

நடந்தது அவ்வளவுதான்!

மருளை அருள் வெல்லுகிறது,

மந்திரமாகிறது நீறு;

மரணம் ஓடுகிறது.

விபூதி பூசும்பொழுதே உடல் இயங்க ஆரம்பிக்கிறது. இரத்த ஓட்டமில்லாமல் வாடியிருந்த நாடிகளும் நரம்புகளும் புது இரத்தம் பாய்ந்து புத்துயிர் பெறுகின்றன. களைத்துப்போன காலும், கையும் களை பெறுகின்றன. நடமாட முடியாமல் சிறகொடிந்த பறவைபோல் படுக்கையில் கிடந்த அந்தப் பெண் குழந்தை அடி எடுத்து வைத்து நடமாடத் தொடங்குகிறுள்.

இவ்வளவும் நடந்தேறுவதற்கு ஆன நேரம் சில நிமிஷங்களே!

கண்ணுக்கு முன்னே காலன் ஓடியதை எல்லோரும்தான் பார்த்தார்கள்.

அந்தப் பெண்ணின் பெற்றோருக்கு உண்டான ஆனந்தத்தைச் சொல்லவும் முடியுமோ?

டாக்டர் நரேந்திரனுக்கோ உள்ளம் வியப்பிலுைம், ஏன், ஒருவித அச்சத்திலுைம் நிரம்பி, பேச்சொடுங்கி ஒரே பிரமிப்பில் வெகு நேரம் ஆழ்ந்து போயிற்று.

இந்த உணர்ச்சி எல்லோரையும் ஒருமுகமாக ஆட்கொண்டது. எமனை விரட்டும் இறைவனுடைய சந்நிதியில் நிற்கிருேம் என்ற பேருணர்வு அச்சந் தருவதாகவும், பக்தி நிரம்பியதாகவும் அங்கு எழுந்து வியாபித்தது.

கைவேலினுல் அயன் கையெழுத்தை மாற்றிய இந்த தெய்வம் எது? பெயரென்ன? பன்றிமலை சாமிகள்! நம் தலைமேல் அவர் கால் பட்டாலும் சரி, கைவேல் பட்டாலும் சரி, நாளும் கோளும் கூற்றும் ஓடி ஒளிகின்றன. சும்மா ஓடிவிடுவதில்லை. இனி இங்கு வருவதில்லை என்று எழுதிக் கொடுத்துவிட்டு ஓடுகின்றன. எல்லோரும் பார்க்கும்படியாகப் பகிரங்கமாக வெட்கமில்லாமல் ஓடுகின்றன. கால் வண்ணத்திற்குக் கைவண்ணம் தோற்கவில்லை. காலுக்கு வேல் இளைக்கவில்லை.

"வேல்பட்டு அழிந்தது செந்தூர் வயல்பொழில் தேங்கடம்பின்
மால்பட்டு அழிந்தது பூங்கொடியார்மனம் மாமயிலோன்
வேல்பட்டு அழிந்தது வேலையும்சூரனும் வெற்பும்அவன்
கால்பட்டு அழிந்தது இங்குஎன் தலைமேல்
அயன் கையெழுத்தே"

* * *

சாமிகளுடைய விபூதி மகிமையை எண்ணிறந்த பக்தர்கள் அனுபவித்து வருகின்றனர். சிலருடைய உயிர்களேயே சாமிகள் பஞ்சாட்சரம் மீட்டு வந்திருக்கின்றது. சிலருக்குக் கண் பார்வையும் வாய்ப்பேச்சும் கொடுத்திருக்கின்றது சாமிகளது விபூதிப் பிரசாதம் சிலருக்குக் காதையும் கேட்க வைத்திருக்கின்றது. சில நொண்டிகளே நடக்க வைத்திருக்கின்றது. தீராத வியாதி என்று நிலேத்துநீடித்த வியாதிகளே விரட்டியிருக்கின்றது சாமிகளுடைய திருநீறு. எண்ணிறந்த மக்களின் தீராத துயரையும் தீர்க்கவும், மனப்புண்ணேயும் ஆற்றவும் சமயசஞ்சீவியாக வாய்க்கின்றது சாமிகளது திருவெண்ணீறு. அந்தப் பெருமையை போற்றுகின்ற ஒரு பக்தரது கவி மாலேயை சாமிகளுக்கு அணிவித்து அகமகிழ்வோம்.

காப்பு

முருகாவெனச்சொல்லி மூண்டதொரு விணேயோட்டும்
அருள்பெற்ற பன்றிமலே குருநாதன் தருகின்ற
திருநீற்றின் மகிமையைத் தெரிந்தவரை பாடவே
ஆறுமுகன் அண்ணன் தான் காப்பு.

1. இருப்பான தலமெல்லாம் என்றும்
துதிப்பதற் கீடேற்றம் செய்யும்நீறு
எங்கெங்கிருந்தாலும் ஏத்திப் பணித்திட
எதிராக நிற்கும் நீறு
திருப்பரங்குன்றமும் செந்தில் கதிர்காமமும்
திருச்சோலேக் குகந்த நீறு.
திருத்தணிகை சுவாமிமலே திருவேரகம்
புகழ் செவ்வேளர் தந்த நீறு
பொருப்புகள் முடிதோறும் பாதகமல முத்திரை
புகழ் பெருக வந்த நீறு
பூசை செய்தே போற்றும் திருவாவினன்குடி
போதகர் தந்த நீறு
அருட்பாதம் நத்தியே நிணேப்பவர் நெஞ்சினில்
அகலாதிருக்கும் நீறு
அடியவர்க்கருள் செய்யும் அருளாளர் பன்றிமலே
குருநாதன் தரு வெண்ணீறே

2. சம்பந்தராகவே தென்னவன் கூடலில்
சமணரை வென்ற நீறு
சகல குருபரனுக அரனுக்கு உபதேசம்
தானுய் உரைத்த நீறு

நம்பின அடியவர் ஈடேற வினையோட
நாதனுர் தந்த நீறு
நாற்பத் தெண்ணுயிரம் ரிஷிகள் முனிசித்தர்கள்
நம்பியே பூசு நீறு
கம்ப மதயானை மாமுகவனுக்கிளையவன்
கருதியே தந்த நீறு
காலனிட தூதர்கள் நாடாமலென்னுளும்
காக்கவே வந்த நீறு
அம்பிகை திரிசூலி, சுந்தரி, சவுந்தரி
அபிராமவல்லி குமரன்
அடியவர்க்கருள் செய்யும் அருளாளர்
பன்றிமலை குருநாதன் தரு வெண்ணீறே

3. நூலைப் பழித்த விடை மாதர்க்கு
வேலாக நுதலில் தரித்த நீறு
நூறு நூருயிரம் இம்சை வந்தாலும்
ஒரு நொடியிற் றெலைக்கும் நீறு
வேலைக்கடந்து வெகு சூரர்கள் மடியவே
வெற்றிவேல் தொட்ட நீறு
வேதனைக்குட்டியே வெஞ்சிறை வைத்தன்று
வேடிக்கை செய்த நீறு
வாலைப் பருவமாய் வயது நூருகவே
வளர்ச்சியுற வந்த நீறு
மாருத செல்வமும் பேரான வாழ்வுடன்
வரிசை தரவல்ல நீறு
ஆலவாய் சொக்கருடன் ஆனந்தத் தாண்டவம்
ஆடிச்செழித்த நீறு
அடியவர்க்கருள் செய்யும் அருளாளர்
பன்றிமலை குருநாதன் தரு வெண்ணீறே

4. அரவங்கள் பூதங்கள் மிருகங்கள் பேய்களை
அடக்கவேயிட்ட நீறு
அஷ்டபாக்ய லக்ஷ்மி இஷ்டமுடன் எந்நாளும்
அகலாமலிட்ட நீறு
இரவு பகல் மறவாமல் முருகர் திருநாமமே
இறைஞ்சித்தரித்த நீறு
எதிராளி நெஞ்சம் கலங்கிப் பயந்தோட
எந்நாதனிட்ட நீறு

பர்வுபல பிணிகளும் உறவு கெடு கோள்களும்
பணிந்தாட இட்ட நீறு
பஞ்சமா பாதகம் மிஞ்சிடும் வல்வினைப்
பறந்தோடத் தந்த நீறு
அரசனுடன் மந்திரி ஆண்மையுள்ள வீரரும்
அதிவசியமாக்கும் நீறு
அடியவர்க் கருள் செய்யும் அருளாளர் பன்றிமலை
குருநாதன் தரு வெண்ணீறே.

5. எத்தேச காலமும் ஏழையாம் எனக்காக
இரங்கியருள் செய்யும் நீறு
எழிலான கிருத்திகை தவருமல் அனுஷ்டிக்க
இன்பங்கள் தந்த நீறு
சிற்றிடை வள்ளியுடன் தினைப்புலம்
காத்திடச் சிவசித்தான நீறு
சிற்றூரு வேடர்கள் சிவபக்தராகவே
திருவுருக் கொண்ட நீறு
முத்தமிழ்க்காகவே அருணகிரி நாதர்க்கு
மோட்சம் கொடுத்த நீறு
முப்பத்து முக்கோடி தேவாதி தேவரும்
முருகரென வந்த நீறு
அத்தனருள் கந்தனுர் நித்தம்
விளையாடவே அகலாமலிட்ட நீறு
அடியவர்க்கருள் செய்யும் அருளாளர்
பன்றிமலை குருநாதன் தரு வெண்ணீறே.

## மூலிகை வைத்தியம்

சாமிகளுக்கு உற்சாகம் பொங்க வார்த்தைகளும் மேலும் பொங்க ஆரம்பிக்கும். "விஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்டது தெய்வீகம். தெய்வீகத்தை பரிசீலனை செய்வதென்ருல் நமது அறிவே எட்டாது, ஆயுளே போதாது. இந்த தெய்வீகத்தை அடைந்து விட்டால் எவ்வளவோ செயற்கரிய செயல் செய்யலாம். ஆனுல் எல்லோருக்கும் இது முடியுமா ? உண்மை சிங்கமாய் இருந்தால் தான் சிம்ம கர்ஜனை செய்ய முடியும். அப்போது தான் மற்ற மிருகங்கள் அந்த கர்ஜனையைக் கேட்டு பயப்படும். ஒருவன் நீச்சல் தெரியும் என்று நெடு நாட்கள் மற்றவர்களை ஏமாற்றித் திரிய முடியாது. தண்ணீரில் தள்ளினுல் அவன் நீச்சல் அடித்தே தீரவேண்டும். அல்லாவிட்டால் அவனுடைய உயிருக்கே ஆபத்து ஏற்படும். டாக்டர் பட்டம் பெறுவதாயிருந்தால் அதற்கு எவ்வளவு பாடுபட வேண்டும், எவ்வளவு

பாடங்கள் படிக்கவேண்டும், எவ்வளவு அனுபவம் வேண்டும்? 'ஓம் நமசிவய' மந்திர உண்மையைக் கண்டுகொள்ள எவ்வளவு பாடுபடவேண்டி இருக்கின்றது. கர்மவினையால் வரும் நோய்களைத் தவிர மற்றெந்த நோய்களையும் அவன் அருளால் குணப்படுத்த முடியும். கற்றது கைமண் அளவு தான். கல்லாதது தான் உலகத் தளவாக அமைந்துள்ளது. "ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்" என்று அதனால்தான் ஔவை பிராட்டியும் உரைத்தனர் போலும்! தான் செய்ய முடியாத காரியத்தை தான் செய்வேன் என்று சொல்வது அறிவின்மை மட்டுமல்ல, அது ஆபத்தையும் கொண்டுவரும். மனிதனிடத்தில் தொடர்பு கொண்டாலேயே எவ்வளவோ நடக்கின்றது. கலெக்டருடைய அன்புக்கு பாத்திரமாகி விட்டாலேயே எவ்வளவோ காரியங்களை சாதித்துக் கொள்ள முடிகின்றதே. அப்படி இருக்க தெய்வத்தினிடத்திலேயே தொடர்பு வைத்துக்கொண்டால் நம்மால் முடியாததும் உண்டோ?"

இப்படி முத்துச் சொல் மாரி பொழிகின்ற சாமிகள் மணிமந்திர ஔடத மேதை என்பதை நாம் அறிவோம். வைத்தியர்களிடையே மகா வைத்திய நாதராக விளங்கும் சித்த புருஷர் நமது சாமிகள். வைத்தியத்தைப் பற்றியே சாமிகள் ஆர்வத்தோடு இயம்பும் மொழிகளையே கேட்போம்:

சாமிகள்: ஆயிரம் பேரைக் கொன்றவர் தான் முழு வைத்தியரென்று சொல்வதைக் கேட்கின்றோம். இதை விளக்கவும் முற்படும் பெரியவர்களையும் நாம் பார்த்திருக்கின்றோம். ஆரம்பத்தில் வேலை கற்றுக்கொள்ளும் டாக்டர்கள் அறுவைசிகித்சையில் அனுபவம் பெற வேண்டும், விதவிதமான நோய்களுக்கு விதவிதமான மருந்துகளைக் கொடுக்கவேண்டும். இவற்றில் தவறுதல் நடந்துவிட்டால் உயிருக்கே ஆபத்து வந்துவிடும். டாக்டர் செய்யும் தவறுதலால் மடியும் மக்கள் எவ்வளவோ உண்டு. தவறை செய்து செய்துதான் ஒருவன் பெரிய டாக்டராகின்றான். பெரிய டாக்டரானவுடன் தவறு நடப்பதே இல்லை. இதை வற்புறுத்தவே 'ஆயிரம் பேரைக் கொன்றவர்தான் முழு வைத்தியராவர்" என்று பழமொழி வந்ததென்றும் இப்பெரியோர்கள் விளக்கம் கூறுவர். உண்மையிலேயே இதை ஊன்றி கவனித்தால் 'ஆயிரம் வேரைக் கொண்டவர்தான் முழு வைத்தியராவர்' என்றுதான் நமது மூதாதையர் உரைத்திருக்கவேண்டும் "ஆயிரம் பேரைக் கொன்றவர்தான் முழுவைத்தியராவர்" என்று நிச்சயமாக சொல்லி இருக்கமுடியாது. முழு வைத்தியர் என்றால் அவருக்கு மூலிகை வகைகள் ஞானம் பூரணமாக இருக்கவேண்டும். ஆயிரம் வேர்களையும் அவற்றின் இயல்பையும் குணங்களையும் அறிந்து ஆராய்ந்து அவை இன்னின்ன வியாதிகளுக்குப் பயன்படுபவை என்பதை அறிந்த ஆற்றல் உள்ளவர்தான் ஒரு சரியான

வைத்தியராக முடியும். அவர் தான் முழு வைத்தியர். அவருக்கு புல் பூண்டு வேர் வகைகளைக் கையாள்வதில் சரியான பாண்டித்யம் வேண்டும். பாண்டித்யம் உள்ளவர் தான் பண்டிதன். வைத்தியன் சரியான பண்டிதராக இருக்கவேண்டும். பண்டிதம் என்றால் என்ன? செய்யவேண்டியதை இதத்தோடு, பக்குவத்தோடு, பாங்கோடு செய்ய தெரியவேண்டும். வைத்தியத்தையும் இதத்தோடு செய்வதில் தான் பண்டிதம் அமைந்து இருக்கின்றது. உண்மையான பண்டிதர் கிடைத்துவிட்டால் உள்ள நோய் பிணிகள் ஓடும். வித்தை கற்கவேண்டுமாயின் நல்ல குருவை தேடவேண்டும். ஆனால் உலகில் நாம் காண்பதென்ன?

" உள்ள நோய் பிணிகள் தீர்ந்தால்
உலகினில் பண்டிதர் தேடார்
தெள்ளற வித்தை கற்றால்
சீடனும் குருவைத் தேடான் "

பண்டிதம் என்பதைப்பற்றி விளக்கம் கொடுத்த சாமிகள் மூலிகை விபரங்களை நன்கறிந்து பாண்டித்தியம் பெற்ற பண்டிதர். 'ஆயிரம்வேரைக் கொண்டவர்தான் முழுவைத்தியராவர்' என்று பழமொழி கூறும் சாமிகள் அந்தப் பழமொழிக்கே விளக்கமாக வைத்திய நாதனாக விளங்கும் தெய்வீக புருஷர். சாமிகள் விபூதியை வா யென்றால் இமைப்பொழுதில் வருவதுபோல, எந்த பச்சிலையும், மாமலையில் உள்ள எந்த மருந்தும் சாமிகள் அருள்வைத்து வா யென்றால் உடனே சாமிகள் திருக்கரங்களுக்கு வந்துவிடும். மாமலையிலுள்ள மூலிகை மட்டும்தானா? தண்ணீரையே தன் எச்சலினால் சாமிகள் பெட்டாலாக மாற்றிய விந்தையை நாம் படித்திருக்கின்றோம். இயற்கைவளம் சிவசக்தியின் திருக்கூத்து. புல்பூண்டு செடி கொடி மரங்கள் இவையெல்லாம் ஆண்டவன் மக்களுக்கு அளித்துள்ள பெரும் செல்வங்கள்; இந்தச் செல்வத்தின் அருமையை அறிந்து அதன் பயனை அடைவதே அறிவுடையோர் இயல்பு. அதை மக்கள் நன்மைக்குப் பயன்படுத்துபவரே திருத்தொண்டர்கள். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் மூலிகை செல்வத்தின் இரகசியகங்களில் பாண்டித்தியம் பெற்ற சித்த புருஷர்: மக்கள் நலனுக்கு அவற்றைப் பயன்படுத்தும் திருத்தொண்டர்.

உலகில் வாழ்விற்குப் பயன்படாத செடியோ, கொடியோ, புல்லோ, பூண்டோ, மரங்களோ, காய்கனிகளோ, கிழங்குகளோ, வேரோ இல்லையென்றே சொல்லிவிடலாம். அறுசுவை உணவிற்கும் இன்றியமையாதிருப்பன காய்கறிகள் மட்டும்தானா? பலவகைக் கீரைகளும்கூட உடலுக்கு வலுவைத்தரும் சத்து கொண்டுள்ளன. பூண்டு, கிழங்கு, செடி, கொடி, வேர்கள் – இவற்றில் பல உடம்பை

வலுப்பெறச் செய்யும் சத்துள்ள பொருள் கொண்டுள்ளது மட்டு மின்றிப் பல வியாதிகளையும் ஒழிக்கவல்ல மருந்துச் சத்துக்களையும் பெற்றுள்ளன. தழைகள்கூட அப்படியே. மரப்பட்டைகளில் சிலவும் மனிதனுக்கு மருந்தாக உதவுகின்றது. அதுபோன்றே ஆலம் விழுதும் வேப்பிலைக் குச்சியும். 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி' அல்லவா? மூலிகைகளின் குணங்களை நன்குணர்ந்த சாமிகள் அடிக்கடி அவைகளின் அருமையைப் பற்றியும் சிறப்பைப் பற்றியும் உற்சாகத்தோடு பேசுவார். எந்தெந்த மூலிகைகள் எங்கெங்கு கிடைக்குமென்றும் எந்தெந்த காலங்களில் கிடைக்கு மென்றும் எப்படி எப்படி அவைகளை அடையலாம் என்றும் அழ காக எடுத்து இயம்புவர். பூரணத்துவம் பெற்றுப் பொலிந்திடும் மருத்துவ ஞானிக்குச் செடிகளைக் கண்டவுடனேயே அதன்பெயரும் குணமும் தெரியும். ஒருசமயம் சாமிகளோடு நாங்கள் பழநிமலை மீது ஏறிக் கொண்டிருக்கின்றோம். எங்களோடு யானை ஏறும் பாதையில் வந்துகொண்டிருந்த சாமிகள் மலையில் முளைத்திருக்கும் சில பச்சிலைச் செடிகளைக்கண்டு தயங்கினர். அருகில் இருந்த இரண்டு செடிகளிலிருந்து தழைகளை எடுத்துவரச் சொன்னர். அதில் ஒரு செடியைத் தம் கைகளில் வாங்கி அது எலும்பு ஒட்டி இலைச்செடி என்று கூறி அதன் குணத்தையும் விளக்கினர். ஒடிந்த எலும்பு ஒட்டுவதற்கு இந்த இலை உதவும் என்றுகூறி அதை மெய்ப் பிப்பது போன்று அந்த இலையில் ஒன்றை இரண்டுபாகமாகக் கிள்ளி, கிழிபட்ட இரண்டு பாகங்களையும் பொருத்திவைக்க, அவை ஒன்ருக உடனே ஒட்டிக்கொண்டன. மற்ருெரு செடியை வாங்கிக் கொண்டார் சாமிகள். அதன்பெயர் பேய்மிரட்டி இலைச்செடி என்ருர். அதன்பின் அதன் குணத்தையும் விவரித்தார். "இதை சாம்பிராணியில் சேர்த்து நெருப்பில் போட்டு பேய்பிடித்தவர் களுக்கு முறைப்படி இப்புகையைக் காட்டினல் பேயும் ஓடிவிடும். எதாயிருந்தாலும் முறைப்படி குருவின் சொல்படி செய்யவேண்டும்.

> " ஆடாதொடை இலையும் ஐந்து மிளகும் சாப்பிட்டால்
> பாடாத நாவும் பாடும்"

இதன் பொருள் தெரிகின்றதா? ஆடாதோடை இலையை முறைப் படிப் பக்குவப்படுத்திக் கஷாயம் செய்து சாப்பிட்டால் சாரீர வசதி இல்லாதவர்க்கு சாரீர வசதி ஏற்படும்: ஆனல் அதை வழிதவறிச் சாப்பிட்டால் "பாடுற நாவும் ஆடும்" படியாகிவிடும். முறை தவறி சாப்பிட்டால் நன்ருகச் சாரீர வசதியுள்ள வாயும் பாதிக்கப்படும், வீக்கமேற்பட்டு நாவும் தடித்து ஆட ஆரம்பித்துவிடும். எதை யும் குருவின் சொற்படி செய்யவேண்டும்."

இந்தக் குருமொழிகளைக் கேட்கின்ற நாம் இதை முதல்பாடமாக ஏற்றுக்கொள்ளவேண்டும். இந்தப் பகுதியில் எந்தெந்த நோய்

களுக்கு எந்தெந்த மூலிகைகளை எந்தெந்த வகையாக சேர்த்து சாப்பிடவேண்டுமென்றும், பத்துபோட வேண்டுமென்றும் கூறி இருக்கின்றது. அதை பொது விதியாக எடுத்துக்கொள்ள வேண்டாம். எந்த வியாதியாக இருந்தாலும், சாமிகளைக் கேட்டே மருந்து வகைகளைக் குறித்துக் கொள்ளவேண்டும். ஏனெனில் சாமிகள் சொல்கின்ற மருந்தைவிட முக்கியமானது தேவையானது அவசியமானது உயிர்போன்றது — சாமிகளுடைய அருள். அவருடைய அருள்விழிகள் நம்மீது கருணை கொண்டாலே போதுமே? எவ்வித நோய்களும் பறந்துவிடுமே? அவர் அருள்சுரந்து சொல்கின்ற மருந்துதான் பயனை அளிக்கவல்லது என்பதையும் நாம் மறந்து விடக் கூடாது. சாமிகளைக் கேட்காமல் இங்குக் கூறப்படும் மருந்து வகைகளைப் பரீட்சை செய்து பார்க்கவேண்டாம் என்று பணிவன் போடு நான் அன்பர்களை கேட்டுக்கொள்கின்றேன். இவைகளை இப்பகுதியில் எழுதுவதன் நோக்கம், சாமிகளுக்கு தெரியாத வைத்தியம் இல்லை, பல ஆற்றல்கள் பெற்றிருக்கின்றார், மூலிகை விபரங்களும் அறியும் ஆற்றலும் பெற்றிருக்கின்றார் என்பதை வற்புறுத்துவதுதான்.

சாமிகள் அடிக்கடி மூலிகைகளைப் பற்றி மனமுவந்து பேசும் திருமொழிகளைக் கேட்டு மகிழ்வோம்.

சாமிகள்: மாமலையிலுள்ள மருந்தே பிணி தீர்க்கும் என்பர். உண்மைதான்! மாமலையிலுள்ள மருந்து பிணியும் தீர்த்து நல்லதும் செய்விக்கும். சில கெடுதலும் செய்விக்கும். திசைப்பூண்டு என்று ஒரு மூலிகை உண்டு. அதை ஆள் தாண்டினால் அவன் புத்தியையே பாதிக்கும் குணமுடையது அது. அழுகண்ணி, தொழுகண்ணி என்று ஒரு மூலிகை உண்டு. அதை அதற்கு வகுத்துள்ள முறைப்படி ஒருவர் கிரகத்தில் கட்டினால் எப்பேர்ப்பட்ட சாதுவையும் சண்டையிட்டுக் கொள்ள செய்யவல்ல சக்தி கொண்டது அது. அருள் வந்த ஒருவர் பம்பத்தை இலைகளை உதறினால் நெல் வந்து விழுவதையும் அநேகர் கண்டிருக்கின்றனர். புல்பூண்டு மூலிகை வகைகள் எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும் கிடைக்காது. சில பெருமலை உச்சிகளிலும், சில சிறுமலைகளிலும், சில மட்ட பூமியிலும் கிடைக்கும். சில உஷ்ண பிரதேசத்திலும், சில குளிர் பிரதேசத்திலும் சில காலங்களில்தான் கிடைக்கும். மூலிகை குணமறியும் சித்தர்களுக்கு மூலிகைகள் எந்தெந்த காலங்களில் எங்கெங்கு கிடைக்கும் என்பதற்குச் சோதிடமும் தெரியும். இவைகளை அஞ்சாமல் கொண்டு வருவதற்குரிய மந்திரங்களும் அவர்களுக்குத் தெரியும். காட்டு விலங்குகளும், விஷ ஜந்துக்களும் பொதிந்துள்ள சில மலைக்காடுகளில் மூலிகைகளை அவர்கள் தேடும்போது மந்திரங்களும் அவர்களைக் காக்க உதவுகின்றன. 'சாகாத்தழை' என்ற மூலிகை ஒன்றுண்டு.

அதை மயில் ஊசியென்றும் அழைப்பர். இது அநேக நல்ல காரியங்களைச் செய்ய உதவுகின்றது. இதை எத்தனை வருடங்கள் வேண்டுமானாலும் வைத்திருந்து ஒரு கிண்ணத்தில் தண்ணீர் வைத்து, இதை அந்தத் தண்ணீருக்குள் வைத்தால், அது அப்பொழுதுதான் பறித்த பச்சிலைபோன்று உருமாறி நிறம்மாறி துளிர் துளிர்த்து விடும். அது 'சாகாத்தழை' என்று பெற்றிருக்கும் பெயரை மெய்ப்பித்துவிடும், தன் நிலை நாட்டிவிடும்.''

மூலிகை குணங்களை இவ்வளவு அழகாகப் பேசுகின்ற சாமிகள் தன் அருளாற்றலால் ஒரு மூலிகையையே பக்குவப்படுத்தி வரவழைத்த அற்புதத்தை இங்குக் குறப்பிடுவது பொருந்தும். ஒரு நாள் சர்க்கரை வியாதியைப்பற்றிப் பேச்சு நடந்தது. சர்க்கரை வியாதி (Diabetes) யை 'சர்க்கரைக் கொல்லி' எனும் மூலிகை கண்டிக்குமா என்பதைப்பற்றிப் பேச்சுவளர்ந்தது, சாமிகள் புளிக் கொன்னைக்காய் கஷாயம் செய்து முறைப்படி பாலில் சாப்பிடுவது நலமென்றும் நாவற்பழத்தைக் காயவைத்து முறைப்படித் தூள் செய்து சாப்பிடுவதும் நலமென்றார். சிறுகுறிஞ்சான் வேரையும் முறைப்படி வஸ்திரகாயம் செய்து ஒரு ஸ்பூன் வாயில் போட்டு பச்சை தண்ணீரோ வெண்ணீரோ சாப்பிட்டு வந்தால் குணம் உண்டாகும் என்றார் சாமிகள். அதன்பின் சர்க்கரைக் கொல்லியின் குணத்தை எடுத்துப் பேசி, "அதை வாயில் போட்டுக்கொண்டு சர்க்கரை சாப்பிட்டால், சர்க்கரை இனிப்பு மாறிவிடும்'' என்றார். சர்க்கரைக் கொல்லி பொடி வரவழைக்கட்டுமா என்றுகூறி என் கரங்களில் தம் வலக்கரத்தைப் பிசைய மளமளவென்று பழுப்பு நிறமான, தவிடு பதமாகவும் இல்லாத உமி பதமாகவும் இல்லாத, 'சர்க்கரைக் கொல்லி' பொடி விழுந்தது. அதை சாமிகள் திருவுள்ளப்படி பக்தர்கள் வாயில் போட்டுச் சுவைக்க முதலில் அது கசக்கவில்லை, மென்று சுவைக்க சுவைக்க அப்பொடி கசக்க ஆரம்பித்தது. அதன்பின் சர்க்கரையையும் வாயில் போட்டுக்கொள்ளச் சொன்னார் சாமிகள். இனிப்பாக இருக்கும் சர்க்கரை, 'சர்க்கரைக் கொல்லி' பொடி சேர்ந்தவுடன் வாயில் மண்போன்று சுவைக்க ஆரம்பித்தது; சர்க்கரையின் இயல்பே இனிப்பே மாறிவிட்டது. இதைக் கண்டு ஆச்சரியப்பட்ட எங்களைக் கண்டு சாமிகள் பேச ஆரம்பித்தார்.

சாமிகள் : 'சர்க்கரைக் கொல்லி' பொடி உங்கள் கைகளுக்கு வந்தது அற்புதம் தான். அது சித்தால் தான் வந்தது. ஆனால் அதோடு சர்க்கரை சேர்த்துச் சாப்பிடும் போது, சர்க்கரை மண்ணாகச் சுவை மாறியது அற்புதமல்ல. அது சித்தால் மாறியதல்ல. அது சர்க்கரைக் கொல்லியின் குணம், இயல்பு. இப்பொழுது நான் கொடுக்கும் விபூதியை பெற்றுக்கொள்ளுங்கள்.

நான் சாமிகளிடம் உடனே என் கரத்தை நீட்ட அருகிலிருந்த கிண்ணத்திலிருந்த விபூதியை சாமிகள் எடுத்து எனக்கு வழங்கினர். என்ன ஆச்சரியம்! விபூதி என் கைக்கு வந்தவுடன் 'சர்க்கரைக் கொல்லி' பொடியாக மாறியது. சாமிகளுடைய அருள் ஆற்றல் தான் என்னே! 'சர்க்கரைக் கொல்லி' சர்க்கரை வியாதியைக் கண்டிக்கும் என்பதைத் தானே தன் திருச்செயலால் பக்தர்களுக்கு விளக்கிக் காட்டினார் சாமிகள்.

சாமிகள் மணிமந்திர ஔடத சித்தர்கள் வரிசையில் விளங்குகின்ற நடமாடும் தெய்வம். சித்தர்களுக்கு மணி எனப்படும் சோதிடமும் தெரியும். மந்திரங்களும் தெரியும். மூலிகைகளால் செய்யப்படும் ஔடதமும் தெரியும். உலோக வகைகளை மருந்தாக மாற்றும் முறையும் தெரியும்; ரசவாதமும் தெரியும். சுண்ணும்பைப் பச்சிலை கொண்டு வெண்ணெயாக மாற்றலாம் என்பர்; இரும்பை பச்சிலை கொண்டு உருக்கலாம் என்பர்; செம்பைக்கூடத் தங்கமாக்கலாம் என்பர். சொல்பவர்கள் சொல் அளவிலேயே நின்றுவிடுவர்; கேட்பவர் கற்பனையில்தான் கனவில்தான் நினைவில்தான் இந்த மாற்றங்கள் நிகழ்வதைக் காண இயலும். நேரில் கண்டு அனுபவிக்க முடியாது. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் சொல்வதை நேரில் நிரூபித்துக் காட்டவல்ல சித்தர். காரியத்தினுல் மங்க பஸ்பம் செய்யலாம். அதை முறைப்படி செய்வதற்குச் சாதாரணமாக ஒருமாதம் ஆகும். மங்க பஸ்பம் தயார் செய்யும் ஒருவர் இதைப்பற்றிப் பெருமையாக சாமிகளிடம் ஒருநாள் உரைத்துக்கொண்டிருந்தார். ஒருமாதத்தில் செய்யவல்ல முறையும் சாமிகளுக்குத் தெரியும்; அதையே ஒருகணத்தில் செய்து காட்டுகின்ற ஆற்றலும் சாமிகளுக்கு உண்டு. "முருகா மங்க பஸ்பம் கொடு" என்ருர் சாமிகள்; அக்கணத்திலேயே மங்க பஸ்பம் உருவாகி விட்டது சாமிகள் இஷ்டப்பட்டால் அருளாற்றலால் சாதாரணமாக கிடைக்காத மருந்து வகைகளும், அருமைப் பொருள்களும் ஒருநொடியில் கிடைக்கும். சேலம் திரு. K. N. வசந்தா சாட்டர்ஜி மகள் நெஞ்சுவலியைத் தீர்க்க அவள் படுக்கையில் உள்ள தலையணையில் ஒரு கருடன் சிறகை வைத்துக்கொண்டு உறங்கும்படி சாமிகள் சொன்னுர். கருடன் சிறகு கிடைப்பது அவ்வளவு எளிதா? முடியாத காரியத்தைச் சொல்லி திகைக்கவைத்து விட்டாரே என்று மனம் கலங்கிய தந்தைக்குச் சாமிகளே அருள் சுரந்து கருடன் சிறகை அளித்தார். தந்தை மகள் கட்டிலுக்கருகில் நடந்து சென்றபோது ஒரு கருடன் சிறகு அவர்முன் விழுந்தது. இது சாமிகளின் அருளால்தான் என்பதை சொல்லவும் வேண்டுமோ? சூடிக்கொடுத்த நாச்சியாருக்குகந்த தைலத்தையும் சாமிகள் வரவழைத்துக் கொடுக்கின்ருர். ஆண்டாள் தைலம் என்பது பல மூலிகை வகைகளால் உண்டாக்கும் தைலம். பாபநாசம் பிரயாணிகள் தங்கும் விடுதியின் வெளியே ஒரு பாறையின் அருகே இருந்த சாமி

கள் அப்பாறையில் ஒரு கிண்ணத்தை வைக்கச் சொன்னார். பக்தர்கள் கிண்ணத்தை வைத்துவிட்டுத் திரும்பினர். மறுபடியும் கிண்ணத்தை எடுத்துப் பார்க்க, கிண்ணத்தில் ஆண்டாள் தைலம் நிறைந்திருப்பதைக் கண்டு ஆச்சரியமுற்றனர். இப்படி எவ்வளவோ பொருள்கள் சாமிகள் வரவழைப்பதைப் பக்தர்கள் அறிவார்.

தொண்டர் விரும்புவனவற்றை உவந்து அளிக்கின்ற சாமிகளின் கருணையை வருணிக்கின்ற கவியோகி சுத்தானந்த பாரதியாரின் வார்த்தைகள் உண்மை ஒளிவீசும் இயல்பின. சாமிகள் திருவனந்த புரத்தில் ஓவளம் என்ற கடற்கரை அழகுத் தலத்தில் பக்தர் வர்மா அவர்களுக்குரிய இல்லத்திற்கு வெளியே அமர்ந்திருக்கின்றார்.

"ஓம் ஜெயஓம் ஓம்சிவஓம் ஹரிஹரா
ஓம் குஹஓம் ஓம்குருஓம் ஹரிஹரா"

என்று ஆரம்பிக்கும் கவியோகி இயற்றியுள்ள தீபாராதனைப் பாட்டை அன்பர் ஒருவர் உளமுருகப் பாடினார். சாமிகள் தொட்ட தெல்லாம் தங்கமாகத் துலங்கும் பெருமையையும் கொண்டு விளங்கு கின்றது பாக்களில் ஒன்று. அந்த அடிகளையும் பக்தர் பாடி பாட்டுக் களை பூர்த்தி செய்தார் — இந்தப் பாட்டை 'நமசிவாய சாமிகள்' அத்தியாயத்தில் கடைசித் தொகுதியில் கண்டு மகிழலாம் — அந்த அடிகளையே படிப்போம்.

"தொட்டதெல்லாம் தங்கமாகத் துலங்குமே
தொண்டர் கொண்ட பணிகள் வெற்றியிலங்குமே
விட்டிடரும் பிணிதுயரும் விலகுமே — அன்பர்
விருப்பமெல்லாம் வெற்றிபெற நிலவுமே"

தொட்டதெல்லாம் தங்கமாகத் துலங்கும்! இது கவியோகியின் பாக்களில் அமைந்துள்ள பூரண உண்மை மொழிகள்! படிப்பதற்கு சொல்லோவிய மட்டுமில்லை கூறியிருப்பது, பாப்பதற்கும் அருளோ வியமாகவும் நடக்கவேண்டியது. இதை நடத்திக்காட்ட சாமிகள் அருள்பாலிக்க வேண்டுமே? எப்படிக் கேட்பது சாமிகளை என்று பக்தர்கள் யோசித்துக் கொண்டிருக்கும் வேளையில் பக்தர் வர்மா அவர்கள் கைகளில் சாமிகள் அருகிலிருந்த மணலில் ஒரு விரல்பிடி எடுத்துக் கொடுத்தார். அந்த விரல்பிடி மண்ணும் இமைப்பொழு தில் அதே அளவில் பத்தரை மாற்றுத் தங்கப் பொடியாக மாறிவிட் டது. (சாமிகள்) "தொட்டதெல்லாம் தங்கமாகத் துலங்குமே" என்ற பாட்டை மறுபடியும் பக்தர்கள் ஆர்வத்தோடு வானை எட்டிப்பிடிக்குமளவு தூக்கிப் பாட ஆரம்பித்திருப்பர் என்று யூகிக் கவும் வேண்டுமோ? சாமிகள் இதுபோன்ற அற்புதத்தை ஆடி அருளிய மற்றொரு நிகழ்ச்சியை 'அற்புதம் ஆடவல்லார் சாமிகள்' அத்தியாயத்தில் 'பொன் ஆக்கும் அற்புதம்' (பக்கம் 603) என்ற பகுதியில் படித்து இன்புறலாம்.

ஒருநாள் பக்தர் ஒருவர் சாமிகளிடம் மூலிகை வகைகளின் அற்புதக் குணங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். கிழவனைக் கூடக் குமரனாக்கவல்ல மூலிகையும் உண்டென்றார். அதை விளக்கத் தான் சமீபத்தில் படித்த ஒரு பாட்டையும் பாட்டை விளக்க ஒரு கதையையும் கூறினார். ஒருகாட்டில் இரு பழுத்த கிழங்கள்; ஒருவர் குரு, மற்றொருவர் சீடர். இளமை அடைய அரும்பாடுபட்டுவந்த குரு நரையையும் மாற்றவல்ல ஒரு அரிய மூலிகைக்கட்டை ஒன்றை வெகுபாடுபட்டு தேடிஅலைந்து கண்டுபிடித்து எடுத்துவந்து யாருக்கும் தெரியாத இடத்தில் பத்திரப்படுத்தி வைத்தார். ஒரு நாள் அவர் வெளியே சென்றிருந்த சமயம், சீடன் சமையல் செய்து கொண்டிருந்தார். அடுப்பில் வெத்துகொண்டிருக்கும் அமுதைக் கிண்ட ஒரு கோலைத்தேட ஆரம்பித்தார் சீடர். சுற்றிலும் முற்றிலும பார்க்க ஒருமூலையில் பத்திரமாக ஒதுக்கி வைக்கப்பட் டிருக்கும் இந்த மூலிகைக் கட்டைக் கொஞ்சம் தெரிந்தது. அதை எடுத்து அமுதைக் கிண்டிவிட்டார். கடைசியில் அந்தக் கட்டை யையே அடுப்பில் விறகாகவும் வைத்து எரித்துக் காலியாக்கி விட்டார், அமுதைக்கிண்ட உபயோகப்படுத்தப்பட்ட அதிசயக் கோல் அதன் அதிசயச் சக்தியை அமுதுக்கு ஈந்தது. அந்த அமுதைச் சாப்பிட்டு எழுந்த சீடனின் தளர்ந்த முதிர்ந்த உடல் உறுதிபெற்று எழுந்தது; மேனியில் இளமை மெருகு ஏறிவிட்டது. நரையும் மூப்பும் இருந்த இடம் தெரியாது மாறிவிட்டது. உண்மையை உணர்ந்த சீடன் இத்தகைய அரிய மூலிகைக்கட் டையை அடுப்பில் விறகாக வைத்து எரித்துவிட்டதை எண்ணி மனம் கலங்கினர். குருவுக்குத் தெரிந்தால் தன்னை என்ன செய் வாரோ? என்று கதிகலங்கி ஒளிந்துகொண்டார். திரும்பிவந்த குரு சீடனைக் காணுமல் தான் ஒளித்து வைத்திருந்த மூலிகைக் கட்டையைக் காணது தேட ஆரம்பித்தார்; குரு கண்டது ஒளிந் திருந்த சீடனைத்தான். சீடன் அடையாளமே மாறிப்போய் இளை ஞனகத் தோன்ருன். உண்மையை உடனே அறிந்து கொண்ட குரு தான் அரும்பாடுபட்டு சம்பாதித்திருந்த மூலிகைப்பொருள் தனக்கு உதவவில்லையே என்று ஏங்கினர், தவித்தார், மனம் புழுங்கினர். அப்போது மின்னலென ஒரு எண்ணம் உதிக்க, அதன்படியே சீடன் உண்ட உணவைக் கக்கச்செய்து, சீடன் க்க்கிய உணவையே உடனடியாகச் சாப்பிட்டார். அவர் நினைத்தபடியே தானும் நரை மூப்பு மாறி இளமை அடைந்தார்.

"உலையில் அமுது படைத்துண்ட
சீடன் ஒளிந் திருப்பத்
தலையில் மயிருங் கறுக்கக் கண்டே
அவன் சற்குருவும்

நிலையுடன் கக்குவித் துண்டடைந்தான்
நன்னெறியில் கஞ்ச
மலையில் அதிசயங் கண்டதுவுங்
கொங்கு மண்டலமே"

இந்தப் பாடலையும் பாடிமுடித்த பக்தர், நாட்டை விட்டுக் காட்டையடைந்த மோனமுனிவர்களும் இளமையைநாடி போட்டி போட்டுக் கொண்டதில் தாம் அடைந்த ஆச்சரியத்தைக் காட்டிக் கொண்டனர். இதைக் கேட்டுக்கொண்டிருந்த சாமிகள் புன்முறுவலோடு ஒரு அரிய திருவுரை வழங்கினுர்.

சாமிகள்: முற்றும் துறந்த முனிவர்களும் தம் தளர்ச்சியை தவிர்த்துக் கொள்வதில் ஆர்வம் காட்டியதில் தப்பொன்றும் இல்லை. உலகில் பிறந்தவர்கள் நோயற்ற வாழ்வு வாழ விரும்புகின்றனர். குறைவற்ற செல்வத்தை பெற விரும்புகின்றனர். இளமை என்பது ஓர் அரிய செல்வம். உடம்பில் தளர்ச்சியும் இரத்தமின்மையும் பெருகிடில் உடம்பு அழிந்து விடும். உடம்பு பழுதுபட்டால் உயிரும் பழுதுபடும். தளர்ச்சி அடைந்த உடம்பிற்கு மெய்ஞானம் சேர உறுதி எங்கிருக்கின்றது? இதைத்தான் மிகவும் அழகாகத் திருமூலர் எடுத்துக் காட்டினுர்.

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"

"உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுள்ளே உறு பொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே."

பெரும் மெய்ஞானியே உடம்பை ஓம்பி யிருந்தபோது காட்டில் இருந்த குருசீடர் இருவர் உடம்பை ஓம்பி போட்டி போட்டுக் கொண்டதில் குற்றம் ஒன்றும் இல்லை. "உள்ளம் பெருங் கோயில்" என்று கூறுகின்ற மற்ருெரு பாட்டும் "ஊனுடம் பாலயம்" என்று உடலைப் போற்றுகின்றது. ஆக உடம்பை யாவரும் போற்ற வேண்டும். நோய் வராதிருக்க வேண்டிய வழிகளைக் கைப்பற்ற வேண்டும். யோக மார்க்கத்தைத் தேடவேண்டும். உடம்பை இரும்பாக்க வல்ல மூலிகை வகைகளைத்தானே காயகல்ப மூலிகை என்றும் அழைக்கின்ருேம். யோகத்தைப் பற்றிக் கூறினேன். யோகம் என்ற

வுடன் குண்டலினி சக்தி நினைவுக்கு வருகின்றது. சக்தி என்ற வுடன் கணபதி என்முன் தோன்றுகின்ருர். அவரைப் பற்றிய ஓர் அருமையான தமிழ்ப் பாடல் ஞாபகத்திற்கு வருகின்றது.

"வாக்குண்டாம் நல்ல மணமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனிமுடங்காது — பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு"

கணபதியை அனுதினமும் தொழுகின்றவர்களுக்கு சரஸ்வதி கடாக்ஷமுண்டு இலட்சுமி கடாக்ஷமுமுண்டு. சகல சம்பத்தும் நோயற்ற வாழ்வும் உண்டு. இதுதான் பாட்டினுடைய சாதாரணப் பொருள். யோகியர்க்கு இந்தப்பாடல் குண்டலினி சக்தியின் பயனை எடுத்துக் காட்டும் பொருளுடையதாக விளங்குகின்றது. கருத்தைக் கருத்தாட்டினுல் இந்தப் பாடலுள் இன்னும் விசேட பொருளும் ஒன்று பொதிந்துள்ளதை உணரலாம். இந்தப் பாட்டு ஐந்து மூலிகைகளை வைத்துப் பாடியுள்ள செய்யுள். நரை திரை மூப்பு இவைகளை ஓட்டவல்ல காய கற்பத்தை அல்லவா இப்பாட்டு எடுத்தோதுகின்றது. பாட்டில் உள்ள பின்மூன்றடிகளையும் எடுத்துச் சிந்தனை செய்வோம். "மேனி முடங்காது பூக்கொண்டு துப்பார் திருமேனி தும்பிக்கையான்பாதம்" என்ற சொற்ருெடர்களை அலசிப் பார்க்கவேண்டும். இவைகளில் ஐந்து மூலிகைகளைப் பற்றிக் கூறியிருக்கின்ருர் பாவலர். ஒன்று மேனி; அது குப்பை மேனியைக் குறிக்கும்; முடங்காது என்பது முடக்கொத்தான் மூலிகையைக் குறிப்பிடும். பூக்கொண்டு என்பது உப்புக் கொண்டு என்பதைக் குறிக்கும். தும்பி என்பது தும்பை இலையைக் குறிக்கும். கையான் என்பது பொற்றலைக் கையானைக் (கரிசலாங் கண்ணி) குறிக்கும். இந்த ஐந்து மூலிகைகளையும் யார் ஒருவர் முறைப்படி செய்து உபயோகப் படுத்துகின்ருேே அவனை நரை திரை மூப்பு பாதிக்காது. இவைகளினுல் செய்யப்பட்ட மருந்து காயகல்பமாகவும் உதவும். சித்தர் களுக்குத் தெரியும் பாட்டும் பாட்டில் பொதிந்துள்ள பொருள் களும், சித்தர்களால் ஆகாததொன்றில்லை. கதையில் சொன்ன மூலிகை கட்டை கிடைக்காவிட்டாலும் இந்தப் பஞ்சமூலிகைகளை முறைப்படி சேர்த்து சாப்பிட்டு நற்பலன் காணலாம். செம்பையோ இரும்பையோ மூலிகைச் சாறுடன் மற்றப் பொருள்களுடன் சேர்த்து புடம் வைத்து தங்கமாக்கும் வித்தையை மட்டும்தாை சித்தர்கள் அறிவர்? அவர்கள் அறிவுக்கு எட்டாதது ஒன்றுமில்லை."

சாமிகள் சொல்வது முற்றிலும் உண்மைதான். சித்தர்களால் இயலாதது ஒன்றுமில்லை யென்பதையும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலைச் சித்தர் வாழ்க்கையில் நடந்துவரும் பல அரிய நிகழ்ச்சிகள் எடுத்துக்காட்டுகின்றன. அவற்றில் ஒரு நிகழ்ச்சியை இங்குக் குறிப்

பிடலாம். நமது தமிழ்நாட்டில் தலைசிறந்த டாக்டரெனப் பேரும் புகழும் அடைந்திருந்தவர் டாக்டர் குருசாமி முதலியார். அவர் சாமிகளுடைய சிறந்த பக்தர்களில் ஒருவர். தன் குமாரன் திரு. விஸ்தவநாத முதலியார் அவர்களையும் சாமிகளுடையப் பக்தராக்கிச் சாமிகள் அருளைப் பூரணமாக அனுபவித்தப் பெருமனிதர். திரு. குருசாமி முதலியார் தன் கடைசிக் காலத்தில் நோய்வாய்ப்பட்டார். சென்னையிலுள்ள பெரிய டாக்டர்களும் கைவிட்டனர். சேலத்திலிருந்த சாமிகளுக்குப் பக்தர் நோய்வாய்ப் பட்டிருக்கும் செய்தி கிடைத்தது. சென்னையில் படுத்த படுக்கையாக இருக்கும் நோயாளியைக்கண்டுத் தன் அருட்பிரசாத விபூதி வழங்கினார் சாமிகள். "இன்னும் ஆறுமாதங்கள் கவலைப்பட வேண்டாம்" என்று கூறிய சாமிகளின் திருமொழிகள் கூடியிருந்த டாக்டர்களின் கவனத்தை இழுத்தன. அவர்களால் தம் சிரிப்பையும் அடக்க முடியவில்லை. காரணம் நோயாளி சில நிமிடங்களில் இறந்து விடுவார் என்று உடல்நிலை இருந்தது. டாக்டர்கள் போட்ட கணக்குதான் தப்பாகிவிட்டது. சாமிகள் விபூதிப் பிரசாதம் வேலை செய்ய ஆரம்பித்தது. முதலியார் அவர்கள் கூற்றுவனிடமிருந்து தப்பித்துக் கொண்டார். சாமிகள் உரைத்தபடியே அவரைக் காலனும் ஆறுமாதங்கள் கடந்தே நெருங்க முடிந்தது!

சாமிகள் உரையாடிக்கொண்டே ஆத்மீக செல்வத்தையுல் மூலிகை வகை செல்வத்தையும் செவிச் செல்வமாகப் பக்தர்களுக்கு வழங்கி வருகின்றார். ஒரு நாள் சித்த வைத்தியத்தின் சிறப்பைப் பற்றிப் பேசிய சாமிகள் தண்ணீரின் தன்மையைப் பற்றியும் அதைத் தொடர்ந்து சில வைத்திய முறைகளைப் பற்றியும் பேசியது உற்று நோக்கத் தக்கது.

சாமிகள்: வெந்நீர் உடம்பிற்குக் குளிர்ச்சி: பச்சை தண்ணீர் உடம்பிற்குச்சூடு. பெருத்த உடம்பை வற்றவைக்க தேன் உதவுகின்றது. பருத்த உடம்பைக் குறைக்க நாள்தோறும் படுப்பதற்கு முன் இரண்டு டேபிள் ஸ்பூன் தேன் விட்டுப் பச்சைத் தண்ணீர் ஒரு டம்ளர் சாப்பிட்டால் உடம்பு இளைக்கும். பருத்த உடம்பை வற்றடிக்க விரும்புபவர் பால் குடிக்கக் கூடாது. ஆனால் உடம்பை பெருக்கவைக்க விரும்புபவர் இரவில் அன்றாடம் படுக்கப் போகுமுன் தேனும் வெண்ணெயும் அல்லது தேனும் பாலும் அவரவர் வயதுப்படி முறைப்படி தகுந்த அளவோடு கலந்து சாப்பிடவேண்டும். ஒவ்வொரு பொருளையும் தனியாக உபயோகப்படுத்தும் போது ஒரு பலன் உண்டாகும்: அதேபொருளை நிலையை மாற்றி சாப்பிட்டால் வேறு பலனை உண்டாக்கும். தேங்காய் பூவிலிருந்து எடுத்த பாலை அடுப்பில் கொதிக்க வைத்து சாப்பிட்டால் பேதியாகும். அதையே கொதிக்க வைக்காமல்

அளவோடு சாப்பிட்டால் கெடுதல் ஒன்றும் செய்யாது. இளநீரை மரத்திலிருந்து பறித்தவுடன் அப்படியே சாப்பிட்டால் உடம்பிற்கு நல்லது. ஆனால் அதையே வடிகட்டி குடித்தால் வயிற்றுப் போக்கு கண்டுவிடும்.

இப்படி கருத்துக் களஞ்சியமாக விளங்கும் சாமிகள் பல வியாதிகளுக்கு பல பக்தர்களுக்கு அருள் பாலித்து வருகினறார். மூலிகை மருந்துகள் சொல்லியும் வைத்தியம் செய்யச் சொல்கின்றார். அவர் கூறும் வைத்திய முறைகளை யெல்லாம் தொகுத்துரைப்பதென்றால் அதற்கென்றே ஒரு புத்தகம் தனியாக எழுதவேண்டியிருக்கும். இந்தப் பகுதியில் ஒரு சில பக்தர்களுக்கு சாமிகள் வைத்தியம் சொன்ன முறைகளைப் பற்றி ஓரளவு சொல்ல விரும்புகின்றேன். இவைகளை பொது வைத்திய விதியாகக் கொள்ளாது, சாமிகளையே நேரில் கலந்து அவர் அருள் பெற்று அவர் சொல்லுகின்ற முறைப்படி அளவுப்படி, நோயாளிகள் வயது. உடற்கூறு. இவைகளை அனுசரித்தும் வைத்தியம் பார்த்துக்கொள்ளுமாறு சாமிகளிடம் வியாதிகளுக்கு மருந்து கேட்க விரும்பும் பக்தர்களைக் கேட்டுக் கொள்கின்றேன். பக்தர்கள் வியாதியைப் பற்றி கேட்பதும் சாமிகள் பதில் அளிப்பதும் சித்த வைத்திய அன்பர்களுக்கு செவிக்கின்ப மூட்டும் செல்வமாகும்.

சாமிகள் : ஓமத்தைக் கருக்கி (வறுத்து) அதைக் கருப்பட்டியோடு சேர்த்து பொடி செய்து நெல்லிக்காய் அளவு மூன்று வேளை சாப்பிட பேதி நிற்கும்.

பக்தர் : 2. சாதாரண இருமலுக்கு என்ன செய்யலாம்?

சாமிகள் : கொஞ்சம் பொட்டுக் கடலையும் மிளகும் சேர்ந்து சாப்பிட்டால் இருமல் குணமாகும்.

பக்தர் : 3. வாய் வெந்தால் என்ன செய்வது, சாமிகளே?

சாமிகள் : சாதாரணமாக வாய் வெந்தால் உப்புத் தண்ணீரில் வாயைக் கொப்புளிக்க வேண்டும். வாய்ப்புண் உண்டானால் தேங்காயும் கொஞ்சம் மஞ்சள் பொடியும் சேர்த்து சாப்பிடலாம். அல்லது வெள்ளாட்டுப் பாலில் மாசிக்காயை இழைத்துச் சாப்பிடலாம்.

பக்தர் 4 : டான்சலுக்கு (உள் நாக்கு வளர்ச்சி) என்ன செய்யலாம், சாமிகளே!

சாமிகள் : நாள்தோறும் மூன்றுவேளை வெங்காயம் சாப்பிடவேண்டும். ஒன்பது நாட்கள் தொடர்ந்து சாப்பிடவேண்டும்.

சீடர் 5: வயிற்றுக் கடுப்பைத் தடுப்பது எப்படி சாமிகளே?

சாமிகள்: கசகசாவை மென்று வெள்ளாட்டுப்பால் சாப்பிட்டால் குணம் உண்டு. அவரை இலைச் சாற்றை எருமைத் தயிரில் பிழிந்து சாப்பிட்டாலும் குணமாகும். வயிற்றுப்போக்காளுல் சட்டியில் மிளகு பொறித்து, அதில் தயிர்போட்டு கடைந்து ஆறினவுடன் சாப்பிட்டால் குணமுண்டாகும்.

சீடர் 6: அஸ்வகந்தியின் கிழங்கின் குணமென்ன, சாமிகளே?

சாமிகள்: இதை, அமுக்களான் கிழங்கு என்றும் கூறுவர். இதைத் தேய்த்துக் குளித்தால் மூக்கடைப்பு, சளி, தலைவலி, தும்மல் எல்லாம் குணமாகும். இது கழுத்துக்குமேல் உள்ள வியாதிகளை கண்டிக்கும். இது இருக்கும் இடத்தில் பாம்பு இருக்காது. இதை எலுமிச்சம்பழச் சாறுவிட்டு அறைத்தும் குளிப்பதுண்டு.

பெண்சீடர் தலைமுடி வளர்வதற்கு மூலிகை வகை உதவி செய்யுமா, சாமிகளே?

சாமிகள்: சோற்றுக்கற்றாழை சாதத்தை (கறி) நிழலில் காயவைத்து வெந்தயம் சேர்த்து தேங்காயெண்ணெயில் கலந்து முடியில் தடவினுல் முடி வளரும். ஏனம்மமா? உனக்கு தான் முடி நிறைய இருக்கின்றதே!
அன்பர்கள் வாய்விட்டுச் சிரிக்கின்றனர்.

பெண்சீடர் சாமிகளே, அது எனக்கல்ல, என்னுடைய தங்கைக்கு.

* * *

சீடர்: முடி கொட்டுவதைத் தடுக்க என்ன செய்யவேண்டும் சாமிகளே?

சாமிகள்: கரிய பவளம், நெய் கொட்டான்காய் (பூந்திக்கொட்டை) மனமுருகி இலை சேர்த்து மைபோல் அரைத்து தேங்காய் எண்ணெயில் சேர்த்து தேய்க்கவேண்டும். வழுக்கையை மாற்ற யானைத் தந்தத்தை சுட்டு வறுத்து தேன்விட்டு அரைத்து வழுக்கையுள்ள இடத்தில் தடவினுல் பலன் உண்டு. வெறுந்தேனை உபயோகிக்கக்கூடாது. அப்படி உபயோகப்படுத்தினுல் மயிர் நரைக்கும்.

* * *

சீடர் : எக்சீமா படைக்கு என்ன மருந்து, சாமிகளே ?

சாமிகள் : ஐந்து ரூபாய் எடை பூவரசம்பட்டை, மூன்று ரூபாய் எடை கட்டி சூடம், ஒரு ரூபாய் எடை வசம்பு – இவைகளை விளக்கெண்ணெய் சேர்த்து மைபோல் அறைத்து டப்பியில் வைத்துக்கொண்டு மூன்று நாட்கள் இரவில் படுக்கப் போகும்போது படை உள்ள இடத்தில் போட்டுக்கொள்ள வேண்டும். காலையில் குளிக்கும்போது இலுப்ப புண்ணாக்கு நெருப்பிலிட்டு அறைத்துச் சீயக்காய் போன்று உபயோகப்படுத்த வேண்டும்.

* * *

சீடர் : வீக்கம் ஆறுவதற்கு என்ன செய்யவேண்டும் சாமிகளே ?

சாமிகள் : ஒரு ரூபாய் எடை உலவ மரத்துப்பட்டை, விலாம்பிசின், உப்பு, பெருமிளகாய், ஏறழிஞ்சி விதை இவைகளை பசும் பால் விட்டு அரைத்து பத்துப் போடவேண்டும். அப்பக் கோவை இலையையும் வீக்கமுள்ள இடத்தில் தடவினால் வீக்கம் வற்றும்.

* * *

சீடர் : வயிற்று வலிக்கு என்ன செய்யலாம் சாமிகளே ?

சாமிகள் : ஒரு ரூபாய் எடை சீனாகற்கண்டு, ஒரு ரூபாய் எடை கசகசா. அரை ரூபாய் எடை காவிக்கல் — இவைகளை நுணுக்கி வெள்ளாட்டுப் பாலில் ஒரு ஸ்பூன் போட்டு காலை மாலை பன்னிரண்டு நாட்கள் சாப்பிட்டால் குணம் தெரியும். இது ஆரம்ப வயிற்று வலிக்கு. நீடித்த வயிற்று வலியாக இருந்தால் நீண்டநாட்கள் என்னைக் கேட்டுச் சாப்பிடவேண்டும். இது வயிற்றுப் புண்ணை ஆற்றும் மருந்து.

* * *

சீடர் : குன்ம வாய்வுக்கு என்ன, மருந்து சாமிகளே ?

சாமிகள் : பத்துரூபாய் எடை பால்சுக்கு, ஐந்துரூபாய் எடை உப்பு, ஒரு ரூபாய் எடை பெருங்காயம், கால்படி நாய்துளசி இலைச்சாறு, கால்படித் தண்ணீர் தயாராக வைத்துக் கொள்ளவேண்டும். சுக்கை முதலில் வறுக்க வேண்டும்.

அது பொன் நிறமாகும். அப்போது உப்பைப் போட வேண்டும், அப்போது பொறியும். பெருங்காயத்தைப் போடவேண்டும், அப்போது பொங்கும். அப்போது நாய்துளசி இலைச்சாற்றையும் தண்ணீரையும் சேர்த்து கொதிக்கவைத்துத் தண்ணீர் வற்றும்வரை அடுப்பில் வைத்திருக்க வேண்டும். தண்ணீர் வற்றியபின் பாட்டிலில் எடுத்து பட்டுபோல் நுணுக்கி ஒரு ஸ்பூன் பச்சைத் தண்ணீரில் சாப்பிட வேண்டும். எவ்வளவு நாட்கள் சாப்பிட வேண்டுமென்பது அவரவர் நோய் நிலையைப் பொறுத்துள்ளது. என்னிடம் நேரில் விபரம் அறிந்து கொள்ள வேண்டும்.

இப்படி பல பக்தர்களுக்கு வகைவகையாக வைத்தியம் சொல்லும் நமது பன்றிமலை வைத்தியநாத சாமிகள் ஒரு மருத்துவ குருஉபதேசமும் செய்வர். "சாதாரண வியாதிகளுக்கு வீட்டுச் சரக்கை எடுத்தே மருந்து சேர்த்துக் கொடுக்கலாம். கொஞ்சம் வியாதிப் பெரிதாயிருந்தால் காட்டு இலைகளையும் வேர்களையும் எடுத்து மருந்தாய் கொடுத்தால் குணம் காணலாம். மாமலையிலுள்ள மருந்தே பிணிதீர்க்கும். இதற்கு அதிகப் பணம் செலவு இல்லை. ஆனால் ஒன்றுமட்டும் கவனிக்க வேண்டும். எதுவானாலும் குருவேண்டும், குரு இல்லாமல் உரு இல்லை" என்று சாமிகள் உரைப்பர். உண்மை தான்! முற்றிலும் உண்மைதான்! சாமிகளுடைய அருள் ஒன்று இருந்தாலே போதும். எப்பேர்பட்ட வியாதியும் பறந்து ஓடிவிடும். சாமிகளுடைய அருட்கண்கள் கடாக்ஷத்தாலேயே மனப்பிணிகளும் நீங்கிவிடும். சாமிகள் நினைத்தாலே போதும்: தூரத்தில் உள்ள பக்தர்கள் துயரெல்லாம் பஞ்சாய்ப் பறக்கின்றன. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலைச் சித்தர் நமது பன்றிமலை வைத்திநாத சாமிகள். அவரை நினைத்தாலே நம் பிணிகளெல்லாம் ஓடிவிடும்.

இப்படி உரையாடிக் கொண்டிருந்த சாமிகள் திருவாயினின்றும் எழுந்தது பரிபூரணானந்தப் பாடல் ஒன்று. மனதற்ற பரிசுத்த நிலையை தாயுமானவர் திருப்பாட்டால் மனமு வந்து பாடினார் சாமிகள்.

" ஆசைக்கோர் அளவில்லை யகில மெல் லாங்கட்டி
யாளினும் கடன்மீதிலே
ஆணைசெல வேநினைவர் அளகேசன் நிகராக
வம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக்க லைந்திடுவர்
நெடு நாளி ருந்த பேரும்

நிலையாக வேயினுங் காய கற்பந் தேடி
நெஞ்சு புண்ணுவ ரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர உண்பதும்
உறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதும் நான் நானெனக் குளறியே
யொன்றை விட்டொன்று பற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையை யருள்வாய்
பாக்குமிட மெங்கு மொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே''

இதையடுத்து உடல் நிலையாமை குறித்து ஒரு கீர்த்தனையையும் சாமிகள் பாடினுர்.

பேதை நெஞ்சே — நர ஜென்மம் எடுத்து நான்
பெற்ற பலன் போதும்
அனுபவித்த சுகம் போதும் — பேதை
மாதர் மனைவி மக்களின் மீதினில் வைத்த
காதலெல்லாம் எங்கே போச்சு
கணப்போதிலடங்கிய மூச்சு — பேதை
இதென்ன பேச்சு — பேதை
பருத்தி மென் மலர் மெத்தையின் மீது படுத்தாயே
நாளைபற்றி எரியுதே தீயே
அந்த சித்திரத்தைப்பற்றி அறியாயே
ஒகோ பேயே — பேதை.
காவலன் வந்துனை கொண்டுபோக வரும்போது
அவனை கண்டு தடுப்பவர் யாரு
அதில் உண்ட பலன் உமக்கேது
இதென்ன சூது — பேதை.

இன்று உள்ளோர் நாளை இலார் என்று எடுத்துக் காட்டும் கீர்த்தனையைப் பாடியருளிய பன்றிமலை வைத்தியநாத சாமிகள், காவலன் கொண்டு போக வரும்போதும் அவனைக் கண்டு தடுக்கக்கூடிய ஆற்றல் பெற்ற சித்தர் என்பதை பக்தர்கள் அறிவர். கடவுளை நம்பினேர் கைவிடப்படார் என்றிருக்கும் பக்தர்களுக்கு சாமிகளே கடவுள். சாமிகளே காக்கும் கடவுள். கடவுள் தான் குரு; குருவே கடவுள். குருநாமமே மந்திரமாக வாய்க்கின்றது. குரு நாமமே வாழ்க்கைக்கு வழி காட்டியாகின்றது. ''பேராயிரம் பரவி

வானோரேத்தும் பெம்மானும் பிரிவிலா அடியார்க்கு என்றும் வராத் செல்வம் வருவி"த்தளிக்கின்றான். "மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி தீராத நோய் தீர்த்தருள வல்லானும்" ஆகின்றான். அப்படி அல்லவா விளங்குகின்றார் நமது பன்றிமலை வைத்தியநாத சாமிகள்!

சாமிகளுடைய குருஅருளை அன்புக் கீர்த்தனைகளாகத் திருப்புகழ் பாடும் புதுடெல்லி திரு. S. பத்மநாபன் பாமலர்களைப் படித்து மகிழ்வோம்.

1

பரமன் அருளால் உதித்துப் பழநிமலை அமர்ந்த
பக்தர்க்கு அருள்புரியும் வடி வேலன்
மதலையெனவே உதித்து மைந்தர்களைக் காக்கும்
பன்றிமலையதனிலே அமர்ந்த பெரியோனே

சரணமதையே நினைந்து சகலமும் நீயே என்று
சந்ததமும் வேண்டி நிற்கும் அடியார்க்கு
கருணைமழையே பொழிந்து கனிவுமொழியே புகன்று
கைகொடுக்கும் எங்கள் குருநாதா.

2

பன்றிமலைகுரு பரமதயாகுரு பாதங்கள் பணிந்திடுவோம்
நமக்கென்றுமிலை இடர் என்றுமிலை துயர்
என்றும் அவன் புகழ் பாடிடுவோம்.

அன்புருவானவன் அண்ட சராசரம் அனைத்திலும் அமர்ந்திருப் [பான்
ஆறுதல் கூறியே அகவிருள் போக்கிடும்
அகந்தனில் அமர்ந்திருப்பான்.

இகபர சுகங்களைத் தந்திடுவான் வரும் இன்னல்கள் போக்கிடு [வான்
ஈடில்லை அவனியில் அவனுக்கிணை சொல்லும்
இறைவனும் வேறு முண்டோ.

உதித்திடும் ஞாயிறு போலவே அன்பர்கள் உளந்தனில் [அமர்ந்திருப்பான்
ஊனங்கள் போக்கியே உடற்பிணி நீக்கியே
உலகினுக்கருள் புரிவான்.

ஓம்எனும் தத்துவப் பொருள்தனை உணர்த்திய ஓராறு முகன் [அருளே
ஔடதமாம் அதை அவனியோர் அடைந்திடில்
அவர்க்கிணை யாருமுண்டோ?

நாரணன் பெயருடை நாவலன் நவின்றசொல் நாளும் உரைத்திடுவோர்
பரிபூரண செல்வமும் புவியினில் அடைந்து நற்
புகழுடன் வாழ்ந்திடுவார்.

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளை வைத்தியநாதப் போற்றிப் பத்துப் பாடி அகம் ஆடி மகிழ்வோம்.

**1**

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் குருவே
காயகற்பம் கொடுத்துதவும் கற்பகமே குருவே
எல்லார்க்கும் இதமுடனே மருந்தருளும் குருவே
இன்னலெலாம் தீர்த்தருளும் இனியமுக குருவே
எல்லோரும் இன்பமுற வாழ்வருளும் குருவே
எம்தலைவா, எம்அரசே, எம்ஈசா, குருவே
நல்லார்க்கும் நற்றவத்தின் மருந்தளிக்கும் குருவே
நற்றவத்தோய் பன்றிமலை வைத்திநாத குருவே.

**2**

வடிவேலன் உவந்தளிக்கும் பக்திநிறை குருவே
வள்ளியுளம் புகுந்தவனின் உளம்புகுந்த குருவே
அடிமுடியும் கண்டுணர்ந்த ராஜயோக குருவே
அண்டமதை பிண்டமதில் முற்றுணர்ந்த குருவே
படிப்படியாய்த் தவம்ஏற்ற இல்லறத்தின் ஞானி
பரம்பொருளைத் தன்னுள்ளே கண்டுகொண்ட குருவே
அடியார்கள் துயரையெலாம் போக்கவல்ல குருவே
அருந்தவத்தோய் பன்றிமலை வைத்திநாத குருவே.

**3**

கன்றுக்குப் பசுபோன்ற தாயன்பு குருவே
கனிகொடுத்து ஞானத்தீம்பால் ஊட்டும் குருவே
இன்றைக்கு எம்மீசனாய் விளங்கும் குருவே
இனியெமக்கு பயமில்லை என்றருளிரும் குருவே
பன்றி மாமலைபெற்ற பார்புகழும் குருவே
பரமனடி மறவாத பக்தியுள குருவே
என்றைக்கும் உம்மருளை நம்பியுள்ளோம் குருவே
எம்அருமை பன்றிமலை வைத்திநாத குருவே.

**4**

தீராத தலைவலியை தீர்த்தருளும் குருவே
தீராத பலநோயைத் தவிர்த்தருளும் குருவே
சேராத குடும்பங்களை சேர்த்துவைக்கும் குருவே

செந்தில் வடிவேலன் அருள்பாலிக்கும் குருவே
ஓயாத வயிற்றுவலி ஓட்டுவிக்கும் குருவே
ஒட்டாத எலும்புகளை ஒட்டவைக்கும் குருவே
தீயான கடும்இன்னல் தீர்க்கவல்ல குருவே
தென்பாண்டி பன்றிமலை வைத்திநாத குருவே.

5

வாட்டமுறும் உளங்களுக்கு அருளமுதம் ஊட்டி
வாட்டமெலாம் தளர்விக்கும் இன்பமுத குருவே
கூட்டுமுன திருவருளால் மனநிறைவைக் கூட்டி
கானமழை பொழிந்திடவே வரமருளும் குருவே
ஏக்கமுற்ற நெஞ்சுக்கு ஏற்றம்தரும் குருவே
ஏழைகட்கும் செல்வமதாய் வாழ்வருளும் குருவே
தூக்கமிலா சஞ்சலப்பேய் பிடித்தலையும் எமக்கு
தூக்கமருள் பன்றிமலை வைத்திநாத குருவே.

6

எட்டாத கோட்டைக்கு ஏங்கிநிற்கும் ஏழை
எட்டிவிட அன்பாலே ஏணிதரும் குருவே
கட்டாத மாளிகையை எண்ணி இளைத்திருப்போர்
கட்டவைத்துக் களிப்பருளும் கருணை உள்ள குருவே
சிட்டாகப் பலஇடங்கள் பறக்கும் மனநிலையைச்
சுடர்போன்று ஓரிடத்தில் நிலைக்கவைக்கும் குருவே
மொட்டாக மூடியதோர் மனம் மலர வைக்கும்
மணக்கதிரே ! பன்றிமலை வைத்திநாத குருவே.

7

சித்தம்கொண்ட போக்கையெல்லாம் சிவன்போக்காய் மாற்றி
சச்சிதானந்தக் கடலில் அழைத்துச்செல்லும் குருவே
நித்தமும் தெரிசனத்தால் நல்லபலன் கண்டோம்
நற்றவர்கள் போற்றுகின்ற நாயகரே குருவே
வித்தகரும் உமைக்கண்டு வியப்புமிகக் கொண்டே
வித்தையெலாம் உமையேத்த உவந்திருக்கும் குருவே
சித்தரெலாம் பதினெண்மர் என்றுசொலும் உலகில்
சித்தரிதோ ! பன்றிமலை வைத்திநாத குருவே.

8

பெற்றோரும் ஆகிளங்கள் பெருங்கவலை தீர்ப்பாய்
பேராசை மனங்களுக்குப் பக்குவத்தை அளிப்பாய்

கற்ேறாரும் வியந்தேத்த கருத்தினையும் அருள்வாய்
கல்லாதார் கற்றிடவே மணிமொழியும் தருவாய்
உற்றார் உறவினர்கள் இல்லாத பேர்க்கு
உறுதுணையாய் வாய்த்துள்ள ஒப்பில்லா குருவே
நற்றாள் மலர்அருளும் ஞானமணி சுடரே
நவமணியே பன்றிமலை வைத்திநாத குருவே.

## 9

அப்பா, என்அப்பா, என்ஆருயிரே என்று
அப்பால் நீஇருந்தாலும் இப்பாலே உருக
தப்பாமல் நீவந்து கருணாமிர்தம் பொழியும்
தயைவடிவே, கற்கண்டே, கற்பகமே குருவே
எப்பாலும் நீஇருக்க எமக்கு பயமேது
எமதருளே, எம்நிறைவே, எம்மருந்தே குருவே
அப்பாஉன் ஆர்வமெலாம் என்னைக் காத்தருளும்
அப்பாவே, பன்றிமலை வைத்திநாத குருவே.

## 10

ஓம்என்ற பிரணவத்தின் உண்மையினை உணர்ந்தோய்
உலகெல்லாம் வாழவைக்கும் நல்மருந்தை அருள்வாய்
ஓம்என்ற தத்துவத்தின் இரகசியங்கள் அறிந்தோய்
ஓங்காரப்பொருள் அருளை வாரி வழங்கிடுவாய்
தோம் தோம் தோம் எனவே உனதடியார் ஆடி
துணைவா உன்புகழ்பாடி வைத்தியத்தைப் பாடி
தோம் ததிங்கிணதோம் எனவே உன்அருளைப்பாட
அருள்புரிவாய், பன்றிமலை வைத்திநாத குருவே.

T. D. மீனாட்சிசுந்தரம்

## 31. மணிமந்திர சுபமங்கள சாமிகள்

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்"
"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்"

### ஜோதிடம், சாதகம் :

"எங்கள் கிராமத்தில் என்வீட்டில் இருபதினாயிரம் மதிப்புள்ள பொருள்கள் களவாடப்பட்டன. அவை திரும்பிக் கிடைக்குமா" என்ற கேள்விக்கும் சாமிகள், "போன பொருளில் முக்கால்வாசி கிடைக்கும்" என்று பதில் அளிக்கின்றார். "என்னுடைய பையன் வீட்டைவிட்டு ஓடிச்சென்று இரண்டு நாட்கள் சென்றன. எப் பொழுது வருவான் சாமிகளே" என்ற கடிதத்திற்கும் சாமிகள் "என்னுடைய பதில் தங்களுக்கு வந்து சேருமுன்பே பையன் வந்து சேர்ந்திருப்பான்" என்றும் விடைக்கடிதம் எழுதுகின்றார். அப் படியே காணமற்போன பொருளில் முக்கால்வாசி வந்து சேர்கின் றது. காணமற்போன பையனும் பதில்கடிதம் வருவதற்கு முன்பே வந்து சேர்கின்றான். குழந்தைப் பிரசவமாவதற்கு முன்பே, "N. V. K. க்கு ஆண்" என்ற குறிப்பையும் சாமிகள் தங்கியிருந்த பங்களாவின் ஜன்னல் கதவிலேயே பக்தர் திரு. N. V. கிருஷ்ண மூர்த்தி செட்டியாருக்காகச் சாமிகள் எழுத்து வடிவில் காண்பிக் கின்றார். அதன்படியே கிருஷ்ணமூர்த்தி செட்டியாரும் தான் ஒரு ஆண் குழந்தைக்குத் தகப்பனானதைக் கேட்டும் கண்டும் பெரு மகிழ்வெய்துகிறார். தெத்துப்பட்டியில் ஒரு பெரிய எஞ்ஜினியரை அவர் மடியில் வைத்திருந்த சிகரெட் பாக்கெட்டை எடுக்கச்செய்து அதைப்பிரித்துப் பார்க்கச்சொன்னார் சாமிகள். "பக்தா உன் மனைவியின் பிரிவாற்றாமையினால் வருந்துகிறாய். கவலைப்படாதே. சீக்கிரம் சேர்த்துவிடுகிறேன் – முருகன்" என்று அந்த சிகரெட் பாக்கெட் அட்டையில் எழுதியிருந்தது. எழுதியுள்ள அவ்வளவும் உண்மை! மனைவியைப் பிரிந்து வாழ்ந்ததும் உண்மை! சாமிகள் கூறியபடியே மனைவி கணவனிடத்திற்குத் திரும்பி வந்ததும் உண்மை!!

மதுரை திரு. V. வைத்தியநாதய்யரோடு சாமிகள் ஸ்வாமி பவுண்டரியில் இருந்தபோது, அய்யருடைய உறவினர் ஒரு தீக்ஷதர் சாமிகளைக் காணக் காத்திருந்தார். சாமிகள் அவரிடம் தான் எழுதிய ஒரு காகிதத்தைக் கொடுத்தார். என்ன ஆச்சரியம்! சாமிகளிடம் எந்த ஜாதகங்களுக்காகப் பொருத்தம் கேட்க வந்திருந்தாரோ அந்த ஜாதகங்களின் நகல்களையே சாமிகள் கொடுத்த காகிதம் காண்பித்தது. "இவ்விரண்டு ஜாதகங்களும் பொருந்தி இருந்தாலும் அப்பெண்ணிற்கு இரண்டு வருடங்கள் கழித்துதான் திருமணம் நடக்கும். நீங்களே அந்தக் கல்யாணத்தை நடத்தி வைப்பீர்" என்றும் சாமிகள் கூறினர். அப்படியே நடந்தது கல்யாணமும்.

சென்னை பல்கலைக்கழக ஆராய்ச்சித் துறையில் பணியாற்றும் விஞ்ஞானப் பேராசிரியர் ஒருநாள் தம்மனைவியுடன் சாமிகளிடம் வந்தார்.

சாமிகள் : தங்களுக்கு என்ன வேண்டும்.

பேராசிரியர் : என் எதிர்காலம் எவ்வாறிருக்கும் என்பதை அறியவே வந்தேன்.

சாமிகள் : (சிறிது நேரம் கண்களைமூடி பின் திறந்து) மூன்று ஆண்டுகள் நான்கு மாதங்கள் கழிந்தபின் உங்களுக்கு நல்லகாலம் பிறக்கும் என்று உங்கள் சோதிடர் எழுதித் தந்தாரா"

பேராசிரியர் : ஆமாம்.

சாமிகள் : அது கணிதம். இது உதயம்.

சாமிகளுக்கு நடந்தவை நடக்கப்போவது இவ்வளவும் எப்படித் தெரிகின்றது? சாமிகள் ஜோதிடநூல் கற்றறிந்தார்களா? ஜோதிட நூல் வல்லவர்களாலும் இப்படி நுணுக்கமாக நடந்தவற்றையும், நடக்கப் போவதையும் சொல்ல முடிகிறதில்லையே? அநேகமாக அவர்கள் நடந்ததைத்தான் அப்படியே உரைக்க முடிகின்றதே தவிர நடக்கப்போவதை அறிகிலரே! இதற்கு விடையும் சாமிகளுடைய பதிலான "அது கணிதம் இது உதயம்" என்பதே விளக்க உதவுகின்றது.

சாமிகள் சோதிடத்தையும் சாதகத்தையும்தான் மனத்தில்வைத்து கணிதம் என்று கூறினர். "இராசி மண்டலத்தில் சூரியன் முதலிய கிரகங்களானவை சுற்றிவருதல், ஒன்றோடொன்று சந்தித்தல், ஒரு ஸ்தானத்தில் சங்கமமாயிருத்தல் ஆகிய பலவித விகற்பங்களைத்

தெரிந்து அவற்றால் நேரிடும் சூரிய சந்திர கிரணங்கள், மழை காலம், கோடைகாலம், வேனிற்காலம் முதலிய கால விகற்பங்கள், ஜலப்பிரவாகம், பெரும்புயல் முதலிய விசேட அற்புதங்கள் ஆகியவைகளைத் தெரிந்து கொள்ளும் கணிதமுறையே ' ஜோதிடமெனப் படும். இதையே மாந்தர்களுக்குச் சொல்லும் போது ஜனன காலத்தில் அமையப்பெற்ற மேஷாதி ராசிகளின் சூரியாதி கிரகங் களின் சஞ்சாரமே ' ஜாதகம் ' எனப்படும். ஒருவருடைய பிறந்த நேரத்தை வைத்துக்கொண்டு கணித உதவி கொண்டு சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது எனும் ஒன்பது நவக்கிரகங்களும், மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் எனும் பன்னிரெண்டு ராசிகளில் எந்தெந்த ஸ்தானத் தில் எவ்வெவ்விதமா யிருக்கின்றார்களோ அவ்வவ்விதமாகவே பலாபலனைத் தந்து அந்த நபரைச் சுகதுக்கத்தை அனுபவிக்கச் செய்வார் என்பது ஜாதகப் பண்டிதர்களின் கூற்று. முன் ஜன் மங்களில் ஒருவன் செய்துள்ள புண்ணியச் செயல்களாலும் பாபச் செயல்களாலும் இந்த ஜன்மத்தில் இன்பதுன்பங்களை அனுபவிக் கின்றான் என்று சாத்திரங்கள் கூறுகின்றன. அந்த இன்பதுன்பம் எவ்வெப்பொழுது வருகின்றன என்பதைச் சோதிடம் நமக்கு அறி விக்கின்றது. சோதிடத்தைப்பற்றிச் சாமிகள் ஒருநாள் விளக்கும் போது சோதி இருக்கும் இடந்தான் சோதிடம் என்று கூறினர். சாதகத்தைப்பற்றி விளக்கும் போதும் சாமிகள் " மனிதனுக்குச் சாதகத்தைச் செய்வதால் சாதகம் என்ற பெயர் வந்தது " என்றும் திருவாய்மலர்ந்தருளினர். சாமிகள் தொடர்ந்து பேசிய திருமொழி களைக் கேட்போம். " இதை சரசோதிமாலை இப்படி விளக்குகுன்றது : வேண்டி முற்பிறப்பிற்செய்த வினைகளின் பயனையெல்லாம் காண் தரும் இந்நூல் கொண்டு காணலாம் தீபம் ஒத்தே. மனிதன் முற்பிறவியில் செய்த நல்வினை தீவினைகளின் விளைவாக இப்பிறப் பில் அனுபவிக்க வேண்டிய இன்பதுன்பங்களாகிய பலாபலன்களை, இப்பிறவியில் எவ்வெப்பொழுது அடைகின்றான் என்பதை அறிய ஆவலுடையவனாக இருக்கின்றான். அந்த நிலையில் மனிதனுக்கு ஜோதிபோன்று நல்வினை தீவினையால் வருகின்ற பலாபலன்களை வெட்ட வெளிச்சமாக்கித் தெரிவிக்கின்றது ஜோதிடம். ஜோதிடம், ஜோதிபோல் நல்லவை கெட்டவைகளை நமக்குக் காட்டிவிடுவதோடு மட்டும் நின்று விடாமலும் முன்செய்த தீவினையால் தீமை இந்த ஜென்மத்தில் வருவதாயிருந்தாலும் அதற்கும் கவலை கொள்ளாமல் சாந்திகர்மங்களைச் செய்து, கிரக தோஷங்களை நிவர்த்தி செய்து கொண்டு நல்வாழ்வு வாழவும் நமக்குச் சாதகமாகவும் பயன்படு கின்றது.

அதனுல்தான் பெரியவர்களும்

> ''நெறித்தரும சாத்திரத்தின் விதிசாந்தி செய்தே
> நிறைந்தசுபம் பெறுவதற்கே நிகழ்த்தினர் சாதகமும்''

என்று அழகாகக் கூறியுள்ளனர். ''சோதிடம்''—இதைச் சொல்வதற்கும் திடம் வேண்டும். அவசரமின்றித் திட்டமாகச் சொல்வதாலும் இதை ஜோதிடம் என்று கூறுவர்''

## உதயம் என்பதென்ன?

சாமிகள் நிகழ்கால இறந்தகால எதிர்கால நிகழ்ச்சிகளை யார் சொல்லாமலும் தெய்வீக சக்தியால் தானே அறிந்து சொல்லுகின்ற திறத்தைத்தான் அன்று 'உதயம்' என்ற ஒரே சொல்லில் எடுத்துரைத்தார். கணிதத்தால் தெரிந்துரைத்தல் ஜோசியருக்கு முடியும். சாமிகளுக்குக் கணிதமும் தெரியும், ஆனல் அவர் 'உதயத்திலிருந்தே எல்லாம் அறிகின்ருர். இந்த 'உதயம்' என்பது என்ன?

> '' துதிபெருக வருமூன்று காலமும் அறிந்தபேர்
> துய்ய கோடியி லொருவராம்''

என்று அறப்பளீசுர சதகம் சாற்றுகின்றது. முக்கால முணர்ந்த முனி கோடியிலொருவரே. அந்த ஒருவரே நமது சாமிகள் என்பதில் ஐயமுண்டோ? பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களை ஒருமனப்பட்டு நிறுத்தி தன் வசமாக்கியவர் ஆத்ம ஞானி! உடலில் உள்ள ஆருதாரங்களில் உள்ள கமலங்களில் அமைந்துள்ள மூர்த்திகளையும் சக்திகளையும் தரிசனம் செய்துகொண்டு தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுபவர் ராஜயோகி! ஐந்தெழுத்துண்மை அறிந்து தன் நெஞ்சத்தில் பராபரனை நிறைத்துவைப்பர் பேரறிவாளர். இவர்களுக்கு சித்தியாகாததும் ஒன்று உளதோ? இவரே திரிகாலம் உணரும் தீர்க்கதரிசியுமாவர். இந்த யோக அனுபவத்தால் முக்காலம் உணருவதைத்தான் 'உதயம்' என்ற ஒரே சொல்லில் சாமிகள் பச்சை மரத்தில் ஆணியில் அறைந்ததைப்போல் நம் மனங்களில் பதியுமாறு கூறினுர். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை யோகீஸ்வரரால் அறியாத உண்மைகளும் உண்டோ? இந்த 'உதயத்தால்' சாமிகள் மற்றவர் மனத்திலுள்ள எண்ணங்களை மட்டுமா அறிகின்ருர்? ஒருவருக்குச் செய்வினைக் கோளாறு ஏற்பட்டிருப்பதை மட்டுமா அறிகின்ருர்? மலையாளத்தில் ஒரு கலெக்டர் விலைக்கு வாங்கியிருக்கும் ஒரு எஸ்டேட்டின் பிளானையும் வரைந்து காட்டி அதில் இன்ன பயிர் செய்தால் இன்ன பலன் கிடைக்கும் என்றும் சொல்கின்ருர். திரு. L. A. AM. அழகப்பச் செட்டியார் கேரளாவில் தான் வாங்கியிருக்கும் ரப்பர் எஸ்டேட்டில் யானைத் தொந்திரவு

உண்டு என்பதைச் சொல்ல, உடனே அவரின் எஸ்டேட் அமைப்பைப் படம் போட்டு விளக்கி எந்தத் திக்கிலிருந்து யானை வந்து தொந்திரவு கொடுக்கின்றது என்பதையும் விளக்க ஆரம்பித்து விடுவார். இவைகளைச் சாமிகள் நேரில் கண்டா சொல்கின்றார். உதயத்தில் கண்டு சொல்கின்றார். இதே "உதயம் தான்" ஒரு பொய்யனையும் உண்மையைக் கதற வைத்தது. ஏழு பெரு மனிதர்கள் ஒருவனை ஊமை ஜோசியர் என்று கூறி அத்தாட்சி கொடுத்திருந்தனர். இந்தப் பொய் ஜோசியனும் அத்தாட்சியைச் சாமிகளிடம் காண்பித்தான், 'பளார்' என்று பொய்யன் கன்னத்தில் ஒரு அறை விழுந்தது "சாமி இதை யாரிடமும் சொல்லாதீங்க" என்று வாய் பேசி "ஊமை ஜோசியன்" சரணடைந்தான் சாமிகளிடம்.

ஒரு நாள் சாமிகள் ஊழ்வினை என்பதைப்பற்றிக் கூறியவைகளை உற்று நோக்குவோம்.

**சாமிகள்:** பெரியவர்கள் வாக்கில் உண்மை உண்டு. ஆனால் சில சமயங்களில் அவர்களுடைய திருவாக்குகள் ஒன்றுக்கு ஒன்று முரண்பட்டதாகவோ தோன்றும். ஆனால் அவைகளை ஊன்றிக் கவனித்தால் ஒவ்வொரு வாக்கிலும் பொதிந்துள்ள உண்மை நன்றாக விளங்கும். ஔவை பிராட்டியார் "ஏற்பது இகழ்ச்சி" என்றும் கூறியவர், அடுத்தாற்போல் "ஐயமிட்டுண்" என்றும்கூறி இருக்கின்றார். இது முன்னுக்குப்பின் முரணாகப் பேசியதாகத் தோன்றலாம். ஆனால் ஊன்றிப் பார்க்கும்போது இதன் அருமை தெரியும், உண்மை விளங்கும். நன்றாக வேலை செய்து சாப்பிடக்கூடியவர்கள் பிச்சையைத் தொழிலாகக் கொள்ளக்கூடாது. உழைத்தே சாப்பிடவேண்டும். அவர்களை நினைத்தே 'ஏற்பது இகழ்ச்சி' என்றார். ஆனால் கை கால் கண் இல்லாதவர்களுக்கு இந்த உபதேசம் இல்லை. அவர்களையும் அநாதிகளையும் நினைத்தே 'ஐயமிட்டுண்' என்ற அறிவுரையை மக்களுக்கு வழங்கி இருக்கின்றார் ஔவை. இதைப்போலவே ஊழைப் பற்றி வள்ளுவரும் இரண்டு இடங்களில், இரண்டு விதமாகப் பேசி இருக்கின்றார்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்"

இக்குறள் ஆள்வினையுடைமை எனும் அதிகாரத்தில் பொருட்பால் பகுதியில் வருகின்றது. இது ஊழைப் பற்றித் தொன்றுதொட்டு வரும் எண்ணத்தை வலியுறுத்துகின்றது. சென்ற ஜென்மங்களில் செய்த வினைகள் இந்த ஜென்மத்தில் அவைகளின் பயன்களை விளைவிக்கின்றன என்பதே நமது சாத்திரங்கள் கூறுவன. இந்த ஊழைப் போன்று வலிதானதொன்று உலகில் இல்லை. அதைத் தடுக்க

எப்படிப் பாடுபட்டாலும் அது நம்மைத் தாக்காமலிருப்பதில்லை. இதைத்தான் வள்ளுவர் தனக்குரிய தனி அழகுபாணியிலே மொழிந்துள்ளார். இதே கருத்தைத்தான் ஔவை பிராட்டியும் கூறியுள்ளார்.

"தாந்தாமுன் செய்தவினை தாமே அனுபவிப்பார்
பூந்தாமரையோன் பொறிவழியே — வேந்தே
ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்றாய்
வெறுத்தாலும் போமோ விதி"

ஆனால் எல்லாம் விதிப்படி நடக்கும் என்று வாளாயிருப்பதும் மடமையாகும். ஆண்டவனைத் தஞ்சமடைந்தவர்கள் என்றுமே வீணாகப் போனதில்லை. அவனே கதி என்று அவனையே ஒட்டியிருப்பவரை ஆண்டவன் எப்பொழுதும் தட்டிக் கழிப்பதே இல்லை. பெண்களில் சாவித்திரி விதியையே தன் விடாமுயற்சியால் மாற்றிவிட வில்லையா? ஆண்களில் மார்க்கண்டேயன் தன் விதியையும் ஈசனருள் கொண்டு மாற்றிக்கொண்டதை மறந்துவிட முடியுமா? சிவனையே தன் சிந்தையில் கொண்டுள்ள தவபல மிக்கோரை, "அல்லல் என்செய்யும், அருவினை என்செய்யும், தொல்வினை வல்வினைத் தொண்டன்றுள் என்செய்யும்? சரவணபவனை நம்பியிருக்கும் அடியவர்களை நாள் என்செயும், வினைதான் என்செயும்? நாடி வந்த கோள் என்செயும், கொடுங்கூற்றென் செயும்! பெருந்தவபல மிக்கோர் தமது உறுதி தளராத பெருமுயற்சியினால் விதியையும் மாற்றவல்லவராகின்றார். இதைத்தான் வள்ளுவர் அறப்பால் பகுதியில் ஊழ் எனும் அதிகாரத்தில்வெகு அழகாக எடுத்துரைத்திருக்கின்றார்.

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாதுஞற்று பவர்"

சாமிகளின் இந்தத் திருஉரைகளைக்கேட்ட நாம் சாமிகள் இதைப்பற்றி பாக்கியபரணியில் எழுதியுள்ள திருமொழிகளையும் இச்சந்தர்ப்பத்தில் படித்து மகிழ்வோம்.

"பெருமையும், சிறுமையும்தான் வரவருமே" என்கின்ற ஆன்றோர் வாக்குப்படி மனிதனே தன்னுடைய மேன்மைக்கும், தாழ்மைக்கும், வெற்றிக்கும், தோல்விக்கும், செம்மைக்கும், வறுமைக்கும் காரணமாகின்றான். சிலர் இதற்குக் காரணம், பூர்வகர்மமென்றும், விதியென்றும் கூறுவர். இது ஓரளவிற்கு உலக வழக்கமாகி விட்டது. ஆனால் விதியை மதியால் வெல்லலாம்! அறமும் புறமும் சூழ்ந்து கொண்டிருக்கும் எதிர்மறைச் சக்திகளை அடக்கி ஒடுக்கி அழித்துவிட்டு உடன்பாட்டுச் சக்திகளின் உறுதுணையுடன் ஆத்ம சக்தியையும் அபிவிருத்தி செய்துகொண்டு நடுநிலை சக்தியை நிலைநாட்டி பரமாத்மாவை நெருங்கக்கூடிய பேரறிவு பெற்ற அறிவாளிகளால்தான் விதியை மதியால் வெல்ல முடியும்."

உண்மைதான்! பரமாத்மாவை நெருங்கக்கூடிய பேரறிவு பெற்ற அறிவாளிகளால்தான் விதியை மதியால் வெல்ல முடியும். எப்படி சிவன் மார்க்கண்டேயருக்கு உதவி, என்றும் சிரஞ்சீவியாக இருக்க வரமளித்தாரோ அப்படியே இந்த பேராற்றல் மிகுந்த பேரறிவாளர்களும் தம் அற்புத சக்தியால் தீராத நோய்களையும் குணப்படுத்துகின்றார்கள். பம்பாயிலிருந்து சாமிகளைப் பார்க்க திரு. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் தம் குடும்பத்தோடு வந்திருந்தார். அந்தக் குடும்பம் பேரார்வத்தோடு சாமிகளுக்குப் பாதபூஜை செய்து முடித்ததைக் கண்ட நாங்கள் அவர்கள் எப்படி சாமிகளிடம் முதன்முதலில் வந்து சேர்ந்தனர் என்ற விபரம் அறிய ஆவலுடையவரானோம்; காரணம் அவர்கள் சாமிகளோடு பழகும் முறையிலும் பாதபூஜை செய்த வகையிலும் ஒரு உள்ளங்கனிந்த பேரன்பு பொங்கிக்கொண்டு இருந்தது.

பம்பாய் பக்தர்: என்னுடைய மனைவிக்கு முதுகெலும்பில் உருக்கி நோய் ஏற்பட்டது. எக்ஸ்ரே எடுத்துப் பார்த்ததில் சில எலும்புகள் அரிக்கப்பட்டு உடனே எடுத்துவிட வேண்டிய நிலையில் இருந்ததை உணர்ந்தோம். ஆனால் அதற்கு வேண்டிய ஆபரேஷன் உடனடியாகச் செய்ய போதிய ஆரோக்கிய நிலையில் என் மனைவிக்கு உடம்பு இல்லை. இந்த சங்கடமான நிலையில் சாமிகளைப் பற்றி கேள்விப் பட்டோம். சாமிகளிடம் ஒருசக்தி எங்களை இழுத்துக்கொண்டு சென்றதென்றே சொல்லவேண்டும். "இதற்கு ஆபரேஷன் தேவையில்லை. பதினைந்து நாட்கள் நான் கொடுக்கும் விபூதிப் பிரசாதத்தைப் பூசிக்கொண்டால் அதுவே போதும்" என்று உளமுவந்து சாமிகள் உரைத்தார். சாமிகள் திருவாய் மலர்ந்தருளியது போலவே விபூதிப்பிரசாதம் பூசப்பூச உட்காரக் கூட முடியாமல் இருந்த என் மனைவிக்கு உட்கார முடிந்தது. அரித்துப்போன எலும்புகள் வளர்ந்து தெம்பேறி வலுப்பெற்று விட்டன. இதைக்கண்டு பேராச்சரியமுற்ற டாக்டர்களும் மறுபடியும் எலும்புகளை எக்ஸ்ரே எடுத்துப் பார்க்க எலும்புகள் பழுதுபட்டிருந்த நிலைமாறி குணமடைத்திருக்கும் விபரம் கண்டு வாயடைத்து நின்றனர். பின்னர் என் மனைவிக்கு பூரண குணமாகிவிட்டது. சாமிகள் எங்களுக்குக் கண்கண்ட தெய்வம்.

இந்த மொழிகளைக் கேட்டுக் கொண்டிருந்த மதுரையிலிருந்து வந்த பக்தர் ஒருவர் உடனே சாமிகளிடம் முறையிட்டுக் கொண்டதும் சாமிகள் அவருக்கு அருள்மொழி அளித்ததும் உற்று நோக்கத் தக்கவை. "சாமி, நமது வீட்டிலும் இதுமாதிரியல்லவா ஒருநோய் தீராத கவலையைக் கொடுத்து வருகின்றது. சாமிகள் நமது வீட்டிற்கு எவ்வளவோ முறை எழுந்தருளி இருக்கின்றீர். இந்த நோயைத் தீர்த்தருள இன்னும் மனமிரங்கவில்லையே" என்று

மதுரை பக்தர் தன் உள்வேதனையை வாய்விட்டுக் கூறினர். சாமிகளுடைய சாந்த முகத்தில் அன்புநகை கனிந்தது. சாமிகள் உளங்கனிந்து பேச ஆரம்பித்தனர்.

சாமிகள்: எல்லாம் வல்லான் வகுத்தது போல்தான் நடக்கும். பம்பாய் பக்தருக்கு நோய் இருந்த இடம் தெரியாது பறந்து போனதும், மதுரை பக்தருக்கு நோய் நிலைத்து வாட்டுவதும் அவரவர்கள் செய்த வினைப்பயன் என்றே சொல்ல வேண்டும். கர்மவினையால் வந்த நோய்க்கு மருந்து கொடுக்க யாராலும் முடியாது. இராமர் பாதம்பட்ட எல்லா கற்களும் பெண்களாக மாறி விடவில்லை. அவர் திருப்பாதம் படவேண்டும், அத்திருப்பாதம் தீண்டியவுடன் கல்லும் பெண்ணாக மாறவேண்டும் என்று ஒரு கல்லுக்குத்தான் கொடுத்து வைத்திருந்தது, கல்லுரு பெண்ணுரு பெற்றது, அகல்யாவுக்கு மட்டும்தான் கொடுத்து வைத்திருந்தது. எல்லா கற்களும் இராமர் பாதம்பட பெண்ணாக மாறிவிட முடியாது; அப்படி மாறிவிடவும் இல்லை. அதுபோன்று எல்லா ஊமைகளையும் என்னால் பேசவைக்க முடியாது. எல்லா வியாதிகளையும் என்னால் குணப்படுத்த முடியாது, யார்யாருக்கு எந்தெந்த காலத்தில் யார்யாரால் விமோசனம் ஏற்பட பிராரப்த்வம் ஏற்பட்டிருக்கின்றதோ அதன்படிதான் நடக்கும். இன்று ஒரு குருடருக்கு என்னால் பார்வை கொடுக்க முடிந்தது என்றால் அந்த ஜன்மத்திற்கு விமோசனம் இன்று என்னால் ஏற்பட பிராரப்த்வம் ஏற்பட்டிருக்கின்றது. அவனன்றி ஓர் அணுவும் அசையாது. அவனன்றி இந்த அற்புதங்களும் நடவாது"

சாமிகளுடைய அருளுரையைக் கேட்ட நாங்கள் சாமிகள் தொடர்ந்து கூறிய, "குருபார்வையினால் கோடி பாபம் தீரும்" என்ற திருமொழிகளையும் கேட்டு அகமகிழ்ந்திருந்தோம். "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்: குருநாதன் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளை நம்பினோர் கைவிடப்படார்" என்றே நெஞ்சங்கள் நம்பிக்கை வானத்தில் பறந்து கொண்டிருந்தன.

## சாமிகள் சாதகம் செய்தல்

நம் விதியை நாமே அனுபவித்து தீர்க்க வேண்டி இருந்தாலும் விதியின் கொடுமையை அனுபவிக்க விடாமல் விதியின் காற்றை மட்டும் லேசாக வீசிப்போகும்படியும் சாமிகள் அருள் செய்கின்றார். ஒரு நாள் சேலத்திலிருந்து வழக்கறிஞர் திரு. A. R. சீனிவாசன் குடும்பத்தினர் பெங்களூருக்குப் போகவேண்டி இருந்தது. அப்போது சேலத்தில் தங்கியிருந்த சாமிகளிடம் அவர்கள் விடைபெற்றுக் கொள்ளச் சென்றனர். அப்போது சாமிகள் ஒரு பூவை அவர்

களுக்கு அளிக்க பூ உடனே ஒரு ஸ்ரீனிவாசப் பெருமாள் விக்கிரக மாக மாறியது. "நீங்கள் ஊருக்குப் போகும்போது இதைக் கூடவே எடுத்துச் செல்லுங்கள். இது உங்களைப் பாதுகாக்கும்" என்று சாமிகள் கூறினர். அதன்படி விக்ரகத்தோடு சென்றுகொண் டிருக்கும் சேலம் பக்தருடைய கார் பெங்களூரை அடைய பதினைந்து மைல்கள் இருக்கும்போது ஒரு திருப்பத்தில் காரின் சக்கரம் கழன்று போய் கார் ஆடாமல் அசையாமல் அப்படியே நின்றுவிட்டது. கார் வேகமாக ஓடிக்கொண்டிருக்கும்போது சக்கரம் கழன்றால் உள்ளிருப் பவருக்கு கட்டாயம் ஆபத்து நேரிடும். ஆனால் சாமிகள் அருளால் உள்ளிருந்தவர்களுக்கும் காருக்கும் ஒருவித ஆபத்தும் நேரவில்லை. இது மட்டுமல்ல. சொல்லி வைத்தாற்போல ஒரு லாரி அங்கு வந்து சேர்ந்தது. அதிலுள்ளவர்கள் வேண்டிய உதவி செய்து சேலம் பக்தர் காரை முன்னால் போகச் சொல்லி பின்னால் வருவதாகச் சொல்லி அனுப்பினர். ஆனால் பின்னால் வருவதாகச் சொன்ன லாரிக் காரர்கள் மறைந்துவிட்டார்கள் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் லாரியைத் தேடிப்பார்க்கும்போது லாரி சக்கரங்களின் சுவடு கூட தெரியவில்லை. சேலம் பக்தருக்கு பெங்களூருக்கருகில் கார் விபத்து நடந்த அதே சமயத்தில் சாமிகள் சேலத்தில் பக்தர் களிடம் இந்த விபத்தைப் பற்றிக் கூறி "முருகன் காப்பாற்றி விட் டான், விக்கிரகம் காப்பாற்றி விட்டது" என்று கூறினர். "தலைக்கு வந்த ஆபத்து தலைப்பாகையோடு போனது' என்பதை அல்லவா இந்த நிகழ்ச்சி நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. சாமிகள் ஆபத்தி னின்றும் காப்பாற்ற ஒரு விக்கிரகத்தைச் சேலம் பக்தர் கூடவே அனுப்பி இருந்தார். அது மட்டுமல்ல, காரைச் சரிப்படுத்தவும் ஒரு லாரியில் இரு மனிதர்களையும் கூட அல்லவா சேர்த்து அனுப்பி இருந்தார். வேலை முடிந்தவுடன் லாரியும் அதில் வந்த இரு மனிதர்களும் மாயமாக மறைந்து விட்ட விந்தையையும் சேலம் பக்தர்களால் மறக்க முடியுமா? சாமிகளது கருணைச் செயலை அவர் களால் என்றுமே மறக்க முடியுமா?

சாமிகள் இப்படி எவ்வளவோ பக்தர்களுக்கு தன் கருணை அமுதினை வழங்கி வருகின்றார். அவரவர்கள் ஜாதக கிரக நிலைகளை திருஷ்டியில் தெரிந்துகொண்டு அதற்கு வேண்டிய செலவு இல்லாத பரிகாரங்களைச் சொல்லும் வன்மையுடையவர் சாமிகள். பில்லி சூனியம், யந்திரத்தகடுகள், முனியன் சேஷ்டை, பேய்—இவைகளால் ஏற்படும் தொல்லைகள் சாமிகளுடைய திருஷ்டி பட்டவுடனேயே பறந்து ஓடிவிடுகின்றன. சாமிகளுடைய திருவடிகள் வரப்பெற்ற இல்லங்கள் புனிதமடைகின்றன. சாமிகளது திருக்கண் கடாக்ஷம் பெறும் மக்கள் க்ஷேமமடைகின்றனர்.

ஜோசியத்தையே தனக்குத் தொழிலாகக் கொள்ளக் கருதிய ஸ்ரீ வெங்கிடாசல சாஸ்திரி என்பவர் அந்த ஜோசியத்தாலேயே

எப்படி அவதிப்பட்டார் என்பதும் அந்த அவதியை எப்படி சாமிகள் அகற்றி அவருக்குக் கிருஷ்ணபகவான் தரிசனத்தையே காண்பித்தனர் என்பதும் கேட்கக் கேட்க நமது வியப்பையும் மகிழ்ச்சியையும் விரிவுபடுத்துகின்றது. 1955ஆம் ஆண்டில் சாமிகள் திருவனந்தபுரம் ஸ்ரீபத்மநாபசாமி கோயிலுக்குச் சென்ருர். முதல் நாள் கோயிலில் சாமிகளுடைய பக்தர்கள் கோவிலுக்குள் சாமிகளை நமஸ்கரிக்கக் கூடாதென்று ஆட்சேபித்த ஸ்ரீ வெங்கிடாசல சாஸ்திரி அடுத்த நாள் சாமிகளைத் தேடி அவர் தங்கி இருந்த இடத்திற்கே புஷ்பம் தேங்காய் பழம் தாம்பூலத்துடன் ஓடோடி வந்து சாமிகளைச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து ஆனந்தக் கண்ணீர் விட்டார். அவருடைய பூர்வீக வாழ்க்கையை நன்குணர்ந்த சாமிகள் அவருக்கு அவருடைய குருவால் ஏற்பட்ட சாபத்தைப்பற்றியும் அவர் நெஞ்சில் இருந்த ஒரு தழும்பைப்பற்றியும் கூறி அவருடைய கதையை சொல்லச் சொன்னுர். அர்ச்சகர் கூறிய விபரங்கள் கேட்போர் மனத்தை உருகவைக்கும் தன்மையன. அர்ச்சகர் முதலில் சிறுவயதில் ஒரு குருவிடம் ஜோசியம் படித்தார். குரு படுத்த படுக்கையாய் அசௌக்யமாக இருந்தபோது 'எப்போது எனக்கு உடம்பு குணமாகும்' என்று சிஷ்யனையே ஜோசியம் கேட்டார். "இன்று மாலை நான்கு மணி தாண்டாது" என்று துணிந்துரைத்தார் சீடர். இதனுல் வெகுண்ட குரு பழுக்கப் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பி ஒன்ருல் சீடன் மார்பில் சூடிட்டார். "உண்மையைச் சொன்னதற்கு இந்த தண்டனையா" என்று கூறிய சீடனைப் பார்த்து 'இனிமேல் உன் ஜோஸ்யம் பலிக்காமல் போகட்டும்" என்று குரு சபித்தார். அந்தச் சாபப்படி ஜோஸ்யத் தொழில் கெட்டு நாற்பது வருடங்களாக கோயிலில் அர்ச்சக வேலையில் இருந்து வருகின்ருர் ஸ்ரீ வெங்கடாசல சாஸ்திரி. சாமிகளை முதல்நாள் கோவிலில் பல சந்நதிகளுக்கு அழைத்துச் சென்று மூர்த்திகள் தரிசனம் செய்து வைத்தபோது கிருஷ்ணசாமி சந்நதிக்கு வந்தவுடன் 'இருங்கள், நான் கொஞ்சம் உள்ளே போய்விட்டுச் சீக்கிரம் வருகிறேன்' என்று சொல்லிச் சென்ருர். நெடுநேரமாகியும் திரும்பி வரவில்லை. சாமிகள் பக்தர்கள் அவரைச் சீக்கிரம் வரும்படி ஒரு ஆளை அனுப்பியபோது அவருடைய பிடரியில் பளீரென்று கையால் யாரோ அடித்ததை உணர்ந்தார். யாரோ அடித்தது உண்மை. வெறும் தோற்றமல்ல. காலதாமதப்பட்டு வந்ததற்குத் தன்னைத் தண்டிக்கவே பத்மநாப மூர்த்தி அடிகொடுத்தார் என்றுகூறி சாமிகளுடைய மன்னிப்பைக் கோரினுர் அர்ச்சகர். சாமிகள் உடனே "இது தண்டனையல்ல. உம்மைப் பத்மநாபர் அனுக்கிரகித்தார். உங்களுக்கு இருக்கும் சாபமும் நீங்கிற்று. பத்மநாபர் கைபட்டதும் உமக்கு சாபம் தீர்ந்தது" என்று திருவாய் மலர்ந்தருளினுர். அதோடு அர்ச்சகரை சாமிகள் விட்டுவிட வில்லை. அர்ச்சகருக்கு அதிர்ஷ்டம் பிறந்து விட்டது. அவரை சாமிகள் தன் பூஜை அறைக்குள் அழைத்துச் சென்ருர்.

சங்கு சக்ரபாணியாக கிருஷ்ணபரமாத்மாவையே அவருக்குச் சேவை செய்து வைத்தார். அர்ச்சகர் கூறுவதையே கேட்போம்.

அர்ச்சகர்: ஸ்ரீ சாமிகள் என்னை ஊதுபத்தியைக் கொளுத்தச் சொன்னார். நான் அப்படியே செய்தேன். என்னைத் தியானம் பண்ணச் சொல்லிவிட்டு ஸ்ரீ சாமிகளும் தியானம் செய்தார். படபட என்று சப்தம் கேட்டது. அப்போது ஒருஜோதி தரை முதல் கூரை வரை எழும்பியது. பின்பு கம்பிபோல் ஒரு மின்னல்கொடி அந்த ஜோதியைச் சுற்றி சுற்றி வந்தது. பிறகு ஜோதிக்குள் ஒரு ரூபம் லேசாகக் காணப்பட்டது. அது பிறகு தெளிந்து சங்கு சக்கர கதா பாணியாக கிருஷ்ணபரமாத்மா எனக்குக் காட்சியளித்தார். நான் கண்டு மதிமயங்கிச் சுயநினைவு இழந்து நின்றேன். சற்று நேரத்திற்குப் பிறகு கம்பிபோன்ற மின்னல்கொடி மறைந்தது. பிறகு ஜோதியின் உயரமும், அகலமும் குறைந்துகொண்டே வந்து கடைசியில் மறைந்தது.

## சாமிகள் ஜோசியருக்கே ஜோசியர் :

சாமிகள் ஜோசியருக்கே ஜோசியம் கூறுவது இது முதல் முறையன்று. வெங்கடாசல சாஸ்திரி அவர்களுடைய பூர்வோத்திரத்தை மட்டுமா அறிந்தார். அவருக்குக் கிருஷ்ண கடாக்ஷத்தையும் ஏற்படுத்தி தானே தடுத்தாட்கொண்டார். ஜோதிட மணிகளுக்கிடையே அருட்ஜோதி திருமணியாக விளங்குகின்ற சாமிகளைப் பிரபல சோதிட நிபுணர்களும் கண்டு தரிசிக்கின்றனர். சாமிகளைத் தரிசித்துச் சாமிகளின் பேரருளைப் பெறும்படி சோதிட சிகாமணிகளின் இஷ்ட தெய்வங்களே அவர்களைச் சாமிகளிடம் அனுப்பி வைக்கின்றனர். தஞ்சை ஜில்லா நன்னிலம் தாலுக்கா மூலங்குடி கிராம முன்சீப்பாக இருக்கும் திரு. பி. வேலாயுதம் பிள்ளை அவர்கள் சமீபத்தில் பல சித்துக்கள் விளையாடிப் பலபேர்க்கு அருள்புரிந்த ஸ்ரீ குழந்தையானந்த சாமிகளைக் குருவாகக் கொண்டவர். அவர் சாமிகளைப்பற்றி 1966இல் எழுதுவதைப் படித்துப் பார்ப்போம். “நான் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளின் ஆசீர்வாதத்தைப் பெற சுமார் ஐந்து ஆறு வருடமாக அலைந்து கொண்டிருக்கிறேன். அவர்களுடைய ஆசீர்வாதம் எனக்குப் பரிபூரணமாகக் கிடைக்கவில்லை. என்னுடைய குருநாதன் குழந்தை ஆனந்தம் சுவாமிகள் கனவில் தோன்றி முருகன் அருள்பெற்ற ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகளை விடாமல் பக்தி செலுத்தும்படி உத்திர விட்டபடியால் நான் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகளிடம் வந்து போனால்தான் என் சொந்தக் காரியங்கள் ஒழுங்கான முறையில் நடைபெற்று வருகிறது.” இத்தகையவர் ஒருநாள் சாமிகளிடம் திண்டுக்கல்லுக்கு வந்திருந்தார். அப்போது தன் கல்யாண விஷயமாகச் சாமிகளிடம் தெரிந்துகொள்ள ஒரு பக்தரும் வந்திருந்தார்.

சாமிகள் வேலாயுதம் பிள்ளையின் ஆரூட அறிவைப் போற்றிப் பேசி முடித்தவுடன் வந்திருந்தவர் தான் வந்த வேலையை பிள்ளை அவர்கள் உதவி கொண்டே முடித்துக்கொள்ளலாம் என்று நினைத்தனர் போலும்! அப்பொழுது சாமிகள் வேடிக்கையாகக் கூறிய மொழிகள் ஊன்றிக் கவனிக்க வேண்டுவன.

சாமிகள்: "வேலாயுதம் பிள்ளையே சொந்தக் கண்ணாடியை வைத்துக்கொண்டு இரவல் கண்ணாடியைத் தேடிக்கொண்டு என்னிடம் வந்திருக்கின்றார்."

இந்த மொழிகளில் எவ்வளவு பேருண்மைகள் பொதிந்துள்ளன. ஜோசியத்தைச் சாமிகள் கண்ணாடிக்கு உவமித்துக் கூறிய பொருத்தம் சரியான பொருத்தம். கண்ணாடியில் நமது பிரதிபிம்பத்தையே காண்கின்றோம். அது போன்றே ஜோசியமும் நமது காலத்தைப் பிரதிபலித்துக் காட்டுகின்றது. சோதிட வல்லுநரானவர்களுக்கே சில சமயங்களில் சந்தேகங்களும் நிம்மதியின்மையும் ஏற்படுகின்றது. அப்போது அவர்கள் வைத்திருக்கும் சோதிடக் கண்ணாடி அவர்களுக்கு உதவவில்லை; சாமிகளிடம் வந்து அவர் அருளைப் பெறுகின்றபோதுதான் அவர்களுக்குச் சந்தேகங்கள் நிவர்த்தியாகின்றன. மனத்தில் புதுமலர்ச்சி ஏற்படுகின்றது. இவைகளைத்தானே சாமிகளுடைய எளிய இனிய மொழிகள் சுருக்கமான சொல்லோவியமாகத் தீட்டிக் காண்பித்தன.

மதறாஸ் திரு. சாமி K. K. அனந்தம் அவர்கள் கைரேகை சாஸ்திர நிபுணர். அவர் சாமிகளை முதன்முதலாகக் கண்டு அவர் கைரேகைகளைப் பார்த்தவுடன் மெய்சிலிர்த்து உணர்ச்சி மேலிட்டு ஆனந்தப் பரவசமடைந்தார் – பேச்சு எழவில்லை – யாருக்காகக் காத்திருந்தாரோ அவரைக்கண்ட பரவசத்தில் நா எழவில்லை. சாமிகளைக் கண்ட இந்தக் கைரேகை சாஸ்திர நிபுணர் தேவிஉபாசகர். சாமிகளைக் கண்ட பத்து வருடங்களுக்கு முன்பு தேவி இவர் கனவில் தோன்றி "கைகளில் சங்கு, சக்கரம், சேவற்கொடி, அறுகோணம், வேல், சண்டா, சூலம் ஆகிய சின்னங்களும், பாதங்களில் சங்கு சக்கரங்களும் வேலும், முதுகில் சேவற்கொடியும் அமையப்பெற்ற மகான் ஒருவரைத் தரிசிப்பாயாக" என்று அருள் செய்தனர். அதன்படி அல்லவா இந்தத் தெய்வச்சின்னங்கள் தாங்கிய சாமிகளை இன்று இவர் கண்டு தான்கண்ட கனவையும் உரைக்கின்றார். சாமிகள் இவரையும் சீடராக ஏற்றுக்கொண்டு கூறிய திருமொழிகளைச் செவிமடுப்போம்.

சாமிகள்: நீங்கள் பாடுபட்டுக் கோபுரத்தில் ஏறிவிட்டீர். ஆனால் இறங்குவதற்கு வழிதெரியாமல் இருக்கின்றீர் ... ... ஸ்ரீதேவியின்

மூலமாகத்தான் என்னைக் கண்டீர். ஆதலால் நீர் தேவியையும் தொடர்ந்து பூஜித்தல் வேண்டும்.

இந்த உரையோடு அவருக்கு நவாக்ஷரீ மஹாமந்திரம் பின்னல் வரையப்பெற்ற தன் திருஉருவப்படங்களை சாமிகள் தன் பூஜை ரூமிலிருந்து ஆனந்தம் அவர்களின் கைகளுக்குப் பறந்துவருமாறு அருள்புரிந்தனர். ஆனந்தம் அவர்கள் ஆனந்தமாக எழுது வதையே படித்து ஆனந்தமடைவோம்.

"ஸ்ரீ சாமிகளைக் குருநாதனுக அடைந்ததில் இருந்து எனக்கு நன்மைகள் பல ஏற்பட்டிருக்கின்றன. என்னுடைய உதவியை நாடிவருகின்றவர்களுக்கு ஸ்ரீ குருநாதரின் அருளினுல் நலம்பெறச் செய்யும் ஆற்றல் எனக்கு முன்பிருந்ததைவிட மிகுந்து வருவதை நன்ருக உணர்கிறேன். ஸ்ரீ சாமிகளின் திருவருளை எல்லா மக்களும் பெற்று இன்புற்று இருக்கவேண்டும் என்பதே என்னுடைய விருப் பம் ஆகும்."

## சாமிகளைப்பற்றி நந்தி நாடி ஏடு

மதுரை ஜில்லாவில் கோவில்பட்டியில் உள்ளவர் திரு மு. சு. ச. வையாபுரி பிள்ளை. இவர் நந்திவாக்கிய ஏடுபடிக்கும் ஜோதிடர். இவர் சாமிகளைக் குருநாதராகப் பணிந்து சாமிகளுடைய திருஉரு வப்படத்தை வைத்து பலருக்கு ஏடுபடித்தும் எழுதியும் கொடுத்தும் வருகின்ருர். இவருடைய மகன் சாந்தநாயகத்திற்கு சாமிகள் அருளால் கண்பார்வை உண்டானது. இவர் சாமிகளைப்போற்று வதைக் கேளுங்கள்.

வையாபுரிபிள்ளை "... ... ... இந்த மகானுல் எத்தனை எத்தனையோ கஷ்டங்கள் பலருக்கு நீங்கி வருவதைக் கண்கூடாய்ப் பார்த்து வருகிறேன். ஜாதகமில்லாமலே என் குருநாதர் ஒவ்வொருவ ருடைய பலனையும் ஒருவரைப் பார்த்தவுடன் கடகடவென்று எடுத் துக் கூறிவிடுகிருர்கள். யாரிடத்திலும் எவ்விதப் பிரதிபிரயோஜ னத்தையும் எதிர்பாராது சாப்பாட்டு நேரத்தையும், நித்திரையை யும் கூடக் கருதாது மக்களுக்குத் தொண்டுசெய்து வருகின்ருர்."

திரு. வையாபுரிப் பிள்ளை சாமிகளைப் புகழ்வதைக்கண்டோம். அவரிடமிருக்கும் நந்திநாடி ஜோதிட ஏட்டுப் பிரதிகள் சாமிகளைப் பற்றிப் புகழ்வதையும் பார்ப்போம். சாமிகளுடைய திருக்குமாரர் திரு. பேச்சிமுத்துராஜா அவர்கள் ஜாதக ஏடுகளில் சாமிகளைப் பற்றி வருகின்ற பாடல்களைப் படித்தின்புறுவோம்.

நோக்கம் பாரது பின் முன்னங்காலம்
நுவலவே பாட்டனார் காலம்
யேக்க மில்லாது சம நல்ல வாழ்வு
இயம்புவேன் பூ விவசாயம்
ஆக்கமதாகும் குறை எதுமிலேயே
அம்மணி பிதா காலம் தன்னில்
யேக்கமில்லாது அப்பன் நற்றுளாய்
இயல்புள பலனிது தாயே

தாயே கேள் அப்பன் யோக்கியன் யூகி
சமர்த்துள்ளான் காரியம் பலது
ஞாயமா யப்பன் வேட்டம் பின்னாலே
நாட்குநாள் க்ஷேமமே காட்டும்
ஆயந்தக்காலம் பெரியவரன்பும்
அதிலும் குமரனின் பக்தி
நேயம தாகும் ஜாதகன் பிறந்தும்
நேர்ந்திடும் பிதுர் செயல் க்ஷேமம்.

க்ஷேமமும் ரவியில் பலனது மட்டும்
செப்புவேன் சோமனார் திசையும்
க்ஷேமமே காட்டும் பலனது
தீதிலே பிதா தொழில் தேட்டும்
ஆமது வாகும் பூமியின் சிறப்பு
ஆகுமே பந்துவில் வருத்தம்
தாமது மலரும் பிதா பெயர் மதிப்பு
தானுண்டு மதி பிற்கூர் தன்னில்

தன்னில் இத் துள்ளும் சோதரசேற்கை
தானுண்டு பிதா தொழில் மதிப்பு
வன்மை தான உத்தியோகச் சீரு
வாய்த்திட பெரியவ ரன்பும்
கண்ணியமாகும் சாதுக்கள் சேவை
காணுமே குமரனின் பக்தி
வண்ணமதாக அருள் மிக வுண்டு
வகையுள தொழிலதும் உண்டு

உண்டுமே பாரு பிதா செயல் பலதாய்
கேதிய கிரி வளச் சிறப்பு
பண்டது வாகும் சேயவன்றிசையும்
பகரவே மாந்தரீகம் பலது

கொண்டிடுமப்பன் குகனருளாலே
கூடுமே பிதா செயல் கீர்த்தி
உண்டுமே பாரு நேமம் ஏமம் மேலும்
உற்றது பலனதும் குகன் அருளால்

அருளது வாலே கிரிவளப் பெருமை
ஆகுமே குமரனுலயச் சீர்
மருவிடு பிதா கோவிற் கொண்டேற்ற
வாய்ந்திடும் பிதா பெயர் புகழ்ச்சி
பொருளது வரத்து பூமியும் கிரியில்
பொருந்திடும் பகை சில இடையில்
அருள்மிக உண்டு பகை வரும் சரண்பார்
அம்மணி பலனது வெற்றி

வெற்றிமிக்கதுன் பிதா செயல் கேங்க
விளம்புவார் உத்தியோக மாற்றம்
உற்றது மாரு பலனது மட்டும்
உண்மைகேள் சேயவன் பிற்கூர்
நற்றவமாகும் பிதா செயல் மதிப்பு
நலமிகும் பக்தி மேலூட்ட
நற்றவமாகும் யோகக் காட்சியுமே
நாட்டிலே பிதா செயல் மதிப்பு

மதிப்புமுண்டாகும் பலபல வகையில்
வந்திடும் குகனருள் மேலாய்
கதிப்படி பலது காரியம் முடிக்க
காணுமே சிவனும் கற்றுளாய்
இதிப்படி பாலன் கல்வியால் கவலை
யேற்குமே பிதா பெயர் புகழ்ச்சி
விதிப்படி உண்டு வினை வதை விற்க
விளம்புவேன் பொருளது சேற்கை

சேர்க்கையுமாகும் பயிற்சி யோகச்சீர்
சிறந்திடும் சாஸ்திரம் கேள்வி
ஆக்கமாயத் தோனும் பக்தி மேலூட்டல்
ஆவது யோகக் காட்சியும் பார்.
யேற்கை யதாகப் பலர்க்கு பகாரம்
இயலும் நாள் ஆசாரம் பேரு
தீர்கமதாகும் அருளும் சித்திக்க
சென்றிடும் திசை எல்லாம் சிறப்பு

சிறப்புள அப்பன் பேரது ஓங்கும்
தீதிலார் யார்க்கும் அன்போடு
அறப் பெருங் கீர்த்தி அருள் செயலாலே
ஆவன பற்பல உதவி
சிறப்புள பேரும் கொண்டாடும் நேமம்
திடமுளார் நேர் விதப் போக்கு
பிறப்பதை அறுக்கும் பக்தி யுண்டாகும்
பெற்றதும் இல்லற ஞானம்

ஞானம் வேதாந்தம் யோகம் கைவல்யம்
நலமிகும் சித்துமே பலது
மேனலமாகும் குறை எது மிலேயே
விளம்பிய உத்தியோகம் மாற்றம்
தானம்மா ராசில் ராகுவின் புத்தி
தானுண்டு உத்தியோக மாற்றம்
வீணில்லா வாழ்க்கை நாடெங்கும் பேரு
விளம்பவே அருள் பெரும் செல்வம்

செல்வம் தானம் மா நிகரும் வேறுண்டா
சொல்லவே குகனருள் எல்லாம்
வல்வினை அகற்றும் பிறர்க்கு பகாரம்
வாய்ந்திடும் தர்ம சிந்தனையும்
அல்லது மேது மன்னவர் பேட்டி
அடியவர் கூட்டம் கொண்டாட்டம்
நல்வித மாக அருள் மிகக் கீர்த்தி
நாட்டிலே சற்சன நேசம்

நேசமதாகும் அருள் பெருங் கருணை
நேர்ந்திடக் குறைவிலா வாழ்க்கை
பேசலாம் அப்பன் யோக்கியம் யூகி
பெருமையும் காட்டிடார டக்கம்
வாசம் தானம்மா கொண்டாட பேரு
வாய்ந்தது ராஜ சன்மார்க்கம்
ஆசாரப் பேரு குரு உபதேசம்
அறுமுகனருள் மிக உண்டாம்

மறையவன்வந்து இவன்குறை நீங்கும்
மகிழ்ச்சியும் தொழிலது சேர்க்கை
குறையெலாம் அகலும் தந்தைக்கு மதிப்பு
குணந்தரும் கிரிவளச் சிறப்பு

துறைய்துவாகும் ஆலயச் சேவை
தானது குமரனின் அருள்மேல்
நிறையபிஷேகம் ஆசானெனப் பேரு
நேர்ந்திட யோகக் காட்சியுந்தான்

தானதுபெருமை உலகிற் கொண்டாட்டம்
தந்தைக்கு நற்கீர்த்தி சிறப்பு
ஞான மேலூட்டும் பக்தி மென்மேலும்
நலந்தரும் பூ வரத்தொருபால்
பேணுதலாகும் மஞ்சள் சந்தோஷம்
பெற்றிடும் நாகுவில் சனிமால்
மேனலமாக அறப்பொருள் சேரும்
மேவிடும் சாதுக்கள் சங்கம்

சாது சங்கத்துளிருந் தறம் செய்தும்
தவத்தொடும் தனிப்பெருங் கருணை
கோதிலாதாகும் அருள்மிகச் சிறப்பு
கூறலா மஞ்சனே குடும்பம்
நீதியாய் நடத்த ஞானமேலுண்டாய்
நேர்மையாய் தந்தையு வாழும்
கோதிலாச் செல்வம் குமரனின் பக்தி
குணந்தரும் பலனிது செம்மல்

செம்மலு மாச்சு அருளிது மாரு
சிறப்புள ராகுவில் கேது
பம்மலு மேது சுக்கிரன் காலம்
பகரவே சங்கப் பேர் சிறப்பு
செம்மலு மாகும் மடந் தடம் கோட்டம்
சிறக்கும் ஆசாரப் பேர் மகிமை
அம்மையே கேளு நின்னருளாலே
ஆவதும் பற்பல உண்டு

உண்டுமே யோகக் காட்சி மேலாக
ஓங்கிடும் அட்டமா சித்தும்
நன்றுடன் வாழும் நற்கீர்த்தி பேரு
நலம்பெரும் பிறவியு மறுக்கும்
பண்டதுவான ராகுவின் பிற்கூர்
பாங்குடன் அருள்மிக மேலாய்
கொண்டுமே அப்பன் நேம மேலூட்டி
குரு பக்தி க்ஷேம முண்டாகும்

ஆமது பின்னும் பிதா செயலனந்தம்
ஆகுமே நேமம் மேல் மேலும்
தாமது குறையா வாழ்க்கையுமுண்டு
சாற்றுவாய் பிதிர் துணை என்ன
ஆமது அப்பன் துணையில் —
அப்பனோடு — தீர்க்கம்
தாமது கேளு பெண் ஒன்று அதிலே
தையலு வேட்டமுமாகி

தானே கேள் வேந்தன் திசை யந்தமாகி
தானுண்டு களை முறக் கோணம்
தோணவே நீலன் வந்துறும்காலம்
தோப்பனும் பக்தி மேலிட்டு
காணும் மேல்ஞான மௌன யோகப் பேர்
காசினிப் பிறப்பது அரும்பின்
காணு மென்தாயே முக்தியுமாக
களருவாய் மருவற்கம் தானே

முதல் பாகத்தில்

**ஸ்ரீ பன்றிமலை சுவாமிகளைப்பற்றி**

எழுதியிருப்பது :—

கண்ணிய முடனே அப்பனும் வாழும்
காணுமே கிரிவளப் பூச்சீர்
நன்னலமாக வரத்து மேலுண்டு
நவிலுவேன் மன்னவர் நேசம்
நேசமதாக உத்தியோக மதிப்பு
நேர்ந்திடும் பெரியவ ரன்பும்
வாசமாய்த் தந்தைக்கு பக்திமேலூட்ட
வாய்த்திடும் சாதுக்கள் சேவை

க்ஷேமமுண்டான பலனுடன் மதிப்பு
நேமமுன் அப்பன் அடக்க முள்ளவன் பார்
நேம மேலூட்டும் வழியும் கைகொண்டு
நேர்ந்திடும் பின் பலன் ஜயமே

ஜெயம் பிரகாசம் கீர்த்தி நற்பேரு
நயம் பெரும் தாயே யோகக் காட்சியும் பார்க்க
நேயமதாகும் குமரனின் அருளால்
நேர்ந்திடும் செல்வம் மேலும் மேலும்

பூமியின் செல்வம் பிதா காலம் க்ஷேமம்
பிதா நல யோக்கியர் யூகி
ஆமதுபாரு புராண காவியங்கள்
ஆய்ந்திடப் பிதா வேட்டம் பின்னே

## சாமிகளைப்பற்றி சுகர்நாடி ஜோதி ஏடு :

நந்தி நாடி ஜோதிட ஏடுகளில் மட்டுந்தானு சாமிகளுடைய பெருமைகள் குறிக்கப்பெற்றுள்ளன? திருப்பாப்புலியூர் திரு. S. J. S. ஜெயகாந்தி நாயுடு அவர்களிடமிருக்கும் சுகர்நாடி ஜோதி ஏட்டுப் பிரதிகளில் சாமிகளைப்பற்றிக் கூறி இருப்பதைப் படித்து மகிழ்வோம்.

தாட்சியறப் பேச்செனும் முந்துராசன்
சார்ந்த நாமன் தயிரியமும் யார்க்கும் நல்லோன்
ஆட்சியா யவன் றந்தை புகழ்க்குமாரன்
அரனிணையச் செல்வனும் முருகனன்பன்

அன்பனும் அரிய செய்கைச் சித்துங்கொள்வான்
அனுதி பரவெளி ஆனந்த சத்துமேற்றுன்
பன்பலர்க்கு முபகரிப்பான் பரமனன்பன்
பார்த்தார்க்கு மாச்சரியமுற யோக நிட்டை

தன் அருள் பூர்த்தி சகசநிலை யறிந்த சீலன்
தாதையவன் அபுரூபம்பின் பலதுமுள்ள
பின் மேலாம் பாகமதில் விரிவைத் தேர்வாய்
பேதமின்றி அரிய செய்கை சாதிப்பானே.

## சாமிகளைப்பற்றி சப்தரிஷி ஏடு :

திரு. S. செந்திவேல் அவர்கள் சப்தரிஷி வாக்கிய சோதிட நிலையம் ஸ்ரீரங்கத்தில் நடத்துகின்றுர். அவரிடம் உள்ள சப்தரிஷி ஏடு சாமிகளைப்பற்றி என்ன சொல்கின்றது என்பதை அறிய ஆவலுற்ற சாமிகள் சீடர் ஸ்ரீரங்கம் திரு. மு. சுப்பையா செட்டியார், அவரை ஒரு நாள் சாமிகளிடம் அழைத்து வந்தார். அப்போது அவருக்கு முதல் முதலில் கிடைத்த சாமிகளைப்பற்றிய ஏடுகளை திரு. S. செந்திவேல், சாமிகளின் பாதங்களில் வைத்து வணங்கினுர். அந்த ஏடுகளில் கண்டுள்ளபடியே—

“ ...........................................
சேரசியுள நம் நூலை
சுருட்டிக் கட்டி

சொல்லி வரும் மகானுபாவன்
பாதம் தன்னில்
தன்னிலே வைத்து திரு
அஞ்சலித்து—என்றபடி.

..............................

அதன்பின் வெகு நாட்களுக்குப் பிறகு அவருக்கு கிடைத்தது மற்றும் பல கௌசிகன் ஏடுகள் சாமிகளின் சிறப்பைத் தொகுத்து! அந்த ஏடுகள் கூறும் விபரங்களைப் படித்து மகிழ்வோம்.

ஓம் :

1. ஆத்மீக தத்துவத்தின் நடுவே நின்றாய்
அங்கென்ற அட்சரத்தை நடுவே பூட்டி
பார்த்து நல் உச்சி முதல் குய்யம் தொட்டும்
பரம் பொருளின் இமை நயனம் மையம் தொட்டும்
போற்றியே நால் வகையின் யோனி கண்டும்
பூவுலகில் எழுவகையின் பிறப்பும் கண்டு
ஆத்மீக எண்பத்து நான்கு லக்ஷம்
அவதரிப்பில் மானிட உருவே ஒன்று

2. நன்றாக அவதரித்த மஹானுபாவன்
நாதாந்த சிவ அம்சம் வந்தித்தும்
கொண்டுநல வராகசிரி தலத்தின் தன்னில்
குவலயத்தில் விளக்கம் தரும் மஹானுபாவன்
அன்றுநாள் முதலாக ஆயுள்மட்டும்
அகிலமதில் சத்து சித்து நந்தயோகம்
இன்றிவர்க்கு இறையவனாய் போற்று மாந்தர்
இல்லத்தில் அவரவர்க்கும் சுபிக்ஷயோகம்

3. யோகத்தின் மஹானுபாவன் இவர் தனக்கு
உத்தமமாய் அங்கத்தின் அம்சம் கேளாய்
வாகுடனே வலகரத்தின் அட்சரங்கள்
வராகியம்மை திருவாசம் ஆட்சி கொண்டு
ஏகநல சதங் கொலியும் நாதமோடு
இரு தனத்தைப் பொழியும் நல்கரத்தின் வாசம்
வாகுடனே இவர் கரத்தால் மாந்தர்கட்கு
வழங்கி வர பிரசாதம் அமுதளிக்கும்.

4. அளிக்கும் நல் அவரவர்க்கும் யோகவாழ்க்கை
அகம் சிறப்பு சேய்பலன்கள் நிதிகள் கீர்த்தி
களித்தல்நல் மனமங்கள யோக மேன்மை
கண்டுரைத்த இறையவனுர் வாய்ப்பு முண்டு
பலிதமும் குறிப்பிட்ட கர்மம் யாவும்
பரபிரமன் தத்துவத்தின் ஆஸ்திமிக்கும்
நலிவுஇல்லை யெப்பலனும் அவரவர்க்கு
நற்பலனே விளைவிக்கும் நீறு வாங்க.

5. வாங்கியும் அணிந்துவர மாந்தர்க் கெல்லாம்
வராகியம்மை திருவருளின் கடாக்ஷமுண்டு
தேங்காமல் அணிகலன்கள் செழித்து ஓங்கி
திரவியங்கள் மேல்மேலே உயர்தற் காண்கும்
பாங்காக அன்பு கொண்ட அவர்வர்க்கும்
பரம்பொருளின் திருகடாக்ஷம் இல்லம் தன்னில்
நீங்காத துர்ப்பலன்கள் நீங்கி நிற்கும்
நிகழ்த்திடுேம் வலகரத்தின் அம்சம் பற்றி.

6. பற்றியும் இடகரத்தின் விபரம் கேளாய்
பரமனும் பார்வதியும் உறைவிடமாய்க் கொண்டு
நத்தியே வேதாங்க முழக்கங் கொண்டும்
நாதாந்த தத்துவத்தின் சூலம் கொண்டும்
உத்தமமாய் இடகரத்தால் தீக்ஷை கட்ட
உலகாளும் ராஜயோகம் அவரவர்க்கும்
வற்ருத பால்பாக்கிய யோக வாழ்க்கை
வந்தணுகும் அவரவரின் இல்லம் தன்னில்

7. தன்னிலே வலபாதம் அம்சம் கேளாய்
தாடங்கம் சதங்கையுடன் ஒலிக்கும் ஓசை
உண்மையுள இடபாதம் நாத வோசை
உத்தமமாய்த் திருவடியின் விபரம் கேளாய்
மண்ணினில் பட்டஇடம் தங்க மார்க்கம்
மனையகத்தை மிதித்தாலும் தேவரில்லம்
இன்னலில்லை இன்றவரை அஞ்சலிக்க
எந்நாளும் முத்தி நலம் அவரவர்க்கு.

8. அவரவர்பால் மஹானுபவன் நயனம் நோக்க
அணுகுமோ துர்ப்பலன்கள் மறைநூல் வாக்கு

பிறைவடிவாய் பூரணமாய் வாழ்க்கை யோகம்
பேசுகிறோம் வராககிரி சாதுவுக்கு
தவத்திருவாய் வந்துதித்த மஹானுபவன்
தன்னையுமே போற்றுத யாவரில்லை
நவக்கோளின் கேந்திர பலன் இவர்தனக்கு
நல்லாயுள் சிரஞ்சீவி யுகங்கள் நான்கும்

9. நான்கான யுகத்திற்கும் இறைவனுகி
நாட்டினில் பிரளயங்கள் நடந்திட்டாலும்
வானத்தின் ஆத்மநிலை சஞ்சரித்து
வராகியம்மை யீன்றெடுத்த அருளைப் போற்றி
ஆனதொரு ககனத்தின் காலை யூன்றி
ஆக்கையும் பொன்மயமாய் இறைவனோடு
வானுலகில் சஞ்சரித்து பின்பால் தோன்றி
வராககிரி தேவன் பட்டம் வழுத்தலாமே.

10. ஆகவே இவர்தனக்கு உலக மாந்தர்
அரங்கத்தின் அரண்மனைகள் துரவு தோட்டம்
வாகுடனே ஸ்தாபிக்க அவரவர்க்கும்
வாழ்க்கையில் அழியாத செல்வம் ஓங்கி
ஏகரசன் வாழ்க்கை யோகம் அவரவர்க்கும்
இல்லத்தில் சேய் பலன்கள் தவழ்தலுண்டு
சோகமுள மலடுபலன் இருந்திட்டாலும்
சுப பலனும் சேய் பலன்கள் தவழ்தலுண்டு.

11. உண்டெனவே இருதயத்தின் அமைப்பைக் கேளாய்
ஓம் என்ற அக்ஷரத்தின் வலிவைப் பெற்று
நங்கென்ற அக்ஷரத்தின் நடுவே கண்டும்
நாதாந்த தத்துவத்தினடுவே நின்று
கொண்டுரைக்க திருமகளின் மார்பில்தாங்கி
திரவியங்கள் வருஷிக்கும் இவர்பால் நோக்க
கண்டுரைத்தோம் சிவ சொரூப இவர் தனக்கு
கயிலாய பதியொக்கும் கௌசிகன் சொல்

12. சொல்லுவோம் சென்னியின் அமைப்பைக் கேளும்
இவ்வடிவே முதல் கண்டோம் பாலனுக்கு
வல்லமையால் நர்த்தனத்தின் சுவாசகாலும்
வலதான நாசிவழி சதங்கை ஓசை

வெல்லுமே இடகலையும் சப்த நாதம்
வேல் முருகா என்றெல்லாம் ஓம் ஒலிக்கும்
எல்லைக்கோர் அளவில்லை இவர் தரிசனங்கள்
ஈரேழு உலகமெல்லாம் இவர் புாலுண்டு

13. உண்டென்றே வேதங்கள் அனைத்துங் கூறும்
உலகத்தில் கண்கண்ட தெய்வமாகும்
வந்த வந்த பேர்களுக்கு இவர்பால் நோக்கி
வலக்கரத்தால் நீர்பெறுக அஷ்டபாக்கியம்
கொண்டு நலம் அவரவர்பால் நுதலில் பூச
குடும்ப நலம் செழித்தோங்கி வளர்தலோடும்
அன்றுடம் நிதிபெருகும் அவரவர்க்கும்
அழியாத புகழ் சீர்த்தி ஆயுள் தீர்க்கம்.

14. தீர்க்க சிவ தெரிசியென்றே இவரைக் காண்பர்
திரவியங்கள் சேர்க்கை நல அவரவர்க்கும்
பாய்தல் சில துர்ப்பலன்கள் யாதுங் காண்போம்
பரமனின் திருவிளை கூத்தைப் போலும்
தீர்க்காத வல்வினைகள் அனைத்தும் யாவும்
தினகரனைக் கண்ட புகைப்போலே நீங்கும்
பார்த்துரைத்தோம் நான்குயுகம் இவர் நல் வாழ்க்கை
பன்னிரண்டு காண்டமதின் சிவாய முற்றும்.

## சாமிகளைப் பற்றி ராம் ராம் ரிஷிவாக்கு

பூர்வ ஜன்மங்களில் ஒருவர் செய்த நல்வினை தீவினை காரணமாக இந்த ஜன்மத்திலும் ஒருவர் நல்லதும் கெட்டதும் அனுபவிக்க வேண்டி இருக்கின்ற தென்பதை ஜாதகம் அறிவுறுத்துகின்றது. மனிதன் பல பிறவிகள் எடுக்கின்றான் என்பதையும் நமது மறைகள் எடுத்தியம்புகின்றன.

"எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான்
யாதினும் அரிதரிதுகாண்
இப்பிறவி தப்பினல் எப்பிறவி வாய்க்குமோ
ஏதுவருமோ அறிகிலேன்"

என்று தாயுமானுரே மலைத்துப் பாடுகின்றார். ஆக மனிதன் பல பிறவிகள் எடுக்கின்றான் என்பதைச் சமீபகாலத்தில் வாழ்ந்த தாமஸ் ஹக்ஸ்லி, தாமஸ் எடிசன் போன்ற மேனாட்டு விஞ்ஞானிகளும் ஓரளவு ஒத்துக் கொண்டிருக்கின்றனர். மறுபிறப்புப்

பற்றியே ஒரு ஆராய்ச்சியை இராஜஸ்தான் பல்கலைக் கழகத்தில் மனோதத்துவத்துறைத் தலைவர் பேராசிரியர் திரு H. N. பனர்ஜி அவர்களே விஞ்ஞானரீதியில் நடத்தி வருகின்றதையும் அறிகின்றோம். நமது சாமிகளின் பூர்வஜன்மத்தைப் பற்றி ஆவி உலக பெருமான் மஹரிஷி ராம் ராம் எனும் மகான் இரண்டு முறைகள் செய்திகள் அருளி இருக்கின்றார்.

இதைப் பற்றி 1955இல் பார்லிமெண்ட் அங்கத்தினராக இருந்த ஸ்ரீ ராவ்பகதூர் அகர்வால், "ராம் ராம் எழுதிக்கொடுத்த வரலாறு சரியானதுதான் என்று சொல்ல ஸ்ரீ சாமிகளுக்கு அவருடைய பூர்வ ஜன்மத்தைப் பற்றித் தெரியுமா" என்று கேட்டார். இதை மொழி பெயர்ப்பின் மூலம் உடனே அறிந்துகொண்ட சாமிகள், "இதோ உங்கள் பூர்வஜன்மாவைப் பற்றி சொல்லுகிறேன்" என்றுகூறி திரு. அகர்வால் அவர்களின் பூர்வஜன்ம விபரங்களைக் கூற ஆரம்பித்தார். இதைக்கேட்ட திரு. அகர்வால் ஏற்கனவே தன் பூர்வஜன்ம வரலாற்றைப் பற்றி ஓலைகள் மூலம் பார்த்திருப்பதையும், அவைகளில் குறிப்பிட்டிருப்பதும் சாமிகள் கூறியதும் ஒத்திருப்பதையும் கூறி மகிழ்ந்தார். இந்த உரையாடல் நிகழ்ச்சியிலிருந்து சாமிகளே தன் பூர்வ ஜன்ம விபரங்களை உண்மை என்று ஏற்றுக்கொள்வது வெளிப்படை.

மகரிஷி ராம்ராம் என்பவர் ஆவி உலகத்தில் இருப்பவர். சூட்சும சரீரத்தில் இயங்கிவரும் இம்மகான் உலகில் அவதரித்த போது ஒரு பெரிய ராஜ ரிஷியாகவும் புகழ்பெற்ற வைத்தியராகவும் இருந்தாரென்றும், ஆத்மீக விஷயங்கள் பற்றி ஆவி உலகத் தொடர்புடன் பேசிவரும் சிலர் மூலம் செய்திகள் அருளி வருவதாகவும் அறிகின்றோம். நமது சாமிகளைப் பற்றி செய்திகள் கிடைக்கப் பெற்ற பாக்கியவான் சேலம் பாரஸ்ட் கன்சர்வேட்டர் திரு. V. S. கிருஷ்ணசாமி அவர்கள். 1960இல் சாமிகள் உடுமலைப்பேட்டை திரு. P. பெரியசாமிப் பிள்ளை இல்லத்திற்கு எழுந்தருளியபோது ஆவி உலகத் தொடர்புகொண்டு பேசிப் பழகியிருந்தவர்களை அழைத்து ராம் ராம் மகரிஷியை அழைத்துப் பேசும்படி கட்டளையிட்டார். அப்போது மாலை ஆறு மணி இருக்கும். அவ்வேளையில் ஆவி உலகத் தொடர்பு வைத்துக்கொள்வதும் வழக்கமில்லை. மகரிஷியும் தாமாகவே வந்து பேசுவதன்றி கூப்பிட்டபோதெல்லாம் வருவதும் இல்லை. அப்படி இருந்தும் அந்த மாலை நேரத்தில் ராம்ராம் மகரிஷி அழைத்தவுடன் ஆவி உலகிலிருந்து பேசலானார். அனைவருக்கும் மாலை வணக்கம் கூறிய மகரிஷி பரந்த உலகில் கடவுளைப் பற்றி மேன்மேலும் நம்பிக்கை ஊட்ட அவதரித்த ஓர் உத்தமர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் என்பதையும் குறிப்பிட்டார்.

இம்மகரிஷி 30—10—54இல் சாமிகளைப் பற்றி கூறிய விபரங்கள் பின்வருமாறு: "இந்த மாலை நேரத்தில் அனைவருக்கும் வணக்கம்.

ஒரு மகாத்மா இந்த இடத்தை இன்று பார்க்க வரும்போது நானும் இங்கிருப்பது பற்றி மகிழ்வடைகின்றேன். அடிக்கடி மனித ரூபம் எடுத்து பழநிக்குன்றுகளில் வாழ்கின்ற மேலான ஏழாவது சுவர்க்க நிலையில் உள்ள ஆத்மாவின் உதவியை இந்த மகான் பெற்றுள்ளார். தென்னிந்தியாவில் ஒருசிறந்த சிவபக்தராக இவர் வாழ்ந்தார். ஏறக்குறைய கி. பி. 1386 அளவில் காஞ்சீபுரத்துக்கருகில் பிறந்தார். சிறு வயதிலேயே ஏகாம்பரநாதரிடம் பற்றுக்கொண்டார். 12 வயதளவில் ஒரு ஞானியைப் பின்பற்றி வடஇந்தியா முற்றும் யாத்திரை செய்தார். ஹரித்துவாரத்தில் அவருக்குத் தீக்ஷை கிடைத்தது. அங்கேயே சுமார் 20 ஆண்டுகள் தங்கியபின் தென்னாடு வந்தார். அவருடைய பெற்றோர்கள் ஏற்கனவே காலமாகிவிட்டனர். அதுவரை அவர் துறவியாக வில்லை. பின்னரே காஷாயமணிந்து சிலகாலம் திருவொற்றியூரில் வாழ்ந்தார். யாண்டும் சிவபெருமானின் புகழையும் படைப்பனைத்தும் ஒன்றில் நிற்பதையும் பாடி வந்தார். தன்பால் வந்த மக்களுக்கு இறைவன் பக்தி ஏற்படச் செய்தார். இறுதியாக பழநியை அடைந்து அங்கேயே தனது எஞ்சிய நாட்களைக் கழித்தார். அவருடைய சமாதி, நீர்த்தேக்கத்திற்கு அருகில் இருக்கிறது. அவர் காலமானபோது அவருக்கு வயது சுமார் 49. அவருடைய ஞானதீக்ஷை அப்போது முற்றும் பூரணமாகவில்லை. அந்தக் குருவே அவர் முன்னறிந்த வகையிலேயே இறைவனை உணர்ந்து அறிவதற்கு உதவி வருகிறார். அதனால்தான் முன்விட்ட இடத்திலிருந்தே இப்பிறப்பில் இவரால் ஆரம்பிக்க முடிந்தது. துறவறத்தின் கடுமைகளையும் உபவாசங்களையும் மேற்கொள்ளவேண்டிய அவசியம் இருக்கவில்லை. உண்மையிலே தற்போது அவர் செய்து வருவது கடுமையான சாதனையாகும். அதாவது குடும்ப வாழ்விலிருந்தே இறைவனைப் பூரணமாக அறிவது ஞானநெறியில் முன்னிற்கும் ஆன்மாக்கள் அனைவருக்கும் இதுவே கடைசி சாதனை. குடும்ப நிலையில் அதனுடைய பல கவர்ச்சிகள், மாயைகளுக்கிடையிலேயே ஒருவர் தனது சித்தியை அடையவேண்டும். அவர் இன்று உங்கள் வீட்டிற்கு ஆசிகூற வந்துள்ளார். அதனால் நான் மகிழ்வடைகிறேன்.''

மகரிஷி ராம்-ராம் அவர்கள் 25—5—56இல் சாமிகளைப் பற்றி கொடுத்த இரண்டாவது செய்தி பின்வருமாறு. ''ஸ்ரீ பன்றிமலை சாமிகளின் வரலாற்றை எழுத அநேக நேரம் செல்லும். ஏனென்றால் அவர் ஒரு சித்தபுருஷர். மகாஜோதியின் விருப்பப்படி இந்தப் பிறவி எடுத்திருக்கிறார். இப்பிறவியில் பொது ஜனங்களுக்கு தெய்வ ஞானம் ஊட்டுவதுதான் அவருக்குக் கொடுத்திருக்கும் முருகனின் ஆக்ஞை. இவரை தரிசித்தாலே எல்லோருக்கும் இவர் ஒரு அரிய சித்தபுருஷர் என்று விளங்கும். அப்படி விளங்காதவர்களுக்கு இவர் செய்கின்ற அற்புதமான வேலைகளிலிருந்து இவருடைய தெய்வ

சக்தி நன்ருகப் புரிபடும். இந்த சக்தி இவருக்கு எவ்விடத்திலிருந்து வந்தது என்று கேட்பவர்களுக்குச் சரியான விடை சொல்ல கொஞ்சமேனும் தயக்கமில்லாமல் இது பூர்வ ஜன்ம வாசனையென்றுதான் சொல்லவேண்டும். அவருடைய பூர்வ ஜன்ம வாழ்க்கையைப் பற்றி ஏற்கனவே நான் சொல்லி இருக்கிறேன். அதைப் படித்தவர்களுக்கு இவருடைய சக்தி ஒரு ஆச்சரியமாக இருக்காது. அது அவருக்கு இயற்கையாகவே உண்டானதென்றுதான் தோன்றும். இதற்கு அறிகுறியாகவே அவர் கைகளின் ரேகைகள் சங்குசக்கரமாகவும் முருகனின் கொடி போலவும் அமைந்திருக்கின்றன. இவ்விதமாக அபூர்வகை ரேகைகள் உள்ளவர்கள் எது வேண்டுமென்ருலும் செய்யலாம். தெய்வத்தின் சக்தி அவ்விடத்தில் குடி கொண்டிருக்கையில் எதுதான் சாத்தியமில்லாதது. சிலபேர் இவருடைய அதிசய செயல்களை பார்த்து இவருடைய சக்தி இவ்வளவு தாஞ என்று நினைப்பது உண்டு. அப்படி நினைப்பது தவறு. இவைகள் தூங்கும் ஆத்மாக்களைத் தட்டி எழுப்புவதற்குதான். தூங்குகிறவனுக்கு தகுந்தாற்போல் எழுப்புகிறதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டும். சிலபேர் இவர் அபூர்வ முறைகளில் விபூதியோ, குங்குமமோ, பழமோ வரவழைப்பதைப் பார்த்து ஆஸ்திகர்களாக மாறுகிருர்கள். இன்னும் சிலருக்குத் தங்கத் தகடு வேண்டியிருக்கிறது. உடைந்து சிதறிய தேங்காயை மறுபடியும் ஒன்ருகச் சேர்த்து தட்டினல் உடைசலில்லாத தேங்காயைப் போன்று வெங்கல நாதத்தைக் கொடுக்கும்படியாகச் செய்வதை விஞ்ஞான முறைகளில் எப்படி சமாதானம் சொல்ல முடியும். எழுப்பின ஆத்மாக்களுக்கு தெய்வ சக்தி உண்டாக்க உபதேசங்களைக் கொடுத்துவரும் இந்த மகானுக்கு இனி அதிகம் வேலை ஏற்படப்போகிறது. நாஸ்திகம் மேலிட்ட இந்த உலகத்தில் ஆஸ்திகத்தை ஸ்தாபிக்க இம்மகான் பாகுபாடு எடுத்துக் கொள்ளப் போகிருர். இதற்காக ஆங்காங்கு தகுதியுள்ள சிஷ்யர்களைப் பெருக்கி வைத்திருக்கிருர். அவர்களுடைய ஒத்தாசையுடன் நம் நாட்டிலே பிரமிக்கத்தக்க முறைகளில் தெய்வ ஞானத்தைப் பரப்பப் போகிருர். இவருடைய வேலை சாதாரண பாமர ஜனங்களின் மத்தியில் தானிருக்கும். இவரிடத்தில் திடமான நம்பிக்கை ஏற்படுவதற்கு முக்கிய காரணமாக இருப்பது இவர் சாதாரண மனிதனைப்போல் கிரஹஸ்தாஸ்ரமத்திலிருந்து கொண்டு இவ்வளவு அரிய பெரிய தெய்வ காரியங்களைச் செய்வதுதான். நான் அதிகம் எழுதுவதில் பயனில்லை. உங்களுக்குக் கூடிய சீக்கிரத்தில் இம்மகானின் அநுக்ரஹம் கிடைக்கப் பெற்று தெய்வ சிந்தனை வேர் ஊன்றினல் நான் எழுதியதைவிட இன்னும் அதிகமான மேலான சக்தியுள்ள இந்த அவதார புருஷரை நீங்கள் உணருவீர்கள். வந்தனம்."

உண்மை தான்! ராம் ராம் மகரிஷி குறிப்பிட்ட நேரத்திற்குள் எவ்வளவு சொல்ல முடியுமோ அவ்வளவும் சொல்லி விட்டார். அவதார புருஷர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளுடைய மேலான சக்தி களை பல இடங்களில் பலவிதமாக எவ்வளவோ கண்டு மகிழ்கின் றனர் பக்தர்கள். 4—2—60இல் சாமிகள் சேலத்தில் ஆவி உலக தொடர்புடையவர்களுடன் பேசிக் கொண்டிருந்தவர் தன்னையே அழைத்துப் பேசும்படி அவர்களிடம் தெரிவித்தார். சாமிகள் விருப்பப்படியே சாமிகளை ஆவி உலகத்தொடர்புடையோர் அழைக்க சாமிகள் உடல் அமர்ந்திருந்த இடத்திலேயே அசையாது இருக்க சாமிகள் ஆத்மா ஆவி உலகில் நுழைந்து மற்ற ஆவிகள் பேசும் முறையிலேயே வந்து பக்தர்களுக்கு ஆசியும் கேள்விகளுக்குப் பதிலும் உரைத்த விந்தையை அன்று கண்டு கேட்டு அனுபவித்த பக்தர்கள் மறக்கவே முடியாது. கூடுவிட்டுக் கூடுபாய்தல் என்ற சித்தைப்பற்றிக் கேள்விப்படுகின்றோம். கலை அனுபவ ஆர்வத்தில் சங்கரரும், ஜீவகாருண்ய உணர்வால் திருமூலரும் இந்த சித்தை ஆடியதையும் இலக்கியம் எடுத்துரைக்கின்றதை அறிவோம். இப் பொழுது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் தம் உடல் கூட்டைவிட்டு ஆவி உலகத்துக்கே சென்று வந்த அற்புதத்தை என்னென் றுரைப்பது!

சாமிகள் 'இராஜ இரத்தின' திருஇல்லத்தில் ஒரு போட்டோ படம் உள்ளது. ஒரு பழைய செங்கல் கட்டிடத்தின் உச்சியில் சாமிகள் நின்று கொண்டிருப்பதைக் காணலாம். இக்கட்டிடம் சாமிகளுடைய பூர்வீக ஜென்மத்தின் உண்மையை உலகிற்கு எடுத் துக்காட்டும் அற்புதமாகவே விளங்குகின்றது. "கி. பி. 1386 அள வில் காஞ்சியில் பிறந்த ஒரு சிவபக்தர், 12 வயதில் வடயாத்திரை செய்து, ஹரித்துவாரம் திருவொற்றியூரில் சிலகாலம் தங்கி, மக்க ளுக்கு இறை பக்தி ஏற்படவைத்து, இறுதியில் பழநியில் தம் எஞ்சிய வாழ்நாட்களைச் கடத்தி சமாதியடைந்தார், அவருடைய சமாதி பழநியில் நீர்த்தேக்கத்திற்கு அருகில் இருக்கிறது. அவர் காலமான போது அவருக்கு வயது சுமார் 49" என்றுரைக்கும் ராம்ராம் மகரிஷி வாக்கை மெய்ப்பித்துக் காட்டுவது போலன்றே இந்த சமாதியும் அதன்மேல் நின்று காட்சியளிக்கும் சாமிகளும் நமக்கு விளங்குகின்றார்கள்.

சாமிகள் கம்பீரமாக நிற்கின்ற பழநியில் உள்ள பழங்கட்டிடம் ராம்ராம் மகரிஷி உரைத்துள்ள சமாதி கட்டிடம் என்பது நமக்கு விளங்கவில்லையா?

## சாமிகளைக்கண்டு அலறி ஓடும் தீவினைச் செயல்கள்

சமீபத்தில் ஒரு திடுக்கிடும் செய்திவந்தது. ஆப்பிரிக்க நாட் டில் டாங்கா டவுனில் சமீபத்தில் நடக்க இருந்த ஒரு குழந்தைக்

காட்சி அழகுப் போட்டி கைவிடப்பட்டது; காரணம் மாந்திரீகர்கள் இதில் வெற்றிகொள்ளும் குழந்தையைத் தம் வித்தையால் சவமாக்கிவிடச் சித்தம் கொண்டனர் என்ற பரபரப்பான செய்தி பரவியதே. 1964–லிருந்து ஜான்ஸிபார் பம்பா முதலிய இடங்களிலிருந்து இந்த கெடுதல் விளைவிக்கும் மாந்திரீகத்தை ஒழிக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டனவென்றும் இருந்தாலும் மாந்திரீகர்களுக்குப் பெருமதிப்பு அங்கு உண்டென்றும் அறிகின்றோம். ஏனெனில் மழைபெய்யவும் பசிப்பிணி நீக்கவும், விரோதியை வசீகரப்படுத்தவும், தீமைகளை அகற்றவும் இந்த வித்தை இருக்கின்றது என்கின்றனர். கெடுதல் செய்விக்கவும் வித்தை இருக்கின்றது: கெடுதல் நீக்கவும் வித்தை இருக்கின்றது நமது நாட்டிலேயே. ஒருசில இடங்களில் பில்லி சூனியம், ஏவல்வேலை முதலியன செய்து கெடுதலுக்கு பயன்படுகின்றதையும் அவைகளை நீக்கத் தக்க பெரியவர்களை நாடுவதையும் நாம் அறிவோம். கந்தப்பெருமானைத் துணைக்கொண்ட பெருமகான்களிடத்தில் இவையெல்லாம் ஒன்றும் செய்யாது என்பதைக் கந்த சஷ்டிக் கவசம் தெளிவாக எடுத்துரைக்கின்றது. கந்தர் பேரன்பை முழுதும் அனுபவிக்கும் நமது சாமிகளும் நம்மைக்காக்க கந்த சஷ்டி கவசத்தை அனுதினமும் பாராயணம் செய்யும்படிக் கூறுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

இந்த பேய், பிசாசு, காட்டேரி, ஏவல் வேலையும், பில்லி சூனியமும் முருகன் துணை இருந்தால் எப்படி அலறிக்கொண்டு ஓடி விடுகின்றன என்பதைக் கந்த சஷ்டி கவசமே அடியில் கண்டுள்ள வரிகளால் தெளிவாக வகைப் படுத்திக் கூறி இருப்பது உற்று நோக்கத்தக்கது.

“பார்க்க பார்க்க பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும் பகை யகல
வல்ல பூதம் வலாஷ்டிகப் பேய்கள்
அல்லல் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழைக்கடை முனியும்
கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரமராக்ஷதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசி காட்டேரி இத்துன்ப சேனையும்
எல்லிலும் இருட்டிலும் எதிர்படு மன்னரும்
கனபூசை கொள்ளும் காளியோடனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியங்காரரும் சண்டாளங்களும்
என்பெயர் சொல்லவும் இடிவிழுந் தோடிட
ஆனை அடியினில் அரும் பாவைகளும்

பூனைமயிரும் பிள்ளை களென்பு
நகமு மயிரும் நீண்முடி மண்டையும்
பாவைகளுடனே பல பல சத்துடன்
மனையிற் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டிய செருக்கும் ஓட்டிய பாவையும்
காசும் பணமும் காவுடன் சோறும்
ஓதுமஞ்சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட.''

கெடுதல் செய்விக்கும் நோக்கத்துடன் செய்கின்ற எந்த வேலையும் சேட்டைகளும் சாமிகளைக் கண்டால் அலறி கலங்குவதையும், சாமிகள் பெயரைச் சொல்லவும் இடிவிழுந்தோடுவதையும், சாமிகளைக் கண்டாலே அலைந்து குலைந்திடுவதும் நாம் கண் கூடாகப் பார்க்கின்றோம்.

பன்றிமலையில் குப்பாக்கவுண்டன் என்பவர் வீட்டில் நடக்காதன நடந்தன. வசதியான வீடு. வேங்கைமரம் கொண்டு கட்டியது. வீட்டைக் கட்டும்போதே கும்பிடுவதுபோல் உள்ள ஒரு பொம்மையும் வைத்து கட்டியிருந்தனர். 'இது இராசி இல்லாத கை' என்பதைப்போல் 'இது விருத்தி இல்லாத வீடென்று' இந்த வீடு பலரைப் பயமுறுத்தியது; காரணம் இங்கு தொட்டில் கட்டினால் தானே ஆடும், கெடிகாரத்துக்கு சாவி கொடுத்தால் எப்படி சப்தம் வருமோ அப்படியே கர்புர் என்ற தொனி கிளம்பும், விளக்கை அணைத்து விட்டுப் படுத்தால் தீடீர் என்று தீ தானே பிடித்துக் கொள்ளும், ஆள்படுத்தால் அவனை ஏதோ ஒன்று அமுக்கும். இது செய்வினைக் கோளாறால் ஏற்பட்ட தென்பதை அறிந்து கொண்ட சாமிகள் எல்லோரும் ஒதுக்கித் தள்ளிய இந்த வீட்டையே வாங்க சித்தம் கொண்டார். வீடும் வாங்கி விட்டார். சாமிகள் இந்த வீட்டில் உள்ள பொம்மையை நீக்கியதுதான் சாமிகள் செய்த முதல் வேலை. அது நீக்கப்பட அவ்வீட்டிலுள்ள கோளாறுகள் அவ்வளவும் உடனடியாக நீக்கப்பட்டன. வீடு விளங்கக் கூடாதென்பதற்கே செய்வினைக் கோளாறு அந்த பொம்மையிலேயே அமைக்கப்பட்டிருந்ததைச் சாமிகளாலா அறிய முடியாமல் இருக்கும்? சாமி வாங்குவதற்குமுன் யாரையும் விரட்டிய அதே வீடு, சாமிகள் வாங்கியவுடன் கணக்கற்ற மக்கள் சாமிகளைத் தேடிவரும் வீடாக இலட்சுமிப் பொலிவோடு விளங்க ஆரம்பித்துவிட்டது.

பன்றிமலைக்குச் சற்று தூரத்தில் மனித சஞ்சாரம் அதிகமில்லாத இடங்களில் அந்தக்காலத்தில் மலைஜாதியினர் சிலர் இருந்தனர். வலை கொண்டு காட்டெலி பிடித்து பொசுக்கி சாப்பிடும் இந்தக் கூட்டத்தினரில் பொல்லாத மந்திரவாதிகளும் உண்டு.

மனிதனையே புலியாக்க வல்ல மந்திரம் கூட அவர்களில் சிலருக்குத் தெரியும். தந்திரம் மந்திரம் இவற்றில் கைதேர்ந்த இராமசாமிப் பிள்ளை இளவயதில் இதைக் கேள்விப்பட்டபோது இதையும் அறிந்துகொள்வோம் என்று முனைந்தார். ஒரு மனிதன் புலி யாவதற்கு உரிய மந்திரங்கள் மட்டும் தெரிந்துகொண்டு பய னில்லை. புலி ரூபத்தை விட்டு மறுபடியும் மனித உரு அடைய மற்றொருவருடைய உதவியும் தேவை. ஆறு கல்லை மந்திரிக்க வேண்டும். அதில் மூன்று கற்களால் மனிதன் உடல் புலி உருவாக மாறும்; மற்றுமுள்ள மூன்று கற்கள் மறுபடியும் மானிட உரு அடைய உதவும். புலியாக மாற இருக்கும் ஒருவன் மரத்தின் கீழே இருக்க மந்திரித்த ஆறு கற்களைக்கொண்டுள்ளவன் மரத்தின் மேலே இருப்பான். ஒரு கல்லை மரத்திலிருந்து கீழே உள்ளவன்மேல் போட கீழே உள்ளவன் குணம் மாறும், இரண்டா வது கல் போட அவன் உரு மாறும், மூன்றாவது கல் போட அவன் முற்றும் புலியாகவே சகல வகையிலும் மாறிவிடுவான். இப்படியே புலி திரும்பி மரத்திற்கு வந்தவுடன் கற்களைப் போட்டே மனிதனாக மாறும்படி செய்ய வல்ல இந்த வித்தையைப்பற்றி விபரம் தெரிந்து கொண்ட இராமசாமிப் பிள்ளைக்கு இதில் நாட்டம் இல்லை ஏன் ஒருவன் இப்படி உருவிட்டு மாறவேண்டும் என்பதின் இரகசி யத்தைக் கேள்விப்பட்ட இராமசாமிப் பிள்ளைக்கு இந்த வித்தையில் அருவருப்பும் ஏற்பட்டது. இந்த வித்தையில் வல்ல ஒருத்தி இப்படி புலி ரூபம் எடுப்பது வழக்கமாம். அவளுக்கு குதிரையை அடித்து சாப்பிடுவதில் வெறி ஏற்பட்டு விட்டதாம். ஒரு சமயம் புலி ஒன்றை சுட்டுவிட்டார்கள். அந்தப் புலியை எல்லோரும் பார்க்கச் சென்றபோது அதன் கழுத்தில் பாசியும் காதில் முருகும் முன் காலில் காப்பும் இருந்ததை எல்லோரும் பார்த்து வியந்தார்கள். மந்திரத் தால் புலி ரூபம் அடைந்த மாதே துப்பாக்கிக்கு பலியானது வெட்ட வெளிச்சமானது. இப்படி ஒரு கதையும் உலவியதைக் கேட்ட இராமசாமிப் பிள்ளைக்கு இந்தக் கெட்ட வித்தையில் மனம் கொஞ்சங் கூடச் செல்லவில்லை.

### பேய் பிசாசு ஓடுதல்

பில்லி சூனியம் கோளாறுகளை நீக்கும் சாமிகள் பேய், பிசாசு ஆவி, தேவதை தொந்திரவுகளிலிருந்தும் பலரைக் காப்பாற்றி வரு கின்றார். சாமிகள் பூஜை செய்தும் இக்கோளாறினால் காலி வீடு களாக இருந்தவற்றைக் கோளாறை நீக்கி நிறை வீடுகளாக மாற்றி விடுகின்றார். ஆவி இம்சையால் அலங்கோல முற்றிருந்த இல்லங்கள் ஆவி ஓடவே மங்களகரமாக சுப இல்லங்களாக மாறி விட்டன. இச் சந்தர்ப்பத்தில் வைணவ மத திலகம் இராமனுஜர், வேந்தன் மகளை பிரமராக்கதன் பிடியிலிருந்து தப்புவித்த நிகழ்ச்சி நினைவுக்கு வரு கின்றது. இராமனுஜர் குருவாக இருந்த யாதவப்பிரகாசர் விரட்ட,

ஓட மறுத்த பிரம்மராக்கதன், "உன் திருவடி தாமரையை என் தலைமேல் வைத்தால் போகிறேன்' என்று கூறி இளையாழ்வாராக விளங்கிய சீடர் இராமனுஜர் திருவடி ஏற்று ஓடி மறைந்ததை கேள்விப்பட்டிருக்கின்றோம். இப்பொழுது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் நேரில் வரக் கூட வேண்டியதில்லை; அவர் படத்தைக் கண்டே அவர் பெயரைக் கேட்டே ஆவிகள் பறந்தோடுகின்றன.

சேலம் கிச்சிப்பாளையத்தில் திரு S. D. சின்னச்சாமி ஒரு வீடு வாங்கினார். அந்த வீட்டில் குடிவருபவர்களையெல்லாம் கதி கலங்க வைத்து விரட்டி வந்தது ஒரு தேவதை. வீட்டின் சொந்தக்காரரே அந்த வீட்டுக்குக் குடியேறினார். உடனே அவருடைய மனைவிக்கே பேராபத்து வரவே, அவரும் வீட்டை காலி செய்தார். சாமிகள் ஒருநாள் இவ்வீட்டிற்கு வந்து பூஜை செய்தார். 'இன்றுமுதல் இந்த வீட்டிலுள்ளவர்களை நான் ஒன்றும் செய்வதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்துவிட்டது. இனி அந்த தேவதை உமக்கு நல்லது செய்யுமே தவிரக் கெடுதல் ஒன்றும் செய்யாது' என்று சாமிகள் உரைத்தது போலவே நடந்து வருகின்றது. திரு. A. V. சுப்பையா பிள்ளை M. A. மதுரையில் ஒரு வீட்டில் குடி இருந்தார். அந்த வீட்டில் ஏற்கனவே ஒரு தற்கொலை ஏற்பட்டிருந்தது. அதனால் ஆவி தொந்திரவு ஏற்பட்டது. அவ்வீட்டில் சாமிகள் பூஜைசெய்து ஆவியை அவ்வீட்டினின்றும் அகற்றிவிட்டார். இங்கு ஆச்சரியப்பட வேண்டிய முக்கியமான பகுதி என்னவென்றால் தற்கொலை செய்து கொண்ட நபரின் ஆவி அங்கு கூடியிருந்த பக்தர்கள் ஒருவர்மேல் யாவரும் எதிர்பாராதவிதமாக ஆர்ப்பவித்து தன் வாழ்க்கையிலிருந்து சில விபரங்களை அறிவித்ததாகும். "இந்த சம்பவத்திலிருந்து சாமிகளிடம் கட்டுப்பட்டது இறந்தவரின் ஆவிதான் என்பது உறுதியானதோடு, சாமிகளின் அபூர்வ சக்திக்கும் இது ஒரு சான்று" என்றுகூறி மகிழ்கின்றார் பக்தர் திரு. சுப்பையா பிள்ளை.

விஜயவாடா திரு. H. B. ராம் பரத்வாஜ் மனைவி ஒரு வைத்திய இல்லத்தில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டார். இரவுகளில் ஒரு கெட்ட ஆவி அந்த அம்மையாரை பயமுறுத்திக்கொண்டு வந்தது. அதைக் கேள்வியுற்ற ராம்பரத்வாஜ் அவர்கள் தன்னிடம் இருந்த சாமிகளின் திருப்படத்தை மனைவியிடம் கொடுத்து சாமிகள் விபூதியும் கொடுத்தார். இரண்டும் இருக்கும்வரை ஒரு தொந்திரவும் வராது என்றும் உற்சாகமூட்டினார். அன்று இரவே கெட்ட ஆவி வரவும் அம்மையார் சாமிகளை நினைத்து வணங்க சாமிகளே அங்கு தோன்றி இனிமேல் ஒரு தொந்திரவுமில்லை என்றுகூறி ஆசியளித்ததாக அந்த அம்மையே கூறக்கேட்டு கணவர் "அசைக்கமுடியாத நம்பிக்கை ஒன்றிருந்தால், மலைகளைக்கூட அசைத்து விடலாம். என்னுடைய மனைவி சாமிகளையே நேரில் பார்க்காமலிருந்தும்கூட,

அவளுடைய நம்பிக்கை அவளுக்கு வேண்டிய தற்காப்பை அளித்து விட்டது. சாமிகள் நீடூழி வாழ்க" என்று மனம் களித்து எழுதுகின்ருர். திரு. S. கணபதிராமன் என்பவர் பம்பாயில் இருப்பவர். அவர் வேலை பார்க்கும் இடத்தில் திரு. மோதிராம் என்பவருக்கு திடீரென்று மனநிலை மாறியது. அவர் உபத்திரவம் தாங்கமுடியாது அவருக்கு மயக்க மருந்து கொடுத்தனர். மாலையில் அவரைப் பார்க்க வந்த திரு. கணபதிராம் எல்லோரையும் வெளியே போகச் சொல்லி, சாமிகள் விபூதியை அவர் நெற்றியில் பூசி, வாயிலும் சிறிது வைத்தார். சாமிகளது திருவுருவப்படத்தைக் காண்பித்து சாமிகள் பெயரை உரைத்து உடனே இந்த இடத்தைவிட்டுப் போகவேண்டும் என்று அவரைப் பிடித்திருந்த ஆவியிடம் கூறிஞர். "அந்தப்படத்தை என்னிடம் கொண்டுவராதே, நான் போய் விடுகிறேன், எனக்கு ஒரு டம்ளர் ஜலம் வேண்டும்" என்றது அந்த ஆவி, மோதிராமை பேச வைத்து. அப்படியே ஒரு டம்ளர் தண்ணீர் கொடுக்கப்பட்டது சாமிகள் விபூதியுடன். அதைச் சாப்பிட்ட மோதிராம் பழைய நல்ல நிலைமைக்கு வந்துவிட்டார். "ஸ்ரீலஸ்ரீ சாமிகளின் திருவுருவப் படத்திற்கே இவ்வளவு மகிமை யென்ருல் ஸ்ரீலஸ்ரீ சாமிகளின் மகிமையை நான் சொல்லித்தான் தெரியவேண்டுமா" என்று மனமகிழ்ந்து எழுதுகின்ருர் பக்தர் கணபதிராமன்.

பிசாசு, பேய் தொந்திரவுகளை நீக்க அருள்புரியும் சாமிகள் வரக்கூடத் தேவையில்லை; அவர் ஆணையிட்டாலே போதும்! பிசாசு தொந்திரவும் நீங்கிவிடுகின்றது. சித்தூர் ஜில்லாவில் ஒருவர் வீட்டில் தொட்டிலில் குழந்தையைப் போட்டால் தொட்டில் தாஞக ஆடும்; வீட்டில் படுத்திருப்பவரை தலைகீழாகப் போட்டுவிடும். இந்தத் தொந்திரவுகளை நீக்க சாமிகள் இரண்டு துண்டு காகிதங்களை அளித்தார். சாமிகள் கூறியபடி அவைகளை சாம்பிராணி தூபம் போட்டு வீட்டின் நடையில் உட்பக்கம் ஒட்டிவிட, அன்றிலிருந்து சாமிகள் ஆணைக்குக் கட்டுப்பட்டு ஒதுங்கி விட்டது இக்கோளாறுகளைச் செய்துவந்த ஆவி. சாமிகள் இட்ட ஆணை இதுதான்! "பன்றிமலை சாமிகள் ஆணையாக சாமிகள் இவ்விடம் வரும்வரை ஒதுங்கி நிற்கவேண்டியது."

ஒரு சமயம் மலாயாவிலிருந்து ஒரு மங்கை எங்கும் கேள்விப்படாத ஒரு நோயிலிருந்து மீட்சி காண்பதற்கு சாமிகளிடம் ஓடோடி வந்தார். அவள் காதில் ஓயாமல் யாரோ குசுகுசுவென்று பேசிக் கொண்டிருப்பதுதான் அந்த அம்மையின் தீரா நோய். திருக்கோயில்களுக்குள் இருக்கும்போது இந்த ஓயாத குசுகுசுப்புப் பேச்சு நின்றுவிடும். கோயிலை விட்டால் அது திரும்பவும் வளர்ந்து விடும். கோயில் ஒன்ருல்தான் கோயில் எல்லைக்குள் மட்டும் கட்டுப்படுத்த முடிந்த விபரீத நோயை சாமிகள் தம் அருட்பிரசாத திரு

நீற்ருல் உடனடியாக கட்டுப்படுத்திய விந்தையை அந்த அம்மையும் அவள் கணவரும் வாயாரக் கூறி மகிழ்ந்ததை மனதாரக் கூறுகின்ருர் சென்னை வழக்கறிஞர் திரு. T. V. இராமச்சந்திர முதலியார். சென்னை திருவல்லிக்கேணியில் திருமதி M. S. சாந்தாவுக்கு ஒரு நூதனமான வியாதி. அந்த வியாதி அந்த மாது ஒரு வயதானவரிடமிருந்து ஒரு கருப்பு மை உருண்டை வாங்கியதிலிருந்து ஆரம்பித்தது. திடீரென்று பூமியிலிருந்து கிளம்பும் உடலில்லாத உருவங்கள்! அவை பூ சூடி இருக்கும், சிரிக்கும், அவர் நினைப்பதையெல்லாம் சொல்லிச் சிரிக்கும், குத்த வருவது போன்றும் பயமுறுத்தும். உன் நான்கு பிள்ளைகளையும் அழைத்துப் போகிறேன் என்றும் பயமுறுத்தும். இந்த நோயை நீக்க ரூபாய் 15,000க்கு மேல் செலவாகிவிட்டது. இதைக் கண்ட டாக்டர் ஜெயலட்சுமி 'என் குருநாதர் காலணுக்கூட செலவில்லாமல் உங்கள் கஷ்டத்தை நொடியில் தீர்த்து வைப்பார்' என்ருர், டாக்டர் சொல்லியபடியே குருநாதர் ஸ்ரீ பன்றிமலை சாமிகளின் அருள் பிரசாத விபூதியும் கிடைத்தது. அம்மைக்கு ஒரு இரட்சைக் கயறும் கட்டினுர் சாமிகள். சாமிகள் உரைத்தபடியே அடுத்த நாள் விடியற்காலையில் ஒரு உடலில்லா உருவம் தோன்றியது. விடைபெற்றுக்கொள்வது போல நான் இன்று போய் விடுகிறேன் என்றது. சாமிகள் உரைத்தபடியே அம்மையும் 'உடனே போய்விடு' என்ருர். இனிமேலும் உண்டோ உடலில்லா உருவங்களின் அட்டகாசம்?

இரயில் நிலைய உதவி அதிகாரி திரு. S. பத்மனுபன் என்பவருக்கு ஒரு கெட்ட ஆவி பிடித்திருந்தது. அதனுல் அடிக்கடி அவருக்கு சுகக் குறைவும் புத்தி பேதகமும் ஏற்படும். ஒரு நாள் ஒரு மாந்திரீகன் வீட்டுக்குச் சென்று தரையில் படுத்து நமஸ்கரித்தார். படுத்தவர் எழுந்திருக்க முடியவில்லை. தரையோடேயே ஒட்டிக்கொண்டார். ஒட்டி இருந்தவரைத் தூக்கி விட பாடுபட்ட மந்திரவாதியும் கதி கலங்கி ஓடிவிட்டான். மந்திரவாதியால் முடியாததை மந்திரவாதி வீட்டில் மாட்டியிருந்த சாமிகளின் படம் ஒருநொடியில் சாதித்தது. பத்மனுபன் சாமிகளின் படத்தைக் கண்டார், வேண்டிக் கொண்டார். உடனேயே எழுந்து நடந்தார். சாமிகளின் அருளை படத்தைக் கண்டு அனுபவித்தவர் சாமிகளை நேரிலேயே காண விழைந்தார். சாமிகளை ஒரு பக்தர் வீட்டு பூஜையறையில் சந்தித்தார். அங்கும் படுத்து நமஸ்கரித்த அவரால் எழுந்திருக்க முடியவில்லை. சில விஞடிகள் கழிந்ததும் 'எழுந்திருங்கள்' என்று சாமிகள் சொல்லி விபூதி அருளினுர். அன்றிலிருந்து இந்த சேஷ்டை நின்றுவிட்டது. அவருள் இருந்த ஒரு பெரும் பாரம் இறங்கி எங்கோ போய்விட்டது போன்ற உணர்ச்சி பெற்ருர் பூரண குணமடைந்த பத்மனுபன் அவர்கள்.

## ஏவல் வேலை, பில்லி சூனியம் நீங்குதல்

கெட்டதை வெறுப்பது மட்டுமில்லை; கெட்டதை உடனடியாக எடுத்து அதனால் அவதியுறும் மக்களுக்கு இன்பம் அருளுகின்ற சாமிகள், ஏவல் வேலை, செய்வினை கோளாறு, பில்லி சூனிய கொடுமைகள்—இவைகளையும் பேய் ஆவி தொந்திரவுகளை நீக்குவது போன்றே எளிதில் உடனடியாக அப்புறப்படுத்துகின்றார். திண்டுக்கல்லில் இரயில்வே நிலையத்திற்கு அருகில் உள்ள ஒரு வீட்டில் ஓயாமல் கற்கள் விழுந்து கொண்டிருந்தன. துடப்பம் தானே நகர்ந்து போய் கொண்டிருந்தது. சாப்பிடும்போது சாதத்தில் கல்மண் விழுந்த வண்ணமாக இருந்தன. சாமிகள் அந்த வீட்டில் தம் திருவடிகள் எடுத்து வைத்ததிலிருந்து இந்த இன்னல்கள் உடனடியாக நீங்கின என்பதை தெத்துப்பட்டி கர்ணம் திரு. T. M. ஷண்முகசுந்தரம் பிள்ளை எடுத்துரைக்கின்றார். இதுபோலவே மாலைதோறும் கல் விழுந்து கொண்டிருந்த கோளாறையும் சாமிகள் அண்ணாமலை நகரில் ஒரு பேராசிரியர் வீட்டிலிருந்தும் தன் வருகையால் போக்கிவிட்டதை நான் அறிவேன்.

எண்ணிறந்த பேர்களுக்கு பித்தம் தெளியவும் சாமிகள் அருளுதவி புரிகின்றார். சேலம் எக்ஸ்டென்ஷன் ஹஸ்தம்பட்டி கிழக்குத் தெருவில் தபால் நிலையத்தில் பணியாற்றுபவருடைய தங்கைக்கு பத்து வருடங்களாக புத்திமாறாட்டமாயிருந்தது, கடைசி ஒரு வருடமாக ஒரு அறையில் அந்தப் பெண்ணை அடைத்து வைக்கவேண்டிய நிலையையும் ஏற்படுத்திவிட்டது. அப்படி இருந்த பெண் ஒருநாள் வீதியில் ஒரு துணையுமின்றி தெளிவு முகத்தோடும் நல்ல உடல் வளர்ச்சியோடும் நடப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டவர்களில் ஒருவர் திரு. H. ஜான் என்பவர், எப்படி இந்த பித்து நோய்க்கு குணமேற்பட்டது என்பதை அறிய ஆவலானார்; காரணம் தன் அண்ணனும் சித்த ஸ்வாதீனமில்லாது அல்லலுற்றிருந்தார். பத்து வருடம் தீராது இருந்த பித்து நோயைப் போக்கியவர் சாமிகளென்றறிந்து கொண்டவர் சாமிகளிடம் தன் அண்ணனை அழைத்துக் கொண்டு சென்றார். சாமிகளும் "ஏசு உங்களைக் காப்பாற்றுவார்" என்று சொல்லி நோயை குணப்படுத்தினார். எண்ணிறந்தோருக்கு பல ஊர்களிலும் தம் அருட்பிரசாத விபூதி கொண்டும் இந்த பித்து நோயை நீக்குகின்றார் சாமிகள். சில சமயங்களில் இந்த மூளைக் கோளாறு யந்திர வேலைகளாலும் ஏற்படும். அப்போது சாமிகள் எதிரிகளால் புதைத்து வைக்கப்பட்டிருக்கும் யந்திரத் தகடுகளை அப்புறப்படுத்தியே புத்தி பேதகத்தை குணப்படுத்துவர். இந்த தன் சொந்த அனுபவத்தையே மதுரை சுவாமி பவுண்டரி திரு, M. S. கோவிந்தசாமி நாயுடு அவர்களே "கோவிலில் இருப்பது பேசாத கடவுளாகவும் என் குருநாத சாமிகளை பேசும் கடவுளாகவும்

நான் எண்ணி நடந்து வருகின்றேன். சாமிகள் மீது நாம் எவ்வளவு தூரத்திற்கு நம்பிக்கை வைக்கிறோமோ அந்த அளவிற்கு அவரது அருள் நம்மை இரட்சிக்கும் என்பதையும் அனுபவத்தில் உணருகிறேன்'' என்று இறுமாந்து பக்தி மொழிகளைப் பகர்கின்றார்,

யந்திரத்தகடுகளைக் கொண்டே நல்ல நிலையில் உள்ள புத்திசாலிகளையும் பைத்தியமாக்க முடியும், ஆரோக்கியத்தை சீர்கேடாக்க முடியும், வாழும் நிலையங்களுக்கு கெடுதல் செய்ய முடியும், இயற்கையாக ஒழுங்காக நடப்பனவற்றையே இயற்கையை மாற்றியும் ஒழுங்கு மீறி நடத்திக்காட்டவும் முடியும். சித்தக் கோளாறு நீங்க சாமிகள் அருள்பெற்ற திரு. M. S. கோவிந்தசாமி நாயுடு, சாமி பவுண்டரி என்ற பணிமனையும் (ஓர்க்ஷாப்) நடத்துகின்றார். அங்கு இரும்பை உருக்குவதற்குரிய சகல சாதனங்களும் உண்டு. ஆனால் இரும்பு மட்டும் உருகுவதில்லை. காரணம் இவருக்கு வேண்டாதவர்கள் அந்த பணிமனையிலேயே இரண்டு செய்வினைத் தகடுகளை புதைத்து வைத்திருந்தனர். சாமிகள் இப்பணிமனைக்கு வந்து செய்வினைத் தகடுகளை நீக்கி மூன்று மாத காலமாக உருகாமல் இருந்த இரும்புப் பாலங்களை உடனேயே உருகும்படியாக செய்து காட்டினார். அன்று முதல் யாதொரு கெடுதலும் இல்லாமல் இரும்பு வழக்கம்போல உருகி வரலாயிற்று. இதுபோன்றே கரூரில் பஸ் தொழிலாளி திரு. D S. மணி அய்யர் ஒரு மோட்டார் பணிமனை வாங்கி இருந்தார். அங்கே முக்கியமான இடத்தில் ஒரு எலக்ட்ரிக் பல்ப் வாங்கிப்போட்டால் பதினைந்து நிமிடங்களுக்குமேல் அது எரிவதில்லை. எதிலும் ஒரு குற்றமும் இல்லை. பணிமனையில் வேலை செய்யும் தொழிலாளியும் வேலைக்கு உட்கார்ந்தவுடன் புத்திசுவாதீனமற்று விடுவன். சாமிகள் இதற்குக் காரணமாக இருந்த இரண்டு மாந்திரீக தகடுகளை அவ்விடத்தினின்றும் அகற்றி தம் விபூதியை லைட்டின்மேல் போட்டு விளக்கேற்றி வைத்தார். அன்றிருந்து லைட் தொந்திரவு கொடுக்காமல் எரிந்து கொண்டிருக்கின்றது. இப்படியே தூத்துக்குடி டாக்டர் திரு. S. ரங்கசாமிபிள்ளை குதிரை வண்டியின் பக்கவாட்டில் அமைந்திருக்கும் மெத்தையிலிருந்தும் தகடு புகுத்தப்பட்டிருந்ததை எடுக்கச் செய்து தீவினைகளை அகற்றினார். பாவிகள் தீவினைத் தகடுகளை எங்கெல்லாம் வைத்து கெடுதல் செய்ய முனைகின்றனர்? திருவாங்கூருக்கு அருகே உள்ள கிளிமானூரில் ஒரு வீட்டில் பல கோளாறுகள் நடந்து கொண்டிருந்தன. வீட்டில் சாம்பிராணி தூபம் போடச்சொன்ன சாமிகள் ஒரு கோணி ஊசியையும் ஒரு பெரிய வெள்ளைத் துணியையும் தம்மோடு கொண்டுவரச் சொன்னார். ஒவ்வொரு அறையாகச் சென்று வீட்டின் பின்புறத்தாழ்வாரத்திற்கு வந்த சாமிகள் சுவர் மூலையில் ஒரு தேக்கு சட்டம் சுவருக்குள் நுழைத்து பூசப்பட்டிருக்கும் இடத்தை கோணி ஊசியால் நோண்டி பார்க்கச் சொன்னார், கீழே விழுகின்ற காரையையும் மண்ணையும் வெள்ளைத் துணியில் பிடிக்கச்

சொன்னர். வெகு நேரம் சென்றும் ஒன்றும் வரவில்லே. சாமிகளே தன்கையால் கோணி ஊசி கொண்டு ஒரு குறிப்பிட்ட இடத்தைக் கீறிப்பார்த்தார். கோணி ஊசி உள்ளே சென்றது. சாமி அதை வெளியில் எடுக்க ஒரு செய்விணே செப்புத்தகடு இருதுண்டாக கோணி ஊசியில் ஒட்டிக்கொண்டு வந்தது. இதற்குபின் சாமிகளது அருளால் அங்கு நன்மை ஏற்பட்டது என்று சொல்லவும் வேண்டுமா?

சிலசமயங்களில் தீவிணேத் தகடுகள் வைப்பவர்கள் மிகவும் கெட்டிக் காரத்தனமாகத் தான் செய்த வேலேயைத் தொடர்ந்து நடக்கச்செய்யப் பெரும்பாடுபடுவர். ஆனல் அத்தகையவரே சாமி களிடம் படுதோல்வியடைந்து விடுவதையும் காணலாம். குமாரப் பாளேயம் திரு. S. கோவிந்தசாமி செட்டியார் வீட்டில் கொஞ்சகால மாக குடும்பத்தில் யாவருக்கும் மனநிம்மதியில்லே. பால் அடுப்பில் வைத்துக் காய்ச்ச உப்பாகிவிடும். பூஜை அறையிலேயே பயங்கர உருவம் வந்து பயமுறுத்தும் அளவுக்குத் தொல்லேகள் பெருகி விட்டன. தீராத எரிச்சலும் உடம்பில் ஏற்பட்டுவிடும். இதைக் கேள்வியுற்ற சாமிகள் இந்தக் கோளாறுகளுக்குக் காரணமாக இருந்த செய்விணேத் தகடுகளே வீட்டின் உள்பகுதிச் சுவர்களி லிருந்து எடுக்கச் செய்து அவற்றைப் பத்திரப்படுத்தி வைக்கச் சொன்னர். இதை அறிந்து கொண்ட மந்திரவாதிப் பத்திரமாகப் பெட்டியில் பதுக்கப்பட்டிருந்தத் தகடுகளே அப்புறப்படுத்தி விட் டான். அன்றிலிருந்து மறுபடியும் தீராதத் தொல்லேகள் ஆரம்பித்து விட்டன, அந்தக் குடும்பமே சாமிகளிடம் அந்தப் பெட்டியோடு வந்தனர். "உங்களுக்குத் திரும்பவும் தொல்லேகள் வந்ததற்குக் காரணம், உங்களுக்குத் தொல்லேகள் கொடுக்கக் காரணமாக இருந்தத் தகடுகளே இத்தப் பெட்டியினின்றும் கெடுதல் செய்தவன் அப்புறப்படுத்தி விட்டான்" என்று சொல்லிச் சாமிகள் பெட்டியைத் திறக்கப் பெட்டியில் ஒன்றும் இல்லே. சாமிகள் உடனே ஒரு இளநீர் வாங்கிவரச்சொல்லி அதன் மேல்பாகத்தைச்சீவி, உடைந்த மேல்பாகத்தை ஒரு கையால் மூடியவாறு இளநீரைக் கெட்டியாய்ப் பிடிக்கும்படி சப் இன்ஸ்பெக்டர் திரு ஆறுமுகத்திடம் கூறினர். சாமிகள் தியானம் செய்து அந்த இளநீருக்குள் பார்க்கச்சொல்ல மறைந்து சென்ற தகடுகள் அதனுள்ளே இருக்கக்கண்டனர். தகடுகள் திரும்பிவந்தவுடனேயே அந்த அம்மாளேப் பற்றியிருந்த எரிச்சலும் மாயமாக மறைந்துவிட்டது. என்னே சாமிகளின் அரு ளாற்றலும் செழுங்கருணேயும்? சூனியத்தைப்பற்றி சாமிகள் சொல் வதையே கேட்போம்.

சாமிகள்: உலகத்தில் பல தீயசக்திகள் உண்டு. அதைக் கொண்டவைகளே பில்லி சூனியம் போன்றவைகள். இதை ஆன் கின்றவன் பொல்லாதவன். அவனும் உருப்படியாவதில்லே. அவள்

இதைக்கொண்டு ஆட்டிவைப்பவர்களையும் உருப்படியாக்க விடுவதில்லை. இந்த பில்லி சூனியத்தால் உயிருக்குக்கூட ஆபத்தைக் கொண்டுவரலாம் என்பதை ஒரு பாட்டு எப்படி உரைக்கின்றது பாருங்கள்.

“ பத்து ஆறு பனிரண்டு இரண்டினில்
மூத்த பானு குசன் சனி இராகுவும்
திட்டமாய் நிறைமேவிடில் சூனியம்
வைத்த வைப்பினில் மாள்வது நிச்சயம் ”

இதையெல்லாம் ஒழித்துக் கட்டவல்ல மகாபலமும் வேண்டும். அந்த மகாபலத்தைக் கொண்டவர், ‘மக்களுக்கு செய்யும் தொண்டு மகாதேவனுக்கு செய்யும் தொண்டென்று’ தம் வாழ்நாட்களை மக்கள் நலனுக்குப் பயன்படுத்துவர்.

“ அன்பர் பணிசெய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே ”

என்றல்லவா பெரியோரும் கூறியிருக்கின்றனர்.

சாமிகள் திருவாக்கைப் போன்றே செயல்வீரராக மக்களுக்குக் கந்தர் சஷ்டி கவசம் போன்று துணைபுரிந்து திருவருள் கூட்டுவதை நாம் போற்றுவோம், பணிவோம், புகழ்வோம். பில்லி சூனியம் பெரும் பகை பேய்களும் சாமிகளைக் கண்டால் அலறி கலங்கிவிடும். சாமிகள் பெயர் சொல்லவும் இடிவிழுந்தோடிடும், சாமிகளைக் கண்டால் அலைந்து குலைந்திடும் !

## அருள்ஜோதி மணியின் கருணாம்ருதம்

மணிமந்திர ஔடதங்களில் வல்லபம் பெற்றுள்ள சாமிகள் தன் ஜோசிய அறிவையும் சமய சந்தர்ப்பங்களில் பக்தர்களுக்குச் சௌகரியம்தேடப் பயன்படுத்திக் கொள்வதிலும் தயங்கியதில்லை. சிலோனுக்கு சாமிகள் சென்றிருந்த நாட்களில்ஒருநாள் ஒரு வழிப் போக்கர் விடுதியில் தங்கநேரிட்டது. சாமிகளைப் பக்தர்கள் அந்த விடுதிக்கு அழைத்துச் சென்றபோது அங்கு ஒரு அறையும் காலியாக இல்லை. கடலில் நீராடிச்சென்ற பக்தர்களின் துணிமணிகளும் ஈரமாக இருந்தன. அவைகளை உடனடியாக காயவைக்கவேண்டும். விடுதிக்கு பொறுப்பாளியான ஒரு அயல்நாட்டுப்பெண் விடுதிக்குரிய சட்டதிட்டங்களை ஒழுங்காகக் கடைப்பிடித்தொழுகும் நெறியாளர். எப்படிச் சொன்னாலும் அங்கு பக்தர்களும் சாமிகளும் துணிமணிகள் காயவைத்துக் கொள்வதற்குரிய நேரம்கூட தங்க விட மாட்டாள் என்பதை உணர்ந்த சாமிகள் இதற்கென்ன செய்வது என்று யோசித்தார். அவர் யோசனைப்படியே அடுத்தகணம்

ஒரு ஜோசியராகவே மாறிவிட்டார். அந்த விடுதிப் பொறுப்பாளிப் பெண்ணின் குடும்ப விஷயங்களைக்கூறி அவளுக்கு நடக்கப் போவதையும் குறிப்பிட பெரிய மகானைப் போற்றுவதோடு நின்று விடவில்லை அந்தப் பெண்மணி. தன்னுடைய பிரத்தியேக அறை யிலேயே பக்தர்களும் சாமிகளும் அவர்கள் இஷ்டப்பட்ட நேரம் சிரமபரிகாரம் செய்துகொண்டு செல்லவும் வேண்டிய உதவிபுரிந் தாள். இப்படியே ஒரு சமயம் காரில் தேக்கடி செல்லும் போதும் காரில் கோளாறு ஏற்பட. தேக்கடி செல்லும் ஒரு காலி வாடகைக் காரைச் சாமிகள் நிறுத்தி, அந்த டிரைவர் எதற்காக எங்கு அவ் வளவு அவசரமாக காரை ஓட்டிச் செல்கின்றார் என்றும், முடிவு நல்ல முடிவு என்பதைச் சொல்ல, யாருக்கும் தெரியாத சமாச் சாரத்தை அறிந்து சொல்லும் இப்பெரியார் ஒரு பெரியமகான் என்பதை உணர்ந்துகொண்ட டிரைவர், சாமிகளுக்குத் தான் தொண்டு செய்யக் காத்திருப்பதை அறிவித்தார். சாமிகள் அந்த இருட்டுகின்ற நேரத்தில் தம்மோடு வந்திருந்த குடும்பத்தினரின் பெண்மணிகளை அந்தக் காலிக்காரில் ஏற்றிக்கொண்டு தேக்கடியில் குறிப்பிட்ட இடத்தில் சேர்த்து விடும்படி டிரைவரிடம் சொன்னார். டிரைவரும் அப்படியே செய்து தேக்கடியிலிருந்து யாருக்காகச் செய்திகொண்டு காரில் பறந்துசென்றாரோ, அதே கனவானை அழைத்தோடிச் சாமிகளிடம் திரும்பி வந்தார். வந்த கனவான் சாமிகளை வணங்கி, சாமிகள் தந்திச் சமாச்சாரத்தை மட்டும் சொன்னதோடு அன்றி, முடிவு நல்லது என்றும் ஆசி அருளிய பெருங்கருணையைப் போற்றி சாமிகளையும் சாமிகளோடு இருந்த பக்தர்களையும் தம் காரிலேயே தேக்கடிக்கு அழைத்துச் சென்ற நிகழ்ச்சியும் நாம் மறக்கமுடியாத ஒன்று.

ஒரு சமயம் நாசிக் பஞ்சவடியில் சாமிகள் தம் பக்தர்களோடு ஒரு சத்திரத்தில் தங்கநேர்ந்தது. அந்த சத்திரத்தில் தண்ணீர் வசதியில்லை. குளிரில் பச்சைத்தண்ணீர் கிடைத்தாலும் குளிப்பது வெகு சிரமம். முதல் நாள் இரவே சத்திரத்திற்கு வந்து அங்கிருக் கும் வசதிகளையும் சூழ்நிலைகளையும் அறிந்துகொண்ட சாமிகள் அதே தெருவில் அக்கம்பக்கத்தில் உள்ள வீடுகளில் குடியிருக்கும் குடும்பத்தார் கவனத்தைக் கவர்ந்தார். பெரிய மகான் வந்திருப் பதை அறிந்த அவர்கள் சாமிகளை வணங்கித் தம் குறைகள் நீங்க பக்கெட் பக்கெட்டாக வெந்நீரும், நிறையமஞ்சளும், கற்பூரமும். பழங் களும், கற்கண்டும் கொண்டு வந்தனர். மற்றப் பொருள்கள் பூஜைக்கு உதவ பக்கெட்டு வெந்நீர் சாமிகளுக்கு மட்டுமின்றி சாமி களோடு கூடவந்த பக்தர்களுக்கெல்லாம் அந்த குளிர் நாளில் குளிக்க உதவியது சாமிகளுடைய விபூதிப் பிரசாதம் அவ்வூர் பக்தர்களின் குறைகளை நீக்க உதவியது. என்னே சாமிகளது சமயோஜித அறிவும், அதன் பயனும்!



சென்ற ஜென்மத்தின் சமாதியின்மேல் இப்பொழுது சாமிகள் நின்று அளிக்கும் காட்சி

(விளக்கம் — பக்கம் 869)

இப்படி பல சந்தர்ப்பங்களில் சாமிகள் தன்னோடு வரும் பக்தர்களுக்கு கஷ்டமேற்படாமல் சூழ்நிலைகளைப் பயன்படுத்தி இருக்கின்றார். சாமிகளது செயல்களால் பக்தர்களுக்கு மட்டுமா நன்மை: யாரைக் கொண்டு பக்தர்களுக்கு நலன் கிடைக்கச் செய்கின்றாரோ அவர்களுக்கே சாமிகளது அருள் கிட்டிவிடுகின்றது. பழைய பக்தர்களும் பழைய பக்தர்களுக்குதவும் புதிய பக்தர்களும் சாமிகளது அருளைப் பரிபூரணமாக அனுபவிக்கின்றனர்.

திரிகால ஞானிகளாக விளங்கும் சாமிகள் சிலரை அனுக்கிரகசித்தால் ஆட்கொள்கின்றதை அன்பர்கள் அடிக்கடி நேரில் காண்பதுண்டு. சில புது மனிதர்களைப் பார்க்கும்போது அவரவரின் மனைவியின் பெயரையும் சொல்லி அவருக்குள்ள குறையையும் உரைத்து அக்குறை நிவர்த்தி ஆவதற்குரியபரிகாரம் உரைக்கும் அருமையையும் இங்கு குறிப்பிடுதல் பொருத்தமாக இருக்கும். திருப்பதியிலிருந்து திரும்பி வரும்போது 1965ல் ஸ்ரீ கபிலேஸ்வர ஆலயத்தில் அர்ச்சகம் செய்யும் ஒரு இளைஞரைக் கண்டு, 'வரலட்சுமி என்ற அவர் மனைவியின் பெயரையும், அவர் குழந்தையில்லாக் குறையையும் சாமிகள் உரைத்த நிகழ்ச்சியை நாம் மறக்க முடியுமா? மற்றொருதரம் திருவனந்தபுரத்தில் ஒரு தென்னந்தோப்பில் தங்கியிருந்தபோது தனக்கு இளநீர் பறித்துவந்த மரமேறியின் பெயரையும் அவர் மனைவியின் பெயரையும் ஒரு புத்தகத்தில் எழுதாமல் எழுதிக்காட்டி அந்த மரமேறியின் மனைவிக்கு வியாதியைக் குணப்படுத்திய நிகழ்ச்சியையும் நாம் மறக்க முடியுமா? 1968ல் திருவண்ணாமலையில் ரோட்டில் வாடிய முகத்தோடு ஒரு பையோடு செல்லும் ஒருவரை சாமிகள் அழைத்து, அவர் மனைவியிடம் கோபித்துக்கொண்டு அவசரப்பட்டு வீட்டை விட்டே கிளம்பி விட்டதை அத்தியாயம் 27ல் 'மற்றோர் மனம் அறியும் ஆற்றல்' என்ற பகுதியில் (பக்கம் 677) நாம் படித்திருக்கின்றோம். கருணையே வடிவாக அமைந்துள்ள சாமிகளால் சௌ. வரலட்சுமிக்கு குழந்தையல்லாத குறை நீங்க அருள் கிட்டுகின்றது. சௌ. பவானிக்கு நெடுநாள் வியாதி தீர விபூதிப் பிரசாதம் கிடைக்கின்றது. ஒரு பாபமுமறியாத ஒரு மனைவிக்கு வீட்டைவிட்டே கிளம்பிய கணவன் மறுபடியும் கிடைக்கின்றான். இப்படி எவ்வளவோ கருணை நிகழ்ச்சிகள் உண்டு!

சாமிகள் 1966ல் திருப்பதியிலிருந்து காரில் திரும்பிக் கொண்டிருக்கின்றார். திருக்கோயிலூரில் கார் வந்து கொண்டிருக்கின்றது, சாமிகள் திருக்கோயிலூரில் தங்க திடீரென்று திருவுளம் கொண்டார். இது திருக்கோயிலூரில் வாழ்ந்துவரும் திரு. D. கண்ணுமணி என்பவரின் பாக்யம் என்றுதான் சொல்லவேண்டும்! சாமிகளை தம் இல்லங்களில் அழைத்து உபசாரம் செய்ய காத்துக் கொண்டிருக்கும் பல பெரியவர்கள் வாழும் திருக்கோயிலூரில், சாமிகள் இதற்குமுன்

கண்டிராத திரு. D. கண்ணுமணி இல்லத்திலேயே தங்கி பூஜைசெய்ய திருவுளம் கொண்டார். முதன் முதலாக சாமிகளைக் காணும் திரு. D. கண்ணுமணி அவர்கள் முகத்தில் ஒளி இல்லை. உள்ளத்தை வாட்டிக் கொண்டிருந்தது ஒரு நினைவு. அதையே சாமிகள் அவரைக் கேட்டுவிட்டார்,

சாமிகள் : நீங்கள் வரப்போகும் தை மாதத்தை நினைத்தே கவலைப்பட்டுக் கொண்டிருக்கின்றீர். உங்கள் கஷ்டங்கள் தீர்ந்து விட்டன. கவலை வேண்டாம். தை மாதத்தில் உமது உயிருக்கே ஆபத்து என்பதை ஜோசியம் சொல்லக்கேட்டு அயர்ந்திருக்கின்றீர். நான் கொடுக்கும் மஞ்சளும் விபூதியும் உங்களைக் காக்கும்.

இப்படிக் கூறிய சாமிகளிடமிருந்து பிரசாதங்களைப் பெற்றுக் கொண்டார் திருமதி கண்ணுமணி அவர்கள். ஜோசியத்தில் கூறியுள்ளபடியே 1967 பிப்ரவரி 3ந்தேதி தோட்டத்தில் இருந்த திரு. D. கண்ணுமணிக்கு மயக்க மேற்பட்டு கீழே விழுந்துவிட்டார் மாலை மூன்று மணிக்கு. உறுதி தளராத அவர் மனைவி சாமிகள் அருளியிருந்த திருமஞ்சனை தன் திருமாங்கல்ய சரட்டில் இட்டுக் கொண்டு கணவருக்கு சாமிகள் கொடுத்திருந்த விபூதி பிரசாதத்தை உள்ளே கொடுத்து வந்தார். பேச்சின்றி போட்டகால் போட்ட இடத்தில் கிடந்த திரு, D. கண்ணுமணி மாலை ஆறேகால் மணிக்கு உணர் வெய்தினர், உடனே எழுந்தார், சாமிகளுக்கு பூஜை செய்ய ஆரம்பித்தார் வழக்கப்படி! சாமிகள் அவரை உயிராபத்தினின்றும் காப்பாற்றிய தோடல்ல. அன்றிருந்து அவர் குடும்பத்தில் பல நன்மைகளும் சாமிகள் கிருபாகடாக்ஷத்தினுல் ஏற்பட்டு வருவதை 28—1—69ல் மறுபடியும் திருப்பதியிலிருந்து திரும்பிவரும் சாமிகளை திருக்கோயிலூரில் கண்டு தரிசித்து ஆசிபெறும் பாக்கியவான் திரு. கண்ணுமணி கூறிய மொழிகளை பக்தர்கள் கேட்டு பெருமகிழ் வெய்தினேம்.

சாமிகளுடைய பக்தர்கள் அனைவரையும் சாமிகள் ‘மகராசியாக இருங்கள்’ என்று வாழ்த்தும் அருமையும் அதை சாமிகளே விளக்கும் அருமையும் எண்ணி எண்ணி நினைந்து இன்புற வேண்டியது. “மகரராசியில் குருவும் சந்திரனும் சேர்ந்தால் யோகமுண்டு” என்று விளக்கும் சாமிகள் “குருவும் மதியும் (அறிவும்) சேர்ந்தால் சகல சம்பத்தும் ஏற்படும் என்று சொல்லவும் வேண்டுமோ” என்று குருவின் அருமையையும் அறிவு ஆற்றல் பெற்ற தக்க குருமார் அருமையையும் அருமையாக விளக்கிடுவர். என்னே சாமிகளின் கருத்தை கருத்தாட்டும் ஆற்றல்!

**நல்ல நாள் :**

“காலத்தைக் காட்டக்கூடியது காலண்டர்” என்று வேடிக்கையாகச் சொல்லி ஆங்கிலத்தையும் தமிழையும் ஒரு கருத்தோவியமாக

இணைத்துக் காட்டும் சாமிகள் நல்ல காரியத்தை நல்ல காலத்தில் செய்வதை அடிக்கடி வற்புறுத்துவர். சாமிகள் நல்ல நாளைப்பற்றிப் பேசுவதையே கேட்போம்.

சாமிகள்: "இராகு காலத்தில் தொடங்கும் வேலை சித்தியாகாது. ஒருவன் இராகு காலத்தில் இரும்புப் பெட்டி செய்ய ஆரம்பித்தால் அப்படிச் செய்த இரும்புப் பெட்டியில் பணம் இருக்காது. எந்தக் காரியமாக இருந்தாலும் அதற்குரிய நல்ல நேரம் பார்த்துச் செய்யவேண்டும். அப்படி நல்ல காலத்தில் செய்யாவிட்டால் அலங்கோலம்தான் நடக்கும். இதைத்தான் "காலம் செய்யாதது (அலங்) கோலம் செய்யும்" என்று சொல்வர். ஓர் ஊருக்குப் புறப்படுவதாக இருந்தாலும் நேரம் பார்த்துத்தான் புறப்படவேண்டும். ஒரு குறிப்பிட்ட நாளில் அவசியம் போய்த்தான் ஆகவேண்டுமென்றிருந்தால் அதிகாலை நாலு மணிக்குமேல் ஐந்து மணிக்குள் தண்ணீரைச் சாப்பிட்டுவிட்டுப் புறப்படலாம். சில சமயங்களில் சூரிய உதயமானவுடன் புறப்படு என்று சொன்னால் ஒரு முரட்டுக் கேள்வியைச் சில பக்தர்கள் கேட்பதும் உண்டு. "மானம் மோடமாயிருந்தால்?" என்று கேட்பர். சூரியோதயம் பார்க்க முடியாவிட்டால் காலை சூரிய உதய நேரத்தில் (ஆறு மணிக்கு) கிழக்கு நோக்கிச் சூரியனை நினைத்துக் கும்பிட்டுவிட்டுப் புறப்பட வேண்டியதுதான். சூரியன் உதயமானவுடன் சூரியனைப் பார்த்துக் கும்பிட வேண்டியதுதான்.

புறப்படுவதற்கு மட்டும்தானா நல்ல நாள் பார்ப்பது? கோடித் துணி வாங்கி உடுப்பதற்கும் கிழமை பார்த்துத்தான் செய்ய வேண்டும். இதற்கு ஒரு பொது விதியும் உண்டு.

"காரியிலழுக்க தாகும்
கதிரவன் பீடைகாட்டும்
மாரியில் நனையும் திங்கள்
வன்புதன் கந்தையாகும்
வீரியமில்லை செவ்வாய்
வெள்ளியில் மடந்தை சேர்வாள்
சூரிய வியாழன் நன்றாங்
குலவிய ஆடை சாத்த"

வீடு கட்டுவதற்கும் நல்ல நாள் உண்டு. அதற்கே ஒரு சாத்திரமுமுண்டு. மனிதனுக்கு ஆயுள் கூறுவதுபோல, ஒரு வீட்டுக்கும் ஆயுள் சொல்ல முடியும். பூமிக்குமேல் நடந்து பூமிக்கடியில் இத்தனை அடிக்குக்கீழ் ஊற்று உள்ளது என்று அறிவதைப்போல், ஒரு வீட்டின் அமைப்பைக் கண்டே அதன் ஜாதகம் உரைக்கமுடியும்.

வீட்டமைப்பு என்பது வீட்டின் திசை அமைப்பை மட்டும் குறிப்ப தல்ல. வீட்டில் உள்ள ஒவ்வொரு அறையும் எப்படி எப்படி அமைய வேண்டும், எத்தனை அடி அளவில், உயரத்திலும், அகலத்திலும், நீளத்திலும் அமையவேண்டும், எங்கெங்கு பூஜையறை, சமையலறை, உறக்க அறை, கழிவு அறை முதலியன அமையவேண்டும் என்பதை சாத்திர முறைப்படி செய்து முடிக்கவேண்டும். வீட்டுக்கு மட்டுமல்ல, ஆலயம், தேர், விக்கிரகம், தோணி, சந்தை — இவ்வளவுக்கும் சாஸ்திரங்கள் உண்டு. பொது நீதிகள் உண்டு. அவைகளைப் பின்பற்றியே நாம் அவைகளைச் செய்து முடித்தல் வேண்டும்.

"வீடு ஆலயம் தேர் விக்கிரகம் தோணி சந்தை
பாடாவதி நாள் செய்யப்பாழாகும் — மானேகேள்
ஆதிமுதல் மூன்று அவிட்டமுதல் நாட்டும்
சோதிமுதல் ஐந்தும் சொல்வது பாடாவதியில்"

திருமுகூர்த்தங்களும் ஜாதகப் பொருத்தம் பார்த்து நல்ல நாட் களிலேயே நடத்த வேண்டும். சில குறிப்பிட்ட நட்சத்திரங்கள் கூடிய சில நாட்களில் நல்ல காரியங்கள் நடத்தவே கூடாது. அப் படி நடந்தால் நிச்சயம் கேடும், துன்பமும்தான்.

ஞாயிறு பரணி

திங்கள் சித்திரை

செவ்வாய் உத்திரம்

புதன் அவிட்டம்

வியாழன் கேட்டை

வெள்ளி பூராடம்

சனி ரேவதி

இந்த நாட்களில் திருக்கல்யாணம் நடந்தால் பெண் விதவை யாவாள்: புதுமனை கோலிற் பாழாகும்: ஊர் பயணம் செய்தால் மரணமாகும்: நிஷேக முகூர்த்தம் செய்தால் பெண் மலடியாவாள்: குழந்தை பிறந்தால் யமனுக்கு இரையாகும்"

"ஒவ்வொரு வருஷமும் பிறக்கும் கிழமைகளையும் பொறுத் துள்ளது அந்த வருட பலாபலன்களும். ஒவ்வொரு தமிழ் வருடத்தில் ஆடி ஐந்தாந் தேதி என்ன கிழமையோ அதே கிழமையில் தான் அந்த வருடம் பிறந்திருக்கும். கிழமைகள் புரிகின்ற விளைச்சலைப் பாருங்கள்.

" ஆடி ஐந்தாந் தேதி தன்னில்
ஆனபுதனே யாமாஞல்
நாடு செழிக்க ஒரு போகம்
நல்ல வியாழன் இரு போகம்
தேடிய வெள்ளி கதிர்ச் சாவி
நின்ற சனியன் கடுங் காய்ச்சல்
பாடும் ஞாயிறு விதைப்பாடு
பகரும் திங்கள் முப்போகம் "

நான் கூறிய பாட்டில் ஒன்று விட்டிருக்கின்றது கவனித்தீர்களா? அதில் செவ்வாய்க்கிழமையைப் பற்றியே ஒன்றும் சொல்லவில்லை. நான் விட்டு விட்டேன் என்று நினைக்கவேண்டாம். "செவ்வாயோ வெறுவாயோ" என்ற பழமொழியே ஒன்று உண்டு. செவ்வாய்க் கிழமை உகந்த கிழமையல்ல என்பது நாடறிந்த விஷயம். விருந்தைப் பற்றிக் கூறும்போது கூட செவ்வாயை விலக்குவது நல்லது என்றே கூறுவர்.

" வெள்ளி சனி திங்கள் விருந்துண்ண புதஞுகும்
கள்ள வியாழன் கசப்பிக்கும் — தெள்ளு கதிர்
தீராப் பகை காட்டும் செவ்வாய் தனக்குமே
வாராப் பகையும் வரும் "

இப்படிக் கூறிஞல், வேறு வழியில்லை என்ருல் என்ன செய்வது? ஏதாவது பரிகாரம் கிடையாதா என்று கேட்பர். உண்டு, பரிகாரம் உண்டு மனசாந்திக்கு!

" செவ்வாய்க்குப் பாலாம் தினகரர்க்கு நெய்யாகும்
மெய்யாம் வியாழம் வெந்நீராகும் – ஐயா கேள்
இந்நாள் ஒரு விருந்தை இட்டிட வேண்டிட்டால்
சொன்னேம் பரிகாரம் தான் "

## நல்ல சகுனம்

நுணுக்கமான சோதிட விஷயங்களையும் ஆராய்ந்து முடிவு சொல்லக் கூடிய ஆற்றலுடைய சாமிகள் சாதாரண விஷயங்களுக்கும் பொது விதிகளை நாட்டில் பிரசித்தி பெற்ற சாதாரணப் பாடல்களால் விளக்கிக் காட்டுகின்ற அருமையை என்னென்று இயம்புவது? எந்த காரியத்திற்குப் புறப்பட்டாலும் நல்ல சகுனத்தில் புறப்படுவது மனதிற்கு நமக்கு திருப்தி அளிக்கின்றது. அது நல்ல பலனையும் தரும் என்றும் நம்புகிறேம். புறப்படும்போது மேள சப்தம் கேட்டால் நம்மையறியாமலேயே ஒரு மன எழுச்சி

ஏற்படுகின்றது, சுபமங்கள வேளையில் புறப்பட்டோமென்று! நிறை குடத்தைக் கண்டால் மனம் களிப்பால் நிறைகின்றது, நிறைவைக் கண்டுவிட்டோம் நல்லது நடக்குமென்று! குடை, கொடி, சாமரை, சுபவரிசை, பழங்கள், கரும்பு. செந்தணல், அக்ஷதை, சலவை வஸ்திரம், மாமிசம், சாதம், தயிர், கள், முத்து, தேன், பொரி நல்ல சகுனமென்பர். அப்படியே யானை, குதிரை, பசுக்கள், ரிஷபம், பட்சிக்கூட்டம், இவைகளும் நல்லது பயக்குமென்பர். கன்னிகை, தாசி, சுமங்கலை, அரசன், மணக்கோலம், இரட்டைப் பிராமணர், இவர்களைக் கண்டாலும் நன்மை உண்டாகுமென்பர். சில பிராணிகள் நாம் புறப்பட்டுச் செல்லும்போது வலமிருந்து இடம்போனால் நல்லது நடக்குமென்பர். கருடன், கழுகு, ஆந்தை, காட்டுக்காடை, வலியன், கீரி, உடும்பு, குரங்கு வலமிருந்து இடம்போக வேண்டும். சில இடமிருந்து வலமாகச் சென்றால் நல்லது நடக்கும் என்பர். நாரை, கிளி, கொக்கு, காக்கை, மயில், கோழி, செம்போத்து, விச்சுளி. புலி, நரி, புள்ளிமான், புனுகுப்பூனை, இவை இடமிருந்து வலம் செல்வது நலம். பாம்பும், பூனையும் முயலும் குறுக்கே போகக்கூடாதென்று சொல்வர். சில சப்தங்களும் புறப்படும்போது கேட்பது நல்லதை விளைவிக்கும் என்ற நம்பிக்கையும் உண்டு. மூஞ்சூறின் சப்தம், வேதஒசை, கழுதை கத்துவது. குதிரை கனைப்பது நல்ல சகுன மென்பர்.

இவற்றைப்பற்றி ஒருநாள் பேசிக்கொண்டிருக்கும்போது சாமிகள் கூறிய திருமொழிகளைச் செவிமடுப்போம்.

சாமிகள்: "நல்ல சகுனமடா — இதை நழுவ விடுவாயோ" என்ற பாட்டைக் கேட்டிருக்கின்றோம். நல்ல சகுனம் நல்ல சகுனம் என்று ஏங்கிநிற்கும் நாம் எதை விரும்புகிறோம். நல்ல காரியம் நடக்க விரும்புகின்றோம். எதிரில் வண்ணார் துணிமூட்டையோடு வருவதைக் கண்டு மனம் களிப்புறும் சிலருக்கு வண்ணார் வருவது தெரியும், வண்ணார் துணிமூட்டையோடு வந்தால் நல்லது என்பது தெரியும். ஆனால் வெளுத்த துணிகளோடு வண்ணார் வருவதைப் பார்ப்பது நல்லதா? அல்லது அழுக்குத் துணிகளோடு வண்ணார் வருவதைப் பார்ப்பது நல்லதா என்பது தெரியாது. கழுதையைக் கண்டவுடன் சிலர் மகிழ்ச்சியடைவர் நல்ல சகுனத்தைக் கண்டோமென்று. ஆனால் கழுதையைப் பார்ப்பது நல்ல சகுனமல்ல, கழுதை கத்துவதைக் கேட்பது நல்ல சகுனமாகும். சாப்பாடு செய்யும் களிமண்சட்டி கழுவுவதைப் பார்த்துப் புறப்படக்கூடாது. பச்சை மூங்கில், பச்சைப் பானை எதிரில் பார்த்துப் புறப்படக்கூடாது.

"வண்ணாரை செக்காரை சக்கிலியர் நாவிதரை
பட்டாடை கட்டும் ஒற்றைப் பார்ப்பாரை

வட்ட வட்ட நாமமிடும் வஷ்டுவரை
கண்டக்கால் ஏமன் எதிரிடுவான் ''

என்ற பாட்டையும் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

கருடன் சேவை தராதா என்று ஏங்கி நிற்கும் கருட சேவையாளரையும் நாம் தெப்பக்குளக் கரைகளில் வியாழனன்றும் குறிப்பிட்ட தினங்களிலும் பார்ப்பதுண்டு. அந்தக் கருடனும் பறக்கும் திசையைப் பொருத்தும் பலன் இருக்கின்றது என்பதை அறிய வேண்டும்.

" செந்தலைக் கருடன்
வந்திடம் பாய்ந்தால்
கங்கையில் பொருளும்
தன் கையில் சேரும் "

என்பர் பெரியோர். அப்படியே வால்நீண்ட கரிக்குருவி பாய்ச்சலின் பயனும் உரைக்கப்பட்டிருக்கின்றது.

" வால் நீண்ட கரிக்குருவி
வலமிருந்து இடம் பாய்ந்தால்
கால் நடையா(க) போரவங்க
கனக தண்டி ஏறுவாங்க "

சாமிகள் மணசாத்திரத்தில் நிபுணராக விளங்குவது போன்று பட்சி சாத்திரத்திலும் நிபுணரென விளங்குகின்றார். பட்சி சாத்திரம் படித்தவர் பெரியவர். அதனால்தான் பட்சி படித்தவரைப் பகையாதே என்றும் கூறுவர்.

" ஊனுக்கு ஒன்றேகால் ஒன்றரைமேல் தானடையாம்
கண்பார்த்து அரசுரெண்டில் காண்போமே – பெண் பாவாய்
தூங்குவது முக்காலாய் துஞ்சுவது தானரையாய்
பாங்குடைய பட்சி பலன் "

எனும் பாட்டையும் பாடி பாட்டில் வரும் 'ஒன்றே கால்' 'ஒன்றரை' 'ரெண்டில்' 'முக்காலாய்' 'தானரையாய்' எனும் சொற்களுக்கும் விளக்கம் சொல்லி பட்சி பலன் உரைக்கின்ற சாமிகள் தன் தெய்வீக அனுபவம் கொண்டு பேருண்மைகளை எளிய சொற்களில் யாவரும் புரிந்து கொள்ளும் வகையில் விளக்குவதிலும் நிபுணர். மண சாத்திரத்திலும், பட்சி சாத்திரத்திலும், ஜோதிட சாத்திரத்திலும், மந்திர சாந்திரந்திலும் பூரணத்வம் அடைந்துள்ள சாமிகள் அந்தந்த சாத்திர மேதைகளிடத்தும் விவாதம் செய்து தானறிந்த உண்மையை பசுமரத்தாணிபோல் அவர்கள் உள்ளங்களில் பதியவைப்பதிலும் வல்லவர்.

அரிய தத்துவங்களை விளக்கி அறிஞர்களை மகிழ்வுறச் செய்யும் சாமிகள் இல்லத்திற் கெந்த தெய்வங்கள் எப்படி அமைந்திருக்க வேண்டும் என்றும் விளக்குவர்.

சாமிகள் : ஒவ்வொரு இல்லத்திலும் விநாயகர் படமும் இலக்குமி படமும் இருப்பது நல்லது. காரியம் கைகூட விநாயகர் உதவுகின்றார் : செல்வம் கைசேர இலக்குமி உதவுகின்றார். அநேகமாக எல்லோர் வீட்டிலும் இலக்குமி படம் உண்டு. அநேகமாக அந்த இலக்குமி நிற்கும் இலக்குமியாகத்தான் பார்க்கின்றோம். அதைப் பார்க்கும்போதே செல்வத்திற்கு 'செல்வோம்' என்று உரை சொல்பவரின் சொற்களுக்கே இப்படம் ஒரு விளக்கமாக நிற்பதையும் காணலாம். செல்வம் நிலைத்திருக்க விரும்பும் உள்ளங்கள் செல்வம் அமர்ந்திருக்க திருச்செல்வியின் அமர்ந்த திருக்கோல படத்தையே வைத்துப் பூசிக்கவேண்டும். அதுபோன்றே வலம்புரி விநாயகரது படமே வீடுகளுக்கு விசேடமானது. வலம்புரி விநாயகரது துதிக்கை வலமாக சுற்றி இருக்கும்.

பக்தர் ஒருவர் : பக்தர்கள் எந்தெந்தப் பக்கங்களில் அமர்ந்து பூஜை செய்யவேண்டும் என்பதற்கும் சாமிகள் விளக்கம் கொடுக்க வேண்டுகிறேன்,

சாமிகள் : நாம் தொழுகின்ற தெய்வங்களைக் கிழக்குப் பக்கம் பார்க்க அமைக்க வேண்டும். அதாவது படங்கள் கிழக்கு நோக்கி இருக்கவேண்டும், நாம் வடக்குப் பக்கம் பார்த்து பூஜை செய்ய வேண்டும். எந்தப் பக்கம் அமர்ந்து தெய்வத்தை வழிபட வேண்டும் என்பது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் நாம் எந்த பக்கத்தில் தலைவைத்து தூங்கவேண்டும் என்பதும், எந்தப் பக்கம் பார்த்துச் சாப்பிடவேண்டும் என்பதும், போசனம் தெற்கும், கிழக்கும் பார்த்து சாப்பிடுவது நல்லது. தன்னூரில் கிழக்குப் பக்கம் தலைவைத்து படுப்பதும், தங்கின ஊரில் மேற்குப் பக்கம் தலை வைத்து படுப்பதும் நல்லது. எப்பொழுதும், எங்கிருந்தாலும் வடக்கே தலைவைத்துப் படுக்கக்கூடாது.

பக்தர் : மயிர் வெட்டிக்கொள்வதற்கும், எண்ணெய் ஸ்நானம் செய்வதற்கும்கூட நாட்கள் பார்த்துச் செய்யவேண்டுமா, சாமிகளே!

சாமிகள் : "மதிபுதன் மயிர் கழி
சனி நீராடு"

என்றே பெரியவர்கள் சொல்வார்களே! அதன்படி நடக்கவேண்டும்.

**மர்ம சாஸ்திரம் :**

மர்ம சாஸ்திரம் அறிந்தவர்கள் யாருடைய உடம்பையும் எப்படியும் ஆட்டிவைக்க முடியும். ஒருவனைப் பேச்சு மூச்சின்றி சாய்க்க வைக்கும் ஆற்றல் பெற்றுள்ள இவருக்கு ஒருவரைத்தொட்டும் சாய்க்க வைக்க முடியும், தொடாமலும் சாய்க்கவைக்க முடியும். ஒருவர் உடம்பில் எத்தகைய கோளாறுகளையும் ஒரு கணத்தில் ஏற்படுத்தி ஒரு கணத்தில் சரி செய்ய முடியும். உடம்பில் இப்படி ஏற்பட்ட கோளாறு எந்த வைத்தியராலும் சரிசெய்ய முடியாது, எந்த பரீட்சையாலும் பரிசோதனையாலும் எப்படி வந்தது எப்படி நிவர்த்தியாகும் என்பதையும் அறிந்துகொள்ள முடியாதது இது தான் மர்ம சாஸ்திர வல்லவரால் செய்யவல்லது. இதை ஆடிக்காட்ட ஒரு உண்மை யோகியால் தான் முடியும். நமது சாமிகள் ஒரு உண்மை யோகி: அவருக்கு இந்த மர்மசாஸ்திர ஆற்றலும் உண்டு.

1961ல் சாமிகள் டெல்லியில் ஒரு பையனை தோள் பட்டையில் தொட்ட மாத்திரத்தில் அவனுடைய நாடி நின்று விட்டது. சாமிகள் மறுபடியும் தொட்ட மாத்திரத்தில் ரத்த ஓட்டம் திரும்பி வந்து விட்டது. இதை எடுத்துரைக்கும் டாக்டர் S. C. மாதூர் M.B B.S அவர்கள் ஆச்சரியத்தை எழுத்தில் அடக்க முடியுமா ! இந்த நிகழ்ச்சி சாமிகள் தொட்டுக் காட்டிய அற்புதம். இத்தகைய நிகழ்ச்சி ஒன்றை தொடாமல் சாமிகள் செய்து காட்டிய விந்தையை வேறொரு டாக்டர் 1956ல் உரைப்பதைக் கேட்போம். இது நடந்த இடம் திருச்செந்தூர். கண்டு வியப்படைந்தவர் பக்தர் தூத்துக்குடி டாக்டர் S. ரங்கசாமி பிள்ளை. பக்தர் கூறுவதையே கேட்போம்.

டாக்டர் : அங்கு ஒரு நாள் பூஜை முடிந்து பக்தர்களிடம் பேசிக் கொண்டிருக்கையில் சாமிகள் அக்கோவில் பட்டரைக் கூப்பிட்டு (‘பின்னால் இருவர் வந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்’ என்று எங்களிடம் முன்னாடியே சொல்லிவிட்டு) ‘விழு’ என்று சொன்னார்கள். அப்படியே அந்த பட்டரும் மூர்ச்சித்து விழுந்து விட்டார். சுய உணர்வு ஒன்றும் இல்லாமலும் வெறும் கட்டை போலும் கிடந்தார். என்னைக் கூப்பிட்டு டாக்டர் என்ற முறையில் பரிசோதனை செய்ய சொன்ன செய்ததில் அவர் உயிருடன் தான் இருக்கிறாரா என்று எனக்கே ஆச்சரியமாக இருந்தது. சிறிது நேரத்திற்குப்பின் அப்பட்டரை ஸ்ரீ சாமிகள் கூப்பிட்டபோது அவர் தூக்கத்திலிருந்து எழுந்திருப்பவர்போல் எழுந்தார். அப்பட்டரை கேட்டதற்கு எங்கேயோ மிதந்து கொண்டிருப்பதாக உணர்ந்ததாய்ச் சொன்னார். ஸ்ரீசாமிகள் வாக்குக்கே அவ்வளவு சக்தி இருக்கிறதென்பதை அறிய அச்சந்தர்ப்பம் பயன்பட்டது.

உடலைச் சாய்த்து எழுப்புகின்ற ஆற்றல் பெற்ற சாமிகள் உடம்பில் உள்ள ஒரு உறுப்பு தொடர்ந்தாற்போல் ஒரு கோளாறால் பாதிக்கப்படுவதையும் காட்டி அதைச் சரிசெய்யக்கூடிய வல்லவர். சென்னை பக்தர் திரு. N. இராமகிருஷ்ணன் உறுப்பொன்றில் சாமிகள் தன் கட்டைவிரலை வைத்து எடுத்தார். கட்டைவிரலைச் சாமிகள் எடுத்ததிலிருந்து புகைச்சல் இருமல் ஆரம்பித்துவிட்டது. அது நிற்கவே இல்லை. இது இதைக்கண்டு கொண்டிருந்த டாக்டர் நரேந்திரன் அவர்களுடைய வைத்திய அறிவுக்கும் எட்டாத ஒரு தெய்விகச் செயல். சாமிகளால்தான் இந்த தொடர்ந்து நீடித்து தொந்திரவு கொடுத்த இருமலை நொடிப்பொழுதில் நீக்கமுடிந்தது. இவை யாவும் எதற்காகச் சாமிகள் செய்கின்றார். மனித அறிவுக்கு அப்பாற்பட்ட சக்தி ஒன்று உண்டு; விஞ்ஞானமோ, வைத்திய நூலோ, ஆராய்ச்சியோ, பரிசோதனையோ ஒன்றும் இதைக் கட்டுப்படுத்த முடியாது, குணமாக்க முடியாது, அறிய முடியாது என்பதைத்தான் சாமிகள் செயல் விளக்குகின்றது. அதனால்தான் வைத்திய நிபுணர்களையே சாமிகள் வைத்துக்கொண்டு இந்தச் செயல்களைக் காட்டி அருள்கின்றார்!

பெரியவர்களை அலட்சியம் செய்து அவதிப்பட்டவர்களையும் பெரியவர்கள் வாழ்க்கை நமக்கு எடுத்துரைக்கின்றது. சிறுவன் ஒருவன் உடம்பில் பல இடங்களில் பஞ்சு ஒட்டவைத்து இராமலிங்க அடிகளிடம் சென்று, உடம்பெல்லாம் சிரங்கு குணப்படுத்த வேண்டும், என்று பொய் சொன்னான். 'தீர்ந்து விடும் போ' என்றுகூறி அனுப்பினர் அடிகள். சிறுவன் வீடு சேருவதற்கு முன்பே பெருஞ் சிரங்குகள் அவன் பஞ்சு ஒட்டி இருந்த இடங்களில் உண்மையிலேயே தோன்றிவிட அவன் அலறி அடித்துக்கொண்டு அடிகளிடம் வந்து தன் பிழையை மன்னித்தருள வேண்ட, வள்ளலார் சாலை கிணற்று தீர்த்தத்தில் அவனை முழுகச் செய்து துன்பம் நீக்கினர். இது நாம் வள்ளலார் சரிதத்தில் படிக்கும் ஒரு நிகழ்ச்சி. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் வாழ்க்கையிலும் ஒரு மந்திரவாதி சாமிகளை வீணுக வம்புக்கு இழுத்து அவதிப்பட்டுக் கடைசியில் சாமிகள் அருளால் நன்மை அடைந்த நிகழ்ச்சியும் ஒன்றுண்டு. குமார் என்பவர் பன்றிமலையில் மரம் அறுக்கும் அயலூர் தொழிலாளி. மந்திரவாதியும் கூட! ஒரு நாள் ஏற்பட்ட தகாறில் சாமிகளிடமே தன் மந்திர சக்தியை காண்பிக்க முற்பட்டார் குமார். சாமிகள் உள்ளங்காலில் கோணி ஊசி ஏற்றினற் போல் இருந்தது. உடனே சாமிகள் துள்ளினர். அடுத்த கணமே குமார் மூக்கிலிருந்து சர் என்று பீறிட்டடித்து இரத்தம். சாமிகளுடைய மகா சக்தியை தப்பாக எடை போட்ட மந்திரவாதியும் சாமிகளின் மகா சக்திக்குமுன் தன் மந்திர சக்தி ஒரு துரும்பு என்பதை உணர்ந்து சாமிகளிடம் தன் வருத்தத்தை அறிவித்துக் கொள்ள, கருணாகரமூர்த்தியாக விளங்கும் சாமிகள் குமாரை காப்

பாற்றி தன் அன்புக்கு அடையாளமாக வேஷ்டி துண்டு கொடுத்து அனுப்பினர்.

மற்றொரு சமயத்தில் தெய்வ நம்பிக்கை இல்லாத ஒருவர் மதுரையில் சாமிகளைப் பரிசோதிக்க வந்தவர் சாமிகள் மர்ம சாத்திரத்தால் சவம் போல் விழுந்ததும், சாமிகள் அருளால் உணர்வு பெற்று எழுந்தபோது தெய்வ நம்பிக்கை உள்ளவராக மாறிய விந்தையும் 27வது அத்தியாயத்தில் 'நாத்திகருக்கும் நற்பாடம்' என்ற தொகுதியில் (பக்கம் 614) படித்து மகிழலாம்.

## இரட்சிக்க மந்திரங்களும் சக்கரங்களும்

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

(தொல்காப்பியனர்)

மந்திரம் என்பது மறைமொழியாகும். அது நிறைமொழி மாந்தரிடமிருந்து வருவது. அது வருவதும் அவர் ஆணையிலிருந்து கிளர்ந்து வருவதாகும். இத்தகைய நிறைமொழி மாந்தரை எப்படிக் கண்டுபிடிப்பது? வள்ளுவர் பதில் உரைக்கின்றார், கேட்போம்!

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்"

உண்மையிலேயே ஒருவர் பரிபூரண யோகியானல் அவர் சொல்வது நடந்தேதீரும். அவர் அருளிக்கூறினும் அவர் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களை அவர் மொழிகள் அளிக்கும் சக்தி உடையது. மொழிகளால் தன் இஷ்டப்பட்ட செயல் விளைவிப்பதல்லவா ஒருவர் செயற்கரிய செயல்? அவரல்லவா பெரியவர்! அவரல்லவா இறைவன்! 'நாதவிந்து கலாதி நமோ நம' என்று இறைவனைத் துதிக்கும் அருணகிரியாரும் அதை அடுத்து இறைவனை "வேத மந்திர ஸ்வரூபா" என்று போற்றுகின்றார். இறைவனே மந்திர வடிவமானல் பெரியவரும் மந்திர வடிவமாகின்றார். இறைவனே குருவாகின்றார். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் மந்திரமே உருவாகி அருளும் மந்திரத் திருமேனி குருநாதன். அவர் மறைமொழிகொண்டு அமைத்து அருளுகின்ற சக்கரங்கள் கொண்ட ஆலயங்கள் எவ்வளவோ ஊர்களுக்கு மூர்த்திகளையும் தீர்த்தங்களையும் ஏற்படுத்தி சீரும் சிறப்பும் கொண்டு வருகின்றன. சாமிகள் தம் திருக்கரத்தினலேயே எழுதிக் கொடுக்கும் சக்கரங்கள் கொண்ட படங்கள் எவ்வளவோ இல்லங்களுக்கு அரண் ஆகின்றன. அவர் போட்ட மந்திர உருவேற்றிய இரட்சைக் கயிறுகள் எவ்வளவோ பக்தர்களைக் காத்து வருகின்றன.

இந்த மறைமொழிப் பொதிந்தச் சக்கரங்களில் சிறந்த சர்வ சத்தி சக்கரத்தைப்பற்றிச் சாமிகள் உரைப்பதையே கேட்டு மகிழ் வோம்.

சாமிகள் : "மூலமந்திரமான பஞ்சாட்சரங்களாகிய ந-ம-சி-வ-ய ஆகிய ஐந்தெழுத்துக்களையும், பஞ்சாட்சரங்களுக்கு உயிர்ப்பை ஊட்டவல்ல அ-இ-உ-எ-ஒ ஆகிய ஐந்து எழுத்துக்களையும், பஞ்சபூத தத்துவங்களுக்குரிய உருவங்களான சதுரம், பிறைவட்டம், முக்கோணம், அறுகோணம், வட்டம் ஆகிய 5 வடிவங்களையும், பஞ்சபூத சக்திகளுக்குரிய மந்திர அட்சரங்களாகிய லம்-வம்-ரம்-யம்-அம் ஆகிய 5 எழுத்துக்களையும், ஐம்பத்தொரு அட்சர சக்திகளின் ஐவகைப் பிரிவு எண்களான 9–11–4–15–12 ஆகிய 5 தமிழ் இலக்கங்களையும், புராதன காலத்து சித்தர்களாலும், முனிவர்களாலும், சாத்திர முறைப்படி வகுக்கப்பட்ட ஐயைந்து இருபத்தைந்து கட்டங்களில் அவையவைகள் இருக்கவேண்டிய அந்தந்த இடங்களில் மாற்றிக் கணித்து எல்லாவற்றையும் ஓரே வட்டத்திற்குள் அடங்கும்படியாக 25 அறைகள் கொண்ட கட்டங்களில் எழுதி அடைத்து அமைக்கப்படுவதே சர்வ சக்தி சக்கரமாகும். இவைகளை பொன், வெள்ளி, தாமிரத் தகடுகளில் முறை பிசகாமல் எழுதி அமைப்பதை யந்திரம் அல்லது ரக்ஷை எனப்படும். இச்சக்கரத்தை முறைப்படி வழிபடுவதால் தீமைகள் விலகி, எல்லா நன்வமகளும் உண்டாகும் என்பது சித்தாந்தமாகும்."

## சக்கரஸ்தாபனமும் கும்பாபிஷேகமும்

சாமிகள் பல ஆலயங்களுக்கு மூலவிக்கிரகங்களுக்கு சக்கரஸ்தாபனம் செய்து அருள்கின்றார். சாமிகள் தலைமையில் பல குட முழுக்குகள் நடந்து வருகின்றன. 1968ம் ஆண்டு இறுதியில் மட்டும் மதுரையிலும் ஸ்ரீரங்கத்திலும் திருவிதாங்கூர் கிளிமானூரிலும் விநாயகர் ஆலயங்களிலும் தாண்டிக்குடியில் பால முருகன் ஆலயத்திலும் சாமிகள் சக்கரஸ்தாபன பொறுப்பையும் தானே ஏற்று தானே செய்து தானே கும்பாபிஷேகத்தையும் தலைமை ஏற்று நடத்திக்கொடுத்தார். சாமிகள் தலைமைப் பங்கு கொள்ளும் கும்பாபிஷேக வைபவங்களிலும் சாமிகள் உற்சாக மிகுந்து அருள் கூர்ந்து அற்புதம் ஆடுவதும் நாம் கண்டுள்ளோம். திருச்சியில் 1956ல் ஸ்ரீ செந்தாமரைக் கண்ணன் சந்நதியின் அஷ்டபந்தன மகோற்சவம் மகாசம்ரோக்ஷணம் நடக்கையில் சாமிகள் கங்கா தீர்த்தம் வரவழைத்ததும், அதை பிரதான கும்ப கலசத்தில் கலக்கும் சமயத்தில் அதில் இருந்த இரண்டு இரண்டணா நாணயங்கள் கற்கண்டு துண்டுகளாக மாறிய விந்தையையும் 'திருச்சியில் ஆண்டவன் அருள் நிறை அண்ணல்' பகுதியில் (பக்கம் 304) படித்து மகிழலாம். 1958ஆம் ஆண்டில் சென்னை மயிலாப்பூர் காபாலீஸ்வரர் மகா

நந்தி கும்பாபிஷேகத்தன்றும் சாமிகள் ஒரு குவளை தண்ணீரை எண்ணெயாக மாற்றிய அதிசயத்தையும் 'அற்புதம் ஆடவல்லார் சாமிகள்' அத்தியாயத்தில் (பக்கம் 606) படித்து மகிழலாம் இங்கு இந்த விந்தை நடப்பதற்கும் காரணம் இல்லாமலில்லை. சாமிகளுடைய சக்தியையே, சாமிகளுடைய தகுதியையே சந்தேகப்பட்டவரின் மன நிலையை சரிப்படுத்தவே ஒரு சித்து நடந்தது. தண்ணீர் எண்ணெயாக மாறிய அற்புதத்தோடேயே மற்றொரு அற்புதமும் நடந்தது. குழுமியிருந்தோரில் ஒருவருக்கு அருள் வந்து சந்தேகப்பட்ட நபரை நோக்கி "நீ போட்டிருப்பது பஞ்சு நூல், பன்றிமலை சாமிகள் போட்டிருப்பது ஞான நூல்" என்று கூறியது, சாமிகளுடைய மற்றவருடன் வைத்து மதிப்பிட ஒண்ணாத பெரு நிலையை விளக்க உதவியது.

மதுரையில் 1968இல் ஜூன் 6அந்தேதி ரயில்வே காலனியில் உள்ள செல்வவிநாயகர் ஆலயத்தில் கும்பாபிஷேகம் நடந்தது. இதை தினமணி தொகுத்துரைக்கும் செய்தியையே வாசிப்போம். "இதை தவத்திரு பன்றிமலை சாமிகள் முன்னின்று நடத்திவைத்தார், விக்ரகங்களுக்கு அடியில் வைக்க வேண்டிய யந்திரங்களை சாமிகள் 15 தினங்கள் பூஜை செய்து அவற்றை எடுத்துக்கொண்டுவந்தார். பின்னர் தவத்திரு பன்றிமலை சாமிகள் ஸ்ரீ விநாயகர், நவக்கிரகங்கள் ஆகியவைகளுக்கு அடியில் தாம் பூஜை செய்துகொண்டு வந்த யந்திரங்களை பிரதிஷ்டை செய்து மருந்து சாத்தினார்." கும்பாபிஷேகத்தை ஒட்டி திருவருள் சபையார் ஏற்பாடு செய்திருந்த உபந்யாசத் தொடர்ச்சியில் திருப்பெருந்திரு. பன்றிமலை சாமிகள் தலைமையில் கூட்டம் நடந்தது. சாமிகள் தமது தலைமை உரையில் 'எங்கும் தானாகிப்பரந்திருக்கும் ஆண்டவன் வையகத்தை ஆட்டி வைக்கின்றான்; ஆண்டவனிடம் ஈடுபடும் மனிதன் சிவத்தையடைகிறான்; சக்தியை அடைகிறான். பக்தியால் ஆத்ம சுத்தி ஏற்படுகிறது. பின்னர் ஆத்ம சக்தி; பிறகு சித்தியும் முக்தியும் ஏற்படுகிறது. கடவுள் எல்லோர் உள்ளங்களிலும் இருக்கிறார். அவர் கண்டவருக்கு கற்கண்டு, காணாதவருக்கு கற்குண்டு, பக்குவமடைந்த ஜீவனுக்கு வீழ்ச்சியில்லை. மனதை அடக்கி வாழ்பவனே மனிதன். அவனே இதயக் கோயிலில் உள்ள கடவுளைக் காணமுடியும்" என்றார். பிறகு தாயுமானவர், அருணகிரிநாதர், திருமூலர், வள்ளலார், பூதத்தாழ்வார், அப்பர், திருஞானசம்பந்தர், போன்ற பெரியார்களின் பாடல்களிலிருந்து ஏராளமான மேற் கோள்கள் காட்டி நாம ஜெபமும் தியானமும் மருந்து போன்றதென்றும், சகல துன்பங்களையும் ஒழிக்க வல்லது நமசிவய மந்திரமென்றும், அவனே அவனே எனக் கூறிக்கொண்டு வீணே காலத்தை கழிக்கும் மக்கள் 'சிவனே, சிவனே, என்று தினசரி 5 நிமிடங்களாவது தியானம் செய்தால் கடைத்தேறலாமென்றும் கூறினார்.

சாமிகளுடைய தலைமை உரையை நேரில் கேட்ட அன்பர்கள் சாமிகளின் பேச்சின் பொருள் வளத்தையும், ஆத்மீக விளக்கத்தையும் மேற்கோள் காட்டும் தெளிவையும், பேச்சின் இனிமையையும், எளிமையையும் மெய்மறந்து புகழ்ந்துகொண்டே இருந்தனர். இந்த கும்பாபிஷேகம் நடந்தபோதும் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. சக்கர ஸ்தாபனம் செய்யவந்த சாமிகளிடம் சிலர் யந்திரதகட்டைப் பற்றி விசாரித்தனர். உடனே சாமிகள் தன் பட்டு சட்டைப்பையிலிருந்து யந்திரத்தகட்டை எடுத்தார். அவ்வளவு லேசாக சாமிகள் தன் சட்டைப்பையிலிருந்து எடுத்துவைத்த யந்திரத்தகட்டை ஏந்திய தாம் பூலத்தைத் தூக்க சக்தியற்றிருந்தனர். அதன் எளிய வடிவைக்கண்டு ஏமாந்திருந்த ஒருவர். சாமிகள் மந்திர உருவேற்றிய யந்திரத்தின் சக்தி அதற்கு ஒருவரும் தனித்து தூக்கமுடியாத நிறைவை கனத்தை அளித்து விட்டது. யாரால் •தூக்கமுடியும் இந்த சக்திவாய்ந்த யந்திரத்தகடு?

தாண்டிக்குடியில் 5—7—68இல் சாமிகள் தலைமையில் நடந்த கும்பாபிஷேக வைபவத்தையும் சாமிகள் நாற்பத்து முக்கோண சக்கரஸ்தாபனம் செய்தருளியதும், தாண்டிக்குடி ஸ்ரீ பாலமுருகன் கோயில்' அத்தியாயத்தில் (பக்கம் 198) படித்து மகிழலாம். அங்கு சாமிகள் நடத்திக் காட்டிய அற்புதங்களை 'யோகத்தின் பயன்' என்ற பகுதியிலும் (பக்கம் 739 – 741) 'பொறுமைக்குச் சன்மானம்' (பக்கம் 408) என்ற பகுதியிலும் படித்து மகிழலாம்.

திருச்சியில் ஸ்ரீரங்கம் அம்மாமண்டபம் ஸ்ரீ விநாயகர் கோயில் கும்பாபிஷேகத்தை சாமிகள் தலைமையில் 4—11—68இல் பக்தர்கள் திரு. ஊ. அ. முருகன் செட்டியாரும், திரு. எம். சுப்பையா செட்டியாரும் நடத்தி வைத்தார்கள். சாமிகள் விநாயகர் சக்கரஸ்தாபனமும் செய்துவைத்து குடமுழுக்கு விழாவையும் சிறப்பாக நடத்தி அருளினார். இங்கு சாமிகள் ஆடிக்காட்டிய அற்புதங்களை நடவாதன நடக்கும் அற்புதம் என்ற பகுதியிலும் (பக்கம் 595) புகைப் படங்களில் அற்புதம் என்ற பகுதியிலும் (பக்கம் 639) படித்து மகிழலாம்.

திருவிதாங்கூரில் கிளிமானூரில் சாமிகள் தலைமையில் 22-1-69ல் ஒரு விநாயகர் கும்பாபிஷேகம் சிறப்புடன் நடந்தது. சாமிகள் பக்தர் திரு. K. K. வர்மா அவர்கள் ஒரு விநாயக பக்தர். கிளிமானூரில் தனக்குச் சொந்தமான ஒரு அழகிய மலையில் பிள்ளையார் கோயில் கட்டியுள்ளார். அந்தப் பிள்ளையார் கோயிலில் சாமிகள் திருவருளால் சக்கரஸ்தாபனம் செய்து கும்பாபிஷேகம் செய்ய விரும்பிய திரு. வர்மா சாமிகளை 1966லேயே அக்கோயிலுக்கு அழைத்துச் சென்றார். அங்குள்ள பிள்ளையாரைப் போன்றே ஒரு கைப்பிடிக்குள் அடங்கும் அளவுள்ள ஸ்படிக விநாயகரை பக்தர் வர்மா அவர்களுக்கு

அளித்து சாமிகள் அற்புதம் ஆடிக்காண்பித்ததை 'கலைஞர்களிடம் ஆர்வம்' என்ற பகுதியிலும் (பக்கம் 431) குருமகராஜன் சுற்றுலா கடைசி பகுதியிலும், (பக்கம் 314) படித்து மகிழலாம். இந்தப் பிள்ளையார் கோவிலுக்காக சாமிகள் உருவாக்கிய திருச்சக்கரத்தை ஸ்தாபிதம் செய்யுமுன் சாமிகள் அதை தான் கிளிமானூரில் பூசைசெய்த அறையில் வைத்திருந்தார். பூஜை அறை சாமிகள் படுக்கை அறைக்கு இடது பக்கத்தில் இருந்தது. படுக்கை அறையின் முன்னுள்ள அறையில் சாமிகளும் பக்தர்களும் கூடியிருந்தனர். சக்கரத்தின் சக்தியை பக்தர்களுக்குக் காட்ட சாமிகள் திருவுளம் கொண்டனர். "நான் விநாயக சக்கரத்தை என் கைக்குப் பறந்துவரச் செய்கிறேன்" என்றுரைத்த சாமிகள் "முருகா சக்கரம் வேண்டும்" என்று விநாயகரையும் துதித்து தம் திருக்கரத்தை நீட்ட பூஜை அறையில் இருந்த சக்கரம், பூஜை அறையை விட்டு படுக்கை அறையையும் தாண்டி முன்அறையில் நின்றுகொண்டிருக்கும் சாமிகள் கைகளுக்கு பறந்தோடி வந்தது. "கணபதியைத் தொழ காரியம் கைகூடும்" என்றுகூறி சாமிகளும் பக்தர்களும் மகிழ்வுற்றனர்.

சக்கரஸ்தாபனத்திலும் மருந்து சாத்துதலிலும் வல்லபம் பெற்றுள்ள சாமிகள் இவற்றைப் பற்றி கூறும் திருமொழிகளையே கேட்டு மகிழ்வோம்.

சாமிகள்: ஐந்தெழுத்தினுண்மை அதுவான அப்பொருளை
நெஞ்சழுத்தி ஒன்றுகி நிற்கு நாள் எந்நாளோ"

என்று தாயுமானவர் ஏங்கி நின்றார்.
திருமூலரும் 'தெள்ளமுதம் ஊறசிவாய நமவென்றும்

உள்ளமுது ஊற ஒருகால் உரைத்திட
உள்ளம் தெளிவு பெற இதுவே'

சிறந்த மருந்தென்றும் உணர்ந்தார். ஔவையும் 'சிவாய நமவென சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒருநாளு மில்லை' என்று அறிவுறுத்தினர். இத்திருப் பெயரில் ஈடுபட்டவர்கட்கு 'நான்' என்ற அகந்தை விலகிவிடும். மெய்யறிவு ஏற்படும். உள்ளொளி பெருகிவிடும். அந்த நிலையில் அவர் சொல்லுக்குள் சொல்லறிவார். அவர் ஜோதியைத் தன்னுள் அறிவார், அவர் தன்னைத் தானறிவார், அவர் தானமும் தவமும் தானென்றே அறிந்து கொள்வார். சொல்லுக்கு எவ்வளவோ சக்தி உண்டு. இதை முற்றும் உணர்ந்தவரே பெரியவர். அவர் தொட்டால் மணக்கும். அவர் சொன்னால் பலிக்கும். ஒரு விதையைத் தெளித்தால் எப்படி முளை கிளம்புகின்றதோ அதே போல் உயிர் மெய் எழுத்துக்களைச் சேர்க்கவேண்டிய முறைப்படி சேர்த்தால் சக்தி ஏற்படுகின்றது. அதுவே மந்திரமாகி விடுகின்றது.

அந்த மந்திரத்தை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான எண்ணிக்கையாக மன ஒருமையுடன் உறுதியுடன் உருவேற்றப்படுகின்றதோ உச்சரிக்கப்படுகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அந்த யந்திரத்திற்கு அமோகமான சக்தி ஏற்படுகின்றது. பஞ்சாட்சர மந்திரங்களை முறை பிசகாமல் உச்சரிக்க வேண்டும். நமசிவய எழுத்துக்களை சொல்லவேண்டிய முறைப்படி குரு உபதேசப்படி சொன்னால் நல்ல பலன் கிட்டும். அதையே மாற்றி அமைத்து உச்சரிப்பதால், புலி போல் பாய்ந்து கெடுதலும் விளைக்கும் சக்தி கொண்டது. அதனால் தான் 'யானைப் பெரும் புலியாம்' என்று கூடச் சொல்வர். யந்திரத்திற்கு மந்திரம் உச்சரிக்க உச்சரிக்க சக்தி ஏற்படுகிறதென்றேன். அந்த மந்திரத்திற்குப் போதிய சக்தி ஏற்பட்டு விட்டதையும் பெரியவர்கள் மனக் கண்களால் பார்க்க முடியும். அந்த சக்கரம் எந்த விக்கிரகத்திற்காக உருவாக்கப்பட்டதோ அந்த விக்கிரகத்தின் அடியில் அந்த சக்கரத்தை வைத்து, அதை யாரும் எடுத்துவிடாமல் மருந்தும் சாற்றிவிட வேண்டும். இந்த மந்திரங்களை தங்கம், வெள்ளி, செம்பு, இவைகளால் செய்யலாம். குங்கிலியம், தேன் மெழுகு, கொம்பரக்கு, பூங்காவி, பசு வெண்ணெய், ஈய செந்தூரம் இவற்றை நல்லெண்ணெய் விட்டுக்காய்ச்சி மருந்து செய்யலாம். இம் மருந்தை கல் விக்கிரகத்திற்கு உபயோகப்படுத்துவது விக்கிரகத்தைப் பெயர்த்து யந்திரத்தை யாரும் வெளிப்படுத்தி எடுத்துகொண்டு போகாதபடி செய்வதற்கேயாகும். யந்திரத்தை அடியில் கொண்ட விக்கிரகத்திற்குச் சக்தி ஏற்பட்டு விடுகின்றது. இந்த சக்தி கல்லால் ஏற்பட்டு விடவில்லை, சொல்லால் தான் ஏற்பட்டுவிட்டது. சொல்லின் சக்தி யந்திரத்திற்குச் சக்தியைக் கொடுக்கின்றது. மந்திரத்தின் சக்தி மூர்த்திக்குச் சக்தியைக் கொடுக்கின்றது. மூர்த்தியின் சக்தி கோயிலுக்குக் கீர்த்தியைக் கொடுக்கின்றது. இதைத் தான்,

> "புல்லினுள் இருந்த பூச்சி பொருந்த வெந்துரை உண்டாக்கி
> சொல்லினுள் நாகைநாதர் தோய்ந்திட்ட சூட்சமம் போல்
> கல்லினுள் தெய்வம் இல்லை கருத்தினுள் தெய்வம் நெஞ்சே"

என்று நெஞ்சறி விளக்கம் உரைக்கின்றது.

### சாமிகளின் திருப்படங்கள்

சாமிகளுடைய திருப்படங்களுக்கும் அமோக சக்தி உண்டு என்பதைப் பக்தர்கள் நன்கறிவர். சாமிகள் படங்கள் பக்தர்கள் பூஜை அறைகளில் கோயில் கொண்டு விளங்குகின்றன: பக்தர்கள் இல்லங்களில் வரவேற்பு அறைகளில் முக்கியமான இடங்களில் வண்ண மாலைகளோடு எழிலோடு விளங்கி வருகின்றன. பக்தர்களின் வைத்திய நிலையங்களிலும் பக்தர்களின் வர்த்தக நிலையங்களிலும்

ஆபீஸ் மேஜைகளிலும் லட்சுமி கடாக்ஷம் அருளி விளங்கி வருகின்றன. சாமிகளின் போட்டோப் படங்களை வாங்கிச் சாமிகளிடம் பக்தர்கள் சக்கரங்கள் போட்டுத் தரும்படி வேண்டிக்கொள்ளும்போது, சாமிகள் அவைகள் மாட்டப்படும் இடங்களுக்குத் தகுந்தாற் போல் சக்கரங்கள் எழுதிப் படங்களை அளித்து ஆசீர்வதிக்கின்றார். எப்பொழுதும் பக்தர்கள் பாக்கெட்டில் இருப்பதற்கும் சின்னப் போட்டோப் படங்களில் சக்கரம் எழுதி அளிக்கின்றார் சாமிகள்.

சாமிகளின் படங்களால் ஏற்படும் நன்மைகளைப் பக்தர்கள் நன்கறிவர். ஒரு துர்ஆவி பிடித்துக் கஷ்டப்பட்ட திரு S. பத்மநாபன் என்பவரை ஒரு மந்திரவாதி அவர் ஒட்டிக்கொண்ட தரையிலிருந்து எழுப்ப முடியவில்லை. அவரைத் தரையிலிருந்து எழுப்ப உதவியது அந்த மந்திரவாதியின் வீட்டில் மாட்டியிருந்த சாமிகள் படம். "பேய் பிசாசு ஓடுதல்" எனும் பகுதியில் இதை (பக்கம் 875) படித்து மகிழ்ந்தோம். செம்பூர் பக்தர் திரு. P.K. ரங்கராவ் 1952-ஆம் வருடம் அவருக்கு வேண்டிய நண்பர் ஒருவர் எஸ்டேட்டில் உள்ள தனிமையான வீட்டில் இருக்கும் சாமிகள் படத்தின் அருளாற்றலை வரைந்து போற்றுகின்றார். "ஓர் இரவில் நெல்திருட சில திருடர்கள் புகுந்து நெல் கிட்டங்கிப் பூட்டை உடைத்துக் கொண்டிருந்தார்கள். நெல் கிட்டங்கி வாசல் நிலைப்படியின்மேல் குருநாதர் படம் ஒன்றிருந்தது. தலைமையாக உள்ள திருடன் சாமிகள் படம் மாட்டியிருந்த இடத்திலிருந்து பதினைந்து பேர்கள்வரை தடியுடன் இறங்குவதுபோல் கண்டு பயந்து மற்றத் திருடர்களையும் கூட்டிக்கொண்டு ஓடும் சமயம் எஸ்டேட் வேலைக்காரர்கள் விழித்துக்கொண்டு திருடர்களைப் பிடித்துக்கொண்டனர். திருடர் தலைவன் படத்திலிருந்து பதினைந்து பேர்கள் தடியுடன் இறங்கிய விபரம் சொன்னதைக் கேட்ட எஸ்டேட் சொந்தக்காரர் இந்த அற்புத லீலையை என்னிடம் சொல்லி என் குருநாதருக்கு நன்றி தெரிவித்து எழுதச்சொன்னார்" என்று கூறி மகிழ்கின்றார் இராவ் அவர்கள். சாமிகள் படம் திரு. H. B. ராம்பர்வத்ராஜ் மனைவியை ஒரு பேய் உபத்திரவத்திலிருந்து காப்பாற்றியதை நாம் "பேய் பிசாசு ஓடுதல்" பகுதியில் (பக்கம் 873) படித்து மகிழ்ந்தோம்.

சென்னை பக்தர் திரு. V. C. வரதராஜ முதலியாருக்காக சாமிகளுடைய போட்டோ படம் ஒன்று பக்தர் படிக்கின்ற பகவத் கீதை புத்தகத்தில் ஏழாவது அத்தியாயம் தொடங்கும் பக்கத்தில் ஒரு நாள் திடீரென்று இருப்பதைக்கண்டு பக்தர் வியப்படைந்தார். அந்த அத்தியாயத்தில் கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு சொல்லும் வாக்கியம் ஒன்றுண்டு. "ஆயிரக்கணக்காய் உள்ள மாந்தருள் என்னை உணர சில அரிய ஆத்மாக்கள் பாடுபடுவதுண்டு; அப்படி பாடுபடும் யோகியரிலும், எனக்கே தன்னைப் பரிபூரணமாக அர்ப்

பணித்துக்கொண்ட ஒரு சிலருக்குத்தான் என்னை உண்மையில் அறியும் ஆற்றல் உண்டு" என்று கூறுகின்றார் கிருஷ்ணபரமாத்மா, கடவுளுக்கே தன்னைப் பரிபூரணமாக அர்ப்பணித்துக்கொண்ட உண்மை உணர்ந்த யோகி நம் சாமிகள் அல்லவா? அதைப் பக்தருக்கு எடுத்துக் காட்டுவது போலல்லவா இருக்கின்றது சாமிகள் படம் இந்த அத்தியாயத்தில் இருப்பது!

இதுமட்டுமல்லாமல் ஒருநாள் திரு. V. C. வரதராஜ முதலியார் வீட்டில் பூஜை அறையில் விளங்கும் சாமிகள் திருஉருவப்படம் சுமார் இருபது நிமிடங்கள் தானே ஆடிக்கொண்டிருந்த விபரங்களையும் அவரும் அவர் குடும்பத்தாரும் எங்களிடம் கூறி அகமகிழ்ந்தனர். சென்னை வைரக்கல் வேலை நிபுணர் திரு. B. நாராயண ஆசார்லுவுக்கு 1967–இல் சாமிகளைக் காணும் பாக்கியம் கிடைத்தது. அன்றே சாமிகள் படம் ஒன்றில் சக்கரம்போட்டுச் சாமிகளிடமிருந்து பெற்றுக் கொள்ளும் பாக்கியமும் கிடைத்தது. அவருக்கு மனத்தில் ஒரு ஆசை. சாமிகளுடைய இரண்டு படங்கள் கிடைத்தால் ஒன்று பூஜை அறையிலும் ஒன்று கடையினும் வைத்து வழிபடலாமே என்று மனதில் எண்ணினார். தன் எண்ணத்தை வெளியே யாரிடமும் உரைக்கவில்லை. காகிதத்தில் பத்திரமாக இருந்த ஒரு படத்தை மடித்து எடுத்துச் சென்றார் பக்தர் படக்கடைக்குச் சட்டம் போட. அதே கடையில் பிரித்துப் பார்க்கும்போது ஒரு படமல்ல, இரண்டு படங்கள் உள்ளே இருந்தன! சாமிகளிடமிருந்து பெற்றுக்கொண்ட ஒரு படமே தன் மனம்போல் இருபடங்களாக மாறிவிட்ட அற்புதத்தை என்னென்பது! ஸ்ரீ சாமிகள் தம்மீது காட்டிய அபார கருணையை அவர் என்றென்றும் மறக்க முடியாதென்றே அவர் உள்ளம் உவகையில் மிதக்க ஆரம்பித்தது.

சாமிகளின் சக்திகளை நேரில்கண்டு வியந்த அயல்நாட்டு அறிஞர் ஒருவருக்காகச் சென்னை பக்தர் ஒருவர் சாமிகளிடம் சாமிகள் படம் ஒன்று கொடுத்து சக்கரம் போட்டுக் கொடுக்கக் கொடுத்தார். சாமிகள் அந்தப் படத்தை வாங்கி அதன் பின்னால் கோடுகள் போட்டு வீடுகள் அமைத்து அந்தந்த வீட்டிற்குரிய அட்சரங்களை ஆங்கிலத்தில் எழுதித் தந்தது உற்றுநோக்கத் தக்கது. "எந்தெந்த சொற்களை ஆண்டிருக்கின்றேன் என்பதை அவரும் (அயல்நாட்டு அறிஞர்) தெரிந்துகொள்ள வெண்டும் என்பதற்காகவே நான் ஆங்கிலத்தில் அட்சரங்களை எழுதுகின்றேன்" என்று சாமிகள் திருவாய் மலர்ந்தருளினர்.

**தற்காப்புக் கயிறு :**

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

செல்வத்தைப் பற்றி திருவள்ளுவர் கூறும்போது அருட்செல்வத்திற்கு முதல் இடம் கொடுத்துப் பாடி இருப்பது பெரியோரின் அருள் நிலையை ஏத்திப்பாடி இருப்பதேயாகும். சாமிகளுடைய அருள் பக்தர்களை காக்கின்றது, அது சாமிகள் அளிக்கும் விபூதி வாயிலாகவும் பக்தர்களைக் காக்கின்றது. அது சாமிகள் உவந்தளிக்கும் காப்புக் கயிறுகளாலும் பக்தர்களை இரட்சிக்கின்றது எப்படிப் படத்திற்குப் பின் சக்கரம் எழுதி சாமிகள் படத்திற்கு சக்தி ஊட்டுகின்றரோ அப்படியே சாமிகள் இந்த பட்டுக் கறுப்பு தற்காப்பு கயிறுகளுக்கும், முடிச்சுபோட்டு மந்திரசக்தி ஏற்றி பக்தர்களைக் காக்கக்கூடிய சக்தியை அளித்துவிடுகின்றார். இந்தக் கறுப்புக்கயிறு பக்தர்களை இரட்சிப்பதால் அதை இரட்சைக் கயிறென்றும் பக்தர்களை காப்பதால் காப்புக் கயிறு, தற்காப்புக் கயிறு என்றும் அழைக்கின்றோம். சாமிகள் ஆடவருக்கு வலக் கரத்திலும், பெண்களுக்கு இடதுகரத்திலும் இந்தக் கயிறைக் கட்டுகின்றார். சில சீடர்களுக்கு காப்புக் கயிறு கட்டும் பாக்கியத்தையும், செல்வத்தையும், தகுதியையும் சாமிகள் ஏற்படுத்தி இருக்கின்றார்.

இரட்சைக் கயிறு அளிக்கவல்ல பெரியவர்முன் காலன்கூட தன் சக்தியை காட்டமுடிவதில்லை. சாமிகள் அருளால் உயிர் இழந்தாரும் திரும்பவும் உயிர் அடைந்த விபரங்களும் அறிவோம்.

> " நில்லென்று சொல்லியல்லோ நிலைநிறுத்த வல்லார்க்கு
> கொல்லென்று வந்த யமன் — என் கண்ணம்மா
> குடியோடிப் போகாஞே "

என்று பாடிய அழுகணி சித்தர்,

> " கட்ட கயிறெடுத்து காலைநாலும் சேர்த்திருக்கு
> அட்டாள தேசமெல்லாம் — என் கண்ணம்மா
> ஆண்டிருந்தால் ஆகாதோ "

என்றும் பாடி இருப்பது கவனிக்கத்தக்கது.

வேலவனுடைய வலிமையைக் கூறவந்த தேவராயப் பாவலர் கந்த சஷ்டி கவசத்தில் கட்டுதலின் சிறப்பைப் போற்றுவதும் உற்று நோக்கத்தக்கதே.

> " மாற்ருன் வஞ்சகர் வந்து வணங்கிட
> காலதூத ரெனைக் கண்டாற் கலங்கிட
> அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
> வாய் விட்டலறி மதிகெட் டோட

படியினில் முட்டப்பாசக் கயிற்ருல்
கட்டுடனங்கம் கதறிடக் கட்டு
கட்டியுருட்டு கால் கை முறிய
கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு முழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதில் செதிலாக"

இப்படி வேலவனுடைய சக்திகளை விளக்கிக் கொண்டே செல்கின்ருர், சக்தி மொழிப்பாவலர். கந்தன் சக்தி எதிரிகளைக் கதறிடவும் கதிகலங்கவும் கட்டுகின்றது. எதிரிகள் விழிகள் பிதுங்கிட முட்டுகின்றது. அவர்களை செதில் செதிலாகச் செருக்கின்றது. வஞ்சனையாளர்களையும், பேய் பிசாசுகளையும், தீமைகளையும், காலனையும் விரட்டியோட்டுகின்றது கந்தன் சக்தி; அது போன்றே நல்லதைக் கூட்டுவித்து கெட்டதை நீக்குகின்றது சாமிகள் பக்தர்களின் கைகளில் கட்டுகின்ற இரட்சைக்கயிறு.

சிலருக்கு எப்படி இந்தக் கறுப்புக் கயிற்றைக் கையில் கட்டிக் கொண்டு வெளியில் கிளம்புவது என்று கூடத் தோன்றும், சாமிகள் மலாயா பயணத்தில் இரு ஆசிரியருக்குக் கறுப்புக் கயிறு கொடுத்ததும், அவர்கள் கட்டிக்கொள்ளாமல் நின்றதும், கறுப்புக் கயிற்றின் மகிமையை சக்தியை சாமிகள் விளங்க வைக்க சித்தாடிய நிகழ்ச்சியையும் 'மலேயாவில் தென்னுட்டுச் சித்தர்' பகுதியில் (பக்கம் 241—242) படித்து மகிழலாம். சமீபத்தில் ஒரு அயல் நாட்டு அறிஞர் சாமிகளின் பெருமையைக் கேள்விப்பட்டுச் சாமிகளைக் காண வந்தார். சாமிகளைக் கண்டு பல விஷயங்கள் அறிந்துகொள்ள வேண்டுமென்று வந்தவருக்கு, சாமிகள் செய்கின்ற செயல்களில் பொதிந்துள்ள உட்கருத்துக்களையும் அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வமும் இருந்தது. சாமிகள் இரட்சைக் கயறு கட்டுவதைக் கண்டு ஆச்சரியப்பட்ட அறிஞருக்கு அதை சாமிகள் ஏன் கட்ட வேண்டும் என்பதை அறியவும் ஆவல் ஏற்பட்டது. சாமிகள் அவருடைய கடந்த கால நிகழ்ச்சிகளை எடுத்துரைத்தார். அவர் இரண்டாவது முறை மணக்க இருக்கும் மங்கை நல்லாளின் இயல்புகளைத் தொகுத்துரைத்த சாமிகளும் இரட்சைக் கயிறு கட்டுவதால் ஏற்படும் நலன்களையும் எடுத்துரைத்தார். மங்களக் கயிற்றை யார் தான் விரும்பமாட்டார்? சுபமங்களம் பெருக்க இந்தக் கயிறு உதவுவதானுல், தான் மணக்க இருக்கும் பெண்மணி தன் இஷ்டம்போல் இல்லாளாக அமைய இந்தக் கயிறு உதவுமானுல் நமது நாட்டு பக்தர் மட்டுமா, எந்த நாட்டிலிருந்து வரும் எந்த பக்தருமே இத்தகைய அருள் கயிறை சாமிகளிட மிருந்து வாங்கவும் தயங்குவரோ? அயல் நாட்டினருக்கும் சாமிகள் காப்புக் கயிறு ஒன்று கிடைத்தது என்று சொல்லவும் வேண்டுமோ?

சாமிகள் இந்தக் கருப்புக் கயிற்றின் சக்தியை விளக்க சித்தாடுவதுமுண்டு. கருப்புக் கயிறு பக்தர்களுக்கு கட்ட அன்பர்கள் நூல் கண்டு வாங்கிவருவதுண்டு. சில சமயங்களில் கண்டு நூல் முடிச்சுகள் விழுந்து சிக்கலாகி இருக்கும். இந்த சிக்கலை நீக்க முடிச்சுகளை அவிழ்க்க சாமிகள் பாடுபடுவதையும் அதற்காக அதே வேலையில் காலம் கழிப்பதையும் பக்தர்கள் அறிவர். ஒரு சில பக்தர்களுக்கு சாமிகள் நூலை கட்டுவதற்கு முன் அந்த பக்தர்களைக் கொண்டே அந்த நூலைப் பல துண்டுகளாகக் கத்தரிக்கச் சொல்வர். அப்படி கத்தரிக்கப்பட்ட பல நூல் துண்டுகளை ஒன்ருகச் சேர்த்து அதே பக்தர்களைக் கொண்டே இழுக்கச் சொல்வர் சாமிகள். அப்படி இழுக்கும்போது பலவாக இருந்த கத்தரிக்கப்பட்ட கயிறுகள் ஒன்ருக மாறி நீண்டுவிடும் அற்புதத்தையும் பக்தர்கள் அறிவர். இந்த சக்தியைக் காணும் அன்பர்களுக்கு இத்தகைய சக்தி வாய்ந்த சாமிகளிடமிருந்து பெறுகின்ற கயிற்றிற்கு எவ்வளவு சக்தி இருக்க முடியும் என்று அறிந்துகொள்ள முடியாதா?

இத்தகைய இரட்சைக் கயிற்றை — காப்புக் கயிற்றை — மங்கள கயிற்றை — அருள் கயிற்றை அதன் பயன் கூறி பாடி மகிழ்வோம்

"வேண்டிய செல்வம் கூடும்; வருவாயும் பெருகும்; க்ஷேமம்
வேண்டிய அளவு கிட்டும் வளமெலாம் ஓங்கும் கீர்த்தி
தோன்றிடும் ஞானம் ஓங்கும் துணைவரும் துயரம் தீரும்
சான்றவர் பன்றிமலை சித்தரின் கயிறு பூண்டால்!"

சாமிகள் சுபமங்கள புருஷர், கல்யாண குணசீலர். சாமிகள் அருளால் எவ்வளவு கன்னிகளுக்குத் திருமணம் நடைபெற்றுள்ளது என்பதையும் எவ்வளவு குடும்பங்களில் ஆண்மகவு பிறக்க சாமிகள் அருள்பாலித்திருக்கின்ருரென்றும் பக்தர்கள் நன்கறிவர். திருமணம் நடக்க சாமிகள் மஞ்சள் நிறப் பட்டுக் கயிறுகளைக் கன்னியர்களுக்குக் கட்டுகின்ருர். மங்களப் பொருள் மஞ்சள் கிழங்குகளை பூஜையில் வைத்து கல்யாணம் நடக்க ஆசீர்வதிக்கின்ருர். இந்த விபரங்களை 'திருமணம் திருவருள் சாமிகள்' என்ற பகுதியில் (பக்கம் 560—571) படித்து மகிழலாம். சாமிகள் சில பக்தர்களுக்கு நவநிறப்பட்டுக்கயிறும் கட்டுகின்ருர். திருப்பதியில் ஒரு கன்னியின் திருமணத்திற்காக திருமதி உமாபதி வேண்டுகோளுக்கிணங்கி ஒரு மஞ்சள் பட்டுக்கயிறு வரவழைத்ததும் திருமதி A. V. கிரி அவாகளுக்கு ஒரு அழகான நவ நிற பட்டுக்கயிறு வரவழைத்ததும் இங்கு உரைப்பது பொருந்தும்.

## தீர்த்தம் காட்டி அருளும் சாமிகள்.

சாமிகளோடு திருத்தலங்களைக் காணவும் திருத் தீர்த்தங்கள் ஆடவும் பக்தர்கள் புறப்படுவதுண்டு. பழனிக்கும் திருப்பதிக்கும்

காளாத்திரி, திருக்கோயிலூர், ஸ்ரீகோகர்ணம், முதலிய தலங்களுக்கும் கோலாப்பூர், பூனு, நாசிக், மகாபலேஷ்வர், பஞ்சவடி—முதலிய இடங் களுக்கும் சாமிகளோடு பக்தர்கள் சென்று இறைவனை தரிசித்து பெற்ற இன்பத்தை 'குருமகராஜன் சுற்றுலா' என்ற அத்தியாயத்தில் படித்து மகிழலாம். சிறு வயதிலேயே ஆச்சாண்ட மலைப்பரதேசி யுடன் நமது நாட்டிலுள்ள புண்ணிய தலங்களைத் தரிசித்து வந்த சாமிகள் தமது பக்தர்களுக்கும் மூர்த்திதலம் தீர்த்தம் இவற்றின் பெரு மைகளை காட்டுவித்து இறை வார்த்தை சொலவும் சற்குருவாகவும் வாய்த்திருக்கின்றது நமது கிடைத்தற்கரிய பாக்யம்.

## குருமகாராஜனோடு மகாமகம் :

உலகைப் பச்சைப் போர்வையால் உடுத்தி மக்களுக்கு நல்ல விளைச்சலை அளித்து மனங்குளிர வைப்பவை திருநதிகள். இந்த நதிகளில் குளிப்பதால் உடம்பிலுள்ள அழுக்குகளைமட்டும் நாம் போக்கிக் கொள்வதோடுகூடத் தம்மை ஒட்டியிருக்கும் பாப அழுக்கு களையெல்லாம் போக்க இந்த புனித நதிகளின் தீர்த்தம் உதவு கின்றது என்ற நம்பிக்கையும் மனிதன் உள்ளத்தில் நெடுநாட்களாக பதிந்துஉளது. அதனுல் நதிகளைப் புண்ணியநதி என்கின்ருேம். அல்லல்மிகு உலகில் எவ்வளவோ குற்றங்கள் நாம் அறிந்தும் அறியாமலும் செய்கின்ருேம். அறிந்து செய்த குற்றங்களை நினைக் கும்போது, மனம் படாதபாடுபட்டு, 'செய்த பாவத்திற்குப் பரிகார மில்லையா?' என்று ஏங்கித் தவிக்கின்றது. அப்போது ஆத்ம சாந்திப் பீடாதிபதிகளாக விளங்கும் குருநாதன் திருவடிகளில் விழுந்து மன்னிப்பைக் கேட்கின்றது, சரணமடைகின்றது மாசு படிந்த மனம். அந்த மாசைத் துடைக்கவல்ல ஆத்மீகச் சக்கர வர்த்திகள் நம்மைத் தூய்மையாக்கப் புனித நீராடச் செய்வதும் வழக்கத்தில் இருந்து வருகிறது.

மகாமகம் என்பது என்ன? எதற்காக மக்கள் லட்சக்கணக்கில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கொருமுறை கும்பகோணத்திலுள்ள மகா மகக்குளத்திற்கு விரைகின்றனர்? இதை விளக்க ஒரு புராணக் கதையும் உண்டு. மக்கள் தாம் செய்த பாவங்களைப் போக்கிக் கொள்ள புண்ணிய நதிகளில் குளிக்கின்றனர். நீராடும் மக்களிட மிருந்து நீங்கிய பாபங்கள் நதிகள்மீது சுமந்து கொண்டே வரு கின்றன. இப்படிப் பாபச்சுமை சேரச்சேர இவைகளை இந்த ஜீவ நதிகள் எங்கே கொண்டுபோய்ப் போக்கிக் கொள்வது? இதைக் கேட்க கங்கை, யமுனை கோதாவரி, காவிரி, நர்மதை, சரஸ்வதி, குமரி, பயோஷ்ணி, சரயூ என்ற ஒன்பது நதிகள் ஒருநாள் சர் வேசுரனை அடைந்தன. "பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை சிம்மராசியில் குரு சேரும்போது குடந்தையில் கும்பலிங்கத்

தினின்றும் தோன்றிய தடாகத்தில் குளித்தால் உங்கள் பாபச் சுமைகளை நீங்கள் போக்கிக்கொள்ளலாம்" என்று ஆண்டவன் திருவாய்மலர்ந்தருள, அதன்படி இந்த ஒன்பது நதிகளும் பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை இங்குவந்து நீராடிச் செல்வதாக ஐதீகம் உள்ளது. இதைக்கேட்கும் மக்களுக்குச் சும்மா இருக்கமுடியுமா? ஒரு பெரு திருவிழாவையே கொண்டாடி மகிழும் வண்ணம் தம் பாபங்களையெல்லாம் போக்கிக்கொள்ள மகாமகத்தன்று கும்பகோணத்திற்கு உலகிலுள்ள பல கோணங்களிலிருந்தும் பெருவாரியாக முந்திக் கொள்கின்றனர்.

பாபத்தைத் தீர்க்க தீர்த்தம் ஒன்றுதானு? தீர்த்தத்தைத் தர வல்ல நாதனுல் முடியாததுண்டா.? குருவால் பாபத்தைப்போக்க முடியாதா? என்றுகூட குருபக்தியில் ஈடுபட்டுள்ள உள்ளங்கள் கேட்கலாம். குருவினுடைய திருவடிகளுக்கே இந்தத் தீர்த்தத்தின் பெருமை உண்டு என்று கைவல்ய நவநீதம் உரைக்கின்றது.

"குலவுசற் குருவின்பாதக் குளிர்புனல் தலைமேற்கொண்டால்
உலகினிற் றீர்த்தமெல்லா முற்றபேறடைவார்"

— கைவல்யநவநீதம்

குருவால் முடியாததொன்றில்லை என்றே சுருக்கமாகக் கூறிவிடலாம். அதனை விளக்க ஒரு கதையும் உண்டு. காசிக்கருகில் ஒரு ஆசிரமம். புண்ணியம் தேடப் புறப்பட்ட புண்டரீகன் என்பவன் வழியில் காசி எங்குள்ளது என்று ஆசிரமவாசியை விசாரித்தான் "அது எங்கிருக்கின்றதோ" என்ருர் பெரியவர். காசிக்குப் பக்கத்திலிருந்தும் அது எங்குள்ளது என்பதைப் பெரியவர் அறியவில்லையே என்று ஏளனம் செய்த புண்டரீகன் அந்த ஆசிரமத்திற்கு அருகிலேயே இரவைக்கழிக்கத் தங்கினுன். விடியற்காலையில் மங்கிய நிலவொளியில் அருவருக்கத்தக்க கோலத்தில் ஆசிரமத்திற்கு மூன்று மங்கையர் வந்தனர். அவர்கள் ஆசிரமத்தில் தூசிகளைத் துடைத்து, வாசலிலும் முற்றத்திலும் சாணமிட்டுப் பெருக்கி கோலமிட்டு, மலர் பறித்து சுத்தம் செய்துவிட்டு ஆசிரமத்தை விட்டு நகர்ந்தனர். திரும்பிவரும் பெண்மணிகள் ஒளிமயமான இன்பக் காட்சியாக உருமாறி விட்ட விந்தையைக் கண்ட புண்டரீகன் அவர்களைக் கண்டு விபரம் கேட்டான். அவர்கள் மூவரும், கங்கை, யமுனை, சரஸ்வதி என்ற நதிகளென்றும், மக்கள் செய்த பாபச் சுமையை மக்கள் குளிக்கும்போது ஏற்றுக் கொண்ட அவர்கள், அதை நீக்கவே இந்த ஆசிரமத்தில் உள்ள குக்குட முனிவருக்குப் பணிவிடை செய்து தம் சுயரூபத்தை அடைகின்றனர் என்றும் கூறினர். புண்ணிய க்ஷேத்திரமாகிய காசியை அறியாத ஒருவர் தன் தாய்தந்தையரை தெய்வமாகக் கருதி அவர்களுக்குப் பணிவிடை செய்ததன் மூலம்

புண்ணியவாளுக வாழ்வதை நதி தேவதைகளிடமிருந்து அறிந்து கொண்ட புண்டரீகன், இது யாகம், யக்ஞம், தானம், தவம், தீர்த்தாடனம், க்ஷேத்ராடனம் இவைகளால் பெறும் பயனைவிட அதிக பலன் அளிக்கவல்லது என்பதையும் உணர்ந்தார். நதிகளின்மேல் படிந்த கோடிக்கணக்கான பாபிகளின் சுமைகளையெல்லாம் நதி தேவதைகள் இவரது பாத சேவையால் போக்கிக் கொள்கின்றன. இதனைக் கேட்ட புண்டரீகனின் கண்கள் திறக்கப்பட்டன. குக்குடமுனிவர் திருத்தாள்களில் மட்டும்தானு அவன் விழுந்தான். தான் இது வரை புறக்கணித்திருந்த தாய் தந்தையரின் திருத்தாள்களையும் வணங்கிப் புண்ணியனுனுன்.

இந்தக்கதை ஒரு பேருண்மையை விளக்குகின்றது. ஒரு புண்ணிய மூர்த்தியின் உறவு கிடைத்துவிட்டால் அதுவே நமக்கு நம் பாப மூட்டைகளை உதறித்தள்ளவும் புண்ணியம் சம்பாதித்துக் கொள்ளவும் உதவுகின்றது. நமது சாமிகள் யாகத்திலும் யக்ஞத்திலும், தானத்திலும், தவத்திலும், தீர்த்தாடனத்திலும், க்ஷேத்ராடனத்திலும் மிக உயர்ந்தநிலை அடைந்தவர்கள். குக்குட முனிவர் போன்றும் தாய் தந்தை பக்தியினுலும் உயர்ந்தவர். இத்தகைய குருமகராஜனுடனேயே பக்தர்கள் 1968ல் கும்பகோணத்திற்குச் சென்று மகாமகம் காணும் பேறுபெற்றனர். காலை 11 மணிக்கு மகாமகக் குளத்திற்கு குருமகராஜனைத் தொடர்ந்து சென்றனர் பக்தர்கள். திருச்சானூர் திரு. M. G. சாரி அவர்கள் வேத மந்திரங்கள் ஓத சாமிகள் மகாமகத்தில் நீராடினுர். அதன் பின் ஒவ்வொரு பக்தர்களையும் அழைத்துதன் திருக்கரத்தாலேயே மூன்றுமுறை வெள்ளிக்குடத்தில் தீர்த்தம் எடுத்து தலையில் ஊற்றினுர். மகாமக தீர்த்தத்தால் பாபம் ஒழிந்தது என்று மகிழ்ச்சியுற்ற உள்ளங்கள் கருணுகரப் பெருமாளுக விளங்கும் குருமகராஜன் திருக்கரங்களினுலேயே தீர்த்தம் அருளப் பெற்ருேம் என்ற பேருவகையில் மிதந்து கொண்டிருந்தன. அதன்பின் சாமிகளோடு பக்தர்கள் காவிரிநதிச்குச் சென்றனர். இங்கு அவ்வளவு ஆள் நெருக்கம் இல்லை. அவசரமில்லை. தொந்தரவுமில்லை. அமைதியாக சாவதானமாக விலாசமாகக் குளிப்பதற்கு இடமும் சூழ்நிலையும் இருந்தன. உற்சாகமிகுந்த சாமிகள் இங்கும் தன் திருக்கரத்தினுலேயே சீடர்களுக்கு வெள்ளித் திருக்குடத்தில் காவிரித் தண்ணீர் மொண்டு பன்னீர் மணங்கமழ ஊற்றினுர்கள். கடைசியில் ஒரு குடம் நிறைய தண்ணீரை டாக்டர் T. V. அரங்கநாதனிடம் கொடுக்க அது முற்றும் பன்னீராகவே மாறிவிட்டது. உற்சாகம் பொங்குகின்ற சாமிகள் தொடர்ந்து சித்தாடத் திருவுளம் கொண்டார். சென்னை திரு. K. K. வர்மா அவர்களைக் காவிரி நீருக்குள் இருக்கும் ஆற்றுமணலை அவர் துண்டில் எடுக்கச் சொன்னுர் சாமிகள். தண்ணீரிலுள்ள ஈரத்துண்டை வர்மா அவர்கள் நீருக்கு மேலே

தூக்கியபோது அது காய்ந்த துண்டாக மாறிவிட்டது. அதில் அள்ளிவைத்திருந்த ஆற்றுமணலும் அதே அளவில் சர்க்கரையாக மாறிவிட்டது. காவிரித் தண்ணீரைப் பன்னீராக மாற்றிய சாமிகள் காவிரி மணலையும் சர்க்கரையாக மாற்றிவிட்டார். முகர்ந்து பார்க்கவும் ஒரு அற்புதம்! ருசி பார்க்கவும் ஒரு அற்புதம்!

மகாமகத்திற்கு வருகை தந்த சாமிகள் கும்பகோணத்தில் தொழிலதிபர் பக்தர் ஜனுப் M. A அப்துல் ரசாக் அவர்கள் பங்களாவில் பக்தர்களோடு தங்கி இருந்தார். அந்தப் பங்களாவில் சாமிகள் ஆடிக் காட்டிய அற்புதங்கள் புதுமையோடும் சந்தர்ப்பத்திற் கேற்ற சுவையோடும் இருந்தன. சாமிகள் தான் தங்கி இருந்த அறையில் சாம்பிராணி வரவழைத்து எழுப்பிய திவ்விய பரிமளம் இல்லம் முழுவதும் நிறைந்து பக்தர்களை மெய்மறக்க வைத்த விந்தையை பக்தர்கள் மறக்கமுடியுமா? பக்தர்களுக்குத் தயாராகும் சாம்பாருக்காக சாமிகள் உள முவந்து சாம்பார் பொடி வரவழைத்துக் கொடுத்ததை சமையல்காரர்களும் விருந்தாளிகளும் மறக்க முடியுமா? அங்கு ஒரு செயற்கை (பிளாஸ்டிக்) பூவிற்கும் இயற்கை நறுமணம் ஊட்டியதை இல்லத் தலைவரும் அவர் குடும்பத்தாரும் மறக்க முடியுமா? இப்படி பல திருவிளையாடல்கள்.

மணிமந்திர சுபமங்கள சாமிகளின் ஜோசிய பாண்டியத்தையும் மந்திரப் பேராற்றலையும் இரட்சைக் கயிற்றின் சக்தியையும் மணத்திற்கு அருளும் மஞ்சள் கயிற்றின் மகத்துவத்தையும் மஞ்சள் கிழங்கு மகிமையையும் தலம் தீர்த்தம் காட்டியருளும் அருமையையும் உணர்கின்ற நாம் சாமிகள் நமக்கு வாய்த்துள்ள தெய்வீகச் செல்வம் என்பதை உணர்கின்றோம். இத்தகைய கல்யாண குண நலன்கள் ஒருங்கே அமைந்த மகிபரைச் சுபமங்கள நாதரென்றே மங்கள நாம சங்கீர்த்தனம் சொல்வோம். வாரத்திலுள்ள ஏழு நாட்கள் பெயர்களைக் கொண்டும் ஆரம்பிக்கும் பாமாலை தொடுத்து சாமிகளை தேவா தேவா என்று போற்றிடுவோம்.

1. பன்றிமலை சாமி எங்கள் தேவா தேவா — உன்றன்
   பாதமலர் போற்றுகின்றோம் தேவா தேவா
   அங்கையற் கண் அம்மை மகிழ் தேவா தேவா — உன்றன்
   அன்பின் புகழ் பாடுகின்றோம் தேவா தேவா

2. ஞாயிறெனவே உதித்தாய் தேவா தேவா — எங்கள்
   ஞாலமெல்லாம் வாழவைத்தாய் தேவா தேவா
   ஆயிரம் பல்லாயிரம் பேர் தேவா தேவா — உன்றன்
   ஆத்தும ஞானம் கொழிப்பர் தேவா தேவா

3. திங்களென சாந்த முகம் தேவா தேவா — உன்றன்
தேன் கலந்த தெய்வமொழி தேவா தேவா
மங்களம் அருளுகின்ற தேவா தேவா — எங்கள்
மனக்கவலை போக்க வல்லாய் தேவா தேவா

4. செவ்வாய் மதுரமொழி தேவா தேவா — உன்றன்
சுந்தர நகை பொழியும் தேவா தேவா
எவ்வாய்க்கும் ஊட்டுகின்ற தேவா தேவா — எங்கள்
எண்ணம் ஈடேறச் செய்வாய் தேவா தேவா

5. புதன் அருள் நலம் வாய்ந்த தேவா தேவா — எங்கள்
புண்ணிய மூர்த்தியே நாதா தேவா தேவா
சுதன் அச்சுதன் மகிழ் தேவா தேவா — எங்கள்
சிந்தைதனைக்குளிர வைப்பாய் தேவா தேவா

6. வியாழன் மகிழும் குரு தேவா தேவா — எங்கள்
வாழ்வினுக்கோர் மணி விளக்கே தேவா தேவா
நியாயம் வழங்கும் வள்ளல் தேவா தேவா — எங்கள்
நோயை அகற்ற வந்தாய் தேவா தேவா

7. வெள்ளி வளர்மதியே தேவா தேவா — எங்கள்
வான் கருணை மாமழையே தேவா தேவா
வள்ளி கணவன் மகிழ் தேவா தேவா — எங்கள்
வாழ்வில் வளம் ஊட்ட வந்தாய் தேவா தேவா

8. சனி ஈசன் அருள்பெற்ற தேவாதேவா — எங்கள்
சங்கடத்தை நீக்க வந்தாய் தேவாதேவா
கனியை எமக்களிப்பாய் தேவாதேவா — ஞானக்
கனியும் எமக்களிப்பாய் தேவாதேவா

9. கானத்தால் கோலமிட்டோம் தேவாதேவா — எங்கள்
கோயில் உள்ளம் திறந்துவைத்தோம் தேவாதேவா
தியானத்தால் உமை அழைத்தோம் தேவாதேவா — உன்றன்
திவ்விய மலர்பாதம் வைப்பாய் தேவாதேவா

10. உன்னருமை பேசப்பேச தேவாதேவா — எங்கள்
வாய்களெல்லாம் தித்திக்குதையா தேவாதேவா
எம்மருமைச் செல்வகுருநாதா தேவா — எங்கள்
இஷ்டத்திற்குகந்த குருநாதா தேவா.

11. மானிலம் செழிக்கவைத்தாய் தேவாதேவா — உன்றன்
மக்களெல்லாம் வாழவைப்பாய் தேவாதேவா
மானிடரும் தேவரென தேவா தேவா — உன்றன்
மகிமையினுல் மாற்றவைப்பாய் தேவாதேவா

12. பகையெலாம் வென்றிடுவாய் தேவாதேவா — எங்கள்
பலம் உன்றன் பக்திநெறி தேவாதேவா
திகைப்புண்டோ தெய்வம்நீயே தேவாதேவா
துள்ளு மனப்பாடலிதோ தேவாதேவா

T. D. மீனுட்சிசுந்தரம்

**சுப மங்கள நிகழ்ச்சிகள் :**

சுபமங்கள சாமிகளாக விளங்கிடும் நமது குருநாதன் செயல்களில் புதுமையும் இனிமையும் பூத்துக் குலுங்குகின்றன. நல்ல வரன்களையும், மக்கட் பேறையும் அருள்கின்ற சாமிகள் ஆடி அருளுகின்ற சித்துக்களில் இன்பம் தழைக்கின்றது, மங்களம் பொங்குகின்றது. சாமிகள் திருப்பதிக்கு 1969இல் ஜனவரியில் சென்ருர். சாமிகள் செல்லும் காரைத் தொடர்ந்து பல பக்தர்கள் பல கார்களில் சென்றனர். சாமிகள் ஓரிடத்தில் இறங்கினுர். அங்கிருந்த ஒரு கல்லை எடுத்து சற்று தூரத்தில் வீசி அடித்தார். அந்தக்கல் சுக்கு சுக்காக உடையவில்லை. கல்கண்டாகவும் மாறவில்லை. ஆனுல் ஒரு அற்புத சாம்பிராணியாக உடனே மாறிவிட்டது. அந்த அருமைச் சாம்பிராணி, விட்டெறிந்த அதே கல் அளவு இருந்ததும், நிறத்திலும் அதே கல் போன்று இருந்ததும், குணத்திலும், மணத்திலும் மட்டும் சாம்பிராணியாக மாறிவிட்டதும் கண்டு அன்பர்கள் மகிழ்ந்தனர். அந்தச் சாம்பிராணியை எடுத்துவந்த பக்தர் கிரி அவர்கள் மனைவி கூடியிருந்த ஆவல்மிகுந்த பக்தர்களுக்கும் அதை பகிர்ந்து கொடுக்கும்போது அன்பர்கள் மகிழ்வை அளவிட முடியுமோ? மங்கள மூர்த்தியிடமிருந்து சுபமங்களப் பொருள் சாம்பிராணி கிடைத்ததைப் பெரும் பேருகக் கருதினர் சாமிகள் பக்தர்கள்.

சாமிகள் ஆடிக்காட்டுகின்ற சில சித்துக்கள் உலகத்திலேயே இதுவரை நடக்காத, நாம் கேள்விப்படாத அதிசயங்களாகவே அமைந்து விடுகின்றன. (வைட்டமின்) சத்துப் பில்லைகளைச் சாப்பிட்டால் அவை உள்ளே சென்று கரைந்து இரத்தத்தோடு சக்திப் பொருளாகச் சேருகின்றன. வாயில் போட்டு விழுங்கிய சத்துப் பில்லைகள் உடலிலிருந்து வெளியே வரமுடியுமா? முடியாதென்று கூறினுர் சாமிகளிடம் ஆசியத்தோடு உரையாடிக்கொண்டிருந்த ஒரு டாக்டர். சாமிகள் அவரையே இரண்டு சத்துப் பில்லைகளை சாப்பிடச் சொன்னுர். சாப்பிட்ட டாக்டர் அடுத்த நிமிடமே சிறுநீர் கழிக்கும் தனி

யறைக்கு விரைந்தார். அங்கிருந்து திரும்பிவரும்போது அவர் வெட்கத்தால் தன் முகத்தை தன் புடவை முந்தானியால் மறைத்து தன்னிருப்பிடம் விரைந்தது எதை விளக்கும்? சாமிகள் சொன்ன படியே நடந்தது என்பதைத்தான் விளக்கும்! இது நடந்தது மதுரையில்!

மதராசில் இத்தகைய அற்புதம் வேறொன்று நடந்தது "வாசி சித்தியானல் சிறுநீரும் பன்னீராகும்" என்றார் சாமிகள். சாமிகள் விளையாட்டாகச் சொல்கின்றார் என்று நினைத்த டாக்டர்கள், உண்மை யிலேயே சாமிகள் கூறியதை மெய்ப்பித்துக் காட்டியபோது தம் புலன்களையே நம்பமுடியவில்லை. இதைக்கண்ட டாக்டர் குமரவேல் டாக்டர் நரேந்திரன், கவியோகி சுத்தானந்த பாரதியார், திரு. K. K. வர்மா முதலிய பக்தர்களுக்கு சிவராஜயோகி ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளால் ஆகாததொன்றில்லை என்பது விளங்காமலா இருக்கும்? சாமிகளுடைய திருக்கரம் வருடினாலே மணம் எழுப்புகின்றது. தண்ணீர் பன்னீராகின்றது. இதுவும் நடக்கும்! எதுவும் நடக்கும்!!

ஒருநாள் டாக்டர் T. V. அரங்கநாதன் கொண்டு வந்த வடை களில் ஒன்றில் பாதியை சாமிகள் டாக்டரிடமே கொடுத்து சாப் பிடச் சொன்னார். டாக்டர் தான் கையில் சாமிகளிடமிருந்து பெற்றுக்கொண்ட வடையை வாயில் வைத்ததும் வடை தித்தித் தது; காரணம் பாதிவடை வாயில் சென்றதும் வடையாக இருக்க வில்லை, அது அதே அளவில் பாதி ஜிலேபியாக மாறிவிட்டது. இதைக்கேட்டுக் கொண்டிருந்த அத்தர் புஷ்ப வியாபாரி ஜனுப் அப்துல் சத்தார் தன்னுடைய அனுபவம் ஒன்றையும் கூறினார். ஜவ்வாது, அத்தர், மருக்கொழுந்து, வெற்றிவேர் வாசனைகள் தயா ரிக்கும் அந்த வியாபாரி சாமிகள் இந்த மணங்களை பக்தர்கள் கைகளில் தம் கரத்தால் தடவியும் தடவாமலும் எழுப்புவதை பல முறைகள் கண்குளிர கண்டிருக்கின்றார். ஒரு நாள் சாமிகள் அவ ருடைய கையில் ஒரு இடத்தில் தன் கையால் வருடினார். பக்தர் முகர்ந்து பார்த்தார். மறுபடியும் முகர்ந்து பார்த்தார். இப்படி பல தடவை முகர்ந்து பார்த்ததைக் கண்டவர்கள் ஏன் இப்படி செய்து பார்க்கின்றார் என்று யோசித்துக் கொண்டிருக்கும் போது சாமிகள், "அது என்ன வாசனை" என்று கேட்டார். "அதைத் தான் கண்டுபிடிக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். இந்த வாசனை ஜவ்வாது மணமாகவும் இல்லை, அத்தர் மணமாகவும் இல்லை, சந்தன மணமாகவும் இல்லை, பன்னீர் மணமாகவுமில்லை, வேறு எந்த புஷ்பங்கள் மணமாகவுமில்லை. இது நான் உலகத் திலேயே கண்டிராத புதுமணமாக வீசுகிறது" என்று தன் புள காங்கிதத்தை விரித்துரைத்தார். "வாசனைப் பொருள் வியா பாரிக்கே விளங்காத ஒரு வாசனையும் உண்டா?" என்றார் சாமிகள்.

தெய்வீகத்தால் ஏற்பட்ட மணத்திற்கு தனிப்பட்ட வாசனையல்லவா ஏற்படும். வாசனைப் பொருள் வியாபாரியே கண்டும் கேட்டிராத வாசனைப் பொருளை வருவிப்பதிலல்லவா சாமிகள் ஆடி அருளுகின்ற அற்புதத்தின் சிறப்பும் அமைந்திருக்கின்றது.

ஸ்ரீரங்கத்தில் சாமிகள் சிவாசாரிய குலபூஷண ஸ்ரீ T. S. சாம்பசிவமூர்த்தி அவர்களுக்கு பூஜை அறையிலுள்ள ஈரமான சந்தனத்தை கெட்டியான உலர்ந்த சந்தனக்கட்டியாக மாற்றி அருள் புரிந்ததைப் படித்து மகிழ்ந்தோம். (பக்கம்-595) திருப்பதியிலிருந்து 1969 ஜனவரியில் திரும்பிவந்த சாமிகளை ஸ்ரீ T S. சாம்பசிவமூர்த்தி அவர்கள் திருச்சானூரில் திரு சாரி அவர்கள் வீட்டில் கண்டு தரிசித்தார். அவரிடம் கூடவே சாமிகள் பேரருளோடு ஆசீர்வதித்துக் கொடுத்த சந்தனக்கட்டியும் இருந்தது. சாமிகளிடம் மனமுவந்து அந்த சந்தனக் கட்டியை காண்பித்த மூர்த்தி அவர்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. அடுத்தகணம் கைகளில் சாமிகள் சொற்படி மூடியிருந்த அந்த அற்புத சந்தனக்கட்டி கைகளை விரிக்கும்போது இருந்த இடத்தையும் ஏமாற்றி காண்பவர்களையும் ஏமாற்றி மறைந்துவிட்டது. மங்கள சந்தனக்கட்டி மறைந்ததால் ஏமாற்றமும் கவலையும் படர்ந்த மூர்த்தி அவர்கள் முகத்தில் மறுபடியும் மகிழ்ச்சியும் பெருமிதமும் பெருக்கெடுத்தோடின; காரணம் மறைந்த பொருளைச் சாமிகள் மீட்டுக் கொடுத்ததே.

மஞ்சள் தீர்த்தத்தில் துவைந்த திருமுருகனது திருப்பாதங்களின் அடிச்சுவடுகளை சாமிகள் பல பக்தர்களுக்குப் பட்டுத்துணிகளிலும் காகிதத்திலும் வரவழைத்துக் கொடுப்பதுண்டு. இந்தப் பாதங்களையும் அன்பர்கள் விருப்பப்படி சாமிகள் வரவழைப்பதிலும் ஒரு தனி அழகு உண்டு. சென்னை பக்தர் திரு. K. V. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு ஒரு ஆசை மனத்தில் அரும்பியது. ஈஸ்வரி மடியில் தவழுகின்ற சின்னக்குழந்தை பாலமுருகனின் சின்னஞ்சிறு பாதங்கள் தனக்குக் கிடைக்க வேண்டும் என்று சாமிகளை வேண்டிக் கொண்டார். அவருடைய விருப்பத்தையும் அருள்நாதர் பூர்த்தி செய்தார். அன்பருக்குக் கிடைத்தது பாலமுருகனின் அழகுத் திருப்பாதச் சுவடுகள்.

சாமிகள் பல பக்தர்களுக்கு அருள் கயிறு வரவழைப்பதையும் பக்தர்கள் அறிவர். இரட்சைக்கயிறு, மஞ்சள் கயிறு – இவைகளையும் சாமிகள் உற்சாகமிகுந்து சில வேளைகளில் வரவழைப்பதுண்டு கோவை பக்தர் திரு V. கிரி அவர்கள் மனைவிக்கு திருப்பதியில் ஒரு மங்கள நவநிறங்கொண்ட அழகுக்கயிறு வரவழைத்து கட்டினர். சாமிகளால் எதுதான் முடியாது? ஒரு கன்னிக்கு வாய்க்கப்போகும் மணாளனே சாமிகள் நினைத்த மாத்திரத்தில் கன்னிக்குமுன் குதித்து வரும்போது இந்த அற்புத கயிறுகளா குதித்துவராமல் இருக்கும்?

சேலம் வழக்கறிஞர் பக்தர் A. R. சீனிவாசன் அவர்கள் பூஜை அறையில் சாமிகள் சில வருடங்களுக்கு முன் இரண்டு அங்குல பிள்ளையார் சுழி வெற்றிலைக் காம்பின் ரசத்தால் சுவரில் எழுதி அமைத்தார். "இதனுடைய மகிமை போகப் போகத் தெரியும்" என்றும் திருவாய் மலர்ந்தருளினார் சாமிகள். நாட்கள் செல்லச் செல்ல பக்தர்கள் அனுபவமும் பக்தியும் பெருகுவது போன்றே இந்த தெய்வீக அடையாளம் பரந்து விரிந்து வருகின்றது. அது ஆதியில் இருந்ததைவிட அளவில் இரு மடங்குக்குமேல் சுற்றிலும் பெருகி வருவது பார்ப்பவர் கண்களுக்கும் கருத்துக்கும் பேரதிசய மாக விளங்குகின்றது.

பக்தர் திரு சங்கர் ஹெக்டே அவர்கள் மனைவிக்கு சாமிகள் இரண்டு எலுமிச்சம்பழங்கள் கொடுக்கின்றார். அதில் ஒன்றை அவர் கைகளில் வைத்து மூடச் சொல்லி, கையை விரித்துப் பார்க்கச் சொல்ல, அந்த இயற்கை மஞ்சள் எலுமிச்சம்பழம் அப்படியே ஒரு செயற்கை பிளாஸ்டிக் எலுமிச்சையாக மாறிவிட்டது. சாமிகள் அந்த பிளாஸ்டிக் எலுமிச்சை மறுபடியும் சில நாட்களில் இயற்கை எலுமிச்சம்பழமாகி விடும் என்றும் கூறி உள்ளார். ஹெக்டே சதிபதிகள் அந்தப் பழத்தை பக்தி விஸ்வாசத்தோடு பூஜையில் வைத்துப் போற்றி வருகின்றனர்.

திருப்பதியில் சாமிகள் 1969 ஜனவரியில் எழுந்தருளியபோது வாலிபர் ஒருவர் சாமிகளிடம் தன்னுடைய உடல் கோளாறைத் தனித்து பேசினார். சாமிகள் அந்த இளைஞரிடம் பக்தர்கள் முன் னிலையில் ஒரு காம்புள்ள வாழைப்பழத்தைக் கொடுத்தார், பழுத் திருந்த பழத்தில் சில கருப்பு புள்ளிகளுமிருந்தன. பழத்தை உரிக்கச் சொன்னார். சாமிகள். அதன்பின் அந்த உரித்த பழத்தை யும், பழத்தின் தோலையும், பழத்தின் காம்பையும் ஒன்றன்பின் ஒன்றாக வாயில் போட்டு நன்றாக மென்று விழுங்கச் சொன்னார் சாமிகள். அதன்படியே செய்தார் இளைஞர். அடுத்தாற் போல் அவ ருடைய டிரௌசர் பாக்கெட்டில் என்ன இருக்கின்றதென்று சாமிகள் பார்க்கச் சொன்னார். என்ன ஆச்சரியம்! சற்று நேரத்திற்குமுன் எல்லோர் முன்னிலையிலும் சாப்பிட்ட அதே பழத்தை இளைஞர் தன் டிரௌசர் பையிலிருந்தும் எடுத்தார். அதே பழம்! அதைப் பற்றி சந்தேகமே இல்லை. அதே காம்பு! அதே அளவு பழம்! அதே நிறம்! அதே கருப்புப் புள்ளிகள் பழத்தின் மேல்! "நீங்கள் இதை கணபதிக்கு என்னோடு வைத்து பூஜை செய்யுங்கள். திரும்பிப் பார்க்காமல் செல்லுங்கள்" என்று கூறி இளைஞரை சாமிகள் அனுப்பி வைத்தார்.

சமீபத்தில் கல்யாணமான தன் மகளிடமிருந்து ஒரு கடிதமும் வரவில்லை என்று மதுரை பக்தர் டாக்டர் சுப்பையா சாமிகளிடம்

சொல்லி வருத்தப்பட்டார். " நீங்கள் ஒன்றுக்கும் வருத்தப்பட வேண்டாம். உங்கள் பெண் பாதி லட்டர் எழுதி வைத்திருக்கின்றது. மற்ற பாதியையும் எழுதி இன்று தபாலில் சேர்த்துவிடும் " என்றார் சாமிகள். சாமிகள் உரைத்தது போன்றே அடுத்த நாள் தன் அருமை மகளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது, அதில் பாதி மையால் எழுதி இருந்தது பாதி பென்சிலால் எழுதி இருந்தது.

டாக்டர் T. V. அரங்கநாதன் ' சிகரெட்டு சாமி ' என்று அழைக்கப்பட்ட ஒரு மகானிடம் தொடர்பு கொண்டிருந்தார். " அடிக்கடி சிகரெட்டு சாப்பிடுவதால் அவரை சிகரெட்டு சாமி என்போம். அவர் என்னிடம் ஒரு எலுமிச்சம்பழம் கொடுத்தார். அது இரண்டு வருடங்கள் கெட்டுப்போகாமல் இருந்தது. நான் சாமிகளைக் கண்டு தரிசனம் செய்த ஒருசமயத்தில் சாமிகள் எனக்கு ஒரு தேங்காய் வரவழைத்துக் கொடுத்தார். அதை எங்கோ வைத்துவிட்ட எனக்கு அதை தவறிவிட்டோம் என்ற நினைப்பு இருந்தது. ஆனால் சாமிகள் கொடுத்த தேங்காய் பத்திரமாகவே என்வீட்டில் இருக்கின்றது " என்று அத்தேங்காயை போற்றி வருகின்ற டாக்டர் பெருமையோடு பேசுகின்றார்.

சென்னை திரு. K. K. வர்மா அவர்கள் அனுபவத்திலும் ஒரு புதுமையும், சிறப்பும் உண்டு. டாக்டர் நரேந்திரன் அவர்களிடமிருந்து சாமிகளைப் பற்றி கேள்விப்பட்ட திரு. வர்மா திடீரென்று ஒருநாள் பழநிக்கு தண்டாயுதபாணி தரிசனத்திற்குப் புறப்பட்டார். வழியில் திண்டுக்கல்லில் இறங்கி சாமிகளைக் காணச் சென்றார். அப்பொழுது சாமிகள் பூஜை அறைக்குள் பூஜை செய்து கொண்டிருந்தார். வெளி அறையில் யாருமில்லை. வெளியறையில் சாமிகளுக்கென்றே அமைந்திருக்கும் ஆசனத்தில் ஜம்மென்று உட்கார்ந்தார் அப்பொழுது அது குரு ஆசனம் என்பதை அறியாத புதியவர். பூஜை முடிய, பூஜை அறைக்கதவு திறந்தது. சோபாவிலிருந்து எழுந்து வந்த வர்மா அவர்கள் பூஜை அறையில் உள்ள வெள்ளி விநாயகரைக் கண்டு மனம் பூரித்தார். அவர் விநாயகப் பெருமான் பக்தர். சாமிகளும் அவருக்கு விபூதி பிரசாதம் அளித்தார்; ஒரு அழகான ரோஜா மாலையையும் அளித்தார். " எனக்கு உபதேசம் வேண்டும் " என்றார் புதிதாக வந்திருந்த பக்தர் வர்மா அவர்கள். " இப்பொழுது நேரம் சரியில்லை " என்றார் சாமிகள் புன்முறுவலோடு. ' ஒரு ரூபாய் மதிப்புள்ள மாலையை அளித்த சாமிகளுக்கு என்ன செய்வது ' என்று யோசித்தார் புதிய பக்தர். சாமிகளிடம் பூஜைக்கென்று கூட பணம் கொடுத்தால் வாங்குவாரோ என்பதும் அவரது சந்தேகம். சாமிகளிடம் விடைபெற்றுக்கொள்ளும்போது சாமிகள் திருச்சொல்படி பூஜை அறைக்கு எதிரில் உள்ள பிள்ளையார் கோவிலுக்குச் சென்று கும்பிட்டார். அங்கு யாருமில்லை. மெதுவாக

தன்னிடமிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை பிள்ளையார் கோயி
லுக்குள் சேர்த்துவிட்டு புது பக்தர் திண்டுக்கல்லை விட்டு நகர்ந்
தார். மறுமுறையும் திண்டுக்கல்லுக்கு தன் குடும்பத்தாரோடு வந்த
போதும் ஒரு பத்து ரூபாய் நோட்டை யாருக்கும் தெரியாமல் பிள்ளை
யார் கோயிலுக்குள் சேர்த்துவிட்டுச் செல்ல தயங்கவில்லை வர்மா
அவர்கள். இதன்பின் டாக்டர் நரேந்திரன் அவர்களோடே வந்து
சாமிகளை தரிசிக்க சாமிகள் மனமுவந்து அவருக்கு ஒரு மங்களத்
தேங்காயும், அட்சதை அரிசியும், மலையாளத்தில் ஒரு ஆசிச்சீட்டும்
வரவழைத்து அருளினர். "நான் உங்களைக் கண்ட உடனேயே
நீங்கள் என் சீடர் என்பதை அறிந்துகொண்டேன்" என்று சாமிகள்
உரைத்ததும் பக்தர் மனதில் அப்படியே பதிந்து விட்டது.

சாமிகள் சில பக்தர்கள் மனங்களை கொள்ளை கொள்வதை
அந்த பக்தர்கள் உரைப்பதையே கேட்டால், அவை இலக்கிய
சுவையும் கற்பனைச்சுவையும் நிறைந்தவைகளாகவே இருக்கும்.
நான் 1969 ஜனவரியில் திருப்பதியில் கண்ட சில பக்தர்கள் அனு
பவங்களில் சிலவற்றையே கேட்டு மகிழ்வோம். திரு. N. இராம
கிருஷ்ணன் அவர்கள் (சென்னை போர்ட் டிரஸ்டில் அசிஸ்டெண்ட்
செக்ஷன் ஆபீசர்) சாமிகளை முதன்முதலில் 1965 செப்டம்பர்
8-ஆம் தேதி சந்தித்தார். சாமிகள் காட்டிய முதல் சித்து அவ
ருக்கு ஜாலம்போல் தெரிந்தது. அவர் ஒரு பேப்பரில் எழுதி
இருந்த ஒரு குறிப்பிட்ட எண்ணை சாமிகள் எடுத்துரைத்தது
அவருக்குப் பிரமாதமாகத் தெரியவில்லை. ஜாலம் செய்பவர் எவரும்
உரைக்க முடியுமே என்று நினைத்தார். இவர் மனதில் நினைத்ததை
உடனே அறிந்துகொண்ட சாமிகள் அவர் எழுதிய ஒரு காகிதத்தை
எரித்துச் சாம்பலாக்கி, அந்தகரிய சாம்பல்தூளை ஒரு தட்டில்
இருந்த தண்ணீரில் கரைக்கச்சொன்னர், அதே கடிதத்தை அதே
மையில் எழுதிய அதே வாசகத்தோடு அவர் பாக்கெட்டிலிருந்தே
வரவும் செய்தார் சாமிகள். இதைக்கண்டு ஆச்சரியப்பட்ட பக்த
ருக்கு சாமிகள் செய்து காட்டுகின்ற அற்புதங்கள் பல காத்துக்
கொண்டிருந்தன. சமீபத்தில் திரு. T. S. S. நடராஜன், M. A., B. L.,
அவர்கள் வீட்டில் டாக்டர் சுந்தரம் அவர்கள் விருப்பப்படி சாமி
கள் கேழ்வரகு வரவழைத்துக் கொடுத்ததும், அதைக்கண்ட திரு
கமலசாமி கிடைத்த கேழ்வரகுக்கு வேண்டிய பாசிப்பருப்பு கிடைத்
தால் கேழ்வரகு தோசை செய்யலாம் என்று கூற, சாமிகள் உடனே
அருள்கூர்ந்து சுமார் அரைப்படி வறுத்த பாசிப்பருப்பு வரவழைத்
துக் கொடுத்ததும் அவர் மனதில் அப்படியே பதிந்துவிட்டன.

திரு. G. சிவானந்தம் (செங்கல்பட்டு ஹைவேஸ் டிவிஷனல்
என்ஜினீர்) சாமிகளைப்பற்றி முதன் முதலில் படித்தது ஆனந்த
விகடனில். அமர்ந்த திருக்கோலத்தில் சாமிகள் வள்ளி தெய்வ

கேரோல் ராம் என்பவரும் இதை அடுத்து 1969 ஜனவரியில் சாமிகளைப் பார்க்க வந்தார். அவர் போர்ட்லாந்து (Portland) விருந்து வந்த உள இயல் ஆயுனர். அவர் தன் ஆராய்ச்சிக்குக் கீழ்நாட்டு யோக சாதனங்கள் எப்படிப் பயன்படும் என்பதை அறிந்து கொள்ளவே வந்தவர். சாமிகளிடம் பல கேள்விகளைக் கேட்டு பதில் அறிந்து சாமிகள் வயப்பட்டார். சென்னை திரு. பாஷியம், மதுரைப் பேராசிரியர் தியாகராசன், திருச்சி டாக்டர் T. V. அரங்கநாதன்—சாமிகளுக்கும் வெளிநாட்டு மேதைக்கும் அவரவர்கள் பேச்சுக்களைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துக்கொடுத்தனர். சாமிகள் அவரிடம் ஆடிக்காட்டிய அற்புதங்களை அவரால் மறக்க முடியுமா? அவர்வாயில் சாமிகள் போட்ட விபூதி சர்க்கரையானது, கேசரி கற்ண்டானது. தனது பிறந்த நாளில் சாமிகளைத் தரிசித்த அவருக்கு சாமிகள் அவர் வாயில் ஒரு பூவை வைத்து பிறந்த தின கேக்கை உண்டாக்கிக் கொடுத்தருளவும் தயங்கவில்லை. உதிர்ந்த பூக்கள் சாமிகள் அருளால் மாலையாக மாறின. அவருடைய வாழ்க்கையில் நடந்த, நடந்துவரும் விஷயங்களைக் சாமிகள் வாயிலாகக் கேட்ட அவர் அசந்தே போனார். சாமிகள் இரட்சைக் கயிற்றின் மகத்துவத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட இந்த வெளி நாட்டார் தனது மனதுக்குகந்த ஒருவருக்கும் ஒரு இரட்சைக் கயிற்றைச் சாமிகளிடமிருந்து வாங்கிக் கொள்ளவும் தயங்கவுமில்லை.

சமீபத்தில் மேற்கு ஜர்மனியிலிருந்து சாமிகளைக் காண ஒரு டாக்டர், டாக்டர் நரேந்திரனேடு வந்திருந்தார். அவரும் எண்ணிறந்த கேள்விகளைச் சாமிகளிடம் கேட்டுப் பதில் அடைந்து மகிழ்ந்தார். சாமிகள் அவருக்குக் கொடுத்த சர்க்கரை ஒரு கல்லாக மாறியது. அதை அவர் ஊருக்கும் கொண்டு போகும்போது அது புட்பமாக மாற வேண்டுமென்று சாமிகளைக் கேட்டுக்கொண்டார். அவர் இஷ்டம் பூர்த்தியாகுமென்று சாமிகளும் மனமுவந்து கூறினர். அவருக்குச் சாமிகள் ஜெர்மன் பாஷையில் அவர் வேண்டுகோளுக்கிணங்கி ஒரு அருள் சீட்டு வரவழைத்துக் கொடுத்தார்.

**கவிஞர் பக்தர்கள் :**

சுபமங்கள சாமிகளைப் பற்றிக் கவிஞர்களுடைய இன்பமூட்டும் அனுபவங்களையும் இங்குக் குறிப்பது பொருத்தமாக இருக்கும். கவி யோகி சுத்தானந்த பாரதியார் "4—12—68 மாலை கார்த்திகை பூஜை செய்து தியானித்தபோது வேல்முருகனைத் தோன்றி என் மனத்தில் புகுந்து நாணுர் குருபரமாத்மா" என்று சாமிகளை வழுத்துகின்றார். தன்னுடைய யோக அனுபவத்வதயும் இரண்டு பாடல்களில் வருணிக்கின்றார்.

"தகராகாசக் குகை நடுவே தணலும் சுத்தசத்தியனே
அகரவுகர மகரவுருவான ஞானக் கணபதியே
பகரவொண்ணுச் சித்திதரும் பன்றிமலைக் குருவருளின்
சிகரமிலகு சித்தொளியே சேயேன் அன்புத்தாய் நீயே.

சுத்தானந்த சுயஞ் சோதித்துரிய வெளியின் சுடர்விளக்கே
சிந்தங் கடந்த தகரகுகைத் தனிமோனத்தின் சக்திவளர்
சித்தர் சித்தி கணபதியே சித்தாந்தத்தின் மணிவிளக்கே
அத்தா என்னுள் விளையாடாய் அன்புவைத்துன் அடி
பணிந்தேன்."

இப்படிப் பாடும் தவயோகிக்கு இன்னுமொரு அனுபவமும் உண்டு. குருநாதன் தாள் மறவாத தவயோகி பூஜை செய்த மலர்களிலிருந்து ஒரு கணபதி கிடைத்தது தவயோகிக்கு. தவயோகியின் இன்பத்தை அளவிட முடியுமா?

தவயோகியின் உள்ளத்தில் அன்பு ததும்புகின்றது. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளுக்கு எழுதும் கடிதத்திலும் சாமிகளுக்கு ஆனந்த மொழிகளாகத் தன் அன்பை அறிவித்துக் கொள்வதையும் பார்த்து மகிழ்வோம.

" அன்பு முருகா அன்பு முருகா அருணகிரிக்குதவும்
இன்ப முருகா இன்ப முருகா — துன்பம்
துடைக்கும் இனிய துரையே என் அன்பின்
அடைக்கலத்தை நீ யேற்றருள் "

கவிஞர் திரு. R. P. தங்கராஜன் முதல் முதலில் சாமிகளைப்பற்றிக் கேட்டவுடனேயே சில வெண்பாக்களைப் பாடினர். ஒரு வெண்பாவோடேயே சாமிகளைக் காணச்சென்றார் 1—6—57இல். அந்த வெண்பா இதுதான்!

" நெஞ்சே வருந்தாதே நீங்கும் துயரெல்லாம்
அஞ்சாதே வெற்றியடைந்திடுவாய் — மஞ்சுதவழ்
பன்றிமலை சித்தர் அருள் பாலிக்க வந்துவிட்டார்
இன்பமே என்றும் இனி"

என்று, "பன்றிமலை சித்தர் அருள்பாலிக்க வந்துவிட்டார் வெற்றியடைந்திடுவாய்" என்று தன் நெஞ்சைக்கண்டு உரைத்தாரோ, அன்றே அவர் பணிசெய்யும் இலாகா நடத்தும் (அக்கௌண்ட்ஸ்) கணக்குப் பரீட்சையில் தேறினர். 1962-இல் மற்ருெருசமயம் கல்கத்தாவில் வேலைப்பயிற்சி பெற்று வரும்போது கையில் கட்டிய இரட்சைக்கயிறு இல்லையே என்று இளைத்திருந்த நேரத்திலும் கல்கத்தாவிலேயே திரு. சரவணே அவர்கள் இல்லத்தில் சாமிகளைக் கண்டு புது இரட்சைக் கயிறு ஒன்று பெற்றதும் அவரால் மறக்க

முடியுமா ? அவர் உளம்சுரந்து சாமிகளைப் பாக்களால் புகழ்வதைப் படித்து மகிழ்வோம்.

1. சித்திரைத் திங்கள் திகழ்பரணி நன்னாளில்
இத்தரையில் வந்துதித்த ஏந்தலே — புத்தொளியாய்ப்
பன்றிமலை தந்த பரிதியே தாள்பணிந்தோம்
என்றும் துணை நீ எமக்கு.

2. என்றும் துணையாய் இடரகற்றி வாழ்வினிலே
வென்றி அளிக்கின்ற வேந்தனே — பன்றிமலை
நாதனே இன்னருள் நல்கும் அருட்குருவே
பாதநிழல் தாராய் பரிந்து

3. பாதநிழல் வந்தடைந்தோம் பன்றிமலை நாயகனே
ஆதரவு காட்டிஎமை ஆட்கொள்ளாய் — பூதலமேல்
பல்லாண்டுன் பாதம் பணிகின்ற நற்பேற்றை
நல்லாய் அருள்வாய் நயந்து.

4. இன்பம் வரும்போ திறுமாப்புக் கொண்டிடோம்
துன்பம் வரினும் துவண்டிடோம் — அன்புருவாம்
பன்றிமலை நாதா நின் பாதநிழல் அல்லால் வே (று)
ஒன்றுமினி நாடோம் உவந்து

5. எத்தனைபே ரின்னல்கள் எம்மைவந்து சூழ்ந்தாலும்
சித்தம் தளர்ந்து சிதைந்திடுமோ — புத்தமுதாம்
பன்றிமலைத் தேவா நின் பாதமலர் பற்றிவிட்டோம்
என்றுமிலை துன்பம் எமக்கு.

* * *

6. கண்ணீர் பொழிந்தனர் கண்டுநின்றோர்; யோகியரும்
எண்ணம் அழிந்துவியப் பெய்தினர் — தண்ணருள்செய்
பன்றிமலை நாதாநீ பாலன் முருகன்தன்
பொன்னடியைக் காட்டிநின்ற போது.

இப்படி சாமிகள் சுபமங்கள சாமிகளாக பக்தர்கள் யாவருக்கும் அருள்சுரந்து இரட்சைக் கயிறு கட்டி, அருள்சித்து ஆடி, அகமகிழ வைக்கின்றார். சாமிகளுடைய புகழை மற்ற அன்பர்களும் பாடி மகிழ்வதையே கேட்போம்.

" விண்ணொடு கீர்த்தி கொண்ட
வேலவன் புகழை யெல்லாம்
கண்ணொடு பார்ப்பதற்குக்
கலியுகம் தன்னில் தோன்றி
மண்ணொடு மனித தேகம்
வடிவத்தில் வந்து பக்திப்
பண்ணொடு கலந்த எங்கள்
பன்றிமா மலையின் தேவே."

இப்படிப் போற்றுகின்றார் கவிஞர் திரு. சு. வழித்துணைராமன் (கங்கை பத்திரிகை). சாமிகள் அருளைக்கண்டு அகமகிழும் திண்டுக் கல் திருமதி. நாராயணி அம்மாள் ஆனந்த மயமாகப் பாடுவதையே கேட்டு மனங்களிப்போம்.

சக்தி ஸ்வரூப ஸ்ரீ சத்குருபாதம்
சகல சாஸ்திர புராணம் சாற்றும் நற்பாதம்
முக்தி கொடுக்கும் மகாமந்திரம் நிறைந்த பாதம்
மூவரும் நால்வரும் காணாதுரிய பாதம்
துளசிஹார பூஜித தூய ஜோதிபாதம்
துக்க நிவாரண ஸ்ரீ சத்குருபாதம்
அன்புஎனும் பாசத்தால் கட்டுண்ட பாதம்
அன்பர் உள்ளக்குகையில் வாழும் நற்பாதம்
அபயம் அளிப்பதில் அதிவிர தயாபாதம்
அப்பா குருநாதாவென்றால் ஆடிவரும் பாதம்
சட்டிசாமிகள் பாதம் சல்லிசாமிகள் பாதம்
குருநாதர் குருபாதம் வள்ளிமணாளன் பாதம்
தக்ஷிணா மூர்த்திபாதம் ஸ்ரீ நாராயணசாமி பாதம்
தக்ஷணம் மோட்சம்தரும் ஸ்ரீ சத்குருபாதம்
ஆனந்த ஜோதிபாதம் ஸ்ரீ நாராயணசாமி பாதம்
ஆனந்த ஜோதிபாதம் பன்றிமலைவாசன் பாதம்
ஆனந்தம் ஆனந்தம் சைதன்ய சாமிபாதம்
ஆனந்தம் ஆனந்தம் பன்றிமலை வாசன்பாதம்

**ஐயப்ப உற்சவத்தில் சாமிகள் :**

சமீபத்தில் 28—12—68இல் சாமிகள் பொள்ளாச்சிக்கு வருகை தந்தார். நன்கு அலங்கரிக்கப்பட்ட ஜீப்பில் இருத்தி சாமிகளை நான்கு வீதிகள் வழியாக ஊர்வலமாக பக்தர்கள் அழைத்துச் சென்ற னர். கோவை பக்தர் திரு. எ. வி. கிரி அவர்கள் விருப்பத்திற் கிணங்க 'மகாலிங்கம் ஆயில் மில்'லில் சாமிகள் ஏராளமான பேருக்கு அன்னதானமும், முந்நூறு பேர்களுக்கு வஸ்திர தான மும் செய்தார். பொள்ளாச்சி ஸ்ரீ ஐயப்ப பக்தஜன சங்கத்தார் சாமிகளை பூரண கும்பமரியாதையுடன் வரவேற்றனர். அவர் வாசித் தளித்த அன்பு மடலில் சில பாட்டுக்களைப் படித்து மகிழ்வோம்.

"அன்புருவாய் எப்பொழுதும் அன்பாகி நிற்பவர்கள்
இன்புருவாய் எப்பொழுதும் இன்புடனே – துன்போட்டுப்
பன்றிமலை சித்தர் தம்பாதத்தை பன்முறையும்
நன்மையாய் போற்றிடுவர் நன்கு."

* * *

பன்றிமலையில் பண்ணவர் துதிக்கும்
நன்றுசேர் நற்பரம் பொருளே வருக!
பக்தியும் ஞானமும் பாரினில் பரவிட
முக்தியைத் தந்திடும் முதல்வா வருக!

* * *

சித்தரே வருக சிவமே வருக
முக்தனே வருக மூர்த்தியே வருக
ஹரிஹர புத்திரன் ஐயப்ப சாமியின்
திருவருள் விளங்கிட சிறந்துமே வருக!

4—1—69இல் திண்டுக்கல்லில் சாமிகள் திருப்பெயர் தாங்கிய வீதியில் ஐயப்பன் ஜோதி ஊர்வலத்தில் சாமிகள் கலந்துகொண்டார். 5—1—69இல் சாமிகள் மதுரையில் வழக்கறிஞர் திரு. பழனி சாமி நாடார் இல்லத்திலிருந்து புறப்பட்ட ஸ்ரீ ஐயப்பன் பக்தர்களுக்கு நல்லாசி கூறி சபரிமலைக்கு வழி அனுப்பினர்.

## ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் மிஷன் :

நமது குருநாதன் திருப்பெயரால், பல சத்சபைகள் ஏற்பட்டு உள்ளன. அண்மையில் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் மிஷன் சென்னையில் உருவாகியுள்ளது. ‘என்கடன் பணிசெய்து கிடப்பதே’ என்ற அடிப்படையில் மனித சமுதாய நன்மைக்காகப் பாடுபட்டுவரும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அருளையும், அருள்மொழிகளையும் பரப்புவதே தன்னுடைய முக்கிய நோக்கமாகவும், பணியாகவும் மிஷன் ஏற்றுள்ளது. அதோடுகூட கடவுள் நம்பிக்கையை வளர்க்கவும், உள்ளுணர்வை (உள்ளொளியை) பெருக்கவும், உலக சகோதரத்துவத்தையும் சகிப்புத் தன்மையையும் விரிவுபடுத்தவும், மனித அறிவினல் உண்டாகும் பயன்களைக் கண்டுபிடிக்கவும் பெருக்கவும், உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் இன்பமும் நன்மையும் தேடவும் பாடுபடவும் ஏற்பட்டுள்ளது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் மிஷன். அருளாளர் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளுடைய பக்தர்களும், சீடரும், ஒவ்வொருவரிடத்திலும் [தூங்கிக்கொண்டிருக்கும் ஆத்மாவைத் தட்டி எழுப்பவும், ஆண்டவன் படைப்பில் இருக்கும் ஒருமையை உணர்ந்தும், அருளாளர் தலைவர் வற்புறுத்தும் எங்கும் பரந்த அன்பு, ஒருவருக்கொருவர் நம்பிக்கை, சகிப்புத் தன்மை, தன்னம்பிக்கை — இவைகளைக் கொண்டு மனம் மொழி மெய்யால் தொண்டு புரிய உறுதி கொண்டிருக்கின்றனர். இந்த மிஷன் சென்னை 34இல், நுங்கம்பாக்கம் ஹைரோட்டில் நெ. 17/2, விக்நேச விகாரில் அமைந்துள்ளது. திரு K. K. வர்மா அவர்களைத் தலைவராகவும், கவியோகி மகரிஷி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார், சென்னை டாக்டர் P. K. சுந்தரம் திருச்சானூர் திரு. M. G. சாரி, திருச்சி டாக்டர் T. V. அரங்கநாதன், கோவை திரு. A. V. கிரி, பம்பாய் திரு. A. V. இராமச்சந்திரன்,

பெங்களூர் திரு. K. O. கிருஷ்ணசாமி இவர்களைத் துணைத்தலைவர் களாகவும், சென்னை திரு. T. S S. நடராஜன் அவர்களைச் செயலாள ராகவும், திரு R. S. மணியம், திரு K. S. V. இராமன், திரு. R. A. சீனிவாசன் இவர்களை கூட்டுச் செயலாளர்களாகவும், திரு. P. S. பாஷியம் அவர்களை பொக்கிஷதாராகவும், மற்றும் பல பக்தர்களை அங்கத்தினராகக் கொண்டு பணியாற்றுகின்றது இம்மிஷன் செயற் குழு. உடனடியாக இந்து மதத்தின் குறிக்கோளையும், பெருமையை யும் விளக்க மூன்று நாட்கள் சென்னையில் ஒரு அகில இந்திய மகா நாடு கூட்டுகின்றது. இனி எத்தகைய வேலைகளில் இந்த மிஷன் ஈடுபடவேண்டும் என்பதைப் பற்றியும் இந்தச் சந்தர்ப்பத்தில் சாமிகளுடைய பக்தர்கள் சிந்தித்து தீர்மானம் எடுக்க உள்ளனர். பாக்கியபரணி எனும் இலக்கியப் பத்திரிகையை நடத்துகின்றது இம்மிஷன். உண்மை அறிவு இதன் இலட்சியம். தெய்வீக பஞ்சாட் சரம் இதன் அடையாளம். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் இதன் ஜோதி. இறைவன் இதன் குறிக்கோள். ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமி கள் வாழ்க! ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் மிஷன் வாழ்க!! ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் அடியாரெல்லாம் வாழ்க!!!

"அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்ப நிலை தானே வந்தெய்தும்" என்று அருள்கூர்ந்து அடிக்கடி நமக்கு தம் திருமொழியாலும், திருச்செயலாலும் எடுத்துக்காட்டுகின்ற நமது அருளாளர் சாமிகளின் பெருமையைப் பாடி மகிழ்வோம். சாமிகளது அருள்தேனை உண்டு உண்டு மகிழும் நாம் தேமதுரத் தமிழிசையால் சாமிகளது பெருமையைப் பாடி மகிழ்வோம்.

1. கற்றவர்க்கு கல்வியருள் கலையரசே களிப்பே!
   கவிஞருக்குக் களிப்பூட்டும் கற்பகத் தேனிசையே!
   கற்றறியா ஞானநிலை விளக்குகின்ற குருவே!
   கலைகளெலாம் முழுதுணர்ந்த கற்கண்டுச் சிகரே!
   நற்றவத்தால் நாடுபவர் நலமறிந்து அவர்க்கு
   நன்மை பல சுரந்தருளும் நவ இரத்தின மணியே!
   பற்றியுளோம் உமதருளை பன்றிமலை குருவே!
   பதமலரைப் பற்றியுளோம், நலம் உவந்தருளே!

2. ஏற்றத்தைக் காட்டுகின்ற எழிலுடையாய் அன்பே!
   ஈசனடி மறவாத சிந்தையரே! தேனே!
   தோற்றுவித்தார் நினதருளால் ஒரு நிலையம் அன்பால்
   திருத்தவ பன்றிமலை சாமி மிஷன் காண்பீர்!
   ஆற்றலும தருளாலே அனைவர் பிணி அகற்றி
   அன்பான பீடத்தில் இறை கருணை நாட்டி
   போற்றியே நினதுபுகழ் பெருமையெலாம் போற்றி
   பணிபுரிய வந்துள்ளார், ஆசி அளித்திடுவாய்!

3. தேவாதி தேவா ! நின் திருப்புகழைப் பாடும்
தூயமன அடியார்கள் திருநெறியின் கூட்டம்
தேனுகத் தித்திக்க அருள் புரிவாய் அன்பால்
தெவிட்டாத அமுதாக வளர்த்திடுவாய் அருளால்
வானோங்கிப் பேசுகின்ற திருநாட்கள் கூட்டம்
வரப்போகும் நன்னாளுக் கறிகுறியாம் இன்றே
மாணுக்கர் பலர் சேர்ந்தோம் மேதினியில் உன்றன்
மாட்சியினை எடுத்துரைக்க எழுந்து விட்டோம் பாரீர் !

4. ஊர் ஊராய் உமது புகழ் பேசி வரவேண்டும்
வளமான உமதருளை ஊர் அடையவேண்டும்
தேர் ஏற்றி உமை அழைத்துப் பெருமை கொள்ளவேண்டும்
தூய ! நின் பதமலர்கள் பக்தர் பெறவேண்டும்
கார் மேனி கண்ணு ! உம் கீதை மொழி வேண்டும்
கந்த மணி வண்ணு ! உம் அற்புதங்கள் வேண்டும்
பார் போற்றும் பன்றிமலை நாதன் அருள் வேண்டும்
பக்தருளம் அவரருளைப் போற்றி பாடவேண்டும்.

5. ஞான சத்சபை யெங்கும் பன்றிமலை நாதன்
ஞானப் பெயர் தாங்கி ஓங்கிடவேவேண்டும்
தேனமுத ஞானமொழி வானோங்கப் பேசும்
தேனினிலும் தித்திக்கும் அடியார்கள் வேண்டும்
கானகத்தில் சோலைவளம் பெருகிடவேவேண்டும்
கட்டாந்தரை யெல்லாம் புல்வளமே வேண்டும்
வானகத்தின் வள்ளல் வளம் பரப்பிடவே வேண்டும்.
வற்ரு நின் அருள் சுனைகள் பல ஓடவேண்டும்.

6. காரிருளை ஓட்டுகின்ற ஜோதி மனம் வேண்டும்
குருநாத ! அஞ்ஞானம் வெறித்தோட வேண்டும்
பாரினிலே மெய்யோங்க பொய் யோட வேண்டும்
பல பிணிகள் சஞ்சலங்கள் பறந்தோட வேண்டும்
யாருக்கும் உதவுகின்ற ஈகை மனம் வேண்டும்
எல்லோரும் ஓரினமே என்ற மனம் வேண்டும்
போருக்கே முந்துகின்ற மனம் நீங்க வேண்டும்
பாரெங்கும் ஆனந்தம் பெருகிடவே வேண்டும்

( T. D. மீனுட்சிசுந்தரம் )

## 32. கருத்தைக் கருத்தாட்டும் சாமிகள்

### அறுபத்து நான்கு கலைகள்

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலா கருணை மாக்கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்ற எம்சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவர் தன்னைக் கண்டு கண்(டு) உள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே.

இப்படி உளம்கனிந்து கசிந்து உருகுகின்ருர் சிவனருட்செல்வ ரான சேந்தனர். சாமிகள் கற்ரேர் கற்பகக்கனி யென்பதும், கருணைமாகடல் என்பதும், மாணிக்கமலை என்பதும், சீடர்கள் உள்ளங்களில் விளங்கிக் கொண்டிருக்கும் பெருஞ்சுடர் விளக்கென் பதையும் பக்தர்கள் அறிவர். குரு என்பவர் ஒரு பேரொளியை ஒப்பர்; எப்படி ஜோதி இருளை அகற்றுகின்றதோ அப்படியே குரு என்பவர் அஞ்ஞானத்தை ஞானத்தால் விலக்குகின்ருர். குரு என்ற சொல்லில் 'கு' அஞ்ஞானத்தையும் 'ரு' ஞானத்தையும் உணர்த்த, அந்தகாரமாகிய அஞ்ஞானத்தை யொழிக்க வாய்ந்த சாதனமே 'குரு' என்பதையும் அச்சொல் விளங்கவைப்பதையும் நாம் அறி கின்ரேம். அதைத்தான்

"ஆசானும் ஈசானும் ஒன்றேயாகும்
அவனருளும் ஒன்ருகும் அதுதானுகும்"

என்று திருமூலர் உரைத்துள்ளார்.

### குருவே பரப்பிரம்மம்

"என்னுடை மனதுபுத்தியிந்திரிய சரீர மெல்லா
மென்னுடை யறிவினலே யிரவிமுன்னினமே யாக்கி
மென்னுடை நீயுநானுமேக மென்றைக்கியஞ் செய்ய
வென்னுடைக் குருவாய்த்தோன்று மீசனை இறைஞ்சினேனே"

குருநிலையில் உள்ளவர் இறைவன் : இறைநிலையில் உள்ளவர் குரு.

அவர் நிலைக்கு ஏற்றாற்போல் சகல கலைநிபுணர். அறுபத்துநான்கு கலைகளையும் அறிந்தவர். இவருக்கு அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதி, ஜோதிடம், தருமம், யோகம், மந்திரம், சகுனம், சிற்பம், வைத்தியம், உருவம், இதியாசம், காவியம், அலங்காரம், மதுரபாடனம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திர பரீட்சை, கனகபரீட்சை, இரதபரீட்சை, கஜபரீட்சை, அசுவபரீட்சை, அரத்தி பரீட்சை, பூமி பரீட்சை, சங்கிராம விலக்கணம், மல்யுத்தம், ஆகருடணம், உச்சாடனம், சித்வேடனம், மதனம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், கௌத்துக வாதம், தாது வாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப் பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப் பிரவேசம், அதிரிசயம், இந்திர ஜாலம், மகேந்திர ஜாலம், அக்கினிதம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டிதம்பம், வாக்குதம்பம், சுக்கிலதம்பம், கன்னதம்பம், அவத்தைப் பிரயோகம் ஆகிய அறுபத்துநான்கு கலைகள் அறிவும் நிறம்பியவர். சுருங்கக் கூறினல் குரு அறியாததொன்றில்லை. அவருக்கு விளங்காத சாத்திரம், தம்பம் ஒன்றுமில்லை. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளிடம் பழகுகின்ற அன்பர்களுக்கு இது நன்ருக விளங்கும். இளவயதிலேயே குதிரைகளைக் கட்டி ஆள்வதிலும், வேட்டையாடுவதிலும், மாயாஜால வித்தைக்காரர்களிடமிருந்து வித்தை அறிந்து கொள்வதிலும் நிபுணரென விளங்கிய சாமிகள் இன்று அட்டமாசித்திகளையும் பெற்றுக் காண்பவர் கண்களையும் கருத்தையும் அள்ளுகின்ற அற்புதங்கள் பல புரிந்து மக்கள் இடர்களை சூரியனைக் கண்ட பனிபோல் மறையச்செய்கின்ருர். சாமிகளே ஒரு நடமாடுந் தெய்வம் என்பதும் பக்தர்கள் அறிவர். அதனல் அல்லவா கருத்தைக் கருத்தாட்டும் ஆற்றலும் அழகும் பெற்று சாமிகள் அறிவு மதியெனப் பொலிகின்ருர்.

சாமிகளுடைய அறிவு, ஆற்றல், அருள் இவைகள் காட்டும் தெய்வீகத்தன்மையை உணர்கின்ற பக்தர்கள் சாமிகளின் தனி மதியழகை அவர் புரியும் செயல்களிலும் கண்டு மகிழ்வர்; அவர் திருவுரையிலும் கேட்டு மகிழ்வர். சாமிகள் ஆங்கிலத்தில் கையெழுத்து இடுவதிலும் ஒரு தனியழகு; சாமிகள் வரு விருந்தினரை உபசரிப்பதிலும் ஒரு தனியழகு; சாமிகள் தன் திரு இல்லத்தைச் செம்மையாக வைத்திருப்பதிலும் ஒரு தனி அழகு; சாமிகள் சொல்லாற்றலிலும் ஒரு தனியழகு. சாமிகளுடைய சொல்லாற்றலைப் பற்றியே ஒரு பெரும் நூல் எழுதிவிடலாம். சாமிகள் சுருங்கச் சொல்லி விளங்கவைப்பதிலும் சமர்த்தர்: சாமிகள் அரிய கருத்துகளைத் தெளிவாக எடுத்துரைப்பதிலும் சமர்த்தர்; சாமிகள் தனிமையில் இனிமையாக உரையாடல் புரிவதிலும் சமர்த்தர்; சாமிகள் பெரும்பந்தலில் பல்லாயிரமக்களுக்கு அறிவுரை வழங்குவதிலும்

சமர்த்தர். எழுத்துவளம், சொல்வளம், பொருள்வளம் சுரக்கின்ற சாமிகள் திருவாக்கில் கற்பனை மெருகும், காவியச் சுவையும், அருள் மணமும் பெருக்கெடுத்துக் கொண்டே இருக்கும். சாமிகள் திரு மொழிகள் அறிவு புகட்டுவன, அன்புநெறி ஊறுவன, பக்தி ஊட்டு வன, அச்சம் ஓட்டுவன, அறம் வழங்குவன. ஆத்மீக அனுபவப் பொருள் நிறைந்தன, அருளமுத வெள்ளம் சுரப்பன. பழமையும் புதுமையும் சேர்ந்து வெளிவருகின்ற சாமிகளின் திருமொழிகளில் கற்றவர்களுக்கு கருத்தோவியங்களும், நல்லவர்களுக்கு அறிவுரை களும், கெட்டவர்களுக்குப் புத்திமதியும், சஞ்சல மனத்தினருக்கு இடர்தீர்க்கும் மருந்தும் உண்டு.

அப்பரைச் சுண்ணும்புக் காளவாயில் இட அரசன் ஆணை பிறந்த போதும் அந்தக் காளவாய்க் கொடுமையிலும் இறைவன் இனிமை யைக் கண்டு இடர் நீக்கினர் அப்பர் என்றறிகிறோம். அந்த நேரத்திலும் அவர் திருவாயினின்றும் வந்தது ஒரு தீம்பாடல்.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே."

இப்படி ஏத்துகின்றார் திருநாவுக்கரசர் இறைவன் தண்ண ளியை. அல்லல் பட்டுழலும் உலகில் புழுவாகத் துடிக்கும் மனங் களுக் கெல்லாம் சாமிகளுடைய திருவாக்கும் மாசில் வீணையின் இன்பத்தையும் மாலை மதியத்தின் அழகினையும் வீசு தென்றலின் குளுமையையும் இளவேனில் இனிமையையும் மூசுவண்டறைப் பொய்கை ஜிலுஜிலுப்பையும் ஊட்டி மகிழ்விக்கின்றது. பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பேசும் சாமிகளது திருவாக்கில் அருட் கனிவும் பொருளமுதும் உண்டு. சாமிகளுடையத் திருவாக்கு 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாயும்' விளங் கும்; 'பின்னைப் புதுமைக்குப் பேர்த்துமப் பெற்றியாய' சீரிளமைத் திறம் வாய்ந்தும் விளங்கும். எக்காலத்தவர்க்கும் எந்நாட்டவர்க்கும் பொருத்தமுடையதாக விளங்கும். அதைக் கேட்டும் ஒவ்வொருவர் உள்ளத்திலும் உவகை பொங்கிவிடும். தன் ஆனந்தத்தைக் காண் பிக்க தேமதுர தமிழிசையில் பாட்டு பாடவும் முனைவர்.

தேன் திதிக்கும் பன்றிமலை வாசக! நின் வாசகத்தை
நான் கேட்கும்போதெல்லாம் திருவமுது சுவை மிகுந்து
ஊன் திதிக்கும் உளம் திதிக்கும் உயிர் திதிக்கும் பார் திதிக்கும்
வான் திதிக்கும் எலாம் திதிக்கும் உவட்டாமல் இனிப்பதுவே!

இப்படியல்லவா பாடத் துள்ளுகின்றது நம் உளங்கள் ! கல்லேயே கற்கண்டாகக் கொடுக்க வல்லவருடைய மொழிகளா இனிக்காமல் திதிக்காமல் இருக்கும் ?

சாமிகளுடைய திருவாக்குகளைத் தனித்தும் கேட்கின்றோம், கூட்டத்திலும் கேட்கின்றோம், வானொலியிலும் கேட்கின்றோம். அவற்றை 1. சாமிகளின் உள்ளம் கவர் கருத்துரை. 2. சாமிகளின் திரு அருள்வாக்கு 3. அறிஞரோடு சாமிகள் அறிவுரை 4. சாமிகள் திருவுரையாடல் 5. சாமிகள் உவந்தளிக்கும் கதைகள். 6 சாமிகள் உதயப் பொன் மொழிகள் என்ற ஆறு பகுதிகளில் தொகுத்து படித்து மகிழ்வோம். சாமிகள் பேருண்மைகளையே கதைகள் வாயிலாகவும் உரையாடல் வாயிலாகவும் இனிமையாக யாரும் புரிந்து கொள்ளும் வகையில் உரைப்பார். பேருண்மைகள் யார் சொன்னாலும் ஒன்றாகவே இருக்கும். சாமிகள் கூறுகின்ற கதைகளில் சிலவும் திரு அருள் வாக்கிலும் உதயப் பொன் மொழிகளில் சிலவற்றிலும் நாம் கேள்விப் பட்டவைகளும் உண்டு. அவற்றையே சாமிகள் திருவாய் மலர்ந்தருளும்போது அதில் ஒரு தனி அழகும் புதுமையும் உண்டு. சாமிகள் ஒரு விஷயத்தை எடுத்துச் சொல்லும்போது சொல்லழகும் பொருளழகும் கூடிவிடும். அங்குமிங்கும் ஆசியமும் அமைந்துவிடும். சாமிகள் கருத்துரையில் சாமிகள் ஆடிக்காட்டும் அற்புதங்களில் உள்ள நவீனமும் இனிமையும் உண்டு. நாம் இவற்றைப் படித்து சாமிகள் அருளைப் பெற்று பயன்பெறுவோம்.

## கருத்தைக் கருத்தாட்டல் — விளக்கம்

ஒரு பெரியவரது மனம் செயல்படும்போது எண்ணம் உதயமாகின்றது. அப்பெரியவர் பேரறிஞராக இருக்கலாம், கவிஞராக இருக்கலாம். யோகியாக இருக்கலாம், இவ்வெண்ணம் பேசப்படும் போதும் எழுதப்படும் போதும் சொல்லுருப்பெருகின்றது. ஒரு பெரியவரின் எண்ணத்தின் சொல்லுருவே கருத்தாகும். அது கரு போன்று தோன்றி வளர்ந்து கருவூலமாக உதவும் பெருமையும் பெற்றுவிடும். எப்படியெனில் ஒரு பெரியவர் கருத்தை மற்ற பெரியவர்கள் தம் கருத்தைக் கொண்டு ஆட்டிப் பார்த்தால் பல உண்மைகள் வெளிவரும். கருத்தோவிய சொற்களை ஆராய்ந்து பார்த்தால் அச்சொற்களுள் உட்பொருளும் அமைந்திருப்பது நன்றாக விளங்கும். ஒருவர் கருத்தை (எண்ணத்தை) நமது கருத்து (அறிவு) கொண்டு ஆட்டி (ஆராய்ந்து) பார்க்கும்போது அதில் பொதிந்துள்ள விசேட அர்த்தம் புரியும், அதில் மறைந்திருக்கும் புதுப்பொருளும் விளங்கும். அதனால் ஒரு கலை இன்ப அனுபவம் ஏற்படும். இச்சொற்கள் பொருளழகு மிக்க பேரறிவாளர்கள் உரையாக இருந்தால் அவைகளை ஆராய புதுப்பொருள்கள் விளங்கும் ; அச்சொற்கள் சொல்லழகும்

பொருளழகும் மிக்க கவிஞர்கள் கவிதைகளாக இருந்தால் இரு சொல் அலங்காரச் சுவையை ருசிக்கலாம்; அச்சொற்கள் சொல்லழகும் பொருளழகும் அருளழகும் மிக்க யோகியர் உதயப் பொன் மொழிகளாக இருந்தால் அவற்றில் இக அர்த்தமும் பர அர்த்தமும் மணக்கக் காணலாம்.

சாமிகளே இந்த இரு பொருள் செறிந்த மொழிகளை அடிக்கடி பக்தர்களுக்குச் சொல்லி பக்தர்களை மகிழ்விப்பர். கருத்தைக் கருத்தாட்டும் கருத்தையே வைத்து சாமிகள் கருத்தாடல் புரிவதை கேட்போம்.

சாமிகள் : "கருத்த கருத்தாடு
கருவலங்காய் தின்னுடு
மெத்தக்கிழண்டாடு
மேமலையை நோக்குதடா" (தெம்மாங்கு)

இதற்கென்ன பொருள்?

பக்தர் : கருப்பு நிறமான ஒரு ஆடு, அதற்கு கருவலங்காய் தின்பதில் ஆசை. அது வயதான ஆடு. அதால் மலை உச்சியை நோக்கி நடக்க முடியாது, மலை உச்சியைப் பார்த்துக்கொண்டே இருக்கிறது.

சாமிகள் : ஒரு அரிய பொருளை விளக்க அருமையான சொற்றொடர்களை பயன்படுத்திய பெரியவர்கள் அவற்றை இருபொருள் படவும் கூறியுள்ளனர். இதுவும் அப்படியே. சில சமயங்களில் ஒரு பொருளைக் குறித்துச் சொன்ன சொற்கள் நாளடைவில் மாறி, வேறு பொருளை உணர்த்தக்கூடிய அளவுக்கு மாறுதல் பெற்றுவிடுகின்றன. அப்படி வேண்டுமானாலும் இதை வைத்துக்கொள்ளுங்கள். ஆலையில்லாத ஊருக்கு இனிப்பு உப்பு சர்க்கரை என்று ஆரம்பத்தில் சொன்னதை இப்பொழுது ஆலையில்லா ஊருக்கு இலுப்பப்பூ சர்க்கரை என்று கூறுகின்றனர். அதிகம் வடித்த முன் சோறு கழனிப்பானையில் விழும் என்ற சொற்கள் நாளடைவில் மாறி இன்று அதிகப் படிச்ச மூஞ்சூறு கழனிப் பானையில் விழும் என்ற நிலைக்கு வந்துவிட்டது. இப்போது நாம் ஆட்டைப் பற்றிய பாட்டைக் கவனிப்போம். உண்மையில் அது ஆட்டைப்பற்றியதே இல்லை. அது கருத்தைக் கருத்தாட்டும் சொற்களே. நான் அதில் ஆளப்பட்டுள்ள வார்த்தைகளை விரித்துரைத்தால் விபரம் விளங்கும். இது கருத்தைக் கருத்தாட்டும் பெரியவர் நிலையைத்தான் உணர்த்துகின்றது. கேளுங்கள்!

"கருத்தைக் கருத்தாட்டு
கருவூலம் தின்றூட்டு
மெத்த கிழண்டாட்டு
மேமலையை நோக்குதடா!"

மேமலே என்பது என்ன? அது கைலாசத்தைக் குறிக்கும். கைலாசம் என்பது என்ன? அது சிவன் இருக்கும் இடம். சிவனை எப்படி அடைவது? யோகத்தால் அடையலாம். ஜீவனே சிவனுவதையும் யோகத்தால் காணலாம். ஜீவனே சிவனுவது யோகியர் அனுபவம். இத்தகைய பெரியவர்கள் இதிகாசங்கள், புராணங்கள், வேதாக மங்கள், உபநிஷத்துகள், தேவாரம், திருவாசகம், திருவருட்பா முதலிய மறைநூல்களை நன்ருக மனதில் கரைத்துக் குடித்தவர்கள், ஆனுல் எவ்வளவு படித்தாலும் ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுவ தில்லே. அனுபவம் வேண்டும். அனுபவமும் உண்டானுல் அவர்கள் சிவநிலேயை அடைய முற்பட்டு விடுவர். இவர்களால் ஒரு கருத்தில் தம் கருத்தை அதாவது அறிவைச் செலுத்தி ஆராய்ந்து மெய்ப் பொருள் காணமுடியும். இவர்களால் நன்கு ஆராயக்கூடிய திறன் இருக்கின்றது. காரணம் கருவூலமாக விளங்கும் மறைநூல்களி லிருந்து அவர்களுக்கு வேண்டிய ஞானம் உண்டு. அதைத்தான் 'கருவூலம் தின்ருட்டு' என்பது குறிக்கும். அவர்களுக்கு நீண்ட நாள் அனுபவமும் உண்டு. அதைத்தான் 'மெத்த கிழண்டாட்டு' என்பது குறிக்கும். பரிபக்குவம் வந்த இப்பெரியவர்களுக்கா மெய்ப்பொருளைக் காணமுடியாது? அதைத் தான் மேமலேயை நோக்குதடா' என்ற சொற்கள் குறிக்கின்றன,

**சாமிகளின் உள்ளம் கவர் கருத்துரை :**

சாமிகள் கருத்தைக் கருத்தாட்டி "கருத்தைக் கருத்தாட்டு" என்ற பாடலுக்கு விளக்கம் கொடுத்ததைப் படித்து மகிழ்ந்தோம். சொற்களை வைத்துக்கொண்டே சாமிகள் காட்டுகின்ற பொருள் ஜாலங்களையும் சொற்களை மாற்றிக்கொண்டே சாமிகள் ஆடிக் காட்டுகின்ற மெய்ப்பொருள் விளக்கங்களையும் பக்தர்கள் கேட்டு அகமகிழ்வர். "நமசிவய" என்ற மந்திரத்திற்கே சாமிகள் இனிமை யாக எளிய முறையில் விளக்கம் கொடுப்பது கற்ருேர் உள்ளத் தைக்கவரும் அழகுடையது. 'நமசிவய' பொருள்பற்றி சாமிகள் பக்கம் பக்கமாக எழுதியுள்ளதை நாம் படித்துமகிழ்ந்தோம். 'நமசிவய' மெய்ப்பொருளை இரத்தினச் சுருக்கமாக ஒரே வாக்கியத் தில் சாமிகள் உரைப்பதையும் நாம் அறிவோம். "நாம்தான் சிவம்; நாம் சிவம், நாம் சிவம் என்பதல்லவா உண்மையிலேயே 'நமசிவய' வாகும்" என்று சாமிகள் அருமையாக நமசிவய மந்திரத்தின் உட்பொருளை மெய்ப்பொருளை இரண்டே வரிகளில் விளக்குவர். சாமிகள் 'நமசிவய' என்ற ஐந்தெழுத்துண்மையை எடுத்துரைக் கும் போக்கே ஒரு தனிப்போக்கு! அது ஸ்ரீலஸ்ரீ பன்றிமலே சாமி கள் போக்கென்றே சொல்லக்கூடிய வகையில் சிறப்பாக அமைந் துள்ளது, சாமிகள் தோண்டித் தோண்டி எடுக்க எடுக்க கருத் தாழத் தங்கச்சுரங்கந்திலிருந்து வற்ருது குறையாது தங்குதடை

யின்றித் தங்கப்பாள கருத்துக்கள் பளபளப்பான சொல்மெருகோடும் செழுசெழுப்பான பொருள் வளத்தோடும் பெருகிவருகின்றன. ஐந்தெழுத்துண்மையை ஒரே வாக்கியத்திலும் பலபக்கங்களில் பல வாக்கியங்களிலும் எடுத்துரைக்கும் சாமிகளின் ஆற்றலை எப்படி வருணிப்பது? சாமிகளோடு இருக்கின்ற நேரம் நம் வாழ்க்கையிலேயே மறக்கமுடியாத பொன்னுனகாலம். அப்போது அவர் சொல்கின்ற சொற்களின் நயமும், கருத்துக்களின் உயர்வும், கதைகளின் சுவையும், கவிதை அலங்கார நடையும் உட்கொள்ள உட்கொள்ள தெவிட்டாத தேனமுதமாக விளங்குகின்றன. சாமிகளுடைய அனுபவ ஞானத்தையும், ஆழமான படிப்பையும், நயமான பேச்சையும் ஆணித்தரமான பதிலையும் பார்க்கும்போது அவரையடைந்த நாமே பாக்கியசாலிகள் என்று நமது உள்ளங்கள் உவகை மீறுகின்றன.

" தம்மை மறந்து அருளமுதம் உண்டு தேக்கும்
தகை உடையார் திருக்கூட்டம் சார்ந்து நாயேன்
வெம்மையெலாந் தவிர்த்து மனங்குளிரக் கேள்வி
விருந்தருந்தி மெய்யறிவாம் விட்டில் என்றும்
செம்மையெலாந் தரும் மௌன அணைமேற் கொண்டு
செறியிரவு பகலொன்று தெரியா வண்ணம்
இம்மையிலே எம்மையினுங் காணுச் சுத்த
இன்பநிலை அடைவேனே ஏழையேனே "

என்று ஏங்கித்தவிக்கும் ஏழைத் தொழும்பர்களுக்கு தம்மை மறந்து அருளமுதம் உண்டு தேக்கும் தகைஉடையார் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகளது திருக்கூட்டம் கிடைத்துவிட்டது. அவரிடம் நம் வெம்மையெலாந் தவிர்க்க மனங்குளிரக் கேள்வி விருந்தருந்த விரைந்து செல்வோம். அவர் அருள் உண்டானால் நிச்சயம் சுத்த இன்ப நிலை அடைந்தே தீருவோம்.

சாமிகள் 'நமசிவய' விளக்கம் கூறுவது போன்றே பல சந்தர்ப்பங்களில் பல கருத்தோவிய சொற்களைப் பக்தர்களிடம் கூறி மகிழ்விப்பதைக் காண்போம்.

**எண்ணிப் பார்ப்பது :**

சாமிகள் : உங்கள் கைகளில் ஒரு ஆயிரம் ரூபாய் கொடுத்தால் முதலில் என்ன செய்வீர்கள்?

சீடர் : நான் முதலில் நன்றி கூறுவேன்.

சாமிகள் : இந்த விடை சரியல்ல. ஒருவருக்கு கொடுத்த பணம் வராமலிருந்து நீதிபதி தீர்ப்பிற்குப்பின் அவருடைய சொத்தை ஜப்தி செய்து பணம் வந்தால், அவருக்கு

நன்றியையா உரைப்போம்? இல்லை! யாரிடமிருந்து பணம் பெற்றுக்கொண்டாலும் முதலில் பெற்றுக்கொண் டாலும் முதலில் பெற்றுக் கொண்ட பணம் சரியாக இருக்கின்றதா என்று பார்க்க நோட்டுகளை எண்ணிப் பார்ப்போம். இப்போது கருத்தைக் கருத்தாட்டிப் பாருங் கள். எண்ணிப் பார்ப்போம் என்று சொன்னேன். பெற்ற தொகை சரியாக இருக்கின்றதா என்று அதை நோட்டு நோட்டாக எண்ணிப் பார்த்தாகி விட்டது. அடுத்தது என்ன செய்வோம்? அந்த பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்யலாம் என்பதை எண்ணிப் பார்ப்போம். நாம் எண்ண எண்ண எவ்வளவு அற்புதங்களை அந்த எண் ணம் என்ற சொல் பலபொருள் காட்டி விளையாடிக் காண்பிக்கின்றது.

**ரோட்டோரம் வீட்டுக்காரி :**

**சாமிகள் :** இப்போது ஒரு விடுகதை சொல்கின்றேன். விடை சொல்லுங்கள்.

"அப்பன் சொரியன்
ஆத்தாள் சடைச்சி
பிள்ளை சர்க்கரைக்கட்டி."

இது என்ன?

**சீடர் :** சாமிகளே, இது பலாப்பழம்!

**சாமிகள் :** உண்மை. இதில் உள்ள பொருள் நயம் சுவைக்க சுவைக்க இனிப்பது தான்.

"ரோட்டோரம் வீட்டுக்காரி
ரோசாப்பூ சேலைக்காரி
காதோரம் கொண்டைக்காரி
கைஅழைப்பில் கெட்டிக்காரி!"

இது என்ன?

**சீடர் :** இது ஒரு ஒய்யாரப் பெண்ணை வருணிக்கின்றது போல் இருக்கின்றது. அவள் நகரத்தாள், நாகரீகப் பெண், குடும்பப் பெண்கள் போக்குக்கு முரண்பட்ட பழக்கம் கொண்டவள் என்பதைத்தான் சொற்கள் விளக்குகின்றன.

**சாமிகள் :** இது ஒரு தென்னை மரம். ஏன் வியப்படைகின்றீர்கள்? அது காற்றில் அசையும்போது அதன் கிளைகள் ஆடி, 'வா வா' என்று அழைப்பது போலிருக்கும். அதனால் தான் கற்பனைக் களஞ்சியமான ஒரு கவிஞன் அதை கை அழைப்பில் கெட்டிக்காரி என்றான்; குரும்பைக் காட்

சியைக் கண்டு காதோரம் கொண்டைக்காரி என்றுன். மரத்தில் பன்னுடை சுற்றி இருப்பதைக் கண்டு ரோசாப்பூ சேலைக்காரி என்றுன்; மரம் ஒரு வீட்டின் ரோட்டோ ரத்தில் இருப்பதால் ரோட்டோரம் வீட்டுக்காரி என்றுன்.

**க, கோ ஆவதென்:**

**சாமிகள்:** ஒரு கால் இல்லாவிட்டால் ஒரு பொருளும் மாறிவிடு கின்றது, ஒரு சொல்லும் மாறி விடுகின்றது. ஒரு கால் இல்லாவிட்டால் மனிதன் நொண்டியாகி விடுகிருன்! காம்பு கம்பாகின்றது. ஒரு கால் செய்கின்ற வேலை இது. இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நான் சொல்கின்ற சிலேடைக் கேள்விகளுக்கு பதில் சொல்லுங்கள்?

1. க, கோ ஆவதென்?
2. காளைமாடு பாய்வதென்?
3. கோழி தண்ணீர் குடிப்பதென்?
4. குமரி புடவை உடுப்பதென்?
5. எருக்கலை பழுப்பதென்?
6. எருமைக் கன்று சாவதென்?
7. செருப்பு குப்பையில் கிடப்பதென்?
8. சிறுக்கி குலுக்கி நடப்பதென்.?

கூடியிருந்த பக்தர்களில் யாரிடமிருந்தும் பதில் ஒன்றும் வர வில்லை.

**சாமிகள்:** முதல் இரண்டு கேள்விகளுக்குக் கூடவா பதில் தெரிய வில்லை. 1, 2 கேள்விகளுக்கு ஒரே விடை! 3, 4 கேள்வி களுக்கும் ஒரே விடை. அப்படியே 5, 6 கேள்விகளுக்கும்; 7, 8 கேள்விகளுக்கும்.

**பக்தர்:** அதெப்படி இருக்க முடியும், சாமிகளே?

**சாமிகள்:** கொஞ்சம் இந்தக் கருத்தை உங்கள் கருத்தால் ஆட்டிப் பாருங்கள். அது அப்படி இருக்கமுடியும் என்பதை ஒத்துக் கொள்வீர். எழுத்துக்களில் கால் சேர்ப்பதை அறியும் உங்களுக்கு எழுத்துக்களில் கொம்பு சேர்ப்பது தெரியாமலா இருக்கும்? இதோ பாருங்கள் இரண்டு கேள்விகளுக்கு ஒரே விடை எப்படி பொருந்தி இருக்கிறது பாருங்கள்.

1. க, கோ ஆவதென்?
2. காளைமாடு பாய்வதென்? } கொம்பால்!

3. கோழி தண்ணீர் குடிப்பதென்?
4. குமரி புடவை உடுப்பதென்? } மானம் பார்த்து!

5. எருக்கெலை பழுப்பதென்?
6. எருமைக்கன்று சாவதென்? } பால் வற்றி!

7. செருப்பு குப்பையில் கிடப்பதென்?
8, சிறுக்கி குலுக்கி நடப்பதென்? } மெட்டுவார் அற்று!

**திருநீறு இட்டார்கெட்டார்:**

இதைச் சொல்லி மகிழ்வூட்டிய சாமிகளிடம் இருசொல் அலங்கார நயத்தைப் பற்றியும் சிலேடை நயத்தைப் பற்றியும் அன்பர்கள் பேசினர். ஆங்கிலத்தில் நான் கேள்விப்பட்ட ஒரு கதை ஞாபகத்திற்கு வந்தது. ஒருவன் நாத்திகன். அவன் உலகில் வாழ்ந்து வந்த கடைசிநாள் வரையிலும் "God is nowhere" (கடவுள் எங்கும் இல்லை) என்றே கூறி வந்தான். அவன் வாழ்வில் கடைசி நாள். உயிர் உடலைவிட்டுப் பிரியப் போகின்றது. அப்பொழுதுதான் அவன் ஈசனைப் பற்றி எண்ணினான். தான் அன்றுவரை ஈசனைப் பற்றி எந்த வாக்கியம் உரைத்தானோ அதே வாக்கியத்தையே உரைத்தான் கடைசி நேரத்தில். ஆனால், கடைசி சொல்லை இரு சொற்களாகப் பிரித்து! அவன் மனம் மாறிவிட்டது. வாக்கியத்தின் பொருளும் மாறி விட்டது. "God is now here" (கடவுள் இங்கு இப்பொழுது இருக்கின்றார்) என்று கூறிவிட்டான். ஒரு நாத்திகன் ஆத்திகனான விந்தையை மட்டும் இந்த நிகழ்ச்சி எடுத்துரைக்கவில்லை. ஒரே வாக்கியம். கடைசி வார்த்தையில் ஒரு மாற்றத்தால் நாத்திக மொழியையே ஆத்திக மொழியாக்கி விட்டது. இந்தக் கதையை சாமிகளிடம் சொன்னேன். "இதைப்போன்று தமிழில் ஒரு வாக்கியம் இல்லை, அமைக்கவும் முடியவில்லை" என்றேன்.

சாமிகள்: என்ன அப்படிச் சொல்லுகின்றீர்! தமிழிலும் இப்படி அற்புதம் உண்டு, சாமி! இதே கருத்தைக் கூறுகின்ற வாக்கியமே உண்டு!

"திருநீறு இட்டார்கெட்டார்
தண்ணீர் பந்தல் வைத்தாரகெட்டார்"

இந்த வாக்கியத்தில் உள்ள சொற்களைப் பிரித்துச் சொல்வதில் தான் இதன் அற்புதம் அமைந்துள்ளது. இந்த வாக்கியங்களை இப்போது சொல்கின்றேன், கேளுங்கள்!

"திருநீறு இட்டார் கெட்டார்!
தண்ணீர்பந்தல் வைத்தார் கெட்டார்!!

இந்த வாக்கியங்களை நான் பிரித்து சொன்னபடி பார்த்தால் பக்திமான் கெட்டு விட்டாரென்றும் தான தருமம் செய்பவர் கெட்டு விட்டாரென்றும் பொருள் கொடுக்கின்றன. இப்போது நான் பிரித்துச் சொல்வதைக் கேளுங்கள்.

"திருநீறுஇட் டார்கெட்டார்?
தண்ணீர்பந்தல் வைத் தார்கெட்டார்?"

அதே சொற்கள்தான். சற்று பிரித்துச் சொன்னதால் கேள்வி யாகவே மாறிவிட்டது. இப்போது அதே வாக்கியங்கள் திருநீறு இட்டு யார் கெட்டார்? தண்ணீர் பந்தல் வைத்து யார் கெட்டார்? என்ற ஆத்திகப் பொருள்கொண்ட கேள்விகளாக மாறிவிட்டன. இப்படி எவ்வளவோ சொல்லற்புதங்கள் உண்டு!

இதைப் போலவே பொருள் நயம் கொண்ட இரு வாக்கியங் களைக் கேளுங்கள்.

"பழநியிலே ஆண்டி மெத்த சாம்பலே இல்லை
மந்தையிலே மாடு மெத்த சாணியே இல்லை."

இதன் பொருள் நயம் விளங்குகின்றதா? (அன்பர்களிடமிருந்து ஒரு பதிலும் இல்லை) சிலசமயங்களில் கருத்தைக் கருத்திட்டு ஆட் டினாலும், கருத்தைப் பெருத்தாட வேண்டியிருக்கும், கருத்தைப் பொறுத்தும் ஆட்டவேண்டியிருக்கும். இது அப்படிப்பட்ட வாக் கியம். 'சாம்பல்' என்று கூறியுள்ளது உண்மையில் அது சாம்பல் அல்ல, ஆனால் அது சாண்பல்தான். அதுபோன்றே 'சாணியே' என்று கூறியுள்ளது உண்மையில் சாணியே அல்ல, ஆனால் அது சாண் ஈ. இப்போது பாருங்கள், அந்த வாக்கியங்களை! அவை புரியும்!

"பழநியிலே ஆண்டி மெத்த சாண்பல்லே இல்லை
மந்தையிலே மாடு மெத்த சாண்ஈயே இல்லை."

## சமைந்து ஐந்து நாள்:

சாமிகள்: இருசொல் அலங்காரம் அனுபவிக்கும் உங்களுக்குச் சில சொற்றொடர்களைக் கூறுகிறேன். நன்றாகச் சிந்தித்துப் பாருங் கள். ஒரு பெண்ணைப் பற்றிய சொற்றொடர்கள். இதில் உள்ள நயம் விளங்குகின்றதா?

"சமைந்து ஐந்து நாள்
புருஷன் கட்டிப் பத்துநாள்
பிள்ளை பெற்று ஆறுநாள்."

இதைக் கேட்பதற்கு வேடிக்கையாக இருக்கும். குறும்புத்தன மும் கேலியும் தொனிக்கும் சொற்களாகவே இருக்கும். இந்தப்

பெண் இயற்கைக்குப் பொருந்தாத பிறவி என்றும் தோன்றும். ஒரு பெண் ருதுவாகி ஐந்து நாளில் கல்யாணமாகின்றது. கல்யாண மாகி பத்து நாளில் அவள் பிள்ளை பெற்று இன்ருேடு ஆறுநாளா கின்றது. இது எப்படி மனிதன் விவேகத்திற்கும் இயற்கைக்கும் பொருந்தும்? இப்படி யாராவதும் சொல்வார்களா? ஊன்றிக் கவனியுங்கள். கருத்தைக் கருத்திட்டு ஆட்டுங்கள். இப்பொழுது அந்த சொற்களின் உண்மை சொரூபம் விளங்கும். ஒரு குண வதியின் இயல்பும் விளங்கும்.

"சமைந்து அஞ்சினுள்
புருஷன் கட்டிப் பற்றினுள்
பிள்ளை பெற்று ஆறினுள்."

ஒரு பெண்ணின் வாழ்க்கையில் மறக்க முடியாத இன்பச் சிகர மேற்றும் வைபவங்கள் இரண்டு. ஒன்று மனத்திற்குகந்த மண வாளனைக் கைப்பற்றுவது. இரண்டு நன்மக்கட் பேறு பெற்று ஆசை அடங்குவது.

ஒரு பெண் ருதுவானவுடன் அவளது பெற்ருேர்மட்டுமா அஞ்சு கின்றனர்? அவளும் அஞ்சுகிருள். அவளுக்குகந்த மணுளன் வாய்ப்பானு என்று? அவள் பாக்கியம் ஒத்த மணுளன் வாய்த்து விட்டால் அவள் கொழுநனைக் கொடியெனப் பற்றி விடுகிருள்.

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு."

என்ற திருவள்ளுவர் வாக்குப்படி அவளுக்கு ஒரு மகவும் வாய்த்து விட்டால் சொல்லவேண்டுமா அவள் இன்பத்தை! அவளுடைய வாழ்வின் ஆசையெல்லாம் பூர்த்தியாகி விட்டது போன்ற உணர்ச்சி யடைகின்ருள் இளம்பெண். இதைத்தான் இச்சொற்கள் விளக்கு கின்றன.

### நூல் நேர்படுத்தும்

சாமிகள்: எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும் என்பர். இந்த எழுத்துக்கள் புரிகின்ற லீலா விநோதங்களை எப்படி வருணிப்பது! அறிவுக்கு மறத்துப் போன கட்டையும் 'மரா மரா' என்று சொல்லச் சொல்ல 'ராம ராம' என்று சொல்லக்கூடிய நிலை எய்திப் புத்துணர்ச்சி பெற்று அறிவுச் சுடர் பிரகாசிக்க இராம நாம தியான ரூபமாகி விடுகின்றது, திவ்ய ராம காவியம் எழுதும் நிலை எய்தி விடுகின்றது. இப்படியே தான் வாசி வாசி என்று தொடர்ந்து உரைத்துக்கொண்டிருந்தால் சிவா சிவா என்று வந்து விடும். வாசியை சிவாய நிலைக்கு கொண்டு செல்பவர் தான் யோக விஸ்வாசி

கள். தியாகம் என்பது என்ன? ஒரு நல்ல காரியத்திற்காக உடல் பொருள் ஆவியைக் கூட தியாகம் செய்பவரும் உண்டு. 'என் உயிரைக் கொடுத்தாவது உன்னைக் காப்பாற்றுவேன்,' என்று சொல்வதும் தியாகம். 'என் ஒரு வேளை சாப்பாட்டைக் குறைத்து உனக்கு ஒரு வேளை சாப்பாட்டைக் கொடுப்பேன்', என்று சொல்வதும் தியாகம். கீதையைக் கவனித்துப் படித்தால் அதில் தியாகத்தின் சிறப்பும் பரவி இருப்பதைக் காணலாம். தாகீ, தாகீ என்று கூறிக் கொண்டே சென்றால் கீதா கீதா என்றே சொல்லிக்கொண்டிருக்கலாம். இப்படிச் சொற்கள் புரிகின்ற கோலாகலங்கள் எவ்வளவோ உண்டு!

கோணல் மரத்தை நூல் கொண்டு நேர் படுத்தலாம்
கோணல் மனத்தை நூல் கொண்டு நேர் படுத்தலாம்

இந்த வாக்கியங்களில் நூல் எனும் சொல் புரிகின்ற பொருள் அற்புதத்தைக் கண்டீர்களா? எப்படி நூல் கொண்டு மரத்தையும் மனத்தையும் நேர்படுத்தலாம் என்று கேட்கின்றீர்களா? கோணல் மரத்தை நூல் கொண்டு அறுத்து நேர் படுத்தலாம். கோணல் மனத்தை நூல் கொண்டு படித்து நேர் படுத்தலாம்.

## "சேலை கட்டிய மாதர்"

சாமிகள்: மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை பொல்லாதது என்று சொல்வர். இதைப் பெரியவர்கள் கண்டித்ததாகவும் உரைப்பர். பெண்ணாசையைக் கண்டிக்கும்போது அருணகிரிநாதர் திருப்புகழ் பாட்டுக்களையும் சொல்லி அவர் கண்டிக்கும் மொழிகளையே பாடிக் காண்பிப்பர். சேலை கட்டிய மாதரை நம்பாதே என்று கூடச் சொல்வர். வம்பர் யாராவது இந்த வாசகத்தைக் கேட்டால் 'சேலை கட்டிய மாதரை மட்டும் தானே நம்பக்கூடாது. கவுன் ஆடை சுற்றிய மாதரை நம்பலாமோ' என்று கூட வம்பளக்க முந்துவர். "தாயும் தமக்கையும் மனைவியும் மகளும் சேலைகள் அணிந்துள்ளனர். அவர்களைக் கூடவா நம்பக் கூடாது" என்றும் கேட்பர். உண்மையிலேயே இந்த வாசகம் சேலை கட்டிய மாதரை நம்பாதே என்பதல்ல. சேல் அகற்றிய மாதரை நம்பாதே என்பதுதான் சரியான வாசகம். காலக்கிரமத்தில் 'சேலகற்றிய' என்பது 'சேலை கட்டிய' தாக மாறியுள்ளது. இப்பொழுது இதன் அருமையை நீங்கள் உணரலாம். கயல்விழி, மான்விழி, அம்புவிழி, வேல்விழி என்று மாதர் கூரிய, மிரண்ட, கடைக்கண்களை வருணிக்கும் புலவர்கள் பெண்களுடைய விழிகளை சேல்விழிகளென்றும் புகழ்வர். சேல் என்பது கடைக்கண் எனப் பொருள்படும். அந்த விழிகளும் விரிந்து உற்று நோக்குமேயானால் அப்பெண்மணியின் மனநிலையை உரைத்து விடும். அன்னவரை நம்பாதே என்றார் இதை உரைத்தவர் துறவிகளைப்பார்த்து.

## "கொல்லான் புலால்" விளக்கம்:

> "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
> எல்லா உயிரும் தொழும்."

இந்தக் குறளுக்குச் சாமிகள் எடுத்துரைக்கும் பொருள் கற்றோரையும், யோகியரையும் கவரக்கூடியது. இதற்குச் சாதாரணமாக உரை கூறுவதென்றால் "ஒரு உயிரையும் கொல்லாதவனுமாய், புலாலை உண்ணாதவனுமாய் உள்ளவனை எல்லா உயிரும் கைகூப்பித் தொழும்" என்பதுதான். இப்போது குறளுக்கு உரை ஆசிரியர்கள் அளித்துள்ள பொருளைப் படிப்போம். மணக்குடவரும், "கொல்லானுமாய்ப் புலாலை உண்டலையும் தவிர்த்தவனைக் கைகுவித்து எல்லா உயிரும் தொழும் என்றவாறு" என்றே பொருளுரைத்தார். பரிதியாரும் 'கொல்லாமையும் புலால் மறுத்தலும் உள்ளானை எல்லா உயிரும் தொழும் என்றவாறு" என்று உரை வரைந்தார். காளிங்கரும் "தனக்குச் சுவை கருதி ஒன்றினைக் கொல்லானுமாய், புலாலினைத் தின்ன மறுப்பது செய்வானுமாய் இருந்தானை அனைத்து உயிரும் கைகூப்பித் தொழும் என்றவாறு" என்று கூறினர். சாமிகள் உவந்தளிக்கும் பொருளை இப்பொழுது படித்து மகிழ்வோம்.

சாமிகள்: "வள்ளுவர் கூறியுள்ள குறளில் ஒரு பேருண்மையும் பொதிந்துள்ளது. சாதாரணமாக இந்தக் குறள் ஜீவகாருண்யத்தை விளக்குவதற்குச் சிறந்த குறளாக அமைந்துள்ளது. கொல்லான் நிலைக்கு வந்துவிட்ட ஒருவன் உயர்ந்த மனிதன்தான். ஆனால் சிலர் பிறவியிலிருந்தே மாமிசம் உண்பதில்லை. காரணம் அவர் மாமிசம் சாப்பிடாத குடும்பத்தில், குலத்தில் பிறந்தவர். ஆனால் அந்த ஒரு காரணத்திற்காக உலகம் அவரைக் கைகூப்பித் தொழ முடியுமா? அவர் சொல்லிலும், செயலிலும் பஞ்சமாபாதகனாக இருந்தால், மாமிசம் சாப்பிடாத ஒரே காரணத்தால் உலகம் அவரைத் தெய்வீக நிலையில் ஏற்றிப் பணியுமா? மிருக வகைகளிலும் மாமிசமே புசிக்காத மிருகங்களும் உண்டு. ஆக கொல்லான் என்பதற்காக மட்டும் ஒருவனை உலகம் தெய்வமாகக் கொண்டாடவில்லை. அவனை தெய்வமாக மதிக்க அவனிடத்தில் இதுவுமன்றி ஒரு தனி விசேடம் ஒன்றிருக்க வேண்டும். ஜீவகாருண்யத்தை விளக்க உதவும் கொல்லான் நிலைக்கு வந்த நெறியாளர், புலால் மறுத்தான் நிலைக்கு உயர்ந்துவிட்ட பெரியவர். அவர் ஐம்புலன்களை வென்றவர். ஐம்பொறிகளால் உய்த்தனுபவிக்கும் சுகங்களை விரும்பாதவர். 'புலால்' என்று இங்கு கூறி இருப்பது 'ஐந்தவித்தான் உடல்'தான். தன்னுடைய சரீரத்தால் வரக்கூடிய சுகபோகங்களை மறந்தவன்தான், ஆசாபாசங்களை உதறித் தள்ளியவன்தான் 'புலால் மறுத்தான்' என்பவர். சிற்றின்பத்தை உதறித்தள்ளிப் பேரின்பத்தில் திளைத்து மூழ்கி இருப்பவர்தான் ஜீவகாருண்ய நிலையில் கொல்லான் நிலையில் திகழ்பவர்.

மேலே கூறிய ஐந்தவித்தான் நிலையில் புலானை மறுத்தான் நிலைக்கு ஏறிவிட்ட பெரியவர். இப்பேர்ப்பட்ட பெரியவர் ஐம்புலன்களை ஒடுக்க ஒடுக்க அவருடைய உடலிலுள்ள புலாலும் வற்றுகின்றது. அவரையே உலகம் தெய்வமெனக் கொண்டாடுகின்றது.

## " கல்லானே யானாலும் கைப்பொருள் " — விளக்கம் :

> கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
> எல்லாரும் சென்றங்கு எதிர்கொள்வர் — இல்லானை
> இல்லாளும் வேண்டாள் மற்றீன்றெடுத்த தாய்வேண்டாள்
> செல்லா தவன் வாயிற் சொல் — நல்வழி.

சாமிகள் : ஒருபாட்டை எடுத்துக்கொண்டால் அதற்கு எல்லோரும் ஒத்துக்கொள்ளக்கூடிய பொருள் இருக்கவேண்டும். அதை மேலாகப் பார்க்கும்போது ஒருபொருள் தோன்றும். அதை நன்றாக ஆராய்ந்து பார்க்கும்போது, கருத்தைக் கருத்தாட்டும்போது அருமையான பொருளும் தோன்றும். அந்தப் பொருள் அருமையாக இருப்பதோடுகூட நமது நாட்டுப் பண்பிற்கும் நமது குடும்பத்தினர் பண்பிற்கும் உகந்ததாக அமைந்துவிட்டால் அந்தப் பொருளையும் பரிசீலனை செய்து பார்ப்பதில் குற்றமொன்றுமில்லை. ஔவையார் அருளிச் செய்துள்ள மேலே கூறிய பாட்டின் பொருள் எல்லோருக்கும் நன்கு விளங்கும். உலகில் எதை மக்கள் மதிக்கின்றனர். பணத்தைத் தான் பெரிதாக மதிக்கின்றனர். பணம் என்றால் பிணம் கூட வாயைத் திறக்கும் என்று சொல்லக்கூடிய அளவுக்குப் பணத்தின் மதிப்பு உயர்ந்து விட்டது. ஒருவனுக்குக் கல்விச் செல்வமில்லாவிட்டாலும் அவன் கோடீஸ்வரனாகி விட்டால் ஊரே திரண்டு, கற்றோரும் மற்றோரும் சென்று அவனை வரவேற்பர். ஆனால் பணமில்லாதவனைச் செல்லாத காசுபோன்றே அவன் மனைவியும் மதிப்பாள், அவன் தாயும் மதிப்பாள். அவன் அறிவாளியாக இருக்கலாம். அவனுடைய ஏழ்மைநிலை காரணமாக அவன் வார்த்தைகளை அவன் சொந்த மனைவியும் ஏற்றுக்கொள்ள மாட்டாள், அவனைப்பெற்ற தாயும் மதிக்கமாட்டாள். இதுதான் இந்தப் பாடலில் உள்ள சாதாரண அர்த்தம், எல்லோரும் கூறும் பொருள்.

சற்று சிந்திந்துப்பாருங்கள். இப்படிச் சொன்னால் காதல் வாழ்க்கைக்குக் களங்கமேற்படவில்லையா ? தாய்ப்பாசத்திற்கு மாசு ஏற்படவில்லையா? இல்லாள் அகத்திருக்க இல்லாததொன்றில்லை என்றும், குலமகட்கழகு கொழுநனைப்பேணுதல் என்றும் போற்றிய தமிழ்க் கவிஞர்களா, காதலையும் தாய்ப்பாசத்தையும் உதறித்தள்ளி, வெறும் பணத்திற்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருப்பர். அப்படி இருந்தால் ''குலமகட்கழகு செல்வக் கொழுநனைப்பேணுதல்''

என்றல்லவா உரைத்திருக்க வேண்டும். கொஞ்சம் ஆராய்ந்து பாருங்கள். பாட்டில் உள்ள முதல் இரண்டு வரிகள் சக்தியுள்ள ஆடவர் பெருமையை எடுத்துரைக்கின்றது. 'இல்லானை இல்லாளும் வேண்டாள், மற்றீன்றெடுத்த தாய்வேண்டாள் செல்லாதவன் வாயிற் சொல்' என்ற அடிகளைச் சற்றுக் கருத்தாட்டிப் பார்க்க வேண்டும். ஒரு தலைவனோடு கூடமாட்டேன் என்று ஒரு தலைவி இருசந்தர்ப்பங்களில் கூற நியாயமுண்டு. அப்போது தலைவன் எத்தகைய வார்த்தைகள் பேசினாலும், கொஞ்சினாலும் பயமுறுத்தினாலும் அவன் சொற்களைத் தலைவி சட்டைசெய்யவே மாட்டாள். ஒருநிலை தலைவன் ஆண்மை இல்லானாக இருக்கும்நிலை. ஆண்மையில்லானை இல்லாளும் சுகத்திற்கு வேண்டாள். மற்றொருநிலை தலைவி ஒரு மகவைப் பெற்றிருச்கும் பச்சை உடம்பு நிலை. ஒரு குழந்தைக்குத் தாயான உடனேயே எந்தப் பெண்ணும் காம இச்சையால் தலைவனைத் தேடுவதில்லை. இங்கு 'மற்றீன்றெடுத்த தாய் வேண்டாள்' என்று கூறியது தலைவனுடைய தாயைக் கூறியதாக எடுத்துக்கொள்ளாமல் தலைவனுடைய தாய்நிலைஎய்திய தலைவியைக்கூறியதாக எடுத்துக்கொள்ள 'ஈன்றெடுத்த தாய்' என்ற சொற்கள் உதவுகின்றன. "ஈன்றெடுத்த" என்பது அப்பொழுது தான் பிள்ளையைப்பெற்ற நிலையைக் குறிக்க உதவுகின்றது. இப்பொழுது பாருங்கள் பாட்டின் மற்றொரு பொருளை! ஆண்மை இல்லானை இல்லாள் வேண்டாள். அதில் நியாயமிருக்கின்றது. பிள்ளையைப்பெற்ற பச்சை உடம்பு தலைவியும் பிரசவமாகி உடனடியாக தலைவனை தன்சுகத்திற்கு வேண்டாள். அவன் என்ன சொன்னாலும் தலைவன் வார்த்தை பயனில்லாது போகும். ஆனால் ஆண்மை பெருகும் தலைவனை, குழந்தை பிறந்து வெகுநாட்கள் சென்றபின் தன்னை இன்பத்திற்காகத் தேடிவரும் தலைவனை தலைவன் தன் காதலன் என்ற ஒரே காரணத்திற்காக தானே வலிய அணைத்துக் கொள்ள தயங்குவதில்லை தலைவியரும். அதேபோன்று தான் சக்திமிக்க ஒருவனை, அவன் கல்லாதவனாயினும், கற்றோரும் மற்றோரும் அவன் சக்திமிக்கவன் என்ற ஒரே காரணத்திற்காக வலியச்சென்று வரவேற்கின்றனர்.

## அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்:

**சாமிகள்:** பஞ்சேந்திரியங்களை யானை என்ற வார்த்தையாலே உணர்த்துவர் பெரியோர்.

"யானை வரும் பின்னே
மணி யோசை வரும் முன்னே"

என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒரு சாதாரண பழமொழி. பஞ்சேந்திரியங்கள் விழிப்படைந்து செயல்படுவதற்குமுன் உள்

நாக்கு பேசிவிடும் என்பதுதான் யோகியர் இந்தப் பழமொழியில் காணும் உண்மை. இதேமாதிரி இன்னொரு சொற்றொடரும் உண்டு.

" யானையைப் பிடிப்பதும்
பானைக்குள் அடைப்பதும் — இதுதான்
செல்ல பிள்ளைக் கடையாளம் "

சாமி: எங்காவது எவராவது யானையைப் பானைக்குள் போட்டிருக்கின்றார்களா? அது முடியுமா?

பக்தர்: சாமிகளே, தாங்கள் கூறியுள்ள திருமொழிகளுக்கு எனக்குப் பொருள் விளங்காவிட்டாலும், திருவாங்கூரில் சிறிய குண்டுமணிகளில் தந்தத்தால் செய்த சிறுசிறு யானைகளை அடைத்து அந்தக் குண்டுமணிகளுக்கு மூடிகளையும் வைத்து மூடிக் கலைஞர்களை மகிழ்விக்கின்றார்கள். ஒரு சிறு குண்டுமணியில் தந்தத்தால் செய்த 5 யானைகளையும் அடைத்து வைக்கின்றனர், 25 யானைகளைக்கூட அடைத்து வைக்கின்றனர்.

சாமிகள்: நான் பார்த்திருக்கின்றேன் இந்த அற்புத வேலைப் பாட்டை. நான் கூற வந்தது இந்தக் கலைப்படைப்பைப் பற்றியதல்ல. நம்முடைய இந்திரியங்களைப் பற்றித்தான். பஞ்சேந்திரியங்களையும் கட்டுப்படுத்துதலையே நான் குறிக்கின்றேன். யோகியர்கள் கடக்கவேண்டிய படிகளுள் ஒன்று பஞ்சேந்திரியங்களைக் கட்டி ஆளுதல். செல்லப்பிள்ளை வேறுயாரும் இல்லை, யோகியர்தான். அவருடைய வேலை (பொழுது போக்கு) பஞ்சேந்திரியங்களைக் கட்டுப்படுத்துவது. யானைகளைப் பானைக்குள் போடுவது என்பது சுலபமான காரியமா? அப்படித்தான் பஞ்சேந்திரியங்களை கட்டுப்படுத்துவதும். இங்கு யானை என்பது பஞ்சேந்திரியம். பானை என்பது மனம். இதற்கு ஒரு சாதாரணப் பொருளும் உண்டு. அதாவது யானை ஈக்களைப் பிடித்துப் பானைக்குள் போடுவது என்பதாகும்.

## ஐந்துமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்:

சாமிகள்: மனத்தைப் பற்றியும் பஞ்சேந்திரியங்களைப் பற்றியும் பெரியவர்கள் நிறைய எழுதி இருக்கின்றனர். அதை அனுபவ வாயிலாகவும் நன்றாய் உணர்கின்றனர். கீதையை உபதேசித்த கிருஷ்ணபகவான் கூறுவதையே கேட்போம். ஒருவர் மனம் எப்போது அசையா நிலை அடைகிறது? நல்லதோ கெட்டதோ எது வந்தாலும் ஒருவர் ஒன்றிலும ஒட்டியவனாகவே இருக்கமாட்டார். அதனால் மகிழ்ச்சியடைவதும், வருத்தப்படுவதுமில்லை. இது எப்படி? உலகப் பொருள்களிலிருந்தும் தம் பஞ்சேந்திரியங்களை அகற்றி விடுவதால் இந்த நிலை ஏற்படுகின்றது. ஒரு ஆமை தன்

நான்கு கால்களையும் தலையையும் தன் ஓட்டுக்குள்ளேயே இழுத்துக் கொள்வது போன்று ஒருவர் தன் பஞ்சேந்திரியங்களை மனத்தினுல் அடக்கிக் கொள்கின்றார். அந்த நிலையில் தான் ஐந்தெழுத்துண்மையையும் ஒருவரால் அனுபவிக்க முடியும். இதை எவ்வளவு அழகாகக் கப்பலாய்க்கட்டி அகண்டரதமாக எடுத்துக் காட்டுகின்றார் ஒரு சித்தர்.

" பஞ்சபூதப் பலகை கப்பலாய் சேர்த்து
பாங்கான ஓங்குமரம் பாய்மரம் கட்டி
நெஞ்சு மனர் புத்தி ஆங்காரஞ் சித்தம்
மானபிமானம் கயிருகச் சேர்த்து
ஐந்தெழுத்தைக் கட்டிச் சரக்காக ஏற்றி
ஐம்புலன் தன்னிலே சுக்கா னிறுத்தி
நெஞ்சு கடாட்சத்தால் சீனிப்பாய் தூக்கி
சிவனுடைய திருப்பொருளை சிந்தையில் நினைத்து
தஞ்சலான ந்த வெள்ளத்தில் தானே
அகண்டரதம் போகுதடா ஏலேலோ ஏலைய ஏலேலோ
ஏலேலோ "

இப்பொழுது நாம் அருணகிரியார் பாடியுள்ள கந்தரனுபூதியில் ஒரு பாட்டை எடுத்துக் கொள்வோம்.

" அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலெனவேல் தோன்றும் — நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகா என்றேதுவார் முன்."

முருகு எனும் சொல்லுக்கு மாறுஇளமை, மாறுஇனிமை, மாறு மணம், தெய்வத்தன்மை என்றெல்லாம் பொருள் கூறுவர். முருகு என்ற சொல்லுக்கு அருள் என்ற பொருளும் உண்டு. அவன் அருளைச் சம்பாதித்துக் கொண்ட பெரியவர் முருகனைக் கூப்பிட வேண்டியது தான். முருகன் ஓடோடி வருவான். " நான் முருகனுக்கு டவாலி கட்டியவன் " என்று அவர் சொல்லக் கூடிய அளவுக்கு முருகன் அருள்பாலித்து உதவுவன். முருகன் அருளை அடைவது எப்படி? அதற்கு வழி சொல்லித் தருகின்றார் அருணகிரிநாதர். ஐந்து முகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும் என்று சொல்கின்றார். ஐந்துமுகம் என்பதென்ன ? அதுதான் பஞ்சேந்திரியங்கள். மெய் வாய் கண் மூக்கு செவி எப்போது ஒருமுகமாகத் தோன்றுகின்றதோ அப்போது ஆறுமுகன், இறைவன், சச்சிதானந்தம் தோன்றிவிடும். பேரின்பத்தை இன்னதென்று சொல்ல முடிவதில்லை. இறை இன்பத்தை எப்படி வருணிப்பது? இருந்தாலும் ஓரளவு அதன் இன்பத்தை இத்தகையது என்று எண்ணிப்பார்க்க முடியும்,

உரைத்துப்பார்க்க முடியும். பேரின்பத்தை அளந்து பார்க்க உலகத்தில் சிற்றின்பத்தையே அளவுகோலாகக் கொள்வதும் உண்டு. சாதாரணமாக அழகில் ஈடுபடுகின்ற மனம் இன்ப நுகர்ச்சியில் ஈடுபட்டுள்ளபோது தன் ஐம்புலன்களையும் அந்த இன்பத்திலேயே திருப்பி விட்டிருப்பதை உணரமுடிகின்றது. பேரின்ப நிலை எய்துவதற்கு முதன் முதலில் நாம் கட்டுப்படுத்த வேண்டியது பஞ்சேந்திரியங்கள் தான். இந்தப் பஞ்சேந்திரியக் குதிரைகளை மனம் என்ற கடிவாளம் கொண்டு ஓட்டிவிட்டால் இறைவனிடம் அழைத்துச் சென்றுவிடும் என்பதில் ஐயமுண்டோ? இது தான் அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும் என்பதன் பொருள்.

வெஞ்சமரில் அஞ்சலென வேல் தோன்றும் என்றார். இந்த வேல் என்பது என்ன? இது படைவேல். கூர்முனைவேல், சக்திவேல் என்பதுமட்டுமல்ல? முருகன் என்றவுடனே அவன் வேலையும் நாம் நினைக்கின்றோம். இந்த உலகத்திலேயே நமக்கு விரோதிகள் எவ்வளவோபேர் உண்டு. காம, குரோதம், மதம், மாச்சரியம் முதலியவைகளும் நமக்குப் பகைவர்கள்தான். அவர்களோடு நாம் போராட வேண்டி இருக்கின்றது; அப்படிப் போராடும்போதும் நமக்கு உறுதுணையாக அமைவது முருகனுடைய வேல்தான். இந்தவேல் கீழே சிறுத்து மேலே பெருத்துள்ளது. இது ஆளைக் கிளப்பும் வேல்அல்ல. ஞானத்தைக் கிளப்பும் வேல். அந்தவேல் ஞானவேல், அந்த அறிவுவேல், நமக்கு உற்ற துணையாகும் போது "எதற்கும் அஞ்சவேண்டாம்", "நானிருக்க பயமேன்" என்ற மனஉறுதி ஏற்பட்டு விடுகின்றது. முருகா என்று ஓதவேண்டியதுதான்! ஐந்துமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றி விடுகின்றது! வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றி விடுகின்றது! பயப்படக்கூடிய தருணத்தில் முருகன் தோன்றாத்துணையாக வந்து காப்பாற்றுகின்றான்!

அதுமட்டும்தானா? நெஞ்சில் ஒரு கால் நினைக்கில் இருகாலும் தோன்றும்! நாம் ஒருகால் நினைத்தால் முருகன் இருகால் தோன்றுகின்றான். நாம் இறைவனை நோக்கி ஒரு அடி எடுத்துவைத்தால் இறைவன் நம்மை நோக்கி இரு அடிகள் எடுத்துவைக்கின்றான். இன்னும் 'இருகால்' என்ற சொற்களில் அருமைப்பொருள் பல பொதிந்திருப்பதைப் பார்த்து மகிழுங்கள். முருகனை நினைத்து விட்டால் அவன் கருணைபொழியும் ஆறுமுகங்களோடும், பன்னிரண்டு கரங்களோடும், இரண்டு திருவடிகளோடும் (இருகால்) நமக்கு காட்சிகொடுத்து விடுகின்றான். இந்தப் பொருள் ஒன்றுதானா 'இருகால்' எனும் சொற்கள் விளக்குகின்றன. இந்த திவ்விய காட்சி இருகாலும், அதாவது இரண்டு வேளைகளிலும் காலையிலும்

மாலையிலும் பக்தர்களுக்கு உண்டு, அதுமட்டுமில்லை. இந்த மெய் யனுபவம் 'இருகாலும்' அதாவது இகத்திலும் பரத்திலும் உண்டு.

## கண்டவர் விண்டிலர் : விண்டவர் கண்டிலர்

சாமிகள் உற்சாகத்தோடு பேச ஆரம்பித்துவிட்டால் ஆத்மீகப் பொருள் செறிந்த தத்துவ வாக்கியங்கள் தானுகவே அருவி போல் கொட்ட ஆரம்பித்து விடும். இத்திருவாக்கியங்களுக்கும் சாமிகள் கூடியிருக்கும் பக்தர்களைப் பொருள் கேட்பதுண்டு. இத்திருவாக் கியங்கள் சாதாரணமாக ஆத்மீக இலக்கியத்திலும் ஆத்மீக அன்பர் கள் உரையாடலிலும் அடிக்கடி பயன்படுபவையேயாம். "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்," "அண்டத்திலுள்ள பிண்டத் தில்," "விட்டகுறை தொட்ட குறை" என்பன போன்ற தத்துவ ஆராய்ச்சிசிக்குரிய சித்தனைக்குரிய சொற்ருெடர்கள் எவ்வளவோ உண்டு. இவைகளுக்கு அவரவர் அறிவுக்கு எட்டியபடி, அவரவர் அனுபவங்களுக்குத் தெரிந்தபடி பொருள் விரித்துக் கொண்டே போகலாம். இறை தத்துவத்தை விளக்க இச்சொற்ருெடர்கள் மிகவும் இன்றியமையாதனவாக இருக்கின்றன.

ஒரு நாள் 'கண்டவர் விண்டிலர்' என்ற சொற்ருெடர்க்கு சாமி கள் பக்தர்களை விளக்கம் கேட்டார்.

பக்தர் 1: சாமிகளே, இறைவனைக்கண்டவர்கள் பேசமாட்டார் கள், இறைவனைக் கண்டதாக பேசுகின்றவர்கள் இறைவனைக் கண் டிருக்க மாட்டார்கள்.

பக்தர் 2: சாமிகளே, இதையே கொஞ்சம் விளக்கமாக உரைக்க லாம். இறைவன் எங்கும் உள்ளவன். சர்வ வல்லபன். அவனன்றி அணுவும் அசையாது. அவனுக்கு ஆதிஅந்தமில்லை. இத்தகையவனைப் பஞ்சபூதங்களை ஒடுக்கி, நான் என்பதை ஒழித்து, சரியை, கிரியை, ஞானம்,யோகம்என்ற மார்க்கங்களால் பாடுபட்டுக்காண்பவர்கள்அப் பரம்பொருளைப் பற்றிப் பேசவே மாட்டார்கள். அந்தப் பேரானந்தப் பெருநிலையை அடைந்தவர்கள் அதிலேயே லயித்து தம்மை மறந்து உலகை மறந்து இருப்பர். ஆனல் காண்டற்கரிய பரம்பொருளை தான் நேரே கண்டதாக உரைப்பது பொய்யுரையாளர்கள், பித்த லாட்டக்காரர்கள்தான். அவர்கள்தான் இறைவனைப் பார்த்தேன், இப்படி இருக்கான், இப்படிப் பேசினுன், என்று கர்வத்தோடும் பேச ஆரம்பித்து விடுவர். ஆனல் கண்டுவிட்டேன் என்று சொல்பவர் கள் உண்மையில் இறைவனைக் கண்டவரே இல்லை. நிறைகுடம் ததும்பாது. அரைகுடம் ததும்பும்.

சாமிகள் : இன்னும் பொருள்கள் உண்டோ ?

பக்தர் 3: பிரம்மம் என்பது நமது புத்திக்கும், வாக்குக்கும் அப்பாற்பட்டது. பிரம்மத்தின் தன்மையை அறிந்துகொள்ள புத்தியும் போதாது. அதை விளக்க வார்த்தைகளும் போதாது. பிரம்மம் என்பது இப்படித்தான் இருக்கும் என்று நேரிடையாக வருணிக்க முடியாது. அது எப்படி எல்லாம் இருக்காது என்பதைத்தான் சொல்ல முடியும். 'நேதி, நேதி' என்றுதான் உரைக்க முடியுமே தவிர இதுதான் அது என்று உரைக்க முடியாது. உண்மையைச் சொல்லப்போனால் மௌனமே இதை அனுபவித்தவர்களின் நிலை. குருமூர்த்தியாக விளங்கும் தட்சிணாமூர்த்தியும் விளக்கம் கொடுத்தது வார்த்தைகள் ஆடாத அமைதி நிலையில்தான். உண்மையைக் காண மௌனநிலை ஒன்றுதான் உதவும். அதைக்கொண்டுதான் உண்மை நிலையை உணர முடியும். சச்சிதானந்தத்தை அனுபவிப்பவர்கள் அது இப்படிப்பட்டது என்று உரைப்பதில்லை. சச்சிதானந்த அனுபவமில்லாதவர்தான் அது இப்படி அது அப்படி என்று அளவு கடந்து பேசுவர்.

சாமிகள்: நீங்கள் சொன்ன விளக்கமெல்லாம் ஒத்துக்கொள்ளக் கூடிய அறிவுரைகள். ஆனால் நான் சொல்லக்கூடிய விளக்கம் மிகவும் எளியது. 'இவ்வளவு தானா' என்று கூட நீங்கள் நினைக்கலாம். ஆனால் அது யாவராலும் ஒத்துக்கொள்ளக் கூடியது. கண்டவர், என்று சொல்கின்றீரே? கண்டவர் யார்? விண்டவர் யார்? காண்பது கண்கள்! பேசுவது வாய்! கண்கள் பேசுவதில்லை.வாய் காண்பதில்லை. ஒரு அழகான தாமரை பூத்த தடாகத்தைக் காண்கின்றோம். கண்கள் அதைக் கண்டு அனுபவிக்கின்றது. ஆனால் தான் அனுபவித்த இன்பத்தின் இயல்பை எடுத்துச் சொல்ல அதனால் முடியுமா? கண்களுக்கு வாய் ஏது? வார்த்தைகள் ஏது? பேசவேண்டுமானால் வாய்தான் பேசமுடியும். வாய்க்குத்தான் வார்த்தைகள். ஆனால் பேசமுடிகின்ற வாய்க்கு பார்க்க முடிகின்றதா? முடியாது. அதனால் தான் காண்கின்ற கண்கள் (கண்டவர்) பேசமுடியவில்லை விண்டிலர்); பேசுகின்ற வாய் (விண்டலர்) காணமுடிவதில்லை (கண்டிலர்) என்று கூறுகின்றனர். எப்படி இந்த விளக்கம்?

இந்தச் சுருக்கமான தெளிவுரையைக் கேட்கும்போது சாமிகளுடைய உதயப் பொன்மொழிகளில் ஒன்று ஞாபகத்திற்கு வருகின்றது. அந்தப் பொன் மொழி— "முத்து மாணிக்கம் கிடைக்கவில்லையே என்று தேடுவர். அது அவர் தோட்டத்திலேயே இருக்கும். அதைக் கிள்ளி எடுத்து வந்து காண்பித்தால் "அட" இது தானா என்பர்." சாமிகளுடைய உரையும் இப்படித் தானே இருக்கின்றது? ஆனால் அது தானே உண்மை!

“ அண்டத்திலுள்ளது பிண்டத்தில் ”

சாமிகள் : “ அண்டமென்றும் பிண்டம் என்றும் சொல்கின்றீர்களே இவையென்ன ?” அண்டத்திலுள்ளது பிண்டத்தில் என்பதைப் பற்றியும் சிந்தனை செய்து பார்த்தீர்களா ?

பக்தர் ஒருவர் : இறைவனை அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகன் என்று போற்றுகின்றனர். அண்டமென்பது பெரிதானதையும் பிண்டம் என்பது சிறியவற்றையும் குறிக்கின்றன. இறைவன் சர்வ வியாபி என்கின்றனர். அவன் எங்கும் உள்ளவன். அவன் இல்லாத இடமில்லை. அவன் தூணிலும் துரும்பிலும் உள்ளான், மனிதனிடத்திலும் உள்ளான். மற்றப் பொருள்களிடத்திலும் உள்ளான்.

பக்தர் 2 : அண்டம் என்பது ஒரு பொருளையும் குறிக்கும் எனலாம் அல்லது இச்சொற்றொடர்கள் அகத்தையும் புறத்தையும் குறிக்க உதவுகின்றன எனலாம். மானிட உடம்பு முதற்கொண்டு இவ்வண்டபுவனங்கள் யாவையும் ஐந்து பூதங்களால் ஆக்கப்பட்டன. மண், தண்ணீர், காற்று, நெருப்பு, ஆகாயம் இல்லாத இடமில்லை. பஞ்சபூதங்கள் நமது உடம்பிலும் உள்ளன. உடம்பைத் தவிர மற்ற இடங்களிலும் இருக்கின்றன.

சாமிகள் : நீங்கள் கூறுவது பொருத்தமாக இருக்கின்றது. ஒரு யோகியின் அனுபவக் கண்கள் கொண்டு இதே வாக்கியங்களைக் காண்போம். ஒரு யோகி உடம்பில் உத்தமனைக் காணும் நிலையை அடைந்துள்ள பெரியவர். “ உடம்பில் உள்ளது எங்கும் உள்ளது, எங்கும் உள்ளது உடம்பில் உள்ளது ” என்பது அவர் தன்னை அறிந்துகொண்ட தன்மை. அவர் தன் உடம்பிலேயே குண்டலியை எழுப்புகின்றார். ஆறு ஆதாரங்களில் உள்ள தெய்வங்களை வழிபடுகின்றார், சிவனோடுகலந்து பரப்பிரம்ம சொரூபி ஆகின்றார், அவரால் ஆகாததொன்றுமில்லை என்று சொல்லக்கூடிய அளவுக்கு பேராற்றல் பெற்று வாழ்கின்றார். அனைத்திலும் ஆகாயத்திலும் வெளியிலும் (அண்டத்தில்) உள்ள ஈசன் தன் பிண்டத்தில் (உடம்பில்) உள்ளான் என்ற உண்மையைக் கண்டுகொண்ட யோகி ‘ அண்டத்திலுள்ளது பிண்டத்தில் ’ என்பதை நம் உடலைக் காட்டியே விளக்குவர். ஆறு ஆதாரங்கள் என்று சொல்வது மனித உடம்பில் மட்டுமல்ல, (பிண்டம்) அண்ட சராசரங்களிலும் (அண்டம்) அமைந்துள்ளது என்பதும் உற்றுநோக்கத் தக்கது. மனிதனிடத்தில் ஆறு ஆதாரங்கள் அமைந்திருப்பது போன்று வெளியில் அமைந்துள்ள ஆதாரங்களைச் சில க்ஷேத்திரங்களில் வைத்துச் சொல்லுவதுமுண்டு. அதைப்பற்றிய பாடலையே கேளுங்கள்,

“ திருவளராமூர் மூலந் திருவானைக்காவே நாபி
மருவளர் சூழண்ணாமலை மணிபூர நீவிர்
இருவருங் கண்ட மன்றமிதயமாந் திருக்காளத்தி
பொருவருங் கண்டமாகும் புருவமத்தியாங் காசி ”

மனிதனிடம் அண்டசராசரத்தில் உள்ளன இருக்கின்றன. மனிதனுள் சரீரம், இதயம், பிராணன்கள் உள்ளது போன்றே சராசரங்களிலும் பிரிதிவி, பூதங்கள். வாக்கு அமைந்துள்ளன. அனுகத சப்தம் இதயத்தில் பிராணன்களிலிருந்து உண்டாவதைப்போல் அண்டத்திலும் வாக்கு சப்தங்கள் உண்டாகின்றன என்பதையும் அறியவேண்டும். இதைத்தான் அண்டத்திலுள்ளது பிண்டத்தில் என்று கூறினர். யோகிகளுக்கு இது நன்ருக விளங்கும் : இது அவர்களுடைய அனுபவமாகும்.

## “ விட்ட குறை தொட்ட குறை ”

சாமிகள் : சிவஞான போதம், சித்தர் பாடல்கள் போன்ற நூல்களில் சில சொற்ருெடர்கள் உண்டு. அவற்றைப் ‘ பரிபாஷை ’ என்று சொல்வர். பார்ப்பதற்கு நமக்கு தெரிந்த புரிகின்ற வார்த்தைகள் தான் ; அதனுள் அமைந்துள்ள பொருள் மட்டும் தான் விளங்குவதில்லை. இவைகளை விளக்க அனுபவம் வேண்டும், தக்க குருமார்களைக்கொண்டு புரிந்துகொள்ளவேண்டும் என்பர். ‘ விட்ட குறை, தொட்ட குறை ’ என்பது அத்தகைய பரிபாஷையல்ல. இவற்றின் பொருளைப்பற்றி சிந்தித்திருக்கின்றீர்களா ?

பக்தர் : மனிதன் பல ஜென்மங்கள் எடுக்கின்ருன். மனிதனுக்கு எவ்வளவோ ஆசைகள் உண்டு. ஆனால் அவ்வளவு ஆசைகளையும் ஒரே பிறவியில் அனுபவித்து விட முடிகின்றதா ? ஒரு பொருளை ஒருவன் ஒரு பிறவியில் அடைந்தாலும் கைக்கெட்டிய பொருள் வாய்க்குக் கிட்டுவதில்லையென்றபடி அவன் அதை அனுபவிப்பதற்கு முன் அவன் இறந்து விடுகின்ருன். அவன் ஆசையால் தொட்டது அவன் உலகை விட்டே பிரிந்து விடுவதால், பூர்த்தி அடைவதில்லை. அவன் உலகத்திலிருந்து விட்டுச் சென்றதை மறுபடியும் அவனுக்கு மறுபிறப்பில் இறைவன் கொடுத்து அவன் குறையைப் பூர்த்தி செய்வதையே இத்தொடர்கள் குறிக்கும். ஒருவன் ஆசையால் முற்பிறப்பில் விட்டதையும் தொட்டதையும் மறு பிறப்பில் குறை நீங்கி நிறைவிக்கும் போக்கையே விளக்க ‘ விட்ட குறை தொட்ட குறை ’ என்று வருணிக்கின்றனர்.

சாமிகள் : ஒவ்வொரு ஜீவராசியும் இறுதியில் கடவுளை அடைந்தே தீரவேண்டும். ஒவ்வொரு ஜீவனும் கடைசியில் சிவனோடு ஐக்கியமாகியே தீரவேண்டும். இதற்காக எவ்வளவோ பிறப்பெடுக்

கின்றனர். புல்லாகி, மரஞ் செடி கொடிகளாகி, புழுவாகி, மீனாகி, பறவையாகி, பல்வேறு மிருகமாகி புண்ணிய வசத்தால் மனிதப் பிறவி யெடுக்கும். சீவன்களுக்கு நல்லது கெட்டது என்று அறியும் அறிவுமட்டுமல்ல, சிவனை அடைகின்ற வழியும் அறியும் அறிவும் உண்டு. யோக வழியில் ஈடுபட்ட பிறவிகள் முன் ஜென்மத்தில் யோகத்தைத் தொட்டுப் பூர்த்தி காணாமலும் மரித்திருப்பர். அவர் முன் ஜென்மத்தில் அரைகுறையாக முடித்த யோகத்தை நிறைவித்து பூர்த்தி செய்து ஜீவன் முக்தர்களாக விளங்கவே மறு ஜென்மம் எடுக்கின்றனர். அப்படி சென்ற ஜென்மத்தில் விட்ட குறையை இஜ் ஜென்மத்தில் பூர்த்தி செய்வதால் சென்ற ஜென்மத்தில் தொட்ட சாதகத்தை இந்த ஜென்மத்தில் தொடர்ந்து செய்வதால் எடுத்தற் கரிய மானிட ஜென்மத்தின் நற்பயனை அடைந்து ஜீவன் நிலையை சிவநிலையாக்கிக் கொள்கின்றனர், பரம் பொருளோடு ஐக்கிய மாகின்றனர். இதைத்தான் இச்சொற்றொடர்கள் விளக்குகின்றன.

## ii. சாமிகளின் திரு அருள்வாக்கு

### 1. அருள் வழிபாடு.

ஓம்

ஆண்டவனுடைய அருளை அடைவதே மானிட ஜன்மத்தின் பயனாகும். இந்த ஆண்டவன் யார்? அவன் அருளை எப்படி அடைவது? என்ற கேள்விகள் உடனே எழுகின்றன.

அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது எதுவோ அதுவே ஆண்டவனாகின்றான்: தன்னருள் வெளிக்குளே அகிலாண்ட கோடி எல்லாம் தங்கும்படிக்கு இச்சை வைத்து உயிர்க்குயிராய்த் தழைத்த தெதுவோ அதுவே ஆண்டவனாகின்றான். இப்படியே அவன் அருள் தன்மையை, அடுக்கிக்கொண்டே செல்கின்றார் தாயுமானவர். ஆகவே இறை தத்துவத்தின் அடிப்படை அருள் என்பது தெளிவாகின்றது, சுருங்கக் கூறின் ஆண்டவன் அருள் வடிவானவன் என்பதே உலகத்தின் பேருண்மை. இந்த ஆண்டவனே முழுமுதலாக, பரம் பொருளாக, ஆத்ம சக்தியாக, மூல சக்தியாக ஆகின்றான். 'ஏகன் அநேகன் இறைவன்' ஆகின்றான், பல சமயங்களாலும் அருள் வடிவிலேயே போற்றப்படுகின்றான். பற்பல ஜீவ நதிகள் நாகரிகம் மிளிரும் பற்பல நகரங்களை உண்டாக்கி இரு பக்கங்களிலும் வயல் வளம் ஊட்டியும் செல்வ வளம் ஊட்டியும் கடைசியில் கடலில் கலக்கின்றன. அருள் வெள்ளப் பெருக்கெடுத்தோடும் நதியினைப் போன்ற இயல்பின நமது பல சமயங்கள். அவைகளெல்லாம் மக்களை அருள் கடலாகிய ஆண்டவனிடத்தே அழைத்துச் செல்ல உதவி செய்து அந்த அருள் கடலிலேயே சங்கமமாகின்றன.

இறைவன் ஒருவனே. நாம் எல்லோரும் ஒரே இனத்தவர். இதைத்தான் 'ஒன்றே குலம் ஒருவனே தேவனும்' என்ற அமுத மொழிகளில் திருமூலர் சாற்றுகின்றார். இந்த ஒரே தேவனை-பேரருள் கடலை அடைவதற்கு வழிகளை வகுத்துக் காட்டும் பல சமயங்களும் பல உபதேசங்களையும் பல கொள்கைகளையும் பல்வேறு விதமாக மொழிந்தாலும் அச்சமயங்களெல்லாம் ஒன்று சேர்ந்து பொதுவாக ஒரே குரலில் உரைப்பது அவனுடைய பேரருள் ஒன்றைப் பற்றித் தான். அருள் ஒன்றுதான் வீட்டையடையும் வழி ; அதுவே நமக்குத் துணை. அருள் ஒன்றே நம்மை வளர்த்தும் காத்தும் வருவது என்பதை வள்ளுவர் எவ்வளவு அழகாக உரைக்கின்றார்.

> "நல்லாற்றான் நாடி அருள் ஆள்க; பல்லாற்றான்
> தேரினும் அஃதே துணை.

இத்தகைய குணவிசேடங்கள் பொருந்திய அருளை நாடியும் தேடியும் அதனோடு கூடுவதே மக்களாகிய நம் கடமையாகும்.

பூர்வ ஜென்மங்களின் நற்பயனாகவே இந்த மானிடப் பிறவியை நாம் அடைந்துள்ளோம். "எண்ணறிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்" என்றே உரைப்பர் ஆத்ம ஞானிகள். பிறவிப் பெருங் கடலை நீந்தி இறைவனுடைய தண்ணருளை அடைய உதவுவது தெய்வ வழிபாடாகும். பொருளே இவ்வுலகத்துச் செல்வமாக அமைந்திருத்தலைப்போல அருளே மறுமைக்குச் செல்வம். விண்ணுலகே அருள் மயமான உலகம். அந்த அருள் உலகை அடைவதற்கு இன்றியமையாதிருப்பது அருள் வாழ்க்கையே. அருள் வாழ்க்கை என்பது கருணை வழியில் நம்மை அழைத்துச் செல்கின்ற இறை வழிபாட்டின் வாழ்வே. இதை உணர்த்தவேதான் திருவள்ளுவர்,

> "அருள் இலார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள் இலார்க்கு
> இவ்வுலகம் இல்லாகி யாங்கு"

என்று கூறியுள்ளார். அருளைப் பற்றிச் சிந்தனை செய்யும் நாம் 'முருகு' என்ற தனித் தமிழ்ச் சொல்லின் அழகைக் கவனிப்போம். முருகு என்றால் மணம் என்று பொருள்; முருகு என்றால் இளமை என்று பொருள். அழகிருக்கும் இடத்தில் இளமைக்கும் மணத்திற்கும் குறை உண்டோ? இந்த மாறுத இளமையும், குறைவில்லா மணமும், நிலைத்து நிற்கும் அழகும், பரிபூர்ண இனிமையும் ஒன்று கலந்து இருக்கின்ற நிலையில் அங்கு தெய்வீகத் தன்மை பூரணமாக நிறைந்திருக்கின்றது. அத் தெய்வீகத்தன்மையென்பது யாது? அதுவே அருள். ஆக முருகு என்ற சொல்லுக்கு அருள் என்ற அழகான பரம்பொருள் விளக்கம் தரும் பொருளும் உண்டு. அதனாலல்லவா கருணாகர வள்ளலாகத் திகழும் பழனியாண்டவனுக்கும் முருகன் என்ற அழகுப் பெயரைச் சூட்டி இருக்கின்றோம்: முருகா என்று சொல்லாதார் உள்ளம்

உருகாததைப் போல இறைவழிபாடில்லாதவர்க்கு அவன் அருள் கிடைப்பதில்லை. இறைவனாகிய பேரருளாளன் நமது தந்தையாகின்றான்: நாம் அவன் சேய்கள் ஆகின்றோம். இந்தப் பிறவிப் பெருங் கடலில் வீழ்ந்து துடிக்கும் நமக்கு இனிமேல் நம்மால் தாங்க முடியாது என்று ஏங்கித் தவிக்கும் நிலையில் அவன் அருள் ஒன்றுதான் உதவும் ஒரு கப்பலாகின்றது. இறை வழிபாடு செய்யும் திருக்கூட்டத்தில் உள்ள நமக்கு அந்த 'வள்ளல்' தன்னருளைக் கொடுக்கத்தயங்குவனோ? தயங்கவே மாட்டான்! அவன் அருளொளியை இப்பொழுதே கொடுத்தருள்வான். இதைத்தான் இராமலிங்க சாமிகளும் வற்புறுத்திக் கூறுகின்றார்.

"வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட
மரபினில் யானொருவனன்றோ? வகையறியேன்? இந்த
ஏழைபடும்பாடு உனக்குத் திருவுளச் சம்மதமோ
இது தகுமோ இது முறையோ இது தருமம் தானோ
மாழை மணிப் பொது நடம் செய்வள்ளால்! யான் உனக்கு
மகனலவோ நீ எனக்கு வாய்த்த தந்தையலையோ
கோழையுல குயிர்த் துயரம் இனிப் பொறுக்க மாட்டேன்
கொடுத்தருள் நின அருளொளியைக் கொடுத்தருள்
[இப்பொழுதே!

அவன் அருளை வழிபாட்டின் மூலமாகப் பெற்று எல்லா நலனையும் பெறுவோமாக.

## 2. இறைவன் தன்மை:

ஓம். அருள்வடிவானவன் இறைவன். 'அன்பே சிவம்' என்கின்றோம். அவனை அடைவதற்கும் நல்வழி அன்பு ஒன்றுதான். அருள்வடிவானவனுக்கு மூன்று வடிவங்கள் உண்டு. ஒன்று அருவம்; இந்நிலை கண்களுக்குப் புலப்படாதது. இரண்டாவது உருவம்; இந்நிலை கண்களுக்குப் புலப்படுவது. மூன்றுவது அருவுருவம்; இது அருவமும் உருவமும் கலந்தநிலை. சிவலிங்கம் இந்த அருவுருவ நிலைக்கு அறிகுறியாம்.

கருணைக்கடலாகிய இறைவன் சில சமயங்களில் அருள்வடிவில் மானிட உருவில் இவ்வுலகில் தோன்றியுள்ளார். அருளினது இன்ப வடிவினை மனத்திலேற்றிய கவிஞர்கள் சிற்பிகள் மெய்ஞான கலைஞர்கள் அருளாளனைத் தம் மனமொழி மெய்களால் வழுத்தும் போது அவனுக்குத் தங்களிஷ்டத்திற்குகந்த உருவினைக் கொடுத்து அவனுக்கென்று கோயில்கட்டி, பூஜைசெய்து வாழ்நாட்களை இறைவன் சிந்தனை நாட்களாக அமைத்து வழிபாடு செய்துவந்தனர். அப்பழக்கமே இன்றும் நிலவி வருகின்றது. இந்த நிலையில் இருக்கும்போது இந்த மெய்யன்பர்களுக்கு ஆலய வழிபாடு அவசிய

மாகின்றது. அன்றாடம் ஆலயம் செல்வது, சிலைஉருவில் இருக்கும் சௌந்தர்யமான கடவுளுக்கு அபிஷேகம் செய்வது, அன்னம் படைத்துப் பூஜை செய்வது, தினசரி கடமையாகவும் அமைந்து விடுகின்றது.

இதற்கு அடுத்த நிலைதான் கோபியராகத் தம்மைப் பாவித்து ஜீவாத்மாக்களாகிய சிலர் பரமாத்மாவாகிய கிருஷ்ணனை மனங் கொண்டு மகிழ்வது, சைவர்கள் அழகுமயமான குமரனை – முருகனை தம் மனக்கோயிலில் இருத்தி அவன் அழகில் மயங்கி மகிழ்வது. இப்படியாக அவரவர்கள் இஷ்டத்திற்கொப்ப அவனைத் தம்முள்ளத் தில் இஷ்டப்பட்ட உருவில் ஏற்றிச் சதாகாலமும் ஈசுவரத் தியானத் தில் ஆழ்ந்திருக்கும் நிலையைப்பெற்ற இவர்கள் "புழுவாய்ப் பிறக் கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரந்தர வேண்டும்" என்று இறைவனை மனதாரப்புகழ்ந்து வாயார வாழ்த்தி "உள்ளம்கவர் கள்வனை" உள்ளத்திலேயே இருத்தி மகிழ்வுறுவர்.

இதைக்கடந்த நிலைதான் ஆண்டவனை தம்முள் உணரும் உண்மைநிலை. "சிவன் வேறு யான் வேறு" எனும் வேற்றுத்தன் மையை விட்டுவிடுவது, சிவன் எவனோ அவனே யான் என்று எப்பொழுதும் மெய்யுணர்வை விடாது கொண்டிருப்பது. எல்லா வற்றிலும் வியாபித்துள்ள சிவன் எல்லாப் பிராணிகளிடத்தும் சாக்ஷாத் வியாபகனாகின்றான். ஒருவனே அநேகத் தன்மையாகின் றான். அநேகனாகியும் ஒருமையை அடைகின்றான்." இந்தப் பரிபக்குவ நிலை அடைந்தவர்கள் தன்னைத்தானே அறிகின்றார்கள். இந்த நிலையைத்தான் திருமந்திரம் எவ்வளவு அழகாக எடுத்துரைக் கின்றது.

> "ஜீவனென சிவ னென வேறில்லை
> ஜீவனார் சிவனாரை யறிகிலர்
> ஜீவனார் சிவனாரை யறிந்தபின்
> ஜீவனார் சிவனாயிட்டி ருப்பரே"

இதே நிலையினை உணர்ந்த மாணிக்கவாசகப் பெருமானின் மணி வாசகத்தையும் இப்போது கவனிப்போம்,

> "முத்திநெறியறியாத மூர்க்கரொடு முயல் வேனைப்
> பத்திநெறியறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
> சித்தமல மறுவித்துச் சிவாமாக்கி யெனை யாண்ட
> வத்தனெனக் கருளியவாறு ஆர் பெறுவாரச்சோவே"

இவ்விதப் பல நிலைகளை அடைவதற்கு நமக்கு உறுதுணையாவன வேதமும் ஆகமமும் புராணமும் இதிகாசமும், மற்ற நூல்களும். இவற்றைப் படிப்பதன் மூலம் இவற்றிலுள்ள சட்டதிட்டத்தின்படி

நடப்பதன் மூலம் ஓரளவு மெய்யுணர்வு அடையலாம். ஆனால் இவை களே நம் அருள் பிரகாசத்தினிடத்தில் வேறொரு உதவியின்றிக் கொண்டு சேர்த்துவிடும் என்று மனப்பால் குடிக்கக்கூடாது. இவை களை நமக்கு வாய்த்துள்ள பாதைகளாகவே பாவிக்க வேண்டும். இப்பாதைகளை ஒழுங்காகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமானால் ஆங்காங்கு களைப்பு நீக்கும் மண்டபங்கள் சத்திரங்கள் வேண்டும். நம்மை இப்பாதைகளில் தைரியமாகத் தங்குதடையின்றி அழைத்துச் செல்லத் தன்னையுணர்ந்தோர் உதவியும் வேண்டும். சில சமயங் களில் சிலருக்கு 'ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாது' என்ற அள வுக்குத்தான் இந்த ஏடுகள் பலனளிக்கும். இதைத்தான் பஜ கோவிந்தம் எனும் சங்கருடைய நூலும் வற்புறுத்திக் காட்டும். ஒரு சமயம் சங்கருடைய மாணுக்கனொருவன் மிக ஆர்வத்தோடு வியாகரண சூத்திரங்களை மனப்பாடம் செய்திருந்தான் மனப்பாடம். மட்டும் ஆத்மா கடைத்தேறுவதற்கு பயன்படா தென்பதை இந்த நூலில் சுட்டிக் காட்டினார் சங்கரர்!

"பஜகோவிந்தம் பஜகோவிந்தம் பஜகோவிந்தம் மூடமதே
ஸம்ப்ராப்தே ஸந்நிஹி தேகாலே நஹி நஹி ரக்ஷதி
[டுக்குங்கரனே'

இதனுடைய பொருள்: "மூடமதியுடை யோனே. சாகும் தருணத் தில் 'டுக்குங்கரனே' என்று சொல்லும் வியாக்கரண சூத்திரமா உன்னைக் காப்பாற்ற முடியும். அதனால்கூட உன்னை மரண சமயத் தில் காப்பாற்ற முடியாது. ஆகையால் கோவிந்தனை உள்ளன்போடு பஜனை செய்" என்று மும்முறை கோவிந்தன் நாமத்தைச் சொல்லி இவ்வுண்மையை வற்புறுத்துகின்றது இந்நூல்.

பகவானிடத்தில் 'நீயே கதி' என்று சரணடைந்துவிட்டால் அவன் அருள் நம்மை எந்த தீயசக்தியிடமிருந்தும் காப்பாற்று கின்றது. தன் பக்தனான மார்க்கண்டேயனைக் காக்க காலனுக்கே ஈசன் காலனாகிய செயலை மறக்க முடியுமா?

எல்லா உயிர்களும் பகவானுக்கு ஒன்றுதான் என்பதை விளக்கவே பகவானைப் 'பற்றற்றான்' என்று சொல்வதுண்டு. ஆனால் அவன் எல்லோருடைய பக்திக்கும் கட்டுப்படுகின்றான். அதனால்தான் 'பகவான்' ஆகின்றான். 'ஆபத்பாந்தவன், அனாத ரக்ஷகன்' ஆகின்றான். இப்பேருண்மையை எவ்வளவு அழுத்தந்திருந்தமாக வள்ளுவர் உரைக்கின்றார்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்றுவிடற்கு"

## 3. மெய்ப்பொருள் இன்பம்.

ஓம். மெய்ப்பொருள் இன்பம் என்பது என்ன? மெய்ப்பொருள் என்பதை உணர்ந்து கொண்டால் அதுவே இன்பமாகின்றது என்பதை உணரலாம். என்றைக்கும் அழியாத பொருள் எதுவோ அதையே மெய்ப்பொருள் என்கின்றோம். அதுவே சச்சிதானந்த மாகின்றது.

'சத்' பொருளுமாய் 'சித்' பொருளுமாய் விளங்கும் மெய்ப் பொருளுக்கு இன்னொரு நிலையும் உண்டு. அதுதான் ஆனந்த நிலை. இம் மெய்ப்பொருள் ஆனந்த ஸ்வரூபமே எல்லா உயிர்களிடத்தும் இன்பமாக அமைந்திருக்கின்றது. ஆக மெய்ப்பொருள் சத்தும் சித்தும் ஆனந்தமுமாக "சச்சிதானந்தமாக" த் திகழ்கின்றது.

ஒவ்வொரு மதமும் இம்மெய்ப்பொருளை வழிபாட்டுத் தெய்வங் களாகவும் அருள்பாலிக்கும் தெய்வங்களாகவும் கொண்டாடு கின்றனர். அவன் அருள் உருவாகிய இடங்களிலும் அவன் திருஅவ தாரம் செய்த இடங்களிலும் அவனுடைய பேருளை யடையவேண்டி மக்கள் தேவாலயங்களையும், தியான மண்டபங்களையும் எழுப்பி அவரவர்க்குகந்த முறைப்படி உற்சவங்களையும், ஒரு சிலர் ஆராதனை களையும் நிகழ்த்த பெரும் ஏற்பாடு செய்தனர். இப்படியாகக் கிறித்த வர்களுக்கு இயேசுநாதர் பிறந்த ஊரும் முகம்மதியருக்கு மெக்காவும் ஹிந்துக்களுக்குக் காசியும் திருப்பதியும் சிதம்பரமும் பழநியும் திருத் தலங்களாக மிளிர்கின்றன.

இத்தகைய தேவாலய வழிபாட்டை வகுத்துக்கொண்ட நம் பெரி யார்கள் அடுத்த நிலையான தன்னை உணரும் நிலையையும் அடைந் தார்கள். "உடம்பினைப் பெற்ற பயனுவதெல்லாம் உடம்பில் உத்த மனைக் காண்" என்பதென்றுர்கள். உள்ளே கிடப்பவன் கடவுள், அவனை அடைய விழைவதே மனிதனின் கடமை. கடவுள் என்ற சொல் 'கட' என்ற சொல்லையும் 'உள்ளே' என்ற சொல்லையும் கூட்டு வித்த சொல்லாகும். எவன் அறிவை உள்ளே செலுத்துகின்றுனே அவனே கடந்து நிற்கும் ஆண்டவனை அடைய முடிகின்றது. தன் னொளியை அறிபவன்தான் ஆண்டவனை அறிகின்றுன். இந்த தன்னுள் உள்ள ஜெகஜ் ஜோதியான ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை விளக்கத்துடன் பிரகாசிப்பதைப் பல நூல்கள் நவிலக் கேட் டிருக்கின்றோம். ஆனல் ஆத்மீகத் துறையில் அனுபவமிக்கவர்கள் உதவியின்றி இத்தகைய அருள் ஜோதியைத் தன்னுள் காணமுடிவது எளிதான காரியமன்று. சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய் வத்தின் பேரொளியைக் காண்பிக்க ஆத்மீக உணர் உடையோர்

துணை இன்றியமையாததாகின்றது. அறிவுடைய எந்த ஆசான் தன்னுள்ளே ஜோதியைக் கண்டவனாகின்றானோ அவனே சொல்லுக்குள் சொல்லறிவர் ஆவர்.

புண்ணியத் தலங்கள் மூலமாக எப்படி நாம் வேண்டும் நற்பயனை அடைய முடிகின்றதோ அப்படியே மகான்கள் மூலமாகத்தான் கடவுளை அடையமுடியும். கடவுளைக் கண்டவர்கள் உண்டா என்று உடனே கேள்வி எழ நியாயம் உண்டு. நான் உறுதியோடு சொல்கின்றேன். கடவுளைக் கண்டவர்கள் உண்டு. இன்றும் இருக்கின்றார்கள். அவர்களால் மற்றவர்களுக்கும் கடவுளைக் காண்பிக்க முடியும். அத்தகையவர்கள்தான் குருநிலைக்கு ஏற்ற மகாபுருஷர்கள் ஆவர், நம்முடைய சைவசித்தாந்த முடிவும் இறைவனே குருவடிவில் எழுந்தருளி நம் பிறவிப் பிணியை நீக்க ஞானத்தை உபதேசிக்கின்றான் என்பதாகும். அதனாலல்லவா குருவைக் கடவுள் நிலையில் வைத்துப் பாதபூஜை செய்து வணங்குகின்றோம்.

குருவை ஒருவன் அடைவதிலும் மகாபுருஷர்களையே தம் குருவாக அடையவேண்டும். பூர்வபுண்ணிய வசத்தால் தெய்வஅருள் நிறைந்த பேரறிவாளர்கள் குருவாக அமைகின்றனர். குருவின் பீடத்தில் அறம் வளர்க்கும் பெரியார்களும் அன்புருவானவர்களும் சத்தியசீலர்களுமே தம் கருணைகொண்டு ஆட்சிபுரிந்து வருகின்றார்கள். அத்தகைய குருமார்களால்தான் மெய்ப்பொருள் இன்பத்திற்கு வழிகாட்டமுடியும். ஆதலால் அவர்கள் திருக்கூட்டத்தையே நாம் நாடுவோமாக.

## 4. அருள்குரு :

ஓம். அறிவை அறிந்தோன் ஆசான். இந்த அறிவு இகத்திற்கும் அவசியமானது, பரத்திற்கும் இன்றியமையாதது. அனுதினமும் குடை ஒன்றைத் தன்கூடவே எடுத்துச் செல்லும் ஒருவர் பெருமழை கொட்டும் ஒருநாளைக்குமட்டும் அக்குடையை எடுத்துச் செல்ல மறந்துவிட்டார் என்றால், குடைக்குத்தான் என்னபெருமை? மறந்து சென்றவருக்குத்தான் என்னபெருமை? இத்தகையவர் குடையைப் பாரமாக சுமப்பதுபோல இவ்வுலகும் இவரைப் பாரமாக சுமந்து நிற்பதுதான் மிச்சம். வெளியே போகும்போதெல்லாம் குடையைக் கூடவே கொண்டுபோக வேண்டுமென்பது அறிவாளிக்குத்தெரியும். அது வெயிலுக்கும் உதவும், மழைக்கும் உதவும். எந்தப் பொருளை எந்தச் சமயத்தில் உபயோகிப்பது என்பது அறிவாளிக்குத் தெரியும்.

இத்தகைய அறிவாளிகள் சமயத்திற்கு உதவுவர். பொருளாளியாகவும் உதவுவர், அருளாளியாகவும் உதவுவர். சமயத்திற்கும், அதாவது சன்மார்க்க சமயத்திற்கும் உதவுவர், சமயத்திலும்

அதாவது உதவவேண்டிய சமயத்திலும் உதவுவர். அருளை வழங்கு வதிலும் கொடையாளியாகவும் விளங்குவர். மன இருளைப்போக்கும் இத்தகைய அறிவாற்றல்மிக்க பெரியோரைக் குருவாக அடைவோரே பூமியில் பாக்கியசாலிகள். ஆன்ம அறிவுமிக்க இக்குருமார்களே மக்களைத் துன்பம் எனும் பெருமழையிலிருந்து. காப்பாற்றமுடியும். அதற்காகவே மெய்யுணர்வு அனுபவம் என்ற குடையை அவர்கள் வைத்திருக்கின்றார்கள். இக்குடை அருள்பாலிக்கின்ற குடையாக அவர்களுக்கு வாய்த்திருக்கின்றது. சீடர்கள் எண்ணிக்கை பெருகப் பெருக இந்த அருள்பாலிக்கும் குடையும் விரிவடைந்துகொண்டே செல்லும். துன்பமெனும் பெருமழையிலிருந்தும் சீடர்களைக் காப் பாற்ற உதவும். கோவர்த்தனகிரியைக் குடையாகக் கிருஷ்ணபகவான் பிடித்த சம்பவத்தையும் உங்களுக்கு ஞாபகப்படுத்துகின்றேன்.

இத்தகைய அறிவாளிகள் உள்ளொளி கண்ட மகான்கள். உள்ளொளியால் உலகம் உய்யப்பாடுபடும் தொண்டர்கள். தன்னை அண்டினோர்க்கு அருள்பாலிக்கும் குருபீடத்தில் அமரக்கூடிய "எண்குணத்தான்" ஆவர். இவர்களைப் போற்றிப் பணிந்து வணங்குவதற்கல்லவா நமது தலைகள் உதவுகின்றன. இதனை எவ்வளவு அழகாகத் திருவள்ளுவர் உரைத்திருக்கின்றார்.

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத்தலை."

இத்தகைய குருவின் சன்னிதானத்தில் இருந்தாலே சீடன் யோக நிலையை அடைந்து விடுகின்றான். குருவின் கடாட்சம் குருவின் பார்வையாலும் குரு தொடுவதாலும் குரு நினைப்பதாலுமே சீடனுக்குப்பரிபூரணமாக வாய்த்துவிடுகின்றது. குரு தன் திருவாயால் மறைகளோ, தத்துவ விளக்கமோ—யாதும் உரைத்துச் சொல்லிக் கொடுக்கத் தேவை இல்லை. பரிபக்குவமுள்ள சீடனைத்தான் குருவும் தடுத்தாட் கொள்கின்றார். குருவின் அருளால்தான் குருவின் தாளை ஒரு சீடன் பற்ற முடிகின்றது. பரிபக்குவம் வாய்ந்த சீடன் குருவைத் தேடிக்கூடச் செல்லவேண்டியதில்லை. குருவே அவனைத் தேடிச் செல்வதும் உண்டு. கன்றைப் பசுவே தேடிச் சென்று பாலூட்டும் இவ்வுலகில் குருவே சீடரை அடைந்து ஞானப்பால் ஊட்டுவதும் உண்டு.

இத்தகைய சீடரின் பாக்கியத்தை என்னென்பது? குரு சீடர் மனநிலை ஐக்கியப்பட்ட ஒரு நிலையாக அமைந்து விடுகின்றது. ஆரம்பத்தில் இருந்த குருவுக்கு மிஞ்சிய சீடனில்லை என்ற நிலை படிப்படியாக மாறி முடிவில் சீடருக்கு மிஞ்சிய குரு இல்லை என்ற அளவுக்கு அவர்கள் அன்யோன்யத்தைக் கூட்டி விடுகின்றது.

குருவின் அன்பையும் பேராற்றல்களையும் பரிபூரணமாக அனுபவிக்கும் சீடன் எப்படிப் படிப்படியாகத் தன் சீட நிலையில் உயர்கின்றான் என்பதைக் கவனிப்போம். ஆரம்பத்தில் 'நான் குருவை சார்ந்தவன்' என்று சொல்லிக்கொள்ளும் அளவுக்குதான் சீடன் குருவுடன் உறவு கொள்கின்றான். அடுத்த நிலை, 'குரு என்னைச் சேர்ந்தவர்' என்று சீடன் பெருமைப்படும் அளவுக்கு வந்துவிடும் ஆத்ம நேய உறவு உச்சிநிலைக்குச் சென்றுவிட்டால் 'நானே குரு' என்று கூறும் அளவுக்குச் சீடன் மனவுறுதியும் குரு கடாட்சமும் அடைகின்றான். இத்தகைய குரு அல்லவா சீடனுக்கு அன்பால் அன்னையாகவும், அப்பனாகவும், தோழனாகவும், தெய்வமாகவும் விளங்குகின்றார்.

அழுந்தொறும் அணைக்கும் அன்னை
அறிவிலாது ஆடி ஓடி
விழுந்தொறும் எடுக்கும் அப்பன்
விளையாடும் போது தோழன்
தொழுந்தொறும் காக்கும் தெய்வம்
இப்படி உலாவும் குருநாதன் வாழி வாழி !

## 5. குமரகுரு.

ஓம்

"உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரை யான் பின் செல்லேன் பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடிய வினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே"

கலியுக வரதனாக விளங்குபவன் நம் கந்தப் பெருமான். தேவாதி தேவன் என்றும் தெய்வசிகாமணி என்றும் ஆயிரக்கணக்கான நாமங்கள் அவருக்கிருப்பினும் அவற்றினுள் சிறந்த நாமங்களாக கருதப்படுவன மூன்றாகும். அவைகளாவன முருகன், குமரன், குகன் என்பன. இம் மூன்று திருநாமங்களில் இடையில் நடுநாயகமாக விளங்குவது குமரன் எனும் திருநாமம். பரம் பொருளாகிய சிவ பெருமானே பிரணவ மந்திரத்தின் பொருளை தனக்கு உபதேசிக்குமாறு கேட்டபொழுது 'குமரா, குமரா' என்ற மந்திரத்தையும் சொல்லித் துதித்தார் எனக் காணக் கிடைப்பதால் இதன் பெருமை நாம் எளிதில் விளங்கக்கூடியதாக இருக்கின்றது. ஆதலால் குமரக் கடவுளை வழிபடுவோர் இளமையும் அழகும் அருளும் பொன்னும் ஞானமும் பகை நீக்கமும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வர்.

கல்லாலின் புடையமர்ந்து நால்வர்க்கு சின்முத்திரை காட்டி எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிய

தெட்சிண மூர்த்திக்கும் குருநாதராக வந்தவர் குமரமூர்த்தியாதலின் அவரைக் குமரகுரு என்று வேதங்கள் துதிக்கின்றன.

அகத்திய முனிவருக்கும் அருணகிரி நாதருக்கும் குருவாக வந்த குமர குருவே நீர் அடியேனுக்கும் குருவாக வந்து அருளவேண்டு மென்று நாம் தவம் புரிய வேண்டும். குமர வேளைக் குருவாகப் பேணும் உத்தம சீலர்கள் பிறப்பு இறப்பற்று பெறுதற்கரிய பேரின்ப வாழ்வு பெறுவார்கள். முருகனிடத்திற் செல்லும் ஆவலுள்ளோருக்கு முருகன் அழகு, முருகன் வீரம், முருகன் அருள் விளையாட்டு, முருகன் காட்டும் காட்சி, முருகன் அருள் செய்யும் விதம்—இவை யாவும் வழங்கி, எப்பொழுதும் முருகன் நமக்கு உள்துணையாக இருந்து நம்மை உய்விக்கும் வழியில் அவனே கொண்டு செலுத்தி தரிசனமும் தந்து ஆட்கொள்ளுவான். ஆதலால் நாம் ஒவ்வொருவரும் அவன் அருள் வழியை நாடி நலம் பெறுவோமாக.

## iii. அறிஞரொடு சாமிகள் அறிவுரை

### 1. மாயை :

ஒரு நாள் பாக்கிய பரணியில் வெளியாகி இருந்த மாயையை விளக்கும் கதை ஒன்றைப்பற்றிச் சாமிகளிடம் பக்தர்கள் பேசிக் கொண்டிருந்தனர்.

பக்தர் : "மாயை, மாயை என்கின்றீர்களே. மாயை என்பதை விளக்கவேண்டும்." என்று கிருஷ்ண பரமாத்வை நாரதர் கேட்டார். உடனே விளக்கம் உரைக்காத கிருஷ்ணன் தனக்குத் தாகமென்று சொல்லி நாரதரைத் தனக்குத் தண்ணீர் கொண்டுவரச் சொன்னார். எழில் மிகுந்த பூஞ்சோலை ஒன்றில் நுழைந்த நாரதர் வனப்புமிக்க குடிலொன்றுக்கு வந்தார். அங்கே அழகிய பருவ மங்கை ஒருத்தியைக் கண்டார். கண்டதும் காதல்! இருவரும் சதிபதியாகி குடும்பம் நடத்தினர். வருடங்கள் பல ஓடின. நாரதருக்குப் பல குழந்தைகள்! ஒரு நாள் பயங்கரமானதொரு வெள்ளம் உண்டானது. அது நாரதர் வீட்டினுள் புகுந்தது. நாரதர் குழந்தைகளையும் மனைவியையும் வெள்ளத்தினின்றும் காப்பாற்றச் செய்த முயற்சியெல்லாம் வீணாயின. அருமைக் குழந்தைகளையும் ஆருயிர் மனைவியையும் வெள்ளத்தில் இழந்து பரிதவித்த நாரதர் வெள்ளத்தினின்றும் மீட்சியடைந்ததே ஒரு பெரிய வேலையாகி விட்டது. 'நமோ நாராயணா' என்று கூறி நாரதர் விழிக்கும்போது "நாரதா நீ தண்ணீர் கொண்டு வருவாயென்று நான் காத்துக்கொண்டிருந்தேன். நீ சென்று பத்து நிமிடங்கள் ஆகிவிட்டனவே. நீ என்ன செய்து கொண்டிருந்தாய்" என்று கண்ணன் ஒன்றும் தெரியாதவர் போல் கேட்டார்.

சாமிகள்: நாரதர் என்ன செய்துகொண்டிருந்தார்? பிரம்மச்சாரி நாரதர் கல்யாணம் செய்துகொண்டார்! ஒரு பெரிய குடும்பத்தையே பெருக்கிவிட்டார். ஒரே சமயத்தில் அவ்வளவு ஆசை மக்களையும் மனைவியையும் இழந்து தானே ஒருவனே மிஞ்சினர். "இதுதான் மாயை" என்று கண்ணன் சொல்லாமல் சொல்லி விளங்கவைத்தார். நாரதருடைய கதையில் எதைக் கண்டோம். வாழ்க்கை நிலையாமையைக் கண்டோம். இந்த உடம்பு மாயனுர் குயவன் செய்த மண்பாண்டம் என்பதைக் கண்டோம். வாழ் வாவது மாயம் என்பதைக் கண்டோம். இந்தச் சமயத்தில் கபீர் தாஸர் பொன்னுரைகள் ஞாபகத்திற்கு வருகின்றன. பாண்டம் செய்யும் குயவனைக் கண்டு மண் சொன்னதாகச் சொல்கின்ருர் கபீர். "நீ இன்று என்னைக் கால்களினுல் துவைக்கின்ருய். நான் உன்னைத் துவைக்கும் காலம் வரப்போகின்றது" என்று மண் கூறியது. இந்தச் சொற்களில் எவ்வளவு உண்மை அடங்கிவிட்டது. கனவு போன்றது வாழ்வு. மாயையும் கனவு போன்றது என்பதையும் கண்ணன் நாரதர் கதையில் கண்டோம். வாழ்வில் இன்பம் என்று கருதுகின்ற பொருள்கள் யாவும் அழிந்துவிடும் இயல்பின. இளமையும் இன்பமும் நீடிப்பதில்லை. இளமையில் சம்பாதிக்கின்ற செல்வங்களும் ஓடிவிடுகின்றன. இளமையில் பெற்றெடுத்த செல்வ மக்களும் நிலையானவர்கள் அல்ல. கடைசியில் இவ்வளவு இன்பத்திற்கும் உறைவிடமாக அமைந்திருந்த உடம்பே அழிந்து விடுகின்றது.

"நந்த வனத்திலோர் ஆண்டி — அவன்
நாளொரு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தானொரு தோண்டி — மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடி போட்டுடைத்தாண்டி

இந்த சித்தர் பாட்டைப் போலல்லவா வாழ்வு அமைந்துள்ளது. இப்படி நிலையற்ற வாழ்வை வாழும் நாம் நிலையுள்ள சச்சிதானந்தத்தைச் சிந்திக்காமல் இருக்கலாமா? அவனருள் அடைவதல்லவா மானிடப் பிறவியின் அரும்பெரும் நோக்கமாக அமையவேண்டும். இறைவனை மன மொழி மெய்களால் அல்லவா சிந்தித்துப் போற்றி அவன் அருளை அடையவேண்டும். இதைத்தான் குமர குருபர சாமிகள் மிக அழகாக வெண்பா ஒன்றில் தக்க உபமானங்களோடு எடுத்துரைத்தார்.

"நீரில் குமிழி இளமை நிறை செல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள் — நீரில்
எழுத்தாகும் யாக்கை — நமரங்காள் என்னே
வழுத்தாதது எம்பிரான் மன்று"

கனவு மூலமாக, கதை மூலமாக விளக்கங் கண்ட 'மாயா தத்துவத்தை' இந்தப்பாட்டு எவ்வளவு தெளிவாக எடுத்துரைக்கின்றது. பாட்டில் அமைந்துள்ள உபமானத்தை எடுத்துக் கொள்ளுங்கள். இளமை, செல்வம், யாக்கை யாவும் நிலையற்றவை என்பதைத் தண்ணீரை வைத்துக்கொண்டே எப்படி விளக்குகின்றார் தெய்வீகக் கவிஞர், இளமை நீரில் உண்டாகும் குமிழி போன்ற இயல்பினது ; நீர்க்குமிழி உண்டான உடனேயே உடைந்துபோம் ; அத்தகையது தான் உருண்டு திரண்டு அங்கவடிவோடு மிளிரும் இளமையும் இளமைக் கூத்தும். உலகில் நாம் அடைகின்ற செல்வங்களும் நீரில் உண்டாகின்ற அலைகளைப் போன்றே வருவதும் மறைவதுமாக உள்ளன. நம்முடைய உடம்பையே பார்க்கும்போது நீரில் எழுதின எழுத்துபோல் உடனே மறைந்துவிடும் இயல்பினதாக யாக்கை அமைந்துள்ளது. இவைகளை நம்பி இன்பத்தை அனுபவிக்க முடியுமா? நிலைபெற்ற இன்பம் என்பது பேரின்பம் ஒன்றுதான். அது வேண்டுமானால் இறைவனைச் சிந்திக்காமல் இருக்கக்கூடாது. இதுதான் பாட்டின் உபமானச் சுவை. இதில் இன்னொரு விஷயத்தையும் கவனித்தீர்களா? புராணக் கதையிலும் நீரை வைத்துக் கொண்டே மாயையை விளக்கி உள்ளனர். நாரதருடைய மாயமான இன்பமும் அந்த நிலையற்ற இன்பத்திற்கு வித்தான மனைவியும் செல்வங்களும் தண்ணீரில் அடித்துக்கொண்டு தண்ணீரோடு ஓடி விட்டதாகக் கதை அமைந்துள்ளது. இந்தப் பாட்டிலும் இன்பத்தின் நிலையாமையைத் தண்ணீரில் உண்டாகும் குமிழி, திரைகள், தண்ணீரில் எழுதுதல் என்பவைகளை வைத்துக்கொண்டே புலவர் விளக்கி இருப்பதும் உற்று நோக்கத்தக்கது.

சிலர் இந்தப் பாட்டை வைத்துக் கொண்டே உடம்பையும் இவ்வுலக வாழ்க்கையையும் வெறுத்துப்பேச முந்துவர். ஆனால் பெரியவர்கள் — குமரகுருபரர் உள்பட — வாழ்க்கையை வெறுத்துவிடச் சொல்ல மாட்டார்கள். வாழ்க்கையை வளமாக வாழ்வாங்கு வாழத் தான் வழிவகுத்துக் கொடுப்பார்கள். காற்றுள்ளபோதே தூற்றிக் கொள் என்பதற்கேற்ப உடம்பு இருக்கும்போதே மறுமைக்கு வேண்டியனவற்றை இப்பிறவியிலேயே தேடிக் கொள்ளப் பாடுபடவேண்டும். மாயை, மாயை என்று கூறுகின்றதெல்லாம் ஐம்பூதச் சேர்க்கையால் உண்டாகும் பல நாம ரூபங்களே. உண்மைப்பொருள் சச்சிதானந்தமய ஆன்மாவே. எப்படிப் பெருங்காற்றால் மேகங்கள் கலைகின்றனவோ அப்படியே மாயை என்ற கருமேகங்களைக் குருநாதன் சண்டமாருதமாகத் தோன்றி நீக்கவல்லவராகின்றார். மாயைக்கும் பிரமத்திற்கும் சம்பந்தமெப்படி? ஆன்மா என்பது என்ன? குருவின் அருள் எதைச்செய்யவல்லது என்பதை ஊன்றிக் கவனிக்க அடியில் உள்ள இரண்டு கைவல்ய நவநீதபாடல்களைப் படித்து கருத்தைக் கருத்தாட்டுவோம்.

" பொய்யை மெய்யென்றே மூடர் புண்ணியரென்று புராணங் கூப்பிடுமானல்
மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திர முண்டோ?
பொய்ய தேதெனினும ரூபங்களாம் பூதமாகிய மாயை
மெய்ய தேதெனிற் சச்சிதானந்தமா வியாபிக்கு மாமாதே.

மாயை என்பதே துடையரா ரெப்படி வந்தது வருவானேன்
மாயையென்பது பிரமவித்தின் வேறெனின் வஸ்துவுமிரண்டாமே
மாயையென்பதும் பிரமமுமொன்றெனில் வஸ்துவும் பொய்யாமே
மாயையென்ற மேகங்களுக் கொருசண்ட மாருத குருமூர்த்தி"

## 2. திருவருள் செல்வம் :

சாமிகள்: மனிதனுடைய சிற்றறிவுக்கு எட்டும் பொருள்கள் கொஞ்சம்தான். அவனவன் அறிவுக்கு எட்டிய அளவுக்கு மனிதன் பொருள்களை அடைகின்ருன், மெய்ப்பொருள் விளக்கம் காண்கின்ருன். பரிபூரண அறிவு அடையும்போதுதான் உண்மையை அடைகின்ருன், சச்சிதானந்தத்தை அடைகின்ருன். அப்போது அவனுக்குக் கிட்டாத பொருள் ஒன்றுமில்லை, எட்டாத உயரம் ஒன்றுமில்லை. ஆனல் அவன் சிற்றறிவுகொண்டு வாழ்ந்துவரும்வரை அவனுக்குப் பல சந்தேகங்கள் உண்டாகின்றன. அவன் பயத்திற்கும் ஆளாகின்ருன். அந்த நிலையில் பல கேள்விகளைக் கேட்க ஆரம்பிக்கின்ருன். கேள்விகள் இல்லாத காலமே இல்லையென்று கூடச் சொல்லலாம். 'இப்படி நடக்க வேண்டும்' என்று ஒரு பெரியவர் கூறினல் "ஏன் இப்படி நடக்கவேண்டும்?" என்ற கேள்வி எழுப்புவது மனிதனின் இயல்பு.

பக்தர்: இதைப்பற்றிக்கூட கௌதமர் வாழ்கையிலிருந்து ஒரு கதையும் சொல்வர். இந்த நிகழ்ச்சி ஓர் அரிய கருத்தை விளக்க உதவுகின்றது. மனிதன் ஆசையாலும் பந்தத்தினுலும் பயத்தினுலும் கட்டப்பட்டிருக்கின்ருன் 'அந்த பந்த பாசத்தினின்றும் மனிதனை விடுவிப்பதற்கு இதுவே வழி என்று கூறிக் கௌதமர் ஒரு வழியைக் காட்டினர். உடனே ஒருவன் 'எப்படி மனிதன் பந்தபாசத்தால் கட்டுண்டு வாழ நேர்ந்தது' என்ற கேள்வியை எழுப்பினன். அதற்குக் கௌதமர் சொன்ன கதை ஒரு பேருண்மையை விளக்க உதவுகின்றது. ஒரு மனிதன் காட்டில் போய்க்கொண்டிருந்தான். அவனுடைய விரோதி அவனை ஒழிக்க தக்க தருணம் நோக்கி இருந்தான். காட்டில் தனிமையாக சென்றவன் மீது விஷத்தில் துவைத்த அம்பைக் குறிவைத்து எய்தான். விஷ அம்பு உடலுள் பாய்ந்தது. விஷத்தின் கொடுமை உடம்பைப் பாதிக்க ஆரம்பித்தது. இதைக் கேள்வியுற்ற அவனுடைய உறவினர்கள் உடனடியாகச் சிகிச்சை அளிப்பதற்கான

சாதனங்களுடன் விஷ அம்பு பாய்ந்து கிடந்த உறவினனைக் காப்பாற்றக் காட்டிற்கு ஓடோடி வந்தனர். விஷ அம்பை உடனே உடலிலிருந்து நீக்கி, விஷமேறிய இரத்தத்தை உடம்பினின்றும் நீக்கி, விஷம் உடல் முழுதும் பரவ முடியாதபடி செய்ய முனைந்தனர் சுற்றத்தார். ஒரு நிமிடத்தையும் வீண் விரயம் செய்யக்கூடாது. அப்படி நிமிடங்களை வீண் விரையம் செய்தால் விஷம் உடலெங்கும் ஏறி உயிருக்கே ஆபத்து ஏற்பட்டு விடும். இந்த நிலையில் விஷ அம்பேறியவன், தன்னை யார் இப்படி விஷ அம்பால் அடித்தது? அவன் உறவினனா அயலானா? அவன் நிறம் கருப்பா, சிவப்பா? அவன் நெட்டையனா குட்டையனா? அந்த அம்பையும் வில்லையும் யார் செய்தது? என்ற கேள்விகளைக் கேட்க இறங்கி விட்டான். உறவினர் என்ன சொல்லியும் அம்பைத் தன் உடலினின்றும் எடுக்க விடவே இல்லை. தன்னுடைய ஐயம் தெளிவு படாதவரை ஒருவரையும் தன்னை நெருங்கவிடவில்லை. அவன் கேள்விகளுக்குப் பதில் கிடைப்பதற்கு முன் அவன் உடல் முழுவதும் விஷ மேறிவிட்டது. அவன் பேச்சும் மூச்சும் அடங்கிவிட்டான்.

சாமிகள்: கௌதம புத்தர் பொன் மொழிகளில் ஒன்று என் ஞாபகத்திற்கு வருகின்றது. பெரியவர்கள் திருவாக்கில் உண்மையும் ஆத்தும ஒளியும் உண்டு. "ஆசையிலிருந்து துன்பம் தோன்றுகிறது; ஆசையிலிருந்து அச்சம் தோன்றுகிறது; ஆசையை விடுபவனுக்கு அச்சமில்லை துன்பமுமில்லை" என்று போதிக்கின்ற புத்தர் பிரான் மிகவும் அழகாகத்தான் இந்தக் கதையின் மூலம் ஒரு உண்மையை உணர்த்துகின்றார். ஒருவர் கொடியமிருகங்கள் உள்ளகாட்டில் நள்ளிரவில் அமாவாசை இருட்டில் போகிறார். அவர் தவிக்கின்ற நேரத்தில் மற்றொருவர் தீவட்டி கொண்டு வந்து வழி காட்டி உதவ வருகின்றார்: அந்த சமயத்தில் எரிந்து கொண்டிருக்கும் தீவட்டி அணையுமுன் தீவட்டி ஒளியில் காட்டைக் கடந்து பக்கத்து ஊரை அடைவது தான் விவேகம். அதை விட்டு விட்டுத் தீவட்டி கொண்டு வந்தவன் எப்படி அந்த நேரத்தில் அங்கு வந்தான், யார் அவனுக்குச் சொல்லி அனுப்பியது, என்ற பேச்சில் இறங்கி விட்டால் கிட்டிய உதவியினாலும் பயனில்லாமல் போய்விடும். காட்டை விட்டே போகமுடியாத நிலையும் காலதாமதத்தால் தீவட்டி அணைந்து விடுவதிலிருந்து ஏற்பட்டு விடலாம். காட்டை விட்டு பந்தோபஸ்தான ஊரை அடைந்தவுடன் விபரங்களை அறிந்து கொள்ளலாம். அது போன்றதுதான் கௌதமர் கூறிய கதையுப். எப்படி மனிதன் பந்த பாசத்தால் கட்டுண்டு வாழ நேர்ந்தது என்பதற்கும் விளக்கம் தானே ஏற்பட்டுவிடும்.

### 3. பேரின்பம்

சாமிகள்: எல்லை எல்லா இன்பம் இந்த உலகில் உள்ள பொருள்களால் உண்டா? ஆனந்தம் வேண்டாதாரில்லை. இன்பத்தில்

சிற்றின்பமும் உண்டு, பேரின்பமும் உண்டு. பேரின்பத்தை விவரிக்க விரும்புவர் அதை சிற்றின்ப அனுபவம் கொண்டும் விளக்க முந்துவர். உலகில் இன்பம், இன்பம் என்று சொல்கின்றேமே? அதன் எல்லையை யாராவது அடைந்ததுண்டா? அதன் சிகரத்தை யாராவது, எவரெஸ்டமலை உச்சியை அடைந்ததைப் போன்று, எட்டிப்பிடித்ததுண்டா?

பக்தர்: சாமிகளே, நான் கேள்விப்பட்ட கதையைச் சொல்லு கின்றேன். ஓர் ஊரில் ஒருவனிருந்தான். அவனுக்குக் கடவுளைக் காணும் பேறு கிடைத்தது. 'உனக்கு என்ன வேண்டும்' என்று கேட்டார் கடவுள். அவன், "உலகத்திலேயே என்னைவிட இன்பம் அனுபவித்தவர் வேறொருவரில்லை என்ற அளவுக்கு நான் இன்பத்தின் உச்சியை அடைய வேண்டும்" என்ருன். கடவுள், 'நீ இந்த உலகில் யார் ஒருவன் இன்பத்தின் உச்சியில் இருக்கின்ருனே, அவனைத் தேடி கண்டுபிடித்து வா. நான் அவனைவிட உன்னை இன்பம் அனுபவிக்கச் செய்கின்றேன், என்ருர். ஊர்ஊராக அலைந்த அவன் கடைசியில் ஓர் அரசனை அவன் மாளிகைப் பூங்காவில் ஐந்து குழந்தைகளோடும் அவன் மனைவியோடும் குலவிக் கொண்டிருப் பதைக் கண்டான். அழகே உருவெடுத்த இராணியையும் மடியிலும் தோளிலும் விளையாடும் குழந்தைகளையும் அரசனுடைய உயர்ந்த நிலையையும் கண்டவன் கடவுளிடம் விரைந்தான். தான் கண்ட மன்னனைப்போல் தானும் இன்பம் அனுபவிக்க கடவுள் அருளை வேண்டினுன். "நீ மன்னனைக் கண்டாய். அவன் மனநிலையை அறிந்து கொண்டாயா?" என்ருர் கடவுள். மறுபடியும் சென்ருன் அவன் மன்னரின் மனநிலையை அறிய. மன்னனிடமிருந்து கேட்ட பதில் இவன் மனத்தில் ஒரு பெரும்புயலை எழுப்பிவிட்டது. மன்னன் பேச ஆரம்பித்தார். "நீ என்னைப்பார்த்து நானே உலகில் மிக பாக்கியசாலி என்று முடிவு செய்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. நானும் ஒருகாலத்தில் என்னைப்பற்றி அப்படித்தான் நினைந்திருந் தேன். ஆனுல் இரண்டு குழந்தைகளுக்குத் தாயாரான என் அருமை அழகு காதல் மனைவி ஒரு கடுமையான நோய்வாய்ப்பட்டு இறக் கும் தருவாயில் இருந்தாள். அவள் இறந்தபின் நான் மறு கல் யாணம் செய்துகொண்டால் எங்கள் குழந்தைகள் மாற்ருந்தாய் கொடுமைகளுக்கு ஆளாகிவிடுமே என்று மனம் ஏங்கித் தவித்தாள். அவள் தவிப்பை நீக்க நான் உடனடியாக வைத்தியர்கள் உதவி கொண்டு குழந்தை பிறக்காதபடி என் ஆண்மையை நீக்கிவிட்டேன். நான் மறுகல்யாணம் செய்யப்போவதில்லை என்பதை என் செய லிலிருந்து கண்டுகொண்ட மகிழ்ச்சியில் என் மனைவி இறக்கவில்லை. அவள் பிழைத்துக் கொண்டாள், அதன்பின் வாழ்ந்தாள், அவள் வாழ்ந்துகொண்டே இன்னும் மூன்று குழந்தைகளுக்கும் தாயாளுள். நான் பெயருக்குத்தான் அந்த மூன்று குழந்தைகளுக்கும் தந்தை,

உண்மையில் அந்தக்குழந்தைகளின் தந்தை நானல்ல. இதிலிருந்து நான் எவ்வளவுதூரம் சந்தோஷத்தில் இருக்குன்றேன் என்பதை புரிந்து கொள்வாய் " என்று கூறினர் மன்னன். " போதும் போதும் நிறுத்திக்கொள்ளுங்கள் " என்று கூறிக்கொண்டே ஓட்டமெடுத் தான் இன்பத்தின் உச்சியை எட்டிப்பிடிக்க ஆசைப்பட்டவன் இறைவனை நோக்கி.

சாமிகள் : உண்மைதான். இன்பம், பேரின்பம், பேரானந்தம், பரிபூரணனந்தம், சச்சிதானந்தம் வேண்டுபவர் இறைவனை நோக் கித்தானே செல்லவேண்டும். உலகத்திலேயே சச்சிதானந்தத்தை விட வேறு எந்த இன்பம் பரிபூரணமானது? பரம்பொருள் இன் பத்திற்கு ஈடுஇணை உலகில் எதுவுமே இல்லை. அதுதான் அழி யாத சுகம், நிலைத்தசுகம், நிரந்தரமானசுகம். இதைத்தானே இந்தப் பாட்டும் நமக்கு விளக்க உதவுகின்றது.

"கனியினும் கட்டிப்பட்ட கரும்பினும்
பனிமலர்க் குழற் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளுமரசினும்
இனியன் தன்னடைந்தார்க் கிடை மருதனே "

இப்பாட்டில் மெய்வாய் கண்மூக்கு செவிகள் அடையும் இன்பம் விவரிக்கப்பட்டுள்ளது. ஒரு புலனல் அடையும் இன்பத்தைவிட ஐம்புலன்களாலும் ஒரே சமயத்தில் அடையும் இன்பமும் விவரிக்கப் பட்டுள்ளது. பாட்டின் முதலடி வாய்ச் சுவையையும் இரண்டாவதடி ஐம்புலன்கள் சுவையையும் எடுத்துரைக்கின்றது. உலகத்தில் படிப் படியாக உயர்ந்து செல்லும் இன்பநிலை ஓரளவில்தான் அமைந் துள்ளது. இந்த இன்ப நிலைகளுக்கெல்லாம் உயர்ந்த இன்பம் ஒன்றுண்டு. அதுதான் இறைவனேடு ஒன்றி இருக்கும் பேரின்பம். அந்த இறைவன் நமக்குள்ளே இருக்கின்றுன், எங்கும் இருப்பதைப் போல! ஐம்புலன்களையும் ஒரு நிலைப்படுத்தி, இறைவன்பால் செலுத்தி மனத்தை இறைவன்பால் வைத்து, கடைசியில் மனமும் மறைந்த நிலையில் பரம்பொருள் ஐக்கியம், சச்சிதானந்தம் ஏற்படு கின்றது. இதை எவ்வளவு அழகாக திருமூலர் எடுத்துச் சொல் கின்றுர்.

" பார் பானகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டால் வெறியும் அடங்கினல்
பார்ப்பான் பசுவைந்தும் பாலாச் சொரியுமே "

" தேனுக்குள் இன்பம் சிவப்போ, கறுப்போ
வானுக்குள் ஈசனைத் தேடும் மதியிலீர்
தேனுக்குள் இன்பம் செறிந்திருந்தாற் போல்
ஊனுக்குள் ஈசன் ஒளிந்திருந்தானே "

இந்த மெய் அனுபவத்தை எட்டிப் பிடித்துவிட்டால் அருட்பெருஞ் ஜோதியாகலாம், தனிப் பெருங் கருணையாகலாம்.

## 4. மன்னிப்பது தெய்வப்பண்பு

ஒருநாள் சாமிகள் கருணையின் சிறப்பைப் பற்றியும் வெறுப்பு மனப்பான்மையே கூடாது என்பதைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தார்.

சாமிகள் : ஒரு பொய்யைச் சொல்ல பல பொய்கள் சொல்லுவது உலக வழக்கம். ஒரு பொய்யும் சொல்லாவிட்டால் பல பொய்கள் பிறக்கவே போவதில்லை. வெறுப்பு என்பது ஒருவன் தூய மனத்தைக் கெடுப்பது. ஒரு அழகிய பூஞ்சோலை ஏற்படுத்தி அதில் ஒரு புலியை கட்டவிழ்த்து விளையாட விடுவாருண்டா? இந்த வெறுப்பு புலிபோல் பாயக்கூடிய மிருக பலம் கொண்ட கெட்ட உணர்ச்சி, அதை வளர்த்துவிட்டால் அன்புக்கே இடமில்லாது அழிவுக்கே அது வித்திடும் இயல்பு கொண்டது. வெறுப்புண்டானால் வாழ்வில் அன்பு குன்றும். பகை ஓங்கும். இன்னல்கள் பெருகும். கொலைபாதகச் செயல்களையும் செய்யத் தூண்டும். அதனால் அதனை ஒழித்து அன்பை தழைக்கவிட்டு ஆனந்தத்தை தென்றல்போல் அனுபவிக்க வேண்டும்.

பக்தர் : சாமிகள் கூறும் உண்மையை விளக்க ஒரு கதையே உண்டு. பிரதத்தா என்பவர் காசியில் அரசாட்சி செய்து வந்தார். தீர்கேதி என்பவர் கௌசலாவின் மன்னன். இருவருக்கும் பகை உண்டானது. தீர்கேதி காசி மன்னனுக்கு பயந்து தன் நாட்டை விட்டே தன் மனையாளோடு ஓடிவிட்டார். தனது ஒரே மகனுக்கு வில், வேல், வாள் பயிற்சி கொடுத்து கல்வி அறிவும் ஊட்டி ஒரு பத்திரமான இடத்தில் அவனை விட்டு தீர்கேதியும் அவர் மனைவியும் ஓடிவிட்டனர். ஆனால் தீர்கேதியையும் அவர் மனைவியையும் பிடித்த காசி மன்னர் இருவரையும் வெறுப்பால் சிரச்சேதம் செய்துவிட்டார். தனது தாய்க்கும் தகப்பனுக்கும் நேர்ந்த கதியைக் கேள்வியுற்ற இளைஞன் காசி மன்னனிடத்திற்கே வந்து தன் தகுதியால் ஒரு பெரும் பதவியில் அமர்ந்தான். யானைகளை அடக்கி ஆளும் வீர பராக்கிரம சாலியான இளைஞனை பிரதத்தா மிகவும் நேசித்தார். அவனோடு ஒருநாள் வேட்டைக்குச் சென்றன். களைத்த அரசன். இளைஞன் மடியில் தன் தலையை வைத்து உறங்கி விட்டார். அநியாயமாக தன் தாய் தந்தையரை கொலை செய்த பாவி மன்னன் தன் மடியில் நிம்மதியாகத் தூங்குவதைக் கண்ட இளைஞனுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. அந்த இடத்திலேயே அப்பொழுதே அரசன் தலையை துண்டிக்க தன் வாளை எடுத்தான். அந்த நேரத்தில் தன் தகப்பன் கூறிய விவேக மொழிகள் மனதில் தோன்ற எடுத்த வாளை உறையுள் பதுக்கி ஆத்திரத்தையும் அடக்கிக் கொண்டான் இளைஞன்.

அதே நேரத்தில் ஒரு பயங்கர கனவைக் கண்டெழுந்தான் தூங்கிக் கொண்டிருந்த காசி மன்னன். "என்னை யாரோ கொல்ல தயாராக இருப்பது போன்ற கனுக் கண்டேன்" என்று சொல்லிக்கொண்டே எழுந்தான் காசி மன்னன். உடனே இளைஞன், "நான்தான் அந்த ஆள். நான்தான் தீர்க்காயு எனும் உன் விரோதியின் மகன். நீ அநியாயமாக என் தந்தையையும் கொன்ருய். பழிக்குப்பழி" என்று கூறி தன் உடை வாளை ஓங்கினுன். எதிர்பாராத விதமாக அகப்பட்டுக் கொண்ட காசி மன்னன் மனம் பதறி வார்த்தை ஓய்ந்து இளைஞன் கால்களைப்பற்றி தன் உயிர் பிக்சை வேண்டி நின்ருன். இதைக் கண்ட இளைஞன் மனம் உடனே இளகிவிட்டது, மாறிவிட்டது. "அரசே, நீங்கள்தான் என்னை காப்பாற்ற வேண்டும். நீங்கள்தான் என்னையும் கொல்வதற்காக எங்கெல்லாமோ என்னைத் தேடி அலைந்தீர். இப்போது நானே உங்களிடம் அகப்பட்டுக் கொண்டேன். நீங்கள்தான் எனக்கு உயிர்ப் பிச்சை அருள வேண்டும்" என்ருன் இளைஞன். வாளோடு நிற்கும் வீர இளைஞன் இஷ்டப்பட்டால் ஒரே நொடியில் அரசனை அந்த இடத்திலேயே அழித்துவிட முடியும். ஆனுல் அவன் கருணையே உருவாக மாறிவிட்டான். அவனிடத்தில் வெறுப்பில்லை. உடனே காசி மன்னன் இளைஞனைத் தழுவிக் கொண்டான் கரைபுரண்டோடும் அன்பால். அவனுக்குத் தன் மகளையும் கல்யாணம் செய்து வைத்தான். அதன்பின் காசி மன்னன் மகளை மனைவியாகப் பெற்ற தீர்க்காயு காசி மன்னன் நாட்டையும் பெற்ருன்.

சாமிகள் : இத்தகையச் செயலைப் போற்றுவதற்கென்றே ஆங்கிலத்தில், ("To love is human but to forgive is divine") "அன்பாயிருப்பது மனிதப்பண்பு மன்னிப்பது தெய்வப்பண்பு" என்றே கூறி இருப்பது உங்களுக்கெல்லாம் தெரிந்திருக்கும். பழிக்குப்பழி வாங்குவதால் உயிர்வதை மட்டுமல்ல, மனத்திற்கு பெரும் கவலைகளும், தீராத பகையும் உண்டாகின்றன. ஆனுல் நடந்ததை மறந்து மன்னிப்பு கொடுத்துவிட்டால் மனிதனே தெய்வமாகின்ருன். இதை விளக்கவந்த வள்ளுவரின் குறளைப் பாருங்கள்.

"இன்ஞ செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்"

இந்தக் குறள் எவ்வளவு பொருத்தமாக நீங்கள் கூறிய கதைக்கு அமைந்துள்ளது என்பதைச் சிந்தித்திப்பாருங்கள். உலகில் மக்கள் தெரிந்தும் தெரியாமலும் எவ்வளவோ கெடுதல்கள் செய்கின்றனர். கெடுதல் செய்துவிட்டோமே என்று வருந்தி இறைவனிடம் ஒருவன் மன்னிப்புக் கோரினுல் கருணைவடிவினனுன இறைவன் உடனே அவனை மன்னித்தருள்கின்ருன். நாம் ஒரு குற்றமும்

செய்யவேண்டாம். குற்றம் செய்தோரையும் நாம் மன்னிக்க மனத்தைப் பக்குவப்படுத்திக் கொள்வோம்.

### 5. பற்றற்றநிலை :

சாமிகள் : கர்மயோகி என்பவர் யார்? அவர் பஞ்சேந்திரியங்களை அடக்கியவர். அவர் மனத்தை ஆள்பவர். அவர் உள்ளம் பரிசுத்தமானது. அவருக்கு இருப்பது ஒரே நினைவு. அது பரம்பொருளின் நினைவு. அந்நினைவில் தன்னையே மறந்து உலகில் வாழ்கின்றார். தான் செய்வதெல்லாம் ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்கின்றார். அவருக்குப் பந்தபாசமில்லை. அவர் தண்ணீரில் உள்ள தாமரைஇலை போன்று அமைந்துள்ளார். பற்றற்றநிலையில் பற்றுள்ள உலகில் ஈசுவரன் ஒருவரையே பற்றி வாழ்கின்றார். இதைப்பற்றி பகவத்கீதையில் ஐந்தாவது அத்தியாயத்தில் நிறையச் சொல்லி இருக்கின்றது.

பக்தர் : இதை விளக்குவதற்கு ஒரு அயல்நாட்டு மேதையின் ஓர் அழகான கதையும் உண்டு. ஒரு காட்டையடுத்த ஊரில் ஒருவருக்கு ஒரேமகன். அவரிடம் ஒரு பெண்குதிரையுமிருந்தது. அவர் பெரியமனிதர். ஒருநாள் அவருடைய ஒரே பெண்குதிரை காணமற் போய்விட்டது. இதைச்கண்ட ஊரார் அவரிடம் வந்து தம் வருத்தத்தை அறிவித்துக் கொண்டனர். சிலநாட்களில் மறைந்த அந்த ஒரு பெண்குதிரை பல ஆண்குதிரைகளோடு தன் தலைவர் வீட்டுக்குத் திரும்பிவந்தது. அந்த பல ஆண்குதிரைகளும் பெண் குதிரையைவிட்டுப் பிரிய மனமில்லாமல் அதோடு தலைவர் வீட்டில் தங்கிவிட்டன. ஒரே குதிரை எட்டுக்குதிரைகளாக பெருகியதைக் கண்ட ஊரார் மறுபடியும் அந்தப் பெரியமனிதரைப் பாராட்ட வத்தனர். அவருடைய ஒரேமகன் முரட்டுக் குதிரைகளைப் பழக்கும் போது ஒரு குதிரையால் கால்முறிந்து கஷ்டப்பட்டான். இப்பொழுதும் ஊரார் பெரியவரைக் கண்டு தம் வருத்தத்தை அறிவித்தனர். திடீரென்று அயல் நாட்டான் இந்த நாட்டைப் படையெடுக்க, அவ்வூரரசன் குடும்பத்திலுள்ள தகுதியான ஆண்பிள்ளைகளை யெல்லாம் சண்டைக்குத் திரட்டி அனுப்பினன். ஆனல் காலுடைந்திருந்த பெரியவருடைய ஒரே மகன் சண்டைக்குச் செல்ல தகுதி யில்லாதவராயிருந்தார். சண்டைக்குச் சென்ற ஆண்மகன்களில் பலர் சண்டையில் பலியாயினர். பெரியவர் பையன் காலுடைந்திருந்த ஒரே காரணத்தால் சண்டைக்குப் போகாமலிருந்ததால் அவர் உயிருக்கு ஒரு ஆபத்தும் இல்லை. இதை உணர்ந்த ஊரார் மறுபடியும் பெரியவரைக் கண்டு அவர் பையனுடைய அதிர்ஷ்டத்தையும் அவர் அதிர்ஷ்டத்தையும் பாராட்டி மகிழ்ந்தனர். ஊரார் உள்ளங்கள்தான் இவருக்கு நேர்ந்த கஷ்ட நஷ்டங்க

ளாலும் மகிழ்ச்சி நிகழ்ச்சிகளாலும் அலைமோதிக் கொண்டிருந் தனவேயன்றி பெரியவருடைய பண்பட்ட உள்ளம் நிறைகடல் போன்று அடங்கி மோன நிலையில் நிலைத்திருந்தது. அவர் வருத் தப்படவும் இல்லை, மகிழ்ச்சியடையவும் இல்லை.

சாமிகள்: பற்றற்ற நிலையை விளக்க அருமையான கதை. இந்தக் கதையில் வருகின்ற ஒரே மகனின் தந்தையாகிய பெரிய வரது மனத்தன்மை போற்றற்குரியது. அம்மனத்தன்மை அடைந்த வர்களுக்கு இன்பமும் துன்பமும் ஒன்றுதான். இன்பத்தால் அவர் மகிழ்வதில்லை. துன்பத்தால் அவர் வாடுவதில்லை. இரு நிலைகளி லும் அவருடைய மனநிலை ஒன்றே தான். அவர்கள் இல்லற வாழ்வு நடத்தினாலும் உலகத்தோடு மக்களோடு சேர்ந்து வாழ்ந்தாலும் தாமரை இலையில் தண்ணீர் இருப்பது போலவே அவர்கள் வாழ்க் கையும் அமைந்து விடுகின்றது. பார்ப்பதற்கு தண்ணீர் தாமரை இலையில் ஒட்டிக் கொண்டிருப்பதுபோல் தோன்றும். உண்மையில் தாமரையிலையும் தண்ணீரும் வெவ்வேருகவே இருக்கின்றன. தண் ணீர் தாமரை இலையில் ஒட்டுவதில்லை. இதுபோன்றே வாழ்வின் அல்லல்களும் இன்பங்களும் இவர்களின் மனநிலையை அசைக்க முடிவதில்லை. இப்பெரியவர்களே தன்னை அறிந்தவர்கள். பரப்பி ரம்மத்தோடு இரண்டறக் கலந்தவர்கள். இவர்களைப் பற்றி முண் டாகோபனிஷத் கூறுவதைக் கவனியுங்கள். யாரொருவன் விருப்பு வெறுப்புகளில் உழல்கின்ருனே அவனே அந்த இச்சைகளை அனுப விக்க அங்குமிங்கும் பிறக்கின்ருன். ஆனல் ஆத்மனேடு இரண்டறக் கலந்த பெரியவரை கவனித்தால் இந்தப் பிறவியிலேயே அவருக்கு இச்சை அற்று விடுகின்றது. அவருடைய ஜீவன் உயர்ந்த நிலைக்கு ஏறிவிடுகின்றது. அவர்களுக்கு மறு பிறப்பில்லை. தன்னை அறிந்த நிலையில் உள்ள இவர்களுக்கு பரப்பிரமத்தைத் தவிர வேறென்றி லும் நாட்டமில்லை. இவர்கள் பற்றற்ற நிலையில், பரிபக்குவமான நிலையில், உன்னத நிலையில் நிற்கின்றனர். எங்கும் எதிலும் வியாபித்துள்ள பரம்பொருளை அறிந்து அனுபவிக்கும் இவர்கள் அதனுள்ளேயே ஐக்கியமாகிவிடுகின்றனர். இந்த நிலையைத்தான் திருவள்ளுவரும் தன் அழகான ஈரடிப்பாக்களில் அவருக்கே உரிய தெளிந்த எளிய நேர்ச் சொற்களில் மிகவும் அழகாக எடுத்துரைக் கின்ருர்.

"பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

## 6. அகத்திலுள்ளது முகத்தில்

சாமிகள்: சாதாரண காட்சிகளை நமது முகத்திலுள்ள இரண்டு கண்கள் காண்கின்றன. முகக் கண்கள் காணமுடியாததை இதயக்

கண்கள் காண்கின்றன: இதயக் கண்கள் காண முடியாததை நெற்றிக் கண் காண்கின்றது. அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பர். அகம் எப்படி இருக்கின்றதோ அப்படியே முகமும் அமைந்துவிடுகின்றது.

பக்தர்: சாமி இதை விளக்க அருமையான கதை ஒன்று உண்டு. ஒரு ஓவிய கலைஞன் அவன் நாட்டிலுள்ள தலைசிறந்த அழகன் முகத்தை வரைந்து அதற்கு முதல் பரிசு பெற்றான். பத்து வருடங்கள் கழிந்தன. ஒரு சிறந்த பயங்கரத்தோற்ற ஓவியத்திற்கு முதல் பரிசு கொடுக்க அதே நாட்டில் ஒரு ஓவியப் போட்டி ஏற்படுத்தினர். பத்து வருடங்களுக்கு முன்பு தலைசிறந்த அழகு முகத்திற்கு முதல் பரிசு வாங்கியவர் சிறை சிறையாக சென்று பார்த்தார், பயங்கரமான முகம் ஒன்றைத்தேடி. அவர் உண்மையிலேயே ஒரு உன்னதமான அழகன் ஒருவனை நேரில் கண்டே அவன் படத்தை வரைந்துதான் அழகு சித்திரப் போட்டியில் முதன் பரிசு பெற்றார். அவர் அதுபோன்றே பயங்கரமான ஒருவன் உரு, சிறையில்தான் பார்க்க முடியுமென்று சிறைக்குச் சிறை சென்று பார்த்தார். ஒரு சிறையில் அவர் யாருடைய கோர முகத்திற்காக தேடிச் சென்றாரோ அவர் கிடைத்தார். பயங்கரமான உருவும் தயாராகிவிட்டது. தன் பயங்கரமான முகத்தை படமாகச் செய்த ஓவியர் தன்னிடம் விடை பெறும்போது அந்த பயங்கர முகத்தினர், "நான் யாரென்று தெரிந்து கொண்டீரோ?" என்றார். 'இல்லை' என்றார் ஓவியக்காரர். "பத்து வருடங்களுக்கு முன் மிகச் சிறந்த அழகன் ஒருவனைத் தேடி அலைந்து அவனைக்கண்டு பிடித்து அவன் படத்தை எழுதினீர்களே. அவன் யார்? நான்தான்! இந்த பத்து வருடங்களில் பஞ்சமா பாதகங்கள் செய்தேன். என் உள்ளத்தின் பயங்கரத்தை என் முகம் எடுத்துக்காட்டுகின்றது. பயங்கரமாக தோன்றும் நான் பத்து வருடங்களுக்குமுன் நீங்கள் பேரழகன் என்று கருதிய அதே பேர்வழிதான். கொடுஞ் செயல்கள் பயங்கரச் செயல்கள் என்னை கொடு மனிதனாகி விட்டது, பயங்கர மனிதனாகி விட்டது" என்றான்.

சாமிகள்: சரியான கதை, அகத்திலுள்ளதை முகம் காட்டும் என்பதை நன்றாக சித்தரிக்கும் கதை. உலகத்தில் எவ்வளவோ இன்பக் காட்சிகள், துன்பக் காட்சிகளைக் காண்கின்றோம். இவற்றைக் காண நமக்கு முகத்தில் உள்ள இரண்டு கண்கள் உதவுகின்றன. சில சமயங்களில் இருட்டில் செல்லும்போதும் வழியில் ஒரு பள்ளம் இருந்தால் அதில் கால்வைக்காது தப்பித்துச் செல்கின்றோம். வழியில் ஆபத்து என்பதை இதயம் எப்படியோ அறிந்து சொல்கின்றது. நாமும் சர்வ ஜாக்கிரதையுடன் நடந்து விபத்துக்கு ஆளாவதில்லை இதைப்போன்றே வெகு தூரத்தில் ஒரு நெருங்கிய நண்பருக்கு ஒரு பேராபத்து ஏற்பட்டாலும் அச்செய்தி கிடைப்பதற்கு முன் நமக்கு

இதயம் படபடக்கின்றது. ஒரு கெட்ட செய்தி வரப்போகின்றது என்ற உள்ளுணர்வு ஏற்படுகின்றது. இதை கண்டு கொள்வதைத் தான் இதயக் கண் கண்டு கொள்கின்றதென்போம்,

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்"

என்று கூறினர் வள்ளுவர். நெஞ்சத்தில் ஏற்படும் உணர்ச்சிகளை படம் பிடித்துக் காட்டுகின்றது முகம், வெகு தூரத்தில் நடப்பன வற்றையும் இதயம் எப்படியோ அறிந்துகொண்டு நமக்கு அறிவித்து விடுகின்றது. இரண்டு கண்களையும், இதயக் கண்களையும் தவிர மற்றொரு கண்ணும் உண்டு. அது யோகியர் அனுபவிக்கின்ற மூன்ருவது கண். அதை நெற்றிக்கண் என்றும் சொல்வதுண்டு. அந்தக் கண் அனுபவம் வாய்ந்துள்ளவர்களுக்கு பார்க்காத பொருள் ஒன்றில்லை என்றே சொல்லலாம் தெய்விக நிலை அடைந்த மகான் களுக்கு இந்தக் கண் உண்டு.

## 7. சச்சிதானந்தம் :

சாமிகள் : ஆண்டவனை சச்சிதானந்த சொரூபி என்கின்ருேமே. சச்சிதானந்தத்தில் சத்து உள்ளது, சித்து உள்ளது, ஆனந்தம் உள்ளது. இதை விளக்குங்கள்.

பக்தர் 1 : பிரபஞ்சமாகவும் அதற்கப்பாற்பட்டதுமாக உள்ளது பரம்பொருள். 'சத்' எனும் சொல் இருப்பது என்பதை (உண்மை) உணர்த்த, சித் எனும் சொல் உணர்வதை விளக்கும். இப்படி 'சத்' பொருளாகவும் 'சித்' பொருளாகவும் விளங்கும் மெய்ப்பொருள் ஆனந்தப் பொருளாகவும் உள்ளது. ஆக மெய்ப்பொருள் சத்தும் சித்தும் ஆனந்தமுமாகத் திகழ்கின்றது, சச்சிதானந்தமாக விளங்கு கின்றது.

சாமிகள் : வேறு விளக்கங்கள் உண்டோ ?

பக்தர் 2 : 'சத்' 'சித்' 'ஆனந்தம்' என்பவை மூன்று நிலை அனுபவங்களை உணர்த்துகின்றன. தூல உடல் அனுபவத்திற்கு அடிப்படையாயுள்ளது 'ஸத்' என்பது. சத் என்பது இடப் பொருள். அதில் இருக்கிறது என்ற தன்மையைத் தவிரவேறில்லை. இத்தூல உடலுக்கு 'சத்'துதான் உண்டு. சூட்சம உடல் அனுபவத் திற்கு அடிப்படையானது 'சித்' என்பது. 'சித்' என்ற தன்மை மனம் புத்தி மூலம் வெளியாகின்றது. இந்த சூட்சம உடலுக்கு 'சித்'துதான் உண்டு. காரண உடல் அனுபவத்திற்கு அடிப்படை யானது ஆனந்தம். நன்ருக தூங்கும் ஒருவரை ஆனந்தமாக தூங்கு

கிறார் என்கின்றோம். ஆக இந்த மூன்று உடல்களினூடே ஒளிரும் ஆத்மனையே சச்சிதானந்தாத்மன் என்கின்றோம்.

பக்தர் 3: கோயில்களில் உருவநிலையில் உள்ள ஒரு மூர்த்தி இந்த சச்சிதானந்த நிலையை உணர்த்த உதவுகின்றது. அதுதான் சோமாஸ் கந்தமூர்த்தி உருவம். சிவனும் உமாவும் கந்தனும் சேர்ந்தமைந்த உருவே சோமாஸ் கந்தர். இந்த உருவில் அப்பனுக்கும் அம்மைக்கும் நடுவே ஒரு குழந்தை வடிவில் கந்தன் இருப்பதைக் காணலாம். இந்த உருவத்தில் உள்ள நித்திய பரமாத்மா 'சத்' என்பதை விளக்க, ஞானசக்தியாகிய உமா 'சித்' என்பதை விளக்க இரண்டும் உருவாக்கும் ஸ்கந்தரே ஆனந்தத்தை விளக்குகின்றார்.

சாமிகள்: வேறு விளக்கம் ஏதாவது உண்டோ?

பக்தர் 4: ஆனந்தம் அடைய இரண்டு வழிகள் உண்டு. சத்தாலும் ஆனந்தம் அடையலாம், சித்தாலும் ஆனந்தம் அடையலாம். சத் என்பது அசைவற்ற பொருளைக் குறிக்கும். சித் என்பது அசைவுள்ள பொருளைக் குறிக்கும். இரண்டும் பரப்பிரம்மத்தை அடையும் போது பரமானந்தம் அடைகின்றன. சில பக்தர்கள் 'சித்' பொருளாய் இருப்பதைவிட 'சத்' பொருளாய் இருந்தே இந்த பேரானந்த நிலையில் நிலைத்துவிடக் கூடாதா என்றும் ஏங்குவதுண்டு. அந்த பக்தர் ஒருவரின் பாட்டு இதை விளக்கும்.

> "பிறையே ரு சடையானும் பிரமனும் இந்திரனும்
> முறையாய பெரு வேள்வி குறை முடிப்பான் மறையானல்
> வெறியார் பூம் பொழில் சூழ் விரையார் திருவேங்கடவா
> படியாக் கிடந்து உன்பவளவாய் காண்பேனே"

சாமிகள்: நீங்கள் கூறிய விளக்கங்கள் யாவும் பெரியவர்கள் ஒப்புக்கொண்ட உண்மைகள். இதில் யோக உண்மையும் உண்டு. ஏழை ஒருவன் கஷ்டப்பட்டு உழைத்து பணம் சம்பாதித்து தனக்கும் தன் குடும்பத்திற்கும் வேண்டிய உணவை சம்பாதிக்கின்றான். உண்டு களைப்பாறிய அவன் இன்பம் நாளையை நினைத்தவுடன் கவலைக்கு இடம் கொடுக்கின்றது. காரணம் நாளைக்கு கூலிவேலை கிடைக்க வேண்டும். இவனைவிட கொஞ்சம் மேல் நிலையில் உள்ளவன் ஒரு மாதத்திற்கு வேண்டிய உணவை தயார் செய்து கொள்ளக் கூடிய மாதச் சம்பளம் பெறுபவன். அவனுக்கும் ஒருமாதமானபின் எப்படி பணம் சம்பாதிப்பது என்ற கவலை வந்துவிடும், ஆக இன்பம் என்பது தொடர்ந்து இருப்பது இல்லை, நிலைத்து இருப்பது இல்லை. அது துக்கத்திற்கு இடம் கொடுத்தே வருகின்றது இது உலக அனுபவம். பொருளுலகில் அல்லல் உண்டு, அவதி உண்டு, ஏமாற்றம் உண்டு. அருளுலகை சற்றுப் பாருங்கள். அங்கு நிரந்தர

மான ஆனந்தம் உண்டு. ஒரு யோகியைப் பாருங்கள். அவர் உடம்பைக் கொண்டும் மனதைக் கொண்டும் யாரும் எளிதில் ஏற முடியாத ஒரு உச்சியையே அடைந்துவிடுகின்ருர். அதுதான் ஆனந்த உச்சி. சத்தைக் (உடம்பு) கொண்டு எழுப்புகின்ற குண்டலினி சக்தி மேலெழும்பி சித்தமிசை குடிகொண்ட பரிபூரணனந்த நிலைக்கு அழைத்துச் சென்று விடுகின்றது. அந்த பரிபூரணனந்த நிலைதான் சச்சிதானந்த நிலை. ஏனெனில் அந்த ஆனந்த நிலையை அடைய யோகியின் சத்தும் (உடலும்) சித்தும் (மனம், தியானம்) உதவுகின்றன. இந்த சச்சிதானந்தர் மக்கள் ஒவ்வொருவரிடமும் சச்சிதானந்தரையே காண்கின்ருர். எப்படி இந்த விளக்கம் ?

## 4. சாமிகள் திருவுரையாடல் :

### நம்பிக்கை

சாமிகளோடு கூட இருந்தால் பொழுது போவதே தெரிவதில்லை. சாமிகள் ஆனந்த புருஷர். ஆனந்தக் கடலில் நீந்திநீந்தி விளையாடும் இயல்பினர். அவர் தன்னைச் சேர்ந்தவர்களையும் ஆனந்தக் கடலில் ஆழ்த்தி அவர்கள் அதில் ஆனந்தமாக நீந்தி விளையாடவும் அருள் செய்கின்ருர். சாமிகளுடைய தெய்வீக வாக்கு அருளைப் பொழிகின்றது, ஆனந்தத்தை ஊட்டுகின்றது. அரிய தத்துவங்களை எளிய முறையில் பசுமரத் தாணிபோல் மனத்தில் பதிய வைக்கும் விதமே சாமிகளுக்குரிய ஒரு தனி பாணியில் அமைந்துள்ளது. எளிய சொற்களில் தத்துவார்த்தங்களைத் தெளிவாக எடுத்துரைக்கும் இயல்பு கற்ருேருக்கு மட்டும் உகந்தனவாக இருப்பது மட்டுமின்றி கல்லாதவர்க்கும் கற்கண்டாக இனிக்கின்றது. சாமிகளோடு மேதைகளும், பட்டதாரிகளும், படிக்காதவர்களும், பாமரர்களும் கூடி இருக்கின்ருர்கள். சாமிகள் அவர்களோடு பேச ஆரம்பித்தால் எல்லோரும் மெய்மறந்து கேட்பர். ஒரு விஷயத்தை சாமிகள் எடுத்துக்கொண்டால் அதை அலசி அலசி விளக்குவார். அப்படிச் செய்யும்போது யாவரும் வாய்விட்டுச் சிரிக்கும்படியான வேடிக்கைத் துணுக்குகளையும் ஆசிய உரைகளையும் சரமாரியாகப் பொழிவர். பேச்சின் நடுவில் கேள்விகளைக் கேட்டு பதிலும் வரவழைப்பர். அருள்நாதன் கேள்விகளுக்கு அவ்வளவு சுலபமாகப் பதில்கூற முடியுமா ? சிலர் சொல்லும் பதில் வேடிக்கையாக இருக்கும். சிலர் சரியான பதில் சொல்ல முடியாது விழிப்பர். சரியான பதில் வராவிட்டாலும் அதைக் கண்டு எள்ளி நகையாடும் இயல்பினர் அல்ல சாமிகள். தானே பதிலையும் சொல்லி பக்தர்களை மகிழ்விப்பர். பதிலோடுகூட அதற்கு சம்பந்தப்பட்ட அரிய உண்மைகளையும் விளக்க முற்படுவர்.

ஒருநாள் "வாசத்திலே வாசம், எந்த வாசம் பெரிது" என்ற கேள்வியை சாமிகள் கேட்டார். பல பதில்கள் கிளம்பின. தல வாசனை யென்றார் கிருஷ்ணமூர்த்தி அவர்கள். பூர்வஜன்ம வாசனை யென்றார் முத்துக்குமாரசாமி அவர்கள். சகவாசம் என்றார் மணி அவர்கள். சுவாசம் என்றார் இராமகிருஷ்ணன் அவர்கள். சீனிவா சன் என்றார் நடராசன் அவர்கள். இந்தக் கேள்வி பக்தர்கள் சிந்தனையைச் செயல்படச் செய்தது. ஒவ்வொரு பக்தர் கூறிய பதிலும் மனத்திற்குகந்தனவாக அமைந்துள்ளது, ஓரளவு ஒத்துக் கொள்ளக்கூடியதாகவும் இருக்கின்றது. ஆனால் சாமிகள் கூறிய பதில் எல்லோரும் கூறிய பதில்களைவிட சிறந்ததாக அமைந்தது. "வாசத்தில் வாசம், விஸ்வாசம்தான் பெரிது" என்று கூறினார் சாமி கள். எவ்வளவு எளிதான பதில், இதைத்தொடர்ந்து சாமிகள் பாக்கி யத்துள் பாக்கியம் எது சிறந்தது என்ற கேள்வியையும் கேட்டார். புத்திர பாக்யம், சௌபாக்யம், தன பாக்யம் என்றெல்லாம் பக்தர் கள் தமக்குத் தெரிந்த பதில்களை உரைத்தனர். சாமிகள் உரைத்த பதிலும், அதைத் தொடர்ந்து சில உண்மைகளை எடுத்துரைத்ததும் சீடர்களுக்குகந்த அமுதமாக விளங்கியது.

சாமிகள்: பாக்கியத்துள் பாக்கியம் சிறந்தது வைராக்கியம் தான். வாசத்துள் வாசம் சிறந்தது விசுவாசம்தான். உலகம் ஓடுவதே விஸ்வாசத்தால்தான். ஒரு அரசு நடப்பதே மக்கள் விஸ்வாசத்தால்தான், பெரிய வங்கிகள் நடப்பதே வங்கியில் பணம் போட்டவர்களின் விஸ்வாசத்தால்தான். இந்த விஸ்வாசம் வேறொன்றுமில்லை, நம்பிக்கைதான். ஒரு மனிதனுக்கு முதலில் தன்னம்பிக்கை வேண்டும். தான் ஆத்மீக விஷயங்களில் முன்னேற முடியும் என்ற தன்னம்பிக்கை வேண்டும். தகுந்த குருவை அடைந் தால் குருவால் தனக்கு ஆத்மீக லாபம் உண்டு என்ற நம்பிக்கை வேண்டும். குருவால் பிறவிப் பெருங்கடலை வெற்றிகரமாக நீந்த முடியும் என்ற நம்பிக்கை வேண்டும். ஆண்டவன் அன்பிலும் இரக் கத்திலும் நம்பிக்கை வேண்டும். இயேசு நாதரும் ஆண்டவனுடைய அன்பு கனிந்த இரக்கத்தில் மக்கள் நம்பிக்கையை வைக்க வேண்டு மென்றே போதித்து வந்ததைப் படித்திருப்பீர்கள். "உண்ண உணவு வேண்டும் என்று கை நீட்டுகின்ற குழந்தைக்கு யாராவது ஒரு கல்லை எடுத்துக் கொடுப்பாருண்டா? உணவை கொடுப்பது அல்லவா மனிதத்தன்மை. விண்ணுலகிலுள்ள நம் தந்தை மண்ணுலகு மாந்தர்களைவிட அதிகம் அன்பு கொண்டவர். ஆகையால் கேள், தேடு, கதவைத்தட்டு; ஏனெனில் யார் கேட்கின்றார்களோ அவர் களுக்கே இறைவன் கொடுக்கின்றான், யார் தேடுகின்றார்களோ அவர் களே இறைவனை அடைகின்றார்கள், யார் கதவைத் தட்டுகின்றார் களோ அவர்களுக்கே கதவு திறக்கப்படுகின்றது" என்று அழகாக இயேசு நாதர் ஈசனருள்பேருண்மையை உபதேசித்து வந்தார். எந்

தக்கதவைத் தட்டச்சொன்னார்? இதயக்கதவை தட்டுங்கள் என்றார். இந்த அடிப்படை உண்மை அல்லவா அவருடைய அற்புதத் திருவிளையாடல்களிலும் பொதிந்திருந்தது. தன்னம்பிக்கை, ஆண்டவன் பேரன்பில் நம்பிக்கை, ஆண்டவன் அருளைச் சம்பாதித்துக் கொண்ட பெரியவர்களிடத்தில் நம்பிக்கை – இவைகள் மிகவும் அவசியம் சீடர் உலகில். ஒரு குருவை அடைகின்ற சீடர் குருவால் ஆகாததொன்றில்லை என்ற திடநம்பிக்கை கொண்டிருந்தால், அவனை நாகபாம்பு கடித்தாலும், குரு 'விஷமே இறங்கு' என்று சொன்னவுடன் விஷமும் இறங்கிவிடும். குரு விபூதி போடவில்லையே என்று சீடன் மலைத்தானானால் விஷம் இறங்காது. அப்படி குரு விபூதி மந்திரித்து பூசினாலும், "வெறும் விபூதி என்ன செய்யும். குரு பச்சிலை மருந்து ஒன்றும் கொடுக்கவில்லையே" என்று நினைப்பானாகில் விபூதியும் மந்திரமும் பயனளிக்காது. அப்படி குரு பச்சிலை மருந்து கொடுத்தாலும், "குரு நவீன வைத்தியப்பயிற்சி தெரியாதவராயிற்றே, அவர் டாக்டர் பட்டம் பெறவில்லையே" என்று சீடன் நினைத்தாலும் மூலிகை மருந்தும் விஷத்தை இறக்க முடியாது; குருவிடத்தில் நம்பிக்கை இருந்துவிட்டால், குரு விஷமே இறங்கு என்றுகூட சொல்லவேண்டியதில்லை விஷத்தை இறக்க. அவர் கண்கள் பார்த்தாலே போதும். அவர் பார்க்கக்கூட வேண்டியதில்லை, அவர் நினைத்தாலே போதும், விஷம் இறங்கி விடும். இத்தகைய நம்பிக்கை சீடரிடம் அவசியம் வேண்டும். இந்த நம்பிக்கைதான் மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறாக இருக்க தீர்க்காயுளை ஈந்தது: இதே நம்பிக்கைதான் சத்தியவானின் உயிரைக்காக்க சாவித்திரிக்கு உதவியது, இதே நம்பிக்கைதான், ஸ்காட்லாந்து மன்னர் ராபர்ட்புரூஸ் என்பவருக்கு தன் நாட்டையும் கடைசியில் கைப்பற்றச் செய்தது, இதே நம்பிக்கைதான், எண்ணிறந்த பக்தர்களை இராமகிருஷ்ணபரமஹம்சரிடமும், இராமலிங்க சாமிகடளிடமும் சேர்த்துவைத்தது. "நம்பு கைகொடுக்கின்றேன்" என்றல்லவா பெரியவர்கள் போதிக்கின்றனர். தெய்வமும் சொல்கின்றது. நம்புவோம், நிச்சயம் தெய்வமும் நமக்குக் கைகொடுத்து உதவும். பெரியவர்களும் நமக்குக் கைகொடுத்து உதவுவர்.

## உரையாடல் என்பது என்ன?

"அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்"

உரையாடல் என்பதே ஒரு கலையாக அமைந்திருப்பதைச் சாமிகளிடம் காணலாம். கலை என்றால் அது கருத்தைக்கவர வேண்டும். கருத்தைக்கவர அதில் அழகு இருக்கவேண்டும். அழகு இருந்தால் அது இன்பத்தை ஊட்ட நல்லிடமாக அமைந்து விடு

கின்றது, சாமிகள் அன்பர்களோடு அளவளாவிப் பேசும்போது கருத்தழகு இன்பம் பெருகிக்கொண்டே செல்லும். எப்படிக் குற்ருல அருவியின் ஜிலுஜிலுப்புத் தண்ணீர் 'தடா தடா' வென்று தலை மேல் விழவிழ, அந்த இன்பத்தை விட்டு நகர மனம் வராமலிருக்குமோ, அப்படியே சாமிகளின் அருள்பெருக்கான அழகு மொழிகளைக் கேட்ககேட்க சாமிகளைவிட்டும் சாமிகள் அருள் தேன்அருவி மொழிகளை விட்டும் பிரிய மனமே வராது. அவரோடு உரையாடல் தொடங்கிவிட்டால் நேரம் போவதே தெரியாது. சாமிகளின் உரையாடலின் தேனருவி இனிமையும், குளிர்ச்சியும், நிறைந்து சாமிகளோடு இருக்கும் பக்தர்களின் உள்ளக்கிளர்ச்சியையும் கிண்டிவிடும், மன எழுச்சியைத் தூண்டிவிடும், இதயகீதத்தை எழுப்பிவிடும். அவருடைய ஆத்மஒலி நாதத்தின் இனிமையில் அவருடன் ஒன்றியிருக்கும் ஆன்மாக்கள் உலகை வாட்டிவதைக்கும் இன்னல்களையும் பேரிடர்களையும் மறந்து உலகத்தையே மறந்து ஒரு தெய்வீக வானத்தின் உச்சியிலே சாமிகளோடு சிறகடித்துப்பறக்க ஆரம்பித்து விடுவர். சாமிகளும் அவர் பக்தர்குழாமும் இந்த உரையாடல் உச்சிவானத்திலிருந்து உலகிற்குத் திரும்பிவர மூன்று மணிநேரம் நான்கு மணிநேரம் ஆகிவிடும். ஆனால் இவ்வளவு நேரம் பறந்து செல்வதே ஒருவருக்கும் தெரிவதில்லை. காலையில் பூஜை முடிந்தவுடன் பக்தர்களுக்கு அருள் பிரசாதம் அருளி சிற்றுண்டி முடித்தவுடன் ஆரம்பிக்கும் உரையாடல் வளர்ந்து விரிந்து உயர்ந்து மத்தியான சாப்பாட்டு வேளையையும் தாண்டிச் சென்றுவிடும். "சாப்பாடு தயாராகி வெகு நேரமா யிற்றே, சாமிகள் இன்னும் சாப்பிடவில்லையே" என்று கூறி சாமிகளை அழைக்க வருகின்றவர்களையும் கூட சாமிகளின் மோகன முரளி உரையாடல் தன்வசப்படுத்திவிடும். அவர்கள் வந்த வேளையையும் மறந்து உரையாடலில் லயித்து விடுவர்.

மனதிற்குப்பிடித்த இனித்த பழக்கங்களில் மனம் திறந்து உரையாடல் என்பது ஒன்று. பேசுபவரும் மனம் திறந்து பேச வேண்டும். கேட்பவரும் உளம் விரும்பிக் கேட்க வேண்டும். சாமிகளை நாடி வருபவர்கள் அவர் அருளை நாடி வருகின்றனர், அவர் அருட்பேச்சை நாடி வருகின்றனர். சாமிகளிடமிருந்து பெருகும் திருமொழிகள் இதயத்திலிருந்து ஊற்றுப் பெருக்கெடுத்து வழியும் அருள் மொழிகள். அவைகளைக் கேட்கக் கேட்க கேட்பவர் இதயங்களும் குளிர்கின்றன. இதயத்திலிருந்து வரும் பேச்சைத்தானே இதயங்கள் கேட்டு மகிழ முடியும்!

உரையாடல் கலையின் இன்பத்தை அன்பர்கள் உணர்வர். அது எப்படி அமைய வேண்டும் என்பதையும் அன்பர்கள் உணர்வர். உரையாடலில் ஒருவரே பேசிக் கொண்டே சென்ருலும் அது

உரையாடல் ஆகாது, அது சொற்பொழிவாகி விடும். ஒருவரே உரையில் தனியாடல் தொடர்த்து செய்தால் பேச்சும் புளித்துவிடும், சலிப்பு தட்டி விடும். உரையாடலில் சுவை குன்றுமலிருக்க கேட்டுக் கொண்டிருப்பவரும் வாங்கிக் கொண்டிருக்கும் தன் நிலையை மாற்றிக் கொண்டு அவரும் கொடுக்கக் கூடிய நிலைக்குத் தன்னை ஆக்கிக் கொள்ள வேண்டும். காது கொடுத்து கேட்பவரும் கேள்விகளை யும் கேட்க வேண்டிய இடங்களில் கேட்டு விஷயம் புரிந்துகொள்ள வேண்டும். உரையாடலில் ஒருவருக்கு மட்டும் பங்கில்லை, கலந்து கொள்வோர் எல்லோருக்கும் பங்குண்டு. அதில் ஆச்சரியக் குறிக்கு மட்டும் இடமில்லை, அதில் கேள்விக் குறிக்கும் இடமுண்டு. உரை யாடலில் வரும் பொருட்களை விளக்க உதாரணங்களும், சில வாழ்க்கை நிகழ்ச்சிகளும், பழமொழிகளும், கதைகளும் தேவைப்படு கின்றன. சாமிகள் உரையாடலைக் கையாளும் முறையே அற்புத மானதொன்று. உரையாடலில் சாமிகள் அனுபவம், வாழ்க்கை நிகழ்ச்சி, நீதிநூல் கதைகள், அறநெறி விளக்கம், ஆத்மீக உணர்வு, அருட் பொருள்—இவைமட்டுமல்ல, சமயங்களில் கீதத்திற்கும் இட முண்டு. கீதத்திற்கு தகுந்தாற் போல் அருள் வீராவேசம் கொண் டவர்கள் அற்புத நடனத்திற்கும் இடமுண்டு. சாமிகளின் சித்து விளையாட்டுக்கும் இடமுண்டு. சாமிகளிடம் கூடி இருப்பவர் அறி வாளிகள், ஆத்மீக அனுபவம் கொண்டவர்கள், கலைஞர்கள், பேரா சிரியர்கள், டாக்டர்கள், வழக்கறிஞர்கள். அவர்களும் சாமிகளின் உரையாடலில் அருமையினை சுவைத்து வாய் மூடி மௌனிகளாக இல்லாமல் கருத்தைக் கருத்தாட்டும் கேள்விகளையும் கேட்கத் தயங் குவதில்லை. சில சந்தர்ப்பங்களில் சாமிகள் உற்சாகம் உரையாடலை வளர்த்துவிடும். அந்த உரையாடல் இன்பக் கடலில் அன்பர்கள் ஆனந்த சயனம் கொண்டிருப்பதைப்போல் அசைவற்று மன மொன்றி நிலைத்திருக்குங்கால், சாமிகளே பக்தர்களில் சிலரை வலிய கூப்பிட்டு சில கேள்விகளைக் கேட்பர். சாமிகளோடு கூட இருப்ப வர்களும் விருவிருப்போடு பக்திச்சுவை சொட்டச் சொட்ட அவர் கள் அவர்கள் அனுபவத்தைப் பற்றியும் பேச முற்படுவர். இப்படி ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ள, பொருள் செறிந்த உரை யாடல் பக்தி செறிந்து பரம்பொருள் இன்பத்தின் உச்சிக்கே எல் லோரையும் ஏற்றிவிடும். சாமிகளோடு பேசிக் கொண்டிருக்கும் போது உரையாடல், படிக்கும் புத்தகங்களைப்போல் கருத்தை அருளு கின்றது, சுற்றுலாப்போல் உலக அனுபவத்தைப் பரப்புகின்றது, நெஞ்சத்து அகநக நட்பிக்கும் நட்பைப் போல் உயிரைத் தழைக்கச் செல்கின்றது.

**உரையாடல் ஒன்று :**

(செடி கொடி உண்மை-விநாயகரைப் பற்றி விளக்கம்-குரு கண் ணாடியைப் போன்றவர்-கந்த சஷ்டி விளக்கம்-ஆண் பெண் சரிசமம்)

சாமிகளுக்கு இயற்கை அன்னையின் பால் உள்ள அன்புதான் தன் இல்லத்திலும் விதவிதமான செடி கொடிகளை வளர்ப்பதில் ஆர்வம் ஊட்டி இருக்கின்றது. சாமிகள் வசிக்கின்ற 'இராஜ இரத்தின' இல்லத்தைச் சுற்றிலும் கண்களைக் கவர்கின்ற குரோட்டன்ஸ் செடி வகைகளும் மிகுந்துள்ளன. பூஜை ஹாலுக்கு அடுத்து ஒரு அழகான பூந்தோட்டம் அமைத்துள்ளது. எப்படி எளிய வீடாக இருப்பினும் சாமிகளின் பக்தர்களின் உள்ளன்பு சாமிகளை அங்கு இட்டுச் செல்கின்றதோ அப்படியே வண்ணச் செடிகளும் அவர்கள் அன்பைக்கவர்ந்து அவை இருக்கும் இடத்திற்கு சாமிகளை இழுத்துச் சென்று விடுகின்றன. திருச்சியில் ஒரு செடி விற்பனை தலத்தில் உள்ள குரோடன்சுகள் சாமிகளின் கவனத்தை இழுத்தன. சாமிகள் அவைகளைப் பார்க்கத் திருவுளம் கொண்டார். சாமிகளுக்கு விருப்பமான குரோடன்சு செடிகளும் மஞ்சள் செம்பருத்திச் செடியும் அங்கு கிடைத்தன. இதைப் பற்றி பேசும்போது சாமிகள், "மரங்களை வளர்த்தால் மழை தானாக வருகின்றது. செடி விற்பனையாளர் தம் தோட்டத்தில் செடிகளை வளர்த்து நம்மை வரவழைத்து விட்டார். எந்தெந்த செடிகளை எப்பெப்பொழுது எடுக்க வேண்டும், நட வேண்டும் என்பதை அறிந்து செய்ய வேண்டும். செடிகள்தான் நிறைய இருக்கின்றனவே என்று மழையில் வைக்க வேண்டிய செடிகளை வெயிலில் வைப்பதும் கூடாது. சில செடிகள் நிழலில் தழைத்தோங்கும்; சில வெயிலில் தழைத்தோங்கும். பாட்டுக்கள் ஏராளமாகப் பாட தெரியுமென்று காலையில் பாடவேண்டிய இராகங்களை மாலையில் பாடினால் பலனளிப்பதில்லை. அதுபோன்றே மழை காலத்தில் வைக்க வேண்டிய செடிகளை கோடை காலத்தில் வைப்பதால் பலன் ஒன்றும் இருக்காது" என்று கூறினார்.

க: பெரியவர்கள் மழையைக் கூட பாட்டுக்கள் பாடி வரவழைத்திருப்பதை நமது தமிழ் நாடு நன்கறியும்.

சாமிகள்: நமது தமிழ் நாடென்ன? உலகத்தில் உள்ள பெரியவர்கள் எங்கு சென்றாலும் மழை பெய்வதை இன்றும் நாம் காணவில்லையா? நமது நாடு என்று பேசும்போது எனக்கு கணபதி நினைவுக்கு வருகின்றார். அவர் எந்த முகத்தில் இருக்கின்றார்?

க: கணபதி யானை முகத்தில் இருக்கின்றார்.

சாமிகள்: அதுவும் உண்மையே. கணபதி எப்பொழுதும் கிழக்கு முகமாகவே அமர்ந்திருக்கின்றார்.

க: கணபதியைப் பற்றி ஒரு பெரிய கேள்வி ஒன்று உளது சாமிகளே. அவர் சமீபத்தில் உருவாக்கப்பட்ட தெய்வமல்லவா என்பது

தான் சில இலக்கிய ஆராய்ச்சியாளர்களின் கேள்வி. அவர்கள் கணபதியை தமிழ் நாட்டில் ஏழாம் நூற்றுண்டில் ஏற்பட்ட கடவுள் என்றும் துணிந்து உரைக்கின்றனர். காரணம் கணபதியைப்பற்றி வந்தவைகளெல்லாம் சமீபத்தில் வந்த இலக்கியங்களிலே காணப் படுபவையே, ஆரம்ப நூற்றுண்டுகளில் ஏற்பட்ட இலக்கியங்களில் கணபதியைப் பற்றிய குறிப்புகள் இல்லை என்றே வாதாடுகின்றனர்.

சாமிகள்: கணபதியைப் பற்றி பேசுகின்ற நாம் அந்த இலக்கியு விவாதங்களுக்குச் செல்ல வேண்டிய அவசியமேயில்லை. கணபதி ஆதிகடவுள். அவர் கழல்பதி. அவர் யோகத்திற்கு உறுதுணை புரி கின்ற கழல்பதி. ஓம் கணபதியைத் தொழ காரியம் கைகூடும் என்ற நம்பிக்கையோடேயே நாம் எந்தக் காரியங்களையும் செய்யவேண்டும்.

க: யோக அனுபவமுள்ளவர்களுக்கு சாமிகள் சொல்வது நன் ருகப் புரியும். ஆனுல் உலகில் உள்ள சில பாமர மக்களுக்கு கடவுள் என்றவுடனேயே, அவரைக் காட்ட முடியுமா என்ற கேள்வியும், அந்தக் கேள்வியைக் கேட்கக்கூடிய துணிவும் ஏற்பட்டு விட்டது

சாமிகள்: அப்படி யாரும் கடவுளைக் காட்ட முடியுமா என்ருல் நாம் உடனே அவரைப் பார்த்து 'நீர் உம் காதைப் பார்த்திருக் கின்றீர்களா' என்றே கேட்கலாம். இல்லை என்றே பதில் வரும். உம்முடைய சொந்த உண்மைக் காதையே பார்க்க முடியாத நிலையில் இருக்கும் உமக்கு கடவுளை எப்படிப் பார்க்க முடியும் என்றே பதில் சொல்லலாமே? இவர்களிடம் அடுத்தாற் போல் "கண்ணுடியைப் பார்த்திருக்கின்றீர்களா?" என்ற கேள்வியைக் கேட்டால், "ஓகோ பார்த்திருக்கின்றேனே. அதில் என் காதுகளையும் பார்த்திருக்கின் றேனே" என்ற பதில் வரும். அவர்கள் கொடுக்கும் பதிலை வைத் துக் கொண்டே அவர்களை நாம் திருப்தி செய்ய முடியும் எப்படி ஒரு கண்ணுடி உன்னுல் பார்க்க முடியாத உன்னுடைய உண்மையான காதைக் காண்பிக்க உதவுகின்றதோ, அப்படியே உன்னுல் பார்க்க முடியாத உண்மைப் பரம் பொருளை குரு எனும் கண்ணுடி உனக்குக் காட்ட முடியும். நீர் ஒரு ஆண்பிள்ளை என்று சொல்ல ஒரு பெண் பிள்ளை வேண்டியிருக்கின்றது உலகில். திடீரென்று பாம்பு என்று உமது மனைவி பதறும்போது, 'பாம்பா, அடுத்த வீட்டு ஆண்பிள் ளையைக் கூப்பிடு' என்பீர். அதே மனைவி "ஆண்பிள்ளையைக் கூப்பிட அடுத்த வீட்டுக்கா போக வேண்டும். நீங்கள் யார்? நீங்கள் ஆண்பிள்ளையில்லையா" என்று சொன்னவுடன்தான் உம் அறிவு வேலை செய்ய ஆரம்பிக்கின்றது. உலகம் போகின்ற போக்கில் ஒருவன் ஆண்பிள்ளை என்பதையே எடுத்துச் சொல்ல ஒரு பெண் பிள்ளை வேண்டி இருக்கின்றது. உலகத்தில் சாமியும் பொய்யில்லை, சாஸ்திரமும் பொய்யில்லை, மந்திரமும் பொய்யில்லை.

"சாமி பொய் யென்ருல் சாணம்பாரு
சாஸ்திரம் பொய் யென்ருல் கிரணம்பாரு
மந்திரம் பொய் யென்ருல் விஷத்தைப்பாரு."

என்று பெரியவர்கள் சொல்லிவைத்தனர். சாதாரணமாக சாணியை அப்படியே விட்டுவிட்டால் அதில் புழுக்கள் உண்டாவதைப் பார்க்கின்ேரும். அதே சாணியை எடுத்து அதை சாமி என்று சொல்லி ஒரு பிடி எடுத்து வைத்து வணங்கிஞல் அதில் ஒரு புழு உண்டாவதைப் பார்த்திருக்கின்ேருமா? அதேமாதிரி "இந்த வருடத்தில் இந்த மாதத்தில் இந்த தேதியில் சந்திரக் கிரகணம், அது இந்தந்த இடங்களில்தான் தோன்றும்" என்று முன்கூட்டியே ஜோதிடர்கள் உரைக்கின்றனரே, அவை பொய்த்ததுண்டா? நாகப்பாம்பின் விஷத்தை, அது கடித்த சிறிதுநேரத்திற்கெல்லாம் மந்திரம் சொல்லி இறங்கவைத்து உயிர்ப்பிச்சை அருளுகின்ருர்களே, மந்திரமுமா பொய்? இவைகளைக் கண்டாகிலும் இறைவன் ஒருவன் உண்டு என்பதை நம்பமாட்டார்களா?

க: மந்திரத்தைப்பற்றி சாமிகள் கூறினீர்கள். மந்திரங்களையும் பிழையின்றி சொன்ஞல்தானே, சாமிகளே, அவை பலனளிக்கும். அல்லாவிட்டால் எல்லாம் விபரீதமாகப் போய்விடும் என்று சொல்கின்ருர்களே, சாமிகளே!

சாமிகள்; நீங்கள் சரியான கேள்விதான் கேட்டீர்கள். அருள் உலகத்தில் மட்டுமல்ல, இந்த பொருள் உலகிலும் எழுத்துப்பிழை ஏற்பட்டால் அர்த்தம் அநர்த்தமாவதோடுகூட பலனே விபரீதப் பலஞகவும் ஏற்பட்டுவிடும். ஒரு ஜமீன்தார் தன்னுடைய மானேஜருக்கு ஒரு லெட்டர் கொடுத்தனுப்பிஞர். அந்த லெட்டரை தனக்கு வேண்டிய நண்பரொருவரிடம் கொடுத்தனுப்பிஞர். மாடுகள் வாங்கவந்த நண்பருக்கு மாடுகள் கிடைக்கவில்லை. முதுகில் பளீர் பளீர் என்ற அடிகள் கிடைத்தன; காரணம் 'மாடுகள் வாங்க வருகிருர் விசாரித்து அனுப்பவும்' என்றெழுதி அனுப்பவேண்டிய கடிதத்தில் மாடுகள் என்ற சொல்லில் உள்ள ஈற்றெழுத்தில் புள்ளிகுத்த மறந்துவிட்டார் ஜமீன்தார். அதைப்படித்த மானேஜர் 'மாடு களவாங்க வருகிருர். விசாரித்து அனுப்பவும்' என்று படித்து மாடுகளைக் களவு செய்ய வருகின்றவரென்று வந்தவரைத் தப்பாக எண்ணி அவருக்குக் கொடுக்கவேண்டிய மரியாதையை அடி ரூபத்தில் எண்ணி வழங்கிஞர் என்று கதை ஒன்றுண்டு. அப்படித் தான் மந்திரங்கள் விஷயத்திலும்! ஐந்தெழுத்தையும் கிரமப்படிச் சொன்ஞல் நல்ல பலனுண்டு. மாற்றி அமைத்துவிட்டால் அதுவே யானை பெரும்புலியாகும் என்றவாறு ஐந்தெழுத்துக்களை வழிதவறி பூசித்தால் அவையே புலியாக பாய்கின்றன. வேறு எந்த பெரிய மந்திரங்களுக்கும் செல்லவேண்டாம், நீங்கள் எல்லோரும் கந்த

சஷ்டி கவசம் படித்திருப்பீர்கள். அதை இன்றுகாலை ஒரு சிறுவன் பாராமல் ஒப்பித்தான். அதைக் கேட்டுக்கொண்டுவந்த அவன் தகப்பனுருக்கு தன் பிள்ளை இவ்வளவு கெட்டிக்காரத்தனமாக கந்த சஷ்டி கவசத்தை ஆரம்பமுதல் கடைசிவரை தங்குதடையின்றி சொல்லிவிட்டானே என்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. நான் என்ன சொன்னேன், தெரியுமா? பையன் இன்னும் சிலவருடங்கள் சென்ற வுடன் அதைச் சொல்லட்டும், இப்பொழுது வேண்டாமென்றேன்.

க: ஆச்சரியமாக இருக்கின்றது, சாமிகளே அதை எல்லோரும் பாராயணம் செய்யவேண்டும் என்று சொல்வீர்கள். ஏன் அந்தப் பையனை வேண்டாம் என்று சொன்னீர்கள்! சாமிகளே?

சாமிகள்: அப்படிக் கேளுங்கள். பையன் "மாடுகள் வாங்க வருவார்" என்பதை "மாடு களவாங்க வருவார்" என்று கூற ஆரம்பித்து விட்டான். அப்படி அவன் கேட்டால் மாடுகளா கிடைக்கும், அடிகள்தான் கிடைக்கும் கதையில் கேட்டபடி. பையன் நன்ருக மனனம் செய்துதான் இருந்தான். இருந்தாலும் அவன் சிறுவயது பையன், 7 வயதுகூட பூர்த்தியாகாதவன். கந்தர் சஷ்டியை பாராயணம்தான் செய்திருந்தானே தவிர அதன்பொருளை உணரவில்லை. ஒப்பிக்கும்போது ஏகப்பட்ட பிழைகளோடு சொன்ஞன். அதனுல்தான் அவன் விபரம் தெரிந்தவுடன் பிழையில்லாமல் சொல்லவே, சில வருடங்கள் கழித்து பாராயணம் செய்யட்டும் என்று கூறினேன். அவன் பாராயணம் செய்திருந்தபடி அனு தினமும் சொல்லிவந்தால் கந்தர் சஷ்டி கவசம், அவனுக்கு ஏதும் தீங்குவந்தால் தற்காப்புக்கு உதவும் கவசமாக விளங்காமல், தீமைகள் எனும் இரும்புகளை இழுக்கும் காந்தக்கவசமாகவே விளங் கும். மரத்திற்கு வைக்கவேண்டிய உரத்தை நாற்றுக்குவைத்தால் நாற்று வீணுகிவிடும். நாற்றுக்கு வைக்கவேண்டிய உரம் மரத் திற்குப் போதாது. அதனதன் பரிபக்குவத்தை அறிந்து உரம் போடவேண்டும்.

க: கந்தர் சஷ்டி கவசம் உண்மையிலேயே அவ்வளவு சக்தி வாய்ந்த தற்காப்பு கவசமா, சாமிகளே.

சாமிகள்: சண்டைக்குச் செல்லும் வீரர்களுக்கு வாளும் கொடுப்பர்; கவசமும் கொடுப்பர்; வாள் விரோதியைத் தாக்க, கவசம் வீரர்களின் உடம்பை பாதுகாக்க. நாமும் வீரர்கள் தான். நாம் வாழ்க்கையில் எவ்வளவோ பேரோடு தினமும் போரிட்டுக் கொண் டிருக்கின்ளும். பசிப்பிணி, உடல் பிணி, வஞ்சகர், சண்டாளர், பேய் பிசாசுகள், செய்வினைக் கோளாறுகள்—முதலிய எவ்வளவோ விரோதிகளோடு நாம் தினமும் சண்டையிட்டுக்கொண்டிருக்கின்

றேம். நமக்கு ஒவ்வொருவருக்கும் தேவராயசாமி ஒரு கவசம் கொடுத்திருக்கின்றார், உடம்பையும் உயிரையும் காக்க. அது இரும்பால் உண்டான கவசமல்ல, சொற்களால் உண்டான கவசம். இது இகத்தில் உடலைக் காத்து பரத்தில் முக்தி அளிக்க வல்லது.

கு: அதைத் தினம் எத்தனை முறை பாராயணம் செய்ய வேண்டும், சாமிகளே?

சாமிகள்: அந்த கவசத்திலேயே பதில் இருக்கின்றது. ஒரு நாள் முப்பத்தாறுருக் கொண்டு ஓதியே ஜெபிக்க சொல்கின்றது கவசம். அது முடியாவிடில் காலையிலும் மாலையிலும் ஜெபிக்கலாம். அதற்கும் நேரம் கிடைக்கவில்லையானால் காலையில் ஒருதரமாவது ஜெபிக்கவேண்டும்.

கு: அதில், சில விளக்கங்கள் தேவைப்படுகின்றன, சாமிகளே!

"ரஹண பவச ரரரர ரரர
ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரஹண வீரா, நமோ நம
நிபவ சரஹண நிறநிற நிறென
வரா ஹணப வருக வருக" என்ற அடிகளும்

"செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகென
நகநக நகநக நகநக நககென
டிகுகுண டிகுகுண டிகுகுண டிகுண
ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடுடு டுடுடுடு டுடுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குடு
விந்து விந்து! மயிலோன் விந்து
முந்து முந்து முருகவேள் முந்து"

இந்த அடிகளுக்கு விளக்கம் வேண்டியிருக்கின்றது சாமிகளே!

சாமிகள் பக்தர் ஒருவரிடம் இருந்த நோட்டுப் புத்தகத்தை வாங்கிக் கீழ்கண்டவாறு எழுதிக் காண்பித்து அந்தப் பக்தரையே படித்துக் காட்டச் சொன்னார். சாமிகள் எழுதி இருந்த எழுத்துக்கள் இவைகளே.

"ளிளி மகள் திதிதி
மிமி மிமி செத்தாள்

பக்தரும் அந்த எழுத்துக்களை உள்ளது போன்றே படித்தார்.

சாமிகள் : இப்படிப் படித்தால் ஏதாவது புரிகின்றதா சாமிகளே? ஒன்றும் புரியவில்லை. ஏதோ கேலி செய்வதாகவும் சொல்லலாம். ஆனால் அதை உருவாக்கியவன் சொல்வதையே கேட்போம். அவன் இந்த எழுத்துக்களை எழுத்து ரூபத்திலேயே படிக்கமாட்டான். அவன் சிந்தையில் உள்ள பொருள் வேறு. அதற்கொப்ப அதை கருத்தாட்டி வாசித்துக் காண்பிப்பான். அவன் இதே எழுத்துக்களை சொல்லும் போது இருளி மகள் முத்தி இருமி இருமிச் செத்தாள் என்பான். எழுத்துக்கள் எழுதும் போதும் சொல்லும் போதும் ஏற்படுத்துகின்ற ஜாலங்களே இவைகள், ஆனால் எழுத்துக்களில் பொதிந்துள்ளன பொருள்கள். இப்பொழுது புரியும் உங்களுக்கும். சாதாரண பொருளுக்கே எழுத்துக்களை இப்படி அமைக்க முடிந்தால், ஈசன் அருளை அடைய உருவாகும் மந்திரங்களை எப்படியெல்லாம் அமைக்க முடியும் பாருங்கள். நீங்கள் கேட்ட கேள்விக்கு வருகின்றேன். ஓம் சரவணபவ என்பது சடாக்ஷர மந்திரம். ஒரு குறிப்பிட்ட பலனுக்காகத்தான் இந்த மந்திர அக்ஷரங்களை மாறி மாறி உபயோகித்திருக்கின்றார் பெரியவர். நமசிவாய மந்திரத்தை, சிவாயநம என்றும் மாற்றிச் சொல்வதைப் போல, சரஹணபவ என்ற சொல்லை ரஹணபவச என்றும், ரிஹணபவச என்றும், விணபவசரஹ என்றும் நிபவசரஹண என்றும் வசரஹணப வருக என்றும் அட்சரங்களை மாற்றி அமைந்திருக்கின்றனர். 'மொக மொக' 'நக நக' என்பது ஒளியையும் ஒலியையும் விளக்குகின்றது. 'நாத விந்து கலாதி நமோ நம' என்பதையும் சிந்தித்துப் பாருங்கள். இந்த வரிகளில் உள்ள அடுக்குகளில் உள்ள ரகரங்கள் 'சரவணபவ' என்ற சடாக்ஷரங்களில் ஒன்று. சப்த ரூபபீஜங்கள் அமைந்த வக்கிரங்களையும் காண்கின்கின்றோம். இவை ஓரளவு உமக்குப் புரிந்திருக்கும் என்று நம்புகின்றேன். இதுபெரிய விஷயமல்ல. குரு அருள் கொண்டவர்களுக்கு மிக எளிதில் புரியக்கூடிய விஷயம். அதில் சில வார்த்தைகள் உள்ளன. அவைகளையும் நீங்கள் சிந்தித்துப் பார்த்ததுண்டா? அவைகளையும் புரிந்துகொள்ள வேண்டுமென்றால் கருத்தைக் கருத்தாட்டினால்தான் புரிந்துகொள்ள முடியும். "மைய நடம் செயும் மயில் வாகனனார்" என்பதற்கு பொருள் தெரிகின்றதா? 'பின்கையிரண்டும் பின்னவளிருக்க' என்று சொல்லும் போது பின்னவள் யார் என்பதை அறிந்துகொண்டீர்களா? 'மார்பை இரத்ன வடிவேல் காக்க' என்றும் சில பிரதிகளில்' மார்பை இரத்த வடிவேல் காக்க' என்றும் இருக்கின்றனவே, இவைகளில் எது சிறந்த வாசகம் என்பதை சிந்தித்துப் பார்த்தீர்களா? சில பிரதிகளில் 'ஆண் குறி இரண்டும் அயில் வேல் காக்க' என்றும் சில பிரதிகளில் 'ஆண் பெண் குறிகள் அயில் வேல் காக்க' என்றும் இருக்கின்றனவே. இவற்றில் எது உகந்தது என்பதை எண்ணிப் பார்த்தீர்களா?

க: சாமிகள் கந்தர் சஷ்டி கவசம் படிப்பதின் அவசியத்தை வற்புறுத்துவதைக் கேட்ட நாங்கள் புத்தகத்தை வாங்கி அதிலுள்ள படி படிக்கின்றோம். முருகனுடைய திவ்விய நாமங்களை தொகுத்துரைக்கும் நல்ல பாட்டு என்பதையும், முருகனை அழைத்து நோயில்லாமல் காக்க அருள் புரியவேண்டும் என்று அழைக்கும் கந்தனுடைய பாட்டு என்பதையும், ஒவ்வொரு அவயவங்களையும் முருகனுடைய வேல் காக்க வேண்டும் என்பதையும், பகை, நோய், செய்வினை, பேய்—இவைகள் இதைப் பாராயணம் செய்யும் பக்தர்களைக் கண்டால் பறந்தோடிப்போக வேண்டும் என்பதையும், உலகில் எல்லோருடைய அன்பைப் பெற்று நீடூழிகாலம் குறைவின்றி மன நிறைவோடு குமரன் அருள் பெற்று வாழவேண்டும் என்பதையும் இந்நூல் தொகுத்து உரைப்பதைத்தான் நாங்கள் பொதுவாக அறிகின்றோம். சாமிகள் எழுப்பிய சந்தேகங்களுக்கு சாமிகள் தான் விளக்கம் கொடுக்கமுடியும். சாமிகளே திருவருள் புரியவேண்டும்.

சாமிகள்: ''மைய நடம் செயும் மயில் வாகனன்.'' மைய என்பதனால் நடு மையத்தில் நின்று, பக்தருடைய மனதாகிய நடு மையத்தில் மயில் வாகனத்தில் அமரும் முருகன் ஆடவேண்டும் என்றும் பொருள் சொல்லலாம். 'மைய' என்பது மையல் என்பதையும் குறிக்கும், கண்டவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வகையிலும் முருகன் மயிலோடு கூத்தாடலாம் என்பதையும் 'மையல்' என்ற சொல் உணர்த்தும். 'பின் கையிரண்டும் பின்னவள் இருக்க' என்ற வரியைப் பார்த்தீர்களா? இது எதைக் குறிக்கும்? இதை அடுத்து வரும் வரியைக் கண்டீர்களா? 'நாவில் சரஸ்வதி நற்றுணையாக' என்கின்றார். கலைமகளை அழைப்பவர் திருமகளை அழைக்காமலா இருப்பர்? பின்னவள் என்பது இலக்குமியைக் குறிக்கும். இந்தக் கவசத்தால் கலைமகள் அனுக்கிரகமும் திருமகள் அனுக்கிரகமும் மலைமகள் மகன் முருகன் அனுக்கிரகமும் பெற விரும்புகின்றார் கவிஞர். மார்பை இரத்ன வடிவேல் காப்பதா? இரத்தவடிவேல் காப்பதா? என்று யோசித்துப் பார்த்தால் இரத்ன வடிவேல் காப்பதே சிறந்ததாக விளங்கும். 'ஆண் பெண் குறிகள் அயில் வேல் காக்க' என்ற வாசகத்தை சில ஆராய்ச்சியாளர்கள் தான் புகுத்தி இருப்பர் என்று நினைக்க இடமிருக்கின்றது. அது ஆண்குறி இரண்டும் அயில் வேல் காக்க என்றுதானிருக்க வேண்டும்.

க: அப்படியானால் இதை ஆடவர்கள் தான் படிக்கலாமே தவிர, பெண்கள் படிக்க முடியாதல்லவா, சாமிகளே!

சாமிகள்: அப்படி நினைத்துதான் இதை 'ஆண் பெண்' என்று திருத்தியவரும் செய்திருக்கவேண்டும், பொதுவாக பெண் எதற்கும் விலக்கல்ல என்பதை நான் அடிக்கடி உங்களுக்குச் சொல்லி வருகின்

றேன். பெண்ணுக்கு உபதேசம் செய்யலாம், பெண்ணும் யோகம் செய்யலாம். ஆண் குறி இரண்டும் என்று கூறியதால் பெண்குறியையும் சேர்த்தே தான் இதை உருவாக்கியவர் செய்திருக்கின்றார் என்பது உறுதியாகின்றது. எதையும் பெண் செய்யலாம் என்று நான் கூறினாலும் சில விஷயங்கள் ஆணுக் கென்றே அமைந்துள்ளது. போர்க் களத்தில் பெண்கள் வில் வேல் வாள் கொண்டு பங்கு கொள்வதோ, குதிரைப்படை யானைப் படை இவைகளில் ஏறிச் சென்று பங்கு கொள்வதோ விசேடமல்ல. பெண் குருவாவதும் விசேடமல்ல. பெண்களுக்கென்றே சில விதிகள் பழமொழி ரூபமாகவும் பாட்டு ரூபமாகவும் அமைந்துள்ளதையும் நாம் மறந்துவிடக் கூடாது.

> "பெண் கண்ட சொத்தும்
> பூனை கண்ட பாலும் நிலைக்காது"—என்பர்.
>
> "ஆறுக்கு நேரான குளமும்
> அரசரோடேறு மாறான குடியும்
> சீறு சீறு என்ற மனையாளும்
> —இம்மூன்றும் நீறு நீறாகிவிடும்—என்றும் சொல்வர்.

கு: சாமி ஒரு சந்தேகம்? கந்தர் சஷ்டி கவசத்தில்' எந்த நாளு மீ ரெட்டா வாழ்வர்' என்ற வரிக்கு விளக்கம் வேண்டும். "ஈ ரெட்டாக" என்ற சொற்கள் இப்படியும் இருக்கலாம் அப்படியும் இருக்கலாம் என்று பொருள்பட வருகின்ற சொற்கள். ஈரெட்டாக சொல்வது உறுதியாகச் சொல்வது ஆகாது. ஈரெட்டு என்பது இரண்டும் கெட்ட விஷயம், "இரண்டாங் கெட்டான்" என்பதைத் தான் குறிக்கும். அப்படிப் பார்க்கும்போது 'எந்நாளும் ஈரெட்டா வாழ்வர்' என்பது உசிதமாக இல்லையே, சாமிகளே.

**சாமிகள் ;** சாமி, என்றும் பதினாறும் வாழலாம் என்றேதான் கூறுகின்றார் பாவலர். ஈரெட்டு என்பது இரண்டு எட்டு என்பதாகும். இரண்டு எட்டுகள் சேர்ந்தால் பதினாறு, பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழத்தான் இந்த வார்த்தைகளை கவிஞர் எடுத்தாண்டிருக் கின்றார்.

**ஒரு பெண் பக்தர் :** சாமிகளே எல்லோரும் சமம் என்று கூறுகின்ற உலகில் ஆணுக்குப் பெண்ணும் சமம் என்றுதானே ஒப்புக்கொள்ள வேண்டும். எந்தத் துறையிலும் பெண்களுக்குச் சமஉரிமை வேண் டாமா, சாமிகளே.

**சாமிகள் :** நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மை. நான் இல்லை என்று சொல்லவில்லை. நான் சொல்ல விரும்புவது, சில துறைகள் ஆண்களுக்குத்தான் தகுதி உள்ளவைகளாக இருக்கின்றன. அதைப் போன்றே சில துறைகள் பெண்களுக்கு உகந்தனவாக இருக்கின்றன.

உலகத்தில் எல்லாமே சரிநிகர் சமானம் என்ற முறையில் அமைந்து விடவில்லை, நடப்பதுமில்லை. பெண்ணுக்குத்தான் ஆண் தாலி கட்டு கின்றான். எந்த ஆணுக்காவது ஒரு பெண் தாலி கட்டியிருக்காள் என்று நாம் கேள்விப்பட்டதுண்டோ? இயற்கைக் கூத்திலும் பெண்கள்தான் பத்து மாதங்கள் தம் வயிற்றில் கருவைத் தாங்கி, பிள்ளையைப் பெற்று, தாலாட்டி சீராட்டி குழந்தையை வளர்க்கின்றார் என்று அறிகின்றோம். ஒரு ஆண் மகனுக்கு ஒரு பெண் ஈடானவள் என்பதை ஒரு நகைச்சுவை கதையே விளக்கும். ஒரு அழகான பெண்ணை ஒரு அழகான ஆண் கல்யாணம் செய்து கொண்டான். கல்யாணமானவுடன் அவர்கள் அழகான உரையாடலைக் கேளுங்கள். "நான் ஏச்சுப்புட்டேனே, நான் ஏச்சுப்புட்டேனே" என்று கை தட்டி ஆரவாரித்தான் மாப்பிள்ளை, தன்னுடைய ஒரு காலில்லா நிலையைக் காண்பித்து! "நான் ஏச்சுப்புட்டேனே, நான் ஏச்சுப்புட்டேனே" என்று கூத்தாடினாள் பெண்ணும், தன் ஒரு கையில்லா நிலையை காண்பித்து. ஒருவருக்கு மற்றொருவர் இளைத்தவராக இல்லை ஏமாற்றும் வித்தையில் என்பதைத்தானே இந்தக் கதை நிரூபிக்கின்றது. அதிகாலையில் சேவல் 'கொக்கரக்கோ' என்று கூவி எல்லோரையும் எழுப்புகின்றதே? நாம் சேவலுக்குத்தானே நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கின்றோம். உண்மையில் முதலில் எழுந்திருப்பது கோழிதான். ஒரு கோழி செய்வதை மனிதவர்க்கம் செய்யமுடியவில்லை. ஒரு கோழி சேவல் இல்லாமலேயே குப்பையைக் கிண்டி முட்டை இடமுடியும். இரவில் பெண் கோழி தன் மூக்கை பூமியில் வைத்துத் தூங்குவதை பார்க்கலாம். உண்மையில் அதிகாலையில் பூமியினுடைய வெப்பத்தை அறிந்து விழித்தெழுவது கோழிதான். அது உடனே சேவலைக் கொத்தும். கோழி எழுப்பிய சேவல்தான் "கொக்கரக்கோ" சப்தம் எழுப்பும். அதனால்தான் இன்றும் எல்லோரும் கோழி கூப்பிட்டது எழுந்திருங்கள் என்பர். சேவல் கூப்பிட்டது என்று யாரும் சொல்வதில்லை. இப்படியே சொல்லிக்கொண்டு போனால் ஒவ்வொருவர் பெருமைகளையும் அடுக்கிக்கொண்டே போகலாம்.

சாமிகள் இப்படி உரையாடிக் கொண்டிருந்தபோது சாமிகளுக்கும் பக்தர்களுக்கும் காப்பி கொண்டுவந்து கொடுத்தனர் காப்பியை சாப்பிட்ட சாமிகள் திருவாயினின்றும் களிப்பினால் உதிர்ந்த ஆசிய முத்து மொழிகளையும் கேட்போம்.

சாமிகள்: டீ (Tea) என்று சொல்கின்றோம். அந்த தேயிலைக்கு ஏன் டீ என்று பெயர் வந்தது? டீயைச் சாதாரணமாகக் குளிர்ப் பிரதேசங்களில்தான் சாப்பிடுவர். நீலகிரிமலைப் பிரதேசங்களில் அதிகம் சாப்பிடுவர், காரணம் அது மலையில் உள்ள குளிரை முண்டித் தள்ளிவிடும். அதனால்தான் அதற்கு டீ என்று பெயர்

வந்தது. டீ என்பது குளிரை முட்டி தள்ளும் என்பது அந்த சொல்லின் நயம். காபி (Coffee) என்பது எல்லா இடங்களிலும் எல்லாச் சமயத்திலும் கிடைக்கும். காபி (Coffee) சாப்பிட்டவரை அது ஹாப்பி (Happy) ஆக்குவதால் (மகிழ்ச்சி ஊட்டுவதால்) அதற்குக் காபி என்று பெயர் வந்தது. இப்போது நம்மை எல்லோரையும் ஆண் பெண் என்ற வித்தியாசத்தைப்பாராட்டாது எல்லோரையும் ஹாப்பி (Happy) ஆக்கிவிட்டது பார்த்தீர்களா? எல்லோரையும் கந்த சஷ்டிக் கவசமும் மகிழ்ச்சி ஓங்கவைக்கும். ஆணும் பெண்ணும் சேர்ந்தே குடும்பம். குடும்பங்கள் கொண்டதே நாடு. நாடுகள் கொண்டாடுவதே ஈசன். அந்த ஈசனின் தாள்களை வழுத்தி வாழ்வோம்.

## உரையாடல் இரண்டு :

(தட்சிணாமூர்த்தி விளக்கம் — ஆரிய சமாஜ தயானந்த சரஸ்வதி — பசித்திரு, தனித்திரு, விழித்திரு விளக்கம் — குரு சிஷ்யபாவனை)

1968 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் சிவராத்திரி திருநாளில் சாமிகளை தரிசிக்க பக்தர்கள் திண்டுகல்லுக்கு விரைந்தோம். குருவின் பாதார விந்தங்களுக்கு மலர் சூடி பணிந்தேத்த விரைந்த பக்தர்கள் உள்ளங்களுக்கு அருள் ஊட்டி உவகை உரை ஊட்டினார் சாமிகள். அன்று மாலை வழக்கம் போல் பூஜை முடிந்தவுடன் பக்தர்கள் சாமிகளின் திருவடிகளுக்கு பூஜை செய்தனர். அதன்பின் சாமிகள் பக்தர்களுக்கு அருள் பாலிக்க, சாமிகளுடன் அன்பர்கள் விருந்து அருந்தி மகிழ்ந்திருந்தனர். அன்று நடந்த உரையாடலில் ஒரு பகுதியை நினைவு படுத்தி எழுதி அதைப் படித்து மகிழ்வோம்.

சாமிகள் : இன்று சிவராத்திரி. நீங்கள் இன்று என்னைக் காண வந்ததைக் கண்டு நான் பெருமைப் படுகின்றேன். சிவராத்திரி மகிமையை கொஞ்சம் விளக்குங்கள்.

ச : சாமிகளைக் காண வந்த எங்களுக்கு இன்று ஒரு புனிதமான நாள். ஆண்டவன் தக்ஷிணாமூர்த்தி உருவில் ஆலமரத்தில் அமர்ந்து வயதான ரிஷிகளுக்கு குரு உபதேசம் செய்து வைக்கின்ற நாள். தக்ஷிணாமூர்த்தி சீடர்கள் அனுபவத்திலும் அறிவிலும் வயதிலும் முதிர்ந்தவர்கள். அவர்களுக்கு உபதேசம் அருளுகின்ற மூர்த்தி இள வயதினர். அவர் உபதேசம் புரிவதிலும் ஒரு விந்தை. அவர் வாயைத் திறந்து நான்கு வார்த்தைகள் பேசி உண்மை விளக்கம் உரைக்கவில்லை. மௌனத்தினாலேயே உபதேசம் அருளுகின்றார் ஈசன். அந்த மௌன உபதேசத்தால் மெய்ப் பொருள் அறிந்து பேரானந்த பெருநிலை அடைகின்றனர் சீடர்.

சாமிகள்: மௌனத்தால் உபதேசம் செய்வதா? பேசாமல் பேசுவதா? தூங்காமல் தூங்குவதா? இவை முடியுமா? முடியும்! இரண்டும் முடியும்! குரு ஒருவரால் செய்ய முடியாததொன்றில்லை, காட்ட முடியாத தொன்றில்லை, விளக்க முடியாததொன்றில்லை. தூங்காமல் தூங்குவது இறையொடு இரண்டறக் கலந்த நிலை. 'நீயே நானாய் நானே நீயாய்' இறையொடு ஒன்றி இருக்கும் நிலையே தூங்காமல் தூங்கும் சமாதி நிலை. பார்ப்பவர்களுக்கு தூங்குவது போல்தான் தோன்றும். ஐம்பொறிகளையும் ஈசன்பால் திருப்பி அவனைக் கலந்திருப்பவனுக்கல்லவா அதன் பேரின்பம் தெரியும். அது போன்றது தான் பேசாமல் பேசுவதும்! குருவானவர் பேசித் தான் ஒரு பொருளை விளங்க வைக்க வேண்டும் என்ற அவகியமே இல்லை. பேசாமலே அவரால் மெய்ப் பொருளை விளங்க வைக்க முடியும், கடாக்ஷித்தருள முடியும். ஒருவரை அண்டி விளக்கம் கேட்பதே ஆத்மபசியைப் போக்கிக் கொள்ளவே. ஆத்மபசி முனி புங்கவருக்கு உண்டு. அன்றாட உலகில் உழலும் மக்களுக்கு அன்றாடம் தோன்றிவதைக்கும் பசிகள் எவ்வளவோ உண்டு. மனத்திற்கு நிம்மதி இருக்காது. பல சோதனைகளுக்கு உட்பட்ட உள்ளம் வெதும்பி வாடி ஒவ்வொரு நிமிடமும் இறந்து கொண்டே இருக்கும். இந்தச் சஞ்சல மனப்பான்மையரின் தீராத்துயரைத் தீர்ப்பதற்கு குரு வேறொன்றும் செய்ய வேண்டியதில்லை. அவர் திருக்கண்கள் பக்தர்களைப் பார்த்து விட்டாலே போதும்.மனதில் நிலைத்திருந்த பெரும் பாரம் குரு கண்கள் பார்த்த கண்ணிமைப் பொழுதில் நீங்கி விடும். மனம் இன்ப மடைந்து விடும். அவருடைய திருக்கரங்கள் சீடன் சிரசைத் தொட்டாலும், நெற்றியைத் தொட்டாலும், முதுகைத் தொட்டாலும் புத்துயிர் பெற்றுவிடுவர் சீடர். அவர் திருக்கரங்கள் கூட தொட்டுத் தடவி விட வேண்டியதில்லை. அவர் பார்த்தாலே போதும். அது கூட வேண்டாம். அவர் சீடரை நினைத்துக் கொண்டாலே போதும்! சீடருடைய ஆருத்துயரெல்லாம் அரை நொடியில் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கி விடும். இதுதான் மௌனப் பேச்சின் மர்மம், இதுதான் மௌனப் பேச்சில் பொதிந்துள்ள உண்மை, இதுதான் மௌனப் பேச்சின் மகிமை. வேண்டியவர்களுக்கு வேண்டிய பொருளுக்கு வேண்டிய அளவு விளக்கம் தர வல்லது குருவின் பேசாத பேச்சு.

> "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு."

இந்த மெய்ப்பொருள் அறிவை ஊட்டத்தான் குரு வேண்டும். இம்மெய்ப்பொருள் அறிவை ஊட்ட குரு வாயே திறக்க வேண்டியதில்லை. மௌனத்தாலேயே மெய்யறிவை ஊட்ட வல்லவர் குரு.

ச: சாமிகளே, ஆரிய சமாஜத்தை ஸ்தாபிதம் செய்தவர் தயானந்த சரஸ்வதி என்ற ஒரு மகாமேதை அவருடைய சிந்தனையைத் தட்டி எழுப்பியதே ஒரு மகாசிவராத்திரி. அதுவரையிலும் அவர் தன் வைதீக தகப்பனாரின் சொல்படி ஆலய வழிபாட்டிலும் ஈடுபட்டிருந்தார், வேதாகம நியமங்களுக்கும் கட்டுபட்டிருந்தார். மகாசிவராத்திரியன்று இரவு முழுதும் தூங்காமல் இருக்க உபதேசம் கேட்ட அவர், அந்த இரவில் கடைசி வரையில் இமைகொட்டாது விழித்திருந்தார், கைலாசம் கிட்டும் என்ற ஒரே நம்பிக்கையில்; ஆனால் எதற்காக அவரை இமைகொட்டாது விழித்திருக்கச் சொன்னார்களோ அந்தப் பெரியவர்களெல்லாம் இரவின் மூன்றும் சாமத்திற்குள் அயர்ந்து உறங்கிவிட்டனர். அதோடுகூட நான்காவது சாமம் நடக்கும்போது ஒரு எலி சிவலிங்கத்தின்மீது ஏறி வந்து கீழே குதித்து பூஜைக்கு வைத்திருந்த பழங்களையும் தேங்காயையும் தின்ன ஆரம்பித்தது. இவைகளைக்கண்டு அதிர்ச்சி அடைந்த இள தயானந்தருக்கு விக்கிரக ஆராதனையில் நம்பிக்கை குன்றிவிட்டது. தனது தனியாத ஆத்மீகப் பசியைத் தணித்துக் கொள்ள நல்ல குருவை நாடி ஓடிவிட்டார். இதையெல்லாம் பார்க்கும்போது விரதம் அவசியமா? இமை மூடாது விழித்திருப்பது அவசியமா? என்றெல்லாம் கேட்க வேண்டியிருக்கின்றது.

சாமிகள்: விரதம் அவசியமா? இரவு தூங்காமல் இருப்பது அவசியமா? இவைகள் தானே சாமி, உங்கள் கேள்விகள். முதலில் நான் கேட்பதற்கு பதில் சொல்லுங்கள். "தனித்திரு, பசித்திரு, விழித்திரு" என்று சொல்கின்றார்களே? அதற்கு என்ன அர்த்தம்?

ச: இறைவனை அடைவதற்குரிய சாதனங்களே இவைகள். தனித்திரு என்றால் சன்யாசம் ஏற்றுக்கொள்வது. குடும்பபாரம் இன்றி ஏகாந்தமாக சன்யாச வாழ்வு ஏற்றுக்கொள் என்பதை தனித்திரு என்பது குறிக்கும். பசித்திரு என்றால் விரதம் அனுஷ்டிப்பதைக் குறிக்கும். விழித்திரு என்றால் ஏகாதசி, சிவராத்திரி முதலிய நாட்களில் தூங்காமல் துதிசெய்து ஈஸ்வரநாம சங்கீர்த்தனம் செய்து கொண்டிரு என்பதைக் குறிக்கும்.

சாமிகள்: நீங்கள் சொன்னதற்கும் இடங்கொடுக்கின்றது இம்மூன்று இரத்தினச் சுருக்கமான வாக்கியங்களும். ஆனால் கருத்தைக் கருத்தாட்டினால் அதில் உள்ளடங்கிய மெய்ப்பொருள் இனிது விளங்கும். தனித்திரு என்றார். அப்படியென்றால் குடும்பத்தை விட்டுக் காட்டுக்குத் தவம் செய்ய ஓடிவிடு என்பது அர்த்தமல்ல. தொண்டென்பதை மறந்து தன்னலமுள்ள தவயோகியாக மாறிவிடு என்பது அதன் பொருள்அல்ல. அன்றாட வாழ்க்கையில் இறைவனை தியானம் செய்வதற்காக ஒரு சில நிமிடங்களாவது

தனித்திரு என்பதுதான் அதன் உட்பொருள். பற்றுள்ள இவ்வுல கில் பற்றற்ற ஒரு தனிநிலையிலும் இருக்கப்பழகிக்கொள் என்பதும் இதன் மெய்ப்பொருள். 'பசித்திரு' என்பது 'பட்டினியாகக்கிட' என்பதல்ல. உடம்பை நன்ருகப் பேணிக் காப்பது ஒவ்வொரு வருடைய கடன். உடம்பைக்காப்பது உயிரைக்காப்பதாகும். அளவு கடந்து சாப்பிட்டு அஜீரணத்திற்கு உட்பட்டு அவதிப்படக் கூடாது. அளவோடு சாப்பிடவேண்டும். அறைவயிறு உணவும், கால்வயிறு தண்ணீரும் சாப்பிடவேண்டும். சாப்பிட்ட பிறகும் கொஞ்சம் பசியிருக்கவேண்டிய அளவு சாப்பிடுதல் உத்தமம், 'விழித்திரு' என்ருல் 'நீர் தூங்கக்கூடாது' என்பது பொருளல்ல. உடம்பிற்குத் தூக்கம் அவசியம். நல்ல உறக்கம் கொண்டவரைத் தான் நல்ல ஆரோக்கியமுடையவன் என்று வைத்தியர்களும் சொல்வர். தூக்கமும் அளவோடு இருத்தல் வேண்டும். தூங்க வேண்டும் என்ருல் இரவு பகல் முழுதும் தூங்கவேண்டும் என்ப தல்ல, அளவோடு ஒருநாளைக்கு ஐந்துமணி உறங்கவேண்டும். நல்ல தூக்கமே நல்ல உடல் நிலைக்கு அறிகுறி. விழித்திரு என்று சொன்னவர்கள் தூக்கத்தைப் பற்றியே குறிக்கவில்லை. அவர், நீங்கள் எப்போதும் எச்சரிக்கையோடு இருக்கவேண்டும். ஏமாறக் கூடாது என்று சொன்ஞர்கள். 'ஈசனேடு ஒன்ற சமயம் வரும், வரும் சமயத்தை நழுவவிடாதீர்கள்' என்றே விழித்திரு என்று கூறிஞர். "அன்னமுடையோனுக்கு அரைநித்திரை ஆகாசபக்கிக்கு முழுநித்திரை" என்பதைக் கேட்டிருக்கிறீர்களா. எவன் தூக்கத்தை வெல்கின்ருனே அவனே யோகி.

இவைகளை உரைத்த சாமிகள் சிறிது நேரம் மௌனமாக அமர்த்து தியானத்தில் ஈடுபட்டனர். குருமகராஜனேடு இருக்கும் எங்களுக்கு இன்னுமொரு விளக்கமும் சாமிகளின் பேசாத நிலை— மௌன நிலை உணர்த்தியது. குருவோடு தனித்திருக்கும் பாக்கிய நேரங்களில் குரு திருவாய் மலர்ந்தருளும் உதயப் பொன் மொழி களுக்கு ஆத்ம பசியோடு காத்திருக்கவேண்டும், மனதைத் தூங்க விடக்கூடாது, மற்ற நினைவுகளுக்கு இடங் கொடுக்காமல், அவர் வழியிலேயே திருப்பி கவனமாக அவர் அருளுகின்ற ஆத்மாமிர்தத்தை ஏற்பதற்காக தயாராக விழித்திருக்கவேண்டும் என்பதுதான் எங்கள் உள்ளங்களில் வீசிய ' தனித்திரு, பசித்திரு, விழித்திரு, என்ற திருவாசகங்களுக்கு பொருளொளியாகும். ஆகவே நமது சாமி களோடு தனித்திருப்போம், பசித்திருப்போம், விழித்திருப்போம்.

சிறிது நேரத்திற்குப்பின் சாமிகள் உரையாடலை ஆரம்பித்தார்.

சாமிகள்: குரு சிஷ்ய பாவனையை நினைக்கும்போது புருஷன் மனைவி பாவனை நினைவுக்கு வருகின்றது. மனைவியிடம் புருஷன்

எவ்வளவு அன்பாகப் பேசுகின்றானோ பழகுகின்றானோ அவ்வளவு அன்பாகவும் அருமையாகவும் குரு தன் சீடனுடன் பழகவேண்டும். புருஷன் அன்பை விளக்க ஒரு மான் வாழ்க்கையே போதும். தண்ணீரில்லாத பாலைவனத்தில் இரண்டு மான்கள் தண்ணீருக் காகத் துடித்தோடின. கடைசியில் ஆண் மான் தண்ணீரைக் கண்டு விட்டது. ஆண் மானுக்கும், பெண் மானுக்கும் தாங்கமுடியாத தாகம். இருந்தாலும் ஆண் மான் தண்ணீரை முதலில் குடிக்கட்டும் என்று பெண் மான் தயங்கியது. அன்பால் அதன் அன்பைக் கண்ட ஆண் மான் தான் முதலில் தண்ணீரைக் குடிப்பதாக பாவனை செய்தது. உண்மையில் அது தண்ணீரைக் குடிக்கவில்லை. ஏனெ னில் தான் குடித்துவிட்டால் ஒருவேளை பெண் மானுக்கு அதன் தாகத்தைத் தணிக்கக்கூடிய அளவுக்குத் தண்ணீர் பாக்கி இருக் குமோ இருக்காதோ என்ற பயம் வந்துவிட்டது ஆண் மானுக்கு. பெண் மான் சாப்பிட்ட பிறகே ஆண் மான் சாப்பிட்டது. விலங் கினத்திற்கே இப்படி அன்பு அமைந்தால், மனித வர்க்கத்திற்கு அது எப்படி அமைந்திருக்கவேண்டும்? பொருளுலகு மக்களைவிட அருளுலகு மக்களுக்கு அது எப்படி இருக்கவேண்டும்?

ச: சாமிகள் சொல்வது உண்மையான சீடருக்கும், குருவுக்கும் பொருந்தும். ஆனால் சாமிகளே கூறி இருப்பதை நினைவுபடுத்த விரும்புகின்றேன். உண்மையான குருமார்களை கண்டுபிடிப்பது எளிது. ஆனால் ஒரு உண்மையான சீடனை கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டம். குரு எவ்வளவு நல்லவர்களாக இருக்கின்றார்களோ, எவ் வளவு அன்பாக நடந்து கொள்கின்றார்களோ, அவ்வளவுக்கவ்வளவு செருக்கும், மமதையும், 'தான்' என்ற அகம்பாவமும் சில சீடர் களுக்கு ஏற்பட்டு விடுகின்றன.

சாமிகள்: யார் எதைச் செய்யவேண்டுமோ, அதைத் தான் செய்யவேண்டும். குரு செய்வதை யெல்லாம் சீடன் செய்ய முடி யாது. இதற்கே ஒரு கதையும் உண்டு. குருவை மிஞ்சுகின்ற அளவுக்கு சீடன் நடந்துகொண்டிருந்தான். கட்டுக்கடங்காத அச் சீடனை கட்டுப்படுத்த குரு ஒரு உபாயம் செய்தார். குருவோடு சீடனும் ஒருநாள் போய்க்கொண்டிருந்தான். குரு ஒரு கள் கடைக் குச் சென்று கள் வாங்கிக் குடித்தார். சீடனும் குருவைப்போன்றே கள் வாங்கிக் குடித்தான். இதை அடுத்து ஒரு ஈயச்சாலையில் ஈயத்தை உருக்கிக் கொண்டிருந்தனர். அந்த உருக்கிய ஈயத்தில் ஒரு டம்ளரும் குரு வாங்கி உட்கொண்டார். குருவால் செய்ததை சீடன் செய்ய முடியுமா? அப்பொழுதுதான் தெரிந்தது தன் தவறு சீடனுக்கு. குருவைப் பணிந்து மன்னிப்பு வேண்டினான் சீடன். அன்பு என்பது ஒருவரிடத்தில் மட்டும் உள்ளது அன்று. அது இருவரிடத்திலும் பரஸ்பரமாக வளரவேண்டும். குரு சீடனை

அன்யோன்யமாக அன்போடு நேசிப்பதைப்போல சீடனும் குருவைப் பக்தி விஸ்வாசத்தோடு நேசிக்கவேண்டும். குருவின் குறிப்பறிந்து நடக்கவேண்டும், அவர் சொல்படி நடக்கவேண்டும்,

ச : தொட்டப் பழக்கம் சுடுகாட்டு மட்டில் என்றபடி, நமக்கு விருப்பமானவைகளை லேசில் விட முடியவில்லையே, சாமிகளே. இந்த ஆசைகள் பாசங்கள் ஒழிவதற்கு வழியே இல்லையா?

சாமிகள்: ஆரம்பத்தில் அப்படித்தான் இருக்கும். இவை ஒழியாது என்றுதான் நினைக்க இடமுண்டு. ஆனால் தக்க குருவை அடைந்த சீடன் இந்த இச்சைகளையெல்லாம் நாளடைவில் விட்டு பரம்பொருள் இச்சையே தனிப்பெரும் இச்சையாக விழைந்து அதை அடைந்தே தீருவர். உலக பாசமெல்லாம் தானாகவே அவரை விட்டு விலகி விடும். ஆரம்பத்தில் விளாம்பழம் அதன் ஓட்டோடு ஒட்டியே இருக்கும். உள்ளே உள்ள பழம் நன்றாக பரிபக்குவ நிலைக்கு வந்தவுடன் அது ஓட்டைவிட்டுப் பிரிந்தே நிற்கும். அது போன்று தான் சீடரும் தம் பந்தபாசங்களை விட்டு நீங்கி நிற்பர்.

## உரையாடல் மூன்று :

(காரைக் கொண்டு உண்மை விளக்கம் — திரௌபதி பக்தி — பாண்டவர் கிருஷ்ணன் உறவு — குரு சீடர் உறவு)

சாமிகள் : நம்முடைய பக்தர்கள் வாங்கும் கார்கள் நிறத்தைக் கவனித்திருக்கின்றீர்களா? ஒன்று வெண்ணிறமாக இருக்கும். அல்லது பச்சை நிறமுள்ளதாக இருக்கும்.

அ: சாமிகளே அப்படி வாங்கும்படி சொல்வதற்கு காரணங்கள் இல்லாமல் இருக்க முடியாது.

சாமிகள் : வெண்ணிறம் சிவனையும் பச்சை நிறம் சக்தியையும் விளக்க உதவுகின்றன. சிவசக்தி இருக்குமிடத்தில் வளமுண்டு, செல்வமுண்டு, மங்களமுண்டு. ஒருவருடைய பெருந்தன்மையை எப்படி விளக்க முடியும்? ஒரு உதாரணம் சொல்லுங்கள்.

அ : நான் என்பது அகன்ற இடத்தில் பெருந்தன்மை விளங்குகின்றது.

சாமிகள் : காரை வைத்துக் கொண்டே ஒரு உதாரணத்தால் விளக்கலாமே?

அ : சாமிகளே விளக்க வேண்டும்.

சாமிகள்: ஒரு கார் இரண்டு மூன்று நாட்கள் ஷெட்டிலேயே வேலையில்லாமல் தங்கி விட்டது. அதைப் புறப்படவைக்க டிரைவர்

படாதபாடுபடுகின்றார். பாட்டரி சார்ஜ் ஆகவில்லை. டிரைவர் அங்குமிங்கும் பார்க்கின்றார். இதைக் கவனித்துக் கொண்டு ஒரு கூட்டமே நிற்கின்றது. அந்தக் கூட்டத்திலிருந்து ஒருவர் யார் சொல்லாமலும் தானே வலிய சென்று காரைத் தள்ளுகின்றார். டிரைவர் கூட்டத்திலுள்ள சிலரைப் பார்த்து தனக்கு உதவி செய்யக் கூப்பிடுகின்றார், அச்சிலரும் சேர்ந்து காரைத் தள்ள கார் புறப்படுகின்றது. இதில் பெருந்தன்மைக்கு உறைவிடமாக யார் விளங்குகின்றார் பார்த்தீர்களா?

அ: யாரும் கூப்பிடாமல் தானாகவே வந்து தள்ளியவர் தான் பெருந்தன்மைக்கு உறைவிடம் என்பதை சாமிகள் வெகு அழகாக விளக்கி விட்டீர்கள்,

சாமிகள்: ஒரு டிரைவர் பயப்பட வேண்டியவை என்ன?

அ: டிரைவர் கார் முதலாளிக்குப் பயப்பட வேண்டும். நடுக் காட்டில் காரில் பெட்ரோல் இல்லை யென்றால் பயப்பட வேண்டி இருக்கும். இருட்டுக் காலங்களில் விளக்கு எரியவில்லையென்றால் பயப்பட வேண்டி இருக்கும்.

சாமிகள்: கார் ஓட்டுபவர் பயப்பட வேண்டியவை – ஆடு மாடு, புதிதாக சைக்கிள் ஓட்டுபவர், குக்கிராம இளம் தம்பதிகள். இவர்கள்தான் எங்கு ஒதுங்குவது, எப்படி ஒதுங்குவது என்பது தெரியாமல் ரோட்டில் அலைமோதிக் கொண்டு கார் ஓட்டுபவருக்கு தலைவலி கொடுப்பர். காரை ஓட்டுபவரில் சிலர் ஹார்ன் அடித்து அடித்து எப்பொழுதும் இடது பக்கமே காரை ஓட்டி, ஒழுங்காக செல்வதுண்டு. ஒரு சிலர் ஹார்ன் அடிக்காமல் அப்படி இப்படி ஓட்டி முந்திக் கொள்வதும் உண்டு. ஒழுங்காக ஓட்டினாலும் விபத்துக்கள் ஏற்படுவதுண்டு. அப்படித்தான் இறைவனை நோக்கிச் செல்வதிலும் அனுபவம் ஏற்படுகின்றது. சிலர் ஆகம விதிப்படி முறைப்படி க்ஷேத்ராடனம் செய்து பூஜை செய்து பல சோதனைகளுக்காளாகி இறைவனை அடைவதும் உண்டு. ஒரு சிலர் இவைகளில்லாமலேயே தெய்வ அருள் சம்பாதிப்பதில் முந்திக் கொள்வதுமுண்டு.

அ: சோதனை என்று சொன்னீர்களே, சாமிகளே. நல்லவர்களுக்குத்தானே கடுஞ் சோதனைகள் ஏற்படுகின்றன.

சாமிகள்: உண்மை தான்! உலகில் பஞ்சபாண்டவர்களைவிடத் துக்கம் அனுபவித்தவர் வேறு யாருமில்லை என்று கூடச் சொல்லலாம். ஆனால் அவர்களை விட பாக்கியசாலிகள் வேறு யாருமில்லை என்ற அளவு அல்லவா அவர்கள் கிருஷ்ணனோடு தொடர்பு கொண்டிருந்தனர். உலகில் கஷ்டம் எவ்வளவு அதிகமாக அனுபவிக்கின்றார்

களோ அவ்வளவு நெருக்கமாக கடவுள் அருளையும் அவர்கள் அடை கின்றார்கள் என்பதற்கு மகாபாரதம் ஒரு எடுத்துக்காட்டு.

அ: சாமிகளே, மகாபாரதம் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் அவதிப் படலங்கள் கொண்ட கதையைத் தானே அமைத்துள்ளது. அதில் கடவுள் அருள் என்று சொல்லுவதற்கு என்ன இருக்கின்றது. அதில் பாண்டவர்கள் இன்பம் அடைந்தார்கள் என்று சொல்வதற்கு ஒரு இடம் உண்டா? அவர் தோற்காத பொருள்கள் ஒன்று மில்லை, கடைசியில் உயிருக்கு உயிரான மனைவியையே தோற்கின்றார்கள். அந்த மனைவியும் மானபங்கத்துக்குள்ளாகின்றாள்.

சாமிகள்: உண்மைதான், ஆனால் ஒவ்வொரு கஷ்டத்திலும் கிருஷ்ணன் உதவுவதை நீங்கள் கவனிக்கவில்லையா?

அ: மகாபாரதத்தில் கிருஷ்ணனைப் பார்க்கும்போது அவருக்கு ஒரு தேவையும் இல்லாதவராகவே தோன்றுகிறார். இந்த பஞ்ச பாண்டவர்கள் தான் தேவை உள்ளவர்களாக ஆரம்பத்திலிருந்து கடைசி வரை கொடும் கஷ்டங்கள் அனுபவிக்கின்றனர்.

சாமிகள்: நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மை. கடவுள் தேவை இல்லாதவன்: மனிதன் தேவையுள்ளவன். தேவை உள்ளவனுக்கு தேவையில்லாதவன் உதவுகின்றதைத்தான் அருள் என்கின்றோம். கடவுள் தேவையுள்ளவர்களுக்கு எல்லாமாகின்றார். பசியெடுத்து வாடுபவனுக்கு உணவுமாகின்றான் ஈசன்: இருட்டில் இடறி விழுபவனுக்கு விளக்குமாகின்றான் ஈசன்: ஆடையின்றி அல்லலுறும் பிறவிக்கும் நிரந்தரமான ஆடையுமாகின்றான் ஈசன்.

அ: மிகவும் அழகாக சாமிகள் ஈசன் கருணையை யெடுத்துச் சொன்னீர்கள். நிரந்தரமான ஆடை கிடைத்ததனால்தான் திரௌபதி மானம் காப்பாற்றப்பட்டது.

சாமிகள்: திரௌபதி 'கிருஷ்ணா' என்று கடவுள் நாமத்தை உரைத்ததற்கே அவ்வளவு மகிமையென்றால், சிந்தித்துப் பாருங்கள் ஈசன் அருளை; சேலை சேலையாக வளர்ந்தது ஈசன் அருள்.

அ: கிருஷ்ண லீலைகளை நினைக்கும் போது ஒரு சம்பவம் எல்லோர் நினைவுக்கும்தான் வரும். திரௌபதிக்கு சேலை சேலையாக வாரி வாரி வழங்குகின்ற அண்ணலா, சிறு வயதில் இடைச் சிறுமிகளுடைய சேலைகளை யெல்லாம் சுருட்டிச் சென்று மரத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டு அவர்களை ஏளனம் செய்தது?

சாமிகள் : இதிலும் ஓர் உண்மை உள்ளது. பெண்கள் கிருஷ் ணனை ஒரு மாட்டுக்காரப் பையன் என்று தான் நினைத்தார்கள். அவர்கள் நினைத்தபடியே மாட்டுக்காரப் பையனாகவே கிருஷ்ணனும் குறும்புத்தனம் செய்தான்.

அ : சாமிகளே, நீங்கள் அந்த இடையர் குலச் சிறுமியரைப் பற்றி சொல்வதைக் கேட்கும்போது ரஹீம் என்ற விஷ்ணு பக்தர் கிருஷ்ணனை தோத்தரிக்கும் ஒரு பாடல் ஞாபகத்திற்கு வருகின்றது. " நாரதர், தினேசர், ரிஷிகள், வேதங்கள்—இவர்களால் கண்டறியாத பரப்பிரம்மத்தைக் கோகிலத்திலுள்ள 'எது வலது கை, எது இடது கை' என்று சொல்லத் தெரியாத இடையர் குலப் பெண்கள் ஒரு தொன்னை மோருக்காக (கிருஷ்ணனை) ஆட்டிவைக்கின்றனர் (நடன மாடச் செய்கின்றனர்)" என்று கூறுகின்றார் பக்தர்.

சாமிகள் : கிருஷ்ணபரமாத்மாவின் உண்மை சொரூபத்தை அப்பேர்ப்பட்ட அர்ச்சுனன் கூட சில சமயங்களில் உணரவில்லை. அர்ச்சுனன் ஓர் சிவ பக்தன். கிருஷ்ணனை சர்வேஸ்வரன் என்பதை அவன் உணரவில்லை. அவன் சிவபூஜையின்றி சாப்பிடமாட்டான். காட்டில் சிவபூஜை செய்யவேண்டும். கிருஷ்ணன் கூறியபடி கிருஷ்ணன் பாதத்தில் தான் சேகரித்திருந்த புட்பங்களைப் போட்டு சிவபூஜை முடித்தான். தன் இல்லத்தை அடைந்தபோது தான் பறித்து பூஜை செய்த அதே மலர்கள் தான் அனுதினம் பூஜை செய்யும் சிவலிங்கத்தில் இருக்கக் கண்டு மலைத்துவிட்டான் அருச்சுனன். அப்போதே உணர்ந்தான் கிருஷ்ணனுடைய சர்வேசுவரத்தன்மையை, ஆனால் அருச்சுனன் அடிக்கடி இதை மறந்துவிடுவதுண்டு. யுத்தம் செய்யு முன்பு கீதா உபதேசம் செய்த கிருஷ்ண பரமாத்மா தன் விஸ்வரூப தெரிசனத்தையும் அர்ச்சுனனுக்கும் காண்பித்ததை நீங்கள் படித்திருப் பீர்கள். அப்படி இருந்தும் ஒரு சமயம் யுத்தம் நடந்துகொண்டிருக் கும்போது ரத சாரத்யம் செய்துகொண்டிருந்த கிருஷ்ணன் அர்ச் சுனனை ரதத்திலிருந்து இறங்கச் சொன்னார். கிருஷ்ணன் சாரதி என் பதை மட்டும் நினைத்துக்கொண்டிருந்த அர்ச்சுனன் " நீர் இறங்கி கத வைத்திறங்கள்" என்றார், கிருஷ்ணனை நோக்கி. இதற்கு கிருஷ்ணன் உடனே குதி என்று ஆணையிட்டதுபோல் சொன்னபோதுதான் அர்ச்சுனன் உடனே ரதத்தினின்றும் குதித்தான். அவன் குதித்த வுடன் அடியில் இருந்த ஒரு பாணம் வெடித்து தீ பிடித்தது. இப்படி பலமுறைகள் கிருஷ்ணன் பஞ்சபாண்டவர்களுக்கு உதவி இருக்கின்றார். மலைபோல் வருகின்ற இன்னல்களையெல்லாம் பனி போல் நீக்கி இருக்கின்றார் கிருஷ்ண பரமாத்மா.

அ : பஞ்சபாண்டவர் வாழ்க்கையில் பட்ட பாட்டை கதைகள் ரூபமாக மகாபாரதமாக எழுதி வைத்து விட்டனர். உண்மையில் எங்கள் தினசரி வாழ்க்கையில் எவ்வளவோ இடர்கள், எவ்வளவோ

கொடுமைகள் எவ்வளவோ மனக்கொதிப்புக்கள், ஏற்படுகின்றன. ஒவ்வொருவர் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் மகாபாரதக் கதை போன்றே சோக நிகழ்ச்சிகளையும் கொடுமை நிகழ்ச்சிகளையும் கொண்டுள்ளன. அன்று அந்த பஞ்சபாண்டவரைக் காக்க கிருஷ்ண பரமாத்மா வாய்த்தது போன்று இன்று எங்களுக்கு சாமிகள் வாய்த்திருக்கின்றீர்கள். நீங்கள் இருக்க எங்களுக்கு பயமேன் !

சாமிகள்: ஆண்டவனை நம்பினால் நம்மைக் கைவிட மாட்டான். கிருஷ்ணன் ஒரு சமயம் ஆற்றில் குளித்துக்கொண்டிருக்கும்போது அவருடைய ஒரே ஆடை தண்ணீரில் அடித்துச் சென்றது. அதைப் பார்த்த அவர் மனைவிகள் ராதாவும், ருக்மணியும், தம் சேலையிலிருந்து முந்தானையில் ஒரு பகுதியைக் கிழித்துக்கொடுக்க தயங்கினர். இதைக்கண்ட திரௌபதி உடனேயே தன் பட்டு முந்தானையில் ஜரிகை வேய்ந்த உயர்ந்த பகுதியை கிழித்து கண்ணனுக்குக் கொடுத்து அவர் மானத்தைக் காப்பாற்றினாள். இந்த சிறு உதவி பின்னால் திரௌபதிக்கே கண்ணன் கருணையை சேலை சேலையாக வாரி வழங்கியதை நாம் காணவில்லையா? கருணையாளன் தான் கண்ணன் !

## உரையாடல் நான்கு:

(பிரசாதம், வரப்பிரசாதம் விளக்கம்—குருபக்தி—)

1967இல் திருப்பதியில் 10ஆம் நெம்பர் விருந்தினர் விடுதியில் சாமிகள் பக்தரோடு தங்கி இருந்தார். காலை பூஜை முடிந்தது. சிற்றுண்டியும் முடிந்தது. சாமிகள் சாப்பிட்ட சிற்றுண்டி மிச்சத்திற்காகப் பக்தர்கள் நான் முன்னே நீ முன்னே என்று போட்டியிட்டு முந்தினர். சாமிகள் அவ்வளவு பக்தர்களுக்கும் தன் புன்னகை பூத்த முகத்தோடு பிரசாதம் கொடுத்து மகிழ்வித்தார். அதன்பின் விருந்தினர் விடுதிமுன் ஹாலில் சாமிகள் ஒரு நாற்காலியில் வீற்றிருக்க அன்பர்கள் சாமிகளைச் சூழ்ந்து அமர்ந்தனர். அப்போது சாமிகள் சீடர்களுக்கு அருளிய பிரசாதத்தோடு செவிப்பிரசாத உரையாடலும் ஆரம்பித்தது.

சாமிகள் : ஏன் சாமி, எச்சில் சாப்பாடு சாப்பிடவேண்டும் ?

அ : சாமிகளிடமிருந்து நாங்கள் பெற்றுக்கொண்டது பிரசாதம் அல்லவா ?

சாமிகள் : உண்மைதான் ! பிரசாதம்தான் அதாவது பிறர் சாதம்தான் !

அ : சாமிகளே, அது வரப்பிரசாதமல்லவா.

சாமிகள் : வரப்பிரசாதம் என்றால் என்ன ?

(ஒருவரிடமிருந்தும் பதில் இல்லை),

சாமிகள் : வரப்போகின்ற பிரசாதம்தான் வரப்பிரசாதமாகின்றது. "எனக்கு குழந்தை இல்லை, எனக்கு ஆண் குழந்தை ஒன்று அருள வேண்டும்" என்று ஆண்டவனை நம்பி வேண்டிக் கொண்டால் அவ்வரப் பிரசாதமும் வேண்டிய பக்தருக்கு கூடிய சீக்கிரம் வாய்க்கின்றது. இந்தப்புத்திரப் பாக்கியத்தை, ஆண்டவன் அருளை வரப்பிரசாதம் என்று போற்றுகின்றோம். ஆக பிரசாதம் என்பது பிறருடைய சாதம்; வரப்பிரசாதம் என்பது வரப் போகின்ற பிரசாதம்.

சு : சாமிகள், பம்பாயில் சாமிகளுடைய பிரசாதத்திற்காகப் பல பேர் முந்திக் கொள்வதை நான் நேரில் பார்த்திருக்கின்றேன். சாமிகள் அவ்வளவு பேருக்கும் தாம் சாப்பிட்டு மிஞ்சிய உணவைப் பிரசாதமாக அருள்வதையும் கண் கொள்ளாக் காட்சியாக கண்டு அனுபவத்திருக்கின்றேன்.

சாமிகள் : சில இடங்களில் ஆண்பிள்ளைகளுக்கு முதலிடம். சாப்பிடுவதிலும் முதலிடம். ஆண் பிள்ளைகள் என்னோடு அமர்ந்து சாப்பிட்டு விடுவர். பாவம்! பெண்கள் என்ன செய்ய முடியும்? பசியோடு உணவுக்காகக் காத்துக் கொண்டிருப்பர். அந்தச் சமயங்களில் நான் பிரசாதம் கொடுக்கும் போது, சாப்பிட்ட ஆண்பிள்ளைகளுக்குக் கொஞ்சமும், சாப்பிடாமல் காத்து நிற்கும் பெண்களுக்கு நிறைய பிரசாதமும் அளிப்பதுமுண்டு.

சு : குமர குருபர சாமிகளும் இந்த குருவின் அமுதப்பிரசாதத்தைப் பற்றி மிகவும் பெருமையாகப் பேசுகின்றார் ஒரு சீடர் ஒருவர் கிடைத்தற்கரிய குரு ஒருவரை அடைகின்றார். அவருடைய குரு அன்பு அளவிட முடியாதபடி வளர்ந்து வருகின்றது. உலகத்தில் சாதாரணமாக காதல் வாழ்வில் சுகமனுபவிக்கின்ற தலைவனும் தலைவியரும், தாம் ஒருவரோடு ஒருவர் கொண்டுள்ள காதலை அறிவிக்கும் போது 'எத்தனை ஜென்மங்கள் எடுத்தாலும் அத்தனை ஜென்மங்களிலும் உங்கள் மனைவியாகவே வாய்க்க இறைவனைவேண்டிக் கொள்கின்றேன்,' 'இனிமேல் எடுக்கப் போகும் ஒவ்வொரு பிறவியிலும் உன் கணவனாக வாய்க்க நான் பிறக்க வேண்டும்' என்று ஈசனை வேண்டிக் கொள்வர். அது போன்றே அன்பு மீறிய சீடனும் அடுத்துப் பிறக்கும் பிறவியில் தான் எப்படி பிறப்பது என்பதைப் பற்றி சொல்கின்றான். அவனுக்கு தேவர்கள் பிறப்பு தேவையில்லை. கடவுளர் பதவிகளும் தேவையில்லை. அடுத்தப் பிறவியில் நாயாகப் பிறந்து, குருவின் அடியார்கள் திருவமுது உண்ட எச்சில் இலையில் உள்ள உணவை உண்ணும்பேறு பெற்று குருவின் அருளை அடைய வேண்டும் என்பது தான் அவர் அவா.

"பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
திருஅமுது ஆர்த்து தெருக்கடை எறிந்த
பரிகலம் மாந்தி இப்பவக்கடல் உழக்கும்
வான்உடை ஞமலியாகி நின்
அருளையும் அயராது அவதரிப்பதுவே."

இப்படி குரு பக்தியைக் காட்டுகின்றார் குமரகுருபரர்.

மற்றொரு பக்தர் : குருவின் பெருமையை சொல்லிக் கொண்டே போகலாம். குருவைப் போற்றுகின்ற சீடன் குருவையே தன் தெய்வமாக பாவிக்கின்றான். குருவின் மேல் அளவு கடந்த ஆராத காதல் கொள்கின்றான். ஆண்டவனுடைய பக்தன் ஒருவன் மீதே ஒரு ஆழ்வார் எவ்வளவு அன்பு கொள்கின்றார் பாருங்கள். பக்தர் பாத தூளி சாப்பிடவும் ஆழ்வார் மீனாகப் பிறக்கவும் ஆசைப்படுகின்றார். அவருக்கு வேறு செல்வங்கள் வேண்டாம் என்கின்றார். சாமிகளுக்கு அந்தப் பாட்டைப் பாடிக் காண்பிக்கின்றேன்.

" ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் இம்மண்ணரசும் யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே."

சாமிகள் : நீங்கள் சொல்வது எல்லாம் ஒப்புக் கொள்ள வேண்டிய உண்மைகள். குரு சீடர் அன்யோன்யத்தைப் பற்றியும் அது எப்படி அமையும் என்பதைப் பற்றியும் முன்னோர்கள் கூறியுள்ள பாட்டுக்களையே உங்களுக்கு ஞாபகப் படுத்துகின்றேன். அவைகளைச் சிந்தித்துக் கருத்தைக் கருத்தாட்டி மகிழுங்கள்.

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென்பது குறித்தோரார்
குருவே சிவமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரை உணர்வற்றதோர் கோவே.

தெளிவு குருவின் மேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே

வித்தக மாகிய வேடத்தான் உண்டஊன்
அத்தன் அயன்மால் அருந்திய வண்ணமாம்
சித்தம் தெளிந்தவர் சேடம் பருகிடின்
முக்தி சித்தியாம்என்று நம்மூலன் மொழிந்ததே

கருடன் உருவம் கருது மளவில்
பருவிடன் தீர்ந்து பயங்கெடு மாப்போற்
குருவின் உருவம் குறித்த அப்போதே
திரிமலம் தீர்ந்து சிவனவனுமே.

வேடங் கடந்து விகிர்தன்பால் மேவி
ஆடம்பரம் இன்றி ஆசாபாசம் செத்து
பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்பட
சாடும் சிவபோதகர் சுத்தச் சைவரே. "

நான் கூறிய இப்பாடல்களில் சித்தம் தெளிந்தவர் சேடம் பருகும் சிறப்பைப் பற்றியும் பெரியவர்கள் கூறி இருப்பது உற்று நோக்கத் தக்கது. இவையெல்லாம் எதைக் காட்டுகின்றன? ஆன்ம நேய ஒருமைப் பாட்டையே விளக்க இவை உதவுகின்றன. ஆண்டவனே குருவுருவில் வருகின்ருன். அந்த ஆண்டவனுடன் இரண்டறக் கலக்கும் உத்தம நிலையையே காண்பிக்க இவை பயன்படுகின்றன. குருசீடன் ஆத்மீக ஐக்கியத்தைக் காட்ட, ஒருயிர்போல் பழகும் அன்யோன்யத்தைக் காட்டவே இவையெல்லாம் அமைந்துள்ளன,

**உரையாடல் ஐந்து :**

(பரமாத்மா ஜீவாத்மா விளக்கம்—ஆண்டவனை அடைய மூன்று நிலைகள்—குருசீடர் விஷ்ணு புராணக் கதை—குருசீடர் நிலைகள் பற்றி சாமிகள் திருவாக்கு).

ஒருநாள் கடவுளைப்பற்றி பக்தர்கள் ஆரம்பித்த உரையாடலை சாமிகள் உற்சாகத்தோடு கேட்டுக்கொண்டிருந்தார்.

ர: சில மதங்கள் இறைவனை நம்மிடமிருந்துப் பிரித்தும் பிரிக்காமலும் பேசுகின்ருர்களே. 'கைலாசத்தில் உள்ள சிவனை பூஜிப்பாய் என்று சொல்பவர் உன்னிடத்திலேயே கைலாசத்தைக் கண்டு கொள்ளலாமே' என்றும் சொல்கின்றனர். சிவன் சிவன் என்று சொல்பவர் ஜீவன் சிவன் என்றும் சொல்கின்றனர். இப்படியே சுவர்க்கத்திலுள்ள உன் தகப்பனுரை பிரார்த்தித்துக்கொள் என்று சொல்பவரும் தகப்பனுரும் நானும் ஒன்று என்றும், உன்னுள்ளேயே கடவுளின் சாம்ராஜ்யம் அமைந்துள்ளது என்றும் கூறுகின்றனர். இது எப்படிப் பொருந்தும்? வேறிடத்தில் உள்ளவர் எப்படி நம்மிடத்தில் இருக்கமுடியும்?

ச: இதில் முரணுக ஒன்றும் இல்லை. கடவுள் எங்கும் வியாபித்துள்ளார். அவர் வெளியிலும் உள்ளார்: உள்ளும் உள்ளார். நாமெல்லாம் பரம் பொருளின் ஒரு பாகம். சூரியனிடமிருந்து வருகின்ற கதிர்கள் பல. அவை எல்லாம் சூரியனிடமிருந்தே வருகின்றன. நாமெல்லாம் பல என்று ஆரம்பத்தில் அறிகின்ற நாம், நாமெல்லாம்

அவனிடத்திலிருந்து வந்துள்ளவர்கள் என்பதை நாளடைவில் அறிகின்றோம். முதலில் ஆண்டவனை நினைக்கும்போது ஆண்டவனை வேறொருவராகத்தான் நினைப்பது. ஆனால் உள்ளொளி ஏற்பட்டவுடன் ஆண்டவன் நம்முள் இருப்பதை அறிந்து விடுகின்றோம்.

ர: ஆண்டவனையும் நம்மையும் வைத்துப் பேசும்போது மூன்று நிலைகளைப்பற்றியும் கூறுகின்றனர். முதல் நிலையை தஸ்யைவகம் என்பர், இந்த நிலையில் "நான் அவனுடையவன்" என்று பக்தன் உணர்கின்றான். இங்கு பக்தருக்கும் ஈஸ்வரனுக்கும் நடுவில் தொங்கும் திரை மிகக் கெட்டியானது, பளுவானது. அடுத்த நிலை 'த்வை வகம்' என்பது. இங்கும் ஆண்டவனுக்கும் பக்தனுக்கும் நடுவில் ஒரு திரை தொங்குகின்றது ஆனால் அது ஒரு லேசான திரை. கடவுளை மூன்றாவது நபராகப் பக்தர் கருதவில்லை, கடவுளை வேறொருவராக பாவிக்கவில்லை 'நான் (பக்தர்) உன்னுடையவர், (கடவுளுடையவர்) என்று கருதுகின்றார் பக்தர். மூன்றாவது நிலை தான் கடைசி நிலை. அதை 'த்வமே வகம்' என்பர். இந்த நிலையில் கடவுளும் பக்தரும் ஒன்றாக உள்ளனர்.

ச: பரம்பொருள் ஒன்று, 'நீ, நான்' என்ற ஆத்ம பேதமே இல்லை என்பதை விளக்க ஒரு கதையே விஷ்ணு புராணத்தில் கூறியுள்ளனர். ரிபு என்னும் ரிஷி நிகதா எனும் தன் சீடரைத் தேடிக் கொண்டு சென்றார். நிகதா அவன் சொந்த ஊரில் அந்த ஊர் ராஜாவின் ஊர்வலத்தை பார்த்துக்கொண்டிருந்தான். சீடருக்கு குருவை உடனே அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஊர்வலத்தைக் கண்ட ரிபு 'அது என்ன' என்று கேட்டார். சீடர், 'ராஜா ஊர்வலம்' என்றார், 'ராஜா யார்' என்று கேட்டார் ரிபு. 'யானை மேல் உட்கார்ந்திருப்பவர்' என்று சீடர் பதிலளித்தார். 'யானை எது, ராஜா யார்' என்று கேட்டார் ரிபு 'மேலே இருப்பவர் ராஜா, கீழே இருப்பது யானை' என்றார் சீடர் 'இதுவும் புரியவில்லை' என்றார் ரிபு. ஆச்சரியமடைந்த சீடர் குரு தோள்கள் மீது ஏறி உட்கார்ந்து, 'இப்போது பாரும். அந்த ராஜாவைப் போல நான் மேலே இருக்கிறேன், அந்த யானையைப் போல நீர் கீழே இருக்கிறீர்' என்றார். "அப்படியா? சரி முதலில் அந்த 'நீ' யும்! 'நானும்' யார் என்பதை எனக்கு விளக்கமாட்டாயா" என்றார் ரிபு. இதைக் கேட்டவுடனே 'நீ' 'நான்' என்ற பேதமற்ற பரம் பொருள் பேருண்மையை இப்படி விளக்கக் கூடியவர் தன் குருதான் என்பதை உணர்ந்த சீடர் அவர் கால்களில் விழுந்து கும்பிட்டார்.

ர: பரம்பொருள் உண்மையை விளக்க குரு சீடரை வைத்துக் கொண்டே இப்படி பல கதைகள் உண்டு. ஏகனாயிருக்கும் பரம் பொருள் அநேகனாகவும் உள்ளதன்மையை, அவன் சர்வ வியாபி என்பதை விளக்க மற்றொரு கதையும் கூறுவர். இருவர் ஒரு பெரிய

வரிடம் சென்று தம்மை சீடராக ஏற்றுக்கொள்ள வேண்டினர். பெரியவர் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு புறுவைக் கொடுத்து யாருக்கும் தெரியாமல் அவற்றை ஓரிடத்தில் கொன்றுவிட்டு வரு மாறு கூறினர். ஒருவன் அதை ஒரு நெருக்கமான தெருவிற்கு எடுத்துச் சென்று ஜனங்கள் பார்க்காதபடி தெரு ஓரத்தில் ஒதுங்கி தன் துண்டுக்குள் இருந்த புறுவைச் சந்தடியில்லாமல் கழுத்தைத் திருகிக் கொன்றுவிட்டுத் திரும்பினன். மற்றொருவன் ஒரு தனிமை யான காட்டுக்குச் சென்றான். புறுவைக் கொல்லத் தயாரானபோது புறுவினுடைய கண்கள் அவன் கண்களைப் பார்த்தன. புறு பார்த்தது இறைவன் பார்ப்பது போலவே அவனுக்குத் தோன்றியது. தன் குரு கூறிய மொழிகள் ஞாபகத்திற்கு வந்தன. "யாருக்கும் தெரி யாமல் புறுவைக் கொன்று வா" என்றார் பெரியவர். ஆனால் இதை இறைவன் கவனித்துக் கொண்டிருக்கின்றானே? இறைவனுக்கும் தெரியாமல் ஒரு காரியம் நடத்த முடியுமா? என்று யோசித்துப் பார்த்தான் சீடன். முடியாது என்று தீர்மானித்து சாமிகளிடம் புறு வோடு திரும்பினன் அவன். புறுவோடு திரும்பியவனையே தன் சீடராக குரு ஏற்றார் என்று சொல்லவும் வேண்டுமோ?

ச: சென்னையில் சாமிகள் திருநட்சத்திரத்தை முன்னிட்டு திருவிழா கொண்டாடிய பக்தர்களுக்கு 28—4—68ல் சாமிகள் குரு சீடர் நிலைபற்றி பேசி இருக்கின்றார். அவருடைய திருமொழிகளை ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் சத் சங்கம் அச்சில் ஏற்றிப் பக்தர்களுக்கு அளித்துள்ளனர். அதில் நீங்கள் சற்று நேரத்திற்கு முன் விளக்கிய மூன்று நிலைகளையும் குரு சீடர் உறவிலும் சாமிகள் வைத்துப் பேசி இருப்பது படித்து இன்புற வேண்டியது. அது என்னிடம் இருக் கின்றது. சாமிகள் திருவுள சம்மதம் பெற்று நானும் அதைப் படிக்கின்றேன். நாம் எல்லோரும் கேட்கலாம்.

சாமிகள்: உங்கள் இஷ்டம் போலவே செய்யுங்கள்.

பக்தர் ச. அவர்கள் தம் பையிலிருந்து அந்த வெளியீட்டை எடுத்து படிக்க ஆரம்பித்தார். சாமிகள் பேசி இருப்பதையே கேட்டு மகிழ்வோம்.

சாமிகள்: ஓம். இங்கு வந்திருக்கும் எல்லோருக்கும் என் னுடைய அந்தரங்க வணக்கம். நான் உங்களுக்கு குருவும்—சீடனும் யோக மார்க்கம் என்ற பொருள் பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். குரு ஆனவர் பிரம்மா ஆகவும், விஷ்ணு ஆகவும், மகேஸ்வரன் ஆகவும், பரப்பிரம்மம் ஆகவும் திகழ்கின்றார். குரு வுக்கு நிகரானவர் வேறில்லை. யார் ஒருவர் குருவைப் பெற்றிருக் கின்றாரோ அவரே புண்யவான். யார் ஒருவர் தங்களுடைய குருவை முதன்மையானவராக கருதுகின்றாரோ அவருக்கு வேத ஆகமப்

பொருள் நன்கு புலப்படும். குரு என்ற வார்த்தைக்கு மன இருளைப் போக்குபவர் என்று பொருளாகும். உண்மையான ஆத்ம அறிவு பெற்றவர்கள் மிகக் குறைவு. அத்தகைய ஆன்ம அறிவு பெற்றவர்களை அணுகவேண்டுபவர்கள் பற்றின்மையையும் இடைவிடாத பக்தியையும் உண்மையான சேவையையும், ஆண்டவனுடைய பெருமையையும், திருநாமத்தையும் உச்சரித்தும் கேட்டு மகிழும் குணங்களை பெற்றவர்களாக இருக்க வேண்டும். யார் ஒருவர் உண்மையாகவும் வெற்றிகரமாகவும் முன் கூறிய குண நலன்களை அடைகிறரோ அவருக்கு குரு கிட்டுவார். குருவோடு தொடர்பு கொண்டால் தவருது வெற்றிகிட்டும். ஏக்கத்திலிருந்தும் உலகில் உள்ள நிலையற்றதும், சுவையற்றதும் ஆகிய பொருள் மீது உள்ள பற்றையும் குருவானவர் அகற்றுவது மட்டுமின்றி ஆண்டவனுடைய கிருபையை பெறச் செய்தும் ஆண்டவனேடு ஐக்கியம் பெறச் செய்வார். குருவோடு நேர்முக தொடர்பு உள்ளவர்களுக்கு நீங்காத இன்பமும், பிறப்பு இறப்பு என்ற சுழல் சக்கரத்திலிருந்து விடுதலையும் பெறுவார்.

நாம் அடையக் கூடிய மிகக்கடினமான மூன்று என்னவென்ருல் மனிதப்பிறவி, ஆண்டவனை அடையவேண்டுமென்ற நீங்காத ஆர்வம், சத்குருவின் பாத மலரிடத்தே சரணுகதி அடைதல் என்பதும் ஆகும். இந்த மூன்றும் கிட்டுமானுல் முக்தி நிச்சயம் கிட்டும். படகிற்குச் சமானமான பூத உடல் அவரவர் செய்த நல்வினைக்கும் பூஜாபலனுக்கும் ஏற்றவாறு அமைகிறது. வாழ்க்கைக் கடலை நீந்துவதற்கு பூத உடலைச் சார்ந்த அறிவு பயன்படுகிறது. அறிவாவது யோக மார்க்கத்தில் பலவகைகளில் சிறந்த முறையில் பயன்படுத்தப்பட வேண்டும். சீடன் ஆனவர் யோகமார்க்கத்திற்கான பக்குவப் படுத்தப் படவேண்டும். அவன் பயத்துடனும், பக்தியுடனும் குருவை அணுக வேண்டும். சீடன் ஆனவன் குருவுக்கு கீழ்படிதல் என்பதை தன்னை யோகமார்க்கத்திற்கு பக்குவப்படுத்திக் கொள்ள முதற்கண் கடமையாக கொள்ள வேண்டும். குருவின் சன்னிதானத்தில் இருத்தலே யோகநிலை என்றும் கூறலாம். ஒவ்வொரு சீடனுடைய மன நிலைக்கு ஏற்றவாறு கடைப்பிடிக்கும் வகையில் பல யோக நிலைகள் பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளது. அதற்கு சீடனுனவன் தன்னைத் தான் அறியவேண்டும். கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் போன்றவைகள் கடமை, அறிவு, பக்தி என்ற மனநிலை உடைய பக்தர்களுக்கு முறைப்படி கூறப்பட்டுள்ளது. ஆத்மாவானது இயற்கையாகவே தெய்வத்தன்மையினுல் கர்மம், சக்தி, தத்துவ ஞானம், மனேதிடம் போன்ற குணங்களினுல் இயற்கையாக உள்ள புலன்களை உள்ளும் புறமும் அடக்கி, விடுதலைப் பெற்று தெய்வநிலை அடைவதே குறிக்கோளாக இருக்கவேண்டும்.

ஏன் அந்த அளவிற்கு குருவிற்கு முக்கியத்துவம் அளிக்கவேண்டும்? ஏன் என்ருல் சித்து மூலமாக அடையும் உயர் அறிவானது

கருத்துக்கள் அல்லது எண்ணங்கள் மூலமின்றி சக்தி மூலமாக அடையப்படுகிறது. இந்த சக்தியானது சீடருக்கு தொடுவதாலோ, நோக்குவதாலோ எண்ணங்களாலோ குருவால் புகுத்தப்டுகிறது. அதாவது தொடு ஸ்பரிசம், நோக்கு ஸ்பரிசம், மானஸ ஸ்பரிசம் என்று கூறுவார்கள். இந்த சைத்தன்ய மாற்றமில்லையேல் முன்னேற்றம் இருக்க முடியாது. குருவினிடத்து, இந்த சக்தியை சீடனுக்கு அருள்விக்கும் அளவில் சக்தி இருக்கவேண்டும்.

பக்தனுக்கும் சீடனுக்கும் உள்ள வேறுபாட்டை அறிய வேண்டும். குருவை பக்தன் எவ்வாறு அணுகுகிறான் என்றால் மர்க்கடகிசோர நியாயப் படியாகும். குரங்குக் குட்டியானது தன்னுடைய தாயை தன் பலத்திற்கேற்ப இறுகப்பிடித்துக் கொள்கிறது, இல்லையேல் அது விழ நேரிடும். இந்த வகையில் பக்தன் குருவை தனக்கேற்றவாறு பின்பற்றுகிறான். சீடனானவன் குருவை எவ்வாறு அணுகுகிறான் என்றால் மார்ஜாலாகி சோர நியாயப்படியாகும். எவ்வாறு பூனைக்குட்டி அது அல்லல்படும் நேரத்தில் தாய்பூனையால் எடுத்துச் சென்று காப்பாற்றப்படும் நேரத்தில் அது தாயின் பலத்தை நம்பி இருக்கிறதோ அந்த முறையில் சீடன் குருவை பின்பற்றுகிறான். குருவினிடத்தில் சீடன் சரணாகதி அடைந்தால் வீழ்ச்சிக்கு இடமில்லை. குரு சீடனை எந்த நிலையிலும் காப்பாற்றுவார். குரு சீடனுக்கு இடையில் மூன்று நிலைகள் உண்டு. முதற்கண் சீடன் 'நான் குருவைச் சார்ந்தவன்' என்று கூறுவான். அதாவது அந்த அளவுக்குச் சுயநலமற்ற முறையில் குருவிற்குச் சேவை செய்கிறான். அடுத்துச் சீடன் 'குரு என்னைச் சேர்ந்தவர்' என்று கூறுகிறான். அதாவது அந்த அளவிற்குக் குருவின்பால் பயபக்தி அதிகப்பட்டு குரு என்னைச் சார்ந்தவர் என்று கூறும் அளவிற்கு அனுமதி பெறுகிறான். கடைசியாக 'நானே குரு' என்று சீடன் கூறுவான். ஏனெனில் அந்த அளவிற்கு குருவின் கிருபையால் ஞானயோகம் அல்லது அறிவைப் பெறுகிறான்.

நீவிர் அனைவரும் வாழ்த்தப் படுவீர். கார்த்திகேயன் அருள் புரிவானாக. எல்லோருக்கும் என் வணக்கம் உரித்தாகுக.

## விஞ்ஞானக் கருத்துக்களைப்பற்றி கருத்தாடல்.

ஒருநாள் காரைக்குடி அளகப்பா பொறி இயல் கல்லூரி பேராசிரியர் திரு R. N. வரதராஜனும் அவர் சகோதரர் எலக்டிரிகல் டிவிஷனல் என்ஜினீர் திரு. R. N. சங்கரன் அவர்களும் சாமிகளிடம் விஞ்ஞானம் கண்டுள்ள சில உண்மைகளைப் பற்றி பேசியதும் சாமிகள் பதில் உரை ஆடியதும் படித்து அனுபவிக்க வேண்டியவை.

வரதராஜன்: சாமிகளே! தற்காலத்தில் அணுவின் அமைப்பைப் பற்றியும் அதன் சக்தியையும் விஞ்ஞான ரீதியில் பரிசீலனை செய்யப் பட்டுள்ள அறிவைக் கவனிக்கும்போது, விஞ்ஞானத் துறையும் தெய்வீகத் துறையை இணைத்துவிடும் எனத் தோன்றுகின்றது. கற்பனைக்கும் எட்டாத பொருள்களை புத்தியைக்கொண்டு ஆராய்ந்து அதன் பலன்களையும் பிரதிபலன்களையும் அனுபவிக்கும் திறமையை மனிதனுக்கு விஞ்ஞான அறிவு கொடுத்திருக்கிறது. உதாரணமாக அணுவின் அமைப்பை ஆராயும்போது சில பௌதிகமான உண்மை களை அறிந்தபோதிலும் சில உண்மைகள் புரியாத புதிராக இருந்து வருகிறது. இயற்கையின் அமைப்புக்கே அடிப்படையாக உள்ள இந்த அணுவின் தத்துவத்தை சரியாகவும் முழுமையாகவும் அறிந்து விட்டால் இந்தப் பரந்த ப்ரபஞ்சத்தின் அடிப்படைத் தத்துவமும் காரணமும் கண்டுகொள்ளலாம் என்ற அளவிற்கு விஞ்ஞானம் வளர்ந்து விட்டது. ஒவ்வொரு அணுவுமே இந்த சூரிய குடும்பம் (Solar system) இயக்குகின்ற மாதிரி இயங்குகின்றது. ஓர் அணுவி லுள்ள உட்கருவின் (nucleus) அமைப்பு ஏராளமான சக்திக்கு இருப் பிடமாகவும் சிறிய துகள்களை சேர்த்து அமைந்ததாக இருக்கின்றது. இந்த சேர்க்கை நேர்மின் ஏற்றம் (protons) துகள்களும் மின்னின் நடுநிலை (neutrons) கொண்ட துகள்களும் கொண்ட அமைப்பாக இருக்கிறது. உட்கருவின் துகள்கள் இடையே உள்ள கவர்ச்சி மிகவும் நெருக்கமாக இருக்கிறது. ஆனால் நேர்மின் ஏற்றம் (protons) கொண்ட துகள்களின் தனிப்பட்ட தன்மையை ஆராய்ந்தால் அவை ஒன்றைவிட்டு ஒன்று விலகக் கூடியத் தன்மையை உடையனவாக இருக்கின்றன. ஆனால் அதே துகள்கள் உட்கருவில் சேர்ந்து இயங்கும் போது ஒன்றை ஒன்று தவிர்ப்பதை விட்டு ஒன்றை ஒன்று சேர்ந்து இருக்கின்றன. உட்கருச் சக்திகள் இப்படி நமக்கு முற்றும் விளங்காத நிலையிலும், புதிராகவும் இருக்கிறது. இந்த தத்துவம் அறிவு முழுதும் புலனாகி இந்த அடிப்படையில் தெய்வீகத்தை அடைய லாமோ என்று நான் சாமிகளைக் கேட்டுக்கொள்கின்றேன்.

சாமிகள்: விஞ்ஞான அறிவுக்கு எல்லை உண்டு. விஞ்ஞான அறிவுக்கு மேற்பட்டது தெய்வீகம். மனிதனுக்கு அறிவு அவன் பெற்ற அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகியவைகளால் ஏற்படுகின்றது. இவைகள் பௌதிகமாக இயற்கை சக்தியின் சேர்க்கையே. இவைகளை உபாதியாகக்கொண்ட உள்ளிருக்கும் ஆத்மா ஜீவனாக விளங்குகின்றது. இந்த உபாதி களின் சேர்க்கையினால் இந்தப் பிரபஞ்சத்தை அறிகின்றவன் யார் என்று தன்னைத்தானே யார் அறிகின்றானோ அப்பொழுதுதான் அடிப் படையான ஆத்ம ஞானம் ஏற்படும். அறிகிறவன், அறிவு, அறியப் படும் பொருள் இவை மூன்றுமாக இயங்கும்போது பூரணமான ஞானம் ஏற்படாது. தன்னைத்தானே அறிந்து தன் வயப்பட்டவ

னுக்கு இந்த முப்புடிகளும் மறைந்து ஒன்றேயாகின்றது. இது ஞானிகளின் அனுபவம். தன்னையே தெரியாதவனுக்கு தனக்கு வேறுபட்டதாகக் கருதும் இயற்கையின் தத்துவத்தை முழுவதாக எப்படி அறிய முடியும்? நீங்கள் சொன்ன உட்கருவின் அமைப்பின் தத்துவம் உடலும் உயிரும்போல் இருக்கிறது. உடலும் உயிரும் சேர்ந்து இருக்கின்றதையும் பார்க்கின்றோம். அவை பிரிவதையும் பார்க்கின்றோம். அது போன்றுதான் உட்கருவின் நேர்மின் ஏற்றத் துகள்கள் ஒரு சமயம் சேர்ந்தும் ஒரு சமயம் தவிர்த்தும் இயங்கக் கூடியவைகளாக இருப்பது!

சங்கரன்: இந்த பௌதிகப் பிரபஞ்சத்தின் சிருஷ்டியைப் பற்றி சாமிகள் கூறும் தத்துவமும் தற்பொழுது நிலவும் விஞ்ஞான ஆராய்ச்சிகளுக்கு புறம்பாக இல்லை. விஞ்ஞான உண்மைகள் காலத்திற்கு காலம் அபிவிருத்தி அடைந்து மாறிக்கொண்டே வருகின்றன. ஆனால் மூலத்தத்துவம் அடிப்படைக் காரணமாக இருக்கவேண்டி இருப்பதால் மாறுவதற்கில்லை. விஞ்ஞானத்தின் போக்கே பலவாகத் தோன்றும். பொருள்களின் மூல காரண உண்மை ஒன்றாகத்தான் இருக்க வேண்டும். இதை அறிந்து விட்டால் மற்றெல்லாவற்றையும் அறிய முடியும் என்ற அடிப்படையில்தான் முன்னேறிக் கொண்டிருக்கிறது. உலகப் புகழ் பெற்ற ஐன்ஸ்டைன் என்ற விஞ்ஞானியும் இப்படிப்பட்ட மூலகாரணத்தை அறிய முடியுமா என்ற அடிப்படையில்தான் ஆராய்ச்சி செய்தார். சாமிகள் கூற்றுப்படியும் முதற்காரணப்பொருள் ஒன்றே இருந்தது. தன்னிடத்தே சக்தியைக் கொண்டிருந்தது. அதுவே பிரபஞ்சத்தை சிருஷ்டித்து பலவாயிற்று. முதற்படியாக இயற்கைச் சக்தி மூன்றாகிற்று. அவையே உடன்பாடு சக்தி (Positive) நடுநிலைச் சக்தி (Neutral) எதிர்மறைச் சக்தி (Negative) என்றாகும். அவை ரஜஸ், சத்வம், தமஸ் என்றாகும். இம்மூன்று குணங்களும் சமமாக இருக்கும் போது, உலகம் தோற்றமாகாது. அவ்வயமாக இருந்தது. இந்த சமத்துவத்தில் மாறுதல் ஏற்பட்டவுடன் மூன்று ஐந்தாகிற்று. பஞ்ச பூதங்கள் தோன்றின. ஐந்து ஐம்பத்தொன்றாகி தொண்ணூற்றாறு தத்துவங்களாகின. அணுவின் நிலையைப் பார்த்தாலும் அப்படித்தான் இருக்கின்றது, அதனுள் பிரபஞ்சமே இயங்குகின்ற மாதிரி புரோட்டான்களும் (உடன்பாடு சக்தி) நியூட்ரான்களும் (நடுநிலைச் சக்தி) எலக்ட்ரான்களும் (எதிர் மறைச் சக்தி) இயங்குகின்றன. மிக சக்தி வாய்ந்த அணுவின் உட்கரு சமநிலைமை விட்டு கிளர்ச்சியுற்று மின்காந்தக்கதிர்கள் வீசுகின்றன. வெடிக்கும் அணுகுண்டுகளின் அனுபவம் அணுவின் உட்கருவின் உள்ளே எவ்வளவு அதிகச் சக்தியைத் திரட்டி வைத்திருக்கின்றது என்பதை நிரூபிக்கின்றது. இம்மாதிரி சத்வம், ரஜஸ், தமஸ் சமநிலையினின்றும் கிளர்ச்சியுற்ற பல சக்திகளாய் பரிணமிக்கும் தன்மை உடையது என்பதும் இப்பொழுது விளங்குகிறது,

சாமிகள்: இப்படித்தான் மனித உடம்பினுள் மூலாதாரத்தில் குண்டலினி சக்தி தூங்கிக் கொண்டிருக்கிறது. யோகத்தின் மூலமாக அதைத் தட்டி எழுப்பி விட்டால் அது சக்திமயமாகி இயங்க ஆரம் பித்து விடும். இடை, பின்கலை, ஸுஷும்ஷா நாடிகள் எதிர்மறை உடன்பாடு நடுநிலைச் சக்திகளைக் குறிக்குமல்லவா?

சங்கரன்: ஒவ்வொரு அணுவையும் அதன் உட்கரு பெற்றிருக்கும் மின் ஏற்றத்தைக் கொண்டு அடையாளம் கண்டுகொள்ளலாம். இப்படி அணுக்களை தொண்ணூற்றுஇரண்டு வகையாக – ஹைட்ரஜன் முதல் யுரேனியம் வரை பிரித்திருக்கிறார்கள். இந்த தொகைக்கு மேலாக யாதொன்றும் காணப்படவில்லை. இவை இந்த பௌதிக பிரபஞ்சத்திற்கு அடிப்படையின் மூல பொருள்களாகும். மனிதனின் உடல் அமைப்பிலும் இந்த மூலப் பொருள்களின் சேர்க்கையே காரணமாகும். இத்துடன் மனித உடல் அமைப்பில் அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்ற நான்கும் சேருகின்றன. இப்படிப் பார்த்தாலும் மொத்தம் 96 தத்துவங்கள் விஞ்ஞான ரீதியாக வருகின்றன. இந்தக் கணக்கு வேடிக்கையாயிருக்கிறது. ஏனென்றால் சாஸ்திர சித்தாந்தப்படிக்கும், சாமிகள் வாக்குப்படிக்கும் 96 தத்துவங்கள் விளக்கம் வேறுமுறையாகக் கூறி இருக்கிறது.

வரதராஜன்: "எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும்
அப்பொருள்மெய்ப்பொருள் காண்பது அறிவு"

என்பது திருவள்ளுவர் வாக்கு. அந்த மெய்ப்பொருளைக் காண்பது என்பது எப்படிப் பொருந்தும் என்று தெரியவில்லை. காண்பது என்பது புலனறிவிற்கு எட்டுவதாக இருக்கவேண்டும். ஆனால் மெய்ப்பொருள் அடிப்படைத் தத்துவமாகிய தெய்வத்தைக் குறித்தால் புலனறிவிற்கு எட்டாதது என்று மகான்கள் சொல்லி இருக்கிறார்கள். இதைப் பற்றி விளக்கும்படி நான் வணங்கிக் கேட்டுக் கொள்கின்றேன்.

சாமிகள்: மெய்ப்பொருள் கடவுளைத் தான் குறிக்கின்றது. கடவுள் என்றால் என்ன?

வரதராஜன்: கடவுள் என்றால் மூலகாரணப் பொருள் என்று சொல்கின்றார்கள். அதைப்பற்றி அனுபவம் எனக்கில்லை.

சாமிகள்: கடவுள் என்றால் உள்கட என்று பொருள். எங்கும் வியாபிக்கும் மூலகாரணமாகிய கடவுள் உங்களிடத்திலும் இருக்கின்றார். புலன்களால் அறிவு உண்டாகின்றது. அந்த அறிவை அறிபவன் உள்ளே இருக்கின்றான். அந்த அறிபவன் யார் என்று

விசாரித்து அறியவேண்டும். எந்த உபகரணங்களாகிய புத்தி, மனது, இந்திரியங்கள் முதலியவைகளால் ஒருவன் பௌதிக அறிவைப் பெறுகின்றானோ அந்த உபகரணங்களைக் கொண்டு அதற்றிலும் தனியாக இயங்கும் அவனை எப்படிக் கண்டுபிடிப்பது? தன் நிலையைக் கண்டுபிடிக்க தன்வயமாக வேண்டும். வெளி நோக்கம் விட்டு அக நோக்கம் வேண்டும். ஆதலால் ஐம்புலன்களையும் மனதையும் புத்தியையும் வெளியில் செல்லாது கட்டுப்படுத்தி தான் என்பதை அறிந்துகொள்ளவேண்டும். எல்லா மதங்களும் மார்க்கங்களும் இதைத் தான் சொல்கின்றன.

சிறிது நேரம் மௌனமாக அமர்ந்திருந்த சாமிகள் மறுபடியும் உரையாடலைத் தொடர்ந்தார்.

சாமிகள் : கடவுளைப் புலன்களால் அறியமுடியாது. உங்களுடைய கண்களையும் வாயையும் உங்களால் பார்க்கமுடியுமா?

வரதராஜன்: என்னால் பார்க்கமுடியாது. ஆனால் ஒரு கண்ணாடியின் உதவியினால் பார்க்கமுடியும்.

சாமிகள் : இப்பொழுது உங்களுக்கு விஷயம் புரிகின்றது. உள்ளிருக்கும் கடவுளைக் காண்பது சுலபமானதல்ல. அப்படி ஒவ்வொருவரிடமும் தான் என்று இயங்கும் மெய்ப்பொருளைக் காண்பதற்கு அதை மறைக்கும் உபாதிகளான அகங்காரம் புத்தி மனம் முதலிய கரணங்களைத் தூய்மையாக்கி அழுக்கில்லாத கண்ணாடி போன்று துடைத்து வைக்கவேண்டும். அது சுலபமானதல்ல. உண்மையை நேரில் பிரத்தியட்சமாகக் கண்ட குரு ஒரு கண்ணாடி போல. அதனால் தான் உண்மை ஞானத்தை அடைய குரு முக்கியமானவர் ஆவர். முதலில் தன்னிடத்தே இயங்கும் பேருண்மையைக் கண்டு பிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் உண்டாகவேண்டும். அதில் அகநோக்கு உண்டாகும். சரியான முறையில் குறுகிய காலத்தில் உண்மையைக் கண்டுகொள்ள உண்மை அறிந்த குருவின் உதவி வேண்டும். ஒரு பொருளை சொல்லிக் கொடுப்பதற்கு அதற்கு வேண்டிய திறமையும் அனுபவமும் வேண்டும். மின்சார இலாகாவில் இருக்கிற லைன் மேனை எடுத்துக்கொள்வோம். அவருக்கு எந்த லைனில் கரண்ட் ஓடுகிறது, அதை நிறுத்த எந்த ப்யூசை எடுக்கவேண்டும் என்பது நன்றாகத் தெரியும். தவறான ப்யூசை எடுத்து லயனில் ஏறினால் என்னாகும் என்பதும் அவருக்குத் தெரியும். அம்மாதிரிதான் தக்க குருவிற்கு தெய்வீக அனுபவமும் அதை சீடர்களுக்கு விளக்கிவைத்து அந்த அனுபவத்தை பெறுமாறு செய்யக்கூடிய திறமை உண்டு. அதனால்தான் அனுபவம் பெற்றுள்ள குருவை அடைந்து வாழ்க்கைப் பேற்றின் பயனை அடையவேண்டும். இப்படிப்பட்ட குருவை அடைந்து அவரிடம் சரணடைந்து ஞானத்தை அடைவது பெரும்

பாக்கியமாகும். இது எல்லோருக்கும் கிடைப்பது துர்லபம். அப்படிப்பட்ட குருவிற்கு தக்க பரிபக்குவமான சீடருக்கு கண்ணுடியைப் போன்று கடவுளேயே காணச் செய்யும் திறமை உண்டு என்பது மகான்களின் சரித்திரங்களிலிருந்தும் விளங்கும். மகான்களின் சரித்திரமே இதற்காகத்தான் ஏற்பட்டிருக்கின்றன.

## 5. சாமிகள் உவந்தளிக்கும் கதைகள்.

### 1. பணியாளிடம் பரிவு

ஒரு யஜமானரிடத்தில் ஒரு வேலைக்காரன் இருந்தான். அவன் மிகவும் நல்லவன். யஜமானரும் மிகவும் நல்லவர். ஒருநாள் யஜமானர் வீட்டில் வேலே நிறைய இருந்தது. மனம் சலிக்காது முகம் சுளிக்காது பணியாள் எல்லா வேலைகளேயும் செய்து முடித்தான். அவன் செய்த வேலையால் அவனுக்குக் களைப்பு ஏற்பட்டது; பசியும் தாங்க முடியவில்லை. அந்த நிலையில் தன் வீட்டிற்குப் போய் வரத் தன் யஜமானனிடம் விடை கேட்டான் பணியாள். அப்போது "இன்னும் ஒரு வேலை பாக்கி இருக்கின்றது" என்று கூறிய யஜமானரின் சொற்கள் அவனைத் தூக்கி வாரிப் போட்டன. என்ன செய்வான்? எஜமானர் எது சொன்னலும் முடியாது என்றே சொல்லத் தெரியாத அந்தப் பணியாள், தடை சொல்லாது அந்த வேலை எதுவோ என்று கேட்டு வேலைக்குத் தயாராஞன். "வேறென்றுமில்லை. நீ வயிரு சாப்பிட்டுச் செல்ல வேண்டும்" என்று அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்த சாப்பாட்டைக் குறிப்பிட்டார் அன்பே வடிவான எஜமானர். எப்படி இருக்கும் இந்த வார்த்தைகளைக் கேட்ட பணியாளுக்கு! யாராயிருந்தாலும் அவர்களை நம்மைப் போலவே பாவிக்கவேண்டும். பணியாளேயும் நம் குடும்பத்தில் ஒருவராகவே பாவித்து அன்பு செலுத்தவேண்டும். எல்லோரும் பரம்பொருள் அம்சங்கள் என்பதை உணர்ந்துவிட்டால் கருணைக்கு குறைவேது? சரி, நமக்கும் இப்போது ஒரு வேலை காத்துக்கொண்டிருக்கின்றது. நாம் மட்டும் சாப்பிட வேண்டாமா? நமக்கும் பசிக்கவில்லையா. இப்படியே பேசிக்கொண்டே போனல் என்னவது?

### 2. அவரவர் வேலைகள்

சில வேலைகளை ஆண்கள் தான் செய்ய முடியும். சில வேலைகளைப் பெண்கள் செய்ய முடிந்தாலும் பெண்கள் அவ்வேலைகளை செய்யக் கூடாது. ஒருவர் கழுதையொன்றும் நாயொன்றும் வளர்த்தார். கழுதை பொதி சுமக்க உதவியது. நாய் இரவில் காவல் காக்க உதவியது. யாராவது அயலான் வீட்டுக்குள் நுழைந்தால் நாய் குரைத்து அவனை விரட்டும். வேறெருவரைக் கண்டால்தான் நாய் குரைக்கும்: மற்றெரு கழுதையைக் கண்டால்தான் கழுதை

கனேக்கும். கழுதை கனேப்பது தன் இனத்தைக் கண்டுவிட்டோ மென்ற மகிழ்ச்சியில்; நாய் குரைப்பது அயலாரை விரட்டியடிக்க வேண்டும் என்ற விஸ்வாஸ உணர்வில். ஒருநாள் இந்த வீட்டுக்கு ஒரு திருடன் வந்தான். நாய் செய்யும் வேலையை உடனே கழுதை செய்ய ஆரம்பித்தது. தன்னுடைய இடிபோன்ற ஓசையை எழுப்பி நீண்ட நேரம் கத்த ஆரம்பித்தது. இதைக் கண்டு எழுந்த வீட்டுக் காரருக்கு கோபம் தாங்கவில்லை கழுதையை நன்ருகப் பலங் கொண்ட மட்டும் அடித்து விட்டார், கழுதை செம்மையாக அடி வாங்கியதுதான் பலன். அதன் செயலை மெச்சுவாரில்லை. ஆதலால் யார் யார் எந்த வேலையைச் செய்யவேண்டுமோ அந்தந்த வேலை யைத்தான் செய்யவேண்டும். பெண் கண்ட சொத்தும் பூனே கண்ட பாலும் நிற்காது என்பதை நாம் உணரவேண்டும்.

### 3. மேலே போக வழி:

ஒரு சீடன் குருவைக் கண்டு மேலே போக வழி கேட்டான். "போன வழியிலேயே போய் வந்த வழியிலேயே வா" என்று குரு கூறினர். "அப்படியென்ருல்?" என்ருன் சீடன். "நீ நமது ஆசி ரமத்துக்கு வா" என்ருர் குரு. "ஆசிரமம் எங்கே இருக்கின்றது?" என்ருன் சீடன்.

> "ஊசிக்கும் சரட்டுக்கும் நடுவே,
> நோயில்லாமல் அணர்த்துகின்றவன் வீட்டுக்குப்
> பக்கத்தில், பட்ட மரம் பொருந்தி இருக்கும்
> அங்கு வந்து சேர்" என்ருர் குரு.

சீடன் சிந்தித்துப் பார்த்தான். அதன் கருத்தைத் தன் கருத்தைக் கொண்டு ஆட்டிப் பார்த்தான். விபரம் புரிந்தது. குரு சொன்ன ஆசிரமம் கொல்லன் தெருவிற்கும் சேணியன் தெருவிற்கும் நடுவில் உள்ள தெரு என்பதை 'ஊசிக்கும் சரட்டுக்கும் நடுவே' என்பது விளக்கும்; வண்ணர் வீட்டுக்குப் பக்கத்தில் ஆசிரமம் அமைந் துள்ளது என்பதை 'நோயில்லாமல் அணர்த்துகின்றவன் வீட்டுக் குப் பக்கத்தில்' என்பது விளக்கும்; கதவு சாத்தி இருக்கும் என் பதை 'பட்டமரம் பொருந்தி இருக்கும்' என்பது விளக்கும். இதை அறிந்துகொள்ளக் கூடிய பரிபக்குவம் வாய்ந்துள்ள சீடருக்கு மேலே போக (சிவானுபவம் பெற) வழி உரைக்கும் குரு திரு வுரைக்கா பொருள் விளங்காது?

### 4. புலி உபதேசம்:

புலிக்கு உபதேசம் செய்த குரு புலியைப் பார்த்து, "நீ யாரையும் கடிக்காதே, கொல்லாதே" என்று சொன்னர். பாயாத புலி ஒன்று சாந்த சொரூபமாகக் காட்டில் உலவி வருவதைக் கண்ட இடைச்

சிறுவர்கள் அதைக் கல்லாலடித்துத் துன்புறுத்தினர். தன் குருவை மறுபடியும் கண்டபுலி தான் குரு வார்த்தைப்படி நடந்ததால் தனக்கு நேரிட்ட கஷ்டங்களை எடுத்துரைத்தது. "ஜீவஹிம்சை உதவாது என்பதற்காகத்தான் நான் உன்னை யாரையும் கடிக்காதே, யாரையும் கொல்லாதே என்று கூறினேனே தவிர, உன்னைக் காத்துக் கொள்வதற்காக உறுமாதே என்று கூடவா உனக்குச் சொன்னேன்" என்று அறிவுரை வழங்கினார் குரு பகவான்.

## 5. பரிபக்குவ நிலை

சாமிகள் : இருளை விரட்டி அறிவு தீபத்தைக் கொடுத்து உதவுகின்றவர்களே குருமார்கள். அவர்கள் சீடர்களுடைய பரிபக்குவ நிலை உணர்ந்து வேண்டிய சமயத்தில் வேண்டியவற்றை அவர்களுக்கு உபதேசம் செய்வர். குரு நல்லவர், எளியவர், எதற்கும் பதில் சொல்பவர் என்று அறிந்து கொண்டு அனுவசியமாகக் கேள்விகளைக் கேட்பதும் முறையல்ல. அவர் போதிக்கும் விஷயங்கள் சில சமயங்களில் உடனடியாகப் புரியாவிட்டாலும் போகப் போகப் பொருள் விளங்கக்கூடியவைகள். குருவும் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் சீடருக்கு உண்மையைச் சொல்லி விளங்க வைப்பர். முதன் முதலில் ஒரு சிறிய குட்டையில் விட்டுத்தான் நீச்சல் பழக்கிக் கொடுக்கவேண்டும். அதன் பின்பு குளத்திலும் பெரிய ஏரிகளிலும், கடலிலும் நீச்சல் அடித்துப் பழகக் கற்றுக் கொடுக்க வேண்டும். கடலில் நீச்சல் அடிக்கப் பழக்கம் வந்துவிட்டால் அவன் எந்த இடத்திலும் தண்ணீரில் நீச்சல் அடிப்பது சுலபமான காரியமாகிவிடும்.

குரு கொடுப்பதையும் வாங்கக் கூடிய நிலை சீடருக்கும் அமைந்திருக்கவேண்டும்.

பக்தர் : இதைப்பற்றிகூட ஒரு பெரும் புலவர் வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சி உரைப்பதுண்டு. எழுத்து வாசனையே இல்லாத ஒருவன் ஒரு பெரும் புலவரை அடைந்தான். தனக்கு புலமை வரும்படி தன்னைச் சீடராக ஏற்றுக்கொள்ள வேண்டினான். புலவர் ஒரு வாக்கியத்தைச் சொல்லி அந்த வாக்கியத்தில் உள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் இவைகளைக் காட்டச் சொன்னார். வந்திருந்தவனுக்கு இவைகூட தெரியவில்லை. 'எழுவாய் பயனிலை' என்று சிலேடைப் பொருள் செறிந்த வார்த்தைகளைச் சொல்லி புலவர் அவனை அனுப்பிவிட்டார்.

சாமிகள் : அந்த சிலேடை நயத்தைக்கூடப் புலவருடன் இருந்திருந்த மற்ற மாணுக்கர்கள்தான் அனுபவத்திருக்கமுடியும். எழுவாய் பயனிலை அறியாதவனை புலவர் எழுவாய் பயனிலை என்று

சொல்லி மட்டும் அனுப்பி இருக்கமுடியாது. தம்பி உனக்கும் புலமைக்கும் வெகுதூரம். ஒன்றும் பிரயோசனமில்லை. நீ இந்த இடத்தை விட்டு எழுந்துவிடு. வேறு தொழில் கற்றுக்கொள் என்று சொன்னவுடன்தான் அவன் அவர் வீட்டைவிட்டு நகர்ந்திருப்பன். ஒருவனுக்கு விரல் இருந்தால் வைர மோதிரம் போட்டுக்கொள்ள லாம். அழகி ஒருவளை மனைவியாகக் கொண்டாலும் அவள் வாழ வீடு ஒன்று வேண்டுமல்லவா. பணம் கொடுத்தாலும் அதைப் பத்திரப்படுத்த பெட்டி ஒன்று வேண்டாமா? இப்படித்தான் குருவும் சீடர்களுக்கு படிப்படியாக அறிவு விளக்கம் கொடுத்து உதவுகின்றார். அறிவு விளக்கம் கொடுக்கும்போதும் அவர் சொற்களால் சொல்லித் தான் அவனை பெரு நிலைக்கு உயர்த்தமுடியும் என்பதல்ல. அவர் அருள் நோக்கு ஒன்று இருந்தாலே போதும், அவன் உயர்வுக்கு. அவர் பார்க்கக்கூட வேண்டியதில்லை, அவர் நினைத்தாலே போதும் அவன் பெருநிலை கருத்துக்களை அறிந்துகொள்ள. நயனதீக்கை, ஸ்பரிசதீக்கை, மானச தீக்கை — இவற்றால் ஒரு ஞானி பரிபக்குவ மடைந்த மற்றவர்களை ஞானிகளாக்கமுடியும்.

குருவின் அருளை சீடன் படிப்படியாக ஏறிப் பல தடவைகள் பெற்றுக் கொள்கின்றான். அப்படிச் செய்யும்போது அவனுடைய நிலையும் படிப்படியாக ஏறுகின்றது. கடைசியில் உச்ச நிலைக்கே ஏற்றிவிடுகின்றார் குரு. ஆரம்பத்தில் குரு சீடருக்கு ஒரு கல்லைக் கொடுத்தாலும் அதை சீடன் தான் இருக்கும் குடிலில் சாம்ப லோடு சேர்த்து வைத்திருப்பான். கொஞ்ச நாட்கள் செல்ல அவர் அவனுக்கு ஐந்து ரூபாய் கொடுத்தால் அதை சீடன் தன் துணி ஒன்றில் முடிந்து பத்திரப்படுத்தி இருப்பான். சில நாட்களுக்குப் பின் குரு ஒரு நூறு ரூபாய் கொடுத்தால் சீடன் ஒரு சிறிய பெட்டி வாங்கி அந்தப் பெட்டிக்குள் ரூபாயை வைத்து பெட்டியைப் பூட்டி வைத்திருப்பான். சீடனுடைய நிலைப் படிப்படியாக உயர்கின்றது. அவன் ஒரு நல்ல பங்களாவிற்கு வந்துவிட்டான். குரு அவனுக்கு ஒரு லட்சம் ரூபாய் அளிக்கின்றார். அதை சீடன் தன் பங்களாவில் உள்ள இரும்புப் பெட்டியில் வைத்து அதை காத்ரெஜ் பூட்டு போட்டு கண்காணித்து வருகின்றான். ஒரு பொருளின் மதிப்பை அறியக் கூடிய அளவுக்கு அவன் நிலை உயர்வடைகின்றது. உயர்வு அடைய அடையத்தான் பொருள்களின் தரத்தையும் ஒருவன் உணர முடி கின்றது. குடிசையில் வாழ்பவனிடம் ஒரு லட்ச ரூபாயைக் கொடுத் தாலும் அதை பத்திரப்படுத்த அவனுக்கு வசதியில்லை. அதை நல்ல வழியில் பயன்படுத்த அறிவு இல்லை. ஒருவனுடைய பரிபக்குவ நிலையை அறிந்துதான் பொருளையும் குரு அளிக்கின்றார். இந்தப் பணம் என்பது என்ன? இந்தப் பொருள் என்பது என்ன? எல் லாம் அருள் தான்! அது குருவருள் தான். அது திருவருள் செல்வம்தான்!

இப்படியே இன்னும் ஒரு கதை உண்டு. குரு சீடருக்கு ஒரு கல்லைக் கொடுத்தார், அது விலையுயர்ந்த கல் என்பதை அறியாத சீடர் அதை ஒரு மூலையில் போட்டு வைத்தார். அந்தக் கல்லைக் கண்ட ஒருவர் அது ஐம்பது ரூபாய் பொறுமானமுள்ளது என்றார். உடனே சீடன் அதை பத்திரப்படுத்தினான். ஒரு கைப்பெட்டியில் வைத்தான். ஒரு வியாபாரி அதைப் பார்த்தான். அது ஐநூறு ரூபாய் மதிப்புள்ளது என்றான். சீடன் அதை தன் பீரோவில் வைத்து பூட்டி வைத்தான். அதை ஒரு அறிவாளி கண்டு, ஐயாயிரம் ரூபாய்க்கு மேல் மதிப்பு போட்டார். உடனே சீடன் அதை இரும்புப்பெட்டியில் பத்திரப்படுத்தினான். அதன் லக்ஷணத்தையும் அருமையையும் கண்ட ஒரு அரசன் அதற்கு ஐந்து லக்ஷம் ரூபாய் கொடுத்து வாங்கிச் சென்றார். எப்படி சீடரின் அதிர்ஷ்டம்? குருவின் செயலை சீடன் மறக்க முடியுமா? குரு எது கொடுத்தாலும் அது விலையுயர்ந்த பொருளாகவே இருக்கும். அதன் அருமையும் பெருமையும் போகப் போகத் தெரியும்.

## 6. கொடுத்துவைத்தவர்

சாமிகளோடு ஒரு சமயம் திருவானைக்காவலுக்கு சில பக்தர்கள் சென்றனர். அகிலாண்டேஸ்வரி சந்நிதானத்தில் சாமிகள் ஒரு பக்தர் கைகளில் தன் கையை பிசைய அகிலாண்டேஸ்வரி குங்குமம் சாமிகள் திருக்கரத்தினின்றும் பெய்து பக்தர் கரத்தை நிறப்பியது. பக்தர் இல்லத்திற்குச் சாமிகளோடு திரும்பியவுடன் தன் பாக்கியத்தைப்பற்றி சாமிகளிடம் உரைத்து பெரு மகிழ் வெய்தினர். சாமிகள் அப்போது கூறிய கதை ஒன்று பக்தர் பாக்கியத்தை விளக்க உதவியது. ஒரு காட்டில் ஒரு விசேடமான மரம். அது ஆயிரம் வருடங்களுக்கு ஒரு முறைதான் ஒரு பழத்தைக் கொடுக்கும். அதைச் சாப்பிட்டவர்களுக்கு சகல சக்திகளையும் கொடுக்க வல்லது அந்தப் பழம். இந்தப் பழத்திற்காக ஒரு ரிஷி இதே வேலையாக மரத்தினடியில் உட்கார்ந்திருந்தார். இந்த மாம்பழத்தின் மகிமையை கிருஷ்ண பரமாத்மாவிடமிருந்து தெரிந்து கொண்ட பீமன் மரத்தினடிக்குச் சென்றார். அப்போது வெகுகாலமாகப் பழத்திற்கு ஏங்கியிருந்த ரிஷி அவசரமாக மலங்கழிக்க அவ்விடத்தை விட்டுச் சென்றார். அப்போது தன் கையில் விழுந்த ஆயிரம் வருடத்துப் பழத்தை பீமன் அடைந்து தன் சகோதரர்களுடன் அதைப் பகிர்ந்து சாப்பிட இருக்கும்போது மலம் கழிக்கச் சென்ற ரிஷி பழம் விழுந்த விபரம் அறிந்து பழத்திற்காகப் பஞ்சபாண்டவர் இருந்த இடத்திற்கு ஓடோடி வந்தார். அவரைக் கண்ட கிருஷ்ணபரமாத்மா "இந்தப் பழம் உமக்குக் கிடைக்க வேண்டியது தான், இருந்தாலும் அதைச் சாப்பிட நீர் தகுதி இல்லாதவராக இருக்கின்றீர்" என்று கூறி, பஞ்சபாண்டவர்களையே அப்பழம் அடைய அனுக்கிரகம் செய்தார் கிருஷ்ணன். இந்த

அருள் குங்குமத்திற்காக எவ்வளவோ பேர்கள் காத்திருக்கின்றனர். ஆனால் நீங்கள் கொடுத்து வைத்தவர். அது உங்களுக்கு கிடைக்கின்றது.'' என்று சொல்லி சாமிகள் கதையை முடித்தார்.

## 7. ரங்கன் நிலை :

ஒரு தாசில்தார் வீட்டில் ரங்கன் என்றொரு பணியாள் வேலை செய்துவந்தான். ஒரு நாள் திடீரென்று அவன் மறைந்து விட்டான். பலநாட்கள் கழித்து மறுபடியும் தாசில்தார் வீட்டுக்கு வந்தான். அவன் நிலையே மாறிவிட்டது. கழுத்தில் உருத்திராட்ச மாலை, நெற்றியிலும், உடம்பிலும் விபூதி, முகத்தில் சாந்தம், பேச்சில் அமைதி, செயலில் செழுந்தன்மை — இப்படி இருந்தான் ரங்கன். இதைப்பற்றி தாசில்தார் மனைவி தாசில்தாரிடம் பேசிக் கொண்டிருந்தாள்.

மனைவி : ரங்கன் மாறிவிட்டதைப் பார்த்தீர்களா?

தாசில்தார் : ஆம், நம் வீட்டில் வேலை பார்த்த பழைய ரங்கன் அல்ல இந்த ரங்கன். இப்போது நம் வீட்டுக்கு வந்திருப்பது ரங்கநாதன்.

மனைவி : என்ன, நீங்கள் கூட அவனுக்கு அவ்வளவு மரியாதை வைத்து, அவனை நாதனாக மாற்றுகின்றீர்கள்!

தாசில்தார் : அன்று படிக்காத ரங்கன் ; பண்பில்லாத ரங்கன் பக்குவமில்லாத ரங்கன். இன்று அவன் ரங்கநாதன்தான். சச்சிதானந்தன், பரம்பொருள் மெய்யன். அன்று அவனிடமிருந்து நிறைய வேலை வாங்கினோம். இன்று அவரைத் தொழவேண்டும்.

மனைவி : இப்படியும் உண்டா கூத்து?

தாசில்தார் : உலகத்தில் எவ்வளவோ நடந்துவருகின்றன. எவ்வளவோ மாறுதல்கள் ஏற்படுகின்றன. உன்னையே எடுத்துக் கொள். நீ எனக்கு கல்யாணம் ஆவதற்கு முன் ஒரு ஏழைக் குடியில் பிறந்து கஷ்டப்பட்டு உழைத்தாய். உனக்கும் எனக்கும் கல்யாணமானது. உன் நிலை மாறிவிட்டது. தனியாக இருந்தவள் நிலை தாரமான நிலைக்கு மாறிவிட்டது. ஏழையாயிருந்தவள் நிலை பதவியாளன் மனைவி நிலைக்கு மாறிவிட்டது. ஒன்றுமில்லாதிருந்த உன் நிலை வைர நகைகள் அணிந்து கொள்ளும் அளவுக்கு மாறிவிட்டது. அப்படித்தான் ரங்கன் நிலையும். அன்று செல்வமற்றிருந்தான். இன்று அருட்செல்வராக மாறிவிட்டான். தக்க குருவிடம் உபதேசம் பெற்ற ரங்கன் நிலை ரங்கநாத நிலைக்கு உயர்ந்து விட்டது. அவன் நிலை துறவிக்கு வேந்தன் துரும்பு என்ற கதையாகிவிட்டது. அவனை மற்றவர்கள் வணங்கும் அளவுக்கு அருள் பீடம் அடைந்து விட்டான் ரங்கன்.

## 8. சமயோசித புத்தி (ஒன்று)

சமயோசித புத்தியை விளக்க சாமிகள் அடிக்கடி பல கதைகள் உரைப்பதுண்டு. ஒரு நாட்டில் ஒரு அழகான விலையுயர்ந்த குதிரை இருந்தது. அதை இராஜா வாங்கி வைத்திருந்தார். அக்குதிரை அதன்பின் எப்படியோ மந்திரி வீட்டிற்கு வந்து சேர்ந்தது. தனக்குச் சொந்தமான குதிரை மந்திரி வீட்டில் இருக்கக்கண்ட மன்னன் சபையைக் கூட்டி விசாரித்தார். சபையில் ஒருவர் வெகு சாமார்த்தியமாக தன் பதிலை அமைத்துச்சொன்னார். அரசனையும் பகைத்துக் கொள்ளக்கூடாது. மந்திரியையும் காட்டிக் கொடுக்கக் கூடாது. குதிரையைக் கண்டதும் "இக்குதிரையை முன்னால் பார்த்தால் இராசாக் குதிரை பின்னால் பார்த்தால் மந்திரிக் குதிரை" என்றார், அதன் அங்கலக்ஷணத்தின் அமைப்பைக் குறிப்பிடுவது போன்று. அதாவது அதன் உடல் அமைப்பைக் கவனிக்கும்போது முன்னால் பார்த்தால் அது இராசாவினுடைய குதிரையைப் போன்றும், பின்னால் பார்த்தால் மந்திரியினுடைய குதிரையைப் போன்றும் இருப்பதாக கெட்டிக்காரத்தனமாக உரைத்தார். அவர் சொன்ன பதிலில் மற்றொரு அர்த்தமும் தொனிக்கும்படியாகவும் உரைத்தார். "முன்னாளில் பார்த்தால் இராஜா குதிரை பின்னாளில் பார்த்தால் மந்திரி குதிரை" என்ற பொருள் படவும் அவர் அளித்த பதில் அமைந்திருந்தது, அதை கொஞ்ச காலத்திற்கு முன் (முன்னாளில்) பார்க்கும் போது அது இராஜாவிடம் இருந்தது, அதை சமீபத்தில் (பின்னாளில்) பார்க்கும்போது மந்திரியிடம் அது இருந்தது என்று பொருள் படவும் இந்த வாக்கியம் அமைந்துள்ளது. இதைப் பார்க்கும்போது மதில்மேல் உள்ள பூனையைப் போன்று விளங்கும் ஒரு ஆங்கில வாசகம் நினைவுக்கு வரலாம். "இரண்டு பக்கமும் சொல்ல நிறைய விஷயமுண்டு." (Much may be said on both sides) எனபதே அந்த ஆங்கில வாசகம்.

## சமயோசித புத்தி (இரண்டு)

ஓர் ஊரில் அறிவாளி புலவர் இருந்தார். அவர் வழுக்கைத்தலை பணக்காரன் ஒருவனைப்பற்றி பாடி அவனிடமிருந்து பெரும் பரிசு பெற்றார். யானையுடனும் பத்தாயிரம் பொன்களுடனும் செல்லும் இக்கவிஞனைக் கண்டு பொறாமை கொண்ட மற்றொருவன், பணக்காரரிடம் விரைந்து சென்று "அந்தப் பிச்சைக்காரப்பயல் உங்களை வழுக்கைத்தலையன் என்று ஏளனமாகப் பேசிச் செல்கின்றான்" என்று கூற, ஆத்திரப்பட்ட வழுக்கைத்தலைப்பணக்காரர் தான் கொடுத்த யானையின்மீது தான் கொடுத்த பத்தாயிரம் பொன்களுடன் செல்லும் கவிஞனைத் தொடர்ந்து ஓடினார். உண்மையை அறிந்து கொண்ட கெட்டிக்கார கவிஞர் "குடுமி அவிழ அவிழ இப்படி ஏன் நீங்கள் ஓடி







1. அமர்ந்த திருக்கோலத்தில் அபயகரத்தோடு சாமிகள்
2. சாமிகளோடு இந்நூலாசிரியர் திரு. T.D. மீனாட்சிசுந்தரம் (பி.ஏ., பி.எல்.) அவர்கள்
3. சாமிகளோடு டாக்டர் திரு. T.V. அரங்கநாதன் M.B.B.S., L.O., (MADRAS) Z.O., (VIENNA) D.O., (LONDON) அவர்களும் இந்நூலாசிரியர் திரு. T. D. மீனாட்சிசுந்தரம் அவர்களும்.

*" மண்ணுலகை விண்ணுலகாய் மலரச்செய்யும்*
*மார்க்கத்தை அறிந்துதவும் மனிததெய்வம்*
*கண்ஈந்து குருடர்களை வாழவைக்கும்*
*குவலயத்தில் ஊமைகளைப் பேசவைக்கும்*
*சென்றவிடம் எங்கும்பல அற்புதங்கள்*
*சென்றுநலம் அருளுகின்ற ஞானவேந்தே*
*பன்றிமலை சாமிஎங்கள் பிராணநேயா*
*பாதமலர் அருளுகின்றோய் போற்றி போற்றி "*

(திரு. T. D. மீனாட்சிசுந்தரம்)



அன்னையார் அவர்களோடும் சாமிகளோடும் நடிகர்திலகம்
பத்மஸ்ரீ சிவாஜிகணேசன் அவர்கள்.

வரவேண்டும் என்று யானையை விட்டிறங்க, பணக்காரர் 'இப்படிப் பட்டவரா தன்னை ஏளனம் செய்திருக்கக்கூடும், இருக்காது' என்று நினைத்து அவரை வழியனுப்ப வந்ததாகக் கூறி தன் மாளிகையை அடைந்தார். என்னே புலவரின் சமயோஜித புத்தி!

### சமயோசித புத்தி (மூன்று)

ஒரு ஆட்டுக்குட்டி. அது நொண்டி ஆட்டுக்குட்டி. ஆனால் கெட்டிக்கார ஆட்டுக்குட்டி. மந்தையுடன் செல்ல முடியாது தனித்திருந்த ஆட்டுக்குட்டியைக்கண்டது ஒரு நரி. நரியைக்கண்டு கொஞ்சம் கூட தன் பயத்தைக் காட்டிக் கொள்ளாத செம்மரி ஆட்டுக் குட்டியிடம் நரி பேசியது.

"சிம்சிம்சான் செம்பிலிக்குட்டி
இப்படி ஏன் படுத்திருக்கே" என்னுச்சான்

(என்று கேட்டதாம்) நரி, நானும் பத்து நரியை தின்னுபுட்டு நடக்க மாட்டாமே கிடக்குறேன் என்னுச்சான் (என்று சொன்னதாம்) செம்பிலியாட்டுக்குட்டி. இதைக் கேட்ட நரி, பத்து நரியை அடித்துச் சாப்பிட வல்ல ஆட்டினிடம் தன் ஜம்பம் பலிக்காது என்று நினைத்து நழுவிவிட்டதாம் அந்த இடத்தை விட்டு. இக்கதையைக் கூறிய சாமிகள் இந்தக்கதையுள் பொதிந்துள்ள பர அர்த்தத்தையும் விளக்கினர்.

சாமிகள்: சிம்சிம்சான் செம்பிலிக்குட்டி யார்? வாசியை அடக்கி ஆளுகின்ற யோகியர்தான் அவர். சிம்சிம்சான் என்பது மூச்சை விளக்கும். நடக்கமாட்டாமே படுத்து கிடக்கின்ற நிலை தூங்காமல் தூங்கும் யோகநிலையை உணர்த்தும். பத்துநரியை தின்றது, உண்மையில் பத்து நரிகளை அடித்துத் தின்றதை உணர்த்தாது. அது பக்தி நெறியைத்தான் உணர்த்தும். பத்து நரி பக்தி நெறி தான்! எப்படி இந்த பரம் பொருள் விளக்கம்?

"முக்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனை
பக்திநெறி அறிவித்து பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்து சிவமாக்கி யெனையாண்ட
வத்தனெனக் கருளியவாரூர் பெறுவாரச் சோவே."

## 9. ஆபத்துக்குதவும் நண்பன் :

ஒருவருக்கு இடுக்கண் வரும் போது அதினின்று காப்பாற்றுப பவனே உண்மையான நண்பன். இடுக்கண் களைவதே நட்பு. இப்படி ஒரு நண்பன் வாய்த்து விட்டால் 'இடுக்கண் வருங்கால் நகுக' ஆரம்பித்து விடுவன் ஒருவன். உண்மையான நட்பு வெறும் சொற்களோடு நின்று விடுவதில்லை. இதை விளக்க ஒரு கதையே

உண்டு. பல நாட்கள் பழகிய இருவர் ஒரு காட்டில் சென்றனர். ஒரு கரடியைக் கண்டு மரம் ஏறத் தெரிந்தவர் மரத்தில் ஏறிக் கொண்டார்; மரம் ஏறத் தெரியாதவர் இறந்தவன்போல் மூச்சைக் கட்டி தரையில் மல்லாந்து விட்டான். வெகுவேகமாக வெகு ஆசை யோடு, படுத்திருந்தவனை சாப்பிடலாம் என்று ஓடி வந்த கரடி அவனைப்புரட்டிப் பார்த்தது, காதையும் முகத்தையும் முகர்ந்து பார்த்தது. அவன் உண்மையிலேயே பிணம் என்று கருதி கரடி அவனை விட்டு அகன்றது. கரடி சென்றவுடன் மரத்திலிருந்து இறங் கியவன் தரையில் படுத்திருந்தவனை எழுப்பி "கரடி உன் காதில் என்ன சொல்லிற்று" என்று கேட்டான். "ஆபத்துக்குதவாத நண்பனை நம்பாதே.

"முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு"

என்பதை மறந்து விடாதே" என்று கரடி எனக்கு புத்தி புகட்டி யது" என்றான் தரையிலிருந்து எழுந்தவன், இந்த கலியுகத்திலும் ஆபத்துக்குதவ முருகனும் ஓடோடி வருகின்றான். வெங்கடேசப் பெருமானும் ஓடோடி வருகின்றான். அன்று மட்டுந்தானா கிருஷ்ணன் வடிவத்தில் நல்ல சிநேகிதனாக பரம் பொருள் அர்ச்சுனனுக்கு உதவினான்? அன்று மட்டுந்தானா சிநேகிதனாக திருவாரூர் ஈசன் சுந்தரருக்கு உதவினார்? இன்னும் அப்படியே தெய்வங்கள் தன்னையே நம்புகின்ற பக்தர்களுக்கு உதவ ஓடோடி வருகின்றனர். ஆபத்தில் உதவுகின்றனர். ஆபத்தில் உதவுகின்ற ஆண்டவனை நம்புங்கள்.

## 10. சாயம் வெளுத்த கதை

உண்மையை வெகுநாள் மூடிவைக்க முடியாது. இதற்கும் ஒரு கதை கூறுவதுண்டு. ஒரு நரி ஒன்று சிரமப்படாமல் ஆட்டுக்குட்டி களை கொன்று சாப்பிட ஒரு யோசனை செய்தது. தன்னை நரி என்று காட்டினால்தானே ஆட்டுக்குட்டிகள் பயந்து ஓடிவிடுகின்றன. நரி நிறத்தையே மாற்றிவிட்டால்? அதன்படியே அது தன் உடல் முழுதும் ஊதா நிறமாக்கிக் கொண்டது. ஊதா நிறத்தில் உள்ளது நரி என்பதை உணராத ஆட்டுக்குட்டிகள் அந்த நூதன மிருகத் தோடு நட்புகொண்டு பழகலாயின, புத்திசாலியான நரி பகலில் ஆட்டுக்குட்டிகளோடு குழைந்து குழைந்து பேசி இரவில் அவைகளை ஒவ்வொன்றாக புசித்து கொழுத்துவிட்டது. இதை அந்த ஆடுகளும் கவனிக்கவில்லை, ஆட்டை மேய்ப்பவர்களும் கவனிக்கவில்லை. ஒரு நாள் சாயம் வெளுத்துவிட்டது. நல்ல மழை, மழையில் உடல் முழு தும் நனைந்து நரியின் உடலில் இருந்த ஊதா சாயம் கரைந்துவிட்டது. அதன் சுய நிறத்தைக் கண்டுகொண்ட இடையர் களுக்கு அது நரி என்பது புரிந்தது. அப்போதுதான் நாளடைவில்

ஆட்டுக்குட்டிகள் எண்ணிக்கை சுருங்கி வந்ததற்கும் விளக்கம் தெரிந்தது. நரி ஓட்டம் எடுப்பதற்கு முன்பாகவே அதை அடித்து நொறுக்கி ஒழித்துவிட்டனர் ஆத்திரமடைந்த இடைச் சிறுவர்கள். ஒருவரை ஒருநாள் ஏமாற்றலாம். பலரை பல நாட்களும் ஏமாற்ற முடியுமா? கள்வன் என்றைக்கிருந்தாலும் பிடிபடுவான்.

## 11. விற்கவந்த வியாபாரி கொடையாளியானது

ஒருநாள் ஒரு டாக்டர் அம்மாள் சாமிகளோடு பேசிக்கொண்டிருந்தபோது தனக்குத் தெரிந்த ஒருவருக்கு ஒரு தொகையைக் கடனாகக் கொடுத்தது பற்றியும், அந்தத் தொகை திரும்பிவராததைப் பற்றியும், அதனால் அவர் மனம் வருத்தப்படவில்லை என்பதைப் பற்றியும் கூறி " நானே அவருக்கு உதவி செய்ய பணத்தை சன்மானமாக கொடுத்து விட்டதாக நினைத்துக்கொண்டேன் " என்று சொல்லி முடித்தார். அந்த அம்மாள் நிலையை விளக்க சாமிகள் உடனே ஒரு கதையைச் சொன்னார். ஒருவன் முயல்களைப் பிடித்து விற்றுக்கொண்டு வந்தான். அவன் எதிரில் மற்றொருவன் குதிரையில் ஏறி சவாரி செய்து கொண்டு வந்தான். " முயல் என்ன விலை " என்று கேட்ட குதிரை ஆசாமியிடம் ஒவ்வொரு முயலும் இரண்டு ரூபாய் என்று சொல்லி இரண்டு முயல்களை அவன் கைகளில் கொடுத்தான் முயல் வியாபாரி. முயல்கள் தன் கைக்குக் கிடைத்தவுடன் குதிரைமீதிருந்த ஆசாமி திடீரென்று குதிரையை அவ்விடத்தினின்றும் கிளப்பினான். குதிரை வெகு வேகமாக ஓட ஆரம்பித்தது. பார்த்தான் முயல் வியாபாரி. அவனிடம் விற்க வேண்டிய முயல்கள் ஏராளமாக ஒரு கூடையில் இருந்தன. அவற்றைக் கீழே வைத்து விட்டு ஓடுவதா! ஏமாந்தது ஏமாந்துவிட்டான். குதிரைக்காரனோடு சென்ற முயல் வரப்போவதில்லை. பணமும் வரப்போவதில்லை. தானும் எவ்வளவு வேகமாக ஓடினும் குதிரையைப் பிடிக்க முடியுமா? தான் ஏமாந்துவிட்டதை சமாளித்துக்கொள்ள குதிரைமீது ஓடுகின்ற நயவஞ்சகனைப் பார்த்து " நான் கொடுத்த இரண்டு முயல்களையும் உனக்கு இனாம் கொடுத்து விட்டேன். சுகமாக மெதுவாகப் போ, ஓடாதே, குதிரைக்கு கால்வலிக்கும் " என்றான். ஆனால் உண்மையிலேயே மனநிறைவோடு முயல் வியாபாரி அவ்வார்த்தைகளை ஆசிகூறுவதுபோல சொல்லி இருப்பானா? உடைந்த மனத்தோடு தான் அப்படிச் சொல்லி இருப்பான். எவ்வளவு கஷ்டப்பட்டு முயல்களைப் பிடித்து வந்திருப்பான்? அதே நிலையில்தானம்மா பணத்தை பறிகொடுத்த நீங்களும் இருக்கின்றீர்கள் என்று சாமிகள் கதையைக் கூறிமுடித்தார்.

## 12. அதிக ஆசை அதிக நஷ்டம் :

பேராசைக்காரன் ஒருவனுக்கு ஒரு சமயம் லட்சரூபாய் லாட்டரி பரிசு கிடைத்தது. அந்தப் பரிசு தனக்குக் கிடைத்தால் ஒரு தேங்காய் விநாயகருக்கு உடைப்பதாக அவன் வேண்டிக் கொண்டிருந்தான். அந்தத் தேங்காயையும் இலவசமாக அடைய எண்ணினுன் பேராசைக் காரன். ஒரு குளக்கரையில் ஒரு தென்னமரம் குளத்திலுள்ள தண்ணீர் மட்டத்திற்கு மேலே சாய்ந்து நின்றது. அதில் ஏறி, தேங்காய் ஒன்றை திருகி எடுக்க முனைந்தவன் வழுக்கி கீழே விழுந் தான். உடனே மரத்திலிருந்து தொங்கும் மட்டையைப் பிடித்து தொங்கினுன். அப்பொழுது குதிரை வியாபாரி ஒருவன் குதிரைமீது சவாரி செய்து வந்தான். "ஏனப்பா இப்படி தொங்குகிருய்" என்ருன். நிலைமையை சமாளித்துக் கொள்ளவும் தன்னைக் காப்பாற் றிக்கொள்ளவும் நினைத்த பேராசைக்காரன் 'நான் சும்மா காத்தாட ரேன்' என்று பொய் சொல்லி குதிரை வியாபாரியிடம் குதிரையைப் பற்றி விசாரித்தான். வியாபாரி பேசிக்கொண்டே தன் குதிரையை பேராசைக்காரன் தொங்கிக் கொண்டிருக்கும் இடத்திற்கு கீழே ஓட்டிவந்து குளத்துத் தண்ணீரில் நிறுத்தினுன். "நீ குதிரைமீது நின்ருல் நான் உன்தோள்மேல் காலை வைத்து இறங்கி விடுகிறேன்" என்ருன் பேராசைக்காரன். அதன்படியே குதிரையில் உட்கார்ந் திருந்த வியாபாரி குதிரைமீது நின்ருன். அப்போது குளத்தில் இருந்த முதலை ஒன்று குதிரை காலை பிடிக்க குதிரை சரேல் என்று அந்த இடத்தைவிட்டுப் பாய்ந்து ஓடிவிட்டது. மரத்தில் தொங்கிக் கொண்டிருந்த பேராசைக்காரன் காலைப்பிடித்துக் கொண்டு தொங்கினுன் வியாபாரியும். இரண்டுபேர் பாரத்தைத் தாங்கமுடியாத மட்டையும் மடமடவென்று முறிய ஆரம்பித்தது. "நானு தொங்கி னுலும் பிழைத்திருப்பேன். நீ வேறே என்காலைப் பிடித்து தொங்கு கிருயே. பிழைப்பேனு" என்ருன் பேராசைக்காரன். நண்பரே! மட்டையை கெட்டியாகப் பிடியும், கீழே முதலை இருக்கிறது என்று கூறி பேராசைக்காரன் கால்களை மேலும் கெட்டியாகப் பிடித்தான் கீழே தொங்கும் வியாபாரி. மட்டை முறிந்து விழுந்தது. இரண்டு மனிதர்களும் தண்ணீரில் மூழ்கினர். பேராசைக்காரனேடு அவன் மடியில் இருந்த ஒரு லட்ச ரூபாய் பணக்கட்டுகளும் தண்ணீரில் மூழ்கின. இக்கதை 'பேராசை பெரு நஷ்டம்' என்பதை அல்லவா விளக்குகின்றது.

## 13. உலக பாசம் :

'உலகத்தில் உள்ள பற்றும் பாசமும் அன்பும் காதலும் மதிப்பும் மரியாதையும் எல்லாம் ஒருவன் உயிருடன் இருக்கும் வரையில்தான். ஒருவனுக்கோ ஒருத்திக்கோ தன் உயிரைவிடச் சிறந்தது வேறென் றும் இல்லை' என்று ஒரு மகான் உரைத்தார். இதைக்கேட்ட சீடனுக்கு

குரு கூறிய மொழிகளில் நம்பிக்கை இல்லை. "அப்படியும் இருக்குமா?" என்றான் சீடன். 'நான் நிரூபிக்கிறேன்' என்றார் குரு. குருவின் சொல்படி சீடனும் நடந்தான். திடீரென்று ஒரு நாள் மொழியற்று செயலற்று படுத்துவிட்டான். 'அவன் இனி எழமாட்டான்' என்று உரைத்தார் குரு. 'சாமி எங்களது ஒரே மகன். அவனை எப்படியாவது காப்பாற்றுங்கள்' என்று கதறினர் பெற்றோர். 'சாமி என் புருஷனை உயிர்பெறச் செய்யுங்கள். அவர் இல்லாமல் நான் வாழ முடியாது" என்றாள் சீடரின் அருமை மனைவி. 'சாமி, நீங்கள் சித்தர். எப்படி யாவது இவருக்கு உயிர்ப் பிச்சை அருளவேண்டும்' என்று எல்லோரும் குருவின் காலில் ல்விழுந்தனர். குரு சற்று யோசனை செய்வது போல் இருந்தார். 'இதற்கு ஒரே வழிதானுண்டு' என்றார் குரு. 'அதென்ன வழி' என்று யாவரும் முந்திக் கொண்டனர். 'யாராவது ஒருவர் அவருக்காகத் தங்கள் உயிரைத் தருவதாயிருந்தால், உயிர்த் தியாகம் செய்தால் அவர் பிழைத்து விடுவார்' என்றனர் குரு. அது வரை கணவன் பக்கத்திலேயே அமர்ந்திருந்த ஆருயிர்க் காதலி (?) அடுத்த நிமிடமே இருந்த இடத்தில் இல்லை. வயதான அம்மாவும், 'நான் உயிர்விடத்தயார். ஆனால் நான் இறந்துவிட்டால் என் வயதான புருஷனை யார் கவனிக்கமுடியும்' என்றாள். வயதான அப்பாவும் 'நானும் உயிரைத் துறக்க தயங்கவில்லை. ஆனால் நான் இறந்து விட்டால் என் மனைவியை யார் கவனிப்பார்கள்' என்று கூறிவிட்டார். இவைகளை இறந்தவன்போல் பாசாங்கு செய்து கொண்டிருந்தவன் கேட்டுக் கொண்டே இருந்தான். 'எனக்காக யாரும் உயிரைக் கொடுக்க வேண்டியதில்லை' என்று எழுந்து உட்கார்ந்தான். 'தாங்களே கதி' என்று தன் அருள்நாதன் திருவடிகளில் விழுந்து வணங்கினான்.

ஒரு பெரிய தனவந்தர் ஒருவர் இருந்தார். அவருக்கு அவருடைய அழகான மனைவி மீது அளவு கடந்த பிரியம். தன்னுடைய மனைவியும் தன்மீது அவள் உயிரையே வைத்திருந்தாள் என்பது அவரது எண்ணம். இதை சோதிப்பதற்காக ஒரு நாள் மூச்சை இழுத்துப் பிடித்து சவம்போல் கிடந்தார். அவரை மயானத்திற்கு எடுத்துச் செல்ல சகல ஏற்பாடுகளும் நடந்தன. அவர் தனக்கு வேண்டிய ஒரு நண்பனிடம் உரைத்து வைத்தபடியே, நண்பரும் "அவர் கையில் உள்ள வைர மோதிரம் கையைவிட்டு வருவதாக இல்லை. அதை அப்படியே அவரோடு எரித்து விடலாமா?" என்றார் மனைவியைப் பார்த்து. "வைர மோதிரத்தை எரிப்பதா? அது விரலை விட்டு வரவில்லையென்றால் விரலை வெட்டி மோதிரத்தை தனியாக எடுத்து விடுங்கள்" என்றாள் ஆசை மனைவி. "அடி இது தானா உன் அன்பு" என்று வீறிட்டெழுந்தார் கணவர் தன் விரல் துண்டுபட்டுவிடும் என்பதை அறிந்து. இது போலவே ஒரு புருஷனின் அன்பை சோதிக்க ஒரு கதையும் சொல்வர். ஒரு அழகானப்

பெண். அவள் மேல் தன் உயிரையே தன் கணவன் வைத்திருந்த தாக அவள் கருதினள். ஒரு நாள் இதை சோதிக்க எண்ணினள். ஒரு பக்கம் காலும் கையும் உடம்பும் உதவாதது போன்றே கட்டை யெனப்படுத்து விட்டாள். அவள் ஏற்பாடு செய்திருந்த நான்கு டாக்டர்களும் அவள் சொன்னபடியே 'இது பச்சை வாதம். இதற்கு மருந்து கிடையாது. அவள் வாழ்வு பூராவும் அப்படியே இருக்க வேண்டியது தான்' என்றனர். அடுத்த நிமிடமே அருமைக் கணவர் (?) தன் அக்காளை அழைத்து "எனக்கு வேறு ஒரு பெண் ணைப் பார்த்து கல்யாணம் செய்து வையுங்கள்" என்று உரைத்து விட்டார். பச்சை வாதம் என்று படுத்துக் கொண்டிருந்தவள் சும்மா வாயிருப்பாள்? நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்.

## 14. அதிக ஆசை அதிக நஷ்டம்

ஒரு தாய்க்கு நான்கு குமாரர்கள் உண்டு. ஒவ்வொரு பையனும் நன்ருக சம்பாதித்து குடும்பம் நடத்திவந்தாலும் ஒவ்வொரு கண வரையும் தம் இஷ்டம்போல் நடத்தி வந்தனர் அவரவர் மனைவிகள். தாயும் கிழவியானதால் மருமகள்களும் மாமியாரை மதிப்பதும் இல்லை. இதை தனக்கு வேண்டிய பெரியவரிடம் சொல்லி வருத்தப் பட்டாள் தாய், பையன்கள் அன்பாக இருப்பினும் அவரவர் மனைவி மார்களை மீறி நடக்க முடியாத நிலையையும் பெரியவரிடம் சொல்லி வருத்தப்பட்டாள் கிழவி. பெரியவர் கிழவியினிடம் ஒரு இரகசியம் உரைத்தார். அதன்படியே தனக்குச் சொந்தமான ஒரு பெரிய பழைய பெட்டியில் நிறைய பெரியவர் குறிப்பிட்ட ஒரு பொருளை வாங்கி நிறப்பினள் கிழவி. அதற்கு ஒரு பெரிய பூட்டை போட்டு பூட்டினள். ஒவ்வொரு மகன் வீட்டிலும் ஒரு மாதம் தங்குவாள். நான்கு மாதத்திற்கொரு முறை ஒவ்வொரு பையன் வீட்டிற்கும் பெட்டியோடு வருவாள் தாய். "பெட்டியில் உள்ள பொருளை நீங்கள் நால்வரும் சரிசமமாக பகிர்ந்து கொள்ளுங்கள், நான் இருக்கும் வரை என்னுடன் பெட்டி இருக்கட்டும். நான் இறந்தவுடன் பெட்டி யைத் திறந்து எடுத்துக்கொள்ளுங்கள்" என்று கூறி வந்தாள் தாய். பெட்டிக்குள் இருக்கும் பொருள் தங்கமோ, வெள்ளியோ, நகைகளோ, கட்டு நோட்டுகளோ என்று ஏங்கித் தவித்த மருமகள் கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு மாமியாரை கவனித்து வந்தனர். இதனல் மாமியாருக்கு அளவற்ற மரியாதை, தேவைக்குமேல் உணவும் விருந்தும். இப்படி எவ்வளவோ நான்கு மாதங்கள் சென்றன. ஒரு நாள் பாட்டி இறந்தாள். அவளுடைய ஈமச்சடங்குகளையும் வெகு விமரிசையாக நடத்தினர் நான்கு மைந் தர்களும். அதன்பின் தம் ஆசை மனைவியர்களோடு தாயின் பழைய பெட்டியை வெகு கஷ்டப்பட்டு வெகு ஆவலுடன் திறந்து பார்த் தனர். பெட்டி நிறைய காரீயம் இருப்பதைக் கண்ட மருமகள்களுக்கு

வயிற்றெரிச்சலும், ஏமாற்றமும்தான்! ஆனால் பையன்களுக்கு உள்ளுக்குள் பரமானந்தம்! அம்மா, தன் கெட்டிக்காரத்தனத்தால் உயிரோடிருந்தவரை மதிப்பாக வாழ்ந்தாள், நன்றாக உண்டு வாழ்ந்தாள் என்று நான்கு மகன்களும் கூடிப்பேசி தம் உள்ளத்தில் பொங்கிய மகிழ்ச்சியை அறிவித்துக்கொண்டனர். "ஏன் இப்படி மகிழ்ச்சி" என்ற மனைவியரின் இடியோசையைக்கேட்ட நால்வரும் பாம்புபோல் பயந்து "மகிழ்ச்சியா, இந்த வேதனையை யாரிடம் சொல்வது என்று வறட்டுச் சிரிப்பு சிரித்தோம்" என்று வெகு கெட்டிக்காரத்தனமாக பேசி நிலைமையை சமாளித்தார்கள் நான்கு புதல்வர்களும்.

## 15. கர்வபங்கம் :

'நான்' என்ற கர்வம் யாருக்கும் கூடாது. உலகத்தில் நல்லவர்கள் உயர்ந்தவர்கள் என்று கூறுபவர்களிடத்தில் கூட இந்தக் கர்வம் அவர்களையுமறியாமல் வந்து விடுகின்றது. தருமர், அர்ச்சுனன், நாரதர், பீமன் இவர்களுக்குக் கூட இந்த 'நான்' எனும் அகந்தை அடங்கிவிடவில்லை. கிருஷ்ண பகவான் இவர்களுக்குத் தகுந்த பாடம் கற்பிக்க வேண்டிய நிலையும் ஏற்பட்டது.

தருமர் ஒரு காருண்ய மூர்த்தி. அவரிடம் ஆயிரம் பேருக்கு சாப்பாடு தருகின்ற அட்சய பாத்திரம் ஒன்றிருந்தது. அதை நினைத்த தருமருக்கு தான் தானமளிக்கும் நிலை மனத்தில் தலை தூக்கியது. மகாபலிச் சக்கரவர்த்தி தருமத்திற்குத் தலை சிறந்தவர் என்று அறிகின்றோம். அவருடைய நாட்டில் பிச்சை வாங்குவதற்கே ஒரு ஆள் கூட கிடையாது. அங்கு எல்லோரும் செல்வந்தர்கள் என்பதைக் கேட்ட தருமருக்கு அகந்தை உடனே ஒழிந்தது.

அர்ச்சுனன் வில் வித்தையில் தனக்கு நிகரில்லை என்ற நெஞ்சழுத்தம் கொண்டிருந்தான். "இராமர் வில்லின் செல்வர் என்று சொல்கின்றனரே, அவர் வில் பலத்தால் அம்புகளை பாலமாக அமைத்துக் கொடுத்திருக்கலாமே" என்று எண்ணினார் பார்த்திபன். அவருடைய கர்வம் தன் கை பலம் கொண்ட பான பலம் கொண்டே அம்புகளால் ஒரு பாலம் அமைத்தது. "இந்தப் பாலம் ஒரு குரங்கைத் தாங்குமா?" என்று கேட்டார் கிருஷ்ண பகவான், அர்ச்சுனன் மமதையால் சிரித்தான். அனுமான் குதித்துக் கொண்டு வந்தார். பாலத்தின் மீது ஏறினார். பாலம் அனுமான் பலத்தை தாங்கமுடியாமல் இருந்த இடம் தெரியாது அழிந்தது. இதைக் கண்ட அர்ச்சுனன் மமதையை அன்றே ஒழித்தான். அனுமனை குருவென மதித்தான். ஆஞ்சநேயர் கொடியையும் கொண்டான்.

நாரதருக்கும் ஹரிகிருஷ்ண பக்தியில் சதாகாலமும் சிந்தித் திருப்பதில் தன்னை மிஞ்சுபவர் ஒருவருமில்லை என்ற எண்ணம் உதித்தது. கிருஷ்ணபகவான் நாரதரை தைலப்பன் என்பவரிடம் அனுப்பினார். தைலப்பன் என்பவர் செக்கில் எண்ணெய் ஆட்டிக் கொண்டிருந்தார். 'இருந்திருந்தும் எண்ணெய் ஆட்டியிடமா என்னை பகவான் 'அனுப்பினார்' என்று மனம் புழுங்கினார் நாரதர். அந்த எண்ணெய் ஆட்டியிடம் அப்படி என்ன விசேடம் உண்டு என்பதை அறிய ஆவல் கொண்டு கிருஷ்ணனையே கேட்டார். "நான் சதாகாலமும் ஈஸ்வர நாமத்தையே பஜனை செய்து வருகின்றேன். தைலப்பரோ வேலையே பிரதானம் என்று இருக்கிறார். அவரிடம் உள்ள பக்தி எப்படி" என்று கேட்டார். கிருஷ்ணன் ஒரு எண்ணைச் செம்பை நாரதரிடம் கொடுத்து ஒரு சொட்டு எண்ணெய் கூட கீழே விழாமல் எடுத்து வரும்படி சொன்னார். கண்ணும் கருத்தும் எண்ணெயில் பொருந்த ஒரு சொட்டும் சிந்தாமல் செம்பை கொண்டு வந்தார். அவர் புத்தி பூருவும் எண்ணெயில் இருந்த நேரத்தில் அவர் ஈஸ்வரனை மறந்தார்." தைலப்பன் தலைக்கு தண்ணீர் விட்டு காலை, மத்தியானம், மாலை கிருஷ்ணு என்று மனப்பூர்வமாக ஆண்டவனை வணங்குவது தவிர மற்ற நேரங்களில் செக்கில் உழைப்பார். அந்த மூன்று வேளையும் அவர் மனம் என்னிடத்தில் தான் லயித் திருக்கும்." என்று கிருஷ்ணன் சொன்ன வார்த்தைகள் நாரதருடைய கர்வத்தை விரட்டிவிட்டது சிறிது நேரமாகிலும் நெஞ்சம் நிறைந்த பக்தரல்லவா தைலப்பர்! இவரல்லவா உண்மை பக்தர் என்று தைலப்பரை உளமார போற்றினார் நாரதர்.

பீமனுக்கும் புஜபல பராக்கிரமத்தில் தன்னை மிஞ்சுபவர் ஒருவரு மில்லை என்ற அகம்பாவம் உண்டு. ஒரு தரம் ஒரு தலைவாசலில் பஞ்சபாண்டவர்களும் பாஞ்சாலியும் நுழையவேண்டி இருந்தது. எல்லோரும் உள்ளே சென்றுவிட்டனர் பீமனைத் தவிர. வெகுநேர மாகியும் பீமன் வரவில்லையே யென்று மற்ற சகோதரர்களும் பாஞ் சாலியும் வெளியே வந்து பார்க்க அவர்களாலேயே அவர்கள் கண்டதையும் அவர்கள் கண்களையும் நம்பமுடியவில்லை. தலைவாசலில் உறங்குகின்ற காவலாளியின் மூச்சு பீமனை முன்னும் பின்னும் இழுத் தடிக்கின்றது. அந்த மூச்சுக் காற்றில் திணறிக்கொண்டு அல்லலுறு கின்றான் பராக்கிரமசாலி பீமன். இந்த நிகழ்ச்சி ஒன்று போதாதா பீமன் மனபோதையை அடக்க!

## 5. சாமிகள் உதயப் பொன் மொழிகள்

1. கடவுள் கண்டவர்க்குக் கற்கண்டு
   காணாதவர்க்குக் கல் குண்டு

2. கடவுள் எப்படி இருக்கின்றார்? எள்ளுக்குள் எண்ணெய் இருப்பதுபோல் இருக்கின்றார். எள்ளைச் செக்கில் இட்டு ஆட்டினால் எண்ணெயைப் பார்க்கலாம். அப்படிப் பாடு பட்டால்தான் ஆண்டவனையும் பார்க்க முடியும். எள்ளைச் செக்கில் இட்டு ஆட்ட எண்ணெய் வெளியிடுவதுபோல் நம் கருத்தை ஆட்ட ஆட்ட ஆண்டவனைக்காண முடியும்.

3. ஒரு பலா மரத்திலுள்ள பலாப்பழத்தை அடைவதற்கு மொசுர் என்ற செவ் எறும்பு கடியைப் பொறுத்துக்கொண்டு மரம் ஏறினால்தான் பலாப்பழம் எடுக்க முடியும். அது போன்றதுதான் கடவுளை அடைய எடுக்கும் முயற்சிகளும்.

4 ஈசனின் பெரியதன்மையை உணர்த்துகின்ற புராணங்கள் ஈசனின் அடிமுடியை அறிய முடியாதென்று வற்புறுத்தும். உண்மையில் கடவுள் எவ்வளவு பெரியவர்? கடவுள் மனிதனுடைய ஆசையை விட மிகப் பெரியவர்!

5. தண்ணீரில் கரைத்த உப்பு தண்ணீரில் எல்லா இடத்திலும் ஒரே மாதிரியாகக் கலந்து நிற்கின்றது. அதைப் போன்றதுதான் கடவுள் இயல்பும்.

6. கடவுள் என்னும் சொல் 'கட' என்ற சொல்லும் 'உள்' என்ற சொல்லும் இணைந்துள்ள கூட்டுச் சொல். எவன் அறிவை உள்ளே செலுத்துகின்றானோ அவனே கடந்து நிற்கும் ஆண்டவனை அடைய முடியும் என்பதை இச்சொல் உணர்த்துகின்றது.

7. ஆதி என்பது ஆகாசமாகின்றது. சக்தி என்பது இயங்க வைக்கும் பிராணன் ஆகின்றது. ஆகையால் ஆகாசமும் பிராணனும் சேர்ந்தே ஆதிசக்தி எனப்படும். அந்த ஆதி சக்திதான் கடவுள். கடவுள் என்ற சொல்லைப் பிரித்து ஆராய்வோம். கடவுள் என்ற சொல் 'கட' என்பதையும் 'உள்' என்பதையும் கொண்டுள்ளது. 'கட' என்பது என்ன? எல்லாவற்றையும் கடந்து நிற்பது; அது ஆகாயம். 'உள்' என்பது என்ன? உள்ளே நின்று இயங்க வைப்பது: அது பிராணன். அதுவே சக்தி. ஆக கடவுள் என்பது ஆகாயத்தையும் பிராணனையும் சேர்த்து காட்டுகின்றது. ஆக கடவுள் என்பது ஆதி சக்தியைக் குறிப்பிடுகின்றது. யோகம் நமக்கு எதைக் காட்டுகின்றது? கடவுளைக் காட்டுகின்றது. குண்டலினி சக்தி மேல் நோக்கிச் சென்று பரவெளிக்கே, மோன நிலைக்கே, இரவு பகலில்லா இடத்திற்கே, தூங்காமல் தூங்கி சுகம் பெறும் பீடத்திற்கே, சிவலோகத்திற்கே, நம்மை இழுத்துச் செல்கின்றது.

8. கடைசியில் பார்க்கப்போனால் நாம் எல்லோருமே கணக்குப் பிள்ளைகள்தான். மனிதன் முதற்கொண்டு தெய்வம் வரையிலும் எல்லோரும் கணக்குப் பிள்ளைகள்தான். ஆனால் நமக்கும் தெய்வத்திற்கும் ஒரு வித்தியாசம் உண்டு. மனிதன் மற்றவர்கள் செய்யும் குற்றங்களைக் கண்டு கணக்கெடுத்து வைத்துக்கொள்கின்றான், எப்பொழுது அவர்களைப் பழிவாங்கலாமென்று; கடவுள் நாம் செய்யும் புண்ணியச் செயல்களைக் கணக்கெடுத்து வைத்துக்கொள்கின்றார், எப்பொழுது நம்மைத் தன் அருட்கரங்கொண்டு அணைக்கலாமென்று.

9. கடவுளை நெருங்க நெருங்கச் சோதனைகள், கடுஞ்சோதனைகள், பரிசோதனைகள் ஓங்கி ஓங்கி வளரும். இவைகளைப் பொருட்படுத்தாமலும் சகித்துக் கொண்டும் கடவுளை நோக்கி நகரவேண்டும். அப்படிச் செய்தால்தான் கடவுளை அடையமுடியும்: கடவுளிடம் இரண்டறக் கலக்க முடியும்.

10. "நீயே நானாய் நானே நீயாய்" இரண்டறக் கலக்கும் போது மெய்ப் பொருள் அடையலாம். அதைக் கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்.

11. கடவுள் என்பவர் அவரவர்கள் பரிபக்குவ நிலைகளுக்குத் தகுந்தாற்போல் அமைகின்றார். ஒரு மயிலை எடுத்துக்கொள்வோம். சித்திரம் வரைபவன் அதைக் கண்டு படமாக வரைந்து இன்பம் காண்கின்றான். கவிஞன் அதன் அழகைக் கவிதை வடிவில் வருணித்து இன்பம் காண்கின்றான். வேடன் அதை இரையாக்கிச் சுவைத்து இன்பம் காண்கின்றான். பக்திமான் மயிலைத்தொழுது இன்பம் காண்கின்றான்.

12. நீ கடவுளை நோக்கி ஒரு அடி எடுத்துவைத்தால் கடவுள் உன்னை நோக்கி இரண்டடி எடுத்து வைக்கின்றார்.

13. நீ கடவுளை விட்டு விட்டு நினைத்தாலும் கடவுள் உன்னை விடாமல் நினைத்துக்கொண்டிருக்கின்றார்.

14. பசுவினிடமுள்ள பாலானது உண்மையில் அதன் உடம்பு முழுவதும் இரத்த வடிவில் பரவியுள்ளது. அப்படி இருந்தாலும் அப்பசுவின் காதுகளையோ கொம்புகளையோ பிசைந்தால் பால் வராது. பால் வேண்டுமானால் அதன் மடிவுகளைப் பிடித்துக் கறக்க வேண்டும். கடவுளும் எங்கும் பரந்திருக்கின்றான். ஆனால் எல்லா இடங்களிலும் கடவுளைக் காணமுடியாது. பூர்வ பக்தர்களுடைய குளுவிசேடம் நிரம்பிய புண்ணிய இடங்களாகிய கோயில்களில்தான் கடவுள் சுலபமாய்க் காணப்படுகின்றான்.

15. பழநி என்ற தலத்தை நினைக்கும்போது போகரை நினைக்காமல் இருக்க முடியாது; திருப்பதி என்ற தலத்தை நினைக்கும் போது கொங்கணரை நினைக்காமல் இருக்கமுடியாது. திருவனந்த புரம் பத்மநாபசாமி கோயிலை நினைக்கும்போது அகஸ்தியரை நினைக்காமல் இருக்கமுடியாது.

16. தெய்வீகத் துறையில் பாடுபட்டவர் நான்கு பேரோடு படுக்கமாட்டார், தனியாகவே இருப்பர். எவ்வளவு அன்யோன்யமாகப் பழகினாலும் படுக்கும்போது தனித்தே இருப்பர். அப்படி ஒரு வேளை அவர் மற்றவர்களோடு படுக்க நேரிட்டாலும் தூங்கவே மாட்டார்.

17. குறிப்பிட்ட ஊர்களின் ஒலி பரப்பைக் கேட்க வேண்டுமானால் அது சம்பந்தப்பட்ட வானொலி நிலையங்களைப் பெற்றால் தான் கேட்கமுடியும். அதுபோலவே புண்ணியத் தலங்களாகிய கோயில்கள் மூலமும் மகான்கள் மூலமும்தான் நாம் கோரும் நல்லன அடைய முடியும்.

18. வயிற்றில் கோரோசனை உள்ள மாடு கலங்கின தண்ணீரைச் சாப்பிடாது, மற்ற மாடுகள் சாப்பிட்ட புல்லை சாப்பிடாது. பெரியவர் இயல்பும் இப்படித்தான்!

19. உபயோகத்தில் கல்லுக்குக்கல் வித்தியாசமுண்டு. ஒரு கல் மேடு ஏறுவதற்குப் படிக்கல்லாகின்றது. மற்றொரு கல் பக்தியை வளர்க்க தெய்வ உருவாகின்றது. ஒன்றை ஏறி மிதிக்கின்றோம், அதன் மீது நின்று குதிக்கின்றோம். மற்றொன்றை உள்ளத்திலும் உடலிலும் வாரி அணைக்கின்றோம், வணங்குகின்றோம். அப்படித் தான் வாழ்க்கையிலும் மாதுக்கு மாது வித்தியாசமுண்டு. ஒரு மாது நம்மைப் பேணி வளர்த்த மாதாவாகின்றாள். பின்னால் வந்த ஒரு மாது நம் வாழ்க்கைநாயகி ஆகின்றாள். ஆனால் தாயின் காலில் தான் விழுந்து விழுந்து வணங்குகின்றோம்.

20. "நோக்க மறியுமாம் காக்கை
குண்டு பட்டால்தான் தெரியுமாம் கொக்குக்கு"

21. தமிழகத்தின் பரந்த வெளிகளில் சிற்பிகள் கலைக்கோயில்களை நிர்மாணித்தனர். அதே சமயத்தில் தமிழர்களின் இதய வெளியிலே கடவுளின் கோயில்களை நிர்மாணித்தனர் ஆத்ம சிற்பிகள். இரண்டு வேலைகளும் தொடர்ந்தே நடந்து வருகின்றன.

22. அறிவை அறிந்தோன் ஆசான்.

23. ஆசான் மூலமாக ஆண்டவனை அறியலாம். உண்மைகளை உணரலாம். மெய்யுணர்வு பெறலாம். வெறும் ஏட்டுப்படிப்பில் மட்டும் மெய்யுணர்வு அடைய முடியாது. ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாது.

24. தக்க ஆசானையன்றி மெய்யுணர்வு ஏற்பட வழியில்லை. தக்க ஆசான் என்பவர் சொல்லுக்குள் சொல்லறிவார், ஜோதியைத் தன்னுள் அறிவார், தன்னைத் தானறிவார், தானமும் தவமும் தான் என்று அறிவார்.

25. கோமாளி ஒருவன் தான்போட்ட வேடத்திற்காகக் கூத்தாடி நடக்கின்றவன். அவன் கோமாளி வேடமும் போட்டுக் கூத்தாடுவன்: சாமியாரோ உண்மையாகவே சாமி யார் என்று அறியக் கூடியவர்.

26. கோமாளிக் கூத்துக்கு எல்லாக் கலைகளும் தேவை. ஆனால் அவை அரை குறைகளாக இருந்தாலும் பரவாயில்லை. சாமிகள் ஸ்தானத்திற்கு சகலகலையாற்றல்கள் உண்டு, அவை பரிபூரண சகல கலையாற்றல்களாகவும் விளங்கும்.

27. எட்டுகின்ற வரையில் சிற்றின்பம்;
எட்டாத வரையில் பேரின்பம்:
சிற்றின்பத்தை அனுபவித்தவர்கள் விட்டு விடுவார்கள்;
பேரின்பத்தை அனுபவித்தவர்கள் விடமாட்டார்கள்.

28. மயிருள்ள சீமாட்டி எப்படி வேண்டுமானாலும் முடி போட்டுக் கொள்ளலாம்; குதிரைவால் கொண்டையும் அஜந்தா கொண்டையும் போட்டுக் கொள்ளலாம்: யோகியர் எத்தகைய சித்துக்களும் ஆடவல்லவர்; அவர்களால் கல்லையும் கற்கண்டாக்க முடியும், இறந்தவர்களையும் எழுப்ப முடியும்.

29. ஜாலம் என்பது குழியில் விட்ட தண்ணீரை ஒக்கும். சித்து என்பது வற்றாத ஊற்றை ஒக்கும். குழியில் விட்ட தண்ணீரளவுக்குத் தான் ஜாலம் செய்யமுடியும். சித்தர்களின் சக்தி இறைக்க இறைக்க ஊறுகின்ற தெய்வீக ஊற்றாகும்; இது வற்றுவதில்லை, வேண்டும் போது வேண்டிய அளவு உதவும்.

30. பைத்தியம் பிடித்தவன் அப்போது கொஞ்சம் இப்போது கொஞ்சம் பேசுவான்: அருள் பைத்தியம் பிடித்தவன் நாள் முழுதும் பேசுவான்; பைத்தியம் பிடித்தவனுக்கு ஆவேசம் விட்டு விட்டு வரும்: அருள் பைத்தியம் பிடித்தவனுக்கு ஆவேசம் தொடர்ந்து வரும்.

31. மழை பெய்யும் போது மக்கள் அதை அணைகளில் தேக்கி அடைத்து வைத்து வேண்டியபோது மடையைத் திறந்து பயன் படுத்திக் கொள்கின்றனர். பெரியவரிடமிருந்து அருள் வாக்கு வரும் போது நாம் அவற்றை உள்ளங்களில் வாங்கி இருத்தி சமயம் வரும் போது அவற்றைப் பயன் படுத்திக் கொள்ளவேண்டும்.

32. அனுதினமும் நீ செய்கின்ற வேலைகள் கணக்கில் அடங்கா: ஆனால் அனுதினமும் நீ ஐந்து நிமிடங்களாவது ஆண்டவனை நினைப் பாயாக.

33. அது வேண்டும் இது வேண்டும் என்று ஆசை மூட்டும் பொருள் உலகில் அதையும் இதையும் அடைய எவ்வளவு பாடுபட வேண்டி இருக்கின்றது. பொருள் உலகிலேயே இப்படிப் பாடுபட வேண்டி இருந்தால் அருள் உலகில் ஆத்ம சித்தி அடைவதற்கு நாம் எவ்வளவு பாடுபட வேண்டும்.

34. பாலம் கட்டுகின்றவர்களை பொறிஇயல் வல்லுனர் என்கின் றோம். இதயக் கோவிலுக்கு அன்புப் பாலம் அமைப்பவர்களை ஞானி கள் என்கின்றோம். தாயுமானரும், இராமலிங்க அடிகளும் மற்ற பெரியவர்களும் ஞான பொறி இயல் வல்லுனர்களல்லவா?

35. 'தன்னையறிந் தின்புறு' என்றார் ஒரு பெரியவர். ஒருவர் தன் உருவைக் கண்ணாடியில் கண்டு இன்பமுறுகின்றார். மற்றொருவர் தன் புகைப்படத்தைக் கண்டு இன்பமுறுகின்றார். வேறொருவர் அவரு டைய வீரப் பிரதாபங்களை அன்பர்கள் சொல்லக் கேட்டு இன்பமுறு கின்றார். இவைகளைக் கண்டு இன்பமுறுவதா பெரியர் குறிப்பிட்ட இன்பம்?

36 ''அவனே இவனே என்று பேசும் நேரங்களில்
சிவனே சிவனே என்று பேசு''

37. தன்னையறிந்தின்பமுறுபவர்கள் இயல்பு என்ன? அவர்கள் பஞ்சேந்திரியங்கள் இருந்தும் இல்லாதவர்களாக இருப்பர், சொல் லாமல் சொல்வர், தூங்காமல் தூங்குவர்.

38. சிலர் தமக்கு நடக்கப் போகும் திருமணத்தைப் பற்றி நினைக் கும்போது திருமணத்தன்று நடக்கும் மேளக் கச்சேரியைப் பற்றி நினைப்பர், சிலர் வருகின்றவர்களை உபசரிப்பதைப்பற்றியும் விருந் தைப் பற்றியும் நினைப்பர், சிலர் ஊர்வலத்தைப் பற்றியும், வாண வேடிக்கைகளைப் பற்றியும் நினைப்பர். ஒரு சிலர்தான் தாம் மணக்கப் போகும் தலைவியினால் தனக்குக் கிடைக்கப்போகும் சுகபோக இன்பத் தைப் பற்றி நினைப்பர். யோக சாதனையில் ஈடுபடுபவரும் பரப்பிரம்

மத்தோடு ஐக்கியப்படும் சச்சிதானந்தத்தையே நினைந்து மகிழ்வர். அதிலும் சிலர் சித்துவகைகளில் மனம் திரிந்தும் மகிழ்வதுண்டு.

39. அபிமானத்திற்குச் செல்பவரும் உலகில் உண்டு;
அதிகாரத்திற்கும் செல்பவரும் உலகில் உண்டு.

40. நீதி அளிக்கும் நிலையில் நீ வாழவேண்டும்;
நீதி ஏற்கும் நிலையில் நீ வாழக்கூடாது.

41. சாதாரணமாக அறையில் ஆடித்தான் அம்பலத்தில் ஆட வேண்டும்; ஆனால் சிலவற்றை அறையில் மட்டும் தான் ஆடிக் காட்ட வேண்டும்.

42. விதியென்ற ஒன்று உண்டு என்பதை நினை; மதியென்று ஒன்று இருப்பதையும், விதியையும் மதியால் வெல்லலாம் என்பதையும் மறந்து விடாதே; மதியை விதிக்கு அடகு வைத்துக் கவலையை ஏற்காதே.

43. கண்களிருந்தும் குருடராய் வாழ்வதைவிடக் குருடராயிருந் தும் விழித்திருப்பதே மேல். கண்களால் தொடுவது மறைந்துவிடும்; மனத்தால் தொடுவது மறைவதில்லை.

44. உலகம் பலவிதம். சிலர் 'டக்டக்' என்று நடப்பர். சிலர் 'பொசுக் பொசுக்' கென்று நடப்பர்' சிலர் காலைத் தேய்த்துநடப்பர். சிலர் எகிறிஎகிறி நடப்பர். ஆசீர்வாதத்திலும் பல விதங்கள் உண்டு. கையால் சிரசையும் உடம்பையும் தடவி ஆசீர்வதிப்பதுமுண்டு. கண்களால் பார்த்து ஆசீர்வதிப்பதுமுண்டு. மனத்தால் நினைத்து ஆசீர்வதிப்பதும் உண்டு. சிரசில் பாதங்களை வைத்தும் ஆசீர் வதிப்பதுண்டு.

45. அவன் அருள் கிடைத்தால் குட்டியும் கிடைக்கும், குட்டிகளும் கிடைக்கும். குட்டி என்பது நல்ல வாழ்க்கைத் துணைவி, குட்டி கள் என்பது நன்மக்கட்பேறு.

46. வேஷம் போட்டால் ஆடித்தீரனும்; பார்க்கிற தினுசாய்ப் பார்த்தால் ஆடுகிற தினுசாய் ஆட வேண்டும்.

47. சீடர் உண்மை குருவுக்குத் தெரியும்;
குரு உண்மை சீடருக்குத் தெரியாது.

48. தெரியாமல் செய்த தப்பு தப்பல்ல;
தெரிந்து செய்யும் தப்பு குற்றமாகும்.

49. வயிற்றுவலி என்றால் டாக்டர் கொடுத்த மருந்தை சாப்பிட வேண்டுமே தவிர டாக்டர் கொடுத்த மருந்தால் வயிற்றுவலி நீங்கி விடுமா என்று பரிசீலனை செய்யக் கூடாது.

50. பெரியவர் சொல்வதை நம்ப வேண்டும்
பெரியவர் சொல்படி நடக்க வெண்டும்
பெரியவர் சொல்வதில் உண்மை உண்டு
பெரியவர் சொல்வதில் நன்மை உண்டு.

51. காலைப் புல்லும் மாலைக் கல்லும் ஆளைக் கொல்லும்;
காலைக் கல்லும் மாலைப் புல்லும் ஆளை வெல்லும்.

52. காற்று இல்லை என்கிற இடத்திலும் காற்று உண்டு என்பதைக் காற்றாடி நிரூபிக்கின்றது.

53. பெரியவர்கள் பேசவிட்டால் பேசிக் கொண்டே இருப்பர். தூங்கவிட்டால் தூங்கிக் கொண்டே இருப்பர்? தட்டி எழுப்பினாலும் எழுந்திருக்கவே மாட்டார்.

54. ஏழை உண்மையில் தன் சொந்த நகையைப் போட்டுக் கொண்டாலும் உலகம் அவனைத் திருடனாகவே கருதுகின்றது. செல்வந்தன் திருட்டு நகையைப் போட்டுக் கொண்டாலும் அவனை செல்வந்தனாகவே உலகம் மதிப்பிடுகின்றது.

55. சுடர்விளக்காயிருந்தாலும் அது நன்றாக விளங்கத் தூண்டு கோல் ஒன்று வேண்டும்.

56. ஐந்து ரூபாய்க்குத் தாலிகட்டி ஏழைப் பிள்ளையார் கோயிலில் திருமணம் செய்து கொண்ட ஒருத்தி தன் வாழ்நாள் முழுதும் கூழைக் குடித்தாலும் தன் புருஷனோடு ஒட்டி வாழ்கின்றாள்; ஆனால் ஐம்பதினாயிரம் கொடுத்து ஒரு விலை மாதை அடைந்தாலும் அவளுக்கு ஆப்பில் பழரசம் கொடுத்தாலும் அவளை அடைந்த மறுநாளே யாருக்கும் சொல்லிக் கொள்ளாமல் அவள் கம்பி நீட்டி விடுகின்றாள்.

57. பெண் பிள்ளை கண்ட சொத்தும்
பூனை கண்ட பாலும் நிலைக்காது.

58. ஊருக்குப் பூத்த தாழம் பூ! அதற்கு அதன் மணம் தெரியாது. அதன் அருமையை ஊரன்றோ அறியும்!

59. நீர் அருவியில் நேராகத் தண்ணீர் அருந்த முடியாது; நீர் அருவியிலிருந்து ஓடிவரும் வாய்க்காலில்தான் தண்ணீர் குடிக்க முடியும். அதுபோன்றே தெய்வத்தை நேரில் பார்க்க முடியாது. தெய்வத்தை ஆலயம் என்ற இடத்தில்தான் சிலா ரூபத்தில் காண முடியும்.

60. புஷ்பத்தில் உள்ள மணம் புஷ்பத்தினுள்ளேயே அடங்கி விடுவதில்லை. மொக்கு மலர்ந்தால் வாசம் வீசுகின்றது அது போன்று மனம் பூத்தால் மணம் உண்டாகும்.

61. காந்தம் இரும்பு இழுக்கும் சக்தி கொண்டது. துருப்பிடித்த இரும்பாயிருந்தால் தேய்த்து தேய்த்து துருவை நீக்கவேண்டும். அழுக்குப்பிடித்த இரும்பாய் இருந்தால் அழுக்கை முதலில் அகற்ற வேண்டும். அப்படிச் செய்தால்தான் காந்தம் இரும்பை இழுக்கும். விருப்பு வெறுப்பு இவைகளில் உழலும் மனம் பக்திக்கு உதவுவதில்லை. மனத்திலுள்ள இந்த அழுக்கை நீக்கிவிட்டால் புனிதமான மனது பக்தி வயப்படுகின்றது.

62 கனிக் கொத்தும் குலையுமாய் பலனளிக்கின்ற மரங்களின் கிளைகள் படிந்தே நிற்கின்றன, அவை தலைதூக்கி நிற்பதில்லை. அது போன்றே நல்லனவெலாம் அளிக்கின்ற அருளும் ஆற்றலும் நிறைந்த பெரியவர்கள் அடக்கத்தோடே படிந்தே வாழ்கின்றனர். அவர்கள் அகந்தையால் தலைநிமிர்ந்து நிற்பதில்லை இவர்கள் நிறைகுடத்தை ஒத்தவர்கள். அடக்கம் ஆயிரம் பொன் தரும்.

63. எல்லாவற்றையும் முறைப்படி செய்யவேண்டும், காலா காலத்தில் செய்து முடிக்கவேண்டும். ஆருயிர் நண்பரென்று அவரின் பழுக்காத கண்ணை ஆபரேஷன் செய்வதில்லை. ஆருயிர் நண்பரும் கண்பழுக்கும் வரை காத்திருக்கத்தான் வேண்டும்.

64. நல்ல நாதஸ்வர வித்வான்கள் வாசித்தால் தலையாட்டு பவரும் உண்டு: அப்படி தலையாட்டுபவர்களைக் கண்டு தலையாட்டு பவர்களும் உண்டு.

65. முத்துமாணிக்கம் கிடைக்கவில்லையே என்று தேடுவர். அது அவர் தோட்டத்திலேயே இருக்கும். அதைக் கிள்ளி எடுத்துவந்து காண்பித்தால், 'அட, இதுதானு' என்பர்.

66. செல்வந்தருக்குப் பாலில் தேன்கலந்து கொடுத்தால் எவ் வளவு திருப்தி அடைவாரோ அவ்வளவு திருப்தி கஞ்சித் தண்ணீரில் கருப்பட்டி கலந்து கொடுக்கும்போது ஏழையடைகின்றார். திருப்தி என்பது ஏற்றுக் கொள்பவரைப் பொருத்திருக்கிறது

67. நல்லோரை நாவில் உரை:
பொன்னைக் கல்லில் உரை.

68. சொல்லின் மதிப்பை சொல்லாளி அறிவர்: கல்லின் மதிப் பைக் கல்லாளி அறிவர்.



திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகள் அமர்ந்த திருக்கோலம்

69. தனிமனிதனுக்கு தந்தை தாய் வாய்த்தது போல் உலகத்துக்கு வானமும் பூமியும் தந்தை தாயாக வாய்த்திருக்கின்றன.

70. ஒருவனுக்கு பக்தி இருப்பதில்லை, அப்படி பக்தி இருந்தால் பணம் இருப்பதில்லை. அப்படி பணமும் பக்தியும் இருந்தால் புத்தி இருப்பதில்லை. அப்படி பணமும் பக்தியும் புத்தியும் இருந்தாலும் ஈகை இருப்பதில்லை. இவை நான்கும் இருந்தாலும் அவனுக்கு பிள்ளை இருப்பதில்லை. இவை ஐந்தும் இருந்தாலும் அவனுக்கு ஆயுள் இருப்பதில்லை.

71. ஓடத்திற்கும் தண்ணீருக்கும் சம்பந்தம் உண்டு. ஆனால் அது எப்படிப்பட்ட சம்பந்தமாக இருக்க வேண்டும்? ஓடத்தை மிதக்க வைக்கத்தான் தண்ணீர் பயன்படவேண்டும், ஓடத்தை மூழ்க அடிக்கஅல்ல. ஓடம் தண்ணீரின்மேல் இருக்கவேண்டும். தண்ணீர் ஓடத்தின்மேல் இருக்கக்கூடாது.

72. படித்தவர்களும் நான்தான் என்கின்றார்கள். பணம் படைத்தவர்களும் நான்தான் என்கின்றார்கள். படிப்பும் பணமும் இல்லாதவர்களும் நான்தான் என்கின்றார்கள் இவர்கள் முன்னேற நான் என்ற அகந்தை ஒழியவேண்டும்.

73. துப்பாக்கிப் பழகுபவன் முதலில் முயலைக் குறிவைத்துச் சுடுகின்றான். அதன்பின் மானையும், அடுத்துப் புலியையும் சுடக்கூடிய அளவுக்குத் தேர்ச்சியும், அனுபவ முதிர்ச்சியும் அடைகின்றான். இப்படிந்தான் எண்ணங்களையும் படிப்படியாக உயர்த்திக்கொண்டு செல்ல வேண்டும்.

74. கோணல் மரத்தை நூல் கொண்டு நேர் செய்யலாம்;
கோணல் புத்திக்காரனை நூல் கொண்டு நேர் செய்யலாம்.

75. சாதாரணக் கண்கள் பார்க்க முடியாததை இதயக்கண்கள் பார்க்க முடியும்; இதயக் கண்களும் பார்க்க முடியாததை நெற்றிக் கண் பார்க்க முடியும்.

76. நண்டு கொழுத்தால் மணல் கூட்டில் இருக்காது, அதை நரி பிடிப்பது வேடிக்கையாக இருக்கும். நரி தன்னுடைய வாலை நண்டுப் பொந்துக்குள் விடும். நண்டு, நரிவாலை இறுகப்பிடித்துக் கொள்ளும். அப்போது நரி தன் வாலை பொந்துக்கு வெளியே எடுத்து வாலை கெட்டியாகப் பிடித்திருக்கும் நண்டைப் பிடித்துச் சாப்பிடும்.

77. பெரியமீன் வெயிலுக்குக் கடலுக்கு வெளியே வந்து விளையாடும். ஆனால் சின்ன மீன்கள் கடலுக்கு வெளியே வந்து விளையாட ஆரம்பித்தால் அவைகளை கருடன் அடித்துச் சென்றுவிடும்.

"கெண்டை துள்ளத் துள்ளக் கருடனுக்கு இரை" என்ற சுலோக மும் உண்டு.

78. காவிரி ஆரம்பிக்கும் இடத்தில் அருவி அளவிலேயே ஓடு கின்றது. காவிரி கடலில் சங்கமம் ஆகும் இடத்திலும் வாய்க்கால் அளவிலேயே ஓடுகின்றது; காரணம் காவிரி பெருகி விரிந்து கரை புரண்டு ஜீவ நதியாக திருச்சி தஞ்சை வட்டாரங்களில் ஓடும்போது அதன் நீரை அணைகள் கொண்டும் கிளை வாய்க்கால்கள் மூலமாக வும் மக்கள் நிலவளம் பெருக்க நீர்வளத்தை நன்றாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அதனால் தான் விரிந்து ஓடிய காவிரி நதி ஒடுங்கிய வாய்க்காலாக கடலுள் சேரும்போது அமைந்துள்ளது. அதுபோன்று தான் மக்கள் உடல் ஒடுங்கி அடங்குவதற்கு முன் தம்மால் பல நலன் கள் உலகம் அடையச் செய்வதே தம் கடனாகக் கொள்ள வேண்டும். நதிகள் பெருகிப் பெருங் கற்களையும் சோலைக் கரைகளையும் உரசி ஓடும் போது சலசலப்புச் சப்தம் கேட்கின்றோமே? அது என்ன சப்தம்? "என் கடன் தண்ணீர் பாய்ச்சுவதே" என்றல்லவா ஆறு கள் மொழிந்து கொண்டு வயல்களையும் சோலைகளையும் நோக்கி மகிழ்ந்து ஓடுகின்றது. அது போன்றல்லவா பெரியவர்கள் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று நினைத்து அகமகிழ்ந்து கருணை சூர்ந்து அருள் சுரந்து யாவருக்கும் அன்புப்பணி செய்து வரவேண்டும்.

79. "நான் தூங்கும்போது வாழ்வு அழகென்று கனாக்கண்டேன்; நான் விழித்த போது வாழ்வு கடமை என்பதை அறிந்தேன்" என்று ஒரு மேல்நாட்டு மேதை உரைத்தது ஞாபகத்திற்கு வரு கின்றது. உண்மைதான்! ஒருவர், வாழ்வு கடமை என்பதை அறிந்து நடக்க ஆரம்பித்தால், அத்தகையவர் வாழ்வன்றோ அழ கான வாழ்வாகும்!

80. ரோஜாச்செடியில் முள் உள்ளதென்று மணமிக்க ரோஜா மலரைப் பறித்து தலையில் சூடாமலிருப்பதில்லை: சேற்றில் பிறந் தது செந்தாமரை என்று அதை ஒதுக்கி விடுபவரில்லை. நல்ல வர்கள் எங்குப் பிறந்தாலென்ன? எங்கு இருந்தால் என்ன? அவர்களால் மக்களுக்கு நலமே.

81. தேள் மட்டும்தானா கொட்டுகின்றது: தித்திக்கும் தேன் திரட்டும் தேனீக்களும் கொட்டுகின்றன. அவை எப்பொழுது கொட்டுகின்றன என்பதைக் கவனித்தீர்களா? அவைகள் ஒரு ஓரத்தில் தூங்கிக்கொண்டிருக்கும் மனிதரைக் குறிவைத்து கோபத் தால் கொட்டிவிட்டது என்று கேள்விப் பட்டிருக்கின்றோமா? அவை கள் இருக்கின்ற இடத்திற்குச் சென்றால்தான் அவைகள் கொட்டு கின்றன.

82. வீட்டு ஈ சுத்தத்திலும் இருக்கும், அசுத்தத்திலும் இருக்கும். அதனால் வியாதி பரவுகின்றது. சாணிப்புழு சாணியில்தான் வாழும், பரிமளமிகுந்த சந்தனத்தில் அது வாழமுடியாது. தேனீக்கள் பரிசுத்தமான பூக்களிடமிருந்து தேனை எடுத்து கூட்டில் சேர்த்து சுகமாக வாழ்கின்றன. அவைகள் மற்றவர்களுக்காகப் பாடுபடும் இயல்பும் அவைகளின் செயலில் பரிமளிக்கின்றது. மாந்தருள்ளும் வீட்டு ஈ இனத்தவர் உண்டு. அவரால் ஓயாத தொல்லை. அவர் ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் சென்று மனஸ்தாபத்தை உண்டாக்குவர், கலகம் விளைவிப்பர். மாந்தருள்ளும் சாணிப்புழு இனத்தவரும் உண்டு. கெட்டவர் கெட்டவழியில்தான் போய்க்கொண்டிருப்பர். அவரைத் திருத்த முடியாது. மாந்தருள்ளும் தேனீக்கள் இனத்தவரும் உண்டு. அவர்கள் பரிசுத்த மனப்பான்மையர். பரிசுத்த செயலாளர்கள். தனக்காக மட்டுமின்றி வையகம் வாழ்வதற்காகவும் ஓயாது உழைத்துவரும் பெரியவர்களே அவர்கள்.

83 சிலர் பிறப்பால் பெரிய மனிதராக விளங்குகின்றார். ஒரு இராஜாவின் மகன் அவன் ராஜகுடும்பத்தில் பிறந்ததால் மதிப்பை அடைகின்றான். சிலர் உழைப்பால் பெரியமனிதராக விளங்குகின்றார். அவர் ஏழைக்குடும்பத்தில் பிறந்தாலும் தம் தகுதியால் செயலால் குணத்தால் பெரிய மனிதராக மற்றோரால் மதிக்கப் படுகின்றார். சிலருக்குப் பெரிய மனிதரென்ற பெயர் திணிக்கப்படுகின்றது. அவருக்குத் தகுதியும் குணமும் இல்லாமலும் இருக்கலாம். ஆனால் பட்டங்களும் பதவிகளும் அவரைத்தேடி வரும். செல்வமும் செல்வாக்கும் அவரை பெரும்பதவியில் இருத்திவிடும். அவரையும் மதிப்பவரும் உண்டு. இவற்றுள் யார் சிறந்தவர்? அன்பு உள்ளத்தோடு அன்புச் சொற்களோடு அன்புப்பணி செய்யும் உழைப்பினால் உயர்ந்த மனிதரே சிறந்தவர் ஆவர். அவரை மனிதரும் மதிப்பர், தெய்வமும் மதிக்கும்.

84. தண்ணீரில்லாமல் மீன் வாழ முடியாது, ஓடில்லாமல் ஆமை வாழ முடியாது, உயிரில்லாமல் உடல் வாழ முடியாது என்பதை அறிகின்ற மனிதரும், மீனில்லாமல் தண்ணீர் இருப்பதையும், ஆமையில்லாமல் ஓடு இருப்பதையும், உடல் இல்லாமல் உயிர் இருப்பதையும் அறிந்தே வாழ்கின்றனர். இவற்றை அறிகின்ற மனிதர் இறைவனையல்லவா அறிந்து அடைந்து இன்புற பாடுபடவேண்டும்.

85. பரம்பொருளை எல்லாப் பொருள்களிலும் காண்பவரையும் எல்லாப் பொருள்களையும் பரம்பொருளில் காண்பவரையும் கடவுள் கண்டு கொண்டே இருக்கின்றார், அவர் நினைத்தபோது வந்து உதவுகின்றார்.

86. ஒரு பெரியவர் எங்கிருந்தாலும் அவர் கடவுளிடத்தில்தான் இருக்கின்றார். அவர் என்ன செய்தாலும் கடவுள் பெயரிலேயே செய்கின்றார், அவர் என்ன கேட்டாலும் கடவுளைப் பற்றித்தான் கேட்கின்றார்.

87. தன்னைப் போன்று பிறரை கருதுகின்றவன்தான் யோகி; பிறர் நலமே தன்னலம் என்று கருதுகின்றவரே யோகி.

88. வேதத்தில் உள்ள ஓம் ஒலியைத் தெய்வமென்பர்; அண்ட சராசரத்திலுள்ள சக்தியைத் தெய்வமென்பர்; தண்ணீரில் உள்ள குளிர்ச்சியைத் தெய்வமென்பர்; சந்திரனில் உள்ள தண்ணொளியையும், சூரியனிடத்தில் உள்ள பேரொளியையும் தெய்வமென்பர். அன்பே தெய்வமென்பதையும் நாம் அறியவேண்டும்.

89. நல்லது நல்லது என்று போற்றுகின்ற உலகத்தில் பசிக்கும்போது சாப்பிடுவது நல்லது, தூக்கம் வரும்போது தூங்குவது நல்லது என்பர். நல்லவர்களின் நல்ல சொற்களைக் கேட்பதும் நல்லது, அதன்படி நடப்பதும் நல்லது என்பதையும் உணர்ந்து நடக்கவேண்டும்.

90. கெட்டது கெட்டது என்று சாற்றுகின்ற உலகில் தீயாரோடு இணைந்திருப்பது கெட்டது, கள்ளுண்பது கெட்டது, கற்பைக் குலைப்பது கெட்டது என்பர். நல்லவர்களை கூடிப்பிரிதல் கெட்டது என்பதும், அப்படிப் பிரிய நேரிட்டாலும் அவரைத் தூற்றுவதும் கெட்டது என்பதையும் உணர்ந்து நடக்கவேண்டும்.

91. "கோவைக் காயை கிள்ளி நான் என் சீடருக்குக் கொடுக்க அது பாவைக் காயாக மாறி விட்டது. நானும் இப்பொழுது அவருக்கு பாவக்காயாக மாறி விட்டேனே" என்று குரு சொல்லக்கூடிய அளவுக்கு சீடன் குருவிடத்தில் நடந்து கொள்ளக்கூடாது.

92. வெளியில் உள்ள ஒளியைக் காண்பவன் மனிதன்: உள்ளே இருக்கும் ஒளியைக் காண்பவன் ஞானி.

93. எல்லா மனிதர்கள் உளத்திலும் இறைவன் மனம் உண்டு: ஆனால் இறைவனிடத்தில் சிலருடைய மனங்கள் இல்லை.

94. அவனன்றி ஓரணுவும் அசையாது; சித்தர்களும் அசைவதில்லை.

95. வல்லான் வகுத்தது சட்டம்: அந்த சட்ட வரம்பிற்கு உட்பட்டதுதான் சித்தர்கள் ஆடிக்காண்பிக்கின்ற சித்துக்கள்.

96. மரத்தில் கிளைக்குக்கிளை வெகுதூரத்தில் தாவுகின்ற தாய்க் குரங்கு வயிற்றை உடும்புப்பிடியாக பிடித்திருக்கும் குட்டிக்குரங் கையும் பார்த்திருப்பீர்கள். தாய்க்குரங்கு அப்படித் தாவும்போது அந்தக் குட்டிக்குரங்கு கீழே விழுவதுண்டா? அந்தத் தாய்க்குரங்கு தான் அப்படித் தன் குட்டியைக் கீழே விழவும் விட்டுவிடுமா? அது ஒருநாளும் நடக்காது, அப்படித்தான் குருவின் உறவும் சீடர் களுடைய உறவும் அமையவேண்டும். ஒரு குருவை அண்டி அவர் அருளில் வளர ஆரம்பிக்கும் சீடன் குருவை அதே குரங்குப்பிடியோடு தான் பற்றிக்கொள்ள வேண்டும், அவனும் குருவின் அருள்நிலை மடியிலிருந்து கீழே தவறி விழுவதில்லை. குருவும் அப்படித்தன் அருள்பிடியினின்றும் சீடர்களைக் கீழே விழுந்துவிடவும் விட்டுவிட மாட்டார்.

97. ஒரு தாய்பூனை தன்குட்டிகளை தன் வாயில் கௌவிச்செல்லும் போது குட்டிகள் விழுவதில்லை. ஒரு குருவும் தாய்ப்பூனையைப் போன்றே சீடர்களை அருளால் கொண்டு செல்கின்றார்.

98. பாலிலிருந்து எடுத்த மோரிலிருந்து கடைந்தெடுத்த வெண்ணை தண்ணீரில் கரைவதில்லை, தண்ணீரில் இருந்தாலும் அது தண்ணீரில் மிதக்கின்றது. அதுபோலவே ஒருவன் கடவு ளோடு மனம் ஒன்றிவிட்டால் அவன் மற்ற செயல்களில் ஈடுபட்டு இருப்பினும் அவன் மனம் மட்டும் அது ஒன்றியிருக்கும் கடவுளை மறப் பதில்லை, கடவுளிடமிருந்து பிரிந்திருப்பதுமில்லை. ஜீவன் கடவுள் தன்மை அடைந்துவிட்டால் பக்குவமில்லாத கணக்கற்ற சாதாரண மக்களுடன் இருந்தாலும் அவர்களோடும் பற்றுள்ள வாழ்க்கை யோடும் ஒட்டாமலேயே அது நிற்கும், வெண்ணை தண்ணீரில் இருப்பதுபோல.

99. கடும் குளிரில் படாதபாடுபட்டு காட்டில் விறகு வெட்டி வந்து நெருப்புமூட்டி விடுகின்றார் ஒருவர். குளிர்காய்வதற்கு அந்தத்தணல் எவ்வளவு பேருக்கு உதவுகின்றது. அதுபோன்றே இறைவன் அருளை அடைய ஓர் ஞானி எவ்வளவு பாடுபடுகின்றார். அந்த ஞானி இறைவன் அருள்பெற்றுவிட்டால் எவ்வளவுபேருக்கு அந்த இறைவன் அருளை அருள அவரே வழிகாட்டியாகவும் தோன்றாத் துணையாகவும் ஆகிவிடுகின்றார்.

100. மூத்தோர் சொல்லும்
முறி நெல்லிக்காயும்
முன்னால் கசக்கும்
பின்னால் இனிக்கும்.

101. புட்பம் மலர்ந்தால் மணம் உண்டாகின்றது. அதுபோல் சொல் உரைத்தால் அதில் சக்தி உண்டாகவேண்டும். அதுவே சித்தி அடைந்தோர் இயல்பு!

102. கண்ணாடியில் உருவத்தைக் காண்பதைவிட மனிதன் கண்ணால் நாடி விஷயங்களை கண்டுபிடிப்பது மேலானது.

103. நான், நீ என்று வேற்றுமைப் படுத்திப் போட்டி போடுவதைவிட "நாம், நாம்" என்று கூடி வாழ்வதில்தான் எவ்வளவு இன்பம் இருக்கின்றது. மக்கள் என்பவர் ஓரினம். உலக மக்கள் யாவரும் நம்மவர் என்று வாழ்ந்திடு.

104. ஒரு பெரிய யானை யாராயிருந்தாலும், தன் பாகனாயிருந்தாலும், தனக்கு தீங்கிழைத்து விட்டதாக நினைத்துவிட்டால் கறுவு வைத்து அவரைக் கொல்லும் அளவுக்கு மூர்க்க புத்தி உள்ளது. ஒரு சிறிய நாயோ தன் தலைவன் அடித்தாலும், உதைத்தாலும் தலைவனை நன்றி விஸ்வாசத்தோடு வாலைக் குழைத்துக்கொண்டு பழகும் அன்பு கொண்டது. இப்படிப்பட்ட மூர்க்க சுபாவமுடைய பெரிய ஆசாமியாய் விளங்குவதைவிட நன்றி விஸ்வாசத்தோடு கூடிய எளிய ஆசாமியாக இருப்பதுவே உத்தமம்.

105. பிரக்ருதியும், ஆத்மாவும் பிரம்மத்தோடு ஒன்றாகும் நிலையை உணர்ந்த ஞானி நல்லது கெட்டது என்ற வலைகளில் சிக்கிக் கொள்வதில்லை. அவர் அருள் இருந்தால் நல்லது கெட்டது என்ற வலைகளிலிருந்தும் மீட்சி பெற முடியும்.

106. மதியால் விதியையும் வெல்லலாம். இது யாரால் முடியும். பஞ்சேந்திரியங்களை அடக்கி மனத்தை ஒருநிலைப்படுத்தி ஆண்டவன் அருள்பாதையில் முனைந்து நிற்கும் ஒருவரால்தான் இது முடியும்.

107. 'செல்வம்' என்ற சொல்லில் 'செல்வோம்' என்ற பொருள் தொனிக்கின்றது. செல்வோம் என்பது நிலையாமையை உணர்த்துகின்றது. செல்வம் இருப்பவரிடம் செருக்குக் கூடாது. செருக்கோடிருக்கும் ஒருவரிடமிருந்துதான் செல்வோம் என்பதைத் செல்வம் சொல்லுகின்றது.

108. செய்வதை முறைப்படி செய்யவேண்டும். ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு. எல்லாம் வயிற்றுக்குள் போவதுதானே என்று சாதம், பருப்பு, குழம்பு, ரசம், மோர், காய்கறி — இவை யாவையும் ஒன்றாகப் பிசைந்து விழுங்குவாரில்லை.

109. எல்லாவற்றையும் கடந்து செல்பவனை அடைய ஒரே வழி உண்டு; அதுதான் மனதை அடக்கி ஒடுக்கும் வழி.

110. புகையிலை விரித்தால் போச்சு:
பெண்கள் சிரித்தால் போச்சு.

111. பக்திக்குப் பாதம் பெரிது:
அறிவுக்குத் தலை பெரிது.

112. சொல்ல வேண்டியவற்றை சொல்ல வேண்டிய முறையில் சொல்ல வேண்டும். தலைபெரிது என்று சொன்னால் மட்டும் போதுமா? எண்சாண் உடம்பிற்கு சிரசே பிரதானம் என்று சொன்னால்தான் விளங்கும்.

113. எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்; அதனால்தான் கிரீடத்தைச் சிரசில் வைக்கின்றோம்.

114 நான் என்ற அகந்தை வடிவத்தை நீக்கிவிடு: அந்த இடத்தில் நீ என்ற பரப்பிரம்ம வடிவத்தை அமைத்துவிடு. அப்போது 'உள்ளொளி' தானாகவே உனக்குத் தெரியும் 'நீயே நானு'ம் உண்மையும் வந்தடையும்.

115. மனம் மனம் என்கின்றோமே? அது எப்படி உள்ளது? மனம் உள்ளவன் மனிதன்: மனம் இல்லாதது மிருகம். மனத்தை அடக்குபவன் நல்லவன்! மனதைக் கட்டுக்கடங்காமல் விட்டு விடுபவன் கெட்டவன். மனத்தைத் தன் இஷ்டத்திற்கு ஆட்டுபவர் பெரியவர்: மனத்தின் இஷ்டத்திற்குத் தான் ஆடுபவர் சிறியவர். மனத்தை கடைசியில் கிள்ளி எறிபவர் யோகி.

116. யாருக்கும் மனம் இளைத்தால் உடம்பு இளைக்கும்.

117. பாத தரிசனம் பாப விமோசனம்.

118. கொட்டுகின்ற மழைத் தண்ணீர் உருவில் உயரமான ஒரு இடத்திலேயே நிலைத்து நின்றுவிடுவதில்லை. அது மலைகளிலிருந்தும் மேட்டிலிருந்தும் ஆறாகப் பெருகிப் பல வளங்கள் உண்டாக்குகின்றது. தெய்வ அருள் சுரந்து அடக்கமே உருவான உயர்ந்த பெரியவர்களிடம் பெருகி மக்களுக்கு உதவுகின்றது.

119. தன்னைத் தான் அறியப் பற்றற்றநிலை அவசியம்தான். பற்றற்றநிலையை இல்லறத்தில் இருப்பவர்கள் அடைய முடியாதா? முடியும்! தாமரை இலையைக் கவனியுங்கள். பார்ப்பதற்கு அது தண்ணீரில் இருப்பது தெரியும். ஆனால் உண்மையிலேயே தண்

ணீர் இலையில் ஒட்டியிருக்கவில்லை. எப்படித் தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாமல் நிற்கின்றதோ அதுபோல் ஒருவன் குடும்ப வாழ்க்கையில் இருந்தாலும் பற்றற்ற நிலையிலே இருக்கமுடியும்.

120. தண்ணீரில் பாலைக் கலக்கலாம். அப்போது தண்ணீரோடு ஒன்றான பால் பிரிக்க முடியாதபடி ஆகிவிடும். ஆனால் ஒரு அன்னம் அதிலிருந்து பாலைமட்டும் பருகவல்ல ஆற்றல் கொண்டுள்ளது.

121. மனம் காற்றைப்போல் அலைந்து திரியும் இயல்புடையது. அதைக் கட்டுப்படுத்துவது கடினம். அப்படி அதைக் கட்டுப்படுத்தி இருந்தாலும் திடீரென்று அது மதம்பிடித்த யானைபோல் சீறி வெளியே கிளம்புகின்றது.

122. முள்ளை முள்ளால் தான் எடுக்க முடியும்; வைரத்தை வைரத்தால் தான் அறுக்க முடியும்.

123. படித்தவர்கள் மறைநூல் காட்டினால் தான் கேட்பர்; படிக்காதவர்கள் அவருக்குப் புரியும் பழமொழிகள் சொன்னால் தான் கேட்பர்.

124. அழுக்கைப் போக்க தண்ணீரில் குளித்து விட்டால் மட்டும் போதுமா? குளிப்பதினால் உடலிலுள்ள அழுக்கு மட்டும்தான் நீங்குகின்றது. ஆனால் உள்ளத்திலுள்ள அழுக்கைப் போக்க வேண்டாமா?

125. துணியிலுள்ள அழுக்கைச் சுத்தப்படுத்துவது தண்ணீர் மனத்திலுள்ள அழுக்கைச் சுத்தப்படுத்துவது பெரியவர்கள் வாக்கு.

126. இல்லற வாழ்க்கையில் வெற்றி காண்பவரும் உண்டு, தோல்வி அடைபவரும் உண்டு. குடும்ப வாழ்க்கையில் நல்லதோ கெட்டதோ இவை யாவையும் சமாளித்து இல்லறத்தை நல்லறமாகக் காண்பவரும் உண்டு. முத்தெடுக்கச் செல்பவருள் சிலர் கடலுக்குள் பாதிவரை சென்று கடலுள் மூச்சு பிடிக்க முடியாமல் பாதியிலேயே மேலே கிளம்பி முத்து சிற்பி இல்லை என்று திரும்பி வந்து விடுபவரும் உண்டு. சிலர் கெட்டி மூச்சுப் பிடித்துக் கடலுள் ஆழமாக உட்சென்று நாற்றத்திலிருந்து ஆணிமுத்தைக் கொண்டுவருபவரும் உண்டு.

127. உண்மையை அறிவதனால் என்ன பயன்? நாம் நல்ல ஸ்தானத்தில் உட்காரலாம். பிறரையும் நல்ல ஸ்தானத்தில் உட்கார வைக்கலாம். நாமும் நலனடையலாம்: பல பேருக்கும் நாம் நன்மை செய்யலாம். இதுவே மானிடப் பிறவியின் பயன்.

128. குளத்திலுள்ள தாமரையின் அருமை அதில் உள்ள நத்தைகளுக்குத் தெரிவதில்லை அதன் மீது உட்கார்ந்து உட்கார்ந்து விளையாடும். ஆனால் வெகுதூரத்திற்கப்பால் உள்ள ஈக்களுக்குத் தெரியும் அதன் அருமை. அவைகள் பறந்தோடி வந்து தாமரையை மொய்த்து அதன் தேனை உண்டு மகிழும்.

129. பிரசாதம் என்பது பிறருடைய சாதமாகும்: வரப்பிரசாதம் என்பது வரப்போகும் பிரசாதமாகும்.

130. மனிதன் நாளைக்கு வேண்டியவற்றை இன்றைக்கே சேர்த்து வைத்துக் கொள்கின்றான். கிழப்பருவத்திற்கு வேண்டிய பொருள்களை இளம் பருவத்தில் சம்பாதித்து வைத்துக் கொள்கின்றான் விவேகி. அதுபோன்றே மறுமைக்கு வேண்டியதை இம்மையிலேயே சேகரித்துக் கொள்ளுவதுதான் அரிதாகிய மனிதப் பிறவி எடுத்ததின் லட்சியமாக வேண்டும்.

131, நல்ல காரியங்களைச் செய்பவரே பெரியவர். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பது தான் தங்களுக்கு வகுத்துக் கொண்ட பெரியவரின் பாதை. அது தான் அவரை இறைவனிடத்திற்கு அழைத்துச் செல்கின்றது. அந்தப் பாதைவழியிலேயே இறைவனையே அவர் அழைத்து வந்து அண்டியவருக்கு அருள்பாலிக்கின்றார்.

132. உண்மையை அறியப்பாடுபடும் சீடன் ஒரு குருவையே பற்றி இருத்தல் வேண்டும். பல குருக்களை நாடினால் வீண் காலம் தான் கழியுமே தவிர நற்பயன் ஒன்றும் காணான். பல இடங்களில் கொஞ்சம் கொஞ்சமாக வெட்டிப் பார்த்தால் தண்ணீர் கிடைக்காது. ஒரே இடத்தில் ஆழமாக வெட்டினால்தான் தண்ணீர் கிடைக்கும்.

133. ஒரு வைத்தியர் வீட்டுப் பணியாளுக்கு நல்ல மதிப்புக் கொடுப்பது அந்த வைத்தியருடைய மதிப்பையல்லவா விளக்குகின்றது. ஆண்டவன் அருள் உள்ளவரை மதிப்பது ஆண்டவனை மதிப்பதையே குறிக்கும்.

134. இருபதுபேர் படித்தாலும் ஒருசிலர்தான் பரீட்சையில் வெற்றி காண்கின்றனர். இப்படியேதான் ஆண்டவன் அருள் கிடைப்பதும் இருக்கின்றது.

135. ஒருவர் சிஷ்யருடைய பரிபக்குவநிலை அடைந்துவிட்டால் குருநாதரே அவரிடம் வந்து சேர்கின்றார். சிஷ்யர் குருவைத் தேடிச் செல்லவேண்டிய அவசியமிராது.

136 முப்பு இல்லாத மருந்து மருந்தல்ல :
ஆசான் இல்லாத அருள் அருளல்ல.

137. எச்சில் உள்ளே இருக்கும்வரை அம்ருதம் :
எச்சில் வெளியே வந்தால் விஷம்.

138. காற்றடித்தாலும் நடுக்கும் :
அருள் வந்தாலும் நடுக்கும்.

139. அடிக்க அடிக்க குனிகின்றவனும் மடையன் :
குனிய குனிய அடிக்கின்றவனும் மடையன்.

140. பிஞ்சு மூங்கிலை வளைத்து விடலாம்; முற்றின மரத்தை வளைக்க முடியாது: இளவயதில் ஞானம் அடைவது எளிது; வயதாக ஆக ஞானம் ஏறுவது அருமை.

141. நல்ல காரியங்களைக் காலாகாலத்தில் செய்து முடிக்க வேண்டும்: பழம் பழுத்தவுடன் மரத்திலிருந்து பறித்துவிட வேண்டும்; பறிக்காவிட்டால் பூச்சி விழுந்து பழம் பாழ்படும்.

142. ஒருகோடி ரூபாயும் சரி; ஒருபிடி சாம்பலும் சரி: முந்தியது சமயத்திற்கு உதவாது; பிந்தியது சமயத்திற்கு உதவும்.

143. தண்ணீர் பிறந்த இடத்தில் அதற்கு மதிப்பில்லை; மற்றோரிடத்தில் அது மதிப்பைப் பெறுகின்றது: காவிரி என்றவுடன் குடகு நமக்கு நினைவுக்கு வருவதில்லை; திருச்சியும், தஞ்சையும்தான் நம் நினைவில் வந்து முன்நிற்கும்.

144. தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று சலியாது உழைப்பவர்கள் மக்கள் தொண்டுக்குத் தம் வாழ்வினை வகுத்துக் கொண்டவர். தன்னை அண்டிய அன்பர்களுக்குத் தன் அன்பை வாரி வாரி வழங்குபவர். இத்தகையவர் உறவு கிடைப்பது பூர்வஜன்ம புண்ணியத்தால்தான். அது அவ்வளவு எளிதல்ல. குறிப்பிட்ட சிலருக்கும் குறிப்பிட்ட காலத்தில் தான் இந்த உறவை அடைய முடியும். அவன் அருளாலே அவன் தாள் வணங்குதற்கும் அவன் அருளே வேண்டும். அவன் அருள் இல்லையென்றால் அவரை நெருங்கவும் முடியாது.

145. பெரியவரும் ஒரு வக்கீல் தான்; ஆனால் பெரியவருக்கும் கோர்ட்டில் ஆஜர் ஆகும் வக்கீலுக்கும் ஒரு வித்தியாசமுண்டு. கோர்ட்டு வக்கீல் தான் ஏற்றுக்கொண்ட ஒரு கேசுக்காக பீசுக்காகத் தான் (Fees) வாதாடுவர். பெரியவர் மக்கள் நன்மைக்காக என்றும்

எப்பொழுதும் ஆண்டவன் சந்நிதியில் வாதாடுகின்ருர். அதற்கு மக்களிடமிருந்தும் அவர் ஆசையோடு ஆவலோடு எதிர்பார்க்கும் பீஸ் (Fees) வேறென்றுமில்லை, உங்கள் அன்பு ஒன்று தான்.

146. கடவுள் எல்லாம் எனக்கு கொடுத்திருக்கின்ருர். ஆம்! அந்த எல்லாம் என்பது எது? அந்த எல்லாம் என்பது என் பக்தர்களாகிய நீங்கள் தான்.

147. மணியடித்து கூப்பிட்டாலும், கைதட்டி கூப்பிட்டாலும், பெயரை அழைத்துக் கூப்பிட்டாலும் மனிதன் திரும்பிப் பார்க்கின்ருன், ஓடி வருகின்ருன். கடவுளும் எந்தெந்த மார்க்கத்திலிருந்து அழைத்தாலும் அருள் பாலிக்க ஓடிவருகின்ருர்.

148. மனித உள்ளம் அன்பின் ஊற்ருக அமைவதுதான் மானிட ஜன்மத்தின் நற்பயன். அன்பு என்பது இகத்திற்கும் பரத்திற்கும் உகந்த உயர்ந்த பொருள். அன்பு தோய்ந்துள்ள உள்ளம் பலருக்கு பலவகையில் ஈடுபடுகின்றது. குழந்தைகளைக் கண்டவுடன் பாசமாக பரிமளிக்கின்றது. தாயைக் கண்டவுடன் சேயன்பாகக் கொழிக்கின்றது. காதலியைக் கண்டவுடன் காதலாக விளங்குகின்றது. பற்றற்ருனுகிய ஈசன் தாளைக் கண்டவுடன் ஒரு தனிப் பெரும் பற்ருல் அவன் தாளைப் பின்னிப் பற்றுகின்றது. அதுவன்றோ பக்தி. ஈசனே பற்றற்ருனக இருக்கும்போது அவன் மெய்யடியார்களும் பற்றற்ருன் ஆகிவிடுகின்றனர். இப்பற்றற்ருன் யார்? பந்த பாசங்களை விட்டவர், விருப்பு வெறுப்பு மற்றவர், இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்ருக பாவிப்பவர்—இப்படியெல்லாம் அதற்குப் பொருள் விரித்துக்கொண்டே போகலாம். அப்படியென்ருல் பற்றற்ற நிலை அடைந்தவர்களுக்குப் பற்றே இல்லை என்று சொல்லிவிட முடியுமா? அவர் மனத்தில் அன்பிற்கு இடமில்லை என்று சொல்லிவிட முடியுமா? தன் தாளை 'நீயே கதி' என்று சரணடைந்தோரை கருணை சுரக்காத ஈவிரக்கமில்லாத கல் நெஞ்சத்தவர் போன்று தள்ளிவிடமுடியுமா? சாந்தமும் தண்ணளியும் பேரன்பும் குடிகொண்ட கருணைமூர்த்தியே அவர். பற்றற்றநிலை என்பது தனக்கென்று வாழாத் தகைமையையே குறிக்கும். தனக்கு வேண்டும் என்ற சுயநலம் அற்ற தொண்டு மனப்பான்மையரே பற்றற்ற நிலை அடைந்தவர்.

149. கேள்வி : நமக்கு வேண்டியது எது?

பதில் : சுகம்,

கேள்வி : சுகம் எப்போது கிடைக்கும்?

பதில் : உடல்நோய், மனநோய் இல்லாதிருந்தாலே அதுவே சுகமாகும்!

கேள்வி : அதற்கென்ன செய்வது!

பதில் : உடம்பைச் சுத்தமாக வைத்துக் கொள். மனத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்.

150 கேள்வி : மனிதன் எப்படி இன்பம் அனுபவிக்கின்றான்?

பதில் : அவன் வண்ணத்துப் பூச்சி போன்று இன்பம் அனுபவிக்கின்றான். வண்ணத்துப்பூச்சி பல மலர்களிலுள்ள தேனை அனுபவிப்பது போன்று பல பொருள்களை அடைந்து இன்பம் அனுபவிக்கின்றான்.

கேள்வி : மனிதனுடைய இன்பம் எப்படி இருக்க வேண்டும்?

பதில் : வண்ணத்துப்பூச்சிக்கு பூ ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குச் சென்று இன்பத்தேனைப் பருகி அனுபவிக்கத்தான் தெரியும். ஆனால் மனிதனுக்கு இறைவனிடமும் ஒன்றியிருக்கவும் முடியும்.

151. கேள்வி : வாடாத பூ, நிலைத்த மணமுள்ள பூ, இன்ப மூட்டும் பூ எது?

பதில் : அது அன்பூ (பு)

152 செயலில் செயலற்றதைக் காண்பவரும் செயலற்றதில் செயலைக் காண்பவரும் பெரியவர்.

153. இடம் பொருள் ஏவல் அறிந்து நடந்து கொள்ள வேண்டுமென்பர். அது சுயநலத்திற்காக அல்ல. ஒருவன் சுயநலத்திற்காக இவைகளைப் பயன்படுத்தினால் அவனை சந்தர்ப்பவாதி என்பர். அவற்றையே பொது நன்மைக்காக ஒருவர் பயன்படுத்திவிட்டால் அவரே தேவரென மாறிவிடுகின்றார்.

154. எல்லாம் ஒன்றே என்று கருதுகின்ற பெரியவருக்கு எல்லோரும் ஒன்றுதான். அவர்கள் மக்களிடையே நல்லவர் கெட்டவர், விரோதிகள், நண்பர்கள், ஏழைகள், செல்வந்தர், உயர்ந்த ஜாதியினர், இழிகுலத்தோர் என்ற வித்தியாசத்தைப் பார்ப்பதில்லை.

155. அதிக காற்றில்லா இடத்தில் உள்ள விளக்கின் சுடரை அசைக்க முடியாது. ஆட்டிவைக்க முடியாது. அது போன்றதுதான் தியானத்தில் ஆழ்ந்துள்ள பெரியவரின் மனம்.

156. திருப்தியான மனத்தோடு இரு என்பர்: கவலையற்ற மனத்தோடு இரு என்பர்: தைரியமான மனத்தோடு இரு என்பர். ஆனால் உண்மையான யோகி இதைப் பற்றி சிந்திப்பதே இல்லை. ஏனெனில் இதைப்பற்றி சிந்திப்பதற்கு அவருக்கு மனமே இல்லை.

157. தூங்குகின்ற ஆத்மாக்களைத் தட்டி எழுப்பிப் பக்தியில் ஈடு படுத்துவதற்கே சித்துக்கள் செய்வது பயன்படுகின்றது. இவ்வுல கத்தை ஆட்டித் தானும் ஆடிநிற்கும் அரிய திருவருள் பேற்றினால், இவ்வையகம் தானும் வாழ்ந்து மக்களையும் வாழ வைக்கின்றது. ஆண்டவன் தன்மையில் மனிதனின் மனம் எவ்வாறு ஈடுபடுகின் றதோ அவ்வளவிற்கு அம்மனிதன் சீலமுடையவனாகின்றான். மனித னின் மனம் எவ்வளவிற்கு ஆண்டவன் மீது லயித்துச் சார்ந்து நிற் கிறதோ அவ்வளவிற்கு ஆண்டவன் அருள் பெற்றுப்பிறப்பை அறுக் கும் புனிதத் தன்மையை மனிதன் அடைவதுமன்றி ஆண்டவனின் எண்ணிலாச் சக்திப் பிரபாவங்களையும் அடைகின்றான். ஆண்டவ னின் அருள் பெற பக்தி வேண்டும். பக்தியை உணர ஆத்ம சுத்தி வேண்டும். ஆத்ம சுத்தி ஏற்பட்டால் ஆத்ம சக்தி ஏற்படும். ஆத்ம சக்தி ஏற்பட்டவுடன் விவேகம், வைராக்கியம், மூதாதை, சாதுசேவை, சாதுசங்கம், சங்கீத ஈஸ்வர நாம கீர்த்தனம், சத்தியம் முதலியவை களின் மூலமாகப் பக்தி தானே ஏற்படும். பக்தி ஏற்பட்டால் சித்தி எல்லாம் ஏற்படும். சித்தி ஏற்பட்டால் முக்தி ஏற்படும். முக்தி நிலையில் ஆத்ம சொரூபத்தைக் காணலாம். ஆத்ம சொரூபத்தை உணர்ந்தால் ஆண்டவனை உணரலாம்.

158. பழநி என்று சொன்னவுடன் ஆண்டவனை 'பழம் நீ' என்று நம் மனம் நினைத்து அவனை அடையப் பாடுபடுகின்றது. அக்கனி நமக்கு கிட்டி விட்டால் அதுவே நமக்கு முக்கனியையும் அரு ளுகின்றது: கற்பகமாகவும் கனியருள் புரிகின்றது.

159. திருப்பதி என்பது என்ன? அது அழகிய பதியைத் தான் குறிக்கின்றது. அவ்வழகனை அடைய நம்மனங்கள் முந்திக் கொள் வதில் ஆச்சரியமென்ன இருக்கின்றது.

160. குழந்தைகளுக்கு ஆகாரம் கொடுக்கும் விஷயத்தில் ஒவ் வொரு குழந்தைக்கும் ஒத்துக் கொள்கின்ற ஆகாரத்தையே தாய் கொடுக்கின்றாள். ஒரு குழந்தைக்குப் பாலும், ஒரு குழந்தைக்குக் கஞ்சியும், ஒரு குழந்தைக்கு சாதமும் ஊட்டுகின்றனர். இப்படியாக குழந்தைகளின் உடல்களுக்கு ஜீரண சக்திக்குத் தகுந்தபடி ஆகாரம் கொடுக்கின்றனர். அதுபோன்றே பற்பல மக்களின் பரிபக்குவ நிலைகளுக்கு ஏற்றாற்போல் கடவுளை அடைய பல மார்க்கங்கள் வகுக் கப்பட்டுள்ளன.

161. ஒருவர் இட்லியை விருப்புகிறார். மற்றொருவருக்குத் தோசை என்றால் ஆசை. இன்னொருவருக்கு உப்புமா மீது உயிர். இந்த இட்டிலியும் தோசையும் உப்புமாவும் உண்டாக்கிக் கொடுப்பது அரிசி தான். அதைப் போன்றே கோபாலன் ஹிந்து மதத்தைத் தழுவுகின்றார். இஸ்மாயில் இஸ்லாம் மதத்தைத் தழுவுகின்றார். ஜேகப் கிறித்தவ மதத்தைத் தழுவுகின்றார். இந்த மதங்களை யெல்லாம் உண்டாக்குகின்ற பொருள் ஒன்றுதான், பரம்பொருள் ஒன்றுதான்.

162. முருகு என்ற தமிழ்ச் சொல்லுக்கு எவ்வளவோ பொருள்கள் சொல்வர். மாறாத அழகை முருகென்பர். மாறாத இளமையை முருகென்பர். மாறாத இனிமையை முருகென்பர். தெய்வத் தன்மையையும் முருகு என்பர். முருகு என்ற சொல்லுக்கு அருள் என்ற பொருளும் உண்டு. அதனாலல்லவா முருகா என்றவுடன் உள்ளம் உருகுகின்றது, உதவியும் கிட்டுகின்றது.

163. உச்சிமலை அடைவதுதான் யோகியர் குறிக்கோள். உச்சியை அடைபவர்களே யோகியர்கள். உச்சி மலையில்தான் சீவன் சிவனோடு ஐக்கியமாகின்றது. உச்சிமலை அடைவதற்கு முன் இடும்பன் சந்நிதி அடைவது ஒக்கும், சித்தாடும் ஆற்றல் பெறும் நிலையினை அடைவது. உண்மை பக்தர் பழநிமலையை அடைவது திண்ணம். அவர் இடும்பன் சந்நதியைத் தரிசித்துத் திரும்பி விடுவதில்லை. அது போன்றே உண்மை யோகி பரப்பிரம்ம ஐக்கியத்தை அடைந்தே தீருவர். சித்தாடலிலேயே மனம் லயித்து அதிலேயே உழன்று திரிந்து வாணாளை வீணாக்க மாட்டார்.

164. மானிட உலகில் போர்த்த போர்த்த உடலில் குளிர் ஓங்கும்; நினைக்க நினைக்க மனதில் குளிர் (சங்சலம்) ஓங்கும்: யோகியர் உலகில் இந்த இரண்டுவகை குளிரும் இல்லை.

165. இராஜா வரும்போது எல்லா மேளங்களும் வரும்; வாண வேடிக்கைகள் வரும்: இவையெல்லாம் இராஜா வருவதற்குமுன் வருகின்றவை

166. கர்விக்குக் கண் தெரியாது:
ஞானிக்கும் கண் தெரியாது.

167. தலையில் உள்ளவரை மயிருக்கு மதிப்பு:
நிலையில் உள்ளவரை மனிதருக்கு மதிப்பு.
மயிர் தலைவிட்டால் மதிப்பவர் இல்லை:
மனிதன் நிலைவிட்டால் மதிப்பவர் இல்லை.

168. ஒரு பொய்யைச் சொல்லி உத்தமன் என்று போற்றப் படுவதைவிட உண்மையையே எப்பொழுதும் பேசி அதனால் கெட்டவன் என்று தூற்றப்படுவது மேல்.

169. மரியாதை போக்கிரிக்கும் கொடுக்கின்றோம், யோக்கியனுக்கும் கொடுக்கின்றோம் ; ஆனால் போக்கிரியை வீட்டு நடையில்வைத்து மாலைபோட்டு சீக்கிரம் அனுப்பிவிடுவோம் : யோக்கியனை வீட்டுக்குள் அழைத்துச் சென்று மாலை அணிவித்து விருந்து படைத்து உளமாரப் பேசி அன்போடு அனுப்பி வைக்கின்றோம்.

170. தெரிந்த விஷயத்தைப் பற்றி பேசினால் அளவோடு இருக்கும், தெளிவோடு இருக்கும் ; தெரியாத விஷயத்தைப் பற்றி பேசினால் அளந்துகொண்டே போகலாம், அது புரியவும் புரியாது.

171. சிவன் தலையில் உள்ள நாகப்பாம்பு கருடனைப் பார்த்து 'கருடா சௌக்யமா' என்று கேட்கும். அதைப்போன்றே பெரியவர்கள் அனுக்கிரகம் கொண்டுள்ளவர்கள் மற்றவர்களைக் கண்டு அஞ்சுவதில்லை.

172. ஆயிரம் சக்திவாய்ந்த குருமார்களைக் காணலாம் ; ஆனால் நம்பிக்கையுள்ள ஒரு சீடரைக் காண்பது அரிது.

173. அபிமானத்திற்கும் செல்பவரும் உண்டு:
அதிகாரத்திற்கும் செல்வபரும் உண்டு.

174. ஜோதி இருக்குமிடம் ஜோதிடம்:
சாதகம் செய்யும் கலை சாதகம் :
காலத்தைக் காட்டக் கூடியது காலண்டர்.

175. ஆமை அபாய காலத்தில் தன் உடலில் உள்ள ஐந்து பாகங்களையும் ஓட்டுக்குள் உள்ளிழுத்துக் கொள்ளும் தன்மை வாய்ந்தது. அபாயம் நீங்கியபின் தலையையும் தன் நான்கு கால்களையும் வெளியில் நீட்டும். அதுபோன்றே உள்ளொளி பெருக்கும் மகான்கள் வெளிஉலகில் அவருக்கு விரும்பாதவை நடக்க ஆரம்பித்தால் உடனே தம் ஐம்பொறிகளையும் உள்ளடக்கி ஈசனுடன் ஒன்றி அமைகின்றனர்.

176. மனுசன் (மனிதன்) என்ற சொல் எதைக்குறிக்கும். மனிதன் பாடுபட்டால் ஈசனை கலக்கலாம் என்பதைக் குறிக்கும். மனிதனே ஈசனுவதை உணர்த்தும் சொல்லே மனுசன் (மனு+ஈசன்) ஆகும், தெய்வ மனுசரூபா என்றபடி.

177. பழைய வீடாக இருந்தாலும் அதை அடிக்கடி கவனித்து வெள்ளை பூசி பழுதுபடாமல் வைத்திருந்தால் புதுவீடு போன்றே தோற்றமளிக்கும் : புதுவீடாக இருப்பினும் அதில் ஏற்படும் ஓட்டை உடைப்புகளைக் கவனியாதிருந்தால் அதுவே பழைய வீடாகத் தோற்றமளிக்கும்.

178. மற்றவருக்குத் தெரியாத விஷயங்களை மற்றவருக்குத் தெரிந்த விஷயங்களை எடுத்துச்சொல்லி விளக்கவேண்டும். பேரின்பம் என்பதை உணராதவர்களுக்கு பேரின்ப விளக்கம் உரைக்கும்போது அவர்களுக்குத் தெரிந்த சிற்றின்பத்தை வைத்துக் கொண்டுதான் ஒரு அளவு பேரின்ப விளக்கம் சொல்லமுடியும்.

179. அரிசியோடு குறுநொய்யை உலையில் வைத்தால் குறு நொய் கஞ்சியாகிவிடும்.

180 சீடன் என்பவன் பெட்டிக்குக் சாவியாக இருக்கவேண்டும்.

181. கேள்வி : நான் மோட்சத்திற்குப் போகவேண்டும்.

பதில் : நான் போனால் போகலாம்.

## 33. ஸ்ரீ தத்துவ தெய்வம்

## திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்

" அரியானை அந்தணர்தம் சிந்தையானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப்பாலைத்
திகழ்ஒளியை தேவர்கள்தங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனை கடலைக்குல வரையைக் கலந்துநின்ற
பெரியானைப் பெரும் பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே " — அப்பர்.

### பெரியான்

சாமிகள் வாழ்க்கை வரலாற்றை இரு பாகங்களில் படிக்கின்றோம். முதல் பாகத்தில் சாமிகள் பிறப்பு, வளர்ப்பு முதல் சாமிகள் இல்லறத்திலிருந்து கொண்டே துறவறப் பெருமைகொண்டு விளங்கும் சிறப்பு நிலையையும் படித்து மகிழ்ந்தோம். இரண்டாம் பாகத்தில் சாமிகள் குண நலன்களைக் 'குணசீலர்' என்ற பகுதியில் படித்து மகிழ்ந்தோம். அதைத் தொடர்ந்து சாமிகள் அற்புதம் ஆடும் சிறப்பையும், சாமிகள் சிவராஜ யோகியாக விளங்குவதையும், சாமிகளின் நமசிவாய தத்துவ விளக்கத்தையும், சாமிகளது வைத்தியநாதத் தன்மையையும், சாமிகளது மணிமந்திர பெருமையையும், சாமிகளது கருத்தைக் கருத்தாட்டும் ஆற்றலையும் படித்து மகிழ்ந்தோம். இவற்றையெல்லாம் படிக்கின்ற நமக்கு திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள் ஒரு தத்துவ தெய்வம் என்பது புரியாமலா இருக்கும்? அவருடைய பேராற்றல்களும், பெருநிலையும் அவர் நடமாடும் தெய்வம் என்பதை நமக்கு விளக்காமலா இருக்கும்? அவர் தன்னையறிந்தின்பமுறும் யோகீஸ்வரர் என்பதை உணர்த்தாமலா இருக்கும்? மெய்ப்பொருளை சர்வபரிபூரணன் என்கின்றோம், சச்சிதானந்தன் என்கின்றோம், தத்துவன் என்கின்றோம். மெய்ப்பொருள் என்றும் நிலைத்து நிற்கும் பொருள். அதன் பெருமையை விளக்கவே மெய்ப்

பொருளை தத்துவன் என்றும் கூறுகின்றோம். சாமிகளைக் கண்டு பழகும் நமக்குச் சாமிகளின் சர்வபரிபூரண நிலையும், சச்சிதானந்த நிலையும், தத்துவ நிலையும் நன்ருக விளங்கும்; ஆனுல் அது ஓரளவு தான் விளங்கும். பரிபூரணனை நாம் பரிபூரணமாக அறிந்து கொள்ள முடிவதில்லை. இதைத்தானே திருநாவுக்கரசரும் மிக அழ காக 'அரியானை' என்று ஆரம்பிக்கும் பாட்டில் அற்புதமாகப் பாடி உள்ளார். இந்த 'அரியானை' 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரி யான்' என்றல்லவா சேக்கிழாரும் புகழ்கின்ருர்.

இறைவன் பெரியான்; மறையிலும் மறையோர் மனத்திலும் விளங்கும் பெரியான்; தேன்பால் சுவையினும் மிக்க ஒளிமிக்க பெரி யான்; தேவர்கள் தன் கோனுதும் பெரியான்; திருமாலையும் பிரமனை யும், கனலையும், காற்றையும், கடலையும், மலைகளையும் கலந்து நிற்கும் பெரியான்; புலியூரிலுள்ள (சிதம்பரம், உள்ளத்தின் நடுவேயுள்ள சிதாகாசம்) பெரியான். இப்படிப்பட்ட பெரியான் எப்பேர்ப்பட்டவன்? அவன் 'யார்க்கும் தெரியாத தத்துவன்' என்றும் விளக்குகின்ருர் அப்பர் அடிகள். இந்தப் பாட்டு நமது சாமிகளது தெய்வீக இயல்பை நன்ருக நமக்குச் சித்திரித்துக் காட்ட உதவுகின்றதல்லவா? அவர் நமது இதயக் கோவிலில் என்றும் அமர்ந்திருக்கும் இனிய தத்துவ தெய்வமல்லவா? அவரது பேச் சல்லவா நமது பேச்செல்லாம்! அவரைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே அன்ருே?

இறைவனது முழு இயல்பை எக்காலத்தும் எவற்ருலும் யாராலும் அறிய முடியாது. அதை ஒருவாறு ஒரு சிறிதுதான் உய்த்து உணர்ந்து ஓதமுடியும். அப்படித்தான் சாமிகள் வாழ்க்கை வரலா ருகிய இந்நூலும் அமைந்துள்ளது. சாமிகளிடம் பல பக்தர்கள் வருகின்றனர். பல வருடங்கள் தொடர்பு கொண்ட பக்தர்களுமுண்டு: ஒரே வருடத்திற்கு உட்பட்ட காலத்தொடர்பு உள்ளவர்களும் உண்டு. சில பக்தர்கள் சக்கரம் போட்ட சாமிகள் திருவுருவப் படங்களை சாமிகள் திருக்கரங்களிலிருந்து பெற்று அப்படங்களைத் தெய்வமாக வைத்துப் பூஜை செய்து வருகின்றனர்: சில பக்தர்கள் சாமிகளிட மிருந்து திரு முருகன் தெய்வப் பாதங்கள் படிந்த பட்டையோ காகிதத்தையோ பெற்று அவைகளைத் தெய்வமாக வணங்கி வருகின் றனர்: சில பக்தர்கள் சாமிகள் அவரவர் மொழியில் வருவித்துக் கொடுக்கும் அருள் சீட்டை சட்டம் போட்டு பூஜித்து வருகின்றனர். ஒரு சில பக்தர்கள் சாமிகள் அருளால் தெய்வீக தரிசனத்தையும் ஜோதி தரிசனமாகவும் அடைந்துள்ளனர். இப்படி இன்னும் எவ்வள வோ இருக்கலாம். நமக்குத் தெரிந்தது ஓரளவுதான். பட்டு பீதாம் பர மங்கள புருடராக விளங்கும் சாமிகள் பூஜை அறையிலிருந்து வரும்போது சிவ சின்னங்கள் தாங்கி ருத்ராட்சமாலை அணிந்து

தேவசொரூபமாகவும் காட்சியளிப்பதையும் அறிவோம். இரட்சைக் கயிறுக்கு உதவும் கறுப்பு பட்டுக் கயிறுகளை பல துண்டுகளாக்கி அவற்றையே மறுபடியும் ஒரே கயிருகத் தம் திருக்கரத்தால் மாற்ற வல்ல அற்புத சக்தி வாய்ந்த சாமிகள், சில சமயங்களில் சிக்கல் கொண்ட கறுப்புக் கயிறுகளின் முடிப்பை அவிழ்ப்பதற்குப் படாத பாடு படுவதையும் காண்கின்ருேம். பாரிச வாயுவால் பாதிக்கப் பட்டு வைத்தியர்களால் குணமாக்கமுடியாது படுத்த படுக்கையாய் இருந்தவர்களையும் ஒரே நிமிடத்தில் குணமாக்கி எழுந்து நடக்க வைக்கின்ற சாமிகள் சிலருக்கு நோய்களை நிவர்த்திக்க விபூதிப் பிர சாதமும் மூலிகைகளும் அருள்வதையும் காண்கின்ருேம். ஒரே சம யத்தில் பலருக்கு பல இடங்களில் காட்சி அருள்கின்ற சாமிகள், சில சமயங்களில் சிலர் தேடிச் சென்ருலும் குறிப்பிட்ட இடங்களில் சாமிகள் தரிசனம் வாய்ப்பதில்லை. தன் மனைவியோடு கோபித்துக் கொண்டு வீட்டை விட்டே செல்கின்ற ஒரு கணவனைச் சாமிகள் தானே கூப்பிட்டு அவனுக்கு நல்லுரை வழங்கி மறுபடியும் அவன் மனைவியிடம் அனுப்புகின்ருர்; ஒரு பெருமலை உச்சியினின்றும் கிடு கிடு பாதாளத்தில் நந்திமலையில் விழ இருந்த ஒருவனை மதுரை யிலிருந்துகொண்டே தம் திருக்கரம் கொடுத்துக் காப்பாற்றுகின்ருர் சாமிகள். மலாயாவில் பக்தர் விருப்பத்திற்கிணங்க இதுவரை யாரும் கண்டும் கேட்டுமிராத ஒரு நூதன புதுமைப் பறவையையே சிருஷ் டித்துவிட்டார் சாமிகள். ''தேவனைக் காட்ட முடியுமா?'' என்று கேட்ட புலவர் ஆசையைத் தீர்க்க ஜோதி வடிவமான வண்ணத்துப் பூச்சி ஒன்றையே பறந்தோடி வரச்செய்தார் சாமிகள்? சாமிகள் மனது வைத்தால் சுபமங்களக் கயிறு எங்கிருந்தோ வந்து விழுகின்றது. சுபமங்களக் கயிறு மட்டும்தாஞ? அது வாழ்க்கையில் இணைத்து வைக்கின்ற மணுளனே அவன் மணக்க இருக்கும் கன்னிக்கு முன் எங்கிருந்தோ வந்திறங்குகின்ருன்? இப்படி எவ்வளவோ அற்புதங் கள் நடக்கின்றன. நாம் கண்டறியாதன பல காண்கின்ருேம். இது மட்டுமா? சாமிகள் தரிசனம் கிடைத்து விட்டால், கண்டதும் காதல் கொள்கின்ருேம்! அது தெய்வீகக் காதல்! அது மாருத சீரிளமைக் காதலாக நிலைத்து விடுகின்றது! சாமிகளைக் காணும் போதெல்லாம் ஒரு மகிழ்ச்சி, ஒரு தெம்பு, ஒரு தைரியம் அடைகின்ருேம்! சாமிகளை நினைக்கும்போதெல்லாம் அதே மகிழ்ச்சி, அதே தெம்பு, அதே தைரியம் நம்மை அணைக்கின்றன. "நான் இருக்க பயமேன்" என்ற பாணி யில் அவருடைய தூக்கிய திருக்கரம் நமக்கு அபயமளித்து இரட்சிக் கின்றது. உண்மையிலேயே சாமிகள் திருவருள் பக்தர்களுக்குக் கிட்டுகின்றது. சாமிகள் நம் மனத்தாஞகின்ருர். சாமிகள் நம் மனத்துள் நின்ற கருத்தாஞகின்ருர்: சாமிகள் நம் கருத்தறிந்து முடிப்பாஞகின்ருர். "வேண்டுவோர் வேண்டுவது ஈவான் கண்டாய்" என்று சாமிகளை ஏத்துகின்றன நம் உள்ளங்கள். "வேண்டத்தக்கதறிவோய் நீ, வேண்ட முழுதுந்தருவாய் நீ" என்று சாமிகளை போற்றுகின்றன நம் இதயங்கள்.

## அட்டமா சித்துக்கள் :

சாமிகள் தன்னையுணர்ந்த சிவராஜயோகீஸ்வரர். அட்டமா சித்துக்கள் அனைத்தும் ஆடவல்ல பெருநிலையில் உள்ள கருணைகரக் கடவுள். இந்த சித்துக்கள் அனைத்தையும் சாமிகள் பக்தர்களுக்கு அருள்பாலிக்கவே பயன்படுத்துகின்றார். சாமிகளை ஓரளவு அறிகின்ற நமக்கு அந்த அட்டமா சித்துக்களும் தெரியவேண்டியதே. (1) அணிமா என்பது அணுவிலும் நுட்பமான வடிவுற்றிருத்தல்; அணுவில் உள்ளதைக்கூட அறியக்கூடிய அவ்வளவு நுட்பமான வடிவையும் பெறலாம். (2) மகிமா என்பது அண்ட சராசரங்களை விட பேர் உருப்பெற்று நிற்றல். அப்படி நிற்கும்போது சகல புவனங்களையும் நம்முன் காணலாம். (3) லகிமா என்பது காற்றினும் மெல்லிய வடிவம் பெறுதல்; இந்த சக்தியால் மனோ வேகத்தையும் மிஞ்சும் அளவுகடந்த வேகத்தை அடையலாம். (4) கரிமா என்பது அசைக்கமுடியாத மலையைப் போன்று வலியுறுதல். (5) பிராப்தி என்பது சந்திரமண்டலத்தைக்கூடத் தொடக்கூடிய அளவுக்கு எந்த இடத்திற்கும் செல்லக்கூடிய சக்தியாகும். இதனால் மனதில் எண்ணியதை எண்ணியவாறு பெறலாம். இதனால் கற்பக நிழல், சங்கநிதி, பதுமநிதி விரும்பியவாறு பெறலாம் என்பர். இந்த சக்தியால் ஆண்டியை அரசனாக்க முடியும், ஓட்டைப் பொன்னாக்க முடியும் என்பர். (6) பிராகம்யம் என்பது வேண்டியனவற்றை வேண்டிய அளவில் அடைந்து அனுபவிக்கும் சக்தியாம். ஒவ்வொரு கோபியர் இடத்தும் ஒவ்வொரு கிருஷ்ணன் அமைந்த நிலை இதை விளக்க ஓர் உதாரணம் (7) வாசித்வம் என்பது எல்லா ஜீவராசிகளையும் அனைத்தையும் சென்ற காலம், நிகழ் காலம், எதிர் காலம் அனைத்தையும் ஆளக்கூடிய சக்தியாம். (8) ஈசத்துவம் என்பது கடவுளைப் போன்று ஆக்கல் அழித்தல் தொழில் முக்காலத்தும் செய்யக்கூடிய சக்தியாம். சாமிகள் அருள்பாலிக்க ஆடுகின்ற சித்துக்கள் எண்ணிறந்தன. அவையாவும் மேலே கூறப்பட்டுள்ள எட்டு சித்துக்களில் வருபவை. சமீபத்தில் சாமிகள் கொடுமுடியில் ஆடிக் காட்டிய ஓர் அற்புதத்தை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். 1969 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 22 ஆம் நாள் திருச்சி ஜில்லாவில் கொடுமுடிக்கருகில் உள்ள நொய்யல் என்ற இடத்தில் செல்லாண்டியம்மன் கோவிலுக்குச் சென்றார் சாமிகள். இது மிகவும் சக்தி வாய்ந்த கோயில். இந்தக் கோயில் பூசாரி அருள் ஆவேசம் வந்தால் இதற்கென்றே இருக்கும் கூரிய அரிவாள் மேல் நின்று கோவிலைச் சுற்றி வருவதுண்டு. இப்பூசாரிக்கு அருள் வந்தால் நடப்பவற்றைக் கூறும் ஆற்றலும் வந்துவிடும். சாமிகள் சென்ற சமயம் இந்த பூசாரி தனக்கு அம்மையின் அருள் ஏற்படாது என்று கூறினார். 'அப்படியா' என்று கேட்ட சாமிகள் ஒரு

வட்டம் வரைந்து அந்த பூசாரியை அவ்வட்டத்துள் நிற்க வைத்தார், சாமிகள் தேவியை வாய்விட்டுத் துதிக்க ஆரம்பித்தார்.

"ஓம் ஆதார காளியே தேவி கோட்டத்திலும்
அலங்கார ரத முன்னிலும்
அந்தியும் பொழுதுச்சி உதய காலத்திலும்
அங்காள பரமேஸ்வரி
சூதானமாகிய நின் கேதாரந் தன்னிலும்
சோலைகள் உளக் கரையிலும்
தூரியாடிய சக்தி கன்னிமார் பக்கலும்
சுடலைகள் மயானத்திலும்
பாதாள மூடிவளர் திரவியந் தன்னிலும்
பாத முச்சந்தி தன்னிலும்
பாங்குடன் இருந்து விளையாடியே ஓங்காரி
பாத நடனம் புரிந்து
வாதாடி நின்றுமே எதிரிட்ட பேர்களை
வெல்ல வல்லான மாவீரா
மாநிலம் புகழ் செய்யும் அம்மாவட்டி மேவிய
வளர் கருப்பண்ண சாமியே."

சாமிகள் இந்தத் துதியை முடித்தவுடன் பூசாரிக்கு அருள் வந்து விட்டது. தன்னால் தேவியின் அருளை அடைய முடியாது என்று சொன்ன பூசாரிக்கு சாமிகள் தேவியின் அருளை உவந்தளித்தார். இப்படி எவ்வளவோ இடங்களில் சாமிகள் செய்திருக்கின்றார். ஓரிடத்தில் முனியாண்டிக்குக் கோயில் கட்டுவதா மதுரை வீரனுக்குக் கோயில் கட்டுவதா என்ற பிரச்னை எழுந்தது. சாமிகள் அந்தக் கோயிலுக்குரிய தேவதையையே பேசவைத்தார். கூட்டத்திலிருந்த ஒருவருக்கு ஆவேசம் வந்தது. அவர் வாயிலாக தேவதையே பேசியது. (பக்கம் 406-407) இப்படி தேவதையே பேச வைத்து பிரச்னையை தீர்த்து வைக்கும் சாமிகளால் ஆவாததொன்றுண்டோ ?

## ஜீவன் முக்தர் — விளக்கம் :

சாமிகளின் எளிமையானத் தோற்றமும் எங்கும் எப்பொழுதும் எல்லோரிடத்தும் சொல்லாலும் செயலாலும் எளிமையாகப் பழகும் தன்மையும் சாமிகளுடைய பேராற்றல்களையும் பெருஞ்சக்தியையும், சர்வேஸ்வரத் தன்மையையும் மறைக்கும் திரையாகவே விளங்குகின்றது. சாமிகள் குடும்பத்தோடு வாழ்கின்றார். திண்டுக்கல்லில் பன்றிமலை சாமிகள் தெருவில் வாழ்கின்றார், இதற்குமுன் பன்றிமலையில் பஞ்சாயத்துத் தலைவர் பொறுப்பையும் ஏற்று வாழ்ந்தார்,

இதற்குமுன் கன்னிவாடி ஜமீனில் ரெவின்யூ இன்ஸ்பெக்டராகவும் பணியாற்றினர் – என்பதை எல்லாம் கவனிக்கும்போது இவரா நலஞ்சிறந்த ஞான யோகக் கிரியா சரியையெலாம் மலர்ந்தமொழித் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்? இவரா தீராத நோயெல்லாம் தீர்க்கும் கருணாகரன்? இவரா பலருக்கு வாய்த்துள்ள ஆபத்சகாயன் அனந்த இரட்சகன் என்ற ஐயமும் எழ இடமுண்டு. ஆனல் பெரியவருடைய இயல்பு எப்படி அமைந்திருக்கின்றது? அப்படித் தான் அமைந்திருக்கின்றது திருத்தவத்திரு. பன்றிமலை சாமிகளின் இயல்பும்! பெரியவர்கள் இயல்பை தொகுத்துரைக்கும் சில பாடல் களைப் படித்து மகிழ்வோம்.

"தீரராய் பரமவித்தாய்த் தெளிந்தவர் தெளியுமுன்னம்
வாரமா யிருந்ததங்கள் வருணமாச்சிரமஞ் சொன்ன
பாரகாரிய மானுலும் பலர்க்குப சாரமாக
நேரதாச் செய்வர் தீர்ந்தநிலைவிடார் ஜீவன்முக்தர்
— (கைவல்ய நவநீதம்)

காமமாதிகள் வந்தாலுங் கணத்திற் போமனத்திற் பற்ருர்
தாமரைஇலைத் தண்ணீர்போற் சகத்தொடுங் கூடிவாழ்வார்
பாமரரெனக் காண்பிப்பார் பண்டிதத்திறமை காட்டார்
ஊமருமாவா ருள்ளத் துவகையாஞ் ஜீவன்முக்தர்.
— (கைவல்ய நவநீதம்)

வல்லனென் றிருப்பினு மிருக்கும் வன்மையோன்
றில்லனென் றிருப்பினு மிருக்கு மெள்ளுறப்
புல்லனென் றிருப்பினு மிருக்கும் புண்ணிய
நல்லனென் றிருப்பினு மிருக்கும் ஞானியே.—(பிரபுலிங்க லீலை)

பேதகன்மத்தால் வந்த பிராரத்த நாநா வாகு
மாதலால் விவகாரங்க ளவரவர் காவவாகும்
மாதவம் செயினுஞ் செய்வார் வாணிபஞ் செயினும் செய்வார்
பூதலம் புரப்பார் ஐயம் புகுந்துண்பார் ஜீவன்முக்தர்.
— (கைவல்ய நவநீதம்)

நறவங் குடித்தாலு நாயிறைச்சி தின்ருலுங்
குறவருடன் கூடிக் குளித்தாலு — மிறைவனே
தானென்னுந் தன்மை சலியா ருலகர்க்கு
நானென்று சொல்லி நடிப்பார். — (சிவஞான வள்ளலார்)

சென்றதுகருதார் நாளை சேர்வது நினையார் கண் மு
னின்றது புசிப்பார் வெய்யினிலவாய்விண் விழுதுவீழ்ந்து
பொன்றினசவம் வாழ்ந்தாலும் புதுமையா வொன்றும்பாரார்
நன்றுதீதென்னுர் சாட்சி நடுவான ஜீவன் முக்தர்.
— (கைவல்ய நவநீதம்)

சாமிகளிடைய எளிமையும், இனிமையும், குழந்தைச் சுபாவமும், பேராற்றல்களும் எண்ணிறந்தவர்களைச் சாமிகளிடம் இணைத்து வைக்கின்றன. சாமிகளுடைய அன்பும், கருணையும், சமரச சன்மார்க்க போதனைகளும், எம்மதமும் சம்மதம் என்ற பெருநோக்கும், என் கடன் பணிசெய்து கிடப்பதே என்ற குறிக்கோளும் பற்பல மதத்தினரையும் சாமிகள் பக்தர்களாக்குகின்றன. சாமிகளைக்கண்ட மேல்நாட்டு அறிஞர்சள், பல்வேறு மதத்தினர் — சீக்கியர், கிறித்தவர், முகமதியர், சைவர்கள், வைணவர்கள் — யாவரும் சாமிகளது உள்ளுணர்வை அறிந்து சாமிகளை 'தன்னையுணர்ந்த மகான்' என்று போற்றுகின்றனர், உள்ளொளி பெருக்கும் பெரியவர் என்று ஏத்துகின்றனர், தன்னையறிந்தின்பமுறும் சிவராஜயோகி என்று பணிகின்றனர். நமது இந்தியநாடு ஓர் புண்ணிய பூமி; எவ்வளவோ மதங்களை உருவாக்கிய நாடு: எவ்வளவோ பெரியவர்களை ஈன்றெடுத்த நாடு இந்நாடு. உருவமற்ற வழிபாட்டிற்கும் வழிவகுத்துக் கொடுத்தது, உருவ வழிபாட்டிற்கும் விதிகள் ஏற்படுத்திக் கொடுத்தது, கடவுளைப்பற்றியே கூறுது கொல்லாமை, திருடாமை, பொய் பேசாமையை வலியுறுத்தும் கொள்கைகளைக் கொண்டவர்களையும் கொடுத்தது, பக்திநெறிக்கும் பாதை அமைத்துக் கொடுத்தது, அன்பையும் அறிவையும் தெய்வமாகப் பாவித்த உத்தமர்களுக்கும் பெரிய இடம் கொடுத்தது. வேதம் உபநிடதம் கொண்ட ஆழ்ந்த கருத்துக்களை மக்களுக்கு எடுத்துரைத்த பேரறிவாளர்களுக்கும் பெருமை தேடிக் கொடுத்தது' மகாவீரர், சித்தார்த்தர், பக்த விஜய பெரியார்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள், சங்கரர், இராமானுஜர், பதினெண் சித்தர்களும்,—இப்பெரியார்களையெல்லாம் மனித சமுதாயம் முன்னேற அளித்த நம் தவத்திருநாடு சமீபத்தில் இராமகிருஷ்ண பரமஹம்சர், இராமலிங்க சாமிகள், சீரடிசாயிபாபா, இரமண மகரிஷிகள் முதலியோரையும் மக்கள் நலனுக்கு அளித்தது ; இன்று திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளையும் நமக்கு அளித்துள்ளது. சாமிகளிடம் வராத மதத்தினர்கள் இல்லை: சாமிகளிடம் பேசாத தத்துவங்கள் இல்லை: சாமிகளிடம் தேடாத உண்மைகள் இல்லை. எல்லோருக்கும் இனிய எளிய சொற்களில் இனிமையாகவும், எளிதாகவும் விளக்கங்கள் கொடுத்துத் திருப்தி செய்கின்ற சாமிகளின் சமரச சன்மார்க்க எம்மத சம்மத அன்பு நெறியை எப்படிப் போற்றுவது ?

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினுற்கோர்
வார்த்தை சொல சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்ற நிலையில் உள்ளோர்க்குச் சாமிகள் சற்குருவாகவும் வாய்க்கின்ருர்.

"விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனி போலன்றே பராபரமே"

என்ற நிலையினருக்கும் அவரவருக்குகந்த சரியை அல்லது தாசமார்க்கத்திலிருந்தும், கிரியை அல்லது சற்புத்திரமார்க்கத்திலிருந்தும், யோகம் அல்லது சன்மார்க்கத்திலிருக்கும் ஞானம் அல்லது சன்மார்க்கத்திலிருந்தும் அறிவு புகட்டும் அருட்குருவாக அமைகின்றார்.

இவையன்றி மேற்படிக்கே செல்ல விரும்பும் பெரியவர்களுக்கும் பெரிய குருவாகவும் விளங்குகின்றார்.

"தேகம் யாதேனுமொரு சித்திபெறச் சீவன்முக்தி
யாகுநெறி நல்லநெறி அய்யா பராபரமே"

என்றிருக்கும் உயர்நிலை பெரியவர்களுக்கும் பெருஞ்ஜோதியாக விளங்குகின்றார் சாமிகள்.

"அட்டதிசையோர்களும் உமது அடிபணியும் மகிமையை
அடைந்தமா ஞான குருவே
அருளடையவுன் வழியதனை அண்டு முன்னடியார்க்கு
அறிவிக்கும் ஞான குருவே
வட்டமதி மண்டபம் மத்தியில் இருந்துளே
வரமதை யளிக்கும் ஞான குருவே
வக்ஷர காயத்துடன் மலமற்ற சாதுவை
வந்துதரிசித்த குருவே
துட்டவழி சண்டனை தோல்வி செய்துசதா
தூங்காமல் தூங்கும் குருவே
துன்பம் சாற்றின்பமது தொடராததற்கு
துலைத்த தன் வினைய குருவே
சட்டப்படி அஷ்டாங்க யோகமது செய்துபின்
சாயுஜ்யம் பெற்ற குருவே
சச்சிதானந்த மதை சாரயான குருவீர்
சண்முகானந்த குருவே"

இப்படி ஏத்துகின்றார் ஒரு முகமதிய பக்தர் சாமிகளின் தெய்வீக ஆற்றல்களை வியந்து!

சாமிகளிடம் பல யோகிகள் வந்து விளக்கங் கேட்டுச் செல்கின்றனர். சில சித்துக்கள் புரிகின்ற சில சித்தர்களும் தன்னிகரில்லாப் பெரும் சித்தர் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளைத் தரிசனம் செய்து அருள்பெற்று மகிழ்கின்றனர். இந்தப் புத்தாண்டில் (சௌமிய வருடம்) சாமிகளைக் காண ஒரு சித்தர் திண்டுக்கல்லுக்கு வந்திருந்தார். அவர் அன்னிய மதத்தைத் தழுவியவர். சாமிகளைக் கண்டு பாமாலை சாற்றி வணங்கி வந்த பெரியவரை விநாயகர் கோவிலில் சாமிகள் பக்தர்கள் சூழ்ந்து கொண்டனர். அவருடைய

சித்தாடும் ஆற்றலைக் கேள்விப்பட்ட பக்தர்களுக்கு அவ்வடியார் உரைத்த மொழிகள் ஒரு பேருண்மையை எடுத்துக் காட்டியது. "சாமிகள் ஓர் அருட்பெரும் ஜோதி, சாமிகள் ஓர் சக்திமிக்க கதிரவன். அவர் ஜோதி முன்பு நான் ஒரு இருபத்தைந்து மெழுகு வர்த்தித் திறன் (Candle Power) உள்ள பல்பு போன்றவன். சாமிகளிடம் நான் அடிக்கடி வந்து ஆசி அருள்பெற்றுத் திரும்புகின்றவன்" என்று மிகவும் அழகாகச் சாமிகளது மாபெரும் சக்தியைப் புகழ்ந்தார். சாமிகள் தம் பக்தர்களுடைய பரிபக்குவநிலை உணர்ந்து அவர்களுக்குகந்த உபதேசம் அருள்கின்றார்.

"கடவுள் கண்டவர்களுக்குக் கற்கண்டு
காணாதவர்களுக்குக் கல்குண்டு."

என்று சொல்லி எளிய சொற்களில் இனிமையாகப் புரியவைக்கின்ற சாமிகள் பரப்பிரம்ம தத்துவத்தையும் பக்தர்களுக்குப்பரிபூரணமாக எடுத்துக் காட்டவல்ல குருநாதன். ஆறுமுகமான பொருள் நீயருள வேண்டும் என்று வேண்டினார் அருணகிரிநாதர் முருகனின் ஒவ்வொரு முகத்தின் இயல்பைத் தொகுத்துக் காட்டும் தன் அருமையான 'ஏறுமயிலேறி விளையாடுமுகம் ஒன்றே' என்று ஆரம்பிக்கும் பாட்டில். அந்த ஆறுமுகப் பொருளை நாம் அடைவதெப்படி? என்பதைச் சாமிகள் பரிபக்குவமடைந்த பக்தர்களுக்கு உணர்த்துகின்றார்; 'அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்' என்பதைச் சொற்களாலும் விளக்குவர் சாமிகள். காட்சியைக் கொண்டே அனுபவ வாயிலாகவும் காட்ட வல்லவர் சாமிகள்.

"கேட்ட இசையெல்லாம் செவிக்கின்பம் ஆச்சுதடி
கேளாத நாதமெல்லாம் உயிர்க்கின்பம் ஆகாதோ"
(Heard melodies are sweet but those
Unheard are sweeter. —Keats)

என்று பாடினார் ஆங்கிலக் கவிஞன் ஜான்கீட்ஸ். அந்தக் கேளாத நாதத்தையும் கேட்க வைக்கக் கூடிய மகாபுருஷர் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்.

"எட்டாப் பழமடியோ
இறக்காத தேனடியோ
மட்டில்லா ஆனந்தமே — கிளியே
மால்மருகன் தந்த சுகம்."

என்று ஏங்கித்தவிக்கின்றது உள்ளம் மால்மருகன் சுகத்தை நோக்கி; அந்த சுகத்தை நமக்கருளவல்ல மகாதேவன் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்.

வேதாந்தம் காண்பதெல்லாம் மாயை என்கின்றது; கயிற்றை அரவு என நினைத்து மிரண்ட கதையாக்குகின்றது நாம் காண்பதை யெல்லாம். ஆனால் நாளுக்கு நாள் விரிந்து செல்லும் விஞ்ஞானம் யாவும் ஆடம் (Atom) எலக்டிரானால் ஆக்கப்பட்டவை என்று போதிக்கின்றது. எது எப்படியோ? இந்த உலகம் ஒரு அற்புதம்! கண்களுக்கு விருந்து ஊட்ட எவ்வளவு அழகுக் காட்சிகள் - நீள் மலைகள், நீலவானம், ஆழ்கடல்கள், மென்மலர்கள், வானவில், பறவைகள், மீனினம், விலங்கினம் — சத் சித் ஆனந்தம் மிளிரும் உலகில், சத்வ ராஜ தாமசகுணம் கொழிக்கும் உலகில் எவ்வளவு மாற்றங்கள்- குளிர்ச்சி உஷ்ணம், அன்பு வெறுப்பு, கருப்பு வெள்ளை, மேடு பள்ளம் — இப்படி எவ்வளவோ? ஒளியின்றித் தண்ணீரின்றித் காற்றின்றி வாழ முடியுமா? உலகிலே எவ்வளவு உருவங்கள்? ஆனால் ஒரு மனிதனைப் போல் மற்றவன் உண்டா, குணத்திலும் தோற்றத்திலும்? இவைகளைப் பற்றி சிந்திக்கும்போது பரம்பொருள் தன்மை விளங்குகின்றது.

> "மரத்தை மறைத்தது மாமத யானை
> மரத்தின் மறைந்தது மாமத யானை
> பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
> பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்"

என்று விளக்க முனைந்தார் பரம்பொருளின் தன்மையை. எவ்வளவு படித்தாலும் ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவுவதில்லை என்பது போல்தான் முடியும். இவற்றை விளங்கவைக்க அனுபவம் வேண்டும். இந்த அனுபவம் அருள ஒரு குருநாதன் வேண்டும். குருநாதன் வாய்ப்பது நமது யோகத்தைப் பொறுத்தது. அப்படி ஒரு குருநாதன் கிடைத்து விட்டால் அந்தச் சச்சிதானந்தன் நம்மையும் சச்சிதானந்தனாக ஆக்கிவிடுவர்.

> "ஆரியன் நல்லன் குதிரை இரண்டுள
> வீசிப்பிடிக்கும் விரகு அறிவார் இல்லை
> கூரியநாதன் குருவின் அருள் பெற்றால்
> வாரிப்பிடிக்க வசப்படுந்தானே,"

யோகத்தை அனுபவ வாயிலாக நமக்கு அருள சிவராஜயோகி திருத்தவத்திரு பன்றிமலைசாமிகள் இருக்கின்றார். அவர் பாதமலர்களைப் பற்றுவோம்!

இவரல்லவா இன்று நமக்குப் பல தத்துவங்களை விளக்குகிறன் அருள் தெய்வமாகப் பிரகாசிக்கின்றார்.

சரித்திரத்திற்குகந்த தத்துவ தெய்வம் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்! தோத்திரத்திற்குகந்த தத்துவதெய்வம் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்! சாத்திரத்திற்குகந்த தத்துவ தெய்வம் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்!

**நாம் போற்றும் குருநாதன் :**

சாமிகளது அருங்குணங்களைப் பார்க்கும்போது, சாமிகள் 'அன்பே சிவம்' என்று விளங்குகின்றார், நமது சித்தமிசை குடி கொண்ட பரிபூரணாநந்தமாக விளங்குகின்றார், அருட்பெருஞ் ஜோதியாகக் தனிப்பெருங்கருணையாக விளங்குகின்றார், "அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்பநிலை தானே வந்தெய்தும்" எனும் திருவாசகத்திற்கு விளக்கமாகவும் விளங்குகின்றார். அவர் நமது சற்குரு. அவர் நமது தந்தையும் தாயும்! அவர் நமது உயிர்த்துணை! அவர் நமது சஞ்சலமது தீர்க்கவந்த தேசிக வடிவு. அவரையல்லால் மற்றொரு துணை நமக்குண்டோ? சாமிகள் நமது பிறவிப் பெருங்கடலைத் தாண்ட வாய்த்துள்ள பெருந் தெய்வம்! அவரை நினைந்து பணிந்து அணைவதல்லவா நமக்கு வாய்த்துள்ள பெரும்பேறு!

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமா யிருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்."

என்றல்லவா நாம் அவரைத் தொழுகின்றோம். சாமிகளை அடைந்துள்ள நாம் என்ன மாதவம் செய்துள்ளோம்.

"என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே
மின்னுவார் சடை வேத விழுப்பொருள்
செந்நெலார் வயற் சேறையுட் செந்நெறி
மன்னு சோதி நம்பால்வந்து வைகவே."

என்றல்லவா நம் உள்ளங்கள் சாமிகளின் திருவடிகளை வணங்குகின்றன.

நமது சாமிகள் நமக்கு வாய்த்துள்ள மெய்ப்பொருள் தெய்வம், நடமாடும் தெய்வம், தத்துவ தெய்வம். விண்ணுலகு தெய்வங்களை

நாம் பார்த்ததில்லை. ஆனால் மண்ணுலகை விண்ணுலகாய் மாற்ற வல்ல அற்புதத் தெய்வம் திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளை நாம் மண்ணுலகில் பார்க்கின்றோம். சங்கரன்தாள் ஷண்முகன்தாள் நேரில் காணச் சிறப்பறியோம் இன்று சாமிகளின் திருத்தாள்களை நேரில் கண்டுகளிக்கும் பேற்றைப் பெற்றுள்ளோம். சாமிகள் யோக உச்சநிலையில் விளங்குகின்ற அருள் தெய்வம், சதாசிவ தெய்வம், தன்னையுணர்ந்த திருத்தெய்வம், 'நீயே நானாய் நானே நீயாய்' என்ற நிலையில் இறையோடு இரண்டறக் கலந்து நிற்கும் மெய்ப் பொருள் தத்துவ தெய்வம்! உலகிற்கு நன்மை பயக்கும் மெய்த் தெய்வம்!

"தத்துவ தெய்வமம்மா
சதாசிவ மானதம்மா
மற்றுள்ள தெய்வ மெல்லாம்
மாயை வடிவாமே"

இப்படியல்லவா நமது சாமிகள் சிவராஜ யோகீஸ்வரராகவும், நமசிவாய சாமிகளாகவும், வைத்திநாத சாமிகளாகவும், மணிமந்திர ஔடத சுபமங்கள நாதராகவும் விளங்குகின்றார். மக்களுக்கு சுபம் அருளுகின்றார்.

"மெய்தானரும்பி விதிர்விதிர்த்துன் விரையார் கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பிவெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றி யென்னும்
கைதான் நெகிழ விடேனுடையா யென்னைக் கண்டுகொள்ளே"

இப்படியல்லவா மனம் மொழி மெய் எனும் முக்கரணங்களாலும் அவர் திருவடிகளை உள்ளன்போடு நாம் வழிபடுகின்றோம்.

சாமிகள் நமது குருதேவர். சாமிகள் நமது கண்கண்ட தெய்வம். சாமிகள் நமது தத்துவ தெய்வம். சிவராஜ யோகீஸ்வரராக விளங்கும் சாமிகளைப் பாமாலைகள் கொண்டும், கீர்த்தனை மாலைகள் கொண்டும் பக்தர்கள் தோத்தரிக்கின்றனர். பக்தர் திருமதி கண்ணம்மாள் என்கிற இலட்சுமி அம்மாள் பாடும் கீர்த்தனங்களைக் கேட்டு மகிழ்வோம்.

### கீர்த்தனம் (i)

**பல்லவி**

குருதேவா சாமி குருதேவா (குருதேவா)

**அனுபல்லவி**

குருதேவா ஸ்ரீ பன்றிமலை தேவா
பக்தர்களைக் காக்கும் பரம புருஷ தேவா (குருதேவா)

சரணம்

மூலாதார குண்டலி மூலக்கனலால்
முட்டி முட்டி எழுப்ப சொல்லாமல் சொல்ல
சுப்பிரமண்ய தேவா தண்டாயுத பாணி
தயானந்த தேவா — (குருதேவா)

## கீர்த்தனம் ( ii )

பல்லவி

என்ன தவம் செய்தேன் நான்
இந்த சற்குருவை அடைய — (என்ன)

அனுபல்லவி

சந்திர சூரியனின் ஒளிப்பிழம்பை வீச
காருண்ய மூர்த்தியின் கருணையே காரணம் — (என்ன)

சரணம்

ஓரிரு திங்களில் ஐயன் திருவடி தீட்சையிட்டு
பற்பல அறிவுரைகள் பரிந்தே சொல்ல
திருமலை யினிலே திருத் தாளினை யனுப்பி
திருவருள் பாலித்த தேசிகனை அடைய (என்ன)

## கீர்த்தனம் ( iii )

பல்லவி

அம்மையே அப்பா குருவே (அம்மை)

அனுபல்லவி

உம்மையே நாடி வந்தேன் — பன்றிமலை முருகா (அம்)

சரணம்

ஐந்து கரத்தனை ஐமுக தேவியை
கனவிலும் நனவிலும் காணத்துடிக்கு மெனக்கு
ஞாயிறு காலைநாடி நான்சென்று காண
நாதாந்த குருவேஎன் போதாந்த குருவே (அம்மை)

சாமிகளது குருநிலையைப் போற்றுகின்ற இசைப்பாடல்களைக் கேட்டோம். இப்போது சாமிகளது தேசிக நிலையையும் தெய்வீக நிலையையும் எழில்ததும்ப வருணிக்கும் கவிஞர் திரு. ரா. பு தங்கராசன் 'பன்றிமலை அடிகளார் திருப்பள்ளியெழுச்சி' பாமாலையைப் படித்து அகமகிழ்வோம்.

## பன்றிமலை அடிகளார் திருப்பள்ளி எழுச்சி

வெள்ளி முளைத்தது ; விளித்தது சேவல்,
வேதமு ழக்கம் விண்ணில் எழுந்தது
வெள்ளிய சங்கம் விளித்தது கேட்டே
விரிகதிர் காணும் விருப்புடன் உள்ளோம்
தெள்ளிய ஞானத் திருநிறை செல்வ
தேசிகனே, பன்றி மலையுறை தேவே
கள்ளமில் உள்ளக் கமலம் மலர்ந்திடக்
கதிரவனே, பள்ளி எழுந்தரு ளாயே !

காரிருள் போக்கக் கதிரவன் வந்தான்
கங்குல கன்றது களித்தது கமலம்
நாரியோர் பாகன் நடேச பேசன்
நன்மகன் முருகனின் நல்லருள் பெற்றோய் !
பாரினில் பக்திப் பயிரினை வளர்க்கப்
பன்றிம லையினில் வந்தவ தரித்தோய் !
தாருடன் வந்தோம் தாள்பணிந் திடவே
தண்ணமுதே பள்ளி எழுந்தரு ளாயே !

பொன்னொளி வீசிப் புகுந்தனன் கதிரோன்
பொய்கையில் பங்கயம் பூத்துந கைத்தாள்
புன்னகை செய்தன பூங்கொடி யாவும்
புள்ளினம் பாடியே துள்ளின வானில்
இன்னலெ னும்கார் இருளினைப் போக்கி
எழிலொளி பரப்பும் எம்முயிர்த் துணையே !
தென்னவ னேபன்றி மலையிடை வந்த
தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே ;

பல்கதிர்த் தேவன் பவனியைக் கண்டோம்
பகையிருள் மாய்த்த நகைமுகம் கண்டோம்
அல்லவை தேய, அறநெறி ஓங்க
அவனியில் பிறந்த அருட்சுடர் மணியே !
வல்வினைப் பயனால் வையக மீதில்
வாடும்எம் துயரை மாற்றிட வல்லோய்
தொல்புகழ்ப் பன்றி மலையிடை வந்த
தூயவனே பள்ளி எழுந்தரு ளாயே !

தொழுதுநும் பாதப் போதினைத் தலையிற்
சூடுதற் கெண்ணிலர் சூழ்ந்துநிற் கின்றோம்
விழிதுயில் கின்றதேன் ? வியப்படை கின்றோம் !

விதித்தசோதனையோ? வேட்கையும் பொய்யோ?
அழுகணீர் துடைத்தே ஆறுதல் அளிக்க
அவனியில் வேறெமக் காருளர் ஐயா?
எழில்மிகு பன்றி மலையிடை வந்த
எம்உயிரே பள்ளி எழுந்தருளாயே!

ரா. பு. தங்கராஜன்

சாமிகளுடைய பெருமையைப் பாடிக்கொண்டே இருக்கின்ற நாம் சாமிகளும் ஒரு சாகித்ய கர்த்தா என்பதை மறந்துவிட முடியுமா? சாமிகள் சகலகலை நிபுணர் அல்லவா? எந்தச் சமயத்திலும் எதைப் பற்றியும் பாடவல்ல சக்தி புருஷர் நமது சாமிகள். சாமிகள் சிவ ராஜ யோகீஸ்வரர். சாமிகள் உளமுவந்து யோக நிலையைச் சித்திரிக்கும் கீர்த்தனத்தைப் பாடி நம்மை மகிழ்விப்பதை அறிவோம். சாமிகள் பாடுகின்ற அந்தக் கீர்த்தனத்தையே கேட்டு மகிழ்வோம்.

"எப்போ காண்பேன் நான் எப்போ காண்பேன்
ஏழை பங்காளனை எப்போ காண்பேன்

பழநி முருகனைப் பாடுங்கள்
பால் காவடி எடுத்துக் கொண்டாடுங்கள்
வேல் முருகனைப் பாடுங்கள்
வேலாயுதம் எடுத்துக் கொண்டாடுங்கள்—எப்போ காண்பேன்

ஹர ஹர ஹர ஹர மஹாதேவா
அம்பிகை மகிழ்பொன் அம்பலவா
சிவ சிவ சிவ சிவ சிவ ராஜா
சிவ நடனம் புரியும் நடராஜா — எப்போ காண்பேன்

ராமா ராமா என்றொரு நாமம் சொல்லடா
பாமரனே உனக்கிதில் பாரமென்னடா
எமன் வந்தால் பொல்லாதவன் விடமாட்டான்
ஸ்ரீ ராமன் பெயரைச் சொன்னால் தொடமாட்டான்
ஷண்முகன் பெயரைச் சொன்னால் தொடமாட்டான்
ஆறுமுகன் பெயரைச் சொன்னால் தொடமாட்டான்
— எப்போ காண்பேன்

சாமிகளுடைய பெருமையைப் பாடிக்கொண்டே இருக்கலாம். சாமிகளுடைய சிறப்பைப் போற்றிக்கொண்டே இருக்கலாம். சாமிகளுடைய வாழ்க்கைத் துணைவியாக விளங்கிய நம் அன்னையார் திருமதி பாப்பாத்தி அம்மாள் தெய்வ நிலையில் இன்றும் அமர்ந்து நமக்கு அருள் பாலித்து வருகின்றார். சாமிகளை என்றும் நமது உள்ளமாகிய ஆலயத்தில் அமர்த்திப் போற்றுகின்ற நாம் இன்று

அமர நிலை அடைந்துள்ள அன்னையார் அவர்களையும் நமது உள்ளக் கோயிலில் அமர்த்தி வணங்கி வருகின்றோம். நம் நடமாடும் தெய்வமாகிய அப்பனுக்கு அஞ்சலி செய்கின்ற நம் நெஞ்சங்கள் அன்புத் தெய்வமாகிய அம்மை அவர்களுக்கும் அஞ்சலி செய்யத் தவறுமோ? இல்லறத்தின் இலக்கணத்திற்கு இலக்கியமாக வாழ்ந்த அன்னையார் அவர்கள் இன்று இன்பமனைக்கு ஒளி நல்கும் எழில் விளக்காக, பரஞ்சுடராக விளங்குகின்றார். அவர்கள் திரு உருவப்படத்திற்குப் புஷ்பங்கள் கொண்டு அர்ச்சித்து போற்றி செய்ய கவிஞர் திரு. ரா. பு. தங்கராசன் போற்றிப்பாமாலை புனைந்துள்ளார். அன்னை அவர்கள் அருளை அடைய நாம் போற்றிப் பாடுவோம்.

ஓம்

பன்றிமலைத் தவமுனிவர் பத்தினியே போற்றி
பாப்பாத்தி எனும்திருப்பேர் படைத்தவளே போற்றி
என்றுமுள தீந்தமிழ்போல் இனியவளே போற்றி
எல்லையிலா அன்புகொண்ட இதயமுள்ளோய் போற்றி: 1

இல்லறத்தின் இலக்கணத்திற் கிலக்கியமே போற்றி
இன்பமனைக் கொளிநல்கும் எழில்விளக்கே போற்றி
நல்லறம்இல் லறமென்றே நவின்றவளே போற்றி
நாதனருட் பதமடைந்து நலம்பெற்றோய் போற்றி. 2

மங்கலநன் மனைவிளக்கம் ஏற்றிவைத்தோய் போற்றி
மாநிலத்தில் உயிர்க்கெல்லாம் மாதாவே போற்றி
திங்களிளம் பிறையென்னத் திகழ்நுதலோய் போற்றி
திருநீறும் குங்குமமும் திகழ்முகத்தோய் போற்றி. 3

வள்ளுவரின் வாசுகிபோல் வாழ்ந்தவளே போற்றி
வையமிசைத் தெய்வீக வடிவடைந்தோய் போற்றி
தெள்ளுதமிழ் ஔவையெனத் திகழ்கின்றோய் போற்றி
தேமாவின் கனியிழைத்த புனிதவதி போற்றி. 4

செல்வமெட்டும் எய்திமண்ணில் சிறந்தவளே போற்றி
செங்கமலத் துறைநின்ற செந்திருவே போற்றி
கல்விநலம் அருள்கின்ற கலைமகளே போற்றி
காசினிக்கு நலம்வழங்கும் கற்பகமே போற்றி. 5

பெண்குலத்தின் பெருமையெலாம் உருவானாய் போற்றி
பேரறத்தைப் பேணிவந்த பெண்ணரசே போற்றி
விண்ணகத்தே தாரகையாய் விளங்கிடுவாய் போற்றி
விரிநிலவில் தண்ணொளியை வீசுகின்றாய் போற்றி 6

மங்கையர்தம் குலத்திற்கோர் மணிமுடியே போற்றி
மாண்புமிகு தமிழ்ப்பண்பின் வடிவானோய் போற்றி
மங்காமல் ஒளிவீசும் மணிவிளக்கே போற்றி
வரும்விருந்தை நோக்கிநிற்கும் வாசலினாய் போற்றி. 1

கதம்பவளக் கயல்விழியோ டிணைந்தவளே போற்றி
கருணையெனும் கடல்போன்ற கண்ணுடையாய் போற்றி
கதம்பமலர் நீங்காத கருங்குழலாய் போற்றி
கற்பகநன் னுடைந்த கார்முகிலே போற்றி. 8

முழுமதிநன் னுளினிலே முத்திபெற்றாய் போற்றி
முப்பாலின் நெறியொற்றி முதிர்ந்தவளே போற்றி
கொழுநனையே தெய்வமெனக் கொண்டவளே போற்றி
கோதில்லா வாழ்வுபெற்ற குணவதியே போற்றி. 9

எல்லோர்க்கும் அன்னையெனும் ஏற்றமுள்ளோய் போற்றி
எவ்வுயிர்க்கும் அருள்புரியும் இதயமுள்ளோய் போற்றி
நில்லாத உலகிலன்பில் நிலைத்தவளே போற்றி
நித்தியலோ கத்திலொளி நிலவிடுவாய் போற்றி. 10

மஞ்சள்குங் குமமாரு மதிநுதலாய் போற்றி
மணமலர்கள் அணிசெய்யும் நறுங்குழலாய் போற்றி
நெஞ்சமலர் விட்டகலா நிர்மலையே போற்றி
நித்தியசு மங்கலியாய் நிற்பவளே போற்றி. 11

ஆரமுதம் அளிக்குமன்ன பூரணியே போற்றி
அணையாமல் சுடர்வீசும் திருவிளக்கே போற்றி
பூரணநல் மதியுரையும் புண்ணியமே போற்றி
பொன்னுலகில் புன்னகைசெய் பூங்கொடியே போற்றி. 12

தண்மதியில் கொலுவிருக்கும் தாயகமே போற்றி
தாரகையில் நகைபுரியும் தனிஒளியே போற்றி
தண்ணமுதப் பூங்காற்றில் தவழ்மணமே போற்றி
தாமரைப்பூம் பொய்கையொளிர் தவமலரே போற்றி. 13

ஓங்கார மந்திரத்தின் உருவானாய் போற்றி
உள்ளத்தின் உள்ளுறையும் ஒளிக்கனலே போற்றி
பாங்கான நெறிகாட்டும் பரம்பொருளே போற்றி
பக்தர்தம் நெஞ்சத்தின் பயம்தவிர்ப்பாய் போற்றி. 14

துன்பமெலாம் நீக்குகின்ற தூயவளே போற்றி
துக்கத்தைத் துடைப்பதற்குத் துணையாவாய் போற்றி
இன்பமணம் பரப்புகின்ற எழில்மலரே போற்றி
இன்னருளை வழங்குகின்ற ஈச்வரியே போற்றி. 15

வேதத்தின் நெற்றியொளிர் சிந்துரமே போற்றி
வேதமெனும் சிப்பியினில் விளைமுத்தே போற்றி
வேதமெனும் விளைநிலத்தில் விரிமலரே போற்றி
வேதமெனும் வானிடையே வெண்ணிலவே போற்றி. 16

எங்குநிறை பரம்பொருளின் இன்னுருவே போற்றி
எல்லையற்ற பேரின்ப வாரிதியே போற்றி
செங்கமலம் மலரவரும் செங்கதிரே போற்றி
செங்குமுதம் சிரிக்கவரும் தண்மதியே போற்றி 17

நன்னெறியில் உயிர்களையே நடத்தவல்லாய் போற்றி
நாதவடி வாயிலங்கும் நற்றேவி போற்றி
என்றென்றும் வெற்றியெனும் எழில்விசையை போற்றி
ஏத்துவோர்பால் வாஞ்சைகொள் வத்சலையே போற்றி. 18

அணிமாதி அட்டசித்தி அடைந்திட்டோய் போற்றி
அன்பர்தம் மனவிருளை அகற்றுவல்லோய் போற்றி
அணிமணிகட் கணிசெய்யும் அழகொளியே போற்றி
அட்டதிக்கும் பணிந்தேத்தும் அம்பிகையே போற்றி 19

சிவனருளைப் பெற்றுவிட்ட சிவகாமி போற்றி
சிவன்பாதம் போற்றுகின்ற சீர்பெற்றாய் போற்றி
பவக்கடலைக் கடத்தவல்ல பகவதியே போற்றி
பக்தர்மனப் பொய்கைவாழ் நல்லனமே போற்றி 20

வளமதுரை மீனாட்சி வடிவிளைந்தோய் போற்றி
வைகையதன் பூம்புனலில் மெய்கலந்தோய் போற்றி
இளவேனிற் காலத்தின் இன்னுணர்வே போற்றி
இன்னிசையாம் அமுதளிக்கும் பூங்குயிலே போற்றி 21

இளங்கதிர்போல் ஒளிவீசும் இயல்புடையாய் போற்றி
எப்பொழுதும் மகிழ்ச்சியிலே திளைத்திருப்போய் போற்றி
களங்கமிலாப் புன்னகைசெய் தாமரையே போற்றி
காதம்பரித் தேன்விழையும் களிவண்டே போற்றி 22

திருவோணத் திருநாளில் தெய்வமானாய் போற்றி
திருப்பதிகள் பலகண்ட தெய்வதமே போற்றி
திருநதிகள் பலவாடி நலம்கண்டோய் போற்றி
திருமலைகள் தோறுமிறை எழில்கண்டோய் போற்றி 23

பூக்களிலே நறுமணமாய்ப் பரிமளிப்பாய் போற்றி
புல்நுனியில் பனித்துளியாய் மின்னிடுவாய் போற்றி
பாக்களிலே செஞ்சொல்லாய்ப் பயின்றிடுவாய் போற்றி
பண்களிலே இன்சுவையாய் ஒலித்திடுவாய் போற்றி 24

கார்முகிலில் மின்னலெனக் கனல்தெறிப்பாய் போற்றி
கனமழையில் தண்ணமுதப் புனல்தெளிப்பாய் போற்றி
வார்கடலில் ஓமெனும்பண் வழங்கிடுவாய் போற்றி
வற்ருத சுனைபோன்று வரமளிப்போய் போற்றி 25

பறவைகளின் நாவினிலே பண்ணுவாய் போற்றி
பாய்புனலில் பேராற்றல் காட்டிடுவாய் போற்றி
கறவைகளின் தோற்றத்தில் கனிவளிப்பாய் போற்றி
காவினிலே பூங்காற்ருய்க் களிப்பருள்வாய் போற்றி 26

அருள்ஒளியை வீசுகின்ற அகல்விளக்கே போற்றி
அன்பென்னும் அமுதளிக்கும் அருட்சுனையே போற்றி
இருளகற்றும் விண்மீனுய் இலங்கிடுவாய் போற்றி
என்றுமின்பம் நல்குகின்ற இன்னமுதே போற்றி 27

அன்னையார் அவர்களுக்குப் போற்றி பாடிய நாம் நம்மிடையே வாழ்வாங்கு வாழுகின்ற நடமாடும் தத்துவ தெய்வம் திருத்தவத் திரு. பன்றிமலை சாமிகளுடைய திருவடிகளுக்கு மலர் சமர்ப்பித்துப் போற்றி பாமாலையும் சமர்ப்பித்து மகிழ்வோம். கவிஞர் திரு. ரா. பு. தங்கராஜன் அவர்கள் போற்றிப் பாடுகின்ருர். அவரோடு நாமும் சேர்ந்து சாமிகளைப் போற்றிப் பாடி மகிழ்வோம்.

அகரமுதல் எழுத்திலெல்லாம் அமர்ந்திருப்போய் போற்றி
ஆறுமுகன் நேயத்தை அடைந்துள்ளோய் போற்றி
அகங்குளிரும் அமுதளிக்கும் அருட்சுனையே போற்றி
ஆறுபகை கடந்துவெற்றி அடைந்தவரே போற்றி.

அகந்தையெனும் பேயடக்கும் அடலேறே போற்றி
அம்புயங்கள் மலரவரும் ஆதவனே போற்றி
அகமலரின் நறுமணமே ஆசிப்போய் போற்றி
ஆனந்த பைரவியின் அரும்புதல்வா போற்றி

என்புருக்கும் இசைக்குருகும் இதயமுள்ளோய் போற்றி
இதயக்கோ வில்சமைக்கும் எழிற்சிற்பி போற்றி
அன்பென்னும் பண்இசைக்கும் அருட்கலைஞ போற்றி
அயன்புரம்கோ வில்கொண்ட வியனுருவே போற்றி

இதயமலர் மீதமரும் எழில்வண்டே போற்றி
எழில்நறவம் உண்டவண்டின் இன்னிசையே போற்றி
புதியமலர் புரிகின்ற புன்னகையே போற்றி
புன்னகையின் சோதியெனப் பொலிந்திடுவாய் போற்றி

கள்ளமில்லா இதயத்தில் கால்வைப்போய் போற்றி
காரிருளில் தவிப்போரைக் கரைசேர்ப்போய் போற்றி
பள்ளத்தில் உழல்வோர்க்குப் பரிந்தருள்வாய் போற்றி
பாதைவிடுத் தலைவோரை ஆதரிப்போய் போற்றி

அந்தகர்க்குக் காட்சிதரும் அருள்விழியே போற்றி
அல்லலெலாம் அழித்தொழிக்க வல்லவரே போற்றி
நொந்தவர்தம் நோவகற்றும் நோன்புடையாய் போற்றி
நோயகற்றி நல்வாழ்வு வாழவைப்போய் போற்றி

பந்தமுற்ருேர் தளைநீக்கும் பலமுடையாய் போற்றி
பயம்நீங்கி உய்யுநெறி பகர்ந்திடுவோய் போற்றி
சிந்தையிலே தெளிவுதரும் சீருடையாய் போற்றி
சீலமிக்க நெறிகாட்டும் தேசிகனே போற்றி.

அன்பென்னும் மணிமகுடம் அணிந்திருப்போய் போற்றி
அமிழ்தளிக்கும் முகில்வண்ணத் தருள்வடிவே போற்றி
அம்புலியின் ஒளிதங்கும் அருஞ்சிகையாய் போற்றி
அருந்தமிழ்ப்பண் கேட்டுசிரம் அசைத்திடுவோய் போற்றி

ஆறணியும் சடைமுடியான் அருட்புதல்வ போற்றி
அரன்பாதம் தாங்குகின்ற சிரமுடையாய் போற்றி
நீறணிந்து திகழ்கின்ற நெற்றியிஞய் போற்றி
நெற்றியிலோர் விழியுடைய நின்மலனே போற்றி

புருவநடு விழியுடைய புண்ணியனே போற்றி
பூசனையில் திறக்குநுதல் விழியுடையாய் போற்றி
திருநுதலில் ஒளிவீசும் திலகமுள்ளோய் போற்றி
திங்களிளம் பிறையென்னத் திகழ்நுதலோய் போற்றி

கருப்புருவச் சிலைதாங்கும் கண்ணுதலே போற்றி
கதிர்மதியாய் ஒளிநல்கும் கண்ணுடையாய் போற்றி
கருணைகலை விசுகின்ற கடல்விழியாய் போற்றி
கடவுளருட் காட்சிதரும் கண்மணியே போற்றி

கலைமகளின் யாழிசையில் களிப்புறுவோய் போற்றி
கந்திருவர் இசைபருகும் காதுடையாய் போற்றி
அலைகடலில் ஓங்கார ஒலிகேட்போய் போற்றி
ஆண்டவனின் குரல்கேட்கும் அருட்செவியாய் போற்றி

நறுமணத்தில் பரம்பொருளின் நலமுணர்வாய் போற்றி
நாதனருள் மணம்நாடும் நாசியிஞய் போற்றி
மருக்கொழுந்தில் மால்மருகன் மணம்நுகர்வோய் போற்றி
மகிழம்பூ மாலையிலே மனமகிழ்வோய் போற்றி

ஓமென்னக் குவிகின்ற உதடுடையோய் போற்றி
உள்ளத்தை வெளிப்படுத்தும் கதவுடையாய் போற்றி
தீமைதவிர் சொல்லருளும் தேனிதழாய் போற்றி
தித்திக்கும் செம்பவளக் கனிஇதழாய் போற்றி

முல்லைமலர்ச் சரம் போன்ற பல்லுடையாய் போற்றி
முத்தாரம் ஒளிவீச முறுவலிப்போய் போற்றி
அல்லைநில வாக்கவல்ல அணிநகையாய் போற்றி
ஆரமுதக் கடல்நுரைப்பல் வரிசையினுய் போற்றி

நன்னெறியை நவில்கின்ற நாவுடையாய் போற்றி
நாமடந்தை உறைவிடமாம் நாமலராய் போற்றி
இன்னமுத வாசகங்கள் இயம்புகின்றோய் போற்றி
இளமுருகன் செபத்தால்நாச் சிவப்படைந்தோய் போற்றி

தெள்ளுதமிழ் அருள் மொழியாம் தேனளிப்பாய் போற்றி
தெவிட்டாத நல்லமுதச் சொல்லருள்வாய் போற்றி
வள்ளுவர்போல் வாழநெறி வகுத்துரைப்பாய் போற்றி
வரம்பில்லாக் கருணைமொழி வழங்கிடுவோய் போற்றி

மூன்றுவரி காட்சிதரும் மிடறுடையாய் போற்றி
முளரிமலர்த் தண்டனைய கழுத்துடையாய் போற்றி
மூன்றுகுணப் போர்வென்ற முத்திரையாய் போற்றி
முகமலரைத் தாங்குமெழிற் கொடிமிடற்றோய் போற்றி

தெய்வீகச் சின்னங்கள் திகழ்புயத்தோய் போற்றி
திருக்குமரன் வாழ்குன்றம் நிகர்தோளாய் போற்றி
உய்வளி பன்றிமலைக்கும் உயர்தோளாய் போற்றி
ஒண்சங்கு சக்கரங்கள் ஒளிர்புயத்தோய் போற்றி

செந்திருவாழ் திருவரங்காய்த் திகழ்மார்பா போற்றி
சிவமணிகள் அணிசெய்யும் திருமார்பா போற்றி
கந்தமலர் மாலைகள் தவழ்மார்பா போற்றி
காருலவும் வானனைய தடமார்பா போற்றி

சிவநாமம் எப்பொழுதும் செபித்திருப்போய் போற்றி
திருச்சின்னம் திகழ்கின்ற திண்புயத்தோய் போற்றி
சிவவடிவாய்த் திகழ்கின்ற சின்மயனே போற்றி
திண்டுக்கல் திருப்பதியாய்த் திகழவைப்போய் போற்றி.

வாய்மையெனும் பேரறத்தின் வடிவானேய் போற்றி
வாழ்வென்னும் பெருங்கடலில் வழிகாட்டி போற்றி
தாய்மையினைப் போற்றுகின்ற தகவுடையாய் போற்றி
தண்ணெளியை வீசுகின்ற தவரிலவே போற்றி

அணிமாதி சித்தியெல்லாம் அடைந்துள்ளோய் போற்றி
அரவிந்தத் தேமலரில் அமர்ந்திருப்போய் போற்றி
பிணியாதி துன்பமெல்லாம் போக்கிடுவாய் போற்றி
பேரன்பத் துறைகாட்டும் பேரறிவே போற்றி

தவமுனிக்கும் அருள்புரியும் தகவுடையாய் போற்றி
தருக்குற்ற நெஞ்சகத்தைத் தாழவைப்போய் போற்றி
துவண்டுவிட்ட நெஞ்சிலுயிர்த் துடிப்பளிப்பாய் போற்றி
தூங்காமல் தூங்குகின்ற தூயவரே போற்றி

வேல்கரத்தில் ஏந்துபன்றி மலைவேந்தே போற்றி
சூல்கரத்தில் தாங்கியுள்ள சுந்தரமே போற்றி
கால்களிலே சக்கரம்வேல் தாங்கியுள்ளோய் போற்றி
கருணையெனும் தடத்தமர்ந்த கவின்மலரே போற்றி

அங்கையிலே வேல்ஆழி சங்கமுள்ளாய் போற்றி
அறுகோண ரேகைஇடக் கரத்துள்ளாய் போத்றி
மங்கையுமை பாலகனை மனத்துவைத்தோய் போற்றி
மயில்நடனம் செயும்பன்றி மலையுடையாய் போற்றி

பங்கமிலாப் பக்திநெறி பரப்புகின்றோய் போற்றி
பாரெங்கும் அன்புவெள்ளம் பாய்ச்சவல்லோய் போற்றி
பங்கயங்கள் முகமலரப் பாய்கதிரே போற்றி
பன்றிமலை பரிந்தளித்த பரம்பொருளே போற்றி.

ஓம் ஸ்ரீ பன்றிமலை சாமி சரணம்.

சாமிகளுடைய போற்றி பாடுவதல்லவா நமது இன்பம். சுப மங்கள சாமிகளது வாழ்த்துப் பாடுவதல்லவா நமது பாக்கியம். போற்றி பாடிக் கொண்டே இருப்போம்.

**1**

“பன்றிமலை பெற்றெடுத்த பார் முதலே போற்றி
பன்னிருகை வேலனருள் பரஞ்சுடரே போற்றி
குன்றுதோறுடுகின்ற குணக்குன்றே போற்றி
கன்னல் மொழி பேசுகின்ற கீதைக் கண்ணு போற்றி
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிவாழும் எங்கள்
எண்ணமெல்லாம் கூட்டுவிக்கும் எழில்முருகா போற்றி
கண்ணுக்கு விருந்தாகும் அருள்முருகா போற்றி
கண்ணுக்கு மணியாகும் எம்மீசா போற்றி

## 2

பெரியவர்கள் அருள்பெற்ற பெரியவரே போற்றி
பெரும் ஆதிகுரு இணைந்த அருள்விளக்கே போற்றி
பெரியசல்லி சாமிஅருள் பெற்றவரே போற்றி
பெருநிதியாம் சட்டிசாமி திருஉடையாய் போற்றி
பெரிய ஆச்சாண்டமலை அருள்பெற்றோய் போற்றி
பெரியவராம் புல்பிடுங்கி சாமிசெல்வா போற்றி
பெரியவராம் தந்தைக்கும் பெரியவராய் குருவாய்
பெருமீசன் சாமிநாதன் உளம்கவர்ந்தாய் போற்றி

## 3

குணவதியை இரத்தினத்தைத் தோற்றுவித்தோய் போற்றி
குணவதியை பாப்பாத்தி மணந்தவரே போற்றி
குணவதிகள் போற்றுகின்ற குணக்குன்றே போற்றி
குணவதிகள் மங்களமாய் வாழ்விப்பாய் போற்றி
குணமிக்க நல்லோர்கள் பெற்றுள்ளோய் போற்றி
குணமிக்க சீடர்களை வளர்த்திடுவாய் போற்றி
குணமிக்க உலகமிதில் நலம் வளர்ப்பாய் போற்றி
குணமிக்க நல்லவரே நாயகரே போற்றி

## 4

பன்றிமலை சாமிக்கு சுபமங்களம்
பாரில்குரு சாமிக்கு சுபமங்களம்
எங்கள்திரு இறைவனுக்கு சுபமங்களம்
ஏழை பங்காளனுக்கு சுபமங்களம்
எந்தை அறிவினுக்கு சுபமங்களம்
எங்கள் பரம்சுடர்க்கு சுபமங்களம்
செந்தில் வேலவனுக்கு சுபமங்களம்
சிங்கார வேலனுக்கு சுபமங்களம்.

## 5

குன்றிலுதித் தோன் வாழ்க
குணமலை சிறந்து வாழ்க
பன்றிமா மலையே பெற்ற
பாக்கிய பரணி வாழ்க
என்றுமே உலகம் உய்ய
இன்பமே அருள்வோன் வாழ்க
பன்றிமா மலையோன் வாழ்க
பரஞ்சுடர் வாழ்க வாழ்க!

6

ஆறிரு தடந்தோள் வாழ்க
　　அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க
　　குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க
　　யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க
　　வாழ்க சீரடியா ரெல்லாம்.

வாழ்க திருத்தவத்திரு பன்றிமலை சாமிகள்
வாழ்க அவர் சீரடியா ரெல்லாம்
வாழ்க நம்நாடு வாழ்க நம்உலகம்.

சுபம்.

# பெயரகராதி

## அ



## ஆ



## இ

## கெ



## கே



## கொ



## கோ



## கை



## ச

சா



சி



சீ



சு

## சூ



## செ



## சே



## சொ



## சோ



## சௌ

## பா



## பி



## பு



## பூ



## பெ



## பே



## பொ



## போ



## ம

சுபம்.

# துணைநூல் பட்டியல்

## திருத்தவத்திரு பன்றிமலை சாமிகளைப்பற்றி :


1. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் வாழ்கை வரலாறு 1954 ... பதிப்பாசிரியர் R. N. தீக்ஷிதர்.

2. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் 1962 ... நான்கு புத்தகங்கள்

3. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் தெற்கிலிருந்து ஒரு சித்த புருஷர் 1965 ... ஸ்ரீ D. M. பருலேகர், வழக்கறிஞர், சுப்ரீம் கோர்ட்.

   Srilasri Pandrimalai Swamigal, A siddha Purusha of South. ... D. M. Parulekar, Advocate, Supreme Court.

4. நான்கண்ட பிரத்தியட்ச தெய்வம் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சாமிகள் 1965 ... வி. ஸ், வெங்கடநாராயணு, எம், எ., பி. இடி., திருப்பதி.

   Naan Kanda Prathyaksha Daivam — Srilasri Pandrimali Swamigal ... V. S. Venkatanarayana, B' A., B. Ed.,

5. அன்னை அழைத்து வாரான்

   The Mother brings him (Annai Azhattu Vaaral) 1966 ... V. S. Venkatanarayana, B. A., B. Ed.,

6. மனித உருவில் கடவுள் பன்றிமலையிலிருந்து சாமிகள்

   Divinity in Human Shape The sage from Pandrimalai ... V. S. Venkatanarayana, B. A., B.Ed.,

7. ஸ்ரீ-ல-ஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் வாழ்க்கை வரலாற்று சுருக்கமும் துதிமாலையும் 1959 ... வெளியிட்டவர். K. S. D. பாண்டுரங்கன் சேலம்.

8. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் மலாயா வருகை. ஞாபக மலர்.

9. ஸ்ரீ-ல-ஸ்ரீ பன்றிமலை சுவாமிகள்—தெற்கிலிருந்து ஒருசித்த புருஷர். ... A. V. இராமச்சந்திரன், பம்பாய்.

Srilasri Pandrimalai Swamigal—A sidha Purusha of the south. ... A. V. Ramachandran.

10. சத்குரு துணை ... (M. G. Potdar) போதார்

11. தவத்திரு பன்றிமலை அடிகளார் பாமாலை 1962 ... தவத்திரு. பன்றிமலை அடிகளார் அருள்நெறி மன்றம் சென்னை.

12. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் ஸஹஸ்ர நாமாவளி—1966 ... ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் ஞான சத் சபா பம்பாய்.

13. அடுக்குநிலைபோதம்—1966 ... இராசிபுரம் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமி தத்துவஞான சங்கம்.

14. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் திருவடிப்புகழ்ச்சி ... பக்தர்கள் சமர்ப்பணம்.

15. ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் இதயாஞ்சலி பத்து — 1967 ... T. D. மீனுட்சிசுந்தரம்

16. பன்றிமலைக் குருமாட்சி—1968 ... கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்

17. அன்னை பஞ்சகம் — 1966 ... கவிஞர் ரா. பு. தங்கராஜன்.

## துணையாக மற்ற நூல்கள்

1. பதினெண் சித்தர்கள் பெரிய ஞானக்கோவை

2. பன்னிரு திருமுறை வரலாறு ... திரு க. வெள்ளைவாரணம்.

3. திருவருட்பா சென்னை ... சமரச சுத்த சன்மார்க்க சங்கம்.

4. தாயுமானவர் திருப்பாடல்கள் சரித்திர சுருக்கம் ... நா. கதிரைவேற்பிள்ளை

5. ஸ்ரீ மகா பக்த விஜயம்—1966 ... ஸ்ரீமதி குகப்ரியை

6. தன்னை அறிதல் — பகவான் ஸ்ரீ இரமண மகரிஷிகள் வாழ்க்கையும் உபதேசங்களும் ... B. V. நரசிம்மசுவாமி

Self-Realisation — Life and Teachings of Bhagavan Sri Ramana Maharishi 1944. ... B. V. Narasimhaswami.

7. ஸ்ரீ சாயிபாபா குறிப்புகளும் திருமொழிகளும் — 1944 ... B. V. நரசிம்மசுவாமி

